Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

உ

ஸ்ரீ

# கம்பராமாயணம்

# யுத்தகாண்டம்

முதற் பகுதி

(1—1210 செய்யுட்கள்)



மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

அடையாறு ● ● சென்னை 20

CC-0. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு—29

உ

ஸ்ரீமத்

கம்பராமாயணம்

# யுத்தகாண்டம்

## முதற் பகுதி

(1—1210 செய்யுட்கள்)

*

சுபகிருதுஸூ ஆடிமீ

*

மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

அடையாறு] 1962 [சென்னை-20

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



# முகவுரை

இங்கிலேயத்தினின்று வெளிவரும் கம்பராமாயணப் புதிப்புக்களுள் இவ்வெளியீடு யுத்தகாண்டத்தின் முதற் பகுதியாகும். இக்காண்டத்தை நான்கு பகுதிகளாக வெளியிடவும், நான்காவது பகுதியில் பதிப்புரை, நூன்முகம், அருஞ்பதங்கள் முதலியவற்றின் அகராதி ஆகியவற்றை பதிப்பிக்கவும் கருதியுள்ளோம். ஒவ்வொரு பகுதியிலும் அதனிலுள்ள பாடல்களுக்கு முதற் குறிப்பு அகராதி மட்டும் கொடுக்கப்பெறும்.

இக்காண்டத்திற்கும் அன்பர்கள் வழக்கம்போல் ஆதரவு காட்டி ஊக்கமளிக்க வேண்டுகிறோம்.

20—7—1962

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# உள்ளுறை



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

உ

ஸ்ரீராமஜயம்

# கம்பராமாயணம்

# ௬. யுத்தகாண்டம்

---

### கடவுள் வாழ்த்து

ஒன்றே யென்னின் ஒன்றேயாம்
பலவென் றுரைக்கிற் பலவேயாம்
அன்றே யென்னின் அன்றேயாம்
ஆமே யென்னின் ஆமேயாம்
இன்றே யென்னின் இன்றேயாம்
இலதென் றுரைக்கின் இலதேயாம்
நன்றே நம்பி குடிவாழ்க்கை
நமக்கிங் கென்னே பிழைப்பம்மா.

ஒன்றே என்னின் ஒன்றே ஆம் - ஒன்றே என்று கூறின் ஒன்றே ஆகும்; பல என்று உரைக்கின் பலவே ஆம் - ஒன்றன்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பலவென்று புகலின் பலவே ஆகும்; அன்றே என்னின் அன்றே ஆம் - (இன்ன தன்மையது) அன்று என்று பகரின் அன்றேயாம்; ஆமே என்னின் ஆமேயாம் - (இன்ன இயல்பினதாகும்) என்று மொழியின் ஆமே ஆகும்; இன்றே என்னின் இன்றே ஆம் - இல்லை என்று கூறின் இல்லையாகும்; உளது என்று உரைக்கின் உளதே ஆம் - உள்ளது என்று சொல்லின் உளதே ஆகும்; (இவ்வாறு), நம்பி குடிவாழ்க்கை நன்று - எம்பிரானுடைய இருப்பும் வாழ்க்கை வரலாறும் மிகவும் வியக்குமாறுள்ளது; நமக்கு இங்கு பிழைப்பு என்னே - இங்கு, இப் பொருளைக் கண்டுணர்ந்து கடைத்தேறுமாறு எங்ஙனம்? அம்மா - வியப்பிடைச் சொல்.

'ஏகம் ஸத் விப்ரா: பஹுதா வதந்தி' என்னும் சுருதி. பரம்பொருள் ஒன்றே ஆயினும், அவன், உலகெலாமாகி வேறுயுடனுமா யொளியாகியும், உருவத் திருமேனிகளாற் பலவாகியும் நிற்பன். ஆதலின், ஒன்றே ஆம் பலவேயாம் என்றார். 'ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லார்க் காயிரம், திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ' என்பது திருவாச. திருத்தெள்ளேணம்; (ஒப்பு): 'உளனெனின் உளனவன் உருவமிவ் வுருவுகள்,; உளனல னெனிலவன் அருவமிவ் வருவுகள்'; 'ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவினுள், நின்ற நன்றெழில் நாரணன்'; 'ஆண் அல்லன் பெண் அல்லன் அல்லா அலியும் அல்லன், காணலும் ஆகான், உளனல்லன் இல்லை அல்லன், பேணுங்கால் பேணும் உருவாகும் அல்லனும் ஆம், கோணை பெரிதுடைத்தெம் பெம்மானைக் கூறுதலே'; (திருவாய்.). இனி ஒரு பொருளைக் கூறி, அது அல்லன் அவன் என்று கூறின் அல்லனுவன்; அந்தப் பொருளில் பரம்பொருளின் சிறப்பம்சங்கள் சில உள ஆகவே அவன் அப் பொருளாவன் என்னில் அவன் அப் பொருளே ஆவன் என்க; 'வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று, நானன்று, நீயன்று அசரீரியன்று, சரீரியன்றே' என்றார் அருணகிரிநாதர். மற்றும் இப் பொருள்களிலே பரம்பொருளின் அம்சங்கள் பல உள என்று கூறின், அவனே, வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி நிற்பன் என்பது இரண்டாவது வரி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யின் கருப் பொருள். 'ஆதிப் பரமா மெனிலன் றெனலாம்' (யுத்த. இரணிய. 109); 'ஒன்றே பொருளென்னின் வேறென்ப வேறென்னின், அன்றென்ப ஆறு சமயத்தார்' (திருவள்ளுவமாலை 9): என்பனவும் காண்க. 'நேதி நேதி' என்ற உபநிடதச் சொற்றொடரும், 'அல்லை யீதல்லை யீதென மறைகளு மன்மைச், சொல்லினாற் றுதித்திளைக்கும் (திருவிளை. பாயிரம் 30) என்ற வரிகளும் இங்குக் கருதத் தகுவன. மற்றும் உலகாயதர் போன்று காட்சிப் பிரமாணம் ஒன்றே கொண்டு பரம்பொருள் இல்லையெனின் இல்லையாவன்; ஏனைய ஆகமம் அனுமானமாதிப் பிரமாணங்களைக் கொண்டு பரம்பொருள் உண்டு என்று கூறின் உள்ளவனுவன். எனலும் ஆம். 'பல்பொரு ணெறியிற் பார்க்கும் பரம்பொருளென்ன யார்க்கும், இல்லையுண் டென்ன நின்ற இடை' (பால. கோலங். 12) என்பதும் காண்க.

இனி 'ஏகமே வாத் வ்தீயம் பிரம்மா' என்பது சுருதி. 'அத்து விதவத்துவை' என்றார் தாயுமானார். அத்வைதம் என்ற பதத்திற்கு ந—த்வைதம் என்பது சமாசம்; இதற்கு வேறுபாடில்லாதது என்பது பொருள் என்பர். மற்றும் அத்வைதத்தின் முதல் எழுத்தாகிய அ என்பதற்கு அன்மை இன்மை மறுதலை என்ற மூன்று பொருள்கள் காட்டி, இரண்டல்லாதது, இரண்டில்லாதது, இல்லவே இல்லாதது என்று பொருள் வழங்குவர் தார்க்கிகர். இவ்வாறு ஒன்றாய்ப் பலவாய், எல்லாமாயல்லதுமாய் அத்துவிதமாய், துவிதமாய் அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறாய்ப் பலபடியாக விளங்குதலின் பரம்பொருளை அறிவது இயலாது என்பார்; நன்றே. நம்பி குடிவாழ்க்கை நமக்கிங் கென்னே பிழைப்பென்றார். ஆன்மா அறிவிக்க அறியும் தன்மையுடையது. 'அவனருளே கண்ணாகக் காணின் அல்லால், இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன் இவனிறைவன் என் றெழுதிக் காட்டொணாதே' (தேவா. 1235.10); என்றும், 'காண் பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே' (தேவா. 1229.3); என்றும் 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' (திருவாச.) என்றும் கூறப்பட்டன காண்க. 'என்னையேதும் அறிந்திலன் எம்பிரான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தன்னை யானுமுன் னேதும் அறிந்திலன், என்னைத் தன்னடி யானென் றறிந்தபின், தன்னை யானும் பிரானென்றறிந்தேனே' என்ற அப்பர் பெருமான் பாசுரமும் இங்கே குறிக்கொள்ளத்தகும். இக்கடவுள் வணக்கச் செய்யுளால் 'அருவமும் உருவமும் அருவுருவமும் ஆகி எங்கும் வியாபித்திருக்கும் பரம்பொருளையும், அவனை அவனுடைய அருட்கண் கொண்டே காணக்கூடும் என்ற உண்மையையும் பரம்பொருள் சமயங்கட்கு அப்பாலானது என்பதையும் அதுவே இராமபிரானாக அவதரித்த செய்தியையும் அழகுபெறக் கூறுகின்றார் கம்பநாடர்.

இதன் முன்னர் இரண்டு பாடல்கள் சில பிரதிகளில் காணப் படுகின்றன.

1. மகிழ்மா றனைவழுத்து வாயென் றுனக்கு
நெகிழ்மா றனைநினைக்கு நேயம்—முகிழ்மா
முலைக்கமலை யேற்ற மொழிகா வியத்தால்
நிலைக்கமலை வேகவருணீ.

2. கம்பர் வீட்டு ளொருசிறுபுன் கட்டுத்தறியுங்
கவிசெயுமென்
றிம்பர் நாட்டு மன்பதைகூ றிருஞ்சொல் புலவீர்
கேட்டு வந்தாம்
சம்பு நீட்டு சடைத்தலைக்குந் தகுவர் தலைக்குந்
திருப்பாத
அம்பு நாட்டு மால்சரித மன்றோர் பாட
லது வியப்பே.

பா-ம். 1. ஒன்றே யென்னில்; பலவே யென்னில்.
2. யாமென் றுரைக்கில் ஆமேயாய், யாமே யென்னி னுமேயாய்
3. உளதென் றியம்பி னுளதே; ஈதே யிறைவன் செயலென்னின்
4. சூடில் வாழ்க்கை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## நூல்

# 1. கடல்காண் படலம்

### வாநரப்படை கடற்கரையில் சென்று தங்குதல்

1. ஊழி திரியுங் காலத்து
        முலையா நிலைய வுயர்கிரியும்
    வாழி வற்ரு மறிகடலும்
        மண்ணும் வடபால் வான்ருேயப்
    பாழித் தெற்குள் ளனபொருப்பும்
        நிலனுந் தாழப் பரந்தெழுந்த
    ஏழு பத்தின் பெருவெள்ளம்
        மகர வெள்ளத் திறுத்ததால்.

ஊழிதிரியும் காலத்தும் - ஊழிக்காலத்தில் எல்லாப் பொருள்களும் மாறுபட்டழியும் இறுதிக் காலத்திலும், உலையா நிலைய - கெடாத தன்மை வாய்ந்த, உயர் கிரியும் - உயர்ந்த இமவானுதி மலைகளும், வற்ரு மறிகடலும் - என்றும் சுவருததும் அலைகள் கரைக்கண் தாக்கி மடியும் படியானதுமான கடலும், மண்ணும் - நிலவுலகும், வடபால் வான் தோய - வடக்குத் திசைக் கண் விண்ணிற் சென்று படியவும், பாழி - வலிய, தெற்கு உள்ளன பொருப்பும் - தெற்கே உள்ள மலைகளும், நிலனும் - பூமியும், தாழ - அழுந்தவும், பரந்து எழுந்த - விரிந்து மேற் கிளம்பிய, ஏழு பத்தின் பெருவெள்ளம் - எழுபது வெள்ளம் எனக்கூறும் பெரிய வாநரப்படை, மகர வெள்ளத்து இறுத்தது - நீர் வெள்ளமாக நிறைந்த (தென்) கடலின் கரையில் (வந்து) தங்கியது. வாழி, ஆல் - அசைகள்.

வாநர சேனைகள் கடற்கரையில் வந்து தங்கிய செய்தியுடன் ஆசிரியர் இக்காண்டத்தைத் தொடங்குகின்ருர். வான்மீகமும் அத்யாத்மமும் அநுமன் பிரஸ்ரவண மலையில் இராமபிரானைக் கண்டு, தான் பிராட்டியைக் கண்ட செய்தியைக் கூறும் பகுதியுடன் இக் காண்டத்தைத் தொடங்கும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பெருந்திரளான வானரப்படை சென்று தங்கியதால், அந்தப் பாரம் தரிக்கமாட்டாது, தென்திசை தாழ, வடதிசை உயர்ந்தது; உயரவே, வடக்கண் உள்ள மலைகளும் பிறவும் வானைச் சென்று தீண்டின என்றார்; தொடர் புயர்வு நவிற்சியணி. உயர்கிரி, மேரு என்பாரும் உளர், தெற்கண் உள்ளன பொருப்பு; பொதியம், மகேந்திர கிரி, திரிகோண மலை முதலியன. இச்செய்யுளின் கருத்துடன் சிவபிரான் பார்ப்பதியை மணந்த காலத்து இமயமலையிடத்துப் பெருங்கூட்டந் திகழ, வடதிசை தாழ்ந்து தென் திசை உயர்ந்ததும், அகத்திய முனிவர் தெற்கண் சென்று உலகைச் சமஞ் செய்ததுமான செய்தியை (தொல். பாயிரம்) ஒப்பிட்டுக் காண்க. இங்கு, வடதிசை உயரத் தென் திசை தாழ்ந்தது. நிலம் புடை பெயர்தல்; புறம். 34:5. பெருவெள்ளம், பெருஞ்சேனைக்கு ஆகுபெயர். ஒரு வெள்ளம் பிறிதோர் வெள்ளத் திறுத்தது என்பது நயம். வெள்ளம்- பேரெண்; நீர்ப்பெருக்கு. மர்க்கட வெள்ளம் மகரவெள்ளத் திறுத்தது என்றார்.

பி - ம். 1. யொத்த காலத்து, யுற்ற காலத்து; முலவா நிலையுமுயர், நிற்கு முயா, உலையா திருந்த.

2. மாக்கடலு மண்ணும்; வடபா லனலும், வடபான் மிதந்தோங்க; வான்றேயும்.

3. தெற்குள்ளன கிரியும்; திக்குள்ளன; பொருப்பும்; நிலமும் தாமும் கீழமுந்த; நிலமுந் தாழ்ப்ப; நிலமு மரனுங் கீழமுந்த.

4. திறுத்தலால்; இறுத்தனவால். 1

## இராமபிரான் கடலைக் காணுதல்

2. பொங்கிப் பரந்த பெருஞ்சேனை
 புறத்து மகத்தும் புடைசுற்றச்
சங்கிற் பொலிந்த தகையாளைப்
 பிரிந்த பின்பு தமக்கினமாம்
கொங்கிற் பொலிந்த தாமரையின்
 குழுவுந் துயில்வுற் றிதழ்குவிக்குங்
கங்குற் பொழுதுந் துயிலாத
 கண்ணன் கடலைக் கண்ணுற்றான்.

பொங்கி பரந்த - மிகுந்து விரிந்த, பெரு சேனை - பெரிய வானரப்படை, புறத்தும் அகத்தும் புடை சுற்ற - எல்லாப் பக்கங்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


களிலும் சூழ்ந்து நிற்ப, சங்கில் பொலிந்த தகையாளை - வெண் சங்கம் போன்று தூய்மை சான்று விளங்கும் பெருந்தன்மையுடைய சீதாப்பிராட்டியை, பிரிந்த பின்பு - நீங்கிய பின்னர், தமக்கு இனமாம் - (கண்களாகிய) தங்கட்கு இனமாகிய, கொங்கில் பொலிந்த தாமரையின் - தேனுடன் திகழ்கின்ற தாமரை மலர்களின், குழுவும் - தொகுதியும், துயில்வுற்று இதழ் குவிக்கும் - தூங்குதல் போன்ற இயல்பினவாய் இதழ்களைக் குவித்து நின்ற, கங்குல் பொழுதும் - இரவு நேரத்திலும், துயிலாத கண்ணன் கடலை கண்ணுற்றான் - உறங்காத விழிகளையுடைய இராமபிரான் கடலைக்கண்டான்.

இராமபிரான் கடலைக் கண்டமை கூறியது; அவன் இரவிலும் பிராட்டியின் பிரிவுத்துயிலால் துயிலாதவன் என்றது. இராமபிரான் திருக்கண்கட்கு உவமையாகலின் தாமரை இன்றும், இனம் எனப்பட்டது. இனம் துயிலும் காலத்தும் தாம் துயிலாக் கண்கள், என்றது நயம். பிரிந்த வேதனையால் உடல் வெளுத்திருந்தது பற்றிப் பிராட்டியைச் சங்கிற்பொலிந்த என்று கூறியதாம்; சங்கு குலத்தூய்மையைக் குறித்ததுமாம். 'வலம் புரியன்ன குலம்புரி பிறப்பும், வான்யாறன்ன தூய்மையும்'. (நன். பாயிரம்) என்றது காண்க. கொங்கு - நறுமணமுமாம். இராமபிரான் கண்களுக்குத் தாமரை இந்நூலிற் பல விடங்களிலும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது; அயோத்தி. கைகேசி. 5, 108; ஆரணிய. 50, 237, சுந்தர. உருக்காட்டு. 39; 51; யுத்த. வீடண. 132: 137; 52, அவன் பிற அவயவங்கட்கும் தாமரையை உவமை கூறுவர்; திருவாய். 8, 5; 1; 8; 9; 1, திருவிருத்தம் 43, முதலியன காண்க. கண்ணன் - இராமபிரான்; ஆரணிய. : 38; 254; உரை காண்க.

பி - ம். 1. புடை பரந்து ; புறத்தெம் மருங்கும் புடைசூழ.
2. கை யாளை. 4. போதும்.



3. சேய காலம் பிரிந்தகலத்
   தீரிந்தான் மீண்டும் சேக்கையின்பால்
மாயன் வந்தா னினிவளர்வா
   னென்று கருதி வருந்தென்றல்
தூயமலர்போ னுரைத் தொகையு
   முத்துஞ் சிந்திப் புடைசுருட்டிப்
பாய லுதறிப் படுப்பதே
   யொத்த திரையின் பரப்பம்மா.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



திரையின் பரப்பு - அலைகள் பரந்த கடலானது, சேய காலம் பிரிந்து அகல - நீண்ட காலம் பிரிந்து செல்ல, திரிந்தான் - தனிமையில் அலைந்தவனாக, மாயன் - திருமால், மீண்டும் - திரும்பவும், சேக்கை இன்பால் - சயன விருப்பால், வந்தான் - வந்தடைந்தான்; இனி வளர்வான் - இனி மேல் (இங்குத்) தனக்குரிய அறிதுயிலை மேற்கொள்வான், என்று கருதி - என்று நினைந்து, வரும் தென்றல் - வீசும் தென்றற் காற்றைக் கொண்டு, தூய மலர்போல் நுரை தொகையும் முத்தும் சிந்தி - தூய்மையான வெண்மலர் போன்ற நுரைத் தொகுதியையும் முத்துக்களையும் சிந்திக் கொண்டு, பாயல்புடை சுருட்டி - (அத்திருமாலின்) பாயலை உட்புறமாகச் சுருட்டி, உதறி படுப்பதே ஒத்த - உதறி விரிப் பதைப் போன்றது. அம்மா - வியப்பிடைச் சொல்.

திரையின் பரப்பு ஒத்தது என்றியைக்க. இச்செய்யுள், தற்குறிப்பேற்றம். சேக்கை - திருமால் அறிதுயிலேற்கும் கடல். சேக்கையின் பால் - தனது படுக்கையினிடத்து எனினுமாம். (ஒப்பு); 'முன்னமே துயின்றருளிய முதுபயோ ததியோ:' வில்லிபா. கிருட்டினன் - 80); மாயன் - இராமன் : ஆசிரியர் பல இடங் களிலும் இராமனைத் திருமாலாகவே குறித்தற் கிணங்க இங்கும் மாயன் என்றார். வளர்தல் - கண் வளர்தல்; துயிலுதல்; மங்கல வழக்கு. சுருட்டிப்பாயல் உதறி என்பதில் சுருட்டுப் பாயென்று தொனிப்பதும் காண்க. சுருட்டுப்பாய், பாய் வகைகளில் ஒன்று.

பி - ம். 1. திரிந்து ; மீண்டும் ; சேக்கையின் கண்.
2. கண் வளர்வான் என்று ; கருதா வருதென்றல்.
3. தூய கமலப் பசுந்தேறல் ; நுரை சிதறி.
4. பாய்தலுதறி. 3

4. வழிக்குங் கண்ணீ ரழுவத்து
வஞ்சி யழுங்க வந்தடுத்த
பழிக்குங் காமன் பூங்கணைக்கும்
பற்றா நின்றான் பொற்றேண்மேல்
சுழிக்குங் கொல்ல னுதுலையிற்
றுள்ளும் பொறியிற் சுடுமென்றே
கொழிக்குங் கடலி னெடுந்திரைவாய்த்
தென்றல் தூற்றுங் குறுந்திவலை,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வழிக்கும் கண்ணீர் அழுவத்து - மேன்மேற் பெருகுவதால் அடிக்கடி கையினால் வழித்தெறியும் படியான கண்ணீர்க் கடலில், வஞ்சி அழுங்க - வஞ்சிக் கொடிபோன்ற சீதாதேவி மனம் வருந்துவதால், வந்து அடுத்த பழிக்கும் - தன்னை வந்து சார்ந்த பழிக்கும், காமன் பூ கணைக்கும் - மன்மதனுடைய மலரம்புகளுக்கும், பற்றா நின்றான் - இலக்காகத் திகழ்ந்த இராமபிரானுடைய, பொன் தோள் மேல் - அழகிய புயங்களின் மீது, கொழிக்கும் கடலின் நெடு திரை வாய் - கொழிக்கின்ற கடலின் உயர்ந்த அலைகளிலிருந்து (கொண்டு வந்து), தென்றல் தூற்றும் குறு திவலை - தென்றற் காற்றானது வீசும் சிறிய அலைத்துளிகள், சுழிக்கும் கொல்லன் ஊது உலையில்- சுழித்து எரிகின்ற கருமானுடைய (துருத்தி கொண்டு) ஊதும் உலையிடத்து, துள்ளும் பொறியில் - சிதறும் தீப்பொறிகளைப் போல, என்னோ சுடும் - என்ன காரணத்தினாலோ சுடும்.

வழிக்கும் கண்ணீர் அழுவம்; (ஒப்பு): 'விழுதல் விம்முதல்' (சுந்தர. 334): 'கண்ணினீர்ப் பெருந்தடத்திடை யிருந்ததோர் அன்னத் தன்மையாள்' (சுந்தர. 393): 'கண்ணினீர்க் கடலிற் கண்டேன்' (சுந்தர. 1279). 'கொங்கை வழிகின்ற மழைக்கணீராள்' (சுந்தர. 1284). வஞ்சி அழுங்க, வந்தடுத்த பழி: அரக்கன் கவர்ந்து செல்லவும் சீதாதேவியை மீட்காததால் இராமபிரானுக்கு நேர்ந்த பழிச்சொல்: (ஒப்பு): 520. கிட்கிந்தா. 523. நீர்த்திவலை சுடுதல்; (ஒப்பு): கிட்கிந்தா: 522. 'நெடுந்திரைவாய்க் குறுந்திவலை' என்ற இடத்துத்தொடை முரண் காண்க. கொல்லன் உலைப்பொறியிற் சுடுதல்; (கிட்கிந்தா. 38).

பி - ம். 1. அழுந்த, வருந்த, அடர்ந்த, அடைந்த; அழுங்கும் படிவந்த.
2. படுகொலைக்கும்; பற்றான்; பொற்றோளைச்.
3. வெவ்வுலையிற், ஒல்லுலையிற்; மன்றோ, மந்தோ, மென்னே.
4. கொடுந்திவலை. 4

5. நென்னற் கண்ட திருமேனி
யின்று பிறிதாய் நீலதளர்வான்
தன்னைக் கண்டும் இரங்காது
தனியே கதறுந் தடங்கடல்வாய்ப்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பின்னற் றிரைமேற் றவழ்கின்ற
பிள்ளைத் தென்றல் கள்ளுயிர்க்கும்
புன்னைக் குறும்பூ நறுஞ்சுண்ணம்
பூசா தொருகாற் போகாதே.

(சீதா தேவியைப் பிரிந்த துக்கத்தால்), நென்னல் கண்ட திருமேனி இன்று பிறிதாய் - நேற்றுப் பார்த்த அழகிய உடல் இன்று பார்ப்பவர் கண்கட்கு அடையாளம் புலப்படாமல் நிறம் வேறுபட்டு, நிலைதளர்வான் - இளைத்து உயிர் நிலை தளர்கின்ற (தனது மருமகனுகிய) இராமபிரான், தன்னை கண்டும் இரங்காது - தன்னை நோக்கியும் மனம் கசியாமலும், (அவனுடைய துயரத்தில் பங்கு கொள்ளாமலும்), தனியே கதறும் - ஒற்றைக் குரலாய் ஒல மிடுகின்ற, தட கடல்வாய் - பெரிய கடலிடத்து, பின்னல் திரை மேல் - ஒன்றேடொன்று பின்னிக் கொண்டெழுகின்ற அலைகளின் மேல், தவழ்கின்ற பிள்ளை தென்றல் - தவழ்ந்து விளையாடுகின்ற இளம் தென்றற் காற்ருனது, கள் உயிர்க்கும் புன்னை குறும்பூ நறு சுண்ணம் - தேனை வெளிவிடுகின்ற புன்னை மரத்தின் சிறிய மலர்களினுடைய நன்மணம் பொருந்திய மகரந்தத்தூளை (வாரிக் கொண்டு வந்து), ஒரு கால் பூசாது போகாது - இராமபிரான் மீது ஒரு தரமாவது அப்பாமல் செல்லாது. ஏ - அசை.

திருமாலுக்கு மகள் கொடுத்த மாமன் முறையினன் ஆன கடல், மருமகனின் தளர்ந்த நிலை கண்டிரங்க வேண்டும்; அங்ஙனம் செய்யாது, அவன் விரக நிலையில் தான் ஆரவாரித்து அவனுக்குத் துன்பத்தைப் பெருக்கியது என்ருர். அதே கடல் தன் மருமகன் வந்தான் என்றுபாய் உதறிப்படுத்ததை கீழ் மூன்ரும் கவியிற் குறித்துள்ளமை காண்க. நென்னல் - நெருநல் என்ற சொல்லின் திரிபு; 'நென்னலே சென்ற தென்ருன்' (வி. பா. நிரை மீட்சி. 106): 'நென்னல் நோக்கி நின்ருரொருவர்' (சிலப். கானல்வரி). திரு மேனியின்று பிறிதாய்; (ஒப்பு): 'வைகறேறு நிறம் பெயர்ந் துறையு மவன்' (குறுந். 298): 'வேனிலா னேறு போலச், சாயின னென்ப நம், மாணல நயந்தே' (குறுந். 74). தென்றல் பிள்ளை - 'பிள்ளை குழவிகன்றே போத்தெனக், கொள்ளவு மமையும் ஓரறி வுயிர்க்கே' (தொல். மரபி 24)-ம் உரை காண்க. குறும் பூ நறும் சுண்ணம், என்று புன்னை மலரின் வடிவும் நறுமணமும் குறித்தமை காண்க. இது நெய்தல் நிலத்து மரம். 'எக்கர்ப் புன்னை யின்னிழ லசைஇச் செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி' (அகநா. 20): பூசாது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


போகாது, என இரண்டு எதிர்மறைகள், பூசியே செல்லும் என உடன்பாட்டுப் பொருளை உணர்த்திற்று; 'வாரா தொழியான்' (சுந்தர. 494): என்ற இடத்துப்போல. இரங்காது என்றதைத் தென்றலுக்கும் கூட்டுக.

பி - ம். 1. திருமேனிக் கின்று.
3. பிள்ளைத் தென்றல் பெரிதாக.
4. ஒருபால்.

6. சிலைமேற் கொண்ட திருநெடுந் தோட்
குவமை மலையுஞ் சிறிதேய்ப்ப
நிலைமேற் கொண்டு மெலிகின்ற
நெடியோன் றன்முன் படியேழும்
தலைமேற் கொண்ட கற்பினாள்
மணிவா யென்னத் தனித்தோன்றிக்
கொலைமேற் கொண்டா ருயிர்குடிக்கும்
கூற்றம் கொல்லோ கொடிப்பவளம்.

கொடி பவளம்-கடற்கரையில் கொடியாய்ப் படர்ந்துள்ள பவள மானது, சிலை மேல் கொண்ட திருநெடு தோட்கு - வில்லை யேந்திய அழகிய உயர்ந்த புயத்திற்கு, மலையும் - (முன்னர் ஒப்பாகாது எனப் பட்ட) மேரு மலையும், உவமை சிறிது ஏய்ப்ப - உவமையாகச் சிறிதளவே ஒக்கும்படியான, நிலைமேல் கொண்டு - துன்புறுகின்ற தன்மையை மேவி, மெலிகின்ற நெடியோன் தன்முன் - உடலும் மனமும் தளர்கின்ற பெருமை வாய்ந்த இராமபிரான் முன்னர், ஏழு படியும் தலைமேல் கொண்ட - ஏழுலகத்தவர்களும் தலைமேற் கொண்டு போற்றுகின்ற, கற்பினாள் - கற்புவாய்ந்த சீதா தேவி யின், மணிவாய் என்ன - அழகியவாய் போன்று, தனிதோன்றி - தனித்துக் காணப்பட்டு, கொலைமேல் கொண்டு - கொல்லுதல் தொழிலை ஏற்று, ஆர் உயிர் குடிக்கும் - இராமபிரானது அரிய உயிரைப் பருகும், கூற்றம் கொல்லோ - யமன் தானோ? கொல், ஐயப்பொருளது. ஓகாரம், வினா.

சிலை மேற்கொண்ட : (ஒப்பு): 'சூடிய சிலை யிராமன் தோள்' இராமபிரானுடைய புயங்கட்கு உவமையாகாத மலை இப் பொழுது அவன் திருமேனி இளைத்த நிலையில் சிறிது உவமை யாயிற்று என்க. படியேழும்; இடவாகு பெயராய் ஏழுலகத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தவரைக் குறித்தது. தலைமேற் கொண்ட கற்பினாள்: (ஒப்பு).: சுந்தர. 1278. 'வடமீன் போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்' (கலித். 2): மற்றும். சிலப். பதிகம். 56; 23. இறுதி வெண்பா: 'நாடு மூரும் புனிபுகழ்ந் தேத்தலும்' (வளையாபதி) இவை காண்க. 'கொலை மேற்கொண்டு; கொலை மேற் கொண்டாரிற் கொடிதே' (குறள். 551). உயிர் குடிக்கும் கூற்றம்; 'உண்டற் குறியவல்லாப் பொருளை, யுண்டது போலக் கூறலுமரபே' (தொல். பொருளி. 19).

பி - ம். 1. நெடுந்திருத்தோள்.
3. மணிவாய் நினைய; எள்ள.
4. குலைமேற் கொண்டார் உயிர்முடிக்கும்; கூற்றுக் கென்றோ;
கூற்றம் போன்ற கொழும் பவளம். 6

7. தூர மில்லை மயிலிருந்த
சூழல் என்று மனம்செல்ல
வீர வில்லின் நெடுமானம்
வெல்ல நாளும் மெலிவானை
ஈர மில்லா நிருதரோ
டென்ன வுறவுண் டுனக்கேழை
மூரன் முறுவற் குறிகாட்டி
முத்தே யுயிரை முடிப்பாயோ.

'முத்தே - முத்துக்களே! மயில் இருந்த சூழல் தூரம் இல்லை என்று-மயில் போன்ற சாயலை யுடைய சீதாதேவி சிறைப்பட்டிருக்கும் இடம் வெகு சேய்மையில் இல்லை' என்று, மனம்செல்ல-உள்ளம் அங்கே விரைய, வீரம் வில்லின் நெடு மானம் வெல்ல - ஆண்மை செறிந்த வில்லினாலாகிய பெருமிதம் வென்று மேற்பட, நாளும் மெலிவானை - நாள்தோறும் மனம் வாடுகின்ற இராமபிரானை, ஏழை மூரல் முறுவல் குறிகாட்டி - பேதையளான சீதாப்பிராட்டியின் பல்லொளி வெளிப்படுமாறு புன்சிரிப்பின் குறிப்பைக் காண்பித்து, உயிரை முடிப்பாயோ - உயிரைப் போக்கக் கடவையோ? (அங்ஙனம் செய்ய), உனக்கு - உனக்கு, ஈரம் இல்லா நிருதரோடு என்ன உறவு உண்டு - இரக்கமற்ற அரக்கர்களுடன் என்ன உறவுள்ளது? ஓ வினா.

தேவியைக் காணவேண்டும் என்று உள்ளம் ஒருபுறம் விரையும்; ஆயினும், கவர்ந்து சென்ற கள்வனை ஒறுத்து அவனை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மீட்பதே கடன் ஆகலின், வில்லின் நெடுமானம் வெல்ல எனப் பட்டது; (ஒப்பு): சுந்தர. 624, 636. ஈரமில்லா நிருதர்; 'இரக்க மென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்' (ஆரணிய. 129). முறுவற் குறிகாட்டி (ஒப்பு); கிட்கிந்தா. 492.

பி - ம். 1. என்ன, சொல்ல.

2. விர நினைந்து; பிரிவெண்ணி வெல்லா நாளும்; மெலிவேனை, மெலிவானுக்கு, மெலிவோனை.

4. உலகை முடிப்பாயோ. 7

8. இந்து வன்ன நுதற்பேதை
யிருந்தாள் நீங்கா விடர்கொடியேன்
தந்த பாவை தவப்பாவை
தனிமை தகவோ வெனத்தளர்ந்து
சிந்து கின்ற நறுந்தாளக்
கண்ணீர் ததும்பித் திரைத்தெழுந்து
வந்து வள்ளல் மலர்த் தாளின்
வீழ்வ தேய்க்கு மறிகடலே.

மறிகடல் - கரைக்கண் தாக்கி மீளும் அலைகளை யுடைய கடல், 'கொடியேன் தந்த பாவை தவம்பாவை - கொடுமையாளனை அடியேன் பெற்ற ஓவியம் போன்ற தவமகளும், இந்து அன்ன நுதல் - எண்ணுட் பிறைபோன்ற நெற்றியினை யுடையவளுமான, பேதை - சீதாப் பிராட்டி, நீங்கா இடர் இருந்தாள் - அகலப் பெறாத துன்பத்திடைத் தங்கியிருந்தாள்; தனிமை தகவோ - அவள் பெருமானைப் பிரிந்து தனித்துச் சிறைப்பட்டிருத்தல் பொருந்திற் றுமோ?' என தளர்ந்து - என்று மனம் நெகிழ்ந்து, சிந்துகின்ற நறுதாளம் கண்ணீர் ததும்பி - வீழ்க்கின்ற சிறந்த முத்துக்கள் போன்ற கண்ணீர்த் துளிகள் நிறைந்து, திரைத்து எழுந்து வந்து - அலைகள் போன்று மென்மேல் பெருகிவந்து, வள்ளல் மலர் தாளில் விழ்வது ஏய்க்கும் - கருணைக் கடலாகிய இராமபிரா னுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடிகளில் வீழ்வது போன்றிருந்தது. ஏ - அசை.

இச்செய்யுள், கடல் தான் நினைத்துச் செய்த செயல்போல வருணித்தது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இந்துவன்ன நுதற்பேதை; கிட்கிந்தா: 775. கொடியேன் தந்த பாவை; கடல் என்ற ஒப்புமைபற்றிப் பாற்கடலிற் றோன்றிய பிராட்டியைத் தன் பாவையெனக் கூறிற்று. (ஒப்பு): 'உவரி வாயன்றிப் பாற்கடலுதவிய அமுதே' (அயோத்தி, சித்திரகூட. 5). பெருமானைப் பிரிந்து தனித்துச் சிறைப்பட்டுப் பிராட்டி யிருந்தது தன் வினைத் தீமைகளின் விளைவே என எண்ணிக் 'கொடியேன்' என்றது. தவப்பாவை; (ஒப்பு): 'நற்பெருந் தவத்தளாய நங்கை' (சுந்தர. 1273); (உயுத்த. மாயா சீதை. 49; 66, ஆரணிய. 630; கிட்கிந்தா. 267. வள்ளல்; (உயுத்த. ஒற்றுக்கேள்வி; 13; முதற் போர். 256. தவப்பாவை தான் பெற்றதால் துன்பமுற்றாள் என்று கூறியதாக அமைத்தது நயம்.

பி - ம். 1. வண்ணம்; யிருதாணிங்கா; விடர்க்கொடியேன்.

2. தந்த மேதை; தன்றனிமை தகவோ வென்னத்தான்.

3. கண்ணீர்த்தாகி, கண்ணீர் தேக்கி; ததும்ப; திரைக்கரத்தால் - திரைத்தோடி.

4. மணித்தாளின்; மலரடிமேல்; விழ்வ போன்ற; விழ்வதொக்கும் மணியாழி.

8

9. பள்ளி யரவிற் பேருலகம்
பசுங்கல் லாகப் பனிக்கற்றை
துள்ளி நறுமென் புனல்தெளிப்பத்
தூநீர்க் குழவி முறைசுழற்றி
வெள்ளி வண்ண நுரைக்கலவை
வெதும்பு மண்ணல் திருமேனிக்
கள்ளி யப்பத் திரைக் கரத்தா
லரைப்ப தேய்க்கு மணியாழி.

அணி ஆழி - அழகிய கடலானது, பள்ளி அரவில் பேர் உலகம் பசும் கல் ஆக - (திருமாலின்) படுக்கையாகிய ஆதிசேடனது சிரத்தின்மீது தாங்கப்பெற்ற பரந்த உலகமே (அரைத்தற்குரிய) கருங்கல்லுரலாகவும், பனிகற்றை துள்ளி நறுமெல் புனல் தெளிப்ப - பனித்திரள் திவலைகளாகிய சிறந்த மணம் செறிந்த மெல்லிய நீரை(க் காற்று)த் தெளிக்க, தூநீர் குழவி முறை சுழற்றி - தெள்ளிய நீராகிய குழவியை, (அரைக்க வேண்டிய) முறையில் சுற்றிச் சுற்றியரைத்து, வெள்ளி வண்ணம் நுரை கலவை - வெண்ணிறமான நுரையாகிய கலவைச் சாந்தை,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வெதும்பும் அண்ணல் - சீதையின் பிரிவால் (உடலும் உள்ளமும்) வெம்மையுற்று நின்ற பெருமானாகிய இராமபிரானின், திரு மேனிக்கு - அழகிய உடம்பில், அள்ளி அப்ப - வாரிப் பூசும் பொருட்டு, திரை கரத்தால் அரைப்பது ஏய்க்கும் - தனது அலைகளாகிய கைகளால் அரைப்பதை நிகர்த்திருக்கும்.

கடற்றிரை கல் உரல் அரைபபதைப் போறல்; தன்மைத் தற்குறிப்பேற்றவணி, உருவகத்தை அங்கமாக ஏற்றுவந்தது. பள்ளி அரவு - 'சென்றாற் குடையாம்' (இயற்பா. பொய்கையார் 53); ஆரணிய. 946 காண்க. பசுங்கல், குழவி - இங்கே உலகம் உரலும், கடல் குழவியும் ஆம். சிலர் அம்மியும் குழவியும் என்பர்; ஆயினும் பின்னர் 'சுழற்றி' என்ற வினை யெச்சம் வருத லின் கல் உரல் என்று பொருள் செய்யப்பட்டது. கல்லிலிட்டு அரைத்தல்: (ஒப்பு): 'காவியங்கண்ணி தன்பாற் கண்ணிய காத னீரின், ஆவியை யுயிர்ப்பென் றோது மம்மியிட் டரைக்கின்றான்' (சுந்தர. 308). 'வெதும்பும் திருமேனிக்கு அள்ளியப்ப' (ஒப்பு): சுந்தர. 420. துள்ளி - துளியென்பதன் விரித்தல். திரைக் கரத் தால்: 'பொன்னி திரைக்கரத்தா லடிவருடப் பள்ளிகொள்ளும்' (திவ்ய. பெருமாள். 1·1).

பி - ம். 1, பள்ளியரவப்; பசுங்காலாக, பசுங்காலாகி.
2. துள்ளு; நறவத் தேன்றுளிப்ப, நறுந்தெண், நறுந்தேன் புனலளிப்ப; தூய்நீர்; சுற்றி.
3. வள்ளல் திருமேனி
4. லரைப்பதாகு: ஆர்த்த தொத்தது, ஆர்ப்ப தொத்தது; அங்கத் திரைக்கை யெடுத்தோடி யழைப்ப தொத்த தகன் கடலே. 9

10. கொங்கைக் குயிலைத் துயர்நீக்க
விமையோர்க் குற்ற குறைமுற்ற
வெங்கைச் சிலையன் றூணியினன்
விடாது முனிவின் மேற்செல்லும்
கங்கைத் திருநா டுடையானைக்
கண்டு நெஞ்சங் களிகூர
அங்கைத் திரள்க ளெடுத்தோடி
யார்ப்ப தேய்க்கு மணியாழி.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(பெரு முழக்கமுடன்) அலைகளை யெறிந்து இராமபிரானை நோக்கிச் செல்லும், அணிஆழி - அழகிய கடலானது, கொங்கை குயிலை துயர் நீக்க - தனங்களையுடைய குயில் போன்ற குரலின ளான பிராட்டியின் துன்பத்தைப் போக்கவும், இமையோர்க்கு உற்ற குறை முற்ற - தேவர்கட்கு (அரக்கரால்) நிகழ்ந்த மனக் குறைகளை ஒழிக்கவும், கை வெம் சிலையன் - திருக்கரத்தில் கடுமையான கோதண்டம் என்னும் வில்லை யேந்தியவனும், தூணி யினன் - புற முதுகில் அம்பருத் தூணியினைக் கொண்டிருப்பவனு மாகி, விடாது முனிவின் மேல் செல்லும் - ஒழியாத சினத்துடன் பகைவர்மேற் படையெடுத்துச் செல்லும், கங்கை திருநாடு உடை யானைக் கண்டு - கங்கை நதி பாயப்பெற்ற அழகிய கோசல நாட்டை உடையவனான ஸ்ரீ இராமபிரானைப் பார்த்து, நெஞ்சம் களிகூர - மனத்தில் மகிழ்ச்சி பெருக, அம் கை திரள்கள் எடுத்து ஓடி - அழகிய அலைகளாகிய கைகளை உயர்த்தி வந்த வண்ணம், ஆர்ப்பது ஏய்க்கும் - ஆரவாரித்தலை ஒத்து விளங்கும்.

கொங்கைக் குயிலை, கங்கைத் திருநாடுடையான், என்ற தொடர்களில் பிராட்டியைச் சிறைமீட்கும் பொருட்டாக, அரக் கரை அழிக்கத் திருவயோத்தியில் இராமபிரான் அவதரித்த வரலாறு விளங்கும். கங்கைத் திருநாடுடையான் - இதுபோன்றே 'கோசல நாடுடை வள்ளல்' (யுத்த. முதற்போர். 256); 'கங்கைத் தீம்புனல் நாடன்' (பால. தாடகை 67); 'கங்கைக் கிறைவன்' (அயோத்தி. நகர் நீ. 117) என ஆசிரியர் இராம இலக்குவரைக் கூறுதல் காண்க. வெம் - விரும்பத்தக்க எனினுமாம். மணி யாழி எனக்கொண்டு, நீலமணி போன்ற நிறத்தினையுடைய ஆழி யென்றோ, நவமணிகளைத் தன்னகத்துக்கொண்ட ஆழியென்றோ கூறினும் அமையும்.

இச்செய்யுளில் அடைமொழியின்றிக் கொங்கை குறிக்கப் பெற்றது. மணியாழி - நீல மணிபோன்ற கடல் என்றுமாம்.

பி - ம். 1. துயர் நீக்கி ; யிமையோர் குறித்த ; யிமையோருற்ற ; தீர்ப்ப.
2. விடாத ; முனிவன் மேற் சென்ற ; மேற்றேன்றும்.
3. களிகூர்ந்திட்.
4. அங்கத்திரைக்கை, அங்கத்திரையை, கையார்த்தநொத்த தணியாழி ; யழைப்ப தொத்தத்தகன்கடலே.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



11. இன்ன தாய கருங்கடலை
யெய்தி யிதனுக் கெழுமடங்கு
தன்ன தாய நெடுமானந்
துயரம் காத லிவைதழைப்ப
என்ன தாகு மேல்விளைவென்
றிருந்தா னிராம னிகலிலங்கைப்
பின்ன தாய காரியமும்
நிகழ்ந்த பொருளும் பேசுவாம்.

இராமன் - இராமபிரான், இன்னது ஆய கரு கடலை எய்தி - இத்தகையதான கரிய கடலை அடைந்து, இதனுக்கு எழுமடங்கு - இந்தக் கடலைக் காட்டிலும் ஏழுமடங்காக, தன்னது ஆய - தன்னிட முள்ள, நெடு மானம் துயரம் காதல் இவை தழைப்ப - மிக்க மானமும் துன்பமும் ஆசையுமாகிய இவைகள் மிக, மேல் விளைவு என்னது ஆகும் என்று - இனி நிகழக்கூடிய செயல் யாதாகும் என, இருந்தான் - ஆய்ந்து கொண்டிருந்தான்; (இது நிற்க); இகல் இலங்கை - பகையால் மாறுபட்ட இலங்கையில், பின்னது ஆய காரியமும் நிகழ்ந்த பொருளும் பேசுவாம் - (அநுமன் எரியூட்டிச் சென்ற) பின்னர் நடைபெற்ற காரியத்தையும் நிகழ்ந்த செயலையும் (இனிச்) சொல்லுவோம்.

பின்னதாய காரியம் - எரிவாய்ப்பட்ட நகரத்தைப் புதுப்பித்ததும், மந்திராலோசனை நிகழ்த்தியதும். இவை, அடுத்த படலத்தில் காணப்பெறும். இலங்கையின் மீதேற்றி இகலிலங்கை எனப்பட்டது.

பி - ம். 1. நெடுங்கடலை; யதனுக்.
2. தளைப்ப.
3. என்னவாகு; மேல்வினையென்; அடலிலங்கை.
4. பின்னதான; நிகழ்ந்த வினையும்.

11

கடல் காண் படலம் முற்றும்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 2. இராவணன் மந்திரப் படலம்

இஃது, அநுமனால் அழிவுண்ட இலங்கையை இராவணன் புதுப்பிக்கச் செய்து, பின் மேல் நடக்கவேண்டியவற்றைத் தன் அமைச்சர்களுடன் ஆராய்ந்த செய்திகளைக் கூறும் படலம் என விரியும். இது, மந்திரப்படலம் எனவும், இராவணன் மந்திரி விசாரப்படலம் எனவும் கூறப்பெறும்.

## இலங்கையை மயன் புதுக்குதல்

12. பூவரு மயனொடும் புகுந்து பொன்னகர்
மூவகை யுலகினு மழகு முற்றுற
ஏவின வியற்றினன் கணத்தி னென்பரால்
தேவரு மருள்கொளத் தெய்வத் தச்சனே.

தெய்வ தச்சன் - மயன், பூவரும் அயனொடும் - திருமாலின் உந்தித் தாமரை மலரிலிருந்து வந்த பிரமனொடும், பொன் நகர் புகுந்து - அழகிய இலங்கை நகருட் புக்கு, மூவகை உலகினும் அழகு முற்றுற - மேல், கீழ், நடு என்ற மூன்றாக வகுக்கப்பெற்ற உலகங்களிலுள்ள நகரங்களைக் காட்டிலும் அழகு நிறைந்தொளிரவும், தேவரும் மருள்கொள - (அந்நகரத்தின் பேரெழிலைக் கண்டு) அமரரும் திகைக்கவும், ஏவின - இராவணனால் கட்டளையிடப்பட்ட எல்லாவற்றையும், கணத்தின் இயற்றினன் - ஒரு கணப்பொழுதில் செய்து முடித்தான், என்பர் - என்று சொல்வர். ஆல் ஏ - அசைகள்.

பொன்னகர் ; இலங்கை ; 'பொன் கொண்டிழைத்த மணியைக் கொடு பொதிந்த' (சுந்தர. 96) ; 'மணி யெலாங்கனகம்' (சுந்தர. 104); மற்றும் ; சுந்தர. 116, 123. காண்க. அநுமன் வாலிலிட்ட தீயான் இலங்கையின் பல பாகங்கள் அழிந்தன வாதலின், புதுக்க வேண்டிய தாயிற்று என்க. எரியுண்ட நகரம் மீண்டும் புதுப்பிக்கப்பட்டதாக வான்மீகத்தில் கூறப்பட வில்லை. தெய்வத் தச்சன் ; 'உலைவிலா வகையிழைத்த தருமமெனா நினைந்தவெலா முதவுந் தச்சன்' (ஆரணிய. 555); 'தெய்வத் தச்சனைப் புகழ்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


துமோ' (சுந்தர. 113). 'தேவரு மருள் கொள' (ஒப்பு). 'சுதன்மை யினுமுதன்மைபெற' (வி. பா. இராசசூய. 6).

பி - ம். 1. பூமிசை, பூவினில்.
3. ஏவென, ஏவமுன், ஏவின னியற்றினன். 1

## இராவணன் வியப்பு

13. பொன்னினு மணியினும் புனைந்த பொற்புடை
நன்னகர் நோக்கின னுகம்நோக்கினன்
முன்னையி னழகுடைத் தென்று மொய்கழல்
மன்னனு முவந்துதன் முனிவு மாறினான்.

மொய்கழல் மன்னனும் - செறிந்த வீரகண்டை யணிந்த அரக்கர் கோனான இராவணனும், பொன்னினும் மணியினும் புனைந்த பொற்புடை - பொன்னினாலும் (ஒன்பது வகை) அரதனங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அழகுவாய்ந்த, நல் நகர் நோக்கினன் நாகம் நோக்கினன் - தனது சிறந்த நகரத்தையும் வானுலகில் உள்ள நகரத்தையும் ஒப்பநோக்கி, முன்னையின் அழகுடைத்து என்று - எரியுண்பதற்கு முன்னர் இருந்ததைக் காட்டிலும் மிக்க அழகு பெற்றுள்ளதென்று பார்த்து, உவந்து - மனமகிழ்ந்து, தன் முனிவு மாறினான் - தன் சினம் தணியப்பெற்றான்.

நகரின் பேரெழிலை நோக்கி அது எரியுண்டதும் ஒருவகையில் நல்லதே என்ற எண்ணம் கொண்டவனாய் முனிவு மாறினன் என்க. இங்கு, 'இந்திரனிருக்கை யென்பார் இலங்கையை யெடுத்துக் காட்டார்' (யுத்த. இலங்கைகாண். 31) காண்க. நாகம் - தேவருலகம். (சீவக. 536).

பி - ம். 1. மணியினு மமைந்த.
2. னுக நோக்கி.
4. முவந்தனன், முகந்து; மாற்றினன். 2

14. முழுப்பெருந் திருநகர் உலகின் முந்தையோன்
எழிற்குறி காட்டிநின் றியற்றி யீந்தனன்
பழிப்பரு முலகங்க ளெவையும் பன்முறை
அழித்தழித் தாக்குவாற் கரிதுண் டாகுமோ.

உலகின் முந்தையோன் - உலகில் மிகவும் பழமையனான பிரமதேவன், எழில் குறிகாட்டி - அழகுக்கு வரம்புகாட்ட, முழு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பெருதிருநகர் நின்று இயற்றி - பூரணமான பெரிய ஒப்பற்ற இலங்காபுரியை (நிதானித்து நிருமித்து), ஈந்தனன் - அளித்தான் ; பழிப்பு அரும் உலகங்கள் எவையும் - குற்றமற்ற உலகங்கள் அனைத்தும், பல் முறை அழித்து அழித்து ஆக்குவாற்கு - பல முறைகள் மாற்றி மாற்றிப் படைப்பவனாகிய அவனுக்கு, அரிது உண்டாகுமோ - செயற்கரியதும் உண்டோ? இன்று.

படைக்கும் தொழிலே ஏனைய இரண்டு தொழில்கட்கும் அடிப் படை ஆதலின், 'உலகின் முந்தையோன்' என்று கூறப் பட்டது. 'பிதாமகன்' என்ற பெயரும் அவனுக்குள்ளமை காண்க. எழில் குறி - அழகின் வரைக்குறிகள். காட்டி என்னும் செய்து என்னும் வாய்ப்பாட்டுச் சொல், காட்ட எனப் பொருள் தந்து நின்றது. இங்ஙனம் இயற்றும் வன்மை அயற் குண்டோவெனின், 'அழித்தழித் தாக்குவாற்கு அரிது என்', என்று விளக்கினார் ; வேற்றுப் பொருள் வைப்பணி. இனி இயற்றி என்பதற்கு, இயற்றும் வல்லமை எனப் பொருள்கொண்டு, எழிற்குறிகாட்டிப் படைக்கும் வல்லமையுமீந்தான் பிரமன் என்று கொள்வர் சிலர் : 'இயற்றி ; தனக்கு இயற்றியுள்ள காலத்திலே' (ஈடு. ௯.1:4). காட்டி நின்று என்பதைக்காட்டி நிற்க என எச்சந் திரிபாகக் கொள்ளலுமாம். ஓகாரம் எதிர் மறை.

பி - ம். 1. முழுப்பெருந் தனிமுதல் ; உலகில்.
2. எழிற்பெற.
3. யாவும் பன்முறை, எவையுமவ்வழி.
4. நியற்றுவாற்கு. 3

## பிரமனுக்கும் மயனுக்கும் விடையளித்தல்

15. திருநகர் முழுவதுந் தெரிய நோக்கினன்
பொருகழ லிராவண னயற்குப் பூசனை
வரன்முறை யியற்றிநீ வழிக்கொள் வாயென்றான்
அரியன தச்சற்கு முதவி யாணையான்.

பொருகழல் இராவணன் - போர்புரிதற்குரிய வீரகண்டை யைப் புனைந்த இராவணன், (தெய்வச்சிற்பியும் அயனும் கூடி அமைத்த தனது), திரு நகர் முழுவதும் - அழகிய நகரம் முழுவ தையும், தெரிய நோக்கினன் - நன்றாகப் பார்த்தான் ; (பின்னர்) ஆணையால் - தனது கட்டளையினால், தச்சற்கும் அரியன உதவி -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மயனுக்கு அருமையான பொருள்களை நன்கொடையாகத் தரச் செய்து, அயற்கு வரன் முறை பூசனை இயற்றி - பிரமதேவற்கு மரபுவழிப் பூசைபுரிந்து, (அவனை நோக்கி), 'நீ வழி கொள்வாய் - நீ சென்று வருக', என்றான் - என விடைகொடுத்தனுப்பினான்.

வரன் முறை - வழிபடு முறை : ஆரணிய - *110.1146.* சிறப்புப் பற்றிப் பிரமற்கு விடை யீந்ததைக் கூறினும், மயனுக்கும் விடை தந்தனன் என்றுணர்க.

பி - ம். 1. இருந்த, திரிந்து ; நோக்கிய ; நோக்கியப்.
3. வரமுறை ; யேத்தி நீ ; வழிகொள்வாய் ; என.
4. ஆணையான். 4

## இராவணன் மந்திரசாலையின் அமர்தல்

16. அவ்வழி யாயிர மாயி ரம்மவிர்
செவ்வழிச் செம்மணித் தூணஞ் சேர்த்திய
அவ்வெழில் மண்டபத் தரிக ளேந்திய
வெவ்வழி யாசனத் தினிது மேயினான்.

அவ்வழி - அப்போது, (இராவணன்), ஆயிரம் ஆயிரம் - பத்து லட்சக்கணக்கில் உள்ள, அவிர் செவ்வழி செம்மணி தூணம் சேர்த்திய - அழகு ததும்பும் அரதனக்கற்கள் பதிக்கப் பெற்ற தூண்கள் நிறுத்தப்பெற்ற, அ எழில் மண்டபத்து - அந்த அழகிய மண்டபத்திலே, அரிகள் எந்திய - சிங்கத்தின் உருவங்கள் சுமந்த, வெவ்வழி ஆசனத்து - வெம்மை வெளிப்படுகின்ற ஆதனத்தில், இனிதுமேயினான் - (மந்திராலோசனையின் பொருட்டு) இனிது வீற்றிருந்தான்.

ஆயிரம் மவிர் - விரித்தல் விகாரம். செவ்வழி - செவ்விவழியும் என்பதன் தொகுத்தல் ; செவ்வழி அவிர் தூணம் எனக்கூட்டிக் கோடலுமாம். செம்மணி - அரதனம் ; பதுமராகமுமாம். தூணம் - அம் - சாரியை. ஆசனம் - வடசொல்.

பி - ம். 1. நிரை.
2. தூண்கள் ; சார்த்திய, சாத்திய.
3. எவ்வழில், எவ்வெழில், இவ்வழி, இவ்வெழில், அவ்வழி.
4, வெவ்வரி, செவ்வழி ; எவ்வரி ; இனிதின் ; மேவினன். 5

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



17. வரம்பறு சுற்றமும் மந்தி ரத்தொழில்
நிரம்பிய முதியருஞ் சேனை நீள்கழல்
தரம்பெறுந் தலைவருந் தழுவத் தோன்றினன்
அரம்பையர் கவரியோ டாடுந் தாரினன்.

அரம்பையர் கவரியோடு ஆடும் தாரினன் - அரம்பை உருப்பசி முதலிய தேவ மகளிர் வீசும் சாமரையுடன் அசைகின்ற மந்தார மாலையனான இராவணன், வரம்பு அறு சுற்றமும் - எல்லையற்ற உறவு முறையாரும், மந்திரம் தொழில் நிரம்பிய முதியரும் - (அரசியல் ஆலோசனையில் வயது சீலம் ஞானம்) என்ற இவற்றில் முதிர்ந்தவர்களும், சேனை நீள்கழல் தரம் பெறும் தலைவரும் - சேனையில் நீண்ட கழலினராய் உயர்ந்து விளங்கும் தலைவர்களும், தழுவ தோன்றினன் - சூழ்ந்து நிற்க (அந்த மந்திர சாலையில்) விளங்கினன்.

முதியர்; அயோத்தி. மந்திரப். 6-11; தரம் - சிறப்பு; ஆரணிய. 233. அரசனுடன் மனமொன்றிப் பணிபுரிவோராகலின், 'தழுவ' எனப்பட்டது. 'அரம்பையர் கவரியோடாடும்'; இதனால் இலங்கேசனுடைய முழுவுலகத்தலைமை பெறப்படும்; 'ஆரணிய. 261, 272: 326, 725, 752, 753, 847; சுந்தர, 457; யுத்த. அதிகாயன்; 274 முதலியன காண்க. கவரி வீசுங்கால் புனைந்ததார் அசைவதை நயம்படக் கூறி ஆசிரியர் அவனது வரம்பில் போகத்தைக் குறித்தார்.

இதன் பின் ஓர் அதிகப்பாடல்

'மின்னவிர் குழைகளுங் கலனும் வில்லிடச்
சென்னியின் மணிமுடி யிருளைச் சிறிட
யன்னபே ரவையினுண் டிருந்த வாண்டகை
முன்னிய துணர்த்துவான் முறையி னோக்கினன்.

பா - ம். 1. வரம்பெறு;
2. முதிஞரும், அமைச்சரும். நீள் கடல்.
3. தழுவ வேறினன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



18. முனிவரு மமரரு முற்று மற்றுளோர்
எனைவருந் தவிர்க்கென வேய வாணையான்
புனைகுழன் மகளிரோ டிளைஞர்ப் போக்கினன்
நினைவுறு காரிய நிகழ்த்து நெஞ்சினன்.

நினைவுறு காரியம் நிகழ்த்தும் நெஞ்சினன் - மனத்துள் கருதிய காரியத்தை மேற்கொண்டியற்றும் நினைப்பினனான இராவணன், (தன் கருத்திற்கிணங்கார் என இவன் கருதிய) முனிவரும் அமரரும் முற்று மற்றுளோர் எனைவரும் - முனிவரையும், தேவர்களையும், தன்னைச் சூழ்ந்த ஏனையவரையும், 'தவிர்க்க' என ஏய ஆணையான் - 'நீக்குக' என்று கட்டளையிட்டவனாய், (பின்னர்), புனை குழல் மகளிரோடு இளைஞர் போக்கினன் - அலங்கரிக்கப்பட்ட கூந்தலையுடைய மகளிரொடு ஆண்டிற் சிறியோரையும் அகற்றினான்.

தேவகண்டகன் இருடிகண்டகன் ஆகலின், முனிவரும் அமரரும் இவனுக்கு அனுகூலராகார்; எனவே அவர்களை நீக்கினான். 'இளையோர் ஒன்று முறைமையுணராதவர் மகளிரென்றுமிவர் மந்தணத்தினெய்தப் பெறாரே' (வி. பா. கிருட்டினன் 52) என்பராதலின் அவர்களையும் போக்கினான். முனைவர் - முதன்மையுடையவர் எனலும் ஆம்; பெருங். 4:7:70-72. தவிர்க்க என என்பது தவிர்க்கென என்றும், ஏவிய என்பது ஏய என்றும் தொகுத்தன. புனைகுழல் மகளிர்; அவனுக்குப் பணியாற்று மகளிர் போலும். எனைவரும் தவிர்கென; (ஒப்பு): 'புக்கபின் னிருபரும் பொருவில் சுற்றமும், பக்கமும் பெயர்கெனப் பரிவினீக்கினான்' (அயோத்தி. மந்திரப். 3).

பி - ம். 1. தேவரும்; மற்று முற்றுளோர், மற்று முற்றினோர், முற்று முற்றினர்.
2. தவிர்கென, கொற்ற வாணையான்.
3. புனைகலன், புனைவரு.

7

19. பண்டிதர் பழையவர் கிழவர் பண்பினர்
தண்டலின் மந்திரத் தலைவர் சார்கென
கொண்டுட னிருந்தனன் கொற்ற வாணையான்
வண்டொடு காலையும் வரவு மாற்றினன்.

(இராவணன்) கொற்றம் ஆணையான் - தனது அரச ஆணையின் படி, வண்டொடு காலையும் வரவு மாற்றினன் - வண்டுகளுடனே காற்றும் உட்புகாதபடி அகற்றி, பண்டிதர் பழையவர் கிழவர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பண்பினர் - புலவர்களும், நெடுநாட் பழகினவரும், தனக்கு உறவினரும், நற்குணங்களிற் சிறந்தவர்களுமான, தண்டல் இல் மந்திரத் தலைவர் - தன்னை விட்டு என்றும் அகலாத அணுக்கரான ஆலோசனைத் தலைவர்களை, சார்க என - வருக என்று, கொண்டு உடன் இருந்தனன் - அழைத்துக்கொண்டு அவர்களுடன் வீற்றிருந்தான்.

கிழவர் என்பதற்கு வயது முதிர்ந்தவர் என்ற பொருள் பிற்காலத்தது. பண்டைப் பொருள், உறவு முறையில் உள்ளவர் என்பதே ஆகலின் அவ்வாறே பொருள் கூறப்பட்டது. இச் செய்யுள் பின் ஒற்றுக்கேள்விப்படலம் 41-ஆம் செய்யுளுடன் ஒப்பு நோக்கத்தக்கது. சார்க என - என்பதில் அகர வீறு தொக்கது. உடன்கொண்டு என இணைத்துக் கூறினுமாம். 'கொற்ற ஆணையான் வண்டொடு காலையும் வரவு மாற்றினான்' (ஒப்பு) : 'கிள்ளையும் குயிலும் வண்டும்........இலங்கை வேந்தன், முனியு மென்றவிந்த வாய' (ஆரணிய. *651*) ; கறங்குகால்புகா கார்புகா, சுந்தர. *118* சீவக. *384*, *2379* ; சூளா. மந்திர. *2.* பெருங். *3:24:217* முதலியன காண்க.

பி - ம். 2. நண்டின ; மந்திரிந்.

3. கொண்டன ; விருந்தனர் விருந்தினன் ; ஆலையால்.

4. வரவை. 8

20. ஆன்றமை கேள்விய ரெனினு மாண்டொழிற்
கேன்றவர் நண்பின ரெனினும் யாரையும்
வான்றுணைச் சுற்றத்து மக்க டம்பியர்
போன்றவ ரல்லரைப் புறத்துப் போக்கினன்.

ஆன்று அமை கேள்வியர் எனினும் - நிறைந்து அமைந்த செவிச் செல்வம் உள்ளவரெனினும், ஆண்தொழிற்கு ஏன்றவர் நண்பினர் எனினும் - வீரத் தொழிலை ஏற்கத்தக்கவராய்த் தனக்கு உற்ற நண்பர் ஆயினும், வான் துணை சுற்றத்து - சிறந்த உறவினர்களிலும், மக்கள் தம்பியர் போன்றவர் அல்லர் யாரையும் - புத்திரர் தம்பிமார் போன்றவர் அல்லாதார் எல்லோரையும், புறத்து போக்கினன் - அப்புறப்படுத்திவிட்டான்.

ஆன்றமை கேள்வியர் - (ஒப்பு) : 'கற்க.....நிற்க வதற்குத்தக' (குறள். *391*). ஆன்றவர் என்பதற்கே அமைந்தவர் எனப்பொருள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கொள்வர்' (மணி. 2, 34); ஆன்று - பரந்து எனினுமாம். அல்லர் என்பது பிரித்துக் கூட்டப்பட்டது. ஐ - சாரியை.

பி - ம். 2. ஏன்றவ ரன்பினர்.

3. சுற்றமு மகனும் தம்பியும்.

4. புறத்திற். 8

## காவலரை நிறுவுதல்

21. திசைதொறு நிறுவின னுலகு சேரினும்
பிசைதொழின் மறவரைப் பிறிதென் பேசுவ
விசையுறு பறவையும் விலங்கும் வேற்றவும்
அசைதொழி லஞ்சின சித்தி ரத்தினே.

உலகு சேரினும் - உலகனைத்தும் ஒன்றுகூடி வந்தாலும், பிசை தொழில் மறவரை - (அவர்களைப்) பிசைந்தெறியும் வினையில் சிறந்த வீரரை, (மண்டபத்தைச்சுற்றி வெளிப்புறத்தில்), திசை தொறும் நிறுவினன் - எல்லாத் திக்குகளிலும் (காவல் புரியுமாறு) நிறுத்தினன்; (இக்காரணத்தால்), விசை உறுபறவையும் - வேகமாய்ப்பறக்கும் பறவைகளும், விலங்கும் - மிருகங்களும், வேற்றவும் - இவற்றின் வேறுபட்ட பூச்சிவகைகளும், சித்திரத்தின் - சித்திரத்தில் தீட்டப்பெற்றனபோல, அசை தொழில் அஞ்சின - புடைபெயர்தற்கும் பயந்தன; (அவ்வாறெனின்), பிறிது என் பேசுவ - (அவனது) ஆணையைப்பற்றி வேறுரைப்பதற்கு என்ன உள்ளது? ஏ - ஆசை.

பி - ம். 1. நிறுவினர், நிறுத்தின.

2. பேசுவாம்.

3. விசைதுறு; மற்றவும்.

4. திசைசெலல்; சித்திரத்தவே.

இதன்பின், பின்வரும் அதிகப் பாடல்கள் சில சுவடிகளிற் காண்கின்றன.

(1) மோதரன் முதலிய வமைச்சர் தம்கணக்
கோதுனூ றுயிர கோடி யோரொடும்
காதுவெஞ் சேனையும் காவ லோர்க்கணக்
கோதிய வெள்ளநூ றவர்க டம்மொடும்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(2) கும்பக மேலையோன் குறித்த வீடணத்
தம்பியர் தம்மொடும் தருக்கும் வாசவன்
வெம்புயம் பிணைத்தபோர் வீர னாதியாம்
உம்பரும் போற்றுதற் குரிய மைந்தரும்

(3) மாலிய வான்முதல் வரம்பில் முந்தையோர்
மேலிவர் தம்மொடும் விளங்கு சுற்றமாம்
சால்வுறு கிளையொடும் தழுவி மந்திரத்
தேலுறு மிராவண னிசைத்தல் மேயினன். 10

## இராவணன் அவையினர்க்குக் கூறுதல்

22. தாட்சியிங் கிதனின்மேற் றருவ தென்னினி
மாட்சியோர் குரங்கினுல் மறுகி மாண்டதால்
ஆட்சியு மரசுமெம் மமைவு நன்றெனுச்
சூட்சியின் கிழவரை நோக்கிச் சொல்லுவான்.

'மாட்சி - என்பெருமை யனைத்தும், ஓர் குரங்கினுல் மறுகி மாண்டது-ஒரு குரங்கின் வலியால் கலங்கி ஒழிந்தது; இனி இங்கு இதனின் மேல் தாட்சி தருவது என் - இனி இதைக் காட்டிலும் இழிவு விளைக்கக் கூடியது வேறு என்ன உள்ளது? ஆட்சியும அரசும் எம் அமைவும் - எனது ஆளுகையும், அரசச் செல்வமும், எமது சேனையின் அமைதியும், நன்று எனு - மிகவும் நன்றாக இருந்தது' என்று (நொந்து கொண்டு பின்னர்), சூட்சியின் கிழவரை நோக்கி சொல்லுவான் - ஆலோசனைக் குரியவர்களைப் பார்த்து இராவணன் பின்வருமாறு கூறுவான். ஆல் - அசை.

இது முதல் நான்கு கவிகள் அவையினர்முன் தன்னை தாழ்த்துக் கூறியவை. இப்பகுதி முதனூலின் இல்லை; அத்யாத மத்தில் உள்ளது. தாட்சி - தாழ்ச்சி; விபீடணன் 19. தாட்சி செய்யினும்' (திரு. கந்த. திருநாரப். 22). தாழ்ச்சி - சூழ்ச்சி இவை எதுகை நோக்கித் தாட்சி சூட்சி என நின்றன.

பி - ம். 1. தாழ்ச்சி.

2. மாழ்ச்சி; அழிந்த மாநகர், அழிதல் மாநகர்.

3. னமைவுமென் னரசும், மமைவுமென் னரசும்; மென்னரனும்; நன்றெனச்.

4. சொல்லினுன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



23. சுட்டது குரங்கெரி சூறை யாடிடக்
கெட்டது கடிநகர் கிளையு நண்பரும்
பட்டனர் பரிபவம் பரந்த தெங்கணும்
இட்டவிவ் வரியணை யிருந்த தென்னுடல்.

'எரி சூறை ஆடிட - தீக்கடவுள் கொள்ளை கொள்ளுமாறு, குரங்கு சுட்டது - குரங்கு தீயிட்டது; (அதனால்), கடி நகர் கெட்டது - சிறந்த காவல் அமைந்த இலங்கா நகரம் பாழாகி விட்டது; கிளையும் நண்பரும் பட்டனர் - என்னுடைய உறவி னரும் நண்பர்களும் இறந்தனர்; பரிபவம் எங்கணும் பரந்தது - மானக்கேடான செய்தி எல்லாத்திசைகளிலும் பரவிவிட்டது; என் உடல் - எனது உடல், இட்ட இ அரியணை இருந்தது - போடப் பட்ட இந்தச் சிங்கத்தவிசிற்றானே கிடந்தது.

சூறை கொள்ளுதல் (ஒப்பு): 'சோதியான் சூழ்பனி நீர் சூறைகொளு மாறே போல்' (பட்டினத். நெஞ்சொடு. 32). கிளை - உறவு; இது வடமொழியில் சாகை என வழங்கும். பரிபவம் - அவமானம்; துன்பமும் ஆம்; யுத்த. கும்ப. 17; திவ்ய. பெரியாழ். 1, 4, 7. தான் உயிருடனிருக்கும்போதே இந்த மானக் குறைவு நிகழ்ந்ததே என்ற கவற்சியால், 'இட்டதிவ் வரியணை யிருந்த தென்னுடல்' என்றான்; (ஒப்பு): 'விருந்தனைய வாளொடும் விழித்திறையும் வெள்கா, திருந்தன னிராவணனு மின்னுயிர் கொடின்னும்' (ஆரணிய. 611): 'நாளுமுள தோளுமுள நானுமுள னன்றே' (ஆரணிய 619). அரியணை - 'அரியணை அநுமன் தாங்க' (யுத்த. முடி சூட்டு. 38); இங்கு, இராவணன் கூறிய செய்தியின் விரிவைச் சுந்தர காண்டம் பொழிலிறுத்த படலம், இலங்கை யெரியூட்டுப் படலங்களிற் காண்க.

பா - ம். 1. தூறையாடின.
2. கொடிநகர், பெருநகர்.
3. பட்டது, பட்டன, பட்டவிப்.
4. இட்டதிவ்,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


24. ஊறுகின் றனகிண றுதிர மொண்ணகர்
ஆறுகின் றிலதழல் அகிலும் நாவியும்
ஏறுமங் கையர்நறுங் கூந்த லின்சுறு
நாறுகின் றதுநுகர்ந் திருந்து நாமெலாம்.

'கிணறு உதிரம் ஊறுகின்றன - கிணறுகளில் நீரூற்றுக்கு மாறாக இரத்த ஊற்றுக்கள் எழுகின்றன; ஒள் நகர் அழல் ஆறுகின்றலது - ஒளி மிக்க (நமது) இலங்கை நகரில் (முன் இடப்பட்ட) தீ இன்னும் தணிந்த தில்லை; அகிலும் நாவியும் ஏறும் மங்கையர் நறு கூந்தலின் - அகில் மணமும் புழுகின் மணமும் ஊட்டப்பெற்ற மாதர்களின் இயற்கை மணமும் செயற்கை மணமும் செறிந்த குழற்கற்றைகளிலிருந்து, சுறு நாறுகின்றது - தீ நாற்றம் வீசுகின்றது; நாம் எலாம் நுகர்ந்து இருந்தும் - நாம் அனைவரும் அந்த நாற்றத்தை உட்கொண்டிருந்தோம்; (இது என்ன விபரீதம்).

தீ வாய்ப்பட்டுப் பல்லாயிரவர் மரித்தனராகலின் கிணறுகள் உதிரம் ஊறுகின்றன எனப்பட்டது. நாவி - புழுகு; கத்தூரியுமாம். சுறு நாறுதல்; சுந்தர. 378, 929; நக்க. 184; 'பொய்யர்கள் போர்க்கும் பீலி சுறுநாறி; (திருவால. 37; 67). இருந்தும் - இருந்தோம்; உளப்பாட்டுத் தன்மைப் பன்மை இறந்தகால வினைமுற்று.

பி - ம். 2. ஆறுகின்றிலதனல்; றிலவெரி, றிலகனல்; அகிலினுவிபோய், அகிலினுவியொத்.

3. கூறுமங்கையர் நறுங், தேறுமென் கோதையர், தேறுகின்றன நறுங், ஏறுமென் கொங்கையர்; கூந்தலின் சுருள்.

4. நாறுகின்றன; முவந்திருந்த, சுமந்திருந்த, நுகர்ந்திருந்த, நுகர்ந்திருந்து,

13

25. மற்றில தாயினு மலைந்த வாநரம்
இற்றில தாகிய தென்னும் வார்த்தையும்
பெற்றிலம் பிறந்தில மென்னும் பேறலால்
முற்றுவ தென்னினிப் பழியின் மூழ்கினும்.

'மற்று இல தாயினும் - பிற செயல்கள் (நம்மாற்) செய்யப்படவில்லையாயினும், பிறந்திலம் என்னும் பேறு அலால் - (பிறந்த பயனை அடைந்திலோம் ஆகலின்) பிறவாதவர்களானோம் என்னும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பயனன்றி, மலைந்த வாநரம் - நம்முடன் எதிர்த்துப் போர் செய்த குரங்கானது, இற்றிலது ஆகியது என்னும் வார்த்தையும் பெற்றிலம் - அழிந்தொழிந்தது என்னும் சொல்லையேனும் கேட்கப் பெற்றிருக்கலாம், அதனையும் பெறவில்லை; பழியின் மூழ்கினும் - பழிக்குப் பாத்திரர்களாகினேம்; முற்றுவது இனி என் - இப்போது செய்து முடிக்கக் கூடியவினை யாதுள்ளது?" என்று இராவணன் வினவினன்.

மலைந்த வாநரம் - அநுமன். பிறந்திலம். (ஒப்பு); 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' (தேவா. 12 : 1). பழி - ஒரு குரங்கு ஊரை யழிக்கவும், பிரதாப லங்கேச்வரன் செயலற்றிருந்தனன் என்பது. 'கிங்கரிஷ்யாமி' என்ற முதனூற் றொடருக் கேற்ப 'முற்றுவதினி யென்' எனப்பட்டது. 'இற்றில தென்னும் வார்த்தை' நகரை அழித்த குரங்கைப் பற்றி அழித்தா லொழிய, நாம் நம் தொழிலை முடிவுபோக ஆற்றினேமாகோம் என்ற குறிப்பு இதிற் காணலாம். பெற்றிலன் பிறந்திலன்; (கிட்கிந்தா : வாலி வதை. 15).

பி - ம். 1. வலிந்தவாநரம்.

2. இற்றனவாயின, இற்றுளதாகிய, இற்றதென் றுலகிடை யெழும்பு வார்த்தையும்.

3. அரசுபே றெலாம்.

4. முற்றிலமெனு ; முற்றிலதே ; மூழ்கினேம் ; மூழ்கினேம் ; முற்றினென் முடிவுருப் பழியின் மூழ்கினேன், மூழ்கியாம். 14

## சேனை காவலன் கூற்று

26. என்றவ னியம்பலு மெழுந்தி றைஞ்சினன்
கன்றிய கருங்கழற் சேனை காவலன்
ஒன்றுள துணர்த்துவ தொருங்கு கேளென
நின்றன னிகழ்த்தினன் எரியு னெஞ்சினன்.

என்று அவன் இயம்பலும் - என்று அவ்விராவணன் கூறிய வளவில், கன்றிய கரும் கழல் சேனை காவலன் - சினம் முதிர்ந்த வலிய வீரகண்டை யணிந்த சேனைத் தலைவன், எழுந்து இறைஞ்சினன் - (இராவணனை) எழுந்து வணங்கி, உணர்த்துவது ஒன்று உளது - உன்னிடம் சொல்லவேண்டிய பொருள் ஒன்று இருக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கின்றது; ஒருங்கு கேள் என - அதனை முற்றிலும் கேட்பாயாக' என்று, எரியும் நெஞ்சினன் - கொதிக்கும் உள்ளத்தனய், நிகழ்த்திான் நின்றனன் - சொல்லி நின்ருன்.

இச்சேனை காவலனைப் பிரகத்தன் என்று முதனூல் கூறும் - இச்செய்யுளால் போர்க்குரிய ஆலோசனையில் முதலில் பேசற்குரியன் சேனை காவலன் என்பது காண்கிறது. அயோத்தியா காண்டத்தில் அறிவு முதிர்ந்த மந்திரிகள் முதற்கண் பேசியதற்கும் இங்கு மறச்செயலையே கருதி நிற்கும் இராவணன் ஆலோசனை மண்டபத்தில் முதற்கண் சேனை காவலன் பேசியதற்கும் உள்ள வேற்றுமையறிக.

கன்றுதல்; 'கன்றிக் கறுத்தெழுந்து காய்வார்' (நாலடி. 315); கன்றுதல், கோபக் குறிப்பு. கன்றிய - வருந்திய எனினுமாம். கருமை - வலிமை; 'கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத் தெறிந்த' (பெரும்பாண். 437). ஒருங்கு - முழுவதும்; 'பொறை யொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற், கிறையொருங்கு நேர்வது நாடு' (குறள். 733). ஒன்றுளது ஒருங்கு கேள்; என்றது நயம்.

பி - ம். 1. விசைத்தலும்; விறைஞ்சினன்.
2. காவல.
3. ஜெருங்கு; கேளென.
4. நின்றவன்; புணர்ப்பினெஞ்சினன், நின்றபி விகழ்த்தினன். புழுங்கு நெஞ்சினன். 16

27. வஞ்சனை மனிசரை யியற்றி வாணுதற்
பஞ்சன மெல்லடி மயிலைப் பற்றுதல்
அஞ்சினர் தொழிலென வறிவித் தேனது
தஞ்சமென் றுணர்ந்திலை யுணருந் தன்மையோய்.

'உணரும் தன்மையோய் - உணரவல்ல தன்மையுடையவனே! மனிசரை வஞ்சனை இயற்றி - மனிதர்க்கு வஞ்சகம் செய்து, வாள்நுதல் - ஒளி தங்கிய நெற்றியையும், பஞ்சு அனமெல் அடி - செம்பஞ்சு போன்ற மெல்லிய பாதங்களையும் உடைய, மயிலை பற்றுதல் - மயில் போன்ற சாயலுடையவளான சீதையைக் கைப் பற்றுதல், (வீரருடைய) தொழிலன்று; அஞ்சினர் தொழில் என -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அச்ச முள்ளவரின் செயல் என்று, அறிவித்தேன் - (முன்னரே) உணர்த்தினேன்; அது தஞ்சம் என்று உணர்ந்திலை - அந்த வார்த்தையைப் பற்றுக்கோடாகு மெனத் தேறினாயில்லை.

வாணுதல் - உவமத்தொகை அன்மொழி; மனிசர், அரக்கர் மானிடரை இழித்துக் கூறும் சொல். பஞ்சின் மெல்லடி; (கிட்கிந்தா. 373); 'பஞ்சொக்கு மடிகள்' (ஆரணிய. 623). அறிவித்தேன் என்று சேனை காவலன் கூறினன்; முன் அறிவித்தது, எங்கு என்று காணப்படவில்லை. தஞ்சம்; ஆரணிய. 486. 'உணருந்தன்மையோய்' என்றது வெறும் புகழுரை மட்டுமன்று; உண்மையில் இராவணன் நல்ல அறிவாளி; 'ஐயன் வேத மாயிரம் வல்லான் அறிவாளன்' என்றது காண்க.

பி - ம். 1. மனிதரை; மனிதருக் கியற்றி.
2. பஞ்சினன், பஞ்சென; பஞ்சின் மெல்லடியினை.
3. அஞ்சின; அறிவித்தேற்கது.
4. நஞ்சென; தன்மையாய். 16

28. கரன்முதல் நிருதரைக் கொன்ற கள்வரை
விரிகுழ லுங்கைமூக் கரிந்த வீரரைப்
பரிபவஞ் செய்ஞ்ஞரைப் படுக்க லாதநீ
அரசிய லழிந்ததென் றயர்தி போலுமால்

'கரன் முதல் நிருதரை - கரன் முதலான (பதினாலாயிரவர்) அரக்கரை, கொன்ற கள்வரை - கொல்வித்த வஞ்சகரும், விரி குழல் உங்கை மூக்கு அரிந்த வீரரை - தலைவிரி கோலமாய்க் காணப்படுகின்ற உன் தங்கையின் மூக்கினைத் துணித்த வீரரும், பரிபவம் செய்ஞ்ஞரை - (நமக்கும்) மானக் குறைவினை யுண்டாக்கும் செயலைப் புரிபவருமான இராம இலக்குவரை, படுக்கலாத நீ - கொல்லாமல் விட்டிருக்கின்ற நீ, அரசியல் அழிந்தது என்று அயர்தி போலும் - அரசியல் குலைந்தது என்று மனம் தளர்கின்றாய் போலும். ஆல் - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பரிபவம் ; 12 உரை காண்க. செய்ஞ்ஞர் - ஞ் - பெயரிடைநிலை. போலும் - ஒப்பில் போலி. இங்கு 'வீரரை' என்றது வஞ்சப் புகழ்ச்சி.

பி - ம். 1. வீரரைக் ; களைந்து காணமர்.
2. நங்கை.
3. செயுநரைப், செருநரைப், செருஞரைப் ; படுக்கலாது நீ, படுக்கிலாத, படுத்திலாது.
4. தழியற் பாலையோ, றயர்த்தி, அறைதி. 17

29. தண்டமென் றொருபொருட் குரிய தற்கரைக்
கண்டவர் பொறுப்பரோ வுலகங் காவலர்
வண்டம ரலங்கலாய் வணங்கி வாழ்வரோ
விண்டவ ருறுவலி யடக்கும் வெம்மையோர்

'வண்டு அமர் அலங்கலாய் - வண்டுகள் விரும்பியமர்கின்ற மாலையைத் தரித்தவனே! தண்டம் என்று ஒரு பொருட்கு உரிய தற்கரை - தண்டனை என்ற ஒரு பொருளுக்குத் தக்க கள்வரை, கண்டவர் உலகம் காவலர் பொறுப்பரோ - கண்டவரான புவியினைக் காக்கும் அரசரும் பொறுத்தல் செய்வரோ? விண்டவர் உறுவலி அடக்கும் வெம்மையோர் - மாறுபட்டவரின் மிக்க வலிமையை அடக்கவல்ல வீரியம் வாய்ந்தவர், வணங்கி வாழ்வரோ - (அப்பகைவரைத்) தொழுது வாழத்துணிவரோ? துணியார்.

முன் செய்யுளில் கள்வர் என்றான், இச்செய்யுட்கண் தற்கர் என்றான். தஸ்கர ; என்ற வடசொல் தற்கர் எனவந்தது. 'தஸ்கராணாம் பதயே நமோ நம'; என்பது வேதம். தக்கலு, தெலுங்கு. தண்டம் - தண்டனை ; 'கடுமொழியும் கையிகந்த தண்டமும்' (குறள். 567). விண்டவர் - பகைவர் ; 'விண்டவர் நம்புகல் மருவி வீழ்வரோ' (யுத்த. வீடணன். 90).

பி - ம். 1. தக்கரைக்.
2. காவல்செய்.
3. வண்டுறை ; வாழ்வதோ, வாழ்வரே.
4. வெம்மைதான், மேன்மைதான், வெம்மையோய். 18

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



30. செற்றவ ரெதிரெழுந் தேவர் தானவர்
கொற்றமும் வீரமும் வலியுங் கூட்டற
முற்றமூன் றுலகுநீ முதல்வ னுயது
வெற்றியோ பொறைகொலோ விளம்பல் வேண்டுமால்.

'மூன்று உலகு முற்ற நீ - உலகம் மூன்றினும் நீ, முதல்வன் ஆயது - தலைவனுய் ஒளிர்வது, கொற்றமும் வீரமும் வலியும் கூட்டு அற - வெற்றியும் வீரியமும், உடல் வன்மையும் ஒருசேர அழியும்படி, செற்றவர் எதிர் எழும் தேவர் தானவர் - மாறுபட்ட வராய்ப் பகைத்து எழுந்த தேவர் மேலும் அசுரர் மேலும், (கொண்ட) வெற்றியோ பொறை கொலோ - நீ அடைந்த வெற்றி யினுலோ (அன்றி) பொறுமை மேற் கொண்டிருந்த தாலோ? (இதனை) விளம்பல் வேண்டும் - உரைத்தல் வேண்டும்; ஆல் - அசை.

உலகம் மூன்றும் வென்று நீ முதல்வனுயது உன் வீரத் தினுலே தான்; அஃதொப்ப இப்பொழுதும் வீரம் காட்டி வெல் வதே மேல் என்றுன். இச்செய்யுளை இப்படலம் 68-ஆம் செய் யுளுடன் ஒப்பிடுக.

பி - ம். 1. செற்றனர், செற்றினர்; செற்றமோ டெதிரெழுந் தேவ ராதியர்.
2. கொற்றவர் வீரமும்.
3. முற்று; முற்றிமூன்; றுலகமு, றுலகுக்கு, றுலகினு.
4. விளம்ப; விளம்பின் மேலையோய். 15

31. விலங்கின ருயிர்கெட விலக்கி மீள்கலா
திலங்கையி னினிதிருந் தின்பந் துய்த்துமேல்
குலங்கெழு காவல குரங்கிற் றங்குமோ
உலங்குநம் மேல்வரி னெழிக்கற் பாலதோ.

'குலம் கெழு காவல - குலம் விளங்கத் தோன்றிய மன்னவ! விலங்கினர் உயிர் கெட - உன் ஆணைக்குக் குறுக்கே நின்ற பகை வர்களின் உயிர் நீங்க, விலக்கி மீள்கலாது - (அவர்களைக்) கொன் றெழித்து வெற்றியுடன் மீளவேண்டியிருக்க, அவ்வாறு புரியாமல், இலங்கையின் இனிது இருந்து இன்பம் துய்த்துமேல் - இலங்கை நகரில் இனிமையுறத் தங்கி நின்று இன்பத்தை மேற்கொண் டிருப்போ மாகில், (நம்மவரைத் தாக்குவ தென்பது), குரங்கில்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தங்குமோ - ஒரு குரங்களவில் நின்று விடுமோ? உலங்கும் நம் மேல் வரின் ஒழிக்கல் பாலதோ - கொசுகும் நம்மேல் எதிரிட்டு வரின் அச்செயல் தவிர்க்கும் தன்மையதோ?

விலங்குதல் - குறுக்கிடுதல்; குறுக்கே படர்வதால் நாலுகாற் பிராணிகட்கு விலங்கு என்று பெயர் வந்தது. விலங்கினர் விலக்கி என்பதில் எதுகை நயம் காண்க. உலங்கு - கொசுகு; 'கலுழன் உலங்கின் மேலெழுந் தென்ன'; சுந்தர. 865. ஓ - எதிர்மறை.

பி - ம். 1. விலங்கினர், விலங்கி; விழ்த்தலால், மீள்கிலா.
2. னிருந்தினி; துய்த்தியேல், துற்றியேல், துய்த்துற.
3. காவலா; தலங்கெழு காவ லாகித் தாங்குமோ.
4. மேல்வரவு. 20

**32. போயின குரங்கினைத் தொடர்ந்து போயிவண்**
**ஏயின ருயிர்குடித் தெவ்வந் தீர்கலம்**
**வாயினு மனத்தினும் வெறுத்து வாழ்துமேல்**
**ஓயுநம் வலியென வுணரக் கூறினன்.**

'போயின குரங்கினை தொடர்ந்து போய் - நகரைச் சுட்டெரித்துச் சென்ற குரங்கைப் பின் பற்றிச் சென்று, இவண் - இந்நகரின் மீது, ஏயினர் - (அந்தக் குரங்கை) ஏவியவர்களின், உயிர் குடித்து - உயிரைப் பருகி, எவ்வம் தீர்கலம் - நமது மனத்துயரம் நீங்கி யின்புறாமல், (நடந்ததை எண்ணி), வாயினும் மனத்தினும் வெறுத்து - வாயினுல் வெறுப்புக் கொண்டு கூறியும் உள்ளத்தால் நொந்தும், வாழ்துமேல் - உயிர் தரிப்போமாயின், நம்வலி ஓயும் என உணர கூறினன் - நமது வலிமை நீங்கும்' என்று இராவணன் மனத்திற் படும்படி சொன்னான்.

உயிர் குடித்தல் - 'உண்டற் குரிய வல்லாப் பொருளை யுண்டது போலக் கூறலு மரபே' என்பது பற்றி வந்தது. முன் பாட்டில் அயர்தல் கூடாது என்றவன் இப்பாட்டில் மேற்செய்ய வேண்டுவதை மொழிகின்றான். 16 முதல் இச் செய்யுள் முடிய பிரகத்தன் கூற்று.

பி - ம். 1. தொடர்ந்து போயதை, போயிவன், போயவன், போயவண்.
2. ஏயெனவுயிர், ஏயினனுயிர்; தெவரும்; தீர்ந்திலம், தீர்கிலம்.
3. மறுத்து, மறந்து. இருந்தகம் பொறுத்து.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இதன்பின் ஓர் அதிகப்பாடல்.

பின்னுமொன் றுரைத்தனன் பிணங்கு மானிட
ரன்னவ ரல்லர்மற் றரக்க ரென்பதற்
கின்னிலை பிடித்தனை யிறைவ நீயெனு
முன்னிரு பக்கனீ துரைத்து முற்றினன்.

இதன்பின் தேவரும் என்ற பாடல் ஓர் பிரதியில் உள்ளது. 21

## மகோதரன் கூற்று

**33. மற்றவன் பின்னுற மகோத ரப்பெயர்க்**
**கற்றடந் தோளினன் கனலிற் காந்துவான்**
**முற்றுற நோக்கினன் முடிவு மன்னதால்**
**கொற்றவ கேளென வினைய கூறினன்.**

மற்றவன் பின்னுற - அந்தச் சேனைத் தலைவனை யடுத்து, மகோதரன் பெயர் கல்தட தோளினன் - மகோதரன் என்ற பெயருடைய மலை ஒத்த பெரிய புயங்களை யுடையவன், கனலின் காந்துவான் - (வெகுளியால்) தீயொத்து மனம் கொதிப்பவனாய், முற்றுற நோக்கினன் - முற்றிலும் பார்த்து, (இராவணனை நோக்கி), 'கொற்றவ - வெற்றி வீரனே! முடிவும் அன்னது - தீர்மானமாகச் செய்ய வேண்டுவதும் சேனை காவலன் கூறிய அதுவேயாம்; கேள் என - நான் சொல்வதைக் கேட்பாயாக' என்று, இனைய கூறினன் - பின் வரும் வார்த்தைகளைச் சொல்லலானான். ஆல் - அசை.

மகோதரன் - யுத்த. இலங்கை கேள்விப்; 37. கல் - மலை; 'தென்குமரி வடபெருங்கல்' (புறநா. 17; 1). கனலிற் காந்துதல்; வெகுளியின் மெய்ப்பாடு; 'புத்தி போய்க்காந்துகின்றது' (ஆரணிய. 208); காந்தின மனத்தினர்' (ஆரணிய. 591). முடிவு - ஆலோசனையின் முடிவு.

பி - ம். 1. விண்ணுற, மொழிந்தபின்.
2. தோளினன்; எரியுங் கண்ணினன்;
3. நோக்கினன், நோக்கிடின்.
4. வினைவு கூறுவான், தொழுது கூறுவான்,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


34. தேவரு மடங்கின ரியக்கர் சிந்தினர்
தாவருந் தானவர் தருக்குத் தாழ்ந்தனர்
யாவரு மிறைவரென் றிறைஞ்சு மேன்மையர்
மூவரு மொதுங்கின ருனக்கு மொய்ம்பினோய்.

'மொய்ம்பினோய் - வலிமை பெற்றவனே! தேவரும் அடங்கினர் இயக்கர் சிந்தினர் - உனக்குத் தேவர்களும் அடங்கியொழுகினர், இயக்கர்களும் இரிந்தோடினர்; தாவரும் தானவர் தருக்கு தாழ்ந்தனர் - வன்மை வாய்க்கப் பெற்ற அசுரர்களும் செருக்கடங்கினர்; யாவரும் இறைவர் என்று இறைஞ்சும் மேன்மையர் - உலகினர் எல்லோரும் முதன்மைபெற்ற தலைவர்கள் என வணங்கும் சிறப்பு வாய்ந்தவர்களான, மூவரும் உனக்கு ஒதுங்கினர் - (பிரமன், திருமால், உருத்திரன்) என்ற மூவரும் உன் வழிக்கு வராது விலகினர்.

தேவரும் மடங்கினர் எனினுமாம். தானவர்: தனுவழியில் வந்தவர்; தத்திதாந்தப் பெயர். மொய்ம்பு - தோள்; அது பின் தோள் வலிக்கு ஆயது. ஒதுங்குதல் - எதிர் நிற்கமாட்டாது விலகுதல். தேவரு மடங்கினர்; (ஒப்பு); ஆரணிய. 871; யுத்த. மூலபல. 3. மூவரும் ஒதுங்கினர்; (ஒப்பு) சுந்தர. 431, 475. தேவரும் மூவரும் இராவணனால் முறியடிக்கப் பட்டதை உத்தர காண்டத்தில் அவனது திக்விசயம் கூறுமிடத்துக் காண்க.

பி - ம். 2. தருக்குந்.
3. ஏவரு முனிவரு மேத்தி நின்றனர்; யாவரு மிறைவனென்; மெய்ம்மையர், மேன்மையாய், மேனையோர்.
4. மடங்கினர்; முன்பினோய், மொய்ம்பினல்.

சில பிரதிகளில் இச்செய்யுள் சேனைகாவலன் மொழியாக அமைந்துள்ளது.



35. ஏற்றமென் பிறிதினி யெவர்க்கு மின்னுயிர்
மாற்றுறு முறைமைசால் வலியின் மாண்பமை
கூற்றுவன் றன்னுயிர் கொள்ளுங் கூற்றெனத்
தோற்றுநின் னேவறன் றலையிற் சூடுமால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'எவர்க்கும் இன் உயிர் மாற்றுறு முறைமை சால் - யாவராயினும் அவர்களின் இனிய உயிரை உடலினின்று வேறுபடுத்துகின்ற ஒழுகலாறு நிறைந்த, வலியின் மாண்பு அமை கூற்றுவன் - வலிமையின் பெருமை செறிந்த யமனும், நீ தன் உயிர் கொள்ளும் கூற்று என - நீ தனது உயிரைக்கவரும் பிறிதோர் யமன் என்று, தோற்று - உன்னிடம் தோல்வியுற்று, நின் ஏவல் தன் தலையில் சூடும் - உன் கட்டளைகளைச் சிரமேற் கொண்டு நிறைவேற்றும்; இனி ஏற்றம் பிறிது என் - இதனைக் காட்டிலும் வேறு உனக்குப் பெருமை யளிப்பது யாது? ஆல் - அசை.

உயிர் மாற்றுதல் - உயிரை உடலினின்று வேறு படுத்தல். மாற்றுறு - உறு, துணைவினை. காலன் காலனாக இங்கு இராவணன் குறிக்கப் பெற்றமை காண்க. காலன் இராவணனுக்கு ஏவல் புரிவது; ஆரணிய : 570.

பி - ம். 2. மாற்றரு; முறைமையான் வலியு; மாண்டமை.
3. கூற்றுநீ, கூற்றினைத், கூற்றுவனுயிரையும்; உயிருண்ணுங்.
4. தோற்றுநின் ஒனவன்; தலைமேற். 24

36. வெள்ளியங் கிரியினை விடையின் பாகனோ
டள்ளிவிண் டொடவெடுத் தார்த்த வாற்றலாய்
சுள்ளியி லிருந்துறை குரங்கின் றோள்வலிக்
கெள்ளுதி போலுநின் புயத்தை யெம்மொடும்.

'வெள்ளி அம் கிரியினை - வெண்ணிறமான கயிலாய மலையை, விடையின் பாகனோடு - இடபத்தைச் செலுத்துபவனாகிய உருத்திர மூர்த்தியோடும், விண்தொட அள்ளி எடுத்து - ஆகாயத்தைத் தீண்டும்படி எளிதாக உயர்த்தித் தூக்கி, ஆர்த்த ஆற்றலாய் - சிவபிரான் மகிழுமாறு சாமகானம் செய்த வன்மை வாய்ந்தவனே! சுள்ளியில் இருந்து உறை குரங்கின் தோள்வலிக்கு - மரத்தின் சிறு கிளையிலிருந்து வசிக்கின்ற ஒரு குரங்கினுடைய புயவலிக்கு முன்பாக, நின் புயத்தை எம்மொடும் எள்ளுதி போலும் - உனது தோள் வன்மையை எங்கள் வலிமையொடுங் கூட்டி இகழ்வாய் போலும்.

வெள்ளியங் கிரியினை எடுத்தது; ஆரணிய. 258, 319, 327, 596, 742, 848, 849, 919; யுத். அங்கதன் தூது. 94; முதற் போர். 209; கும்ப. 1; மாயாசீதை. 7. சிறிதும் முயற்சி இன்றி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மலையினை உயர்த்தான் என்பான் அள்ளி என்ருன். சுள்ளி - மெல்லிய கொம்பு; 'சுள்ளிக்கேன் கோடாலி' (தனிப்பா.); இது சாகா மிருகம் என்ற வடசொற்றொடரின் தமிழாக்கம். எள்ளுதல் - இகழ்தல்; ஆரணிய. 693; சீவக. 847; 'எள்ளல் இளமை பேதைமை மடனென், றுள்ளப்பட்ட நகைநான் கென்ப.' (தொல். மெய்ப்பாட். 4). நின்புயத்தை யெம்புயத்தொடும் என விரிக்க.

பி - ம். 1. வெள்ளியின் கிரியினை.
2. தூர்க்கும்.
3. விருந்துறை.

25

37. மண்ணினும் வானினு மற்றை யொன்றினும்
கண்ணினி னீங்கினர் யாவர் கண்டவர்
நண்ணரும் வலத்தினர் எண்ணின் நாயக
எண்ணுவ தீவர்திறத் தெண்ண லேயுமோ.

'நாயக - தலைவனே! மண்ணினும் வானினும் - பூமி வான் என்ற இரண்டிலும், மற்றை ஒன்றினும் - இவற்றினும் வேருன பாதளத்தினும், கண்ணினில் நீங்கினர் - உன் விழிக்கு அகப்படாமல் விலகினவராக, நண் அரு வலத்தினர் - கிட்டுதற்கரிய வன்மையுடையவர், யாவர் கண்டவர் - யாவரே காணப்படுகின்றனர்? எண்ணின் - ஆய்ந்து நோக்கின், எண்ணுவது - மிக்க வலியுடையவர் பொருட்டுக் கருத வேண்டுவனவற்றை, இவர் திறத்து எண்ணல் ஏயுமோ - இந்த வலியற்ற மனிதர் பொருட்டு ஆலோசித்தல் தகுவதோ?

கேவலமான மனிதரை ஒரு பொருளாகக் கருதி வெகுவாக ஆலோசிப்பது மேம்பாடாகாது என்ருன். நண்ண அரும் என்பது நண்ணரும் எனத்தொகுத்தது. எண்ணுவது எண்ணல் என்பதில் எதுகை நயமும், இச்செய்யுளை இரணியன் வதை. 71-ஆம் செய்யுளோடு ஒப்பிடுக.

பி - ம். 1. மற்று முற்றுதின், மற்று முற்றுநீ, மற்றை யண்டத்தின்.
2. கண்ணணி, கண்ணினு; எனக்கெதிர்.
3. நண்ணிரும், நண்ணினர்; வலத்தவர்; நண்ணினுயக, நண்ணு நாயக, என்னினுயக, நண்ணினுயகன்; யாவர்.
4. எண்ணுவ திவர்திறத் தெண்ணலாகுமோ; எண்ணுறு திறத்தவர்க் கெண்ணலாவதோ; எண்ணில திறந்தவ ரெண்ணிலாவரோ,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இதன்பின் ஓர் அதிகப்பாடல்.

எரிவிழி நுதலின னிசையும் நின்றவத்
தருமைகண் டழித்தன னழிவி லாததோர்
பெருவர மென்றிடிற் பேதை மானிடர்
இருவரும் குரங்குமென் செய்ய லாவதே. 26

38. இடுக்கிவ ணியம்புவ தென்னை யீண்டெனை
விடுக்குவை யாமெனிற் குரங்கை வேரறுத்
தொடுக்கரு மனிசரை யுயிருண் டுன்பகை
முடிக்குவென் யானென முடியக் கூறினன்.

'இவண் இடுக்கு இயம்புவது என்னை-இங்கு நமக்குத் துன்பம் நிகழ்ந்த தென்று கூறுவது எதன் பொருட்டு? ஈண்டு எனை விடுக்குவை ஆம் எனில் - இப்போதே என்னை அனுப்புவாயானால், குரங்கை வேர் அறுத்து - குரங்கு இனத்தை அடியோடு கொன்றொழித்து, ஒடுக்க அரு மனிசரை உயிர் உண்டு - வெல்லுதற் கரியரென்று சொல்லப்படுகின்ற மனிதருடைய உயிரைக் கவர்ந்து, உன் பகை முடிக்குவென் யான் என முடிய கூறினன் - உன் பகையை யானே முடிக்கின்றேன்' என்று மகோதரன் சொல்லி முடித்தான்.

இடுக்கு - இடுக்கண். துன்ப மிகுதியாற் கண்கள் இடுகிச் சிறுத்தலின் இடுக்கு என்றான்; இடுக்கு - குறுக்கே என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. முடியக் கூறினன் என்பதில் அவனுக்குப் பின்னர் நிகழவிருக்கும் வாழ்நாளிறுதிக் குறிப்பைக் காணலாம். இதனைச் சிலேடை பற்றி எழுந்த அங்கதம் என்ப; மங்கலப் பொருளிலேயே அமங்கலப் பொருள் தொனிப்பது இதன் இலக்கணம். செய்யுள் 34 முதல் இச் செய்யுள் முடிய மகோதரன் கூற்று.

பி - ம். 1. மிடுக்கிவ னியம்புவ தென்னை வெய்தென இடுக்கிவன்; விளம்புவ, வேண்டுவ; தென்ன, தில்லை.
3. மனிதரை; யொடுக்கியுள், ஒடுக்குவன்.
4. நானென. 27

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## வச்சிரதந்தன் கூற்று

39. இச்சிரத் தவனுரைத் திறுக்கு மேல்வையில்
வச்சிரத் தெயிற்றவன் வல்லை கூறுவான்
அச்சிரத் தைக்கொரு பொருளன் றென்றனன்
பச்சிரத் தம்பொழி பரிதிக் கண்ணினன்.

இ சிரத்தவன் உரைத்து இறுக்கும் ஏல்வையில் - இந்தத் தலைவன் கூறி நிறுத்திய அளவில், வச்சிரத்து எயிற்றவன் - வச்சிர தந்தன் என்பவன், வல்லை கூறுவான் - விரைந்து மொழி வானாய், பச்சிரத்தம் பொழி பரிதி கண்ணினன் - புதிய உதிரத் தைக் கக்கிடுகின்ற சூரியன்போற் சிவந்து தோன்றும் விழிகளை யுடையவனாகி, 'அ சிரத்தைக்கு ஒரு பொருள் அன்று என்றனன் - அத்தகைய விசேட முயற்சியைக் காட்ட இவர்கள் ஓர் பொரு ளன்று' என்று பகர்ந்தான்.

சிரத்தவன் - தலைவன் என்ற பொருளில் வந்தது, 'இச்சிரத் தவன் - நெடுங்காலமாக இருப்பவன்; சிரம் - நெடுங்காலம் என்பன' ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. ஏல்வை - காலம்; ஆரணிய. 1170; 'அரசாள்கின்ற ஏல்வை'; உத்தர. சம்புவன். 6. வச்சிரத் தெயிற்ற வன்; இது வஜ்ரதந்தன் அல்லது வஜ்ரதம்ஷ்ட்ரன் என்ற வட சொல்லின் தமிழாக்கம். இதுபோன்ற பல வடமொழிப் பெயர்களை ஆசிரியர் தமிழ்ப்படுத்துவதை இந்நூலில் ஆங்காங்குக் காணலாம். வல்லை - விரைவு; ஆரணிய. 792. சுந்தர. 752; 'வல்லே மறவல் ஓம்புமதி எம்மே' (தொல். சொல். 412. உதாரண மேற்கோள்); 'வல்லே யகறிரோ' (பொருந. 122). இனி அச்சிரத்தா என்றதை வடசொல்லாகக் கொண்டு, கவனமின்றி யிருக்கும் ஒரு பொருள் அன்று எனினுமாம். பச்சிரத்தம் பொழிதல் வீரவெகுளியின் மெய்ப்பாடு. பரிதி வட்டவடிவு பற்றியும் ஒளிபற்றியும் வந்த உவமை. பரிதி ஒளிக்கற்றைகளைப் பொழியும்; இவன் கண் பசிய நிறத்ததான உரத்தைக் கான்றது என்க. பச்சிரத்தம்; 'பலிக் கலத் தூற்றிய பச்சிரத்தம்' (மதுரைக். 53) 'ஆயிரக் கணக்கான அரக்கர்கள் பரதனால் அனுப்பப்பட்ட சேனைவீரர்போல் மாறு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வேடம் பூண்டு இராமனோடு வரச்செய்து, பகைவர்களை வஞ்சனையால் வெல்ல வேண்டும் என்று வச்சிர தம்ஷ்ட்ரன் கூறினன்' என்பது வான்மீகம்.

பி - ம். 1. இச்சரித் தவனுறை யிறுக்கு ; மேல் வையுள்.
2. தெயிற்றினன், தெயிற்றினன் ; வல்ல ; வணங்கிக் கூறுவான்.
3. பொருளுண்டாயினும், பொருளின்றாயினும், பொருளன்றாயினும் ; பொருளுண்டாயினும்.
4. பருதி. 28

40. போயினி மனிசரைக் குரங்கைப் பூமியில்
தேயுமின் கைகளாற் றின்மி னென்றெமை
ஏயினை யிருக்குவ தன்றி யென்னினி
ஆயுமி தெம்வயி னயிர்ப்புண் டாங்கொலோ.

(வச்சிர தந்தன்), 'இனி போய் - இனி, சென்று, மனிசரை குரங்கை கைகளால் பூமியில் தேயுமின் - மனிதரையும் குரங்கையும் கைவன்மையால் தரையில் இட்டுத் தேயுங்கள்; தின்மின் - உண்ணுங்கள்'; என்று எமை ஏயினை இருக்குவது அன்றி - என்று எங்களுக்குக் கட்டளையிட்டு அமர்வதல்லாமல், இனி ஆயும் இது என் - இப்போது என்ன புரிவது என்று ஆலோசிப்பது என்னை ? எம்வயின் அயிர்ப்பு உண்டாம் கொல் - எங்கள் வலியைக் குறித்து உனக்கு ஐயம் உண்டோ? ஓகாரம் வினா.

அயிர்ப்பு - ஐயம் ; பாரத. திரௌபதி. 62 ; 'உடனயிர்ப் பிரிய' (பெருங். மகத. 27, 203). கொல் - ஐயப்பொருளில் வந்தது. 'கொல்லே ஐயம்' (தொல். இடை. 20).

பி - ம். 1. போயின ; பூமிமேல்.
2. னென்றமை, னென்றவை.
3. ஏயிவண் ; யெண்ணினில், யெண்ணீநீ, யெண்ணினை.
4. தென்வயின், தெமர்வயின் ; டாகவோ, டாய்க்கொலோ. 29

41. எவ்வுல கத்துநின் னேவல் கேட்கிலாத்
தெவ்வினை யறுத்துனக் கடிமை செய்தயான்
தவ்வின பணியுள தாகத் தான்கொலோ
இவ்வினை யென்வயி னீகலா தென்றான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'ஏ உலகத்தும் - எந்த உலகில் இருப்பினும், நின் ஏவல் கேட்கிலா - உன் கட்டளைக்குச் செவிகொடாத, தெவ்வினை அறுத்து - பகைவரை ஒழித்து, உனக்கு அடிமை செய்த யான் - உனக்கு அடிமைத் தொழில் புரிந்த யான், தவ்வின பணி உளதாக தான் கொலோ - தவறிய கட்டளை உள்ளதாக மனத்து நினைந்தோ, இவ் வினை - பகைவரைக் கொன்றொழிப்பதான இந்தக் காரியத்தை, என்வயின் ஈகலாது என்றுன் - என்னிடத்து ஒப்படையாமல் இருத்தல்?' என்று மொழிந்தான் வச்சிர தந்தன்.

தெவ்வுப் பகை யாகும்; 'தெவ்வுப்புலம் சிதைய வெய்கணை சிதறி' (தொல். சொல். 346. உதாரண மேற்கோள்); ஆரணிய. 583, 625, 1067. தவ்வுதல் - தவறுதல்; கெடச் செய்தலும் ஆம்: 'எறிந்த வீச்சுத்தவ்விட' (யுத்த. அதிகாயன். 213). ஈகலாது; ஈகலாதது என்பதன் விகாரம். இவ்விரண்டு (40, 41) பாடல்களும் வச்சிர தந்தன் கூற்று.

பி - ம். 2. தெவ்வரை; மறுத்துனக்; செய்நியான்.
3. தவ்வினைப்; பழியுள; வாகத், தாகித்.
4. யெம்வயின். 30

## துன்முகன் கூற்று

42. நின்மினென் றவன்றனை விலக்கி நீயிவண்
என்முனு மெளியைபோ லிருத்தி யோவெனு
மன்முகம் நோக்கினன் வணங்கி வன்மையால்
துன்முக னென்பவ னினைய சொல்லினுன்.

'நின்மின் என்று' அவன் தனை விலக்கி - 'நீ நில் என்று' அந்த வச்சிர தந்தனைத் தடுத்து, துன்முகன் என்பவன் - துன்முகன் என்னும் அரக்கன், 'நீ - நீ, இவண் - இப்போது, என் முனும் எளியை போல் இருத்தியோ எனு - (வீரம் செறிந்த) என் முன்னரும் எளியவன் போன்று இருக்கக் கடவையோ?' என்று, மன் முகம் நோக்கினன் வணங்கி - அரசனுன இராவணன் முகத்தைப் பார்த்து வணக்கம் செலுத்தி, வன்மையால் இனைய சொல்லினுன் - உரத்த குரலில் இவ்வார்த்தைகளை மொழியலானுன். இவற்றை அடுத்துள்ள ஆறு செய்யுட்களிற் காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தன்னை ஒத்த வீரரிருக்கும் போது இராவணனுக்குக் கவற்சி வேண்டுவதின்று என்பான் 'என் முனும் எளியையோ' என்முன் என்க. உம்மை - உயர்வு சிறப்பு. பலபடவந்த அரக்கர்களின் பெயர்களை ஏற்ற பெற்றி எதுகையினமைத்துப் பாடிய ஆசிரியர் திறம் போற்றத்தக்கது; வச்சிரத் தெயிற்றவன், பிசாசன் என அமைத்துப்பாடுவது காண்க. வன்மையாற் சொல்லினுன் என இணைக்க.

பி - ம். 1. நின்னிலென் ; றவனையும் ; நீயிதன் : நீயிவை.
2. என்னிலு, மென்னினு ; மெளியர்போ ; லிருத்தி, லிறத்தி, லிசைத்தியோ, உரைத்தியோ வென.
3. வன்கையால், வாய்மையால் ; வணங்கு கையினன்.
4. சொல்லுவான். 31

43. திக்கயம் வலியில தேவர் மெல்லியர்
முக்கணுன் கயிலையு முரணின் ருயது
மக்களுங் குரங்குமே வலிய ராமெனின்
அக்கட விராவணற் கமைந்த வாற்றலே.

(உனது ஆற்றலுக்கு முன்பு), திக்கயம் வலி இல - எட்டுத்திக்கு யானைகளும் வலியற்று நின்றன; தேவர் மெல்லியர் - தேவர்களும் உரமிழந்து மெலியவ ராயினர்; முக்கணுன் கயிலையும் முரண் இன்று ஆயது - மூன்று விழிகளையுடைய சிவ பெருமானது கைலையங்கிரியும் வலியற்றதாயிற்று; (அவ்வாறு பெருவீரம் செறிந்த உனக்கு முன்பு) மக்களும் குரங்குமே வலிய ராம் எனின் - மனிதரும் குரங்குகளுமே வன்மை யுடையவராயின், அக்கட இராவணற்கு அமைந்த ஆற்றல் - இராவணனிடம் செறிந்த வன்மையும் வீரமும் வியக்கத் தக்கதே. ஏ. அசை.

திக்கயம் - இதன் விவரம், கிட்கிந்தா. 441. உரைக் குறிப்புப் பார்க்க. இராவணன் திசையானைகளை வென்றது; ஆரணிய. 258, 223, 328, 557, 643, 646, 752, 848, 874 சுந்தர. 303, 312, 666. இந்திராதி தேவர்களை வென்றது; ஆரணிய. 329, 920, 330. முக்கணுன் கயிலையை முரணறச் செய்தது; ஆரணிய. 258, 319, 327, 596, 742, 848, 889, 919; சுந்தர. 117, 272, 303, 451, 452,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

743; யுத்த. முதற்போர். 94, 209; மாயா சீதை. 8. மற்றும் இவ்வரிய செயலைத் தேவாரத் திருமுறையில் திருஞான சம்பந்தர், அப்பர் பாசுரங்களிலும் காண்க. இராவணன் - அழுதவன், பிறரை அழச் செய்தவன் என்று இருபொருள்படும் என்பர். 'பண்டைத் தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்' (யுத்த. கும்ப. 87) என்ற இடத்தில் முன் பொருளைக் காணலாம். அக்கட என்பது வியப்பைக் குறிப்பதாய்க் கன்னடத்திருந்து தமிழில் போந்து வழங்கும் திசைச் சொல். எக்கட விருந்த ஆற்றலே - என்ற பாடத்துக்கு ஆற்றல் எத்திசைக் கண் இருந்தது என்க. அக்கடா - அங்கே, என்று தெலுங்கில் வழங்கும். தேவர் மெல்லியர் - 'தேவர் மெய்ப்புகழ் தேய்த்தவன்' (யுத்த. மூலபல. 3). சோழனுடன் மாறுபட்டுக் கம்பர், தெலுங்க மன்னனுன வாரங்கல் பிரதாபருத்திரனிடம் சென்று சில காலம் இருந்ததாக வரலாறுண்டு என்பது இங்கே அறியற்பாலது.

பி - ம். 1. திக்கையெம்; மெல்லியோர்.
2. முரணன்றுயது.
3. வலியவாமெனின், வலிய நாமெனும்.
4. அக்கடா; அமைந்த தாற்றலே; எக்கட இராவணற் கிருந்த ஆற்றலே.

32

44. பொலிவது பொதுவுற வெண்ணும் புன்றொழில்
மெலியவர் கடனமக் கிறுதி வேண்டுவோர்
வலியின ரெனிலவர்க் கொதுங்கி வாழ்துமோ
ஒலிகழ லொருவநம் முயிருக் கன்பினல்.

'பொது உற - பொதுவாக, எண்ணும் புன் தொழில் - ஆலோசனை புரிதலாகிய அற்பத் தொழில், மெலியவர் கடன் - வன்மை யற்றவரின் செயலாக, பொலிவது - விளங்குகின்றது; நமக்கு இறுதி வேண்டுவோர் - நமது ஒழிவை விரும்பும் நமது பகைவர், வலியினர் எனில் - வன்மை வாய்ந்தவர் என்று நம் கருத்திற் றோன்றினும், ஒலி கழல் ஒருவ - ஒலி செய்கின்ற வீர கண்டை புனைந்த ஒப்பற்ற வீர! நம் உயிருக்கு அன்பினல் - நம்முயிரிடத்து அன்புவைத்து, அவர்க்கு ஒதுங்கி வாழ்துமோ - அவர்கட்கு அடங்கி வாழக்கடவோமோ?'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'எண்ணுவது மெலியவர் கடன்; நாம் போருக்கு எழுவதே நமக்குப் பொருத்தமாகும்' என்று துன்முகன் கூறினன் என்க. ஆலோசனை வேண்டுவதின்று என்பது அவன் கருத்து. அடுத்த செய்யுளையும் காண்க. 'ஒலி கழலொருவ' என்ற சொற்களால் இராவணனுடைய அளவிறந்த வீரத்தை நினைவூட்டியவாறு.

பி - ம். 1. பொலிவுற; வென்னும்.
2. வேண்டுவார், வேண்டுமானல்.
3. லெனிலவற்; வாழுமோ, வாழ்துமேல், வாழ்வதோ. 33

45. கண்ணிய மந்திரங் கருமம் காவல
மண்ணியன் மனிசருங் குரங்கு மற்றவும்
உண்ணிய வமைந்தன வுணவுக் குட்குமேல்
திண்ணிய வரக்கரிற் றீரர் யாவரோ.

காவல - அரசே! மண் இயல் மனிசரும் குரங்கும் மற்றவும் - பூமியில் வாழும் மனிதரும் குரங்குகளும். (அவற்றின் இனமான) கரடிகள் முதலியனவும், உண்ணிய அமைந்தன - அரக்கராகிய நாம் உண்பதற்கு ஏற்பட்டவை; (அங்ஙனமாகவும்) உணவுக்கு உட்குமேல் - உணவுப் பொருளாகிய அவர்களிடத்து அச்சம் கொள்வோமெனின், திண்ணிய அரக்கரில் தீரர் யாவர் - உடலுறுதி மனவுறுதி கொண்டுள்ள அரக்கராகிய நம்மைப் பார்க்கிலும் தைரியசாலிகள் யாவர்? (இல்லை என்றபடி); (அவ்வாறு அஞ்சுவோமாயின்), கண்ணிய மந்திரம் கருமம் - இப்பொழுது மேற்கொள்ளும் ஆலோசனை புரியத்தக்கதேயாம். ஓ - வினா.

கண்ணுதல் - கருதுதல்: ஆரணிய. 1188; சுந்தர. 308, 323, 939. 'மண்ணியல் மனிசரும்' என்பது இகழ்ச்சி. 'நமக்கு உணவாகக்கூடிய மனிதரையும் குரங்கையுமா நாம் அஞ்சுவது?' என்றான். உண்ணிய - செய்யிய என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். உட்குதல் - அஞ்சுதல்; 'ஓடவுட்கியுயிருலைந்தாரரோ' (ஆரணிய. 293); 'ஆர்கலி தானுமுட்கி யசைவுற' (ஆரணிய. 418); 'பீடுடையவரு முட்க' (சீவக. 300). தீரர் - தீரரல்லர் என்பது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பிற குறிப்பு. மந்திரம் கருமமன்று என்பதே துன்முகன் கருத்து; முன் செய்யுளையும் காண்க.

பி - ம். 1. மந்திரக் கருதும்.

2. மன்னிய; மற்று நாம், மற்றொக்.

3. வுரையுங் கேட்கியேற்.

4. இன்னிய ரரக்கரிற்; இன்னிய வெமர்க ளிற்றியராவதோ. 34

46. எரியுற மடுப்பது மெதிர்ந்து ளோர்படப்
பொருதொழில் யாவையும் புரிந்து போவதும்
வருவதுங் குரங்குநம் வாழ்க்கை யூர்கடந்
தரிதுகொ லிராக்கதர்க் காழி நீந்துதல்.

'வருவதும் - நம் நகர்க்கண் வருவதும், (வந்து), எரி உற மடுப்பதும் - நகரத்தைத் தீயுண்ணச் செய்வதும், எதிர்ந்துளோர் பட - தன்னொடும் பொருதவர் அனைவரும் இறந்து ஒழியுமாறு, பொருதொழில் யாவையும் புரிந்து போவதும் - போர்த்தொழில் வகை யாவும் செய்து (பிறகு) நமது ஊரை விடுத்துச் செல்வது மாகிய (இவை யனைத்தும் புரிவது), குரங்கு - ஓர் குரங்கேயாகும்; இராக்கதர்க்கு - அரக்கராகிய நம்மனோர்க்கு, நம் வாழ்க்கை ஊர் கடந்து - நமது இருப்பிடமான இலங்கை நகரை விட்டு, ஆழி நீந்துதல் - சமுத்திரத்தைத் தாண்டி (அந்தக் குரங்கிருக்கும் இடத்திற்குப்) போதல், அரிதுகொல் - அரியது போலும்!

நீந்துதல் - அரிதிற் கடத்தல். கொல் - ஐயம். வாழ்க்கை ஊர் - வாழ்தலையுடைய ஊர். இச்செய்யுளும் இகழ்ச்சிக் குறிப்பு. ஆழி கடந்து பகைவர்மீது போர் தொடுத்தலே இப்பொழுது செய்யத் தக்கது என்று வற்புறுத்தினன் என்க.

பி - ம். 2. யாவதும், ஆவதும்; புரிவதும் புரிந்து; புகலலெம்மொடும்.

3. வருவது.

4. லரக்கருக்.

35

47. வந்துநம் மிருக்கையு மரணும் வன்மையும்
வெந்தொழிற் றுனையின் விரிவும் வீரமும்
சிந்தையி னுணர்பவர் யாவ ரேசிலர்
உய்ந்துதம் முயிர்கொடிவ் வுலகத் துள்ளுளார்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'வந்து - நம் நகர்க்கண் வந்து, நம் இருக்கையும் அரணும் வன்மையும் - நமது இருப்பிடத்தையும் அரண் செறிந்துள்ள வகையையும் அதன் திண்மையையும், வெம் தொழில் தானையின் விரிவும் வீரமும் - கொடுந்தொழிலமைந்த நமது சேனையின் பரப்பிணையும் (அரக்கர்களான) நமது வீரத்தையும், சிந்தையின் உணர்பவர் - தமது உள்ளத்தால் நன்கு அறிந்தவராய், (நமக்குட் சிக்காமல்) தம் உயிர் கொடு - தமது உயிருடன், உயந்து - தப்பிப் பிழைத்துப் போகிறவர், இ உலகத்து உள் உளார் - இந்த உலகினிடத்து இருப்பவர், யாவரே சிலர் - (இந்தக் குரங்கல்லாமல் வேறு) எந்தச் சிலர் தாம் உளர்? (இல்லை யென்றபடி).

நம் பாலுள்ள அச்சத்தால் திரிபுவனத்தும் நாமிருக்கும் இடத்தை எவருமே கருதார்; ஆகவே அவர்கள் இங்கு வர மாட்டார் என்றபடி. குரங்கை நாம கொல்லாமல் விட்டது நமது பிழை; இனியேனும், நம் நகரைக் கண்டு சென்று மீண்ட குரங்கையும், வீரரிருவரையும் கொன்றொழித்தலே தகுதி என்றான்,

பி - ம். 1. வந்துன திருக்கையு, துனதிருக்கையின்.
2. தானையின் விதியும்; விரிவு மொன்றிவை, விரிவும் வெம்மையும்.
3. னுணர்ந்தவர், லுண்பவர், லுணர்குநர்.
4. முயிரொடிவ்; முயிர்கெட; உள்ளுவர்; உயிர்கொடிவ் வாழி நீந்துதல், உய்ந்தன நின்றமூன் றுலகத் துள்ளுமே. 36

**48. ஒல்வது நினையினு முறுதி யோரினும்**
**வெல்வது விரும்பினும் விளைவு வேண்டினும்**
**செல்வது மவருழைச் சென்று தீர்ந்தறக்**
**கொல்வதுங் கருமமென் றுணரக் கூறினான்.**

'ஒல்வது நினையினும் - இப்பொழுது நம்மால் இயல்வதை ஆராய்ந்தாலும, உறுதி ஓரினும் - (நமக்கு) உற்ற காரியத்தைக் கருதினாலும், வெல்வது விரும்பினும் - வெற்றி கொள்வதை வேண்டினாலும், விளைவு வேண்டினும் - இனிமையான முடிவை விழைந்தாலும், செல்வதும் - (அந்த இராம இலக்குவர் இருக்கும் இடத்திற்குப்) போவதும், அவர் உழை சென்று - அவரிடம் போய், தீர்ந்து அற கொல்வதும் - அவர்களின் உயிர் ஒழிந்து நீங்க

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அவர்களைக் கொல்வதுமே, கருமம் என்று உணர கூறினன் - மேற்கொள்ளத்தக்க காரியம்' என்று இராவணன் நன்கு தெரிந்து கொள்ளுமாறு மொழிந்தான்.

ஏனையோர்போ லன்றித் துன்முகன், பகைவர் உள்ள இடம் தேடிச் சென்று அவரை அழிப்பதே மேல் என்றான். ஒல்வது - 'ஒல்வதறிவது' (குறள். 472). 42-ஆம் செய்யுள் முதல் இச் செய்யுள் இறுதியாகத் துன்முகன் கூறியவை.

பி - ம். 1. உறுதியோர்கிலும்.
2. வீரம் வேண்டினும்; விஜயம் வேண்டினும்.
3. செல்வதிங் கவருழைச்; தேய்ந்தறக்.
4. கொல்வதுங் கருதுமென், கொல்வது தருமம். 37

## மாபெரும் பக்கன் கூற்று.

49. காவலன் கண்ணெதி ரவனைக் கைகவித்
தியாவதுண் டினிநமக் கென்னச் சொல்லினன்
கோவமும் வன்மையுங் குரங்குக் கேயென
மாபெரும் பக்கனென் றொருவன் வன்மையான்.

வன்மையான் மாபெரும் பக்கன் என்று ஒருவன் - மிகவும் வலிமை வாய்ந்த மாபெரும் பக்கன் என்ற ஒருவன், காவலன் கண் எதிர் - இராவணன் முன்பாகவே, 'கோவமும் வன்மையும் குரங்குக்கே - சினமும், வலிமையும் குரங்குக்கே உள்ளனவாகும்', என - என்று கூறிய, அவனை - அந்தத் துன்முகனை, கைகவித்து - (நீ வீரம் பேசியது அமையும் என்று) கை கவித்து அடக்கி, (ஒரு குரங்கின் பொருட்டு நாம் இத்துணைக் கவலைப் படுவோமானால்), நமக்கு இனி யாவது உண்டு - இனி நமக்கு என்ன வீரம் உள்ளது? என்ன - என்று, சொல்லினன் - மேலும் கூறுவானானான். இவற்றை இது முதல் நான்கு கவிகளில் காண்க.

கை கவித்தல் - 'கைகவி நறுநெய்' (சீவக. 400) என்ற தொடரும், 'போது மென்று கைகவித்தற்குக் காரணமான நல்ல நெய்' என்ற அதனுரையும் காண்க; 'வைகல் வைகல் கைகவி பருகி' (பொருந. 158), அகநா. 70-ம் காண்க. கைகவித்தியாவது குற்றியலிகரம். மாபெரும் பக்கன் - மகா பார்சுவன் என்ற வட

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சொல்லின் தமிழாக்கம். பகைவரிருக்கும் இடம் தேடிச் செல்ல வேண்டும் என்று துன்முகன் பகர்ந்தது மாபெரும் பக்கனுக்கு உடன் பாடின்றாகலின், கைகவித்தான் என்றார்.

பி - ம். 1. காவலன் றன்னெதிர் ; கைதவிர்ந்.
2. யாது கண்டினி யென்ன ; என்று கூறுவான்.
3. கோபமும் ; வண்மையுங், வெம்மையுங் ; குரங்கிற்றே ; யென.
4. வண்மையால். 38

50. முந்தினர் முரணிலர் சிலவர் மொய்யமர்
நந்தினர் தம்மொடு நனிந டந்ததோ
வந்தொரு குரங்கிடு தீயின் வன்மையால்
வெந்ததோ விலங்கையோ டரக்கர் வெம்மையும்.

'(குரங்கு நம் நகர்க்கண் வந்த போது), முந்தினர் - முன்னர்ப் போர்க்குச் சென்ற, முரணிலர் சிலவர் - வலிமை யற்ற சில வீரர், மொய் அமர் - பகைவரை நெருங்கி ஆற்றும் போரில், நந்தினர் தம்மொடு - இறந்து பட்டவருடன், (அரக்கர் வெம்மையும் - அரக்கரின் வீரியமும்) நனி நடந்ததோ - அறவே ஒழிந்ததோ? (அல்லாமல்), ஒரு குரங்கு வந்து இடு தீயின் வன்மையால் - தனிப் பட்ட ஒரு குரங்கு வந்து வைத்த நெருப்பின் வலிமையால், இலங்கையோடு அரக்கர் வெம்மையும் வெந்ததோ - இலங்கை எரியுண்டபோது அரக்கரின் மனத்தின் வேகமும் உடன் வெந் தொழிந்ததோ?

மொய் - பகை ; 'மொய் வெல்லும் குருதி வேலான்' (சீவக. 1704) ; 'மொய்யாரு வகையனுய்' (சீவக. 1802) ; மொய்யமர் ; இருபெயரொட்டுப் பண்புத்தொகை. நந்துதல் - அழிதல் ; சுந்தர. 615. அரக்கர் வெம்மையும் என்ற தொடர் ஈரிடத்தும் கூட்டப் பெற்றது.

பி - ம். 1. முந்துணர், முந்திலர் ; மொய்ம்மையார்.
2. தமரொடு ; நனி நயந்ததோ, நலி நயந்த தோர் ; நந்தின ரென்றுளம் நசையிற்றீர்ந்ததோ. 39


CC-0. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



51. மானிட ரேவுவார் குரங்கு வந்தீவ்வூர்
தானெரி மடுப்பது நிருதர் தானையே
ஆனவ ரதுகுறித் தழுங்கு வாரெனின்
மேனிகழ் தக்கன விளம்ப வேண்டுமோ.

'ஏவுவார் மானிடர் - (நீ சென்று வருக) எனக் கட்டளை பிறப்பிப்பவர் அற்பமான மனிதர்; (அவரால் ஏவப்பட்ட) குரங்கு - (ஒன்றுக்கும் பற்றுத) குரங்கு, இ ஊர் வந்து - இந் நகரில் புகுந்து, எரிமடுப்பது - தீவைப்பது; அது குறித்து - அதனை எண்ணி, (மிகவும் வீரம் செறிந்த) நிருதர் தானையே ஆனவர் - அரக்கர் வீரர்கள், அழுங்குவார் எனின் - மனம் வருந்துவார்கள் என்றால், மேல் நிகழ் தக்கன விளம்ப வேண்டுமோ - இனி மேல் நடைபெறக் கூடியவற்றைச் சொல்லவும் வேண்டுமோ? ஓகாரம்; வினு. தான்; அசை.

ஓர் தனிக்குரங்கு செய்த செயலைக் கண்டு நாம் மனம் புழுங்குவோ மெனின், நாம் அஞ்சினம் என்று நம் பகைவர்கள் தருக்குக் கொண்டு மேலும் மேலும் இடர் விளைக்கப் புகுவர்; ஆகலின் அதன் இச்செயலைப் பெரிதாகக் கருதல் நன்றன்று என்ருன். மேனிகழ் தக்கன - இன்னும் நடை பெறக் கூடிய தீய செயல்கள்.

பி - ம். 1. மானுடர்; ஏவலாற்.
2. தானவர், தானையை.
4: நிகழ்வதற் கினி, நிகழ்நவற்குரை; விளம்பல்; வேண்டுமால்.

இதன்பின் ஓர் அதிகப்பாடல்:—

கறைமிடற் றிறையன்று கமலத் தேவன்று
நிறைக டற்றுயில் வானன்று நின்றுவாழ்
சிறுதொழிற் குரங்கொடு சிறிய மானிட
ருறுதிறத் துணர்ச்சியி னுறுதி யாவதோ. 40

52. நின்றுநின் றிவைசில விளம்ப நேர்கிலென்
நன்றினி நரரொடு குரங்கை நாமறக்
கொன்றுதின் றல்லதோ ரெண்ணங் கூடுமோ
என்றன னிகல்குறித் தெரியுங் கண்ணினுன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'நின்று நின்று - இங்கேயே நின்று கொண்டு, இவை சில விளம்ப நேர்கிலென் - பகைவரின் பராக்கிரமத்தையும், நமது பலக் குறைவையும் குறித்துச் சொல்வதற்குச் சம்மதியேன்; இனி - இனிச் (செய்ய வேண்டுவது யாது எனின்), நரரொடு - எதிரிடும் மனிதருடனே, குரங்கை நாம் அற - குரங்கின் பெயரும் இன்றி ஒழியுமாறு, கொன்று நன்று தின்று அல்லது ஓர் எண்ணம் கூடுமோ - கொன்று நன்றாகத் தின்பதைத் தவிர்த்து வேறு எண்ணம் நமக்குப் பொருந்துமோ?' என்றனன் இகல் குறித்து எரியும் கண்ணினன் - என்று மாறுபாட்டைக் குறித்துக் கோபத்தீ வெளிப்படும் விழியினனான மாபெரும் பக்கன் சொன்னான்.

பகைவரிடம் தேடி அவர்களைக் கொல்வோம் என்றான் துன்முகன்; அதனை மறுத்து, 'அவர்கள் வந்தெதிர்ப்பரேல் அவரைப் பொருது வெல்வோம்' என்று மாபெரும் பக்கன் கூறியதாகத் தொனிப்பது காண்க. நாமற - நாமமுமற; 'வானரப் பேருமாளுமெனும் பொருள்' (கிட்கிந்தா. 558); நாம் - நாமம் என்பதன் தொகுத்தல்; 'நாமமு முருவமும் கரந்து நண்ணினாய்' (சுந்தர. 1112); 'நாமமு மநுமனென்பேன்' (சுந்தர. 1124). 'இகல் குறித்தெரியுங் கண்' வெகுளியின் மெய்ப்பாடு. (ஒப்பு); 'கைபிசையா வாய்மடியாக் கண்சிவவா வெய்துயிரா, மெய்குலையா வேரா வெகுண்டெழுந் தான்' (தண்டி. 70. மேற்.); 'அகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்' (புறநா. 300). செய்யுள் 38 முதல் 41 வரை மாபெரும் பக்கன் கூற்று.

பி - ம். 1. றிவைசெல; விளம்பி, வியம்பி; நேர்கிலன், நேர்வனே.

2. நன்றென, நன்றெனின், நன்று நீ; என்று போய்க் குரங்கொடு மனிதர் யாரையும்.

3. கொன்றுநின்; றெண்ணுங்; றெண்ணல், கொன்றபின் னல்லதோர். 41

## பிசாசன் கூற்று

53. நிசாதிசை போதுநா மரசன் செய்வினை
உசாவின னுட்கின னொழிதும் வாழ்வென்றான்
பிசாசனென் றொருபெயர் பெற்ற பெய்கழல்
நிசாசர னுருப்புணர் நெருப்பி னீர்மையான்.

பிசாசன் என்று ஒரு பெயர் பெற்ற - பிசாசன் என்று பெயர் படைத்த, பெய்கழல் நிசாசரன் - வீரகண்டை யணிந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அரக்கன், நெருப்பின் உருப்புணர் நீர்மையான் - நெருப்பின் உருவினைப் பெற்ற (மிகவும் வெம்மை வாய்ந்த) தன்மையனாய், 'அரசன் உட்கினன் செய்வினை உசாவினன் - நமது மன்னனான இராவணன் பயம்மேற் கொண்டவனாய்ப் புரியவேண்டிய காரியங் களைப் பற்றிக் கேட்கலானான்; (ஆகலின் இந்த இழிவான தன்மை ஒழியுமாறு) நாம் திசாதிசை போதும் - நாம் ஒவ்வொரு திக்கிலும் செல்வோம், வாழ்வு ஒழிதும் என்றான் - (சென்று) உயிர் வாழ்தலை விட்டு விடுவோம்' என்று மனம் நொந்து கூறினான். இச்செய்யுள் பிசாசனின் உட்கருத்தைக் கவிக் கூற்றாக அமைத்தது.

திசாதிசை - வடமொழிச் சந்தி. உசாவுதல்; 'உசா வில்லாத் துன்பம்' (சிலப். 15. 92. உரை); (சீவக. 310. உரை). உசா - வினா; 'சான்றோருசாப் போல வுண்டோர் நுசுப்பு' (காரிகை); இச்சொல் உயவு எனவும் வழங்கும்; ''உயவுத் துணை' (அகம். 338); நற். 330; குறுந். 207. உட்குதல் - அஞ்சுதல்; சுந்தர. 67, 166. முதலிரண்டடிகட்கு, இங்கிருந்து உயிர் வாழ்தல் தவிர்ந்து வேற்றுத் திசைக்கண் ஓடி விடுவோம் எனினுமாம். பிசாசன் என்றதற் கேற்ப எதுகை அமைத்துள்ள நயம் காண்க. பெய் கழல் - வினைத்தொகை. நெருப்பின் உருப்புணர் நீர்மையான் - அழலுருவன் என்க. 'அரசர்க் கரசனே கலங்கி நின்றான்; ஆகவே நம்மனோர்க்கு இனி இங்கு இருப்பேது' என்பது குறிப்பு. நிசாசரன்; வடசொல்; இரவில் சஞ்சரிப்பவன் என்னும் பொரு ளுடையது; 'செவ்வழி மந்திரத் திசைய ராகையால், வெவ்வழி யிருடர மதித்து மீச்செல்வார்' (சுந்தர. 142).

பி - ம். 1. போரு நாம்; மிறைவலிச் செயற்கு.
2. உசாவினை யென்றிடின்; உட்கினமொழிதும்.
3. பெற்ற போர்வலி.
4. நிசாசரருரு; ருட்புணர்; நேர்மையான்; நிசாசர னெருப்பு நின் றெரியுங் கண்ணினன்.

42

## சூரியன் பகைஞன் கூற்று

54. ஆரியன் றன்மையி தாயி னுய்வுறு
காரிய மீதெனிற் கண்ட வாற்றினாற்
சீரியர் மனிசரே சிறியம் யாமெனச்
சூரியன் பகைஞனென் றொருவன் சொல்லினான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சூரியன் பகைஞன் என்று ஒருவன் - சூரிய சத்துரு என்ற ஓர் அரக்கன், 'ஆரியன் தன்மை ஈதாயின் - சிரேட்டனுன இராவணன் நிலைமை இவ்வாருனுல், ஆய்வுறு காரியம் ஈது எனில் - நாம் ஆராய்கின்ற செயலும், (ஒரு அற்பக் குரங்கையும் எளிய மாநுடரையும் வெல்வது என்ற) இஃது ஆகுமாயின், கண்ட ஆற்றினுல் சீரியர் மனிசரே - நாம் எண்ணிப்பார்க்கும் அளவில் சிறந்தவர் மனிதரே ; யாம் சிறியம் - நாம் கீழ்ப்பட்டவரே' எனு - என்று, சொல்லினுன் - மொழிந்தான்.

இத்துணைக் கலக்கம் நாமெய்தச் செய்த மானிடரே வன்மையர் போலும் என்று சூரியன் பகைஞன் மனம் நொந்துரைத்தான். சூரியன் பகைஞன் ; சூரிய சத்துரு அல்லது பானுகோபன் என்பர்; (யுத்த. இலங்கை கேள்வி 28). ஆரியன் - அரசன்; பூஜ்யன்; வேதங்களை அறிந்தவனுதலில், 'ஆரியன்' என்ருன் எனலும் ஆம்.

பி - ம். 1. யீதாகின், யீதாகில், லாயுறு, லாய்வுறு ;
2. மிது வெனிற்.
3. சீரிய ; மனிதரே ; சிறியர் யாம், சிறுமை ; நாம்.
4. பகைவனுந் தொழுது சொல்லினுன். 43

## வேள்வியின் பகைஞன் கூற்று

55. ஆள்வினை நிலைமையு மரக்க ராற்றலும்
தாழ்வினை யிதனின்மேற் சாற்றத் தக்கதோ
சூழ்வினை மனிசராற் ருேன்றிற் ருமெனு
வேள்வியின் பகைஞனு முரைத்து வெள்கினுன்.

வேள்வியின் பகைஞனும் - யக்ஞஹா என்ற அரக்கனும், 'சூழ்வினை மனிசரால் தோன்றிற்று ஆம் - நாம் இவ்வாறு ஆலோசிப்பது கேவலம் மனிதர்ப் பொருட்டால் எழுந்தது ஆகும் ; ஆள்வினை நிலைமையும் - இடைவிடாத மெய்ம் முயற்சி யுடையராதலையும், அரக்கர் ஆற்றலும் - அரக்கரின் பராக்கிரமத்தையும், தாழ்வினை - இழிவாக்கிடச் செய்யும் செயல், இதனின் மேல் சாற்ற தக்கதோ - இதைக்காட்டிலும் மிக்கதொன்று பகரத்தக்கது (பிறிது) இருக்கின்றதா ?' எனு உரைத்து வெள்கினுன் - எனச் சொல்லி நாணமடைந்தான். ஓகாரம், வினு.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஆள்வினை - அரக்கர் உலகினை ஆளும் நிலையெனினுமாம். ழகரளகரங்கள் எதுகையின் அமைந்தன; 'லளயோரபேத': என்பர், வடமொழிவாணர்; இதுவும் அது போன்ற தொன்றென்க. சூழ்வினை; 'சூழ்வினை நான்முகத்தொருவன் சூழினும்' (அயோத்தி. நகர்நீங், 163). வேள்வியின் பகைஞன்; இவனை யக்ஞஹா என்பர்; யக்ஞ சத்துரு வெனினுமாம்; (யுத்த இலங்கை கேள்வி 37). வெள்கினன் - வெள்கல், இளிவரல் என்னும் சுவை; 'மூப்பே பிணியே வருத்த மென்மையோ, டியாப்புற வந்த விளிவர லுண்கே' (தொல். மெய்ப்பாட். 6) என்றதுகாண்க; இது, வருத்தம் அல்லது மென்மைபற்றி வருவது.

பி - ம். 1. ஆழ்வினை; யுடைமையும்; மரசன்.
2. தாழ்வினி, தாள்வினி; யவர் நிலை, யிவர்நிலை; யிதுனிலை பகர.
3. தோன்றிற்று மெனில்.
4. உணர்த்தி வெட்கின்; வெதும்பினன். 44

## தூமிராட்சன் கூற்று

56. தொகைநிலைக் குரங்குடை மனிசர்ச் சொல்லியென்
சிகைநிறச் சூலிதன் திறத்திற் செல்லினும்
நகையுடைத் தாமமர் செய்த னன்றெனப்
புகைநிறக் கண்ணனும் புகன்று பொங்கினன்.

புகைநிற கண்ணனும் - தூமிராட்சன் என்ற பெயர் படைத்தோனும், 'சிகை நிறம் சூலிதன் திறத்தில் செல்லினும் - எரிகின்ற தீக்கொழுந்தின் நிறத்தைக் கொண்ட சூலாயுதம் தாங்கிய சிவபெருமான் பக்கல் (போர் செய்யச்) சென்றாலும், நகை உடைத்து ஆம் - ஏளனத்திற்குக் காரணமாகும்; (அவ்வாறெனில்), தொகை நிலை குரங்கு உடை மனிசர் சொல்லி என் - கூட்டம் கூட்டமாக நிற்கக்கூடிய குரங்கை உதவியாகக் கொண்ட மனிதரை நோக்கிச் செல்லுதலைப் பற்றிக் கூறி என்ன பயன்? (ஆகவே), அமர் செய்தல் நன்று என - போர் புரிவதே சிறந்தது' என்று, புகன்று பொங்கினன் - சொல்லி மனம் கொதித்தெழுந்தான்.

சிகை - தீக்கொழுந்து; 'ஊழித்தீ......சிகை' (கல்லா, கணபதி துதி). சூலி - சூல மேந்தியவன்; சிவன்; 'சூலியின் னருட்டுறையின் முற்றினன்' (கிட்கிந்தா. 114): 'சூலியைப் பொருப்பினோடும் துளக்கிய'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(யுத்த. மாயா சீதை, 8). பொங்கிப் புகன்றான் - மனம் கொதித்துக் கூறினான் எனலும் ஆம். புகை நிறக் கண்ணன் ; தூமிராட்சன் என்ற வடசொல்லின் தமிழ் ஆக்கம்.

பி - ம். 1. தொகை நிற ; குரங்குடன் மனிதர் ; நரரைச் சொல்லினென், சொல்லினன், சொல்லெனச், சொல்லினும், சொல்லலம்.

2. நிகை நிலைச் சூலிதன் திறத்துச் ; சொல்லினும் ; சேரினும்.

3. தகை நிறத்தண்ணறன் சமைத னன்றெனு, தகைநிறத் தெண்ணலன், தகைநிறத் தருஞ்சமம் சமைந்த நன்றென, தெண்ணலஞ் சமைத்த னன்றெனு ; கண்ணனென் றொருவன். 46

## பிறரும் தம் கருத்தைக் கூறல்

57. மற்றவன் பின்னுற மற்றை யோர்களும்
இற்றிது வேநல மெண்ண மற்றிலென்
றுற்றன வுற்றன வுரைப்ப தாயினர்
புற்றுறை யரவெனப் புழுங்கு நெஞ்சினர்.

மற்றவன் பின்னுற - தூமிராட்சன் மொழிந்த பிறகு, மற்றையோர்களும் - பிற அரக்கரும், புற்றுறை அரவு என புழுங்கும் நெஞ்சினர் - புற்றிலே வாழும் பாம்பு போன்று வருந்தும் மனத்தராய், 'இற்று இதுவே நலம் - (இப்பொழுது) இங்கே வரின் போர் புரிவது சிறந்தது; மற்று எண்ணம் இல் என்று - வேறு யோசனைக்கிடமில்லை' என்று, உற்றன உற்றன உரைப்பது ஆயினர் - தத்தம் மனத்தில் எழுந்த எழுந்த கருத்துக்களைச் சொல்லலாயினர்.

இன்று, இற்றென வலித்தது. உற்றன, வினையாலணையும் பெயர். இற்று இதுவே நலம் - இப்படிப்பட்டதான போர் புரியும் இதுவே நல்லது எனினுமாம். உற்றன உற்றன - பன்மை குறித்து வந்த அடுக்கு; 'இயைந்தன இயைந்தன' (யுத்த. வீபீடண. 43) என்ற இடத்துப்போல. புற்றுறை அரவு - நல்ல நாகத்திற்கு வாதாசனி என்ற பெயருண்டாகலின், அது காற்றுட்கொள்ள வெளியிற் செல்லுதல் வேண்டும்; புற்றினுறைதல் வருத்தம் விளைக்கும் ஆகலின், 'புழுங்கும்' என்றார். 'இழந்தமணி புற்றரவெ திர்ந்ததென லானாள்' (சுந்தர.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



554): மற்றும், அரவுக் கேற்ற இயற்கையடை மொழியுமாம்; (ஒப்பு); 'குருதிக் கோட்டுக் குஞ்சர நகரம்'; 'தூம்புடை நெடுங்கை வேழம்' (சீவக. 232, 2182) காண்க.

பி - ம். 1. மற்றிவன், மற்றுளோர்களும்; மற்றுள வமைச்சரும் வரம்பில் சேனையின் பின்னுறை.

2. இற்றது; இற்றது வோவுர மென்ன மற்றினி; வேநல மெண்ணலாகு மென்; இற்றது வேநிலை யென்ன மற்றிலை; வெற்றியந் தலைவரும் விரும்பித் நம்மனத்.

3. உற்றுழி யுற்றுழி; சொல்லி யோங்கினர். 46

## கும்பகருணன் பேசத் தொடங்குதல்

58. வெம்பிக லரக்கரை விலக்கிவினை தேரா
நம்பிய ரிருக்கவென நாயகனை நண்ணு
எம்பியென கிற்கிலுரை செய்வலித மென்னுக்
கும்பகரு ணப்பெயரி னுனிவை குறித்தான்.

கும்பகருணன் பெயரினன் - கும்பகருணன் என்னும் பெயர் பூண்ட பேரரக்கன், வெம்பு இகல் அரக்கரை - மனம் புழுங்கி நின்ற வீரரான அரக்கரை, விலக்கி - அப்பாற் படுத்தி, 'வினை தேரா நம்பியர் இருக்க - இன்னது புரிவது என்று உணர மாட்டாத பெரியோர் வாளாதிருக்கக் கடவர்,' என - என்று கூறி, நாயகனை நண்ணு - தலைவனான இராவணனை அணுகி, 'எம்பி எனகிற்கில் - என் தம்பி (இவன்) என எண்ணுகின்ற மனவுறுதியை மேற்கொண்டுள்ளாயெனில், இதம் உரை செய்வல் என்னு - உனக்கு நன்மையை விளைக்கும் செயலைச் சொல்லுவேன்' என்று பகர்ந்து, இவை குறித்தான் - இவ்வார்த்தைகளைச் சொல்ல மனம் கொண்டான். இவன் கூற்றைப் பின்வரும் ஒன்பது செய்யுட்களில் காண்க.

தேரா - தேராத என்பதன் ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். நண்ணு - செய்யா என்னும் வாய்பாடு. எம்பி - என் தம்பி என்பதன் மரூஉ. எனகிற்கில் என்பதில் கில் ஆற்றலை யுணர்த்தும் இடைநிலை. கிற்றல் - சம்மதித்தல். 'நிற்குமே யிறைவி கிற்குமே' (நக்க. 57); 'கிற்றவா வடியேன்' (திருவாச. திருச்சதகம் 34): ஹிதம் என்ற வடசொல் இதம் என வந்தது. கும்பகருணன் - குடம் போன்று குவிந்து கவிந்த காதுடையவன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இவன் இராவணன் தம்பி; 'நான் உன் தம்பி உன் நன்மையையே கருதுவேன் என்ற திடமான எண்ணம் உனக்கு என்பால் இருக்குமானால், நான் சில அறிவுரைகளைக் கூறுகிறேன்' என்றான் கும்பகருணன். கும்பகருணன் அறிவுரை முதனூலிலும் அத்யாத்மத்தும் உள்ளது.

ரீ - ம். 1. வினையத்தோர்.

2. முன்னுள், முன்ன.

3. உம்பியென; செய்வனிதம்; என்றான்.

4. பெயரி னுனுரை. 47

59. நீயயன் முதற்குல மிதற்கொருவ னின்றாய்
ஆயிர மறைப்பொரு ளுணர்ந்தறி வமைந்தாய்
தீயினை நயப்புறுதல் செய்வினை தெரிந்தாய்
ஏயின வுறத்தகைய வித்துணைய வேயோ.

'நீ - நீ, அயன் முதல் குலம் இதற்கு ஒருவன் நின்றாய் - பிரம தேவனை ஆதியாகக் கொண்ட இக்குலத்திலே தன்னிகரற்றவனாக உள்ளாய்; ஆயிரம் மறைபொருள் உணர்ந்து அறிவு அமைந்தாய் - பல சாகைகளைக் கொண்ட சாம வேதத்தின் உட்பொருளை நன்கு தெரிந்து சிறந்த அறிவுடன் பொருந்தியுள்ளாய்; தீயினை நயப்புறுதல் செய்வினை தெரிந்தாய் - நெருப்பைத் தீண்டினால் அது எரித்து விடுமே என்று எண்ணாது (விட்டில் பறவை போன்று) அதன் செந்நிற ஒளியை விழையத்தக்க செயலாக மயங்கி உணர்ந்தாய்; ஏயின உற தகைய இ துணைய வேயோ - ஊழ்வினையால் உந்தப்பட்டு நிகழக்கூடிய விபரீத விளைவுகள் இம் மட்டோ? ஓகாரம் - வினா.

இராவணன் அயன் குலம்; ஆரணிய. 258; சுந்தர. 483; 1154. ஆயிரமறைப் பொருளுணர்தல்; 'ஐயன் வேதமாயிரம் வல்லான்' (சுந்தர. 483; 1086). இங்கே ஆயிரம் என்றது எண்ணிக்கை குறித்து வந்ததன்று; பல என்னும் பொருளது. நான்கு வேதங்கள் என்றும், அதர்வணத்தை நீக்கித் 'த்ரயீ வேதா' என்றும் கூறுவது, சில்வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவினரான மக்கட் கின்றியமையாதனவற்றைத் தொகுத்த படியாகும். ஆனால் 'அநந்தா வைவேதா' (வான்மீகம்) என்றபடி வேதம் பலவாகும்; 'வேதம் பல' என்பது சடகோபரந்தாதி. மற்றும் சாமவேதம் ஆயிரம் சாகைகள் அல்லது கிளை



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


களை யுடையது எனினும் ஆம். மனப்பாடமாகவோ மேலெழுந்த வாரியாகவோ கல்லாது, ஆழ்ந்து கற்றுத் தேறினன் என்பான், 'உணர்ந்தறி வமைந்தாய்' என்றான். 'தீயினை நயப்புறுதல்' 'சுடுதியைத் துகிலிடைப் பொதிந்ததுன்மதி' (யுத்த. விபீடண. 47); (ஒப்பு.) 'வெவ்விடத்தை யமிழ்தென வேண்டுவான்' (சுந்தர, 430). ஏவின என்பது ஏயின வென வந்தது.

பி - ம். 1. மிதற்குருவி.
2. நயந்தறிவு.
3. தீவினை, தீயென; செய்தனை, தெரிந்தால், நயந்தனை; தீவினை செயற்குரியதே தெளிவை.
4. ஏயன; முதற்றகைமை, முறைத்தகைய, வளைத்தகைய, வனத்தகைய; வெய்யோய். 48

**60. ஓவிய மமைந்தநகர் தீயுண வுளைந்தாய்**
**கோவிய லழிந்ததென வேறொரு குலத்தான்**
**தேவியை நயந்துசிறை வைத்தசெய னன்றோ**
**பாவிய ருறும்பழி யிதிற்பழியு முண்டோ.**

'ஓவியம் அமைந்த நகர் - (சிறந்த சித்திரகாரியால் தீட்டப்பெற்ற அழகிய) சித்திரம் போன்று பொருந்தி ஒளிரும் இலங்கை மாநகரத்தை, தீ உண - நெருப்பு எரித்திட, கோ இயல் அழிந்தது என உளைந்தாய் - அரசியலே கெட்டது என நினைந்து மனம் நொந்தனை; வேறு ஒரு குலத்தான் தேவியை நயந்து - நமது குலமல்லாது பிறிதொரு குலத்தில் வந்த இராமபிரானது கற்பரசியாகிய சீதாப்பிராட்டியை இச்சித்து, சிறை வைத்த செயல் நன்றோ - சிறைப்படுத்திய இச் செய்கை சிறந்த தொன்றோ? பாவியர் உறும்பழி இதில் - பாவச் செய்கை புரிந்தவர்கள் எய்தும் இப் பழியைக் காட்டிலும், பழியும் உண்டோ - நிந்திக்கப்படும் காரியம் (வேறு யாதேனும்) உள்ளதா? ஓ - விஞ.

ஓவியம் - சித்திரம்; 'ஓவியவுருவ' (கிட்கிந்தா. 365). கோவியல் - இராஜ தருமம்; 'கோவியற் றருமம்' (கிட்கிந்தா. 307). கோவியல்; மகளிர் கற்பைக் காத்தல் அரச நீதி; 'மாதவர் நோன்பும் மடவார் கற்பும், காவலன் காவ லின்றெனின் இன்றால்' (மணி. 22 : 208-9). பாவியர் உறும்பழி: 'எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும், விளியாது நிற்கும் பழி'; 'பகைபாவ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மச்சம் பழியென நான்கும், இகவாவா மில்லிறப்பான் கண்' (குறள். 145, 146); 'பிறன்தாரம் நச்சுவார்ச் சேரும் பகை பழி பாவம்' (நாலடி. 82); 'காணின் குடிப்பழியாம்' (நாலடி. 84); 'மற்றொருவர்க்கா மனைவாழும், தாரம் கொண்டா ரென்றிவர் தம்மைத் தருமந்தான், ஈரும் கண்டரய்' (ஆரணிய. 734).

பி - ம். 1. நீயுற ; விழைந்தாய்.
2. லொழிந்ததென ; குலத்தோன்.
3. செயலன்றே.
4. வரும்பழி ; யிதற்பழியு. 49

61. நன்னக ரழிந்ததென நாணிலை நயத்தால்
உன்னுயி ரெனத்தகைய தேவியர்க ளுன்மேல்
இன்னகை தரத்தர வொருத்தன்மனை யிற்றாழ்
பொன்னடி தொழத்தொழ மறுத்தல்புகழ் போலாம்.

'நல் நகர் அழிந்தது என - சிறந்த நமது தலைநகரம் (எரிவாய்ப் பட்டு) ஒழிந்தது என்று, நாணிலை - வெட்கிலை ; உன் உயிர் என தகைய தேவியர்கள் - உனது ஆவியே என்று சொல்லத் தக்க உன் மனைவிமார், நயத்தால் - விருப்பினால், உன் மேல் இன் நகை தர தர - உன்னை மகிழ்வூட்டத் தமது புன்முறுவலை விடாமற் செய்யும்போதே, ஒருத்தன் மனை இல் தாழ் - ஒருவனுடைய மனையில் அவன் இல்லாளாகத் தங்கியுள்ள, பொன் அடி தொழதொழ - திருமகள் போன்றவளாகிய ஒருத்தியின் பாதங்களிலே பன்முறை வணங்கவும், (அன்னாள்) மறுத்தல் புகழ் போலாம் - மறுத்தலைக் கேட்டிருத்தல் (பிரதாப இலங்கேசனாகிய நினக்குப்) புகழ் போலும்.

வெறுத்துத் தள்ளவும் பிறன் மனைவியைப் பணிந்து நிற்கின்றனை ; இஃது உனக்குப் புகழாகுமோ? 'தேவியர்கள் இன்னகை தர தர' (ஒப்பு.) 'செந்திரு வொப்பார் எத்தனையோர் நின் திருவுண்பார்' (ஆரணிய. 735). தாழ்தல் - தங்குதல் ; 'தண்டாமரையவள் தாழுந் தகையன' (சீவக. 523) ; 'ஏற்றணல் தாழ் மணியோசையும்' (சீவக. 1313). பொன் - திருமகள் அவதாரமான பிராட்டி எனினுமாம். போலாம் - ஒப்பில் போலி.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தொழத்தொழ - அடுக்கு, இளி வரவு. ஒருத்தன் மனையில் தாழ் பொன் என்பதற்கு ஒப்பற்றவனான இராமபிரான் மனைவியெனி னும் ஒன்றும்.

பி - ம். 1. நயந்நாய், நயந்நான்.
3. உன்னகை, ஒண்ணகை; யிற்றுன். தரத்நர வொருந்த னில்லினுடன்.
4. மறுத்நல் புலமைத்நோ. 50

62. என்றொருவ னில்லுறை தவத்தியை யிரங்காய்
வன்றொழிலி னய்மறை துறந்துசிறை வைத்தாய்
அன்றொழிவ வாயின வரக்கர்புக ழைய
புன்றொழிலி னரிசை பொறுத்தல்புல மைத்தோ.

'என்று ஒருவன் இல் உறை தவத்தியை - எப்பொழுது ஒப்பற்றவனான ஒருவனுடைய மனையில் அவனது வாழ்க்கைத் துணையாக வசிக்கும் தவமகளை, ஆய்மறை துறந்து - அழகிய வேத நெறியைக் கைவிட்டு, இரங்காய் - உன் பெருமைக்கு இழுக்காகுமே என்று சிறிதும் மனம் தளராமல், வல்தொழிலின் - கடுந்தொழிலை மேற்கொண்டவனாய் (வலியக் கவர்ந்து வந்து), சிறைவைத்தாய் - சிறைப்படுத்தினாய்; அன்று - அன்றே, அரக்கர் புகழ் ஒழிவ ஆயின - அரக்கர்களின் சீர்த்திகள் அழியத் தொடங்கி விட்டன; ஐய - தலைவனே! புன் தொழிலினர் - இகழத்தக்க செயல் புரிபவர், இசை பொறுத்தல் புலமைத்தோ - புகழை அடையப் பெறுவர் என்று எண்ணுவது அறிவுடைமை யாகுமோ?

ஓகாரம் - எதிர்மறை. இல்லுறை தவத்தி; 'இல்லின் மாண் புடை நங்கையர் மனத்தவம்' (சுந்தர. 401); 'தனிமையும் பெண் மையுந் தவமு மின்னதே' (சுந்தர. 403); 'உலகுடை நாயகன் தன் துணைப் பெருந்தேவி தவத்தொழில்' (சுந்தர. 633); 'நற்பெருந் தவத்தளாய நங்கை' (சுந்தர. 1273); 'அருந்ததிக் கற்பினாளுக் கழிவுண்டோ' (யுத்த. மாயா சீதை. 96); 'மறை துறந்து சிறை வைத்தாய்'. (ஒப்பு). 'ஏதிலா ரிற்கண் குருடனாய்......அறங்கூற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வேண்டா வவற்கு' (நாலடி. 188). ஒரு கற்பரசியை வலிந்து சிறை யிட்ட போதே உன் புகழ் ஒழிந்தது என்பது சிறப்புப் பொருள்; இதனை, புன்மொழிலி னிசை பொறுத்தல் புலமைத்தோ' என்ற பொதுப் பொருள் கொண்டு விளக்கியதால், இது வேற்றுப் பொருள் வைப்பணி.

பி - ம். 1. யிரங்கா.
2. நிறந்து சிறை.
3. அன்றழிவ ; நேசில ; புகழையா.
4. புன்மொழிலிறுவிசை, ஞர்நசை ; பொருந்தல். 51

63. ஆசில்பர தாரமவை யஞ்சிறை யடைப்பேம்
மாசில்புகழ் காதலுறு வேம்வளமை கூரப்
பேசுவது மானமிடை பேணுவது காமம்
கூசுவது மானிடரை நன்றுநம கொற்றம்.

'ஆசு இல் பர தாரம் அவை - பழுதில்லாத பிறன் மனைவியை, அம்சிறை அடைப்பேம் - உள்ளமாகிய சிறைக்கண் வைப்பேம்; மாசு இல் புகழ் காதல் உறுவேம் - (ஆயினும்) களங்கமற்ற கீர்த்தியை அடைய விரும்புவேம்; வளமை கூர - சொல் வளம் பெருக, பேசுவது மானம் - உரையாடுவது கௌரவப் பேச்சு; இடை பேணுவது காமம் - நம்மிடத்து வைத்துப் போற்றுவது இழிவுடைக் காமம்; கூசுவது மானிடரை - அஞ்சிப் பின்னிடைவது மனிதரைக் கண்டு; நம கொற்றம் நன்று - நம்முடைய வெற்றி வீரம் மிகவும் அழகிதாயிருந்தது.

பர தாரம் வடமொழித் தொடர் - பிறன் மனைவி எனப்பொருள் படும். தாரம் வடமொழியில் பன்மைச் சொல் ஆகலின் தாரமவை என்றார் போலும். மற்றும் இராவணனாற் சிறைப்படுத்தப்பட்ட பல மகளிரை யெண்ணியும், 'அவை' யென்றமைத்திருத்தல் கூடும்; 'ஆசில் பல தாரம்' என்ற பாடமும் காண்க. அகம் சிறை- அஞ்சிறை. 'நஞ்சனை யானகம் புகுந்த நங்கை யான்' (சுந்தர. 505); 'சானகியை மனச்சிறையிற் கரந்த காதல், உள்ளிருக்கு மெனக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கருதி யுடற்புகுந்து தடவியதோ வொருவன் வாளி, (யுத்த. இராவணன் வதை. 230); 'அரக்கன் ருன்றன் இதயமாம் சிறையில் வைத்தான்'. நன்றுநம கொற்றம்; பிறகுறிப்பு.

பி - ம். 1. பல தாரம்; தார மடையச் சிறை, மமையச் சிறை, சிறையில் வைத்தாய், யடைப்போம், யடைத்தாய், யடைத்தோம், வைப்போம்.

2. காதலுறுவாய், லுறுவோம்.

3. பேசுவது வீரம்; பேணுவது மானம்.

4. மானுடரை. 52

இதன்பின்வரும் 15 அதிகப்பாடல்கள் ஓர் பிரதியில் உள்ளன.

ஓதுவல் லருந்தவ முயற்றலில தேனுங்
கோதுறு குலச்சிறுமை கொண்டுடைய தேனும்
வாதுறு பகைத்திற மலிந்துடைய தேனும்
நீதியதி னின்றடி நிலைக்கழிவு முண்டோ. 1

உந்துதம ரோடுலகி னூழிபல காலம்
நந்துதலில் லாதிறைவ ஞயிட நயந்தோ
சிந்தையில் விரும்புதல்செய் மங்கையர் திறத்தோ
புந்திகொடு நீதவ முயன்றபொறை மேனுள். 2

ஆசைகொடு வெய்திலரு மானிடரை வஞ்சித்
தாசிலொரு மங்கையவ ளைத்தனி கவர்ந்துங்
கூசியவ ...........விளை வும்பெறுதல் கூடாய்
வீசுபுகழ் வாழ்வுவெறி தேயழிவ தாமோ. 3

நிரம்பிடுகி லொன்றதை நெடும்பகல் கழித்தும்
விரும்பிமுயல் வுற்றிடை விடாதுபெறல் மேன்மை
வரும்படி வருந்தினும் வராதபொரு ளொன்றை
நிரம்புமென வேநினை தல் நீசர்கட னையா. 4

ஆசில்பல வண்டமுன தேயரச தாக
யீசன்முன் னழித்ததுன் னிருந்தவ வியப்பால்
நீசர்தொழில் செய்ததனை நீங்கியிட லாமோ
வாசமல ரோன்மரபில் வந்தகுல மன்ன. 5

ஆலமயில் கின்றவ னருஞ்சிலை முறித்தே
வாலியை வதைத்தெழு மராமரமு முட்கக்
கோலிவரி விற்பகழி கொண்டுடைய னென்ருற்
சீலமுறு மானிட னெனத்தெளிய லாமோ. 6

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஆதிபர னுமவ னடித்துணை வணங்கிச்
சீதையை விடுத்தெளியர் செய்பிழை பொறுக்கென்
றோதல்கட னுமென வொருப்பட வுரைத்தான்
மூதுரைகொள் பேரனு மதேமுறைமை யென்றான். 7

என்றவ னுரைத்திட யிராவணனு நெஞ்சங்
கன்றிநய னத்திடை பிறந்தன கடைத்தீ
யின்றுமுடி வுற்றதுல கென்றெவரு மஞ்சக்
குன்றுறழ் புயக்குவை குலுங்கிட நகைத்தான். 8

நகைத்திளவ லைக்கடிது நோக்கிநவில் கின்றான்
பகைத்துடைய மானுடர் வலிச்செயல் பகர்ந்தாம்
திகைத்தனைகொ லாமெனது சேவக மறிந்தும்
வகைத்திற முரைத்திலை மதித்திலையென் னெம்பி. 9

புயங்களொரு மூன்றையு முருக்குபுனி தன்றன்
வரங்களு மழிந்திடுவ தோமதி யிலாதாய்
தரங்கொடிமை யோரெனது தாள்பரவ யானென்
சிரங்கொடு வணங்குவது மானுடர் திறத்தோ. 10

பகுத்தபுவ னத்தொகை யெனப்பகர் பரப்பு
மிகுத்ததிறல் வானவரும் வேதமுதல் யாவும்
வகுத்தரிய முத்தொழில்செய் மூவரும் மடிந்தே
யுகுத்தபொழு தத்தினுமெ னக்கழிவு முண்டோ. 11

நிறந்தனில் மறந்தொலைய நீதுயில் விரும்பித்
துறந்தனை யருஞ்சமர மாதலினவை சொன்னாய்
இறந்துபட வந்திடினு மிப்பிறவி தன்னில்
மறந்துமுள தோசனகன் மங்கையை விடுத்தால். 12

எனக்கத மெழுந்தவ னுரைக்கவிளை யோனும்
நினைத்தனன் மனத்தினிடை நிறுத்துறுதி சொல்லச்
சினத்தொடு மறுத்திகழ்வு செய்தலரி தாழின்
வினைத்திற மெவர்க்குமது வெல்வதரி தன்றே. 13

கறுத்தவ னுரைத்திடு கருத்தினிலை கண்டே
பொறுத்தருள் புகன்றபிழை யென்றடி வணங்கி
யுறுத்துதல்செய் கும்பகரு ணத்திறலி னோனு
மறுத்துமொரு வாய்மையிது கேளென வுரைத்தான். 14

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஏதில்கரு மச்செயல்து ணிந்திடுத லெண்ணித்
தீதொடு துணிந்துபினு மெண்ணுதல் சிறப்போ
யாதுமினி யெண்ணவதி லென்னபய னையா
போதியது நம்மரசு பொன்றுவரு காலம். 15

64. சிட்டர்செயல் செய்திலை குலச்சிறுமை செய்தாய்
மட்டவிழ் மலர்க்குழலி னளையினி மன்ன
விட்டிடுது மேலெளிய மாதுமவர் வெல்லப்
பட்டிடுது மேலதுவு நன்றுபழி யன்றால்.

'சிட்டர் செயல் செய்திலை - மேலோர் புரியும் செயலைப் புரிந்தாயில்லை; குலம் சிறுமை செய்தாய் - குலத்திற்கு இகழ்ச்சியை உண்டு பண்ணினை; மட்டு அவிழ் மலர் குழலினளை - மலர்கள் புனைந்த கூந்தலையுடைய சீதையை, இனி விட்டிடுதுமேல் - இவ்வளவு விபரீத நிகழ்ச்சிகள் விளைந்த பிறகு விட்டிடுவோமாகில், மன்ன - அரசே! எளியம் ஆதும் - கேவலமாகக் கருதப்படுபவர் ஆவோம்; (அவ்வாறு விடாமையின்), அவர் வெல்லப் பட்டிடுது மேல் - அந்த மானிடர் நம்மை வெற்றி கொள்ள, அதன் முடிவாக நாம் இறப்போமானால், அதுவும் நன்று பழி அன்று - அதுவும் நன்மையாம்; பழிக்குக் காரணமாகாது. ஆல் - அசை.

சிட்டர் - சதாசார முள்ளவர். பிறன் மனைவியைச் சிறையிட்டது தகாதது தான் எனினும், தூதன் மூலம் நமது நிலைமை யாவும் அறிந்து அவர்கள் போருக்கு ஆயத்தமான நிலையில், நாம் பின் வாங்குவது வீரமாகாது என்பான், 'இனி' என்றான். சிஷ்டர் என்ற வடசொல் சிட்டர் எனவந்தது. சிறுமை - துன்பமுமாம். மன்ன என்றது, அவனது பேரரசையும் பௌருஷத்தையும் குறித்தபடி. பின்னர் இந்திர சித்துத் தன் தந்தையிடம் 'ஆசை தானச் சீதை பால் விடுதியாயின் அன்னவர் சீற்றம் தீர்வர், போதலும் புரிவர் நீசெய் தீமையும் பொறுப்பர்' (யுத்த. இந்திர சித்து 6) என்று கூறிய போது, 'உலகெலாம் பெயரப் போகக், காதையென் புகழினோடு நிலைபெற அமரர் காண, மீதெழு மொக்குளன்ன யாக்கையை விடுவதல்லால், சீதையை விடுவ துண்டோ விருபது திண்டோ ளுண்டாய்' (யுத்த. இந்திரசித்து. 8); 'இன்றுளார் நாளை மாள்வர் புகழுக்கு மிறுதி யுண்டோ' (யுத்த. இந்திர சித்து. 10); என்ற இராவணன் கூறியவற்றுடன் இதனை ஒப்பு நோக்குக. இதே கும்பகன்னன் பின்னர்த்தன் அண்ண

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



னிடம், 'சுடுதியைத்து கிலிடைப் பொதிந்த துன்மதி, இடுதியே சிறையிடை யிறைவன் தேவியை, விடுதியேல் உய்குதி விடாது வேட்டியேல், படுதியென் றுறுதிகள் பலவும்' பன்னியதும், 'ஆனதோ வெஞ்சமம் அலகில் கற்புடைச், சானகி துயர் இன்னும் தவிர்ந்ததில்லையோ' (யுத்த. கும்ப. 79) என்று கூறுவதும் சிறிது ஆராயத்தக்கது. இங்குப் போருக்குத் தயாரான இவன் பின்னர், இராம இராவணரின் முதற்போர் நிகழ்ச்சிகளைக் கேட்டு, எதிரிகளின் அளவிறந்த சக்தியையும் தெய்வத்தன்மையையும் அறிந்து தன்னிடமிருந்தபகை நினைவு மாறிக் கூறுவது கண்டு தெளிக. இதனை, அவன் 'திட்டிவிடமன்ன கற்பின் செல்வியை' (யுத்த. கும்ப. 80); 'பெருவலியிராமன் தோள்களை, வெல்லலாமென் பது சீதை மேனியைப், புல்லலாமென்பது போலுமால்' என்று கூறுவன கொண்டு தெளிக; மற்றும், 'வென்றிவண் வருவ னென்றுரைக்கிலென்'; 'இந்திரன் பகைஞனு மிராமன்றம்பிதன் மந்திரவலியினல் மடிதல் வாய்மையால்' என்ற சொற்கள் கொண்டு கும்பகன்னனை முக்காலமும் உணரவல்ல தீர்க்கதரிசி யென்றும் கொள்ளலாம்.

பி - ம். 3. விட்டிடித்து மேலினியம், மேலெளிமை, மேலெளியம்; வாமவரை, யாதுமவர், மாகுமவர்.

4. மன்றுபழி யாமால். 53

65. மரன்படர் வனத்தொருவ னேசிலை வலத்தால்
கரன்படை படுத்தவனை வென்றுகளை கட்டான்
நிரம்பிடுவ தன்றதுவும் நின்றதினி நம்பால்
உரம்படுவ தேயிதனின் மேலுறுதி யுண்டோ.

'மரன்படர் வனத்து - மரங்கள் அடர்ந்த காட்டில், ஒருவனே - இராமபிரான் தனியாகவே, சிலை வலத்தால் - தனது கோதண்டம் என்னும வில்லின் வன்மையால், கரன் படைபடுத்து அவனை வென்று - கரனுடைய பதினாலாயிரம் சேனைகளைக் கொன்று, அவனையும் வெற்றி கொண்டு, களை கட்டான் - தனது பகையை ஒழித்தான்; அதுவும் நிரம்பிடுவது அன்று - அச்செயலும் முடிந்தபாடில்லை; இனி நம்பால் நின்றது உரம்படுவதே - இனி நம் மிடத்துக் காணப்பெறுவது அந்த மனிதர்கள் கையினல் நமது வன்மை ஒழிதலேயாகும்; இதனின் மேல் உறுதி உண்டோ-



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இதைக்காட்டிலும் நமக்குப் பொருந்துவது என்ன உள்ளது? (ஒன்று மில்லை).

'நமது வலியனைத்தும் தூதன் மூலம் நன்குணர்ந்துள்ள நமது விரோதிகள், கரன் முதலியவர்களைக் கொன்றதுடன் நின்றுவிட மாட்டார்கள்; இனி, நம்மேற் படையெடுத்தும் வருவர்; வந்தால் நமது வன்மையழியும்; அவர்களை எதிர்ப்பதே நல்லது என்றான். மரம் - மரன் - ஈற்றுப்போலி. வனத்தொருவனே சிலை வலத்தால் கரன் படைபடுத்து; 'மானிடன் ஒருவன் வந்த வலிகெழு சேனைக் கம்மா கானிட மில்லை' (ஆரணிய. 429); 'இனைய வாகலின் மானிட னொருவனென் றிவனை, நினைய லாவதிங் கேழைமை' (ஆரணிய 434); 'நிருதர்தம் பெரும்படை நெடிது, நின்றவன் ஒருவன்' (ஆரணிய. 484); 'இங்கொர் மானிடற் கித்தனை வீரர்கள் இடைந்தீர்' (ஆரணிய. 505). களைகட்டல்; 'கைங்கூழ் களைகட் டதனொடு நேர்' (குறள். 550); உரம்படுதல் - வன்மை அழிதல்.

பி - ம். 1. மரம்படர்; வனைத்தான்; மரம்படர் வனத்திருவர் தம்பியர்கள் சேனை.
2. கட்டால், கட்டா; கரன்பட வதைத்தவனை வெல்கருமம் நம்மால்.
3. தன்றிதுவு; நின்ற தனி நம்மால்.
4. உரன்படுவ; தேயதனின்; உரம்படுவ தியாமதனின். 54

66. வென்றிடுவர் மானிடவ ரேனுமவர் தம்மேல்
நின்றிடை விடாதுநெறி சென்றுற நெருக்கிச்
சென்றிடுதல் செய்கில மெனிற்செறுந ரோடும்
ஒன்றிடுவர் தேவருல கேழுமுட னென்றும்.

'மானிடவர் வென்றிடுவரேனும் - மனிதர்களே வெற்றிபெறுவ ரென்றாலும், நெறி சென்று - அவர்கள் இருக்கும் இடம் போய், அவர் தம் மேல் - அவர்கள் மீது, நின்று - எதிர்த்து நின்று, இடை விடாது உற நெருக்கி - இடையீடின்றி மிகவும் அடர்த்து, சென்றிடுதல் செய்கிலம் எனில் - போர்க்குச் செல்லுதலைச் செய்யாது விடுவோமானால், தேவர் செறுநரோடும் ஒன்றிடுவர் - தேவர்களும், நமது பகைவரான அந்த மனிதருடன் கூடிவிடுவர்; (அம்மட்டோ)? உலகு ஏழும் உடன் ஒன்றும் - ஏழுலகங்களும் ஒன்று கூடிவிடும். அதன் விளைவாகப் பல இடர்கள் நேரும் என்பது குறிப்பெச்சம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வெற்றி யாவர் பக்கம் நிகழ்ந்தாலும் நம்முடைய எதிர்ப்பு முயற்சியைக் கைவிடுவது நன்றன்று என்றான். நின்று இடைவிடாது நெறி சென்று நெருக்கி என்ற சொற்களில் அவனது வீரம், சினம் முதலியன நன்கு பெறப்படுதல் காண்க. தின்றிடுதல் என்பது இலக்கணையால் ஒழித்தகற்றுதல் என்ற பொருளைக் குறித்து நின்றது. இருவர் பகைமையே நாம் சமாளிக்க முடியாத நிலையில், தேவரும் ஏழுலகும் அவர்களோடு இயையுமேல் நம் நிலை கேவலம் ஆகிவிடும்; ஆதலின் எதிர்ப்பே மேல் என்றான்.

பி - ம். 2. சென்றற.

3. நின்றிடுவ, நின்றிடுதல்; செய்தில.

4. தேவரு மவர்க்குதவி யாக; னென்றாய்; னென்றும். 55

67. ஊறுபடை யூறுவதன் முன்னமொரு நாளே
ஏறுகட லேறிநரர் வாநரரை யெல்லாம்
வேறுபெய ராதவகை வேரொடு மடங்க
நூறுவது வேகரும மென்பது நுவன்றான்.

'ஊறுபடை ஊறுவதன் முன்னம் - மேன் மேலும் எழும் சேனை பெருகி நிறைவதன் முன்னரே, ஒரு நாளே - ஓர் குறிப்பிட்ட நாளிலே, ஏறுகடல் ஏறி - அலைகள் மேன் மேல் எழுகின்ற கடலைத் தாண்டி, நரர் வாநரரை எல்லாம் - மனிதர்களையும் அவரொடும் கூடிவரும் தேவர்கள் என்ற எல்லோரையும், வேறு பெயராத வகை - பிற இடங்கட்குச் செல்லாதபடி (மடக்கி), வேரோடும் அடங்க - வேரொடும் ஒருசேர, நூறுவதுவே கருமம் என்பது நுவன்றான் - அழிப்பதுவே நாம் புரியத்தக்க காரியம்' என்று சொன்னான்.

ஊறுபடை ஊறுவது; ஏறுகடலேறி - தொடை நயம் காண்க. (ஒப்பு): 'இளைதாக முண்மரங் கொல்க களையுநர் கைகொல்லும் காழ்த்த விடத்து' (குறள். 879): 'முளையிலே யுயிர் கொல்வதோர் கடுவிடம் முற்றிவன் காழேறி, விளையிலேது செய்யாது...... படை கொடு மோதி களையிலே நமக்கிருப்புளது' (வி. பா. சூது 71); 'கூர்முள் வேலை முளையிலே களையினல்லால், நனிவர வயிர்த்த போது நவியமு மடியுமன்றே' (வி. பா. சூது. 11). நரர், வாநரர்; 'வாநராணும் நராணுஞ்ச' என்பது வான்மீகம். வேறு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பெயர்தல் - பிழைத்துப்பிற விடங்கட்குச் செல்லுதல், நூறுதல் - பொடியாக்குதல் ; ஆரணிய. 466, 468, 541, 551. ஏகாரம், தேற்றம்.

பி - ம். 1. முன்ன மொருநாமே.

2. லேறிநர வாநரரை.

3. வேறுபெய ராதபடி. 56

## இராவணன் போருக்கு எழுக என்றல்

68. நன்றுரைசெய் தாய்குமர நானிது நினைந்தேன்
ஒன்றுமினி யாய்தல்பழு தொன்னலரை யெல்லாம்
கொன்றுபெயர் வாம்நமர் கொடிப்படையை யெல்லாம்
இன்றெழுக வென்கென விராவண னிசைத்தான்.

'குமர - இளையோய்! நன்று உரை செய்தாய் - நீ நன்கு சொல்லினை ; நான் இது நினைந்தேன் - நானும் இவ்வாறே கருதினேன் ; இனி ஒன்றும் ஆய்தல் பழுது - இனி பிறிதொன்றைக் குறித்து ஆராய்வது பயனற்ற செயலாகும் ; ஒன்னலரை எல்லாம் கொன்று பெயர்வாம் - பகைவர் அனைவரையும் கொன்றே திரும்புவோம் ; நமர் - நம்மவருடைய, கொடிப் படையை எல்லாம் - நமக்குரிய வீணைக்கொடியை உயர்த்தியுள்ள சேனைகளை யெல்லாம், இன்று எழுக என்க என - இப்பொழுதே படையெடுத்துச் செல்லுக என்று பணிக்க' என்று, இராவணன் இசைத்தான் - இலங்கேசன் சொன்னான்.

குமர ; அன்புபற்றிவந்த வழுவமைதி. 'பழுது பயமின்றே' தொல். சொல். 324. நமர் - நம்மவர். என்கென, அகரவீறு தொக்கது.

பி - ம். 1. கருணை ; யிளவல் ; நானது.

2. யென்னலபழு.

3. பெயர்வோ நம, பெயர்வே நமர்.

4. இன்றெழுக வேயென, இன்றெழுக வென்க. 57

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இந்திரசித்து மறுத்துக் கூறல்

69. என்றவ னியம்பியிடு மெல்லையினில் வல்லே
சென்றுபடை யோடுசிறு மானிடர் சினப்போர்
வென்றுபெயர் வாயரச நீகொலெம வீரம்
நன்றுபெரி தென்றுமக னக்கிவை நவின்ருன்.

என்று - மேலே கூறியவாறு, அவன் இயம்பி இடும் எல்லையினில் - அந்த இராவணன் மொழிந்த காலையில், மகன் - (அவன் புதல்வனுன) இந்திரசித்து (தந்தையைப் பார்த்து), 'அரச - மன்னவா !, (எம்மனோரைப் போன்ற வீரர் பலர் உளராக), நீகொல் - நீதானே, வல்லே படையோடு சென்று - விரைந்து சேனையுடன் போய், சிறு மானிடர் சினம் போர் - இழிக்கத்தக்க மனிதருடனே கோபத்துடன் செய்யத்தக்க யுத்தத்தில், வென்று பெயர்வாய் - வெற்றியுடன் மீளக்கடவை ; (அவ்வாறெனின்), எம வீரம் பெரிது நன்று - எங்களுடைய ஆண்மை மிகவும் நன்ருக இருந்தது !' (என்று) நக்கு - சிரித்து, இவை நவின்ருன் - பின்வரும் வார்த்தைகளைச் சொன்னுன். அவற்றை அடுத்துவரும் ஆறு செய்யுட்களிற் காண்க.

நகை இங்கே வீரத்தெழுந்த வெகுளி நகை. சிறு மானிடர் ; இகழ்ச்சி. இராவணன் மந்திராலோசனையில் வீடணனுக்குப் பிறகே இந்திரசித்து பேசியதாக வான்மீகம் கூறும். இந்திரசித்தின் உரையாடல் அத்யாத்மத்தும் உண்டு. நன்று பெரிது ; 'நன்றும் பெரிதாலம்ம' (குறுந். 29.).

பி - ம். 1. னியம்பியிடு, னியம்பியுறு.
3. நீகொலென. 58

## இந்திரசித்தின் கூற்று

70. ஈசனருள் செய்தனவு மேடவிழ் மலர்ப்பே
ராசன முவந்தவ னளித்தனவு மாயப்
பாசமுதல் வெம்படை சுமந்துபலர் நின்ருர்
ஏசவுழல் வேனொருவன் யானுமுளெ னன்றே.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

'ஈசன் அருள் செய்தனவும் - சிவபெருமான் அருள்கூர்ந்து தந்தனவும், ஏடு அவிழ் மலர் பேராசனம் உவந்தவன் - இதழ்கள் விரியப்பெற்ற தாமரை மலராகிய பெருமை வாய்ந்த இருக்கையை மகிழ்வுடன் ஏற்ற பிரமன, அளித்தனவும் - அன்பு கூர்ந்து கொடுத்தனவும் ஆன, மாய பாச முதல் வெம்படை சுமந்து பலர் நின்ருர் - வியக்கும் தன்மை வாய்ந்த பாசம் முதலான கொடிய ஆயுதங்களைத் தாங்கிப் பலர் (ஆயத்தமாக) நிற்கின் றனர்; ஏச உழல்வேன் ஒருவன் - பிறர் பழிக்குமாறு நடமாடித் திரியும் ஒருவனுக, யானும் உளென் அன்ருே - நானும் உயிர் தரித்திருக்கின்றேன் அல்லவோ?

ஈசன் - சிவபெருமான்; சகல ஐசுவரியங்களையும் உடையவன். ஏடவிழ் மலர்: (ஒப்பு): 'ஏடவிழ் மாலை' (பால. கார்முக. 33). பாசம் - கயிறு வடிவான ஓர் போர்க் கருவி; 'வெங்குசைய பாசம்' (சுந்தர. 165; 173); 'கடுந்தொழிற் பாசம்' (மணி. 22, 71). ஏசல் - பழித்தல்; அயோத்தி. குகப். 15; சுந்தர. 397, 507. 'யானுமுள னன்ருே' (ஒப்பு): 'நாளுமுள தோளுமுள நானுமுளெ னன்ருே' (ஆரணிய. 613). பல இடையூறுகளை விளைத்து நகரை எரியூட்டியவனை விட்டுவிட்டது குறித்து, 'ஏச உழல்வேன்' என்ருன்.

பி - ம். 2. மகிழ்ந்தவன்; மாயாப்.
3. படைபரித் துலகில் யாரும்; நின்ருேர்.
4. ஏசவுழல்வோன்; னென்ருன்; ஏசவுழல் வேனெனிற் சிறியர் யாரே.

71. முற்றுமுள தாமுலக மூன்றுமெதிர் தோன்றிச்
செற்றமுத லாரொடு செறுத்ததொர் திறத்தும்
வெற்றியுன தாகவிளை யாதொழியி னென்னைப்
பெற்றுமிலை யானெறி பிறந்துமில னென்ருன்.

'உளதாம் மூன்று உலகம் முற்றும் - காணப்படுகின்ற மேல் கீழ் நடு என்று சொல்லப்படும் மூன்று உலகம் முழுவதும், செற்ற முதலாரொடு - கறுவு கொண்ட முதற் கடவுளரோடும், எதிர் தோன்றி - நமக்கு எதிராக வந்து, செறுத்ததோர் திறத்தும் - சினந்து எழுந்தபோதும், வெற்றி உனதாக விளையாது ஒழியின் - வெற்றி உனக்கே உண்டாவதாகப் புரிய நான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தவறுவேனுனல், என்னை பெற்றும் இலை - என்னை நீ (பெற்றும்) பெருதவனுகக் கருதப்படுவாய்; யான் நெறி பிறந்தும் இலன் என்றுன் - யான் நேர் மகனுகப் பிறந்தவனும் ஆகேன்' என்று (சூளுரைத்தான்) இந்திரசித்து.

செற்ற - பகைத் தெழுந்த; 'செற்றன் ருயினுஞ் செயிர்த் தன் ருயினும்' (புறநா. 226); 'செற்ற தெவ்வர்' (மதுரைக். 189). செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது என்பர். 'அரசர் செறின் வவ்வார்' (நாலடி. 134). செறுத்தல் - சிதைத்தலுமாம். 'உறைத்துஞ் செறுத்து மூணர்த்துவானை' (பரிபா. 12 : 66). செறுத்தல் : நெருக்குதலுமாம். கடையடிக்கு : 'தம்பிக்குயிரி று சமைத்தவனைக், கம்பிப்பதோர் வன்றுயர் கண்டிலனேல், நம்பிக் கொரு நன்மகனே வினியான்' (யுத்த. அதிகாயன். 11).

பி - ம். 1. முற்று முதலாயுலக, முதலா முலக, முளவாயுலக.
2. செற்றிமுதலா; லோரொடு, செறித்தெதிர் திறத்தும்; செறுத்த பொழுதந்துப்.
3. வெற்றியெனதாக, வெற்றியுளதாக; வினையா தொழிவனுகிற், வினையா தொழிகி.
4. பெற்றுமிலன்; யானுநிற், நானிற், யானெனில், மிலனன்ருே, மிலையென்ருன். 60

72. குரங்குபட மேதினி குறைத்தலை நடம்போர்
அரங்குபட மானிட ரலந்தலை படப்பார்
இரங்குபடர் சீதைபட வின்றிருவர் நின்ருர்
சிரங்குவ டெனக்கொணர்தல் காணுதி சினத்தோய்.

'சினத்தோய் - கோபத்துடன் கூடியவனே!, குரங்குபட - குரங்குகள் இறக்கவும், மேதினி - பூமி, குறை தலை நடம் - கவந்தம் ஆடுதலைக் கொண்ட, போர் அரங்குபட - யுத்த நடிப்பு மேடையாகவும், (போர் புரிந்து), மானிடர் அலம் தலைபட - மனிதர்கள் துன்பத்தை அடையவும், பார் இரங்குபடர் சீதைபட - உலகினர் மனம் நெகிழ்தற்குக் காரணமான துன்பத்தைச் சீதாதேவி யடையவும், இன்று - இப்பொழுது (நம்மை எதிர்த்து), நின்ருர் இருவர் - நின்ற இருவரான (இராம இலக்குவரின்), சிரம் - தலைகளை, குவடு என கொணர்தல் காணுதி - மலைச் சிகரங்களைப் போலக் கொண்டு வருவதைக் காண்பாயாக.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குறைத்தலை - தலையற்ற உடல்; இதனைக் கவந்தம் என்பர்; 'குறைத்தலைப் படுபிண னெதிர்' (புறநா. 371); மதுரைக் காஞ்சியில் இதனை யூபம் என்பர்; 'யூபம் எழுந்து ஆட - குறைத்தலைப் பிணம் எழுந்து நின்று ஆடுகையினாலே'; (மதுரைக். 27 உரை); 'கும்மனத்தாளர் குறைப்பிணங் காட்டி' (பெருங். இலாவாண. 19, 57). அரங்கு - ரங்கம் என்ற வடசொல் அகரம் பெற்று வந்தது. அலந்தலை - கலக்கம்; (சுந்தர. 910); 'இவள் பேச்சும் அலந்தலை' (திவ்ய. பெரியாழ். 3·7·1); அலந்தலைமை - தொந்திரவு; 'அலந்தலைமை செய்திடுமையன்' (திவ்ய. பெரியதிரு. 4·4·3). பார் இரங்குபடர் சீதைபட - இப்பார் மட்டுமன்று எப்பாரும் இரங்கின; (ஒப்பு): 'மங்கை யழலும்' எனத் தொடங்கும் யுத்த. சீதைகளம். 5 பாடல் காண்க. 'நின்றார் சிரங்குவடெனக் கொணர்தல்' என்ற தொடர், நின்றவருடைய சிரம் என்றும், நின்றவர் தம் சிரத்தைக் கொணர்தல் என்றும் பொருள்படுதல் உய்த்துணர்க. (ஒப்பு): 'செங்கையால் தாங்கிய குரிசில்பற்றிக் கொணர்ந்திடுந் தலையைக் கண்டான்' (யுத்த. இந்திரசித்து. 60): 'வன்றலை யெடுத்து நீமுன் வருதலால் வாநரேச, என்றலை யெடுக்கலானேன்' (யுத்த. இந்திரசித்து 62); 'சுமித்திரை உய்யவீன்ற, நன்மகன் வாளிநக்க நாயவ னுடலை நக்க, என்மக னிறந்தானென்ன நீயெடுத் தரற்றல்' (யுத்த. மாயாசனக. 59) என்பன காண்க.

பி - ம். 1. படும்போர், படப்போர், நடப்போர், படுப்போர்.
2. வெந்தலை, ரலைந்தலை; படப்பேர், படைப்பேர்.
3. இன்றிருவ ரென்றார்.
4. சிரங் கடிதினிற்; திறத்தோய்.

61

73. சொல்லிடை கழிக்கிலென் சுருங்கிய குரங்கென்
கல்லிடை கிழிக்குமுரு மிற்கடுமை காணும்
வில்லிடை கிழித்தமிடல் வாளிவெரு வித்தம்
பல்லிடை கிழித்தீரிவ கண்டுபய னுய்ப்பாய்.

'சொல் இடை கழிக்கிலென் - அதிகமாகப் பேசிக் காலம்கழிக்க நான் விரும்பவில்லை; சுருங்கிய குரங்கு - கண்கள் உட்குழிந்து முகம் சுருங்கப் பெற்ற குரங்குகள், கல் இடை கிழிக்கும் உருமில் கடுமை காணும் - மலைகளையும் பிளக்கும் இடியைக் காட்டிலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கொடுமை வாய்ந்துள்ள, என் வில் இடை கிழித்த மிடல் - என் வில்லிடத்தினின்று வெளிப்பட்ட வன்மை பொருந்திய, வாளி வெருவி - அம்புகட்கு அஞ்சி, தம் பல் இடை கிழித்து - தம்முடைய பற்களை இளித்துக் கொண்டு, இரிவ கண்டு பயன் உய்ப்பாய் - ஓடுவது கண்டு வெற்றிப்பயனைக் கொள்வாயாக.

உரும் - இடி; ஆரணிய. 18, 689 : கிழித்த என்ற சொல் பல பொருள்களில் வருதல் காண்க. சுருங்கிய குரங்கை வலீமுகம் என்பர். சொல் இடை: இடை - காலம். குரங்குகள் அஞ்சி ஓடுங்கால் பற்காட்டுவ தியல்பு. சுருக்கம், கண் முகம் இரண்டி னுக்கும் கொள்ளப்பட்டது ; 'முன்னிரண்டு காலெங்கே யுட்குழிந்த கண்ணெங்கே' (தனிப்பா.) என்றது காண்க. உடலின் மீது விழும் அம்புகட்கு மலையில் விழும் இடி உவமை.

பி - ம். 1. கிழிக்கில, கழிக்கிலை, கழித்தல.
2. கழித்தவுரு, குழிக்கு முரு ; உருமிற் கடிது, உருவிற் கடுமை.
3. குழித்த ; கழித்த மிடல் ; வாளிபட வுட்கிப், வானரி வெரீஇத்தம்.
4. பல்லிடைகளிற், கழித்திரிவ, கிழித்திடுதல் ; கண்டு பல. 62

74. யானையிலர் தேர்புரவி யாதுமில ரேவுந்
தானையிலர் நின்றதவ மொன்றுமிலர் தாமோ
கூனல்முது கின்சிறு குரங்குகொடு வெல்வார்
ஆனவரும் மானிடர்ந மாண்மையழ கன்றே.

'யானை இலர் - யானைப்படை யில்லாதவரும், தேர் புரவி யாதும் இலர் - தேர்ப்படை, குதிரைப் படை யொன்றும் இல்லாத வரும், ஏவும் தானை இலர் - நம்மை எதிர்க்கும்படி செலுத்தக் கூடிய காலாட் படையில்லாதவர்களும், நின்ற தவம் ஒன்றும் இலர் தாமோ - நிலைபேறுடைய தவம் ஒன்று மில்லாதவர்களு மான (நம்) விரோதிகளா, கூனல் முதுகின் சிறு குரங்குகொடு-கூன் பொருந்திய முதுகினையுடைய எளிய குரங்குகளைக் கொண்டு, வெல்வார் - (நம்மை) வெற்றி கொள்ளப்போகிறார்கள் ? ஆனவரும் மானிடர் - அவர்களும் (தேவர் முதலியோ ரல்லர்) மனிதர்களே ; (அங்ஙன மாகவும், அவர்களைக் கண்டு அச்சம் கொள்ளும்) நம் ஆண்மை அழகு அன்றோ - நம்முடைய வீரம் அழகா யுள்ள தல்லவோ ? ஓகாரம் வினா.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கூனல் முதுகின் குரங்கு'; 'கூனுடைக் குரங்கு' (யுத்த. கும்ப. 92); 'குனியுமாக் குரங்கு' 693. தாமோ; ஓகாரம் எதிர் மறை; இளிவரல் பற்றி வந்தது. கொடு - நான்காம் வேற்றுமைச் சொல்லுருபு. ஒன்றுக்கும் பற்ருத மனிதர் இருவர்க்கும் குரங்குக்கும் அஞ்சுவது அழகன்று என்ருன்.

பி - ம். 1. புரவியாவுமிலர், யெய்யுந், யேயுந், யெய்தும்.

2. தாமோர், தாமே.

3. கூனமுதுகு. கூனே.

4. மாநுடவ ராண்மை, ராணே, நமதாண்மை; யினிதன்ரே, யினிதன்ருல்.

75. நீரும்நில னும்நெடிய காலும்நிமிர் வானும்
பேருலகில் யாவுமொரு நாள்புடை பெயர்த்தே
யாருமொழி யாமைநரர் வாநரரை யெல்லாம்
வேருமொழி யாதவகை வென்றலது மீளேன்.

'நீரும் நிலனும் - நீரும் பூமியும், நெடிய காலும் - எங்கும் பரந்துள்ள காற்றும், நிமிர் வானும் - மேலே விளங்கிக் காணும் ஆகாயமும் ஆகிய, பேர் உலகில் யாவும் - இந்தப் பெரிய உலகில் உள்ள அனைத்தையும், ஒரு நாள் புடை பெயர்த்து - ஒரே நாளில் கீழ்மேலாகும்படி புரிந்து, நரர் வாநரரை எல்லாம் - மனிதர் குரங்குகள் என்ற வருக்கத்தைச் சேர்ந்த யாவர்களிலும், யாரும் ஒழியாமை-எவரும் எஞ்சாதபடியும், வேரும் ஒழியாத வகை-வேரும் மிஞ்சாதபடியும், வென்றலது மீளேன் - வெற்றி கொண்டல்லது, நான் (உயிருடன்) திரும்பேன்'. ஏ - அசை.

இந்திர சித்தின் சூளுறவு. ஐம்பெரும் பூதங்களில் நான்கினைக் கூறினர். தீயினை உபலக்கணத்தாற் கொள்க. நிமிர்தல்-மேலே விளங்குதல். புடை பெயர்தல்; 'நிலம் புடை பெயர்வதாயினும்' (புறநா. 34); 'நிலம் புடை பெயரினும்' (பெருங். இலாவா. 17; 139). ஒழியாமை - ஒழியாமல். கருவும் அறுத்தொழிப்பேன் என்பான் 'வேரு மொழியாதவகை' என்ருன். (ஒப்பு): 'வேறு பெயராதவகை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வேரொடு மடங்க' (மந்திரப். 56); 'வேரறுப்பன் வெருவன்மின்' (ஆரணிய. 139).

பி - ம். 2. பேருமுலகு, பேருலகி ; நாளீடை ; பெயர்ந்தே.

3. ஒழியாமல், மறியாமல் ; வா நரங்கள் என்பார்.

4. கொன்றலது ; பேருமொழியாதவகை கொன்றலது பேரேன் ; 64

## வீடணன் கூற்று

76. என்றடி யிறைஞ்சின னெழுந்துவிடை யீமோ
வன்றொழிலி னாயெனலும் வாளெயிறு வாயின்
தின்றனன் முனிந்துநனி தீவினையை யெல்லாம்
வென்றவரு ணன்றுணரும் வீடணன் விளம்பும்.

என்று - என்று சொல்லி, அடி இறைஞ்சினன் எழுந்து - தந்தையின் அடிகளில் வணங்கி எழுந்து, 'வன் தொழிலினாய் - வலிய செயலாற்ற வல்லவனே! விடை ஈமோ - அநுமதி தருக', எனலும் - (இந்திர சித்து) வேண்டிய அளவிலே, நனி தீவினையை எல்லாம் வென்றவருள் - மிக்க தீவினைகள் அனைத்தையும் வெற்றி கொண்டு விளங்கும் ஞானிகள் குழுவிற்குள்ளே, நன்று உணரும் - மிக நன்றாக அறிய வேண்டுவனவற்றை அறிந்தவனான, வீடணன் - வீபிஷணாழ்வான், முனிந்து-சினம் கொண்டு, வாயில் வாள் எயிறு தின்றனன் - வாயில் ஒளியுள்ள பற்களைக் கடித்தவனாய், விளம்பும் பின்வருமாறு சொல்லலானான்; அதனை மேல் வரும் கவிகளிற் காண்க.

ஈமோ ; மோ : முன்னிலையசை. வல்தொழில் - கொடிய தொழிலுமாம். எயிறு தின்றல் சினக்குறி. 'எயிறு தின்றுவைது' (வி.பா. நிவாத. 115); 'கடித்த கதிர் வாளெயிறு' (ஆரணிய. 602); தின்றனன் : முற்றெச்சம். நன்றுணரும் 'மூதுணர்வின் மிக்கான் அடல் வீடணன்' (யுத்த. அதிகாயன். 87). 'தொழுதனன் உலக மூன்றுந் தலையின்மேற் கொள்ளுந்தூயான்'; 'மேதாவிகட்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கெல்லாம் மேலான மேன்மையான்.' (யுத்த - இரணிய. 176); 'அந்த மில்குணத்தினனே' (யுத்த. விபீடண. 152).

பி - ம். 1. என்றன னிறைஞ்சின.
2. வன்றிறலினுய்; றுயெனவும்.
3. முனிந்துவரு, முனிந்தனன்முன்; நீயினனை.
4. வென்றவரின், வென்றவனினின்று. 65

இங்கு 'மந்திரப்படலம் முற்றும்' என்றும், அடுத்து வருவது விபூடணன் புத்திப்படலம் என்றும் ஓர் பிரதியில் உள்ளது.

## வீடணன் இந்தரசித்தை நோக்கிக் கூறியவை

77. நூலினு னுணங்கிய வறிவு நோக்கினர்
போலுமா லுறுபொருள் புகலும் பூட்சியோய்
காலமேல் வினைபொரு ளுணருங் கற்பிலாப்
பாலனீ யினையன பகரற் பாலையோ.

(வீடணன் இந்திர சித்தை நோக்கி), 'நாலினுல் நுணங்கிய அறிவு நோக்கினர் போலும் - அறிவு நூல், உலக நூல்களிற் கூறப்பட்டனவற்றை நுட்பமான நுழை புலங்கொண்டு ஆராய்ந் தவர்களைப் போன்று, உறு பொருள் - (இப்பொழுதைக்கு) ஏற்ற கருத்துக்களை, புகலும் பூட்சியோய் - சொல்ல முன்வருகின்ற கோட்பாட்டை யுடையவனே! காலம் - கால நியதியையும், மேல் வினை பொருள் - மேல் நிகழவிருக்கும் நிகழ்ச்சிகளையும், உணரும் கற்பு இலா பாலன் நீ - தெரிதற்கேற்ற கல்வியறிவு வாய்க்கப்பெருத சிறுவனுகிய நீ, இனையன பகரல் பாலையோ - இத்தகைய சொற்களைச் சொல்லக் கடவையோ? ஆல் - அசை. ஓ - வினு.

நுணங்கிய - 'நூற் பெருங்கடல் நுணங்கிய கேள்வியான்' (சுந்தர. 301). 'நுணங்கிய கேள்வியான்' (யுத்த. விபீடண. 87). 'நுணங்கிய கேள்வியர்' (குறள். 419). போலும் - ஒப்பில் போலி. உறுபொருள் - 'உறுபொருள் யாவரும் ஒன்றக் கூறினர்' (யுத்த. விபீடணன். 86). பூட்சி - பூட்கை; மேற்கொள்ளும் உறுதி. கற்பு -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கல்வி ; 'உலகந் தாங்கிய மேம்படு கற்பின்' (பதிற்று. 59, 8). 'எழுதாக் கற்பின்' (குறுந். 156).

பி - ம். 1. நோக்கினர், நோக்கினை, நோக்கில், நோக்கிலர், நோக்கிலை.
2. லொருபொருள் ; புகலப் ; பூட்சியோ, பூழ்ச்சியோர், பூட்சியோர் ; சூட்சியின்.
3. காலமே : ளுணரக்.
4. பாலநி யனையன.

66

78. கருத்திலான் கண்ணிலா னொருத்தன் கைக்கொடு
திருத்துவான் சித்திர மனைய செப்புவாய்
விருத்தர்மே தகையவர் வினைஞர் மந்திரத்
திருத்தியோ விளமையான் முறைமை யெண்ணிலாய்.

'இளமையான் - வாலிபத் தன்மையால், முறைமை எண்ணிலாய் - சொல்லவோ செய்யவோ வேண்டிய வழிதுறை எண்ணாதவனான நீ, கருத்து இலான் கண் இலான் ஒருத்தன் - ஆயும் திறனில்லாதவனும், விழிகள் இல்லாதவனுமாகிய ஒருவன்; கைகொடு திருத்து வான் சித்திரம் அனைய செப்புவாய் - தனது கைகளைக் கொண்டு திருத்தமாக ஆக்கும் உயர்ந்த சித்திரத்தை ஒத்த வார்த்தைகளைச் சொல்கின்றனை ; விருத்தர் மேதகையவர் வினைஞர் மந்திரத்து இருத்தியோ - (ஞானம் வயது, ஒழுக்கம் என்ற மூன்றிலும்) முதிர்ந்து விளங்கும் பெரியோர், பிரமஞானிகள், செயலாற்றும் தீரர்கள் என்ற இவர்கள் குழுமியுள்ள மந்திராலோசனைப் பேரவையில் நீயும் ஒருவனாக அமர்தற்கு தகுதியுள்ளவனோ ?

சித்திரம் திருந்துவதற்குக் கண் அவசியம் எனினும் கருத்து அதனினும் இன்றியமையாதாகலின் கருத்தினை முன் வைத்தார் ; 'ஆதரித் தமுதில் தோய்த்து' (பால. மந்திரச். 5) : என்றது காண்க. திருத்து வான் சித்திரம் என்க. மந்திரம்-இலக்கணையால் அறிஞரின் ஆய்வுக் கூடத்தை உணர்த்தியது. அனைய, பெயர். விருத்தர் மேதகையர் வினைஞர் : 'அறனறிந்து மூத்த அறிவுடையார்' (குறள். 441). முறைமை - காலம் இடம் அறிந்து சொல்லு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தலும் செய்தலும். மந்திரத்து இருக்கத்தகாதவர்; பெருங். 4, 5 : 70-72; வில்லிபா. கிருட்டினன் தூது. 52. யுத்த. மந்திர. 7.

பி - ம். 1. ஒருவன் ; கைகொடு.
2, செப்புமோ ; செப்பினுய்.
3. விருத்த மேதகை ; தகையிவர் ; வினையர், வினையமந்திரம் ;
4. இளமையின் முறைமை செப்புவாய் ; என்னலாய். 67

79. தூயவர் முறைமையே தொடங்குந் தொன்மையர்
ஆயவர் நிற்கமற் றவுண ராதியாந்
தீயவர் தவத்தினுற் றேவ ராயது
மாயமோ வஞ்சமோ வன்மை யேகொலோ.

'தூயவர் - பரிசுத்தரும், முறைமையே தொடங்கும் தொன்மையர் ஆயவர் - நீதி முறைக்கேற்ற செயல்களையே செய்பவருமான பழமை வாய்ந்தவரும் பெரியோர்களுமான தேவர்கள், நிற்க - ஒரு புறமிருக்க, மற்று அவுணர் ஆதியாம் தீயவர் - அவர்களினும் வேருன அவுணர் முதலான கொடியவர், தவத்தினுல் - தவத்தால், தேவர் ஆயது - தேவரைப் போல் சிறப்புற்றது, மாயமோ வஞ்சமோ வன்மையே கொலோ - பொய்யோ, வஞ்சனையோ, அல்லது வன்மையினுலோ? ஓ - வினு.

அவுணர் முதலானோர் தேவராக ஆவது தவத்தினன்றிப் பிறவகையானன்று ; அறமே மேற்கொள்ளத்தக்கது என்றுன். (ஒப்பு) கிட்கிந்தை. 343. 'ஏவலெவ் வுலகுஞ் செய்யச் செல்வமிற் கிசைந்த தென்றுல், பாவமோ முன்னீ செய்த தருமமோ தெரியப் பாராய்' (சுந்தர. 459); 'அறத்திறனுலே யெய்தினை யன்றே வது நீயும், புறத்திறனுலே பின்னு மிழக்கப் புகுவாயோ' (ஆரணிய. 733). 'முற்றமூன் றுலகும்நீ முதல்வ னுயது, வெற்றியோ பொறை கொலோ' (உயுத்த இராவணன் மந்திரப். 19); 'அறத்தினலன்றி யமரர்க்கு மருஞ்சமம் கடத்தல், மறத்தி னலரி தென்பது மனத்திடை வலித்தி' (யுத்த. முதற்போர். 252).

பி - ம். 1. துடங்குந் தொன்மையோ, தொன்மையோர்.
2. அவுணராதியர், ராதியாய்த்.
3. அறத்தினுற், திறத்தினுற் ; தீயவரிடைச் சிலர் தேவராயது.
4. கொலாம். 68

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



80. அறந்துறந் தமரரை வென்ற வாண்டொழில்
திறந்தெரிந் திடினது தானுஞ் செய்தவம்
நிறந்திறம் பாவகை யியற்று நீர்மையால்
மறந்துறந் தவர்தரும் வரத்தின் வன்மையால்.

'அறம் துறந்து - அறத்தை அறவே விடுத்து, அமரரை வென்ற - தேவர்களை யெல்லாம் வெற்றி கொள்ளுமாறு நின்பால் அமைந்துள்ள, ஆண் தொழில் - வீரத்தின், திறம் தெரிந் திடின் - கூறுபாட்டை நன்கு ஆராய்ந்தால், அதுதானும் - அதுவும், செய்தவம் - நீ புரிந்த தவத்தை, நிறம் திறம்பாவகை இயற்றும் - அதன் தன்மை கெடாதபடி ஆற்றிய, நீர்மையால் - தகுதியாலும், மறம் துறந்தவர் தரும் வரத்தின் வன்மையால் - கொடிய செயல்களை நீத்த தேவர்கள் (உனக்குத்) தந்த வரத்தின் பலத்தாலுமே யாகும்.

நிறம் - இயல்பு ; 'வின்னிற வாணுதல்' (திருக்கோ. 68); செய் தவம் 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ மீண்டு முயலப்படும்' (குறள். 265). நீர்மையைக் கண்டு மறந்துறந்தவர் தரும் வரம் எனினுமாம்.

பி - ம். 2. திறந்தெரிந்திடலது, தெரிந்திடிலது, திடவது.
3. யியற்றி ; நீதியின், நீதியான்.
4. மறந்திருந், மறந்திறந் ; வண்மையால். 69

81. மூவரை வென்றுமூன் றுலகு முற்றுறக்
காவலி னின்றுதங் களிப்புக் கைம்மிக
வீவது முடிவென வீந்த தல்லது
தேவரை வென்றவர் யாவர் தீமையோர்.

'தீமையோர் - தீய செயலாளர்கள், மூவரை வென்று - மும் மூர்த்திகளையும் அடக்கி, மூன்று உலகும் முற்றுற - மூன்று உலகம் முழுவதையும், காவலின் நின்று - காக்கும் தொழிலில் நிலைத்து நின்று, தம் களிப்பு கைமிக - தங்களுடைய செருக்கு அதிகமாக, (நல்லவர்க்குத் தீமை புரிந்து). வீவது முடிவு என வீந்தது அல்லது - இறந்தொழிவதே (தமது) முடிவு என்று (பிறர் அறியுமாறு) இறந்தனர் அன்றி, தேவரை வென்றவர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

யாவர் - தேவரை வெற்றி கொண்டு தம் வாழ்நாள் முழுவதும் சிறந்து விளங்கியவர் யார்? (ஒருவரு மில்லை).

களிப்பு - சங்கச் செய்யுட்களில் இச்சொல் கள்ளுண்ட களியையே குறித்து நின்றது. 'களித்தானைக் காரணம் காட்டுதல்' (குறள். 929): பின்னர்ப் பொதுவாக மகிழ்ச்சியைக் குறித்தது. பின்வரும் இரணியன் வதைப் படல வரலாற்றைச் சூசிப்பது போல இச்செய்யுள் அமைந்துள்ளமை காண்க.

பி - ம். 1. றுலகை முற்றுறக்.
2. னின்று நங்.
3. ஆவன, வீவன; வியைந்த, விய்ந்த,
4. சிரியோர், தீமை யோய். 70

82. வினைகளை வென்றுமேல் வீடு கண்டவர்
எனைவரென் றியம்புகே னவர்த மீகையான்
முனைவரு மமரரு முன்னும் பின்னரும்
அனையவர் திறத்துளார் யாவ ராற்றினர்.

'முன்னும் பின்னரும் - முற்காலத்திலும் பிற்காலத்திலும் இருந்தவரும் இருப்பவருமான, முனைவரும் அமரரும் - முனிவர் களும் தேவர்களும், வினைகளை வென்று - தீய வினைகளை வெற்றி கொண்டு, அவர் தம் ஈகையால் - தங்களுடைய தியாக வுணர்வால், மேல் வீடு கண்டவர் - உன்னதமான முத்தியுலகை யடைந் தவர்கள், எனைவர் என்று இயம்புகேன் - எத்துணைவர் என்று நான் உரைக்கக் கூடும்? அனையவர் திறத்துளார் - அந்த வரிசை களைச் சேர்ந்தவர்களில், யாவர் ஆற்றினர் - (தீத்தொழில்களைப்) புரிந்தவர் யாவர்? (எவருமில்லை).

வினைகள்: ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தம் என்றும், இவை களே பிறப்பிற்கு மூலம் என்றும் கூறுவர். 'வினைப் போகமே யுறுந்தேகம் கண்டாய்' (பட்டினத். திருத்தில்லை 7). இவற்றை வெற்றி கொண்டாலன்றி வீடு காண்ப தரிது. ஆகாமிய வினை - பிராரத்தம் புசிக்கும்போது வந்து கூடும் வினை. பிராரத்தம்: இப்பொழுது துய்க்கப்படும் முன்னைவினை. சஞ்சிதம்: அநாதியா யீட்டப்பட்டுள்ள கருமத்தில் துய்த்துக் கழிந்ததுபோக எஞ்சியது. 'பிராயச்சித்தஞ் சஞ்சிதஞ் தவிர்க்கு மன்றே' (பிரபோத. 39 : 18)

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வினை - நல்வினை தீவினையுமாம். வீடு - விடு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர்; முக்தி என்ற வடசொல் இப்பொருளிலேயே வழங்கும். ஆற்றுதல் - செய்தல். (குறள். 975).

பி - ம். 2. எளையரென்; றியம்புது, றியம்புவ, றியம்புவா, றிர்க்கையால், னவர் தமிகையால், நிய்கையானவர், யாவர் நீமையான்.
3. முனிவரும்.
4. றிறம்பினர், பிறருளர், றிறந்துளாராவர், அறுயவரன்றிவே றியாவ ராற்றினர். 71

83. பிள்ளைமை விளம்பினை பேதை நீயென
ஒள்ளிய புதல்வனை யுரப்பி யென்னுரை
எள்ளலை யாமெனி னியம்ப லாற்றுவென்
தெள்ளிய பொருளென அரசற் செப்பினன்.

'பேதை நீ - அறியாதவனான நீ, பிள்ளைமை விளம்பினை - சிறு பிள்ளை யியல்பால் (இவ்வாறு) கூறினாய்;' என - என்று சொல்லி, ஒள்ளிய புதல்வனை உரப்பி - புகழுடன் பொலியும் மகனை (இந்திரசித்தை) வெகுண்டு கூறி, 'என் உரை எள்ளலை யாம் எனின் - என் சொற்களை இகழாமல் இருப்பாயாயின், (நான்), தெள்ளிய பொருள் - தெளிந்து அறிந்த கருத்தை, இயம்பல் ஆற்றுவென் - சொல்லுவேன்' என - என்று, அரசற் செப்பினன் - அரசனுக்குக் கூறினான். (அவற்றைப் பின் வரும் செய்யுட்களில் காணலாம்).

பிள்ளைமை : பிள்ளைத் தன்மை; 'பிள்ளைமை காதல் கூர' (சீவக. 2529) : 'பிள்ளைமை விடுத்த தள்ளரும் பருவத்து' (பண்டார மும்மணி. 2, 36). எள்ளல் - இகழ்தல்; 'எள்ளலிளமை பேதைமை மடனென்று' (தொல். மெய்ப்பாடு. 4). பெருமிதத்தாலும் செருக்காலும் புறக்கணிக்கக் கூடும் என்று எதிர் பார்த்தே, 'எள்ளலை யாமெனின்' என்றான்.

பி - ம். 1. நீயென.
2. உள்ளிய; யேன்றுரை.
3. இறைவ கேளென.
4. பொருள்முறை வணங்கிச் செப்புவான். 72


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## வீடணன் இராவணனை நோக்கிக் கூறியவை

**84.** எந்தைநீ யாயுநீ யெம்மு னீதவ
வந்தனைத் தெய்வநீ மற்று முற்றுநீ
இந்திரப் பெரும்பத மிழக்கின் றுயென
நொந்தன னுதலின் நுவல்வ தாயினேன்.

'எந்தை நீ - எனக்குத் தந்தை நீ, யாயும் நீ - தாயும் நீ, எம் முன் நீ - என் தமையனும் நீ, தவ வந்தனை தெய்வ நீ - தவத்தினால் நான் கண்டு வழிபடற்குரிய கடவுளும் நீ, மற்றும் முற்றும் நீ - மேலும் (உலகில் மேன்மையாகக் கருதப்படும்) பொருள் அனைத்தும் (எனக்கு) நீ; இந்திர பெரும்பதம் இழக்கின்றுய் என - இந்திர பதவி போன்ற பெரிய சாம்ராஜ்யத்தை இழப்பதற்குரிய செயலைப் புரிகின்றனை என்று, நொந்தனன் ஆதலின் - நினைந்து மனம் வருந்தினன் ஆகலின், நுவல்வது ஆயினேன் - உன்பாற் சில அறிவுரைகள் கூறுவதை மேற்கொண்டேன்.

**எந்தை** : என் தந்தை யென்பதன் மரூஉ. யாய் - தாய்; இதுவே பழந்தமிழ் நூல்களிற் காணப்படுவது; இது பின்னர், 'ஆய்' எனத் திரிந்தது. 'யாயும் ஞாயும் யாராகியரோ' (குறுந். 118); 'யாயாகியளே மாயோளே' (குறுந். 30). தவ, மிகவும் எனவும் ஆம். முன் இரண்டடிகளும் வீடணன் தன் அண்ணனிடம் வைத்திருந்த நன்மதிப்பினை விளக்கும். மூவுலகும தன் ஏவல் செய்ய நின்ற அவனது ஆட்சி நிலையை, 'இந்திரப் பெரும் பதம்' என்றும், அதனை இழப்பது நன்றன்று என்றும் கூறினன்; (ஒப்பு) : 'மன்ன நீயுன் வாழ்வை முடித்தாய் மதியற்றுய்' (ஆரணிய. 731) : என்பது மாரீசன் கூற்று; 'அந்தரத்தோடு மெவ்வுலகு மாள்கின்றுன்' (ஆரணிய. 847) என்பது இராவணனே தன்னைப் பிறன்போல் கூறியது; 'இந்திரப் பெரும்பதம்' இதன் விரிவைக் காட்சிப் படலத்து அசோக வனத்தில் பிராட்டி முன்பு இராவணன் தோன்றியதை வருணிக்கும் இடம் கொண்டும், பிணிவிடு படலச் செய்யுட்கள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கொண்டும் உணர்க. இந்திரப் பெரும்பதம் - சக்கரச் செல்வம் (நாலடி. 346) : இந்திரனுக்குச் சக்ரீ என்ற பெயர் உண்டு.

பி - ம், 1. நவமுறை.
2. தெய்வமுற ; மற்றுறை.
4. வயர்தலின் ; நொந்தன னடியனே னுவலக் கேட்டியால்.

73

85. கற்றுறு மாட்சியென் கண்ணின் றாயினும்
உற்றுறு பொருள்தெரிந் துணர்த லோயினும்
சொற்றுறு சூழ்ச்சியின் துணிவு சோரினும்
முற்றுறக் கேட்டபின் முனிதி மொய்ம்பினோய்.

'மொய்ம்பினோய் - வலியோனே ! கற்று உறு மாட்சி என் கண் இன்றாயினும் - கற்றதனால் நிகழக்கூடிய மாண்பு என்னிடம் இல்லாவிடினும், உற்று உறு பொருள் தெரிந்து உணர்தல் ஓயினும் - இப்பொழுது நிகழ்ந்துள்ள பெரிய நிகழ்ச்சியை முடிவு போக ஆராயவல்ல அறிவு எனக்கு இன்றாயினும், சொற்று உறு சூழ்ச்சியின் துணிவு சோரினும் - சொல்லப் பெற்றுள்ள மந்திராலோசனையின் துணிந்த பொருளைத் தெரிவதில் தளர்ச்சி ஏற்படினும், முற்று உற கேட்டபின் முனிதி - என் சொற்களை முழுவதும் கேட்ட பின்னர் வேண்டும் எனின் சினம் கொள்வாயாக.

என் உரை கொள்ளத்தக்க தாயினும் தள்ளத்தக்க தாயினும் முற்றும் கேட்டபின் முனிக என்று விநயமாகக் கூறினன். ஓய்தல் - குறைதல் ; 'ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்' (தொல். உரியியல். 32). கற்றுறுமாட்சி, கல்வியறிவு எனினும், உற்றுறு பொருள், சாத்தியமான தாத்பரியம் எனினும் ஆம்.

பி - ம். 2. துணர்தி, துணர்த்தி ; பொருள்முறை யுணர்வி னோயினும்.
3. சூட்சியின்.
4. முன்பினோய்.

இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் ஓர் பாடல் அதிகமாகக் காண்கிறது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

எனவவன் அடித்துணை யிறைஞ்சி வாய்புதைத்
தினியசித் திரமென வொடுங்கி நின்றுதான்
நனைமலர்க் கண்கணீர் சொரிய நன்னெறி
வினைபயில் வீடணன் விளம்பல் மேயினான். 74

**86. கோநகர் முழுவதும் நினது கொற்றமும்**
**சானகி யெனும்பெய ருலகின் றம்மனை**
**யானவள் கற்பினால் வெந்த தல்லதோர்**
**வாநரம் சுட்டதென் றுணர்தல் மாட்சியோ.**

'சானகி எனும் பெயர் உலகின் தம்மனை ஆனவள் கற்பினால் - சானகி என்று பெயர் கொண்ட உலகின் தாயாகிய சீதாதேவியின் கற்பு மாண்பினால், நினது கொற்றமும் - உன் வெற்றிச் சிறப்பும், கோநகர் முழுவதும் - இலங்காபுரி முழுவதும், வெந்தது அல்லது - வெந்து அழிந்தனவே அல்லாமல், ஓர் வாநரம் சுட்டது என்று உணர்தல் மாட்சியோ - ஓர் குரங்கு சுட்டது என்று உட்கொள்ளுதல் பெருமையின் பாற்படுமோ? ஓ - வினா.

'நகரைக் குரங் கெரியூட்டியதென்று கருதுதல் மாண்பன்று; சீதையின் கற்புத்தான் அஃது எரியுண்டதற்குக் காரணம்' என்று சுட்டுகின்றான் அறிஞரின் அறிஞன். கொற்றமும் சுட்டது என்றதில், சுட்டது என்பது மறையும்படி செய்தது என்று கொள்க. சானகி, ஜனகன் மகள்: வடமொழித் தத்திதாந்த நாமம். தம்மனை - தாய்; 'தம்மனை தன்முன் வீழ்ந்துமெய் வைத்தலும்' (மணி. 6, 31); 'தொடியோள் தம்மனை' (பெருங். உஞ்சைக். 36; 259); 'நன்முலைத் தீம்பால் தம்மனை கொடுப்ப' (பெருங். மகத. 9 : 51). சானகியை உலகின் தம்மனை என்றது; 'தாயவ ளமிர்தினோடுந் தோன்றினா ளென்றுந் தோன்றாத், தாயவ ளுலகுக் கெல்லா மென்பதுஞ் சாற்றுகின்றார்; (யுத்த. இலங்கைகாண். 12); 'தாயினுந் தொழத்தக்காண் மேல்' (யுத்த. இராவணன் வதை. 211); 'வேதவதி யிவள்கா ணுலகுக்கோ ரன்னை யென்று' (யுத்த. இராவணன் வதை. 222). பிராட்டி கற்புத் தீயினள்; 'அரக்க ரென்னும் கான்சுட முளைத்த கற்பின்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கனலியை' (ஆரணிய. 227); 'சனகியென் றொருதழல்' (சுந்தர. 665). ஓகாரம் - எதிர்மறை.

பி - ம். 1. கோனகர்; நின்று.
2. உலகின் றுயெனும், றுயவள்.
3. வெந்தவல்லதோர்.
4. றுரைத்தல், மாட்சியோய்.

இப்பாடல் சில சுவடிகளில் பின்வருமாறு மாறியுள்ளது.

சானகி யுலகுயி ரெவைக்குந் தாயெனு
ஆனவள் கற்பினு லெரிந்த தல்லது
கோனகர் முழுவதும் நினது கொற்றமும்
வாநரஞ் சுட்டதென் றுணர்தல் மாட்சியோ. 75

8?. எண்பொருட் டொன்றிநின் றெவரு மெண்ணினுல்
விண்பொருட் டொன்றிய வுயர்வு வீழ்ச்சியும்
பெண்பொருட் டன்றியும் பிறிதுண் டாமெனின்
மண்பொருட் டன்றியும் வரவும் வல்லதோ.

'எண்பொருட்டு ஒன்றி நின்று - நன்கு ஆலோசிப்பதற்காக ஒன்றி நின்று மனத்தை ஒருமைப்படுத்தி, எவரும் எண்ணினுல் - யாவர் கருதி நோக்கினும், விண்பொருட்டு ஒன்றிய உயர்வு வீழ்ச்சியும் - ஆகாயத்தை அளாவுமாறு உயர்ந்த தலைமைப் பதவியின் ஒழிவும், பெண் பொருட்டு - பெண்மேல் வைத்த காதலினுல்தான்; அன்றியும் - அஃதல்லாமல், பிறிது உண்டாம் எனின் - வேறு வகையாக நிகழும் என்றுல், மண்பொருட்டு - பூமி காரணமாகவும் (நிகழ்வதாகும்); அன்றியும் - இவை அல்லாமலும், வரவும் வல்லதோ - (ஒருவர்க்கு அழிவு) நிகழ்வதும் உண்டோ? (இல்லை).

'ஒருவன் தன் பெருஞ் செல்வத்தையும் பதவியையு மிழக்க நேர்வது, மண்ணுசையினுலும் பெண்ணுசையினுலும்; ஆகவே உனது முறையற்ற காதல் உனக்குக் கேடு விளைக்கும்' என்றுன். பெண்ணுசையால் அழிவு நேரும் என்று கூறுவான் மண்ணுசையும் இனம்பற்றி மொழிந்தனன். பெண்ணுசையால் அழிந்தவர்; 'வாசவனும் பிறர் நகைக்க வுடலெடுந்தா னொருவனரா வடிவமானுன், தேசுபுகழ்க் கலைமதியும் உடலிழந்தான் மலர்வேதன் சிரமொன் றற்றுன், ஈசனுதல் விழிதிறந்தா னிராவண சுந்தோப

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சுந்தர் இறந்தார் மண்மேல், காசினிப்புன் மானிடரோ மோகசா கரமதனைக் கடக்க வல்லார்' (தனிப்பா.); 'மங்கையர் பொருட்டா லெய்து மாந்தர்க்கு மரணமென்றல், சங்கையின் றுணர்தி வாலி செய்கையால்' (கிட்கிந்தா. 411) என்பது இராமபிரான் கூற்று. ஓகாரம் - எதிர்மறை.

பி - ம். 1. டொன்றநின்.

2. வின்பொருட்டாகிய, டன்றிய; வயர்வு மீட்சியும்.

3. அன்றியே; பிறிதுண்டோ வுயிர்.

4. டன்றியே; வல்லதே, வல்லவோ. 76

88. மீனுடை நெடுங்கட லிலங்கை வேந்தென்பான்
தானுடை நெடுந்தவம் தளர்ந்து சாய்வதோர்
மானுட மடந்தையா லென்னும் வாய்மொழி
தேனுடை யலங்கலா யின்று தீர்ந்ததோ.

'தேனுடை அலங்கலாய் - தேன் பொருந்திய மலர்களாலாகிய மாலை யணிந்தவனே! மீன் உடை நெடுகடல் இலங்கை வேந்து என்பான் - மீன்களை மிகுதியும் பெற்றுள்ள பரந்த கடல் சூழ்ந்த தீவாகிய இலங்கை மன்னனான இராவணன் என்பான், (முன்பு) தானுடை நெடுதவம் தளர்ந்து சாய்வது - தான் ஆற்றிய அருந் தவத்தின் பயன் குறையப் பெற்றுப் பெருமை குன்றுவது, ஓர் மானுட மடந்தையால் என்னும் வாய்மொழி - ஒரு மனித வர்க்கத்துப் பெண்ணினால் என்று கூறும் சொல், இன்று தீர்ந்ததோ - இப்பொழுது முற்றுப்பெறப் போகின்றதோ?

இங்குக் கூறப்பெற்ற சாபம் வேதவதியின் பொருட்டு என்னும் வான்மீகம்; இஃது அரம்பையின் பொருட்டு (உத்தரகாண்டம். திக்கு விசய. 166) என்றும் கூறப்பெறும். 'கூசாது தீண்டினையால், ஏடாவுனக்கு மிலங்கைக்கு முன்கிளைக்கும் கேடாகத் தோன்றுவே னென்றாள் கிளர்சினத்தாள்' (உத்தர. திக்குவிசய. 17). பிரமன் சாபம் என்பது, புஞ்சிகஸ்தலை யென்னும் அரக்கன் பொருட்டு அரக்கன் பெற்ற சாபம். 'மேவுசிந்தையின் மாதரை மெய் தொடில், தேவு பொன்றலை சிந்துக நீயெனப் பூவின் வந்த புராதன னேபுகல் சாவமுண்டென தாருயிர் தந்ததால்' (சுந்தர. 627). இதனை அறிந்தே இராவணன் நிலத்தை ஒரு யோசனை நீளம் கீண்டு கொண்டெழுந் தேகினன் என்பது, சுந்தர. 626; 1276; ஆரணிய. 878. மீனுடை நெடுங்கடல்: மீனுடை; இயற்கை அடைமொழி;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(ஒப்பு) : 'தூம்புடை நெடுங்கை வேழம்' (சீவக. 232); 'குருதிக் கோட்டுக் குஞ்சர நகரம்' (சீவக. 2182). ஓகாரம் - எதிர்மறை. வாய்மொழி - சாபமும் ஆம்.

பி - ம். 1. வேந்தன்முன், வேந்தனின், வேந்தநின், வேந்துநின்.
2. சாய்வது, சாய்ந்தது.
3. மானுடர் ; என்ற, என்னு.
4. நிர்ந்ததே ; நிருமே ; தேர்தியால். 77

89. ஏறிய நெடுந்தவ மிழைத்த வெல்லைநாள்
ஆறிய பெருங்குணத் தறிவ னாணையால்
கூறிய மனிதர்பாற் கொற்றங் கொள்ளலை
வேறினி யவர்வயின் வென்றி யாவதோ.

'ஏறிய நெடு தவம் இழைத்த எல்லை நாள் - மிக்க பெருந் தவத்தை நீ மேற்கொண்டு செய்த காலத்தில், ஆறிய பெரு குணத்து அறிவன் ஆணையால் - அமைதியுடன் கூடிய பெருமை சான்ற பண்பினையுடைய தூய அறிவினனான பிரமதேவனின் கட்டளையால், கூறிய - வன்மை வாய்ந்தவராக இப்பொழுது பேசப் படுகின்ற, மனிதர்பால் கொற்றம் கொள்ளலை - மனிதரை வெல்வ தற்கான வரம் கேளாது விடுத்தனை ; இனி அவர்வயின் வேறு - இனி அவரிடம் தோல்வியுறுதலின் வேறான, வென்றி யாவதோ - வெற்றி எங்குள்ளது ?

ஏறிய நெடுந்தவம் - 'ஓராயிர மாண் டுபவசித்துக் கழிந்தால் ஓரோர் தலையாகச், சீரார் சிரமொன் பதுந்தடிந்து செந்தீ யிடையோ மம்புரிந்து, பேரா வுபவா சத்தினனாய்ப் பின்பு மோரா யிரத்தாண்டில் தாரார் மற்றைத் தலைதடிய லுற்றான் பற்றித் தசக்கிரிவன்' (உத்தர. இராவணன் பிறப்பு. 26) : 'முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும்' (யுத்த. இராவணன் வதை. 198). இழைத்தல் - செய்தல் ; 'உன் திருமேனிக் கன்பிழைத்த வன்பிழையால்' (ஆரணிய. 333). ஆறிய பெருங் குணத்து அறிவன் ; இங்குப் பிரமனைக் குறித்தது. கூறிய மனிதர்பாற் கொற்றம் கொள்ளலை ; 'மன்னு மனிதர் தமைப் பொருளா மனத்தி னினையா வாளரக்கன், உன்னு பொருளொன் றொழியாமல் வேண்ட விரிஞ்ச னுவந்தளித்தான்'; (உத்தர. இராவணன் பிறப்பு. 28). கூறிய - மேலே சிறப்பித்துத்தான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கூறிய இராம இலக்குவர். கொள்ளலே; அல் எதிர்மறை இடைநிலே.

பி - ம். 1. பெருந்தவம்.

2. தறிஞன் ; ஆறணி சடைமுடி யமலன் றன்வயின்.

3. கூறியவிவர்வயின் ; கொண்டிலே.

4. வென்றியாவையோ, யாவதே, யாவையே.

90. ஏயது பிறிதுணர்ந் தெண்ண வேண்டுமோ
நீயொரு தனியுல கேழும் நீந்தினுய்
ஆயிரந் தோளவற் காற்றல் தோற்றனே
மேயினே யாமெனின் விளம்ப வேண்டுமோ.

'நீ ஒரு தனி உலகேழும் நீந்தினுய் - நீ தனித்து ஒருவனுகவே ஏழுலகங்களேயும் வெற்றி கொண்டாய்; (எனினும்), ஆயிரம் தோளவற்கு ஆற்றல் தோற்றனே - ஆயிரம் புயங்களே யுடையவனுன கார்த்த வீரியார்ச்சுனனிடம், உன் வலிமை ஒழியப் பெற்றவனுய், மேயினே ஆம் - அங்கு நிற்கவும் மாட்டாமல் நடந்தனே யாவை; எனில் - என்ருல், எண்ண ஏயது - மனிதரால் வந்து பொருந்த கூடிய துன்பத்தைப்பற்றி, பிறிது உணர்ந்து எண்ண வேண்டுமோ - மற்றும் அறிந்து ஆராய்ச்சி செய்ய வேண்டுமா? விளம்ப வேண்டுமோ - அல்லது பகரத்தான்வேண்டுவதோ? ஒகாரங்கள் எதிர் மறை.

ஏயது - பொருந்தியது ; 'ஏயதோர் நெறியை யெய்தி' (ஆரணிய. 1185) ; 'ஏயது முடித்து மென்று' (யுத்த. விபீடண. 23). நீந்துதல் - அரிதிற் கடத்தல். ஆயிரம் தோளவன் - கார்த்த வீரியன் : அவனுக்கு ஆற்றல் தோற்றது ; இராவணன் ஓர் கால் நருமதை யாற்றங்கரையில் சிவபூசை செய்யப்புக, அப்பொழுது தேவியருடன் நீர் விளேயாட்டு நிகழ்த்த வேண்டிக் கார்த்த வீரியன் என்னும் மன்னன் அவ்வாற்றுப் புனலேத்தேக்கி அப் பூசைக் கிடையூறு விளேத்த அளவில், இருவர்க்கும் போர் நிகழ்ந்து, முடிவில் இராவணன் சிறைப்படுத்தப்பட்டதும், பிரமன் வந்து சிறை வீடு செய்ததும் உத்தரகாண்டம் கார்த்த வீரியார்ச் சுனப் படலத்துக் காண்க.

'அரக்கர் கோன்றளர வறிந்தவா யிரந்தோ ளருச்சுன னுற்றலி னிவனேப் பொன்னெடுந் தோள்க ளயர்வுறப் பிணித்துப் போக லுற்ருனே'; 'திண்டிறனிருபன் றிருநகர் புகுந்து தீயவன்றனேச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சிறைவைத்தான் ; 'சிறிய சிற்றந் தவிர்ந்துநீ யவனைச் சிறைவிடு கெனமுனி செப்ப, ஆறிய மனத்த னயவன் விடுப்ப' (உத்தர. கார்த்த வீரிய. 18, 19, 22) என்ற செய்யுட்கள் இங்குக் காணத்தகுவன. ஆயிரம் தோளவன் ; 'ஆயிர மடற்கையுடையானை' (ஆரணிய. 749) ; 'ஆயிரந் தடக்கை யானி னைந்நான்கு கரமும் பற்றி' (சுந்தர. 464.) ; 'உயிருற்றதொர் மரமாமென வோராயிர முயர்தோள் வயிரப்பணை துணிய' (பால. பரசு. 12); 'கானுயர்வரை நிகர் கார்த்த வீரியன்' (சுந்தர. 456). கார்த்த வீரியனுக்குத் தலை ஒன்று என்று நச்ச. 417 உரை பகரும். 'சீர்த்தவீ ரியரா யுள்ளார் செங்கண் மாலெனினு மியானக், கார்த்த வீரியனை நேர்வா ருளரெனக் கருதலாற்றேன்' (யுத்த. கும்ப. 25) என்பது இராவணனே கார்த்த வீரியன் பெருமையைக் கூறியது.

பி-ம். 2. நீந்துவாய் ; நீயொரு மூவுல கடங்கவென்று.
3. ஆற்றருேற்று முன்.
4. மேயலை ; யாமினி, யாயினி ; மேயினை யின்றிடின் ; விறலின் மேலையோய். 79

91. மேலுயர் கயிலையை வென்ற மேலைநாள்
நாலுதோ ணந்திதா னவின்ற சாபத்தால்
கூலவான் குரங்கினாற் குறுகுங் கோளது
வாலிபாற் கண்டனம் வரம்பி லாற்றலாய்.

'வரம்பில் ஆற்றலாய் - எல்லையற்ற வன்மையுடையவனே ! மேல் உயர் கயிலையை - வான் அளாவி யெழுந்த கயிலையங்கிரியை, வென்ற மேலை நாள் - பெயர்த்தெடுத்து வெற்றி பெற்ற முன்னாளிலே, நாலு தோள் நந்திதான் நவின்ற சாபத்தால் - நான்கு தோள்களையுடைய நந்தி தான் கூறிய சாபத்தின் விளைவாக, கூலம் வான் குரங்கினால் கோள் குறுகும் - வாலையுடைய பெரிய குரங்கினால் உனக்குக் கெடுதி நேரும் என்பது அறியப்பட்டது ; அது - அதன் உண்மையை, வாலிபால் கண்டனம் - வாலி உன்னை வென்றது கொண்டு தெரிந்தோம்.

மேல் உயர் கயிலை என்பதற்கு எல்லா மலைகளினும் மேலாக உயர்ந்த கயிலை எனலும் ஆம். கயிலையை வென்றது ; உத்தர : வரை யெடுத்த படலம் ; ஆரணிய. 258, 319, 327, 596, 742,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


848, 889, 919; சுந்தர. 12, 26, 117, 272, 303, 451, 452, 743; யுத்த அணிவகுப்பு. 94, 209 ; கும்ப, 1 ; மாயா சீதை. 8. மேலை நாள் - முன்னாள் ; 'மேலை நாளுயிரொடு பிறந்து' (ஆரணிய. 227). நந்தி சாபம் : 'நந்தி தன் முகந்தனை யிகழ்ந்திட வவன் குபிதனாய், இரங்கலை குரங்குமுக மென்றெனை யிகழ்ந்தவ னிலங்கை நகரில், குரங்குகள் புகுந்துதனி கொன்றிடுக நின்குலனை யென்றுரை செய்தான்' (உத்தர. வரையெடுத்த. 67). கூலம் - வால் ; லாங் கூலம் என்ற வடசொல்லின் முதற்குறை. வரம்பில் ஆற்றலாய் என்பது பிறகுறிப்பு.

பி - ம். 1. யெடுத்த,
2. நாலுதோ ணந்திமுன் னுரைத்த சாபமும்.
3. கோளெனு.
4. கண்டனை ; லாற்ற லோய். 80

92. தீயிடைக் குளித்தவத் தெய்வக் கற்பினள்
வாயிடை மொழிந்தசொல் மறுக்க வல்லமோ
நோயுனக் கியானென நுவன்று ளாளவள்
ஆயவள் சீதைபண் டமுதிற் றோன்றினள்.

'தீ இடை குளித்த - தீக்குழியில் வீழ்ந்து உயிர் விடுத்த, அ தெய்வ கற்பினள் - அந்தத் தெய்வத் தன்மை வாய்ந்த கற்பரசியான வேதவதி, வாய் இடை மொழிந்த சொல் - வாயினால் உரைத்த அந்தச் சூளுரையை, மறுக்க வல்லமோ - வாராமல் தடுத்து நிறுத்தும் வன்மை நம்பாலுண்டோ? 'யான் உனக்கு நோய் என நுவன்றுளாள் அவள் - உனக்கு நான் ஒரு நோய் போல்வேன்' என்று அவள் சொல்லியிருக்கிறாள் ; ஆயவள் சீதை பண்டு அமுதில் தோன்றினள் - அவளே சீதை, முன்னாளில் அமுதுடன் தோன்றிய திருமகள் அமிசமானவள்.

முதல் அடியிற் குறிக்கப்பட்ட கற்பரசி வேதவதி ;88-ன் கவியும் காண்க. இவள் வரலாற்றினை உத்தரகாண்டம் திக்குவிசயப் படலம் 3—19 செய்யுட்களில் காண்க. இந்த மாதரசியே பின்னர் சீதையாகத் தோன்றினாள் என்பதை, 'வன்னி யிடைமூழ்கி மாதவத் தான் மாச்சனகன், தன்னுடைய வேள்வித் தரணியிடை வந்துதிப்ப அன்னவளை முன்னா ளமிழ்திற் பிறந்தாளை' (உத்தர. திக்குவிசய. 19) என்பது கொண்டு காண்க. வாயிடை மொழிந்த சொல் - 'செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்' (குறள். 91) என்ற இடத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


துப்பரிமேலழகர், 'வாய்என வேண்டாது கூறினர், தீச்சொல் பயிலா என்பது அறிவித்தற்கு' என்றது காண்க. இங்ஙனம் வேண்டாது கூறியது, 'விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்' என்பது பற்றி. 'நோயுனக் கியானென நுவன்று ளாளவள்' என்பதை, 'ஏடா வுனக்கு மிலங்கைக்கும் உன்கிளைக்கும், கேடாகத் தோன்றுவே னென்றுள் கிளர்சினத்தாள்'; (உத்தர. திக்குவிசய. 17) என்பது கொண்டு தெளிக. அமிர்தில் தோன்றியவள் திரு; அவளே சீதாப்பிராட்டி என்பது குறிப்பு. 'ஆயிடை யமுதின் வந்த அருந்ததிக் கற்பின்' (ஆரணிய. 284); 'அமிழ்தின் வந்த தேவியை' (கிட்கிந்தா. 307); 'அடியனேனும் அடைக்கலம் அமுதின் வந்தீர்' (யுத்த. மாயாசனக. 10).

பி-ம். 3. நோயுனக் கியானெனும், கியானென்று.
4. ஆயது; சிறையென் றமுதிற் றேன்றினள். 81

## வேறு

93. சம்பரப் பெயருடைத் தானவர்க் கிறைவனைத்
தனுவ லத்தால்
அம்பரத் தும்பர்புக் கமரிடைத் தலைதுமித்
தமர ருய்ய
உம்பருக் கிறைவனுக் கரசளித் துதவினு
னொருவ னேமி
இம்பரிற் பணிசெயத் தசரதப் பெயரினு
னிசைவ ளர்த்தான்.

'தசரத பெயரினன் இசை வளர்த்தான் - தயரதன் என்ற பேர் பூண்டு கீர்த்தி பெற்றவனை, ஒருவன் - ஒப்பற்றவன், நேமி இம்பரில் பணிசெய - தனது ஆணை ஆழி இவ்வுலகில் தொழிலாற்ற, சம்பரன் பெயர் உடை தானவர்க்கு இறைவனை - சம்பரன் என்னும் பெயர் தாங்கிய தானவர் அரசனை, தனு வலத்தால் - தனது வில் வன்மையால், அம்பரத்து உம்பர் புக்கு - ஆகாயத்தின் மேலிடத்திலே புகுந்து, அமர் இடை தலை துமித்து - போரிலே அவன் தலையைத் துணித்து, அமரர் உய்ய - தேவர்கள் (அசுரரின் கொடுமையினின்றும்) நீங்கி உய்வு பெறுமாறு, உம்பருக்கு இறைவனுக்கு அரசு அளித்து உதவினன் - தேவர்கோனாகிய இந்திரனுக்கு அவனுக்குரிய அரசினைத் தந்தருளினன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இதுகாறும் இராவணன் பெற்ற சாபங்களை அவனுக்கு நினைப்பூட்டி, இராமபிரானை இகழ்தலாகாது என்று காட்டி, மேலும் அப்பிரானின் குலப்பெருமையை எடுத்துரைக்கின்றான் வீடணன். சம்பரன் : தண்டகவனத்தில் வைஜயந்த நகரில் ஆட்சி புரிந்தவன் ; இவன் தனக்குதவியான பல அசுரர்களுடன் சென்று இந்திரனை வென்று அவனது பொன்னுலகைக் கைக்கொண்டான். அந் நிலையில் முறியடிக்கப்பட்ட இந்திரன் தயரதன்பால் தன் குறை கூறி வேண்ட, அயோத்தி மன்னன் தன் மனையாள் கைகேயியையும் உடன்கொண்டு சென்று சம்பரனைக் கொன்று இந்திரனுக்கு அவனது விண்ணுல காட்சியை மீட்டுத் தந்தான் என்பது வரலாறு. இதனை, 'குன்றளிக்கும் குலமணித்தோட் சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து நீகொண், டன்றளித்த வரசன்றோ புரந்தரனின் றுள்கின்ற தரச' (பால. கையடை. 8) : என்பது கொண்டு காண்க. இனி, சம்பரன் இரணியாக்கனுடைய பிள்ளை ; மயன், சம்பரன், மாரீசன் என்னும் மூவருள் ஒருவன் என்று பிறிதோர் குறிப்பும் பாகவதத்திற் காணப்படுகிறது. தயரதன் சம்பரனை அழித்தது ; அயோத்தி. மந்தரை 81 ; பள்ளியடை 53 ; ஆரணிய. 199 ; 1002. தானவர் - தனுவழியில் வந்தவர் ; வடமொழித் தத்திதாந்தப் பெயர். அம்பரம் - ஆகாயம் ; 'ஆழ்ந்ததே ரம்பரத் தோட்டி யார்க்கின்றான்' (ஆரணிய. 64 : 488); 'அம்பரமே தண்ணீரே சோறே' (திவ்ய. திருப்பாவை. 17). இம்பர் - இவ்வுலகு ; 'இம்பர், வார்தந்த முலையினார்தம் வயிறு தந் தாளுமல்லள்' (ஆரணிய. 631) ; 'இம்பர்வீ டளிக்குந் தெய்வ மகளிரே' (திருவிளை. தருமி. 33).

பி - ம். 1. தானவர்த் தலைவனை

4. இசைவளத்தான், வளர்த்தோன் ; இம்பரித் தரைமிசைத் தசரதப் பெயர்படைத் திசைவளர்த்தான்.

82

94. மிடல்படைத் தொருவனு யமரர்கோன் விடையதாய்
வெரிநின் மேலாய்
உடல்படைத் தவுணரா யினரெலா மடியவா
ளுருவி னனும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அடல்படைத் தவனியைப் பெருவளந் தருகவென்
றருளி னுனும்
கடல்படைத் தவரொடுங் கங்கைதந் தவன்வழிக்
கடவுண் மன்னன்.

'(அந்தத் தயரதன்), மிடல் படைத்து ஒருவனுய் - வலிமை யுற்று(த் தான்) பிறருதவி யின்றித் தனியாக, அமரர் கோன் விடையதாய் - தேவர்கட் கரசனுன இந்திரன் இடப வடிவம் ஏற்று வர, வெரிநின் மேலாய் - அவனுடைய முதுகின் மேலேறி, உடல் படைத்து அவுணர் ஆயினர் எலாம் - அவுணர் என்று உடல் பெற்ற அனைவரும், மடிய - இறந்து ஒழியும்படி, வாள் உருவி னுனும் - வாளுருவிய புரஞ்சயன் என்னும் ககுத்தப் பேரரசனும், அடல் படைத்து - தான் வலிமை யடைந்து, அவனியை பெரு வளம் தருக என்று அருளினுனும் - (அந்த வன்மையால்) பூமியை 'மிக்க வளம் தந்தருள்க' என்று அருள் புரிந்த பிருது மன்னனும், கடல் படைத்தவரொடும் - பூமியை அகழ்ந்து கடலைக் கண்ட சகரரின் புதல்வரும், கங்கை தந்தவன் - கங்கையை (பூமிக்கண்) தருவித்த பகீரதனும் ஆகிய இவர்களின், வழி கடவுள மன்னன் - கால்வழியில் தோன்றிய தெய்வீக அரச னுவான்.

முதலிரண்டடிகளிற் குறிக்கப் பெற்ற வரலாறு :—

ஒரு காலத்தில் அசுரர்களால் துன்புறுத்தப்பட்டுத் தன்பால் முறையிட்ட தேவர்களை நோக்கித் திருமால், 'நான் பூமியில் புரஞ்சயன் என்னும் மன்னனுகத் தோன்றி அவ்வசுரர்களைக் கொல்வேன், நீங்கள் துணைக்கொண்மின்' என்று பணிக்க, அப்பணியை மேற்கொண்டு, தேவர்கள் இட்சுவாகுவின் புதல்வன் சசாதன் என்பவன் மகனுன அந்தப் புரஞ்சயனிடம் எய்த, அவன் 'எனக்கு இந்திரன் வாகனமாக நிற்பின் அவன் முதுகின்மேற் கொண்டு போர்புரிந்து பகைவரை மடியச் செய்வேன்' என்றுன்; இந்திரனும் தடை கூருது இடபமாகி அவனைத் தாங்க, அம் மன்னன் அவன் மீதேறி அசுரர்களைக் கொன்றெழித்தான். எருது வடிவான இந்திரனது கழுத்தில் ஏறியதனுல் புரஞ்சய னுக்குக் ககுத்ஸ்ன் என்னும் பெயர் வந்தது; ககுத் - திமில். இவன் மரபின் வந்ததனுல் இராகவனும் காகுத்தன் எனப் பட்டான்; (பால. குலமுறை. 3): காளிதாசன் ரகுவம்சமும் காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மூன்றுமடியிற் குறித்த வரலாறு :—

வேனன் என்னும் அரசன் திருமாலைப் பழித்து யாகம் இயற்ற, முனிவர்கள் வெகுண்டு, அவனைத் தருப்பைகளினாலே கொன்றனர்; பின்னர், அவன் குலம் அறவே அழிதல் கூடாது என்று அவனது வலக்கரத்தைக் கடைந்து தீ வரச்செய்து, பிரமனைக் கருதித் தவம் புரிந்தனர்; அவ் வேள்வியில் திருமால் அமிசமாகப் பிருது என்பவன் தோன்றினான். அப்பொழுது அவன் கீழ்க் குடிமக்கள் பூவளம் குறைந்து உணவுப் பொருள் குன்றியது என்ன, அதனைக் கேட்ட அம் மன்னன், விளைவினைக் குறைத்துக் காட்டிய பூமியை எதிர்க்க, பூமகள் ஓர் பசுவின் வடிவு கொண்டு ஓடினாள். அரசனும் விடாமற் றொடர, முடிவில் அவள் அவனையே சரணடைந்து ஓர் கன்றினை உண்டாக்கி அதன்மூலம் பூவளம் சுரக்கச் செய்வதாகக் கூறி, பசுவின்பால் ஒரே மாதிரியாக எங்கும் பரவும்படி மேடு பள்ளங்களைச் சீர்திருத்த வேண்டும் என்று இரக்க, மன்னவன் தன் வில்லின் நுனியாற் பூமியைச் சமன் செய்து, பசு வடிவங் கொண்ட பூமியிலிருந்து எல்லா உணவுப் பொருள்களையும் தோற்றுவித்தான். இதுபற்றியே பூமிக்குப் பிருதிவி என்று பெயர் எழுந்தது என்பர்; (பால. குலமுறை. 1) காண்க.

நான்காம்டியின் வரலாறுகள் :—

சகரப் பேரரசன் பரிமேதம் செய்யத் தொடங்கித் தனது வேள்விக் குதிரையை விடுத்தானாக, அதனை உணர்ந்து இந்திரன் தன் மாயையால் அந்தக் குதிரையைக் கவர்ந்து சென்று பாதலத்தில் கபிலர் என்னும் முனிவர் பக்கல் விட்டுச் சென்றான். சகரன் மக்கள் சினந்து உலகனைத்தும் துருவிச் சென்று முடிவாகப் பாதலத்தில் அம் முனிவரிடம் அந்தப் பரியைக் கண்டு, தவறுதலாக அம் முனிவரே அதனை ஒளித்தார் என உட்கொண்டு, அவர் தவத்தினுக் கூறுசெய்து, அம் முனிவன் சினத் தீயினால் சாம்பராயினர். பின்னர் வேள்விக் குதிரை மீட்கப்பட்டு வேள்வி நிறைவேறியது. அங்ஙனம் குதிரை தேடும்பொருட்டுச் சகர புத்திரர் அகழ்ந்த பள்ளமே, பின்னர் பல நதிகளால் நிறை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வுற்றுக் கடலாயிற்றென்பர். கங்கை தந்தவன் பகீரதன்; இவ் வரலாற்றின் விரிவுகளைப் பாலகாண்டம். அகலிகைப் படலம் 33 முதல் 59 வரை உள்ள செய்யுட்களிற் காண்க. (பால. குலமுறை. 7)ம் காண்க.

பி - ம். 1. விடைதர; விடையதா மேலால்; மிடல்படைத் தமரர்கோ னிடபமெய் யுருவெடுத் தெய்தவேறி.

2. உடல்பதைத்.

3. பெருவெளம்.

4. கடல்படைத் தவனெடும்; தவனெடுந் கடவுள் மன்னர். 83

95. பொய்யுரைத் துலகினிற் சினவினர் குலமறப்
பொருது தன்வேல்
நெய்யுரைத் துறையிலிட் டறம்வளர்த் தொருவனாய்
நெறியி னின்றான்
மையுரைத் துலவுகண் மனைவிபால் வரமளித்
தவைம றுது
மெய்யுரைத் துயிர்கொடுத் தமரரும் பெறுகலா
வீடு பெற்றான்.

'(இச் சீரிய குலத்திற் றோன்றிய தயரதன்), பொய் உரைத்து- பொய் பேசிக்கொண்டு, உலகினில் சினவினர் குலம் அற - புவிக் கண் சினத்தால் பொரவந்தவரின் குலம் முற்றும் அழியும்படி, பொருது - போர் புரிந்து, தன் வேல் நெய் உரைத்து உறையில் இட்டு - தனது வேலுக்குத் தைலமிட்டு (அதனை) உறையிலே போகட்டு வைத்து, அறம் வளர்த்து ஒருவனாய் நெறியில் நின்றான் - தருமத்தை ஓங்குமாறு புரிந்து (தன்னிகரற்றவனாய்), நீதிமுறையில் நின்றவன் ஆன அந்தத் தயரதன், மை உரைத்து உலவுகண் மனைவிபால் வரம் அளித்து - மை தீட்டப்பெற்றுக் (காதோடு) அளாவும் விழிகளை யுடைய கைகேசியென்ற தன் மனைவிக்கு இரண்டு வரங்கள் ஈந்து, அவை மறுது - பின்னர் அவற்றை மறுக்காமல், மெய் உரைத்து - உண்மையையே பேசி, உயிர் கொடுத்து - உயிரைவிட்டு, அமரரும் பெறுகலா வீடு பெற்றான் - தேவர்களாலும் அடைய முடியாத முத்தியுலகை அடையப் பெற்றான்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இச் செய்யுட்கண் தயரதனுடைய வாய்மைச் சிறப்புப் புகழ்ந்து கூறப்பட்டது. சினவுதல் - சினம் என்ற பெயரினின்று தோன்றிய வினை ; 'சினவுவாட்கண்'; 'சினவு பொன்வாள்' (சீவக. 1791 ; 2251) ; 'வினவிய மகளிர்க்குச் சினவுநர்ச் சாய்த்தவன்' (பெருங். மகத. 14 : 174). வேலிற்கு நெய் உரைத்துப் போர்க்குப் பயன்படுத்தாது உறையிலிட்டான் என்றதிலிருந்து, தயரதன் நாட்டிற் பகையின்மை விளங்கும்; (ஒப்பு): 'வாளாற் காய்ந்தே கடந்தான் பகைவேலை' (பால. அரசியற். 5) என்ற இடத்து வாள் காட்டி உருத்ததன்றி அதனை வெட்டி வீழ்த்தற்குப் பயன்படுத் திலன் என்ற குறிப்பினையும் உய்த்துணர்க. 'உறையோடு நெடு வேலாய்' (பால. குலமுறை. 24) என்றதும் காணத்தகும்; 'பொரு துறைசேர் வேலினாய்' (பால. குலமுறை. 6). (ஒப்பு): ஒள்வாள் கறை யடி யானைக் கல்ல, துறைகழிப்பறியா வேலோனூரே' (புறநா. 321); 'உறை நிறுத்திய வாளினாற் பகையிரு ளொதுக்கி' (திருவிளை. நாட்டு. 1); 'வள்ளல்வள் ளுறையயில் மன்னர் மன்னனே' (பால. அரசியல். 6). வேலுக்கு நெய் உரைத்தல் அது துருப்பிடியாமைப் பொருட்டு ; உரைத்தல் - பூசுதல் ; (சீவக. 831). தயரதன் மெய் யுரைப்பவன் ; 'பொய்ப்பகை மெய்க்கணி' (ஆரணிய. 197); 'மறக்க முற்றுத தன் வாய்மை காத்தவன்' (ஆரணிய. 195); 'வாய்மையு மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்' (கிட்கிந்தா. 305); 'மனிதன் வடிவங்கொண்ட மனுவுந் தன்னை மறந்தான் ; (அயோத்தி. நகர்நீ. 68); 'மெய்யின் மெய்யே' (அயோத்தி. நகர்நீ. 70).

பி - ம். 1. பொருதனன், பொருதுதன்மேல்.
2. அறம்வளத்.
3. மய்யுரைத் ; தவைமருதே, பொருதே.
4. பெறுகிலா.

84

96. அனையவன் சிறுவரெம் பெருமவுன் பகைஞரா
லவரை யம்மா
இனையரென் றுணர்தியே லிருவரும் ஒருவரு
மெதிரி லாதார்
முனைவரு மமரரும் முழுதுணர்ந் தவர்களும்
முற்று மற்றும்
நினைவருந் தகையர்நம் வினையினுல் மனிதரா
யெளிது நின்றார்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'எம்பெரும - எமது தலைவனே! அனையவன் சிறுவர் உன் பகைஞர் - அத்தகைய பல சிறப்பும் ஒருங்கே பெற்ற தயரதனின் மக்களே இப்பொழுது உன் பகைவர்களாக வந்துள்ளவர்; அவரை இனையர் என்று உணர்தியேல் - அவரை இத்தகையர் என்று அறிய விரும்பினல், இருவரும் ஒருவரும் எதிர் இலாதார் - அவ்விருவரும் எவரையும் தமக்கு நிகராய்ப் பெருதவர்கள்; (மேலும்), முனைவரும் அமரரும் முழுதுணர்ந்தவர்களும் - முனிவர்களும் தேவர்களும் (இறப்பு நிகழ்வு எதிர்வு) என்ற முக்கால நிகழ்ச்சிகளையும் கடைபோக அறிந்த திரிகால ஞானிகளும், மற்றும் முற்றும் - மற்றுமுள்ள சரம் அசரப்பொருள்களும், நினைவு அரு தகையர் - மனத்தால் உணர்தற்கு அரிய இயல்பினர்; (அன்னர்), நம் வினையினல் மனிதராய் எளிது நின்ருர் - நாம் புரிந்துள்ள வினையின் விளைவாக, மானிட வடிவமேற்று மிகச் சுலபராய் நின்ருர்கள். ஆல் - அசை. அம்மா - வியப்பு.

இனி, வீடணன் இராமபிரானின் பெருமையை உரைக்கத் தொடங்குகின்ருன். அனையவன் சிறுவர் - மேலே கூறியபடி பொய் தவிர்ந்து, அறம் வளர்த்து, வீரம் செறிந்து விளங்கிய தயரதன் சிறுவர் எனவே, அப்பண்புகள் இவர்பாலியற்கையின் அமைந்தன என்று கூறிப் பின்னரும் அவர்களின் தெய்வத்தன்மையை இக்கவியில் மொழிகின்ருர். இருவரும் ஒருவரும் என்றதில் இணைமுரண் காண்க. 'முனைவருமமரரும் இத்தொடர்'; 71-லும் காண்க. முற்று மற்றும் என்பது மற்று முற்றும் என மொழிமாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது. 'நம்வினையினல் மனிதரா யெளிது நின்ருர்: (ஒப்பு): 'யான்றவ முடைமை யாலிவ் விறுதிவந் தியைந்த தியார்க்கும், சான்றென நின்ற வீரன் தான் வந்து வீடு தந்தான்' (கிட்கிந்தா. 375); 'கால் தரை தோய நின்று கட்புலக் குற்ற தம்மா' (கிட்கிந்தா. 376); 'காவற்கு புகுந்து நின்ருர் காகுத்த வேடங்காட்டி' (யுத்த. கும்ப. 149); இனி மேல் கூறிய தொடர்க்கு நம்முடைய தீவினையின் விளைவாக நம்மைக் கொல்வதற்கு மனிதராய் எளிது நின்ருர் என்ற தொனியும் இங்கே



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காணலாம். (ஒப்பு): 'அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய தவமும் துரக்க' என்றது காண்க.

பி - ம். 1. பெருமறின்; பகைஞரன்னவரை, பகைஞரானவரை.

2. எனையரென், இனைஞரென்; மெதிர்கிலாதார், மெதிர்கலாத.

3. முனிவரு மமரரு முக்கணு னயன்முதல் சுருதிநாலும்.

4. வினைவருந்; மனிசரா; யெளிதினின்றூர்; வெளியினின்றூர், நெறியி னின்றூர், நினைவருங் கடவுளெம் வினையினல். 85

97. கோசிகப் பெயருடைக் குலமுனித் தலைவனக்
குளிர்ம லர்ப்பே
ராசனத் தவனெடெவ் வுலகமுந் தருவனென்
றமைய லுற்றுன்
ஈசனிற் பெறுபடைக் கலமிமைப் பளவிலெவ்
வுலகும் யாவும்
நாசமுற் றிடநடப் பனகொடுத் தனபிடித்
துடையர் நம்ப.

'நம்ப - தலைவனே! அ குளிர் மலர் பேர் ஆசனத்தவனெடு - அந்தக் குளிர்ந்த தாமரை மலராகிய பெருமை பொருந்திய இருக்கையிலிருக்கும் பிரமதேவனெடு, எ உலகமும் தருவன் என்று அமையல் உற்றுன் - (அவனைப் போல்), எந்த உலகத்தையும் படைத்தளிப்பேன் என்று (அந்த ஆக்கும் தொழிலிற்) பொருந்தியவனுன, கோசிக பெயருடை முனிகுல தலைவன் - கோசிகன் என்னும் பெயர் பூண்ட முனிவர் குலத்திற் கெல்லாம் தலைவன், இமைப்பு அளவில் - கண் இமைக்கும் நொடிப்பொழுதில், எ உலகும் யாவும் நாசம் உற்றிட - எல்லா வுலகங்களிலும் உள்ள எல்லா (இயங்குதிணை நிலைத்திணையான) பொருள்களும் அழிவினை யடையுமாறு, நடப்பன - செல்லும்படி, ஈசனில் பெறுபடை கலம் - சிவபிரானிடம் பெற்ற ஆயுதங்களாக, கொடுத்தன பிடித்துடையர் - கொடுத்தனவற்றைக் கையில் ஏந்தியுள்ளனர் அந்த இராம இலக்குமணர்கள்).

முதலிரண்டடிகளிற் குறித்த கோசிகன் வரலாற்றின் விரிவை, பால காண்டம், மிதிலைக் காட்சிப்படலம் 91 முதல் 146 வரையுள்ள செய்யுட் பகுதிகளிற் காண்க. குளிர் மலர்ப்பேராசனத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தவன் - பிரமன். உலகமுந் தருவன் என்றது, திரிசங்கின் பொருட்டு அம்முனிவன் நூதன சிருட்டி செய்யத் தொடங்கியது. 'மலர்ப்பேராசனத் தவனெடெவ் வுலகமுந் தருவன்' (ஒப்பு): 'மன்னுயிரடங்கலு முலகும்வே றமைத்துத் தேவரோ, டிடங்கொணுன் முகனேயும் படைப்ப னீண்டெனு' (பால. கையடைப். 3); 'மணபடைத்த முனி' (பால. கையடை. 13). இம்முனிவன் தான் சிவபிரானிடம் பெற்ற அஸ்திரங்களை இராம இலக்குவர்கட்கு வழங்கின செய்தி பின்னிரண் டடிகளிற் குறிக்கப்பெற்றன; இதனை, பால. வேள்விப் படலம் முதல் மூன்று கவிகளிற் காண்க. கோசிகன், குசிகன் வழியில் வந்தவன்; வடமொழித் தத்திதாந்தப் பெயர். 'எவ்வுலகமுந் தருவன்'; 'எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்று நாள் விண்ணவர்க் காக்கிய முனிவன்' (பால. வேள்வி. 41) காண்க. குலமுனித் தலைவன் - சிறந்த முனிவர்களின் தலைவன் எனினுமாம். முனி - மனன சீலன். நடப்பன, கொடுத்தன; பலவின் பால் வினையாலணையும் பெயர்கள். 'ஏவின செய்து நிற்றும் இளையவன் போலவென்ன' (பால. வேள்வி. 3): 'சுடுகிற்கும் படைக்கலங்கள், செய்தவத்தால், ஈந்தேனு மனமுட்க விவற்கேவல் செய்குநவால்' (பால. குலமுறை. 28).

பி - ம். 1. குளிர் மரைப்பூ.

2. அமைய லூற்ற.

3. பளவினெவ்; வுலகம் யாவும், வுலகில் யாரும்.

4. தொடுத்தவை; கொடுத்தவைபிடித்: துடைய நம்பர், தன்பர்; நம்பி.

88

98. எறுழ்வலிப் பொருவிறே ளவுணரோ டமரர்பண்
டிகல்செய் காலத்
துறுதிறற் கலுழன்மே லொருவனின் றமர்செய்தா
னுடைய வில்லும்
தெறுசினத் தவர்கள்முப் புரம்நெருப் புறவுருத்
தெய்த வம்பும்
குறுமுனிப் பெயரினு னிறைதவர்க் கிறைதரக்
கொண்டு நின்றார்.

'(மேலும்), எறுழ்வலி - மிக்க வன்மை வாய்ந்த, பொருஇல் தோள அவுணரோடு - ஒப்பற்ற புயங்களையுடைய அவுணர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


களோடு, அமரர் பண்டு இகல் செய் காலத்து - தேவர்கள் முன்னாளில் போர் நிகழ்த்தியபோது, உறுதிறல் கலுழன் மேல் - மிக்க ஆற்றல் கொண்ட கருடன் மீது ஏறி, ஒருவன் நின்று அமர் செய்தான் உடைய வில்லும் - தான் தனித்து நின்று போர் புரிந்த திருமாலின் வில்லையும், தெறு சினத்தவர்கள் - (பகைவரை) அழிக்கவல்ல கோபமிக்கவரான அசுரர்களின், முப்புரம் நெருப்பு உற உருத்து எய்த அம்பும் - திரிபுரங்களைத் தீப்பற்றி யெரியும் படி வெகுண்டு விடுத்த (சிவபிரானுடைய) அம்பினையும், குறு முனி பெயரினன் நிறைதவர்க்கு இறை - குறிய உருவத்துடன் முனிவன் என்று புகழ்பெற்றவனும் நிறைந்த தவத்தினையுடைய முனிவர்க்குத் தலைவரானவனுமான அகத்திய முனிவர், தர - அளிக்க, கொண்டு நின்றார் - கைக்கொண்டு நின்றார்.

எறுழ்வலி - ஒரு பொருட் பன்மொழியுமாம்; 'ஒரு பொருட் பன்மொழி சிறப்பினின் வழா' (நன் - பொது. 47). இகல்; 'இகலுந் தோழிநம் காமத்துப் பகையே' (குறுந். 257); 'இகல் செயக்கருதி யிருள்திரண் டொலித் தெழுந்தன செழுந்தடங் கூந்தல்' (அரிச். 4). உறு - மிகுதிப் பொருள் படுவதோர் உரிச்சொல்: 'உறுதவ நனியென வரூஉம் மூன்றும், மிகுதி செய்யும் பொருள வென்ப' (தொல். சொல், உரி. 3). கலுழன் மேனின்றமர் செய்தவன் திருமால். 'முப்புரம் நெருப்புற எய்தது; தாரகன் புதல்வரான தாரகாக்ஷன் கமலாக்ஷன் வித்யுன்மாலி என்ற மூன்றசுரர்களும் விண்ணில் இயங்கும் பொன் வெள்ளி இரும்பாலியன்ற கோட்டை களின் மேற் கொண்டு, தேவர்களை வருத்தச் சிவபெருமான் பூமி யைத் தேராகவும், சூரிய சந்திரரைச் சக்கரங்களாகவும், பிரமனைத் தேர்ப்பாகனாகவும், மேரு மலையை வில்லாகவும், வாசுகி என்ற அரவினை நாணாகவும், திருமாலை அம்பாகவும் கொண்டு போருக் கெழுந்து இடையில் பரிவாரங்களாக அமைந்த அமரரின் தருக் குணர்ந்து தன் நகையினாலேயே முப்புரங்களையும் வென்றதாக வரலாறு. சிவபெருமானது இந்த வீரச்செயல் திருவதிகை என்ற சிவதலத்தில் நிகழ்ந்தது என்ப; 'பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை' (பெரியபு. பாயிரம்) என்றது காண்க. இவ்வரலாறு 'சுந்தர. 452, 991, 1003, 1145, 1171, 1178-ஆம் செய்யுட்களிலும், ஆரணிய. 173 முதலிய இடங்களிலும் காண்க. முனிவன் திருமாலின் வில்லும் சிவபெருமானின் அம்பும் ஈந்தமை,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஆரணிய காண்டத்தில், 55, 56-ஆம் கவிகளிற் காண்க. நிறை தவர் ; 'நிறைதவத்தின் துறை முடித்து' (ஆரணிய. 332): 'நிறை தவர்க் கிறைதர' என்ற தொடரில் இணையெதுகை நயம் காண்க.

பி - ம். 2. கலுழன்மீ தொருவனின்.
3. வருச் செய்தவம்பும்.
4. கொண்டு நின்ருன்.

87

99. நாவினு லுலகைநக் கிடுவதிக் களவிடற்
குரிய நாளும்
மேவுதீ விடமுயிர்ப் பனவெயிற் பொழியெயிற்
றனவ வீரர்
ஆவமா மரியபுற் றுறைவமுற் றறிவருக்
கழிவு செய்யும்
பாவகா ரியருயிர்ப் பதமலா லிரைபெரு
பகழி நாகம்.

'பகழி நாகம் - (அந்த இராமபிரானது) அம்புகளாகிய நாகங்கள், நாவினுல் உலகை நக்கிடுவ - (தமது) நாவினுல் உலகினையே நக்குவன ; திக்கு அளவிடற்கு உரிய - திக்குக் களனைத்தும் அளந்து கொள்ளற் குரியன ; நாளும் - தினந் தோறும், மேவு தீவிடம் உயிர்ப்பன - தமது நச்சுப்பறகளில் ஊறி நின்ற, கடுமையான விஷத்தைக் கக்குவன ; வெயில் பொழி எயிற்றன - ஒளியை உமிழுகின்ற பற்களை யுடையன ; அ வீரர் - அந்த வீரருடைய, ஆவம் ஆம் அரிய புற்று, உறைவ - அம்புப் புட்டிலாகிய அரிய புற்றிலே தங்குவன ; முற்று அறிவருக்கு அழிவு செய்யும் - முழுதும் உணர்ந்துள்ள பேரறிஞர்கட்குத் தீங்கு செய்கின்ற, பாவகாரியர் உயிர் பதம் அலா - பாவிகளின் உயிராகிய உணவையன்றி, இரை பெரு - (பிறிதோர்) இரையைப் பெற விரும்பாதன.

இராமபிரான் அம்புகளின் சிறப்பு இக்கவியிற் கூறப்பட்டது. அம்புகளை நாகங்களாக உருவகம் செய்ததற் கிணங்க, அவற்றிற்கு நா, விடம், விடப்பற்கள், உறையும் புற்று, உணவு முதலிய வற்றைக் கூறினர். இங்கு வாளியின் கூரிய நுதியை நாவாகவும், மாற்றாரின் உயிரைப் போக்கும் உறுப்பினை எயிருகவும் கொள்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இச்செய்யுள் முற்றுருவகம்: எல்லாத்திக்குகளிலும் ஏககாலத்துச் சென்றுபாயும் என்பார், திக்களவிடற் குரிய என்றார்; அதன் ஒளியும் வெம்மையும் பற்றி வெயிற்பொழி யெயிறென்றார். அம்பறாத் தூணியைப் புற்றென்றார். மற்றும், நல்லரவம் யாவரையும் தீண்டும்; ஆனால், இவ்வாளியாகிய நாகங்கள் நல்லோர்க் கல்லல் புரிந்து கொல்லும் பாவிகளையே வதைக்கும் என்று அதன் சிறப்புத் தன்மையைக் குறித்தார். பாவகாரி - பாவச் செயல்களைப் புரிபவன். 'பாவகாரி தன் பாவகம் ஒரு முகம் பயில' (சுந்தர. 1092). பதம் - உணவு; 'நகைப்பத மிகுத்த கையினாலாகிய' (பெருங். உஞ்சைக். 40 : 131); 'பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' (புறநா. 2); 'கொள் பத மொழிய' (புறநா. 23).

பி - ம். 1. நக்கிடுவ தொத், கிடுவதற் ; தரியவாய் நாமநாளும்.
2. வேவுதீ ; றனைய வீரர்.
3. வாமமா ; றறிவினுக் ; மற்ற மரருக் கழிவு செய்யும்.
4. பாவகா ரிகளுயிர்ப் ; பதமலரல திரைபெரு. 88

100. பேருமோ வொருவரா லவர்களா லல்லதிப் பெரிய வேனும்
நாருமூ ரியுமரு நம்முடைச் சிலைகள்போ னலிவ வாமோ
தாருவோ வேணுவோ தாணுவா யுலகினைத் தழுவி நிற்கும்
மேருவோ மால்வரைக் குலமதோ வல்லவோ வில்லு
[மன்னே.

'வில்லும் - அவர்கள் கைக்கொண்டு நிற்கும் விற்களை, அவர்களால் அல்லது ஒருவரால் பேருமோ - அந்த இராம இலக்குவரன்றிப் பிறரால் அசைக்கவேனும் இயலுமோ? (அவைகள்), நம்முடை சிலைகள் போல் நாரும் ஊரியும் அரு - (அவைகள்) நம்முடைய விற்களைப்போல, நாணியும் வன்மையும் என்றும் நீங்கப் பெறு; இ பெரியவேனும் - இந்த நம்முடைய விற்கள் உருவிற் பெரியனவாகக் காணப்படினும், நலிவ ஆமோ - அவர்களின் விற்களை ஒடிக்கக் கூடியன ஆகுமோ? (நிற்க), (அந்த விற்கள்) தாருவோ - கற்பகத்தருவோ? வேணுவோ - மூங்கிலோ? தாணுவாய் - பரம்பொருள்போல என்றும் நிலைத்ததாய், உலகினை தழுவி நிற்கும் மேருவோ - உலகத்தின் நடுவே தங்கிப் புவியினைத் தாங்கும் மேருமலையோ? (இவையாவு மன்றி), மால்வரை குலம் அதோ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அவ்லவோ பெரிய மலைகள் எல்லாம் ஒருங்கே கூடி யமைந்தன வன்றோ? மன் - ஓ; அசைகள்.

இராமபிரான் வில்வாளிகளின் பெருமை :—'வேதச் சொல்லெனத் துணைய வாளித் தூணியும் புறத்துத்தூக்கி' (யுத்த. மூலபல. 70): மற்றும் கும்பகருணன் வதைப்படலத்துப் 18-ஆம் கவிமுதல் 25 வரை உள்ள செய்யுட்களையுங் காண்க. வேட்டார்க்கு வேட்டதை யீவது பற்றிக் கற்பகத்தாருவையும், என்றும் அழியாமல் கிளைகளை உண்டுபண்ணுதலின் மூங்கிலினையும், யாவராலும் அழிக்க வியலாமைபற்றி, அழியாப் பரம்பொருளாகிய தாணுவையும், உருவம்பற்றி மேருவையும் உவமை கூறினர்.

பி - ம். 1. விருவரால்; அளவிடப்; பெரியவேணு; வேணுவோ; அவன் விறற்கல்லதோர் பெரிய நாளின்.

2. வலியலாமோ, வலியலாகா, வலிமூரியோசை யினியவாகும், நம்முடைச் சிலையெலா.

3. வேணுமோ, தாணுவாய்; வுலகெலாஞ்; தழுவதிற்கும்.

4. குலமெலாம், குலமதோ; வல்லவோ; மன்னு. 89

101. உரமொருங் கியதுநீர் கடையும்வா லியதுமார்
புலகை மூடும்
மரமொருங் கியகரா தியர்விரா தனதுமால்
வரைகள் மானும்
சிரமொருங் கியவினிச் செருவொருங் கியதெனிற்
றெவ்வ ரென்பார்
பரமொருங் குவதலாற் பிறிதொருங் காததோர்
பகையு முண்டோ.

'(அந்த இராம பிரானது அம்புகளால்), நீர் கடையும் வாலியது மார்பு உரம் ஒருங்கியது - கடல் கடைந்த வாலி மார்பின் வன்மை அடங்கியது; உலகை மூடும் மரம் ஒருங்கிய - உலக முழுதும் பரந்துநின்ற மராமரங்கள் பிளக்கப்பட்டன; கர ஆதியர் விராதனது - கரன் முதலானவர்களுடையவும், விராதனுடையதுமான, மால்வரைகள் மானும் சிரம் ஒருங்கிய - பெரிய மலைகள் ஒத்த தலைகள் சிந்தின; இனி செரு ஒருங்கியது எனின் - இனி போர் நெருங்கியதென்றால், தெவ்வர் என்பார் - பகைவர்களுடைய,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பரம் ஒருங்குவதலால் - பாரம் குறையுமேயன்றி, பிறிது - வேருக, ஒருங்காதது ஓர் பகையும் உண்டோ - (அவர்களுக்கு) ஒடுங்காத ஒரு பகையும் உள்ளதா? ஓ - வினு.

இராமபிரான் அம்பின் ஆற்றலை வாலிவதைப்படலம், மராமரப்படலம், கரன் வதை விராதன் வதைப் படலங்களிற் காண்க. பரம் - பாரம்; 'ஒருத்தலைப்பரம்' (அயோத்தி, மந்திர. 66.); இராமபிரான் அம்பினுல் இராவணனின் சிரங்களும் ஒருங்கும் என்று கூறினன் வீடணன் என்க.

பி - ம். 1. விராதனனு; மாமலைகள் மானும்.
3. சிரமொருங்கின வினிச், மொருங், வொருங்குளதெனில், குவதெனிற், கினதெழிற், குளதெனிற்; றேவரெரன்பார், றேவரென்போர்.
4. வகையு முண்டோ. 90

102. சொல்வரம் பெரியமா முனிவரென் பவர்கள்தந்
துணையி லாதார்
எல்வரம் பெரியதோ ளிருவரு மமரரோ
டுலகம் யாவும்
வெல்வரென் பதுதெரிந் தெண்ணினுர் நிருதர்வேர்
முதலும் வீயக்
கொல்வரென் றுணர்தலா லவரைவந் தணைவதோ
ரியைபு கொண்டார்.

'சொல் - புகழ்ந்து கூறற் குரிய, வரம் பெரிய - வரங்களைப் பெற்றுப் பெருமை வாய்ந்த, தம் துணை இலாதார் மாமுனிவர் என்பவர்கள் - தமக்கு நிகரில்லாத பெரிய முனிவர்கள் என்று சொல்லப்படுமவர், எல் வரம் பெரிய தோள் இருவரும் - ஒளி பொருந்திய சிறந்த அகன்றுயர்ந்த புயங்களையுடைய இராம இலக்குவராகிய இருவரும், அமரரோடு உலகம் யாவும் - தேவர்களோடு உலகமனைத்தையும், வெல்வர் என்பது - வெற்றி கொள்வர் என்பதை, தெரிந்து எண்ணினுர் - நன்கு அறிந்து ஆராய்ந்தவர்களாய், (அவ்விருவரும்) நிருதர் வேர் முதலும் வீய - அரக்கருடைய அடிவேரும் அழிய, கொல்வர் என்று உணர்தலால் - கொல்வார்கள் என்று அறிதலால், அவரை - அவர்களை, வந்து அணைவதோர் இயைபு கொண்டார் - சென்று சேர்தலாகிய ஒரு தன்மையைக் கொண்டுள்ளனர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முனிவர் இராமபிரானை அணைந்ததும் இராமபிரான் அவர்களைப் புரப்பதாக அருளியதும், ஆரணியகாண்டம் 129—139 செய்யுட்களிற்காண்க. 'நிருதர் வேர் முதலும் வீய' என்பது, 'ஆர றத்தினெ டன்றிநின் ருரவர், வேர றுப்பன் வெருவன்மி னீரென்ருன்' (ஆரணிய. 139). பெரியமா : ஒருபொருட் பன்மொழி எனலும் ஆம்.

பி - ம். 1. சொல்வரம் புடையமா முனிவர்வா னவரெனுந் தூயர் யாரும்.
2. ஒல்வரம் ; பரியமா ; ளிருவரும்,
3. வெல்வனென்பது ;
4. அமைவதோர், தினியதோ ; ரிசைவு, ருறவு. 91

103. துஞ்சுகின் றிலர்களா லிரவுநன் பகலுநின்
சொல்ல வொல்கி
நெஞ்சுநின் றயருமிந் நிருதர்பேர் சனகியாம்
நெடிய தாய
நஞ்சுதின் றனர்கடாம் நண்ணுவார் நரகமென்
றெண்ணி நம்மை
அஞ்சுகின் றிலர்கணின் னருளலாற் சரணிலா
வமர ரம்மா.

'(சீதாப்பிராட்டி சிறைப்பட்டிருத்தலின் என்ன தீங்கு எப்பொழுது விளையுமோ என்ற எண்ணத்தினால்), நெஞ்சு நின்று அயரும் இ நிருதர் - மனதில் ஏக்கங்கொண்டு தளரும் இந்த அரக்கர்கள், நின் சொல்ல ஒல்கி - உன்னிடம் தம் கருத்தை வெளியிடுதற்குப் பின் வாங்கினவராய், இரவு நன் பகலும் துஞ்சுகின்றலர்கள் - இரவுப்போதிலும் சிறந்த பகற்போதிலும் உறங்கிலர் ; நம் அருள் அலால் சரண் இலா அமரர் - நம்முடைய கருணையே தமக்குத் தஞ்சமன்றிப் பிறிதிலாத தேவர்கள், பேர் சனகியாம் நெடியது ஆய நஞ்சு - பெருமை வாய்ந்த சனகி என்ற மிகவும் கொடிதான நஞ்சினை, தின்றனர்கள் தாம் - உட் கொண்டவர்களான அரக்கர், நரகம் நண்ணுவார் என்று எண்ணி - நரகத்தினை அடைவர் என்று எண்ணியவர்களாய், நம்மை அஞ்சுகின்றலர்கள் - நமக்குப் பயமின்றி யிருக்கின்றார்கள். ஆல், அசை ; அம்மா, வியப்பு.

நமக்கு அஞ்சியொழுகிய அமரர் இப்பொழுது தமக்குப் புகல் கிடைத்த தென்று கவலை தீர்ந்திருக்கின்றனர் ; கவலை இன்ன



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தென்றறியாத அரக்கர் வைதேகி சிறைப்பட்டதன் விளைவாகத் தங்கட்கு யாது நிகழுமோ என்று ஏங்கி உற்சாகம் நீத்தனர் என்று கூறப்பட்டது. துஞ்சினர்; 'துஞ்சினர் செத்தாரின் வேறல்லர்' (குறள். 926). சனகியாம் நஞ்சு; (ஒப்பு): 'மாதரார் வடிவு கொண்ட, நஞ்சுதோ யமுத முண்டா னச்சினேன்' (யுத்த, இராவணன் சோக. 53); 'திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை' (யுத்த. கும்ப. வதைப். 80).

பி - ம். 1. நிலரினி: இரவுநண்.

2. நெஞ்சநின், நெஞ்சினின்; றயருநம், தயருநின்; நெஞ்சுநின் றயரு மின் னெறிகொள்மா சனகியாம், பேரசனியாய்; நெடிது காலம், நெடியதான.

3. எஞ்சுகின்; விலர்கடாம், றவர்கடாம்; நஞ்சு நின்றனர்களென் றெண்ணியே நமர்கள்முன் னுணிநின்றும்.

4. கிலர்கணின்; சரணலா, தரணிலா, சரணலால்; அமரரையா; அஞ்சு கின்றிலர்கள் நின்னுணையிற் பிறிகிலா வமரரையா. 92

104. புகல்மதித் துணர்கிலா மையினமக் கெளிமைசால்
பொறுமை கூர
நகல்மதிக் கிலமறுப் பொலியவா ளொளியிழந்
துய்ய நண்ணும்
பகல்மதிக் குவமையா யினவெலா மிரவுகால்
பருவ நாளின்
அகல்மதிக் குவமையா யினகொலோ வமரர்தம்
வதன மம்மா.

'புகல் மதித்து உணர்கிலாமையின் - நம்மிடம் அடைக்கலம்புக எண்ணியும் அடையப் பெருமையின், நமக்கு எளிமை சால் - நம்பால் எளியராய், பொறுமை கூர - பொறுமைத்தனம் மிக, நகல் மதிக்கில - (அது பற்றி) மகிழ்தலைச் செய்யாது, மறு பொலிய வாள் ஒளி இழந்து உய்ய நண்ணும் - களங்கம் தன்பால் ஒளிர மிக்க ஒளி இலதாக (முற்றும் அழியாது) உய்தல் மட்டுமே அமையப் பெற்ற, பகல் மதிக்கு உவமை ஆயின அமரர் தம் வதனம் எலாம் - (முன்பு), பகற்போதில் காணப்படும் சந்திரனுக்கு உவமையாகக் கூடிய தேவர்களின் முகங்கள் யாவும், (இப்போது) பருவ நாளின் இரவு கால் - பௌர்ணமி அன்று இரவில் ஒளி வீசுகின்ற, அகல் மதிக்கு உவமை ஆயின கொலோ - விரிந்த முழுமதிக்கு உவமை களாயின; கொல் - ஐயம், ஓ; அசை; அம்மா, வியப்பு.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இச் செய்யுளும் தேவர்கள் அச்சம் நீங்கி நிற்கும் நிலையைக் கூறியது. நகல் - சிரித்தல்; 'நகுதற் பொருட்டன்று நட்டல்' (குறள். 784); 'நகலி னினிதாயின் காண்பாம்' (நாலடி. 137). வாள் ஒளியாகலின், வாளொளி மிக்க ஒளி யென்க. பகல் மதி - 'பகல் மதி போலப் பசந்த குமரன்' (பெருங். நரவாண. 8 ; 146). பருவநாள் அகல் மதி - பூரணச் சந்திரன். வதனம் - முகம் ; வட மொழி. சில சுவடிகளில் இச் செய்யுள் 'உரமொருங்கிய' என்று தொடங்கும் 101-ஆம் செய்யுட்குப் பின் காண்கிறது.

பி - ம். 1. புகுமிடைப் பெறுகிலாமையின் ; பொறுமைகூர, புன்மைகூர.
2. நகை மதித் தனிமறுப், மதிக்கிலர் ; தையல் நண்ணும்.
3. குவமையாம் விபுதரா ; யினமுகம் ; விபுதர்சால்.
4. தராபதி யுளார். 93

105. சிந்துமுந் துலகினுக் கிறுதிபுக் குருவொளித்
துலைதல் செய்வார்
இந்துவின் திருமுகத் திறைவிநம் முறையுளா
னென்ன லோடும்
அந்தகன் முதலினோ ரமரரும் முனிவரும்
பிறரு மஞ்சார்
வந்துநம் நகரமும் வாழ்வையும் கண்டுகண்
டகல்வர் மன்னோ.

'சிந்து முந்து உலகினுக்கு - சிருட்டியிலே கடலே முன்பாகக் கொண்ட உலகின், இறுதி புக்கு - முடிவெல்லை வரைச் சென்று, உரு ஒளித்து உலைதல் செய்வார் - தம்முடைய உருவினை மறைத்துக்கொண்டு வருந்துபவரான, அந்தகன் முதலினோர் அமரரும் - யமன் முதலான தேவர்களும், முனிவரும் - இருடிகளும், பிறரும் - இவர்களின் வேறான யட்சர், கின்னரர் முதலிய தேவகணத்தாரும், இந்துவின் திருமுகத்து இறைவி நம் உறையுளான் என்ன லோடும் - முழுமதி போன்ற கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்குடைய முகத்தினளாகிய சீதாதேவி நாம் வதியும் நகர்க்கண் (இலங்கையில்) சிறைப்பட்டிருக்கின்றாள் என்று கேட்டறிந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வுடனே, அஞ்சார் - முன் நம்பாலிருந்த பயத்தை அறவே விட்ட வராய், வந்து - வந்து, நம் நகரமும் வாழ்வையும் கண்டு கண்டு அகல்வர் - நமது நகரையும், வாழ்க்கைச் சிறப்பினையும் அடிக்கடி பார்த்துச் செல்வர். மன் ; ஓ, ஈற்றசைகள்.

இதுவும் முன் செய்யுளின் கருத்தையே கொண்டது. சிந்து உலகு - பூதத்துவ நிபுணர்கள் சிருட்டிக் கிரமத்தில் கடலே முதற்கண் தோற்றியது என்பர். சொல்வரம் பெரியர் என்ற பாடலிலிருந்து இந்தப்பாடல் வரையில், தோற்றொளித்த அமரர் கள் அச்சம் நீங்கினமையும், அது காரணமாக அரக்கர்கட்குத் தீமை விளையக்கூடும் என்பதும் கூறப்பட்டன. இதனல் இராம ஐயம் பிறரால் உணரப்பெற்றதை இராவணன அறியவேண்டும் என்பது வற்புறுத்தப் பெற்றது என்க.

பி - ம். 1. ஒளித்துழுறல் செய்வார் ; உணர்தல் செல்லார்.
2. இந்து வந்தெனு முகத் ; நம்பதியுளா ளென்றலோடும்.
3. அந்தணன்.
4. வந்து தம் ; முலகமும் வானமும், முலகமும் பெருமையும் கண்டுறை வர், கண்டுவந் தகல்வர். 94

106. சொலத்தகாத் துன்னிமித் தங்களெங் கணும்வரத்
தொடர்வ வொன்னர்
வெலத்தகா வமரரு மவுணருஞ் செருவில்
விட்டன விடாத
குலத்தகால் வயநெடுங் குதிரையு மதிர்மதக்
குன்று மின்று
வலத்தகால் முந்துறத் தந்துநம் மனையிடைப்
புகுவ மன்னே.

'சொல தகா - (வாயினல்) எடுத்து விளம்பற்கரிய, துன் நிமித் தங்கள் எங்கணும் வர தொடர்வ - கெட்ட அறிகுறிகள் எங்கும் தொடர்ந்து வருவனவாயின ; (அவையன்றி), ஒன்னர் - நமக்கு விரோதிகளாய், வெல தகா அமரரும் அவுணரும்-நம்மை வெல்லும் தகுதியில்லாத தேவரும் அவுணரும், செருவில் விட்டன - (நம் மோடு எதிர் நின்று பொர வியலாமல்) போரில் விடுத்துச் சென்றனவான, விடாத குலத்த கால் வய நெடு குதிரையும் - நீங்காத சாதிப்பெருமையினையும், கால் வலிமையினையு முடைய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நீண்ட குதிரைகளும், அதிர் மத குன்றும் - பிளிறுகின்ற மதம் நிறைந்து விளங்கும் மலை யொத்த யானைகளும், இன்று - இப் போது, (தம் முடைய) வலத்த கால் முந்து உற தந்து - வலக்காலை முன்னெடுத்துவைத்து, நம்மனை இடை புகுவ - நம் அரண்மனை களில் புகத்தொடங்குகின்றன. மன், ஓ ; அசைகள்.

இராவணன் தோற்பான் என்பதற்குரிய பிற அறிகுறிகளை இச் செய்யுள் சுட்டியதாகும். தகாத என்பது ஈறு குறைந்து, தகா என நின்றது. வலக்காலை முன்வைத்துத் தம் சொந்த இல்லிற் புகுதல் தொன்று தொட்ட தமிழ் நாட்டு வழக்கு. நெடும் குதிரை- நெடுமை, பெருமை மேற்று. அதிர் மதக்குன்று - பிளிறுகின்ற மத மொழுகும் மலை போன்ற யானை. இது மதமலை யெனவும் வழங்கும்; (சுந்தர. *380*).

பி - ம். 1. துன்னிமித் தங்களும் வரவரத் ; தோன்னுர் ; துன்னிமித் தங்கள்வந் தெங்கணுஞ் சூழ்ந்த தெம்மூர்.

2. செலத்தகா ; நிலைத்தகா தவுணரு மமரரு மேலைநாட் செருவி னீட்டுங்.

3. கொலத்தகா ; குதிரை தேர்க் குஞ்சரம் ; அதிர்குரற் ; மின்றும், மென்றும் ; மெல்லாம்.

4. தந்துதம் ; புகுதும். 95

107. வாயினும் பல்லினும் புனல்வறந் துலறினர்
நிருதர் வைகும்
பேயினும் பெரியபேர் நரிகளும் திரிதரும்
பிறவு மெண்ணின்
கோயிலும் நகரமு மடநலார் குழலுநங்
குஞ்சி யோடும்
தீயின்வெந் தனவினித் துன்னிமித் தம்பெறுந்
திறனு முண்டோ.

'நிருதர் - அரக்கர்கள், வாயினும் பல்லினும் புனல் வறந்து உலறினர் - (தங்களுடைய) வாயிலும் பல்லிலும் நீர் வற்றிவிட நாவானது வறளப் பெற்றார்கள் ; வைகும் பேயினும் பெரிய பேர் நரிகளும் - (இருளிலேயே) தங்கி நிற்கும் பேய்களைக் காட்டிலும் மிகப் பெரியனவாகக் காணப்பெறும் நரிகளும், திரிதரும் - நமது நகரத்தில் சஞ்சரிக்கும் ; பிறவும் எண்ணில் - மேலும் ஆராய்ந்து பார்க்கும் இடத்து, கோயிலும் நகரமும்- அரண்மனைகளும் நகரப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பகுதிகளும், மடநலார் குழலும் நம் குஞ்சியோடும் - மடப்பம் வாய்ந்த மகளிரின் கூந்தலும், (ஆடவராகிய) நமது மயிர்முடிகளும், தீயின் வெந்தன - (ஒரு காரணமும் இன்றித்) தீப்பட்டுக்கருகின; இனி - இனிமேல், (இதைப்பார்க்கிலும்), துன் நிமித்தம் பெறும் திறனும் உண்டோ - கெட்ட சகுனங்கள் பெறும் வகையுள்ளதோ? (இல்லை).

வாய் வறந்துலர்வது, நரிகள் பகலில் நடுவூரிற் புகுவது, கோயில், நகரம், மடவார் குழல், ஆடவர் குஞ்சி இவை காரண மின்றித் தீப்படுவது கெட்ட அறிகுறிகள். கோயிலும் நகரமும் என்றதற்கு இடப்பொருளாகக் கொண்டு பொருள் உரைத்த லும் ஆம். கோயில் - அரண்மனே. பெண்பாற் கூந்தலும் ஆடவர் பங்கியும் வேற்றுமை தெரிப்பான் குழலும் குஞ்சியும் என்றான்.

பி - ம். 1. துரறினர், துலறியே; நிருதரென்போர்.
2. பேயினும் பெரியபேய், பெரிதுபேய்; புரிதரும்; பிறரும், பெரிது.
3: கோயிலும் நிரமும்.
4. நதனினிற், நிடுமலா, நிடுதலா; லொருநிமித். 96

108. சிந்தமா நாகரைச் சிரமுருக் கியகரன்
திரிசி ரத்தோன்
முந்தமா னுயினன் வாலியே முதலினேர்
முடிவு கண்டால்
அந்தமா னிடவனே டாழிமா வலவனும்
பிறரு மையா
இந்தமா னிடவரா மிருவரோ டெண்ணலா
மொருவர் யாரே.

'ஐயா-ஐயனே! சிந்த-வலிகெட, மா நாகரை - பெருமைசான்ற தேவர்களை, சிரம் முருக்கிய - போரில் தலையற்று ஒழியுமாறு புரிந்த, கரன் திரிசிரத்தோன் - கரன் திரிசிரன், முந்த மான் ஆயினன் - முன்னர் பொன் மானக மாறிவந்த மாரீசன், (மற்றும்) வாலியே முதலினோர் முடிவு கண்டால் - வாலி முதலானவர்களின் இறுதியை நோக்கில், அந்தம் மான் இடவனேடு - அழகிய மானை இடக்கரத்தில் ஏந்திய (இடபவாகனனை) சிவபிரானேடு, ஆழிமா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வலவனும் - (சுதரிசனம்) என்ற பெரிய சக்கரத்தினை வலக்கையில் தாங்கிய திருமாலும், பிறரும் - பிரமன் ஆதியான மற்றைத் தேவர்களும் என்ற இவர்கள் வரிசையில், இந்த மானிடவர் ஆம். இருவரோடு - இந்த மனிதர்களாகும் இராம இலக்குவரோடு, எண்ணல் ஆம் ஒருவர் யாரே - ஒன்று கூட்டி எண்ணக்கூடிய ஒருவர் யாருளர்? (யாரும் இல்லை).

இனி, இராமபிரான் ஆற்றலைச் சிறப்பித்துக் கூறுவான் அவன் கான் முதலிய வலியோர்களை முருக்கியவன் என்றான்; முந்தமா னுயினன்; 'மாய மானுயினன் மாயமா னுயினன்' (கிட்கிந்தா. 88); என்றது காண்க. ஆழிமா வலவன் - வலக்கரத்தில் சக்கரப் படை தாங்கிய திருமால். இவ்விருவரும் திருமாலின் அமிசமே எனினும் மனித உருவிற் றிகழ்ந்தமை நோக்கி வேறுபடுத்தார். (ஒப்பு): 'நேமியோ குலிசியோ நெடுங்க ணிச்சியோ, தாமரைக் கிழவனோ' என வினவிய இராவணனிடம், 'சொல்லிய அனைவரு மல்லன்.........அல்லியங் கமலமே யனைய செங்கணோர், வில்லிதன் றூதன் யான்' என்பதும், 'மூவர் தேவரும்......நினைவரும்' 'வினையமு முடிக்க நின்றுளான்' என்பதும் (சுந்தர. 1116, 1117) இங்கே காணத் தகுவன; 'மூவருமல்லன்' (1119) என்பதும் அது. இராமபிரானின் பரத்துவம் கூறப்பெற்றது.

பி - ம். 3. வலவனு மயனுமையா; அந்தமா னுடவனோ டாழியா னயனெனு மூவராதி.
4. டெதிர்கலாம்; ஒருவர் யாரோ. 97

109. இன்னமொன் றுரைசெய்கே னினிதுகே ளெம்பிரா
னிருவ ராய
அன்னவர் தம்மொடும் வாநரத் தலைவரா
யனுகி நின்றார்
மன்னுநம் பகைஞராம் வானுளோ ரவரொடும்
மாறு கோடல்
கன்னமன் றிதுநமக் குறுதியென் றுணர்தலுங்
கரும மன்றால்.

'எம்பிரான் - எமது தலைவனே!, இன்னம் ஒன்று உரை செய்கேன் - மற்றும் ஒன்று மொழியப் போகின்றேன்; இனிது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கேள் - நன்ருகக் கேட்பாயாக ; இருவர் ஆய அன்னவர் தம் மொடும் - இருவராக வந்துள்ள அந்த இராம இலக்குவருடனே, வானரம் தலைவராய் அணுகி நின்ருர் - வானரப்படையின் தலைமை தாங்கி அண்மையில் நிற்பவர், மன்னும் - நிலைபெற்ற, நம் பகைஞர் ஆம் வானுளோர் - நமது விரோதிகள் ஆகிய தேவர்கள் ; (ஆதலின்), அவரொடும் மாறு கோடல் - அவர்களைப் பகைத்துக் கொள்ளுதல், கன்னம் அன்று - நமக்குப் பெருமை தரக்கூடியதன்று ; இது - நம்மிடம் பகைத்து வந்தவர்களாகிய அவர்களை எதிர்ப்பதாகிய இந்தச் செயல், நமக்கு உறுதி என்று உணர்தலும் கருமம் அன்று - நமக்கு நன்மை விளைக்கும் என்றுட்கொள்ளுதலும் உரிய செய்கையாகாது' (என்று கூறினுன்).

'நீ முன்னர் வரம் வேண்டி நின்றபோது, மனிதர்களாலோ குரங்குகளாலோ நீ முறியடிக்கப்படுதல் கூடாது என்று விரும்பி வேண்டவில்லை ; அவர்களால் உனக்கு இறுதி நேரும் ; ஆகவே அவர்களைப் பகைத்தல் நன்றன்று' என்ருன். வானரர் தேவர்கள் என்பது முன்னரே பல இடங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. மாறு கோடல் - பகைமை கொள்ளுதல். கன்னம் - பெருமை ; புகழ், கனம் என்ற வடசொல் இரட்டித்துக் கன்னமென்ருயது. 'கன்மமன்' என்ற ஓர் பாடமும் உண்டு ; ஆயினும், அதே அடியில் கருமம் என்ற சொல் வருவதாலும், எதுகை நயம் நோக்கியும் கன்னம் என்ற பாடமே தழுவப்பட்டது. இருவர் - இராம இலக்குவர் ; நரநாராயணர் என்ற குறிப்பும் காணப்பெறுவது காண்க. இதுகாறும் வீடணன், பகைவரை இகழ்தல் பேதைமை என்று கூறி, அவர்களோடு சந்து செய்து கொள்ள உபாயங்களை மேலே கூறத் தொடங்குகின்ருன்.

பி - ம். 1. உரை செய்வேன், செய்வான், செய்தால்.

2. அன்னவன் றன்னெடும் ; யருகு நின்ரூர், யணுகுகின்ருர்.

3. மன்னநம், மன்னனின்.

4. கன்மமன்று ; றவர்களைக் கோறலென் ; றிருவரைக் குறுகவென் ; உணர்தியேல், அனைதருங், கருமமென்ருன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வேறு

## விடணன் உபாயம் கூறியது

110. இசையுஞ் செல்வமு முயர்குலத் தியற்கையு மெஞ்ச
வசையுங் கீழ்மையு மீக்கொளக் கிளையொடு மடியா
தசைவில் கற்பினவ் வணங்கைவிட் டருளுதி யதன்மேல்
விசைய மில்லெனச் சொல்லினன் அறிஞரின் மிக்கோன்.

அறிஞரின் மிக்கோன் - அறிந்த ஞானிகளிற் சிறந்தவனாகிய வீடணன், 'இசையும் செல்வமும் உயர்குலத்து இயற்கையும் - புகழும் செல்வமும் உயர்குடியில் உதித்தற்கேற்ற நல்லொழுக்கமும், எஞ்ச - குறைந்தொழிய, வசையும் கீழ்மையும் மீ கொள - நிந்தனையும் இழிவும மிக, கிளையொடும் மடியாது - உறவினர்களுடனே இறந்துபடாமல், அசைவில் கற்பின் அ அணங்கை - தளராத கற்பினையுடைய அந்தத் தெய்வ வனிதையாகிய (சீதையை) விட்டருளுதி - விட்டிடுக ; அதன்மேல் - அவ்வாறு புரிவதைக் காட்டிலும், விசையம் இல் - உனக்கு வெற்றி விளைக்கக் கூடிய செயல் பிறிதில்லை,' என சொல்லினன் - என்று அறிவுரை கூறி யமர்ந்தான்.

முதலிரண் டடிகளோடு 'வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும், எச்சம் பெறாஅ விடின்' (குறள். 238) என்பதை ஒப்பு நோக்குக ; இசைக்கு வசை எதிர்மொழி யாதலும் உணர்க. எஞ்சுதல் : இங்கே குறைதல் ; (குறுந். 210, 232, 237). அசைவில் கற்பினவ் வணங்கு - பிராட்டி 'அலகில் கற்புடைச் சானகி' 'திட்டிவிடமன்ன கற்பின் செல்வி' என்பன கும்பகன்னன் கூற்றுக்கள். கும்பகன்னனும் பிராட்டியை விட்டுவிடுமாறு கூறியது மேல்வரும் கும்பகருணப் படலத்துட் காண்க. அறிஞரின் மிக்கான் - வீடணன் ; யுத்த. இராவணன் மந்திரப். 65-இன் உரை பார்க்க.

பி - ம். 1. இசையுஞ் செய்கையு ; மெஞ்சா.
2. கிளையொடு முடியா, கிளையது.
3. கற்பின ளணங்கைவிட் ; யிதன்மேல், யினிமேல்.
4. சொல்லிறுன், செப்பினன் ; அறிவினல் மிக்கோன். 29



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## இராவணன் சினம்

111. கேட்ட வாண்டகை கரத்தொடு கரதலங் கிடைப்பப்
பூட்டி வாய்தொறும் பிறைக்குலம் வெண்ணிலாப் பொழிய
நாட்டந் தீயெழ நலந்திக ழாரமு மார்பும்
தோட்ட டங்களுங் குலுங்கநக் கிவையிவை சொன்னான்.

கேட்ட ஆண்டகை - (மேற்கூறியவாறு வீடணன் உரைத்ததைச் செவியேற்ற வீரனான இராவணன், கரத்தொடு கரதலம் கிடைப்ப பூட்டி - கையொடு கை ஒன்றும்படி கூட்டி, வாய்தொறும் பிறை குலம் வெள் நிலா பொழிய - பத்து வாய்களினும் இளம் பிறை போன்ற வளைந்த பற்கள், வெண்ணிறமான ஒளியை விரிப்ப, நாட்டம் தீ எழ - கண்களில் தீப்பொறி பறப்ப, நலம் திகழ் ஆரமும் மார்பும் தோள் தடங்களும் - அழகுடன் விளங்கும் முத்து மாலைகளும் அவற்றை அணிந்த மார்பும் தோளிடங்களும், குலுங்க - அசையும்படி, நக்கு - சிரித்து, இவை இவை சொன்னான் - பின் வரும் வார்த்தைகளை மொழியலானான்.

ஆண்டகை; அன்மொழித் தொகை. ஆண்டகை என்றதால், அவன் ஆண்மையே மிகுந்து அறிவு குன்றியிருந்த நிலை சுட்டப்பெற்றது என்க. கரத்தொடு கரதலம் கிடைப்ப; இது சினத்தால் நிகழும் மெய்ப்பாடு. கிடைத்தல் - தலைப்படுதல், சேர்தல்: இங்குக் கொட்டி என்று பொருள்பட அமைந்தது. தலைப்பட்டு - கிடைத்து (சீவக. 1592 உரை); 'விடலையோர் வேற் கணாளைக் கிடைத்து' (திருவிளை. தருமிக்கு 42). பிறைக்குலம் - வளைந்த பிறை மதி போன்ற வெள்ளிய பற்களின் தொகுதி. நாட்டம்—கண் - பொருள்களை நாடுவது என்ற காரணக்குறி; 'நாட்டமிரண்டும் அறிவுடம் படுத்தற்குக், கூட்டி யுரைக்குங் குறிப்புரையாகும்' (தொல். பொருள். களவி 5). பிறைக்குலம் வெண்ணிலாப் பொழிதலும், நாட்டம் தீ எழலும் தோள தடங்கள் குலுங்குதலும் வெகுளியின் அறிகுறிகள். தோள் தடங்களைத் தடந்தோள்கள் என்றுரைப்பினுமாம்.

பி - ம். 1. கரத்தொடுங் கைத்தலம்; கரத்தொடு கரங்கிளர் சினத்தில்; கிடைக்க.
2. பூட்ட; எயிற்றிளம் பிறைக்குலம் பொழிய.
3. வாட்ட டந்திக ழாரமும் வயங்கொளி.
4. தோட்டலங்களும்; இணையன; சொல்வான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


112. இச்சை நல்லன வுறுதிக ளிசைக்குவெ னென்றாய்
பிச்சர் சொல்லுவ சொல்லினை யென்பெரு விறலைக்
கொச்சை மானிடர் வெல்குவ ரென்றிது குறித்த
தச்சமோ வவர்க் கன்பினோ யாவதோ வையா.

'ஐயா - ஐயனே! இச்சை நல்லன உறுதிகள் இசைக்குவென் என்றாய் - விரும்பக்கூடியனவும் நன்மை செயக்கூடியனவுமான, உறுதிமொழிகளைச் சொல்லுவதாக மொழிந்தாய்; (ஆனால்) பிச்சர் சொல்லுவ சொல்லினை - பித்தர் கூறும் சொற்களையே பகர்ந்தாய்; என்பெரு விறலை - என்னுடைய மிக்க ஆற்றலை, கொச்சை மானிடர் வெல்குவர் - இகழத்தக்க மனிதர்கள் கடந்திடுவர், என்ற - என்று சொல்லிய, இது குறித்தது - இவ்வாறு நீ விளம்பியது, அச்சமோ - அவர்களிடம் உள்ள பயத்தினாலா? அவர்க்கு அன்பினோ யாவதோ? - அல்லது அவர்கள் மாட்டு எழுந்த அன்பு காரண மாகவா? என்ன காரணத்தினால்?

இச்செய்யுளில் வீடணனை இராவணன், 'ஐயா' என்றது இகழ்ச்சியால் என்க. பித்தர் - பிச்சர்; இடைப்போலி. 'பிச்சரங் கவரெனப் பிறருந் தூற்றவே' (பிரபோத. 25, 70). கொச்சை மானி டர் - இகழத் தக்கவர்; 'கொச்சைமாந்தர்' (ஆரணிய. 503); (மற்றும்) சுந்தர. 1141; யுத்த. மந்திரப். 112. நீ இங்ஙனம் கூறி யது அவரை அஞ்சியா அல்லது அவர்பாற்கொண்ட அன்பினாலா என்றான்.

பி - ம். 1. யல்லன.
3. கொச்ச; வெல்குவ ரென்பது, ரென்றெனைக்.
4. யாதினோ; யாவதோ வறியின். 101

113. ஈங்கு மானிடப் பசுக்களுக் கிலைவர மென்றாய்
தீங்கு சொல்லினை திசைகளை யுலகொடுஞ் செருக்கால்
தாங்கும் யானையைத் தள்ளியத் தழல்நிறத் தவனை
ஓங்க றன்னொடு மெடுக்கமுன் வரங்கொண்ட துளதோ.

'ஈங்கு - (நீ வரம் பெற்ற) இதனில், மானிட பசுக்களுக்கு இலை வரம் என்றாய் - மனிதப் பசுக்களை வெல்வதற்கான வரம் கேட்கப் பெறவில்லை என்று கூறினை; தீங்கு சொல்லினை - என்னிடம் குறை கற்பித்தாய்; உலகொடும் - உலகுடனே, திசைகளை செருக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கால் தாங்கும் யானையை தள்ளி - எட்டுத் திக்குகளையும் செருக் கோடு தாங்குகின்ற யானைகளை வென்று, அ தழல் நிறத்தவனை - அந்தத் தீவண்ணனாகிய சிவபிரானை, ஓங்கல் தன்னொடும் எடுக்க - ஒப்பற்ற மலையுடனே பெயர்க்க, முன் வரம் கொண்டது உளதோ - முன்பு வரம் பெற்றதுண்டோ? ஓகாரம் - எதிர்மறை.

இது, வீடணன் 89, 90-ஆம் பாடல்களில் கூறினமைக்கு விடையாகும்.

பசுக்கள் - கோழை மனத்தின என்பதுபற்றிக் கூறப்பட்டது; இழிவு. திசைகளைத் தாங்கும் யானை எட்டென்ப. தழல் நிறத் தவன் - சிவபெருமான்; 'முழுத்தழல் மேனி தவளப் பொடியன்' (தேவா. 1199·5); மற்றும், (ஆரணிய. 158, 582, 920, 984) காண்க. ஓங்கல் - உயர்ந்திருப்பது; மலைக்குக் காரணக்குறி. இங்கு கயிலாய மலை; இராவணன் ஓங்கல் எடுத்தது; ஆரணிய. 258, 319, 327, 596 742, 848, 889, 919. மற்றும், அப்பர், சம்பந்தர் தேவா ரங்களில் பதிகந்தோறும் 8-ஆவது பாசுரத்திலும், திருக்கடைக் காப்பிலும் இச்செய்தி கூறப்பெற்றுள்ளமை முறையே காண்க.

பி - ம். 1. மானிடர் தங்களுக்கு, மானிடப் புழுக்களுக்கு; சிலவர; மென்றேய், மென்றுன்.
2. திசைகளைத் தனித்தனி.
3. ஆனையை; தழனிறத்தோனை.
4. ஓங்க லொன்றெடு; மெடுக்கவும்; வரங்கொண்ட துண்டோ. 102

114. மனக்கோ டன்றியும் வறியன வழங்கினை வானோர்
சினக்கோ டும்படை செருக்களத் தென்னையென் செய்த
எனக்கு நிற்கமற் றொருவயிற் றென்னொடு முதித்த
உனக்கு மானிடர் வலியராந் தகைமையு முளதோ.

'மனக்கொடு அன்றியும் வறியன வழங்கினை - நன்கு மனத்திற் கொள்ளாமலே (சிந்திக்காமலே) பயனற்ற சொற்களை மொழிந் தாய்; வானோர் சினம் கொடும் படை - தேவர்களின் கோபத்தைக் கொண்ட கொடிய போர்க்கருவிகள், செருகளத்து என்னை என் செய்த - போர்க்களத்தில் என்னை என் செய்துவிட்டன? எனக்கு நிற்க - என்னைப்பற்றியது ஒருபுறமிருக்க, மற்று - பிறிது, ஒரு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வயிற்று என்னொடும் உதித்த உனக்கு மானிடர் வலியராம் தகைமையும் உளதோ - ஒரு தாய் வயிற்றில் என்னுடன் சகோதரனாகப் பிறந்த உன்னைக்காட்டிலும், அந்த மனிதர்கள் வலிமையுள்ளவராக விளங்கும் தன்மையும் உண்டோ? இல்லை என்றபடி. ஓகாரம் - எதிர்மறைப் பொருளது.

'என்னைக்காட்டிலும் வலி குறைந்த உன்னையே அவர்கள் வெல்ல முடியாதே, அங்ஙனமாகவும் என்னை அவர்கள் வெல்வர் என்று எதுபற்றிக் கூறினை' என்றான். ஒருவயிற் றுதித்தமை - விச்ரவஸ் என்ற பேரிருடிக்கும் கேகசி என்ற அரக்கிக்கும் மக்களாகப் பிறந்தமை; உத்தரகாண்டம் அரக்கர் பிறப்புப் படலத்துக் காண்க.

பி - ம். 1. மனத்தொ டன்றியும், மனத்தின் வந்தன.
3. என்னொடிங் கொருவயிற் றுதித்த.
4. தன்மை முளதோ.

103

115. சொல்லு மாற்றங்கள் தெரிந்திலை பன்முறை தோற்று
வெல்லு மாற்றலு மொருமுறை பெறவிலை விண்ணைக்
கல்லு மாற்றலென் கிளையையு மென்னையுங் களத்திற்
கொல்லு மாற்றல ருளரெனக் கோடலுங் கோளே.

'சொல்லும் மாற்றங்கள் தெரிந்திலை - பகரத்தக்க செய்திகள் இன்ன வென்று அறிந்தாயல்லை; பன் முறை தோற்று வெல்லும் ஆற்றலும் ஒரு முறை பெற இலை - (தேவர்கள் என்னிடம்) அநேகம் தடவைகள் தோல்வியடைந்து, எங்களை வெற்றி கொள்ளும் வன்மை ஒரு தடவையேனும் எய்தினர் இல்லை; விண்ணை கல்லும் ஆற்றலென் - விண்ணுலகத்தையும் பெயர்க்கும் வன்மை வாய்ந்தவன் யான்; (ஆதலின்) கிளையையும் என்னையும் கொல்லும் ஆற்றலர் உளர் என - சுற்றத்தாரையும் என்னையும் கொல்லக்கூடிய வன்மையாளரும் இருக்கின்றனர் என்று, கோடலும் கோளே - கொள்ளுதலும் ஏற்ற கொள்கையாகுமா?

மாற்றம் - செய்தி. ஆரணிய. *562*; சுந்தர. *328, 444, 464, 516*; யுத்த. இரணியன். *164*. கிளை; உவம ஆகுபெயராய்ச் சுற்றத்தைக் குறித்து நின்றது. கொல்லும் மாற்றலர் எனினுமாம்; மாற்றலர் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பகைவர்கள் ; கொள் என்றலும் ஆம். கொள் + தல் ; கோடல், கோள் - உள் கோள், கொள்கை.

பி - ம். 1. பல முறை, முறை முறை ; தோற்றும்.
2. ஒரு முறை பொறுத்தனன், பெறுகதாம், பெறுக தான்.
3. கலையையும் ; களத்துக்.
4. கோடலுங் கொண்டாய் ; கொளலோ. 104

116. தேவ ரிற்பெற்ற வரத்தின தென்பெருஞ் செருக்கேல்
மூவ ரிற்பெற்ற முடையவன் றன்னெடு முழுதும்
காவ லிற்பெற்ற திகிரியோன் றன்னெடுங் கடந்த
தேவ ரிற்பெற்ற வரத்தினு லியம்புதி யிளையோய்.

'இளையோய் - தம்பி! என்பெருஞ் செருக்கு - எனது மிக்க கர்வம், தேவரில் பெற்ற வரத்தினதேல் - தேவர்களிடத்திநின்று அடைந்த வரத்தினல் என்று மொழிவாயாகில், மூவரில் பெற்றம் உடையவன் தன்னெடும் - மும் மூர்த்திகளில் காளை மாட்டை வாகனமாகப் பெற்றவனேடும், முழுதும் காவலிற் பெற்ற திகிரி யோன் தன்னெடும் - உலக முழுவதும் காத்தல் தொழிலைக் கைக் கொண்டதனல் கையில் ஏற்றுள்ள ஆழிப்படையை யுடையவ னேடும், கடந்தது - (பொருது) வென்றது, எவரில் பெற்ற வரத் தினல் இயம்புதி - எவர்பாற் கொண்ட வரத்தினல் ஆயின? இதனைச் சொல்வாயாக.

தேவரிற் பெற்ற - 'தேவரிற் பெற்றநஞ் செல்வக் கடிவடி வார் திருவே' (திருக்கோ. 14) : மூவர் - மும் மூர்த்திகள். பெற்றம் உடையவன் - காளை மாட்டைத் தன் வாகனமாக உடைய சிவபெருமான். காவலிற் பெற்ற திகிரியோன் ; திருமால். பெற்ற வரத்தினல் வெல்வது என்றல் வரங்கொடுத்தவரை வெல்லுதல் கூடுமா? எனவே தேவரை வெற்றி கொண்டது தான் பெற்றவரத் தினலன்று என்ருன். திருமாலையும் சிவபெருமானையும் எதிர்த்து வென்றமை கூறிப் பிரமனெடும் பொருததாகக் கூறப்படவில்லை ; பிரமன் அவனது பாட்டனுதலின் என உணர்க.

பி - ம். 1. வரத்தினிற் பெருஞ் செருக்கென்.
3. திகிரியோன் ; தன்னையுங்.
4. தியாவரிற் பெற்ற. 105

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


117. நந்தி சாபத்தி னமையடுங் குரங்கெனி னம்பால்
வந்த சாபங்க ளெனைப்பல வவைசெய்த வலியென்
இந்தி யாதிக ளவித்தவர் தேவர்நம் மிறுதி
சிந்தி யாதவர் யாரவர் நம்மையென் செய்தார்.

'நந்தி சாபத்தின் - நந்தி கொடுத்த வெகுளியுரையால், நமை குரங்கு அடும் எனின் - நம்மைக் குரங்கு அழிக்கும் என்பாயாகில், நம்பால் வந்த சாபங்கள் எனைபல - நம்மிடம் வந்து சார்ந்த சாபங்கள் எத்தனையோ பல: அவை செய்த வலி என் - அவைகள் நமக்கு என்ன வன்மையைச் செய்து விட்டன?; இந்திய ஆதிகள் அவித்தவர் - ஐந்து இந்திரியங்களையும் (ஆறுவது இந்திரியமான) மனத்தையும் (தொழிலற) அடக்கிய மனனசீலர்களும் (முனிவர்களும்), தேவர் - தேவர்களும், நம் இறுதி சிந்தியாதவர் யார் - நம்முடைய முடிவைக் குறித்துக் கருதாதவர்கள் யார்? அவர் நம்மை என் செய்தார் - அவர்கள் நம்மை என்ன செய்து விட்டனர்?

இதுவும், அடுத்த இரண்டு செய்யுட்களும் வீடணன் 80-ஆம் பாட்டில் கூறியதற்கு இராவணன் இறுத்தவிடையாகும்.

நந்தி சாபம்; உத்தர. வரையெடுத்த. 67-ஆம் செய்யுட்கண் காண்க. சாபம் - வெகுண்டு கூறப்பட்டுத் தீங்கு விளைக்கும் சொல். 'சாபமே சபித்தல் வில்லாம்' (நிகண்டு). அவித்தவரும் தேவரும் எனக்கொள்க. இந்திரியம் என்ற வடசொல் இந்தியம் எனத்தொக்கது; இவை கன்மேந்திரியம் ஞானேந்திரியம் என இரு கூறுக உள்ளன. விவரம் சாத்திர நூல்களிற் காண்க. இந்தியாதிகள் அடக்கியவர் எனக் கூறுது அவித்தவர் என்றது வேரறுத்து வெந்நீர் விடுவது போன்று அறவேகளைதல் என்றவாறு; 'ஐந்தவித்தான் ஆற்றல்' (குறள். 25.);

பி - ம். 1. செய்த வலியேது.
3. இந்திராதியர் சித்தர்வித் யாதரர், இந்திராதியர் சித்தியர் தேவர் நம், சித்தர்கள் தேவர் நம்.
4. ஆரவை, யாரவைவ; செய்த.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


118. அரங்கி னுடுவார்க் கன்புபூண் டுடைவர மறியேன்
இரங்கி யானிற்ப வென்வலி யவன்வயி னெய்த
வரங்கொள் வாலிபாற் ருேற்றனன் மற்றும்வே றுள்ள
குரங்கெ லாமெனே வெல்லுமென் றெங்ஙனம் கோடி.

'அரங்கின் ஆடுவார்க்கு அன்பு பூண்டு உடை வரம் அறியேன் - பொற் சபையில் கூத்தாடும் பெருமானிடம் பத்திமேற் கொண்டு அதன் காரணமாக வாலி பெற்றிருந்த வரத்தின் பெருமையை நான் அறியவில்லை; (ஆகவே), யான் இரங்கி நிற்ப - யான் மனம் சோர்ந்து இருக்க, என்வலி அவன் வயின் எய்த வரம் கொள்வாலிபால் தோற்றனன் - என் வன்மையிற் பாதி அவன் பால் சென்றடைய, மேலே கூறிய வரங்களைப் பெற்ற வாலியினிடம் தோல்வியுற்றேன்; (இது கொண்டு), மற்றும் வேறு உள்ள குரங்கு எலாம் எனை வெல்லும் என்று எங்ஙனம் கோடி - மற்றும் வேருக உள்ள குரங்குகள் அனைத்தும் என்னை வெற்றி கொள்ளும் என்று எவ்வாறு உட்கொள்கின்றனை?

இனி 'உடைவரம்' என்பதை வினைத்தொகையாக்கி 'எக் கோடி யெவராலும் வெலப்படா னெனக்கொடுத்த வரமும்' (யுத்த. இரா. வதைப். 198) என்றதற் கேற்ப, சிவபிரானிடம் அன்பு பூண்டு அவன்பாற் பெற்றவரம் வீணுதற்கில்லை; என்ருலும் யான் வாலி பாற் ருேற்றது, அவன் பெற்றிருந்த வரத்தின் காரணமாக என் வலி அவன் வயின் எய்தியதால் நிகழ்ந்தது எனக் கூறியதாகப் பொருள் கோடலும் ஒன்றும்.

'வாலி பெற்ற வரத்தின் தன்மை யறியாமையின் இரங்கி நின்ருன் இராவணன்; அப்பொழுது அவன் வலியிற் பாதி வாலி பால் சேர அவன் தோற்ருன்' என்பது இங்கே குறிக்கப்பட்டது இஃது இராவணன் கூற்று என்பது குறிக்கொள்ளற் பாலது; மற்றும் 'பேதைய ரெதிர்குவ ரெனினும் பெற்றுடை யூதிய வரங்களு முரமு முள்ளதிற், பாதியு மென்னதாற் பகைப்ப தெங்ஙனம்' (கிட்கிந்தா. 255) வாலி எங்கும் வெற்றிக் கொடியே நாட்டி நின்ற கூறியதும் கவனிக்கத்தக்கது. ஓரிடத்தில், 'இந்த இலங்கேசனே' வெல்வதும் தோற்றல் தானும் விளையாட்டின் விளைந்த மேனுள்' (சுந்தர. 471) என்று கூறுவதும் இங்குக் காண்க. 'வென்றவர் தோற்பர் தோற்ருேர் வெல்குவர்' (யுத்த. கும்ப. 37) என்று உலகியலாற் கூறி மகோதரன் இராவணனைத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தேற்றினன் என்ப. எனவே தோல்வியைப் பொருட்படுத்தின வனன்று இராவணன் என்பது புலனாகும்.

பி - ம். 1. அரங்கி னுடுவார்க் ; அன்பு கொண்டு ; மறியேம்.
2. நானிற்ப ; அவன் வயினெய்த.
3. வாலியாற்.
4. வெல்லுமா றெங்ஙனங் குறித்தாய். 107

119. நீல கண்டனும் நேமியும் நேர்நின்று பொரினும்
ஏலு மன்னவ ருடைவலி யவன்வயி னெய்தும்
சால வன்னது நினைந்தவ னெதிர்செலல் தவிர்ந்து
வாலி தன்னையம் மனிதனு மறைந்துநின் றெய்தான்.

'நீலகண்டனும் - (விடமுண்டு) நீல நிறம் பெற்ற கழுத்தை உடையவனான சிவபெருமானும், நேமியும் - ஆழிப்படை ஏந்திய திருமாலும், நேர் நின்று பொரினும் - நேர்ப்பட எதிராக நின்று எதிர்த்தாலும், ஏலும் அன்னவர் உடைவலி அவன் வயின் எய்தும் - எதிரேற்கின்ற அவர்கள் உடைத்தாயிருக்கும் வலிமையிற் பாதி அவ்வாலியைச் சென்றடையும்; அன்னது சால நினைந்து - அத்தன்மையை நன்கு ஆராய்ந்து, அவன் எதிர் செலல் தவிர்ந்து - அந்த மனிதனும் (இராமனும்) வாலிக்கு நேராகச் சென்று பொருவதை விட்டு, வாலி தன்னை அ மனிதனும் - வாலியை அந்த இராமனும், மறைந்து நின்று எய்தான் - மறைவாக இருந்து அம்புகளால் எய்து கொன்றான்.

நீல கண்டன் - சிவபெருமான். நேமி - ஆகுபெயராகத் திருமாலைக் குறித்து நின்றது. வாலி பெற்ற மேற்படி வரத்தை நினைந்து தான் அவனை இராமபிரான் நேர் முகமாக வந்து பொராமல், மறைந்து நின்று எய்தான் என்ற இராவணன் கூற்று ஆராயற்பாலது. இனி வான்மீகத்திலும் தமிழ் உத்தர காண்டத்தும் வாலியைப் பற்றிய செய்தியில் இந்த வரம் குறிக்கப் பட வில்லை என்பது அறிதற் பாலது.

பி - ம். 1. நேமியு மெதிர் நின்று ; நேரின், நேரில்.
2. ஆல மன்னவர், மாலு மன்னவர்.
3. சாலு நல்வர, சால நல்லவா, சால வன்னவை ; னெதிர் செய்ந்.
4. வாலி தன்னையும் ; மனித்தனு ; மறையநின். 108



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

120. ஊன வில்லிறுத் தோட்டைமா மரத்துளம் போட்டிக்
கூனி சூழ்ச்சியா லரசிழந் துயர்வனங் குறுகி
யானி ழைத்திட வில்லிழந் தின்னுயிர் சுமக்கும்
மானி டன்வலி நீயலா லாருளர் மதிப்பார்.

'ஊனவில் இறுத்து - (முன்னரே) பழுது பட்டிருந்த (சிவ பிரானது) வில்லை முறித்து, ஓட்டை மா மரத்துள் அம்பு ஓட்டி - உளுத்து ஓட்டைகள் நிரம்பி நின்ற பெரிய மராமரத்துள் அம்பினைச் செலுத்தி, கூனி சூழ்ச்சியால் அரசு இழந்து - கூனியின் வஞ்சனைச் செயலினால் அரசினைக் கைவிட்டு, உயர் வனம் குறுகி - மரங்கள் உயர்ந்த காட்டை அடைந்து, யான் இழைத்திட - நான் சூழ்ச்சி செய்ய, இல் இழந்து - மனைவியை இழந்து, இன் உயிர் சுமக்கும் - இனிய உயிரைச் சுமந்து கொண்டிருக்கும், மானிடன் வலி நீ அலால் மதிப்பார் ஆர் உளர் - அந்த மனிதன் ஆற்றலை நீ அல்லாமல் வேறு பெருமையாகக் கருதுபவர் யாவர் இருக்கின்றனர்? எவரும் இல்லை.

இராவணன் இராமபிரானை இகழ்கின்றான். இஃது இளிவரல் என்னும் சுவையின் பாற்படும்; பிறன் பாற் கண்ட குறைவுகளைக் கூறி இகழ்ந்தது. பிராட்டியின் கன்யா சுல்கமாக அமைந்த சிவ தனுசின் வரலாறு, பால காண்டம். பரசுராமப் படலம் 27 முதல் 31 செய்யுட்களிற் காண்க. முன்னரே திருமாலுடன் பொருத போரில் ஊனமுற்ற தாகலின், 'ஊன்வில்லிறுத்து' என்றான். இதே தொடர் ஷை படலம் 32-வது செய்யுட் கண்ணும் வருதல் காண்க. 'ஓட்டை மரத்துளம் போட்டி' என்றதிலிருந்து மராமரம் முன்னரே துளைபட்டிருந்த தென்று தெரிகிறது. ஓட்டை மா மரத்துளம் போட்டி ' என்ற இடத்து எதுகை நயம் காண்க. ஓட்டை மரத்துக்கு மா என்ற அடைமொழி தந்தது இராமபிரான் செயலின் இழிவு மிகுதி தோன்ற என்க. 'மூலப் பொத்தற் செத்த மரத்தேழ் முதலுக்கும், வாலிக்கும்மேயாயின வாறென் வலியம்மா' (யுத்த. பிரமாத்திர. 216) என்று இராமபிரானே கூறுதல் காண்க. கூனி சூழ்ச்சியால் அரசிழந்தது. அயோத்தியா காண்டம். கைகேசி சூழ்வினைப் படலத்துக் காண்க. 'குறியதா மேனியாய கூனியாற் குவவுத் தோளாய், வெறியன வெய்தி' (கிட்கிந்தா., 410); பிராட்டியை வஞ்சத்தாற் கவர்ந்ததும் ஓர் தீரச் செயலாகவே கருதி. 'யான் இழைத்திட' என்கின்றான். மனைவியை யிழந்து மறுகிய நிலையில் மனத்திற்குக் கிளர்ச்சியின் றென்பான், 'உயிர் சுமக்கும்'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்றான். (ஒப்பு): இருதோளெனச் சோம்பி யோங்கும்; கல்லும் சுமந்தேன் கணைவரிப் புட்டிலும் சுமந்தேன், வில்லும் சுமக்கப் பிறந்தேன்' (அயோத்தி. நகர் நீ. 138); 'நாளுமுள தோளுமுள நானுமுள னன்றோ' (ஆரணிய. 613). எந்த இரு செயல்களும் இராமன் பெருமையை விளக்குவனவோ அந்த இரண்டையும் முன்னர் எடுத்துக் கூறி, ஊனவில் லென்றும் ஒட்டை'மரம் என்று அவற்றை இராவணன் இழிவு படுத்தினன்; ஒன்றுக்கும் பற்றாத ஓர் பணிப்பெண் சூழ்ச்சியையும் வெல்ல முடியாது உழந்தனன் என்பது குறிக்கக் கூனி சூழ்ச்சியால் அரசிழந்து என்றான். யான் இழைத்திட என்பதில் சூழ்ச்சி என்பதைக் கூட்டுக.

பி - ம். 2. அரசழிந்.
3. யானிழைத்திட ; உயிர்சுமந் திருந்த.
4. நியலா தாருளர் மதித்தார், மதித்தோர்.

109

121. என்று தானுரை மொழிந்துநீ யுணர்விலி யென்னு
நன்று போதுநா மெழுகெனு மரக்கனை நணுகி
ஒன்று கேளின முறுதியென் றன்பின னொழியான்
துன்று தாரவன் பின்னரு மினையன சொன்னான்.

என்று - மேலே கண்டபடி, உரை தான் மொழிந்து - இராவணன் சொற்களைக் கூறி, 'நீ உணர்வு இலி என்னு - நீ ஆராய்தற்கு வேண்டும் அறிவு இல்லாதவன' என்று சொல்லி,(மேலும்), 'நன்று - நல்லது ; நாம் போதும் எழுக எனும் அரக்கனை நணுகி - நாம் (பொருதற்குப்) புறப்படுவோம் (எல்லோரும்) என்னுடன் எழுந்துவருக' என்று மொழிந்த இராவணனை நெருங்கி,(வீடணன்), 'இனம் உறுதி ஒன்று கேள் என்று - இன்னும் ஓர் நன்மை பயக்கும் செய்தி ஒன்று (நான் கூறக்) கேட்பாயாக' என்று, அன்பினன் ஒழியான் - அன்புடையனாகி விடாமல், துன்று தாரவன் - மலர்கள் நெருங்கிய மாலையணிந்த வீடணன், பின்னரும் இனையன சொன்னான் - அதன் பின்னும் பின்வரும் சொற்களைச் சொன்னான். இதனை அடுத்த கவியிற் காண்க.

எழுக என என்பது, எழுகென எனத்தொக்கது. பெரும் போகங்களைத் தன் அடாத செயலால் தன் தமையன் இழக்க நேருமே என்ற அநுதாபத்தால் விடாது அறிவுரையைத் தொடர்ந்தான் என்பதை விளக்க, (யுத்த. வீடண 10-ம் காண்க). 'அன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பினன் ஒழியான்' சொன்னுன் எனப்பட்டது. அமைச்சர் போன்ற பேரறிஞர்க்கு இடித்துரைப்பதும், வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின்றுரைப்பதும் இயல்பாகலின் இங்ஙனம் கூறியதென்க. மேல் வீடணன் பெற இருக்கும் இலங்கை யரசு போகத்தைச் சுட்டுவான், துன்றுதாரவன் எனப்பட்டது.

பா - ம். 1. என்று தன்னுரை மிழிந்து நீ, என்றுரைத்தன னுரைத்து நீ; உணர் விலி யென்ன.

2. நின்று போதுதி யெழுகெனு, போதநீ யெழுகெனு; இறைவனை நயந்தே நணுகா.

3. உறுதியா னுரைக்குவன் என்னு; அன்பினன் ஒழியாத், ஒளியான்;

4. சொல்வான். 110

122. தன்னின் முன்னிய பொருளிலா வொருதனித் தலைவன்
அன்ன மானிட னுகிவந் தவதரித் தமைந்தான்
சொன்ன நம்பொருட் டும்பர்தஞ் சூழ்ச்சியின் துணிவால்
இன்னம் நேர்குதி போலுமென் றடிதொழு திரந்தான்.

'தன்னின் முன்னிய பொருள் இலா ஒரு தனி தலைவன் - தன்னிலும் முற்பட்ட பொருள் ஒன்றும் இருக்கப்பெருத ஒப்பற்ற தனித்தலைவனுன பரம்பொருள், உம்பர் தம் சூழ்ச்சியின் துணிவால் - தேவர்களின் ஆலோசனையின் முடிவால், சொன்ன நம் பொருட்டு - பழிக்கப்படுகின்ற நம்மைக் கொல்வதற்காகவே, அன்ன மானிடன் ஆகி வந்து அவதரித்து அமைந்தான் - இராமபிரான் என்ற பெயருடன் மனிதனுகி வந்து பிறந்துள்ளான், (இவ்வா றிருக்கவும்) இன்னம் நேர்குதிபோலும் - இன்னமும் அவனுடன் எதிர்த்து நிற்பாய் போலும்' என்று அடிதொழுது இரந்தான் - என்று பகர்ந்து, இராவணன் அடிகளை வணங்கிக் கெஞ்சினுன் வீடணன்.

தன்னின் முன்னிய பொருள் இலாத் தலைவன்; இராம பிரானின் பரத்துவத்தைச் சுட்டியது; இது நூலெங்கும் காண லாம். தன்னின் முன்னிய - தன்னைக்காட்டிலும் முதன்மையாகக் கருதக்கூடிய எனினுமாம். சொன்ன நம்பொருட் டும்பர்தம் சூழ்ச்சி; 'கானிடை வந்த தேயும் வானவர் கடாவவேயாம்' (யுத்த. இலங்கை காண். 13); 'தேவி தூய வுள்ளமுந் திரிந்தது சூழ்ச்சியி னிமையோர், மாயையும் மவர் பெற்ற நல்வர முண்மை யாலும்' (அயோத்தி. மந்தரை. 77); 'அரக்கர் பாவமு மல்லவரி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யற்றிய வறமும், துாக்க நல்லறந் துறந்தனள் தூமொழி மடமான்' அயோத்தி. மந்தரை. 78).

பி - ம். 1. பொருவிலா, பொருளெலா முளதனித் தலைவன் ;
2. அன்ன மானுட ராபிவெந்து.
4. இன்ன மெண்ணலை. 111

123. அச்சொற் கேட்டவ னாழியா னென்றனை யாயின்
கொச்சைத் துன்மதீ யெத்தனை போரிடைக் குறைந்தான்
இச்சைக் கேற்றன யான்செய்த வித்தனை காலம்
முச்சற் றான்கொலம் முழுமுத லோனென முனிந்தான்.

அச்சொல் கேட்டு - அந்த வார்த்தையை இராவணன் செவியேற்று, 'அவன் ஆழியான் என்றனை - அந்த இராமன் திகிரிப் படை தாங்கிய திருமாலே என்று கூறினை ; ஆயின்-(நீ சொல்வது உண்மையே) ஆனால், கொச்சை துன்மதி - கோழையான துர்ப்புத்தியை உடைய அந்தத் திருமால், எத்தனை போரிடை குறைந்தான் - எத்தனை போர்களில் எனக்குத் தோல்வியுற்றான்? யான் இத்தனை காலம் செய்த இச்சைக்கு ஏற்றன - நான் இவ்வளவு காலம் ஆற்றிய செயல்களோ என் விருப்பத்தின் படி நான் செய்தனவே ; (அவ்வாறு நான் என் விருப்பப்படி பல காரியங்கள் செய்து வந்த போது, அதனைத்தடுப்பதற்கு வராமல்), முழுமுதலோன் முச்சற்றான் கொல் - அந்தப் பரிபூரணன திருமால் உயிர்ப் படங்கிக்கிடந்தானோ', என முனிந்தான் - என்று வெகுண்டான்.

ஆழியான் - திகரிப்படை தாங்கியவன் அல்லது பாற்கடலில் அறிதுயில் கொள்வோன் என்க. 'ஆழியான் அவனை நோக்கி' (யுத்த. வீபீடண. 142.) ; கொச்சைத் துன்மதி : (ஒப்பு) : 'கொச்சை மானுடர்' (யுத்த. மந்திரப். 101) ; 'கொச்சையிடையர்' (வி.பா. இராசசூய. 114). கொச்சை மாந்தரைக் கோல் வளைமகளிரும் கூசார். (ஆரணிய. 503) ; எத்தனை போரிடைக் குறைந்தான்' (ஒப்பு): 'நீயெனிலாண்டோ சொன்பதிற் றிரட்டி, நெடுஞ் சிறைக் கலுழன் முன்னெறிக்கொள், ஈயென வோடி மதுரைவிட் டாழி யெயிற் றுவரரகைப்பதி புகுந்தாய்' (வி.பா. இராசசூய. 21) ; 'மறங்கொள் வெஞ்செரு மலைகுவான் பன்முறை வந்தான், கறங்கு வெஞ்சிறைக் கலுழன்றன் கடுமையிற் கரந்தான், பிறங்கு தெண்டிரைப் பெருங் கடல் புக்கினம் பெயரா துறங்குவான்' (யுத்த. இரணியன். 49) ;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



என்பன இங்கு ஒப்பு நோக்கத்தகும். மூச்சு என்ற சொல் எதுகை நோக்கி முச்சென முதல் குறுகிநின்றது. 'முச்சத்தார் போல்' (அயோத்தி. கைகேசி. 31): முழு முதல் - இகழ்ச்சி. 'தன்னின் பொருளிலாத் தலைவன்' திருமால் என்பது கம்பர் மதம்; இதனைப் பிற இடங்களிலும் காணலாம்.

பி - ம். 1. என்றனை யாகிற், னென்றவனுகில்.

2. எத்தனை யோரிடைச்.

3. இச்சைக் கொத்தன; யரன் செய.

4. முழு முதல் வொனென; மொழிந்நான், நீ சொன்ன முழுமுத லிறைவன். 112

124 இந்தி ரன்றனை யிருஞ்சிறை யிட்டநா ளிமையாத்
தந்தி கோடிறத் தகர்ந்தநாள் தன்னையான் முன்னம்
வந்த போர்தொறுந் துரந்தநாள் வானவ ருலகைச்
சிந்த வென்றநாள் சிறியன்கொல் நீசொன்ன தேவன்.

'இந்திரன் தனை இருஞ்சிறை இட்ட நாள் - நான் இந்திரனைப் பெருஞ் சிறையில் அடைத்த நாளிலும், இமையா தந்தி கோடு இற தகர்ந்த நாள் - கண்ணிமைத்தலில்லாத திசையானைகளை அவற்றின் தந்தங்கள் அறும்படி உடைத்த நாளிலும், தன்னை யான் முன்னம் வந்த போர் தொறும் துரந்த நாள் - அந்தத் திருமாலை யான் முன்னாளில் அவன் என்னை எதிர்த்து நின்ற போர்க்களந் தோறும் துரத்திய காலத்திலும், வானவர் உலகை சிந்த வென்ற நாள் - தேவர்களின் உலகைச் சின்னபின்னமாம்படி நான் வெற்றி கொண்ட நாளிலும், நீ சொன்ன தேவன் சிறியன் கொல் - நீ சொன்ன அந்தத் தேவன் வயதிலும் ஆற்றலிலும் சிறியவனு யிருந்தானோ?

இச் செய்யுட் கருத்துக்களை மறுப்பது போன்று இராமன் கூற்றாக அங்கதன் இராவணன் முன்பு கூறியதை யுத்த. அங்கதன்: 32-36-ல் காண்க. இந்திரன்றனை யிருஞ்சிறையிட்ட நாள்: (உத்தர. திக்குவிசய. 244). இமையோர் தந்தி கோடிறத் தகர்ந்த நாள்; (ஆரணிய. 258, 323, 328, 557, 643, 646, 752, 818, 875; சுந்தர: 303, 312, 666. தந்தி; வடமொழி. தந்தத்தை உடையது. 'இமையாத்தந்தி'; 'இமை யாக் குஞ்சரம்' (திருவிளை. இசைவாது. 34) முன்னம் வந்த போர் தொறும் துரந்த நாள் - இரணியன்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இரணியாக்கனைப் போந்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகளாதலும் கூடும்; யுத்த. இரணியன். 49; வி.பா. இராசசூய. 21-ம் பார்க்க. துரந்த - துரத்திய: 'இருளைத்துரந்திட்டு' (திருவாச. 25, 1); வான வரை வென்றது உத்தரகாண்டம் திக்குவிசயப்படலத்துக் காண்க. வர் உலகைச் சிந்த இஃது 'தன்னின் முன்னிய பொருளிலாவொரு தனித் தலைவன்' என்ற வீடணன் உரையை இழித்துக் கூறியது.

பி - ம். 1. சிறைவைத்த நாள்; யிமையோர்.
2. கோடற; தகர்ந்த நாள், மலைந்த நாள்;
3. வானவ ருலகம்;
4. அவனை யான் முன்னம். 113

125. சிவனு நான்முகத் தொருவனுந் திருநெடு மாலாம்
அவனு மற்றுள வமரரு முடனுறைந் தடங்கப்
புவன மூன்றும்யா னுண்டுள தாண்டவப் பொருவில்
உவனி லாமையி னோவலி யொதுங்கியோ வுரையாய்.

'(இன்னும்), சிவனும் - சிவபெருமானும், நான் முகத்து ஒரு வனும் - நான்கு முகங்களையுடைய பிரமனும், திருநெடு மாலாம் அவனும் - அழகிய பெரிய மாலாகிய அந்தக் கடவுளும், மற்றுள அமரரும் - வேறுகப் பொருந்திய தேவர்களும், உடன் உறைந்து அடங்க - ஒரு மிக்கத்தங்கி ஒடுங்க, புவனம் மூன்றும் யான் ஆண்டு உளது - மூன்றுலகங்களையும் நான் ஆட்சி புரிந்த செயல், ஆண்ட அ பொரு இல் உவன் இலாமையினோ - உலகம் யாவையும் யாரை யும் ஆட்கொண்ட, அந்த நிகரற்ற அவன் அக்காலத்து இல்லாமையாலோ, (அல்லது) வலி ஒதுங்கியோ - இருந்தும் அவன் வலி ஒடுங்கப் பெற்றதனுலோ? உரையாய் - கூறுவாயாக.

'பரம் பொருளே உம்பர் சூழ்ச்சியால் மானுடனுக வந்தவதரித் தான்' என்றது கேட்டு 'அப்பரம் பொருள் என்னை என்ன செய் தது; என்று இராவணன் பரம்பொருளையே இகழ்ந்தான் என்க. நான் முகத்தொருவன் - முகங்கள் நான்கெனினும் உருவால் ஒரு வனே என்ற குறிப்புக் காண்க. திருநெடுமால்; திருமகளை மார்பிற் கொண்ட திருவிக்கிரமனுகிய மால் எனினுமாம். நெடுமாலாம் அவனும் என்ற சொற்போக்கே இகழ்ச்சியைக் குறித்து நின்றது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொருவில் உவன் - போர் புரிகின்ற கோதண்டபாணி யென்றும் ஆம். வலி ஒதுங்கியோ'; என்வலிக்கு ஒதுங்கியோ எனினுமாம்.

பி - ம். 1. ஒருவனுந் தேவர்க்குந் தெரியா, தெரிய.

2. தடங்காப், தடங்கும்.

3. புவன மூன்று நான் மூன்றுந்தாம்; ஆண்டவப் பொது வேல்; ஆண்டவர் பொருவேல், ஆண்டவப் பொருவேல்.

4. அவரொதுங்கினர்; வலியோங்கவோ, வலியவ ரொதுங்கவோ, வலி யொதுங்கியது; உரவோய்; உவனில் லாமை கொல் லோவலி யின்றியோ வுரையாய். 114

126. ஆயி ரம்பெருந் தோள்களு மத்துணைத் தலையும்
மாயி ரும்புவி யுள்ளடி யடக்குறும் வடிவம்
தீய சாலவுஞ் சிறிதென நினைந்துநாம் தின்னும்
ஓயு மானிட வுருவுகொண் டனன்கொலா முரவோன்.

'உரவோன் - வலிமை வாய்ந்த அந்தத் திருமால், ஆயிரம் பெருந்தோள்களும் அ துணை தலையும் - தனது ஆயிரம் பெரிய தோள்களையும், அதே அளவுள்ள ஆயிரம் தலைகளையும், மா இரு புவி - மிகப்பெரிய இந்தப் பூமியை, அடிஉள் அடக்குறும் வடிவம் - தனது திருவடிக்குள்ளாக அடக்கவல்ல பெரிய வடிவத்தை (இது) தீய - தீயது, சாலவும் சிறிது என நினைந்து - மிகவும் சிறுமையுடையது' என உட்கொண்டு, நாம் தின்னும் ஓயும் மானிட உருவு கொண்டனன் கொல் - நம்மால் உணவாக் கொள்ளப்படுகின்ற வலிதளர்ந்த மனித உருவம் கொண்டானோ? கொல் - ஆம்; அசை.

ஆயிரம் பெருந்தோள்கள் 'சகச்ர பாத்' (புருட சூக்தம்); அத்துணைத் தலையும் 'சகச்ர சீர்ஷா புருஷ; (புருட சூக்தம்). இரும்புவியுள்ளடி யடக்குறும் வடிவம். ஆரணிய. 58; 'விண்டு, காலினு லளந்தவான முகட்டையும் கடக்க' (சுந்த. 33); 'கழற் கால் மாயன் நெடுமையா னன்றளந்த வுலகெல்லாம்' (அயோத்தி. குகப். 69). 'ஓங்கி யுலகளந்த உத்தமன்' (திருப்பாவை. 3): 'மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான், ஞால முழுதும் நயந்தளந் தான்' (திருவள்ளுவ மாலை. 6): 'மடியிலா மன்னவ னெய்தும் அடியளந்தான், தாஅய தெல்லா மொருங்கு' (குறள். 70); ஓயும். தளரும். 'ஓய்தலாய்தல் நிழத்தல் சாஅய். ஆவயினான்கும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உள்ள தன் நுணுக்கம்'. (தொல். சொல். 330) பரம் பொருளேயே முன் செய்யுளின் இகழ்ந்து, அவன் மானிட உருவம் கொண்டதை இங்கு இகழ்கின்றான்.

பி-ம். 1. ஆயிரந் தடந் தோள்கள்.
2. உள்ளடி யடக்கிய' வலியும்.
3. நான் தின்னும், யாம், தான்.
4. மானிட ருருவு ; கொண்டான் கொலோ, கொண்டனன் கொலோ ; ஒருவன் ; வடிவு கொண்டோவெனே யுருப்பான். 115

127. பித்த ளுகிய வீசனு மரியுமென் பெயர்கேட்
டெய்த்த சிந்தைய ரேகுழி யேகுழி யெல்லாம்
கைத்த வேற்றினும் கடவிய புள்ளினு முதுகில்
தைத்தவாளிக ளின்றுள குன்றின்வீழ் தடித்தின்.

'பித்தன் ஆகிய ஈசனும் - பித்தன் என்று சொல்லப்படும் ஈசனுகிய சிவ பெருமானும், அரியும் - திருமாலும், என் பெயர் கேட்டு - என பெயரைக் கேட்டு, எய்த்த சிந்தையர் - இளைத்த மனத்தினராய், ஏகுழி ஏகுழி எல்லாம் - தாம் செல்லும் இடந் தோறும் இடந்தோறும், கைத்த ஏற்றினும் கடவிய புள்ளினும் - தாம் ஏறிச் செலுத்திய காளை மாட்டிலும், செலுத்துகின்ற கருடப் புள்ளிலும், முதுகில் தைத்த வாளிகள் - முதுகிடைச் சென்று ஊன்றிய அம்புகள், குன்றின் வீழ் தடித்தின் இன்று உள - மலையின் மீது வீழ்ந்த மின்னற் கீற்றுகளைப்போல இன்றும் காணப் படுவன.

ஈசனுக்குப் பித்தன் எனப்பெயர் வந்த வரலாறு, பெரிய புராணம் தடுத்தாட் கொண்ட புராணத்துக் காண்க. 'பித்தா பிறைசூடி' என்பது சுந்தரர் வாக்கு. கைத்தல் - உகைத்தல்; முதற் குறைந்தது. கடவுதல் - செலுத்துதல். குன்றின் வீழ் தடித்து மிகவும் பொருத்தமான உவமை. தடித்து - மின்னல். சுந்தர, 183, 299.

பி-ம். 1. ஈசனு மாலுமென், ஈசனு மயனுமென் ; பேர் கேட்டு.
3. கடாவிய.
4. வாளிகளின்றன, ஊன்றின ; குன்று வீழ் ; தடத்தின். 116



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இதன் பின் ஆறு அதிகப் பாடல்கள். அவை பின் வருமாறு:

ஈசன் றன்வயின் வரம்கொளு முன்னம்யான் அவனை
வீசும் வன்சுடர் வரையொடும் விசும்புற வெடுத்தேன்
ஆசி லங்கது கண்டவ னரும்பதத் தூன்றக்
கூசி யென்வலி குறைந்திலென் பாதலத் தமர்ந்தேன். 1

அமர்ந்து வீங்குதற் கருமைகண் டவன்பத மகத்தேன்
சுமந்து நீதவம் புரிகெனச் சுக்கிர னுரைப்பத்
தமந்தி ரண்டுறும் புலப்பகை சிமிழ்த்திடத் தருக்கி
நிமிர்ந்து நின்றனென் நெடும்பக லருந்தவ நிலையில். 2

நின்று பல்பகல் கழித்திட நிமலனெஞ் சுருகி
நன்று நன்றென நயந்தெனை வரும்படி யழைத்து
ஒன்று னுனீ யழிவிலா துகம்பல கழியச்
சென்று வாழுதி யெனத்தந்த வரம்சிதைந் திடுமோ. 3

கார்த்த வீரியன் வாலியென் றவர்வலி கடக்கும்
மூர்த்த மென்னிடத் தில்லெனக் கோடலை முதனுள்
சேர்த்த நண்பின ராயபின் சிவன்படை யுவர்மேல்
கோத்து வெஞ்சமம் புரிந்திலெ னென்றுளம் கூசி. 4

இந்த மெய்ம்மைநிற் குரைப்பதெ னிவ்வர மெனக்குத்
தந்த தேவனுக் காயினு மென்வலி தவிர்த்துச்
சிந்த வொண்ணுமோ மானிடர் திறத்தெனக் கழிவு
வந்த தென்றுரைத் தாயிது வாய்மையோ மறவோய். 5

ஆய தாகமற் றண்டமா னுடவரோ டணுகும்
தீய வான்குரங் கனைத்தையும் செறுத்தற நூறித்
தூய வானவர் யாரையும் சிறையிடைத் தொடுத்துக்
காய்வெ னென்றுதன் கண்சிவந் தினையன கழறும். 6

128. வெஞ்சி னந்தரு போரினெம் முடனெழ வேண்டா
இஞ்சி மாநக ரிடையுறைந் தீண்டினி திருத்தி
அஞ்ச லஞ்சலென் றயலிருந் தவர்முகம் நோக்கி
நஞ்சின் வெய்யவன் கையெறிந் துருமென நக்கான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நஞ்சின் வெய்யவன் - விடத்தைப் பார்க்கிலும் கொடியவன் ஆன இராவணன், 'வெம் சினம் தருபோரின் - கடும் கோபங் காரணமாக விளையும் யுத்தத்தில், எம்முடன் எழவேண்டா - நீ எங்களுடன் கிளம்பி வருதல் வேண்டுவதில்லை, இஞ்சி மாநகர் இடை உறைந்து - மதில் சூழ்ந்த இந்தப் பெரிய நகரத்திலேயே வதிந்து, ஈண்டு இனிது இருத்தி - இங்கேயே இனிது தங்கியிருப் பாயாக; அஞ்சல் அஞ்சல் - பயப்படாதே பயப்படாதே' என்று - என்று கூறி, அயல் இருந்தவர் முகம் நோக்கி - அருகில் நின்ற வீடணன் முகத்தைப் பார்த்து, கை எறிந்து உரும் என நக்கான் - இருகைகளையும் தட்டி இடி இடிப்பது போன்று பேரொலி விளையு மாறு வெடி சிரிப்புச் சிரித்தான்.

இஞ்சி - மதில். சுந்தர: 177, 251, 261; சீவக. 1947; 'ஈண்டினி திருத்தி' (ஒப்பு): நீ நின்னிருக்கையைத் தொடர்ந்து தோளில் புல்லிய பகழி வாங்கிப் போர்த்தொழிற் சிரமம் போக்கி எல்லியும் கழித்தி' (யுத்த. இந்திரசித்து 12); கையெறிந்து உரும் என நகுதல் - வீரத்தெழுந்த வெகுளி நகையும் மெய்ப்பாடும்; பிறனை எள்ளி நகைத்தது. (ஒப்பு) 'கையெறிந்து நக்கார்' (சீவக. 582); கை எறிதல் - கை தட்டல்; இதுகை புடைத்தல் எனவும்படும். நஞ்சின் வெய்யவன். நஞ்சு உண்டாரையே கொல்லும், இவன் கண்டாரைக் கொல்பவன் ஆகலின் நஞ்சினும் வெய்யவன் எனப் பட்டான்.

பி - ம். 1. போரினம், போரினென்; வேண்டாம்.
2. இடமுடைத், அரணுடைத்.
3. அயலிருந்; தார்முக நோக்கி.

117

129. பின்னும் வீடண னையநின் றரமலாப் பெரியோர்
முன்னை நாளிவன் முனிந்திடக் கிளையொடு முடிந்தார்
இன்ன முண்டியா னியம்புவ திரணிய னென்பான்
தன்னை யுள்ளவா கேட்டியென் றுரைசெயச் சமைந்தான்.

பின்னும் - பின்னரும், வீடணன் - விபீஷணாழ்வான் (இராவ ணனைப் பார்த்து), 'ஐய - ஐயனே! நின் தரமலா பெரியோர் - நின் அளவு வலிமையன்றி அதனினும் அதிகமான வலிமை படைத் தவரான பெரியோர்கள், முன்னை நாள் இவன் முனிந்திட கிளை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

யாடு முடிந்தார் - மேலை நாளில் இந்தத் திருமால் வெகுளத் தமது உறவு முறையாருடனே இறந்து பட்டனர், (ஆகவே) இன்னம் உண்டு யான் இயம்புவது - இன்னமும் நான் உன்பாற் கூற வேண்டுவது உள்ளது; இரணியன் என்பான் தன்னை உள்ளவா கேட்டி என்று - இரணியன் என்பவனைப்பற்றி நிகழ்ந்தது நிகழ்ந்த படியுள்ள சரிதத்தைச் சொல்லுகிறேன், செவி சாய்ப்பாயாக' என்று, உரை செய சமைந்தான் - சொல்லத் தொடங்கினன்.

உள்ளவாறு என்பது ஈறு குறைந்து நின்றது. சில பிரதிகளில் இச் செய்யுள் அடுத்த படலத்தின் முதற்பாடல்.

பி - ம். 1. அயல நின்; நரமல, நரமலன், நரமலர்; பெரியோன்.
2. முன்னை நாளவன்; முடிந்தான், 118

இராவணன் மந்திரப் படலம் முற்றும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 3. இரணியன் வதைப் படலம்

பிரகலாதன் பொருட்டு ஸ்ரீ நரசிங்கப் பெருமான் அவதரித்து இரணியனை வதைத்த வரலாற்றினைக் கூறும் படலம் என விரியும்.

இது கம்ப நாடரின் புதுப்படைப்பு, முதனூலில் இல்லாதது. இதனை ஆசிரியர் திருவரங்கத்து மேட்டழகர் திரு முன்பு அரங் கேற்றப் புக்க போழ்து, இப்பகுதி முதனூலாகிய வான்மீக ராமா யணத்தில் இல்லை யெனச் சிலர் தடை செய்த காலத்து, முன்பெழுந் தருளியிருந்த நரசிங்க மூர்த்தம் தன் திருமுடி யசைத்து நகைத் துப் பெருமுழக்கம் செய்ததாகவும் அந்த வியத்தகு நிகழ்ச்சியை நினைந்து பெரியோர்கள் அதனை ஏற்றனர் என்பதாகவும் கூறப் படும் செய்தி செவியாறலாக வந்துள்ளது.

இப்படலம் இயற்றியதற்குப் பற் பல காரணங்கள் பகர்வர், அவற்றுள் ஒன்று பின் வருமாறு. கம்பர் வடமொழிப்பாகவதத் தையும் தமிழில் ஆக்க எண்ணினர்; ஆயினும் தமது வாழ்நாட் குள் அது கை கூடுமோ என ஐயுற்று அம்முயற்சியை விடுத்துப் பின்னர்ச் சிரஞ்சீவிகளாகிய அநுமனையும் வீடணனையும் பாடிச் சிறப்பித்த இவர், மகாபாகவத சிரோமணியும். 'பிரகலாத நாரத பராசர' எனத்தொடங்கி வழங்கும் சுலோகத்தில் முதலிடம் பெற்றவனும், சிரஞ்சீவியுமான, பிரகலாதாழ்வான் வரலாற்றினை யேனும் செந்தமிழிற் பாடுவோம் எனக்கொண்டு, இதனைப்பாடிச் சமயோசிதமாகவும், வீடணன் கூற்றுகவும் இராமாயணத்தில் அமைத்தனர் என்ப. இப்படலம் 'இரணியன் கதைப்படலம்' என்று சில பிரதிகளில் காணப்படுகிறது.

**130.** **வேதங் கண்ணிய தவமெலாம் விரிஞ்சனே யீந்தான்**
**போதங் கண்ணிய வரமவன் றரக்கொண்டு போந்தான்**
**காதுங் கண்ணுதன் மாலயன் கடைமுறை காணுப்**
**பூதங் கண்ணிய வலியெலா மொருதனி பொறுத்தான்.**

'வேதம் கண்ணிய தவம் எலாம் - வேதங்களால் கருதப்பட்ட தவங்கள் அனைத்தையும், விரிஞ்சனே ஈந்தான் - பிரமதேவனே

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆசானாக இருந்து இயற்றி வைத்தான்; போதம் கண்ணிய வரம் - இரணியன் தன் அறிவினால் ஆய்ந்து குறிப்பிட்ட வரங்கள் எல்லாம், அவன் - அந்தப் பிரமனே, தர கொண்டு போந்தான் - உதவ, (அவற்றை) ஏற்றுத்திரும்பினான்; காதும் கண்ணுதல் - சங்கரிக்கும் தொழிலையுடைய நெற்றிக் கண்ணனான சிவபெருமானும், மால் அயன் - திருமாலும் பிரமனும், கடை முறை காணா - முடிவு காண இயலாதனவும், பூதம் கண்ணிய - ஐம்பெரும் பூதங்களிடம் உள்ளன வென்று கருதப்பெறுவனவுமான, வலி எலாம் - சர்வ வல்லமைகளையும், ஒரு தனி பொறுத்தான் - (ஒருங்கே) தான் ஒருவனே தாங்கி நின்றான்.

வேதங்களாற் கருதப்படாத தவங்கள் ஒன்றுமில ஆகலின் வேதம் கண்ணிய எனப்பட்டது. கண்ணிய - கருதிய; ஆரணிய: 1170, 1196, 1188; சுந்தர: 308, 322, 849. இரணியன் ஆற்றிய தவங்களும் அவன் பெற்ற வரங்களும் பாகவதம் ஏழாவது கந்தத்தில் காணலாம்; வரங்கள் அனைத்தையும் பெற்றே திரும்பினான் என்பான் 'கொண்டு போந்தான்' என்றான். காதும் கண்ணுதல்; 'காது வேலன்ன கண்ணார்' (திருவிளை. வளையல். 9); என்ற இடத்துப் போலச் சொல் முரண். கண்ணுதல் - நுதற்கண் என்பது முன்பின்னாகத் தொக்கது, கடை முறை - முடிவு. முத்தேவர்களாலும் முடிவு காணாத வலிபடைத்தவன் என்பது இங்குக் கூறப்பெற்றது. பூதம் கண்ணிய வலியெலாம்; உருவற்ற ஆகாயம் நீங்கலாக ஏனைய நான்கு பூதங்களையுமே கொள்க. (ஒப்பு). 'நீரும் நீர்தரு நெருப்பும் வன்காற்றும் கீழ் நிரந்த பாரும் சார்வலி படைத்தவன்' (கிட்கிந்தா. 289).

பி - ம். 1. கண்ணிய பொருளெலாம், வரமெலாம்;

2. வரமயன்,

3. காதந்; கண்ணுத லோனவன், மலரயன்; கடை முதல், கடன் முறை; மாலயனிமையவர் முதலா.

4. கண்ணிய வுரமெலாம், கண்ணிய பொருளெலாம்.

1

131. எற்றை நாளினு முளனெனு மிறைவனு மயனும்
கற்றை யஞ்சடைக் கடவுளுங் காத்தளித் தழிக்கும்
ஒற்றை யண்டத்தி னளவினே அதன்புறத் துலவா
மற்றை யண்டமுந் தன்பெய ரேசொல வாழ்ந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'(பின்னும் அவ்விரணியன்), எற்றை நாளினும் உளன் எனும் இறைவனும் - எக்காலத்திலும் அழிவில்லாதவனாய் உள்ளான் என்று கூறப்படும் திருமாலும், அயனும் - பிரமனும், கற்றை அம் சடை கடவுளும் - தொகுதியான அழகிய சடா பாரத்தையுடைய சிவபெருமானும், காத்து அளித்து அழிக்கும் - (முறையே) காவல் செய்தும், படைத்தும் அழித்தும் வருகின்ற, ஒற்றை அண்டத்தின் அளவினோ - இந்த ஓர் அண்டத்தின் அளவு மட்டுமோ, அதன் புறத்து உலவா - அதன் சுற்றுப்புறங்களில் விளங்குகின்ற, மற்றை அண்டமும் - பிற அண்டங்களும், தன் பெயரே சொல வாழ்ந்தான் - (அரி என்ற நாமம் உச்சரித்தலைத் தவிர்ந்து), இரணியன் என்ற தன் பெயரையே சொல்லுமாறு புரிந்து வாழ்ந்தான்.

எற்றை நாளினும் உளன் எனும் இறைவன் என்று திருமாலுக்கு இங்கே அழியாப் பரத்வம் கூறப்பட்டது. உளன் எனும் என்பதைப் படைத்தல் அழித்தல் தொழில்களை ஆற்றும் இருவர்க்கும் கூட்டினும் ஆம்; மூவரும் உலக நடப்பிற் கின்றியமையாதவர்கள் ஆகலின். முத்தொழில்களில் படைப்பே முந்தியது எனினும்; காத்தலின் சிறப்புத் தோன்றத் திதியை முற்கூறினர். அண்டங்கள் பல என்பது கம்பன் கொள்கை; இதனை இந்நூலிற் பல இடங்களிற் காணலாம். ஏகாரம், தேற்றம். 'காத்தளித் தழிக்கும்' என்பதை, 'மற்றை யண்டமும்' என்பதனோடு கூட்டியும் பொருள் உரைக்கலாம்.

பி - ம். 3. அண்டத்தின் அளவினும்; இதன் புறத்து; உறவாழ்; அதன் புறத் தும்பர்.

4. மற்றை யண்டத்தும்; தன் பெயரே சொல்ல; தன் பெரும் புகழ் சொல, தன் புகழே செல.

2

இதன் பின் ஓர் பாடல்:—

'இந்த விந்திர னிமையவ ரவற்கொரு பொருளோ
உந்து மண்டங்க ளனைத்தினு முள்ளவிந் திரரும்
அந்த நான்முகன் உருத்திரன் அமரர்மற் றெவரும்
வந்தி வன்பத முறைமுறை வணங்கிட வாழ்ந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



132. பாழி வன்றடந் திசைசுமந் தோங்கிய பனைக்கைப்
பூழை வன்கரி யிரண்டிரு கைகொடு பொருத்தும்
ஆழங் காணுதற் கரியவா யகன்றபே ராழி
ஏழுந் தன்னிரு தாளள வெனக்கடந் தேறும்.

'பாழி - இடம் அகன்ற,' வல் தட திசை சுமந்து ஓங்கிய - வலிய பெரிய திசைகளைத் தாங்கிக் கொண்டு உயர்ந்த, பனை பூழை கை - பனந்துண்டங்கள் போன்ற துளையுடன் கூடிய துதிக்கை களையுடைய, வல் கரி இரண்டு - வலிய இரண்டு யானைகளை, இரு கை கொடு பொருத்தும் - தன் இரண்டு கைகளால் ஒன்றோ டொன்று முட்டிப் பொருமாறு புரிவான்; (மற்றும்) ஆழம் காணு தற்கு அரியவாய் - ஆழம் காண்பதற்கு அருமையானதாய், அகன்ற பேர் ஆழி ஏழும் - பரந்த பெரிய ஏழுகடல்களையும், தன் இரு தாள் அளவு என கடந்து ஏறும் - தனது இரண்டு கணைக்கால்களின் அளவென்று கூறும்படி தாண்டி மேற் செல்வான்.

திசைக்கரி - எட்டுத் திசைகளையும் தாங்கும் யானைகள். ஆரணிய. 278, 452, 473, 599, 643, 1069; பூழை - சிறு துவாரம்; 'புகையும் புகற்கரிய பூழை நுழைந்து' (நாலடி. 282); புழை என்ற சொல்லின் நீட்சியுமாம். 'கரி இரண்டிருகை கொடு பொருத் தும்' (ஒப்பு): 'தவழ்கின்ற பருவந்தன்னில் கோளரி இரண்டு பற்றிக் கொணர்ந்தனை கொணர்ந்து கோப, மூளுறப் பொருத்தி மாட முன்றிலின் முறையினோடி, மீளரு விளையாட்டின்னம் காண் பெனோ' இராவணன் சோகப். 49), 'ஆழம் காணுதற்கரிய ஆழி; ஆழமுடைத்தாகலின் கடலுக்கு ஆழி காரணக்குறி. 'ஆழ நெடுந்திரை யாழி' (அயோத்தி. குகப். 15). என்றது காண்க. தன் இருதாளள வெனக்கடந்து. (ஒப்பு): 'நீண்ட தோள்களால் வேலையைப் புறஞ்செல நீக்கி' (யுத்த. மூலபல. 7): கருங்கடல் கடந்தனன் காலினா லென்றான்' (சுந்தர. 585) (கிட்கிந்தா. 691); 707; 709; 'உலக மெல்லாந் தழுவி நினறெடுப்ப வேலை தனித்தனி கடக்கும் தாள! (சுந்தர. 520); 'குவலய முழுதும், தழுவிவிண்ணை யும் திசையையும் தடவுமாத் தானை' (யுத்த. மூலபல. 4); தாளள

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வெனத் தாண்டல்; தன் இரு கால்களால் ஒரே தாண்டலில் தாண்டும் அளவு எனவும் கொள்ளலாம்.

பி - ம். 1. பணைக்கை.

2. பூமி; வன்கிரி, வான்கிரி; யிரண்டொரு கையெரடு.

3. ஆழி யங்கர னனுகுதற் கரியவாய்க் கிடந்த; யகன்றவோ ராழி.

4. ஆழி யேழுந்தன் காலிரண் டாற்கடந், தேறும்; காலள வெனக்; தாளன். 3

133. வண்டற் றெண்டிரை யாற்றுநீர் சிலவென்று மருவான்
கொண்டல் கொண்டநீர் குளிர்ப்பில வென்றவை குறுகான்
பண்டைத் தெண்டிரைப் பரவைநீ ருவரென்று படியான்
அண்டத் தைப்பொதுத் தப்புறத் தப்பினு லாடும்.

'வண்டல் தெள் திரை - அடியில் வண்டல் மண்ணையும், மேலாகத் தெள்ளிய அலைகளையு முடைய, யாற்று நீர் சில என்று மருவான் - நதிப்புனல் தன் உருவினைக் கருதும் போது (நீராடுவ தற்குப் பற்றுதபடி மிகவும் அளவிற் சிறியன என்று), அதனை அணுகான்; கொண்டல் கொண்ட நீர் - மேகங்களால் ஆழியி னின்றும் முகக்கப்பட்ட நீர், குளிர்ப்பு இல என்று அவை குறு கான் - (நீராவியே குளிர்ந்த தாகலின்) தண்மை போதா தென்று அவற்றை நெருங்கான்; பண்டை தெள் திரை பரவை நீர் - பழமை யான தெளிய அலைகளையுடைய ஆழிப்புனல், உவர் என்று படி யான் - உப்பு நீர் என்று அதனிலும் முழுகான்; (இவற்றை நீக்கி) அண்டத்தை பொதுத்து - மூதண்டத்தைத் துளை செய்து கொண்டு, அப்புறத்து அப்பினால் ஆடும் - அதற்கு அப்பால் உள்ள நீர் நிலையில் நீராடுவான்.

உலகத் தோற்றத்தின் கண் முதற்கண் உண்டாயது நீர் என் பான் பண்டைத் தெண்டிரைப் பரவை நீர் என்றான். 'அண்டத் தைப் பொதுத்து' பொதுத்தல் - துளைத்தல். "புட்கள் பொதுத்த புலால் வெண்டலை' (பதினெ. மூத்த. 3). 'கால்களைப் பொதுக்கும் படி' (மதுரைக் காஞ்சி. 598. உரை); இன்னும் சிலப். 15; 213 அரும்பதவுரை காண்க. இச்சொல் 'பொதிர்த்தல்' எனவும் வழங்கும். சீவக. 2778. இங்குக் கூறிய கருத்தைப் பின்னும் 'பெரும்புறக் கடன் மஞ்சன மருவி', என்று அடுத்த பாடலிலும் கூறுவர், யாறு மேகம் என்ற இவை பலவாகலின் சில பல எனப்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பன்மையாற் கூறப்பட்டது. அப்பு - நீர். வடசொல். கொண்டல் கொண்ட நீர்; 'கருங்கடனீர் சென்று புயல் முகந்து, பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு' (நன்னெறி. 4); 'கருவி வானம் கடல் கோள மறப்பவும்' (பொருந. 235); 'பாடிமிழ் பனிக்கடல் பருகி வல னேர்பு' (முல்லைப். 4); மதுரைக்காஞ்சி. 238, 244.

பி - ம், 1. செலு வென்று, செல வென்று.
2. கொண்டி நீர்; குளிப்பில; வென்றதிற்; வென்றவன்; குளியான் குடையான்.
3. உவரியிற். 4

இதன் பின் ஓர் அதிகப்பாடல்.

திரும கட்கிறை யுலகினுஞ் சேண்படு புரமூன்
றெரிப டுத்திய வீசன்றன் பொருப்பினு மேகிச்
சுரரெ னப்படுந் தூயவர் யாவருந் தொழத்தாங்
கிரணிய நமவென்று கொண்டிருந் தேத்தக்கேட்
[டிருக்கும்.

134. மரபின் மாபெரும் புறக்கடன் மஞ்சனம் மருவி
அரவி னுட்டிடை மகளிரோ டின்னமு தருந்திப்
பரவு மிந்திரன் பதியிடைப் பகற்பொழு தகற்றி
இரவி னோலக்கம் நான்முக னுலகத்து ளிருக்கும்.

'(அவன்), மரபின் - முறையாக, மாபெரும் புறகடல் மஞ்சனம் மருவி - பெரிய (அண்டத்துக்கு அப்புற முள்ள) கடலில் திருமஞ்சனம் செய்து, அரவின் நாடு இடை மகளிரோடு இன் அமுது அருந்தி - நாகலோகத்தின் கண் உள்ள நாக கன்னிகளுடன் இனிய அமுதத்தை உண்டு, பரவும் இந்திரன் பதியிடை பகல் பொழுது அகற்றி - தன்னையே நாளும் துதித்து வணங்கும் இந்திரனுடைய அமராவதி நகரில் பகற் காலத்தைக் கழித்து, இரவில் நான் முகன் உலகத்துள் ஓலக்கம் இருக்கும் - இராப்போதில் பிரமனுடைய சத்திய லோகத்தில் நாட்கொலு வீற்றிருப்பான்.

மரபின் - நீராடு முறைப்படி, மூன்று உலகங்களும் அவன் வசமாகலின், அவன் ஆங்காங்கு எளிதில் சென்று வருவதை ஈங்குணர்த்தி அவன் பெருமை தெரிக்கப்பட்டது. இந்திரன் இரணியனால் முறியடிக்கப்பட்டு வணங்கினவன்' ஆதலின் பரவும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்றான். யாவராலும் போற்றப்படும் எனினுமாம். இரவினோலக்கம்: கந்த இந்திர. 3. 'நாளோலக்கம் அருள்' (திவ். திருப்பள்ளி. 9); 'எம்பெருமான் ஓலக்க மண்டபத்துள்' (தாயு. எந்நாட். அருளியல்பு. 10); சீவக. 1156 உரையில், ஓலக்கம் - சபை என்ற பொருளில் வந்துள்ளது. 'பரவு மிந்திரன் பதியிடைப் பகற்பொழுதகற்றி' (ஒப்பு): பானக்க திஞ்சொ லரமங்கையர் பாடல் பார்த்தும், வானக் கிறையா யகல்வானவர் வந்து தாழத், தேனக்க செம்பொற் றருநீழல் சிறப்பவைகும்' (பாக. 7. 7; 25);

பி - ம். 1. மாப்பெரும்,

2. அரவ நாட்டிடை; மக்களோ.

3. பரவ விந்திரன்; பதியினிற்; நகற்றி.

4. நான்முக னுலகினின்விற் றிருக்கும்; னுலகுந்தி லிருக்குக்.

இதன் பின் 'பண்டு வானவர்' என்ற பாடலும், 'நிலனும் நீரும்' என்ற பாடலும் சில பிரதிகளில் உள்ளன.

135. சாரு மானத்திற் சந்திரன் றனிப்பதஞ் சரிக்கும்
தேரின் மேலினின் றிரவிதன் பெரும்பதஞ் செலுத்தும்
பேர்வி லெண்டிசைக் காவலர் கருமமும் பிடிக்கும்
மேரு மால்வரை யுச்சிமே லரசுவீற் றிருக்கும்.

'(இன்னும் அவ்விரணியன்), சாரும் மானத்தில் - விண்ணைச் சார்ந்து இயங்கும் விமானத்தில் சென்று, சந்திரன் தனி பதம் சரிக்கும் - சந்திரனது ஒப்பில்லாத பதவியிலே சஞ்சரித்து அவனது தொழிலைத்தான் ஆற்றுவான்; தேரின் மேலின் நின்று - ஒற்றையாழித் தேரின் மீது அமர்ந்து, இரவி தன் பெரும் பதம் செலுத்தும் - சூரியனுடைய பெரிய பதவியிலிருந்து அதிகாரம் செலுத்துவான்; பேர்வு இல் எண் திசை காவலர் கருமமும் பிடிக்கும் - தத்தம் இடங்களினின்று நீங்குதலில்லாத எட்டுத் திசைபபாலகரின் உலகம் புரக்கும் தொழில்களையும் மேற்கொள்வான்; மேருமால் வரை உச்சிமேல் அரசு வீற்றிருக்கும் - மேரு என்ற பெரிய மலையின் உச்சியில் (பிரமன் போன்று) அரசைக் கைப்பற்றிச் சிறப்புடன் அமர்ந்திருப்பான்.

சந்திரன் விமானத்தில் ஊர்தலும் சூரியன் தேர் மீது வருதலும் என்ற வழக்கு இங்கே குறிக்கப் பெற்றமை காண்க. 'தேரின்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மேலினின் றிரவிதன் பெரும்பதம் செலுத்தும்' (ஒப்பு) 'ஒற்றைத் திகிரித் தடந்தேரிவர்ந் தொண்பொ னேங்கல், முற்றக் கனைவெங் கதிர்மண்டில முற்று மாளும்' (பாக. 7 ; 26); சாரு மானத்திற் சந்திரன் றனிப்பதம் சரிக்கும்' (ஒப்பு) : செம்மணி மானமூர்ந்து, கற்றைக் கதிர்வெண் மதிமண்டிலங் காத்தளிக்கும்' (பாக. 7. 2 : 26); ஆரணிய ; 662 ; தக்க ; 555 உரை. மானம் ; 'மான மிசையூர்ந்து' (கந்தபு. அசுரர்யாக. 14); எண்டிசைக் காவலர் ; இந்திரன், அக்கினி, இயமன், நிருதி. வருணன், வாயு, குபேரன் ஈசானன் என்பவர்கள். மேருவாகிய மால்வரை என்க 'அரசு வீற்றிருக்கும்' 'அரசு வீற்றிருந் தாளவும்' (சுந்தர. 642);

பி - ம். 1. சார்வி மானத்திற்; சாரும் வானத்திற்-
2. தேரின் மேலு நின், மிது, மேனின்று.
3. பேரில் ; பெரும்பதம் செலுத்தும்.
4. உச்சியின். 6

இதன் பின் 'மரபின்' என்ற பாடல் சில பிரதிகளில்.

136. நிலனுந் நீரும்வெங் கனலொடு காலுமாய் நிமிர்ந்த
தலனு ணீடிய வவற்றினத் தலைவரை மாற்றி
உலவுங் காற்றொடு கடவுளர் பிறருமா யுலகின்
வலியுஞ் செய்கையும் வருணன்றன் கருமமு மாற்றும்.

'நிலனும் நீரும் வெம் கனலொடு காலுமாய் - பூமியும் நீரும் வெம்மை வாய்ந்த தீயொடு காற்று மாய், நிமிர்ந்த - ஓங்கி விளங்குவனவும், தலனுள் நீடிய அவற்றினத் தலைவரை - பூமியில் நெடுங் காலமாக உளளனவுமான அந்தப் பூதங்களின் அதிதேவதைகளை, மாற்றி (அவரவர் பதவிகளினின்றும்) - நீக்கி (தானே), உலவும் காற்றொடு - விடாது வீசும் காற்றும், கடவுளர் பிறருமாய் - பிறதேவர்களுமாக ஆகி, உலகின் வலியும் செய்கையும்-உலகில் உள்ள பூதங்களின் வலிமைகளையும் செய்கைகளையும், வருணன் தன் கருமமும் ஆற்றும் - வருண பகவானுடைய தொழிலையும் செய்வான்.

'நிலனும் நீரும்'; இப்படலம் முதற் செய்யுட் பொருட் குறிப்பை நோக்குக. மாற்றி : தலைவரை மாற்றி ஒருவர் பதவியை மற்றொருவர்க்களித்து எனினுமாம். 'ஆதவ முதல்வன் றன்னை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யவிர்மதிப் பதத்தி லோச்சும், சீதள மதியை வெய்யோன் செந் நெறிப்படுத்திச் செல்லும்' வருணன் தன் கருமம் - மழை பொழிதல்; பெருமண லுலகிற்கு இறைவனாய் மிகப்பழைமை வாய்ந்த கடவுளரில் ஒருவன் இவன். 'வருணன் மேய பெருமணலுலகம்' (தொல். பொருள். 5) என்றது காண்க. உலவும் காற்று; இதனைச் சதாகதி என்பர் வடநூலார். உலவும் காற்றொடு என மீட்டும் கூறியது கொண்டு இரணியனுடைய இடை விடாத சஞ்சாரம் குறிக்கப் பெற்றது.

பி - ம். 1. நிமிர்ந்து. நிமிரும்.
3. பிறிதுமாய்.
4. வலியின்; கருமமு முற்றும். 7

இதன்பின் 'மரபின்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

137. தாம ரைத்தடங் கண்ணினன் பேரவை தவிர
நாமந் தன்னதே யுலகங்கள் யாவையும் நவிலத்
தூம வெங்கன லந்தணர் முதலினர் சொரிந்த
ஓம வேள்வியி னிமையவர் பேறெலா முண்ணும்.

'(அவன்), தாமரை தட கண்ணினன் பேர் அவை தவிர - செந்தாமரை மலர்போலும் விழிகளையுடைய திருமாலின் திரு நாமங்கள் ஆகியவை (உச்சரிக்கப்பெறாமல்) ஒழியவும், தன்னதே நாமம் - தன் பெயரையே, உலகங்கள் யாவையும் நவில - எல்லா உலகத்தவர்களும் விடாது சொல்லவும் (செய்து), தூமம் வெம் கனல் அந்தணர் முதலினர் சொரிந்த - யாகப் புகையை யுடைய வெம்மையான முனிவர்கள் முதலானவர்கள் சொரிந்த, ஓம வேள்வியின் - ஓம ஆகுதி செய்தனவும், இமையவர் பேறு - தேவர் கட்குச் சேர்தற்குரியனவுமான, எலாம் - அவிர்ப்பாகம் முதலியன எல்லாவற்றையும், உண்ணும் - (தானே ஏற்று) உட்கொள்வான்.

'தாமரைத் தடங்கண்ணினன்' ஆரணிய. 376, 421, 972, 984; சுந்தர. 394; உலகம் எல்லாம் மரபுமுறை தவிர்ந்து தன் பெயரையே உச்சரிக்குமாறு செய்தான் என்று அவன் சார்வ பௌமத் தன்மை விளக்கப்பட்டது. பேரவை; ஸகஸ்ரநாமங்கள்; வைகுண்டத் திருவோலக்கச் சபை யெனலும் ஒன்றும், தூம வெங்கனல் அந்தணர் - ஓமத்தீ வளர்ப்போர்; 'முத்தீ விளக்கிற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



றுஞ்சும்' (புறநா. 2); இமையவர் பேறு - தேவர்களுக்கு அளிக்கப் பெறும் அவிர்ப்பாகம் (ஒப்பு): 'மாயவ னுருவெனச் சாற்றும், அரிய வேள்வியே முதலிய அறங்களை யழித்து' (பாகவத. 7·2:3).

பி - ம். 1. பெயரிவை, பேரிவை, பெயரவை; தவிர்த்து, தவிர்ந்து; தாமரைக் கண்ணன் றழற்கண்ணன் பெயரிவை தவிர.

2. நாமந் தன்னவே; நடுங்க.

4. வேள்வியும்; இறையவர், இறைவர் தம். 8

138. காவல் காட்டுதல் துடைத்தலென் றித்தொழில் கடவ
மூவ ரும்மவை முடிக்கிலர் பிடிக்கிலர் முறைமை
ஏவர் மற்றவர் யோகிக ளுறுபத மிழந்தார்
தேவ ரும்மவன் தாளலா தருச்சனை செய்யார்.

'காவல் - உலகினைக் காத்தலும், காட்டுதல் - படைத்தலும், துடைத்தல் - அழித்தலும், என்று இ தொழில் கடவ மூவரும் - முறையே உரிமை பெற்ற திருமால், பிரமன், சிவபிரான் என்ற மும்மூர்த்திகளும், அவை முடிக்கிலர் - அவ்வத் தொழில்களைச் செய்து முடிக்க இயலாதவர்களாய், முறைமை பிடிக்கிலர் - அவர்களின் உரிமையைக் கைவிட்டனர்; (இவர்கள் நிலையே இவ்வாறெனில் தங்கள் தங்கள் தொழில்களை மேற்கொண்டு ஆற்ற வல்லவர்), மற்றவர் ஏவர் - பிறர் யாருள்ளனர்? யோகிகள் - யோக முறை கைவந்தவர்களும், உறு பதம் இழந்தார் - தங்களுடைய யோகப் பயிற்சியால் அடையக்கூடிய பதவிகளை இழக்கப் பெற்றனர்; தேவரும் அவன் தாள் அலாது அருச்சனை செய்யார் - தேவர்களும் அவன் பாதங்களை யன்றிப் பிறிதொன்றைப் பூசியாதவ ராயினர்.

'காவல் காட்டுதல் துடைத்தல்' இப்படலம் இரண்டாஞ் செய்யுளின் உரைக் குறிப்புக் காண்க. முடிக்கிலர் பிடிக்கிலர் - இவற்றில் 'கில்' என்பது ஆற்றலை யுணர்த்தும் இடைநிலை. ஏவர் - எவர் என்ற வினா நீண்டது; 'ஏவரே யுலகந்தந்தார்' (இரணிய. 119); தேவரும் - உம்மை உயர்வு சிறப்பு. இரணியனுக்குத் தேவர்கள் முதல் யாவரும் அஞ்சினர் என்பது. 'கலைமகள் கொம்மை முலைபொரு திணிதோட் கடவுள்தன் படைப்பினை மாற்றி, மலர்தலை யுலக முழுவதுந் தானே வருத்தற வெளிதினிற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



படைக்கும், சிலைவிழுங் குயர்தோள் மாயனை யகற்றிச் சிறப்புட னுலகெலா மளிக்கும், மலைமகள் பாகன் சிறிதுகை யாற வாருயிர் துடைப்பினுந் துடைக்கும்' என்றதிற் காண்க.

பி - ம். 1. இத்தொழிற் குரிய, தொழிற்கடவா, கருதும்.
2. மூவரும் மிவை ; முறையின்.
3. யாவர் மற்றவர் ; உறும்பதம். 9

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

ஓமரீ யாந மோவென வொளிவருந் தேறும்
நாம நான்மறை விடுத்தவன் றனக்குள்ள நாமம்
காம மெழுதற் குறும்பெறி கடவுளா முனிவர்
ராம தோதுகி லவரிற்கவ ரொப்பவர் யாரோ.

139. பண்டு வானவர் தானவர் யாவரும் பற்றித்
தெண்டி ரைக்கடல் கடைதர வலியது தேடிக்
கொண்ட மத்தினைக் கொற்றத்தன் குவவுத்தோட் கமைந்த
தண்டெ னக்கொள லுற்றது நொய்தெனத் தவிர்ந்தான்.

'(அவ்விரணியன்), பண்டு - முற்காலத்திலே, வானவர் தானவர் யாவரும் பற்றி - தேவர்களும் அசுரர்களும் பிறரும் கைப்பற்றி, தெண் திரைகடல் கடைதர - தெளிவான அலைகளை யுடைய கடலைக் கடைவதற்கு, வலியது தேடி கொண்ட - பலமுடையது என்று நினைந்து பொறுக்கி எடுத்துக் கொண்டதான, மத்தினை - மந்தரமலை என்ற மத்தினை, கொற்றம் தன் குவவு தோட்கு அமைந்த - வெற்றி பொருந்திய தன்னுடைய திரண்ட புயத்திற்கு ஏற்ற, தண்டு என கொளல் உற்று - கதாயுதம் என்று கொள்ளத் தொடங்கி, அது நொய்து என தவிர்ந்தான் - அது (பின்பு தான் கைப்பற்ற முடியாமல்) மிகவும் இலேசாக வுள்ளது என்று அதனைக் கைக்கொள்ளாது விடுத்தான்.

தேவர் தானவர் கடல் கடைந்தது இந்நூலிற் பல இடங்களிலும் குறிக்கப் பெற்றுள்ளது. ஆரணிய. 102, 178; கிட்கிந்தா. 115, 141, 247, 249, 253, 367, 372; சுந்தர. 42; யுத்த. அங்கதன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தூது. 24; மத்து - மந்தரகிரி, கடல் கடைந்த வரலாறு; பால. அகலிகை. 21—26.

பி - ம். 1. பயிற்றித்.
3. கொற்றவக், கொற்றத்தின்; குவவுதோட், குவவுத்தோ ளமைத்த.

140. மண்ட லந்தரு கதிரவன் வந்துபோய் மறையும்
எண்ட லந்தொடற் கரியன தடவரை யிரண்டும்
கண்ட லம்பசும் பொன்னிறத் தவற்கிரு காதில்
குண்ட லங்கள்மற் றென்னினிப் பெருவலி கூறல்.

'மண்டலம் தரு கதிரவன் - வட்ட வடிவமான சூரியன், வந்து போய் மறையும் - தோன்றி மறைதற்கு இடமான, எண் தலம் தொடற்கு அரியன - மனத்தாற் கருதுவதற்கும் அருமையான, தடவரை இரண்டும் - பெரிய மலைகளாகிய (உதயகிரி, அத்தமன கிரி) என்ற இரண்டினையும், கண் தலம் பசும்பொன் நிறத் தவற்கு - கண்களாகிய இடங்கள் பசிய பொன்னிறமாகப் பெற்ற இரணியனுக்கு, இரு காதில் குண்டலங்கள் - செவிகளில் இடும் குண்டலங்கள்; இனி - இனிமேல், (அவ்விரணியனுடைய) பெரு வலி கூறல் - மிக்க வன்மையைக் குறித்துக் கூறவேண்டுவது, மற்று என் - வேறு யாது உள்ளது?

இனி, இரணியாக்கனே மூத்தவன்; இவனையே திருமால் கேழல் உருவெடுத்துக் கொன்றார்; பாகவதம். 712 : 1 : 3:6. இந்தப் படலத்துக் கூறப்படுபவன் இரணியனே என்பது காண்க. மேலே கூறிய இரு கிரிகளிலும் சூரியன் தோன்றி மறைவ தென்பது புராண வரலாறு. எண் தலம் - மனமாகிய இடம். கண் தலம் பசும் பொன்னவன் - இரணியாட்சன். இரணியம் - பொன். இனி, பொன்னவன் முன்னவன் காதில் என்றும், பொன்னிறத்தவற் கிளங்காளை என்றும் வேறு பாடங்களுண்டு. எனினும், வரலாற்றின்படி இரணியாட்சன் முன்னவன், இரணிய கசிபு அவன் பின் வந்தவன் என்பது பெறப்படும். 'பொற்கண்ணன் தம்பி யென்றினைய போர்த்தொழில்' (சுந்தர. 458)-இன் உரைக் குறிப்புக் காண்க. 'நினக்குப் பின்னோன் பொற்கண்ணன்' (யுத்த. இரணிய. 121)-ம் காண்க. இரணியாட்சனும் இரணியகசிபுவும் இரட்டைச் சோதரர் என்ப. 'செவ்வைச் சூடுவார்' பாகவதம். 7·2·38-ஆம் செய்யுளும் இங்குக் காணத்தகும். 'முன்னவன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காதிற் குண்டலம்' (ஒப்பு): 'சிகரவண் குடுமி நெடுவரை யெவையு மொருவழித் திரண்டன சிவண, மகரிகை வயிர குண்டல மலம்பு திண்டிறல் தோள்புடை தயங்க' (சுந்தர. 407).

பி - ம். 1. மண்டிலம், மறைந்துபோய்.
2. தொடர்க; கரியவன் றடவரை.
3. பொன்னிறத்தவற் கிளங்காளை, பொன்னவன் முன்னவன் காதில்.
4. றென்னெனப்; பெருவிறல்; கூறின். 11

141. மருக்கொள் தாமரை நான்முகன் முதலிய மறையோர்
குருக்க ளோடுகற் றோதுவ தவன்பெருங் கொற்றம்
சுருக்கின் நான்மறை தொன்றுதொட் டுரைதொறுந்
[தோன்று
திருக்குந் தெய்வமு மிரணிய னேநம வென்னும்.

'மரு கொள் - நறுமணம் பொருந்திய, தாமரை நான்முகன் - செந்தாமரையில் வீற்றிருக்கும் பிரமன், முதலிய மறையோர் - முதலான அந்தணர்கள், குருக்களோடு கற்று ஓதுவது அவன் பெரும் கொற்றம் - தங்கள் தங்களுடைய ஆசிரியர்களுடனிருந்து கற்பது அந்த இரணியனுடைய அளவிறந்த வெற்றியையே; சுருக்கின் - சுருக்கமாகச் சொல்லப்புகின், தொன்றுதொட்டு உரை தொறும் தோன்றுது இருக்கும் நான்மறை - பழங்காலம் தொடங் கிச் சொல்லுந்தோறும் எளிதில் பொருள் உணர முடியாததாக வுள்ள நான்கு வேதங்களும், தெய்வமும் - அவற்றின் அதிதேவதை களும்கூட, 'இரணியனே நம என்னும் - இரணியனே உனக்கு வணக்கம்' என்று சொல்லும்.

சுருக்கு என்பது பிரணவம் என்றும் கூறுவர். சர்வ வேதத்தின் சாரம் ஆதலின் இங்ஙனம் கூறப்பட்டது. 'வேதத் துக்கு ஓமென்னுமது போலுள்ளதுக் கெல்லாம் சுருக்காய்' (உபதேசரத்தின.) என்றது காண்க. நான்மறையும் தெய்வமும் - வேதங்களும் அவற்றிற்குரிய அதிதேவதைகளும்; நம என்ற வடசொல், வணக்கம் என்று பொருள்படும். சிவபிரானின் ஐந்து


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முகங்கள் - ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோ சாதம். குருக்களோடு - குருக்களிடம்.

பி - ம். 1. நான்முகன் முதலிய மறையோர், முதலிய வானோர், நான்முகனும் முகன் முதலோர்.

2. தன்பெருங் கொற்றம்.

3. சுருக்கி, சுருக்க ; உயிர்தொறும்.

4. இரணியவே நம:. 12

142. மயரு மன்னவன் சேவடி மண்ணிடை வைப்பின்
அயரும் வாளெயிற் றுயிரம் பணந்தலை யனந்தன்
உயரு மேலண்ட முகடுதன் முடியுற வுயரும்
பெயரு மேனெடும் பூதங்க ளைந்தொடும் பெயரும்.

'அன்னவன் - அந்த இரணியன், சேவடி மண் இடை வைப்பின் - தன் செய்ய பாதங்களைப் பூமியில் பதித்தால், வாள் எயிறு ஆயிரம் பணம் தலை அனந்தன் - ஒளி கொண்ட பற்களையும் ஆயிரம் படங்களுடன் கூடிய தலைகளையுமுடைய ஆதிசேடன், மயரும் அயரும் - மனம் மயங்கி மெலிவான்; உயரு மேல் - அவன் கால்களை ஊன்றி உயர்வானாகில், அண்டமுகடு தன் முடி உற உயரும் - அண்டத்தின் உச்சிவரையில் தன் சிரம் பொருந்து மாறு உயர்வான்; பெயருமேல் - நடக்கப்புக்கால், நெடு பூதங்கள் ஐந்தொடும் பெயரும் - பெரிய பூதங்களாகிய (மண், புனல், அனல், காற்று, ஆகாயம்) என்ற ஐந்தொடும் பெயர்ந்து செல்வான்.

மயரும் அயரும் என்று கூட்டுக; மயரும் என்பதை முற்றெச் சமாக்குக. முதலடிக்கு, உபய பாதங்களைப் பூமியினிடம் பதித் தால், பூமி குழிபடும் என்பாரும் உளர். நெடும் பூதங்ளொடும் பெயரும்; (ஒப்பு) 'பேரடா நின்ற தாளோ டுலகெலாம் பெயரப் போவான்' (இரணியன். 129): (ஒப்பு); 'திரிவ ரேலுட றிரிதரு நெடு நிலஞ் செவ்வே, வருவ ரேலுடன் கடல்களுந் தொடர்ந்துபின் வரு மால்' (யுத்த. மூலபல. 12);

பி - ம். 1. மயர்வின், மயரின் ; மயருமன்னெடும், மண்ணுற.

2. நனந்தலை, ஆயிரந் தலையுள, பணத்தலை.

3. முகடுந்தன் ; முடிவுற ; உயரு மேலவன் முடிதொடமேலண்ட முயர்ந்து. 13

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## தான் சாகாமைக் குரிய வரன்களை இரணியன் பெற்றிருந்தமை.

143. பெண்ணிற் பேரெழி லாணினி லலியினிற் பிறிதும்
உண்ணிற் கும்முயி ருள்ளதி லில்லதி லுலவான்
கண்ணிற் காண்பன கருதுவ யாவினுங் கழியான்
மண்ணிற் சாகிலன் வானிலுஞ் சாகிலன் வரத்தால்.

'வரத்தால் - (அவன், தான் அடைந்த) வரத்தின் மகிமையால், பெண்ணில் - பெண்ணாலும், பேர் எழில் ஆணினில்-பெருமை வாய்ந்த அழகு மிக்க ஆண்களினாலும், அலியினில் - அலிகளினாலும், பிறிதும் - மற்றும், உள் நிற்கும் உயிர் உள்ளதில் இல்லதில் உலவான் - உடற்கண் தங்கியுள்ள உயிரையுடைய பிராணிகளாலும், உயிரற்ற சடங்களாலும் அழிவெய்த மாட்டான்; கண்ணில் காண்பன - கண்ணினாற் காணப்படுவன, கருதுவ - மனத்தால் நினைக்கப்படுவன என்ற, யாவினும் கழியான் - எவற்றாலும் உயிர் நீங்கப்பெறான்; மண்ணில் சாகிலன் வானிலும் சாகிலன் - பூவுலகத்தினும் அவனுக்கு இறப்பில்லை, விண்ணுலகத்திலும் இல்லை.

முதற் பாட்டில், 'போதங் கண்ணியவரம் எலாம் தரக்கொண்டு போந்தான்' என்று கூறியது இங்கு விரித்துக் கூறப்பெற்றது என்க. இரணியன் மிகவும் சமர்த்தனே யெனினும் அவன் போதம் அளவிற்பட்ட பசு போதம் தானே; பூரண அறிவன் ஆன இறைவன் சூழ்ச்சிகட்கு முன்பு அது பயன்படாது என்பது இரணியனின் இறுதி கண்டுணர்க. 'வேண்டத் தக்க தறிவோய் நீ' (திருவாச. குழைத்த. 5) 'என்னை தோவிங் கதிகாரம்' (திருவாச குழைத்த. 8) என்பன இங்குக் குறிக்கொள்ளத்தகும். உயிரில்லாதது - சடப்பொருள். பேர் எழில் என்பதை இடை நிலை விளக்காகக் கொண்டு பேரெழிற் பெண்ணில், பேரெழில் ஆணில் என்லாக் கூட்டுக. கண்ணிற் காண்பன மனத்தாற் கருதுவ எனக. சாகிலன் வரத்தால் - பாகவத. 7. 2. 20. காண்க.

பி - ம். 1. பிறிதில்.
3. கண்ணிற் காண்பதென் றேதுவ, காண்பது கருதுவது; யாதினும.
4. வரத்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



144. தேவ ராயின ரேவருஞ் சேணிடைத் திரியும்
யாவ ராதிமற் றெவரினு மெரியழல் நுதற்கண்
கோவும் மாலயன் மானிடன் யாவருங் கொல்ல
ஆவி தீர்கிலன் ஆற்றலுந் தீர்கில னனையான்.

(அந்த இரணியன்), தேவர் ஆயினர் ஏவரும் - தேவர்களாக உள்ளவர் எல்லோரும், சேண் இடை திரியும் யாவர் ஆதி - விண்ணில் சஞ்சரிக்கின்ற எவராயினும் அவர்கள் முதலாக, மற்று எவரினும் - பிற எவர்களாலும், எரி அழல் நுதல் கண் கோவும் - எரிகின்ற கனல் போன்ற நெற்றி விழியையுடைய சிவபெருமானும், மால் அயன் மானிடன் - திருமால் பிரமன் மனிதன் போன்ற, யாவரும் - எவராலும், கொல்ல - கொல்லப்பட்டு, ஆவி தீர்கிலன் - உயிர் நீங்கப் பெருன்; ஆற்றலும் தீர்கிலன் - வன்மையும் ஒழியப் பெருன்; அனையான் - அத்தகைய பெருமை வாய்ந்தவன் அவன்.

சேண் - ஆகாயம்; ஆரணிய. 720; சுந்தர. 71. சிலர் 'கோவை மாலயன் மானிடன்' என்ற பாடங்கொண்டு, மான் - இடன்-மானை இடக்கரத்தில் ஏந்திய சிவபெருமான் என்பர். இங்ஙனம் ஏற்பதில் மானிடன் (மனிதன்) விடப்படுவன் ஆகலின் இந்தப் பாடம் கொள்ளலாயிற்று. மால் கொல்ல ஆவி தீர்கிலன் என்றது, திருமாலும், மானுட மடங்கலாகிக் கொன்றதன்றித் தானுன தன்மையிற் கொல்லாமை குறித்தென்க. மற்றும் மூலத்திருமால் வேருகவும் அவனுடைய அம்ச ஆவேச அவதாரங்கள் வேருகவும் கூறுவது கம்ப நாடர் வழக்கு. 'சூர றுத்தவனும் சுடர் நேமியும்' (ஆரணிய. 139) 'செங்கண்மால் நான்முகன் சிவனென் றேகொலோ, எங்கணு யகனையு நினைத்த தேழைநீ' (சுந்தர. 455). மற்றும், சுந்தர. 1116, 1117-க் காண்க.

பி - ம். 1. தேவராதியர், தேவ ராயினும்; தேவரும்; ரெவரினும் திர்தருமியக்கர்.

2. யாவ ரேயு, யாவராயினும், யாவரால மற்று என்னவு நினைக்கவு மியன்ற, யாவராயினு மெண்ணுதற் கரியரா யியன்று.

3. கோவை மாலயன், கோவ மாலயன்; மானுடன், மானிடர்: 15

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


145. நீரிற் சாகில நெருப்பினுஞ் சாகில னிமிர்ந்த
மாரு தத்தினு மண்ணின்மே லெவற்றினு மாளான்
ஓருந் தேவரு முனிவரும் பிறர்களு முரைப்பச்
சாருஞ் சாபமு மனையவன் றனைச்சென்று சாரா.

(மற்றும் அந்த இரணியன்), நீரில் சாகிலன் - நீரில் மூழ்கி இறவான்; நெருப்பினும் சாகிலன் - தீ வாய்ப்பட்டும் மரிக்கமாட்டான்; நிமிர்ந்த மாருதத்தினும் - மேலோங்கி வீசுகின்ற காற்றினாலும், மண்ணின்மேல் எவற்றினும் மாளான் - பூமியின் கண் உள்ள எந்தப் பொருள்களாலும் இறந்து படான்; ஓரும் தேவரும் முனிவரும் பிறர்களும் உரைப்ப - பலவற்றையும் நன்குணர்ந்த தேவர்களும் இருடிகளும் ஏனையோரும் வெகுண்டு கூற, (அதன் விளைவாக) சாரும் சாபமும் அனையவன் தனை சென்று சாரா - அடைய வருகின்ற, சாபங்களும் அந்த இரணியனைச் சென்று அடையமாட்டா.

மாருதம் - காற்று; வடசொல். 'மாருதத்தின் காதலைத் தான்' (யுத்த.); சாபம் - அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயனையே தந்து நிற்கும் சொல்; 'சாபமே சபித்தல் வில்லாம்' (நிகண்டு). இதனைச் சாவம் என வழங்குவர் ஆசிரியர்; 'சாவ முண்டென தாருயிர் தந்ததால்' (சுந்தர. 627); 'சாவ மற்றவனிடுதலும்' (பெருங் நரவாண. 3, 104). மண்ணும் வானமும் கீழ் பதினான்காவது செய்யுட் கண் குறிக்கப்பட்டனவாதலின் ஏனைய மூன்றான நீர், தீ, காற்று என்பன இங்குத் தரப்பட்டன. மண்ணின் மேல் எவற்றினும் என்ற தொடரில், எவற்றினும் என்பதற்கு, எந்த இடங்களானாலும் என்றும் உரைக்கலாம்; 'மண்ணின் மேல் வான்புகழ் நட்டானும்' (திரிகடு. 16).

பி - ம். 1. சாவிலன்; நெருப்பிலும், சாவிலர்;
2. மாருதத்தின மண்ணின் மற்று.
3. முனிவரு, முரைக்கும்.
4. அன்னவன்.



146. உள்ளிற் சாகிலன் புறத்தினு முலக்கிலன் னுலவாக்
கொள்ளைத் தெய்வவான் படைக்கலம் யாவையுங் [கொல்லா
நள்ளிற் சாகிலன் பகலிடைச் சாகிலன் நமனார்
கொள்ளச் சாகில னூரினி யவனுயிர் கொள்வார்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'உள்ளில் சாகிலன் - மனேயின் உட்புறத்திலும் இறவான்; புறத்தினும் உலக்கிலன் - வெளிப்புறத்திலும் சாகான்; உலவா கொள்ளை தெய்வவான் படைக்கலம் யாவையும் கொல்லா - அழி வில்லாத மிகுதியான தெய்வத் தன்மை வாய்ந்த சிறந்த ஆயுதங்கள் எவையும் அவனைக் கொல்லமாட்டா; நள்ளில் சாகிலன் - நடு இரவிலும் அவனுக்குச் சாதலில்லை; பகல் இடை சாகிலன் - பகற்போதிலும் இறவான்; நமனுர் கொள்ள சாகிலன் - (எல்லா உயிர்களையும் போக்கவல்ல) யமனும் அவன் உயிர் கவருமாறு இறவான்; இனி யார் அவன் உயிர் கொள்வார் - இவ்வாறெனின் அவன் உயிரைப் போக்கக்கூடியவர் யார்? யாருமில்லை.

உள்ளிலும் புறத்திலும் உலவான், படைக்கலங்களும் அவனைக் கொல்லமாட்டா, நடு இராத்திரியிலும் நண்பகலிலும் இறவான், யமனுலும் அவன் உயிரைக் கவர்தற்கு இயலாது. இவ்வாறு வரங்கள் பெற்றவன் ஆதலின், அவைகட்கு விரோத மின்றி, உள்ளும் புறமுமில்லாத அவன் கோயில் வாயிற்படியில், தன் நகமாகிய ஆயுதத்தினுல், பகலும் இரவுமல்லாத அந்தி வேளையில், விண்ணும் மண்ணுமல்லாத தன் மடிமீது வைத்து, மனிதரும் விலங்குமல்லாத மானுட மடங்கலாகித் திருமால் இரணியனைக் கொன்ருர் என்க. இப்படலம் 153-ஆம் செய்யுள் காண்க.

உலவா - அழியாத; 'உலவாக் காலந் தவமெய்தி' (திருவாச. திருச்சதகம். 54); இப்படலம் 14-ம் பார்க்க. கொள்ளை - மிகுதி; ஆரணிய. 630. நள் - நடு இரவு.

பி - ம். 1. உள்ளுஞ் சாவிலன்.
2. தேவர்தம்.
3. சாவிலன், நள்ளிராவிடை; பகலினிந்.
4. யாதினுங் குறையான்; யாருயிர் குடிப்பார்.



147. பூத மைந்தொடும் பொருந்திய வுருவினுற் புரளான்
வேதம் நான்கினும் விளம்பிய பொருள்களால் விளியான்
தாதை வந்துதான் தனிக்கொலை சூழினுஞ் சாகான்
ஈத வன்னிலை யெவ்வுல கங்கட்கு மிறைவன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பூதம் ஐந்தொடும் பொருந்திய உருவினுல் புரளான் - ஐந்து பூதங்களின் கூட்டுறவால் உண்டான எந்த உருவப் பொருளாலும் அழிவெய்தான்; வேதம் நான்கினும் விளம்பிய பொருள்களால் விளியான் - நான்கு மறைகளிலும் கூறப் பெற்றுள்ள பொருள்களாலும் சாகான்; தாதைதான் தனி வந்து - பெற்ற தந்தையே (மறைவாக) தனித்து வந்து, கொலை சூழினும் சாகான் - கொலை செய்யுமாறு சூழ்ச்சி செய்யினும் அந்தச் சூழ்ச்சியால் இறவான்; ஈது அவன் நிலை - இது (அவனுடைய) வியக்கத்தக்க தன்மையாயிருந்தது; எ உலகங்கட்கும் இறைவன் - அவன் எந்த உலகத்துக்கும் ஒரு தனித் தலைவன் ஆவன்.

ஐந்து பூதங்களாலும் கொல்லப்படான் என்று முன் கூறினர். இச்செய்யுட்கண் அவற்றிடைத் தோன்றிய சடப்பொருள் சித்துப் பொருள்களாலும் விளியான் என்ருர். 'எல்லாப் பொருள்களும் பாஞ்ச பௌதிகம்' என்பர் வடநூல் வல்லார். எனவே, அவற்றின் சேர்க்கையினுலேயே எப்பொருள்களும் உண்டாவன என்பதும், அவைகள் தோற்றிய முறைப்படியே மூலப்பிரகிருதியில் சென்றெடுங்கும் என்பதும் சித்தாந்தம். இதனைப் பஞ்சீகரணம் முதலியவற்ருற் கண்டுணர்க. எல்லாப் பொருள்களும் இதில் உள்ளன. இதில் இல்லாத எப்பொருளும் இல்லை யாகலில், 'வேத நான்கினும் விளம்பிய பொருள்கள்' எனப்பட்டது. வேதங்கள் நான்கு என்பரேனும், அவை பல என்பது அறிஞர் கொள்கை; 'அநந்தாவை வேதா': (வான்மீகி இராமாயணம்) 'ஐயன் வேதம் ஆயிரம் வல்லான்' (சுந்தர. 483). தாதை - உலகின் தாதையான பிரமனுமாம்; 'வல்லே யேகிய தாதை' (கந்தபு. பிரமயாகப். 6); 'எவ்வுல கங்கட்கும் இறைவன்' (பாகவத. 7·2·2.) காண்க. இனி, 'தாதை தன்னைத்தான் தனிக்கொலை சூழினும் சாகான்' என்ற பாடங்கொண்டு, தாதை என்பதை உலகிற்கே ஓர் தலைவன் போனறுள்ள இரணியனுக்கே ஆக்கி, அவன் தற்கொலை புரிந்துகொள்ள நினையினும் அந்த முயற்சியும் பலியாது எனினுமாம். இங்கே 'தனிக்கொலை' என்பது, பிறரறியாமல் தனியிடத்தே சென்று தன் உயிர்க்குக் கேடு சூழ்வது என்க.

முன்னர், 18 கவிகளில் இரணியனின் பல்வேறு பெருமைகளையும், அவன் பெற்ற சீரிய வரங்களையும் கூறிவந்தார். இரணியாக்கன் வராக அவதாரம் செய்த திருமாலாற் கொல்லப்பட்ட பின்னர், அவன் உடன் பிறந்தவனுன இரணியன் மனம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கொதித்துப் பூமிக்கண் சென்று நல்லோர்களையும் அறங்களையும் அழித்திடுமாறு தன் பரிவாரங்கட்குக் கட்டளையிட்டுப் பின் அறக்கடவுளின் உபதேசம் பெற்றுக் கானடைந்து கடுந்தவ மாற்ற, அக்காலை அவனுக்கு வரமருளினன் பிரமதேவன்; இஃது,

'பங்கயப் பொகுட்டின் மேலோன்
 படைத்தன தம்மின் மாளான்
அங்கண்வா னுலகின் மண்ணின்
 அகத்தினிற் புறத்திற் றுஞ்சான்
கங்குலும் பகலும் மாயான்
 கனலுமிழ் படையிற் பொன்றான்
வெங்கண்வாள் அவுணன் பெற்ற
 வரனையென் விளம்பு கேளுல்' (பாக. 7·2·20)

என்று சுருக்கிக் கூறப்பட்டுள்ளது. இவ் வரங்களைப் பெற்ற பின்னரே தன் நகர் அடைந்து, 'விதிமுறை யரியோ மென்ன விளம்புதொல் வழக்கு மாற்றிப், புதிதுதன் பெயரேகூறப் பணித் தனன்' என்றும் கூறப்பட்டது.

பி - ம். 1. பூதமைந்தினும்; உணர்வினிற், புணரா, புணரும்; சாகரன்.
 2. விளங்கிய; டியான்.
 3. தாதை தன்னையே; சாதல் உன்னியே தான்றனைக் கொல்லினும். 18

இதன்பின் ஓர் அதிகப்பாடல்:—

'குனிப்பி லாதபல் லாயிர கோடியண் டத்தின்
நுனிக்கும் வானவர் முதலிய வுயிர்த்தொகை நோக்கில்
அனைத்து மன்னவ னேவலைத் தலைக்கொண்டங் [கவன்பேர்
நினைத்து வாழ்த்திட மூவர்போ லொருதனி நின்றான்.

**148.** ஆய வன்றனக் கருமக னறிஞரி னறிஞன்
தூய ரென்பவர் யாரினு மறையினுந் தூயன்
நாய கன்றனி ஞானிநல் லறத்துக்கு நாதன்
தாயின் மன்னுயிர்க் கன்பின னுளனொரு தக்கோன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆயவன் தனக்கு அருமகன் - அன்ன தன்மையனான இரணியனுக்கு மிகவும் அருமையான புதல்வனும், அறிஞரின் அறிஞன் - மேதாவிகட்கெல்லாம் மேதாவியாயும், தூயர் என்பவர் யாரினும் தூயன் - மிகவும் பரிசுத்தர் என்று கூறப்படுவர் யாவரினும் தூய்மை சான்றவனாயும், மறையினும் தூயன் - வேதங்களைக் காட்டிலும் பரிசுத்தனாயும், நாயகன் - தலைவனாயும், தனி ஞானி - ஒப்பற்ற ஞானவானாயும், நல் அறத்துக்கு நாதன் - சிறந்த தருமத்திற்கே இயமானனாயும், மன் உயிர்க்கு தாயின் அன்பினன் - நிலை பெற்ற உயிர்களிடத்து தாய் மகவிடத்துக் காட்டும் அன்பினைக் காட்டிலும் அன்பு பூண்டவனாயும் உள்ள, ஒரு தக்கோன் - ஒரு தகுதியாளன், உளன் - பிறந்துள்ளான்.

பிரகலாதனுடைய அளவிறந்த பெருமை ஒரே செய்யுட்கண் சுருக்கிக் கூறப்பெற்றது. இதில், 'அறிஞரின் அறிஞன்' என்று கூறப்பட்டதே யன்றிப் பிரகலாதன் என்ற பெயர் இப் படலத்தில் யாண்டும் கூறப்படாமை குறிக்கொள்ளத் தக்கது. இப் பெயர் பாகவதத்திற் காணப்படும்: 'இரணியன் றருபோர் தழைந்தவேற் புதல்வர் நால்வருள், பேர்தழைத்த மெய்ப் பிரகலாதனும்' (பாக. 7 · 2 : 29) என்றது காண்க. பரிபாடல் இவ்விளைஞன் பெயரைப் பிருங்கலாதன் என்று கூறும். இத் துணை விரிவாக இப் படலத்தை வரைந்த கம்ப நாடர் பிரகலாதன் பெயரைக் கூறுதது, 'எந்நாளு மூலையாய்நீ யென்போலுளை யென்று' திருமால் அவதாரமான நரசிங்கப் பெருமான் கூறி யுள்ளமையாலும், பக்தர் வரிசையில் முதற்கண் கூறப்படுபவன் அவன் ஆதலாலும், அப் பெரியோன் பெயரைக் கூறற் கஞ்சியே யென்க. அருமகன் என்றது, இவனைப் பெறுந் தகுதியுள்ளவன் அல்லன் இரணியன் என்றதைக் குறித்து நின்றது. 'ரத்தின் வயிற்றின் முத்து' என்ற முதுரையும் காண்க. இரணியன் மக்கள் நால்வர் என்றும், அவர்களில் பிரகலாதன் ஒருவன் என்றும் பாகவதம் கூறும். மறை இறைவன் வாய்ச்சொல் ஆகலின் அதற்குத் தூய்மைக் குறைவின்று என்க. ஒரே செய்யுட்கண் இரத்தினச் சுருக்கமாகப் பிரகலாதாழ்வானுடைய பேரறிவு, மனம் மொழி மெய்களின் தூய்மை, அறச்சிந்தை, யாவற்றினும் மேலான அன்பு, நடுவு நிலைமை முதலிய பண்புகள் கூறப்பட்டுள்ளமை காண்க. அன்பின் பின்னர்த் தகுதியை வைத்தார், நடுநிலை தவறியும் அன்பு நிகழக்கூடுமாகலின்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'தாயின் மன்னுயிர்க் கன்பினன்' (ஒப்பு): பாக. 184, 1146; இப் படலம் 82-ஆம் செய்யுள். தூயன் ஈரிடத்துக் கூட்டப்பட்டது.

பி - ம். 2. தூய ரென்பவர்

3. நாயகன் திருஞானி, திருஞான; மற்றறிஞர்க்கு. 19

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

அன்ன வன்புகழ் சீலநல் லறந்தனி மெய்ம்மை
உன்னு நான்மறை யோடரு நீதியும் பொறையும்
இன்ன யாவுமற் றுருவுகொண் டுளதென வவந்தே
மன்னு யிர்த்தொகை மகிழ்ந்திட வொருதனி வாழ்ந்தான்.

## இரணியன் பிரகலாதனுக்கு மறை ஓதுவிக்க முயலுதல்

**149.** **வாழி யானவன் றனைக்கண்டு மனமகிழ்ந் துருகி**
**ஆழி யையநீ யறிதியால் மறையென வறைந்தான்**
**ஊழி யுங்கடந் துயர்கின்ற ஆயுளா னுலகம்**
**ஏழு மேழும்வந் தடிதொழ வரசுவீற் றிருந்தான்.**

ஊழியும் கடந்து உயர்கின்ற ஆயுளான் - கற்ப காலத்தையும் மீறி வளர்கின்ற ஆயுளையுடையவனும், உலகம் ஏழும் ஏழும் வந்து அடிதொழ - ஏழு உலகங்களும் வலிய வந்து தன் அடிகளைப் பரவுமாறு, அரசு வீற்றிருந்தான் - அரசிருக்கையில் பிறரெவர்க்குமில்லாத பெருஞ் சிறப்புடன் அமர்ந்திருந்தவனும் ஆன இரணியன், வாழி ஆனவன் தனை கண்டு - வாழ்ச்சியையுடைய அந்த அறிஞனை புதல்வனைப் பார்த்து, மனம் மகிழ்ந்து உருகி - உள்ளத்துக் களிப்பும் நெகிழ்வும் கொண்டு, 'ஆழி ஐய - என்னுடைய ஆணைச் சக்கரத்துக்கு உரிமையுள்ள மகனே!, நீ மறை அறிதி என அறைந்தான் - நீ வேதாப்பியாசம் செய்வாயாக' என்று சொன்னான். ஆல் - அசை.

இரணியன் வாக்கினின்றும் அவன் அறியாமலே, 'ஆழி ஐய' என்ற சொற்கள் வந்தமை உய்த்துணரத்தக்கது. இப்படல இறுதியில், 'எந்நாளும் உலவாய்நீ யென்போல் உளை' என்றான் என்று நரசிங்கப்பெருமான் கூறுவது காண்க. 'ஊழியுங் கடந் துயர்கின்ற ஆயுள்'; 'நீடூழி வாழ்க' என்று வாழ்த்தும் மரபுபற்றி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எழுந்தது. உலகம் ஏழும் ஏழும் - கீழ் மேலுலகங்கள் பதினன்கு என்க.

பி - ம். 1. வாளிவானவன் ; மனமுவந்துருகி.
2. ஆளி.
3. துய்கின்ற. 20

150. என்றரு ரந்தண னெல்லையி லறிஞனை யேவி
நன்று நீயிவற் குதவுதி மறையென நவின்றான்
சென்று மற்றவன் றன்னொடு மொருசிறை சேர்ந்தான்
அன்று நான்மறை முதலிய வோதுவா னமைந்தான்.

என்று - என்று மொழிந்து, எல்லையில் அறிஞன் ஓர் அந்தணனை ஏவி - அளவற்ற அறிவுள்ளவனை ஒப்பற்ற ஓர் மறையோனைக் கட்டளை யிடுபவனாய், 'நன்று - சிறந்த வகையில், நீ இவற்கு மறை உதவுதி - நீ என் மகனாகிய இவனுக்கு வேதப் பொருளை போதிப்பாயாக' என நவின்றான் - என்று சொன்னான்; (உடனே அந்தக் கட்டளைக் கிணங்கச்) சென்று - போய், அவன் தன்னொடும் ஒரு சிறை சேர்ந்தான் - குரு அந்த சிறுவனுடன் ஒரு பக்கம் சென்றடைந்து, அன்று - (சென்று சேர்ந்த) அந்த தினத்திலேயே, நான்மறை முதலிய ஓதுவான் அமைந்தான் - வேதங்கள் முதலானவற்றைக் கற்பிக்கத் தொடங்கினான். மற்று - வினை மாற்றில் வந்தது.

பிரகலாதனுக்குக் கல்வி புகட்டுமாறு இரணியன் வெள்ளி மைந்தர்களை ஏவினதாகப் பாகவதம் கூறும். கம்பநாடர் ஆசிரியன் பெயரைக் கூறவில்லை. 'என்று ஓர் அந்தணன் எல்லையில் அறிஞன்' என்றே கூறியமைந்தார். எல்லையில் அறிஞன் என ஒருமையாகக் கூறப்பட்டிருத்தலின் அவன் அசுர குருவாகிய சுக்கிரனே ஆதலும் கூடும்; ஓர் அந்தணன் ஒப்பற்ற அந்தணன் என்க. 'கவீநா முசநாகவி:' (பகவற்கீதை. விசுவ ரூபம்) என்று கண்ணன் தன்னைக் கவிகட்குள் சுக்கிராசாரியனாகக் கூறிக்கொள்வதும் காண்க. அரச நீதி; 'சுக்கிர நீதி' சுக்கிரன் இயற்றியதாதலும் அறியத்தகும். ஒரு சிறை என்பது ஒரு அறை எனப் பொருள்படுமேனும், பின்னர் ஆசிரியனுக்கும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பிரகலாதனுக்கும் நிகழவிருக்கும் நிகழ்ச்சிகளை எண்ணி மனத்திற்குகவாத சிறை (சிறைச்சாலை) என்பது தொனி.

பி - ம். 1. மேவி.
2. இன்று நீ பிதற்கு ; உதவிசெய், அறைந்தான்.
4. நன்று நான்மறை ; இசைத்தான்.

21

## பிரகலாதன் ஆசிரியனுடன் பிணக்குற்றது

151. ஓதப் புக்கவ னுந்தைபே ருரையென லோடும்
போதத் தன்செவித் தொளையிரு கைகளாற் பொத்தி
மூதக் கோயிது நற்றவ மன்றென மொழியா
வேதத் துச்சியின் மெய்ப்பொருட் பெயரினை விரித்தான்.

ஓத புக்கவன் - மறைகளைப் போதிக்கத் தொடங்கிய அந்த அந்தணன், 'உந்தை பேர் உரை எனலோடும் - உன் தந்தை பெயரை முதற்கண் உச்சரிப்பாயாக' என்று சொன்ன அளவில், தன் செவி தொளை இரு கைகளால் போத பொத்தி - (பிரகலாதன்) தன்னுடைய காதின் துவாரங்களை இரண்டு கரங்களாலும் அழுத்தி மூடிக்கொண்டு, 'மூ தக்கோய் - முதுமையும் தகுதியும் வாய்ந்தவனே!, இது நல் தவம் அன்று என மொழியா - நீ செய்யும் இச்செயல் தூய்மையான செய்கை யன்று' என்று சொல்லி, வேதத்து உச்சியின் மெய் பொருள் பெயரினை விரித்தான் - மறைகளின் முடி என்று சொல்லும்படியான உபநிடதங்களில் கூறப்படுகின்ற உண்மை வடிவமான கடவுளின் பெயரையே நன்கு எடுத்துச் சொன்னான்.

ஓத : பிறவினைப் பொருளில் வந்தது. ஓதப் புக்கவனை எனப் பிரகலாதற்கே ஏற்றினுமாம். உந்தை - உன் தந்தை என்பதன் மரூஉ. 'காதவனைக் கேட்க' (பு. வெ. மாலை வாழ்த்து) ; 'பத்ரம் கர்ணேபி' (வேதம்) என்றிருப்பதால், அமங்கலச் சொற்கள் தன் செவிக்கண் நுழையாதவண்ணம் செவி பொத்தி எனப் பட்டது. உபநிடதங்களை வேதசிரம் என்ப. மொழியா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'வேதத்துச்சியின் மெய்ப் பொருள் பெயர்' (ஒப்பு) : 'வேதாந்த விழுப்பொருள் மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனனே' (திவ். பெரியாழ். 4·3:11) ;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இங்குப் பிரகலாதாழ்வான் உரைத்தது, 'ஓம் நமோ நாராயணாய' என்ற மந்திரம் என்பது அடுத்த செய்யுளால் விளங்கும்.

பி - ம். 1. புக்கபின்.
2. இரு கையினும், கைகொடு, கையினற் ; புதையா.
3. மாதக் கோயிது னற்றமென் முன்பினு மிலையால், மாதக் கோயிதுன் றவமென முன்பினு மலையா, மாதக் கோயநு மறமெனு முன்பினு மலையா, உலையா.
4. மெய்ப்பொருட் பெரியனை விநித்தான் ; மெய்ப்பொருள் நாமத்தை விரித்தான். 22

## பிரகலாதன் அஷ்டாக்ஷரம் உரைத்தது

152. ஓந மோநரா யணயவென் றுரைத்துள முருகித்
தான மைந்திரு தடக்கையுந் தலைமிசைத் தாங்கிப்
பூநீ றக்கண்கள் புனலுக மயிர்ப்புறம் பொடிப்ப
ஞான நாயக னிருந்தன னந்தண னடுங்கி.

ஞான நாயகன் - அறிவிற் சிறந்தவனான பிரகலாதன், ஓ நமோ நராயணாய என்று உரைத்து - ஓ நமோ நாராயணாய என்ற திருவெட்டெழுத்துக்களை உச்சரித்து, உளம் உருகி - மனம் கரைந்து, தான் அமைந்து - தன் இந்திரியங்கள் எல்லாம் அமைதியுறப் பெற்று, இரு தட கையும் தலைமிசை தாங்கி - இரண்டு பெரிய கரங்களையும் தலையின்மேல் கூப்பி வைத்துக் கொண்டு, பூநிற கண்கள் புனல் உக - செந்தாமரை மலர் போன்ற நிறத்தனவான விழிகளில் ஆனந்தக் கண்ணீர் பெருகவும், மயிர் புறம் பொடிப்ப - மெய்ம் மயிர் சிலிர்ப்பவும், இருந்தனன் - (தியானத்தில்) அமர்ந்திருந்தான் ; (அவ்வளவில்), அந்தணன் நடுங்கி - ஆசிரிய மறையோன் உடலும் உள்ளமும் நடுக்குற்று ; மேல் செய்யுளில் வரும் 'கெடுத் தொழிந்தனை' என்பதனோடு தொடர்ந்து முடியும்.

ஓம் நமோ நாராயணாய - இஃது அஷ்டாக்ஷரம் எனவும் திருவெட்டெழுத் தெனவும்படும். மறைமொழி யாதலின் திருவெட்டெழுத்தைச் சிறிது பின்னப்படுத்திக் கூறினர் என்ப. அத்திருப்பெயரை உச்சரிக்குங்கால் பிரகலாதன்பால் நிகழ்ந்த மெய்ப்பாடுகள் இங்கே குறிக்கப்பெற் றுள்ளன. உள்ளம் ஒருமைப்பட்டே புறக்கரணங்கள் தொழிலாற்ற வேண்டியிருப்பதால் உளம் உருகி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எனமுதற் கூறப்பட்டது; பின்னர் அடக்கமும், தலைமேற் கைகள் கூப்புதலும், ஆனந்தக் கண்ணீர் பெருக்குதலும், மெய்ம்மயிர் சிலிர்த்தலும் முறையே நிகழ்ந்தமை காண்க. (ஒப்பு): 'மெய்தானரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்குக், கைதான் தலை வைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம், பொய்தான் தவிர்ந்து' (திருவாச. திருச்சதகம்); ஞான நாயகன்; 'ஞான நல்லறத்திற்கு நாதன்' என முன்னர்க் கூறியுள்ளமை காண்க. திருவெட் டெழுத்து என்ற பெரியதிருமந்திரத்தின் மகிமையைப் பெரிய திருமொழி 1, 1-ல் உள்ள 10 பாசுரங்களிலும் காண்க. திருவெட்டெழுத்தின் பொருள் :—அகாரார்த்தமான திருமாலுக்கு உரிய ஞான ஸ்வரூபியான ஆன்மாவான நான் நாராயணனுக்கே எல்லா அடிமையும் செய்யப் பெறுவேனாக வேணும்; எனக்கு உரியனல்லேன், என்று கூறுவர்; வல்லார்வாய் கேட்க.

பி - ம். 1. உரைத்துணர் வுருகி.
2. இருசுடர்க்கையும்; தலையின் மேல்.
3. மயிர்க்குலம் பொடிப்ப, மயிர்புறம்.
4. நடுங்க. 23

இதன் பின் ஓர் அதிகப்பாடல்.

நடுங்கி யந்தணன் நாப்புலர்ந் தரும்புல னைந்தே
ஒடுங்கி யுள்ளுயிர் சோர்ந்துடல் பதைத்துளம் வெருவி
அடங்கு மின்றுநம் வாழ்வென வயர்ந்தொரு படியாய்ப்
பிடுங்கி மெல்லுரை புதல்வனுக் கினையன பேசும்.

## ஆசிரியன் வெகுளல்

153. கெடுத்தொ ழிந்தனை யென்னையு முன்னையுங் கெடுவாய்
படுத்தொ ழிந்தனை பாவியெத் தேவரும் பகர்தற்
கடுத்த தன்றியே யயலொன்று பகரநின் னறிவில்
எடுத்த தென்னிது வென்செய்த வண்ணம்நீ யென்றான்.

(அதைக் கேட்ட ஆசிரியன்), 'கெடுவாய் - அழிந்து போகுபவனே! பாவி - பாவம் புரிந்தவனே! என்னையும் கெடுத்து ஒழிந்தனை - ஆசானாகிய என் வாழ்வையும் கெடுத்தனை; உன்னையும் படுத்து ஒழிந்தனை - மாணவனாகிய உனக்கும் கெடுதி தேடிக் கொண்டாய்; எ தேவரும் பகர்தற்கு அடுத்தது அன்றியே -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



எந்தத் தேவர்களும் சொல்லுதற்குப் பொருந்தாததாய் உள்ள, அயல் ஒன்று பகர - வேறாகிய ஒருவார்த்தையைச் சொல்லும்படி, நின் அறிவில் எடுத்தது இது என் - உன் அறிவில் ஏற்ற இக்காரியம் யாது? நீ செய்த வண்ணம் என் - இவ்வாறு நீ புரிந்த காரியம் எத்தகையது?'' என்றான் - என்று சொன்னான்.

கெடுவாய் - இது வெறுப்புக் குறிக்கும் சொல். வயிற்றுப் பெருமான் பொருட்டு இரணியனைச் சார்ந்து பிழைப்பவனாதலின், உத்தமருள் உத்தமனான ஞான பண்டிதனைப் பாவி என்றான். கெடுத்தது அவன் இகவாழ்வைக் கெடுத்தது. பெருமான் திருநாமத்தைக் கூறவும் மறுத்து, 'அயல் ஒன்று பகர்தற் கெடுத்ததென்' என்றும், 'கெடுத் தொழிந்தனை' என்றும் கூறினான். (ஒப்பு): 'கெடுத் தொழிந்தனை' (அயோத்தி. மந்தரை சூழ்ச்சி. 76); என் ஈரிடத்துக் கூட்டப்பட்டது.

பி - ம். 2. யத்தேவரும், யத்தேவரைப், யத்தேவனைப்; பகர; பலகால்.
3. அறிவின்; என் செய வெண்ணினை;
4. என் செய்த வண்ணமி தென்றான். 24

இதன் பின் ஓர் அதிகப்பாடல்.

என்றவ் வேதிய னிவையிவை யியம்பலு மிதுகெட்டேன்
ஒன்று மெய்ப்பொரு ளுணர்ந்துள சிறுவனு முரவோய்
நன்று நீயெனக் குரைத்ததென் றிளநகை புரிந்தாங்
கின்று கேளிதி னுறுதியென் றெடுத்திவை யுரைப்பான்.

## பிரகலாதனின் விடை

154. என்னை யுய்வித்தே னெந்தையை யுய்வித்தே னினைய
உன்னை யுய்வித்திவ் வுலகையு முய்விப்பா னமைந்து
முன்னை மூலத்தின் முதற்பெயர் மொழிவது மொழிந்தேன்
என்னை குற்றம்நா னியற்றிய தியம்புதி யென்றான்.

(அவ்வார்த்தைகளைக் கேட்டுப் பிரகலாதன் ஆசானை நோக்கி, 'நான் உச்சரித்த திருவெட்டெழுத்தால்), என்னை உய்வித்தேன் - நான் என்னையே வீடேறுமாறு செய்தேன்; எந்தையை உய்வித்தேன் - என்னைப் பிறப்பித்த தந்தையை ஈடேற்றினேன்; இனைய - இத்தன்மையின் எனக்குக் குருவாக அமைந்த, உன்னை உய்வித்து-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உன்னையும் கடைத்தேறுமாறு செய்து, இ உலகையும் உய்விப்பான் அமைந்து - இந்த உலகமும் கடைத்தேறும்படி பொருந்தி, முன்னை மூலத்தின் முதல் பெயர் மொழிவது மொழிந்தேன் - மிகவும் பழமையானதும் எல்லாவற்றிற்கும் ஆதி மூலமானதுமான வேதத்தின் முதற் சொல்லான பிரணவம் முதற்கண் சொல்லும் பொருளான நாராயணன் திருப்பெயரைச் சொன்னேன்; நான் இயற்றியது குற்றம் என்னை - நான் புரிந்ததில் உள்ள பிழை யாது? இயம்புதி என்றான் - சொல்வாயாக' என்றான் ஆசிரியன்.

இப் பெயருச்சாரணத்தால் முதற்கண் உய்ந்தவன் பிரகலாதன் ஆதலின், 'என்னை யுய்வித்தேன்' என்றும், நன் மக்களைப் பெற்றவர் என்றும் உய்வதற்குத் தடையின்றாகலின், 'எந்தையை உய்வித்தேன்' என்றும், நல் மாணவர் தம் நற்பண்பு செய்கைகளான் ஆசிரியன் உய்வதும் உண்டாகலின், 'உன்னை உய்வித்தேன் என்றும், பிரகலாதனது இச்செயலும் பின் நிகழவிருக்கும் வியத்தகு நிகழ்ச்சிகளும் கண்டும் கேட்டும் உலகம் உய்வது ஒருதலை யாதலின், 'உலகினை உய்விப்பான் அமைந்து' என்றும் கூறினான் என்க. முன்னை மூலத்தின் முதற்பெயர் மொழிவது. 'ஆதியந்தம் அரி' ஆரேனும் ஒன்று சொல்லப்புகின், உன் பேரே வரும் என்ன பேறு பெற்றேன்' (தனிப்பா. ஒட்டக்கூத்தர்), என்றது காண்க. சுருதியாதியிற் றொடங்குறு மெல்லையிற் சொல்லும் ஒருவன் (இரணியன். 40); 'குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுய ராயின வெல்லாம், நிலந்தரம் செய்யும் நீள்விசும் பருளும் அருளொடு பெருநில மளிக்கும், வலந்தரு மற்றும் தந்திடும் பெற்ற தாயினு மாயின செய்யும், நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன் நாராயணா வென்னும் நாமம்' (திவ்ய. பெரிய திரு. 1 : 1 · 9); என்ற பாசுரம் அறிதல் தகும்; 'நாராயணா வென்னா நாவென்ன நாவே' (சிலப். 17. ஆய்ச்சியர்); என்பது சிலப்பதிகாரம்.

பி - ம். 1. உய்வித்தே ; வியைய, வினைய, இனிதும்.

2. உலகெலாம் ; உய்விக்க உரைத்தேன்.

3. முன்னை வேதத்தின் ; முறைப் பெயர் : முழுவது முரைத்தேன், மொழிந்ததை மொழிந்தேன்.

4. என்ன குற்றம் ; வியம்பிய, வியம்பினது.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## ஆசிரியன் வேண்டுகோள்

155. முந்தை வானவர் யாவர்க்கு முதல்வர்க்கு முதலோன்
உந்தை மற்றவன் திருப்பெய ருரைசெயற் குரிய
அந்த ணாளனே னென்னினு மறிதியோ வையா
எந்தை யிப்பெய ருரைத்தெனைக் கெடுத்திட லென்றான்.

(அதுகேட்டு அந்தணன்), 'உந்தை - உனது தந்தை, முந்தை வானவர் யாவர்க்கும் - பழமையான எல்லாத் தேவர் கட்கும், முதல்வர்க்கும் முதலோன் - மும் மூர்த்திகளுக்கும் தலைவன்; அவன் திருப்பெயர் - அவனுடைய அழகிய நாமத்தை, உரை செயற்கு உரிய - சொல்லுதற் குரிமைபெற்ற அந்தணாளனேன் - பிராமண னாகிய, என்னினும் அறிதியோ - என்னைக்காட்டிலும் நீ விஷயங்களை அறிந்தவனோ? ஐயா - என் ஐயனே! எந்தை - என் அப்பனே! இ பெயர் உரைத்து எனை கெடுத்திடல் என்றான் - இந்தப் பெயரைப் பகர்ந்து என் வாழ் வினைக் கெடுத்துவிடாதே' என்று மொழிந்தான்.

'மூலத்தின் முதற் பெயர் மொழிவது மொழிந்தேன்' என்ற பிரகலாதனை மறுத்து, 'முந்தை வானவர் யாவர்க்கு முதல்வன் உந்தை' என்று ஆசிரியன் கூறினன் என்க. இக்கருத்து முன் பாடல்களிலேயே கூறப்பட்டுள்ளது. ஸ்ரீமந் நாராயணன் திருப் பெயரை உச்சரிக்கவும் அஞ்சி, 'இப்பெயர்' என்றான். இவ்வாறே ஆசிரியன் பிற இடங்களிலும் கூறுவதை 153, 164, 166, செய் யுட்களிற் காண்க. எந்தை இப்பெயர்; (ஒப்பு): 'இந்தவிப் பிறவிக் கிருமாதரை' (சுந்தர. 640). மற்று; அசை.

பி - ம். 1. தானவர்க்கும் முதல்வர்க்கு முதலோன்; உரவோன்.
2. மற்றிவன்.
3. அந்த ணாளனுன், அந்த ணாளவன்; என்னுமதறிதியோ; ஐயா; அந்த நான்முகன் முதலிய வமரர்க ளென்றல்.
4. இந்த, எந்தை யப்பெயர்; இந்தப் பேருரைத் தென்னைநீ கெடுத்திட லென்றான்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## பிரகலாதன் விடை

156. வேத பாரக னவ்வுரை விளம்பலும் விமலன்
ஆதி நாயகன் பெயரன்றி யான்பிறி தறியேன்
ஓத வேண்டுவ தில்லையென் னுணர்வினுக் கொன்றும்
போதி யாதது மில்லையென் றிவையிவை புகன்ருன்.

வேத பாரகன் - நான்மறைகளைக் கரைகண்டவனான அந்த அந்தணன், அ உரை விளம்பலும் - மேற்சொன்ன மொழிகளைக் கூறவும், விமலன் - குற்றம் தீர்ந்தவனான பிரகலாதன், 'ஆதி நாயகன் பெயர் அன்றி யான் பிறிது அறியேன் - எல்லாவற்றிற்கும் முதல் தலைவனாகிய அந்த ஸ்ரீமந் நாராயணன் பெயரன்றிப் பிற பெயர்களைச் சொல்ல நான் தெரிந்து கொள்ளவில்லை; ஓத வேண்டுவது இல்லை - எனக்கு இனிக் கற்க வேண்டிய பொருள் ஒன்றும் இல்லை; என் உணர்வினுக்கு ஒன்றும் போதியாததும் இல்லை - என் அறிவினுக்கு எட்டாமல் பிறர் கற்றுத் தரத்தக்க எப்பொருளும் இல்லை'; என்று இவை இவை புகன்ருன் - என்று கீழ்வருவனவற்றைச் சொன்னான். இவற்றை மேல் வரும் ஆறு கவிகளிற் காண்க.

பாரம் - கரை. பாரகன் - கரைகண்டவன்; 'காளிந்தி நதியின் பாரம்' (வி. பா. குரு. 90); 'தென்சொற் கடந்தான் வடசொற்கடற் கெல்லை தேர்ந்தான்' (அயோத். நகர்நீ. 141). 'என் உணர்வினுக் கொன்றும் போதியா ததுமில்லை' (ஒப்பு): நாமமறையோதா தோதிநனி யுயர்ந்தான்' (இரணிய. 175); உணர்வினுக்கு... போதியாதது மில்லை; 'ஓத லின்றியே யுணர்வு கூறுமிக் காதலன்' (பாக. 7 · 2 ; 35); 'மந்திரங்கள் மொழிந்தவர்க்கு மதுர வாக்காற், பொருவிறப்ப வோதினர் புகலிவந்த புண்ணியனா ரெண்ணிறந்த புனிதவேதம்' (பெரியபு. திருஞான. 264)'; 'கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்' (திருத்தொண்டத்தொகை); 'தன்ன துள்ளுறு முணர்ச்சியாற் புதுவது தந்தது' (இரணியன். 36) என்றதும் காண்க. எந்தப் பெயரில் எல்லா அறிவுகளும் அடங்கி யுள்ளனவோ அதனை அறிந்தபின், தான் அறியவேண்டிய பிறிதொன்றில்லை என்ற உணர்ச்சி பிரகலாதனுக்கு உண்டாயிற்று என்க.

பி - ம். 1. வேதநாயகன்; அஃதுரை செய்தலும்.
3. யென்றுணர்வினுக்கு, யென்னறிவினுக்கு.
4, இவையிவை புகலும்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



157. தொல்லை நான்மறை வரன்முறைத் துணிபொருட் கெல்லாம்
எல்லை கண்டவ னகம்புகுந் திடங்கொண்ட தென்னுள்
இல்லை வேறினிப் பெரும்பதம் யானறி யாத
வல்லை யேயெனின் யோதுவி நீதியின் வழாத.

'தொல்லை நான்மறை - பழமையான நான்கு வேதங்கள், வரன் முறை - மரபு வழுவாது, துணி பொருட்கு எல்லாம் - தெளிந்த எல்லாப் பொருள்கட்கும், எல்லை கண்டவன் - பேரெல்லையும் முடிவுமாகக் காணப்படும் ஸ்ரீமந் நாராயணன், என் அகம் உள் புகுந்து இடம் கொண்டது - என் மனத்தின் உள்ளே புகுந்து அதனைத் தன் இருப்பிடமாகச் செய்துகொண்டான்; இனி யான் அறியாத வேறு பெரும் பதம் இல்லை - இனி என்னால் அறியப் படாது வேறாகவுள்ள பெரிய திருநாமம் இல்லை; வல்லையே எனின் - வன்மையுடையை ஆகில், நீதியின் வழாத ஓதுவி - வேத நீதிக்கு முரண்படாத பொருள் ஏதேனும் உண்டெனில், ஓதுவி - போதிப்பாயாக.

'தொல்லை நான்மறை துணிபொருள்' (ஒப்பு): 'மறைகளு முனிவர் யாரு மலர்மிசை யயனு மற்றைத், துறைகளின் முடிவும் சொல்லும் துணிபொருள்' (கிட்கிந்தா. 360); 'முற்றிய பொருட் கெலா முடிவு ளான்றனை' (யுத்த. கும்ப. 289); 'வேதத் தோட்டி யின் தொடக்கி னிற்கும், துணைக்கைமால் யானை யன்னான்' (யுத்த. நாகபாசப். 242); திருமாலே என் உள்ளத்து வதிதலின் நீதி யல்லாதன என் மனம் கொள்ளாது; தகுதி யுள்ளதைப் போதிக்கக்கூடுமெனில் போதிப்பாயாக' என்றான் பிரகலாதன். நீதியின் வழாத ஓதுவி யெனக் கூட்டுக.

வி - ம். 1. நான்மறை யாவையும்.
2. எல்லை கொண்டவன்; மனம் புகுந்து; தென்னில்.
3. இல்லை யென்றினிப்; பெரும்பயன்.
4. வல்லை யேலினி, யேயினி; ஓதுதி, ஓதுநீ, ஓதிவை.

28

158. ஆரைச் சொல்லுவ தந்தண ரருமறை யறிந்தோர்
ஓரச் சொல்லுவ தெப்பொரு ளுபநிட தங்கள்
தீரச் சொற்பொருள் தேவரும் முனிவரும் செப்பும்
பேரைச் சொல்லுவ தல்லது பிறிதுமொன் றுளதோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'அந்தணர் சொல்லுவது ஆரை - வேதத்தின் அந்தத்தை அணவும் பிராம்மணர் உரைப்பது எவரை, அருமறை அறிந்தோர் - அரிய வேதங்களும் வேத சாஸ்திரம வல்ல ஞானிகளும், ஓர சொல்லுவது - எல்லோரும் உணருமாறு எடுத்து மொழிவதும், உபநிடதங்கள் தீர சொல்பொருள் - உபநிடதங்கள் முடிவாகப் பகர்வதுமான பொருளாகி, தேவரும் முனிவரும் செப்பும் பேரை - தேவர்களும் முனிவர்களும் சொல்கின்ற அந்தப் பரம் பொருளின் திருநாமத்தை, சொல்லுவது அல்லது - உச்சரிப்ப தல்லாமல், பிறிதும் ஒன்று உளதோ - வேறொரு சிறந்த பெயரும் சொல்லற்கு இருக்கின்றதா?

ஆரை : யாரை என்பதன் மரூஉ. உபநிடதம் - இறைவன் அருகில் கொண்டு சேர்ப்பது என்பது உறுப்புப் பொருள். அந்தணர் அருமறை; தொல். பிறப்பியல்; இறை. 1. ஓர்தல் : 'ஓர்ந்துகண் ணோடா திறை புரிந்து' (குறள். 541); 'ஓர்த்துள்ள முள்ள துணரின்' (குறள். 357).

பி - ம். 1. அருமறை யறைந்தோர்.
2. ஓரச்சொல்லுவ துண்டுகொல், ஓதச் ; ஒரு பொருள்.
3. தீரச் சொல்லுவ தேவரும் ; தீரச் செய்வினை.
4. முனிவரு மமரரும் ; பிறிதுவே ருளதோ, பிறிதொன் று முண்டோ. 29

159. வேதத் தானுநல் வேள்வியி னுனுமெய் யுணர்ந்த
போதத் தானுமப் புறத்துள வெப்பொரு ளானும்
சாதிப் பார்பெறும் பெரும்பதம் தலைக்கொண்டு [சமைந்தேன்
ஓதிக் கேட்பது பரம்பொரு ளின்னமொன் றுளதோ.

'வேதத்தானும் - நான்மறைகள் கூறியபடியும், நல் வேள்வியினானும் - சிறந்த யாகங்களாலும், மெய் உணர்ந்த போதத்தானும் - தன்னையும் தனக்காதாரத் தலைவனையும் கண்டுணர்ந்த மெய்ஞ்ஞான அறிவினைக் கொண்டும், அ புறத்து உள்ள எ பொருளானும் - மற்றும் புறச்சாதனங்களான தவம், தானம், தேவபூசை முதலியவற்றானும், சாதிப்பார் - தாம் முடிவில் அடையக்கூடிய தான சித்திகள், பதமுத்தி பரமுத்திகள் என்ற இவற்றை முயன்றடைய எண்ணுபவர், பெறும் பெரும் பதம் - தாம் உருவேற்றி உரைத்தற்குரிய உன்னதமான திருநாமத்தை, தலைகொண்டு சமைந்தேன் - உட்கொண்டு மொழிந்தேன்; இன்னம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஓதி கேட்பது பரம்பொருள் ஒன்று உளதோ - இதனினும் பிறிதாகப் பிறர் சொல்லிக் கேட்டறிதற்குரியதான மேலான பொருள் ஒன்று உண்டோ? (இல்லை). ஓ - வினா.

'வேதத்தானும் ..... ... சாதிப்பார்' (ஒப்பு): 'அறத்தொடு வேதம் புணர்தவ முற்றி, விறற்புகழ் நிறப்ப விளங்கிய கேள்வித், திறத்திற் றிரிவில்லர் அந்தணர் ஈண்டி, அறத்திற் றிரியா' (பரிபா. திரட்டு. 1·19·22); வேளவி - யாகம். ஒரு பலனை விரும்பிச் செய்வது; இ. பெயர் விகுதி. 'மெய்யுணர்ந்த போதம்' 'பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களாலன்றி உண்மையான் உணர்தல்'; இதனை வடநூலார் 'தத்துவ ஞானம்' என்பர்; (குறள். மெய்யுணர்தல் உரை); மெய்யுணர் வுடையாரே வீடு எய்துவர் என்ப. மெய்யுணர்வின் இலக் கணத்தை, 'எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு' என்ற திருக்குறளைக் கொண்டும், அதற்குப் பரிமேலழகர் வரைந்த விருத்தி யுரையைக் கொண்டும் உணர்க. 'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி' (குறள். 356); 'ஓர்த்துள்ள முள்ள துணரின் ஒருதலையாப் பேர்த்துள்ள வேண்டா பிறப்பு' (குறள். 357) என்பனவும் இங்கே காணத்தகும். 'உன்னைநீ யறிவாயாகில் உனக்கொரு கேடும் இல்லை' (கைவல்யம். பாயிரம்); பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும், செம்பொருள் காண்ப தறிவு' (குறள். 358). இந்த ஞானத்தைப் 'பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கிய ஞான மாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானம்' (பெரியபு. திருஞா. 70) என்பர். சாதித்தல் - நிறைவேற்றுதல். 'சாதியா தனவுமில்லை' (ஆரணிய. 32); 'அடியேன் பண்டென் சாதித்ததே' சடகோபரந். 7). இதிலிருந்து வந்த பெயர் சாதனை. 'சாதிப்பார் பெறும் பெரும்பதம்'; பரமபதமுமாம். சரியை, கிரியை, யோகம், ஞானம், பத்தி, பிரபத்தி முதலிய பல வழிகள் உளவாகலின், புறத்துள எப்பொருளானும் என்றார். இந்த மெய்யுணர்வினைத்தான் 'அபவாத நெறி' என்று கூறும் வேதாந்த நூல்கள் (கைவல்யம். தத்துவ) காண்க.

பி - ம். 1. மெய்யுணர்ந்தோர்.
2. புறந்துள வப்பொருளாலும்.
3. பெறும்பதங்களை; கைக்கொண்டு.
4. ஓதிக் கேட்பன, ஓதக் கேட்பது, கேட்பதும்.



இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**160. காடு பற்றியுங் கனவரை பற்றியுங் கலைத்தோல்
மூடு பற்றியும் முண்டித்து நீட்டியு முறையால்
வீடு பெற்றவர் பெற்றதின் விழுமிதென் றுரைக்கும்
மாடு பெற்றனன் மற்றினி யென்பெற வருந்தி.**

'காடு பற்றியும் - காடுகளை வசிக்கும் தலமாக ஏற்றும், கனவரை பற்றியும் - பெரிய மலைப்புறங்களை ஏற்றும், கலை தோல் மூடு பற்றியும் - மான் முதலிய விலங்குகளின் தோல்களை உடையாகக் கொண்டும், முண்டித்தும் நீட்டியும் - மழித்தும் சடையை நீளச் செய்தும், முறையால் - கிரமமாக, வீடு பெற்றவர் - (அவரவர்க்கேற்ற) முத்தி நிலையை அடைந்த பெரியோர்கள், பெற்றதின் - அடைந்ததைக் காட்டிலும், விழுமிது-மிகச்சிறந்தது, என்று உரைக்கும் மாடு பெற்றனன் - என்று புகழ்ந்து கூறும் செல்வத்தைப் பெற்றேன்; மற்று இனி வருந்தி என் பெற - இதனினும் வேறாக இனி உடலும் மனமும உளைந்து யான் பெறக்கடவது யாது?

இக்கவியில் பிரபத்தி நெறியின் பெருமை கூறப்பட்டுள்ளது. காட்டில் உறைதலும் மலைக்குகைகளில் வசித்தலும், மான் தோல் முதலியவற்றை யுடுத்தலும், தலைமயிரை மழித்தலும், சடையாக நீட்டலும் என்ற இவையனைத்தும் முத்தி பெறற்குப் பலரும் மேற்கொள்ளும் நெறிகள். இந்நெறிகளைக் காட்டிலும் பிரபத்தி நெறியே மிகச்சிறந்தது; அந்நெறியாகிய பெருஞ் செல்வத்தைப் பெற்றேன். இனியான் உடல் வருந்திப் பெறக்கடவது என் உள்ளது என்றான் பிரகலாதன்; (ஒப்பு):

> 'செய்தவ ராக வருந்தியும் தீர்த்தத் துறைபடிந்தும்,
> கைதவ ராகமுங் கற்றுமென் னுங்கடற் பார்மருப்பிற்
> பெய்த வராகனை மாலலங் காரனைப் பேரிலங்கை
> யெய்தவ ராகவவென் றேத்த நீங்கும் இருவினையே'
>
> (அழகரந்தாதி. 10);

'அருமறை யோதியென் பல்வேள்வி முற்றியென் ஆதரவால், நருமதை கங்கை முதற்புனல் மூழ்கியென் நாண்மலர்சேர், மருமலி சோலைக் கருவைப் பிரான் திரு மந்திரத்தை, ஒரு முறை யோதித் துறக்கம் பெறாத உணர்விலரே' (திருக். கருவை. கலித். அந்தா. 21); மூடு - போர்வை. மூடுதல் என்ற வினையினின்று வந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பெயர். முண்டித்து நீட்டியும் (ஒப்பு): 'மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம், பழிப்ப தொழித்து விடின்' (குறள். 280) 'சடையு முண்டமும் சிகையும்' (அரிச்.); மாடு - செல்வம். 'ஒருவற்கு மாடல்ல மற்றையவை' (குறள். 400);

பிரபத்தி என்பது எம்பெருமானே சரணம் என்று விடாது நினைந்து அவனருளுக்குப் பாத்திரமாகி மீளாக்கதி என்ற முத்தியை அடையும் நெறி. இராமாயணம் முழுவதுமே பிரபத்தி அல்லது சரணுகதி சாஸ்திரம் என்பர் அறிஞர். பால காண்டத்தில் தேவரும், அயோத்தியா காண்டத்தில் பரதனும், ஆரணிய காண்டத்தில் முனிவர்கள், காகாசுரன் முதலானவர்களும், கிட்கிந்தா காண்டத்தில் சுக்கிரீவனும், சுந்தர காண்டத்தில் பிராட்டியும், யுத்த காண்டத்தில் வீடணனும் முறையே சரண் புகுந்தனர் ஆகலின் அவ்வாறு கூறுவர். இன்னும் இதன் அருமை பெருமைகளை இப்படலத்தை யடுத்துவரும் விபீடணன் அடைக்கலப் படலத்தில் காண்க.

பி - ம். 1. கறைத் தோல்.

2. மூடி முற்றியும்; நீடியும்; நீட்டித்தும், முறைசால்.

3. விழுமிய தமைந்தேன், விழுமிய நியன்ற. 31

**161.** **செவிக ளாற்பல கேட்கில ராயினுந் தேவர்க்**
**கவிகொள் நான்மறை யகப்பொருள் புறப்பொரு ளறிவார்**
**கவிக ளாகுவர் காண்குவர் மெய்ப்பொருள் காலாற்**
**புவிகொ ணாயகற் கடியவர்க் கடிமையிற் புக்கார்.**

'காலால் புவிகொள் நாயகற்கு அடியவர்க்கு அடிமையில் புக்கார் - ஈரடியால் மூவுலகங்களையும் அளந்த திருமாலாகிய தலைமகனுடைய அடியார்களுக்கு அடிமைத் தொழில் புரியப் புகுந்தவர்கள், செவிகளால் பல கேட்கிலர் ஆயினும் - தங்களுடைய காதுகளால் பல நற்பொருள்களைக் கேளாதவராஞலும், தேவர்க்கு அவிகொள் நான் மறை அகப்பொருள் புறப்பொருள் அறிவார் - தேவர்களுக்கு அவிர்ப்பாகம் அளிப்பதற்கான பல மந்திரங்களைத் தம் அகத்துக் கொண்ட வேதங்களின் பூர்வார்த்த உத்தரார்த்தங்களை அறிவார்கள்; கவிகள் ஆகுவர் - வித்வான்களும் ஆவார்கள்; மெய்ப்பொருள் காண்குவர் - நிலை பேறுடைய உண்மைப் பொருளையும் காணப்பெறுவார்கள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

திருமாலடியவர்க்கு அடியாராகுவார், அவன் அருளாலேயே சகல ஞானங்களும் சித்திகளும் கைவரப் பெறுவர் என்பது இங்குக் குறிக்கப்பட்ட பொருள். 'திருமாலுக் கடிமை செய்' என்பது மூதுரை. 'கற்றலிற் கேட்டலே நன்று' (பழமொழி. 5) 'செல் வத்துட் செல்வம் செவிச் செல்வம்' (குறள். 411); என்று வருவன பற்றிக் கேள்வியைச் சிறப்பித்தார். கேட்பன பலவாகவும் பேசுவன சிலவாகவும் இருத்தல் வேண்டும் என்பது பற்றியே இறைவன் வாய் ஒன்றாகவும், காதுகள் இரண்டாகவும் படைத்தனர் என்ப. அகப்பொருள் - நான் மறைகளின் உட்பொருள். அகப்பொருள் புறப்பொருள்களை முறையே ஆந்த்ரார்த்தம், பாகியார்த்தம் என்பர் வடநூல் வல்லுநர். ஹவிஸ் என்ற வட சொல் அவியென வந்தது. அவி என்பதை வேள்விக்காக அவிக்கப்படுவது என்றும் கூறு வர். "செவி யுணர்விற் கேள்வி யுடையார் அவியுணவின் ஆன்றாரோ டொப்பர் நிலத்து' (குறள். 413). காலால் புவிகொள் நாயகர் - திருவிக்கிரம, அவதாரம் எடுத்த திருமால். 'ஓங்கி யுலகளந்த உத்தமன்' (திருப்பாவை. 3). இறைவன் பெருமையினும் அவன் அடியார் பெருமை சாலச் சிறந்ததாகலின் 'அடியவர்க் கடிமையிற் புக்கார்' எனப்பட்டது. அடியார் பெருமை 'தண்டறு சிந்தைத் தபோதனர் தாமகிழ்ந் துண்டது மூன்று புவனமும் உண்டது' இக்கருத்தைத் திருமந்திரம், ஏழாந்தந்திரம் மகேசுவர பூசைச் செய்யுட்கள் கொண்டுணர்க; 'அடியார்கடங்கள் அருட் குழாம் புகவிட்டு' (திருவாச. சென்னிப்பத்து. 7); 'தொழுதகை யினராகித் தூய்மலர்க், கண்கணீர் மல்குந் தொண்டர்க்கு, வழுவிலா மலர்ச் சேவடிக்கணஞ் சென்னி மன்னி மலருமே' (திருவாச. சென்னிப். 8) காண்க. 'அடியேனுன், அடியார் நடுவி லிருக்கும் மருளைப் புரியாய்' (திருவாச. கோயில் மூத்த 1); அடிமையிற் புக்கார்: 'குற்றேவலும் செய்து, மெய் கொண்டு கைக்கொண்டு கும்பிட்டு, அன்பு என்பது' கம்பர் பாடின ஆழ்வார் அந்தாதி என்பது பழையவுரை.

பி - ம். 1. செவிக ளாற்பலர்; கேட்கலர், தேவற்கு.

2. அறப்பொருள்: பிறப்பொருள்; அறிவோர்.

3. மேற்பொருள்; மெய்ப்பொருளல்லது, கல்லார்.

4. புவிகள்; புக்கான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



162. எனக்கும் நான்முகத் தொருவற்கும் யாரினு முயர்ந்த
தனக்கும் தன்னிலை யறிவரு மொருதனித் தலைவன்
மனக்கு வந்தனன் வந்தன யாவையு மறையோய்
உனக்கு மின்னதி னல்லதொன் றில்லென வுரைத்தான்.

'மறையோய் - அந்தணனே!, எனக்கும் - அடியேனுக்கும், நான்முகத்து ஒருவற்கும் - நான்கு முகங்களையுடைய பிரமனுக்கும், யாரினும் உயர்ந்த தனக்கும் - எல்லோர்க்கும் மேம்பட்ட முற்றறிவனை தனக்கும், தன் நிலை அறிவரும் ஒரு தனி தலைவன் - தன் உண்மை நிலை தெரிய ஒண்ணுதபடியுள்ள ஒப்பற்ற ஏக நாயகனை திருமால், மனக்கு வந்தனன் - என் மனத்து வந்து இடங்கொண்டுள்ளான்; (ஆகவே), யாவையும் வந்தன - எல்லாப் பொருள்களும் என் உள்ளத்து வந்து பொருந்தின; உனக்கும் - உனக்கும், இன்னதின் நல்லது ஒன்று இல் என உரைத்தான் - உனக்கும் இந்தப் பரம்பொருளைக் காட்டிலும் மேலான பொருள் ஒன்றுமில்லை' என்று சொல்லி முடித்தான் (பிரகலாதன்).

யாரினும் உயர்ந்த தனக்கும் என்றது - எல்லாரினும் உயர்ந்த தானும் தன் குண மறியமாட்டான் ஆகலின்; 'தனக்குந் தன்றன்மை யறிவறியானை' (நம்மாழ்வார்); 'உன்னைநீ தானும் உணராதாய்' (வி. பா. கிருட்டினன். 36). மனத்துக்கு வந்தன என்றது, மனக்கு வந்தன எனத் தொகுத்தது; 'மாறுநீர் வையக்கணி' (குறள். 701) என்ற இடத்துப்போல. இச் செய்யுளும் முன் செய்யுளையே தழுவி இறைவன் அருள் உண்டெனில் எல்லாம் எளிதின் வந்தெய்தும் என்பதை விளக்குகின்றது. என்னை உய்வித்தேன் (25) என்றது, முதல் இச் செய்யுள் ஈறுகத் திருமாலின் உயர்வையும், அவன் திருநாமத்தின் மகிமையையும் பிரகலாதன் அவ்வாசிரியனுக்கு உபதேசித்தான் என்க. 'மனக்கு வந்தன - பெருமாள் திருவுள்ளத்துக்கு உவந்த வார்த்தையாகச் சொல்லுகின்றேன்' என்பது பழையவுரை.

பா - ம். 2. வேறுள சராசரத்திற்கும்; கடவுள்.
3. மனக்கு வந்தன, வந்தனை; சொல்லுவன்; வந்தன வந்தன.
4. நல்லதொன் றியாதென.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## அந்தணன் இரணியனிடம் சென்று கூறல்

163. மாற்றம் யாதொன்று முரைத்திலன் மறையவன் மறுகி
ஏற்ற மென்னெனக் கிறுதிவந் தெய்திய தென்னு
ஊற்ற மில்லவ னோடினன் கனகனை யுற்றான்
தோற்ற வந்ததோர் கனவுகண் டனனெனச் சொன்னான்.

மறையவன் - அந்தணன், (பிரகலாதன் கூறியவற்றிற்கு), மாற்றம் யாதொன்றும் உரைத்திலன் - மறுமொழியாக ஏதொன்றும் சொல்லாமல், மறுகி - மனம் கலங்கி, 'என் ஏற்றம் எனக்கு - (இனி) எனக்கு என்ன பெருமை யுள்ளது? இறுதி வந்து எய்தியது என்னு - என் வாழ்விற்கே முடிவு நேர்ந்தது' என்று நினைந்து, ஊற்றம் இல்லவன் - நெஞ்சில் வன்மை சிறிதும் இல்லாத கோழையனாகி, ஓடினன் - ஓடி, கனகனை உற்றான் - இரணியனை அடைந்து, 'தோற்ற - காணும்படியாக, வந்தது ஓர் கனவு கண்டனன் என சொன்னான் - நிகழ்ந்த ஓர் கனவு கண்டனன்' எனக் கூறினான்.

மாற்றம் - வார்த்தை; (ஆரணிய. 562); சுந்தர. 328. ஊற்றம் - வன்மை; 'ஊன்றின பரிக்கவோ ரூற்றம் பெற்றிலான்' (ஆரணிய. 246). ஏற்றம் - உயர்ச்சி. பிரகலாதனுக்கும் தனக்கும் நேர்ந்த நிகழ்ச்சிபோன்று இரணியன் ஆட்சியில் நனவில் நிகழக்கூடியதன்றாகலின், கனவு கண்டதாகக் கூறினான்.

பி - ம். 2. எய்திய தென்ன.
4. கனவு கண்டேனெனச், கனவு கண்டாலெள.



164. எந்தை கேளெனக் கிம்மைக்கு மறுமைக்கு மியம்பச்
சிந்தை யாலிறை நினைத்தற்கு மடாதன செப்பி
முந்தை யேநினைந் தென்பொருள் முற்றுமென் றுரைத்தான்
மைந்த னேதிலன் வேதமென் றுரைத்தனன் வணங்கி.

(அஃது என்ன என்று இரணியன் கேட்க, அந்தணன்), 'எந்தை கேள் - என் தந்தை போன்றவனே கேட்பாயாக! எனக்கு இம்மைக்கும் மறுமைக்கும் இயம்ப - (உன் மகன்), எனக்கு இம்மை மறுமைப் பயன்களை எண்ணிப் புகல்வதற்கும், இறை சிந்தையால் நினைத்தற்கும் - சிறிதளவேனும் மனம் கொண்டு எண்ணுதற்கும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அடாதன செப்பி - அடுக்காத சொற்களை மொழிந்து, 'முந்தையே நினைந்து - முன்பே ஒருவரும் சொல்லிக் கொடுக்காமல், (தானாகவே, தன் உள்ளுடை உணர்ச்சியால்) எண்ணி, என் பொருள் முற்றும் என்று உரைத்தான் - யரன் சொல்லும் பொருள் அமையும் என்று கூறி; மைந்தன் ஓதிலன் வேதம் என்று வணங்கி உரைத்தனன் - உங்கள் மகன் வேதங்கள் கற்கவில்லை' என்று பணிந்து பகர்ந்தான்.

அடாதன - பொருந்தாத; இம்மை மறுமைகளிலும் சொல்லுதற்குத் தகாதன வெனினுமாம். செப்பி - சொல்லி; செப்புதல் என்ற சொல் சங்க நூல்களிலோ, சிந்தாமணியிலோ காண்டற்கில்லை. இப் பதம் தெலுங்கு மொழியில் பெரிதும் பயில்கின்றது. பரிபாடலிலும், சூடாமணி நிகண்டிலுப், பெருங்கதையிலும் இச் சொல் காணப்படுகிறது; இதனைத் தெலுங்குச் சொல் என்பர். 'செய்ததும் வாயாளோ செப்பு' (பரி. 6·67); 'செப்பிய மாற்றம் பொய்ப்ப தன்றால்' (பெருங். மகத. 24 ; 228). 'முந்தையே நினைந்தேன் - 'வேதத்தை முன்பே அறிந்தேன்' என்று சொன்னான் என்றான். பழைய உரை. முந்தை - முன்பு; 'வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்' (புறநா. 10).

பி - ம். 2. நினைதற்கு ; அடாதெனச்.
3. உன்பொருள் ; றுரைத்து.
4. மறையென், வேதமொன் ; றுரைத்திலன் ; மறுகி. 35

## இரணியன் வினா

**165.** **அன்ன கேட்டவ னந்தண நந்தமக் கடாத**
**முன்னர் யாவரு மொழிதரு முறைமையிற் படாத**
**தன்ன துள்ளுறு முணர்ச்சியாற் புதுவது தந்த**
**தென்ன சொல்லவ னியம்பிய தியம்புதி யென்றான்.**

அன்ன கேட்டவன் - அத்தகைய சொற்களைக் கேட்ட இரணியன், 'அந்தண - பிராமணோத்தமனே! நம் தமக்கு அடாத - நம் போன்றவர்கள் சொல்லுதற்குத் தகாதனவும், முன்னர் யாவரும் மொழிதரும் முறைமையில் படாத - முன்பு எவர்களும் சொல்லுதற்குப் பொருந்தாதனவும், தன்னது உள் உறும் உணர்ச்சியால் புதுவது தந்தது - தன் மனத்துள் எழுந்த உணர்வின் விளைவாகப் புதிதாகத் தானே படைத்ததுமாய், அவன் இயம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பியதுசொல் என் - அவன் சொல்லிய சொற்களை, இயம்புதி என்றுன் - சொல்வாயாக' என்று மொழிந்தான்.

நந் தமக்கு - நம் போன்ற அசுரர்களுக்கு. உள்ளுறும் உணர்ச்சி - பிரமஞானம்.

பி - ம். 1. கேட்டன ; அந்தணர்க்கடாத ; அன்னகேட்டலு மிரணிய னவன்முக நோக்கி.

2. முன்னம் ; மோதரு ; முறைமையாற் படாத.

3. புன்மை யுள்ளுடை யுணர்ச்சியால் புகுவது தந்த ; சமைத்த. 36

## அந்தணன் விடை

166. அரச னன்னவை யுரைசெய வந்தண னஞ்சி
சிரத லங்கரஞ் சேர்ந்திடச் செவித்தொளை சேர்ந்த
உரக மன்னசொல் யானுனக் குரைசெயி னுரவோய்
நரக மெய்துவ னுவும்வெந் துகுமென நவின்றுன்.

அரசன் அன்னவை உரை செய - மன்னனுன இரணியன், அந்த வார்த்தைகளைப் புகல, அந்தணன் அஞ்சி - பிராமணன் பயந்தவனுய், கரம் சிரதலம் சேர்ந்திட - கைகள் இரண்டும் தலை மேற் கூப்பியபடி யிருக்க, 'செவி தொளை சேர்ந்த உரகம் அன்ன சொல் - என் செவித் துவாரங்களில் பாம்பு நுழைந்தாற்போன்ற சொல்லை, யான் உனக்கு உரை செயின் - அடியேன் உன்பால் எடுத்துக் கூறினுல், உரவோய் - வன்மை மிக்கவனே! நரகம் எய்துவன் - நரகத்திற்கே சென்றுவிடுவேன் ; நாவும் வெந்து உகும் என நவின்றுன் - அச் சொல்லைச் சொன்ன அடியேன் நாக்கும் வெந்து விழுந்துவிடும்' என்று பகர்ந்தான்.

மீளாக் கதியென்று கூறும் பரமபதத்தைத் தரவல்ல ஸ்ரீமந் நாராயணன் திருநாமம் உச்சரிக்கப்படின் தான் நரகம் எய்துவன் என்றும், நாவானது வெந்துகும் என்றும் அந்தணன் கூறியது, இரணியனை அடுத்து வாழும் தன்னுடைய வாழ்க்கை நிலையையும், வயிற்று பிழைப்பையும் கருதி என்க.

பி - ம். 1. அரசன் அஃதுரை செய்தலும் ; அந்தணன் நடுங்கி ; மறையவ னஞ்சி.

2. கரம் சேர்த்திட, சேர்த்திடாச், சேர்த்தினன்.

3. உரைசெயின் யானுனக்கு.

4. நரக மெய்துமென், மெய்துமின் ; நாவும்வெந் திடுமென. 37

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இரணியன் பிரகலாதனை வரவழைத்து வினுதல்

167. கொணர்கென் மைந்தனை வல்விரைந் தென்றனன்
[கொடியோன்
உணர்வில் நெஞ்சின னேவலர் கடிதினி னோடிக்
கணனி னெய்தினர் பணியெனத் தாதையைக் கண்டான்
துணையி லான்றனைத் துணையென வுடையவத் தூயோன்.

கொடியோன் - (அது கேட்டு) கொடுமை பூண்டவனான இரணியன், 'என் மைந்தனை வல் விரைந்து கொணர்க என்றனன் - என் புதல்வனை மிகவும் விரைவாக என்முன் அழைத்துகொண்டு வாருங்கள்' என்று கட்டளை யிட்டான்; (உடனே), உணர்வு இல் நெஞ்சினன் ஏவலாளர் - நல்ல ஞானமில்லாத அழுக்கேறிய மனத்தை யுடைய அந்த இரணியனுடைய பணியாளர்கள், கடிதினின் ஓடி - விரைவாக ஓடிச்சென்று, கணனின் எய்தினர் - ஒரு கணத்தில் அவனை அடைந்து, 'பணி என - நீ அங்கு வர வேண்டும் என்பது உன் தந்தையிட்ட கட்டளை' யென்று சொல்ல, துணையிலான் தனை துணை என உடைய அத் தூயோன் - தன் துணை யொருவரும் தன்னில் வேறில்லாதவனான திருமாலையே தனக்கு உற்ற துணையாகப்பெற்ற பிரகலாதன், (தாமதமின்றி வந்து), தாதையை கண்டான் - தன் தந்தையைப் பார்த்தான்.

கொணர்க என்பதன் அகரவீறு குறைந்தது. வல்விரைந்து - ஒருபொருட் பன்மொழி. தக்கன தகாதன அறியா மனத்தினன் ஆகலின், 'உணர்வில் நெஞ்சினன்' எனப்பட்டான். வல்விரைந்து எனக் கட்டளையிடவே, ஏவலர் கடிதின் ஓடினர் என்றார். 'கணனின் எய்தினர் பணியென, தாதையைக் கண்டான்' என்ற தொடரில் மெய்ப்பாடு தோன்றச் சுருக்கிக் கூறிய நயம் பாராட்டற் பாலது. இறைவன் ஆணையாதலின் காலம் தாழ்த்தற் கில்லை; (ஒப்பு): 'உற்றக லாமுன், கற்ற குரங்கைப், பற்றுமின் என்றான், முற்ற முனிந்தான்' (சுந்தர. 1228); 'பணியெனத் தாதையைக் கண்டான்'; அயோத்தியா. மந்திரப் படலத்து 51-ஆம் செய்யுளோடு ஒப்பிடுக. 'துணையிலான் தனை' (ஒப்பு): 'தன் துணை ஒருவருந் தன்னில் வேறிலான்' (கிட்கிந்தா. 260); 'ஒப்பிறையும் பெறலரிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஒருவா' (ஆரணிய. 61); 'உவமை நீங்கிய தோன்றல்' (ஆரணிய. 148); 'தன்னொப்பா ரில்லா தானை' (அப்பர் திருத்தாண்டகம்).

பி - ம். 1. கொணர்க, கொணர்தி.

2. உனரு நெஞ்சுடை; காவலர் ஏவலாற், ஏவலரோடி.

3. னெய்தியே மொழிந்தனர்; அருளெனத்.

4. துணையென வுடையவன்; தொழுதான். 38

168. தொழுத மைந்தனைச் சுடர்மணி மார்பிடைச் சுண்ணம்
எழுத வன்பினி னிறுகுறத் தழுவிமா டிருத்தி
முழுது நோக்கிநீ வேதியன் கேட்கிலன் முனியப்
பழுது சொன்னசொல் என்னசொல் பகருதி யென்றான்.

தொழுத மைந்தனை - தன்னை வந்து வணங்கிய மகனை, சுடர் மணி மார்பிடை சுண்ணம் - ஒளிமிக்க அழகிய தனது மார்பில் பூசப்பட்ட சாந்து, எழுத - அந்தப் புதல்வன் மேனியிற் படும்படி, அன்பினில் இறுகுற தழுவி - அன்புடன் இறுகத் தழுவிக் கொண்டு, மாடு இருத்தி - அருகில் அமரச் செய்து, முழுதும் நோக்கி - (பேரழகனான அவனைத்) தலை முதல் கால் வரையில் நன்கு பார்த்து, 'நீ - நீ, வேதியன் கேட்கிலன் முனிய - அந்தணன் கேட்கமாட்டாமல் வெகுளும்படி, பழுது சொன்ன சொல் என்ன சொல் - குற்றம் பொருந்தியதாகச் சொல்லிய சொல் என்ன சொல்? பகருதி என்றான் - அச் சொல்லைக் கூறுக' என்றான்.

சுண்ணம் - சூர்ணம் என்ற வடசொற்றிரிவு என்பர். இறுகுறத் தழுவி என்பது அளவிறந்த அழகினைக் குறித்தது. பிரகலாதன் பேரழகன் ஆதலின் தலை முதல் கால்வரை அவனை நோக்கினான்; (ஒப்பு): 'பண்புற நெடிதுநோக்கி' (ஆரணிய. 278). கேட்கிலன் - முற்றெச்சம். பழுது - பயனின்மையுமாம்; 'பழுது பயமின்றே' (தொல். சொல். உரி. 26). மாடு - பக்கம்; 'மாடு பற்றியிடங்கர் வலித்திட' (கிட்கிந்தா. 338); 'ஊர்தரு குரங்கின் மாடே' (கிட்கிந்தா. 309). வேதியனை அப்புறப்படுத்தி இரணியன் மகனைக் கேட்கின்றான் என்க.

பி - ம். 2. அன்பினு லிறுகப் புல்லி; அன்பினே டிறுகுறத்.

3. கேட்கலின்.

4. பழுது சொன்னசொ லன்னது, சொன்னசொ லென்னது, சொல்லிய தென்னது. 39

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



169. சுருதீ யாதிய தொடங்குறு மெல்லையிற் சொல்லும்
ஒருவன் யாவர்க்கும் நாயகன் திருப்பெய ருணரக்
கருதக் கேட்டிடக் கட்டுரைத் திடர்க்கடல் கடக்க
உரிய மற்றிதின் நல்லதொன் றில்லென வுரைத்தான்.

'சுருதி ஆதிய - வேதம் முதலானவைகளை, தொடங்குறும் எல்லையில் - சொல்லத் தொடங்கும் அளவில், சொல்லும் ஒருவன் - (பிரணவ வடிவன்) எனச் சொல்லப்பெறும் ஒப்பற்ற தலைவனும், யாவர்க்கும் நாயகன் - எல்லோர்க்கும் தலைவனுமான அவனது, திரு பெயர் - அழகிய திருநாமமேதான் (அடியேன் பகர்ந்தது); உணர கருத கேட்டிட கட்டுரைத்து - மனத்தால் சிந்தித்து, உள்ளுணர்வால் பிறர் கேட்கும்படி உறுதியாகக் கூறி, இடர் கடல் கடக்க உரிய - துன்பக் கடலைத் தாண்டுதற்குரிய, மற்று இதின் - வேறு இந்தத் திருநாமத்தைப் பார்க்கிலும், நல்ல தொன்று இல்லது என உரைத்தான் - மிகச் சிறந்தது பிறிது ஒன்று இல்லை' என மொழிந்தான்.

சுருதி - கேட்கப்படுவது; எழுதாக்கிளவி என்பர்; வேதம். இது கேள்வி யெனவும் வழங்கும். ஆதிய என்றதனால், உபநிடதங்கள், சாத்திரங்கள், ஆகமங்கள், புராணங்கள் என்ற அனைத்தையும் கொள்க. 'ஒருவன் யாவர்க்கு நாயகன்' (ஒப்பு): 'பூத நாயகன்' (யுத்த. அங்கதன் தூது. 21); 'ஏனை நிற்பவும் திரிபவு மிரங்கின வெவையும், ஞானநாயகன் உருவமே யாகலி னடுங்கி' (யுத்த. பிரமாத்திர. 203); 'உயர்வற வுயர்நல முடையவள்' (திருவாய். 1·1·1); 'ஈடும் எடுப்புமில் ஈசன்' (திருவாய். 1·6·3); 'மூவராகிய மூர்த்தியை மூவர்க்கும் முதல்வன்' (திருவாய். 3·6·2); 'உணர கருத கேட்டிட' என்பதில் கேள்வி விமரிசம் பாவனை என்ற மூன்றும் அடங்குதல் காண்க. இடர் கடல் கடக்க - உருவகம்; 'இடர்க் கடலுக் கோடம்' திருக்கருவை. வெண்பா அந்தாதி); 'இப் பிறவிக் கடல் கடந்தேன்' (ஆரணிய. 61); 'சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை, யிடராழி நீங்குகவே யென்று' (திவ்ய. இயற்பா. 1). இனி சுருதியாதியில் தொடங்குறும் ஒருவன் என்றும், எல்லையில் சொல்லும் ஒருவன் என்றும் தனித்தனிக் கூட்டி நான்மறைகள் தொடங்கும்போதும், முடிக்கும்போதும், ஹரி, ஓம் என்று கூறும் மரபுபற்றிக் கூறியதுமாம். பிரகலாதன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அஷ்டாக்ஷர மந்திரத்தைத் தான் கூறியதைக் குறிப்பாக உணர்த்த, அதனை அறியமாட்டாத இரணியன் மேலும் வினவத் தொடங்கினான் என்பது அடுத்த செய்யுளால் விளங்கும்.

பி - ம். 1. சுருதி யாதியிற், யோதிய, யாவையும், யாயது; துடங்குறு; வேலையைச் சொன்னேன், வேலையிற் சொன்னேன், மெல்லையிற் சொன்ன, வேலையிற் சொன்ன.

2. குரைக்கக்.

4. மற்றிநி; னல்லதொன், மற்றிந னில்லதொன்று. 40

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

என்னும் வாசகம் கேட்டலு மெழுந்துமின் றிறைவன்
பொன்னின் வார்கழல் பணிந்துவாய் புதைத்தரும் [புதல்வன்
மன்னர் மன்னயான் பழுதொன்று முரைத்திலன் மாபால்
உன்னு முண்மையை யுரைத்தனன் கேளென வுரைப்பான்.

## இரணியன் மேலும் வினுதல்

170\. தேவர் செய்கைய னங்ஙன முரைசெயத் தீயோன்
தாவில் வேதியன் றக்கதே யுரைசெயத் தக்கான்
ஆவ தாகுக வன்றெனி னறிகுவ மென்றே
யாவ தவ்வுரை விளம்புதி விரைவினி னென்றான்.

(அசுரர் வழியில் பிறந்திருந்தும்), தேவர் செய்கையன் - தேவர்களுக்கு இயற்கையா யமைந்த ஒழுகலாற்றை யுடைய பிரகலாதன், அங்ஙனம் உரை செய - அவ்வாறு மொழிந்தாைக, தீயோன் - கொடியவனான இரணியன், 'தா இல் வேதியன் - குற்ற மற்ற அந்தணன், தக்கதே உரை செய தக்கான் - தகுதியான தொன்றையே சொல்லக்கூடியவன்; ஆவது ஆகுக - நிகழ்வது நிகழட்டும், அன்று எனின் - மகன் கூறியது தக்கதன் றென்றறிந் தால், அறிகுவம் - மேலே நடத்த வேண்டுவதை ஆராய்வோம்', என்று - என்று எண்ணி, (புதல்வனைப் பார்த்து), 'யாவது அ உரை - நீ சொன்னதாகக் (அந்த ஆசிரியன்) கூறிய அந்தச் சொல் என்ன?, விரைவினின் விளம்புதி என்றான் - விரைவில் சொல்லுக' என்றான். ஏ - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வந்த வழி அசுர வழியாக இருந்தும் தேவர்போன்று தூய செய்கையான் என்றார்; ஒப்பு: 'வேடர் குலப்பெருந் தவத்தான் வந்து கொள்கையின் உம்பர் மேலார்' (பெரியபு. கண்ணப்ப. 180); தவறு எனினும் என்றான்; ஒப்பு: 'கருநிறத் தோர்பால், வெளித்து வைகுதல் அரிதென வவருரு மேவி, ஒளித்து வாழ்கின்ற தருமமன் னூன்றனை யுற்றான்' (சுந்தர. 231) என்று வீடணனைக் கூறியது காண்க. 'தாவில் வேதியன்..... தக்கான்' என்ற தொடரினின்று இரணியனுக்கு அந்த அந்தண ஆசிரியன் மாட்டிருந்த நன்மதிப்புப் போதரும்; அத்துணை விநயமாக ஆசிரியன் நடந்துகொண்டான் என்பது முன்னர், 'உரகமன்ன சொல்' (26) என்றும், 'பிரகலாதனைப் பாவி' (24); என்றும், 'முந்தை வானவர் யாவர்க்கு முதல்வற்கு முதல்வன் உந்தை' (26); என்றும் கூறியன கொண்டுணர்க. தனது அகில உலக நாயகத்துக்குக் குறைவு செய்யும் சொல்லாதல் கூடுமோ என்ற கவலையால் விளம்புதி விரைவி னென்றான். யாவது, 'ஒன்றறி சொன்முன் யாதென் வினவிடை ஒன்றிய வகரம் வருதலும்' (தொல். எழுத்து. 173) என்றபடி யாது என்ற சொல்லினிடையில் வகரவுயிர் வந்தது.

பி - ம். 1. தேவ; தேவின் செய்கையைச் சிறுவனு முரைசெயத்.

2. யுரையெனத்; தருவன், தக்கோன், தக்கான்.

3. ஆவ தாகுவ தன்றெனி, தாகுவ னன்றெனி, அறிகுவ னன்றே, அறிகுவ மன்றே.

4. ஏவ தெவ்வுரை, யியம்புதி யியம்புதி யென்றான்; யாவ திவ்வுரை யியம்பிய தியம்புதி யென்றான். 41

## பிரகலாதன் எட்டெழுத்தின் பெருமைகளை விளக்கல்

171. காமம் யாவையுந் தருவது மப்பதங் கடந்தால்
சேம வீடுறச் செய்வதுஞ் செந்தழல் முகத்த
ஓம வேள்வியி னுறுபத முய்ப்பது மொருவன்
நாம மன்னது கேள்நமோ நாராய ணாய.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

'காமம் யாவையும் தருவதும் - விரும்பிய உறுதிப் பொருள் கள் எல்லாவற்றையும் உதவுவதும், அ பதம் கடந்தால் - அந்த நிலையைத் தாண்டின், சேமம் வீடு உற செய்வதும் - நன்மையைத் தரும முத்தியை அடையுமாறு புரிவதும், செம் தழல் முகத்த - சிவந்த அக்கினியிலே (நெல் முதலியவற்றைக் கொண்டு சொரியும்), ஓமம் வேள்வியின் உறுபதம் உய்ப்பதும் - ஓமத்துடன் இயைந்த வேள்விகளால் அடையப்பெறும் சுவர்க்கம் முதலிய பதவிகளில் புகுவிப்பதும், ஒருவன் நாமம் - ஒப்பற்ற திருமாலின் திருப்பெயரே யாகும்; கேள் - (அதனை நான்) சொல்லக் கேள்; அன்னது நமோ நாராயணாய - அது (பிரணவத்துடன் இயைந்த) நமோ நாராயணாய என்னும் திருஅஷ்டாக்ஷர மஹாமந்திரம் என்பது.

யாவையும் - அறம் பொருள் இன்பம் என்ற இம்மைக்குரிய உறுதிப் பொருள்கள். இங்கே, 'குலந்தரும் செல்வந் தந்திடும்' (திவ்ய. பெரியதிரு. 1·1·9) என்ற திருமங்கையாழ்வாருடைய பாசுரக் கருத்துக் குறிக்கொள்ளத் தகும். வீடு என்றது, 'அந்தமி லின்பத் தழிவில் வீடு'; எந்த இடம் சென்று சேர்ந்தால் மீட்டும் இப் பூவுலகிற்கு வருவதின்றோ அது. ஓம வேள்வியின் உறுபதம் - இது பதமுத்தி யன்றிப் பரமுத்தி யாகாது; புண்ணியம் உள்ளவரை அமரபோகம் துய்த்து, 'க்ஷீணே புண்யே மிருத்யு லோகம் விசந்தி' (பகவத்கீதை.) என்றபடி மீட்டும் பிறப்பதான இத்தகைய இன்பத்தை ஜீவன் முக்தர்கள் விழையார். 'ஆனாத செல்வ வரம்பையர்கள் தற்சூழ, வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்' (திவ்ய. பெருமாள். 4 : 2); 'கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு' (திருவாச. திருச்சதகம். 2) என்றமை காண்க. ஓம வேள்வி; 'அக்னிஷ்டோமம்' முதலியன. இங்குப் பிரணவ மின்றி, 'நமோ நாராயணாய' என்று ஏழு எழுத்துக்களே கூறப் பட்டன. முன் 24-ஆவது கவியில் ஓ நமோ நாராயணாய என்று, மறைத்து வைத்தற்குரிய மகாமந்திர மாதலின், திருவெட்டெழுத் தைச் சிறிது பின்னப்படுத்திக் கூறினர் என்று கூறப்பட்டது. 'அப்பதம் கடந்தாற் சேமவீடுறச் செய்வது'; 'ஈதல் அறம் தீவினைவிட் டீட்டல் பொருள் எஞ்ஞான்றும், காதலிருவர் கருத்தொருமித் தாதரவுப், பட்டதே யின்பம், பரனைநினைந் திம்மூன்றும், விட்டதே பேரின்ப வீடு' (தனிப்பா. ஔவை.); என்றது காண்க. திருவெட்டெழுத்தின் பெருமையைப் பிள்ளைப் பெருமாளையங்கார் இயற்றிய திருவரங்கத்துமாலை 81-ஆம் செய்யுட் கொண்டும் உணர்க. 'புண்ணியம் காமம் பொருள் வீடு பூதலத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தோர்க் களிப்பான், எண்ணியங் காமன் திருத்தாதை' (திருவேங்கட அந்தாதி. 38).

பி - ம். 1. யாவதுங்.

2. விடுமச்; செந்தழ லழுந்த, முகத்தின்.

3. னுறுபயன்; துய்ப்பது, முகப்பது.

4. கேட்டியோ; நாமமே நமோ நாராய ணயவென் பதுவே. 42

172. மண்ணி னின்றுமேல் மலரய னுலகுற வாழும்
எண்ணில் பூதங்கள் நிற்பன திரிவன விவற்றின்
உண்ணி றைந்துள கரணத்தி னூங்குள வுணர்வின்
எண்ணு கின்றதிவ் வெட்டுழுத் தேபிறி தில்லை.

'மண்ணின் நின்று - பூவுலகிலிருந்து, மேல் மலர் அயன் - மேலே உள்ள தாமரை மலரில் வாழும் பிரமதேவனுடைய, உலகு உற வாழும் - சத்தியலோகம் வரையில் பொருந்தி வாழ்கின்ற, எண்ணில் பூதங்கள் - அளவற்ற ஐம்பெரும் பூதங்களில், நிற்பன திரிவன இவற்றின் - நிலைத்திணை இயங்குதிணை என்ற பொருள் களின், உள் நிறைந்துள கரணத்தின் ஊங்கு உள - உள்ளே அமைந்துள்ள அந்தக்கரணத்தினிடையே யுள்ள, உணர்வின் - உள்ளுணர்வின், எண்ணுகின்றது இவ் வெட்டெழுத்தே - கருதுவது இந்த அஷ்டாக்ஷரமேயாம்; பிறிது இல்லை - இஃது ஒப்பது வேறு யாதுமில்லை.

இவ்வெட்டெழுத்து - ஓம் நமோ நாராயணாய என்பது. கரணம் - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற அந்தக் கரணங் கள். இது, எல்லாப் புவனங்களிலுமுள்ள சராசரங்களின் அந்தக் கரணங்களின் உள்நின்று அவற்றை இயக்குவன என்றான். 'இல்லக விளக்கது' என்று தொடங்கும் அப்பர் சுவாமிகள் தேவாரத்தையும் காண்க.

பி - ம். 1. மண்ணொ டாதிமற் றுலகமும் மலரயன் முதலா.

3. உண்ணிறைந்தன, ணிறைந்துறை; கருமத்தி; உணர்வு, உணர்வால்.

4. எண்ணுகின்றதங் கெட்டு. 43

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**173.** முக்கட் டேவனும் நான்முகத் தொருவனு முதலா
மக்கட் காறுமிம் மந்திர மறந்தவ ரிறந்தார்
புக்குக் காட்டுவ தரிதிது பொதுவுறக் காண்பார்
ஒக்க நோக்கின ரல்லவ ரிதனிலை யுணரார்.

'முக்கண் தேவனும் - மூன்று விழிகளை யுடைய சிவபெருமானும், நான் முகத்து ஒருவனும் - சதுர்முகனுன பிரமனும், முதலா - முதலாக, மக்கள் காறும் - மானிடவர் வரையில், இம் மந்திரம் மறந்தவர் இறந்தார் - இந்த மந்திரத்தை மறந்தவர்கள் (உயிருடன் இயங்கினும்) நடைப்பிணமே யாவர்; புக்கு காட்டுவது அரிது - காட்டுவேன் என்று மேற்கொண்டு விளக்குவது அருமை; இது பொது உற காண்பார் - இதனை நடுவு நிலைமையுடன் காண்பவராகிய ஞானிகள், ஒக்க நோக்கினர் - இதன் பெருமையைப் பொருத்தமாகக் கண்டுள்ளனர்; அல்லவர் - ஞானமில்லாதவர், இதன் நிலை உணரார் - இதனுடைய உண்மை இயல்பினை அறிந்து தெளியமாட்டார்.

முக்கண் தேவன் - சிவபெருமான். முக்கண் - சந்திரன் சூரியன் அங்கி. முன் பாட்டில், 'மண்ணின்மே னின்று மலரயனுலகுற' என்று புவனங்களைக் கூறி, இங்கு மாற்றி, 'நான்முகத் தொருவனும் முதலா மக்கட்காறு' மென்று அவற்றில் வாழ்பவர்களைக் கூறினுன். இம் மந்திரம் என்றது மேலே குறித்த திருவெட்டெழுத்தினை. அதனிலை உணரார்; எவ்வகைப்பட்ட பிரமாணங்களை மேற்கொண்டு முயன்ருலும் அவன் உண்மை வடிவைக் காட்டுவதருமை. 'அப்படிய னந்நிறத்தன் அவ்வண்ணத்தன் அவனருளே கண்ணுகக் காணின் அல்லால், இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணுதே' (தேவா. 1235 : 10); 'படியுள்ரைத் தெடுத்துக் காட்டும் படித்தன்று படிவம்..... இலக்கண மொழியும்' (சுந்தர. 527); ஏதுக்களாலும் எடுத்துக் காட்டாலும், சோதித்தல் வேண்டாம் சுடர்விட்டுளன் எங்கள் சோதி' என்பன காண்க. ஒக்க நோக்கினர்; 'ஓடும் செம்பொனும் ஒப்பவே நோக்கும் பிரம ஞானிகள்; இவர்களை,

'வித்யாவினய ஸம்பன்னே ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி
சுனிசைவ ச்வபாகேச பண்டிதா சமதர்சின:' (பகவத். 5 : 8).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'சீதோஷ்ண ஸுகதுக்கேஷு ததாமானபமானயோ:'

'யுக்த இத்யுச்யயே யோகீஸமலோஷ்டாச்ம காஞ்சன:'

(பகவற். 6, 7-8).

என்ற ச்லோகங்கள் கொண்டும் காண்க.

மறந்தவர் உயிருடன் கூடி இயங்கினும் நடைப்பிணமே யாவார் என்பார், இறந்தார் என்றார்; நல்லுணர்வற்றவர் என்பது கருத்து. ஒக்க நோக்கினர்: இன்ப துன்பங்களைச் சமமாக நோக்கும் நிலையினை உடையார்; ஒப்பு: 'மெய்த் திருப்பதமே வென்ற போதினும், இத்திருத் துறந்தேகென்ற போதினும், ஒத்திருக்கும் நிலை'; 'மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத்தின் பண்பும்'; 'அடல்வலிச் சலகன் என்பான், என்றதோர் தண்மை வெம்மை யிடைச்சமங் கொண்டாற்போல' (குசேலோ. வைகுந்த. 45) என்றதும் காண்க.

பி - ம். 1. முதலோர், முதல்வோர்.
2. மறந்தவர் மறந்தார், மறந்திலர் வாழ்வார், மறைந்தார்.
3. தரிதென, நரிதது; பொதுவற; கண்டார்; காண்போர்.
4. ஒக்க நோக்கிடு நல்லவர்; தன்னிலை; யோர்வார். 44

174. தோற்ற மென்னுமத் தொல்வினைத் தொடுகடற் சுழிநின்
றேற்று நன்கல னருங்கலன் யாவர்க்கு மினிய
மாற்ற மங்கல மாதவர் வேதத்தின் வரம்பில்
தேற்ற மெய்ப்பொருள் தெரிந்தமற் றிதினிலை சிறந்த.

தோற்றம் என்னும் அ தொடு கடல் தொல்வினை சுழி நின்று-பிறவி என்கின்ற பிரசித்தமான தோண்டப்பட்ட கடலின் பழவினையாகிய சுழலிலிருந்து, ஏற்றும் - உயிர்களை முத்தி என்ற கரைக்கண் கொண்டு செலுத்துகின்ற, நல் கலன் - சிறந்த மரக்கலமாக உள்ளதும், யாவர்க்கும் அரு கலன் - எல்லோர்க்கும் அடைதற் கருமையான அரிய அணிகலமாக உள்ளதும், யாவர்க்கும் இனிய மங்கல மாற்றம் - அனைவர்க்கும் இனிமையான மங்கல மொழியாக உள்ளதும், தெரிந்த மா தவர் - முக்காலமு முணரவல்ல பெருந் தவமுனிவர்கள், வேதத்தின் வரம்பில் தேற்றம் மெய்ப் பொருள் - நான்மறைகளின் முடிவான உபநிடதங்கள் மூலமாகத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தெளிந்தெடுத்துத் தந்த உண்மையான சித்தாந்தம், சிறந்த மற்று இலை இதின் - இதனைக்காட்டிலும் உயர்ந்தது வேறு இல்லை.

தோற்றம் - பிறவி; அம் விகுதிபெற்ற தொழிற்பெயர். வினை காரணமாகத் தோற்றமாதலின், 'தொல்வினை' என்றார். வினை அநாதி யாகலின் தொல்வினை எனப்பட்டது. தொடு கடல் - அகழப்பட்ட கடல்; 'சகரர் தொட்டலாற் சாகரம்' (பால. அகலிகை. 43). தொடுதல் - அகழ்தல்; 'தொட்டனைத் தூறு மணற்கேணி' (குறள். 396). வினை - நல்வினை தீவினைகள். நல்வினையும் பிறவிக்கு ஏதுவாகலின் அதனையும் கூட்டியே கூறினர். நல்வினை தீவினைகளை முறையே பொன் விலங்கும் இருப்பு விலங்குமாகக் கூறுவர். கலன் - இரண்டில் முன்னது மரக்கலம், பின்னது அணிகலம். 'நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும், கெடுநீரார் காமக் கலன்' (குறள். 605)-ல், இந்தக் கலன் என்ற சொற்கு, விரும்பிப் புனையும் ஆபரணம் என்றும், ஏறும் மரக்கலம் என்றும் உரையாசிரியர் கூறுதல் காண்க. 'தோற்ற மென்னுமத் தொடுகடல் தொல்வினைச்சுழி என்றும், இனிய மங்கல மாற்றம் என்றும் மொழி மாற்றுக. திருவெட்டெழுத்தை மரக்கலமாகக் கூறியது ஒப்ப மணிவாசகப் பெருமானும், 'தனியனேன் பெரும்பிறவிப் பௌவத்து' எனத் தொடங்கும் தமது திருவாசகப் பாசுரத்தில், 'அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை' என்றது காண்க. 'கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும், நற்றுணை யாவது நமச்சி வாயவே' (தேவா. 1182 : 1) என்றதும் காணத்தகும். மற்றும் தேவா. 466 : 6-ம் காண்க. 'இருவினைப் பாசமு மலக்க லார்த்த லின், வருபவக் கடலின்வீழ் மாக்களேறிட, அருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல், ஒருகன்மே லேற்றிடல் உரைக்க வேண்டுமோ' (பெரியபு. திருநாவு. 139) என்பதும் இங்கு அறியத்தகும். இங்குப் பிரகலாதன் கூறியதை, 'நாவினுக் கருங்கலம் நமச்சிவாயவே' என்ற அப்பர் சுவாமிகளின் கருத்தோடு ஒப்பிடுக. திருமந்திரத்தைப் பலபடியாக உருவகம் செய்தது பல படப்புணைவணி.

பி - ம். 1. தொல்வினைச் சுடுகடற்.

2. அருங்கலம், வான்கலம்.

3. மாற்று; மாதவ, மாதவம்; மரபிற், வைப்பிற்.

4. தேற்றும்; அப்பொருள்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



175. **உன்னு யிர்க்குமென் னுயிர்க்குமிவ் வுலகத்தி னுள்ள**
**மன்னு யிர்க்குமீ துறுதியென் றுணர்வுற மதித்துச்**
**சொன்ன திப்பெய ரென்றன னறிஞரிற் றூயோன்**
**மின்னு யிர்க்குவே லிரணியன் றழலெழ விழித்தான்.**

அறிஞரில் தூயோன் - அறிவுள்ளவர்களில் தூய்மையான அறிவுடைய பிரகலாதன், 'உன் உயிர்க்கும் - உனது உயிர்க்கும், என் உயிர்க்கும் - எனது ஆன்மாவிற்கும், இ உலகத்தில் உள்ள மன் உயிர்க்கும் - இந்தப் பூவுலகில் உள்ள நிலைபெற்ற எல்லா உயிர்களுக்கும், ஈது உறுதி என்று உணர்வு உற மதித்து - இதுவே சிறந்த பயனை அளிக்கவல்லது என்று அறிவிலே பொருந்துமாறு ஆராய்ந்து, சொன்னது இ பெயர் என்றனன் - கூறியதாகும் இத் திருநாமம்' என்று பகர்ந்தான்; (இவ் வார்த்தைகளைக் கேட்ட அளவிலே), மின் உயிர்க்கும் வேல் இரணியன் தழல் எழ விழித்தான் - மின்னல்போன்று ஒளியை வெளி விடுகின்ற வேலையுடைய இரணியன், கண்களில் நெருப்புப் பொறிகள் கிளம்பும்படி (சினத்துடன்) விழித்து நோக்கினான்.

உணர்வுற மதித்துச் சொன்ன இப்பெயர்; ஒப்பு: 'தன் உள்ளுறு முணர்ச்சியாற் புதுவது தந்தது என்ன சொல்' (இரணிய. 36). இது உறுதி: 'மும்மைசா லுலகுக் கெல்லாம் மூலமந் திரத்தை' (கிட்கிந்தா. 300); 'நன்மையும் செல்வமு நாளும் நல்குமே, தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே, சன்மமு மரணமு மின்றித் தீருமே, இம்மையே ராமவென் றிரண்டெ ழுத்தினால்' (கம்ப. பாயிரம்); 'ஈதைகள் தீர்க்கும் நாமத் திராமனை' (யுத்த. நாகபாசப். 275). அறிஞரிற் றூயோன்: 'அறிஞரி னறிஞன்' (இரணியன். 19); 'ஞான நாயகன்' (இரணியன். 23); 'தேவர் செய்கையன்' (இரணியன். 41). மின்னுயிர்க்கும் வேல் என்று கூறினமையின் இரணியன் வெகுளி காரணமாக அவன் மைந்தனுக்கு நிகழவிருக்கும் வேதனைகள் ஒருவாறு குறிக்கப்பட்டமை காண்க. அறிஞரில் அறிஞனது அமைதியான கூற்றும், இரணியனது வெகுளிச் செயலும் என்ற இவைகளுடன் கண்ணபிரான் விசுவரூபம் காட்டி நிற்கவும், துரியோதனன் மதியாமலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அவரைத் தொழாமலும் நின்ற அசுர இயல்பு இங்கே ஒப்பு நோக்கத்தகும். (வில்லி. பா. கிருட்டினன். 214).

பா-ம். 1. உலகத்திற் பிறந்த.
2. மன்னுயிர்க்குமீ துறுதியா மென்பதை ; மறிந்தேன்.
3. சொன்ன விப்பெயர், விப்பொருள் ; தூயான்.
4. அழலெழ, தழலென ; எரியுற. 46

## இரணியன் வெகுண்டு வினவுதல்

176. அற்றை நாண்முதல் யானுள நாள்வரை யப்பேர்
சொற்ற நாவையுங் கருதிய மனத்தையுஞ் சுடுமென்
ஒற்றை யாணைமற் றியாருனக் கிப்பெய ருரைத்தார்
கற்ற தாரொடு சொல்லுதி விரைந்தெனக் கனன்றான்.

(இரணியன் பிரகலாதனை நோக்கி), 'அற்றை நாள் முதல் - அந்தப் பழங்காலந்தொட்டு, யான் உள நாள் வரை - யான் வாழ்வுற்றிருக்கும் இந்தக் காலம் வரையில், அப்பேர் சொற்ற நாவையும் கருதிய மனத்தையும் சுடும் என் ஒற்றை ஆணை - (நீ சொன்ன) இந்த நாமத்தை உச்சரித்த நாவினையும், எண்ணிய மனத்தையும் சுட்டொழிக்கும் என்னுடைய ஏகச் சக்கிராதிபத்தியம் ; (அவ்வாறாக), உனக்கு யார் இப் பெயர் உரைத்தார் - உன்னிடம் இந்தப் பெயரைச் சொல்லியவர் யார்? கற்றது ஆரொடு - யாருடனிருந்து இதனைக் கற்றுக்கொண்டாய் ; விரைந்து சொல்லுதி என கனன்றான் - தாமதமின்றிக் கூறுவாயாக' என்று சொல்லிச் சினந்தான். மற்று - அசை.

சொற்ற - சொல் என்றதன் அடியாகப் பிறந்த பெயரெச்சம். ஒற்றை ஆணை ; 'உரைசெய் திகிரி தனையுருட்டியொருகோ லோச்சி யுலகாண்ட'; பிற மன்னர் எவரும் உரிமைகொளற் கில்லாத தனிச் செங்கோலுமாம்'; ஒப்பு : 'போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅய்' (புறநா. 8) ; 'நாமந் தன்னதே யுலகங்கள் யாவையும் நவில' (இரணியன். 8) என்றனவும் காண்க. 'பொதுவறக் கோனடத்தி' (திருக்கருவை. கலித்.) ; மற்றும், கலித். 68 ; நெடுநல். அவதாரிகை ; 'கொடியு முரசுங் கொற்றவெண் குடையும், பிறர்கொளப் பொறாஅன் றானேகொண்டு' (சிதம்பர. மும்மணிக். 25) ; இதனை ஏகச்சக்கிராதிபத்யம் என்றும் சார்வ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பௌமம் என்றும் வழங்குவர் வடநூலார். உத்தமமானதும் உய்விக்க வல்லதுமான இறைவன் திருநாமத்தை உரைக்கவும் மனமில்லானாய், 'இப்பெயர்' என்றான். முன் கவியில் தழல் எழ விழித்தான் என்று புறமெய்ப்பாடு கூறப்பட்டது. இங்கு 'கனன்றான்' என்றது, அவனது உள்ளக் கொதிப்பைக் கூறுகின்றது. ஆர் - யார் என்பதன் மரூஉ; ஆரொடு - வேற்றுமை மயக்கம்.

பி - ம். 1. இற்றை; நாள்வரை யிப்பேர்.

2. வாய்மையும், வாயையும்; கருதின.

3. யாருனக் கிப்பொருள்.

4. விரைந்தெனக் கென்றான். 47

177. முனைவர் வானவர் முதலினர் மூன்றுல கத்தும்
எனைவ ருள்ளவர் யாவரு மென்னிரு கழலே
நினைவ தோதுவ தென்பெயர் நினக்கிது நேர
அனைய ரஞ்சுவர் மைந்தநீ யாரிடை யறிந்தாய்.

(மேலும் அவன்), 'முனைவர் - எல்லோருக்கும் முன்னவரான மும்மூர்த்திகளும், வானவர் முதலினர் - தேவர்களும் முதலாக, மூன்று உலகத்தும் - மூன்று உலகங்களிலும், எனைவர் உள்ளவர் - எத்துணைவர் உள்ளார்கள், யாவரும் - அவர்கள் எல்லோரும், நினைவது என் இரு கழலே - எண்ணுவது என் அடிகளையே; ஓதுவது என் பெயர் - உச்சரிப்பது எனது பெயரையே; (ஆகலின்), அனையர் - மேலே கூறப்பட்டவர்கள், நினக்கு இது நேர அஞ்சுவர் - உனக்கு இந்தப் பெயரைப் போதிப்பதற்குப் பயப்படுவர்; (ஆகலின்), மைந்த - மகனே!, நீ யாரிடை அறிந்தாய் - நீ வேறு எவரிடம் இதனைத் தெரிந்துகொண்டனை?

முனைவர்: 'முன்னோனை முனைவன்' என்பது ஓர் சொல் விழுக்காடாம்; முன் என்பதனை முன்னையென்பவாகலின்' என்பர் நச்சினார்க்கினியர்; ஆதலின், முனைவர் என்பதற்கு முன்னையவர் என்று பொருள் தரப்பட்டது. கழல் - கருவி யாகுபெயர். நேர்தல் - உபதேசித்தல். வெகுளி யெழுந்தும் மகனிடம் அன்புக் குறைவு இன்றென்பது காட்ட, மைந்த, என்றான். இச் செய்யுள்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அடுத்ததனோடு இயைந்து 179-இல் உள்ள 'வெகுண்டான்' என்பதனோடு வினைமுடிவு கொள்ளும்.

பி - ம். 1. முனிவர் ; முற்றுலகத்தும்.
2. இளையர்.
3. நினைவ தேத்துவ, தேற்றுவ ; நினக்கிது நிகழ்ந்தற்கு ; நேரார், நேர்வார்.
4. அனைவ ரஞ்சுவ ; அஞ்சனி. 48

178. மறங்கொள் வெஞ்செரு மலைகுவான் பன்முறை வந்தான்
கறங்கு வெஞ்சிறைக் கலுழன்றன் கடுமையிற் கரந்தான்
பிறங்கு தெண்டிரைப் பெருங்கடல் புக்கினம் பெயரா
துறங்கு வான்பெய ருறுதியென் றுருனக் குரைத்தார்.

'மறங்கொள்-வீரமிகுதியால் மேற்கொள்ளப்படும், வெம் செரு மலைகுவான் பல்முறை வந்தான் - கடுமையான போரின்கண் என்னுடன் போர்புரிதற்கு அநேக தடவைகள் அவன் வந்தான்; கறங்கு வெம் சிறை கலுழன் தன் கடுமையிற் கரந்தான் - ஒலிக்கின்ற வேகம் அமைந்த சிறகுகளையுடைய கருடனுடைய வேகத்தால் ஓடி ஒளிந்தான்; பிறங்கு தெள் திரை பெரும் கடல் புக்கு - விளங்குகின்ற தெள்ளிய அலைகளையுடைய பரந்த கடலில் புகுந்து, இனம் பெயராது உறங்குவான் பெயர் - இன்னம் அதனை விட்டு நீங்காமல் துயில்கின்ற ஒருவன் பெயரை, உறுதி என்று யார் உனக்கு உரைத்தார் - நிலையான பயனை அளிப்பதென்று உனக்குப் போதித்தவர் யார்?

மறங்கொள் என்று மனத்தெழுந்த வீரத்தையும் வெஞ்செரு என்று போர்க்களத்தின் கடுமையையும் குறித்தான். பன்முறை வந்தான் கலுழன்றன் கடுமையிற் கரந்தான்; இதனை இரணியனுக்கு அஞ்சியே திருமால் ஓடிப் பாற்கடலில் ஒளித்ததாகக் கூறப்பட்டது. எனினும் இச் செய்தி வில்லி பாரதத்தில் சராசந்தனுக்கு அஞ்சித் திருமால் அவதாரமான கண்ணன் இங்ஙனம் செய்ததாகக் குறிக்கப் பெற்றுள்ளது; (வி. பா. இராசசூய. 21). கண்ணன் அவதாரம் காலத்தாற் பிற்பட்டது; ஆகலின், இவ்வாறு பின் அவதாரத்தில் நிகழ்ந்த ஓர் செய்தியை ஆசிரியர் அறிந்தவராதலின், அதனை இரணியன் கூற்றாக அமைத்தனர் போலும். இவ்வாறு காலத்தாற் பிற்பட்ட செய்திகளை முன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கூட்டிக் கூறுவது புலவர் மரபு. இவ்வாசிரியரே அநுமன் இலங்கை யெரியூட்டும்போது அவன் வாலில் வைத்த தீயைப் போல எரியூட்டப்பெற்ற பிரகலாதன் மேனி குளிர்ந்தது என்றல் காண்க. (யுத்த. இரணிய. 86). பிரகலாதன் செய்தி முன்யுக நிகழ்ச்சி; அநுமன் வரலாறு பிந்தியது ஆதலும் காண்க. இரணிய னுடனேயே திருமால் பன்முறை பொருது பாற்கடலில் புக்கு ஒளித்தனன் என்றற்கு விளக்கமான வரலாறு கிட்டுமேற் கொள்க. கறங்குதல் - ஒலித்தல்; 'கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்' (சீவக. 248); 'மன்றம் கறங்கமணப்பறை பறையாயின' (நாலடி. 23). கடுமை - விரைவு. வெஞ்செரு என்றதிற் கேற்ப வெஞ்சிறை என்றது காண்க. கலுழன் - கருடன். பிறங்கு தெண்டிரை - இடையறாது மேல்மேல் வந்து குவிகின்ற அலை யெனினுமாம். தன்கீழ்ப் பணியாற்றும் ஆசானும், தனக்கு அடங்கி யொழுகும் மூன்றுலகத்தவரும் உரைத்திருக்கமாட்டார் கள் என்ற துணிவுள்ளவ னாதலின், 'ஆருனக் குரைத்தார்' என்றான்.

பி - ம். 2. கறங்கின ; வெஞ்சினக் கலுழன் ; கடந்தான். கழிந்தான்.
3. புக்கபின், புக்கனன்.



179. பரவை நுண்மண லெண்ணினு மெண்ணரும் பரப்பிற்
குரவர் நங்குலத் துள்ளவ ரவன்கொலக் குலைந்தார்
அரவி னாமத்தை யெலியிருந் தோதினு லதற்கு
விரவு நன்மையென் துன்மதீ விளம்பென வெகுண்டான்.

'பரவை நுண் மணல் எண்ணினும் - கடலினுடைய சிறு மணலைக் கணக்கிட்டு எண்ண முடிந்தாலும், எண்ண அரும் பரப்பின் - எண்ணி வரையறை செய்தற்கியலாத பெருந் தொகை யினரான, நம் குலத்து உள்ளவர் குரவர் - நமது வழியில் தோன்றிய பெரியோர் பலர், அவன் கொல குலைந்தார் - அந்தத் திருமால் கொல்ல அதனால் இறந்துபட்டனர்; அரவின் நாமத்தை- தனக்குப் பிறவிப் பகையாகிய நல்ல பாம்பின் பெயரை, எலி இருந்து ஓதினால் - எலி அமர்ந்து உச்சரித்தால், அதற்கு விரவு நன்மை என் - அந்த எலிக்கு வந்து சேரக்கூடிய நலம் என்ன? துன்மதி விளம்பு என வெகுண்டான் - கெட்ட புத்தி யுள்ளவனே! சொல்க' எனச் சினந்து கூறினான் (இரணியன்).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பரவை - பரந்திருத்தல்பற்றிக் கடலுக்குக் காரணக்குறி. நுண் மணல் எண்ணுதல் மிகவும் அரிய செயல்; ஒப்பு: 'தொல்லை நம்பிறவி யெண்ணிற் றொடுகடல் மணலுமாற்ற எல்லைய' (சீவக. 270); 'முந்நீர்க் கடற்கரையின் நொய்ம்மணலை எண்ணி யளவிடலாம்' (சேக்கிழார் புராணம். 51). குரவர்: ஐம்பெருங் குரவரில் தாதை மூதாதைகளைக் குறித்து நின்றது; 'அரசனு வாத்தியான் தாய்தந்தை தம்முன், நிகரில் குரவ ரிவர்' (ஆசாரக். 16). எலிக்கு அரவு பிறவிப்பகை; 'ஒலித்தக்கால் என்னும் உவரி யெலிப்பகை, நாக முயிர்ப்பக் கெடும்' (குறள். 763). பாம்பின் பெயரை எலி சொல்வதால் யாது பயன் நிகழும்? அதுபோன்று குலப்பகைவனை ஒருவனது நாமத்தை உச்சரிப்பதால் எய்தும் நன்மையென் என்றான். இருந்து ஓதுதல் - நின்றுவிடாது கூறுதல். துன்மதி - வடசொல். அண்மைவிளி.

பா - ம். 1. பரப்பின், பரப்பால்.
2. எங்குலத், என்குலத்.
3. எலியிருந் தெண்ணினுல்.
4. விளம்பெனு. 50

180. வயிற்றி னுள்ளுல கேழினே டேழையும் வைக்கும்
அயிர்ப்பி லாற்றலென் னநுசனை யேனமொன் றாகி
எயிற்றி னாலெறிந் தின்னுயி ருண்டவ னாமம்
பயிற்ற வோநினைப் பயந்தது நானெனப் பகர்ந்தான்.

(மேலும் அவன்), 'உலகு ஏழினோடு ஏழையும் - உலகங்கள் பதினான்கினையும், வயிற்றினுள வைக்கும் - தன் வயிற்றினுள்ளே அடக்க வல்லவனும், அயிர்ப்பில் ஆற்றல் என் அநுசனை - ஐயத்திற்கு இடனில்லாத ஒருதலையான வன்மைவாய்ந்த என் தம்பியான இரணியாட்சனை, ஏனம் ஒன்று ஆகி - வராகவதாரம் எடுத்து, எயிற்றினால் எறிந்து இன் உயிர் உண்டவன் நாமம் - வளைந்த தந்தங்களாற் கிழித்து அவனது இனிய உயிரைப் பருகின திருமாலின் பெயரை, பயிற்றவோ - சொல்லிப் பழகுதற் காகவோ, நான் நினை பயந்தது என பகர்ந்தான் - நான் உன்னை மகனாகப் பெற்றது?' என்று மொழிந்தான்.

முதலடியினால் திருமாலுக்கும் இரணியாக்கனுக்கும் உள்ள சமத்துவம் கூறப்பட்டது. திருமால் தன் வயிற்றில் ஈரேழுலகங்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கனையும் அடக்குதல்போன்று அந்த அசுரனும் அடக்கினன் என்றான். ஒப்பு: 'மன்வயிற்றி லடக்கிய மாயனைத் தன்வயிற்றின் அடக்கும் தவத்தினுள்'; 'மூவுலகு முண்டுமிழ்ந்த முதல்வ' (திவ்ய. திருமாலை. 1); 'படைத் துடைத்து உண்டுமிழ்ந்த பார்' (திவ்ய. இயற்பா. 1, 2). அயிர்ப்பு: ஆரணிய. 599; சுந்தர. 52. அநுஜன் - உடன்பிறந்தவன்; வடசொல். மூன்றாவது அடியிற் குறித்த வரலாறு: பூமியை ஓர்கால் சுருட்டிக்கொண்டு பாதலம் புகுந்த இரணியாக்கனைத் திருமால் வராக வுருவெடுத்துச் சென்று கொன்று தனது கொம்பினால் அப்பூமியை குத்தி யெடுத்துக் கொண்டு மீட்டும் விரித்தருளினன் என்பது. இவ்வவதாரம் திருமாலின் பத்து அவதாரங்களில் மூன்றாவது. அநுசன் - தம்பி. இரணியாட்சனை இரணியன் தம்பியென்றே கம்பர் பின்னும் கூறுவர். இப்படலம் 121-ஆம் செய்யுளைக் காண்க. இரணியாட்சனைத் தமையனாகக் கூறுவாருமுளர். இச் செய்யுளின் பாடபேதம் காண்க.

பி - ம், 2. அயர்ப்பு; ஆற்றலெம் மன்னனை, லென் னன்னனை, லெம் மன்னனை.
4. வோவுனை; நினை வனர்த்தது; பகருதி யென்றான்; பகர்வான். 51

181. ஒருவன் யாவர்க்கு மெவற்றிற்கு முலகிற்கு முதல்வன்
தருதல் காக்குதல் தவிர்த்தலென் றிவைசெயத் தக்கான்
கருமத் தாலன்றிக் காரணத் தாலுள்ள காட்சி
திருவி லீமற்றி தெம்மறைப் பொருளெனத் தெரிந்தாய்.

'திருவிலீ - நல்வாழ் வற்றவனே! யாவர்க்கும் எவற்றிற்கும் உலகிற்கும் - எல்லா உயர்திணைப் பொருள்கட்கும் எல்லா அஃறிணைப் பொருள்கட்கும், (சரம் அசரங்கட்கும், இவ்விரு வகைப் பொருள்களும் தங்குதற் கிடமான) உலகங்கள் அனைத்தினுக்கும், முதல்வன் - தலைவனும், தருதல் காக்குதல் தவிர்த்தல் என்று - படைத்தல் காத்தல் அழித்தல் என்று கூறப்படும், இவை செய தக்கான் - இந்த முத்தொழில்களைப் புரியத் தகுதி வாய்ந்தவனும், ஒருவன் - நான் ஒருவனே; கருமத்தால் அன்றி - இவ்வாறு நேர்முகமாக நடைபெறும் தொழில்கொண்டு அறிவதல்லாமல், காரணத்தால் உள்ள காட்சி - காரணப் பொருளைப்பற்றி அநுமானத்தால் காணும் இந்த அறிவு, எ மறை பொருள் என தெரிந்தாய் - எந்த வேதத்திற் கூறப்பட்ட முடிவான பொருள் என நீ அறிந்துள்ளாய்? மற்று - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காட்சிப் பிரமாணமே சிறந்தது என்றும், அநுமானம் சிறப்புடையதன் றென்றும் வாதித்தான். தன் உயர்வைக் காட்சியால் கண்டு துணியவேண்டு மென்று இரணியன் பிரகலாதனுக்குக் கூறினன் என்க. யாவர்க்கு மெவற்றிற்கும் முதல்வன்; ஒப்பு: 'ஊழிமுத னயகன்'; (யுத்த. ஒற்றுக்கேள்வி. 4); 'மூவர்க்கும் தலைவராய மூர்த்தியார்' (யுத்த. கும்ப. 149); மற்றும், சுந்தர. 187, 510; 607, 633 காண்க. காட்சிப் பிரமாணத்தையே கொண்டு ஆகமம், அநுமானங்களைப் புறக்கணிப்பவ னகலின், 'கருமத்தாலன்றிக் காரணத்தாலுள்ள காட்சி' என்றான். காட்சிப் பிரமாணம் ஒன்றே கொள்பவர் உலோகாயதர் எனப்படுவர். காட்சி - அறிவு; காரணம் இங்கே அநுமானம். 'ஒருவன் என்றது ஏக நாயகன் முத்தொழிற்காக மூவரைக் காட்டித் தான் காரணப் பொருளா யிருப்பவன் காட்சிக் குடையவன்; அந்தக் கருமத் தலைவரை எந்த வேதப் பொருளென் றறிந்தாய்; எனவே அத்துவித மார்க்கமான மாயாவாதத்தைச் சொன்னன்' என்பது பழைய உரை.

பி - ம். 1. எவ்வுலகத்திற்கும், முதல்வர்க்கு; மிறைவன்.
2. தருதல் காத்திவை, காத்தவை; தக்கோன்.
3. காரண னுளனெனும்.
4. மற்ற, மற்றச்; செம்மறைப்; நுணிவென; தெளிந்தாய். 52

182. ஆதி யந்தங்க ளிதனின்மற் றில்லைபே ருலகின்
வேத மெங்ஙன மங்ஙன மவைசொன்ன விதியால்
கோதி னல்வினை செய்தவ ருயர்குவர் குறித்துத்
தீது செய்தவர் தாழ்குவ ரிதுமெய்ம்மை தெரியின்.

'வேதம் எங்ஙனம் - நான்மறைகள் எவ்வாறு பகர்ந்தனவோ, அங்ஙனம் - அவ்வாறே, அவை சொன்ன விதியால் - அவைகளால் வகுக்கப்பட்ட வழிமுறை பிசகாமல், கோது இல் நல்வினை செய்தவர் உயர்குவர் - குற்றமற்ற நல்ல தொழில்களை ஆற்றியவர் மேன்மை யுறுவர்; தீது குறித்து செய்தவர் தாழ்குவர் - கொடிய செயலை வேண்டும் என்றே எண்ணிப் புரிந்தவர் இழிந்தநிலை யுறுவர்; தெரியின் இது மெய்ம்மை - ஆராய்ந்து பார்க்குமிடத்து இஃது உண்மை; பேர் உலகின் - பரந்த உலகத்தில், இதனின் - இஃதன்றி, ஆதி அந்தங்கள் மற்று இல்லை - முதலாயுள்ள பொருளும் இறுதியாயுள்ள பொருளும் தனித்து ஒன்றுமில்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆதியந்தம் - கடவுள் வாழ்த்து ; பாயிரம். இச் செய்யுட் கொண்டு இரணியன் பெருந்தவம் செய்து பல வரங்களும் பெற்றவனுகலின், ஆகமப் பிரமாணத்தை ஏற்றுப் பேசுகின்றுன். ஆனுல், கர்மமே எல்லா மேன்மையையும் தரும் என்பது அவன் வழக்கு ; அடுத்த செய்யுளிலும் அவன் இதனையே வற்புறுத்தி, மூவரும் கர்ம பலன்களால் உயர்ந்தவர்களே ; அக் கருமங்களைத் தான் அவர்களைவிட அதிகமாகச் செய்துள்ளமையால், அவர்களுக்கும் மேலான பதவியைத் தான் அடைந்துவிட்டதாக அவன் கூறுகின்றுன். இது வேதத்தின் கர்ம காண்டத்தை நம்பி, ஞான காண்டத்தை இகழும் அவன் செயலைக் காட்டுவதாகும். இங்கு வேதம் சொன்ன விதி என்றுன் ; ஆனுல், 'மறைகளும் முனிவர் யாரும் மலர்மிசை யயனு மற்றைத், துறைகளின் முடிவு மெல்லாம் துணிபொருள் திருமால்' என்பது ஆணவத்தடிப்பால் அவன் உள்ளத்து ஏறவில்லை ; 'தொல்லை நான்மறை வரன்முறை துணிபொருட் கெல்லாம் எல்லை கண்டவன்' (இரணியன். 28) ; என்று பிரகலாதன் அறிவுறுத்தியும் அவன் மனம் கொள்ளவில்லை. உயர்குவர், தாழ்குவர் ; 'வினையி னுல்வரும் மேன்மையுங் கீழ்மையும்' (கிட்கிந்தா. 344) ; 'நல்லறஞ் செய்வோர் நல்லுலக டைதலும், அல்லறஞ் செய்தோர் அருநர கடைதலும்' (மணி. 16 : 88-89) ; என்ற கருத்தைக் கொண்டவன் இரணியன் என்பது காட்டப்பெற்றது. நல்வினை புரிவதிலும் சில குற்றங்கள் நிகழக் கூடுமாகலின், 'கோதில் நல்வினை' எனப்பட்டது. ஒருவன் உள்ளத்தில் ஒரு செயல் நன்றென்று படலாம் ; ஆனுல், அதுவே தீமையை விளைப்பதும் கூடும்; இது கொண்டேதான் மணிவாசகப் பெருமான், 'நன்றே செய்வாய் பிழை செய்வாய், நானே விதற்கு நாயகமே' என்றும், 'என்னதோவிங் கதிகாரம்' (திருவாச. குழைத்த. 6, 7) என்றும் கூறினர் என்க. குறித்து என்பதற்குத் தாம் செய்யும் தீவினை அவலம் விளைக்கும் என்று அறிந்தும் என்று பொருள்படுதல் காண்க.

பி - ம். 1. அதனின்மற் ; றில்லையவ் வுலகில்.

2. வேத மங்ஙனம், வேத மந்தனை ; மிவை சொன்ன.

3. உயருவர் ; குறித்த, குறிக்குந்.

4. செய்குவர் ; ரழல்குவர், ஆழ்குவர் ; தெரியில் ; தேரின்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


183. செய்த மாதவ முடைமையின் அரியயன் சிவனென்
றெய்தி னூர்பத மிழந்தனர் யான்றவ மியற்றிப்
பொய்யி னயகம் பூண்டலி னினியது புரிதல்
நொய்ய தாகுமென் றுரு மென் காவலி னுழைவார்.

'செய்த மா தவம் உடைமையின் - முன்பு ஆற்றிய பெரிய தவங்கள் ஆற்றியுள்ளமையின், அரி அயன் சிவன் என்று எய்தினூர் - திருமால் பிரமன் சிவபிரான் என்று நின்று, ஆக்கல் காத்தல் அழித்தல் என்ற தொழில்களை முறையே அடையப் பெற்றூர்கள்; யான் தவம் இயற்றி பொய் இல் நாயகம் பூண்டலின் - நான் அவர்களைக் காட்டிலும் பெருந் தவங்கள் செய்து, மெய்யான தலைமையை ஏற்றதனுல், பதம் இழந்தனர் - அவர்கள் தத்தம் பதவிகளை இழக்கப் பெற்றனர்; (மேலும்), அது புரிதல் நொய்யது ஆகும் என்று - இந் நிலையில் அந்த முத்தொழிலை யும் புரிவது (பெரிய தவத்தனுன இந்த இரணியன் முன்பு,) தமக்குத் தாழ்வினைத்தரும் என்று நினைந்து, ஆரும் என் காவலின் நுழைவார் - அவர்கள் எல்லோரும் என் கட்டுப்பாட் டிற்குள் ளாயினர்.

இச் செய்யுள் தம் கருமங்களாலேயே ஆன்மா ஏற்றம் அடை யும் என்பதை வற்புறுத்தி, கடவுள் என்ற ஒன்று இல்லை என்று கொள்ளும் இரணியனின் மதம் கூறப்பெற்றது காண்க. 'தவத் தின் பெருமை: 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ மீண்டு முயலப் படும்' (குறள். 265). நொய்ம்மை - எளிமை; ஆரணிய. 604. தாம் மேம்பாடுற்று வாழ்ந்ததையும் இரணிய னிடம் தாம் புகுந்து வாழ்வதையும் ஒருசேர அறிந்தவர்கள் காணின் நன்று என்று மறைவாக இருந்து வதிவார், என்பது தோன்ற 'நுழைவார்' எனப்பட்டது.

பா - ம். 1. செய்தே தவம்.

3. பூண்டனன்; இனியிது, இனியன.

4. நொய்த லாகுமென், நொய்தி லாவதென்; றெவருமென்; றேவலி னேரால்; உழல்வார்; நொய்தி னவதென் றேருமென்,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


184. வேள்வி யாதிய புண்ணியந் தவத்தொடும் விலக்கிக்
கேள்வி யாவையுந் தவிர்த்தன னிவைகிளர் பகையைத்
தாழ்வி யாதன செய்யுமென் றனையவர் தம்பால்
வாழ்வி யாதினி யெவ்வலி யுரங்கொண்டு வாழ்வார்.

'இவை - இந்த யாகம் முதலிய கிரியைகள், கிளர் பகையை - மனக்கிளர்ச்சி கொண்ட விரோதிகளுக்கு, தாழ்வியாதன செய்யும் என்று - இழிவுபடாத மேம்பாட்டினை உண்டுபண்ணும் என நினைந்து, வேள்வி ஆதிய புண்ணியம் தவத்தொடும் விலக்கி - யாகம் முதலான புண்ணியக் கிரியைகளையும் தவத்தையும் புரிய விடாமல் தடுத்து, கேள்வி யாவையும் தவிர்த்தனன் - வேத சாத்திர ஆராய்ச்சிகள் அனைத்தையும் தடுத்துவிட்டேன்; (ஆகலின், இவ்வாறு நான் செய்துவிட்டமையால் அச்செய்கை), அனையவர் தம்பால் - அந்த மும்மூர்த்திகள் இடத்து, வாழ்வி யாது - நல்வாழ்வைப் புரியாது; இனி - இனிமேல், எ வலி உரம் கொண்டு வாழ்வார் - எந்த வன்மை அல்லது ஆதரவைக்கொண்டு வாழப்போகின்றார்கள்?

இச் செய்யுளில் வேள்விப் பயன் முதலியவற்றை அத் தேவர்கள் பெறுமல் அவர்களைத் தான் மெலிவித்த முறையை இரணியன் விளக்குகின்றான். 'தரையின்மீது போய் மாயவன் உருவெனச் சாற்றும், அரிய வேள்வியே முதலிய வறங்களை யழித்துப், புரியு மந்தணர்ப் பொன்றுறப் புரிமினோ' (பாக. 7.2.2) என இரணியன் தானவரை நோக்கிக் கூறியது காண்க. தவத்தானும் வேள்வியானும் நிகழக்கூடிய பெரும்பயனைத் தானே நேர்முகமாகத் தெரிந்தவனாகலின் வேள்வி யாதிய புண்ணியம் என்றான். புறம் கொண்டு என்ற பாடம் கொண்டு என்புறம் கண்டு அல்லது என்னை முறியடித்து என்பது பொருளாகவும் கொள்ளலாம். 'வேதமும் வேள்வியும் விலக்கி வேதியர்க் கேதமும் இமையவர்க் கிடரு மீட்டிய பாதகர்' (யுத்த. விபீடண 75); என்ற வரிகள் இங்குக் காணத்தகும்.

பி - ம். 1. வேள்வி யாகியப், யாகிய.
2. தவிர்ந்தன ; னிவர்கிளர் ; வகையைத்.
3. றினையவர் ; றெனியவர் ; களைந்தனன்.
4. வாழ்வியாதைய வெவ்வலி, யாதவ ரெவ்வலி, யாதய லெவ்வழி ; வாழ்வாய் ; வாழ்விலாதினி யெவ்வலி யுரங்கொண்டு வாழ்வார். 55


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

அழிவில் வச்சிர யாக்கையென் னருந்தவத் தடைந்தேன்
ஒழிவி லாயிர கோடிகொள் ளுகம்பல கழியத்
தெளிவு பெற்றிறை பூண்டுள னிவனலாற் றெய்வ
மொழியின் மூடரும் வேறுள தாமென்று மொழியார்.

**185. பேதைப் பிள்ளைநீ பிழைத்தது பொறுத்தனென்**
**[பெயர்த்தும்**
**மேதை வார்த்தைக ளினையன விளம்பலை முனிவன்**
**யாது சொல்லின னவையவை யிதமென வெண்ணி**
**ஓதி போதியென் றுரைத்தன னுலகெலா முயர்ந்தோன்.**

'பேதை பிள்ளை - அறியாத குழந்தாய்!, நீ பிழைத்தது பொறுத்தனென் - நீ தவறிழைத்ததை இப்பொழுது மன்னித்தேன்; பெயர்த்தும் - திரும்பவும், இனையன மேதை வார்த்தைகள் விளம்பலை - மிக்க அறிவுள்ளவன் போன்று இத்தகைய சொற்களைச் சொல்லாதே; முனிவன் யாது சொல்லினன் - அந்தணன் ஆகிய குரு எதை எதைக் கூறுகின்றானோ, அவை அவை இதம் என எண்ணி - அந்த அந்தச் சொற்களை நன்மை விளைப்பன என மனத்துட்கொண்டு, ஓதி - கற்பாயாக; போதி - புறப்பட்டுப் போ', என்று உரைத்தனன் உலகு எலாம் உயர்ந்தோன் - என்று கூறி முடித்தான் உலகனைத்திலும் உயர்ந்தவனான இரணியன்.

ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்று கொண்ட பிரகலாதனின் கருத்தை, இரணியன் காரணங்காட்டி மாற்ற முயன்று, அதற்கு அவன் உடன்படுவான் என்றெண்ணி, அவனைத் திருத்த எண்ணியது இச்செய்யுளில் கூறப்பெற்றது. மேலும், இதுவரை பிரகலாதனிடம் அவன் தன் வாஞ்சை குறையாமையையும் இது விளக்குகின்றது. பெயர்த்தும் - மீட்டும்; 'பிரிந்த போகம் பெயர்த்தும் பெறுகுவை' (பெருங். இலாவாண. 13 : 59); 'பெயர்த்து மவற்கோர் பெருஞ்சிறப் பியற்றி' (பெருங். மகத. 27, 36). விளம்பலை : எதிர்மறை ஏவல் வினைமுற்று. அல் : எதிர்மறை இடைநிலை. இதம் - ஹிதம் என்ற வடசொற் றிரிபு. ஓதுதி என்பது ஓதி என்ன நின்றது. பேதைப் பிள்ளை என்றதற்கேற்ப

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அதன் எதிர்ப்பதமான மேதை என்ற பாடமே தழுவப்பட்டது. ஏதில் வார்த்தைகள் என்ற பாடமும் சிலர் ஏற்பர்.

பி - ம். 1. பிள்ளைநி யுரைத்தது ; பிழைத்தும்.

2. ஏதில் ; இனியன.

3. ஏதுரைத்தனன் ; நலமெனா.

4. போதி, ஓதியென், ஓதுபோவென ; போயென ; உலகினு ளுயர்ந் தோன், சேயதற் குரைப்பான். 56

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

## வேறு

### பிரகலாதன் கூறியன

186. உரையுள துணர்த்துவ துணர்ந்து கோடியேல்
விரையுள வலங்கலாய் வேத வேலையின்
கரையுள தியாவருங் கற்குங் கல்வியின்
பிரையுள தென்பது மைந்தன் பேசினன்.

'விரை உள அலங்கலாய் - மணம் பொருந்திய மாலையணிந் தவனே !, உணர்த்துவது உரை உளது - நான் உனக்கு அறிவிக்க வேண்டிய வார்த்தை இருக்கின்றது; உணர்ந்து கோடியேல் - அதனை உள்ளபடி தெரிந்துகொள்வாயாகில், (அது), வேதம் வேலையின் கரை உளது - நான்மறைகளாகிய ஆழியின் எல்லையாக உள்ளது ; யாவரும் கற்கும் கல்வியின் பிரை உளது - அனைவரும் கற்கும் (பிற) கல்வியின் (பாலைத் தயிராகச் செய்யும்) சிறு மோர்த் துளிபோன் றுள்ளது', என்பது - என்ற பொருளை, மைந்தன் பேசினன் - பிரகலாதன் எடுத்து மொழிந்தான்.

வேதங்களுக்குக் கரையாகவும், யாவரும் கற்கும் கல்வியின் பிரையாயும் உள்ளது என்றது ; பரஞானத்தால் அறியக் கூடியதே பரம்பொருள் என்பதும், அப் பரம்பொருள் அறிவு உலோகாயத மான அபரஞானக் கல்வியினால் பெருகும் ஆணவத்தைத் திரியச் செய்வது என்பதும் ஆம். இரணியன் கர்மகாண்டத்தைக் கற்று ஆணவம் மிக்குப் பரம்பொருளைப்பற்றிய திரிபுணர்ச்சி அடைந்து, தான் அப் பரம்பொருளினும் மிக்கவன் என்று அகந்தையில் நின்று பேசினதைக் கேட்ட பிரகலாதன், ஞானமற்ற வெறுங்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கல்வியினால் தந்தையின் மனம் திரிந்திருப்பதைக் கண்டு இவ்வாறு சொன்னான் என்க.

கோடி-கொள் + தி. அலங்கல்-அசைவது என்று பூமாலைக்குக் காரணக்குறி. வேதவேள்வி-வேதங்களில் விதிக்கப்பட்டபடி புரியும் வாஜபேயம், அக்கினிட்டோமம் முதலியன. வேள்வி என்பதில் வேள் - பகுதி ; இ - பெயர் விகுதி ; ஒன்றை விரும்பிச் செய்வது என்று பொருள். இதனைக் காமியம் என்பர் ; இதனால் எய்துவது பதமுத்தியே, பரமுத்தி யன்று. பிரை : உறை மோர். துளி மோரினைப் பாலிற் பெய்யினும் அத் துளி பரந்து பாலனைத்தையும் தன் வடிவாக்கும் ; 'பிரைசேர் பாலின்' (திருவாச. 25, 5) ; 'பாலுறு பிரையினிற் பரந்த தெங்குமே' (பால. மிதிலைக். 41) ; 'சேர்வுறு பாலின் வேலை சிறுதுளி தெறித்த தேபோல்' (யுத்த. ஒற்றுக். 25) ; யுத்த. இராவணன் வதை. 243-ம் காண்க.

பி - ம். 1. உணர்ந்துவன் ; கேட்டியேல்.
2. விரையுளர் : வேத வேள்வியின்.
3. யாவையுங் ; கறங்கும் ; கருதுங்.
4. பிரையுள வென்பது, பொருளென ; பேசுவான். 57

187. வித்தின்றி விளைவதொன் றில்லை வேந்தநின்
பித்தின்றி யுணர்தியே லளவைப் பெய்குவன்
உய்த்தொன்று மொழிவின்றி யுணர்தற் பாற்றெனுக்
கைத்துன்று நெல்லியங் கனியிற் காண்டியால்.

'வேந்த - அரசே !, வித்து இன்றி விளைவது ஒன்று இல்லை - விதை யில்லாமல் வளர்வதான தாவரம் ஒன்று கிடையாது ; நின் பித்து இன்றி உணர்தியேல் - உன்னுடைய (ஐயம் திரிபு அறியாமைகளாகிய) மாறுபாட் டுணர்ச்சியைத் தவிர்த்து, உணர்தியேல் - அறிவாயாகில், அளவைப் பெய்குவன் - உண்மைத் தத்துவப் பொருளைத் தெரிந்துகொள்ளும் விதத்தைப் புகல்வேன் ; (நான் பகர்வது), ஒன்றும் ஒழிவின்றி உய்த்து உணர்தல் பாற்று எனு - ஒரு சிறிதும் விடாமல் மனத்தைச் செலுத்தி நன்கு அறியத்தக்கது என நினைந்து, கை துன்று நெல்லியின் கனியில் காண்டி - கையினிடத்துப் பொருந்திய நெல்லிப் பழம் போல (அதனை உள்ளது உள்ளவாறு), நன்கு அறிவாயாக. ஆல் - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இது முதல் 22 கவிகளில், பிரகலாதன் ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்று நிரூபிக்கும் முறையைக் கூர்ந்து நோக்குதல் பயனுடைத்தாம். முதன் முதலாக இச் செய்யுளில், தோன்றி மறையும் இப் பிரபஞ்சத்துக்கு, தனக்கு மூலமில்லாத ஒரு கடவுள் உண்டு என்பதை, 'வித்தின்றி விளைவதில்லை' என்ற உதாரணத்தால் நிலைநிறுத்துகின்ருன். 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்ற முதல் குறள் இங்கே கருதத்தக்கது. அளவை: காட்சி, அநுமானம், ஆகமம்; கடவுளே உலகிற்கு முதற்காரணன் என்பது வித்தின்றி விளைவ தொன்றில்லை என்பதனுற் குறிக்கப்பட்டது. பின்னரும், 'ஆலமும் வித்துமொத் தடங்குந் தன்மையான' (14) என்று கூறப்பெற்றுள்ளமை காண்க, 'அஹம் ஸர்வஸ்ய பரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே' (பகவத் கீதை. 10 : 8)' 'அஹம் க்ருத்னஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா' 'நான் உலகம் முழுவதின் தோற்றத்துக்கும் ஒடுக்கத்துக்கும் காரணம்' (பகவந்கீதை. 7 : 6); 'எல்லா உயிர்கட்கும் வித்து எதுவோ அது நான், என்னை அன்றி இயங்கு நிலைத்திணைப் பொருள்கள் வாழ்வது ஒன்றுமில்லை' (கீதை. 10 : 39); கைத்துன்று நெல்லியங்கனி - 'உள்ளங்கை நெல்லிக்கனிபோல'த் தெற்றென விளங்குவது. காண்டி - முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று.

பி - ம். 1. வேந்தனின்.
2. பித்தன்றி ; செய்தனன், செய்தன.
3. உணர்த்தற் பாற்றெனு.
4. நெல்லியின்.

58

**188. தன்னுளே யுலகங்க ளெவையுந் தந்தவை**
**தன்னுளே நின்றுதா னவற்றுட் டங்குவான்**
**பின்னிலன் முன்னிலன் ஒருவன் பேர்கிலன்**
**தொன்னிலை யொருவராற் றுணியற் பாலதோ.**

'ஒருவன் - ஒப்பற்ற முதற்கடவுள், தன்னுளே உலகங்கள் எவையும் தந்து - தன்னிடத்திருந்தே அனைத்துப் புவனங்களையும் உண்டுபண்ணி, அவை தன்னுளே நின்று - அவற்றிற்குள்ளே தான் நிற்பது மாத்திரமன்றி தான் அவற்றுள் தங்குவான் - (தான் எள்ளில் எண்ணெய்போன்று) அவற்றிடைப் பொருந்தி யமர்வான் ; பின்னிலன் முன்னிலன் - (அவன் காலத்தால்) தனக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



குப் பின்னும் தனக்கு முன்னும் எவரும் இருக்கப் பெறுதவன்; பேர்கிலன் - நிலைதிரியாதவன்; (அப் பெருமானுடைய), தொல் நிலை ஒருவரால் துணியல் பாலதோ - பழமையான நிலைமை (இத் தகையதென்று) ஒருவரால் தெளிந்து கொள்ளக்கூடியதோ? (அன்று). ஓ - வினா.

இச் செய்யுளில் பரம்பொருளினின்றே பிரபஞ்சங்கள் யாவும் தோன்றின என்பதும், அவற்றினுள் அவனே தங்கி அவற்றை இயக்குகின்றான் என்பதும், அவன் காலத்துக்குட் படாதவன்; ஒருவன்; மாற்றமுடியாதவன் என்பனவும் கூறப் பெற்றன. தன்னுளே உலகங்கள் எவையும் தந்து; (ஒப்பு): 'உலகம் யாவையும் தாமுள வாக்கலும்' (பால. பாயிரம். 1); 'உலகுதந்தானும் பல்வே றுயிர்கள் தந்தானு முள்ளுற், றுலைவிலா வுயிர்கடோறு மங்கங்கே யுறைகின் றானும்' (யுத்த. இரணிய. 120); 'எல்லா உயிர்களின் உள்ளத் துறையும் ஆன்மா நானே; உயிர்களின் ஆதியும் நடுவும் இறுதியும் நானே' (கீதை. 10·20). பின்னிலன் முன்னிலன்; (ஒப்பு): 'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருள், பின்னைப் புதுமைக்கும் பெயர்த்துமப் பெற்றியன்' (திருவாச. திருவெம்பாவை. 9); 'முன்னு முதுபொருட்கு முன்னு முதுபொருளை' (திருவிளை. நரிபரி. 20); 'முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்' (திருமந். பரசிவ. 7). ஒருவன்: 'தன்னையொப் பாரொன்று மில்லாத் தலைமகன்' (திருமந். பரசிவ. 7).

பி - ம். 1. எவையுந் தந்தவன்.
2. தங்குவோன்.
3. பெயர்வன்; பேர்கலன்.
4. துணியப் பாலதோ.

59

189. சாங்கியம் யோகமென் றிரண்டு தன்மைய
வீங்கிய பொருளெலாம் வேறு காண்பன
ஆங்கவை யுணர்ந்தவர்க் கன்றி யன்னவன்
ஓங்கிய தனிநிலை யுணரற் பாலதோ.

வீங்கிய பொருள் எலாம் வேறு காண்பன - எங்கும் விரிந்து பரந்துள்ள எல்லாப் பொருள்களையும் தனித்தனிப் பிரித்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நோக்குவனவாகிய, சாங்கியம் யோகம் என்று இரண்டு தன்மைய - சாங்கியம் யோகம் என்ற இரண்டு தன்மையான வழிகள் உள்ளன; ஆங்கு அவை உணர்ந்தவர்க்கு அன்றி - அவற்றை உள்ளவாறு தெரிந்தவர்க்கல்லாமல், (ஏனையோர்க்கு), அன்னவன் ஓங்கிய தனி நிலை உணரல் பாலதோ - அந்தக் கடவுளுடைய ஒப்பற்ற நிலை அறியவல்லதோ? அன்று. ஓ - வினா.

சாங்கியம்: இது 25 தத்துவங்களையும் உள்ளவாறு விரித்துக் கூறி, அதனை உள்ளபடி யுணர்ந்தவர்களே முடிவில் தத்துவாதீதனாகிய பரம்பொருளைக் காணக்கூடும் என மொழிவது; 'பேணு தத்துவங்க ளென்னும் பெருகு சோபானமேறி, ஆணையாம் சிவத்தைச்சார அணைபவர்போல ஐயன்' (பெரியபு. கண்ணப்ப. 103) என்றது காண்க. இதன் விரிவான இலக்கணத்தை, 'இது சாங்கிய மதமென வெடுத்துரைப்போன்' (மணி. 27 : 202) முதலாக 240-ஆம் வரி யீருகவுள்ள பகுதிகொண் டுணர்க. 25 தத்துவங்களாவன :—தன்மாத்திரைகள் ஐந்து, பூதங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, மகத், அகங்காரம், மனம், மூலப்பிரகிருதி, புருஷன் என்பன. இந்தச் சாங்கிய தரிசனம் செய்தவர் கபிலர் என்ப. இனி யோகம் என்பது அதிசூக்குமமான கடவுளை, இயமம் நியமமாதி எட்டுவித யோகங்களை மேற்கொண்டு, அகத்தான் வழிபடுகை. பகவத்கீதையில் பகவான் தத்துவ விசாரத்தை ஸாங்கியம் என்றும், அதன் அனுட்டானத்தை யோகம் என்றும் கூறுவர். 'ஏஷாதே பிஹிதா ஸாங்க்யே' (பகவத்கீதை. 2·39) காண்க. வடமொழியில் யோகசூத்திரம் செய்தவர் ஸ்ரீபதஞ்சலி பகவான் என்ப. மனம் ஒடுங்கி ஆன்ம சொரூபத்தில் நிலைத்திருக்கும்போது அது சமாதி என்று சொல்லப்படுகிறது. அந் நிலையில் ஆன்ம ஞானமும் யோகமும் பூர்த்தியாகின்றன. மனிதன் அடையவேண்டிய பெருநிலையை அடைகின்முன். இந்த உண்மையைத்தான் பின்னிரண்டடிகள் தெளிவுபடுத்துகின்றன. சாங்கியத்தையும் யோகத்தையும் ஒன்றுகக் காண்போன் உண்மை காண்கின்முன். அறிவைக் கையாண்டு இயற்கையின் இயல்பு எத்தகையது என எண்ணிக் காண்பது சாங்க்யம். யோகம் என்பது கர்மத்தின் மூலம் பிரகிருதியோடு தொடர்புகொள்ளுதல் ஆகும். இனி இவ்விரண்டின் விரிவுகளைத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தனிப்பட்ட நூல்களிற் காண்க. தத்துவங்களைப் பல்வேறு சமயங்கள் பற்பலவகையாகக் கூறும்.

பி - ம். 1. தாங்கிய வுலகமென் றிரண்டு, தாங்கிய யோகமென் றிரண்டும்; தங்கிய.
3. ஆங்கவை யறிந்தவர்க்கு.
4. தன்னிலை, மேனிலை, தவறிலை. 60

190. சித்தென வருமறைச் சிரத்திற் றேறிய
தத்துவ மவனது தம்மைத் தாமுணர்
வித்தக ரறிகுவர் வேறு வேறுணர்
பித்தரு முளர்சிலர் வீடு பேறிலார்.

'அவன் - அக்கடவுள், சித்து என அரு மறை சிரத்தில் தேறிய தத்துவம் - ஞானவடிவன் என்று எளிதில் உணர்தற்கரிய வேதாந்தங்களில் தெளியவைக்கப்பட்ட பரதத்துவமாவன்; அது - அந்த நிலையை, தம்மை தாம் உணர் வித்தகர் அறிகுவர் - தம்மை யறிந்து தலைவனையும் உள்ளபடி யறிந்த ஞானிகளே அறிவார்கள்; (அன்றி), வேறு வேறு உணர் பித்தரும் உளர் - பல்வேறு வகையாக மாறுபட அறிகின்ற (விபரீத உணர்ச்சியுள்ள) சிலரும் இருக்கின்றனர்; வீடு பேறிலார் - (அந்த மயக்க உணர்வுள்ளவர்கள்) முத்தியடையப் பெறார்.

இனி, பரம்பொருளுக்கு இலக்கணம் கூறத்தொடங்கி, அது, 'சித்து' என்று கூறினன் என்க. வேத முடிவில் ஞான சொரூபன் என்று தெளிந்து கூறப்பட்ட உண்மைப் பொருளாகிய அவன் இயல்பினைத் தம்மைத்தாம் உணர்ந்த ஞானசீலர்களே உணர்வர்; மற்றும் அசித் ஆன விஷயங்களைப் பொருள் எனக் கொள்பவரும் உண்டு; அவர் முத்திக்கருகராகார் என்பது கூறப்பெற்றது. சித்து - ஞான வடிவன்; 'ஞான நாயகன் உருவமே யாதலின்' (யுத்த. பிரமாத்திர. 203). மறைச்சிரம் - உபநிடதம். தம்மைத் தாம் உணர் வித்தகர் - ஆன்ம ஞானம் உள்ளவர்; 'உன்னைநீ உணர்வையாகில் உனக்கொரு கேடுமில்லை' (கைவல்யம்.); 'தன்னையும் தனக்காதாரத் தலைவனும் தான் கண்டானேல், பின்னையத் தலைவன் தானாய்ப் பிரமமாய்ப் பிறவி தீர்வன்' (கைவல்யம்). வேறு வேறு உணர் பித்தர் - பல சமய வாதிகள்; (தாயு. பரிபூரண. 9) காண்க, 'அவஜானந்தி மாம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மூடா மமபூத மஹேச்வரம்' (கீதை. 9 : 1); என்னுடைய பரசொரூபத்தையும் உயிர்கட்கெல்லாம் நான் ஈசனுயிருப்பதையும் அறியாத பித்தர்கள் என்பது காண்க.

பி - ம். 1. சிரத்துத்; தேற்றிய.
2. தத்துவ மானது, மன்னது; மறிகுநர், மறிந்தவர்.
3. வேறு வேறுள
4. உணர்கிலார்; பெற்றிலார். 61

191. அளவையா னளப்பரி தறிவி னப்புறத்
துளவையா யுபநிட தங்க ளோதுறு
கிளவியார் பொருள்களாற் கிளக்கு ருதவன்
களவையா ரறிகுவார் மெய்ம்மை கண்டிலார்.

(அந்தப் பரம்பொருளின் நிலை), அளவையான் அளப்பரிது - காட்சி முதலிய பிரமாணங்களால் அளந்தறிய வியலாதது; அறிவின் அப்புறத்து உள - அறிவிக்கு எட்டாது சேய்மையில் உள்ளது; ஐயா - தந்தையே!, உபநிடதங்கள் ஓதுறு - உபநிடதங்களில் சொல்லப்படுகின்ற, கிளவியார் பொருள்களால் கிளக்குருதவன் - சொற்களினுலும் அவற்றின்கண் அடங்கிய பொருள்களாலும் எடுத்துச் சொல்ல முடியாதவனுன அந்தப் பரம்பொருளின், களவை யார் அறிகுவார் - கபட நாடகத்தை எவர் தான் தெரிந்துகொள்ள வல்லவர்?, மெய்ம்மை கண்டிலார் - அந்த உண்மையை (எவரும்) கண்டிலர்.

இறை, அளவைகளுக்கு அப்பாற்பட்டது; வேதத்தாலும் சொல்ல முடியாதது என்ற இன்மை முறை இலக்கணம் இங்குக் காட்டப்பெற்றது. இறைவன் வாசாமகோசரன்; பிரமாணங்களால் அளந்தறியக்கூடியவ னல்லன். 'ஏதுக்களானும் எடுத்து மொழியாலு மிக்குச் சோதிக்க வேண்டா சுடர் விட்டுளன் எங்கள் சோதி' (தேவா. 1178·5); 'அளவறுப்பதற் கரியவன்' (திருவாச. திருச்சதகம். 35); 'வாக்கிறந்த பூரணமாய்' (திருவிளை. துதி.); 'எழுதரு மறைகள்தேரு இறைவன்' (திருவிளை. துதி.); 'மறையினு லயனுன் மாலான் மனத்தினுல் வாக்கான் மற்றுங்,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaaṇ Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



குறைவிலா அளவினாலும் கூறொணா தாகிநின்ற இறைவனார்' (சிவ. சித்தி. அவையடக்கம்.) என்பன காண்க. களவை, மெய்ம்மை கண்டிலார் யார் அறிகுவார், எனினுமாம்.

பி - ம். 1. அளவையா மளப்பரிது, லளவறிந்து ; தறிவ, தளவி.

2. உளவையா வுபநிடதங்க ளோதுவ.

3. கிளத்து ருதவன், கிளத்து ருவவன், கிளக்கு ருனவன், கிளக்கி னன்னவன். 62

192. மூவகை யுலகுமாய்க் குணங்கள் மூன்றுமாய்
யாவையு மெவருமா யெண்ணில் வேறுபட்
டோவலி லொருநிலை யொருவன் செய்வினை
தேவரு முனிவரு முணரத் தேயுமோ.

'மூவகை உலகுமாய் - விண் மண் பாதலம் என்ற உலகம் மூன்றின் வடிவமாகியும், குணங்கள மூன்றுமாய் - சத்துவம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் சொரூபமாகியும், யாவையும் எவருமாய் - உலகின்கணுள்ள இயங்குதிணை நிலைத் திணைப் பொருள்கள் எல்லாமாகியும், (அஃறிணை உயர்திணைப் பொருள்களாகியும்), எண்ணில் வேறுபட்டு - ஆராயுங்கால் வெவ் வேறு வகைப்பட்டும், ஓவல் இல் ஒரு நிலை ஒருவன் - ஒழிதலில்லாத ஒப்பற்ற தனித்த நிலைமையுடைய முதற்கடவுள், செய்வினை - செய் தருளும் தொழில், தேவரும் முனிவரும் உணர தேயுமோ - தேவர் களும் முனிவர்களும் அறிந்துகொள்ளுமாறு குறைந்து காட்டுமோ?

இறைவனின் எங்கும் நிறைந்த தன்மை இங்கு நிறுவப்பெற் றது. ஒன்று பல்வேறுபாடுகளை அடைந்து நிற்கும் நிலையும் இங்குக் கூறப்பெற்றது காண்க. மூவகை உலகு - விண், மண், பாதலம் ; மூன்று குணங்கள் - சத்துவம், ராஜசம், தாமதம் ; 'உல கெலாமாகி வேறா யுடனுமாய் ஒளியாய்' (சிவ. சித்தி. 2·1). யாவையும் எவருமாய் - 'எல்லாமாய் அல்லதுமாய்' (திருவிளை. துதி.) ; 'ஒன்றாய்ப் பலவா யுயிர்க் குயிராய்'; 'யார் என்னை எல்லாவற்றிலும் எல்லாவற்றையும் என்னிடம் காண்கின்றானோ அவன் காட்சியினின்றும் நான் மறைவதில்லை' (ஒப்பு) : 'அன்றின் னாடென்று மறிவா னவர்க்கு மறியாமை நின்ற அரன்' (தேவா. 36,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


4); 'தேவர்கோ அறியாத தேவதேவன்' (திருவாச. திருச்சதகம். 30) என்பன காண்க.

பி - ம். 1. உலகமாய்க், உலகமுங்.
2. யாவரு மெவையுமாய்; யெண்ணரின், யெண்ணி.
3. உணரற்பாலதோ. 63

193. கருமமுங் கருமத்தின் பயனு மப்பயன்
தருமுதற் றலைவனுந் தானு மானவன்
அருமையும் பெருமையும் அறிவ ரேலவர்
இருமையென் றுரைசெயுங் கடனின் றேறுவார்.

கருமமும் - யாகம் முதலிய கிரியைகளும், கருமத்தின் பயனும் - அந்தக் கிரியைகளைப் புரிவதால் புரிபவன் அடைகின்ற பேறுகளும், அ பயன்தரு முதல் தலைவனும் - அந்தப் பயனை அளித்தருள்கின்ற முதற்கடவுளும், தானும் - அந்தப் பயன்களை அடையப் பெறுகின்ற சீவான்மாவும், ஆனவன் - தானே ஆன அந்த இறைவனது, அருமையும் பெருமையும் அறிவரேல் - அருமை பெருமைகளை நன்கு உணரப்பெறுவராகில், அவர் - அவ்வாறுணர்பவர், இருமை என்று உரை செயும் கடல் நின்று ஏறுவார் - இம்மை மறுமை என்று சொல்லப்படுகின்ற கடலிலிருந்து (முத்திக் கரையில்) ஏறுவர்.

'கருமமுங் கரும பலனுமாகிய காரணன் றன்னை' (திருவாய். 3:5·10); பகவத்கீதை. ச்லோகங்கள் IX, 16, 17 காண்க. இருமை - இம்மை, மறுமைகள். 'இறைவனே கருமத்தின் பயனை அளிப்பவன்' 'கர்மண்யேவாதி காரஸ்தே மாபலேஷு கதாசன:' (கீதை.)

பி - ம். 1. பயனுங் கண்ணிய.
2. தானுந் தானவன், தாங்குவோன்.
3. மறிவராலிவர், மறிவராலவர், மறிய வல்லவர். 64

194 மந்திர மாதவ மென்னு மாலைய
தந்துறு பயனிவை முறையிற் சாற்றிய
நந்தலில் தெய்வமாய் நல்கும் நான்மறை
அந்தமில் வேள்விமாட் டவிசு மாழவன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மந்திரம் மா தவம் என்னும் மாலைய - மந்திரமும் பெருமை சான்ற தவமும் என்னும் இயல்பினவும், தந்து உறு பயன் - இவைகள் உதவுகின்ற பேறுகளும், இவை முறையில் சாற்றிய - இவைகளின் பொருட்டு முறையாகச் சொல்லப்பட்ட, நந்தல் இல் தெய்வமாய் - கெடுதல் இல்லாத தெய்வமுமாகி, நான்மறை அந்தம் இல் வேள்வி மாட்டு நல்கும் அவிசும் ஆம் அவன் - நான்கு வேதங்கள் வகுத்தபடி அழிவில்லாதனவான யாகங்களில் (தேவர்களைக் கருதி) இடப்படுகின்ற அவிசின் வடிவமுமானவன்.

இறைவன், மந்திரம், தவம், வேள்விகளாவன் என்பது இச் செய்யுளின் கருத்து. மந்திரம் - 'நிறைமொழி மாந்தர் தம் ஆணையிற் கிளந்த, மறைமொழி தானே மந்திரம் என்ப' (தொல். செய்யு. 178); கடவுளைத் தியானிக்குங்கால் அந்த அந்தத் தேவதைகட்குரிய மந்திரங்களைப் பன்முறை உருவேற்றிப் பயன் உறுவது இயல்பு. 'மும்மைசா லுலகுக் கெல்லா மூலமந்திரத்தை' (கிட்கிந்தா. 300) என்றது காண்க. தவம்; 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப்படும்' (குறள். 265); என்றும், 'தவம் செய்வார் தம் கருமஞ் செய்வார்' (குறள். 266) என்றும் கூறியன காண்க. நந்தல்-கெடுதல்; 'நந்தா விளக்கனைய நாயகனே' (அயோத். கிளைகண்டு. 60); நந்தலில் தெய்வமாய் நல்கும்: 'யார் என்னை எப்படி வழிபடுகிறுரோ அவர்க்கு நான் அப்படியே அருள் புரிகிறேன்' (கீதை. 4, 11); 'எந்த எந்த பக்தன் எந்த எந்த தேவ வடிவத்தைச் சிரத்தையோடு அர்ச்சிக்க விரும்புகின்றுனே, அவ்வவனுடைய அந்த மன ஊக்கத்தை அசையாததாக நான் செய்கின்றேன்' (கீதை. 7, 21). வேள்விமாட்ட விசுமாமவன்: 'ப்ரஹ்மார்ப்பணம், ப்ரஹ்மஹவிர், ப்ரஹ்மாக்னௌ ப்ரம்மணுஹுதம், ப்ரஹ்மைவதேன கந்தவ்யம், ப்ரஹ்மகர்ம ஸமாதிநு' (கீதை. 24); அர்ப்பணம் செய்தல் பிரம்மம், நெய் முதலிய ஹவிஸும் பிரம்மம், பிரம்மமாகிய அக்னியில் பிரம்மம் கொடுக்கப்படுகிறது.

பி - ம். 1. மாற்றலைத், மாலயந், மாதவன், மாலவன்.
2. பயமிவை.
3. அறிய அந்தணர்.
4. அவிசுமாரவன், அவிசுமாயவன், அவியதாமவன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


195. முற்படப் பயன்றரு முன்னில் நின்றவை
பிற்படப் பயன்றரும் பின்பு போதுவ
தற்பயன் ருன்தெரி தரும மில்லையஃ
தற்புத மாயையா லறிகிலார் பலர்.

'(அந்தப் பரம்பொருள்), முன்னில் நின்றவை - முதலிற் இயற்றப்பட்டு நின்றுள்ளனவான கருமங்கட்கு, முற்பட பயன் தரும் - முன்னதாகப் பயனை உதவுவான்; பின்பு போதுவ - பின்பு செய்யப்பட்டு வருவனவான கருமங்கட்கு, பின்பட பயன் தரும் - பிந்திப் பயன் உதவுவான்; (இவ்வாறன்றித் தம்மிட்டபடி), தன் பயன் தான் தெரி தருமம் இல்லை - தானே பயனை ஆராய்ந்து கொடுக்கிற கருமம் எதுவும் இல்லை; அற்புதம் அஃது - அந்த வியக்கத்தக்க செய்தியை, மாலயயால் பலர் அறிகிலார் - (அப் பெருமானது) மாயா சக்தியால் பலரும் அறியமாட்டார்.

கருமம் தானே பயனை ஈவது அன்று; அதனை ஈகின்றவன் இறைவனே என்பது இங்குக் கூறப்பெறுகிறது. வினைப்பயன் யாவரும் துய்த்து ஆதல் வேண்டும்; (ஒப்பு): 'பல்லாவுள் உய்த்துவிடினும் குழக்கன்று வல்லதாங் தாய்நாடிக் கோடலைத், தொல்லைப் பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த, கிழவனை நாடிக் கொளற்கு' (நாலடி. 101); 'நினைப்பக் கிடந்த தெவனுண் டாம் மேலை, வினைப்பய னல்லாற் பிற' (நாலடி. 105); 'சிறுகா பெருகா முறை பிறழ்ந்து வாரா' (நாலடி. 110). அதனை வினையே அளிக்காது; இறைவனே அளிப்பான்; இந்த உண்மை புலப் படாவாறு மாயை மறைக்கின்றது என்று கூறினன். முன் 193-ஆம் செய்யுளையும் காண்க.

பி - ம். 1. முற்பயன்; நின்றவர், னின்றவர், னின்றமை; முற்செயப் பெரும் பயன் முற்றி நின்றவோர்; முற்பயன் றருமமு முன்ன நின்றவாய்.
2. பிற்பயன்; பயன்றரு; போலவன், போல்வன.
3. தற்பரன்; தற்பயத் தாற்றரும்; ருன்றிரி; மில்லையது, யில்லையேல்.
4. மாயையின்; அறிகிலார் பிறர். 66

196. ஒருவினை யொருபய னின்றி யுய்க்குமோ
இருவினை யென்பவை யியற்றி யிட்டவை
கருதின கருதின காட்டு கின்றது
தருபர னருளினிச் சான்று வேண்டுமோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இயற்றி இட்டவை இருவினை என்பவை - உயிர்கள் புரிந்தன வான நல்வினை தீவினை என்ற இரண்டில், ஒரு வினை ஒரு பயன இன்றி உய்க்குமோ - ஒவ்வொரு வினை ஒரே காலத்தில் ஒரே பயனையின்றிப் (அதனை மீறி) பல பயன்களைத் தரக்கூடியதோ? (இல்லை); தருபரன் - அனைத்தையும் படைக்கின்ற பரமனுடைய, அருள் - அருட்டிறமோ, கருதின கருதின காட்டுகின்றது - எண்ணிய எண்ணிய பயன்களை யெல்லாம் அளிக்கின்றது; இனி சான்று வேண்டுமோ - இனி, (அப்பெருமானுடைய) உயர்வினை விளக்கப் பிற பிரமாணங்களும் தேவைப்படுமோ? வேண்டுவ தின்று.

முன் செய்யுளின் தொடர்பாக இச் செய்யுள் அமைந்துள்ள பொருத்தம் காண்க. கருமத்துக்குத் தானே பயன் கொடுக்கும் இயல்பு இருக்குமானால், உலகத்தில் ஒரேவித கருமத்துக்கு ஒரே வித பயனையே காணவேண்டும்; அவ்வாறில்லாமல், பலன்களில் வேற்றுமைகளை நாம் உலகில் காண்பதற்குப் பலன்களைக் கொடுப்பவனான இறைவனின் கருணையே காரணம் என்று பிரகலாதன் தன் கொள்கையை இங்கு நிரூபிக்கின்றான். வினை - ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தம் என மூவகைப்படும். இது தொடர்ச்சியாய் இறைவன் ஆணையால் உயிர்க்குப் பல்வேறு வகைப்பட்ட உடல்களைத் தோற்றுவிக்கும்; 'வினைப்போக மேயுறு தேகங் கண்டாய்' (பட்டினத்தார். ). இருவினை - நல்வினை தீவினை; இவற்றின் பயனாகிய புண்ணிய பாவங்களை அனுபவிக் குங்கால் எது அளவிற் குறைவோ அதனையே உயிர்கள் முதற்கண் துய்க்கும் என்பது நியதி. இதுபோன்ற வேற்றுமைக்குக் காரணம் பரம்பொருளின் கருணையும் இச்சையுமாம் என்று காட்டப்பெற்றது. 'தருபரன் அருள் காட்டுகின்றன' (ஒப்பு): 'இருவினை யின்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து, வருவது போவதாகு மன்னிய வினைப்ப லன்கள் தருமரன்' (சிவ. சித்தி. 2·2·1); 'இதமகிதங்க ளெல்லா மிறைவனே யேற்றுக் கொண்டிங், கிதமகிதத்தா லின்பத் துன்பங்க ளீவனன்றே' (சிவ. சித்தி. 2·2:14); கருமம் சடமாதலின் தானே ஒன்றையும் விளைத்துக்கொள்ள மாட்டாது, 'வினைப் பயனை வழங்குபவன் நானே' (கீதை. 10, 33); 'கருமமும் கரும பலனுமாகிய காரணன்' (திருவாய். 3-5-10). வினை என்பது ஊழ்; 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினும் தானை முந்துறும்' (குறள். 380); என்றபடி அது மிகவும் வன்மை யுடைத்து. ஆயினும் தீவினை தீய பயனைத்தான் அளிக்கும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஆனல் இறைவன் மனச் சங்கற்பமானது பலவகைப் பயன்களையும் ஒரே காலத் தளிக்கவல்லது. யக்ஞம் தானம் தவம் முதலிய பலவகைப் பேறுகளையும் உதவும்; ஆயினும் கடவுளின் அருள் இப் பயன்களை யில்லையாக்கவும செய்யும். மேலும் மேலும் நற்பேறுகளையும் அளிக்கும் கருமத்தின் பயனைத் தருபவன் அந்தப் பரம்பொருளே. இயற்றி யிட்டவை இருவினைகளுள் ஒருவினை என்று கூட்டுக. நல்வினையும் பிறவிக் கேதுவாகலின் இருவினை என்ருர்.

பி - ம். 1. ஒருவினை பெருமையி னுரைக்குந் தன்மைபோல், பெருமையி னிலையும் தன்மையே; பயனன்றி.

2. இருவினை யென்றவை, யவ்வவை.

3. காட்டுகின்றது.

4. தருபய னருளிது, தருபய னருளினச், தருபயன் பெறினிதிற்; அருளெனிற் சாற்றல் வேண்டுமோ; சான்றும் வேண்டுமே. 67

அதிகப் பாடல்கள் :—

உயிர்க்குயி ராகிநின் றுதவும் பான்மையிற்
றயிர்க்குறு செய்தவம் செயலிற் காண்டல்போற்
பயிர்ப்புறு மதனிலைப் பாசம் நீக்கிவே
றயிர்ப்பது மறிவினி லறிவர் சீரியோர்.

நான்முகத் தொருவனு நாரி பாகனுந்
தானிகத் துணர்வதற் கரிய தத்துவத்
தோனிகத் தொடுபர மிரண்டு மெங்குமா
ரூனகத் துயிராகத் துலவு மூர்த்தியான்.

197. ஓராவுதி கடைமுறை வேள்வி யோம்புவோர்
அராவணை யமலனுக் களிப்ப ராலது
சராசர மனைத்தினுஞ் சாரு மென்பது
பராவரு மறைப்பொருள் பயனு மன்னதால்.

'வேள்வி ஓம்புவோர் - யாகம் செய்பவர்கள், கடைமுறை - அந்த யாகத்தின் இறுதியில், அரா அணை அமலனுக்கு ஓர் ஆவுதி அளிப்பர் - பாம்பணைப் பள்ளியானை திருமாலுக்கு ஓர் ஆகுதியை அளிப்பார்கள்; அது - அந்த ஆகுதியானது, சராசரம் அனைத்தினும் சாரும் - எல்லாவிதமான இயங்கு பொருள் நிலைத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



திணைப் பொருள்களையும் சென்று அடையும், என்பது - என்று கூறுவது, பராவு அரு மறைபொருள் - துதித்தற்கு அரிய வேதத்திற் சொல்லப்பட்ட பொருளாம்; (அஃதன்றி), பயனும் அன்னது - அதன் விளைவும் அத்தன்மைத்தே யாகும். ஆல்: அசை.

இறைவன் வேள்விகளுக்குத் தலைவன் என்பதும், அவனே எல்லாம் ஆவன் என்பதும் கூறப்பெற்றன. அமலனுக்கு அளிப்பர்: ஓமம் செய்யுங்கால் எஞ்சியுள்ள நெய் முதலிய ஓம திரவியங்களை 'ஸ்ரீ விஷ்ணவேஸ்வாஹா' என்றுரைத்து ஒரே ஆகுதியாய் ஓமஞ் செய்வர்; அது சராசரமனைத்தினும் சாரும் என்பது கூறப்பெற்றது. 'எல்லா நதிகளும் கடலில்சென்று சங்கமமாதல்போன்று, எந்தத் தேவதைகளை வணங்கினாலும், அந்த வணக்கம் கேசவனையே சார்கின்றது' என்றதும் ஒப்பு நோக்குக. 'யார் என்னை எவ்வாறு வழிபடுகின்றாரோ அவர்க்கு நான் அவ்வாறே அருள் புரிகின்றேன்' (பகவத்கீதை. 3·11); என்பதுங் காண்க. மகாவிஷ்ணுவிற்கு 'யக்ஞ போக்தா' என்ற பெயருண்டு; 'போகியாயிருந் துயிர்க்குப் போகத்தைப் புரிதல்' (சிவ. சித்தி. 1·2·50)-யும் காண்க. அராவணை அமலன் - திருமால். பராவ அரும் என்பது பராவரும் எனக் குறுகிற்று; (அயோத்தி. மந்தரை. 47); சராசர மனைத்தும் பரம்பொருளின் திருமேனி யாகலின், அவனுக்கு அளிக்கும் ஆகுதி முதலியன அவற்றைச் சாரும் எனப்பட்டது. 'மறைப் பொருட் பயன்' என்றுங் கொண்டு பொருள் காணலாம்.

பி - ம். 1. ஓராகுதி; கடன்முறை; யோம்புவார்.
2. அளிப்ப ரேயது,. 68

198. பகுதியி னுட்பயன் பயந்த தன்னதின்
விகுதியின் மிகுதிக ளெவையு மேலவர்
வகுதியின் வயத்தன வரவு போக்கது
புகுதியில் லாதவர் புலத்திற் றேமோ.

(அந்தப் பரம்பொருள்), பகுதியினுள் - மூலப் பிரகிருதியினின்று, பயன் பயந்தது - காரிய வடிவான உலகினைப் படைத்தது,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மேலவர் - சிறந்த ஞானிகள் (நூல்களிற் கூறிய) வகுதியின், வயத்தன எவையும் - மறைநூல்களின் வகைகளில் அடங்கிய எல்லாப் பொருள்களும், அன்னதின் - அந்த மூலப்பிரகிருதியினின்று எழுந்த, விகுதியின் மிகுதிகள் - விகாரத்தில் பிறந்த கூட்டங்களே; (மற்றும் இவ் வுலகங்களில்), வரவு போக்கு - (கருமத் தொடர்பாலன்றித் தானுகவே தன் இச்சைப்படி) வந்து செல்வதாகிய அந்தப் பரப்பிரமத்தின் உண்மை வடிவம், புகுதி இல்லாதவர் புலத்திற்று ஆகுமோ - தத்துவ உணர்வில்லாதவருடைய அறிவினுல் அறியப்படுவதாகுமோ? (ஆகாது). ஓ - வினு.

இச் செய்யுட்கண் காரியப் பிரபஞ்சமும் இறைவன் தானுகவே தோன்றி உயிர்க்கருள்வன் என்பதும் கூறப்பட்டன. பிரகிருதி, விகிர்தி என்ற வட சொற்கள் பகுதி, விகுதி எனத் திரிந்தன. மேலவர் வகுதியின் வயத்தன எவையும் அன்னதின் விகுதியின் மிகுதிகள் என இயைக்க. 'சுழுத்திபோலப் பொருந்துமவ் வியத்தந் தன்னில், இதுகால தத்துவப்பே ரீசனுட் பார்வை யாலே, முது மூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்த மாமே' (கைவல்யம். தத்துவ. 29); என்பது காண்க. உள்ளதாகிய காரணத்தில் உள்ளதாகிய காரியம் தோன்றும்; இதனைச் சற்காரிய வாதம் என்பர் சைவசித்தாந்திகள். பிரகிருதி மாயை: 'மண் மாயையாகத் திரிகைதன் சத்தியாக ஆரியன் குலாலனுய்நின் ருக்குவன் அகில மெல்லாம்' (சிவ. சித்தி. 1·1:18). மூலப்பிரகிருதியின் விகாரத்திற் பிறந்த கூட்டங்கள்; 'ஆகாசாத் வாயு; வாயு: அக்னி; அக்னி: ஆபஹா; ஆபோ பிருத்வீ' என்பது வேதம். 'தோற்றமாம் சத்திதன்னிற் சொல்லிய விண்ணும் விண்ணிற், காற்றதாங் காற்றிற் றீயாங் கனலினீர் நீரின் மண்ணும், போற்றுமிவ் வைந்தும் நொய்ய பூதங்க ளென்றும் பேராம், சாற்றுமற் றிவற்றிற்போக சாதன தனுவுண்டாகும்' (கைவல்யம். தத்துவ. 54) என்பதும் காண்க. இந்தப் பிரபஞ்சத் தோற்றம் முதலிய பல விவரங்களும் பஞ்சீகரணப் பகுதிக்கண் கண்டு தெளிக. 'அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே' (தாயு. பரிபூரண. 7); இங்குப் பரிபாடல் (3, 5-9)ம் காண்க. பரம்பொருள் கருமத் தொடர்பால் போக்குவரவுறுதல் இல்லை; (ஒப்பு): 'வந்தாய்போல வாராதாய், வாராதாய்போல் வருவோனே'; (திருவாய். 6·10:9); 'வாராதே வரவல்லாய்' (ஆரணிய. 55); 'நான் பிறப்பிறப் பற்றவன் என் ஆன்மமாயையால் அவதரிக்கின்றேன்' (பகவத். 3·6); 'பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோ ரிலையே' (பரிபா.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

3·66·70); 'அஜாயமனோ பஹுதா விஜாயதே' என்பது வேதம். 'மூலமே யில்லா முதல்வனே' (ஆரணிய. 1172); 'கர்மங்கள் என்னைத் தீண்டா' (பகவற். 3·14); 'அலகிலா வுயிர்கள் தத்தம் ஆணையின் அமர்ந்து செல்லத் தலைவனாய் அவற்றின் தன்மை தனக்கெய்த லின்றி' (சிவ. சித்தி. சூத். 2-1); 'நிறுத்திடு நினைந்த மேனி நின்மல னருளினாலே' (சிவ. சித்தி. 1·45). புகுதியில்லாதவர் புலத்திற் றுருகுமோ என்பது; 'சிவம் சத்தி தன்னை யீன்றும் சத்திதான் சிவத்தை யீன்றும், உவந்திருவரும் புணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும், பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகும், தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் தெரியு மன்றே' (சிவ. சித்தி. 2·77); 'என்னாற் கண்காணிக்கப்பெற்றுப் பிரகிருதியானது இயங்குதிணை நிலைத் திணைப் பொருள்களைக் கொண்ட உலகினைப் படைக்கின்றது,; இதன் காரணத்தால் உலகம் சுழல்கிறது' (பகவத்கீதை. 9·10); 'அறிஞர்களே என் உண்மை நிலையை உணர்வர்; மூடர்கள் என்னைக் கன்மவசப்பட்ட ஓர் மானிட வடிவன் என்று எண்ணி அவமதிக்கின்றனர்' (பகவத்கீதை. 9·11) என்றவற்றால் உணரலாம். இனி, மூலப்பிரகிருதியினின்று மகத்தத்வமும், அதினின்று அகங்காரமும், அதினின்று சப்தமும், சப்தத்தினின்று ஆகாயம் முதலியனவும், முக்குணங்களும், கருமேந்திரிய ஞானேந்திரியங் களும் தோன்றின என்ப; முழு விவரமும் விரிந்த நூல்களிற் காண்க. மேலவர் வகுதியின் வயத்தன என்பது; தத்துவங்களும் அவற்றாலாகிய பிரபஞ்சமும் என்க. வரவு போக்கது - வருதலும் போதலும் உடையது. பெருமாள் அவதாரங்கள் அனைத்தும் கரும வயத்தன அல்ல; அவன் நினைப்புமாத்திரத்தில் நிகழ்வது: 'குறித்ததொன் றுகமாட்டாக் குறைவில னாதலானு, நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும், வெறுப்பொடு விருப்புத் தன்பான் மேவுத லிலாமை யானு, நிறுத்திடு நினைந்த மேனி நின்மல னருளினாலே' (சிவ. சித்தி. 1, 45).

பி - ம். 1. பயனு மன்னதின், பயந்த தின்னதின், தன்னது.

2. விரதிகள்; எவையின்; மேலவாம்.

3. வகுதியின் வைத்தது, வசத்தன, வயத்தது.

4. புகுதியின் போக்கது, றங்குமோ; புலத்தி னுருகுமோ.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



199. எழுத்தியல் நாளத்தி னெண்ணி லாவகை
முழுத்தனி நான்முகன் முதல முற்றுயிர்
வழுத்தரும் பொகுட்டதோர் புரையின் வைகுமால்
விழுத்தனிப் பல்லிதழ் விரையி லாமுகிழ்.

'எண் இலா வகை - அளவற்ற கூறுபாடுகளை யுடைய, முழு தனி நான்முகன் முதல முற்றுயிர் - முழு வடிவமான ஒப்பற்ற பிரமன் முதலான உயிர்கள் அனைத்தும், எழுத்து இயல் நாளத்தின் - வரையப்பட்ட ஓவியம்போன்ற அழகிய தண்டுடன் இயைந்ததும், விழு தனி பல் இதழ் - சிறந்த நிகரற்ற பலவாகிய இதழ்களை யுடையதும், விரை இல் ஆம் முகிழ் - நறுமணத்திற்கு இருப்பிடமுமான அத் திருமாலின் நாபிக்கமலத்தினது, வழுத்த அரு பொகுட்டது ஓர் புரையில் வைகும் - முற்றும் துதிசெய்தற்கு அருமையான கொட்டையின் ஓர் இடைவெளியில் பொருந்தி நிற்கும். ஆல் - அசை.

சராசரங்களின் சிறுமையும் பரம்பொருளின் பெருமையும் கூறப்பெற்றன. வழுத்தரும் பொகுட்டு; 'அண்டப் பெருங் கோயிற் கெல்லா மழகாய, மண்டலங்கள் மூன்றின்மே னின்று மலராத, புண்டரிக மொட்டின் பொகுட்டோ புரையம்மா' (ஆரணிய. 1176). நாளம் - தண்டு; (ஆரணிய. 606). பொகுட்டு - கொட்டை; 'விளைநறவு கக்கும் பொலம் பொகுட்டலர் கமலம்' (குமரகுரு. மீனாட்சி. 8);. 'புவனமோ நான்முகன் படைப்பு, நான்முகனோ திருமா லுந்திவந்தோன்' (ஔவை). உலக சிருட்டிக்கிரமம் புருட சூக்தத்திலும் சொல்லப்பட்டது. நாம் காணும், கருதும் பிரபஞ்ச மெல்லாம் பரம்பொருளின் நாபிக்கமலத்தின் பொகுட்டில் ஒரு சிறு புரையில் அமைவனவே என்றதால், அவன் அளவற்ற ஆற்றல் கூறப்பெற்றது. முகிழ் - ஆகுபெயர்.

பா - ம். 1. எண்ணைலா, எண்ண லாமறை.

2. நாயகன் மூலம்; முற்றியல், மற்றுயிர்.

3. ஒரோளியின்.

4. பலவிதழ், யல்லிதன்; விரையுலா முகிழ்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**200.** **கண்ணினுங் கரந்துளன் கண்டு காட்டுவார்**
**உண்ணிறைந் திடுமுணர் வாகி யுண்மையால்**
**மண்ணினும் வானினு மற்றை மூன்றினும்**
**எண்ணினும் நெடியவ னொருவ னெண்ணிலான்.**

'எண்ணினும் நெடியவன் - தன்னைக் குறித்து நினைவாருடைய நினைவிற்கு எட்டாதவனும், ஒருவன் - ஒப்பற்றவனும், எண்ணிலான் - (குண கர்மங்களினால்) வரையறுக்கப்படாதவனுமான அத் திருமால், கண்ணினும் கரந்துளன் - பார்ப்பவரது விழிகளிலும் மறைந்துள்ளான்; உணர்வாகி உண்மையால் - ஞான வடிவினன் ஆகலின், (தன் வடிவத்தினை), கண்டு காட்டுவார் - தாம் தரிசித்து அதனைப் பிறர்க்குக் காட்டப்புகும் தத்துவ ஞானிகளுடைய, உள் நிறைந்திடும் - உள்ளத்துள்ளே பூரணமாய் விளங்குகின்றான்; (மற்றும்), மண்ணினும் வானினும் மற்றை மூன்றினும் - பூமியிலும், ஆகாயத்திலும், (நீர், தீ, வளி) என்னும் ஏனைய மூன்றிலும், (அவ்வவற்றின் உள்ளுறையும் ஒருவனாகவும் மறைந்து நிற்கின்றான்)

இறைவன் எங்கும் உளன் என்பது இங்குக் கூறப் பெற்றது. இச் செய்யுள் கருத்துககு ஒப்பு, பகவத்கீதை. அத். 7; 6—10 காண்க. 'அங்கிங் கெனாதபடி யெங்கும் பிரகாசமா யானந்த பூர்த்தியாகி, அருளொடு நிறைந்த தெது' (தாயு. 1); என்பதும் நோக்குக. கண்ணினும் உளன்; (ஒப்பு): 'சாணினு முளன்' (இரணிய. 124); உணர்வாகி; 'அறிவினுக் கறிவாகி'; 'சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகு திவ்யதே ஜோன் மயத்தை' (தாயு. பரசிவ. 9); 'உள்குவா ருள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி யென்று, வெள்கினேன்' (அப்பர். தேவா. 1159 : 3). எண்ணிலான்; 'குணகர்ம விபாகச:' (கீதை.); 'மனவாக் கெட்டாச் சித்துருவாய்' (தாயு. பொருள். 1); உள் நிறைந்திடும் உணர்வு; 'யாதுமன நினையுமந்த நினைவுக்கு நினைவாகி' (தாயு. பொருள். 15). 'மண்ணினும் வானினு மற்றை மூன்றினும் நெடியவன்' எனக் கூட்டிப் பஞ்சபூதங்களிலும் மிக்கவன் எனினும் ஒன்றும். 'கண்டு காட்டுவான்' என்ற பாடமாயின், தான் கண்டு பிறர்க்கும் உண்மைப் பொருளைக் காட்டுபவன் என்க.

பி - ம். 1. கண்ணொளி கரந்தெனக் கரந்து காட்டுவான், கண்டு காட்டுவான், காட்டுவர்.
2. முனியாகி, மதியாகி; ஒண்மையால்.
4. நெடியனென் றொருவன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



201. சிந்தையிற் செய்கையிற் சொல்லிற் சேர்ந்துளன்
இந்தியந் தொறுமுள னுற்ற தெண்ணினுல்
முந்தையோர் எழுத்தென வந்து மும்முறைச்
சந்தியும் பதமுமாய்த் தழைத்த தன்மையான்.

'உற்றது எண்ணினுல் - அந்தப் பரம்பொருளின் உண்மை நிலையை எண்ணுமிடத்து, (அவன் உயிர் வருக்கங்களின்), சிந்தையில் செய்கையில் சொல்லில் சேர்ந்து உளன் - எண்ணத்திலும் செயலிலும் சொல்லிலும் இயைந்திருக்கின்றுன்; இந்தியம் தொறும் உளன் - அவற்றின் இந்திரியங்கள்தோறும் இருக்கின்றுன்; முந்தை ஓர் எழுத்தென வந்து - நான்மறைகளின் தொடக்கத்தில் கூறப்படுகின்ற ஓரெழுத்தாகிய 'ஓம்' என்னும் பிரணவமாகத் தோன்றி, (பின்பு ஈரெழுத்தாகிய 'நம' என்பதும், அதன்பின் ஐந்தெழுத்தாகிய நாராயணுய என்பதும் ஆகக்கூடிய எட்டெழுத்தும்), மும்முறை பதமும் - மூன்று பதமும், சந்தியும் ஆய் - இரண்டு சந்தியுமாகி, தழைத்த தன்மையான் - பொருட் செறிவால் மிக்கு விளங்கும் இயல்பினன்.

இதுவும் முன் செய்யுளின் கருத்தையே வலியுறுத்தும். சிந்தையிற் செய்கையிற் சொல்லிற் சேர்ந்துளன் ; (ஒப்பு) : 'யான் ஒட்டி யென்னுள் இருத்துவன் என்றிலன், தான் ஒட்டி வந்தென் றனி நெஞ்சை வஞ்சித்து, ஊன் ஒட்டி நின்றென் உயிரிற் கலந்து' (திருவாய். 1·7·7) ; 'உலகெலாமாகி வேறு யுடனுமா யொளியா யொன்றி' (சிவ. சிந்தி. 2, சூத். 1). பிரணவத்தின் பொருள் :—அகாரவாச்யனை திருமாலுக்கு மகாரவாச்யன் ஆன ஜீவன் அடிமை என்பர். ஓம் + நம: + நாராயணுய என்பன மூன்று பதங்கள் ; இங்கு இரு சந்திகள் காண்க.

பி - ம். 1. நிர்ந்துளன், சேர்ந்துளான்.
2. இந்தியந் தனிலுற்ற ; தெண்ணினுன்.
4. தோன்றுந் தன்மையான், தழைக்கும், தவேத்த.



CC-O. Nanaji Deshmukh Library; BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**202.** **காமமும் வெகுளியு முதல கண்ணிய**
**தீமையும் வன்மையுந் தீர்க்குஞ் செய்கையான்**
**நாமமு மவன்பிற நலிகொ டாநெடும்**
**சேமமும் பிறர்களாற் செப்பற் பாலவோ.**

'காமமும் - ஆசையும், வெகுளியும் - சினமும், முதல கண்ணிய - முதலாகக் கருதப்பட்ட, தீமையும் வன்மையும் தீர்க்கும் செய்கையான் - கெடுதிகளையும் (அவற்றின்) வலிமையையும் (தன்னைப் புகல் அடைந்தவர்க்குப்) போக்கும் அருட் செயலுடன் கூடியவன் ; (அத்தகையவனுடைய), நாமமும் - திருநாமங்களின் பெருமையும், அவன் பிற நலி கொடா நெடு சேமமும் - அப் பெருமானுடைய பிற உயிர்களுக்கு வருத்தந் தராதபடி செய்யும் ரட்சிக்கும் தொழிலும், பிறர்களால் செப்பல் பாலவோ - அவன் அருள் பெறாத அஞ்ஞானிகளால் எடுத்துரைக்கும் தன்மையவோ ? இல்லை. ஓ - வினா.

இறைவன் அருள் வழங்கும் முறை இங்குக் காட்டப்பெற்றது. 'காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன் நாமங் கெடக்கெடும் நோய்' (குறள். 360) என்பதில் குறிக்கப்பட்டது பிறவி நோய். திருமாலின் திருநாமம் எல்லாம் செய்ய வல்லது என்பதை, 'நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே, தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே, சன்மமு மரணமு மின்றித் தீருமே, இம்மையே இராமவென் றிரண்டெ ழுத்தினால்' (பால. பாயிரம்.) என்றது கொண்டும், 'மும்மைசால் உலகுக் கெல்லாம் மூலமந்திரம் என்பது கொண்டும்' (கிட்கிந்தா. 300) ; 'குலந்தரும் செல்வந் தந்திடும்' (திவ்ய. பெரியதிரு. 1·1.9) என்ற திருமங்கை மன்னன் அருளிச் செயல் கொண்டும் உணரலாம். திருமால் காப்புக் கடவுளாக இருந்து பல்லுயிர்களையும் காத்தருள்வன் என்பது குறிக்கப் பட்டது. பின்னிரண் டடிகளின் கருத்து: 'மேல் மிற்றோர், நோயுஞ் சார் கொடான் நெஞ்சமே சொன்னேன், தாயும் தந்தையுமா யிவ்வுலகினில், வாயுமீசன் மணிவண்ண னெந்தையே' (திருவாய். 1·10:6) என்ற வரிகளிற் காண்க. 'பிதாஹமஸ்ய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஜகதோ மாதா தாதா பிதா மஹ:, வேத்யம் பவத்ர மோங்கார ருக்ஸாம யஜுரேவச:' (கீதை. 9·17); 'அனன்யாஸ் சிந்தையந் தோமாம் யேஜனு: பர்யுபாஸதே, தேஷாம் நித்யாபி யுக்தானும், யோகக்ஷேமம் வஹாம்யஹம்' (கீதை. 9·22) என்றவற்றிலும் நாமமே சேமம் என்றமைவதும் காண்க.

பி - ம். 2. நீய்க்குஞ்; செய்கையன், செய்கையால், செம்மைய.

3. நாமமும் பிறர்கொள, வினைபெற, பெருமைப் நவில என்றது, நவில்வ னல்லது.

4. செப்ப லாகுமோ; செப்பற் பாலதோ. 73

203. காலமுங் கருவியு மிடனு மாய்க்கடைப்
பாலமை பயனுமாய்ப் பயன்றுய்ப் பானுமாய்ச்
சீலமு மவைதருந் திருவு மாயுளன்
ஆலமும் வித்துமொத் தடங்கு மாண்மையான்.

'ஆலமும் - (பல விழுதுகள் வேரூன்றப்பெற்று விரிந்த) ஆல மரமும், வித்தும் ஒத்து - (அம்மரத்தையும் தன்னுள் அடக்கி நிற்கும்) விதையும் போல, அடங்கும் ஆண்மையான் - தனது சூக்கும உருவில் அனைத்தும் அடங்கப்பெற்ற மிக்க விபவமுடைய அப் பெருமான், காலமும் கருவியும் இடனுமாய் - காலமும் சாதனமும் (செயலாற்றுதற்கான) இடனுமாய், கடைபால் அமை பயனுமாய் - (அச் செயலால்) இறுதியில் செய்பவன் அடையக்கூடிய பயனுமாய், பயன் துய்ப்பானுமாய் - அந்தப் பயனை அனுபவிக்கின்ற சீவான்மாவுமாய், சீலமும் அவை தரும் திருவுமாய் - நல்லொழுக்கங்களும், அவ்வொழுக்கங்களில் (இம்மை, மறுமை, வீடுகளைத்) தரக்கூடிய நிதியுமாய், உளன் - இருக்கின்றான்.

முதலடிக்கு ஒப்பு: 'யாவருமாய், யாவையுமாய் எழில் வேதப் பொருள்களுமாய்' (திருவாய். 4·1·2); இரண்டாம் அடிக்கு (ஒப்பு): 'கருமமுங் கரும பலனுமாகிய காரணன்'. (திருவாய். 3·5·10); 'விதியாய் வினைவாய் வினைவின் பயனாகி' (தேவா. 72·1); 'யக்ஞம் நானே, ஸ்வதா நானே, ஔஷதம் நானே, மந்திரம் நானே, ஓமம் செய்யப்படும் நெய்யும் நான், அக்கினி நான், வேட்டல் நான்' (கீதை. 9·16); 'போகமாய்ப் விரிந்தும் போகியாய்ப் பரந்தும்' (வி. பா. அருச். தவ. 78); 'செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும் இறைவன்' (சிவ. போதம். 11). காலமும் இடனும்;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'அஹமே வாக்ஷய: கால: தாதாஹம் விச்வதோ முக:'; 'ஓயாத காலம் நானே எங்கும் பரந்திருந்து வினைப்பயனை வழங்குபவன் நானே' (கீதை. 9·33). ஆலமும் வித்துமொத் தடங்கும்; 'எல்லா உயிர்களுக்கும் வித்து எதுவோ அதுவே நான்' (கீதை. 10·39). ஆலமும் வித்தும்; பால. வேள்வி. 21; ஆரணிய. 155-ம் காண்க. 'மரமரத்தின் வித்தும் வந்தியையுமாபோல்' (சிவ. சித்தி. 2·9); சீலமும் அவைதரும் திருவும்: 'ஒழுக்கம் விழுப்பந் தரலா லொழுக்கம் உயிரினு மோம்பப் படும்' (குறள். 131). திரு என்ற சொல்லில் இம்மை மறுமை வீடு என்னும் அனைத்தும் அடங்கும். சைவத்திருவும் வைதிகத்திருவும் எனினும் ஒன்றும். இறைவனது அசாதாரணமான இச் சக்தியைக் குறித்து 'ஆண்மையான்' என்றார்.

பி - ம். 1. பாலமைப், பாலவைப், பால்வரு.

4. மொத்தணைந்த, தமைந்த. 74

204. உள்ளுற வுணர்வினி துணர்ந்த வோசையோர்
தெள்விளி யாழிடைத் தெரியுஞ் செய்கையான்
உள்ளுளன் புறத்துள னென்று நண்ணலான்
தள்ளரு மறைகளு மருளுந் தன்மையான்.

'ஓர் தெள்விளி யாழிடை - ஒப்பற்ற தெளிவான இசையினை யுடைய யாழினின்று உண்டாவதும், உள் உற - மனத்திலே நன்கு பொருந்த, உணர்வினிது உணர்ந்த - அறிவினால் இனியதென்று அறியப்படுவதுமான, ஓசை - ஒலியைப்போல, தெரியும் செய்கை யான் - யாவர்க்கும் இனியனாகக் காணப்படும் தன்மையனான அத் திருமால், உள் உளன் புறத்து உளன் - எல்லாப் பொருள்களின் உள்ளும் இருக்கின்றான், புறத்தும் இருக்கின்றான்; (ஆயினும்), ஒன்றும் நண்ணலான் - (அவற்றின் நன்மை தீமைகளிலோ, குணம் குற்றங்களிலோ) யாதொன்றும் தன்பால் தொடரப் பெறான்; (மேலும்), தள்ள அரு மறைகளும் மருளும் தன்மையான் - (சிறந்த பிரமாணம் என்று பலரும் ஒத்துக்கொள்ளும்) விலக்குதற்கியலாத

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நால் வேதங்களும் (உண்மை யியல்பு அறியமாட்டாது) திகைக்கும் வடிவினை யுடையவன்.

யாழிடமிருந்து ஓசை புலப்படுவதுபோல் பொருள்களிலிருந்து புலப்படும் இயல்பினன் இறைவன் என்பதும், அவன் எங்குமிருந்தும் எதனிடமும் பற்றற்றவன் என்பதும் கூறப்பெற்றன. முதல் இரண்டடிக்கு (ஒப்பு): 'முன்நல் யாழ்பயில் நூல் நரம்பின் முதிர்சுவையே' (திருவாய். 2:3:7). யாழிடைத் தெரியும் செய்கையான்; 'பண்ணு ளீராய்ப் பாட்டு மானீர்' (தேவா. 56, 4); 'பண்ணிடைத் தமிழொப்பாய், பழத்தினிற் சுவையொப்பாய்' (தேவா. 60·6); 'உள்ளுமாய்ப் புறமுமாகி யுருவமா யருவமாகி' (தேவா. 240·7); உள்ளுளன் புறத்துளன் ஒன்று நண்ணலான்; 'உலகெலாமாகி.........அவற்றின் தன்மை தனக்கெய்த லின்றி' (சிவ. சித்தி. 2, சூ. 1); 'தொழில்கண் மூனறும், போற்றவே யுடைய னீசன் புகுந்தது விகார மென்னிற், சாற்றிய கதிரோ னிற்கத் தாமரை யலருங் காந்தங், காற்றிடுங் கனலை நீருங் கரந்திடும்' (சிவ. சித்தி. 1·33); 'கருமங்கள் எனைத்தீண்டா' (பகவத்கீதை. 3·14). தள்ளரு மறைகளும் அருளும் தன்மையான் என்பதற்கு, விலக்கற் கருமையான வேதங்களைப் பிரமனுக்கு அருளிச் செய்தவன் என்றும் கூறலாம்; (ஒப்பு): 'அன்னமா யருமறைக ளறைந்தாய் நீயே' (ஆரணிய. 60); 'அன்னமாய் நூல் பயந்தாற்கு' (பெரியதிரு. 9·4·2). தள்ளரு மறைகள் - 'தள்ளரிய பெருநீதி' (பால. குல முறை. 21).

பி-ம். 1. உணர்வினு முணர்ந்த; ஓதிய; ஓசையான், உண்மையோர்.
2. தெள்ளிய வழியிடைத், தெள்ளியமனமிடைத், தெள்ளுறு மனனிடைத்; தெரிக்குஞ் செய்கையான், செய்கையின், செய்கைபோல்.
3. ஒன்றுந் தானலன்-
4. தள்ளுறு; மயங்கும்.

75

205. ஓமெனு மோரெழுத் ததனி னுள்ளுயிர்
ஆமவ னறிவினுக் கறிவு மாயினன்
தாமமு வுலகமுந் தழுவிச் சார்தலால்
தூமமுங் கனலும்போற் றொடர்ந்த தோற்றத்தான்.

28

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'ஓம்' எனும் ஓர் எழுத்து அதனின் - ஓம் 'என்ற பிரணவத்தின், உள் உயிர் ஆம் அவன் - உள்ளடங்கிய அ, உ, ம் என்னும் ஓரெழுத்துப் பதம் மூன்றனுள், முக்கியமான அகாரம் என்னும் உயிரெழுத்தின் பொருளாகிய அத் திருமால், அறிவினுக்கு அறிவும் ஆயினன் - தானே ஒளிவிட்டு விளங்குவதான அறிவுக்கும் அறிவாக ஆயினன்; தாமம் மூவுலகமும் தழுவி சார்தலால் - ஒளிமிக்க மூன்றுலகங்களையும் பொருந்திப் புணர்ந்திருப்பதால், தூமமும் கனலும் போல் தொடர்ந்த தோற்றத்தான் - புகையும் நெருப்பும் போன்று ஒருங்கே பல இடங்களில் பரவும் இயல்பு உடையவன்.

'ஓ மித்யாக்ஷரம் ப்ரஹ்ம' (கீதை. 8·13) என்று சுருதி கூறுதலின் ஓமெனும் ஓரெழுத்தென்றார். பிரணவம் அல்லது ஓங்காரம் மொழிகளுக்கு வித்துப்போன்றது. எல்லா மறைகளிலும் பீஜ மந்திரமாயிருப்பது ஓங்காரம். சப்த ப்ரஹ்மம் என்று இஃது அழைக்கப்படும். 'ப்ரணவ ஸர்வவேதேஷு சப்த: கே பௌருஷம் ந்ருஷு'; (எல்லா வேதங்களில் ஓங்காரமாகவும், வானில் ஓசையாகவும் நான் இருக்கிறேன்' (கீதை. 7·8). பிரணவம் என்னும் ஓரெழுத் தொருமொழிக்குப் பொருள் பிரம்மம்; அதில் அடங்காத பொருளில்லை. 'உம்பர் நாயகன் திருவாக்கில், பிரணவமுதித்த ததனிடை வேதம் பிறந்தன' (திருவிளை. 16·4); 'ஓதரு மகார முகாரமே மகார முதித்திடும் பிரணவம்' (திருவிளை. 16·33); அதனி னுள்ளுயிர்; ஓம் என்பதன் உள்ளுயிர் அகாரம் என்ப. அறிவினுக் கறிவு மாயினன்; அறிவு வடிவன் ஆன்மா; எனவே அறிவினுக் கறிவாகி என்பதற்கு உயிருக்கு முயிராகி என்றே பொருள் கொள்ளலாம்; 'உயிர்க்குயிராகி நின்ற' (திவ்ய.); 'ஒருவனையே நோக்கும் உணர்வு' (இயற்பா. முதல். 67); 'இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி எங்குநிறை கின்ற பொருளே' (தாயு. 94). மூவுலகமும் தழுவிச் சார்தல்; 'ஓசை யொலியெலா மானாய் நீயே' (தேவா. 299·1); 'உலகெலாமாகி வேறு யுடனுமாய்' (சிவ. சித்தி. 2:1). தூமமுங் கனலும்போல்; (ஒப்பு): 'கூறு மங்கியும் தூமமும் போற்குண குணியாய்' (பாகவத. 7·2·65); தூமமும் புகையும்போல் - தூமத்தினின்றே யுண்டாகும் இரண்டும் பரவும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இயல்பின ; அதைப்போல, கடவுள் எங்கும் பரந்தவன் ; அவன் ஆற்றலும் அவ்வாறே என்றனர்.

பி - ம். 2. அறிவினுக் கறிவு மாகுவான், ஆகுவன்.

3. தாமமூன் றுலகமும், தாமமுன் னுலகமும், நாமமு முலகமும் ; தாமும், தானுஞ், சாற்றலாற்.

4. தூமவெங். 76

206. காலையி னறுமல ரொன்றக் கட்டிய
மாலையின் மலர்புரை சமய வாதியர்
சூலையின் திருக்கலாற் சொல்லு வார்க்கெலாம்
வேலையுந் திரையும்போல் வேறு பாடிலான்.

'காலையில் நறுமலர் ஒன்ற கட்டிய - காலைப்போதில் மலர்ந்த நன்மணம் பொருந்திய மலர்களை ஒருசேரத் தொடுத்த, மாலையின் மலர் புரை சமய வாதியர் - மாலைக்கண் உள்ள அம் மலர்களை நிகர்த்த (ஒன்றோடொன்று வினவிடையாகத் தொடர்ந்த மிகப் பலவான) வாதங்களைப் புரிபவர்களுடைய, சூலையின் திருக்கு அலால் - குடைதலால் உண்டான மாறுபாடுகளன்றி, சொல்லு வார்க்கு எலாம் - ஒரே மனதாகப் பாவித்துச் சொல்லுபவர் எல்லோர்க்கும், வேலையும் திரையும்போல் வேறுபாடு இலான் - கடலும் (அதிற் காணப்படும்) அலையும்போன்று (தன்னில்) எத் தகைய மாறுபாடும் இல்லாதவன்.

பல்வேறு சமயவாதிகளால் அவன் பலவாறு கூறப்படினும் அவன் ஒருவனே என்பது கூறப்பெற்றது. ஒரு மாலையில் பலவித மலர்கள் தொடுக்கப்பட்டிருப்பினும் மாலை ஒன்றுதல்போல, பல மதங்கள் அமையப்பெற்றிருப்பினும் பரம்பொருள் ஒன்று என்க. பிரம்மத்தைப்பற்றிக் கூறுங்கால் 'சமயவா திகளெலாம் தம் தெய்வ மெம்தெய்வமென் றெதிர் வழக்கிடவு நின்றது எது?' என்றார் தாயுமானவர். காலையின் மாலையின் என்பதில் அடி முரண் காண்க. சூலையின் திருக்கு : பல சமயத்தினரும் தத்தம் கொள்கைக் கேற்றவாறு வேதப் பொருள்களை நலிந்து கூறும் மயக்கவுரை. வேலையும் திரையும்போல் - அலைகள் பலவாயினும் அவையனைத்தும் கடலோடு ஒன்றுவதுபோன்று சமயவாதிகள் கூறும் பொருள்கள் அனைத்தும் பரம்பொருளின்கண் அடங்கு மென்ப. சூலுதல் - குடைதல். ஐ - பெயர் விகுதி. மாலையும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மலர்களும் போலவும், வேலேயும் திரைகளும்போலவும் இறைவன் முறையே சீவான்மாக்களின் வேருகவும் அவைகளோடு ஒன்றியும் இருப்பதை இங்கு ஆசிரியர் குறிக்கின்ருர் என்க. ‘ மாலேயின்கண் மலர்போல் ’ நன். சங்கர. உரை. சூ. 127, 128 காண்க.

பி - ம். 1. ஒன்றிற் கட்டிய, காட்டிய.

2. மாலேயின் மலர்பொருள், மலர்புனே, மலேபொருள் ; சமயவாதிகள்.

3. நிருகலாற். 77

207. இன்னதோர் தன்மைய னிகழ்வுற் றெய்திய
நன்னெடுஞ் செல்வமு நாளு நாமற
மன்னுயி ரிழத்தியென் றிறைஞ்சி வாழ்த்தினேன்
சொன்னவ னுமமென் றுணரச் சொல்லினன்.

‘இன்னதோர் தன்மையன் - இப்படிப்பட்ட ஒப்பற்ற இயல்பினே யுடையவன் ஆன அந்த ஸ்ரீமந் நாராயணனே, இகழ்வுற்று - (நீ) இகழ்தலேப் பொருந்தி, எய்திய - நீ (கடுந்தவத்தின் விளேவாக) அடையப்பெற்ற, நல் நெடு செல்வமும் - சிறந்த ஏராளமான செல்வங்களும், நாளும் - ஆயுட்காலமும், நாம் அற - பெயருமின்றி அழிந்து கழிய, மன் உயிர் இழத்தி என்று - நிலேபெற்ற உயிரினே இழக்கின்றனேயே என்று வருந்தி, சொன்னவன் நாமம் - கீழே நான் சொன்ன அப் பெருமானுடைய திருநாமத்தை, இறைஞ்சி வாழ்த்தினேன் - வணங்கி வாழ்த்தினேன்’. என்று உணர சொல்லினன் - இரணியன் மனதில் படும்படி விளக்கமாகக் கூறினன்.

செய்யுள் 187 முதல் இச் செய்யுள் முடிய பிரகலாதன் பரம்பொருள் இலக்கணங்களேயும், அவன் திவ்ய நாமத்தின் சிறப்பையும் பல உதாரணங்களுடன் தன் தந்தைக்குக் கூறினன் என்க. இவ்வாறு அவன் கூறியது தந்தையின் நன்மைக்கே என்றதும் காண்க. நாம் அற - பெயரும் கெட்டொழியுமாறு ; நாமம் என்பதன் விகாரம் நாம் என்பது. இகழ்வுற்று இழத்தி என இயைக்க. சொன்னவன் - கீழே விவரிககப்பட்ட பெருமான்.

பி - ம். 1. தன்மையின்.

2. நாமுற.

3. இன்னுயிர் ; யென்றஞ்சி.

4. சொன்னவன் மூர்த்தியென் றிறைஞ்சி. 78

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வேறு

## இரணியன் சீற்றம்

208. எதிரில் நின்றவ னிவையுரைத் திடுதலு
மெவ்வுல கமுமஞ்ச
முதிரும் வெங்கத மொழிகொடு மூண்டது
முதுகடற் கடுவேய்ப்பக்
கதிரும் வானமுஞ் சுழன்றன நெடுநிலங்
கம்பித்த கனகன்கண்
உதிரங் கான்றன தோன்றின புகைக்கொடி
யுமிழ்ந்தது கொடுந்தீயே.

எதிரில் நின்றவன் இவை உரைத்திடுதலும - தன் எதிர் நின்றுகொண்டிருந்த பிரகலாதன் இந்த வார்த்தைகளை மொழிந்தவுடன், எ உலகமும் அஞ்ச - எவ்வகை யுலகமும் பயம் அடையுமாறு, முதிரும் வெம் கத மொழி கொடு - மேல் மேல் வளர்கின்ற கடுமையான சினம், அதற்கு உடந்தையான சொற்களையும் உடன் கொண்டு, முது கடல் நடு ஏய்ப்ப மூண்டது - பழமையான பாற்கடலிற் றோன்றிய விடத்தைப்போன்று எழுந்தது; (அதன் கடுமையால்), கதிரும் - சூரியன் முதலான ஒளிப் பிழம்புகளும், வானமும் சுழன்றன - விண்ணுலகமும் சுழலத் தொடங்கின; நெடு நிலம் கம்பித்த - நீண்ட பூமியினிடங்கள் நடுங்கின; கனகன் கண் உதிரம் கான்றன - இரணியனுடைய விழிகள் இரத்தத்தை ஒழுக விட்டன; புகை கொடி தோன்றின - நெருப்புக்குக் கொடி யெனப் படும் புகை காணப்பட்டன; கொடும் தீ உமிழ்ந்தது - கொடிய நெருப்பு அக் கண்களால் கக்கப்பட்டது. ஏ - அசை.

கதம் என்பது சினம்; அஃது அளவிறந்ததாகவே 'வெங் கதம்' எனப்பட்டது. கடற் கடு - ஆலகால விடம். கம்பித்தல் - நடுங்குதல். கம்பம் - வடசொல்; 'அமுது உடல் கம்பித்து' (திருவாச. 4·61). புகையை நெருப்பின் கொடி என்ப; புகைக்கொடி - புகைமாலையும் ஆம்.

பி - ம். 1. எவ்வுலகங்களும் எஞ்ச.
2. மொழிகண்டு, மொழிகொண்டு; முதிர்தரும்.
3. சுழன்றது.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இதன்பின் ஒரு அதிகப்பாடல் :—

வைய மேலினி வரும்பகை யுளவெனின்
வருவதொன் றென்றாலும்
உய்ய வுள்ளுளே யொருவனை யுணர்ந்தன
னென்றென்மு னுரைசெய்தாய்
செய்ய வேண்டுவ தென்னினி நின்னுயிர்
செகுக்குவன் சிறப்பில்லாப்
பொய்யி லாளனைப் பொருந்திய பெரும்பகை
போயபின் புகழையா.

## இரணியன் பிரகலாதனைக் கொல்லக் கட்டளையிடுதல்

209. வேறு மென்னொடு தரும்பகை பிறிதினி
வேண்டலென் வினையத்தால்
ஊறி யென்னுளே யுதித்தது குறிப்பினி
யுணர்குவ துளதன்றால்
ஈறி லென்பெரும் பகைஞனுக் கன்புசால்
அடியன்யா னென்கின்றான்
கோறி ரென்றன னென்றலும் பற்றினர்
கூற்றினுங் கொலைவல்லார்.

(அவன் உரக்க), 'இனி வேறு - இனி பிறிதாக, என்னொடு தரும் பகை - என்னொடு உண்டாகும் பகை, பிறிது வேண்டலென் - மற்றொன்றை விரும்புவே னல்லேன்; (இதுவே போதுமானது); வினையத்தால் - சூழ்ச்சியால், என் உளே ஊறி - என் உடலிலேயே ஊறியிருந்து, உதித்தது - (இத்தகைய பகைமை) தோன்றியது; இனி குறிப்பு உணர்குவது உளது அன்று - இனியும், (என் மகனுன இவனது) நினைவினை அறிய வேண்டும் என்பதில்லை; ஈறு இல் என் பெரு பகைஞனுக்கு அன்புசால் அடியன் யான் என்கின்றான் - அழிவில்லாத எனது பெரிய விரோதியினிடம் அன்பு செலுத்தும் அடியவன் என்று மொழிகின்றான்; கோறிர் என்றனன் என்றலும் - (ஆதலால்) இவனைக் கொன்றிடுங்கள்' என்று சொன்ன அளவில் கூற்றினும் கொலை வல்லார் பற்றினர் - எமனைப் பார்க்கிலும் கொலைத் தொழிலில் வல்ல கொலைஞர்கள் அவனைப் பிடித்துக் கொண்டனர். ஆல் : அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



எனக்கு ஏற்பட்ட இந்தப் பகை வேயின் உள்ளிருந்தே தீப் பிறப்பதுபோல என்னிடமே பிறந்துண்டாயிற்று ; (ஒப்பு): 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி' மூதுரை. 20 ; 'யார்க்கும், உந்தரு நிலையதாகி யுடனிருந் துயிர்கள் தம்மை, அந்தகர்க் களிக்கும் நோய் போல்' (ஆரணிய. 417); 'மேலைநாள் உயிரொடும் பிறந்து தான்விளை காலமோர்ந் துடனுறை கடியநோய்' (ஆரணிய. 227); இங்குக் குறித்த பகை, உட்பகை. இதன் பல தன்மைகளைத் திருக்குறள் 89-ஆவது அதிகாரம் கொண்டுணர்க. குறிப்பு - எண்ணம். ஈறில் என் பெரு பகைஞன் - தொன்றுதொட்ட விரோதி என்ற பொருளுடன், ஆதிநடு அந்தமில்லாதவன் என்ற தொனிப்பொருள் கொண்டுள் ளமையும் காண்க. கொல்+திர் என்பது கோறிர் என வந்தது. குறிப்பு இனி உணர்குவ துளதன்று, என்பதற்கு என் மனக் குறிப்பை இனியும் ஆராய வேண்டுவதில்லை எனினும் ஒன்றும். வினையம் - கருமமும் ஆம். குறிப்பு - அடையாளம் எனலும் ஆம்.

பி - ம். 1. தருபகை ; வேறுவேறுள தரும்பகை பிறிதெனின் ; வேண்டலா.

2. குறிப்பின.

3. அடியவனுன், அடியனென்.

4. கோறி யென்றலும், பற்றினர் சுற்றினர் ; கொலைவல்லோர், கொடுந் தொழிலில் வல்லோர். 80

## ஏவலாளரின் கொடுமையும்
## அவை பயனிலவாக ஆயினமையும்

210. குன்று போன்மணி வாயிலின் பெரும்புறத்

துய்த்தனர் மழுக்கூர்வாள்

ஒன்று போல்வன வாயிர மீதெடுத்

தோச்சின ருயிரோடுந்

தின்று தீர்குது மென்குந ருருமெனத்

தெழித்தனர் சினவேழக்

கன்று புல்லிய கோளரிக் குழுவெனக்

கனல்கின்ற தறுகண்ணர்.

கனல்கின்ற தறு கண்ணர் - கோபத்தீ ஒளிர்கின்ற கொடிய விழியினரான அந்தக் கொலைஞர்கள், வேழம் கன்று புல்லிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கோளரி குழு என - யானைக் கன்றினைப் பற்றிக்கொண்ட சிங்கத்தின் தொகுதியைப்போன்று (அப் பிரகலாதனைச் சூழ்ந்து கொண்டு), குன்றுபோல் மணி வாயிலின் - மலைபோல உயர்ந்த நவரத்தினங்கள் இழைத்துக் கட்டிய வாசலில், பெரும் புறத்து - பரந்த வெளியிலே, உய்த்தனர் - கொண்டு சென்று, 'உயிரோடும் தின்று தீர்குதும் என்குநர் - இவனை உயிருடன் (இவன் உடலைத்) தின்று விடுவோம்' என்று சொல்கின்றவர்களாய், உரும் என தெழித்தனர் - இடிபோல உரத்து அதட்டிக்கொண்டு, ஒன்று போல்வன ஆயிரம் மழு கூர்வாள் - ஒன்றுபோல வுள்ள (ஒரேமாதிரியான) ஆயிரக் கணக்கான மழுக்களையும், கூரிய வாட் படைகளையும் மீது எடுத்து ஓச்சினர் - உயர எடுத்து (அவன் மீது), வீசினார்கள்.

'குன்றுபோல் வயின்' (ஒப்பு): 'குன்று கண்டன்ன வுறையுள்' (சிலப். 5:27, 153); 'மங்குறோய் கோயிற் கொற்றக் கடைத் தலை' (கிட்கிந்தா. 65). மழு - எரி யீட்டி. கன்று புல்லிய கோளரிக்குழு என்ற உவமையின் பொருத்தம் பாராட்டற்குரியது.

பி - ம். 1. வாயிலி னெடும்புறந்து ; மழுக்கறைவாள்.
3. தெழிக்குநர்.
4. கனலுகு. 81

211. தாயின் மன்னுயிர்க் கன்பினன் றன்னையத்
தவமெனுந் தகவில்லோர்
ஏயெ னுந்துணை மாத்திரத் தெய்தன
எறிந்தனர் எறிதோறும்
தூய வன்றனைத் துணையென வுடையவன்
ஒருவனைத் துன்னுதார்
வாயின் வைதன வொத்தன வத்தனை
மழுவொடு கொலைவாளும்.

தவம் எனும் தகவு இல்லோர் - தூய்மையான செயல் என்று பகரத்தக்க நடுவுநிலை அற்றவர்களான அந்த அசுரர்கள், ஏ எனும் துணை மாத்திரத்து - ஏ என்று ஒருதரம் சொல்லும் கால வளவில் (விவகு விரைவாக), மன் உயிர்க்கு தாயின் அன்பினன் தன்னை - உலகத்து நிலைபெற்ற உயிர்களிடத்துத் தாயைக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காட்டினும் அன்புள்ளவனான அந்தப் பிரகலாதன் மீது, எய்தன - செலுத்தினவும், எறிந்தன - வீசினவும் ஆன, அத்தனை மழுவொடு கொலைவாளும் - அவ்வளவு எரியிட்டிகளும் கொலை புரியத்தக்க வாட்படைகளும்; எறிதோறும் - வீசுந்தோறும், தூயவன் தனை துணை என உடையவன் ஒருவனை - மிகவும் பரிசுத்தனான இறைவனைத் தனக்கு உற்ற உயிர்த் துணைவனாகக் கொண்டுள்ள அந்த ஞானியை, துன்னுதார் வாயின் வைதன ஒத்தன - பகைவர்கள் வாய்கொண்டு வைத வசைச் சொற்களை ஒத்துக் (ஒன்றும் செய்ய மாட்டாதனவாய்) கழிந்தன.

தவமெனுந் தகவில்லோர் துன்னுதார் என இயைத்துப் பொருள் கூறலும் ஆம். அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன் விளைப்பன தவமுடையோர் சொற்களே; அத்தவம் என்னும் தகுதி யில்லாதவர்கள் எங்ஙனம் வெகுண்டுரைப்பினும் அச் சொற்கள் கருதிய பயனை விளையா; அதுபோன்று, அசுரர்கள் மழுவாள் முதலாயின பிரகலாதனை ஊறுபடுத்தும் வன்மை யற்றன என்க. எய்தினர்: முற்றெச்சம். தாயின் மன்னுயிர்க் கன்பினன்; 'தாயொக்கு மன்பிற்' (பால. அரசியல். 4); 'தாயென உயிர்க்கு நல்கி' (கிட்கிந்தா. 348); 'தாயே யனைய கருணையான்' (சுந்தர. 1169); 'அன்னை தயையும்' (தனிப்பா. ஔவை.); பாலினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' (திருவாச. பிடித்த: 9); 'போற்றலாற் றுயரொத்தும்' (சீவக. 1895). வைதன எனவே அமையும், வாயின் என வேண்டாது கூறினர். அச் சொற்களின் பயனின்மை கருதி என்க. 'வாயின் வைதன ஒத்தன' (ஒப்பு): 'கோவிளங் குமரன் மார்பிற் கொலைவலா ரெறிந்த கொற்றப் பூவுடைக் குடுமி வெள்வேல் பூவெனப் பொலிந்த மன்னோ' (பாகவத. 7·2:45).

பி - ம். 2. எய்தினர்; எறிந்தன ரெறிதோறுந்.
3. வல்வினை தீயெனத் துணிவிலா, தூயவன்றனைத் தீயவன் றுணிவிலா.
4. வரும்வரும், மழுவெழுக், மழுவொடுங்; கொல்வாளும் கூர்வாளும்.

82

212. எறிந்த வெய்தன வெற்றின குத்தின
வீர்த்தன படையாவும்
முறிந்த நுண்பொடி யாயின முடிந்தன
முனிவிலான் முழுமேனி



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சொறிந்த தன்மையுஞ் செய்தில வாயின
தூயவன் துணிவொன்று
அறிந்த நாயகன் சேவடி மறந்திலன்
அயர்த்திலன் அவன்நாமம்.

எறிந்த - வீசப்பட்டனவும், எய்தன - செலுத்தப்பட்டனவும், எற்றின - தாக்கக்கூடியனவும் குத்தின - குத்தும் இயல்பினவும், ஈர்த்தன - பிளக்கும் (தன்மையனவும்) ஆன, படை யாவும் - எல்லா ஆயுத விசேடங்களும்; (அந்த ஞானிச் சிறுவன் உடல்மீது பட்டு), முறிந்த - இற்றனவாய், நுண்பொடி ஆயின முடிந்தன - சிறு தூள் களாக மாறிக் கழிந்தன; ஆயினும், முனிவு இலான் முழு மேனி - சிறிதும் சினமில்லாத பிரகலாதனுடைய உடல் முழுவதிலும், சொறிந்த தன்மையும் செய்தில ஆயின - தினவு சொரிதல்போன்ற தன்மையையும் செய்யக்கூடாதனவாயின; (அவ்வாறாகவும்), தூயவன் - பரிசுத்தனான அச் சிறுவன், துணிவு ஒன்று அறிந்த நாயகன் - உறுதியான ஓர் பொருளாகத் தன்னால் அறியப்பட்ட தலைவனான திருமாலினுடைய, சேவடி மறந்திலன் - பாத இணை களை மறந்தானில்லை, அவன் நாமம் அயர்த்திலன் - அவனது திருப்பெயரை மறந்தானுமில்லை.

பலவான ஆயுதங்களும் சிறுவன் மேனிக் கெவ்வகை யூறுஞ் செய்யவில்லை. பிரகலாதன் தான் துணிந்த முடிவான பொருளை நினைத்தவண்ணமாக இருந்தான். அயர்த்தல் - மறத்தல்; மணி. 18·83; 'அயர்ப்பது செய்யா அறிவின ளாக' (மணி. 23; 42); 'அந்நாள் நின்னை யயர்த்துப் போயினர்' (மணி. 25·162). 'துணி வொன்று அறிந்த நாயகன்' (ஒப்பு): 'துணிபொருள் திணிவிற் றாக்கி' (கிட்கிந்தா. 360).

பி - ம். 1. குற்றின; ஈர்ந்தன.

2. முறிந்து; வாயின; முடிவிலன்.

3. செய்கில; வாயது, வாயன, தானது; தன்மனம்; துணிவோடும் துணிவொன்றல், துணிவொன்றும்.

4. அறிந்து; அயர்ந்திலன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## பிரகலாதனை நெருப்பில் வீழ்த்துதலும் அவன் ஊறுபடாமையும்

213. உள்ள வான்பெரும் படைக்கலம் யாவையும்
உக்கன வுரவோய்நின்
பிள்ளை மேனிக்கொ ரானிவந் திலதினிச்
செயலென்கொல் பிறிதென்னக்
கள்ள வுள்ளத்தன் கட்டினன் கருவிகள்
கதுமெனக் கனல்பொத்தித்
தள்ளு மின்னென வுரைத்தனன் வயவரும்
அத்தொழிற் றலைநின்றார்.

(இந் நிலையில் அசுரர்கள் இரணியனை அணுகி), 'உரவோய் - வன்மை வாய்ந்தவனே! உள்ள வான் பெரு படைக்கலம் யாவையும் உக்கன - எங்கள்பாலிருந்த சிறந்த பெரிய ஆயுதங்கள் அனைத்தும் பொடியாகிக் கழிந்தன; நின் பிள்ளை மேனிக்கு ஓர் ஆனி வந்திலது - உன் குமாரன் உடலுக்கு எவ்வகையான ஊறுபாடும் நேர்ந்ததில்லை, இனி - இனிமேல், செயல் என்கொல் பிறிது என்ன - (நாங்கள்) ஆற்ற வேண்டுவது வேறு யாது உள்ளது' என்று கேட்க, (இரணியன்), 'கள்ள உள்ளத்தன் - மாயை மிக்க மனத்தவன் ஆகலின், (அப் பிரகலாதன்) கருவிகள் கட்டினன் - ஆயுதங்களை (தொழில் ஆற்றுவண்ணம்) கட்டிவிட்டான்போலும், (இனி), கதுமென கனல் பொத்தி தள்ளுமின் என உரைத்தனன் - விரைவாகத் தீயினை வளர்த்து அதில் வீழ்த்துங்கள்' எனச் சொன்னான்; (உடனே), வயவரும் - கொலை வீரரும், அ தொழில் தலை நின்றார் - அந்தக் கொடிய வேலையில் முயன்று நின்றார்கள்.

வான் பெரும் படைக்கலம் - உயர்வும் பெருமையும் கொண்ட கடவுட் படைகளுமாம்; பால. வேள்வி. 4; குலமுறை. 28; மேனிக் கொரானி - இணையெதுகை காண்க. ஹானி என்ற வடசொல் ஆனி என வந்தது. வலிமை ஒழியும்படி மந்திரத்தாற் பிணித்தல் 'கண்கட்டு வித்தை' என்றது காண்க. 'கரடிவெம் புலிவாயை யுங் கட்டலாம்' (தாயு. 117); 'கண்கட்டு வித்தைகளுங் காட்டி' (குற்ற. குற. 116); 'ஈதென்ன கண்கட்டு மாயம்' (இராமநா. ஆரணிய. 28). பொத்துதல் - தீமூட்டுதல். 'கனையெரி பொத்தி'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(மணி. 2·42); தலை நின்றார்; 'உரிமை யொழுக்கம் தலை நின்ற' (பெரியபு. கலிக்கம்ப. 1).

பி - ம். 1. உள்ள வான்படை யுலப்பில; உதிர்ந்தன; உரவோ யுள்.
2. வந்திலதென, திலதெனிற்.
3. கட்டினிற்; தழல் பொத்தி; கனன் மீது; கனல் பொங்க. 84

214. குழியி லிந்தன மடுக்கினர் குன்றெனக்
குடந்தொறுங் கொணர்ந்தெண்ணெய்
இழுது நெய்சொரிந் திட்டனர் நெருப்பெழுந்
திட்டது விசும்பெட்ட
அழுது நின்றன ரயர்வுற வையனைப்
பெய்தன ரரியென்று
தொழுது நின்றனன் நாயகன் றாளிணை
குளிர்ந்தது சுடுதீயே.

குழியில் இந்தனம் குன்றென அடுக்கினர் - ஒரு குழி அகழ்ந்து அதில் விறகினை மலைபோலக் குவித்து, குடம் தொறும் - குடங்களில், எண்ணெய் இழுது நெய் - எண்ணெயையும், வெண்ணெயையும், நெய்யினையும், கொணர்ந்து சொரிந் திட்டனர் - கொண்டுவந்து ஊற்றினர்; நெருப்பு விசும்பு எட்ட எழுந்திட்டது - தீயானது விண்ணை அளாவி ஓங்கி நின்றது; அழுது நின்றனர் அயர்வு உற - பக்கத்திலே அச் சிறுவன் நிலை கண்டு கண்கலங்கி நின்ற தேவர் முதலானோர் மனத்தளர்ச்சி அடையும்படி, ஐயனை பெய்தனர் - அழகனாகிய அந்த அரசிளங் குமரனை அதில் போகட்டனர்; (அப்பொழுதும் அவன்), அரி என்று - அரி என்ற நாமத்தைச் சொல்லி, நாயகன் தாள் இணை தொழுது நின்றனன் - இறைவனான திருமாலினுடைய திருவடியிணைகளை வணங்கி நின்றான்; (அவ்வளவில்), சுடு தீ குளிர்ந்தது - (எந்தப் பொருளையும் சுட்டெரிக்கவல்ல) நெருப்பும் தண்மைபெற்று நின்றது. ஏ - அசை.

இங்கு அப்பர் பெருமானைப் பல்லவ மன்னன் நீற்றறையி லிட்டதும், அப் பெருமான் சிவனடித் தியானத்தால் எவ்விதமான இடையூறுமின்றி ஏழு நாட்கள் உள்ளிருந்து, 'மாசில் வீணையும் மாலை மதியமும்' என்ற பாசுரம் பாடியுய்ந்ததும் நினைவு கூரத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தரும். இந்தனம் - விறகு; வடசொல். 'இந்தனமாக வேண்டும் காரகி லீட்டத் தோடும்' (ஆரணிய. 1025); 'இந்த னங்களின் வெந்தெரி சிந்தின' (சுந்தர. 716); 'தறித்த விந்தனந் தினந் தொறும் தாங்கி' (திருவிளை. விறகுவிற்ற. 14). 'குளிர்ந்தது சுடு தீயே'; 'பொய்கையும் போன்றதே ஈசன் எந்தை யிணையடி நீழலே; (தேவா. 1203:1). இங்கு அநுமன் வாலில் இட்ட தீ பிராட்டியின் அருளால் அவனுக்குக் குளிர்ந்தது என்றமை நினைவு கூரலாம் சுந்தர. 1172-1174. இச் செய்தி அடுத்த செய்யுளில் குறிக்கப் பெறுவதும் காண்க.

பி - ம். 1. அடுக்கின ராயிரம்; கொணரென்னெய்.
2. எழுந்தெரிந்தது.
3. நின்றவ ரயாவுற; யிட்டரி கரியென்று ஐயனைக் கனல்பொத்தி.
4. தொழுது நாயகன் ருளினை நினைத்தலும். 85

215. கால வெங்கனல் கதுவிய காலையிற்
கற்புடையவள் சொற்ற
சீல நல்லுரை சீதமிக் கடுத்தலிற்
கிழியொடு நெய்தீற்றி
ஆல மன்னவர் கரங்களால் வயங்கெரி
மடுத்தலி னநுமன்றன்
கூல மாமென வென்புறக் குளிர்ந்ததச்
குருமணித் திருமேனி.

ஆலம் அன்னவர் கரங்களால் வயங்கு எரி மடுத்தலின் - ஆல கால விடம்போன்ற கொடிய அரக்கர்கள் தங்களுடைய கைகளினால் (அநுமனுடைய வாலில்), கிழியொடு நெய் தீற்றி - துணி சுற்றி நெய்யை ஊற்றி, வயங்கு எரி மடுத்தலின் - விளங்குகின்ற நெருப்பு மூட்டியதனால், காலம் வெம் கனல் கதுவிய காலையில் - ஊழிக்காலத் தீயைப்போல அக்கினி சூழ்ந்து நின்றபொழுதில், கற்புடையவள் சொற்ற சீலம் நல் உரை சீதம் மிக்கு அடுத்தலின் - அக்கற்பினை யுடைய சீதாப்பிராட்டி (இரங்கி) வெளியிட்ட தூய்மையான சிறந்த சொற்கள் மிக்க குளிர்ச்சி பெற்றிருந்ததால்: அநுமன் தன் கூலம் ஆம் என - அநுமானுடைய வால் (குளிர்ந்தது) போன்று, அ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குருமணி திருமேனி - அந்த ஒளிவாய்ந்த அரதனம்போன்ற பிரகலாதனது அழகிய உடல், என்பு உற குளிர்ந்தது - (இறைவன் திருப்பெயரை உச்சரித்ததன் பயனாக) எலும்பு வரையில் குளிர்ச்சியுற்றது.

இரணியன்வதம் இராவணன் வதத்திற்கு முன்பு நிகழ்ந்தது. எனவே, இங்குக் கூறப்பட்ட உவமை பொருளுக்குக் காலத்தாற் பிற்பட்டது. எனினும் ஆசிரியன் அறிந்திருந்த பொருளாதலின் இந்த உவமானம் கூறினர் என்க. இந்தக் காலப் பிறழ்ச்சியை ஏற்றுக்கொண்டுள்ளனர் நூலாசிரியர்கள். ஜகப்பிரியர் எழுதிய 'ஜூலியஸ் சீசர்' நாடகத்துக் கடிகாரம் மணியடித்தது என்பது காலப் பிறழ்ச்சியேனும் அஃது ஏற்றுக்கொள்ளப்பட்டமை இங்கே காணத்தகும். கால வெங்கனல் - ஊழிக்காலவடவைத்தீ. கதுவுதல் - பற்றுதல். இங்குத் தாவியெரிதல் ; ஆரணிய. 442. கற்புடையவள் பிராட்டி - அவள் சொற்ற சில நல்லுரை. 'தாயே யன்ன கருணை யான் துணையே யேதுந் தகவில்லா, நாயே யனைய வல்லரக்கர் நலியக் கண்டா னல்காயோ, நீயே கற்புக் கொருசான்று நிற்கே தெரியுங் கற்பதனில், தூயே னென்னிற் றெழுகின்றேன் எரியே அவனைச் சுடலென்றாள்' (சுந்தர. 1169); என்பது, சிலம் நல்லுரை தூய்மையானதும் நன்மை பயப்பதுமான சொற்கள். காலவெங் கனல், ஆல மன்னவர், வயங்கெரிமடுத்தல் என்ற சொற்களால் கனலின் அளவிறந்த கடுமை தெரிவிக்கப்பட்டது. கூலம் - வால். லாங்கூலம் என்ற வடசொல்லின் 'நாமைக தேசம்' என்ப. பிரகலாதன் சரிதையினின்றும், அப்பர் பெருமான் சரிதையி னின்றும் விளங்கும் உண்மை பின்வருமாறு :—ஒரு அன்பன் தான் புரியும் எச்செயலையும் பசுச்செயலாகவன்றி, பதிச்செயலாகப் புரிவானாகில், அவனுக்கு எவ்விதக் குறைவும் நிகழாது ; 'வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையுந், தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும், மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண், டுனமொன் றில்லா வொரு வனுக் காட்பட்ட வுத்தமர்க்கே' (தேவா. 1199:8). அன்றே யென்றன் ஆவியும்..............குன்றே யனையாய்நீ யெனையாட் கொண்டபோதே கொண்டிலையோ இன்றோ ரிடையூ றெனக் குண்டோ வெண்டோண் முக்க ணெம்மானே, நன்றே செய்வாய்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பிழைசெய்வாய் நானே விதற்கு நாயகமே' (திருவாச. குழைத்த. 7); என்புறக் குளிர்தல்: 'என்புறக் குளிரும்' (யுத்த. விபீடண. 21).

பி - ம். 2. சீதள மடுத்தலிற் ; றுகிலொடு.

3. ஆலமன்னவர் வயங்கெரி மடுத்தபோ தனுமன்றன் வாலென்னும் ; ஆலமன்னவவ் வரக்கர்கள் ; பயந்தெரி ; மடுத்தபோ தனுமன்றன், மடுத்தலி லனுமன்றன்.

4. என்புற வெழுந்தது ; குளிர்ந்தன ; குரிசிறன் றிருமேனி. 86

## பிரகலாதன்மீது நாகங்களை ஏவுதல்

216. சுட்ட தில்லைநின் றோன்றலைச் சுடர்க்கனல்
சுழிபட ரழுவத்துள்
இட்ட போதிலு மென்னினிச் செயத்தக்க
தென்றன ரிகல்வெய்யோர்
கட்டித் தீயையுங் கடுஞ்சிறை யிடுமினக்
கள்வனைக் கவர்ந்துண்ண
எட்டுப் பாம்பையும் விடுமின்க ளென்றனன்
எரியெழு தறுகண்ணன்.

(அது நோக்கிய), இகல் வெய்யோர் - மாறுபட்ட கொடிய அசுரர்கள், (இரணியனிடம் வந்து), 'சுழிபடர் அழுவத்துள் - சுழன்று பரவுகின்ற பெரும் பள்ளத்தில், இட்ட போதிலும் - வீழ்த்திய காலத்தும், சுடர் கனல் - ஒளிவிடுகின்ற தீயானது, நின் தோன்றலை சுட்டதில்லை - உன்னுடைய புதல்வனை எரிக்க வில்லை; இனி என் செய தக்கது என்றனர் - இனி (நாங்கள்) புரியத்தக்க செயல் என்ன' என்று வினவினர்; (அதனைக் கேட்டு), எரி எழு தறு கண்ணன் - சினத்தீ பொங்கி எழுகின்ற கொடிய விழிகளையுடைய இரணியன், 'தீயையும் கட்டி கடும் சிறை இடுமின் - (என் சொற்களையும் மீறிய) அக்கினி தேவனையும் (உங்களுடைய மந்திர வன்மையால்) அடக்கி, கொடுமையான சிறைக் காவலில் வைத்திடுமின்; (பின்னர்), எட்டு பாம்பையும் - எட்டுத் திசைகளினுமுள்ள நாகங்களையும், அ கள்வனை கவர்ந்துண்ண விடுமின்கள் என்றனன் - அந்தக் கள்ளத்தன்மை வாய்ந்த பிரகலாதனைப் பற்றித்தின்னுமாறு ஏவுங்கள்' என்று பகர்ந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எரி சுடாதொழிய இரணியன் அக்கினியைக் கட்டிப் பின்னர் பிரகலாதன்மீது எட்டுத்திசை நாகங்களையும் ஏவுமாறு பணித்தனன். இகல் வெய்யோர்: போரை விரும்புவோர் எனினுமாம். வெம்மை வேண்டல்; (தொல். சொல். உரி. 36). எட்டுத் திக்குகளிலும் எட்டு நாகங்கள் உள என்பர்; அவை முறையே, அநந்தன், கார்க்கோடகன், குளிகன், சங்கபாலன், தக்ஷன், பதுமன், மகாபதுமன், வாசுகி என்பனவாம். இரணியன் தன் மனைவியையே அழைத்து மகனுக்கு நஞ்சூட்டுமாறு சொல்ல, அவள் முதற்க ணிசையாது, பின்னர் கணவன் கட்டளையை மறுக்க அஞ்சி ஊட்டினள் என்றும், அதுவும் அவனை ஒன்றும் ஊறுபடுத்தவில்லை என்றும் வரலாறுண்டு. அவ்வரலாறு இங்கு விடப்பெற்றது. அப்பர்பிரான்மீது பெரும் நாகங்களையும் ஏவி அவனைக் கொல்லுமாறு பல்லவ மன்னன் செய்தபோது, அரசு இறைவனைப் பாடி யுய்ந்ததும் இங்கே காணத்தகும். 'பொடியார்க்கும் திருமேனிப் புனிதற்குப் புவனங்கள், முடிவாக்குந் துயர் நீங்க முன்னைவிட மமுதானுற் ...... பசுபதியார் தம்முடைய அடியார்க்கு, நஞ்சமுத மாவதுதா னற்புதமோ' என்பன காண்க. இந்நிலையிலும் பல்லவ வேந்தன் 'நஞ்சமயத்தில் விடந்தீர், தஞ்சமுடை மந்திரத்தால் சாதியா வகைதடுத்தான்' என்று சினந்து வேழத்தை விடுத்ததும் இங்கே காணலாம்.

பி - ம். 1. சுடர்கின்ற.
2. இகல்வெய்யோன்.
3. சிறைவையுமக்; யிடுமினவன்றனை.
4. என்கின்ற எரியெழு.

87

217. அனந்த னேமுத லாகிய நாகங்கள்
அருளென்கொ லெனவன்னுன்
நினைந்த மாத்திரத் தெய்தின நொய்தினில்
நெருப்புகு பகுவாயால்
வனைந்த தாமன்ன மேனியி னுன்றன்மேல்
வாளெயி றுற வூன்றிச்
சினந் தமீக்கொளக் கடித்தன துடித்திலன்
திருப்பெயர் மறவாதான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அனந்தனே முதல் ஆகிய நாகங்கள் - அநந்தன் முதலாகக் கூறப்படுகின்ற எட்டுத்திசைப் பாம்புகளும், அன்னான் நினைந்த மாத்திரத்து - அந்த இரணியன் கருதிய அளவில், அருள் என் கொல் என - அவன் அருளிச் செய்யும் கட்டளை யாதோ என எண்ணி, எய்தின - (அங்கு) வந்து சேர்ந்து, நொய்தினில் - விரைவில், நெருப்பு உகு பகுவாயால் - தீயைக் கக்குகின்ற தமது பிளந்த வாய்களால், வனைந்தது ஆம் அன்ன மேனியினான் தன் மேல் - அழகுற அமைக்கப்பட்ட சித்திரப் பதுமைபோன்ற திருமேனியை யுடைய பிரகலாதாழ்வான்மீது, வாள் எயிறு உற ஊன்றி - வாள் போன்ற விடப்பற்களை நன்கு பதித்து, சினம் தம் மீ கொள் கடித்தன - கோபம் தம்மை விஞ்சி மிகுதியாகத் தீண்டின; (அந் நிலையிலும்), திருப்பெயர் மறவாதான் துடித்திலன் - ஸ்ரீமந் நாராயணனது மங்கலகரமான நாமத்தை ஒரு சிறிதும் மறவாதவனான அச் சிறுவன், சிறு துடிப்புக்கூடக் கொள்ளவில்லை.

அநந்தனே முதலாகிய: முன் செய்யுள் உரை காண்க. தெய்வத்தன்மை வாய்ந்தவன் பிரகலாதன் ஆகலின், அத் தெய்வமா நாகங்கள் அவனைத் தீண்டவில்லை. பகுவாய் - பிளந்தவாய். 'வனைந்ததா மன்னமேனி' (ஒப்பு): 'வனைந்தனைய திருமேனி' (பால. கார்முக. 25); 'வனையலாம் படித்தலா வடிவு' (சீவக. 709). வாள் எயிறு - ஒளிபொருந்திய பற்கள் எனினுமாம்; இங்கு விடப்பற்கள், இவை காளி, காளாத்திரி, யமன், யமதூதி என்ப; (சீவக. 1288) உரை பார்க்க. இப் பற்களின் விடத்திற்கு ஏழு வேகம் என்றும், ஏழாவது வேகம் வரையில் பிழைப்பிற்கு இடன் உண்டு என்றும், பின்னர் இறத்தல் உறுதி என்றும் நூல்கள் பகரும்; (பெரியபு. அப்பூதி. 25). பகுவாய் - பிளப்புண்ட நா எனினும் ஒன்றும். 'கப்புடை நாவி னாக ருலகமும்' (பால. எதிர்கொள். 2); 'கவைநா வருந்தலைக் காண்பின் சேக்கை' (பரி. 13·28). விநதை தன் மாற்றாளாகிய கத்துருவினிடம் அடிமைத் தளைபூண்டதை நீக்க அவள் மகன் கருடன் விண்ணுலகினின்று கொணர்ந்த அமுத கலயத்திலிருந்து சிந்தின அமுதத்தை நக்குகையில், அது சிந்தப்பெற்ற தருப்பையாற் கீறுண்டு, கத்துரு



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வின் மக்களான அரவங்களின் நாக்கள் பிளவுண்டன என்பது புராண வரலாறு.

ி - ம். 1. லெனவென்று, வுன்று.

2. எய்தினர், நேர்ந்தனர் ; நெருப்புகப்.

3. அனந்த சாயிதன் அன்பெனு மடியவ னரும்பெறற் றிருமேனி; அனந்த சாயிதன் அருளுடை யடியவ னருள்பெற்ற திருமேனி ; வனைந்த தாரவன்.

4. சினந்து மிக்கொள, சினந்த லேக்கொள ; கடிந்தது ; துடிப்பிலன்.

218. பக்க நின்றவை பயத்தினிற் புயற்கறைப்
பசும்புனல் பகுவாயிற்
கக்க வெஞ்சிறைக் கலுழனு நடுக்குறக்
கவ்விய காலத்துட்
செக்கர் மேகத்துச் சிறுபிறை நுழைந்தன
செய்கைய வலிசிந்தி
உக்க பற்குல மொழுகின வெயிற்றிரும்
புரைதொறு மமிழ்தூறி.

பக்கம் நின்றவை - (அப்போது) அருகில் நின்ற பிராணிகள் அனைத்தும், பயத்தினில் - அச்சத்தால், பகுவாயில் - தம்முடைய திறந்த வாய்களினின்று, புயல் கறை பசும் புனல் கக்க - மேகம் (நீர் பொழிவதுபோன்று) புதிய இரத்தக்கறை யுள்ள நீரை வெளி விடவும், வெம் சிறை கலுழனும் நடுக்குற - (பாம்புகட்குப் பிறவிப் பகையாகிய) கடிய வேகத்திற் செல்லவல்ல சிறகுகளையுடைய கருடனும் உடல் நடுங்கும்படியாகவும், கவ்விய காலத்துள் - (அந் நாகங்கள்) தீண்டியபோது, செக்கர் மேகத்து சிறு பிறை நுழைந் தன செய்கைய - சிவப்பு நிறமான மேகத்தினுள்ளே சிறிய பிறைச் சந்திரன் புகுந்தாற்போன்ற செயல்களை யுடையனவான, பல் குலம் - பற்களின் தொகுதிகள், வலி சிந்தி உக்க - வன்மையழிந்து ஒடிந்து சிதறின ; எயிறு இரும் புரை தொறும் அமிழ்து ஊறி ஒழுகின - பற்களின் பெரிய இடைவெளிகள் எல்லாம் (விடத்திற்கு மாறாக) அமிழ்தமானது ஊறி யொழுகப் பெற்றன.

புயல் நீரைப் பொழிவதுபோன்று, உதிரம் கக்கின என்க. புயற்கறை - உவமைத்தொகை. வெம் சிறை - வெம்மை, வேகம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குறித்தது; எதிர்க்கும் வன்மையுமாம். கலுழன் - கருடனின் திரிபு. செக்கர் வானம் - செவ்வானம். 'காளமேகத்தைச் செக்கர் கலந்தென' உறவூன்றிய பற்களை மீட்டும் கடிப்பதற்கு உயர்த்தவியலாமல் அந் நாகங்கள் பற்கள் உடையப் பெற்றன என்பது 'வலிசிந்தி உக்கபற்குலம்' என்பதனுல் அறிக. குலம் - கூட்டம் அல்லது தொகுதி. இறைவனை மறவாதவன் திருமேனி யாகலின் அவற்றின் பற்களில் விடமொழுகாது அமுது ஊறிற்று என்றார். 'அடுகொலைப் பாந்தளெட்டு மமுதுவா யுகுத்த மாதோ' (பாகவத. 7·2·47). நாகங்களின் வளைந்த பற்களுக்குப் பிறைமதியும் பிரகலாதனுடைய செம்மைத் திருமேனிக்குச் செக்கர் வானமும் உவமைகள். புரை - துளையும் ஆம்.

பி - ம். 1. பக்கம் நின்றிவை, நின்றவர்; பயத்தினர்; பற்கறை, புயற்றலைப்; நின்றவர் பயமுறப் புயங்கங்கள்.
2. நடுங்குற; காலத்தும்.
3. சிறுபுழை; பலசிந்தி.
4. பற்குவை; புழைதொறு; அமுதூறி; ஒழுக் கெயிற்றிரும் புரைபுரை தொறும். 89

## வேறு

### திக்கு யானையை ஏவுதல்

219. சூழப் பற்றின சுற்றுமெ யிற்றிற்
போழக் கிற்கில வென்றுபு கன்றார்
வாழித் திக்கின் மயக்கின் மதந்தாழ்
வேழத் துக்கிடு மின்னென விட்டான்.

(இவ்வாறாக அந்த அசுரர்கள் இரணியனை அணுகி), 'சுற்றும் சூழப் பற்றின - பிரகலாதனுடைய உடல் முழுவதையும் நன்கு கவர்ந்து நின்ற அந்த நாகங்கள், எயிற்றில் - தம்முடைய நச்சுப் பற்களால், போழக் கிற்கில - (அவன் உடலைப்) பிளந்து காயப்படுத்தக்கூடவில்லை'; என்று புகன்றார் - என்று மொழிந்தார்கள்; (அதனைச் செவியேற்ற இரணியன்), 'மதம் தாழ் மயக்கின் - மதம் தங்குதலான் களிப்பு மயக்கம் மிகப்பெற்ற, திக்கின் வேழத்துக்கு இடுமின் என விட்டான் - திசை யானைக்கு இலக்காக

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விடுங்கள்' என்று கட்டளை யீந்து விடுத்தான். வாழி - அசை. வாழித்திக்கின் - செய்யுள் நோக்கி வலித்தது.

போழக் கிற்கில; கில் என்பது ஆற்றலை யுணர்த்தும் இடைநிலை என்பர். மற்றும், கில் என்ற சொல்லிலிருந்தே 'கிற்றவா' என்ற சொல் எழுதலும் காண்க. போழக் கிற்கில - போழ்கில என்று கொளலும் ஆம். தாழ்தல் - தங்குதல்; இங்கு மிகுதல் பொருட்டு. வேழம் - ஆண்யானை; 'வேழக் குரித்தே விதந்து களிறென்றல்' (தொல். மரபு. 34). பிழை செய்தவர்களை யானைக் காலில் இட்டு வதைப்பது பண்டைய தமிழ் நூல்களிற் காணலாம். விட்டான் என்பதை ஏவி விடுத்தான் எனக் கொள்க.

பி - ம். 1. குந்றெயி றிற்றன.
2. போழக் கற்றில, போழக் கிற்றில; தென்று.
3. திக்கி விமிர்ந்தது; மதக்கை; மயக்கி, மயங்கி. 90

220. பசையிற் றங்கலில் சிந்தையர் பல்லோர்
திசையிற் சென்றனர் செப்பின னென்னும்
இசையிற் றந்தன னிந்திர னென்பான்
விசையிற் றிண்பணை வெஞ்சின வேழம்.

(அது கேட்டு), பசையில் தங்கலில் சிந்தையர் பல்லோர் - அன்பென்ற தன்மையில் ஒரு சிறிதும் பொருந்தாத வன்னெஞ்சராகிய பலர், திசையில் சென்றனர் - திசைகளில் முதலாவதான கிழக்கு நோக்கிச் சென்று, செப்பினன் என்னும் இசையில் - (இரணியன்) இங்ஙனம் கட்டளையிட்டான் என்று சொல்லிய சொல்லைக் கேட்ட அக் கணமே, இந்திரன் என்பான் - அந்தத் திக்கின் காவலன் ஆன இந்திரன் என்பவன், திண்பணை வெம் சின வேழம் விசையில் தந்தனன் - உறுதியான பருத்த கொடிய கோபம் வாய்ந்த ஐராவதம் என்ற நான்கு கொம்புகளை யுடைய யானையை வெகு விரைவில் அனுப்பிக் கொடுத்தான்.

பசையில் தங்கலில் சிந்தையர் பல்லோர்; பசை - அன்பு. (ஒப்பு): 'இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்' (ஆரணிய. 129). பசை - இரக்கம்; 'பசையற்றுள்' (அயோத்தி. கைகேசி. 42). வேழத்தின் வேகமும், மாற்றமுடியாத மன உறுதியும், உடற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பருமனும், கடும் சினமும், 'விசையிற் றண்பணை வெஞ்சின வேழம்' என்ற தொடராற் குறிக்கப்பட்டன. 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொள் திண்டோள் மாரன்' (பால. பூக்கொய். 18) என்றவிடத்து அஞ்சாமை, சலியாமை, அழகு, திண்மை, கண்கவர் வனப்பு எனற அனைத்தும் ஒருசேரக் கூறியதுபோன்று என்க. என்னும் இசையில் என்றது என்று இசைத்த அளவில் என்று பொருள்படும்.

பி - ம். 1. பசையிற் றங்கில.
2. செப்பின ரென்னும்.
3. இசையிற் சென்றனன். 91

221. கையிற் கால்களின் மார்பு கழுத்தில்
தெய்வப் பாச முறப்பிணி செய்தார்
மையற் காய்கரி முன்னுற வைத்தார்
பொய்யற் றானு மிதொன்று புகன்றான்.

(அசுரர்கள் பிரகலாதனுடைய), கையில் - கைகளிலும், கால்களில் மார்பு கழுத்தில் - கால்களிலும் மார்பு கழுத்து இவற்றிலும், தெய்வ பாசம் உற பிணி செய்தார் - தெய்வத்தன்மை வாய்ந்த கயிறுகளால் இறுகப் பிணித்து, (அச் சிறுவனை), மையல் காய்கரி முன் உற வைத்தார் - மதமயக்கம் செறிந்த வெகுளும்படியான யானைமுன் இட்டார்; (அச் சமயம்), பொய் அற்றானும் இது ஒன்று புகன்றான் - பொய்ம்மை யில்லாதவனான பிரகலாதனும் (அந்த யானையை நோக்கி) இந்த ஒரு வார்த்தையைக் கூறினான். அதனை அடுத்த கவியிற் காண்க.

பிணி செய்தார் - ஒருசொல். பிணித்தலைச் செய்தார் என்று பிணி என்பது முதல்நிலைத் தொழிற்பெயருமாம். தெய்வப் பாசம் - மந்திர வன்மைபெற்ற கயிற்றுக் கருவிகள்; (ஒப்பு): 'ஏவின செய்து நிற்றும் இளையவன்போல வென்று, தேவர்தம் படைகள் செப்ப' (பால. வேள்வி. 3). மையல் - மதமயக்கம். காய்கரி - வினைத்தொகை. உண்மை தத்துவப் பொருளாகிய இறைவனை உள்ளபடி யறிந்து உரைப்பவன் ஆதலின்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொய்யற்ருன் என்ருர்; தன்னபிமானமற்று, எல்லாம் இறைவனுடையதே என்று நின்ற நிலே, பொய்யற்ற நிலே ஆகும்.

பி - ம். 3. மையிற், மையைக், மய்யற்.
4. பொய்யற் ருனு மிருந்து.

92

222. எந்தாய் பண்டொ ரிடங்கர் விழுங்க
முந்தாய் நின்ற முதற்பொரு ளேயென்
றுந்தாய் தந்தை யினத்தவ னேத
வந்தா னென்றன் மனத்தின னென்ருன்.

உம் தாய் தந்தை இனத்தவன் - உமது தாய் தந்தையர்க்கு இனத்தவன் ஆன கஜேந்திரன், பண்டு ஓர் இடங்கர் விழுங்க - முன்காலத்து ஒரு முதலே தன்னை விழுங்கவந்த வளவில், 'எந்தாய் - எமது தந்தையே, முந்தாய் நின்ற முதற் பொருளே என்று - எல்லாப் பொருளகட்கும் முதற் காரணமாய் நின்ற ஆதிப் பொருளே! என்று, ஓத - கூவியழைக்க, வந்தான் - (உடனே அங்கு) எழுந்தருளி அந்த யானேக்குத் துன்பத்தை நீக்கிய திருமால், என் தன்மனத்தினன் என்ருன் - என்னுடைய உள்ளத்திலே அமர்ந்துள்ளான்' என்று மொழிந்தான்.

என் தந்தை என்பது எந்தாய் என நின்று விளித்தது. பண்டொர் இடங்கர் விழுங்க: இது கஜேந்திரனுக்குத் திருமால் அருளிய வரலாறு. இக் காவியத்தில் பல இடங்களிலும் இச் செய்தி குறிக்கப்பட்டுள்ளது. இராமாயணமே சரணுகதி சாஸ்திரம் ஆகலின், இந்தச் செய்தியை அவ்வாறு ஆசிரியர் சிறப்பித்தார் என்க. (ஆரணிய. 49) காண்க.

நிட்டையிலிருந்து அகத்திய முனிவர் எழுந்தருளியபோது அவரை வரவேற்காமையின், அம் முனிவர் சாபத்தால் இந்திரத்துய்ம்நன் என்னும் அரசன் ஓர் வேழமாகி, அந்தப் பிறப்பிலும் திருமாலடிக் கன்பு செலுத்தி நின்று ஓர் தாமரை மலர் பறிக்க ஓர் குளத்தில் இறங்க, அங்கே ஓர் முனிவர் சாபத்தால் முதலேயாகப் பிறந்த ஹூஹூ என்னும் கந்தருவனுற் பிணிக்கப்பட்டு, இருவர்க்கும் போர் நிகழுங்கால் 'ஆதிமூலமே' என்று யானே அலறிய குரல் கேட்டுத் திருமால் வந்து முதலேயைக் கொன்று யானேயை விடுவித்தார் என்பது கதை. இதன் முழு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



விவரமும் ஸ்ரீபாகவதத்தும், அரிதாஸர் இயற்றிய கஜேந்திர மோக்ஷம் என்ற நூலிலும் காண்க. ஆழ்வார்களும் இச் செய்தியைப் பாடியுள்ளனர். 'மாடுபற்றி யிடங்கர் வலித்திடக் கோடு பற்றிய கொற்றவற் கூயதோர்' (கிட்கிந்தா. 338); 'போதக மொன்று கன்றி' (யுத்த விபீடண. 113) எனத் தொடங்கும் செய்யுட்களும் இங்குக் காணத்தகும். இவ் வரலாற்றால் திருமாலே பரம்பொருள் என்பது விளங்கும் என்பர். இடங்கர் - முதலைச் சாதியில் ஓர் வகை. 'கொடுந்தாள் முதலையு மிடங்கருங் கராமும்' (குறிஞ்சிப். 257); 'உரவுக் களிறு கரக்கு மிடங்கர்' (மலைபடு. 211).

பி - ம். 1. விழுங்கா.

2. முந்நா.

3. உய்ந்தா தந்தையினத் நிபமோத; யினத்தவ னேத, யெனத்தவன்.

4. வந்தென், என்றன். 93

223. என்னு முன்ன மிருங்களி றுந்தன்
பொன்னு ரோடை பொருந்த நிலத்தின்
அன்னு னைத்தொழு தஞ்சி யகன்ற
தொன்னு ரத்திற மெய்தி யுரைத்தார்.

என்னு முன்னம் - என்று (பிரகலாதன்) கூறி முடிக்கும் முன்னரே, இரும் களிறும் - அந்தப் பெரிய யானையும், தன் பொன் ஆர் ஓடை நிலத்தில் பொருந்த - தன்னுடைய பொன்னாலாகிய நெற்றிப்பட்டமானது தரையிற் படியும்படி, அன்னானை தொழுது - அவனுக்கு வணக்கம் செய்து, அஞ்சி அகன்றது - பயந்து விலகிச் சென்றது; அ திறம் - அந்தத் தன்மையை, ஒன்னார் எய்தி உரைத்தார் - பகைவர்கள் (இரணியனைச்) சார்ந்து மொழிந்தனர்.

ஓடை - நெற்றிப்பட்டம்; (சுந்தர. 132, 959). இங்கும் ஆளுடையரசு என்ற அப்பர் பெருமான் வரலாறு காணத்தகும். பல்லவன் ஏவலில் யானை அப்பரைக் கொல்ல வந்தது, அப்பொழுது அப்பர் சுவாமிகள் 'அஞ்சுவது யாதொன்று மில்லை, யஞ்ச வருவது மில்லை' என்று பாடவே அந்த வேழம் அவரை மும்முறை வலம் வந்து பணிந்து, தன்னை ஏவியவர்களை விரட்டிடச் சென்றதாக வரலாறு. 'தம்பெருமான் சரணாகக், கொண்ட கருத்தி லிருந்து குலாவிய வன்புறு கொள்கைத், தொண்டரை முன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வலமாகச் சூழ்ந்தெதிர் தாழ்ந்து நிலத்தில், எண்டிசை யோர்களுங் காண விறைஞ்சி யெழுந்தது வேழம்' (பெரியபு. திருநாவுக். 117) என்றது காண்க. ஒன்னார் - ஒன்ருர் என்பதன் மரூஉ. அத் திறம் - யானையின் செயல்.

பி - ம். 1. இகற்களிறு, மதக்கரி ; அஞ்சி.

4. ஒன்னு னத்திற மெய்த வுணர்ந்தான் ; இத்திறம் ; ஓத வுணர்ந்தான்.

224. வல்வீ ரைத்துயில் வானை மதித்தென்
நல்வீ ரத்தை யழித்தது நண்ணுற்
றொல்வீ ரொற்றை யுரக்கரி தன்னைக்
கொல்வீ ரென்றன னெஞ்சு கொதிப்பான்.

(அச் சொற்களைச் செவிக்கொண்டு), நெஞ்சு கொதிப்பான் - மனம் அழல்பவனான இரணியன், (அவ்வசுரர்களைப் பார்த்து), (இந்த யானை) 'வல் வீரை துயில்வானை மதித்து - பெரிய கடலில் உறங்குபவனைப் பெருமைப்படுத்தி, என் நல் வீரத்தை அழித்தது - என்னுடைய சிறந்த ஆண்மையைச் சிதைத்தது ; (ஆகலின்), ஒல் வீர் - எந்தக் காரியத்தையும் செய்து முடிக்கும் வல்லமையுடையீரே ! நண்ணுற்று - சென்று, ஒற்றை உரம் கரி தன்னை கொல்வீர் என்றனன் - ஒப்பற்ற வலிய யானையைக் கொல்வீராக' என்று சொன்னான்.

வீரை - கடல் ; 'நிழல்வீ ரையனு னுடனே' (சுந்தர. 493) ; 'திரை வீரை' (திருவிசை. திருமாணி. 3, 5) ; 'வல்வீரைத் துயில் வானை' (யுத்த. 178) உரைக் குறிப்புக் காண்க. துயில் - இங்கே அறிதுயில் ; 'ஒருவினையு மில்லார்போல் உறங்குதியால் உறங்காதாய்' (ஆரணிய. 58). ஒல்லுதல் - இயலுதல் ; 'ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே' (குறள். 673) ; மற்றும், (குறள். 33 ; 472 ; 673 ; 818. தன்னைப் புறக்கணித்த வேழத்தைக் கொல்லும்படி கட்டளை யிட்டான் இரணியன்.

பி - ம். 1. மதித்தேன்.

2. வீரத்தை யொழித்தது ; நன்னூல், நாமஞ்.

3. தொல்வீ ரத்த துணைக்கரி தன்னை.

4. என்றன னின்று ; கொதித்தான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


225. தன்னைக் கொல்லுநர் சாருத லோடும்
பொன்னைக் கொல்லு மொளிப்புகழ் பொய்யா
மன்னைக் கொல்லிய வந்தது வானின்
மின்னைக் கொல்லும் வெயிற்றி னெயிற்ருல்.

(அச் சொற்களைக் கேட்ட அசுரர்கள்), தன்னை கொல்லுநர் சாருத லோடும் - தன்னைக் கொல்லும் நினைவினராய் வந்து நெருங்கின அளவில், (அந்த யானை), வானின் மின்னை கொல்லும் வெயிற்றின் எயிற்ருல் - விண்ணிடத்து மின்னலை யழிக்கும் வெயில் ஒத்த ஒளியை யுடையதான தனது தந்தத்தால், பொன்னை கொல்லும் - பொன்னையும் கெடுக்கும் (உடம்பின்), ஒளி புகழ் பொய்யா மன்னை - ஒளிமிக்க புகழ் அழியாத பெரியோனை, கொல்லிய வந்தது - கொல்லும்பொருட்டு வந்தது.

பொன்னைக் கொல்லும் - இங்கே கொல்லுதல் கீழ்ப்படுத்துதல் என்று பொருள்படும். இறுதி யடியில் உள்ள இப் பதமும் அதே பொருளது. கொல்லிய : எதிர்கால வினையெச்சம். வெயிற்று - வெயிலை யுடையது ; வினையாலணையும் பெயர். வெயில்தின் எனப் பிரித்துத் தனது ஒளியினுல் வெயிலையும் மங்கச் செய்கின்ற எனினும் ஆம். ஒளிப்புகழ் - இருபெயரொட்டுமாம்.

பி - ம். 2. மொழிப்புகல், மொழிப்புகழ்.
3. வந்தது வாரா.
4. எயிற்றினி யற்ருல், எயிற்ருன் ; விதிர்த்த வெயிற்ருல், எயிற்றின் விதிர்த்த.
96

226. வீரத் திண்டிறன் மார்பினில் வெண்கோ
டாரக் குத்தி யழுத்திய யானை
வாரத் தண்குலை வாழை மடல்சூழ்
ஈரத் தண்டென விற்றன வெல்லாம்.

வீரம் திண் திறல் மார்பினில் - ஆண்மை மிக்க உறுதியான வலிமைகொண்ட (பிரகலாதனது) மார்பினில், ஆர குத்தி அழுத்திய - நன்ருகக் குத்தி ஊன்றிய, யானை வெண் கோடு எல்லாம் - யானையின் வெண்ணிறமான தந்தங்கள் நான்கும், வாரம் - பிரியத்திற்கு இடமான, தண் குலை வாழை மடல் சூழ் -


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குளிர்ந்த குலைகளையுடைய வாழை மரத்தின் பட்டை சுற்றிய, ஈரம் தண்டு என இற்றன - குளிர்ந்த தண்டுபோல ஒடிந்து வீழ்ந்தன.

கோடு தண்டென இற்றன என இயைக்க; (ஒப்பு): 'எண் டிசைக் களிறும் கூர்ங்கோ டிற்றன சிதர்ந்த' (பாகவத. 7·2:48) உவமையணி. வாரம் - அன்பு; 'வாரம் பட்டுழி' (சீவக. 888). 'தாளிணைக் கொருவார மாகுமென் நெஞ்சமே' (திவ்ய. பெருமாள். 2.7). வாழைத்தண்டில் யானைகட்குப் பிரியம் அதிகம்; அஃது அதன் மதத்தை யடக்கவல்லதுமாம். 'யானைக்கு வாழைத் தண்டு, மனிதனுக்குக் கீரைத்தண்டு' என்ற பழமொழி காண்க.

பி - ம். 1. வெங்கோடு.
2. அழுத்திய நாகம், அழுத்திய தானை, அழுத்திடலோடும்.
3. மடற்குள். 97

227. வெண்கோ டிற்றன மேவலர் செய்யும்
கண்கோ டற்பொறி யிற்கடி தேகி
எண்கோ டற்கரி தென்ன வெகுண்டான்
திண்கோ டைக்கதி ரிற்றெறு கண்ணன்.

(அது நோக்கி), மேவலர் - பகைவரான அசுரர்கள், கண் கோடல் செய்யும் பொறியில் - கண் இமைத்தல் செய்யும் அளவில், கடிது ஏகி - (இரணியன்பால்) விரைந்து சென்று, 'வெண் கோடு இற்றன - வெள்ளை யானையின் வெண்ணிறமான தந்தங்கள் ஒடிந்தன; எண் கோடற்கு அரிது - நின் மகனுடைய வன்மை (உயிர்) கொள்ளற்கு அரியது' என்ன - என்று கூற, (இரணி யன்), திண் கோடை கதிரில் தெறு கண்ணன் - முதிர்ந்த கோடைக் காலத்துச் சூரியனிலும் வெம்பிச் சுடும் விழிகளை யுடையவனாய், வெகுண்டான் - சீறினான்.

கோடு - யானையின் கொம்பு; 'கோடு சங்கூதும் கொம்பு, மரக்கொம்பு விலங்கின் கொம்பு' (நிகண்டு). மேவலர் - விரும்பத் தகாதவர்; பகைவர். 'மேவலர் கிடைக்கினிதின் மேலினிய துண்டோ' (ஆரணிய. 753); 'துன்புறுக்கு மேவலரை நோவ தென்' (பழ. 238). கண்கோடல் செய்யும் பொறியில் என இயைக்க. பொறி - அளவு. எண் - வன்மை; ஏண் என்ற சொல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



குறுகி நின்றது. ஏண் வலிமை என்பது; 'ஏணிலான் சேவகமும்' (சிறுபஞ். 12). இரணியனது கடுமையான பார்வைக்குத் திண் கோடைக் கதிர் உவமை.

பி - ம். 1. வெங்கோ டிற்றது; மெய்யிலர் செய்யும், வேயினர் செப்ப.

2. கண்சோ டிற்பொறி; கடிதேக.

3. வெண்கோ டிற்கிரி யென்ன; வெண்கோடுற் றுநிரந்தெறு. 98

இங்கு அதிகப் பாடல்கள் :—

இவனை யெண்ணிலே மாளிகை யும்பர்மே லேற்றிப்
புவனந் தன்னிலே நூக்குமென் றவுணர்கோன் புகலப்
புவன முண்டவன் கழலிணைப் புண்ணியன் றன்னைப்
பவனன் றன்னிலும் வெய்யவர் பற்றியே யெடுத்தார்.

உற்றெ ழுந்தனர் மாளிகை யும்பர்மேற் கொண்டு
கற்ற றிந்தவர்க் கரசனைக் கடுந்திற லவுணர்
பற்றி நூக்கலும் பார்மகள் பரிவுடன் னரரால்
நற்ற வற்கொரு தீங்கிலை யெனவவ ணயர்ந்தான்.

## இரணியன் பிரகலாதனைக் கடலில் தள்ளிவிடக் கட்டளையிடல்

228. தள்ளத் தக்கில் பெருஞ்சயி லத்தோ
டள்ளக் கட்டி யடுக்கி விசித்துக்
கள்ளத் திங்கிவ னைக்கரை காணு
வெள்ளத் துய்த்திடு வீரென விட்டான்.

(இவ்வாறு வெகுண்ட இரணியன் அசுரர்களை நோக்கி), 'கள்ளத்து இவனை இங்கு - வஞ்சனை மிக்க இந்தப் பிரகலாதனை இப்பொழுதே, தள்ள தக்கில் பெரும் சயிலத்தோடு - அசைக்க முடியாத பெரிய மலையுடனே, அள்ள கட்டி அடுக்கி விசித்து - சேர்த்துப் பிணித்து மேல் மேலும் (பல வரிக்கயிறுகளால்) இறுகப் பிணித்துக் கொண்டுசென்று, கரை காணு வெள்ளத்து உய்த்திடுவீர் என விட்டான் - எல்லை காணமுடியாத கடல் பெருக்கிலே தள்ளிவிடுங்கள்' என்று சொல்லி விடுத்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சயிலம் - சைலம்; வடசொல். விசித்தல் - இறுக்கிக் கட்டுதல். 'உயர் நெற்றியின் விசித்து' (ஆரணிய. 13); 'வீக்கிய வவனுடல் விசித்த பாம்பினே' (சுந்தர. 1110). கள்ளம் - வஞ்சனை என்ற பொருளில் வந்தது; கள்ளத்து இவனை இங்கு விசித்துக் கட்டி என இயைக்க. கரைகாணு வெள்ளம்; கடல்; 'மகர வெள்ளத் திறுத்ததால்' (யுத்த. 1); 'ஈறில் வேலையை' (கிட்கிந்தா. 691); 'கடல்கண்டோ மென்பர் யாவரே முடிவுறக் கண்டார்' (கிட்கிந்தா. 717).

பி - ம். 3. எள்ளக் கட்டி யெடுத்து விசித்து; அடுக்கி யிறுக்கி, யடித்து, விசித்தே.

4. உய்த்துவிடீர், உய்த்திடு மின்னென, வெள்ளந் துக்கிடு மின்னென.

229. ஓட்டிக் கொல்ல வுணர்ந்து வெகுண்டான்
விட்டிட் டானல னென்று விரைந்தார்
கட்டிக் கல்லொடு கால்விசை யிற்போய்
இட்டிட் டார்கட லின்னடு வேதான்.

(அவ் வார்த்தைகளைச் செவியேற்ற அசுரர்கள்), 'விட்டிட்டான் அலன் - (இவ்வளவு நிகழ்ந்தும் இன்னும் இரணியன் இவனை) விட்டுவிடவில்லை; ஒட்டி கொல்ல உணர்ந்து வெகுண்டான் - சூள் கொண்டு இவனைக் கொலை புரிவதாக மனவுறுதி செய்து சினம் கொண்டான்'; என்று விரைந்தார் - என்றறிந்து தாமதியாராய், கால் விசையில் போய் - காற்றின் வேகத்தோடும் சென்று, கல்லொடு கட்டி இட்டு - (பிரகலாதாழ்வானை) மலையுடன் சேரப் பிணித்து, கடலின் நடுவே இட்டார் - கடலின் நடுவில் தள்ளினார்கள்.

இவ்வளவு நிகழ்ந்தும் இரணியன் மகனைக் கொலை புரியும் எண்ணத்தை விட்டானில்லை என்று ஏவன் மாக்கள் பணியாற்ற விரைந்தனர். கல்லொடுகட்டி இட்டு எனக் கூட்டுக. ஒட்டுதல் - துணிதல்; 'காண்பதே கருமமாக வொட்டி' (சீவக. 2143). கல் - இங்கு மலையைக் குறித்தது. முன் பாட்டில், தள்ளத்தக்க பெருஞ் சயிலம் என்றது காண்க. 'தெனகுமரி வடபெருங் கல்' (புறநா. 17) என்ற இடத்துக் கல் இமயமலையைக் குறித்து நின்றது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கால்விசை என்பது காலின் வேகம் எனினுமாம். ஏ தான் - சொல் விழுக்காடு.

பி - ம். 1. உருத்து ; வெருண்டார்.
2. விட்டிட்டா விலன் ; என்ன வெருண்டார்.
4. விட்டிட்டார்கள் ; கடலின்னிடை விழ. 100

## பிரகலாதன் ஊறுடையாமை

230. நடுவொக் குந்தனி நாயக னுமம்
விடுகிற் கின்றில னுகலின் வேலை
மடுவொத் தங்கதின் வங்கமு மன்ருய்
குடுவைத் தன்மைய தாயது குன்றம்.

(அவ்வாறு போகட்டவுடனே பிரகலாதன்), நடு ஒக்கும் தனி நாயகன் நாமம் - நடுவுநிலை தவருமல் உள்ள ஒப்பற்ற தலைவனை ஸ்ரீமந் நாராயணனது திருப்பெயரை, விடுகிற்கின்றிலன் ஆகலின் - (உச்சரிப்பதை) விடாதவன் ஆதலின், வேலை மடு ஒத்து - கடல் ஓர் சிறு பள்ளம்போன்று விளங்க, அங்கு அதின் - அக்கடல் பெருக்கில், குன்றம் - அவனுடன் பிணித்த மலையானது, வங்கமும் அன்ருய் - ஒரு மரக்கலம்போலவும் ஆகாமல், குடுவை தன்மையது ஆயது - ஒரு சிறிய சுரைக்குடுக்கையின் தன்மை கொண்டு விளங்கியது.

திருமாலின் திருப்பெயரை மறவாத சிந்தையன் ஆகலின் அந்தக் கரைகாணு வெள்ளமும் மலையும் ஒரு சிறு நீர்நிலையாகவும், மரக்கலம்போன்றும் காணப்பெருமல், ஒரு சிறிய சுரைக் குடுக்கைபோன்று விளங்கியது. மடு - நீர் நிலை ; 'கங்கை வருநீர் மடுவுள்' (திருவாச. நீத்தல். 26). வங்கம் - மரக்கலம் ; 'வாலிதை யெடுத்த வளிதரு வங்கம்' (மதுரைக். 536) ; 'வங்கத்தார் பொருள் போல்' (திருவிளை. தருமிக்கு. 82). இங்கு பல்லவர்கோன் அப்பர் பிரானைக் கட்டிக் கடலில் விடுமாறு செய்ததும், ஆளுடையரசு நமச்சிவாயப் பதிகம் அருளிச்செய்து உய்ந்ததும் நினைவு கூரத் தகும். 'கல்லினோ டெனைப்பூட்டி யமண் கையர், ஒல்லை யூர்புக நூக்கவென் வாக்கினுல், நெல்லு நீள்வய னிலக் குடியரன், நல்ல நாமம் நவிற்றியுய்ந் தேனன்றே' (தேவா. 466 : 7) என்றதும், 'சொற்றுணை வேதியன் சோதி வானவன்' (தேவா. 1182:1) எனத் தொடங்கும் அப் பதிகத்து, 'கற்றுணைப் பூட்டியோர் கடலிற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பாய்ச்சினும், நற்றுணை யாவது நமச்சி வாயவே' என்றதுமான அகச்சான்றுகள் இங்கே அறியத்தகும். 'அரியவஞ் செழுத்தையும் அரசு போற்றிடக், கருநெடுங் கடலினுட் கன்மி தந்ததே'; 'இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின், வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட, அருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல், ஒருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ' (பெரியபு. திருநாவுக். 128, 129) என்ற வரிகள் இங்கு ஒப்புக்காணத்தகும். இறைவன் திருநாமம் ஒருவர்க்குப் பேராபத்தை விலக்கவல்லது என்ற உண்மை பிரகலாதாழ்வான், அப்பர் சுவாமிகள் ஆகிய இருவர் வரலாற்ருலும் வெளிப்படுதல் காண்க. குடுவையை இங்கு உவமையாக்கியதுய்த் துணரத்தகும். ஆறு குளங்களில் நீந்துவார் கை சளைத்த நிலையில் உதவுவதற்கு ஓர் மரத்தாலாய குடுவையைக் கைக்கொள்வர்; அக் குடுவை தானும் மிதந்து, அதனைப் பற்றினவர்களையும் நீரில் அமிழாது காக்கும். இனி, 'உடுபத் தன்மையதாயது' என்று பாடமோதித் தெப்பம் என்பாரும் உளர். உடுபம் - தெப்பம்; வடசொல். அந்தப் பாடம் ஏற்பின் அந்த வரியில் மோனையில்லாது போதல் காண்க.

பி - ம். 2. ஞதலின்.
3. தார்கலி; மன்ருற், ஒன்ருய்க்; அங்குகல் வங்கமு மாருய்.
4. குடுபத் தன்மை; தன்மையு மாயது. 101

231. மோதுற் ருர்திரை வேலையின் மூழ்கான்
மீதுற் ருர்சிலை மீது கிடந்தான்
ஆதிப் பண்ணவன் ஆயிர நாமம்
ஓதுற் ருன்மறை யொல்லை யுணர்ந்தான்.

மறை ஒல்லை உணர்ந்தான் - வேதங்களை (ஓதாது) விரைவில் கண்டறிந்தவன் ஆன அப் பிரகலாதன், மோதுற்று ஆர் திரை வேலையின் மூழ்கான் - ஒன்ருேடொன்று தாக்கிக்கொண்டு நிறைகின்ற அலைகளைக் கொண்ட கடலில் அமிழ்ந்துவிடாது (மிதந்து), மீது உற்று ஆர் சிலை மீது - கடல்மேலே பொருந்தி நின்ற மலையின்மீது, கிடந்தான் - படுத்தவண்ணம் இருந்தவனுய், ஆதி பண்ணவன் ஆயிரம் நாமம் ஓதுற்ருன் - யாவர்க்கும் யாவைக்கும் முதலான திருமாலினது ஆயிரம் நாமங்களையும் பகர்வதானுன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இச் சரிதையினின்றும் நாம் அறிய வேண்டிய உண்மைக ளாவன: யான் எனது என்பதின்றிச் செய்யும் செயல்கள் அனைத்தும் பசுச் செயலாகவன்றி பதிச்செயலாகவே செய்து இறைவனிடம் பத்தி செய்வோரை, இறைவன் வலிய வந்து காப்பான் என்பதும், பத்திநெறியைவிடப் பிரபத்தி என்ற சரணு கதிநெறியே மிகவும் உயர்ந்த தென்பதும் ஆம். இங்கு, 'ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ அஹம் த்வா ஸர்வபா பேப்யோ மோக்ஷ யிஷ்யாமி மாசுச:' (கீதை. 18:66); 'அனன்யாஸ் சிந்தயந் தோமாம் யேஜநா: பர்யுபாஸதே, தேஷாம் நித்யாபி யுக்தானும் யோக க்ஷேமம் வஹாம் யஹும்' (கீதை. 9·22) என்ற சுலோகங்களும், 'அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமை யெல்லாமுங், குன்றே யனையா யென்னை ஆட் கொண்டபோதே கொண்டிலையோ, இன்றோ ரிடையூ றெனக்குண்டோ எண்டோண் முக்க ணெம்மானே, நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ விதற்கு நாயகமே' (குழைந்த. 7) என்ற திருவாசகப் பாசுரமும் நினைவு கூரத்தக்கன. இறைவனுக்குச் சரணுகத வத்ஸலன் என்று பெயர்.

மீதுற்ருர் சிலை கிடந்தான்; (ஒப்பு): 'ஆலப் பாசிலை கிடந்தோ னன்பன் கல்லொடு மிதந்தான்' (பாகவத. 7·:5(). ஆதிப் பண்ணவன் - கடவுள். இங்கே திருமால்; 'பண்ணவன் எண் குணன்' (சிலப். 10; 188). ஒல்லை யுணர்ந்தான்; 'ஓத வேண்டுவ தில்லை யென்னுணர்வினுக் கொன்றும், போதி யாதது மில்லை' (இரணிய. 27); 'நாமமறை யோதாதே தோதி நனி உயர்ந்தான்' (யுத்த. 175) என்பன காண்க. 'பிரகலாதன் அன்னையின் கருப்பத்தி லிருக்கும்போதே நாரத முனிவர் உபதேசத்தால் வேதமுத லனைத்தையும் உணர்ந்தனன்' என்று பாகவதம் கூறும்.

பி - ம். 1. மூழ்கா.

4. மறையெல்லை யுணர்ந்தான். 102

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

ஓதத் தின்மிதந் தோடிய கலமெற்
றீதற் றைதெளி வோடு திகழ்ந்தான்
வேதத் துச்சியின் மெய்ப்பொருள் நாமம்
ஓதிப் பின்னு முரைப்பதை யுற்ருன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



232. தலையிற் கொண்ட தடக்கையி னுன்றன்
நிலையிற் றீர்வின் மனத்தி னினைந்தான்
சிலையிற் றிண்புன லிற்சினை யாலின்
இலையிற் பிள்ளை யெனப்பொலி கின்றான்.

திண் புனலில் - வலிமை வாய்ந்த பாற்கடலில், சினை ஆலின் இலையில் - கிளைகளோடுகூடிய ஆலமரத்தின் இலையில், பிள்ளை என - சிறு குழந்தை வடிவாகப் பள்ளிகொண்டுள்ள திருமால் போல, சிலையில் பொலிகின்றான் - கடல்மீது மிதக்கும் மலையின் மேல் (எந்தவிதமான இடையூறுமின்றி) விளங்கும் அந்தப் பிரகலாதன், தலையில் கொண்ட தட கையினுன் - தன் சிரத்தின்மீது கூப்பி வைத்துக்கொண்ட பெரிய கைகளை யுடையவனாய், தன் நிலையில் தீர்வில் மனத்தின் நினைந்தான் - தனது உறுதி நிலையி னின்று நீங்குதல் இல்லாத உள்ளத்துடன் (திருமாலை) நினைவு கூரலானான்.

தலையிற்கொண்ட தடக் கையினுன் - பிரகலாதன்; வணக்கம் செலுத்தும்போது கைகளை கூப்பித் தலைமிசைக் கொள்வது மரபு. 'கைதான் தலைவைத்து' (திருவாச. திருச்சதகம். 1) என்றார் பிறரும். நிலையில் தீர்வின் மனம்: இதனை ஏகாக்ரசித்தம் என்பர் வடமொழிவாணர். திருமால் பாற்கடலில் ஓர் ஆலிலைமீது பள்ளி கொண்டிருப்பதுபோன்று, புனலில் சிலைமீது காணப்பட்டான் சிறுவன். ஊழிக்காலத்தில், எழுகடலும் பொங்கியெழத் தாவர சங்கமம் அனைத்தும் அழிவெய்துங்கால், அப் பொருள்கள் அனைத்தையும் தனது வயிற்றிலடக்கிக்கொண்டு, ஒரு சிறு மகவின் வடிவாக ஆலிலையில் பள்ளிகொண்டு அறிதுயில் கொள்வன் திருமால் என்பது நூற் கொள்கை. 'மன்வயிற்றி னடக்கிய மாயனைத், தன்வயிற்றி னடக்குந் தவத்தினாள்' (அயோத்தி. மந்திர. 94). நிலையிற் றீர்வின் மனத்தின்; இங்கு, 'வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும், தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும், மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண், டுனமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே' (தேவா. 1199; 8) என்ற அப்பர் பாசுரம் குறிக்கொள்ளத்தகும். கல் மிதவையாகப் பிரகலாதனும் ஆளுடையரசும் மிதந்து கரை யேறினதுபோன்ற செய்திகளை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நிகழா நிகழ்ச்சிகள் என்பர் சிலர். சாதாரணமான மக்கள் செய்தற் கரியவற்றைச் செய்பவரே பெரியர் என்பது பெரியோர் கூற்று; 'செயற்கரிய செய்வார் பெரியர்' (குறள். 26) என்று பெருமைக் கிலக்கணம் கூறினர் பொய்யில் புலவர்; மற்றும், 'முன்னவனே முன்னின்றால் முடியாத பொருள் உளதோ' (பெரியபு. திருநகர.: 47) என்றபடி ஆண்டவன் திருவிளையாடல்களைப் பதியுணர்வுகொண் டறியலா மன்றிக் கேவலம் பசு உணர்விஞலோ பாச வுணர்வி ஞலோ அறிய வியலாது என்பது தேற்றம்.

பி-ம். 1. தலையிற்கண்ட.
2. நிலையிற் றிர்வன்.
3. தன்புனல்; சிலைமேற்றன். 103

## வேறு

### பிரகலாதன் துதி

233. அடியா ரடியே னெனுமார் வமலால்
ஒடியா வலியா னுடையே னுளெனோ
கொடியாய் குறியாய் குணமே துமிலாய்
நெடியா யடியே னிலைநேர் குதியோ.

(அந் நிலையில் பிரகலாதன் இறைவனை நோக்கி), கொடியாய் - (தீங்கிழைப்பவரை ஒறுப்பதில்) கொடுமை யுடையவனே! குறியாய் - எவராலும் குறித்து அறிய இயலாதவனே! குணம் ஏதும் இலாய் - பண்புகள் ஏதும் இல்லாதவனே! நெடியாய் - விராட் வடிவனே! அடியார் அடியேன் எனும் ஆர்வம் அலால் - யான் உனது அடியார்களுக்கு அடிமையாகுவன் என்னும் காதல் உடையவனன்றி, ஒடியா - தளராத, வலியான் உடையேன் உளெனோ - ஆணவத்தடிப்பை உடையவஞக இருக்கின்றேனோ? அடியேன் நிலை நேர்குதியோ - அடியேனது நிலைமையைக் கண்டு அருள் புரிவாயோ?

இது முதல் பத்துக் கவிகள் பிரகலாதன் துதி; இச் செய்யுட் சந்தம் சுந்தரகாண்டத்துப் பிராட்டி துயரினைக் கூறும் பாடல் களின் சந்தத்தை ஒத்திருப்பது காண்க; (490—498); பால



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காண்டம். கடிமணப். (3—18) செய்யுட்களும் காணத்தகும். ஒடிதல்; 'ஒடியா முறையின் மடிவிலை யாகி' (புறநா. 29). 'அடியேன் அல்லேன் சொல்லோ தான்எனை ஆட்கொண் டிலையோ' (திருவாச. திருச்சதகம். 83). நெடியாய் - திருவிக்ரமாவதாரத்தில் மூவுலகும் ஈரடியா லளந்து நீண்டோனே எனினுமாம். குறியாய் குணமேது மிலாய்: 'யாரும் ஓர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்' (திருவாய். 1·3·4). முதலிரண்டடிக்கு (ஒப்பு): 'பத்துடை யடியவற் கெளியவன், பிறர்க்கரிய வித்தகன்' (திருவாய். 1·3:1); 'குணமிலான் குறியிலான்' (தேவா.). 'நேர்குதியோ' என்பதற்கு 'நீ ஒப்புக்கொள்கின்றனையோ' எனினுமாம். இச் செய்யுளையும் இதனை யடுத்துவரும் இதே சந்தமுள்ள செய்யுட்களையும் சிந்தடி நான்குகொண்ட வஞ்சி விருத்தமாகவும் அலகிடலாம். குறியாய்: குறுகியவனே, எனினும் ஆம். குணமிலன் - நிர்க்குணன்.

பி - ம். 1. ஒடியா வலியென்.
4. நிலைநோக் குறியோ. 104

**234.** **கள்ளந் திரிவா ரவர்கை தவனீ**
**உள்ளந் தெரியா தவுனக் குளவோ**
**துள்ளும் பொறியின் னிலைசோ தனைதான்**
**வெள்ளந் தருமின் னமுதே விதியோ.**

'கள்ளம் திரிவார் அவர் கைதவன் நீ - வஞ்சனை மேற்கொண்டு அலைகின்றவர்களுக்கு வஞ்சகனாய் நடிப்பவன் நீ; (அவ்வாறாகவும்), உனக்கு உள்ளம் தெரியாத உளவோ - உயிர்களுடைய உள்ளக் கருத்துக்களில் நீ அறியாதனவும் இருக்கின்றனவோ? வெள்ளம் தரும் இன் அமுதே - பாற்கடல் தந்த இனிய அமுதம்போன்று எல்லோர்க்கும் இனியானே! துள்ளும் பொறியின் நிலை சோதனை தான் - அலைகின்ற ஐம்பொறிகளின் நிலைமையைப் பரிசோதிப்பது, விதியோ - முறையாகுமோ? தான் - சொல் விழுக்காடு. ஓ - இரண்டும் வினா.

முதலிரண்டடிக்கு ஒப்பு: 'கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித், தெள்ளியே னாகி நின்றேன் தேடினேன் நாடிக் கண்டேன், உள்குவா ருள்கிற் றெல்லாம் உடனுறைந் தறிதியென்று, வெள்கினேன்' (தேவா. 1189 : 3); 'உள்ளத்தின் எல்லாம் உளன்'; 'நினைப்பார்கள் மனத்துக்கோர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வித்து மானாய்' (தேவா. 1230:7). பொறிகளின் விரைந்து ஆற்றும் செயலை நோக்கித் 'துள்ளும் பொறி' என்றார். 'துள்ளுமறியா மனதை' (தாயு. கருணாகர. 54) என்பன காண்க. வெள்ளம் தரும் இன் அமுதம் - திருப்பாற்கடல் கடைந்த காலத்து எழுந்த அமுதம் போன்றவனே. திருமாலுக்கு, ஆராவமுதன் என்ற பெயருண்மையும் காண்க. 'என்னிலும் மினியா னொருவ னுளன்' (தேவா. 250 : 1) என்றார் அப்பர் பெருமான்' 'அறிவனே யமுதே' (திருவாச. திருச்சதகம். 50).

பி - ம். 1. நிரிவானன.
2. தெரியாத துனக்குளதோ.
3. பொறியே விலைசோர் தலைதான்; சோதனையோ. 165

235. வருநான் முகனைம் முகன்வா னவர்கோன்
திருநான் மறையின் னெறியே திரிவார்
பெருநா டெரிகின் றிலர்பே தைமையேன்
ஒருநா ளுனையெங் ஙனமுள் ளுவெனே.

'வரு நான் முகன் - (உனது) உந்திக்கமலத்தினின்று தோன்றிய நான்கு முகங்களை யுடைய பிரமனும், ஐம் முகன் - ஐந்து முகங்களை யுடைய சிவபெருமானும், வானவர் கோன் - தேவர் கோமானாகிய இந்திரனும், (ஆகிய தேவர்கள்), திரு நான் மறையின் நெறியே திரிவார் - மங்கலகரமான நான்கு வேதங்கள் கூறியுள்ள வழியிலேயே செல்கின்றார்கள்; (அவ்வாறு ஒழுகும் அவர்களும்), பெரு நாள் - வெகு காலமாக, தெரிகின்றிலர் - உன் உண்மைச் சொரூபத்தை அறியவில்லை; (அங்ஙனமாயின்), பேதைமையேன் - அறிவிலியாகிய நான், ஒரு நாள் - ஒரு நாட்குள்ளாக, உனை எங்ஙனம் உள்ளுவெனே - உன் பெருமையை எவ்வாறு கருதக் கூடும்? ஓ - வினா.

முதல் மூன்றடிகட்கு, ஒப்பு: 'தேவர்கோ வறியாத தேவ தேவன்' (திருவாச. திருச்சதகம். 30); 'அளவ றுப்பதற் கரியவன் இமையவர்க் கடியவர்க் கெளியான்' (திருவாச. திருச்சதகம். 35); 'மேலை வானவரும் மறியாததோர் கோலமே' (திருவாச. திருச்சதகம். 43); 'வான நாடரு மறியொ ணாதநீ' (திருவாச, திருச்சதகம். 95); 'அடியவர்க் கெளியவன் பிறர்க்கரிய வித்தகன்' (திருவாய். 1·3·1); 'யாருமோர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்' (திருவாய். 1·3·4). பெருநாள் - அநேக காலம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

நான்முகன் முதலியோர் வேதவழி நின்று அறிகிலர் என்றமை யால், பரம்பொருள் நூலறிவுக்கு அப்பாற்பட்டவ னென்பதும் ஞானத்துக்கே இலக்காவன் என்பதும் சுட்டப்பெற்றது.

பி - ம். 1. நான்முகனே முதல்; வானவர்தூான், வானவர்தாம்.
2. நான்மறையின் முறையே.
3. பெருநா ளுணர்கின்றவர்.
4. முன்னுவனே. 106

**236. செய்யா தனவோ விலைதீ வினைதாம்**
**பொய்யா தனவந் துபுணர்ந் திடுமால்**
**மெய்யே யுயிர்தீர் வதொர்மேல் வினைநீ**
**ஐயா வொருநா ளுமயர்த் தனையோ.**

'செய்யாதன தீவினையோ இலை - அடியேன் புரியாத பாவச் செயல்களோ இல்லை, தாம் - (அங்ஙனம் நான் செய்த) அவை களின் விளைவுகளும், பொய்யாதன வந்து புணர்ந்திடும் - தவருது வந்து என்னையே அடையும்; மெய்யே - இஃது உண்மையே, ஐயா - தலைவரே! உயிர் தீர்வதொர் மேல்வினை - உயிரானது அக் கருமம் விட்டு நீங்கும்படியான ஒப்பற்ற சிறந்த அருட்செயலை, ஒரு நாளும் - ஒருபொழுதேனும், நீ அயர்த்தனையோ - நீ என் விஷயத்தில் மறந் தனையோ? ஆல் - அசை.

செய்யாதனவோ ஓகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. தீவினை, முன் பிறப்புக்களிற் செய்தவை. தீவினைதாம் பொய்யா தனவந்து புணர்ந்திடுமால்; 'தாந்தாமுன் செய்தவினை தாமே அனுபவிப்பார், பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே ஒறுத்தாரை யென்செயலாம் ஊரெல்லாம் ஒன்ரு, வெறுத்தாலும் போமோ விதி' (நல்வழி. 30); 'பல்லாவு ளுய்த்து விடினும் குழக் கன்று, வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப், பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த, கிழவனை நாடிக் கொளற்கு'; 'உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா, பெறற்பா லனையவும் அன்னவாம், மாரி—வறப்பின் தருவாரும் இல்லை அதனைச், சிறப் பின் தணிப்பாரும் இல்; 'வேண்டினும் வேண்டா விடினும் உறற் பால, தீண்டா விடுதல் அரிது' (நாலடி. 101; 114; 119) என்பன இங்குக் குறிக்கொள்ளத் தக்கன. 'ஊழிற் பெருவலி யாவுள மற் றொன்று, சூழினுந் தான்முந் துறும்' (குறள். 380) என்பதும் காண்க, 'உயிர் தீர்வதொர் மேல்வினை' (ஒப்பு): 'சார்ந்த இரு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வல்வினைகளும் சரித்து, மாயப்பற் றறுத்து, தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி வீடு திருத்துவான்' (திருவாய். 1·5·10); 'தொழுமின் அவனைத் தொழுதால், வழிநின்ற வல்வினை மாள் வித்து, அழிவின்றி ஆக்கம் தரும்' (திருவாய். 1·6·8); 'அடியாரை வல்வினைத் துப்பாம் புலனைந்தும் துஞ்சக் கொடான் அவன்' (திருவாய். 1·7·2). முதலடியில் ஓகாரம் பிரிவினை; 'வினைப்பிறவி யென்கின்ற' (திருவாச. கண்டபத்து. 2)-ம் காண்க.

பா - ம். 1. மிடைதீ வினைதாம்.

2. பொய்யா தெனவந்து; தனவாய்மை; புணர்த்திடுமால்.

3. மெய்யா யினதீர்வ தென்மேல் வினையை; மெய்யே யிடர்தீர். 107

237. ஆயப் பெறுநன் னெறிதம் மறிவென்
றேயப் பெறுமீ சர்களெண் ணிலரால்
நீயப் புறநிற் கநினைக் கிலர்நின்
மாயப் பொறிபுக் குமயங் குவரால்.

ஆய பெறு நல் நெறி - ஆராய்ந்து பெறத்தக்க சிறந்த வழி யாவது, தம் அறிவு என்று - தமது அறிவே என்று நினைந்து, ஏய பெறும் ஈசர்கள் எண்ணிலர் - அந்த ஞானமே உயர்ந்ததெனக் கருதும் தலைவர் கணக்கற்றவர்கள்; நீ அ புறம் நிற்க - நீ அன்னு ருடைய அறிவையும் கடந்து நிற்றலின்; (அவர் அனைவரும்), நினைக்கிலர் - உன் உண்மை நிலையைச் சிந்திக்க இயலாதவர் களாகி, நின் மாய பொறி புக்கு மயங்குவர் - உன் மாயையாகிய அகப்படுத்தும் யந்திரப் பொறியில் சிக்கிக் கலங்குவர். ஆல் இரண்டும் அசை.

பெரு ஞானியரும் தம்மறிவா லுனைக் காணப் பெறார்; 'அவ னருளாலே அவன் தாள் வணங்கி' என்றது காண்க. ஆயப் பெறுநன் னெறிதம் மறிவு என்று ஏயப் பெறுதல்; (ஒப்பு): 'இயைந்த நீதி, வளையா வருநன் னெறிநின் னறிவாகு மன்றே' (அயோத்தி. நகர்நீ. 129). ஈசர்கள்: அட்டமா சித்திகளாலும் யோக ஞான நெறிகளாலும் ஈசனுக்குச் சமானமான மேதைகள்; ஈசர்கள் தேவர்கள் எனினுமாம். நிற்க - நிற்றலால் என்ற காரணப் பொருட்டு. 'உணர்ந்தார்க் குணர்வரியோன்' (திருக்கோ. 9); என்று தொடங்கும் செய்யுளையும், அதற்குப் பேராசிரியர் உரைத்த உரையையும் காண்க. 'இமையோர் கூட்டம் எய்துமா றறியாத

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எந்தாய்' (திருவாச. திருச்சதகம். 25); 'அளவறுப்பதற் கரியவன் இமையவர்க்கு' (திருவாச. திருச்சதகம். 35); சிவஞானம் பெருது முதல்வனை அறிய வியலா தென்பர். ஈசர்கள்: பிற குறிப்பு. 'திருகினுர் முதுகிட்டுப் பறந்த வீரர்' (வி. பா. 13-135) என்ருற் போல. 'திரிபிர் குணமயைர் பாவரேபி: ஸர்வ மிதம் ஜகத், மோஹிதம் நாபி ஜாநாதி மமேப்ய: பரமவ்யயம்' (கீதை. 7 : 13); 'ஸர்வஸ்ய யோகமாயா ஸமா வ்ருத:, மூடோயம் நாபி ஜாநாதி லோகா மா மஜமவ்யயம்' (கீதை. 7·25) என்பனவும் காண்க. என்னுடைய யோக மாயையினுல் நன்கு மூடப்பட்டுள்ள நான் எல்லாருடைய அறிவுக்கும் எட்டுகிறதில்லை என்பது பொருள்.

பி - ம். 1. பெருமன்னெறி; அறிவன்.
2. எண்ணிலதாம்.
3, நீயப் புறமே னிகரொக் கிலர்; நினைக்கிலரான்.
4. மயங்குவரேல். 108

238. தாமே தனிநா யகரா யெவையும்
போமே பொருளென் றபுரா தனர்தாம்
யாமே பரமென் றனரென் றவவர்க்
காமே பிறர்நின் னலதா ருளரே.

'தாமே தனி நாயகராய் - தாங்களே நிகரற்ற முதல் தலைவர் களாய், பொருள் எவையும் - எல்லாப் பொருள்களும், போம் - தங்களுக்குத் தெரியும், என்ற புராதனர் தாம் - என்று பகர்ந்த பழைமையோர் சிலர், யாமே பரம் என்றனர் - தாங்களே பரம் பொருள் என்று மொழிந்தனர்; என்ற அவர்க்கு - இவ்வாறு கூறிய அவர்களுக்கு, ஆமே - அவர்கட்கு அந்தப் பரத்துவம் சித்திக்குமோ? (சித்தியாது), நின் அலாது பிறர் ஆர் உளர் - உன்னையன்றி வேறு யார் உண்மையிற் பரம்பொரு ளாவார். முதல் ஏகாரம் அசை; 2-வது வினு.

தனி நாயகர் - பரம்பொருள். போதல் - பயிற்சி மிகுதல்; 'முத்தமிழ்த் துறை யின்முறை போகிய' (கம்ப. சிறப்பு); 'ஓவியத் துறைகை போய' (நைடத. அன்னத்தைக்கண். 6). இந்தச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



செய்யுளிலேயே இரணியன் தன் அகங்காரத்தினாலும், தான் பெற்றிருந்த வரங்களினாலும் திருமூர்த்திகட்கும் தான் மேலான வன் என்று நினைத்திருந்த நினைவையும் பிரகலாதன் சுட்டிய தாகக் கூறவும் இடமுண்டு. 'இன்னதோர் தன்மைய னிகழ்வுற றெய்திய, நன்னெடுஞ் செல்வமும் நாளும் நாமற, மன்னுயி ரிழத்தி யென் றிறைஞ்சி வாழ்த்தினோன், சொன்னவன் நாமம்' (78) என்று பிரகலாதன் முன்னர்க் கூறியுள்ளமை காண்க.

பி - ம். 1. நாயகமா.

2. பரமென் றவரென் ; எங்கவவர்க்கு, என்னவவர்க்கு.

4. தாமே ; பிறவின்னலநு ; றுளதோ, ருளரோ. 109

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

239. ஆதிப் பரமா மெனிலன் றெனலாம்
ஓதப் பெருநூல் களுலப் பிலவால்
பேதிப் பனநீ யவைபேர் கிலையால்
வேதப் பொருளே விளையா டுதியோ.

'ஆதி பரமாம் எனில் அன்று எனலாம் - (ஒரு தெய்வத்தை) முதற் பரம்பொருள் ஆகும் என்று (எவரேனும்) கூறினால், (அதனை மறுத்து வேறொருவர்), அவ்வாறு அன்று எனப் பகர்தல் கூடும்; ஓத - இவ்வண்ணம் மாறுபட்டுக் கூறுதற்கு ஏதுவாக, பெருநூல்கள் உலப்பில - பெருமைசான்ற நூல்கள் கணக்கற்றன ; அவை பேதிப்பன - அவை தம்முள் மாறுபடுவன ; (ஆனால்), நீ பேர்கிலை - (பரம்பொருளா யுள்ள) நீயோ மாறுவதில்லை ; வேதப் பொருளே விளையாடுதியோ - நான்மறைகளில் கூறப்பட்டுள்ள பொருளாக உள்ளவனே! நீ கபடமாகத் திருவிளையாடல் புரிகின் றாயோ? ஆல் - அசைகள்.

முதலடிக்கு : இக் காண்டத்து முதற்கண் உள்ள 'ஒன்றே என்னின் ஒன்றே யாம்' என்னும் செய்யுளை ஒப்பிட்டு நோக்குக. 'ஒன்றே பொருளென்னின் வேறென்ப, வேறென்னின் அன்றென்ப வாறு சமயத்தார்' (திருவள்ளுவமாலை. 9). 'பேதியாது நிமிர்பேத வுருவம் பிறழ்கிலா' (ஆரணிய. கடவுள் வாழ்த்து.) ; 'தோய்ந்தும் பொருளனைத்தும் தோயாது நின்ற பரஞ்சுடரே' (ஆரணிய. கடவுள் வாழ்த்து.) என்பன காண்க. பெருநூல்கள் உலப்பில : 'தெய்வம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பலவவர் நூலும்பல' (சடகோபர் அந்.). மறைப்பொருளே ; 'புகலரிய சதுமறை யாய் மறைப்பொருளாய் உபநிடத்தாய்' (அரிச். பு. பாயிரம்.). 'வேதப்பொருளே விளையாடுதியோ' என்றமையால் பிரமம் என்று பெயர் சுட்டாது, வேதப் பரம்பொருளைக் கூறியிருக்க, சமய ஆசிரியர்கள் தத்தம் மதத்திற்கேற்ப அப் பரம் பொருளுக்குப் பெயர் வகுத்துச் சமயங்களை வேறுபடப் போதித்து வருவதும், வேற்றுமைப்படாத நீயே வேற்றுமைப்பட்டுத் தோற்றுவதும், உன் திருவிளையாடலே என்றபடி ; ஆரணிய. 54-ஆம் செய்யுளும் காண்க. வணங்கும் துறைகள் பலபல வாக்கி மதிவிகற்பாற், பிணங்குஞ் சமயம் பலபல வாக்கி அவையவைதோ, றணங்கும் பலபல ஆக்கிநின் மூர்த்தி பரப்பிவைத்தாய்' (திருவிருத். 96).

பி - ம். 1. மெனல் ; எனலாய்.

2. ஓதற்பெறு ; உலப்பிலதால்.

3. போதிப்பன நீ ; இவை போறிலவாம் ; யாதுவை பேர்கலையால், யோர்கிலையால். 110

240. அம்போ ருகனு வரனு வறியார்
எம்போ லியரெண் ணிடினென் பலவாக்
கொம்போ டடைபூக் கனிகா யெனினும்
வம்போ மரமொன் றெனும்வா சகமே.

(உன் உண்மைப் பெருமையை), அறியார் எம்போலியர் - தெரியாதவரான என்னைப்போன்ற பேதையர்கள், (உன்னையே உறுதியாகப் பாவியாமல்), அம் போருகனு - உன்னைப் பிரமனுகவும், அரனு - சிவபிரானுகவும், பலவா எண்ணிடின் என் - பல பொருள்களாகக் கருதினுல் அஃது எவ்வாறு அமையும்; கொம்போடு அடை பூ கனி காய் எனினும் - கிளையும் இலையும் கனியும் காயும் என்று குறிக்கும்படி (பல பொருளாக ஒளிர்ந்தாலும்), மரம் ஒன்று எனும் வாசகம் வம்போ - மரம் ஒன்றுதான் என்று கூறும் சொல் புதுமையானதோ ? ஏ : அசை.

பரம்பொருள் திருமாலாயிருக்க அது சிவன் என்றும், பிரமன் என்றும் கூறி மயங்குவர். அச் சிவபெருமானும் பிரமனும் மரத்தின் உறுப்புக்களாகிய பூ, இலைபோன்று, பரவஸ்துவாகிய உன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அங்கங்களே; அவற்றிற்கு மூலமாய் நிற்கும் மரம்போன்ற மூலப் பொருள் நீயே என்பது கூறப்பெற்றது. (ஒப்பு): 'பாத வங்களின் தளிரொடு பூமுதற் பலவும், ஓதிமூ வேறுவே றுருவென வொளிருமா போல்' (பாகவத. 7·2:66). எம்போலியர் என்று தன்னைத் தாழ்த்திக் கொண்டான்; 'கண்ணப்ப ளெப்பதோர் அன்பின்மை' (திருக்கோத்தும்பி. 4) என்ற இடத்து, 'அன்பின்மை யில் தன்னைப்போல் என்று கூறியபடி. கொம்பு - மரக்கிளை. வம்பு - புதுமை; 'வம்பப்படம்' (பெருங். 1·40:11); 'வம்ப மாக்கள்' (சிலப். 5; 111). அம்போருகன் - தாமரையில் வசிக்கும் பிரமன். அம்போருகம் - நீரின் முளைப்பது என்று தாமரைக்குக் காரணக்குறி.

பி - ம். 1. அம்போ ருகனு ரரனு; அம்போ ருகநான் முகனே; அம்போ ருகனும் மரனும்.
2. எம்போ லிலெயென்.
3. யெனலும், யெனவும்.
4. வாசிகமே.

111

**241.** **நின்னிற் பிறிதாய் நிலையிற் றிரியா**
**தன்னிற் பிறிதா யினதா மெனினும்**
**உன்னிற் பிறிதா யினவோ வுலகம்**
**பொன்னிற் பிறிதா கிலபொற் கலனே.**

'உலகம் - உலகங்கள், நின்னில் பிறிதாய் - உன்னிடத்தி னின்றும் வேறாகி நிலைமை மாறி, நிலையில் திரியா - தத்தம் தன்மைகளில் திரிந்து, தன்னில் பிறிதாயின தாம் எனினும் - தமக் குளளே பல்வேறு வகைப்பட்டன வானாலும், உன்னில் பிறிது ஆயினவோ - உன்னினின்றும் வேறுபட்டனவாகிவிடுமா? பொன் கலன் பொன்னில் பிறிது ஆகில - பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணங்கள், அந்தப் பொன்னினின்றும் வேறாகக் கருதப் படுவதில்லையே.

பொன் கொண்டு செய்யப்பட்ட அணிகள் பலவும் பொன் அடைந்த மாறுதல்களாகவே அதனின்று வேறுபடாததுபோல, உன்னிடமிருந்து தோன்றிய உலகங்கள் உன்னிலும் வேறல்ல என்பது இதன் கருத்து. 'பொன்னுளே தோன்றியதோர் பொற் கலனே போல்கின்றேன்' (இரணிய. 160). போல, புரைய முதலிய



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உவம வுருபின்றிப் பிம்பப் பிரதிபிம்ப பாவம்தோன்றக் கூறப் பட்டமையின், இஃது எடுத்துக்காட் டுவமையணி. பொற்கலன் பிறிதாகில : ஒருமை பன்மைமயக்கம். திரியா - செய்யா என்னும் வாய்பாடு. 'பேதங்களனைத் துமாய் பேதமிலாப் பெருமையனை' (திருவாச. கண்ட. 10).

பி - ம். 1. நிலையிற் றிரிவார், பிறியா.
2. பிறிவாயின தானறமுப், பிறிதாயின தான்றவமும்; தாமெனினும்.
3. பிறிதா யினதோ, பிறிதா யுளதோ-
4. பிறிதா கியபொற் கலனே. 112

இங்கு இரண்டு அதிகப் பாடல்கள் :—

கயமே வுமிடங் கர்கழற் கதுவ
பயமே வியழைத் ததுபன் முறையுள்
நயமே வியநா மமதக் கரியன்
றுயுமா றுதவுற் றிடவந் திலையோ.

வேதன் சிரமொன் றைவெறுத் தமையால்
காதும் பிரமக் கொலைகா யுலைந்து
ஓதுன் திருநா மமுரைத் தருவன்
ஏதன் கெடவந் திடவொட் டிலையோ.

242. தாய்தந் தையெனுந் தகைவந் தனைதான்
நீய்தந் தனைநீ யுறுநெஞ் சினனுன்
நோய்தந் தவனே நுவறீர் வுமெனு
வாய்தந் தனசொல் லிவழுத் தினனால்.

'தாய் தந்தை எனும் தகை வந்தனை - தாயும் தந்தையும் என்று சொல்லப்படும் அன்பின் தன்மையுடன் வந்து, தான் நீய் தந்தனை - என்னை நீ படைத்தருளினாய்; நீ உறு நெஞ்சினன் நான் - நீ எழுந்தருளி யிருக்கப்பெற்ற உள்ளத்தை யுடையவன் அடியேன்; நோய் தந்தவனே நுவல் தீர்வும் எனு - (அடியே னுக்குப் பிறவிப்) பிணியைக் கொடுத்தவனாகிய நீயே சிறப்பாகச் சொல்லப்படுகின்ற அப் பிணிக்கு மாற்று அல்லது பரிகாரமு மாவாய்' என்று, வாய் தந்தன சொல்லி வழுத்தினன் - (உண்மை யாக) வாயினின் றெழுந்த சொற்களைச் சொல்லித் துதித்தான் (பிரகலாதன்). ஆல் - அசை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தாய் தந்தை யெனும் தகை - 'அன்னையும் அத்தனுமாவா யழல்வண்ணா நீயலையோ' (தேவா. 1199; 3); 'அப்பனீ யம்மைநீ' (தேவா. 1228 : 1); 'தாய்தன்னை அறியாத கன்றில்லை தன்கன்றை யாயுமறியும் உலகின்று யாகினைய' (ஆரணிய. 55). வந்தனை - வந்து; முற்றெச்சம். நீ தந்தனை - ஜீவான்மா அநாதியாயினும், கருமத்துக்கீடாக அது பிறக்கும்பொழுது அதற்குத் தனுகரண புவனபோகங்களைப் பரமன் தருதலின், 'நீ தந்தனை' என்றான். அன்பனாகிய தன் நெஞ்சினின்றும் என்றும் நீங்கலன் ஆகலின், 'நீயுறு நெஞ்சினன்' என்றான். நோய் தந்தவனே நுவல் தீர்வு; (ஒப்பு): 'இதமகி தங்க ளெல்லா மிறைவனே யேற்றுக் கொண்டிங், கிதமகி தத்தா லின்பத் துன்பங்க ளீவனன்றே' (சிவ. சித்தி. 2, 13); 'அறமலி யிதஞ்செய் வோருக் கநுக்கிர கத்தைச் செய்வன், மறமலி யகிதஞ்செய்யி னிக்கிர கத்தை வைப்பன்'; 'நீக்கிமுன் னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து, நோக்கி நுண்ணிய நொடியன சொற் செய்து, நுகமின்றி விளாக்கைத்துத், தூக்கி முன்செய்த சுடர்ச் சோதி' (திருவாச. அதிசயப். 8). 'தன்னோய்க்குத் தானே மருந்து' (குறள். 1202); 'பிணியு மதற்கு மருந்து' (திருக்கோவை. 5). நோய்: இங்குப் பிறவிநோய். பிறவியைத் தரும் அந்த இறைவனே பிறப்பற்றவனாகவும் செய்வான் என்ற இறைவனது அருட்டன்மை இங்குக் குறிக்கப்பட்டது. நோய் - இப்பொழுது அடையும் நோயும் ஆம்.

பி - ம். 1. தகைவந்ததனை, தகைவன்றனை.
2. நெஞ்சிலெழ, நெஞ்சினன் யான். 113

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

அதுகண் டடல்வஞ் சகரப் பொழுதில்
கதமிஞ் சியமன் னவன்முன் கடுகிப்
புதல்வ னிறைவா துபொருப் புமுநீர்
மிதவைப் படமே வினனென் றனரால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


243. அத்தன் மையறிந் தவருந் திறலோன்
உய்த்துய்ம் மினென்முன் னெனவுய்த் தனரால்
பித்துண் டதுபேர் வுறுமா பெறுதுங்
கைத்துங் கடுநஞ் சினெனக் கனல்வான்.

அத் தன்மை அறிந்த - (மேலே கூறிய கடுந் தண்டனைகளால் எவ்விதமான துன்பமும் உறுதவனும் இறைவனைத் துதித்து நின்றவனுமான அந்தச் சிலனது) நிலையை (ஏவலர் மூலமாக)த் தெரிந்த, அரு திறலோன் - மிக்க ஆண்மை வாய்ந்த இரணியன், 'என்முன் உய்த்துய்ம்மின் என - '(அவனைக் கொணர்ந்து) என் முன்னர் விடுங்கள்' என்று ஏவ, உய்த்தனர் - (அசுரர்கள்) பிரகலாதனை அவன் முன்பு கொண்டுவந்து விட்டனர்; (உடனே இரணியன்), 'பித்துண்டது பேர்வுறு மா பெறுதும் - இவன் பித்துக்கொண்ட நிலை மாறும்படியான வழியைச் செய்யப்பெறுவோம்; கடு நஞ்சின் கைத்தும் - மிகவும் கொடிய விடமூட்டி இவனைக் கொல்வோம்', என - என்று சொல்லி, கனல்வான் - கோதித்து எழுந்தான். ஆல் - அசை.

பிரகலாதனுக்கு விடமூட்டிக் கொல்ல முயன்றான் இரணியன். பித்துண்டது - திருமாலிடத்தில் பிரேமைகொண்டு விளங்கியது. (ஒப்பு): பாகவத. 7·2; 32; 'உத்தமனத்த னுடையா னடியே நினைந் துருகி, மத்த மனத்தொடும் மாலிவ னென்ன மனநினைவிற் கொத்தன வொத்தன சொல்லிட வூரூர் திரிந்தெவரும், தத்த மனத்தன் பேசவெஞ் ஞான்றுகொல் சாவதுவே' (திருவாச. திருச்சதகம். 3). பேர்வுறுமாறு என்றது, ஈறு குறைந்தது. கைத்தல் - வெறுத்தல்; இங்குக் கொல்லுதல் என்ற பொருளில் வந்தது; காரியத்தைக் காரணத்தாற் கூறிய உபசார வழக்கு. உய்த்து உய்ம்மின், என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 2. உய்த்துளரால்.
3. மத்துண்டனைபேர், மத்துன்டது.
4. கைக்கும்; கடுநெஞ்சின்; கனகன், கனலா. 114

244. இட்டார் கடுவல் விடமென் னுடையான்
தொட்டா னுகரா வொருசோர் விலனால்
கட்டார் கடுமத் திகைகண் கொடியோன்
விட்டா னவன்மே லுறவீ சினரால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கடு வல்விடம் இட்டார் - மிகவும் கொடுமையான நஞ்சினைப் பிரகலாதனை உண்பித்தார்கள் ; (அதனை), என் உடையான் தொட்டான் - என்னை ஆட்கொள்ளக் கூடிய தகுதிவாய்ந்த பிரகலாதன் வாங்கி, நுகரா - உண்ட பின்னரும், ஒரு சோர்வு இலன் - எவ்வித மான தளர்ச்சியையும் அடையவில்லை ; (அங்நிலையில்) கட்டு ஆர் - பல வரிகளாலாகிய, கடு மத்திகை - கொடிய சம்மட்டிகளால் (அடித்துக் கொல்லுமாறு), கண் கொடியோன் விட்டான் - தீயவனாகிய இரணியன் ஏவிவிட்டான் ; (அந்தப் பணியாட்கள்) அவன் மேல் உற வீசினர் - அந்தச் சிறுவன்மீது அம்மத்திகைகளைக் கொண்டு) நன்றாக ஓங்கி யடித்தார்கள். ஆல் - அசை.

வல்விடம் என்றாலே அமையும். விடத்தின் மிகுந்த கொடுமை தோன்றக் 'கடுவல்விடம்' என்றார். எண் உடையான் என்ற பாடங்கொண்டு, ஸ்ரீமந் நாராயணனையே தியானிப்பவன் எனினுமாம். என் உடையான் ; என்னை ஆட்கொள்ளக்கூடியவன் என்று கவி கூறியதாம். நரசிங்கப்பெருமான் பிரகலாதனை நோக்கி, 'நாளு வளர்க நீ' (இரணிய. 173) என்றதும், தைத்யர்களுக்குள் நான் பிரகலாதன் (கீதை. 10 : 30) ; என்ற கீதை வரியும் இங்கே காணத் தகுவன. மத்திகை - சம்மட்டி. (முல்லைப். 59) ; வலிய கோலுமாம்.

பி - ம். 1. கடுநஞ்சை யிளங்குமரன், கடுவெவ்விடம் ; எண்ணுடையான்.
2. தொட்டார் நுகராதிகழந் தொகைவான் ; இகழ் கோதையவன்.
3. கொடியார் ; கொடியான் ; கடுமத்திகை கண் கொடியான்.
4. அவர் மேலவர் வீசினர் ; அவன் மேல் வர ; வலி வீசினரால். 115

**245.** **வெய்யார் முடிவில் லவர்வீ சியபோ**
**துய்யா னெனும்வே லையினுள் ளுறைவோன்**
**கையா யிரமல் லகணக் கிலவென்**
**றெய்யா வுலகியா வையுமெண் ணினனால்.**

முடிவு இல்லவர் வெய்யார் - எண்ணிக்கையற்றவரான அந்தத் தீயோர், வீசியபோது - சம்மட்டிகளை ஓங்கி அடித்தபோதில், உய்யான் எனும் வேலையின் - (கண்டவர் அனைவரும்) இனி, 'இவன் பிழைக்கமாட்டான்' என்று இரங்கிக்கூறும் சமயத்தில், (அப் பிரகலாதன்), 'உள் உறைவோன் - என் உள்ளத்தில் குடிகொண்டுள்ள பரம்பொருளுக்கு, கை ஆயிரம் அல்ல கணக்கில என்று -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'கரங்கள் ஆயிரம் என்ற எண்ணில் உட்படுவனவல்ல மிகப்பல' என்று, உலகு யாவையும் - எல்லா உலகங்களின் வடிவான பெருமான் உண்மை நிலையை, எய்யா எண்ணினான் - தளராமல் நினைவு கூர்ந்து நின்றான். ஆல் - அசை.

பிரகலாதன் மனத்தளர்வின்றி இறைவனது விசுவ ரூபத்தைத் தியானித்திருந்தனன். வெய்யார் - வெம்மை என்ற பண்படியாகப் பிறந்த பலர்பாற் பெயர். முடிவில் வெய்யார் என மாற்றி அளவிறந்த கொடுமையுடன் கூடியவர் எனினும் ஒன்றும். உள்ளுறைவோன்: அந்தர்யாமியான கடவுள்; 'உள்குவா ருள்கிற் றெல்லாம் உடனுறைந் தறிதியென்று' (தேவா. 1189 : 3); 'உலகெலா மாகி வேறா யுடனுமாய்'; (சிவ. சித்தி. 2 : 1). கையாயிரம்: (ஒப்பு): 'சகஸ்ர சீர்ஷா புருஷ: சகஸ் ராக்ஷ ஸ்கச்ரபாத்' (புருடசூக்தம்.). உலகினை நினைவு கூருங்கால் உலகெலா மாகி நின்ற இறைவன் வடிவும் மனத்தின்கண் நிகழ்தல்கூடும் ஆகலின், 'உலகியாவும் எண்ணினன்' எனப்பட்டது. திருமால் தனக்குதவி புரிதற்குக் கை யிரண்டுமட்டுமல்ல பல உறுப்புக்களும் உண்டு; ஆதலின் கைவிடான் என்பது தொனி. இனி, எய்யாமை அறியாமை எனப்பொருள்படு மாகலின், அதன் எதிர்ப்பதமான எய்தல், அறிதல் எனப் பொருள்கொண்டும், எய்யா என்பதைச் செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சமாக்கியும், உலகு யாவையும் அறிந்து எண்ணினன் எனினுமாம்.

பி - ம். 1. வெய்யோர்; அளவில்லவர்.
2. உய்யா னெனுமன் னவனுள்; உறைவார், உறைவோர்.
4. எண்ணினவாய், எள்ளினவால். 118

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

மிடல்கொண் டவர்வீ சுகரம் பொடிபட்
டுடல்சிந் திடவுட் கினர்மற் றவனுக்
கொடிவொன் றிலதென் றவரோ தழனம்
விடமஞ் சவெழுந் தனன்வெய் யவனே,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## பிரகலாதனைத் தானே கொல்ல இரணியன் கடுகுதல்

246. ஊனோ டுயிர்வே றுபடா வுருவம்
தானே யுடையன் தனிமா யையினன்
யானே யுயிருண் பலெனக் கனகன்
வானே ழுநடுங் கிடவந் தனனால்.

(பல கொடுமைகள் புரிந்தும் பிரகலாதன் இறந்துபடாதது கண்டு), 'ஊனோடு உயிர் வேறுபடா உருவம் தானே உடையன் - இச் சிறுவன் உடலைவிட்டு உயிர் நீங்காதிருக்கக்கூடிய வடிவத்தைத் தான் உடையவனாக உள்ளான்; தனி மாயையினன் - ஒப்பற்ற மாயா சக்தியுடன் விளங்குகின்றான்; (ஆதலின்), யானே உயிர் உண்பல் என - நானே அவனுயிரைக் கொன்று பருகுவேன்' என்று கூறி, கனகன் - இரணியன், வான் ஏழும் நடுங்கிட வந்தனன் - ஏழு மேகங்களும் அஞ்சும்படி மகன் அருகில் வந்தான். ஆல் - அசை.

வான் - மேகம்; 'ஏழுடு வான் ஞெமிர்ந்து' (மதுரைக். 243); அவை ஏழென நூல்கள் கூறும். அவை:—சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்காலவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீல வர்ணம் என்பவை. வானேழு: மேலுலகங்கள் ஏழு எனலும் ஆம்.

பா - ம். 1. உபையம், உவயம்.
2. மாயையயினால், மாய்கை, மாயையென.
3. கனலா.

117

## பிரகலாதன் அஞ்சாமை

247. வந்தானை வணங்கியென் மன்னுயிர்தான்
எந்தாய் கொளவெண் ணினையே லிதுதான்
உந்தா ரியதன் றுலகியா வுமுடன்
தந்தார் கொளநின் றதுதா னெனலும்.

வந்தானை - (அவ்வாறு சினந்து) தன்னைக் கொல்வதற்கு வந்த இரணியனை; (பிரகலாதன்), வணங்கி - தொழுது, 'எந்தாய் - என் தந்தையே! என் மன் உயிர் தான் கொள எண்ணினையேல் - எனது அழியாது நிலைபெற்ற உயிரைப் போக்க நீ நினைவாயானால்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இது தான் உன் தாரியது அன்று - இந்த என் உயிர் உன் வழிப்பட்ட தன்று ; உலகு யாவும் உடன் தந்தார் - எல்லா உலகங்களையும் ஒருங்கே படைத்தவரான ஸ்ரீமந் நாராயணனே, கொள நின்றது - கொள்ளும்படி யுள்ளது' எனலும் - என்று சொன்ன அளவில், என்றான் என்று அடுத்த செய்யுளுடன் முடியும். தான் - சொல் விழுக்காடு, அசையுமாம்.

உயிர் அநாதியாய் என்றும் உள்ளதாகலின் மன் உயிர் என்றான். உம் தாரியது அன்று : தாரி - வழி ; இதனை' 'தாரா' என்ற வடசொற்றிரிபென்பர் ; ஆனல் ,தாரி என்ற பதம் தெலுங்கு கன்னட மொழிகளில் பெரிதும் பயில்கின்றது ; ஆதலின் திசைச்சொல் என்க. பிரகலாதன் இரணியனை நோக்கி 'நீ உடற் றந்தையே அன்றி உயிர்த் தந்தை யாகாய் ; ஸ்ரீமந் நாராயணனே அதற்குரியவன்' என்றான் என்க. 'ஈறினை யிழைப்ப லென்று யிழுதையி னியல்ப தீதாம், நாறுபைங் கமலை கேள்வ னன்மனு நவிலு நீரார்க், கூறுசெய் குறல்கூற் றுக்கு மொல்லுமோ வொல்லா தெந்தாய், தேறுதி மறைகள் சான்று' (பாகவத. 7·80). எண்ணினை யென்றதற் கேற்ப உன் தாரி யென்றிருக்க வேண்டியது எதுகை நோக்கி உம்தாரி என வந்தது. உம் ; மரியாதைப் பன்மையுமாம்.

பி - ம். 1. எம்மன்னுயிர்.

3. உந்தா வரிதென், உந்தா விவிதன் ; உலகேழு முடன்.

4. தந்தான் கொள, தந்தார் தொழ நின்றது. 118

## வேறு

### இரணியன் உலகளித்தான் யாவன் எனல்

248. ஏவரே யுலகந் தந்தார்
என்பெய ரேத்தி வாழும்
மூவரே யல்ல ராகில்
முனிவரே முழுதுந் தோற்ற
தேவரே பிறரே யாரே
செப்புதி தெரிய வென்றான்
கோவமுண் டெழுந்துங் கொல்லான்
காட்டுமேற் காட்சி கொள்வான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(அதுகேட்டு இரணியன்), 'உலகம் தந்தார் எவர் - உலகங்களைப் படைத்தவர் என்று நீ சொல்கின்றாயே அவர் யார்? என் பெயர் ஏத்தி வாழும் மூவரே - என்னுடைய நாமத்தை நாடோறும் துதித்து வாழ்கின்ற மும்மூர்த்திகளா? அல்லராகில் - அவர்கள் எல்லாமற்போனால், (என்பெயரேத்திவாழும்), முனிவரே - முனிவர்களா? முழுதும் தோற்ற தேவரே - (அல்லாமல்) தங்கள் உரிமை உடைமைகள் அனைத்தையும் இழந்து என்னிடம் தோல்வியுற்ற அமரர்களா? பிறரே யாரே - (அல்லது) வேறேனும் யாவரோ? தெரிய செப்புதி என்றான் - விளங்கும்படி கூறுவாயாக' என்று வினவினான்; காட்டு மேல் காட்சி கொள்வான் - நேராக அவனைப் பிரகலாதன் காட்டுவானாகில் காணலாம் என்ற நினைவினன் ஆதலின், (அவ்விரணியன்), கோவம் மூண்டு எழுந்தும் கொல்லான் - சினம் மேல்மேல் வளர்ந்தபோதும் கொலைசெய்வதை மேற்கொள்ளவில்லை.

ஏவர் - எவர் என்ற சுட்டு நின்றது. என்பெயரேத்திவாழும்; இப்படலம் 2, 8, 12 செய்யுட்களைக் காண்க. மூவர் - அயன், அரி, அரன். இச் செய்யுட்களில் அடுத்து வரும் ஏகாரங்கள் இரணியனுடைய ஆணவத்தையும், வேகத்தையும் காட்டும். கோபம் என்ற வடசொல் எதுகை நோக்கிக் கோவம் என வந்தது. காட்சி - காட்சிப்பிரமாணம்; இந்தப் பிரமாணமே வேண்டுதலின், இரணியன் உலோகாயதன் என்க.

பி - ம். 1. ஏவரோ ; வுலகத் தாமற் றென்பெயர் ; ஏற்று.
2. மூவரோ ; யல்லர்வான, யல்லவாகின் ; முனிவரோ.
3. தேவரோ ; பிறரோ ; யாரோ ; செப்புக ; தெரியவென்று.
4. எழுந்து கொல்வான். 119

## பிரகலாதன் விடை

249. உலகுதந் தானும் பல்வே
றுயிர்கடந் தானு முள்ளுற்
றுலைவிலா வுயிர்க டோறு
மங்கங்கே யுறைகின் றானும்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மலரினில் வெறியு மெள்ளி
லெண்ணெயும் போல வெங்கும்
அலகில்பல் பொருளும் பற்றி
முற்றிய வரிகா ணத்தா.

(பிரகலாதன் இரணியனை நோக்கி), 'அத்தா - என் தந்தையே! உலகு தந்தானும் - உலகங்களைப் படைத்தவனும், பல்வேறு உயிர்கள் தந்தானும் - பலவான, ஒன்றோடொன்று தம்முள் வேறுபட்ட உயிர்களைப் படைத்தவனும், உலைவு இலா உயிர்கள் தோறும் - கெடுதலில்லாத அந்த உயிர்த் தொகுதிகளில் எல்லாம், அங்கங்கே - அந்தந்த இடங்களிலே, உள் உற்று உறைகின்றானும் - அவ்வவற்றின் உள்ளே பொருந்தி அந்தர்யாமியாகத் தங்குபவனும், (ஆனவன் யாவன் என்னில்), மலரினில் வெறியும் - பூக்களில் வாசனையும், எள்ளில் எண்ணெயும்போல - எள்ளுக்குள் எண்ணெயும் போன்று எங்கும் - எவ்விடத்தும் உள்ள, அலகு இல் பல் பொருளும் பற்றி - எண்ணிறந்த பல பொருள்களிலும் பொருந்தி, முற்றிய அரி காண் - நிறைந்து விளங்குகின்ற திருமாலே யாவன்.

இச் செய்யுட்கண் பரத்துவம், வியூகத்துவம், அந்தர்யாமித்வம் முதலியன கூறப்பட்டிருத்தல் காண்க. உலகு தந்தான் - 'உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்' (கம்ப. பாயிரம்.); 'உலகனைத்தும் தானாய்த் தானுமானான்' (பெரியதிரு. 1·5:7); திருவாய். 1·1·7. பல்வே றுயிர் - எண்பத்து நான்கு லக்ஷம் சீவராசிகள். எள்ளுக்குள் எண்ணெய்போல்: 'தன்னுளே யுலகங்க ளெவையுந் தந்தவை, தன்னுளே நின்றுதா னவற்றுட் டங்குவான்' (யுத்த. 188); மற்றும் ஆரணிய. 55; 159. 'ஓங்கிய வுலகமு முயிருமுட் புறம், தாங்கிய பொருள்களுந் தானுந் தானென' (யுத்த. முதற் போர். 116).

பி - ம். 2. அலகிலா; மருட்டுங் கேளாய்.

3. மலரினில் மணமும்; மருட்டுங் கோளாய்; எண்ணெயும் போல மற்றும்; மற்றுட்டங்கும்.

4. அலகிலெப், அலகிறெல்; புகழும்; அத்தன்,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



250. என்கணு னேக்கிக் காண்டற்
கெங்கணு முளன்கா ணெந்தை
உன்கணு னன்பிற் சொன்னல்
உறுதியென் றென்றுங் கொள்ளாய்
நின்கணு னேக்கிக் காண்டற்
கெளியனே நினக்குப் பின்னேன்
பொன்கணு னுவி யுண்ட
புண்டரீ கக்க ணெம்மான்.

'எந்தை - என் தலைவனான அந்தத் திருமால், (அவனுக்கு அடிமையாகிய நான்), என் கண்ணால் நோக்கி காண்டற்கு எங்கணும் உளன் - என் விழிகளாற் பார்க்குமாறு எல்லா இடங்களிலும் விளங்குகின்றான்; (அந்த உண்மையை), உன் கண் நான் அன்பில் சொன்னால் - உன்னிடம் நான் அன்புபற்றிக் கூறினால், உறுதி என்று ஒன்றும் கொள்ளாய் - அதனை நிச்சயிக்கப்பட்ட பொருள் என்று ஒரு சிறிதும் ஏற்றுக்கொள்ளாய்; (இவ்வாறு நம்பிக்கை யில்லாத காரணத்தால்), நினக்கு பின்னேன் பொன் கணன் ஆவி உண்ட புண்டரிக கண் எம்மான் - உனக்குப் பின் வந்த இரணியாட்சனுடைய உயிரைக் கொன்ற செந்தாமரைபோன்ற கண்களை யுடைய எம் தலைவனான திருமால், நின் கணால் நோக்கிக் காண்டற்கு எளியனோ - உன் கண்களால் குறித்துக் காண்பதற்கு எளியவன் ஆவனோ? காண் - அசை.

'பத்தி வலையிற் படுவோன்' (திருவாச. திருவண்ட. 42); 'பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்' (திருவாய். 1·3:1). எந்தை என்பது, இரணியனை நோக்கிக் கூறிய அண்மைவிளியுமாம். பொன்கணன் - இரணியாட்சன்; இரணியம் - பொன்; அக்ஷம் - கண்.

பி - ம். 1. காணு னெங்கணும், காணு வெங்கணும், காணுய்.

2. அன்பிற் சொன்னேன்; சொன்ன வுறுதியென்று, சொன்ன னுறுதி யென்று; சோறல் உறுகோளென்றுணர கில்லாய்; [illegible]; ஒன்றுங் கேளாய்.

3. நினக்கு மூத்த; புன்கணன்.

4. புண்டரீகக் கணனை, புண்டரீகக் கணனே.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



251. மூன்றவன் குணங்கள் செய்கை
மூன்றவ னுருவ மூன்று
மூன்றுகண் சுடர்கள் சோதி
மூன்றுதன் னுலக மூன்று
தோன்றலு மிடையு மீறுந்
தொடங்கிய பொருள்கட் கெல்லாம்
சான்றவ னிதுவே வேத
முடிவிது சரத மென்றான்.

'அவன் குணங்கள் மூன்று - அவனுக்குரித்தான குணங்கள் மூன்று; செய்கை மூன்று - தொழில்கள் மூன்று; அவன் உருவம் மூன்று - அவன் வடிவங்களும் மூன்று; சோதி சுடர்கள் மூன்று கண் - ஒளிமிக்க மூன்றும் அவன் கண்கள்; தன் உலகம் மூன்று - மூன்றுலகங்களும் அவனுடையன; தோன்றலும் இடையும் ஈறும் - முதலும் நடுவும் முடிவும் ஆகிய மூன்று நிலைமையையும் தொடங்கிய பொருள்கட்கெல்லாம் - தொடங்கிக்கொண்ட எல்லாப் பொருள்கட்கும், சான்று அவன் - சாட்சியாவான் அவனே; இது வேத முடிவு - இதுவே மறைகளின் தீர்மானமான கருத்து, இது சரதம் என்றான் - இது சத்தியம்' என்று சொன்னான் (பிரகலாதன்). ஏகாரம்: தேற்றம்.

மூன்று குணங்கள்: சத்துவம், ராஜஸம, தாமதம். மூன்று செயல்கள்: படைத்தல், காத்தல், அழித்தல். உருவம் மூன்று: அயன், அரி, அரன்; அச்சுதன், அனந்தன், கோவிந்தனுமாம். மூன்று கண்கள்: சந்திரன், சூரியன், தீ; உலகம் மூன்று: விண், மண், பாதலம். எல்லாப் பொருள்கட்கும் சான்று அவன்; சரதம் - உண்மை. எங்கும் பரந்துள்ள திருமாலின் தன்மை இங்குக் கூறப்பெற்றது. சான்று: (கிட்கிந்தா. கடவுள் வாழ்த்து) காண்க.

பா - பே. 1. குணமே, மூன்றவன்; மூன்றவன்; குணமே.
2. செந்தீ; மூன்றவன், மூன்றதன்; உருவம்.
3. துடக்கிய; தோன்றிய வதுவெ; முடிவவன், முடிவது. 122

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## இரணியன் கூற்று

252. என்றலு மவுணர் வேந்த
னெயிற்றரும் பிலங்க நக்கான்
ஒன்றலில் பொருள்க ளெல்லாம்
ஒருவன்புக் குறைவ னென்றாய்
நன்றது காண்டும் பின்னர்
நல்லவா புரிது மன்றே
நின்றுள னென்னிற் கள்வ
நிரப்புதி நிலைமை என்றான்.

என்றலும் - என்று இவ்வாறு பிரகலாதன் புகன்றவுடன், அவுணர் வேந்தன் - அசுர மன்னனான இரணியன், அரும்பு எயிறு இலங்க நக்கான் - அரும்புகிற பற்கள் வெளித்தோன்றும்படி நகைத்து, 'ஒன்றல் இல் ஒருவன் - எதிலும் பொருந்துதல் இல்லாத ஒரு தலைவன், பொருள்கள் எல்லாம்-பொருள்கள் அனைத்தினும், புக்கு உறைவன் என்றாய் - உட்புகுந்து வசிப்பன் என்று மொழிந்தாய்; அது நன்று காண்டும் - அந்த நிலையைச் செம்மையாக ஆராய்வோம்; பின்னர்நல்லவா புரிதும் - பிறகு அதற்கு நன்கு இயைந்த காரியத்தைச் செய்வோம்; கள்வன் - அந்தத் திருடனாகிய (நீ சொன்ன ஒருவன்), நின்றுளன் என்னில் - நீ சொன்னவாறு எங்கும தங்கியுள்ளான் என்பது உண்மையெனின், நிலைமை- அந்த நிலையை, நிரப்புதி - காட்சி யளவையால் காட்டுவாயாக', என்றான் - என்று மொழிந்தான. அன்று, ஏ - அசை.

நக்கான் : இங்கு நகை எள்ளல்; நகை - பிறன் மடமை கண்டு நக்கது. ஒன்றல் இல் பொருள்கள் - ஒன்றின் ஒன்று வேறாக உள்ள பொருள்கள் எனினுமாம்; (ஒப்பு): 'ஒன்றினோ டொன்றொவ்வாப் பூதங்கள் தொறுமுறைந்தால்' (ஆரணிய. 48). அவ்வளவு பொருள்களிலும் ஒருவன் எவ்வாறு புகுந்து வதிவன் என்று இறைவன் சர்வாந்திரியாமி என்பதை உணராமற் கூறினான். 'நின்றதூ ணகத்து முன்கோ னிருக்குமோ நிரப்பு கென்றான்' என்று நான்காமடி சில பிரதிகளில் காணப்படுகின்றது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. எயிற்றினை யிலங்க.
2. ஒன்றல பொருள்கட் கெல்லாம்; உறையு மென்றாய்.
3. நன்றது கண்டு, கண்ட; நல்லவா செய்து மன்றே, செய்து தூணில், புரிதும் தூணில்.
4. நின்றதூ ணகத்து முன்கோ ளிருக்குமோ, நின்றுளது; நிரப்பு கென்றான். 123

## பிரகலாதன் விடை

253. சாணினு முளனோர் தண்மை
யணுவினைச் சதகூ றிட்ட
கோணினு முளன்மா மேருக்
குன்றினு முளனிந் நின்ற
தூணினு முளனீ சொன்ன
சொல்லினு முளனித் தன்மை
காணுதி விரைவி னென்றா
னன்றெனக் கனகன் சொன்னான்.

(அது கேட்டுப் பிரகலாதன், 'யான் கூறிய அந்தத் தலைவன்') சாணினும் உளன் - சாணிலும் இருக்கின்றான்; ஓர் தண்மை அணுவினை சத கூறு இட்ட கோணினும் உளன் - ஒரு எளிய அணுவை நூறு பங்காகச் செய்த அந்தப் பகுப்பிலும் அமர்ந்துள்ளான்; மா மேரு குன்றினும் உளன் - மிகப் பெரிய மேரு மலையிலும் இருக்கின்றான்; இ நின்ற தூணினும் உளன் - இதோ இங்கு அருகில் உள்ள தூணிலும் இருக்கின்றான்; நீ சொன்ன சொல்லினும் உளன் - (அவனைக் குறித்து) நீ இகழ்ந்து கூறிய அந்த சொல்லினும் இருக்கின்றான்; இ தன்மை விரைவின் காணுதி என்றான் - இந்த அவனது எங்கும் பரந்துள்ள நிலையைத் தாமதமின்றி ஆராய்ந்து அறிவாய்' என்று மொழிந்தான்; கனகன் இரணியனும், 'நன்று என சொன்னான் - நல்லதென்று' அதற்கு இயைந்து மேலும் சொல்லத் தொடங்கினான்; அதனை அடுத்த செய்யுளிற் காண்க.

இச் செய்யுட்கு (ஒப்பு): பாகவத. 7·2, 82. தண்மை - எளிமை, தாழ்வு; (பிங்.); 'தண்ணிய வென்னைத் தடுத்தாட் கொளநின்ற தற்பரனே' (திருக்கருவை. கலித். அந்.). சதகூறு - நூறாகப் பகுத்தல். கோண் - ஒரு சிறு பகுதி. "அணோரணீயாம் மகதோ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மகியாம்' என்பது சுருதி. அணுவினைச் சதகூறிட்ட கோண் என்றார் ஆசிரியர். அதனைப் பலவாகப் பிளத்தல்கூடும் என்று அறிந்தே கூறினர்போலும். 20-ஆம் நூற்றாண்டில் அது எலக்ட்ரான் என்றும் பாசிட்ரான் என்றும் வழங்குதல் காண்க. 'ஓர் தன்மை' என்ற பாடத்துக்கு ஒரு தன்மையாகவே உள்ளான் என்க.

பி - ம். 1. சாணிலு முளரோ ; சதகூறிட்டு.

2. காணிலு முளன் முன்னின்ற, முளனீ பூண்ட, முளனுன்னின்ற.

3. உளனீ பூண்ட, உள்நின்ற, பூணிலு முளனுள்ளப் பொருட்டிலு முளனென் பொய்மை.

4. என்றலும் ; கனகன் நக்கான், சென்றான். 124

## இரணியன் கூற்று

254. உம்பர்க்கு முனக்கு மொத்திவ்
வுலகெங்கும் பரந்து ளானைக்
கம்பத்தின் வழியே காணக்
காட்டுதி காட்டி டாயேல்
கும்பத்தின் கரியைக் கோண்மாக்
கொன்றென நின்னைக் கொன்றுன்
செம்பொத்த குருதி தேக்கி
யுடலையுந் தின்பே னென்றான்.

'உம்பர்க்கும் உனக்கும் ஒத்து - தேவர்களுக்கும் உனக்கும் ஒத்த நண்பனாய், இ உலகு எங்கும் பரந்துளானை - இந்த உலகம் அடங்கலும் வியாபித்துள்ளவனாக நீ கூறுகின்ற அவனை, கம்பத்தின் வழியே காண காட்டுதி - இந்தத் தூணிடத்திலே நான் நேராகக் காணுமாறு காட்டித் தருக ; காட்டிடாயேல் - அங்ஙனம் காட்டத் தவறுவாயாகில், கரியை கும்பத்தின் கோள் மா கொன்றென - யானையை மத்தகத்தைப்பற்றிச் சிங்கம் கிழித் தாற்போல, நின்னை கொன்று - உன்னையும் கிழித்து, உன் செம்பு ஒத்த குருதி தேக்கி - உனது தாம்பிரம்போன்று சிவந்த உதிரத்தை நிரம்பப் பருகி, உடலையும் தின்பேன் என்றான் - உடலையும் உணவாகக் கொள்வேன்' என்று சொன்னான் (இரணியன்),

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கோண்மா வேங்கை (கிட்கிந்தா. 53) : கோண்மா - பிற விலங்குகளின் உயிரைக் கவரவல்ல மிருகம் எனினுமாம். கொன்றது என்ன என்றது கொன்றென நின்றது. தேக்குதல் - நிரம்பப் பருகுதல் ; 'நிறைமத்த மதுவைத் தேக்கி' (கம்ப. அதிகாய. 215). கும்பம் - யானையின் மத்தகம்.

பி - ம். 1. உலகெலாம் ; போந்துளானை.
2. காட்டா யாகில்.
3. கும்பத்தின் ; கொன்று.
4. உயிரையுந். 125

## பிரகலாதன் விடை

255. என்னுயிர் நின்னாற் கோறற்
கெளியதொன் றன்றி யான்முன்
சொன்னவன் றொட்ட தொட்ட
விடந்தொறுந் தோன்றா னாயின்
என்னுயிர் யானே மாய்ப்பன்
பின்னும்வாழ் வுகப்ப லென்னின்
அன்னவற் கடியே னல்லே
னென்றனன் அறிவின் மிக்கான்.

(இவ்வாறு கூறக் கேட்டு), அறிவின் மிக்கான் - அறிவிற் சிறந்தவனான பிரகலாதன், (தன் தந்தையை நோக்கி), 'என் உயிர் நின்னால் கோறற்கு எளியது ஒன்று அன்று - எனது உயிர் உன்னுடைய முயற்சிகளால் கொல்லப்படும்படி எளிமையானதன்று ; யான்முன் சொன்னவன் - நான் முன்பு கூறிய அவன், தொட்ட தொட்ட இடம் தோறும் தோன்றான் ஆயின் - நான் சுட்டிக் காட்டும் இடங்களில் எல்லாம் எழுந்தருளாமற் போனால், யானே என் உயிர் மாய்ப்பன் - நானே என் உயிரைப் போக்கிக்கொள்வேன் ; பின்னும் வாழ்வு உகப்பல் என்னின் - அதன் பின்னரும் இந்த சில உலக வாழ்வினை விரும்புவேனாகில், அன்னவற்கு அடியேன் அல்லேன் - அப்பெருமானுக்கு நான் அடியவன் அல்லேன்', என்றனன் - என்று மறுமொழி பகர்ந்தான்.

அன்றியான் முன் - குற்றியலிகரம். அன்னவற்கு அடியேன் அல்லேன் - நான் திருமாலுக் கடியவன் என்பதுண்மையானால்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அவன் நான் விரும்பிய இடம் தோறும் எனக்குக் காட்சி தந்தருள்வன்; அவ்வாறு காட்சி தராவிடின், என்னுடைய அடியனுந் தன்மை பூரண மடைந்ததில்லை என்று எண்ணி நானே தற்கொலை புரிந்துகொள்வேன் என்று சூளுரைத்தான் பிரகலாதன்.

பி - ம். 1. நான்முன்.
3. மன்னுயிர்; நிப்பன்; வுகப்பெ னுகில், வுகப்பனுயின்.
4. அடியன், அடிமை; அறிவு மிக்கான், மிக்கோன். 126

## நரசிங்கத் தோற்றம்

256. நசைதிறந் திலங்கப் பொங்கி
நன்றுநன் றென்ன நக்கு
விசைதிறந் துருமு வீழ்ந்த
தென்னவோர் தூணின் வென்றி
இசைதிறந் தமர்ந்த கையா
லெற்றின னெற்ற லோடும்
திசைதிறந் தண்டங் கீறச்
சிரித்ததோர் செங்கட் சீயம்.

(அது கேட்டு இரணியன் தன் உள்ளத்துள்ள), நசை திறந்து இலங்க பொங்கி - பகடிக் கருத்து வெளிப்படுமாறு மனக்கிளர்ச்சி கொண்டு, நன்று நன்று என்ன நக்கு - நல்லது நல்லது என்று பகர்ந்து சிரித்து, விசை திறந்து - வேகம் வெளிப்பட்டு, உருமு வீழ்ந்தது என்ன - இடி வீழ்ந்தாற் போன்று, ஓர் தூணின் - ஒரு தூணிலே, வென்றி இசை திறந்து அமர்ந்த கையால் - வெற்றியையும் கீர்த்தியையும் வெளிப்படச் செய்த தனது கையினுல், எற்றினன் - அறைந்தான்; எற்றலோடும் - அறைந்த அளவில், ஓர் செம் கண் சீயம் - (சினத்தால்) கண்கள் சிவக்கப் பெற்ற ஒரு சிங்கமானது, திசை திறந்து - திக்குகளனைத்தையும் பிளந்து கொண்டு, அண்டம் கீற சிரித்தது - (தனது பேரொலியினுல்) அண்டம் பிளக்குமாறு வெடி சிரிப்புச் சிரித்தது.

எற்றினுன், செம்பொற் றூணிடை யடித்தானன்றே; பாகவத. 7·2 : 85. நசை - பிரகலாதனுடைய உரையைச் சோதிக்கும் விருப்பம். சீயம் - சிம்ஹம் என்ற வடசொல்லின் சிதைவு. ஹிம்ஸா என்ற வடசொல் முன் பின்னுகை மாறியது என்ப. உருமு



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வீழ்ந்ததென்ன எற்றினன் என இயைக்க. கம்பர் இராமாயணத்தைத் திருவரங்கம் மேட்டழகர் சந்நிதியில் அரங்கேற்றியபொழுது இச் செய்யுளைக் கேட்டு அரங்கநாதர் தலையசைத்தார் என்பது ஐதிகம்.

பி - ம். 1. நசைதிறந் தென்னப் ; நக்கான்.

2. விசைபிறந்து, இசை திறந்து ; தென்னவே.

3. இசை திறந் தமர்ந்த, இசை திறந் தமைந்த, துயர்ந்த, இசை பிறந்து; எற்றினன்.

4. அண்டங் கீறி. 127

## அப்பொழுது பிரகலாதன் நிலை

257. நாடிநான் தருவே னென்ற
நல்லறி வாள னுநாந்
தேடிநான் முகனுங் காணுச்
சேயவன் சிரித்த லோடும்
ஆடினு னழுதான் பாடி
யரற்றினன் சிரத்திற் செங்கை
சூடினன் தொழுதா னோடி
யுலகெலாந் துகைத்தான் துள்ளி.

நாளும் தேடி நான் முகனும் காணு சேயவன் சிரித்தலோடும்- பலநாட்களாகத் தேடித் திரிந்தும், பிரமனும் காண முடியாமல் சேய்மையில் உள்ளவனான பெருமான் (தூணுள்ளிருந்தே) நகைத்த அளவில், நான் நாடி தருவென் என்ற நல்லறிவாளன் - நான் விரும்பியழைத்துக் காட்டுவேன் என்று சொன்ன சிறந்த அறிஞன் ஆன பிரகலாதன் (மிக்க மகிழ்ச்சி கொண்டவனாய்), ஆடினன் அழுதான் பாடி அரற்றினன் - கூத்தாடினன்; ஆனந்தக் கண்ணீர் பெருக்கி அழுதான்; அவன் புகழைப் பாடி அலறினன்; சிரத்தில் செம்கை சூடினன் - தலைமேல் இருகைகளும் குவித்துக் கொண்டான்; தொழுதான் - கீழ் விழ்ந்து பணிந்தான்; உலகு எலாம் துள்ளி ஓடி துகைத்தான் - உலகம் முற்றிலும் குதித்துக் கொண்டு ஓடி அழுந்த மிதித்தான்.

நரசிங்கப் பெருமான் தூணினின்று சிரித்த வுடனே பிரகலாதன் மாட்டு நிகழ்ந்த மெய்ப்பாடுகள் இங்குக் கூறப்பட்டுள்ளன

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(ஒப்பு.): (யுந்த. மீட்சிப். 248, 253; திருமுடி சூட்டுப். 13. சேயவன். எளிதில் காண வியலாதபடி தூரத்தில் நிற்பவன்.

பி-ம். 1. நான் மறையுங்.
2. சேவகன், செய்யவன்; பாடினுனின் றருதனன், அரற்றிறு வரற்றிச்.
4. துள்ளினுன் துயரம் நீந்தான். 128

இங்கு அதிகப் பாடல்கள் :—

ஈதவன் மகிழ்த லோடும் இரணியன் எரியிற் பொங்கிச்
சாதலே யில்லா வென்முன் தருக்குறு மாய மெல்லாம்
போதுமோர் கணத்தி னுள்ளே போக்குவேன்
[போக்குவேனென்
ருேதினன் அண்ட கோளம் உடைந்திட உருத்துச்
[சொல்வான்.

நாணிநின் னெதிரே யாண்டு நடுவதா யினதோர் செம்பொன்
தூணில்நின் றனனே யன்றித் தோன்றிய திலதென் ருென்ற
வேணுதண் டுடையோன் வெய்ய வெள்ளியே விளம்ப வெள்ளி
காணவந் தனைய சீயம் கணத்திடைக் கதிர்த்த தம்மா.

## இரணியன் முரண்பாடு

258. ஆரடா சிரித்தாய் சொன்ன
அரிகொலோ வஞ்சிப் புக்க
நீரடா போதா தென்று
நெடுந்தறி நேடி னுயோ
போரடா பொருதி யாயிற்
புறப்படு புறப்ப டென்றுன்
பேரடா நின்ற தாளோ
டுலகெலாம் பெயரப் பேர்வான்.

பேர் அடா நின்றதாளோடு - எங்கும் தன் நாமம் அடுத்து விளங்கி நிற்றற்குக் காரணமான வலிமை யுடனே, உலகு எலாம் பெயர பேர்வான் - உலகடங்கலும் (தான் செல்லுங்கால் அந்த வேகத்தினுல்) தன்னுடன் நிலை பெயருமாறு செல்பவனுன இரணியன், (நரசிங்கத்தின் நகைப்பைச் செவியேற்று), 'சிரித்தாய் ஆரடா - நகைத்த நீ யாரடா! சொன்ன அரிகொலோ - இந்தச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சிறுவன் சொல்லி யழைத்த அரிதானோ? அடா அஞ்சி புக்க நீர் போதாது என்று - அடே! பகைவர்க்குப் பயந்து நீ புகலாகச் சென்றடைந்த பாற்கடல் பற்ருது என்று கருதி, நெடு தறி நேடினேயோ - (என் அரண்மனைக்கண் உள்ள) இந்த உயரமான கம்பத்தைத்தேடி நின்றனேயோ? அடா போர் பொருதி ஆயில் - உன்னாற் செய்து முடித்தற்கு அடுக்காத போர் புரிய நினைவை ஆயின், (அதனைச் செய்தற்கு ஆயத்தமாகிப்) புறப்படு புறப்படு' என்ருன் - எழுக எழுக என்று பகர்ந்தான்.

ஆணவத்தடிப்புக் காரணமாகத் திருமாலை ஏக வசனமாகப் பேசுகின்ருன். சொன்ன அரிகொலோ - என்பது இகழ்ச்சி. இங்கு வில்லி பாரதம் இராச சூயச்சருக்கத்துச் சிசுபாலன் கண்ணனை யிகழ்ந்த பகுதியை ஒப்பு நோக்குக. இரணியன் இரணியாட்சர் களே ஒரு பிறப்பில் சிசுபால தந்தவக்தரர்களாகத் தோன்றினர் என்பது புராண வரலாறு. அப் பகுதி பின்வருமாறு :—

1. மற்றவ ரிறைவன் மலரடி வணங்கி
வான்பிறப் பேழுற மாட்டே
முற்றுமுப் பவமு முனக்குவெம் பகையா
யுற்பவித் துன்பத முறுவேம்

2. இரணிய னிரணி யாக்கனென் றுரைக்கு
மியற்பெய ரிருவரு மெய்தி
முரணிய கொடுமை புரிந்துமூ வுலகு
மொய்ம்புடன் கவர்ந்திடு நாளில்
அரணி யிழைப்போ னரவரி யுருவா
யச்சுதன் றூணிலங் குரித்துத்
தரணியி னுகிராற் பிளந்துமுன் னுகத்தில்
தனபகை செகுத்தனன் பின்னும்

3. அரக்கர்தங் குலத்துக் கதிபதியாகி
யாண்டு போய் மீண்டுமங் குரித்துத்
தருக்குட னவர்க ளிருவரு முறையாற்
றம்பியுந் தமையனு மானர்

(வி. பா. இராசசூய. 146-149)

தறி - தூண். 'கனக னெற்றுந் தறியிடை' (கந்தபு. வள்ளி 15): 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்' என்ற பழ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மொழி காண்க. தாளோ டுலகெலாம் பெயரப்பேர்வான்; (ஒப்பு): யுத்த. 132, 142 காண்க. நான்காம் அடியில் அடா என்பது அடு என்னும் பகுதியிற் பிறந்த உடன்பாட்டு இறந்தகால வினை யெச்சம். தாள் - முயற்சியுமாம்; ஒப்பு: சுந்தர. 423.

பி - ம். 1. அரிகொலாம்.
2. நெடுந்தறி நீட்டி னுயோ, தேடினுயோ.
3. பொருவை யாரிற், யாரயிற்.
4. பேரிடா; போவான். 129

## நரசிங்கமூர்த்தியின் புறப்பாடு

259. பிளந்தது தூணு மாங்கே
பிறந்தது சீயம் பின்னை
வளர்ந்தது திசைக ளெட்டும்
பகிரண்ட முதல மற்றும்
அளந்ததப் புறத்துச் செய்கை
யாரறிந் துறைய கிற்பார்
கிளர்ந்தது ககன முட்டை
கிழிந்தது கீழு மேலும்.

(இவ்வாறு இரணியன் வெகுண்டு கூறியவுடன்,) தூணும் பிளந்தது - அந்தத் தூணும் இரு கூறாகியது; ஆங்கே சீயம் பிறந்தது - அவ்விடத்து நரசிங்க உருவம் வெளி வந்தது; பின்னை - பிறகு, திசைகள் எட்டும் வளர்ந்தது - எட்டுத் திக்குகளை யும் அளாவி ஓங்கிற்று; பகிர் அண்டம் முதல மற்றும் அளந்தது - வெளியண்டங்கள் முதலான பல அண்டங்களையும் அளந்தது; அ புறத்து செய்கை யார் அறிந்து அறைய கிற்பார் - அதற்கப் பால் அவனுருவம் ஊடுருவிச் சென்ற செய்திகளை யாவரே அறிந்து பகர்தல் கூடும்? கிளர்ந்தது ககனமுட்டை கீழு மேலும் கிழிந்தது - விளங்கி நின்றதான அண்ட கடாகம் கீழு மேலும் பிளந்தது.

இங்குச் செவியாறலாகவந்த ஒரு கதைபின்வருமாறு: சோழ மன்னன் ஒட்டக் கூத்தரையும் கம்பரையும் இராமாயணம் பாடப் பணித்ததாகவும், முன்னவர் நாடோறும் சில செய்யுட்களாக இயற்றிவந்தனர் என்றும், ஒருநாள் அரசனது ஏவல் மாக்கள் சிலர் கம்பர் மனைக்குச் சென்று, அவரைக் காணாது, அவர் மனைக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குளிருந்த ஒரு பணிப்பெண்ணை வினவ, அவள் இராமாயணம் கிழிந்தவரையில் பாடியாயிற்று என்றதாகவும், அந்தக் கிழிந்த என்ற சொல் இரணியன் மார்பை நரசிங்கப் பெருமாள் நகத்தால் கிழித்ததையே குறிக்கும் என்றும் கூறுவர். கதை நம்பத்தக்க தன்று. பிளந்தது, பிறந்தது, அளந்தது என்ற வினை முற்றுக்களை முன்னிறுத்தியது கொண்டு ஒன்றன் மேலொன்ருக விரைவில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் புலனும். கீழு மேலும் : பாதலமும் விண்ணுலகமும்.

பி - ம். 1. அங்கே ; பின்னே.
2. நிசையு மண்ட.
3. புறத்தின் செய்கை ; ஆற்ற சிற்பார், அமைய.
4. ககன முட்டக். 130

## பெருமான் விசுவரூப வர்ணனை

260. மன்றலந் துளப மாலை
மானிட மடங்கல் வானில்
சென்றது தெரிதல் தேற்ரும்
சேவடி படியிற் றீண்டி
நின்றதோர் பொழுதி னண்ட
நெடுமுகட் டிருந்த முன்னேன்
அன்றவ னுந்தி வந்தா
ருமெனத் தோன்றி ஞனல்.

மன்றல் அம் துளப மாலை - நறுமணம் கமழும் அழகிய திருத் துழாய் மாலை புனைந்த, மானிட மடங்கல் - நரசிங்கப் பெருமான், வானில் சென்றது தெரிதல் தேற்ரும் - விண்ணில் துளைத்துச் சென்ற வகையைத் தெரிந்து தெளியோம்; சேவடி படியில் தீண்டி - (அப் பெருமான்) தனது சிவந்த பாதங்கள் பூமியில் படியும்படி, நின்றதோர் பொழுதின் - நின்ற சமயத்தில், அண்டம் நெடு முகடு இருந்த முன்னேன் - அண்டத்தின் உயர்ந்த மேல் புறத்தில் இருந்த பிரமதேவன், அன்று - அப்பொழுதுதான்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அவன் உந்தி வந்தான் ஆம் என தோன்றினன் - அந்தத் திருமாலினுடைய நாபிக்கமலத்து உதித்தான் எனும்படி விளங்கினன். ஆல் - அசை.

படைப்புக் கடவுளாகிச் சத்தியலோகத்தில் உறையும் அயன் விசுவரூபங்கொண்ட நரசிங்கப்பெருமான் திருவுருவத்தில் நாபி அளவிலே நின்று அன்றுதான் அவன் உந்திக் கமலத்துத் தோன்றினன் என்று கூறுமாறு காணப்பட்டான் எனக் கூறு முகத்தால், பெருமானுடைய அளப்பரிய பேருருவைப் புகழ்ந்தனர் என்க; தற்குறிப்பேற்றவணி. மன்றல் - நறுமணம். துளப மாலை - திருமாலுக்குரிய திருத்துழாய் மாலை. இரணியன் கேட்ட வண்ணம், தேவர் மனிதர் விலங்குகள் என்ற வர்க்கத்தில் ஒன்ருக வாராமல், விலங்கும் மனிதனுமாக விரவிய கோலம் நரசிங்கப் பெருமான் கோலம். படி - பூமி; பிருதிவி என்ற வடசொல் படி எனத் திரிந்த தென்பர். எல்லாப் பொருள்களும் தன்னிடம் படியப் பெறுவது என்று தமிழ்ச்சொல் என்றும் மொழிவர்.

பா - ம். 1. துளபப் புத்தேள்.
2. தேற்ருச், தேற்ருர்.
3. பொழுதிற் றீண்ட, பொழுதின் கண்ணே; நெடுமுகட் டிருந்து; மன்ஞே.
4. வந்த தாமென; தோன்றி ஞனே. 131

261. எத்துணை யுளது கையென்
றியம்பினு லெண்ணற் கேற்ற
வித்தக ருளரே யந்தத்
தானவர் விரிந்த சேனை
பத்துநூ றமைந்த கோடி
வெள்ளத்தாற் பகுதி செய்த
அத்தனை கடலு மாளத்
தனித்தனி யள்ளிக் கொண்ட.

(அந்த நரசிங்க மூர்த்திக்கு), கை எத்தனை உளது என்று இயம்பினல் - கைகள் எவ்வளவு உள்ளன என வினவின், எண்ணற்கு ஏற்ற வித்தகர் உளரே - (அவற்றை) எண்ணி (இவ்வளவு என்று) கணிக்கக்கூடிய திறமை வாய்ந்தவர் (எவரேனும், எங்கேனும்) இருக்கின்றுர்களா? பத்து நூறு அமைந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கோடி வெள்ளத்தால் - ஆயிரம் கோடி வெள்ளம் என்னும் எண்ணால் அளவிட்டு, பகுதி செய்த அந்த தானவர் விரிந்த சேனை - பகுக்கப்பட்ட அந்த அசுரர்களுடைய பரந்த சேனைகளாகிய, அத்தனை கடலும் - கடல்கள் அனைத்தும், மாள - வற்றும்படி, தனி தனி அள்ளி கொண்ட - (அந்த நரஹரியின் கரங்கள் அந்த அசுரர்களனைவோரையும்) தனித்தனி வாரிக்கொண்டன.

பகுதி செய்தல் - வகுத்தல். அத்தனை கடலுமாளத் தனித் தனி யள்ளிக்கொண்ட ; (ஒப்பு) : 'வெள்ளமேழு பத்துளதால் வீரன்சேனை யிவ்வேலைப், பள்ளம் ஒருகை நீரள்ளிக் குடிக்கச் சாலும் பான்மையதோ' (சுந்தர. 603) ; மற்றும், கிட்கிந்தா. 691 ; 707 ; 709 காண்க. எத்துணை யுளதுகை ; (ஒப்பு) : 'அன்று தனித்தனி நின்று மலைத்தரு ளங்கைகள் பற்பலவே' (வி. பா. கிருட்டினன். 203).

பி - ம். 1. எத்தனை போதும், இத்துணை போதும் ; எண்ணல் தேற்ற, எண்ணத் தக்க.
2. வித்தகர் உளரோ ; வந்த.
3. பகுதி செய்தான்.
4. அத்தனைவரையும் ; அள்ளிக்கொண்டான். 132

262. ஆயிரங் கோடி வெள்ளத்
தயிலெயிற் றவுணர்க் கங்கங்
கேயின வொருவர்க் கோரோர்
திருமுக மிரட்டிப் பொற்றோள்
தீயெனக் கனலுஞ் செங்கண்
முகந்தொறு மூன்றுந் தெய்வ
வாயினிற் கடல்க ளேழு
மலைகளு மற்று முற்றும்.

ஆயிரம் கோடி வெள்ளத்து - ஆயிர கோடி வெள்ளம் என்னும் எண்ணிக்கையுள்ள, அயில் எயிறு அவுணர்க்கு ஒருவர்க்கு - (வேல்போன்று) கூர்மையான கோரப் பற்களையுடைய அசுரர்கள் ஒவ்வொருவருக்கும் நேராக, ஓரோர் திருமுகம் - (அமைந்து நின்ற) ஒவ்வொரு திருமுகமண்டலமும், இரட்டி பொன் தோள் - அதனினும் இரண்டு பங்கான திருப்புயங்களும், முகம் தொறும் - ஒவ்வொரு திருமுகமண்டலத்தும், தீ என கனலும் செம் கண் மூன்றும் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நெருப்புப்போன்று சினத்தால் ஒளிர்கின்ற சிவந்த திருக்கண்கள் மூன்றும், (அந்த வடிவத்தில்), அங்கு அங்கு ஏயின - ஆங்காங்கு அமைந்து காணலாயின; தெய்வ வாயினில் - தெய்வத்தின் (பிளந்த) வாயினிடத்து, ஏழு கடல்களும் மலைகளும் - ஏழு கடல்களும் அளவிறந்த மலைகளும், மற்று முற்றும் - வேறுள்ள சராசரமனைத்தும் உள்ளடங்கும்.

நரசிங்கப் பெருமானது விசுவரூபம் இங்கே வருணிக்கப் பெற்றது. பகவத்கீதையில், 'அநேக வக்த்ர நயனம் அநேகாத்புத தர்சனம், அநேக திவ்யா பரணம் திவ்யா நேகோத்யதா யுதம்' (கீதை. 11·10) முதலான கண்ணபிரான் விச்வரூபத்தைக் குறிக்கும் ச்லோகங்களை இங்கு ஒப்பு நோக்குக. வில்லிபாரதம் கிருட்டினன் தூதுச்சருக்கம் (119-206)-உம் காணத்தகும். திருமால் சங்கரிக்கும் தொழில் மேற்கொண்டமையின் உருத்திர அம்சமாக முக்கண்கள் கொண்டு விளங்கினன் எனப்பட்டது. பிரளயத்தின் போது சராசரமனைத்தும் தன் அகட்டுக்கொள்பவன் திருமால் ஆகலின் இங்கும், 'தெய்வவாய் கடல்கள் ஏழும் மலைகளும் கொள்ளும்படி இருந்தது' என்றார்.

பி - ம். 1. ஆயிர கோடி.
3. சிரந்தொறும்; மூன்று.
4. வாயின.

133

263. முடங்குவா ருளைய வண்ட
முழுவது முடிவி லுண்ணும்
கடங்கொள் வெங்காலச் செந்தீ
யதனைவந் தழிக்குங் கால
மடங்கலி னுயிர்ப்பு மற்றக்
காற்றினை மாற்று மானல்
அடங்கலும் பகுவா யாக்கை
யப்புறத் தகத்த தம்மா.

முடங்கும் வார் உளை - அந்த மானிடச் சிங்கத்தின் மடங்கிய நீண்ட பிடரி மயிர்க்கற்றை, அ - அந்த, அண்டம் முழுவதும் - உலக உருண்டை முழுவதையும், முடிவில் உண்ணும் கடம் கொள் - யுகமுடிவில் உட்கொள்ளும் கடப்பாட்டினை யுடைய, வெம் காலம் செம் தீ அதனை வந்து அழிக்கும் - கொடிய அந்த ஊழி முடிவில்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உலகனைத்தும் ஒழிக்கும் சிவந்த காலாக்கினியையும் சென்று அழித்து மறையச் செய்யும், கால மடங்கலின் உயிர்ப்பும் - அந்தக் காலன்போன்ற நரசிங்க உருவின் பெருமூச்சும், அ காற்றினை மாற்றும் - (அந்த ஊழிக்காலத்துச்) சண்டமாருதத்தையும் அடக்கிவிடும்; ஆனால் - இவ்வாறெனினும், அடங்கலும் - (மேற்கூறிய பிடரிமயிர்த் தொகுதி, பெருமூச்சு என்ற) இரண்டும், பகுவாய் ஆக்கை - பிளந்த வாயினையுடைய அந்தச் சிங்க வடிவத்தினது, அ புறத்தது அகத்தது - மேற்புறத்திலும் உள்ளிடத்திலுமே அடங்கியுள்ளன. அம்மா - வியப்பிடைச்சொல். மற்று - அசை.

சிங்க வடிவத்தின் செந்நிறமும், நீண்டு அடர்ந்த பிடரிமயிரும் உருவத்தாலும் அழிக்கும் வன்மையாலும் ஊழித் தீயையும் புறம் காணும் என்றும், அதன் பெருமூச்சானது ஊழிக்காலத்துச் சண்டமாருதத்தையும் கீழ்ப்படுக்கும் என்றும் மேற்கூறிய ஊழித்தீயும் பெருமூச்சும், அந்த மூர்த்தியின் உடற்புறத்தும் உள்ளகத்துமே காணப்பட்டன என்றும், அதன் தோற்றத்தை வியந்தபடி. 'வைய மடங்கலும்' (திருவேங். அந்தாதி.).

பி - ம். 1. வாலுளை ; உளையவ்வண்ட, உளையினவண்ட.
2. காலான், காற்றுன், கையன்.
3. உயிர்ப்பின் ; மற்றும், மற்றைச், மாற்று மாற்றல், மாற்று மாபோல்.
4. அந்தத் தம்மா, அப்புறம் பொடித்த தம்மா. 134

264. குயிற்றிய வண்டம் குஞ்சை
யிட்டிலா முட்டை முட்டப்
பயிற்றிய பருவ மொத்த
காலத்து ளமுது பல்கும்
எயிற்றுவன் பகுவா யுள்புக்
கின்னரு ளிருக்கை யெய்தி
வயிற்றின்வந் தந்நா ளிந்நாள்
வாழுமன் னுயிர்கண் மன்னோ.

குயிற்றிய அண்டம் - (திருமால்) படைத்த அண்டகோளங்கள், குஞ்சை இட்டிலா - குஞ்சு பொறிக்காத நிலையில் உள்ள, முட்டை முட்ட பயிற்றிய - முட்டைகள் (போன்றிருக்க) அவற்றை ஈன்ற பறவை முதலியன வயிற்றில் அணைத்து அடைகாக்கும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பருவம் ஒத்த - காலம்போன்ற, (அனைத்துலகும் ஈன்று காத்தளிக்கும் அப்பன் அந்த அண்ட கோளங்களைத் தன் வயிற்றில் இட்டுக் காக்கின்ற), காலத்துள் - ஊழிக் காலத்தில், வயிற்றின் வந்து - (அப் பெருமானது) வயிற்றிலே யிருந்து, (பின்னர்) அந்நாள் - (ஊழி வெள்ளம் ஒழிந்த) அந்த நாளிலே, (அத் திருவயிற்றினின்று வெளிப்பட்டு), இ நாள் மன் உயிர்கள் - இக் காலத்தும் நிலைபெற்று வாழ்கின்ற உயிர்கள் அனைத்தும், அமுது பல்கும் எயிறு வல் பகு வாய் உள் புக்கு - அமுதம் பெருகும் பற்களையுடைய வலிய பிளந்த (அந்தச் சிங்கப் பெருமான்) வாயிடைப் புகுந்து, இன் அருள் இருக்கை எய்தி - இனிய அருள் செறிந்த தங்குமிடம் பெற்று, வாழும் - வாழ்ந்திருக்கும். மன், ஓ - ஈற்றசைகள்

ஊழிப் பெருவெள்ளத்தில் திருமாலின் திருவயிற்றி லடங்குவனவாகக் கூறப்படுவன அனைத்தும் அந்தச் சிங்கப்பெருமான திருவயிற்றிலே அடங்கிக் காணப்பட்டன என்பது. குயிற்றுதல்; சுந்தர. 731. பெருமானது பிளந்த வாய்வழியே அவனது உதரத்துட் புகுந்து வதியும் அனைத்திற்கும் அவனது பற்களால் எவ்வகை ஊறுபாடும் உற்றதில்லை யென்பார். 'அமுது பல்கும எயிறு' என்றார். இருக்கை; 'ஈண்டு நின்றேகி நீ நின்னின் னியல்பமை இருக்கை யெய்தி' (கிட்கிந்தா. 405).

இரணியனுடன் பேருருவெடுத்த நரசிங்கப்பெருமான்போரிட்ட காலத்தில் அண்டங்களிலுள்ள உயிர்களெல்லாம், ஊழிக்காலத்தில் அவன் திருஉதரத்துள் அடங்கிக் கிடப்பனபோல, அவனுள் புகுந்து அடங்கிக் கிடந்தன; குஞ்சு வெளிவராக் காலத்தில் தாய்ப் பறவை முட்டையைக் காப்பாற்றுவதுபோல அவன் அவ்வுயிர்களைக் காத்துவந்தான். 'அமுது பல்கும் எயிற்றுவன் வாய் உள் புக்கு' என்றமையால், வாயினுள் புக்க உயிர்கள் கெடாமல் வாழ இடம் பெற்றன என்பது குறிக்கப்பெற்றது. இக் கருத்து அடுத்த செய்யுளாலும் விளங்குவது காண்க.

பி - ம். 1. நஞ்சி யிடைநிலை, குஞ்சி யிட்டிலா; முட்டை குட்டம், முட்டை இட்டி.

2. காலத்துள் முதலமூன்று; அமுதமூறும், அமுநம் பாயும்.

3. எயிற்றுவண்; பகுவா யாற்புக்; இன்னரு ளிருக்க, இரங்கின னிருக்கை.

4. வயிற்றுற வந்நாள், வயிற்றின் வந்தந்நாள், வயிற்றினை யந்நாள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

265. நன்மையிற் றொடர்ந்தார்க் குண்டோ
 கேடுநான் முகத்தோ னாதி
தொன்மையிற் றொடர்ந்த வாய்மை
 யறத்தொடுந் தொடர்ந்தி லோரை
அன்வயித் தோருந் தீய
 வவுணரல் லாரை யந்நாள்
தன்வயிற் றகத்து வைத்துத்
 தந்ததச் சீயந் தாயின்.

நன்மையில் தொடர்ந்தார்க்கு உண்டோ கேடு - நற்செய்கைகளிலேயே தொடர்ந்து நின்றவர்க்கு எப்பொழுதேனும் கெடுதி விளையுமோ? நான்முகத்தோன் ஆதி - பிரமன் முதலாக, தொன்மையில் தொடர்ந்த - பழமையாகத் தொடர்ந்து வருகிற, வாய்மை - சத்தியமான, அறத்தொடும் தொடர்ந்திலோரை - தரும மார்க்கத்தோடும் இயைபில்லாத அசுரர்கள் மட்டுமன்றி, அன்வயித்தோரும் தீய - அவர்களிடம் தொடர்பு கொண்டவர்களும் அழிய, அவுணர் அல்லாரை அ நாள் தன் வயிற்று அகத்து-அசுரர் அல்லாத நல்லோர்களனைவரையும் தன் வயிற்றினிடத்து, அ சீயம் தாயின் வைத்து தந்தது - அந்த நரசிங்கமூர்த்தி தாய்போன்ற அன்பொடும் அடக்கிப் புரந்தது.

எதிர்த்த அரக்கர் மட்டுமன்றி அவரோ டியைந்த தீநெறி அவுணரையும் வீட்டி, அறத்தோரைமட்டும் காத்தது அந்தச் சிங்க வுருவம். 'நன்மையிற் றொடர்ந்தார்க் குண்டோ கேடு' என்ற பொதுப் பொருளைக்கொண்டு அவுணரல்லாரைத் தன் வயிற்றகத்து வைத்துப் புரந்தது என்ற சிறப்புப் பொருளை விளக்கியது; வேற்றுப் பொருள் வைப்பணி. அந்வயம்: வடமொழி; அதினின்று வந்த வினையாலணையும் பெயர் அன்வயித்தோர். அன்வயித்தோர் - வமிசத்தோர் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. தாயின் - இன் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருளது.

பி - ம். 2. அறத்தொடும் துறக்கிலோரை, தொடர்ந்திலோரை.
 3. அனுவயத்தோடும், அன்வயத் தோரும், அவுணரல் லோரை.
 4. வயிற்றந்து; தானே, தாயில்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## நரசிங்கமூர்த்தி அசுரர்களை அழித்தமை

266. பேருடை யவுணர் தம்மைப்
பிறையெயிற் றடக்கும் பேராப்
பாரிடைத் தேய்க்கு மீளப்
பகிரண்டத் தடிக்கும் பற்றி
மேருவிற் புடைக்கு மாள
விரல்களிற் பிசையும் வேலை
நீரிடைக் குமிழி யூட்டு
நெருப்பிடைச் சுரிக்க நீட்டும்.

(அந்த நரசிங்கப் பெருமான்), பேருடை அவுணர் தம்மை பிறை எயிற்று அடக்கும் - புகழ்பெற்ற அசுரர்களைத் தனது பிறை போன்று வளைந்த தந்தங்களில் அடக்கிக்கொள்ளும்; (சிலரை), பேரா - பெயர்த்து, பார் இடை தேய்க்கும் - பூமியின்மீது தேய்க்கும்; (சிலரை), மீள - மீட்டும், பகிர் அண்டத்து அடிக்கும் - இவ்வண்டத்துக் கப்பாலுள்ள வெளியண்டங்களில் தாக்கும்; பற்றி மேருவிற் புடைக்கும் - (கையில்) அகப்படுத்தி மேரு மலை மீது அடிக்கும்; மாள - இறந்துபடும்படிச் சிலரை, விரல்களில் பிசையும் - கை விரல்களால் பிசையும்; (மற்றும் சிலரை), வேலை நீரிடை குமிழி ஊட்டும் - உடல் நீரில் அமிழ்த்தி நீர்க் கொப்புளங்கள் மேலெழச் செய்யும்; நெருப்பிடை சுரிக்க நீட்டும் - (சிலரை) வடவைத் தீயில் எரிந்து சுருளுமாறு இட்டு எரிக்கும்.

பேர் உடை அவுணர் - தமது பேரும் புகழும் தங்களின் தீச் செயலால் உடையப்பெற்ற அவுணர் எனினுமாம். சீவக சிந்தாமணியில், 'கலனுடை நாய்கன்' என்ற இடத்து, நச்சினார்க்கினியர், 'மரக்கலங்கள் உடைத்தான நாய்கன்' என்று ஓரிடத்தும், 'கலங்கள் உடையப் பெற்றவன்' எனப் பிறிதோரிடத்தும் உரைத்தமை காண்க. ஊட்டுதல் - உண்டுபண்ணுதல். சுரித்தல்; சுந்தர. 584.

பி - ம். 1. வேருடை; கை அகத்தடக்கும்; பேராப்.
2. தேய்க்கு மள்ளி; பகிரண்ட மீதிற்; தடைக்கும்.
3. புடைக்கு மற்றை; விரல்களாற்; பிசையும் பல்காற்.
4. சுருக்கி.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



267. வகிர்ப்படுத் துரிக்கும் பற்றி
வாய்களைப் பிளக்கும் வன்றோல்
துகிற்படுத் துரிக்கும் செந்தீக்
கண்களைச் சூலும் சுற்றிப்
பகிர்ப்படக் குடரைக் கொய்யும்
பசையறப் பிசையும் பல்கால்
உகிர்ப்புரை புக்கோர் தம்மை
யுகிர்களால் உறக்கு மூன்றி.

(மற்றும் அந்த நரமடங்கல் பல அசுரர்களை), உரித்து வகிர் படுத்தும் - உரித்து இருபிளவாகச் செய்யும்; வாய்களை பற்றி பிளக்கும் - வாய்களைப் பிடித்துக் கிழிக்கும்; வல் தோல் துகிற் படுத்து உரிக்கும் - வன்மை வாய்ந்த உடல் சதையை ஆடையைக் கிழிப்பதுபோலக் கிழிக்கும்; செம் தீ கண்களை சூலும் - சிவந்த சிலைத்தீயைக் கக்குகின்ற விழிகளைக் குத்திக் கிழிக்கும்; சுற்றி பகிர்பட குடரை கொய்யும் - சுற்றிப் பிளவுபடக் குடரைப் பிளக்கும்; பசை அற பிசையும் - இரத்தப்பசை நீங்கும்படி கைகளாற் பிசையும்; பல்கால் - பலதடவைகள், உகிர் புரை புக்கோர் தம்மை - நகத்துவாரங்களில் அகப்பட்ட அசுரர்களை, உகிர்களால் ஊன்றி உறக்கும் - நகங்களை அழுத்திக் கிள்ளி யெறியும்.

துகில்படுதல் - ஆடையை யொப்பச்செய்தல். சூலுதல் - அகழ்தல். 'நுங்குசூன் றிட்டன்ன கண்ணீர்மை' (நாலடி. 44); 'உறச்சுலவிச் சூன்றிடலும்' (குசேலோ. வைகுந்த. 54). உறக்குதல் - கிள்ளுதல்; 'உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி' (நாலடி. 38).

பி - ம். 1. வகிர்பட, வகிர்ப்படுத் துகிர்க்கும், வகிற்படுத் துறக்கும்; பிறி; வாயினை, வாய்தனை.
2. துகில்மடுத், உகிற்படுத்து; வெந்நீ; கனத்தொடுந் தோண்டுஞ் கண்களைக் கொண்டுபற்றி.
3. பகிர்பட.
4. உகிர்ப்பெரும்புரைபுக் கோரை.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


268. யானையுந் தேரு மாவும்
யாவையு முயிரி ராமை
யூனொடுந் தின்னும் பின்னை
யொலிதிரைப் பரவை யேழும்
மீனொடுங் குடிக்கு மேகத்
துருமொடும் விழுங்கும் விண்ணில்
தானொடுங் காதென் றஞ்சித்
தருமமுஞ் சலித்த தம்மா.

(பின்னும் அந்த நரமடங்கல் மூர்த்தி அந்த அவுணர்கட்கு ஊர்திகளாகிய), யானையும் தேரும் மாவும் யாவையும் உயிர் இராமை ஊனொடும் தின்னும் - யானைகளையும் தேர்களையும் குதிரை களையும் மற்றும் எல்லாவற்றையும் உயிரில்லாதபடி உடலோடும் தின்னும்; பின்னை - அதையடுத்து, ஒலி திரை பரவை ஏழும் - ஒலிக்கின்ற ஏழு கடல்களையும், மீனொடும் குடிக்கும் - அவற்றின் கண் உள்ள மீன் தொகுதிகளுடன் பருகும்; விண்ணில் மேகத்து உருமொடும் விழுங்கும் - வானத்தின் கண் உள்ள மேகங்களை இடிக ளுடனே உட்கொள்ளும்; தருமமும் - அறக்கடவுளும், தான் ஒடுங்காது என்று அஞ்சி சலித்தது - இந்த நரஹரி எந்தவகையி லும் சினம் தணியப்பெறாது என்று பயந்து மனம் கலங்கிற்று. அம்மா - வியப்பிடைச்சொல்.

உயிரிராமை என்றது தேர் ஒழிந்த ஏனையவற்றுக்கும் ஏற்புழிக்கோடலாற் கொள்க. ஊனொடும் தின்னும் என்பது கொண்டு தேரையும் உருக்குலையச் செய்யும் என்க. ஒலிதிரைப் பரவை யாகலின் அதற்கு ஆர்கலி என்று பெயர். 'பெருங்கட லாடிய சென்றார், ஒருங்குடன் ஓசை அவிந்தபின் ஆடுதும் என்றற்றால்' (நாலடி. 332) என்பதும் காண்க.

பி - ம். 1. ஆனையும்; உயிருறுமல்.
2. ஊனொடும்பிசையுந்; ஒலிகடல்.
3. மேக முருமொடும், மேக முதலொடும்; விழுங்கும் வெம்மை. 139

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



269. ஆழிமால் வரையோ டெற்றும்
சிலவரை யண்ட கோளச்
சூழிருஞ் சுவரிற் றேய்க்குஞ்
சிலவரைத் துளக்கில் குன்றம்
ஏழினோ டெற்றிக் கொல்லுஞ்
சிலவரை யெட்டுத் திக்குந்
தாழிருட் பிழம்பிற் றேய்க்குஞ்
சிலவரைத் தடக்கை தாக்கி.

(மேலும் நரசிங்கமூர்த்தி அந்த அவுணர்களில்), சிலவரை - சிலரை, ஆழிமால் வரையோடு எற்றும் - உலகினைச் சூழ்ந்துள்ள சக்கரவாளகிரியோடு மோதும்; சிலவரை - சிலரை, அண்டகோளம் சூழ் இரு சுவரில் தேய்க்கும் - அண்ட உருண்டையைச் சுற்றியுள்ள பெரிய சுவரிடத்துச் சார்த்தித் தேய்க்கும்; சிலவரை - சிலரை, துளக்கில் குன்றம் ஏழினோடு எற்றி கொல்லும் - அசையாத ஏழு மலைகளுடன் தாக்கி உயிரழிவு செய்யும்; சிலவரை - சிலரை, எட்டு திக்கும் தாழ் இருள் பிழம்பில் - எட்டுத் திசைகளிலும் தங்கியுள்ள இருள் தொகுதியில், தட கை தாக்கி தேய்க்கும் - தனது பெரிய கரங்களால் எடுத்து மோதித் தேய்க்கும்.

துளக்கில் குன்றம் - அசலம். ஆழிமால் வரை: இதன் விவரத்தை மணிமேகலை (6; 192-202) கொண்டு காண்க. குன்றம் ஏழு: கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம் என்பன. கந்தமாதனத்தைச் சேர்த்து எட்டு என்றும் சொல்வர். நான்கு திசைகளும் நான்கு கோணத் திசைகளும் சேர்த்துத் திசை எட்டென்பர். விண் மண் என்பவற்றையும் கூட்டித் திசை பத்தென்றும் மொழிவர்; 'தசரதன் என்பதற்குப் பத்துத் திக்குகளினும் தன் தேரைச் செலுத்துபவன்' என்றது காண்க. தாழ்தல் - தங்குதல்; 'மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார்' (சிலப். 17).

பி - ம். 1. ஆழிமா; கோளஞ்.
2. சிலவரைச் சொன்ன; தொகுந்த குன்றம்.
3. தாழிரும்; சிலவரைத் தரையிற் சாடும்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


270. மலைகளிற் புரண்டு வீழ
வள்ளுகிர் நுதியால் வாங்கித்
தலைகளைக் கிள்ளு மள்ளித்
தழலெழப் பிசையும் தக்க
கொலைகளிற் கொல்லும் வாங்கி
யுயிர்களைக் குடிக்கும் வான
நிலைகளிற் பரக்க வேலை
நீரினில் நிரம்பத் தூர்க்கும்.

(மற்றும் சில அசுரர்களைக் கைப்பற்றிய அம் மூர்த்தி அவர்களின் உடல்), மலைகளில் புரண்டு வீழ - மலைகளைப்போலப் புரண்டு வீழும்படி, வள் உகிர் நுதியால் வாங்கி - கூரிய நகங்களால் இழுத்து, தலைகளை கிள்ளும் - அவற்றின் தலைகளைக் கிள்ளும்; (சிலரை), அள்ளி தழல் எழ பிசையும் - கைகளால் வாரி நெருப்புப் பிறக்கும்படி பிசையும்; (சிலரை), தக்க கொலைகளில் கொல்லும் - நேராக ஈரற்குலையில் குத்தி உயிரழியச் செய்யும்; உயிர்களை வாங்கி குடிக்கும் - அவர்களின் உயிர்களை எடுத்துப் பருகும்; (சில அசுரர்களை), வேலை நீரினில் - (கடல் நீர்) வான நிலைகளில் பரக்க நிரம்ப தூர்க்கும் - ஆகாயத்தின் புறங்களில் பரவும்படி அந் நீரிலே (அவர்களைப் போகட்டு) நிறையுமாறு தூர்த்துவிடும்.

மலைகளின் - இன் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருளது. குலை என்பது கொலை என்று வந்தது; குலை - ஈரற் குலை. உயிர் குடித்தல் - மரபு வழுவமைதி. தக்க கொலைகளிற் கொல்லும் என்பதற்குச் சின்னபின்னப்படுத்தி வதைக்கும் என்பர் சிலர். அஃது சிறப்பின்மை யறிக.

பி - ம். 1. புரட்டி விழ்த்தி; வள்ளுகிர்க் கையால் வாங்கி.
2. தசைகளைப் பிழியும்; தழலெனப்; பிசையும் தத்தம்.
3. வாரிச் சிலவரை; குடிக்கும் யானை.
4. நீரினின்; நீர்களை; நிரப்ப. 141



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



271. முப்புறத் துலகத் துள்ளு
மொழிவற முற்றும் பற்றித்
தப்புத லின்றிக் கொன்று
தையலார் கருவுந் தள்ளி
இப்புறத் தண்டத் தியாரு
மவுணரில் லாமை யெற்றி
அப்புறத் தண்டந் தோறுந்
தடவின சிலரை யம்மா.

(மேலும்), முப்புறத்து உலகத்து உள்ளும் - மூன்றுவகை யுலகங்களிலும், ஒழிவு அற - மிச்சம் இல்லாதபடி, முற்றும் பற்றி - அசுரர் அனைவரையும் விடாமல் பிடித்து, தப்புதல் இன்றி கொன்று - தவறாமல் கொலைபுரிந்து, தையலார் கருவும் தள்ளி - அசுர மகளிருடைய கருப்பங்களையும் சிதைத்து, இ புறத்து அண்டத்து யாரும் அவுணர் இல்லாமை - அண்டத்தின் இப்புறத்தில் அசுரர் ஒருவரும் இல்லாமையால், (அம் மூர்த்தியின் சில கரங்கள்), அ புறத்து அண்டம் தோறும் எற்றி சிலரை தடவின - புறத்தேயுள்ள அண்டந்தோறும் எட்டிப்பிடித்து அசுரர் களைத் தேடின. அம்மா - வியப்பு.

தையலார் கருவும் தள்ளி; (ஒப்பு): 'ஊனடை கருவும்பட்டன தழும்போ டுதித்தன' (திருவிளை. மண்சுமந்த. 55). 3, 4 அடிகளுக்கு ஒப்பு: 'ஏழி லாமையின் மீண்டதவ் விராகவன் பகழி, ஏழு கண்டபி னுருவுமா லொழிவதன் றின்னும்' (கிட்கிந்தா. 173). அண்டத்தி யாரும்: குற்றியலிகரம்.

பி - ம். 1. முப்புரத்; மொழியற.
2. கருவுந் தள்ளும்.
3. இப்புறத் தண்டந்தோறுங், இப்புறக் கண்டத்தியாரும்; அவுணரில் லாம லெற்றி; அளந்தனன் அமல னம்மா.

142

இதன்பின் ஓர் அதிகப் பாடல்:—

அப்புறத் தளவில் கோடி
யண்டங்க ளனைத்தும் உள்ளார்
வெப்புறும் அனந்த கோடி
வெள்ளமென் றுரைப்பார் மேலாம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


துப்புடைக் கனகன் சேனைத்
தொகையவை யனைத்தும் செந்தீ
ஒப்புற நகைத்து நீறாய்
எரித்ததோர் கடவுட் சீயம்.

272. கனகனும் அவனில் வந்த
வானவர் களைக ணான
அனகனு மொழியப் பல்வே
றவுணரா னவரை யெல்லாம்
நினைவதன் முன்னங் கொன்று
நின்றதந் நெடுங்கட் சீயம்
வனைகழ லவனு மற்றம்
மடங்கலின் வரவு நோக்கி.

அ நெடு கண் சீயம் - அகன்று நீண்ட விழிகளையுடைய அந்த நரசிங்கப் பெருமான், கனகனும் அவனில் வந்த - இரணியனும் அவனிடம் தோன்றிய, வானவர் களைகண் ஆன அனகனும் ஒழிய - தேவர்களின் ஆதரவாளனான குற்றமற்ற பிரகலாதனும் தவிர்த்து, பல் வேறு அவுணர் ஆனவரை எல்லாம் - பலவகைப் பட்ட அசுரர்கள் அனைவரையும், நினைவதன் முன்னம் கொன்று - நினைத்தற்கு முன்னமே (வெகு விரைவில்) கொலை செய்து, நின்றது - வாளாது நின்றது; (அப்போது) வனைகழல் அவனும் - புனைந்த வீரகண்டை யணிந்த அந்த இரணியனும், மற்று அ மடங்கலின் வரவு நோக்கி - அந்த நரசிங்கம் தன்னை நோக்கி வருவதைப் பார்த்து; 'உருத்து நின்றான்' என்ற அடுத்த செய்யுளுடன் தொடரும்.

அவனில் வந்த - அவன் குடியிற்றோன்றிய எனினும் ஒன்றும். தன்னுடைய பிரபத்தி விசேடத்தால் திருமாலையே வரவழைத்து, உலக கண்டர்கள் இருடி கண்டர்களான அவுணர்களை அழியச் செய்து வானவர்களை உய்வித்தது பற்றி, 'வானவர் களைகணான அனகன்' எனப் பட்டது. களைகண்; ஆரணிய. 205. மற்றும் பின்னர் நரசிங்கப்பெருமானே, 'நானு வளர்க நீ' (இரணிய. 173) எனக் கூறியதுகொண்டும், 'பிரகலாதஸ்சாஸ்மி தைத்யானும்' என்ற பகவத் கீதை வரி கொண்டும், திருமால் வேறு பிரகலாதன் வேறு அல்லர் என்பதுணர்க. அனகன் - வடசொல்; குற்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மற்றவன் என்பது இதன் பொருள் ; ஆரணிய. 1193 ; சுந்தர. 665
சியம் ; சுந்தர. 5.

பி - ம். 2. அவுணரா னேரை.
3. நின்றது நெடுங்கட்.
4. வனைகழ லானு, மற்ஞற, வரவை. 43

## இரணியன் போருக்கு நிற்றல்

273. வயிரவா ளுறையின் வாங்கி
வானக மறைக்கும் வட்டச்
செயிரறு கிடுகும் பற்றி
வானவ ருள்ளம் தீய
அயிர்படர் வேலை யேழும்
மலைகளும் சிதற வார்த்தங்
குயிருடை மேரு வென்ன
வாய்மடித் துருத்து நின்றான்.

வயிரம் வாள் உறையின் வாங்கி - (இந்திரனது) வயிரப்படை போன்ற கூரிய தன்னுடைய வாட்படையை உறையினின்று எடுத்து, (வலக்கரத்தில் தாங்கி), வான் அகம் மறைக்கும் - ஆகாயம் முழுவதையும் மறைக்கக்கூடிய, வட்டம் செயிர் அறு கிடுகும் பற்றி - வட்டவடிவான குற்றமற்ற கேடயமும் (இடக் கரத்திற்) பிடித்துக் கொண்டு, வானவர் உள்ளம் தீய - தேவர்களின் மனமானது கருகவும், அயிர் படர் வேலை ஏழும் - நுண்மணல் பரந்த ஏழுகடல்களும், மலைகளும் - எட்டுக் குல பர்வதங்களும், சிதற ஆர்த்து - நிலைகெடுமாறு ஆரவாரித்து, அங்கு - அவ்விடத்தில், உயிர் உடை மேரு என்ன வாய்மடித்து உருத்து நின்றான் - உயிருடன் கூடிய மேருமலைபோல உதட்டை மடித்துக்கொண்டு வெகுண்டு நின்றான், (இரணியன்).

இரணியனது வீராவேசமும் அதன் மெய்ப்பாடுகளும் இங்கே குறிக்கப் பெற்றன. வயிரவாள் - வயிரத்தினா லியன்ற வாள் எனினுமாம். எந்த உலோகங்களையும் ஈர்க்கவல்லது அது என்க. எவ்வகையினும் பழுதுபடாத கிடுகு என்பார் செயிரறு என்றார்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


செயிர் - குற்றம். 'செயிர் தீர்காதல்' (பெருங். உஞ்சைக். 46:77); 'செயிர் தீர்ந்த பல்லின் வனப்பும் வனப்பல்ல, மாந்தர்க்குச் சொல்லின் வனப்பே வனப்பு' (சிறுபஞ்ச. 37). கிடுகு - கேடயம்; இது தோல் எனவும்படும். அயிர் - நுண்மணல்; (ஆரணிய. 199). உயிர் உடை மேரு, இல் பொருள் உவமை. இங்கும் உயிர் உடை என்பதற்கு அங்கதப் பொருளாக உயிர் உடையும் தறுவாயில் உள்ள என்று கூறினும் ஒன்றும்; (137. உரை பார்க்க). வாய் மடித்துருத்தல் - சினத்தால் தோன்றும் மெய்ப்பாடு; 'வம்பியல் சிலையை நோக்கி வாய்மடித் துருத்து நக்கான்' (சுந்தர. 985).

பி - ம். 1. வானக மறையும் வட்ட.
2. செயிரறு கடகம்.
3. அயிர்பட; சிதற; வார்த்து.
4. வன்ன வாய்மடுந் துருத்து. 144

## மகன் தந்தைக்கு அறிவுகூறல்

274. நின்றவன் றன்னை நோக்கி
நிலையிது கண்டு நீயும்
ஒன்றுமுன் னுள்ளத் தியாது
முணர்ந்திலை போலு மன்றே
வன்றொழி லாழி வேந்தை
வணங்குதி வணங்க வேயுன்
புன்றொழில் பொறுக்கும் என்றான்
உலகெலாம் புகழ நின்றான்.

உலகு எலாம் புகழ நின்றான் - எல்லா உலகங்களும் ஏத்தும்படி நின்றவனான பிரகலாதன், நின்றவன் தன்னை நோக்கி - அவ்வாறு நின்ற இரணியனைப் பார்த்து, 'இது நிலை கண்டும் - (இந்த) நரசிங்க மூர்த்தியின் நிலைமையைப் பார்த்தும், நீ - நீ, ஒன்றும் உன் உள்ளத்து யாதும் உணர்ந்திலை போலும் - பொருந்திய உன் மனத்தில் சிறிதும் ஆராயவில்லை போலும்; வல்தொழில் ஆழிவேந்தை வணங்குதி - (பகைவரை அழித்தலாகிய) வலிய தொழிலில் வல்ல ஆழிப் படையையுடைய திருமாலைப் பணிவாயாக; வணங்கவே உன் புன் தொழில் பொறுக்கும்-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உன்னுடைய அற்பமான இந்தச் செயல்களை எல்லாம் பொறுத் தருள்வான்', என்றான்-என்று கூறினன். அன்று, ஏ : அசைகள்.

நிகழா நிகழ்ச்சியைக்கண்டும் இரணியனுக்கு நல்லறிவு எழா மைக்கு வியந்து கூறுகிறான். இரணியன் நின்ற இந்த நிலையை வில்லி பாரதம், கிருட்டினன் தூதுச் சருக்கத்து, 'பின்னையு மஞ்சியயர்ந்தில னெஞ்சு பெயர்ந்திலன் ஆசனமும், சென்னியிலுங் கரம் வைத்திலன் வண்புகழ் சிறிது மொழிந்திலனே' (214); என்பது கொண்டு காண்க. வன்றொழில் ஆழி எனினும், அது கருணையும் செய்யும் ஆதலின் வணங்குக என்றான். தீயோர்க்கு அவன் வன்றொழில் வேந்தன், தன்னைச் சார்ந்தார்க்கு அவன் கருணை ஆழி என்ற தொனியும் இங்குக் காணலாம். வணங்கவே என்ற இடத்து வணங்கின அளவிலேயே என்ற பொருள் கொள்க. உலகெலாம் புகழ நின்றான். 'பிரகலாத நாரத பராசர புண்டரீக வியாசாம்பரீஷ சுக சௌநக' என்ற சுலோகத்துப் பிரகலாதனை முதற் கண் வைத்து உலகம் துதித்தல் இங்குக் காணத்தகும்.

பி - ம். 1. கண்டு மன்ற, கண்டுநீச.
3. வன்றொழி லொழிய வெந்தாய். 145

## இரணியன் விடை

275. கேளிது நீயுங் காணக்
கிளர்ந்தகோ ளரியின் கேழில்
தோளொடு தாளும் நீக்கி
நின்னையுந் துணித்துப் பின்னென்
வாளினைத் தொழுவ தல்லால்
வணங்குதல் மகளி ரூடல்
நாளினும் உளதோ வென்னு
அண்டங்கள் நடுங்க நக்கான்.

(அது கேட்டு இரணியன் பிரகலாதனை நோக்கி), 'கேள் இது - யான் கூறும் இந்த வார்த்தையைச் செவியேற்பாயாக; நீயும் காண - (திருமாலைப் புகழ்ந்து கூறிய) அன்பனான உன் கண் முன்பே, கிளர்ந்த கோள் அரியின் - உயர்ந்து நின்ற இந்த நரசிங்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கத்தின், கேழ் இல் தோளொடு தாளும் நீக்கி - ஒப்பற்ற புயங்களை யும் பாதங்களையும் வெட்டி, நின்னையும் துணித்து - (பின்னர்) உன்னையும் சேதித்து, பின் என் வாளினைத் தொழுவது அல்லால் - அதன் பின்னர் (எனக்கு இவ்வளவையும் சாதித் தளித்த) என் வாட் படையை வணங்குவேனே அன்றி, வணங்குதல் - பணிதல் என்பது, மகளிர் ஊடல் நாளினும் உளதோ - மனைவியரோடு (கலவிக்காலத்தில் நிகழும்) புலவிப் போதினும் நேர்ந்த துண்டோ?'' என்ன - என்று மொழிந்து, அண்டங்கள் நடுங்க நக்கான் - அண்டங்கள் அனைத்தும் நடுங்குமாறு சிரித்தான்.

பிரகலாதனை முன்னர்த் துணித்துவிடின், அந்த நரசிங்கப் பெருமானது தோள் தாள்களை நீக்கும் அவனது வன்மை அச் சிறுவன் அறியாமலேயே போய்விடும். ஆகலின், தோள் தாள் களை நீக்குவதே முன்னர்க் கூறப்பட்டது. இரணியனால் அப்பெரு மானைக் கொல்ல இயலாது என்பது தோன்றக் கொன்று என்னாது, தோளோடு தாளும் நீக்கி எனப்பட்டது என்க. வாளினைத் தொழு தல்; வெற்றி யுற்றபின். ஊடல் - புலவி; இதனைப் பிரணய கலகம் என்பர் வடநூலார். இதன் இலக்கணத்தையும் பிறவற்றையும், திருக்குறள் காமத்துப்பாலில் உள்ள, புலவி, புலவி நுணுக்கம், ஊடல் உவகை முதலிய அதிகாரங்களிற் காண்க. நக்கான்; நகுதல் இங்கு இளமைபற்றி யெழுந்த எள்ளல் நகை. 'எள்ளல் இளமை பேதைமை மடனென் றுள்ளப்பட்ட நகை நான்கென்ப' (தொல். மெய்ப்பாடு 4). இங்கு இரணியன் நகைத்தது, வீரத் தெழுந்த வெகுளியினால் எனினும் ஆம். 'ஊடல் நாளினும் உளதோ; (ஒப்பு): 'மெலியுமிடை தடிக்குமுலை வேயிளந்தோட் சேயரிக்கண் வென்றிமாதர், வலிய நெடும் புலவியினும் வணங்காத மகுட நிரை' (ஆரணிய. 556); 'யாரையும் கும்பிடாவென் தலை மிசை' (ஆரணிய. 872).

பி - ம். 1. அரியின் கேளார், கேளில்.
2. தோளோடு தோளும் துணித்த.
4. நாளினு முளவோ வென்ன.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## இரணிய நரசிங்கப்போர்

276\. நகைசெயா வாயுங் கையும்
வாளொடு நடந்த தாளும்
புகைசெயா நெடுந்தீப் பொங்க
உருத்தெதிர் பொருந்தப் புக்கான்
தொகைசெய்வார்க் கரிய தோளாற்
றாள்களாற் சுற்றிச் சூழ்ந்தான்
மிகைசெய்வார் வினைகட் கெல்லாம்
மேற்செயும் வினையம் வல்லான்.

நகைசெயா - (இரணியன் இவ்வாறு வீரமொழிகளைக் கூறி) வெகுளிச் சிரிப்புச் சிரித்து, வாயும் கையும் வாளொடு நடந்த தாளும் புகைசெயா - வாயிலும் கைகளிலும் வாட்படையிலும், நடந்து செல்கின்ற கால்களிலும், (மனத்தில் உள்ள சினம் காரணமாக) புகை யுண்டாக்கிக்கொண்டு, நெடு தீ பொங்க - நீண்ட வெகுளித் தீயானது மிக, உருத்து எதிர் பொருந்த புக்கான் - அந்த நரசிங்கமூர்த்தியைச் சினந்து எதிர்க்கப் புகுந்தான்; அப்பொழுது மிகை செய்வார் வினைகட்கு எல்லாம் மேல் செயும் வினையம் வல்லான் - துன்பம் இழைப்பவர்களான அவுணர் முதலியவர்களின் சூழ்ச்சிகட் கெல்லாம் மேலான சூழ்ச்சிகளைச் செய்யவல்ல பெருமான், தொகை செய்வார்க்கு - கணிக்க வேண்டும் என்று கருதினோர்க்கு, அரிய தோளால் தாள்களால் சுற்றி சூழ்ந்தான். கணித்தற்கு அருமையான பல கைகளாலும் கால்களாலும் (இரணியனைச்) சுற்றிப் பற்றினன்.

நகை செயா, புகை செயா; செய்யா என்னும் வாய்பாடுகள். தொகை செய்வார்க்கரிய தோள்: (ஒப்பு): 'எத்துணை யுளது கையென் றியம்பினு லெண்ணற் கேற்ற வித்தகருளரே' (இரணியன். 132); தொகை செய்தல் - எண்ணிக் கணக்கிடுதல். மிகை செய்வார் வினைகட் கெல்லாம் மேற்செயும் வினையம் வல்லான் (ஒப்பு): 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன் றுசூழினுந் தான்முந்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


துறும்' (குறள். 380). வினையம் - சாமர்த்தியம் அல்லது உபாயம்; ஆரணிய. 502.

பி - ம். 1. வாயுங் கண்ணும்.

2. புகை செய; பொங்கா; வுருத்தெதிர் பொங்கும்.

3. தொகை செயந்; சுழற்றிச்.

4. மிகை செய்வார் மிகைகட் கெல்லாம்; வினையம் வல்லோன். 147

277. இருவரும் பொருந்தப் பற்றி
யெவ்வுல குக்கும் மேலாய்
ஒருவருங் காணு வண்ண
முயர்ந்ததற் குவமை கூறின்
வெருவருந் தோற்றத் தஞ்சா
வெஞ்சின வவுணன் மேரு
அருவரை யொத்தான் அண்ணல்
அல்லவை யெல்லாம் ஒத்தான்.

(இரணியன் நரசிங்கப் பெருமான் என்ற) இருவரும் - இரண்டு பேர்களும், பொருந்த பற்றி - ஒருவரை யொருவர் கட்டிப் பிடித்து, எ உலகுக்கும் மேலாய் - எந்த உலகத்துக்கும் மேலாக, ஒருவரும் காணு வண்ணம் உயர்ந்ததற்கு உவமை கூறின் - யாரும் காண இயலாதபடி உயர்ந்து நின்ற நிலைக்கு உவமை கூறப்புகின், வெரு வரும் தோற்றத்து - பிறர் அச்சம்கொள்ளும்படியான உருவத்தை யுடைய, அஞ்சா வெம் சினம் அவுணன் மேரு அருவரை ஒத்தான் - சிறிதும் அஞ்சாதவனும் கடும் சினம் கொண்டவனுமான இரணி யன் மேரு என்று சொல்லும் அரிய மலையை நிகர்த்து விளங்கி ஞன்; அண்ணல் - நரசிங்கப் பெருமான், அல்லவை எல்லாம் ஒத்தான் - அஃதல்லாத பிறமலைகளை யெல்லாம் ஒத்து விளங் கிஞன்.

இரணியன் பெயர்க்கேற்பப் பொன்னிற மாதலின் மேருமலைக் குவமிக்கப் பெற்ருன். இரணியன், மேருவுக்கு, 273. அல்லவை - அஃதல்லாத பிறகுலாசலங்கள் என்க; மேருமலையைச் சூழ்ந் துள்ள உலகு முழுதும் என்னினுமாம்; எல்லாப் பிரபஞ்சங்களும் எனவும் கொள்ளலாம்.

38

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பி - ம். 1. எவ்வுலகுக்கு மெல்லாம்.

2. உய்ந்ததற்கு ; கூறில்.

3. வெஞ்சினத் தவுணன்.

4. மாயன் ; அல்லன. 148

278. ஆர்ப்பொலி முழக்கின் வெவ்வாய்
வள்ளுகிர்ப் பார மான்ற
ஏற்றருங் கரத்திற் பல்வே
றெறிதிரைப் பரப்பி னுற்ற
பாற்கடல் பரந்து பொங்கிப்
பங்கயத் தொருவன் நாட்டின்
மேற்சென்ற தொத்தான் மாயன்
கனகனும் மேரு வொத்தான்.

வெவ்வாய் ஆர்ப்பு ஒலி முழக்கின் - கொடிய வாயினுற் செய்யும் ஆரவாரத்தின் ஒலியாலும், வள் உகிர் பாரம் ஆன்ற ஏறு அரு கரத்தில் - கூரிய நகங்களாகிய தொகுதிகள் நிறைந்து விளங்கும் உயர்ந்த அருமையான கைகளினுலும், மாயன் - அந்த நரசிங்க மூர்த்தி ; பல் வேறு எறிதிரை பரப்பின் உற்ற - பலவாக வேறுபட்ட அலைகள் வீசுகின்ற பரப்புடன் பொருந்திய, பாற்கடல் பரந்து பொங்கி - திருப்பாற்கடல் கிளர்ந்து எழுந்து, பங்கயத்து ஒருவன் நாட்டின் மேல் சென்றது ஒத்தான் - பிரமலோகத்தின் மேலும் சென்றதை நிகர்த்தனன் ; கனகனும் மேரு ஒத்தான் - இரணியன் அதனிடை அகப்பட்ட மேருமலையை ஒத்துத் திகழ்ந்தான்.

நரசிங்கத்தின் ஒலி முழக்கிற்குக் கடலின் முழக்கமும், அதன் கைகளின் தொகுதிக்கு ஆழியின் அலைப் பரப்பும் ஒப்பாகக் கூறப் பட்டன ; பங்கயத் தொருவன் நாடு - பிரமலோகம் ; இதனைச் சத்தியலோகம் என்ப. அவுணன் நிறத்தால் மேரு வொத்து விளங்கியதை முன் பாடலில் மட்டுமன்றி இப் பாட்டிலும் கூறினர். இங்ஙனம் ஓரிடத்தில் கூறும் உவமையை அடுத்தடுத்தும் கூறு வது ஆசிரியர் வழக்கு என்பதை, 'நவ்வி வீழ்ந்தென'; 'மடந்தையை மானை யெடுக்கு மானையேபோல்' (அயோத்தி. மந்தரை. 88; கைகேசி சூழ்வினை 3) என்பன கொண்டும், (அயோத்தி.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கைகேசி. 3; 11; 15; 16) என்பன கொண்டும் அறிக. நரசிங்கம் வெண்ணிறம் என்பது இச் செய்யுளாற் பெறப்படும்.

பி - ம். 1. முழக்கி.

2. ஏற்ற பல்காங்க ளெல்லாம் எரிநிரைப் பரப்பதாக; வேற்பொலி; பரப்பிற் ருேன்ற, பரப்பி லிற்ற.

4. கனகனும் வெயிலை யொத்தான். 149

இங்குச் சில அதிகப்பாடல்கள் :—

இத்திறம் அமரின் ஏற்றங் கிருவரும் பொலிந்த காலை
அத்திறற் கனகன் வேண்டும் போர்பல வியற்றிப் பின்னும்
எத்தனை கோடி கோடி மாயங்கள் இயற்ற நோக்கி
முத்தனு முறுவல் கொண்டாங் கவையெலா முடித்து
[நின்ருன்.

நெருப்பெனக் கனகன் சீறி நிலமுதல் புவனம் அஞ்சப்
பொருப்பினம் எவையும் சிந்திப் பொடிபடக் குதித்துப்
[போர்வாள்
திரிப்பறச் சுழற்றித் தாக்க வருதலும் தரும மூர்த்தி
பருப்பதங் கடந்த தோளான் பதமிரண் டொருகை பற்ரு.

279. வாளொடு தோளுங் கையும்
மகுடமும் மலரோன் வைத்த
நீளிருங் ககன முட்டை
நெடுஞ்சுவர் தேய்ப்ப நேமி
கோளொடுந் திரிவ தென்னக்
குருமணிக் கொடும்பூண் மின்னத்
தாளிணை யிரண்டும் பற்றிச்
சுழற்றினன் தடக்கை யொன்ருல்.

(இரணியனுடைய), வாளொடு தோளும் கையும் மகுடமும் - வாளாயுதமும் புயங்களும் கைகளும் மணிமுடியும், மலரோன் வைத்த - பிரமன் படைத்த, நீள் இரு ககனம் முட்டை - உயர்ந்த பெரிய அண்டகோளத்தின், நெடுசுவர் தேய்ப்ப - நீண்ட சுவரில் உராயும்படியும், நேமி - இராசிமண்டலம், கோளொடும் திரிவது என்ன - கிரகங்களோடும் சுற்றித் திரிவனபோல, குருமணி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கொடும் பூண் மின்ன - ஒளி பொருந்திய நவமணிகளாலாகிய அவன் (அணிந்த) வளைந்த அணிகள் ஒளி செய்ய, (நரசிங்க மூர்த்தி), தட கை ஒன்றால் - தனது பெரிய கைகளில் ஒன்றினால், தாள் இணை இரண்டும் பற்றி சுழற்றினன் - இரண்டு கால்களையும் பிடித்து (அவ்விரணியனை)ச் சுழற்றினான்.

ககன முட்டை: யுத்த. 259, 279 காண்க. வைத்த - உண்டாக்கி வைத்த. நீள் இருங் ககனம் என்று கூறவே நீட்சி பருமன் உயரம் என்ற அனைத்தும் விளங்கும். கோள் - ஊர்கோள் எனினும் ஆம். இரண்டும் ஒன்றாற் சுற்றினன் எனவே சிறிதும் முயற்சி யின்றிச் செயலாற்றியது புலனாம். கொடும்பூண் - கொடியன் அணிந்த பூண் எனினுமாம். பூணுக்குக் கொடுமையின்று அதனைப் புனைந்தவன் கொடுமை அதன்மேல் ஏற்றப்பட்டது; இஃது ஒருவகை உபசார வழக்கு.

பா - ம். 1. வாளொடுந்; கையுந் தோளும்; மலரோன் தந்த.
3. குயின்மணி, குலமணி; குழையும் மின்ன.
4. சுற்றினன். 150

280. சுழற்றிய காலத் திற்ற
தூங்குகுண் டலங்கள் நீங்கிக்
கிழக்கொடு மேற்கு மோடி
விழுந்தன கிடந்த வின்றும்
அழற்றரு கதிரோன் றோன்று
முதயத்தோ டத்த மான
நிழற்றருங் காலை மாலை
நெடுமணிச் சுடரி னீத்தம்.

சுழற்றிய காலத்து - நரசிங்கமூர்த்தி இரணியனைப்பற்றிச் சுழற்றியபோது, இற்ற - விழுந்த, தூங்கு குண்டலங்கள் நீங்கி - அவனது செவிகளில் தொங்கிக்கொண்டிருந்த குண்டலங்கள் கழன்று, கிழக்கொடு மேற்கும் ஓடி விழுந்தன - கிழக்கிலும் மேற்குத் திக்கிலும் விரைந்து சென்று விழுந்தன; கிடந்த - அவ்வாறு வீழ்ந்து கிடந்தவைதாம், இன்றும் - இந்நாளிலும், அழல் தரு கதிரோன் தோன்றும் உதயத்தோடு - வெயிலைச் செய்கின்ற சூரியன் காணப்படும் உதயகிரியும், அத்தம் ஆன - மறையும் அத்தகிரியும் ஆம்; நெடு மணி சுடரின் நீத்தம் - (அக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குண்டலங்களில் பதித்த) பெரிய மாணிக்கங்களின் ஒளிவெள்ளமே, காலை மாலை நிழல் தரும் - காலையும் மாலையும் (அக் கிழ்த் திசையிலும் மேற்றிசையிலும்) ஒளியை உண்டுபண்ணும்.

தூங்குதல் - தொங்குதல்; 'தூங்குசிறை வாவலுறை தொன் மரங்க ளென்ன' (சீவக. 498); 'தூங்கு தாணி' (ஆரணிய. 543). அழல் தரு கதிரோன் - சூரியன்; உதயகிரி அத்தகிரி என்ற இரண்டினையும், அவை வெளிவிடும் வெள்ளிய செவ்விய ஒளிகளையும், இங்கு இரணியனது குண்டலங்கள் அவற்றிற் பதிக்கப்பெற்ற மாணிக்கங்கள் என்ற இவைகளின் மீதேற்றிக் கூறினர்; (ஒப்பு): (யுத்த. இரணிய. 11); 'குண்டலங்கள் குலவரையை வலம்வருவான் இரவிகொழுங் கதிர்சூழ் கற்றை, மண்டலங்கள் பன்னிரண்டும் நாலைந்தாய்ப் பொலிந்ததெனை வயங்க' (ஆரணிய. 557). நீத்தம் - வெள்ளம்; இங்கு ஒளித் தொகுதியைக் குறித்தது.

பா - ம். 1. துத்தத்; தூற்ற.
2. கிழக்கொடு மேற்குமோ; ; நின்னும், வின்னும்.
4. நிழற்றுவ, நிழற்றுறு; கால; சுடர, சுவறில். 151

281. போன்றன இனைய தன்மை
பொருவிய தினைய தென்று
தான்றனி யொருவன் றன்னை
யுரைசெயுந் தரத்த னுளே
வான்றரு வள்ளல் வெள்ளை
வள்ளுகிர் வயிர மார்பின்
ஊன்றலும் உதிர வெள்ளம்
பரந்துள துலக மெங்கும்.

இனைய போன்றன தன்மை பொருவியது - இவை ஒத்தவையான தன்மைகள் நேர்ந்ததனால், (தன்னை ஒத்த எவரும் இல்லாமையின்), தான் தனி ஒருவன் தன்னை - தான் ஒப்பற்றவனாக விளங்கும் அந்த நரசிங்கமூர்த்தியின் தன்மை குறித்து, இனையது என்று - இத்தன்மையது என்று, உரை செயும் தரத்தன் நானோ - சொல்ல வன்மையுடையவன் நானோ? வான் தரு வள்ளல் - (பரிபாக

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

முடைய தன் அடியவர்கட்கெல்லாம்) பரமபதத்தை உதவி யருள்கின்ற அந்தக் கருணாநிதியான மூர்த்தி, வெள்ளை வள் உகிர் வயிரம் மார்பின் ஊன்றலும் - தனது வெண்ணிறமான கூரிய நகங்களை, இரணியனுடைய வயிரம்போன்று வன்மைவாய்ந்த மார்பினிடத்துப் பதித்த அளவில், உதிரம் வெள்ளம் பரந்து உளது - இரத்தப் பெருக்கு எழுந்து உலகம் முழுதும் பரவிற்று.

வான் என்பது இருவினை யொப்பும் மலபரிபாகங் கண்ட ஞானிகள் இறுதியிற் சென்றடையும் மீளாக்கதி என்ற விடு என்க. நரசிங்கம் வெண்மை நிறமானது என்பதற்கு (278) 'வெள்ளை வள்ளுகிர்' என்பதும் ஒரு சான்று.

பா - ம். 1. போன்றன வனைய, எனைய தென்று, இனைய வென்றுந், பொருவிய தேனை வென்று, போன்ற வினையதன்மை யென்று.

2. தான்தனை ; தரத்திறலோ.

3. மான்றரு மன்னல் ; மார்பத்து, வான்றரு மமலன் வெள்ளுகிர் கனகன் மார்பத்து. 152

இங்கு சில அதிகப்பாடல்கள் :—

1. அழிவிலான் வயிர மார்பத் தமலன்மா னுடமாம் சீய
எழிலுலாம் உருவு கொண்டாங் கிருகையி னுகிர்வா [ளோச்சிக்
கழியவே பிளத்த லோடும் கனகமா மேரு விண்டு
கிழியவே குத்தி ஓதம் கிளர்ந்தபோற் கிளர்ந்த தம்மா.

2. இரணியன் வயிர மார்பும் இருபிள வாகக் கீறிக்
கரையறும் அவுண வெள்ளப் படையெலாங் கடிதின் [மாய்த்துத்
தரைமுத லான அண்டப் பரப்பெலாம் தானே ஆகிக்
கருணைகொள் அமலன் பல்வே றுயிரெலாம் காத்து [நின்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இரணியன் வதை

282. ஆயவன் றன்னை மாயன்
அந்தியின் அவன்பொற் கோயில்
வாயிலின் மணிக்க வான்மேல்
வயிரவா ளுகிரின் வாயின்
மீயெழு குருதி பொங்க
வெயில்விரி வயிர மார்பு
தீயெழப் பிளந்து நீக்கித்
தேவர்த மிடுக்கண் தீர்த்தான்.

மாயன் - நரசிங்கமூர்த்தி, ஆயவன் தன்னை - அந்த இரணியனை, அந்தியின் அவன் பொன் கோயில் வாயிலின் - சாயங்கால வேளையில், அவனுடைய பொன்மயமான அரண்மனை வாயிற் படியில், மணி கவான் மேல் - அழகிய தனது தொடைமீது அமர்த்திக்கொண்டு, வயிரம் வாள் உகிரின் - வன்மைவாய்ந்த வாள்போன்ற நகங்களினால், வாயின் மீ எழு குருதி பொங்க - வாயின்மீது எழுந்து வழிகின்ற உதிரம் மிக, வெயில் விரி வயிர மார்பு - ஒளிவிடுகின்ற வயிரம்போன்ற வலிய மார்பில், தீ எழ பிளந்து நீக்கி - நெருப்புப் பொறிபறக்கப் பிளந்து ஒழித்து, தேவர் தம் இடுக்கண் தீர்த்தான் - தேவர்களுடைய துன்பத்தைப் போக்கினான்.

இச் செய்யுளுடன், பாகவத. 7·2·87-ஆம் பாட்டை ஒப்பு நோக்குக. 'நள்ளிற் சாகிலன் நடுப்பகற் சாகிலன்' ஆதலின், அந்திப்போதென்றும், 'உள்ளிற் சாகிலன் புறத்தினும் உலக்கிலன்' ஆகலின், 'பொற்கோயிலின் வாயிலின்' என்றும், 'மண்ணிற் சாகிலன் வானினும் சாகிலன்' ஆகலின், 'மணிக்கவான் மேல்' என்றும், 'கொள்ளைத் தெய்வவான் படைக்கலம் யாவையும் கொல்லா' ஆகலின் வயிரவாள் என்றும் இரணியன், தவமாற்றிப் பெற்ற வரங்கட்குப் பங்கமுறாமல் நரசிங்கப்பெருமான் அவனது உயிரை வெளியேற்றினன் என்று கூறப்பட்டது. 'தேவர்தம் இடுக்கண் தீர்த்தான்'' 'பரித்ராணாய சாதூநாம் விநாசாயசதுஷ்கிருதாம், தர்ம சம்ஸ்த்தாப னார்த்தாய சம்பவாமி யுகேயுகே' (கீதை. 4; 8) எனபது இங்குக் காணத்தகும். இங்கு, 'எங்குமுளன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கண்ணன் என்றமகனைக் காய்ந்து, இங்கில்லை யாலென் றிரணியன் தூண்புடைப்ப, அங்கப் பொழுதே அவன்வீயத் தோன்றியவென், சிங்கப் பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே' (திருவாய். 2·8·9) என்ற பாசுரம் காணத்தகும். இங்குப் பிரகலாதனுக்கு அருள் செய்யும் மூலமாய்த் தேவர்களுக்கு இடுக்கண் தீர்க்கப்பெற்ற செய்தி கூறப்பெற்றது. இவ்வண்ணமே பிராட்டியின் சிறைவீடு காரணமாகத் தேவர்களுக்கு இடுக்கண் தீர்வதை நாம் இராமாயணத்தில் காண்கிறோம்.

பி - ம். 2. வாயலின் ; நன்மாணிக்க வயிர ; வள்ளுகிரால் ; வாளின்.
3. மியருங் ; மார்புந்.
4. தேவர்கள் ; நடுக்கம். 153

அஞ்சி ஓடிய தேவர்கள் அங்கு வருதல்

283. முக்கணு னெண்க ணனு
முளரியா யிரங்க ணனும்
திக்கணுந் தேவ ரோடு
முனிவரும் பிறருந் தேடிப்
புக்கநா டறிகு றுமற்
றிரிகின்றார் புகுந்து மொய்த்தார்
எக்கணாற் காண்டு மெந்தை
யுருவமென் றிரங்கி நின்றார்.

புக்க நாடு தேடி அறிகுறுமல் திரிகின்றார் - தாம் தாம் சென்ற இடத்தை எவரும் நாடி அறிய முடியாதபடி திரிபவரான, முக்கணன் - மூன்று கண்களையுடைய சிவபெருமானும், எண் கணனும் - எட்டு விழிகளையுடைய பிரமதேவனும், முளரி ஆயிரம் கணனும் - தாமரை மலர்போன்ற ஆயிரம் நேத்திரங்களையுடைய இந்திரனும், திக்கு அணும் தேவரோடு முனிவரும் - எட்டுத் திசைகளிலும் உள்ள பாலகர்களும் முனிவர்களும், பிறரும் - ஏனையோரும், (அந்த இரணியன் மரித்தவுடனே), புகுந்து மொய்த்தார் - புக்கு நெருங்கினவராய், எந்தை உருவம் எக் கணால் காண்டும் என்று இரங்கி நின்றார் - எம்பிரானுடைய உருவத்தை எந்தக் கண்களைக்கொண்டு காண்பது என்று தம் (செயலற்ற) நிலைக்கு இரங்கி நின்றார்கள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vijay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆயிரங் கண்ணன் - இந்திரன். இவனுக்கு ஆயிரம் நேத்திரங்கள் கௌதமர் சாபத்தாற் றோன்றின என்பது வரலாறு; பாலகாண்டம் அகலிகைப் படலம் காண்க. அணவுதல் - பொருந்துதல்; அணவும் என்பது அணுல் என்று வந்தது. அத்தகைய பேருருவத்தை மக்கட் கண்கொண்டு காண இயலாமைபற்றி எக்கணுற் காண்டும் என்றார். மற்றும், அப் பேருரு அச்சம் விளைக்கவே கண்கூசியதா லிவ்வாறு கூறப்பட்டது எனினுமாம். திக் என்பது வடசொல்; திக் + கண் + ஆம் என்று பிரித்துத் திசைகளில் உள்ள எனலும் ஒன்றும். இனி, புக்க நாடு அறிகுறுமல் தேடித் திரிகின்றார் எனக் கூட்டி, எம்பெருமான் புகுந்த இடம் அறியமாட்டாமல் தேடி அலைகின்றார் எனினுமாம்.

பி - ம். 1. ஆயிரக் கணுனும்.

2. முனிவரோடு தேவரும்; பிறரு மெல்லாம்.

3. புக்க நாட்டு; அறிவுருமல்.

4. எக்கணுற் காணும், காண்போம், காட்டும்; உருவமொன்; றிரங்குகின்றார், றிரந்து நின்றார். 154

## வந்த வேந்தர்கள் அஞ்சுதல்

284. நோக்கினர் நோக்கி னார்முன்
நோக்குறு முகமுங் கையும்
ஆக்கையுந் தாளு மாகி
யெங்கணுந் தானே யாகி
வாக்கினுன் மனத்தி னுன்மற்
றறிவினு லளக்க வாரா
மேக்குயர் சீயந் தன்னைக்
கண்டனர் வெருவு கின்றார்.

(அவ்வாறு சுற்றி நின்று), நோக்கினர் நோக்கினர் முன் - பார்த்துப் பார்த்து நின்றவர்களுடைய முன்பெல்லாம், நோக்குறு முகமும் கையும் - காணப்படுகிற முகங்களும் கைகளும், ஆக்கையும் தாளும் ஆகி - உடலும் கால்களும் பலவாகக் கொண்டவனுய், எங்கணும் தானே ஆகி - எல்லாவிடங்களிலும் தானுகவே நின்று, வாக்கினுல் மனத்தினுல் மற்று அறிவினுல் அளக்க வாரா - சொற்களினுலும், எண்ணங்களாலும், வேறு அறிவினுலும் எல்லை காண


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

முடியாதபடி., மேக்கு உயர் சியம் தன்னை - மேலே உயர்ந்து விளங்குகின்ற அந்த நரசிங்கப் பெருமானை, (அந்த முக்கணன் முதலானவர்கள்), கண்டனர் வெருவுகின்றார் - பார்த்து அச்சம் கொண்டவர்க ளாயினர்.

மேக்கு - மேலிடம்; 'மேக்கெழு பெருஞ்சினை' (குறுந். 26).

பி - ம். 1. நோக்கலும்.

2. ஆக்கையும் தோளும்; தானுமாகி.

3. மனத்தினுனு மறிவினுல்.

4. கண்டவர். 165

## பிரமன் துதி

285. பல்லொடு பல்லுக் கெல்லை
யாயிரக் காதப் பத்தி
சொல்லிய வதனங் கோடி
கோடிமேல் விளங்கித் தோன்ற
எல்லையி லுருவிற் ருகி
யிருந்ததை யெதிர்ந்து நோக்கி
அல்லியங் கமலத் தண்ணல்
அவன்புகழ் விரிப்ப தானுன்.

பல்லொடு பல்லுக்கு எல்லை பத்தி - ஒரு பல்லுக்கும் மற்றொன்றுக்கும் உள்ள இடைவெளி, ஆயிரம் காதம் - ஆயிரம் காதமாக, சொல்லிய - சொல்லப்பட்ட, வதனம் கோடி கோடி மேல் விளங்கி தோன்ற - முகங்கள் பலகோடி என்னும் எண்ணிக்கையினும் அதிகமாக ஒளிவிட்டு நிற்க, எல்லை இல் உருவிற்று ஆகி இருந்ததை - எல்லை இல்லாத பெருவடிவமாகிக் காணப்பட்ட அந்தப் பெருமானை, எதிர்ந்து நோக்கி - நேராகக் கண்டு, அல்லி அம் கமலத்து அண்ணல் - அகவிதழ்களை யுடைய அழகிய தாமரையில் தோன்றியவனை பிரமதேவன், அவன் புகழ் விரிப்பது ஆனுன் - அந்தப் பெருமானுடைய சிறப்பைக் கூறத்தொடங்கினுன். இதனை அடுத்துவரும் நான்கு செய்யுட்களில் காண்க.

பெருமானது விசுவரூபத்தின் பெருமை இங்கும் கூறப்பட்டது. ஒரு பல்லுக்கும் பிறிதொரு பல்லுக்கும் இடையே பல

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

வாக இடைவெளி யிருந்ததென்றும், முகங்கள் பலகோடியாக விளங்கின வென்றும், பெருமான் பேருருவம் வருணிக்கப்பட்டது. 'அநேக வக்த்ரம் நயனம்' (கீதை. 11 : 10) காண்க. எதிர்ந்து நோக்குதல் - பார்த்தல். அல்லியங் கமலத்தண்ணல் - பிரமதேவன். அவன் என்றது நரசிங்கமூர்த்தியை.

பி - ம். 1. பல்லுக் கொலலை ; ஆயிரங் காதம் ; பற்றிச்.

2. கோடியே விளங்கித் தோன்ற.

3. எல்லையி னுருவிற் ருகி, உருவத் தாகி ; மெய்தி நின்றான். 156

## வேறு

286. தன்னைப் படைத்ததுவுந் தானே யெனுந்தன்மை
பின்னைப் படைத்ததுவே காட்டும் பெரும்பெரும
உன்னைப் படைத்தாய்நீ யென்று லுயிர்படைப்பான்
என்னைப் படைத்தாய் நீ யெனுமிதுவு மேதாமோ.

'பெரு பெரும - மிகவும் பெரியோனே! தன்னை படைத்ததுவும் தானே எனும் தன்மை - (தொடக்கத்தில்) உன்னை ஆக்கிக் கொண்டவனும் நீயேதான் என்னும் உண்மைச் செய்தியை, பின்னை படைத்ததுவே காட்டும் - இப்பொழுது உன்னை (இத்தூணிடத்தில் நரசிங்கமூர்த்தியாக) ஆக்கிக் கொண்டதே நன்கு தெரிக்கும் ; (இவ்வண்ணம்), உன்னை படைத்தாய் நீ என்றால் - உன்னை நீயே சிருட்டித்துக் கொண்டாயெனில், உயிர் படைப்பான் - உயிர்த்தொகுதிகளைச் சிருட்டித்தற்காக, நீ என்னை படைத்தாய் எனும் இதுவும் ஏதாம் - என்னை நீ உண்டாக்கினாய் என்னும் இச்செயல் என்ன இயல்பினது என்று கருதப்படும்? ஓ - வினா.

'தன்னைப் படைத்ததுவும் தானே' 'இச்சாமாத்ரம் பிரபோத் சிருஷ்டி ;' என்பது சுருதி: 'நிறுத்திடு நினைந்தமேனி நின்மல னருளினாலே' (சிவ:சித்தி. 1·45); 'வாராதே வரவல்லாய் (ஆரணிய. 55), 'வந்தாய் போல வாராதாய் வாராதாய் போல் வருவானே' (திவ்ய. திருவாய். 6·10 : 9) 'வருவாய்போல வாராதாய்' (யுத்த. பிரமாத் 228); என்பன காண்க. பெரும் பெரும - மிகப் பெரியோனே ; 'பிறப்பில் பல் பிறவிப் பெருமானை) (திவ்ய. திருவாய். 2·9:5) ; 'அஜாய மானோ-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பஹு⁻தா விஜாயதே' (புருடசூக்தம்). பரம் பொருள் தன்னைத் தானே படைத்துக்கொண்டது எனச் சுருதிகள் முறையிடும்; அதற்கு நீ இப்பொழுது தூணில் நரசிங்கனாகத் தோன்றியதே போதுமான சான்று. இவ்வாறிருக்கப் படைப்புக் தொழிற் கென்று என்னைப் படைத்தது ஏன் என்று வினவுகின்றான் பிரமன்.

பி - ம். 1. படைத்தனவும்.

2. படைத்தனவே, படைத்தனையே, படைத்தெவையும், பெரும் பெருமை.

3. படைத்தாய் நீ, யென்று.

4. யெனுமதுவும்; ஏத்தாமே, ஏதாமோ, எற்றுமோ. 157

287. பல்லா யிரகோடி யண்டம் பனிக்கடலுள்
நில்லாத மொக்குளெனத் தோன்றுமால் நின்னுழையே
எல்லா உருவமுமாய் நின்றக்கா லிவ்வுருவம்
வல்லே படைத்தால் வரம்பின்மை வாராதோ.

'பல் ஆயிரம் கோடி அண்டம் - எண்ணிறந்த அண்டங்கள், பனி கடலுள் நில்லாத மொக்குள் என நின் உழையே தோன்றும் - குளிர்ச்சியான கடலில் நிலையாது தோன்றி மறையும் நீர்க்குமிழிகள் போன்று உன்னிடமே உண்டாகும்; (ஆதலின்), எல்லா உருவமுமாய் நின்றக்கால் - காணப்படும் எல்லா உருவங்களும் நீயாகவே யிருக்க (அவற்றை எல்லாம் அழிக்க வல்ல), இ உருவம்- இந்த நரசிங்க வடிவத்தை, (நீயே) வல்லே படைத்தால் வரம் பின்மை வாராதோ - விரைவாகப் படைத்துக் கொண்டால் வரம்பில்லாமை என்னும் குற்றம் உனக்கு நேரமாட்டாதா? ஆல்: அசை. ஓ: வினா.

பெருமான் தானே படைத்த உருவங்களை வரம்பு மீறி அழிக்காமல், சினம் தணிய வேண்டும் என்று வேண்டுகின்றான் பிரமன். இரண்டாமடிக்கு; (ஒப்பு): 'நிற்கு நெடுநீத்த நீரின் முளைத்தெழுந்த, மொக்குளே போல முகுளித்த வண்டங்கள், ஒக்க வுயர்ந் துன்னுளே தோன்றி ஒளிக்கின்ற, பக்க மறிதற் கெளிதோ பரம்பரனே' (ஆரணிய. 1178); நிலையில்லாமைக்கு நீர்க் குமிழி உவமை; 'நீரிற் குமிழி யிளமை நெடுஞ்செல்வம், நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள்' (நீதிநெறி. 1); 'மீதெழு மொக்குளன்ன யாக்கை' (யுத்த. இந்திரசித். 9); 'படு மழை மொக்குளில்' (நாலடி. 27). எல்லா உருவமுமாய் நின்றக்கால்; (ஒப்பு): ஆன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மாக்கள் அனைத்தும் அவனே' (திவ்ய. திருவாய். 3·4·10); 'யாவையும் எவரும் தானாய்' (திவ்ய. திருவாய். 3·4·10). 'அண்டம் பலவு மனைத்துயிரும் அகத்தும் புறத்தும் உளவாக்கி, உள்ளும் புறத்தும் உளையாகி' (யுத்த. பிரமாத்திர. 226). வரம்பின்மை என்பது பெருமானின் எட்டு விசேட குணங்களில் ஒன்று; இங்கு அச்சொல் பெருமானது சொரூபமாகவேயுள்ள வற்றை எல்லை மீறி அழித்தலைச் சுட்டி நின்றது என்க. இங்கு வரம்பின்மை என்பது அநவஸ்தா தோஷம்.

பி - ம். 1. ஆயிரங்கோடி.

2. நில்லாத மொக்குளில், மொக்குளினில்; நின்னிலையே.

3. இவ்வுலகும்.

4. வல்லே குறித்தால்; வரம்புண்மை. 158

288. பேரை யொருபொருட்கே பலவகையாற் [பேர்த்தெண்ணும்
தாரை நிலையை தமியை பிறரில்லை
யாரைப் படைக்கின்ற தியாரை யளிக்கின்ற
தாரை யழிக்கின்ற தையா வறியேமால்.

'ஐயா-ஐயனே! ஒரு பொருட்கே-(நீயாகிய) ஒரு பொருளுக்கே, பலவகையால் பேரை பேர்த்தெண்ணும்-பலவிதங்களாகப் பெயரை வேறுபடுத்தி எண்ணத்தக்க, தாரை நிலையை-ஒழுங்கான நிலையை யுடையாய்; தமியை - தனிப்பொருளாக உள்ளாய்; பிறர் இல்லை - பிறர் எவரும் உன்னையல்லாமல் இல்லை; (இங்ஙனம் உலகம் அடங்கலும் நீயாகவே யிருக்க), படைக்கின்றது யாரை - நீ சிருட்டி செய்வது எவரை? அளிக்கின்றது யாரை - காப்பது எவரை? அழிக்கின்றது ஆரை - அழிப்பது எவரை? அறியேம் - (அந்த மாயாவிலாசத்தை நாங்கள்) அறியமாட்டோம். ஆல் - அசை.

ஒரு பொருளுக்கே பல பெயரிட்டுப் பேதித்து நிற்கும்படியான காட்சியை யுடையீர் எனப்பட்டது; 'நீமுயலும், கோலமோ யார்க்குந் தெரிவரிய கொள்கையவால்' (ஆரணிய. 1172). முதலடிக்கு (ஒப்பு): 'ஒருநாமம் ஓருருவ மொன்றுமில்லார்க் காயிரம், திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ' (திருவாச. திருத்தெள்ளேணம். 1); 'ஏகமூர்த்தி யிருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தி ஆகி' (திவ்ய. திருவாய். 4·3·3);

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

'உமருகந் துகந்த உருவம்நின் உருவம் ஆகி' (திவ்ய 8 · 1 : 4). தாரை - ஒழுங்கு; தாரை - வடசொல். முத்தொழிலை மேற்கொண்டு நீ ஆக்கிப் புரந்தழிக்கின்ற அனைத்தும் உன் வடிவின்றி வேறல்ல; ஒப்பு: 'எவ்வுயிரும் பராபரன் சந்நிதியாகும் இலகும் உயிரனைத்தும் ஈசன் கோயில்'. கடையடி முற்றுமோனை.

பி - ம். 1. வேரை, பேதை; வல்வகையாற், பல்வகையாய்; போக்கென்றுங்.
2. நாரை நிலைமை, தனியை, தம்மிற்.
4. அறியோமால்.

159

289. நின்னுளே என்னை நிருமித்தாய் நின்னருளால்
என்னுளே யெப்பொருளும் யாவரையும் யானீன்றேன்
பின்னிலேன் முன்னிலேன் எந்தை பெருமானே
பொன்னுளே தோன்றியதோர் பூணொக்கும் பூட்சியாய்.

'(நீ) என்னை நின்னுளே நிருமித்தாய் - நீ உன் உந்திக் கமலத்தே என்னைத் தோற்றுவித்தாய்; நின் அருளால் - உன் கருணை விசேடத்தால், எப்பொருளும் யாவரையும் என்னுளே யான் ஈன்றேன் - எல்லா அஃறிணைப் பொருள்களையும், உயர்திணைப் பொருள்களையும் என்னிடத்திலேயே நானே தோற்றுவித்தேன்; எந்தை பெருமானே - என் தந்தையும் தலைவனுமாக உள்ளவனே! முன்னிலேன் பின்னிலேன் - உம்மையன்றி அடியேற்கு ஓர் காரணமுமில்லேன்; காரியமுமில்லேன்; பொன் உளே தோன்றியது ஓர் பூண் ஒக்கும் பூட்சியாய் - ஒரு பொன்னின் உருவெடுத்த பொன் ஆபரணத்தைப்போன்று பற்பல வடிவுடைய உடலும் உடையவனும்போல ஒருமைப்பட்டு நிற்கும் உருவம் உள்ளவனே!

நான்முகனை நாராயணன் படைத்தான்; நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்; (இயற்பா. 41); 'ஓயாத மலராயனே முதலாக வுளராகி, மாயாத வானவர்க்கு மற்றெழிந்த மன்னுயிர்க்கும், நீயாதி முதற்றாதை' (ஆரணிய. 53). பூட்சி - உடல்; 'புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய்' (தேவா. 1160 : 6). பின்னிலேன் முன்னிலேன்; யுத்த. 188 பார்க்க. பொன்னிற் றோன்றும் பணி; யுத்த. 241.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. நிருமித்தால்; நீயலாது, நியல்லாது, நீய்ல்லாய், நின்னருளாய்.
2. என்னுள்ளே யெல்லாப் பொருள்களுமா யெய்தி நின்றாய்.
4. தோற்றிய; பொற்கலனே போல்கின்றேன்; பூட்சியனே. 160

## சிங்கப்பிரான் சினம் தணிதல்

290. என்றுங் கியம்பி யிமையாத வெண்கணனும்
வன்றாண் மழுவோனும் யாரும் வணங்கினராய்
நின்றா ரிருமருங்கும் நேமிப் பெருமானும்
ஒன்றாத சீற்றத்தை யுள்ளே யொடுக்கினான்.

என்றுங்கு இயம்பி - என்று கூறித் துதிசெய்து, இமையாத எண் கணனும் - இமைத்தல் இல்லாத எட்டுக் கண்களையுடைய பிரமதேவனும், வல்தாள் மழுவோனும் - வலிய காம்பினையுடைய எரியீட்டி யென்னும் படையைத் தாங்கிய சிவபெருமானும், யாரும் - மற்றும் தேவர்கள் முதலான எல்லோரும், வணங்கின ராய் - பணிந்தவர்களாய், இருமருங்கும் நின்றார் - இரண்டு பக்கங் களிலும் நின்றார்கள்; நேமி பெருமானும் - ஆழிப் படையை ஏந்திய நரசிங்கப் பெருமானும், ஒன்றாத சீற்றத்தை உள்ளே ஒடுக்கி னான் - ஒருவழிப்படாத (அடங்காத) சினத்தைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டான்.

எண்கணன்-பிரமதேவன். ஒன்றாத சீற்றம்: (ஒப்பு): 'சிறுவனை நோக்கியுஞ் சிவப்பானவே' (புறநா. 100 : 11); ஒன்றாத சீற்றம்- இயற்கையாக எண்குணங்களுள் ஒன்றான பேரருளுடைமைக்குப் பொருந்தாத சினமுமாம்.

பி - ம். 1. என்றுங்கயனும் சிவனும் துதித்திறைஞ்ச. என்றுங் இயம்ப; இமை யாத முக்கண்ணன்.
2. வன்றுள் மலரோனும்; யாரும் வந்து; வணங்கினரால்; வழுத்தினர்; வன்றுள் குலிசன் முதலிமையோர் தாம்வணங்கி.
3. நின்று ரருள்சுரந்து.
4. ஒன்றுன, ஒன்றுகர்; யொடுக்கினர். 161

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## நரசிங்கமூர்த்தி தேவர்கட்கு அபய மளித்தல்

291. எஞ்சு முலகனைத்து மிப்பொழுதே யென்றென்று
நெஞ்ச நடுங்கு நெடுந்தே வரைநோக்கி
அஞ்சன்மி னென்னு வருள்சுரந்த நோக்கினல்
கஞ்ச மலர்ப்பழிக்குங் கையபயங் காட்டினன்.

உலகனைத்தும் இப்பொழுதே எஞ்சும் என்று என்று - உலக மெல்லாம் இந் நொடியிலே குறைந்தழியும் என்று இடைவிடாது எண்ணி, நெஞ்சம் நடுங்கும் நெடு தேவரை நோக்கி - (அச்சத்தால்) உள்ளம் நடுங்கிய பெரிய தேவர்களைக் கண்ணுற்று, (நரசிங்க மூர்த்தி), 'அஞ்சன்மின் என்னு - பயப்படாதீர்' என்று மொழிந்து, அருள் சுரந்த நோக்கினல் - திருவருள் பொழியும் பார்வையால், கஞ்சம் மலர் பழிக்கும் அபயம் கை காட்டினன் - செந்தாமரை மலரைப் பழிக்கும் வலத் திருக்கரத்தின் அபய முத்திரையைக் காட்டி அச்சம் தீர்த்தான்.

அபயம் - அபய முத்திரை ; உள்ளங்கை வெளித் தோன்றும் படி, கையை மலர்த்தி ஐந்து விரல்களையும் உயர்த்தி வைக்கும் நிலை. இஃது அச்சம் அகற்றுவது; வரத முத்திரை என்பது வரம் ஈவது என்ப ; மகாபரத சூடாமணி, பகுதி 1·402 பார்க்க. என்றென்று; அடுக்கு, அவர்களின் பலவான எண்ண மிகுதியைக் குறித்தது. நெடுந்தேவராயினும் நெஞ்ச நடுக்கம்; எள்ளல்: 'திருகினர் முதுகிட்டுப் பறந்த வீரர்' (வி. பா. 13 : 135); என்ற இடத்துப் போல. கஞ்சம் - கம்ஜம்; நீரில் முளைப்பது என்பது உறுப்புப் பொருள். கை அபயம் . அபயக் கை.

பி - ம். 1. மெப்பொழுதே.
2. நெஞ்சு நடுங்கி.
4. மலர் பழிக்கும் ; கையபயம் நாட்டினன். 162

## பிரமன் முதலானோர் பிராட்டியாரை நரசிங்கப்பிரானிடம் செல்லும்படி வேண்டுதல்

292. பூவின் திருவை யழகின் புனைகலத்தை
யாவர்க்கும் செல்வத்தை வீடென்னு மின்பத்தை
ஆவித் துணையை அமுதிற் பிறந்தாளை
தேவர்க்குந் தம்மோயை யேவினர்பாற் செல்ல.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'மேற்கூறியவாறு அபயம் அளித்த பிறகும், தேவர்கள் அச்சம் தீராதவராய்), அழகின் புனைகலத்தை - அழகுக்கே ஓர் அணிபோல்வாளும், யாவர்க்கும் செல்வத்தை - எல்லோர்க்கும் செல்வமாக ஒளிர்பவளும், வீடு என்னும் இன்பத்தை - முத்தி நிலையில் அடையும் இன்ப வடிவானவளும், ஆவி துணையை - அனைத்துயிர்கட்கும் உற்ற துணையாக வுள்ளவளும். அமுதில் பிறந்தாளை - திருப்பாற் கடலில் அமுதுடன் பிறந்தவளும், தேவர்க்கும் தம் ஓயை - தேவர்களுக்கும் தாய் ஆனவளும் ஆன, பூவின் திருவை - செந்தாமரை மலரில் வாசம் செய்யும் திருமகளை, பால் செல்ல - அந்த நரசிங்கப் பெருமானிடம் ஏகுமாறு, ஏவினர் - அனுப்பினர்கள்.

பெருமான் அபயக்கரம் காட்டிய பின்பும் அவனை அணுகும் துணிவற்றவராய்த் தேவர்கள் திருமகளை முன் செல்லுமா றுய்த்தனர் என்பதாம். பிரானுக்கு உட்சினம் ஆறியும் புறத்தே காணப்பட்ட வெகுளிக் குறிகள் இன்னும் மறையவில்லை யாகலின், தேவர்கள் தேவியை அனுப்பினர் என்க. இங்கு வீராவேசம் கொண்டு கிட்கிந்தை நகரிற் புகுந்த இலக்குவனை அஞ்சித் தாரையை அவன் முன்னர் அனுப்பிய அநுமன் முதலிய வானர வீரர்களின் செயலை ஒப்பிட்டுக் காண்க. 'சொன்ன தாரையைச் சுற்றினர் நின்றனர், என்ன செய்குவ தெய்தினன் என்றனர்' (கிட்கிந்தா. 593). பூவின் திரு ; 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' என்பது நோக்குக. அழகின் புனைகலம் - அழகுக்கும் அழகு செய்பவள் திருமகள் ; 'அழகெனு மணியுமோ ரழகு பெற்றதே' (பால. மிதிலைக். 34) ; (ஒப்பு) : 'அழகிவளைத் தவஞ்செய்து பெற்றது காண்' (பால. கார்முகப். 18). 'அணிபறித் தழகு செய்யும் அணங்கினை'; (யுத்த. அங்கதன். 18).

'வீடென்னு மின்பம்' - அடியார்கள் முத்தி யுலகத்து அழியாப் பேரின்பம் துய்த்தற்குப் பிராட்டி புருஷகாரம் ஆதல் பற்றி 'வீடென்னும் இன்பம்' என்றார் எனினுமாம். உயிர்கட்கு உற்ற துணை யாகலின், 'ஆவித் துணையை' என்றார் ; 'முனிவரு மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்' (திருக்கோ. 332); 'பொருளில்லார்க் கிவ்வுலக மில்லாகி யாங்கு' (குறள். 247) ; என வருவ


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தாலும், திருமகளே பொருளின் வடிவமாகலாலும், 'ஆவித்துணை' எனக் கூறியதென்க. பாற்செல்ல ஏவினர் எனக் கூட்டுக.

பி-ம். 1. அழகின் புது நலத்தை, புனை நலத்தை.

2. வியும்; அப்பதத்தை.

3. அமிழ்திற்.

4. ஏவினன்; இறைவன்பால். 183

## நரசிங்கப்பெருமான் பெருமாட்டிமீது அருள்பார்வை செலுத்துதல்

293. செந்தா மரைப்பொகுட்டிற் செம்மாந்து வீற்றிருக்கும்
நந்தா விளக்கை நறுந்தா ழிளங்கொழுந்தை
முந்தா வுலகு முயிரு முறைமுறையே
தந்தாளை நோக்கினன் தன்னொப்பொன் றில்லாதான்.

(அப்பொழுது), தன் ஒப்பு ஒன்று இல்லாதான் - தனக்கு நிகரான ஒரு பொருளும் இல்லாதவனான அம்மூர்த்தி, செந்தாமரை பொகுட்டில் செம்மாந்து வீற்றிருக்கும் - செந்தாமரை மலரின் கொட்டையில் மிக்க மகிழ்ச்சியுடன் எழுந்தருளி யிருக்கும், நந்தா விளக்கை - தூண்டா விளக்கை நிகர்த்தவளும், நறும் தாழ் இள கொழுந்தை - நறுமணம் பொதிந்துள்ள இளம் கொழுந்து போன்றவளும், உலகும் உயிரும் முறை முறையே முந்தா தந்தாளை - உலகில் உள்ள உயிர்களை எல்லாம் ஒழுங்காக ஆதி காலத்துப் பெற்றவளுமான அந்தப் பெரிய பிராட்டியை, நோக்கினன் - அருட் கண்கொண்டு கடாக்ஷித்தான்.

பொகுட்டு - இங்குத் தாமரைக்கொட்டை; 'மாரிப் பேருறை மொக்குளன்ன பொகுட்டு விழிக்கண்ண' (புறநா. 333); 'அரும் பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்' (பரிபா. பக். 174); நன். 387 மயிலை. செம்மாத்தல் - களித்தல்; செம்மா, பகுதி. 'செல்லும் மழவிடைபோற் செம்மாந்து' (நள. 153). நந்தாவிளக்கு - அவியா விளக்கு; சுயம்பிரகாச உருவம்; 'நந்தா விளக்குப் புறமாகென' (சீவக. 2564); 'நந்தா விளக்குச் சுடர்நன் மணி' (சீவக. 3144); 'நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்' (மணி. 14 : 18); 'விளக்கு அழிதன் மாலைத் தாதலின், 'நந்தா விளக்கே' என்றான்; இது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தெரிதரு தேற்ற வுவமை யென்னும் அலங்காரம்'; (டி உரை காண்க). 'நந்தா விளக்கனைய நாயகனே' (அயோத்தி. திருவடி. 60). தாழ் கொழுந்து, என்பதைத் தாழையின் இளங் கொழுந்து எனக் கோடலும் ஆம். தன் 'ஒப்பொன் றில்லா தான்; 'உவமை நீங்கிய தோன்றல்' (ஆரணிய. 148); 'தன் னொப்பா ரில்லப்பன்' (திவ்ய. திருவாய்.) என்றது காண்க. உலகும் உயிரும் முறைமுறையே தந்தானை; (ஒப்பு): 'சிவம் சத்திதன்னை யீன்றும் சத்திதான் சிவத்தை யீன்றும், உவந் திரு வரும்புணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்' (சிவ. சித்தி. 2·77). மாயை என்ற அருட்சத்தியே உலகின் முதற் காரணம் என்பதும் அறிக; 'தேரில்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக, வாரியன் குலால னுய்நின் ருக்குவன் அகில மெல்லாம்' (சிவ. சித்தி. 1 : 18).

பி - ம். 1. மரைமலர் மேற்.

2. நந்தா மணிவிளக்கை; தாரிளங் கொழுந்தை.

3. முந்தா முலகு. 184

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

மங்கையொரு பாகன் முதல் அமரர் மாமலர்மேல்
நங்கை தனை யேவுதலும் நாரா யணக்கடவுள்
சிங்கலிலா மானுடமாம் சீயவுரு வம்போகிப்
பொங்கு பரஞ்சுடரா யெங்கும் பொலியநின்றான்.

## நரசிங்கமூர்த்தி பிரகலாதனைக் கடைக்கணித்தல்

294. தீதிலா வாக வுலகீன்ற தெய்வத்தைக்
காதலா னேக்கினன் கண்ட முனிகணங்கள்
ஓதினர் சீர்த்தி யுயர்ந்த பரஞ்சுடரும்
நோதலாங் கில்லாத வன்பனையே நோக்கினன்.

உயர்ந்த பரம் சுடரும் - மிகவும் மேன்மைகொண்ட சோதி வடிவனான அம்மூர்த்தியும், தீது இலா ஆக உலகு ஈன்ற தெய்வத்தை - கெடுதிகள் ஒன்றும் இல்லாதபடி உலகத்தைப் படைத்து உதவிய தெய்வமான திருமகளை, காதலால் நோக்கினன் - அன்புடன் பார்த்தருளிய பெருமானை, கண்ட முனி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கணங்கள் - நோக்கிய இருடிக்கூட்டத்தார், சீர்த்தி ஓதினார் - அப் பெருமானது புகழை எடுத்து மொழிந்தார்கள்; ஆங்கு நோதல் இல்லாத அன்பனையே நோக்கினான் - அப்பொழுது தன் தந்தை இறந்ததற்குச் சிறிதும் வருந்தாத பக்தனான அந்தப் பிரகலாதனை (அப் பெருமான்) பார்த்தான்.

தீதிலாவாக நோக்கினான் என இயைத்தலுமாம். சீர்த்தி ஓதினார் என மாற்றுக. எத்துணையோ வருத்தத்திற் குள்ளாகியும் எம்பிரானையே தியானித்திருந்து எவ்விதமான வருத்தமும் அடையாததனால், 'நோதலாங்கில்லாத அன்பன்' என்னப்பட்டான் எனினும் ஆம். 'வானம் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால் வரையும், தானம் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும், மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண், டேனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே' (தேவா. 1199 : 8); 'அஞ்சுவது யாதொன் றுமில்லை அஞ்சவருவது மில்லை'; 'ஏமாப் போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே எந்நாளும் துன்பமில்லை' (தேவா. 1236·1) என்ற அப்பர் பாசுரங்களும், 'இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான், துன்பம் உறுத லிலன்'; 'இன்னாமை யின்ப மெனக்கொளின் ஆகும்தன், ஒன்னார் விழையும் சிறப்பு' (குறள். 628 ; 630) என்ற குறட்பாக்களும் பிரகலாதன் நிலைக்கு நினைவு கூரத்தக்கன. 'அன்பனையே' என்பதில், ஏகாரம் பிரிநிலை. பிரமன் முதலானவர்கள் அங்குக் கூடியிருந்தபோதிலும், அன்னாரை நோக்காது பிரகலாதனையே பார்த்தருளினான் பெருமான் என்க.

பி - ம். 1. தீதிலவாக, தீதில் வரவாக.
3. ஓதினார் கீர்த்தி ; பரஞ்சுடரான் ; ஓதினார் வேதம் ஒளிரும் பரஞ்சுடரும்.
4. நோதலானினில்லாத.



## இதுமுதல் மூன்று செய்யுட்கள் நரசிங்கமூர்த்தி பிரகலாதனைப் பார்த்துக் கூறுவன

295. உந்தையை யுன்முன்கொன் றுடலைப் பிளந்தனையச்
சிந்தை தளரா தறம்பிழையாச் செய்கையாய்
அந்தமிலா அன்பென்மேல் வைத்தா யளியத்தாய்
எந்தை யினியிதற்குக் கைம்மாறி யாதென்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(அவனைப் பெருமான் நோக்கி), 'உந்தையை - உன் தந்தையை, உன் முன் கொன்று - உன் முன்பாகக் கொலைசெய்து, உடலை பிளந்து அளைய - உடம்பைக் கிழித்து உதிரத்தில் அளையவும், சிந்தை தளராது அறம் பிழையா செய்கையாய் - மனம் சற்றும் நெகிழாது தருமநெறி தவறாத செயலை யுடையவனே! என்மேல் அந்தம் இலா அன்பு வைத்தாய் - என்னிடத்து எல்லையற்ற பிரியம் காட்டினாய்; அளியத்தாய் - நீ இரங்கத் தக்காய்; எந்தை - என் தந்தையே! இனி இதற்கு - நீ என்பால் வைத்த அன்பிற்குப் பிரதியாக நான் உனக்குச் செய்யும், கைமாறு யாது என்றான் - பிரதியுதவி யாது?' என்று மொழிந்தருளினான்.

'அந்தமிலா அன்பு'; 'சிந்தைபிடையரு வன்பு' (பெரியபு. திருஞான. 270); கண்ணப்பன் சிவபிரான்மீது வைத்தது, காரைக்காலம்மையார் கைலைக்கிறைவன்மீது வைத்ததுபோன்ற அன்பு. 'எந்தை யினியிதற்குக் கைம்மாறு யாது' (ஒப்பு): 'உன்னடியார்க் கென்செய்வ னென்றே யிருத்திநீ' (திவ்ய. திருவாய்.). உலகனைத்தும் ஆகி நின்ற பெருமான் அன்பர் கட்குப் புரியக்கூடாதது எது? எனினும் அப்பெருமானே இரங்கித் தான் செய்யும் கைம்மா றென்று மின்றென்று கூறுவனேல், பிரகலாதனுடைய அநந்யபத்தியின் திறம் இத்தகையது என்று கூறற்பாற்றோ? 'செம்மையா லுயிர் தந்தாய்க்குச் செயலென்னால் எளிய துண்டே' (சுந்தர. 560) என்ற பிராட்டி கூற்று இங்கு ஒப்பு நோக்குக. எந்தை என்று எம்பெருமான் பிரகலாதனை விளித்தது அன்பின் பெருக்கால் என்க; சிவபெருமான் காரைக்கால் அம்மையை 'என் அம்மை' என்றதும், இராமபிரான் இலக்குவனை 'அத்தா' (கிட்கிந்தா. 287) என்றதும் காண்க.

பி - ம். 1. உந்தையை முன்னெதிரே யான்கொன் டுயிருண்ண, உன் முன்னே! கொன்றுடலை; யானளையச்; கொன்றுயா னுயிரளைய, யான்கொன் றுயிருண்ண.

3. அன்பென்பால் அளித்தாயேல். 166

296. அயிரா விமைப்பினையோ ராயிரங்கூ றிட்ட
செயிரி னெருபொழுதி னுந்தையையாஞ் சீறி
உயிர்நேடு வேம்போ லுடலளையக் கண்டும்
செயிர்சேரா வுள்ளத்தாய்க் கென்னினியாஞ் செய்கேம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'ஓர் இமைப்பினை - ஒரு கண்ணிமைப்பொழுதை, அயிரா - நுண் மணல்போன்ற அளவாக, ஓர் ஆயிரம் கூறிட்ட - ஓர் ஆயிரம் பகுதி யாகப் பகுத்த, ஒரு பொழுதில் - ஒரு சிறு பொழுதில், உந்தையை - உன் தந்தையை, செயிரின் யாம் சீறி - அவன் இழைத்த குற்றம் காரணமாக யாம் சினந்து, உயிர் நேடுவேம் போல் உடல் அளைய கண்டும் - அவன் உயிரை நாடுவதுபோன்று அவனது பிளந்த உடல் உதிரத்தில் யான் அளைந்ததை நீ நேரில் பார்த்தும், செயிர் சேரா உள்ளத்தாய்க்கு - சிறிதும் துன்பம் அடையாத மனத் தினனான உன் திறத்து, இனி என் யாம் செய்கேம் - இனி யாம் செய்யக்கூடிய பிரதியுதவி யாது?

இங்கு, எல்லா வரங்களும் பெருமைகளும் தந்தருளவல்ல சீதாப்பிராட்டியார், 'மும்மையா முலகம்தந்த முதல்வற்கு முதல்வன் தூதாய்ச், செம்மையா லுயிர்தந் தாய்க்குச் செய லென்னால் எளியதுண்டே' (சுந்தர. 560) என்று அநுமனைப் பாராட்டியதை ஒப்பு நோக்குக. முதலடியால்: வரத்தாற் சிறந்து இறுமாந்த இரணியனை மிகவும் சிறிய கால அளவில் கொன்ற பெருமானுடைய பேராற்றல் கூறப்பட்டது. 'உயிர் நேடு வேம்போ லுடலளையக் கண்டும்' (ஒப்பு): 'எள்ளிருக்கு மிடமின்றி யுயிரிருக்கு மிடம்நாடி யிழைத்தவாறோ' (யுத்த. இரா. வதை. 239). 'என்னினியாம் செய்கேம்' முன் பாட்டில், 'இதற்குக் கைம்மா றியாதென்றான்' என்பதும், அதன் உரையும் காண்க.

பி - ம். 1. அயிரா மிமைப்பினை.

2. செயிரி லொருபொழுதில், செயிரோ ஞெருபொழுது; யான்சீறி.

3. உயிர்தேடு; வன்போ, வான்போ; தான்கண்டும்.

4. உள்ளத்தாற்; யானெஎன் செய்கேன், யான் செய்கேனோ. 167

297. கொல்லே னினியுன் குலத்தோரைக் குற்றங்கள்
எல்லை யிலாதன செய்தாரே யென்றாலும்
நல்லே முமக்கெம்மை நாணாமல் நான்செய்வ
தொல்லை யுளதே யியம்புதியா லென்றுரைத்தான்.

'(இனி), உன் குலத்தோரை - இனிமேல் உன் குலத்துள்ள வரையும் இனித் தோன்றுமவரையும், எல்லை இலாதன குற்றங்கள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


செய்தாரே என்றாலும் கொல்லேன் - அளவிறந்த குற்றங்கள் செய்தார்கள் ஆயினும் அவர்களைக் கொல்லமாட்டேன்; உமக்கு எம்மை நல்லேம் - உமக்கு பிறப்பு எல்லாவற்றினும் அநுகூலமா யிருப்போம்; நான் செய்வது உளதே-நான் உனக்குப் புரியக்கூடிய உபகாரம் யாதேனும் இருக்குமாயின், நாணமல் ஒல்லை இயம்புதி - சிறிதும் கூசாமல் விரைந்து பகர்வாயாக' என்று உரைத்தான் - என்று நரசிங்கப்பெருமான் பிரகலாதனை நோக்கிக் கூறினன். ஆல் - அசை.

'மஞ்சரீ விழைந்தாய் வேட்ட வரங்கைக் களிப்ப லென்றான்' (பாகவத. 9·2·94); 'கொல்லே னினியுன் குலத்தோரை' இவ் வாறு கூறியதற் கிணங்க, பிரகலாதனுடைய பெயரனான மகா பலியைக் கொல்லாமல் அடக்கியதும், அவன் மகன் நமுசி என்பவனை வாளிற் சுழற்றிய மாத்திரத்தோடு விட்டிட்டதும், அவனது பௌத்திரனான வாணாசுரனைக் கொல்லாது கால் மாத்திரம் துணித்து விடுத்ததும் காணத்தகுவன. உமக்கு எம்மை நல்லேம். பார்த்தனும் கண்ணபிரானும் பல பிறப்புக் களில் நண்பினராகவும், உறவினராகவும் தோன்றியமை கீதையில் கண்ணபிரான் கூற்றிற்கண்டது போல. எம்மை - எல்லாம்; 'எம்மை உலகத்தும்' (நாலடி. 152) என்ற இடத்து எல்லா உலகத்தும் என்று பொருள் வரைதல் காண்க; (நாலடி. உரை வளம்).

பா - ம். 1. கொல்லே மினியுன், னனியுன்; குலத்தாரை; குற்றந்தான்.

2. யிளாதன, யிலாதென்ன; யானலும்.

3. நல்லே னுனக்கென்றும், னுனக்கென்னை; நல்லா யெனக்கொரு நாணம னுன்செய்வ.

4. ஒல்லே, எல்லே; யுளவே, யுளதா. 168

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

ஈதாங் கமல னியம்ப வெழிற்புதல்வன்
நாதாங் கருமறையும் நாடற் கரியசெழும்
பாதாம் புயமலரில் பன்முறையுந் தாள்பணிந்து
வேதாந்த மெய்ப்பொருளே என்று விளம்பலுற்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## பிரகலாதன் வரம் வேண்டுதல்

298. முன்பு பெறப்பெற்ற பேருே முடிவில்லை
பின்பு பெறும்பேறு முண்டோ பெறுகுவனேல்
என்பு பெருத இழிபிறவி யெய்தினுநின்
அன்பு பெறுகை யரும்பே றெனக்கென்ருன்.

(அப்பொழுது பிரகலாதன் பெருமானை நோக்கி, உனது அருளால்), 'முன்பு பெற பெற்ற பேருே முடிவு இல்லை - இதன் முன்பு நான் அடைந்துள்ள சிறந்த நன்மைகள் எல்லையில்லாதன; பின்பு பெறும் பேறும் உண்டோ - இன்னும் யான் அடைய வேண்டிய நன்மைகளும் உள்ளனவா? பெறுகுவனேல் - இன்னும் ஏதேனும் பெற வெண்ணுவேனுனல், என்பு பெருத இழிபிறவி எய்தினும் - எலும்புகூட இல்லாத மிகவும் இழிந்த புழுப் பிற வியை நான் பெற்றபோதிலும், நின் அன்பு பெறுகை அரும்பேறு எனக்கு என்ருன் - உன்னிடம் இடைவிடாத அன்பினை அடை வதே அடியேனுக்கு பெறுதற்கரிய சிறந்த வரம் ஆகும்' என்று மொழிந்தான்.

கடையிரண்டடிக்கு (ஒப்பு): 'வழிபடு மன்பேயன்றி வர மெவன் பெறுவதென்னுத், தொழுதனன் வழுத்த லுற்ருன் தூயபே ரறிஞ னம்மா' (பாகவத. 7·2·95). 'முன்பு பெறப்பெற்ற பேருே முடிவில்லை' என்றது, இரணியனுலும் அவன் ஏவலாளர் களாலும், அவர்கள் ஆற்றிய பல்வேறு சூழ்ச்சிகளாலும் கொல்லப் பெருமலிருந்ததைக் குறிக்கும். இவ்வாறு அவன் இருந்தது திருவெட்டெழுத்தை உச்சரித்த பெருமையால் என்ருன். இதனை, 'நம்பெருமா ளெட்டெழுத்தின் பெருமை நவிலுமதோ, சம்பரன் மாயம் புரோகிதர் சூழ்வினை தாரணிவான், வெம்படை மாசுண மாமத வேழம் விடந்தழல்கால், அம்பர மேமுத லானவை பாலனுக் கஞ்சினவே' (திருவரங்கமாலை. 8) என்றதுகொண்டு காண்க. இறைவன் அருளைப் பெறுவதற்கும் ஓர் பரிபாகமும், தகுதியும், நல்லூழும் தேவை ஆதலின், 'பெறுகுவனேல்' என்ருன். என்பு பெருத இழிபிறவி; புழுப்பிறவி; 'என்பி லதனை வெயில்போலக் காயுமே, அன்பி லதனை யறம்' (குறள். 77). அன்பு பெறுகை அரும்பேறு (ஒப்பு): 'இறவாத வின்ப வன்பு வேண்டி' (பெரியபு. காரைக்கால். 60); 'வேண்டுநின் கழற்க ணன்பு' (திருவாச. திருச்சதகம். 74); 'நின் கழற்கணே மெய்கலந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வன்பரன் பெனக்குமாக 'வேண்டுமே' (திருவாச. திருச் சதகம். 73); 'நின் தாளிணைக்கீழ் மேயின வன்பொன்றுமே அடியேன்பெற வேண்டுவதே' (திருக்கருவை. கலித். அந்.). 'நின் மாட் டொன்றே, அடியேன் வேண்டுவ தது நீ மறுக்கேல், மூவுல களந்தநின் சேவடி வாழ்த்தித், தொழுதகைத் தொண்டர் தந் தொண்டருட் சேர்க்காது, எழுவகைத் தோற்றத் தின்னுப் பிறப்பின், என்பொழி யாக்கையுட் சேர்ப்பினும் அவர்பால், அன் பொழியாமை யருள்மதி யெமக்கே' (திருவரங்கக் கலம். 1).

பி - ம். 1. பேறே.

2. பெரும்பேறு முண்டு ; பெறுவேனேல்.

3. இழிபிறப்பை, யெய்திடினும்.

4. அன்பு பெறும்பேறு ; அடியேற் கருளென்றான். 169

## பிரகலாதனுக்கு வரம் அளித்தல்

299. அன்னானை நோக்கி யருள்சுரந்த நெஞ்சினனாய்
என்னானை வல்ல னெனமகிழ்ந்த பேரீசன்
முன்னான பூதங்கள் யாவுமுடி வுற்றிடினும்
உன்னா ளுலவாய்நீ யென்போ லுளையென்றான்.

அன்னானை நோக்கி - இங்ஙனம் வரம்வேண்டிய பிரகலாதனைப் பார்த்து, அருள் சுரந்த நெஞ்சினனாய் - கருணை ஒழுகப்பெற்ற திரு வுள்ளத்தை உடையவனாய், 'என் ஆனை - என்னுடைய உண்மை பக்தன், வல்லன் - தன்னை உணர்ந்த ஞானி', என மகிழ்ந்த பேர் ஈசன் - என உகந்த பெரிய பெருமான், 'முன் ஆன பூதங்கள் யாவு முடிவுற்றிடினும் - முன்பு தோன்றிய ஐம்பெரும் பூதங்கள் அழிவு பெற்றபோதும், உன் நாள் உலவாய் நீ - உன் வாழ்நாள் குன்றி நீ அழிவெய்தாமல், என்போல் உளை என்றான் - என்னைப் போலவே என்றும் இருப்பவன் ஆவாய்' என்று அருளிச் செய்தான்.

விடாது பொழிதலின், 'அருள் சுரந்த நெஞ்சென்றார்' 'தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி, வாங்கக் குடநிறைக்கும் வள்ளற் பெரும்பசுக்கள்' சுரப்பதுபோலு மென்க. 'என் ஆனை' என்பது, அன்புபற்றி யெழுந்த அருமைமொழி ; 'என்னானை யென்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

னப்பன்' (திருவாய். 3·9·1); என்னுடைய ஆனை போன்றவன் எனினுமாம். ஆனை - அன்புபற்றிக் கூறும் வழுவமைதி. 'மச்சித்த மத்கதப் பிராணு: போதயந்த: பரஸ்பரம்' (கீதை.) என்றதற்கேற்ப, சிறந்த பக்தனுகலின், 'என் ஆனை' என்ருன். 'வல்லன்' இங்கே ஆத்ம ஞானி என்பதைக் குறிக்கும். மாயையினுல் தரப்பட்ட பிரபஞ்ச மனைத்தும் பஞ்சபூதத்தி லடங்கும்; இந்தப் பூதங்கள் தாம் உலகிற்குக் காரணம் ஆதலின், 'முன்னன பூதங்கள்' என்ருன். 'யாவுமுடிவுற்றிடினும்' எல்லாப் பொருள்களும் இறுதியடையும் காலம் யுகப்பிரளயம் என்றும், மகாப் பிரளயம் என்றும் இருவகைப்படும் என்பர். பிரகலாதன் சாரூப்ய நிலை அடைந்தானுகலின், 'உன்னுள் உலவாய்' என்றும், 'என் போல் உளை' என்றும் கூறியருளினன் பெருமான். 'வல்ல வுருவொளியாய் நானு வளர்கநீ' (யுத்த. இரணிய. 173) காண்க. 'பிரஹ்லாதஸ்சாஸ்மி தைத்யானும்' (கீதை. 10·30) என்று கண்ணபிரான் கூறியதும் காண்க. 'பிரகலாத நாரத பாரசர புண்டரீக வியாசாம்பரீஷ சுகசௌநக காசியப' என இங்குக் குறிக்கப்பெற்றுள்ள ஒன்பது பேர்களில் பிரகலாதன் முதலிடம் பெற்றமை இங்கு நோக்கத்தகும். 'யான் மறுவிலா மனத்தேனென்னின், ஊழியோர் பகலா யோது மாண்டெலாம் உலக மேழும், ஏழும்வீ வுற்ற ஞான்றும் இன்றென இருத்தி என்ருன்' (சுந்தர. 561) என்ற பிராட்டி அநுமனுக்குச் சிரஞ்சீவிப்பட்டம் அருளியதும் இங்கே நினைவு கூரத்தகும். அநுமனை, 'சாகா வரத்தலைவ ரிற்றிலக மன்னுன்' (சுந்தர. 57) எனறது காண்க. சிரஞ்சீவிகள் எழுவர்; அவர்கள் முறையே, அசுவத்தாமன், மகாபலி, வியாசன், அநுமன், விபீடணன், கிருபாச்சாரியன், பரசுராமன் என்றும் கூறுவர். 'மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகைநாளிர்' (கிட்கிந்தா. 985) என்பது சாம்பவன் அநுமனைப் புகழ்ந்ததாகும்.

கம்பநாடர் பாகவதத்தையும் தமிழில் பாடவேண்டும் என்று நினைத்தார்; ஆயினும் வயது முதிர்ந்த நிலையில் அவ்வெண்ணம் முற்றுப்பெறுமோ என்ற ஐயம் எழ, பிரபத்தி வைராக்கியத்திற் சிறந்தவனும், சிரஞ்சீவியும், எம்பெருமானுடைய சாரூப்யத்தைப் பெற்றவனுமான பிரகலாதாழ்வான் சரிதத்தைப் பாடினுல், பாகவதத்தின் உட்கருத்துப் பாடியதாகும் என்று எண்ணியே, முதல் நூலில் இல்லாத இந்த இரணியன் வரலாற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


றைத் தமது பெருங்காப்பியத்திற் புகுத்தினர் என்க. சுந்தர காண்டத்தில் அநுமனையும், இதனை அடுத்துவரும் படலத்தில் வீடணனையும் சிரஞ்சீவியாகப் பாடிய கம்பர், இரண்டிற்கும் நடு நாயகமாய் நின்ற இப் படலத்துள் பிரகலாதனையும் சிரஞ்சீவி யாகப் பாராட்டியதன் பொருத்தம் உணர்க.

பி - ம். 1. தந்த ; நெஞ்சினுய்.

2. என்னேசம் வல்லாய் ; என்னுனை ; வல்லை யெனவளித்த ; வல்லே னென.

3. யாவையுமே ; முற்படினும், யாவையு முற்றிடினும்.

4. எந்நா ளுலவாய்நி, எந்நாளு முலவாய்.

170

300. மின்னைத் தொழுவளைத்த தென்ன மிளிரொளியாய்
முன்னைத் தொழும்புனக்கே யாமன்றே மூவுலகும்
என்னைத் தொழுதேத்தி யெய்தும் பயனெய்தி
உன்னைத் தொழுதேத்தி யுய்க வுயிரெல்லாம்.

(மேலும் பிரகலாதனை நோக்கிப் பெருமான்), 'மின்னை தொழு வளைத்தது என்ன மிளிர் ஒளியாய் - மின்னலை இரேவதி என்ற நக்ஷத்திரம் வளைத்து நின்றதுபோன்று ஒளிவிடுகின்ற சோதி வடிவனே ! மூவுலகும் உனக்கே முன்னை தொழும்பு ஆம் அன்றே - மூன்று உலகங்களும் உனக்கே தொன்றுதொட்டு அடிமை யாகுமன்றே ? உயிர் எல்லாம் - (உலகின்கணுள்ள) உயிர்களனைத் தும், என்னை தொழுது ஏத்தி எய்தும் பயன் எய்தி - என்னை வணங்கி வாழ்த்தி அடையக்கூடிய பேறுகள் எல்லாம் அடைந்து, உன்னை தொழுது ஏத்தி உய்க - உன்னை வணங்கி வாழ்த்தி ஈடேறுவதாக.

மின்னலே மிக்க ஒளியுள்ளது ; அதனை இரேவதி என்ற நக்ஷத்திரம் சூழ்ந்திருக்கும் எனின் ஒளி மிகுதியைப்பற்றிக் கேட்க வேண்டுமோ ? எனவே அதுபோன்று மிளிர் ஒளியாய் என்றான். தொழும்பு - அடிமையாள் ; 'பலவாறே தொழும்பாகு மங்கு' .(சிவஞானபோ. 1·3) ; 'தொழும்பர் உளக்கோயில்' (குமர.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மீனாட்சி பிள்ளை. 62). மூவுலகும் தனக்கடிமையாதல் போன்று, தனக்கு ஒப்பான பிரகலாதனுக்கும் அவை அடிமை யென்கின்றான் பெருமான். இருவர்க்கும் சாம்யம் ஏற்பட்ட நிலையில் பெருமானை வணங்கற் குரியார்கள், ஆழ்வானையும் வணங்கற் குரியார் என்றருளினன். இக் கருத்து பின்னர்க் கூறப்படும் 'நானு வளர்கநீ' என்ற தொடர்க்கண்ணும் காணப்படுதல் ஓர்க. பிரக லாதனைக் கொல்லுமாறு ஏவின யாவும் அவனைக் கொல்ல மாட்டாது, அந்தப் பிரகலாதனுக்கு அஞ்சி ஒழுகினமைகொண்டே மூவுலகும் அவனைத் தொழற்குரியன் என்பது பெறப்படும். 'முன்னைத் தொழும் புனக்கே' இதன் விரிவை இதன் பின்னர் வரும் 302-ஆம் செய்யுட் கொண்டறிக. 'தொழு தேத்தி' என்பதில் தொழுதல் கைகூப்பியும், ஐந்து உறுப்புக்களும், எட்டு உறுப்புக்களும் தரையிற்பட வணங்குவதையும், ஏத்தல் என்பது நினைந்தும், வாய்கொண்டும் துதித்தலையும் குறிக்கும். இங்குக் காயம் வாக்கு என்ற இவற்றின் செயல்களே குறிப்பிடப் படினும், மனத்தையும் உபலக்கணத்தாற் கொள்க. மனமின்றி மற்றிரண்டும் நிகழாவாகலின்;'கைகள் தலைபுக்கனபின் கருத்துளது மெல்லாம், தெய்வமென லுற்ற உடல்சிந்தை வசமன்றோ' (பால. கோலங். 34) என்றது காண்க. 'மனத்தினால் வாக்கினான் மறு வுற்றே னெனின்' (யுத்த. மீட்சி. 84) என்ற பிராட்டிகூற்றில் காயத்தால் என்பது, உபலக்கணத்தாற் பெறப்படுவதும் உய்த் துணர்க. 'எய்தும் பயன்' அனைத்தும் அடுத்து வரும் 302-ஆம் பாடல் கொண்டுணர்க. உலகெல்லாம் என்றும் பாடம் உண்டு; எனினும், 'உயிரெல்லாம்' என்ற பாடமே இங்குச் சிறக்கும். உலகெல்லாம் எனின், உயர்ந்தோரை மாத்திரம் குறிக்கும். 'உலகம் என்பதுயர்ந்தோர் மாட்டே' என்றார் ஆகலின். இ பிர பத்தி மார்க்கத்தில் ஈடுபட்ட உயிர்கள் அனைத்தும் ஏற்றம் தாழ்வு என்ற வேற்றுமையின்றிப் பெருமான் அருட்குப் பாத்திரமாகக்கூடு மாகலின் பின்னதே இங்குக் கொள்ளப்பெற்றது; 'என்னுயி ரனையாய்நீ யிளவலு னிளையானிந், நன்னுத லவணின்கேள் நளிர்கட லிலமெல்லாம், உன்னுடை யதுநானுன் றொழிலுரி மையினுள் ளேன்' (அயோத்தி. கங்கைப். 68) என்றமையும் ஒப்பு நோக்குக. 'ஈறிலான் அன்பிற்கு எளியவன்' இறைவன் (திருவிளை. பழி யஞ்சின. 1) என்ற உண்மை இச் செய்யுளாற் பெறப்பட்டது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vijay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பி - ம். 1. தொழுவனைத்த தன்ன ; மினிரொளியே.
2. தொழும்புக்கே ; மூன்றுலகும்.
3. வுயிரெல்லாம். 171

301. ஏனவர்க்கு வேண்டி னெளிதொன்றே வெற்கன்பர்
ஆனவர்க்க மெல்லா நினக்கன்ப ராயினர்
தானவர்க்கு வேந்தனீ யென்னுந் தரத்தாயோ
வானவர்க்கு நீயே யிறைதொன் மறைவல்லோய்.

'தொல் மறை வல்லோய் - பழமையான வேதங்களில் வல்லவனே! எற்கு அன்பர் ஆனவர்க்கம் எல்லாம் - எனக்கு அடியவரான எல்லாவகையினரும், நினக்கு அன்பர் ஆயினர் - உனக்கு அடியார்கள் ஆயினர்; எனவே, நீ தானவர்க்கு வேந்தன் என்னும் தரத்தாயோ - நீ அசுரர்கட்கு மாத்திரம் மன்னன் எனப் படும் தகுதி யுள்ளவனோ? நீயே வானவர்க்கும் இறை - நீயே தேவர்கட்கும் அரசனாக ஆகுவை; ஏனவர்க்கு வேண்டின் எளிது ஒன்றோ - இத்தகைய பெருமை உன்னையல்லாது பிறர் (அவர்) விரும்பினும் அவர்கள் எளிதில் அடையக்கூடிய பொருளாகுமோ? ஆகாது.

ஏனையர் என்பது இங்கு ஏனவர் என வந்தது; இஃது ஏனோர் எனவும் வரும். 'எற்கன்பர் ஆனவர்க்க மெல்லாம் நினக் கன்ப ராயினர்' (ஒப்பு): இப் படலம் 171-ஆம் உரை காண்க. வர்க்கம் - வடசொல்; இங்கே வருக்கம் என்று 'ரவ்விற் கம்முதலா முக்குறிலும்' (நன். உயிரிற். 21) என உகரம் ஏற்றுவரற்பாலது இயல்பாகவே நின்றது. 'நீ தானவர்க்குமட்டும் வேந்தனன்று, வானவர்க்கும் நீயே தலைவன்' என்று அருளினன் பெருமான். 'பொருந்துமோர் மனுவின் காலம் போற்றுசீர் வேந்தனாகி, இருந்தபின் னெனதுபாத மெய்துக வெனச்சொன் னானல்' (பாகவதம். 7·2·106); தொன்மறை வல்லோய்: 'நாமமறை யோதா தோதி நனியுயர்ந்தான்' (இரணிய. 175) காண்க.

பி - ம். 1. ஏனையர்க்கும் ; வேண்ட வெளிதன்றே, வேண்டி லெளிதன்றே.
2. ஆன்மாக்க ளெல்லாம், ஆனவர்க ளெல்லாம் ; நினக்கன்ப ராகினர்.
3. வேந்தனே ; தரத்தையோ.
4. மானவர்க்கும் ; நீயே யிறைவன், யிறைதொன், யிறையே. 172

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**302.** **நல்லறமும் மெய்ம்மையும் நான்மறையும் நல்லருளும்**
**எல்லையின் ஞானமு மீறிலா வெப்பொருளும்**
**தொல்லைசா லெண்குணனும் நின்சொற் றொழில்செய்க**
**வல்லவுரு வொளியாய் நாளு வளர்க நீ.**

'வல்ல உரு ஒளியாய் - சிறந்த உடல் தேஜஸ் உடையவனே! நல் அறமும் - உயர்ந்த தருமமும், மெய்ம்மையும் - சத்தியமும், நால் மறையும் நல் அருளும் - நான்கு வேதங்களும் சிறந்த கருணையும், எல்லையில் ஞானமும் - அளவிறந்த ஞானமும், ஈறு இலா எ பொருளும் - இறுதியில்லாத எந்தப் பொருளும், தொல்லை சால் எண் குணனும் - பழமை நிறைந்த மிக்க எட்டுக் குணங்களும், நின் சொல் தொழில் செய்க - உன் ஏவலை மேற் கொண்டு வினைகள் ஆற்றக்கடவன; நாளு வளர்க நீ - நீ நாளுகவே விளங்கி வாழ்வாயாக.

பெருமான் தனக்கும் பிரகலாதாழ்வானுக்கும் பேதமில்லை என்று அருளிச்செய்தவாறும். 'சத்யம ஞானம் அனந்தம் பிரும்மா' என்பது வேதம். இறைவன் அறமூர்த்தி, சத்திய மூர்த்தி, வேதவடிவன், அருள்வடிவன், ஞானவடிவன், உலகனைத் தும் ஓர் வடிவமானவன். இதுபோன்ற பண்புகள் அனைத்தும் பிரகலாதனிடமும் உண்டாகுமாறு ஆசி கூறினன். எண் குணங் களாவன: தன்வயத்தனுதல், தூய உடம்பினனுதல், இயற்கை யுணர்வினனுதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பி லின்பமுடைமை என்ப. மற்றும், வாத்ஸல்யம் (அன்பு), ஸ்வா மித்வம் (தலைமை), ஸௌசீல்யம் (தூய தன்மை), ஸௌலப்யம் (எளிவந்த தன்மை), ஞானம், சக்தி, பிராப்தி, பூர்த்தி என்றும் கூறுவர். குறள். 9; பரி உரையும் காண்க. நல்லறம்; 'அறத்தின் மூர்த்தி' (அயோத். மந்திர. 3); நல்லருள்: 'கருணையின் நிலைய மன்னுன்' (யுத்த. அங்கதன். 2); 'தீர்த்தன்' (யுத்த. கும்ப. 166); 'தருமமென் றறிஞர் சொல்லும் தனிப்பொருள்' (யுத்த. மூலபல. 70) முதலிய தொடர்மொழிகளால் இராமபிரான் இந் நூலிற்கண் ஆங்காங்குக் கூறப்படுதலும் காண்க. நின்சொல் தொழில்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


செய்க - நின் ஏவல் பூண்டு ஒழுகுக என்றவாறும். வல்ல உரு வொளியாய் : இது எம்பெருமானுடைய ஸ்வரூப நிலேயும் ஆம். நானுக என்பது, நானு எனக் குறைந்தது.

பி - ம். 1. மேன்மையு நாம மறை நான்கும்

2. எல்லேயில்.

3. தொழில் செய்ய, தொழில் செய்க.

4. நல்லவுரு, மல்லலுரு, நல்லேயுரு ; மல்லலுரு வொழிய ; நானுய் ; நாளும் வளர்க நீ.

173

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

சீலமு றுமேவாயுனக்குச் செப்பும் திருநாமம்
மேலோர் புகழ்பிரக லாத னெனவிரும்பி
நால்வேத வாய்மை நனிமா தவத்தோரும்
மேலாம் அமரர்களும் யாரும் விளம்பவென்றுன்.

## நரசிங்கமூர்த்தி தேவர்களிடம் பிரகலாதனுக்கு முடிசூட்ட ஆவன செய்க எனல்

303. என்று வரமருளி யெவ்வுலகும் கைகூப்ப
முன்றில் முரச முழங்க முடிசூட்ட
நின்ற வமர ரனேவீரு நேர்ந்திவனுக்
கொன்று பெருமை யுரிமை புரிகென்றுன்.

(சிங்கமூர்த்தி), என்று வரம் அருளி - மேற்கூறியவாறு வரம் அளித்தருளி, 'எ உலகும் கை கூப்ப - எல்லா உலகங்களும் கை குவித்து நிற்ப, முன்றில் முரசம் முழங்க - அரண்மனேயின் ஆசார வாசலில் மும்முரசமும் ஒலிக்க, முடி சூட்ட - நான் பிரகலாதனுக்கு மகுடம் சூட்டுமாறு, நின்ற அமரர் அனேவீரும் - இங்கு நின்று கொண்டிருக்கும் தேவர்களாகிய நீங்கள் எல்லோரும், நேர்ந்து - உளம் ஒப்பி, இவனுக்கு ஒன்று பெருமை உரிமை புரிக என்றுன் - பொருத்தமான சிறப்புற்ற உரிய செயல்களே இயற்றுவீராக' என்று கூறியருளினுன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

முன்றில்; இல்முன் என்பதன் இலக்கணப் போலி. இரண்டாம் அடி முற்றுமோனை. நின்ற அமரர் - நரசிங்கப்பெருமானைக் காணவந்த தேவர்கள்; (இரணியன். 156—161) பார்க்க. முரசம் - அரசர்க்குரிய முரசங்கள். மூன்றென்ப: அவை வெற்றி முரசு, வீர முரசு, கொடை முரசு; வீர முரசுக்குப் பதிலாக மண முரசும் கொள்வர். 'இமிழ்குரன் முரச மூன்றுடனாளும்' (புறநா. 58).

பி - ம். 1. முரசு; முடிசூட்டி.
3. அமரரையு நீர்விரும்பி, அமர ரணைவரும், அமர ரணைவோரும்; வந்திவனுக்கு, நேராக.
4. புரிகென்றார், புரிகின்றார். 174

## பிரகலாதன் மூவுலக ஆட்சியை ஏற்றல்

304. தேம னுரிமை புரியத் திசைமுகத்தோன்
ஓம மியற்ற வுடையான் முடிசூட்டக்
கோமன் னவனுகி மூவுலகுங் கைக்கொண்டான்
நாம மறையோதா தோதி நனியுயர்ந்தான்.

(சிங்கப் பெருமானுடைய ஆணையின்படியே), தேமன் - தேவர்களும் அத்தேவர்களின் இறைவனான இந்திரனும், உரிமைபுரிய - உரிய பணிவிடைகளைச் செய்யவும், திசைமுகத்தோன் - பிரமதேவன், ஓமம் இயற்ற - ஓமம் வளர்த்து வைதிகக் கிரியைகளைச் செய்யவும், உடையான் முடிசூட்ட - எல்லாப் பொருள்களையும் அடிமையாகக் கொண்ட மூர்த்தி முடிசூட்டவும், கோ மன்னவனுகி - அரசர்க்கரசராகி, நாமம் மறை ஓதாது ஓதி நனி உயர்ந்தான் - புகழமைந்த வேதங்களை ஓர் ஆசிரியன்பால் இருந்து கல்லாமலே எல்லா ஞானங்களும் கைவரப்பெற்று மிகச்சிறப்புற்ற பிரகலாதாழ்வான், மூவுலகும் கைகொண்டான் - மூன்று உலகங்களையும் தன்வயமாக்கிக் கொண்டான்.

தேமன் - தேவர்களும் அவர்கட்கிறைவனான இந்திரனும் உம்மைத் தொகை. தே - தேவ என்ற வடசொல்லின் விகாரம். தேமன் - இந்திரன் என்றும் கூறலாம். திசைமுகத்தோன் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நான்முகன். ஹோமம் என்ற வடசொல் ஓமம் என நின்றது; 'ஓம வேள்வியி னுறுபத முய்ப்பதும்' (யுத்த. இரணிய. 42). கோமன்னவனுகி - அரசர்க்கரசாகி, 'நான்மறை ஓதாதோதியவன்' பிரகலாதன்; 'பண்டை நற்றவத்தாற் றோன்றிப் பரமனைப்பத்தி செய்யும் தொண்டர்களில் ஒருவன் ஆகலின், இங்ஙனம் கூறினர். (ஒப்பு): 'ஓத லின்றியே வுணர்வு கூருமிக் காத லன்றனைக் கற்க வைத்தனன்' (பாகவத. 7·2·35); 'ஓத வேண்டுவதில்லை யென் னுணர்வினுக் கொன்றும், போதியாததுமில்லை' (யுத்த. இரணிய. 27): வருதிறத்தின் மறைநான்கும் தந்தோம் என்று மந்திரங்கள் மொழிந்த வர்க்கு மதுர வாக்கால், பொருவிறப்ப வோதினர் புகலி வந்த புண்ணியனுர் எண்ணிறந்த புனித வேதம்; 'சுருதி ஆயிர மாதி அங்கமான தொல் கலைகள் எடுத்தியம்பும் தோன்றலாரை' (பெரியபு. திருஞான: 264: 265) காண்க. வேட்டுவனுய்ப் பிறந்து வேட்டக் கலையன்றி ஒன்றும் பயிலாத கண்ணப்ப நாயனுரைக் 'கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்' என்றதும் இங்குக் காணத் தகும். நாமம் - புகழ்; 'வழுதியர் நாமம் வளர்க்கின்ற வாணன்' (தஞ்சைவா. 7). நாமம்; 'நாம மேருவும் பொன்மலை யாதலால்' ஆரணிய. 234); 'எண்ணிறந்த வரங்களைப்பெற்று, 'உலகெலா முயர்ந்தோன்' (யுத்த. இரணிய. 56). ஆகி நின்ற இரணியனுக்கும், 'மூவுலகும் கைக்கொண்டு நனி உயர்ந்தோனை பிரகலாதனுக்கும் உள்ள வேற்றுமை காணவே, அகந்தையா லழிவும், தன்னை யறிந்து தலைவனை யறிவதால் எய்தக்கூடிய நிரதிசயப் பேரின்பமும் நன்கு புலனும்.

பி - ம். 1. தேவருரிமை.

2. ஓம மியற்றி. முடிசூடிக்.

3. கோமா னவனுகி; மூவுலகு

4. நாம வருமறைநூ லோதி; நனி யுணர்த்தான். 175

## வீடணன் இரணியன் வரலாற்றை முடித்தல்

305. ஈதாகு முன்னிகழ்ந்த தெம்பெருமா னென்மாற்றம்
யாதானு மாக நினையா தீகழ்தியேல்
தீதாய் விளைதல்நனி திண்ணமெனச் செப்பினுன்
மேதாவி கட்கெல்லாம் மேலான மேன்மையான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

(இவ்வரலாற்றைக் கூறி), மேதாவிகட்கு எல்லாம் மேலான மேன்மையான் - அறிவுடையவர் யாவரினும் மேம்பட்டவனுன சிறப்பு வாய்ந்த வீடணன், (இராவணனை நோக்கி), 'எம் பெருமான் - எங்கள் தலைவனே! முன் நிகழ்ந்தது ஈதாகும் - முன் நடைபெற்ற இரணியன் வாழ்க்கை வரலாறு இதுவாகும்; என் மாற்றம் யாதானும் ஆக நினையாது - நான்கூறும் செய்தி ஏதோ பொருள் உள்ளது எனவே கருதத் தக்கது என்று எண்ணுமல், இகழ்தியேல் - இகழ்வாயாகில், தீதாய் விளைதல் நனி திண்ணம் - தீமையாகி முடிதல் மிகவும் உறுதி' என - என்று, செப்பினுன் - சொன்னுன்.

'மேதாவிகட் கெல்லாம் மேலான மேன்மை யான்' மேதாவி - பேரறிஞன்; வேதத்தின் வழங்கும் சொல்: 'மேதாவி பூயாசம்' என்றது காண்க. (ஒப்பு): 'ஆயவன் தனக் கருமகன் அறிஞரி னறிஞன்' (யுத்த. இரணிய. 19); 'ஞான நாயகன்' (யுத்த. இரணிய. 23). மாற்றம் - செய்தி, ஆரணிய. 562.

பி - ம். 3. தீதாய் வருதல்; திடமென்று. 178

இரணியன் வதைப்படலம் முற்றும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 4. வீடண னடைக்கலப் படலம்

இது வீடணாழ்வான் இராமபிரானைச் சரணம் அடைந்ததைக் கூறும் படலம் என விரியும். இது விபீஷணப் பெருமாள் அடைக்கலப் படலம் என்றும் விபீஷணன் அடைக்கலப் படலம் என்றும் பிரதிகளில் காணப்படுகிறது.

## இராவணன் வீடணனிடம் சினம் கொள்ளுதல்

306. கேட்டன னிருந்துமக் கேள்வி தேவியிற்
கோட்டிய சிந்தையா லுறுதி கொண்டிலன்
மூட்டிய தீயென முடுகிப் பொங்கினன்
ஊட்டரக் கூட்டிய வனைய செங்கணன்.

கேட்டனன் இருந்தும் - தன் தம்பி வீடணன் கூறியதைச் செவியேற்றிருந்தும் இராவணன், அ கேள்வி - அந்தக் கேள்வி கொண்டு, தேவியில் கோட்டிய சிந்தையால் - சீதாப்பிராட்டியின் மோகத்தால் மாறுபட்ட உள்ளத்தான் ஆகலின், உறுதி கொண்டிலன் - மன உறுதி கொள்ளாமல், ஊட்டு அரக்கு ஊட்டிய அனைய செம் கணன் - ஊட்டத்தக்க செவ்வரக்கு ஊட்டியது போன்று ஒளிரும் கண்களை யுடையவனாகி, மூட்டிய தீ என முடுகி பொங்கினன் - நன்கு கொழுந்துவிட் டெரியுமாறு கொளுத்திய தீயை ஒத்துச் சினம் மூண்டெழுந்தான்.

தேவியிற் கோட்டிய சிந்தையன்: 'பூவை சானகிவுருவெளி ஒரு முகம் பொருந்த'; (சுந்தர. 1092): 'தேவிய னேமியாணிற் சிந்தைமெய்த் திருவினேக' (சுந்தர. 308); 'சிற்றிடைச் சீதை யென்னும் நாமமும் சிந்தைதானும், உற்றுடன் ஒன்றாய் நின்றால் ஒன்றைவிட் டொன்றை யுன்ன, மற்றொரு மனமும் உண்டோ, மறக்கலாம் வகைமற்றியாதோ' (ஆரணிய. 637). வேறொன்றின் மீது கொண்ட மனம் அறிவு நீங்கல்; ; (ஒப்பு): 'மையலா லறிவு நீங்கி' (பால. அகலிகை. 75); 'தையலார் மயலிற் பட்டோர் தமக் கொரு மதியுண் டாமோ' (திருவிளை. இந்திரன்பழி. 4). கோட்டிய - வளைந்த; 'நகைமுகம் கோட்டி நின்றாள்' (சீவக. 1568). மூட்டிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தீ - கொளுத்தப்பட்ட தீ; இதற்கு எதிரிடையான மூட்டாத் தீயினையும் ஆசிரியர் குறிப்பர்; (அயோத்தி. நகர்நீ. 115). ஊட்டரக்கு: சீவக.: 642. இச் செய்யுள் தன்மைத் தற்குறிப்பேற்ற வணி.

பி - ம். 1. இருந்தவர், னிருந்துழி; தேவிபாற்; தேர்விலாச்; கேள்வி தேர்கலாக்; கேள்வியிற் கோட்டிய.

2. சிந்தையான், சிந்தியா; யொன்றுங் கொண்டிலன்.

3. முனிந்து, முருங்கி, முருக்கிப்; பொங்கினன்.

4. ஊட்டிய தனைய வுன்கனுன்- 1

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

சிரத்தொகை யனைத்தையும் துளக்கி நீறெழக்
கரத்தொடு கரம்பல புடைத்துக் காளை நீ
உரைத்திடும் உறுதிகள் நன்று நன்றெனச்
சிரித்தனன் கதமெழுந் தினைய செப்புவான்.

307. இரணிய னென்பவ னெம்மு னோரினும்
முரணிய னவன்றனை முருக்கி முற்றினன்
அரணிய னென்றவற் கன்பு பூண்டனை
மரணமென் றொருபொருண் மாற்றும் வன்மையோய்.

(இராவணன் வீடணனை நோக்கி), 'வன்மையோய் - ஆற்றல் படைத்தவனே! இரணியன் என்பவன் எம் முனோரினும் முரணியன் - இரணியன் என்பவன் எங்கள் மூதாதையர்களைக் காட்டிலும் வலியன், அரணியன் - தன்னைச் சரண் அடைந்தவரைக் காக்கவல்ல திருமால், அவன் தனை முருக்கி முற்றினன் - அந்த இரணியனை அழித்து ஒழித்தான்; என்று அவற்கு அன்பு பூண்டனை - என்று கருதி அவனிடம் அன்பு கொண்டாய்; மரணம் என்று ஒரு பொருள மாற்றும் - எத்தகைய வலியையும் மரணம் என்ற ஓர் விஷயம் மாற்றிவிடும்.

முரண் - மாறுபாடு; இங்கே வலிமை. முருக்குதல் - அழித்தல்; 'முருக்கிமிரு தக்குலமு டித்து' (சுந்தர. 614). அரணியன்: சரண்யன் என்ற வடசொல்லின் தமிழாக்கம். கடையடிக்கு: 'ஜாதஸ்யஹி த்ருவோ மிருத்யு'; 'நெருநல் உளனொருவன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இன்றில்லை யென்னும், பெருமை யுடைத்திவ் வுலகு' (குறள். 336) என்ற இடங்களால் மாற்றும் வன்மை எவர்க்கும் இல்லை என்க. இனி, இந்த உண்மையை இராவணனும் உணர்ந்திருந்தான் என்பதை, 'இன்றுளார் நாளை மாள்வர் புகழுக்கும் இறுதி யுண்டோ'; 'பொன்றுதல் ஒரு காலத்துந் தவிருமோ' (யுத்த. இந்திரசித்துவதை. 10) என்பன கொண்டறிக. தான் புரிந்த தவத்தினாலும் பெற்ற வரங்களினாலும் சாகாமையை எய்த வியலாது என்பதற்கு இரணியன் வரலாறே சான்று. மரணமு மில்லாமல் செய்துகொள்ளும் வன்மை யுடையவனே என்றும் வீடணனுக்கே இயைத்தும் பொருள் கூறுவர். 'அரணியன் - முல்லை நிலத்தவன். அரணியம் - காடு' என்பது பழைய உரை. வன்மையோ என்ற பாடம்கொண்டு பொருள் கூறுவாரும் உளர்.

பி - ம். 1. ஏம்மனேரினும், னெம்மை நேரினும்.
2. அவனையே : முற்றினேன்.
3. காணிவ னென்றவற், என்பவர்க்.
4. வண்மையோ, வன்மையோ, வண்மையோய். 2

308. ஆயவன் பயந்ததன் றாதை யாகத்தை
மாயவன் பிளந்திட மகிழ்ந்த மைந்தனும்
ஏயும்நம் பகைஞனுக் கினிய வன்புசெய்
நீயுமே நிகர்பிறர் நிகர்க்க நேர்வரோ.

'ஆயவன் - அப்படிப்பட்டவனாகிய, பயந்த தன் தாதை ஆகத்தை - தன்னைப் பெற்ற தன்னுடைய தந்தையின் உடலத்தை, மாயவன் பிளந்திட - நரசிங்கமூர்த்தி கிழித்தது கண்டு, மகிழ்ந்த மைந்தனும் - வருந்தாது மகிழ்ச்சிகொண்ட அவன் மகன் பிரகலாதனும், ஏயும் நம் பகைஞனுக்கு - பொருந்திய நம்முடைய விரோதிகளிடத்து, இனிய அன்பு செய் - இனிதாக அன்பு பூண்டு ஒழுகும், நீயுமே நிகர் - நீயுமே (ஒருவர்க் கொருவர்) ஒப்பாவீர்கள் ; பிறர் நிகர்க்க நேர்வரோ - மற்றவர்கள் உங்களுக்கு ஒப்பாகப் பொருந்துவரோ ?

பயந்த: 'நாமம் பயிற்றவோ நினைப்பயந்தது நான்' (யுத்த. 180) என்று இரணியன் கூறுதல் காண்க. விரோதிகளிடம் அன்பு கூர்வதில் நீயும் பிரகலாதனுமே ஒத்து விளங்குகின்றீர்கள். நீயுமே - ஏகாரம் பிரிநிலை. ஓ - வினா.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி-ம். 1. பயந்த; தந்தை; யாக்கையை.
2. கல்லிய.
3. ஏயுமென்; பகைஞருக்கு, பகைவனுக்கு; நண்புசெய்.
4. பிறர் நினக்கு, நிகர்க்கு; இதற்கு; நிகர்ப்ப நேர்வமோ. 3

309. பாழிசா லிரணியன் புதல்வன் பண்பெனச்
சூழ்வினை முற்றியா னவர்க்குத் தோற்றபின்
ஏழைநீ யென்பெருஞ் செல்வ மெய்திப்பின்
வாழவோ மதித்தனை வரவற் றாகுமோ.

'பாழிசால் இரணியன் புதல்வன் பண்பு என - வலிமை நிறைந்த இரணியன் தன் மகனான பிரகலாதன் தன்மைபோன்று, சூழ்வினை முற்றி - நீ கருதுகின்ற காரியம் இனிது முடிந்து, யான் அவர்க்கு தோற்றபின் - நான் அந்த இராமனிடம் தோல்வியுற்ற பின்னர், ஏழை நீ - பேதையான நீ, என் பெரும் செல்வம் எய்தி - என்னுடைய மிகுந்த செல்வத்தைப் பெற்று, பின் வாழவோ மதித்தனை - பிறகு வாழ்வதாக எண்ணினைபோலும்; வரவற்று ஆகுமோ - (அந்த எண்ணம்) நிறைவேறவல்லதா? (நிறைவேறாது).

ஓகாரங்கள் வினாப்பொருளன. வற்று - வன்மை என்ற பண்படியாகப் பிறந்த குறிப்பு முற்று. ஏழை - செல்வமிகுதி யில்லாதவனுமாம். இலங்கேசுவரனான தன்னை அடுத்து வாழும் எளியவனாகலின் அங்ஙனம் கூறினான் என்க. சூழ்வினை - ஆலோசனையும் ஆம்.

பி-ம். 2. அவற்கு.
3. எய்தினை.
4. கருத்தது; கருத்திது; வரமற்று, வாழ்விற் றாகுமோ. 4

310. முன்புற வனையர்பா னண்பு முற்றினை
வன்பகை மனிதரின் வைத்த வன்பினை
என்புற வுருகுதி யிரங்கி யேத்துதி
உன்புக லவர்பிறி துரைக்க வேண்டுமோ.

'முன்பு உறவு அனையர் பால் நண்பு முற்றினை - முன்னரே உறவு முறையார் போன்ற அந்த இராம இலக்குமணரிடம் நட்பு வளரப் பெற்றனை; வல்பகை மனிதரின் வைத்த வன்பினை -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vijay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கொடிய விரோதிகளாகிய அந்த இராம இலக்குமணர் கொண்டிருத்தல் போலவே (அரக்கரிடம்) மேற்கொண்ட விரோத முடையாய்; (மேலும்), என்புற உருகுதி இரங்கி ஏத்துதி - எலும்பும் உருகுமாறு மனம் உருகுகின்றாய் (மனம் தளர்கின்றாய்), துதிக்கின்றாய்; எனவே, உன புகல் அவர் - அவர்கள் உனக்குப் பாது காவலாக ஆவர்: பிறிது உரைக்க வேண்டுமோ - (மற்றும்) உன்னைக் குறித்து வேறு ஏதேனும் சொல்வது அவசியமா ?

முன்புற என்பதற்கு முன்னதாக என்றும் கொள்வர். வைத்த அன்பினை என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். அன்பு வைக்கும் உன்பால் அவர்கள் அன்புவைப்பார்களா என்று ஆலோசியாமல் செய்தனை என்றான் எனலும் ஆம். இனி முன்புறவு அனையர்பால் என்று கொண்டு, நமக்கு முன்பு மிகவும் கோழைத்தனம் வாய்ந்த புறாக்களை யொத்தவர் எனினுமாம், வன்பகை - அரக்கர்க்குப் பிறவிப் பகைவர். என்புற உருகுதி. (ஒப்பு): 'என்பும் உடையர் பிறர்க்கு' (குறள். 72): 'என்பெலாநெக்குடைய' (தாயு. சுகவாரி. 4). ஓகாரம் வினா.

பி - ம். 1. அன்புறுவனையர்பால்; அன்பு முற்றினை, பூண்டனை, முற்றினாய்.
2. மனிதர்பால், மனிசரின்; உதித்த, மதித்த; வன்பினோய், உருகிற்றி.
3. ஏற்றுதி.
4. உரைத்தல் வேண்டுமோ; ஒன்னுமோ. 5

311. நண்ணின மனிதரை நண்பு பூண்டனை
எண்ணினை செய்வினை யென்னை வெல்லுமா
றுண்ணினைந் தரசின்மே லாசை யூன்றினை
திண்ணிதுன் செயல்பிறர் செறுநர் வேண்டுமோ.

'நண்ணின மனிதரை நண்பு பூண்டனை - எனக்குப் பகைவராக அணுகிய மானிடரிடம் நட்புக் கொண்டாய்; செய்வினை எண்ணினை - நீ புரிய வேண்டிய காரியத்தை நன்கு ஆராய்ந்தனை; என்னை வெல்லுமாறு உள் நினைந்து - என்னை வெற்றி கொள்ளும் வகையைப் பற்றி ஆழச் சிந்தித்து, அரசின் மேல் ஆசை ஊன்றினை - இலங்கை யரசின் மீது ஆழ்ந்த காதல் கொண்டாய்; உன் செயல் திண்ணிது - உன் செய்கை மிகவும் உறுதியாக வுள்ளது; செறுநர் பிறர் வேண்டுமோ - (எனக்கு உன்னைக் காட்டிலும்) வேறுபகையும் தேவையோ ?

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'நாடாது நட்டலிற் கேடில்லை' (குறள். 791) என்றிருக்கவும், 'நண்ணிய மனிதரை நண்பு பூண்டனை' என்றான். 'அரசின்மேல் ஆசை ஊன்றினை' 304; (ஒப்பு): 'ராஜ்ய காங்க்ஷி விபீஷண:' (வான்மீகம்). ஊன்றுதல் - பற்றுமிகுதல். உடன்பிறந்த நீயே இவ்வாறு புரியுங்கால் பகைவர் வேறு தேவையோ என்றான்; 'வித்யதே ஞாதிர்பயம்' என்பது இராவணன் கூற்று' (வான்மீகம்). செறுநர் - பகைவர்; ந் - பெயர் இடைநிலை. ஓ - வினா.

பி - ம். 1. நன்னரினை, நன்னுறு.

2. வெல்லுவது.

3. உன்னினை வரசின்; உன்னரினை வரசின்;

4. செயலது, செயலின்மேற்; செறுக்க, செறுநர் நீயரோ. 6

## வேறு

312. அன்று வாநரம் மணிமலர்க் காவினை யழிக்கக்
கொன்று தின்றிடு மின்னெனத் தூதரைக் கோறல்
வென்றி யன்றென விலக்கினை மேல்வினை வெண்ணித்
துன்று தாரவர்த் துணையெனக் கோடலே துணிந்தாய்.

'அன்று - சில நாட்கட்கு முன்பு, வாநரம் மணிமலர் காவினை அழிக்க - ஒரு குரங்கு வந்து நமது அழகிய கற்பகவனத்தைச் சூறையாடுகையில், கொன்று தின்றிடுமின் என - 'இதனைக் கொன்று தின்மின்கள்' என்று நான் கட்டளையிட, தூதரை கோறல் வென்றி அன்று என - தூதுவர்களைக் கொல்லுதல் வெற்றி விளைப்பதாகாது என்று சொல்லி, மேல் வினைவு எண்ணி விலக்கினை - மேலே நடைபெற வேண்டிய காரியங்களைக் கருதி, (அவனைக் கொல்ல ஒட்டாதபடி) தடுத்தாய்; (அவ்வாறு புரிந்ததற்கு ஏற்பவே), துன்று தாரவர் துணை என கோடலே துணிந்தாய் - மலர்கள் நெருங்கித் தொகுக்கப்பெற்ற மாலை யணிந்தவர்களாகிய அம்மானிடரையே உதவியாகக் கொள்வதாக மனத்தில் உறுதி செய்து கொண்டனை.

மணி மலர்க்கா என்பதற்கு நவமணிகள் கொண்டே இயற்றப் பட்ட சோலையெனினும் ஆம்; 'கானும் பொழிலும் இவைசெங் கனகத்தி னாலும், ஏனைய மணியாலு மியற்றிய வேனும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யாவும், தேனும் மலரும் கனியுந் தரச்செய்த செய்கை' (சுந்தர. 114); 'கோறல் வென்றி யன்றெண விலக்கினை' (சுந்தர. 1152); வீடண. 86·98-ம் காண்க. மேல் விளைவு: இனி நிகழவேண்டிய காரியங்கள். இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

பி - ம். 1. வந்து நஞ்சோலையை யழிக்க, மணிமலர்ச் சோலையை.

2. கொன்று மென்றியான் கூறிய, கொன்று மின்றெனக் கூறலும்.

3. உரும்வினை, விளைவினைவு. 7

## வேறு

313. அஞ்சினை யாதலி னமர்க்கு மாளலை
தஞ்சென மனிதர்பால் வைத்த சார்பினை
வஞ்சனை மனத்தினை பிறப்பு மாறினை
நஞ்சினை யுடன்கொடு வாழ்த னன்றரோ.

'அஞ்சினை ஆதலின் அமர்க்கும் ஆளலை-(நமது பகைவரைக் கண்டு) பயந்தனை ஆதலின், நீ போர் செய்தற்குத் தக்க வீரன் ஆகமாட்டாய்; தஞ்சு என மனிதர்பால் வைத்த சார்பினை-(நமக்குப்) புகலிடம் என்று மானிடரிடம் கொண்ட பற்றினை உடையாய்; வஞ்சனை மனத்தினை பிறப்பு மாறினை-கரவு பொருந்திய மனத்துடன் கூடியவனாய் (அரக்கர் பிறப் பொழுக்கத்தினின்று) மாறிவிட்டனை; எனவே, (உன்னுடன் பொருந்தி வாழ்வதைக்காட்டிலும்), நஞ்சினை உடன் கொடு வாழ்தல்-விடத்தை உடன்கொண்டு வாழ்வது, நன்று-நல்லது. அரோ-அசை.

'பயந்தனை யாதலின் போர் செய்யும் ஊக்கம் உனக்கில்லை. பகைவரான மனிதரிடம் பற்றுக் கொண்டுள்ளாய்; வெளிப் பகையைக்காட்டிலும் உட்பகை மிகவும் கொடியது; எனவே, உன்னுடன் உறவாடுவது நஞ்சொடு பழகுவது போலும்' என்றான். 'அஞ்சுக கேள்போற் பகைவர் தொடர்பு'; 'உறன் முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா, னேதம் பலவும் தரும்; அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொரு, துட்பகை யுற்ற குடி; உடம்பாடி லாதவர் வாழ்க்கை குடங்கருட், பாம்போ டுடனுறைந் தற்று' (குறள். 882, 885, 888, 889) காண்க. 'நஞ்சினை யுடன்கொடு வாழ்தல்' என்ற கருத்து முதனூலிலும்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காணப்படும். பிறப்பு மாறினை - அரக்கர் பிறப்பின் ஒழுக்கத்தை மாற்றிவிட்டாய்; அதாவது, கொலை களவு முதலிய பாவச் செயல்களே அரக்கர்க்குரிய தொழில்களாயிருக்க நீ தயை அன்பு முதலியவற்றை மேற்கொண்டாய் என்றான்; (ஒப்பு): 'நங்குலத் தலைமைவிட்டான் நலப்பட்டான் தேவர்க்கு' (பெரியபு. கண்ணப்ப. 116); 'கள்ளநீர் வாழ்க்கை யேமைக்கைவிட்டுக் காலும்விட்டான்' (யுத்த. கும்ப. 169). இத்தொடர், பின் நிகழ்வதை முன் குறிப்பது போலும் காணப்படுவது உய்த்துணர்க; (ஒப்பு): 'அல்லது புரிது மேல் அரக்க ராதுமால்' 'களவிய லரக்கன் பின்னே தோன்றிய கடன்மைதீர, இளையவற்கவித்த மோலி யென்னையும் கவித்தி என்றான்' (யுத்த. 448) என்பன காண்க.

பா - ம். 1. ஆதலால்.
2. மனிசர்பால்; சார்வினை.
3. பிறப்பு மாற்றினை.
4. என்மையோ; வாழ்தல் வாழ்க்கையோ. 8

## இராவணன் தன் முன்னின்று வீடணனை விலக்குதல்

314. பழியினை யுணர்ந்தியான் படுக்கி லேனுனை
ஒழிகிலை புகலுத லொல்லை யேகுதீ
விழியெதிர் நிற்றியேல் விளிதி யென்றனன்
அழிவினை யெய்துவா னறிவு நீங்கினான்.

'பழியினை உணர்ந்து யான் உனை படுக்கிலேன் - (உடன் பிறப்பைக் கொன்றானே என்ற) பழிக்குப் பயந்து நான் உன்னைக் கொல்லத் துணியவில்லை; புகலுதல் ஒழிகிலை - கண்டபடி பேசுவதை நீ இன்னும் விடுத்தபாடில்லை; (ஆகையால்), ஒல்லை ஏகுதி - என்னைவிட்டுச் சீக்கிரமே செல்வாயாக; விழி எதிர் நிற்றியேல் விளிதி என்றனன் - என் கண் முன்னர் இனி நிற்பாயானால் நீ இறந்துபடுவாய்' என்று வெகுண்டு மொழிந்தான்; (யாவன் எனில்), அழிவினை எய்துவான் - இறந்து அழிவினை அடையும் பொருட்டு, அறிவு நீங்கினான் - நல்லுணர்வு நீங்கப்பெற்ற இராவணன்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuyan Vani Trust Donations


'படியின் மேற்படிந்தான் பழிபார்க்கலான்' (சுந்தர. 443) முதலியன என்றபடி, பழிக்கஞ்சாதவனான இராவணன் பழிக்கஞ்சி, இங்கு உடன்பிறப்பைக் கொல்லத் தான் அஞ்சுவதாகக் கூறுகின்றனன். எத்துணைக் கொடியவரிடத்தும் ஒரு சிறிது நற்பண்பில்லாமற்போகாது என்ற கூற்றினை இங்கு உணர்க. அழிவினை யெய்துவான் அறிவு நீங்கினான்; 'விநாசகாலே விபரீத புத்தி:' என்றது காண்க. 'நன்மையும் தீமையன்றே நாசம் வந்துற்ற நாளில்' (ஆரணிய. 756) என்ற மாரீசன் கூற்றும் இங்குக் காணத்தகும். நீங்கினான் என்பது கொண்டே நிறைந்த அறிவுள்ளவன் என்பது தொனிக்கும்; 'ஐயன் வேதம் ஆயிரம் வல்லானறிவாளன்' (சுந்தர. 483) என்று சிறப்பிக்கப்பெற்றவன் அன்றோ? எய்துவான் என்பதற்கு எய்த என்பது பொருள் எனினும், தனது ஆணவத்தாலும் விபரீத அறிவாலும் தானே தனக்கு முடிவைத் தேடிக்கொண்டவன் என்ற பொருளும் காணலாம். இராவணன் வீடணனை இச் செய்யுளிற் கூறியவாறு, நீங்குதி, விளிதி, என்று கூறியதாக முதனூல் குறிக்கவில்லை. அத்யாத்மத்தில் கம்பன் காப்பியத்திற் கூறியவாறே இராவணன் கட்டளையிட்டதாக உள்ளது.

பி - ம். 1. பழவினை யுழந்தியான்; யுணர்ந்துதான்.
2. ஒழிகில; பகருதல், புகலுதி, போகுதி, நீங்குதி.
3. விடிதி; விளிதியேயென.
4. அனைய கூறினன்.

## வீடணன் துணைவருடன் எழுந்து மேலும் இராவணனுக்கு நல்லுரை மொழிகூறி நீங்கல்

315. என்றலு மிளவலு மெழுந்து வானிடைச்
சென்றனன் றுணைவருந் தானுஞ் சிந்தியா
நின்றனன் பின்னரு நீதி சான்றன
ஒன்றல பலப்பல வுறுதி யோதினன்.

என்றலும் - என்று (இராவணன்) வெகுண்டு கூறியவுடன், இளவலும் - இளைய சகோதரனான வீடணனும், சிந்தியா - மேல் செய்யவேண்டியதை ஆலோசித்து, துணைவரும் தானும் எழுந்து வானிடை சென்றனன் நின்றனன் - துணைவருடனே தானும் எழுந்து வானத்திடைச் சென்று நின்றவனாய், பின்னரும் பின்னும், நீதி -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சான்றன - நீதி நிரம்பியனவாய், ஒன்று அல பல பல உறுதி ஓதினன் - ஒன்று அல்லாத பலப்பல நன்மை பயக்கத்தக்க சொற்களை (இராவணனுக்கு)க் கூறுவானானன். அதனை மேல் இரண்டு கவிகளிற் காண்க.

இளவல்: அல் பெயர்விகுதி. சிந்தியா - செய்யா என்னும் உடன்பாட்டு வினையெச்சம். துணைவர் - மேலே கூறப்படும் அநிலன் முதலிய நால்வர் (519). இராவணன் சினந்து தன்னை ஏகுமாறு கூறினன்; எனினும், வீடணன் உடன்பிறந்த வாஞ்சையால் மீட்டும் சில உரைகளை விளம்பினன் என்க. உண்மையில் வீடணன் அரசின்மேலாசை கொள்ளாதவன் என்பது, அவன் இராவணனுக்கு மீட்டும் உறுதி கூறியதால் விளங்கும். பல பல என்பது பலப்பல, பற்பல எனப் பலவகையாகப் புணரும்; 'பலசில வெனுமிவை தம்முன் தாம்வரின்' (நன். உயிரீற்று. 20) என்றது காண்க. வானிடைச் சென்றனன் - சிறந்த வரம் பெற்றவர்கள் மேல், கீழ், பாதலம் என்று கூறப்படும் எல்லா இடங்களுக்கும் செல்லக்கூடியவர் ஆதலின் இவ்வாறு கூறப்பட்டது. 'அந்த ரக்ஷகத ஸ்ரீமான்' என்பது வான்மீகம்.

பி - ம். 2. யமைச்சரொடு; சிந்தியான்.
3. பின்னெரு; சான்றென, சார்ந்தன, சான்றின; நீதிவாய்மைகள்.
4. ஒன்றின; பலபல. 10

316. வாழியாய் கேட்டியால் வாழ்வு கைம்மிக
ஊழிகாண் குறுநின துயிரை யோர்கிலாய்
கீழ்மையோர் சொற்கொடு கெடுத னேர்தியோ
வாழ்மைதா னறம்பிழைத் தவர்க்கு வாய்க்குமோ.

'வாழியாய் - வாழ்வை விரும்புபவனே! கேட்டி - நான் மொழிவதைக் கேட்பாயாக; வாழ்வு கைம்மிக - நல்வாழ்வானது பெருக, ஊழி காண்குறு நினது உயிரை ஓர்கிலாய் - நெடுங்காலம் இருந்து வாழ்தற்குரிய உன் உயிரைப்பற்றி ஒன்றும் கருதாதவனாய், கீழ்மையோர் சொல் கொடு - அறிவு ஒழுக்கங்களில் இழிந்தவர்களின் உரைகளைக் கேட்டு, கெடுதல் நேர்தியோ - நிலைகுலைதற்கு உடன்படுவையோ? வாழ்மை தான் அறம் பிழைத்தவர்க்கு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வாய்க்குமோ - சிறந்த வாழ்வென்பது தருமநெறியினின்றும் மாறினவர்கட்கு உண்டாகுமோ? ஆல் - அசை. ஓ - வினா.

கைம்மிகல் - மேம்படுதல்: 'புலவி கைம்மிக' (ஆரணிய. 591). ஊழி காண்குறு நினதுயிர்; கடுந்தவம் புரிந்து நீண்ட ஆயுள் பெற்றவனாதலின் இங்ஙனம் கூறினன்; 'முக்கோடி வாழ்நாளும்' (யுத். இராவணன். 198) என்றது காண்க. கடையடிக்கு ஒப்பு: 'அறத்திறனாலே யெய்தினை யன்றோ வதுநீயும், புறத்திறனாலே பின்னு மிழக்கப் புகுவாயோ' (ஆரணிய. 733); 'கண்டக ருய்ந்தாரெவரையா' (ஆரணிய. 734). ஆழ்மை - ஆளுந்தன்மை என்பது ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. வாழிய; கேட்டியேல்; கைமிக.

2. குறுகின வுறுதி; ஓர்கிலை

3. கெடுதலோர்தியோ, கெடுக்க நேர்தியோ; கெடுதி; ஓர்தியோ.

4. வான்மை; வாழ்வு; பிழைத்திருப்ப தாக்குமோ, பிழைத்தவர்க்கு மாதுமோ, வாய்க்குமே, மன்னுமோ. 11

317. புத்திரர் குருக்களின் பொருவில் கேண்மையர்
மித்திர ரடைந்துளோர் மெலியர் வன்மையோர்
இத்தனை பேரையு மிராமன் வெஞ்சரம்
சித்திர வதைசெயக் கண்டு தீர்தியோ.

'புத்திரர் - உன்னுடைய புதல்வர்களும், குருக்கள் - உன் ஆசிரியர் முதலிய பெரியோர்களும், பொருவில் கேண்மையர் - ஒப்பற்ற உறவினரும், மித்திரர் - நண்பர்களும், அடைந்துளோர் - உன்னைப் புகலாகச் சார்ந்தவர்களும், மெலியர் வன்மையோர் - பலமற்றவர்களும் பலம் பெற்றவர்களுமான, இத்தனை பேரையும் - இவ்வளவு பெயர்களையும், இராமன் வெம்சரம் - இராமபிரானுடைய அம்பு, சித்திரவதம் செய கண்டு தீர்தியோ - சித்திரவதை பண்ணு வதைப் பார்த்து(ப் பின்னர்) நீ உயிர்விடப் போகின்றாயோ?

மித்திரர் - மித்ர என்ற வடசொல் திரிபு. சித்திரவதை - அங்கங்களைத் தனித்தனியாகச் சேதித்துக் கொல்லுதல்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சித்திரம் - ஒன்றைப் பலவாக்குதல் என்பர். இராவணன் இராமன் அம்பிற் கிரையாவன் என்று நன்கு அறிந்தவனுதலின், 'சித்திர வதம் செய' என்றான். ஓ - வினு.

பி - ம். 1. பொருவு ; கேள்வியர்.

2. ரடைந்தவர் ; மெலியா ; வான்மையோர், வன்மையர்.

3. இத்தனை யோரையும், இந்நுனை ; வன்சரம்.

4. சித்ரவதஞ். 12

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

நேர்வரும் உறுதியின் நிலையு ரைத்தனன்
சீரிதென் றுணர்கிலை சீறிப் பொங்கினுய்
ஓர்தரும் அறிவிலார்க் குரைக்கும் புந்தியார்
தேர்வுறி னவர்களின் சிறந்த பேதையோர்.

318. எத்துணை வகையினு முறுதி யெய்தின
ஒத்தன வுணர்த்தினே னுணர கிற்றிலை
அத்தவென் பிழைபொறுத் தருளு வாயெனு
உத்தம னந்நக ரொழியப் போயினுன்.

'எத்துணை வகையினும் - எவ்வளவோ விதங்களிலும், உறுதி எய்தின - நன்மை பயக்கக்கூடியனவும், ஒத்தன - (நீதி நூலுக்கு) இயைந்தனவுமான நல்ல பொருள்களை, உணர்த்தினேன் - தெரிவித்தேன் ; உணர கிற்றிலை - நீ அவற்றை அறியும் ஆற்ற லற்றவனுயினை ; அத்த - என் தலைவனே, என் பிழை பொறுத்து அருளுவாய் எனு - நான் செய்த தவறுதல்களை மன்னித்தருள்வா யாக' என்று இராவணனை நோக்கிச் சொல்லிவிட்டு, உத்தமன் அந்நகர் ஒழிய போயினுன் - குணம் செயல்களால் மிகவும் சிறந்தவ னுன அந்த வீடணன் அந்த இலங்காபுரியை நீத்துச் செல்ல லானுன்.

உறுதி பயப்பனவும், காலம் இடங்கட்கேற்பனவுமான உண்மைகளைக் கூறவேண்டிய முறைப்படி வீடணன் கூறியது முதலிரண்டடிகளிற் பெறப்படும். தன்னிடம் பிழையொன்றும் இன்றெனினும் தமையன் மனத்துப் பிழை யெனப்படின், அதனை யும் பொறுத்தருளுமாறு நயம்படக் கூறினன். 'ஜேஷ்ட ப்ராதா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பிதுர் சம:' என்றபடி தமையன் தந்தையை ஒப்பாதலின், 'அத்த' என்றான். பிழையொன்றும் அவன்பாலின்றென்பது அவனை 'உத்தமன்' என்று அடுத்த அடியிற் கூறியதுகொண்டு பெறப்படும். ஒழிய - நீத்து என்ற பொருளோடு, அழிய என்னும் அமங்கலப் பொருளையும் காட்டும்; இவன் நீத்துச் சென்றது இலங்கை அழியக் காரணமாதலின் என்க. இங்கு வீடணன் இராவணனுக்குத் தத்துவம் போதித்து விலகினதாக அத்யாத்மம் கூறும்.

பா - ம். 1. எந்தனை வகையெனும்; யெய்திய, யெய்தினன்; யேய்ந்தன, யென்னின, யொப்பன.
2. உணர்த்தினன், உணர்கிற் றிலையெல், உருகுகிற்றிலை.
3. ஒத்தென; அருளுவாயென, அருடியால்.
4. னன்னகர். 13

## அனலன் முதலிய நால்வர் உடன்சென்றமை

**319.** அனலனு மனிலனு மரன்சம் பாதியும்
வினையவர் நால்வரும் விரைவின் வந்தனர்
கனைகழற் காலினர் கருமச் சூழ்ச்சியர்
இனைவரும் வீடண னோடு மேயினர்.

கனைகழல் காலினர் - ஒலிக்கின்ற வீர கண்டை புனைந்த பாதங்களை யுடையவரும்; கரும சூழ்ச்சியர் வினையவர் - புரிய வேண்டிய காரியங்களை ஆராய்ந்து புரிபவரும் நல்வினை யுடையவர்களுமான, அனலனும் அனிலனும் அரன் சம்பாதியும் - அனலன், அனிலன், அரன், சம்பாதி என்ற அமைச்சர்களாகிய நால்வரும், இனைவரும் வீடணனோடும் ஏயினர் - (தமையன் தன் நல்லுரைகளைக் கேளாமையின் தான் பிரிய நேர்கின்றதே என்று) வருந்தி நின்ற வீடணனோடும் கூடி நின்றனர்.

முன் 315-ஆவது பாடலில் 'துணைவர்' என்றதை இங்கு விளக்குகின்றார் ஆசிரியர். அரக்கர் தம் பெரும் குழுவில் இந் நால்வர்கள்மட்டும் வீடணனோடு மேயினர் ஆகலின், இவர்களை நல்வினையவர் என்று கூறலாம். வீடணன் மந்திரிமார் நால்வரும் அவன் மாமன்மார் என்ப. இனைதல் - வருந்துதல்; 'இனைந் திரங்கிப் பள்ளிபடுத்தார்களே' (சீவக. 292). 'முன்னர் விழியெதிர் நிற்றியேல் விளிதி' (யுத்த. 314) என்றமையின், 'துணைவர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விரைவின் வந்தனர்' எனப்பட்டது. முதனூலில் நான்கு அரக்கர்கள் எனக் கூறப்பட்டுள்ளதன்றி அவர்களின் பெயர்கள் குறிக்கப்படவில்லை.

பி - ம். 2. இளையவர் ; எய்தினர்.
3. சூழ்ச்சியார்.
4. அளையவர், அளைவரும், அளையரவ் ; ஆயினர், பேசினர், மேவினர்.

## இராமன் கடற்கரை வரவுகேட்டு ஐவரும் அங்குச் செல்லுதல்

320. அரக்கனு மாங்கணோ ரமைச்சர் நால்வரும்
குரக்கினத் தவரொடு மனிதர் கொள்ளைநீர்க்
கரைக்கண்வந் திறுத்தன ரென்ற காலையில்
பொருக்கென வெழுதுமென் றெண்ணிப் போயினர்.

**ஆங்கண்** - அவ்விடத்து, **அரக்கனும் ஓர் அமைச்சர் நால் வரும்** - அரக்கனாகிய வீடணனும் ஒப்பற்ற நான்கு மந்திரிமார் களும், **குரக்கு இனத்தவரொடு** - குரங்கு வர்க்கத்தினராகிய சுக்கிரீவன் முதலியோருடனே, **மனிதர்** - இராம இலக்குமணராகிய இருவரும், **கொள்ளை நீர் கரைகண் வந்து இறுத்தனர்** - பெரு வெள்ளமாகிய கடலின் கரையிலே வந்து தங்கியுள்ளனர், **என்ற காலையில்** - என்ற சமயத்தில், **பொருக்கென எழுதும் என்று எண்ணி போயினர்** - விரைவாக (அங்குச்) செல்வோம் என்று (கடலின் அக்கரைக்குப்) போயினர்.

**ஆங்கண்**, என்ற காலையில் என்று இயைத்து, அங்கு கேட்ட காலத்தில் என்றும் பொருள் கொளளலாம். **ஆங்கண்** - அவ் விடத்து ; (தொல். எழுத். 114 உரை) ; 'அகலுளாங்கண்' (மலைபடு. 438) ; 'மணிநொச்சி நிழலாங்கண்' (பொருந. 185). **கொள்ளை** - மிகுதி ; (ஆரணிய. 630) ; 'கொள்ளைமா மதத்த நால்வாய்க் குஞ்சரம்' (பாகவத. 1·5·14); **கொள்ளை நீர்** : இங்குக் கடல். **பொருக் கென** - விரைவுக் குறிப்பு.

பி - ம். 1. அங்கணோர் ; அங்ஙன் ; அரக்கர்.
2. குரக்கினக் கடலொடும் ; மனிசர்.
3. இருந்தனர்.
4. எழுந்துவே,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## விடணன் குரக்குப் படையைக் கண்ணுறல்

321. அளக்கரைக் கடந்துமே லறிந்த நம்பியும்
விளக்கொளி பரத்தலிற் பாலின் வெண்கடல்
வளத்தடந் தாமரை மலர்ந்த தாமெனக்
களப்பெருந் தானையைக் கண்ணி னோக்கினான்.

மேல் அறிந்த நம்பியும் - பின் நிகழப் போவதை உணர்ந்த தீர்க்க தரிசியான வீடணன், அளக்கரை கடந்து - கடலைத் தாண்டி (மறுகரையை அணுகி), விளக்கு ஒளி பரத்தலில் - தீபங் களின் ஒளி நிறைந்து விளங்குவதால், வெண் பாலின் கடல் - வெண்ணிறமான பாற்கடலானது, வளதட தாமரை மலர்ந்தது ஆம் என - (தன்னிடத்து) வளம் செறிந்த பெருமை வாய்ந்த தாமரை மலரப் பெற்றதுபோலும் என்று தோன்றுமாறு விளங்கிய, களம் பெருதானையை - போர்க்களத்து ஒன்றும் வானர சேனையை, கண்ணின் நோக்கினான் - கண்களாற் பார்த்தான்.

அளக்கர் : சுந்தர. 259 ; 584. மேலறிந்த நம்பி 'விளை வினை யறியும் வென்றி வீடணன்' (யுத்த. 448). வானரப் பெருஞ் சேனையில் விளக்கொளி பரந்தது ; பாற்கடலில் தாமரை மலர்ந்தது போல் என்றார். தற்குறிப்பேற்ற அணி. குரங்குகள் வெண் ணிறமும் தீபம் செந்நிறமுமாதல் உணர்க. பால் கடல் அல்லது வெண்கடல் என்றாலே அமையும், வெண்ணிற மிகுதியைக் குறிக்கப் பாலின் வெண்கடல் என்றார். இனி தடம் என்பதைப் பொய்கை என்று கொண்டு, தடத்தில் மலர்ந்த வளத்தாமரை எனினும் ஒன்றும். நோக்கினான் என்று அமையாது கண்ணின் என்றான், கூர்ந்து வியந்து கவனித்ததுபற்றி என்க. 'தாமரை விளக்கந் தாங்க' (பால. நாட்டு. 4) ; நம்பி தானையை நோக்கினான் என்றியைக்க.

பி - ம். 1. மேலெறிந்து ; போனவர்
2. யாத்தலிற் ; பாலின் வேலையின்.
3. வைக்கருந், வளத்தன.
4. பெருஞ் சேனையைக் கண்டு ; கண்ணிற் கண்டனன் ; கண்டனர். 16



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## வீடணனின் வியப்பு

322. ஊனுடை யுடம்பின வுயிர்கள் யாவையும்
ஏனைய ஒருதலை நிறுத்தி யெண்ணினல்
வானரம் பெரிதென மறுவில் சிந்தையான்
தூநிறச் சுடுபடைத் துணைவர்ச் சொல்லினன்.

'ஊன் உடை உடம்பின உயிர்கள் யாவையும் - மாமிசப் பற்றுள்ள உடலுடன் கூடிய உயிர்கள் அனைத்தும் (ஒரு புறம் நிறுத்தி), ஏனைய - மற்றுமுள்ள வானரங்களை, ஒரு தலை நிறுத்தி எண்ணினல் - மற்றொரு புறத்திலும் நிற்கச்செய்து எண்ணினல். வானரம் பெரிது என - வானரக் குலமே (எண்ணிக்கையில்) மிகுந்தது' என்று, மறுஇல் சிந்தையான் - குற்றமற்ற உள்ளத்தனன வீடணன், தூநிறம் சுடுபடை துணைவர் சொல்லினன் - மாமிசம் பொருந்தப்பெற்ற, ஒளிமிக்குக் கொல்லும் இயல்பினவான படைக்கலங்களை ஏந்திய மந்திரிமாரைப் பார்த்துக் கூறினன்.

உலகின் கண்ணுள்ள சீவராசிகளிலும் அதிகம் போன்று காணப்பட்டது அந்தக் குரக்குச் சேனை என்பது கருத்து; தொடர்புயர்வு நவிற்சியணி. மறுவில் சிந்தையான்; தூய எண்ணமுள்ளவன்; வீடணன் 'உலக மூன்றும் தலையின்மேற் கொள்ளுந் தூயான்' (யுத்த. மருத்துமலை. 13). மறுவில் - 'மறுவிலா மனத்தேனென்னின்' (சுந்தர. 561). தூ இறைச்சி 'சோதிய சோரியுந் தூவுந் துன்னின' (ஆரணிய. 397); 'நெய்கொணிணந் தூ நிறைய வமைத்திட்ட' (பு. வெ. மா. 10. முல்லை. 8). சுடுபடை, வினைத்தொகை.

பி - ம். 1. உடம்பினி னுயிர்கள், உடம்புடை.
2. ஏனைய வொருவகை.
3. மறுகும்.
4. சிறுபடைத் துணைவன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## விடணன் துணைவரிடம் உசாவுதல்

323. அறந்தலை நின்றவற் கன்பு பூண்டனென்
மறந்துநன் புகழலால் வாழ்வு வேண்டலென்
பிறந்தவென் னுறுதிநீ பிடிக்க லாயெனத்
துறந்தனெ னினிச்செயல் சொல்லு வீரென்றான்.

'அறம் தலை நின்றவற்கு அன்பு பூண்டனென் - தருமத்தையே முதன்மையாகக் கொண்டு ஒழுகுபவராகிய இராமபிரானிடம் அன்பு பூண்டுள்ளேன்; நன் புகழலால் - நல்ல கீர்த்தியினால் வரும் வாழ்வன்றி, மறந்தும் வாழ்வு வேண்டலென் - மறந்தும் கூடப் பழியை விளைக்கும் வாழ்க்கையை நான் விரும்பமாட்டேன்; பிறந்த என் உறுதி நீ பிடிக்கலாய் என - 'உடன் பிறந்துள்ள, எனது முடிவான கருத்தை நீ கடைப்பிடிக்க மறுக்கின்றாய்' என்று (இராவணன் என்னை வெகுண்டு விரட்ட), துறந்தனென் - (நான் அவனை) நீத்து வந்தேன்; இனி செயல் சொல்லுவீர் என்றான் - இந்நிலையில் நான் செய்ய வேண்டுவது என்ன' என்று (வீடணன் தன் அமைச்சர் நால்வரையும்) வினவினான்.

தலை நிற்றல்; 'தாயர் பெருநெறி தலைநின் றனனால்' (பெருங். 2, 10 : 173) : நல்லொழுக்கம் தலை நின்றார்' (பெரியபு.). புகழலால் வாழ்வு வேண்டலென் ; (ஒப்பு) : 'தோன்றிற் புகழொடு தோன்றுக' (குறள். 236) ; புகழ் என்ற அதிகார முழுதும் இங்குக் காணத்தகும். 'உறுதி நீ பிடிக்க லாயென' மேல் 13-ஆம் பாடல் பார்க்க. 'தீயாரைக் காண்பதுவும் தீதே ..... யாவரோ டிணங்கி யிருப்பதுவும் தீது' (மூதுரை. 9) ஆகலின் துறந்தனென் எனப்பட்டது.

பி - ம். 1. பூண்டனன்.
2. மறந்தனன் ; வேண்டலை, வேண்டிலேன்.
3. பிறந்தவின் னுறுதி ; பிடித்திலாயென, பிடித்திரா யெனச், பிடிக்கிலா யெனத்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## இராமபிரானைக் காண்பதே நலம் என்று அமைச்சர் கூறல்

324. மாட்சியி னமைந்தது வேறு மற்றிலை
தாட்சியிற் பொருடருந் தரும மூர்த்தியைக்
காட்சியே யினிக்கட னென்று கல்விசால்
சூட்சியின் கிழவர்கள் துணிந்து சொல்லினர்.

'தாட்சி இல் பொருள் தரும் தரும மூர்த்தியை - எவ்வகையான தாழ்வுமில்லாத உறுதிப் பொருள்களை அளிக்கவல்ல அறக்கடவுளான ஸ்ரீ இராமபிரானை, காட்சியே இனி கடன் - தரிசித்தலே இனி நாம் செய்யவேண்டிய கடமை; மாட்சியின் அமைந்தது - பெருமையுடன் கூடியதும் (அதுவேயாம்); மற்று வேறு இலை - பிறிதொன்றும் இல்லை' என்று - என்று, கல்விசால் சூட்சியின் கிழவரும் துணிந்து சொல்லினர் - ஆலோசனைக் குரியவரான அமைச்சர்களும் தெளிவாகச் சொன்னார்கள்.

தாழ்ச்சி, சூழ்ச்சி என்பன எதுகைநோக்கித் தாட்சி, சூட்சி என வந்தன. தாட்சி, சூட்சி; கந்த. திருநகரப். 22. காட்சியே என்பதில் உள்ள ஏகாரம் தேற்றம். கல்விசால் சூட்சி: இதன் விரிவைத் திருக்குறள் அமைச்சியல் கொண்டு காண்க. 'தொல்லைநல் வினையென வுதவும் சூழ்ச்சியார்' (அயோத். மந்திரப். 10) என்று தயரதனுடைய அமைச்சர் புகழப்பட்டமை காண்க. 'கருமச் சூழ்ச்சியர் வினையவர்' (யுத்த. 319) என்று இவரை முன்னர்க் குறித்ததும் இங்குக் காணத்தகும். துணிந்து - தெளிவுடன். துணிதல் - தெளிதல்: 'துன்னல்போகிய துணிவினோர்' (புறநா. 23; 14) என்ற இடத்துச் சூழ்ச்சித் தெளிவினை யுடையோன் என உரை கூறியது காண்க. 'நெஞ்சத்துத் துணிவில்லோரே' (புறநா. 214 : 3).

பி - ம். 1. சிறந்துறல்; மற்றும் வேறிலை.
2. தாழ்ச்சியில்; பெரும்படைந்.
4. கிழவரும்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## அமைச்சர் கூறியதை உடன்பட்டு வீடணன் கூறுதல்

325. நல்லது சொல்லினீர் நாமும் வேறினி
அல்லது செய்துமே லரக்க ராகுதும்
எல்லையில் பெருங்குணத் திராமன் றாளிணை
புல்லுதும் புல்லிய பிறவி போகவே.

(அமைச்சர்களை நோக்கி வீடணன்), 'நல்லது சொல்லினீர் - நல்ல உரைகளையே மொழிந்தீர்கள்; நாமும் - நாம், இனி வேறு அல்லது செய்து மேல் அரக்கர் ஆகுதும் - இனிமேல் (நீங்கள் கருதியது) அல்லாததாகிய ஒன்றைப் புரிவோமானால், அரக்கர் செயலையே மேற்கொண்டவராக எண்ணப்படுவோம்; (ஆதலின்), எல்லையில் பெரு குணத்து இராமன் தாளிணை - அளவிறந்த நற் பண்புகளையுடைய இராமபிரானது அடியிணைகளை, புல்லிய பிறவி போக - நம்மைப் பற்றியுள்ள இந்த அரக்கர் பிறப்புத் தவிரும்படி, புல்லுதும் - தழுவுவோம். ஏ - அசை.

அரக்கர்கள் அறமூர்த்தியான இராமபிரானைச் சென்று சாரார்; சார்வராயின் அரக்கராகார்; எனவே நாமும் நாம் குறித்த நற்செயலால் கொடிய அரக்கர் பிறப்பை ஒழித்தவ ராவோம், இன்றேல் அரக்கராகவே நிற்போம் என்றனன் வீடணன்; (யுத்த. 444, 445) என்பன இங்கு நோக்கத்தகும். 'அறந் துணை யாவதல்லா லருநர கமைய நல்கும், மறந்துணை யாக மாயாப் பழியொடும் வாழமாட்டேன், ................ பிறந்திலே னிலங்கை வேந்தன் பின்னவன் பிழைத்த போதே' (யுத்த. நிகும்பலை. 171); 'கள்ளநீர் வாழ்க்கை யேமைக் கைவிட்டுக் காலும் விட்டான்' (யுத்த. கும்ப. 169); 'களவிய லரக்கன் பின்னே தோன்றிய கடன்மைதீர, இளையவற் கவித்தமோலி யென்னையுங் கவித்தி யென்றான்' (யுத்த. 448) என்பனவும் காண்க. இங்கு, சமணராகவே பல்லாண்டுகள் வாழ்ந்து பின்னர்ச் சிவனரு ளாற் சைவராக மாறிய திருநாவுக்கரையர், தமது சமணப் பிறவியறுமாறு வேண்டியதைக் குறிக்கொள்ளல் தகும். 'புன் னெறியா மமண்சமயத் தொடக்குண்டு போந்தவுடல், தன்னுடனே உயிர்வாழத் தரியேனான் தரிப்பதனுக், கென்னுடைய நாயகநின் னிலைச்சினையிட் டருளென்று, பாடுவார்' (பெரியபு. திருநாவுக். 150)

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்பதும், 'மின்னுரு முவிலைச்சூல மென்மேற் பொறிமேவு' என்ற அவரது பாசுரமும் நினைவு கூரத்தகும்.

பி-ம். 2. அல்லது நினைதுமேல்; ஆதுமால், ஆகுவர்; போலுமால்.

4. புல்லியிப் பிறவி போக்குதும்; போக்குவோம்; போகவோ, போகுமால். 20

326. முன்புறக் கண்டிலேன் கேள்வி முன்பிலேன்
அன்புறக் காரண மறிய கிற்றிலேன்
என்புறக் குளிருநெஞ் சுருகு மேலவன்
புன்புலைப் பிறவியின் பகைஞன் போலுமால்.

'முன்பு உற கண்டிலேன் - இதற்கு முன்பாக நான் அவ்விராமபிரானைத் தரிசித்ததில்லை; கேள்வி முன்பிலேன் - அவரைப் பற்றி முன்பு கேட்டறிந்ததுமில்லை; (அங்ஙன மிருந்தும்), அன்பு உற காரணம் அறிய கிற்றிலேன் - அப்பிரானிடம் அன்பு மிகுதற்கு முகாந்தரம் ஒன்றும் அறியக்கூடாதவனாக உள்ளேன்; என்பு உற குளிரும் - (அவனை நினைக்கும்போதே) என்னுடைய உடல் எலும்புகள் மிகவும் குளிர்ந்து காட்டும்; நெஞ்சு உருகு மேல் - மனமும் (அனலிலிட்ட மெழுகென) உருகுமாகில், அவன் - அந்த இராமபிரான், புன் புலை பிறவியின் பகைஞன் போலும் - மிகவும் இழிவான பிறப்பை வென்றொழிக்கவல்ல விரோதியே யாவன் போல் தோன்றுகின்றது. ஆல் - அசை.

காண்டலுமின்றி ஒருவனைக் குறித்துக் கேட்டலுமின்றி ஓர் அன்பு ஒருவனிடம் தோன்றுமாயின் அஃது அப்பிராகிருத நட்பெனப்படும். இவ்வாறு அன்பு தன்பால் தோன்றற்குக் காரணம் வீடணன் பின்னிரண்டடிகளிற் கூறியுள்ளான். 'காண்டகைமை யின்றியுமுன் கலந்தபெருங் கேண்மையினார்' என்று போற்றப்படும் அப்பூதியடிகள்பால் எழுந்த அன்பும், கோப்பெருஞ் சோழன், பிசிராந்தையார் என்ற இவர்களிடை நிகழ்ந்த நட்பும், இங்கே குறிக்கொள்ளத்தகும். திருமால் அவதாரமான இராமபிரான் தனது பவப்பிணியை ஒழிக்க வல்லவன் ஆகலின் கேவலம் உடலுறவன்றி, உயிருறவென்பதைக் குறித்தது காண்க. பரம்பொருளின் கூறானவன் இராமபிரான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆதலின், 'அவனைக் காண்டற்கு முன்னரே' அவனை நினைத்தொறும், பேசும்தொறும், எப்போதும் அனைத் தெலும்புண்ணெக ஆனந்தத் தேன்சொரியும் அவனது தன்மையை வீடணன் குறித்தான் என்க. 'அழிந்தது பிறவியென்னும் அகத்தியற் முகத்தில்காட்ட' (யுத்ந. 441)-உம் காண்க; 'துன்பினைத் தொடக்கு மாயைத் தொல்வினை துடைத்துநீக்கித், தென்புலத் தன்றிமீளா நெறியுய்க்கும் தேவ ரோதாம், என்பெனக் குருகுகின்ற திவர்கின்ற தளவில் காதல், அன்பினுக் கவதி யில்லை' (கிட்கிந்நா. 56) என்ற அநுமனிடம் நிகழ்ந்த மெய்ப்பாட்டை ஒப்பு நோக்குக. புன்புலைப் பிறவி; 'புலையாம் பிறவி பிறந்து' (திருவரங்ம. கலம் : 16).

பி-ம். 1. கண்டிலன் ; மூளவே.

2. அறிய கிற்கிலன்.

3. நெஞ்சுருக்கு மெற்கவன், உருகு மென்னவன், உருகு மன்னவன்.

4. புன்புறப் பிறவி, புன்புலப் பிறவி ; பகைஞர். 21

**327.** **ஆதியம் பரமனுக் கன்பு நல்லறம்**
**நீதியின் வழாமையு முயிர்க்கு நேயமும்**
**வேதிய ரருளும்நான் விரும்பிப் பெற்றனன்**
**போதுறு கிழவனைத் தவமுன் பூண்டநாள்.**

'போது உறு கிழவனை தவம் முன் பூண்ட நாள் - திருமாலின் உந்தித் தாமரையில் தங்கியுள்ள பாட்டனாகிய பிரமனைக் குறித்து நான் தவம் செய்த காலத்து, ஆதி அம் பரமனுக்கு அன்பும் - எல்லாப் பொருள்கட்கும் முதன்மையான அழகிய பரமனிடம் பத்தியும், நல் அறம் - சிறந்த தருமமார்க்கத்தைக் கடைப்பிடித்து ஒழுகுதலும், நீதியின் வழாமையும் - நீதியிலிருந்து (அணுவளவும்) தவறாமையும், உயிர்க்கு நேயமும் - எல்லா உயிர்களிடத்தில் அன்பும், வேதியர் அருளும் - அந்தணர்களின் அருளும், நான் விரும்பி பெற்றனன் - நான் வேண்டி நின்று அடைந்தேன்.

இச் செய்யுளுடன், 'பொய்யும் களவும் பாதகமும் பொல்லா வொழுக்கு மவைகடிந்து, மெய்யும் யாவும் தருமமுடன் விளங்கும் பொறையு மிவைபூண்டு, செய்யும் செயல்க ளவையெல்லாம் சிட்டர் செய்யும் செயலாகி, அய்யன் புகழ்வீ டணன்மறைக ளறைந்த தவத்தின் வழிநின்றான்' (உத்நா. இராவணன் பிறப்பு. 20)

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்பது காண்க. 'நான் விரும்பிப் பெற்றனன், பெற்றவைகள்' (உத்தர. இராவணன் பிறப்பு. 30); 'தவமுன் பூண்டது' (உத்தர. இராவணன் பிறப்பு. 25); இப் படலம் 55-ஆம் செய்யுளையும் காண்க. ஆதியம் பரமன் - திருமால். இந்த வரத்தின் பெருமை யால்தான் தனக்கு இராமபிரானிடம் பத்தி எழுந்தது என்பது குறிப்பு. 'பண்டுதான் பலநாட் செய்த நற்றவப் பயன்றந் துய்ப்ப, முந்துறப் போந்த நம்பி' (யுத்த. ஒற்றுக் கேள்வி. 24)ம் காண்டல் தகும். மறை தந்தவனை இராமபிரானே வீடணனைத் 'தருமசீல' என்றும், 'நீதி யாறெனத் தெரிவுறு நிலைமை பெற்று டையாய்' (யுத்த. மீட்சி. 13; 150) என்றும் கூறியமை நோக்குக. பரமனிடத்தன்பு, இராமபிரான் பெயர்கேட்ட அளவில் அவன் என்புறக் குளிர்ந்தது கொண்டும், நல்லறமும் நீதியும், அவன் அண்ணனுக்கு எடுத்துரைத்த நல்லுரைகளைக் கொண்டும், உயிர்க்குநேயம் தூதனைப் போந்த அநுமனைக் கொல்லுதல் தருமமன்றென்று இராவணனுக்கு ஏதுக்கள் எடுத்துக் காட்டியது கொண்டும் வேதியர்பால் அன்பு. 'அந்தணர் இல்லெனப் பொலிந்த தாமரோ' (யுத்த. 403) என்ற தொடர் கொண்டும் அறிய லாகும்.

பி - ம். 2. வழாமலும், அவர்க்கு

3. வேதியர்க்கு; வேண்டிப் பெற்றதும், பெற்றது.

4. போதுறு.



328. ஆயது பயப்பதோ ரவதி யாயது
தூயது நினைந்தது தொல்லை யாவர்க்கும்
நாயகன் மலர்க்கழல் நணுகி நம்மனத்
தேயது முடித்துமென் றினிது மேவினான்.

ஆயது - அந்த அயன் தந்த வரம், பயப்பது - நலம் உதவுவதான, ஓர் - ஒப்பற்ற, அவதி ஆயது - காலம் (இப்போது) உண்டாகி யுள்ளது; நினைந்தது தூயது - (அமைச்சர் மாராகிய) நீங்கள் ஆராய்ந்து கூறியது குற்றமற்றதே யாகும்; தொல்லை யாவர்க்கும் நாயகன் - பழமையான எல்லோர்க்கும் தலைவனை இராமபிரா னுடைய, மலர் கழல் நணுகி - செந்தாமரை யொத்த திருவடிகளை அணுகி, நம் மனத்து ஏயது முடித்தும் என்று - நமது உள்ளத்தின் கண் எழுந்த எண்ணங்களைப் பூர்த்தி செய்வோம் (கவலையை நீக்கு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வோம்)' என்று பகர்ந்து இனிது மேவினன் - மன அமைதியுடன், வீற்றிருந்தான் (விபீடணன்).

தொல்லை யாவர்க்கும் நாயகன் : 'ஊழி முதனாயகன்' (யுத்த. ஒற்றுக் கேள்வி. 4); 'பூத நாயகன்' (யுத்த. அங்கதன். 21) முதலியன காண்க. மலர்க்கழல் - திருவடி : ஆகுபெயர்.

சில சுவடிகளில் இதன் பின் 'அளக்கரை' என்று தொடங்கும் 331 ஆம் செய்யுள் காணப் பெறுகிறது.

பி - ம். 1. அமைதி ; யாவதும், ஆவது.

2. நினைத்தது, நினைந்தனே, நினைந்தனம், நினைத்தனே, மலர்ச்சரணம் ;

3. அனுகி நம்மனம் மேயினர் ;

4. மேயது, மேவினர், போயினர் ; எண்ணி. 28

## இரவில் அவர்கள் ஓரிடத்தில் தங்குதல்

329. இருளுற வெய்துவ தியல்பன் றாமெனப்
பொருளுற வெண்ணிய புலன்கொள் புந்தியார்
மருளுறு சூழலின் மறைந்து வைகினர்
உருளுறு தேரவ னுதய மெய்தினன்.

இருள் உற - இரவு நேரம் வந்தடைந்ததனால், எய்துவது இயல்பு அன்று ஆம் என - (தாம் இராமபிரானைச் சென்றடைவது) இயற்கையாகப் புரியக்கூடிய காரியம் ஆகாது என்று, பொருள் உற எண்ணிய புலன்கொள் புந்தியார் - ஆற்றவேண்டிய வினைகளை நன்கு ஆலோசித்திருந்த அந்த அறிவமைந்த விவேகிகளான வீடணனும் அவன் நண்பரும், மருள் உறு சூழலின் மறைந்து வைகினர் - மயக்கத்தைச் செய்யக்கூடிய அந்த இடத்தில் மறைவாகத் தங்கியிருந்தனர்; (அப்பால்), உருளுறு தேரவன் உதயம் எய்தினன் - (பிறகு) ஒற்றைச் சக்கரத்தால் உருண்டு செல்லும் தேரினை உடைய சூரியன் உதயகிரியைச் சேர்ந்து விளங்கினன்.

புலம் - புலன்; இறுதிப் போலி. பகைவரிடமிருந்து தாம் செல்லுதலின் மறைந்து வைக வேண்டி நேர்ந்தது. இதற்கு


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இருள் நேரமும், மருள் உறுசூழலும் உதவினமை காண்க. உருளுறு தேரவன் ; ஒற்றையாழித் தேரைச் செலுத்தும் சூரியன்: (ஆரணிய. 82) ; 'உருளுறு தேரினனு மிலங்கை மீதோடு மன்றே' (யுத்த. 430) ; உதயம் - உதயகிரி.

பி - ம். 1. இருவிடை ; யெய்துத ; யேகுவது ; லியலன்று.

2. பொருளுற வுணர்ந்தவிப் வெண்ணிய, வெண்ணியப் ; கேள்வியர், கேள்வியார் ; பொலன்கொள் தோளினர்.

3. சோலையின்.

4. உதையம் ; ஆயினன். 24

## இராமபிரான் நிலை

330. அப்புறத் திராமனவ் வலங்கு வேலையைக்
குப்புறக் கருதுவான் குவளை நோக்கிதன்
துப்புறச் சிவந்தவாய் நினைந்து சோர்குவான்
இப்புறத் திருங்கரை மருங்கி னெய்தினன்.

(இவ்வாறிருக்க), இராமன் - இராமபிரான், அ அலங்கு வேலையை அ புறத்து குப்புற கருதுவான் - அந்த அலைகள் வீசியலைகின்ற ஆழிக்கு அப்புறம் செல்லுமாறு அதனைக் கடப்பதற்கு ஆலோசிப்பவனாய், குவளை நோக்கிதன் - கருங்குவளை மலர் போன்ற விழிகளையுடைய சீதாப்பிராட்டியின், துப்பு உற சிவந்த வாய் - பவளத்தை யொப்பச் சிவந்த அதரத்தை, நினைந்து - எண்ணி, சோர்குவான் - மனம் தளர்ந்தவனாய், இ புறத்து இரும் கரை மருங்கின் எய்தினன் - இந்தப் பக்கத்துக் கடலின் பெரிய கரை ஓரத்தில் வந்தடைந்தனன்.

குப்புறுதல் - தாண்டுதல் ; ஆரணிய. 718 ; சுந்தர. 15 காண்க. துப்பு - பவளம். உற - உவம வாசகம் ; துப்பு ; ஆரணிய. 695. சிவந்த வாய் - 'சிவந்த வாய்ச் சீதையும் கரிய செம்மலும்' (அயோத்தி. மந்தரை. 55).

பி - ம். 1. இராமனு மலங்கல், இராமனவ் வலங்கல்.

3. நினைந்துச் சோர்குவான்.

4. மருங்கின். 25

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


331. கானலுங் கழிகளும் மணலுங் கண்டலும்
பானலுங் குவளையும் பரந்த புன்னையும்
மேனிறை யன்னமும் அடம்பும் வேட்கைகூர்
பூநிறச் சோலையும் புரிந்து நோக்கினன்.

(அப்பிரான்) கானலும் - கடற்கரைச் சோலைகளும், கழிகளும் - உப்பங்கழிகளும், மணலும் - மணற்பரப்புக்களும், கண்டலும் - (அங்கு) வளர்ந்துள்ள தாழைகளும், பானலும் - ஆங்காங்குள்ள நீர்த் தேக்கங்களில் மலர்ந்துள்ள கருநெய்தல்களும், குவளையும் - கருநீல மலர்களும், பரந்த புன்னையும் - கிளைகளால் விரிந்து காணப்படும் புன்னை மரங்களும், மேல் நிறை அன்னமும் - அவற்றின்மீது அமர்ந்து காணப்படும் ஆண் அன்னப்புட்களும், அடம்பும் - அடப்ப மரங்களும், வேட்கைகூர் பூ நிற சோலையும் - ஆசை மிகுதற்குக் காரணமான மலர்களால் விளக்கமுற்று நின்ற சோலை களும், (ஆகிய இவற்றை), புரிந்து நோக்கினன் - விரும்பிப் பார்த்தான்.

கானல் ; 'புலவு மணற் பசுங்கானல்' (பட்டினப். 94). கழி - கடலையடுத்த உவர்நீர்ப் பரப்பு ; 'மாக்கழி மலர்ந்த நெய்த லானும்' (புறநா. 48 : 3). கண்டல் - தாழை ; 'கண்டல் திரை யலைக்கும் கானல்' (நாலடி. 194). பானல் : ஆரணிய. 645 ; 'கரிய பானலார் கண்ணியர்க்கும்' (திருவாச. திருச்சதகம். 19). அடம்பு - ஓர் கடற்கரை மரம்; கொடியுமாம் : 'வறளடம்பின் மலர் மலைந்தும்' (பட்டினப். 64); இஃது அடும்பு என்றும் வழங்கும்; 'அடும்பம ராத்தி' (குறிஞ்சிப். 87). இங்குக் கூறப்பட்டவை யனைத்தும் நெய்தற் கருப்பொருள்களாதல் காண்க. வேட்கைகூர் சோலை யாகலின் புரிந்து நோக்கினன் எனப்பட்டது.

பி - ம். 1. கரண்டலும்.
3. பெடையும் ; பிறவும் வேட்கைகூர்.
4. பூநிறை சூழலும், பூநறச், பூநிலை. 26

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

332. தரளமும் பவளமுந் தரங்க மீட்டிய
திரண்மணிக் குப்பையுங் கனக தீரமும்
மருளுமென் பொதும்பரு மணலின் குன்றமும்
புரள்நெடுந் திரைகளும் புரிந்து நோக்கினன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தரளமும் - முத்துக்களும், பவளமும் - பவளங்களும், தரங்கம் ஈட்டிய திரள் மணி குப்பையும் - அலைகள் கரைக்கண் கொழித்துத் தள்ளிய திரண்ட இரத்தினக் குவியல்களும், கனக தீரமும் - பொன்போல் விரும்பத்தக்க கடற்கரையும், மருளும் மென் பொதும்பரும் - மனம் மயங்குதற்குக் காரணமான மெல்லிய சோலைகளும், மணலின் குன்றமும் - மணல் மேடுகளும், புரள் நெடு திரைகளும் - புரளுகின்ற பெரிய அலைகளும், (ஆகிய இவைகளை), புரிந்து நோக்கினன் - (அவன் அப்பொழுது) விரும்பிக் கண்ணுற்றான்.

தரளம் - முத்து; 'மின்னெனத் தரளம் வேய்ந்த வெண்ணிற விமானம்' (சுந்தர. 214). பவளம்; பிரவாளம் என்றதன் திரிபு. தரளம், தரங்கம், பவளம், தீரம் என்பன வடசொற்கள். இரத்தின மிகுதியைக் கூறுவான் குப்பை யென்றார்; கடலுக்கே ரத்னாகரம் என்ற பெயருண்மையும் இங்குக் காண்க. கனக தீரம் - கரைக்கண் பொன் கொழிப்பதுபற்றி இங்ஙனம் கூறப்பட்டது; 'முத்தீர்த்துப் பொன் திரட்டி' (கிட்கிந்தா. 740) என்று ஆறு வருணிக்கப்பட்டதும் காண்க. பொதும்பர் - மரச்செறிவு; பொதும்பின் ஈற்றுப் போலி: 'போதுலா மாதவிப் பொதும்ப ரெய்தினள்' (சுந்தர. 509); 'பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்கண்' (சிலப். 10; 37). மருளுமென் பொதும்பர், 24-ஆம் செய்யுள் காண்க. புரிந்து நோக்கினன் என்பது முன்னரும் வந்தது.

பி - ம். 1. தரங்க மீட்டிட.
2. கனகத் தீரமும்.
3. அமிழ்தின் குன்றமும்.
4. புரிநெடுந்; புக்கு நோக்கினன்; பெருந்த. 27

## விரகமீதூர்ந்த இராமபிரான் செயல்கள்

333. மின்னகு மணிவிரற் றேய விழ்கணீர்
துன்னரும் பெருஞ்சுழி யழிப்பச் சோர்வினோ
டின்னகை நுளைச்சிய ரிழைக்கு மாழிசால்
புன்னையம் பொதும்பரும் புக்கு நோக்கினன்.

இன் நகை நுளைச்சியர் - (கணவன்மாருடன் கூடிய காலத்து) இனிய மகிழ்ச்சியுடன் இருந்த பரதவ மகளிர், (பிரிவு நேர்ந்த போதில்), மின் நகு - மின்னலையும் தன் ஒளியால் நகையாடுகின்ற,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

மணி விரல் தேய - தம் கைவிரல்கள் தேயவும், கண் வீழ் நீர் - கண்களினின்றும் வீழ்கின்ற நீர், துன் அரு பெரு சுழி அழிப்ப - அடைதற்கரிய பெரிய சுழிகளை அழித்துக்கொண்டிருப்பவும், சோர்விேைடு-மனத்தளர்ச்சியுடன், இழைக்கும் ஆழிசால்-மணலிற் கீறுகின்ற கூடற்சுழிகள் நிரம்பிய, புன்னை அம் பொதும்பரும் புக்கு நோக்கினன் - புன்னை மரங்கள் அடர்ந்த அழகிய பூங்காக் களையும் (இராமபிரான) உட்புகுந்து பார்த்தான்.

மின்னகும் அணிவிரல் - மின்னல்போல் ஒளிரும் அணிவிரல் எனினுமாம். துன்னரும் பெருஞ்சுழி அழிப்ப: இங்கு மகளிர் கூடலிழைத்தல் குறிக்கப்பட்டது; 'கூடலாவது வட்டமாக கோட்டைக் கீறி, அதற்குள் சுழிசுழியாகச் சுற்றும் சுழித்து, இவ் விரண்டு சுழியாகக் கூட்டினல், இரட்டைப்பட்டால் கூடுகை, ஒற்றைப்பட்டாற் கூடாமை என்று சங்கேதம்' என்ற பெரிய வாச்சான்பிள்ளை எழுதிய குறிப்புக் காண்க. (திவ்ய. நாச்சியார்) 'தெள்ளியார் அரும்பதம்'. இங்ஙனம் பன்னுட்கள் இழைத்தலின் மணிவிரல் தேயும், வீழ்கின்ற கண்ணீர் சுழித்த சுழிகளை எண்ண வொட்டாது அழிக்கும் என்று கூறப்பட்டது. ஒருமுறையில் சுழிகள் இரட்டைப்படாவிடின் மறுமுறையும் மூன்ரு முறையும் பார்த்தறிவது மனிதவியற்கை யாகலின், 'ஆழிசால்' என்ருர். ஒருமுறை யிழைத்ததைக் கண்ணீரழிப்ப மீட்டும் இழைத் தலின் இவ்வாறு கூறினர் எனினும் ஒன்றும். மற்றும், பல மகளிர் ஒருங்கே இவ்வாறு புரிதலின் ஆழிசால் என்ருர் எனினு மாம். இனி, மணலில் ஒரே வட்டமாகப் போகட்டு, போட்ட அளவிலேயே வட்டத்தின் இரு முனைகளும் ஒன்றின், வருவது உறுதி யென்றும், ஒன்ருதேல் உறுதி யன்றென்றும் அறிவதும் உண்டு. சுழிக்கணக் கெண்ணுதல்; 'ஆழிதிருத்திச் சுழிக் கணக்கோதி' (திருக்கோவை. 186); 'ஆழியிழைப்பப் பகல்போம் இரவெல்லாம், தோழி துணையாத் துயர்தீரும்' (யாப். விருத்தி. மேற்கோள்). இனி, ஆழியிழைக்கப் புகுவார், சுழிகள் ஒற்றைப்படின் வருத்தம் மேலும் மிகுமே என்று வாளாதிருப்பர்; இதனை, 'கூடற்பெருமானைக் கூடலார் கோமானைக், கூடப் பெறுவேனேற் கூடென்று—கூடல், இழைப்பாள்போற் காட்டி யிழையா திருக்கும், பிழைப்பிற் பிழைபாக் கறிந்து' (முத்தொள்.) என்பது கொண்டு காண்க. மேலும் ஆழிதிருத்தலின் விவரத்தை 'சென்ருர் வரையக் கருமஞ் செருவேலான், பொன்ருங் கணியகலம் புல்லப் பொருந்துமேற், குன்ருது கூடுகெலக் கூறிமுத்த வார்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மணன்மேற், அன்றுங் கணியிழையாள் ஆழியிழைத் தாளே' (சீவக. 1037)-ஆம் செய்யுள் கொண்டும், அதன் உரை, குறிப்புரை கொண்டும் தெளிக. வீழ்கணீர் - வீழ்கின்ற கண்ணீர் எனில் தொகுத்தல். சுழிக் கணக்குகள் மகளிர் எதிர்பார்த்த வண்ணம் அமைதல் அருமைநோக்கித் 'துன்னரும்' எனப் பட்டது. நுளைச்சியர் - நெய்தனில மகளிர். புன்னை - கடற்கரை மரம். முன் செய்யுட்களில் புரிந்து நோக்கினன் என்று இராம பிரானது மனக்கிளர்ச்சியைக் கூறிய ஆசிரியர், இச் செய்யுட்கண் புக்கு நோக்கினன் என்றது அவனது அக்கிளர்ச்சியின் மாற்றத் தைக் குறிக்கும். 'சோர்வினேடு', என்றதை இராமபிரானுடன் இயைத்தும் கூறலாம்; அவன் சோகம் எய்தியதன் காரணம், பிராட்டியும் இச்செயலை ஆற்றி வருந்துவள்கொல் என்ற ஏக்கம் பற்றி யென்க.

பி-ம். 1. வின்னகு ; மணியினம் விழக் கன்னீர்.
2. துன்னிரும் ; யழிக்க.
3. கூடல்சால்.
4. புன்னையும் ; புகுந்து. 28

334. கூதிர்நுண் குறும்பனித் திவலைக் கோவைகால்
மோதிவெண் டிரைவர முடவெண் டாழைமேல்
பாதியஞ் சிறையிடைப் பெடையைப் பாடணைத்
தோதிமந் துயில்வகண் டுயிர்ப்பு வீங்கினன்.

வெண் திரை மோதிவர-வெண்ணிறமான அலைகள் கரைக்கண் தாக்கி ஒன்றன்மேல் ஒன்றாக வீசிவர, (அந்த அலைகள் தாக்காத வண்ணம்), கூதிர் நுண் குறும்பனி திவலை - கூதிர் காலத்து நுட்பமான சிறிய பனித்திவலையின், கோவை - திரள்களை, கால் - உமிழ்கின்ற, (பனிநீரைச் சிறு சொட்டுகளாகச் சொட்டுகின்ற), முடம் வெண் தாழைமேல் - வளைந்த வெண்ணிறத் தாழையின் மீதிருந்து, பெடையை - தமது பேடைப் புட்களை, அம் சிறை பாதி இடை - (தமது) அழகிய சிறகின் ஒரு பாதியில், பாடு அணைத்து - ஒரு பக்கத்தில் தழுவிக்கொண்டு, ஓதிமம் துயில்வ கண்டு - அன்னங்கள் உறங்குவதைப் பார்த்து, உயிர்ப்பு வீங்கினன் - பெருமூச்செறிந்தான் (இராமபிரான்).

கூதிர் - பழந்தமிழிலக்கணம் கூறும் ஆறு பெரும் பொழுதுகளில் ஒன்று. ஐப்பசி, கார்த்திகை மாதங்களைக் கூதிர்க்காலம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்ப; குளிர்காலம். காலுதல் - வெளிவிடுதல்; 'பகல்கான் றெழுதரு பகல்கதிர்ப் பரிதி' (பெரும்பாண். 1) என்ற இடத்துக் குறிப்புரையில், 'கான்ற என்னுமிடக்கர் அணிகுறித்துப் பிறி தொரு பொருண்மேல் நிற்றலின் மறைக்கப்படாது; தன் பொருள்மேல் நின்றுழி மறைக்கப்படும்' (தொல். எச்ச. 47) என்று குறிக்கப்பெற்றுள்ளமை இங்குக் காணத்தகும். முட வெண்தாழை யெனத் தாழையின் இயல் கூறினர்; தாழை - தாழைச்செடி. அம் சிறை பாதி இடை எனப்பிரித்துக் கூட்டப்பெற்றது. அகம் சிறை-அஞ்சிறை யென்றாயிற்று எனில் சிறையின உட்புறம் என்க. பாடு-பக்கம். ஓதிமம் - அன்னம்; 'ஓதிம மொதுங்கக் கண்ட வுத்தமன்' (ஆரணிய. 224); ஓதிமம் தன் பேட்டை யணைந்துறங்கும் இவ் வியற்கை நிகழ்ச்சி, தான் அங்ஙனம் சீதாதேவியை அணைத்தற் கில்லையே என்ற கவலையை இராமன்பால் எழுப்பிற்று என்க. இச் செய்யுட்கொண்டு இராமபிரான் போருக்கெழுந்த காலம் கூதிர்க்காலம் என்பது போதரும். இந்த இயற்கை வருணனை முதனூலில் இல்லை. இந்தச் செய்யுளையும் இதனை யடுத்துள்ள மூன்று செய்யுட்களையும், கிட்கிந்தாகாண்டம் கார்காலப் படலத் துத் தேவி பிரிவாற்றாமையின் இராமபிரான் வருந்திக்கூறும் செய்யுட்களுடன் ஒப்பு நோக்குக. 'தாழை - செவ்விளநீர்; கௌளி பாத்திரம்' என்பன பழையவுரை.

பி - ம். 1. குறுந்துளிக்; கொள்ளை; சால், சார்.

2. மோது; வண்டிரை; தாழையிற்.

3. சிறகிடைப். 29

335. அருந்துதற் கினியமீன் கொணர அன்பினால்
பெருந்தடங் கொம்பிடைப் பிரிந்த சேவலை
வருந்திசை நோக்கியோர் மழலை வெண்குரு
கிருந்தது கண்டுநின் றிரக்க மெய்தினான்.

அருந்துதற்கு இனிய மீன் கொணர - உண்பதற்கு இனிமை யான மீன்களைக்கொண்டு வருமாறு, அன்பினால் பெரு தட கொம் பிடை பிரிந்த சேவலை - ஆர்வம் கொண்டு பெரிய அகன்ற மரக் கிளையினின்றும் பிரிந்து சென்ற ஆண்பறவையை, வரும் திசை நோக்கி - அது வரக்கூடிய திக்கினைப் பார்த்த வண்ணம், ஓர் மழலை வெண் குருகு - இனிய இளங்குரலையுடைய வெண்ணிறம் வாய்ந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஓர் பெண் நாரை, இருந்தது கண்டு நின்று இரக்கம் எய்தினன் - தங்கியிருந்ததை நோக்கி மனம் தளர்ச்சியுற்றான், (இராமபிரான்).

கொம்பிடை - கிளையிலிருந்து. சேவல் - ஆண் பறவை; 'சேவற் பெயர்க் கொடை சிறகொடு சிவணும் மாயிருந் தூவி மயிலலங் கடையே' (தொல். மரபி - 48). ஆண் குருகின் வரவை அதன் பெடை எதிர் நோக்குவது போன்று, தன் வரவைச் சீதாதேவி எதிர்பார்ப்பாளல்லளோ என்ற நினைவெழ, இராமபிரான் மனம் மெலிகின்றான் என்க; 'சுருதி நாயகன் வரும்வரும் என்பதோர் துணிவாற், கருதி மாதிர மனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்' (சுந்தர. 338); 'வாரா தொழியான் எனும் வண்மையினால், ஓராயிர கோடி யிடர்க்குடையேன், (சுந்தர. 494); என்று வந்தன காண்க. வெண் குருகு - நாரை.

பி - ம். 1. அருந்துதற் கரிய.
2. கொம்பரிற் ; பிரிந்து.
3. வருந்துணை ; வெங் குருகு.
4. நோக்கி ; கண்டு நொந்து ; இரங்கல் எய்தினன். 30

336. ஒருதனிப் பேடைமே லுள்ள மோடலால்
பெருவலி வயக்குரு கிரண்டும் பேர்கில
திருகுவெஞ் சினத்தன தெறுகட் டீயுக
பொருவன கண்டுதன் புருவங் கோட்டினன்.

ஒரு தனி பேடை மேல் உள்ளம் ஓடலால் - ஒப்பற்ற தனிப்பட்ட பெட்டைக் குருகின் மீது மனம் செல்லுதலினால், பெருவலி வயகுருகு இரண்டும் - மிக்க வலிமைவாய்ந்த வெற்றி மிக்க இரண்டு குருகுகள், பேர்கில திருகு வெம்சினத்தன - பின்னிடாதனவாய் ஒன்றுடன் ஒன்று மாறுபட்ட கடுமையான கோபத்தைக் கொண்டனவும், தெறுகண் தீஉக - சினத்தாற் சூடேறிய கண்களிலிருந்து தீப்பொறி சிதர்ந்தனவுமாகி, பொருவன கண்டு தன் புருவம் கோட்டினன் - தம்முட் போர் புரிவதைப் பார்த்து (இராமபிரான்) தன் புருவத்தை (வெகுளி தோன்ற) வளைத்தான்.

உள்ளம் செல்லலால் என்று அமையாது ஓடலால் என்று காம வேகத்தைக் குறித்தார். இரு குருகுகளும் போரிடும் ஆற்றலில் ஒரு நிகரன என்பார், 'பெரு வலி வயக்குருகு' என்றார்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இஃது இராம விராவணற்கும் ஒக்கும். புருவம் கோட்டுதல்; வெகுளியின் மெய்ப்பாடுகளில் ஒன்று; 'முரிந்த புருவமுஞ் சிவந்த கண்ணும்' (சிலப். அரங்கேற்று); 'வெங்கணேரிய ப்புருவ மீதுற விடைத்தான்' (ஆரணிய. 742); 'பொங்கும்படை யிரியக் கிளர் புருவங்கடை நெரிய' (பால. பரசுராம. 16). கோட்டுதல் - வளைத்தல். 'புருவமுஞ் சிலையுங் கோட்டி' (சுந்தர. 763); 'நகை முகங் கோட்டி நின்றாள்' (சீவக. 1568).

பா - ம். 1. பெடையின் மேல்,

2. பொருவலி; போகில, பேர்கிலா.

3. சினத்தின, சினத்திடைந்; நறுகட்டியன, திருகுறு வெஞ்சினந் தெறுகட்டி யெனப்.

4. பொருவது. 31

**337.** **உண்ணிறை யூடலிற் றோற்ற வோதிமம்**
**கண்ணுறு கலவியில் வெல்லக் கண்டவன்**
**தண்ணிறப் பவளவா யிதழைத் தற்பொதி**
**வெண்ணிற முத்தினா லதுக்கி விம்மினான்.**

உள் நிறை ஊடலில் தோற்ற ஓதிமம் - உள்ளே நிறைந்த புலவியிலே தோல்வியுற்ற பெடையன்னம். கண்ணுறு கலவியில் வெல்ல கண்டவன் - கண்ணுக்குப் புலப்படும் புணர்ச்சியிலே வெற்றி பெறக் கண்டவனான ஸ்ரீராமபிரான், தண் நிறம் பவளம் வாய் இதழை - இனிய நிறத்தையுடைய பவளம் ஒத்த வாயிதழை, தன் பொதி வெண் நிற முத்தினால் - தன்னால் மறைக்கப்படுகின்ற முத்துப்போலுள்ள பற்களினால், அதுக்கி விம்மினான் - கடித்த வண்ணம் பொருமலுற்றான்.

உண்ணிறை யூடலிற் றோற்ற - 'ஊடலிற் றோற்றவர் வென்றார் அது மன்னுங் கூடலிற் காணப்படும்' (குறள். 1327); இஃது அதிசயோக்தி; இங்குத் தன் பவளவாயிதழைப் பிராட்டி யிதழா கவே கொண்டு சுவைத்து, உண்மையன்மையின் மனம் நொந்தனன். மற்றும் அச்செயலைக் கண்டு துயரம் ஆற்றாது வாயிதழைக் கடித்தான் கடித்தது. வெகுளிபற்றியதும் ஆம். பவளத்தை முத்தினால் அதுக்கினான் என்ற நயம் காண்க. பொதிதல் - மறைத்தல்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 2. கண்ணிறை, கலவியில்; கழிப்பக் கண்டவன்.

3. தான் போதி.

4. முகத்தினுல். 32

## சுக்கிரீவன் முதலியோர் தேற்றத்தேறி இராமபிரான் தன் இருக்கை அடைதல்

338. இத்திற மெய்திய காலை யெய்துறும்
வித்தகர் சொற்களான் மெலிவு நீங்கினுன்
ஒத்தன னிராமனு முணர்வு தோன்றிய
பித்தரி னொருவகை பெயர்ந்து போயினுன்.

இ திறம் எய்திய காலை - இந்நிலையை அடைந்த பொழுது, இராமனும் - இராமபிரானும், எய்துறும் - அங்கு வந்த, வித்தகர் சொற்களான் ஒருவகை மெலிவு நீங்கினுன் ஒத்தனன் - மேம்பட்ட அறிஞர்களான சுக்கிரீவன், அநுமன் முதலியோரின் தேறுதல் மொழிகளால் மனத்துயரம் ஒருவாறு நீங்கப்பெற்றவன்போன்றவனுகி, உணர்வு தோன்றிய பித்தரின் - நல்லறிவு வரப்பெற்ற பித்தர்போன்று, பெயர்ந்து போயினுன் - அவ்விடத்தைவிடுத்தகன்ருன்.

ஒருவகை என்பதை, உணர்வு தோன்றிய என்பதுடன் இயைத்து, துயரம் முற்றிலும் நீங்கின பாடில்லை என்று குறித்தார் எனலும் ஆம்.

பி - ம். 1. இத்திற மேவிய, நிகழ்வுறு; காலை யெய்திய, காலமெய்துறும்.

2. நீங்கினர், நீக்கினுன்.

4. பித்தரி னொருவகை; பெயர்த்தும். 33

## வீடணன் வாநர சேனையைச் சார்தல்

339. உறைவிட மெய்தினு னொருங்கு கேள்வியின்
துறையறி துணைவரோ டிருந்த சூழலின்
முறைபடு தானையின் மருங்கு முற்றினுன்
அறைகழல் வீடண னறங்கொள் சிந்தையான்.

உறை விடம் எய்தினுன் - தனது இருக்கையைச் சென்றடைந்த இராமபிரான், ஒருங்கு - ஒரு சேர, கேள்வியின் துறை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அறி துணைவரோடு - கேட்டறிய வேண்டிய நூல்களின் வழிகளை எல்லாம் அறிந்த தன் நண்பருடன், இருந்த சூழலின் - அமர்ந் திருந்த எல்லையில், முறைபடு தானையின் மருங்கு - (போர்க்கு) உரிய முறைப்படியே ஒழுகுகின்ற வானரப்படையின் அருகிலே, அறம் கொள் சிந்தையான் - தரும நெறியையே கருதுபவனான, அறை கழல் வீடணன் - ஒலிக்கின்ற வீரகண்டை புனைந்த வீடணன், முற்றினன் - சென்றடைந்தான்.

ஒருங்கு கேள்வியின் துறையறி துணைவர் - இங்கு அயோத் தியாகாண்டம் மந்திரப்படலத்துக் கூறப்பெறும் அமைச்சர் பண்பு களை ஒப்பு நோக்கல் தகும். பல்லான்ற கேள்வியாகலின், 'கேள் வித்துறை' யென்றார். கேள்வி யெனவே கல்வியும் பெறப்படும். 'கற்றலிற் கேட்டலே நன்று' என்றும, 'செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்' (குறள், 411): என்றும் கூறப்பெறுதலின், கேள் வியை விசேடித்தார். முறைபடுதானை; 'மறமானம் மாண்ட வழிச் செலவு தேற்ற, மென்நான்கே ஏமம் படைக்கு' (குறள். 766) என்ற குறட்பாவும் மற்றும் அந்நூலில் படைமாட்சி என்ற அதிகாரத்துக் கூறப்பட்டன பலவும் இங்குக் கண்டுணர்க. அயிர்ப்பு இல் சிந்தை யான், என்ற பாடத்துக்கு இராமபிரான் தனக்குச் சரண்வழங்கு வாரோ மறுப்பாரோ என்ற ஐயம் சிறிதும் இல்லாதவன் என்க. அறங்கொள் சிந்தையான்: 'தருமசீல வென்றான் மறைந்து ளான்' (யுத்த. மீட்சி. 12); யுத்த. 327-உம் பார்க்க.

பி - ம். 1. எய்தின ; கேள்வியன்.
2. சூழல் வாய்.
3. முறை தரு ; முற்றினவன்.
4. அயிர்ப்பில் சிந்தையான். 34

இதன்பின், பின்வரும் இரண்டு அதிகப்பாடல்கள் காண் கின்றன. இவை பல சிறந்த சுவடிகளில் இல்லை. 'சர்வலோக சரண்யாய ராகவாய மகாத்மனே' என்று தொடங்கும் முதனூல் சுலோகத்தைப் பின்பற்றி, பின்வந்த ஒருவர் இப்பாடல்களைப் பாடிச் சேர்த்திருக்கக்கூடும் என்று தோன்றுகின்றது.

மற்றுள பொருளுள தென்னின் மாறிலாக்
கொற்றவ சரணெனக் கூய தோருரை
உற்றது செவித்தலத் தைய னெல்லையின்
நற்றுணை வரைமுகம் நயந்து நோக்குறா.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எந்தையே யிராகவ சரண மென்றசொல்
தந்தவ ரெனைவரோ சாற்று மின்னென
மந்தண முற்றுழீஇ வயவெஞ் சேனையின்
முந்தினர்க் குற்றதை மொழிகு வாமரோ.

## வாநரர் செயல்

340. முற்றிய குரிசிலை முழங்கு தானையுள்
உற்றனர் நிருதர்வந் தென்ன வொன்றினர்
எற்றுதிர் பற்றுதி ரெறிதி ரென்றிடை
சுற்றின ருருமெனத் தெழிக்குஞ் சொல்லினர்.

முற்றிய குரிசிலை - வந்தடைந்த பெருமையாளனான விடணனை(ப் பார்த்து), முழங்கு தானையுள் - ஆரவாரிக்கும் படையிலே, நிருதர் வந்து உற்றனர் என்ன ஒன்றினர் - அரக்கர் வந்து சேர்ந்தனர் என்று ஒன்றுகூடினவராய், 'எற்றுதிர் பற்றுதிர் எறிதிர் - '(வந்த இந்த அரக்கர்களைத்) தாக்குங்கள், பிடியுங்கள், ஆயுதங்களை அவர்கள்மீது வீசுங்கள்' என்று - என்று சொல்லிக்கொண்டு, உரும் என தெழிக்கும் சொல்லினர் - இடி போன்று முழங்கும் கடுஞ் சொற்களை யுடையவர்களாய், இடை சுற்றினர் - (வாநரப்படைகள்) அவ்விடத்தில் (அவர்களைச்) சூழ்ந்து கொண்டனர்.

முழங்கு தானை - முரசு முழங்கும் தானை எனினுமாம். தெழித்தல்: 'வைதார் பலர் தெழித்தார் பலர்' (ஆரண்ய. 459); 'பகடு தெழி தெள்விளி' (அகநா. 17).

பி - ம். 1. குரிசிலும்; தானையர், தானையின்.
2. உற்றுளர்.
3. எறிமி னென்றிடை.
4. தொனிக்கும்.



341. தந்தது தருமமே கொணர்ந்து தானிவன்
வெந்தொழிற் றிவினை யுந்த வெம்மையால்
வந்தன னிலங்கையர் மன்ன னுக்குநம்
சிந்தனை முடிந்தன வென்னுஞ் செய்கையார்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(வானரசேனைகளிற் சிலர்), 'தருமமே - அறக்கடவுளே, கொணர்ந்து தந்தது - (இவனை இங்கே) கொண்டு வந்து விட்டது; இவன் தான் - இவன் தன்னுடைய, வெம் தொழில் தீவினை வெம்மையால் உந்த - இவன் கொடுஞ்செயலான பாவமே கடுமையாகப் பிடித்துத் தள்ள, வந்தனன் - நம்மிடம் வந்தனன்; (இவனே), இலங்கையர் மன்னனுகும் - இவனே இலங்கை அரசனுன இராவணனுவான்; (ஆதலின்), நம் சிந்தனை முடிந்தன என்னும் செய்கையார் - (நம் கருத்துக்கள்) நிறைவேறின' என்று கருதுபவராய் அதற்கேற்ற செயலை மேற்கொள்வாராயினர்.

சிந்தனை - கவலையுமாம்; 'சிந்தனை முகத்தில் தேக்கி' (அயோத்தி. குகப். 35); சிந்தனை இராவணனைக் கொன்று பிராட்டியை மீட்பது. வெம்மையால் வந்தனன் என்றே கொண்டு மனக்கடுமையுடன் வந்தான் எனினுமாம்.

பி - ம். 1. கருமமே; தானெனு, தானவன்.

2. பயந்த மெய்ம்மையான்; மெய்ம்மையால், மேன்மையான், வெம்மையான்.

3. மன்னனுமென, மன்னனுமெனச், மன்னனுதலிற்.

4. முடிந்தனன்; தெளிந்தனர்; சிந்தையார் செய்கையான். 36

342. இருபது கரந்தலை யீரைந் தென்னுமத்
திருவிலிக் கன்னவை சிதைந்த வோவென்பார்
பொருதொழி லெம்மொடும் பொருதிர் போரென்பார்
ஒருவரி னொருவர்சென் றுறுக்கி யூன்றுவார்.

'இருபது கரம் தலை ஈரைந்து என்னும் அ திருவிலிக்கு - இருபது கைகளும் பத்துத் தலைகளும் (உடையவன்) என்று சொல்லப்பெறுகின்ற அந்த நல்லூழில்லாதவனுக்கு, அன்னவை - அந்தத் தலைகள் பத்தும், கரங்கள் இருபதும், சிதைந்தவோ - அழிந்தனவோ' என்பார் - என்று மொழிபவர்களும், 'பொரு தொழில் எம்மொடும் பொருதிர் போர் என்பார் - போர்த்தொழிலில் வல்ல எங்களோடும் போர்புரிதிர்' என்று பகர்பவர்களுமாகி, ஒருவரின் ஒருவர் சென்று உறுக்கி ஊன்றுவார் - ஒருவர் முன் ஒருவர் முற்பட்டுச் சென்று சினந்து (சிலர் வீடணனை) எதிர்த்து நிற்பார்கள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'இருபது கரந்தலை யீரைந் தென்னுமத் திருவிலி' என்ற தொடரைத் திருவவதாரப் படலத்தும் காணலாம்; (பால. திருவவ. 11). திரு - அருட்செல்வம். இராவணன் என்று கருதியவர்கள் இருபது கைகளும், பத்து முகங்களும் இல்லையே என்று முதற் கண் எண்ணிப் பின்னர் அவை சிதைந்தனபோலும் என்று தம்மைத் தேற்றிக்கொண்டனர். இதனுடன் இலங்கைக்கண் சென்று பிராட்டியைத் தேடிய அநுமன், கும்பகன்னனைக் கண்டதும், 'குறுக நோக்கிமற் றவன்தலை யொருபதுங் குன்றத், திறுகு திண்புய மிருபது மிவற்கிலை' யென்று கருதியதும் ஒப்பு நோக்குக; (சுந்தர. 226), ஆரணிய. 231-உம் காண்க. மற்றும், 'இந்திர னென்னி னிரண்டேகண் ணேறூர்ந்த, அந்தரத்தா னென்னிற் பிறையில்லை—அந்தரத்துக், கோழியா னென்னின் முகநான்றே கோதையை, ஆழியா னென்றுணரப் பாற்று' (தொல். பொருள். 60 நச்:மேற்) என்பதும் ஒப்பாகக் காணத்தகும்.

பி - ம். 1. என்பரத், என்பரித்.
2. சிதைந்தவோ, சிறந்தவோ.
3. போந்தென ; என்றெடும்.
4. முன்னுறுக்கி. 37

343. பற்றிநஞ் சிறையிடை வைத்துப் பாருடைக்
கொற்றவர்க் குணர்த்துது மென்று கூறுவார்
எற்றுவ தன்றியே யிவனைக் கண்டிறை
நிற்றலென் பிறிதென நெருக்கி நேர்குவார்.

(பின்னும் சிலர்), 'பற்றி நம் சிறை இடை வைத்து - இவனைப் பிடித்துச் சிறையிலே அடைத்து, பார் உடை கொற்றவற்கு உணர்த்துதும் என்று கூறுவார்-பூமண்டல முழுதும் தன்னதாகப் பெற்ற இராமபிரானுக்கு அறிவிப்போம்' என்று மொழிவார்; (மற்றும் சிலர்), 'இவனை எற்றுவது அன்றியே - இவனைத் தாக்குவதே யல்லாமல், கண்டு இறை நிற்றல் பிறிது என் - இவனைப் பார்த்துக்கொண்டு இறைப்பொழுதும் தாமதித்து நிற்பது எதன் பொருட்டு?' என - என்று சொல்லிக்கொண்டே, நெருக்கி நேர்குவார் - கிட்ட அணுகி எதிர்ப்பார்கள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தாயுரை கொண்டு தாதையுதவிய தரணிதன்னைப் பரதனுக்குக் கொடுத்திருந்தபோதிலும், உண்மை அரசுரிமை இராமபிரானுக்கே ஆதலினாலும், பின்னர் வனத்தினின்றும் மீண்டு அயோத்தி நகரத்துப் பதினோராயிரம் ஆண்டுகள் அரசுபுரிய விருப்பதாலும், பாருடைக் கொற்றவர் எனப்பட்டது. பாராளும் என்னுது பாருடை எனக் கூறப்பட்டதும் கண்டு தெளிக. (ஒப்பு): 'கோசல நாடுடை வள்ளல்' (யுத்த. முதற்போர். 256); 'ஐயநீயயோத்தி வேந்தற் கடைக்கல மாகி' (யுத்த. கும்ப. 136); 'பாரின் நாயகன்' (யுத்த. 348). இனிப் பார்முழுதும் காக்கும் உரிமைபெற்ற காப்புக் கடவுளான திருமால் எனினுமாம். இறை - கணப்பொழுது.

பி - ம். 1. பற்றினஞ் பற்றிநாம்; சிறையிட; பாரினெம்.
2. கொற்றவற்கு; உணர்த்துவதென்று.
3. எற்றுத லன்றியே, எற்றது மன்றியே.
4. நிற்றிரென்; நெருங்கி! நேர்வரால், நோக்குவார், தேருவார். 39

344. இமைப்பதன் முன்விசும் பெழுந்து போயபின்
அமைப்பதென் பிறிதிவ ரரக்க ரல்லரோ
சமைப்பது கொலையலால் தக்க தியாவதோ
குமைப்பது நலனென முடுகிக் கூறினர்.

'இமைப்பதன் முன் விசும்பு எழுந்து போய பின் - கண் இமைப்பதற்கு முன்னே (ஒரு நொடிப்பொழுதில்) இவன் ஆகாய மார்க்கமாகக் கிளம்பிச் சென்ற பின்பு, பிறிது அமைப்பது என் - வேருகப் புரியக்கூடிய செயல் என்ன உள்ளது? இவர் அரக்கர் அல்லரோ - இவர்கள் இராக்கதரல்லரோ? (நாம் இவர்கள் விஷயத்தில்), சமைப்பது கொலையலால் - புரியவேண்டியது கொலையேயன்றி, தக்கது யாவதோ - செய்யத்தக்க வேறு காரியம் யாதோ? (யாதுமில்லை); குமைப்பது நலன் என முடுகி கூறினர் - அழித்துவிடுவதே நல்லது' என்று முன்னர் விரைந்து மொழிந்தனர். ஓகாரம்: வினாக்கள்.

நமக்குப் பிறவிப் பகைவர்களாகலின் இவ் வரக்கரைக் கொல்லுவதே கடமை என்றனர் சிலர். குமைப்பது - அழிப்பது; 'வேலினு மறலினுங் குமைத்தது' (பெருங். 1·42:222); 'வெளிற் றறிவிரண்டுங் குமைப்ப' (தணிகைப். விநாயக, காப்பு. 2).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. போமவர், போமிவர், போனபின், போமுனம்.
2. அமைப்பதன் ; பிறிதவர்.
3. கொலையெனத் தருவது.
4. கொமைப்பது ; முடுக்கிக் கூறுவார். 39

345. இயைந்தன வியைந்தன வினைய கூறலும்
மயிந்தனுந் துமிந்தனு மென்னு மாண்பினர்
அயிந்திரம் நிறைந்தவ னாணை யேவலால்
நயந்தெரி காவல ரிருவர் நண்ணினர்.

இயைந்தன இயைந்தன இனைய கூறலும் - வானர வீரர்கள் தம் மனத்தில் தோன்றிய இவ்வாறான வார்த்தைகளைப் பலபடியாக மொழிதலும், நயம் தெரி காவலர் - நீதியுணர்ந்த காவலாளிகளான, மயிந்தனும் துமிந்தனும் என்னும் - மயிந்தன் துமிந்தன் என்னும், மாண்பினர் - மாட்சிமைப்பட்டவர்களான, இருவர் - இரண்டு வானரர்கள், அயிந்திரம் நிறைந்தவன் ஆணை ஏவலால் - ஐந்திர வியாகரணம் கற்றவனான அநுமன் தன் கட்டளைப்படி, நண்ணினர் - அவ்விடம் வந்தனர்.

மயிந்தன் துமிந்தன் : இவர்கள் அசுவினி தேவர்களின் இரட்டைப் பிள்ளைகள். இவர்கள் அநுமன் ஏவலால், வந்தவர் நிலையை அறியச் சென்றனர் என்க. அயிந்திரம் - இந்திரனால் தோற்றுவிக்கப்பட்ட வியாகரணம் என்ப. 'கப்பத் திந்திரன் காட்டிய நூலின், மெய்ப்பாட் டியற்கையின்' (சிலப். காடுகாண். *154—155*). இந்திர வியாகரணம் மிகவும் பழமையானதென்பது 'ஐந்திரம் நிறைந்த' தொல்காப்பியரே, 'இந்திரன் எட்டாம் வேற்றுமை யென்றனன்' என்பது கொண்டறிக. நயம் - நீதி; (குறள். *97, 193, 194, 197*). வானரர்கள் தேவர்களின் அவதாரமேயாகலின் உயர்திணை வாய்பாட்டிற் கூறப்பட்டனர்; 'வானுளோரனைவரும் வானரங்களா' (பால. திருவவ. *21*).

பி - ம். 1. இயைந்தனர் இசைந்தன.
2. துவிந்தனும் ; மாண்பினோர்.
3. இயைந்திவர் ; ஏவலார்.
4. காவலர் நால்வர். 40

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


346. விலக்கினர் படைஞரை வேத நீதிநூல்
இலக்கண நோக்கிய வியல்ப ரெய்தினர்
சலக்குறி யிலரென வருகு சார்ந்தனர்
புலக்குறி யறநெறி பொருந்த நோக்கினர்.

வேதம் நீதி நூல் இலக்கணம் நோக்கிய இயல்பர் எய்தினர் - நான் மறைகளிலும் நீதி சாஸ்திரங்களிலும் கூறப்பட்ட அங்கக்குறி இலக்கணங்களைக் கற்றுத் தேர்ந்த தன்மை யுடையவராகி வந்த அந்த மயிந்த துவிதர்கள், படைஞரை விலக்கினர் - சேனை வீரரை அப்புறப்படுத்தி, புலக்குறி அறநெறி பொருந்த நோக்கினர் - நல்ல விவேகத்தின் சின்னங்கள், அறவொழுக்கங்கள் என்ற இவை அந்த வீடணனு றியோரிடம் பொருந்தியிருத்தலைக் கண்டு, 'சலக் குறி இலர் என அருகு சார்ந்தனர் - இவர்கள் வஞ்சனைக்குரிய அறி குறிகள் சிறிதும் இலர்' என்று அருகு சார்ந்தனர் - அண்மையில் சென்றார்கள்.

சுக்கிரீவன் இவர்களை வீடணனென அயிர்க்க, வீரர்கள் அவனைப்புடைக்க எழுந்தனர் என்றும், வீடணன் விண்ணில் எழுந்து இராமபிரானிடம் முறையிட்டுத் தன் வரலாறுகளைக் கூறியதாகவும், உடனே சுக்கிரீவன் இராகவனையணுகிப் பல காரணங்களைக் காட்டி வீடணனைச் சேர்க்கக் கூடாது என்று கூறியதாகவும், பின்னர் இராமபிரான் அருகில் உள்ள அறிஞர்கள் தத்தம் கருத்துக்களை வெளியிட்டதாகவும் முதனூல் பகரும். சலம் - வஞ்சனை. 'சலப்படையா னிரவிற் றுக்கிய தெல்லாம்' (பரிபா. 6 : 57) சலக்குறி, வியாஜம் என்றும் கூறுவர், சலம் - தணி யாக் கோபமுமாம். புலக்குறி - நல்லறிவின் சின்னங்கள் ; ஒருவரின் உறுப்புக்களிலிருந்தே அவருடைய குணப்பண்புகளை அறிவதற் கேதுவான நூல் சாமுத்திரிகாலக்ஷண நூல் என்பர்.

பி - ம். 1. விலக்கினூர்.

1. இயல்பி னெய்தி.

3. மருங்கு,

4. அறிநெறி யுண்மையிற்.




CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## மயிந்தன் அரக்கர்களை வினவுதல்

347. யாரிவ ணெய்தீய கருமம் யாவது
போரது புரிதிரோ புறத்தொ ரெண்ணமோ
சார்வுற நின்றநீர் சமைந்த வாறெலாஞ்
சோர்விலீர் மெய்ம்முறை சொல்லு வீரென்றான்.

(மயிந்தன் என்ற வானர வீரன் வீடணாதியரை நோக்கி), 'யார் - (நீவிர்) யாவர்? இவண் எய்திய கருமம் யாவது - இவ்விடம் வந்தது எக்காரணம் பற்றி; போரது புரிதிரோ - எங்களுடன் போர் புரியப் போகின்றீர்களோ? புறத்தொர் எண்ணமோ - அல்லது சமாதானம் செய்து கொள்ளவேண்டும் என்ற ஒரு நினைவோ? சார்வு உற நின்ற நீர் - வானரர்களாகிய நாங்கள் வந்தடைந்துள்ள இடத்தில் வந்து நின்ற நீங்கள், சமைந்த ஆறு எலாம் - நீங்கள் நினைந்துள்ள விதங்களை யெல்லாம், சோர்விலீர் - சிறிதும் தளரா மல், மெய்ம் முறை சொல்லுவீர்' என்றான் - சத்தியமாகச் சொல்லுங்கள் என்று கூறினான்.

பி - ம். 1. ஆரிவண்,
2. போர்புரி தொழிலதோ.
3. சார்புற; எண்ணி நீர்.
4. சோர்வில் நிர்; மெய்ம்மையே; சொல் முறை; என்னுர். 42

## அனலன் கூறிய விடை

348. பகலவன் வழிமுதல் பாரி ளுயகன்
புகலவன் கழலடைந் துய்யப் போந்தனன்
தகவுறு சிந்தையன் றரும நீதியன்
மகன்மகன் மைந்தனுன் முகற்கு வாய்மையான்.

(அப்பொழுது அனலன்) 'தகவு உறு சிந்தையன் - (இங்கு வந்துள்ளவன்) நடுவு நிலைமையோடு கூடிய நெஞ்சினனும், தருமம் நீதியன் - அறமும் நீதியும் உடையவனும், வாய்மையான் - சத்தியத்தைக் கடைப்பிடிப்பவனும், நான்முகற்கு மகன் மகன் மைந்தன் - பிரமதேவன் பேரனுடைய புதல்வனுமான வீடணன்; பகலவன் வழி முதல் - சூரிய வம்சத்தில் முதன்மை பெற்று ஒளிர்-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பவனும், பாரின் நாயகன் - பூமிக்குத் தலைவனும், புகல் - சரணாகத வத்ஸலனுமான, அவன் - அந்த இராமபிரானுடைய, கழல் அடைந்து உய்ய போந்தனன் - திருவடியைக் கைப்பற்றிக் கடைத் தேறும் பொருட்டு வந்துள்ளான்.

இச் செய்யுளும் இதனை அடுத்துவரும் மூன்று செய்யுட்களும் அனலன் என்ற மந்திரியின் கூற்று என்பது பின்வரும் (48) செய்யுட்கொண்டுணரப்படும்; இனி பாரின் நாயகன் அவன் கழல் புகல் அடைந்துய்ய என இணைத்தலுமாம். முதல், ஆகுபெயராய் முதல்வன் என்பதைக் குறிக்கும். கழலடைதல் - திருவடியில் ஈடு படுதல்; தகவு-நடுவு நிலைமை. தொழிற் பெயர்; 'தக்கார் தகவிலர்' (குறள். 114); 'தருமமும் தகவும் சார்வும் (கிட்கிந்தா. 348); நீதிக்கு நடுவு நிலைமை வேண்டப்படுதலில் தகவுறு என்று, தகவினை முன்வைத்தார். கடையடி வீடணன் பிரமனின் பெயரன் என் பதைக் குறிக்கும். இவ்வாறு தொடர் மொழிகளாகப் பெயர்களைக் கூறுவது ஆசிரியர் வழக்கு. 'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி' (ஆரணிய. 258); என்று சூர்ப்பணகையும், 'வையந் தந்த நான் முகன் மைந்தன் மகன் மைந்தன்' 'தனையனுன் முகன்றகை மகன் சிறுவற்குத் தவத்தால்' (சுந்தர. 483); (யுத்த. 511); என இராவணனும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. பிரமதேவன் மகன் புலத்தியன், அவன் மகன் விச்சிரவஸ், அவன் மகன் வீடணன் என ஓர்க.

பி - ம். 2. புகலரும்.

3. தகைவுறு ; நீதியான்.

4. வாய்மையால்.

48

349. அறநிலை வழாமையு மாதி மூர்த்திபால்
நிறைபெரு நேயமு நின்ற வாய்மையும்
மறையவர்க் கன்புமென் றினைய மாமலர்
இறையவன் றரநெடுந் தவத்தி னெய்தினான்.

'அறம் நிலை வழாமையும் - தரும நெறியினின்று பிறழாமை யும், ஆதி மூர்த்திபால் - எல்லா வற்றிற்கும் முதலான திருமாலி னிடத்து, நிறை பெரு நேயமும் - நிறைந்த பெரும் பக்தியும், நின்ற வாய்மையும் - அழியாது நிலைபெற்ற உண்மையும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மறையவர்க்கு அன்பும் - வேதியரிடம் பற்றும், என்று - என்று சிறப்பித்துக் கூறப்படும், இனைய - இத்தகைய பண்பொழுக்கங்களை, நெடு தவத்தின் - தனது உயர்ந்த தவத்தின் பயனாக, மாமலர் இறையவன் தர - சிறந்த தாமரை மலரில் வாசம் செய்யும் பிரமன் அருள, எய்தினான் - அடையப் பெற்றான்.

இச் செய்யுளுடன் இப்படலம் 22, 55-ஆம் செய்யுட்களையும் ஒப்பு நோக்குக. அங்கும் அறநிலை வழாமையும் வேதியரருளும் குறிக்கப் பெற்றுள்ளன. அங்கு உயிர்க்கு நேயமும் எனறுள்ளது; இங்கு இறைவனபால் நேயம் என்று கண்டுள்ளது. இறைவன் பால் நேயமுள்ளவரே உயிர்களிடத்து அன்புள்ளவர் ஆவர், 'ஈசனுக் கன்பில்லா ரெவ்வுயிர்க்கும் அன்பில்லார், தமக்கும் அன்பில்லார் என்பதும், 'எவ்வுயிரும் பராபரன் சந்நிதியாகும் இலங்கும் உயிரனைத்தும் ஈசன் கோயில்' என்பதும், இங்கே குறிக்கொள்ளத் தகுவன. அங்கும் 'ஆதியம் பரமன்' என்றுள்ளது, இங்கும் ஆதிமூர்த்தி பால்' என்றுள்ளது. மறையவரிடம் அன்பு இவனுக்கு இருந்தமையின், அவர் அருளும் பெற்றனன் என்று கூறப்பட்டது. 'பிராமணமமதேவதா' என்றது காண்க. வாய்மையும் என்பதற்கு தொன்றும் தீமையிலாத சொலல் (குறள். 291); என்பது பொருளாகும் என்றினைய என்பதனால் இவை போன்ற பலவொழுக்கங்களும் எங்க. அவை யாவன திருக்குறள் அறத்துப்பாலில் அன்புடைமை தொடங்கி ஊழ் என்ற அதிகாரம் வரையில் விதந்து கூறப்பட்ட நற்பண்புகள் என்க. என்ற இனைய என்பது என்றினைய எனத்தொகுத்தது.

பி - ம். 1. வழாமலும்.

2. நிறைவரு நேயமும், நிறைதரு.

3. இனைய யாவையும். 44

350. சுடுதீயைத் துகிலிடைப் பொதியுந் துன்மதீ
இடுதீயே சிறையிடை யிறைவன் றேவியை
விடுதீயே லுய்குதி விடாது வேட்டியேல்
படுதீயென் றறுதிகள் பலவும் பன்னினான்.

'சுடுதியை துகிலிடை பொதியும் துன்மதி - எரிக்கின்ற நெருப்பினை ஆடையுள் வைத்து மூடும் கெட்ட புத்தியுள்ளவனே! சிறை இடை இறைவன் தேவியை இடுதியே - இராமபிரானுடைய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மனையாளைச் சிறையகத்து வைத்திருக்கின்றாயே; விடுதியேல் உய்குதி - அவளைச் சிறைவீடு செய்வாயாகில் நீ பிழைத் தேறு வாய்; விடாது வேட்டியேல் - பிடிவாதமாகச் சிறை வீடு செய்யா மல் விரும்புவையாகில், படுதி - இறந்துபடுவாய்' என்று உறுதி கள் பலவும் பன்னினன் - பற்பல நன்மை தரத்தக்க அறவுரை களைக் கூறினன்.

சுடுதீ - சுடுதி எனக்குறுகிற்று: பொதிதல் 'பொன் போற் பொதிந்து' (குறள். 155) உறுதிகள்; இராவணன் மந்திரப் படலத்து வீடணன் இராவணனுக்குக் கூறியவை; ஆண்டுக் காண்க.

பி - ம். 1. பொதிந்து, போதிந்த.
2. இராமன்.
3. விடாது வைத்தியேற்.
4. உறுபொருள்; சொல்லினன். 45

351. மறந்தரு சிந்தையன் மதியி னீங்கினன்
பிறந்தனை பின்பதிற் பிழைத்தி போர்குதி
இறந்தனை நிற்றியே லென்ன வின்னவன்
துறந்தன னெனவிரித் தனலன் சொல்லினன்.

'மறம் தரு சிந்தையன் மதியின் நீங்கினன் - தீய நெறியைக் கொண்ட மனத்தினனும் நல்லறிவு தொலையப் பெற்றவனும் ஆன இராவணன், (மேற்கூறிய உறுதியுரைகளைக் கேட்டு) 'பின்பு பிறந்தனை - எனக்குத் தம்பியாகத் தோன்றினை; அதில் பிழைத்தி - அதனால் இது வரையில் உயிர் பிழைத்திருக் கின்றாய். போர்குதி - என்னிடத்தை விட்டுச் சென்று விடு; நிற்றி யேல் இறந்தனை - இனி என் முன் நிற்பாயாகில் (என் சினத்துக்கு இலக்காகி) உயிரிழக்கப் பெறுவாய் என்ன - என்று அவன் மொழிய, இன்னவன் துறந்தனன் - இந்த வீடணன் அவனை விடுத்து வந்து விட்டான்', என - என்று, அனலன் - அனலன் என்பவன், விரித்து சொல்லினன் - விரிவாகக் கூறினன்.

பி - ம். 1. சிந்தையே.
2. இன்பந்தில்; போதுந், போகுதி.
3. என்ன மன்னவன்; என்றிராவணன். 46

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## மயிந்தன் இராமபிரானிடம் அறிவிக்கச் செல்லுதல்

352. மயிந்தனு மவ்வுரை மனத்து வைத்துநீ
இயைந்தது நாயகற் கியம்பு வேனெனுப்
பெயர்ந்தனன் றம்பியும் பெயர்வில் சேனையும்
அயர்ந்திலிர் காமினென் றமைவ தாக்கியே.

மயிந்தனும் - வானர வீரனான மயிந்தன் என்பவனும், அ உரை மனத்து வைத்து - அந்த அனலன் மொழிந்த வார்த்தைகளை உள்ளத்திற்கொண்டு, 'தம்பியும் - என் தம்பியான துமிந்தனும், பெயர்வு இல் சேனையும் - மனவுறுதி நீங்கப்பெறாத வானரப்படையும் ஆகிய நீங்கள், அயர்ந்திலிர் காமின் - சிறிதும் தளராதவர்களாய்ப் பாதுகாத்துக்கொண்டிருங்கள்' என்று - என்று எச்சரித்து, அமைவது ஆக்கி - அமர்ந்திருக்குமாறு புரிந்து, 'நீ இயைந்தது - (அனலனைப் பார்த்து) நீ மனமிசைந்து மொழிந்ததை, நாயகற்கு இயம்புவேன் என - எங்கள் தலைவனாகிய இராமபிரானுக்குச் சொல்லுவேன்' என்று சொல்லி, பெயர்ந்தனன் - அவ்விடத்தை விடுத்துச் சென்றான். ஏ : அசை.

நாயகன் - இராமபிரான். காவலிற் றளராத சேனை என்பான் 'பெயர்வில் சேனை' என்றான். அயர்ந்திலிர் : முற்றெச்சம். இங்குப் பரதனை எதிர்கொள்ளச் சென்ற குகன் தன் சேனைக்களித்த கட்டளை காணத்தகும். 'காமின்கள் நெறி' (அயோத்தி. குகப். 31).

பி - ம். 1. வைத்தினி, வைத்தியான்.

2. இயந்தவை ; இயம்பவே யெனப் ; நால்வருக் கியம்பலே யென.

3. துமித்தனும்.

4. அயர்ந்திடல் காவல், இயைந்துடன் காவல், மயங்கலில் காவல் ; காவலின் னமைதி, காவனின் றியைவது.



## மயிந்தன் இராமபிரானிடம் சென்று வணங்குதல்

353. தருமமும் ஞானமும் தவமும் வேலியாய்
மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாய்க்
கருணையங் கோயிலி லிருந்த கண்ணனை
அருநெறி யெய்திச்சென் றடிவ ணங்கினன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தருமமும் ஞானமும் தவமும் வேலியாய் - அறம் தூய அறிவு தவம் என்ற இப்பண்புகள் காவல் வேலியாகவும், மருவு அரும் - எளிதில் அடைதற்கரிய, பெருமையும் பொறையும் வாயிலாய் - பெருமிதமின்மையும் பொறுமையும் இரண்டு வாயில்களாகவும், அருள் நெறி எய்தி - பிறர்க்கு அருள்புரியும் தூய வழியை மேற் கொண்டு, கருணை அம் கோயிலில் இருந்த கண்ணனை - கருணை என்னும் ஆலயத்தில் இருந்த (திருக்கோலத்துடன் வீற்றிருந்த) அருட்கண் நோக்குடைய இராமபிரானிடம், சென்று அடி வணங்கினன் - (மயிந்தன்) போய் அவன் திருவடிகளைப் பணிந்தான்.

தருமம் - அறம்; 'அறனெனப்பட்டது கொல்லாமை'; 'அஹிம்ஸா பரமோ தர்ம:'; 'அறவோர் மற்றெவ் வுயிர்க்கும், செந்தண்மை பூண்டொழுக லான்' (குறள். 30). ஞானம் - 'எவ் வுயிரும் பராபரன் சந்நிதியாகும், இலங்கு முயிரணைத்தும் ஈசன் கோயில்' என்ற துணிவு. தவம் - 'உற்றநோய் நோன்றல் உயிர்க் குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு' (குறள். 261) என்றபடி சீவகாருண்யம். இவைகள் நாற்புறவேலி என்றார். தருமம் ஞானம் தவம் என்ற மூன்றே கூறப்படினும், ஞானத்தை அபரம், பரம் என்ற இரண்டாகக் கொள்ளவே நான்கு புறமுமாம். இனி, அடுத்தடுத்து மூன்று சுற்றுப் பிரகாரங் களாக இவை மூன்று பண்புகளும் அமைந்தன வெனினுமாம். இத்தகைய பண்புகள் மதில்களாக அமைந்து காவல்புரிய இவற்றின் நடுவே யுள்ளது கருணையங் கோயில் எனவும், அந்தக் கருவரையில் பெருமான வீற்றிருந்தான் எனவும் கூறப்பெற்றது. பெருமை - பெருமித மின்மை; இராமபிரானுக்குப் பூர்வபாஷி என்ற ஓர் பெயருண்டு. பொறை - பிறர் குற்றங்களைப் பொறுத் தல். இவற்றை வடமொழி வல்லுநர் முறையே சௌலப்யம் என்றும், க்ஷமை என்றும் மொழிவர். இவை யிரண்டும் திருக் கோயிலின் அபிமுக வாயிலும், அதோமுக வாயிலும் என்றார். இத்தனை பண்புகளும் சரணாகத வத்ஸலனான பெருமானுக்கு இன்றியமையாதன வாகலின் இவற்றை அழகுபெறக் கூறினார். மேற்கூறிய பண்புகள் இல்லையெனில் கருணை பிறவாது, கருணை என்பது அருள்; இதனைத் திருவள்ளுவர், செல்வத்துட் செல்வம் என்பர் 'அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்' (குறள். 241) என் றமை காண்க. இஃது அன்பினும் சாலப்பெரிது, இதனை அருள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்னும் அன்பீன் குழவி (குறள். 757) என்றபடி, தொடர்புடையார் மாட்டுச் செல்லும் அன்புடன் தன்னல மின்மையுங்கூட இந்த அருள் பிறக்கும். இப்படலம் 126 முதல் 130 வரை உள்ள செய்யுட்களை இங்கு ஒப்பு நோக்குக. தருமமும் ஞானமும் தவமும் வேலியாக அமையவே, அதருமமும் அஞ்ஞானமும் அவச்செய்கை களும் அக்கோயிலின் உட்புகற்கில்லை யென்பது குறிப்பு. இங்கே கண்ணன் கண்ணழகுடையவன் எனவே அருட்கண்ணன் என்று கொள்க. 'கண்ணுக் கணிகலம் கண்ணோட்டம்' (குறள். 575); 'கண்ணவா னென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு' (திருவாய்.) இங்கு, 'கருணையங் கோயிலில் அருணெறி யெய்தி யிருந்த கண்ணனை' என்று பிரித்துக் கூட்டப்பட்டது. கண்ணன்; ஆரணிய. 254; சுந்தர. 678. வீடணன் போந்தது முன்னரே இராமபிரான் உணர்வன். எல்லாம் அறிந்த அப்பெருமான் அவன் போந்த காரணத்தை உய்த்துணர்ந்து, பிரபத்தி மார்க்கத்தில் தலைப்பட்டுள்ள அந்த வீடணனுக்கு அருள் புரிதற்கு வரதக்கரம் அபயக்கரம் கொண்டு கருணையங் கோயி லின்கணிருந்தான் என்று கூறிய நயம் உய்த்துணர்க. 'சர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேவம் சரணம் வ்ரஜ' (கீதை.) என்ற ச்லோகம் இங்குக் குறிக்கொள்ளத்தகும். இது மிகச் சிறந்த செய்யுள் என்பது ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. தருமமு நீதியும்.
2. பொருவரும் கேள்வியும்.
3. கோயிலில். 48

354. உண்டுரை யுணர்த்துவ தூழி யாயெனப்
புண்டரீ கத்தடம் புரையும் பூட்சியான்
மண்டிலச் சடைமுடி துளக்கி வாய்மையாய்
கண்டதுங் கேட்டதுங் கழறு வாயென்றான்.

'ஊழியாய்-பேரூழிகள் நிகழுங்காலத்தும் அழியா திருப்பவனே! உணர்த்துவது உரை உண்டு - அறிவிக்கவேண்டிய மொழி ஒன்று உளது,' என - என்று (மயிந்தன்) கூற, புண்டரீகம் தடம் புரையும் பூட்சியான் - தனது உறுப்புக்களால் செந்தாமரைக் குளத்தை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நிகர்த்த திருமேனியொடும் விளங்குபவனான இராமபிரான், மண்டிலம் சடைமுடி துளக்கி - வட்டமான தனது சடாபாரத்தை(த் தனது இணக்கம் புலப்பட)ச் சிறிது அசைத்து, 'வாய்மையாய் - உண்மையே பேசுபவனே ! கண்டதும் கேட்டதும் கழறுவாய் என்றான் - நீ நேரில் பார்த்ததும் கேட்டறிந்ததும் சொல்லுவாயாக' என்று பணித்தான்.

ஊழியாய் : இதனை 'ஆயுஷ்மான்' என்பர் ; 'ஊழிமுத ஞயகன்' (யுத்த. 691) ; 'ஊழியி ஞெருவனும்' (யுத்த. கும்ப. 3:6). 'புண்டரீ கத்தடம் புரையும் பூட்சியான்'; 'அமலத் திண்கரமுங் காலும் வதனமும் கண்ணுமான, கமலத்தின் காடு பூத்த காளமா மேகமொத்தான்' (யுத்த. 781) ; 'கண்டனன் வதனம் வாய் கண்கை காலெனப், புண்டரீ கத்தடம் பூத்து' (யுத்த. கும்ப. 279) ; 'செந்தாமரைத் தடங்கண், செங்கனிவாய் செங்கமலம், செந்தா மரை யடிகள், செம்பொன் திருவுடம்பே' (திருவாய். 2·5:1) ; 'விட்டிலங்கு செஞ்சோதித் தாமரைபாதம் கைகள் கண்கள்' (திருவாய். 2.7·5) ; 'கண்கை கால், தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதா 'சாயல்சாமத் திருமேனி தண்பா சடையாத் தாமரைநீள், வாசத்தடம்போல் வருவானே' (திருவாய். 8·5:1); 'கார்க்கடல் கமலம் பூத்த தெனப் பொலி வானே' (யுத்த. 435) பூட்சி - உடல் ; (பிங்.) 'புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய்' (தேவா. 1160 ; 6). உயிரைப் பூண்பது அல்லது தரிப்பது என்ற காரணக்குறி. மைந்தர் துவிவிதரை அநுமன் வீடணன்பால் உய்த்தமை இராமபிரான் அறிவன் ; ஆதலின், 'கண்டதும் கேட்டதும் கழறுவாய்' என்றான். மண்டிலச் சடைமுடி - வனவாசம் செய்யப் புக்க இராமபிரான் சடை தாங்கினன் ; 'தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கரும் தவமேற் கொண்டு' (அயோத்தி. கைகேசி. 107).

பி - ம். 2. புரைகட் புங்கவன்.

3. மண்டலச் ; துளக்க ; வாய்மையாய்.

4. கழறன் பேயினன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## மயிந்தன் கூறிய விடை

355. விளைவினி யறிந்திலம் வீட ணப்பெயர்
நளிர்மலர்க் கையின னால்வ ரோடுடன்
களவியல் வஞ்சனை யிலங்கைக் காவலற்
கிளவல்நஞ் சேனையி னடுவ ணெய்தினான்.

'இனி விளைவு அறிந்திலம் - இனிமேல் என்ன நிகழுமோ தெரிந்தோமில்லை; உடன் இயல் களவு - உடன்பிறந்த பிறவிக் குணமான களவுத் தொழிலோடு, வஞ்சனை - பிறரை வஞ்சிக்கும் தீய பண்பினையும் உடைய, இலங்கை காவலற்கு - இலங்கையைப் பாதுகாக்கும் இராவணனுக்கு, இளவல் வீடண பெயர் - தம்பியான வீடணன் என்ற பெயரையுடைய, நளிர் மலர் கையினன் - ஒளிர்கின்ற தாமரை மலர்போன்ற கரங்களையுமுடையவன், நால்வரோடுடன் - நான்கு துணைவர்களோடு, நம் சேனையின் நடுவண் எய்தினான் - நமது சேனையின் இடையே வந்தடைந்தான்.

இளவல் - அல் பெயர்விகுதி. இச் செய்யுளும் இதனை அடுத்த செய்யுளும் மயிந்தன் கண்டதைக் கூறுவன. 'களவியல் வஞ்சனை யிலங்கை காவலற் கிளவல்' என்ற தொடர்கொண்டு, வீடணனை ஏற்பதா தவிர்ப்பதா என்ற ஐயம் அவனிடம் நிகழ்ந்தது புலப்படும். இதனை, 'விளைவினி யறிந்திலம்' என்ற சொற்கள் காட்டும். உடன் களவியல் வஞ்சனை யெனக்கூட்டுக. மலர்க் கையினன், என்று அங்க அடையாளம் கூறினன்; அதனால் அவன் பண்பு அறியலாகும் என்று என்க.

பி - ம். 1. விளைவினை ; அறிந்திலன்.
2. நளிமல ரக்கர்க ளுல்வர் ; மலைபரக்கையர், நளிபுனை யாக்கையன்.
3. களவுசெய்.
4. இளையவன் ; நடுவந் தெய்தினன். 50

356. கொல்லுமின் பற்றுமி னென்னுங் கொள்கையால்
பல்பெருந் தானைசென் றடர்க்கப் பார்த்தியான்
நில்லுமி னென்றுநீர் யாவிர் நுந்நிலை
சொல்லுமி னென்னவோர் துணைவன் சொல்லினான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'கொல்லுமின் பற்றுமின் என்னும் கொள்கையால் - (வந்த அந்த அரக்கர்களை மாற்றார்கள் எனக் கருதிக்) கொலை செய்யுங்கள் பிடியுங்கள் என்னும் கோட்பாட்டுடன், பல் பெரு தானை சென்று அடர்க்க யான் பார்த்து - பலவாகிய பெரிய வாநரச்சேனை மேற்சென்று நெருக்க யான் கண்டு; (அச் சேனையை), நில்லுமின் என்று - மேற்செல்லாதீர் நில்லுங்கள் என (வாநரர்களை) விலக்கி, நீர் யாவிர் - நீங்கள் யார்? நும் நிலை சொல்லுமின் - உம்முடைய நிலைமையைப் பகருங்கள்' என்ன - என்று (வீடணன் முதலியோரைக்) கேட்க, ஓர் துணைவன் சொல்லினான் - அந்த வீடணனது நண்பர்களில் ஒருவன் (பின்வருமாறு) மொழியலுற்றான்,

இங்கு ஓர் துணைவன் என்றது மயிந்தனை குறித்தது.

பி - ம். 1. பற்றுமி னெற்றுமின்; என்ற; கொள்கையர்.
2. பல்பெருஞ் சேனை; யாம்.
3. நில்லுமி னன்றியாவ னின்னிலை; நீயாரை; இன்னிலை; என்றிவட விலக்கி.
4. சொல்லுதி. 51

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

357. முரண்புகு தீவினை முடித்த முன்னவன்
கரண்புகு சூழலே சூழக் காண்பதோர்
அரண்பிறி தில்லென வருளின் வேலையைச்
சரண்புகுந் தானென முன்னஞ் சாற்றினன்.

'முரண்புகு தீவினை - மாறுபாட்டிற் சென்ற தீயதொழிலை, முடித்த முன்னவன் - செய்து முடித்த தன் தமையனான இராவணன், கரண் புகு சூழலே சூழ - தன்னுடைய அந்தக்கரணமாகிய மனம் எண்ணினதையே எண்ணித் தன்வழியே சென்றதனால், காண்பதோர் அரண் பிறிது இல் என - அறிந்து அடையக்கூடிய புகலிடம் வேறு இல்லை என நிச்சயித்து, அருளின் வேலையை சரண் புகுந்தான் என - கருணைக்கடலாகிய இராமபிரானைப் பாது காவலிடமாகக் கருதிப் புக்கனன் என்று, முன்னம் சாற்றினன் - அவன் வந்த கருத்தினைத் தெரிவித்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பல நல்லுரைகளைத் தான் பகரக்கேட்டும் பிடிவாதமாகத் தன் காமாதுரச் செயலை முடிக்கக் கருதினவன் என்பான் தீவினை என்றான். கரண் - கரணம்; அந்தக் கரணம் இங்கே மனம். சூழல் - தொழிற்பெயர். 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா' என்பதற்கேற்ப, 'சூழலே சூழ' எனப்பட்டது; இப்படலம் 62, 66 பார்க்க. அருளின் வேலை - கருணைக்கடல்; 'அருட்கரச' (ஆரணிய. 166). முன்னம் - கருத்து; 'முன்னத்தின் உணருங் கிளவியு முளவே' (தொல். சொல். எச்ச. 63).

பி - ம். 1. முரன்புகுந்; முன்னவற் கரன்; முடிக்கு மூர்த்திக்கு.
2. சூழலே புகுதல்; காண, காணுங் காப்பதோர்.
3. அருளின் செல்வனே.
4. சரண்புகுந் தானெனா, புகுந்தேன். 52

358. ஆயவன் றருமமு மாதி மூர்த்திபால்
மேயதோர் சிந்தையும் மெய்யும் வேதியர்
நாயகன் றரநெடுந் தவத்து நண்ணினன்
தூயவ னென்பதோர் பொருளுஞ் சொல்லினான்.

'தூயவன் - மிகவும் பரிசுத்தனான, ஆயவன் தருமமும் - அத்தகையவன் ஆன வீடணது அறநெறியும், ஆதி மூர்த்திபால் மேயது ஓர் சிந்தையும் - முதல் மூர்த்தியான திருமாலிடத்துப் பொருந்திய ஒப்பற்ற நல்ல நினைவும், மெய்யும் - சத்தியமும், நெடுதவத்து - அவன் ஆற்றிய பெருந்தவத்தின் விளைவாக, வேதியர் நாயகன் தர நண்ணினன் - அந்தணர்க்கெல்லாம் தலைவனான பிரமன் அருள அடைந்துள்ளான், என்பது ஓர் பொருளும் சொல்லினான் - என்பதான ஓர் செய்தியையும் கூறினான்.

தருமமும் 'விபீஷணன்சதர்மாத்மா' என்று முதனூலில் வருவது காண்க. 'ஆதி மூர்த்திபால் மேயதோர் சிந்தை; இங்கு 'அறந்தலை நின்றவற் கனபு பூண்டனன் (யுத்த. 323) என்ற பாடலையும் இதேபடலம் 22, 46 ஆம் செய்யுட்களையும் ஒப்பு நோக்குக. 'ஆதிமூர்த்தி; முன்னர் 'ஆதியம் பரமன்' (யுத்த. 327); 'யாவர்க்கும் நாயகன்' (யுத்த. 328) என்பன காண்க. மேயதோர் சிந்தை - அநந்யபக்தி, சிந்தை அவன் வழிப்படவே மொழியும் காயமும் வழிப்படுதல் கூறாமலே யமையும். (ஒப்பு): கைகடலை புக்கன கருத்துளது மெல்லாம், தெய்வமென லுற்றவுடற் சிந்தைவச

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மன்றோ' (பால. கோலங். 34): இனி, சிந்தையும் மெய்யும் என்பதை மனமும் காயமும் எனக்கொண்டு மொழியை உபலக்கணத்தாற் கோடலுமாம்.

பி - ம். 1. ஆதி மூர்த்தியான்.
2. மெய்ம்மை ; பூவுறை.
3. நருநெடுவரத்து ; தவத்தின் ; எய்தினன்.
4. சொல்லினர். 53

359. கற்புடைத் தேவியை விடாது காத்தியேல்
எற்புடைக் குன்றமா மிலங்கை ஏழைநின்
பொற்புடை முடித்தலை புரளும் என்றொரு
நற்பொரு ளுணர்த்தின னென்று நாட்டினான்.

(விபீடணன் இராவணனை நோக்கி) 'கற்புடை தேவியை விடாது காத்தியேல் - கற்புமிக்க அந்தப் பிராட்டியைத் தொடர்ந்து சிறை காப்பாயாகில், இலங்கை என்பு உடை குன்றமாம் - இந்த இலங்காபுரியானது (அரக்கர்களின்) எலும்புகள் நிறைந்த மலையாகிவிடும்; ஏழை - அறிவில்லாதவனே! நின் பொற்பு உடை முடிதலை புரளும் - உன்னுடைய அழகிய மகுட மணிந்த தலையானது தரையில் வீழ்ந்து புரளும்;' என்று ஒரு நல் பொருள் உணர்த்தினன் என்று நாட்டினான் - என்று ஓர் சிறந்த அறவுரை கூறினான் என்பதையும்' (அந்த விபீடணனுடைய நண்பன் என்னிடம்) அறிவித்தான்.

முதலடியோடு 'கோநகர் முழுவதும் (75) எனத் தொடங்கும் செய்யுளுடன் ஒப்பு நோக்குக. 'எற்புடைக்குன்றமாம் இலங்கை' (ஒப்பு): 'பொற் பிறங்க லிலங்கை பொருந்தலர், எற்பு மால்வரை யாகில தேயெனின்' (சுந்தர. 623) என்ற பிராட்டி கூற்று காண்க. 'கற்புடைத்தேவி' சுந்தர. 141, 321, 404, 468, 1269 காண்க. ஏழை - அறிவிலி என்னும் பொருளது. 'பொற்புடை' என்பதில் பொற்பு உடையப் பெற்ற தலை என்ற தொனியும் காண்க. பொற்பு: 'பொற்பே பொலிவு' (தொல். உரி. 37):

பி - ம். 2. குன்றும் ; ஏனை.
4. உணர்த்தினன் ; நாட்டினன் ; நாட்டினர். 54

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



360. ஏந்தெழி லிராவண னினைய சொன்னநீ
சாந்தொழிற் குரியையென் சார்பு நிற்றியேல்
ஆந்தினைப் பொழுதினி லகறி யாலெனப்
போந்தன னென்றனன் புகுந்த தீதென்றான்.

'ஏந்து எழில் இராவணன் - உயர்ந்த அழகினையுடைய இராவணன், இனைய சொன்ன நீ - இவ்வாறு எனக்கு உகவாத வார்த்தைகளை மொழிந்த நீ, என் சார்பு நிற்றியேல் - என் பக்கம் நிற்பாயானால், சாம் தொழிற்கு உரியை - இறப்பதற்கே தக்கவனாவாய்,' (ஆகவே) ஆம் தினை பொழுதினில் அகல்தியால் என - பொருந்திய தினையளவு நேரத்திற்குள்ளாக என்னை விட்டு அகல்வாயாக என்று மொழிய, போந்தனன் என்றனன் - (அவ்விடத்தை விடுத்து இங்கு) அந்த வீடணன் வந்தனன் என்று அனலன் தெரிவித்து; புகுந்தது ஈது என்றான் - நிகழ்ந்தது இது' என்று (தான் கண்டதும் கேட்டதுமான செய்திகளை), மயிந்தன் என்ற வானரவீரன் இராமபிரானிடம்) அறிவித்தான்.

தான் நேரிற் கண்டதும் அநலன் வாய்க்கேட்டதும் மயிந்தன் கூறினன். ஏந்தெழில் - உயர்ந்த அழகு; 'ஏந்தெழில் மிக்கான் இளையான் இசை வல்லான்' (தனிப்பா.) சார்பு நிற்றியேற் சாந்தொழிற் குரியை என மொழி மாற்றுக. சிறிய அளவைக் குறிப்பதற்குத் தினையைக் கூறுவர். 'தினைத்துணை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே' (திருவாச. திருக்கோத். 3): இனை யளவு போதாச் சிறு புன்னீர்' (திருவள். மாலை. 5):

பி - ம். 1. சொல்லி.

2. கரியையென் சார்வு; தொழிற்குரிய; நின்றினி.

3. ஆந்தனைப்; ஆய்ந்திமைப்; பொழுதினி யகறி. 55

வந்தவர்களை ஏற்பதா தவிர்ப்பதா என இராமபிரான்
தன் நண்பரை வினவல்

361. அப்பொழு திராமனும் அருகில் நண்பரை
இப்பொருள் கேட்டநீ ரியம்பு வீரிவன்
கைப்புகற் பாலனோ கழியற் பாலனோ
ஒப்புற நோக்கிநும் முணர்வி னாலென்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அப்பொழுது (மயிந்தன் கூறிய சொற்களைக் கேட்ட) - அப்போது, இராமனும் அருகில் நண்பரை, இராமபிரானும் (தன் அண்மையில் அமர்ந்திருந்த) துணைவரைப் பார்த்து, 'இப் பொருள் கேட்ட நீர் - இப்போது நடைபெற்ற செய்திகளை (மயிந்தன் வாய்மொழியாற்) செவியேற்ற நீங்கள், கைபுகல் பாலனோ - இந்த வீடணன் நம்மிடம் புகுதற்கு உரியவனோ? அல்லது, கழியல் பாலனோ - அப்பால் சென்றிடற்கே உரியவனோ? நும் உணர்வினால் - உங்கள் அறிவினால், ஒப்புற நோக்கி - நடுவு நிலைக்கேற்ப ஆராய்ந்து, இயம்புவீர் என்றான் - உரைப்பீர்களாக' என்று சொன்னான்.

இப்பொருள் ; மயிந்தன் கூறியன. கைபுகல் ; 'கைபுகற் கமைவதானான்' (யுத்த. 424) ; 'திருமந்திரங்கை புகுந்தவாறே ஈசுவரன் கைபுகுதும்' (ஸ்ரீவசன. 97) ; 'ஒப்புற நோக்குதல்' 'சமன் செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற், கோடாது ஆராய்தல் : இவ்வாறு ஏற்பதா தவிர்ப்பதா என்று நண்பரிடம் வினவியதாக முதனூலில் இல்லை. சுக்கிரீவனே வீடணனைக் கண்ட அளவில், பெருமாளிடம் தானாகவே தன் கருத்துக்களைக் கூறப்பிறரும் தத்தம் கருத்துக்களைத் தெரிவித்ததாக அந்நூல் கூறும். உணர்வின் எழுந்த அளவிலே கூறிவிடாது நோக்கி என்றும் ஒப்புற என்றும் கூறியது கொண்டு நல்ல முறையில் ஆராய்ந்து கருதது வெளியிடுமாறு கூறினன் என்க இடம் நோக்கிப் பிறர் உவப்பப் பகர்வதும் உலகிய லாகலின்' (ஒப்பு). 'நீர், புகன்றவிப் பொம்மல் வாசகம், உகவையின் மொழிந்ததோ வுள்ள நோக்கியோ, தகவென நினைந்ததோ' (அயோத்தி. மந்திரப். 79) எனத் தயரதன் தன் அமைச்சரை நோக்கி வினவியது காண்க.

பி - ம். 1. அருகு நன்பரை, அமரு மன்பரை, அறிவினன்பரை.
2. இயம்பு வீரெனைக்.
3. கைப்புகப் ; கழியப் ; கழித்தற் பாலனோ.
4. நோக்குவீர், நோக்குறும் ; நோக்குநும், நோக்குமின். 36

### சுக்கிரீவன் கூற்று

362. தடமலர்க் கண்ணனைத் தடக்கை கூப்பிநின்
றிடனிது காலமீ தென்ன வெண்ணுவான்
கடனறி காவலன் கழறி னனரோ
சுடர்நெடு மணிமுடிச் சுக்கி ரீவனே.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தட மலர் கண்ணனை - குளத்தில் மலரும் செந்தாமரை போன்ற விழிகளையுடைய இராமபிரானிடம், தடகை கூப்பி நின்று - தன்னுடைய நீண்ட கைகளைக் குவித்து நின்று, கடன் அறிகா வலன் - தனது கடமையை நன்கு உணர்ந்திருந்த குரக்கரசனை, சுடர் நெடு மணிமுடி சுக்கிரீவன் - ஒளிவிடுகின்ற பெரிய நவமணிகள் அழுத்திச் செய்த கிரீடம் அணிந்த சுக்கிரீவன், இடன் இது காலம் ஈது - பேசவேண்டிய இடம் இது காலமும் இது. என்ன எண்ணுவான் - என்று ஆலோசிப்பவனாய், கழறினான் - சொல்லத் தொடங்கினான். அரோ ஈற்றசை. அவன் கூறியவை பின்வரும் 12 செய்யுட்களிற் காண்க.

தடமலர்க் கண்ணன்; தடம் - பொய்கை. மலர் - தாமரை. 'பூவெனப்படுவது பொறிவாழ் பூவே' 'பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை' (தேவா. 1182 : 2) 'பூவிற்குத் தாமரையே' (திருவள். மாலை 36) என்றமை காண்க. 'கண்ணன; 353 உரை காண்க, தடக்கை - நீண்ட பெரிய கைகள். 'தடவும் கயவும் நளியும் பெருமை' (தொல். சொல். உரி. 22) சுக்கிரீவன் வானர மன்னனாகலின் கால மிடமறிந்துகூறும் கடமை ஓர்ந்தவன் என்பான், 'இடனிது காலமீ தென்ன வெண்ணுவான் கடனறி காவலன்' என்றான்; 'ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்கருதி யிடத்தாற் செயின்' (குறள். 484); 'நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர், பண்பறிந் தாற்றாக் கடை' (குறள். 469) என்பராகலின், கடமை அறிந்து மொழிந்தான் எனக. பகைப்புலத்திலிருந்து போர் நிகழும் அமயத்துப் போந்தவன் வீடணன் ஆகலின் அந்தக் காலத்தையும், வந்து அடைந்துள்ள இடத்தையும் ஆய்ந்து கூறினன் எனப்பட்டது,

பி - ம். 1. கூப்பினன்.
2. உன்னுவான்.
3. காதலன், காட்சியன்.



363. நனிமுதல் வேதங்க ளான்கும் நாமநூல்
மனுமுதல் யாவையும் வரம்பு கண்டநீ
இனையன கேட்கவோ வெம்ம னோர்களை
வினவிய காரணம் விதிக்கு மேலுளாய்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி), 'விதிக்கு மேல் உளாய்- பிரமனுக்கும் மேம்பட்டிருப்பவனே! முதல் வேதங்கள் நான்கும்- முதன்மை பெற்ற நான்மறைகளையும், நாமம் நூல் - புகழ்பெற்ற நூல்களாகிய, மனு முதல் யாவையும் - மனுகர்ம சாஸ்திரம் முதலிய யாவற்றினுடைய, வரம்பு நனி கண்ட நீ - எல்லையை நன்றாகக் கண்டுள்ள நீ, எம்மனோர்களை - எம்போன்ற அறிவு அநுபவங்களிற் குறைந்துள்ளவர்களை, வினவிய காரணம் - கேட்ட காரணம், இனையன கேட்கவோ - இந்தச் செய்திகளைக் கேட்டறிவதற்காகவோ?

நனி முதல் - மிகவும் முதன்மையான எனினுமாம். வேதம் பௌருஷேயம் அபௌருஷேயம் என்று இருவகையாகக் கூறுவர்; ஆகலின் அங்ஙனம் கூறப்பட்டது. சில் வாழ்நாள் பல் பிணி சிற்றறிவினர்க்காக நான்காக வகுக்கப்பட்டதன்றி, வேதம் பல என்பது நூற்கருத்து; 'அநந்தாவை வேதா;' என்பது வான் மீகம். 'ஐயன் வேத மாயிரம் வல்லான் அறிவாளன்' (சுந்தர. 483); 'எண்ணரிய மறையினொடு கின்னரர்களிசை பாட' (பால. மிதிலைக். 153) என்பனவும் காண்க. நாமம் - புகழ்; பெருமை. 'நாம மேருவும்' (ஆரணிய. 234); 'வழுதியர் நாமம் வளர்க்கின்ற வாணன்' (தஞ்சை வாணன். 7). நூல் என்பது ப்ண்டைத் தமிழில் இலக்கணத்தையே குறித்துப் பின்னர் பொதுவாக இலக்கியங் களுக்கும் வழங்கப்பெற்றது; இராமபிரான், நூல் வரம்பு கண்டவன்: 'கலைகளின் பெருங்கடல் கடந்த' (ஆரணிய. 470); 'நான் மறை யின் கனி' (ஆரணிய. 97); 'சுருதி நாயகன்' (சுந்தர. 338, 632, 1107); 'மறைகளுக் கிறுதியாவான்' (சுந்தர. 1); விதிக்கு மேலுளாய்: விதி; பிரமன்; (திவா.) 'காட்டுவார் விதியார்' (சுந்தர. 198), இனி விதிக்கு மேலுளாய் என்பதற்கு, பெருவலி பெற்ற ஊழ் என்ற விதிக்கும் விதியாகுபவன் எனினுமாம்; 'விதிக்கும் விதியாகும் என் விற்றொழில் காண்டி' (அயோத்தி. நகர்நீங். 134). பிறரிடம் கேட்டறிய வேண்டும் பொருள் இராம பிராற்கில்லை; எனவே, சுக்கிரீவன் முதலானோர்களைக் கேட்டது அவரவர் மனநிலையைச் சோதிக்கவே என்று கூறினன் சுக்கிரீவன்.

பி - ம். 1. வேதங்க ளூலும்.
3. இனியன; கேட்டி கொல்.
4. வினவின; விதியின்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


364. ஆயினும் விளம்புவ னருளி னுழியாய்
ஏயின தாதலி னறிவிற் கேற்றன
தூயவென் றென்னினுந் துணிவன் றென்னினும்
மேயது கேட்டியால் விளைவு நோக்குவாய்.

'(எம்பால் வினவி உங்கட்கு ஆகவேண்டுவது ஒன்றும் இல்லை); ஆயினும் - ஆனாலும், அருளின் ஆழியாய் - கிருபாகரனே! ஏயினது ஆதலின் - நீ கட்டளையிடுவதால், அறிவிற்கு ஏற்றன விளம்புவன் - என் அறிவிற்குப் புலப்படுவதைக் கூறுவேன்; தூய என்று என்னினும் - (யான் மொழிவது) மிகவும் நல்லது எனக்கருதினாலும், துணிவு அன்று என்னினும் - மேற்கொண்டு துணியப்படும் பொருள் அன்று என்று கருதினாலும், மேயது கேட்டி - என் கருத்தில் பொருந்தியுள்ளதைச் செவியேற்பாயாக; (ஏற்ற பின்னர்), விளைவு நோக்குவாய் - அதனால் உண்டாகக் கூடிய பயனைக் குறித்து நீயே ஆலோசித்துக் கொள்வாயாக. ஆல் - அசை.

பெருமானது பேரறிவின் முன்னர்த் தன் சிற்றறிவு எம்மாத்திரம் என்பதை உணர்ந்து சுக்கிரீவன் அடக்கம் கூறினன். தான் கூறும் விடை தவறாக விருப்பினும் பொறுத்தருள்வான் என்று எண்ணி, 'அருளின் ஆழியாய்' என்றான். ஏவின செய்தல் கடமையாதலின் அவன் சொல்லத் துணிந்தான் என்க. அண்மையில் இருந்த பல்லோர்களுள்ளும், வானரேந்திரனாகலான், இராமபிரான் பொதுவாகக் கேட்ட போதினும், தானே முதற்கண் கூறினன் என்க. சிறப்பாக இவனையே குறித்துப் பெருமான் கேட்கவில்லை என்பது 'எம்மனோர்களை' என்றதால் தெளிவாகும். முதநூலினும் சுக்கிரீவனே முதற்கண் பேசினன் என்பது முன்னர்க் காட்டப்பட்டது.

பா - ம். 2. ஏயன; ஏற்றவா.
3. தூயவன் றென்னினும், துணிவன் றென்னினும்.
4. கேட்டபின்; கோடியால்; நோக்கென்றான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuyan Vani Trust Donations



365. வெம்முனை விளைதலி னன்று வேறொரு
சும்மையா னுயிர்கொளத் துணிதலா லன்று
தம்முனைத் துறந்தது தரும நீதியோ
செம்மையி லரக்கரில் யாவர் சீரியோர்.

(இந்த விடணன் இச்சமயத்தில்), 'தம்முனை துறந்தது - தன் தமையனை இராவணனை விடுத்து வந்தது, வெம் முனை விளைதலின் அன்று - தமையனோடு கடும்போர் நிகழ்ந்ததால் அன்று, வேறு ஒரு சும்மையான் உயிர் கொள துணிதலால் அன்று - பிறிதொரு சுமையால் தன் உயிரையே கொள்வதற்குத் துணிவுகொண்டதாலும் அன்று; (ஆதலின் இவன் செயல்), தரும நீதியோ - அறநெறி யாகுமோ? செம்மை இல் அரக்கரில் சீரியோர் யாவர் - நடுவுநிலைமை முதலிய நேர்மைக் குணங்கள் அற்ற அரக்கர் குழுவில் மேன்மையுடையவர் என்று புகலற் குரியவர் யாவர்? ஓ : வினா.

முனை - போர்; 'முனைவீரன் கொற்றப்போர்' (சுந்தர. 318); 'கடுநெறி முனையகன் பெரும்பாழ்' (பதிற்றுப். 25, 9). சும்மை - சுமை; ஓசையுமாம். இங்கே அபவாதம் அல்லது பழிச்சொல் என்க. முன்னர், தான் தன் தமையனுடன் வேறுபட்டதற்குக் காரணம் வாலி இவனைப் பகைத்து, இவன் மனைவியையும் கவர்ந்து, தன்னைக் கொல்ல முயன்றதால் ஆகும் என்று குறித்தான். வேறொரு சும்மையால் என்பது, தற்காப்பிற்காக அன்று பிலத்துவாரத்தைக் கற்கொண்டடைத்தான் என்ற ஓர் பழிச்சொல் காரணமாக எனினுமாம்.

பி - ம். 1. விளைதலின், விளைத்தலாலன்று, விளைந்தலினன்று.
2. சும்மை யாலுயிர்; அன்றே.
3. நீதியோய்.
4. செம்மையால்; சீரியார்.



366. நகையுறு தந்தையைத் தாயைத் தம்முனை
மிகையுறு குரவரை யுலகின் வேந்தரைப்
பகையுற வருதலுந் துறந்த பண்பிது
நகையுற லன்றியே நயக்கற் பாலதோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'தகை உறு - தகுதிவாய்ந்த தந்தையை, தாயை தம்முனை - அப்பனையும் அன்னையையும் தமையனையும், மிகை உறு குரவரை - மேம்பாடு பொருந்திய ஆசாரியரையும், உலகின் வேந்தரை - புவி மன்னவர்களையும், (அவர்கட்கு), பகை உற வருதலும் - விரோதிகள் பொருந்த வரும்போது, துறந்த பண்பு இது - கைவிட்டு வருதல் என்ற இந்தக் கோழைத்தனம், நகை உறல் அன்றியே - (ஒழுங்கீனமான செய்கை என்று) கேலி செய்யக்கூடிய காரியமே அல்லாமல், நயக்கல் பாலதோ - அறிஞர்கள் விரும்பி ஏற்கக்கூடிய செயல் ஆகுமோ? ஓகாரம் - வினா.

முதலிரண்டடிக்கு ஆபத்துக் காலத்தில் 'அரசன் உவாத்தியான் தாய் தந்தை தம்முன், நிகரில் குரவ ரிவர்' (ஆசாரக். 16) என்ற இவர்களை கைவிடுதல் கூடாது என்ற அறம் இங்கே கூறப்படுதல் காண்க. வேந்தரைத் துறந்த என இணைக்க. பாவச் செயல்கள் புரிந்தவனைச் சேர்க்கலாகாது என்பது கருத்து.

பி - ம். 1. தகைவுறும் ; தம்முனைத் தாயைத் தந்தையை.
2. மிகையறு ; யறிவிற் கேற்றவர் ; வேந்தனை.
3. பண்பது.
4. அன்றியும் ; நயக்கப் பாலதோ, நயக்க லாவதோ.



367. வேண்டுழி யினியன விளம்பி வெம்முனை
பூண்டுழி யஞ்சிவெம் செருவிற் புக்குடன்
மாண்டொழி வன்றிநம் மருங்கு வந்தவன்
ஆண்டொழி லுலகினுக் கானியா மன்றே.

'வேண்டுழி - (தமையனால் தனக்கு) ஆகவேண்டிய காரியம் உளதெனில் அப்பொழுதுமாத்திரம், இனியன விளம்பி - இனிமையான சொற்களைக் கூறி, வெம் முனை பூண்டுழி - அவன் கொடும் போரை மேற்கொண்டபோது, செருவில் புக்கு உடன் மாண்டு ஒழிவு அன்றி - போர்க்களம் சென்று (அவன் இறந்துபடின்) தானும் அவனுடன் இறந்து மறைவதல்லாமல், அஞ்சி - பயந்து, நம் மருங்கு வந்தவன் - நம் அருகில் வந்தவனுடைய, ஆண் தொழில் - வீரமானது, உலகினுக்கு ஆனியாம் அன்றே - உலகத்தார் பழிப்புக்கு இடமாகும் அல்லவோ? அன்று, ஏ - அசைகளும் ஆம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


முதலிரண்டடிக் கருத்தினைச் செஞ்சோற்றுக் கடன் கழிக்கத் துரியோதனன் பக்கலிருந்து போர்புரிந்திறந்த கன்னன் வீரத் தொடும் ஒப்பிடுக. 'நினக்கே யன்றி, ஏரூரும் கதிர்முடியா யுற்ற போரில் யார்க்கினியென் னுயிரளிப்ப தியம்பு வாயே' (வி. பா. 17, போர். 21); மற்றும், 'உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன், செறினுஞ்சீர் குன்ற லிலர்' (குறள். 778); 'புரந்தார்க ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா, டிரந்துகோட் டக்க துடைத்து' (குறள். 780) என்பன இங்கே காணத்தகும். இனி, 'ஆண்டொழில் உலகினுக் காணியாம்' என்ற பாடங்கொண்டு, ஆண்மை உலகிற்கு ஆணிபோல் ஒளிருமன்றோ' என்று பிறகுறிப்பாகவும் பொருள் கொள்வர்.

பி - ம். 1. இனையன, விரும்பி.

3. மாண்டொழி லஞ்சி, மாண்டுழி யன்றி.

4. ஆணியா மன்றோ, அன்றோ; என்றான். 64

368. மிகைப்புலந் தருமமே வேட்ட போதவர்
தகைப்புலந் துறந்துபோய்ச் சாத லன்றியே
நகைப்புலம் பொதுவுற நடந்து நாயக
பகைப்புலஞ் சார்தலும் பழியி னீங்குமோ.

'நாயக - தலைவனே! மிகை புலம் தருமமே வேட்டபோது - (தன்) மேலான அறிவு அறத்தையே விரும்பி நிற்குமாகில், அவர் - அவருடைய, தகை புலம் துறந்து போய் - நல்வழியைத் தடுத்தலைக்கொண்ட இடத்தை அகன்று சென்று, சாதல் அன்றியே - இறப்பதே யல்லாமல், பொது நகை புலம் உற - (யாவரும்) பொதுவாக நகைத்தலாகிய மெய்ப்பாட்டை அடைய, நடந்து - அவ்விடத்தைவிட்டுச் சென்று, பகை புலம் சார்தலும் - பகைவர் இருக்குமிடத்தைச் சென்றடைதலும் தகுதியாகுமோ? பழியின் நீங்குமோ - அத்தகைய செயல் பழியினின்றும் விலகுதற்குரிய செய்கையாகுமோ? ஓ - வினா.

தகைத்தல் - தடுத்தல்; 'நின்னைத் தகைத்தனன்' (கலி. 108 : 20). அண்ணன் அறநெறிக்கு மாறினன் எனின், தம்பி செய்யவேண்டுவது, அவனைவிட்டு விலகிச் சாவதன்றிப் பகையிடம் சேர்வது தகுதியன்று என்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி-ம். 1. தன்மமே; கேட்ட; போதிவர், போதிவன்.
2. தொகைக்குலம்; துறந்த லன்றியோ.
3. பொதுவற; நாயகன்.
4. சார்வதோர்; பழிய தாகுமால், பகையு மாகுமால், பகையி னீங்குமோ.

55

**369. வார்க்குறு வனைகழற் றம்முன் வாழ்ந்தநாட்**
**சீர்க்குற வாயிடைச் செறுநர் சீறிய**
**போர்க்குற வன்றியே புகுந்த போதிவன்**
**ஆர்க்குற வாகுவன் அருளி னாழியாய்.**

'அருளின் ஆழியாய் - கருணைக்கடலே! வார்க்குறு வனை கழல் தம்முன் - உலோகங்களை உருக்கிவார்த்துச் செய்யப்பட்ட அழகிய வீரகண்டையை அணிந்தவனான அண்ணன், வாழ்ந்த நாள் - சீர் சிறப்போடு வாழ்ந்த நாட்களில், சீர்க்கு உறவாய் - அவனது செல்வத்தில் பங்குகொள்ளவேண்டி அவனுக்கு உற்ற வன்போன்று நடித்து, இடை செறுநர் சீறிய போர்க்கு - நடுவில் அவனுடன் பகைவர் சினந்து புரிகின்ற போருக்கு, உறவு அன்றியே - உற்ற நண்பனாகாமல், புகுந்த போது - மாற்றாராகிய நம்மிடம் வந்து நுழைந்தான் என்றால், இவன் ஆர்க்கு உறவு ஆகுவன் - இந்த வீடணன் யாருக்குத்தான் உறவாக இருக்கக்கூடும்?

வனைகழல் - வினைத்தொகை. புகுந்தபோது ஆர்க்குற வாகு வன்:- 'உண்டாய போதங் குடைந்துழிக் காகம்போற், றொண்டா யிரவர் தொகுபவே'; 'காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து, மேலாடு மீனிற் பலராவர்—ஏலா, இடரொருவ னுற்றக்கால் ஈர்ங் குன்ற நாட, தொடர்புடையே மென்பார் சிலர்' (நாலடி. 284, 113) என்ற செய்யுட்கள் இங்கு ஒப்புநோக்கத்தகுவன. 'தன் அண்ணன் வாழும்போது சிறப்புடன் அவனை அண்டி வாழ்ந்து, போர் நிகழ்வ தறிந்து கைவிட்டுவந்த இவன் நமக்கு எப்படி உறவாகக்கூடும்?' என்றான். 'அருளி னாழியாய்' என்று இராமனை விளித்தது, பெருமானது இயற்கைக் கருணையைக் குறித்தது; அந்தக் கருணைக்குப் பாத்திரம் வீடணன் அன்று என்றதைச் சுட்டிய வாறு என்க; கருத்துடையடை கொளியணி. இச் செய்யுட் கருத்தை, 'செல்வத்துட் சேர்ந்தவர் வளனுண்டு மற்றவர் ஒல்கிடத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


துலப்பிலா உணர்விலார் தொடர்பு போல்' (கலித். 25 : 19 - 20) என்ற வரிகளிலும் காணலாம்.

பி - ம். 1. வார்க்குற ; வாழ்நாள்.
2. சிறுநாள்.
3. போர்க்குறவாகி ; போந்த, போதவன்.
4. ஆகுவான், ஆகுங்கொல். 88

370. ஒட்டிய கனகமா னுருவ மாகிய
சிட்டனன் மருமக னிழைத்த தீவினை
கிட்டிய போதினிற் றவமுங் கேள்வியும்
விட்டது கண்டுநாம் விடாது வேட்குமோ.

'ஒட்டிய கனகம் மான் உருவம் ஆகிய - மேற்கொண்ட பொன் மானின் உருவமாக வந்த, சிட்டன் - மேன்மையனாகிய மாரீசன், நன் மருமகன் இழைத்த தீவினை - சிறந்த மருமகனான இராவணன் புரியுமாறு சொன்ன கெட்டகாரியத்தை, கிட்டிய போதினில் - செய்யுமாறு நெருங்கியபோதில், தவமும் கேள்வியும் விட்டது கண்டும் - தவத்தையும் கேள்வியறிவையும் கைவிட்டதை அறிந் திருந்தும், நாம் விடாது வேட்குமோ - நாம் இவனை ஒழித்துத் தள்ளாமல் விரும்பி ஏற்கக் கடவோமோ? ஓகாரம், வினா.

முன் இரண்டடிகளில் கூறப்பட்ட நிகழ்ச்சிகளை ஆரணிய. 758, 793-இல் காண்க. மாரீசன், சுகேதுவின் புதல்வியான தாடகை யின் மகன். இவனது தந்தையான சுந்தன் என்ற யக்ஷன் அகத் தியரால் சபிக்கப்பட்டுச் சாம்பராய்விட, கணவனை இழந்த தாடகை தன் இரு மக்களுடன் அம்முனிவனை எதிர்த்தாள்; அந்த எதிர்ப்பின் விளைவாக இயக்கரான இம்மூவரும் அரக்க ராயினர். பின்னர், தாடகையின் குமாரர்களான சுபாகுவும் மாரீசனும் இராவணனையடுத்து அவனால் மக்கள் எனப் பாராட்டப் பெற்று, மாமனான இராவணனுடன்கூடி முனிவர்கட்குத்தீங்கிழைத் தனர். இம் மாரீசன் கோசிகன் வேள்வியில் தளர்வுற்றதும், மானுருவாக மாறியதும், தண்டகவனத்தில் இராமபிரானால் துன் புற்றதும், முறையே பால. வேள்விப். ஆரணிய. 758, 766, 773-ஆம் செய்யுட்களாலறிக; இப் படலம் 77-ஆம் செய்யுளும் காண்க. சிரேட்டன் என்ற வடசொல் சிட்டன் என வந்தது. சிட்டன் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆசாரமுள்ளவனும் ஆம்; அவன் தவநிலையில் நின்ற காலத்து, இராவணன் அவனைக்கண்டு வஞ்சச்செயல் செய்யத்தூண்டினமை நோக்குக. 'தவமும் கேள்வியும்' இதனை ஆரணிய. 723 கொண்டு அறிக. மாரீசன் இயக்கனாக இருந்த காலத்து யோககண்டக னுடன் பொருது தோற்றமை, உத்தரகாண்டம் வரையெடுத்த படலம் 35-ஆம் செய்யுளால் அறிக. 'ஒட்டிய கனகம், சுவச்சமான மாற் றுயர்ந்த பொன்னுமாம், 'ஆணிப் பொனினாகியது' (ஆரணிய. 773) என முன்னர்க் கூறப்பட்டது காண்க. 'விட்டது விடாது' என்ற இடத்து முரண்தொடை காண்க. மாரீசன் இராமபிரான் கூவியது போற் கூவி இறந்தது, சுந்தர. 564 கண்டுணர்க. காமரூபிகளான இவ்வரக்கர்கள் வஞ்சனையாக வேடம் தரிப்பார் கள்; ஆகவே, அவர்களை நம்புதல் பிழை என்றான். 365—369 செய்யுட்களுள் சுக்கிரீவன், வீடணன் தமையனுக்குத் துரோகம் செய்து வந்தவன்; ஆகையால் அவனை ஏற்றுக் கொள்ளலாகாது என்று கூறி, இச்செய்யுளில் அவன் மாரீசனைப் போல் இராம பிரானை வஞ்சிக்க வந்தவன் என்று கூறுகிறான் என்க. மாரீசன் சிட்டன்; பலமும் கேள்வியுமுடையவன்; ஆனால் இராவணனுக் காக அவற்றை விட்டு வஞ்சனை புரிந்தான்; அவ்வாறே வீடணனை யும் நல்லவனாக நம்பத்தக்கவனல்லன் என்று சுக்கிரீவன் கூறி னான் என்க.

பி-ம். 1. ஒட்டிய தருமமான்.

2. சிட்டனும்.

3. போதவன்; பொருதுநற்.

4. வேண்டுமோ, வேட்டுமோ. 67

371. கூற்றுவன் றன்னொடிவ் வுலகங் கூடிவந்
தேற்றன வென்னினும் வெல்ல வேற்றுளேம்
மாற்றவன் றம்பிநம் மருங்கு வந்திவன்
தோற்றுமோ வன்னவன் றுணைவ னாகுமோ.

'கூற்றுவன் தன்னொடு - யமனையே துணையாகக்கொண்டு, இ உலகம் கூடிவந்து ஏற்றன என்னினும் - இந்த உலகம் முழுவதுமே ஒன்றுகூடி வந்து எதிர்த்தன ஆயினும், வெல்ல ஏற்றுளேம் - (அவற்றையும்) வெற்றிகொள்ளுமாறு ஏற்று வந்திருக்கிறோம்; (இங்ஙனம் ஆகவும்), மாற்றவன் தம்பி - நேர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பகைவனான இராவணனின் தம்பி, இவண் நம் மருங்கு வந்து தோற்றுமோ - இந்த இடத்து நம் பக்கத்தில் வந்து காணப்படு வானோ? (வரவேண்டிய அவசியமில்லையே); அன்னவன் துணைவன் ஆகுமோ - அப்படியே வந்தான் என்றாலும் நமக்குப் பொருந்திய நண்பன் ஆவானோ? ஓகாரம் - வினா; எதிர்மறைப் பொருளை உணர்த்தி நின்றது.

முதலடிக்கு ஒப்பு: 'கூற்று மென்பெயர் சொலக் குலையும்' (கிட்கிந்தா. 254); 'நின்றபே ருலகெலாம் நெருங்கி நேரினும், வென்றிவெஞ் சிலையலாற் பிறிது வேண்டுமோ' (கிட்கிந்தா. 260) என்பது காண்க. முன் செய்யுளில் வீடணன் தம்மை வஞ்சிக்கக் கூடும் என்றான்; இதில் அவன் துணையே வேண்டுவதின்று என்கின்றான். கடை இரண்டடிக்கு ஒப்பு: 'பகையெனின் கூற்றம் வரினும், தொலையான்றன் நட்டார்க்குத் தோற்றலை நாணாதோன் குன்று' (கலித். 43; 10—11).

பி - ம். 1. எவ்வுலகும்.
2. ஏற்றின ரென்னினும், ஏற்றுளான், ஏற்றுள வந்தவன், வந்தேற்றினர், வந்தேற்றளவு; என்னினும், என்னுளோம்.
3. மாற்றலன்.
4. துணையும்; ஆவனே.

68

372. அரக்கரை யாசறக் கொன்று நல்லறம்
புரக்கவந் தனமெனும் பெருமை பூண்டநாம்
இரக்கமி லவரையே துணைக்கொண் டேறலால்
சுருக்கமுண் டவர்வலிக் கென்று தோன்றுமால்.

'அரக்கரை ஆசு அற கொன்று - அரக்கர் அனைவரையும் ஒருவரும் எஞ்சாமல் கொன்று, நல் அறம் புரக்க வந்தனம் எனும் பெருமைபூண்ட நாம் - சிறந்த தருமத்தைக் காப்பதற்காக வந்துள்ளோம் என்னும் பெருமையை மேற்கொண்டுள்ள நாம், இரக்கம் இல் அவரையே துணை கொண்டு ஏறலால் - இரக்கமே யில்லாத அந்த அரக்கரையே உதவியாக ஏற்றுப் போருக்குச் செல்லுதலால், அவர் வலிக்கு சுருக்கம் உண்டு - அந்த இராம இலக்குமணர்களது ஆற்றலுக்கு ஏதோ குறைவுள்ளது, என்று தோன்றும் - என்று யாவர்க்கும் தோன்றும். ஆல் - அசை.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆசு - நுட்பம்; சிலப். 3 · 47 காண்க. அரக்கரை வேருடன் களைந்து அறம் நிலைநாட்ட வந்தோம் என்ற பெருமைபூண்ட நாம் அரக்கரைத் துணைக்கொள்வது முறையன்று; மேலும், பகைவர்க ளாகிய அவர்களாலும் அவர்களின் உளவாலும்தான் நமக்கு வெற்றி கிட்டியது என்ற சொற்கள் நம் வீரத்துக் கிழுக்காகும் என்றான். 'வீடணன் தந்த வெற்றி' (யுத்த. இந்திரசித்துவதை 71): என்று இராமபிரானே பின்னர்க் கூறுதல் காண்க. அவர் என்றது இராம இலக்குவரை; 'நல்லறம் புரக்க வந்தனம் எனும் பெருமை பூண்ட நாம்' என்ற தொடரில் அவதார ரஹஸ்யம் அடங்கியுள்ளமை யுய்த்துணர்க; திருவவ தாரப் படலம் காண்க. இராமபிரானைத் திருமாலாகவே கூறுவது ஆசிரியர் பெருவழக்கு. பெருமானின் நண்பர்கள் மட்டுமன்றி அவனது பகைவர்களும் இதனை ஒத்துக்கொண்டுள்ளனர்' (கிட்கிந்தா. 360, 361, 362, 363) பார்க்க. மற்றும், 'தசரதன் சிறுவன் றன்னை, மாசற்ற சோதி வெள்ளத் துச்சியின் வரம்பிற் றோன்றும், ஈசற்கு மீசன் வந்தா னென்பதோர் வார்த்தை யிட்டார்' (யுத்த. இலங்கைகாண். 7) என்றது காண்க. இரக்கமி லரக்கர்; 'இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்' (ஆரணிய. 129); 'இரங்காத அரக்கிமாரும்' (யுத்த. பிராட்டிகளங்காண். 5).

பி - ம். 2. புரக்கவந் தனரெனும்; கொடுமை பூண்டநீ.

3. இரக்கமி லரக்கரைத்; ஏற்றுற வேற்றுமேல், ஏறமேல், ஏறுமேல், ஏறுற; துணைக்கொண்டோ மெனில், கொண்டோ மெனின், துணைக் கொண் டேற்றுமால்.

4. சுருக்கமுண் டெம்வலிக்கு, சுருக்கமுன் டிவர்வலிக்கு. 69

373. விண்டுழி யொருநிலை நிற்பர் மெய்ம்முகம்
கண்டுழி யொருநிலை நிற்பர் கைப்பொருள்
கொண்டுழி யொருநிலை நிற்பர் கூழுடன்
உண்டுழி யொருநிலை நிற்பர் உற்றவர்.

'உற்றவர் - உறவினர் என்போர், விண்டுழி ஒரு நிலை நிற்பர்- பிரிவுற்ற காலத்திலும் ஒரே நிலையில் நிற்பர், மெய் முகம் கண்டுழி ஒரு நிலை நிற்பர் - நேர்முகத்தைப் பார்த்த சமயத்தும், ஒரே நிலையில் நிற்பர்; கைபொருள் கொண்டுழி ஒரு நிலை நிற்பர் - கையில் உள்ள பொருளைப் பிறர் கவர்ந்துசென்ற வழியும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(கலங்காது) ஒரே நிலையில் நிற்பர்; கூழுடன் உண்டுழி ஒரு நிலை நிற்பர் - உணவுகளை உடனிருந்து உண்ணும்போதும் ஒரே நிலையில் நிற்பர்.

சிறந்த ஆருயிர் நண்பரின் செயல்கள் இங்கே குறிக்கப் பெற்றன. இதன்படி ஒரே நிலையில் நில்லாது வேண்டுவன வெல்லாம் அண்ணன்பால் துய்த்து அவனுக்கு இடர் நேர்ந்தவழி நம்மை நாடி வந்தனன். ஆகவே இவன் ஏற்கத் தக்கவனல்லன் என்பது உட்கோள். கூழ் என்பது உணவுப் பொதுவைக் குறித்து நின்றது. இச்செய்யுள் பிறிது மொழிதல் அணி. 'ஒரு நிலைநிற்பர் என்பது பன்முறையும் வந்தது சொற்பொருட் பின்வரு நிலையணி' கீழ் 66-வது செய்யுட் கருத்தே இங்கு பிறிதோர் வகையின் அனுவதிக்கப்பட்டது; இவ்வாறன்றி, இவன் மாறிவிடுவான் என்றதும் ஆம்.

பி - ம். 1. மெய்முகம். 70

374. வஞ்சனை யியற்றிட வந்த வாறலால்
தஞ்சென நம்வயிற் சார்ந்து ளானலன்
நஞ்செனக் கொடியனை நயந்து கோடியோ
அஞ்சன வண்ணவென் றறியக் கூறினன்.

'வஞ்சனை இயற்றிட வந்த ஆறு அலால் - இவன் வந்தது ஏதோ கபடமான செயல் புரிவதற்கே யல்லாமல், தஞ்சு என நம் வயின் சார்ந்துளான் அலன் - அவன் தஞ்சம் என்று நம்மிடம் வந்தடைந்தவன் அல்லன்; (அங்ஙனம் ஆகவும்), அஞ்சன வண்ண - மைபோன்ற நிறத்தவனே! நஞ்சு என கொடியனை நயந்து கோடியோ - விடம்போன்ற தீயவனை விரும்பி ஏற்கப் போகின்றாயோ?' என்று அறிய கூறினன் - என்று (தன் கருத்து) விளங்கும்படி யெடுத்துச் சொன்னான் சுக்கிரீவன்.

59 முதல் இச்செய்யுள் முடிய சுக்கிரீவன் வீடணனைச் சேர்த்துக்கொள்ளலாகாது என்பதைக் காரணங் காட்டி நிறுவினன் என்க. 'நஞ்செனக் கொடியன்' என்று வீடணனை இங்குக் குறித்தனன் சுக்கிரீவன். பின்னர் தன் சிறுமையைத் தானுயர்ந்து வீடணனே, 'நஞ்செனத் தகையன் அன்றோ' (வீடணன். 126) எனக் கூறியது காண்க. கோடியோ - கொள்ளுதல் தகுதியன்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

என்பதை விளக்கி நின்றது. அஞ்சனவண்ணன் - மை நிற வண்ணன்; இராமபிரான்; 'அஞ்சன வண்ணனென் னுருயிர் நாயகன் (அயோத்தி. குகப். 14); 'அஞ்சனைக் கொரு சிறுவன் அஞ்சனக் கிரியனைய மஞ்சனே' (கிட்கிந்தா. 47); மற்றும், ஆரணிய. 702, 780, 946, 984. சுந்தர. 1126, 1184 காண்க.

வீடணன் வேண்டுகோளைக் கேட்டவுடனேயே, இராமபிரான் கூறுமாறு வேண்டுமுன்பே சுக்கிரீவன், 'வானரர்களுடன் ஆலோசித்தும் அரக்கர்களின் நிலையை வேவுகாரர்களைக் கொண்டறிந்தும் காரியங்கள் இயற்ற வேண்டும் என்றும், நினைத்த உருவம் எடுக்க வல்லவர்களும், வஞ்சகர்களும் ஆன இவர்களிடம் நம்பிக்கை வைத்தல் கூடாது என்றும், இவன் இராவணனுடைய வேவுகாரனாக இருத்தல் கூடும் என்றும், பகைப்புலத்திலிருந்து வந்த மாற்றானின் நேர் தம்பியை நம்புவது தகாது என்றும், சமயம் பார்த்துக் காக்கை பல கோட்டான்களை நலிந்தது போலத் தம்மை இவன் கொன்றுவிடுவான் என்றும், ஆகவே இவனை வதைப்பதே முறையென்றும் கூறினன்' என்று முதனூல் கூறும்.

பி - ம். 1. இயற்றிய, இயற்றுவன்.

3. கொடியனே; நஞ்சினிற் கொடிதென; கோடியால்; கோடுமேல். 71

## சாம்பனை அவன் கருத்தென்னவென்று வினுதல்

375. அன்னவன் பின்னுற வலகில் கேள்வியில்
தன்னிகர் பிறரிலாத் தகைய சாம்பனை
என்னையுன் கருத்தென விறைவி னுயினுன்
தொன்முறை நெறிதெரிந் தவனுஞ் சொல்லுவான்.

அன்னவன் பின் உற - அந்தச் சுக்கிரீவன் பேசி முடிந்தபின், அலகு இல் கேள்வியில் - அளவிறந்த நூற் கேள்வியில், தன் நிகர் பிறர் இலா - தன்னை யொத்த ஒருவரு மிருக்கப் பெருத, தகைய சாம்பனை - தன்மையை யுடைய சாம்பவனை (நோக்கி), 'உன் கருத்து என்னை என - வீடணனை ஏற்பதில் உன்னுடைய கருத்து யாது?' என்று, இறை வினுயினன் - தலைவனுன ஸ்ரீராமபிரான் கேட்டான்; தொல் நெறி முறை தெரிந்தவனும் சொல்லுவான் - பழமையான நீதி வழிகளை முறையே உணர்ந்த அந்தச் சாம்பவனும் மொழியலானுன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அன்னவன் பின்னுற - சுக்கிரீவன் கருத்து இராமபிரான் கருத்தை யொட்டாது சிறிது பின்னிடைய எனினுமாம். அலகில் கேள்வியன் என்றதனால் சாம்பன் பேரறிவாளன் என்பது பெறப் படும். இவன் இராம இராவணர் போரில் பிரமாத்திரத்தால் அனை வரும் மூர்ச்சித்தபோது அநுமனுக்குச் சஞ்சீவியின் இருக்கை கூறுபவன். திருப்பாற்கடல் கடைந்த காலத்து இருந்தவன்; சிரஞ்சீவிகளில் ஒருவன்; கேள்வியென்று கூறியமையாது தொன் முறை நெறி தெரிந்தவன் என்பதுகொண்டு, பிரமபுத்திரனை சாம் பவனது நுண் மாணுழைபுலம் புலனும். 'மெய்ம் மருந்து முளநீ வீர, ஆண்டேகிக் கொணர்தியென வடையாளத் தொடுமுரைத் தான் அறிவின் மிக்கான்' (யுத்த. மருத்துமலை. 27). இவன் என்று பின் கூறுவது காண்க. இராமபிரானுடைய அவதார ரகஸ்யம் முழுவதும் தெரிந்தவனாதலின் தொன்முறை தெரிந்தவன் என்றார் எனினுமாம்.

பி - ம். 1. கேள்வியால்.

2. பிறிதிலாத், பிறனலாத்.

3. விறுவினுன்.

4. தொன்னிலை; சொல்முறை; பலதெரித்து; சொல்லினன்; தெரிந் தவன் சொல்லினனரோ; வரன் முறை தெரியச். 72

## சாம்பன் கூற்று

376. அறிஞரே யாயினும் அரிய தெவ்வரைச்
செறிஞரே யாவரேற் கெடுத றிண்ணமாம்
நெறிதனை நோக்கினு நிருதர் நிற்பதோர்
குறிநனி யுளதென வுலகங் கொள்ளுமோ.

'அறிஞரே ஆயினும் - எவ்வளவு அறிவுள்ளவர்களேனும், அரிய தெவ்வரை - நீக்குதற் கரிய பகைவர்களை, செறிஞரே ஆவரேல் - அணுகிப் பொருந்துவாராயின், கெடுதல் திண்ணம் ஆம் - அழிவது நிச்சயமே யாகும்; நெறிதனை நோக்கினும் - இவர்கள் இப்போது மேற்கொண்டுள்ள வழியைக் கவனித்தாலும், நிருதர் நிற்பதோர் குறி நனி உளது - இந்த அரக்கரிடம் நிலை பெற்றிருக்கின்ற ஒப்பற்ற நல்ல குறிகள்மிகவும் காணபடுகின்றன என உலகம் கொள்ளுமோ, என்று இவர்களை ஏற்பதை உலகம் ஒத்துக் கொள்ளுமோ?

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆயினும் உம்மை உயர்வு சிறப்பு. அரிய - வெல்லற்கு அல்லது கடத்தற்கரிய. செறிஞர் - வினையாலணையும் பெயர்; ஞ் பெயரிடை நிலை. நெறி - மேற்கொண்ட வழி, நினைத்தால் மனம் மாறுவர் ஆகலின் குறிநனி யுளதென்பதில்லை என்றான். ஓர் நிருதர் நிற்பது.... கொள்ளுமோ, என்பதற்கு, ஓர் அரக்கனிடம் நற்குணங்களுக்குரிய குறிகள் நிரம்ப உள்ளன என்று அவனைச் சேர்த்துக் கொண்டால், உலகம் அதனை ஒவ்வாது என்றான். 'உலகம் என்பதுயர்ந்தோர் மாட்டே' (நிகண்டு) என்பவாக லின் உலகுடன் பேரறிஞரைக் குறிக்கும். இச்செய்யுட் கருத் துக்கு: 'நாடாது நட்டலிற் கேடில்லை' (குறள். 791); 'ஆய்ந் தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை, தான்சாந் துயரம் தரும்' (குறள். 792); 'கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அருங்காலை, யுள்ளினு முள்ளஞ் சுடும்' (குறள். 799); 'சொல் வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில் வணக்கம், தீங்கு குறித்தமையான்' (குறள். 827); 'தொழு தகை யுள்ளும் படையொடுங்கு மொன்னார், அழுதகண் ணீரு மனைத்து' (குறள். 828); 'கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன, வினைபடு பாலாற் கொளல்' (குறள். 279) என்ற குறட் பாக்கள் இங்கே குறிக்கொள்ளத்தக்கன. இத்தகைய அரிய நீதிகளைக் கூறவல்லவன் என்பது குறித்தேதான் முன்னர், 'அலகில் கேள்வியன்' என்றும், 'தொன்முறை நெறி தெரிந்தவன்' என்றும் சாம்பன் கூறப்பட்டனன் என்க. தொன்முறை நெறி; உலகியலும், பொருணூல் அறநூல் முதலியனவும் நன்குணர்ந்த நெறி என்க. இனி, அறிஞரே ஆயினும் என்பதற்குப் பகைவர் மிகவும் அறிவாளிகளே யானாலும் என்பதும் ஒன்றும். இனி, ஈற்றடிகட்கு, பகைவராகி நம்மை வந்தடைந்துள்ள இவர்கள்பால் நற்குறிகள் மிகக் காணப்படுகின்றன என்பது கொண்டு இவர்களை ஏற்றுக் கொள்வதை உலகம் நன்றென ஒப்புமோ என்றும் பொருள் காணலாம்.

பா - ம். 1. அறிஞரே; தேவரை.

2. செறுநரே; யாமெனிற்; கெடுத்தல்; திண்மைமால்.

3. நெறிநனி; நெறிதனில்; நோக்குறின்; நிற்பரோ.

4. குறுநனி; குறிதனி.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

377. வெற்றியுந் தருகுவர் வினையம் வேண்டுவர்
முற்றுவ ருறுகுறை முடிப்பர் முன்பினுல்
உற்றுறு நெடும்பகை யுடைய ரல்லதூஉம்
சிற்றினத் தவரொடுஞ் செறிதல் சீரிதோ.

'உற்றுறு நெடுபகை உடையர் - பொருந்திய நீண்ட பகைமையையுடைய எதிரிகள், வினையம் வேண்டுவர் - தொழில் செய்து முடிக்கும் வகையை விரும்புவார்; (ஆகவே, நம்மை ஏமாற்றும் பொருட்டு), வெற்றியும் தருகுவர் - (முதற்கண்) நமக்கு வெற்றியையும் தருவார்கள்; முன்பினுல் உறுகுறை முடிப்பர் - வன்மையோடு நமக்கு உற்ற குறைபாடுகளை (அவற்றிற்கு வேண்டிய செயல் நன்கு ஆற்றிப்) போக்குவார்கள்; முற்றுவர் - நம்மை விடாது சூழ்வர், அல்லதூஉம் - அல்லாமலும், (இவ்வாருயினும்), சிற்றினத்தவரொடும் - அற்பருடன், செறிதல் சீரிதோ - பொருந்தி நட்புக் கொள்ளுதல் சிறப்புடையதாகுமோ' (ஆகாது). ஓகாரம் வினு.

எது வேண்டினும் ஆற்றுவர், அதனோடு வெற்றியும் தருகுவர், என்ற கருத்து உம்மையால் விளங்கும்; முன்பு - வலிமை. சுந்தர. 61; 'முன்பாலுடற் சினம் செருக்கி' (குறிஞ்சிப். 159); செற்றம்; 'பழிதர வந்த, செற்றம் நம்வயிற் கொள்ளான்' (பெருங். 1:37; 57-58); 'செற்றத்திற் கழுமி' (பெருங். 1:46; 41); 'செற்றம் நீங்கிய மனத்தினர்' (திருமுருகு. 132); 'செற்றமும் உவகையுஞ் செய்யாது காத்து' (மதுரைக். 490); அல்லதூஉம். அளபெடை இன்னிசை. முதலடிக்கு (ஒப்பு): 'செறிப்பில் பழங்கூரை சேறணையாக, இறைத்து நீர் ஏற்றும் கிடப்பர்...... தங்கருமமுற்றும் துணை' (நாலடி. 231); 'பெருகுவது போலத் தோன்றி வைத் தீப்போல், ஒரு பொழுதுஞ் செல்லாதே நந்தும்..... பந்தமிலாளர் தொடர்பு'; 'புறநட்டகம் வேர்ப்பார் நச்சுப் பகைமை, வெளியிட்டு :வேருதல் வேண்டும்' (நீதி நெறி. 56; நாலடி. 234) குறைமுடித்தல்-குறையைப் போக்குதல்; 'என்னுடைச் சிறுகுறை முடித்தல்' (கிட்கிந்தா. 210). குறை - மனநிம்மதியின்மையுமாம்; 'என்ன குறை நமக்கே' (திவ்ய. திருவாய். 6. 4. 1); முற்றுவர் என்பதற்கு முடிவு அல்லது அழிவு தேடுவர் என்றும், வினையம் என்பதற்கு வஞ்சனை யென்றும் பொருள் கொள்ளலாம். கடையடிக்கு, 'குறள். சிற்றினஞ் சேராமை' என்ற அதிகாரச் செய்யுட்களை ஒப்பு நோக்குக.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பா - ம். 1. தருவர் நல்; வினையும், எனையுர்.
2. மொய்ம்பினல்; உறுமுறை, முடிய, முன்பினர்.
3. உற்றது, உற்றுநின்; அல்லரே; அல்லரேற், அல்லரோ.
4. திண்மையோ, செல்விதோ. 74

378. வேதமும் வேள்வியும் விலக்கி வேதியர்க்
கேதமு மிமையவர்க் கிடரு மீட்டிய
பாதகர் நம்வயிற் படர்வ ராமெனின்
தீதில ராய்நமக் கன்பு செய்வரோ.

'வேதமும் வேள்வியும் விலக்கி - நான் மறைகளையும் அவற்றால் விதிக்கப்பட்ட யாகங்களையும் கெடுத்து, வேதியர்க்கு ஏதமும் - மறைகளில் தேர்ந்த பிராமணர்கட்குத் தீங்கும், இமையவர்க்கு இடரும் - தேவர்களுக்குத் துன்பமும், ஈட்டிய - வலிந்து கூட்டிவைத்த, பாதகர் நம் வயின் படர்வராம் எனின் - பாவிகளாகிய அரக்கர்கள் நம்மிடம் நாடி வருவார்கள் ஆனால், தீது இலராய் - (அவர்கள்) தீய நினைவில்லாதவர்களாய், நமக்கு அன்பு செய்வரோ - நம்மிடம் அன்பு காட்டுவார்களோ? ஓ - எதிர்மறை.

வேள்வி - வேள் - விருப்பம். ஒரு பலனைக் கருதிச் செய்யப் படும் காமிய கருமம்; 'அக்னிஷ்டோமம் ஸ்வர்க்க காமோ யஜேதா' என்றது காண்க. நிஷ்காமிய கன்மம் இதனின் வேறு. வேள்வி விலக்கி முனிவர்க் கிடுக்கண் ஈந்தது; 'மாதவத் தொழுகலே மறைகள் யாவையும், ஓதலெ மோதுவார்க் குதவ லாற்றலெம், மூதெரி வளர்க்கலெ முறையினீங்கினெம், ஆதலி லந்தண ரேயு மாகிலேம்' (ஆரணிய. 131) என்றமை காண்க. இலங்கையுள் வாழ்ந்த அரக்கருள் ஒருவன் பெயர் 'எக்ஞசத்ரு அல்லது வேள்விப்பகைஞன்' என்பதும், இராவணனைத் தேவகண்டகன், ரிஷிகண்டகன், பிராமணகண்டகன் என முதனூல் கூறுவதும், 'தீதென்றுள்ளவை யாவையுஞ் செய்தெமைக், கோதென் றுண்டிலன் இத்தனையே குறை' (பால. தாடகை. 56) என்ற கோசிகன் கூற்றும் காணத்தகும். பாதகர், தீதிலராய் நமக்கன்பு செய்வரோ? அவரது பிறவிக் குணம் மாறாது என்றபடி; 'பன்னாகம் தனக்கமிர்தம் கொடுத்தாலும் விடமொழியப் பயன் கொடாதே' (வி. பா. கிருட்டினன். 25); 'உப்பொடு நெய்பால் தயிர் காயம் பெய்தடினும், கைப்பறாப் பேய்ச்சுரையின் காய்' (நாலடி. 116); 'குலத்தளவே யாகும் குணம்' (மூதுரை. 7) என்பன காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. வேள்வியு மயக்கி.
2. ஏதமுந் தேவருக்கு.
3. பாதக ராயவர்.
4. நீதலா லவர்க்கரு ளன்பு. 75

379. கைப்புகுந் தொருசர ணளித்துக் காத்துமேல்
பொய்க்கொடு வஞ்சனை புணர்த்த போதினும்
மெய்க்கொள விளியினும் விடுது மென்னினும்
திக்குறு நெடும்பழி யறமுஞ் சீறுமால்.

'கைப்புகுந்து - நம்மிடத்தில் புகல் புகுந்ததனால் அவர்கள் அடைய எண்ணிய, ஒரு சரண் அளித்து - ஒரு புகலிடம் தந்து, காத்துமேல் - நாம் அவர்களைப் புரக்கவெண்ணினால், (இவர்கள்) பொய் கொடு - பொய்ம்மையைத் தழுவி, வஞ்சனை புணர்த்த போதினும் - வஞ்சனையான செய்கைகளைப் புரிந்த போதிலும், மெய் கொள விளியினும் - நாம் நம்பிய (இவர்களால் நம்முடைய) உடலையே பிறர் கவர நமக்கு மரணம் நேர்ந்தாலும், விடுதும் என்னினும் - அவர்களைக் கைவிட்டோமானாலும், நெடுபழி திக்கு உறும் - நீங்காத பழிச்சொல் எட்டுத்திசையினும் பரவும்; அறமும் சீறும் - (அல்லாமலும்) அறக்கடவுளும் வெகுளும். ஆல் - அசை.

'நாம் இவர்களை ஆராயாது ஏற்றுப் புகல் அளிப்பின், பின்னர் அவர்களைப் பிறகு கைவிடுதற்கில்லை. அங்ஙனம் ஏற்றுக் கொள்ளப் பெற்றவர் நமக்கே ஏதம் விளைப்பினும் அவர்களை நாம் ஒறுத்தற்கு மில்லை. கைவிட்டாலும் பழியே சாரும். மற்றும் அஃது அறத்துக்கு விரோதமுமாம். இவ்வாறு தரும சங்கடம் நேரும். ஆதலின் நன்கு ஆராய்ந்து முடிவு செய்தலே நன்று' என்றான். இங்குக் கூறப்பட்ட இக் கருத்துக்களை யுத்த. 411, 422-இல் காணப்படும் இராமபிரான கூற்றுக்களுடன் ஒப்பிட்டு, அப்பிரானது அருள்நோக்கத்தைக் காண்க. 'நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின், வீடில்லை நட்பாள் பவர்க்கு' (குறள். 791); 'ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை, தான்சாந்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



துயரம் தரும்' (குறள். 792); 'பல நாளும், நீத்தா ரெனக்கை விடலுண்டோ தந்நெஞ்சத் தியாத்தாரோ டியாத்த தொடர்பு' (நாலடி. 214) என்பன காண்க.

பி - ம். 1. கைப்புகுந் துறுசரண் அருளிக்.

2. போழ்தினும், போதவன்.

3. மெய்க்கொளி ; மெய்க்கொடு ; மென்னெளிற், என்னிளி.

4. நிக்கொடு.

76

**380. மேனனி விளைவது விளம்ப வேண்டுமோ**
**கானகத் திறைவியோ டுறையுங் காலையின்**
**மானென வந்தவன் வரவை மானுமிவ்**
**வேனையன் வரவுமென் றினைய கூறினான்.**

'மேல் நனி விளைவது விளம்ப வேண்டுமோ - இனி மிகவும் (தீமையாக) விளைவதைக் குறித்துக் கூறவும் வேண்டுமோ? கானகத்து இறைவியோடு உறையும் காலையின் - காட்டிலே பிராட்டியுடன் (நீர்) தங்கியிருந்த போது, மான் என வந்தவன் வரவை - பொன் மான் வேடம் பூண்டு வந்த மாரீசனது வருகையையே, இவ் ஏனையவன் வரவும் மானும் - அயலானாகிய இந்த வீடணன் வருகையும் நிகர்க்கும்' என்று, இனைய கூறினான் - இவ்வாறான சொற்களைக் கூறி முடித்தான் (சாம்பவன்).

73 முதல் 77 முடிய, சாம்பவன் கூற்று. எக்காரணம் கொண்டும், சிற்றினத்தாரைச் சேர்க்கலாகாது. அவர் தம் இயல்பு மாறார்; பொன் மானாக வந்த மாரீசன் செயலால் விளைந்த இடர் அறிந்திருப்பதால் வீடணனை ஏற்கலாகாது என்றான் சாம்பவன். இங்கு ஆரணிய காண்டம், மாரீசன் வதைப்படலத்துத் தெளிவுடைச் செம்மலான இலக்குவன் மாயமானைக் குறித்துக் கூறியவை ஒப்பு நோக்கத் தகும். (ஆரணிய. 775; 776, 786) காண்க. 'மானென வந்தவன்' மாரீசனை வீடணனுக் குவமையாக்கியது காண்க.

பி - ம். 1. விளைவன விளைவ.

2. உறைந்த காலையில்.

77

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## இராமபிரான் நீலனை வினவுதல்

381. பால்வரு பனுவலின் றுணிவு பற்றிய
சால்பெருங் கேள்வியன் றானை நாயகன்
நீலனை நின்கருத் தியம்பு நீயென
மேலவன் விளம்பலும் விளம்பன் மேயினன்.

பால் வரு - பல வகுப்புகளாக உள்ள, பனுவலின் - அரசியல் நூல்கள் நீதி நூல்கள் என்ற இவைகளின், துணிவு பற்றிய - துணிந்த பொருள்களை நன்கு மனத்திற் கொண்டுள்ள, சால் பெரு கேள்வியன் - நிறைந்த நூற்கேள்விகளை யுடையவனான, தானை நாயகன் - சேனைத்தலைவனான, நீலனை - நீலனைப் பார்த்து, 'நீ நின் கருத்து இயம்பு என - நீ உன் மனக் கருத்தை மொழிவாயாக' என்று, மேலவன் விளம்பலும் - மேன்மை தங்கிய இராமபிரான் சொன்ன அளவில், விளம்பல் மேயினன் - நீலன் சொல்லத் தொடங்கினன்.

முன் அரசனையும் அறிஞனையும் வினவியபின் சேனைத் தலைவனை வினவினன் என்பது இங்குக் காணலாம். நீலன் பின்வரும் 6 செய்யுட்களில் தன் கருத்தை விளக்கினன்.

பால் - பகுப்பு. 'அறத்துப் பால், பொருட்பால் என்பன காண்க. பால்வரு; 'பால்வரு தென்றமிழ்ப் பாவை. (யாப். விருத்தி). 'பால்வரும் உறுதி யாவும் தலைவற்குப் பயக்கும் நீரார்' (அயோத்தி. மந்திரப். 8). இராவணன் மந்திரப் படலத்து முதற்கண் சேனைத்தலைவன் எழுந்து பேசுதல் முன் குறிக்கப்பெற்றது. 'தானை நாயகன் நீலன்' 'சேமத் திண்சிலை மாலியும் நீலனும் செறுத்தார்' (யுத்த. படைத்தலைவர். 49); 'சூலமும் மழுவுந் தாங்கித் தோளிரு நான்கும் தோன்ற, மூலம்வந் துலகை யுண்ணும் உருத்திர மூர்த்தி யென்ன, நீலனின் றுழியே நின்றான்' (யுத்த. நாகபாச. 54); 'நீல னின்றதொரு நீல மால்வரை' (யுத்த. நாகபாச. 83); 'நீல னின்றவன் நெருப்பின் மகன்' (யுத்த. இராவணன் வாநரத். 26). பனுவலின் துணிவுபற்றிய கேள்வியன் எனவே கல்வி கேள்விகளிற் சிறந்தவன் என்பது பெறப்படும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. பால்வரும் ; பற்றினாய்.

2. சால்வரும் ; கேள்வியின்.

3. நீல நின்கருத் தியம்பென நிமலன்.

4. ஏலவ னினைத்தன வினைய கூறினான், ஏல்வயி னினைந்தன. 78

## நீலன் கூற்று

382. பகைவரைத் துணையெனப் பற்றற் பாலவாம்
வகையுள வன்னவை வரம்பில் கேள்வியாய்
தொகையுறக் கூறுவென் குரங்கின் சொல்லென
நகையுற லின்றியே நயந்து கேட்டியால்.

'வரம்பில் கேள்வியாய் - எல்லை யற்ற நூற் கேள்வியை உடையவனே! பகைவரை துணை என பற்றல் பாலவாம் வகை உள - விரோதிகளைத் துணையாக ஏற்றற்கு உரிய வகைகள் பல உள்ளன; அன்னவை தொகை உற கூறுவென் - அவற்றைத் தொகுத்துச் சொல்வேன் ; குரங்கின் சொல் என - இவை குரங்கு கூறும் சொற்கள் தாமே என்று, நகை உறல் இன்றியே - ஏளனம் செய்யாமல், நயந்து கேட்டி - விரும்பிக் கேட்பாயாக' ஆல் - அசை.

பாலவாம் வகை. சாம தான பேத தண்டம் என்ப. இங்கு 'பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்தும், இருள்தீர எண்ணிச் செயல்' (குறள். 675); 'முடிவு மிடையூறும் முற்றியாங் கெய்தும், படுபயனும் பார்த்துச் செயல் (குறள். 676) 'வினையான் வினை யாக்கிக் கோடல் நனைகவுள், யானையால் யானையாத் தற்று' (குறள். 678); 'நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே, ஒட்டாரை யொட்டிக் கொளல்' (குறள். 679) என்பன காண்க; மற்றும் கௌடில்யர் அர்த்த சாத்திரமும் மித்திர பேதம் சுகிர்ல்லாபம் முதலிய பஞ்ச தந்திரக் கதைகளும் காணத்தகுவன. வகைகள் பல வெனினும் கால மிடங்கட் கேற்பத் தொகுத்துக் கூறுவதாகக் கூறுகின்றான். நீங்கள் என்பால் கேட்டறிவன ஒன்றும் இல்லை எனினும் கட்டளையிட்டதால் கூறுகின்றேன் என்பான் 'வரம்பில் கேள்வியாய்' என்றான். பகைவரைத் துணைக் கொள்ளும் சந்தர்ப்பங்களை இனி வரும் செய்யுட்களில் நீலன் கூறுதல் காண்க. குரங்கின் சொல் லென நகையுறல்: இங்கு, 'குரங்குறை யிருக்கை யென்னும் குற்றமே குற்றமல்லால்' (கிட்கிந்தா. 416) என்ற சுக்கிரீவன் விநய வார்த்தையை ஒப்பு நோக்குக.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. பகையுரை ; பாலவாய், பாலதோ, பால்வரு.
2. வகையலது.
3. கூறுவன்.
4. நகையுறத் தக்கன, நக்கவை ; கோடியால் ; நீக்குவாய். 79

383. தங்குலக் கிளைஞரைத் தருக்கும் போரிடைப்
பொங்குநர்க் கொன்றவர்க் கெளியர் போந்தவர்
மங்கையர் திறத்தினின் வயிர்த்த சிந்தையர்
சிங்கலில் பெரும்பொரு ளிழந்து சீறினோர்.

'தம் குல கிளைஞரை - தமது குலத்தவரான உறவினரை, தருக்கும் போரிடை - செருக்கு மேற்கொண்டு புரியும் சண்டையிலே, பொங்குநர் கொன்றவர்க்கு - சினம் மிக்கவராய்க் கொல்லும் தொழிலை மேற் கொண்டவர்க்கு, எளியர் போந்தவர் - (அவர்களை எதிர்க்கும் ஆற்றலின்றி) எளியராய் வந்தவர்களும், மங்கையர் திறத்தினின் வயிர்த்த சிந்தையர் - மகளிரைக் கெடுத்தது காரணமாக (மாற்றானுடன்), பகைமை பூண்ட மனத்தினரும், சிங்கல் இல் பெரும்பொருள் இழந்து சீறினோர் - குறைவில்லாத மிக்க பொருளை இழக்குமாறு செய்ததனால் வெகுண்டவர்களும்.

இது முதல் 5 செய்யுட்கள் நீலன் கூற்று. போந்தவர் முதலியன. 385-ஆம் பாடலில் உள்ள 'உடற் கொளத்தகையர்' என்பதனோடு இயையும். பகைப்புலத்தவராயினும் இன்னின்னாரையே ஏற்றுக்கொள்ளலாம் என்பது இது முதல் மூன்று கவிகளால் கூறப்பட்டது. இனி, பொங்குநர்க் கொன்று அவர்க்கு எளியராய்ப் போந்தவர் என்றும் பொருள் கொள்வர். அங்ஙனம் எனின் தன் மேற் சீறி வந்தவரைக் கொன்று பின் அம்மாற்றார்க்கே எளியராய்ப் போந்தவர் என்க. வயிர்த்தல் 'வயிர்த்தனன் நிலத்தினுயர் வானமினி தென்பான்' (வி. பா. சம்பவ. 102) ; சிங்கல் - குறைதல் ; 'சிங்கலிலிருமறை' (பால. கடிமண. 48). இச்செய்யுட் கருத்துக்கள் சுக்கிரீவனுக்குப் புகல் அளித்தமைக்குப் பொருந்துவதாதல் உணர்க.

பி - ம். 1. தருக்கிப்.
2. பொங்கினர், பொங்குவர் ; கொற்றவர்க்கு ; இளைஞர்.
3. வலிந்த ; வயிரச்.
4. பெரும் பொரு ளிழிய. 80

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


384. பேரபி மானங்க ளூற்ற பெற்றியோர்
போரிடைப் புறங்கொடுத் தஞ்சிப் போந்தவர்
நேர்வரு தாயத்து நிரப்பி னோர்பிறர்
சீரிய கிளைஞரை மடியச் செற்றுளோர்.

பேர் அபிமானங்கள் உற்ற பெற்றியோர் - மிக்க தேகாபி மானம் பொருந்திய தன்மையரும், போர் இடை புறம் கொடுத்து அஞ்சி போந்தவர் - சண்டையில் முதுகு காட்டிப் பயந்து வந்தவரும், நேர் வரு தாயத்து நிரப்பினோர் - நேரான பங்காளி தன் தாயப் பொருளை வவ்வினராக அதுபற்றி வறுமையுற்றவர்களும், பிறர் சீரிய கிளைஞரை மடிய செற்றுளோர் - பிறருடைய சிறப்பு வாய்ந்த உறவினரை இறந்துபடும்படிப் பகைமை கொண்டவரும்.

பெற்றியராய்ப் புறங்கொடுத்து எனினுமாம். இனி இச் செய்யுள் மூன்றும் அடியில் நிரம்பினர் என்று பாடங் கொண்டு, தாயாதிகட்குச் சரவேண்டிய தாயபாகத்தைக் கொடாமல் அதைக் கொண்டு செல்வவான்களா யிருப்பவர்கள் என்றும், நான்காம் அடிக்கு அன்னியராற் பீடிக்கப்பட்ட பந்துக்களைக் கொன்றுவிட்ட பேர்களும். (நம்மிடத்தில் வந்தால் தண்டனை யடைதற் குரியராவர்) என்றும் பொருள் கூறுவாரும் உளர். ஆயினும் இப்பொருள் 385-இல் காணப்பெறும் 'உடற்கொளத்தகையர் நம் உழைவந் தொன்றினல்' என்ற சொற்றொடருடன் மாறு கொள்ளும். மேலும் 'பகைவரைத் துணையெனப் பற்றற் பாலவாம், வகையுள அன்னவை, தொகையுறக் கூறுவன்' என்ற அடிகளின் கருத்துக்கும் முரணும். ஆதலின் மேல் கூறப்பட்ட உரையே பொருத்தமாதல் உணர்க. தாயத்து நிரப்பினோர் - தாயத்தாரால் வறுமையுற்றவர். நிரப்பு - வறுமை. 'இன்றும் வருவது கொல்லோ நெருநலும் கொன்றது போலு நிரப்பு' (குறள். 1048); 'நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடரிது' (குறள். 1049): 'நிரப்பின் றெய்திய நீணில மடங்கலும்' மணி. 14 : 51): நிரப்பு நிரப்புதல் என்று பொருள்படும். இதே சொல் இங்கு நிரம்பலின்மையைக் காட்டும் வறுமையைக் குறிப்பதால் மங்கல வழக்கென்க.

பி - ம். 1. உடைய பெற்றியோர்.
2. போரினில்.
3. நேர்வரும், நிரம்பினோர்கள்தம், நிரம்பினோர் பிறர்.
4. சீறிய.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


385. அடுத்தநாட் டரசிய லுடைய வாணையாற்
படுத்தவர் நட்டவர் பகைஞ ரோடொரு
மடக்கொடி திறத்திடை வைத்த சிந்தையர்
உடற்கொளத் தகையர்நம் முழைவந் தொன்றினல்.

'அடுத்த நாட்டு அரசியல் உடைய ஆணையால் - தன் நாட்டை யடுத்துள்ள அரசனது கட்டளையால், படுத்தவர் நட்டவர் - வருத்தப்பெற்று நட்பினை நாடுபவர், பகைஞரோடு ஒரு மடக் கொடி திறத்திடை வைத்த சிந்தையர் - விரோதிகளுடைய ஒரு இளைய நங்கையினிடம்வைத்த மனத்தினர் (என்ற இவர்களும்), நம் உழை வந்து ஒன்றினல் உடன் கொள தகையர் - நம்மிடம் வந்தடைந்தால் ஏற்றுக் கொள்ளற் குரியராவர்.

படுத்தவர் - முற்றெச்சம். பகைஞரோடு - பகைவரிடத்திய. உருபு மயக்கம் - மடக்கொடி - உவமைத்தொகையன்மொழி; (மணி. **19 : 141**). சிந்தை - கவலை; சிந்தா - என்ற வடசொல் ஐகாரம் பெற்றது. இச்செய்யுட்குப் பகைஞரோடு ஒரு மடக்கொடி பயந்த மைந்தர் ஆயினும் என்று பாடங் கொண்டு பகைஞர்க்குரிய பல மகளிருள் ஒரு மடக்கொடி பெற்ற மைந்தராயினும் என்றும் கூறுவர்.

பி - ம். 1. இயல்பு.
2. பட்டவர்; பகைவரோடு, பகைவர் மற்றொரு.
3. பயந்தவர் மைந்தராயினும்; திறத்தினுல் வாஞ்சை வைத்தவர்; வைத்த சிந்தையொடு.
4. ஒன்றினர்.

82

386. தாமுற வெளிவருந் தகைமை யாரலர்
நாமுற வல்லவர் நம்மை நண்ணினல்
தோமுற நீங்குத றுணிவ ராதலின்
யாமிவன் வரவிவற் றென்னென் றுன்னுவாம்.

'தாம் உற எளிவரும் தகைமையார் அலர் - தாமாகவே பிறரை வந்து சாரும்படி எளிய தன்மை யுடைய ரல்லாதவரும், நாம் உற - பிறர் அச்சம் கொள்ளுமாறு, வல்லவர் - வன்மை வாய்ந்தவருமாகிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அவர்கள், நம்மை நண்ணினுல் - நம்மைச் சார்வராயின், தோம் உற - அவர்கள் குற்றம் பொருந்த, நீங்குதல் துணிவர் ஆதலின் - (சமயத்தில்) விட்டுச் செல்லுதற்குத் துணிவர் ஆதலின், யாம் இவன் வரவு இவற்று என் என்று உன்னுவாம் - நாம் இவ் வீடணன் வருகையைப்பற்றிக் கீழ் வகுத்துக் கூறியவகையில் எந்த வகையைச் சாரும் என்று ஆலோசிப்பது அவசியம்.

முதலடியில் 'வெளிவரும்' எனவும் பிரிக்கலாம். மேலே கூறிய செய்யுட்களில் கூறிய எந்த வகையிலும் இவன் எண்ணத் தக்கவனல்லன்.

பி - ம். 1. தூமவர்க்கு ; தூமவற்கு.
2. நண்ணினுர்.
3. ஆமுறை, தோமுறு, தோமற ; நீங்குவர், அழிவர்.
4. வரவினை, வரவினி, வரவிதற்கு. 83

387. காலமே நோக்கினுங் கற்ற நூல்களின்
மூலமே நோக்கினு முனிந்து போந்தவன்
சீலமே நோக்கியாந் தெளிந்து தேறுதற்
கேலுமே யென்றெடுத் தினைய கூறினன்.

'காலமே நோக்கினும் - இவன் வந்த காலத்தை ஆராய்ந்து பார்த்தாலும், கற்ற நூல்களின் மூலமே நோக்கினும் - கற்றுள்ள நூல்களைக் கொண்டு ஆராய்ந்து பார்த்தாலும், முனிந்து போந்தவன் - தன் தமையனை வெறுத்து இங்கு வந்தவன், சீலமே நோக்கி - (இப்பொழுது மேற்கொண்டுள்ள) நல்லொழுக்கத்தையே கண்டு, யாம் தெளிந்து தேறுதற்கு ஏலுமே - நாம் மனத் தெளிவு கொண்டு நம்புதல் கூடுமோ?' என்று இனைய எடுத்து கூறினன் - என்று இவ்வாறுன மொழிகளை எடுத்துச் சொன்னுன் (நீலன்).

இவன் நம்மிடை வந்துள்ள காலத்தையும், நூல்களின் துணிவையும் அண்ணனிடம் வெகுண்டு வந்த இவனுடைய நடத்தையையும் எண்ணும்போது, இவனுடைய நிலைமையை நாம் ஒரு தலையாகத் தேர்தற்கில்லை. ஆகவே ஏற்றுக் கொள்ளுதல் நன்றன்று என்றுன் என்க. இப்படலம் 73-உம் காண்க.

பி - ம். 3. சீலமே நோக்கினும் ; நோக்கியான் ; தெரிந்து.
4. உரைத்து ; உணர்ந்து ; இனிய கூறினன். 84

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## ஏனையோர் கருத்து

388. மற்றுள மந்திரக் கிழவர் வாய்மையால்
குற்றமில் கேள்விய ரன்பு கூர்ந்தவர்
பற்றுதல் பழுதெனப் பழுது றுவொரு
பெற்றியி னுணர்வினர் முடியப் பேசினர்.

குற்றம் இல் கேள்வியர் - பழுதில்லாத கேள்வி யுடையவர்களும், அன்பு கூர்ந்தவர் - இராமபிரானிடம் அன்பு மிகுந்தவர்களுமான, மற்றுள மந்திர கிழவர் - மற்றுமுள்ள மந்திராலோசனைக்குரிய மந்திரிமார்கள், பழுது உறு ஒரு பெற்றியின் உணர்வினர் - கெடுதலில்லாத ஒரேவிதமான தன்மையை யுடையவராய், வாய்மையால் - உண்மையாக, 'பற்றுதல் பழுது' என முடிய பேசினர் - (பகைவனை) ஏற்றுக்கொள்வது தீதெனத் தீர்மானமாகக் கூறினர்.

'காய்தல் உவத்தல் ஆராய்தல்' (அறநெறிச். 42) என்றபடி விருப்பு வெறுப்பற்று ஆராய்தல் நெறி. இங்கு அன்பு கூர்ந்து என்றதனால், இராமபிரானிடம் நிகழ்ந்த அன்பினால் 'வந்தவன் எத்திறத்தனாயினும் பெருமானுக்கு ஊறுபாடொன்றும் நிகழவொண்ணாது; எனவே ஏற்கக்கூடாது' என்று ஒருமுகமாகக் கூறினர் என்பது பெறப்படும். 'மற்றுள மந்திரக் கிழவர்' இங்கு அங்கதனும், சரபனும் தங்கள் கருத்தைக் கூறியதாக முதனூல் கூறும்.

பி - ம். 1. மந்திரிக் கிழமை, மந்திரிக் கிழவர்.
2. கேள்வியான்; நண்பு.
3. பகையுருவொரு, பகையுருவகை.
4. ஒருபெற்றியா னுணர்வினர். 85

## இராமபிரான் அநுமன் கருத்தை வினவுதல்

389. உறுபொருள் யாவரு மொன்றக் கூறினர்
செறிபெருங் கேள்வியாய் கருத்தென் செப்பென
நெறிதரு மாருதி யென்னு நேரிலா
அறிவனை நோக்கின னறிவின் மேலுளான்.

அறிவின் மேல் உளான் - உணர்ந்தார்க்கும் உணர முடியாதபடி யாவையும் கடந்துநின்ற பரம்பொருளான ஸ்ரீராமபிரான்,


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நெறிதரும் மாருதி என்னும் நேர் இலா அறிவனை - யாவர்க்கும் நன்னெறியைக் காட்டவல்ல காற்றின் மைந்தனுன அநுமன் என்னும் ஒப்புயர்வற்ற ஞானியை, 'செறிபெரும் கேள்வியாய் - பொருந்திய பரந்த கேள்வி ஞானமுள்ளவனே! உறு பொருள் யாவரும் ஒன்ற கூறினர் - செய்தற்குரிய காரியத்தைக் குறித்து யாவரும் ஒருபடித்தாக மொழிந்தார்கள், (இனி, இவ் வீடணனை ஏற்றுக்கொள்வதில்), கருத்து என் செப்பு என - நீ கருதுவது சொல்வாயாக' என்ற கருத்துப் புலப்படுமாறு, நோக்கினன் - கண்ணுற் பார்த்தான்.

ஒன்றக் கூறினர் - ஏற்கக்கூடாது என்று ஒருமுகமாகக் கூறினர். செறிபெருங் கேள்வியாய்; சுந்தர. 229. வான்மீகி, 'புத்திமதாம் வரிஷ்டம்' என்ற அடைமொழிகளை வீடண னுக்கும் அநுமனுக்குமே தந்துள்ளார்; இது அறிவில் மிக வுயர்ந்தவன் எனப் பொருள்படும். அறிவுக்கு ஆணி; (சுந்தர. 28). உரையால் ஒருவனை அறிபவன்: (சுந்தர. 59); 'கற்றுணர் மாருதி'; 'கலை கற்றுன்' (சுந்தர. 1233; 1237); 'நூற் பெருங்கடல் நுணங் கிய கேள்வியான்' (சுந்தர. 301). 'நெறிதரு மாருதி'; 'நீதியி னின்றீர் வாய்மை யமைந்தீர் நினைவானும், மாதர் நலம் பேணுது வளர்ந்தீர்' (கிட்கிந்தா. 992) என்றபடி நீதித் திறத்தையும், உண்மையின் உயர்வையும், காமத்தால் நிகழும் கேட்டையும் தன்னுடைய வாழ்க்கையினுலேயே பிறருக்கு அறிவுறுத்தியவன் மாருதி. அறிவன் - குறிப்பிற் குறிப்புணரும் அறிஞன். ஆதலின் சொல்லாமல் நோக்கினன் எனப்பட்டது. அறிவின் மேலுளான் - அறிவினுக் கறிவன் எனினுமாம்.

பா - ம். 1. யாவையும்; ஒன்று; ஒக்க.
2. செறிபொருட்; கேள்வியர்.
3. நெறிதெரி; நேர்விலா.
4. அறிவனை வினவினன், அறிவினையுளான். 86

## அநுமன் கூறத் தொடங்குதல்

390. இணங்கின ரறிவில ரெனினு மெண்ணுங்கால்
கணங்கொள்கை நும்மனோர் கடன்மை காணென
வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன்
நுணங்கிய கேள்வியா னுவல்வ தாயினன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'இணங்கினர் அறிவிலர் எனினும் - நம்மை அண்டி வந்தவர் அறிவில்லாதவராயினும், எண்ணுங்கால் - நன்கு ஆராய்ந்து பார்க்குமிடத்து, கணம் கொள்கை நும்மனோர் கடன்மை காண் என - நம் தொகுதியில் சேர்த்துக்கொள்ளுதல் நும் போன்றவர்களின் கடமையாகும்' என்று கூறி, நுணங்கிய கேள்வியான் - நுட்பமான பல பொருள்களையும் கேட்டுணர்ந்த அநுமன்; வணங்கிய சென்னியன் - வணக்கம் தோன்றுகின்ற சிரத்துடன் கூடியவனும், மறைத்த வாயினன் - கைகளால் மறைத்துக்கொண்ட வாயினை யுடையவனும் ஆகி, நுவல்வது ஆயினன் - சொல்லத் தொடங்கினன்.

முன்னிரண்டடிகளிலும் பேரறிவாளனை அநுமனது அவையடக்கம் கூறப்பட்டது. தன்னைச் சேர்ந்தவர்கள் அறிவிற் குறைந்தவரேனும், அவர்களுக்கும் வாய்ப்பளித்துத் தம்முடன் கூட்டி யுயர்வுபடுத்துவது பெருந்தன்மைவாய்ந்த உங்களைப் போன்றவர்களுடைய கடமை என்று விநயமாக மொழிந்தான் அநுமன் என்க. சென்னி வணக்கமும், வாயை மறைத்துக் கொள்ளுதலும் பணிவின் மெய்ப்பாடுகள். அநுமன், நுணங்கிய கேள்வியன் : 'நூற் பெருங்கட னுணங்கிய கேள்வியான்' (சுந்தர. 301) ; 'நுணங்கு கேள்வியான்' (கிட்கிந்தா. 947) ; 'நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய, வாயின ராதலரிது' (குறள். 419). மூன்றுமடிக்கு (ஒப்பு) : அயோத்தி. கைகேசி சூழ்வினை. 104 காண்க. கணங் கொள்கை ; 'கணங்கொண்டு சுற்றத்தார்' (நாலடி. 45).

பி - ம். 1. அறிவினர் ; எண்ணுவ, எண்ணரினும்.
2. கடமை.
3. மறைத்த வாயினும், மறைத்து வாயினை.



391. எத்தனை யுளர்தெரிந் தெண்ண வேய்ந்தவர்
அத்தனை வருமொரு பொருளை யன்றென
உத்தம ரதுதெரிந் துணர வோதினர்
வித்தக வினிச்சில விளம்ப வேண்டுமோ.

'தெரிந்து எண்ண ஏய்ந்தவர் எத்தனை உத்தமர் உளர் - ஆராய்ந்து சிந்திக்கக்கூடியவர்கள் எத்தனைபேர் உத்தமர் உள்ளவர், அத்தனைவரும் ஒரு பொருளை - அவ்வளவு பேர்களும் ஒரு பொருளை நன்கு ஆராய்ந்து, அது அன்று என - அது செய்யத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தக்கது அன்று என்று, தெரிந்து உணர - அறிந்து தெளியுமாறு, ஓதினர் - உரைத்துவிட்டனர்; (ஆகலின்), வித்தக - அறிஞனே! இனி சில விளம்ப வேண்டுமோ - இவ்வளவு நிகழ்ந்த பின்பு யான் வேறு சிலவற்றை மொழியவேண்டுமோ? ஓ - எதிர்மறை.

தாங்களோ வித்தகர், பிறரிடம் கேட்கவேண்டிய அவசியம் உங்கட்கில்லை; எனினும் பல அறிஞர்கள் தத்தம் கருத்தினை வெளியிட்டனர். அந்நிலையில் நான் சொல்லவேண்டுவது ஒன்றும் இல்லை என்று பணிவு புலப்படக் கூறினன் அநுமன் என்க.

பீ - ம். 1. உள; தெரிந்தென்ன.
2. பொருளை நன்றென, நன்றெனில்.
3. உத்தம வென்பதென்; புணர.
4. இனிப்பிற. 88

392. தூயவர் துணிதிற னன்று தீயதே
ஆயினு மொருபொரு ளுரைப்பெ னுழியாய்
தீயனென் றிவனையா னயிர்த்தல் செய்கிலேன்
மேயின சிலபொருள் விளம்ப வேண்டுமால்.

'தூயவர் - பரிசுத்தரான இவர்கள், துணிதிறன் - தெளிந்து சொன்ன விஷயம், தீயதே அன்று - கெடுதியானதன்று, ஆயினும் - ஆனாலும், ஆழியாய் - திகிரிப்படையை யுடையவனே! ஒரு பொருள் உரைப்பென் - ஒரு செய்தி கூறுவேன்; (அஃது என்னெனில்), யான் இவனை - நான் இந்த வீடணனை, தீயன் என்று அயிர்த்தல் செய்கிலேன் - கெட்டவன் என்று சந்தேகம் கொள்ள மாட்டேன்; (அதற்கு), மேயின சில பொருள் விளம்ப வேண்டும் - பொருத்தமான சில செய்திகளை நான் கூறியாகவேண்டும். ஆல் - அசை.

எடுத்துக் கூறியவரும் மனம், மொழி, மெய்களால் பரிசுத்தர்கள். அவர்கள் துணிந்து கூறியதும் தீயதன்று. ஆயினும், வீடணனைக் கொடியவன் என்று தான் கருதவில்லை என்று கூறி அதற்குப் பிரமாணம் காட்டுகின்றான் அநுமன். நன்று தூயதே என்ற பாடம் உண்டெனினும், தீயதே அன்று என்ற பாடம் சிறக்கும். அநுமன் மேற்கூறிய கருத்துக்களினின்றும் வேறுபடுதலின் அவற்றை ஒருதலையாக ஏற்காமல், யுக்திகட்கு அவை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொருந்துமாயினும் அநுபவத்தைக்கொண்டு நோக்கின் அவை ஏற்கக்கூடியனவல்ல என்று தான் நேரிற் கண்டதும் கேட்டதும் கூறுகின்றான். ஆழியாய் என்ற சொற்குத் திகிரிப்படையுடையவனே என்றும், திருப்பாற்கடலில் துயில்பவனே என்றும், ஊழிப் பெருவெள்ளத்தில் மிதப்பவனே என்றும் பலபடியாகப் பொருள் கொள்வர். ஆயினும், இங்கு இடத்துக் கேற்றவாறு அருட்கடலே என விளித்தான் என்க. அன்று தீயதே: இங்ஙனம் கூறுவது இவ்வாசிரியர் வழி. சூர்ப்பணகை வந்தபோது இராமபிரான், 'உன் வரவு நல்வரவாகுக' என்னாது, 'தீதில் வரவாக' என்று கூறியதும், 'இல்' என்ற சொல்லின்கணுள்ள தொனிக் குறிப்பும் காண்க. தன் அநுபவம் கூறித் துணிகின்றானாகலின் 'மேயின சில்பொருள்' என்றான். சிலபொருள் என்றான்: அவைகளை வீடணன் நிரபராதி என விளக்கப் போதியன என உட்கொண்டு, 'பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற, சிலசொல்ல றேற்றா தவர்' (குறள். 649).

பி - ம். 1. நினைதிறன் அன்று தூயதே; தூயவர்; சொற்றமை.

2. ஆயினு மறிந்தவன்.

3. தியனென் றவனே; நாளிரந்தல்; செய்திலேன்.

4. மேயினேன்; விளம்பக் கேட்டியால், வேண்டுமோ, விளம்பல் மேவினான்; சொல்லல் மேவினன். 89

இதன்பின், 'எத்தனை' யென்ற பாடல் ஓர் பிரதியில் காணப் பெறுகின்றது.

393. வண்டுழா யலங்கலாய் வஞ்சர் வாண்முகம்
கண்டதோர் பொழுதினிற் றெரியுங் கைதவம்
உண்டெனி னஃதவர்க் கொளிக்க வொண்ணுமோ
விண்டவர் நம்புகன் மருவி வீழ்வரோ.

'வண் துழாய் அலங்கலாய் - வளமான துளசிமாலை யணிந்தவனே! வஞ்சர் வாண்முகம் கண்டதோர் பொழுதினில் தெரியும் - கபடமிக்கவருடைய ஒளிபொருந்திய முகத்தைப் பார்த்த அளவிலேயே (அவர் தம் வஞ்சகம்) நன்கு புலனாகும்; கைதவம் உண்டெனின் - அவரிடம் வஞ்சகம் குடிகொண்டிருக்குமாயின், அஃது - அந்த வஞ்சகத்தை, ஒளிக்க அவர்க்கு ஒண்ணுமோ - மறைப்பதற்கு அவர்களால் இயலுமோ? விண்டவர் - உண்மையாக

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நம்முடன் மாறுபட்டவர், நம்புகன் மருவி வீழ்வரோ - நம்மிடம் சரண் புகுந்து அமைவரோ? ஓகாரங்கள், எதிர்மறை.

வண்டுளர் என்றும் பாடம். உளர்தல் - ஒலித்தல்; 'மென்மொழி மேவல ரின்னரம் புளர' (திருமுருகு. 142). வஞ்சர் வாண் முகம்: 'அகத்தி னழகு முகத்தில் தெரியும்' என்ற முதுரை காண்க. 'அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சம், கடுத்தது காட்டு முகம்'; 'முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினுங், காயினும் தான்முந் துறும்' (குறள். 706, 707) என்பனவும், மற்றும், குறிப்பறிதல் அதிகாரப் பாக்களும் இங்கே நோக்கத் தகும். 'வஞ்சர் வாண்முகம்' என்றார், உள்ளே உள்ள அவக் கருத்து வெளித் தோன்றுவண்ணம் ஒளிமுகம் காட்டி மறைக்க முயல்பவர் வஞ்சகர் ஆகலின். வாண்முகம் என்றது நகையுடன் கூடியிருப்பினும் வாள்போற் கொடிதென்பது காட்ட. இதனை அடுத்துள்ள பாடலும் காண்க. 'மருவி வீழ்வரோ' என்பதை வீழ்ந்து மருவுவரோ எனலும் பொருந்தும். வீழ்தல் - விரும்புதல். ஓ - எதிர்மறை.

பி - ம். 1. வண்டுள ரலங்கலாய்.
2. கண்டுள போதிலே, பொழுதிலே.
3. மறைக்க வெண்ணுமோ.
4. பல்பகல், பலபகல். 90

இச் செய்யுள் முதல் ஆறு செய்யுட்கள் சில பிரதிகளில் 'அன்னவன்' எனத் தொடங்கும் பாடற்குப்பின் உள்ளன.

394 உள்ளத்தி னுள்ளதை யுரையின் முந்துற
மெள்ளத்தம் முகங்களே விளம்பு மாதலால்
கள்ளத்தின் விளைவெலாம் கருத்தி லாமிருட்
பள்ளத்தி னன்றியே வெளியிற் பல்குமோ.

'இருள் - இருட்டானது, பள்ளத்தின் அன்றியே - பள்ளமான இடத்தில் அன்றி, வெளியில் - (ஒளியுள்ள) பரந்த வெளியில் பல்குமோ - மிக்குக் காணப்படுமோ? (காணப்படாதன்றே) அது போன்று, கள்ளத்தின் விளைவு எலாம் - வஞ்சகத்தால் நிகழ்வன அனைத்தும், கருத்தில் ஆம் - ஒருவருடைய உள்ளத்தில் தானே பொருந்தி யிருக்கும்; ஆதலால் - ஆகையினால், உள்ளத்தின் உள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ளதை உரையின் முந்துற - மனத்தில் அடங்கியிருக்கின்ற வஞ்சனை நினைவினைச் சொல் வெளிப்படுவதற்கு முன்னரே, தம் முகங்களே மெள்ள விளம்பும் - தங்களுடைய முகக் குறிப்புக்களே வெளிப் படுத்திவிடும். ஓகாரம் - எதிர்மறை.

முதல் இரண்டடிக்கு: 'அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்' (குறள். 706); 'முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினும், காயினும் தான்முந் துறும்' (குறள். 707) என்பன காண்க. 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது பழமொழி. 'முன்னம் முகம்போல முன்னுரைப்ப தில்'. இங்கிதம் வல்லவனன அநுமன் வீடணனைக் குற்றமற்றவன் என்கின்றான். 'முகக்குறிப்பை ஒருவன் மறைத் துக்கொள்ள எண்ணினும், அம் முகக்குறிப்பு மனிதர் உள்ளத்தில் உள்ள எண்ணத்தை விளக்கிவிடும்' என்பது வான்மீகம்.

பி - ம். 1. உள்ளத்தை.
2. எள்ளத் தம்முகங்களே யியம்பும்.
3. கருத்திலா விருட்.
4. பள்ளத்தி லன்றியே. 91

395. வாலிவிண் பெறவர சிளைய வன்பெறக்
கோலிய வரிசிலை வலியுங் கொற்றமும்
சீலமு முணர்ந்துநீற் சேர்ந்து தெள்ளிதின்
மேலரச செய்துவான் விரும்பி மேயினன்.

'வாலி - வாலி யென்ற வானர வீரன், விண் பெற - வீட்டின்பம் அடையவும். இளையவன் அரசு பெற - அவன் தம்பியான சுக்கிரீவன் கிட்கிந்தைப் பேரரசை யடையவும், கோலிய வரிசிலை வலியும் - வளைத்த உமது கட்டமைந்த வில்லின் வன்மையும், கொற்றமும் - வெற்றியும், சீலமும் - ஒழுக்கமும், உணர்ந்து - நன்கு தெரிந்து, (பின்பு), நின் சேர்ந்து - உன்னைச் சரண் அடைந்து, தெள்ளிதின் - தெளிவாக, மேல் அரசு எய்துவான் - உயர்ந்த அரசினை அடைவதற்காக, விரும்பி மேயினன் - ஆசை கொண்டு வந்துள்ளான (இந்த விடணன்).

கோலுதல் - வளைத்தல். 'நெடுங்காழ்க் கண்டம் கோலி' (முல்லைப்: 44); கண்டகரை எய்தழிக்கும் கோதண்டத்தின் வலிமை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

யும், என்றும் தோல்வி காணாத வெற்றித் திறனும், நல்லோர்க் கருள் வழங்கும் உயர்ந்த மனப்பண்பும் உணர்ந்து எனவே, இராவணனை அழித்து வெற்றி கொள்ளும் வீரமும், நல்லவனை தனக் கருள் புரியும் மனப்பண்பும் அறிந்தவன் வீடணன் என்று குறிக்கப்பட்டது. மேலரசு எய்துவான் விரும்பி; இத் தொடர் மேன்மை தங்கிய இலங்கை ஆட்சி எனப் பொருள்படுமேனும், அழியும் மாலைத்தாகிய புவியரசன்றித் திருமாலுடன் உடனுறையும் மோட்ச சாம்பிராஜ்யம் எய்துவான் என்பதே ஆசிரியர் குறிப்பென்பது ஆராய்ந்து நோக்கின் விளங்கும், அரசுநிலையின்மையும், அதினும் அரக்கர் அரசியல் விழையத் தக்கதன்று என்பதும் வீடணன் உணர்ந்தவன் என்பது (93-ம்) செய்யுளிற் கண்ட அநுமன் கூற்றான் அறிக. முதனூலில் உள்ள 'ராஜ்ய காங்க்ஷீ விபீஷண' என்றதும் இங்கே காணத்தகும். 'ஏழை நீ யென்பெருஞ் செல்வ மெய்திப்பின், வாழவோ கருத்து' (யுத்த. 309) இது இராவணன் தன் தம்பிமீது செய்த குற்றச்சாட்டு. நேரிற் காணப்பெற்ற இராமபிரான் திருவருட்கு இலக்காய் அழியாப் பரமபதம் எய்துவதன்றி அரக்கரை அரசாள மனம் கொள்வானோ தூயமையின் வடிவான வீடணன். 'பிறவியை வேரின் வாங்கச், செம்மணி மகுட நீக்கித் திருவடி புனைந்த செல்வன், தன்முனோர் கமலத் தண்ணல் தாதையார் சரணம் தாழ, என்முனோர் எனக்குச் செய்த வுதவியென் றேம்ப லுற்றான்' (யுத்த. 441); 'வெற்றர செய்தி யெம்பி வீட்டர செனக்கு விட்டான்' (கிட்கிந்தா. 354) என்பன காண்க. 'புருஷாத புருஷம் ப்ராப்ய, தத்ரதோஷ குணவபி' எனத் தொடங்கும் முதனூல் ச்லோகம் இச் செய்யுட்கு மூலம் என்ப. போர் நிகழ் பொழுதில் துறந்து வந்தான் என்று மந்திரிமார்கள் சாட்டிய குற்றத்தை இங்குக் காரணம் காட்டி மறுக்கின்றான் அநுமன். சீலம் - சௌலப்யம் என்பர். தாழ்ந்தோருடன் பெரியோர் பேதமின்றிக் கலந்திருக்கும் பண்பு. இராமபிரானுக்குப் பூர்வபாஷி' என்ற பெயருண்மையும் காண்க. இங்கு 'வாலி தங்களால் வதைக்கப்பட்டதையும் சுக்கிரீவர் பட்டத்துக்கு வந்ததையும் கேள்வியுற்று. இராச்சியம் வேண்டும் என்ற எண்ணத்துடன் புத்தி பூர்வமாக இங்கு வந்திருக்கிறார். இவரை நாம் சேர்த்துக் கொள்ளலாம்' என்பது வான்மீகம்.

பா - ம். 3. சேந்து ; சேர்ந்து தெள்ளிய.
4. மேவினன்.

92

இதன்பின் 'காலமன்றி' என்ற பாடல் ஓர் பிரதியில்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


396. செறிகழ லரக்கர்த மரசு சீரியோர்
நெறியல தாகலி னிலைக்க லாமையும்
எறிகட லுலகெலா மிளவற் கீந்ததோர்
பிறிவருங் கருணையு மெய்யும் பேணினன்.

'செறி கழல் அரக்கர் தம் அரசு - கட்டப்பட்ட வீரகண்டை யணிந்த அரக்கர்களுடைய அரசு, சீரியோர் நெறி அலது ஆகலின் - அறிவு ஒழுக்கங்களாற் சிறந்து விளங்குவோரது முறை வழிப்பட்டதன்றாதலின், நிலைக்கலாமையும் - அதன் நிலை பேறில் லாத இயல்பினைக்கண்டும், எறிகடல் உலகு எலாம் - அலை வீசுகின்ற கடல் சூழ்ந்த உலகம் முழுவதும், இளவற்கு ஈந்ததோர் பிறிவரும் கருணையும் மெய்யும் பேணினன் - தம்பியான பரதனுக்கு அன் புடன் அளித்ததாகிய ஒப்பற்ற அவனுக்கே இயற்கையாயமைந்த, (என்றும் அவனை விட்டு நீங்காத) அருளையும் உண்மையையும் (கண்டும்) விரும்பி வந்தான்.

உலகெலாம் இளவற் கீந்ததோர் பிறிவரும் கருணை: அயோத்தியா காண்டம், கைகேசி சூழ்வினைப் படலம் காண்க. மற்றும் 'தாயுரை கொண்டு' (அயோத். குகப். 35); 'ஏற்றபேருகெலா மெய்தி யீன்றவள்' (கிட்கிந்தா. 259); 'தாதை சொற் றலைமேற் கொண்ட தாபதன்' (யுத்த. நாகபாச. 275); 'பெற்ற தாதை பூட்டிய செல்வமாங்கோர் தம்பிக்குக் கொடுத்துப் போந்து' (கிட்கிந்தா. 310); 'ஒரு சொலால், அளவில்கற் புடையசிற் றவை பணித் தருளலால், வளையுடைப் புணரிசூழ் மகிதலத் திருவெலாம், இளையவற் குதவியித் தலையெழுந் தருளினன்' (கிட்கிந்தா. 85); 'வேந்தன் வீயவு மாய்வர மேவவும், ஏந்த லெம்பி வருந்தவும் என்னகர், மாந்தர் வன்றுயர் கூறவும் யான் வனம், போந்த தென் னுடைப் புண்ணியத் தாலென்றான்' (ஆரணிய. 155); 'சிறிய தாய் சொன்ன திருமொழி சென்னியிற் சூடி' (சுந்தர. 1020) என்பனவும் காண்க. 'நட்புந் தயையும் கொடையும்' பிறவிக் குணமாகலின் பிறிவருங் கருணை யெனப்பட்டது. கருணையும் என்றதனால், பரதன்மாட்டு அருள் புரிந்ததுபோன்று தன் மாட்டும் அருள் வழங்குவன் என்றகருத்தும் தோன்றும். மெய்என்பது. 'தந்தையை உண்மையன் ஆக்கியதைக் குறித்து நின்றது; 'உந்தை யுண்மையு


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஞுக்கியுன் சிற்றவை, தந்த சொல்லைத் தலைக்கொண்டு தாரணி, வந்த தம்பிக் குதவிய வள்ளலே' (ஆரணிய. 211) என்ற சடாயு கூற்றைக் காண்க.

பி - ம். 1. அரசுஞ் ; சிறியோய்.

2. ஆதலின் ; நிலைக்கலாமையால் ; நினைக்கலாமையும், நெறியல தாமையும்.

3. யியந்ததோர்.

4. அன்பும். 93

இதன் பின் ஓர் அதிகப் பாடல் :—

ஆவலின் அடைக்கலம் புகுந்து ளான்கருத்
தோவலின் இவர்தமக் குணர வொண்ணுமோ
தேவர்கள் தேவனீ தெளியின் அன்னவர்
கூவியிங் கறிவது கொள்கை யாகுமால்.

**397. காலமன் றிவன்வரு கால மென்பரேல்
வாலிதன் னுறுபகை வலிதொ லைத்தலால்
ஏலுமிங் கிவற்கினி யிறுதி யென்றுனை
மூலமென் றுணர்தலாற் பிரிவு முற்றினன்.**

'இவன் வரு காலம் காலம் அன்று என்பரேல் - இந்த வீடணன் (தன் அண்ணனை விடுத்து) நம்மிடம் வந்த இச்சமயம் தக்க காலம் அன்று என்று கூறுவார்களாகில், (அது பொருந்ாது); வாலி தன் உறு பகை வலி தொலைத்தலால் - தன்னுடைய பெரும் பகைவனான வாலியின் வன்மையை இராமபிரான் அழித்தது கொண்டு, இங்கு இவற்கு இனி இறுதி ஏலும் என்று - இவ்விடத்தே இந்த இராவணனுக்கு இனி முடிவே அமையும் என்று துணிந்து, மூலம் என்று உனை உணர்தலால் பிரிவு முற்றினன் - எல்லாவற்றிற்கும் மூலப்பொருள் என்று உன்னைத் தெளிதலால் அவனைவிட்டு நீங்குதலைச் செய்து முடித்தான்.

கீழ் 63-வது செய்யுட்கண், 'பகையுற வருதலும் துறந்த பண்பிது' என்று சுக்கிரீவன் கூறியதை மறுத்து அநுமன், 'இதற்கு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


முன் வீடணன் வாராமல், இப்பொழுது வந்ததன் காரணம், அழியாவரம் பெற்றுப் பரம்பொருட் கன்றித் தோலாத வலியன் ஆன வாலியைத்தொலைத்த கரத்தால் இராவணன் இறந்துபடுவது உறுதி என்று துணிந்தும், இராமபிரான் மூலமுதற்பொருள் எனத் தெளிந்துமே எனக் கூறுகின்றான். இரண்டாவதடிக்கு ஸ்ரீவசன பூஷணத்தை மேற்கோளாகக் காட்டி, 'பிரபத்தி மார்க்கத்தில் பரம் பொருளைச் சரண் புகுதற்குத் தேச கால நியம மில்லையாதலின், அவன் வந்ததுவே தேசமும் காலமும் என்க', எனக் கூறுவர் அறிஞர். உறுபகை - மிக்க பகை. 'சால உறு தவ நனி கூர் கழி மிகல்' (நன். உரி. 15). மூல மென்றுணர்தல் : 'அன்று மூல மாதியாய்'; 'முத்தேவரின் மூலமுதற் பொருளாம்'; 'ஊழியாய்' 'முன்னவற் கிதுவென் றெண்ண லாவதோர் மூலமில்லான்' (ஆரணிய. 69, 904, 1140, 1189); 'ஊழி முதனாயகன்' (யுத்த. ஒற்றுக். 4); 'ஆழித்தனி முதல் நாயகன்' (யுத்த. நிகும்பலை. 132).

பி - ம். 1. வரும்; கருத்து முன்னுறின்; என்றது, என்பது, என்றயாம்.
2. துன்னுறு; வலிய தேறியது, வலிய தெய்தியது.
3. ஏலுமங் கவற்கினி யிறுதி யென்னலால், யென்றலான்,
4. மூலமென் றுணர்வரைப் பிரிவு. 94

398. தீத்தொழி லரக்கர்த மாயச் செய்வினை
வாய்த்துள ரன்னவை யுணரு மாண்பினால்
காய்த்தவ ரவர்களே கையுற் றார்நமக்
கேற்றதோ ருறுதியு மெளிதி னெய்துமால்.

'தீ தொழில் அரக்கர் தம் மாயம் செய்வினை - கெட்ட செயல்களையுடைய அரக்கர்களின் மாயம் புரிகின்ற தொழிற்கண், வாய்த்துளர் - அமைந்திருக்கப்பெற்றவரும் (அரக்கர் புரியும் மாய வினைகள் எல்லாம் கைவந்தவரும்), அன்னவை உணரும் மாண்பினால் - அத்தகைய செயல்களை அறியும் வகையில், காய்த்தவர் - கைதேர்ந்தவருமான, அவர்களே - அந்த அரக்கர்களே, நமக்கு கை உற்றார் - (வலிய வந்து) நம் வசமாயினர்; (இதனால்), ஏற்றது ஓர் உறுதியும் எளிதின் எய்தும் - பொருந்திய ஒப்பற்ற நன்மையும் (நமக்கு) வருத்தமின்றியே எளிதில் கிட்டும். ஆல் - அசை,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

முன்பாட்டில், வீடணன் போந்தது தக்க காலமே என்ற அநுமன், அவன் வந்தது மாயத்தால் ஏமாற்றுவதற்காக அன்றென்பதும், அவ்வாறு மாயம் அறிந்திருப்பின் அதுவும் அநுகூலமே என்றும் பகர்ந்தான்; 'அடலரக்க ரவரோடே, செருச்செய்வா னமைந்தீ ராகில், தாம்பொறியிற் பலமாயந் தரும் பொறிக ளறிந்தவற்றைத் தடுப்பேனன்றே, பாம்பறியும் பாம்பினகா லெனமொழியும் பழமொழியும் பார்த்திலீரோ' (ஆரணிய. 357) என்ற சூர்ப்பணகை கூற்று இங்கே காணத்தகும். மற்றும், நாகபாசத்தால் இராமபிரானுதி அனைவரும் மூச்சற்றுக்கிடந்த நிலையில் வீடணன், 'இந்திரசித்து புணர்க்கு மா மாயம்' என்று இலக்குவற்குக் கூறிப் பின்னர், 'வெல்லா வறத்தினைப் பாவம்' (யுத்த. நாகபாசப். 233) என்று இராமபிரானைத் தேற்றியதும், பிரமாத்திரத்தால் இராமபிரானுக்கு ஓர் இடையூறும் எய்தா தெனத் தேற்றி மருந்து கொணரும்படி, 'மருந்துபோய்க் கொணர்தி' (யுத்த. மருந்து. 22) என்று அநுமனுக்குக் கூறியதும், மாயாசீதைப்படலத்துச் சீதை மறித்தாள் என்று சங்கையெழ, அவன் வண்டுருக்கொண்டு பிராட்டியைக் கண்டு அவள் வலியள் என அறிந்ததும், இரகசியமாக இந்திரசித்து இரவில் நிகழ்த்த இருந்த நிகும்பலை ஆகிய வேள்வியைப்பற்றியும் அதனைத் தடுக்கும் முறையைப் பற்றியும் இலக்குவற்குக் கூறியதும், பகைப்புலத்திருந்து வந்த வீடணன் செய்கைகள் ஆகும். இவைகளனைத்தையும் கருத்துட்கொண்டுதான், 'ஆடவர்திலக நின்னு லன்றிக லநும னென்னும், சேடனு லன்று வேருேர் தெய்வத்தின் சிறப்பு மன்று, வீடணன் றந்த வெற்றி யீது' (யுத்த. இந்திரசித்து. 71) என இராமபிரான் கூறியது என்பது உணர்க. காய்த்தல் - அநுபவத்தால் தழும்பேறி முற்றுதல். ஏத்த அரு என்பது ஏத்தரு எனத் தொகுத்தது.

பி - ம். 1. தீய்த்தொழில்; மாயைச்.

2. வாய்த்துளா னன்னவை, வாய்த்தன வன்னவை; மாண்பினுர்.

3. காத்தவர்; கையுற்குல்.

4. ஏத்தரும்; எளிது மெய்துமால். 95

399. தெளிவுற லரிதிவர் மனத்தின் றீமையாம்
விளிவது செய்குவ ரென்ன வேண்டுதல்
ஒளியுற வுயர்ந்தவ ரொப்ப வெண்ணலார்
எளியவர் தீறத்திவை யெண்ண லேயுமோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'யாம் - நாம், இவர் மனத்தின் தீமை தெளிவுறல் அரிது - இந்த அரக்கருடைய உள்ளத்தின் கெட்ட தன்மையைத் தெளிவாக அறிதல் அருமை, விளிவது செய்குவர் என்ன வேண்டுதல் - இவர் நாம் இறந்துபடும்படி புரிவர் என்று சிலர் கருதுதல் கூடும், (ஆயினும்) ஒளி உற உயர்ந்தவர் - மேன்மை பொருந்த உயர்ந்து விளங்குபவர், எண்ணலார் ஒப்ப - ஆராயாதவர்களைப்போல, எளியவர் திறத்து இவை எண்ணல் ஏயுமோ - மிகவும் எளியவரான இவர்கள் திறத்து இத்தகைய சங்கைகளை மேற்கொள்ளுதல் பொருந்துமோ' (பொருந்தாது).

கரவுடை நெஞ்சினர் அரக்கர் ஆகலின் இவர்களையும் நம்பற்கில்லை என்று எண்ணுதல் கூடாது என்கின்றான். வேண்டுதல் - மனத்தால் கருதுதல் என்னும் பொருட்டு. (தமையனால்) எளிமையுற்று வந்தவனை ஐயுறுவதாகாது என்றனன் என்க. எண்ணலார் ஒப்ப - பகைவரைப்போல எனினுமாம்.

பி - ம். 1. அரிதவர் ; மனத்து ; தீமையால், தீமைகள், தீமையும்.
2. விளிவகை, இளிவகை, விளைவுசெய்.
3. ஒளிவுற ; உள்ளத்து ; எண்ணலாவ், எண்ணலால்.
4. திறத்தினில் ; வேண்டுமோ. 96

400. கொல்லுமி னிவனையென் றரக்கன் கூறிய
எல்லையிற் றூதரை யெறித லென்பது
புல்லிது பழியொடும் புணரும் போர்த்தொழில்
வெல்லலம் பின்னையென் றிடைவி லக்கினுன்.

'இவனை கொல்லுமின் என்று அரக்கன் கூறிய எல்லையில் - (நான் பிராட்டியை நாடி இலங்கைக்குச் சென்றிருந்தபோது), 'இந்த அநுமனைக் கொலைசெய்யுங்கள்' என்று இராவணன் சொன்ன அளவில், (அவனை மறுத்து), 'தூதரை எறிதல் என்பது புல்லிது - தூதாக வந்தவர்களைக் கொல்வது என்பது மிகவும் அற்பமான செயல்; (அச்செய்கை), பழியொடும் புணரும் - பழியாகப் பொருந்தும்; பின்னை - பின்னர், (பகைவர் வந்து எதிர்க்க அவருடன் ஆற்றும்), போர் தொழில் - பொருதலாகிய தொழிலில், வெல்லலம் - வெற்றிகொள்ள இயலாதவராவோம்', என்று இடைவிலக்கினான் - என்று நடுநின்று கூறி அச்சமயத்தில் இராவணனை இவன் தடுத்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வீடணன் திறத்து ஐயுற வேண்டுவதில்லை எனக் கூறிய அநுமன், இங்கு தன் நேர் அநுபவம் ஒன்றினைக் கூறித் தெருட்டுகின்றான். வீடணன் அநுமன் கொலையுண்ணுமற் செய்தது; 'கொன்மி னென்றனன் கொல்லியர் சேறலும், நின்மி னென்றனன் வீடண னீதியான்'; 'இயம்பு தூது வந்தன னென்ற பின்னுங் கோறியோ மறைகள் வல்லோய்'; 'வேந்தர், மாதரைக் கொலை செய்தார்க ளுளரென வரினும் வந்த, தூதரைக் கொன்று ளார்கள் யாவரே தொல்லை நல்லோர்!' 'மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட, தகைப்புலக் கருமத்தோரைக் கோறலில் தக்கோர் யார்க்கும், நகைப்புலம் பிறிதுண் டாமே'; 'வேந்தனீ வேற்றோரேவ, இத்தலை யெய்தினானைக் கொல்லுதல் இழுக்கம்' என்றன (சுந்தர. *1152, 1154, 1155, 1156, 1157*) காண்க. வெல்லலம் - உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்று.

பி - ம். 1. கொல்லுதல்; கூறிட.

3. புல்லிய; பழியொடு; பொருந்து போர்த்தொழில்.

4. வெல்லுவாய், வெல்லலாம்; பின்னரேன் 97

**401.** **மாதரைக் கோறலு மறத்து நீங்கிய**
**ஆதரைக் கோறலு மழிவு செய்யினும்**
**தூதரைக் கோறலுந் தூய்தன் றுமெனு**
**ஏதுவிற் சிறந்தன வெடுத்துக் காட்டினன்.**

'மாதரை கோறலும் - மகளிரைக் கொல்லுதலும், மறத்து நீங்கிய ஆதரை கோறலும் - வீரத்தைத் கைவிட்டு இழிந்தவரைக் கொல்லுதலும், அழிவு செய்யினும் தூதரை கோறலும் - கேட்டையே விளைத்தாலும் அவ்வாறு செய்கின்ற தூதர்களைக் கொல்லுதலும், தூய்து அன்றும் எனு - பரிசுத்தமான செயல் ஆகாது என்று சொல்லி, ஏதுவில் சிறந்தன எடுத்து காட்டினன் - காரணங்களில் மிகவும் சிறந்தவற்றை எடுத்து அறிவித்தான்.

முதல் மூன்றடிகளைச் சுந்தரகாண்டம் *1154—1157* செய்யுட்களுடன் ஒப்பு நோக்குக. ஏது: ஹேது என்ற வடசொல் தமிழ்க்கேற்பத் திரிந்தது. சிறந்தன - வினையாலணையும் பெயர். தூதரைக் கோறலை விலக்க எண்ணிய வீடணன், மாதரைக் கோறலும் மறம் என்றான். அண்ணன் சீதாப்பிராட்டிக்கு ஊறு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விளக்காமல் இருத்தற்பொருட்டு என உணர்க; பின்வரும், மாயா சீதைப்படலம் இதனை விளக்கும். மறத்து நீங்கிய ஆதர் - வீர மற்றவர்கள். மறம் - பாவச்செய்கையும் ஆம். ஆதர்: 'ஆதனேன்' (ஆரணிய. 71) காண்க. தூதன் - தான் சொல்லும்படியாகப் பணிக்கப்பெற்றவதனைச் சொல்லும் அளவில் நில்லாது மிகையும் செய்தானே ஆதலின் கொல்லற்குரியன் என இராவணன் கூறுதல்கூடும் என்பதைக்கருதி, 'அழிவு செய்யினும் தூதரைக் கோறலும் என்ருன்' என்க. தூய்தன்று: திருக்குறள், 'தூய்தன்மை' என்ற அதிகாரத் தலைப்புக் காண்க. அநுமன் தூதனு ஒற்றனு என்று பல அறிஞர் சங்கை கொள்வர். ஆயினும், கம்பநாடர் பல இடங்களிலும் தூதன் என்றே தெரிந்து கூறுதலின், அச் சங்கைக்கு இடமில்லை என்க. 'மனேஜவம்' என்று தொடங்கும் முதனூல் ச்லோகத்தில், ஸ்ரீராமதூதம் சிரஸாநமாமி என வருதல் காண்க. வாலி சேய் விடுத்த தூத; (சுந்தர. 1725) என்றே இராவணன் கூறுதலும் காணலாம்.

பி - ம். 1. மறத்து னிங்கிய, மனத்து.
3. தூய்தன் ருமென.
4. ஓதினன்.

98

402. எல்லியில் யானிவ னிரண மாளிகை
செல்லிய போதினுந் திரிந்த போதினும்
நல்லன நிமித்தங்கள் நனிந யந்துள
அல்லது முண்டுநா னறிந்த தாழியாய்.

'ஆழியாய் - திகிரிப்படை யேந்தியவனே! எல்லியில் - இராப்போதில், யான் - நான், இவன் இரணம் மாளிகை - இந்த வீடணனுடைய பொன்மயமான மாளிகையில், செல்லிய போதினும் - முதல் முதலாகச் சென்றபோதும், திரிந்த போதினும் - (பின்னர் அந்த மாளிகைப் புறத்தே) அலைந்த காலத்தும், நல்லன நிமித்தங்கள் நனி நயந்துள - நன்மையை விளக்கவல்ல அறிகுறிகள் மிகவும் விரும்பத்தக்கனவாக அமைந்தன; அல்லதும் - அஃதன்றியும், நான் அறிந்தது உண்டு - நான் இந்த வீடணனைப்பற்றி அறிந்துள்ள சில சிறப்புச் செய்திகளும் உள்ளன.

எல்லி - இச்சொல், இரவு பகல் என்ற இரண்டையும் குறிப்பது; இங்கே இரவு, 'எல்லியும் பகலும் தோன்று திமை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யவர் நகர மேய்க்கும்' (நைடத. நாட்டுப். 27); 'எல்லியிது காலை யிது' (சீவக. 1877). எல்லி - பகல்; 'இரவொ டெல்லியு மேத்து வார்' (தேவா. 344 : 8); இரண்டு மாறுபட்ட பொருள்களைக் குறிப்பது இச்சொல் என உணர்க. தழைத்தல் கெடுதல் என்ற இரு பொருள்களையும் பயக்கும். 'நந்துதல்' என்ற சொல்லும் குற்றம், உயர்வு என்று தம்முள் மறுதலையான இரு பொருள் களைப் பயக்கும்; 'புரை' என்ற சொல்லும் இது போன்றதே. இவன் என்றது வீடணனை. இரணியம் என்பது இரணம் எனத் திரிந்தது. செல்லிய என்பது வினையெச்ச வாய்பாடன்று; செல்ல என்றே பொருள்படும். நிமித்தம் - நல்ல அறிகுறிகள்; நிமித்தங்களில் மக்கட்கு எந்நாளிலும் நம்பிக்கை உண்டு; (சுந்தர. 361—364) காண்க.

பி - ம். 1. எல்லையில், யானவன்; இரத மாளிகை.

2. பெயர்ந்த; பொழுதினும், திரண்ட போதினும்.

3. நனி நிகழ்ந்தன, நிகழ்ந்துள, நனி நயந்தன.

4. முண்டியான். 99

403. **நிந்தனை நறவமு நெறியி லூன்களும்**
**தந்தன கண்டிலென் றரும தானமும்**
**வந்தனை நீதியும் பிறவு மாண்பமைந்**
**தந்தண ரில்லெனப் பொலிந்த தாமரோ.**

'நிந்தனை நறவமும் - இகழத்தக்க கள்ளும், நெறியில் ஊன் களும் - நன்னெறி கைப்பிடித்தார்க்குப் பொருந்தாத இறைச்சி யுணவுகளும், தந்தன கண்டிலென் - (இந்த வீடணன் அரண் மனையில்) கொண்டு வைக்கப்பட்டிருந்ததை நான் பார்க்கவில்லை; (அதற்கு மாறாக இவன் இல்லமானது) தருமம் தானமும் - தருமத் தோடு இயைந்த கொடையும், வந்தனை - பெரியோர் வழிபாடும், நீதியும் - நியாய முறையும், பிறவும் - மற்றும் பல நன்மைகளும், மாண்பு அமைந்து - சிறப்புடன் பொருந்தி, அந்தணர் இல் எனப் பொலிந்தது ஆம் - அழகிய அருட்டன்மை வாய்ந்த பெரியோர் மனைபோல நன்கு விளங்கிற்று. அரோ - ஈற்றசை.

நிந்தனை நறவம் : கள்ளுண்பதால் நிகழும் பெருங்கேடுகளைத் திருக்குறள் 'கள்ளுண்ணாமை' என்ற அதிகாரத்துக் காண்க. 'கலமயக்கம் கள்ளுண்டு வாழ்தல்', நன்மையிலாளர் தொழில்'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(திரிகடு. 39) ' 'கட்களவு சூது கருத்தினுல் பண்டெடுத்துக் காட்டும் பயின்று' (சிறுபஞ்ச. 28); 'கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந், தள்ளாதாகுங் காமந் தம்பா, லாங்கது கடிந்தோர்'; 'கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையும், உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை' (மணி. 22; 171-172; 24; 77-78); 'காதல் கவருடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல், ஈதல் மறுத்தல் இவை கண்டாய்' (நள. 205); 'அறிவை யழிக்கும் செயலழிக்கும் அழியா மானந் தனையழிக்கும், செறியு மறிஞர் மதியாத செருக்கை விளைக்கு மீன்றுளு, முறியும் வெறுப்பு மிக விளைக்கு முனிவு விளைக்கும் பகையஞ்சாக், குறிகள் விளைக்கும் நகை விளைக்கும் கொள்ளேல் கள்ளுண் டலைமைந்தா (விநாயக. அரசியற்கை. 140); 'ஒளியு மொளி சான்ற செய்கையுஞ் சான்ருேர், தெளிவுடைய னென் றுரைக்குந் தேசுங் - களியென்னும் கட்டுரையாற் கோதப்படுமே லிவை யெல்லாம், விட்டொழிக்கும் வேருய் விரைந்து' (அறநெறி. 140) என்பன காண்க. நெறியில் ஊன் - சன்மார்க்கம் பற்றினுர் மேற் கொள்ளத்தகாத புலாலுண்ணல், ஊனுண்ணலின் கெடுதிகளைப் 'புலான் மறுத்தல்' என்ற திருக்குறள் அதிகாரம் கொண்டுணர்க. 'தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான் எங்ஙனம் ஆளும் அருள்' என்றபடி, அருளிற்கு நேர்மாருன செயல் ஆகலின் அதனை 'நெறியில் ஊன்' என்ருன். 'அந்தணர் இல்' 'அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண் டொழுகலான்' (குறள். 30) என்ருர். ஊனுண்ணும் படியான அரக்கர் குழுவில் வீடணன் ஒருவனே ஊனுண்ணுதவன் என்று அவனது அருட்டிறத்தைக் குறித்தார்; முன்னர், இப்படலத்து 22இல் 'ஆதியம் பரமனுக்கன்பு நல்லறம், நீதியின் வழாமையும் உயிர்க்கு நேயமும், வேதியரருளும் நான் விரும்பிப் பெற்றனன்' என்று வீடணனே கூறுதல் காண்க: 'அந்தணர் வடிவங் கொண் டிலங்கையில் வாழ், ஆதிவா ளரக்கனைப் போல்' (வி. பா. சடாசுரன். 7). தரும தானம் உம்மைத்தொகை. தருமம் - அறன்; 'அறவினை யாதெனிற் கொல்லாமை' (குறள். 321); 'நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங், கொல்லாமை சூழு நெறி' (குறள். 323),

பி - ம். 2. தந்நில; கங்டிலன், கங்டிலந்; தருமந்.

3. மாண்டவை.

4. அந்தணர் மனையென; ஆழியாய். 100



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



404. அன்னவன் றனிமக ளலரின் மேலயன்
சொன்னதோர் சாபமுண் டுன்னைத் துன்மதி
நன்னுத றீண்டுமே னணுகுங் கூற்றென
என்னுடை யிறைவிக்கு மினிது கூறினள்.

'அன்னவன் - அந்த வீடணனது, தனி மகள் - ஒப்பற்ற புதல்வியும், (பிராட்டி வருந்தி நின்ற போதில்), (அவளை நோக்கி), 'நல் நுதல் - அழகிய நெற்றியை உடையவளே ! அலரின் மேல் அயன் - திருமாலின் உந்திக்கமலத் தெழுந்த பிரமதேவன், சொன்னது ஓர் சாபம் உண்டு - (இராவணனுக்குச்) சொல்லிய ஓர் சாபம் உள்ளது; (ஆதலின்), துன்மதி உன்னை தீண்டு மேல் கூற்று நணுகும் என - கெட்ட புத்தியுடையவன் ஆன அவ் அரக்கன் உன்னைத் தொடுவானானால், உடனே யமன் அவனை உயிரைக் கவர்தற்கு வருவன்' என்று, என்னுடை இறைவிக்கும் இனிது கூறினள் - என் தலைவியான பிராட்டிக்கும் இனிமையான சொற்களைக் கூறித் தெருட்டினள்.

அன்னவன் தனி மகள்; திரிசடை. சொன்னதோர் சாபம்; சுந்தர. 627, 628 காண்க. என்னுடை இறைவி என்ற பத்தியபிமானத்துடன் அநுமன் கூறினன் என்க 'என் பெருந்தெய்வம்' (சுந்தர. 1270); ஒப்பு: 'சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலு மென் சுந்தரனும்' (தனிப்பா.) என்றது காண்க. சாபம் அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும், அவ்வப்பயனையே தரும் சொல்; 'சாபமே சபித்தல் வில்லாம்' (நிகண்டு). இறைவிக்கும் உலகன்னை: யாகி யாரும் தனக்கு இதம் கூறவேண்டப்பெறுத பிராட்டி தான் எடுத்த மானிட வுருவுக்கேற்ப நடித்துக்காட்ட வேண்டுதலின், சோகத்தாளாயிருக்கத் திரிசடை தேறுதல் கூறவேண்டி நேர்ந்ததை, உம்மை குறித்து நின்றது. நாகபாசப்படலத்தும் பிரமாத்திரப் படலத்தும் இராமபிரான் (தான் கொண்ட மனித வுருவிற்கேற்ப), புலம்பியதும், வீடணனும் தேவர்களும் தேற்றுதலும் இங்கு ஒப்பு நோக்கத் தகும்; 'ஆத்மா நம் மாநுஷம் மன்யே இராமம் தசரதாத்மஜம்' என்ற முதனூல் சுலோகம் இங்கே காணத்தகும்.

பி - ம். 1. மன்னவன்; தன்மகள்; மலரின்.
2. சாபமுன் டென்னத்; உண்டகத்திற் சோர்விலா.
3. தன்னுறுங்.
4. இனிய, கூறுமால்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


405. பெற்றுடைய பெருவரமும் பிறந்துடைய
வஞ்சனையும் பிறவு முன்கை
விற்றொடையின் விடுகணையால் வெந்தொழியு
மெனக்கருதி விரைவின் வந்தான்
உற்றுடைய பெருவரமு முகந்துடைய தண்ணளியு
முணர்வு நோக்கின்
மற்றுடையர் தாமுளரோ வாளரக்க னன்றியே
தவத்தின் மிக்கார்.

'பெற்றுடைய பெரு வரமும் - (தன் அண்ணன்) அடையப் பெற்றுள்ள சிறந்த வரங்களும், பிறந்துடைய வஞ்சனையும் - தோன்றும் போதே பிறவிக் குணமாக அவனிடம் அமைந்த கபடமும், பிறவும் - மற்றுமுள்ளவைகளும், உன் கையில் தொடையின் விடுகணையால் - உன் கையில் உள்ள வில்லின் நாணியிலிருந்து விடுகின்ற அம்புகளால், வெந்து ஒழியும் என கருதி - எரிந்து அழியும் என நினைந்து, விரைவின் வந்தான் - (இந்த வீடணன்) காலம் தாழ்க்காமல் வேகமாக வந்தான்; நோக்கின் - ஆராய்ந்து பார்த்தால், தவத்தின் மிக்கார் - தவத்தால் சிறந்துள்ள அரக்கர் குழுவில், வாள் அரக்கன் அன்றியே - கொடிய அரக்கனுகப் பிறந்த இந்த வீடணனே அல்லாமல், உற்றுடைய பெருவரமும் - தவத்தின் பயனுக அடைந்துள்ள சிறந்த வரங்களும், உகந்துடைய தண்ணளியும் - மனமகிழ்ந்து கைக் கொண்டுள்ள கருணையும், உணர்வும் - தத்துவ அறிவும் (ஆகிய இவைகளை), மற்றுடையர் தாமும் உளரோ - பெற்றுள்ளவர்கள் பிறரும் இருக்கின்றனரோ? (இல்லை).

இராவணன் வீடணன் என்ற இருவரும் பெருவரங்கள் பெற்றவர் தாம்; ஆயினும் முன்னவன் வஞ்சனை முதலிய தீய பண்புகளை உடையவன் ஆதலின், அவன் இராமனம்பிற்கு இலக்காக வேண்டியவனே என்று தெளிந்து, பெருவரத்தோடு தண்ணளியும் உணர்வும் வாய்க்கப்பெற்ற வீடணன் இராமபிரான் அன்பிற் கிலக்காக ஆக முயன்முன் என்க. இப்படலம் 18, 22, 45, 46 ஆம் செய்யுட்கள் காண்க. வாளரக்கன் என்பது அரக்கர்க்கு இயற்கை யடைமொழி யேனும், இங்கு வாளேந்திய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அரக்கன் என்றேனும், தனது பகைவர்க்கு வாள் போன்றவன் என்றேனும் கொள்க. இதுகாறும் வீடணன் குற்றமற்றவன், குணங்கள் நிரம்பியவன் என்று கூறி, அவனுடைய ஞான விசேடங்களை இச் செய்யுளில் அமைத்து அவனைச் சேர்த்துக் கொள்வதே தக்கது என்று அநுமன் கூறத் தொடங்கினன் என்றதன் சிறப்பு நோக்குக.

பி - ம். 1. பிறந்துடைய பெருந்தவமும்.

2. கடுங்கணையால் வெந்தழியும்; மேனினுஞல், மேற்சொல்லோடும், மேற்கோளோடும்.

3. உற்றுடைய மனவலியும், ஊக்கமிகு பெருந்தொழிலும், பிறந்துடைய பெருந்தவமும்; உணர்ந்து.

4. மற்றுடையார்; வாளரக்கர் அன்றியே. 102

406. தேவர்க்குந் தானவர்க்குந் திசைமுகனே முதலாய
தேவ தேவர்
மூவர்க்கு முடிப்பரிய காரியத்தை முற்றுவிப்பான்
மூண்டு நின்ருய்
ஆவத்தின் வந்தபய மென்ருனை யயிர்த்தகல
விடுதி யாயின்
கூவத்தின் சிறுபுனலைக் கடலயிர்த்த தொவ்வாதோ
கொற்ற வேந்தே.

'கொற்ற வேந்தே - வெற்றி பொருந்திய மன்னவ! தேவர்க்கும் தானவர்க்கும் - தேவர்கட்கும் அசுரர்கட்கும், திசைமுகனே முதலாய தேவ தேவர் மூவர்க்கும் - பிரம தேவன் முதலான தேவாதி தேவர்களான மும்மூர்த்திகட்கும், முடிப்பரிய காரியத்தை - செய்து முடிக்க வியலாத செயலை, முற்றுவிப்பான் மூண்டு நின்ருய் - முடித்துத் தரும் பொருட்டு முனைந்துள்ளாய்; ஆவத்தின் - துன்பம் நேர்ந்த காலத்து. வந்து - நம்பால் வந்து, அபயம் என்ருனை - அபயம் என்று சொல்லிக் கொண்டு நின்ற இவனை, அயிர்த்து - ஐயம் கொண்டு, அகல விடுதி ஆயின் - நீங்கும்படி விட்டு விடுவாயாகில், (அச்செயல்) கடல் - பெரும் நீர்ப்பரப்பான கடலானது, கூவத்தின் சிறு புனலை அயிர்த்தது ஒவ்வாதோ - கிணற்று நீரை (நம்மை அடித்துக் கொண்டு சென்று விடுமோ எனு), ஐயுற்றதை நிகர்க்காதோ?

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'தன் துணை யொருவரும் தன்னில் வேறிலான்' என்று புகழப்பட்ட நீர் அரக்கர் குலத்தையே வேரறுக்க வல்லீர்; அப்படியிருக்க, தனித்து எளியனாய் நின்ற இவனால் உமக்கு என்ன தீங்கு நிகழும்? அபயம் என்று வந்தவனை ஏற்பதே நீதி' என்றான் அநுமன். 'ஆபத்தின் வந்தபயம் என்றானை அயிர்த்து' இங்கு, பாதுகாக்கும் நிலையில் இருக்கும் ஒருவன் கண் முன்பேயே சரணம் அடைந்தவன் காப்பாற்றப் படாமல் வதைக்கப் படுவானே யாகில், அச்சரணாகதன், அவ்வாறு தன்னைக் காவாதவனுடைய புண்ணியத்தைக் கவர்ந்து நற்கதியை அடைகின்றான்' என்ற முதனூற் கருத்துக் காண்க. ஆபத்து என்ற வடசொல் எதுகை நோக்கி ஆவத்து என வந்தது. அபயம்-பயம் எய்தாதபடி காக்க வேண்டிய பொருள். 'கூவத்தின் சிறு புனலைக் கடல் அயிர்த்தல்'; 'கூவலிற் புக்கு வேலை கோட்படுமென்று கொள்ளேல்' (யுத்த. பிராட்டி களங்காண். 28): கூவம்-கிணறு; கூபம் என்ற வடசொல்லின் திரிபு.

பி-ம். 1. திசைமுகற்கும், தெய்வமென்னும், தேவதேவே, தேவர்தேவர்.

2. முற்றுத; முண்டு நின்றே.

3. விடுது மென்றால்; விடுதி யென்றால், விடுந்து மென்றால்.

4. கடலயிர்த்தா லொவ்வாதோ. 103

407. பகைப்புலத்தோன் துணையல்லன் என்றிவனைப்
அறிஞர் பார்க்கின் [பற்றேமேல்
நகைப்புலத்த தாமன்றே நற்றாய முளதாய
பற்றான் மிக்க
தகைப்புலத்தோர் தந்தையர்கள் தம்பியர்கள்
தாமே யன்றோ [தமையரிவர்
மிகைப்புலத்து விளைகின்ற தொருபொருளைக் காதலிக்கின்
விளிஞ ராவார்.

'நல் தாயம்-சிறந்த தாய உரிமையில், உளது ஆய மிக்க பற்றான்-ஏற்பட்டுள்ள மிகுந்த ஆசையால், தகைபுலத்தோர்-(பிறர் உரிமையினைத்) தடுக்கும் நினைவினராய், மிகை புலத்து விளைகின்றது ஒரு பொருளை-மேலான நிலத்துப் பயிராகின்ற ஒரு பொருளை, காதலிக்கின்-விழைவாராயின், தந்தையர்கள்-பெற்றோராயினும், தம்பியர்கள்-இளைஞராயினும், தமையர்-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அண்ணன்மாராயினும், இவர் தாமே அன்றே - இவர்கள் தாமல்லவோ, விளிஞர் ஆவார் - (தமக்குள்ளே சினம் கொள்ளும்) பரம விரோதிகள் ஆவர். எனவே, பகை புலத்தோன் - விரோதிகளிடத்துள்ளவன், துணை அல்லன் - நமக்கு நண்பனல்லன், என்று - என்று ஐயுற்று, இவனை பற்றே மேல் - இவனை ஏற்காமல் விட்டு விடுவோமெனில், அறிஞர் பார்க்கின் - அரசியல் வல்லவர் எண்ணிப் பார்க்குங்கால், நகைபுலத்தது ஆம் அன்றே - சிரிப்பிற்கிடமாகுமல்லவோ?

'அண்ணன் கொடுமைக்கஞ்சி அபயம் பெற வந்துள்ளான் என்று தெரிந்த பின்னரும், இவன் பகைவன் வருக்கத்தான் என ஏற்காது விடுதல் பொருத்தம் அன்று; பங்காளிகட்குள்ளேயே ஒருவன் பங்கைப் பிறனொருவன் வெளவவேண்டும் என்று கருதும் இடத்துச் சச்சரவு நிகழ்வதில்லையா? எத்தாயர் வயிற்றினும் பின் பிறந்தார்கள் எல்லாரும் ஒத்து ஒற்றுமையுடன் காணப்படுகின்றனரா? இல்லையே. ஆகவே, இவனை ஏற்றல் தகும்' என்றான் அநுமன். 'தமது குலத்திலே பிறந்த தாயாதிகளும் அடுத்த நாட்டிலிருப்பவரும் ஒரு அரசர் சங்கடத்திலிருக்கும்போது அவனைச் சமயம்பார்த்துக் கொல்லுகின்ற சத்துருக்கள் ஆவார்கள் என்று முதனூலில் இராமபிரான் கூற்றாகக் காணப்படுவது இங்கு ஒப்பு நோக்கத்தகும். ஞாதிர் பயத்தினை இராவணனும் கூறுவது முதனூலிற் காண்க. தகைத்தல்-தடுத்தல்; 'நின்னைத் தகைத்தனென்' (கலித். 108 : 20).

பி - ம். 1. யல்லர், யல்லவென; இவரைப் பற்றேமேல், பற்றுமேல்.
2. புலத்தா ரென்றென்றே, புலத்தா ராமென்றே; உளதாக; முதலாய.
3. தகைப்புலத்த; தந்தை தாய் தம்பியர்கள் தனையரிவர்.
4. மிசைப்புலத்து விளைகின்ற மெய்ப்பொருளை, விளைகின்ற விளை பொருளை; வினைஞராவார்.
104

408. ஆதலா லிவன்வரவு நல்வரவே யெனவுணர்ந்தே
னடியனேனுன்
வேதநா லெனத்தகைய திருவுளத்தின் குறிப்பறியே
னென்று விட்டான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காதனுன் முகனுலுங் கணிப்பரிய கலையனைத்துங்
கதிரோன் முன்சென்
ருேதினு னோதநீர் கடந்துபகை கடிந்துலகை
யுய்யக் கொண்டான்.

'ஆதலால் - மேற்கூறியவைகள் இங்ஙனம் இருத்தலால், இவன் வரவு நல்வரவே என அடியனேன் உணர்ந்தேன் - இந்த வீடணன் வருகை நல்ல வரவுதான் என உங்கள் அடியவனுகிய நான் தெளிந்தேன்; வேதம் நூல் என தகைய உன் திருவுளத்தின் குறிப்பு அறியேன் என்று - வேதசாத்திரங்களே என்று சொல்லக் கூடிய உன்னுடைய நல் உள்ளத்தின் குறிப்பினை நான் அறியேன்' என்று, காதல் நான்முகனுலும் கணிப்புஅரிய கலை அனைத்தும் - அன்பு செய்யப்படுகின்ற பிரமதேவனுலும் கணக்கிட்டு முடியாத சாத்திரங்களை எல்லாம், கதிரோன் முன் சென்று - சூரியன் முன்னர்ச் சென்று, ஓதினுன் - கற்றவனும், ஓத நீர் கடந்து பகை கடிந்து - கடலைத் தாண்டிச்சென்று பகைவரை அழித்து, உலகை உய்ய கொண்டான் - உலகத்தைக் கடைத்தேறப் புரிந்தவனுமான அநுமன், விட்டான் - கூறி முடித்தான்.

இப் படலம் 88-ஆவது செய்யுள் முதல் இப் பாடல் இறுதி யாகப் பதினெட்டுப் பாடல்களில் சுக்கிரீவன் முதலியோர் கூறிய அறிவுரைகளைப் பூருவபக்கம் செய்து, விநயத்துடன் காரண காரியத் தொடர்ச்சியாக எடுத்து, 'ஆதலால்' என்று தொடங் கும் இச் செய்யுட்கண் தன் தீர்மானத்தை ஒருதலையாகப் பகர்ந் தான் அநுமன் என்க. பொதுவாக ஆசிரியர், 'ஆதலால்' என்று குறிப்பிடும் இடங்களில் எல்லாம் இவ்வாறு நீண்டதோர் ஆராய்ச்சி யுரையைச் சிறப்பாகக்காணலாம்; (ஒப்பு): சுந்தர. 509; 632 காண்க. 'மானென வந்தவன் வரவை மானுமிவ் வேனையன் வரவும்' என்று சாம்பவன் கூறியதை மறுத்து, 'இவன் வரவு நல்வரவே' என்ருன் அநுமன். வேதநூல் எனத்தகைய; 'விராவரும் புவிக் கெலாம் வேதமேயன இராமன்' (அயோத்தி. மந்தரை. 47); 'அலை யாழி யெனவளர்ந்தார் மறைநான்கு மனையார்கள்' (பால. குல முறை. 23); 'நான்மறையின் கனி' (ஆரணிய. 97); 'சுருதி நாயகன்' (சுந்தர. 338, 632, 1107); 'மறைகளுக் கிறுதியாவான' (சுந்தர. 1); 'சுருதியாளு நாயகன்' (யுத்த. முதற்போர். 229);

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'வேதத் தோட்டியின் தொடக்கி னிற்கும் துணைக்கைமால் யானை யன்னான்' (யுத்த. நாகபாசப். 242). காதல் நான்முகன் - கலைக ளனைத்தையும் அளந்து முடிவு காணவேண்டும் என்னும் ஆசை யுடைய பிரமன் எனினுமாம். கலையனைத்தும் கதிரோன் முன் சென் றோதினான்; 'பகலோன்முன் தேர்மு னடந்தே யாரிய நூலுந் தெரிவுற்றீர்' (கிட்கிந்தா. 991); 'நடந்து நின்றவ னருங் கதிர் முன்பு, தொடர்ந்தவன்' (இராவணன். வானரத். 25). 'உலகை உய்யக் கொண்டான்'; 'மும்மையா முலகந்தந்த முதல்வற்கு முதல் வன் தூதாய், செம்மையா லுயிர் தந்து' இராமபிரானுக்குப் பிராட்டி யின் இருப்பை யறிவித்தவனாகலின், இங்ஙனம் கூறினர் ஆசிரியர் என்க. மற்றும், கலையனைத்தும் காதலால் ஓதினான் என அநும னுக்கு ஏற்றிக் கூறினுமாம்.

பி - ம்.' 1. என்றுணர்ந்தேன்; அடியேனுன்றன்.

2. திருமனத்தின்; என்று மீட்டான்.

3. அளப்பரிய.

4. பகைகடந் துய்யச் செய்தான்; கடந்து. 105

## வேறு

## இராமபிரான் தன் துணிவு கூறல்

409. மாருதி வினய வார்த்தை செவிமடுத் தமிழ்தின் மாந்திப்
பேரறி வாள நன்று நன்றெனப் பிறரை நோக்கிச்
சீரிது மேலிம் மாற்றம் தெளிவுறத் தேர்மி னென்னு
ஆரிய னுரைப்ப தானு னனைவரு மதனைக் கேட்டார்.

'ஆரியன் - மேன்மைதங்கிய இராமபிரான், மாருதி வினய வார்த்தை - அநுமனுடைய பணிவுடன் இயைந்த சொற்களை, செவி மடுத்து - கேட்டு, அமிழ்தின் மாந்தி - அமிழ்தம்போன்று (அதனைப்) பருகி (உட்கொண்டு), 'பேர் அறிவாள நன்று நன்று என - மிக்க அறிவுள்ளவனே நல்லது நல்லது' என்று அறனை புகழ்ந்து, பிறரை நோக்கி - மற்றும் சுக்கிரீவன் முதலிய ஏனை யோரைப் பார்த்து, சீரிது - (இவ்வநுமன் கூறியது) மிகவும் பெருமை வாய்ந்தது; மேல் இ மாற்றம் - இனிமேல் (யான் பகரும்) இந்த வார்த்தையை, தெளிவு உற, தேர்மின் - இச்சொற்களை மனத் தெளிவுடன் நீங்கள் ஆலோசனை செய்யுங்கள்'; என்னு - என்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கூறி, உரைப்பதானன் - தன் கருத்தைச் சொல்வதானன், அனைவரும் அதனை கேட்டார் - எல்லோரும் அதனைக் கேட்கலானார்கள்.

இனிவரும் 44 செய்யுட்களில் இராமபிரானின் கருத்துக் கூறப்படுகின்றது. வினயம் - பணிவு; 'வினயத்தொடு குறுக' (தேவா. 908 : 8); வினைய வார்த்தை என்றுகொண்டு தந்திரமான சொல் எனினுமாம். நயம் - நீதியுமாம். வார்த்தையை மாந்துதல் - 'உண்டற்குரிய வல்லாப் பொருளை யுண்டதுபோலக் கூறலும் மரபே' என்பதனாற் காண்க. மாந்துதல் - பருகுதல்; 'அஞ்சொற்கள் கிள்ளைக்கெல்லாம் அருளினள் அழகை மாந்தி' (பால. கோலங். 19). தக்கார்களைக் கேட்டே ஓர் காரியம் தொடங்குவது அரசியல்முறையாதலின், பலருடைய கருத்துக்களையும் வினவினன் என்க. 'தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க், கரும்பொருள் யாதொன்று மில்' (குறள். 462). பேரறிவாளன் நன்று என்ற பாடம் கொண்டு, பேரறிவாளன் இராமன் என்றலும் ஒன்றும். அப்பொழுது பேரறிவாளனை ஆரியன் என்க.

பி - ம். 1. வினைய வார்த்தை, இனிய வார்த்தை, அமுத வார்த்தை; மடுத்தினிது.

2. பேரறிவாள என்று.

3. மேலிவ்வார்த்தை, மேயவார்த்தை; தெளிவுறத் தெளிமின் என்ன.

410. கருத்துற நோக்கிப் போந்த காலமு நன்று காதல்
அருத்தியு மரசின் மேற்றே யறிவினுக் கவதி யில்லை
பெருத்துயர் தவத்தி னனும் பிழைப்பில னென்னும் [பெற்றி
திருத்திய தாகு மன்றே நம்வயிற் சேர்ந்த செய்கை.

'கருத்துற நோக்கி - (விடணன்) தன் மனத்தால் நன்கு ஆராய்ந்து, போந்த காலமும் நன்று - இங்கு வந்துள்ள காலமும் நல்லதாகியுள்ளது, காதல் அருத்தியும் அரசின்மேற்றே - இவனது மனத்தூன்றிய ஆசையும் இலங்கை யரசின் மேலதாகும், அறிவினுக்கு அவதி இல்லை - (இவனுடைய) ஆராய்ச்சி அறிவிற்கு ஓர் எல்லை இல்லை; நம்வயின் சேர்ந்த செய்கை-(இவன்) நம்மிடம் வந்து கூடிய இந்தச் செயலானது, பெருத்து உயர் தவத்தினனும்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பிழைப்பு இலன் என்னும் பெற்றி - மிகுதியான உயர்ந்த தவம் புரிந்தவனான இவ்வீடணன் சிறிதும் தவறில்லாதவன் என்னும் தன்மையை, திருத்தியது ஆகும அன்றே - சிறந்த முறையில் விளக்கும் அன்றோ? அன்றோ - அசை.

வீடணன் கருத்துற நோக்கியது. 'இப்படலம் 13-ஆம் செய்யுளிற் காண்க. தன் தமையனை வழிப்படுத்த முடியாத நிலையில், அறவடிவான இராமபிரானையே சரண் புகுவோம் என்று எண்ணி வந்த காலம், 'பாரிநாயகன் புகலவன் கழலடைந்துய்யப் போந்தனன்' 45); 'தாட்சியில் பொருடரு தருமமூர்த்தியைக் காட்சியே இனிக் கடன் (19) என்பன காண்க. 'பகையுற வருத லும் துறந்த பண்பிது' (63); 'போர்க் குறவன்றியே புகுந்தபோ திவன் ஆர்க்குறவாகுவன்' (66); 'மானென வந்தவன் வரவை மானுமிவ் வேனையன் வரவும்' (77); 'காலமே நோக்கினும் (84) என்ற செய்யுட் கருத்துக்கள் இங்கு மறுக்கப்பட்டமை காணத் தகும்; குறள் 483, 484: 'அருத்தியும் அரசின்மேற்றே' மேலர செய்துவான் விரும்பி மேயினன்' என்றது காண்க. 'ராஜ்ய காங்க்ஷீ ராக்ஷஸ: என்பது முதனூல்' மற்றும் பகைப் புலத்தோனான இவன் நமக்குக் கிடைத்திருப்பதால், பகைவரு டைய சூழ்ச்சிகளையும், பலா பலங்களையும் நாம் அறிதற்கு ஏது வாகும் என்ற க்ருத்துத் தோன்ற 'போந்த காலமும் நன்று என்றான் எனினுமாம். இப்படலம் 95-வது செய்யுளும் அதன் உரையும் காண்க. காதல் அருத்தி ஒரு பொருட் பன் மொழிகள். அறிவினுக் கவதியில்லை; 'இந்த விபீஷணாழ்வானுக்குப் 'பலம் இராம ப்ராப்தி' என்று பிள்ளை லோகாசாரியர் எழுதுவர். 'பெருந் துயர் தவத்தினான்' இப்படலம் 22, 45கவிகளைக் காண்க.

பி - ம். 1. போந்தார்; காலத்.

2. இருத்தியும் அரசு; மேலே, வேறே.

3. தவத்தினுலும்; அரசினுலும்; பெருந்துறை தவத்தினுலும்; பிழைப் பிலது.

4. தெரித்தன மாகு மன்றோ; தெரித்தனன். 107

411. மற்றினி யுரைப்ப தென்னை
மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி யன்ன
தன்றெனிற் பிறிதோன் றுனும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வெற்றியே பெறுக தோற்க
வீகவீ யாது வாழ்க
பற்றுத லன்றி யுண்டோ
புகலெமைப் பகர்கின் றானை.

'மற்று இனி உரைப்பது என்னை - வேறாக இனிக் கூற வேண்டுவது என்ன உள்ளது? மாருதி வடித்து சொன்ன பெற்றியே பெற்றி - அநுமான் வடிகட்டிக் கூறிய வகையே (நாம் மேற்கொள்ளத் தக்க) வகையாகும்; அன்னது அன்று எனில் - அவன் சொன்னது ஏற்கக் கூடிய தன்று என்று நீங்கள் கருதுவீராகில், பிறிது ஒன்றானும் - வேறு எந்த வகையினிலேனும், (நாம்) வெற்றியே பெறுக - வெற்றி பெற்றாலும் சரி, தோற்க - தோல்வியுற்றாலும் சரி, வீக - இறந்துபடினும் சரி, வீயாது வாழ்க - இறவாமல் இருப்பினும் சரி; புகல் எமை பகர்கின்றானை - எம்மை அடைக்கலமாக விரும்பிச் சொல்கின்ற இந்த வீடணனை, பற்றுதல் அன்றி உண்டோ - ஏற்றுக் கொள்ளுதலன்றி (பிறிதொரு செயல்) உளதோ? (இல்லை).

அநுமன் கூறியதை முற்றும் அங்கீகரித்துத் தன் முடிவான துணிவை இராமபிரான் கூறுகின்றான். சரணளிக்கப்பட்டவர்களாலேயே இடையூறு விளைவதாயினும் அஃது ஓர் பொருட்டன்று; புகலளிப்பதே கடன் என்று கூறிப் பின் பல கவிகளில் அச் செயலின் பெருமையை இராமபிரான் விளக்குதல் காணலாம். இங்கு, யதிவாராவண ஸ்வயம்' என்ற முதனூல் வாக்கியம் அறியத்தக்கது.

பி - ம். 1. மற்றொரு பயனுமில்லை; உரைப்ப தென்னோ, நில்லை.
2. யென்ன தன்றியே; வெற்றியே பெருக.
3. வீய்க.
4. பற்றுவது; அடைக்கலம் பகர்கின்றானை. 108

412. இன்றுவந் தானென் றுண்டோ
வெந்தையை யாயை முன்னைக்
கொன்றுவந் தானென் றுண்டோ
புகலது கூறு கின்றான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


துன்றிவந் தன்பு பேணுந்
துணைவனு மவனே பின்னைப்
பொன்றுமென் றுலு நம்பாற்
புகழன்றிப் பிறிதுண் டாமோ.

'புகலது கூறுகின்றான்-' நான் உங்கள் அடைக்கலம்' என்று சொல்பவன், இன்று வந்தான் என்று உண்டோ - இன்றைக்குத் தான் வந்தவன் என்று விலக்கி விடுவதற்கு இடம் உண்டோ? எந்தையை யாயை முன்னை கொன்று வந்தான் என்று உண்டோ - என் தந்தையையும் தாயையும் அண்ணனையும் கொலை புரிந்து விட்டு வந்து சரணம் புக்கான் என்று கூறித்தள்ளத்தான் இடம் உண்டோ? துன்றி வந்து அன்பு பேணும் துணைவனும் அவனே - நம்மை நெருங்கி வந்தவனாகக் கருதி அன்பு பாராட்டுவதற்குத் தக்க நண்பனும் அவனே; பின்னை - இதன் பின்னை, பொன்றும் என்றாலும் - அவனால் நாம் இறத்தல் கூடும் என்ற போதும், நம்பால் - அவனைப் புகலாக ஏற்ற நம்மிடத்து, புகழ் அன்றி பிறிது உண்டாமோ - புகழே அல்லாமல், அதற்கு மாறான பழி நமக்குச் சேருமோ? (பழி அவனையே தான் சாரும்). ஓ - எதிர்மறை.

சரண் புக்கவன் பல நாட் பழக்கமில்லாதவன் என்றோ, தீய செயல் புரிபவன் என்றோ சங்கை கொள்ளுதல் முறையன்று, புகலளிக்கப்பெற்ற நமக்கோ அவனால் இறுதி நேருமாகில், அந்த இறுதி நமக்குப் புகழையும், வஞ்சித்தவனுக்குப் பழியையும் விளைக்கும். ஆகவே இவனை ஏற்பதே நயம் என்றான் இராமபிரான். எந்தையை யாயை முன்னைக் கொன்றவன்; பெற்றோர்களைக் கொல்லுதல் மகாபாதகச் செயல்; அத்தகைய செயலைச் செய்தவனும் வந்து சரண்புக்கால் அவனுக்கு அபயம் அளிப்பதே முறை என்று புகன்றான்; (ஒப்பு): 'என்னனும் வேண்டினும் நன்றுமற் றென்று விழுமியோர், காண்டொறும் செய்வர் சிறப்பு' (நாலடி. 159). இனி, எந்தை என்பதை இராமபிரானுக்குத் தந்தைமுறையாகக் கருதப்பட்ட சடாயுவைக் கொன்றவனான இராவணனே வந்து சரண்புகினும் அவனுக்கும் அபயமளிப்பதே கடன் என்றான் எனினுமாம். 'யதிவா ராவணஸ்வயம்' என்ற முதனூல் இங்கே காணத்தகும். என்று - என்பது என்னும் பொருளது. இங்கு,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொன்று மென்றாலும்; அடுத்த செய்யுளில் இதன் விளக்கம்போல் இறுதி அடிகள் அமைவன காண்க.

பி. ம். 1. முன்பு, முன்பே, முன்னங், முந்நிக்.

2. கூறும்போது ; அடைக்கலங் ; புகுகின்றனை.

3. தொன்றுவந் தன்பு.

4. பின்றும் ; பிறிது முண்டோ, பிழையு முண்டோ, இறுதி யுண்டோ.

413. பிறந்தநாட் டொடங்கி யாரும்
துலைபுக்க பெரியோன் பெற்றி
மறந்தநா ளுண்டோ வென்னைச்
சரணென்று வாழ்கின் றானைத்
துறந்தநாட் கின்று வந்து
துன்னினன் சூழ்ச்சி யாலே
இறந்தநா ளன்றே யென்று
மிருந்தநா ளாவ தென்றான்.

'துலை புக்க பெரியோன் பெற்றி - ஒரு புறாவிற்காகத் தராசுத் தட்டில் ஏறித் தன் உயிரைவிடச் சித்தமாயிருந்த சிபிச்சக்கரவர்த்தியின் உயர்ந்த (தன்னலமறுக்கும்) தன்மையை, யாரும் - எவரேனும், பிறந்த நாள் தொடங்கி - நினைவு தோன்றிய நாள் முதலாக, மறந்த நாள் உண்டோ - நினையாதொழிந்த நாள உள்ளதா ? (அவ்வாறாகலின்), என்னை சரண் என்று வாழ்கின்றானை - என்பாற் சரணடைந்து நல்வாழ்வுபெற விரும்புபவனை, துறந்த நாட்கு - (என் உயிர்க்குத் தீங்குநேருமோ என அஞ்சிக் கைவிடுவேனாகில்) அங்ஙனம் கைவிடுகின்ற நாளைக்காட்டிலும், இன்று வந்து துன்னினன் சூழ்ச்சியாலே - இன்று வந்து நம்மை யடைந்த இந்த வீடணனது வஞ்சனையாலே (எனக்கு மரணம் நேர்ந்து), இறந்த நாள் அன்றே - அவ்வாறு மரணம்கிட்டிய நாளல்லவோ, என்றும் இருந்த நாள் ஆவது என்றான் - என்றென்றும் அழியாமல் புகழ் உடம்புடன் விளங்கும் நாள் ஆகும்' என மொழிந்தான்.

தன் குல முன்னோருள் ஒருவனான சிபி மன்னன் ஓர் புறவின் பொருட்டுத் தன் தசையை யறுத்துவைத்துத் தானும் துலைபுக்க செய்தியைக் கூறித் தானும் தன் உயிரைப் பொருட்படுத்தாது விடணற்கு அபயம் அளித்தல் வேண்டும் என்று கூறுகின்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



துலை - தராசு. சிபி துலை புக்கது : பால. திருவவ. 65, குலமுறை. 7 ; யுத்த. கும்ப. 355 ; புறநா. 37, 39, 43, 46 ; சிலப். வாழ்த்து. 17, கட்டுரை. 58, வழக்குரை. 52, நீர்ப்படை. 166—168 ; குறள். 72 பரிமேலழகர் உரை ; கலிங். இராசபாரம். 93 ; இராசராசன் உலா. 5, 6 ; குலோத்துங்கன் உலா. 17 ; விக்கிரமன் உலா. 10—11 என்பன கொண்டு உணர்க. இறந்த நாளன்றோ இருந்தநாள் : 'நத்தம் போற் கேடும் உளதாகும் சாக்காடும், வித்தகர்க் கல்லா லரிது' (குறள். 235); மற்றும் பால. வேள்வி. 50, புறநா. 175; பதிற். 14; திரிகடு. 16 ; கார்நாற்பது. 8 ; பெரும்பாண். 466-7 முதலியன காண்க. 'ஒப் புரவி னால்வரும் கேடெனி னஃதொருவன் விற்றுக்கோட் டக்க துடைத்து' (குறள். 220). மூவேந்தரால் வஞ்சனையாற் கொல்லப் பட்ட பெருங்கொடைவள்ளலான பாரிவேள் வரலாறும் இங்கே கருதத்தகும்.

பி - ம். 2. எம்மைச்.

3. துறந்தநாட் கன்றுவந்து, நாளன்றுவந்து, துறந்தநா ளகன்ற நாளாம், துறந்தநா ளிறந்த நாளாம்.

4. இறந்தநா ளன்றே ; வென்றி யிருந்த ; நாளாய தென்பர், என்பார்.

414. இடைந்தவர்க் கபயம் யாமென்
றிரந்தவர்க் கெறிநீர் வேலை
கடைந்தவர்க் காகி யால
முண்டவற் கண்டி லீரோ
உடைந்தவர்க் குதவா னாயி
னுள்ளதொன் றீயா னாயின்
அடைந்தவர்க் கருளா னாயி
னறமென்னா மாண்மை யென்னும்.

'இடைந்தவர்க்கு - (கடலில் ஆலகால விடம் எழ அதைக் கண்டு) பின்னிடைந்தவரும் ; 'யாம் அபயம் என்று இரந்த வர்க்கு - நாங்கள் அச்சம் தீர்த்துக் காக்கப்பெறும் பொருளா வோம்', என்று சொல்லிக் கெஞ்சியவருமான, எறிநீர் வேலை கடைந்தவர்க்கு ஆகி - அலைகளை வீசுகின்ற நீர் கொண்ட கடலைக் கடைந்த தேவாசுரர்களைக் காக்கும் வண்ணம், ஆலம் உண்டவன் கண்டிலீரோ - அக்கடலில் எழுந்த ஆலகால விடத்தை உட் கொண்ட சிவபெருமானைப் பற்றி நீர் கேட்டறிந்த தில்லையா?

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உடைந்தவர்க்கு உதவான் ஆயின் - (ஒருவன்) மனமும் வலியும் அழிந்தவர்க்கு உதவான் ஆனாலும், உள்ளது ஒன்று ஈயான் ஆயின் - தன்னிடம் உள்ள பொருளை வேண்டுவோர்க்குக் கொடாதவன் ஆனாலும், அடைந்தவர்க்கு - தன்னைச் சரண் அடைந்தவர்க்கு, அருளான் ஆயின் - தன்னைச் சரண் அடைந்தவர்க்கு அருள் செய்து ஏற்காதவன ஆனாலும், அறம் என்னும் ஆண்மை என்னும் - அத்தகையவனுடைய தருமம் யாதாகும்? அவனது வீரம் தான் என்ன பயன்படக்கூடும்?

புகல் அடைந்தோரைக் காப்பது முறையென்பதற்கு மேலும் சில எடுத்துக் காட்டுகள் கூறுகின்றான். அடைந்தவர்க் கருளுதல் போன்று தனிச்சிறப்பு வாய்ந்தன வாகலின், உடைந்தவர்க்குதவுதலையும் உள்ள தொன்றீதலையும் உடன் கூட்டிக் கூறினன். உடைந்தவர்க்குதவுதலும், அடைந்தவர்க் கருளுதலும் ஆண்மையின் பாற்படும். உள்ள தொன்றீதல் அறத்தின் பாலதாம் என்க. நீர் வேலை என்ற இடத்து நீர் என்பது பாலுக் கிலக்கணையாம். கடைந்தது நீர் வேலை யென்ற வரலாறும் உண்டு. சிவபிரான் விடம் உண்டது. ஆரணிய. 613 ; 688 ; 694. சுந்தர. 78, 181, 317, 1180. 'வேலை நஞ்சுண்டு ஊனமொன்றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே' (தேவா. 1199 ; 8; ) இந்நூற்கண் சிவபிரானுடைய பல அரிய செயல்களும் குறிக்கப்படுதல் ஆங்காங்குக் காண்க. உண்டவற் கண்டிலீரோ: காணுதல், இங்கே செவிப் புலனால் உணர்தல் அல்லது நினைத்துணர்தல் என்க. உடைந் தவர்க்குதவானாயின் உள்ள தொன்றீயானாயின் கலித். பாலை. 9 : 1 ; நாலடி. 93. 170, 202 ; குறள். 524-527, 837 ; பழ. 53, 223, 289, 358. அறநெறி. 76. 'செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்' வெற்றி வேற்கை.

பி - ம். 1. இத்திரை யெழு நீர் வேலை.
2. அடைந்தவர்க் காதி ; உண்டவர்.
3. உடைந்தவர்க் கிரங்கானுகில்.
4. அரசென்னும்.

111

415. பேடையைப் பிடித்துத் தன்னைப்
பிடிக்கவந் தடைந்த பேதை
வேடனுக் குதவிசெய் வான்
விறகிடை வெந்தீ மூட்டிப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பாடுறு பசியை நோக்கித்
தன்னுடல் கொடுத்த பைம்புள்
வீடுபெற் றுயர்ந்த வார்த்தை
வேதத்தின் விழுமி தன்றே.

'பேடையை பிடித்து - தனது பெட்டைப் புள்ளைப் பற்றிக் கொண்டு, தன்னை பிடிக்கவந்து அடைந்த - தன்னைக் கைப்படுக்க வந்து சேர்ந்த, பேதை வேடனுக்கு - அறிவற்ற ஓர் வேடனுக்கு, உதவி செய்வான் - உபகாரம் செய்யும் பொருட்டு, விறகிடை வெம் தீமூட்டி - விறகில் வெம்மையான நெருப்பை உண்டு பண்ணி (குளிர் காய்தற்குதவி) பாடு உறு பசியை நோக்கி - அந்த வேடனது வருந்துகின்ற பசியைப் பார்த்து (அதனை ஆற்றுமாறு) தன் உடல் கொடுத்த பைம்புள் - (அந்த எரியிலேயே வீழ்ந்து) தனது உயிரைப் பரோபகாரமாகத் தந்த பசிய பறவையானது, வீடு பெற்று உயர்ந்த வார்த்தை - மேலான கதியை அடைந்து சிறப்பு எய்திய வரலாறு,' வேதத்தின் விழுமிது அன்றோ - மறைகளில் கூறிய பொருள்கள் போலவே சிறந்து விளங்குவ தொன்று அல்லவா? ஓ - வினா.

இக்கவியிற் கூறப்பட்ட செய்தி 'கபோதாபாக்யானம் என்று முதனூலிற் கூறப்பட்டுள்ளது. ஒரு வேடனாற் பிடிபட்ட ஓர் பெண் புறவு மரத்திலிருந்த தன் ஆண் புறவினை நோக்கித் தான் மறவன் கூட்டிற் சிக்கியது ஊழின் பயன் என்றும், அதற்காக வருந்துதல் வீணென்றும் கூறிப் பசியால் வருந்தும் வேடனுக்கு உதவவேண்டும் என்று பகர, அந்த ஆண் புறு ஒரு சுள்ளியால் தீ மூட்டி அவன் குளிரைப் போக்கியது என்பது வரலாறு; இது பாரதத்திலும் காணப்படுவது. ஒன்றுக்கும் பற்றாத அந்தப் பறவைக்கும் பிறர்க்கு உதவ வேண்டும் என்ற உணர்ச்சியிருந்த தெனில், பகுத்தறிவு படைத்த தான் தன்னுடைய உயிரைக் கொடுத்தும் உதவி புரிதல் நீதியன்றோ எனக் கேட்டான் இராம பிரான் என்க. வேதத்தின் விழுமிதன்றோ ச்ரூயதேஹி' என்ற ஸ்ரீவால்மீகமும், ஸ்மர்யதே என்னாது ச்ரூயதே என்றது, வேதம் போலக் கேட்டுப் போருவதொன்று' என்று அதற்குப் பெரியவாச்சான் பிள்ளை - அருளிய வியாக்யானமும் இங்கே அறியத்தக்கன, சுருதி- வேதம்; கேட்கப்படுவது என்று பொருள்படும். பேதை - பிறவுயிர்களைப்பிடித்து வதைப்பதன்றிப் பிறிதொன்றும் கல்லாதவன். செய்வான் - வானீற்று வினையெச்சம். மிகுதியான குளிரைப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


போக்கச் சிறுதீ அமையாதாகலின் 'வெந்தீ' எனப்பட்டது. மற்றும் குற்றமற்ற புறவினைக் கொன்ற தீயென்பதுபற்றி அவ்வாறு கூறியதுமாம். தீ மூட்டி அவன் பசியையறிந்து தன் உயிரையே அளித்த புறவு, சாமானியப் பறவையெனல் கூடுமா? 'கோடுபற்றிய கொற்றவற் கூயதோர் வீடு பெற்ற விலங்கும் விலங்கரோ' என்றது காண்க. பாடுறு - படுத்தல் அல்லது வருத்துதலைச் செய்கின்ற; பாடுறு - அந்த வேடன் பக்கத்தில் பொருந்திய பசி யெனினும் ஆம்; பாடு - பக்கம். நோக்கி - அந்த வேடனுடைய பசியாலெழுந்த மெய்ப்பாடுகளாகிய தளர்ச்சி, உறக்கமின்மை, ஏக்கம் முதலியவற்றைக் கண்ணுற்று; மற்றும் கடுங்குளிரால் அவன் வருந்துவதை நோக்கியும் ஆம். சீதமுற்ருேனவிநயம்;—'ஓதிய பருவர லுள்ளமோ டுழத்தலும், ஈரமாகிய போர்வை யுறுத்தலும், ஆர வெயிலுழந் தழலும் வேண்டலும், உரசியு முரன்று முயிர்த்து முரைத்தலும், தக்கன பிறவுஞ் சாற்றினர் புலவர் (சிலப். 3.) விடுத்த பைம்புள் என்றது கொடுத்த என்றது, உயிர்க் கொடை கொடை கட்குள் சிறந்த தொன்ருகலின்; பாடுறு பசி என்றும் பைம்புள் என்றும் கூறினர். அவனுடைய கோரப் பசி எங்கே புறவின் சிறு ஊன் தொகுதி எங்கே? யானைப்பசிக்கு ஒரு சோளப் பொறி என்றது போலும் வீடு பெற்ற எனச்சொல்லியமையாது உயர்ந்த என்றது பல் வேறு வகையாக வீடெய்தலினும் பிறர் பொருட்டுயிர் விடுவதால் எய்துவதன் சிறப்பு நோக்கி என்க.

பி - ம். 1. படுத்து; பிடிக்கிய வந்த.
2. வேடனுக் கபய நல்கி, உதவி செய்து.
3. நீக்கி; துறந்த பைம்புள்.
4. விழுமி தென்ருன். 112

இக் கவியும் இதனை அடுத்துள்ள 'போதகம்' என்ற கவியும், 'சீதையை' என்ற கவியின் பின்னர்ச் சில பிரதிகளிற் காணப்படுகின்றன. இச்செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

416. போதக மொன்று கன்றி
யிடங்கர்மாப் பொருத போரின்
ஆதியம் பரமே யானுன்
னபயமென் றழைத்த வந்நாள்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வேதமு முடிவு காணு
மெய்ப்பொருள் வெளிவந் தெய்தி
மாதுயர் துடைத்த வார்த்தை
மறப்பரோ மறப்பி லாதார்.

'இடங்கர் மா பொருத போரின் - முதலையாகிய விலங்கு செய்த சண்டையில், போதகம் ஒன்று கன்றி - கஜேந்திரன் மனமழுங்கி (வலி குறைந்து), ஆதி அம் பரமே - அழகிய ஆதி மூலமே', 'யான் உன் அபயம் என்று அழைத்த அ நாள் - யான் உன் அடைக்கலப்பொருள்' என்று கூப்பிட்ட அந்த நாளிலே, வேதமும் முடிவு காணு - மறைகளாலும் வரையறுத்து அறிய முடியாத, மெய் பொருள் - உண்மைப் பரம்பொருளான திருமால், வெளிவந்து எய்தி - கண்முன்பு நேரில் எழுந்தருளி, மா துயர் துடைத்த வார்த்தை - அந்த விலங்கின் பெருந்துன்பத்தைப் போக்கிய நல்லுரையை, மறப்பு இலாதார் மறப்பரோ - மறப்பு என்பது இல்லாத அறிஞர் மறந்துவிடுவார்களோ?

பொய்கை முதலை வாய்ப்பட்டு 'ஆதிமூலமே' என்றழைத் தருளிய கஜேந்திரனுக்கு அருள்புரிந்து அதனைக் காத்து வீடளித்த வரலாறு மிகவும் பிரசித்தமானது. 'கடுத்தகராங் கதுவநிமிர் கையெடுத்து மெய்கலங்கி, உடுத்ததிசை யனைத்தினுஞ் சென் றுலிகொள்ள வுறுதுயரால், அடுத்தபெருந் தனிமூலத் தரும்பரமே பரமேயென், றெடுத்தொருவா ரணமழைப்ப நீயோ வந்தே னென்றாய்' (ஆரணிய. 49); 'மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான் வேட்கையி னோடுசென் றிழிந்த, கானமர் வேழம் கையெடுத்தலறக் கராவதன் காலினைக்கதுவ, ஆனையின் துயரந் தீரப்புள் ளூர்ந்து, சென்றுநின் றாழி தொட்டானை' (பெரியதிரு. 2·3:9); மற்றும், பெரியதிரு. 2·5:1; 2:10·10; 5:1·2; 5:8·3. 'ஆதிமூலமே' என்ற சொற்கேட்ட வளவில் பொய் கையை அடைந்து யானைக் கருளினன் திருமால்; அங்ஙன மாகவும், நேரில் மிக எளியனாய் வந்து புகல்புகுந்த இந்த வீடணனுக்கு அருள்புரியாதிருத்தல் முறையன்று என்றான் என்க. இங்கு திருவாய். 6-8-5ன் கீழ் 'கிம்புநர்மத்விதோஜந்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



என்ற ச்லோகத்தின்கீழ் உள்ள ஈட்டுப்பேருரை நோக்கத் தக்கது.

பீ - ம். 1. போரில்.
2. ஆதியம்பரனே.
3. வேதமும் முடியும்.
4. பிறப்பில் லாதார். 113

417. மன்னுயி ரெல்லாந் தானே
வருவித்து வளர்க்கு மாயன்
தன்னன வுலக மெல்லாந்
தருமமு மெவையுந் தானே
என்னினு மடைந்தோர் தம்மை
யேமுற வினிதி னோம்பிப்
பின்னும்வீ டளிக்கு மென்றாற்
பிறிதொரு சான்று முண்டோ.

'மன் உயிர் எல்லாம் - உலகில் நிலைபெறுன உயிர்களனைத்தையும், தானே வருவித்து வளர்க்கும் மாயன் - தானாகவே படைத்து (அவற்றை)ப் பாதுகாக்கின்ற திருமால், உலகம் எல்லாம் தன்னன - உலகனைத்தும் தன்னுடையனவே (என்றும்), தருமமும் எவையும் தானே என்னினும் - அவ்வுலகத்தில் வழங்குகின்ற அறங்களும், அவற்றால் விளையும் பயன்களும் தானே என்றாலும், அடைந்தோர் தம்மை - (தன்னைப்) புகலடைந்தவர்களை, ஏமுற இனிதின் ஓம்பி - சுகம் உறும்படி நன்கு புரந்து, பின்னும் - அதற்கு மேலாக, வீடு அளிக்கும் என்றால் - முத்தியையும் தந்து அருள்வன் எனில், பிறிது ஒரு சான்றும் உண்டோ - (புகல் புக்கவரைப் பாதுகாப்பது அவசியம் என்பதை மெய்யாக்க) வேறு பிரமாணமும் தேவையோ? (வேண்டா). ஓகாரம், வினா.

திருமாலின் முத்தொழில்களில் படைப்பும் காப்பும் கூறினர். வருவித்து என்பது உயிர்கட்குரிய தனுகரண புவனபோகங்களைப் படைத்து என்று பொருள்படும். உயிர்கள் வினை துய்த்தற்கு இவற்றை இறைவன் அளித்தலின், 'தானே' எனப்பட்டது. (ஒப்பு); 'கருமமுங் கருமத்தின் பயனும் அப்பயன், தருமமுந் தலைவனுந் தானு மானவன்' (யுத்த. 193); 'யார்க்கும் சான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



றென நின்ற வீரன் தான்வந்து வீடுதந்தான்' (கிட்கிந்தா. 375). திருமாலே முத்தொழிலும் செய்வன் என்று வழங்கும் கொள்கை பற்றி இவ்வாறு கூறினர். சிவபரத்துவம் கூறும் சைவசித்தாந்திகள் சிவபிரானுக்கே இத் தொழில்களை ஏற்றிக் கூறுவர். எம்பெருமான் விழைந்தது எதுவோ அதுவே தருமம்; அந்தப் பயனைத் தருபவனும் அவனே; ஆகலின், 'தருமமும் எவையும் தானே' எனப்பட்டது. 'சர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்றது பற்றி, 'எவையும் தானே' எனப்பட்டது எனினுமாம். ஏம்-இன்பம்; ஆரணிய. 241; சுந்தர. 298 காண்க.

பி - ம். 1. அறிவித்து.

2. தன்னையே யுலகம்; தன்னது; தருமமே லவையும்.

4. என்னினிப் பிறிதுபேசில். 114

418. நஞ்சினை மிடற்று வைத்த
நகைமழு வாள னாளும்
தஞ்சென முன்னந் தானே
தாதைபாற் கொடுத்துச் சாதல்
அஞ்சினே னபய மென்ற
வந்தணர்க் காகி யந்நாள்
வெஞ்சினக் கூற்றை மாற்று
மேன்மையின் மேன்மை யுண்டோ.

'நஞ்சினை மிடற்று வைத்த-விடத்தைத் தன் கண்டத்தில் நிறுத்திய, நகை மழுவாளன்-ஒளிமிக்க கோடாலிப் படையை யுடைய சிவபெருமான், நாளும் தஞ்சு என-தன்னை வந்தடுத்தவனை மார்க்கண்டனுடைய வாழ்நாள் எளிதாகியது (குறைந்தது) என்று சொல்லி; முன்னம்-முன்னர், தாதைபால்-தந்தையிடத்து, கொடுத்து-மார்க்கண்டேயன் என்ற புதல்வனை அருளி (பின்னர்), சாதல் அஞ்சினேன்-இறத்தற்குப் பயந்தேன், அபயம் என்ற அந்தணர்க்கு ஆகி-அபயம் என்று மொழிந்து அடைக்கலம் புகுந்த மார்க்கண்டேயன் என்னும் அந்தணச் சிறுவற்காக, அ நாள்-அந்தக் காலத்திலே, தானே-தானே, வெம் சின கூற்றை மாற்றும்-கொடும் சினம்கொண்ட யமனை உதைத்து வீழ்த்த, மேன்மையின் மேன்மை உண்டோ-மேம்பட்ட செயலைக்காட்டிலும் மேன்மையான செயல் இருக்கின்றதா? ஓ-வினா.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சிவபிரான் நஞ்சினை மிடற்றுவைத்தது; ஆரணிய. 613, 688, 694; சுந்தர. 78, 181, 317, 1180. நகை - ஒளி; நக்க. 103, 330, 333, 640, 679; 'வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்' (தேவா. கோளறுபதிகம்.). 'நகைதாழ்பு துயல்வரூஉம்' (திருமுருகு 86); மழுவை எரியீட்டி யென்றும் கூறுவர்; மழு - 'அவனாயுத மழுவாள்' (நக்க. 453). பதினாறு ஆண்டுகளே மார்க்கண்டனுக்கு நிலவுலக வாழ்வென்று அவன் தந்தையிடம் கூறிய சிவபிரானே, பின்னர்த் தன்னிடம் அச்சிறுவன் அடைக்கலம் புக்கபோது தான் அளித்த வரத்தை மீறியே காலனைக் கடிந்து அவனைக் காத்த வரலாறு இங்குக் குறிக்கப்பட்டது. 'அந்தணாளனுன் னடைக்கலம் புகுத வவனைக் காப்பது காரணமாக, வந்த காலன்ற னாருயி ரதனை, வவ்வினாய்க் குன்றன் வண்மைகண்டடியேன்' (தேவா. 175·1); 'மார்க்கண்டற் காக மறலிபட்ட பாட்டை யுன்னிப் பார்க்கி லன்பர்க்குப்பயம் உண்டோ பராபரமே' (தாயு. பராபர.); 'உழைக்கும் பண்டை யுதைநினைந் துட்கியோ, இழைக்கும் கூற்ற மெதிரா திரிவதே' (நக்க. 677). தஞ்சம் என்ற சொல்லின் திரிபாகிய 'தஞ்சு' என்பது சிறிது என்ற பொருள் தந்தது. கூற்றை மாற்றுதல் - யமன் ஆற்றலைத் தொலைத்தல்.

பி - ம். 1. மிடற்றுள்; நாடுப்.
2. கொடுத்த; சார்தல்.
3. அஞ்சினன்; அந்தணர்க்காக.
4. கூற்றைவென்ற, கொன்ற.

115

இதன்பின் சில பிரதிகளில் 'உய்யநிற் கபயமென்றான்' என்ற பாடல் காணப்பெறுகிறது.

419. சரணெனக் கியார்கொ லென்று
சானகி யழுது சாம்ப
அரணுனக் காவென் வஞ்சி
யஞ்சலென் றருளி னெய்தி
முரணுடைக் கொடியோன் கொல்ல
மொய்யமர் முடித்துத் தெய்வ
மரணமென் றுதை பெற்ற
தென்வயின் வழக்கன் றாமோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'சானகி - சீதாதேவி, 'எனக்கு யார் கொல் சரண்-(இராவணன் வஞ்சித்துக் கவர்ந்து சென்ற நாளில்) எனக்கு இந்த விபத்துக் காலத்தில் அடைக்கலம் ஈந்து அருள்பவர் யார்?' என்று - என்று, அழுது சாம்ப - புலம்பியவண்ணம் பொலிவழிந் தொடுங்க, (அக்காலத்து), என் தாதை - எனக்குத் தந்தை முறையான சடாயுவானவர்; (சீதாதேவியைக் கண்ணுற்று), 'வஞ்சி - வஞ்சிக் கொடிபோல்பவளே! அஞ்சல் உனக்கு அரண் ஆவென் என்று அருளின் எய்தி - பயப்படாதே நான் உன்னைக் காத்தருள்வேன்' என்று கூறிக்கொண்டு கருணையுடன் அங்கு வந்து, முரண் உடை கொடியோன் கொல்ல - அறத்தினோடு மாறுபட்ட தீயவன் ஆன இராவணன் தன்னைக் கொல்ல, மொய் அமர் முடித்து - அதனையும் பாராட்டாது (தன்னால் ஆனமட்டும்) வலிய போரைச் செய்து விட்டு; தெய்வ மரணம் பெற்றது என்வயின் வழக்கு அன்றுமோ - தெய்வத் தன்மைவாய்ந்த முடிவினை யடைந்தது யான் முறையாகக் கொள்ளக்கூடிய செயலாகாது ஒழியுமோ? ஓ - வினா.

சானகி, ஜனகன் மகள். தத்திதாந்தப் பதம். சாம்புதல் - பொலிவழிதல்; 'மறந்து சாம்பினான்' (ஆரணிய. 942); சுந்தர. 356, 509. உனக்கு அரண் ஆவன் என மொழி மாற்றுக. வஞ்சி: வஞ்சிக்கொடிபோன்ற பிராட்டிக்கு உவமவாகுபெயர். 'முரணுடைக் கொடியோன் - வலிய வீணைக் கொடியனான இராவணன். தன் உயிரையும் பொருட்படுத்தாது எதிர்த்து இறந்ததுபற்றித் தெய்வமரணம்' எனப்பட்டது. இவ்வாறு வீரப் பான்மையுடன் இறப்பவர்க்கு வீரசுவர்க்கம் கிட்டும் என்பர். என் தாதை என்றது சடாயுவை. இவன் கழுகரசன்; ஆரணிய. 825, 916, 918, 922, 925, 945, 991, 996, 1012, 10 8; சுந்தர. 569; யுத்த. மகுடபங்கப். 34 காண்க. அருணன் புதல்வன்: சம்பாதி பின் பிறந்தவன்; ஆரணிய. 201. என் தாதை என்றது தயரதன் நண்பனும் சோதரனும் போன்றவன் ஆதலின், 'தயரதற் கின்னுயிர்த் துணைவன்' (ஆரணிய. 201); 'தம்பொருட்டாற் பொன்னுலகம் புக்க தாதை, மீண்டனன்வந் தானவனைக் கண்டனரே யொத்த ரைவ் விலங்கற் றோளார்' (ஆரணிய. 202); 'மருவினிய குணத் தவரை யிருசிறகா லுறத்தழுவி மக்காளீரே' (ஆரணிய. 203); 'தாதை கூறலும்' (ஆரணிய. 210); மற்றும் 219, 981; யுத்த. அங்கதன். 5 காண்க. இந்த சடாயுவைப் 'பெரிய உடையார்' என வழங்குவர் வைணவர். 'வல்லை மைந்த' (ஆரணிய. 212); 'பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்' (ஆரணிய.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

219). தெய்வ மரணம் ; ஆரணிய. 925, 932 ; 'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு' (சுந்தர. 566) ; மற்றும் கிட்கிந்தா. 962 ; தேவா. 158 : 2. சடாயு வரலாற்றை ஆரணியகாண்டத்திற் காண்க.

பி - ம். 1. அரனுனக் கியானேவஞ்சி.

3. மொய்யமர் முடித்த தெந்தை, முடித்த வெந்தை.

4. மரணமப் பெரியோன், மரணமாம் பெரியோன் பெற்ற ; வழக் கின்றுமே. 116

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

420. உய்யநிற் கபய மென்று
னுயிரைத்தன் னுயிரி னேம்பாக்
கய்யனு மொருவன் செய்த
வுதவியிற் கருத்தி லோனும்
மய்யற நெறியி னேக்கி
மாமறை நெறியி னின்ற
மெய்யினைப் பொய்யென் றுனு
மீள்கிலா நரகின் வீழ்வார்.

'உய்ய - தான் பிழைத்தற்காக, நிற்கு அபயம் என்றான் உயிரை - (உனக்கு யான் அடைக்கலம் என்றவனுடைய உயிரை, தன் உயிரின் ஓம்பா கய்யனும் - தன் உயிரைப் போல நினைந்து பாதுகாக்க முன் வராத வஞ்சகனும், ஒருவன் செய்த உதவியில் கருத்திலோனும் - பிறர் ஒருவன் புரிந்த உபகாரத்தை நினையாத வனும், மை அற - குற்றம் இல்லையாமாறு, நெறியின் நோக்கி - முறையாக ஆராய்ந்து, மாமறை நெறியின் நின்ற - பெருமை வாய்ந்த வேத மார்க்கத்தில் பொருந்திய, மெய்யினை - உண்மை யான தத்துவப் பொருளை, பொய் என்றுனும் - பொய் யென்று கூறும் நாத்திகனும் (என்ற இவர்கள்) மீள்கிலா நரகின் வீழ்வார் - என்றும் மீளுதலில்லாத நரகத்தில் அழுந்துவர்.

செய்ந்நன்றி கொன்றவனும், பரம்பொருள் ஒன்று இல்லை என்று வாதிக்கும் நாத்திகனும், மன்னுயிரைத் தன்னுயிர் போன்று பாவித்து அதனைப் பாதுகாவாதவன் போன்று, மீளா நரகின் வீழ்வர் என்பது இங்கே குறிக்கப்பட்டது. மீள்கிலா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நரகின் வீழ்வர் - (ஒப்பு): 'அண்ணுத்தல் செய்யா தளறு' (குறள். 255.) என்றது காண்க. இங்குப் புகல் புக்கோரைக் காத்தலே; வற்புறுத்தப்படினும், ஒருங்கே நரகம் புகும் ஒற்றுமை பற்றி ஏனைய இரண்டையும் இயைத்துக் கூறினர். (ஒப்பு): 'உடைந்த வர்க் குதவானுயின், உள்ளதொன் றீயானுயின். அடைந்தவர்க் கருளானுயின் அறமென்னும் ஆண்மை என்னும் 'அட்டுயி ருடலம் தின்று னமைச்சனு யரசு கொன்றுன். குட்ட நோய் நரகம் தம்மிற் குளிப்பவ ரிவர்கள் கண்டாய்' (சிந்தா. 253); கையன் - வஞ்சகன், கற்கா நாட்டுச் சொல், எதுகை நோக்கிக் கய்யன், என வந்தது. உதவியிற் கருத்திலோன் 'எந்நன்றி கொன்றுர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (குறள். 110); 'மாயா வுதவிகொன் றுர்க்கென் றேனு மொழிக்கலா முபாய முண்டோ' (கிட்கிந்தா. 613); 'உதவாம லொருவன் செய்த வுதவிக்குக் கைம் மாருக, மதவானை யனைய மைந்த மற்றுமுண் டாக வற்றே' (கிட்கிந்தா. 617); 'செய்ந்நன்றி, கொல்லன்மின்' (சிலப். இறுதிக்கட்டுரை). உதவியிற் கருத்திலோன் எனப்பட்டது, கருத்திருப்பின் பிரதி யுதவி செய்யுமாறு தூண்டுமாகலின். மறையின் நின்ற மெய்: உண்மையான கடவுட்டத்துவமுமாம், மெய்யினைப் பொய்யென் றுனும்: 'உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத் தலகையா வைக்கப்படும்' (குறள். 850): இக் குறளின் உரையில் 'கடவுளும் மறுபிறப்பும் இருவினைப்பயனும் முதலாக அவர் உளவென்பவற்றை இல்லை என்று மறுப்பவனும் என்றமை காண்க. மை என்பது கருமை, அஞ்ஞானம் அல்லது அவித்தையுமாம். மெய்யினைப் பொய் என்றுனும் என்ற இடத்துத் தொடை முரண் காண்க. மாமறை நெறி - சுத்த சன்மார்க்கம்.

பி - ம். 1. உய்யலுற்று.
2. கருத்திலானும்.
3. மையறு, மையுறு; முறையின்; அருமுறை வழக்கில்; வழங்கு நின்ற.
4. வீழ்வான்.

117

421. சீதையைக் குறித்த தேயோ
தேவரைத் தீமை செய்த
பேதையைக் கொல்வே னென்று
பேணிய விரதப் பெற்றி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வேதிய ரபய மென்றூர்க்
கன்றுநான் விரித்துச் சொன்ன
காதையைக் குறித்து நின்ற
வவ்வுரை கடக்க லாமோ.

'தேவரை தீமை செய்த பேதையை கொல்வேன் என்று - தேவர்கட்குத் திங்கு விளைத்த அறிவிலியாகிய இராவணனைக் கொலை புரிவேன்' என்று, பேணிய விரத பெற்றி - நான் விரும்பி அறைந்த சூளுறவின் தன்மை, சீதையை குறித்ததேயோ - சீதையை (அவன் கவர்ந்து செல்வான், அதனால் அவனைக் கொல்ல வேண்டும்) என்று நினைத்துச் சொன்னதோ? (அன்று); அபயம் என்றூர் வேதியர்க்கு - (நீயே புகல் என்று கூறி), அபயம் வேண்டிய (தண்டகாரணிய வாசிகளான) முனிவர்கட்காக, அன்று நான் விரித்து சொன்ன - அக்காலத்தில் நான் விரிவாகப் பகர்ந்த, காதையை குறித்து நின்ற அ உரை கடக்கலாமோ - வரலாற்றைச் சுட்டிக் காட்டுகின்ற அந்த வார்த்தையை (சரணம் அடைந்த வரைக் காக்க வேண்டும் என்று கூறியதை), கடக்கலாமோ - மீறி நடத்தல் சரியாகுமா?

இராவணனைக் கொல்வதாகத் தான் உரைத்த சூளுறவு சீதாதேவியை மீட்பதற்காக வன்று, தேவர், முனிவர், அந்தணர் கண்டகனான இராவணனைக் கொன்று உலகினை யுய்யச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தாலேயே என்ற அவதார ரகசியமே இங்குக் குறிக்கப்படுவது காண்க. பின்னிரண்டடிகட்கு; 'ஐயிரு தலையினே னனுசராதியாம், மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே உய்திறமில்லை' (பால. திருவவ. 18) என்று தேவர்கள் முறையிட, 'மன்றலங் துளவினுன் வருந்தல் வஞ்சகர், தந்தலை யறுத்திடர் தணிப்பென்' (பால. திருவவ. 20) எனத் திருமால் கூறியருளியதும், 'இருளுடைவைகலெம் இரவி தோன்றினுய், அருளுடை வீரவுன் னபயம்' என்ற முனிவரிடம், 'புகல் புகுந்திலரேற் புறத்தண் டத்தின், அகல்வ ரேனுமென் னம்பொடும் வீழ்வரால்' (ஆரணிய. 134); 'சூர றுத்தவ னும்சுடர் நேமியும், ஊர றுத்த வொருவனும் ஓம்பினும், ஆர றத்தினெ டன்றிநின் றூரவர், வேர றுப்பன் வெருவன்மீர் நீரென்றான்' (ஆரணிய. 139) என்பன காண்க. 'பரித் ராணய ஸாதூநாம் விநாசாயச துஷ்கிருதாம், தர்ம ஸம்ஸ்தாப


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஞார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே' என்ற பகவத்கீதை ச்லோக மும், 'வானின்றிழந்து' என்ற அயோத்தியா காண்டம் கடவுள் வாழ்த்துச் செய்யுளும் இங்கே குறிக்கொள்க. 'அரக்கரை யாசறக் கொன்று நல்லறம், புரக்கவந் தனமெனும் பெருமை பூண்ட நாம்' (யுத்த. 372) என்ற கவியும், 'மறைகளும் முனிவர் யாரும்' என்ற கிட்கிந்தா காண்டத்து நிகழும் வாலி கூற்றும் இங்கே அவதார இரகசியத்தைத் தெரித்தல் கண்டு தெளிக. மற்றும், 'தசரதன் சிறுவன் தன்னை, மாசற்ற சோதி வெள்ளத் துச்சியின் வரம்பிற்றோன்றும், ஈசற்கு மீசன் வந்தான்'; 'நின்ற தூயோன், இன்னனே யென்ன யாரு மியம்புவர்'; 'அப்பத மவனுக் கீந்தான் அரக்கர்வே ரறுப்பதாக, இப்பதி யெய்தி னனவ் விராம னென் றெவரும் சொன்னார்'; 'இலங்கை வேந்தன், தானுடை வரத்தை யெண்ணித் தருமத்தின் தலைவர் தாமே, மானுட வடிவங் கொண்டார்' (யுத்த. இலங்கைகாண். 7, 8, 11, 13) என்று மாலியவான் இராவணனிடம் கூறுவனவும் இங்குக் காணத்தகுவன. காதை - சொல் என்ற அளவில் நின்றது. முதலடியில் உள்ள, 'தேவரை' என்பது உருபு மயக்கம். வேதியர் என்றார்க்கு என்பதை, என்றார் வேதியர்க்கு என உருபு பிரித்துக் கூட்டுக.

பி - ம். 1. குறித்தோ யானும்.
2. கொல்லவென்று ; கொல்வனென்று ; விரதம்.
3. என்றார்.
4. குறித்துச் சொன்ன ; நின்ற தவ்வுரை. 118

இதன் பின் போதகம் என்ற செய்யுள் ஓர் பிரதியில் உள்ளது.

422. காரிய மாக வன்றே
யாருக கருணை யோர்க்குச்
சீரிய தன்மை நோக்கி
னிதனின்மேற் சிறந்த துண்டோ
பூரிய ரேயுந் தம்மைப்
புகல்புகுந் தோர்க்குப் பொன்று
ஆருயிர் கொடுத்துக் காத்தார்
எண்ணிலா வரச ரம்மா,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'காரியம் ஆக - கருதிய செயல் கை கூடட்டும்; அன்றே ஆகுக - கைகூடாதாகட்டும், நோக்கின் - ஆராய்ந்து பார்த்தால், கருணையோர்க்கு - அருள் சேர்ந்த நெஞ்சினர்க்கு, சீரிய தன்மை - மேம்பாடு அளிக்கும் பண்பு, இதனின் மேல் சிறந்தது உண்டோ - இந்தப் புகல் புக்கோரைப் புரப்பதைக்காட்டிலும் மேலானது உள்ளதோ? பூரியரேயும் - கீழ்ப்பட்டவராயினும், தம்மை புகல் புகுந்தோர்க்கு தம்மைச் சரணாக வந்து அடைந்தவர் பொருட்டு, பொன்றா - அழியாத, ஆர் உயிர் கொடுத்து - தங்கள் அருமையான உயிரையும் விடுத்து, எண்ணிலா அரசர் காத்தார் - கணக்கற்ற அரசர்கள் காத்தருளினர். அம்மா, வியப்படைச்சொல்.

'நாம் மேற்கொண்ட கருமம் முற்றினும் சரி, முற்றுவிடினும் சரி; தம் உயிரையும் விடுத்தேனும் சரணமடைந்தவரின் குணம் குற்றம் நாடாது அவரைக்காத்தலே நீதி' என்றான் இராமபிரான், பூரியர் - கீழ்மக்கள்; 'பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள' (குறள். 241); 'பூரியர்கள் ஆழுமளறு' (குறள். 919). பொன்றா ஆருயிர் என்பதற்குப் பூதவுடல் பொன்றினும் புகழ் உடல் பொன்றப் பெறாத எனினுமாம்; 'நைநம் சிந்தந்தி சஸ்திராணி, நைநம் தகதி பாவக:' (பகவத்கீதை.) என்று உயிரின் இயல்பு கூறுவது காண்க. ஆக, ஆகுக; வியங்கொள் வினை முற்றுக்கள்; 'கயவொடு ரவ்வொற்றீற்ற வியங்கோள்' (நன். வினை. 19).

பி - ம். 1. இன்றே, என்றே; கருணையோர்க்கும்.

2. அதனின்; சுதின்.

3. பூரிய ரேனும்; பூரியரேனும் தன்மை; புகல் புரிந்தோர்க்கு.

4. காத்தற் கெண்ணிலா.

சில சுவடிகளில் இங்கு ஓர் அதிகப் பாடல் காண்கிறது.

மோதிவந் தடருஞ் சீய முனிவனுக் குடைந்த வேடன்
மீதொரு மரத்திற் சேர வெகுண்டுரை யரிக்குச் சொல்லப்
பேதமற் றிருந்து மன்னன் பிரித்தவஞ் சகத்தை யோர்ந்தும்
காதலிற் கனிகாய் நல்கிக் காத்ததுங் கவிய தன்றோ.

பி - ம். 1. முனிவனு; முனியினு; நல்கா.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



423. ஆதலா னபய மென்ற
பொழுதத்தே யபய தானம்
ஈதலே கடப்பா டென்ப
தியம்பினீ ரென்பால் வைத்த
காதலா லினிவே றெண்ணக்
கடவதென் கதிரோன் மைந்த
கோதிலா தவனை நீயே
யென்வயிற் கொணர்தி யென்றான்.

'ஆதலான் - ஆகையால், அபயம் என்ற பொழுதத்தே - அபயம் என்று என்னை வந்து சார்ந்த அப்பொழுதே, கடப்பாடு என்பது - கடமைஎன்று சொல்லப்படுவது, அபயதானம் ஈதலே - வந்தவர்க்கு அபயதானம் அளிப்பதேயாகும்; என்பால் வைத்த காதலால் இயம்பினீர் - நீங்கள் என்மீது கொண்டுள்ள அன்பினால் (இவனை ஏற்பது சிறிதும் பொருத்தமன்று என்று) சொன்னீர்கள்; இனி வேறு எண்ண கடவது என் - இனிமேல் (இந்த வீடணனை ஏற்பதில்) வேறாக ஆலோசிக்க வேண்டியது யாதுளது? 'கதிரோன் மைந்த - சூரியன் புதல்வனான சுக்கிரீவ! கோதிலா தவனை நீயே என் வயின் கொணர்தி என்றான் - குற்றமற்ற அந்த வீடணனை நீயே என்னிடம் அழைத்து வருக' என்று சொன்னான் இராமபிரான்.

கீழ் 409 முதல் 422 வரை காரண காரியமாகத் தன்பால் தன் நண்பர்கள் வெளியிட்ட கருத்துக்களை மறுத்துப் புகல் புகுந்த வீடணனை ஏற்பதே கடன் என்று கூறி அபயதானம் ஈயும் தன் கருத்தை உறுதிப்படுத்தி மொழிகின்றான் அருட்கடலாகிய இராம பிரான். அபயதானம் வடசொற்றொடர். கடப்பாடு - ஒப்புரவு; 'ஒப்புரவி னால்வரும் கேடெனி னஃதொருவன், விற்றுக்கோட் டக்க துடைத்து' (குறள். 220); தான் மேற் கூறியவற்றோடு தன் முடிந்த முடிபாக வீடணனைக் கோதிலாதவன் என்றது கருதத் தக்கது, 'அபயம் ஸர்வபூதேப்யோ - ததாம் யேதத்விருதம் மம'; 'ஆநயை நம் ஹரிச்ரேஷ்ட, தத்தமஸ்யா அபயம் மயா' (வான்மீகம்).

குறிப்பு: இந்நூலில் மந்திரப்படலங்கள் இரண்டு. ஒன்று அயோத்தியா காண்டத் தொடக்கத்தும் மற்றொன்று யுத்த காண்டத்திலும் காணப்படும். இப்படலங்களில் மன்னன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தன்மையையும், குடிகளை அவன் காக்கும் மரபும், உண்மையான ஜனநாயகத்துக்கேற்ப அரசன் தன் அமைச்சருடனும் இழ்க்குடிகளுடனும் அளவளாவி அரச காரியங்களைப் புரியும் அவனது ஆற்றலும் கூறப்பட்டுள்ளன; ஆளும் மன்னவனியல்பினுக்கேற்ப அவனுக்கு அறிவுரை கூறும் அமைச்சரும் அமர்வர். மற்றும் வாலிவதைப் படலத்திலும், வீடணன் அடைக்கலப்படலத்திலும், வாதமுறையில் முடிவான நீதி வழங்கும் முறைகளைக் காண்கின்றோம். இவற்றிலிருந்து அரசியல் நீதி முறைகளைச் சிறப்பு வகையில் ஓர்ந்தவர் கம்ப நாடர்என விளங்குவது காண்க.

பி - ம். 1. போழ்தந்தே.
2. கடமை நிருமியம்பினீ ரென்மேல்; மைந்தா.
3. கடவதோ. 120

இங்கு ஓர் அதிகப்பாடல்.

என்னமுன் பருதி மைந்தன எழுந்தடி வணங்கி யெந்தாய்
சொன்னதே துணிவ தல்லால் மறுத்தொரு துணிவும் [உண்டே
உள்ளத் துணரா தேதோ வுனக்கரி தியாதோ என்னப்
பன்னிமற் றவரை யெல்லாம் பார்த்திதை யுரைக்க லுற்றான்.

### சுக்கிரீவன் வீடணனை அழைத்துவரச் செல்லுதல்

424. அய்யுற வெல்லாந் தீரு
மளவையா யமைந்த தன்றே
தெய்வநா யகன துள்ளந்
தேறிய வடைவே தேறிக்
கய்புகற் கமைவ தானுன்
கடிதினிற் கொணர்வ லென்னு
மெய்யினுக் குறையு ளான
வொருவன்பால் விரைவிற் சென்றான்.

தெய்வ நாயகனது உள்ளம் தேறிய அடைவே - தேவாதி தேவனான இராமபிரானது உள்ளம் தேறிய முறையிலேயே, தேறி - தன் மனமும் தெளியப் பெற்றதனால், அய்யுறவு எல்லாம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தீரும் அளவையாய் அமைந்தது - நிகழ்ந்த சந்தேகங்கள் அனைத்தும் நீங்கும் அளவையா யமைந்தது ; (ஆகவே), 'கய்புகற்கு அமைவது ஆனுன் - நம் குழுவில் புகுதற்குப் பொருந்தியவன் ஆனுன் ; கடிதினில் கொணர்வல் என்ன - அதனல் விரைந்து அவனை இராமபிரான் சமூகத்துக்கு அழைத்து வருவேன்' என்று கூறிக்கொண்டு, மெய்யினுக்கு உறையுள் ஆன ஒருவன்பால் விரைவிற் சென்ருன் - உண்மைக்கு நிலைக்களமான ஒப்பற்ற வீடணனிடம் வேகமாகச் சென்ருன்.

ஐயுறவு, தொழிற்பெயர். 'தெய்வ நாயகன் : 'வேறுள்ள தெய்வ நாயகன்' (யுத்த. 930). கடிதில் என்பது அவனது மனோ வேகத்தையும், விரைவில் என்பது அவனது நடைவேகத்தையும் குறித்து நின்றன. அன்று, ஏ - அசைகள்.

பி - ம். 1. ஐயுறவெல்லாம் நீக்குமளவையுண் நிங்கி, யளவையால்.

2. நாயகன்றன் ; அளவே ; தேறிய தெளிவே.

3. கையற ; கடிதினிக் ; கொணர்வன்.

4. உறையுளான் முன் ; போனுன். 121

## சுக்கிரீவன் வருவது கேட்டு வீடணன் அவன் முன்பு வருதல்

425. வருகின்ற கவியின் வேந்தை
மயிந்தனுக் கிளைஞன் வள்ளல்
தருகென்ரு னதனு னின்னை
யெதிர் கொளற் கருக்கன் றந்த
இருகுன்ற மனைய தோளா
னெய்தின னென்ன லோடும்
திரிகின்ற வுள்ளத் தானு
மகமலர்ந் தவன்முன் சென்ருன்.

வருகின்ற கவியின் வேந்தை - வீடணனை அழைப்பதற்கு வந்துகொண்டிருந்த வானர மன்னனுகிய சுக்கிரீவனை, மயிந்தனுக்கு இளைஞன் - மயிந்தன் என்பானது தம்பியான துமிந்தன் என்பவன் (வீடணனுக்குக் காட்டி), 'வள்ளல் தருக என்ருன் - வண்மையுடைய இராமபிரான் உன்னை அழைத்து வருக என்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சொன்னான்; அதனால், நின்னை எதிர் கொளற்கு - உன்னை எதிர் கொண்டு அழைப்பதற்காக, அருக்கன் தந்த இரு குன்றம் அனைய தோளான் எய்தினன் - சூரியன் பெற்ற இரண்டு மலைகள் போன்ற புயங்களையுடைய சுக்கிரீவன், வந்தனன்' என்னலோடும் - என்று கூறிய அளவிலே, திரிகின்ற உள்ளத்தானும் - (தன்னை ஏற்பாரோ மாட்டாரோ என்று பலவாறு) சுழற்சி கொண்ட வனான வீடணனும், அகம் மலர்ந்து அவன் முன் சென்றான் - மனம் மகிழ்ந்து அந்தச் சுக்கிரீவன் எதிரே போனான்.

மயிந்தனுக்கு இளைஞன்; இவன் துமிந்தன்: 'மயிந்தனும் துமிந்தனும் என்னு மாண்பினர்' (யுத்த. 345); தருக என்றான் என்பது தருகென்றான் என்றாயிற்று. தன்னை ஏற்கவெண்ணி வருகின்றான் என்றறிந்ததனால் அகம் மலர்ந்து எனப்பட்டது.

பி - ம். 1. இளைய, இளையோன்; இளவல் காட்டி.

2. அதனுல் உன்னை, அதனுனின்னை. அன்னால், ஆதி; எதிர்கொள.

3. எய்தினன் எய்தலோடும், என்றபோது.

4. தெரிகின்ற; மனம், முகம்; மகிழ்ந்து. 122

426. தொல்லருங் கால மெல்லாம்
பழகினுந் தூய ரல்லார்
புல்லல ருள்ளந் தூயார்
பொருந்துவ ரெதிர்ந்த ஞான்றே
ஒல்லைவந் துணர்வு மொன்ற
விருவரு மொருநா ளுற்ற
எல்லியும் பகலும் போலத்
தழுவின ரெழுவிற் றோளார்.

தொல் அரு காலம் எல்லாம் - பழமையான அரிய காலம் முழுவதும், பழகினும் - பழகி நின்றாலும், தூயர் அல்லார் புல்லலர் - மனத்தூய்மையில்லாத கீழ்மக்கள் மனம் பொருந்தி ஏற்கமாட்டார் கள்; உள்ளம் தூயார் - மனத்தூய்மை உடையவர்கள், எதிர்ந்த ஞான்றே பொருந்துவர் - நேரிற் கண்ட அப்பொழுதே சென்று நட்பின் இயைவர்; (இங்ஙனம் ஆதலின்), ஒல்லை வந்து உணர்வும் ஒன்ற - விரைவாக உள்ளம் பொருந்தி ஒன்றுபட, எழுவின்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தோளார் - இருப்புத் தூண்போன்ற உயர்ந்து பருத்த புயங்களை யுடைய, இருவரும் - வீடணன் சுக்கிரீவன் என்ற இருவரும், ஒரு நாள் உற்ற எல்லியும் பகலும் போல - ஒரே தினத்தில் வந்து பொருந்திய இரவும் பகலும் போல, தழுவினர் - தழுவிக் கொண்டார்கள்.

முதலிரண்டடிகட்கு ; 'செல்வுழிக் கண்ணொருநாட் காணினும் சான்றவர், தொல்வழிக் கேண்மையின் தோன்றப் புரிந்தியாப்பர்', (நாலடி. 154) ; 'பன்னாளும் சென்றக்காற் பண்பிலார் தம்முழை, என்னானும் வேண்டுப வென்றிகழ்ப், என்னானும், வேண்டினு நன்று மற்றென்று விழுமியோர், காண்டொறுஞ் செய்வார் சிறப்பு' (நாலடி. 159) ; 'ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை, இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே'; 'நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப் பின்னீர பேதையார் நட்பு' (குறள். 782) ; 'பெரியவர் தம் கேண்மை பிறைபோல நாளும் வரிசை வரிசையா நந்தும் - வரிசையால், வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே, தானே சிறியார் தொடர்பு' (நாலடி. 125). ஒல்லை வந்துணர்வும் ஒன்ற; 'புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சி தான், நட்பாங் கிழமை தரும்' (குறள். 785) ; சுக்கிரீவனும் வீடணனும் முன் பழக்கமில்லாதிருந்தும் மனம் ஒன்றித்தழுவினர். எல்லியும் பகலும் - இரவும் பகலும்போல, கருநிற வீடணனும் வெண்ணிறச் சுக்கிரீவனும் தழுவினர் ; 'எல்லியும் பகலும்' (ஆரணிய. 130) ; எல்லி - இரவு ; 'எல்லியில் நானிவன்' (யுத்த. 402). இச்செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பணி.

பி - ம். 1. சொல்லரும் தொல்பெரும் ;
2. புல்லுவர் ; எதிர்ந்தபோதே, போழ்தே.
4. பகலு மென்னத் ; தழுவினர்.

123

## அபயம் வழங்கின இராமபிரானை வணங்குக என்று சுக்கிரீவன் வீடணற்குக் கூறல்.

427. தழுவினர் நின்ற காலைத்
 தாமரைக் கண்ணன் றங்கள்
முழுமுதற் குலத்திற் கேற்ற
 முறைமையா லுவகை மூள

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வழுவலி லபய முன்பால்
வழங்கின னவன்பொற் பாதம்
தொழுதியால் விரைவி னென்னுக்
கதிரவன் சிறுவன் சொன்னுன்.

தழுவினர் நின்ற காலே (அவ்விருவரும்) தழுவிக் கொண்டு நின்ற போது, கதிரவன் சிறுவன் - சூரியன் புதல்வனுன சுக்கிரீவன், (வீடணனே நோக்கி), 'தாமரை கண்ணன் - செந்தாமரை மலர் போன்று விழிகளேயுடைய இராமபிரான், தங்கள முழுமுதல் குலத்திற்கு ஏற்ற - தங்களுடைய மிகச்சிறந்த சூரிய குலத்துக் கேற்ற, முறைமையால் - முறைப்படியே, உவகை ஊழ - மகிழ்ச்சி பெருக, வழுவலில் அபயம் உன்பால் வழங்கினன் - குற்றமற்ற அபயதானத்தை உன்னிடம் அளித்தருளினுன்; அவன் பொன் பாதம் - (ஆதலின்), அந்தப் பெருமானுடைய அழகிய திருவடிகளே, விரைவின் தொழுதி என்னு - தாமத மின்றி வணங்குக' என்று, சொன்னுன் - மொழிந்தான். ஆல்- அசை.

தாமரை கண்ணன்; இராமபிரான்: ஆரணிய. 376, 421, 606, 813, 972, 984; சுந்தர. 394. முழுமுதற் கேற்ற முறைமை; முன்னர் சிபி முதலியவர்கள் வரலாறு கொண்டுணர்க. இராமபிரானுக்கு வில்லொன்று இல்லொன்று சொல்லொன்றுகலின், வாக்குத் தவருன் அவன் என்பது தோன்ற, 'வழுவலில் அபயம்' எனப் பட்டது. முன்பால் எனக்கொண்டு மனவுறுதியோடு எனலுமாம். இப்பொருள் வழுவலில் என்ற சொல்லோடு நன்கு இயைதல் உய்த்துணர்க. இனி பகைப்புலத்திருந்து வந்த உனக்கு எனினுமாம். பின்னர், 'பஞ்செனச் சிவக்கு மென்காற் றேவியைப் பிரித்த பாவி, வஞ்சனுக்கிளேய வென்னே வருகவென் றருள்செய் தானே' (429) என்று வீடணன் இராமபிரானது அருட்டன்மையைப் புகழ்ந்தது காண்க.

பி - ம். 1. கண்ணன் தன்கண்.
2. உவகை முற்ற.
3. வழுவலன்; நின்பால்; மலர் பொற்பாதம்.
4. விரைவி னென்று.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## அது கேட்ட வீடணன் நிலையும் அவன் கூறினவையும்

428. சிங்கவே றனையான் சொன்ன
வாசகஞ் செவிபு காமுன்
கங்குலி னிறத்தி னுன்றன்
கண்மழைத் தாரை கான்ற
அங்கமு மனம தென்னக்
குளிர்ந்ததவ் வகத்தை மிக்குப்
பொங்கிய வுவகை யென்னப்
பொடித்தன வுரோமப் புள்ளி.

சிங்க ஏறு அனையான் - ஆண் சிங்கம் ஒத்தவனான சுக்கிரீவன், சொன்ன வாசகம் செவிபுகா முன் - மொழிந்த சொற்கள் தன் காதில் நுழைவதற்கு முன்னே, கங்குலின் நிறத்தினுன் தன் கண் மழை தாரை கான்ற - இருள் போன்று கருநிற முடையவனான வீடணனுடைய கண்கள் உவகைக் கண்ணீரை ஒழுக்கின ; அங்கமும் - அவனுடைய உடலும், மனமது என்ன குளிர்ந்தது - அவன் உள்ளம் போன்று குளிர்ந்தது ; அவ்வகத்தை மிக்கு பொங்கிய உவகை என்ன உரோம புள்ளி பொடித்தன - அந்த உள்ளத்தைப் பார்க்கிலும் அதிகமாகக் களிப்புப் பெருகிற்று என்று சொல்லும் படி, மயிர்க்குச்சங்கள் மேனி முழுதும் நிறைந்தன.

சிங்க ஏறு. 'ஏறு மேற்றையும் ஒருத்தலும் களிறும்........ யாத்த ஆண்பாற் பெயரென மொழிப' (தொல். மரபு. 2); 'பன்றி புல்வா யுழையே கவரி, யென்றிவை நான்கு மேறெனற்குரிய'; 'எருமையும் மரையும் பிறவும் அன்ன' (தொல். மரபு. 38, 39) என்பவற்றுள் பிறவும் அன்ன என்பது கொண்டு சிங்கவேறும் கொள்க. 'சிங்கவே றெனத்திறற் சித்தர் சேரவே' (ஆரணிய. 562); பண்டைச் சங்க நூலாகிய பத்துப் பாட்டில் சிங்கவேறு நச்சினர்க் கினியர் உரையில் தான் காணப்படுகின்றது; (பட்டினப். 298 உரை.); 'ஏறுபோற் பீடு' (குறள். 59). வன்மை மட்டுமன்றி, முன்பின் நோக்கிச் செல்லும் நடைச்சிறப்பாலும் சிங்கவேறு உவமை என்க. வாசகம் - வடசொல். கங்குலின் நிறத்தினுன் - அரக்கனாதலின் அவன் நிறம் இருள் நிறம் என்று கூறப்பட்டது ; 'கருநிறத் தோர்பால், வெளுத்து வைகுதல் அரிதென வவருரு மேவி, ஒளித்து வாழ்கின்ற தருமமன் னுன்றனை யுற்றுன் (சுந்தர. 231); (ஒப்பு): 'கார் முகில் கமலம் பூத்த தன்றிவன் கண்ணன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கொல்லாம். ஆரருள் சுரக்கு நீதி யறநிறம் கரிதோ வென்றான். (யுத்த. 440). உள்ளத்தில் மகிழ்ச்சியுற்ற அளவில் அந்த மகிழ்ச்சி மெய்ப்பாடுகள் புறத்தும் காணப்பெறு மாகலின், 'அங்கமு மனம தென்னக் குளிர்ந்தது' எனப்பட்டது. இறுதியடி மிகவும் பொருத்தமான உவமை.

பி - ம். 1. கண்கணீர் ; குளிர்ந்தன.

3. அகம் குளிர்ந்து.

4. பொங்கின ; வெள்ளம் ; பொடித்ததவ் ; வுரோமப் புள்ளின்.

இதன்பின் 'துறவியர்' என்ற பாடல் ஓர் பிரதியில் காண் கிறது.

**429.** **பஞ்செனச் சிவக்கு மென்காற்**
**றேவியைப் பிரித்த பாவி**
**வஞ்சனுக் கிளைய வென்னை**
**வருகவென் றருள்செய் தானோ**
**தஞ்செனக் கருதி னானோ**
**தாழ்சடைக் கடவு ளுண்ட**
**நஞ்செனச் சிறந்தே னன்றோ**
**நாயக னருள நாயேன்.**

(வீடணன் சுக்கிரீவனை நோக்கி), 'பஞ்சு என - தோழியர்கள் செம்பஞ்சுக் குழம்பு என்று சொல்ல எடுத்த போதும், சிவக்கும் மென் கால் தேவியை பிரித்த பாவி - சிவந்து காட்டும் மெல்லிய கால்களையுடைய தேவியை(க் கவர்ந்து சென்று) இராமபிரானிட மிருந்து பிரியச் செய்த கொடியனை இராவணன் என்னும், வஞ்ச னுக்கு - வஞ்சகனுக்கு, இளைய என்னை - இளையவன் ஆன என்னை யும், வருக என்று அருள் செய்தானோ - தன் முன் வரலாம் என்ற அருள் புரிந்தானோ !, தஞ்சு என கருதினானோ - என்னையும் ஓர் எளிய அடைக்கலப் பொருளாக நினைத்தானோ ? நாயகன் அருள, நாயேன் - உலகின் தலைவனான இராமபிரான் திருவருள் புரிய நாய் போற் கடைப்பட்ட யானும், தாழ் சடை கடவுள் உண்ட - தொங்குகின்ற சடையையுடைய சிவபெருமான் உட்கொண்ட, நஞ்சு என சிறந்தேன் அன்றோ - விடம்போல் சிறப்பினைப் பெற்றேனல்லனோ ? ஓ - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'பஞ்செனச் சிவக்கும்' (ஒப்பு): 'பஞ்சின் மெல்லடியாள் பாகன்' (கிட்கிந்தா. 373); 'பஞ்சின் மேலும் பனிக்கும் பனிக் குமே' (சீவக. 134); சீவக. 358; குறள். 112. 'தாழ்சடைக் கடவுளுண்ட நஞ்சு' 111 உரைக் குறிப்பு நோக்குக. சிவ பெருமான் உட்கொண்டதனால் சிறப்புற்ற விடம் போனறு, கொடி யவனான தானும் இராமபிரான் அருளுக்குப் பாத்திரமாகி உயர்ந்த தாக வீடணன் கூறினன் என்க. இராமபிரானது அருட் பெரு மையையும், தன்பால் உள்ள பிறப்பு முதலான குற்றங்களையும் கூறி, கொல்லவல்ல விடத்தைச் சிவபிரான் ஏற்றுத் தன் கண்டத் துக்கு அணியெனக் கொண்டாற் போன்று, தன்னையும் ஓர் நல்ல பண்பினனாகவே கருதி ஏற்றான் என்று கூறினன். 'கறை மிடறணி யலு மணிந்தன்று' (புறநா. 126. கடவுள் வாழ்த்து). தீயகுணங்கள் மிகுத்த அந்த இராவணன் இருந்த வயிற்றில் பத்து மாதங்கள் இருக்க நேர்ந்தது நினைத்து, 'பாவி வஞ்சனுக் கிளைய வென்னை' என்றான். (ஒப்பு): பாழ்த்த பாவிக் குடரிலே நெடுங்காலம் கிடந் தேற்கு' (அயோத்தி. குகப். 70). சரணம் புகுவோர் தமது குற்றங் குறைகளைக் கூறியே சரண் புகுவது முறை என்பதும் இங்கே புலப் படும்; (ஒப்பு): 'குற்றஞ் செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்' (தேவா. 176 : 4).

பி-ம். 1. சிவந்த ; பிரிவு செய்த, பிரித்த பாவ.
2. நஞ்செனத் தகையே னன்றே நாயகனருளின் நாயேன் ; நாயகன் நாயினேனை. 126

430. மருளுறு மனத்தி னேனென்
வாய்மொழி மறுத்தான் வானத்
துருளுறு தேரி னானு
மிலங்கைமீ தோடு மன்றே
தெருளுறு சிந்தை வந்த
தேற்றமீ தாகிற் செய்யும்
அருளிது வாயிற் கெட்டேன்
பிழைப்பரோ வரக்க ராயோர்.

'தெருள் உறு சிந்தை வந்த - (இராமபிரானுடைய) தெளிந்த உள்ளத்தில் எழுந்த, தேற்றம் ஈதாகில் - தெளிவான முடிவு, (புகல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


புகுந்தோரைப் புரப்பது என்ற) இது ஆனல், செய்யும் அருள் இது ஆயில் - அதற்கேற்பப் புரிந்தருளும் கருணையும் (குறைகளைப் பாராமல் தன்பால் வருமாறு அழைக்கின்றமை) இதுவானல்; (இராவணனும் இப்பிரானைச் சரண் அடைந்து கடைத்தேறலாமே), அங்ஙனம் புரியாமல், மருள் உறுமனத்தினன் என் வாய்மொழி மறுத்தான் ; (ஆணவத் தடிப்பால்) மயங்கிய உள்ளத்தனை என் தமையன் யான் கூறிய சத்தியமான உரைகளை ஏற்றுக் கொள்ள மனமில்லாதவன் ஆனன் ; கெட்டேன். கேட்டுக்குள்ளானேன். அரக்கர் ஆயோர் பிழைப்பரோ - இனி இராக்கதர் உய்யும் வகையும் உள்ளதோ ? இனி, வானத்து உருள் உறு தேரினனும் இலங்கை மீது ஓடும் அன்றே - ஆகாயத்தில் உருண்டு செல்கின்ற ஒற்றை யாழித் தேரையுடையவனை சூரியனும், (இராவணனுக்கு அஞ்சாது) இலங்கைக்கு நேராகச் செல்வானே ! அன்று, ஏ - ஈற்றசை.

'மருள் உறு மனத்தினன்' (ஒப்பு) : 'மாயையான் மதியிலா நிருதர் கோன்' (கிட்கிந்தா: 91) ; 'சுடுதியைத் துகிலிடைப் பொதியும் துன்மதி' (யுத்த. 350) ; 'பிறந்தவென் னுறுதிநீ பிடிக்கலா யெனுத், துறந்தனன்' (யுத்த. 323) : 'பாவ காரிதன் பாவகம் ஒருமுகம் பயில' (சுந்தர. 1092) : 'மன்னநீ யுன்வாழ்வை முடித்தாய் மதியற்றய்' (ஆரணிய. 731) என்றது மாரிசன் கூற்று. 'கருத்திலா விறைவன் தீமை கருதினல் அதனைக் காத்துத் திருத்தலா மாகில் நன்றே' (யுத்த. கும்ப. 157) என்பது கும்ப கருணன் கூற்று. வாய் மொழி - உண்மையாக உறுதி பயக்கும் சொல். வானத்துருளுறு தேரினன், சூரியன் ; 'உருளுறு தேரவனுதய மெய்தினன்' (யுத்த. 329) ; ஆரணிய. 82, 414, 1050 ; சுந்தர. 106, 107, 192 காண்க. 'சூரியன் இலங்கை நகரை விலகிச் சென்றது ; சுந்தர. 1 6, 158, 169, 193 ; 'கதிர் மீச் செலாக் கொடி மதிற் குடுமி' (யுத்த. முதற்போர். 3). தான் சரண் புகுந்தது போன்று இராவணனும் சரண் புகுந்திருப்பின், அவன் நல்வாழ்வு வாழ்ந்திருக்கலாம் ; தன் சொற்களைக் கேளாமல் தன் அழிவிற்கும் இலங்கை யரசின் பெருமைக் குலைவுக்கும் காரணமானனே என்று, அருளுடை நெஞ்சினன் ஆகலின், வீடணன் இரங்குகின்றன் : 'யதிவா ராவண ஸ்வயம்' என்பது முதனூல் வாக்கியம். முதனூற் போரிறுதியில் இராவணன் தோல்வி யுற்றிருந்த நிலையில்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இராமபிரான் அவனை நோக்கிக் கூறிய 'ஆளையாவுனக், கமைந்தன' (யுத்த. முதற்போர். 256) என்று தொடங்கும் கவியில், 'இன்றுபோய்ப் போர்க்கு நாளை வாவென நல்கினன் கோசல நாடுடை வள்ளல்' என்றதுகொண்டு, இலங்கை யாசினை வீடணற் களித்தபோதிலும், இராவணனும் பின்னர் தன் வீரத்தையும் அருளையும் நினைந்து சரண் புகுவனேல், அவனுக்குத் தான உரிமை பெற்றுள்ள கோசல நாட்டையும் அளிக்கக் கருதினான் என்பது உணரப்படும்.

பி - ம். 1. மனத்தா லென்றன், மனத்தா னென்றன் ; மறுத்து.
3. சிந்தை வைத்த தேற்ற மிதாகச்.
4. அரக்கரம்மா ; அரக்கரானோர் ; ஆனர்.

127

431. தீர்வரு மின்ன றம்மைச்
செய்யினுஞ் செய்ய சிந்தைப்
பேரரு ளாளர் தத்தஞ்
செய்கையிற் பிழைப்ப துண்டோ
கார்வரை நிறுவித் தன்னைக்
கனலெழக் கலக்கக் கண்டும்
ஆர்கலி யமர ருய்ய
வமிழ்துபண் டளித்த தன்றே.

'கார்வரை நிறுவி தன்னை கனல் எழ கலக்க கண்டும் - கரிய மந்தர மலையை மத்தாக நாட்டித் தன்னை நெருப்புப் பொறி பிறக்கு மாறு கடைந்ததைப் பார்த்திருந்தும், ஆர்கலி அமரர் உய்ய பண்டு அமிழ்து அளித்தது அன்றே - திருப்பாற் கடலானது (விடங் கண்டு அஞ்சிய) தேவர்கள் பிழைக்குமாறு முற்காலத்தில் அமிழ்தம் ஈந்தது அல்லவா? (ஆகவே), தீர்வு அரு இன்னல் - போக்கற்கரிய கடுமையான துன்பங்களை, தம்மை - தமக்கு, செய்யினும் - புரிந்தாலும், செய்ய சிந்தை பேரருள் ஆளர் - நடுவு நிலைமையுடன் கூடியவராய் மனத்தில் மிக்க அருளைக் கொண்டுள்ள பெரியோர்கள், தம் தம் செய்கையில் பிழைப்பது உண்டோ - தமது இயற்கையான அருட் செயல்களிலிருந்து தவறுவது உண்டோ?

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


முன்னிரண்டடிகளிற் கூறிய பொதுப் பொருளைப் பின்னிரண்டடிகளின் சிறப்புப் பொருள் வற்புறுத்தியதால், இச் செய்யுள் வேற்றுப்பொருள் வைப்பணி. பாற்கடல் தன்னைக் கடைந்தார்க்கும் அமுதளித்தது போன்று நல்லவர்கள் அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல தமக்கிடுக்கண் விளைப்போர்க்கும் அருள் புரிவார் என்பது பெறப்பட்டது. 'பிறர் தீமை சொல்லாநலத்தது சால்பு'; 'இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு' (குறள். 984 ; 987); 'நண்பாற்ற ராகி நயமில செய்வார்க்கும், பண்பாற்ற ராதல் கடை' (குறள். 998). மூன்றாவதடியிற் கண்ட வரலாறு; ஆரணிய. 102, 178; சுந்தர. 42 காண்க. கார்வரை - மந்தரகிரி. ஆர்கலி : என்றும் நிறைந்த ஓசையையுடையது என்று கடலுக்குக் காரணக்குறி; அன்மொழித் தொகை. நல்லோர் குணத்திற்றிரியாரென்ற உண்மை இங்குக் காட்டப்பெற்றது.

பி - ம். 1. இன்னதீமை, அன்னதீமை, செய்யப்பெற்ற.
2. பேரறிவாளர் ; பெருமையிற்.
3. நிறுத்தி.
4. அமிழ்துபண் டுதவிற் றன்றே. 128

432. துறவியி னுறவு பூண்ட
தூயவர் துணைவ னென்னை
உறவுவந் தருளி மீளா
வடைக்கல முதவி னானே
மறவினை நீக்க லில்லா
மாயமு மாய வாழ்க்கைப்
பிறவியும் பெயர்த்தேன் பின்னு
நரகினிற் பிழைப்ப தானேன்.

'துறவியின் உறவு பூண்ட தூயவர் துணைவன் - (அகப்பற்றுப் புறப்பற்றுக்களை விட்ட) துறவிகளின் நட்பினை மேற்கொண்ட பரிசுத்தரும் நண்பனுமான இராமபிரான், என்னை உற உவந்து அருளி - என்னிடம் மிகவும் மகிழ்ச்சிகொண்டு அருள்புரிந்து, மீளா அடைக்கலம் உதவினான் - என்றும் கைவிடுதலில்லாத புகலைத் தந்து உதவி புரிந்தான் ; (இஃது வியப்பே இதனால்), மறவினை நீக்கல் இல்லா - பாவச் செய்கைகளை அகற்றல் இல்லாத,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மாயமும் - மாயத்தையும், மாய வாழ்க்கை பிறவியும் - மாய வாழ்விலே யழுந்திய இந்த அரக்கர் பிறப்பையும், பெயர்த்தேன் - விடுத்தொழித்தேன்; பின்னும் நரகினில் பிழைப்பது ஆனேன் - அதனினும் மேலாக நரகினைப் பெறுவதினின்று தப்பி ஈடேறினேன். ஏ - அசை.

தூயவர் துணைவனான இராமபிரான் அடைக்கலம் உதவியதால், தான் அரக்கர் பிறப்பினையே ஒழித்துவிட்டதாகவும், அந்த உதவியே தன்னை நரகிற் புகாமல் காக்கும் என்றும் வீடணன் கூறினன்; 'அழிந்தது பிறவி யென்னு மகத்தியன் முகத்துக் காட்ட' (யுத்த. 444); 'களவிய லரக்கன் பின்னே தோன்றிய கடன்மைதீர, இளையவற் கவித்த மோலி யென்னையுங் கவித்தி யென்றான்' (யுத்த. 448): என்பன காண்க. துறவி என்பது வினையி னீங்கி விளங்கிய அறிவனான இறைவன் எனினுமாம்; 'பற்றுக பற்றற்றான் பற்றினை' (குறள். 350): என்றபடி இறைவனையே தமக்கு நிலைத்த உறவாகக் கொண்ட பரிசுத்தராகலின் 'தூயவர்' எனப்பட்டது; இராமபிரான் திருநாமம் உச்சரிப்பவரும், அவன் திருவடியில் ஈடுபட்டோரும் 'சன்மமு மரணமுமிலராவர்' என்பது, 'சன்மமும் மரண முமின்றித் தீருமே, இம்மையே ராமவென் றிரண்டெழுத்தினால்' என்பது கொண்டு காண்க. 'நரகினில் பிழைத்தேன்'; நரகினில் என்பது ஐந்தாம் வேற்றுமை நீக்கப்பொருள். அரக்கனேனும், தூயோன் உறவினால் அரக்கர் தன்மை மாறப்பெற்றதாகக் கூறினன்; 'ஊரங் கணநீர் உரவுநீர் சேர்ந்தக்கால் பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்' (நாலடி. 175); 'தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம், மருண்ட தன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே, உருண்ட வாய்தோறும் பொன்னுரு ளுரைத்துரைத் தோடி, இருண்ட கல்லையும் தன்னிற மாக்கிய விரதம், (பால. வரைக். 8): என்பன இங்கு ஒப்பு நோக்கத் தகுவன. உறவு வந்தருளி எனினுமாம்.

பி - ம். 1. உணர்வு,

2. உறவு தந்தருவி; உதவினுளேல்; உறவு தந்தருளி.

3. அறிவினை யிறையுமில்லா ரறிவிலா வரக்க னென்னும், யறிவிலியரக்கனென்னும்.

4. பிறவியில், பிறவியை; பெயர்ந்தேன், பிழைத்தேன்; மீண்டு நரகினும்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## சுக்கிரீவன் வீடணனை விரைவில் வர வற்புறுத்தல்

433. திருத்திய வுணர்வு மிக்க
செங்கதிர்ச் செல்வன் செம்மல்
ஒருத்தரை நலனுந் தீங்குந்
தேரினு முயிரி னோம்பும்
கருத்தின னன்றே தன்னைக்
கழலடைந் தோரைக் காணும்
அருத்திய னமலன் றாழா தேகுதி
யறிஞ வென்றான்.

திருத்திய உணர்வு மிக்க செம் கதிர் செல்வன் - (இராம பிரானது வாயுரையால்) திருந்திய நல்லறிவு மிகப் பெற்றவனாகி செவ்விய கிரணங்களை யுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவன், (வீடணனைப் பார்த்து), 'அறிஞ - அறிஞனே! செம்மல் - பெரியோனான இராமபிரான், ஒருத்தரை - ஒருவனுடைய, நலனும் தீங்கும் தேரினும் - நற் பண்புகள் தீய பண்புகளை ஆராயும் திறத்தனாகிலும், தன்னை கழல் அடைந்தோரை - தன்னிடம் புகல் புக்கவரை, உயிரின் ஓம்பும் கருத்தினன் அன்றே - தன்னுயிரைக் காட்டிலும் பெரிதாகப் பாதுகாத்தருளும் எண்ண முடையவன் அன்றோ? அமலன் - பரிசுத்தனான அவன், காணும் அருத்தியன் - உன்னைக் காணவேண்டும் என்ற ஆவலுடன் இருக்கிறான்; தாழாது ஏகுதி என்றான் - கால தாமதமின்றி அவன்பாற் செல்வாயாக' என்று மொழிந்தான்.

சரணம் புக்கவர்க்கு அவர்களின் குணம் குற்றம் பாராது அருள் புரிபவன் இராமபிரான் என்பது இங்கே குறிக்கப்பட்டது. தொடக்கத்தில் பல காரணங்கள் கூறிச் சுக்கிரீவனை ஏற்க வொண்ணாது என்ன மறுத்த சுக்கிரீவன், இராமபிரான் கூறிய சொற்களால் உள்ளம் மாறி அவனை அழைக்க முன் வந்தானாகலின், 'திருத்திய உணர்வு மிக்க செங்கதிர்ச் செல்வன்' எனப்பட்டான். இனி, செல்வன் செம்மல் சுக்கிரீவனைக் குறித்தது எனினுமாம். தன் அண்ணனுக்கு நன்மதி கூறியும், அவன் செவியேற்காத நிலையில் இராமபிரானைச் சரண் புகுந்து நின்றனன் ஆகலின், வீடணனை அறிஞ என்றான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. உணர்வின்; செங்கதிர்ச் சிறுவள்; மைந்தன்.

2. நலனுந் நீங்கு முணர்வனே; உரைத்தநன் னலனுந் தேரின்; தெரியினு முயிரிதேடும்.

3. கருத்தொடு கடவுடன் பொற்கழல்; தன் பொற்கழல். 130

## இருவரும் இராமபிரானிடம் சேறல்

434. மொய்தவழ் கிரிகண் மற்றும்
பலவுடன் முடுகிச் செல்ல
மய்தவழ் கிரியும் வெள்ளிக்
குன்றமும் வருவ தென்னச்
செய்தவம் பயந்த வீரர்
திரண்மர மேழுந் தீர
எய்தவ னிருந்த சூழ
லிருவரு மெய்தச் சென்றார்.

மொய் தவழ் கிரிகள் மற்றும் பலவுடன் - வலிமை விளங்கப் பெற்ற மலைகள் வேறு பலவற்றுடன், முடுகி செல்ல - விரைந்து வர, மய் தவழ் கிரியும் வெள்ளி குன்றமும் வருவது என்ன - கரு நிறம் விளங்கப்பெற்ற அஞ்சன மலையும் வெண்ணிறமான கைலை மலையும் ஒன்றுகூடி வருவதே போன்று, செய் தவம் பயந்த வீரர் இருவரும் - முற்பிறப்பில் பண்ணிய நல் வினைப்பயன் கைவரப் பெற்ற வீரர்களாகிய வீடணன் சுக்கிரீவன் என்ற இருவரும், திரள் மரம் ஏழும் தீர - ஒன்றுகத் திரண்ட மராமரம் ஏழும் ஒழியுமாறு, எய்தவன் இருந்த சூழல் எய்த சென்றார் - அம்பு செலுத்தியவனை இராமபிரான் தங்கியிருந்த இடத்தை அடைய நினைந்து சென்றார்கள்.

மைதவழ்கிரி வீடணன், வெள்ளிக் குன்றம் - சுக்கிரீவன். சுக்கிரீவனுக்கு வெள்ளிக் குன்றம் (கிட்கிந்தா. 571). முன்னர் எல்லியும் பகலும் என்றது காண்க. மொய் தவழ்கிரிகள் வீடணனுடன் வந்த அனலன் முதலிய நால்வர்கள். இராமபிரானைக் காண வேண்டும் என்ற அவா மிகுத்தலின் 'முடுகிச் செல்ல' எனப்பட்டது. மொய்தவழ்கிரி; மேகங்கள் அடர்ந்து தவிழப் பெற்ற மலை எனினுமாம். மை தவழ்கிரி - மேகம் தவழப்பெற்ற மலை எனலும் ஒன்றும். குன்றம் வருவது - நிகழா நிகழ்ச்சி; இல்பொருள் உவமை. மலைக்கு அசலம் அல்லது அசையாதது என்பது பெயர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



செய்தவம் பயந்தவீரர் - முற்பிறப்பில் செய்த தவத்தினால் இராம பிரானால் உடன் பிறந்தவர்களாகத் தழுவப் பட்டவர்கள் என்க. 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப் படும்' (குறள். 265). 'திரண்மர மேழும் தீர எய்தவன்'; திரள் மரம் ஏழும் - திரண்ட மரங்கள் என மராமரத்தையும், எழு வகைப் பிறப்பிலும் திரண்டு குவிந்த என்று பாவத் தொகுதியையும் குறித்ததாகக் கொள்க. எழுபிறப்பும் நிகழும் தீயவை யாவும் இராமபிரான் கண்ணம்பு படின் அழிந்து ஒழியப்பெற்று அவன் திருவடிக் கன்பராகி உய்வர் என்ற குறிப்பு இங்கே காணலாம். எய்தவன் இருந்த சூழல் எய்தச் சென்றார் என்ற இடத்து ஈதுகை நயம் காண்க. மரமேழும் எய்தது; கிட்கிந்தா காண்டம் மராமரப் படலத்துட் காண்க.

பி - ம். 1. முற்றும்; பரிவுடன்.
2. மைதவழ்; மேருக் குன்றமும்.
3. செய்தவம் பயந்த செல்வன்; வீரன்; நீய.
4. எதிரச் சென்றார். 131

## வீடணன் இராமபிரானைத் தரிசித்தல்

435. மாற்கடஞ் சூழ்ந்த வைப்பின்
அங்கதன் மருங்கு காப்ப
நாற்கடல் உடுத்த பாரின்
நாயகன் புதல்வ னுமப்
பாற்கடல் சுற்ற விற்கை
வடவரை பாங்கு நிற்பக்
கார்க்கடல் கமலம் பூத்த
தெனப்பொலி வானைக் கண்டான்.

மாற்கடம் சூழ்ந்த வைப்பின் - குரங்குகள் சூழ்ந்து நின்ற இடத்தில், அங்கதன் மருங்கு காப்ப - வானர இளவரசனான அங்க தன் பக்கத்திலிருந்து புறக்காவல் செய்யவும், பால் கடல் சுற்ற - பாற்கடல் சூழ்ந்து விளங்கவும், வில் கை வடவரை பாங்கு நிற்ப -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வில்லேந்திய கையுடன் மேருமலை (போன்ற இலக்குவன்) அருகில் நிற்கவும், நால் கடல் உடுத்த பாரின் நாயகன் - நான்கு கடல்கள் சூழப்பெற்ற இந்த நிலவுலகின் தலைவனான தயரதனுடைய, புதல்வன் ஆம் அ கார்க்கடல் கமலம் பூத்தது என - புத்திரனை, அந்தப் புகழ்பெற்ற கரிய கடல் பல தாமரை மலர்களைப் பூத்தது என்னுமாறு, பொலிவானை கண்டான் - ஒளிர்பவனான இராமபிரானை வீடணன் தரிசித்தான்.

இங்கு இராமபிரான் கொலுவிருக்கை வருணிக்கப்பட்டுள்ளது. பாற்கடல் போன்ற வெண்ணிறக் குரங்குகளால் சூழப்பட்ட இடத்தே, அங்கதன் உடைவாள் ஏந்திப் புறக்காவல் புரிய, இளைய பெருமாளான இலக்குவன் வில்லேந்திய கையனாய் நிற்க, பல தாமரை மலர்கள் மலரப்பெற்ற கரிய கடல் போன்று ஒளிரும் இராமபிரானைக் கண்டான். இளையவன் என்ற பாடம் கொண்டு இலக்குவன் என்பர் ஒரு சாரார்; ஆயினும் 'அங்கதன் உடைவாள் ஏந்த' (யுத்த. திருமுடி 38) எனப் பின்னர் வருவது கொண்டு அங்கதன் புறக்காவல் செய்ய எனப்பொருள் தரப்பட்டது. 'தாமரைத் தடங்கணானும், பொன்னுடை வாளை நீட்டி நீயது பொறுத்தி யென்றான்' (கிட்கிந்தா. 380) என்பது இங்குக் காணத்தகும். நாற்கடலுடுத்த பாரினாயகன் - தயரதன்; 'கடல் சூழ்ந்த வுலகெலாம் காக்கின்ற பெருமான் (திருத்தொண்டத் தொகை) என்றதுபோல வந்தது. நாமப்பாற்கடல் என இயைத்துப் புகழ்சான்ற பாற்கடல் என்றும் கொள்வர். இலக்குவன் பொன்னிறமாகலின் வடவரைக்குவமிக்கப்பட்டான். 'விற்கை வடவரை'; 'வில்லையூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன்' (அயோத்தி குகப். 138). வில்லோடு கூடிய வடவரை; பால. திருவவ. 134; பால. குலமுறை. 22; 'இங்கு அறக்கணல்லதொரு கண்ணிலனாகி, நிறக்கருங்கடலு ணேமியினின்று' (யுத்த. இராவணன் வானரத். 22) எனபதையும் ஒப்புக் காண்க. கார்க்கடல் கமலம பூத்தது : (ஒப்பு): 'கருமுகில் தாமரைக் காடு பூத்து' (பால. திருவவ. 13); 'அமலத்திண் கரமும் காலும் வதனமும் கண்ணுமான, கமலத்தின் காடுபூத்த காளமா மேக மொத்தான்' (யுத்த. இலங்கை காண் 28); மற்றும் யுத்த. கும்ப. 279; இயற்பா. 3 : 9; திருவிருத்தம். 43 காண்க.

பி-ம். 1. மாற்கடல்; சுமந்த வைப்பின்; இளையவன்.
2. புதல்வ னரும்.
3. மருங்கு நிற்ப; நிற்க.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இராமபிரான் அப்பொழுதிருந்த நிலை

436. அள்ளிமீ துலகை வீசு
 மரிக்குலச் சேனை நாப்பண்
தெள்ளுதண் டிரையிற் ருகிப்
 பிறிதொரு திறனுஞ் சாரா
வெள்ளிய கடலின் மேனாள்
 விண்ணவர் தொழுது வேண்டப்
பள்ளிதீர்ந் திருந்தா னென்னப்
 பொலிதரும் பண்பி னானை,

உலகை - பூமியை, அள்ளி மீது வீசும் - கையினால் எடுத்து ஆகாயத்தில் எறிய வல்ல, அரிகுல சேனை நாப்பண் - குரங்குக் கூட்டத்தாலான படையின் நடுவில், தெள்ளு தண் திரையிற்று ஆகி - தெளிந்த குளிர்ந்த அலைகளையுடையதாகி, பிறிது ஒரு திறனும் சாரா - வேறொரு தன்மையும் விரவாத, வெள்ளிய கடலின் - வெண்ணிறமான பாற்கடலின், மேல் நாள் - முன்னாளிலே, விண்ணவர் தொழுது வேண்ட - தேவர்கள் எல்லோரும் வணங்கி விரும்ப, (அதற் கிணங்கிப்) பள்ளிதீர்ந்து இருந்தான் என்ன - தனது அரவுப் படுக்கையில் அறிதுயில் கொள்வதை நீத்து நின்றது போன்று, பொலிதரும் பண்பினானை - விளங்குகின்ற இயல்பையுடையவனும்,

இது முதல் நான்கு கவிகளில் உள்ள பண்பினானை, வயங்குவானை, முதலிய இரண்டாம் வேற்றுமை உருபேற்ற பெயர்கள் **440** ஆம் செய்யுட்கண் உள்ள நோக்கி என்பதனை வினை முடிவு கொள்ளும். அள்ளி மீது உலகை வீசும்; (ஒப்பு) : தனிமை தாங்கிய வுலகையுஞ் சலம்வரிற் குமைக்கும்' (கிட்கிந்தா. 693) : 'ஏயின் மண்டல மெள்ளிட விடமின்றி யிரியும்' (கிட்கிந்தா. 707) : 'உண்ணின் அண்டங்கள் ஓர் பிடி யுண்ணவு முதவா' (கிட்கிந்தா. 708) ; மற்றும் யுத்த. 342 ; யுத்த. மூலபல. 4 காண்க. நாற்புறமும் வெண்ணிறக் குரங்குகள் சூழ, இராமபிரான் இருந்ததற்கு, ஆதியில் தேவர்கள் வேண்டப் பாற்கடலில் ஆதிசேடன் சயனத்தில் கிடந்த திருக்கோலத்தை நீத்துத் தனியே வீற்றிருந்த திருமாலை உவமை கூறினர். தனித்து இருப்பினும், 'சென்றாற் குடையாம்' என்ற பாசுரத்திற்கேற்ப என்றும் இணைபிரியாத சேடன் உருமாறி இலக்குவன் அருகில் நின்றதும் காணலாம். 'பள்ளி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தீர்ந்திருந்தது; 'ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்ட யோத்தி வந்தான்' (சுந்தர. 1122); துறந்து போமெனச் சொற்ற சொற்றேறுமோ, உறைந்த பாற்கடற் சேக்கை யுடனெரீஇ, அறம் திறம்புமென் றைய னயோத்தியிற், பிறந்த பின்பும் பிரிவில ளாயினள் (அயோத்தி. நகர்நீ. 223), 'ஆழித் துயில் கடந் தயோத்தி வந்தான்' (யுத்த. அங்கதன் 14); மற்றும், யுத்த. கடல் காண். 3. விண்ணவர் தொழுது வேண்டியது, பால. திருவவதாரப் படலத்துட் காண்க.

பி - ம். 1. அரிகுலச்.

2. நள்ளருந், தெள்ளுதெவ் ; நிறனுஞ் சார. 133

437\. கோணுதற் கமைந்த கோலப் புருவம்போற்
[றிரையுங்கூடப்
பூணுதற் கினிய முத்தின் பொலிமணல் பரந்த வைப்பில்
காணுதற் கினிய நீள வெண்மையிற் கருமை காட்டி
வாணுதற் சீதை கண்ணின் மணியென வயங்கு வானை,

கோணுதற்கு அமைந்த கோல புருவம் போல் - வளையும் தன்மை வாய்ந்த (சீதாதேவியின்) அழகிய புருவத்தை ஒப்ப, திரையும் கூட - அலைகளும் பொருந்த, பூணுதற்கு இனிய முத்தின் - அணிவதற்குத் தக்க முத்துக்கள் போன்று, பொலி மணல் பரந்த வைப்பில் - விளங்குகின்ற மணல் தொகுதி பரவிய கடற்கரையிலே, காணுதற்கு இனிய நீள வெண்மையில் கருமை காட்டி - நோக்குவதற்கு இனிமையாகக் காணப்படுகின்ற நீண்ட வெண்ணிறத்திலே கரு நிறத்தைத் தோற்றுவித்து, வாள் நுதல் சீதை கண்ணின் மணி என வயங்குவானை - ஒளி தங்கிய நெற்றியினை யுடைய சீதா தேவியின் கண்ணின் கருமணி போன்று விளங்குபவனும்,

அலைகள் வந்து வந்து மறிகின்ற கடற் கரையின் வெண் மணற் பரப்பில் கார்மேனி வண்ணனான இராமபிரான் வீற் றிருந்தது, சீதா தேவியின் வளைந்த புருவத்தின் அருகில் வெண் ணிறமாய் நீண்ட விழியின் நடுவில் உள்ள கருமணி போன்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இருந்தது எனப்பட்டது; நற்குறிப்பேற்றவணி. ஒருவருடைய அருமைப் பாட்டைப் புலப்படுத்தக் கண்ணின் கருமணி என்பது வழக்கு; 'கருமணியிற் பாவாய்நீ போதாய் நாம் வீழும் திருநுதற் கில்லை யிடம்' (குறள். 1123); 'கண்ணே கண்ணிற் கருமணியே' (தேவா. 482 : 1). இராமபிரான் பிராட்டிக்கு அருமையானவன் என்பது இங்கே போதரும். பிராட்டியின் புருவங்கட்கு அலே யுவமை. கூடப் பரந்த என இயைத்தலுமாம். 'நீள வெண்மையிற் கருமை காட்டி' (ஒப்பு): 'ஈசற் கியான் வைத்த வன்பி னகன்றவன் வாங்கியவென், பாசத்திற் காரென் றவன்தில்லை யின்னொளி போன்றவன்தோள், பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல் யாம், பேசத் திருவார்த்தை யிற்பெரு நீளம் பெருங்கண்களே' (திருக்கோவை. 109); 'கருமணிப் பாவை யன்னான்' (சீவக.1508). இங்கு, கருமணியைப் போலும் பாவை; என்றது கருவிழியை யன்னான் சீவகன்' என உரை வரைந்தவாறு காண்க. 'கரியவாய் வெளியவாகும் வாட்டடங் கண்க ளம்மா' (கிட்கிந்தா 773).

பி - ம். 1. கோணுதற்கரிய.
2. பூணுதற் கரிய, உரிய முத்திற்; பொலி மணற்.
3. இனிய கானல்; நில.
4. வாணுதற் கமைந்த. 134

438. படர்மழை சுமந்த காலைப் பகர்வரு மமரர் கோமான்
அடர்சிலை துறந்த தென்ன வாரந்தீர் மார்பினானைக்
கடர்கடை மத்திற் பாம்பு சுழற்றிய தென்னக் காசின்
சுடரொளி வலயந் தீர்ந்த சுந்தரத் தோளி னானை.

படர் மழை - ஆகாயத்தில் செல்லுகின்ற மேகமானது, சுமந்த காலை - (கடல்நீரை மிகுதியாகத்) தாங்கி நின்ற காலத்தில் (சூரியன் கதிரே தோன்றாமல் விடாமழை பெய்த காலத்தில்), பகர்வு அரு அமரர் கோமான் - சொல்லுதற்கரிய (புகழமைந்த) தேவர் கோமகனான இந்திரனுடைய, அடர் சிலை துறந்தது என்ன - நெருங்கிய வில்லை (வானவில்லை) அம்மேகம் நீங்கி நின்றதுபோல, ஆரம் தீர் மார்பினானை - நவமணிகளால் இயன்ற மாலையை அணியா தொழிந்த மார்பினானும், கடர் கடை மத்தில் பாம்பு சுழற்றியது என்ன - பாற்கடலைக் கடைந்த மத்தாகிய மந்தரமலையிலிருந்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(கடை கயிருக அமைந்த வாசுகி என்னும்) பாம்பு சுழற்றப் பெற்ருற்போல, காசின் சுடர் ஒளி - நவமணிகளால் ஒளிவிடுகின்ற, வலயம் தீர்ந்த - வாகுவலயம் அணியாது ஒழியப்பெற்ற, சுந்தர தோளிணை - காட்சிக்கினிய திருத்தோள்களை யுடையவனும்.

இக் கவியில் இராமபிரான் மார்பும் தோள்களும் அழகுற வருணிக்கப்பெற்றுள்ளன ; நவமணி ஆரம் அணியப்பெருத அவன் மார்பிற்குப் பல வண்ணங்கள்கொண்ட வானிடுவில் நீங்கப்பெற்ற காளமேகமும், அப்பெருமானது வாகுவலயம் அணியப்பெருத திருப்புயங்கட்கு கடைகயிருன வாசுகி நீங்கிய மந்தரமலையும் உவமைகள். படர்மழை - ஊர்ந்து செல்கின்ற மேகம். மேகம் நீராவியே ஆதலின் ஓரிடத்தில் நிலைத்து நில்லாது செல்லும் ; அதுபற்றியே மேகத்திற்குச் செல் என்பது காரணக்குறி. ஆரம் தீர்ந்த, வலயம் தீர்ந்த என்றமை கொண்டே அவைகள் சக்கரவர்த்தித் திருமகற்கின்றி யமையாத அணிகள் என்பது விளங்கும் ; இவ்வாறு கூறுவதும் ஒருவகைக் கவி வழக்கு: 'குழைக்கின்ற கவரியின்றிக் கொற்ற வெண் குடையுமின்றி' (அயோத்தி. நகர்நீ. 2) என்ற இடத்து இன்மையைக் குறிக்கும் முகத்தான், அந்த அரசச் சின்னங்களின் இன்றியமையாமை குறித்தமை அறிக. 'அணிபறித் தழகு செய்யும் அணங்கு' (யுத்த. அங்கதன். 18) என்பதுகொண்டே அணிதரிப்பது மகளிர் வழக்கு எனப் பெறப்படுவதும் காண்க. 'அணியிலாக் கவிதையும் பணியிலா வனிதையும் என்பது பழமொழி. அமரர் கோமான் அடர்சிலை : இந்திரவில் அடைமழையில் புலனுகாதுபோலும். கடர்கடை மத்து - மந்தரகிரி. பாம்பு : கடைகயிருன வாசுகி என்னும் அரவம். கடல், கடர் ஈற்றுப்போலி. காசு - இரத்தினம். ஒளிவலயம் - வாகுவலயம். அடர்சிலை: ஆரணிய. 84 ; சுந்தர. 726 என்பன கண்டுணர்க.

பி - ம். 1. காயம், காலப் ; பருவவான்.

2. அடல்.

3. மத்தும் நாம்பும், மந்துத் தாம்பு ; காய்பொற்.

4. சுடர்மணி வலயம் ; சோர்ந்த.

135

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


439. கற்றைவெண் ணிலவு நீக்கிக் கருணையா லமிழ்தங் காலும்
முற்றுறு கலையிற் றுய முழுமதி முகத்தி னானைப்
பெற்றவ னளித்த மோலி யிளையவன் பெறத்தான் பெற்ற
சிற்றவை பணித்த மோலி பொலிகின்ற சென்னி யானை.

கற்றை வெண் நிலவு நீக்கி - தொகுதியான வெண்ணிறம் வாய்ந்த நிலவைப் பொழிவதை விடுத்து, கருணையால் அமிழ்தம் காலும் - அருட்பெருக்கால் அமுதத்தைப் பொழிகின்ற, முற்றுறு கலையிற்று ஆய - பதினாறு கலைகளும் நிறையப்பெற்ற, முழுமதி முகத்தினானை - பூரண சந்திரன்போன்ற முகவிலாசத்தை உடையவனும், பெற்றவன் அளித்த மோலி - தந்தையான தயரதன் அன்புடன் தந்த மணிமகுடத்தை, இளையவன் பெற - தம்பியான பரதன் அடையுமாறு புரிந்து, தான் பெற்ற சிற்றவை பணித்த மோலி - தான் அடைந்த சிறிய அன்னையான கைகேயி கட்டளையிட்டருளிய சடைமுடி, பொலிகின்ற சென்னியானை - விளங்குகின்ற சிரத்தை யுடையவனும்.

நிலவு நீக்கி அமிழ்தம் காலும்: நிலவு அமுதம் என்ற இரண்டும் மதியினிடத்துண்டு. சந்திரனுக்கு, 'அமுதகிரண கலை' என்ற பெயருமுண்டு. இங்கே நிலவை விடுத்து அமுதத்தையே பொழியும் முழுமதியைக் கூறிப்போந்தார். நிலவு நீங்கினது பிராட்டியின் பிரிவால் நேர்ந்த சோகத்தாலும், அமுதம் கான்றது வீடணனிடம் கொண்ட அருளாலும் என்க. வளர்ந்தும், குறைந்தும், மக்கட்கு முறையே இன்பமும் துன்பமும் மாறிமாறி அளிக்கும் மதிபோலாது, என்றும் இன்பமாகிய அமுதத்தைப் பொழிவதால் 'முழுமதி முகத்தினானை' எனப்பட்டது. பெற்றவன் அளித்த மோலி இளையவன் பெற: 'மின்னொளிர் கான மின்றே போகின்றேன் விடையும் கொண்டேன்' (அயோத்தி. கைகேசி. 110); 'தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னை' (அயோத்தி. குகப். 35); 'ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே ஆள' (அயோத்தி. கைகேசி. 107) எனத் தொடங்கும் பாசுரங்கள் காண்க. பணி - கைகேயியின் கட்டளை; 'மன்னவன் பணியன் றாகில் நும்பணி மறுப்பனோ என், பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ' (அயோத்தி. கைகேசி. 110) என்றதனால், 'சிற்றவை பணித்தமோலி பொலிகின்ற சென்னியான்' எனப்பட்டது. 'இப் பணி தலைமேற் கொண்டேன்; (அயோத்தி. கைகேசி. 110) என இராமபிரான் கூறியதும் காண்க. கட்டளையைச் சிரமேற்கொண்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


டொழுகுதல் என்பது உலகவழக்கு. 'சிறியதாய் சொன்ன திரு மொழி சென்னியிற் சூடி, நெறியி னின்றதன் நாயகன் புகழென நிமிர்ந்தான்' (சுந்தர. 1020) என்பன காண்க. மௌலி - மகுடம்; அது மோலி யெனத் திரிந்தது. இங்கே சடாமகுடத்தைக் குறித்து நின்றது. 'மண்டிலச் சடைமுடி துளக்கி' (யுத்த. 554); மோலி மகுடத்தையும், இலக்கணையால் கட்டளையையும் உணர்த் திற்று என்க.

பி - ம். 1. நீங்க.
2. முற்றுறு நிலையிற்றுகி.
3. பெறவே பெற்ற.
4. சிற்றவை பணியா, சிற்றவை சொல்லான், பணியால்;; சடைபொரு, சடையொருசென்னியான்; 136

## இராமபிரானைக்கண்ட வீடணனது ஈடுபாடு

440. வீரனை நோக்கி யங்க மென்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர்
வாரநெஞ் சுருகிச் செங்க ணஞ்சன மலையன் றுகில்
கார்முகில் கமலம் பூத்த தன்றிவன் கண்ணன் கொல்லாம்
ஆரருள் சுரக்கு நீதி யறநிறங் கரிதோ வென்றான்.

வீரனை நோக்கி - (இத்தகைய) வீரனை இராமபிரானை (முதன் முதலாக வீடணன்) நேரிற் கண்டு, (அதுபற்றி), அங்கம் மென்மயிர் சிலிர்ப்ப - தனது உடல் முழுவதும் மெல்லிய மயிர்ப்புளகம் ஏற, கண்ணீர் வார - உவகைக் கண்ணீர் பெருக, நெஞ்சு உருகி - மனக்கசிவுற்று, (வீடணன்), 'செம் கண் அஞ்சன மலை - (இங்குக் காணப்பெறுவது) சிவந்த விழிகளையுடைய அஞ்சனக்குன்றமோ? அன்று ஆகில் - அஃதில்லையாகில், கமலம் பூத்தது கார்முகில்-செந் தாமரை மலர்கள் மலரப்பெற்ற காளமேகமோ? அன்று - அவ் விரண்டும் அன்று; இவன் கண்ணன் கொல் ஆம் - இவன் திருமால்போலும்! ஆர் அருள் சுரக்கும் நீதி அறம் நிறம் கரிதோ என்றான் - நிறைந்த அருளை விடாதுபொழியும் தன்மைவாய்ந்த அந்த அறக்கடவுளின் நிறம் கருமையோ? என்று (தனக்குள்ளே வியந்து) பகர்ந்தான்.

இராமபிரானை 'வீரன்' என்றே பலவிடங்களிலும் கூறுவர் கம்பநாடர். சுந்தர. 187, 631; 'வீரனஃ துரைத்தலோடும்'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(ஆரணிய. 262). அங்கம் - உடல்; வடசொல். இந்த மூர்த்தி செங்கண் படைத்த அஞ்சன மலேயோ; அல்லாமல் செந்தாமரைகள் மலரப்பெற்ற காளமேகமோ எனில் இவ்விரண்டும் அன்று; இவன் அருட்கொண்டலான திருமாலேதான். இத்தகைய கொண்டலான அறமூர்த்திக்கு நிறம் வெள்ளிதாக இருத்தல் வேண்டும்; ஆனல், இது கருமையாகக் காணபபடுகின்றதே என்று வியந்தான் வீடணன். புண்ணியம், அறம் என்ற இவைகள் வெண்ணிறமாகவே கூறப்படுவது வழக்கு. இங்கே அப்பெருமானது காட்சிக்கெளிமை, கருணை, வரம்பில்லா அழகு என்ற இவற்றில் மிகவும் ஈடுபட்டே கம்பர்பெருமான் வீடணன் வாயிலாக அவ்வுயர்ந்த பண்புகளேச் சிறப்பித்தான் என்க. இக் கவிஞர் பெருமான் தன் கூற்ருகவும், பிறர் கூற்றுக்களாகவும் இராமபிரானுடைய திருமேனியையும் பண்புகளேயும் கூறியுள்ள இடங்கள் இக்காவியத்திற் பலவாகும். 'வெய்யோனெளி தன்மேனியின் விரிசோதியின் மறைய' எனத்தொடங்கும் அயோத்தியா காண்டம் கங்கைப் படலம் முதல் செய்யுள் காண்க. 'ஆல முலகிற் பரந்ததுவோ' (பால. மிதிலேக். 67) என்ற கவியும் காணத்தகும். 'அறநிறம் கரிதோ' (ஒப்பு): 'கருநிறத் தோர்பால், வெளித்து வைகுதல் அரிதென வவருரு மேவி, ஒளித்து வாழ்கின்ற தருமமன் ஞன்தனே யுற்ருன்' (சுந்தர. 231). அஞ்சன மலேயோ, கார்முகில் கமலம் பூத்ததோ என வரவேண்டிய ஓகாரங்கள் இங்கு தொக்குநின்றன. (ஒப்பு): யுத்த. 437. உரை காண்க. இச்செய்யுட்களுடன் குகன், அநுமன் முதலியோர் இராமபிரானே முதன்முதற் கண்டவற்றைக் கூறும் பாடல்களேக் காண்டல் நலமாகும்.

பி - ம். 1. அங்கண்; மெய்.

2. நெஞ்சுருக; மலேயின்ருகில்; மலேயிற்ருகி.

3. பூத்த தாமிவன். 137

## தன் அண்ணனே தனது நற்பேற்றுக்குக் காரணம் என்று வீடணன் மகிழ்தல்

441. மின்மினி யொளியின் மாயும் பிறவியை வேரின் வாங்கச்
செம்மணி மகுட நீக்கித் திருவடி புனேந்த செல்வன்
தன்முனூர் கமலத் தண்ண ருதையார் சரணந் தாழ
என்முனு ரெனக்குச் செய்த வுதவியென் ரேம்ப லுற்ருன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'மின் மினி ஒளியின் மாயும் - மின் மினிப் புழுவின் ஒளி போன்று தோன்றி மறையும், பிறவியை வேரின் வாங்க - பிறப்பினை அடியோடு அழிக்க, செம்மணி மகுடம் நீக்கி - சிறந்த அரதனங்கள் இழைக்கப்பெற்ற கிரீடத்தை விடுத்து, திருவடி புனைந்த செல்வன் - இராமபிரானது பாதுகைகளைச் சிரமேற்கொண்ட அருட்செல்வன் ஆன பரதாழ்வானுடைய, தன்முனா் - தமையனும், கமலத்து அண்ணல் தாதையார் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் பெருந்தகையான பிரமதேவனது தந்தையுமான இராமபிரானது, சரணம் தாழ - திருவடிகளில் நான் வணக்கம் செலுத்தி உய்யுமாறு, என்முனா் எனக்கு செய்த உதவி என்று - என் அண்ணனான இராவணன் எனக்குப் புரிந்த உபகாரம் இருந்தவாறு என்னே' என்று வியந்து, ஏம்பல் உற்றான் - மகிழ்ச்சியை அடைந்தான்.

மின் மினி : சுந்தர. 111. இராவணன் தன்னை வெறுத்து அகற்றியதே தனக்குப் பேருதவியாயிற்றென்று மகிழ்ந்தான் வீடணன். 'வெற்றர செய்தி யெம்பி வீட்டர செனக்கு விட்டான்' (கிட்கிந்தா. 354): என்பது இங்கே காணத்தகும். செம்மணி மகுட நீக்கித் திருவடி புனைந்த செல்வன் : பரதன். திருவடியே எல்லாம் விளைக்கக் கூடுமாகலின், திருவடி புனைந்த செல்வன் என்றான்; இறைவன் திருவடி அனைத்தும் உதவ வல்லது, என்பதை 'சிந்திப் பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன், முந்திப் பொழிவன முத்தியளிப்பன. மொய்த்திருண்டு பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன பாம்பு சுற்றி, அந்திப் பிறையணிந் தாடுமை யாறன் அடித்தலமே' (தேவா. 292 : 1) என்பது முதலாகக் காணப்படும் அப்பர் பெருமான் பாசுரங்கள் கொண்டறிக. மின்மினி யாக்கை நிலையாமைக் குவமை. மின்மினி - மின்னல் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. 'பிறவிப் பெருங் கடல் நீந்துவர் நீந்தார். இறைவன் அடி சேராதார்' (குறள். 10): என்றபடி இறைவன் அடி சேர்ந்தார்க்கே பிறவித் துன்பம் நீங்குமாதலின், 'பிறவியை வேரின் வாங்க' எனப்பட்டது. பரதாழ்வானுக்குத் தானுக மேற்கொண்ட பிறவியன்றி வேறு பிறவி யில்லை யாயினும், பிறவியுள்ளது போன்றும், அதனை மாய்த்தற்காக இராமபிரானது திருவடி புனைந்ததாகவும் கற்பித்தார். கமலத் தண்ணல் தாதையார் :

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வீடணன் அவதார ரகசியம் அறிந்தே கூறினன் என்க. ஏம்பல் - மகிழ்ச்சி ; 'ஏம்பலோ டுறையும் மாயன்' (காஞ்சி. சலந்தரீச. 17).

பி - ம். 1. விரைவின் ; வாங்கிச் ;
3. நம்முனர்.
4. எம்முனர் ; எமக்குத் தந்த. 138

442. பெருந்தவ மியற்றி னோர்க்கும் பேர்வரும்
பிறவி நோய்க்கு
மருந்தென நின்றான் றானே வடிக்கணை
தொடுத்துக் கொல்வான்
இருந்தன னின்ற தென்னு மியம்புவ
தில்லை தீர்ந்த
அருந்தவ முடைய ரம்மா வரக்கரென்
றகத்துட் கொண்டான்.

'பெரு தவம் இயற்றினோர்க்கும் - மிகுதியான தவம் புரிந்தவர் கட்கும், பேர்வு அரு பிறவி நோய்க்கும்-தானே நீக்குதற்கு முடியாத பிறவி என்னும் வியாதிக்கும், மருந்து என நின்றான் - மருந்து போல நின்றவனாகிய இராமபிரான், தானே - தானாகவே, வடிகணை தொடுத்து கொல்வான் இருந்தனன் - கூர்மையான அம்புகளைத் தொடுத்துக் கொல்வதற்கு ஆயத்தமாகி நின்றனன் ; (அதனால்), அரக்கர் தீர்ந்த அரு தவம் உடையர் - இராக்கதர்கள் முற்றிய பெருந் தவம் உடையவர்கள் ; நின்றது என்னும் - இனி உரை யாடும்படி யாதுள்ளது ? இயம்புவது இல்லை - நாம் சொல்வதற்கு ஒன்றும் இல்லை ?' என்று - என்று, அகத்துள் கொண்டான் - தன் உள்ளத்தே நினைந்தான் வீடணன். அம்மா - வியப்பிடைச் சொல்.

பிறவிப் பிணிக்கு மருந்தாவன் இராமபிரான் ; அவனே வடிக் கணை தொடுத்து அரக்கர்களைக் கொல்வான் மேவினன் ; எனவே அரக்கர்கள் தம் யாக்கை நீங்கப் பெற்று நல்லுல கடைவது திண்ணம், எனவே அரக்கர் அருந்தவமுடையவர் என்ன வியந்து கூறினன். இவ்வாறே அநுமன் கூறியதும் காண்க. (கிட்கிந்தா. 56).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuyan Vani Trust Donations

(ஒப்பு): 'யான்றவ முடைமை யாலிங் கிறுதிவந் தடுத்த தியார்க்கும், சான்றென நின்ற வீரன் தான் வந்து வீடு தந்தான்' (கிட்கிந்தா. 375): 'பெருந்தவ மியற்றி னோர்க்கும்' என்ற இடத்து உம்மை உயர்வு சிறப்பு, அண்மைத் தொண்டராகவும் அன்பராகவும் உள்ளவர்க்கே கிடைக்கக் கூடிய பிறவித் தீர்வு, பகைமை பாராட்டுவோராகிய அரக்கர்க்கும் அவர்கள் எதிர்பாராமலே கிட்டியது என்றான். கொல்வான்; வானீற்று வினையெச்சம். தீர்தல் - முதிர்தல். பிறவி நோய்க்கு மருந்து; 'மருந்து நம் மல்லற் பிறவிக்கு' (திருக்கோவை. 148); முருகன் 'கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே' (கந்தரலங். 40) என்பதும் காண்க. 'நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன்' (யுத். கும்ப. 31); 'இராம னம்பாற் பொன்றலே புகழுண் டன்றே' (ஆரணிய. 757).

> 'கரக்கு மாயமும் வஞ்சமுங் களவுமே கடனு
> இரக்கமே முதற் றருமத்தி னெறிக்கென்று மிழியா
> அரக்க ரைப்பெருந் தேவர்க ளாக்கின வமலன்
> சரத்தின் மேலினிப் பவித்திர முளவெனத் தகுமே'

(யுத். பிரமாத்திர. 111) என்பன காண்க.

பி - ம். 1. பொருவரும் பிறவி, இயற்றினுக்கும்.

2. நின்ற; நின்ற தென்னே; நின்றதானே; என்னே வியப்புவ.

3. இருந்தனன் என்ற போதென். 139

## வீடணன் இராமபிரானை வணங்குதல்

443. கரங்கண்மீச் சுமந்து செல்லுங் கதிர்மணி முடியன் கல்லும்
மரங்களு முருக நோக்குங் காதலன் கருணை வள்ளல்
இரங்கின னேக்குந் தோறு மிருநிலத் திறைஞ்சு கின்றான்
வரங்களின் வாரி யன்ன தாளிணை வந்து வீழ்ந்தான்.

கரங்கள் மீ சுமந்து செல்லும் கதிர்மணி முடியன் - கைகளை மேலுயர்த்தி வைத்துக்கொண்டு செல்பவனை ஒளிர்கின்ற அரதன மகுடமணிந்தவனும், கல்லும் மரங்களும் உருக நோக்கும் காதலன் - கற்களும் மரங்களும்கூட உருகுமாறு இரங்கி நோக்குகின்ற அன்புருவனும் ஆன வீடணன், கருணை வள்ளல் - அருள் வடிவான இராமபிரான், இரங்கினன் நோக்கும் தோறும் - மனம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கசிந்து தன்னைப் பார்க்கும்போதெல்லாம், இரு நிலத்து இறைஞ்சுகின்றான் - பெரிய பூமியில் வீழ்ந்து வணங்குபவனாகி, வரங்களின் வாரி அன்ன தாளிணை வந்து - வரங்கள் நிறைந்து விளங்கும் கருணைக்கடலான இராமபிரானது உபயசேவடிகளை அடைந்து, வீழ்ந்தான் - நெடுஞ்சாண்கிடையாக வணங்கினான்.

கதிர்மணி முடிமீச் சுமந்து செல்லும் கரங்களன் என உருபு பிரித்துக்கூட்டலுமாம். 'கல்லும் மரங்களும் உருக நோக்கும் காதலன்' என்று வீடணன் பத்தித்திறத்தை வியந்து கூறியது எனினுமாம். இராமபிரானை முதன்முதன் கண்ட அநுமன் 'என்பெனக் குருகுகின்ற திவர்கின்ற தளவில் காதல்' என்றமையும் காண்க. 'கல்லும் புல்லும் கண்டுரு கப்பெண் கனிகின்றாள்' (பால. மிதிலைக். 32) என்று பிராட்டி கூறப்பெற்றதும் காணலாம். கல்லும் மரங்களும் உருக நோக்கும் காதலன் என்பது உயர்வு நவிற்சி. கல்லும் உருகுதல்: உருகாத நெஞ்சினைக் கல்லாகவும், ஆனந்தக்கண்ணீர் வீழ்க்காத கண்களை மரமாகவும் திருவாச. திருச் சதகம். 21 கூறியது இங்கே காணத்தகும். 'காதலன்' என்றதை இராமபிரானுக்கு ஏற்றும்போது 'காதல்' என்பது உயிர்கள்மாட்டுக் காட்டும் அன்பு என்க. வீடணற்கு அந்வயிக்குங்கால் பத்தித் திறமாகும்; 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' (தேவா. 1176 : 1) தாளில் வீழ்ந்து பணிவார்க்கு வேண்டுவன சித்திக்கச்செய்யும் சேவடிகள் ஆகலின், 'நின்னிற் சிறந்த நின் தாளிணை' (பரி. 4 : 62); வரங்களின் வாரியன்ன தாளிணை யெனப்பட்டது. 'கைதவ மியற்றி யாண்டும் கழிப்பரும் கணக்கில்தீமை, வைகலும் புரிந்துளாரும் வானுயர் நிலையை வள்ளல், எய்தவர் பெறுவரென்றால் இணையடி யிறைஞ்சி யேவல், செய்தவர் பெறுவ தையா செப்பலும் சீர்மைத் தாமோ' (கிட்கிந்தா. 362) என இராமபிரான் வாளிக்கிலக்காகி வீடெய்திய வாலியே கூறுவது காண்க. இராமபிரான் கருணைவள்ளல்: 'கருணையின் நிலைய மன்னான்' (யுத்த. அங்கதன். 2). 'அருட்கரசன்' ஆரணிய. 166. 'கற்றைவெண் ணிலவு நீக்கிக் கருணையா லமுதம் காலும், முற்றுறு கலையிற்றாய முழுமதி முகத்தினானை' (136) என்று முன்னர்க் கூறியதும் காண்க.

பி - ம். 2. காதலான்.
3. இரங்கினான்.
4. வாரியன்னான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## இராமபிரான் வீடணற்கு இருக்கை யீதல்

444. அழிந்தது பிறவி யென்னு மகத்தியல் முகத்திற் காட்ட
வழிந்தகண் ணீரின் மண்ணின் மார்புற வணங்கி னானைப்
பொழிந்ததோர் கருணை தன்னாற் புல்லின னென்று
[தோன்ற
எழுந்தினி திருத்தி யென்ன மலர்க்கையா லிருக்கை
[யீந்தான்.

'பிறவி அழிந்தது - தனது பிறவிப்பிணி யொழிந்தது, என்னும் அகத்து இயல் - என்று உணரும் மனப்பாங்கு, முகத்தில் காட்ட - முகத்தில் விளங்குமாறு, வழிந்த கண் நீரின் மண்ணின் மார்பு உற வணங்கினானை - பெருகி வீழ்கின்ற கண்ணீரோடு பூமியில் தன் மார்பு பொருந்த வீழ்ந்து வணங்கிய வீடணனை, பொழிந்தது ஓர் கருணை தன்னால் புல்லினன் என்று தோன்ற - விடாது வீழ்கின்ற கருணையுடன் தழுவினன் என்று விளங்குமாறு, 'இனிது எழுந்து இருத்தி என்ன - இனிதாக எழுந்தருள்க' என்று, மலர் கையால் இருக்கை ஈந்தான் - செந்தாமரை மலர் போன்ற தன் கரத்தால் ஆசனம் அளித்தான்.

அழிந்தது, தெளிவுபற்றி வந்த காலவழுவமைதி. 122 முதல் 141 வரை உள்ள அழகிய பாடற்பகுதிகள் கம்பன் படைப்பு, முதனூலில் இல்லை, 'அகத்தியல் முகத்திற் காட்ட குறள். 706, 707; காண்க. 'உள்ளத்தி னுள்ளதை யுரையின் முந்துற, மெள்ளத்தன் முகங்களே விளம்பு மாகலான்' (யுத்த. 394): கண்ணீர் மார்புற: 'மார்பாரப்பொழி கண்ணீர் மழை வாரும் திருவடிவும்' (பெரியபு. திருநாவுக். 225); 'வந்திழி கண்ணீர் மழையும்' (பெரியபு. திருஞான. 270); 'விழி நீர்கள் ஊற்றென வெதும்பி யூற்ற (தாயு. கருணாகர. 55). மண்ணின் மார்புற வணங்குதல் சாஷ்டாங்க நமஸ்காரம் என்பர். இடைவிடாது பொழிவதாதலின்; கருணை பொழிதல் என்னாது, பொழிந்ததோர் கருணை, என்றார். (ஒப்பு): மழைக்கணென்பது காரணக்குறி யென வகுத்தாள்' (சுந்தர 335).

பா - ம். 1. பிறவியென்ன, என்ன; காட்டி.
2. கண்ணீரன்.
3. புல்லின னுருகி யன்போடு, என்ன நோக்கி.
4. மலர்க்கையின்; ஈய்ந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## இராமபிரான் வீடணற்கு இலங்கை அரசினை யீதல்

445. ஆழியா னவனை நோக்கி யருள்சுரந் துவகை தூண்ட
ஏழினோ டேழாய் நின்ற வுலகுமென் பெயரு மெந்நாள்
வாழுநா ளன்று காறும் வளையெயிற் றரக்கர் வைகும்
தாழ்கட லிலங்கைச் செல்வ நின்னதே தந்தே னென்றான்.

ஆழியான் - திகிரிப்படை யேந்திய கையை யுடையவனான இராமபிரான், அவனை நோக்கி - அந்த வீடணனைப் பார்த்து, அருள் சுரந்து உவகை தூண்ட - அருள்மிகுந்து மகிழ்ச்சி உள்ளிருந்து தள்ள, 'ஏழினோடு ஏழாய் நின்ற உலகும் என் பெயரும் - பதினான்காக விளங்கும் உலகமும் என் திருநாமமும், எந்நாள் வாழுநாள் - எத்துணை நாள் வரையில் நிலைபெற்று நிற்குமோ, அன்று காறும் - அந்நாள் வரையிலும், வளை எயிறு அரக்கர் வைகும் - வளைந்த பற்களையுடைய இராக்கதர்கள் வாழும், தாழ் கடல் இலங்கை செல்வம் - ஆழமான கடல்சூழப்பெற்ற இலங்கை யரசாகிய செல்வம், நின்னதே தந்தேன் என்றான் - உன்னுடையதேயாக ஈந்தேன்' என்று பகர்ந்தான்.

ஆழியான் பாற்கடலில் பள்ளி கொள்ளுபவன் எனினுமாம். அருள் மிகுதியைக் குறிக்கச் 'சுரந்து' எனப்பட்டது. 'ஏழினோடே ழாய் நின்ற வுலகுமென் பெயரும் எந்நாள் வாழுநாள்' என்பது ஊழிக காலம். 'ஊழியான்' (கிட்கிந்தா. 534, 679):என்ற பெயர் இராமபிரானுக் குண்மை காண்க; 'ஊழி முதல் நாயகன்' (யுத்த. ஒற்றுக். 4): 'ஊழியினொருவனும்' (யுத்த. கும்ப. 317). நின்னதே ஏகாரம் தேற்றம். 'இந்தா விபீஷணா' என்ற இராம நாடகக் கீர்த்தனையில், 'காருள்ளளவும் கடனீருள்ளளவும், இந்தப் பாருள்ளளவும் என்றன் பேருள்ளளவும், தந்தேன், தந்தேன், தந்தேன்' என்று இச்செய்யுட் கருத்து விளக்கிக் கூறப்படுவது காண்க. போர் முடிவில் வெற்றி தனதே என்று அறிந்தவன் ஆதலானும், 'முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட் கிறையென்று வைக்கப் படும்' (குறள். 388); 'அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா மானமுடைய தரசு' (குறள். 384) என்றபடி, அரசுரிமை எல்லா நற் பண்புகளும் வாய்க்கப்பெற்றவனுக்கே அளிக்கப்பட வேண்டுமாக லானும், 'இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்' என்றான் என்க. 'மின்னிலங்கு பூண் விபீடண நம்பிக்கு, என்னிலங்கு



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஙாமத்தளவும் அரசு, என்ற மின்னலங்காரன்'. இனி, 'கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்' (தொல். புறத். 12): என்ற இடத்து, உரைகாரர் நச்சினார்க்கினியர் 'பகைவர் நாட்டினைத் தான் கொள்வதற்கு முன்னேயுங் கொண்டான் போல வேண்டியோர்க்கே கொடுத்தலைக் குறித்த வெற்றியும்' என்று எழுதி, 'இராமன் இலங்கை கொள்வதன் முன் வீடணற்குக் கொடுத்த துறையும் அது' என்று கூறியுள்ளமை இங்கே காணத்தகும். இங்கு, 'ஆயிரம் திரிவிளக் கமைய மாட்டிய, சேயொளி விளக்க மொன் றேந்திச் செய்யவன், நாயகன் றனிமனை நின்று நண்ணுதல், மேயி னன் வீடணன் கோயில் மென்சொலாய்' (சுந்தர. 381) என்ற பிராட்டிக்குத் திரிசடை கூறியதும், விபீஷணனை இராமபிரான் 'ஸ்ரீமான்' என்று வான்மீகத்துக் கூறியதும் காண்க; இங்கே ஸ்ரீ யென்றது ராஜ்யஸ்ரீ. உவகை தூண்ட அருள் சுரந்து என மாற்றியும் உரைத்தல் கூடும்; அருள் சுரப்பதன் முன் நல்ல மனக் கிளர்ச்சி வேண்டப்படும் ஆதலின். வளையெயிறு, வக்கிர தந்தம், 'வளையெயிற் றரக்கரோடு' (ஆரணிய. 286). ஆசிரியர், இது முதல் வீடணனைக் குறிக்குமிடமெங்கும் அவனை இலங்கை யரசனென்றே குறித்துவருவது நோக்கத்தகும்.

பி-ம். 1. உவகை கூர; கூர்ந்தே,

3. வாழுமந் நாள்க ளெல்லாம்; வாழுமென் னுள்கள்; வாளெயிற்று; அரக்கர் வேட்கும்.

4. இன்னதே. 142

### சராசரங்களின் ஆரவாரம்

446. தீர்த்தன தருளை நோக்கிச் செய்ததோ சிறப்புப் பெற்றான்
கூர்த்தநல் லறத்தை நோக்கிக் குறித்ததோ யாது [கொல்லோ
வார்த்தையஃ துரைத்த லோடுந் தனித்தனி வாழ்ந்தே [மென்ன
ஆர்த்தன வுலகி லுள்ள சராசர மனைத்து மம்மா.

வார்த்தை அஃது உரைத்தலோடும் - இராமபிரான் (மேற் கூறிய) சொற்களைச் சொல்லிய உடனே, உலகில் உள்ள சராசரம் அனைத்தும் - தலத்தில் உள்ள நிலைத்திணை இயங்கு திணைகளான

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பொருள்கள் எல்லாம், (மகிழ்ச்சி கூர்ந்து), 'வாழ்ந்தேம் என்ன தனி தனி ஆர்த்தன - நல்வாழ் வுற்றேம்' என்று தனித்தனியாக ஆர்ப்பரித்தன; (இந்த ஆர்ப்பு), தீர்த்தனது அருளை நோக்கி - தூய்மை சான்ற இராம்பிரானது அருளைக் கண்ணுற்று, செய்ததோ - வியப்பு மேலிட்டுச் செய்ததோ? (அன்றி), சிறப்பு பெற்றான் கூர்த்த நல் அறத்தை நோக்கி குறித்ததோ - இராம பிரானது அருட் சிறப்பினைப் பெற்ற வீடணனது மிக்க நல்ல சீலத்தை யறிந்து வியந்த வகையோ? யாது கொல்லோ - மற்றும் என்ன காரணத்தால் நிகழ்ந்ததோ? (ஒன்றும் அறியோம்); அம்மா: வியப்பிடைச்சொல்.

இந்த நிகழ்ச்சிகளைக் கண்டு சராசரம் அனைத்தும் ஆர்த்தன என்றும், அந்த ஆர்ப்பு, இராமபிரானது திருவருளை யெண்ணி நிகழ்ந்ததோ, அன்றி வீடணன், மறச் செய்கையனான இராவணனை விடுத்து, தரும வடிவனான இராமபிரானை அடையப் பெற்றுயர்ந் ததை யெண்ணி நிகழ்ந்ததோ, எது வென்று கூறற்கில்லை என் கின்றார் ஆசிரியர்: இது கவிக்கூற்று; கிட்கிந்தா. 105-ம் காண்க. இராமபிரானுடைய அருட்குப் பாத்திரமாகினன் ஆதலின் வீடண னைச் 'சிறப்புப் பெற்றான்' என்றார். சிறப்பு என்பதற்கு மோக்கம் என்றும் பொருளுண்டாதலின், வீட்டின்பம் என்னும் முடிவில் அடையும் பெரும்பேறும் உற்றான் என்க. 'சிறப்பீனும் செல்வமு மீனும்' (குறள். பரி உரை. 31). தீர்த்தன்: தூய்மை மிக்கவனும், தன்னை யடைந்தோரையும் தூயராக்குபவனும்; 'புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்' (மணி. 5 : 98); 'தீர்த்தன் கழல் பரவா முதலரி போல்வரு திறலான்' (யுத்த. அதிகாயன்: 157): இராம பிரானைத் தீர்த்தன் என்றது, பால. திருவவதாரம் 117; 32. ஆரணிய. 547; கிட்கிந்தா. 201, 450; சுந்தர. 677; யுத்த. அதிகாயன். 157. கூர்த்து: 'கூர்த்து நாய் கௌவி' (நாலடி. 70). சராசரங்கள் அனைத்தும் மகிழ்ந்து ஆர்த்தது இராமபிரான் உலகில் உள்ள எல்லா உயிர்கட்கும் உயிராகிய காரணத்தால் என்க. 'ஏனை நிற்பவும் திரிபவு மிரங்கின வெவையும், ஞான நாயக னுருவமே யாகலி னடுங்கி' (யுத்த. பிரமாத்திர. 203). இராமபிரானின் அருளை யும் நோக்கி அறத்தையும் நோக்கி என்றமைத்ததன் அருமை நோக்குக. சராசரம் ஆர்த்ததற்கு; பிரமாத்திரத்தால் அனைவரும் வீழ்ந்த இடத்து இராமபிரானது துயரத்தைக் கண்ணுற்று அனைத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


துயிர்கள் மட்டுமல்ல, பகையும் பாவமுமே கலுழ்ந்தன என்றமை யைக் காண்க. (ஒப்பு): 'மங்கை யழலும் வானுட்டு மயில் களழுதார்' (யுத்த. பிராட்டி களம். 5); 'கிள்ளையொடு பூவை யழுத' (அயோத். நகர்நீ 100) என்ற செய்யுட்களும் இங்குக் காணத்தகுவன; அருள் கண்டார்த்தது போன்று, அவலம் கண்டயர்த்தன என்க.

## வீடணற்கு முடி சூட்டுமாறு இராமபிரான் இலக்குமணற்குக் கட்டளை யிடுதல்

447. உஞ்சனே னடிய னேனென் றூழ்முறை வணங்கி நின்ற
அஞ்சன மேனி யானை யழகனு மருளி னேக்கித்
தஞ்சநற் றுணைவ னுன தவறிலாப் புகழான் றன்னைத்
துஞ்சலி னயனத் தைய சூட்டுதீ மகுட மென்ருன்.

அழகனும் - சுந்தரனுன இராமபிரானும், 'அடியனேன் உய்ஞ்ச னேன் என்று - அடியேன் பிழைத்தேன்' என்று, ஊழ் முறை வணங்கி நின்ற - வணங்க வேண்டிய முறைமைப்படி வணங்கி நின்ற, அஞ்சன மேனியானை - மை போன்று கறுத்த உடலின் நிறத்தையுடைய வீடணனை, அருளின் நோக்கி - கருணையுடன் பார்த்து, (பின்பு, இலக்குவனை நோக்கி), 'துஞ்சல் இல் நயனத்து ஐய - உறக்க மில்லாத கண்களையுடைய ஐயனே! தஞ்சம் நல் துணைவன் ஆன - நமது அடைக்கலமாகி உயர்ந்த நண்பன் ஆன, தவறு இலா புகழான் தன்னை - குற்றமற்ற கீர்த்தியுள்ள வீடண னுக்கு, மகுடம் சூட்டுதி என்ருன் - மணி முடியைச் சூட்டுவாயாக' என்று சொன்னுன்.

உய்ஞ்சனன்; உய்ந்தனன் என்பதன் போலி. ஊழ் முறை வணங்குதல் - வணங்க வேண்டிய முறைப்படி வணங்குதல். அழகன் - இராமபிரான்; 'அல்லியாண் டமைந்த மேனி யழகன்'; 'அந்த மிலழகனை' (அயோத்தி. குகப். 12): 'அழகனை யழகி யாளும்' (ஆரணிய. 785): மற்றும், சுந்தர. 197, 390, 612, துணைவன் - தம்பியுமாம்; 'குகனெடு மைவரானேம்' (யுத்த. 449) என்ற செய்யுளையும் காண்க. துணைவனுன தவறிலாப் புகழான், என்றமை, 'நல்லா ரெனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை, யல்லா ரெனினும் அடக்கிக் கொளல்வேண்டும்' (நாலடி. 221): 'தம

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ரென்று தாங்கொள்ளப் பட்டவர் தம்மைத், தமரன்மை தாமறிந்தாராயின், அவரைத், தமரினும் நன்கு மதித்துத் தமரன்மை, தம்முள் அடக்கிக் கொளல். (நாலடி. 229): என்றமையால் விளங்கும். துஞ்சலில் நயனத்தைய; பதினான் காண்டுகள் உறக்க மின்றியிருந்தே இலக்குவன் இந்திரசித்தைக் கொல்லவேண்டுதலின், இங்ஙனம் கூறப்பட்டது; 'வீரன், கங்குல் எல்லை காண்பளவும் நின்றான், இமைப்பிலன் நயனம்'; 'துறக்க மெய்தி யவருந் துறவாத, உறக்க மென்பதனை யோட முனிந்தான்' (யுத்த. இராவணன் வாநரத்தானை. 22); 'மனையும் வாழ்வு முறக்கமு மாற்றினான்' (யுத்த. நாகபாசப். 153).

பி - ம். 1. உஞ்சனன்.

3. தஞ்சமென் றுணைவனுய நின்பெருந் தமையன் றன்னை; தஞ்செனத் துணை; தகைவிலா; புகழோன்.

4. நயனந்தையா; நயனத் தண்ணல். 144

## திருவடிநிலைகளைத் தனக்குச் சூட்டுமாறு வீடணன் வேண்டல்

448. விளைவினை யறியும் வென்றி வீடண னென்றும் வீயா
அளவறு பெருமைச் செல்வ மளித்தனை யாயி னைய
களவிய லரக்கன் பின்னே தோன்றிய கடன்மை தீர
இளையவற் கவித்த மோலி யென்னையுங் கவித்தி
[யென்றான்.

விளைவினை - செய்கையின் பயனை, அறியும் - முன்கூட்டி அறியவல்லவனான, வென்றி வீடணன் - வெற்றிமிக்க வீடணன், (இராமபிரானை நோக்கி), 'ஐய - தலைவனே! என்றும் வீயா - எப்பொழுதும் அழியாததும், அளவு அறு பெருமை செல்வம் - அளவற்ற பெருமையுடையதுமான செல்வத்தை, அளித்தனை ஆயின் - அளித்து அருள்வாயாகில், களவு இயல் அரக்கன் பின்னே தோன்றிய - வஞ்சனையையே இயல்பாகவுடைய அரக்கனுக்குத் தம்பியாகத் தோன்றிய, கடன்மை தீர - தொடர்புமுறை நீங்கும்படி, இளையவன் கவித்த மோலி - உங்கள் தம்பியான பரத

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



னுக்குச் சூட்டிய மகுடத்தை, என்னையும் கவித்தி - எனக்கும் சூட்டுவீராக' என்றான் - என்று சொன்னான்.

இராமபிரான் கட்டளைப்படி அவ்விடத்திலேயே வீடணற்கு இலக்குவன் பட்டாபிடேகம் செய்துவைத்ததாக வான்மீகம் கூறும். கம்பர் இந்த வைபவத்தை இராவணன் வதைக்குப் பின்னரே நிகழ்ந்ததாகக் கூறுவர்; 'ஆதி நாயக னுக்கிய நூன் முறை, நீதியானை நெடுமுடி சூட்டுவாய்'; 'அய்ய னாணையி னாலிளங் கோளரி, கய்யி னான்மகு டங்கவித் தானரோ' (யுத். மீட்சிப். 2, 6) என்பன காண்க. முக்காலமும் உணர்ந்தவனாதலின், 'விளை வினை யறியும் வென்றி வீடணன்' எனப்பட்டான். இளையவற் கவித்த மோலி - பாதுகை; அயோத். கிளைகண்டு. 135, 136, 139 காண்க; (ஒப்பு): 'புன்னெறியா மமண்சமயத் தொடக்குண்டு போந்தவுடல், தன்னுடனே யுயிர்வாழத் தரியேனான் தரிப்பதனால், என்னுடைய நாயகனின் னிலச்சினையிட் டருளென்று, பன்னு செழுந் தமிழ்மாலை முன்னின்று பாடுவார்' (பெரியபு. திருநாவுக். 150)-உம், 'பொன்னார் திருவடிக் கொன்றுண்டு' (தேவா. 937 : 1) என்ற அப்பர் சுவாமிகள் அருளிய பாசுரமும் நோக்குக. இவற்றினின்று வீடணன் இலங்கை யரசினை விரும்பினவன் அல்லனென்பதும், முத்திநிலையையே விழைந்தவன் என்பதும் பெறப்படும். 'ராஜ்ய காங்க்ஷீ விபீஷண:' என்ற முதனூல் சொற்றொடர்க்கும், 'மோட்ச சாம்ராஜ்யம்' என்றே பொருள் கோடல் தகும் என்பர். எனினும், 'அருத்தியும் அரசின் மேற்றே' (யுத். 410) என இராமபிரானும், 'மேலரசு செய்து வான் விரும்பி மேயினான்' (யுத். 395) என அநுமனும் கூறினர் ஆகலானும், இலங்கை யரசாட்சியும் அவன் விரும்பினன் என்பதும் ஒருவாறு ஊகிக்கப்படும். மற்றும், 'நிரம்பிய ஒருவன் காத்த நிறையரசு' அராஜகமாயின் பல இடர்ப்பாடுகள் நாட்டில் நிகழக்கூடுமாதலானும், இராமபிரானே அவனை முடிசூட்டிக் கொள்ளுமாறு வற்புறுத்தலானும் வீடணன் அரசேற்றனன் என்க. இப்படலம் 10, 11, 12, 13-ஆம் செய்யுட்களிலிருந்து, வீடணன் முன்னுணர்ச்சி யுள இராமபிரானோடு பகைமை அரக்கர் பூண்டறுவதற்கே காரணமாம் என்று கூறினனாகலின், 'விளைவினை யறியும் வீடணன்' என்றான் எனினுமாம். மற்றும், 'இந்திரப் பெரும்பதம் இழக்கின்றாய்' (யுத். 84); 'அவ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ரொடும் மாறுகோடல் கருமமன்று' (யுத்த. 109); 'இளையொடு மடியா, அசைவில் கற்பினவ் வணங்கைவிட் டருளுதி' (யுத்த. 110) என்று அவன் தமையனிடம் கூறினமையும் காண்க.

பி - ம். 1. அறியும் மேன்மை.
2. அளவறும்; ஆகிலையா.
3. கடமை; கட்டைத்.
4. இளையவன் கவித்த மௌலி.

145

449. குகனெடு மைவ ரானே முன்புபின் குன்று சூழ்வான்
மகனெடு மறுவ ரானே மெம்முழை யன்பின் வந்த
அகனமர் காத லைய நின்னெடு மெழுவ ரானேம்
புகலருங் கானந் தந்து புதல்வராற் பொலிந்தா னுந்தை.

(அதனைக்கேட்ட இராமபிரான்), 'எம் உழை அன்பின் வந்த அகன் அமர் காதல் ஐய - எம்பால் அன்புடன் வந்திட்ட மனம் பொருந்திய அன்புடன் கூடிய ஐய! முன்பு - முதலில், குகனெடும் ஐவர் ஆனேம் - குகனெடும் ஐவர் ஆயினேம்; பின் - அதன் பின்னர், குன்று சூழ்வான் மகனெடும் அறுவர் ஆனேம் - பெரு மலையைச் சுற்றி வருபவனுகிய சூரியன் மகனுன சுக்கிரீவனுடன் ஆறு பேராயினேம்; நின்னெடும் எழுவர் ஆனேம் - இப்போது நின்னுடன்கூடி ஏழு பேராயினேம்; உந்தை - உன் தந்தையான தயரதன், புகல் அரு கானம் தந்து - நுழைதற்கரிய காட்டு வாசத்தை எனக்குக் கொடுத்து, புதல்வரால் பொலிந்தான் - பல புத்திரர்களால் விளக்கம் உற்றுன்' (என்று கூறியருளினுன்).

குகனேடு மைவரானேம்; என்னுயி ரனையாய்நீ யிளவலு னிளையானிந், நன்னுத லவணின்கேள்' (அயோத்தி. கங்கைப். 73); 'துன்புள தெனினன்றோ சுகமுள ததுவன்றிப், பின்புள திடைமன்னும் பிரிவுள தெனவுன்னேல், முன்புள மொருநால்வே முடிவுள தெனவுன்னு, அன்புள வினிநாமோ ரைவர்க ளுளரானேம்' (அயோத்தி. கங்கைப். 74); என இராமபிரானும் 'மன்முன்னே தழீஇக் கொண்ட மனக்கினிய துணைவனேல், என்முன்னே யவற்காண்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பேன்' (அயோத்தி. குகப். 27) ; என்று பரதனும், 'ஐவீரு மொருவீரா யகனிலத்தை நெடுங்கால மளித்திர்' என்று கோசலையும் கூறியவை இங்குக் குறிக்கொள்ளத்தகும். 'ஆழ நீர்க்கங்கை யம்பி கடாவிய, ஏழை வேடனுக் கெம்பியுன் றம்பிநீ, தோழன் மங்கை கொழுந்தி யெனச்சொன்ன, வாழி நண்பினை' (சுந்தர. 352); 'ஏழை யேதலன் கீழ்மக னென்ன, திரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து, மாழைமான் மடநோக்கி யுன்தோழி, யும்பி யெம்பியென் றொழிந்திலை யுகந்து, தோழ னீயெனக் கிங்கொழி யென்ற, சொற்கள் வந்தடி யேன்மனத் திருந்திட, ஆழி வண்ணநின் னடியிணை யடைந்தேன், அணி பொழில்திரு வரங்கத் தம்மானே' (பெரியதிரு. 5:8:1) என்ற பாசுரங்களும் இங்குக் காண்க. சுக்கிரீவனை ஆருவதாக ஏற்றது; 'நின்னோ, டுற்றவர் எனக்கு முற்றூர் உன்கிளை யெனதென் காதற், சுற்றமென் சுற்ற நீயென் னின்னுயிர்த் துணைவன்' என்றான். இங்கு துணைவன் தம்பியென்னும் பொருளது என உணர்க. இங்கு 'விபீஷணனை இராவணன் குலபாம்ஸாம்' என்றான். இராமபிரான் அவனை இக்ஷ்வாகு வம்சியராகவே நினைத்து வார்த்தையருளிச் செய்ததாம். இராமபிரான் பரமசுலபனாக வீடணனிடம் அன்பு காட்டிக்கூறிய இச் செய்யுள் மக்கட் குழுவிற்கே அன்பின் திறத்தையும் சகோதரத் தன்மையையும் எடுத்துக் காட்டுவதாகும். 'யான் வனம் போந்த தெம்முடைப் புண்ணியத்தால்' என்று தண்டகாரணிய முனிவர்க்குக் கூறியபடியே, இங்கும் தந்தை புகலரும் கானம் தந்தது பெருநன்மைக்கே என்று கூறுதல் காண்க. எந்தை யென்னாது உந்தை யென்று கூறி ஒரு வயிற்றிற் பிறவாவிடினும், வீடணன் தந்தையாகவே தயரதனைக் கூறியது பாராட்டத்தக்கது. இதுவே தொடர்புடையா ரல்லாதா ரிடத்தும் காட்டும் அருள் எனப்படும். இங்கு இராமபிரான் வீடணனை, ஐய, என்றழைத்தது அன்பால் என்க; இவ்வாறே, இலக்குவனை அத்தன், என்று அழைத்தமையும் கிட்கிந்தா. 269-இல் காண்க. 'இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி' என்ற வீடணனின் விண்ணப்பத்தை ஏற்றுக்கொண்ட முறையில், இராமபிரான் அவனைப் பரதனை ஒக்க ஓர் உடன்பிறந்தவனாக ஏற்றுக் கொண்டமை இச் செய்யுளால் விளங்குவது காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. ஜவ ராஜனும்.

2. அறுவரானேம்; வந்தாயன்பின்.

3. காதலையா; ஆனேம்.

4. புதல்வரிற், புதல்வராய்; பொலிந்தா னெந்தை. 146

## வீடணன் திருவடி நிலையைச் சூடுதல்

450. நடுவினிப் பகர்வ தென்னே நாயக
நாயி னேனை
உடனுதித் தவர்க ளோடு மொருவனென்
றுரையா நின்றுய்
அடிமையிற் சிறந்தே னென்னு வயிர்ப்பொடு
மச்ச நீங்கித்
தொடுகழற் செம்பொன் மௌலி சென்னியிற்
சூட்டிக் கொண்டான்.

(அதுகேட்ட வீடணன் இராமபிரானை நோக்கி), 'நாயக - தலைவனே! நாயினேனை - நாயினும் இழிந்த என்னை, உடன் உதித்தவர்களோடும் ஒருவன் என்று உரையா நின்றுய் - உன் உடன் தோன்றியவர்களுள் ஒருத்தன் என்று பகர்கின்றுய்; (இங்ஙனம் என்பால் அன்பு காட்டி யிருக்க), நடு இனி பகர்வது என்னே - இப்போது இடையே நான் சொல்ல வேண்டுவது என்ன உள்ளது? அடிமையில் சிறந்தேன் - உன் அடியனுன தன்மையினுல் மேம்பாடு எய்தினேன்', என்னு - என்று கூறி, அயிர்ப்பொடும் அச்சம் நீங்கி - சந்தேகத்தோடு பயமும் நீங்கப்பெற்று, தொடு கழல் செம்பொன் மௌலி - அணிந்த வீரக் கழலை யுடைய திருவடிகளாகிய செம்பொன் மணி முடியை, சென்னியில் சூட்டி கொண்டான் - சிரத்தில் அணிந்து கொண்டான்.

'இளையவற் கவித்த மோலி யென்னையும் கவித்தி' எனத்தான் விழைந்த வண்ணமே, பெருமாள் திருவடி நிலைகளாகிய செம்பொற் மகுடத்தைச் சென்னிமீது சூட்டிக்கொண்டான் விடணன் என்க. இலக்குவனுக்கு 'மகுடம் சூட்டுதி' என்று இடப்பெற்ற கட்டளை இராவணன் வதைக்குப்பின் நிகழவிருப்பதும் காண்க.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அயிர்ப்பும் அச்சமும் நீங்கி: இராமபிரான் ஏற்பரோ ஏற்கமாட்டாரோ என்ற முதற்கண் நிகழ்ந்த ஐயமும், வானரர்கள் தன்னை என்ன செய்வார்களோ என்ற பயமும் நீங்கப்பெற்று என்க. கழல், இங்குப் பாதுகை.

பி - ம். 1. நடுவினில்; நாயகன்.

2. நின்ருன்; உரைத்தபோதும்.

3. என்றே; அயிர்ப்பெனும், தொடுகழற் பாதந்தாங்கி; சூடிக்கொண்டான். 147

## அப்பொழுது நிகழ்ந்தவை

451. திருவடி நிலையைச் சூடிச் செங்கதி ருச்சி சேர்ந்த
அருவரை யென்ன நின்ற வரக்கர்தம் மரசை நோக்கி
இருவரு முவகை கூர்ந்தார் யாவரு மின்ப முற்ருர்
பொருவரு மமரர் வாழ்த்திப் பூமழை பொழிவ தானர்.

**திருவடி** நிலையை சூடி - இராமபிரானது திருவடி நிலைகளைத் (தனது சிரசிலே) அணிந்து, செம் கதிர் உச்சி சேர்ந்த - செந்நிறக் கிரணங்களையுடைய சூரியன் தன் சிகரத்திலே சேரப்பெற்ற, அரு வரை என்ன நின்ற - அரிய மலை போன்று நின்ற, அரக்கர் தம் அரசை நோக்கி - அரக்கர்களின் மன்னவன், ஆன வீடணனைப் பார்த்து, இருவரும் உவகை கூர்ந்தார் - இராம இலக்குமணராகிய இருவரும் மகிழ்ச்சி யடைந்தார்கள்; யாவரும் இன்பம் உற்ருர் - மற்றும் அங்கிருந்த எல்லோரும் இன்பம் அடைந்தார்கள்; பொரு அரும் அமரர் வாழ்த்தி பூ மழை பொழிவது ஆனர் - ஒப்பற்ற தேவர்களும் வாழ்த்துக் கூறி மலர்மழை பொழிவதானர்.

இருவர் என்பது வீடணனுக்காகப் பரிந்து பேசிய அநுமனையும், இராமபிரான் கட்டளையை மேற்கொண்டு அவனை அழைத்து வந்த சுக்கிரீவனையும் குறிக்கும் என்றும் கூறுவர். எந்த எந்த இடங்களில் தங்கள் காரியத்துக்கு அநுகூலம் ஏற்படுமோ அந்த அந்த இடங்களில் எல்லாம் மலர்மாரி பொழிந்து வாழ்த்துவர் அமரர் என்பதை இந்நூலிற் பல இடங்களிலும் காணலாம்.

பி - ம். 1. தலையிற்சேர, தலைமேற்சூடி, தலையிற் சூடி, முடியிற் சூட்டி, நேர்ந்த.

3. இருவரு மின்ப முற்ருர். 148

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## அப்போதெழுந்த ஆரவாரம்

452. ஆர்த்தன பரவை யேழு மார்த்தன மேக மார்த்த
வார்த்தொழிற் புணருந் தெய்வ மங்கல முரசுஞ் சங்கும்
தூர்த்தன கனக மாரி சொரிந்தன நறுமென் சுண்ணம்
போர்ந்தது வானத் தன்றங் கெழுந்தது துழனிப்
[பொம்மல்.

(அப்பொழுது), ஆர்த்தன பரவை ஏழும் - ஏழு கடல்களும் ஆரவாரித்தன; மேகம் ஆர்த்தன - சப்த மேகங்களும் ஆரவாரித்தன; வார்தொழில் புணரும் தெய்வம் மங்கல முரசும் சங்கும் ஆர்த்த - வாரினால் கட்டுதல் அமைந்த தெய்வத் தன்மை வாய்ந்த மங்கல முரசுகளும் சங்குகளும் முழங்கின; கனக மாரி தூர்த்தன - (தேவர்கள் பொழிந்த) பொன் மழையானது நில வுலகத்தை நிரப்பியது; நறுமென் சுண்ணம் சொரிந்தன - நறிய மெல்லிய சுண்ணப் பொடிகள் சொரிந்தன; அன்று அங்கு எழுந்தது துழனி பொம்மல் - (அப்பொழுது) அந்த இடத்தில் உண்டான பேரொலியானது, வானத்து போர்த்தது - ஆகாயம் முழுவதும் பரந்து மூடியது.

இச் செய்யுட்கண் கூறப்பட்ட ஆரவாரங்கள் பின் நிகழ இருக்கும் இராவணவதத்திற்கும் அறிகுறிகள் என்க. மேகமார்த்த, முரசும் சங்கும் ஆர்த்தன எனக் கூறினமையின், அவற்றை விண்ணவரது ஆரவாரமும், பூவுலகில் வானரருடைய ஆரவாரமும் என்று முறையே கொள்க. முரசுஞ் சங்கும் ஆர்த்தல்; ஐங்குறு. துழனிப் பொம்மல் - ஒலி மிகுதி; பொம்மல். சீவக. 1492.

பி - ம். 1. அமரர் நாடும்; வேதமும்; (2) வார்த்தொகை மருவும் தெய்வ.
4. போர்த்தன; வானந்தொன்ற, அன்று வானத்து; ஒன்றே வானத்து; பம்மல். 149

453. மொழிந்தசொல் லமிழ்த மன்னு டிறத்தினின்
முறைமை நீங்கி
இழிந்தவென் மரபு மின்றே யுயர்ந்தவென்
றிடரிற் றீர்ந்தான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**செழுந்தனி மலரோன் பின்னை யிராவணன்
தீமைச் செல்வம்
அழிந்ததென் றறனுந் தன்வா யாவலங்
கொட்டிற் றன்றே.**

செழு தனி மலரோன் - தழைத்த ஒப்பற்ற தாமரை மலரில் வாழ்பவனான பிரமதேவன், 'மொழிந்த சொல் அமிழ்தம் அன்னாள் திறத்தினில் முறைமை நீங்கி - பேசுகின்ற சொல்லின் இனியபண்பால் அமிழ்தத்தை ஒத்தவளான சீதாதேவி திறத்தில் நெறிமுறை தவறி நடந்ததால், இழிந்த என் மரபும் - தாழ்வினை அடைந்துள்ள எனது புலத்தியன் வழியும், இன்றே உயர்ந்தது என்று இடரில் தீர்ந்தான் - இப்பொழுதே சிறந்து விளங்கியது' என்று எண்ணித் துன்பம் நீங்கப்பெற்றான்; பின்னை - இனி, இராவணன் தீமை செல்வம் அழிந்தது என்று - இனிமேல் இராவணனுடைய கெடுதலையே விளைக்கும் செல்வம் அழிந்தது என்றே, அறனும் தன் வாய் ஆவலம் கொட்டிற்று - தருமதேவதையும் தன் வாய் திறந்து ஆரவாரம் செய்தது. அன்று, ஏ - ஈற்றசைகள்.

தன் மரபிற்கு நேர்ந்த பேரிழுக்குத் தீர்ந்ததென்று பிரமன் துன்பொழிந்து மகிழ்ந்தான். இனி, இராவணன் இறந்துபடுவது ஒருதலை என்று அறக்கடவுள் மகிழ்ந்து கூத்தாடிற்று என்றார். (ஒப்பு) 'வானவரு முனிவர் குழுவும் தனியறமுங் குனிக்க' (சுந்தர. 544): மொழிந்த சொல்லமிழ்த மன்னாள் பிராட்டி; 'அஞ்சொற்க ளமுதில் அள்ளிக்கொண் டவள்' (ஆரணிய. 623); 'குயிலும் கரும்பும் செழுங்தேனும் குழலும் யாழும்.........அயிலுமமுதும் சுவைநீத்த' (ஆரணிய. 1058). ஆவலங் கொட்டுதல்: (கந்தபு. சிங்கமுகா.: 438).

பி - ம். 1. அமிர்தம்; திறத்தினுல்.
2. அழிந்த, அழிந்தது; நின்றே; ஏம்பலுற்றான்.
3. மலரோன் நல்கும்.

150

## முடிசூடிய வீடணனைப் பாடிவீட்டினை வலம் செய்விக்குமாறு இராமபிரான் கட்டளையிடல்

454\. **இன்னதோர் செவ்வித் தாக விராமனு மிலங்கை வேந்தன்
தன்னெடுஞ் செல்வந் தானே பெற்றமை பலருங் கேட்பப்
பன்னெடுந் தானை சூழப் பகலவன் சேயு நீயும்
மன்னெடுங் குமர பாடி வீட்டினை வலஞ்செய் கென்றான்.**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இன்னதோர் செவ்வித்து ஆக - இவ்வாறான காலநிலை நேர்ந்ததாக, இராமனும் - இராமபிரானும், (இலக்குவனை நோக்கி), மன் நெடு குமர - பெருமைதங்கிய அரசிளங்குமரனே! இலங்கை வேந்தன் தன் நெடு செல்வம் - இலங்கை மன்னவனான இராவணனுடைய அளவற்ற செல்வத்தை, தானே - இந்த வீடணனே, பெற்றமை பலரும் கேட்ப - அடைந்தமையைப் பலரும் கேட்டு மகிழுமாறு, பல் நெடும் தானை சூழ - பலவாகிய சேனைகள் சூழ்ந்து உடன்வர, பகலவன் சேயும் நீயும் - சூரியன் புதல்வனான சுக்கிரீவனும் நீயும், பாடி வீட்டினை வலம் செய்க என்றான் - இந்தப் படைவீட்டைச் சுற்றி ஊர்வலமாக வாருங்கள் என்று பகர்ந்தான்.

பாடிவீடு - பாசறை. வீடணனைத் தான் அங்கீகரித்து முடிசூட்டியதைப் பலரும் தெளிந்து அவனிடம் அன்புகூருமாறு பாடி வீட்டை வலம் செய்வித்தான். செய்கவென்றான் என்பது செய்கென்றான் எனத் தொக்கது. மன்னெடுங் குமர என்று அங்கதனை விளித்துக் கூறியதாகவும் கொள்ளலாம். பாடிவீடு வலம்வருதல், புறத்திணைத் துறையாகிய களங்கொள்ளுதலின்பாற் படும்; இச்சொல் களத்தைத் தமதாக்கிக்கொள்ளுதல் எனப் பொருள்படும்.

பி - ம். 1. இன்னதே ; காலமாக.

2. பலரும் காணப்.

4. நல்நெடுங் குமர. 151

455. அந்தமில் குணத்தி னானை யடியிணை முடியி னோடும்
சந்தன விமான மேற்றி வாநரத் தலைவர் தாங்க
இந்திரர்க் குரியசெல்வ மெய்தினா னிவனென் றேத்தி
மந்தரத் தடந்தோள் வீரர் வலஞ் செய்தார் [தானைவைப்பை.

மந்தரம் தட தோள் வீரர் - மந்தரமலையைப்போன்ற பெரிய புயங்களையுடைய வீரர்கள், அந்தம் இல் குணத்தினானை - முடிவு இல்லாத நற்பண்புகள் வாய்ந்த வீடணனை, அடி இணை முடியினோடும் - (இராமபிரானது) திருவடி நிலைகளாய மணிமகுடத்தோடும், சந்தனம் விமானம் ஏற்றி - தேர்போன்று காணப்படுகின்ற விமானத்தின்மீது அமரச்செய்து, வாநர தலைவர் தாங்க -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வானரத் தலைவர்கள் அதனைத் தாங்கி நிற்க, இந்திரற்கு உரிய செல்வம் இவன் எய்தினான் என்று ஏத்தி - இந்திரனுக்குரிய பெருஞ் செல்வத்தை இவன் அடையப்பெற்றான் என்று புகழ்ந்து, தானை வைப்பை -(சேனைகள் தங்கியிருந்த) படைவீட்டை, வலம் செய்தார் - வலமாகச் சுற்றிப் பவனி வந்தனர்.

அடியிணை முடி - திருவடி நிலை. சந்தனம் - தேர்; ச்யந்தன என்ற வடசொற்றிரிபு. 'மணிச் சந்தனத் தேற்றிய' (வி. பா. குரு குல. 124); சந்தன விமானம் இருபெயரொட்டுமாம்; இந்திரர்க் குரிய செல்வம்; இந்திரதிருவன் என்று கூறுவது வழக்கு. முன்னர், 'இந்திரப் பெரும்பதம் இழக்கின்றாய்' (யுத்த. 85) என்று வீடணன் தன் அண்ணனை நோக்கிக் கூறியது காண்க. 'இந்திர திருவன் றன்னை' (பால. எதிர்கோள். 4); 'இந்திர திருவற் குய்த்தார்' (சீவக. 1264). மந்தரத் தடந்தோள்; 'மந்தர மனைய தோள் வள்ளல்பேர் சொல' (அரிச். பு. விவாக. 235). தானைவைப்பு-பாசறை.

பி - ம். 3. இந்திரற்கரிய; ஏத்த.
4. பாடிவைப்பை.

162

456. தேடுவார் தேடநின்ற சேவடி தானுந் தேடி
நாடுவா னன்றுகண்ட நான்முகன் கழீஇய நன்னீர்
ஆடுவார் பாவ மைந்தும் நீங்கிமே லமர ராவார்
சூடுவா ரெய்துந் தன்மை சொல்லுவார் யாவர் சொல்லீர்.

தேடுவார் - (கடவுளின் உண்மை நிலையையும் அவன் அருட் டிறத்தையும் அறியவேண்டும் என்று) நாடுபவர்களான பரமஞானி கள், தேட நின்ற சேவடி தானும் தேடி - தேடும்படி நின்ற திருவடி யிணைகளைத் தானும் தேடி, நாடுவான்-நாடுபவனாகி, அன்று கண்ட நான் முகன் கழீஇய நல் நீர் - (திருவிக்கிரமாவதாரத்தில்) காணப் பெற்றவனான பிரமதேவன் நீராட்டியதனால் எழுந்த சிறந்த கங்கையின் தூய நீரில், ஆடுவார் - நீராடுவோர், பாவம் ஐந்தும் நீங்கி மேல் அமரர் ஆவார் - பஞ்சமகா பாதகங்களும் நீங்கப்பெற்று மேன்மைபெற்ற தேவர்கள் ஆவார்கள்; இவ்வாறெனில், சூடுவார்

CC-0. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எய்தும் தன்மை சொல்லுவார் யாவர் சொல்லீர் - அந்தச் சேவடிகளையே சிரத்தில் அணிபவர் அடையும் மேம்பாட்டை யெடுத்துச் சொல்ல வல்லவர் யாவர்? சொல்வீர்களாக.

இச் செய்யுள் கவிக்கூற்று. திருமால் திருவடியிற்பட்ட நீரே பெரும்பாதகங்களைப் போக்குமானால், அந்தத் திருவடியை நேரிற் சூடுவோரின் பெருமையை யாவர்தான் மதிப்பிட முடியும் எனப் பட்டது. பாவம் ஐந்து : கொலை, களவு, சூது, கள், காமம் என்பன; கொலை, களவு, பொய்ம்மொழிதல், கள்ளருந்தல், குரு நிந்தை என்றும் கூறுவர். 'கைதவ மியற்றி யாண்டும் கழிப்பருங் கணக்கிறீமை, வைகலும் புரிந்துளாரும் வானுயர் நிலையை வள்ளல், எய்துவர் பெறுவர் என்றால் இணையடி யிறைஞ்சி யேவல், செய்தவர் பெறுவதையா செப்பலாஞ் சீர்மைத்தாமே' (கிட்கிந்தா. 362) என்பது வாலி கூற்று. 'இருவினையும் துப்புற நீத்தனைய சுடர்த் திருவடியாற் றுடைத்தாய் நீ' (ஆரணிய. 61).

பி - ம். 1. தேடநின்ற திருவடி.
2. கழிய.
3. பாவ மஞ்சும்.
4. கண்டிர். 153

457. இற்றைநா ளளவும் யாரு மிருடிக ளிமையோர் ஞான
முற்றினு ரன்பு பூண்டார் வேள்விகண் முடித்து நின்றூர்
மற்றுமா தவரு மெல்லாம் வாளெயிற் றிலங்கை வேந்தன்
பெற்றதார் பெற்று ரென்று வியந்தனர் பெரியோ
[ரெல்லாம்.

பெரியோர் எல்லாம் - பெரியோர்கள் எல்லோரும், இருடிகள் இமையோர் ஞானம் முற்றினார் - முனிவர்கள், தேவர்கள், ஞானம் முதிர்ந்தவர்கள், அன்பு பூண்டார் - பக்தி மேற்கொண்டவர்கள், வேள்விகள் முடித்து நின்றார் - யாகங்களை நிறைவேற்றியவர்கள், மற்றும் மாதவரும் யாரும் எல்லாம் - மேலும் தவசிரேட்டர்கள் ஆகிய எல்லோரிலும், வாள் எயிறு இலங்கை வேந்தன் பெற்றது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இற்றை நாள் அளவும் ஆர் பெற்றுர் என்று - வாள்போன்ற தந்தங்களையுடைய இலங்கை மன்னன வீடணன் அடைந்த இந்த உயர்ந்த பேற்றை இன்றைய நாள் வரையில் இவன் போல் வேறு யாவரே கைவரப்பெற்றுர் என்று, வியந்தனர் - மருட்கை எய்தினர்.

இறைவனையே நேரிற்கண்டு, புகல் புகுந்து அவனால் அருள் செய்யப்பெற்று, அவன் சேவடிகளைச் சிரமேற்றுங்கி இம்மையிற் பேரரசு பெற்று மறுமையிலும் நிரதிசயப் பேரானந்தப் பெருவாழ்வு எனப்படும் நித்தியசூரிகளின் பேற்றை வீடணன் அடைந்ததுபோன்று வேறு எவரும் பெறவில்லை என்று பெரியோர் வியந்தனர் எனப்பட்டது; இதுவும் கவிக்கூற்று. சில சுவடிகளில் இதனுடன் இப்படலம் முடிகின்றது.

பி - ம். 4. பெயர்ந்தனர்.

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

வானவ ரிதனைக்கூற வலங்கொடு தானை வைப்பைத்
தானையந் தலைவரோடும் சார்ந்தவீ டணனும் தாழா
தானுடைப் பிறவி தீர்ந்தேன் எனமனத் துவந்தாங் [கண்ணல்
தேனுகு கமல பாதம் சென்னியால் தொழுது நின்றான்.

## இராமபிரான் வீடணனுக்கு உறைவிடம் அருளியதும் சூரியன் மறைவும்

458. வந்தடி வணங்கிய நிருதர் மன்னவற்
கந்தமி லாததோ ருறையு ளவ்வழித்
தந்தனன் விடுத்தபின் இரவி தன்கதிர்
சிந்தின வெய்யவென் றெண்ணித் தீர்ந்தனன்.

(இவ்வாறு), வந்து - ஊர்வலமாக வந்து, அடி வணங்கிய - தன் திருவடிகளில் வணக்கம் செய்த, நிருதர் மன்னவற்கு - அரக்கர் வேந்தனை வீடணனுக்கு, அந்தம் இலாதது ஓர் உறையுள் - முடி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வற்ற போகங்களுடன் கூடிய ஓர் இருப்பிடத்தை, அ வழி தந்தனன் விடுத்த பின் - அவ்விடத்து அருளி விடை யீந்த பின்னர், இரவி - சூரியன், சிந்தின தன் கதிர் வெய்ய என்று எண்ணி தீர்ந்தனன் - சிந்திய தன் கிரணங்கள் வெப்பமுள்ளன என்று நினைந்து மேலைத்திக்கில் மறைந்தனன்.

இக்கவி ஏதுத் தற்குறிப்பேற்றவணி. சூரியன் தன் வெம்மையால் இராமபிரான் முதலியோர் வருந்தக்கூடும் என்று மறைந்தனன் எனப்பட்டது. இச் செய்யுள் சில பிரதிகளில் இதனை அடுத்த படலத்தின் முதலாகக் காணப்படுகிறது. 155

வீடணன் அடைக்கலப் படலம் முற்றும்.

---

## வீடணன் அடைக்கலத்தைப்பற்றி வான்மீகம் கூறுவது

வீடணன் இராவணனை நோக்கிச் சீதை ஐந்தலை நாகம் என்றும், எத்தகைய அரக்கர் வீரர்களும் இராமனம்பின் எதிர் நிற்கவல்லரல்லர் என்றும், சீதையை விட்டுவிடுவதே நலம் என்றும் கூறப் பிரகத்தன் அதனை மறுக்கின்றான். பின்னர், இந்திரஜித்தைப் பழித்து வீடணன் கூற இராவணன் பகைவனோடும் பாம்பொடும் உறைந்தாலும் உறையலாம், தாயாதிகளுடன் வசிக்க முடியாது என்றும், தாயாதிகள் காட்டுயானைகளைப் பாகற்குப் பிடித்துதவும் பழகிய பெண் யானைகள் என்றும் வெகுண்டு கூற, வீடணன் பின்னும் நல்லுரைகள் கூறி அவன் வழிக்குவாரான் என்று கண்டு நால்வருடன் எழுந்து இராமபிரான் தங்கியுள்ள இடம் செல்கின்றான். சுக்கிரீவன் அவனைப்பற்றிச் சங்கைகொண்டு அவனைக் கொல்லவேண்டும் என்று சொல்ல, அச்சமயம் இராமபிரான் ஏனைய வானர வீரர்களின் கருத்தை வினவுகின்றான். வினவிய அளவில் அங்கதன், சரபன், சாம்பன், மைந்தன் என்ற இவர்கள் அவனை ஏற்றல் கூடாது என்ற தங்கள் கருத்தைத் தெரிவித்தார்கள். பின்னர், அநுமன் வந்தவனைச் சோதித்து அறிதல் இயலாது என்றும், வீடணன் வந்த காலமும் இடமும் மிகவும் பொருத்தமானவைதாம் என்றும், அவன் முகத்தெளிவி



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


லிருந்து அவனது களங்கமற்ற மனம் விளங்குகின்றதென்றும், தன் அண்ணனது அடாத செயலையும், வாலியை அழித்துச் சுக்கிரீவற்கு அரசளித்த தன்மையையும் கேட்டே சரண்புக வந்தவன் அவன் என்றும், ஆகவே அவனை ஏற்பதே நல்லது என்றும் கூறினான். சுக்கிரீவன் பின்னரும் ஐயுற, இராமபிரான் தன் ஆற்றலுக்கு முன் எவரும் நிற்க இயலாது என்றும், தான் நினைத்தால் பகைவர் அனைவோரையும் விரல் நுனியினாற் கொல்லக்கூடும் என்றும், கொடியவனாயினும் சரண் புகுந்தவனை, ஏற்பதே நலம் என்றும் கூறி, வேடனுக்குத் தன் உயிர்கொடுத்துதவிய புறவின் வரலாற்றையும், கண்டு முனிவரின் அறவுரையையும் கூறிச் சரணம் அடைந்தவன் பாதுகாக்கப்படாமல் வதைக்கப்படுவானேயானால், சரணாகதனுடைய பாவங்களை சரணமடையப் பெற்றவன் பெறுகின்றான் என்பதும் சொல்லி, வீடணனை ஏற்று, அவர்க்கு இலங்கையை யளித்துத் திருமுடி சூட்டி வைக்கின்றான்; பின்னர், அரக்கரின் பலாபலங்களை வீடணன் இராமபிரானுக்குக் கூறுகின்றான்.

---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 5. இலங்கை கேள்விப் படலம்

இது, வீடணன் மூலமாக இராமபிரான் இலங்கையின் நிலைமையைக் கேட்டறிந்ததைக் கூறும் படலம் என விரியும். இது, இலங்கை யளவறி படலம் என்றும், ஒன்னார் வலியறி படலம் என்றும் சில பிரதிகளில் காணப்படுகின்றது.

வீடணன் அடைக்கலம் பெற்று அமைந்தபின் பிராட்டியைப் பிரிந்து நின்ற இராமபிரான் அவன் வாயிலாக மாற்றானாகிய இராவணன் வன்மையையும், அவனது சேனையின் பெருமையையும் இராமபிரான் கேட்டுணர்ந்த செய்திகள் இப்படலத்திற் கூறப்பட்டுள்ளன.

### மாலைப்போது

459. **சந்திவந் தனைத்தொழின் முடித்துத் தன்னுடைப்**
**புந்திநொந் திராமனு முயிர்ப்பப் பூங்கணை**
**சிந்திவந் துறுத்தனன் மதனன் றீநிறத்**
**தந்திவந் திறுத்தது கறுத்த தண்டமே.**

சந்தி - மாலைப்பொழுதில் (செய்யவேண்டிய). வந்தனை தொழில் - வந்தனைகளை, முடித்து - நிறைவேற்றியபின், இராமனும் - இராமபிரானும், தன்னுடை புந்தி நொந்து - தன் மனம் வருந்தியவனாய், உயிர்ப்ப - பெருமூச்சு விடுமாறு, மதனன் - மன்மதன், பூ கணை சிந்தி வந்து உறுத்தனன் - தன் மலர் வாளிகளைப் பெய்துகொண்டு வந்து வருத்தினான்; (அப்போது), தீ நிறத்து அந்தி வந்து இறுத்தது - நெருப்பொத்த செந்நிறம் வாய்ந்த அந்திக்காலமும் வந்து நிலைபெற்றது; அண்டம் கறுத்தது - (பின்னர்) வானம் இருள் மூடப்பெற்றது. ஏ - அசை.

சந்தி வந்தனை தொழில்: க்ஷத்தியர்க்குரிய சந்தியா வந்தனம் முதலிய நித்ய கன்மங்கள். 'சந்தி நோக்கின னிருந்து கண்டனன்: (ஆரணிய. 309 ; 332). க்ஷத்திரியர்க்கும் திரிகால சந்தியாவந்தனம் உண்டென்பதை, 'கௌஸல்யா ஸுப்ரஜா ராமா பூர்வா சந்த்யா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பிரவர்த்ததே, உத்திஷ்ட நரசார்த்தூல கர்த்தவ்யம் தெய்வமாகந் ஹிகம்' என்ற முதனூல் ச்லோகம் கொண்டுணர்க. பூங்கணை - மன்மதனுடைய ஐந்து மலர் அம்புகள். 'நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ, அனைத்துணர்வு போக்கும் அசோகு - புனத்து வளர், முல்லை கிடைகாட்டும் மானே முழுநீலம், சொல்லு மத னம்பின் குணம்' (இரத்தினச் சுருக்கம்). மதனன் - மன்மதன். தீ நிறத்து அந்தி வந்து உறுத்தது - இங்கே குறித்தது செவ் வானம். அண்டம் - உலகமுமாம்; (ஒப்பு): பால. மிதிலைக். 62, 64, 65, 66 காண்க. அந்தி: சந்தி என்னும் வடசொற்றிரிபு. மாலைக் காலம் விரக உணர்ச்சியை மிகுக்கும் என்ற உண்மை இங்குக் கூறப்பெற்றது.

பி - ம். 1. அந்தமில் திறந்ததோர்; தன்னெடும்; தன்னுளே; நான்பெருங்.

2. புத்தி நேர்ந்திரா; இராமனு மிருப்ப, மிருக்க.

3. வந்தொறுத்தனன்; அநங்கன்; செக்கரும்.

## முன்னிரவு நிகழ்ச்சிகள்

460. மாத்தடந் திசைதொறும் வளைந்த வல்லிருள்
கோத்தது கருங்கடல் கொள்ளை கொண்டென
நீத்தநீர்ப் பொய்கையி னிறைந்த நாள்மலர்
பூத்தபோன் மீன்களாற் பொலிந்த தண்டமே.

வளைந்த வல் இருள் - எங்கும் சூழ்ந்த வலிய இருளானது, கரு கடல் கொள்ளை கொண்டு என - கரிய கடல்நீர் கொள்ளை கொண்டாற்போன்று, மா தட திசை தொறும் கோத்தது - பெரிய அகன்ற திக்குகளில் எல்லாம் தொடர்ந்து நின்றது; நீத்தம் நீர் பொய்கையின் - வெள்ளம் பெருகுகின்ற பொய்கையின்கண், நிறைந்த நாள் மலர் - நிறைந்த புதிய மலர்கள், பூத்தபோல் - விரிந்தாற்போல, அண்டம் - வானம், மீன்களால் பொலிந்தது - நட்சத்திரங்களால் விளங்கிற்று. ஏ - அசை.

கொண்டால் என என்பது, கொண்டென என ஆயிற்று. இருள் எங்கும் சூழ்ந்ததைக் 'கடல் கொள்ளை கொண்டென' என்றார்; தற்குறிப்பேற்றவணி. வானத்து உடுக்களின் தோற்றம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொய்கையில் மலர் பூத்ததுபோன்று என்றார்; (ஒப்பு): 'வீங்கு நீர் தாவுதண் மதிதன் னெடுந் தாரகை, ஓவு வானமு முண்ணிறை தாமரைப், பூவெலாம் குடிபோனதும் போன்றதே' (பால. நீர்விளை. 31) காண்க.

பி - ம். 1. மறைந்த, மலர்ந்த, வளைத்த, வளைந்து.

2. வெதுப்பும் வெம்மையால்.

3. நீர்த்த; நிறைந்து தாமரை.

4. பூத்தன, பூத்தென; மின்குலம். 2

461. சில்லியல் கோதையை நினைந்து தேம்பிய
வில்லியைத் திருமனம் வெதுப்பும் வேட்கையால்
எல்லியைக் காண்டலு மலர்ந்த வீட்டினால்
மல்லிகைக் கானமும் வான மொத்ததே

சில் இயல் கோதையை - தகட்டணி பொருந்திய கூந்தலையுடைய பிராட்டியை, நினைந்து தேம்பிய - எண்ணி உளைந்த, வில்லியை - கோதண்டம் என்னும் வில்லைத் தாங்கும் வீரனான இராமபிரானது, திரு மனம் வெதுப்பும் வேட்கையால் - அழகிய உள்ளத்தை வாடச் செய்யவேண்டும் என்னும் விருப்பத்தால், எல்லியை காண்டலும் - இரவு வரக்கண்ட அளவில், மலர்ந்த ஈட்டினால் - விரிந்த தன்மையால், மல்லிகை கானமும் வானம் ஒத்தது - மல்லிகை மலர்கள் மலர்ந்திருந்த வனமும் வானத்தை நிகர்த்து விளங்கிற்று. ஏ - அசை.

சில் இயல் கோதை- சிலவாக வகுத்த அல்லது குளிர்ச்சி பொருந்திய கூந்தல் எனினுமாம். 'சில்ல லோதி' (ஆரணிய. 311). தேம்பல் - வருந்துதல்; 'திமுகத்திட்ட மெழுகிற் றேம்பியும்' (பெருங். உஞ்சைக். 35, 52). எல்லி - இரவு; சுந்தர. 153, 726, 1193; யுத்த. 404. ஈடு - தன்மை; பெருமையுமாம். மாலைக்காலத்தில் மலரப்பெற்ற கானம், இராமபிரானைத் துன்புறுத்தற்கேற்ற இராப் போதாகிய துணைவன்மையைப் பெற்றதனால், முகமலர்ந்தது போன்று அரும்புகள் விரியப்பெற்று உடுக்களுடன் ஒன்றும் ஆகாயம் போன்றது எனப்பட்டது; தற்குறிப்பேற்றவணி, உவமையணியுமாம். இங்கு மல்லிகை வெதுப்பியதாகக் கூறியது மதனன் அம்புகளில் ஒன்றாகிய முல்லையின் இனம் அது என்பதுபற்றிப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



போலும். தேம்பிய: கால வழுவமைதி இயல்பு பற்றி வந்தது 3, 4 அடிகட்கு, 'முல்லையாசில் வான்பூச் செவ்வான் செவ்வி கொண்டன்று' (குறுந். 108).

பி - ம். 1. சில்லியற்; நினைத்துந்.
2. வெம்மையால்.
3. மலர்ந்த தெங்கணுந்.
4. வானம் போன்றதே. 3

## மதியின் தோற்றம்

462. ஒன்றியுட் கறுப்பினோ டொளியின் வாளுரீஇத்
தன்றனி முகத்தினு லென்னைத் தாழ்த்தற
வென்றவள் துணைவனை யின்று வெல்குவென்
என்றது போலவந் தெழுந்த திந்துவே.

'தன் தனி முகத்தினுல் என்னை அற தாழ்த்து - தனது ஒப் பற்ற முகத்தால் என்னை மிகவும் கீழ்ப்படுத்தி, (முழுதும்) வென்ற வள் துணைவனை-வெற்றி கொண்ட பிராட்டியின் கணவனை, இன்று வெல்குவென் என்றது போல-இன்று வெற்றி கொள்வேன் என்று நினைந்தாற் போன்று, இந்து - சந்திரன், உள் கறுப்பினோடு ஒன்றி - தன்னுள்ளே களங்கத்துடன் பொருந்தி' ஒளியின் வாள் உரீஇ - ஒளியாகிய வாளை உருவிக்கொண்டு, வந்து எழுந்தது - (கீழ்த்திசையில்) வந்து உதித்தது, ஏ - அசை.

கறுப்பு: களங்கம் என்றும் வெகுளி யென்றும் இரு பொருள் படும், கறுப்பு - வெகுளி; கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள (தொல். சொல். 372); 'நிறகறுத் தோரருங் கடிமுனை யரணம் போல்'. வாள் ஒளியையும் வாள் என்ற ஆயுதத்தையும் குறிக்கும், தன்னைப் பிராட்டி முகம் மானக் குறைவு செய்ததால் வெகுண்டு வாளுருவிப் போந்ததாக உருவகித்த நயம் காண்க. அற என் பதை இடை நிலை விளக்காக்கி, தாழ்த்த, வென்றவள் என்ற இரண்டினோடும் கூட்டுக. முதலிரண்டடிகட்கு (ஒப்பு): 'அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல, மறுவுண்டோ மாதர் முகத்து' (குறள். 1117): பிராட்டி முகத்தை வெல்ல முடியாத நிலையில், அவனைச் சார்ந்தவனையாவது துன்பத்துக் குள்ளாக்குவோம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்பதுபோல இந்து எழுந்தான் எனப்பட்டது. இதனை விறல்கோளணி யென்பன.

பி - ம். 1. ஒன்றியுட் கறுவி ; ஒளியும், ஒளிப்பின்.

2. தன்றிரு ; தானற, தாழ்ந்தற.

4. எழுந்த திங்களோ. 4

463. கண்ணினை யப்புறம் கரந்து போகினும்
பெண்ணிற முண்டெனிற் பிடிப்ப லீண்டென
உண்ணிறை நெடுங்கட லுலக மெங்கணும்
வெண்ணிற நிலவெனும் வலையை வீசினன்.

கண்ணினை - கண்களுக்குப் (புலனாகாமல்) அ புறம் கரந்து போகினும் - சீதாதேவி அப்பாற்பட்டு மறைந்து நிற்பினும், பெண் நிறம் உண்டு எனில் - அந்தப் பெண்ணின் உடல் எங்கேனும் காணப்பெறின், ஈண்டு பிடிப்பல் என - இங்கே இப்பொழுதே கைப்பற்றுவன் என்று கருதி, உள்நிறை நெடுகடல் - உள்ளே நிரம்பிய அகன்ற கடலாற் சூழப்பெற்ற, உலகம் எங்கணும் - உலகத்தில் எல்லாப் பக்கங்களிலும், வெள் நிற நிலவு எனும் வலையை வீசினன் - வெண்ணிறம் கொண்ட நிலா வென்னும் வலையை வீசினன் (சந்திரன்).

கண்ணினை - வேற்றுமை மயக்கம். இராமன் துயரத்தைக் கண்ணுற்றுப் பிராட்டி வடிவைப்பற்றித் தருவது கருதினன் போல் மதி தன் நிலவினை வீசினன் எனப்பட்டது; (ஒப்பு): வெருவர முழங்குகின்ற மேகமே மின்னுகின்றாய், தருவலென் றிரங்கினையோ தாமரை மறந்த தையல், உருவினைக் காட்டிக் காட்டி யொளிக்கின்றாய்' (கிட்கிந்தா. 492) ; 'சேருடிக் குங்குமக் கொங்கையைக் காட்டிச் சிரித்தொரு பெண், போராள் பிடி பிடி யென்றே நிலவு புறப்பட்டதே' (தனிப்பா) என்ற பாடலும் இங்கே காணத்தகும். நிறம் - உடல், 'மெல்லியலை மல்லற் றன்னிற மொன்றி லிருத்தி நின்றேன்' (திருக்கோ. 58) :

பி - ம். 1. போகிலும் ; போயினும் ; பிணிப்ப னீண்டு ; வின்றென ; பெண் ணிறத் தொடையினைப் பிடிப்பனென்ற. பிடிப்பனுல்.

3. உலகம் யாவையும். 5

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



464. புடைக்கவன் றிரையெடுத் தார்க்கும் போர்க்கடல்
உடைக்கருந் தனிநிற மொளித்துக் கொண்டவன்
அடைக்கவந் தானெனை யரியின் றனையாற்
கிடைக்கவந் தானெனக் கிளர்ந்த தொத்ததே.

புடைக்க - கரையில் மோதுமாறு, வல்திரை எடுத்து ஆர்க்கும் பெரிய அலைகளை உயர்த்தி ஆரவாரிப்பதும், போர் கடல் - போர் புரிவதில் விருப்பம் கொண்டதுமான கடல், 'உடைக்க அரு தனி நிறம் - மாற்றற்கரியதும் ஒப்பில்லாததுமான கரு நிறத்தை, ஒளித்து கொண்டவன் - தன்னிடம் முறைவாகக் கைக்கொண்டவனாகிய இராமபிரான், எனை - என்னை, அரியின் தானையால் அடைக்க் வந்தான் - குரக்குச் சேனையைக்கொண்டு அணை கட்டுமாறு வந்தவனாகி, கிடைக்க வந்தான் என - கைக்கெட்ட வந்துள்ளான் என, கிளர்ந்தது ஒத்தது - எழுந்ததை ஒத்து விளங்கிற்று. ஏ - அசை.

சந்திரன் ஒளி பெற்றுப் பொங்கிக் கிளர்ந்து செல்வது இங்கே கூறப் பெற்றது; 'தன்னிறத்தை முன்னரே வவ்விய இராமபிரான் பின்னும் தன்னைத் தூர்க்க நினைந்து போந்தான்; ஆகவே அவனை எதிர்ப்பேன்' எனச் சினந்து கிளர்வது போன்று அலைகள் காணப்பட்டன எனப்பட்டது, தற்குறிப்பேற்றவணி. இராமன் நிறம் கடல் நிறம் என்று இந்நூலிற் பல இடங்களிலும் காணலாம். 'கடலோ மழையோ' (பால. மிதிலைக். 18); 'மையோ மரகதமோ மறிகடலோ மழை முகிலோ' (அயோத்தி. கங்கை. 1). கிடைத்தல் - சமீபத்தல், 'கிடந்தானைக் கிடைத்திரு தடக்கை கூப்பினன்' (கிட்கிந்தா. 575); திரையெடுத்துக் கிளர்ந்தது என்றும் இயைக்கலாம்.

பி - ம். 1. புடைக்கும் வெண்டிரை.
2. கனி நிறம்; நிறத்தொளி யுடைய வும்பரான்.
3. வந்தான் மறித்தரியின்; வந்தாவைன் அரியின்.
4. கிடக்க; தொத்தவே. 6

465. மேலுகத் தொகுதியான் முதிர்ந்த மெய்யெலாம்
தோலுகுத் தாலென வரவத் தொல்கடல்
வாலுகத் தாலிடைப் பரந்த வைப்பெலாம்
பாலுகுத் தாலென நிலவு பாய்ந்ததால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தொல் அரவம் கடல் - பழமையான அரவக்கடலானது, மேல் உக தொகுதியான் - முன்னர்(ப் பல) யுகங்களின் தொகை கழிந்தமையின், முதிர்ந்த மெய் எலாம் - முதிர்ச்சியுற்ற உடம்பெல்லாம், தோல் உகுத்தால் என - தோலுரிந்தாற்போல காணப்படுகின்ற, வாலுகத்தால் இடை பரந்த வைப்பு எலாம் - வெண் மணலினிடையே விரிந்துள்ள இடம் முழுவதும், பால் உகுத்தால் என - பாலைச் சொரிந்தாற் போன்று, நிலவு பாய்ந்தது - நிலவின் ஒளி பரந்தது. ஆல் - அசை.

யுகம் தமிழிற் கேற்ப உகம் எனத்திரிந்தது; இது நற்குறிப் பேற்றவணி. யுகம், யூபம், யௌவனம் என்ற சொற்களும் தமிழில் உண்டு. பொருளுக்கேற்ப, தோல் உகுத்தல் கூறப்பட்டது; பாம்பு தோலுரிக்கும் என்பது உணர்க. நல்ல பாம்புக்குப் பால் வார்க்கும் வழக்கும் இச்செய்யுளிலிருந்து அறியலாம் (பால் நிலா : தக்க. 605). சிருட்டியில் முதற்கண் எழுந்தது நீரென்பராகலின் 'தொல் கடல்' எனப்பட்டது. தொல் அரவம் கடல்' கடலுக்கு அதன் ஒலி காரணமாகவே ஆர்கலி என்ற பெயர் உண்டு (ஒப்பு). 'பெருங்கட லாடிய சென்றார் ஒருங்குடன், ஓசை யவிந்தபின் ஆடுதும் என்றற்றால்' (நாலடி. 332); வாலுகம் - வெண் மணல்; (பிங்.) 'வேலைவாலுகத்து விரிதிரைப் பரப்பின்' (சிலப். 6; 131); 'வாலுகத்திற் கான்ற மணிக்கு விலையுண்டு; (திருச்செந்தூர் பிள்ளைத்); வைப்பு - பூமி. எல்லாப் பொருள்களும் வைத்தற் கிடமாவது என்ற காரணக்குறியான் எழுந்த பெயர் என்ப. பால் நிலவு; 'பானிலாவைப் பசுங்கதிர்' (தக்க. 605). அரவம் பேரொலி யென்றும், பாம்பு என்றும் இருபொருள்படச் சிலேடையில் அமைந்துள்ளது காண்க.

பி - ம். 1. உதிர்ந்த, முடிந்த.
2. ஆர்ந்த.
3. வாலுகத் தரவுடை.
4. பாய்ந்ததே. 7

466. மன்றல்வாய் மல்லிகை யெயிறு வண்டினங்
கன்றிய நிறத்தது நறவின் கண்ணது
குன்றின்வாய் முழையினிற் குலாய கொட்பது
தென்றலென் றொருபுலி யுயிர்த்துச் சென்றதால்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மன்றல் வாய் மல்லிகை எயிறு - நறுமணம் பொருந்தப் பெற்ற மல்லிகையாகிய விடப்பற்களுடனே, வண்டு இனம் கன்றிய நிறத்தது - வண்டுக் கூட்டங்களாகிய கருநிறக் கோட்டை யுடையதும், நறவின் கண்ணது - நறவாகிய (செந்நிறக்) கண்களை யுடையதும்; குன்றின் வாய் - குன்றுகளினிடத்துள்ள, முழையினில் - குகைகளினின்றும், குலாய கொட்பது - சஞ்சரித்து மகிழும் இயல்பினை யுடையதுமாகிய, தென்றல் என்று ஒரு புலி உயிர்த்து சென்றது - தென்றற் காற்றென்ற (ஒரு புலி) பெருமூச் செறிந்து கொண்டு, (விரகத்தால் வருந்துபவர்களாகிய இரையை நாடி) வருவதாயிற்று. ஆல் - அசை.

பிராட்டியைப் பிரிந்து வருந்தும் இராமபிரானைக் கொல்ல வருவது போன்றிருத்தலின் தென்றலைப் புலியாக உருவகித்து அதற்கேற்ப மல்லிகையை அதன் பற்களாகவும் குன்றக் குகையினை இருப்பாகவும் கூறினர். விரகநோயை அதிகரிப்பதில் தென்றலும் ஒன்றென்பர்; 'தென்றலைப் பகை என்றது' (ஆரணிய. 757); தென்றற்புலி; பால. கடிமணப். 7; 'அணங்கா மிவளுக் கவிர் மதியம் ஒன்றே, வணங்கா வருந்தென்ற லொன்று' (திருச்செந்திற் கலம்பகம். 27); 'ஆரமா மலையிற்றோன்றி யங்கங்கோடிச்செய் தீங்கால், ஈரமே வியதென் காற்று மிந்துவுஞ் சமனே கண்டீர்' (அழகர். கலம். 73); 'கூற்றென் றலவொரு கோடி கெட்டேன் கொழுந்தொன்று தென்றற் காற்றென்று' (மதுரைக்கலம்பகம். 6); குலாய; 'கூடலால வாயிலாய் குலாய தென்ன கொள்கையே (தேவா. 863 ; 1).

பி - ம். 1. மன்றல்வாழ் மல்லிகை ; எயிற்றின் ; வண்டெடன.
2. நீர்த்தது, விடத்தது.
3. நிலவினின்று ; நின்றுலாய ; நுழையிளின்று குலாய கோட்பது.

## இராமபிரான் விரகமும் செயல்களும்

467. கரத்தொடும் பாழிமாக் கடல்க டைந்துளான்
உரத்தொடுங் கரநெடு முருவ வோங்கிய
மரத்தொடுந் துளைத்தவன் மார்பின் மன்மதன்
சரத்தொடும் பாய்ந்தது நிலவின் றாரைவாள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பாழி கரத்தொடும் - தனது வலிய கைகளால், மாகடல் கடைந்துளான் - பெரிய கடலைக் கடைந்தவனான வாலியின், உரத்தொடும் - மார்புடனே, கரனொடும் - கரன் என்னும் அரக்கனையும், உருவ ஓங்கிய - வானத்தை அளாவுமாறு உயர்ந்த, மரத்தொடும் துளைத்தவன் மார்பின் - மரா மரங்கள் ஏழினையும் (தன் அம்பினால்) துளையிட்டவனான இராமபிரான் மார்பில், மன்மதன் சரத்தொடும் - மாரனுடைய மலரம்புகளுடனே, நிலவின் தாரை வாள் பாய்ந்தது - நிலவாகிய கூரிய நுனியை யுடைய வாளாயுதமும் உட்புகுந்தது.

வாலியின் திண்ணிய மார்பில் இராமபிரான் விடுத்த சரம் 'கதலியின் கனியினைக் கழியச் சேரும் சூசியிற் சென்றது' (கிட்கிந்தா: 289); என்றது காண்க. கரனும் இராமபிரானுடைய 'வில்லொன்றிற் பகழி மூன்றில் ஏற்றினன் விண்ணில்' (ஆரணிய. 617); மரா மரம் வீழ்ந்த செய்தியின் விவரத்தைக் கிட்கிந்தா காண்டம் 173, 174 கண்டுணர்க. இத்துணை அரிய செயல்கள் ஆற்றிய இராமபிரான் மார்பு மன்மதன் மலரம்பு, அவனது கொடையாகிய சந்திரனது நிலவாகிய வாளுடன் நுழைதலால் வருத்திற்று என்றார். (ஒப்பு) : 'பரங்கிடந்த பாதிரம் பரித்த பாழியானையின், கரங்கிடந்த கொம்பொடிந்த டங்க வென்ற காவலன், மரங்குடைந்த தும்பிபோல வங்க பாணம் வந்துவன், துரங்குடைந்து நொந்து நொந்து ஊந்து ஊந்தொ டுங்கினன்; (ஆரணிய. 646). லவின் தாரைவாள்; 'ஆழி வெண்டிரை முகட்டெழு மவிர்மதிக் கதிர்வாள்' (நைடத. நிலாத் தோற்றுப். 12); 'கதிர் வாள் நிலவே' (சுந்தர. 492).

பி - ம். 2. உயர வோங்கிய.

4. சரத்தொடும் பட்டன. 9

468. உடலினை நோக்குமின் னுயிரை நோக்குமால்
இடரினை நோக்குமற் றியாது நோக்கலன்
கடலினை நோக்குமக் கள்வன் வைகுறுந்
திடரினை நோக்குந்தன் சிலையை நோக்குமால்.

(அப்போது இராமபிரான், மேற்கூறிய நிலவு தென்றல் முதலியவற்றால் வாட்டமுற்ற தனது) உடலினை நோக்கும் - சரீரத்தைக் கண்ணுறுவான்; இன்உயிரை நோக்கும் - (இவ்வாறு தன் மேனி உலையுமாறு செய்த) தன் இனிய உயிர் போன்ற சீதா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தேவியை உள்ளத்தால் கருதுவான்; இடரினை நோக்கும் - தனக்கு நிகழ்ந்துள்ள பிரிவென்னும் துன்பத்தினைக் கருதுவான்; யாது நோக்கலன் - பிறிதொன்றையும் பாராமல், கடலினை நோக்கும் - நான் உடனே செல்ல வொண்ணாதபடி தடை செய்யும் ஆழியைப் பார்ப்பான், அ கள்வன் வைகுறும் திடரினை நோக்கும் - தன் இல்லாளைக் கவர்ந்து சென்ற அந்த இலங்கேசன் வதியும் இலங்கையாகிய திட்டைக் கண்ணுறுவான்; தன் சிலையை நோக்கும். தன்கை வில்லினையும் கூர்ந்து கவனிப்பான். மற்று, ஆல் : அசைகள்.

இச் செய்யுட்களில் காணப்படும் மெய்ப்பாடுகள் கூர்ந்துணரத் தக்கன. தன் உடலினை நோக்கி அதன் வாட்டத்தைத் தவிர்க்கக் கூடிய உயிர்போன்ற பிராட்டியை மனக்கண்ணாற் கண்டு, அந்த மருந்தை எய்தப் பெருமையான் நிகழ்ந்த இடரினைக் கருதி நிற்கும். மற்றும் தான் மேல் நிகழ்த்த வேண்டிய செயல் கட்குத் தடையாக வுள்ள கடலினைக் கண்டு, அதனை எவ்வாற்றானும் தாண்டிப் பிராட்டியைக் களவாடிச் சென்ற இராவணன் வதியும் இலங்கைத் திட்டை அடைந்து அவனைக் கொன்று வீழ்த்த நினைந்து தன் கோதண்டத்தைக் கண்ணுறுவான் என்றார். (ஒப்பு) : 'போதக மனையவன் பொலிவு நோக்கிப்பின், வேதனை தருகின்ற வில்லை நோக்கித்தன், மாதினை நோக்கிப்பின் மனத்தை நோக்கி' (பால கார்முகப். 11); 'பொழிலை நோக்கும் பொழிலுறையும் புள்ளை நோக்கும் பூங்கொம்பின். எழிலை நோக்கு மிளமயிலி னியலை நோக்கு மியல்பானன், குழலை நோக்கிக் கொங்கையிணைக் குவட்டை நோக்கி யக்குவட்டின், தொழிலை நோக்கித் தன்னுடைய தோளை நோக்கி நாட்கழிப்பான், (ஆரணிய. 1050). 'தலையினை நோக்கும் தம்பி கொற்றவை தழீஇய பொற்றோள், மலையினை நோக்கும் நின்ற மாருதி வலியை நோக்கும், சிலையினை நோக்கும் தேவர் செய்கையை நோக்கும் செய்த, கொலையினை நோக்கும்' (யுத்த. இந்திர சித்து. 67) ; அருவமான உயிரும், பண்பான இடரும் கட்புலனாகா ஆகலின் மனக் கண்ணாற் பார்த்தான் என்க. இன்னுயிர் - பிராட்டி- ஈண்டு 'நீ யிருக்க வாண்டங் கெவ்வுயிர் விடுமிராமன்' (சுந்தர. 525). 'தேடாநின்ற என்னுயிரை' (கிட்கிந்தா. 27).

பி - ம். 1. உடலினை நோக்கும்பின்.
2. இடரினை நோக்குமுன்; நோக்கிமற் - நோக்கிலன், நோக்கலின் யாது.
3. கடலினை நோக்கியக்.
4. திடலினை.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



469. பணிபழுத் தமைந்தபூ ணலத்திற் பண்பினல்
பிணிபழுத் தமைந்ததோர் பித்தி னுள்ளத்தான்
அணிபழுத் தமைந்தமுத் தரும்பு செம்மணி
மணிபழுத் தமைந்தவாய் மறக்க வல்லனே.

பணி பழுத்து அமைந்த பூண் நலத்தின் பண்பினல் - நல்ல வேலைப்பாடு முற்றப்பெற்ற ஆபரணம்போன்று அழகு வாய்ந்த பிராட்டியின் பண்புகளை நினைவு கூர்வதால், பிணி பழுத்து - பிரிவெனும் நோய் முற்றி, அமைந்ததோர் பித்தின் உள்ளத்தான் - அதன் காரணமாக நிலைபெற்ற பித்து மேற்கொண்ட மனத்தின னாகிய இராமபிரான், அணி பழுத்து அமைந்த முத்து அரும்பு செம்மணி - அழகு முதிர்ந்த நல்ல முத்துக்கள் தன்னில் தோன்றப் பெற்ற அரதனம்போன்ற, மணி பழுத்து அமைந்த - அழகு நிரம்பி அமையப்பெற்ற, வாய் மறக்க வல்லனே - சீதாதேவியின் வாயினை மறக்கும் வன்மை யுடையவனே? அல்லன், ஓ - வினு.

பழுத்த என்ற சொல் நான்கடிகளினும் வந்து வெவ்வேறு பொருள் தந்து நின்றது. மணி பழுத்து - அழகு முதிர்ந்து. மணி பழுத்து - பவளம்போன்று பழுப்பு நிறம் வாய்ந்து எனினும் ஒன்றும். மறக்க வல்லனே; 'மயிலும் பெடையு முடன்திரிய' (ஆரணிய. 1058) எனத் தொடங்கும் செய்யுளுடன் இதனை ஒப்பிடுக. ஓ - எதிர்மறை. இச்செய்யுள் திரிபு என்னும் சொல் லணி,

பி - ம். 1. பூணல்குற் ; பண்பினள்.
3. அணிபழுத் தனைய, அணிபழுத் தழகமைந் தமுதகும்புதேன் ; செய்யனிற்.
4. மணிபழுத் தனைய ; மாமரயன். 11

சுக்கிரீவன் இராமபிரானைத் தேற்றுதல்

470. ஆயதோ ரளவையி னருக்கன் மைந்தனி
தேய்வதென் காரிய நீரப்புஞ் சிந்தையை
மேயவன் றன்னெடு மெண்ணி மேலினித்
தூயது நினைகிலை யென்னச் சொல்லினுன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஆயது ஓர் அளவையின் - இவ்வாறு அவலமுற்ற நிலையில், அருக்கன் மைந்தன் - சூரியன் புதல்வனான சுக்கிரீவன்; (இராம பிரானைப் பார்த்து), 'நீ காரியம் நிரப்பும் சிந்தையை - நீ புரிய வேண்டியவற்றைப் புரிந்து நிரப்பும் எண்ணம் உள்ளவன்; அப்படிப்பட்ட நீ; தேய்வது என் - மனம் வருந்துவது எதன்பொருட்டு? (இப்போது), மேயவன் தன்னொடும் எண்ணி - நம்மை வந்து அடைந்தவனாகிய வீடணனோடும் ஆலோசித்து, இனிமேல் - இதன்மேலாக, தூயது நினைகிலை - செய்யத்தக்க நல்ல காரியங்களை எண்ணுகின்றாயில்லை' என்ன சொல்லினான் - (இது தகாது) என்று சுக்கிரீவன் கூறினன்.

வருந்துவதாற் பயனின்று என்றும், வீடணனோடும் ஆலோசித்து மேல் நடைபெறவேண்டியவற்றைப் புரிதலே கடமை என்றும் கூறினான் சுக்கிரீவன். இராமபிரான் தான் எடுத்த மானுட வடிவுக்கேற்ப நடித்துக்காட்டும் பல இடங்களை இந்நூலில் ஆங்காங்குக் காணலாம். இச் செய்யுட்கண் அவன் தேவியை நினைந்து இரங்கியபோது சுக்கிரீவன் தேற்றி நின்றனன். இவ்வாறு அவன் மனம் தளர்ந்த இடங்களும், பிறர் அவனைத் தேற்றிய இடங்களும் உள; கிட்கிந்தா. 495, 527, 533; யுத்த. வீடணன். 23 என்பன காண்க. தூயது: திருக்குறள் 'வினைத் தூய்மை' என்னும் அதிகாரம் காண்க.

பி - ம். 1. ஆயதோர் காலையின்; மைந்தனீர்.
2. தேய்வதே; முடிக்குஞ் சிந்தையாய்.
3. தன்னொடு வினவியும்.
4. நிலைத்திலை; சோதியான். 12

## வீடணன் இராமபிரானை அடைதல்

471. அவ்வழி யுணர்வுவந் தயர்வு நீங்கினன்
செவ்வழி யறிஞனைக் கொணர்மின் சென்றென
இவ்வழி வருதியென் றியம்ப வெய்தினான்
வெவ்வழி விலங்கினன் நெறியை மேவினான்.

அவ்வழி - அப்போது; (இராமபிரானும்), உணர்வு வந்து அயர்வு நீங்கினன் - தன் அறிவு வரப்பெற்றுத் தளர்ச்சி நீங்கப்பெற்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வனாய், 'சென்று செவ்வழி அறிஞனைக் கொணர்மின் - உடனே போய் நடுவு நிலைமையான வழியிலே செல்லும் அறிவாளனை வீடணனை அழைத்து வாருங்கள்', என - என்று கட்டளையிட; (பணியாளர்கள் அக் கட்டளையைச் சிரமேற்கொண்டு), இ வழி வருதி என்று இயம்ப - (வீடணனை நோக்கி) 'இராமபிரான் தங்கியுள்ள இடத்திற்கு வருக' என்று சொல்ல, வெவ்வழி விலங்கினன் - தீயவழியினின்று நீங்கியவனும், நெறியை மேவினன் - சன்மார்க்கத்தைத் தழுவியவனுமான வீடணன், எய்தினன் - வந்து சேர்ந்தான்.

வீடணன், செவ்வழி யறிஞன்: 'கல்விக்கண் மிக்கோன்' (யுத்த. 717); 'மூது ணர்வின்மிக் கான்அடல் வீடணன்' (யுத்த. அதிகாயன். 87); 'நீதி யாறெனத் தெரிவுறு நிலைமையான்' (யுத்த. மீட்சி. 13). இறுதியடிக்கு, (ஒப்பு): 'அறந்தலை நின்றவற் கன்பு பூண்டனன்..............பிறந்தவென் னுறுதிநீ பிடிக்கிலா யெனத், துறந்தனன்' (யுத்த. 323); 'நீர்கெழு தன்மையாய்' (யுத்த. 472).

பி - ம். 1. அவ்வழி நினைவுவந்; நிங்கினன்.
2. கொணர்தி; சென்றேன.
3. வருகவென்.
4. விலங்கி நல்நெறியை; மேயினன். 13

இதன்பின் இரு அதிகப்பாடல்கள் :—

திருமறு மார்பனை யிறைஞ்சச் செல்வனும்
அருள்சுரந் தரக்கனை யருகி ருத்தியே
அருவரை யனையதோர் அறிஞ நீபுகல்
பொருள்உள தெமக்கது புகலக் கேட்டியால்.

மருக்கிளர் தாமரை வாச நாண்மலர்
நெருக்கிடு தடமென விருந்த நீதியான்
திருக்கிளர் தாமரை பணிந்த செம்மலை
யிருக்கவீண் டெழுந்தென விருந்த காலையில்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## இராமபிரான் வீடணனை வினவுதல்

472. ஆர்கலி யிலங்கையி னரணு மவ்வழி
வார்கெழு கனைகழ லரக்கர் வன்மையும்
தார்கெழு தானையி னளவுந் தன்மையும்
நீர்கெழு தன்மையாய் நிகழ்த்துவா யென்றான்.

(இராமபிரான் வீடணனை நோக்கி), 'நீர் கெழு தன்மையாய் - நல்ல பண்புகள் நிரம்பி விளங்கும் இயல்புடையவனே! ஆர் கலி இலங்கையின் அரணும் - கடலாற் சூழப்பட்ட இலங்கைத்தீவின் அரணமைப்பையும், அவ்வழி-அந்த நகரத்தில் உள்ள, வார் கெழு கனைகழல் அரக்கர் வன்மையும் - திரண்டமைந்த ஒலிக்கின்ற வீரகண்டை புனைந்த அரக்கர்களின் ஆற்றலையும், தார் கெழு தானையின் அளவும் - இதுகாறும் வெற்றிமாலையே தரித்துவந்த சேனைகளின் அளவினையும், தன்மையும் - பலவிதமான தகவினையும், நிகழ்த்துவாய் - கூறுவாயாக' என்றான் - என்று கேட்டான்.

'சலங்காவல் யந்திர மதிலேழ்' என்ற அனைத்தும் பெற்ற தீவாதலின், 'ஆர்கலி யிலங்கையின் அரணும்' எனப்பட்டது. போர் கருதி வந்துள்ளானாகலின், 'வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும், துணைவலியும் தூக்கிச் செய' விழைகின்றான் இராமபிரான். 'வார்கெழு கனைகழல்': 'வார்க்குறு கனைகழல்' (யுத்த. 369); தார்கெழுதானை; கொடிப் படையுமாம். 'தன்மையும்' என்பதற்கு அநுமன் இலங்கையிற் காட்டிய வீரப் பான்மையும் என்று கொண்டாரும் உளர். நீர்கெழு தன்மையாய்; 'நீரோ ரன்ன சாயல்' (புறநா. 105); மற்றும், கலித். 63, 84; மலைபடு. 61.

பி - ம். 2. வனைகழல்; வண்மையும்.
3. அவாவை புக்கதுப்; தன்னையும்
4. நிரப்புநீ யென்றான், சாற்றுவா யென்றான்.

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வீடணன் விடை

473. எழுதலு மிருத்தியென் றிராம னேயினன்
முழுதுணர் புலவனை முளரிக் கண்ணினன்
பழுதற வினவிய பொருளைப் பண்புறத்
தொழுதுயர் கையினன் றெரியச் சொல்லினன்.

எழுதலும் - (இராமபிரான் வினாக்கட்கு விடை தருமாறு வீடணன்) எழுந்து நின்ற அளவில், முளரி கண்ணினன் இராமன் - செந்தாமரை மலர்கள்போன்ற விழிகளையுடைய இராமபிரான், முழுது உணர் புலவனை - தீர்க்கதரிசியான வீடணனை, 'இருத்தி என்று ஏயினன் - அமர்ந்திருந்தே பகர்க' என்று நியமித்தானாக; (வீடணன்), தொழுது உயர் கையினன் - வணக்கத்துடன்உயர்த்தி நின்ற கரங்களைக் கொண்டவனாய், வினவிய பொருளை - இராம பிரான் கேட்ட வினாக்கட்கெல்லாம், பண்பு உற - தக்க முறையில், பழுது அற தெரிய சொல்லினன் - குற்றமில்லாமலும் நன்கு மனத்திற்படுமாறும் கூறினன்.

'முழுதுணர் புலவன்' வீடணன்: (யுத்த. அதிகாயன். 81) பார்க்க. 'முளரிக் கண்ணினன்' ஆரணிய. 376, 421, 606, 813, 972, 984; சுந்தர. 322, 394. பழுதற வினவிய என்பதை இராமபிரானுக்கே ஏற்றித் தான் மேற்கொள்ள இருக்கும் போரில் ஆராய்ச்சியின்மையான் நிகழக்கூடிய குற்றங்கள் இல்லையாம்படி வினவிய எனினுமாம். இக் குற்றங்கள் இன்ன என்றும், அவற்றைப் போக்கும் நெறிகளும், தெரிந்து செயல்வகை, வலியறிதல், காலமறிதல், இடனறிதல், தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல் முதலிய திருக்குறள் அதிகாரங்களிற் கண்டுணர்க. முளரி - முள்ளுடன்கூடிய தண்டினையுடைய தாமரை; இதனைக் காரண விடுகுறி என்பர் இலக்கணம் வல்லார். விரவும் தீமைகளைமட்டும் விதந்தால் அமையாது, நன்மை விரவும் பான்மையையும் உணர்த்த வேண்டுதலின், 'பழுதற பண்புற' என்று கூறப்பட்டது. தொழுதுயர்கை - சிறந்த வணக்கமுறை; 'தொழுதுயர் கையினன் துவண்ட மேனியன்' (அயோத்தி. கிளைகண்டு. 49). பசுமரத் தாணியென நெஞ்சில் ஊன்றுமாறு கூறினன் என்பான், 'தெரியச் சொல்லினன்' எனப்பட்டது.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. ஏவினன்.
2. புலவர்முன்.
3. பண்பினல்.
4. சொல்லல் மேயினன். 15

## இலங்கையின் தோற்றம்

474. நிலையுடை வடவரை குலைய நேர்ந்ததன்
தலையென விளங்கிய தமனி யப்பெரு
மலையினை மும்முடி வாங்கி யோங்குநீர்
அலைகட லிட்டன னநுமன் ருதையே.

'அநுமன் தாதை - அநுமனுடைய தந்தையான காற்றின் வேந்தன், நிலை உடை வடவரை - என்றும் அழியாது நிலைபெற் றிருந்த வடக்கின்கண் உள்ள மேருமலையின் சிகரத்தை, குலைய நேர்ந்து - திருகுவதாகச் சூளுரைத்து, அதன் தலை என விளங்கிய - அந்த மலையின் சிகரமாக ஒளிர்ந்த, மும்முடி தமனியம் பெரு மலையினை - மூன்று முடியை யொருங்கே கொண்ட பொன் மயமான உயர்ந்த மலையினை, வாங்கி - பறித்து, நீர் அலை ஓங்கும் கடல் இட்டனன் - நீர் அலைகள் உயர்ந்தெறியும் கடலில் விழுமாறு வீசினன். ஏ - அசை.

இதிலிருந்து இலங்கை வரலாறு தொடங்குகின்றது. வீடணன் கூற்று இது முதல் 51 கவிகளிற் காண்க. வடமொழி அசலம் என்பதற்கேற்ப, 'நிலையுடை வடவரை' யெனப்பட்டது. வடவரை குலைந்தது; உத்தரகாண்டம் அரக்கர் பிறப்புப் படலத்துக் காண்க. தமனியப் பெருமலையினை மும்முடி வாங்கி இட்ட வரலாறு, சுந்தர. 24-ஆம் செய்யுளிலும், அதன் உரையிலும் காண்க. 'மேருக் குன்றைக் கொண்டுபோய்க் குரைகடலிட' (யுத்த. படைக்காட்சி. 12). வடவரை - மேருமலை; 'வடவரையை மத்தாக்கி' (சிலப். ஆய்ச்சியர்.); இதனை, 'வடமேரு' என்றும் வழங்குவர்; (ஆரணிய. 605); 'மேற்றிசைக்கு மொரு மேரு வுண் டென வுயர்த்தினன்' (வி. பா. இராசசூய. 52) என்பதுகொண்டு மேரு வடக்கது என்பது பெறப்படுதல் காண்க. அலைகடல்: வினைத்தொகை.

பி - ம். 1. குலைய மேலைநாள்; நேர்ந்தவன். 16
3. மலையினை மும்மடி; வலியினல்; மலையினின்முடி.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## மதில்களும் காவலர்களும்

475. ஏழுநூ றியோசனை யகல மிட்டகீழ்
ஆழநூ றியோசனை யாழி மால்வரை
வாழியா யுலகினை வளைந்த வண்ணமே
சூழுமா மதிலது சுடர்க்கு மேலதால்.

'வாழியாய் - என்றும் அழியாப் பரம்பொருளே! ஏழு நூறு யோசனை அகலம் - அந்த இலங்கை மதிலின் சுற்று எழுநூறு யோசனையாகும்; கீழ் இட்ட - கீழே அமைந்த, ஆழம் நூறு யோசனை - அதன் ஆழம் நூறு யோசனையாகும்; உலகினை - உலகத்தை, ஆழிமால் வரை வளைந்த வண்ணமே - இந்த நில வுலகினைச் சக்கரவாளகிரி எவ்வாறு சூழ்ந்துள்ளதோ அதே போன்று, மா மதில் சூழும் - இலங்கை நகரை அந்தப் பெரிய மதிலானது சூழ்ந்து நிற்கும்; அது சுடர்க்கும் மேலது - அதன் உயரமோ கதிர்மதி முதலியன செல்லும் வானவீதிக்கும் மேலாக வுள்ளது. ஆல் - அசை.

ஏழு நூறியோசனை: 'ஏழுநூ றோசனை சூழ்ந்தெயில் கிடந்ததிவ் விலங்கை' (சுந்தர. 324) என்றதனால் அகலம் என்பதற்கு இங்குச் சுற்று என்று பொருள் கொள்வதே பொருந்தும். யோசனை: நான்கு குரோசங்கொண்ட நீட்டல் அளவை என்பர். இலங்கை உட்புறம் எழுநூ றோசனை; (சுந்தர. 95). ஆழி மால் வரை - சக்கரவாளகிரி; 'சக்கரப் பொருப்பு; கிட்கிந்தா. 142-ஆம் உரைக்குறிப்பு காண்க; 'ஆழிமா மலை' (கிட்கிந்தா. 116). மதில: 'அன்னமா மதிலுக் காழிமால் வரையை யலைகடல் சூழ்ந்தெனா அகழி, பொன்விலை மகளிர் மனமெனக் கீழ்போய்ப் புன்கவி யெனத்தெளி வின்றி' (பால. நகரப். 14); மற்றும், பாலகாண்டத்துள் அயோத்தி மதிலின் வருணனைகளும் இங்கு ஒப்பு நோக்கத்தகுவன. 'ஆழியக முாகவரு காவமரர் வாழும், ஏழுலகின் மேலைவெளி காறுமுக டேறி .... ஊழிதிரி நாளுமுலையா மதில்' (சுந்தர. 157).

பி - ம். 1. நூறோசனை; மிட்டிட, ஈட்ட.
2. நூறோசனை; யாகி மால்வரை.
3. வாழிய வுலகினை; வளைத்த.
4. சூழியால் மதிலது; சுரர்க்கு மேலதால்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

வலம்பெறு தசமுகன் தவத்தின் மாட்சிகண்
டிலங்குறு மலரயன் எண்ணில் யோசனைத்
தலங்கொடு சமைத்துநல் நகரும் தந்திதற்
கிலங்கையென் றொருபெயர் ஈந்த மேலைநாள்.

476. **மருங்குடை வினையமும் பொறியின் மாட்சியும்
இருங்கடி யரணமும் பிறவு மெண்ணினல்
சுருங்கிடு மெனைப்பல சொல்லிச் சுற்றிய
கருங்கட லகழது நீருங் காண்டிரால்.**

'மருங்குடை வினையமும் - அந்த மதிலின்கண் உள்ள வேலைத் திறனும், பொறியின் மாட்சியும் - அதனிடத்து அமைந்துள்ள பலவித யந்திரங்களின் மாண்பும், இரு கடி அரணமும் - பெருங் காவலாக அமைந்த நீர் அரண் முதலிய அரண்களும், பிறவும் எண்ணினல் - மற்று முள்ளனவும் எண்ணி நோக்கினல், சுருங் கிடும் - (எண்ண வியலாதபடி) மனமே குறுகி விடும்; பல சொல்லி என - பலபடக்கூறி யாவதென்ன? சுற்றிய கருங்கடல் அகழது - (அந்த இலங்கையின் மதில்) தன்னைச் சூழ்ந்துள்ள கரிய கடலினையே தனது அகழாகக் கொண்டுள்ளது, நீரும் காண்டிர் - நீங்களும் அதனைக் காணலாம். ஆல் - அசை.

வினையம் - வேலைப்பாடு; சூழ்ச்சியும் ஆம்; 'தொழில்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. பொறியின் மாட்சி; 'திண் பொறி யடக்கிய செயலால், காவலிற் கலையூர் கன்னியை யொக்கும், சூலத்தாற் காளியை யொக்கும், (பால. நகரப். 9). சினத்தயில் கொலைவாள் சிலைமழுத் தண்டு சக்கரந் தோமர முலக்கை, கனத்திடை யுருமின் வெருவருங் கவண்கல் என்றிவை கணிப்பில கொதுகின், இனத்தையும் உவணத் திறை யையு மியங்குங் காலையு மிதமல நினைவார், மனத்தையு மெறியும் பொறி' (பால. நகரப். 12): மற்றும் 'மிளையுங் கிடங்கும் வளைவிற் பொறியும், கருவிர லூகமும் கல்லுமிழ் கவணும், பரிவுறு வெந் நெயும் பாகடு குழிசியும், காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையும், தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை யடுப்பும், கவையும கழுவும் புதையும் புழையும், ஐயவித் துலாமும் கைபெயரூசியும், சென்றெறி சிரலும் பனறியும் பணையும், எழுவுஞ் சீப்பு முழுவிரற் கணையமும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கோலும் குந்தமும் வேலும் பிறவும், ஞாயிலும் சிறந்த (சிலப். 15 207-217); சீவக. 101-104. 'வங்தெறி பொறிகள் வகைமாண் புடைய, கடிமதி லோங்கிய' (மணி. 28; 23-24). அரண் - நீர் அரண், நில வரண், காட்டரண் மதிலரண் என நால்வகைத் தென்பர். இலங்கை நீவாகலின் நீரரணைச் சிறப்பாக இறுதி யடியிற் குறித்தார், சுருங்கிடும் என்பதற்குக் கணிப்போர் வாழ் நாள் சுருங்குவதன்றி, பொறிகளின் அளவு கூறியமையாது என்க; கந்தபுராணம் திருநகரப்படலம் 9-20 செய்யுட்களும், திருவிளை யாடல் திருநகரப்படலம், இடைநகர், மதிற் பொறிகளின் வருணனை களும் காணத்தகும். இலங்கை சுற்றிய கருங்கடலகழது; 'ஆழி யகழாக' (சுந்தர. 157).

பி - ம். 3. சுருங்கிடு மென்பல; சுருங்கவென் பலசொலின் சுழன்று; சொல்லில்.
4. கருங்கடற் கிடந்தது; நீளம் காண்டியால். 18

இங்கோர் அதிகப்பாடல் :

ஆயவிந் நகரிடை அரக்கர் ஆகிய
தீயவர் தொகையினைத் தெரிக்கின் எண்ணில்நாள்
போயிடத் துணித்தவை புந்தி யோரினும்
ஓயுமோ அறிந்தவை உரைப்பென் ஆழியாய்.

**477. வடதிசை வயங்கொளி வாயில் வைகுவோர்
இடையில ரெண்ணிரு கோடி யென்பரால்
கடையுக முடிவினிற் கால னென்பதென்
விடைவரு பாகனைப் பொருவு மேன்மையோர்.**

'வயங்கு ஒளி வட திசை வாயில் வைகுவோர் - விளங்குகின்ற ஒளியை யுடைய வடக்குத் திக்குக் கோட்டை வாசலில் (காவலாகத்) தங்கி நிற்பவர், இடை இலர் - எந்த நிலையிலும் பின்னிடையாத வர்களரன, எண் இரு கோடி என்பர் - பதினாறு கோடி யென்னும் கணக்கினர் ஆவர்; (அவர்களைக்) கடை யுகம் முடிவினில் - யுகத் தின் இறுதியில் (எல்லா உயிர்களையும் வதம் செய்கின்ற), காலன் என்பது என் - யமன் என்று கூறுவது எங்ஙனம்? (அந்த யமனும் இவர்கட்கு நிகராக மாட்டான்); விடைவரு பாகனைப் பொருவு மேன்மையோர் - (அந்த யமனையும் அடர்த்து அடக்கிய) இட

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பத்தில் ஏறும்படியான, சிவபிரானையே நிகர்க்கும் மேம்பாடுடையவர். ஆல் - அசை.

முதல் அடி - முற்று மோனை, எண்ணிரு கோடி - எண்ணப்பட்ட இரு கோடி யெனினுமாம். யுகக் கடை, கடையுகம் என முன் பின்னாகத் தொக்கது. காலன் - எமன்; உயிர்களின் கால வரையறையைக் கணிப்பவன் எனப் பொருள்படும். காலன் என்பதென் விடை வருபாகனைப் பொருவும் என்றதனால், அவர்கள் கால காலரே யென்க. சிவபிரானுடைய விடை தரும தேவதையே என்பர். மேன்மை இங்குக் குணமேன்மையன்று, வலியின் சிறப்பினைக் குறித்து வந்தது.

பி - ம். 1. வாயல் வைகுவார்; காப்பவர்.

3. கால னென்னவோ.

4. பொருவும் வெம்மையார்; விழுங்கும்; 19

இதன்பின் 'கிட்டிசை' என்ற பாடல் ஓர் பிரதியில்.

478. மேற்றிசை வாயிலின் வைகும் வெய்யவர்க்
கேற்றமு முளவவர்க் கிரண்டு கோடிமேல்
கூற்றையுங் கட்பொறி குறுகக் காண்பரேல்
ஊற்றுறு குருதியோ டுயிரு முண்குவார்.

'மேல் திசை வாயிலின் வைகும் வெய்யவர்க்கு - மேற்குத் திக்கு வாயிலில் தங்கியிருக்கும் கொடியோர்க்கு, அவர்க்கு எண் இரண்டு கோடி மேல் ஏற்றமும் உள - கீழே கூறப்பட்டவர்களின் எண்ணிக்கையிலும் அதிகமாக இரண்டு கோடி மிகையாதலும் உள்ளன, (அவர்கள் பிறரை வதைக்கும் தொழிலில் தலைசிறந்தவனை), கூற்றையும் - யமனையும், கண் பொறி குறுக காண்பரேல் - தமது கண்ணாகிய பொறிகொண்டு அணுகக் காண்பராகில், ஊறு உறு குருதியோடு - மேல் மேல் பெருகி வருதலையுடைய இரத்தத்தோடு, உயிரும் உண்குவார் - (அக்கூற்றின்) உயிரையும் பருகவல்லவர்கள்.

மேலைப்பாடலில் அரக்கரைக் கால காலன் என்றான். இங்குக் கூற்றுவற்கும் கூற்று என்கின்றான். கண் ஐம் பொறிகளில் ஒன்றாகளின் 'கட் பொறி' என்றார்; 'கட்பொறி கதுவ' (கிட்கிந்தா. 751).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குருதியோடு உயிரும் உண்குவார்; உயிரைப் போக்கி உதிரத்தைப் பருகுவர் என்க.

பி - ம். 1. வெய்யவர்.

2. ஏற்றமி லெண்ணிரு கோடி யென்பரால்; ஏற்ற முற்றவர்க்கு; ஏற்ற முற்றது மிருநூறு வெள்ளமாம், ஏற்றமுளா ரவர்க்கு.

3. குறுகிக் காண்பரேல்.

4. ஊற்றுகு குருதி, உண்பரால். 26

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

பேயர்க ளென்னயான் பிதற்றப் பேர்கிலா
மாயிரும் புறமதில் வகுத்த மாப்படை
ஏயின நாளெலாம் எண்ணும் பித்தர்கள்
ஆயிர வெள்ளமே அறிந்த தாழியாய்.

இதன்பின் 'இப்படி' என்ற பாடல் ஓர் பிரதியில்.

**479.** **தென்றிசை வாயிலின் வைகுந் தீயவர்**
**என்றவர் எண்ணிரு கோடி யென்பரால்**
**குன்றுறழ் நெடியவர் கொடுமை கூறியென்**
**வன்றிறல் யமனையு மரசு மாற்றுவார்.**

தென் திசை வாயிலின் வைகும் தியவர் - தெற்குத் திக்கின் கண் உள்ள வாயிலின் அமர்ந்துள்ள கொடியோர், என்றவர் - என்று புகழ் பெற்றவர்கள், எண் இரு கோடி என்பர் - பதினாறு கோடி என்பர்; குன்று உறழ் நெடியவர் - மலையை ஒத்து உயர்ந்தவரான அவர்களது, கொடுமை கூறி என் - கொடிய தன்மைகளை எடுத்துக்கூறி என்ன பயன்? வல்திறல் யமனையும் அரசு மாற்றுவார் - மிகவும் வன்மை வாய்ந்த யமனுடைய ஆட்சியையும் மாற்றவல்லவர். ஆல் - அசை.

குன்றுறழ் நெடியவர் - உருவத்தானும் வன்மையானும், சலியாத் தன்மையானும் உவமை. யமனையும் அரசு மாற்றுவார். (ஒப்பு): 'பேர்வி லெண்டிசைக் காவலர் கருமமும் பிடிக்கும்'. 'வருணன்றன் கருமமு மாற்றும்' (யுந். 135, 136); (ஒப்பு): 'மறலியைப் பண்டு தம்பெருந் தாய்சொல வலியால், புறனிலைப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பெருஞ் சக்கர மால்வரைப் பொருப்பின், விறல் கெடச் சிறையிட்டு' (யுத்த. படைக் காட்சி. 17).

பி - ம். 2. எய்துறு நூறு வெள்ளமாம்.
3. குன்றுறு, குன்றெென; பெருமையர்; கொன்றுயிர் கொள்பவர்; வன்மை.
4. நமனையும்; வரவு மாற்றினர். 21

இதன்பின் மேற்றிசை யென்னும் பாடல் ஓர் பிரதியில்.

480. கீட்டிசை வாயிலின் வைகுங் கீழவர்
ஈட்டமு மெண்ணிரு கோடி யென்பரால்
கோட்டிருந் திசைநிலைக் கும்பக் குன்றையும்
தாட்டுணை பிடித்தகன் றரையி னெற்றுவார்.

கீழ் திசை வாயிலின் வைகும் கீழவர் - கிழக்குத் திக்கில் உள்ள வாசலில் தங்கியிருக்கும் கீழ்மையான பண்பு படைத்தவர்களுடைய, ஈட்டமும் - தொகுதியும், எண் இருகோடி என்பர் - பதினாறு கோடி என்று கூறுவர்; அவர்கள், இருதிசை நிலை - பெரிய கீழ்த்திசைக் கண் நிலை பெற்றுள்ள, கோடு கும்ப குன்றையும் - (நான்கு) தந்தங்களையும் கும்பங்களையும் படைத்துள்ள மலை போன்றுள்ள ஐராவதத்தையும், தாள் துணை பிடித்து - இரண்டு கால்களையும் பற்றி, அகன் தரையின் எற்றுவார் - அகன்று பரந்த நிலத்தின்மீது எடுத்து அடிக்க வல்லவர்கள். ஆல் - அசை.

கீழவர் - கீழ்த்திசைக் கண் உள்ளவர் என்றும், கீழ்மைத்தனம் வாய்ந்தவர் என்றும் இருபொருள்படும். கீழ்மைப் பண்பினர் எனவே கூட்டம் என்னாது ஈட்டம் என்றான். ஈட்டம் - தொகுதி. 'அமர ரீட்டத்தர்' (ஆரணிய. 483); 'எண்கினீட்டம்' (கிட்கிந்தா. 694). திசை நிலைக்கும்பக் குன்று - எட்டுத்திக்குக்களிலும் நிலை பெற்றுள்ள குன்றம்போன்ற யானைகள் என்றும் கூறுவர்; உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழி (ஒப்பு); கும்பக் குன்று; நடைமலை, வருங்குன்றம், மதமலை என்பன காண்க. எற்றுதல் - அடித்தல் 'எடுத்துப் பாரிடை யெற்றுவென் பற்றி யென்று' (கிட்கிந்தா. 288): வடதிசையில் தொடங்கிக் கீட்டிசையில் முடியும் இம்முறைவைப்பில் துர்ச்சகுனம் தொனிப்பது காண்க. இம்முறை வைப்பு-சுவடிகளில் மாறி அமைந்துள்ளது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 3. நிசை நிலைக் கோபக் ; கோரக் ; சுமந்த குன்றையும்.

4. தாட்டுனை சுழற்றியே, பிடித்தவை, பிடித்துடன். 22

481. விண்ணிடை விழித்தனர் நிற்கும் வெய்யவர்
எண்ணிரு கோடியி னிரட்டி யென்பரால்
மண்ணிடை வானவர் வருவ ரென்றவர்
கண்ணிலர் கரையிலர் கரந்து போயினர்.

'விழித்தனர் - எப்பொழுது எதிரிகள் தாக்க வருவார்கள் என்று திறந்த கண்ணினராய், விண்ணிடை நிற்கும் வெய்யவர் - ஆகாய வீதியிலேயே நின்று கொண்டிருக்கும் இக்கொடிய அரக்கர்கள், எண் இரு கோடியின் இரட்டி என்பர் - முப்பத்திரண்டு கோடி என்று சொல்வர் ; வானவர் மண் இடை வருவர் என்றவர் - தங்கட்குப் பிறவிப்பகைவரான தேவர்கள் பூமியினிடம் வருவார்கள் என்று பாதுகாப்பவர், கரை இலர் - கணக்கிறந்தவர்களும், கண்ணிலர் - இரக்க மற்றவர்களுமான பேர்கள், கரந்து போயினர் - மறைந்து வதிகின்றார்கள். ஆல் - அசை.

விழித்தனர் ; 'விழித்த கண்ணன்' (அயோத்தி. கங்கைப். 49) ; 'விழித்தகண் வேல் கொண்டெறிய' (குறள். 775) ; கண்ணிலர் - இரக்க மில்லாதவர் ; கண் - இரக்கம் ; 'கடுஞ் சொல்லன் கண்ணில னாயின் (குறள். 566) ; 'காலன் என்னுங் கண்ணிலி யுய்ப்ப' (புறநா. 240). கரை - எல்லை.

பி - ம். 1. விண்ணிடைக் காவலின், விழித்துற.

2. எண்ணிய.

3. வருத வின்றியே ; லன்றியே.

4. கண்ணிலி, கரையிலோர். 23

482. பிறங்கிய நெடுமதிற் பின்னு முன்னரும்
உறங்கல ருண்பத முலவை யாதலாற்
கறங்கெனத் திரிபவர் கணக்கு வேண்டுமேல்
அறைந்துள தையிரு நூறு கோடியால்.

'பிறங்கிய நெடுமதில் பின்னும் முன்னரும் - விளங்குகின்ற உயர்ந்து நீண்ட மதிலின் பின்புறமும் முன்புறமும், உறங்கலர் - கண் மூடாமல், பாது காவல் புரிபவரும், உண்பதம் உலவை



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஆதலால் - உட்கொள்கின்ற ஆகாரம் காற்றேயாகலின், கறங்கு என திரிபவர் - காற்றாடி ஒப்பச் சுற்றித்திரிபவரின், கணக்கு வேண்டு மேல் - தொகையினை அறிய விரும்பினால்; ஐ இரு நூறு கோடி அறைந்துளது - பத்து நூறு கோடி என்று கூறப்பெற்றுள்ளது. ஆல் - அசை.

பதம் - உணவு. 'பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' (புறநா. 2, 16); 'பத மிகுத்துத் துய்த்தல் வேட்கையிற்' (சிலப். 28.; 189); உலவை - காற்று; ஆரணிய. 121; 162, 442. கறங்கு - காற்றாடி; 'கறங்காகு மெனத்திரிய நீயேயோ' ஆரணிய. 50; 'கறங் கெனத்திரிதல்' (ஆரணிய. 494); சுந்தர. 803.

பா - ம். 1. நெடுமதிட்.

2. உலங்கில; உலவை யாமென; உண்பதுலாவி யாதலின்.

4. அறைந்தனர், அறிந்த வாறறைந்துள தனந்த கோடியாகல். 24

இதன்பின் 'விண்ணிடை' என்ற பாடல் ஓர் பிரதியில்.

483. இப்படி மதிலொரு மூன்று வேறினி
ஒப்பரும் பெருமையு முரைக்க வொண்ணுமோ
மெய்ப்பெருந் திருநகர் காக்கும் வெய்யவர்
முப்பது கோடியின் மும்மை முற்றினர்.

'இப்படி - முன்பு மொழிந்தவாறு அமைந்த, மதில் ஒரு மூன்று - மதில்கள் மூன்றுள்ளன; இனி வேறு - மற்றும் தனித்து, ஒப்பு அரு பெருமையும் உரைக்க ஒண்ணுமோ - நிகரில்லாத (காப்பின்) சிறப்பினையும் எடுத்துச் சொல்லக்கூடுமோ? மெய் பெரு திரு நகர் காக்கும் வெய்யவர் - உண்மையான பெருமை வாய்ந்த அந்த அழகிய பட்டணத்தைக் காவல் புரிவதில் விருப்பம் உள்ள (அரக்கர்கள்); முப்பது கோடியின் மும்மை முற்றினர் - தொண்ணூறு கோடியென்னும் அளவினர் ஆவர்.

மதில்கள் மூன்று: அவை புற மதில், இடை மதில், அக மதில் என்க. இடைநகர்: அகழி வருணனையைச் சுந்தர. 240-இல் காண்க. இலங்கையின் அகநகர்; சுந்தர. 261. மும்மதி லிலங்கை; திவ்ய. திருவெழுகூற்றிருக்கை. அகநகர்: சிலப். அடைக்கலக். 109. 'முன்னர்ப் புறநகர்ச் சிறப்புக்கூறி ஈண்டு அகநகர்ச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சிறப்புக் கூறுவார், மதிலக வரைப் பென்றூர்' (சிலப். ஊர்காண். 69 உரை). வெய்யவர் - விருப்ப மிக்கவர்; 'வெம்மை வேண்டல்' (தொல். உரி. 36); வெய்யவர் கொடியவர் எனினுமாம்.

பி - ம். 1. என்னரினில்.

2. பெருமையை; வேண்டுமோ.

3. வெப்பெழுந்.

4. முப்பது வெள்ளமாம் கணக்கில் முற்றினர்; வெம்மை முற்றினர். 25

## சேமப்படை

484. சிறப்பவன் செய்திடச் செல்வ மெய்தினர்
அறப்பெரும் பகைஞர்க ளளவி லாற்றலர்
உறத்தெறும் பகைவரி னுதவு முண்மையர்
இறப்பில ரெண்ணிரு நூறு கோடியே.

'(மேலே விதந்து கூறியவர்கள் அல்லாமல்), அவன் - அந்த இராவணன், சிறப்பு செய்திட - மரியாதைகள் செய்திட, செல்வம் எய்தினர் - அது காரணமாகப் பெருஞ்செல்வம் படைக்கப் பெற்றவர்களும், அறம் பெரு பகைஞர்கள்- தருமத்திற்குப் பெரிய பகைவர்களும், அளவில் ஆற்றலர் - எல்லையற்ற வன்மைவாய்ந்தவர்களும், தெறும் பகை உற வரின் உதவும் உண்மையர் - அழிக்கவல்ல பகைவர்கள் நெருங்கி வந்தால் (உள்ளன்புடன்) எதிர்த்துப் போர் புரிய உதவுபவர்களும், இறப்பிலர் - அரசனது ஆணையைக் கடவாதவருமான வீரர்கள், எண் இரு நூறு கோடி - பதினாறு நூறு கோடி என்னும் அளவினர்; (அந்நகரத்துச் சேமப்படையாக உள்ளார்கள்). ஏ - அசை.

அரசன் படையாளர்க்குச் செய்யும் சிறப்பு 'மாராய வஞ்சி' எனப்படும். ஏனாதி முதலிய பட்டப் பெயர்களைக் காண்க. அறப்பெரும் பகைஞர்கள்; 'அறம்பு காமையா லழியுமிப் பதியென வயிர்த்தான்' (சுந்தர. 118); 'பாவந் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்' (யுத்த. படைக்காட்சி. 23); 'அறத்தைத் தின்றருங் கருணையைப் பருகிவே றமைந்த, மறத்தைப் பூண்டுவெம் பாவத்தை மணம்புணர் மணாளர்' (யுத்த. மூலபல. 6). எண் இரு நூறு கோடி என்பதற்கு எண்ணப்பட்ட இரு நூறு கோடி எனினுமாம். இச் சேமப்படையினர் அன்றூடம், தொழில் செய்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பவர் அல்லர் என்பது பகைவரின் உதவும் உண்மையர் என்றமையாலும், அவர் அரசனால் பெரும் சிறப்பெய்திச் செல்வத்துடன் வாழ்ந்தனர் என்பது முதலடியாலும் விளங்கும்.

பி - ம். 2. உறந்தரும்.

4. ரெண்ணவர்க் கேழு வெள்ளமோ ; இவர்க் கேழு வெள்ளமால். 26

## கோயில் வாயில் காப்போர்

485. விடமல விழியெனும் வெகுளிக் கண்ணினர்
கடனல விமைத்தலு மென்னுங் காவலர்
வடமலை புரைவன கோயில் வாயிலின்
இடம்வலம் வருபவ ரெண்ணெண் கோடியால்.

'விடம் அல விழி - இவை நஞ்சல்ல கண்களே ; எனும் - என்று புகலுமாறு, வெகுளி கண்ணினர் - சினம் தோன்ற விழிக்கும் கண்களை யுடைவர்களாகி, இமைத்தலும் கடன் அல என்னும் - கண் இமைப்பதும் (நாம் ஏற்றுள்ள காவல் முறைமைக்குப்) பொருந்துவதன்று என்று கருதுகின்ற, காவலர் - காவல் மாக்கள், வட மலை புரைவன கோயில் வாயிலில் - மேரு மலையை நிகர்ப்பனவான அரண்மனை வாயிலின்கண், இடம் வலம் வருபவர் எண் எண் கோடி - இடம் வலமாக நடந்தவண்ணம் இருப்பவர் அறுபத்திநாலு கோடியென்னும் அளவினர் ஆவர். ஆல் - அசை.

விடமல விழியெனும்; (ஒப்பு): 'கருங்கய லல்ல கண்ணே யெனக்கரி போக்கி னாரே' (சீவக. 626). கடனல இமைத்தலும்; (ஒப்பு): 'விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின் ஓட்டண்டோ வன்க ணவர்க்கு' (குறள். 775). வடமலை புரைவன கோயில் வாயில்; (ஒப்பு): 'மேருவை நிறுத்தி வெளி செய்தது கொல்' (சுந்தர. 161); 'கடவுள் மால்வரை கண் விடுத்தனன்' (சிறுபாண். 205-206) ; 'மலைதலைக் கொண்டபேர் யாறுபோலும் உலகவிடை கழி' (சிலப். நாடுகாண். 26, 27). இங்கு, 'உலகிடை கழி' என்பதற்கு, 'உலகத்தா ரெல்லாரும் போகலான ஊர்வாயில் என அடியார்க்கு நல்லார் உரைப்பது காண்க. இடம் வலம் வருபவர் : ஒருவர் இடதுபுறத்திலிருந்து வலத்திலும், மற்றொருவர் வலத்திலிருந்து இடத்தும் நடந்து காவல் புரிவர். வாயில்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



காவலர் நடந்தவண்ணம் காவல் புரிவது இன்றும் அரமனைகளிலும், அரசியற் காரியாலயங்களிலும், பெரிய மடங்களிலும் காணலாம்.

பி - ம். 1. விழியென வெருளும், விழிப்பன வென்னும்; சிந்தையர்.

2. கூடியவ ரிமைத்தலும்; கடளல விமைப்பன.

3. புரையுயர், புரைபவன், புரைபவர்.

4. திரிபவர்; ஏழென் வெள்ளமால். 27

## படையின் மொத்தத் தொகை

486. பேயனே னென்பல பிதற்றிப் பேர்த்தவன்
மாயிரு ஞாலத்து வைத்த மாப்படை
தேயினும் நாளெலாம் தேய்க்க வேண்டுவ
தாயிர வெள்ளமென் றறிந்த தாழியாய்.

'ஆழியாய் - சக்கரப்படை தாங்கியவனே! பேயனேன் பேர்த்து பல பிதற்றி என் - பேய்போன்ற யான் (அந்தப் படையின் அளவினையும் பெருமையினையும்பற்றித்) திரும்பத் திரும்பப் பிதற்றுவதால் எய்தும் பயன் என்; அவன் - அந்த இராவணன், மா இரு ஞாலத்து வைத்த மா படை - மிகப் பெரிய பூமியின்கண் கூட்டி வைத்துள்ள பெரிய சேனை, நாள் எலாம் தேயினும் - உலகுள்ள நாள் எல்லாம் அழிய நேரினும், (தான் அழியாமல்), தேய்க்க வேண்டுவது - அழிக்க வேண்டியவை; ஆயிரம் வெள்ளம் என்று அறிந்தது - ஆயிரம் வெள்ளம் என்று அறியப்பட்டுள்ளது.

மாயிரு ஞாலம், ஒருபொருட் பன்மொழி. சிலப். 5 : 163; கானல் வரி : 52 : 12; இராவணன் படை ஆயிரம் வெள்ளம் என்பது இங்குக் கூறப்பெற்றது; சுக்கிரீவன் படை எழுபது வெள்ளம் (சுந்தர. 520) என்பது கருதத் தக்கது. 'மாயிருஞாலத்து வைத்த' என்றமையால், பின்பு படைக்காட்சிப் படலத்தில் 'ஒத்த வெள்ளமோராயிரம்' (29) என்று கூறிய மூலபலம் நீங்கியவை என்பது புலனாகும்.

இதன் பின் 'தேர் பதினாயிரம்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. பேயின ; பேர்வுரு.

2. மூலந் தமர்ந்த மாப்படை ; வாழு மன்னுயிர்.

3. தேய்வுறு ; நாளெலாந் தேய.

4. ஆயிரம் ; அறைந்த ; றறிதியாழியாய் ; அறிவன் ஆழியாய். 28

## அரண்மனை முன்றிலின் வீரர்

487. அன்றியு மவனகன் கோயி லாய்மணி
முன்றிலின் வைகுவார் முறைமை கூறிடின்
ஒன்றிடி னுலகெலா மெடுக்கு மூற்றத்தார்
குன்றினு நெடியவர் கோடி கோடியால்.

'அன்றியும் - அல்லாமலும், அவன் அகன் கோயில் - அந்த இராவணனது விசாலமான அரண்மனையின் கண், ஆய் மணி முன்றிலின் வைகுவார் - அழகிவ நவமணிகளால் இயன்ற வாயிலின் முன்பு தங்கியுள்ள வீரர்களின், முறைமை கூறிடின் - நிலைமையைக் கூறப்புகின், ஒன்றிடில் உலகெலாம் எடுக்கும் ஊற்றத்தார் - ஒருங்கு கூடுவாராகில் உலகனைத்தையும் பெயர்த்து எடுக்க வல்லவன்மை செறிந்தவர்கள், குன்றினும் நெடியவர் - மலையைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் ; (அவர்களின் தொகை), கோடி கோடி - பல கொடிகளாகும். ஆல் - அசை.

முதலிரண்டடிக்கு (ஒப்பு): சுந்தர. 115 ; 'திசைமுகந் தழுவும் சிகர மாளிகைத் தலம்' (சுந்தர. 124) ; இல் முன் என்பது முன்றில் என வந்தது. ஊற்றம் - வன்மை, 'ஊசிவெ ரொடும்பறித் துருட்டும் ஊற்றத்தான்' (ஆரணிய. 848) ; 'ஊற்ற மில்லவன் ஓடினன் கனகனை யுற்றுன்' (யுத்த. 163) ; நெடியவர் - நெடுமை இங்கு உயரத்தின் மேற்று. கோடிகோடி : கோடியின் கோடியான குருக்கள் வெஞ்சேனை' (வி. பா. நிரைமிட்சி. 122) ; கோடி கோடியால் - கோடி என்னும் கணக்கினர் ; நீ மனம் கொள்வாயாக எனினுமாம்.

பி - ம். 1. கோயில் வாயணி, வாய்மனை.

2. மூன்றிலுன் மாறினர் முறையின் வைகுவார்.

3. ஒன்றிய ; உலகையும்.

4. கோடியே. 28

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## இராவணன் நாற்படை

488. தேர்பதி னுயிரம் பதுமஞ் செம்முகக்
கார்வரை யவற்றினுக் கிரட்டி கால்வயத்
தூர்பரி யவற்றினுக் கிரட்டி யொட்டகந்
தார்வரு புரவியி னிரட்டி சாலுமே.

'(அந்த இராவணனது) தேர் பதினுயிரம் பதுமம் - தேர்கள் பதினுயிரம் பதுமமாகும்; செம்முகம் கார்வரை அவற்றினுக்கு இரட்டி - செம்புள்ளி பாய்ந்த முகத்தைக் கொண்ட கரிய மலை போன்ற யானைகள் அந்தத் தேர்த் தொகையைக் காட்டிலும் இரண்டு மடங்கு என்ப; கால் வயத்து ஊர்பரி - கால் வன்மை வாய்ந்து சவாரி செயற்குரிய குதிரைகள், அவற்றினுக்கிரட்டி - அந்த யானைகளின் தொகையினும் இரண்டு மடங்காகும்; ஒட்டகம் - ஒட்டகங்கள், தார்வரு புரவியின் இரட்டி சாலும் - கிண்கிணி மாலையணிந்த குதிரைகளின் தொகையைக் காட்டிலும் இரண்டு மடங்காக நிறைந்து விளங்கும். ஏ - அசை.

பதுமம் ஒரு பேரெண்; கோடா கோடி என்பர் 'கொடிப் படைப் பதுமத்தின் தலைவன்' (யுத்த. 5(2)). கார் வரை - மலை போன்ற யானைகள்; 482 உரை காண்க. செம்முகக் கார்வரை; 'புகராலழ கெய்தி' (வி. பா. 16 ஆம் போர். 7). முதல் மூன் றடிகட்கொப்பு 'அண்ணல் யானை யாயிரம், விண்ணத் தியங்கு தேர் எண்ணவற் றிரட்டியே' (சீவக. 566). கால் வயத்து என்பது காலின் வசத்தால் அல்லது உதவியால் எனினுமாம். வயம் - மூலம் அல்லது சாதனம்; வயம் - வலி (நாமதீப நிகண்டு); பரி - குதிரை. பரிந்து செல்வது பற்றி வந்த பெயர். பரித்தல் சுமத்தலுமாம். ஒட்டகம் - பெரும்பாலும் பாலை வனத்தில் வசிப்பது இதனை வனந்தரக் கப்பல் என்பர். 'தள்ள ரும்பரம் தாங்கிய ஒட்டகம்' (பால. எழுச்சி. 37); தார்வரு புரவி - போரில் முன்னணி யிற் சென்று பொரவல்ல அல்லது பிடரிமயிருடன் கூடிய பரி எனினுமாம். தார் - தூசிப்படை; பிடரி மயிர். 'தார்ப் புரவி வட்டம்' (சீவக. 84).

பி - ம். 1. தேர் பதினுயிர கோடி ; பதினுயிரம் பத்து செம்முகக்.
3. ஊர்பரி யுரைத்தவற்றிரட்டி.
4. ஏர்வரும் ; பாகம் சாருமால் ; பொன்பரால், யானவை ; வெள்ளமால் ; யேயுமால்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஈங்கிவ னன்றியும் ஏழு தீவினும்
ஓங்குபா தலத்தினும் உயர்ந்த அண்டத்தும்
தாங்கிய சக்கர வாளச் சார்பினும்
ஆங்கவன் படைதனக் களவை யில்லையால்.

### இராவணனது துணைவர்

489. இலங்கையி னரணிது படையி னெண்ணிது
வலங்கையில் வாள்சிவன் கொடுக்க வாங்கிய
அலங்கலந் தோளவன் றுணைவ ரந்தமில்
வலங்களும் வரங்களும் தவத்தின் வாய்த்தவர்.

'இலங்கையின் அரண் இது - இலங்கா நகரத்தின் அரண் இத்தன்மையது; படையின் எண் இது - சேனையின் தொகை இப்படிப்பட்டது: சிவன் கொடுக்க - சிவபிரான் கொடுத்தருள, வாள் வலம் கையில் வாங்கிய - சந்திரகாசம் என்னும் வாளினைத் தனது வலக் கரத்தில் வாங்கிக் கொண்ட, அலங்கல் அம் தோளவன் - வெற்றி மாலையே (இதுகாறும்) சூடிவந்த அழகிய புயங்களை யுடைய இராவணனுக்கு, துணைவர் - உதவியாக நிற்பவர், அந்தம் இல் வலங்களும் வரங்களும் - ஈறில்லாத வலிமைகளையும் வரங்களை யும், தவத்தின் வாய்த்தவர் - தாம் ஆற்றிய தவத்தின் பயனாக அடையப் பெற்றவர்கள்.

இலங்கையின் அரண்களும் படையின் தொகையும் கூறினான். இனி அடுத்து வரும் பாடல்களில் வீரர்களைத் தனித் தனி விதந்து கூறுவன். வாள் கொடுத்தது; 'மூன்றரைக் கோடி யாண்டும், எவ்வகைப் படையும் வெல்லும் சந்திர வாளு மீந்தான் (உத்தர. கும்ப. 1); 'செவ்வே பிழையா நெடுவாளுறை தீர்த்தெ றிந்தான்' (ஆரணிய. 931); ஒருவர் மகிழ்ந்து அல்லது ஆசிகூறி யளிக்கும் பொருளை வலங்கையில் வாங்க வேண்டும் என்ற மரபு பற்றி 'வலங்கையில் வாங்கினன்' எனப்பட்டது. வலம் அலங்கலந் தோளவன் என இயைப்பினும் ஆம். 'தவத்தின் வாய்த்தவர்' யுத்த. 405.

பி - ம். 2. வாட்சிவன்.
3. அலங்கலந் தோளினன்.
4. தவத்திற் பெற்றுளார்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வேறு

### அகம்பன்

490. உகம்பல் காலமுந் தவஞ்செய்து பெருவர முடையான்
சுகம்பல் போரலால் வேறிலன் பொருபடைத்
[தொகையான்
நகம்ப லென்றிவை யில்லதோர் நரசிங்க மனையான்
அகம்ப னென்றுள னலைகடல் பருகவு மமைவான்.

'பல் உகம் காலமும் தவம் செய்து - பலயுக காலங்கள் தவம் புரிந்து, பெருவரம் உடையான் - பெருமை மிக்க வரங்களைப் பெற்றவனும், பல் போர் அலால் - பல வகையான போர்த் தொழில் அல்லாமல், சுகம் வேறு இலன் - இன்பம் பெறும் செயலாக எதனையும் ஏற்காதவனும், பொரு படை தொகையான் - போராற்ற வல்ல பெரும் சேனையை யுடையவனும், நகம்பல் என்றிவை இல்லது ஓர் நரசிங்கம் அனையான் - நகமும் பல்லும் என்று கூறப்பெறும் இவைகளைப் பெற்றிலாத ஒரு நரசிங்க மூர்த்தியை நிகர்த்தவனும், அலை கடல் பருகவும் அமைவான் - அலைகளையுடைய கடல் நீர் முழுவதையும் முடிக்கக்கூடிய தன்மை வாய்ந்தவனுமான, அகம்பன் என்று உளன் - அகம்பன் என்று கூறும்படியான ஓர் அரக்கன் உள்ளான்.

இச் செய்யுட் கண் 'அகம்பன்' என்ற பெயர்க் கேற்ப எதுகை அமைத்த நயம் காண்க. உகம் பல் என்பதைப் பல் உகம் என மாற்றுக. சுகம்பல் போரலால் வேறிலன்' (ஒப்பு); 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொ டிண்டோள்' (பால. பூக்கொய். 18); 'போரெனிற் புகலும் புனைகழல் மறவர் (புறநா. 31); 'வளி பொரு தெண்கண் கேட்பின், அதுபோ ரென்னும் என்னையும் உளனே' (புறநா. 89); 'குழாக்களிற் றரசர் குறித்தெழு கொலைக் களம், விழாக்களம் போல மெய்ம்மலி யுவகையர்; (ஒப்பு): 'தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவற், கொற்கத் துதவினு னுகுமால் பிற்பிற், பலர் புகழ் செல்வம் தருமாற் பலர் தொழ வானக வாழ்க்கையு மீயுமா லன்னதோர், மென்மை யிழுப்பப் பழிவருவ செய்பவோ, தானேயும் போரும் உயிர்க்கு' (நகநூர்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



புறத்திரட்டு; படைச் செருக்கு. 9) என்பவாகலின் சுகம்பல் போரலால் வேறிலன் எனப்பட்டது. போர்கள் நிகழாத காலத்தும், வீரஉணர்ச்சி குன்றுமையின் மன்னர் மரபின் வந்தவர்கள் தகர்ப்பரய்ச்சலும், வாரணப்போரும் கண்டு மகிழ்வதுண்டு என்பர். 'விலக்கரும் போர்த்தகர்ப் பாச்சல் கண்டருளி வெற்றிபெற, மலைக்குநெடு முட்கணைக்கால் வாரணப்போர் மகிழ்ந்தருளி (பெரியபு. கழறிற்று. 129.) என்றது காண்க. நகம்பல் என்றிவை யில்லதோர் நரசிங்கம்' இல்பொருள் உவமை. அலைகடல் பருகவும் அமைவான்' (ஒப்பு) வீரன் சேனை, இவ்வேலைப் பள்ளம் ஒருகை நீரள்ளிக் குடிக்கச் சாலும் பான்மையதோ' (சுந்தர. 603); கிட்கிந்தா. 691; 707; 708; 709. அகம்பனை இராவணன் மகன் என்றும் கூறுவர். இவன் அநுமனுடன் பொருது இறந்தது பிரமாத்திரப் படலத்துக் காண்க.

பா - ம். 1. தவஞ் செய்த.

2. பெரும் படைத் தொகையான்.

3. இலாததோர், வலியதோர்.

4. முடிக்கவு மமைவான்; வல்லான், ஆவான். 32

இப்பாடல் ஓர் பிரதியில் இல்லை.

## நிகும்பன்

491. பொருப்பை மீதிடும் புரவியும் பூட்கையும் தேரும்
உருப்ப விர்படை யொன்பது கோடியு முடையான்
செருப்பெய் வானிடைச் சினக்கிடாய் கடாய்வந்து செறுத்த
நெருப்பை வென்றவன் நிகும்பனென் றுளனொரு
[நெடியோன்.

'(அன்றியும்) பொருப்பை மீதிடும் புரவியும் - மலைகளையும் தாண்டிச் செல்லும் குதிரைப்படையும், பூட்கையும் - வேழப்படையும், தேரும் - தேர்ப்படையும், உருப்பு அவிர் படை - வெம்மையோடு ஒளிர்கின்ற காலாட்படையும், ஒன்பது கோடியும் உடையான் - ஒன்பது கோடி அளவில் உடைத்தானவனும், செரு பெய் சின கிடாய் - போரில் ஈடுபடும் கோபம் மிக்க ஆட்டுக் கிடாயை, கடாய்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வந்து - செலுத்தி வந்து, வானிடை செறுத்த - ஆகாய வீதியிலே போரிட்ட, நெருப்பை வென்றவன் - தீக்கடவுளை வென்றவனுமான நிகும்பன் என்று ஒரு நெடியோன் உளன் - நிகும்பன் என்று வழங்கப்பெறும் ஒரு பெருமை சான்ற வீரன் ஒருவன் உள்ளான்.

பூட்கை; ஆரணிய. 437; சுந்தர. 851, 864. 938. உருப்பு - வெம்மை, 'உருப்பவி ரமயத்து' (குறுந். 154); அருக்கருருப் பவித்தே' (நக்க. 482); நெருப்பை வென்றவனை அக்கினித்தம்பம் வல்லவன் என்ப. 'சலமே னடக்கலாம் கனல்மே லிருக்கலாம்' (தாயு. தேஜோ. 8); கும்ப நிகும்பர்கள் கும்பகர்ணன், புதல்வரென முதனூல் கூறும்: (உத்தர. இராவணன் பிறப்பு. 68) ம் காண்க. சிலர் நிகும்பன் என்ற ஓர் அரக்கன் இராவணனுக்கு மாமன் முறையினன் ஒருவன் உண்டென்பர். நால் வகைச் சேனையும் ஒவ்வொன்று ஒன்பதுகோடி யெனக் கொள்ளலுமாம்.

பி - ம். 1. பூட்கையும் புரவியும்; புழைக்கை; புரவியும் யானையும்.
3. செருப்பை.
4. தெடியான். 33

## கும்பன்

492. தும்பி யீட்டமு மிரதமும் புரவியுந் தொடர்ந்த
அம்பொன் வாட்படை யையிரு கோடிகொண் டமைந்தான்
செம்பொ னுட்டுள சித்தரைச் சிறையிடை வைத்தான்
கும்ப னென்றுள னூழிவெங் கதிரினுங் கொடியான்.

'(இஃதன்றியும்), தும்பி ஈட்டமும் இரதமும் புரவியும் தொடர்ந்த - யானைத்திரளும் தேர்த்தொகுதியும் குதிரைப்படையும் அணியணியாகத் தொடரப்பெற்ற, அம் பொன் வாள்படை ஐயிரு கோடி கொண்டு அமைந்தான் - அழகிய பொன்னாலாகிய வாளை ஏந்திய காலாட்படைகள் பத்துக்கோடி உடன்கொண்டு பொருந்தியவனும், செம்பொன் நாட்டு உள சித்தரை சிறை இடை வைத்தான் - செம்பொன்னுடென்னும் தேவர் உலகின் உள்ள சித்தரைச் சிறைப்படுத்தியவனும் ஆகிய, கும்பன் என்று உளன் - கும்பன் என்று ஒருவன் உள்ளான்; (அவன்), ஊழி வெம் கதிரினும் கொடியான் - கடையூழிக் காலத்துத் தோன்றும் வெப்பமான கிரணங்களையுடைய சூரியனைக்காட்டிலும் வெய்யவன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தும்பி - யானை; பிங். விலங்கின் பெயர். 'தும்பியின் குழாத்திற் சுற்றும் சுற்றத்தன்' (அயோத்தி. கங்கை. 49); 'தும்பியை அரி தொலைத் தென்ன' (கிட்கிந்தா. 286). தொல்காப்பியத்தும் சங்க நூல்களிலும் இச்சொல் ஒருவகை வண்டினையே குறித்து நின்றது; பிற்காலத்து யானையையும் குறித்தது. பொன்மாப் படை என்னும் பாடத்திற்குப் பொன்னை ஊதியமாகப்பெற்றுப் பணியாற்றும் காலாட்படை என்க. ஊழி வெங் கதிர் - பிரளயகால சூரியன்.

பி - ம். 1. புரவியு மிரதமும்.
2. அம்பொன் மாப்படை.
3. செம்பொ னுட்டிடை; சித்திரச் சிறையினில் செறுந்தான்.
4. காற்றினும் கொடியோன். 34

ஒரு சுவடியில் இச்செய்யுள் பின்வருமாறு மாறிக் காண்கிறது:

தும்பி யீட்டமும் இரதமும் பரியொடுங் துடரும்
அம்பதாதிய வெள்ளமாப் படையொடு மமைந்தான்
செம்பொ னுட்டுள தேவரைச் சிறையிடை வைத்தோன்
கும்ப நாட்டனென் றுளனெடு சித்தரைக் குறைத்தான்.

## மகோதரன்

493. பேயை யாளியை யானையைக் கழுதையைப் பிணித்த
ஆய தேர்ப்படை யையிரு கோடிகொண் டமைந்தான்
தாயை யாயினுந் தனிக்கொலை சூழினுந் தவிரா
மாயை யானுளன் மகோதர னென்றொரு மறவோன்.

'பேயை யாளியை யானையை கழுதையை பிணித்த ஆய' - பேயையும் யாளியையும் யானையையும் (கோவேறு) கழுதையையும் பூட்டினவாகிய, தேர்படை ஐயிரு கோடி கொண்டு அமைந்தான் - தேர்ச்சேனை பத்துக் கோடியைக் கொண்டு பொருந்தியவனும், தாயை ஆயினும் - பெற்ற தாயாக விருப்பினும், தனி கொலை சூழினும் தவிரா - தனித்துக் கொலைசெய்ய வெண்ணினும் அந்த எண்ணத்தைக் கைவிடாத, மாயை யான் - மாயையில் வல்லவனான, மகோதரன் என்று ஒரு மறவோன் - மகோதரன் என்று ஒப்பற்ற வீரன், உளன் - உள்ளான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மகோதரனது மாயப்போரைப் பிரமாத்திரப் படலத்துக் காண்க. யாளி என்பது சிங்கம்போன்ற ஓர் பழங்காலத்து மிருகம்; இப்பொழுது வழக்கு வீழ்ந்தது. யாளி உருவச்சிலைகள்மட்டும் இன்றும் பெருங் கோயிற் சிற்பங்களிற் காணலாம். கழுதை - கோவேறு கழுதை. இதனை அத்திரி யென்ப; 'வான வண்கைய ரத்திரி யேற' (சிலப். 6, 119)-உம், அத்திரி - குதிரையில் ஓர் சாதி. இதனை இராச வாகனம் என்பர் அடியார்க்கு நல்லார். 'தாயை யாயினுந் தனிக்கொலை சூழினும் தவிரா'; 'கோவந் தோன்றிடிற் றுயையு முயிருணும் கொடியோர்' (யுத்த. படைக்காட்சி. 23); 'தனிக்கொலை' (யுத்த. 147). மகோதரன் என்ற வடசொல் பெரு வயிற்றன் எனப் பொருள்படும்.

பி - ம். 1. குதிரையைப் பூதத்தைப் பிணிக்கும்.

2. ஐயிரு வெள்ளம்.

3. ஆயினும் சலித்திடின்; வஞ்சனை தவிரா.

4. மாய்கையா னுளன். 35

யஞ்ஞஹா

494. குன்றில் வாழ்பவர் கோடிநா லைந்தினுக் கிறைவன்
இன்று ளார்பினை நாளையி லாரென வெயிற்றால்
தின்று ளானெடுந் தேவரைப் பன்முறைச் செருவின்
வென்று ளானுளன் வேள்வியின் பகைஞனோர்
[வெய்யோன்.

(மற்றும்), 'குன்றில் வாழ்பவர் - மலைப்பக்கங்களில் வாழ்பவரான, நாலைந்தின் கோடிக்கு இறைவன் - இருபது கோடி வீரர்க்குத் தலைவனும், இன்றுளார் பினை நாளை இலார் என - இன்று உயிருடனிருப்பவர் பின்னர் நாளைக்கு உயிருடன் இல்லாதவர் எனுமாறு, எயிற்றால் - தனது பற்களினால், தின்றுளான் - (கண்ணிற்பட்ட உயிர்களைத்) தின்பவனும், நெடு தேவரை பன்முறை செருவின் வென்றுளான் - (பெருமைவாய்ந்த) தேவர்களைப் பலதடவைகளில் போரில் வெற்றிகொண்டவனுமான, வேள்வியின் பகைஞன் ஓர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வெய்யோன் - யஞ்ஞுஹா என்னும் ஓர் கொடியவன், உளன் - இருக்கின்றான்.

குன்றில் வாழ்பவர்: இக் குன்றுகள் கந்தமாதனம், மலையம் சக்கரமால்வரை முதலியன என்க; யுத்த. படைக்காட்சி. 14, 15, 17 காண்க. யஞ்ஞுஹா என்ற வடசொல்லின் தமிழாக்கம் வேள்வியின் பகைஞன் என்பது. இவனை யக்ஞ சத்துருவென்றும் கூறுவர். அரக்கர்கள் வேதவேள்வியை அழிப்பவர் என்பது இந்நூலில் ஆங்காங்குக் காணப்படும். 'தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக் கிடையூறு' (பால. கையடைப். 10); 'வேதமும் வேள்வியு மயக்கி' (யுத்த. 378); மற்றும், 'சம்பரன் முதலினோரேகித் துன்னும் வேள்வியே முதலிய வறங்களைத் தொலைத்து' (பாக. 7·2:4); 'மூதெரி வளர்க்கலெம் முறையி னீங்கினேம், ஆதலின் அந்தணரேயு மாகிலேம்' (ஆரணிய. 131).

பி - ம். 1. குன்றின் வாழ்பவன்; வாழ்படை வெள்ளம்.

2. இன்றுளார்தமை நாளையின்.

4. வேள்வியின் பகைஞனென் றுரைப்போன். 38

## சூரிய சத்துரு

495. மண்ணு ளாரையும் வானிலுள் ளாரையும் வகுத்தால்
உண்ணு நாளொரு நாளினென் றொளிர்படைத் தானை
எண்ணி னலிரு கோடிய னெரியஞ்ச விழிக்கும்
கண்ணி னுளன் சூரியன் பகையென்றோர் கழலான்.

'மண்ணுளாரையும் - இவ்வுலகி லுள்ளவரையும், வானில் உள்ளாரையும் - விண்ணுலகில் உள்ளவரையும், வகுத்தால் - வகைப்படுத்தினால், உண்ணும் நாள் - (அவ்வெல்லோரையும்) உண்கின்ற நாள், ஒரு நாளின் - ஒரே நாளில், என்று - என்று சொல்லுமாறு, ஒளிர் - விளங்குகின்ற. படை தானை - படைக்கலத்தோடு கூடிய சேனையை, எண்ணினல் - கணக்கிட்டால், இரு கோடியன் - இரண்டு கோடிகளைக் கொண்டவனும், எரி அஞ்ச விழிக்கும் கண்ணினன் - நெருப்பும் அச்சமுறும்படி உருத்து நோக்குகின்ற விழிகளை யுடையவனுமான, சூரியன் பகை என்றோர் கழலான் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சூரிய சத்துரு என்னும் பெயர்கொண்ட ஓர் வீரகண்டை யணிந்த வீரன், உளன் - உள்ளான்.

முதலிரண்டடிகட்கு: 'நக்கீரரைச் சிறைப்படுத்தி அப் புலவ ரோடுஒரே நாளில் அவர் துணைவரையும் பாரணம் செய்ய எண்ணி யிருந்து, முருகப்பிரானால் கொலையுண்ட 'கல்கி' என்னும் பூதத்தை ஒப்பு நோக்குக. எண்ணினால்: எண்ணிக்கையின்படி எனினுமாம். சூரியன் பகை; சூரிய சத்துரு: பானுகோபன் என்ற சொல்லும் இதே பொருள்படும்; இவன் சூரியகேது என் றும் கூறப்படுவன். 'இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென் றெண்ணவோ திடமில்லையே' (தாயு. சச்சிதா. 5); 'இன்றுளார் நாளை மாள்வர்' (யுத்த. இந்திரசித்து. 10); 'நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை' என்ற பழமொழிகள் கேள்வியளவில் இருந் ததைக் கண்கூடாகக் காட்டுபவன் இவன் என்க. சூரிய சத்துரு வும் சூரியன் மகனும் பொருததைப் படைத்தலைவர் படலத்துக் காண்க.

பி - ம். 1. வானுளார் தம்மையும்.
2. நாளினின் றுழல்தரு பசியன் படைத்துடையான்; நாளென வுழறரு பசியான்.
3. கோடிய; எரியஞ்ச எரியும்.
4. கண்ணுளான்; பகையென்ற. 37

## மகாபார்சுவன்

496. தேவருந் தக்க முனிவருந் திசைமுகன் முதலா
மூவரும் பக்க நோக்கியே மொழிதர முனிவான்
தாவரும் பக்க மெண்ணிரு கோடியின் தலைவன்
மாபெரும் பக்க னென்றுளன் வாளரி யனையான்.

'தேவரும் - வானவரும், தக்க முனிவரும் - தவத்தாற் தகுதி பெற்றோரிரும் இருடிகளும், திசைமுகன் முதலாம் மூவரும் - பிரமன் முதலான மும்மூர்த்திகளும், பக்கம் நோக்கியே மொழி தர முனிவான் - அக்கம் பக்கம் பார்த்துக்கொண்டே உரையாடுமாறு பெருஞ்சினம் கொள்பவனும், தாவரும் பக்கம் எண்ணிரு கோடி யில் தலைவன் - குற்றமற்ற பதினாறுகோடிச் சேனைக்குத்தலைவனும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வாள் அரி அனையான் - கொடிய சிங்கம் போன்றவனும் ஆன, மா பெரும் பக்கன் என்று உளன் - மகாபார்சுவன் என்ற ஒருவன் உள்ளான்.

பிரமன் முதலான மும்மூர்த்திகளும் மகாபார்சுவன் எங்கு வந்துவிடுவானோ என்று அஞ்சிப் பக்கம் நோக்கியே உரையாடுவர் என்க. 'பகலில் பக்கம் பார்த்துப் பேசு' என்பது பழமொழி. தாவரு பக்கம்; பக்கம் - சேனை. மொழிதர: தர - துணையினை; பக்ஷம்: பக்கம் என வந்தது. பார்சுவம் என்ற வடமொழி பக்கம் எனப் பொருள்படும். மகாபார்சுவன் போர்த்திறம் யுத்தகாண்டம் படைத்தலைவர் படலத்துட் காண்க. இவனே மாபெரும் பக்கன்; மாபெரும் பாரிசன் எனவும் கூறப்படுவான்.

பி - ம். 2. நிரிதர.

3. சேனைவெள்ளத் தொருதலைவன்.

4. குன்றினும் வலியான். 30

## வச்சிர தம்ஷ்ட்ரன்

497. உச்சி ரத்தெரி கதிரென வுருத்தெரி முகத்தன்
நச்சி ரப்படை நாலிரு கோடிக்கு நாதன்
முச்சி ரத்தயில் தலைவற்கும் வெலற்கரு மொய்ம்பன்
வச்சி ரத்தெயிற் றவனுளன் கூற்றுவன் மாற்றான்.

'உச்சிரத்து எரி கதிர் என - தலைக்கு நேராக வந்து ஒளி வீசுகின்ற சூரியன் என்னுமாறு, உருத்து எரி முகத்தன் - வெகுண்டு ஒளிர்கின்ற முகத்தை யுடையவனும், ந சிரம்படை - நாலிரு கோடிக்கு நாதன் - மிக்க தலைமை பெற்ற எட்டு கோடி சேனைக்குத் தலைவனும், மு சிரத்து அயில் தலைவற்கும் - மூன்று தலைகளையுடைய சூலப்படையை ஏந்திய தலைவனான சிவ பிரானாலும், வெலற்கு அரு மொய்ம்பன் - வெற்றிகொள்ள முடியாத வலிமை வாய்ந்தவனும் ஆகி, கூற்றுவன் மாற்றான் - யமனுக்கும் விரோதியான, வச்சிரத்து எயிற்றவன் உளன் - வச்சிர தம்ஷ்ட்ரன் என்று ஒருவன் உள்ளான்.

உச்சிரம் - தலையின் மேற்புறம்; கதிர் ஆகுபெயராகக் கதிரவனைக் குறித்தது. உருத்து - வெம்மைகொண்டு அல்லது அழன்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'ஆகமுருப்ப நூறி' (புறநா. 25, 10). ந என்னும் சொல் உயர்வு குறிக்கும் என்பர். நச்சினர்க்கினியர்: சீவக. 482 உரை. உடலுறுப்புகளில் சிரம் உயர்வாதல்போன்று உயர்வான படை என்க. ',சர்வஸ்ய காத்ரஸ்ய சிரம் பிரதானம்' என்றது காண்க. முச்சிரம் - திரிசூலம்; சிவனுலும் வெலற்கரியான் வச்சிர தந்தன் என்பவன். வச்சிரம்போன்ற உறுதிவாய்ந்த பற்கள் என்க. கூற்றுவன் மாற்ருன்; (ஒப்பு): 'கூற்று மென்பெயர் செலக் குலையும்' (கிட்கிந்நா. 254); 'கூற்றுவன் தன்னெடிவ் வுலகம் கூடிவந், தேற்றன வென்னினும் வெல்ல வேற்றுளேம்' (யுத்த. 37); 'கூற்றுக்கும் விதிக்கும், வசையும் வன்மையும் வளர்த்தவர்' (யுத்த. படைக்காட்சி. 10); மற்றும், யுத்த. படைக் காட்சி. 17; மூலபல. 18. 'கறங்கு போல்வன காற்றினுங் கூற் றினுங் கடிய' (கிட்கிந்நா. 703); 'பிடிக்கு மேற்பெருங் காற்றையுங் கூற்றையும் பிடிக்கும்' (கிட்கிந்நா. 709); 'கூற்றுடன்று மேல் வரினும் கூடியெதிர் நிற்கும், ஆற்ற லதுவே படை' (குறள். 765); 'முச்சிரத்தயில்' சுந்தர. 1157. 'முச்சிரப்படை' (தக்க. 657). வச்சிரதம்ஷ்ட்ரன்: 'வச்சிரத் தெயிற்றவன்' (யுத்த. 39); மொய்ம்பு தோள் எனினுமாம். வச்சிரத் தெயிற்றவன் போர் படைத்தலைவர் படலத்துக் காண்க.

பி - ம். 1. முகத்தான்.

3. உச்சிரத்தெறி, உச்சிரத்தது; வெலற்கரு முனைவன், விலக்கரு மொய்ம்பன்.

4. றவனென்றேர் கூற்றிற்கும் வலியான், கூற்றுக்கு; வன்மைய னுளனல். 39

## பிசாசன்

498. அசஞ்சலப்படை யையிரு கோடிய னமரின்
வசஞ்செ யாதவன் தானன்றிப் பிறரிலா வலியான்
இசைந்த வெஞ்சமத் தியக்கரை வேரோடு முன்னுட்
பிசைந்து போந்தவன் பிசாசனென் றுளனெரு பித்தன்.

'அ சஞ்சல படை ஐயிரு கோடியன் - (போரில்) சிறிதும் சலிப்புருத பத்துகோடிச் சேனைக்குத் தலைவனும், அமரின் - போரில், வசம் செயாதவன் - (எவராலும்) வெல்லப் பெருதவனும்,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தான் அன்றி பிறர் இலா வலியான் - (வலியவர் என்று கூறப்) பிறரைப் பெறாத வன்மையானும், இசைந்த வெம் சமத்து - கிடைத்த கடுமையான போரில், முன்னாள் - பண்டை நாளிலே, இயக்கரை வேரொடும் பிசைந்து போந்தவன் - யக்ஷர்களை வேருடன் கூட (எவரும் எஞ்சாதவண்ணம்) கைகளாற் பிசைந்து எழுந்தவனு மான, பிசாசன் என்று ஒரு பித்தன் உளன் - பிசாசன் என்று போர்ப்பித்துப்பிடித்த ஒருவன் உள்ளான்.

அசஞ்சலம்: வடசொல். ந சஞ்சலம் என்பது அதன் சமாசம். தானன்றிப் பிறரிலா வலியான்; 'உண்மைக்கிவனே வலிக்கிவனே யுறவுக்கிவனே' (வி. பா. திரௌபதிமாலை. 34); (ஒப்பு): 'தன்துணை யொருவரும் தன்னில் வேறிலான்' (கிட்கிந்தா. 260); 'அதிரதர் தம்மையெண்ணில் அணிவிரல் முடக்கவொட்டா முதிர்சிலை முனி' (வி. பா. நிரைமீட்சி. 92). பிசாசன், பித்தன் என்ற அடைமொழி களால் உருத்திரன்போன்று வெம்மை வாய்ந்தவன் என்பதும் பெறப்படும். இவன் போர்த்திறம் படைத்தலைவர் படலத்துக் காண்க.

பி - ம். 1. அமலில்; கோடியன் மலரின்; ஐயிரு வெள்ளங்கொண் டமைந்தான்.
2. வசஞ் செயாதவர்; தானன்றிப் பிறிதிலா; வலியோன்.
3. இசைஞ்ச; வாளொடு மேனுள்.
4. மோந்தவன். 40

## துன்முகன்

499. சில்லி மாப்பெருந் தேரொடுங் கரிபரி சிறந்த
வில்லின் மாப்படை யேழிரு கோடிக்கு வேந்தன்
கல்லி மாப்படி கலக்குவான் கனலெனக் காந்திச்
சொல்லு மாற்றத்தன் துன்முக னென்றறந் துறந்தோன்.

'சில்லி மா பெரு தேரொடும் கரிபரி - சக்கரங்களுடைய மிகப் பெரிய தேர்களுடனே யானைகளும் குதிரைகளும், சிறந்த வில்லின் மா படை - சிறந்த வில்லாளர்களின் பெரிய படைகளுமாகிய, ஏழிரு கோடிக்கு வேந்தன் - பதினான்குகோடிச் சேனைக்குத் தலைவனும், மா படி கல்லி - பெரிய பூமியை அகழ்ந்து, கலக்குவான் - நிலை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தடுமாறச் செய்பவனும், கனல் என காந்தி சொல்லும் மாற்றத்தன் - (கோபத்தால்) அழல்போலும் மனம் வெகுண்டு உரைக்கும் சொற்களை யுடையவனும், துன்முகன் என்று அறம் துறந்தோன் - துன்முகன் என்று சொல்பவனும் ஆன தரும நெறியைக் கைவிட்ட (ஒருவன் உளன்).

சில்லி - தேர்ச் சக்கரம்; சுந்தர. 820, 972, 1193; ரத கஜ துரக பதாதி என்ற வடசொற்றொடர்க்கேற்ப தேர் கரிபரி வில்லின் மாப்படை என்றான். கல் என்று கொண்டு மலையுடன்கூடிய பூமி என்பர் ஒரு சாரார். படி - பூமி. பிருதிவி என்பது படி என்றாயதென்பர். மற்றும், எப்பொருளும் படிதற்கு இடமாதலின் இப் பெயர் பெற்றது எனினுமாம். 'காந்திச் சொல்லும்: அவன் பேச்சின் கடுமை குறிக்கப்பட்டது. முகத்தின் கடுமைகொண்டே துன்முகன் எனப்பட்டனன் போலும். 'அறம் துறந்தோன்'; 'அறத்தைத் தின்றருங் கருணையைப் பருகிவே றமைந்த, மறத்தைப் பூண்டுவெம் பாவத்தை மணம்புணர் மனத்தர்' (யுத்த. மூலபல. 6). மாற்றம் - சொல்; 'மாற்றமஃ துரைசெய' (அயோத்தி. மந்தரை. 51). இவன் போர்த்திறம் யுத்தகாண்டம் முதற்போர்ப் படலத்துக் காண்க.

பா - ம். 1. தேர் கரிபரி யொடும்; செறிந்த.
2. வெள்ளம்கொண் டமைந்தான்.
3. கல்லின், கல்லு; கடலெனக், கடலினை.
4. மாற்றிலன், ஆற்றலின், ஆற்றலன். 41

விருபாட்சன்

500. இலங்கை நாட்டன்ன வெறிகடற் றீவிடை யுறையும்
அலங்கல் வேற்படை யையிரு கோடிக்கு மரசன்
வலங்கொள் வாட்டொழில் விஞ்சையர் பெரும்புகழ் [மறைத்தான்
விலங்கு நாட்டத்த னென்றுளன் வெயிலுக விழிப்பான்.

(மற்றும்), 'அன்ன - அப்படிப்பட்ட, எறி கடல் தீவு - அலைகள் வீசப்பெற்ற கடல் நடுவிலுள்ள தீவாகிய, இலங்கை நாட்டிடை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உறையும் - இலங்கை நாட்டிலே வாழ்கின்ற, அலங்கல் வேல் படை - வெற்றிமாலையே சூடிய வேற்படையைத் தாங்கிய சேனைகள், ஐயிரு கோடிக்கும் அரசன் - பத்துக்கோடிக்கும் தலைவனும், வலம் கொள் வாள் தொழில் விஞ்சையர் - வெற்றியையேகொண்ட வாள் ஏந்திச் செய்யும் போர்த் தொழிலில் வித்தியாதரருடைய, பெரு புகழ் மறைத்தான் - பெரும் புகழைமறையச் செய்தவனும், வெயில் உக விழிப்பான் - வெயில்போன்று ஒளியெழுமாறு விழிப்பவனுமான, விலங்கு நாட்டத்தன் என்று உளன் - விரூபாட்சன் என்று ஒருவன் உள்ளான்.

எறிகடலிலங்கைத் தீவு 'கடல் சூழிலங்கைக் கயவாகு வேந்தனும்' (சிலப். 30 ; 160) ; வித்தியாதரர் என்ற சொல் விஞ்சையர் என மருவிற்று. 'வலம் கொள்வான் தொழில்' என்ற பாடத்திற்கு வாளை வலமேந்திப்புரியும் போர் எனினுமாம். 'விலங்கு நாட்டவன்' விருபாட்சன் என்ற வடமொழிப் பெயரின் தமிழாக்கம் ; 'தொன்னெடும் நகரிகாக்க விருபாக்க என்னச் சொன்னான்' (யுத். அணி வகுப்பு. 21.) விலங்கு நாட்டம். நேர்நோக்கமின்றிக் குறுக்குப் பார்வை. விலங்கு - குறுக்கு.

பி - ம். 1. நாட்டின னெறி.
2. ஆறைந்து வெள்ளம்கொண் டமைந்தான்.
3. வலங்கை வாட்டொழிப்.
4. விலங்கு நாட்டவன்.

42

## தூமிராட்சன்

501. நாம நாட்டிய சவமெலா நாளென்று மொருவர்
ஈம நாட்டிடை யிடாமல்தன் னெயிற்றிடை யிடுவான்
தாம நாட்டிய கொடிப்படைப் பதுமத்தின் தலைவன்
தூம நாட்டத்த னென்றுளன் தேவரைத் துரந்தான்.

'நாள் என்றும் - எல்லா நாட்களிலும், சவம் நாமம் நாட்டிய எலாம் - பிணம் என்று பெயர் கொடுக்கப் பெற்ற எல்லா வற்றையும், ஒருவர் - எவரும், ஈமம் நாட்டிடை இடாமல், தன் எயிறு இடை இடுவான் - நன்காட்டிடத்துக் கொண்டு போடாமல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(அவற்றைத்) தன் பற்களினிடையே வைத்துத் தின்பவனும், தாமம் நாட்டிய கொடி படை பதுமத்தின் தலைவன் - மாலைகள் சூட்டப்பெற்ற கொடிகளுடன்கூடிய பதுமம் என்ற எண்ணிக்கை கொண்ட சேனைக்குத் தலைவனும், தேவரை துரந்தான் - தேவர்களையும் (போரில்) முதுகு காட்டி ஓடும்படி துரத்தியவனும் ஆன, தூமம் நாட்டத் தன் என்று உளன் - தூம்ராக்ஷன் என்று ஒருவன் உள்ளான்.

சவம்; சாவு என்றதன் அடியாகப பிறந்த பெயர். ஈம நாட்டிடையிடாமல் 'விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலங்கெட்ட புல்லறிவாளர் வயிறு!' (நாலடி. 121); பதுமம்: ஓர் பேரெண்; தூம நாட்டத்தன் - தூம்ராக்ஷன் என்ற வடமொழிப் பெயரின் தமிழாக்கம்: 'தூமக்க ணரக்கனும்' (யுத்த. நாகபாசப். 25); இவன் புகைநிறக் கண்ணன் 'இறந்தாரை யெண்ணிக் கொண்டற்று' என்றபடி இறந்தவர் எண்ணிலராகலின் அவர் அடக்கம் செய்யப் பட்ட இடத்தையும் நாடு என்றான். 'தூமக் கண்ணனும் அநுமனும் எதிரெதிர் தொடர்ந்தார்' (யுத்த. படைத்தலைவர். 49); இவனது வீரத்திறத்தைப் படைத் தலைவர் வதைப் படலத்துட் காண்க.

பி - ம். 1. சவமெனின், சவமெரி.
2. நாடொறும், இடாவணம்.
4. தூமநாட்டவன்; தொலைத்தான். 43

## இரணமத்தன் முதலியோர்

502 போரின் மத்தனும் பொருவய மத்தனும் புலவர்
நீரின் மத்தன்ன பெருமையர் நெடுங்கடற் படையார்
ஆரு மத்தனை வலியுடை யாரிலை யமரிற்
பேரு மத்தனை யெத்தனை யுலகமும் பெரியோய்.

(மேலும்), 'பெரியோய் - சீரியோனே! போரில் மத்தனும் - ரணமத்தன் என்பவனும், பொருவயம் மத்தனும் - போர் புரிவதில் பொருது வெற்றிகொள்ளும் மத்தனும்; (என்ற இவர்கள்), புலவர் நீரின் மத்தன்ன பெருமையர் - தேவர்கள் அந்நாளிற் கடைவதற்குக் கைக்கொண்டு கடலில் நாட்டிய மந்தர மலைபோன்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பெருமை யுள்ளவர்கள் ; நெடு கடல் படையார் - பெரிய கடல் போன்ற பரந்த சேனைகளைப் பெற்றவர், அமரில் - போரில், அத்தனை வலியுடையார் ஆரும் இல்லை - அவர்கள் வன்மைபோன்ற வன்மையுடையவர் எவரும் இல்லை ; (அந்த வீரரால்) எத்தனை - எத்தனை யுண்டோ, அத்தனை உலகமும் பேரும் - அத்தனை உலகமும் நிலைகெட்டழியும்.

ரணமத்தன் என்பது போரின் மத்தன் எனப்பட்டது. ரணம்-போர். வடசொல். நீரின் மத்து - கடல் கடைந்த மந்தர கிரி. பேருமத்தனை யுலகமும். 'உலகெலாம் பெயரப் பேர்வான்' (யுந்த. இரணிய.) ; நீர் கடலுக்கு இலக்கணை.

பி - ம். 1. போருக்கு, பொருவரு ; இருவர், உலவா, பலவா.
2. நேரின் ; மந்தெனும், மந்தனும் ; பெருமையன் ; நெடும் படைத் தலைவர், நெடும் படை யுடையான்.
3. யாரிலை யவரால் ; வலியால்.
4. எத்தனை யுலகெலாம் ; உலகமும் வானமும். 44

## பிரகத்தன்

**503. இன்ன தன்மைய ரெத்தனை யாயிர ரென்கேன்**
**அன்ன வன்பெருந் துணைவரா யமர்த்தொழிற் கமைந்தார்**
**சொன்ன சொன்னவா படைத்துணை யிரட்டியின் தொகை [யான்**
**பின்னை யெண்ணுவர் பிரகத்த னென்றொரு பித்தன்.**

'அன்னவன் பெரு துணைவராய் அமர் தொழிற்கு அமைந்தார் - அந்த இராவணனுக்குத் துணையாகப் போர்த் தலைவர்களாய் அமைந்தவர், இன்ன தன்மையர் - இத்தகைய இயல்பு வாய்ந்தவர்கள், எத்தனை ஆயிரர் - எத்தனை ஆயிரவர், என்கேன் - என்று உரைப்பேன் ; (எண்ணிறந்தவர் ஆவர்), பின்னை - இவர்கட்குப்பின், சொன்ன சொன்னவா படைத்துணை இரட்டியின் தொகையான் - மேலே விதந்து சொல்லப்பட்ட படையளவின் இரட்டிப்பான படைத் தொகுதியை யுடையவனாகி, பிரகத்தன் என்று ஒரு பித்தன் - பிரகத்தன் என்ற ஓர் போர்ப்பித்துக் கொண்டவனை, எண்ணுவர் - (உலகத்தவர்) நினைப்பார்கள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இவன் வரலாறு இது முதல் ஆறுகவிகளில் காண்க. பிரகத்தன் சேனை காவலன் என்பது இதனை அடுத்துள்ள செய்யுளாற் காணப்படும். முன்னர் இராவணன் மந்திரப் படலத்து முதல் முதல் எழுந்து தன் கருத்தை யறிவித்தவன் இவனே; யுத்த. இரா. மந்திரப். 15-20); முதனூலும் இவனை இராட்சத சேனாபதி என்று கூறும்: இவன் நிலன் என்ற வானர வீரனாற் கொல்லப்பட்டான். யுத்த. முதற்போர். 78 காண்க.

பி - ம். 1. எத்துணை யாயிரம்.

3. படைத்துணைக் கிரட்டி; தொகைக் கிரட்டி.

4. பின்னர்; என்னுளான்.



504. சேனை காவல னிந்திரன் சிந்துரச் சென்னி
யானை கால்குலைந் தாழியோ ரேழும்விட் டகல
ஏனை வானவர் இருக்கைவிட் டிரியலுற் றேகச்
சோனை மாரியிற் சுடுகணை பலமுறை துரந்தான்.

(இந்தப் பிரகத்தன்), 'சேனை காவலன் - சேனைத் தலைவன், சிந்துரம் சென்னி - குங்குமம் அப்பியுள்ள மத்தகத்துடன் கூடிய, இந்திரன் யானை - இந்திரனது ஐராவதம் என்ற யானை; கால் குலைந்து - கால் தடுமாறி, ஆழி ஓர் ஏழும் விட்டு அகல - ஏழு கடல்களையுடைய இவ்வகன்ற விடத்தைவிட்டு ஓடவும், ஏனை வானவர் இருக்கை விட்டு இரியல் உற்று ஏக - மற்றும் உள்ள தேவர்கள் தமது இருப்பிடத்தைவிட்டு நிலைதடுமாறி ஓடவும், சோனை மாரியில் சுடுகணை பல முறை துரந்தான் - சோனை மழை போன்று இடைவிடாது பொழிவதும் சுட்டெரிக்கும் இயல் புள்ளனவுமான அம்புகளைப் பலகால் விடுத்தான்.

யானையின் தலைக்குச் சிந்துரம திட்டுவது மரபு, சிந்துரம் - குங்குமம். 'மாடுழுத நறுங்கலவை வயக்களிற்றின் சிந்துரத்தை மாறு கொள்ள' (சுந்தர. 312); இந்திரன் சென்னி சிந்துர யானை எனக் கூட்டி ஐராவத மாகிய தலைமை பெற்ற சிந்துர மாகிய யானை எனினுமாம். சிந்துரம் - யானையுமாம். தமக்கு அதிபனை இந்திரன் யானையே நிலைகுலைந்த வளவில ஏனைவானவரும் இரிந்து ஓடினர் எனப்பட்டது. இரியலுறுதல் - நிலை கெட்டோடுதல். ஆரணிய. 420, 473, 886. சோனை - விடாமழை (நிகண்டு); 'சோனை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மேகம் பொழிவது போல்' (வி. பா. 17-ஆம். 135); சோனை மாரியிற் சுடுகணை என்பதில் முரண் தொடை காண்க சோனை மாரியிற் கணை சுடுகணை யெனத் தனித்தனிப் பிரித்துக்கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது; சோனைமாரி சுடாதாகலின். இங்குக் கணைக்குச் சோனை விடாது பொழிவதில் உவமை.

பி - ம். 2. கால்நூலந் தழிதர.

3. இரியப் போயுலையச், உலைதலுற்றிரிய, இரியலுற்றுலைய.

4. மாரியினிருமடி மும்மடி சொரிந்தான்; துரந்தோன். 46

## கும்பகர்ணன்

505. தம்பி முற்பகற் சந்திரர் நால்வரிற் றயங்கும்
கும்ப மாக்கிரிக் கோடிரு கைகளாற் கழற்றிச்
செம்பொன் மால்வரை மதம்பட்ட தாமெனத் திரிவான்
கும்ப கன்னனென் றுளன்பண்டு தேவரைக் குமைத்தான்.

'கும்ப மா கிரி - மத்தகத்துடன்கூடிய பெரிய (ஐராவதமென்னும்) மலையின், முன்பகல் சந்திரர் நால்வரில் தயங்கும் - வளர்பிறைச் சந்திரர் நால்வரை ஒத்து விளங்குகின்ற, கோடு - தந்தங்களை, இரு கைகளால் கழற்றி - இரு கரங்களாலும் அடியோடு அகழ்ந்து, செம் பொன் மால்வரை மதம்பட்டதாம் என திரிவான் - செம்பொன்னிறத்த பெரிய மலையொன்று மதம் கொண்டது போன்று திரிபவனாகி, பண்டு தேவரை குமைத்தான் - முற்காலத்துத் தேவர்களை அழித்தவனான, கும்பகன்னன் என்று தம்பி உளன் - (இராவணனுக்கு) ஓர் தம்பி உள்ளான்.

முற்பகல் - முன்னாளில் எனினுமாம்; 'முற்பகல் செயின் பிற்பகல் விளையும்' என்பது கொன்றைவேந்தன். 'முற்பகல் செய்தான் பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்' (சிலப். 21:3:4); 'பிறர்க்கின்னா முற்பகல் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்' (குறள். 319); 'முற்பகல் செய்வினை பிற்பக லுறுநரின்' (பெருங். 1·5:259). சந்திரர் நால்வர்; இல்பொருள் உவமை. பிறைச் சந்திரன்போன்ற தந்தங்கள். இந்திரனது ஐராவதம் என்ற யானைக்கு நான்கு கோடுகள் என்பது புராண வரலாறு. 'பெருங்கவுள பிறையேயர் கோட்ட' (சீவக. 2968); 'தேயாமதி தன்னைப், யொடித்திரு பக்கமும் வைத்தன

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மகரிகை யொன்றியொன் றி யொன்னார்பெய், பிடிக்கு மருப்பது' (வீ. பா. 16-ஆம் போர்ச். 7); 'பிறைக் கோட்டியானை பிணிப்பது மன்றி' (பெருங். 1·33 : 149); மற்றும், பெருங். 3·20; 52-53; 3·27; 219. தயங்கல் - விளங்கல்; 'தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி வயங்கிணர்' (சிலப். 2·82-83) என்ற வரிகளும், 'தயங்கல் வயங்கல் இரண்டும் விளக்கமாகலிற் பரியாயம் என்னும் அலங்காரம்' என்ற உரைப்பகுதியும் காண்க. கும்பம் - யானை மத்தகம்; 'இகலிரும் கும்பத் தேந்திய சென்னியது' (பெருங். 1·42 : 225). செம்பொன் மால்வரை மதம்படுதல் இல்பொருள் உவமை. யானைக்கு வரை பல இடங்களில் உவமையாக வருதல் நூல்களிற் காணலாம்; 'நீலமால்வரை நிமிர்ந்து நடந்தன்ன' (பெருங். 1·58 : 17); 'அசலமே யனைய திக்கி லானைக்கோ டனைத்தும்' (தக்க. 735). குமைத்தல் - அழித்தல்; 'கொடிக்குமுறக் குமைத்தே' (தக்க. 478).

பி - ம். 2. கும்பமால் கரிக், கம்பமாக்கரி; கைகளால் வாங்கி.
3. மதங்கொண்ட.
4. கும்ப னென்றவன். 47

## இந்திரசித்து

506. கோளி ரண்டையுங் கொடுஞ்சிறை வைத்தவக் குமரன்
மூளும் வெஞ்சினத் திந்திர சித்தென மொழிவர்
ஆளு மிந்திரற் கன்னவன் பிணித்ததற் பின்னைத்
தாளு மார்பினுந் தோளினு முளவினந் தழும்பு.

'கோள் இரண்டையும் - (சூரியன் சந்திரன் என்ற) இரண்டு கிரகங்களையும், கொடு சிறை வைத்த அ குமரன் - கடுஞ் சிறையிட்ட அந்த (இராவணனது) புதல்வனை, மூளும் வெம் சினத்து - மேன் மேலும் எழுகின்ற கடுமையான கோபத்தையுடைய, இந்திரசித்து என மொழிவர் - இந்திரசித்தென்று கூறுவர்; அன்னவன் பிணித்ததன் பின்னை - அந்த இந்திரசித்து அவனைச் சிறைப் படுத்துமாறு கட்டியதிலிருந்து, ஆளும் இந்திரற்கு - மூன்றுலகமும் ஆட்சி செய்கின்ற அந்த இந்திரனுக்கு, தாளும் மார்பினும் தோளினும் தழும்பு இனம் உள - கால்களிலும் மார்பிலும் புயங்களிலும் உண்டான தழும்புகள் இன்னம் உள்ளன.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கோள் இரண்டு - கதிரும் மதியும். கொடுஞ்சிறை வைத்தது: 'நாளெலாம் புடைதயங்க், நாமநீ ரிலங்கையிற்று னலங்கவிட்ட, கோளெலாங் கிடந்தநெடுஞ் சிறையன்ன நிறையாரம்' (ஆரணிய. 558); 'வாளுடை தடக்கையன் வாரி வைத்தவெங், கோளுடை சிறையினன்' (ஆரணிய, 851); 'இருகோளும் சிறைவைத்தாற் கிளையாள்' (ஆரணிய. 358). இந்திரசித்து என்றது இந்திரனை வெற்றிகொண்டதாற் போந்த பெயர். இவன் இயற்பெயர் மேக நாதன்; இதுவும் காரணப்பெயரே. 'வந்துபிறந் திடுமைந்தன் மழையிடித்த தெனவாய்விட் டழுதலாலவ், வெந்திறன்மைந் தனை மேக நாதனெனப் பெயரிட்டான் இலங்கை மன்னன்' (உத்தர. இராவணன் பிறப்பு. 66). மேகநாதன் இந்திரனைப் பிணித்தது: 'காலபாச மிதாமெனும், வெய்யபாச முறப்பிணித்தனன் மேக நாதன்' (உத்தர. திக்குவிசயப். 240).

பி - ம். 1. சிறை வைத்துளான்; இட்டவன்.

2. மொழிந்தோன்.

4. தூளினுமுள.

48

## அதிகாயன்

507. தன்னை யுந்தெறுந் தருமமென் றிறைமனந் தாழான்
முன்னவன்றரப் பெற்றதோர் முழுவலிச் சிலையான்
அன்ன வன்றனக் கிளையவன் அப்பெய ரொழித்தான்
பின்னொ ரிந்திர னிலாமையிற் பேரதி காயன்.

'தருமம் தன்னையும் தெறும் - அறநெறி (பிறழ்ந்தால்), பிறழ்ந்த தன்னையும் அழித்து விடும், என்று இறை மனம் தாழான் - என்ற எண்ணமின்றிச் சிறிதளவும் மனம் தளராதவனாய் (மறச்செயல் களைப் புரிபவனும்), முன்னவன் தர பெற்றதோர் - முதல்வனாகிய பிரமதேவன் தரப்பெற்றதாகிய, முழுவலி சிலையான் - பூரண வன் மையையுடைய வில்லேந்தியவனும், அன்னவன் தனக்கு இளைய வன் - அந்த இந்திரசித்துக்குப்பின் பிறந்தவனும், பின் ஓர் இந்தி ரன் இலாமையின் - தான் பொருது வெல்லுதற்குப் பிறிதொரு இந்திரன் இல்லாமையின், அப்பெயர் ஒழித்தான் - அந்த இந்திர சித்து என்னும் பெயரைப் புனையாது விட்டவனுமான, பேர் அதிகா யன் - அதிகாயன் என்று பெயர் பெற்றவன் (உளன்).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தன்னையுந் தெறும் தருமம்; 'மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின், அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு' (குறள். 204); 'அவ்விய நெஞ்சத்தா னாக்கமும் செவ்வியான், கேடும் நினைக்கப் படும்' (குறள். 169); (ஒப்பு): 'தன்னையே கொல்லும் சினம்' (குறள். 305). அதிகாயன் இராவணனுக்குத் தானியமாலையிடம் பிறந்தவன். கடையடிப் பொருள் ஊன்றிக் கவனிக்கத்தக்கது. இந்திரன் ஒருவனே; அவனை வென்றதால் மேகநாதன் இந்திரசித்தெனப் புகழப் பட்டான். பிறிதோர் இந்திரன் இருந்திருப்பின் அவனை வெல்லும் ஆற்றல் இந்த அதிகாயற்குண்டு; ஆனால் மற்றோர் இந்திரன் இல்லை; எனவே அதிகாயன் எனப்பட்டான். இது கொண்டு இந்திரசித்துக்கு எந்த வகையினும் ஆற்றல் குறைந்தவன் அல்லன் அதிகாயன் என்பது விளக்கப்பட்டது. இங்ஙனம் அணி பெறக் கற்பிப்பது கம்பநாட்டாரது காவிய முறைகளில் ஒன்று. பிறிதோர் உதாரணம்: இறந்து கிடந்த அதிகாயன்பக்கல் நின்று வருந்திய இராவணனை, அழுதான் என்று கூறின் அவன் பெருமைக்கிழுக் கென்று கருதிக் 'காட்டாதன காட்டிய தாதையைச் சென்று கண்டான்' (யுத்த. நாகபாசப். 3) இந்திரசித் தென்று கூறினர் கல்வியிற் பெரியார். இந்த அதிகாயன் வீரப்பான்மையை அதிகாயன் வதைப் படலத்துக் காண்க. இச் செய்யுள் பிறிதினவிற்சியணி. கூறவேண்டிய பொருளை நேராகக் கூறாமல் மாற்றிக் கூறுவது இதன் இலக்கணம் என்ப.

பி. ம். 1. தருமன்; தாழின்.
2. முன்னரன்.
3. ஒழிந்தான்.
4. இலாமையாற்; வின்மையின்.



## தேவாந்தகன் முதலிய மூவர்

508. தேவ ராந்தக னராந்தகன் றிரிசிரா வென்னும்
மூவ ராந்தகை முதல்வராந் தலைவரு முனையில்
போவ ராந்தகை யழிவரா மெனத்தனிப் பொருவார்
ஆவ ராந்தகை யிராவணற் கரும்பெறற் புதல்வர்.

'தேவர் அந்தகன், நர அந்தகன், திரிசிரா என்னும் மூவர் - தேவராந்தகன் நராந்தகன் திரிசிரா என்னும் மூவர்கள், ஆம் தகை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


முதல்வராம் தலைவரும் - பொருந்திய தகுதி வாய்ந்த மும்மூர்த்தி களான உலகின் தலைவர்களும், முனையில் - போர் முகத்தில், போவராம் - போவரேல், தகை அழிவராம் என - தகுதியும் (வன்மையும்) அழியப்பெறுவர் என்று பகருமாறு, தனி பொருவார் ஆவர் - தனித்தனிப் போர்புரியும் ஆற்றல் மிக்கவர் ஆவர்; (அவர்கள்), தகை இராவணற்கு அரும்பெறல் புதல்வர் ஆம் - வன்மை வாய்ந்த இராவணனுக்குப் பெறற்கரிய மக்களாவர்.

தேவாந்தகன் என்பது தேவர் அந்தகன் எனவந்து தேவராந்தகன் என நீட்டல் விகாரம் பெற்றது; தேவர்கட்கு யமன் போன்றவன் என்பது பொருள். இச்செய்யுள் அடிதோறும் முதலெழுத்து மட்டும் வேறுபட்டுச் சில பல எழுத்துக்கள் ஒன்றி வந்தமையின் திரிபு என்னும் சொல்லணியின் பாற்படும். இங்குக் கூறப்பட்ட திரிசிரா என்பவன் கரனுக்குத் துணையாக இராமபிரானுடன் பொருது இறந்த திரிசிராவினும் வேறுவன்; ஆரணிய. 498 பார்க்க. அந்தகன் என்ற வடசொல், உயிர்களை அவற்றின் வாழ்நாளிறுதியில் கவர்பவன் என்று பொருள்படும். அரும் பெறற் புதல்வர் என்பது பெறற்கரும் புதல்வர் என மாற்றப்பட்டது. இச்செய்யுள்களால் சுந்தர காண்டத்தில் அநுமனால் கொல்லப்பட்ட அக்கனோடு, இந்திரஜித்து, தேவராந்தகன், நராந்தகன், திரிசிரா, அதிகாயன் ஆகியோர் இராவணனின் புதல்வர் என்பது தெரிய வருகிறது.

பி - ம். 3. பொருவரார்.

4. அரும் பெரும் புதல்வர்.

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

இன்னும் மைந்தர்கள் இயம்பின்மூ வாயிர கோடி
என்ன உண்டவர் இரதமும் கரிகளும் பிறவும்
துன்னும் ஆள்வகைத் தொகுதியும் செறிந்திட மேனாள்
முன்ன காதியன் உலகினைப் பரிபவப் படுத்தோர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இராவணன் வரலாறு

509. இனைய தன்மையர் வலியிஃ திராவண னென்னும்
அனைய வன்றிறம் யானறி யளவெலா மறைவென்
தனைய னுன்முகன் றகைமகன் சிறுவற்குத் தவத்தால்
முனைவர் கோன்வர முக்கணன் வரத்தொடு முயர்ந்தான்.

'இனைய தன்மையர் வலி இஃது - இப்படிப்பட்ட தன்மையை யுடைய இராவணனுடைய துணைவரின் வலிமை இவ்வாறாகும்; (இனி), இராவணன் என்னும் அனையவன் திறம் - இராவணன் என்று புகழ்ந்து கூறப்படுகின்ற அந்த இலங்கை மன்னனின் வன்மை குறித்து, யான் அறி அளவு எலாம் அறைவென் - யான் அறிந்த அளவெல்லாம் கூறுவேன் (அவன்), நான்முகன் தகை மகன் - பிரமனது நற்பண்புகள் வாய்ந்த புதல்வனான புலத்தியனது, சிறுவற்கு - மகனான விச்ரவசுக்கு, (இவன்), தனையன் - மகன்; தவத்தால்-தான் ஆற்றிய தவத்தின் பயனாக, முனைவர் கோன் வரம் முக்கணன் வரத்தொடும் உயர்ந்தான் - முன்னவனான பிரமதேவன் தந்த வரங்களுடன், மூன்று கண்களையுடைய சிவபிரான் அருளிய வரங்களையும் கைக்கொண்டு சிறப்புற்றவன்.

இதுகாறும் ஏனைய வீரர்களையும் இராவணனின் மக்களையும் கூறி, இனி இராவணன் பராக்கிரமத்தை இதுமுதல் 515வது செய் யுள் இறுதியாகக் கூறுகின்றான். தனையன் நான்முகன் தகை மகன் சிறுவற்குத் தனையன்; 'வையந் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்' (சுந்தர. 483); 'மகன்மகன் மைந்தனான் முகற்கு வாய் மையான்' (யுத்த. 348). பிரமனும் சிவபிரானும் அருளிய வரங்கள் உத்தரகாண்டம், இராவணன் பிறப்புப் படலத்துக் காண்க. சிவபெருமானால் இராவணன் முக்கோடி வாழ்நாளும் சந்திரகாசம் என்ற வாளும் பெற்றமை இங்குக் குறிக்கப்பட்டது. முனைவர் - முனிவர்; முனைவர்கோன் இங்குப் பிரமனைக் குறித்தது.

பி - ம். 1. வலியிவை.
2. யானறிவன.
3. சிறுவன் முன் தவத்தான்.
4. முனைவ கோளவன்; உயர்ந்தோன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


510. எள்ளி லைம்பெரும் பூதமும் யாவையு முடைய
புள்ளி மானுரி யாடைய னுமையொடும் பொருந்தும்
வெள்ளி யம்பெருந் தடங்கிரி வேரொடும் வாங்கி
அள்ளி விண்டொட வெடுத்தன னுலகெலா மனுங்க.

'எள்ளில் ஐ பெரு பூதமும் - இகழத்தகாத ஐந்து மகா பூதங்களும், யாவையும் உடைய - பிற பொருள்களையும் தனதாகப் பெற்றவனும், புள்ளிமான் உரி ஆடையன் - புள்ளிகள் அமைந்த வேங்கைப்புலியின் தோலை ஆடையாகப் பெற்றவனும் ஆன சிவ பெருமான், உமையொடும் பொருந்தும் வெள்ளி அ பெரு தட கிரி - பார்வதியோடும் வீற்றிருந்த கைலாயம் என்னும் அழகிய பெரிய மலையை, வேரொடும் வாங்கி - வேருடன் அகழ்ந்து, அள்ளி - கையில் எடுத்து, உலகு எலாம் அனுங்க - உலகத் துள்ளோரெல்லாம் மனம் உளையுமாறு, விண் தொட எடுத் தனன் - ஆகாயத்தைத் தீண்டுமாறு உயர்த்தான்.

முதலடிக்கு: ஐம்பெரும் பூதங்களையும் தன்வயமாக வுடைய சிவபெருமான் என்பது பொருள்; 'பூத நாயகன்' (யுத்த. அங்க தன். 21). எள்ளுதல் - இகழ்தல்; ஆரணிய. 693; 'எள்ளரு முருவுள இலக்கணம்' (சுந்தர. 394); 'எள்ளரிய தேர்தரு சுமந் திரன்' (சுந்தர. 551). புள்ளி மான் என்பது, இங்கே புலியைக் குறித்தது என்க. புள்ளி மானுரி யாடையன்; சிவபெருமான்: தாருகானத்து முனிவர் வெகுண்டு தம் மந்திரவலியால் ஏவிய புலி யைக்கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்தான் என்பது புராண வரலாறு; 'புலியினத ளுடையானும்' (ஆரணிய. 556); 'புலித்தோலை யரைக்கசைத்து' (சுந்தரர் தேவாரம்); 'கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை' (திருவாச. திருச்சதகம்.). மூன்று நான்காம் அடிகளில் அடங்கிய வரலாறு, உத்தர. இரா வணன் வரையெடுத்த படலத்துக் காண்க; 'ஈசனுண் டிருந்தபே ரிலங்கு மால்வரை, யூசிவே ரொடும்பறித் துருட்டு மூற்றத்தான்' (ஆரணிய. 848); மற்றும், ஆரணிய. 258, 319, 327, 596, 742, 848, 889, 919 காண்க. இராவணனுடைய இச் செயல் அப்பர், சம்பந்தர் என்ற சமயகுரவர்களால் தேவாரத்தில் பலவிடங்களில் குறிக்கப்பெறுவது காணலாம். அனுங்க - வருந்த; 'பஞ்சி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யொளி விஞ்சுகுளிர் பல்லவ மனுங்க' (ஆரணிய. 250). அனுங்குதல் - வாடுதல்; (பிங்.). எவ்விதமான முயற்சியும் இன்றி எடுத்தனன் என்பான், 'அள்ளி' என்ருன்.

பி - ம். 1. பூதங்கள்; சூழ்ந்த, சூழ.
2. புள்ளிமா வுரி; ஆடையான்; புணர்ந்தே.
3. பெருங் கிரியினை.

52

511. ஆன்ற வெண்டிசை யுலகெலாஞ் சுமக்கின்ற யானை
ஊன்று கோடிறத் திரள்புயத் தழுத்திய வொண்மை
தோன்று மென்னவே துணுக்கமுற் றிரிவரத் தொகுதி
மூன்று கோடியின் மேலொரு முப்பத்து மூவர்.

'ஆன்ற - பரந்த, எண் திசை - எட்டுத் திக்குகளிலிருந்து, உலகு எலாம் சுமக்கின்ற யானை - உலகனைத்தையும் தாங்கி நிற்கின்ற யானைகளின், ஊன்று கோடு இற - ஊன்றிய தந்தங்கள் முறிந்திடுமாறு, திரள் புயத்து அழுத்திய - திரண்ட புயங்களிலே பதியவைத்த, ஒண்மை தோன்றும் என்னவே - விளக்கமான வலி காணப்படும் என்ற அக்கணத்திலேயே, அ தொகுதி மூன்று கோடியின் மேல் ஒரு முப்பத்து மூவர் - அந்தக் கூட்டமாகவுள்ள முப்பத்து முக்கோடித் தேவர்களும், துணுக்கம் உற்று - அச்சம் அடைந்து, இரிவர் - ஓடலாயினர்.

இராவணன் திக்குவிசயம் செய்தபோது, திக்கு யானைகள் அவன் புயத்திற் பாய அவற்றின் தந்தங்கள் ஒடிந்தமை கண்டு முப்பத்து முக்கோடி தேவர்கள் அஞ்சி ஓடினர் என்பது இங்குக் குறிக்கப்பெற்றது. இராவணன் கயங்களை வென்றது; 'திக்கின் மாவெலாந் தொலைத்து' (ஆரணிய. 258); 'நிறைமதத்த திசை யானை மருப்பொடியப் பொருப்பிடியத் தோணிமிர்த்த வலியோனே' (ஆரணிய. 323); மற்றும், ஆரணிய. 328, 557, 643, 646, 752, 848, 875 என்பன காண்க. இராவணன் மார்பில் திக்கு யானைகளின் மருப்பழுந்தியது: சுந்தர. 303, 312; 'வாரணம் பொருத மார்பும்' (யுத்த. கும்ப. 1). முப்பத்து முக்கோடி தேவர்களாவர்; எட்டு வசுக்கள், பதினொரு உருத்திரர், பன்னிரு ஆதித்தர், அசுவினி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தேவர்கள் இருவர் ஆகிய முப்பத்து மூன்று வகையினர்களுள், வகைக்கு ஒவ்வொரு கோடியர் ஆனமையைச் சுட்டியது.

பி - ம். 1. ஏன்றவெண்டிசை ; வாணே.

2. கோடுறு ; மணிப்புயத் தழுத்தின ; உரவோன் ; உண்மை.

3. இரிவன.

4. முப்பதின் மூவர். 53

512. குலங்க ளோடுந்தங் குலமணி முடியொடுங் குறைய
அலங்கல் வாள்கொடு காலகே யரைக்கொன்ற தற்பின்
இலங்கை வேந்தனென் றுரைத்தலு மிடியுண்ட வரவிற்
கலங்கு மாலினந் தானவர் தேவியர் கருப்பம்.

'குலங்களோடும் - (தமது) குலங்களோடும், தம் குலமணி முடியொடும் - தம் உயர்ந்த நவரத்தினங்கள் இழைத்துச் செய்ய பட்ட மகுடங்கள் அணிந்த தலைகளோடும், குறைய - அழிய, அலங்கல் வாள் கொடு - (இராவணன்) மாலை சூடிய வாளினைக் கைக்கொண்டு, காலகேயரை கொன்றதன் பின் - காலகேயர் என்ற அசுரர்களைக் கொன்ற பிறகு, இலங்கை வேந்தன் என்று உரைத்தலும் - இலங்கை அரசன் என்று (எவரும்) மொழிந்த அளவில், இடி உண்ட அரவில் - இடியோசை கேட்ட நாகம் (கலங்குவது போல), இனம் - இன்னமும், தானவர் தேவியர் கருப்பம் கலங்கும் - தானவரின் மனைவிமாருடைய கருப்பம் குலையும். ஆல் : அசை.

குலமணி - சாதி ரத்தினங்கள்; குலம் - உயர்ந்த சாதி அல்லது ரகம் : 'குலமலர்க் குப்பை' (அயோத்தி. மந்தரை. 85). அலங்கல் - வீசப்பட்டு அசைகின்ற வாளுமாம். காலகேயர் ; இவர்கள் கச்யபருக்குக் கலை என்பவளிடம் தோன்றியவர்கள் ; இந்திரனைப் பல முறை வெற்றி கொண்டவர்கள். ஒரு சமயம் கடலில் ஒளித்திருந்த இவர்களையும் நிவாத கவசர்களையும் அழிக்குமாறு தேவர் வேண்ட, அகத்தியர் கடலைப் பருகினர் என்றும், அப்பொழுதே அருச்சுனன் இவர்களைக் கொன்றனன் என்றும் மகாபாரதம் கூறும் ; வில்லி பாரதம் காலகேய நிவாதகவசச் சருக்கம் காண்க. இவர்களை இராவணனும் வென்றதாக இங்குக் குறிக்கப் பெற்றுள்ளது. என்றோ நிகழ்ந்த நிகழ்ச்சி கேட்டு இன்றும் கலங்கும் தானவர் தேவியர் கருப்பம் என்பதுகொண்டு, போரின் கடுமை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யைக் காணலாம். (ஒப்பு): 'எழுவரு நடுங்கினர் என்ப, ஏழு பெற்றதோ விக்கணைக் கிலக்க மென் றெண்ணி' (கிட்கிந்தா. 174). தானவர் - தனு வழியில் வந்தவர்கள் என்று தத்திதாந்தப்பெயர். இடியுண்ட அரவு; ஆரணிய. 809. கருப்பம் கலங்குதல் என்பது, உலக வழக்கு.

பி - ம். 1. நன்குல; குறையா குன்றை.
2. அலங்கு கொன்றவதற்பின்.
4. கருவும்.

54

513. குரண்ட மாடுநீ ரளகையி னொளித்துறை குபேரன்
திரண்ட மாடுந்தன் றிருவொடு நிதியமு மிழந்து
புரண்டு மான்றிரள் புலிகண்ட தாமெனப் போனான்
இரண்டு மானமும் இலங்கைமா நகரமு மிழந்து.

'இரண்டு மானமும்-தன் மானம், தனக்குரிய புட்பக விமானம் என்ற இரண்டு மானங்களுடன், இலங்கைமா நகரமும் இழந்து - தான் ஆட்சி புரிந்து வந்த இலங்கைப் பெரு நகரையும் (இராவண னுடன் பொருது) இழந்து, குரண்டம் ஆடும் - குரண்டம் என் னும் பறவைகள் மூழ்குகின்ற, நீர் - நீர் நிறைந்த, அளகையின் ஒளித்து உறை குபேரன் - அளகாபுரியில் மறைந்து வதிகின்ற குபேரன், மான் திரள் புலி கண்டதாம் என புரண்டு-மான் கூட்டங் கள் புலிகண்டதொப்ப நிலை தடுமாறி, திரண்ட மாடும் தன் திரு வொடு நிதியமும் இழந்து - தனது குவிந்த பெருஞ் செல்வத்தையும் தனது வெற்றித் திருவினையும், நவ நிதிகளையும் கைவிட்டு, போனான் - சென்றான்.

இச்செய்யுளிற் குறிக்கப்பெற்ற வரலாறு பின் வருமாறு:—

இராவணன் கடுந்தவம் ஆற்றிய பின்னர், அவன் தாய்ப் பாட்டனை சுமாலி என்பவன், அவன் அண்ணனை குபேரன் ஆட்சியில் இருந்த இலங்கையைக் கைப்பற்றுமாறு கூற, அவனும் அதற் கிசைந்து குபேரனிடம் தூது விடுத்தனன். குபேரனும் இலங்கையை அவனிடம் விடுத்து வடக்கண் உள்ள அளகாபுரியை அடைந்து வதிந்தனன். இதன் பின்னர் இலங் கேசன் அளகாபுரியையும் சென்று முற்றுகையிட இருவருக்கும் போர் நிகழ்ந்தது. குபேரன் தோல்வியுற்றான். அவனுக்குரிய



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



புட்பக விமானம் இராவணனால் கைப்படுத்தப்பட்டது, (உத்தர காண்டம் காண்க). குபேரன் தோற்றுப் புட்பகமிழந்து அவமான முற்றதை, 'இரண்டு மானமு மிலங்கை மாநகரமு மிழந்து' எனக் குறித்தார்; இரண்டு மானம், சிலேடை; இரு பொருள்கட்கு ஒரே வினையமைப்பது; (ஒப்பு): 'மென் மருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்' (சுந்தர. 332). குரண்டம் - கொக்கு; கிட்கிந்தா. 20, 472; நீர்க் காக்கையுமாம்; சுந்தர. 246. அளகைக் கதிபன் குபேரன் எட்டுத் திசைகளுள் வடதிசைப் பாலகன். திரண்ட மாடு - பெருஞ்செல்வம்; 'மாடல்ல மற்றையவை' (குறள். 400); பண்டைக் காலத்துக் கால்நடைகளே செல்வம் எனப்பட்டதால் அவற்றின் பெயரான் மாடு என்ற சொல் செல்வத்தைக் குறித்தது என்ப. மாடு - பொன்னுமாம்; (சூடா.), (பெருங்கதை. 1:55:60); இது மாடை எனவும் வழங்கும்; மாஷா என்ற வடசொல், பொன் என்று பொருள்படும். திரு - வெற்றிமகள்; மாடு, திரு, நிதியம் என்ற மூன்றினையும் இழந்ததாகக் கூறினர். நிதியம் - சங்கநிதி, பதுமநிதியுமாம். இராவணனைக் கண்டு அஞ்சிக் கீழ் வீழ்ந்து புரண்டு என்பாரும் உளர். ஆயினும், புரண்டு போனான் என்று நன்கியையாமை காண்க. புலி கண்ட மான்; (ஒப்பு): ஆரணிய. 130; சுந்தர. 333, 427; வி. பா. சூதுபோர். 251.

பி - ம். 1. குரண்ட மாடு பேரளகை.
2. இரண்டு மாடும்: நிதியமும்; திருவொடும்.

55

514. புண்ணுஞ் செய்தது முதுகெனப் புறங்கொடுத் தோடி
உண்ணுஞ் செய்கையத் தசமுகக் கூற்றுந்தன் னுயிர்மேல்
நண்ணுஞ் செய்கைய தெனக்கொடு நாடொறுந் தன்னுள்
எண்ணுந் தன்மைய னந்தகன் றன்பத மிழந்தான்.

'அந்தகன் - இயமன், உண்ணும் செய்கை அ தசமுக கூற்றும் - உயிரைப் பருகும் தன்மையுடன் கூடிய அந்தத் தசமுகன் என்னும் யமனும், 'முதுகு புண்ணும் செய்தது என - முதுகையும் புண்படுத்தியது' என்று, புறம் கொடுத்து ஓடி - முதுகு காட்டிய வண்ணமே ஓடி, தன் பதம் இழந்தான் - தன்னுடைய பதவியை இழக்கப்பெற்றவனாய், தன் உயிர் மேல் நண்ணும் செய்கையது -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தன் உயிரின்மீதும் அக்கூற்றம் வரக்கூடிய தன்மை வாய்ந்தது, என கொடு - என்று மனங்கொண்டு, நாள் தொறும் - ஒவ்வொரு நாளும், தன் நாள் எண்ணும் தன்மையன் - தன் வாழ்நாளைக் குறித்து எண்ணும் இயல்பினன் ஆனான்.

இராவணனுடைய படைக்கு முதுகுகாட்டி ஓடித் தன் பதவியை இழக்கப்பெற்ற இயமன், எங்கு தன் உயிருக்கும் கேடு நேருமோ என்று அஞ்சித் தன் வாழ்நாட்களை யெண்ணி நின்றனன் என்க. புண்ணும் செய்தது முதுகு என்ற தொடரில், உம் என்பதனை முதுகு என்பதனோடு கூட்டிப் பொருள் கொள்ளப் பெற்றது. புறங்காட்டுதல் வீரர்கட்கு மிக்க இழிவான செயல்; 'புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே' (புறநா. 66); 'வெம்பு காட்டிடை நுழைதொறும் வெரிநுறப் பாய்ந்த, வம்பு காட்டுதி ரோகுல மங்கையர்க் கம்மா' (ஆரணிய. 506). தசமுகனைச் கூற்று வனாக உருவகம் செய்தார். அந்தகன் - உயிர்கட்கு அந்தத்தை அல்லது இறுதியைச் செய்பவன் என்று பொருள் தரும் வட சொல்; ஆரணிய. 8, 144, 725. அந்தம் - மரணம்; 'மூப்பென மொழிவ தந்தத் தளவும், தாக்குநிலை யாமையிற் றுன்றளர்ந் திடுதல்' (மணி. 30; 100 - 101); அந்தகன் என்ற சொல் பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பெருங்கதை முதலிய பண்டைய நூல் களிற் காண்டற்கில்லை. மனத்தைப் புண்படுத்தியதோடு புற முதுகையும் புண் செய்தது எனக்கோடலும் பொருந்தும். திக்கு விசய காலத்து இராவணனுக்கஞ்சி யமன் காக்கை யுருக்கொண்ட தாக வரலாறுண்டு; (உத்தர. திக்குவிசயம். 22) கண்டுணர்க.

பா - ம். 2. உண்ணும் செய்கையிற்; தன் னுயிரை.

3. எண்ணுந் தன்மையன். 58

515. இருணன் காசற வெழுகதி ரவனிற்க வென்றும்
அருணன் கண்களுங் கண்டிலா விலங்கைபண் டமரிற்
பருணன் றன்பெரும் பாசமும் பறிப்புண்டு பயத்தால்
வருண னுய்ந்தனன் மகரநீர் வெள்ளத்து மறைந்து.

'இருள் நன்கு ஆசு அற எழு கதிரவன் நிற்க - இருளை நன்றாக ஒரு சிறிதும் மிஞ்சாதபடி ஓட்டி உதிக்கின்ற சூரியன் கிடக்க, என்றும் - எந்தக் காலத்தும், அருணன் கண்களும் கண்டிலா இலங்கை - சூரியன் தேரோட்டியான அருணனுடைய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விழிகளும் காணப்பெருத இலங்கா நகரம், பண்டு - முற்காலத்தில், அமரில் பருணன் - போரில் கைதேர்ந்தவன் ஆன, வருணன் - மேற்றிசைப் பாலகனாகிய வருணன், (இராவணனுடன் புரிந்த போரில்), தன் பெரு பாசமும் - தன்னுடைய பெருமைசான்ற பாசம் என்னும் ஆயுதமும், பறிப்புண்டு - (அவனால்) பறிக்கப்பெற்று, பயத்தால் - அச்சத்தின் காரணமாக, மகர நீர் வெள்ளத்து மறைந்து உய்ந்தனன் - கடல்நீர்ப் பெருக்கில் மறைந்து உயிர் வாழ்ந்தான்.

கதிரவன் உதயமாதற்குள் அருணன் உதயம் நிகழும்; எனவே, சூரியன் தேரோட்டியான அருணனும் அந்த இலங்கையைக் கண்டதில்லை எனப்பட்டது. ஒளி குறைந்த அருணனே புகுதற்கு அஞ்சினன் என்றால், ஒளி விஞ்சிய கதிரவன் எவ்வாறு நுழைவன் என்பது கருத்து. இலங்கை கதிரவன் புகாநகர் என்பது இந்நூலிற் பலவிடங்களிலும் கூறப்பெற்றமை காணலாம். வருணனுக்கு ஆயுதம், பாசம் என்னும் கயிறு. 'பாசக் கரத்தான் பறந்தானே ரன்னமாய்' (உத்தர. திக்குவிசயப். 22) இராவணற்கஞ்சி அன்னமாய்ப் பறந்தான் என்பது அறிக. மகர நீர் - ஆழி; மகரமீன்களின் இருப்பிடமாதலின் இப்பெயர் பெற்றது. பருணன் - பர்ணிதன்; என்றதன் விகாரம்; பருணிதர்; கிட்கிந்தா. 781) காண்க.

பி - ம். 1. இன்றும்.
2. கண்டிலே.
3. தன்னெடும் பாசமும்; பறிகொடுத் தஞ்சி; புலத்தால்.
4. மறைந்தே; வருணன் மாக்கடல் வெள்ளத்திற் கரந்துற மறைந்தான்.

இங்கு இரண்டு அதிகப்பாடல்கள் :—

பண்ட வன்றவத் துமையொரு பாகன்முன் கொடுக்கும்
திண்டி றல்பெரும் வானகத் தேரொன் றி னிவர்ந்தே
அண்ட கோடிக ளெவற்றினும் புகுந்தர சுரிமை
கொண்டு மீளுவா னொருகணத் திலங்கையில் கொடியோன்.

சுற்று தன்கிளைப் பரப்பொடும் தொலைவின்றி வாழ்தற்
குற்ற மூன்றரைக் கோடியி னுகமவன் தவத்தின்
பெற்ற னன்சிவன் கொடுத்திடப் பெருவரம் பெரியோய்
இற்ற வன்செய லென்றுகொண் டினையன வுரைப்பான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இராவணனை ஒழித்தற்குரியன் இராமபிரானே எனல்

516. என்று லப்புறச் சொல்லுகே னிராவணன் மேருக்
குன்று லப்பினு முலப்பிலாத் தோளினன் கொற்றம்
இன்று லப்பினு நாளையே யுலப்பினுஞ் சிலநாட்
சென்று லப்பினும் நினக்கன்றிப் பிறர்க்கென்றுந் தீரான்.

மேரு குன்று உலப்பினும் உலப்பு இலா தோளினன் இராவணன் கொற்றம் - மேருமலை அழியப்பெறினும் அழிவில்லாத புயங்களையுடைய அவ்விராவணனது வீரத்தை, உலப்பு உற என்று சொல்லுகேன் - முடிவுபோக எடுத்து என்றைக்குரைப்பேன்; (எவ்வளவு நாட்கள் மொழிந்தாலும் அவனது வீரப்பிரதாபங்கள் சொல்லி முடிவுபெறா); (அந்த இராவணன்), இன்று உலப்பினும் - இன்றைக்கே அழிந்தாலும், நாளையே உலப்பினும் - நாளைக்கே இறந்தாலும், சில நாள் சென்று உலப்பினும் - சிலநாட்கள் கழிந்து மரிப்பினும், நினக்கு அன்றி என்றும் பிறர்க்கு தீரான் - உனக்கே அல்லாமல் எந்தக் காலத்திலும் பிறர் கையால் அழிவெய்தான்.

இராவணனுடைய பெருமை முழுவதும் கூறற்கரிது என்றும், அவன் இராமபிரான் கரத்தால்தான் அழியக்கூடும் என்றும் கூறினன் வீடணன். உலத்தல் - இறத்தல்; கிட்கிந்தா. 961; சுந்தர. 460, 511. தீர்தல் - அழிதல். 'அல்லெலாந் திரண்டன்ன நிறத்த ஞற்றலை, வெல்லலா மிராமனுற் பிறரும் வெல்வரோ' (சுந்தர. 1103) என்று அநுமன் நினைப்பு இங்குக் கருதத்தக்கது; யுத்த. அங்கதன் தூது 16-ஆம் செய்யுளும் காண்க.

பி - ம். 2. உலப்பறுத்.

4. பிறர்க் கொன்றும்; நீரா; நீயன்றிச் செகுப்பவர் பிறர்யார். 58

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

ஈது நிற்கமற் றெந்தைநீ யேவிய தூதன்
மோது வாரிதி கடந்தொரு கணத்தினில் முடுகி
ஆதி நாயகி தன்னைக்கண் டணிநக ரரனும்
காது வெஞ்சினத் தரக்கர்தம் வலியையும் கடந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## அநுமன் திறம் கூறல்

517 ஈடு பட்டவ ரெண்ணிலர் தோரணத் தெழுவால்
பாடு பட்டவர் படுகடன் மணலினும் பலரால்
சூடு பட்டது தொன்னக ரடுபுலி துரந்த
ஆடு பட்டது பட்டன ரநுமனு லரக்கர்.

(இராவணன் வலிமை இவ்வாறாக), 'அநுமனல் - அநுமானல், (அசோக வனத்தில்) தோரணத்து எழுவால் - தோரண வாயிலிலிருந்த இருப்புத் தடியால், ஈடுபட்டவர் எண்ணிலர் - தமது வலிமை ஒடுங்கப் பெற்றவர் கணக்கில் அடங்கார்; பாடுபட்டவர் படுகடல் மணலினும் பலர் - அவனல் (அடிபட்டு) இறந்து போனவர் ஒலிக்கின்ற கடல்மணலைக் காட்டிலும் பலராவர்; எஞ்சிய அரக்கரும், அடு புலி துரந்த - கொல்லும் இயல்புள்ள புலியினல் துரத்தப்பட்ட, ஆடு பட்டது பட்டனர் - ஆடுகள் அடைந்த துன்பத்தையே அடைந்து மரித்தனர்; தொல் நகர் சூடுபட்டது - பழமையான இலங்கா நகரம் எரியுண்டழிந்தது. ஆல் - அசை.

இது முதல் ஏழுபாடல்களில் அநுமன் அசோகவனத்தில் காட்டிய திறம் கூறுகின்றான் வீடணன். பிராட்டியை நாடிச் சென்று சிஞ்சுபாவனத்திடை அவளைக் கண்டு அடையாளம் பெற்ற அநுமன் மாற்றான் வலியை உள்ளபடி யறிய வேண்டித் தோரண வாயில் முறித்து நின்று பின்னர்த் தன்னை எதிர்ப்பான் வந்த அக்கன், சேனபதிகள் ஐவர், கிங்கரர்கள், சம்புமாலி என்ற இவர்களைத் தொலைத்து, இலங்கை யெரியூட்டிய (சுந்தர காண்டச்) செய்திகள் இங்கே கூறப்பெற்றுள்ளன. செய்திகளின் விரிவைச் சுந்தர காண்டத்துக் காண்க. ஈடு - எளிவரவு; கிட்கிந்தா. 250; தக்க. 61, உரை; பெருங். 2, 10, 10; ஈடு - வலிமையும் ஆம்; ஈடு பட்டு - வலிமையிழந்து எனினும் ஆம். எழு - இருப்புத்தடி; தோரண வாயிலின் குறுக்கே போடப்பட்டிருந்ததென்க. அநுமன் அசோகவனத்தில் எழு ஏந்திப் போரிட்டது, சுந்தர. 895 முதலிய பாடல்களிற் காண்க. படுகடல்-ஒலிக்கும் கடல்; ஆர்கலி என்ற ஓர் பெயர் அதற்குண்மையும் காண்க. நகர் சூடுபட்டது; இலங்கை யெரியூட்டப்பட்டது. அடுபுலி - வினைத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தொகை. புலி துரந்த ஆடு: (ஒப்பு): 'ஆட்டிடைப் பாயுமரிமாப் போல' (பெருங். 2; 9: 160). பாடு - படுதல் என்னும் வினையடியாகப் பிறந்த தொழிற் பெயர்; பாடு - துன்பமுமாம். துரந்த பிறவினைப்பொருளில் வந்தது.

பி - ம். 2. பலவால்.

3. சூடுபட்டவர், கொடிநகர்.

4. பட்டதன்று.

518. காய்த்த வக்கணத் தரக்கர்த முடலுகு கறைத்தோல்
நீத்த வெக்கரி னிறைந்துள கருங்கட னெருப்பின்
வாய்த்த வக்கனை வரிசிலை மலையொடும் வாங்கித்
தேய்த்த வக்குழம் புலர்ந்தில விலங்கையின் றெருவில்.

'காய்த்த அகணத்து - (அநுமன்) சின மூண்ட அதே கணத்தில், அரக்கர் தம் உடல் உகு கறை தோல் - அரக்கருடைய உடலினின்று சிந்திய உதிரக்கறையுடன் பொருந்திய உடல் சருமங்கள், நீத்த எக்கரின் - நீர் நடுவிலுள்ள மணற் குன்றுகள் போன்று, நிறைந்துள - நிறைந்து காணப்படுகின்றன; கரு கடல் நெருப்பின் வாய்த்த அக்கனை - கருங்கடற்கணுள்ள வடவை நெருப்பின் உக்கிரமான தன்மை வாய்க்கப்பெற்ற அந்த அட்ச குமாரனை, மலை வரி சிலையொடும் வாங்கி - மலை போன்ற கட்டமைந்த வில்லுடன் தூக்கி யெடுத்து, (அநுமன் தரையிலே போகட்டுத்), தேய்த்த - தேய்த்ததால் உண்டான, அ குழம்பு - அவன் உதிரக் குழம்பு, இலங்கையின் தெருவில் உலர்ந்தில - இன்னும் இலங்கை வீதிகளில் காய்ந்த பாடில்லை.

கறை - உதிரக் கறை. எக்கர்கருங்கடல் நிறைந்துள என மாற்றுக. நிறைந்துள, என்று நிகழ்காலத்துக் கூறியதால் அவை இன்னும் நீங்கில என்று கூறியதாம். நெருப்பின் வாய்த்த - தீ ப் போ ன் ற திறல்படைத்த. அக்கன்; அக்ஷன் என்ற வடசொல் அக்கன் எனத்திரிந்தது. அக்கன் பிடித்திருந்த வில் மலை போன்றிருந்தது என்று கூறி, அவனையும் தேய்த்தான் என அநுமன் பராக்கிரமம் கூறியவாறு, 'மண்காணத் தேய்த்தா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


னூழியி துலகேழ் தேயினு மொருதன் புகழிறை தேயாதான்' (சுந்த. 968). அக்கன், இந்திரசித்தின் தம்பி ; இராவணனுக்கு மண்டோதரியிடம் தோன்றினவன்.

பி-ம். 1. நிறைந்துகு.
2. நித்த வெங்கரி.
3. வாய்த்த வக்கனின். 60

இதன்பின் 5 பாடல்களின் முறை சுவடிகளில், மாறுபட்டுக் காண்கின்றது.

519. சேனைக் காவல ரோரைவ ருளர்பண்டு தேவர்
வானைக் காவலு மானமு மாற்றிய மறவர்
தானைக் கார்க்கருங் கடலொடுந் தமரொடுந் தாமும்
யானைக் காற்பட்ட செல்லென வொல்லையி னவிந்தார்.

'பண்டு - முற்காலத்தில், தேவர் வானை காவலும் மானமும் மாற்றிய மறவர் - தேவர்களுடைய விண்ணுலகக் காவலும் பெருமையும் மறையுமாறு புரிந்த பெருவீரரான, சேனை காவலர் ஓர் ஐவர் உளர் - தானைத் தலைவர்கள் ஓர் ஐவர் இருந்தனர்; (அவர்கள்) தமது, தானை கார் கரு கடலொடும் - சேனையாகிய கருநிறம் பொருந்திய பெருங் கடலோடும், தமரொடும் - தம்முடைய சுற்றத்தாரோடும், தாமும் - தாங்களும், யானை கால் பட்ட செல் என - யானையின் கால்களிற் சிக்கிய கறையான் புற்றுப்போன்று, ஒல்லையின் அவிந்தார் - விரைவில் அழிந்தொழிந்தனர்.

இதில் பஞ்சசேனாதிபதிகள் அழிந்தமை கூறப்பட்டது ; ஐவரின் பெயர் : விரூபாட்சன், யூபாட்சன், துர்த்தர்ஷன், பிரகசன், பாசகர்ணன் என்ப. இவர்களின் வதை வரலாறு சுந்தர காண்டத்திற் காண்க. யானைக் காற்பட்ட செல் ; உவமையணி. வானைக் காவலும் மானமும் மாற்றிய மறவர் ; (ஒப்பு) : 'இரண்டு மானமும் இலங்கைமா நகரமு மிழந்து' யுத்த. 513.

பி-ம். 2. அரணமும்.
3. கார் வரும் ; கடலொடு தமரொடு ; நவிர.
4. ஒல்லென. 61

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



520. எங்கு லத்தவர் ரெண்பதி னுயிர ரிறைவர்
கிங்க ரப்பெயர்க் கிரியன்ன தோற்றத்தர் கிளர்ந்தார்
வெங்க ரத்தினுங் காலினும் வாலினும் வீக்கிச்
சங்க ரற்கழி முப்புரத் தவரெனச் சமைந்தார்.

'எம் குலத்தவர் - எங்கள் குலத்தில் தானே தோன்றியவனும், எண்பதினுயிரர் இறைவர் - எண்பதினுயிரவராகவுள்ள தலைவரு மான, கிங்கரர் பெயர் கிரி அன்ன தோற்றத்தர் - கிங்கரர் என்று பெயர் பெற்றவரும் மலைபோன்ற காட்சியினருமான வீரர், கிளர்ந் தார் - மகழ்ச்சிகொண்டு எழுந்தனர்; (அவ்வாறு எழுந்த அவர்கள் அநுமனால்), வெம் கரத்தினும் - கடுமைவாய்ந்த கைகளினாலும், காலினும் வாலினும் - கால்களினாலும் வாலினாலும், வீக்கி - பிணிக்கப்பட்டு, சங்கரற்கு அழி முப்புரத்தவர் என சமைந்தார் - சிவபிரானால் அழிக்கப்பட்ட திரிபுரத்து அசுரர்கள்போன்று அழிந்தனர்.

இப்பாட்டில் கிங்கரரை வதைத்தமை கூறப்பட்டது. எண்பதி னுயிரர் கிங்கரர் என்று முன்னர்க் கிங்கரர் வதைப் படலத்துக் குறிக்கப்படவில்லை. கிங்கரர் - பணியாளர். கரத்தினும் காலினும் வீக்கி - இந்த அரிய அநுமன் செயலைக் கிங்கரர் வதைப்படலத்துக் காண்க. சங்கரன் - எல்லோர்க்கும் இன்பத்தைச் செய்பவன் என்பது உறுப்புப்பொருள்; 'சங்கரம் லோக சங்கரம்' என்றது காண்க. முப்புரத்தவரை அழித்தது; ஆரணிய. 139, 258, 458, 815, 905, 931, 999; கிட்கிந்தா. 351, 452, 530; சுந்தர. 139 என்பன காண்க. சமைதல் - அழிதல்; 'ஐவரும் சமைந்தார்' (சுந்தர. 930).

பி - ம். 1. இறைவ.
2. பெருங்கிரி; பெயரோர் குளிர்ந் தநுமனைக் கிடைத்தார்.
3. விக்கச்; விலங்கச்; மழுவினு, மெழுவினும்.
4. திரிபுரத்தவர்.

62

521. வெம்பு மாக்கடற் சேனைகொண் டெதிர்பொர வெருண்டான்
அம்பு மாரியும் வன்புயத் தருவரை யழுத்தி
யும்பர் வானகத் தொருதனி நமனைச்சென் றுற்றான்
சம்பு மாலியும் வில்லினற் சுருக்குண்டு தலைவ.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'தலைவ - தலைவனே! சம்பு மாலியும் - சம்பு மாலி யென்பவனும், வெம்பும் மா கடல் சேனை கொண்டு - சினத்தால் மனம் கொதிக்கும் பெரிய கடல்போன்று பரந்த சேனையை உடன் கொண்டு, எதிர் பொர வெகுண்டான் - எதிர் நின்று போர் புரியுமாறு சீறினவனுன்; அம்பு மாரியும் வன்புயத் தருவரை அழுத்தி - அம்பு மழையையும் அநுமனது புயங்களாகிய அரிய மலையில் பதியச்செய்து; (பின்பு), வில்லினுல் சுருக்குண்டு - அவன் கையிலிருந்த வில்லினுலேயே சுருக்கிடப்பட்டு; (உயிரிழந்து), ஒரு தனி நமனை சென்று - ஒப்பற்ற யமனை அடைந்து, உம்பர் வான் அகத்து உற்ருன் - வீரசுவர்க்கத்தை அடைந்தான்.

வெம்பு மாக்கடற் சேனை: சேனையின் மனக்கொதிப்பையும், பரப்பையும் உணர்த்தி நின்றது. இறந்தான் என்பது, 'உம்பர் வானகத் தொருதனி நமனைச்சென் றுற்ருன்' என்ற நீண்ட சொற்றொடராற் குறித்தான் சம்புமாலி. 'வில்லினுல் சுருக்குண்டு' 'சிலையைக் கையால் வாங்கிக் கழுத்தி னிடையிட்டு, வலித்தான்' )சுந்தர. 859) காண்க.

பி - ம். 1. சேனாகண் டெதிர்.

2. அம்பு மாயிர மாயிரம்; சிரத்தழுந்தி.

3. யமனைச்

4. வாலினுற், வாலிடைச் சுருக்குண்டான். 63

522. சொன்ன மாமதி லிலங்கையின் பரப்பினில் துகைத்துச்
சின்ன மானவர் கணக்கிலர் யாவரே தெரிப்பார்
இன்ன மாருளர் வீரர்மற் றிவன்சுட வெரிந்த
அன்ன மாநக ரவிந்ததக் குருதியா லன்று.

'சொன்ன மா மதில் இலங்கையின் பரப்பினில்-பொன்மயமான உயர்ந்த மதில்கள் சூழ்ந்த இலங்கை நகரின் பரந்தவெளியில், துகைத்து - அநுமனுல் நசுக்கப்பட்டு, சின்னம் ஆனவர் கணக்கிலர் - உடல் சிதையப்பெற்றவர் எண்ணிறந்தவர் ஆவர்; (அவர்களை), யாவரே தெரிப்பார் - யாவரே அளந்து கூறவல்லவர்? மற்று - மேலும், இவன் சுட எரிந்த - இந்த அநுமன் கொளுத்தியதனுல் தீப்பட்டு வெந்த, அன்ன மா நகர் - அத்தகைய பெரிய நகரம், அன்று - அப்பொழுது, அ குருதியால் - (அவனுல் கொல்லப்பெற்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அரக்கரது) அந்த உதிரத்தால், அவிந்தது - அணைந்தது ; (எனின்), இன்னம் வீரர் ஆர் உளர் - இனி இவர்களைக்காட்டிலும் சிறந்த வீரர் யாரே இருக்கின்றனர், (ஒருவரும் இல்லை).

சொன்ன மாமதில் : 'பொன்கொண் டிழைத்த மணியைக் கொடு பொதிந்த' (சுந்தர. 69) ; 'மனையெலாம் கனகம்' (சுந்தர. 104) ; 'பொன்னின் மாநகர் மீச்செலான்' (சுந்தர. 116) ; 'பொன் னின் மால்வரை மேன்மணி பொழிந்தன பொருவ..........படைத் தான்' (சுந்தர. 123). அநுமன் வாலெரியால் எரிந்த இலங்கை இறந்துபட்ட அரக்கர்தம் குருதியால் அவிந்தது என்றார் ; உயர்வு நவிற்சியணி. (ஒப்பு) : 'சோறு வாக்கிய கொழுங்கஞ்சி, யாறு போலப் பரந்தொழுகி, யேறுபொரச் சேறாகித், தேரோடத் துகள் கெழுமி, நீறாடிய களிறுபோல' (பட்டினப். 44-48). 'கையா னிலந்தடவிக் கண்ணீர் மெழுகுவார்' (அயோத்தி. நகர்நீ. 108) ; 'மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே' (புறநா. 249).

பி - ம். 1. பரப்பினில் தொலைந்து.

2. தெரிமின், தெரிதி ; தெரிந்திடி லிறைவ ; தெரிப்பர்.

4. குருதியா லரக்கர் ; அகன்று ; மலிந்தது குருதியின்வாடை. 64

523. விலங்கல் வெந்தவா வேறினி விளம்புவ தெவனோ
அலங்கல் மாலையுஞ் சாந்தமு மன்றுதா னணிந்த
கலங்க ளோடுமச் சாத்திய துகிலொடுங் கதிர்வாள்
இலங்கை வேந்தனு மேழுநாள் விசும்பிடை யிருந்தான்.

'கதிர் வாள் இலங்கை வேந்தனும் - ஒளிநிறைந்த வாட்படை யுடைய இலங்கை மன்னனை இராவணனும், அன்று தான் அணிந்த அலங்கல் மாலையும் சாந்தமும் - அன்று தான் புனைந்த அசைகின்ற மாலையுடனும் சந்தனத்துடனும், கலங்களோடும் அச் சாத்திய துகிலொடும் - அணிகலன்களோடும் அழகுபெற உடுத்த ஆடையோடும், விசும்பிடை ஏழு நாள் இருந்தான் - விண்ணிடத்திலேயே ஏழு நாட்கள் இருந்தான் என்றால், விலங்கல் வெந்தவா வேறு இனி விளம்புவது எவன் - திரிகோணமலை என்ற இலங்காபுரியானது வெந்த விதத்தை மற்றும் வகுத்துக்கூற வேண்டியது எதன்பொருட்டு ? ஓ - வினா.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

விலங்கல் - மலை; பூமிக்குக் குறுக்கே படர்வது என்று காரணக்குறி. வெந்தவாறு என்பது ஈறு குறைந்து வெந்தவா என நின்றது. அலங்கல் மாலை: ஒருபொருட் பன்மொழியுமாம். கலங்கள் - அணிகலங்கள்; 'கெடு நீரார் காமக் கலன்' (குறள். 605). இலங்கை வேந்தன், அவன் தலைநகர் எரிவாய்ப்பட்டபோது ஏழு நாள் விசும்பிடை யிருந்ததாக இங்குக் கூறப்படும் செய்தி, முன்னர்ச் சுந்தரகாண்டத்து இலங்கை யெரியூட்டு படலத்துக் குறிக்கப் பெறவில்லை.

பி - ம். 1. இலங்கை; வெந்தது; விளம்புமா றெவனோ; இலங்கை வெந்தது வேறினி யியம்புவ தெவனோ. 65

## எரிந்த இலங்கையைப் பிரமன் மீண்டும் இயற்றியமை

524. நொதுமற் றிண்டிற லரக்கன திலங்கையை நுவன்றேன்
அதுமற் றவ்வழி யரணமும் பெருமையு மறைந்தேன்
இதுமற் றிவ்வழி யெய்திய திராவண னேவப்
பதுமத் தண்ணலே பண்டுபோ லந்நகர் படைத்தான்.

'நொதுமல் திண் திறல் அரக்கனது இலங்கையை நுவன்றேன் - மிக்க உறுதியான வன்மைசான்ற இராவணனது இலங்காபுரியின் தோற்றத்தைப் பகர்ந்தேன்; அது மற்று - அதன்மேல் வேருக, அ வழி அரணமும் பெருமையும் அறைந்தேன் - அதே முறையில் அரணமும் மற்றும் உள்ள பெருமையையும் உள்ளபடி மொழிந்தேன்; இது இ வழி எய்தியது - இந்த இலங்கை எரியூட்டானது இந்த (நான் கூறிய) வண்ணம் நிகழ்ந்தது; (பின்னர்), இராவணன் ஏவ - இராவணன் கட்டளை பிறப்பிக்க, பதுமத்து அண்ணலே அ நகர் பண்டுபோல் படைத்தான் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பெருமையாளனான பிரமனே முன்னிருந்தபடியே அந்நகரைப் புதுப்பித்தான்'.

அண்ணலே - ஏகாரம் பிரிநிலை. எரியுண்ட இலங்கையைத் தெய்வத் தச்சனைக்கொண்டு பிரமன் புதுக்கியதை, யுத்தகாண்டம் இராவணன் மந்திரப் படலம் 1, 2-ஆம் செய்யுட்களிற் காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மற்று, வினைமாற்றுப்பொருளில் வந்தது. பதுமத் தண்ணல் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன். பண்டுபோல்: இங்குச் சுந்தரகாண்டத்தில் ஊர்தேடு படலத்துக் காணப்பெறும் இலங்கை வருணனை காணத்தகும்; சுந்தர. 96—136.

பி - ம். 1. நொதுமத் நிண்டிறம்; அரக்கர நியற்கையும்; இலங்கை மாநகரம். 2. அதுமற் றிவ்வழி, றிவ்வயின்; 66

## வீடணன் போந்ததற்கு அநுமன் வீரச்செயலே காரணம் எனல்

525. காந்து மானையிற் கரன்முதல் வீரருங் கவியின்
வேந்து மென்றிவர் விளிந்தவா கேட்டன்றவ் விலங்கை
தீந்த வாகண்டு மரக்கரைச் செருவிடை முருக்கிப்
போந்த வாகண்டும் நானிங்குப் புகுந்தது புகழோய்.

'புகழோய் - கீர்த்தி வாய்ந்தவனே! காந்தும் ஆனையில் - கொதித்தெழும் வேழம் போன்ற, கரன் முதல் வீரரும் - கரன் முதலிய வீரரும்; கவியின் வேந்தும் - குரங்குகட்கு அரசனான வாலியும், என்று இவர் - என்ற இவர்கள். விளிந்தவா கேட்டன்று - உங்கள் கரத்தால் இறந்த செய்தியைக் கேட்டன்று (நான் இங்கு வந்தது); அ இலங்கை - அழகிய இலங்கை நகர், (அநுமனால்) தீந்தவா கண்டும் - நெருப்புண்டதைப் பார்த்தனாலும், அரக்கரை செரு இடை முருக்கி போந்தவா கண்டும் (அவன்) அரக்கரைப் போரிலே அழித்துத் திரும்பியதைப் பார்த்துமேதான், நான் இங்கு புகுந்தது - நான் உம்மை அடைக்கலம் புகுந்தது'.

இப்படலம், 16-வது செய்யுள் முதல், 68 வரை வீடணன் கூற்று; காந்துதல் - சினத்தல், 'காந்துகின்றது கட்டுரையிரென்றான்' (ஆரணிய. 208); காந்தின மனத்தினர்' (ஆரணிய 5.1); முருக்குதல் - அழித்தல்; 'அருக்கனை முரணற முருக்கும்' (கிட்கிந்தா. 693); 'ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி' (புறநா. 18); கரன், வாலி ஆகியோர்களை இராமபிரான் வதைத்த செய்திகளைக் கேட்ட வீடணன், அப்பிரான்பால் அடைக்கலம் புகவேண்டும் என்ற எண்ணம் பெறவில்லை; அநுமனின் அக்காலச் செயல்களைக் கண்ட அன்றே அவ்வெண்ணம் புகப்பெற்றான். இதனால் சுத்த வீரனை இந்த அநுமனைத் தன அடியனாகப் பெற்ற இராமபிரானின் ஆன்ம வலியை உணர்ந்தே தான புகல் புகுந்ததாக

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வீடணன் கூறுகின்றான் என்க. கேட்டலினும் காண்டலின் சிறப்பு இங்குக் குறிக்கப்பெற்றதும் காண்க. திந்தவாறு போந்தவாறு என்பன ஈறு குறைந்து நின்றன.

பி - ம். 1. காந்தம் வெஞ்சினக் கரன் முதல; காந்து மாளெரிங், கரந்து வாளியின்.

2. வேந்து மன்னவர்; வேந்து மாண்டவர் விளிந்ததும்; கேட்டன்று விலங்கல்.

3. நிர்ந்தவா; தீய்ந்தவர்; இவன் செரு முருக்கி. 67

## இராமபிரான் அநுமனைப் பாராட்டுதல்

526. கேள்கொள் மெய்ம்மையான் கிளத்திய பொருளெலாங் [கேட்டான்
வாள்கொ ணோக்கியைப் பாக்கியம் பழுத்தன்ன மயிலை
நாள்கள் சாலவு நீங்கலின் நலங்கெட மெலிந்த
தோள்கள் வீங்கத்தன் றூதனைப் பார்த்திவை சொன்னான்.

கேள் கொள் மெய்ம்மையான்-தன்னிடம் நட்புப் பூண்ட சத்திய வந்தனன வீடணன், கிளத்திய - எடுத்துரைத்த, பொருள் எலாம் கேட்டான் - செய்திகள் அனைத்தையும் செவியேற்றவனாய், (இராம பிரான்) வாள் கொள் நோக்கியை - வாளின் தன்மை கொண்ட கண்களையுடையவளும். பாக்கியம் பழுத்தன்ன மயிலை - (முன் பிறவியில் ஆற்றிய) நல்வினைப் பயன் முதிர்ந்து வந்தது என்று சொல்லும்படியாகக் கிடைத்த மயில் போன்ற சாயலை யுடையவளு மான பிராட்டியை, சாலவும் நாள்கள் நீங்கலின் - பல நாட்களாகத் தான் பிரிந்திருத்தலின், நலம் கெட - அழகு குன்றும்படி, மெலிந்த தோள்கள் வீங்க - இளைத்த புயங்கள் பூரிக்க, தன் தூதனைப் பார்த்து இவை சொன்னான் - தன் தூதனான அநுமனை நோக்கிப் பின் வருமாறு மொழிந்தான்.

கிளத்துதல் - சொல்லுதல், 'கேட்டதோ கண்டதோ கிளத்து வீரென்றான் (சுந்தர. 810); சாயலால் மயில். வீடணன் கூற்றினால், அநுமனுடைய பராக்கிரமத்தை உணர்ந்த இராமபிரான் பிராட்டி யைப் பிரிந்ததனாலான மெலிவு நீங்கப்பெற்று, இனிச் சீதா தேவியை அடையப் பெறுதல் ஒரு தலை யென்ற நினைவினனாய்ப் புயங்கள் பூரிக்கப்பெற்றான். உள்ளம் பூரிப்பின் உடலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பூரிக்குமாதலின். தூதனைப் பார்த்து; சிலர் அநுமனைத் தூதனன்று ஒற்றன் என்றே வாதிப்பர். ஆயினும் கம்ப நாடர் அநுமனைப் பல இடங்களிலும் இராம தூதன் என்றே கூறிச் செல்லுதல் காண்க. சுந்தர. 24, 148, 187, 331, 510, 560, 1016, 1026; யுத்த. 401, 576. 'ஸ்ரீராமதூதம் சிரசா நமாமி' என்பது வான்மீகம். இராமபிரான் அநுமனைப் புகழ்ந்தமை அடுத்த இரண்டு செய்யுட்களில் காண்க.

பி - ம். 1. கேள்கொள் நோக்கினன், மேன்மையான்;

3. நாள்கள் சாலவும் பிரிதலின் நலங்கெட வுலர்ந்த; நாட்கள் போக்குறப் பிரிதலின்.

4. வீங்கித்தன்; சொல்வான். 68

527. கூட்டி னூர்படை பாகத்தின் மேற்படக் கொன்றாய்
ஊட்டி னூயெரி யூர்முற்று மினியங்கொன் றுண்டோ
கேட்ட வாற்றினுற் கிளிமொழிச் சீதையைக் கிடைத்தும்
மீட்டி லாததென் விற்றொழிற் காட்டக்கொல் வீர.

(இராமபிரான் அநுமனை நோக்கி), வீர - வீரனே! கூட்டினூர் படை - பெருந்தொகுதியாகத் திரட்டி நின்ற சேனையில், பாகத்தின் மேல் பட கொன்றாய் - செம்பாதிக்கும் அதிகமாக (ஒரே நாளில்) கொன்றனை; ஊர் முற்றும் எரி ஊட்டினாய் - இலங்கை நகர் முழுதும் தீக்கிரை யாக்கினாய்; இனி அங்கு ஒன்று உண்டோ - இனிமேல் அங்கே (நான்) புரியக்கூடியது ஏதேனும் உள்ளதா? கேட்ட ஆற்றினால் - இப்பொழுது கேட்டுணர்ந்த வகையில், கிளி மொழி சீதையை கிடைத்தும் - கிளிபோன்ற சொற்களை யுடையவளான சீதையை அடைந்தும்; (நீ), மீட்டிலாதது நீ மீட்டுகொண்டு வாராதது, என் வில் தொழில் காட்டகொல் - என் வில்லின் வல்லமையைத் தெரித்தற்குத்தானோ?

பாகம் - செம்பாதி. கிளிமொழிச் சீதை: 'பஞ்சரக் கிளி யெனக்கதறு' (ஆரணிய. 25); 'பிள்ளைச்சொற் கிளிய னாளை' (ஆரணிய. 1003); 'அஞ்சொற் கிளியன்ன அணங்கினை' (ஆரணிய. 1094). மீட்டி லாததென் விற்றொழிற் காட்டக்கொல் வீர: 'சொல்லி னாற்சுடு வேனது தூயவன், வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன்' (சுந்தர. 624); 'கற்றைப்பூங் குழலாளைச் சிறைவைத்த கண்டகனை, முற்றப்போர் முடித்ததொரு குரங்கென்றான் முனை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வீரன், கொற்றப்போர்ச் சிலைத்தொழிற்குக் குறையுண்டா மெனக் குறைந்தான்' (சுந்தர. 318) என்ற வரிகள் இங்கு நோக்கத்தக்கன. அநுமன் ஆற்றலிலும், அறிவிலும் இராமபிரான் கொண்ட உறுதி இங்குப் புலனாவது காண்க.

பி - ம். 1. மேற்செலக்.

3. கெட்டவாற்றினிற் கிளி, வாற்றினக் ; சிதையைக்கிட்டி.

4. நாட்டவோ ; வீரா, விர. 69

528. நின்செய் தோள்வலி நிரம்பிய விலங்கையை நேர்ந்தோம்
பின்செய் தோஞ்சில வவையினிப் பீடின்று பெறுமோ
பொன்செய் தோளினாய் போர்ப்பெரும் படைகொண்டு
[புகுந்தோம்
என்செய் தோமென்று பெரும்புக மெய்துவா னிருந்தோம்.

'பொன் செய் தோளினாய் - அழகுவாய்ந்த புயவலிமை யுடையவனே! போர் பெரும் படை கொண்டு புகுந்தோம் - போர் புரியும் பெரிய சேனையைக்கொண்டு புகுந்தோமாய், நின் செய் தோள் வலி நிரம்பிய இலங்கையை நேர்ந்தோம் - உன்னால் செய்து காட்டப்பெற்ற புயவன்மை நிறைந்தொளிரும் இலங்கை நகரை எதிர்த்து, பின் சில செய்தோம் - இனிச் சில வீரச்செயல்களைப் புரிவோம் ; (ஆயினும்), அவை - அச்செயல்கள், இனி - இனிமேல், இன்று - இப்போது, பீடு பெறுமோ - பெருமை எய்துமோ? (எய்தாது ; ஆதலின்), என் செய்தோம் என்று - என்ன ஆண்மைச்செயல் புரிந்ததாக, பெரும் புகழ் எய்துவான் இருந்தோம் - பெரிய புகழ் அடையலாம் என்று இருந்தோம்?

நீ தனித்து ஆற்றிய வீரச்செயல்கட்கு நான் பெரும் படை கொண்டு சென்று ஆற்றப்போகும் செயல் எவ்வகையிலும் ஈடாகாது ; அதனால் எனக்குப் புகழ் எய்திடாது என்று கூறு முகத்தான், அநுமனுடைய பெரும் பேராற்றலைப் புகழ்கின்றான் இராமபிரான். இறுதியடிக்கு : என்ன வீரச்செயல் புரிந்தோம் என்ன புகழ் எங்கட்குரியதாகும் என நினையுந்தோறும் வியப்பாக உள்ளது என்றான் என்று கொள்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. நிரப்பிய ; நேர்ந்து.

2. பிடென்று, பிடொன்று ; பெறுமே.

3. படைகொடு ; படையொடும் புக்கோம்.

4. இருந்தேம். 70

## இராமபிரான் அநுமனுக்கு பிரமபதம் அளித்தல்

529. என்ன தாக்கிய வலியொடவ் விராவணன் வலியும்
உன்ன தாக்கினை பாக்கிய முருக்கொண்ட தொப்பாய்
முன்ன தாக்கிய மூவுல காக்கிய முதலோன்
பின்ன தாக்கிய பதநினக் காக்கினன் பெற்றாய்.

'பாக்கியம் உரு கொண்டது ஒப்பாய் - நல்வினையே வடிவெடுத்தாற் போன்றவனே! என்னது ஆக்கிய வலியொடு அ இராவணன் வலியும் - என்னதாக (நான்) பெற்றுள்ள வலிமையையும் அந்த இராவணனது வலிமையையும் (நீ இலங்கையில் முந்துறச் சென்று வென்றதனால்) உன்னது ஆக்கினை - உன்னதாக்கிக்கொண்டாய்; முன்னது ஆக்கிய - முன்னிருந்ததுபோன்றே படைக்கப்படுவதான, மூ உலகு ஆக்கிய முதலோன் - மூன்று உலகங்களையும் படைக்கும் முதல்வனான பிரமன், பின்னது ஆக்கிய - (அவன் காலத்துக்குப்) பின்பு அமைக்கப்படுவதான, பதம் - பிரமபட்டத்தை, நினக்கு ஆக்கினன் - உனக்கே (இப் பிறவிக்குப் பின்னர்) நியமித்துள்ளேன்! பெற்றாய் - (நீ அப் பதவியை) உறுதியாகப் பெறுவாய்.

'பாக்கியம் உருக்கொண்ட தொப்பாய்' (ஒப்பு): (யுத்த. 526) மூவுலகாக்கிய முதலோன் - பிரமன்; முதலோனுக்கு ஆக்கிய பதம் அவன் பின்னர் நினக்கு ஆக்கினேன் என்க. 'காலனை ஒக்கும் தூதன் காலுங் கண்ணுதலு மென்றார், மேலுமொன் றுரைத்தார் அன்னான் விரிஞ்சனு மினிமே லென்றார்' (யுத்த. 763) என்றது மாலியவான் கூற்று. பெற்றாய் என்பது, எதிர்காலம் இறந்த காலமாக வந்த வழுவமைதி; தெளிவுபற்றி வந்தது.

பி - ம். 1. என்ன தாக்கிய தன்மையும்.

2. உருக்கொண்ட தொப்ப.

4. பின்னதாக்குறும் ; பதமுனக்கு ; ஆக்கினம். 71



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## அநுமன் நாணமும், பிறர் மகிழ்ச்சியும்

530. என்று கூறலு மெழுந்திரு நிலனுற விறைஞ்சி
ஒன்றும் பேசல னாணினன் வணங்கிய வுரவோன்
நின்ற வாநரத் தலைவரு மரசுமந் நெடியோன்
வென்றி கேட்டனர் வீடுபெற் றாரென வியந்தார்.

என்று கூறலும்-என்று (இராமபிரான்) கூறியவுடனே, வணங்கிய உரவோன் - வணக்கத்துடன் நின்ற வன்மையுடையவனான அநுமன், எழுந்து - எழுந்து, இரு நிலன் உற இறைஞ்சி - பெரிய பூமியில் உடல்படியும்படி வீழ்ந்து வழிபட்டு, ஒன்றும் பேசலன் - யாதொன்றும் உரையாடாமல், நாணினன் - நாணங்கொண்டிருந்தான்; நின்ற வாநர தலைவரும் - அங்கிருந்த வாநரத் தலைவரும், அரசும் - (அவர்கட்குத்) தலைவனான சுக்கிரீவனும், அ நெடியோன் வென்றி கேட்டனர் - அந்தப் பெரியோனது வெற்றியைக் கேட்டனர்; (கேட்ட அளவில்), வீடு பெற்றார் என வியந்தார் - மோட்சத்தை அடைந்தவர்போன்று ஆச்சரியம் எய்தினர்.

இரு நிலம் - பெரிய பூமி; 'ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை, யிருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே' (நறுந்தொகை. 34); 'ஒரு குறளாய் இருநிலமு வடிமண் வேண்டி' (பெரியதிரு. 3·4:1). நிலன் உற இறைஞ்சுதலைச் சாஷ்டாங்க நமஸ்காரம் என்பர். இராமபிரான் புகழுரைகளைக்கேட்ட அநுமனது பணிவும், தருக்கின்மையும் குறிக்கப்பட்டன. 'தேர்ந்தநூற் கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே' (சீவக. 53). வாநரத் தலைவர்கள் முன்னே தானைகாண் படலத்துக் கூறப்பட்ட சேனைத்தலைவர்கள். அரசு - சுக்கிரீவன். நெடியோன் - பெருமைமிக்க அநுமன். நெடுமை, இங்குப் பெருமை மேற்று.

பி - ம். 1. என்ற போழ்தினில், போதினில்; நிலந்துற.
2. நாணினன் வணங்கினன். 72

## இராமபிரான் ஆழிகடக்கும் வழியைக்குறித்து வீடணனை வினவல்

531. தொடக்கி நின்றவிவ் வுலகொரு மூன்றையுந் தோளால்
அடக்கும் வண்ணமு மழித்தலு மொருபொரு ளன்றாற்
கிடக்கும் வண்ணவெங் கடலினைக் கிளர்பெருஞ் சேனை
கடக்கும் வண்ணமு மெண்ணுதி யெண்ணுநூல் கற்றாய்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(இராமபிரான் வீடணனை நோக்கி), 'எண்ணும் நூல் கற்றாய்-நன்கு மதிக்கப்படுகின்ற நூல்களைக் கற்றவனே! தொடக்கி நின்ற - படைக்கப்பெற்று நிலைபெற்ற, இ உலகு ஒரு மூன்றையும் - இந்த மூன்று உலகங்களையும், தோளால் அடக்கும் வண்ணமும் - புயவலியால் அடக்கியாளும் தன்மையும், அழித்தலும் - போரில் எதிர்ந்தாரைத் தொலைத்தலும், ஒரு பொருள் அன்று - (நமக்கு) ஒரு பெரிய காரியமாகாது; (ஆயினும்), கிடக்கும் வண்ணம் வெம் கடலினை - (நாம் நேராக இலங்கைக்குச் செல்லாதபடி பரந்து) கிடக்கும் இயல்புள்ள இந்தக் கொடிய கடலினை, கிளர் பெரு சேனை - மனக்கிளர்ச்சி கொண்டுள்ள இந்தப் பெரிய சேனை, கடக்கும் வண்ணமும் எண்ணுதி - கடந்து செல்லும் ஆற்றினையும் சிறிது சிந்திப்பாயாக' என்று கூறினன். ஆல் - அசை.

இனி, முதல் இரண்டடிகளை அநுமனுக்கேற்றி யுரைத்து, கூறப்பட்ட முத்தொழில்களும் அவன் ஆற்றற்கரியனவல்ல எனக் கூறினர் என்பாரும் உளர். தொடங்கி என்பது தொடக்கி என வலித்தது. 'எண்ணு நூல் கற்றாய்'; 'கல்விக்கண் மிக்கோன்'; 'மூதுணர்வின் மிக்கான் மதிவீடணன்' (யுத்த. 717).

பி - ம். 1. தொடக்கு மென்னிலிவ்; உலகொரு மூன்றையும்.
2. அடக்கி வென்றவன்; அளித்தலும்.
3. வண்ணமிக் கடலினை.
4. வண்ணமீ தெவ்வழி யியம்புதி; எண்ண நூல். 73

## வீடணன் கடலை வழிவேண்டுமாறு கூறல்

532. கரந்து நின்றநின் றன்மையை யதுசெலக் கருதும்
பரந்து நின்றிருக் குலமுதற் றலைவராற் பாரில்
வரந்த ரும்மிந்த மாக்கடல் படைசெல வழிவே
றிரந்து வேண்டுதீ யெறிதிரைப் பரவையை யென்றான்.

'அது - அந்தக்கடல், கரந்து நின்ற நின் தன்மையை - மறைந்து ஒழுகும் உனது உண்மை யியல்பினை, செல கருதும் - முழுவதும் நன்குணரா நிற்கும்; (மற்றும் அது), நின் திருகுல

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

முதல் தலைவரால் பரந்தது - பாரில் உனது திருக்குலத்தில் தோன்றித் தலைமை சிறந்த (சகரரால்) அகழப்பெற்றுப் பூமியில் பரந்து கிடப்பதாகும்; ஆகவே, இந்த மாக்கடல் வரம் தரும் - இந்தப் பெரிய கடல் (நீ விரும்பிய) வரத்தை யளிக்கும்; (எனவே), எறிதிரை பரவையை - அலைகளைக் கரை மீது வீசுகின்ற இந்த ஆழியை, படை செல - நமது சேனை கடந்து செல்லும் வண்ணம், வேறு இரந்து 'வழி வேண்டுதி - தனித்து இரந்து வழி செய்யுமாறு வேண்டுவாய் என்றான் (வீடணன்).

இந்த ஆழியானது உனது முன்னோர்களான சகர புத்திரரால் அகழப்பட்டதாகலானும் உனது மறைந்துள்ள பெருமையை உணரும் ஆகலானும் நீர் வேண்டியபடி புரியும்; ஆகவே வேண்டுதல் முறை என்றான் வீடணன். இங்கும் சரணாகதியின் பெருமை வீடணனால் கூறப்பட்டது. சுக்கிரீவன் தனித்து வினவிய போதும் சரணாகதியே வேண்டப்படுவது, என்று வீடணன் அவன்பாற் கூறியதாக முதனூலும் கூறும்; இது வீடணன் கூற்று என்பது அடுத்த செய்யுளால் விளங்கும். திருக்குல முதல் தலைவர். சகர புத்திரர்கள். 'இவர் குலத்தோருவரிநீர்க் கடலோட்டா ரெனின்வேறோர் கட்டுரையும் வேண்டுமோ (பால. குலமுறை. 8); 'கடல் படைத் தவநெடுங் கங்கைவந் தவன்வழிக் கடவுண் மன்னன்' (யுத்த. 94); 'சகர நீர்வேலை' (சுந்தர. 407).

பி - ம். 1. தன்மையது; சொலிற், கருதிற், சொல்லிக் கருதும்.
2. பரந்து நின்ற நின்; தலைவர் போல்; பரிவால்.
3. இந்த மால் கடல், மாகடல் செலவழி.
4. இரந்து வேண்டுதி. 3-4 வழியொன், றிரந்து கொள்ளுதி வருணனை லென்றன னுரவோன். 74

## இராமபிரான் கடற்கரை யடைதலும் சூரியன் உதயமும்

533. நன்றி லங்கையர் நாயகன் மொழியென நயந்தான்
ஒன்று தன்பெருந் துணைவரும் புடைசெல வுரவோன்
சென்று வேலையைச் சேர்தலும் விசும்பிடைச் சிவந்த
குன்றின் மேனின்று குதித்தன பகலவன் குதிரை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உரவோன் - பேரறிஞனை இராமபிரான், இலங்கையர் நாயகன் இலங்கையின் தலைவனை வீடணனது, மொழி நன்று என நயந்தான் - வார்த்தை சிறந்ததாக உள்ளது என்று விரும்பி யேற்றவனய், ஒன்று - தன்னிடம் பொருந்திய, தன் பெரு துணைவரும் புடை செல - தனது பெருமை மிக்க நண்பர்களாகிய சுக்கிரீவன், வீடணன் அநுமன் முதலானோர் அண்மையில் தொடர்ந்துவர, வேலையை சென்று சேர்தலும் - கடற்கரையைச் சென்று அடைந்த அளவில், பகலவன் குதிரை - பகலைச் செய்பவனை சூரியனது குதிரைகள், சிவந்த குன்றின் மேல் நின்று குதித்தன - சிவந்து காட்டிய உதய கிரியின் மேலிருந்து (ஆகாய வீதியில்) தாவிக் குதித்தன.

உதய மாதலின் சிவந்த குன்று என்றான் சூரியன். உதயகிரியில் தோன்றுவதும் அத்தமனகிரியில் மறைவதும் உண்டு என்பது புராண வரலாறு. 'உதயகிரி யெனும்கடவுள் நுதல்கிழித்த விழியேபோ லுதயம் செய்தான்' (பால. மிதிலைக். 150); 'உதயமால் வரையின் மீப்படர் வெங்கதிர்ச் செல்வர்' (சுந்தர. 414): பகலவன் குதிரை: ஒற்றையாழித் தேரிற் பூட்டப்பட்ட சூரியன் குதிரைகள். இக்குதிரைகள் ஏழென்றும், ஒன்றென்றும் பகர்வர். 'சீதம், புக்கு நீங்கலிற் றளர்வில விரவிதேர்ப் புரவி (கிட்கிந்தா. 162) 'போதுமே யிரவி புரவி' (தக்க. 55); 'இரவிகள் பல்லுந் தத்த, மீரறு தேரிலவ்வேழ், புரவிகள் (தக்க. 732). பகலவன்; திவாகரன் என்ற வடசொல் இதே பொருளது.

பி - ம். 2. ஒன்றும், ஒன்றுநன்; பெருஞ் சேனையும், பெரும்படைஞ, புடைவர வுற்றுச்.

3. சேரலும்; விசும்பிடைச் சேர்ந்த.

4. குதித்தது; குன்றின் மேற்றிசை குதித்தது.



இதனுடன், ஒன்னார் வலியறி படலம் முற்றும் என்று பிரதியில் காணப்படுகின்றது. மற்றும் இருபிரதிகளில் 'இதனுடன் இலங்கை அளவறி படலம் முற்றும் என்றும், இது முதல் வருணன் அடைக்கலப் படலம் என்றும் காணப்படும்.

இலங்கை கேள்விப்படலம் முற்றும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**இப்படலம் சம்பந்தமாக முதனூல் கூறுவது :—**

அபயம் அளிக்கப்பெற்ற வீடணனுக்கு இராமபிரான் இனிய உரைகளைக் கூறி, அரக்கர்களின் வன்மை மென்மைகளை அறிவிக்குமாறு கேட்க, வீடணன் கூற, இரகு நந்தனன் 'இராவணனைக் கொன்று உன்னை இலங்கைக்கு அரசன் ஆக்குவேன்' என, வீடணனும் 'நீர் அரக்கரை வதைக்கும் பொழுது என்னாலியன்ற உதவி புரிவேன்' என்று பகர, இராமபிரான், 'பேரறிவாளனான வீடணனை அவனுக்கு விருப்பமில்லா விடினும் அரசனாக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு இருப்பதால் அபிடேகம் செய்வாயாக' என்று மொழிய, இலக்குவன் வாநரர்களிடையே வீடணனை அரக்கர் கோமானாக அபிடேகம் செய்து வைத்தான் என்பது.

---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 6. வருணன் அடைக்கலப் படலம்

இது, இராமபிரானை வருணன் அடைக்கல மடைந்ததைக் கூறும் படலம் என விரியும். இது, சில பிரதிகளில் கடல் சீறிய படலம் என்றும், வருணன் அடைக்கலப் படலம் என்றும், கடலைச் சீறிய படலம் என்றும், கடல் சீறியருள் படலம் என்றும் காணப் படுகிறது. இப்பாடலும் இதனை அடுத்துள்ள மூன்று செய்யுட் களும் இப்படலத்துக்கும், முன்புள்ள இலங்கை கேள்வியிற் காணப் படுகின்றன. சில பிரதிகளிலும், சில அச்சுப் புத்தகங்களிலும் கடல் சீறிய படலம் என்றும், வருணன் அடைக்கலப் படலம் என்றும் இரண்டு படலங்களாக உள்ளன.

## உலகிருள் நீங்குதல்

534. கொழுங்க திர்பகைக் கோளிரு ளீங்கிய கொள்கை
செழுஞ்சு டர்ப்பனிக் கலையெலா நிரம்பிய திங்கள்
புழுங்கு வெஞ்சினத் தஞ்சனப் பொறிவரி யரவம்
விழுங்கி நீங்கிய தொத்தது வேலைசூழ் ஞாலம்.

வேலை சூழ் ஞாலம் - கடலாற் சூழப்பெற்ற இந்தப் பூமி, கொழு கதிர் - செழித்த கிரணங்களைப்பெற்ற சூரியனாலே, பகை கோள் இருள் நீங்கிய கொள்கை - பகையான வலிய இருள் ஒழியப்பெற்ற தன்மையினால், செழு சுடர் - தழைத்த ஒளியைத் தன் அகம் கொண்ட, பனி கலை எலாம் நிரம்பிய திங்கள் - குளிர்ந்த பதினாறு கலைகளும் நிறைந்து விளங்கப்பெற்ற சந்திரன், புழுங்கு வெம் சினத்து - அழலச்செய்யும் கடுமையான வெகுளியையும், அஞ் சனம் - கருநிறத்தையும், பொறி வரி அரவம் - படப் புள்ளிகளையும் உடற்கண் வரைகளையும் உடைய இராகுவெனும் சர்ப்பத்தால், விழுங்கி நீங்கியது ஒத்தது - விழுங்கப்பெற்று(ப் பின்) வெளிப் பட்டதை நிகர்த்தது.

இருளால் மூடப்பட்ட உலகிற்கு இராகு விழுங்கிய மதியினை யும், கதிரவன் ஒளியால் இருள் நீங்கப்பெற்ற புவனத்திற்கு அரவின் வாயினின்று வெளிப்பட்ட சந்திரனையும் உவமை கூறினார்; **தன்மைத் தற்குறிப்பேற்றவணி**. கலையெலாம் நிரம்பிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



திங்கள் என்றூர், பூரண சந்திரனையே அரவு பற்று மாகலின், கலையெலாம் - மதிக்குரிய பதினறு கலைகள். விழுங்கப் புறப்படுதலின், புழுங்கு வெம்சினத்தரவம் எனப்பட்டது. அஞ்சனம் என்றதால், கரும்பாம்பாகிய இராகுவைக் குறித்ததென்க; பொதுவாகச் சூரியனை இராகுவும், சந்திரனைக் கேதுவும் விழுங்கும் என்ற கொள்கையும் உண்டு. பொறி - படப்புள்ளிகள். அரவம் இக்கதிர்மதியை விழுங்குவதனலேயே கிரகணம் ஏற்படுவது என்பது நூல்களில் ஆங்காங்குக் கூறப்படுதல் காணலாம். 'மதிசேரரவின் மானத் தோன்றும்' (சிறுபாண். 185-)உம், 'திங்களைச் சேர்கின்ற கரும்பாம்பை யொப்பத் தோன்றும்' என்ற அதன் உரையும் காண்க; 'ஒருபுடை பாம்பு கொளினும்' (நாலடி. 148); 'மதியம் கெடுக்கும் நாகம்' (பெருங். 1·33; 172-173).

பி - ம். 1. கொழுந்திருட்; கோளொலா; செய்கை.
2. கதிரெலா நிரம்பிய திங்கள்.
3. விங்கிய தொத்தது.

## இராமபிரான் தருப்ப சயனத்தில் அமர்தல்

535. தருண மங்கையை மீட்பதோர் நெறிதரு கென்னும்
பொருள்ந யந்துநன் னூனெறி யடுக்கிய புல்லிற்
கருணை யங்கடல் கிடந்தது கருங்கட லேக்கி
வருண மந்திர மெண்ணினன் விதிமுறை வணங்கி.

'தருணம் மங்கையை - இளம் பருவம் வாய்ந்த பெண்ணுகிய சீதையை(ச் சிறை), மீட்பதோர் நெறி தருகென்னும் - மீட்பதற்காக (வானர சேனையுடன் கடலைக் கடத்தற்கு ஏற்ற) ஒரு வழியைச் சொல்வாயாக', என்னும் - என்று கேட்கும், பொருள் நயந்து - ஒரு காரியத்தை விரும்பி, அம் கருணை கடல் - அழகிய அருட் கடலாகிய இராமபிரான், நல் நூல் நெறி அடுக்கிய - சிறப்புவாய்ந்த நூல்களில் இயம்பியபடியே அடுக்கிச் செய்யப்பெற்ற, புல்லில் - தருப்பைப் புல்லின்மீது, விதி முறை - விதிக்கப்பட்ட நெறிப் படியே, வணங்கி - வழிபட்டு, கரு கடல் நோக்கி - தன்முன்னே பரந்து கிடந்த கரிய கடலைப் பார்த்தவண்ணமாய், வருணன் மந்திரம் எண்ணினன் - வருண மந்திரத்தை உருவேற்றிக்கொண்டு கருணை அம் கடல் கிடந்தது - அருள் வடிவமான கடல் போன்ற இராமபிரான் படுத்திருந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தருண மங்கை - பருவப்பெண். தருணி என்பது வடசொல். நன்னூல் நெறியடுக்கிய புல்லிற் கிடத்தல் - இதனைப் பிராயோப வேசம் என்பர். முறைப்படி தருப்பை அடுக்கவேண்டுதலின், 'நன்னூல் நெறியடுக்கிய புல்' என்றார். இந்த இடம் இன்றும் 'தர்ப்பசயனம்' என்றும், தமிழில் திருப்புல்அணையென்றும் வழங்குதல் காண்க. கருணையங்கடல் கருங்கடல் நோக்கிக் கிடந்தது என்பதற்கு, திருவாய்மொழி 6·9:3 ஈட்டு வியாக்யானம் இங்கே அறியத்தகும். வெகுண்டு வற்றச்செய்யும் ஆற்றல் உண்டெனினும், அங்ஙனம் செய்யாது வரங்கிடந்தமையின், 'கருணையங் கடல்' எனப்பட்டது. வருண மந்திரம் - வருணபகவான் உபாசனைக் குறிப்பு. இன்றும் மழைவேண்டின் இம் மந்திரத்தை ஜபிப்பது காணலாம். இராமபிரான் தர்ப்பசயனத்தில் அமர்ந்த கோலத்தை முதனூல் யுத்த. 21-ஆம் சர்க்கம் அழகுபட அமைக்கின்றது காண்க.

பி - ம். 2. நன்னூல் முறை, நுண்ணூல் முறை.

3. கடல் கிடந்தனன், கடல் துயின்றனன்.

4. எண்ணினன்; இயற்றினன், மொழிந்தனன்; விதிமுறை எண்ணினன் வணங்கி. 2

இதுமுதல் வருணன் அடைக்கலப் படலம் என்று ஓர் பிரதியில் கண்டுள்ளது.

### சயனத்து ஏழுநாள் இருந்தும் வருணன் வாராமை

536. பூழி சென்றுதன் றிருவுருப் பொருந்தவும் பொறைதீர்
வாழி வெங்கதிர் மதிமுகம் வருடவும் வளர்ந்தான்
ஊழி சென்றன வொப்பென வொருபக லவையோர்
ஏழு சென்றன வந்தில னெறிகடற் கிறைவன்.

(இராமபிரான்), பூழி சென்று - புழுதி பரந்து, தன் திருஉரு பொருந்தவும் - தனது திருமேனிக்கண் படியவும், பொறைதீர் வெம் கதிர் - பொறுமை யற்ற கடுமையான வெயில் கிரணங்கள், மதி முகம் வருடவும் - சந்திரன் போன்ற அழகிய முகத்தைத் தடவவும், வளர்ந்தான் - அந்த மந்திரத்தை உருவேற்றியபடி கண் வளர்பவன் போன்றிருந்தான்; ஒரு பகல் ஊழி சென்றன ஒப்பென - ஒரு நாள் ஊழிக்காலம் கழிந்தது போன்று விளங்க, அவை ஓர்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஏழு சென்றன-அப்பகல்கள் ஏழு கழிந்தன; எறிகடற்கு இறைவன் வந்திலன் - அலை வீசுகின்ற கடலுக்குத் தெய்வமாகிய வருணன் (அப்பொழுதும்) வெளிப்பட்டு வரவில்லை. வாழி - அசை.

பூழி-புழுதி, 'பூழிவெங் கானம் நண்ணி' (அயோத்தி. கைகேசி: 107); மூன்று நாட்களே இராமபிரான் விரதமிருந்ததாக முதனூல் கூறும். சக்கரவர்த்தித் திருமகன் உடலும் புழுதிபடியக் கிடப்பதா என இரங்கிக் கூறியவையாகும் முன்னிரண்டடிகள் (ஒப்பு): 'இவ்வாறுகிப் பிறப்பதோ விதுவோ மன்னர்க் கியல் வேந்தே' (சீவக. 309); என்று விசயாதேவி தன் மகன் சீவகனைக் நோக்கிக் கூறியது காண்க. பகல் என்பது நாட்பிரிவைக் குறியாது நாள் என்ற பொருளினது, 'ஒல்வ கொடாஅ தொழிந்த பகலும் (நாலடி. 169).

பா - ம். 2. மணிமுடி வருட; மணிமுகம் வருட.

3. சென்றனவாமென, சென்றனனெப்பென. 3

## இராமபிரான் சினந்து கூறல்

537. ஊற்ற மீக்கொண்ட வேலையா னுண்டிலை யென்னும்
மாற்ற மீக்கவும் பெற்றிலம் யாமெனு மனத்தால்
ஏற்ற மீக்கொண்ட புனலிடை யெரிமுளைத் தென்னச்
சீற்ற மீக்கொண்டு சிவந்தன தாமரைச் செங்கண்.

'ஊற்றம் மீக்கொண்ட வேலையான் - வலிமை மிகுதியும் படைத்த சமுத்திர ராசன், உண்டு இலை என்னும் மாற்றம் ஈக்கவும் பெற்றிலம் யாம் - செய்வேன் செய்யேன் என்ற மொழிகளை ஈயவும் நாம் பெற்றேமில்லை;' எனும் மனத்தால் - என்ற நினைவால், ஏற்றம் மீ கொண்ட - கொந்தளிப்பை அதிகமாகக் கொண்ட, புனலிடை - கடற் பரப்பில், எரி முளைத்து என்ன - நெருப்பு எழுந்த தொப்ப, (இராமபிரான் தனது திருவுள்ளத்திலே) சீற்றம் மீ கொண்டு தாமரை செம் கண் சிவந்தன - சினத்தை மிகுதியும் கொண்டதனுல், (அப்பெருமானது) தாமரை போன்று சிவந்த கண்கள் மேலும் சிவப்பேறின.

வேலையான்; கடற்கிறையான வருணன். வேலா, வட சொல்; அது தமிழிற் கேற்ப ஐ பெற்று வேலை என்ருயது. உண்டிலை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யெனும் மாற்றம் - வேண்டுகோட் கிணங்குதல் இணங்காமை என்னும் உத்தரம். மாற்றம் - வார்த்தை இங்கே விடை யென்ற பொருளில் வந்தது (ஆரணிய. 562); ஈகவும் ஈக்கவும என வலித்தது. ஈக்க: 'இருகரும் புருவமாக ஈக்க' (சிலப். 1. 2 : 45): இயல்பாகச் சிற்றம் இல்லாத இராமபிரான் சினத்தை ஏறட்டுக் கொண்டான். இந்தச் செயற்கை வெகுளிக்கு உலகத்து நிகழ்ச்சிகளில் ஓர் உவமை கிட்டாமையின், 'புனலிடை எரி முளைத்தென்ன சிற்றம்' எனப்பட்டது. புனலிடை எரி முளைத்தது - வடவைத் தீ யெனினும் ஆம். (ஒப்பு): 'திங்களுட் டீத்தோன்றி யற்று' (கலித். 4); இல்பொருள் உவமை. சிவந்தன தாமரைச் செங்கண், இயல்பாகவே சிவந்த கண்கள் சிற்றத்தால் மேலும் சிவந்தன. (ஒப்பு): அப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா' (அயோந்தி. கைகேசி. 108) என்றது போல. இயல்பாக இராமன் சினமில்லாதவன்; (ஒப்பு): 'கூனிகூன் போக வுண்டை, செறித்தபோ தொத்ததன்றிச் சினவுண்மை தெரிந்ததில்லை' (யுத்த. கும்ப. 17); 'செயிர்ப்பினும் அழகு செய்யும்' (யுத்த. 708). சினத்தை இடங்கட்கேற்ப ஏறட்டுக் கொள்ளுதல்; 'கோதாவரியைச் சினம் கொண்டனன் கொண்டல் ஒப்பான்' (சுந்தர. : 573) 'கோபமா ஹாரயத்திவ்ரம்' என்பது வான்மீகம்.

பி - ம். 1. உண்டில்லை.

2. பெற்றில னேமேனும்; நோக்கவும் பெற்றிலன்; மாலுறுமனத்தான்.

3. மீக்கொண்டு; மீக்கொள்ள.

4. மீக்கொள; சிவந்தது.

538. மாண்ட வில்லிழந் தயருநான் வழிதரு கென்ன
வேண்ட வில்லையென் றொளித்ததா மெனமனம் வெதும்பி
நீண்ட வில்லுடை நெடுங்கன லுயிர்ப்பொடு நெடுநாண்
பூண்ட வில்லெனக் குனிந்தன கொழுங்கடைப் புருவம்.

'மாண்ட இல் இழந்து அயரும் நான் - மாட்சிமைப்பட்ட வாழ்க்கைத் துணைவியைப் பிரிந்து வருந்தும் நான், வழி தருகென்ன - வழிசெய்க என்று, வேண்ட - வேண்டா நிற்கவும். (இந்தக் கடல் தெய்வம்), இல்லை என்று ஒளித்ததாம் என மனம் வெதும்பி - இணங்குவதற்கில்லை என்ற குறிப்பு விளங்க, மறைந்த தாகும்' என இராமபிரான் உள்ளம் கொதித்து. நீண்ட வில் உடை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நெடுகனல் உயிர்ப்பொடு - நீளமான ஒளியுடன் கூடிய அனல் போன்ற பெரு மூச்சுடன், நெடு நாண் பூண்ட வில் என - பெரிய நாணை ஏற்றிய அவனுடைய கோதண்டம் என்னும் வில்லை யொப்ப, கொழு புருவம் கடை குனிந்தன - (இராமபிரானுடைய) செழித்த புருவங்களின் ஓரங்கள் வளைந்து காட்டின.

மாண்ட - பெருமையுள்ள; 'மாண்டவென் மனைவியொடு மக்களும் நிரம்பினர்' (புறநா. 191); 'இல்லதென் இல்லவள் மாண்பானால்' (குறள். 53); வடமொழியாளர் கிருகணி என்பர். இல் - மனைவிக்கு இலக்கணை. இல்லை - இணங்குதற்கில்லை யெனப்பட்டது. நீண்ட வில் - பரந்த ஒளி; 'தண்ணாரம் வில் விலங்க' (சீவக. 2959). மூன்றுமடியில் நீண்ட, நெடும், நெடு நாண் என்ற சொற்கள் இராமபிரானின் வெகுளி யென்னும் மெய்ப் பாட்டை மிகுத்துக் காட்டுதல் காண்க. நெடுங்கனல் - வடவை யெனினுமாம். இங்கு அக்கினி அம்பின் நுனியாகவும், வாசுகி நாணாகவும், மேருமலை வில்லாகவும் கொண்டு புரமெரித்த சிவ பெருமானது ரௌத்திரம் ஒருவாறு குறிக்கப்படுதல் உய்த் துணர்க. கடைப்புருவம் - புருவக் கடை; இலக்கணப் போலி.

பி - ம். 1. அயருவான்; வழிதனை வணங்கி, வழிதகுகென்று.
2. ஒளித்ததா லென; வெதும்ப.
3. வில்லிடை, வில்லிடு, நிறைநாண்.
4. குனித்தன; குனித்தது.

539. ஒன்றும் வேண்டல ராயினு மொருவர்பா லொருவர்
சென்று வேண்டுவ ரேலவர் சிறுமையிற் றீரார்
இன்று வேண்டிய தெறிகட னெறிதனை மறுத்தான்
நன்று நன்றென நகையொடும் புகையுக நக்கான்.

'ஒருவர் ஒன்றும் வேண்டலர் ஆயினும் - ஒருவர் ஒரு சிறிது பொருளையும் விரும்பாதவராயினும், (எல்லாப் பொருள்களும் நிரம்பப்பெற்றவராயினும்), ஒருவர் பால் ஒருவர் - ஒருவரிடம் ஒருவர், சென்று வேண்டுவரேல் - போய் ஏதேனும் ஓர் பொருளை நாடுவரா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யின், அவர் சிறுமையில் தீரார்-(வேண்டுபவர்) அவர் தமது கீழ்மை யான தன்மையினின்றும் நீங்கார்; (அவ்வண்ணமே), இன்று வேண்டியது நெறிதனை - இன்று நாம் விரும்பிக்கேட்ட வழியை, எறிகடல் மறுத்தான் - அலைவீசும் கடற்கிறைவன் (காட்ட) மறுத்தான்; நன்று நன்று என - (இது) மிகவும் நன்றாக இருந்தது' என்று, நகையொடும் புகை யுக நக்கான் - (சினத்தால் எழுந்த) சிரிப்பொடும், வாயினின்றும் புகை வெளிப்படச் சிரித்தான்.

ஒரு குறைவுமில்லாத பெருமைசான்ற தான் குறைவேண்டவும் அதனைப் பொருட்படுத்தாத அற்பன் என்று கடலை முனிகின்றான் இராமபிரான். இக் கருத்துக் கொண்டுதான் 'ஏற்ப திகழ்ச்சி' என்றும், 'கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார் கண்ணும் இரவாது வாழ்வதாம் வாழ்க்கை' (நாலடி. 305) என்றும் கூறப்பட்டன. மற்றும், திருக்குறள் இரவு, இரவச்சம் முதலிய அதிகாரங்களும் இங்குக் காணத்தகும். நன்று நன்று அடுக்கு மிகுதி. நக்கான்: இது வீரத்தெழுந்த வெகுளிநகை. இச் செய்யுளில் ஒரு நீதி அடங்கியுள்ளது காண்க.

பி - ம். 1. ஒன்று, ஒன்றி; வேண்டிலராயினும்; ஒருவர்போல்,

2. என்று வேண்டுவது.

3. என்று கொண்டதிவ் வெறிகட லென்னுடை யிரக்கோள், நன்று வேண்டிய தெறிகடல்; நெறியிது; மறுத்தல், மறுத்தால்,

4. புகையெழ, புகையொடும், நகையொடும்; அமலனும் நவில்வான்.

540. பார நீங்கிய சிலையின னிராவணன் பறிப்பத்
தார நீங்கிய தன்மைய னாதலிற் றகைசால்
வீர நீங்கிய மனிதனென் றிகழ்ச்சிமேல் விளைய
ஈர நீங்கிய தெறிகட லாமென விசைத்தான்.

'இராவணன் பறிப்ப தாரம் நீங்கிய தன்மையன் ஆதலின் - (நான்) இராவணன் கவர்ந்து சென்றனால் மனைவியைப் பிரிந்த தன்மையை யுடையேனாதலின், எறி கடல் - இந்த அலைவீசுகின்ற கடல், தகை சால் வீரம் நீங்கிய மனிதன் - (இவன்) பெருமையுடன் கூடிய ஆண்மை நீங்கப்பெற்ற மானிடன், பாரம் நீங்கிய சிலையினன் - பெருமை யகலப்பெற்ற வில்லைத் தாங்கியவன், என்று - என்று கருதி, இகழ்ச்சி மேல் விளைய - இகழ்வு மிகவும் உண்டாகும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


படி, ஈரம் நீங்கியது ஆம் - இரக்கம் நீங்கப்பெற்றது ஆகும்' என இசைத்தான் - என்று கூறினன் (இராமபிரான்).

இங்கு, 'க்ஷமயாஹி ஸமாரிக்தம் மாமயம் மகராலயம்: அஸமர்த்தம் விஜாநாதி, திக்க்ஷமா மித்ரு சேஜநே' என்ற முதனூல் ச்லோகம் அறியத்தக்கது. குறை உள்ள நெஞ்சு குறுகுறுக்கும் என்பர்; தான் தாரத்தினின்று பிரிந்த கேவல நிலையை வருணன் உணர்ந்து அவமதித்தான்போலும் என்கின்ருன் இராமபிரான். இங்குக் கம்பநாடருடைய உலகியலறிவினையும் மனத்தத்துவ உணர்ச்சியையும் காணலாம். வீரம் ஆடவர்க்கு மேன்மை விளைத்தலின் தகைசால் எனப்பட்டது. ஈரம் - இரக்கம்; 'ஈரமன்றியி தென்செய்த வாறரோ' (கிட்கிந்தா. 313).

பி - ம். 1. பறித்த, பறிக்கந்.

3. நீங்கினன்.

4. தெறிகடற் கின்றதுவென; எறிகடற் கரசனென் றெழுந்தான். 7

541. புரந்து கோடலும் புகழொடு கோடலும் போரால்
துரந்து கோடலு மென்றிவை தொன்மையிற் றொடர்ந்த
இரந்து கோடலின் இயற்கையும் தருமமு மெஞ்சக்
கரந்து கோடலே நன்றினி நின்றதென் கழறி.

'புரந்து கோடலும்-பிறரைக் காப்பாற்ற முயன்று அந்த உதவிக்காக ஒன்றைப் பெற்றுக்கொள்ளுதலும், புகழொடு கோடலும்-கீர்த்தியோடு ஒன்றை அடைதலும், போரால் துரந்து கோடலும்-பகைவருடன் சண்டைசெய்து அவர்களைத் துரத்தி அவருடைய பொருளைக் கைப்பற்றுதலும், என்ற இவை தொன்மையில் தொடர்ந்த - என்ற இம்முறைகள் பண்டைக்காலந்தொட்டு நடைபெற்று வருவனவாம்; (இவைகளை விடுத்து), இரந்து கோடலின் - நான் இரந்துகொள்வதை மேற்கொண்டபோது, இயற்கையும் தருமமும் எஞ்ச - தன் நற்பண்பும் அறச்சிந்தையும் குறையுமாறு, கரந்து கோடல் நன்று - இந்தக் கடல்தெய்வம் (நான் விழைந்தபடி வந்துதவாமல்) மறைந்து வதிதல் நன்ருக இருந்தது; இனி கழறி நின்றது என் - இனி அவனை இடித்துரைத்தால் நிகழக் கூடியது யாது உளது?' (ஒன்றுமில்லை). ஏகாரம்: தேற்றம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இங்கே இரப்பின் இழிதகவை அறிந்து கூறுகின்றான் இராம பிரான். ஒரு பொருளை அடைதற்குப் பல நெறிகள் உள்ளன. ஆயினும், இரந்து ஒன்றைப் பெறுதல் இழிவு; அதுபற்றியே தான் வருணன் அவமதித்தான் என்று வருந்தினன்; (ஒப்பு): 'உறுபொருளும் உல்குபொருளுந் தன் ஒன்னார்த் தெறுபொருளும் வேந்தன் பொருள்' (குறள். 756). என்ற இவை என்பது, என்றிவை எனத் தொக்கது. 'இலன் என்னும் எவ்வம் உரையாமை யீதல், குலனுடையான் கண்ணே உள' (குறள் 223); அங்ஙனமாகவும் அசட்டையாக இருந்தான் என்றான். இயற்கை - கொடைப் பிறவிக்குணம் ஆகலின் இயற்கை எனப்பட்டது. தருமம் - தன்பால் வந்து இரந்தவரைப் பாதுகாத்தளிக்கும் சரணாகதி தருமம். இந்த இரண்டும் இவ்வருணன்பால் இல்லை என்றான். ஈதலின் சிறப்பும், ஈயாமையின் இழிவும், திருக்குறள் ஈகை, இரவு, இரவச்சம் என்ற அதிகாரங்களால் உணர்க. நன்று - பிறகுறிப்பு.

பி - ம். 1. புகழொடுப் ; பொருது.

2. என்றிவை கோடலும் துறந்து ; எனச்சொல்லுந் தொன்மையைத் தொடர்ந்தும்.

3. கோடலின் ; அஞ்சக்.

4. கழறின். 8

542. கானி டைப்புகுந் திருங்கனி காயொடு நுகர்ந்த
ஊனு டைப்பொறை யுடம்பின னென்றுகொண் டுணர்ந்த
மீனு டைக்கடற் பெருமையும் வில்லொடு நின்ற
மானு டச்சிறு தன்மையும் காண்பரால் வானோர்.

'கான் இடை புகுந்து - காட்டிலே புகுந்து, இரு கனி காயொடு நுகர்ந்த-(சுவையாற்) பெருமைசான்ற கனிகளையும் காய்களையும் உண்ட, ஊன் உடை பொறை உடம்பினன்-மாமிசத்தானியன்ற பருத்த உடலினை யுடையவன் (நான்), என்று கொண்டு உணர்ந்த - என்று மனத்துட்கொண்டு தெளிந்த, மீன் உடை கடல் பெருமையும் - மீன்களை யுடைத்தான இந்தக் கடலின் பெருமையையும், வில்லொடு நின்ற சிறு மானுட தன்மையும் - வில்லைத் தாங்கிநின்ற சிறுமைப்பட்ட என் மனிதத்தன்மையின் பெருமையையும், வானோர் காண்பரால் - தேவர்கள் கண்ணுறுவாராக. ஆல் - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முதலிரண்டடிகளும் வருணன் இராமபிரானைப்பற்றி எண்ணியதாகக் கூறியது. இவன் வெறும் மாமிசப்பிண்டம், இவன் என்னை என்ன செய்துவிடமுடியும் என்பது வருணனின் எண்ணம்போலும். 'என் பெருமையையும் இந்த வருணனுடைய பெருமையையும் இப்போதே வானவர் காணுமாறு என் வில்லாற்றலைக் காட்டுவேன்' என்றான் இராமபிரான்.

பி-ம். 1. கவர்ந்த.

4. மாவிடச்சிறு. 9

543. ஏத மஞ்சிநா னிரந்ததே யெளிதென விகழ்ந்த
ஓத மஞ்சினே டிரண்டும்வெந் தொருபொடி யாகப்
பூத மஞ்சும்வந் தஞ்சலித் துயிர்கொண்டு பொருமப்
பாத மஞ்சலர் செஞ்சவே படர்வரென் படைஞர்.

'ஏதம் அஞ்சி-(ஆழியைக் கணையேவி வற்றச்செய்வது) குற்றம் எனப்போந்து, நான் இரந்ததே எளிது என-நான் இரந்ததே மிகவும் இழிவானது என நினைந்து, இகழ்ந்த-(என்னை) அவமதித்த, ஓதம் அஞ்சினேடு இரண்டும் வெந்து ஒரு பொடியாக-ஏழு கடல்களும் கொதித்து வற்றிப் பொடியாகுமாறு, பூதம் அஞ்சும் வந்து அஞ்சலித்து உயிர் கொண்டு பொரும-ஐந்து பூதங்களும் வந்து கைகுவித்து உயிர்த்தலைக் கொண்டு விம்ம, அஞ்சலர்-சிறிதும் அச்சமின்றி, என் படைஞர்-என் படைவீரர்களாகிய வானரர்கள், பாதம் செஞ்சவே படர்வர்-தங்கள் கால்களினாலேயே நேராகவே போருக்குச் செல்லத் தொடங்குவர்.

ஏதம்-குற்றம்; வேதியர்க் கேதமு மிமையவர்க் கிடரு மீட்டிய' (யுத்த. 378); 'ஏதம் அஞ்சி வருணனை இரந்ததை இவன் என் எளிமையாகக் கொண்டான். இனி, இக்கடலை நான் வற்றச்செய்து என் சேனையை இதன்மீது நடக்கச்செய்வேன்' என்று இராமபிரான் வெகுண்டனன் என்க. ஓதம் அஞ்சினே டிரண்டு-ஏழு கடல்கள். ஏதம் அஞ்சியது: கடலை அத்திரம் விடுத்து வற்றச்செய்யின் அதன்கண் உள்ள பல்லுயிர்களும் இறந்து ஒழியுமே என்ற குற்றத்திற்கு அஞ்சி, தன் பெருமைக்கிழுக்கென்றும் பாராது, இராமபிரான் வருணனை இரந்தது என்க. உயிர்:உயிர்த்தலின் முதனிலை. ஆழிவற்றித் துகளான அளவில் ஐம்பெரும் பூதங்களும் நிலைதடுமாறித் தமக்கு உயிர்ப் பிச்சை வேண்டி யிரக்கும் என்றும் மூன்றும் அடிக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



குப் பொருள் கொள்ளலுமாம். (ஒப்பு) : 'என்றும்நீக்கமற, அன்றிற் பெடையோடு வாழ்வதன்றே பனை' திருவெங்கைக். 109) என்னும் அருளியல் கிளத்தற் செய்யுளும், 'பெண்ணை, யுடனும் பெடையொ டெண் சேபலும் முட்டையும் கட்டழித்து, மடனும் புனை தரின், யார் கண்ண தோமன்ன வின்னருளே' (திருக்கோவை. 77). என்ற செய் யுளும் காண்க. அஞ்சலித்தல்-கைகூப்பி வணங்குதல்; 'அஞ்சலித் தறியாச் செங்கை ஆணையாய்' (கிட்கிந்நா. 373). பொருமுதல்-விம்மி யழுதல்; 'பொன்றின ராமெனப் பொருமு புந்தியர்' (கிட்கிந்நா. 822). செஞ்சவே - செம்மையாக; 'செஞ்சவே கமலக் கையாற் றீண்டலும்' (பால. பூக்கொய். 7). 'ஸாகரம் ஸோஷ்யஷ்யாமி, பத்ப்யோ யாந்து ப்லவங்கமா' என்ற முதனூல் ச்லோகம் இங்கே காணத்தகும்.

பி - ம். 1. இரந்ததை யெளிவென, இருந்ததென் னெளிவென; இகந்து, நினைந்த.

3. உயிர்கொடு போற்ற.

4. பாத மஞ்சியே; பணிவரேன் பகைவர். 10

544. மறுமை கண்டமெய்ஞ் ஞானியர் ஞாலத்து வரினும்
வெறுமை கண்டபின் யாவரும் யாரென விரும்பார்
குறுமை கண்டவர் கொழுங்கன லென்னினுங் கூசார்
சிறுமை கண்டவர் பெருமைகண் டல்லது தேருர்.

'மறுமை கண்ட - வீட்டினைக் காணப்பெற்ற, மெய் ஞானியர் - உண்மையான தத்துவ ஞானிகளே, ஞாலத்து வரினும் - மீண்டும் இவ்வுலகத்தே வந்திடினும், யாவரும் - (இவ்வுலகத்தினர்) யாவரும், வெறுமை கண்டபின் - (வந்த) அவரிடம் விசேடத்தன்மை யொன்றும் இல்லாதிருத்தல் கண்டு, யார் என விரும்பார் - யாவர் என்று அறிதற்கும் அவாக்கொள்ளார்; கொழு கனல் என்னி னும் - கொழுத்த அனலானலும், குறுமை கண்டவர் - அதன் உருவச்சிறுமையைக் காண்பவர், கூசார் - (அதனிடத்தில் தமது பணிவு புலப்படுமாறு) கூச்சம்கொண்டு ஒழுகமாட்டார்; சிறுமை கண்டவர் - சின்னத்தன்மையைத் தாம் நேரிற்கண்ட இப்புவி யினர், பெருமை கண்டல்லது தேருர் - ஒருவரது பண்புப் பெரு மையை நேரிற் பார்த்தாலன்றித் தெளியார்' என்று இராமபிரான் வெகுண்டு கூறினன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'முக்தர்கள் எளியவராய்ப் புலப்படின் அவரை உலகத்தார் மதியார்; எரிக்கும் நெருப்பு சிறு துண்டாய்த் தோன்றும் போது எவரும் அதனிடம் அஞ்சார். இவ்வுலகம் ஆடம்பரத்துக்கே மதிப்புக் கொடுக்கும்; அந்த உலகியல்தான் இவ்வருணனிடமும் காணப்படுவது. காட்டில் வாழ்ந்து காய்கனி அயின்று மனையைப் பறிகொடுத்தவன் என்று, தன் பெருமை நோக்கி அஞ்சாது, தன் எளிமை நோக்கித் தன்னை வருணன் இகழ்ந்தான்' என்று இராமபிரான் நினைக்கின்றான். நீறுபூத்த நெருப்பின் உண்மை வன்மையறியாது அதனைப் புறக்கணித்து ஏதப்படுவாரும் உண்டு; அந்த நெருப்பானது வளர்ந்து எரிந்து தன் வல்லபம் காட்டும்வரையில் அதனைப் பொருட்படுத்தாதிருப்பர் மக்கள். என்பது யாவரும் அறிந்தவொன்று. 'சிறியரென் றிகழ்ந்து நோவு செய்வன செய்யல்' (கிட்கிந்தா. 410) என்று இராமபிரானே கூறியுள்ளமை காண்க. 'எளியாரை எள்ளாதா ரில்' என்பது பழமொழி. (248). கூசார் - நாணார்; 'கொச்சை மாந்தரைக் கோல்வளை மகளிரும் கூசார்' (ஆரணிய. 503); 'கூசி ஆவி குலைவுறு வாளையும்' (சுந்தர. 428); 'கூசிக்கூசி யிவையிவை கூறினன்' (சுந்தர. 431). பொதுப்பொருள் சிறப்புப் பொருளைக் காட்டுவதால் இச்செய்யுள் பிறிதுமொழிதல் அணியின் பாற்படும்.

பி - ம். 1. ஞாலத்துள் வரினும்.
2. யாவரும் யாவையும்; யாவரும் யாவதும், யாரையும் யாவையும்.

## 'கடல் மீது அம்பு செலுத்த வில்லைத் தருக' என, இலக்குவன் கொடுத்தல்

545. திருதி யென்பதொன் றிழிதர வூழியிற் சினவும்
பருதி மண்டில மெனப்பொலி முகத்தினன் பலகால்
தருதி வில்லெனு மளவையில் தம்பியும் வெம்பிக்
குருதி வெங்கன லுமிழ்கின்ற கண்ணினன் கொடுத்தான்.

திருதி என்பது ஒன்று இழிதர - (பின்னர்) அடக்கம் என்று சொல்லப்படும் ஒரு பொருள் குறைந்து காட்ட, ஊழியில் சினவும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஊழிக்காலத்தில் சினந்து எழுகின்ற, பருதி மண்டிலம் என - சூரிய மண்டிலம் போல, பொலி முகத்தினன் - கடுந்தன்மையுடன் ஒளிர்கின்ற முகத்துடன் கூடியவனாய், (இராமபிரான்), பலகால் 'வில்தருதி' எனும் - பலதடவை 'வில்லைக் கொடுப்பாயாக' எனும், அளவையில் - அளவில், குருதி வெம் கனல் உமிழ்கின்ற கண்ணினன் தம்பியும் - உதிரத்துடனே கடுமையான நெருப்பினையும் கக்குகின்ற விழிகளையுடையவனான தம்பி இலக்குவனும், வெம்பி கொடுத்தான் - மனம் வெதும்பித் தந்தான்.

திருதி - அடக்கம்; வடசொல்; தைரியமும் ஆம்; தான் இரந்து வேண்டியும் வருணன் வாராமையினாலே அவனது ஆணவத்தைச் சிதைக்கவேண்டி இளைய பெருமானைப் பார்த்து வில்லைத்தருக என்ன, அவன் தான் திருமாலின் சேக்கையாதலின் 'படுக்கைப்பற்றைப் படைப்பற்றுக்குதல் கூடாது' எனச் சிறிது தயங்கினனாக, இராமபிரான் பன்முறை வேண்ட நேர்ந்தது; உடனே, 'அடியாரினினேவல் செய்தி' என்று அவன் அன்னை யிட்ட கட்டளையை நினைவு கூர்ந்து வில்லைக் கொடுத்தனன் என்க. அன்றி பலகால் கூறியது, இராமபிரானின் மன விரைவைக் காட்டியதுமாம். இலக்குவன் இராமபிரான் ஏவலை என்றும் புறக்கணியாதவன்; கோசிக முனிவன் அளித்த தெய்வப்படைகள் கூட, 'வீரநீ விதியினெம்மை, ஏவின செய்து நிற்றும் இலக்குவன் போல வென்று' (பால. வேள்வி. 3) எனக் கூறியது காண்க. அளவிறந்த வெகுளி எழுந்தால் அடக்கம் அழியுமாதலின் திருதி என்பதொன் றிழிதர எனப்பட்டது. இழிதர என்பதில் தர துணைவினை. ஊழியில் சினவும்; இல், ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருள். 'மூட்டாத காலக் கடைத்தீயென மூண்டெழுந்தான்' (அயோத்தி. நகர்நீ. 115); 'ஆழிசூ ழுலக மெல்லாம் அருங்கனல் முருங்க வுண்ணும் ஊழி நாள்' (சுந்தர. 27); 'ஊழிவெங்கனல் உண்டிட' (சுந்தர. 1221): இத்தீ எழுவகைத்து என்பது (தக்க, 475): 'ஊழியெரி' (தக்க. 469); 'ஊழி நெருப்பி னுருத்தனை யொப்பான்' (ஆரணிய. 1074). முகத்திற்குப் பருதி உவமை; 'குழவி ஞாயிற் றெழிலிகந் தெள்ளும் திருமுகம்' (பெருங். 1. 55; 4-5); 'யாவையு மீறுறு மந்நாள், முற்றிய ஞாயிறு போலு முகத்தாள்' (ஆரணிய. 1073). குருதி வெங்கனல் உமிழ்கின்ற கண்; வெகுளியின் மெய்ப்பாடு; 'கண்ணிற் கடைத்தீ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யுக' (அயோத்தி. நகர்நீ. 116). திருதி என்ற வடசொல்லுக் கேற்ப எதுகை யமைத்த திறம் பாராட்டற் பாலது.

பி-ம். 1. அழிதர.

2. மண்டலம்.

4. உமிழ்தரு கண்ணன் கைக் கொடுத்தான். 12

## இராமபிரான் வில்லின் நாணேற்றுதல்

546. வாங்கி வார்சிலை வாளியின் மற்றொரு வேலை
வீங்கு தோள்வலம் வீக்கினன் கோதையை விரலால்
தாங்கி நாணினைத் தாக்கினன் தாக்கிய தமரம்
ஓங்கல் முக்கணன் தேவியைத் தீர்த்துள தூடல்.

(இராமபிரான்), வார் சிலை வாளியின் வாங்கி-நன்கு கட்டமைந்த வில்லினை அம்புகளுடனே பெற்றுக் கொண்டு, மற்று ஒரு வேலை - ஒரு புட்டிலை, வீங்கு வலம் தோள் வீக்கினன்-மிகுந்த வலிமையினுற் பருத்த தோளில் சேரப் பிணித்து, கோதையை விரலால் தாங்கி- உறையைத் தன் விரல்களில் பூட்டிக் கொண்டு, நாணினை தாக்கினன் - அந்நாணியை இழுத்தான்; தாக்கிய தமரம்-அங்ஙனம் நாணைத் தாக்கியதால் உண்டாய பேரொலியானது, ஓங்கல் - கைலை மலையில் வீற்றிருந்த, முக்கணன் தேவியை ஊடல் தீர்த்தது-மூன்று விழிகளையுடைய சிவபிரானுடைய தேவியான பார்ப்பதியின் ஊடலைப் போக்கியது.

இராமபிரானின் மனக்கொதிப்புச் சிலைமேல் ஏற்றப்பட்டது. வேலை - புட்டில் என்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு. ஆழிபோல் வற்றாத அம்புகள் என்ற குறிப்புப் போலும். மற்று, அசை. தோள் வலம் என்று அமையாது 'வீங்கு தோள் வலம் என்றது 'போர் கருதின அளவில் புயம் வீங்கியதைக் காட்டிற்று; 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொள் திண்டோள்' (பால. பூக்கொய். 18). வீக்குதல் - பிணித்தல்; 'யாப்புறு புரிஞாண் வீக்குமுதலவிழ' (பெருங். உஞ்சைக். 52, 86). கோதை - கோதா;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வடசொல் ; இது வில்லாளர் கையிற் பூணுவதும் உடும்புத் தோலாலாயதுமான ஒரு வகை உறை. கோதா என்பதற்கே உடும்பு என்ற பொருள் உண்டு. 'மூரிச் சிலையு முரட்கோதையுங் கட்டி' (பாரத வெண். 776) ; 'வில்லவன் வில்லமர் கோதை விடாத வோர் வல்லவன்' என்பது (தக்கயாகப்பரணி. 801); இச்சொல் இந்தப் பொருளில் சங்க நூல்களில் வழங்கிற்றில்லை ; தம்ரம - பேரொலி ; 'தமரம துடன்வளர் சதுமறை' (பால. திருவவ. 126). ஓங்கல் முக்கணன் ; கைலைக் கதிபனான மூன்று கண்களையுடைய சிவபெருமான் ; மூன்று கண்கள் சந்திரன் சூரியன் அங்கி என்பர்; 'முக்கணனெண்கணனும்' ( யுத்த. 283). ஊடல் தீர்த்தது - சிவபிரானிடத்துப் புலவியால் பிரிந்து நின்ற உமா தேவியார். இந்த வில்லின் அதிர்ச்சியால் அஞ்சிக் கணவனை ஊடல் தீர்ந்து புல்லினள் என்பது குறிப்பு. 'ஊடுதல் காமத்துக் கின்பம் அதற் கின்பம் கூடி முயங்கப் பெறின்' (குறள். 1330); என்றது காணத் தகும். 'ஊடலை மறந்துமை மடந்தையர னைத்தன முறத்தழுவினள்' (உத்தர. வரை யெடுத்த. 70); இராவணன் கைலையை உயர்த்தப் பார்ப்பதி ஊடல் தீர்ந்து சிவபெருமானைத் தழுவியது முதனூலில் கூறப்பட்டது. தன்னை வலியவந்து உமை தழுவியதைக் கண்டு அரன் நகை செய்ததாகவும் கூறப்படுவதுண்டு. இந்த ஆலிங்கனம் சிறந்த தென்பர் 'வலிய அணைந்த சுகம் போலே' என்பது அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து.

பி - ம். 1. வெஞ்சிலை ; வாளிபெய் புட்டிலு மலைபோல்.

2. தோளயல், தோளியல் ; வீக்கிலன்.

4. ஓங்கு முக்கணன். 13

இதன்பின் 'பெரிய மால்வரை' என்ற பாடல் ஓர் பிரதியில் உள்ளது.

## இராமபிரான் அம்பெய்தல்

547. மாரி யின்பெருந் துளியினும் வரம்பில வடித்த
சீரி தென்றவை யெவற்றினும் சீரிய தெரிந்து
பாரி யங்கிரும் புனலெலா முடிவினிற் பருகுஞ்
சூரி யன்கதி ரனையன சுடுசரஞ் சொரிந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மாரியின் பெரு துளியினும் வரம்பு இல - காலத்திற் பெய்யும் மழையின் பெருந்துளிகளைப் பார்க்கிலும் எல்லையில்லாதனவும், வடித்த - கொல்லனுடைய உலைக்களத்தில் கூர்மை செய்யப் பட்டனவாய், சீரிது என்றவை எவற்றினும் சீரிய - மிகவும் சிறந்தது என்று கூறப்படும் யாவற்றினும் சிறந்தனவும், பார் இயங்கு இரும் புனல் எலாம் முடிவினில் பருகும் - பூமியில் அலைகின்ற மிக்க நீரனைத்தையும் ஊழிமுடிவில் உட்கொள்கின்ற, சூரியன் கதிர் அனையன - சூரியனது கிரணங்களை நிகர்ப்பனவுமான, சுடுசரம் - பகைவரைச் சுட்டுக் கொல்லவல்ல அம்புகளை, தெரிந்து துரந் தான் - ஆராய்ந்து எடுத்து (இராமபிரான் வருணன்மீது) செலுத் தினன்.

பல அம்புகள் இராமபிரான் எய்ததாக இங்குக் குறிக்கப் பெற்றது. 'வில்லொன்றிற் கடிகை மூன்றில் ஏறினர் விண் ணில் என்றாள்' (ஆரணிய. 617) என்பது சூர்ப்பணகை கூற்று. சொல் ஒன்று, வில் ஒன்று, இல் ஒன்று எனச் சிறப்பிக் கப்பட்ட இராமபிரானுக்குப் பல அம்புகள் தேவையோ என்ற வினாவினை எழுப்பிக்கொண்டு, 'இக்கடலோடு துவக்கான ஏழு கடலையும் அழிக்கையிலுண்டான திருவுள்ளத்தாலே, மராமரம் ஏழும் மலையேழும் கீழேழுலகமுமாக மூவேழிருபத்தொன்றை யும் ஓரம்பாலே துளையுருவப்பண்ணினவருக்கு ஓரேழுக்குப் பல அம்புகள் வேணுமோ? என்னில், யானை தன் வலிமையை யறியாதவாறுபோலக் கோபத்தின் மிகுதியாலே தம்முடைய மிடுக்கை மறந்து.............செய்தார்' என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்தது இங்குக் காணத்தக்கது. சுடுசரத்திற்கு ஊழிக்காலக் கதிரவன் கதிர்கள் உவமிக்கப்பட்டன. சுடுசரம்; 'சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்' (பால. தாடகை. 73). இராமபிரான் பிரமாத்திரத்தை பிரயோகிக்கத் தொடங்கியபோது வருணன் வந்தான் என்று வான்மீகம் கூறும்.

பி - ம். 1. மாரியில்; வரம்பில வடர்ந்த.
2. சீரி தென்றிவை; தெரிந்தே.
3. புனலொடு; முடிவுறப்.
4. துரந்தான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



548. பெரிய நாலிரு வரையினும் பெருவலி பெற்ற
வரிகொள் வெஞ்சிலை வளர்பிறை யாமென வாங்கித்
திரிவ நிற்பன யாவையு முடிவினில் தீய்க்கும்
எரியின் மும்மடி கொடியன சுடுசர மெய்தான்.

பெரிய நாலிரு வரையினும் - மிகவுயர்ந்த எட்டு குல மலைகளைக் காட்டிலும், பெரு வலி பெற்ற - மிக்க வன்மைகொண்ட, வரி கொள் - கட்டமைந்த, வெம் சிலை - கொடிய வில்லை, வளர் பிறை யாம் என வாங்கி - பூர்வபக்கத்துச் சந்திரன்போன்று வளைத்து, திரிவ நிற்பன யாவையும் - இயங்குவன நிலைத்திருப்பன எனப்படும் பொருள்கள் அனைத்தையும், முடிவினில் தீய்க்கும் - ஊழியிறுதியில் சுட்டெரிக்கும், எரியின் மும்மடி கொடியன - பிரளயத்தீயைக் காட்டிலும் மும்மடங்கு கொடியனவாகிய, சுடுசரம் எய்தான் - சுடும் அம்புகளைச் செலுத்தினன்.

இச் செய்யுளும் சுடுசரம் எய்ததையே குறித்தது; குலமலைகள் எட்டு என்றார்; முன்னர் மராமரப் படலத்தில் 'ஏழு குன்றமும்' என்று குறித்தனர் ஆசிரியர்; (கிட்கிந்தா. 174). மேருவுடன் எட்டுப் போலும். அஷ்டகுலபர்வதம் என்பன: அவை: இமயம், மந்தரம், கைலாசம், விந்தியம், நிடதம், ஏமகூடம்,நீலம், கந்தமாதனம். (லெக்ஸிகன் அகராதி) அவை, உருவத்தினும் எளிதில் இருத தன்மையினும் வில்லிற்கு உவமை. சிலைக்கு வளர்பிறை உவமம். வளர்பிறை பின் நிகழவிருக்கும் ஆக்கத்தையும், வருணனது இணக்கத்தினையும் சூசிப்பித்தது என்னலாம். இறுதியடிகளில் மீட்டும் ஊழித்தீயே குறிக்கப்பட்டது. அங்கு 547-இல் கூறியதினும் எரி மும்மடங்கு வன்மை வாய்ந்தது என்றார். சுடுசரம் (547). மும்மடி - மும்மை, மும்மடங்கு என்க. இருமடி, மும்மடி ஆகுபெயர் என்ற இடத்தும் இப்பெயர் வழக்குக் காண்க.

பி - ம். 1. மால்வரை யேழினும் பெருவலி படைத்த, பெற்று.
3. நீக்கும்.
4. எரியும்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## அப்போது கடலின்நிலை

549. மீனும் நாகமும் விண்டொடு மலைகளும் விறகாய்
ஏனை நிற்பன யாவையு மேலெரி யெய்தப்
பேன நீர்நெடு நெய்யெனப் பெய்கணை நெருப்பாற்
கூனை யங்கியின் குண்டமொத் ததுகடற் குட்டம்.

மீனும் நாகமும் விண் தொடும் மலைகளும் - (கடலிலுள்ள) மீன்களும் பாம்புகளும் ஆகாயத்தை அளாவி உயர்ந்த மலைகளும், விறகாய் - விறகாகப் பயன்பட, ஏனை நிற்பன யாவையும் மேல் எரி எய்த - மற்றுமுள்ள யாவும் (வெந்து) மேலே தீயெழ, பேனம் நீர் நெடு நெய் என - நுரையுடன் விரவிய கடல்நீர் நிறைந்த நெய்யாக, பெய்கணை நெருப்பால் - (இராமபிரான்) விடுத்த அம்பி னின்று வெளிப்பட்ட நெருப்பினால், கடல் குட்டம் கூனை அங்கி யின் குண்டம் ஒத்தது - கடற்பள்ளமானது நாற்புறமும் வளைத்துச் செய்யப்பட்ட அக்கினி குண்டத்தை ஒத்து விளங்கிற்று.

நாகம்; பலபொருள் ஒருசொல்; இங்கே அரவினைச் சுட்டி யது. இங்குக் கடலினை ஓர் ஓமகுண்டமாகக் கூறினர். மேல் எரி: எரிகின்ற விறகில் வீசியெரியுமாறு நெய்யூற்று வது மரபு; இங்குக் கடல்நீரே நெய்யாக உதவியது என்றார். நீர் நெடுநெய்: கிட்கிந்தா. **453.** திவ்ய. முதல்திரு. **1.** பேனம் - நுரை; 'பேன வேலையிற் புடைபரந்தது' (சுந்தர. **869**); 'பேன வெண் குடையவாய்' (யுத்த. பிரமாத்திர. **145**). கூனை - சிறு சட்டி. இங்கு விறகு என்றது சமித்துக்களை. கூனை அங்கி என்பதற்கு ஔபாசனச்சட்டியில் வைத்த நெருப்பு எனினுமாம். கூனை - வாயகன்ற பானை; 'குருதி சாறெனப் பாய்ந்தது குரை கடற் கூனை' (சுந்தர. **790**); இங்கும் குரைகடலைக் கூனை என்றது காண்க. கூனை பானை என்பதை, 'கூனையும் குடமும் குண்டு சட்டியும்' (தனிப்பாடல்) என்ற இடத்தும் காணலாம். கடற் குட்டம்: 'கடற்குட்டம் போழ்வர் கலவர்' (நான்மணிக். **18**). நீர் நெடு நெய்யெனப் பெய்கணை நெருப்பால் என்ற இடத்தில் தொடை முரணும் இணையெதுகையும் காண்க.

பா - ம். 1. விண்டொடர்; விறகால்.
3. பெருங்கடல்; நெருப்பாய்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## அம்புகளின் பலவிதச் செயல்கள்

550. பாழி வன்னெடுங் கொடுஞ்சிலை வழங்கிய பகழி
யேழு வேலையு மெரியொடு புகைமடுத் தேகி
ஊழி வெங்கனற் கொழுந்துக ளுருத்தெழுந் தோடி
ஆழி மால்வரைக் கப்புறத் திருளையு மவித்த.

பாழி வல் நெடு கொடு சிலை வழங்கிய பகழி - (இராமபிரானுடைய) மிக்க வன்மை வாய்ந்த நீண்ட கொடிய வில்லினின்றும் செலுத்தப்பட்ட கணைகள், ஏழுவேலையும் எரியொடு புகை மடுத்து ஏகி - ஏழு கடல்களையும் நெருப்புடன் புகையும் நிரம்புமாறு புரிந்து புறப்பட்டு, ஊழி வெம் கனல் கொழுதுகள் - ஊழிக் காலத்துக் கொழுவிய தீச் சுவாலைகள் போன்று, உருத்து எழுந்து ஓடி - செடியினிடத்துக் கிளம்பிப் படர்ந்து; ஆழி மால் வரைக்கு அப்புறத்து இருளையும் அவித்த - சக்கரவாள கிரிக்கும் அப்பால் உள்ள இருட்டையும் இல்லையாகச் செய்தன.

வல்நெடும் கொடுஞ்சிலை என்று அதன் வலிமையும் நீளமும் வதைக்கும் ஆற்றலும் ஒருங்கே கூறப் பெற்றன. 'ஆழ நெடுந் திரை' (அயோத். குகப். 15) என்ற இடத்துக்கங்கை யாற்றினது ஆழமும் அகல நீளங்களும் கூறப்பெற்றதுபோல. ஏழுவேலை; கிட்கிந்தா. 174); உரைக் குறிப்புக் காண்க. ஆழிமால் வரை - சக்கர வாளகிரி. 'அலையின் வேலை சூழ் கிடந்த ஆழிமாமலை' (கிட்கிந்தா. 116); இதனை 'நேமிகிரி' என்றும் 'திகிரிவரை யென்றும் கூறுவர் (தக்க. 422, 427).

பி - ம். 1. பாழியின் நெடுங் கொடுஞ்சிலை.
2. புகை மடுத்தென்ன, மடுத்தெரிய, மடுத்தெய்தி, தெய்த.
3. உருத்தென வோடி.
4. ஆழி மால்வரை யப்புறத்து. 17

551. மருமதாரையி னெரியுண்ட மகரங்கண் மயங்கிச்
செருமவானிடைக் கற்பக மரங்களுந் தீய
நிருமி யாவிட்ட நெடுங்கணை பாய்தலி னெருப்போ
டுருமு வீழ்ந்தெனச் சென்றன கடற்றுளி யும்பர்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நிருமியா விட்டநெடுகணை - (இராமபிரான்) மனச்சங்கற்பத்துடன் விடுத்த நீண்ட அம்புகள், பாய்தலின் - ஊடுருவிச் செல்லுதலின், நெருப்போடு உருமு வீழ்ந்தென - நெருப்புடனே இடியும் வீழ்ந்தாற்போன்று, மரும தாரையின் எரி உண்ட மகரங்கள் - இரகசிய உறுப்புக்களில் தீப்பட்ட சுறுமீன்கள், மயங்கி செரும - மயங்கி நெருங்கவும், வான் இடை கற்பகம் மரங்களும் தீய - விண்ணுலகத்துள்ள கற்பகத் தருக்களும் கரிந்து போகவும். கடல் துளி உம்பர் சென்றன - கடலின் நீர்த்துளிகள் வானத்துச் சென்றன.

மருமதாரை : உயிர்த்தானங்கள் அல்லது இரகசிய உறுப்புக்கள்; மர்மம் வடசொல். மகரங்கள்-கடல்மீன்கள். இம்மீன்களின் மிகுதிபற்றி ஆழிக்கு மகராலயம் என்ற பேர் எழுந்தது. மகரம் கண் மயங்கி என்று கொள்ளலும் பொருந்தும். செரு முதல் - நெருங்குதல்; 'பயிர் செருமிப்' போனதினால் கதிர்க்குலை வாய்க்க வில்லை' நாஞ்சில் நாட்டு வழக்கு; உண்புழி விக்கிக் கண் புகச் செருமி' (பெருங். 2-9: 252); நிருமித்தல்; அசுரர்களை நீறுகும்படியாக நிருமித்து' (திருவாய். 4:8:1); நெருப்போடுருமு வீழ்ந்தென; நீரிடி நெருப்பிடி என்ற வழக்கும் காண்க. இடியினாற்றாக்கப்பட்டுத் தாவரங்கள் எரிவது பெருவழக்கு, கடல் நீர்த்துளிகள் வானத்துச் சென்றன என்றது உயர்வு நவிற்சி (ஒப்பு): திமித மிட்டுத் திரியும் திரைக்கடல், துமித மூர்புக வானவர் துள்ளினர், அமுத மின்னும் எழும்எனும் ஆசையால்' (யுத்த. 659);

பி-ம். 1. தாரையி னெரியுண்ட.
2. செருமு வானிடை.
3. நெடுங்கணை படுதலின்; படுத்தலும்.
4. சென்றது. 18

552. கூடும் வெம்பொறிக் கொடுங்கனல் தொடர்ந்தன [கொளுத்த
ஓடு மேகங்கள் பொரிந்திடை யுதிர்ந்தன வும்பர்
ஆடு மங்கையர் கருங்குழல் விளர்த்தன அளக்கர்க்
கோடு தீந்தெழக் கொழும்புகைப் பிழம்புமீக் கொள்ள.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அளக்கர் கோடு தீந்து எழ - கடலின் எல்லை வரம்பு அழிந்து கெடும்படியும், கொழு புகை பிழம்பு மீ கொள்ள - அடர்ந்த புகைத்தொகுதி மேலெழவும், கூடும் வெம் பொறி கொடுகனல் - ஒன்று கூடிய வெம்மையான தீப்பொறிகளைக் கொண்ட கொடிய அக்கினிச் சுவாலைகள், தொடர்ந்தன கொளுத்த - விடாமல் எரித்த தனுல், ஓடும் மேகங்கள் - வானில் விரைகின்ற மேகங்களும், பொரிந்து இடை உதிர்ந்தன - அந்த வெப்பத்தாற் பொரிந்து கீழ் உதிர்ந்திட்டன; உம்பர் ஆடும் மங்கையர் - விண்ணுலகத்தில் நடம் புரிகின்ற (அரம்பை மேனகை முதலிய) தேவ மாதர்களின், கரு குழல் விளர்த்தன - கருமை நிறமான கூந்தல் நரை போன்று வெண்மை நிறம் பெற்றன.

அம்பின் விசையால் மேகங்கள் பொரிந்து உதிர்ந்தன; விண் ணுலகத்தில் நடனமாடும் அரமகளிரின் கருங்குழல் விளர்த்தன எனப்பட்டது. அளக்கர்க் கோடு - ஆழியின் கரை அல்லது வரம்பு. 'குளவளாக் கோடின்றி நீர்நிறைந் தற்று' (குறள். 523); 'குண்டு துறையிடு மணற்கோடு' (பெருங். : 1 : 53 : 53).

பி - ம். 1. கொழுங்கனல்; தொடர்ந்திட; கொளுந்த.
2. சொரிந்திடை யுதிர்ந்தன.
3. வெளுத்தன.
4. நீர்த்தெழு; கொடும்புகை; பிழம்பு போய். 19

553. நிமிர்ந்த செஞ்சரம் நிறந்தொறும் படுதலும் நெய்த்தோர்
உமிழ்ந்து லந்தன மகரங்க ளுலப்பில வுருவத்
துமிந்த துண்டமும் பலபடத் துரந்தன தொடர்ந்து
திமிங்கி லங்களும் திமிங்கில கிலங்களுஞ் சிதறி.

நிமிர்ந்த - மேலோங்கி எழுந்த, செம் சரம் - உதிரத்தாற் சிவந்த அம்புகள், நிறம் தொறும் படுதலும் - மார்புகள்தோறும் தோய்தலின், நெயத்தோர் உமிழ்ந்து உலந்தன மகரங்கள் - உதிரத் தைக் கக்கியிறந்த சுராமீன்கள், உலப்பில - எண்ணற்றன; தொடர்ந்து துரந்தன உருவ - இடைவிடாது தொடுக்கப்பட்ட அந்த அம்புகள் ஊடுருவிச்செல்ல, திமிங்கிலங்களும் - திமிங்கிலம் என்ற பிராணிகளும், திமிங்கில கிலங்களும் - அந்தத் திமிங்கிலங் களையும் அழித்து உண்ணவல்ல திமிங்கிலகிலங்களும், சிதறி -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சிதறுண்டு, துண்டமும் பலபட துமிந்த - துண்டங்கள் பலவாகும் படி அறுபட்டன.

நிறம் - மார்பு, உடலுமாம்; கிட்கிந்தா. 475; 'மெல்லியலை மல்லற், றன்னிற மொன்றி லிருத்தி நின்றேன்' (திருக்கோ. 58). நெய்த்தோர் - உதிரம்; 'செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய' (நற். 2 : 4); 'நெய்த்தோர்க் கச்சையி னித்திலம் போல' (பெருங். 1 · 58 : 5). உலப்பில - கணக்கற்றன; 'உலந்த துண்மையோ' (கிட்கிந்தா. 961); 'நாளுலந் தழியு மன்றே' (ஆரணிய. 424); 'உலவாக் காலம் தவமெய்தி' (திருவாச. திருச்சதகம். 54). துமிந்த - அறுபட்டன; கிட்கிந்தா. 87; 'அரவி னருந்தலை துமிய' (புறநா. 211). திமிங்கிலம் என்ற மீனை விழுங்கக்கூடியது, திமிங்கில கிலம்; சுந்தர. 38 உரை காண்க.

பி - ம். 1. நிமிர்ந்த வெஞ்சரம்; படுந்தொறும்; தைத்தலும், மன்னலும்.

2. உலர்ந்தன; சிரங்களு முருவ, சிரங்க ளுருவி.

3. தொடர்ந்தன; தொலைந்து, தொலைந்த; துமீந்த துண்டமும் கண்டமும்.

4. திமிகளு முதிர்ந்தன; திமிர்ந்தெ ழுந்திடு மளக்கரிற் றரங்கநீர் சிதறி, மாண்டன வுடல்பல சிதறி. 20

554 நீறு மீச்செல நெருப்பெழப் பொருப்பெலா மெரிய
நூறு மாயிர கோடியுங் கடுங்கணை நுழைய
ஆறு கீழ்ப்பட வளறுபட் டழுந்திய வளக்கர்
சேறு தீய்ந்தெழக் காந்தின சேடன்றன் சிரங்கள்.

நீறு மீசெல நெருப்பு எழ - சுட்ட நீறு மேலே பறக்குமாறு நெருப்பு எழுந்ததால், பொருப்பு எலாம் எரிய - மலைகள் அனைத்தும் தீந்துபட, நூறும் - நூற்றுக்கணக்கிலும், ஆயிரம் கோடியும் - ஆயிரக் கணக்கிலும் கோடிக் கணக்கிலும், கடு கணை நுழைய - கடுமையான அம்பு புகுந்ததனால், (முதலில் தன்னிடம் வீழ்ந்த) ஆறு கீழ்பட அளறுபட்டு - ஆறுகள் எல்லாம் கீழ்ப்படும் படி சேறு பொருந்தி, அழுந்திய அளக்கர் - பாதலத்து அழுந்தும் நிலைபெற்ற கடல் (பின்னர்), சேறு தீய்ந்து எழ - அச் சேறும் கரிந்து பொடியாகக் கிளம்பியதனால், சேடன் தன் சிரங்கள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காந்தின - பாதலத்துள்ள ஆதிசேடனது தலைகள் ஒளியுடன் காணப்பட்டன.

நீறு - வெந்த பொடி; 'நீடிய அரக்கர் சேனை நீறுபட் டழிய' (பால. பாயிரம்.). தன்னிடம் சங்கமித்த ஆறுகள் அனைத்தும் கீழ்ப்பட்ட சேற்றுடன்கூடிக் கடலும் பாதலத்திலழுந்தியது; அந்தச் சேறும் தீய்ந்து பொடியாக எழுந்தவளவில், பூமியைத் தாங்கும் ஆதிசேடன் சிரம் தோன்றின எனப்பட்டது. தொடர் புயர்பு நவிற்சியணி. 3, 4 அடிகட்கு ஒப்பு: 'சோறு வாக்கிய கொழுங்கஞ்சி, யாறுபோலப் பரந்தொழுகி, யேறுபொரச் சேறாகித், தேரோடத் துகள் கெழுமி' (பட்டினப். 44-47). காந்தின சேடன்றன் சிரங்கள்; (ஒப்பு): 'கண்ண கன்றபே ரகழியி லுழக்கிய கரிகள், தண்ணந் தாமரைத் தாளெனத் தடக்கையாற் பிலத்தில், நண்ணுஞ் சேடனை யெடுத்ததன் சுடிகையி னுறி, உண்ணிவந் தொளிர் மணியினு லுற்கையென் றெறியும்' (நைடத. நகரப். 2). காந்துதல் - ஒளி வீசுதல்; 'பாம்பிற் காந்து மினமணி' (பால. நாட்டுப். 7).

பி - ம். 1. பொருப்பெலா நெருப்பெழுந்து; நெரிய; பொருப்பின நெருப்பெழு நிமலன்.
2. கொடுங்கனை.
4. காய்த்தன. 21

555. மொய்த்த மீன்குலம் முதலற முருங்கின மொழியிற்
பொய்த்த சான்றவன் குலமெனப் பொருகணை யெரிய
உய்த்த கூம்புடை நெடுங்கல மோடுவ கடுப்பத்
தைத்த வம்பொடுந் திரிந்தன தாலமீன் சாலம்.

பொருகணை எரிய - போர் செய்கின்ற அம்புகள் எரிந்ததால், மொழியில் பொய்த்த - வாக்குத் தவறிய (பொய்யுரையாடிய), சான்றவன் குலம் என - சிறந்தவன் குலம்போன்று, மொய்த்த மீன்குலம் - அடர்ந்து நின்ற மீன் தொகுதிகள், முதல் அற முருங்கின - வேருடன் அழிந்தன; உய்த்த கூம்பு உடை நெடு கலம் ஓடுவ கடுப்ப - செலுத்தப்பட்ட பாய்மரத்துடன் கூடிய பெரிய மரக்கலங்கள் ஓடுவனபோன்று, தால மீன் சாலம் - பனை மீன் கூட்டங்கள், தைத்த அம்பொடும் திரிந்தன - தம் உடலில் உருவிநின்ற அம்புகளுடன் அங்குமிங்கும் அலைந்தன.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முருங்குதல் - அழிதல்; 'முருங்கழல்' (சிட்கிந்தா. 971). பொய்த்த சான்றவன் குலமென; 'பொய்க்கரி கூறிய கொடுஞ் சொல் போலவே' (ஆரணிய. 485); மற்றும், அயோத்தி. பள்ளி படைப். 102; சுந்தர. 808; மூலபல. வதைப். 145; (ஒப்பு): 'மன்றேரஞ் சொன்ஞர் மனை' (நல்வழி. 23); இன்னும், கலித். 34, குறுந். 184; சிறுபஞ்ச. 10 என்பன காண்க. மொழியில் - கூறுங்கால் எனினுமாம். மேலே தைத்த அம்புகள் கூம்பினையும் தாலமீன்கள் மரக்கலத்தினையும் ஒத்து இருந்தன என்க. தால மீன் - பனைமீன்; 'பனைமீன் வழங்கும் வளைமேல் பரப்பின்' (மதுரைக். 375) குறிப்பு; தன்மைத் தற்குறிப்பேற்றவணி. கலம் - மரக் கலம். தொகுதியைக் குறிக்கும் ஜாலம் என்ற வடசொல் சாலம் எனவந்தது. எட்டே யவ்வும் (நன். 147).

பி - ம். 1. முதலன, முருங்கிய.

2. பொருகணை யரிய, கணைமாரி; நெரிய.

3. கூம்பொடு; ஓடுவதொப்ப.

4. சாலமீன்; சால. 22

556. சிந்தி யோடிய குருதிவெங் கனலொடு செறிய
அந்தி வானகங் கடுத்ததவ் வளப்பரு மளக்கர்
பந்தி பந்திக ளாய்நெடுங் கடுங்கணை படர
வெந்து தீந்தன கரிந்தன பொரிந்தன சிலமீன்.

பந்தி பந்திகளாய் - வரிசை வரிசைகளாய், நெடு கடு கணை படர - நீண்ட கடுமையான அம்புகள் பாய்ந்துவருதலின், சில மீன் - சில மீன்கள், வெந்து தீந்தன கரிந்தன பொரிந்தன - வெந் தும் எரிந்தும் கரியாகியும் பொரிந்தும் கிடந்தன; சிந்தி ஓடிய குருதி - (அந்த மீன்களின் உடலினின்று) சிதறிப் பரந்த உதிரம், வெம் கனலொடு செறிய - வெம்மைவாய்ந்த அம்புக் கனலுடன் நெருங்கியதனுல், அளப்பரும் அவ் அளக்கர் - அளவிடற்கரிய அந்தக் கடல், அந்தி வானகம் கடுத்தது - அந்தியில் காணப் பெறும் செக்கர் வானத்தை நிகர்த்து விளங்கியது.

அந்திவானம் - செக்கர்வானம். பந்தி பந்திகளாய் - வரிசை வரிசையாய். வெகுதூரம் சென்று கொல்லவல்லது ஆதலின், 'நெடுங் கொடுஞ்சரம்' என்றூர். தீந்தன கரிந்த பொரிந்தன

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



என்ற சொல்லடுக்கால் பயங்கர நிகழ்ச்சி வெளியாதல் காண்க. குருதி, சிவப்பும் ஆம்; குறுந். 1.

பா - ம். 1. கனலொடும், களல்களே.

2. வானக மொத்தன.

3. பந்தி பந்தியதாய்; நெடுஞ் சரங்களும் பருக; கணையெறி படர, நெடுங்கணை யடர.

4. வீழ்ந்தன, வீந்தன; மீன்கள். 23

557. வைய நாயகன் வடிக்கணை குடித்திட வற்றி
ஐய நீருடைத் தாய்மருங் கருங்கனல் மண்டக்
கைகல ந்தெரி கருங்கடல் காரகல் கடுப்ப
வெய்ய நெய்யிடை வேவன வொத்தன சிலமீன்.

வையம் நாயகன் வடிகணை - உலகின் தலைவனான இராம பிரானது கூரிய அம்புகள், குடித்திட வற்றி - பருகியதால் வறண்டு, நீர் ஐயம் உடைத்தாய் - நீர் உள்ளதோ இல்லையோ என்று சங்கைகொள்ள இடமாகி, மருங்கு அரு கனல் மண்ட - தன்னிடத்து கொடிய நெருப்பு மிக்குச் செறிந்ததனால், கை கலந்து எரி கரு கடல் - எல்லாப் பக்கங்களிலும் ஒருங்கே எரியப் பெற்ற கரிய கடல், கார் அகல் கடுப்ப - கரிய அகலை ஒத்து விளங்க, சில மீன் வெய்ய நெய்யிடை வேவன ஒத்தன - சில மீன்கள் கொதிக்கின்ற நெய்யிலே வேவனவற்றை நிகர்த்தன.

வைய நாயகன்; 'உலகுடை நாயகன்' (சுந்தர. 633). கடல் வறுக்கும் சட்டியாகவும், நீரே நெய்யாகவும் உதவ, அந்நெய் யிடை வேவும் பண்டங்கள் போன்றன மீன்கள் எனப்பட்டது. கார் அகல் கடுப்ப; (ஒப்பு): 'மொய்ந்நிலத் தகளியில் முழங்கு நீர் நெயின்......... .......மையகல் ஒத்தது மழைத்த வானம்' (கிட்கிந்தா. 433). காரகல்; பெரும்பாண். 377; புறநா. 300; யா. வி. கருங் கடலுக்குக் காரகல் என்பது பொருள். கை - பக்கம்; 'இருகையும் முள்ளெயிறும் வாளுமுற' (சுந்தர. 163); 'கைபரந் தெழுசேனை' (சுந்தர. 878). வற்றி ஐயநீ ருடைத்தாய்; (ஒப்பு): 'எடுத்தவேல் வலந்திரித் தெறிந்தவேலை வேன்முனை, மடுத்தவேலை சுஃறெனவ் வறந்து மாவலிகெட' (திருவிளை. கடல்சுவற. 14); ஐ - நுட்பமும் ஆம். கனல்மண்டக் கைகலந்தெரி கருங்கடல் என்ற இடத்து,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தம்முன் ஒன்றினென்று மாருன இயல்புடையதாய நீரும் நெருப்பும் ஒன்றியெரிந்தன என்று கூறிய நயம் காண்க. மற்றும், பிரபஞ்சத் தோற்றம் எழுந்தபடியே ஒடுக்கமும் நேரும் என்ற நியதிப்படி நீரை உண்பது நெருப்பென்ற கருத்தும் இங்கே காண்டல் தகும்.

பி - ம். 2. மைய நீர்; ஆய பேரருங் கனல் மண்டி, ஆய்வருங் கருங்கனல் மண்டி.

3. எரி கதுவிடக் கடலிடம் கலமாய். 24

இதன்பின் 'சிந்தி யோடின' என்ற பாடல் ஓர் பிரதியில் உள்ளது.

558. குணிப் பருங்கொடும் பகழிகள் குருதிவாய் மடுப்பக்
கணிப் பரும்புனல் கடையுறக் குடித்தலிற் காந்து
மணிப் பருந்தடங் குப்பைகண் மறிகடல் வெந்து
தணிப் பருந்தழல் சொரிந்தன போன்றன தயங்கி.

குணிப்பு அரு கொடு பகழிகள் - எண்ணுதற்கரிய கொடிய அம்புகள், குருதி வாய் மடுப்ப - இரத்தம் நிறைந்த வாயினுல் உட்புகுமாறு, கணிப்பு அரு புனல் கடையுற குடித்தலின் - எண்ணுதற்கு முடியாத (மிக்க) கடல்நீரை முழுவதும் பருகுதலின், காந்தும் பரு மணி தட குப்பைகள் - (அந்தக் கடலிலே) ஒளி விடுகின்ற அரதனங்களின் மிகவும் பெரிய குவைகள், தயங்கி - விளங்கித் தோன்றி, மறி கடல் - அலைகள் கரைக்கண் வந்து மடங்கும் தன்மையுள்ள கடல், வெந்து - கொதித்து, தணிப்பு அரு தழல் சொரிந்தன போன்றன - அணைத்தற்கு இயலாத நெருப்பினைச் சொரிந்தனபோன்று காணப்பட்டன.

கடல்நீர் முழுவதையும் அம்புகள் வற்றச்செய்துவிட்டமையில் கடலின் அடியிற் கிடக்கும் மணிகள் ஒளிவிட்டுத் தோன்றின; அக்காட்சி, தழல் சொரிந்தனபோலத் தோன்றிற்று என்க. இங்கு, இயற்கையாகவே ஒளி காலுகின்ற மணி தன் எரியாலும் ஒளி வீசிற்று. 'இருள் பருகும் அருமணி' (சீவக. 169) என்றதையும், அதன் உரையையும் காண்க. கடையுறக் குடித்தல் - அறவே பருகுதல்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. பெரும்பகழி ; மடுத்து.
2. கடையறப் ; கலந்து.
3. மணிப் பெருந்தடம், தடம்பெருங்.
4. பொரிந்தன போன்றன. 25

559. எங்கும் வெள்ளிடை மடுத்தலி னிழுதுடை யினமீன்
சங்க முங்கறி கிழங்கென விடையிடை தழுவி
அங்கம் வெந்துபே ரளற்றிடை யடுக்கிய கிடந்த
பொங்கு நன்னெடும் புனலறப் பொரித்தன பொன்ற.

எங்கும் வெள்ளிடை மடுத்தலின் - எப்பக்கமும் வெற்றிட மாகுமாறு (நீரை இராமபாணம்) குடித்ததனால், இழுது உடை இனமீன் - கொழுப்பினைக்கொண்ட மீன் தொகுதிகளும், சங்கமும் - சங்குகளும், கறி கிழங்கு என இடை இடை தழுவி - கறியும் கிழங்கும்போன்று இடையிடையே பொருந்தி, அங்கம் வெந்து - உடல் வேக்காடெய்தி, பேர் அளற்றிடை அடுக்கிய கிடந்த - மிக்க கடல் சேற்றிலே ஒன்றின்மேல் ஒன்று அடுக்கியதுபோலக் கிடந்தவைகள், பொங்கும் - பொங்கும் இயல்புள்ள, நல் நெடு புனல் அற - சிறந்த மிக்க புனல் அடியோடு வற்றும்படி பொரித்தன போன்ற - பொரிக்கப்பட்ட பொரியலை நிகர்த் திருந்தன.

வெள்ளிடை - வெற்றிடம் ; 'வெள்ளிடை மருங்குலார்' (சுந்தர. 206) ; 'வெள்ளிடை வியன்கோயில்' (சுந்தர. 301). எரிந்து பொரிந்த கொழுப்புடன் குவிந்து காணப்பட்ட மீன் தொகுதிகளும் சங்குகளும் பொரிக்கறி போன்றன எனப்பட்டது. இந்த உவமை கொண்டு ஆசிரியருடைய உலகியல் அறிவு ஒருவாறு காணலாம். சங்கமும் உயிர்ப்பிராணி ஆதலின், அதனையும் உடன்கூட்டிக் கூறினர். இனி, இனமீன் சங்கம் என்று இணைத்துச் சாதிமீன் களின் தொகுதி எனலும் ஆம்.

பி - ம். 1. படுதலின், படுத்தலின்.
2. இனிதுடை ; தழுவ.
3. வெஞ் சேற்றிடை யடுக்கிய வயங்க, பேராற்றிடை யடுக்கின கிடந்த.
4. நல்கறி ; பொடித்தமீன் பொடிப்பன. 26



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


560. அதிரும் வெங்கணை யொன்றையொன் றடர்ந்தெரி யுய்ப்ப
வெதிரின் வன்னெடுங் கானென வெந்தன மீனம்
பொதுவின் மன்னுயிர்க் குலங்களும் துணிந்தன பொழிந்த
உதிர முங்கடல் திரைகளும் பொருவன வொருபால்.

அதிரும் - ஒலிக்கும் தன்மையுள்ள, வெம் கணை - கொடிய அம்புகள், ஒன்றை ஒன்று அடர்ந்து - ஒன்றுடன் ஒன்று தாக்கி, வல் வெதிரின் நெடு கான் என - வலிய மூங்கில்கள் நிறைந்த நீண்ட காட்டைப்போன்று, எரி உய்ப்ப - நெருப்பை உண்டு பண்ண, (அதனால்), ஒருபால் - ஒருபுறம், மீனம் வெந்தன - மீன்கள் வெந்தன; பொதுவின் மன் உயிர் குலங்களும் - பொதுவாக உள்ள நிலைபெற்ற உயிர்வர்க்கங்களும், துணிந்தன - துண்டு பட்டனவாய், பொழிந்த - வெளிக்கக்கிய, உதிரமும் - இரத்தமும், கடல் திரைகளும் பொருவன - கடலிலுள்ள அலைகளும் எதிரிட்டுக் கலப்பனவாயின.

பொதுவின் மன்னுயிர் குலங்கள் - நீரில் வாழ்வனவல்லாத உயிர்த்தொகுதிகள். இனி, பொருவன என்பதற்கு ஒப்பன என்றும் கூறுவர்.

பி - ம். 1. எரியடர ; மடுப்ப.

2. நன்னெடுங் ; வெங்கருங், வெந்தது.

3. துணிந்தவை பொதிந்த.

4. பொருதன.

27

561. அண்ணல் வெங்கணை யறுத்திடத் தெறித்தெழுந் தளக்கர்ப்
பண்ணை வெம்புனற் படப்பட நெருப்பொடும் பற்றி
மண்ணில் வேருறப் பற்றிய நெடுமரம் மற்றும்
எண்ணெய் தோய்ந்தென வெரிந்தன விருகரை மருங்கு.

இருகரை மருங்கு - இரண்டு கரைகளின் பக்கங்களிலும் இருந்த, மண்ணில் வேர் உற பற்றிய நெடுமரம் - பூமியில் வேர் நன்றாக ஊன்றிய உயர்ந்த மரங்கள், அண்ணல் வெம் கணை அறுத்திட - இராமபிரானுடைய கொடிய அம்புகள் துணித்ததனால், தெறித்து எழுந்து - சிதர்ந்து வீசி, நெருப்பொடும் பற்றி - தீயி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


னும் பற்றப்பட்டு, பண்ணை அளக்கர் வெம் புனல் - சிறிய நீர் நிலைபோன்ற கொதிக்கின்ற நீர் மேலெழுந்து, பட பட - (தம்மீது) படுந்தோறும் படுந்தோறும், மற்றும் - பின்னும், எண்ணெய் தோய்ந்து என எரிந்தன - எண்ணெயிற் படிந்தாற்போன்று எரியத் தொடங்கின.

நெடுமரம் தெறித்தெழுந்து, நெருப்பொடும் பற்றி, எண்ணெய் தோய்ந்தென, எரிந்தன என்றியைக்க. மரத்துண்டுகள் எரியும் நீரில் பட்டது, அவைமீது எண்ணெய் ஊற்றியதுபோல் ஆயிற்று என்க. கடல்நீர் வற்றிப் பண்ணை நீர்போலாயிற்று எனப்பட்டது. அளக்கர் பண்ணை வெம்புனல் - ஆழியின் தொகை நீரெனினுமாம். பண்ணை - நீர்நிலை ; (பிங்.).

பி - ம். 2. பண்ணை வெம்புலப் ; பற்ற.

3. வேரற ; முற்றிய, வற்றிய ; முற்றும்.

4. தோய்ந்தன, தோய்த்தென ; தோய்த்ததொத் தெரிந்தன விருகரை மருங்கு ; மலையொடு மெல்லாம். 29

562. தெய்வ நாயகன் தெரிகணை திசைமுகத் தொருவன்
வைவி தாமெனப் பிழைப்பில மனத்தினுங் கடுக
வெய்ய வன்னெருப் பிடையிடை பொறித்தெழ வெறிநீர்ப்
பொய்கை தாமரை பூத்தெனப் பொலிந்தது புணரி.

தெய்வ நாயகன் - தேவாதி தேவனான இராமபிரான், தெரி கணை - ஆராய்ந்து செலுத்திய அம்புகள், திசை முகத்து ஒருவன் வைவு இது ஆம் என - நான்முகன் என்ற பிரமதேவனுடைய சாபம்போலும் இது எனும்படி, பிழைப்பில - தவறுதனவாய், மனத்தினும் கடுக - மனத்தைக்காட்டிலும் விரைவாகச் செல்ல, வெய்ய வல் நெருப்பு - அக்கணையால் தோன்றிய கொடிய பெரிய தீயானது, இடை இடை பொறித்து எழ - இடையிடையே பொறிகளைச் சிதர்ந்துகொண்டு மேலெழுதலால், புணரி - கடலானது, வெறி நீர் - நறுமணம்கொண்ட நீர் நிறைந்த, பொய்கை - தடாகம், தாமரை பூத்தென பொலிந்தது - தாமரை மலர்களைப் பூத்தாற் போன்று விளங்கியது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கடலின் இடையே நெருப்பு எழுந்து காணப்படுவதால், அக் கடல் செந்தாமரை பூத்த நீர்த்தடம்போன்றதெனப்பட்டது. கணையின் வேகத்துக்கு மனமும், ஊறுசெய்வதில் தவருமைக்கு நான்முகன் சாபமும் உவமைகள். தெய்வ நாயகன்; யுத்த. 424; அங்கதன். 21. திசைமுகத் தொருவன் - நான்முகன்; இவன் நான்கு முகங்கள் பெற்ற வரலாறு பலவாக வழங்கும். வைவி தாமெனப் பிழைப்பில: வைவு - சாபம்; (ஒப்பு) யுத்த. : 611 வெகுண்டு கூறும் முனிவரது சொல் தவருமற பலிக்கும். வைத வைவில் மராமரம் ஏழ்துளை செய்தவன்' (பால. பாயிரம். 5); 'சொல் லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' (பால. வேள்வி. 75); 'அண் ணறன் சொல்லே யன்ன படைக்கலம்' (பால. வேள்வி. 1).

பி - ம். 2. வைத தாமென எய்கையால்.
3. வெய்யவான், வெய்யதாய்; பொடித்தெழ; விரிந்த.
4. பொலிந்ததப் புணரி.



563. செப்பின் மேலவர் சீறினு மதுசிறப் பாதல்
தப்பு மேயது கண்டனம் உவரியில் தணியா
உப்பு வேலையென் றுலகுறு பெரும்பழி நீங்கி
அப்பு வேலைவாய் நிறைந்தது குறைந்ததோ வளக்கர்.

செப்பின் - கூறுமிடத்து, மேலவர் சீறினும் அது சிறப்பு ஆதல் - மேன்மக்கள் வெகுண்டாலும் அந்த வெகுளி சிறந்த தொன்ருக அமைதல், தப்புமே - தவறுமோ? (தவருது), அது உவரியில் கண்டனம் - அதனை உப்புக்கடலில் கண்கூடாகக் கண்டோம்; (எவ்வாறெனில்), வேலை - கடல், தணியா உப்பு என்று உலகு உறு பெரு பழி நீங்கி - நீங்காத உப்பினையுடையது என்று உலகினில் பொருந்தி நின்ற பெரும்பழிப்புரை நீங்கப் பெற்று, அப்பு வேலைவாய் நிறைந்தது - சுத்தநீர்க் கடலாக நிறைந்து விளங்கிற்று: அளக்கர் குறைந்ததோ - கடல் அளவில் குறைந்து காட்டிற்ருே?

பெரியோர் வெகுண்டு சீறின் அஃது ஓர் நன்மைக்கே என்பர்; அதனை இங்குக் கண்கூடாகக் கண்டோம். உப்பு வேலை இப்பொழுது அப்பு வேலையாக மாறியது. அம்பு - அப்பென வலித்தது;' அப்பு - நீருமாம்; பிருதிவி அப்பு என்றமை காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அம்பு சிலேடைவகையால் அம்பினையும் தண்ணீரையும் குறிக்கும். தீமையை நன்மையாகக் கூறும் நயம் இங்குக் காண்க. இது காட்சியணியின்பாற்படும்; இச்செய்யுள் வேற்றுப் பொருள்வைப் பணியுமாம்.

பி - ம். 1. சிறப்பான.

3. பழி ஒழிய. 30

564. தாரை யுண்டபே ரண்டங்க ளடங்கலும் தானே
வாரி யுண்டருள் செய்தவற் கிதுவொரு வலியோ
பாரை யுண்பது படர்புன லப்பெரும் பரவை
நீரை யுண்பது நெருப்பெனு மப்பொரு ணிறுத்தான்.

பாரை உண்பது படர்புனல் - (ஊழிக்காலத்துப்) பூமியைக் கவர்ந்தழிப்பது பரந்த கடல் நீர்; அ பெரு பரவை நீரை - அந்த மிக்க கடல் தண்ணீரை, உண்பது நெருப்பு - உண்ணுவது தீ, எனும் - என்று மறைகள் முழங்கும், அ பொருள் - அந்தக் கருத்தை, நிறுத்தான் - (அன்று, இராமபிரான்) தன் செய்கை யால் நிலைபெறச் செய்தான்; தாரை உண்ட பேர் அண்டங்கள் அடங்கலும் - வரிசைமேல் வரிசையாக ஒழுங்குபட்டுள்ள பெரிய உலகங்களை எல்லாம், தானே வாரி உண்டு அருள் செய்தவற்கு - தானொருவனாகவே அள்ளி உண்டு அருள் புரிந்தவனுக்கு (திரு மாலின் அமிசாவதாரனான இராமபிரானுக்கு), இது ஒரு வலியோ - இது ஒரு பெரிய செயலோ?

உலகத் தோற்றத்திலே ஐம்பெரும் பூதங்கள் ஒன்றினின்று மற்றொன்று தோன்றும், பிரளயத்தின்போது தோன்றியபடியே ஒடுங்கும். ஆகாயத்தினின்று வாயுவும், அதினின்று அக்கினி யும், அதினின்று நீரும் தோன்றின; முறையே நீரானது தீயில் ஒடுங்கும் என்பது பின்னிரண்டடிகளிற் குறிக்கப்பட்டது. 'உடல் முதற் சுபாவ மீறு வொன்றிலொன் றுதித்த வாறே, அடைவினி லொடுக்கிக் காண்ப தபவாத உபாயமாமே; (தத்துவ. 47) என்ற கைவல்யச் செய்யுளையும், 'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு' (குறள். 355) என்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குறட்பாவினையும், அதற்குப் பரிமேலழகர் உரைத்த உரையையும் இங்கே காண்க. அண்டங்கள் அடங்கலும் தானே வாரியுண்டவன் திருமாலின் அவதாரமான இராமபிரான். 'உலகமும் மூன்றே; உடன் அவை ஒக்க விழுங்கி ஆல் இலையைச் சேர்ந்தவன் எம்மான்' (திருவாய். 1·9:4); 'ஏழ் உலகுங் கொள்ளும் வள்ளல்வல் வயிற்றுப் பெருமான்' (திருவாய். 2·2:7). அண்டங்களை யெல்லாம் உண்டவனுக்கு ஓரண்டத்தில் உள்ள ஒரு பொருளை யுண்ணச் செய்வதருமையோ; தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி.

பி - ம். 1. அண்டங்கள் நுடங்கவும்.

2. தேரை யுண்டென யுண்டவர்க்கு; ஈதொரு செயலோ.

3. பாரை யுண்டது.

4. நிறைத்தான். 31

## வேறு

565. மங்கலம் பொருந்திய தவத்து மாதவர்
கங்குலும் பகலுமக் கடலுள் வைகுவார்
அங்கம்வெந் திலரவ னடிக ளெண்ணலாற்
பொங்குவெங் கனலெனும் புனலிற் போயினர்.

கங்குலும் பகலும் அ கடலுள் வைகுவார் - இரவும் பகலும் அந்தக் கடலுள் வதிபவரான, மங்கலம் பொருந்திய தவத்து மாதவர் - மங்களகரமான தவத்தாற் சிறந்த பெருந்தவ முதியோர், அவன் அடிகள் எண்ணலால் - அந்தப் பரம்பொருளின் திருவடிகளை இடைவிடாது கருதுதலால், அங்கம் வெந்திலர் - தம் உடல் வேகப்பெறாமல், பொங்கு வெம் கனல் எனும் புனலில் போயினர் - மிக்கு எரிகின்ற கடுமையான அழல் என்னும் நீரிலேயே (எவ்வித ஊறுபாடுமின்றிச்) சென்றார்கள்.

நீரினுள்ளும், நெருப்பிலும் நின்று தவம் புரிவார், நீரை நீங்கி நெருப்பில் நின்றனர் என்பது நயம். வேண்டிய வேண்டியாங் கெய்தக்கூடும் ஆதலின், மங்கலம் பொருந்திய மாதவம் எனப் பட்டது. இறைவனை இடைவிடாது தியானித்திருப்பின் தியானிப்பவர்க்கு எவ்வகை இடையூறும் எய்தாது என்பதற்குச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சான்றாக மாதவர் அங்கம் வெந்திலர் என்றும், கனலைப் புனலாகக் கடந்தனர் என்றும் கூறப்பட்டது. 'தொழுது நின்றனன் நாயகன் தாளிணை குளிர்ந்தது சுடுதீயே' (யுத்த. 214). அந்தத் தியானத்திலேயே கனலும் புனலாயது எனப்பட்டது; பிரகலாதன், அப்பர் சுவாமிகள் இவர்களின் வரலாறுகளைக் காண்க.

பி - ம். 1. தவத்தின்.
2. கடலின்.
4. கனல் புனலென்னப் போயினர். 32

566. தென்றிசை குடதிசை முதல திக்கெலாந்
துன்றிய பெரும்புகைப் படலஞ் சுற்றலாற்
கன்றிய நிறத்தன கதிர வன்பரி
நின்றன சென்றில நெறியி னீங்கின.

தென்திசை குடதிசை முதல திக்கெலாம் - தெற்குத் திக்கு மேலைத் திக்கு முதலான திசைகளில் எல்லாம், துன்றிய பெரும புகை படலம் சுற்றலால் - அடர்ந்த பெரும் புகைத்தொகுதி சூழ்தலால், கதிரவன்பரி - சூரியனுடைய தேர்க் குதிரைகள், கன்றிய நிறத்தன - (தமக்கு இயல்பாயுள்ள பச்சை நிறம் போய்) கருநிறமான நிறத்தைப் பெற்றனவாய், நெறியின் நீங்கின - வழி தவறப்பெற்று, சென்றில நின்றன - மேல் செல்ல மாட்டாதனவாய் நின்று விட்டன.

இருதிசைகளைக் குறித்தது மற்றத் திசைகட்கு உபலக்கணம். படலம் - பெரும் பரப்பு. 'படலசூடி காகோடி பணிமதாணி மார்பாளே' (தக்க. 105); 'வெண்ணிப் போர்வை யுள்ளொளிப் படலத்து' (பெருங். 1 : 57 : 52); நெறியினீங்குதல் (ஒப்பு): நெறித் துறையி னீங்கினேம்' (ஆரணிய. 130); 'நெறியி னீங்கியோர் நீரல கூறினும்' (சிலப். 237); சென்றில நின்றன என மொழி மாற்றப் பெற்றது. தொடர்புயர்வு நவிற்சியணி.

பி - ம். 1. குணதிசை, வடதிசை.
2. படலை.
3. நிறத்தெழுங் கதிரவன் பரி.
4. நின்றது; சேணுந்நீயவே. 31

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


567. பிறிந்தவர்க் குறுதுய ரென்னும் பெற்றியை
அறிந்திருந் தறிந்திலர் ரனைய ராமெனச்
செறிந்ததம் பெடைகளைத் தேடித் தீக்கொள
மறிந்தன கரிந்தன வானப் புள்ளெலாம்.

வானம் புள் எலாம் - ஆகாயத்தில் பறக்கவல்ல பறவைகள் அனைத்தும், செறிந்த - தம்முடன் பொருந்திய, தம் பெடைகளை தேடி - தம்முடைய பெட்டைப் பறவைகளைத் தேடிய வண்ணம். தீ கொள - (இராமபிரான் அம்பினின் றெழுந்து) நெருப்புப் பற்றவே, பிறிந்தவர்க்கு உறுதுயர் என்னும் பெற்றியை - (இராம பிரான்) துணையைப் பிரிந்தவர்க்கு நேரும் துன்பத்தை, அறிந் திருந்து அறிந்திலர் அனையர் ஆம் - தாம் நன்ருக உணர்ந் திருந்தும் உணராதவர் போன்ருர், என - என்று சொல்லிக் கொண்டே, மறிந்தன கரிந்தன - அத்தீயில் வீழ்ந்து கருகிப் போயின.

பிரிந்தார் மிக்க துன்பத்தை யடைவர் என்பதை இராம பிரான் அறியாதவன் இல்லை; அறிந்திருந்தும் தம்முடைய பெட்டைப் பறவைகள் இறந்துபடுமாறு செய்தனன் என்று சொல்லிக் கொண்டே, அவற்றை நாடிச் சென்ற ஆண் பறவை களும் தீயில் வீழ்ந்து உயிர் துறந்தன எனப்பட்டது. ஆண் பெண் பறவைகட்குள்ள அன்பும், 'ஒன்றில் காலை அன்றில்போல்' உயிர்விடும் தன்மையும் 'பேடையைப் பிடித்து' (யுத்த. 415). எனத் தொடங்கும் வீடணன் அடைக்கலப்படலப் பாடல் கொண் டுணர்க, மறிந்தன; முற்றெச்சம்.

பி - ம். 1. பிறந்தவர்க்கு; பொருளுணரும் பெற்றியார்; துயரென்னும் பெற் றியை, பிறந்ததம் பார்ப்பினுக் குருகும் பெற்றியார்.

3. தீச்செல, தீச்சுட.

568. சுமையறு கருங்கடற் கனலி கைபரந்
தமைவன மொத்தபோ தறைய வேண்டுமோ
சுமையுறு பெரும்புகைப் படலஞ் சுற்றலால்
இமையவ ரிமைத்தனர் வியர்ப்பு மெய்தினர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கமை அறு கருகடல் - (இராமபிரான்) தனது பொறுமைக் குணத்தை நீக்குதற்கு ஏதுவாகி நின்ற கரிய கடல், கனலிகை பரந்து - (அப்பிரானது அம்பினின் றெழுந்த) நெருப்பு தன்னிடம் முழுதும் பரவப்பெற்று, அமை வனம் ஒத்தபோது - மூங்கிற் காட்டை நிகர்த்திருந்த போதில், அறைய வேண்டுமோ - (அதனல் விளைந்த கொடுமையைச்) சொல்லவும் வேண்டுமோ? சுமை உறு பெரு புகை படலம் சுற்றலால் - தொகுதியாகப் பொருந்திய பெரும் புகைத்தொகுதி சூழ்ந்து நின்றதால், இமையவர் இமைத்தனர் - இமையா நாட்டத்தராகிய தேவர்களும் கண் கொட்டினர். (அம்மட்டோ என்றும் வியர்வெழாத மேனியில்) அவர்கள் வியர்ப்பும் எய்தினர் - வியர்வையும் உண்டாகப் பெற்றார்கள்.

க்ஷமா என்ற சொல் கமை எனத் தமிழிற் கேற்பத் திரிந்தது. கனலி - இராமபிரான் அம்பினின் றெழுந்த நெருப்பு. கைபரத்தல் - பரவுதல்; கை உபசர்க்கம் என்பர். அமை வனம் - மூங்கிற்காடு; புற எரி தீண்டுதற்கு முன்னர்த் தன் இடமே எரிகொண்டதாதலின் அமைவனத்தை உவமித்தார். மூங்கில் வனம்போல் எரிந்தமை; 584. இமைத்தலும் வியர்த்தலும் தேவர்கட்கில்லையென்பது (ஒப்பு): திருநுதல் வேர்வரும்பும் தேங்கோதை வாடும் ......போகித மூண்கணு மிமைக்கு, மாகு மற்றிவ ளகலிடத் தணங்கே' (புற. வெ. மாலை. கைக். 3).

பா - ம். 1. கவமயுறு; கடல்.
2. அமைவன வொத்த.
3. படலை.
4. வெயர்ப்பும். 35

569. பூச்செலா தவணடை போல்கி லாமையால்
ஏச்செலா மெய்திய எகினம் யாவையும்
தீச்செலா நெறிபிறி தின்மை யாற்றிசை
மீச்செலா புனலவன் புகழின் வீந்தவால்.

பூ செலா அவன் நடை போல்கிலாமையால் - மலரிலும் அடிவைத்துச் செல்லுதற்குக் கூசும் (அத்துணை மென்மை வாய்ந்த) சீதாதேவியின் நடைபோல அழகுபெற நடக்கவியலாமையின், ஏச்சு எலாம் எய்திய எகினம் யாவையும் - பழிப்புரைகள்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அனைத்தையும் அடையப்பெற்ற அன்னப்புட்கள் எல்லாம், தீ செலா நெறி பிறிது இன்மையால் - நெருப்புப் பரவாத வழிகள் வேறொன்றும் இல்லாமையால், திசை மீ செலா - திக்குகளின் மேலே செல்ல இயலாதனவாய், புனலவன் புகழின் வீந்த - வருண பகவான் புகழ்போன்று அழிந்தன. ஆல் - அசை.

பூச் செலாதவள் நடை; (ஒப்பு): 'பஞ்சிமேல் மிதிக்கும் போதும் பனிக்குஞ்சி ரடியி னாளே' (சீவக. 1531); 'அனிச்சமும் அன்னத்தின் தூவியு மாத ரடிக்கு நெருஞ்சிப் பழம்' (குறள். 1120). ஏச்சு - பழிப்புரை; 'எம்ர்கள் குடிக்கோ ரேச்சுக்கொ லாயிடுங் கொலோ' (பெரியாழ். 3:8:2); 'இது மண்டல முழுவதுக்கும் ஏச்சு' (நந்தனர் சரித்திரம்). எகினம் - அன்னம்; இது, எகின் எனவும் வழங்கும். 'மடலவிழ் மரைமாட் டெகினென' (சிவப். பிரபந். சோணசைல. 5). அன்னம் வெண்ணிறம், புகழும் வெண்ணிறம் என்றது இங்கே அறிக. பழிப்புரையுடன் உயிர் வாழ்தலின் இறத்தலே நன்று என்று எகினங்கள் வீழ்ந்தன என்ற குறிப்பும் இங்குக் காணலாம். இராமபிரானது வெகுளிக்குப் பாத்திரமானதுபற்றிப் புனலவன் புகழ் வீழ்ந்தது என்று கூறி, அதனைப் பறவைகளின் வீழ்ச்சிக் குவமித்தார். திசை மீச் செலாப் புகழ் என்பதற்கு, எட்டுத் திசைகளிலும் பரவாத புகழ் எனினுமாம். 'ஏமாங் கதமென் றிசையாற் றிசைபோய துண்டே' (சீவக. 31). செலா என்பது மூன்றுமடியில் ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம். நான்காமடியில் முற்றெச்சம்.

பா - ம். 1. செலாத வண்பெடை, செலாத வப்பெடை; போகலாமையில், போகி லாமையால்.

2. ஏச்செலா வெய்தீய; அன்னம்.

4. மீச்செலாப் புரவலன், மீச்செலாப் புலவன்றன்; வீய்ந்ததால். 38

570. பம்புறு நெடுங்கடற் பறவை யாவையும்
உம்பரிற் செல்லலுற் றுருகி வீழ்ந்தன
அம்பர மம்பரத் தேக லாற்றல
இம்பரி லுதிர்ந்தன வெரியு மெய்யன.

பம்புறு நெடு கடல் பறவை யாவையும் - பரவியுள்ள அகன்ற கடலில் உறையும் பறவைகள் எல்லாம், உம்பரில் செல்லல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

உற்று - (தப்புவதற்காக) வானை நோக்கிச் செல்லத் தொடங்கி, உருகி வீழ்ந்தன - (அங்கும் படர்ந்த தீயினால்) உடல் உருகிக் கீழே விழுந்தன; அம்பரம் - மேகங்களும், எரியும் மெய்யன - எரிகின்ற உடலையுடையனவாய், அம்பரத்து ஏக ஆற்றல - ஆகாய வீதியிற் செல்ல இயலாதனவாகி, இம்பரில் உதிர்ந்தன - இந்த நிலவுலகிலேயே சிதறிக்கிடந்தன.

பம்புதல் - பரவுதல்; 'பாங்கர்ப் பம்பிய குவையிலே முசுண்டை' (அகநா. 94); 'அளிகள் பம்பும் சுரிகுழல்' (சுந்தர. 278). கடற் பறவைகள் - நீர் வாழ்வன. அம்பரம் அம்பரத்தேகல் என்பதில் சொன்னயம் காண்க. உம்பர், இம்பர்; (பால. பாயிரம்.) பார்க்க. அம்பரம் - ஆகாயம்; 'ஆழ்ந்ததே ரம்பரத் தோட்டியார்க்கின் ருன்' (ஆரணிய. 488). அப்பிரம் என்ற சொல், அம்பரம் எனத் திரிந்ததாகக்கொண்டு, மேகம் என்று பொருள் கொள்ளப்பெற்றது. 'கொண்டல் முகிலப்பிரம்..............மேகம்' என்பது நாமதீப நிகண்டு (83). அம்பர்: பொன்னம்பர், மூலம்பர் என்ற தெய்வலோகத்துப் பறவை விசேடம் என்று கூறுவர். எரியும் மெய்யன உதிர்ந்தன என மொழிமாற்றிப் பொருள் தரப்பட்டது.

பி - ம். 1. பரவை.
2. வியந்தன.
3. வம்பரும்; ஆற்றிலர்.
4. இம்பரில் மறிந்துபோ யெறிந்து விழ்ந்தவே.



571. பட்டன படப்படப் படாத புட்குலம்
சுட்டுவந் தெரிக்குலப் படலஞ் சுற்றலால்
இட்டுழி யறிகில விரியல் போவன
முட்டையென் றெடுத்தன வெளுத்த முத்தெலாம்.

சுட்டு வந்து எரி குலம் படலம் சுற்றலால் - தீய்த்துக் கொண்டே தீயின் தொகுதி சூழ்ந்ததால், பட்டன படபட - இறந்துபோன பறவைகள் இறந்துபட இறந்துபட, படாத புள் குலம் - இறவாத பறவைத் தொகுதிகள் எல்லாம், இரியல் போவன - ஓடத் தொடங்கினவாய், இட்டுழி அறிகில - (தாம முட்டை) இட்ட இடத்தை உணரமாட்டாமல், வெளுத்த முத்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எலாம் - வெண்மை நிறமான முத்துக்களை எல்லாம், முட்டை என்று எடுத்தன - தம்முடைய முட்டைகள் எனக் கருதி யெடுத்துக் கொண்டன.

பட்டன பட்டன : அடுக்கு மிகுதி குறித்து வந்தது. சுவாலை யின் மிகுதி கூறுவான் எரிக்குலப் படலம் எனப்பட்டது. படலம் : தொகுதி ; இப்படலம் 36 குறிப்புப் பார்க்க. இரியல் போதல் ; ஆரணிய. 420, 473, 886 காண்க. பறவைத் தொகுதிகள் வெண் ணிறமான முத்தை முட்டையென்று எடுத்தன எனக் கூறியது மயக்கவணி. முத்தை முட்டையென மயங்கல்.

பி - ம். 2. எரிக்கனல், எரிகனல்.

3. போயின.

4. எடுத்தன கடலுள், கடுந்த. 36

572. வள்ளலைப் பாவிதான் மனித னென்றுடன்
எள்ளலுற் றெதிர்ந்தில னேழு நாளென
வெள்ளிவெண் பற்களைக் கிழித்து விண்ணுறத்
துள்ளலுற் றிரிந்தன குரங்கின் சூழலே.

குரங்கின் சூழல் - தொகுதியாயிருந்த குரங்குகள், 'பாவி தான் - அந்தப் பாவகாரியம் செய்த வருணன், வள்ளலை - கருணை மிக்க இராமபிரானை, மனிதன் என்று உடன் எள்ளல் உற்று - மனிதன் என்றே இகழ்தலைப் பொருந்தி, ஏழு நாள் எதிர்ந்திலன் என - எதிர்கொள்ளாமல் ஏழு நாட்கள் தாமதித்தான்' என்று சொல்லிக்கொண்டு, வெள்ளி வெண் பற்களை கிழித்து - (தம் முடைய) வெள்ளிபோன்ற வெண்ணிறம் வாய்ந்த பற்களை இளித்துக்கொண்டு, விண் உற துள்ளல் உற்று இரிந்தன - ஆகாயத்திலே துள்ளுதலைப் பொருந்தி நிலைகுலைந்தன. ஏ : அசை.

வள்ளல் - இராமபிரான் ; கிட்கிந்தா. 123, 193, 196 ; முதலியன காண்க. இங்கே குறிக்கப்பட்ட குரங்குகள் நீர் வாழ்வன. 'மற்றைய பூதமெல்லாம் வருணனை வைத மாதோ' (63) என இப்படலத்திலே பின்னர் வருவது காண்க. ஊன் அயிலாதன ஆகலின் குரங்குகளின் பற்கள் என்றும் வெண்ணிறமாகும் என்ப. குரங்கு சூழ்ந்தில என்ற பாடங்கொண்டு எரி அவைகளைச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சூழவில்லை எனக்கொள்வாரும் உளர். நிலக் குரக்குப்படைக்கு முன்னர், நீர்க் குரங்குகள் இறந்துபடுதல் மிகவும் வருத்தத்தை விளைக்கக்கூடும் ஆதலின் அவை தப்பின எனக் கோடலுமாம். இராமபிரானைப்பற்றி ஆசிரியர் கொண்ட கருத்து, இச் செய்யுளில் தொனிப்பது காண்க.

பி - ம். 1. பாவிகாள், பாவியேம், பாவியேன்.

2. இகழ்ந்தனம் ; எண்ணிலோம், எண்ணிலோமென.

4. குரங்கு சூழ்ந்தில. 39

573. தாநெடுந் தீமைக ளுடைய தன்மையர்
மாநெடுங் கடலிடை மறைந்து வைகுவார்
தூநெடுங் குருதிவேல் அவுணர் துஞ்சினர்
மீனெடுங் குலமென மிதந்து வீங்கினர்.

நெடு தீமைகள் தாம் உடைய தன்மையர் - மிக்க கெடுதிகளைத் தம்மிடம் உடைத்தான இயல்பினரும், மா நெடு கடல் இடை மறைந்து வைகுவார் - கரிய பெரிய கடற்குள்ளே மறைந்து உறைபவருமான, தூ நெடு குருதி வேல் அவுணர் - மாமிசத்தைக்கொண்ட நீண்ட இரத்தம்படிந்த வேலைத் தாங்கிய அவுணர்கள் (அம் பெரியால்), துஞ்சினர் - மரித்தவராய், மீன் நெடு குலம் என மிதந்து வீங்கினர் - மீனின் பரந்த கூட்டம்போன்று மிதந்து உடல் பருத்துக் காணப்பட்டார்கள்.

மறைந்து வைகுவார் - பாரதத்திற் கூறப்பெறும், காலகேயர் நிவாதகவசர் போன்றவர் என்க. தூ - ஊன். வேல் பல வுடல்களில் ஊடுருவும்போது அதனிடத்து மாமிசமும் இரத்தமும் படியுமாதலின், 'தூநெடுங் குருதி வேல்' எனப்பட்டது. நீரிடையிறந்துபட்ட உடல்கள் உதிக்குமாதலின் மிதந்து வீங்கினர் எனப்பட்டது. தாம் நெடும் எனப்பிரிக்க.

பி - ம். 1. தானெடுந் ; தன்மையோர்.

2. மானெடுந் ; மறந்து.

3. தூனெடுங்.

4. மீனெடுங்கிரி. 40

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



574. தசும்பிடை விரிந்தன வென்னுந் தாரைய
பசும்பொனின் மானங்கள் உருகிப் பாய்ந்தன
அசும்பற வறந்தன வான வாறெலாம்
விசும்பிடை விளங்கிய மீனும் வெந்தவே.

பசும் பொனின் மானங்கள் - (அம்புத் தீயால்) பசியபொன்னால் செய்யப்பட்ட விமானங்கள், தசும்பு இடை விரிந்தன - (தொடக்கத்தில் பொற்குடமா யிருந்தது) நடுவே இடையே விரியப்பெற்றன, என்னும் தாரைய - என்று பகரத்தக்க ஒழுங்கை யுடையனவாய், உருகி பாய்ந்தன - பின்னர் உருகி ஓடுவன ஆயின; (அதன் விளைவாக), வான ஆறு எலாம் - ஆகாய கங்கைப் புனல் முழுதும், அசும்பு அற வறந்தன - நீர் கசிவுமில்லாதவண்ணம் வறண்டு போயின, விசும்பிடை விளங்கிய மீனும் வெந்தவே - ஆகாய வீதியில் விளக்கமுற்ற நட்சத்திரங்களும் வேக்காடுற்றன. ஏகாரம் - அசை.

தசும்பு - குடம்; 'துணைபுணா ராயமொடு தசும்புடன் தொலைச்சி' (புறநா. 224); 'ஆடகத் தசும்புறு சயந்தனம்' (ஆரணிய. 414); மற்றும், பால. நகரப். 26; அயோத். சித்திரகூட. 36; சுந்தர. 90. தாரை - ஒழுங்கு. மானம்: விமானம் என்பதின் முதற்குறை. அசும்பு - கசிவு; 'வாரசும் பொழுகு முன்றில்' (புறநா. 114). ஆகாய கங்கை சிறு கசிவுகூட இல்லாமல் அறவே வறண்டது என்க. விசும்பிடை மீனும் வெந்த; தொடர்புயர்வு நவிற்சியணி. விசும்பு - ஆகாயம்; 'நிலனேந்திய விசும்பும்' (புறநா. 2).

பி - ம். 1. தாரையப்.
2. விமானங்கள், விமானமும்; உருக்கிப்.
3. வான யாறெலாம், வான யாறுகள்.
4. இயங்கின; வெந்தவால், வெந்ததால்.



575. செறிவுறு செம்மைய தீயை யோம்புவ
நெறியுறு செலவின தவத்தி னீண்டன
உறுசின முறப்பல வுருவு கொண்டன
குறுமுனி யெனக்கடல் குடித்த கூர்ங்கணை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கூர்கணை - (இராமபிரானுடைய) கூரிய அம்புகள், குறு முனி என - உருவத்தாற் குறுகிநின்ற அகத்திய முனிவனைப்போல, செறிவுறு செம்மைய - பொருந்திய நடுவு நிலைமையுடன் கூடியனவும், தீயை ஓம்புவ - முத்தீயைப் போற்றுவனவும், நெறிஉறு செலவின - சன்மார்க்கத்தில் பொருந்திய செலவினை யுடையனவும், தவத்தின் நீண்டன - தவத்தாற் பெருமை யுற்றனவும், உறுசினம் உறபல உருவு கொண்டன - மிக்க சினம் செறிவதாற் பல்வேறு உருவங்களை யேற்றனவு மாகி, கடல் குடித்த - கடல் நீரைப் பருகின,

கூர்ங்கணை பருகின என்க. கணைக்குச் செம்மை: பகைவரின் உதிரம் படுதலால் உண்டாயது என்க; தீயை ஓம்புதல் - தீயை மென்மேல் வளரச் செய்தல், நெறியுறு செலவின - நேரான வழியிலே செல்லும் இயல்பின. தவத்தின் பெருமையால் நீளும் தன்மைய, உருவு கொள்ளுதல் - ஒன்று பலவாக ஆதல்; இராமனது கணைக்கும் குறுமுனிக்கும் செம்மொழிச் சிலேடையாகக் கூறப்பட்ட உவமை யணி. அகத்தியர்க்குப் பொருத்திக் கூறுங்கால் செம்மையும், ஓம்புதலும், நேரிய செலவும், தவத்தான் வளர்ச்சியும், டல் உருக் கோடலும், கடல்நீரைப் பருகுதலும் எனக் கொள்க. சொற்கள் பிரிக்கப் பெருமல் இரு பொருள் தருவது செம்மொழிச் சிலேடை. இதன் எதிர்ப்பதம் பிரிமொழிச் சிலேடை. அகத்தியன் கடல் பருகியது; ஆரணிய. அகத்தியப் படலம் 154-ம் அதன் உரைக் குறிப்பும் காண்க. 'கடலெல்லாம், உண்டவர்கள் பின்னுமிழ்க வென்றது முமிழ்ந் தான். இராமபிரான் கணை ஒன்று பலவாதல்; 'உற்பத்தி யயனேடொக்கும், ஓடும் போதரனே யொக்கும்' (யுத்த. கும்ப. 27); என்ற வரிகள் கொண்டு காண்க.

பி - ம். 1. செறியுறு செம்மையில்.
2. வீண்டென.
3. கொள்வன.

576. மோதலங் கனைகடன் முருக்கும் தீயினுற்
பூதலங் காவொடு மெரிந்த பொன்மதில்
வேதலு மிலங்கையும் மீளப் போயின
தூதன்வந் தானெனத் துணுக்கம் கொண்டதால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மோதல் அம் கனைகடல் - கரையின் கண் தாக்குதலை யுடைய அழகிய ஒலிக்கின்ற கடலில், முருக்கும் தீயினால் - (அம்பினின் றெழுந்த) எதனையும் அழிக்க வல்ல நெருப்பினால், பொன்மதில் வேதலும் - (இலங்கையின்) பொன்னாலாகிய மதில் வெந்த அளவில், பூதலம் காவொடும் எரிந்த - (முன்னர் அநுமானால்) அசோக வனத்துடன், பூதலமும் தீப்படுத்தப்பெற்ற, இலங்கையும் - இலங்கை நகரத்தில் உள்ளனயாவும், போயின தூதன் - (முன்னர் வந்து) சென்ற தூதனாகிய அநுமன், மீள வந்தான் என - மீளவும் வந்தனன் என்று எண்ணி, துணுக்கம் கொண்டது - அச்சம் அடைந்தன. ஆல் - அசை.

இலங்கையும் துணுக்கங்கொண்டது என்று இயைக்க. கரைக்கண் மோதுதலின் 'மோதலங் கனைகடல்' எனப்பட்டது. பூதலம் கா - இலங்கையும் அதன் கண்ணிருந்த அசோக வனமும். தீ இலங்கைப் புறத்தும் பரந்து செல்ல முன்னர்த் தீயிட்ட அநுமனே மீட்டும் வந்தனன் என இலங்கை வாசிகள் அஞ்சினர் என்க. இலங்கை; இடவாகு பெயராக இலங்கையில் வதிவோரைக் குறித்தது. போயின தூதன் மீளவந்தான் எனக் கூட்டப்பட்டது.

பி - ம். 1. முழங்ருநீ, முழங்கத்.
2. எரிந்து.
3. மேய்தலும்.
4. துணுக்கம் உற்றதே. 43

577. அருக்கனி லொளிவிடு மாட கக்கிரி
யுருக்கென வுருகின வுதிரந் தோய்ந்தன
முருக்கெனச் சிவந்தன முரிய வெந்தன
கரிக்குவை நிகர்த்தன பவளக் காடெலாம்.

அருக்கனில் ஒளிவிடும் ஆடகம் கிரி - கதிரவனைப் போல ஒளி வீசுகின்ற பொன் மயமான திரிகூடமலை. உருக்கு என உருகின - பொன் உருகுவது போன்று உருகி, உதிரம் தோய்ந்தன - இரத்தம் படியப் பெற்றாற்போன்று காணப்பட்டன ; முருக்கு என சிவந்தன - முள் முருக்கம் பூப்போன்று சிவந்த நிறம் பெற்றன ; பவளம் காடு எலாம் - பவளக் காடுகள் அனைத்தும், முரிய வெந்தன - தமது இயல்பான நிறம் கெடும்படி வேதல் உற்றனவாய், கரிகுவை நிகர்த்தன - கரியின் தொகுதியை ஒத்து விளங்கின.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அர்க்கன் என்பது அருக்கன் என வந்தது. ஆடகக் கிரி பொன்மலையான மேருவின் ஒரு பிரிவாதலின் இங்ஙனம் கூறப் பட்டது. முருக்கு - முள்முருக்கமரம். இதனைக் கலியாண முருங்கை என்றும் கூறுவர். முரிதல் - நிறம் திரிதல். தீயினால் காடுகள் கரிந்தன எனப்பட்டது.

பி - ம். 1. ஒளிவிளங் காடகக்கிரி.

3. முதிர வெந்தன. 44

578. பேருடைக் கிரியெனப் பெருத்த மீன்களும்
ஓரிடத் துயிர்தரித் தொதுங்க கிற்றில
நீரிடைப் புகுஞ்சில நெருப்பு நன்றெனப்
பாரிடைக் குதித்தன பதைக்கு மெய்யன.

பேர் உடை கிரி என பெருத்த மீன்களும் - பெருமையுடைத் தான மலைபோல உடற்பருத்த மீன்களும், ஓர் இடத்து உயிர் தரித்து ஒதுங்க கிற்றில - ஓரிடத்தில் உயிரைத்தாங்கி ஒதுங்கி நிற்க இயலாதனவாகி, நீர் இடை புகும் சில - நீரிடையிற் புகுந்தன சில, நெருப்பும் நன்று என - (அந்த நீரின் கொதிப்பினைக் கண்டு) தீயும் இக்கடல் நீரினும் நல்லது என்று, பதைக்கும் மெய்யன பார் இடை குதித்தன - விதிர்விதிர்க்கும் உடலுடன் கூடினவாய்ப் பூமியினிடம் தாவின.

கிற்றில என்பதற்கு, மனம் கொள்ளவில்லை என்றும் கூறலாம். கிற்றல் - சம்மதித்தல்; (நக்க. 57) உரை பார்க்க. தண்மைய தாகும் என நீரிடைப் புக்கன அதன் கொதிப்புத் தாங்காமல், நெருப்பே நல்லது என்று அதின் வீழ்ந்தன என்க.

பி - ம். 1. வேருடை; பெரிய; மீன்குலம்.

2. ஏதுங்கு கிற்றில, ஒங்க கிற்றில.

3. புகுமதில்; நெருப்பில். 45

579. சுருள்கடற் றிரைகளைத் தொலைய வுண்டனல்
பருகிடப் புனலில பகழி பாரிடம்
மருள்கொளப் படர்வன நாகர் வைப்பையும்
இருள்கெடச் சென்றன வீரவி போல்வன.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பகழி - இராமபாணங்கள், சுருள் கடல் திரைகளை தொலைய உண்டு - சுருளும் தன்மையுள்ள கடலின் அலைகள் அறவே சுவறும்படி பருகி(ப் பின்) குடித்துவிட, அனல் பருகிட புனல் இல - (மேலும்) அனல் பருகுதற்கு நீர் இல்லாமையால், பாரிடம் மருள் கொள - பூமியில் உள்ளவர் மயங்கும்படி, படர்வன - செல்லத் தொடங்கினவாய், நாகர் வைப்பையும் - நாகர்களின் உறைவிடமான பாதலத்தையும், இரவி போல்வன - கதிரவனை ஒத்துவிளங்கினவாய், இருள் கெட சென்றன - இருட்டு நீங்கச் சென்றன.

திரை திரையாகச் சுருண்டு புரளுதலின், சுருள் கடல் எனப் பட்டது. அம்பு கடல்நீர் முழுதும் பருகிப் பின்னர் பருகற்குப் புனலின்மையின் பாதாள கங்கை உள்ள நாகலோகம் நோக்கிச் செல்ல, அந்த உலகம் இருள் நீங்கப்பெற்றது எனப்பட்டது; (ஒப்பு) : 'ஏழுமா மரமுருவிக் கீழுலக மென்றிசைக்கும்.............. ஏழிலாமையான் மீண்டதவ் விராகவன் பகழி' (கிட்கிந்தா. 173); இருள் கெடுத்து நின்ற நிலையில் சூரியன் உவமை. பாரிடம் - பூதங்கள் எனினுமாம். நாகர் வைப்பு - நாகலோகம்.

பா-ம். 1. சுருள்கெடத் ; உண்டன, உண்டென.
2. பாரிடை.
3. மருள்கெட ; படர்நெடு மகர வைப்பெலாம்.
4. சென்றுள ; போன்றன, ஒப்பன. 48

580. கரும்புறக் கடல்களோ டுலகங் காய்ச்சிய
இரும்புறச் செல்வன விழுவ கீழுற
அரும்புறத் தண்டத்தை யுருவி யப்புறம்
பெரும்புறக் கடலையும் தொடர்ந்து பின்செல்வ.

(இராமபிரான் விடுத்த அம்புகள்), 'கரு புற கடல்களோடு - கறுத்துக் காணப்படும் மேற்புறத்தினையுடைய கடல்களுடன், உலகம் காய்ச்சிய - நிலப்பகுதியையும் எரித்தனவாய், இரும்பு உற செல்வன - இரும்பின் தன்மை அமையச் செல்வனவும், கீழ் உற விழுவ - கீழ்நோக்கி இறங்குவனவுமாகி, அரு புறத்து அண்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


டத்தை - ஊடுருவுதற்கு அரிய புறத்திணைக்கொண்ட இந்த உலக உருண்டையை, உருவி - துளைத்துச்சென்று, அப்புறம் - பின்னர், பெரும் புற கடலையும் தொடர்ந்து பின் செல்வ-அகன்ற புறக்கடலையும் பின்பற்றிச் செல்வனவாயின.

புறக்கடல்கள் ஏழு; இவைகட்கப்பாலும் ஏழு கடல்கள் உண்டு என்று புராணம் கூறும். இச் செய்யுட்கு, (ஒப்பு) : இப் படலம் 20-ஆம் செய்யுட்கண் கூறிய அம்பினது வியக்கத்தகும் செய்கைகள்; 'மரபின் மாபெரும் புறக்கடல் மஞ்சன மருவி' (யுத்த. 134). திண்மையைக் கருதி, 'இரும்புறச் செல்வன' என்றார்.

பி - ம். 1. காட்சிய.

3. அண்டமும்.

4. பின்செலும்.



581. திடல்திறந் துகுமணித் திரள்கள் சேணிலம்
உடல்திறந் துதிரம்வந் துகுவ போன்றன
கடல்திறந் தெங்ஙணும் வற்ற வக்கடல்
குடல்திறந் தனவெனக் கிடந்த கோளரா.

(நீர் வறண்டமையின் கடலிடத்தே), திடல் திறந்து - திட்டுகள் உண்டாகப்பெற்று, உகு மணி திரள்கள் - (அங்குச்) சிதறிக் கிடந்த அரதனக் குப்பைகள், சேண் நிலம் - உயர்ந்த பூமி, உடல் திறந்து - உடல் பிளக்கப்பெற்று, உதிரம் வந்து உகுவ போன்றன - இரத்தம் பெருகிச் சிந்துவதை ஒத்தன; கடல் திறந்து - கடலானது மடையுடையப்பெற்று, எங்ஙணும் வற்ற - எங்கும் நீர் வறண்டமையின், கோள் அரா - (அதனிடம் உற்பத்தியான) பிறவுயிரைக் கொள்ளவல்ல கடற் பாம்புகள், அ கடல் குடல் திறந்தன என கிடந்த - அந்தக் கடல் குடல் திறந்தவற்றைப் போன்று காணப்பட்டன.

கடற் றிட்டுக்களில் சிதறிக் கிடந்த இரத்தினத் தொகுதிகள் பூமி உடல் திறக்கப்பட்டு உதிரம் உகுவது போன்றன; அதனிடம் காணப்பட்ட கடற் பாம்புகள் கடல்களின் குடலைப்போன்றன என்க; தன்மைத் தற்குறிப்பேற்றம். மணிகள் உதிரத்துக்கு நிறத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தாலும், நீண்டு வளைந்த பாம்புகள் குடலுக்கு உருவத்தாலும் உவமைகள். கோள் அரா - பிறவுயிர்களைக் கொள்ளவல்ல பாம்புகள்; வலிய பாம்புகள் எனினுமாம். கோள் - வலிமை. குடர் - குடல் கடைப்போலி.

பி - ம். 1. திடல் சிறந்து.
3. கடலிறந்து.
4. குடர். 48

582. ஆழியிற் புனலற மணிக ளட்டிய
பேழையிற் பொலிந்தன பரவை பேறுறப்
பூழையிற் பொருகணை யுருவப் புக்கன
மூழையிற் பொலிந்தன முரலும் வெள்வளை.

ஆழியில் - கடலில், புனல் அற - நீர் வற்றுவதால்; (இரத்நாகரம் எனும்), பரவை - கடல்கள், பேறு உற - நற்பயன் எய்துமாறு, மணிகள் அட்டிய பேழையில் பொலிந்தன - நவமணிகள் நிரப்பி வைத்த நகைப்பெட்டிபோன்று விளங்கின; பூழையில் - தம்பாலுள்ள துவாரங்களில், பொருகணை - (இராமபிரான் விடுத்த) பொருகின்ற அம்பு, உருவ புக்கன - ஊடுருவிப் புகப்பெற்றனவாகி, முரலும் வெள் வளை - ஒலிக்கின்ற வெள்ளிய சங்குகள், மூழையில் பொலிந்தன - அகப்பையை ஒத்துக் காணப்பட்டன.

நீர் வற்ற அதனகத்திருந்த அரதனங்களால், கடல் ஓர் அணிகலப்பேழைபோன்று காணப்பட்டது. சங்குகளின் புழையில் கணைகள் பொருந்தியதனுல் அவைகள் அகப்பைபோன் றிருந்தன; தன்மைத் தற்குறிப்பேற்றவணி. மணிகளட்டிய பேழை; இரத்தினப் பேழை; (காஞ்சிப்.); கடலுக்கே இரத்நாகரம் என்ற பெயருண்மையும் இங்கே காணத்தகும். வற்றின கடலுக்கு இரத்தினப்பெட்டி உவமை. அட்டுதல் - நிரப்பிவைத்தல்; 'அளகத்தின் அட்டிய தாதும்' (திருக்கோ. 122). பூழை - சிறு துவாரம்; 'பூழைத் தலை நுழைந்து' (பதுவா. 845 : 1); 'புகற்கரிய பூழை நுழைந்து' (நாலடி. 282). சங்குக்கு மூழை: மூழை - அகப்பை; 'மூழையெனப்பொலி மொய்பில வாயாள்' (ஆரணிய. 1074); 'பாற்கூழை மூழை சுவையுணரா தாங்கு' (நாலடி. 321).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. எட்டிய.

2. ஏழையிற் ; பேர்வறப், பெட்புடை.

3. பூழியிற் ; உருவி.

46

583. நின்றுநா ருயிரம் பகழி நீட்டலால்
குன்றுநா ருயிரங் கோடி யாயின
சென்றுதேய் வுறுவரோ புலவர் சீறினும்
ஒன்றுநூ ருயின வுவரி முத்தெலாம்.

நின்று - வீராவேசத்துடன் நின்று, நூருயிரம் பகழி நீட்டலால் - (வில்லினின்று) ஓரிலக்கம் அம்புகளைச் செலுத்தியதனுல், குன்று நூருயிரம் கோடி ஆயின - மலைகள் பல்லாயிரமாக ஆயின ; (மற்றும்), உவரி முத்து எலாம் - சமுத்திரத்தில் இருந்த முத்துக்கள் யாவும், ஒன்று நூருயின - ஒன்று பலவாகவாயின ; (இவ்வாறு ஒன்று பலவாயதும் பொருத்தமே), புலவர் சீறினும் - புலமை மிக்கவர் சீற்றம்கொண்ட இடத்தும் (சீற்றத்துக் கிலக்கானவர்), சென்று தேய்வு உறுவரோ - போய் அளவிற்குறைவரோ ? (குறைவுருர்).

புலவர் வெகுண்டிடினும் ஒரு குறையும் நேராதாகலின், குன்றுகளும் முத்துக்களும் பலவாகிப் பல்கிப் பெருகின எனப் பட்டது. பொதுப்பொருள் சிறப்புப்பொருளை விளக்கி நிற்றலின் வேற்றுப்பொருள்வைப்பணி. குன்றும் நல்ல முத்துக்களும் சிதைந்து பலவாயின என்ற கருத்தை அவைகள் அளவில் மிகுந்ததாகக் கூறிய நயம் இங்கு அறிதற்பாலது. 'சென்று தேய்வுறுதல்' 'சென்று தேய்ந்திறுதல்' என்றது காண்க ; (ஒப்பு) : யுத்த. 553.

பி - ம். 2. குன்றுநூ ருயிரக் கோடி.

3. உறுவரே, உறுவதோ ; சீறினுல்.

50

584. சூடுபெற் றையனே தொலைக்கு மன்னுயிர்
வீடுபெற் றனவிடை மிடைந்த வேணுவின்
காடுபற் றியபெருங் கனலி கைபரந்
தோடியுற் றதுநெருப் புவரி நீரெலாம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஐயன் ஏ சூடு பெற்று - தலைவனான இராமபிரான் அம்பினால் சுடப்பட்டு, தொலைக்கும் மன்னுயிர் - அழிக்கப்பட்ட மன்னுயிர்கள், வீடு பெற்றன - முத்தியுலகை அடையப்பெற்றன; இடை மிடைந்த - கடலிடத்து அடர்ந்த, வேணுவின் காடு பற்றிய பெரு கனலி - மூங்கிற் காடுகளில் பிடித்த பெரிய நெருப்பு, கை பரந்து - பக்கங்களில் எங்கும் பரவுவதால், நெருப்பு - தீயானது, உவரி நீர் எலாம் ஓடி உற்றது - கடல்நீர் முழுவதும் சென்று பரவிற்று.

சூடு, சினத்துக்கு இலக்கணை. ஏ - அம்பு. தொலைக்கும் - அழிக்கப்பட்ட இராமபிரான் கணையாற பட்டனவாதலின் உயிர்கள் எல்லாம் வீடு பெற்றன எனப்பட்டது. 'யான்தவ முடைமையாலிவ் விறுதிவந் தியைந்த தியார்க்குஞ், சான்றென நின்ற வீரன் தான்வந்து வீடு தந்தான்' (கிட்கிந்தா. 375); 'காக்கு மாயமும் வஞ்சமும் களவுமே கடனு, இரக்கமே முதற் றருமத்தி னெறிக்கென்று மிழியா, அரக்க ரைப்பெருந் தேவர்க ளாக்கின வமலன், சரத்தின் மேலினிப் பவித்திர முளவெனத் தகுமே' (யுத்த. பிரமாத்திர. 111). இராவணன்மீது தைத்த 'இராமபிரான் வாளியினைப் 'புனிதவாளி' (யுத்த. இராவணன் வதை. 198) என்றதும் காண்க. வேணு - மூங்கில்; 'வேணுக் கோலின் மிடைந்தவ ரொற்றலின்' (சீவக. 634); 'மாணு விறலோய் வேணுவா கென' (சிலப். கடலாடு கதை. உரை). கைபரந்து: இப்படலம் 38-ஆவது செய்யுளும் அதன் உரையும் காண்க. அங்கும் அமைவனம் என்ற மூங்கிற் காடு எரியுண்டதனைக் கூறினர். ஏ : தேற்றேகாரம்.

பி - ம். 1. ஐயமே தொலைத்து மினுயிர்.
2. அடை, புடை மிடைந்த.
3. காடுபற் றியநெடுங்.



585. காலவான் கடுங்கணை சுற்றுங் கவ்வலால்
நீலவான் துகிலினை நீக்கிப் பூநிறக்
கோலவான் கழிநெடுங் கூறை சுற்றினள்
போலமா நிலமகள் பொலிந்து தோன்றினள்.

காலம் வான கடுகணை - யமனைப்போன்ற கொடுமைவாய்ந்த அம்புகள், சுற்றும் கவ்வலால் - எல்லாப்புறங்களிலும் சென்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பற்றலால், மா நிலமகள் - பூமிப்பிராட்டி, நீல வான் துகிலினை நீக்கி- தனக்கு இயற்கையின் அமைந்த நீல நிறமான சிறந்த ஆடையை விலக்கி, பூ நிறம் கோலம் வான் கழிநெடு கூறை சுற்றினுள் போல- செம்மலரின் நிறத்தைக்கொண்ட அழகிய சிறந்த மிகவும் நீண்ட ஆடையைத் தரித்தாள்போன்று, பொலிந்து தோன்றினுள் - விளங்கிக் காட்சியளித்தாள்.

• கடலின் நிறம் நீலம்; இதனை நிலமகட்கு ஆடையாகக் கூறுதல் கவிமரபு. அந்த நிலமகள் தனக்குரிய நீலநிற ஆடையாகிய கடல் இப்பொழுது இராமபிரானுடைய செந்நிறவாளிகளால் தீக்கப் பட்டுச் செந்நிறமாயிற்று என்று கூறப்பட்டது; நன்மைத் தற்குறிப் பேற்றவணி. வான் நீல துகிலினை என மொழிமாற்றி வானம் போன்ற நீலநிறத் துகிலினைக் களைந்து எனலுமாம். வானமும் பொதுவாக நீலநிறமெனினும் சிற்சில சமயங்களில் செக்கர் வானம் ஆவதுண்ட குறிப்பும் இங்குக் காணத்தகும், கவ்வுதல் - சென்று இறுகப்பற்றுதல்; 'கூர்த்து நாய் கௌவிக் கொளக்கண்டும்' (நாலடி. 70). கூறை - ஆடை; 'யான் உடுத்த கூறைபிறர் கொள்ளப்பட்டு' சிலப். அடைக்கலக். அடியார்க்கு. உரை, (பக். 404); 'முடத்தி வந்தாள் அவட்குக் கூறைகொடுக்க' (தொல். சொல். 38 உரை); 'அத்திட்ட கூறையரைச் சுற்றி' (நாலடி. 281).

பி - ம். 1. கடுங்களல்.
2. தனிநெடுங்.
3. பொன்னிறக் கூறை.



**586. கற்றவர் கற்றவ ருணர்வு காண்கிலர்**
**கொற்றவன் படைக்கலங் குடித்த வேலைவிட்**
**டுற்றுயிர் படைத்தெழுந் தோட லுற்றதால்**
**மற்றொரு கடற்புக வடவைத் தீயரோ.**

கற்றவர் கற்றவர் உணர்வு காண்கிலர் - கல்வி வல்லார் கல்வி வல்லுநருடைய சிறந்த அறிவினைக் காணப்பொருர்; வடவைத்தீ - (அதற்கேற்பவே) வடவைத்தீயானது, கொற்றவன படைக்கலம் குடித்த வேலைவிட்டு - வெற்றி வீரனன இராமபிரான் விடுத்த போர்க்கருவிகள் பருகிய ஆழியை விடுத்தலைப் பொருந்தி, உற்று உயிர் படைத்து - வன்மை கொண்டு, மற்று ஒரு கடல் புக -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பிறிதொரு கடலிற் புகுமாறு, எழுந்து ஓடல் உற்றது - எழுந்து ஓடத்தொடங்கிற்று. ஆல், அரோ - ஈற்றசைகள்.

குதிரை முகமாகக் கடலுள்ளே தங்கி இருந்து கடல்நீர் பெருகித் தரையை அழிக்காதபடி செய்துகொண்டிருப்பது வடவைத்தீ என்பர். இது பிரளயகாலத்து அனைத்துலகையும் அழிப்பது. அந்த வடவையும் இராமபிரானது அம்புகள் கடல் நீரை விடாமற் பருகுவது கண்டு பொறுமல், பிறிதோர் கடலுக்குச் சென்று தான் பருகும் வேலையைச் செய்யப் புறப்பட்டது என்று கூறி, வடவைகொண்ட பொறுமைக்குப் புலவர்கள் தம்பேரன்ற புலவர்மாட்டுக் கொள்ளும் பொறுமை குறிக்கப்பட்டது. ஒரு புலவன் பிறிதொருவனிடம் கொள்ளும் பொறுமையை, 'வித்வத் காய்ச்சல்' என்பர். கொற்றவன் கடல்நீர் சுட்டதனுல் அதில் இருந்த வடவைத்தீ அக்கடலினின்று பிறிதொரு கடலேயடைய வெண்ணியது என்றார், ஒருதீ பிறிதொன்றைச் சுடுதல்; 'கனிந் துயர் கற்பெனுங் கடவுட் டீயினுல் நினைந்திலே யென்வலி நீக்கினு யென' (யுத்த. மீட்சிப். 89); தீக்களுள் மிகக்கொடியதான வடவை இராமபிரான் அம்பின தீக்கு அஞ்சி ஓடிற்று என்றது தொனி. கொற்றவன் இராமபிரான், 'யாதுகொற்றவனேவிய ததுசெயலன்றோ நீதியெற்கு' (அயோத்தி. மந்திர. 70); 'கொற்றவற் காண்டுக் காட்டிக் கொடுத்த போது' (சுந்தர. 523). படைக்கலம் குடித்தல்: 'உண்டற் குரிய வல்லாப் பொருளை யுண்டனபோலக் கூறலுமரபே' (தொல். பொருள். 19). வடவை: 'வடவேலே பருகும்தீ' (ஆரணிய. 26); வேற்றுப் பொருள்வைப்பணி. நெடுங்கடல் பருகும் பாவகன்; (ஆரணிய. 1144); மற்றும், சுந்தர. 904 உரைக் குறிப்பும் காண்க.

பி - ம். 1. உணர்வில்; காண்கிலாக்.

2. கொற்றவன் படைத்தநீக், புடைத்தநீக்; குடிக்க, குளித்த.

3. பதைத்து; ஓடி.



587. வாழிய ருலகினை வளைத்து வானுறச்
சூழிரும் பெருஞ்சுடர்ப் பிழம்பு தோன்றலால்
ஊழியி னுலகெலா முண்ண வோங்கிய
ஆழியிற் பொலிந்ததவ் வாழி யன்னநாள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உலகினை வளைத்து - நிலவுலகைச் சூழ்ந்துகொண்டு, வான் உற சூழ் இரு பெரு சுடர் பிழம்பு - ஆகாயத்திலும் பொருந்து மாறு சுற்றிய பெரிய அனற்றெகுதி, தோன்றலால் - காணப்பட்ட தால், அ ஆழி - அந்தக் கடல், ஊழியின் உலகு எலாம் உண்ண ஓங்கிய - ஊழிக்காலத்தில் உலகம் முழுவதையும் அழிக்குமாறு உயர்ந்த, ஆழியில்-பிரளய வெள்ளத்தைப்போன்று, அன்ன நாள்- அந்த நாளில், பொலிந்தது - விளங்கிற்று. வாழியர் - அசை.

ஊழிமுடிவில் கடல் மேலிட்டுத் தரையை அழிக்கும் என்பது புராண வரலாறு. 'ஆழி உலகை அழிக்கும்' (திருவரங்கத்து மாலை). ஆழியில், இல் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொருள். ஆழி முன்னது கடல், பின்னது இலங்கைக்கடல்; ஆழி, பெரும்புறக் கடல் என்பாரும் உளர். ஆழியிற் பொலிந்தது; ஆழி - சக்கரா யுதம் என்பது பழையவுரை.

பி - ம். 1. வாழிய வுலகினை ; வளைந்த.
2. சுடர்பிழம்பு.
4. பொலிந்தவவ் வாழியந்த. 54

588. ஏனைய ரென்னவே றுலகி னீண்டினர்
ஆனவர் செய்தன வறைய வேண்டுமோ
மேனிமிர்ந் தெழுகனல் வெதுப்ப மீதுபோய்
வானவர் மலரய னுலகின் வைகினர்.

வானவர் - தேவர்கள், மேல் நிமிர்ந்து எழு கனல் வெதுப்ப - மேல்நோக்கி உயர்ந்து எழுந்த தீ வாட்டியதனால், மீதுபோய் - பின்னும் மேலேபோய், மலர் அயன் உலகின் வைகினர் - தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனுக்குரிய சத்தியலோகத்திற் சென்று தங்கினர்; ஏனையர் என்ன வேறு உலகின் ஈண்டினர் ஆனவர் - (இவர்கள் நிலையே இங்ஙனமாக) இவர்களல்லாத பிறர் என்று சொல்லப்பெறும் பிற உலகங்களில் நெருங்கி யிருந்தவர் எனப்படுகின்ற மனிதர்கள், செய்தன அறைய வேண்டுமோ - புரிந்தவற்றைக் கூறவும் வேண்டுமோ?

ஈண்டுதல் - நெருங்குதல்; 'ஈண்டு தம்கிளை யோடு மெரித் திடும்' (சீவக. 250). இச்செய்யுள் தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வானவர் வதியும் உலகத்தின் மேலுள்ளது பிரமன் உறையும் சத்தியலோகம் என்பராதலின், பூலோகம் முதலாக எண்ண 7வது இந்த உலகென்ப. 'மீதுபோய் வானவர் மலர் அயன் உலகு' எனப்பட்டது; (ஒப்பு): 'அண்ட நெடுமுகட் டிருந்த முன்னோன், அன்றவ னுந்திவந்தா னெனத் தோன்றி னானல்' (யுத்த. 266).

பி - ம். 1. ஏனைய : என்னரி, ஏன்னா. 55

## இரமபிரான் பிரமாத்திரம் விடுக்கத் தொடங்குதல்

589. இடுக்கினை யெண்ணுவ தென்னை யீண்டினி
முடுக்குவன் வருணனை யென்ன மூண்டெழு
தடுக்கரு வெகுளியான் சதுமு கன்படை
தொடுத்தன னமரருந் துணுக்க மெய்தினர்.

'ஈண்டு இடுக்கினை எண்ணுவது என்னை - (இனி இதனால் நிகழும்) துன்பத்தைக் குறித்து இப்போது கருதுவதென்? இனி - இனி, வருணனை முடுக்குவன் என்ன - வருணனை இங்கு விரைந்து வரச்செய்வேன்' என்று, மூண்டு எழு தடுக்க அரு வெகுளியான் - பொங்கி எழுகின்ற தடுத்தற்கியலாத சினமுடையவன் ஆன இராமபிரான், சதுமுகன் படை தொடுத்தனன் - பிரமாத்திரத்தை ஏவ எண்ணினன், (அது கண்டு) அமரரும் துணுக்கம் எய்தினர் - தேவர்களும் நடுக்கம் உற்றனர்.

(முன் பல அம்புகளை ஏவியும் மூன்று நாட்கள் குறையிரந்து கிடந்தும் வருணன் வெளிவராமையின்) இராமபிரான் சினங் கொண்டு வருணன்மீது பிரமாத்திரம் தொடுத்தனன் என்க. மிகவும் கொடிய அத்திரமாதலின், இலக்குவன் அதனை விட வேண்டாம் என்று கூறினன் என்றும், அதனையும் பொருட்படுத் தாது இராமபிரான் ஏவினன் என்றும் முதனூல் கூறும். இடுக்கு - இடுக்கண் என்பதன் திரிபு; இங்கு, பிரமன் கணையைத் தொடுப்ப தால் நிகழக்கூடிய பல்விதத் துன்பங்கள். 'இடுக்கிவ ணியம்புவ தென்னை' (யுத்த. 38). முடுக்குவன் - ஒளிந்துறையும் வருணனை விரைந்து வெளிவருமாறு செய்வேன் என்றான். முடுக்குதல் - விரைதல்; 'முடுக்கி வந்து' (உத்தர. இலங்கையழி. 20). சது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முகன் - பிரமன். அமரரும்: உம்மை உயர்வு சிறப்பு; (ஒப்பு): 'ஒக்க நோக்கிய யோர்கரு மருந்துய ருழந்தார்' (அயோத்தி. நகர்நீ.: 215).

பி - ம். 1. என்னுவதில்லே, இயம்புவ லென்னே யவ்வழி.

2. மூண்டதோர், மூண்டெதிர்.

3. வெகுளியால்; சதுர்முகன். 56

## பிரமாத்திரம் விடுக்கத் தொடங்குகையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள்

590. மழைக்குலங் கதறின வருணன் வாயுலர்ந்
தழைத்தன னுலகினி லடைந்த வாறெலாம்
இழைத்தன நெடுந்திசை யாதும் யாவரும்
பிழைப்பில ரென்பதோர் பெரும்ப யத்தினுல்.

மழைக்குலம் கதறின - (அக்காலத்து) மேகக்கூட்டங்கள் உரக்க ஒலித்தன; வருணன் வாய் உலர்ந்து அழைத்தனன் - வருணன் வாய்புலர்ந்து கூவியழைத்தான்; உலகினில் ஆறு எலாம் அடைந்த - உலகில் உள்ள எல்லா நதிகளும் தூர்ந்தன; நெடு திசை யாதும் யாவரும் - நீண்ட திக்குகளில் உள்ள அஃறிணைப் பொருள்களும் உயர்திணைப் பொருள்களும் ஆகிய அனைத்தும், பிழைப்பிலர் என்பதோர் பெரும் பயத்தினுல் - உயிர் தப்புதல் இலராவர் என்னும் பேரச்சத்தினுல், இழைத்தன - எண்ணத்தொடங்கின.

வருணன் வாயுலர்ந்து அழைத்தனன் - இராமபிரானுல் பிரமாத்திரம் விடப்பட்டது என்பதை அப்பொழுது உணராது, அதன் கொடுமையால் தாக்கப்பெற்று வாயுலர்ந்து கூவினன் என்க. அடைதல் - முடிந்து தீர்தல்; ஒருவரை இறந்த ஞான்று அடைந்தனர் என்று கூறும் மரபு காண்க. யாதும் யாவரும் பிழைப்பிலர் என்று அஃறிணையும், உயர்திணையும் கலந்து உயர் திணை முடிபு பெற்றது திணைவழுவமைதி. இதனைப் 'பலவயி னுனும் எண்ணுத்திணை விரவுப்பெயர்' (தொல். சொல். 51)-ஆம் சூத்திரத்துப் பலவயினுனும் என்றமையான், திணைவிராய் உயர் திணையான் முடிந்தது; 'திணைபால் பொருள்பல விரவின சிறப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பினும், மிகவினு மிழிபினு மொருமுடி பினவே' (நன். பொது. 27) என்ற சூத்திரச் சிறப்புப்பற்றி உயர்திணையான் முடிந்தது; (ஒப்பு): 'பொன்னனும் குதிரையும் வந்தார்கள்' இழைத்தல் - மனத்தாற் சூழ்தல்; 'சாந்துடை மார்பன் தாதை தன்மனத் திழைக்கினுனே' (சீவக. 1089)-உம், 'தன்மனத்தே சூழா நின்றான்' என்ற அதன் உரையும் காண்க.

பி - ம். 1. வாய் புலர்ந்து.

2. உலகமு மடைத்த.

3. நூறெலாம் யாதும் யாரினிப், யாமினி.

4. பிழைப்பரிது. 57

வேறு

591. அண்டமூ லத்துக் கப்பால் ஆழியுங் கொதித்த தேழு
தெண்டிரைக் கடலின் செய்கை செப்பியென் றேவன் [சென்னிப்
பண்டைநா ளிருந்த கங்கை நங்கையும் பதைத்தாள் [பார்ப்பான்
குண்டிகை யிருந்த நீருங் குளுகுளு கொதித்த தன்றே.

அண்ட மூலத்துக்கு அப்பால் ஆழியும் கொதித்தது - (அப்போது) அண்டகோளத்தின் அடிக்கு அப்பால் சூழ்ந்து உள்ள ஆவரணக் கடலும் கொதிகண்டது; ஏழு தெண் திரை கடலின் செய்கை செப்பி என் - ஏழாக எண்ணப்பட்ட தெள்ளிய அலைகளையுடைய கடற்கண் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் குறித்துச் சொல்லி ஆவது என்ன? தேவன் - சிவபெருமானுடைய, சென்னி - சிரத்தில், பண்டை நாள் இருந்த கங்கை நங்கையும் - பழங்காலந் தொட்டு இருந்த கங்கா தேவியும், பதைத்தாள் - நடு நடுங்கினாள்; பார்ப்பான் - பிரமதேவனுடைய, குண்டிகை இருந்த நீரும் குளுகுளு கொதித்தது - கரகத்தில் இருந்த நீரும் குளு குளுஎன்ற சத்தத்துடன் கொதிப்புக் கண்டது. அன்றே - ஈற்றசை.

முதலடிக்கு: 'அண்டத் தைப்பொதுத் தப்புறத் தப்பினு லாடும்' (யுத்த. 133); 'மரபின் மாபெரும் புறக்கடல் மஞ்சன மருவி' (யுத்த. 134); இந்தப் புறக்கடல் வேலை ஏழினும் வேறு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்பது இரண்டாவது அடியாற் றெரியவரும். தேவன் - சிவபிரான்; 'தேவர் கண் தேவன்' (கிட்கிந்தா. 960). பிரமன் கணையை வருணன்மீது விட்ட அளவில் ஏழுலகங்களிலும் ஆங்காங்கிருந்த நீர்த்தொகுதிகள் எல்லாம் கொதிக்கத் தொடங்கின; புறக் கடலும் சிவபிரான் திருமுடியிலுள்ள கங்கையும் கொதித்தது என்று கூறி, அந்தக் கங்கை நதிக்குக் காரணமான பிரமனது கரக நீரும் கொதித்தது ஆகலின் மற்றைய கடல்களின் கொதிப்பினைக் கூறவும் வேண்டுமோ என்றார். பார்ப்பான் குண்டிகை நீர்; (ஒப்பு): 'தேடுவார் தேட நின்ற சேவடி தானுந் தேடி, நாடுவான் அன்று கண்ட நான்முகன் கழீஇய நன்னீர்' (யுத்த. 456). குளுகுளு - அடுக்கு; கடல் இனம் என்பதுபற்றி அண்டத்துக் கப்புறக் கடல் கொதித்தது, கடலிற் சங்கமமாகும் தொடர்புபற்றிக் 'கங்கையும் கொதித்தது. அந்தக் கங்கையை ஒருகால் தன்னிடம் கொண்ட பார்ப்பான் குண்டிகை நீரும் கொதித்தது என்றது தொடர்புயர்வு நவிற்சியணி.

பி - ம். 1. அண்டமு முலகத் தப்பால்; கொதித்தவேழு.

4. கொளு கொளு, கொள கொள. 58

592. இரக்கம்வந் தெதிர்ந்த காலத் துலகெலா மீன்று மீளக்
கரக்குநா யகனைத் தானு முணர்ந்திலன் சீற்றங் கண்டும்
வரக்கரு தாது தாழ்த்த வருணனின் மாறு கொண்டார்
அரக்கரே நல்ல ரென்னு வறிஞரு மலக்க முற்றார்.

'இரக்கம் வந்து எதிர்ந்த காலத்து - (தனது திருவுள்ளத்தின் கண்) கருணை பிறந்து எழுந்த காலத்து, உலகு எலாம் ஈன்று மீள கரக்கும் நாயகனை - உலகனைத்தையும் படைத்துத் திரும்பவும் (அவற்றைத் தன்னிடமே) ஒடுங்கச் செய்யும் தலைவனான திருமாலின் அமிசமான இராமபிரானை, தானும் உணர்ந்திலன் - இந்த வருணன் தானும் தெரிந்து கொள்ளவில்லை; சீற்றம் கண்டும் - (அப்பெருமானது) சினத்தை நேரிற் பார்த்தும், வர கருதாது தாழ்த்த - வரவேண்டும் என்று எண்ணாமல் காலதாமதம் செய்த, வருணனின் - வருணனைக் காட்டிலும், மாறு கொண்டார் அரக்கரே - மாறுபாடு கொண்டவரான அரக்கர்களே, நல்லர் - நல்லவர்'; என்னு - என்று, அறிஞரும் அலக்கண் உற்றார் - ஞானிகளும் மனம் வருந்தலானார்கள்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இரக்கம் வந்தெதிர்ந்த காலத்து உலகெலா மீன்று : உயிர்கள் அனைத்தும் கருமத்துக் கீடாகப் பிறக்க வேண்டுதலின், அவைகட் குத் தனுகரண புவனபோகங்களை அளிப்பவன் இறைவன் ஆகலின் உலகெலாம் ஈன்று எனப்பட்டது ; (ஒப்பு) : 'ஆரியன் குலாலனைய் நின் ருக்குவ னகில மெல்லாம் 'ஞாலமே ழினையும் தந்து இறைவன் ஆற்றும் ஐந்தொழில்களும் 'பார்த்திடின் அருளே எல்லாம்' சிவ. சித்தி. 18 : 37) ; என்று கூறப்படுதலின் இரக்கம் வந்தெதிர்ந்த காலை' எனப்பட்டது. உலகெலா மீன்று மீளக் கரக்கு நாயகன், உலகம் யாவையும் தாமுள வாக்கலும், நிலை பெறுத்தலும் நீக் கலும் நீங்கலா, அலகிலா விளையாட்டு' (பால. கடவுள்.) ; அரக்கர் என்றும் வைரிகள் ஆவர். உதவியாற்ற வேண்டிய வருணனும் நம்மைப் புறக்கணித்தான். இவ்வாறு புறக்கணித்தவன் அரக்க ரிலும் கொடியன் என்று பலரும் வருந்தினர் ; (ஒப்பு) : 'நீசனே நீசன் நினையுங்காற் சொற்றவனும் நீசனே நீசன் அவனையே - நீசப்—புலையனு மென்றுரைக்கும், புல்லியனே மேலாம் புலையன்' நீதிவெண்பா. 24) என்க. ஏ - வினு. நாழ்ந்தல் ; 'ஊறுமா நோக்கித் தாழ்த்தான்' (கிட்கிந்தா. 606). அலக்கண் - துன்பம் ; (யுத்த. 590) ; 'அலக்க ணுற்றேற் காற்றுவதற் கடைவுண் டன்றே' (கிட்கிந்தா. 31) ; 'அன்னுள் ஆண்டுற்ற வலக்க ணேக்கின்' (ஆரணிய. 870) ; 'ஆவா அலக்க ணுறுவாள்' (ஆரணிய. 959) ; இச் செய்யுளால் ஆக்கல், அளித்தல், அழித்தலாகிய முத்தொழில்களுக்கும் உரியவன் இராமபிரான் என்ற கம்பர் மதம் வெளியாவதும் காண்க.

பி - ம். 1. இரக்கம் வந்துற்ற காலத்.
2. உணர்ந்திவன்.
3. மாறு கொண்ட.
4. அறிஞ ரென்னு வமரரும்.

59

593. உற்றெரு தனியே தானே தன்கணே யுலக மெல்லாம்
பெற்றவன் முனியப் புக்கான் நடுவினிப் பிழைப்ப [தெங்ஙன்
குற்றமொன் றிலாதோர் மேலுங் கோள்வரக் குறுகு மென்னு
மற்றைய பூத மெல்லாம் வருணனை வைத மாதோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'ஒரு தனியே தானே உற்று - தானே தன்னந்தனியனாய் மனத்துள் கருதி, தன்கணே உலகம் எல்லாம் பெற்றவன் - தன்னுள்ளே உலகங்களனைத்தையும் ஈன்றவனான பராபரன், முனிய புக்கான் - சினம்கொள்ளத் தொடங்கினான்; இனி நடு பிழைப்பது எங்ஙன் - இனி இவ்விடையில் பிழைப்பது எவ்வாறு? குற்றம் ஒன்று இலாதோர் மேலும் - (குற்றம் இழைத்தவர்மீது மட்டுமன்றி) குற்றம் ஒன்றும் புரியாதவர் மேலும், கோள்வர குறுகும் என்னா - தீங்கு வந்தடையும்' என்று, மற்றைய பூதம் எல்லாம் - ஏனைய பூதங்கள் எல்லாம், வருணனை வைத - வருணபகவானை வைதன. மாது, ஓ - அசைகள்.

வருணன் காரணமாகத் தங்கட்கும் நாசம் உறுமோ என்று நிலம், தீ, வளி, ஆகாயம் என்ற ஏனைய பூதங்களும் வருணனை வைதன எனப்பட்டது. தன்கணே உலகமெல்லாம் பெற்றவன்: 'தன்னுளே யுலகங்கள் எவையும் தந்து' (யுத்த. 188). ஊழிப் பிரளயத்துச் சராசரமனைத்தும் சூக்குமவுருவில் மூலப்பிரகிருதியில் ஒடுங்கும். பின்னர், இக் கரும பூமியில் தாம் தாம் புரிந்த கன்மத்துக்கிடாகப் பிறக்கும்; அந்த உயிர்கட்குத் தனுகரண புவனபோகங்களைப் பரமன் உதவுவன். இஃதன்றி உயிர்களைப் படைத்தல் என்பது இல்லை; இறைவன் அநாதி, கன்மம் அநாதி அதேபோன்று உயிர்களும் அநாதி என்பராதலின், 'தன்னுளே திரைத்தெழுந் தரங்கவெண் டடங்கடல், தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல், நின்றுளே யடங்குகின்ற நீர்மை நின்கணின்றதே' (திருச்சந். 10). பெற்றவன்......................பிழைப்பதெங்ஙன்; ஒப்பு: 'மருந்தின்று, மன்னவன் சீறில் தவறுண்டோ' (கலி. 89 : 10). சில பிரதிகளில், கடல் சீறிய படலம் இச்செய்யுளுடன் முடிவடைகிறது.

பா - ம். 1. உலகம் யாவும்.

2. முனியப் பெற்றால்; நடுவினிற்; பிழைப்ப துண்டோ, தெங்கே.

3. குற்றமொன் றில்லா.

4. மற்றையப். 80

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வருணன் தோற்றம்

594. எழுசுடர்ப் படலை யோடும்
இரும்புகை யெழும்பி யெங்கும்
வழிதெரி வறிவிலாத நோக்கினன்
வருண னென்பான்
அழுதழி கண்ண னன்பா
லுருகிய நெஞ்ச னஞ்சித்
தொழுதெழு கைய னெய்திற்
றோன்றினன் வழுத்துஞ் சொல்லான்.

எழு சுடர் படலையோடும் இருபுகை எழும்பி - மேல்நோக்கி எழுகின்ற சுவாலைத் தொகுதியுடன் கிளம்பி கரிய புகையும் மேல் எழுந்து, வழி தெரிவு அறிவிலாத நோக்கினன் - வழியைக் காண்டற்கரிய விழிகளையுடைய, வருணன் என்பான் - வருணபகவான், அழுது அழி கண்ணன் - அழுவதனால் பொலிவிழந்த கண்களை யுடையவனும், அன்பால் உருகிய நெஞ்சன் - அன்பால் உருகுகின்ற உள்ளத்தை யுடையனுமாகி, அஞ்சி - பயந்து, தொழுது எழு கையன் - வணக்கம் கொண்டுயர்கின்ற கைகளையும், வழுத்தும் சொல்லான் - தோத்திரம் செய்யும் சொற்களையும் கொண்டவனாய், நொய்தில் தோன்றினன் - (இராமபிரான்) முன்பு விரைவில் காணப் பட்டான்.

சுடர்ப்படலை - தீத்தொகுதி; 'காயெரிப் படலை' (யுத்த. 595); 'மூடின இருட்படலை மூவுலகு மஞ்ச' (ஆரணிய. 599); வழுத்துஞ் சொல்லான் தோன்றினன் என்க. தொழுதெழு: 'கொழுநற் றொழு தெழுவாள்' (குறள். 55); இதற்கு எழுந்து தொழுவாள் என்று முன்பின்னாகக் கூட்டிப் பொருள் கூறுவர் பிரயோக விவேகமுடையார். இக் குறட்குப் பரிமேலழகர் உரையும் அதன் கீழ்க்குறிப்பும் இங்குக் காணத்தகும். புகை மிகுந்த நிலையில் வழி காண இயலாதபடி தயங்கினன் வருணன் என்க. சில பிரதிகளில் இச் செய்யுள் முதல் வருண னடைக்கலப் படலம் தொடங்கும்.

பி - ம். 1. இரும்புகை நிரம்பி, நெருங்கி.
2. அறிவிலாதான், அறிகிலாத.
4. தொழுதுயர்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வருணன் கூற்று

595. நீயெனை நினைந்த தன்மை
நெடுங்கடன் முடிவி னின்றேன்
ஆயினே னறிந்தி லேனென்
றண்ணலுக் கயிர்ப்பு நீங்கக்
காயெரிப் படலை சூழ்ந்த
கருங்கடற் றரங்கத் தூடே
தீயிடை நடப்பான் போலச்
செறிபுனற் கிறைவன் சென்றான்.

'நெடு கடல் முடிவின் நின்றேன் ஆயினேன் - பரந்த கடலின் ஓர் புற எல்லையில் நின்றுகொண்டிருந்தேன்; (ஆகவே), நீ எனை நினைந்த தன்மை அறிந்திலேன் - நீ என்னை எண்ணிய தன்மையை உணர்ந்தேனில்லை'; என்று - என்று மொழிந்துகொண்டே, செறி புனற்கு இறைவன் - நெருங்கிய கடல் நீருக்குத் தலைவனான வருணன், அண்ணலுக்கு அயிர்ப்பு நீங்க - இராமபிரானுக்குத் தன்பால் எழுந்த ஐயம் அகலுமாறு, தீ இடை நடப்பான் போல - நெருப்பின்மீது நடந்து செல்பவன் போன்று, காய் எரி படலை சூழ்ந்த - கொதிக்கும் தன்மையுள்ள நெருப்புத்தொகுதி சூழ்ந்த, தரங்க கரு கடல் ஊடே - அலைகளுடன்கூடிய கரிய கடலின் குறுக்காக, சென்றான் - வந்தான்.

வருணன் கூவிக்கொண்டே வந்தனன் என்க. அண்ணலுக் கயிர்ப்பு நீங்க: பிறர் தம்மீது ஐயம்கொண்ட வழித் தம்மீது குற்றமில்லை என்று காட்டற்குத் தீயில் இறங்குதல் உண்டு. சாதாரணமாக எரிசூழ்ந்த நீரின்ஊடே வந்தான் என்பதைக் காரணம் கற்பித்து அயிர்ப்பு நீங்க எனப்பட்டது; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. யுத்த. 606-ஆம் செய்யுள் காண்க. சென்றான் - வந்தான்; 'செல் விருந்தோம்பி' (குறள். 86) உரை காண்க.

பி - ம். 1. நீயென; நின்றே.
2. நின்ற தாயினேன்.
3. காயெரி படலை.
4. நடப்பா னென்ன.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## வருணன் இராமபிரானை அடைதல்

596. வந்தன னென்ப மன்னே
  மறிகடற் கிறைவன் வாயிற்
சிந்திய மொழியன் றீந்த
  சென்னியன் றிகைத்த நெஞ்சன்
வெந்தழிந் துருகு மெய்யன்
  விழுப்புகைப் படலம் விம்ம
அந்தரி னலமந் தஞ்சித்
  துயருழந் தலக்க ணுற்றான்.

மறி கடற்கு இறைவன் - அலைகள் கரைக்கண்மோதி மடங்குகின்ற கடலுக்குத் தலைவனான வருணன், வாயில் சிந்திய மொழியன் - வாயினின்றும் வெளிப்படுகின்ற சொற்களை யுடையவனும், தீந்த சென்னியன் - எரிந்து கருகிய தலையினை யுடையவனும், திகைத்த நெஞ்சன் - திடுக்கிட்ட உள்ளத்தை யுடையவனும், வெந்து அழிந்து உருகும் மெய்யன் - வெந்து உருக்குலைந்து கரைந்துபோன உடலை யுடையவனுமாகி, விழு புகை படலம் விம்ம - மிக்க புகைத்தொகுதிகள் சூழ்ந்து நிறைந்ததனால், அந்தரின் அலமந்து அஞ்சி - குருடரைப்போல மனம் சுழன்று பயந்து, துயர் உழந்து அலக்கண் உற்றான் - துன்பத்தால் வருந்தி மிக்க இடர்ப்பாட்டினைப் பொருந்தியவனாய், வந்தனன் என்ப - இராமபிரான் திருமுன்பு வந்தான் என்ப. மன், ஓ - அசைகள்.

சிந்திய மொழியன், தீந்த சென்னியன், திகைத்த நெஞ்சன் வடமொழிநடை. பரபரப்புடன் பேசும் நிலையில் நிதானம் தவறிச் சொற்கள் வெளிவந்தன என்பது காட்டச் சிந்திய மொழியன் எனப்பட்டது. வருணனுடைய மனம், மொழி, மெய்கள் யாவும் பேரலக்கணுற்றமை இங்கே தெரிக்கப்பட்டது. அலமருதல் - மனம் சுழலல்; 'அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி' (தொல். உரி. 11). அலக்கண் - துன்பம்; இப்படலம் 62-ஆம் செய்யுள் பார்க்க. அந்தர் - அந்தகர், குருடர்; 'அந்தர் வந்தென

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வந்திதன் கைதர' (அயோத். கிளைகண்டு. 14); 'அந்தர் கரமுற்ற தடியன்றி யறியார்' (திருவாத. பு. புத்தரை. 79).

பி - ம். 2. நீய்ந்த நெஞ்சன்.
3. புகைப் படலை.
4. அந்தரின் வலம்வந் தஞ்சி. 63

## வருணன் இராமபிரானிடம் பணிதல்

597. நவையறு முலகிற் கெல்லாம்
நாயக நீயே சீறிற்
கவையம்நின் சரண மல்லாற்
பிறிதொன்று கண்ட துண்டோ
இவையுனக் கரிய வோதா
னெனக்கென வலிவே றுண்டோ
அவயம்நின் னவய மென்னு
வடுத்தடுத் தரற்று கின்றான்.

'உலகிற்கு எல்லாம் நாயக - உலகங்கட்கெல்லாம் தலைவனே! நவை அறும் நீயே சீறில் - எந்தவிதமான குற்றங்களு மில்லாத (குணக்கடலாகிய) நீயே இவ்வாறு வெகுண்டால், நின் சரணம் அல்லால் கவயம் பிறிது ஒன்று கண்டது உண்டோ - உன்னுடைய பாதவிணைகள் அன்றி எனக்குக் காப்பாகிய கவசம் வேறு ஒன்று காணக்கூடுமா? இவை உனக்கு அரியவோதான் - (உயிர்களைக் காப்பதுபோன்ற) யாவும் உனக்கு ஓர் அருமையான பொருளோ! எனக்கு என வலி வேறு உண்டோ - (நீ கொடுத்த வலியே யன்றி) உன்னை எதிர்க்கக்கூடியதாக எனக்குத் தனித்து ஓர் வன்மை யுள்ளதா? (இல்லையே), அவயம் நின் அவயம் என்னு - அபயம்! நான் நினக்கு அபயம்!' என்று, அடுத்து அடுத்து அரற்று கின்றான் - அடுத்தடுத்து (இடைவிடாது) கூக்குரலிட்டனன்.

கவயம் - கவசம் என்ற வடசொல் யகரம் பெற்று வந்தது. இது இலக்கணையால் பாதுகாப்பு என்ற பொருளில் வந்தது. அபயம் என்ற வடசொல் அவயம் என வந்தது.

பி - ம். 1. நாயக னீயே.
2. கவயன்.
4. எடுத் தெடுத்து. 64

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வருணன் துதி

598. ஆழிநீ யனலு நீயே
யல்லவை யெல்லா நீயே
ஊழிநீ யுலகு நீயே
யவற்றுறை யுயிரும் நீயே
வாழியா யடியே னின்னை
மறப்பனோ வயங்கு செந்தீச்
சூழுற வுலைந்து போனேன்
காத்தருள் சுருதி மூர்த்தி.

(வருணன் இராமபிரானை நோக்கி), 'சுருதி மூர்த்தி - வேதங்களால் மேலான பொருளாகப் புகழப்படுகின்ற சுவாமி! ஆழி நீ அனலும் நீயே - கடலும் நீ, தீயும் நீயே; அல்லவை எல்லாம் நீயே - ஏனைப் பூதங்களும் நீயே; ஊழி நீ - உலகினை அழிக்கும் ஊழிக்காலமும் உன்னிடம் நின்று வெளிப்படுவதே; உலகும் நீயே - உலகவடிவானவனும் நீயே; அவற்று உறை உயிரும் நீயே - அவ்வுலகங்களினிடத்துத் தங்கும் உயிர்களுக்குயிராய் இருப்பவனும் நீயே; வாழியாய் - என்றும் அழியாது வாழ்ந்திருப்பவனே! நின்னை அடியேன் மறப்பனோ - நின்னை அடியேனாகிய நான் மறப்பேனோ? வயங்கு செந்தீ சூழுற உலைந்து போனேன் - ஒளியுடன் விளங்குகின்ற சிறந்த நெருப்பானது என்னைச் சூழ்ந்து பொருந்த மனம் வருந்தலானேன்; காத்தருள் - புரந்தருள்வாயாக.

இதுமுதல் 6 பாடல்கள் வருணன் துதியாக அமைந்துள்ளன. எங்குமா யாவுமாய் நிற்கும் பரம்பொருளின் தன்மை இச்செய்யுளிற் கூறப்பட்டது. 'அண்டம் பலவு மனைத்துயிரு மகத்தும் புறத்து முளவாகி, உண்டு முமிழ்ந்து மளந்திடந்து முள்ளும் புறத்து முளையாகி' (யுத்த. பிரமாத்திர. 226); (ஒப்பு): 'சோதிநீ சோதிச் சுடர்ப் பிழம்புநீ' (ஆரணிய. 1175); 'ஏழுலகு மானான் றன்னை, யேழ்கடலு மேழ்மலையு மானான் தன்னைக், காற்றானைத் தீயானை நீருமாகி' (தேவா. 722 : 3). சுருதி மூர்த்தி; 'சுருதிநூல் வல்லன்' (கிட்கிந்தா. 204); 'நன்னூற் கெல்லா மிறைவன்' (கிட்கிந்தா. 311); 'வேத நாயகன்' (யுத்த. அங்கதன். 21; கும்ப. 324); 'சுருதி நாயகன்' (சுந்தர. 338, 632, 1107).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. அல்லவும்.

3. உன்னே; வையங்கும் செந்நி, செந்நீ.

4. நூழுறந் தொலைந்து.

65

599. காட்டுவா யுலகங் காட்டிக்
காத்தவை கடையிற் செந்தீ
யூட்டுவா யுண்பாய் நீயே
யுனக்குமொண் ணாத துண்டோ
தீட்டுவான் பகழி யொன்றி
லுலகங்க ளெவையுந் தீய
வீட்டுவாய் நினையி னாயேற்
கித்தனை வேணு மோதான்.

'காட்டுவாய் - உலகத்தை எல்லாம் படைப்பவனே! உலகம் காட்டி - அவ்வுலகங்களைத் தோற்றுவித்து, காத்து - புரந்து, அவை கடையில் செந்தீ ஊட்டுவாய் - அவை இறுதிக்காலத்து அழியுமாறு ஊழிச் செந்தியால் எரியுமாறு செய்வாய்; உண்பாய் நீயே - அவற்றை வயிற்றிடைக் கொள்பவனும் நீயே; உனக்கும் ஒண்ணாதது உண்டோ - உன்னால் இயலாத காரியமும் உள்ள தாமோ? தீட்டுவான் பகழி ஒன்றால் - நன்கு தீட்டிக் கூராக்கப் பெற்ற சிறந்த அம்பு ஒன்றினால், உலகங்கள் எவையும் தீய - எவ்வகை யுலகமும் நெருப்புண்ணுமாறு, வீட்டு வாய் - அழிக்க வல்லவனே! நினையின் - எண்ணுமிடத்து, நாயேற்கு - என் பொருட்டு (உலகினையழிக்க நினைப்பதான), இத்தனை வேணுமோ - இத்தனை வெகுளியும் வேண்டப்படுவதா? தான் - அசை.

மும்மூர்த்திகளின் செயல்களும் இவனிடமே அமைந்துள்ளன என்று கூறுவது இச்செய்யுளாகும். 'உலகம் யாவையும்' என்று கூறும் பாயிரச் செய்யுட்கருத்து இங்கு அமைந்துள்ளமை காண்க. காட்டுவா யுலகம் காட்டி: 'காட்டிநீ கரந்துமிழும் நிலம் நீர்தீ விசும்புகால்' (திருவாய்மொழி. 4·9·8). முதலிரண்டடிகள் பரமனது எண் குணங்களில் ஒன்றான வரம்பிலாற்றலைக் குறித்தது. குற்றவாளி அடியேனாக, உலகங்களைச் சினம் மூண்டு அழிப்பது தகுமா என்றான் வருணன். அன்றி, 'சர்வ வல்லவனை உங்கள்முன்பு நான் எம்மாத்திரம்? என்மீது இவ்வளவு சினம் வேண்டுமோ' என்றப்படியும் ஆம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. கரந்தவை.

3. உலகங்களவ் மூன்றும்.

4. நியுநா யோற்கு ; இந்துனோ.

66

600. சண்டவான் கிரணம் வாளாற்
றயங்கிருட் காடு சாய்க்கும்
மண்டலத் துறையுஞ் சோதி
வள்ளலே மறையின் வாழ்வே
பண்டைநான் முகனே யாதி
சராசரத் துள்ள பள்ளப்
புண்டரீ கத்து வைகும்
புராதன போற்றி போற்றி.

'சண்டம் வான் கிரணம் வாளால் - உக்கிரமான சூட்டினுற் சிறந்த ஒளியுடன்கூடிய வாளினைக்கொண்டு, தயங்கு இருள் காடு சாய்க்கும் - திகைத்தற்குக் காரணமான இருட்காட்டினை அழித்துப் போக்கும், மண்டலத்து உறையும் சோதி வள்ளலே - சூரிய மண்டலத்தின் நடுவில் பொருந்தி நிற்கும் ஒளிவடிவான கருணையனே! மறையின் வாழ்வே - வேதங்கட்கு இருப்பிடமானவனே! பண்டை நான்முகனே ஆதி - பழமையான நான்முகனே முதலான, சர அசரத்து உள்ள - இயங்குபொருள் நிலைத்திணைப் பொருளுடன் கூடிய, பள்ள புண்டரீகத்து வைகும் - ஆழ்ந்த தாமரையுடன் நிலைபெற்றுள்ள, புராதன போற்றி போற்றி - பழமையானவனே! வணக்கம் வணக்கம்!

சண்டம் - வலிமை: இங்கே வெப்பத்தின் வன்மை; 'பல்லாயிரகோடி சண்ட தூணங்கள் போன்றன' (வி. பா. காண்டவ. 38). சண்டம் - பெருமையுமாம்; 'சண்டவெரி' (நக். 63) என்பதற்கு, 'பிரசண்டமான நெருப்பு' என உரை கூறப்படுதல் காண்க. சண்டம்: வடசொல்; 'சண்டம், கூட்டம்' என்பது பழையவுரை. வானத்தினின்று வீசும் ஒளித்தொகுதியும் ஆம். கிரணத்தை வாள் என்றதற்கேற்ப, இருளை மரங்கள் என்று கூறுமையின் இது ஏகதேசவுருவகம். கிரணம் வாள் என்பதனைக் கிரணமாகிய ஒளியென்றே கொண்டு அந்த ஒளி இருட்காட்டை யொழித்தது எனக் கோடலுமாம். வாள் - ஒளி; (தொல். சொல். 367). தயங்கிருள் - விளங்கும் இருளுமாம்; (ஒப்பு): 'மன்னுசெங் கதிரோன் றன்னை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மயங்கிருட் குழாமென் செய்யும்' (குசேலோ. வைகுந்த. 20). சாய்த்தல் - அழித்தல்; 'மல்லரை மறஞ்சாய்த்த' (கலித். 134). மண்டலத் துறையும் சோதிவள்ளல்; 'சௌரமண்டல மத்யஸ்தம்' என்பது வேதம். சராசரம்: சர, அசரம் வடமொழித் தீர்க்கசந்தி. சராசரத்துள்ள பள்ள புண்டரீகம்; உயிர்களின் ஹிருதயகமலங்கள்; 'மலர்மிசை ஏகினன்' (குறள். 3). பிரமனையும் உயிர்களையும் தன்னுள் கொண்ட புண்டரீகத்தைத் தன் நாபியிற் கொண்டவன் எனினும் ஆம்.

பி - ம். 1. சீய்க்கும்.

3. உள்ளப்பள்ளப். 07

601. கள்ளமா யுலகங் கொள்ளுங்
கருணையாய் மறையிற் கூறும்
எள்ளலா காத மூலத்
தியாதுக்கு முதலா யீறில்
வள்ளலே காத்தி யென்ற
மாகரி வருத்தந் தீரப்
புள்ளின்மேல் வந்து தோன்றும்
புராதன போற்றி போற்றி.

'கள்ளமாய் - பிறர் அறியாதபடி, உலகம் கொள்ளும் கருணையாய் - உலகினையெல்லாம் மறைத்துக்கொள்ளும் வள்ளலே! மறையில் கூறும் - வேதங்களால் சொல்லப்படுகின்ற, எள்ளல் ஆகாத - எவரும் இகழ்தற்கு முடியாத, மூலத்து யாதுக்கும் முதலாய் - மூலப்பொருள்கள் எனப்படும் எல்லாவற்றிற்கும் ஆதிமூலமாய், ஈறில் வள்ளலே - முடிவில்லாத கருணையனே! காத்தி என்ற - காப்பாயாக என்று அலறிய, மா கரி வருத்தம் தீர - பெரிய கஜேந்திரனுடைய துன்பம் அகலுமாறு, புள்ளின் மேல் வந்து தோன்றும் புராதன போற்றி போற்றி - கருடப்பறவையின்மீது அமர்ந்துவந்து காட்சியளிக்கும் பழமையான பரம்பொருளே வணக்கம் வணக்கம்.

கள்ளமாய் உலகங் கொள்ளுதல்; 'உபநிடதத்துனது, களவை யாய்ந்துறத் தெளிந்திலது' (யுத்த். மீட்சி. 105). ஆதிமூலமே யென்று கதறிய யானைக்கு அருளியவனே என்ற விளி தன்னையும் அதுபோன் றளிக்கவேணும் என்ற குறிப்புக்கொண்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



டிருத்தலின் இச்செய்யுள் கருத்துடையடைகொளியணி. கள்ளமா யுலகம் கொள்ளும் கருணையைச் சைவர் திரோபவம் என்பர். இஃது, ஆன்மா தன் கன்மம் முடியும் வரையில் உலக அனுபவங் களில் உழன்று மயங்கும்படி உண்மையை மறைத்தலைச்செய்யும் அருட்செயலாகும். மூலத்து.............வள்ளலே; 'அண்டமுத ஞயகன்' (சுந்தர. 607); 'ஊழிமுத ஞயகன்' (ஒற்றுக். 4); 'மூவர் தேவரும், எனையவர் ஏனையர் யாவர் யாவையும் நினைவரும் வினை யமும் முடிக்க நின்றுளான்' (சுந்தர. 1117); 'மூலமும் நடுவு மீறு மில்லதோர் மும்மைத் தாய, காலமுங் கணக்கும் நீத்த காரணன்' (சுந்தர. 1122); 'முப்பரம் பொருளிற்குண் முதலை மூலத்தை' (பால. கடிமணப். 69). புள் - கருடப்பறவை. கஜேந்திரனைக் கடவுள் காத்த வரலாறு இந்நூலிற் பலவிடங்களிலும் சுட்டப்பெறும்.

பி - ம். 1. கொள்ளையா; கருணையான்; மறையிற்.
2. யாவர்க்கும்; முதலாயுள்ள.
3. மதகரி. 68

602. அன்னை நீ யத்த னீயே
யல்லவை யெல்லா நீயே
பின்னுநீ முன்னும் நீயே
பேறுநீ யிழவு நீயே
என்னைநீ யிகழ்ந்த தென்ற
தெங்ஙனே யீசனுய
உன்னைநீ யுணராய் நாயே
னெங்ஙன முணர்வே னுன்னை.

அன்னை நீ அத்தன் நீயே - எனக்குத் தாயும் நீ, தந்தையும் நீயே; அல்லவை எல்லாம் நீயே - மற்றும் (எனக்கான) எல்லாப் பொருள்களும் நீயே; பின்னும் நீ முன்னும் நீயே - இறுதியும் நீ முதலும் நீயே; பேறும் நீ இழவும் நீயே - நான் அடையத் தக்கனவும் நீ; நான் இழக்கத் தக்கனவும் நீயே; என்னை நீ இகழ்ந்தது என்றது - என்னைப் பார்த்து இகழ்ந்தாயென்று நீ மொழிவது, எங்ஙனே - எவ்வாறு பொருந்தும்? ஈசனுய உன்னை நீ உணராய் -கடவுளாகிய உன்னை நீயே அறிய மாட்டாய், நாயேன் எங்ஙனம் உன்னை உணர்வேன் - நாய்போல் இழிந்தவனை நான் உன்னை எவ்வாறு உணர்தல் கூடும்?

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'அவர் நமக்கன்னையும் அத்தனுமல்லவோ' (குறுந். 93): அன்னை நீ அத்தனீ - (ஒப்பு): 'அன்னையும் அத்தனும் ஒப்பாய் அழல்வணு நீயலையோ' தேவா. 1199 : 3): 'அத்தனுகி யன்னையாகி யாளுமெம் பிரானுமாய்' (திருச்சந்த. 115); 'பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ' (இயற்பா. பெரியதிருவந். 5). 'அப்பனீ யம்மை நீ' (தேவா. 1228 : 1): அல்லவை யெல்லா நீயே 'எல்லா மாயல்லதுமாய்' (திருவிளை. துதி); பின்னும் நீ முன்னும் நீயே, 'முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே, பின்னைப் புதுமைக்கும் பெயர்த்துமப் பெற்றியனே' (திருவெம். 9); 'பின்னிலன் முன்னிலன் ஒருவன் பேர்கிலன்' (யுத்த. 188); என்ற இடத்தும் இந்தக் கருத்தைக் காணலாம். உன்னைநீ யுணராய்: 'உன்னை நீயுணர்கிலை' (யுத்த. மருத்து. 82); 'உன்னை நீ யொன்று முணர்ந்திலை' (யுத்த. மீட்சிப். 113); 'உன்னை நீ தானு முணரா தாய்' (வி. பா. கிருட்டினன். 36); 'தனக்குந் தன்றன்மை யறி வறியானை' (திருவாய். 8 : 4 : 6): நீயே உன்னை உணராத நிலையில் தான் எவ்வாறு உணர முடியும் என்றான். உருவை யளிக்கும் தாய் தந்தையர் அவ்வப்பிறவிகட்குக் காரணமாகி மறைவர்: அவர் நிரந்தரமாக உதவுவாரும் அல்லர்; வீடு பேறளிக்கவும் வல்லர் அல்லர். 'அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ' என்றார் பட்டினத்தார்; என்றும் கை விடாது கடைபோகும் வகையில் காப்பவன் ஈசன் ஒருவனே என்பது இங்குக் குறிக்கப்பட்டது.

பி - ம். 2. இகழ்வு நீயே.

3. இகழ்ந்தா யென்ற தெங்ஙனம்.

4. நின்னை நீ, நின்னையே; உணரா; உணர்வேன் நின்னை. 68

603. பாயிருள் சீய்க்குந் தெய்வப்
பருதியைப் பழிக்கு மாலை
மாயிருங் கரத்தான் மண்மே
லடியுறை யாக வைத்துத்
தீயன சிறியோர் செய்தாற்
பொறுப்பதே பெரியோர் செய்கை
ஆயிர நாமத் தையா
சரணமென் றடியில் வீழ்ந்தான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பாய் இருள் சீய்க்கும் தெய்வம் பருதியை - பரந்த இருட்டை யழிக்க வல்ல தெய்வத் தன்மை வாய்ந்த சூரியனையும், பழிக்கு மாலை - (தன் ஒளி மிகுதியால்) இகழ்கின்ற பேரொளி வாய்ந்த இரத்தின மாலை யொன்றை, மா இரு கரத்தால் - மிகப் பெரிய தனது கைகளால், (தாங்கி வந்து) மண்மேல் அடி உறை ஆக வைத்து - பூமியின்மேல் (இராமபிரானுக்குப்) பாதகாணிக்கையாகச் சமர்ப்பித்து, 'சிறியோர் தீயன செய்தால் - சிறியவர்கள் கெட்ட காரியங்களைச் செய்வாராயின், பொறுப்பதே பெரியோர் செய்கை - பொறுப்பதே பெரு மக்களின் செயலாகும், ஆயிரம் நாமத்து ஐயா - ஆயிரம் பெயர்களை உடையவனே, சரணம்' என்று அடியில் வீழ்ந்தான் - திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

சீத்தல் - நீக்குதல். 'ஆன்றபே ரிருளைச்சீத்து' (சுந்தர. 192); 'பாருலகெங்கும் பேரிருள் சீக்கும்' (கிட்கிந்தா. 991). இருக்கு வேத காலம்தொட்டு ஞாயிற்றுத் தெய்வம் வழிபடப்பட்டு வந்ததாதலின் தெய்வப்பரிதி என்றார்; 'கொடிநிலை கந்தழிவள்ளி' (தொல். புறத். 88) என்ற இடத்துக் 'கொடிநிலை, கீழ்த்திசைக் கண்ணே நிலை பெற்றுத் தோன்றும் வெஞ்சுடர் மண்டிலம் என்னும் தெய்வம்' என்று கூறப்படுதல் காண்க. விழிகள் கெடாமல் நின்றிலக வேண்டுவோர் இந்த ஆதித்தனை வழிபடுதல் மரபு. 'நாட்கதிரே ............நாணுத கண்எனக்கு நல்கு' (தொல். புறத். 88) என்ற உதாரணச் செய்யுள் காண்க; மற்றும், 'மாயோன் மேய' (தொல். அகத். 5) என்ற சூத்திர உரையில், 'இனிப் பாலைக்குச் சினை வாடச் சிறக்குநின் சினந்தணிந் திகெனக், கனைகதிர்க் கனலி யைக் காமுற லியைவதோ' என ஞாயிற்றைத் தெய்வமாக்கித் கூறுபவாலெனின் (நச்.) என்று கூறுவதுகொண்டும், ஞாயிறு தெய்வமாய் நின்றது காண்க. வருணன் தந்த மாலை ஞாயிற் றொளியினும் சிறந்தது எனப்பட்டது. மா இரும் - 'ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா' என்பதுபற்றி வந்தது. அடி யுறை - பாதகாணிக்கை என வழங்கும். மூன்றாவதடிக்கு: 'சீறுவா யல்லை யைய சிறியவர் தீமை செய்தால், ஆறுவாய் நீய லான்மற் றருளர்' (கிட்கிந்தா. 606); 'சிறியோர் செய்த சிறு பிழை யெல்லாம், பெரியோ ராயிற் பொறுப்பது கடனே' (நறுந் தொகை. 53); 'பொறுப்ப ரன்றே பெரியோர் சிறியோர்தம் புரை பிணையே' (குலோத். கோவை.); 'பிழையோர் நூறேசெயினும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொறுப்ப ரன்றே யருளுணேக்கினரே’ (திருவாவடுதுறைக்கோவை. 419). ஆயிர நாமத்தையா: ‘ஆயிர நாமத் தாழி யரியினுக்கு’ (யுத்த. மாயாசனக. 67); ‘ஆயிர நாமத் தண்ணல்’ (யுத்த. நாகபாசப். 218); ஒருநாமம் ஓருருவ மொன்றுமில்லார்க் காயிரம் திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ’ (திருவாச. திருத்தெள்ளேணம்).

பி-ம். 1. படர்மணி பூக்குமாலை.

2. ஆயிரங்கரத்து;

3. நீயவை. சிறியேம்; பொறுப்பது, பொறுத்தலே; பெரியோர் மெற்றே.

4. சரணென. 70

## இராமபிரான் சீற்றம் தணிதல்

604. பருப்பதம் வேவ தென்னப்
 படரொளி படரா நின்ற
உருப்பெறக் காட்டி நின்றி
 யானுனக் கபய மென்ன
அருப்பறப் பிறந்த கோப
 மாறினு னரு வாற்றல்
நெருப்புறப் பொங்கும் வெம்பால்
 நீருற்ற தன்ன நீரான்.

பருப்பதம் வேவது என்ன - பெரிய மலை எரிகின்றதென்று (கண்டோர்) எண்ணுமாறு, படர் ஒளி படரா நின்ற - பரவுகின்ற ஒளியினையுடைய தீ பரவுகின்ற, உரு பெற காட்டி நின்று - தன் வடிவத்தை நன்றாகக் காட்டி நின்று, ‘யான் உனக்கு அபயம் என்ன - நான் உனக்கு அபயம்’ என்று (வருணன்) வேண்ட, ஆரு ஆற்றல் நெருப்பு உற - தணியாத வன்மைவாய்ந்த நெருப்பு மிகுதியாக எரித்ததனால், பொங்கும் வெம்பால் - கொதிக்கின்ற தன்மைவாய்ந்த சுடுகின்ற பாலில், நீர் உற்றது அன்ன நீரான் - நீர் தோய்ந்தது ஒத்த தன்மையுடையவனாய், அரும்பு அற பிறந்த கோபம் மாறினான் - இராமபிரான் மிகுதியாக எழுந்த கோபம் மாறப்பெற்றான்.

பர்வதம் என்ற வடசொல் பருப்பதம் எனத் திரிந்தது; ‘செம்பொற், பருவரையும் நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வார்கள்' (பால. குலமுறை. 22); 'பருப்பதத்துக் கயல்பொறித்த பாண்டியர் குலபதிபோல்' (திவ்ய. பெரியாழ். 5·4·7). அரும்பு + அற என்பது அருப்பற வென்றாயிற்று; அரும்பு முதனிலைத் தொழிற்பெயராக, அரும்புதல் அல்லது கிளைத்தல் என்று பொருள் தந்தது, மீண்டும் அரும்புதல் அல்லது தோன்றலற என்க. இனி, அருப்பற என்பதற்கு அருப்பு நெருப்புறப் பொங்கும் வெம்பால் நீருற்றதன்ன எனினுமாம்; (ஒப்பு): 'நீர்கொண்ட வெப்பம் போல் தானே தணியுமே, சீர்கொண்ட சான்றோர் சினம்' (நாலடி. 68); 'பாலின்நீர் தீயணுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து, மேலுநீர் கண்டமையும் மேன்மைபோல்' (நீதிவெண்பா. 77). வருணன் நின்ற இரங்கத்தக்க கோலமும், இராமபிரான் வெகுளி சடுதியில் மாறிய பான்மையும் மிக அழகாக இங்குக் கூறப்பெற்றமை காண்க.

பி - ம். 1. படர்எரி படரநின்ற, கொளுந்த நின்ற.
2. வந்து நானுனக் கடிமை யென்ன.
3. அருப்பிறப்; மாற்றினன்; ஆற்றுவாற்றல்.
4. நீருற்ற தனையா.

71

## இரமபிரான் வினா

605. ஆறினு மஞ்ச லுன்பால்
அளித்தன மபய மன்பால்
ஈறிலா வணக்கஞ் செய்தியா
மிரந்திட வெய்தி டாதே
சீறுமா கண்டு வந்த
திறத்தினைத் தெரியும் வண்ணம்
கூறுநீ யறிய வென்றான்
வருணனுந் தொழுது கூறும்.

(இராமபிரான் வருணனை நோக்கி), 'ஆறினும் - நாம் கோபம் தணியப்பெற்றோம்; அஞ்சல் - பயப்படாதே! அபயம் உன்பால் அளித்தனம் - அபயம் உனக்குத் தந்தோம்; ஈறிலா அன்பால் வணக்கம் செய்து - முடிதல் இல்லாத அன்போடு வணக்கத்தைச் செலுத்தி, யாம் இரந்திட - நாம் இரந்து கேட்கவும், எய்திடாதே -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வாராமலிருந்து, சிறுமா கண்டு - (நாம்) சினந்த தன்மையைப் பார்த்து, வந்த திறத்தினை அறிய - வந்துள்ள காரணத்தை எல்லோரும் உணருமாறு, நீ தெரியும் வண்ணம் கூறு - நீ விளக்கமாகப் பகருவாயாக', என்றான் - என்று பணித்தனன் இராமபிரான்; வருணனும் தொழுது கூறும் - வருணனும் வணங்கிச் சொல்லத் தொடங்கினான்.

அபயம் அன்பால் அளித்தனம் எனக் கூட்டினுமாம். செய்தியாம் - குற்றியலிகரம். அன்போடழைத்தபோதின் வாராது சீறிய அளவில் போந்ததென் என்றான் இராமபிரான்; 'தெரியும் வண்ணம்கூறு' என்றது, நடந்தவற்றையெல்லாம் நோக்கித் திகைத்து நின்ற வானரவீரர்கள் அறியுமாறு கூறு என்றலும் ஆம்.

பி - ம். 1. ஆறினன், ஆறிநீ.
2. செய்தியான்; எய்தாதே.
3. தெரிவதாக.
4. கூறுவாய் தெரிய. 72

வருணன் விடை

606. பார்த்தனிற் பொறையின் மிக்க
பத்தினிக் குற்ற பண்பு
வார்த்தையி னறிந்த தல்லாற்
றேவர்பால் வந்தி லேனுன்
தீர்த்தநின் றுணை யேழாஞ்
செறிதிரைக் கடலின் மீனின்
போர்த்தொழில் விலக்கப் போனேன்
அறிந்திலேன் புகுந்த தொன்றும்.

'பார்தனில் பொறையின் மிக்க - பூமிப்பிராட்டியைக் காட்டிலும் பொறுமையிற் சிறந்த, பத்தினிக்கு உற்ற பண்பு - (உனது) தரும பத்தினிக்கு நேர்ந்த தன்மையை, வார்த்தையின் அறிந்தது அல்லால் - (உனது) சொற்களான் (இப்பொழுது) அறிந்து கொண்டேனல்லாது, நான் தேவர்பால் வந்திலேன் - தேவர்கள் வாயிலாக நான் கேட்கப்பெற்றேனில்லை, தீர்த்த - பரிசுத்தமான பொருளே! ஏழாம் செறி திரை கடலின் - ஏழாவதாகிய அடர்ந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அலைகளைக்கொண்ட கடலிலே, மீனின் போர் தொழில் - மீன்களின் சண்டைச் செயலை, விலக்க போனேன் - தவிர்க்கச் சென்றேனாத லால், நின் ஆணை - உனது கட்டளையையும்; புகுந்தது ஒன்றும் அறிந்திலேன் - நிகழ்ந்த எச்செயலையும் தெரிந்தேனில்லை.'

பொறையில் மிக்கவள் பூமிதேவி என்ப; 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல' (குறள். 151); 'நிலத்தோ ரன்ன நலத்தகு பெரும்பொறை' (பெருங். 1:42:179); நன். பொது. 27. எதுகை நோக்கியும் ஓசை யின்பமும் கருதிப்பார்தனில் என்பது பார்த் தனில் என வலித்தது. பத்தினி - சீதாப்பிராட்டி; 'தெய்வப் பத்தினி' (யுத்த. மாயா. 49); 'இற்பிறப் பென்ப தொன்றும் இரும் பொறை யென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்' (சுந்தர. 1273) என்று அநுமன் கூறுதல் காண்க; 'பொறையிருந் தாற்றியென் னுயிரும் போற்றி னேன்' (சுந்தர. 499) எனப் பூமிதேவியின் மகளான பிராட்டியே கூறுதல் காண்க. தேவர்பால் வந்திலேன்; (ஒப்பு): 'நினைவ தோதுவ தென்பெயர் நினக்கிது நேர வனைய ரஞ்சுவரே' (யுத்த. 177) என்று இரணியன் கூறுவது காண்க. தேவர்பால் வந் திலேன் - தேவர்களிடம் வந்திருப்பின் செய்தி தெரிந்திருக்கும் அவரிடமும் சென்றேனில்லை எனலும் ஆம்; வருணன் இங்குக் கூறியிருப்பதை 'யுத்த. 595-இல் காண்க. பிரமாத்திரத்தை விட்ட அளவிலேயே வருணன் அபயம்புக்குப் பின்பு ஆழ்ந்திருக்கும் தன்மை யியல்பாதலின் 'அதனைப்போக்குவது எனக்கு இயலாததே இதனை எங்ஙனம் சொல்வது என்ற நினைவினாலேயே வாரா திருந்தேன்; என்னால் ஆன உதவி புரிவேன்' என்று தானே மொழிந்ததாக முதனூல் கூறும்.

பி - ம். 1. பார்த்தனைப்; பண்பும்.

3. திரைநெடுங்.



## இராமபிரான் 'இவ்வம்புக்கு இலக்கு என்' என்ன வருணன் விடையளித்தல்

607. என்றலு மிரங்கி யைய
னித்திற நிற்க விந்தப்
பொன்றலில் பகழிக் கப்பா
லிலக்கமென் புகறி யென்ன

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நன்றென வருணன் யானு
முலகமு நலிவு தீர்ந்தாம்
குன்றென வுயர்ந்த தோளாய்
கூறுவ லென்று கூறும்.

என்றலும் - என்று வருணன் மொழிந்தவுடன், ஐயன் - இராம பிரான், இரங்கி - வருணன்பால் இரக்கம் கொண்டவனாய், 'இ திறம் நிற்க - இந்தச் செய்தி இருக்கட்டும்; இந்த பொன்றல் இல் - இந்த அழிதல் இல்லாத, பகழிக்கு-என் அம்புக்கு, அப்பால் - இனி, இலக்கம் என் புகறி என்ன - இலக்காகக்கூடிய பொருள் நீ சொல்லிக்காட்டுக' என்று கூற, வருணன் - வருணனும், 'நன்று என - நல்லது என மொழிந்து, குன்று என உயர்ந்த தோளாய் - மலையென்றுரைக்குமாறு உயர்ந்த தோள்களை யுடையவனே! யானும் உலகமும் நலிவு திர்ந்தாம் - யானும் உலகத்துயிர்களும் வருத்தம் தீரப்பெற்றேம்; கூறுவல் - (இனி) இலக்கினைப் புகல் வேன்', என்று கூறும் - என்று சொன்னான்.

இராமபிரான் தன் கணைக்கு இலக்காவது யாது எனக்கேட்க வருணன் விடையிறுப்பதை மேற்கவிகளில் காண்க. சுந்தர. 683-இல் காகாசுரன் வரலாறும், அதன் கீழ்க் குறிப்பும் அதிகப் பாடல்களும் காண்க. பரசுராமன் வரலாறும் காணத்தகும்.

பி - ம். 1. என்கைப்.
2. இலக்குநீ; என்ருள்.
3. தானு முலகத்து நலிவுதீர.
4. குன்றினும்; கூறுவ னென்று.

608. மன்னவ மருகாந் தார
மென்பதோர் தீவின் வாழ்வார்
அன்னவர் சதகோ டிக்கு
மேலுளா ரவுண ராயோர்
தின்னவே யுலக மெல்லாந்
தேய்ந்தன வெனக்குந் தீயார்
மின்னுமிழ் கணையை வெய்யோர்
மேற்செல விடுதி யென்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'மன்னவ - அரசே! மருகாந்தாரம் என்பது ஓர் தீவின் வாழ்வார் - மருகாந்தாரம் என்று சொல்லப்படும் ஒரு தீவிடத்து வாழ்பவரான, அவுணர் ஆயோர் அன்னவர் - அவுணரான அவர்கள், சத கோடிக்கு மேல் உளார் - நூறு கோடிக்கும் அதிகமாக இருக்கின்றனர்; தின்னவே - அவர்கள் உண்பதால், உலகம் எல்லாம் தேய்ந்தன - உலகத்துயிர்கள் எல்லாம் குறைந்தழிந்தன; எனக்கும் தீயார் - அவர்கள் எனக்கும் தீமை புரிகின்றார்; மின் உமிழ் கணையை - ஒளிவிடுகின்ற அம்பினை. வெய்யோர் மேல் செல விடுதி என்றான் - அந்தக் கொடியவர்மீது செல்லுமாறு ஏவுவாயாக' என்று சொன்னான்.

மருகாந்தாரம்: இதனைத் தருமகுல்யம் என்றும், அங்கிருக்கும் கொலை பாதகர்கள் தனது தீர்த்தத்தைப் பருகுகின்றனர் என்றும் கூறி, அந்த அத்திரத்தை அவர்கள்மீது ஏவுமாறு கூறினன் வருணன் என்று முதனூல் கூறும். அம்பு தைத்த இடம் மருகாந்தாரம் என்றும் அந்நூலிற் காணப்படுகிறது. இந்த இடம் பின்னர் இராமபிரான் கருணையால் பாலும் தேனும் நிரம்பிய ஓர் செழிப்பான தலமாக ஆயது என்றும் அந்நூல் கூறும்.

பி - ம். 2. அளப்பரு மவுணர் தாங்கள்.
3. தீர்ந்துள.



## இராமன் அம்பு அந்த அரக்கரைக் கொன்று மீளுதல்

609. நேடிநூல் தெரிந்து ளோர்க்கு
முணர்விற்கு நிமிர நின்றான்
கோடிநூ றுய தீய
வவுணரைக் குலங்க ளோடும்
ஓடிநூ றென்று விட்டா
னேரிமை யொடுங்கா முன்னம்
பாடி நூறுக நூறி
மீண்டதப் பகழித் தெய்வம்.

நேடி - தேடி ஆராய்ந்து, நூல் தெரிந்துளோர்க்கும் - நூல்களை அறிந்துளோருக்கும், உணர்விற்கும் நிமிர நின்றான் - அறிவிற்கும் எட்டாது உயர்ந்து நின்றவனான இராமபிரான், 'நூறு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கோடி ஆய தீய அவுணரை - நூறுகோடிக் கணக்கினரான அவுணர்களை, ஓடி குலங்களோடும் நூறு - விரைந்து சென்று அவர்களைக் குலங்களுடனே அழிப்பாயாக' என்று விட்டான் - என்று மொழிந்து தன் அம்பினை விட்டான்; (அங்ஙிலையில்), அ பகழி தெய்வம் - அந்தத் தெய்வீக அம்பானது, ஓர் இமை ஒடுங்கா முன்னம் - கண்மூடித் திறப்பதற்குள்ளாக, பாடி - மருகாந்தாரம் என்னும் இடம், நூறுக நூறி மீண்டது - பொடியாகும் படி அழித்துத் திரும்பியது.

நேடுதல் - தேடுதல்; 'நீர்கொண்டனை யிவ்வழி நேடினை போய்' (ஆரணிய. 1093); 'நிழற்றிகழ் வேலி ஞனை நேடிய நெடுங்க ணாளும்' (சீவக. 252). உணர்விற்கும் நிமிர நின்றான்; 'உணர்ந்தார்க் குணர்வரியோன்' (திருக்கோ. 9); இங்கு, 'ஒருகால் தன்னையுணர்ந்தவர்கட்குப் பின் உணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியும் ஒடுங்குதலான் மீட்டுணர்வரியோன்' என்று பேராசிரியர் எழுதுதல் காண்க; 'அறிவரியான்' (சிவ. சித்தி. 12 : 3); இதற்கு 'அசிந்திதனுய் நின்ற பரம்பொருள்' என உரை வரையப்படுதல் காண்க. 'மண்பா லமரர் வரம்பாரும் காணாத' (ஆரணிய. 1177); மற்றும், அபரஞானம் என்ற நூலுணர்வினுக்கும், பரஞானம் என்ற மெய்யுணர்விற்குமே எட்டாதவன் என்க. கோடி நூறாய என்பதை நூறு கோடியாய என மாற்றி யுரைக்கப்பட்டது. பாடி - நகரம்; 'பாடி விழாக் கோள் பன்முறை யெடுப்ப' (சிலப். உரைபெறு. 3); ஆயர்பாடி என்றதும் காண்க. அம்புகள் விரைவில் எய்யப்படுங்கால் அவை ஒலிவிளைத்துச் செல்லுமாகலின் பாடி மீண்டது என்பாருமுளர். பகழியைத் தெய்வமாகப் போற்றி அதற்கு மாலை முதலியன அணிவது பண்டைத் தமிழ்வழக்கு; 'இவ்வே பீலியணிந்து மாலை சூட்டி' (புறநா. 95). மீண்டதப் பகழித்தெய்வம்; 'தெய்வவான் படைக்கலம்' (யுத்த. 146); 'தூய்மல ரமரர் தூவ, ஐயன்வெங் விடாத கொற்றத் தாவம்வந் தடைந்த தன்றே' (கிட்கிந்தா. 381); 'கார்க்குன்ற மனையான்றன் கடுங்கணைப்புட் டிலனடுவட் கரந்த தம்மா' (யுத்த. இராவணன் வதை. 199).

பி - ம். 1. தேடி: தெரிந்து ளோர்தம் 'உணர்விற்கும் தெரிய.
2. குலந்தி னேடும்.
3. ஓடிநூ றென்ன.
4. பகழிப் புத்தேள். 78


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


610. ஆய்வினை யுடைய ராகி
யறம்பிழை யாதார்க் கெல்லாம்
ஏய்வன நலனே யன்றி
யிறுதிவந் தடைவ துண்டோ
மாய்வினை யியற்றி முற்றும்
வருணன்மேல் வந்த சீற்றம்
தீவினை யுடை யார் மாட்டே
தீங்கினைச் செய்த தன்றே.

ஆய்வினை உடையர் ஆகி - ஆராய்ச்சியை மேற்கொண்டவ ராகி, அறம் பிழையாதார்க்கு எல்லாம் - தருமநெறி தவருதவர்க்கு எல்லாம், ஏய்வன நலனே அன்றி - பொருந்துவன நன்மையே யல்லாமல், இறுதி வந்து அடைவது உண்டோ - அழிவு வந்து எய்துவது உண்டோ? (இல்லை), மாய்வினை முற்றும் இயற்றி - இறத்தலை முற்றும் செய்து முடிக்கவல்ல, வருணன் மேல் வந்த - வருணன்மீது வந்த (இராமபிரானுடைய), சீற்றம் - சினம், தீவினை உடையார் மாட்டே தீங்கினை செய்தது (நல்லவனுகிய வருணனை ஒன்றும் செய்யாது) தீவினையாளரான அவுணருக்கே கெடுதியை உண்டு பண்ணிற்று. அன்றே - ஈற்றசை.

இது கவிக்கூற்று. வருணன்மீது எய்யப்பெற்ற அம்பு, அவுணரை அழித்த தன் காரணம் இங்குக் கூறப்பெற்றது. இப் பாடலில் இறைவன் மேற்கொள்ளும் துட்ட நிக்கிரக சிட்டபரி பாலன முறையும் கூறப்பெற்றது என்க. இங்கு, 'நன்மையிற் றொடர்ந்தார்க் குண்டோ கேடு' (யுத்த. 265) காண்க; 'அறந்தலை நின்றூர்க் கில்லை யழிவெனு மறிஞர் வார்த்தை, சிறந்தது' (யுத்த. இந்திரசித்து வதை. 58). முன்னிரண்டடிகளிற் கூறிய பொதுப் பொருளைப் பின்னடிகள் விளக்கிவந்ததனுல் இது வேற்றுப்பொருள் வைப்பணி.

பி - ம். 1. பிழையாதாற் கென்றும்.
2. ஏய்வ னருளே; இயைவது.
3. மாய்வினை யியற்ற வேண்டி; எழுந்த சீற்றம்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


611. பாபமே யியற்றி னுரைப்
பன்னெடுங் காத மோடித்
தூபமே பெருகும் வண்ண
மெரியெழச் சுட்ட தன்றே
தீபமே யனைய ஞானத்
திருமறை முனிவன் செப்பும்
சாபமே யொத்த தம்பு
தருமமே வலிய தம்மா.

பல் நெடு காதம் ஓடி - (இராம பாணமானது) பல நீண்ட காத தூரம் வேகமாய்ச் சென்று, தூபமே பெருகும் வண்ணம் - புகை யானது வளரும் வண்ணம், பாபமே இயற்றினுரை - பாவச் செயல் களையே புரிந்தவர்களை, எரி எழ சுட்டது அன்றே - தீ எழச் சுட்டது அல்லவா? அம்பு - அந்த அம்பு, தீபமே அனைய ஞானத் திருமறை முனிவன் - தீபமே ஒத்த தத்துவ ஞானத்துடன் கூடிய அழகிய வேதம் வல்லுநனான முனிவன், செப்பும் சாபமே ஒத்த - வெகுண்டு கூறும் சாப மொழியையே நிகர்த்தன; (இதனால் பெறப்படுவது என்) தருமமே வலியது - தருமமே வன்மையுடை யது என்பதே. அம்மா - வியப்பிடைச்சொல்.

மறைமுனிவன் - பிரமதேவனும் ஆம். அன்றி, தீபமே யனைய ஞானத் திருமறை முனிவன் என்று முதனூலாசிரியரான வான் மீகனை ஆசிரியன் நினைவு கூர்ந்ததுமாம். ஞானத்தைத் தீபம் என்றார் 'ஞான தீபேன பாஸ்வதா' என்பது கீதை. அம்பு, வெகுண்டு கூறும் முனிவரின் சாபத்தைப் போன்றது எனப் பட்டது (ஒப்பு): 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' (பால. தாடகை. 73); 'வைத வைவின் மராமரமேழும்' (கம்ப. பாயிரம். 5); 'வைதெனக் கொல்லும் விற்கை மானிடர்' (யுத்த. இலங்கை காண். 1); 'வைதாலென வைதாவின வடிவாளி' (யுத்த. முதற்போர். 158); 'வைவன முனிவர்சொல் லனைய வாளிகள்' (யுத்த. அதிகாயன். 116); 'வை தவை வி னி லொழிந்தன' (யுத்த. வேலேற்ற. 29); இராமன் விடுத்த அம்பு வருணனைச் சுடாது, பாபிகளான அவுணரைச் சுட்டது என்பது கொண்டு தருமமே வலியுடைத் தென்பது குறிக்கப்பட்டது. 'அறத்தினூங் காக்கமும் இல்லை; (குறள். 32); யுத்த. முதற்போர். 252-ம் காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 2. எரியெழச் சுட்டதாகி.

3. முனிவர்.

4. ஒத்ததம்ம ; பெரியதம்மா.

78

## இராமபிரான் வருணனை வழிவேண்டுதல்

612. மொழியுனக் கபய மென்று
யாதலால் முனிவு தீர்ந்தேன்
பழியெனக் காகு மென்று
பாதகர் பரவை யென்னும்
குழியினைக் கருதிச் செய்த
குமண்டையைக் குறித்து நீங்க
வழியினைத் தருதி யென்றான்
வருணனை நோக்கி வள்ளல்.

வள்ளல் வருணனை நோக்கி மொழி உனக்கு அபயம் என்றாய் ஆதலால் - கருணையாளனான (இராமபிரான் வருணனை நோக்கி) 'நீ உனது வார்த்தைகளால் உனக்கு அபயம் என்று சொல்லினை யாதலின், முனிவு தீர்ந்தேன் - உன்மேல் எழுந்த சீற்றம் நீங்கப் பெற்றேன்; பழி எனக்கு ஆகும் என்று, (நான் பாதகர்களைக் கொல்லாவிடின்) எனக்குப் பழி பொருந்தும், என்ற காரணம் பற்றி, பாதகர்-பாவிகளாகிய அரக்கர், பரவை என்னும் குழியினை - கடல் என்கின்ற சிறு குழியை, கருதி - தமக்கு அரணாகக் கருதி, செய்த குமண்டையை - செய்து வருகின்ற மகிழ்ச்சியை, நீங்க குறித்து - அவர்கள் விட்டொழியுமாறு மனத்தின் எண்ணி, வழியினை தருதி என்றான்-வழியினை அமைத்துத் தருவாயாக' என்றான்.

முதலடி இராமபிரான் சரணாகத வத்ஸலன் என்பதைக் குறித்தது. ஆரணிய காண்டத்து முனிவர்க்கு அளித்த அபயம் கொண்டும், கிட்கிந்தா காண்டத்துச் சுக்கிரீவன் சரணாகதி கொண்டும் பின்னர் விபீடண சரணாகதி கொண்டும் சரணாகதியின் பெருமையை யறிக. 'புகல் புகுந்தில ரேற்புறத் தண்டத்தின், அகல் வல ரேனுமெ மன்பொடும் வீழ்வரால்' (ஆரணிய. 134); இலங்கை அரக்கர்கள் தமக்குக் கடலே அரணாக உள்ளது என்று இறுமாந்திருந்தனர்; அவர்களின் இறுமாப்பிறும்படி வழி விடுக என்று இராமபிரான் வருணனை வேண்டினன் என்க. குமண்டை செருக்கு மிகுந்து ஆடப்படும் ஒருவகைக் கூத்து, 'யாகத்துக்குக் கர்த்தா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வெனச் சொல்லுகின்ற சாத்திரத்தைவிட்டு வேருெரு சாத்திரத்தைப்பற்றி யாகத்தைத் தொடங்கியதனுல் தக்கன் யாகம் குலைந்து அவனும் அழிந்தான்' (தக்க. 246 உரை). 'தக்கனர் ஜொண்ட வேள்விக் குமண்டை யதுகெட' (தேவா.); 'இட்ட குமண்டை யபே யுகளித்தனவே' (வி. பா. 16-ஆம் 51).

பி-ம். 1. மொழி யெனக்கு ; அவைய.

2. பழி யெனக்காக ; பாதகப்.

3. குமண்டையைக் குறைத்து ; நிக்கி, நிக்க. 79

## வருணன் தன்மீது சேது அணைகட்டினல் நான் தாங்குவேன் என்று பகர்தல்

613. ஆழமு மகலந் தானு
மளப்பரி தெனக்கு மைய
ஏழென வடுக்கி நின்ற
வுலகுக்கு மெல்லை யில்லை
வாழியாய் வற்றி நீங்கில்
வரம்பில கால மெல்லாம்
தாழும்நின் சேனை யுள்ளம்
தளர்வுறுந் தவத்தின் மிக்கோய்.

(அதனைக் கேட்ட வருணன் இராமபிரானை நோக்கி), 'தவத்தின் மிக்கோய் - தவத்தால் தலை சிறந்தவனே! ஏழ் என அடுக்கி நின்ற - ஏழாக ஒன்றின் மேல் அடுக்கப்பட்டுள்ள, உலகுக்கும் எல்லை இல்லை - உலகங்களுக்கு ஒரு முடிவெல்லை யில்லை; (அது போன்றே) ஆழமும் அகலம் தானும் - என்னுடைய ஆழமும் அகலமும், எனக்கும் அளப்பரிது ஐய - என்னுலும் அளத்தற்குரியதன்று; வாழியாய் - அழியாத வாழ்வுள்ளவனே! வற்றி நீங்கில் - நீர் வறண்டு நீங்குவதாயின், வரம்பு இல காலம் எல்லாம் தாழும் - எல்லையற்ற காலங்களெல்லாம் சென்றுவிடும்; (அவ்வாறு காலம் தாழ்ப்பின்), நின்சேனை உள்ளம் தளர்வுறும் - உனது சேனைகளின் ஊக்கமும் குன்றிவிடும்.

ஏழென அடுக்கிநின்ற உலகு: சப்ததத்திவு என்று புராணங்கள் கூறும் ஏழு தீவுகளைத் தன்னகத்தடக்கிய உலகு என்க. ஏழ் என அடுக்கிநின்ற உலகம் என்றதால், ஒன்றின்மேல் ஒன்ருக

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உள்ள பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், ஜன லோகம், தபோலோகம், சத்தியலோகம் எனினுமாம். ஆழிவற்றி மேற்செல்வதெனின் காலம் பல செல்லும் என்று விண்ணப்பித் தான் வருணன்.

4. வற்ற நீக்கில்; வரம்பறு. 80

614. கல்லென வலித்து நிற்பிற்
கணக்கிலா வுயிர்க ளெல்லாம்
ஒல்லையி னுலந்து வீயு
மிட்டதொன் றொழுகா வண்ணம்
எல்லையில் கால மெல்லாம்
ஏந்துவ னினிதி னெந்தாய்
செல்லுதி சேது வென்றொன்
றியற்றியென் சிரத்தின் மேலாய்.

'எந்தாய் - என் தந்தைபோன்றவனே!' 'கல் என வலித்து நிற்பின் - (நான் வற்றாமல்) கல்லையொப்ப இறுகி நிற்பேனாகில், கணக்கு இலா உயிர்கள் எல்லாம்-(என்னிடம் வாழும்) எண்ணிறந்த உயிர்கள் எல்லாம், ஒல்லையின் உலந்து வீயும் - விரைவினில் கெட்டழியும்; இட்டது ஒன்று ஒழுகாவண்ணம் - வைத்தது நகராதபடி, எல்லையில் காலம் எல்லாம் இனிதின் ஏந்துவன் - எண்ணிறந்த காலம் எல்லாம் இனிது தாங்கிநிற்பன்; சேது என்று ஒன்று என் சிரத்தின் மேலாய், இயற்றி - சேது என்ற ஒரு அணையை என் தலைமீது அமைத்து, செல்லுதி - கடந்து செல்வாயாக' (என்று மொழிந்தான் வருணன்).

கல்லென வலித்து நிற்பில் - கற்போன்று வன்னெஞ்சனாகில்; தொல். சொல். 19; 'நிலம் வலிது' என்றது காண்க. சேது: 'சேடனென்னப் பொலிந்தது சேதுவே' (யுத்த. சேதுபந்தன. 66).

பி - ம். 1. கல்லென வடுக்கி நிற்கிற், கல்லினிற் றார்த்து மென்னிற்; கணக்கில.

2. ஒல்லையி னுலர்ந்து, உலைந்து.

3. எளிதின்.

4. இயற்றிவென். 81

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


615. நன்றிது புரிது மன்றே
நளிர்கடற் பெருமை நம்மால்
இன்றிது தீரு மென்னி
லெளிவரும் பூத மெல்லாம்
குன்றுகொண் டடுக்கிச் சேது
குயிற்றுதீ ரென்று கூறிச்
சென்றன னிருக்கை நோக்கி
வருணனு மருளிற் சென்றான்.

'நன்றிது புரிதும் - (சேது அமைப்பதான) இந்த நற்செயலைச் செய்வோம்; நளிர் கடல் பெருமை - (வற்றும்படி செய்தால்) குளிர்ந்த கடலின், இன்று இது - இந்தப் பெருமையானது, நம்மால் தீரும் என்னில் - நம்மால் ஒழியும் என்றால், பூதம் எல்லாம் எளிவரும் - ஏனைய நான்கு பூதங்களும் எளிமையுறும்; (ஆகவே), குன்று கொண்டு அடுக்கி சேது குயிற்றுதிர் என்று கூறி - மலைகளைக் கொண்டு ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கி சேது என்ற அணையை அமைப்பீராக' என்று பணித்து, இருக்கை நோக்கி சென்றனன் - தான் தங்கியிருந்த இடத்தை நோக்கிப்போனான் இராமபிரான்; வருணனும் அருளிற் சென்றான் - இராமபிரான் அருளுடனே வருணனும் தன் இருக்கையை அடைந்தான். அன்றே - ஈற்றசை.

குயிற்றுதல்; 'வயிரங் குயிற்றி' (சிலப். இந்திரவிழ. 147).

பி - ம். 1. புரிது மென்றே; என்னு; நனிவரும்; நம்பால்.
3. சேதுக்.

82

வருணன் அடைக்கலப் படலம் முற்றும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வருணன் அடைக்கலப் படலம், இதனை யடுத்து வரும் சேது பந்தனப் படலம் என்ற இரண்டினையும் ஒட்டி வான்மீகம் கூறுவது:

கடல் கடப்பது எவ்வாறென இராமபிரான் வினவ, வீடணன் வருணனைச் சரண் அடையவேண்டும் என்றான். இராமபிரான் அதற்கிசைந்து கடற்கரையில் தருப்பைப் படுக்கையில் படுத்தார்; அச்சமயம் இராவணனால் அனுப்பப்பட்ட சுகன் என்ற ஒற்றன் குரங்குருவில் அங்கு வந்தான். அவனை வீடணன் மாற்றான் என அறிந்து அவனைக் கொல்லப் புக்கபோது இராமபிரான் அவனை விடுதலை செய்கின்றான். பின்னர் மூன்று இரவுகள் கழிந்தன; சமுத்திரராஜன் வந்து காணவில்லை. இராமபிரான் வெகுண்டு வருணன்மீது அம்புதொடுக்கப் புக்க அளவில் இலக்குவன் தடுக்கின்றான்; பின்னரும், இராகவன் சினம் தணியாதவனாய்ப் பிரமாத்திரத்தை ஏவுதற்கு முயன்றபோது பல கெட்ட அறிகுறிகள் உண்டாயின. அப்பொழுது சமுத்திரராஜன் வருகின்றான்; வந்து ஓர் மணிமாலையைக் கையுறையாக அளிக்கின்றான். பணிந்து நன்மொழி பகர்ந்தவளவில் இராமபிரான் சினம் தணியப்பெற்ற போதிலும், தான் ஏவ இருக்கும் அம்பிற்கு ஓர் இலக்கு வேண்டுமே யெனக்கேட்கப் பல துட்டர்கள் நிறைந்துள்ள தர்மகுல்யம் என்ற தலத்தின்மீது ஏவுமாறு வேண்டுகின்றான் வருணன். இராமபிரான் அவ்வாறு செய்தான். அவன் அம்பு சென்று வீழ்ந்த இடம் மருகாந்தாரம் என்றும், விரணகூபம் என்றும் வழங்கும். பின்னர், வருணன் இராமபிரானை நோக்கி, நளன் என்ற விசுவகன்மாவின் மகனைக்கொண்டு தன்மீது அணையமைக்க வேண்டுகின்றான். நளனும் இசையச் சேது அமைக்கப்பட்டது. இராமபிரானும் இலக்குவனும் முறையே சுக்கிரீவன் தோளிலும் அங்கதன் தோளிலும் ஏறிக்கொண்டு கடலைக் கடந்தனர்; தேவர்கள் வாழ்த்தினர்.

———

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 7. சேதுபந்தனப் படலம்

ஸ்ரீ இராமபிரான் வானரப்படைகளுடன் கடலைக் கடந்து இலங்கை புகுமாறு (கடலில்) சேதுவைக் கட்டிய படலம் என விரியும். இது சேதுப் படலம் என சில பிரதிகளில் காணப்படுகின்றது.

## சுக்கிரீவன் நளனைச் சேது அமைக்க வேண்டுதல்

616. **அளவறு மறிஞரோ டரக்கற் கோமகற்**
**கிளவலு மினிதுட னிருக்க வெண்ணினன்**
**வினைவன விதிமுறை முடிக்க வேண்டுவான்**
**நளன்வரு கென்றனன் கவிக்கு நாயகன்.**

கவிக்கு நாயகன் - குரக்கினங்கட்கெல்லாம் தலைவனாகிய சுக்கிரீவன், அளவு அறும் அறிஞரோடு - எண்ணிறந்த அறிவாளிகளுடன், அரக்கர் கோமகற்கு இளவலும் உடன் இருக்க - அரக்கர் பெருந்தலைவனான இராவணனுடைய தம்பி வீடணனும் அருகிருக்க, இனிது எண்ணினன் - இனிதாக ஆலோசித்தவனாய், வினைவன - மேலே செய்யக்கூடியவற்றை, விதி முறை முடிக்க வேண்டுவான் - செய்யவேண்டிய நியதிப்படி செய்து முடித்தற் பொருட்டு, 'நளன் வருக' என்றனன் - நளன் வருவானாக என்றான்.

வருணன் தன்மீது அணை கட்டுமாறு செப்பி நளனைக் கொண்டு சேதுவை அமைக்கச் சொன்னதின்பேரில் நளன் அமைத்ததாக முதனூலில் உள்ளது. இளவல் - வீடணன் ; அல் பெயர் விகுதி. எண்ணினன் - முற்றெச்சம். வேண்டுவான் - வானீற்று வினையெச்சம் எதிர்காலங் காட்டிற்று. வருக வென்றனன் அகர ஈறு தொகுத்தது. சேதுபந்தனம் தொடங்குமுன் இராமபிரான் அங்கு இராமலிங்கத்தைப் பூசித்து வழிபட்டார்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



என்பது அத்யாத்மம். நளன் - விசுவகர்மாவின் அமிசம் பெற்றவன்.

பி - ம். 1. அளவரும் ; அரக்கனே டரசர் கோமகன் ; அளவரு குணத்தனு மரக்கர் வேந்தனும்.

2. எண்ணியே, எண்ணினன் ; என்றுபின்.

3. செய்வினை, செய்வன, செய்குவ.

4. கவியி னுயகன்.

617. வந்தனன் வாநரத் தச்சன் மன்னநின்
சிந்தனை யென்னெனச் செறிதி ரைக்கடல்
பந்தனை செய்குதல் பணிந மக்கென
நிந்தனை யிலாதவன் செய்ய நேர்ந்தனன்.

வாநர தச்சன் வந்தனன் - வாநரச் சிற்பியான நளன் என்பவன் வந்தான் ; (வந்து சுக்கிரீவனைப் பார்த்து), 'மன்ன - அரசே ! நின் சிந்தனை என் என - என்னை என்ன யோசனையுடன் அழைத்தீர்கள்' என்று கேட்க, 'திரை செறி கடல் - அலைகள் அடர்ந்த கடலை, பந்தனை செய்குதல் பணி நமக்கு என - அணைபோடுதலே நாம் புரியவேண்டிய காரியம்' என்று (சுக்கிரீவன்) விடையளிப்ப, நிந்தனை இலாதவன் செய்ய நேர்ந்தனன் - (தான் புரியும் தொழிலில்) எவரும் பழிப்புக்கூறற்கிடனில்லாத சிறந்த சிற்பியான அவன் செய்வதற்கு இயைந்தான்.

'நளன் விசுவகன்மாவின் புதல்வன் ; அவனைக்கொண்டு சேது கட்டவேண்டும்' என்று சொன்னவன் சமுத்திரராஜன் என்பது வான்மீகம். பந்தனை செய்தல் - அணை கோலுதல். நளன் தனது வன்மையைப் பிறர் வாய்க்கேட்டே அறிந்துகொள்ளக்கூடும் ஆதலின், வருணன் சொன்ன பின்னரே அவனுக்கு ஊக்கம் எழுந்தது என்பது. அநுமனைக் குறித்து மிவ்வாறு கூறுவதுண்டு : 'உன்மத் தனுய்த் தன்வலிதா னுணரா தொழிக' வென வுரைத்தான் ; (உத்தர. அநுமப். 42).

பி - ம். 1. வானவர் தச்சன்.

2. நமக்கெனு.

4. நிந்தனை யில்லவன் இயற்ற ; நோக்கினன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## நளனின் உடன்பாடும், சேதுவின் அமைப்பும்

618. காரியங் கடலினை யடைத்துக் காட்டலே
சூரியன் காதலே சொல்லி யென்பல
மேருவு மணுவுமோர் வேறு ருவகை
ஏருற வியற்றுவென் கொணரப் செப்பென்றான்.

'சூரியன் காதலே - சூரியனுக்குப் பிரியமான புதல்வனே ! கடலினை அடைத்து காட்டலே காரியம் - கடலினை அணைகட்டிக் காட்டுவதே (நான்) ஆற்றவேண்டிய பணி, பல சொல்லி என் - நான் பல சொல்லுவானேன் ? மேருவும் அணுவும் ஓர் வேறு உருவகை - (பெரிய) மேருமலையும் (சிறிய) அணுவும் மாறு பட்டுத் தெரியாதவண்ணம் (அதாவது சமனாகும்படி), ஏர் உற இயற்றுவென் - (அணையை) அழகு பொருந்த அமைத்திடுவேன் ; கொணர செப்பு என்றான் - அதற்கு ஆன பொருள்களைக் கொண்டு வந்துதவுமாறு ஆணையிட்டருள்க' என்றான்.

காதலர் - மக்கள் ; 'தருமநீரர் தயரதன் காதலர்' (ஆரணிய. 365) ; 'வாலிகா தலனை முந்தை வணங்கினன்' (சுந்தர. 1251) ; 'மாருதத்தின் காதலைத்தான்' (யுத்த. மாயாசனக. 84). மேருவும் அணுவும் ஓர்வேறுருவகை என்றது, மேடு பள்ளங்கள் தோற்றா வாறு சமன் செய்தல். காட்டல் - பெருமான் திருக்கண்ணுக்கு மாறு கட்டிய அணையைக் காண்பித்தல்.

பி - ம். 1. கடறனை ; கட்டலே, காட்டுவேன், காட்டுதல்.
2. காதலன்.
4. ஏர்வுற, சேர்வுற ; கொணர்தி யென்னவே, கொணர்க வென்றனன் கொணர வென்னவே. 3

619. இளவலு மிறைவனு மிலங்கை வேந்தனு
அளவறு நங்குலத் தரசு மல்லவர்
வளைவருங் கருங்கட லடைக்க வம்மெனத்
தளமலி சேனையைச் சாம்பன் சாற்றினன்.

'இளவலும் இறைவனும் இலங்கை வேந்தனும் - இலக்குவ னும் இராமபிரானும் இலங்கை யரசனான வீடணனும், அளவு அறு - கணக்கற்ற, நம் குலத்து அரசும் - நமது வானரக்குலத்திற்கு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அரசனாகவுள்ள சுக்கிரீவனும், அல்லவர் - தவிர ஏனையோர், வளை வரும் கரு கடல் அடைக்க வம் என - வளைந்துள்ள கரிய கடலை அடைப்பதற்கு வாருங்கள் என்று, தளம் மலி சேனையை சாம்பன் சாற்றினன் - பலதொகுதியாகக்கூடி நின்ற சேனையைப் பார்த்துச் சாம்பவன் பறையறைந்து அறிவித்தான்.

இலங்கை வேந்தன் - முன்னரே வீடணன் அடைக்கலப் படலத்துப் பெருமான் ஏவலால் இளையபெருமாள் சூட்ட இலங்கை நாட்டரசுக்கு முடிசூடினன் ஆதலின் இவ்வாறு கூறப்பட்டான். வான்மீகத்தின்படி முடிசூட்டு இராம இராவணன் போருக்குப் பின்னரே நிகழ்ந்தது என்பதறிக. சாம்பன் பறையறையும் போது அணைகோல வரத்தகாதவர் இன்னார் என வரையறுக்கின்றான். இங்கே அவனது உலகியல் அறிவினைக் காண்க; (ஒப்பு): 'நைவளம் நவிற்றுமொழி நண்ணவர லோடும், வைய நுகர் கொற்றவனும் மாதவரு மல்லாற், கைகள்தலை புக்கன' (பால. கோலங்காண். 34). மலி தள சேனை யெனக்கொண்டு, நிறைந்த தளமாகிய சேனையென இருபெயரொட்டாக்கலும் ஆம்; மீமிசைச் சொல் என்பாரும் உளர். சாம்பன் - ஜாம்பவன் என்ற வடசொற் றிரிபு. சாம்பன் சேனையை அழைத்த செய்தி வான்மீகத்தில் இல்லை. வளை தரும் கடல் - வளை சங்கும் ஆம். வம் - வாரும்; 'வம்மின் புலவீர்' (திருவாய். 3 · 9 : 6). தளம், உயர்வும் இடமும், என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 3. வளைதரு. 4

இங்கு ஓர் சுவடியில் ஓர் அதிகப்பாடல் :—

சாற்றுமா முரசொலி கேட்டுத் தானையின்
ஏற்றமோ டெழுந்தனர் எறிதிரைக்கடல்
ஊற்றமீ தொளித்தொரு களத்தி லுற்றனை
ஏற்றதும் எனப்படைத் தலைவர் யாருமே.

## வாநரர்கள் அணைகட்ட உதவுதல்

620. கருவரை காதங்கள் கணக்கி லாதன
இருகையிற் றேள்களிற் சென்னி யேந்தின
ஒருகட லடைக்கமற் றெழுந்த வேலைகள்
வருவன வாமென வந்த வாநரம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காதங்கள் கணக்கு இலாதன கருவரை-எண்ணற்ற பல காதங்கள் அகன்ற பெரிய மலைகளை, இரு கையில் தோள்களில் சென்னி ஏந்தின - இரண்டு கரங்களிலும் புயங்களிலும் சிரங்களின்மீதும் தாங்கினவாய், ஒரு கடல் அடைக்க - ஒரு கடலை அணை செய்தற்கு, மற்று ஒழிந்த வேலைகள் - அஃதல்லாத பிற கடல்கள், வருவன ஆம் என வாநரம் வந்த - வருவன என்று பகருமாறு குரங்குகள் வந்தன.

இச் செய்யுள் **தற்குறிப்பேற்றவணி.** கருவரை - வன்மைவாய்ந்த மலை யெனினுமாம். கருமை - வலிமை ; 'கருங்கை யொள்வாள்' (புறநா. 3.) வாநரத்துக்குக் கடல் ; **யுத்த. 535, 957.**

பி - ம். 2. தோளினிற். 5

621. பேர்த்தன மலைசில பேர்க்கப் பேர்க்கநின்
றீர்த்தன சிலசில சென்னி யேந்தின
தூர்த்தன சிலசில தூர்க்கத் தூர்க்கநின்
றூர்த்தன சிலசில வாடிப் பாடின.

சில மலை பேர்த்தன - சில வாநரங்கள் மலைகளை அகழ்ந்தன, சில பேர்க்க பேர்க்க நின்று ஈர்த்தன - சில வாநரங்கள் அகழும் தோறும் அகழுந்தோறும் (அம்மலைகளை) நின்றுகொண்டு இழுத்தன ; சில சென்னி ஏந்தின - சில வாநரங்கள் தம் தலைமீது (பெயர்த்த மலைகளைத்) தாங்கி வந்தன ; சில - சில, தூர்த்தன - (அவற்றை வாங்கிக் கடலிலிட்டுத்) தூர்த்தன ; சில தூர்க்க தூர்க்க நின்று ஆர்த்தன - சில குரங்குகள் அங்ஙனம் தூர்க்கும் தோறும் தூர்க்கும்தோறும் நின்று பெருமுழக்கம் செய்தன ; சில சில ஆடி பாடின - சிற்சில வாநரங்கள் ஆடிக்கொண்டே பாடின.

பி - ம். 1. பேர்க்கச் சென்று.
3. சில சேர்க்க. 6

622. காலிடை யொருமலை யுருட்டிக் கைகளின்
மேலுடை யிருமலை வாங்கி விண்டொடும்
சூலிடை மழைமுகில் சூழ்ந்து சுற்றிய
வாலிடைச் சிலமலை யீர்த்து வந்தவால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(சில குரங்குகள்), காலிடை ஒரு மலை உருட்டி - காலினால் ஒரு மலையை உருளச்செய்தும், கைகளின் மேல் உடை இரு மலை வாங்கி - பிறிதொரு குரங்கின் கைகளின்மீது இருந்த இரண்டு மலைகளையும் தாங்கியும், விண் தொடும் - ஆகாயத்தை அளாவி, சூல் இடை - கரு முதிர்ந்த, மழை முகில் - மழை பொழியவல்ல மேகங்கள், சூழ்ந்து சுற்றிய - கவிந்து சுற்றப்பெற்ற, சில மலை - சில மலைகளை, வாலிடை ஈர்த்து வந்த - தம் வால்களினால் இழுத்தும் வந்தன. ஆல் - அசை.

பி - ம். 2. மேலுடை மலையினை.

3. சுற்றுற; சுமந்து சுற்றிய, சூன்று சுற்றிய.

4. ஒருமலை ஈர்த்து வந்தன. 7

## அந்த மலைகளைக்கொண்டு நளன் சேது அமைத்தல்

623 முடுக்கினன் றருகென மூன்று கோடியர்
எடுக்கினு மம்மலை யொருகை யேந்தியிட்
டடுக்கினன் றன்வலி காட்டி யாழியை
நடுக்கின னளனெனு நவையி னீங்கினன்.

நவையின் நீங்கினன் எனும் நளன் - குற்றங்களினின்று நீங்கினவனான நளன் என்னும் சிற்பி, மூன்று கோடியர் எடுக்கினும் - மூன்றுகோடி வீரர் சுமந்து வந்தாலும், தருகென - தருக என்று மொழிந்து, முடுக்கினன் - அவர்களை விரையச் செய்தவனாய், அ மலை - அந்த மலைகளை, ஒரு கை ஏந்தி இட்டு - ஒரு கையினால் தாங்கிக்கொண்டு, அடுக்கினன் - வரிசைப்படுத்தி, தன் வலி காட்டி - (இவ்வண்ணம்) தனது வலிமையைக் காண்பித்து, ஆழியை நடுக்கினன் - கடலை நடுங்குமாறு செய்தான்.

முடுக்குதல் - விரையச்செய்தல்; 'கடுகி முடுக்கிலும்' (விநாயக பு. 557); 'படியின்மேல் முடுகியே' (ஆரணிய. 7). நடுக்குதல்: 'நடுக்குற்றுத் தற்சேர்ந்தார்' (நாலடி. 93). நவையி னீங்கினன்; 'நிந்தனை யிலாதவன்' (யுத். 617) காண்க.

பி - ம். 1. மூன்று கோடியார், கோடிபேர்.

2. எடுப்பினும்.

3. காட்டி யையன்முன்.

4. நவையு னீங்கினன். 8

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


624. மஞ்சினிற் றிகழ்தரு மலையை மாக்குரங்
கெஞ்சறக் கடிதெடுத் தெறியவே நளன்
விஞ்சையிற் றுங்கினன் சடையன் வெண்ணெயில்
தஞ்சமென் றோர்களைத் தாங்குந் தன்மைபோல்.

மஞ்சினில் திகழ்தரும் மலையை - மேகங்கள் சூழப்பெற்று விளங்குகின்ற மலைகளை, மாகுரங்கு - பெரிய வானரங்கள், எஞ்சற கடிது எடுத்து எறியவே - மிச்சமில்லாதபடி விரைவுடன் உயர்த்தி வீசிய அளவில், வெண்ணெயில் - திருவெண்ணெய்நல்லூரிலே, சடையன் - சடையப்ப வள்ளல், தஞ்சம் என்றோர்களை - நீயே தஞ்சம் என்று மொழிந்து தன்னிடம் வந்தவர்களை, தாங்கும் தன்மை போல் - தாங்கி ஆதரிக்கும் தன்மை போன்று, நளன் விஞ்சையில் தாங்கினன் - நளன் தன்னுடைய அபூர்வமான கலை வன்மையால் தாங்கினன்.

மஞ்சினில் மஞ்சினுடன் உருபு மயக்கம். இச்செய்யுள் உவமையணி. வித்தை - விஞ்சை எனத் திரிந்தது, நளன் தான் கற்ற அரிய வித்தையால் மலைகளைத் தாங்கியதற்குக் கம்பரை ஆதரித்த சடையப்ப முதலியார் தம்பால் தஞ்சம் என வந்தவர்களைத் தாங்கியது உவமிக்கப்பட்டது. உவமை என்பது உயர்ந்ததன் மேற்று ஆதலின் அந்த வள்ளலின் கொடைத்திறம் இங்குக் காட்டப்பட்டது; 'மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெ யண்ணல், (பால. வேள்விப், 1); வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன் (கம்ப. காப்பு. 5); 'பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன் புகழ்போல் எங்கும் பரந்துளவால்' (பால. மிதிலைக். 73); 'ஆசங்கை கொண்ட கொடைமீளி யண்ணல் சரராமன் வெண்ணெய்' (யுத்த. நாகபாசப். 263); 'வெண்ணெய்ச் சடையன்றன் மரபுளோர் கொடுக்க வாங்கி' (யுத்த. திருமுடி சூட்டு. 38): சில சுவடிகளில், இப்படலம் 47-ஆம் செய்யுளுக்குப் பின், இச்செய்யுள் காணப் பெறுகிறது.

பி - ம் 1. மஞ்சௌத் திகழ்தரு வெற்பை மாருதி, மஞ்சுறத்திகழ்தரு.
2. எஞ்சலில் கிரி.
3. தாங்கினுன்,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## சேது அணையிடும்போது உற்ற பல நிகழ்ச்சிகள்

625. சயக்கவிப் பெரும்படைத் தலைவர் தாள்களால்
முயற்கறை மதிதவழ் முன்றிற் குன்றுகள்
அயக்கலின் முகிற்குல மலறி யோடின
இயக்கரு மகளிரு மிரியல் போயினர்.

சயம் கவி - வென்றி பொருந்திய வாநரங்களின், பெரு படை தலைவர் - பெருஞ்சேனைத் தலைவர்கள், தாள்களால் - தமது கால்களால், முயல்கறை மதி தவழ் முன்றில் குன்றுகள் - முயற் களங்கமுள்ள சந்திரன் தவழும் முகப்பினைக் கொண்ட சிறு மலைகளை, அயக்கலின் - (வேரோடும் அகழுமாறு) அசைத்தலினால், முகில் குலம் அலறி ஓடின - அம்மலைகளைச் சூழநின்ற மேகத் தொகுதிகள் (இடியோசை காட்டி) கதறி விரைந்தன ; இயக்கரும் மகளிரும் இரியல் போயினர் - இயக்கர்களும் அவர்தம் தேவிமார் களும் நிலை குலைந்து ஓடினார்கள்.

முயற்கறை மதி - களங்கத்துடன் கூடிய சந்திரன் ; இக்களங் கத்தை மானென்றும் முயல் என்றும் வருணிப்பது கவிசமயம். 'வம்புறு மறுவைப் பற்றி முயலென வாங்கும் வண்ணம், எம்பெருங் களிறே' (யுத்த. இராவணன் சோகப். 50) ; 'இளம்பிறை முயற் குழந்தை' (குமரகுரு. முத்துக்குமார. பிள்ளைத். 5) ; 'கலைவெண் மதியின் முயல் தடவி' (மீனாட்சி. பிள்ளைத். 3) ; முன்றில் ; இல் முன் என்பது முன்பின்னாகத் தொக்கது ; முன்னிடம் என்பது பொருள் அசக்கல் - அயக்கல் சகரயகரப்போலி. முகிற்குலம் அலறுதல் - இடி யிடித்தல். மகளிர் என்பது மனைவிமார் என்ற பொருளில் வந்தது 'மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்' (மணி. 21 : 30) ; 'இரியல்போதல் : கறையடி யானை யிரியல் போக்கும்' (புறநா. 135 : 12) ; 'உம்பரு மிரியல் போனார்' (ஆரணிய. 473) ; 'சேக்கை விட் டிரியல் போகி' (ஆரணிய. 977).

பா - ம். 1. தாங்கின, தாங்கலாள்.
2. முயற்கலா மதிதவழ்.
3. அயற்கலி, அயற்கலின்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


626 வேரொடு நெடுங்கிரி தலைவர் வீசின
ஓரிடத் தொன்றின்மே லொன்று சென்றுற
நீரிடை நிமிர்பொறி பிறக்க நீண்டவீ
தாருடை நெருப்பென வருண னஞ்சினான்.

தலைவர் வேரொடு வீசின நெடுகிரி - படைத்தலைவர்கள் வேருடன் அகழ்ந்து எறிந்த பெரிய மலைகள், ஓரிடத்து ஒன்றின் மேல் ஒன்று சென்றுற - ஓரிடத்தில் ஒன்றின் மீது ஒன்று தாக்கியதால், நீரிடை நிமிர் பொறி பிறக்க - நீரின்மேல் எழுகின்ற பொறிகள் வெளிப்பட, வருணன் - வருணன், 'நீண்ட ஈது ஆருடை நெருப்பென அஞ்சினான் - தொடர்ந்து எரிகின்ற இது யார் எழுப்பிய நெருப்போ' எனப் பயந்தான்.

வேர் உடை நெடுங்கிரி - என்ற பாடத்திற்கு வேர் அகழப் பெற்ற பெரிய மலையென்க. ஈது - இது என்னும் சுட்டு நீண்டது. மலைமீது மலை மோதியதால் பிறந்த நெருப்புப் பொறிகளைக் கண்டு, முன் இராமபிரான் அம்பினால் பிறந்த நெருப்பில் துன்புற்ற வருணன், 'இது யார் விட்ட அம்போ' என்று அஞ்சினான் என்க. நீண்டு அவி தாருடை நெருப்பு எனக் கொண்டு நீண்டு அவிந்த மலைபோல் ஒழுங்கான நெருப்பு என்று ஒரு சாரார் பொருள் கூறுவர்.

பி - ம். 1. வேருடை ; கிரிதலை வாங்கி.
2. சென்றுக. 11

627. ஆனிறக் கண்ணனென் றொருவ னங்கையால்
கானிற மலைகொணர்ந் தெறியக் கார்க்கடல்
தூநிற முத்தினந் துவலை யோடும்போய்
வானிறை மீனொடு மாறு கொண்டவே.

ஆன் நிற கண்ணன் என்று ஒருவன் - பசுவின் கண்போன்ற நிறத்தவான விழிகளையுடைய கவாட்சன் என்று கூறப்பட்ட ஒரு வானர வீரன், அம் கையால் - தனது அழகிய கைகளால், கான் இற மலை கொணர்ந்து எறிய - காடுகள் அழியும்படி மலையைக்கொண்டு வீச (அதன் விசையினால்), கார் கடல் தூ நிறம் முத்தினம் - கரிய கடலில் உள்ள வெண்மையான முத்துத் தொகுதிகள், துவலை


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யோடும் போய் - நீர்த்துளிகளுடன் மேலே சென்று, வான் நிறை மீனொடு மாறு கொண்ட - (இவை நீர்த்துளிகள், இவை முத்துக்கள் என்று அறிய முடியாதபடி) வானவீதியில் நிறைந்தொளிர்கின்ற நட்சத்திரங்களோடு மாறுபட்டுத் திகழ்ந்தன. ஏ - அசை.

ஆன் நிறை கண்ணன்: கவாட்சன் என்ற வடசொல்லின் தமிழாக்கம்; கிட்கிந்தாகாண்டம் 693-ஆம் செய்யுள் உரைக்குறிப்புக் காண்க. இவன் இடபக்கண்ணன் என்றும் கூறப்பெறுவன். அகம் கை - அங்கை; 'அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்' (நன். மெய்யீறு. 9). தூ நிறம் - வெண்மைநிறம்; 'தூமதி வாக்கிய கிரணம்' (காஞ்சிப். நாட்டுப். 96); தூய்மை - வெண்மை; 'செங்கோட் டிளம்பிறை செக்கர்த் தோன்றித், தூய்மை காட்டும்' (பெருங். 1·33; 58-59). இஃது மயக்கவணி, தொடர்புயர்வு நவிற்சியுமாம்.

பி - ம். 2. கானிறை, கானிமிர்.
4. வானிடை, வானுள; கொண்டதே. 12

628. சிந்துரத் தடவரை யெறியச் சேணிடை
முந்துறத் தெறித்தெழு முத்து மொய்த்தலால்
அந்தரத் தெழுமுகி லாடை யாவகன்
பந்தரொத் தநெடும் பரிதி வானமே.

சிந்துரம் தட வரை - யானைகளை மிகுதியாகக்கொண்ட பெரிய மலைகளை, எறிய - (கடலில் வானரங்கள்) வீசும்போது, முந்துற தெறித்து எழு முத்தும் - (அந்தக் கடலிலிருந்து) வெளிப்பட்டுச் சிதறியெழுந்த முத்துக்கள், சேண் இடை மொய்த்தலால் - ஆகாயத்திடத்து அடர்ந்துகொண்டதனால், அந்தரத்து எழும் முகில் - விண்ணிடைக் காணப்படும் மேகங்கள், ஆடையா - (பந்தலிற் கட்டும்) ஆடைபோன்று காணப்பட, நெடு பரிதி வானம் - சூரியன் செல்லும் நீண்ட ஆகாயமானது, அகன் பந்தர் ஒத்தது - அகன்ற பந்தர்போலக் காணப்பட்டது. ஏ - அசை.

சிந்துரம் - யானை; 'சிந்துரம் வயப்புரவி தேர்திசை பரப்பி' (ஆரணிய. 524); 'சிந்தூரத் திலகநுதற் சிந்துரத்தின் மருப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொசித்த செங்கண்மாலே' (வி. பா. கிருட்டின. 11); இது வட சொல். இதனைச் சங்கமருவிய நூல்களிற் காண்டற்கில்லை. சிந் துரம், சிவப்பு என்பது பழையவுரை. தட வரை - பெரிய மலை; 'தடவும் கயவும் நளியும் பெருமை' (தொல். சொல். உரி. 22). வானத் துக்குப் பந்தரையும், அதன்கண் தவழும் முகிலுக்கு அப்பந்தரிற் கட்டும் சீலையையும் அதில் தொத்தும் முத்தத்துக்குச் சீலையில் தொங்கவிடும் முத்தையும் உவமித்தார்; நன்மைத்தற்குறிப்பேற்றவணி. இங்கே குறிக்கப்பெற்ற முத்தங்கள் கடற்கணுள்ள சிப்பி முத்தும், எறியப்பட்ட மலைகளில் இருந்த வேழத்தின் முத்துக்களுமாம். முத்துப் பிறக்கும் பல இடங்களில் யானைத் தந்தம் ஒன்றுதல் காண்க. ஆடையாக என்றது ஈறு குறைந்தது. பந்தல், பந்தர் ஈற்றுப்போலி. பந்தர், இங்கு முத்துப் பந்தர்; 'வரித்த தண் கதிர் முத்த தாகியிம் மண்ணனைத்துமி முற்றமேல், விரித்த பந்தர்' (அயோத். கைகேசி சூழ்வினைப். 50) என்றது காண்க. நெடும் பரிதி வானம் - நீண்ட வட்டமாகப் பரந்த வானவெளி யெனினுமாம்.

பி - ம். 1. செறிய.
2. தோற்றலால், தொத்தலால்.
3. ஆடையாய்; வாசவன், மாமதன்.
4. பருதி; யானவே. 13

629. வேணுவி னெடுவரை வீச மீமிசைச்
சேணுறு திவலையா னனைந்த செந்துகில்
பூணுறு மல்குலிற் பொருந்திப் போதலால்
நாணினர் வானவர் நாட்டு நங்கைமார்.

வேணுவின் நெடுவரை வீச - மூங்கில்கள் நிறைந்த உயர்ந்த மலைகளை(க் கடலில் வானரங்கள்) எறிய, மீ மிசை சேண் உறு திவலை யால் நனைந்த செம் துகில் - (அந்த வேகத்தால்) மிக்க மேலிடமான ஆகாயத்தின்கண் எழுந்த நீர்த்துளிகளால் நனையப்பெற்ற செந்நிற ஆடை, பூண் உறும் அல்குலில் - மேகலை மணி தரிக்கப்பெற்ற அல்குலில், பொருந்தி போதலால் - ஒட்டிக்கொள்ளுதலால் (தம் உடலுறுப்புக்கள் வெளித்தெரிவது குறித்து), வானவர் நாட்டு நங்கைமார் நாணினர் - விண்ணுலகத்து மகளிர்கள் வெட்க மடைந்தனர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வேணு - மூங்கில்; 'வேணு வெண்காழ் யானை' (பெருங். 1·32:97); 'மாணு விறலோய் வேணு வாகென' (சிலப். 1·6 உரைக்குறிப்பு); 'வேணுவானது வளைந்துபோய்' (சிவப். பிரபந்.). மீமிசை: ஒருபொருட் பன்மொழி. பூண் உறும் அல்குல்; 'அல்குற்கு மிடைக்கு மீந்தார் அணிகல மாய வெல்லாம்' (சீவக. 2535). பின்னிரண்டடிகட்கு (ஒப்பு): 'துடுப்பு வீசுந் துவலைகள் மகளிர் மென்றூ, சுயல்வுறு பரவையல்கு லொளிப்பறத் தளிர்ப்ப வுளளத், தயர்வுறு மதுகைமைந்தர்க் கயர்வுயிர்ப் பளித்து தம்மா' (அயோத்தி. குகப். 56). இச்செய்யுள் தொடர் புயர்வு நவிற்சியணி.

பி - ம். 2. சேணுறத் துவலையான்; நனைந்து.

3. பொருந்த; போகலால், பொத்தலால்.

4. வானநா டுடைய மங்கைமார், வானநாட் டுறையும். 14

630. தேனிமிர் தடவரைத் திரைக்க ருங்கடல்
தானிமிர் தரவிடை குவியத் தள்ளுநீர்
மேனிமிர் திவலைமீச் சென்று மீடலால்
வானவர் நாட்டினு மழைபொ ழிந்தவால்.

திரை கரு கடல் - பெரிய அலைகளையுடைய கரிய கடல், தான் நிமிர் தர - மேலெழுமாறு, தேன் நிமிர் தடவரை - தேன் மிகுந்த பெரிய மலைகள், இடை குவிய - (எறியப்பட்டுக்) குவிந்த அளவில், தள்ளு - (கடலிலிருந்து) வெளிப்படுத்தப்பட்டு, மேல் நிமிர் நீர் திவலை - மேலெழும்பிய நீர்த்துளிகள், மீ சென்று மீடலால் - வெகுதூரம் மேலே சென்று திரும்புவதால், வானவர் நாட்டினும் மழை பொழிந்த - தேவர் உலகத்தும் மழை பெய்தன. ஆல் - அசை.

நிமிர்தர: தர துணைவினை. வானவர் நாட்டினும் என்ற உம்மையால் ஞாலம் வறந்தீர வானின்றுலகம் வழங்கிவரும் மழை ஆண்டு வேண்டுவதின்றென்பது காட்டப்பட்டது; (ஒப்பு): பாரதப் போரில் பெரும்படைகளால் எழுப்பப்பட்ட புழுதி வானுலகம் சேர, அங்கிருந்த ஆகாய கங்கை வண்டல் படியப்பெற்றும், இந்திரன் நகரம் புழுதிபடிந்தும் விளங்கின என்று கூறப்பட்டதை, 'சேனை நடவவெழுதுகள் ககனம் சுலாவி ..........வியனதி வண்டலாக அமரர் உறைதரு நகரம்பொன் வீதி புழுதி யெழ' (வி. பா. 16-ஆம் போர் 73) என்றதுகொண்டு காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. தேனிவர்.

2. தவனிடை ; குளிப்பத், குவிப்பது ; அள்ளி.

3. மிள்கலால்.

4. பொழிந்ததே, பொழிந்ததால். 15

## வேறு

631. மய்யுறு மலைக ளோடு மறிகடல் வந்து வீழ்ந்த
வெய்யவாய் மகரம் பற்ற வெருவின விளிப்ப மேனாள்
பொய்கையி னிடங்கர் கவ்வப் புராதனா போற்றி யென்று
கய்யெடுத் தழைத்த யானை போன்றன களிநல் யானை.

களி நல் யானை - மதம் மிக்க சிறந்த யானைகள், மையுறு மலைகளோடு - மேகங்கள் சூழப்பெற்ற மலைகளுடனே, மறி கடல் வந்து வீழ்ந்த - (அலைகள் கரைக்கண் வந்து) மடிகின்ற கடலிடத்து வந்து வீழ்ந்தனவாய், வெய்ய வாய் மகரம் பற்ற - கொடிய வாயினையுடைய முதலை கவ்வ, வெருவின விளிப்ப - அஞ்சி ஓலமிட்டவை, மேனாள் - முன்னாளிலே, பொய்கையின் - தாமரைத் தடாகத்தில், இடங்கர் கவ்வ - முதலை கௌவிக்கொள்ள, 'புராதனா - மிகவும் பழமையானவனே! போற்றி என்று - உனக்கு வணக்கம் (என்னைக் காப்பாற்றுக)' என்று, கை எடுத்து அழைத்த யானை போன்றன - கையெடுத்துக் கூப்பிட்ட கஜேந்திரனை ஒத்துத் திகழ்ந்தன.

மை - மேகம்; இங்கு எதுகைநோக்கி மய் என வந்தது. வீழ்ந்த - வீழ்ந்தனவாய், முற்றெச்சம். வெய்யவாய் - கொடுமை மிக்கனவாய் எனினுமாம். மகரம் - முதலை; 'மணி மகரம் வாய் போழ்ந்து' (சீவக. 170); மகரம் மீனுமாம், முதலைகள் கடல் நீரில் உறையா என்று கூறுவர். வீழ்ந்தன விளிப்ப எனக் கூட்டுக. விளித்தல் - அழைத்தல்; 'கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்' (குறள். 894). பொய்கை - மானிடராக்காத நீர்நிலை; (பெருங். 3 : 3 · 5) உரைக்குறிப்பு; 'வாவியுள பொய்கையுள' (கிட்கிந்தா. 833); 'வாவியும் பொய்கையும் கண்டார்' (சீவக. 337). இடங்கர் - முதலைவகை; 'கொடுந்தாள் முதலையு மிடங்கரும் கராமும்' (குறிஞ்சிப். 257) என்ற இடத்து நச்சினார்க்கினியர் 'இவை மூன்றும் சாதி விசேடம்' என்றது காண்க. சிலப்பதிகாரப் பதிகம் அடியார்க்குநல்லார் உரை இங்குக் காணத்தகும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இறையனார் அகப்பொருள் உரையில், 'நெய்தற்கு மா சுறுவும் முதலையும்' என்றார். கை - துதிக்கை. கஜேந்திரன் வரலாறு இந்நூலிற் பலவிடங்களில் காணலாம்; ஆரணிய. 49; யுத்த. வீடணன். 113. புராதனு; யுத்த. வருணனை வழிவேண்டு. 70.

பி - ம். 1. மையறு; வந்து விழ்வ.

2. வெய்யவாம்; வெருவியே யுளைந்து, வெருவின விரிப்ப, வெருவின விளைப்ப, வெஞ்செரு விளைப்ப.

3. இடங்கர் கொள்ளப். 16

632. அசும்புபாய் தேனும் பூவு மாரமு மகிலு மற்றும்
விசும்பெலா முலவுந் தெய்வ வேரியின் மிடைந்து விம்மத்
தசும்பெலாம் வாச மூட்டிச் சார்த்திய தண்ணி ரென்னப்
பசும்புலா னாறும் வேலை பரிமளங் கமழ்ந்த தன்றே.

அசும்பு பாய் தேனும் - ஊற்றுக்கசிவாகப் பாய்கின்ற தேனும், பூவும் ஆரமும் அகிலும் - மலர்களும் சந்தனமும் அகிற்கட்டைகளும், மற்றும் - பிற நறுமணப் பொருள்களும், விசும்பு எலாம் உலவும் - ஆகாயம் எல்லாம் பரவுகின்ற, தெய்வ வேரியின் மிடைந்து விம்ம - தெய்வ மணத்துடனே செறிந்து மிகுதலால், பசும் புலால் நாறும் வேலை - புதுப் புலால் மணம்வீசும் கடல் (அப் புலால் நாற்றம் நீங்கி), தசும்பு எலாம் வாசம் மூட்டி சார்த்திய தண்ணீர் என்ன - குடத்தில் நறுமணப் பொருள்களைப் போகட்டு வைத்த தண்ணீர்போன்று, பரிமளம் கமழ்ந்தது - நல்ல மணம் வீசலாயிற்று. அன்று, ஏ - ஈற்றசைகள்.

அசும்பு - கசிவு, ஊற்றும் ஆம்; 'அசும்பு பாய்வரை' அயோத். சித்திரகூடப். 36; சுந்தர. 90, 303. ஆரம் - சந்தன மரம்; 'அகிலோங்காரம், மஞ்சிவரு நெடுங் கிரியும்' (கிட்கிந்தா. 744); அகம். 13, 100; 'அரைத்த வாரமு மாரமு மணிந்து' (வி. பா. நிரை மீட்சி. 29). விசும்பு - ஆகாயம்; 'விசும்பு தைவரு வளியும்' (புறநா. 2). தெய்வம் - திவ்யம். வேரி - நறுமணம்; 'வேரியந் தெரியல் வீர' (ஆரணிய. 784). நறுமணஞ் செறிந்த பொருள்கள் சேர்தலின் கடல்நீர் புலால் நீங்கி மணமுள்ள பொருள்கள் போகடப்பட்ட குடங்கள்போன்று கமழ்ந்தது எனப்பட்டது. தேனின் மிகுதி கூறலின் இது வீறுகோளணி. இயல்பான புலால்மணம் நீங்கி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நறுமணம் கான்றது என்றது, பிறிதின்குணம்பெறலணி. கடல் பரிமளம் வீசியதன்றி, தேன் செறிதலால், உவர் நீங்கி இனிப்பு மிக்கதும் உய்த்துணர்க ; (ஒப்பு) : 'புதுப்புனல் குடையு மாதர் பூவொடு நாவி பூத்த, கதுப்புறு வெறியே நாறுங் கருங்கடற் றரங்கம்' (பால. நாட்டுப். 11) ; மற்றும், பால. நீர்விளையாட்டுப். 20 ; (ஒப்பு) : 'குரும்பை மென்முலையா ராடக் கூந்தலி னறவம் தோய்ந்த, இரும்புன லாறுபாய வெறிதிரை சுருட்டுந் தெண்ணீர்க், கருங் கடற் புலவுநீங்கி நறுமணங் கமழு மென்றால், முருந்துறழ் மூர லார்த மிகுதியை மொழியலாமோ' (நைடத. நாட்டுப். 11). வாச மூட்டிச் சார்த்திய தண்ணீர் ; (ஒப்பு) : 'ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு, தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு' (நாலடி. 139). பரிமளம், வடசொல். தசும்பெலாம் வாசமூட்டிச் சார்த் திய தண்ணீர்.

பி - ம். 1. தேனும்போதும், மலருந்தேனும்.
2. உலாவும் ; வீழ ; விசும்பினி லுலவும் தெய்வ வெறியென.
3. தசும்பினில் ; சேர்த்திய, சாரித்த ; போல. 17

633. தேமுதற் கனியுங் காயுந் தேனினோ டூனுந் தெய்வப்
பூமுத லாய வெல்லா மீன்கொளப் பொலிந்த வன்றே
மாமுதற் றருவோ டோங்கும் வானுயர் மானக் குன்றம்
தாமுத லோடுங் கெட்டா லொழிவரோ வண்மை தக்கோர்.

தக்கோர் - தகுதிவாய்ந்த பெரியோர்கள், தாம் முதலோடும் கெட்டால் - தாம் அடியோடு அழிய நேரினும், வண்மை ஒழிவரோ - (தமது) வள்ளன்மைக்குணம் நீங்கப்பெறுவர்களோ ? (அது போன்று), மாமுதல் தருவோடு ஓங்கும் வான் உயர் மானம் குன்றம்- மா முதலிய மரங்களோடு தழைத்த விண்ணளாவ உயர்ந்த பெருமைமிக்க மலைகள் (தாம் கடலில் வீழ்ந்தொழிந்தாலும்), தேம் முதல் கனியும் காயும் - இனிமைமிக்க பழங்களும் காய்களும், தேனினோடு ஊனும் - தேனுடனே மாமிசமும், தெய்வ பூ முதல் ஆய எல்லாம் - தெய்வத்தை அருச்சிக்கக்கூடிய மலர் முதலியன எல்லாமும், மீன் கொள பொலிந்த - மீன்கள் உட்கொள்ளுமாறு விளங்கின. அன்றே - தேற்றம்.

'மலைகள், தாம் நிலைபெயர்ந்து கடலுள் வீழ்ந்து அழியும் காலத்திலும் மீன்களுக்குப் பழங்கள் முதலியவற்றை அளித்தன'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



என்ற சிறப்புப்பொருளால், 'ஒழிவரோ வண்மை தக்கோர்' என்ற பொதுப்பொருளைக் குறித்தார். இச்செய்யுள் வேற்றுப்பொருள் வைப்பணி. தேம், தேனும் ஆம். இச்செய்யுட்கு (ஒப்பு) 'கெட்டாலு மேன்மக்கள் மக்களே மற்றும் நாலடியார்: 147—150-ம் காண்க. 'நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தாரானலும் இல்லையென மாட்டா ரிசைந்து' (நல்வழி.); மற்றும், திருவிளை. தருமிக்கு. 17-உம் காண்க.

பி - ம். 2. பொலிந்தது.

3. தருவோ டொக்கும். 18

634. மண்ணிறை சேற்றுட் புக்குச் சுரிகின்ற மானக் குன்றம்
கண்ணிறை போதுங் காயுங் கனிகளும் பிறவுங் கவ்வி
எண்ணிறை மீன்க ளெல்லாம் வறியவ ரென்ன மேன்மேல்
உண்ணிறை செல்வ நல்கா தொளிக்கின்ற வுலோப
[ரொத்த.

கண் நிறை போதும் காயும் கனிகளும் - (கடலில் படிகின்ற) கண்ணுக்கு நிறைந்து காணப்படுகின்ற மலர்களையும் காய்களையும் கனிகளையும், பிறவும் - பிற உணவுப்பொருள்களையும், கவ்வி - மலைகள் தாமே தம்மகத்துக்கொண்டு, எண் நிறை மீன்கள் எல்லாம் - எண்ணிக்கையால் மிக்கு விளங்குகின்ற மீன்கள் எல்லாம், வறியவர் என்ன - ஒன்றும் பெறாத வறியரேபோன்று இருக்க, மண் நிறை சேற்றுள் புக்கு சுரிகின்ற மான குன்றம் - மண் நிறைந்த சேற்றினுள் நுழைந்து புகுகின்ற பெரிய மலைகள், உண் நிறை செல்வம் மேன்மேல் நல்காது ஒளிக்கின்ற உலோபர் ஒத்த - தம்மிடம் நிறைந்து விளங்கும் பொருளை மேன்மேலும் பிறருக்கு உதவாது மறைக்கின்ற கருமிகளை நிகர்த்தன.

முன் செய்யுளில் மலைகளின் வண்மையைச் சுட்டி, இங்கு அவற்றின் உலோபத்தைக் கூறினர். சில மரங்கள் கனி முதலியவற்றுடன் மண்ணினுள் மறைந்தமை இங்குப் கூறப் பெற்றது. சுரிதல் - சுழிதல்; 'நெருப்பிடைச் சுரிக்க நீட்டும்' (யுத். 266); சுரிக்கின்றது - ஆழ்கின்றது என்பது பழையவுரை. கடலிடை வீழ்ந்த மலைகளில் உள்ள போது முதலியவற்றை மீன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கள் பல உயிர்க்கும் உதவாமல் சேற்றிடைக் கரக்கின்ற மலைகள் உலோபிகளை ஒத்தன எனப்பட்டது. உவமையணி. கண்ணிறை போது: கண்ணிறைந்த கணவன் என்ற வழக்குக் காண்க. உண்ணிறை செல்வம் - தம்பால் பொதிந்துள்ள பொருள்.

பி - ம். 1. மன்னுற; சுரிக்கின்ற; மாலைக்.
2. கவ்வா, கவ்வ.
3. வெண்ணிற, என்னுறு.
4. செல்லச்செல்ல; ஒளிகின்ற வுலோபர். 10

635. **கறங்கெனத் திரியும் வேகக் கவிக்குலம் கடிதின் வாங்கிப்**
**பிறங்கிருங் கடலிற் பெய்த போழ்தத்தும் பெரிய பாந்தள்**
**மறங்கிளர் மான யானை வயிற்றின வாக வாய்சோர்ந்**
**துறங்கின கேடுற் றாலு முணர்வரோ வுணர்வி லாதார்.**

கறங்கு என திரியும் - காற்றாடிபோலத் திரிகின்ற, வேகம் கவி குலம் கடிதின் வாங்கி - வேகத்துடன்கூடிய குரங்குக் கூட்டங்கள் (மலைகளை) விரைவாகப் பேர்த்து எடுத்து, பிறங்கு இரு கடலில் பெய்த போழ்தத்தும் - விளங்குகின்ற பெரிய கடலிடத்தே போகட்ட போழ்திலும், பெரிய பாந்தள் - (அம்மலைகளில் வாழும்) பெரிய பாம்புகள், மறம் கிளர் மானம் யானை - (தாம் முன் விழுங்கின) வீரம் விளங்குகின்ற பெருமைமிக்க யானைகள், வயிற்றின ஆக - தம் வயிற்றினுள்ளனவாக, வாய் சோர்ந்து உறங்கின - வாய்கள் நெகிழ்ந்தவண்ணம் தூங்கியே கிடந்தன; உணர்வு இலாதார் - நல் உணர்ச்சியில்லாதவர்கள், கேடு உற்றாலும் உணர்வரோ - கெடுதி நேர்ந்தாலும் உணர்ச்சி கொள்வார்களோ?

இச்செய்யுளும் **வேற்றுப்பொருள்வைப்பணி.** சிறப்புப்பொருளைச் சாதிப்பதற்குப் பொதுப்பொருளையும், பொதுப்பொருளைச் சாதிப்பதற்குச் சிறப்புபொருளையும் அமைத்துக் கூறுவது இதன் இலக்கணம், (தண்டி. 46); இங்குச் சிறப்புப்பொருளை பொதுப் பொருள் சமர்த்தித்து நின்றது. (ஒப்பு): பால. கோலங்காண். 9. கறங்கு - காற்றாடி; 'கறங்கு போல்வன' (கிட்கிந்தா. 703); 'பெயர்க்கும் சாரிகை கறங்கென' (சுந்தர. 803). இரு கடல் - கரிய கடலுமாம். இச்செய்யுளில் அமைந்துள்ள ஒருவகை ஒப்பு: 'கண்கூடாப் பட்டது கேடெனினும் கீழ்மக்கட், குண்டோ வுணர்ச்சிமற் றில்லா


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கும்—மண்டெரி, தான்வாய் மடுப்பினும் மாசுணங் கண்டுயில்வ பேரா பெருமூச்செறிந்து' (நீதிநெறி. 34); 'கொலைஞ ருலையேற்றித் தீமடுப்ப வாமை, நிலையறியா தந்நீர் படிந்தாடி யற்றே' (நாலடி. 331). மறங்கிளர் மான் யானை வயிற்றினவாக: பெரிய மலைப்பாம்புகள் பிராணிகளை உள்ளபடி விழுங்குவதும், அந்தப் பிராணிகள் சில பல விநாடிகள் அதன் வயிற்றிடையிருந்து கூவிப் பின்னர் மடிவதும் காணப்படும் காட்சிகள். அரவம் யானையை விழுங்கல்; 'போரரா, விழுங்கவந் தெழுந்தெதிர் விரித்த வாயின்வாய், முழுங்குதிண் கரிபுகும்' (பால. தாடகை. 361); 'மைந்துமலி சினத்த களிறுமத னழிக்கும், துஞ்சு மரங்கடுக்கு மாசுணம்' (மலைபடு. 260-261); 'களிறு பாந்தட் பட்டென'; 'களிறகப் படுத்த பெருஞ்சின மாசுணம்' (நற். 14, 261); 'பரிய களிற்றை யரவு விழுங்கி மழுங்க' (தேவா. திருஞான.). பாம்புக்கு அஜகரம் என்ற ஓர் பெயருண்டு; 'கைந்நாக மேமேயு மாநாகம்' தக்கயாகப்பரணி 543-ஆம் உரை காண்க. போழ்தத்தும்: அத்து, சாரியை.

பி-ம். 1. கையின் வாங்கி, கதுவ வாங்கி.
2. போதத்தும்; பெய்த பேர்வரை, பெருவரைப்.
3. வாய் சேர்ந்து. 20

636. இழையெனத் தகைய மின்னி னெயிற்றின
முழக்க மெய்தப்
புழையுடைத் தடக்கை யொன்றே டொன்றிடை
பொருந்தச் சுற்றிச்
கழையுடைக் குன்றின் முன்றி லுருமொடு
கலந்த கால
மழையெனப் பொருத வேலை மகரமு
மத்த மாவும்.

புழை உடை தட கை - துளையுள்ள பெரிய கை, ஒன்றோடு ஒன்று இடை பொருந்த சுற்றி - ஒன்றின்மாட்டு மற்றொன்று சேர (ஒன்றையொன்று) சுற்றினவாய், இழை என தகைய - (இழைக்கப் பட்ட) அணியென்னும் தன்மைவாய்ந்த, மின்னின் எயிற்றின - ஒளி விளங்கும் பற்களையுடையவான, மத்த மாவும் வேலை மகரமும் - மதம்கொண்ட யானையும் கடலில் உள்ள மகரமீனும், கழை உடை குன்றின் முன்றில் - மூங்கில் செறிந்த மலையின் மேலிடத்துப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொருந்தி நின்ற, உருமொடு கலந்த கால மழை என முழக்கம் எய்த - இடியொடு விரவிய ஊழிக்கால மழைபோன்று பேரொலி யெழ, பொருத - தம்முட் போர் செய்தன.

பேரொலி உண்டாமாறு ஒன்றுகூடின் வன்மை மிகும் ஆதலின் இயல்பாகவே கூட்டம் கூட்டமாகத் திரியும் யானைகள் மகரத்தை எதிர்க்கக் கூடின எனப்பட்டது. இழை - ஆபரணம்; இழைத்துச் செய்யப்படுவது என்ற காரணக்குறி. காதல் முறையிலும், கூட்டுறவு முறையிலும் யானைகள் தத்தம் துதிக்கைகளை இணைத்துக்கொள்ளும் முறையை இன்றும் காணலாம். குன்றின் முன்றில், முன் 10-ஆம் செய்யுள் கண்டுணர்க. கழை - மூங்கில். மத்தமா - மதம்கொண்ட யானைகள்; (ஒப்பு): 'மத்த யானை வருந் தாதோ' (சுந்தர. 547); கிட்கிந்தா. 231. புழையுடைத் தடக்கை மத்தமா என இணைக்க. மகரமீனுக்கும் துதிக்கையுண்டு; அதன் கொம்பினை அங்ஙனம் வழங்குவர்போலும்.

பி - ம். 1. முழக்க மேய்ந்த.

3. உருமொடும்.



637. பொன்றின சிறிய வாய புண்ணியம் புரிந்தோர் போலக்
குன்றுகள் குரக்கு வீரர் குவித்தன நெருப்புக் கோப்ப
ஒன்றின்மே லொன்று வீழ வுகைத்தெழுந் தும்பர் நாடு
சென்றுமே லிடம்பெ றுது திரிந்தன சிகரச் சில்லி.

குரக்கு வீரர் குவித்தன - வானரவீரர்கள் குவித்த, குன்றுகள் - சிறு மலைகள், நெருப்பு கோப்ப - (பிறகு உராய்தலால்) நெருப்புத் தொடர்ந்து பற்றுமாறு, ஒன்றின் மேல் ஒன்று வீழ - ஒன்றின்மீது மற்றொன்று வீழும்படி, உகைத்து எழுந்து - செலுத்தப்படுதலால் உண்டான, சிகரம் சில்லி - சிகரத் துணுக்குகள், பொன்றின சிறிய ஆய புண்ணியம் புரிந்தோர் போல - சிதைந்துபோன சிறிய புண்ணியம் செய்தோர்போன்று, உம்பர் நாடு சென்று - மேலே கிளம்பி விண்ணுலகம் சென்று, மேல் இடம் பெறுது திரிந்தன - மேலே இடம் கிடைக்கப்பெறுமல் மீண்டன.

சிறிது புண்ணியம் புரிந்தோர் அதன் பயனாகத் தேவர் உலகத்தில் சிறிதுகாலம் வசித்துப் பின்னர் அந்தப் புண்ணியம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அற்றுப்போக, மீட்டும் பூமியிற் பிறப்பர் என்பது நூற்கொள்கை; 'க்ஷீணே புண்யம் மர்த்ய லோகம் விசந்தி' என்பது பகவத்கீதை. அவர்களைப்போல, சில்லிகள் மேலெழுந்து விழுந்தன என்றார். சில்லி - உடைகல்; துணுக்குகள்.

பி - ம். 1. பொன்றினர்.

2. குன்றுகள் துரக்கும்; குலித்தனர்.

3. உதைத்து; உம்பர் நாடச், நாட்டிற்.

4. மேனிலை.

22

638. கூருடை யெயிற்றுக் கோண்மாச் சுறவின மெறிந்து
[கொல்லப்
போருடை யரியும் வெய்ய புலிகளும் யாளிப் போத்தும்
நீரிடைத் தோற்ற வன்றே தந்நிலை நீங்கிற் றென்றால்
ஆரிடைத் தோலார் மேலோ ரறிவிடை நோக்கி னம்மா.

கூர் உடை எயிறு கோண்மா சுறவு இனம் - கூரிய பற்களை யுடைய நீர் மிருகமாகிய சுறவின் குழாங்கள், எறிந்து கொல்ல - அடித்துக் கொலைசெய்ததால், போர் உடை அரியும் வெய்ய புலிகளும் யாளி போத்தும் - போர்புரியும் தன்மைபெற்ற சிங்கமும், கடுமையான புலிகளும், ஆண் யாளிகளும்; நீர் இடை தோற்ற - நீரிலே தோல்வியுற்றன; அம்மா - ஈதென்ன வியப்பு; அறிவிடை நோக்கின் - அறிவினால் ஆய்ந்து பார்க்கின், தம் நிலை நீங்கிற்று என்றால் - தமது இருக்கைவிட்டு நீங்கிடின், மேலோர் - இயல்பாக வன்மைவாய்க்கப்பெற்றவர், ஆர் இடை தோலார் - எவரிடம்தான் தோல்வியடையமாட்டார்கள்? அன்றே - தேற்றம்.

கோண்மாச் சுறவினம் - கோட்பாட்டுடைய பெரிய சுறாமீன் என்பது பழையவுரை. போத்து: இங்கே ஆண் விலங்கைக் குறித்தது; 'பெற்ற மெருமை புலிமரை புல்வாய், மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே' (தொல். மரபி. 41); போத்து என்பதை யாளியின் கன்றென்றும் கூறுவர் சிலர்; யாளி - சிங்கம் போன்ற ஓர் மிருகம் என்பர்; அது இப்போது வழக்கிறந்தது. இச்செய்யுளும் வேற்றுப் பொருள்வைப்பணி; (ஒப்பு): பால. பூக்கொய். 6, 7, 9. பின்னிரண்டடிகட்கு (ஒப்பு): 'நெடும் புனலுள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வெல்லு முதலே யடும்புனலின், நீங்கி னதனைப் பிற' (குறள். 495); 'யானையைச் சலந்தனில் இழுத்த அக்கரா, பூனையைக் கரைதனிற் பிடிக்கப் போகுமா' (விவேகசிந்தாமணி); மற்றும், சீவக. 446-உம் குறள் இடனறிதல் அதிகாரமும் காண்க. இப்படலத்தின் 18-ஆம் செய்யுள் முதல் இச்செய்யுள் இறுதியாகச் சேதுபந்தன நிகழ்ச்சிகளால் அறியக்கூடிய தத்துவக் கருத்துக்களையும், நீதிகளையும் ஆசிரியர் தொகுத்துக் காட்டும் சிறப்பு நோக்கத்தக்கது.

பி - ம். 1. கூறுடை.
2. பேரிடை.
3. நீங்கிச் சென்றால், நீக்கி.
4. ஆரிடை யழிவு வாரா, ஆரிடைத் தோலார் தங்கள். 23

639. ஒள்ளிய வுணர்வு கூட வுதவல ரெனினு மொன்றோ
வள்ளிய ராயோர் செல்வ மன்னுயிர்க் குதவு மன்றே
துள்ளின குதித்த வானத் துயர்வரைக் குவட்டிற் றூங்கும்
கள்ளினை நிறைய மாந்திக் கவியெனக் களித்த மீன்கள்.

ஒள்ளிய உணர்வு கூட - விளக்கமான அறிவு பொருந்த (அறிந்து), உதவலர் எனினும் - உதவி புரியாரேயானாலும், வள்ளியர் ஆயோர் செல்வம் - வள்ளன்மை பூண்டவரின் பொருளானது, ஒன்றோ - அந்த அளவுடன் நிற்குமோ, மன் உயிர்க்கு உதவும் அன்றே - நிலைபெற்ற உயிர்கட்கு உபகாரமாகும் அல்லவோ? மீன்கள் துள்ளின வானத்து குதித்த - மீன்கள் துள்ளி ஆகாயத்திற் குதித்தனவாய், உயர்வரை குவட்டில் தூங்கும் - உயர்ந்த மலைகளின் உச்சியிலே தொங்குகின்ற, கள்ளினை நிறைய மாந்தி - தேனை நிறையக் குடித்து, கவி என களித்த - குரங்குகள் போன்று களிப்பு மிக்கனவாயின.

இங்கு வள்ளியராயோர் செல்வம் மன்னுயிர்க் குதவும் என்ற பொதுப்பொருளை, உயர்வரைக் குவட்டிற் றூங்கும் கள்ளினை மாந்திக் களித்தன மீன்கள் என்னும் சிறப்புப்பொருள் சமர்த்தித்தது காண்க. மலை தானே உதவாவிட்டாலும், அதன்கண்ணுள்ள தேன் மீனுக்குப் பயன்பட்டது; அதுபோல், வள்ளி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யோர் மனப்பூர்வமாக உதவாவிட்டாலும், அவர்களுடைய செல்வம் பிறருக்குப் பயன்படும் என்று கூறப்பெற்றது. கவி - குரங்கு; கபி என்ற வடசொற்றிரிபு.

பி - ம். 2. வள்ளிய ராஞேர்; செய்கை.

3. மானத் தும்பர்தம், வானத் துயர்முறை, மானத் துயர்வரைக், தொடர்வரை. 24

640. மூய்செரி பிறக்க மீக்கொண் டிறக்கிய முடுக்கந் தன்னல்
கோய்சொரி நறவமென்னத் தண்புன லுகுக்குங் குன்றின்
வேய்சொரி முத்துக் கம்மா விருந்துசெய் திருந்த விண்ட
வாய்சொரி யிப்பி யோடும் வலம்புரி யுமிழ்ந்த முத்தம்.

மூய்சு எரி பிறக்க - அடர்கின்ற நெருப்பு எழுமாறு, மீ கொண்டு இறக்கிய முடுக்கம் தன்னல் - உயரத்திலிருந்து கீழ் இழிந்த வேகத்தினலே, கோய் சொரி நறவம் என்ன - மதுச் செப்பிலிருந்து கள்ளினைச் சொரிவதுபோன்று, தண் புனல் உகுக்கும் குன்றின் - குளிர்ந்த நீரைச் சிந்துகின்ற மலைகளில் உள்ள, வேய் சொரி முத்துக்கு - மூங்கில்கள் சொரிந்த முத்துக்களுக்கு, இப்பி விண்ட வாய் சொரி முத்தமோடும் வலம்புரி உமிழ்ந்த முத்தம் - இப்பிகளின் பிளந்த வாயிலிருந்து வீழ்த்த முத்துக்களுடன் வலம்புரிச் சங்கங்கள் ஈன்ற முத்துக்களும், விருந்து செய்து இருந்த - விருந்தாற்றி நின்றன. அம்மா - வியப்பிடைச்சொல்.

மூசெரி என்பது எதுகைக்கேற்ப மூய்செரி எனக் கொள்ளப் பட்டது. மூசு எரி - அடர்ந்து எரியும் தீ. மூசுதல் - மொய்த்தல்; 'மூசுவண்டு வாசமுண்டு மோகன முகாரிராகம் பாடுமே' (அண்ணு மலை. காவடிச்சிந்து); 'சுரும்பு மூசாச் சுடர்ப் பூங்காந்தள்' (திருமுருகு. 43)-உம் அதன் உரையும் காண்க. முடுக்கம் - வேகம். கோய் - செப்பு; 'கோயிற் றேருமால்' (புறநா. 300); 'சாத்துக் கோயும் பூத்தகைச் செப்பும்' (பெருங். 3 : 5 : 77); 'கோலைக் கோயுட் கொண்டுநிறை யமைத்த' (பெருங். 3 : 9 : 43). இனம்பற்றி இப்பி முத்தும் வலம்புரி முத்தும் தம்மிடம் வந்து கலந்த மலைகளினின்ற வேய்முத்தங்கட்கு விருந்தளித்தன எனப்பட்டது; அதாவது, தம்மிடம் வந்த வேய்முத்தங்கட்கு இடம் தந்து உதவின என்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அறிவற்ற இந்த முத்துக்களும் இனம்பற்றித் தம்மிடம் போந்த வேய்முத்தங்கட்குதவின என்பதிலிருந்து பொதுவாக அந்நாட்டு மக்களும் விருந்தோம்புதலில் வழுவலிலர் என்பது உள்ளுறையாகக் கொள்க. வலம்புரி: 'வலம்புரி சலஞ்சலம் வளை இயதொத்தனள்' (சீவக. 184); வலம்புரி, முகம் வலமாக வளைந்திருக்கப்பெற்ற சங்கு என்ப. இது மிகவும் அருமையானது, விலையுயர்ந்தது; இதற்கு மாறுக இடப்புறம் வளைந்தது இடம்புரி. ஈற்றடியில் உள்ள முத்தம் இப்பிக்கும் கூட்டப்பட்டது. முடுக்கு அம் தன்றுல் கோய்: நெருக்கும் நீரிலுள்ள சங்கு என்பதும், 'வேய்முத்துக்கு இப்பியும் சங்கும் விருந்திடுவனபோல முத்தங்களை ஈன்றன' என்பதும் பழையவுரை. இதன்பின் ஒரு பாடல் வசனத்தின்மூலம் காணக்கிடக்கிறது என்பதும் ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. இயற்றிய.
2. கோசொரி, பூசொரி; தன்சுனை.
3. வேசொரி; விண்ட; இருந்த போலும். 25

## வேறு

641. விண்ட லந்தொடு மால்வரை வேரொடும்
கொண்ட லங்கொள வீரர் குவித்தலால்
திண்ட லங்கட லானது நீர்செல
மண்ட லங்கட லாகி மறைந்ததே.

வீரர் - வானரவீரர்கள், விண் தலம் தொடு மால்வரை - ஆகாயத்தைத் தீண்டுகின்ற பெரிய மலைகளை, வேரொடும் கொண்டு - வேருடன் அகழ்ந்துவந்து, அலம் கொள குவித்தலால் - வருத்தம் உறுமாறு குவித்ததனல், கடல் - கடலானது, நீர் செல திண் தலம் ஆனது - நீர் புறத்தே சென்றுவிட வலிய தரையாக ஆயிற்று; (கடல்நீர்), நீர் செல - நீர் பாயப்பெற்றதனல், மண் தலம் - பூமியானது, கடலாகி மறைந்தது - கடலாக மாறிக் கட்புலனுகாமல் மறைந்தது. ஏ - அசை. நீர் செல இரண்டிடத்தும கூட்டப்பட்டது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பின் இரண்டடிகளில் பரிவர்த்தனை அல்லது மாற்றணி காண்க. 'பொருள் பரிமாறுதல் பரிவருத் தனையே' (தண்டி. பொருளணி. 62); பூமியின் தன்மையைக் கடலும், கடலின் தன்மையைப் பூமியும் பெற்றன என்றது காண்க. அலம் - துன்பம்; 'அலமகன் முத்தி யுண்டாம்' (ஞாந. எக்கிய. பூ. 2:8); அலம் - நிறைவுமாம். மண்டலம் - பூமண்டலம். நீர்செல என்பது இடைநிலை விளக்காகிக் கடலோடும் மண்டலத்தோடும் இயையும்.

பி - ம். 2. கொண்ட லங்கொளி.

3. கடலாயது.

4. மண்டலங் கெடலாகி; மறைந்தவே, மலிந்தவே, நிறைந்தவே. 26

642. அய்யன்வேண்டி னதுவிது வாமன்றே
வெய்ய சீயமும் யாளியும் வேங்கையும்
மொய்கொள் குன்றின் முதலின மொய்த்தலால்
நெய்தல் வேலி குறிஞ்சி நிகர்த்ததால்.

மொய்கொள் குன்றின் - வன்மை செறிந்த குன்றினிடத் திருந்த, வெய்ய சீயமும் யாளியும் வேங்கையும் - கொடிய சிங்கமும் யாளியும் வேங்கைப்புலியும், முதலின - முதலாயின, மொய்த்தலால் - நெருங்கியதனால், நெய்தல் வேலி - நெய்தல் நிலங்கள், குறிஞ்சி நிகர்த்தது - குறிஞ்சி நிலத்தை ஒத்தன; அய்யன் வேண்டின் அது இது ஆம் அன்றே - யாவர்க்கும் தலைவனான இறைவன் விரும்பின் ஒன்று பிறிதொன்றாக மாறும் அல்லவோ? ஆல் - அசை.

ஒன்று வேண்டிற் பிறிதொன்றாகும் என்பதை விளக்க 'அது இதுவாம்' எனப்பட்டதனால், பொதுப்பொருள் சிறப்புப்பொருள் கொண்டு அமைக்கப்பட்டது; வேற்றுப்பொருள்வைப்பணி. (திருவிளை. தருமிக்கு. 33). (ஒப்பு) 'முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ' (பெரியபு. மனுநீதி.) 'உனக்கு மொண்ணாத துண்டோ' (யுத்த. 599). சீயம் யாளி வேங்கை, என்பவை குறிஞ்சிக் கருப்பொருள்; (தொல். அகத்திணை. 18) காண்க. சீயம் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சிங்கம்; 'பொன்து ளங்குளைச் சீயமும் போன்றனன்' (கிட்கிந்தா. 567); 'நாய்தரக் கொள்ளும் சீயம் நல்லர சென்று நக்கான்' (யுந்த. அங்கதன். 29).

பி - ம். 1. அது வழல்.

2. வேங்கையும் வேழமும், வேழமும் வேங்கையும்.

3. குன்று, குன்றம்; முதலின மொத்தலால்.

4. நெய்தல் வேலே; நிறைந்ததே. 27

643. யானு ணுதன விங்கிவை யென்னவே
தீனு ணுதன வென்னிது செய்யுமே
மானு ணுத திரைக்கடல் வாழ்தரு
மீனு ணுதன வில்லை விலங்கரோ.

'யான் உணுதன இங்கு இவை என்னவே - யாம் உண்ணுதவை இந்தக் கடலில் இவைகள்' என்று பகர்ந்து, தீன் உணுதன - (மலை விலங்குகள்) உணவு உட்கொள்ளாவாயின; மான் உணுத திரைகடல் வாழ் தரு மீன் - (இங்ஙனம்) விலங்குகளால் உண்ணப் படாத அலைகடலில் தங்கியுள்ள மீன்கள், இது என் செய்யுமே - இந்த மிருகச்சாதி (இவ்வாறு செய்வதைவிட்டு) என்ன செய்யும்? (என்று கொண்டு), உணுதன விலங்கு இல்லை - அன்று விலங்கு களால் உண்ணப்பெறுத மீன்களால் உண்ணப்படாத மிருகங்கள் இல்லை. ஏ, அரோ - அசைகள்.

தீன் - தின்னப்படுவது; தீனி என்பது செயப்படுபொருள் விகுதிகெட்டு வந்தது. மான் என்பது, ஈண்டு மிருகப் பொது வைக் குறித்து நின்றது (பிங்.). இந்தக் கவியை மீனின் வாக்கிய மாகக் கொள்க. தின்றால் என்னிது செய்யுமே - நாமிந்தச் சிங்கத்தைத் தின்றால்அவை யென்ன செய்யும்? என்பது பழைய வுரை.

பி - ம். 1. ஈங்கிவை; என்னவோர்.

2. செய்யுமோ. 28



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


644. வெளவி லங்கு வளர்த்தவர் மாட்டருள்
செவ்வி லங்கலில் சிந்தையிற் றீருமோ
இவ்வி லங்கல் விடேமினி யென்பபோல்
எவ்வி லங்கும்வந் தெய்தின வேலையே.

வெள விலங்கு - (பிற உயிர்களைக்) கவ்விக்கொள்ளும் இயல்பு செறிந்த பிராணிகளுக்கும், வளர்த்தவர் மாட்டு - (தம்மை) வளர்த்தவர் இடத்தில், செம் விலங்கல் இல் - செவ்விய தன்மை நீங்கப் பெறுத, சிந்தையில் - மனத்தினின்று, அருள் தீருமோ - அருள் விலகுமோ? (விலகாது), 'இ விலங்கல் இனி விடேம் - இந்த மலையை இனி விட்டு வரமாட்டோம்', என்ப போல் - என்று மொழிவனபோன்று, எ விலங்கும் வேலை வந்து எய்தின - எவ்வகையான மலைமிருகங்களும் (மலைகளோடு) கடலை வந்தடைந்தன. ஏ - அசை.

வேற்றுப்பொருள்வைப்பணி. வளர்த்தவர்மாட்டு அருள் தீருமோ என்ற பொதுப்பொருளை, விலங்குகள் விடேம் என்று மலையுடன் வேலைக்குவந்ததாகிய சிறப்புப்பொருள் விளக்கி நின்றமை காண்க; (ஒப்பு): உத்தர. அரக்கர் பிறப்பு. 9. இரண்டிடத்தும் விலங்கு என்ற சொல் வந்துளதேனும், பின்னர்க் கூறியது மலைவிலங்குகளைக் காட்டிற்றுதலின் சிறப்புப்பொருள் என்க. 'வெளவிலங்கு, உடையவனைப் பற்றித்திரியும் நாய்போலக் குன்றுவிட்டுப் போகாமல் மிருகங்களும் கடலுக்குள்ளே விழுந்தன' என்பது பழையவுரை.

பி - ம். 1. வல்விலங்கு.
2. சிந்தைய தாமென, சிந்தையர் தீர்வரோ, சிந்தையின் றீருமோ.
3. விடோமினி.
4. எய்திய.



இங்கு ஓர் அதிகப்பாடல் :—

தம்மி னத்தொரு வற்கொரு சார்வுற
விம்ம லுற்ற விடாதுறை வார்கள்போர்
செம்மை மிக்க குரக்கினஞ் சேர்க்கையா
லெம்ம லைக்குல முங்கட லெய்துமோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


645. கனித ருந்நெடுங் காய்தரு நாடொறும்
இனித ருந்தவ நொய்தி னியற்றலால்
பனித ருங்கிரி தம்மனம் பற்றறு
முனிவ ரும்முனி யார்முடி வுன்னுவார்.

இனிது அரு தவம் நொய்தின் இயற்றலால் - இனியதும் செய்தற்கரியதுமான தவத்தை வருத்தமின்றி ஆற்றும் இடமாயிருத்தலின், நாள்தொறும் - தினந்தோறும், கனி தரும் நெடு காய் தரும் - பழங்களைத் தருவதும் பெருங் காய்களைத் தருவதுமான, பனி தரும் கிரி - குளிர்ச்சி செறிந்த மலையை, தம் மனம் பற்று அறு முனிவரும் - தம் மனத்து அகப்பற்றுப் புறப்பற்றுக்கள் நீங்கப்பெற்ற இருடிகளும், முடிவு உன்னுவார் - (தாம்) இறந்துபட எண்ணுவார்களும், முனியார் - வெறுக்கமாட்டார்கள்.

கனிதரும் காய்தரும் கிரி என இயைக்க. முனிவரும் முனியார் என்ற இடத்து முரண்தொடை காண்க. முடிவுன்னுதல் - உயிர்க்கிறுதிசெய்தலைக் கருதுதல். 'இந்த மலை நமக்குச் சகலமும் தந்தாலும், அரக்கர் மடியவல்லவோ வானரர் பிடுங்கினர்கள்' என்கிற முடிவை எண்ணிச் சற்றுங் கோபித்துக் கொள்ளாது, முனிவர் வேறிடங்களிலே போனர்; இது பொருள் என்பது பழையவுரை.

பி - ம். 1. கனிதரு.
3. பற்றறு.
4. முனியாதற முற்றுவார்.



646. புலையின் வாழ்க்கை யரக்கர் பொருப்புளார்
தலையின் மேல்வைத்த கையினர் சாற்றுவார்
மலையி லேமற்று மாறினி வாழ்வதோர்
நிலையி லேமென் றிலங்கை நெருங்கினர்.

புலையின் வாழ்க்கை பொருப்புளார் அரக்கர் - ஊனைத்தின்று உயிர்வாழும் மலைவாசிகளான அரக்கர்கள், தலையின்மேல் வைத்த கையினர் - தலையின்மீது கைவைத்தவராய், 'மலையிலே மற்றும் மாறு இனி வாழ்வது ஓர் நிலையிலேம் - (நாம் வதிந்த மலை கடலில் எறியப்பட்டதனால்) இனி வாழ்வதற்கு வேறோர் இடம் கிடைக்கப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பெருதவர் ஆனோம்', என்று சாற்றுவார் - என்று சொல்லிக் கொண்டே, இலங்கை நெருங்கினர் - இலங்காபுரியை நெருங்கிச் செல்வாராயினர்.

மலையில் வாழ்ந்த அரக்கர்கள் அவர்களின் இருக்கை கடலில் வீழ்த்தப்பட்டதனால் வருந்தினர் எனப்பட்டது. பொருப்பு - மலை; 'பொருப்புறழ் வயிரத் திண்டோள்' (கிட்கிந்தா. 934); 'வரைத்தா ழருவிப் பொருப்பின்' (மதுரைக். 42). தலையின்மேற் கைவைத்தல் வருத்தத்தின் அறிகுறி என்பர்; 'கைதான் தலை வைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி யுள்ளம்' (திருவாச. திருச் சதகம். 1); 'தங்கையு மவ்வழி தலையிற் றாங்கிய' (ஆரணிய. 577); 'தலைமிசைத் தாங்கிய கரத்தர் தாரைநீர், முலைமிசைத் தூங்கிய முகத்தார்' (யுத்த. இராவணன் வதைப். 232); 'ஏங்கின ளிரங்கி விம்மி, யுருகின ளிருகை கூப்பித், தாங்கின டலையிற் சோர்ந்து' (கிட்கிந்தா. 384).

பி - ம். 1. பொருப்பினர்.
3. மலையிலோம்.
4. நிலையிலோம். 31

647. முழுக்க நீரிற் புகாமுழு கிச்செலாக்
குழுக்க ளோடணை கோளரி யாளிகள்
இழுக்கில் பேரணை யின்னிரு பக்கமும்
ஒழுக்கின் மாலை வகுத்தன வொத்தவே.

நீரில் முழுக்க புகா - (கடலின் நீர் தம்மை) அழுத்திவிட (அக் கடல்) நீரிலேயே அடித்துச் செல்லப்படாதனவும், முழுகி செலா - (தாம் நீரிற் பாதி) அழுந்தி நீரிலேயே சென்றுவிடாதனவும் ஆன, குழுக்களோடு அணை - கூட்டங்களோடு கூடிய, கோளரி யாளி கள் - சிங்கங்களும் யாளிகளும், இழுக்கில் - குற்றமற்ற, பேர் அணையின் இரு பக்கமும் - பெரிய அணையின் இருபுறங்களிலும், ஒழுக்கின் மாலை வகுத்தன ஒத்தவே - ஒழுங்காக மாலை யமைத் திருந்தனவற்றை நிகர்த்து விளங்கின. ஏ - அசை.

தன்மைந்தற்குறிப்பேற்றவணி. முழுக்குதல் - அமிழ்த்தல்; பிற வினை. கோளரி - சிங்கம்; பிற உயிர்களைக் கொள்ளவல்லது என்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காரணக்குறி. கோளரி யாளிகள், உம்மைத்தொகை. பள்ளத் திற் சென்றால் மீன் கொல்லும் ; திருவணையிலேறினால் வானரம் கொல்லும் என இருபுறமும்பற்றி ஒளித்துநின்ற மிருகங்கள் இரண்டு மாலை யொத்தன என்பது பழையவுரை.

பி - ம். 1. முழுக்கு, முழுக்கல் ; முதுகிற்செல.

4. ஒத்தவாய். 32

648 பளிக்கு மால்வரை முந்து படுத்தன
ஒளிக்கு மாழி கிடந்தன வோர்கிலர்
வெளிக்கு மால்வரை வேண்டு மெனக்கொணர்ந்
தளிக்கும் வாநர வீர ரநேகரால்.

ஒளிக்கும் ஆழி - (விழிக்குப் புலனாகாதவாறு) மறைக்கப்படும் கடலிலே, முந்து படுத்தன - முன்னமே போகடப்பட்ட, பளிங்கு மால்வரை - பளிங்காலான பெரிய மலைகள், கிடந்தன - கிடந்தன வற்றை, ஓர்கிலர் - உணரமாட்டாதவராய், 'வெளிக்கு - அந்த வெளியிடத்தை மூடுவதற்கு, மால்வரை வேண்டும் என - பெரிய மலை வேண்டும்' என்று, கொணர்ந்து - (மலைகளைப் பெயர்த்துக்) கொண்டுவந்து, அளிக்கும் - அங்கே இடுமாறு தருகின்ற, வாநர வீரர் அநேகர் - குரங்கு வீரர்கள் பலர். ஆல் - அசை.

சேதுவின் ஓர் பகுதி பளிக்கினால் அமைத்திருந்தும், அந்த இடத்தினை வெற்றிடம் என்று கருதி மேலும் மலைகளைக் கொணர்ந்தன வாநரங்கள் என்பதாம். பளிங்கு மால்வரை - பளிக்கு மால்வரை என்றாயது ; நன். உயிரீற்றுப். 34. வெளிக்கு - வெற்றிடத்துக்கு. 'ஒளிக்கும் ஆழி: கடல் இங்ஙனம் ஒளித்த தென்று பளிங்கை யறியாமல் மயங்கியது' என்பது பழையவுரை. பளிங்கும் நீரும் வேற்றுமை தெரியாமை முதலிரண்டடிகளிற் கூறப்பெற்றது ; (ஒப்பு) : பால. நகரப். 20 ; 'படிகத்தின் தலமென் றெண்ணிப் படர்சுனை முடுகப்புக்க' (பால. வரைக். 48) ; 'கயங்கள போன் றொளிர்ப்பளிங் கடுத்த கானமும்' (பால. உண்டாட்டு. 5).

பி - ம். 1. முந்து, மீது ; படுத்தனன்.

2. கிடந்தென ; ஓர்கிலார்.

4. அநேகரே. 33

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


649. பாரி னுள்முதுகுந்நெடும் பாழ்பட
மூரி வாநரம் வாங்கிய மொய்ம்மலை
வேரி னுமென வெம்முழை யின்னுழை
சோரு நாக நிலனுறத் தூங்குமால்.

பாரினுள்-பூமிதேவியின், நெடும் முதுகும் பாழ்பட-நீண்ட முதுகும் பாழிடமாகுமாறு, மூரி வாநரம் வாங்கிய மொய் மலை-வலிய குரங்குப்படைகள் பெயர்த்தெடுத்த வலிய மலைகள், வேரின் ஆம் என-வேருடன் கூடியன என்று புலப்படுமாறு, வெம் முழையின் உழை-கொடிய குகைகளிலிருந்து, சோரும்-நழுவிப் பாதி வெளிப்பட்ட, நாகம் நிலன் உற தூங்கும்-பாம்புகள் நிலத்திற படியுமாறு தொங்கும், ஆல்-அசை.

பாரினுள்-நிலமகள்; பூமியைப் பெண்ணாகக் கூறுவது கவி சமயம். மூரி-வன்மை; கிட்கிந்தா. 271. மலைக் குகைகளினின்று நிலநோக்கித் தொங்குகின்ற நாகங்கள் மலையின் வேர்போன்றன என்க. தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மலை பெயர்க்கப்பட்ட இடம் வெற்றிடமாகப் புலப்படுமாதலின், பாரினுள் பாழ்பட எனப் பட்டது. பாம்புக்கு வேர் உவமை. 'பிடுங்கப்பெற்ற மலை மறுபடியும் பூமியில் இறங்கவேண்டுமென்று நாகம் சுற்றின' என்பது பழையவுரை.

பி-ம். 1. பாரினின்.
3. வேரினுயின, வேரிறுயகல்; மென்முழை.
4. நாகி நிலத்துறத் தூங்குவ; நாகர் நிலத்துறத் தூங்குவார். 34

650. அருணச் செம்மணிக் குன்றய லேசில
இருணற் குன்ற மடுக்கின வேய்ந்தன
கருணைக் கொண்டல் வறியன் கழுத்தென
வருணற் கீந்த வருண சரத்தையே.

அருணம் செ மணி குன்று அயலே-சிவந்த அழகிய அரதனங்கள் ஒளிர்கின்ற சிறு மலைகளின் பக்கத்தில், இருள் நல் குன்றம் சில அடுக்கின-இருள்வண்ணம் கொண்ட சிறந்த சில மலைகள் ஒன்றின்மேலொன்றாய் அடுக்கப்பட்டவை, கருணை கொண்டல்-கருணை பொழியும் மேகம் ஒத்த இராமபிரான்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வறியன் கழுத்து என - (தனக்கு மணிமாலையைக் காணிக்கையாகத் தந்து) வருணன் வெறுங்கழுத்தை யுடையானென்று கருதி, வருணற்கு ஈந்த வருண சரத்தையே - அந்த வருணனுக்கு அளித்த பல நிறமுள்ள மணிவடத்தை, ஏய்ந்தன - ஒத்தன. ஏ - அசை.

சரத்தையே ஏய்ந்தன என்க. அரதனங்கள் ஒளிரும் குன்றுகளின் அருகில், இருள் நிறம் கொண்ட சில குன்றுகள் அடுக்கப் பட்டமை, இராமபிரான் தனக்கு வருணன் உதவிய மணிமாலையைக் கழுத்து வறியனாயுள்ளான் வருணன் என்று அவனுக்கே கொடுத்த இரத்தினமும் நீலமணியும் விரவிய மாலை போன்றது. கருணைக் கொண்டல் - இராமபிரான்; சுந்தர. 573. கொண்டல் - நீரைக்கொள்வது என்று மேகத்திற்குக் காரணக்குறி. வருண சரம் - பலவண்ண மணிகள் விரவிக்கோத்த சரம். இறுதியடியில், பிராசநயம் காண்க. 'திருவணை நவரத்னத்தாலும் கட்டியது. மாலை ஏய்ந்தது. சரம் - மாலை' இவை பழையவுரை.

பி - ம். 1. ஏருசில்.

4. ஈய்ந்த; சரந்ததே. 35

651. ஏய்ந்த தம்முடம் பிட்ட வுயிர்க்கிடம்
ஆய்ந்து கொள்ளு மறிஞரி னாழ்கடற்
பாய்ந்த பண்டுறை யும்மலைப் பாந்தள்கள்
போந்த மாமலை யின்முழை புக்கவே.

ஏய்ந்த - (பிறிதோருடலிற் புக்கு) அமைந்த, உயிர்க்கு இட்ட இடம் - உடல் நிலைத்தற்கிடமான, தம் உடம்பு - தமது உடம்பை, ஆய்ந்து கொள்ளும் அறிஞரின் - ஆராய்ந்து (மீளவும்) அடைகின்ற பரகாயப்பிரவேசம் என்னும் சித்தியில் பழகிய அறிவு முதிர்ந்த யோகசித்தர்போன்று, ஆழ் கடல் பாய்ந்த - (மலையை வீசிய வேகத்தால்) ஆழமான கடலிலே பாய்ந்தனவான, மலை பாந்தள்கள் - மலைப்பாம்புகள், பண்டு உறையும் - முன்னர்த் தாம் தங்கினவாய், (இப்பொழுது), போந்த - கடலிடம் அடைந்த, மா மலையின் முழை புக்க - பெரிய மலைக்குகைகளில் புகுந்தன. ஏ - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உயிருடனிருக்கும்போதில் பிறிதோருடலில் புகுந்து மீட்டும் தம் உடலில் புகுமாறுபோன்று, எறியப்பட்ட மலையின் விசையால் கடலில் வீழ்ந்த பாம்புகள் மீட்டும் அந்த மலை முழையிலேயே புக்கன எனப்பட்டது. இங்குப் பரகாயப்பிரவேசம் என்ற சித்தி குறிக்கப்பட்டது; இதனையே கூடுவிட்டுக் கூடுபாய்தல் என்றும் கூறுவர். இது மிகவும் சிரமத்தின்பேரில் கைகூடும் ஆதலின் இடம் ஆய்ந்துகொள்ளும் அறிஞர் எனப்பட்டது. ஆதிசங்கரா சார்யார் பரகாயப் பிரவேசம் செய்ததும், அருணகிரிநாதர் கிளியாக மாறியதும், திருமூலர் உடல் மாறியதும் இங்கே கருதத்தக்கன. 'மற்றொரு சரீரத்தினும் புகுதலாம்' (தாயு. தேசோ. 8) என்பதும் காண்க. பாந்தள் - பாம்பு; 'பாந்தள் நீங்கிய முழையென' (சுந்தர. 305); 'பாராழிப் பிடரிற் றுங்கும் பாந்தளும்' (கிட்கிந்தா. 756). இச்செய்யுள் உவமையணி. 'பாம்பு தாம் தரிக்கக் கடலில் இடமில்லாமையால் தம் முன் இடமான மலையையே நாடி அடைந் தன' என்பது பழையவுரை.

பா - ம். 1. தம்முடல் விட்ட வுயிர்க்கிடம்.

2. ஆழிக்கண்.

3. பாய்ந்து.

4. போந்து; மால்வரையின்; புக்கதே, புக்கதால். 36

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

ஒருவ ராயிரம் யோசனை யோங்கிய
அருவி மால்வரை விட்டெறிந் தார்த்தலால்
மருவு வான்கொடி மாட விலங்கையில்
தெருவெ லாம்புக் குலாயதெண் ணீரரோ.

## அநுமன் முதலானோர் கடலில் மலையிடுதல்

652. சேதுவின்பெரு மைக்கிணை செப்பவோர்
ஏது வேண்டுமென் றெண்ணுவ தென்கொலோ
தூத னிட்ட மலையின் துவலையால்
மீது விட்டுல குற்றன மீன்களும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சேதுவின் பெருமைக்கு இணை செப்ப ஓர் ஏது வேண்டும் என்று எண்ணுவது என்கொல் - சேதுவின் பெருமைக்கு ஒப்புக் கூறுதற்கு ஒரு காரணம் வேண்டும் எனக் கருதுவது எதன் பொருட்டு? தூதன் இட்ட மலையின் துவலையால் - இராமதூதனான அநுமன் கடலில் எறிந்த மலை வானத்து எழுப்பிய நீர்த் துளியோடு, மீன்களும் - (கடலிலிருந்த) மீன்களும், விட்டு - கடலை நீத்து, மீது உலகு உற்றன - வானுலகத்தை யடைந்தன. ஓ - வினா.

இங்கு வானர வீரர்கள் தனித்தனியே இயற்றிய சாகசங்களைக் கூறத்தொடங்குகின்றார். தூதன் - அநுமன். மீது உலகு - விண்ணுலகம். விண்டு - விட்டு என வலித்தது எனக்கொண்டு, விட்டுணு உலகம் எனினுமாம். துவலை - துளி. 'மீன் கணம் - வானிலுள்ள உடுக்கணங்கள். உற்றன - (பூமியில்) விழுந்தன' என்பது பழையவுரை.

பி - ம். 1. இனி, அணி.

2. என் கண்ணுவ தென்னென.

4. உற்றது மீன்குலம். 37

653. நீல னிட்ட நெடுவரை நீணிலம்
மூல முட்டலின் மொய்புனல் கைம்மிகக்
கூல மிட்டிய வார்கலி கோத்தலால்
ஓல மிட்டன வோடி யுலகெலாம்.

நீலன் - நீலன் என்ற வானர வீரன், இட்ட - கடலில் எறிந்த, நெடு வரை - பெரிய மலையானது, நீள் நிலம் மூலம் முட்டலின் - நீண்ட பூமியின் அடிவாரம்வரையில் சென்று தாக்கியதால், மொய் புனல் - அடர்ந்த நீர், கைமிக - பரவுமாறு, கூலம் இட்டிய ஆர் கலி - கரை நெருங்கப்பெற்ற ஆழியானது, கோத்தலால் - (பூமியைக்) கவிந்துகொண்டதால், உலகு எலாம் - நிலவுலகத்தில் இருந்த உயிர்கள் அனைத்தும், ஓடி ஓலம் இட்டன - ஓடிக் கதறுவன ஆயின.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நீணில மூலம் - நிலத்தின் அடிவாரம்; பாதலமும் ஆம். முட்டல் - மோதுதல்; 'துள்ளித்தூண் முட்டுமாங் கீழ்' (நாலடி. 64); 'முட்டுவேன் கொல் தாக்குவேன் கொல்' (குறுந். 28). மொய் புனல் - வலிய தண்ணீர். கைம்மிகல் - 'காப்புக் கைம மிகினும்' (தொல். பொருள். 214); 'புலவி கைம்மிக' (ஆரணிய. 591). இட்டிய - நெருங்கிய; 'இட்டி தாகவந் துறைமினோ' (தேவா. 1240 : 2); உலகெலாம் எழுந்தோடி ஓலமிட்ட என்க. இட்ட எழுந்து என்பது இட்டெழுந்து எனத்தொக்கது. 'கூல மிட்டிய - கரை சிறிதாகக்கொள்ள' என்பது பழையவுரை; இட்டிய - சிறிய.

பி - ம். 1. சேணுற.
2. மொய்ம்புனல்; கைம்மிகும்.
3. இட்டிய தாதலின், முட்டிய தாதலின், இட்டிய வாதலின்; கோத் ததால்.
4. ஓலமிட் டெழுந்தோடி, இட்டெழுந் தோட. 38

654. மயிந்த னிட்ட நெடுவரை வானுற
உயர்ந்து முட்டி விழவெழுந் தோதநீர்
தியந்த முட்டத் திசைநிலை யானையும்
பெயர்ந்து விட்டவை யாவும் பிளிறுவ.

மயிந்தன் இட்ட நெடுவரை - மயிந்தன் என்ற வீரன் கடலில் வீசிய பெரிய மலையினால், ஓதம் நீர் வான் உற உயர்ந்து எழுந்து - ஆகாயத்திற் பொருந்தக் கிளம்பி, முட்டி - (அவ்வானத்தைத்) தாக்கி, விழ - விழும்போது, தி அந்தம் முட்ட - திக்கந்தங்களை மோதியதாக, திசை நிலை யானையும் - (அப்போது) எட்டுத் திக்கு களிலும் உள்ள யானைகளும், பெயர்ந்து விட்டவை - (தத்தம்) இடம் விட்டு நீங்கினவாய், யாவும் பிளிறுவ - அவை யாவும் முழங்குவன ஆயின.

ஓத நீர் - ஆழி; 'ஓதநீர் கடந்து பகைகடிந்து' (யுத்த. 408). தியந்தம்: திக் அந்தம், வடசொற்றொடர். திசைநிலை யானை - திக்கு எல்லைகளிலிருந்து உலகைத் தாங்கும் யானைகள். அயிந்தம் என்ற பாடங்கொண்டு, இந்திரலோகத்தை முட்ட என்றும் கூறுவர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 2. அயிந்த மிட்ட வளவெழுந் தார்த்தநீர், அயிந்த முட்டி விழவெழுந் தார்த்தநீர்.

3. இவிந்த ; முட்டி.

4. விட்டவை தாமும் ; பிளிறின, பிளிறுமால். 39

இதன்பின் 'ஒருவனுயிரம்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

655. இலக்கு வன்சர மாயினு மின்றெதிர்
விலக்கி னல்விலங் காத விலங்கலால்
அலக்க ணெய்தி யமிர்தெழ வாழியைக்
கலக்கி னன்மகன் மீளக் கலக்கினன்.

ஆழியை அலக்கண் எய்தி அமிர்து எழ - திருப்பாற்கடலை (அது) துன்பம் அடையவும் அமுதம் தோன்றவும், கலக்கினன் மகன் - கடைந்து கலக்கிய வாலியின் புதல்வனை அங்கதன், இலக்குவன் சரம் ஆயினும் - (குறிதவறாது தாக்கவல்ல வலிய) இலக்குவன் அம்பு எனினும், இன்று எதிர் விலக்கினல் விலங்காத - இன்று எதிரிட்டு விலக்கினல் விலங்காத (மிக்க வன்மைவாய்ந்த), விலங்கலால் - மலையைக் கையேற்று, மீள கலக்கினன் - மீட்டும் (அக்கடலைக்) கலங்குமாறு செய்தான்.

இலக்கு வல் சரம் என்றது, குறிதவறாது சென்று தைக்கும் இராமபிரான் அம்பினை எனினுமாம். இலக்கு - குறி. இலக்குவன் சரம் ; (ஒப்பு) : யுத்த. அதிகாயன். 83. அலக்கண் - துன்பம் ; 'ஆண்டுற்ற அலக்க ணேக்கின்' (ஆரணிய. 870) ; 'ஆவா வலக்க ணுறுவாள்' (ஆரணிய. 959). ஆழியைக் கலக்கினவன் வாலி : கிட்கிந்தா. 392, 393 : 'அலைகடல் கடைய வேண்டின் ஆரினிக் கடைவ ரையா' (கிட்கிந்தா. 372) ; 'வேலையை விலங்கன் மத்தில், சுற்றிமா நாகம் தேய வமுதெழக் கடைந்த தோளான்' (சுந்தர. 518) என்பன காண்க. 'யானது, தயிரெனக் கடைந்தவர்க் கமுதம் தந்ததும்' (கிட்கிந்தா. 253) என்பது வாலியே தாரையிடம் கூறியது, மகன் மீளக் கலக்கினன் என்பதுகொண்டு எவ்வகையி னும் தந்தைக்கு ஆற்றல் குறைந்தவன் அல்லன அங்கதன் என்ப துணரலாம் ; 'மகனறிவு தந்தை யறிவு' (நாலடி. 367) என்றதும் காண்க. 'இலக்குவன் சரம் என்றது, இராமன் தயாநிதி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யாகையால் இலக்குவன் அம்பைச் சொன்னது ; அதுவன்றிக்கே, வலிய சரமாகி உலகில் உண்டான உயர்திணைகளும் இலக்கானாலும் எனினுமாம்' என்பது பழையவுரை.

பி - ம். 1. சரமாயிரம் ; என்றெதிர், ஏன்றெதிர்.

2. விலக்கினும், விலங்கலாத.

3. எய்த ; அமுதெழ. 40

656. மருத்தின் மைந்தன் மணிநெடுந் தோளெனப்
பெருத்த குன்றங் கரடிப் பெரும்படை
விருத்த னிட்ட விசையினின் வீசிய
திருத்தம் வானவர் சென்னியிற் சென்றவால்.

மருத்தின் மைந்தன் மணி நெடு தோள் என - வாயுவின் புதல்வனான அநுமனது அழகிய உயர்ந்த புயங்களைப்போல, பெருத்த - பருமனவாய்ந்த, குன்றம் - மலையை, கரடி பெரு படை விருத்தன் - கரடிப் பெரும்படையில் வயது முதிர்ந்தவனான சாம்பவன், இட்ட விசையினில் - போகட்ட வேகத்தினால், வீசிய திருத்தம் - தெறித்த நீர்த்துளிகள், வானவர் சென்னியில் சென்ற - தேவர்களின் சிரங்களில்போய் வீழ்ந்தன. ஆல் - அசை.

மருத்தின் மகன் - வாயுவின் புதல்வனான அநுமன் ; 'மருத்தின் காதலன்' (யுத்த. வேலேற்ற. 40) ; மருத், வடசொல். குன்றம் போன்று பருத்த என்னாது மாற்றிக் கூறியது எதிர்நிலையணி. கரடிப் பெரும்படை விருத்தன் - சாம்பவன் ; கரடிப்படை பெரும் விருத்தன் எனினுமாம். திருத்தம் - தீர்த்தம் ; 'உயர் குடுமித் திருத்தம் பயிலும்' (திருக்கோ. 62) ; இச்சொல் பிராகிருதம் என்பர். முதலிரண்டடிகளில் அநுமன் பெருமை கூறப்பட்டது.

பி - ம். 2. குன்ற மகற்றி.

4. சென்றதால், சேர்ந்ததால். 41

657. குமுத னிட்ட குலவரை கூத்தனில்
திமித மிட்டுத் திரியுந் திரைக்கடல்
துமித மூர்புக வானவர் துள்ளினர்
அமுத மின்ன மெழுமென வாசையால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குமுதன் இட்ட குலவரை - குமுதன் என்ற வீரன் வீசிய சிறந்த மலையானது, கூத்தனில் - கழைக்கூத்தாடி போன்று, திமிதம் இட்டு - திமிதம் என்னும் ஒலியை எழுப்பி, திரியும் திரை கடல் - கலங்கப்பெற்ற அலையுடைய கடலின், துமி - நீர்த்துளிகள், தம் ஊர் புக - தாங்கள் வதிந்த வானுலகத்தில் புக்க அளவில், இன்னம் அமுதம் எழும் எனும் ஆசையால் - மீட்டும் ஓர்முறை அமுதம் தோன்றும் என்னும் ஆர்வத்தால், வானவர் துள்ளினர் - தேவர்கள் மகிழ்ச்சி மிகுந்து கூத்தாடினர்.

துமி : இங்கு ஓர் வரலாறு கூறப்பெறுவது காண்டல் தகும். கம்பரும் ஒட்டக்கூத்தரும் இராமாயணம் பாடுமாறு சோழ மன்னனால் நியமிக்கப்பட்டு, இருவரும் எழுதத் தொடங்கினர் என்றும், கம்பர் தொடர்ந்து எழுதாமை கேட்டு மன்னன் 'எதுவரையில் எழுதினீர்' என்று அவரைக் கேட்க, அப்புலவர் பெருமான் சேது பந்தனம் வரையில் பாடியதாகக் கூறினர். ஒட்டக்கூத்தர் அதன் உண்மையைக் காணவேண்டி ஒரு பாடலேனும் சொல்ல வேண்டும் என்று வினவ, அப்பொழுது கம்பர் இந்தப் பாடலைக் கூறியதாகச் சொல்வர். இதில் வந்துள்ள துமி என்ற பதம் தமிழ் வழக்கல்லவென்று தடை நிகழ்த்த, ஆசிரியர் உலக வழக்கில் அச்சொல் உள்ளது என்றுகூறி அதனை மெய்ப்பிக்க ஓர் மனையில் கலைமகளையே எழுந்தருளுமாறு வேண்டியதாகவும், அவள் ஓர் ஆயர் மகளாக வந்து தன் மக்களாக வந்தவர்களைப் பார்த்து, 'எட்டிச் செல்லுங்கள் 'தயிர்த்துமி தெரிக்கும்' என்று கூறக் கூத்தர் மயங்கிப் பின்னர்த் தான் அதுகாறும் எழுதியிருந்த இராமாயணப் பகுதியைக் கிழித்துவிட்டதாகவும் கூறப்படும் இவ்வரலாற்றினை விநோதரச மஞ்சரியிற் காண்க; இது சரித்திர உண்மைக்குப் பொருந்தாது. அமுதம் இன்னும் எழும் என்றது முன்னர் ஒருமுறை அமுதம் கடைந்ததைக் குறித்து நின்றது. திமிதம் : ஸ்திமிதம் என்ற வடசொல்லின் திரிபென்பர். ஸ்திமிதம் - நிலைநிறுத்தல். துமிதம் - தாளமெட்டு என்பாரும் உளர். 'திமிதம் - பரதத் தொழில்' என்பது பழையவுரை.

பி - ம். 1. குமிதன் ; கூத்தரிற், கூர்த்தெழத்.

2. திரையும்.

3. துமுதம்.

4. அமிர்தம் ; இன்னும்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


658. கனசி னத்துரு மிற்கடுங் கார்வரை
பனச னிட்டன யாவும் பரிக்கிலன்
மனசி னத்த வனந்தனவ் வாழ்விகந்
தனச னத்தொழின் மேற்கொள்வ தாயினன்.

மன சினத்த அநந்தன் - தன் உள்ளத்துக் கோபம் இயல்பாகவே கொண்டுள்ள ஆதிசேடன், பனசன் இட்டன - பனசனால் வீசப்பட்டனவாகி, கன சினத்து உருமின் கடு கார்வரை - மிக்க சினத்துடன்கூடிய இடியினால் தாக்கப்பட்டு வேகமாக வீழ்ந்த பெரிய மலைகள், யாவும் பரிக்கிலன் - அனைத்தையும் பொறுக்க மாட்டாதவனாய், அ வாழ்வு இகந்து - அவ்வாழ்வு ஒழிய, அனசன தொழில் மேற்கொள்வது ஆயினன் - உண்ணாவிரதத்தைக் கடைப் பிடிப்பானாயினன்.

பனசன் என்ற வீரனெறிந்த பெரிய மலைகளைத் தாங்கமாட்டாமல் ஆதிசேடன் உண்ணாவிரதமே மேலென்று எண்ணி அதனை மேற்கொள்ளலாயினன் எனப்பட்டது, தொடர்புயர்வு நவிற்சியணி. பனசன்: 'மூன்று கண்ணில னாயினும் மூன்றெயி லெரித்தோன், போன்று நின்றவன்' (யுத்த. இராவணன்றானை. 32); 'கருங்கடல் கலக்கு மத்திற் பனசனுங் கலக்கிப் புக்கான்' (யுத்த. நாகபாசப். 58); 'போத்தோர் புலிபோற் பனசன் புரள' (யுத்த. படைத் தலைவர். 93); 'பருவலிப் பனசன்' (யுத்த. பிரமாத்திரப். 121). பரித்தல் - தாங்குதல்; 'பரித்த செல்வம் ஒழியப் படருநாள்' (சுந்தர. 355). உருமினால் மலைகள் வீழ்தல்: 'வரையுதிர்க்கு, நரையுருமினேறு' (மதுரைக். 63). அவ்வாழ்வு என்றது பூமியைத் தாங்கி நிற்கும் வாழ்க்கையை. அசனம்: வடசொல், ந + அசனம் என்பது சமாசம். உணவொழிந் திருத்தல் - இடர் நீங்கப்பெறுதற்கு உண்ணாவிரதம் ஏற்பது தொன்றுதொட்ட ஓர் வழக்கு. அநந்தன் அரவமாதலின் இடியோசைபோன்ற கார்வரை வீழ்ச்சியை அஞ்சினன் என்க; எதுகைப்பொருட்டு மனசினத்த என்று இயல்பாக நின்றது.

பி - ம். 2. பனச னிட்டபின்.

3. மனசினத்தின்; அனந்தனும்; வாழ்விகழ்ந்து.

4. அனசினத்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


659. எண்ணி லெண்கின மிட்ட கிரிக்குலம்
உண்ண வுண்ணச்சென் றொன்றினெ டொன்றுறச்
சுண்ண நுண்பொடி யாகித் தொலைந்தன
புண்ணி யம்பொருந் தாத முயற்சிபோல்.

எண்ணில் - கணக்கில்லாத, எண்கு இனம் இட்ட கிரி குலம் - கரடிக் கூட்டங்கள் (கடலில்) வீசி எறிந்த மலைத்தொகுதிகள், உண்ண உண்ண - ஒன்றையொன்று உண்பதுபோன்று, சென்று - போய், ஒன்றினொடு ஒன்று உற - ஒன்றன்மேல் மற்றொன்று மோத, புண்ணியம் பொருந்தாத - (நிறைவேறுதற்குரிய) புண்ணியம் அற்ற, முயற்சிபோல் - காரியம்போன்று, நுண் சுண்ண பொடி ஆகி தொலைந்தன - சிறிய சூர்ணப்பொடியாகி உரு அழிந்தன.

போகட்ட மலைத்தொகுதிகள் பொடியாகப் போனதற்குப் புண்ணியம் பொருந்தாத முயற்சி தகர்ந்துபோவதை உவமை கூறினர்; உவமையணி. சுண்ணம்: சூர்ணம் என்ற வடசொல்லின் சிதைவு. 'உண்ண உண்ண - கடலிலே அழுந்த அழுந்த' என்பது பழையவுரை. புண்ணியம் பொருந்தாத முயற்சி சிதறும் என்பது ஒரு நீதி.

பி - ம். 2. ஒன்றினி லொன்றுறச்.
3. சுண்ண நன்பொடி ; துலைந்தன.
4. பொருந்தார்தம்.

44

### இட்ட கிரிகளின் பாரம்

660. ஆர வாயிர யோசனை யாழமும்
தீர நீண்டு பரந்த திமிங்கிலம்
பார மால்வரை யேறப் பதைத்துடல்
பேர வேகுன்றும் வேலையும் பேர்ந்தவால்.

ஆயிரம் யோசனை ஆழமும் ஆர - (கடலில்) ஆயிரம் யோசனை யளவுள்ள ஆழமும் நிறையுமாறு, தீர நீண்டு - முற்றும் நீண்டு,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பரந்த திமிங்கிலம் - பரவியிருந்த திமிங்கிலம், பாரம் மால்வரை ஏற - பாரமுள்ள பெரிய மலை (தம்மீது) படிய, உடல் பதைத்து - உடம்பு நடுங்கி, பேரவே - (தாம் இருந்த இடத்தைவிட்டுச்) சென்றதால், குன்றும் வேலையும் பேர்ந்த - (போகடப்பட்ட) மலையும் கடலும் நிலைதிரிவன ஆயின. ஆல் - அசை.

திமிங்கில அளவு இங்குக் குறிக்கப்பெற்றது.

பி - ம். 3. மாமலை.

4. பேரவே நெடுங்குன்றமும் பேர்ந்தவே, பேர்ந்ததால். 45

## நளனின் முயற்சி

661. குலைகொ ளக்குறி நோக்கிய கொள்கையான்
சிலைக ளொக்க முறித்துச் செறித்துநேர்
மலைக ளொக்க வடுக்கி மணற்படத்
தலைக ளொக்கத் தடவுந் தடக்கையால்.

குலை குறி கொள - அணையானது தான் குறித்தவண்ணம் அமையுமாறு, நோக்கிய கொள்கையான் - மனத்தால் கருதிய கோட்பாட்டினையுடைய நளன், சிலைகள் ஒக்க - கற்கள் (ஏற்றத் தாழ்வின்றி) செவ்வனே அமையுமாறு, முறித்து நேர் செறித்து - பிளந்து ஒன்றோடொன்று நேராகப் பொருந்துமாறு செய்தும், மலைகள் ஒக்க அடுக்கி - மலைகளை நேரொக்க அடுக்கியும், மணல் பட - (அவற்றின்மீது) மணல் நிறையவும் (சேர்த்து), தலைகள் ஒக்க - சிகரங்கள் (தனிப்பட்டுக்) காணப்படாமல் ஒரேமட்டமாக ஆகுமாறு, தட கையால் தடவும் - பெரிய கரங்களால் தடவி நிரவுவான்.

குலை - அணை; 'குலைகட்டி மறுகரை யதனாலேறி' (திவ்ய. பெருமாள். 10 : 7). மலைக்கற்களைச் சமமாக அடுக்கி அவற்றின் மீது மணலைப் பரப்பி நளன் அணையமைத்த திறம் இங்கே கூறப்பட்டது. தடவுதல் - நிரவுதல்.

பி - ம். 1. குலைகொளுங் குறி.

2. செறிக்க, செறிந்த.

3. மனம் பொருந்தத். 46

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


662. தழுவி யாயிர கோடியர் தாங்கிய
குழுவின் வாநரர் தந்த கிரிக்குலம்
எழுவி னீள்கரத் தேற்றிட விற்றிடை
வழுவி வீழ்வன கால்களில் வாங்குவான்.

(மேலும் நளன்), ஆயிரம் கோடியர் குழுவின் வாநரர் தழுவி தாங்கிய தந்த - ஆயிரம்கோடி என்ற எண்ணிக்கையரான கூட்டமான வாநரர்கள் அணைத்துத் தாங்கிக்கொண்டு வந்த, கிரி குலம் - மலைத்தொகுதியை, எழுவின் நீள் கரத்து ஏற்றிட - இருப்புக் கம்பங்கள்போன்ற (தன்) நீண்ட கைகளால் ஏந்தும்போதில், இறுற் இடை வழுவி - துண்டுபட்டு நடுவில் நழுவி, வீழ்வன - வீழ்கின்றவைகளை, கால்களில் வாங்குவான் - கால்களால் ஏந்திப் பிடிப்பான்.

எழு - இருப்புத்தூண்; 'எழுவென மலையென வியைந்த தோளினுய்' (ஆரணிய. 1114); 'எழுவினு முயர்ந்த தோளாய்' (அயோத்தி. குகப். 33). இப்படலத்தின் 9-ஆம் செய்யுளை இச் செய்யுளின்பின் ஒரு சுவடி அமைக்கும்.

பி - ம். 1. கோடியும், கோடிய, கோடுகள்.
3. வீற்றிட.
4. வழுவி மஞ்சினிற். 47

மலை தாங்கிச்செல்லும் வாநரங்கள்

663. மலை சுமந்து வருவன வாநரம்
நிலையி னின்றன செல்ல நிலம்பெரு
அலைநெ டுங்கட லன்றியு மாண்டுத்தந்
தலையின் மேலொரு சேதுவுந் தருவபோன்ம்.

மலை சுமந்து வருவன வாநரம் - மலைகளைத் தாங்கி வருவனவான குரங்குகள், செல்ல நிலம் பெரு - மேற்செல்ல இடம் கிடைக்கப்பெருமல், நிலையின் நின்றன - (ஓரிடத்திலேயே) நிலைபெற்று நின்றவை, அலை நெடு கடல் அன்றியும் - அலைகள் செறிந்த அகன்ற கடல் மட்டுமன்றி, ஆண்டு - அப்போது, தம் தலையின்மேல் ஒரு சேதுவும் தருவ போன்ம் - தமது சிரத்தின் மீதும் ஒரு சேதுவை அமைத்தனபோல் காணப்பட்டன.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இடமின்றிக் குரங்குகள் மலைகளைச் சுமந்து நின்றனவாக அப்போது அவற்றின் சிரசில் கிரிகள் தொடர்ந்து காணப்பட்ட தோற்றம் அவைகள் தம் தலைமீதும் ஓர் சேது அமைப்பது போன்றது எனப்பட்டது, தன்மைத் தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 3. ஆண்டுதந்.

4. மேலுபோர்; சேதுந், சேது; தந்தபோல், தருவபோல். 48

664. பருத்த மால்வரை யேந்திய பல்படை
நிரைத்த லிற்சில செல்ல நிலம்பெருக்
கரத்தி னேந்திய கார்வரை வாநரம்
சிரத்தின் மேற்கொண்டு நீந்தின சென்றவால்.

பருத்த மால்வரை ஏந்திய பல்படை - பருமன்வாய்ந்த பெரிய மலைகளைத் தாங்கினவான பலதிறப்பட்ட குரக்குச் சேனைகள், நிரைத்தலில் - வரிசைப்பட்டு நின்றமையின், (அவற்றுட்) சில வாநரம் செல்ல நிலம் பெரு - சில குரங்குகள் மேற்போதற்கு இடம் கிட்டப்பெருது, கரத்தின் ஏந்திய கார்வரை - (தத்தம்) கைகளில் தாங்கிநின்ற பெரிய மலைகளை, சிரத்தின் மேல் கொண்டு நீந்தின சென்ற - தலைகள்மீது சுமந்துகொண்டனவாய்க் கடலில் நீந்திச் சென்றன. ஆல் - அசை.

பல்படை - பலவாகிய குரங்குச் சேனை. நிரைத்தல் - வரிசைப் படுத்துதல்; 'முட்ட நித்தில நிரைத்த பந்தரில்' (வி. பா. கிருட்டின. 103); நிரைத்தல் - இடைவிடாது இடுதலுமாம்; 'நிரைத் தீவினை' (சீவக. 1603) என்ற இடத்து நச்சினார்க்கினியர் நிரைத்த என்பதற்கு இடைவிடாத என்று பொருள் கூறல் காண்க.

பி - ம். 1. மாமலை.

2. செலச் செல்ல.

665. ஆய்ந்து காத மரிது சுமந்தன
ஓய்ந்த கால பசியி னுலர்ந்தன
ஏந்து மால்வரை வைத்தவற் றீண்டுதேன்
மாந்தி மாந்தி மறந்து மயங்குமால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆய்ந்து காதம் அரிது சுமந்தன - ஆராய்ந்து பலகாதங்கள் அருமையாகச் சுமந்தனவும், ஓய்ந்த கால - கால்கள் தளரப் பெற்றனவும், பசியின் உலர்ந்தன - பசியினால் வாடினவும் ஆன குரங்குகள், ஏந்து - (தாம்) தாங்கிவந்த, மால்வரை - பெரிய மலையை, வைத்து - கீழேபோட்டு, அவற்று ஈண்டு தேன் - அவற்றில் நெருங்கியிருந்த தேனை, மாந்தி மாந்தி மறந்து மயங்கும் - இடைவிடாமற் பருகித் தம் மெய்ம்மறந்து மயக்கம் உறுவன ஆயின. ஆல் - அசை.

காதம்: பத்து மைல் என்றும், ஏழு மைல் என்றும் பலவாறு கூறுவர்; 'காத மிருபத்து நான்கொழியக் காசினியில், ஓதக் கடல்கொண் டொளித்ததோ' (தனிப்பா.); 'காழிக்கும் தில்லைக்கும் காதம்' (வழக்கு). ஓய்தல் - சோர்ந்து தளர்தல்; 'ஓய்தல் சாய்தல் நிழத்தல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்' (தொல். சொல். உரி. 32); 'கையுங் காலு மோய்வன வழுங்க' (குறுந். 383). மறந்து மயங்குதல்: தேன் போதை மிகுப்பதாகலின் என்க; கிட்கிந்தாகாண்டம் 641 உரைக்குறிப்புப் பார்க்க. இறுதியடி முற்றுமோனை.

பி - ம். 1. ஆய்ந்து நீனம்.
2. ஒய்ந்து; காலும், கால்கள்; உலந்தன, உழந்தன.
3. வைத்தவற் றிட்டுதேன்.
4. மறிந்து; துயின்றவால். 50

## சேதுபந்தனம் குறித்து வாநரங்கள் தம்முள் உரையாடல்

666. போதல் செய்கு நரும்புகு வார்களும்
மாதிரந் தொறும் வாநர வீரர்கள்
சேது வெத்துணை சென்றதென் பார்சிலர்
பாதி சென்ற தெனப்பகர் வார்சிலர்.

மாதிரம் தொறும் வாநர வீரர்கள் - பெரிய திசைகள்தோறும் இருந்த குரங்கு வீரர்கள், போதல் செய்குநரும் புகுவார்களும் - (சேது கட்டுமிடத்திலிருந்து) செல்பவர்களும் (அங்குப்) புகுபவர்களுமாகி, சிலர் சேது எத்துணை சென்றது என்பார் - (புகுகின்ற சிலர்) சேதுவானது எவ்வளவு தூரம் கட்டப்பட்டது என்று வின

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வினராக சிலர் - (போகின்ற) சிலர், பாதி சென்றது என பகர்வார் - பாதிவரை கட்டப்பட்டது என்று பகர்வார்.

போதல் செய்குநர் - மலைகளை மீளக் கொணரச் செல்பவர். செய்குநர் - ந் பெயரிடைநிலை. மாதிரம் - திக்கு; 'மாதிர மெவையும் நோக்கான்' (யுத்த. கும்ப. 3); மற்றும், சுந்தர. 338, 415, 1016 காண்க.

பி - ம். 3. எத்தனை; சென்ற தென்றூர்.
4. பகர்ந்தார். 61

இச்செய்யுள் ஓர் பிரதியில் 'நெடும்பன்மால்வரை' என்றதன் பின் காண்கிறது.

## மலைகளும் மரங்களும் கடலில் விழ்ந்ததால் உண்டான நிகழ்ச்சிகள்

667. குறைவில் குங்கும முங்குகைத் தேன்களும்
நிறைம லர்க்குல முந்நிறைந் தெங்கணும்
துறைதொ றுங்கிரி தூக்கின தோய்தலால்
நறை நெடுங்கட லொத்தன நாமநீர்.

தூக்கின கிரி - சுமந்துவந்த மலைகளில், குறைவு இல் குங்குமமும் குகை தேன்களும் - குறைவில்லாத குங்குமமும் மலைக்குகைக் கண்ணிருந்த தேன்களும், நிறை மலர் குலமும் - நிறைந்த மலர்க் கூட்டமும், துறை தொறும் எங்கணும் நிறைந்து தோய்தலால் - துறைகள்தோறும் நிறைந்து படிதலால், நாமம் நீர் - அச்சம் விளைக்கும்படியான அந்த உப்புக்கடலானது, நெடு நறை கடல் ஒத்தன - நீண்ட தேன் கடலை நிகர்த்து விளங்கின.

நறை - தேன்; 'நறை பழுத்த துறைத் தீந்தமிழ்' (குமர. மீனாட்சி பிள்ளைத். 62). நாமம் நீர் கடல்: நாமம் - அச்சந்தருவது; 'நாமநீர் வைப்பில்' (குறள். 149); நாம் - அச்சம்; ஆரணிய. 68, 58; 'பேம்நாம் உரும் என வரூஉங் கிளவி, ஆமுறை மூன்றும் அச்சப் பொருள' (தொல். சொல். உரி. 67); 'நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த' நாம் என்பது நாமம் எனத்திரிந்தது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. குலந்தேன்.

3. தூர்த்தன, தூங்கின. 52

668. நெடும்பல் மால்வரை தூர்த்து நெருக்கவுந்
துடும்பல் வேலை துளங்கிய தில்லையால்
இடும்பை யெத்தனை யும்படுத் தெய்தினும்
குடும்பந் தாங்கும் குடிப்பிறந் தாரினே.

இடும்பை எத்தனையும் படுத்து எய்தினும் - துன்பமானது மிகவும் துன்புறுத்தி (மேன்மேல்) உண்டாயினும், குடும்பம் தாங்கும் குடி பிறந்தாரின் - குடும்பத்தை (விடாது) தாங்குகின்ற உயர்குடிப் பிறந்தோர்போன்று, நெடும்பல் மால்வரை தூர்த்து நெருக்கவும் - உயர்ந்த பலவான பெரிய மலைகள் நிறைந்து நெருக்கும்போதும், துடும்பல் வேலை துளங்கியது இல்லை - ததும்பிக் கொந்தளிக்கும் கடலானது (சிறிதும்) கலக்கம் உறவில்லை. ஆல், ஏ - அசைகள்.

துடும்பல் - ததும்புதல்; துளும்பல். துளங்கல் - அசைதல்: 'மின்னென மார்பினுல் துளங்க' (சுந்தர. 411). இடும்பை - துன்பம்; 'இன்பம் விழையான் இடும்பை யியல்பென்பான்' (குறள். 628); 'இடும்பைக் கிடும்பை படுப்பர்' (குறள். 623); 'இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ' (குறள். 1029). குடும்பந் தாங்கும் குடிப்பிறந்தார்; (ஒப்பு): யுத்த. 431. 'நரம்பெழுந்து நல் கூர்ந்தாராயினும் சான்றோர்......செய்வர் செயற்பா லவை' (நாலடி. 153); 'உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணும், குடிப்பிறப் பாளர்தம் கொள்கையிற் குன்றார்' (நாலடி. 141); 'எவ்வம் உழந்தக் கடைத்தும் குடிப்பிறந்தார், செய்வர் செயற்பா லவை' (நாலடி. 147); 'செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற், கொல்கார் குடிப்பிறந் தார்' (நாலடி. 148); 'தொன்மரங்கள்... ..........தாங்கல் கடன்' (சீவக. 498). தொடும்பல் வேலை என்ற பாடத்திற்குத் தோண்டப்பட்ட பலவாகிய கடல் என்க.

பி - ம். 1. நெடும்பொன் மால்வரை.

2. தொடும்பல்.

3. மடுத் தெய்தினும், மடுத் தெய்தவும்.

4. குடிப்பிறந் தார்கள்போல். 53

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


669. கொழுந் துடைப்பவ ளக்கொடி யின்குலம்
அழுந்த வுய்த்த வடுக்க றகர்ந்தயல்
விழுந்த பன்மணி யின்னொளி மீமிசை
எழுந்த வெங்கணு மிந்திர வில்லென.

கொழுந்து உடை பவளம் கொடியின் குலம் - கொழுந்தோடிப் படரும் தன்மைவாய்ந்த பவளக்கொடியின் தொகுதி, அழுந்த - (நீரில்) ஆழுமாறு, உய்த்த - கொணர்ந்துபோகட்ட, அடுக்கல் - மலைகளினின்று, தகர்ந்து - சிதறுண்டு, அயல் விழுந்த - பக்கங்களிலே வீழ்ந்த, பல் மணியின் ஒளி - பலவித அரதனங்களின் காந்தியானது, மீ மிசை - மிக்க மேலிடமான வானில் தோன்றும், இந்திர வில் என எங்கணும் எழுந்த - இந்திர வில்லைப்போன்று எங்கும் உயர்ந்து காணப்பட்டன.

அடுக்கல் - மலை; ஆரணிய. 516, 517, 1187. இந்திர வில் - மேகதனுசு; 'இந்திர வில்லெனக் கிடந்த வீதியே' 'விளங்கிய இந்திரன் வில்லு மொத்தன' (சுந்தர. 276); 'இந்திர திருவிலேய்ப் பக் குலவிய புருவத் தாட்கு' (சீவக. 539). தன்மைந்தற்குறிப் பேற்றவணி.

பி - ம். 1. மீன் குலம்.
2. அழுங்க; அடுக்கலிற் காந்துவ, அடுக்குறக் காய்ந்நயல்.
4. இந்திரன் வில்லினே. 54

670. பழும ரம்பறிக் கப்பற வைக்குலம்
தழுவி நின்றொரு வன்றனி தாங்குவான்
விழுத லும்புகல் வேறிட மின்மையால்
அழுத ரற்றுங் கிளையென வானவால்.

பழு மரம் பறிக்க - கடலில் எறியுமாறு (வீரர்கள்) ஆலமரத்தை வேருடன் அகழ்ந்து கொண்டு செல்ல, பறவை குலம் - அம்மரத்திலிருந்த பறவைத் தொகுதிகள், தழுவி நின்று - யாவரையும் அணைத்துக் கொண்டு, தாங்குவான் - ஆதரிப்பவனான தனி ஒருவன் - ஒப்பற்ற (குடும்பத் தலைவன்) ஒருத்தன், விழுதலும் - இறந்த அளவில், புகல் வேறு இடம் இன்மையால் - (தமக்கு) ஆதரவான பிறிது இடம் இல்லாமையால், அழுது அரற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


றும் கிளை என ஆன - கண்ணீர் விட்டுக் கதறுகின்ற சுற்றத்தார் போன்று ஆயின. ஆல் - அசை.

பழுமரம் - ஆலமரம். 'பழுமரப் பறவை' (சீவக. 828) : பழுத்த மரமுமாம். மரங்கள் அகழப்படவே இருக்க இடமின்றித் தவித்தலறும் பறவைகள், காத்திருந்த குடும்பத் தலைவனைப் பிரிந்த உறவினர் போன்றன. உவமையணி.

பி - ம். 2. தாங்கிறன்.
5. புகும்; வேறிடம்.

671. தாவ லோவல மென்றது தாங்கிய
மாவெ லாங்கடல் வீழ்தலும் வண்டெலாங்
காவ லாளர் விழக்களை கண்ணிலா
ஏவ லாளரி னெங்குந் திரிந்தவால்.

தாவல் ஓவலம் என்றது - தங்கியுள்ள இடமாதலை நீங்கப் பெறேம் என்ற வண்டினத்தை, தாங்கிய-(இதுகாறும்) தாங்கிய, மா எலாம் கடல் வீழ்தலும் - மாமரங்கள் அனைத்தும் கடலில் வீழ்ந்த அளவில், வண்டு எலாம் - வண்டுகள் எல்லாம். காவல் ஆளர் விழ - பாதுகாப்பவர் மரிக்க, களைகண் இலா - வேறு ஆதரவாளரை அடையப் பெறாத, ஏவலாளரின் எங்கும் திரிந்த - ஏவல் மாக்களைப் போன்று எங்கும் அலைவன வாயின. ஆல் - அசை.

தாவல் - தங்குமிடம். தாழ்வு என்றது தாவென வந்தது. (வின்ஸ்லோ); வழக்கில் கூட அந்தத் தாவு இந்தத் தாவு என்று வருதல் காண்க. ஓவலம் - தன்மைப் பன்மை வினைமுற்று ஓவல் - ஒழிதல் 'ஓவுநாளுயிர் போகுநாள்' (தேவா. 927 : 3); 'ஓவில் வாழ்த்தொலி' (ஆரணிய. 522). 'ஓவா திரண்டுவவு மட்டமியும்' (சீவக. 1547); களைகண் - ஆதரவு : 'களைகண்ணு அளந்தபாடல்' (சுந்தர. 287); 'அறனே களைக ணென்பார்' (சீவக. 2557); ஏவலாளரின்; இன் ஐந்தன் ஒப்புப் பொருளில் வந்தது.

பி - ம். 1. தருந லோவல ரென்றுயிர், தாவ லோவல மென்றுயிர், தாவ லோருள ரென்றுயிர்.
2. மரமெலாம்.
3. கரவிலாளர்; கண்ணிலார்.
4. இரவலாளரின்; விர்ந்ததால், திரிந்தலால், இரிந்தலால், எழுந்தவே.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


672. தொக்க டங்கல வோடுந் துவலைகள்
மிக்க டங்கலும் போவன மீன்குலம்
அக்க ருங்கட றூர வயற்கடற்
புக்க டங்கிடப் போவன போன்றவே.

தொக்கு அடங்கல ஓடும் துவலைகள் - (மலைகளை எறிந்த போது) ஒன்றாகச் செறிந்து அடங்கியிராமல் ஓடுகின்ற (கடலின்) நீர்த்துளிகள், மிக்கு அடங்கலும் போவன - மிகுதியாக எல்லா இடங்களிலும் செல்பவை, அ கருகடல் தூர - அந்தக் கருங்கடல் (மலைகளினால்) தூர்ந்துவிட்ட காரணத்தால், மீன்குலம் அயல் கடல்புக்கு - மீன் கூட்டங்கள் (அக்கடலை விட்டு) பிற கடல்களிற் புகுந்து, அடங்கிட போவன போன்ற - அங்கேயே அடங்கி விடுமாறு செல்வனபோலக் காணப்பட்டன. ஏ - அசை.

அடங்கல: முற்றெச்சம் - கடல் தூர்க்கப்பட்ட அளவில் அதன் கண் இருந்த மீன் கூட்டங்கள் வேறு கடல்களை நோக்கிச் சென்றதுபோல, இக் கடல் நீரும் பிறகடலை நாடிச் சென்றது போன்றிருந்தது நீர்த் தவளைகள் பல இடங்களும் பரந்து சென்றமை எனப்பட்டது. மீன் குலம் போன்று திவலைகள் ஓடின என்க. 'தொக்கடங் கடலோடும் - கூடிப் பொருந்தின வெற்றியோடும்' என்பது பழையவுரை.

பி - ம். 1. தொக்கடங்கலமோடும், தொக்கருங்கடலோடும்; துவலையின், துவலைபின்.
3. தூர்ப்பவயற்கடல்.
4. போல்வன, போன்றன.

57

673. மூசு வண்டின மும்மத யானையின்
ஆசை கொண்டன போற்றொடர்ந் தாடின
ஓசை யொண்கடற் குன்றொ டவைபுக
வேசை மங்கைய ராமென மீண்டவே.

மும்மத யானையின் ஆசை கொண்டனபோல் - மூன்று மதங்கள் செறிந்த யானைகளினிடம் ஆர்வம் கொண்டவைபோன்று, தொடர்ந்து ஆடின - பின் தொடர்ந்துவந்து பறந்தனவான, மூசும் வண்டினம் - மொய்க்கின்ற வண்டுக்குழாங்கள், ஓசை ஒண் கடல் - ஒலிமிக்க ஒளிசெறிந்த கடலிலே, குன்றொடு அவை புக - மலைகளுடனே அவ் யானைகளும் புகுதலும், வேசை மங்கையர் ஆம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



என மீண்ட - வேசை மகளிர்போன்று (அந்த யானைகளை விடுத்துத்) திரும்பிச் சென்றன.

மூசுதல் - மொய்த்தல்; சேதுபந்தன. 25. மும்மதம் - கன்னக போல கோசமதங்கள்; 'மோனை முத்தமிழ் மும்முத மும்பொழி யானை' (தனிப்பா. ஒட்டக்கூத்தர்.); 'ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்தன்' (சிவஞானபோதம். பாயிரம்). மதநீரை வண்டுண்ணு தல்: 'வரிவண், டோங்குயர் எழில்யானை கமழ்கடாம், கமழ்நாற்றம் ஆங்கவை விருந்தாற்ற' (கலித். மருதக். 66 : 3-4). ஆசைமிக்கவர் போல் நடித்துப் பசையற்ற இடத்தில் தம்மைக் காதலித்தோரைக் கைவிடும் வேசையர் இயல்பு இங்குக் குறிக்கப்பட்டது. வேழங் களின்கண்ணிருந்த மதநீரை உண்டிருந்த வண்டுகள், அவை தங்கியிருந்த மலைகள் கடலிற்புக்க அளவிலே அவற்றை நீத்துப் பறந்தோடின என்க. வேசை - மங்கையர்; 'ஆமாபோல் நக்கி யவர்கைப் பொருள்கொண்டு, சேமாபோற் குப்புறூஉம் சில்லைக் கண் அன்பினை' (நாலடி. 377). ஓசை ஒண் கடல் - ஆர்கலி; நிறைந்த ஓசையை உடையது.

பி - ம். 1. மும்மத மாவின்மீ(து).
2. தொடர்ந் தாடிய.
3. ஓசை மாக்கடல்; குன்றோ டொளிந்தலும்; ஒண்கடற் குள்புக.
4. மங்கையர் அன்பென; மீண்டதே. 58

674. நிலம ரங்கிய வேரொடு நேர்பறித்
தலம ருந்துய ரெய்திய வாயினும்
வலம ரங்களை விட்டில மாசிலாக்
குலம டந்தைய ரென்னக் கொடிகளே

நிலம் அரங்கிய - தரையில் அழுந்திய, வேரொடு நேர் பறித்து - வேருடன் நேரே பெயர்க்கப்பட்டு, அலமரும் துயர் எய்திய ஆயினும் - (அதனால்) சுழற்சியைச் செய்கின்ற துன்பம் உற்றனவாயிருந்தும், வல மரங்களை - வலிய மரங்களை, மாசு இலா குலம் மடந்தையர் என்ன கொடிகள் விட்டில - குற்றமற்ற குல வனிதையர்கள்போன்று கொடிகள் விடாமற் பற்றிநின்றன. ஏ - அசை.

முன் செய்யுளில் வேசையரையும், இதனில் குலமடந்தையரை யும் அமைத்து வேறுபாடுணர்த்திய பான்மை கருதத்தக்கது.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இஃது ஓர் சிறந்த உவமை: வேரோடு அகழப்பட்டுக் கடலில் வீசப்பட்ட கொடிகள் அவற்றை ஆங்கும் விடாமல் தழுவி நிற்றற்கு, வாழ்விலும் தாழ்விலும் தத்தம் கணவன்மாரைக் கைவிடாத குலமங்கையர்கள் உவமிக்கப் பெற்றனர்; (ஒப்பு): 'அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மோடு, துன்பம் துணையாக நாடின் அதுவல்ல, தின்பமும் உண்டோ வெமக்கு' (கலித். 5). அரங்குதல் - அழுந்துதல்' (தொல். உரி. நிகண்டு). அலமருதல் - மனஞ்சுழலுதல்; 'அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி' (தொல். சொல். உரி. 13); அலமரல் ஆயம்: 'சிலமந்தி அலமந்து மரமேறி முகில் பார்க்கும் திருவை யாறே' (தேவா. 278 : 1); மற்றும், ஆரணிய. 316, 592.

பி - ம். 1. நிலமடங்கிய; பறிந்து.

3. மலை மரங்களை.

4. மடந்தையர் போன்ற, போலக். 59

675. துப்பு றக்கட றூய துவலையால்
அப்பு றக்கட லுஞ்சுவை யற்றன
எப்பு றத்துரு மேறுங் குளிர்ந்தன
உப்பு றைத்தன மேக முகுத்தநீர்.

துப்பு உற கடல் தூய துவலையால்-(குரங்குகள் மலைகளை வீசிய போது) வலிமையுடன் கடல் எழுப்பிய நீர்த்துளிகளால், அ புற கடலும் - அண்டத்துக் கப்புறத்துள்ள கடலும், சுவை அற்றன - தமது இயல்பான சுவை நீங்கப்பெற்றன; (உப்புச்சுவை யுற்றன), எ புறத்து உரும் ஏறும் குளிர்ந்தன - எங்கும் உள்ள பேரிடிகளும் (தமது இயற்கையான வெம்மை நீங்கப்பெற்றுத்) தண்மை யுற்றன; மேகம் உகுத்த நீர் உப்பு உறைத்தன - மேகம் பெய்த மழைப் புனலும் உப்பு உறைக்கப்பெற்றன.

அப்புறக்கடல் - புறக்கடல்; 'மரபின் மாபெரும் புறக்கடல் மஞ்சன மருவி' (யுத்த. 134). உருமேறு - இடி; 'ஏறு மேற்றை யும்' (தொல். மரபி. 1) என்ற சூத்திரத்தில் 'பிறவும்' என்றதனால் உருமேறும் கொள்க. தூவிய என்பது, தூய எனத்தொகுத்தது. உப்புக்கடலின் நீர் மிகுதியால் தயிர்க் கடல், பாற்கடல், கருப்பஞ் சாற்றுக் கடல் எனக் கூறப்படும் கடலும் உப்பு விரவப் பெற்றன.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அம்மட்டோ மழைநீரும் உவர்நீராயிற்று என்க. தொடர்புயர்வு நவிற்சியுடன் விரவிய பிறிதின் குணம்பெறலணி.

பி - ம். 1. நுப்புடை ; கடற்றுய.

2. அப்புடைக் ; அற்றவே.

3. வெப்புறுத்து, இப்புறத்து.

4. உருக்கு நீர், முருக்கும் நீர். 60

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

மஞ்சினிற் றிகழ்தரு மலையை மாக்குரங்
கெஞ்சலில் கடிதெடுத் தெறிய வேருடன்
விஞ்சையிற் றுங்கினன் சடையன் வெண்ணெயிற்
றஞ்சமென் றுர்களைத் தாங்குந் தன்மைபோல்.

676. முதிர் நெடுங்கிரி வீழமு ழங்குநீர்
எதிரெ ழுந்துநி ரந்தர மெய்தலால்
மதிய வன்கதி ரிற்குளிர் வாய்ந்தன
கதிர வன்கனல் வெங்கதிர்க் கற்றையே.

முதிர் நெடும் கிரி வீழ - முதிர்ந்த உயர்ந்த மலைகள் (தன்மேல்) வீழ்ந்ததால், முழங்கும் நீர் - ஆரவாரிக்கும் கடலானது, எதிர் எழுந்து - மேற்புறமாகக் கிளம்பி, நிரந்தரம் எய்தலால் - இடைவிடாது எப்பொழுதும் வந்து அடைந்ததால், கதிரவன் கனல் வெம் கதிர் கற்றை - சூரியனுடைய தீப்போன்ற வெப்பம் மிகுந்த கிரணத்தொகுதிகள், மதியவன் கதிரில் குளிர் வாய்ந்தன - சந்திரனுடைய ஒளித்தொகுதிகள்போலக் குளிர்ச்சி வாய்க்கப்பெற்றன. ஏ - அசை.

முதிர் நெடுங் கிரி : பூதத்வ நிபுணர்கள் மலைகட்கும் வளர்ச்சி தேய்வு உண்டென்பர் ; அதுபற்றி முதிர் என்றார்போலும். நிரந்தரம் - இடைவிடாமை ; எப்பொழுதும் என்று பொருளும் தரும், வடசொல். தொடர்புயர்வு நவிற்சியணியோடு, பிறிதின் குணம் பெறலணி.

பி - ம். 1. முது.

3. கலையிற் ; வந்தன, வாய்த்தன. 61

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

677. நன்கொ டித்து நறுங்கிரி சிந்திய
பொன்கொ டித்துவ லைப்பொதிந் தோடுவ
வன்கொ டிப்பவ ளங்கள் வயங்கலால்
மின்பொ டித்தது போன்றன விண்ணெலாம்.

நறும் கிரி - (தன்மீது எறியப்பட்ட) நல்மணம் உள்ள மலை களாலே, நன்கு ஒடித்து - நன்றாக முறிக்கப்பட்டு, சிந்திய - சிதறிய பொன் கொடி துவலை பொதிந்து ஓடுவ - பொன்னின் ஒழுங்கினைக் கொண்ட நீர்த்துளிகளாலே மூடப்பெற்று விரைந்து மேலே செல்வனவான, வல் கொடி பவளங்கள் - வலிய கொடிப்பவளங்கள், வயங்கலால் - ஒளிர்தலால், விண் எலாம் - வான வீதியெல்லாம், மின் பொடித்தது போன்றன - மின்னல் தோன்றியதுபோன்று காணப்பட்டன.

பொன்னுடன் இயைந்த நீர்த்திவலைகளால் நிறையப்பெற்று வானில் தோன்றும் பவளங்கட்கு மின்னல்கள் உவமை. தன்மைத் தற்குறிப்பேற்றவணி. 'நன்கொடித்து - உலகம் நன்மைபெறப்பிடுங்கி. பொன் கொடி - பொன்னனங்கொடி; மலையிலுண்டானவை' என்பது பழையவுரை.

பி - ம். 1. நன்கொ டிக்க ளொடும்பொறி யின்றிரள்.
2. பொதிந்தோடிய.
3. வழங்கலான்.
4. கொடித்திரள் போன்றன, கொடிக்கள் பொடித்தது. 62

678. ஓடு மோட்டரி னொன்றினமு னொன்றுபோய்ச்
காடு நாடு மரங்களுங் கற்களும்
நாட நாட நளிர்கடல் நாட்டிலோர்
பூடு மாடுத லில்லையிப் பூமியில்.

ஓடும் ஓட்டரின் - ஓடுகின்ற ஓட்டக்காரரைப்போன்று, ஒன்றின் முன் ஒன்று - ஒரு குரங்கின்முன் மற்றொரு குரங்கு (போட்டியிட்டுக் கொண்டு), போய் - சென்று, காடு நாடு மரங்களும் கற்களும் - காட்டில் பொருந்திய மரங்களையும் மலைகளையும், நளிர் கடல் நாட்டில் - குளிர்ந்த கடலுள்ள பிரதேசத்தில், நாட நாட - தேடித்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

தேடிக் கொண்டுவந்து சேர்த்தலின், இ பூமியில் - இந்த உலகத்தில், ஓர் பூடும் ஆடுதல் இல்லை - ஒரு பூடும் விளங்கிற்றில்லை.

ஓட்டர் - ஓட்டக்காரர்; வினையாலணையும்பெயர். பூடு: 'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி' (திருவாச. அகவல்). 'ஓடித் திரிவன வாநரங்கள் கடல் அணைகட்டவேணும் என்ற ஆசையினாலே ஒரு பூடுமில்லாதபடி காடும் நாடும் நகரமும் ஆகி விட்டதால் மலை தேடிப் பூமி ஓடிற்று' என்பது பழையவுரை.

பி - ம். 1. ஒட்டறும், ஒட்டரும்; மீளுமது ஒன்றன்பின்.
2. நாடு நகரமுங் காண்கில.
3. நாடு நாட்டு; நாடி நாடி நளிர்கடல் வைப்பிலோர்.
4. பூடு மாட்ட லிலாய பொருப்பரோ, பூடும் வாட்ட மிலாமை பொருந்தின. 63

இங்கு மூன்று அதிகப்பாடல்கள் :—

மணற்ப ரப்பு மணிப்பரப் பும்மொளி
தணற்ப ரப்புவ போன்றன தான்கவி
உணற்ப ரப்பு முறுகவி யின்குகைக்
கணப்ப ரப்புக் கடற்பரப் பானதே.

வரைப ரப்பு மணற்பரப் பும்மயில்
திரைப ரப்புவ தென்னத் தனித்தனி
உரைப ரப்பு முறுதனி யொண்கவிக்
கரைப ரப்புங் கடற்பரப் பானதால்.

இன்ன வாறங் கெழுபது வேள்ளமும்
அன்ன சேனைத் தலைவரு மகழியைத்
துன்னி நின்று விடாதிடை தூர்த்தலால்
பொன்னி லங்கை தொடுத்தணை புக்கதே.

## வாநரர் பேராரவரம்

679. உற்ற தாலணை யோங்க விலங்கையை
முற்றி மூன்று பகலிடை முற்றவும்
பெற்ற வார்ப்பு விசும்பு பிளந்ததால்
மற்றிவ் வானம் பிறிதொரு வான்கொலோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மூன்று பகல் இடை முற்றி முற்றவும் - மூன்று பகற்போது முழுவதும் முடிவெய்திய அளவில், ஓங்கல் இலங்கையை அணை உற்றது - திரிகூடமலையில் உள்ள இலங்காபுரியைச் சேது அணை யானது சென்று அடைந்தது; பெற்ற ஆர்ப்பு - (அப்போது வாநரங்கள்) விளைத்த பேராரவாரம், விசும்பு பிளந்தது - ஆகாயத்தை இரண்டு செய்தது; மற்று இ வானம் பிறிது ஒரு வான்கொலோ - இந்த வானம் வேறு ஒரு அண்டத்தின் ஆகாயம் தானோ. மற்று: வினை மாற்று. ஆல் - அசைகள்.

கொலோ - ஐயம்; 'கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே' (நன். இடை. 16). ஓங்கல் இலங்கை: இங்கு மூன்று நாட்களில் அணை முற்றியதாகக் கூறப்பட்டது; ஐந்து நாட்களில் சேது கட்டி முடிந்ததாகக் கூறுவதோடு இன்னும், அணையின் நீளம் 100 யோசனை, அகலம் 10 யோசனை என்றும் முதனூல் கூறும். விசும்பு - ஆகாயம்; 'நிலம் நீர் தீவளி விசும்பு' (தொல். மரபி. 89). இப்பொழுதுவான் பிரமன் பிறகு படைத்தது என்பது பழையவுரை. வானம் பிறிதொருவான்: 'வேறோர் வாலி கொலாம்' (கிட்கிந்தா. 395) என்றதுபோல.

பி - ம். 1. ஓங்கி யிலங்கையை.
2. முற்ற, முற்று; முற்றலும், முற்றலில், முற்றிலும்.
3. ஆர்ப்பின் விசும்பு; பிளந்தது.
4. மற்றவ் வானம்; கொலாம். 64

## சேதுவின் காட்சி

680 நாடு கின்றதென் வேறென்று நாயகன்
தோடு சேர்குழ லாடுயர் நீக்குவான்
ஓடு மென்முது கிட்டென வோங்கிய
சேட னென்னப் பொலிந்தது சேதுவே.

'(கடலைக் கடக்க விரும்புபவர்களே!) நீங்கள், வேறொன்று நாடு கின்றது என் - பிறிதோர் உபாயம் தேடித்திரிவது எதற்காக? நாய கன் - (யாவைக்கும், யாவர்க்கும்) தலைவனான இராமபிரானுக்கு, தோடு சேர் குழலாள் துயர் நீக்குவான் - பூவிதழ்கள் பொருந்தின கூந்தலை யுடையவளான பிராட்டியைக் குறித்த துன்பத்தைப் போக்கும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பொருட்டு, என் முதுகு இட்டு ஓடும் என - என் முதுகில் அடி வைத்து விரைந்து செல்லுங்கள்' என்று, ஓங்கிய சேடன் என்ன - தன் முதுகினை நிமிர்த்துக் காட்டிய ஆதிசேடன்போன்று, சேது பொலிந்தது - அந்தச் சேதுவானது விளங்கிற்று. ஏ - அசை.

நாயகன் என்பது, சேடன் இராமபிரானை விளித்ததுமாம்; அண்மைவிளி. இவ்வாறு கட்டப்பட்ட அணை கடலைத்தாண்ட விரும்புபவர் நடந்து செல்லுமாறு ஆதிசேடன் தன் முதுகினை உயர்த்துக் காட்டியதுபோலும் எனப்பட்டது, தன்மைத்தற்குறிப் பேற்றவணி. ஓடும், முன்னிலை ஏவற்பன்மை. நாயகன் - இராம பிரான். தோடு சேர் குழலாள் - பிராட்டி. சேதுவுக்குச் சேடன் உவமை.

பி - ம். 1. வேறொரு.

2. துயர் நீக்குதல்.

3. ஓடுமின்; முதுகிட்டுற வோங்கிய. 65

681. மெய்யி னீட்டத் திலங்கையா மென்மகள்
பொய்ய னீட்டிய தீமை பொறுக்கலா
தைய னீட்டிய சேனைகண் டன்பினாற்
கையை நீட்டிய தன்மையுங் காட்டுமால்.

மெய்யின் நீட்டத்து இலங்கையாம் மெல் மகள் - உண்மையி லேயே மனம் நீண்டு செல்லுதலையுடைய அந்த இலங்கையான மெல்லிய பெண், பொய்யன் நீட்டிய தீமை பொறுக்கலாது - (இராம பிரானுக்கு) இராவணன் என்னும் வஞ்சகன் உண்டாக்கிய தீங்கினை ஆற்றமாட்டாதவளாய், ஐயன் ஈட்டிய சேனை கண்டு - ஐயன் மிகுதியாகக் கூட்டிக்கொண்டுவந்த சேனையைக் கண்டு, அன்பினால் - ஆர்வத்துடன், கையை நீட்டிய தன்மையும் காட்டும் - (தன்) கரத்தை நீட்டிய தன்மையையும் போலும். ஆல் - அசை.

இராமபிரானுக்கு அரக்கர் இயற்றிய வஞ்சனை பொறுமல், இராவணன் ஆட்சியிலிருந்த இலங்காநகரமே இராமபிரான் சேனையை வரவேற்குமாறு கையை நீட்டியதாகக் கூறப்பட்டது. நகரங்களையும் நாடுகளையும் பெண்பாலாக அமைத்துப் பேசுவது கவிசமயம்; 'நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ' (பால. நகர. 2). பாரதமாது என்பன காண்க; (ஒப்பு): 'செழுமணிக் கொடிகள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



எல்லாம், ஐயனை ஒல்லை வாவென் றழைத்தன போன்ற' (பால. மிதிலைக். 1). இராவணனுடைய கொடுங்கோலாட்சியில் அகப்பட்டு மெலிந்தவளாதலின் இலங்கை மென்மகள் எனப்பட்டது. பொய் வஞ்சனையெனப் பொருள் தந்து நின்றது. இங்கு, சேதுவுக்கு இலங்காதேவி கை உவமை. கை நீட்டும் தன்மை அழைத்தற் குறிப்பு.

பி - ம். 1. மெய்யன் ; இலங்கையர் மேன்மகள்.

2. பொய்யின் ; பொறுக்கலாள்.

4. காட்டிற்றே. 66

682. கான யாறு பரந்த கருங்கடல்
ஞான நாயகன் சேனை நடத்தலால்
ஏனை யாறினி யானல தாரென
வான யாறிம்பர் வந்தது மானுமால்.

வான யாறு - ஆகாய கங்கையானது, 'கான யாறு பரந்த கரு கடல் - காட்டாறுகள் பரவியிருந்த கரிய கடலின்கன், ஞான நாயகன் சேனை நடத்தலால் - ஞானநாயகனை இராமபிரானுடைய சேனை செல்லவேண்டியிருத்தலின், இனி யான் அலது - இனி நானே அல்லாமல், ஏனை யாறு யார் என - மற்றை நதிகள் (உதவுதற்கு) யார்?' என்று சொல்லிக்கொண்டு, இம்பர் வந்தது மானும் - இப் பூவுலகின்கண்ணே வந்ததை ஒக்கும். ஆல் - அசை.

அந்த அணை வான யாறு வந்து கடலில் படிந்ததுபோன்றிருந்தது எனப்பட்டது. இங்கு யாறு, நதி வழி என்று இரு பொருட்பட நின்றமை காண்க. இதுகாறும் கானயாறு வீழ்ந்த கருங்கடலில் தெய்வத் தன்மைவாய்ந்த இராமபிரான் கடக்க வேண்டுதலின் வானயாறு வந்து பொருந்தியதாகக் கூறினர். ஞான நாயகன் - இராமபிரான் ; (ஒப்பு) : 'செவியுறு கேள்விச் செல்வன்' (கிட்கிந்தா. 347) ; 'சுருதி நாயகன்' (சுந்தர. 338, 632, 1107) ; 'வேதமும் போதமும் காண்கிலாதான்' (சுந்தர. 578) ; 'வேத நாயகன்' (யுத்த. கும்ப. 153) ; 'வேதத் தோட்டியின் தொடக்கி னிற்கும் துணைக்கைமால் யானை யன்னான்' (யுத்த. நாகபாசப். 242) ; 'ஞான நாயகன்' (பிரமாத்திர. 203) என்ன காண்க. தன்மைத்தற்குறிப்பேற்றவணி. ஆர் - யார் ; 'நானுமோர் ஆர் ... ' (திருவாச. திருக்கோத். 2). இங்கு வானரத்தொகுதிக்குக் கங்கை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உவமை; அன்றி, சேதுவுக்கே உவமை எனலும் ஆம். 'திருவணையில் வானரமெங்கும் நிறைந்து நிற்பது, கங்கையானது நானிருக்கவே, மற்றக் காட்டாறுகள் வந்து கடலின் விழுவாலென்'; என்று எண்ணிக்கொண்டு தான் ஒருமிக்க நீண்டு கிடக்கிறது ஒத்தது. அதுவன்றிக் கங்கையானது ஒருவழியாகக் கிடந்ததும் ஆம்' என்பன பழையவுரை.

பி - ம். 1. படர்ந்த; படர்ந்தன கார்க்கடல்.
2. நடக்கலால், நடக்கத்தான்.
3. யாமலது.
4. வதிந்தது, வகிர்ந்தது. 67

683. கற்கி டந்தொளிர் காசினங் காந்தலால்
மற்க டங்கள் வகுத்த வயங்கணை
எற்க டந்த விருளிடை யிந்திரன்
விற்கி டந்தன வென்ன விளங்குமால்.

கல்கிடந்து ஒளிர் காசு இனம் - (சேது கட்டுமாறு போடப்பட்ட) மலைகளில் பொருந்தி ஒளி வீசுகின்ற, பல ரகமான அரதனத் தொகைகள், காந்தலால் - ஒளிவீசுதலின், மற்கடங்கள் வகுத்த - குரங்குகளால் அமைக்கப்பட்ட, வயங்கு அணை - விளங்குகின்ற அணையானது, எல் கடந்த இருளிடை - சூரியன் மேற்கு மலையில் சென்று மறைந்த இரவிலே, இந்திரன் வில் கிடந்தன என்ன விளங்கும் - இந்திர வில்லானது கடலின் மீது கிடந்தது போலத் தோன்றும். ஆல்: அசை.

கற்கிடந் தொளிர் காசு; 'கற்பா லுமிழ்ந்த மணி' (சீவக. அவை.); 9, 588; பரி. 3:64; நான்மணி. 5; பெருங். 1:51:9. நவரத்தினத்தின் ஒளி இந்திர வில்லின் ஒளி எனப்பட்டது. தற்குறிப் பேற்றம். கல் - மலை; 'தென்குமரி வடபெருங்கல்' (புறநா. 17). காசு - இரத்தினம்; கிட்கிந்தா. 462, 895; காந்தல் - ஒளி வீசுதல்; 'பரம்பிற் காந்து மின மணி' (பால. நாட்டுப். 7). மற்கடங்கள் - குரங்குகள். மற்கடம், வடசொல். எல் - சூரியன்; 'எற்கலை திருவரை யெய்தி' ஆரணிய. 141); 'எற்படக் கண்போன் மலர்ந்த' (திருமுரு. 74); இந்திரன் வில்லும் பன்னிறத்த தாகலின் காசினம் போன்ற தென்றார். காசினம் நவ மணிகள், முத்து, நீலம், பவளம், மரகதம், வயிரம், மாணிக்கம்,


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



புட்பராகம், கோமேதகம், வைடூரியம் என்ப. சூரியன் ஒளியின்றியும் நவமணிகள் ஒளி விடுமோ என்னில், ஒளி விடும் என்பது அறிஞர் துணிபு: சிந்தாமணியில் (169); இருள் பருகும் அருமணி என்பதற்கு, நச்சினார்க்கினியர் வரையும் உரை கண்டு தெளிக. 'ஒளிதிகழ் திருந்துமணி நளியிரு ளகற்றும்' (புறநா. 172); 'இருளறு திருமணி' (பெருங். 3 : 5 : 2). இந்திரவில் சேதுக்கு உவமை.

பி - ம். 1. ஒளிர் காஞ்சனம்.

2. மற்க டந்தர வந்து; கடந்த திருவிடை, கிடந்திருள் வானிடை; இந்திர.

4. விற்கிடந்தது. 68

## சுக்கிரீவன் வீடணன் முதலியோர் சேதுகட்டி முடிந்ததை இராமபிரானிடம் தெரிவிக்கச் செல்லுதல்

684. ஆன பேரணை யன்பி னமைந்தபின்
கான வாழ்க்கைக் கவிக்குல நாதனும்
மான வேற்கை யிலங்கையர் மன்னனும்
ஏனை யோரு மிராமனை யெய்தினர்.

ஆனபேர் அணை அன்பின் அமைந்த பின் - செய்து முடிந்த அந்தப் பெரிய அணை பலருடைய அன்பினால் கட்டி நிறைவேறிய பின், கானம் வாழ்க்கை கவிக்குல நாதனும் - காட்டிலே வாழ்தலையுடைய குரங்குக் கூட்டங்கட்குத் தலைவனான சுக்கிரீவனும், மானம் வேல்கை இலங்கையர் மன்னனும் - பெருமை சான்ற, வேலைக் கரத்திற் றாங்கிய இலங்கை யதிபன் ஆன வீடணனும், ஏனையோரும் - பிறரும், இராமனை எய்தினர் - (சேது கட்டி முடிந்த நற்செய்தியைத் தெரிவிக்குமாறு) இராமபிரானிடம் சென்று சேர்ந்தனர்.

பலரும் ஒரு மனப் பட்டுச் செய்ததாகலின் அன்பின் அமைந்த எனப்பட்டது. சரணாகதி செய்த அளவிலேயே இராமபிரான் ஏவலால் இலக்குவன் முடிசூட்டச் சூடினவனாகலின் வீடணனை இலங்கையர் மன்னன் என்றார். அரசர்க்கு வேல் வீர அறிகுறியாகலின் மானவேற்கை இலங்கையர் மன்னன் எனப்பட்டது; மானவேல். வேற்கையென்று இவண் கூறப்பட்டது; வீடணன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இரவணனைவிட்டு இராமபிரானிடம் சென்றபோது கதையைக் கொண்டு சென்றதாக முதனூல் கூறும்.

'மானவேல் முட்டைக்குமாருய தெவ்வர் போம்'
கானவேல் முட்டைக்குங் காடு' (தனிப்பா. பொய்யாமொழி)

பி - ம். 1. அமைத்தனர்; அமைந்தள;

2. தானமேவு; ஞானமேரு, ஞானமாலைக்கவி. 69

ஞான மாலைக்கவி எனப்பாடல் கொண்டு ஞானமும் ஒழுங்கும் அமைந்த வாநரம் என்பது (பழையவுரை.)

685. எய்தி யோசனை யீண்டொரு நூறுடன்
ஐயி ரண்டி னகல மமைந்திடச்
செய்த தாலணை யென்றது செப்பினர்
வைய நாதன் சரணம் வணங்கியே.

எய்தி - இராமபிரானை அடைந்து, 'ஈண்டு அணை - இந்த இடத்தில் அணையானது, ஒரு நூறுயோசனையுடன் - ஒரு நூறு யோசனை நீளத்துடன், ஐயிரண்டின் அகலம் அமைந்திட - பத்து யோசனை அகலமும் அமையும்படி, செய்தது என்ற - செய்யப் பட்டது என்ற, அது - அந்நற் செய்தியை, வையம் நாதன் சரணம் வணங்கி செப்பினர் - உலக நாயகனை இராமபிரானது ஸ்ரீபாதங் களில் வணங்கி அறிவித்தனர். ஆல், ஏ - அசைகள்.

வைய நாதன்; இராமபிரான் மூன்று மடியில் உள்ள செப்பி ணர் என்பதற்கு முன் செய்யுட்கணுள்ள கவிக்குல நாதன் முதலி யோர் என்பது எழுவாய், சேது அணை நூறு யோசனை நீளம் பத்து யோசனை அகலம் என்பது வான்மீகம்.

பி - ம். 1. எய்த; நூறிவை.

3. அணை யென்பது.

4. வணங்கினர். 70

சேதுபந்தனப் படலம் முற்றும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 8. ஒற்றுக் கேள்விப் படலம்

இராவணன் தன் மாற்றுனை இராமபிரான் வலியையும் அவன் துணைவலியையும் அறிந்து வருமாறு ஒற்றரை ஏவி அவர்கள் கொணர்ந்த செய்தியைக் கேட்டலைக் கூறும் படலம் என விரியும். இது திருவணை செய்த படலம், திருவணை செல் படலம், பாசறைப் படலம், சுவேலைப் படலம் என்ற வேறு பெயர் களுடன் சில பிரதிகளில் காணப்படுகின்றது.

## இராமபிரான் சேதுவைக் காண விரைதல்

686. ஆண்டகையு மன்பினொடு காதலது கூர
நீண்டகையி னலவரை நெஞ்சினொடு புல்லி
ஈண்டவெழு கென்றன னிழைத்தபரி செல்லாம்
காண்டலதன் மேனெடிய காதன்முதிர் கின்ருன்.

ஆண் தகையும் - ஆண் தன்மை மிக்க இராமபிரானும், காதல் அது கூர - பிரேமை பெருக, அவரை - (சேது அணை அமைத்த நற்செய்தியை வந்து சொன்ன) அந்தச் சுக்கிரீவன் முதலானோரை, நெஞ்சினொடு - மனமார, நீண்ட கையினல் அன்பினொடு புல்லி - தன் னுடைய நீண்ட தாள்தோய் தடக்கையினல் பிரியத்துடன் தழுவி யணைத்து, இழைத்த பரிசு எல்லாம் - சேதுவைக்கட்டிய தன்மை யாவும், காண்டல் அதன் மேல் - பார்ப்பதில், நெடிய காதல் முதிர் கின்ருன், ஆசை மீதூரப் பெற்றவனய், 'ஈண்ட எழுக - (எல் லோரும்) விரைந்து எழுவீர்களாக' என்றனன் - என்று கூறினன்.

ஆண்டகை: பண்புத்தொகை அன்மொழி. காதலது: அது, பகுதிப் பொருள்விகுதி. நீண்டகை - முழந்தாள் அளவும் நீண்ட கரம்; இது உத்தமபுருட இலக்கணம் என்பர்; 'தாடுறு தடக்கை' (சுந்தர. 536); வடமொழிவாணர், 'ஆஜாநுபாகு' என்பர். ஈண்ட: விரைவுக் குறிப்பு; 'இடுக்கண் களைதற் கின் டெனப் போக்கி' (சிலப். 13, 101). காதல் முன்னது, செய்தி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கூறியவர்மீதும் பின்னது சேது அணையைக் காண்டலிலும் எனக் கொள்க.

பி - ம். 1. காதலமுது, காதலமிர்து, காதலதுகூற ; தானிடை யெழுந்தே.

2. நீண்டகையி னல்நளனே.

3. ஈண்ட எழுகின்றனன் ; இழைத்தபடி யெல்லாம்.

4. காண்டலதின், காண்டிடுதல். 1

687. பண்டையுறை யுட்கெதிர் படைக்கடலின் வைகும்
கொண்டலென வந்தவணை யைக்குறுகி நின்றான்
அண்டர்முதல் வன்னொருத னுவியனை யாளைக்
கண்டன னெனப்பெரிய காதன்முதிர் கின்றான்.

அண்டர் முதல்வன் - தேவர்க்கும் தேவனாகிய இராமபிரான், பண்டை உறை யுட்கு எதிர் - (தனது) பழமையான வாழிடமாகிய கடலுக்கெதிராக, படை கடலின் வைகும் கொண்டல் என வந்து - சேனைக்கடலிலே தங்கும் மேகம் என்னும்படி வந்து, அ அணையை குறுகி நின்றான் - அந்த அணையை அணுகி நின்றவனாய், ஒரு - ஒப்பற்ற, தன் ஆவி அனையாளை - தன் உயிர்போன்றவளான தேவியை, கண்டனன் என - நேரில் பார்த்தவன்போன்று, பெரிய காதல் முதிர்கின்றான் - மிகுந்த காதல் அதிகரிக்கப்பெற்று விளங்கினான்.

'அண்டரே தேவர் ஆயர்' என்பது நிகண்டு. முதலடியில் கடலினுக் கெதிர்கடல் என்ற நயம் நோக்குக. மேகம் கடலிடை நீர்பருகுவது உண்டாகலின், இங்குக் கடலின் வைகும் கொண்டல் எனப்பட்டது. இராமபிரானுக்குக் கொண்டல் உருவுவமையோடு பண்புவமையுமாம்; கொண்டல் நீர் பொழிவதுபோன்று கருணையைப் பொழிவானாகலின். அண்டர் முதல்வன ; (ஒப்பு) : சுந்தர. 510, 607 ; யுத்த. 689. ஆவி அனையாள் : 'ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை' (கிட்கிந்தா. 307) ; (ஒப்பு) : 'கண்டு நீ யிருந்தா யாண்டங் கெவ்வுயிர் விடுமிராமன்' (சுந்தர. உருக். 77). அணைகட்டியதைக் கேட்டவுடன் இனி விரைவில் சீதையை அடையக்கூடும் என்ற நினைவினன் ஆதலின், 'ஆவி யனையாளைக் கண்டனன்' எனப்பட்டது. காதல் எனின் அமையும், 'பெரிய காதல்' என்றும், முதிர்கின்றான் என்றும் கூறியது, பிரிவு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

காதலைப் பெருக்குமாதலின். சம்போகம் விப்ரளம்பம் என்ற இரண்டில் விப்பிரளம்பம் என்ற பிரிவே பின்னர் நிகழக்கூடிய சேர்க்கையைச் சிறப்பிக்கும் என்பர் அறிஞர். திருமால் அறிதுயில் கொள்வது பாற்கடல் என்பர்; எனினும், கடல் என்ற பெயர் ஒற்றுமை குறித்துப் 'பண்டை யுறையுள்' எனப்பட்டது. 'பண்டை யுறையுட் கெதிர்: முன் கண்வளர்ந்தருளும் கடலுக் கெதிரென்றும், வானரங்களைத் திருப்பாற்கடலுக் கெதிரென்றும் ஆம்' என்பது பழையவுரை.

பி - ம். 1. படக்கடலின்.
2. வந்துவணை; குறுகுகின்றான், குறுக நின்றான்.
3. அண்ட முதல்வன். 2

## இராமபிரான் நளனைப் புகழ்தல்

688. நின்றுநெடி துன்னின னெடுங்கட னிரம்பக்
குன்றுகொ டடைத்தணை குயிற்றியதொர் கொள்கை
அன்றுலகு தந்தமுத லந்தண னமைத்தான்
என்றபொழு தின்கணுமி தென்றியலு மென்றான்.

நெடிது நின்று - வெகுதூரம் நிதானித்து, உன்னினன் - நினைத்தவனாய்; (இராமபிரான்), 'நெடு கடல் நிரம்ப - (அந்த) நீளமான கடலில் நிரம்பும்படி, குன்று கொடு அடைத்து அணை குயிற்றியதொர் கொள்கை - மலைகளைக்கொண்டு அடைத்து அணைகோலியதாகிய இச்செயல், அன்று உலகு தந்த முதல் அந்தணன் - முன்பு உலகனைத்தும் படைத்த முதல்வனாகிய பிரமதேவனே, அமைத்தான் என்ற பொழுதின்கணும் - செய்தான் என்றாலும், இது என்று இயலும் - இது எப்போது கைகூடும்', என்றான் - என்று வியந்து கூறினான்.

பிரமனாலும் செய்தற்கரிய இந்த அணையை ஐந்து நாளில் இயற்றியது எவ்வாறு என வியந்தவாறு. பிரமன் கட்டிடத் தொழிலில் சிறந்தவன்; சுந்தர. 123 கண்டுணர்க.

பி - ம். 1. பெரி துன்னியின், நெடி துன்னிய; நிறைக்கடல், நிரைகடல்.
3. அமைந்தான்.
4. என்றிசையும். 3

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



689. ஊழிமுத னுயகன் வியப்பினெ டுவந்தான்
ஆழமுரை செய்யுமள வேயினிய தொன்றே
ஆழியி னிலங்கைநெடி தத்திசையி னுமேல்
ஏழுகட லுங்கடி தடைப்பனிவ னென்றான்.

ஊழி முதல் நாயகன் - ஊழிக்காலத்தும் அழியாது விளங்கும் ஆதிமுதல்வனான இராமபிரான், வியப்பினொடு உவந்தான் - (அணையைக்கண்டு) ஆச்சரியத்துடன் உள்ளம் மகிழ்ந்து, 'ஆழம் உரை செய்யும் அளவே இனியது ஒன்றோ - (இந்தக் கடலின்) ஆழத்தினை எடுத்துரைக்கும்வகை இனிது கூடுமோ? (இத்தகைய கடலையும் அணை கட்டி முடித்தானே), ஆழியின் இலங்கை - ஆழி சூழப்பெற்ற இலங்கா நகரமானது, நெடிது - வெகுதூரத்தே, (அந்த ஏழு கடலுக்கும்), அ திசையின் ஆ மேல் - அப்பாலால இடத்திலிருக்குமேனும், இவன் ஏழு கடலும் கடிது அடைப்பன் - இந்த நளன் ஏழு கடலையும் விரைவில் அடைத்து அணை யமைப்பான்', என்றான் - (என்று) நளன் வல்லமையைப்பற்றிக் கூறினான். ஓ - வினா.

ஊழிமுத னுயகன் - இராமபிரான்; கிட்கிந்தா. 429, 534, 679; சுந்தர. 107, 324, 1105; யுத்த. கும்ப. 316. உவந்தான் - உவப்புப் புதுமையும பெருமையும்பற்றி எழுந்தது; 'புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு, மதிமை சாலா மருட்கை நான்கே' (தொல். மெய்ப்பாட். 7). ஒன்றோ: எண்ணிடைச்சொல். ஒன்றோ, ஏழு கடலும் கடிதடைப்பன்; (ஒப்பு): 'பாழி நெடுந்தோள் வீராநின் பெருமைக் கேற்பப் பகையிலங்கை, ஏழுகடற்கு மப்புறத்த தாகா திருந்த திழிவன்றோ' (சுந்தர. 598); 'இச்சிலை கிடக்கமலை யேழையு மிருறோ' (பால. கோலங். 36); 'தாழுமுரை செப்பு முளவோ' என்ற பாடங்கொண்டு; 'உரையும் தாழ்ந்து போம், சொல்லினு மடங்காது' என்பது பழையவுரை.

பி - ம். 1. ஊழிநெடு; வியப்பொடும்.

2. ஆழியினதாழமுரைநா முரைசெய்யுமளவன்றே; வாழியிவ் விலங்கை நெடுவன்திசைய நாமேல்; தாழும்; அளவே இனியதோன்றே, அளவே தணியிதொன்றே, அளவே தகையிதென்றே.

3. பெரிது; இசையது.

4. அடைப்ப ரிவர். 4

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இதன்பின் ஓர் அதிகப்பாடல்:—

என்றுநளனைக்கருணையில்தழுவி யன்பாய்
அன்றுவருணன்னுதவு மாரமு மளித்துத்
துன்றுகதிர் பொற்கலனு மற்றுள தொகுத்தே
வெனறியினி யென்றுபடை யோடுடன் விரைந்தான்

## இராமபிரான் அணையின்மீது செல்லுதல்

690. நெற்றியி னரக்கர்பதி செல்லநிறை நன்னூல்
கற்றுணரு மாருதி கடைக்குழை வரத்தன்
பெற்றியுணர் தம்பியொரு பின்புசெல வீரப்
பொற்றிரள் புயக்கரு நிறக்களிறு போனன்.

நெற்றியின் அரக்கர் பதி செல்ல - (படையின்) முன்னணியில் அரக்கர் மன்னனாகிய வீடணன் செல்லவும், நிறை நல் நூல் கற்றுணரும் மாருதி - பொருள் நிறைந்த சிறந்த நூல்களனைத்தும் தெரிந்துணர்ந்த அநுமன், கடை குழை வர - சேனையின் பின்னணியில் வரவும், தன் பெற்றி உணர் ஒரு தம்பி - தன் பெருமைக் குணங்கள் எல்லாம் நன்குணர்ந்த ஒப்பற்ற தம்பியான இலக்குவன், பின்பு செல - தன்னைத் தொடர்ந்து பின்னே வரவும், வீரம் - வீரம் செறிந்த, பொன் திரள் புயம் - அழகிய திரண்ட கைகளையுடைய, கரு நிற களிறு போனன் - கரிய நிறம்பெற்ற யானைபோன்றவனான இராமபிரான் சென்றான்.

நெற்றி - முன்படை. நிறை நன்னூல் கற்றுணரு மாருதி: கிட்கிந்தா. 61, 74, 990, 991, 992; சுந்தர. 301, 1233, 1237; யுத்த. 408; நிறை நன்னூல் என்றும கற்றுணரும் என்றும் கூறியது, 'இல்லாத வுலகத் தெங்கு மிங்கிவன் இசைகள் கூரக் கல்லாத கலைகள்' (கிட்கிந்தா. 61). இல என்றமையின. 'காதல் நான்முகனாலும் கணிப்பரிய கலையனைத்தும் இவன் கற்றவன்' ஆதல் முன் கூறப்பெற்றது. உணர்தல் - நிதித்தியாசனம் என்பர் வடமொழிவாணர். குழை: கூழை என்பது குறுகியது; கூழை - பின்னணி. சிறந்த வீரனை வெற்றியை மணந்தவன் என்று கூறும் கவிமரபுபற்றி 'வெற்றிபுணர் தம்பி' என்ற பாடமும் ஏற்கும். மணநூல் என்று வழங்கும் சீவகசிந்தாமணியில் மண்மகளையும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பூமகளையும் கதாநாயகன் மணந்ததாகக் கூறியமை காண்க. இராம பிரான், வீரப்புயம் பொற்புயம் திரள்புயம் எனப் பிரித்துக் கூட்டுக; (ஒப்பு): 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொள் திண்டோள்' (பால. பூக்கொய். 18) என்ற இடத்து போரென்ன வீங்கும் தோள், பொருப்பன்ன தோள், பொலன்கொள் தோள், திண்டோள் என்றதுபோல. களிறு இராமபிரானுக்கு; 'இருகை வேழத் திராகவன் றன்கதை' (பால. காப்பு. 1); 'காவலன் பயந்தவீரக் கார்முகக் களிறே' (யுத்த. இலங்கைகாண். 45); 'வேதத் தோட்டியின் தொடக்கி னிற்கும் துளக்கைமால் யானை யன்னான்' (யுத்த. நாகபாசப். 242). இச்செய்யுட்கு (ஒப்பு): 'சீரைசுற்றித் திருமகள் பின்செல' (அயோத்தி. நகர்நீ. 254). சுக்கிரீவன் வேண்டுகோட்படி இராமபிரான் அநுமன்மீதும், இலக்குவன் அங்கதன்மீதும் அமர்ந்து செல்ல, சுக்கிரீவன் பின் தொடர்ந்தான் என்பது முதனூலிற் கூறப்படுவது. வீடணன் படைகளுடன் முன்னும், அடுத்து இராமபிரானும், அவன்பின் இலக்குவனும், இறுதியில் படையுடன் அனுமனும் சென்றனர் என்க.

பி - ம். 1. நெறிநன்னூல்.
உ. வெற்றிபுணர், வெற்றி புனை வோரு மவர்; கூழைவரத்தான். 6

## சேனைச் செலவின் வருணனை

691. இருங்கவிகொள் சேனைமணி யாரமிட றத்தன்
மருங்குவளர் தண்டலை வயங்குதிரை மான
ஒருங்குநனி போயின வுயர்ந்தகரை யூடே
கருங்கடல் புகப்பெருகு காவிரி கடுப்ப.

இரு கவி கொள் சேனை - பெருந்திரளான வாநரங்கள் அடங்கிய சேனைகள், மணி ஆரம் - நவமணிகளையும் சந்தனக் கட்டைகளையும், இடற - இடறுமாறு, தன் - தனது, மருங்கு வளர் - பக்கங்களிலே ஓங்கி வளர்ந்துள்ள, தண்டலை - சோலைகளை, வயங்கு திரை மான - விளங்குகின்ற அலைகள் ஒத்திருப்ப, கரு கடல் புக பெருகு காவிரி கடுப்ப - கரிய கடலிலே சென்று வீழுமாறு நீர் பெருகுகின்ற காவிரிநதியை ஒப்ப, உயர்ந்த கரை ஊடே நனி


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஒருங்கு போயின - உயர்ந்துநின்ற அந்தச் சேது அணையின் வழியாக மிகவும் ஒன்றுபட்டுச் சென்றன.

மணியும் ஆரமும் இடறுதல் சேனைக்கும் நதிக்கும்; 'முத் தீர்த்துப் பொன்வரன்றி' (கிட்கிந்தா. 740). தண்டலை - குளிர்ந்த இடமான சோலை; 'தண்டலை மயில்களாட' (பால. நாட்டுப். 4). காவிரி: காவேரி என்னும் வடமொழிச் சிதைவு; கவேர கன்னி - சோழர் குலக்கொடி என்றும் பொன்னி யென்றும் வழங்கும். 'காவி ரிப்பாவை தன்றாதை கவேரன்' (மணி. 3 · 55-56); 'கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாறு' (சிலப். 1 · 6 · 163); 'குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு, கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்கும், காவிரிப் புதுநீர்' (சிலப். 1 · 10 :106-108). கடுப்ப: உவமவுருபு. சேனைக்குக் காவிரியும், அலைகளுக்குச் சோலைகளும், இலங்கைக்குக் கடலும் உவமைகள். சேனை போயின என இயைக்க. 'கடலிலெழுந்த திரைகள் இருமருங்கும் உயர்ந்த சோலைபோல' என்பது பழையவுரை.

பி - ம். 1. இடறித்.

2. வளர்தெண்டிரை, தண்டிரை; வயங்குபொழில்.

3. போயின துயர்ந்த.

692. ஓதிய குறிஞ்சிமுத லாயநில னுள்ள
கோதில அருந்துவன கொள்ளையின் முகந்துற்று
யாதுமொழி யாவகை சுமந்துகட லெய்தப்
போதலினு மன்னபடை பொன்னியென லான.

ஓதிய - (தொல்காப்பியம் முதலான நூல்களிற்) கூறப்பெற்ற, குறிஞ்சி முதல் ஆய நிலன் உள்ள - குறிஞ்சி முதலான நிலங்களில் உள்ள, கோது இல - குற்றம் இல்லாத, அருந்துவன - உணவாக உட்கொள்ளும் உணவுப்பொருள்களை, கொள்ளையின் முகந்துற்று - மிகுதியாகக் கவர்ந்துகொண்டு, யாதும் ஒழியா வகை சுமந்து - ஒன்றையும் விட்டுவிடாமல் தாங்கியவண்ணம், கடல் எய்த போதலினும் - கடலையடையச் செல்லுதலாலும், அன்ன படை பொன்னி எனல் ஆன - அந்தப் பெருஞ்சேனை காவிரி யென்னு மாறு இருந்தது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இச்செய்யுளில் குரக்குப்படைக்குக் காவிரியை உவமிக்க மற்ெருரு காரணம் கூறப்பெற்றது. தொல்காப்பியர் காலத்திலிருந்தே புகழ்ந்து கூறப்படுதலான் ஓதிய குறிஞ்சி முதல் என்ருர். அருந்துவன: வினையாலணையும் பெயர். கொள்ளை - மிகுதி; 'கொள்ளைமா நிதியம்' (ஆரணிய. 630). பொன்னி ஐவகை நிலங்கள் தோறும் பாய்ந்து செல்லுதலின் அந்நிலங்களின் கருப்பொருள்களை அடித்துக்கொண்டு செல்லும் எனப்பட்டது. குறிஞ்சி முதலாய நிலம்: குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்பன. இச்செய்யுட் கருத்துக்கு (ஒப்பு): 'முல்லையைக் குறிஞ்சியாக்கி............ அன்றே' (பால. ஆற்றுப். 17); 'புவியினுக் கணியா...யைந்திணை நெறியளாவி' (ஆரணிய. 220); மற்றும், ஆரணிய. 48, 916; ஒற்றுக். 8. தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இங்கு பொன்னி நதியைச் சிறப்பித்ததுகொண்டு ஆசிரியரின் நாட்டுப் பற்று விளங்கும். காவிரி கிட்கிந்தா. 748; பால. மிதிலைக். 6; பால, அகலிகை. 32.

பி - ம். 1. நிலமுள்ள.

2. கொள்கையின்.

3. சுமந்து கடல்செலப், செல்ல.

4. போதலுறும்; யெனலாகும். ॥

693. ஆயது நெருங்கவடி யிட்டடி யிடாமல்
தேயுநெறி மாடுதிரை யூடுவிசை செல்லப்
போயசில பொங்குதொறு பொங்குதொறு பூசற்
பாய்புரவி விண்படர்வ போலினிது பாய்வ.

போயசில - (தனிப்பட்டுச்) சென்ற சில குரங்குகள், ஆயது நெருங்க அடி இட்டு - அந்தச் சேனை நெருங்க அடி வைத்தலால், தேயும் நெறிமாடு - (கால்கள் ஊன்றித்) தேய்ந்த வழிகளிலே, அடி இடாமல் - அடி வைக்க முடியாமல், மாடு - சேதுவின் இரு புறங்களிலும் அடிவைத்து, திரை ஊடு - கடலலைகளின் இடையே, விசை செல்ல - வேகத்துடன் வந்து கொண்டிருக்க, (அவ்வாறு அலைகள்) பொங்கு தொறு பொங்குதொறு - பொங்கிப் பொங்கி யெழுந்தோறும், பூசல் பாய் புரவி - போரிடத்துப் பாய்கின்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



குதிரைகள் மீது, விண்படர்வபோல் இனிது பாய்வ - ஆகாயத்தில் செல்வபோன்று இனிதாகத் தாவிச் செல்வனவாயின.

சேனையின் முன்னணியில் குரங்குகள் அடர்ந்து செல்வதால், சில குரங்குகள் அடிவைக்க முடியாமல் சேதுவின் இரு மருங்கும் செல்லுங்கால் பேரலைகள் வீச, அவ்வலைகளும் கீழாகுமாறு அவை தவ்விச் செல்வது குதிரை சவாரி செய்வதை ஒத்தது எனப்பட்டது. கடல் திரைகளைக் குதிரைகட் குவமை கூறுவது கவி மரபு, 'தரங்க நிரைத்தன தரள நிரைத்தன, துரங்க மெனைப்பல கோடி தொகுத்தே' (நக்க. 265); 'ஒலியவார் திரையி னன்ன வொழுங்கின யோகமாக்கள்' (திருவிளை. திருமணப். 11); 'அணையிட மில்லாமல் கடலுக்குள்ளே போகின்ற வானரங்கள் திரை பொங்குந் தோறும் குதிரை ராவுத்தர் ஒத்தன' என்பது பழையவுரை.

பி - ம். 1. அடியிட் டிடைவிடாமல், இடமீலாமல், யிடையிலாமல்.
2. மாடு தரையொடு ; சில செல்லப்.
3. போய சில வோங்குதொறு.
4. யிற்படர்வ ; மீது செல்படைத் தலைவ ரொந்த. 8

## செல்ல முடியாது தவிப்பாரைக் சேனையிலுள்ளவை கரை சேர்த்தல்

694. மெய்யிடை நெருங்கவிசை யுற்றவயல் வீழும்
பொய்யிடமி லாதபுன லிற்புக லிலாத
உய்விட மளிக்குமரு ளாளர்முறை யுய்த்தார்
கையினிடை சென்றுகரை கண்டகரை யில்லை.

மெய் இடை நெருங்க - செல்லக்கூடிய இடங்களில்) சேனை களின் உடல்கள் நெருங்கி யிருத்தலின், விசை உற்ற - வேகம் பொருந்தினவாய், அயல் வீழும் - பக்கத்தில் விரும்பிச் செல்லக் கூடிய, பொய் இடம் இலாத - காலி யிடத்தை அடையப் பெறு தனவும், புனலில் புகல் இலாத - நீரிலே செல்ல முடியாதனவுமான, வானரங்களை, உய்விடம் அளிக்கும் அருளாளர் - பிழைக்கும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இடத்தை அருளுடன் அளிக்கின்ற கருணை மிக்க பிறவாநரங்கள், கையினிடை முறை உய்த்தார் - தம் கையின் மீதே செல்லுமாறு முறையே செலுத்தினர். (இவ்வாறு) சென்று கரைகண்ட - கையி னிடமாகவே சென்று கரை யடைந்த (வாநரங்கட்கு), கரை இல்லை - ஓர் எல்லை இல்லை,

பொய்யிடம் - காலியிடம்; செல்ல இடம் கிடைக்கப் பெரு தனவும், நீரில் செல்ல இயலாதனவுமாகத் தவிக்கின்ற குரங்கு களை நடக்க இடம்பெற்ற சேனையிலுள்ள வாநரர்கள் தத்தம் கைகளிற் றூங்கி முறையே செலுத்த அவை கரையேறின எனப் பட்டது. கரைகண்டன என்பது ஈறு குறைந்தது; வினையா லணையும் பெயர். கரங்களிற் றூங்கி உதவினமையின் அருளாளர் எனப்பட்டார். கரைகண்ட கரையில்லை என்ற தொடரில் மோனை இணை யெதுகைகளும் முரணும் காண்க. 'பொய்யிடை யிலாத புனல் - சத்தியமாக நின்ற கடலுக்குள்ளே வாநரம் போய் விடாமல் இருகரைக் கீழும் கைகொடுத்துக் கூட்டிப் போனூர்கள்' என்பன பழையவுரை.

பி - ம். 1. வெளி யற்றயலில் விழும்.
2. பொய்யிடை; புரும்படி விளக்கி.
3. முறையுய்ப்போர், முறையொத்தார்.
4. கையிடை கொடுப்பவழி சென்ற. 10

## இராமபிரானுக்கு வாநரர் உபசாரஞ் செய்தமை

695. இழைத்தனைய வெங்கதிரின் வெஞ்சுட ரிராமன்
மழைத்தமுகி லன்னமணி மேனிவரு டாமல்
தழைத்தநிழ லுற்றகுளிர் சந்தன முயர்ந்த
வழைத்தரு வெடுத்தருகு வந்தன ரநேகர்.

இழைத்தனைய - (நவமணிகளை) இழைத்தாற்போன்று காணப் படுகின்ற, வெம் கதிரின் வெம் சுடர் - சூரியனுடைய கடுமையான வெயிலானது, இராமன் - இராமபிரானுடைய, மழைத்த முகில் அன்ன மணி மேனி வருடாமல் - மழைநீர் நிறைந்த முகில்போன்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அழகிய திருமேனியைத் தீண்டாதபடி, தழைத்த - நன்கு ஓங்கி வளர்ந்தனவும், நிழல் உற்ற - நிழல் பொருந்தியனவுமான, குளிர் சந்தனம் - குளிர்ச்சியான சந்தன மரங்களையும், உயர்ந்த வழை தரு எடுத்து - சிறந்த சுரபுன்னை மரங்களையும் பறித்துக்கொண்டு, அருகு வந்தனர் அநேகர் - அண்மையில் தொடர்ந்த வாநரங்கள் பலவாகும்.

மழைத்த முகில் அன்ன மேனி: (ஒப்பு): ஆரணிய. 24, 176, 302, 303, 540, 1017. 'கருந்தனி முகில்' (சுந்தர. 507). கொண்டலொப்பான்: (சுந்தர. 573); கார்மேக வண்ணன்: (சுந்தர. 57). மழைத்த - 'மழைத்த வானமே' (கிட்கிந்தா. 433). வருடல் - தடவுதல்; 'செம்புனல் வந்தங் கடிவருட' (தேவா. 112, 5); 'பொன்னி திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும்' (திவ்ய. பெருமாள். 1:1). சந்தன மரத்தைக் குடையாகப் பிடித்தும், வழை மரங்களைச் சாமரையாக வீசியும் வந்தனர் என்க. 'அழைத்தவை யெடுத்தருகு சென்றனர் என்று பாடங்கொண்டு, சுவாமி திருமேனியிலே கொம்புகள் படாமல் முன்னே கரங்களினாலே விலக்கிப் போனார்கள்' என்று பழையவுரை கூறும்.

பி - ம். 1. கதிரெழுஞ்.
2. முகில்போலும்.
3. தழைத்து, தழைத்த லுறவுற்ற: சந்தன மரக்கா.
4. அழைத்தவை; சென்றனர். 11

696. ஓமநெறி வாணர்மறை வாய்மையொரு தாமே
ஆமரசன் மைந்தர்திரு மேனியல சாமே
பூமர னிறுத்தவை பொருந்துவ பொருத்திச்
சாமரையின் வீசினர் படைத்தலைவர் தாமே.

ஓமம் நெறி வாணர் - ஓமம் செய்கின்ற முறையில் (கடவுள் அருளை விரும்பி) வாழ்பவரான அந்தணர்களின், மறை வாய்மை ஒரு தாமே ஆம் - நான்மறைகளின் உண்மையான பொருள்வடிவர் தாமேயான, அரசன் மைந்தர் - தயரதச் சக்கரவர்த்தியின் திருக்குமாரரான இராம இலக்குவருடைய, திருமேனி அலசாமே -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அழகிய மேனி வருந்தாதபடி, படை தலைவர் தாமே - வானரப் படைத்தலைவர்கள் தாங்களே, பூமரன் இறுத்து - பூக்கள் பொதிந்த மரங்களை ஒடித்து, அவை பொருந்துவ பொருத்தி - அவற்றில் ஒன்றுசேரக்கூடியவற்றை ஒன்று சேர்த்து, சாமரை யின் வீசினர் - சாமரையாகக்கொண்டு வீசினர். ஏகாரம் - தேற்றம். தாம் - சொல் விழுக்காடுமாம்.

ஓமம் - வேள்வித்தீயில் நெய் முதலியன பெய்தல்; 'ஓம ராமரை' (ஆரணிய. 31); 'ஓம வேள்வியி னுறுபத முய்ப்பதும்' (யுத்த. இரணிய. 42); 'ஓமம் வேள்வி யுதவும் தபம் ஜபம்' (சேதுபு. சேதுச். 5). மறைவாய்மை; 'விராவரும் புவிக்கெலாம் வேத மேயன விராமன்' (அயோத்தி. மந்தரை. 47); 'மறைநான்கு மனை யார்கள்' (பால. குலமுறை. 23); 'நால்வரும் பொருவினுன் மறை யெனு நடையினர்' (பால. எதிர்கோள். 28); (ஒப்பு): 'மறைய னைத்துமொரு வடிவாமென' (பெரியபு. திருஞான. 188). அலசுதல் - வருந்துதல்; 'மருங்கலச' (கிட்கிந்தா. 839); 'திருவுடம் பலச நோற்கின்றான்' (ஆரணிய. 237). மரம் - மான்; ஈற்றுப்போலி.

பி - ம். 1. ஒரு தானே.

2. ஆமரசர்.

3. பொருந்துவ பொருந்தச்; பொருத்து நெறிகட்டி, இறுத்தவர் பொரூந் துவர், பொருந்தி. 12

## இராமபிரான் படைகளுடன் கடல்கடந்து அக்கரை சேர்தல்

697. மருங்கட வளர்ந்தமுலை மங்கைமன முன்னு
வருங்கடக மங்கையினில் வள்ளலினை கின்றான்
ஒருங்கட லுயர்ந்தபடர் தானையொடு மோதத்து
இருங்கடல் கடந்துகரை யேறின விராமன்.

கடகம் வரும் அங்கையினில் வள்ளல் இராமன் - தன் அழகிய கையில் கேடகம் அணிந்த கருணைக்கடலான இராமபிரான், மருங்கு அட வளர்ந்த முலை - இடை ஒடியும்படி தழைத்து ஓங்கிய தனங்களையுடைய, மங்கை மனம் உன்னு - சீதாதேவியின் (தனிப் பட்டு வருந்துகின்ற மனத்தை) நினைந்து, இனைகின்றான் - வருந்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பவனும், ஒருங்கு - ஒன்றுகூடி, அடல் உயர்ந்த - வலிமை மிக்க, படர் தானையொடும் - (தன்னைப் பின்தொடர்ந்து வரும்) குரக்குச் சேனையுடன், ஓதத்து இரு கடல் கடந்து கரை ஏறினன் - நீர் நிறைந்த பெரிய கடலைத்தாண்டி இலங்கைக்கரை சேர்ந்தான்.

மருங்கு - இடை ; 'மருங்கிலா நங்கையும் வசையி லையனும்' (பால. மிதிலைக். 38) ; 'மருங்கலச வற்கலை வரிந்து' (கிட்கிந்தா. 389) ; இது மருங்குல் எனவும் வழங்கும். பிரிந்து வருந்தும் சீதா தேவியின் மனம் என்ன பாடுபடும் என்பதை நினைத்து என்க. மனம் முன்னு - தன் மனத்தில் முன்னி எனினுமாம். முன்னு - செய்யா வென்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். அம் + கை = அங்கை ; 'அகமுனர்ச் செவிகை வரின் இடையனகெடும்' (நன். மெய்யீற். 19). இனைதல் - வருந்துதல் ; 'சோலை வாழைச் சுரிநுகும் பினைய' (குறுந். 308) ; 'இனைகூஉ' (புறநா. 44). கடகம் ; ஆடவர் பெண்டிர் என்ற இருவரும் கரத்தில் அணிவது ; 'கங்கைக் கிறைவன் கடகக்கை புடைத்து நக்கான்' (அயோத்தி. நகர்நீ. 117) ; 'கடகம் செறித்த கையை' (மணி. 6 : 114) ; 'கடக வண்கை வெஞ்சிலை கொண்டு' (சீவக. 2318) ; 'கடகஞ் செறியாதோ கைக்கு' (தனிப்பா. ஒளவை.) ; கடகம் - கேடகம் (திவா.).

பி - ம். 1. மணம்.

2. நினைக்கின்றான், அலைக்கின்றான்.

3. உடனுயர்ந்து மிகு.



முதலிரண்டடிகள் :

அருங்கடக மங்கையி லகற்றியயர் வோரும்
மருங்கட வளர்ந்தமுலை மங்கைமண முன்னு

என்றும் காணப்படும்.

## இராமபிரான் ஒரு மலையில் தங்குதல்

698. பெருந்தவ முயன்றமரர் பெற்றிடு வரத்தால்
மருந்தனைய தம்பியொடும் வன்றுணைவ ரோடும்
அருந்ததியும் வந்தனைசெ யஞ்சொலிள வஞ்சி
இருந்தநக ரின்புறனொர் குன்றிடை யிறுத்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(அவ்வாறு இலங்கை சேர்ந்த இராமபிரான்), அமரர் பெரு தவம் முயன்று பெற்றிடு வரத்தால் - தேவர்கள் பெருந்தவத்தினால் முயற்சிசெய்து பெற்ற வரத்தின் பயனாக, மருந்தனைய தம்பியொடும் வன் துணைவரோடும் - தேவர் அமுதை ஒத்த இலக்குவனுடனும் வலிய நண்பருடனும், அருந்ததியும வந்தனை செய் - (கற்புத் திறத்தால்) அருந்ததியும் வணக்கம் செய்யும்படியானவளும், அம் சொல் இள வஞ்சி - (செவிக்கினிய) அழகிய சொற்களைப் பேசும் இளவஞ்சிக் கொடிபோன்றவளுமான சீதாதேவி, இருந்த (சிறையிருந்த) நகரின் புறன் ஓர் குன்றிடை இறுத்தான் - இலங்காபுரியின் பக்கத்தில் ஒரு குன்றின் அருகில் சென்று தங்கினான்.

முதலிரண்டடிகட்கு (ஒப்பு): ஆரணிய. 230; 'சேக்கையினரவி னீங்கிப் பிறந்தது தேவர்செய்த, பாக்கிய முடைமை யன்றோ' (ஆரணிய. 781); 'அண்டா வையா வெங்கள் பொருட்டால் அயர்கின்றாய்' (யுத்த. பிரமாத்திர. 222). மருந்து - அமுதம்; 'மருந்தனைய தங்கை' (ஆரணிய. 611); 'மருந்துமெலாகியது' (சுந்தர. 558); 'மருந்தனைய தேவி' (சுந்தர. 612); சோர்வடைந்த காலத்தும் இறந்துபடும்படி வேதனை நிகழ்ந்தபோதுகளிலும் உடனிருந்து தேற்றியவன் ஆகலின், 'மருந்தனைய தம்பி' எனப்பட்டான். அருந்ததியும் வந்தனை செய்: 'சில மின்னதென் றருந்ததிக் கருளிய திருவே' (அயோத்தி. சித்திரகூடப். 16); (ஒப்பு): 'அருந்ததி யெனத்தகைய சீதை' (கிட்கிந்தா. 845); 'அலகில் கற்புடை சானகி' (யுத்த. கும்ப. 79); 'திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி' (யுத்த. கும்ப. 80); 'விணைகளைக் கற்பின் வென்ற விளக்கு' (யுத்த. மாயாசனக. 4). அஞ்சொற்கள் அமுதி லள்ளிக் கொண்டவள் ஆதலின், 'அஞ்சொலிளவஞ்சி' என்றார்; அழகு, இனிய சொல், இளமை, வஞ்சிக்கொடிபோன்ற இடை என்ற அனைத்தும் 'அஞ்சொ லிளவஞ்சி' என்ற தொடராற் குறிக்கப் பெறுதல் காண்க. பிராட்டி இலங்கையில் இருந்தது, தேவர் பெற்ற வரம் நிறைவேறுதற்கு, என்ற பொருள் இங்குத் தொனிப்பது காண்க. இராமபிரான் தங்கிய மலையின் பெயர் சுவேல பருவதம் என்றும், பவளமால்வரை என்றும் கூறுவர்.

பி - ம். 1. பேணிய பயந்தான், பேணிய தவந்தால்.

3. அருஞ்சொல் மடவன்னம்.

4. யிருந்தான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இதன்பின், 'நளன் முடிசூட்டு படலம்' என்ற தலைப்புடன் 26 பாடல்கள் அதிகமாக ஒரு சுவடியில் காணப்படுகின்றன:

என்றுமகிழ் கொண்டிரவி மைந்தனை யிராமன்
வன்றிறலி னானளன் வகுத்தவணை மானக்
குன்றநெடு நீரின்மிசை நின்றிலகு கொள்கை
நன்றவன் முயன்றதவ மென்கொனவில் கென்றான். 1

நவிற்றுதி யெனக்கருணை வள்ளலெதிர் னாமக்
கவிக்கிறைவ னெய்தியிரு கைமலர் குவித்தே
புவிக்கிறைவ போதினமர் புங்கவ னிடத்தே
யுவப்புட னுதித்தவர்க ளோர்பதின்ம ரென்பார். 2

மலரவ னிடத்தின்வரு காசிபன் மரீசி
புலகனுட னத்திரி புலத்தியன் வதிட்ட
னிலகுவிசு வன்பிருகு தக்கனியல் பாகு
நலமருவு மங்கிர வெனப்புகல்வர் நல்லோர். 3

மக்கடனி லொன்பதின்மர் வானமுத லாக
மிக்கவுல கைத்தர விதித்துவிசு வப்பேர்
தொக்கபிர மற்கொரு தொழிற்றனை விதித்தா
னக்கண நினைத்தபடி யண்டமுத லாக. 4

அன்னதொழி லால்விசுவ கன்மனென லானான்
பொன்னுலகை யாதிய் வகுத்திடுதல் போல
னென்னலிகன் மாருதி நெருப்பினி லழிந்த
நன்னகர முன்னையினு நன்குற வளித்தான். 5

மூவுலகி னெவ்வெவர்கள் முன்னுமணி மாட
மாவது புரிந்துமய னாகவு மிருந்தான்
தேவலிசன் மாவசுரர் சொற்றமுறை செய்தற்
காவளவில் வானவர்க டச்சனென லானான். 6

அன்னவ னியற்கையறி தற்கரிய மேனாட்
பன்னுமறை யுந்தணான் விதித்தபடி பார்மேன்
மன்னுமிமை யோரெவரும் வந்தபடி தானே
யுன்னுமவன் மைந்தனள னென்றிட வுதித்தான். 7

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தாயரொடு தந்தைமகி ழுந்தனையன் வானின்
மேயமதி போலவளர் மெய்யின்மணி மாட
நாயகம தானதிரு வீதியி னடந்தே
யேயசிறு பாலருட னுடிமனை யெய்தும். 8

சிந்தைமகி ழில்லில்விளை யாடுசிறு வன்றோர்
தந்தைவழி பாடுபுரி யுங்கடவு டன்னை
வந்துதிகழ் மாமணி மலர்த்தவிசி னேடே
கந்தமலர் வாவியி னிடைக்கடிதி னிட்டான். 9

மற்றைய தினத்தினிறை யெங்கன மருண்டே
பொற்றொடி மடந்தையை வினவித்துரை யெனப்போய்
நற்றவ மகச்செய னடுக்கியய னண்ணிச்
சொற்றன ளெடுத்துவழி பாடுபுரி தூயோன். 10

பூசனை புரிந்தவன் வயத்திறை புகாமே
கோசிக மமைத்துமணி மாடமது கோலி
நேசமுற வைத்திடவு நென்னலென வோடி
யாசையி னெடுத்தவனு மாழ்புனலி னிட்டான். 11

இப்படி தினந்தொறு மியற்றுவது கண்டே
மெய்ப்புதல்வ னைச்சின மிகுத்திட வெகுண்டு
மப்படிசெய் தத்திற மயர்த்தில னிவன்றன்
கைப்படன் மிதக்கவென வோருரை கதித்தான். 12

அன்றுமுத லின்னவ னெடுத்தபுன லாழா
தென்றரிய மாதவ ரிசைத்தபடி யின்னே
குன்றுகொட டுக்கநிலை நின்றது குணத்தோ
யென்றுநளன் வன்றிற மெடுத்துமு னிசைத்தான். 13

## வேறு

சொற்றவை யனைத்தையுங் கேட்டுத் தூய்மறை
கற்றவ ரறிவுறுங் கடவு ளித்தொழின்
முற்றுவித் தனையுள மகிழ மொய்ம்பினேய்
மற்றுனக் குரைப்பதென் முகமன் வாழியாய். 14

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அய்யனல் லியற்கையெப் பொருளு மன்பினு
லெய்தினர் மகிழ்ந்திட வீயு மெண்ணினர்
செய்தொழின் மனக்கொளச் செய்த செய்கைகண்
டுய்திற நளற்குமன் றுடைமை யாதலான். 15

இத்திறம் புரிநளற் கின்ப மெய்தவே
வித்தக வியற்றிட வேண்டு மென்றன
னுத்தம னுரைப்படி யுளூற்றற் கெய்தினர்
முத்திறத் துலகையு மேந்து மொய்ம்பினர். 16

இங்கிவன் ருதைதயை யெண்ணு முன்னமே
யங்கவன் வணங்கின னருகி னெய்தினன்
புங்கவ னின்மகற் கினிய பொன்முடி
துங்கமா மணிக்கலன் றருதி தூய்மையாய். 17

என்றலு மணிமுடிக் கலன்க ளின்னருத்
துன்றுமா மலர்த்தொடை தூய பொற்றுகில்
குன்றெனக் குவிந்தன கோல மாமலர்
மன்றல்செய் விதானமும் மருங்க மைந்தரோ. 18

முடிபுனை மண்டப மொன்று முற்றுவித்
திடிநகர் பல்லிய மியம்ப வாநரர்
நெடியவான் கங்கையே முதல நீத்தனீர்
கடிதுகொண் டணைந்தனர் கணத்தி னென்பவே. 19

நவன்றனை விதிமுறை நான மாடுவித்
திளங்கதி ரனையபொற் றுகிலு மீய்ந்தொளிர்
களங்கனி யனையவ னேவக் கண்ணகன்
வளந்திகழ் மண்டப மருங்கி னெய்தினன். 20

ஆனதோர் காலையி னருக்கன் மைந்தனு
மேனைய வீரரு மிலங்கை மன்னனும்
வானர ரனைவரு மருங்கு சூழ்வந்து
தேனிமி ரலங்கலுங் கலனுஞ் சேர்த்தியே. 21

பொலங்கிரி யனையதோட் டம்பி போந்தொளி
யிலங்கிய மணிமுடி யிருகை யேந்தினன்
அலங்கலந் தோள்நளற் கன்பிற் சூட்டினன்
குலங்களோ டினிதுவாழ் கென்று கூறியே. 22

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இளையவன் றிருமலர்க் கையி னேந்தியே
யொளிமுடி புனைந்திட வுலக மேழினு
மளவிலா வுயிர்த்தொகை யனைத்தும் வாழ்த்திய
நளனியற் றியதவ நன்றென் றோதினர். 23

முடிபுனை நளனெழுந் திறைவன் மொய்கழ
லடிமிசை வணங்கிட வவனுக் கந்தமில்
படிபுக ழாசிகள் பகர்ந்து பார்மிசை
நெடிதுற நின்குல மெனநி கழ்த்தினான். 24

மற்றைய ரனைவரு மருள்வ ழங்கவே
பொற்றிரண் மணிமுடி புனைந்த பேரக்கவி
றுற்றடி வணங்கிட வுவந்து தாளையும்
பெற்றநன் விடைகொடு பெயர்ந்து போயினான். 25

இன்னன நிகழ்ந்தபி னினிதி னெம்பிரான்
றன்னிகர் சேதுவை நோக்கித் தையலா
ளின்னறிர்த் திடவெழுந் தருள வெண்ணினான்
பின்னவ ணிகழ்ந்தமை பேசு வாமரோ. 26

## இராமபிராற்குப் படைவீடு அமைக்குமாறு கட்டளை யிடுதல்

699\. நீலனை நெடிது நோக்கி நேமியோன் விரைய நீநம்
பால்வரு சேனைக் கெல்லாம் பாடிவீ டமைத்தி யென்னுக்
கால்மிசை வணங்கிப் போனான் கல்லினாற் கடலைக் கட்டி
நூலுரை வழிசெய் தானுக் கந்நிலை நொய்திற் சொன்னான்.

நேமியோன் - ஆழிப்படை ஏந்திய திருமாலின் அமிசமான இராமபிரான். நீலனை நெடிது நோக்கி - நீலனை நீண்ட நேரம் பார்த்து, 'நீ நம்பால் வரு சேனைக்கு எல்லாம் விரைய பாடிவீடு அமைத்தி - நீ நம்முடன் வந்துள்ள சேனைகட்கு எல்லாம் விரைவாகப் பாடிவீடு அமைப்பாயாக', என்ன - என்று பணிக்க, அவன் (கால் மிசை வணங்கி போனான் - அவன் (இராமபிரானது) திருவடிகளில் வணக்கம் செலுத்திச் சென்று, கல்லினால் கடலைக் கட்டி - மலைகளைக்கொண்டு கடலைக் கட்டி, நூல் உரை வழி செய்தானுக்கு - சிற்ப நூலிற் கூறியதற் கிணங்க முறையாகச் சேதுவை யமைத்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வனுன நளனிடம், அ நிலை நொய்தில் சொன்னுன் - அந்தக் கட்டளையின் தன்மையை விரைவாகக் கூறினுன்.

நீலன் - சேனைத் தலைவன். வழி செய்தான் - நளன். நீலனைப் பாசறை யமைக்குமாறு இராமன் பகர, அவன் தெய்வத்தச்சனுன நளனிடம் அந்தக் கட்டளையை விளம்பி, அதனை அமைக்குமாறு கூறினன். கல்லினுற் கடலைக் கட்டி நூல் உரை வழி செய்தவன் நளன் : சேதுபந்தனப் படலத்துக் காண்க. நூல் - சிற்ப நூல்.

பி - ம். 1. நோக்கி யிளைட, யினிது நோக்கி ; நெடியநீநம் ; விரைவினி.

2. சேனைக் கின்னெ ; இழைத்தியாற்பாடி, யமைத்தியாற்பாடி ; அளித்தி யாற்பாடி, என்ருன்.

3. கால்வரை, காலவன்.

4. நூல் வரை வழி, நூல் வழி,

இதன்பின் இரண்டு சுவடிகளில் காணப்பெறுகின்ற அதிகப் பாடல்கள்.

இறுத்தனனேழு பத்து வெள்ளமாம் சேனை யோடும்
குறித்திடும் அறுபத் தேழு கோடியாம் வீர ரோடும்
பொறுத்தமூ வேழு தானைத் தலைவர்க ளோடும் பொய்தீர்
அறத்தினுக் குயிரா யென்றும் அழிவிலா வமல னம்மா.

கேட்டலும் நளனென் ருேதும் கேடிலாத் தச்சன் கேள்வி
வாட்டமில் சிந்தை யரன்றன் மனத்தினும் கடுகி வல்லே
நீட்டுறும் அழிவில் லாத யோசனை நிலைய தாகக்
காட்டினன் மதிலி னேடும் பாசறை கடிதி னம்மா. 15

## நளன் பாசறை அமைத்தல்

700\. பொன்னினு மணியி னுனு
நான்முகன் புனைந்த பொற்பின்
நன்னல மாக வாங்கி
நான்முகச் சதுர நாட்டி
இன்னரென் னுத வண்ண
மிறைவர்க்கும் பிறர்க்கு மெல்லாம்
நன்னகர் நொய்திற் செய்தான்
தாதையும் நாணுட் கொண்டான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(நளன்) நல் நலமாக - மிக்க நல்ல நன்மை உண்டாகுமாறு, வாங்கி - இடத்தைப்பெற்று, நால் முகம் சதுரம் நாட்டி - நான்கு முகமாக அமையும்படி சதுரம் செய்து, இன்னார் என்றுத வண்ணம் (இந்தப் படை வீட்டில் இருத்தற் குரியவர்) இவர்கள் தாம் என்றுதபடி, இறைவர்க்கும் பிறர்க்கும் எல்லாம் - தலைவர்களாகிய சுக்கிரீவ வீடணர்க்கும், மற்றும் உள்ள வானரப் படைகட்கும், எல்லாம் நான்முகன் புனைந்த பொற்பின் - எல்லாம் சதுர்முகப் பிரமனாலேயே படைக்கப்பட்டன போன்று, பொன்னினும் மணியினானும் - பொன்னினாலும் மணியினாலும், நல் நகர் நொய்தில் செய்தான் - சிறந்த பாசறையை மிக எளிதில் செய்து முடித்தான் (நளன்), தாதையும் நாண உட்கொண்டான் - அவனுடைய தந்தையான விச்சுவகன்மாவும் (அத்தகைய ஆற்றல் தனக்கில்லையே) என்று எண்ணி வெட்கமடைந்தான்.

பிரமன் சிருட்டியே போன்று நகரைப் படைத்தனன் என்பான் 'நான் முகன் புனைந்த பொற்பின்' எனப்பட்டது, தாதை - விசுவகன்மன்; பழையவுரை மயன் என்னும். நகர் என்ற பதம் இப்பொழுது பட்டணத்தைக் குறித்து நின்றது 'நகரேஷு காஞ்சி' என்றது காண்க. பண்டைய நூல்களில் மனையைக் குறித்து நின்றது. 'பாழியன்ன கடியுடை வியனகர்' (அகநா. 15); கோயிலுமாம் 'முக்கட் செல்வர் நகர்' (புறநா 6): தாதையும் நாணுட் கொண்டான்; (ஒப்பு): வி. பா. இராசசூய. 3, 6.

பி - ம். 2. நன்னலம் அமைலாங்கி; நால்வகைச் சதுரம்.
3. இன்னரென் றெறுதவண்ணம்.
4. நன்னகர் விரைவிற், நன்னகரென்னச், நாதையை நாணுக் கொண்டான். 16

'நன்னெறி முறையினங்கு நால்வகைச் சதுரமாக' என்பது சில பிரதிகளில் இரண்டாமடி.

## இராமபிரானுக்குப் பர்ணசாலை யமைத்தல்

701. வில்லினுற் கிருக்கை செய்யும் விருப்பினுற் பொருப்பின் [விங்கும்
கல்லினுற் கல்லை யொக்கக் கடாவினன் கழைக ளான
நெல்லினு லலக்குங் காலு நிரப்பினன் தருப்பை யென்னும்
புல்லினுல் தொடுத்து வாசப் பூவினன் வேய்ந்து போனன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வில்லினாற்கு - கோதண்டம் என்னும் வில்லேந்திய இராமபிரானுக்கு, இருக்கை செய்யும் விருப்பினால் - இருப்பிடம் அமைக்க வேண்டும் என்ற ஆர்வத்தால் (நளன்), பொருப்பின் வீங்கும் கல்லினால் - மலையிலே இருந்த பருத்த கற்களால், கல்லை ஒக்க கடாவினான் - கற்களை ஒரு சமமாகுமாறு வீசி யெறிந்து அமைத்தான்; (பின்னர்) ஆன கழைகள் நெல்லினால் - ஏற்றன வான மூங்கில்கள் வாகைகள் என்ற இவற்றின் உதவியால், அலக்கும் காலும் நிரப்பினான் - வரிச்சலும் காலும் நிறைத்து, தருப்பை என்னும் புல்லினால் தொடுத்து - தருப்பைப் புற்களால் கட்டி, வாசம் பூவினால் வேய்ந்து போனான் - நறுமண முள்ள மலர்களால் மேற்கூரையை வேய்ந்து பர்ணசாலை அமைத்தான்,

வில்லினான் - இராமபிரான்; ஆரணிய. 740, 940; வில்லீ: ஆரணிய. 130, 450, 458, 542, 702, 772, 1029; கிட்கிந்தா. 761. வில்லிதன் தூதன் யான்; சுந்தர. 1196. நெல் - வாகை; (அக. நிகண்டு). அலக்கு - வரிச்சு; 'மனையினீடு மலக்கினை யறுத்து' (பெரியபு. இளையான். 19). கழை - மூங்கில்; 'கழைபடு முத்தமும்' (கிட்கிந்தா. 11); மற்றும், சுந்தர. 773. முடங்கலில் வரிச்சுமேல் மூட்டிப் பூக்கிளர் நாணலின் புல்லுவேய்ந்து இலக்குவன் இராமபிரானுக்குப் பர்ணசாலை அமைத்தது ஒப்பு நோக்கத்தகும்; (அயோத்தி. சித்திரகூடப். 49, 50) காண்க. 'புல்லினால் தொடுத்து வாசப் பூவினால் வேய்ந்து போனான்' என்ற தொடர் நளன் அதிக முயற்சியின்றி எளிய கருவிகளைக்கொண்டு பாடிவீடமைத்ததை உணர்த்தும்; 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்ற முதுமொழியும் காண்க. தொடுத்து, வேய்ந்து என்ற சொற்களும் ஏற்பவமைந்துள்ளமை நோக்குக. அரசியற்குரியரான சுக்கிரீவன் விடணனுக்கேற்பப் பொன்னினும் மணியினும் அமைத்த நளன் இராமபிரானுடைய தாபதக்கோலத்திற்கேற்ப, பன்னசாலையமைத்தது இங்குக் குறிக்கொள்ளத்தகும். கால் - வரிச்சல் அடித்தற்காய மரச்சட்டம். புறம், 22-ஆம் செய்யுளில் 'அலங்கு செந்நெற் கதிர்வேய்ந்த, ஆய்கரும்பின் கொடிக்கூரை' என்றது இங்கு ஒப்பு நோக்கத்தகும். நெல் - மூங்கில் என்பது பழையவுரை.

பி - ம். 1. வில்லிநரிக்கு; பொருப்பு; வீங்க; ஓங்கும்.

2. கழைகளாலும்; சுவரையேற்றி.

3. தருப்பை யான.

4. மேய்ந்து விட்டான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இங்கு ஓர் அதிகப்பாடல் :—

போயின னமலன் பாதம் பொருக்கென வணங்கி யின்னே
ஆயின தணிகொள் பாடி நகர்முழு தமல என்றுன்
நாயகன் தானும் வல்லே நோக்கினன் மகிழ்ந்து நன்றென்
றேயினன் எவரும் தத்தம் பாசறை யிருக்க வென்றே.

**எல்லோரும் தத்தம் பாசறைகளிற் சேர்தல்**

702. **வாயினு மனத்தி னாலும் வாழ்த்திமன் னுயிர்கட் கெல்லாம்**
**தாயினு மன்பி னானைத் தாளுற வணங்கித் தத்தம்**
**ஏயின விருக்கை நோக்கி யெண்டிசை மருங்கும் யாரும்**
**போயினர் பன்ன சாலை யிராமனும் இனிது புக்கான்.**

மன் உயிர்கட்கு எல்லாம் - நிலைபெற்ற எல்லாப் பிராணிக ளிடத்தும், தாயினும் அன்பினானை - அன்னையைப்பாக்கிலும் அன்பு செய்பவனான இராமபிரானை, யாரும் - எல்லோரும், வாயினும் மனத்தினாலும் வாழ்த்தி - வாயாலும் உள்ளத்தாலும் வாழ்த்தி, தாள் உற வணங்கி - அப்பெருமான் திருவடிகளில் வீழ்ந்து வணக்கம் புரிந்து, எண் திசை மருங்கும் - எட்டுத் திசை களின் பக்கங்களிலும், தத்தம் ஏயின இருக்கை நோக்கி போயினர் - தத்தமக்குப் பொருந்தி அமைக்கப்பெற்ற இருப்பிடங்களை நோக்கிச் சென்றார்கள் ; இராமனும் பன்னசாலை இனிது புக்கான் - இராம பிரானும் (இலக்குவனுடன் தனக்கென அமைத்த) இலைக்குடிலை இனிதாக அடைந்தான்.

தாயினும் அன்பினானை ; (ஒப்பு): 'தாயொக்கு மன்பில் ; (பால. அரசியல். 4) ; 'தாயே யனைய கருணையான்' (சுந்தர. 1169)' 'பெற்ற தாயினு மாயின செய்யும்' (பெரியதிரு. 1·1·9) ; 'பாலினைக் தூட்டும் தாயினும் சாலப்பரிந்து' (திருவாசகம். பிடித்த. 9) ; 'போற்றலாற் றாய ரொத்தும்' (சீவக. 1895). வாயினும் மனத் தினும் என்று வாக்கினையும் மனத்தினையும் கூறிப் பின்னர் மூன்றாவதாகக் காயத்தையும் குறிக்கு முகத்தால், 'தாளுற வணங்கி' என்றான். இவ்வணக்கம் காயத்தின் செயல் என்பது அறிக. தாள் உற - இராமபிரான் திருவடி தன் சிரத்திற் பொருந்த என்க. பன்னசாலை, பர்ணசாலை ; வடசொற்றொடரின்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


திரிபு. பர்ணம் - இலை; தமிழில் இலைக்குடில் என வழங்கும். இதன் அமைப்பு முன் பாட்டிற் காண்க.

பி - ம். 1. மனத்தும் வாழ்த்தி மன்னுயிர்க் செல்லாம் பெற்ற.

2. நாளினை; தந்தம்.

3. மருங்கில், மருங்கு.

4. போயின ரமைத்த சாலை; இராமனும் சென்று; நோய்திற் புக்கான்.

## சூரியாத்தமனம்

703. பப்புநீ ராய வீரர் பருவரை கடலிற் பாய்ச்சத்
துப்புநீ ராய தூய சுடர்களுங் கறுக்க வந்திட்
டுப்புநீ ரகத்துட் டோய்ந்த வொளிநிறம் விளங்க வப்பால்
அப்புநீ ராடு வான்போ லருக்கனு மத்தஞ் சேர்ந்தான்.

பப்பு நீர் ஆய வீரர் - பரவும் தன்மைவாய்ந்த வானர வீரர், பருவரை கடலில் பாய்ச்ச - பெரிய மலைகளைக் கடலிடை யிட்டத னாலே, துப்பு நீர் ஆய தூய சுடர்களும் - பவழம்போன்று செந் நிறம்பெற்ற தூய்மையான தன் கிரணங்களும், கறுக்க வந்திட்டு - கறுத்திடுமாறு (அக்கடலினின்று தெறித்து) வந்து, உப்பு நீர் அகத்துள் தோய்ந்த - உப்புநீர் தன்னிடம் படிந்ததனால் (மங்குதல் அடைந்த), ஒளி நிறம் - ஒளியுடன்கூடிய நிறம், விளங்க - விளங்கும்படி, அப்பால் - அதன் பிறகு, அப்பு நீர் ஆடுவான் போல் அருக்கனும் அத்தம் சேர்ந்தான் - அம்பு என்று சொல்லப் படும் தூய நீரில் மூழ்குபவன்போன்று அத்தமன கிரியை அடைந்தான்.

பப்பு - பரப்பு; (திவா.). ஏதுத்தற்குறிப்பேற்றவணி. வீரர் மலை களைக் கடலிற் போட்டதனால் உப்புநீர் மேல் எழும்பிக் கதிரவ னுடைய செய்ய கிரணங்கள் கறுக்குமாறு செய்யப் பின் தனது இயற்கை ஒளி நிறம் விளங்குமாறு தூய நீரில் ஆடுவது போன்று சூரியன் அத்தமித்தான்; (ஒப்பு): யுத்த. படைத் தலைவர். 55; இந்திரசித்து. 34. கடல்நீரில் நீராடுவோர் பின் தூய நீரில் மூழ்குவது மரபு என்பதும் இங்கே காண்க. 'தீதுநீங்கக் கடலாடியும் மாசுபோகப் புனல் படிந்தும்' (பட்டினப். 99-100). கதிரவன் மேலைக்கடலின் வீழ்வதாகக் கூறுவது மரபு.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'வில்வகைக் குமர னின்ற வேலையின் வேலை சார்ந்தான், தொல் வகைக் குலத்தின் வந்தான் துன்பத்தாற் புனலுந் தோய்ந்து, செல்வகைக் குரிய வெல்லாம் செய்குவா னென்ன வெய்யோன்' ஆரணிய. 1029. அம்பு, வடமொழியில் தண்ணீர் எனப்படும்; இஃது அப்பு என வலித்தது. அப்புவாகிய நீர் எனினுமாம். ஆடுவான் - வானீற்று வினையெச்சம். அத்தம் சேர்தல் - அத்த மித்தல்.

பி - ம். 1. பப்புநீள் டுயர்ந்த ; கடலுட்.

2. துப்புநீ ரதனுல் ; நீய ; வீந்திட்டு.

3. நீரகத்துத்.

4. வரையை, வானம் ; சார்ந்தான். 18

## சந்திரனது தோற்றம்

704. மாலுறு குடக வானின் வயங்கிய வந்து தோன்றும்
பாலுறு பசுவெண் திங்கள் பங்கய நயனத் தண்ணல்
மேலுறு பகழி வாங்கி வெகுண்டனன் விரைவின் வந்த
காலுற வளைத்த காமன் வில்லெனக் காட்டிற் றன்றே.

மால் உறு குடகம் வானின் - பெருமை பொருந்திய மேற்றிசை வானத்தின்கண், வயங்கிய வந்து தோன்றும - விளங்குமாறு வந்து காணப்படுகின்ற, பால் உறு பசு வெண் திங்கள் - பிளவாகப் பொருந்திய வெண்ணிறம்வாய்ந்த இளைய பிறைச்சந்திரன், பங்கயம் நயனத்து அண்ணல் மேல் - தாமரை மலர்போன்ற விழிகளை யுடைய பெருமையாளனுன இராமபிரான்மேல், உறு பகழி வாங்கி - மிது தீண்டுகின்ற அம்பினைத் தேர்ந்தெடுத்து, வெகுண்டனன் - சினம் மிக்கவனுய், விரைவின் வந்த காமன் - வேகமாக வந்த மன்மதன், கால் உற வளைத்த வில் என காட்டிற்று - இரண்டு முனைகளும் கூடுமாறு வளைத்த வில்போன்று காணப்பட்டது. அன்று, ஏ - ஈற்றசைகள்.

வயங்கிய - செய்யிய என்னும் வாய்பாடு. பங்கய நயனத் தண்ணல்; ஆரணிய. 376, 421, 606, 813, 972; சுந்த. 394 என்பன காண்க. 'கையும் கால்களும் நயனமும் கமலமே யனைய' (யுத்த. முதற்போர். 214). இளைய பிறைச்சந்திரன், இராமபிரான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மீது பகழி எய்வது மன்மதன் இருமுனையும் ஒன்றுபட வளைத்த வில்போன்றிருந்தது எனப்பட்டது. தலைவன் தலைவியர் ஒருவர் ஒருவரைப் பிரிந்து நின்றவர்மீது விரகம் மிகுமாறு மலரம்பு களை எய்பவன் மன்மதன் ஆகலின் இங்ஙனம் கூறப்பட்டது, தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. வயங்கியே.

3. பகழி தூர்க்க; வெருண்டன.

4. காலுற வாங்கிக்; வளைந்து; குடையெனக் காட்டிற் றன்றே. 29

## இராமபிரான் விரகநிலை

705. நூற்றிதழ்க் கமலந் தந்த நுண்ணறுஞ் சுண்ண முண்ணத்
தீற்றிமென் பனிநீர் தோய்ந்த சீகரத் தென்ற லென்னும்
காற்றினும் மாலை யான கனலினுங் காம வாளிக்
கூற்றினும் வெம்மை காட்டிக் கொதித்ததக் குளிர்வெண்
[டிங்கள்.

நூறு இதழ் கமலம் தந்த - நூறு இதழ்களையுடைய தாமரை ஈந்த, நுண் நறு சுண்ணம் உண்ண - நுட்பமான நல்மணம் செறிந்த மகரந்தத் தூளை (உள்) நிறையும்படி, தீற்றி - தன்னிடத்தில் அப்பிக்கொண்டு, மென் பனி நீர் தோய்ந்த - மெல்லிய பனிநீர் படியப்பெற்ற, சீகரம் தென்றல் என்னும் காற்றினும் - துளிகளுடன் விரவிய தென்றற் காற்றினாலும், மாலை ஆன கனலினும் - மாலைப்போது என்ற நெருப்பினாலும், காமன் வாளி கூற்றினும் - மன்மதன் அம்பு என்னும் யமனாலும், அ குளிர் வெண் திங்கள் - அந்தத் தன்மைவாய்ந்த பிறைச்சந்திரனும், வெம்மை காட்டி கொதித்தது - வெப்பத்தை இராமனிடம் உண்டு பண்ணிக் கொதித்துக் காணப்பட்டது.

நூற்றிதழ்: நூறு என்பது பல என்னும் பொருளில் வந்தது; 'ஒருநாள் எழுநாள்போற் செல்லும்' (குறள். 1269) என்ற இடத்து 'ஏழென்பது' அதற்கு மேலாய பன்மை குறித்து நின்றது; 'ஒருவர்கூறை யெழுவ ருடுத்து என்றாற்போல' என்று பரிமேலழகர் உரை வரைதல் காண்க. தலைவியுடன்கூடி ர்லாது தண்மையுடன் விளங்கும் சந்திரன், பனிநீர் விரவிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தென்றலும் மாலையும் மன்மதன் வாளியும் என்றவற்றின் கூட்டுற வால் இராமன் திருமேனியில் வெப்பம் உண்டாக்கின எனப் பட்டது. இச்செய்யுளுடன் **யுத்தகாண்டம்** கடல்காண் படலம் 4, 5-ஆம் செய்யுட்களை ஒப்புநோக்குக. இங்கு, 'காமன்பூங் கணைக்கும் பற்றுநின்றான் பொற்றோளைச், சுழிக்குங் கொல்ல னூதுலையிற் றுள்ளும் பொறியிற் சுடுமன்றே, கொழிக்குங் கடலி னெடுந்திரைவாய்த் தென்றல் தூற்றுங் குறுந்திவலை'; 'பின்னற் றிரைமேல் தவழ்கின்ற பிள்ளைத்தென்றல் கள்ளுயிர்க்கும், புன்னைக் குறும்பூ நறுஞ்சுண்ணம் பூசா தொருகாற் போகாதே' என்பன குறிக்கொள்ளத்தகும். 'கூற்றொன் றலவொரு கோடிகெட் டேன்கொழுந் தொன்றுதென்றற், காற்றொன் றிளம்பிறைக் கீற் றொன்று கார்க்கட லொன்று கண்ணீர், ஊற்றொன்று' (**மதுரைக் கலம்பகம்.** 6) என்பதும் காண்க. 'கயங்க ளென்னுங் கனல் தோய்ந்து கடிநாண் மலரின் விடம்பூசி, இயங்கு தென்றல்' (பால. மிதிலைக். 64). கொதித்தது திங்கள்: 'வீங்கா நின்ற கருநெருப்பி னிடையே யெழுந்த வெண்ணெருப்பே' (பால. மிதிலைக். 75); 'சுடுதியோ கடற்றோன்றிய திங்களே' (பால. மிதிலைக். 77); 'சிகரத் திவலை யுருக்கிய செம்பெனத் தெறிப்ப' (சுந்தர. 420). மாலையான கனல்; (ஒப்பு): 'உயிருண்ண வயங்குமாலை' (பால. மிதிலைக். 64). மிதிலைக். 62-உம் காண்க.

பி - ம். 1. கமல மன்னும்; நுண்ணுறுஞ்; உவ்டு.
2. தூற்று; சேதளத், தூயவத்.
3. காமன் வசளிக். 21

706. செயிர்ப்பினு மழகு செய்யுந் திருமுகத் தணங்கைத் தீர்ந்து
துயிற்சுவை துறந்தான் தோண்மேற் றூநிலாத் தவழுந் [தோற்றம்
மயிற்குலம் பிரிந்த தென்ன மரகத மலைமேன் வன்னி
உயிர்ப்புடை வெள்ளைப் பிள்ளை வாளரா வூர்வ தொத்த

செயிர்ப்பினும் அழகு செய்யும் - சினந்தாலும் அழகுடன் விளங்கும், **திருமுகத்து அணங்கை தீர்ந்து** - அழகிய முகத்தை யுடைய தெய்வ மகள் போன்ற சீதாதேவியைப் பிரிந்து, துயில் சுவை துறந்தான் - நித்திரையினால் வரும் இன்பத்தை நீத்திருந்த இராமபிரானது, தோள்மேல் - புயங்களில், தூ நிலா தவழும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தோற்றம் - தூய வெண்ணிறமான நிலவொளி படிந்து ஊர்கின்ற காட்சி. குலம் மயில் பிரிந்த தென்ன - சாதி மயில் பிரிந்து நின்ற காரணத்தினால், மரகதம் மலை மேல் - மரகதக்கிரியின் மீது, வன்னி உயிர்ப்புடை வெள்ளை வாள் அரா பிள்ளை - நெருப்புப்போன்று மூச்செறிதலை யுடைய வெண்ணிறம் பெற்ற கொடிய பாம்புக்குட்டி, ஊர்வது ஒத்த - ஊர்வதைப் போன்றது.

செயிர்ப்பு - கோபம். செயிர்ப்பினும் அழகு செய்யும் திருமுகத் தணங்கு: (ஒப்பு): அணிபறித் தழகு செய்யும் அணங்கு, (யுத்த. அங்கத. 18); 'தென்றலுடன் கூடிய நிலவு இராமபிரான் புறத்திற் படுதலை வாளரா ஊர்வதற்கு உவமித்தான். தற்குறிப்பேற்றவணி. இராமபிரான் மரகதமலை, பிரிந்த மயில் சீதை, அரவுக்கு மயில் பிறவிப்பகை எனினும் இங்கு மயில் பிரிந்த அளவிலே மலைமீது அரா அச்சமின்றி ஊர்ந்தது என்று அழகுபெறக் கூறப்பட்டது. மயிற் குலம் - மயிற் கூட்டம்; இங்கே பிராட்டிக் கேற்றும்போது குலமயில் எனக் கொள்க. 'மலைக்குல மயில் (கிட்கிந்தா. 249); என வாலி தாரையை விளித்தது காண்க. மரகதமலை; இராம பிரான், 'மையோ மரகதமோ மழை முகிலோ' (அயோத்தி. கங்கைப். 1); வாளரா; கொடிய அல்லது வாள் போன்ற அரவு என்க. நிலவுக்கு அரவு; (ஒப்பு): ஆரணிய. 117, 293, 1035. நிலவினால் இராமபிரான் துன்புற்றமை; ஆரணிய. 1036 - 45; பால. மிதிலைக். 76, 77; மற்றும், நைடதம் மாலைப்படலம் சந்திரோ பாலம்பனப்படலமும் காண்க.

பி - ம். 1. அழகு செய்து.

2. மறந்தான்; தவழ்ந்த, தழுவும்.

3. பிரிந்தமான; மெள்ள.

4. ஊர்வ போன்ற. 22

707: மன்னெடு நகர மாடே வருதலால் வயிரச் செங்கைப்
பொன்னெடுந் தீரடோ ளையன் மெய்யுறப் புழுங்கி
[நைந்தான்
பன்னெடுங் காதத் தேயுஞ் சுடவல்ல பவளச் செவ்வாய்
அந்நெடுங் கருங்கட் டையை யனுகினல் ஆவ துண்டோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நல் நெடு நகரம் மாடே வருதலால் - பெருமை சான்ற நீண்ட இலங்காபுரியின் இடத்தே வருதலால், வயிரம் செம் கை - வன்மை வாய்ந்த செந்நிறமான கரத்தையும், பொன் நெடு திரள் தோள் - அழகிய நீண்டுதிரண்ட தோள்களையுமுடைய, ஐயன் - இராம பிரான, மெய் உற புழுங்கி நைந்தான் - உடல் மிகவும் வெயர்த்து வருந்தினன்; பல் நெடு காதத்து ஏயும் சுடவல்ல - பலவாக நீண்ட காதங்களின் அளவிலும் சென்று எரிக்கும் வன்மை வாய்ந்த, பவளம் செவ்வாய் - பவளம் போன்று சிவந்த வாயினையும், அம் நெடு கருகண் தீயை - அழகிய நீண்ட கரிய கண்ணிணையும் உடைய அந்தத் தீயினை, அணுகினல் ஆவது உண்டோ - நெருங்கினல் அதனல் ஏதும் நன்மை உண்டாகுமோ? ஓ - எதிர்மறை.

இலங்காபுரி நெருங்க நெருங்க இராமபிரானுக்கு விரகம் மிகுந்தது, பிராட்டியைத் தீயாக வுருவகித்தார். சாதாரணமான தீயினின்றும் வேறுபாடு தோன்ற 'பவளச் செவ்வாய் நெடுங் கருங்கட்டீ' எனப்பட்டது. இயல்பாகத் தீ செந்நிறம் என்பது தோன்றச் செந்நிறமான பவளத்தையும் சிவந்த வாயையும் கூறிக் கொடுமை பற்றிக் கருங்கட்டீ எனப்பட்டது, கருமை - கொடுமை, விடாது எரிக்கும் ஆதலின் நெடு என்ற அடைமொழியையுந் தரப்பட்டது. தீ; இங்குக் காமத்தீ; 'நீங்கிற் றெறூஉங் குறுகுங் காற் றண்ணென்னும் தீ' (குறள். 1104); என்பர் வள்ளுவர். இங்கு அதற்கு மாருகக் குறுகும் காற் சுட்டது என்றமை காண்க. பன்னெடுங் காதத் தேயும் சுடவல்ல தீ. (ஒப்பு): 'நீருட் குளிப் பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி, ஒளிப்பினும் காமம் சுடும்' (நாலடி. 90); 'காமக் கனலி' (பெருங். 2 : 18 : 8); 'காம நோய்போல், விடிற்சுட லாற்றுமோ தீ' (குறள். 1159); 'காமக் கடுங்கனல் மூண்டதால்' (ஆரணிய. 291).

பி - ம். 1. மன்னிய விலங்காகபூரின், கிரியின், நகரின், வரவர, உருகி சாலப்.

4. அன்னொடும்; நீயை பாங்கே; ஆவதுண்டோ. 23

இங்குப் பாசறைப் படலம் முற்றும் என்றும், வீடணஅடைக்கலப் படலம் முற்றும் என்றும் சில பிரதிகளில் காணப்படுகின்றது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இராவணன் அனுப்பிய ஒற்றர்களை விடணன் பிடித்துக் கொள்ளல்

708. இற்றது கால மாக விலங்கையர் வேந்த னேவ
ஒற்றர்வந் தளவு நோக்கிக் குரங்கென வுழல்கின் றூரைப்
பற்றின னென்ப மன்னோ பண்டுதான் பலநாட் செய்த
நற்றவப் பயன்தந் துய்ப்ப முந்துறப் போந்த நம்பி.

பண்டு தான் பல நாள் செய்த - முன்பு தான் பலகாலமாக ஆற்றிய, நல் தவம் பயன் தந்து உய்ப்ப - சிறந்த தவத்தின் வினை வானது செலுத்த, முந்து உற போந்த நம்பி - முன்னர் (இராம பிரானிடம்) வந்தடைந்த வீடணன், இலங்கையர் வேந்தன் - இலங் காபுரி மன்னனான இராவணன், காலம் இற்றது ஆக - (தனது) வாழ்நாள் இறுதி யெய்தியதாக (கெட்ட புத்தி கொண்டு), ஏவ - கட்டளை யிட்டனுப்பியதால், ஒற்றர் வந்து - வேவுகாரர்கள் வந்து, அளவு நோக்கி - (வானரப்படையின்) அளவினைப் பார்த்தவண்ணம் குரங்கு என உழல்கின்றாரை - குரங்குகள் போன்று (வேடம் தரித் துப் பாடி வீட்டில்) திரிகின்றவர்களை, பற்றினன் - பிடித்துக் கொண்டான். என்ப, மன்னோ - அசைகள்.

நம்பி பற்றினன் என்க. இற்றது காலமாக: காலம் இத்தன் மையதாக எனவும் பொருள் கொள்வர். அளவு - வானர சேனையின் அளவு. பண்டு தான் பலநாட் செய்த........போந்த நம்பி; (யுத்த. 708). நம்பி: ஆண்பாற் சிறப்புப்பெயர். சேதுபந்தனத்திற்கு முன்பே சார்த்தூலன் என்ற அரக்கன் வானரசேனை வந்துள்ளமையை இராவணனுக்கு அறிவிக்க, இராவணன் சுகன் என்றவனைச் சுக்கிரீவனிடம் அனுப்பி மித்ரபேதம் செய்விக்குமாறு பகர, அவன் ஒரு பறவை உருவங்கொண்டு, சுக்கிரீவனைக் கண்டு இராவணன் சொல்லியனுப்பியதைக் கூறினான் என்றும், அவனைக் கண்ட வானர வீரர்கள் அவனைத் துன்புறுத்தினர் என்றும், அவன் முடிவில் இராமபிரானைச் சரணடைய அவர் அவனை விடுவித்தனர் என்றும் வான்மீகம் கூறும்.

பா - ம். 1. இற்றிது ; ஏவும்.
2. வந்துற்று.
3. பற்றின னென்ப.
4. பயன்க டுய்ப்பான், பயன்க டுய்ப்ப,



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இதுமுதல் ஒற்றுக் கேள்விப் படலம் என்று ஓர் பிரதியில் காணப்படுகின்றது,

709. பேர்வுறு கவியின் சேனைப் பெருங்கடல் வெள்ளந் [தன்னுள்
ஓர்வுறு மனத்த னாகி யொற்றரை யுணர்ந்து கொண்டான்
சேர்வுறு பாலின் வேலைச் சிறுதுளி தெறித்த வேனும்
நீரினை வேறு செய்யு மன்னத்தின் நீர னானான்.

பேர்வுஉறு கவியின் சேனை பெருகடல் வெள்ளம் தன்னுள் - இடம்மாறிப் பெயர்ந்து செல்லும் இயல்புவாய்ந்த குரங்குச் சேனையாகிய பெருங்கடல் வெள்ளத்தில், ஓர்வுஉறு மனத்தன் ஆகி - ஆராய்ச்சி கொண்ட உள்ளத்தனாகி (வந்த), ஒற்றரை உணர்ந்து கொண்டான் - வேவுகாரரைத் தெரிந்துகொண்டவனான வீடணன், சேர்வுஉறு பாலின் வேலை - (நீர் கலந்தாலும் தன்னோடு பாலாகச்) சேர்த்துக்கொள்ளுதல் பொருந்திய பாற்கடலில், சிறு துளி தெறித்த வேனும் - ஒரு சிறு நீர்த்துளி தெறித்ததாயினும், நீரினை வேறு செய்யும் - அந்த நீரினையும் பிரித்து எடுக்கும் ஆற்றல் சான்ற, அன்னத்தின் நீரன் ஆனான் - அன்னப்புள்ளின் தன்மையை யுடையவன் ஆனான்.

நின்ற இடத்தில் நில்லாது அடிக்கடி சலிக்கும் ஆதலின், 'பேர்வுறு கவி' என்றார்; கபி என்ற வடசொல் கவி என்று வந்தது. அன்னியர் தம் சேனையில் விரவிவிடுவாரோ என்று கண்ணும் கருத்துமாக ஆராய்பவனாகலின் வீடணனை 'ஓர்வுறு மனத்தன்' என்றார்; (ஒப்பு): 'கங்குல் எல்லைகாண் பளவு நின்றான், இமைப்பில நயன மென்றான்' (அயோத்தி. குகப். 42); 'கண்ணிணைக் காக்கின்ற விமையிற் காத்தனர்' (பால. வேள்வி. 41). ஒற்றர்: இவர்கள் பகைவரிடமிருந்து இராமபிரான் பாசறைக்கண் நிகழ்வன கண்டுபோதற்கு இராவணனால் அனுப்பப்பட்டவர்களான சுகன், சாரணன் என்பவர் என்பது முதனூல் கொண்டும் அறியப்படுவது; யுத்த. 716-உம் பார்க்க. இந்தச் சுக சாரணர்கள் குரக்குருக்கொண்டு வந்ததாகவும், அவர்களை வீடணன் உணர்ந்துகொண்டு கொல்லும்படி கட்டளை யிட்டதாகவும், அப்பொழுது கருணைவள்ளலான இராமபிரான் அவர்களைக் கொல்லுதல் கூடாது என்று விலக்கி அவர்கள் பிழைத்துப்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



போகும்படி அருள் புரிந்ததாகவும் முதனூல் கூறும். அன்னம் பாலினின்று நீரைப் பிரித்தல்; 'பானிறக் குருகி ஞய்ந்து' (சீவக. 395); இங்கு, 'அன்னம்போல நல்லனகொண்டு' என உரை வரையப்பெறுதல் காண்க. 'பெரும்பாலி னின்றன்னம் கங்கா சலத்தைப் பிரிப்பதுபோல்'; 'நீரொழியப் பாலுண் குருகின் றெரிந்து' (நாலடி. 155). இந்தத் திறம்வாய்ந்த அன்னம் இங்கே குரக்குச் சேனையினின்று ஒற்றரைப் பிரித்த வீடணற்குவமை. சேர்வுறு பால் - நீர் தன்னிடம் விரவினும் தன்னுடன் சேர்த்துக் கொள்ளும் பால்போன்று என்க; சேர்வுறு பால் - திரண்ட தொகுதியான பால் எனினுமாம்.

பா - ம். 1. பேர்வது; பெருங்கட லாய வெள்ளத்.

2. மனத்தாற் பார்க்கும்; மனத்திறுகி, மனத்தராய.

3. தெளிந்த தேனும், தெறித்த தேனும், துளித்த தேனும், சிறுதுளி புற்ற தேனும்.

4. நீரன் அன்றன், நீர்மை யானன். 25

710. பெருமையுஞ் சிறுமை தானும் முற்றுறு பெற்றி யாற்ற
அருமையி னகன்று நீண்ட விஞ்சையு ளடங்கித் தாமும்
உருவமுந் தெரியா வண்ண மொளித்தன ருறையு மாயத்
திருவரை யொருங்கு காணும் யோகியு மென்ன லானன்.

பெருமையும் சிறுமை தானும் - மகத்தில் மகத்தாகியும், அணுவில் அணுவாகியும் உள்ள, முற்றுறு பெற்றி - நிரம்பப் பெற்ற தன்மை மிக, ஆற்ற - மேற்கொண்டு பின்பற்றுதற்கு, அருமையின் - அரிய பண்பினுல், அகன்று நீண்ட விஞ்சையுள் அடங்கி தாமும் - விரிந்து நீண்டுள்ள அணிமாதி வித்தைகட்குக் கட்டுப்பட்டு, தாமும் உருவமும் தெரியா வண்ணம் - தாமும் உருவமும் விழிகட்குத் தெரியாதபடி, ஒளித்தனர் - மறைந்தவராய், உறையும் மாயத்து - (உடலுக்குள்ளே) வதிகின்ற விசித்திர இயல்பு அமைந்த, இருவரை - (உயிர் இறைவன் என்ற) இருவரையும், ஒருங்கு - ஒன்ருக, காணும் யோகியும் என்னல் ஆனன் - நேராகக் கண்களால் காணவல்ல யோகி என்று பகர்தற்கும் தக்கவன் ஆனன் (வீடணன்).

பெருமை சிறுமை என்பன இங்கே அணிமா, மகிமா, லகிமா முதலிய அட்டமா சித்திகளைக் குறிக்கும். அணிமா - அணுப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


போலாகுதல்; லகிமா - சித்திகளுள் ஒன்ருன கனமற்றதாகும் ஆற்றல். இச்சித்திகள் எளிதில் கைவரப்பெறுவதன்ருகலின் 'அருமையி னகன்று நீண்ட விஞ்சை' எனப்பட்டது. இச்செயல்களின் அருமையை, 'கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்' (தாயு. தேசோமயா. 8) எனத் தொடங்கும் செய்யுள் கொண்டுணர்க. 'வேருெருவர் காணும லுலகத் துலாவலாம்'; 'தன்னிகரில் சித்தி பெறலாம்' என்ற தொடர்கள் இங்குக் குறிக்கொள்ளத் தருவன. மாயவித்தையினுல் தமது உருக்கரந்து நின்ற இரு சாரணவரக்கரையும், ஆன்மத் தியானத்தில் தலைசிறந்த யோகி ஜீவான்மா பரமான்மாக்களைக் கண்டுணர்வதுபோன்று, வீடணன் தேர்ந்தறிந்தான் எனப்பட்டது. இங்கு இருவர் என்பதற்குச் சிவனும் திருமாலும் என்றும், பெருமாளும் பிராட்டியும் என்றும், விஞ்சை என்பதற்கு வேதம் என்றும் பொருள் கூறுவாரும் உளர். கட்புலனுகாமல் நிற்கும் ஜீவான்ம பரமான்மாக்களை யோகி தன்னுடைய யோகபலத்தால் பிரித்து அறியக்கூடும். இந்தச் சிறந்த உவமையைக்கொண்டே மாற்ருராய் ஒற்றறியும்பொருட்டு வந்த இருவரின் விஞ்சை புலனுகும்.

பா - ம். 1. முற்றெரு; பெற்றி யாற்றம்.

2. விஞ்சையி டைக்கத் தாலும், விஞ்சையு ளடங்கி யார்க்கும்.

4. எவ்வண லாஹன்.



இங்கு ஓர் அதிகப்பாடல்:—

அவ்வகை யறிந்து நின்ற வீடணன் அரியின் வீரர்க்
கொவ்வுற வுருவ மாறி யரக்கர்வந் தமையங் கோதச்
செவ்விதின் மாயச் செய்கை தெளிந்திடு மாறு தாமே
கைவலி யதனுல் பற்றிக் கொண்டனர் கவியின் வீரர்.

**வீடணன் இராமபிரானுக்கு அவ்வொற்றரைக் காட்டுதல்**

711. கூட்டிய விறற்றிண் கையாற்
குரங்குக ளிரங்கக் குத்தி
மீட்டொரு வினைசெய் யாமல்
மாணையின் கொடியால் வீக்கிப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பூட்டிய கையர் வாயாற்
    குருதியே பொழிகின் றுரைக்
காட்டினன் கள்வ ரென்னக்
    கருணையங் கடலுங் கண்டான்.

விரல் கூட்டிய திண் கையால் - விரல்களை ஒன்று சேர்த்து முட்டியாக்கிய வலிய கரத்தால், இரங்க - மனம் வருந்தும்படி, குரங்குகள் குத்தி - குரங்குகளால் குத்தப்பட்டு, மீட்டு - பின்னர், ஒரு வினை செய்யாமல் - வேறு ஒரு தொழில் இயற்ற முடியாத படி, மாணையின் கொடியால் வீக்கி - மாணை என்னும் கொடியினால் இறுக்கி, பூட்டிய கையர் - சேர்த்துக் கட்டிய கையை யுடையவர்களும், வாயால் குருதியே பொழிகின்றுரை - வாயினால் இரத்தத்தையே கக்குபவருமான அந்த ஒற்றர்களை, கள்வர் என்ன - (மாறுவேடம் புனைந்துவந்த) திருடர்கள் என்று, காட்டினன் - வீடணன் (இராமபிரானுக்குக்) காண்பித்தான்; கருணை அம் கடலும் கண்டான் - கருணைக்கடலான இராமபிரானும் (அவர்களைப்) பார்த்தான்.

கூட்டிய விரல்: முட்டி யெனப்படும்; முட்டி யுத்தம் என்பது காண்க. மாணை - ஓணன் கொடி என்பர்; இதனைக் கஜபுஷ்பி என்றும் கூறுவர்; அயோத். வனம்புகு. 36; குறுந். 36 காண்க. 'பூட்டிய கையன் கள்வரென்னக். காட்டினன்' என மாற்றுக; ஒப்பு: 'பூட்டிய கையன்' (அயோத். குகப். 34); கருணையங் கடல் - இராமபிரான்; அடுத்து அவ்விருவர்களையும் விட்டு விடுமாறு கூறுதல்பற்றி இங்ஙனம் கூறப்பட்டது. தூதர் இலக்கணமும் ஒற்றர் இலக்கணமும் திருக்குறள் தூது என்ற அதிகாரத்திலும், ஒற்றாடல் என்ற அதிகாரத்திலும் விரிவாகக் கூறப்பட்டிருத்தல் காண்க. தலைசிறந்த நாகரீகம் திகழும் இந்த 20-ஆம் நூற்றாண்டில் பேசப்படும் தூதர் ஒற்றர் என்ற பாகுபாடு 2000 ஆண்டுகட்கு முன்பும் இருந்தமைகொண்டே அக் காலத்துத் தமிழர் அரசியல் முறையின் திறம் நன்கறியப்படும்.

பி - ம். 1. கூட்டிநற் றிண்கையார; குரங்குக ளதிரக் குத்தி.
2. மாழையின்; வீங்க.
3. பூட்டிய தங்கை வாயிற் பொழிகின்ற, பூட்டிய கையால் வாயால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இராமபிரான் கழிவிரக்கம்

712. பாம்பிழைப் பள்ளி வள்ளல்
பகைஞரென் றுணரான் பல்லோர்
நோம்பிழை செய்த கொல்லோ
குரங்கென விரங்கி நோக்கித்
தாம்பிழை செய்தா ரேனுந்
தஞ்சமென் றடைந்தோர் தம்மை
நாம்பிழை செய்ய லாமோ
நலியலீர் விடுமி னென்றான்.

பாம்பு இழை பள்ளி வள்ளல் - பாம்பினால் ஆக்கப்பட்ட படுக்கையையுடைய கருணைமிக்க இராமபிரான், பகைஞர் என்று உணரான் - (மாறுவேடம் புனைந்த அந்த ஒற்றர்களை) விரோதிகள் என்று அறியாதவனாய் (குரங்குகளே என்றெண்ணி), பல்லோர் நோம்பிழை குரங்கு செய்த கொல்லோ-பலரும் வருத்த முறும்படியான குற்றத்தை இந்தக் குரங்குகள் புரிந்தனவோ? (அதனால் குத்துண்டனவோ?)' என்று, இரங்கி நோக்கி - கருணையுடன் பார்த்து, 'தாம் பிழை செய்தாரேனும் - தாங்கள் தவறிழைத்தனர் ஆயினும், தஞ்சம் என்று அடைந்தோர் தம்மை - புகல் என்று வந்து புகுந்தவர்களுக்கு, நாம் பிழை செய்யலாமோ - நாம் தவறு இழைக்கலாமோ? நலியலீர் - (இவர்களை) வருத்தாதீர்; விடுமின் - (கட்டை) அவிழ்த்து விடுங்கள்', என்றான் - என்று மொழிந்தான்.

பாம்பிழைப் பள்ளி: ஆதிசேடனாகிய சேக்கை; 'நீள் கடலுள், என்றும் புணையாம்' (முதல்திரு. 53) என்றதும், சுந்தர. 395 காண்க. பாம்பிழைப் பள்ளி வள்ளல்: 'பாம்பணை யமலன்' (யுத்த. மூலபல. 45). பின்னிரண்டடிகள் முதலடியில் இராமனை வள்ளல் என்று கூறியதை விளக்கி நின்றது. சரணாகத வத்ஸலன் இராமபிரான் என்பது காண்க; 'இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு' (குறள். 987) என்றது காண்க. நோகும் என்பது நோம் என நின்றது.

பி - ம். 1. பாம்புழை; பல்கால்.
2. செய்தார் கொல்லோ, கொல்லாம்.
4. நலிந்திடல்; விடுதி யென்றான், விடுதிர் என்றான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## வீடணன் சுகசாரணரென்று அவர்களைத் தெரிவித்தல்

713. அகனுறப் பொலிந்த வள்ளல்
கருணையா லழுத கண்ணன்
நகநிறை கானின் வைகு
நம்மினத் தவரு மல்லர்
நகைநிறை வில்லா வுள்ளத்
திராவணன் தந்த வொற்றர்
சுகனிவ னவனுஞ் சார
னென்பதுந் தெரியச் சொன்னான்.

அகன் அற பொலிந்த வள்ளல் கருணையால் - மனம்மைந்து பொலிந்த இராமபிரானின் கருணையைக் கண்டு, அழுத கண்ணன் - மனமிரங்கி அழுத கண்ணினை உடைய வீடணன் (இராமபிரானை நோக்கி), '(இவர்கள் குரக்குருவில் காணப்படினும்), நகம் நிறை கானின் வைகும் நம் இனத்தவரும் அல்லர் - மரங்கள் நிறைந்த காட்டிடைத் தங்கியுள்ள நம்மினத்தவரும் (வானரரும்) அல்லர்; நகை நிறைவு இல்லா உள்ளத்து - இனிய பண்புகள் நிறையாத மனத்துடன் இயைந்த, இராவணன் தந்த ஒற்றர் - இராவணன் அனுப்பித்தந்த வேவுகாரர்கள்; இவன் சுகன் - இவன் சுகன் என்ற பெயரினன்; அவனும் சாரன் - அவனும்சாரணன்' என்பதும் தெரிய சொன்னான் - என்பதையும் விளங்குமாறு கூறினான்.

இராமபிரான் இரக்க உணர்ச்சியைக் கண்டு வீடணன் மனம் உருகி அழுதனன் என்க. நகை என்பது இனிய பண்புக்கு இலக்கணை. இந்தச் சுக சாரணர் வரலாறு முதனூலில் விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. 'அகனுறப் போந்த வள்ளல் என்ற பாடத்துக்கு, உள்ளன்புடனே வந்த வீடணன்' என்பது பழையவுரை.

பி - ம். 1. அகநிறை யருளின் மூர்த்தி; போந்த வள்ளல்; கருணையொத் தழுத கண்ணர்.
2. நகநிறை காலின்; இனத்தவர்கள்.
3. நக; நெறியிலாத, நிறைவிலாத.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வீடணனை வேறுபடுத்தக்கருதி அவ்வொற்றர் இராமபிரானிடத்துக் கூறுதல்

714. கல்விக்கண் மிக்கோன் சொல்லக்
கருநிற நிருதக் கள்வர்
வல்விற்கை வீர மற்றிவ்
வாநரர் வலியை நோக்கி
வெல்விக்கை யரிதென் றெண்ணி
வினையத்தா லெம்மை யெல்லாம்
கொல்விக்க வந்தான் மெய்ம்மை
குரங்குநாங் கொள்க வென்றார்.

கல்வி கண் மிக்கோன சொல்ல - கல்வியில் மேம்பட்டவனான வீடணன் அவ்வாறு கூறிய அளவில், கரு நிற நிருத கள்வர் - கரிய நிறமுள்ள அந்த அரக்க ஒற்றர்கள் (இராமபிரானை நோக்கி), 'வல் வில் கை வீர - வலிய வில்லேந்திய கையினையுடைய வீரனே! இ வாநரர் வலியை நோக்கி - இந்தக் குரங்குகளின் வன்மையைக் கருதி, வெல்விக்கை அரிது என்று எண்ணி; (இராவணனுக்கு வென்றியுண்டாக்கிக் கொடுத்தல் இயலாதென எண்ணி, (இரா வணன் தம்பியாகிய இவன்), வினையத்தால் - சூழ்ச்சியால், எம்மை எல்லாம் - எங்களனைவரையும், கொல்விக்க வந்தான் - கொலையுண் ணுமாறு செய்விக்க வந்தான்; மெய்ம்மை - இது சத்தியம்; நாம் குரங்கு - நாங்கள் குரங்குகளே; கொள்க - இதனை மனத்தில் கருது வீராக', என்றார் - என்று மொழிந்தனர். மற்று - வினைமாற்று.

கல்விக்கண் மிக்கோன் - வீடணன்; 'மூதுணர்வின் மிக்கான் மதிவீடணன்' (யுத்த. அதிகாயன். 87); இவ்வாறு அவனைக் கூறுவது, மாறுவேடத்தில் வந்த ஒற்றர்களை அறியும் திறம் அவன் பெற்றமையின் என்க. வெல்விக்கை: கை விகுதிபெற்ற தொழிற்பெயர். 'கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டும், உகாஅமை வல்லதே யொற்று' (குறள். 585) என்றதற்கேற்ப அஞ்சாது தாங்கள் குரங்குகளே என்று தைரியமாகப் பொய் யுரைக்கின்றனர் சுகசாரணர். 'விற்கை வீர' நினக்கமைந்த வாநரப்படை வெல்லற்கரிது என்று இராவணன் இடமிருந்து வீடணன் நயவஞ்சகமாகக் கொல்விக்க வந்ததாக அச்சாரணர் கூறினர்; (ஒப்பு): 'என்னைப்போ லிடையே வந்தா னிகழ்விப்பெ னிவனை யென்னு'; 'வருமிவள் மாயம் வல்லள் வஞ்சனை யரக்கி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நெஞ்சம், தெரிவில டேறுந்தன்மை சிரியோய் செவ்விதன்ருல், உருவிது மெய்யதன்ரு லானுகர் வாழ்க்கை யானே, வெருவினை னெய்திடாமல் விலக்குதி வீர’ (ஆரணிய. 281, 282) என்று அரக்கி சூர்ப்பணகை கூறியதும் இங்குக் காண்க.

பி - ம். 1. கருமன்.
4. வந்தா னென்ரு. 30

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

எனவவ ரியம்பக் கேட்ட விறைவனுக் கிலங்கை வேந்தன்
தனதொரு தம்பி யன்னோர் சாற்றிய வாய்மை மெய்யும்
எனதொரு மனத்தின் வஞ்சம் இருந்ததும் இன்னே [காண்டி
நினைவதன் முன்னே விஞ்சை நீக்குவெ னென்று [நேர்ந்தான்.

## வீடணன் அந்த ஒற்றரைக் காட்டல்

715. கள்ளரே காண்டி யென்ரு
மந்திரங் கருத்துட் கொண்டான்
தெள்ளிய தெரிக்குந் தெவ்வர்
தீர்வினை சேர்த லோடும்
துள்ளியி னிரதந் தோய்ந்து
தொன்னிறங் கரந்து வேருய்
வெள்ளிபோன் றிருந்த செம்பு
மாமென வேறு பட்டார்.

(இதனைக்கேட்ட வீடணன், பிரானை நோக்கி), ‘(வாநரர் அல்லர்) கள்ளரே-கள்ளவேடம் தரித்தவரே, காண்டி-இவரைக் காண்பாயாக’ என்ரு-என்று, மந்திரம் கருத்துள் கொண்டான்-மந்திரத்தை மனத்தால் உருவேற்றினன்; தெள்ளிய தெரிக்கும் தெவ்வர் தீர்வினை சேர்தலோடும்-உண்மையை அறிவிக்க வல்லதாய்ப் பகைவரின் (குரங்கு வடிவத்தை) மாற்றுதற்குரியவான செயல் (மந்திர ஜபம்) வந்து பொருந்திய மாத்திரத்தில், துள்ளியின் இரதம் தோய்ந்து-பாதரசத்துளி மேலே படப்பெற்று, தொல் நிறம் கரந்து-பழைய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தன்னிறம் மாறி, வேறாய் - வேறுபட்டு, வெள்ளி போன்று இருந்த வெள்ளெனளிக் கருதுமாறு இருந்த, செம்பும் ஆம் என - செம்பும் பாதரசத்தால் புடமிட்ட அளவில் வெள்ளித் தன்மை நீங்குவதை யும் போலும் என்னுமாறு, வேறுபட்டார் - குரக்கு வடிவத்தி னின்றும் வேறுபட்டு முன்னைய அரக்கர் வடிவத்தையே பெற்றார்கள்.

மந்திரம் : அதர்வண வேடத்தில் கூறப்பட்ட அபிசார மந்தி ரங்கள். இந்த மந்திரங்கள் ஆக்கவும் அழிக்கும் செய்யும். 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த, மறைமொழி தானே மந்திரம் என்ப' (தொல். செய்யுள். 178); வெள்ளி போன்றிருந்த செம்பு - ஒரு மட்ட உலோகத்தை உயர்ந்ததான பிறிதொன்றாய்ச் செய்வது இரசவாதம் எனப்படும். 'இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்' (பெரியபு. கண்ணப்ப : 154); 'அம்பொன் மிக வைத்த பேரும், நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்' (தாயு. பரிபூரண : 13); துள்ளி என்பது பாதரசத்துளி. இதற்கே உலோகங்களை மாற்றும் ஆற்றலுண் டென்பர். 'வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும் வேதித்து விற்றுண்ணலாம்' (தாயு. தேசோமயம் : 8); இங்கு வீடணன் தன் மந்திரத்தால் போலி உருவை மாற்றியதற்கு, சிலப்பதிகாரத்தில் கோவலன் காடு காண் காதையில், தன்னை மயக்கிய இயக்கியைச் சுந்தரி, மந்திரத் தால் மாற்றிய செய்தி நினைப்புறத் தக்கது.

பா - ம். 2. தெய்வ வீடணன் சேர்ந்த நிசர் ! தீவினை செருக்கலோடும்.

3. இரதந் தோய்ந்த, தோயத் ; தூய் நிறம் ; இரிந்து வேறாய், இரிந்து வேறோர் ; கரந்து தோன்றா.

4. போலிருந்த ; ஒடிருந்த ; செம்பொன். 31

## இராமபிரான் ஒற்றர்கட்கு அபயமளித்தல்

716. மின்குலா மெயிற்ற ராகி
வெருவந்து வெற்பி னின்ற
வன்கணார் தம்மை நோக்கி
மணிநகை முறுவல் தோன்றப்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



புன்கணார் புன்க ணீக்கும்
புரவலன் போந்த தன்மை
என்கொலாந் தெரிய வெல்லா
மியம்புதி ரஞ்ச லென்றான்.

மின் குலாம் எயிற்றர் ஆகி - மின்னல்போலும் ஒளிவிடும் பற்களை யுடையவராகி, வெருவந்து - (தம் உண்மையுருவம் வெளிப்பட) அச்சமுற்ற, வெற்பின் நின்ற வன்கணார் தம்மை நோக்கி - மலைபோன்று நின்ற கொடியவர்களான அந்த ஒற்றர்களைப் பார்த்து, புன்கணார் புன்கண் நீக்கும் - துன்புற்றவர்களின் துயரத்தைப் போக்கும், புரவலன் - காத்தலில் வல்ல இராமபிரான், மணி முறுவல் நகை தோன்ற - முத்துப்போன்ற வெண்ணிறமான பற்களில் இளநகை வெளிப்பட, 'அஞ்சல் - பயப்படாதீர்கள், போந்த தன்மை என்கொல் ஆம் - (நீங்கள்) வந்த காரணம் யாது கொல்? எல்லாம் தெரிய இயம்புதிர் - யாவற்றையும் விளங்குமாறு சொல்லுங்கள்', என்றான் - என்று கூறினான்.

வெருவருதல் - அஞ்சுதல்; 'வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்' (குறள். 563); 'கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை' (புறநா. 19, 16). வெற்பின் நின்ற: இங்கு வெற்பு, அவர்கள் உடற்பருமையும் உயரமும் குறிக்குமேனும் அச்சத்தால் அவர்கள் அசைவின்றி நின்றதையும் குறிக்கும் என்றும் கொள்க. வெற்பின், ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொருளின் வந்தது. முறுவல் - பற்கள்; 'முறிமேனி முத்த முறுவல்' (குறள். 1113). மணிமுறுவல் நகை என்க. புன்கண் - துன்பம்; 'புன்கணோய் தீர்க்க கிற்றிலேன்' (கிட்கிந்தா. 214); 'புரப்போர் புன்கண்கூர' (புறநா. 72 : 17). புன்கணார் புன்கண் என்பதில் இணையெதுகை காண்க. புன்கணார் புன்கண் நீக்கும் புரவலன், என்றது இராமபிரான் பொதுவியல்பை விளக்கும் அழகிய தொடர்.

பி - ம். 1. வெருவியே, வெருவிய.

2. முறுவல் செய்தான்.

3. புன்கணூர் புன்மை; புங்கவன்.

4. தெரிய வென்று வியம்புதிர்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## ஒற்றர்களின் விடை

717. தாய்தெரிந் துலகு காத்த
தவத்தியைத் தன்னைக் கொல்லும்
நோய்தெரிந் துணரான் தேடிக்
கொண்டன னுவல யாங்கள்
வாய்தெரிந் துணரா வண்ணங்
குழறுவார் வணங்கி மாய
வேய்தெரிந் துரைக்க வந்தேம்
வினையினால் வீர வென்றார்.

(அதைக்கேட்ட அவர்கள்), வணங்கி குழறுவார் - இராம பிரானை வணக்கம் செய்து வாய்கள் குழற, 'வீர - வீரனே! தாய் தெரிந்து உலகு காத்த தவத்தியை - தாயாகத் தெளியப்பட்டு உலகினைப் புரக்கின்ற தவமுடைய பிராட்டியை, தன்னை கொல்லும் நோய் - தன்னைக் கொல்லும் வியாதியென்று, தெரிந்து உணரான் - ஆராய்ந்து அறியாதவனாய், தேடி கொண்டனன் - (கேட்டை) விளைத்துக்கொண்டவனாகிய இராவணன், வாய் தெரிந்து உணரா வண்ணம் - (நீங்கள் சென்ற காரியத்தின்) உண்மை அறிந்து தெரியாதவகையில்; (ஒற்றிவாருங்கள் என்று), நுவல - கட்டளை யிட, மாய வேய் தெரிந்து உரைக்க - வஞ்சனையாக ஒற்றறிந்து (தன்பால்) கூறுமாறு, யாங்கள் வினையினால் வந்தேம் - நாங்கள் எங்கள் ஊழ்வினை தூண்ட வந்தோம்', என்றார் - (என்று தாம் வந்த காரணத்தை) எடுத்துரைத்தார்கள்.

பிராட்டியை உலகின் தாய் என்றது, ஆரணிய. 899. பிராட்டி இராவணனைக் கொல்லவந்த நோய் என்றது, தாய் என்பதற்கு தாய்மையை அதாவது தாயின் தன்மையை நன்கு உணர்ந்து எனினுமாம்; (ஒப்பு): 'திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி' (யுத்த. கும்ப. 80); 'சீதையென் றமிழ்தாற் செய்த நஞ்சினால்' (யுத்த. இராவணன் சோக. 53). வினையினால் வேய்தெரிந் துரைக்க வந்தேம் என்பதற்கு, அரசனுக்கு வினைசெய்வார்களான ஒற்றர் புரியவேண்டிய தொழிலை மேற்கொண்டு என்றலும் ஒன்றும். வேய் - ஒற்றொற்றி யுணர்தல்; இங்குத் திருக்குறள் ஒற்றாடல் அதிகாரம் காண்க. தெரிந்து தெரியாவண்ணம் வாய் குழறுவார் என்று கொண்டு, ஆராய்ந்து இன்னது சொல்வதென்று அறியாத

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


படியினாலே வாயினாற் குழறுபவர்களாய் என்றுரைப்பர் ஒருசாரார். வேய் - ஒற்றி என்பதற்கு வேய்க்கை (மதுரைக். 643) என்றும், வேய்த்து என்பதற்குப் பிறர் தெரிந்துகொள்ளாதபடி அறிந்து (மதுரைக். 642) என்றும் வருவன காண்க; இது, வாய்தெரிந் துணராவண்ணம் என்ற தொடராற் பெறப்படுவது உணர்க.

பி - ம். 1. உலகங் காத்த, உலகுக் காய.

2. நோய்தெரிந் தாய்ந்து; கொண்டவன்; எம்மை நோக்கி; நுவனை வாற்றின், என்னு.

3. தெரிந் துரையா; கழறுவார், கழறுவான்; மறைந்து; கழறுகிர் வணங்கி. 33

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஆங்கவர் புகலக் கேட்ட வையனும் அவரை நோக்கி
ஈங்கிது கருமமாக வெய்தினீர் என்னின் நீபோய்
தீங்குறும் தசக்கிரீவன் சிந்தையிற் றெரியுமாறு
ஓங்கிய வுவகை வார்த்தை யுரையுமென் றோத லுற்றான்.

## இராவணனிடஞ் சொல்லுமாறு இராமபிரான் அவ்வொற்றரிடம் கூறியவை

718. எல்லையி லிலங்கைச் செல்வ
 மிளையவற் கீந்த தன்மை
சொல்லுதிர் மகர வேலை
 கவிக்குல வீரர் தூர்த்துக்
கல்லினிற் கடந்த வாறுங்
 கழறுதிர் காலந் தாழ்த்த
வில்லினர் வந்தா ரென்றும்
 விளம்புதிர் விளம்ப வல்லீர்.

(அச்சொற்களைக் கேட்ட அவர்களிடம்), 'விளம்ப வல்லீர் - சொல்லும் ஆற்றல்படைத்த ஒற்றர்களே! (இராவணனிடம்), எல்லை இல் இலங்கை செல்வம் - வரம்பிலாத இலங்கைச் செல்வத்தை, இளையவற்கு ஈந்த தன்மை சொல்லுதிர் - இளையோ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஞன தம்பி துய்க்குமாறு அவனுக்கு யான் அளித்துவிட்டதைச் சொல்லுங்கள் ; மகரம் வேலை - மகரமீன்கள் நிறைந்துள்ள கடலை, கவி குல வீரர் - வானரர் குலத்துத் தோன்றிய வீரர்கள், கல்லினில் தூர்த்து கடந்த ஆறும் - கற்களைக்கொண்டு நிரப்பி (வழிவகுத்துக் கொண்டு) தாண்டிய விதத்தையும், கழறுதிர் - பகருங்கள் ; காலம் தாழ்த்த - (நல்ல புத்தி வரும் என்று எண்ணி) இத்துணைக்காலம் தாமதித்திருந்த, வில்லினர் வந்தார் என்றும் - வில்லினை ஏந்திய வீரர்கள் வந்துள்ளார்கள் என்றும், விளம்புதிர் - சொல்லுங்கள்.

இதுமுதல் ஆறு பாடல்கள் இராவணனிடம் தெரிவிக்குமாறு இராமபிரான் ஒற்றர்களிடம் கூறியவை. இளையவன் - இராவணற்கு இளையவனான வீடணன். மகர வேலை - மகரமீன் நிறைந்த கடல் ; மகராலயம் என்றும் வழங்கும். தாழ்த்தல் - காலதாமதம் செய்தல் ; 'தாழ்த்திடாமல் மின்னிடை வெந்தீத் தம்மின்' (சேதுபு. சங்கர. 71). இளையவற்கு ஈந்த தன்மைக்கு ; (ஒப்பு) : 'அரசிளையவன்பெறக், கோலிய வரிசிலை வலியும்' (யுத்த. 395, 396)-ம் காண்க. எல்லையில் செல்வம் ; இச்செய்யுளுடன் யுத்த. அங்கதன் தூதுப் படலத்து இராவணனிடம் கூறுமாறு அங்கதற்குரைத்த பாடல்கள் ஒப்புநோக்கத்தக்கன ; யுத்த. அங்கதன். 11, 12. இராம இலக்குவர் இருவருமே வில்லாற்றலில் வல்லவர் ஆகலின் வில்லினர் என்றிணைத்தே கூறினர் என்க ; 'வில்லிதன் தூதன் யான்' (சுந்தர. 1116) என்ற அநுமன் கூற்றும், 'பூசல் விற்குமர' (யுத்த. இலங்கைகாண். 37)-உம், 'குனிவிற் செங்கைக் குமரனே' (யுத்த. இலங்கைகாண் 41)-உம், 'வில்லும் சுமக்கப் பிறந்தேன்' (அயோத். நகர்நீ. 139) என்ற இலக்குவன் கூற்றும் இங்கே காண்க. 'சொலல் வல்லன் சோர்வில னஞ்சான்' (குறள். 647) என்ற அமைச்சர் இலக்கணம் ஒற்றர்க்கும் ஏயுமாதலின், 'விளம்ப வல்லீர்' என்றான்.

பி - ம். 2. கவிப்பெருந் தானைநோக்கி ; வீரர் தூர்த்த.

3. தாழ்த்த.

4. விளம்புதிர் தெரியவென்றான் ; வினையை மிக்கீர் ; விளம்பலாதீர் ; வில்லினர் வந்தா ரென்னும் தன்மையும் விளம்புவீரால். 34

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


719. கொத்துறு தலையான் வைகுங்
குறும்புடை யிலங்கைக் குன்றம்
தத்துறு தடநீர் வேலை
தனியொரு சிறையிற் றாதல்
ஒத்துற வுணர்ந்தி லாமை
யுயிரொடு முறவி னேடும்
இத்துணை யிருந்த தென்னுந்
தன்மையு மியம்பு வீரால்.

'கொத்துறு தலையான் வைகும் - கொத்தாக அமைந்த தலைகளையுடைய இராவணன் வசிப்பதும், குறும்பு உடை - சிற்றூர்களை உடையதுமான, இலங்கை குன்றம் - இலங்கா நகரத்தைத் தன்னுள் அடக்கியுள்ள திரிகோண மலை, தத்துறு தட நீர் வேலை தனின் - அலைகள் தாவித்தாவிச் செல்கின்ற மிக்க நீர் நிறைந்த கடலில், ஒரு சிறையிற்று ஆதல் - ஒரு தனிப்பட்ட இடத்திலே இருப்பதாதலை, ஒத்துறு - மனதிற் பொருந்த, உணர்ந்திலாமை - தெரியாமலிருந்ததுதான், இத்துணை - இவ்வளவு காலம், உயிரோடும் உறவினேடும் - உயிருடனும் சுற்றத்தாருடனும், இருந்தது - (அவன்) இருந்ததற்குக் காரணம், என்னும் தன்மையும் இயம்புவீர் - என்னும் விஷயத்தையும் சொல்வீராக. ஆல் - அசை.

முன் செய்யுளில் 'காலந் தாழ்த்த வில்லினர்' என்று தம்மை இராமபிரான் கூறிக்கொண்டதற்குக் காரணத்தை இச்செய்யுளிற் கூறுகின்றார். கொத்துறு தலையான; 'பத்துள தலையும் தோளும்' (சுந்தர. 448); 'பத்துள தலைப்பகுதி தோள்கள் பல வன்றே' (ஆரணிய. 614); 'இருபது கரந்தலை யீரைந் தென்னும்' (யுத்த, 342); மற்றும், பால. திருவவ. 11; சுந்தரகாண்டத்து இராவணன் திருவோலக்கம் கூறுமிடத்துத் 'தேவரோ டிருந்தரசியல் ஒருமுகம் செலுத்த' எனத் தொடங்கும் பாடல்களும் அதனையடுத்துள்ள இரண்டு பாடல்களும், யுத்தகாண்டத்து இந்திரசித்து இறந்தவுடன் பத்துத் தலைகளும் பத்துவிதமாக ஓலமிடும் செய்யுட்களும் இங்கு அறியத்தகும்; (சுந்தர. 1092-1094); யுத்த. இராவணன் சோகப். 16-22). இராவணன் தொடக்கத்துத் தவம்புரிந்த காலத்துத் தனது தலைகளை ஒவ்வொன்ருய் ஓமத் தீயிலிட்டது, உத்தரகாண்டத்தும் 'ஓரா யிரமாண் டுபவசித்துக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கழிந்தா லோரோர் தலையாகச், சீரார் சிரமொன் பதுந்தடிந்து செந் தீ யிடையோ மம்புரிந்து, பேரா வுபவா சத்தினுய்ப் பின்பு மோரா யிரத்தாண்டில், தாரார் மற்றைத் தலைதடிய லுற்றான் பற்றித் தசக்கிரிவன்' (உத்தர. இராவணன் பிறப்பு. 26); 'முடித் தலைகள் பத்து' (யுத்த. மகுடபங்க. 10). குறும்பு-ஊர்; (திவாகரம்). கொத்து-பனங்குலை என்றும் கூறுவர். சீதாதேவி சிறையிருந்த இடம் தெரியாமையே காலம் தாழ்த்ததன் காரணம் என்றான். 'ஈண்டுநீ யிருந்ததை யிடரின் வைகுறும், ஆண்டகை யறிந்திலன்' (சுந்தர. 512); 'கள்ளவரக்கர் கடியிலங்கை காணு தொழிந்த தாலன்றோ, உள்ள துணையு முளதாவது' (சுந்தர. 603); 'கனைகட னடுவண், உண்டி லங்கையென் றுணர்ந் திலர்' (சுந்தா. 341) என்று முறையே அநுமனும், பிராட்டியும் கூறியன காண்க; சுந்தர. 453-ம் காணலாம். சிறையிற்று: குறிப்பு முற்று.

பி-ம். 1. கலையான்; இருக்கைக்.
2. தத்துறு கடலி னுள்ளாய்த்; தனியொரு, தனிலொரு.
3. உணர்வி னேடும்.
4. அத்துறை யிருந்த; தன்மையுந். 35

720. சண்டங்கொள் வேக மாகத்
தனிவிடை யுவணந் தாங்கும்
துண்டங்கொள் பிறையான் மௌலித்
துளவினு னேடுந் தொல்லை
அண்டங்க ளெவையுந் தாக்கிக்
காப்பினும் அறமி லாதான்
கண்டங்கள் பலவுங் காண்ப
னென்பதும் கழறு வீரால்.

'மாகம்-வானத்தில், சண்டம் கொள் வேகம் ஆக-மிகுந்த உக்கிரத்தோடமைந்த வேகத்துடன் செல்ல வல்ல, தனிவிடை உவணம்-ஒப்பற்ற இடபமும் கருடனும், தாங்கும்-முறையே சுமக்கும், துண்டம் கொள் பிறையான்-பிளவாக அமைந்த பிறைச் சந்திரனைத் தரித்த சிவபிரான், மௌலி துளவினுனேடும்-மகுடத் தில் திருத்துழா யணிந்த திருமாலுடன் கூடி, தொல்லை அண்டங் கள் எவையும்-பழமையான அண்டங்களில் உள்ள எல்லா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உயிர்களும், தாக்கி காப்பினும் - (எதிர்த்து வந்தவர்களை) மோதிய வண்ணம் பாதுகாத்திடினும், அறம் இலாதான் - தருமநெறியைச் சிறிதும் பின்பற்றுதவனுன இராவணனை, கண்டங்கள் பலவும் காண்பன் என்பதும் - பல துண்டங்களாக ஆகுமாறு செய்து காண்பேன் என்ற செய்தியையும், கழறுவீர் - சொல்வீர்களாக ஆல் - அசை.

மாகம் சண்டங் கொள் வேகம் எனக் கூட்டுக; சண்டம் - உக்கிரம்: 'சண்டப் பிறைவா ளெயிற்றுன்' (ஆரணிய. 913); சண்டவேகம (கிட்கிந்தா. 568); தனிவிடை தாங்கும் பிறையான் என்றும், உவணந் தாங்கும் துளவினுன் என்றும் முறை நிரனிறை யாக இயைக்க, விடை யூர்வதும் பிறைத்துண்டாள்வதும் சிவ பெருமானுக்கும், உவணம் ஊர்வதும், துளவணிவதும் திருமாலுக் கும், ஏற்றுக. துண்டப் பிறையணிதல்; 'சந்திர மவுலி' (ஆரணிய. 581); பிறையணி கொண்ட வண்ணல்' (சீவக. 2537); அறமிலாதான் - இராவணன்: 'அறம்பு காமையா லழியுமிப்பதி' (சுந்தர. 118); இனி இச்செய்யுளில் கம்பர், இராமபிரானைப் பரம் பொருளாகவே கொண்டு, அவன் சிவபிரான், திருமால் இவர் களினும் அப்பாற்பட்டவன் என்பதை அறிவிப்பது காணலாம். இச்செய்யுட்கு, இராவணன் சிவபெருமானையும் திருமாலையும் தாக்கி அண்டங்கள் அனைத்தையும் புரக்கும் திறம் பெற்றிருந் தான் எனினும், அறமிலாதானைப் பல கண்டங்கள் காண்பன் என்று கூறியதாகக் கோடலுமாம்.

பி - ம். 1. வேகமாரும்.

2. பிறையோன் மோலித்.

3. அண்டங்கொள் தேவர்வந்து அண்டங்க ளெவையுந் தாங்கி; அறமில் யாக்கை, அறிவிலானை, அறிவிலான்றன், அறமிலானை.

4. காண்ப னென்பதும்; காணக் காண்பதும். 38

721. தீட்டுறு மழுவாள் வீரன்
தாதையைச் செற்றுன் சுற்றம்
மாட்டிய வண்ண மென்ன
வருக்கமு மற்றும் முற்றும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வீட்டியென் தாதைக் காக
மெய்ப்பலி விசும்பு ளோருக்கு
ஊட்டுவெ னுயிர்கொண் டென்னும்
வார்த்தையு முணர்த்து வீரால்.

'தீட்டுறு மழுவாள் வீரன் - (கூர்மைக்காகத்) தீட்டப் பெறுகின்ற மழுவென்னும் ஒளிமிக்க படையைத் தாங்கிய, வீரனான பரசுராமன், தாதையைச் செற்ருன் - தன் தந்தையை விரோதித்தவன் ஆன கார்த்தவீரியார்ச்சுனனை, சுற்றம் - சுற்றத்தோடும், மாட்டிய வண்ணம் என்ன - அழித்தவாறு போன்று, வருக்கமும் மற்றும் முற்றும் - பந்துக்களையும் மற்றுமுள்ளோரையும், வீட்டி - அழித்து, உயிர்கொண்டு - (இராவணனுடைய) உயிரையும் கொண்டு, என் தாதைக்காக - என் தந்தையான சடாயுவின் பொருட்டு, மெய்பலி - (அந்த இலங்கேசனது) உடலாகிய பலியை, விசும்புளோர்க்கு ஊட்டுவென் - விண்ணுலகில் உறையும் தேவர்களுக்கு (அவியுணவாக) உண்பிப்பேன், என்னும் வார்த்தையும் உணர்த்துவீர் - என்னும் சொற்களையும் அறிவிப்பீராக'. ஆல் - அசை.

மழுவாள் வீரன் - பரசுராமன், தாதை பரசுராமன் தந்தையான சமதக்கினி இருடி; கார்த்த வீரியார்ச்சுனன் தவம் செய்து சிறந்த வரங்களைப்பெற்று மாகிஷ்மதி நகரில் அரசாண்டவன். இராவணனையும் வென்றவன், அவன் ஓர் சமயம் சமதக்கினி ஆச்சிரமம் சென்று அம்முனிவரால் விருந்தூட்டப்பெற்று, அம்முனிவனிடம் இருந்த கரமேதேனுவைக் கவர்ந்து செல்லப் பரசுராமன் சினந்து அவனையும் அவன் மக்களையும் கொன்ருன் என்பது வரலாறு. 'கார்த்தவீரியனை நேர்வா ருளரெனக் கருதலாற்றேன்' (யுந்த. கும்ப. 25) கார்த்த வீரியனுக்கு ஆயிரம் கைகள் என்றும், தலை ஒன்றே யென்றும் நக்க. 417 உரை கூறும்; பரசுராமன் தோள்களை வெட்டி வீழ்த்தது 'கார்த்த வீரியன், தாளெருமனிதனுல் தளர்ந்து ளானெனின்' (சுந்தர. 456); மற்றும், பால. பரசுராமப் 12, ஆரணிய. 867 காண்க. 'அரணி தன்னுற் றீக்கடைந் தியற்றித் தெண்ணீர், தந்தனன் ருதைதன்னைத் தடக்கையி னெடுத்துச் சார்வான் (ஆரணிய. 1095); கார்த்தவீரியனை மட்டுமன்றி அன்னுன் புதல்வரையும் கொன்றமை பற்றி, 'சுற்றம்

96

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மாட்டிய வண்ணம்' எனப்பட்டது. விசும்புளோர்க்குப் பலியூட்டுதல் தேவர்கடன் எனப்படும். 'தென்புலத்தார் தெய்வம்' (குறள். 43).

பி - ம். 1. தீட்டிய மழுவால்; செற்றூர், செற்றேன்.

2. வாட்டிய; வண்ணமேதன்.

3. நரைதக்காய; மெய்ம்மலி; விசும்புளோரை; விசும்பிறோரை. 37

722. தாழ்விலாத் தவத்தோர் தையல்
தனியொரு சிறையில் தங்கச்
சூழ்விலா வஞ்சஞ் சூழ்ந்த
தன்னைத்தன் சுற்றத் தோடும்
வாழ்வெலாந் தம்பி கொள்ள
வயங்கெரி நரக மென்னும்
மீள்விலாச் சிறையின் வைப்பே
னென்பதும் விளம்பு வீரால்.

'தாழ்வு இலா தவத்து ஓர் தையல் - குறைவில்லாத தவத்தினளாகிய ஒப்பற்ற பெண், தனி ஒரு சிறையில் தங்க - தனிப்பட்டு ஒப்பற்ற சிறையில் வதிய, சூழ்வு இலா வஞ்சம் சூழ்ந்த - (பிறரால்) ஆராய்ந்துணர்தற்கு முடியாத வஞ்சனையை எண்ணிச் செய்த, தன்னை - அவ்விராவணனை, வாழ்வு எலாம் தம்பி கொள்ள - அரசியற் செல்வம் அனைத்தையும் தம்பியான வீடணன் அடைய, தன் சுற்றத்தோடும் - அவனது உறவினருடனும், வயங்கு எரி நரகம் என்னும் - விளங்குகின்ற தீயுடன்கூடிய நரகம் என்று சொல்லப்படுகின்ற, மீள்வு இலா சிறையின் - தப்புதற்கு இயலாத சிறையின்கண், வைப்பேன் - வைத்திடுவேன், என்பதும் - என்ற செய்தியையும், விளம்புவீர் - பகர்வீர்களாக. ஆல் - அசை.

தவத்தோர் தையல் - பிராட்டி; 'புனித மாதவத் தணங்கு' (சுந்தர. 469); 'தனிமையும் பெண்மையுந் தவமு மின்னதே' (சுந்தர. 403), 'தவஞ்செய்த தவமாந் தையல்' (சுந்தர. 1275); 'தெய்வப் பத்தினித் தவத்துளானை' (யுத்த. மாயாசீதை. 49). வாழ்வெலாம் என்றது வீடணற்கருளிய அரசபோகத்தை. எரி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நரகம்; 'எரிவாய் நிரயத்து' (நாலடி. 58). 'தனிச் சிறையில் விளப் புற்ற கிளிமொழியாள்' (திவ்ய. திருவாய். 4·9·5) என்றதற்கேற்ப 'ஓர் தையல் தனியொரு சிறையிற் றங்க' எனப்பட்டது.

பி-ம். 1. தனித்தொரு; சிறையிற்ருக.
2. நூழ்கலா.
4. மீள்கலா, விழ்கலா, விழ்விலா. 38

## இராமன் விடை கொடுத்தனுப்ப ஒற்றர் ஏகுதல்

723. நோக்கினீர் தானை யெங்கும்
நுழைந்துநீ ரினிவே றொன்றும்
ஆக்குவ தில்லை யாயி
னஞ்சலென் றஃதுண் டன்றே
வாக்கினின் மனத்திற் கையின்
மற்றினி நலியா வண்ணம்
போக்குமின் விரைவி னென்று
னுய்ந்தன மென்று போனார்.

'நீர் தானை எங்கும் நுழைந்து நோக்கினீர்-நீங்கள் சேனையெங்கும் புகுந்து பார்த்தீர்கள்; இனி வேறு ஒன்றும் ஆக்குவது இல்லை ஆயின் - இனி வேறு ஒரு காரியமும் ஆகவேண்டுவதில்லையெனின், அஞ்சல் என்று அஃது உண்டு அன்றே - அஞ்சல் என்று அபய மீந்த அது இருக்கின்றதல்லவோ? (ஆதலின), வாக்கினில் மனத்தில் கையில் - வாக்கினாலும் மனத்தினாலும் கையாலும், மற்று இனி நலியா வண்ணம் - இனி பிறர் யாரும் வருத்தாதபடி, விரைவின் போக்குமின் - தாமதமின்றி (இலங்கை மன்னனிடம்) செல்லுங்கள்' என்றான் - என்று கூறினன்; 'உய்ந்தனம் என்று போனார் - (சுகசாரணர்கள்) பிழைத்தோம்' என்று சொல்லிக் கொண்டு சென்றனர்.

நாம் அபயம அளித்தோம் ஆகலின் உங்களை வானரர்களும் ஒன்றும் செய்யார்; செல்க என்று விடையீந்தான் இராமன். ஆகுவது போகுமின என்பன எதுகைநோக்கி வலித்தல; அன்றி,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


போக்குமின் என்றது சுக்கிரீவனுதியரை நோக்கி இராமபிரான் கூறியதாகவும் கொள்ளலாம்; அவ்வாருயின் முதலிரண்டடிகளே ஒற்றர்களிடம் இராமபிரான் கூறியவை என்க.

பி - ம். 1. நுழைந்த நீர், நுழைந்தினிர்.
2. இல்லை யொன்றும்; அஞ்சலி ரென்று கூற, அஞ்சலென் றவரை யையன்.
3. வாக்கினுன் மனத்தாற் கையால்; மற்றவர் நலியா, மற்றிவர் வலியா.
4. போக்குநிர், போக்குதி; உய்ந்தன மென்னப். 39

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

இன்ன வாறிவர் தம்மையிங் கேவிய
மன்னர் மன்னவ ஞய விராவணன்
அன்ன போதங் களவி லமைச்சரோ
டுன்னு மந்திரத் துற்றதை யோதுவாம்.

## வேறு

## இராவணன் தனித்து எண்ணுதல்

724. அரவ மாக்கட லஞ்சிய வச்சமும்
உரவு நல்லணை யோட்டிய வூற்றமும்
வரவும் நோக்கி யிலங்கையர் மன்னவன்
இரவி னெண்ணிட வேறிருந் தானரோ.

(இஃது இவ்வாருக), இலங்கையர் மன்னவன் - இலங்கையிலுள்ள அரக்கரின் மன்னனுன இராவணன், அரவம் மா கடல் அஞ்சிய அச்சமும் - ஆரவாரம் மிகுந்த பெரிய கடற்கிறைவனுன வருணன் அச்சத்தையும், உரவு நல் அணை ஓட்டிய ஊற்றமும் - வன்மைவாய்ந்த சிறந்த சேதுவை (அந்தக் கடலின் ஊடே) நீளக் கட்டிய வலிமையையும், வரவும் நோக்கி - (தமது பகைவர் இலங்கைக்கு) வந்துவிட்டதையும் பார்த்து, இரவின் - இராக்காலத்தில், எண்ணிட - ஆலோசனை யியற்ற, வேறு இருந்தான் - தனிப்பட்டிருந்தான். அரோ - அசை.

இதுமுதல் இராவணன் செயல் கூறுகின்றுர். அரவ மாக்கடல் - வருணன். வரவு - பகைவர் வருகை. நிசாசரர் என்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பெயர் அரக்கர்க்குண்மையின் இராவணன் தனித்து ஆலோசனை செய்ய இரவினையே மேற்கொண்டான் என்க; தன்மறை வெளிப்படாதிருக்க இரவில் எண்ணிட வேறிருந்தான், என்பதும் ஆகும். இதுவே அரசியல் முறை 'சக்கரத் தவனெனத் தமிய னுயினுன்' (அயோத்தி. மந்திரப். 3).

பி - ம். 2. நல்லணை கட்டிய, ஓங்கிய.
4. எண்ணிடம். 40

## இராவணன் மந்திரசாலை யடைதல்

725. வார்கு லாமுலை மாதரும் மைந்தரும்
ஆரும் நீங்க அறிஞரொ டேகினுள்
சேர்க வென்னினல் லால்அன்று தென்றலும்
சார்கி லாநெடு மந்திரச் சாலையே.

'சேர்க என்னின் அல்லால் - 'வருக' என்று உத்தரவு ஈந்தாலன்றி' அன்று - அப்பொழுது, தென்றலும் சார்கிலா - தென்றற் காற்றும் உட்புகாத, நெடு மந்திரசாலை - நீண்ட ஆலோசனை மண்டபத்தில், வார் குலாம் முலை மாதரும் - கச்சு ஒளிரும் தனங்களை யுடைய பெண்களும், மைந்தரும் - ஆடவரும், ஆரும் நீங்க - பிறரும் அந்த இடத்தினின்றும் விலகிச்செல்ல, அறிஞரொடு ஏகினுன் - (மந்திரச் சுற்றத்தோடும்) சென்றுன். ஏ - அசை.

முன்செய்யுளில் கூறிய 'வேறிருந்த' இடம் இங்கு விளக்கப்படுகிறது. மாதரும் மைந்தரும்; மனைவிமாரும் புதல்வர்களும் எனினுமாம்; 'ஆருநீங்க; இளையோர் ஒன்று முறைமை யுணராதவர் மகளி ரென்னுமிவர் மந்திரத்தி னெய்தப் பெறுரே' (வி. பா. கிருட்டினன். 52). அறிஞர் - ஐம்பெருங் குழுக்களும் ஆம். தென்றலும் சார்கிலா ; 'வண்டொடு காலையும் வரவு மாற்றினுன்' (யுத்த. 19) ; 'கிள்ளையும் குயிலும் வண்டும்................இலங்கை வேந்தன் முனியுமென் றவிந்தவால்'. முதலிரண்டடிகள் மந்திர சபைக்கு வரத்தகாதவர்களைக் கூறும். இராவணன் மந்திராலோசனை செய்யும் இடங்களில் யார் யார் புகக்கூடாது என்பதும், அவன் ஆண்மைக்கு ஐம்பூதங்களும் அஞ்சின என்பதும் முன் இராவணன் மந்திரப் படலத்தில் 7—10 செய்யுட்களிற் காண்க. இராவணன் ஆணைக்குத் தென்றல் அடங்கினமை, ஆரணிய. 716—

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



719 காண்க. (ஒப்பு) 'கூலத்தா ருலகமெல்லாம் குளிர்ப்பொடு வெதுப்பு நீங்க' (ஆரணிய. 657).

பி - ம். 1. வாருலா.

2. ஆரு நீக்கி ; ஏகின்ருன்.

3. அல்லா லிளந் தென்றலும்.

4. மந்திர சாலேயே, சாலேயான். 41

## அப்போது விளக்கு ஏந்தியவர்

726. உணர்வி னெஞ்சின ரூம ருரைப்பொருள்
புணருங் கேள்விய ரல்லர் பொறியிலர்
கொணருங் கூனர் குறளர் கொழுஞ்சுடர்
துணரு நல்விளக் கேந்தினர் சுற்றினர்.

பொறி இலர் - (மக்கட்குரிய) நல்லிலக்கணம் அமையப்பெருத வராய், உணர்வில் நெஞ்சினர் - அறிவில்லாத நெஞ்சினே யுடைய வரும், ஊமர் - ஊமைகளும், உரை பொருள் புணரும் கேள்வியர் அல்லர் - சொல்லுகிற விஷயம் மனத்தில் படுதற்கேற்ற கேள்விச் செல்வம் இல்லாதவரும் ; (செவிடரும்), கொணரும் - (வேண்டிய வற்றைக்) கொண்டுவரும் தன்மைகொண்ட, கூனர் குறளர் - கூனரும் குறளரும் ஆகிய இவர்கள், கொழு-கொழுவிய, துணரும் சுடர் - பலமுகங்களாக ஒளிவிட்டெரிகின்ற, நல் விளக்கு ஏந்தினர் - சிறந்த தீபத்தை ஏந்தியவராய், சுற்றினர் - சூழ்ந்து நின்ருர்கள்.

அறிவற்றவர் ஊமையர் செவிடர் இவர்களால் எந்தவிதமான கெடுதலும் நிகழவியலாதாகலின் அவர்களேயே விளக்கேந்தி வரச் செய்தான் ; பால. எழுச்சி. 40 69 ; பெருங். 1, 58 : 178 ; (ஒப்பு) : 'நானநெய் விளக்க நாலிருகோடி நங்கைய ரங்கையா லெடுப்ப' (சுந்தர. 409). பொறியிலர் அலிகள் என்பாரும் உளர் ; துருக்கி யரசர் அந்தப்புரங்களில் அலிகளே பணியாற்ற அமர்த்தபபட்டிருந் தவர் என்று கூறுவர். துணரும் நல் விளக்கு - பல முகங்களாக ஒளிவிடும் விளக்கு ; இதனேக் கொத்து விளக்கு என்பர். ஏந்தினர் : முற்றெச்சம்.

பி - ம். 1. நெஞ்சின மருமறைப், நெஞ்சினருமரைப்போற்.

3. குணருஞ் ; சுடர்த். 42

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

சொல்லு மந்திரச் சாலேயில் தூய்மதி
நல்ல மைச்சர் நவையறு கேள்வியர்
எல்லே யில்லவர் தங்களே நோக்கியே
அல்ல ரக்கர் பதியுமங் கோதுவான்.

## இராவணன் தன் அவையினரிடம் வினவுதல்

727. நணியர் வந்து மனிதர் நமக்கினித்
துணியும் செய்வினே யாதெனச் சொல்லினன்
பணியுந் தானவ ராதியர் பன்முடி
மணியி னுல்விளங் கும்மலர்த் தாளினன்.

பணியும் தானவர் ஆதியர் பன்முடி - (தன்னே) வணங்குகின்ற அசுரர் முதலானவர்களின் பலவாகிய மகுடங்களில் பதிக்கப்பெற்ற, மணியினுல் விளங்கும் - நவமணிகளால் ஒளிவிடுகின்ற, மலர் தாளினன் - தாமரைபோன்ற பாதங்களே யுடையவனுன இராவணன், 'மனிதர் வந்து நணியர் - (நமது பகைவரான) மனிதர் வந்து அண்மையர் ஆயினர்; நமக்கு இனி துணியும் செய்வினே யாது - நாம் இனித் துணிந்து ஆற்றவேண்டிய செயல்கள் யாவை', என சொல்லினன் - என்று மந்திரச் சுற்றத்தாரை நோக்கிக் கேட்டான்.

இறுதியடிகளில் இராவணன் பெருமை கூறப்பட்டது. தானவ ராதியர் பன்முடி மணியினுல் விளங்கும் மலர்த்தாள்; (ஒப்பு) : 'அரக்க ராதியோர், நாயகர் நளிமணி மகுட நண்ணலால், தேய்வுறத்தேய்வுறப் பெயர்ந்து செஞ்சுடர், ஆய்மணிப் பொலன் கழ லடியின் ஞர்ப்பவே' (ஆரணிய. 559); 'நின்றீமின் மன்னீர் நெருநற் றிறைகொணர்ந்து, முன்றந்த மன்னர் முடிதாக்க' (முத்தொள். 67); மற்றும், சுந்தர. 312; பால. அரசியற். 8. பகைவருடைய முடிப்பொன்னுல் கழல் செய்வித்துப் புனேதல் என்ற வழக்குண்மையும் காண்க :(புற.நா. 40).

பி - ம். 1. நணிய; நமக்கெனத்.
2. துணியுங் காரியம்; போரெனச் சொல்லினும்.
3. வானவ ராதியர்.
4. மணித்தாள்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஈத லாமுரை த தென்பய னின்றுபோய்க்
காதி மானுட ரோடு கவிக்குலம்
சாத லாக்குவன் தானோர் கணத்தெனும்
போதில் மாலிய வானும் புகலுவான்.

## மாலியவான் கூற்று

728. கால வெங்கனல் போலுங் கணைகளால்
வேலை வெந்து நடுங்கி வெயில்புரை
மாலை கொண்டு வணங்கின வாறெலாம்
சூல மென்னவென் னெஞ்சைத் துளைக்குமால்.

(அப்பொழுது மாலியவான் இராவணனை நோக்கி), 'கால வெம் கனல் போலும் - ஊழிக்காலத்துத் தோன்றும் கொடிய தீப் போன்றுள்ள, கணைகளால் - (இராமபிரானது) அம்புகளால், வேலை வெந்து - சமுத்திரராசன் தீப்பட்டு, நடுங்கி - நடுக்கமுற்று, வெயில் புரை மாலை கொண்டு வணங்கின ஆறு எலாம் - வெயில்போலும் ஒளிவிடும் நவமணிமாலையைக் கையுறையாகக்கொண்டு தொழுது நின்றவண்ணம் எல்லாம், சூலம் என்ன - சூலப்படைபோன்று, என் நெஞ்சை துளைக்கும் - என் உள்ளத்தைக்குடையும். ஆல் - அசை; இரக்கம் குறித்து வந்தது.

கால வெங்கனல் : இதே தொடர் யுத்த. 215-ல் வந்துள்ளமை காண்க. வெயில் புரை மாலை - இராமபிரானுக்குக் கையுறையாக அளித்த ; 'தெய்வப் பருதியைப் பழிக்குமாலை, மாயிருங் கரத்தான் மண்மே லடியுறையாக வைத்து' (603) என்ற இடத்துக் காண்க.

பி - ம். 4. தொளைக்குமால், துளைத்ததால் 44

729. கிழிப டக்கடல் கீண்டது மாண்டது
மொழிப டைத்த வலியென மூண்டதோர்
பழிப டைத்த பெரும்பயத் தன்னவன்
வழிகொ டுத்ததென் உள்ளம் வருத்துமால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'கடல் கிழிபட கீண்டதும் - கடலானது இரு பிளவாகக் கிழிந்ததும், மாண்டதும் - அதன்கண் இருந்த உயிர்கள் அனைத்தும் இறந்துபட்டதும், மொழி படைத்த வலியென - தவமுனிவர்களின் சொற்களுக்குள்ள வன்மையைப்போன்று, பூண்டதோர் பழி (பகழி) படைத்த - எழுந்ததான ஒப்பற்ற அம்பு படியப்பெற்ற, பெரும் புயத்து - பெரும் புயங்களையுடைய, அன்னவன் - அந்த வருணன், வழி கொடுத்தது என் உள்ளம் வருத்தும் - சமுத்திரத்தில் வழிசெய்து கொடுத்தது என் மனத்தைப் புண்படுத்தும். ஆல் - அசை.

கிழித்தல் கீண்டல் என்ற இரு பதங்களும் ஒரு பொருளன; 'கீண்டா னொரு யோசனை கீழொடு மேல்'. மொழி படைத்த வலி: சாவவும் வாழவும் செய்யக்கூடிய முனிவர் சொல்லின் வன்மை. 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' (பால. தாடகை. 73); 'வைதெனக் கொல்லும் விற்கை மானிடர்' (யுத்த. 751); 'வைத வைவில்' (பால. பாயிரம்). பகழி பழி என எதுகைநோக்கித் தொகுத்தது என்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு. பழையவுரைகாரரும் பகழி என்றே கொண்டுள்ளனர். இனி, பழிபடைத்த பெரும் பயத்து என்பதற்கு, திருமாலின் அமிசமான இராமபிரானுடைய ஆணையை மீறினன் என்ற பழியினால் உண்டான பெரிய அச்சத்தினால் எனக்கோடலும் ஏற்கும். இராவணாதிகள் புரியும் துன்பத்துக்கஞ்சித் திருமாலிடம் தம் குறைகூறிய தேவர்களில் வருணனும் ஒருவன். அவன் அவதார ரகஸ்யம் முற்றும் உணர்ந்தவன்; உணர்ந்திருந்தும் இராமன் வேண்டுகோளைச் செவியேற்கவில்லை. அதனால் பழி எழ அதனை ஒட்டி அச்சமும் எழுந்தது; 'தீயன சிறியோர் செய்தால் பொறுப்பதே பெரியோர் செய்கை' (யுத்த. 603) என வருணனே கூறுதல் காண்க. கரன்வதைப் படலத்து இராமபிரான் ஊறுபட்டபோது ஒரு வில்லை வருணன் இராமபிரானுக்களித்தது இங்கு நினைவு கூரத்தகும். 'வானுளோர் அனைவரும் வானரங்களாகத் தோன்றி உதவிபுரிதல் வேண்டும் என முன்னர்த் திருமாலினால் பணிக்கப்பெற்றிருந்தும் வாலி முரண்பட்டதனால் அவன் இராமன் வாளியால் இறந்துபட நேர்ந்தமையும் இங்குக் காண்க.

பி - ம். 2. வல்விர முடிந்திட.
3. பெரும் பயத்து.
4. வழி தொடுத்தது.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



730. படைத்த மால்வரை யாவும் பறித்துவேர்
துடைத்த வானர வீரர்தந் தோள்களைப்
புடைத்த வாறும் புணரியைப் போக்கற
அடைத்த வாறுமென் னுள்ளத் தடைத்தவால்.

'படைத்த மால்வரை யாவும் - (பிரமனால்) படைக்கப்பட்ட பெரிய மலைகள் அனைத்தையும், வேர் பறித்து - வேருடன் அகழ்ந்து கொண்டு வந்து, துடைத்த - (உலகிலேயே பெரிய மலைகள்) இராத வண்ணம் புரிந்த, வானர வீரர் - குரக்கு வீரர்கள், புணரியை போக்கு அற அடைத்த ஆறும் - கடலை அசையவொட்டாது அடைத்த விதமும், தம் தோள்களை புடைத்த ஆறும் - (மகிழ்ச்சி மிகுதியால்) தத்தம் தோள்களைத் தட்டியெழுந்தவாறும், என் உள்ளத்து அடைத்த - என் மனத்தில் இடங்கொண்டுள்ளன. ஆல் - அசை.

தோள் புடைத்தல் - மகிழ்ச்சி அல்லது வீரமிகுதியால் புயங்களைத் தட்டிக்கொள்ளுதல்; 'தோள்புடைத் தார்த்து' (யுத்த. கும்ப. 336).

பி - ம். 1. படைத்த மாமலை ; பறித்த.
2. துடைத்து ; தோள்களில்.
4. நெஞ்சத்து ; அடைத்ததால், அடைப்பனே. 46

731. காந்து வெஞ்சின வீரர் கணக்கிலார்
தாந்த மாற்றலுக் கேற்ற தரத்தர
வேந்த வெற்பை யொருவன் விரல்களால்
ஏந்தி யிட்டதென் னுள்ளத்தி னிட்டதால்.

'வேந்த - அரசே! காந்து வெம் சினம் கணக்கிலார் வீரர் - எரிகின்ற கொடுஞ் சினத்தினையுடைய எண்ணிறந்த வானர வீரர்கள், தாம் தம் ஆற்றலுக்கு ஏற்ற தர தர - தாங்கள் தங்களுடைய திறமைக்கேற்ற மலைகளைக் கொண்டுவந்து கொடுக்கக் கொடுக்க, வெற்பை - தலைமைசான்ற அந்த மலைகளை, ஒருவன் - ஒப்பற்றவனான நளன், விரல்களால் ஏந்தி - தனது கைவிரல்களால் தாங்கி, இட்டது - கடலிடை போகட்டு அடைத்தது, என் உள்ளத்தின் இட்டது - என் நெஞ்சிலேயே இட்டதுபோன்று என்னைத் துன்புறுத்துகின்றது. ஆல் - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வேந்த வெற்பு - தலைமைசான் மலையுமாம்; வேய்ந்த வெற்பு என்ற பாடமும் கருதத்தகும். தரத்தர - விடாது கொணர்ந்து கொடுக்க; 'வானரர் தந்த கிரிக்குலம், எழுவிலிகள்கரத் தேற்றிட விற்று' (யுத். 664) காண்க.

பி - ம். 1. காய்ந்த வாநரர் வீரர் கதத்தினல்.

3. ஏற்றன தாக்கவே.

4. வேய்ந்த வெற்பை யொருவன், வேந்தன் மற்றெரு வன்றன்விரல்.

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஈதெலா முரைத் தென்பயன் இன்றுபோய்க்
காதி மானுட ரோடு கவிக்குலம
சாதல் ஆக்குவன் தானோர் கணத்தெனும்
போதில் மாலிய வானும் புகலுவான்.

732. சுட்ட வாகண்டுந் தொன்னகர் வேலையைத்
தட்ட வாகண்டுந் தானவர் தானையைக்
கட்ட வாகண்டுங் கண்ணெதி ரேவந்து
விட்ட வாகண்டு மேலெண்ண வேண்டுமோ.

'சுட்டவா கண்டும் - கடலினை எரித்ததைப் பார்த்தும், தொல் நகர் வேலையை தட்டவா கண்டும் - பழமையான நகரத்தைச்சுற்றி நின்ற கடலினை அணையமைத்துத் தடுத்தவிதத்தைக் கண்டும், தானவர் தானையை கட்டவா கண்டும் - (அநுமன்) அரக்கர் சேனையை அழித்தவிதத்தைப் பார்த்தும், கண் எதிரே வந்து விட்டவா கண்டும் - கண்ணுக்கு நேராக (அவ்விரோதிகள்) வந்து விட்ட வகையைப் பார்த்தும், மேல் எண்ண வேண்டுமோ - மேலே (அவர்களை வெல்லுமாறு) கருதுதலும் வேண்டப் படுவதோ?' ஓகாரம் - எதிர்மறை.

சுட்டவா முதலிய நான்கு முதற் சீர்களும் ஈறுகுறைந்து நின்றன. தொன்னகர் வேலை என்பதனை, இடைநிலை விளக்காக 'சுட்டவா கண்டும்'; 'தட்டவா கண்டும்' என ஈரிடத்தும் இயைக்க. தட்டல் - அணை கட்டித் தடுத்தல். 728 முதல் 732 வரை உள்ள பாட்டுக்கள் மாலியவான் கூறியது என்பது, இதனை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அடுத்துவரும் பாடலின் தொடக்கத்துள்ள 'தாயைப் பயந்தோ னியம்பலும்' என்பது கொண்டறியப்படும். சுட்டவா கண்டும் என்பதை அநுமனுக்குப் பொருத்தியும் கூறலாம்.

பி - ம். 2. தாவற்ற தெவ்வரை; தானவர் வேலையை, தானவர் தெவ்வரை.

4. மேற்செல வேண்டுமோ. 48

## இராவணன் மாலியவானை வெகுண்டு கூறுதல்

733. என்று தாயைப் பயந்தோ னியம்பலும்
தின்று வாயை விழிவழித் தீயுக
நன்று நன்றுநம் மந்திரம் நன்றெனு
என்றும் வாழ்தி யிளவலொ டேகென்றான்.

என்று தாயை பயந்தோன் இயம்பலும் - இவ்வாறு தன் தாயான கேகசியைப் பெற்றவனான பாட்டன் கூற; (இராவணன்), வாயை தின்று - உதட்டைக் கடித்து, விழி வழி தீ உக - கண்களின் வழியாக நெருப்புப்பொறி பறக்க; 'நன்று நன்று - நல்லது நல்லது, நம் மந்திரம் நன்று - நமது மந்திராலோசனை நன்றாக விருந்தது', எனு - என்று வெகுண்டு கூறி; (மாலியவானை நோக்கி), 'இளவலொடு ஏகு - (நீயும் என்) தம்பியான வீடணனோடு செல்க; (சென்று), என்றும் வாழ்தி - நீடூழி வாழ்வாயாக' என்றான் - என்று மொழிந்தான்.

தாயைப் பயந்தோன்: மாலியவான். இராவணன் தாயாகிய கேகசி என்பவளது தந்தையான சுமாலியின் உடன்பிறந்தோன். இவர்களும் மாலி என்ற தம்பியும்கூடி இலங்கையிற் புக்குப் பல்லோரையும் துன்புறுத்தத் திருமால் மாலியைக் கொன்றான். சுமாலியும் மாலியவானும் பாதலத்துட் புக்கனர். குபேரனை வென்று இராவணன் இலங்கையைக் கைப்பற்றிய பின்னர் அவனுடன் இவ்விருவரும் சென்றிருந்தனர் என்பது வரலாறு. சுமாலியின் உடன்பிறந்தவன் என்ற முறைகொண்டு மாலியவானையும் தாய்ப்பாட்டன் என்றார். இராவணனுக்கு மாலியவான் பாட்டன் என்பதை 'ஆங்கவன்றன் முதாதையாகிய..........மாலியவான்' (யுத்த. கும்ப. 12) என்றதனாலறிக. வாய் தின்னுதல் - சினக் குறிப்பு. நன்று நன்று மந்திரம் நன்று, பிற குறிப்பு. இளவல் - வீடணன்; அல், பெயர்விகுதி. பின்னர் இலங்கைகாண் படலத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தும் 11 கவிகளில் இம்மாலியவான் இராவணனிடம் இராமபிரான் வன்மையைக்கூறி நல்லுரை பகர்வதை அப்படலம் 6 முதல் 16 வரை காண்க.

பி - ம். 2. மென்று ; விழிவழி நீயுசு.
4. நன்று நன்று நம்சூழ்ச்சி யெறு.
4. என்றும் வாழி. 46

## மாலியவான் அடங்கலும் சேனைத் தலைவன் கூறலும்

734. ஈன மேகொ லிதமென வெண்ணுரு
மோன மாகி யிருந்தனன் முற்றினுன்
ஆன காலை யடியி னிறைஞ்சிய
சேனை நாத னினையன செப்பினுன்.

'இதம் ஈனமே - (பிறர்க்கு) நன்மை பயப்பவற்றை உரைப்பது தாழ்வினை விளைப்பதே', என - என்று, எண் உரு - எண்ணுதலைப் பொருந்தி, முற்றினுன் - வயது முதிர்ந்தவனான அந்த மாலியவான், மோனம் ஆகி இருந்தனன் - வாய் பேசாமல் இருந்தான் ; ஆன காலை - அக்காலத்து, அடியின் இறைஞ்சிய - (இராவணனின்) பாதங்களில் வணக்கம் செய்து நின்ற, சேனை நாதன் - தானைத் தலைவன், இனையன செப்பினுன் - (பின்வரும்) இந்த வார்த்தைகளைப் பகர்ந்தான். கொல் - அசை ; ஐயப்பொருளுமாம்.

இதம் : ஹிதம் என்ற வடசொல் பேதைக் குரைத்தாலும் தொன்ரு துணர்வு (பழ. 93). ஓர்த்த கருத்தும் உணர்வு முணராத, மூர்க்கர்க்கும் யாதும் மொழியற்க - மூர்க்கன்தான், கொண்டதே கொண்டு விடானுகும், பழ. 94. இதம் ஈனம் ; 'ஞானமும் கல்வியும் நவின்ற நூல்களும், ஈனருக் குரைத்திடல் இடர தாகுமே' (விவேக சிந்தாமணி). சேனை நாதன் - பிரகத்தன். முற்றினுன் மோனமாகி இருந்தனன் எனக் கூட்டித்தான் சொல்வதை முடித்தவனுய் மோனமாகினுன் என்றும் கொள்ளலாம்.

பி - ம். 1. ஈனமாத லிதமென வெண்ணுவான், இதமென வெண்ணினுன்.
2. மோனமாக ; விருந்தானற.
3. இறைஞ்சிய.
4. சேனை காவலன் ; செப்புவான். 50

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



735. கண்மை யிந்நகர் வேலை கடந்தவத்
திண்மை யொன்று மலால்திசைக் காவலர்
எண்ம ரும்மிவற் கேவல்செய் கின்றவவ்
வுண்மை யொன்று முணர்ந்திலை யோவையா.

'ஐயா - ஐயனே! கண்மை - கண்ணுக்கு நேராக, இந்நகர் வேலை கடந்த - இந்த இலங்காபுரியைச் சூழ்ந்து நிற்கும் கடலைத் தாண்டி வந்த, அ திண்மை ஒன்றும் அலால் - அந்த வன்மை ஒன்றே அன்றி, திசை காவலர் எண்மரும் - திக்குப் பாலகர்கள் எட்டுப் பேர்களும், இவற்கு ஏவல் செய்கின்ற - இந்த இராவணனுக்குப் பணியாற்றுகின்ற, அ உண்மை ஒன்றும் உணர்ந்திலையோ - அந்த உண்மை நிகழ்ச்சியைச் சிறிதும் தெரிந்தாயில்லையோ?

கண்மை - காட்சி; இச்சொல் கண்ணின் தன்மை அல்லது கண்ணோட்டம் என்ற பொருளில் சுந்தர. 438-இல் வந்துள்ளது. வருணனை வென்றான் இராமன் எனில், அவன் திக்குப்பாலகர்களில் ஒருவன் தானே; எட்டுத் திக்கின் காவலரையும் வென்ற இராவணன் முன்பு அவர்கள் எம்மாத்திரம் என்றான் சேனை நாதன். இவனே, இராவணன் மந்திரப் படலத்தில் முதலாவதாகப் பேசியதும் காண்க. திசைக்காவல் செய்தது, ஆரணிய. 567—571-இல் காண்க.

பி - ம். 1. கண்மை யந்தர, கண் வயந்தர;
3. செய்கின்ற தந்திண்மை.
4. போ லென்றான், ஓதுவாய், செப்புவாய்; போறுமால். 51

736. கூசும் வாநரர் குன்றுகொ டிக்கடல்
வீசி னாரெனும் வீரம் விளம்பினை
ஊசி வேரொடு மோங்கலை யோங்கிய
ஈச னேடு மெடுத்தது மில்லையோ.

'கூசும் வாநரர் - கூச்சம் கொள்ளும் இயல்பு வாய்ந்த குரங்குகள், குன்று கொடு - மலைகளைக் கொண்டு, இ கடல் வீசினார் எனும் வீரம் விளம்பினை - இந்தக் கடலில் எறிந்தார் என்னும், (பகைவரின்) வீரத்தை மெச்சிப் பேசினை; ஓங்கியஓங்கலை - மிகவும் உயர்ந்த கயிலை மலையை, ஊசி வேரொடும் ஈசனோடும் எடுத்ததும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இல்லையோ - சல்லி வேருடனும் (அதில் வீற்றிருந்த) சிவபெருமானேடும் பெயர்த்தெடுக்கவில்லையோ? ஓகாரம் - வினு.

கூசுதல் - கூசிக்கூசி யினையன கூறினுன் (சுந்தர. ஊசி வேரொடும் எடுத்தது; 'ஈசனுண் டிருந்தபே ரிலங்கு மால்வரை, யூசிவே ரொடும்பறித் தெடுக்கு மூற்றத்தான்' (ஆரணிய. 848); இன்னும், மலையெடுத்தது; ஆரணிய. 319, 323, 327, 745, சுந்தர. 117, 272, 451-452, 743; உத்தரகாண்டம் வரையெடுத்த படலமும் காண்க. ஓங்கல் மலைக்குக் காரணக்குறி; ஓங்கலை யோங்கிய என்பதில் இணையெதுகை காண்க.

பி - ம். 1. கூசி வானரம்; கொடுகடல், கொடாங்கடல்.
2. விளம்புவாய், விளம்பினுய்.
3. ஓங்கலை யன்று நீ ஏங்கிய; 52

737. அதுகொ டென்சில வாரமர் மேலினி
மதிகெ டுந்தகை யோர்வந்து நாமுறை
பதிபு குந்தனர் தம்மைப் படுப்பதோர்
விதிகொ டுந்த விளைந்தது தானென்ருன்.

'இனி - இனிமேல், அது கொடு என் - (நிகழ்ந்த) அந்தச் செயல்களை நினைவு கூர்வதால் அடையும் பயன் யாது? சில மதிகெடும் தகையோர் - சில புத்தி கெட்ட தன்மையர், தம்மை படுப்பது ஓர் விதி கொடு உந்த - தம்மைக் கொல்விப்பதாகிய ஒப்பற்ற ஊழ்வினை பிடித்துத் தள்ளுவதால், ஆர் அமர் மேல் வந்து - போர் புரிவதன் பொருட்டு வந்து, நாம் உறை பதி புகுந்தனர் - நாம் வசிக்கின்ற ஊரிலே புக்கனர், விளைந்தது - (இதுவே) நிகழ்ந்தது', என்ருன் - என்று பகர்ந்தான. தான் - அசை.

அது என்ற சுட்டுப் பகைவர் நகரிற் புக்கதைச் சுட்டி நின்றது. அது என்பது முன்னிகழ்ந்த இராவணன் வீரச்செயல் எனினுமாம். அமர்மேல் - அமரின் பொருட்டு: வேற்றுமை மயக்கம்; பொருட்டு நான்காம் வேற்றுமைச் சொல்லுருபு. விதி கொடுந்த: 'வென்றிவன் வருவனென் றுரைத்திலேன்விதி, நின்றது பிடர் பிடித் துந்த நின்றது' (யுத்த. கும்ப. 95). பகைவருடைய போராத

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காலம் இங்கு நம்முடன் எதிர்க்க வந்தனர் என்று கூறி நிறுத்தினுன்.

பி - ம். 1. வானர மாகிநீ, மானிட ராகுவார்.

2. மதிகொடுந் ; தன்மை.

4. விளிந்திட வேண்டுவார்.

இங்கு ஓர் அதிகப்பாடல் :

என்னும் வாய்மை யியம்புறு போதினில்
முன்ன மேசென்ற ஒற்றர் முடுகியெம்
மன்ன வர்க்கெம் வரவுரைப் பீரென
துன்னு காவலர் தம்மிடைச் சொல்லினுர்.

## வாயில்காவலன் ஒற்றர் வந்தமையைத் தெரிவித்தல்

738. முற்று மூடிய கஞ்சுகன் மூட்டிய
வெற்ற னற்பொழி கண்ணினன் வேத்திரம்
பற்று மங்கையி னன்படி காரனின்று
ஒற்றர் வந்தன ரென்ன வுணர்த்திஞன்.

(இங்கிலையில்), முற்றும் மூடிய கஞ்சுகன் - (உடல்) முழுதும் மூடப்பெற்ற சட்டையை யுடையவனும், மூட்டிய வெறு அனல் பொழி கண்ணினன் - எரியுமாறு செய்த வெறும் தீப்பொறியைக் கக்குகின்ற விழியினனும், வேத்திரம் பற்றும் அங்கையினன் - பிரப்பங்கோலைப்பிடித்த உள்ளங்கையை யுடையவனுமான, படிகாரன் - வாயில் காவலன் (உட்புகுந்து), 'இன்று ஒற்றர் வந்தனர் என்ன - இப்பொழுது வேவுகாரர் வந்தனர்' என்று, உணர்த்திஞன் - அறிவித்தான்.

கஞ்சுகன் - சட்டையிட்ட பிரதானி; 'காவலற்கொருழுது கஞ்சுக னுரைப்போன்' (மணி. 25 : 11); இவன் மிகவும் சினம் கொண்டவன் என்பதும், கையில் பிரம்பு கொண்டிருப்பவன் என்பதும், காணவருபவர் யார் யார் என்று தலைவர்க் குணர்த்துவது இவன் பணியாகும் என்பதும் இதில் சுட்டப்பட்டது; 'மின்னுடை வேத்திரக் கையர் மெய்புகத், துன்னிடு கஞ்சுகத் துகிலர்' (ஆரணிய. 569). வேத்திரம் - பிரம்பு; 'வேத்திரத் தாசனம்'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(ஆரணிய. 840); 'வானவர் மகுடகோடி, பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் ருக்கி' (திருவிளை. கடவுள். 18). படிகாரன் - வாயில் காப்போன்; பிரதீகாரி என்ற வடசொற்றிரிபு. இச்சொல் படிசாரன் என்று சீவகசிந்தாமணியில காணப்பெறுகின்றது. 'படிகாரி ரெம்வரவு சொல்லுதிர்' (அயோத்தி. பள்ளி. 1).

பி - ம். 1. கஞ்சுகி மூட்டிய, கஞ்சுக மொய்ம்பினுன்.
2. பொழி.
3. அங்கையினுல்; படிகாவலன், படிவாயி னின்று, படிவாயிலி னெற்றர். 54

## ஒற்றர் உட்புகுதலும், இராவணன் வினவுதலும்

739. வாயில் காவலன் கூறி வணங்கலும்
ஏய வெங்கண் விறல்கொ ளிராக்கதர்
நாய கன்புகுத் தீங்கென நன்றெனப்
போய வன்புக லப்புகுந் தாரரோ.

வாயில் காவலன் கூறி வணங்கலும் - வாயில் காப்போன் (இவ்வண்ணம்) சொல்லி வணங்கிய அளவில், வெங்கண் ஏய - கடுமையான நோக்குடன்கூடியவனும், விறல்கொள் இராக்கதர் நாயகன் - வன்மைவாய்ந்த அரக்கர் தலைவனுமான இராவணன், 'ஈங்கு புகுத்து - இங்கே புகுமாறு செய்', என - என்று கட்டளையிட, அவன் - அந்தக் காவலன், 'நன்று' என - நல்லது என்று, போய் புகல - போய்ச் சொல்லிய அளவில், புகுந்தார் - ஒற்றர்கள் உட்புகுந்தனர். அரோ - அசை.

வெங்கண்மை - வன்மை.

பி - ம். 1. காவலன் கூற வயங்கெரி.
2. இராக்கதர் நாயகன்.
3. ஆயவர்ப்; ஈங்கெ; ஆமெனப்; நண்பொடும்.
4. போயவன் புகுத்த. 55

இச்செய்யுள் அச்சிட்ட பிரதிகள் பலவற்றில் இல்லை. எனினும், வாயில் காவலன் அரசன் அநுமதியை அறிவிக்க ஒற்றர் உட்புகுந்தார் என்று கதைத் தொடர்பு குறிப்பதாலும்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சில சிறந்த சுவடிகளில் இது காணப்படுதலாலும், ஸ்ரீஐயரவர்கள் குறிப்பைப் பின்பற்றியும், இச்செய்யுள் இங்குக் கூட்டப்பெற்றது.

## ஒற்றர் இராவணனை வணங்குதல்

740 மனைக்கண் வந்தவன் பாதம் வணங்கினர்
பனைக்கை வன்குரங் கின்படர் சேனையை
நினைக்குந் தோறுந் திடுக்கிடு நெஞ்சினர்
கனைக்குந் தோறு முதிரங்கள் கக்குவார்.

பனை கை வல் குரங்கின் படர் சேனையை - பனந்துண்டம் போன்ற கைகளையுடைய வலிய குரங்கினது பரந்த சேனையை, நினைக்கும் தோறும் திடுக்கிடும் நெஞ்சினர் - எண்ணும்தோறும் நடுங்கும் உள்ளத்தினை உடையவரும், கனைக்கும் தோறும் உதிரங்கள் கக்குவார் - கனைக்கும்தோறும் இரத்தத்தை உமிழ்பவருமான ஒற்றர்கள், மனைகண் வந்து - அந்த மந்திராலயத்தின்கண் வந்து, அவன் பாதம் வணங்கினர் - அந்த இராவணனுடைய பாதங்களில் வணக்கம் புரிந்தனர்.

பனைக்கைக் குரங்கு; 748. சேனையை நினைக்குந்தோறும் என்றும், (இராவணன்) கனைக்கும்தோறும் என்றும் பொருள் கூறலாம். கக்குதல்; 'கக்கின னுயிர்' (கிட்கிந்தா. 287).

பி - ம். 3. நினைக்க வேயும்; அலமரும்; திடுக்கெனும், துணுக்குறு. 56

741. வெள்ள வாரி விரிவொடும் வீடணத்
தள்ள வாரி நிலைமையுந் தாபதர்
உள்ள வாறு முரைமினென் றுனுயிர்
கொள்ள வாய்வெரு வுங்கொடுங் கூற்றனன்.

உயிர் கொள்ள வாய் வெருவும் கொடு கூற்றனன் - உயிர் கவருமாறு வாய்பிதற்றுகின்ற கொடிய யமன்போன்ற இராவணன், 'வெள்ளம் வாரி விரிவொடும் - வெள்ளநீரைக்கொண்ட கடல் போன்ற (சேனையின்) பரப்புடன், வீடணன் தள்ள வாரி நிலைமையும் - வீடணன் என்ற சோம்பேறியின் தன்மையையும், தாபதர் உள்ள ஆறும் - தவசிகள் உருவம் தரித்த இராம இலக்குவர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இருக்கும் திறமும் ஆகிய இவற்றை, உரைமின் - சொல்லுங்கள்', என்றான் - என்று கட்டளையிட்டான்.

வெள்ளம் - வானர வெள்ளம்; வெள்ளம் - சேனையின் அளவு. வாரி - கடல். தள்ளவாரி - சோம்பேறி; இது தெல்லவாரி யென்று நாடோடியாக வழங்குகின்றது. தள்ளவாரம் - சோம்பல்; 'தூங்க லசைத லலசுதல் சோம்பே சடமடி தள்ள வாரமுந் தருமே' (பிங்.); 'தள்ளபாரு' என்ற சொல் போர்க்கு அஞ்சுபவன் என்ற பொருளில் கன்னடத்தில் உள்ளது என்பர். தாபதர் - தவம் புரிவோர்; 'இருவர் மானிடர் தாபதர்' (ஆரணிய. 365); 'தாபதர்கள் சிலையெடுத்துத் திரியுமிது' (ஆரணிய. 319); இங்கு, இராம இலக்குவர். வானரச் சேனையின் விவரத்தைச் சுகசாரணரே இராவணனுக்குக் கூறியதாக முதனூலில் உள்ளது.

பி - ம். 1. நிலைமையும் வீடணன், விரிவொடும் வீடணன்.
2. தள்ள வாமும்நிலை; நாபதன்.
4. கொள்ளை; கூற்றினன். 57

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

என்னச் சார ரிசைத்தனர் வேலையைக்
கன்ன லொன்றிற் கடந்து கவிக்குலம்
துன்னு பாசறைச் சூழல்க டோறுமே
அன்ன ராகி யரிதி னடைந்தனம்.

742. அடிய மந்நெடுஞ் சேனையை யாசையால்
முடிய நோக்கலுற் றேமுது வேலையின்
படியை நோக்கியெப் பாலும் படர்குறும்
கடிய வேகக் கலுழனிற் கண்டிலம்.

'அடியம் - (உன்) அடியோங்களாகிய நாங்கள், அ நெடு சேனையை - அந்த நீண்ட குரங்குச் சேனையை, ஆசையால் - விருப்பத்துடன், முடிய நோக்கல் உற்றேம் - நன்றாகக் காணத் தொடங்கினோம்; (ஆயினும்), முது வேலையின் படியை நோக்கி - பழமையான கடலின் தன்மையைக் காணுமாறு, எ பாலும் படர் குறும் - எல்லாப் பக்கங்களிலும் பறத்தல் பொருந்திய, கடிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வேகம் கலுழனில் கண்டிலம் - கடுமையான விரைவுடன்கூடிய கருடனைப்போன்று காண இயலாதவர்களானோம்.

இதுமுதல் எட்டுக் கவிகள் ஒற்றர் கூற்று. இச்செய்யுள் வானர சேனையின் பெருக்கத்தைச் சுகசாரணர் கூறியது. முடிய நோக்குதல்; 'முழுதுணர் சிந்தையான முடிய நோக்கினன்' (அயோத்தி. 319); மற்றும், கிட்கிந்தா. 715, 717, 718-உம் காண்க. நிலப்பகுதிக்கு முன்னரே நீர் உண்டாகலின் 'முதுவேலையின்' எனப்பட்டது. படி - தன்மை; 'படியெடுத் துரைத்துக் காட்டும் படித்தன்று'; 'கரும்மணியம் பாலகத்துப் பதித்தன்ன படியவாய்' (சீவக. 167). பல திசைகளிலும் பறந்துசெல்லும் கருடன் கடல் முழுவதும் ஒருங்கே காணவியலாது; கருடனிற் கண்டிலம் என்பதற்கு, கருடனைப்போலக் காணும் திறம் பெற்றோமில்லை என்ற பொருளும் பொருந்தும்; 'கழுகுக் கண்' என்றது காண்க. யாதேனும் ஒரு பாகத்தைத்தான் காண்டல்கூடும்; அதுபோன்று, சேனை முழுதும் காணமுடியாமல் அதன் ஓர் பகுதியையே கண்டனம் எனப்பட்டது; 'மாக்கள், கடல்கண் டோமென்பார் யாவரே முடிவுறக் கண்டார்' (கிட்கிந்தா. 717). முன்னொரு காலத்தில் உலகு முழுதும் காணவெண்ணிப் பூமியெல்லாம் சூழ்வந்து, பின் மேலுலகம் சென்று ஒரு நாளிலே அறிந்த கருடன்போல என்பது பழைய உரைக்குறிப்பு. கலுழன் - கருடன் திரிந்து வந்தது; சுந்தர. 22, 32, 35, 43, 185, 533 என்பன கொண்டறிக. கடிய வேகம்; 'சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்' (பால. தாடகை. 73). நோக்க லுற்றேம் கண்டிலம் என இயைக்க.

பி - ம். 1. மன்னெடுஞ்; யன்பினுல்.

2. நோக்கிய பாரம், நோக்கியவ் வானம், நோக்கி யெக்காலும் நோக்க லுற்றோ, நோக்கி யெப்பாற்பட.

3. படர்குற்ற.

4. கலுழற்குங் காண்கெரணு, கண்டிலேம்.



743. நுவல யாம்வர வேண்டிய நோக்கதோ
கவலை வேலை யெனுங்கரை கண்டிலா
அவல மெய்த வடைத்துழி யார்த்தெழும்
துவலை யேவந்து சொல்லிய தில்லையோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'வேலை எனும் கரை கண்டிலா - வேலை என்று கூறப்படுகின்ற கடலின் கரையைக் காணவியலாமையான, கவலை - துயரமே, அவலம் எய்த - வருத்தம் அடையும்படி (கவலை நீங்கும்படி), அடைத்துழி - (வானரர்கள் மலைகளை வீசிக் கடலை) அடைத்த போது, ஆர்த்து எழும் துவலையே - ஆரவாரித்து மேற்கிளம்பிய நீர்த்துளிகளே, வந்து சொல்லியது இல்லையோ - வந்து அறிவிக்க வில்லையோ? நுவல - அதனை எடுத்துரைக்க, யாம் வரவேண்டிய நோக்கமதோ - நாங்கள் வரவேண்டிய நோக்கத்தை யுடையதோ?

குரங்குகள் கடலில் வீசியெறிந்த மலைகளினால் மேலெழுந்த நீர்த்திவலையின் பேரொலியே அலைகளின் பெருக்கினையும் வன்மை யையும் காட்டும் எனப்பட்டது. இனி, கவலை வேலை எனும் கரை கண்டிலா - கவலையாகிய கடல் என்கின்ற கரை காணமுடியாத, அவலம் எய்த - துயரத்தை (அரக்கர்கள்) அடைய, அடைத்துழி - வானரங்கள் மலைகளை பெறிந்து கடலை அடைத்தபோது, ஆர்த்து எழும் துவலையே - ஆரவாரித்து மேற்கிளம்பிய நீர்த்துளிகளே, வந்து சொல்லியது இல்லையோ - வந்து அறிவிக்கவில்லையோ? நுவல - அதனை எடுத்துரைக்க, யாம் வரவேண்டிய நோக்கதோ - நாங்கள் வரவேண்டிய கருத்தை உடையதோ எனினுமாம். ஓகாரங்கள் - வினா.

துவலையே வந்து; (ஒப்பு): 'ஊர் தீயிட்ட தோங்கிரும் புகையே யோத' (சுந்தர. 1254); 'என்றுணைக் கணவனுற்றற் குரனிலா திற்று வீழ்ந்த, அன்றெழுந் துயர்ந்த வோசை கேட்டிலை போலு மம்மா' (சுந்தர. 451); துமித மூர்புக வானவர் துள்ளினர், அமுத மின்னு மெழுமெனு மாசை யால்' (யுத்த. 657). அடைத்த உழி என்பது அடைத்துழி என அகரம் தொக்கது. அவலம் - துன்பம்; 'அவலக் கவலை கையா றழுங்கல்' (மணி. 4 : 118). 'நோக்கதோ என்றது, நாங்கள் வந்து சொல்லுமளவும் கிடந் ததோ. கவலை - வழி. அவல மெய்தல் - வேலை கலங்க' என்பன பழையவுரை.

பா - ம். ௨. கவலை வேலையடைந்திடக் கற்பழிந்து; யெனுங்கரை காண்கிலாது.
௬. மெய்திய தேதுளி, எய்தி யடைத்துழி.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


744. எல்லை நோக்கவு மெய்தில தாமெனும்
சொல்லை நோக்கிய மானிடன் தோளெனும்
கல்லை நோக்கிக் கணைகளை நோக்கித்தன்
வில்லை நோக்கவும் வெந்தது வேலையே.

'எல்லை நோக்கவும் - கடற்பரப்பைக் கண்ணுற்றுக் கிடக்கவும், எய்திலது ஆம் எனும் - (அந்தச் சமுத்திரராஜன்) வராமல் காலம் தாழ்த்தது என்ற, சொல்லை நோக்கிய - பழிமொழியைக் கருதிய, மானிடன் தோள் எனும் - அந்த மானுடன் தனது தோள் என்னும், கல்லை நோக்கி - மலையைப் பார்த்து, கணைகளை நோக்கி - அம்புகளையும் பார்த்து, தன் வில்லை நோக்கவும் - தன்னுடைய வில்லையும் கண்ணுற்ற அளவில், வேலை வெந்தது - கடல் எரிந்தது. ஏ - அசை.

சொல் - பழிச்சொல். இச்செய்யுட்கு (ஒப்பு): பால. கார்முக. 11. மூன்றிடங்களில் நோக்குதல் என்ற பதம் இராமபிரான் அம்பினால் வேலைவெந்த விரைவினைக் குறித்தது; (ஒப்பு): 'எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்' (பால. கார்முகப். 34); 'வில்லொன்றிற் கடிகை மூன்றில் ஏறினர் விண்ணி லென்றான்' (ஆரணிய. மாரீசன். 617); 'மாலு மக்கணம் வாளியைத் தொட்டதும், கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர், கால னைப்பறித் தக்கடி யாள் விட்ட, சூல மற்றன துண்டங்கள் கண்டனர்' (பால. தாடகை. 70). வில்லை வளைத்து நாணேற்றிக் கணையைப் பூட்டுவதற்குமுன் வேலை வெந்தது என்பார், 'வில்லை நோக்கவும்' என்றார். எல்லை..............'சொல்லை நோக்கிய - நீர் ஏழுநாள் அவதியிட்டு வரம் கிடந்தும் வருணன் வந்தானில்லை என்று (அருகிலிருந்தவர்) சொன்னது கேட்ட' என்பது பழையவுரை.

பி - ம். 1. நோக்கினும்; எய்தல ராயினும், எய்தல தாமெனும்.
2. மானிடன்.
3. கணையையிவ னோக்கிந்தன்.
4. வில்லை நோக்கலும்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இங்கு ஓர் அதிகப்பாடல் :—

வருண னஞ்சி வழிகொடுத் தையநின்
சரண மென்றடி தாழ்ந்தவன் றன்பகை
நிருதர் வெள்ளம் அனந்தம் நிகழ்த்துமுன்
திரிபு ரச்செயல் செய்ததங் கோர்கணை.

745. தாரு லாமணி மார்பநின் தம்பியே
தேரு லாவு கதிருந் திருந்துதன்
பேரு லாவு மளவினும் பெற்றனன்
நீரு லாவு மிலங்கை நெடுந்திரு.

'தார் உலாம் மணி மார்ப - வெற்றிமாலை யசைகின்ற மார்பினை உடையவனே! நின் தம்பியே - உன்னுடைய தம்பியாகிய வீடணனே, தேர் உலாவு கதிரும் - தேரின்மீது (நாடோறும்) சஞ்சரிக்கின்ற சூரியனும், திருந்து - செம்மையான, தன் பேர் உலாவும் அளவினும் பெற்றனன் - தன் (இராமன்) பெயர் உலகிடை வழங்கும் காலம்வரையிலும் (சூரியன் சஞ்சரிப்பதும் இராம நாமம் வழங்குவதுமான காலமாகிய கற்பகாலம் வரையில்), நீர் உலாவும் இலங்கை நெடு திரு - கடல்நீராற் சூழப்பெற்ற இலங்கையின் பெருஞ்செல்வத்தை அடையப்பெற்றான்.

நின் தம்பி...............பெற்றனன்; 'ஆழியா னவனை நோக்கி யருள்சுரந் துவகை தூண்ட, எழினே டேழாய் நின்ற வுலகுமென் பெயரும் எந்நாள், வாழுநா ளன்று காறும் வாளெயிற் றரக்கர் வைகும், தாழ்கட லிலங்கைச் செல்வம் நின்னதே தந்தே னென்றான்' (யுத்த. 445); 'கார் உள்ளளவும் கடல்நீ ருள்ளளவு மிந்தப் பாருள் ளளவும் என்றன் பேருள் ளளவும், இந்தா விபீஷணா இலங்காபுரி ராஜ்யம்' (இராம நாடகம்). தன் பேர் - இராமபிரான் திருநாமம்; 'அமரரும் பெறுத லாற்றா உவயலோ கத்தி னுள்ள சிறப்புங்கேட் டுவந்தே னுள்ளம்' (யுத்த. கும்ப. 151); 'எனக் கவன் தந்த செல்வத் திலங்கையு மரசு மெல்லாம், நினக்குநான் தருவன்' (யுத்த. கும்ப. 14). 'சூரிய சந்திரர்கள் உள்ளவரையில்' என்று கூறுவது உலகவழக்கு; இங்கு, 'எக்காலமும்' என்பது பொருள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பி - ம். 1. மார்பவுன், மார்வுநின்.

2. கதிர்க ளிரண்டுந் தன், கதிருந் திருந்து தன், கதிருந் திரிந்தன.

3. உலாவளவு மெய்தப்.

4. நெடுந்திசை. 61

746 சேது பந்தனஞ் செய்தன னென்றதிப்
போது வந்த புதுவலி யோவொரு
தூது வந்தவன் தோள்வலி சொல்லிய
ஏது வந்தமி லாத விருக்கவே.

'ஒரு தூது வந்தவன் தோள்வலி - ஒரு தூதாகவந்த அநும னுடைய புயவலி, சொல்லிய - முன்னமே அறிவித்த, அந்தம் இலாத ஏது இருக்கவே - முடிவில்லாத காரணம் இருக்கையில், சேது பந்தனம் செய்தனன் என்றது - சேது அணையை அமைக்கச் செய்தனன் என்ற விஷயம், இ போது வந்த புது வலியோ - இப் போது ஏற்பட்ட புதிய வன்மையோ?

இராமபிரான் விடுத்த தூதன் தோள்வலியிலிருந்தே இராம பிரான் தோள்வலி யறிந்திருந்தோம்; எனவே அணைக்கட்டைச் செய்து முடித்தது புதிய வலியோ? என்றபடி.

பி - ம். 1. னென்றவிப்.

2. புதுமையதோ.

3. தோள் வலியா முனம், வலியான் முனம், யான்முனம் வலி சொல் லவே.

4. ஏதுவந்த தெலாம், அந்த மிலாதது; இருக்கையே. 62

747. மருந்து தேவ ரருந்திய வைகல்வாய்
இருந்த தானவர் தம்மை யிரவிமுன்
பெருந்திண் மாயற் குணர்த்திய பெற்றியின்
தெரிந்து காட்டின னும்பி சினத்தினன்.

'தேவர் மருந்து அருந்திய வைகல்வாய் - தேவர்கள் அமுதம் பருகிய முன்னாளிலே, இருந்த தானவர் தம்மை தெரிந்து - அவர்களிடையே வந்து மறைந்திருந்த அசுரர்களை அறிந்து, முன் பெரு திண் மாயற்கு - முன்பு பெருவலிமைபடைத்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



திருமாலிடம் கூறவிரும்பி, இரவி உணர்த்திய பெற்றியின் - (சூரியன்) காட்டிய தன்மைபோன்று, உம்பி தெரிந்து - உன் தம்பி வீடணன் (குரக்குவடிவு தரித்த எங்களை) அறிந்துகொண்டு, சினத்தினன் - கோபம் மூண்டவனாய், காட்டினன் - (இராமபிரானிடம் எங்களைக்) காட்டிவிட்டான்.

மருந்து - அமுதம்; 'மருந்தனைய தங்கை' (ஆரணிய. 611); 'மருந்தனைய தேவி' (சுந்தர. 612). பாற்கடல் கடைந்தபோது எழுந்த அமுதத்தினைத் திருமால் மோகினி உருக்கொண்டு தேவர்கட்கு அளித்தபோது, சிம்மிகை என்ற அரக்கியின் புதல்வனான சைம்மிகேயன் தனது அசுர உருவை மறைத்துக்கொண்டு அமுதம் பெற முயலுகையில், சூரிய சந்திரர்கள் காட்டிக்கொடுத்துவிட, திருமால் அமுதம் பகிர்ந்தளித்த அகப்பையினால் அவ்வசுரனை அடித்ததாகவும், அந்நிலையிலே அவ்வசுரன் தலை வேறு உடல் வேறாகப் பெற்று, அமுதம் அயின்றதால் உயிர் நீங்கப்பெறாது, இராகு கேதுக்களாக மாறியதாகவும், பின்னர் அவ்விராகு கேதுக்கள் தம்மை மானக்குறைவு செய்த கதிர்மகனைச் சிற்சில காலங்களில் தீண்டிவந்தன வென்றும், அவ்வாறு தீண்டப்பெறும் காலம் கிரகணம் என்று வழங்குவதாகவும் புராணம் கூறும். தானவர் தம்மைத் தெரிந்து எனக் கூட்டிப் பொருள் தரப்பட்டது. இராகு கேதுக்கள் என்ற இரு வடிவாக மாறியதுபற்றித் தானவர் எனப் பன்மையாற் குறித்தது. இரவி எனக் குறிக்கப்பட்டதேனும் அவன் ஒளிகொண்டு இயங்கும் மதியினையும் கொள்க. தெரிந்து காட்டினன் என்றேகொண்டு எங்கள் கபடத்தை உணர்ந்து காட்டினன் எனினுமாம்.

பி - ம். 1. மாலைவாய், மாலைவந்.

2. அருந்து, அறிந்து; இமைப்பின் முன், தம்மை யறிந்துமுன், இமையவர்; இகழ்ந்து முன், யிமைந்து முன்.

4. மாய னுணர்த்தி; பெற்றிபோல்.

3. திரிந்து; காட்டினான்; சினத்தினல். 82

748. பற்றி வானர வீரர் பனைக்கையால்
எற்றி யெங்களை யேனெடுந் தோளிறச்
சுற்றி யீர்த்தலைத் துச்சுடர்போ லொளிர்
வெற்றி வீரற்குக் காட்டி விளம்பினன்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வானர வீரர் - வானர வீரர்களின் உதவியால், பணைகையால் - பணைமரம் போன்ற கரத்தின், எங்களை - எங்களை, பற்றி - கைப் பற்றி, ஏண் நெடு தோள் - பெருமை மிக்க நீண்டதோள்களை, எற்றி இற - குத்தி முறியுமாறு, ஈர்த்து சுற்றி அலைத்து - இழுத்துச் சுழற்றித் துன்புறுத்தி, (அந்த வீடணன்) சுடர்போல் ஒளிர் வெற்றி வீரற்கு காட்டி விளம்பினன் - சூரியன்போன்று விளங்கும் வெற்றி பொருந்திய வீரனாகிய இராமபிரானுக்குக் காண்பித்து (எங்களை இன்னார் என்று) தெரிவித்தான்.

ஏண் - பெருமை' 'ஏணிலே னிருந்தேன்' (திவ்ய. பெரியதிரு. *1 : 6 : 1*); 'ஏண்பாலோவா' (அயோத்தி. கைகேசி. *39*).

பி - ம். 1. சேணை பணைக்கையால்.
2. என்பொடு ; தோளுறச்.
3. துகைக்கச் சுடரொளிர் ; ஒளி.
4. வீரனிற். 63

749. சரங்க ளிங்கிவற் றிற்பண்டு தானுடை
வரங்கள் சிந்துவ னென்றனன் மற்றெமைக்
குரங்க லாமை தெரிந்துமக் கொற்றவன்
இரங்க வுய்ந்தன மீதெங்க ளொற்றென்றார்.

'அ கொற்றவன் - அந்த வெற்றி பொருந்திய இராமபிரான், இங்கு சரங்கள் இவற்றில் - இங்குள்ள இந்த அம்புகளினால், தான் பண்டு உடை வரங்கள் சிந்துவன் என்றனன் - முன்னரே இரா வணன் பெற்றுள்ள வரங்களை எல்லாம் அழித்து விடுவேன் என்று மொழிந்தான், மற்று - மற்றும், எமை - எங்களை, குரங்க லாமை தெரிந்தும் - ஏமாற்றுமாறு குரங்கின் உருக்கொண்டவரே யன்றி உண்மையில் குரங்குகள் அல்லோம், என்றதை உணர்ந்த பின்னரும், இரங்க உய்ந்தனம் - (எங்கள்பால்) இரக்கம் கொண்ட தனால், (நாங்கள்) பிழைத்தோம்; ஈது எங்கள் ஒற்று - இதுவே நாங்கள் ஒற்றி வந்த பொருள் ஆகும்', என்றார் - உணர்த்தினார்கள் (சுக சாரணர்).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சிந்துதல் - ஒழித்தல்; 'இடர் தொடரா வினையான சிந்தும்' (தேவா. 37:1): 'சிந்திப்போம் இருவினைகள் சிந்திப் போமே' ஈது: இது என்னும் சுட்டு நீண்டது.

ப - ம். 1. சரங்களிங் கிவற்றால்.

2. வந்தெமைக்.

4. ஒற்றரோ; ஒற்றென்றான். 84

## ஒற்றர் யாவற்றையுங்கூறி இராவணனை வாழ்த்துதல்

750. மற்றும் யாவையும் வாய்மைய மானவன்
சொற்ற யாவையுஞ் சோர்வின்றிச் சொல்லினர்
குற்றம் யாவையுங் கோளொடு நீங்குக
இற்றை நாண்முத லாயுவுண் டாகென்றார்.

மற்றும் - மேலும், யாவையும் - (அந்த வானரப்படையின் இடையிலே நடந்த) எல்லாவற்றையும், வாய்மைய மானவன் - உண்மையுள்ள பெருந்தகையான இராமபிரான், சொற்ற - (இராவணனிடம் சொல்லுமாறு) சொன்ன, யாவையும் - எல்லா விஷயங்களையும், சோர்வின்றி - தளர்வில்லாமல், சொல்லினர் - உரைத்தவரான ஒற்றர்கள், 'இற்றை நாள் முதல் - இன்று நாள் முதலாக, கோளொடு குற்றம் யாவையும் நீங்குக - தீமையுடன் குற்றம் எல்லாமும் ஒழிவதாக, ஆயு உண்டாக - நின ஆயுள்வளர்வதாக', என்றார் - என்று வாழ்த்தினர்.

வாய்மைய மானவன் - இராமபிரான்- சோர்வு - 'சொல்லாடச் சோர்வு படும்' (குறள். 405). தாம் பகர்ந்தவற்றில் இலங்கேசன் வெறுக்கத்தக்கன சில இருத்தல்கூடும் என ஐயுற்று, அவன் வெகுளாதிருக்குமாறு வாழ்த்தினர் என்க. சொற்ற - 'சொற்ற வாயையும் கருதிய மனத்தையுஞ் சுடுமென் ஒற்றை யாணை' (யுத்த. 176). கோள் - தீமை; (பிங்.). இன்று + நாள் = இற்றை நாள்; 'ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே' (நன். உயிரீற்று. 35). ஆயு - ஆயுள்; 'ஆயு வழியு மதிக மிலிங்க மெனின்' (சைவச. பொருள். 109). சில அச்சுப் புத்தகங்களிலும், சில சுவடிகளிலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இதனோடு ஒற்றுக் கேள்விப் படலம் முற்றும். என்று எழுதப் பட்டுள்ளது.

பி - ம். 1. வாய்மையும் வானவன், வாய்மையம் மன்னவன், ஈதென மன்னவன்.

2. சொற்ற யாவும்; செவி சுடச், செவி யிடச்.

4. உற்ற; உண்டி தென்றார்; சென்றுன்; உண்டே தென்றுன். 65

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

செவித்துணை யிருப தூடும் தீய்சொரிந் தென்னக் கேட்டுப்
புவித்தலம் கிழிய வண்டம் பொதிருறத் திசையில் நின்ற
இபத்திர ளிரிய வானத் திமையவர் நடுங்கக் கையால்
குவித்தடம் புயமே கொட்டிக் கொதித்திடப் பகர லுற்றுன்.

## வேறு

## இராவணன் மேலும் அமைச்சரோடு ஆராய்தல்; சேனைகாவலன் கூற்று

751. வைதெனக் கொல்லும் விற்கை மானிடர் மகர நீரை
நொய்தினி னடைத்துத் தானை யோடும்வந் தேறி நம்மூர்
எய்தின ரென்ற போதின் வேறினி யெண்ண வேண்டும்
செய்திற னுண்டோ வென்னச் சேனைகா வாளன் செப்பும்.

'வைதென கொல்லும் விற்கை மானிடர் - (இருடிகளின்) சாபம் என்னுமாறு (தவருது) கொல்லுகின்ற வில்லைக்கொண்ட மனிதர், மகரம் நீரை - கடலை, நொய்தினின் அடைத்து - விரைவில் அணை கட்டி அடைத்து, தானையோடும் வந்து ஏறி - சேனையுடனும் (அந்தக் கடலைத்) தாண்டி, நம ஊர் எய்தினர் என்ற போதின் - நமது ஊரை அடைந்தனர் என்ற போழ்தில், வேறு இனி எண்ண வேண்டும் செய்திறன் உண்டோ - வேருகக் (யாம்) கருதத்தக்கதும் செய்யக்கூடியதுமான தொழில் வேறு உள்ளதோ?' என்ன - என்று (இராவணன்) வினவிய வினவிற்கு, சேனை காவாளன், செப்பும் - சேனை காவலன் மறுமொழி பகரலுற்றுன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முன்பு (53) பிரகத்தன் பேசிக்கொண்டிருந்த நிலையில் ஒற்றர்கள் வந்து புகுந்து தம் வரலாற்றைக் கூறினர் (58—65); அவர்கள் சொல்லி முடித்தபின், இராவணன் அவையினரை மேலும் வினவினன் என்று கொள்ளத்தக்கது. வைதெனக் கொல்லும் விற்கை; (ஒப்பு): 'வைதாலன வைதாவின வடிவாளி' (யுத்த. முதற்போர். 158); 'புலவர் சொற்றுறை புரிந்தவும் போன்றன புங்கம்' (யுத்த. கும்ப. 226); 'வைவன முனிவர்சொல் லனைய வாளிகள்' (யுத்த. அதிகாயன். 116); 'சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்' (பால. தாடகை. 73). பொருவதன்றி இனிச் செய்யக் கூடியது ஒன்றும் இன்றென்பான், 'செய்திறன் உண்டோ' என்றான். இச்செய்யுளின் முதல் மூன்றடிகளிற் கண்ட செய்தி, இராவணன் முன்னே உணர்ந்தவையே; ஒற்றர்களால் அச் செய்தி உறுதியாக்கப்பெற்றது. இராமபிரானின் வில்லினை உள்ளபடி இராவணன் இங்குக் கூறியது, வருணன்மீது அவன் செலுத்திய அம்பின் செய்தியை ஒற்றர் கூறக்கேட்டு, அந்த உணர்ச்சியுடன் கூறியதாகவும் கொளளலாம். இதுமுதல் நான்கு கவிகள் சேனை காவலன் கூற்று. விற்கை மானிடர் மகரநீரை நொய்தினில் அடைத்து என்பதுகொண்டு, செயற்கரும் செயல் அஃது என்று உணரப்படும். தானை தமிழ்ச் சொல்லாகக் காணப் பெறவில்லை; எனினும், புறநானூற்றிலேயே அச்சொல் காணப் படுகின்றது; இதனைச் சேனையென்ற சொல்லின் திரிபென்றும் பாரசிகத்தில் தாண் என்ற சொல் படையைக் குறிக்கும் என்றும் கூறுவர். சேனை காவலன் - பிரகத்தன். காவாளன் - காவலன்.

பி - ம். 1. மகர வேலை, மகா நீணீர்.
2. அடைத்த; மானத் தானையா னுவன்ற; நும்மூர்.
3. போதும், போழ்தும்.
4. உண்டோ வென்று; காப்பாளன், காவலவன்; சொன்னான். 66

இதுமுதல் இராமன் இலங்கைகாண் படலம், சேருபதிப் படலம் என்ற வேறு பெயர்கள் சில சுவடிகளிற் காணப்படுகின்றன.

752. விட்டனை மாதை யென்ற போதினும் வெருவி வேந்தன்
பட்டதென் றிகழ்வர் விண்ணோர் பற்றியிப் பகையைத் தீர
ஓட்டலாம் போரி னென்னா ரொட்டினு மும்பி யோட்டான்
கிட்டிய போது செய்வ தென்னினிக் கினத்தல் வேண்டும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'மாதை விட்டனே என்ற போதினும் - சீதையை விடுதலே செய்தனே என்ருலும், வேந்தன் வெருவி பட்டது என்று விண் ணோர் இகழ்வர் - இலங்கையரசன் அஞ்சித் தோற்ருன் என்று தேவர்கள் இகழ்வார்கள்; பற்றி - விடாமல், இ பகையை தீர போரின் ஒட்டலாம்-பகைவர் அழியப் பொருந்தி (நாம்) புரியக்கூடிய போரில் சமாதானம் செய்துகொள்ளலாம்; (அப்படி) ஒன்னுர் ஒட்டினும் - பகைவர்கள் சமாதானம்செய்ய இசைந்தாலும், உம்பி ஒட்டான் - உன் தமபி அங்ஙனம் செய்ய உடன்படான்; கிட்டிய போது - போர் கிட்டிய நெருக்கடியான இச்சந்தர்ப்பத்தில், இனி செய்வது என் - இனிப் புரிவது என்ன என்று, கிளத்தல் வேண் டும் - சொல்லுதல் வேண்டும்.

சீதையை விட்டுவிடின் இகழ்ச்சி வந்தடையும். பகைவரை எதிர்த்து முறியடிப்போம் என்னினும் அல்லது சமாதானஞ்செய்து கொள்வே மென்னினும் அவற்றிற்குத் தடைகள் நிகழும். உம்பி ஒட்டான்: மாயாசீதைப் படலத்துள் வண்டின துருவங்கொண்டு பிராட்டியைச் சென்றுகண்டு அவள் வலியள் என்றறிந்து பலர்க் கும் தேறுதல் அளித்ததும், நிகும்பலே வேள்வியின் பரம இரக சியங்களே வெளியிட்டு இலக்குவன் அந்த யாகத்தை அழிக்குமாறு செய்ததும் இங்கே குறிக்கொள்ளத்தகும். ஒட்டுதல் - நட்புச் செய்தல்; 'ஒட்டாரை யொட்டிக் கொளல்' (குறள். 679); பின், ஒட்டுதல் உடன்படுதல் என்ற பொருளிலும் வந்தது. கிட்டிய போது - அவர்கள் அண்மையில் வந்தபோது எனலும் ஆம். கிளத்தல் வேண்டும எனபது இங்கு ஆராய்ந்து பேசப்பட வேண்டும் என்ற பொருளில் வந்தது.

பி - ம். 1. விட்டனம்; போழ்தினும்; வேந்த.

2. பற்றியிப் பகையைத் தீர்வாம்.

3. ஒட்டின மெனினு மன்னு, ஒட்டலாம் பெரியோ யென்னு, ஒட்டலாங் கேளீரென்னு.

4. போதுவேறு செய்வதென்; கிளக்க; வேண்டாம். 67

753. ஆண்டுச்சென் றரிக ளோடு மனிதரை யமரிற் கொன்று
மீண்டுநம் மிருக்கை சேர்து மென்பது மேற்கொண் டேமே
ஈண்டுவந் திறுத்தா ரென்னு மீதலா துறுதி யுண்டோ
வேண்டிய தெய்தப் பெற்ருல் வெற்றியின் விழுமி தன்றே.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(கடற்கரையில் நமது பகைவர் தங்கினர் என்று கேட்ட பொழுதிலேயே), ஆண்டு சென்று - அவ்விடத்திலேயே போய், அரிகளோடு மனிதரை அமரில் கொன்று - குரங்குகளோடு மனிசரைப் போரில் கொன்று, மீண்டு - திரும்பவும், நம் இருக்கை சேர்தும் என்பது மேற்கொண்டேமே - நமது இருப்பிடத்திற்கு வந்து சேருவோம் என்ற செயலைக் கைக்கொண்டோமா? ஈண்டு வந்து இறுத்தார் என்னும் - நமது பகைவர் இவ்விடம் வந்து தங்கினர் என்று கூறப்படும், ஈது அலாது உறுதி உண்டோ - இதுவல்லாது (வேறு) உற்ற பொருள் உள்ளதோ? (நாம்), வேண்டியது எய்தப் பெற்றால் வெற்றியின் விழுமிது அன்றோ - நாம் விரும்பியதை அடையப்பெறின் அதுவே வெற்றியைக்காட்டிலும் சிறந்தது ஆகுமன்றோ?

நம் பகைவரை நோக்கிச் சென்று பொருது வெற்றி கொண்டோமில்லையே என்று கவலை வேண்டாம்; அவர்களே நம்மிடம் நோக்கி வந்துவிட்டனர், இனி வெல்வது எளிது என்றான்; (ஒப்பு): யுத்த. 341; திருக்குறளில் உள்ள காலமறிதல், இடனறிதல் என்ற அதிகாரங்கள் இங்கே ஒப்பு நோக்கத்தகும். ஆண்டு - 'முன் ஆலோசனை செய்தபோது, வானரர்கள் இருக்குமிடத்திற்குச் சென்று அவர்களைக் கொன்று திரும்புவதாக ஆராய்ந்தோமே' (இராவணன் மந்திரப். 27, 37, 41) என்று கூறியதாகவும் பொருள் கொள்ளலாம். இச்செய்யுளில் பகைஞன் இலங்கைக்குள் வந்தது நல்லது என்ற கருத்தைச் சேனை காவலன் கூறுகின்றான் என்க.

பி - ம். 1. மனிசரை.

2. கொண்டேமேல், கொண்டோமேல்.

3. இறுத்தா ரென்னில், என்றால்.

4. வேண்டுவது, வெற்றியில்.



754. ஆயிரம் வெள்ள மான அரக்கர்தந் தானை ஐய
தேயினு மூழி நூறு வேண்டுமால் சிறுமை யென்னே
நாயினம் சீயங் கண்ட தாமென நடப்ப தல்லால்
நீயுருத் தெதிர்ந்த போது குரங்கெதிர் நிற்ப துண்டோ.

(மேலும்), 'ஐய - ஐயனே! ஆயிரம் வெள்ளம் ஆன அரக்கர் தம் தானை - ஆயிரம் வெள்ளம் என்ற கணக்குள்ள அரக்கருடைய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சேனை, தேயினும் நூறு ஊழி வேண்டும் - (பகைவரால்) அழிவதானாலும் நூற்றுக்கணக்கான ஊழிக்காலங்கள் வேண்டும்; சிறுமை என்னோ - (அங்ஙனம் இருப்பவும் நமக்கு உண்டான) இகழ்ச்சி என்னவோ? (மேலும்) நீ உருத்து எதிர்ந்த போது - நீ வெகுண்டு பொருத காலத்து, நாய் இனம் சீயம் கண்டது ஆம் என - நாய்கள் ஓர் சிங்கத்தைக் கண்ணுற்றன என்னும்படி, (அந்தப் பகைவர் தொகுதி) நடப்பது அல்லால் - (அஞ்சி)ப் பின்வாங்குவதன்றி, குரங்கு எதிர் நிற்பது உண்டோ - குரங்குகள் உன்னை எதிர்த்து நிற்பதும் நிகழக் கூடிய காரியமா? (அன்று) ஆல் - அசை. ஓகாரம் - வினா.

முதலிரண்டடிகளில் சேனையின் பெருக்கினைக் கூறித் துயருறுவதற்குக் காரணம் ஏதும் இல்லை என்றான். நாயினம் சீயம் காண்டல்: ஒருவாறு ஒப்பு: 'மடங்க லேற்றுற் றுலைபுண்டு சாய்ந்து போன, கருக்கிளர் மேகமன்ன களிறு (யுத்த. நாகபாச. 285); 'மடங்கலின் முழக்கங் கேட்ட வான்கரி யொத்தார்' (யுத்த. நாகபாச. 284). 'சிங்கத்தின் நாதம் வந்து செவிப்புக விலங்கு சிந்தி' (யுத்த. பிரமாத்திர. 14); சீயம் - சிங்கம். கிட்கிந்தா. 567: 'முழையுட்டுஞ்சும் பொங்குளைச்சீயம்' (சுந்தர. 5); 'சீயமு மேறும் பாய்பரிப் புரவியும்' (பெருங். 1 : 42 : 85).

பி - ம். 1. வெள்ள மாய, உண்டு; வெள்ள மேலுமிரட்டி கொளரக்கர்தானை.
2. நூறு வேண்டுமே; என்னே.
4. நீயுருத் தெழுந்தபோது; போழ்து. 69

இங்கு இரண்டு அதிகப் பாடல்கள் :—

தானையந் தலைவ னீது சாற்றலும் தறுகண் வெம்போர்க்
கோனமுன் றுருத்து வீரம் குன்றிய மனித ரோடு
வானரக் குழுவை யெல்லாம் வயங்குமென் கரத்தின் வாளால்
ஊனறக் குறைப்பென் நாளை யொருகணப் பொழுதி
[லென்றான்.

மன்னவர் மன்னன் கூற மைந்தனும் வணங்கி ஐயா
என்னுடை யடிமை யேதும் பிழைத்ததோ இறைவ நீ போய்
மன்னிய மனித்த ரோடும் குரங்கொடு மலைவ னென்றால்
பின்னை யென் வீர மென்னும் என்றனன் பேச லுற்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


755. வந்தவர் தானை யோடு மறிந்துமாக் கடலில் வீழ்ந்து
சிந்தின ரிரிந்து போகச் சேனையும் யானுஞ் சென்று
வெந்தொழில் புரியு மாறு காணுதி விடையீ கென்னு
இந்திரன் முதுகு கண்ட விராவணற் கேயச் சொன்னுன்.

'வந்தவர் - (நம்மை எதிர்த்து) வந்தவர்கள், தானையோடு - தங்கள் சேனையுடனே, மறிந்து மா கடலில் வீழ்ந்து - திரும்பிப் பெரிய கடலில் வீழ்ந்து, சிந்தினர் இரிந்து போக - சிதறுண்டு நிலை கெட்டு ஓடும்படி, சேனையும் யானும் சென்று - சேனையும் யானும் போய், வெம் தொழில் புரியும் ஆறு - கடுமையான போர்த் தொழில்களைச் செய்யுமாறு, காணுதி - கண்ணுறுவாயாக; விடை ஈக - உத்தரவு தந்தருள்க', என்னு - என்று, இந்திரன் முதுகு கண்ட இராவணற்கு ஏய சொன்னுன் - இந்திரனைப் புறங் கொடுத்து ஓடும்படி புரிந்த இராவணனுக்கு ஏற்குமாறு (சேனைத் தலைவன்) பகர்ந்தான்.

வந்தவர்: இராம இலக்குவர். இந்திரர்: முற்றெச்சம். வெந்தொழில் என்றது போரினை. ஈக என்ன என்பது அகர வீறு தொகுத்து ஈகென்னு என நின்றது. 'ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்று' ஆகலின் இலங்கை மன்னனிடம் காவலாளன் வேண்டி யிரந்தான் என்க. இந்திரன் முதுகு கண்ட இராவணன்; ஆரணிய. 329. 'ஆயிரங் கண்ணவன் விண்ணினுேடே, வாளா லொறுத்தான். (ஆரணிய. 920); போரில் தோற்றவனைக் கூறும்போது முதுகு காட்டினன் என்றும், வென்றவனைக் கூறும்போது முதுகு கண் டான் என்றும், கூறுவது மரபு. 'தேரோ டவர்ப்புறங் காணே னுயின்' (புறநா. 71): இதன் முன்பு, பகைவர் நம்மூர்க்குப் போந் ததே நன்று என்றும், சேனை மிகுதி யாகலின் அவர்களை வெல்லுதல் எளிதென்றும் கூறிய சேனை காவலன் இப் பொழுது தானே பகைவரை எதிர்த்துச் செல்வதாக மொழிந் தான். முன்னுளில் படையெடுத்துச் சென்றே இராவணன் வெற்றி பெற்றவன் ஆகலின் இப்போரிலும் அவ்வாறு செய்தல் நன்று என்பான்' இந்திரன் முதுகு கண்ட இராவணற் கேயச் சொன் னுன்' எனப்பட்டது.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பி - ம். 1. மா கடலின், கடலுள்.

2. சிந்தியே யிரியல்; தேவருந் திகைப்ப யான்போய்.

3. விடைதா வென்ன, விடை ஈயென்ன, விரைவி லென்று.

4. எய்திச்; ஏய. 70

## மாலியவான் கூறத் தொடங்குதல்

756. மதிநெறி யறிவு சான்ற மாலிய வானல் வாய்மை
பொதுநெறி நிலைய தாகப் புணர்த்துதல் புலமை யென்று
வீதிநெறி நிலைய தாக விளம்புகின் றோரு மீண்டு
செதுநெறி நிலையி னுரே யென்பதுந் தெரியச் சொல்லும்.

மதி நெறி அறிவு சான்ற மாலியவான் - யாவராலும் நன்கு மதிக்கப்படுகின்ற சன்மார்க்கமும் தூய அறிவும் மிகுந்த மாலியவான் (இராவணனை நோக்கி), ' நல் வாய்மை - சிறந்த வார்த்தை, பொது நெறி நிலையது ஆக - பொதுவான வழியிலே நிலைத்திருப்பினும், புணர்த்துதல் புலமை என்று - (அதனை நமக்குப்) பொருந்தும்படி செய்வதே சிறந்த அறிவுத்திறன் ஆகும் என்று சொல்லி, விதி நெறி நிலையது ஆக - பகைவர் நம்மை நோக்கி வந்தது விதியின் வழியே நிற்றலை யுடையதாக, விளம்புகின்றோரும் - கூறுகின்ற பிரகத்தன் முதலானோரும், ஈண்டு - இப்பொழுது, செது நெறி நிலையினரே - கெட்டவழியில் நிலைத்து நிற்பவரே', என்பதும் - என்ற கருத்தினையும், தெரிய சொல்லும் - விளக்கமாகச் சொல்லத் தொடங்கினான்.

இதுமுதல் பத்துக் கவிகள் மாலியவான் கூற்று. மதி - இயற்கை யுணர்வு. நெறி - கற்றுணர்ந்த மார்க்கநெறி. அறிவு - பகுத்தறிவு அல்லது நுண்மாணுழைபுலம். வாய்மை - வாயின் தன்மை; அதாவது உண்மையே பேசுதல். இதனை மெய்யினது தன்மை என்பர் பரிமேலழகர், (குறள். 291) உரை; 'வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும், தீமை யிலாத சொலல்' (குறள் 291) என்றது காண்க. வாய்மை பொதுநெறி நிலையதாகப் புணர்த்துதல் என்ற ஓர் வதந்தி பொதுவாக வழங்கப்படினும் எனினுமாம். விதிநெறி நிலையதாக விளம்புகின்றோர் என்றது பிரகத்தன் கூறியது கருதி, 'தர்மைப் படுப்பதோர், விதிகொடுந்த விளைந்தது' (யுத்த. 737) என்றது காண்க. செதுநெறி - தீய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நெறி, கொல்லும் நெறி; கலித். மரு. 3:3; அகநா. 63:14, 373:4; புறநா. 269·9; தேவா. திருஞான. அப்பர். 5; திருவிசைப்பா. 17; சீவக. 1124; பெருங். 3·15·20; தணிகைப். திருநாட்டு. 110 என்பன வற்றால் கண்டுணர்க.

பி - ம். 1. மாலியவா னவ்வாய்மை.

2. நிலைமையாகப் புணர்த்துதல், நிலையாகத்தா னேவுதல்; பொது மெய், புலமைத் தென்று.

3. விதிநெறி நிலையவாக, நிலையினின்ற; விரர்மற் றிவரை யையா, விளம்புகின் றோர்கள் யாரும்.

4. நிலைய ரல்லர்; என்பது; தெரியச் செப்பும், செல்லச் சொல்லும், சொன்னான். 71

சில பிரதிகளின்படி இதனுடன் ஒற்றுக் கேள்விப் படலம் முடிகிறது.

757. பூசற்கு முயன்று நம்பாற் பொருதிரைப் புணரி வேலித்
தேசத்துக் கிறைவ னான தசரதன் சிறுவ னாக
மாசற்ற சோதி வெள்ளத் துச்சியின் வரம்பில் தோன்றும்
ஈசற்கு மீசன் வந்தா னென்பதோர் வார்த்தை யிட்டார்.

'மாசு அற்ற சோதி வெள்ளத்து - களங்கம் அற்ற ஒளிக் கற்றைகளை யுடைய, உச்சியின் வரம்பில் தோன்றும் - வானத்தின் உயர்ந்த இடத்து எல்லைக்கண் காணப்படுபவனாகி, ஈசற்கும் ஈசன்- தேவர்க்கும் தேவனான முழு முதற்கடவுளே, பொருதிரை புணரி வேலி தேசத்துக்கு இறைவன் ஆன தசரதன் - தரைமீது தாக்கு கின்ற அலைகள்மிக்க கடலினையே எல்லையாகவுடைய பூமிக்குத் தலைமகன் ஆன தயரதனுடைய, சிறுவன ஆக - புதல்வனாக, நம்பால் பூசற்கு முயன்று - நம்முடன் போர் புரிதற்கு முயன்று, வந்தான் - வந்துள்ளான், என்பதோர் வார்த்தை இட்டார் - என்ற ஓர் வார்த்தையைப் பலரும் பகர்கின்றார்கள்.

பொருதிரைப் புணரி...........தேசத்துக் கிறைவன்; 'செம் மாண் டனிக்கோ லுலகேழினும் செல்ல நின்றான்' (பால. அரசியற். 1); 'வையக முழுவதும் வறிஞ னோம்புமோர் செய்யெனக் காத்து' (பால. அரசியல். 12). புணரி - கடல். பல நதிகள் தன்னிடம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வந்து கலக்கும் இடம் என்பது காரணக்குறி; இ பெயர்விகுதி. தசரதன் என்பதற்குப் பத்துத் திக்கிலும் தன் தேரைச் செலுத்தி நின்றவன் என்பது பொருள் என்ப. இங்கு இராமபிரானைத் தசரதன் சிறுவன் என்று கூறப்பட்டது. முன்னர்க் கவிக்கூற்ருக அமைந்த 'இம்மாண் கதைக்கோ ரிறையாய இராம னென்னும் மொய்ம்மாண் கழலோற் றருநல்லற மூர்த்தி யன்னுன்' என்று இராமனை மகவாகப்பெற்ற சிறப்புடையவன என்பதும் நோக்கத் தகும். அகிலவுலகங்களையும் ஈன்று காத்தழிக்கும் அப்பனை ஸர்வேஸ்வரன் பரமசுலபனுய் அர்ச்சாவதாரம் ஏற்றுத் துட்டர் களை அழிக்கவும், சிட்டர்களைப் புரக்கவும் அவதரித்தான் என்பது தசரதன் சிறுவன் என்பதனுல் அறியலாம். 'மசரதமனையவர் வரமும்' எனத் தொடங்கும் பாட்டில், 'தசரதன் மதலையா வருதும் தாரணி' (பால. திருவவ. 42) என்று வந்துள்ளமை காண்க. இராவணுதிகளைப் பொருது வெல்வதற்கு இராமபிரானுக்கு எவ் விதமான முயற்சியும் தேவையில்லை; எனினும் இங்கு முயன்று என்பதற்குத் தேவ காரியமாக முயற்சிசெய்து என்பது பொரு ளாகக் கொள்க. மாசற்ற சோதிவெள்ளத் துச்சியின் வரம்பு என்றது, சோதிமயமான பரமாகாசம்; வெள்ளம் மிகுதி என்னும் பொருளது. கம்பர் மதம் இங்கும் அடுத்த செய்யுளிலும் வெளி யாவது காண்க.

பி - ம். 1. முயன்று நம்பாற் புகுந்தவள்; புணரி வேலை, யெல்லைத்.
2. தேசத்துக் கரசனுன, சிறுவன் தன்னை.
3. உச்சியின் வைகுகின்ற.
4. விட்டான். 72

758. அன்னவற் கிளவல் தன்னை யருமறை பரமென் ருேதும்
நன்னிலை நின்று தீரா நவையிலா வுயிர்க டோறும்
தொன்னிலை பிரிந்தா னென்னப் பலவகை நின்ற தூயோன்
இன்னணை யென்ன யாரு மியம்புவ ரேதி யாதோ.

'அன்னவற்கு இளவல் தன்னை - அந்த இராமபிரானுக்குத் தம்பியான இலக்குவனை, அருமறை - உணர்தற்கரிய வேதமானது, பரம் என்று ஓதும் - பரமென்று பகர்கின்ற, நல் நிலை நின்று - அந்தச் சிறந்த பதவியினின்று, தீரா - நீங்காது, நவையிலா தொல்நிலை பிரிந்தான் - குற்றமற்ற (தனது) பழமையான நிலையி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


னின்றும் விலகிவிட்டான், என்ன - என்று எண்ணும் வண்ணம், உயிர்கள்தோறும் - குற்றமற்ற பிராணிவர்க்கங்களில் எல்லாம், பலவகை நின்ற தூயோன் - பல்வேறு வகையாக உருவெடுத்து நிற்கின்ற அமலமூர்த்தியான திருமாலின், இன் அணை என்ன யாரும் இயம்புவர் - இனிய படுக்கையென்று பலரும் கூறுவர்; ஏது யாதோ - இதற்குக் காரணம் என்னவோ? ஓ - வினா.

இளவல் - இலக்குவன்; அல் பெயர்விகுதி. அருமறை - எளிதில் அறிந்து தேறற்கரிய வேதம். இரண்டு, மூன்றும் அடிகளில் பெருமானின் அவதாரம் கூறப்பட்டது. அவதாரம் என்ற வட சொல்லுக்குக் கீழே இறங்குதல் என்பது பொருள்; 'வானின் றிழிந்து' எனத்தொடங்கும் அயோத்தியா காண்டம், காப்புச் செய்யுளைக் காண்க. நன்னிலை - ஸ்ரீவைகுண்டத்தில் லக்ஷ்மீபதியாக வுள்ள நிலை. தீரா நின்ற நவையிலா நின்ற என இயைக்க. தீராது நவையிலாது என்பன ஈறு கெட்டதாகக் கொள்க. உயிர்கள் தோறும் என்றான் ஆன்மாக்கள் பல என்பது வைணவ சித்தாந்த மாகலின். பலவகை என்றது பெருமானது பல்வேறு அர்ச்சாவ தாரங்களைக் குறித்து நின்றது. உயிர்கடோறும் பலவகை நின்ற என்பதற்குப் 'போகமாகவும் போகியாகவும் யோகியாகவும், ஏகமாய் நின்ற தத்துவ மறைக்கும் எட்டுதற் கரியனாய் நிற்கும்நிலை எனினுமாம்' (வி. பா. அருச். தவநிலைச். 78) காண்க. இனி, நவையிலா உயிர்கள் எனவேகொண்டு அநாதி யான ஆன்மாக்கள் இயற்கையாகத் தூய்மையுடையன என்பதும், பின்னர்க் கன்மவயத்தால் பல நவைகட்குள்ளாவன என் பதும் ஊகித்துணரப்படும். இறைவன் தூயவுடம்பினனாத லானும், இயல்பாகவே பாசங்களின் நீங்கினவன் என்பதுபற்றியும் தூயோன் எனப்பட்டான்; 'வினையின் நீங்கி விளங்கிய அறிவன்' (தொல். மரபி. 83) என்றது காண்க. தூயோன் இன் அணை - ஆதிசேடனாகிய பாயல்; 'சென்றாற் குடையா மிருந்தாற் சிங்கா தனமாம்............என்றும், அணையாந் திருமாற் கரவு' (முதல்திரு. 53) என்றது காண்க. யாரும் என்பது அறிந்தோர் பலரும் என்ற பொருளது. ஹேது என்ற வடசொல் ஏது என நின்றது. பெரு மான் பலவாக உருவெடுப்பினும் தனது பரத்வத்தினின்று நீங்குவ தில்லை என்பதும் எவ்விதமான கருமபந்தமும் அவனைச் சார்வ தில்லை என்பதும், அவன்தன் இச்சையினாலேயே இவ்வுருவத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


திருமேனிகளை ஏற்பன் என்றும் நூல்கள் கூறும் ' அஜாய மானோ பஹுதா விஜாயதே' (புருஷ சூக்தம்.) ; 'பிறப்பில் பல்பிறவிப் பெம்மான்' என்பன காண்க. உயிர்கள்தோறும் உறைந்திடினும் அவற்றின் தன்மை தனக்கெய்தலின்றி, நிலவுசீர் அமல னாகி ' (சித்தியார். 2 : 1) என்பது 'நவையிலாது நின்ற' என்ற தொடரால் விளங்கும்.

பி - ம். 1. இளையான் றன்னை ; அருநெறிப் பாம்பென் றேதும், பரன்.

2. நின்று நீர்ந்து ; நவையறு பொருள்கடோறும்.

3. தொன்னிலை பரனே யென்ன ; நின்று, நிறைந்த ; சுடரொளி யாய தூயோன்.

4. இன்னண மெவரும் கேட்ப, என்றுமி தெவரும் கேட்ப, இன்னவ னருள யாரும் ; விளம்புவது. 73

759. அவ்வமர்க் கமைந்த வில்லுங் குலவரை யவற்றி னான்ற
வெவ்வலி வேறு வாங்கி விரிஞ்சனே விதித்த மேனாள்
செவ்வழி நாணுஞ் சேடன் றெரிகணை யாகச் சேர்த்திக்
கவ்வையில் கால நேமிக் கணக்கையுங் கடந்த தென்பார்.

'அ அமர்க்கு அமைந்த வில்லும் - அந்த (இராமபிரான்) போர்புரிதற்குப் பொருந்திய வில்லும், குலவரை அவற்றின் ஆன்ற - குலமலைகளின்கண் உள்ள, வெவ்வலி - கடுமையான வலிமையை, வேறு வாங்கி - பிரித்து எடுத்து, மேனாள் விரிஞ்சனே விதித்த - முன்னாளில் பிரமதேவனே நிருமாணம் செய்ததாகும்; செ வழி நாணும் சேடன் - (அந்த வில்லுக்கு) நேர்மையாக அமையப்பெற்ற நாண்கயிறும் ஆதிசேடன்; தெரிகணை யாக சேர்த்தி - (அந்த வில்லில்) ஆய்ந்து எடுத்த அம்பாக இணைக்கப் பட்டு, கவ் அயில் - கவ்வும் தன்மையுள்ள கூரிய முனையும், காலம் நேமி - காலச் சக்கரத்தின், கணக்கையும் - கணிக்கக்கூடிய தன்மையையும், கடந்தது என்பார் - மீறியது என்று மொழிவர்.

காலநேமிக் கணக்கு என்றது காலச்சக்கரம் இடையீடின்றிச் சுழல்வதுபோன்று கணையும் செல்லும் என்பது குறித்து என்க. காலநேமி - பகைவர்களைத் தவறாது அழிக்கவல்ல திருமாலின்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஆழிப்படையுமாம். 'வில், சகல மலைகளின் பலன்கள் கூட்டிப் பிரமன் செய்தது; நாண் - சேடன்; அம்பு, காலநேமி ஒத்தது' என்பது பழையவுரை.

பி - ம். 1. அவ்வவர்க்கு.
2. வீதிக்க மேனுள்.
3. தெரிகலை யாகச் செய்த.
4. கவ்வையில் என்னு : கடக்கத் தானே ; என்ருர். 74

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

இந்திரன் செம்மல் தம்பி யாவரும் எவரும் போற்றும்
சந்திரன் பதத்து முன்னேன் என்றனர் சமரை வேட்டு
வந்தனர் நமது கொற்றம் வஞ்சகம் கடப்ப தென்னும்
சுந்தர னவனு மின்னேன் என்பதுந் தெரியச் சொன்னன்.

760. வாலிமா மகன்வந் தானே வானவர்க் கிறைவ னென்ருர்
நீலனே யுலக முண்ணும் நெருப்பினுக் கரச னென்ருர்
காலனே யொக்குந் தூதன் காலுங்கண் ணுதலு மென்ருர்
மேலுமொன் றுரைத்தா ரன்னுன் விரிஞ்சனு மினிமே
[லென்ருர்.

'மா வாலி மகன் வந்தானே - பெருமைசான்ற வாலியின் மகனுகப் பிறந்த அங்கதனே, வானவர்க்கு இறைவன் என்ருர் - தேவர்கட்குத் தலைவன் ஆன இந்திரன் என்ருர்கள்; நீலனே உலகம் உண்ணும் நெருப்பினுக்கு அரசன் என்ருர் - நீலனே (ஊழிக்காலத்தில் உலகனைத்தையும்) உட்கொள்ளும் அக்கினிக் கடவுள் என்ருர்கள்; காலனே ஒக்கும் தூதன் காலும் கண்ணுதலும் என்ருர் - (பராக்கிரமத்தால்) யமனை நிகர்த்து விளங்கும் தூதனுகிய அநுமனை வாயுவின் அமிசமும் நெற்றிக்கண்ணை யுடைய சிவபெருமானின் அமிசமும் ஒருங்கே வாய்க்கப்பெற்றவன் என்ருர்கள்; மேலும் ஒன்று உரைத்தார் - மற்றும் அவனைக் குறித்து ஒன்று மொழிந்தார்கள்; அன்னுன் இனிமேல் விரிஞ்சன் ஆம் என்ருர் - அவ்வநுமன் இனி நிகழும் பிறப்பில் பிரமதேவனே என்றும் பகர்ந்தனர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வாலி மாமகன் - அங்கதன். வாலி, இந்திரன் மகன்; 'தரு வுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவா னெனதுகூறு, மருவலர்க் கசனியன்ன வாலியு மகனு மென்ன' (பால. திருவவ. 27) என்றது காண்க. நீலன்: அக்கினியின் குமாரன ஆதலின் உலகம் உண்ணும் நெருப்பினுக் கரசன் எனப்பட்டது. உலகம் உண்ணும் நெருப்பு வடவைத்தீ என்பர்; 'நீல னின்றவன் நெருப்பின் மகன்' (யுத்த. 824); 'மூலம்வந் துலகை யுண்ணு முருத்திர மூர்த்தி யென்ன, நீலன்' (யுத்த. நாகபாசப். 54); 'அரியுமற் றெனது கூறு நீலனென் றறைந்திட் டானல்' (பால. திருவவ. 27) என்றமை காண்க. காலனையொக்கும் தூதன் காலுங் கண் ணுதலும்: அநுமன் வாயுவின்கூறும் சிவபிரான்கூறும் கொண்டு தோன்றியவன் என்பது; 'வாயுமற் றெனது கூறு மாருதி' (பால. திருவவ. 28); 'புராரி மற்றியானே வாத சேயெனப் புகன்றான்' (பால. திருவவ. 28); 'மருத்தின் காதலன்' (யுத்த. வேலேற்ற. 40); 'வாயு குமாரன்' சுந்தர. 56, 57, 197, 517, 519 என்பன காண்க. 'சூலமேய் தடக்கை யண்ண லுனுமோர் குரங்காய்த் தோன்றி' (யுத்த. 77). அன்னான் விரிஞ்சனு மினிமே லென்றார்; யுத்த. 529. 'இலங்கை நகரி லெரியூட்டி, மன்ன னிராமன் மனமுவப்ப வயவா ளரக்கர் குலமறுத்துப், பின்னை யவன்றன் பேரருளாற் பிரம பதமும் பெறுகென்றான்' (உத்தர. அநுமப். 40).

பி - ம். 2. நெருப்பினுக் கரசென் றார்கள்.
2. காலனே; காற்றெனும் கடவு ளென்றார்.

761. அப்பத மவனுக் கீந்தா
னரக்கர்வே ரறுப்ப தாக
இப்பதி யெய்தி னனவ்
விராமனென் றெவருஞ் சொன்னார்
ஒப்பின லுரைக்கின் றாரோ
வுண்மையே வுணர்த்தி னாரோ
செப்பியென் குரங்காய் வந்தார்
தனித்தனித் தேவ ரென்றார்.

'அ பதம் அவனுக்கு ஈந்தான் அ இராமன் - அந்தப் பிரம பதத்தை அந்த அநுமனுக்கு அளித்தவன் ஆன அந்த இராம பிரான், அரக்கர் வேர் அறுப்பதாக - அரக்கரை வேருடன் ஒழிப்ப

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தாக, இப்பதி எய்தினன் என்று எவரும் சொன்னர் - இந்த நகரத்தை அடைந்துள்ளான் என்று பலரும் பகர்ந்தார்கள்; குரங்காய் வந்தார் தனி தனி தேவர் என்ருர் - வானரங்களாக வந்துள்ளார் (எல்லோரும்) தனித்தனி தேவர் ஆவர் என்ருர்; ஒப்பினல் உரைக்கின்ருரோ - (இவ்வாறு சொல்லும் உலகமக்கள்) ஏதோ ஒப்புமைபற்றி மொழிகின்ருரோ? உண்மையே உணர்த்தினரோ - உண்மையைக் கண்டறிந்தே அறிவுறுத்தி நிற்கின்ருரோ? செப்பி என் - (அதைக்குறித்துச்) சொல்லி என்ன? ஓகாரம் - ஐயப்பொருள், வினவுமாம்.

அப்பத மவனுக் கீந்தான்: அப்பதம் - பிரமபதம்; இதனை அநுமனுக் களித்தவன் பிரமன் என்று உத்தரகாண்டம் அநுமப் படலம் 40 கூறும். இங்கு அவனுக் கீந்தவன் இராம்பிரான் எனப்பட்டது; (யுத்த. 529) காண்க. இப்பதி - இலங்கைமாநகர். குரங்காய் வந்தார் தனித்தனித் தேவர்; 'வானுளோ ரனைவரும் வானரங்களா' (பால. திருவவ. 21); மற்றும், பால. திருவவ. 26—29 பார்க்க. 'ஒப்பினி லுரைக்கின்ருரோ என்றது, எல்லோரும் கூடிக் கபடமாகச் சொல்கின்ருரோ? தெரியாது' என்பது பழையவுரை. ஒப்பு - கபடம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. மற்றும், 'வானராணும் நராணுஞ்ச கதமாசித் சமாகமம்' என்றபடி இராம இலக்குவரையும் அவருடன் வந்த வானர கோடிகளையும் ஒருங்கே கண்டு, அரக்கர் குலத்தை அழிக்கவருவதாகச் சொல்லப்படும் தேவர்களே இவர்கள் என்று ஒப்புமைபற்றிக் கூறுகின்ருரோ என்பது கருத்து.

பி - ம். 1. ஈய்ந்தான்.
2. யெய்தி நின்ற.
3. ஒப்பினியுரை, ஒப்பினிலுரை.
4. தேவர் நின்ருர். 76

762. ஆயது தெரிந்தோ தங்க ளச்சமோ அறிவோ யார்க்கும்
சேயவ ளெளிய ளென்னுச் சீதையை யிகழ லம்மா
தூயவ ளமிர்தி னேடுந் தோன்றின ளென்றும் தோவ்ருத்
தாயவ ளுலகுக் கெல்லா மென்பதுஞ் சாற்று கின்ருர்.

(இங்ஙனம் உலகத்தார் பகர்வது, 'ஆயது தெரிந்தோ - உண்மையை உணர்ந்துதானே? (அல்லது), தங்கள் அச்சமோ -


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தங்களுடைய பயத்தினுலோ? அறிவோ - (அன்றித் தமது) அறிவினுல் அறிந்து சொல்வதோ? (எவ்வாறிருப்பினும் சரி), தூயவள் அமிர்தினேடும் தோன்றினுள் - தூய்மையான இயல்பு வாய்க்கப் பெற்ற சீதாப்பிராட்டி அமுதத்துடன் எழுந்த திருமகளே என்பதும், உலகுக்கு எல்லாம் - உலகத்திலுள்ள சராசரங்கட்கெல்லாம், என்றும் தோன்ரு - எக்காலத்தும் தன் தன்மை இன்னதென்று உணரப்படாத, தாயவள் என்பதும் சாற்றுகின்ருர் - தாயாவள் என்றும் உரைக்கின்றனர்; (ஆகவே), யார்க்கும் சேயவள் எளியள் என்ன சீதையை இகழல் - எல்லோர்க்கும் சேய்மையிலுள்ளவளான அச்சீதையை எளியவளாயுள்ளாள் என்று இகழாதே, (நான் சொல்வதைக் கேட்பாயாக). அம்மா - வியப்பிடைச்சொல்.

ஆயது: மேற்கண்டவாறு உலகத்தறிஞர் கூறுவது உண்மையுணர்ந்தோ பயத்தினுலோ அன்றி அறிவினுல் ஆய்ந்தோ அறிகிலேன் என்ருன். சேயவள் - சீதாதேவி; சேயவள் என்பதற்குச் செம்மையானவள் என்றும் பொருள் கொள்வர். அம்மா, அம்ம என்பது செய்யுள் நோக்கி நீண்டது எனினுமாம். 'அம்ம கேட்பிக்கும்' என்பது, (தொல். இடை. 28). தூயவள் அமிர்தி ைேடுந் தோன்றினுள்: 'அமிழ்தின் வந்த தேவியை' (கிட்கிந்தா. 307); 'ஆயிடை யமுதின் வந்த வருந்ததிக் கற்பின்' (ஆரணிய. 284); 'அமுதின் வந்தீர்' (யுந்த. மாயாசனக. 10); (ஒப்பு): 'கடலன்றி, யன்றம் மாடத் தும்ப ரளிக்கு மமுதன்னுள்' (பால. மிதிலைக். 26). அமிர்தினேடும் தோன்றினுள் என்பது கொண்டும், தோன்ருத் தாயவள் என்பது கொண்டும் பிராட்டி தெய்வப்பிறவி யென்பதும், கருவாய்ப்பட்டுப் பிறவாதவள் என்றுமுணரலாம். ஆயது சாற்றுகின்ருர் என்றும் இயைக்கலாம். 'இந்தக்கவி விற்பூட்டு' என்பது பழையவுரை. முன் செய்யுளில் இராமபிரான், வானரர்கள் இவர்களின் தெய்வாமிசத்தைப்பற்றிக் கூறி, அஃது ஒப்புக்கொள்ளத் தக்கதன்ருயினும், பிராட்டியின் தெய்வாமிசத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதை இங்கு மாலியவான் வற்புறுத்துகின்ருன். வீரனுன இராமனைத் தெய்வமென்பது அச்சத்தால் ஆகலாம்; ஆனுல், எளியளான பிராட்டியை அவ்வாறு கொள்வது உண்மையறிந்தவர்க்கே ஆகும் என்பது இங்குக் கூறப்பெற்றது. பிராட்டி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உலகுக்கெல்லாம் தாய்; இப்படலம் 18-ஆம் செய்யுள் உரையிற் காண்க.

பி - ம். 2. என்னுச் சிந்தையில்; சிதையென்று; சேயவ ளடைந்தோர்க் கென் றுஞ் சிந்தையள் செப்பி னுள்ளம்.

77

763. கானிடை வந்த வாறும்
வானவர் கடாவ வேயாம்
மீனுடை யகழி வேலை
விலங்கன்மே லிலங்கை வேந்தன்
தானுடை வரத்தை யெண்ணித்
தருமத்தின் தலைவர் தாமே
மானுட வடிவங் கொண்டா
ரென்பதோர் வார்த்தை யிட்டார்.

'கான் இடை வந்த ஆறும் - (அந்த இராமபிரான்) காட்டிற்கு வந்த விதமும், வானவர் கடாவவே யாம் - தேவர்கள் வேண்டிச் செலுத்தியதனாலேயாம்; மீன் உடை வேலை அகழி - மீனுடைய கடலை அகழியாக ஏற்றதும், விலங்கல் மேல் - திரிகோண மலையின் மீது இருப்பதும் ஆன, இலங்கை வேந்தன் - இலங்கை நகர்க்குத் தலைவனான இராவணன், தான் உடை வரத்தை எண்ணி - தான் அடைந்துள்ள வரத்தை நினைந்து, தருமத்தின் தலைவர் தாமே - அறத்தின் தலைமைபூண்டவரான திருமால் தாமே, மானுட வடிவம் கொண்டார் என்பதோர் வார்த்தை இட்டார் - மானுட வடிவம் ஏற்றார் என்பதான ஓர் வார்த்தையும் சொன்னார்கள்.

கானிடை வந்தவாறும் வானவர் கடாவ: ஆரணிய. 230, 781; 'அண்டா வையா வெங்கள் பொருட்டா லயர்கின்றாய்' (யுத்த. பிரமாத்திர. 222)-ம், இதனை அடுத்த செய்யுட்களும், மூலபல. 72-ம் காண்க. வானவர் கடாவ; பால. திருவவ. 17—30 பார்க்க. மீனுடை யகழி - இயற்கையடை. விலங்கல் மேலிலங்கை - எதுகை நயம் காண்க. கடல் இலங்கையின் அகழி; சுந்தர. 157. முதலில் வரம் கேட்டபோது. மனிதரை ஒருபொருட்டாக எண்ணவில்லை இராவணன்; இதனைக் 'கூறிய மனிதர்பால் கொற்றங் கொள்ளலை' (யுத்த. மந்திரப். 78) என்றதனாற் காண்க. இந்த வரத்தின் விவரத்தை, உத்தரகாண்டத்து இராவணன் பிறப்புப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


படலத்து 27—29 செய்யுட்களிற் காண்க. தருமத்தின் தலைவர் - இராம இலக்குவர்; 'அறத்தி ஞயகன்' (சுந்தர. 639); மற்றும், சுந்தர. 363, 1120, 1123; கிட்கிந்தா. 175, 186; அயோத்தி. 37; யுத்த. கும்ப. 149. மானுட வடிவங் கொண்டார் 'வானின் றிழிந்து' (அயோத்தி. காப்பு.) காண்க. இங்குக் கிட்கிந்தா காண்டத்து இராம இலக்குவரைக் கண்டு அநுமன் கருதியவற்றை ஒப்புநோக்குக.

பி - ம். 1. கானிடை வந்த தேயும்; கடவ வேயாம், கடாவ வேயால்.
2. வேலை யிலங்கைமேல்.
3. தனித்தனித் தலைவர்.
4. மானிடர் வடிவு.

78

764. ஆயிர முற்பா தங்க
ளீங்குள வடுத்த வென்றூர்
தாயினு முயிர்க்கு நல்லா
ளிருந்துழி யறியத் தக்கோன்
ஏயின தூத னெற்றப்
பற்றுவிட் டிலங்கைத் தெய்வம்
போயின தென்றுஞ் சொன்னூர்
புகுந்தது போரு மென்றூர்.

'ஈங்கு உள - இந்த இலங்கா நகரத்திலே உள்ளனவாக, ஆயிரம் உற்பாதங்கள் அடுத்த என்றூர் - ஆயிரக்கணக்கான கெட்ட சகுனங்கள் இடைவிடாது நிகழ்ந்துள்ளன என்றூர்கள்; தாயினும் உயிர்க்கு நல்லாள் - அன்னையைக் காட்டிலும் பிராணிகளிடம் நன்மை புரிபவளான சீதை, இருந்த உழி அறிய தக்கோன் - இருந்த இடத்தை அறிந்து வர மேலோனுகிய இராமபிரான், ஏயின தூதன் எற்ற - ஏவிய தூதனை அநுமன் தாக்கியதனல், இலங்கை தெய்வம் பற்றுவிட்டு போயினது என்றும் - சொன்னூர் - இந்த இலங்காபுரித் தெய்வம் (இந்த நகரத்திலே) மனம் பற்றுதலை விடுத்துச் சென்றதென்றும் மொழிந்தார்; போரும் புகுந்தது என்றூர் - சண்டையும் நேர்ந்துள்ளது என்றும் பேசிக் கொண்டார்கள்.

ஆயிரம் என்பது பலவென்ற பொருளில் வந்தது. 'ஒரு நாள் எழு நாள் போற் செல்லும்' (குறள். 1269); என்ற இடத்து எழு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நாள் பல நாள் என்றது போல. உற்பாதம் - கெட்ட அறிகுறி ; ‘ உற்பாதமாகப் படியிடை யற்றுவீழ்ந்த தோகை ’ (பால. தாடகை. 74) : ‘ தூம கேதுக்கள் ; எட்டுத் திக்கிலும் உற்பாத காலங்களில் தோன்றக் கூடியன அவை ’ (ருக்க. 457 உரைக் குறிப்பு ; ‘ சொலத் தகாத் துன்னிமித்தங்க ளெங்கணும் வரத் தொடர்வ’ (யுத்த. 106). என்று வீடணன் முன் அறிவித்ததும் காண்க.

இலங்கைத் தெய்வம் - இலங்கைமாதேவி ; இவள் வரலாற்றினைச் சுந்தர காண்டம் 187 - 190-ம் செய்யுட்களிற் காண்க. ‘ முரண்வலிக் குரங்கொன் றுன்னைக், கைத்தலந் தன்னாற் றீண்டிக் காய்ந்தவன் றென்னைக் காண்டி, சித்திர நகரம் பின்னைச் சிதைவது திண்ணம் என்றான். (சுந்தர. 189) என்பது இங்குக் காணத்தகும். தக்கோன் - இராமபிரான்.

பி - ம். 1. இங்குள தடுத்தது.

2. அறிந்து தக்கோன் ; தக்கான்.

3. இலங்கைச் செல்வம்.

4. போயினதென்று ; போரு மென்பார். 79

765. அம்பினுக் கிலக்க மாவா
ரரசொடு மரக்க ரென்ன
நம்பரத் தடங்கு மெய்ய
னாவினிற் பொய்யி லாதான்
உம்பர்மந் திரிக்கு மேலா
வொருமுழ முயர்ந்த ஞானத்
தம்பியே சாற்றிப் போனா
னென்பதுஞ் சமையச் சொன்னார்.

‘ நம் பரத்து அடங்கும் மெய்யன் - நம் சார்பில் அடங்கியுள்ள சத்தியவானும், நாவினில் பொய்யிலாதான் - நாக்கினால் பொய் கூறாதவனும், உம்பர் மந்திரிக்கு மேலா - தேவர் அமைச்சனை பிரகற்பதியைக் காட்டிலும், ஒரு முழம் உயர்ந்த ஞானம் தம்பியே - ஒரு முழம் மேலோங்கிய அறிவு சான்ற தம்பியான வீடணனே. ‘ அம்பினுக்கு இலக்கம் ஆவார் - இராமபிரான் கணைக்கு இலக்காகப் போகின்றவர்கள், அரசொடும் அரக்கர் என்ன - இலங்கை வேந்தனான இராவணனும், அவனுடன் சேர்ந்த அரக்கர்களும்’

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்று, சாற்றி போனர் என்பதும் சமைய சொன்னர் - சொல்லிச் சென்றுன் என்ற செய்தியையும் செம்மையாக மொழிந்தனர்.'

வீடணன் இவ்வாறு கூறிப்போனது, இரணியன்வதைப்படலம் 176. மெய்யன் என்றுலே அமையும்; நாவினிற் பொய்யிலாதான் என மீட்டும் கூறிச் சிறப்பித்தது அவனது மனமொழி காயங்களின் தூய்மை விளக்க வென்க. உண்மை வாய்மை மெய்ம்மை என்ற மூன்று சொற்களில் உண்மை உள்ளத்தின் தூய்மையையும், வாய்மை வாயின் தன்மையையும், மெய்ம்மை, உடலின் தன்மை யையும் குறிக்கும்; இதற்கேற்பவே நாவினிற் பொய்யிலாதான் எனப்பட்டது. உம்பர் மந்திரிக்கு மேலர மொரு முழ முயர்ந்த வீடணன்; 'மேதாவிகட் கெல்லாம் மேலான மேன்மையான்' (இரணியன். 176) ஞானத்தம்பி; 'கல்விக்கண் மிக்கோன்' (யுத்த. 714); 'மூதுணர்வின் மிக்கான் மதிவீடணன்' (யுத்த. அதிகாயன். 87); முன் செய்யுட்களில் என்றுர் என்று சொல்லி வந்து இங்குத் தம்பியே சாற்றிப் போனன் எனத் தேற்றேகாரம் தந்து கூறியது பின்வரும் கெடுதிகளை உறுதிசெய்வதற்கு என்க. உம்பர் மந்திரி - தேவகுருவான பிரகஸ்பதி. 'இந்த இலங்கை, இராவணன், எல் லாரும் பெருமாள் அம்பினுலே அழிவர் என்று சோதிடம் பார்த்து முன் சொல்லிக் கொண்டிருந்தா னென்றும் சொன்னர்' என்பது பழையவுரை.

பி - ம். 1. இலக்கும்; என்றுன், என்றுர்.

2. நடங்கு மென்னு.

3. மேலாம், மேலாய்; நெறியறிந்த.

4. என்பது; சாரச் சொன்னர், சமையச் சொல்லும், சமையச் சொன்னுன்.

766. ஈதெலா முணர்ந்தே னுயு மென்குல மிறுதி யுற்றது
ஆதியி லிவனு லென்றும் முன்றன்மே லன்பி னுலும்
வேதனை நெஞ்சி னெய்த வெம்பியான் விளைவ
[சொன்னேன்
சீதையை விடுதி யாயின் தீருமிச் சிறுமை யென்றுன்.

'ஈது எலாம் உணர்ந்தேன் ஆயும் - மேற்கூறிய அனைத்தும் நான் அறிந்திருத்தலாலும், என் குலம் ஆதியில் இறுதி உற்றது - என்னுடைய அரக்கர் குலம் முன்னர் அழிவுற்றது,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இவனால் என்றும் - இந்தத் திருமாலினால் தான் என்றகாரணத்தாலும், உன் தன்மேல் அன்பினாலும் - உன்பால் எனக்குள்ள அன்பு காரணமாகவும், நெஞ்சின் வேதனை எய்த - என் மனத்தில் வருத்தம் ஏற்பட, வெம்பியான் வினைவ சொன்னேன் - மனம் கொதித்து (இனி) நிகழக் கூடிய செய்திகளை எடுத்துரைத்தேன்! சீதையை விடுதி ஆயின் இ சிறுமை தீரும் - சீதையைச் சிறைவீடு செய்வாயாகில் (உனக்கு நேரக்கூடிய) இந்தத் துன்பம் விலகும்' என்றான் - என்று கூறி முடித்தான் மாலியவான்.

மாலியவான் தன் கூற்றுக்கு மூன்று காரணங்கள் கூறுகின்றான். என்குலம் இறுதி யுற்றது; குலத்தின் வரலாறு. அரக்கர் குலத்துப் பிறந்தவன் ஹேதி; அவன் மகன் வித்யுகேசன்; அவன் மனைவி சாலகடங்கடை; அவன் மகன் சுகேசன். இந்தச் சுகேசனுக்கு தேவவதி என்னும் மனைவிபால் தோன்றிய மக்கள் மாலியவான், சுமாலி, மாலி என்ற மூவர். இம்மூவரும் பிரமனிடம் வரம்பெற்று இலங்கையை யடைந்து, மிக்க செருக்குடன் வாழ்ந்து பலர்க்கும் இடர் செய்தனர். இத்துன்பங்களைப் பொறுத தேவர் திருமாலிடம் சென்று முறையிட்டார்கள்; அப்பெருமான் அவர்கள் பொருட்டாக அரக்கர்களைப் பொருது மாலியைக் கொன்றார். அதுகண்டு அஞ்சி மாலியவானும், சுமாலியும் பாதலம் புக்கு ஒளிந்தனர். பின்னர், இராவணன் குபேரனைத் துரத்தி விட்டு இலங்கை மன்னனாக வந்தபோது மீட்டும் மாலியவான் முதலானவர்கள் இலங்கையிற் குடியேறினர். இறுதி யுற்றது ஆதியில் இவனால் என்றது திருமாலினால் என்க. ஆதியில் இவனால் எனக்கூட்டி, மூலமும் ஈறுமில்லா இத்திருமாலால் எனினுமாம். ஆதியின்றாகவே அந்தமும் இன்றாம் என்க. விடுதியாயின் தீருமித் தீமை: சீதையை விட்டுவிடுமாறு இராவணனுக்கு நல்லுரை கூறினவர் பலர். மாரீசன்கூற்று (ஆரணிய. 731). 'தேவியை விடுக வன்றேற் செருக்களத் தெதிர்ந்து தன்னின், ஆவியை விடுதி யென்றான்' (யுத்த. அங்கத. 31) என்பது இராகவன் கூறியதாக அங்கதன் இராவணனிடம் கூறியது. 'தேவியை விடுதியாயின் திறலது தீருமன்றே, ஆவியை விடுத லன்றி யல்லதொன் றுவதுண்டோ' (யுத்த. கும்ப. 38) என்பது மாலியவான் இலங்கேசனிடம் கூறியது. 'திட்டிவிடமன்ன கற்பின் செல்வியை, விட்டிலை யோவிது விதியின்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வன்மையே' (யுத்த. கும்ப. 80) என்பது கும்பகன்னன் கூற்று. 'ஆசைதானச் சீதைபால் விடுதி யாயின் னன்னவர் சீற்றந் தீர்வர்' (யுத்த. இந்திரசித்துவதை. 6) என்பது சொந்த மகன் இந்திரசித்தின் நல்லுரை. 'சானகியை மனச்சிறையிற் கரந்த காதல் உள்ளிருக்கு மெனக்கருதி யுடற்புகுந்து தடவியதோ வொருவன் வாளி' (யுத்த. இராவணன்வதை. 239) என்பது வண்டோதரி கூறியது; (ஒப்பு): உன்றன்மே லன்பினாலும்: 'உன்மேற் காதலாலுரைத்தே னென்றான் உலகெலாம் கலக்கி வென்றான்' (யுத்த. இராவணன்வதை. 239); வினைவ சொன்னேன் என்பது கொண்டு மாலியவானைத் தீர்க்கதரிசி என்னலாம். இராமபிரான் அவதாரத் தத்துவத்தை ஆசிரியர் மாலியவான் கூற்றாக இங்கு விளக்கிக் கூறுவது காண்க. 'ஈதெலா.................இவனால்' என்றது, முன் மாலியைக் கொன்றபோது நானும் சுமாலியும் ஒளித்துப் போனபின் நாங்கள் கூடின இந்த இலங்கையும் பறிபட்டுப்போகச் செய்தவனாகையினாலே இது அறிந்து சொன்னேன் என்பது மாலியவான் வாக்கியம்.

பி - ம். 1. ஆயின், யானும்.
2. ஆதியி லவனால்; உன்கண்மே லன்பினாலும், அன்புனக் குடைமையாலும், அன்புனக் குண்மையானும்.
3. நெஞ்சி னெய்தி; வெதும்பியான் வினைவைச் சொன்னேன், விளம்பினேன் வேண்டியீண்டு, விளங்கச் சொன்னேன்.
4. தீருமித் தீமை யென்றான். 81

## இராவணன் விடை

767. மற்றெலா நிற்க வந்த
மனிதர்வா னரங்கள் வானின்
இற்றைநா ளளவு நின்ற
விமையவ ரென்னுந் தன்மை
சொற்றவா றன்றி யேயுந்
தோற்றிநீ யென்றுஞ் சொன்னாய்
கற்றவா நன்று போவென்
றினையன கழற லுற்றான்.

'மற்று எலாம் நிற்க - (நீ கூறியவைகளில்) ஏனையவைகள் ஒருபுறம் இருக்கட்டும்; வந்த -(இப்போது வந்துள்ள), மனிதர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வானரங்கள் - மனிதரும் வானரங்களும், வானின் - விண்ணிடத்தே, இற்றை நாள் அளவும் - இந்நாள் வரையிலும், நின்ற - (என்னை ஒன்றும் செய்யக்கூடாமல்) இருந்த, இமையவர் என்னும் தன்மை - தேவர்கள் என்ற செய்தியை, சொற்ற ஆறு அன்றி ஏயும் - சொன்ன முறை அல்லாமலும், நீ தோற்றி என்றும் சொன்னய் - நீ (அந்த இராமனிடம்) தோல்வியுறுவாய் என்றும் பகர்ந்தாய்; கற்றவா நன்று - (நீ நீதி நூல்களையும் அரசியல் நூல்களையும்) படித்தறிந்த விதம் மிகவும் நன்ருக இருந்தது! போ - செல்வாயாக' என்று - என்று (இராவணன் மாலியவானை நோக்கிச் சொல்லிப் பின்னரும்), இனையன கழறல் உற்ருன் - இத்தகைய வார்த்தைகளை மொழியலானுன்.

இதுமுதல் 5 கவிகள் ஒருதொடர். மனிதர் வானரங்கள்: உம்மைத்தொகை. இன்று+ஐ=இற்றை; 'இற்றைநா ளளவு மன்னய்' (சுந்தர. 523). கற்றவாறு என்பது ஈறு குறைந்து கற்றவா என வந்தது. நன்று: குறிப்பு மொழி. என்னை வெல்லுமாற்றல் படைத்தவர் எனின் போர்புரியாது இத்துணை நாள் தாழ்த்ததென் என்பான். 'இற்றைநா ளளவு நின்ற இமையவர் என்ருன்; 'இன்றைவரை நமக்கு ஏவல் செய்துநின்ற வானவர்' என்பது பழையவுரை.

பி - ம். 1. நிற்க விந்த; மலையில்.
2. நின்ருர்.
3. சோதிமால் மனித னென்ருய்.
4. இவையிவை; இன்னன. 32

768. பேதைமா னிடவ ரோடு குரங்கல பிறவே யாக
பூதல வரைப்பி ஞகர் புரத்தினப் புறத்த தாக
காதுவெஞ் செருவேட் டென்னைக் காந்தினர் கலந்த [போதுஞ்
சீதைதன் திறத்தின் ஆயி னமர்த்தொழில் திறம்பு வேனே.

'பேதை மானிடவரோடு - அறிவில்லாத மனிதர்களுடனே, குரங்கு அல - குரங்குகள்மட்டும் அல்ல, பிறவேயாக - பிற விலங்குகளும் ஒன்று கூடட்டும்; பூதல வரைப்பின் நாகர் புரத்தின் - இந்தப் பூமியின் எல்லையிலும் நாகர் உலகிலும், அ புறத்தது ஆக-


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(இந்தப் புவிக்கு) அப்பாற்பட்ட இடத்திலுமே ஆகட்டும்; காது வெம் செரு வேட்டு - ஒருவரை ஒருவர் பகைத்துச் செய்கின்ற கடுமையான போரினை விரும்பி, காந்தினர் - மனக்கொதிப்புக் கொண்டவராய், என்னை கலந்த போதும் - என்னை விரோதிகள் நெருங்கினபோதும், ஆயின் - ஆய்ந்து பார்க்குமிடத்து, சீதை தன் திறத்தின் - சீதையின் பொருட்டெனில், அமர் தொழில் திறம்புவேனோ - போர்த்தொழிலிற் பின்வாங்குவேனோ? ஓ - வினா.

அளவற்ற மனிதர்களும் குரங்குகளும் ஏனைய பிராணிகளும் கிடக்கட்டும். மூன்றுலகத்தோறும் போர்புரியினும், சீதை காரண மாக அப்போர் நிகழின் அந்தப் போரினை யேற்பேனே யன்றிப் பின்வாங்கமாட்டேன் என்றான் இராவணன்; 'சீதையை விடுவ துண்டோ இருபது திண்டோ ளுண்டாய்' (யுத்த. இந்திரசித் வதை. 9) காண்க. நாகர் புரம் என்பதைப் பாதலம் எனக் கொண்டு, அப்புறத்தது என்பதைத் தேவருலகாகக் கொள்க. அப்புறத்தது என்பதைச் சத்தியலோகம் என்பாரும் உளர். காந்துதல் - நெஞ்சு கொதித்தல்; 'காந்த மூள' (தக்க. 584). ஆயின், என்பதனை சீதை தன் திறத்தின் என்பதனோடு கூட்டலுமாம்.

பி - ம். 2. புரத்தினில், புறத்தி னுள்ளார்.

3. காதி; செருவி லென்முன் கடுகியே; போது.

4. தன் திறத்தினுகில், திறத்தன்றாயின்.

83

**769.** ஒன்றல பகழி யென்கைக் குரியன உலக மெல்லாம்
வென்றன ஒருவன் செய்த வினையினும் வலிய வெம்போர்
முன்றரு கென்ற தேவர் முதுகுபுக் கமரின் முன்னம்
சென்றன இன்று வந்த குரங்கின்மேற் செல்க லாவோ.

'என் கைக்கு உரியன - என் கரத்திலே இருத்தற்கு உரியன வும், உலகம் எல்லாம் வென்றன - உலகனைத்தையும் வெற்றி கொண்டனவும், ஒருவன் செய்த வினையினும் வலிய - ஒருவன் புரிந்த தீவினைகளைப் பார்க்கிலும் வன்மை வாய்ந்தனவும், முன் வெம் போர் தருக - 'போர்க்களத்தில் கடுமையான போரைப் புரிக' ' என்ற தேவர் - என்று வந்த தேவர்களின், முதுகு புக்கு -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

முதுகின்வழியே புகுந்து, அமரின் - போர்க்களத்தில், முன்னம் சென்றன - முன்பு சென்றனவுமான, ஒன்று அல பகழி - ஒன்றல்லாத (மிகப் பலவான) அம்புகள், இன்று வந்த குரங்கின்மேல் செல்லாவோ - இப்பொழுது வந்துள்ள குரங்குகளின்மேல் செல்லும் தன்மையுடையனவல்லவோ?

வினையினும் வலிய; 'வினையின் வெய்யன படைக்கலம்' (யுத்த. தேரேறு. 21). 'ஊழிற் பெருவலி யாவுள' (குறள். 380); வினையின் வலி இக்காப்பியத்திற் பல இடங்களிலும் பேசப்படும்; 'வினையது வலியினாலும்' (ஆரணிய. 639); 'விதியின் பிழை' (அயோத்தி. நகர்நீ. 133); 'விதியின துணிவால்' (ஆரணிய. 1094); 'விதி நின்றது, பிடர் பிடித் துந்தநின்றது' (யுத்த. கும்ப. 95). இன்று செல்கலாவோ; (ஒப்பு): 'மன்னவர் நெஞ்சினில் வேடர் விடும்சரம் வாயாவோ' (அயோத். குகப். 16).

பி - ம். 2. வென்றவன்; வினையினும் வெய்ய.
3. முன் தருகின்ற; முதுகிட; உவரியூடு.
4. சென்றன மீட்டு மிந்தக்; செல்கிலாவோ. 84

770. சூலமேய் தடக்கை யண்ணல்
தானுமோர் குரங்காய்த் தோன்றின்
ஏலுமே லிடைவ தல்லா
லென்செய்வ னென்னைக் கால
வேலைநீர் கடைந்த மேனா
ளுலகெலாம் வெருவ வந்த
ஆலமோ விழுங்க வென்கை
யயின்முகப் பகழி யம்மா.

'சூலம் ஏய் தட கை அண்ணல் தானும் - சூலப்படையை ஏந்திய பெரிய கரங்களையுடைய பெருமைமிக்க சிவபிரான் தானும், ஓர் குரங்காய் தோன்றின் - ஒரு குரங்காய்த் தோன்றினான் ஆயின், ஏலுமேல் - இயைந்தால், இடைவது அல்லால் - பின்னிட்டுச் செல்வதன்றி, என்னை என் செய்வன் - என்னை என்ன செய்யக்கூடும்; என் கை அயில் முக பகழி - என் கையினின்று வெளிச் செல்லுவனவான கூரிய முகத்தையுடைய அம்பு,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

விழுங்க - (அச்சிவனால்) விழுங்கப்படுவதற்கு, கால வேலை நீர் - ஊழிப்பிரளயத்தை உண்டாக்கவல்ல கடல்நீரை, கடைந்த - கடைந்த, மேல் நாள் - முன்னாளில், உலகு எலாம் வெருவ வந்த ஆலமோ - உலகனைத்தும் அஞ்சுமாறு தோன்றிய ஆலகால விடமோ? அம்மா - வியப்பிடைச்சொல். ஓ - எதிர்மறை.

சிவனும் தன்னை யெதிர்த்துப் போர்புரியின் தோற்பதன்றிப் பிறிதில்லை யென்கின்றான். சூலமேய் தடக்கை யண்ணல் குரங்காய்த் தோன்றி: இது முன் வரலாற்றினை யொட்டியது; 'வானுளோ ரனைவரும் வானரங்களா; (பால. திருவவ. 21): 'புராரி மற்றியானே வாத சேயெனப் புகன்றான்' (பால. திருவவ. 28); 'செப்பியென் குரங்காய் வந்தார் தனித்தனித் தேவ ரென்றார்' (யுத்த. 761); 'காலனை யொக்குந் தூதன் காலுங்கண் ணுதலு மென்றார்' (யுத்த. 760). வேலைநீர் கடைந்தது; பால. அகலிகைப். 21—27. உலகெலாம் வெருவவந்த ஆலம்; 'வெருவு மாலமும் பிறையும் வெவ்விடை யவற்கீந்து' (பால. அகலிகைப். 26); மற்றும், கடல் கடைந்தது வாலி செயலாகக் குறிக்கப்பட்டுள்ளமை வாலி கூற்றாலும், அங்கதன் கூற்றாலும் ஆங்காங்குக் குறிக்கப் பெற்றிருத்தல் காண்க. ஆலத்தினும் தன் பகழி கொடிது என்கின்றான் இராவணன்.

பி - ம். 1. தோன்றி.
2. என்செய வல்லா னென்னை, என்செய்வா னென்னைக் கால.
3. வேலையே.



771. அறிகிலை போலு மைய வமரெனக் கஞ்சிப் போன
எறிசுடர் நேமி யான்வந் தெதிர்ப்பினு மென்கை வாளி
பொறிபடச் சுடர்கள் தீயப் போவன போக்கி லாத
மறிகடல் கடைய வந்த மணிகொலாம் பூண மார்பில்.

'ஐய - ஐயனே! அமர் - போரின்கண், எனக்கு அஞ்சி போன - எனக்குப் பயந்து ஓடினவனும், எறிசுடர் நேமியான் வந்து எதிர்ப்பினும் - ஒளிவீசுகின்ற ஒளியினையுடைய ஆழிப்படை தாங்கியவனான திருமாலே வந்து தாக்கினும், பொறிபட - தீப்பொறிகள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உண்டாகவும், சுடர்கள் தீய - (சூரிய சந்திரர்களான) இரண்டு ஒளிப்பிழம்புகளும் எரிந்து கரிந்துபோகவும், போவன - வெளிச் செல்வனவான, போக்கு இலாத என் கை வாளி - குற்றமற்ற என் கை அம்புகள், மார்பில் பூண - (அத்திருமால்) மார்பில் தரித் தற்கு, மறிகடல் கடைய வந்த மணி கொலாம் - கரைக்கண் தாக்கி மறிக்கின்ற பாற்கடலைக் கடையுங்கால் (ஆங்குத்) தோன்றிய கௌத்துவ மணியோ ? (மணியன்றே), ஐய அறிகிலை போலும் - இவ்வாறான என் அம்பின் திறத்தை நீ தெரிந்தாயல்லைபோலும்.

மணி - கௌத்துபம் ; இதனைத் திருமால் ஆபரணமாகக் கொண்டார் என்பது ஐதிகம். இச்செய்யுள் விலக்கணி. நேமியான் - ஆழிப்படை தாங்கிய திருமால். மார்பில்பூண என்றதனால், மார் பைப் பிளக்கும் என்பது குறிப்பு. போக்கு - குற்றம் ; 'போக்கறு பனுவல்' (தொல். பாயிரம்).

பி - ம். 2. எதிர்க்குமேல்.

3. பொறிபடர், படு ; போகிலந்த, போழ்து முன்னுள்.

4. மணிகொலோ ; மார்பிற்பூண.



772. கொற்றவா ளிமையோர் கோமான்
குரக்கின துருக்கொண் டானேல்
அற்றைநா ளவன்றன் விட்ட
வயிற்படை யறுத்து மாற்ற
இற்றவான் சிறைய வாகி
விழுந்துபோ யெழுந்து வீங்காப்
பொற்றைமால் வரைக ளோவெள்
புயநெடும் பொருப்பு மம்மா.

கொற்றவாள் இமையோர் கோமான் - வெற்றியைக்கொண்ட வாளினை ஏந்திய தேவர் தலைவனான இந்திரன், குரக்கினது உரு கொண்டானேல் - குரங்கினது வடிவைக் கொண்டான் ஆகில், அற்றை நாள் - (மலையின் சிறகரியத் தொடங்கிய) அந்தக் காலத் தில், அவன் விட்ட அயில்படை அறுத்து மாற்ற - அந்த இந்திரன் விடுத்த கூரிய வச்சிரப்படை அறுத்து மாற்றியதனால், இற்ற வான் சிறைய ஆகி - ஒடிந்துபோன பெரிய சிறகுகளை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

யுடையனவாகி, விழுந்து போய் - விழுந்திட்டு(ப் பின்னர்), எழுந்து வீங்கா - இளம்பி ஓங்குதலில்லாத, பொற்றைமால் வரைகளோ - உயர்ந்த பொற்றையென்று கூறப்படுகின்ற சிறுமலைகளோ? என் புயம் நெடு பொருப்பும் - என்னுடைய புயமாகிய பெரிய மலைகளும், அம்மா - வியப்பிடைச்சொல். தான் - அசை.

இமையோர் கோமான் குரக்கிலை துருவுகொண்டது பொதுப் படக் கூறியதேனும், இங்கு இந்திராம்சம் பெற்ற அங்கதனைக் குறித்தது எனலாம்; 'வாலிமா மகன்வந் தானை வானவர்க் கிறைவன் என்றூர்' என்ற மாலியவான் கூற்றினையொட்டி எழுந் தவை இச்சொற்கள்; யுத்த. 763 உரைக்குறிப்புக் காண்க. சிறை யிற்று விழுந்த பொற்றைமால் வரைகள்: இந்திரன் மலைகளின் சிறகினை யறுத்ததைக் குறிக்கும். மலைக்குச் சிறகு இருந்தது என்பது நக்க. 56, 170, 366, 749 கண்டுணர்க. பொற்றை - சிறு குன்று. இவ்வாறு இராவணன் மாலியவானுக்குக் கூறினான் என்க.

பி - ம். 1. கொற்றவன்; உருவங் கொண்டான், உருவு கொண்டால்.
2. அவனுல் விட்ட; யறுத்து நீக்கி, நீக்க.
3. விழுந்துமே லெழுந்து; விக்காப்.
4. வரையவோ; பொருப்பு மென்றான். 87

## பொழுதுவிடிதலின் வருணனை

773. உள்ளமே தூது செல்ல வுயிரனா ருறையுள் நாடும்
கள்ளமார் மகளிர் சோர நேமிப்புள் கவற்சி நீங்கக்
கொள்ளைபூண் டமரர் வைகுங் குன்றையுங் கோட்டிற் [கொண்ட
வெள்ளநீர் வடிந்த தென்ன வீங்கிருள் விடிந்த தன்றே.

உள்ளமே தூது செல்ல - மனமே தூதாகச் செல்ல, உயிர் அனார் உறையுள் நாடும்-(தமது) உயிரை நிகர்த்த காதலரின் இருப் பிடம் கருதிச் செல்கின்ற, கள்ளம் ஆர் மகளிர் சோர-வஞ்சனைமிக்க வழியல்லாத வழிமேற் செல்லுகின்ற மகளிர் மனம் தளரவும், நேமி புள் கவற்சி நீங்க - சக்கரவாகப் பறவைகள் (தம்) மனத்துயரம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நீங்கப்பெறவும், கொள்ளை பூண்டு அமரர் வைகும் - மிகுதியாக நிறைந்து தேவர்கள் வசிக்கின்ற, குன்றையும் - மேருமலையினையும், கோட்டில் கொண்ட - உச்சிவரையில் மூடிக்கொண்டு நின்ற, வெள்ளம் நீர் வடிந்தது என்ன - வெள்ளநீர் வற்றினாற்போன்று, வீங்கு இருள் விடிந்தது - பொங்கிநின்ற இருட்டு அகன்றது. அன்று ஏ - அசை.

வெள்ளத்தால் மூடப்பட்டதுபோன்ற இருள் நீங்கிற்றென்பது கருத்து. சோரம் போகின்ற மகளிர்க்கு விடியல்நேரம் வருத்தத்தை விளைக்கும்; சோர நாயகர்களை விட்டுப்பிரிய நேருமாதலின். தன்மைத்தற்குறிப்பேற்றவணி. நேமிப்புள் - சக்கரவாகம். ஆண் பெண் பறவைகள் இரவிற் பிரிந்து பகலிற் கூடுவனவாகலின் விடியற்போதில் கவற்சி நீங்கின எனப்பட்டது. 'உயிரன்னார் தம்மை நாடும்' என்ற பாடமுண்டு. தூதராகச் செல்லும் பல பொருள்களில் உள்ளமும் ஒன்று; 'நெஞ்சுவிடு தூது' என்றது காண்க.

பி - ம். 2. கள்ளமாம்; துஞ்ச; சோரும்; நெஞ்சினிற்; கவற்றி, கவலை; வீங்கக்.
3. கோட்டிக் கொள்ளும்.
4. வீய்ந்த தன்றே. 88

ஒற்றுக் கேள்விப் படலம் முற்றும்.

---

## ஒற்றுக் கேள்விப் படலத்தைப்பற்றி வான்மீகம் கூறுவது:—

சேது அணை வகுத்த பின்னர், இராமபிரான் சுக்கிரீவன் முதலானோருடன் இலங்கையைநோக்கிச் செல்கின்றான். இவர்கள் வரவினைச் சுகன் என்பவன் இராவணனுக்கு அறிவிக்கின்றான். இவனே பின்னர் ஒற்றனாகச் சென்று வீடணன் கையிற் சிக்கி, இராமபிரான் கருணையால் விடுதலைபெற்று, அப்பெருமான் கூறிய செய்திகளை இராவணனிடன் சென்று சொல்கின்றான். சாரன் என்ற ஒற்றனும், சார்த்தூலன் என்ற ஒற்றனும் பகைவர்கையில்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அகப்பட்டுப் பின் தப்பிப்பிழைத்து இராவணனை அடைகின்றார்கள். மற்றும், முதனூல் 31-ஆம் அத்யாயத்தில் வித்யுஜ்ஜஹ்வன் என்ற ஓர் அரக்கனைக்கொண்டு மாயை விளைவித்துப் பிரகத்தனைக்கொண்டு இராமபிரான் தலை வெட்டப்பட்டதாகப் பொய்பேசி இராவணன் சீதாதேவியைத் துன்புறுத்தியதும், அவள் அலறி ஓலமிட்டதும், வீடணன் மனைவி சரமை என்பவள் அவளுக்கு அனைத்து நிகழ்ச்சியும் மாயையே உண்மையன்று எனத் தேற்றத் தேவி தேறியதும் கம்பர் காவியத்தில் இல்லை. எனினும், இச் செய்தியை அடிப்படையாகக் கொண்டு முதனூலில் இல்லாததும் மிக்க சுவையுள்ளதுமான மாயாசனகப் படலத்தை அமைத்து, அதில் இராமபிரான் வெட்டுண்டதாகக் கூருது, சனகன் வெட்டுண்டதாகக்கூறிக் கதையை நடத்திச்செல்கின்றார் கம்பர். மாயாவிநோதனான இராமபிரானை எந்த மாயைதான் வெல்லமுடியும்? மேலும், பரம இராமபக்தனான கம்பநாடர் விளையாட்டாகவேனும் இராமபிரான் தலை வெட்டுண்டதாகப் புனைய ஒருப்படுவாரோ? இது நிற்க, நினைத்த உருக்கொண்டு யாண்டும் செல்லவல்ல சரமை என்பவள் இராவணனுடைய மந்திரசபையில் நிகழ்ந்தவற்றைச் சீதாப்பிராட்டிக்குரைத்து, அவித்தர் என்ற வயோதிக அமைச்சன் இராவணனுக்குக் கூறிய அறமொழிகளை உணர்த்தி, இராவணன் இராமபிரான் கையாற் கொலையுண்பது ஒருதலை என்று மொழிகின்றான்; சீதாதேவி கவலை நீங்கப் பெறுகின்றாள். மாலியவான் இராவணனுக்குப் பல அறவுரைகளைக் கூறியும், அவன் ஊழ்வினை உருத்து ஊட்ட ஓரே பிடிவாதமாகப் பிராட்டியை விடுதலைசெய்ய மறுத்துப் போரையே மேற்கொள்கின்றான்.

---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 9. இலங்கைகாண் படலம்

இராமபிரான் சுவேலமலைமீதேறி இலங்கையைக் கண்டதைக் கூறும் படலம் என்று விரியும். சில ஏடுகளில் இது 'இராம னிலங்கைகாண் படலம்' என்றும் வழங்குகின்றது. சில பிரதி களில் முதல் இருபத்துமூன்று கவிகள் செருப்பதிப் படலம் என்று கூறப்படுகின்றது.

## சூரியோதய வருணனை

774. இன்னதொர் தன்மைத் தாமென்
றெட்டியும் பார்க்க வஞ்சிப்
பொன்மதிற் புறத்து நாளும்
போகின்றான் போர்மேற் கொண்டு
மன்னவர்க் கரசன் வந்தான்
வலியமா லென்று தானும்
தொன்னகர் காண்பான் போலக்
கதிரவன் தோற்றஞ் செய்தான்.

இன்னதோர் தன்மைத்து ஆம் என்று - இவ்வாறான தன்மையினை உடையதாகும் என, எட்டி பார்க்கவும் அஞ்சி - எட்டிக் காண்பதற்கும் பயந்து, பொன் மதில் புறத்து நாளும் போகின்றான் - பொன்மயமான மதிலின் புறத்திலேயே நாடோறும் செல்பவனாகிய, கதிரவன் - சூரியன், 'போர் மேல் கொண்டு மன்னவர்க்கு அரசன் வந்தான் - போரை ஏறட்டுக் கொண்டு அரசர்க்கரசனான இராமபிரான் வந்தனன்; (ஆதலின்), வலியம் - நாம் வன்மை பெற்றுவிட்டோம்', என்று - என்று, தானும் தொல் நகர் காண்பான்போல தோற்றம் செய்தான் - தானும் பழமையான அந்த இலங்காபுரியைக் காண விழைந்தவன் போன்று உதித்தான். ஆல் - அசை.

இச்செய்யுள் சூரியோதயத்தைக் கூறும்; ஏதுத்தற்குறிப்பேற்ற வணி. இராவணனது ஆட்சிக்கு அஞ்சி நாள்தோறும் மதிற் புறத்தே செல்பவனான கதிரவன், இராமபிரான் போர் மேற்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கொண்டு வந்துள்ளமையைக் கண்டு தைரியம் உற்று அந்நகரின் உள்ளே தோன்றினன் என்றார். எட்டியும் பார்க்க என்பதில் உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. 'பொன்மதிற் புறத்துப் போதல்'; 'கறங்கு கால்புகா கார்புகா கதிர்புகா' (சுந்தர. 118); 'முன்னம் யாவரு மிராவணன் முனியுமென் றெண்ணிப், பொன்னின் மாநகர் மீச்செலான் கதிரென' (சுந்தர. 116); 'கடுங்கதிர்கள் மீது கடிதேகா' (சுந்தர. 158); 'காய்கதி ரியக்கின் மதி' (சுந்தர. 169); மற்றும், சுந்தர. 193-உம் காண்க. 'உருளுறு தேரினனு மிலங்கைமீ தோடு மன்றே' (யுத்த. 430); 'கதிர்மீச் செலாக் கொடிமதிற் குடுமி' (யுத்த. முதற்போர். 3). பெருங்காப்பிய இலக்கணத்துச் சூரியோதயம் ஓர் பகுதியாகலின் இங்குக் கூறப்பட்டது. சில சுவடிகளில் இச்செய்யுளுடன் ஒற்றுக்கேள்விப் படலம் முடியும். வேறு சிலவற்றில் இது இலங்கைகாண் படலத்தின் 24-ஆம் செய்யுளாக அமைகின்றது.

பி - ம். 1. தன்மை யாமென்; எட்டுநற் கஞ்சி யப்பால்; பார்ப்ப வஞ்சி.
4. தொன்னகர் காண்பா னென்னுக். 1

இங்கு ஓர் அதிகப்பாட்டு:—

எரியெனச் சீறி யிவ்வா றுரைத்திரு மருங்கில் நின்ற
நிருதரைக் கணித்து நோக்கி நெடுங்கரி யிரதம் வாசி
விருதர்க ளாதி வெள்ளப் படைத்தொகை விரைந்து நாளைப்
பொருதிற மமையு மென்னுப் புதுமலர்ச் சேக்கை புக்கான்.

## இராமபிரான் பரிவாரங்களோடு சுவேலமலையி னுச்சியிலேறி நிற்றல்

775. அருந்ததி யனைய நங்கை யவ்வழி யிருந்தா ளென்று
பொருந்திய காதல் தூண்டப் பொன்னகர் காண்பான் [போலப்
பெருந்துணை வீரர் பற்றத் தம்பியும் பின்பு செல்ல
இருந்தமால் வரையி னுச்சி யேறின னிராம னிப்பால்.

அருந்ததி அனைய நங்கை அ வழி இருந்தாள் என்று - அருந்ததிபோன்ற கற்புவாய்ந்த சீதாதேவி அந்த இலங்கையில் இருந்தாள் என்றதுபற்றி, பொருந்திய காதல் தூண்ட - உள்ளத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தூன்றிய காதல் தூண்டுவதால், பொன் நகர் காண்பான்போல - அழகிய இலங்காபுரியைப் பார்ப்பவன்போன்று, பெருதுணை வீரர் பற்ற - (தனது) பெருந்துணைவராயுள்ள வீடண சுக்கிரீவர் இரு புறமும் கைலாகு தர, தம்பியும் பின்பு செல்ல - இலக்குவனும் பின்னே வர, இருந்த - தான் தங்கியிருந்த, மால்வரை உச்சியின் - பெரிய சுவேலமலையின் உச்சியிலே, இராமன் ஏறினன் - இராம பிரான் ஏறினன்; இப்பால் - இதன் பின்னர், அடுத்த கவிகளில் தொடரும்.

அருந்ததி அனைய நங்கை - சீதாதேவி; ஆரணிய. 829, 994; 'சீல மின்னதென் றருந்ததிக் கருளிய திருவே' (அயோத்தி. சித்திரகூடப். 16); 'அருந்ததியும் வந்தனைசெ யஞ்சொ விள வஞ்சி' (யுத்த. 698); 'அருந்ததிக் கற்பி னளுக் கழிவுண்டோ' (யுத்த. மாயாசீதை. 96). அந்தப் பொன்னகர் காண்பான்போல என்றது, பொன் திருமகளாதலினாலும் தன் குலத்து மருமக ளாதலினாலும் அவள் இருந்த அந்த நகரைக்காண அவாவினன் போல என்க. சுக்கிரீவன் போர்க்குப் பல வீரர்களைத் தந்தும், வீடணன எதிரிகளின் பலாபலங்களைக் கூறியும் நின்றவனாதலின் அவர்களைப் பெருந்துணை வீரர் என்றார். 'வீடணன் தந்த வெற்றி' (யுத்த. இந்திரசித்து வதை. 71) என்றது காண்க. மால் மலை என்றது, சுவேலமலை. இதுகாறும் இராவணன் செயலைக் கூறிவந்து இப்பொழுது இராமபிரான் செய்தியைக் கூறுவதால் இப்பால் எனப்பட்டது. சில சுவடிகளில் இச்செய்யுளுடன் முன் படலம் முடியும்.

பி - ம். 1. அருந்துதி.

3. வீரர் சுற்ற, சூழ. 2

776. செருவலி வீர ரெல்லாஞ் சேர்ந்தனர் மருங்கு செல்ல
இருதிறல் வேந்தர் தாங்கு மிணைநெடுங் கமலக் கையான்
பொருவலி வயவெஞ் சீயம் யானையும் புலியுஞ் சுற்ற
அருவரை யிவர்வ தாங்கோ ரரியர சனைய னானான்.

செரு வலி - போர்புரியும் வன்மைசான்ற, வீரர் எல்லாம் - வீரர்கள் அனைவரும், சேர்ந்தனர் மருங்கு செல்ல - ஒன்றுகூடி இருபுறமும் செல்ல, இரு திறல் வேந்தர் - இரண்டு வலிமைவாய்ந்த சுக்கிரீவன் வீடணன் என்ற அரசர்கள், தாங்கும் - கைலாகு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கொடுத்துத் தாங்கும், இணை நெடு கமல கையான் - இரண்டாகிய நீண்ட செந்தாமரைபோன்ற கரங்களையுடைய இராமபிரான், பொரு வலி வயவெம் சீயம் யானையும் புலியும் சுற்ற - போர் செய்யும் திறல் வாய்ந்த சிங்கங்களும் யானைகளும் புலிகளும் தன்னைச் சூழ்ந் திருப்ப, அருவரை இவர்வது-ஏறுவதற்கு அருமையான மலையிலே ஏறுவதாகிய, ஓர் - ஒப்பற்ற, அரி அரசு அனையன் ஆனான் - அரச சிங்கத்தை நிகர்த்து விளங்கினான். ஆங்கு - அசை.

இல்பொருளுவமையணி. சேர்ந்தனர், முற்றெச்சம். வேந்தர் தாங்கும் இணைநெடுங் கையான் : ஆசிரியர் அரண்மனைப் பழக்கம் உள்ளவராதலின் இருபுறமும் இருவர் கைலாகுதரச் செல்லும் முறையை இங்குக் குறித்தனர் ; முன் செய்யுளில் 'பெருந்துணை வீரர்பற்ற' என்றமையும் காண்க. பலதிறப்பட்ட யானைகளும சிங்கங்களும் புலிகளும்போன்ற வானரவீரர் சூழ, ஓர் மலையின்மீது ஏறும் சிங்கவரசினைப்போன்று இராமன் சென்றான். அருவரை - ஏறுவதற்கு அரிய மலை. வான்மீகத்தில் இராமபிரான் இலக்குவ னிடம் இலங்கையைப்பற்றிக் கூறிய பகுதியில் அந்நகரின் இயற்கைக்காட்சி வருணனையே பேசப்படுகின்றது. பிறகு இராம பிரான் செய்த படைவகுப்பும், சுகன் என்ற சாரணன் வரவும் சொல்லப்படுகிறது. அத்யாத்ம இராமாயணத்தில் சேது கட்டிய தற்கு முன் இரு வேவுகாரர்கள் வந்து பிடிபட்டு விடுதலைபெற்றது கூறப்பட்டது. பின்னர் வானரப்படையின் தொகை கூறப்படு கிறது. சில சுவடிகளில் இதுமுதல் 'இலங்கைகாண் படலம்' தொடங்கும்.

பி - ம். 1. செருமலி ; சேர்ந்துடன்.

2. வீரர்தாங்கு மிகல் ; கையன்.

3. பொருவரும் ; யானையும் புலியுஞ், புலியினம் யாவும், யானையும் புரிந்து சுற்ற.

8

777. கதமிகுந் திரைத்துப் பொங்குங்
கனைகட லுலக மெல்லாம்
புதைவுசெய் யிருளிற் பொங்கு
மரக்கர்தம் புரமும் பொற்பும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சிதைவுசெய் குறியைக் காட்டி
வடதிசைச் சிகரி யொன்றின்
உதயம தொழியத் தோன்று
மொருகரு ஞாயி றொத்தான்.

கதமிகுந்து இரைத்து பொங்கும் - சினமேறி அலைமிகுந்து கொந்தளிக்கின்ற, கனை - ஒலிக்கும் தன்மையுள்ள, கடல் உலகம் எல்லாம் - கடல்சூழ்ந்த உலகனைத்தும், புதைவு செய் இருளில் - தன்னிடத்து அழுந்தி மறையுமாறு செய்யும் இருட்டில், பொங்கும் அரக்கர் தம் புரமும் - சினத்தாற் பொங்கி எழுகின்ற அரக்கர் நகரமாகிய இலங்கையும், பொற்பும் - அதன் அழகும், சிதைவுசெய் குறியை காட்டி - அழியப்போகின்ற குறியைக் காண்பித்து, உதயமது ஒழிய - உதயமலைச் சிகரத்திலே உதிப்பதைத் தவிர்த்து, வடதிசை சிகரி ஒன்றில் - வடதிசைக்கண் உள்ள ஒரு திசையில், தோன்றும் ஒரு கரு ஞாயிறு ஒத்தான் - ஒப்பற்ற கரிய சூரியனை ஒத்து விளங்கினான்.

சூரியோதய காலத்திலே சுவேல மலைமீது நின்ற இராமபிரானைச் சமற்காரமாக வருணித்தது இச்செய்யுள். இருளுக்கு அரக்கரும், ஞாயிறுக்கு இராமபிரானும் ஒப்பு. கதம் - கோபம்; ஆரணிய. 300, 494; கதமிகுந்து இரைத்த என்பது கடலின் கொந்தளிப்பைச் சுட்டியது. கனைகடல் - வினைத்தொகை; கனை என்பது இயற்கை அடைமொழி. ஆர்கலி என்ற அதன் பெயர் காண்க. புதைவு செய்தல் - மூடுதல்; 'புதை யிருள்' (பால. மிதிலைக்காட்சி. 150). பொங்குதல், கடல் அரக்கர் என்ற இருவர்க்கும் கூறப்பட்டமை காண்க. கடல் பொங்கி மேலிட்டால் அதற்குக் கரையேது என்ற பழமொழியும் உண்டு. கீழ்த்திசையில் உதிப்பதைத் தவிர்த்துப் பிறிதோர் திசையில் சூரியன் உதயம் செய்வதும், செஞ்ஞாயிறு கருஞாயிறு ஆவதும் கெட்ட அறிகுறிகள் ஆகலின், உதயகிரியல்லாத சுவேல மலையின் சிகரத்தில் இராமபிரான் தோன்றியது ஓர் உத்பாதமாகக் கூறப்பட்டது நன்மைத்தற்குறிப்பேற்றவணி. இதுபோன்ற நிகழா நிகழ்ச்சிகளை, 'பாஅல் புளிப்பினும் பகலிருளினும், நாஅல் வேதநெறி திரியினும்' (புறநா. 2); 'வசையில்புகழ் வயங்குவெண்மீன், திசை திரிந்து தெற்கேகினும்' (பட்டினப். 1-2) என்ற இடங்களிற் காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கரு ஞாயிறு: 'கட்டார் சிலைக் கருஞாயிறு புரைவான்' (யுத்த. மூலபல. 110); 'கண்டா மரைபோற கருஞா யிறென' (ஆரணிய. 97). (ஒப்பு): 'அநுமனு மிரவி யென்பவன், தென்புலத் துளனெனத் தெரிவ தாயினன்' (சுந்தர. 1265); சுந்தர. 30-ம் காண்க.

பி - ம். 1. கதமிகுத் துரைந்துப் பொங்கும், கதமொத்துக் கனைத்திற் றேன்று, கதையொத்துக் கணக்கற் றென்றுக்.
2. புதையச் செய்து; இருளிற் றேன்றும்; அரக்கரும்.
3. சிதையச் செய்; சிகரக் குன்றின். திகிரி யொன்றின், சிகரந் தன்னில்.
4. உதயத்தை. 4

778. துமிலத்திண் செருவின் வாளிப் பெருமழை சொரியத்
[தோன்றும்
விமலத்திண் சிலைய ஞண்டோர் வெற்பினை மேய வீரன்
அமலத்திண் கரமுங் காலும் வதனமுங் கண்ணு மான
கமலத்திண் காடு பூத்த காளமா மேக மொத்தான்.

துமிலம் திண் செருவின் - பேராரவாரத்துடன் கூடிய வலிய போரில், வாளி பெரு மழை சொரிய தோன்றும் - அம்புகளாகிய பெரிய மழையைப் பொழியுமாறு தோன்றுகின்ற, விமலம் திண் சிலையன் - குற்றமற்ற உறுதியான வில்லை யுடையனுகி, ஆண்டு ஓர் வெற்பினை மேய வீரன் - அவ்விடத்தில் ஒரு மலையை அடைந்து நின்ற வீரனான இராமபிரான், அமலம் திண் கரமும் காலும் வதனமும் கண்ணும் ஆன - தூய்மையான வலிய கையும் காலும் கண்ணும் என்ற, திண் கமலம் காடுபூத்த - வலிய தாமரைக் காடு பூத்த, காளம் மா மேகம் ஒத்தான் - கரிய பெரிய மேகத்தை ஒத்து விளங்கினன்.

துமிலம் - பேரொலி 'துமில மெழுப்பறை கொட்டி' (திவ்ய. பெரியாழ். 3:8:3) துமிலப்போர்: (ஆரணிய. 376). வீரன்: ஆரணிய காண்டம் 23, 133, 262, 283 முதலிய பல இடங்களிற் காண்க. கமலத் திண்காடு: யுத்த. 354 உரைக் குறிப்புக் காண்க. கண் ணுற்றுன் வாலி நீலக் கார்முகில் கமலம் பூத்து, மண்ணுற்று வரிவி லேந்தி' (கிட்கிந்தா. 304); 'கண்டனன் வதனம்வாய் கண் கை காலெனப், புண்டரீ கத்தடம் பூத்துப் பொற்சிலை, மண்டலம் தொடர்ந்துமண் வயங்க வந்ததோர், கொண்டலிற் பொலிதரு கோலத் தான்றனை' (யுத்த. கும்ப. 279); கார்க்கடல்கமலம் பூத்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தெனப் பொலிவானைக் கண்டான்' (யுத்த. 435); தாமரைக் காடு பூத்த காளமேகம்; இல்பொருளுவமை. கண்ணும் மான எனக் கூட்டலுமாம். அப்பொழுது மான உவம வுருபு.

பி - ம். 1. துமிலந்தின்.
2. விமலத்தின்; செருவின்.
3. அமலத்தின்; கண்ணும் வாயும்.
4. கமலத்தின். 5

779. மற்குவ டனைய திண்டோள் மானவன் வானத் தோங்கும்
கற்குவ டடுக்கி வாரிக் கடலினைக் கடந்த காட்சி
நற்குவ டனைய வீர ரீட்டத்தி னடுவ ணின்றான்
பொற்குவட் டிடையே தோன்றும் மரகதக் குன்றம்
[போன்றான்.

வானத்து ஓங்கும் கல்குவடு அடுக்கி - ஆகாயத் தளவு உயர்ந்த கல் மலைகளை யடுக்கி, வாரி கடலினை கடந்த - கடலைத் தாண்டினவரும், நல்குவடு அனைய காட்சி வீரர் - காண்டற்கினிய மலையை ஒத்தவருமான வானர வீரர்களின், ஈட்டத்தின் நடுவண் நின்றான் - கூட்டத்தின் நடுவில் நின்றவனான, மல்குவடு அனைய திண் தோள் - வலிய மலைச்சிகரத்தையொத்த உறுதியான தோள்களை யுடைய, மானவன் - மனுவழியில் தோன்றிய இராமபிரான், பொன் குவடு இடையே தோன்றும் - பொன் மலைகளின் நடுவில் காணப்படும், மரகத குன்றம் போன்றான் - மரகத மலையை நிகர்த்து விளங்கினான்.

வானர வீரர்களுக்குப் பொற் குவடும், இராமபிரானுக்கு மரகதக் குன்றும் உவமைகள். மரகதக்கிரியன் னானை; (கிட்கிந்தா. 94. காட்சி வீரர் என்றது, தோற்றப் பெருமையையுடைய வானர வீரரைக் குறிப்பதாகும்.

பி - ம். 1. மான மில்லாக், மானத் தோங்கும்; வரம்பில் லாத.
3. ஈட்டத்துள்; நடுவு.
4. பொற்குவ டிடையே; மரகதக் குவடு; போல்வான். 6

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## மலைமீதேறிய இராமபிரான் இலங்கையைக் காணுதல்

780. அணைநெடுங் கடலிற் றோன்ற
வாறிய சீற்றத் தையன்
பிணைநெடுங் கண்ணி யென்னு
மின்னுயிர் பிரிந்த பின்னைத்
துணைபிரிந் தயரு மன்றிற்
சேவலில் துளங்கு கின்றான்
இணைநெடுங் கமலக் கண்ணா
லிலங்கையை யெய்தக் கண்டான்.

பிணை நெடு கண்ணி என்னும் இன் உயிர் பிரிந்த பின்னை - பெண் மானைப் போன்ற நீண்ட விழிகளைப் பெற்ற சீதை என்ற இனிய உயிர் போல்வாளைப் பிரிந்த பின்னர், துணை பிரிந்து அயரும் அன்றில் சேவலில் துளங்குகின்றான் - தனது துணையான பேடையைப் பிரிந்து தளரும் அன்றில் பறவை போன்று மனக் கலக்கம் கொண்டவனாகி, நெடு கடலில் அணை தோன்ற - அகன்ற கடலில் அணை காணப்படவே, ஆறிய சீற்றத்து ஐயன் - தணிந்த சினத்தை யுடைய அழகனான இராமபிரான், நெடு இணை கமலம் கண்ணால் - நீண்ட இரண்டு தாம்ரை போன்ற விழிகளால், இலங்கையை எய்த கண்டான் - இலங்காபுரியை நன்றாக நோக்கினான்.

பிணை நெடுங்கண்ணி; சுந்தர. 427; கிட்கிந்தா. 920. இன்னுயிர் பிரிந்த பின்னை; பிராட்டி இராமபிரான் உயிர் என்றது. 'ஆவி யைச் சனகன் பெற்ற அன்னத்தை யமிழ்தின் வந்த சீதையை' (கிட்கிந்தா. 307) என்பது வாலி கூற்று. அனிக வெஞ்சமத் தாருயிர் போகத்தான், தனியிருந்த வுடலன்ன தையல்' (ஆரணிய. 548); 'தேடா நின்ற வென்னுயிரைத் தெரியக் கண் டாய்' (கிட்கிந்தா. 27); என்பது இராமபிரான் கூறியது. 'பூண்ட மெய் யுயிரோ போகாப் பொய்யுயி ரோடு நின்றான், ஆண்டகை நெஞ்சி னின்று மகன்றிலை................ஈண்டுநீ யிருக்க வாண்டங் கெவ்வுயிர் விடுமிராமன்' (சுந்தர. 525); 'இன்னுயிரின்றி யேகும் இயந்திரப் படிவ மொப்பான்' (சுந்தர. 566); எய்த - நன்றாக. 'என வினைத் தெய்த நோக்கி' (சுந்தர. 514). தன் பகைவனின் நகரைப் பார்க்கும்போது, அவன் உள்ளத்தில் அங்குச் சிறைப்பட்டிருந்த தன் மனைவியின் நினைவே மேலோங்கி யிருந்தது என்று குறித்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தது காண்க. 778-ஆம் பாடல் முதல் இச்செய்யுள் ஈறாக, சுவேல மலைமீது நின்ற இராமபிரான் தோற்றமும் அவன் மன நிலையும் கூறப்பெற்றன.

பீ - ம். 1. ஆற்றிய.

2. மன்னுயிர் ; துறந்த.

4. இனிது கண்டான். 7

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

கண்டக மகிழ்ந்தாங் கண்ணல் கடிநக ரிலங்கை மூதூர்
விண்டலம் அளவும் செம்பொற் கோபுரம் விளங்கும் வீதி
மண்டபம் சிகர கோடி மாளிகை மலர்க்கா வாதி
யெண்டிசை யழகும் நோக்கி யிளவலுக் கியம்பு கின்றான்.

## இலங்கையின் சிறப்பை இராமபிரான் கண்டு இளவற்கு அறிவித்தல்

781. நந்திரு நகரே யாதி வேறுள நகர்கட் கெல்லாம்
வந்தபே ருவமை கூறி வழுத்துவா னமைந்த காலை
இந்திர னிருக்கை யென்பா ரிலங்கையை யெடுத்துக்
[காட்டார்
அந்தர முணர்தல் தேற்று ரருங்கவிப் புலவ ரம்மா.

(இராமபிரான் இலக்குவனை நோக்கிப் பகர்வானாய்த்) 'தம்பீ! அருகவி புலவர் - அருமையான கவிகளை இயற்றவல்ல புலவர்கள், நம் திரு நகரே ஆதி வேறுள நகர்கட்கு எல்லாம் - நமது அழகிய நகரம் முதலான வெவ்வேறாக உள்ள நகர்கட்கு எல்லாம், வந்த பேர் உவமை கூறி - மனத்தின் கண் எழுந்த பெரிய உவமைகளைச் சொல்லி, வழுத்துவான் அமைந்த காலை - புகழ்ந்து சொல்லத் தொடங்கியபோது, (உவமைப் பொருள்) இந்திரன் இருக்கை என்பார் - இந்திரன் வாழு மிடமான அமராவதி நகரம் என்று பகர்வர் ; இலங்கையை எடுத்து காட்டார் - அதனினும் பன்மடங்கு சிறந்து விளங்கும் இலங்கா நகரத்தை, (உவமைப் பொருளாக) எடுத்துக் காட்ட மாட்டார்கள் ; அந்தரம் உணர்தல் தேற்றார் - அமராவதிக்கும் இலங்கைக்குமுள்ள வேறுபாட்டை (அவர்கள்)


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தெளிந்து உணர மாட்டார்கள் போலும். அம்மா - வியப்பிடைச் சொல்.

'இந்திர னிருக்கை யென்பா ரிலங்கையை எடுத்துக் காட்டார்' பால காண்டத்தில் 'அவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி புரிகின்ற தயோத்திமா நகரம்' என அயோத்தியைப் புகழ்ந்த ஆசிரியர் இங்கும் இந்திரனது அமராவதியினும் இலங்கை சிறந்தது என்று கூறி யமையாது எல்லாச் சிறந்த நகரங்கட்குமே இந்நகர் எடுத்துக் காட்டப்படவேண்டிய சிறப்பினது என்றார். 'உயர்ந்ததன் மேற்றே உள்ளும் காலே' என்றது காண்க. இங்கு, வைகுந்த மாகிய தனது இருக்கையையும், தாற்காலீகமாக வந்து தங்கியுள்ள பூலோக வைகுந்தமான அயோத்தியையும் கண்டு துய்த்த இராகவன் வாயிலாகவே இலங்கை நகரின் சிறப்பை ஆசிரியர் வெளிப் படுத்தியது அறியற்பாலது, ஆசிரியரே இந்நகரின் எழிலிலும் சிறப் பிலும் ஈடுபட்டனர் என்பது, அவர் பல படியாக இலங்காபுரியை ஊர் தேடு படலத்து வருணித்தது கொண்டும், முடிவில் தெய்வத் தச்சனைப் புகழ்துமோ எனத் தொடங்கும் செய்யுட்கண் 'தொய்யற் சிந்தையாம் யாதினை யாதென்று புகழ்வாம்' என வரைந்தது கொண்டும் அறியலாம் (சுந்தர. 96-136) அன்றியும் வீடணற்கு முடிசூட்டியபோது இலங்காநகரத்தின் சிறந்த அமிசங்களைக் கண்ணுறக் கண்ட இராமபிரான், ஒரு சிறந்த பொருளை ஆங்குக் கண்டு, விடாது நோக்க, அப்பொழுது அருகிலிருந்த சாம்பவன், பெருமான் அதில் ஈடுபட்டிருப்பது கண்டு, தான் பிரம சிருட்டியி லிருந்து எல்லாவற்றையும் நோக்கியதாகவும் ஆனல் ஒருவனுக்குத் தானமாக ஈந்த பொருளைத் திரும்பவும் பெற எண்ணியவரை மட்டும் கண்டதில்லை யென்னும் கருத்துப்பட அமைந்த ச்லோகப் பகுதி இங்கே அறியத்தக்கது. 'தத்தாபஹாரம் வின' என்றமை காண்க.

பி - ம். 4. அந்தர மறிதல்.

8

782. பழுதற விளங்குஞ் செம்பொன் தலத்திடைப் பரிதி நாண
முழுதெரி மணியிற் செய்து முடிந்தன முனைவ ராலும்
எழுதரு வகைய வாய மாளிகை யியையச் செய்த
தொழில்தெரி சிலவால் தங்கண் சுடர்மணிக் கற்றை சுற்றி.

'பழுது அற விளங்கும் - குற்றமின்றி ஒளிரும், செம்பொன் தலத்திடை - சிவந்த பொன்னினுல் ஆக்கப்பட்ட தலத்தின்கண்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பரிதி நாண - (ஒளிமிக்க) சூரியனும் வெட்க முறும்படி, முழுது - முற்றிலும், எரி மணியில் செய்து முடிந்தன - பிரகாசிக்கின்ற அரதனங்களால் செய்து முடிந்தனவும், முனிவராலும் - பிரமனாலும், எழுதரு வகைய ஆய - படைத்தற்கரிய தன்மையுடையனவுமாகப் பொருந்திய, மாளிகை - மாளிகைகளில், இயைய - வேலைப்பாடுகள் அமைய, செய்த தொழில் - புரிந்த தொழில்கள், தம்கண் - தம்மிடத்து, சுடர்மணி கற்றை சுற்றி - ஒளி வீசுகின்ற நவமணித்தொகுதிகளால் சூழப்பெற்று, தெரிகில - அறிய முடியாமலிருந்தன. ஆல் - அசை.

பொற்றலத்தமைந்த மணிமாளிகைகளின் உண்மை நிலை - அவற்றின் ஒளி மிகுதியால் அறிய முடியாதனவாயின என்க. எழுதரும் தகைய - படைத்தற்கரிய, முனிவன் - தச்சர்களுள் சிறந்த மயன்; அன்றி விசுவகர்மனும் ஆம்.

பி - ம். 2. முடித்தன ; முனிவனாலும்,
3. எழுதருந் தகைய வாய, ஆகி ; மாளிகை யிசையச்.
4. தெரிகிலவால் எங்கும், ஓங்கும் ; சுடர்நெடுங்கற்றை சுற்ற. 8

783. விரிகின்ற கதிர வாகி மிளிர்கின்ற மணிகள் வீசச்
சொரிகின்ற சுடரின் சும்மை விசும்புறத் தொடருந் தோற்றம்
அரிவென்ற வெற்றி யாற்றல் மாருதி யமைத்த தீயால்
எரிகின்ற தாயே காணிக் கொடிநக ரிருந்த தின்னும்.

விரிகின்ற கதிர ஆகி - பரந்து நிற்கின்ற கிரணங்களை யுடையனவாகி, மிளிர்கின்ற மணிகள் வீச - விளங்குகின்ற நவமணிகள் ஒளிவீச, சொரிகின்ற சுடரின் சும்மை - பொழிகின்ற ஒளித்தொகுதி, விசும்புஉற தொடரும் தோற்றம் - விண்ணளாவித் தொடர்கின்ற காட்சியானது, அரிவென்ற வெற்றி ஆற்றல் - பகைவரை அடிப்படுத்த வெற்றியையும் வன்மையுமுடைய, மாருதி அமைத்த தீயால் - அநுமன் வைத்த தீயினால், இ கொடி நகர் எரிகின்றதாயே இன்னும் இருந்தது - இந்தக் கொடிகளால் அலங்கரிக்கப்பட்ட இலங்காபுரி இன்னும் எரிவதுபோலும் இருப்பதை, காண் - நீ காண்பாயாக.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சிவந்த அரதனங்களின் ஒளி மேலே பரவ இலங்கை ஒளி விடுவது, அநுமன் மூட்டிய தீ இன்னும் எரிவது போலும் எனப் பட்டது. சுடரின் சும்மை - ஒளித்தொகுதி, அரிவென்ற வெற்றி ஆற்றல் - பகைவரை அடிப்படுத்த வென்றி மிக்க பராக்கிரமம் என்க. அரி - பகைவர். கொடி நகர் என்பது நகர்க்கு இயற்கை யடைமொழி. இன்னும் என்றதனால், வைத்த தீ விடாது எரிந்தது புலனாவது மட்டுமன்றி வெகு தூரத்திலிருந்தும் காணக் கூடிய நிலையில் அவ்வெரியிருந்தது என்பதும் பெறப்படும். 'ஊர் தீ யிட்ட தோங்கிரும் புகையே யோத' (சுந்தர. 1254) என்ற அநுமனுடன் சென்ற வானர வீரர் கூறியது இங்கே காண்க. (ஒப்பு): 'ஒண்ணக ராறுகின் றலதழல்' (யுத்த. 24). ஒருசார் ஒப்பு; (சுந்தர. 451).

பி - ம். 1. கதிரது ; வீசிச்.
2. தொடர்ந்த தோற்றம், சுடருப்.
3. அரிவென்றி ; மடுத்த தீயால், அளித்த.
4. எரிகின்ற தாமே ; தோற்றம். 10

784. மாசடை பரந்த மான மரகதத் தலத்து வைத்த
காசடை சமைந்த மாடங் கதிர்த்தழை கற்றை சுற்ற
ஆசறக் குயின்ற வெள்ளி யகன்மனை யன்ன மாகப்
பாசடைப் பொய்கை பூத்த பங்கயம் நிகர்ப்ப பாராய்.

மாசு அடை பரந்த - மேகங்கள் நெருங்கிப் பரந்த, மான மரகத தலத்து - உயர்ந்த மரகதத் தலத்திலே, வைத்த - கட்டப்பட்ட, காசு அடை சமைந்த மாடம் - அரதனத்தால் நெருக்கமாக அமைக்கப்பெற்ற மாடங்கள், தழைகதிர் கற்றை சுற்ற - (தமது) மிகுந்த கிரணத்தொகுதிகள் எங்கும் சூழுமாறு அமைய, ஆசு அற குயின்ற - குற்றமற இழைக்கப்பட்டு, வெள்ளி அகன் மனை அன்னமாக - (பொன் மாடங்களின் இடையே அமைக்கப்பெற்ற) வெள்ளியினால் ஆய அகன்ற மனைப்பகுதிகள் அன்னம் போன்று ஒளிர, பாசடை பொய்கை பூத்த பங்கயம் நிகர்ப்ப பாராய் - பசிய இலைகள் பரவிய பொய்கைகளில் மலர்ந்துள்ள தாமரைகளை ஒத்து விளங்குவதைக் காண்பாயாக.

மரகதத்தலம் பொய்கையாகவும், மாடங்கள் பங்கயங்களாக வும், மனைகள் அன்னங்களாகவும் உருவகிக்கப் பெற்றன. மனை -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மாடங்களுக்குள் இடையே அமைந்த பகுதிகள். மரகதத் தலம் - பசிய இலைகள் அடர்ந்த தளவாடம்; அதனிடத்துப் பொன்னால் இயன்ற பல மாடங்கள்; அவற்றின் இடையே வெள்ளியால் அமைந்த மணிப்பகுதிகள் இங்குக் குறிக்கப்பெற்ற பொருள்களாம். இதனை வீதி வருணனையாகவும் கொள்க. முதலடியில் எதுகை நோக்கி அடைப் பரந்த என்பது இயல்பாக நின்றது; இரண்டாவது அடியில் அடை, அடைந்து என்னும் பொருளது. இச்செய்யுளில் திரிபு என்ற சொல்லணி காண்க. பசிய அடை பாசடை என வந்தது என்று கொண்டு, பசிய இலை எனினுமாம். கிட்கிந்தா. 9. காசு - அரதனம்; சுந்தர. 49. 154, 413, 422. பாசடை: 'பாசடை சிவந்த கணைக்கா னெய்தல்' (குறுந். 9); இச்செய்யுளும் கிட்கிந்தா காண்டம் 9-ஆம் செய்யுளும், கல்லாடம் 7 : 37-ஆம் வரியும் சொற்களினமைதிக்கு ஒப்பு நோக்கத் தக்கன.

பி - ம். 1. மரசட; பரந்து மூண்ட, தலத்துமான, மாடஞ் செய்ய.
2. காசிடைச், காசடச்; மாடக்கதிரிடை, மாடக்கதிர் நிறக், மாடக் கதிர்மணி.
3. ஆசடை; குயின்ற; மாடங்கள்.
4. பாசடைக் கமலம் பூத்த பொய்கை; திகர்த்த. 11

785. தீச்சிகை சிவணுஞ் சோதிச் செம்மணிச் செற்றிச் செய்ய
தூச்சுடர் மாட மீண்டித் துறுதலால் கருமை தோன்ரு
மீச்செலு மேக மெல்லாம் விரிசுடர் விழுங்க வேவக்
காய்ச்சிய இரும்பு மானச் சேந்தவை யொளிர்வ காணய்.

தீசிகை சிவணும் சோதி-அக்கினிக் கொழுந்து போன்ற ஒளியினையுடைய, செ மணி செற்றி செய்ய-சிவந்த இரத்தினங்கள் பதித்துச் சிவந்த, தூ சுடர் மாடம் ஈண்டி-தூய்மையான ஒளிமிக்க மாடங்கள் நெருங்கி, துறுதலால் - சுடர்விடுதலால், கருமை தோன்ரு - கருநிறம் தோன்ருமல், மீ செலும் மேகம் எல்லாம் - ஆகாயத்தில் படர்ந்து செல்லும் மேகங்கள் எல்லாம், விரி சுடர் - அந்த விரிந்த சுடர்களால், விழுங்க - விழுங்கப்பட்டு, வேவ காய்ச்சிய இரும்பு மான-வேகும்படி பழுக்கக் காய்ச்சிய இரும்புத் தகட்டையொப்ப, சேந்தவை ஒளிர்வ காணய் - சிவந்த நிறத்தனவாய் ஒளி செய்வதைப் பாராய்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மேகமெல்லாம் சேந்தவை ஒளிர்வ என்று இயைக்க. நகரின் ஒளி வீசுவதால் கரிய மேகம் சிவந்து காட்டியது என்பது பொருள். பிறிதின் குணம்பெறலணியுடன் கூடிய தற்குறிப்பேற்றவணி. சிகா எனற வடசொல் சிகை என வந்தது; 'ஆவீறு ஐயாகும்' 'தஸ்ய மத்யே வன்னி சிகா' என்பது மறை. செற்றி-பதித்து. துறுதல்-நெருங்குதலும் ஆம்; 'துறுமலர் அவிழ் குழலாய்.' (சிலப். 7, 42). தோன்று - தோன்றி, செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். சேந்தவை: செம்மை என்னும் பண்படியாகப் பிறந்த வினையெச்சம்.

பி - ம். 1. செற்றிச் செய்ய, செய்த தூணின், செற்றிச் செய்த.
3. விரிசுடர் இலங்கை வேவ, விரிசுட லிலங்கை வேறு.
4. சேத்தொளி கனல்வ, சேர்ந்தவை யொளிர்வ, சேர்ந்தவை யொழிவ.

786. விற்படி திரள்தோள் வீர நோக்குதி வெங்கண் யானை
அற்படி நிறத்த வேனு மாடகத் தலத்தை யாழக்
கற்படி வயிரத் திண்காத் திரங்களிற் கல்லிக் கையால்
பொற்பொடி மெய்யிற் பூசிப் பொன்மலை யென்னப்
[போவ.

'வில்படி திரள் தோள் வீர - வில் (தழும்பு) படிந்துள்ள திரண்ட புயங்களையுடைய வீரம் பொருந்திய இலக்குவனே! வெம் கண் யானை - சினத்தால் வெம்மையாகக் காணப்படும் கண்களை யுடைய யானைகள், அல் படி நிறத்த வேனும் - இருள் படிந்தாற் போன்ற நிறத்தினை யுடையவானாலும், ஆடகம் தலத்தை - இந்த இலங்காபுரியின் பொன் தலத்தினை, கல் படி - கல்லையொத்து, வயிரம் திண் காத்திரங்களில் - உறுதிவாய்ந்த வலிய முன் கால் களினால், ஆழ கல்லி - ஆழமாகத் தோண்டி, பொன் பொடி - (ஆங்குத் தோன்றிய) பொன் துகள்களை, கையால் - துதிக்கையி னால் (எடுத்து), மெய்யிற் பூசி-தம்முடைய உடலில் பூசிக்கொண்டு, பொன் மலை என்ன போவ-பொன்மலைபோலச் செல்வன; நோக்குதி-பாராய்.

விற்படி திரள் தோள்வீரா: 'விற்பெருந் தடந் தோள்வீர' என்று அநுமன் விளித்தது காண்க; (சுந்தர. 1273); வில் இங்கு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வில்தழும்பு. இந்தச் செய்யுட்களிலும் இதனை யடுத்துள்ள பத்துப் பாடல்களிலும் இலக்குவனுடைய திண்ணிய தோள், வில், பரந்த சிவந்த கரம், அரியேறன்ன வீரம் முதலிய கூறப்பெறுவதைக் கண்டுணர்க. மதத்தால் எழுந்த வெம்மை யானைக்கு உள தாகலின் வெங்கண் யானை எனப்பட்டது. வெம்மை - விருப்பமு மாம்; மதத்தானெழுந்த காமம். பெரும்பாலான யானைகள் கரு நிறத்தனவாகலின் அல்படி நிறைத்த எனப்பட்டது. ஆடகம் - மாற்றுயர்ந்த பொன்; 'ஆடகத் தசும்பு' (ஆரணிய. 414); 'ஆட கத் தருவின் சோலை' (சுந்தர. 748); 'ஆடக வளைக்குயில்' (பால. கடிமணப். 2). 'ஆடக மாடம்' (இறை. அகல். உரை). கல்படி - படி, உவம வாசகம்; ஆழக்கல்லி என இயைக்க. பொற்பொடி களை மேலுறப் பூசிய கருநிற யானைகள் பொன்னிறத்தனவாக ஆயின. யானை மண்ணைத் தன்மீது வாரிப்போட்டுக்கொள்வது இயல்பு. எனவே, இங்கும் பொற்றுகள்களை வாரி மேலே இறைத் துக்கொண்டதெனப்பட்டது. கல்படி வயிரத் திண்கால் என்று அதன் மிக்க வலியைக் குறித்தார். காத்திரம் - முன்கால்; 'காத்தி ரங்களாற் றலத்தொடும் தேய்த்ததோர் களிறு' (பால. வரைக்காட்சி. 6); வரகாத்திரம் என்பதனைத் தலையென்றும், அவரகாத்திரம் என்பதனைக் காலென்றும் வடநூலார் கூறுவா ராதலின், தேவர் அதனைச் சிதைத்து 'அபரகாத்திரம் என்றார்' ஐராவதம் ஐராபதம் என்றாற்போல. எனவே அவரகாத்திர மென்றது கால்களை; இனி, பின்கால் முன்கா லென்பாரு முளர். 'வபையோர் அபேதஹர' என்ற வடமொழி வழக்கும் காண்க. (சீவக. 806) உரை.

பி - ம். 2. தலத்தை யார்க்க.
3. திண்கால் நகங்சுளில்; கல்லிற்.
4. பொற்படி; மேலிற்; பூசியென்ன; வீசி; பொன்வரை. 13

787. பூசல்விற் குமர நோக்காய் புகரற விளங்கும் பொற்பின்
காசுடைக் கதிரின் கற்றைக் கால்களாற் கதுவு கின்ற
வீசுபொற் கொடிக ளெல்லாம் விசும்பினைக் கவித்த மேகம்
மாசறத் துடைத்தல் வானம் விளக்குவ போலு மாதோ.

'பூசல் வில் குமர - போர்புரியும் வில்லைத்தாங்கிய குமரனே! புகர் அற விளங்கும் பொற்பின் - குற்றமற விளங்கும் அழகினை யுடைய, காசு உடை கதிரின் கற்றை - (கம்பங்களில் பதிக்கப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பெற்ற) இரத்தினங்களினால் ஆகிய ஒளித்தொகுதியை யுடையன வாய், கால்களால் கதுவுகின்ற - அலைகின்ற காற்றினால் கவ்வப் பெற்ற, வீசு பொன் கொடிகள் எல்லாம் - அசைகின்ற அழகிய கொடிகள் அனைத்தும், விசும்பினை கவித்த மேகம் - ஆகாயத்தைக் கவிழ்ந்துபற்றிய மேகமாகிய, மாசு அற - அழுக்கு நீங்குமாறு, துடைத்து - போக்கி, அ வானம் விளக்குவ போலும் - அந்த ஆகாயவீதியைத் துலக்குவனபோலும், நோக்காய் - இதனைப் பார்ப் பாயாக. ஓ - ஈற்றசை.

பூசல் - போர்; (ஆரணிய. 253). புகர் - குற்றம்; தொல். எழுத்து. 369. நகரின் மாளிகைகள்மீது அரதனகம்பங்களிலே கட்டப்பட்ட கொடிச்சீலைகள் காற்றால் அசைவன, மேகமாகிய மாசு நீங்க ஆகாய வீதியைத் துடைப்பன போன்றன என்க; (ஒப்பு): 'மாகாரின் மின் கொடி மடக்கின ரடுக்கி, மீகார மெங்கணு நறுந்துகள் விளக்கி' (சுந்தர. 98) காண்க.

பி - ம். 1. பூசலிற்; இமைக்கும் பொற்பின், விளங்கு மம்பொன்.

2. கதவிக் கற்றை, கதலி கட்டும்; விரல்களாற்.

3. பொற் பொடிகள்; விசும்பினின் விரிந்த.

4. துடைக்க வோங்கி, துடைத்து மாடம், துயிலும் வானம்; விளங்குவ போல்வ. 14

788. நூல்படத் தொடர்ந்த பைம்பொற் சித்திர நுனித்த பத்திக்
கோல்படு மணிக ளாய குலமணி யெவையுங் கூட்டிச்
சால்படுத் தரக்கன் மாடத் தனிமணி நடுவட் சார்த்தி
மால்கடற் கிறைவன் பூண்ட மாலைபோன் றுள்ளதிம் மூதூர்.

'இ மூதூர் - இந்த இலங்கா நகரமானது, நூல்பட தொடர்ந்த - நூல் அமைக்கப்பட்டதுபோன்று (நேராக) தொடர்ந் திருப்பனவும், பைம்பொன் - பசிய பொன்னால் அமைக்கப்பெற்று, சித்திரம் நுனித்த பத்தி - சித்திரங்கள் நுட்பமாகச் செய்யப் பெற்று வரிசைப்பட்டனவும், கோல்படு - அழகு பொருந்தியனவு மான, மணிகள் ஆய குலமணி - மணிகளாகிய சாதிமணிகள், எவை யும் கூட்டி - எல்லாம் சேர்க்கப்பெற்று, சால்பு அடுத்து - மேன்மை பொருந்தி, அரக்கன் மாடம் - இராவணனது மாடமாகிய, தனி மணி - ஒப்பற்ற நாயக மணி, நடுவண் சார்த்தி - நடுவே பதிக்கப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பெற்று, மால் கடற்கு இறைவன் - பெருமைவாய்ந்த கடல் அரசன், பூண்ட மாலை போன்று உளது - தரித்த அரதன மாலைபோலும் உள்ளது.

'மணியிற் றிகழ்தரு நூல்போல்' (குறள். 1273). கோல்படு: அழகு என்று பொருள்படும் கோலம் எனும் சொல் கோல் என நின்றது. குலமணி - சாதி மாணிக்கம், சிறந்தமணியுமாம். சால்பு அடுத்து எனப் பிரிக்க. சால்பு - நிறைந்த தன்மை. இந்திரசித்து முதலியவர்களின் மாளிகைகள் சூழ்ந்திருக்கும் மணிகள் போல் ஒளிர, இராவணன் மாளிகை நாயகமணிபோல் நடுவணதாக, கடல் அரசன் புனைந்த இரத்தின மாலைபோன்று விளங்கிற்று இலங்கை என்றார். தன்மைத்தற்குறிப்பேற்றவணி; (ஒப்பு): மணி. 15:75-76. நூல்படத் தொடர்ந்த: 'நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத், தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப், பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து' (நெடுநல். 76—79). வருணன் பூண்ட மாலை இலங்கைக்குவமை.

பி - ம். 1. தொடர்ந்து, துரந்த.
2. கால்படு மனைக ளெல்லாம் கதிர்மணிக் கூட்டமாக.
3. நடுவட் சேர்த்தி, தழுவச் செய்து, தமனிய நடுவே சாத்தி.
4. மாலை யொன்று. 15

இதுமுதல் மகுடபங்கப் படலம் என்று சில பிரதிகளில் காணப்படும்.

789. நன்னெறி யறிஞ நோக்காய் நளிநெடுந் தெருவி னுப்பண்
பன்மணி மாடப் பத்தி நிழல்படப் படர்வ பண்பால்
தந்நிறந் தெரிகி லாத வொருநிறஞ் சார்கி லாத
இன்னதோர் நிறத்த வென்று புலப்படா விவுளி யெல்லாம்.

'நல் நெறி அறிஞ - சன்மார்க்கம் நன்கு தெரிந்த அறிஞனே! நளி நெடு தெருவின் நாப்பண் - பெருமைசான்ற நீண்ட தெருவின் நடுவில், பல் மணி மாட பத்தி நிழல்பட - பலவாகிய மணிகள் இழைத்து அமைக்கப்பட்ட மேல்மாடங்களின் வரிசைகளின் ஒளிகள் (தம்மீது) படுமாறு, படர்வ - செல்வனவான, இவுளி எல்லாம் - குதிரைகள் அனைத்தும், பண்பால் தம் நிறம் - இயற்கையாக அமைந்த தமது நிறம், தெரிகிலாத - அறியப் பெறாதனவும்,


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஒரு நிறம் சார்கிலாத - ஒரு குறித்த நிறத்தைப் பொருந்தாதன வும், இன்னதோர் நிறத்த என்று புலப்படா - இன்ன நிறத்தைப் பொருந்தியவையெனத் தெரியப் பெறுதனவுமாயின, நோக்காய் - (இதனைக்) காண்பாயாக.

நல் நெறி - சன்மார்க்கம்; 'வளையாவரு நன்னெறி நின்னறி வாகு மன்றே' (அயோத்தி. நகர்நீ. 129); 'தெளிவுடைத் தம்பி' (ஆரணிய. 786). நளி - பெருமை; 'தடவும் கயவும் நளியும் பெருமை' (தொல். உரி. 22). வரிசையான மாளிகைகளில் நவ மணிகளும் இழைக்கப்பட் டிருத்தலின் அம்மாளிகைகள் நிறைந்த இலங்கைத் தெருவின் ஊடே குதிரைகள் செல்லும்போது, அந்த மணிகளின் நிறம் அவற்றின் மேல்பட, அந்த அந்த நிறமாகக் குதிரைகள் காணப்படுவதால், எவ்வெக்குதிரை எவ்வெந்நிறத்தது என அறிதற்கில்லை. மற்றும், குதிரைகட்கில்லாத மரகதம் முதலிய நிறத்தால் அந்த மணிகளின் நிறமும்பெற்று இந்த விலங்குகள் இன்ன வினத்தைச் சார்ந்தவை என அறிதற்கும் இயல்வதில்லை என்க. பிறிதின்குணம்பெறலணி; (ஒப்பு): 'பெரியநா ளொளிகொ ணுறு விதமணிப் பித்திப் பத்தி, சொரியுமா நிழலங் கங்கே சுற்றலால் காலின் றேன்றல், கரியனுய் வெளிய னுகிச் செய்ய னுய்க் காட்டுங் காண்டற், கரியனு யெளிய னுந்தன் னகத்துறை யழக னேபோல்' (சுந்தர. 197); இன்னும், பால. மிதிலைக். 16-உம் காண்க. பண்பால் தன் நிறம் என்பதற்கு, சிறந்த பால் நிறமான தன் வெள்ளை நிறம் என்றும் பொருள் கொள்வர்; 'நவமணிகளிற் செய்த மாடங்களின் பலபல ஒளிபட, வெள்ளைக் குதிரை ஒரு நிறமாக இருக்கவில்லை' என்பது பழையவுரை. இவுளி - குதிரை; 'விரை நிரை யிவுளி' (சீவக. 123).

பி - ம். 1. அறிஞன்; நளிர் நெடுந், நளிபடும், நனிநெடுந், நாணப்.
3. தெரிகிலாதது.
4. இன்னதோர் குலத்த; புலப்படாப் புரவி. 16

790. வீரநீ பாராய் மெல்லென் பளிங்கினுல் விளங்கு கின்ற
மாரனு மருளச் செய்த மாளிகை மற்றோர் சோதி
சேர்தலுந் தெரிவ அன்றேல் தெரிகில தெரிந்த காட்சி
நீரினு லியன்ற வென்ன நிழலெழு கின்ற நீர்மை.

'வீர - வீரனே! மெல் என் பளிங்கினுல் - மெல்லிய பளிங்குக் கற்களினுல், விளங்குகின்ற - ஒளிர்கின்றனவும், மாரனும் மருள

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

செய்த - மன்மதனும் மனம் மயங்குமாறு அமைக்கப்பட்டனவுமான, மாளிகை - மாளிகைகள், மற்று ஓர் சோதி சேர்தலும் - (தம்மீது) பிறிதோர் ஒளி பட்டவுடனே, தெரிவ - காணப்படுவனவும், அன்றேல் - படாவிடில், தெரிகில - காணப்படாதனவும் ஆகி, தெரிந்த காட்சி - (இவ்வாறு) விளங்குகின்ற காட்சியானது, நீரினல் இயன்ற என்ன - நீரினல் அமைக்கப்பட்டவை இவை என்னுமாறு, நிழல் எழுகின்ற நீர்மை - ஒளி தோன்றுகின்ற தன்மையை, நீ பாராய் - நீ காண்பாயாக.

பலநிறப் பொருள்கள் தம்மீது பட்டாலன்றிக் கண்ணுக்குப் புலனுகாத பளிங்கு மாளிகைகள் ஒருநிறமும் தனக்கொன்றில்லாத நீரினல் இயன்றனவோ என்னுமாறுள்ளன எனப்பட்டது, மணிகளின் ஒளி தம்மிற்றுக்கியபோது அவ்வம் மணிகளின் நிறமாகக் காட்டும் பளிங்குகள், மணிகளின் நிழல் தம்மிற் படியாதபோது நீரான் அமைந்தனபோன்று காணப்படும் அம்மாளிகைகள் என்பது கருத்து, பிறிதின் குணமேற்பணி. 'அடுத்தது காட்டும் பளிங்குபோல்' (குறள். 706) என்பதும் இங்கு நோக்கத்தகும். நீரும் பளிங்கும் வேற்று நிறம் கொள்வன; (ஒப்பு): 'ஈர்ந்தநுண் பளிங்கெனத் தெளிந்த வீர்ம்புனல், பேர்ந்தொளிர் நவமணி படர்ந்த பித்திகைச், சேர்ந்துழிச் சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலான், ஓர்ந்துணர் வில்லவ ருள்ள மொப்பது' கிட்கிந்தா(. 5). ஆன்மா சார்ந்ததன் வண்ணமாதல் போன்று நீர் நிலத்தியல் பால் திரியும். 'நிலத்தியல்பால் நீர் திரிந்தற்று' (குறள். 452)-ம் அதற்குப் பரிமேலழகர் உரையும் காண்க. எளிதில் உடையும் தன்மைத்தாகலின் மெல்லென் பளிங்கு எனப்பட்டது. மாரனும் மருளச் செய்த மாளிகை: மாரன் ஆடவரிற் சிறந்தவன் ஆகலின் ஓவியத் தொழிலிலும் வல்லவன். அவனும் கூட மயங்கும் மாளிகை என்று அந்த மாளிகையின் சிறப்புக் கூறப்பெற்றது. (ஒப்பு) 'மதனற்கும் எழுத வொண்ணுச் சீதை (பால. மிதிலைக். 5); அனங்கவேள் செய்த ஓவியம்' (சுந்தர. 340) பளிங்கு.............. நீரினு லியன்ற; 'பளிங்கு சொரிவன்ன பாய்சுனை' (குறிஞ்சிப். 57); 'மீன வாவிபோல் வியன்படி கத்திலுல் விளங்கும் ............ முழு மணித் தலம்' (கந்தபு. திருநகரப். 33);

பா - ம். 1. ஆரிய; விளங்கி மீது.

3. சேர்வன; தெரிபவன்றே, தெரிப்பவன்றேற், தெளிவதன்றேல்; தேர்கிலாத்; சிறந்த, தெளிந்த.

4. நிழலெழு கின்றதன்றே, எழுகின்ற நீர.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


791. கோனிறக் குனிவிற் செங்கைக் குமரனே கொழுவெண் [டிங்கட்
காணிறக் கதிரின் கற்றைச் சுற்றிய வனைய காட்சி
வானிறத் தரளப் பந்தர் மரகத நடுவண் வைத்த
பானிறப் பரவை வைகும் பரமனை நிகர்ப்ப பாராய்.

'கோல் நிறம் குனிவில் செ கை குமரனே - அம்பினையும் ஒளியையுடைய வளைந்த வில்லையும் கொண்ட குமரனே! கொழு - தழைத்த, வெள் திங்கள் கால் நிற கதிரின் கற்றை - வெண்ணிறமான சந்திரனுடைய ஒளி விடுகின்ற கிரணங்களின் தொகுதியை, சுற்றிய அனைய காட்சி - சுற்றினாற் போன்ற தோற்றத்தினையுடைய, வால் நிறம் தரளம் பந்தர் நடுவண்வைத்த - வெள்ளை நிறமான முத்துப் பந்தலினிடையே பதிக்கப் பெற்ற, மரகதம் - மரகத மணி, பால் நிறம் பரவை வைகும் - பாலின் நிறம் கொண்ட ஆழியில் அமர்ந்துள்ள, பரமனை நிகர்ப்ப பாராய் - பரம் பொருளான திருமாலை ஒத்து விளங்குவதைக் காண்பாயாக.

செங்கை - நடுவு நிலைமையுடன் கூடிய கை எனினுமாம்; அல்லது, வில் பிடித்துச் செந்தழும்பேறிய கையெனினும் இழுக்காது. காலுதல் - உமிழ்தல். நிறம் கால் கதிரின் கற்றை யெனக் கூட்டுக. வால் - வெண்மை. 'பணிமொழி வாலெயிறு' (குறள். 1121); தரளம் - முத்து 'தரளம் வேய்ந்த வெண்ணிற விமானம்' (சுந்தர. 214); 'வாரித் தரள நகை செய்து' (சிலப். 7. 38); முத்துப் பந்தர் பாற்கடலையும், நடுவில் வைத்த மரகதம் திருமாலையும் போன்று இருந்தன. உவமையணி. பரவை; பரந்திருப்பது என்று கடலுக்குக் காரணக்குறி. பந்தல் : பந்தர் ஈற்றுப் போலி. கோல்-அம்பு. கால் நிறம் - கக்கும் ஒளி. தெய்வப் புலவர்கட்குச் சிறந்த உவமைகளே தோன்றும் என்பதற்கு இச்செய்யுள் ஓர் எடுத்துக் காட்டு. (ஒப்பு): திருக்கோ. 109.

பி - ம். 1. குளிர் வெண் டிங்கள்.

2. கதிர் வெண்டிங்கள், கதிர் வெண் கற்றை; தெற்றிய, தோற்றிய; ஆய.

3. தவளப் பந்தர்; நடுவுள்.

4. பரமனை நிகர்த்த; குறுங்குடி நிகர்ப்ப.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

792. கோளவா வரியே றன்ன குரிசிலே கொள்ள நோக்காய்
நாளவா மீன்தோய் மாடத் தும்பரோர் நாகர் பாவை
காளவா ருறையின் வாங்குங் கண்ணடி விசும்பிற் கவ்வி
வாளரா விழுங்கிக் காலும் மதியினை நிகர்த்த வண்ணம்.

கோள் அவா - பிற வுயிர்களைக் கொள்வதற்கு (கொல்வதற்கு) விழைகின்ற, அரி ஏறு அன்ன - ஆண் சிங்கத்தை நிகர்த்த, குரிசிலே - பெருமையாளனே! நாளவாம் மீன்தோய் - நாட்கள் எனப்படும் நட்சத்திரங்கள் பொருந்திய, உம்பர் மாடத்து - மேல் மாளிகை யிடத்து; ஓர் நாகர் பாவை - ஒரு தெய்வமகள், காளம் வார் உறையின் வாங்கும் - கரு நிறமுள்ள நீண்ட உறையினின்று எடுத்த, கண்ணடி - கண்ணாடியானது; வாள் அரா - கொடிய இராகு கேதுக்கள் என்ற பாம்புகள், விசும்பில் கவ்வி விழுங்கி - (வாயினால்) ஆகாயத்தில் கவ்வி விழுங்கி, காலும் - பின்பு வெளி யுமிழ்கின்ற, மதியினை நிகர்த்த வண்ணம் - சந்திரனை ஒத்து விளங் கும் தன்மையை, கொள்ள நோக்காய் - நன்றாகக் காண்பாயாக.

தான் நின்ற இடத்திலிருந்து, இலங்கை மாட மொன்றில் ஒரு நாகர் மகள், தன் உறையினின்று கண்ணடி வாங்கிய காட்சியைக் கண்டு இராமபிரான் கூறியது. கோள்: கொள்ளுதல் முதனிலை திரிந்த தொழிற்பெயர். அரியேறு - ஆண்சிங்கம் 'பன்றி புல்வா யுழையே கவரி, யென்றிவை நான்கு மேறெனற் குரிய' (தொல். மரபி. 38) என்ற சூத்திரத்தில் 'உரிய' என்பது கொண்டு அரியேறும் கொள்க. 'பிறவும் அன்ன' எனப் பேராசிரியர் உரைக் குறிப்புக் கொண்டும் கொள்ளலாம், கோளவா அரியேறன்ன குரிசில் என்பது கொண்டு மாற்றாருயிரைக் கவரும் இலக்குவனது பேராற்றல் நன்கு புலனாகும். இதனை இலக்குவன் ஆற்றும் பல போர்களைக் கண்டு தெளிக; ஒப்பு: 'சுமித்திரைச் சிங்கம்' (யுத்த. கும்ப. 208) காண்க. கரிய நிறம் வாய்ந்த உறையிலிருந்து எடுத்த கண்ணடி, இராகுவின் வாயிலிருந்து வெளியேறும்சந்திரனைப்போன் றிருந்தது. தன்மைத் தற்குறிப்பேற்றவணி. காளம் - கறுப்பு; 'காள மேகத்தைச் செக்கர் கலந்தென' (யுத்த. இந்திரசித்து 68); 'கமலத் திண் காடுபூத்த காளமா மேக மொத்தான்' (யுத்த. 778). நாகர் பாவை: இராவணனால் வலிந்து கொணரப்பட்ட பெண். அவன் திக் விஜயம் செய்தபோது சிறைப்படுத்திக் கொணர்ந்த கன்னியருள் ஒருத்தி 'நாகர் வாழிட முதலென நான்முகன் வைகும் மாகமால் விசும் பீறென நடுவுள வரைப்பில், தோகை மாதர்கள்' (சுந்த.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

1087). பாவை : உவமவாகுபெயர். காள வாயுறை - கருத்த சூரிய படத்தின்உறை என்பது பழையவுரை.

பி - ம். 1. கொள்கை நோக்காய்.

2. நாளவாமின் ; நாளவாய்மின் ; நாகர் பார்வை.

3. காளவா வுறையின், காளவா றுறையும், காளவாளுறை.

4. நிகர்ப்ப பாராய், நிகர்த்த மாதோ. 18

793. கொற்றவான் சிலைக்கை வீர கொடிமிடை மாடக் குன்றை
உற்றவான் கழுத்த வான வொட்டகம் வைத்த வும்பர்ச்
செற்றிய மணிக ளீன்ற சுடரினைச் செக்கா ரத்தின்
கற்றையந் தளிர்க ளென்னக் கவ்விய நிமிர்வ காணாய்.

கொற்றம் வான் சிலை கை வீர - வெற்றி பொருந்திய பெரிய வில்லேற்ற வீரனே! கொடி மிடை மாட குன்றை உற்ற - கொடிகள் செறிந்த மாடத்தை யெட்டுகின்ற, வான்கழுத்த ஆன ஒட்டகம் - உயர்ந்து நீண்ட கழுத்தை யுடையனவான ஒட்டகங்கள், வைத்த - அமைத்த, உம்பர் செற்றிய மணிகள் - உப்பரிகையில் அழுத்திய அரதனங்களால், ஈன்ற - வெளி விடப்பட்ட, சுடரினை - (செந்நிறமான) ஒளியை, செக்காரத்தின் கற்றை அம் தளிர்கள் என்ன - தேமாமரத்தின் தொகுதியான அழகிய தளிர்கள் என்று கருதி, கவ்விய நிமிர்வ காணாய் - கவ்வும் பொருட்டு நிமிர்பவற்றை நீ நோக்குவாயாக.

மாளிகை முகட்டின் கண் பதிக்கப்பெற்ற சிவந்த மணிகளின் கற்றைகளைத் தேமாமரத்தின் தளிர்கள் எனக்கருதி ஒட்டகங்கள் கவ்வின எனப்பட்டது. மயக்கவணி. செக்காரம், தேமா மரம்; சஹகாரம் என்ற வடசொற் சிதைவு. வயந்த காலத்துக்கும் மன்மதனுக்கும் குயிலுக்கும் துணையாய் மலர்வது என்ற காரணக்குறி. அத்து சாரியை, ஒட்டகம்; இதனைப் பாலைவனக் கப்பல் என்பர். மணற் காடுகளில் விரைவாக நடக்க வல்லது; அரேபியா நாட்டில் மிக்குள்ளது. 'தள்ளரும் பரம் தாங்கிய வொட்டகம்' (பால. எழுச்சி. 3) என்றதும் காண்க. இதனை உஷ்ட்ரம் என்று வடசொல்லின் சிதைவாகக் கொள்வர். கவ்விய : செய்யிய வென்னும் வாய்பாடு.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம. 1. கொற்ற வெஞ்சிலைக்கை ; கொடி யுடை ; மாடக்கொத்தை.

2. மற்ற தும்பர், அவற்ற தும்பரி.

3. சுடர்கனை ; செக்க ரார்ந்த, செய்கையாரக், செக்கரொண்பற், செய்யராகக், செக்கரந்தெிச், சேகா ரத்தின்.

4. கவ்வுவ ; நிகர்வ. 20

794. வாகைவெஞ் சிலைக்கை வீர
மலர்க்குழல் வடிக்கு மாலைத்
தோகைய ரிட்ட தூமத்
தகிற்புகை முழுதுஞ் சுற்ற
வேகவெங் களிற்றின் வன்றோல்
மெய்யுறப் போர்த்த தையல்
பாகனிற் பொலிந்து தோன்றும்
பவளமா ளிகையைப் பாராய்.

வாகை வெம் சிலை கை வீர - வெற்றி மாலை புனைந்த கொடிய வில்லினைத் தாங்கிய வீரனே ! மாலை - மாலைப் பொழுதில், வடிக்கும் மலர் குழல் - நன்கு வகை செய்த, மலரணிந்த கூந்தல் (புலர்த்துமாறு) தோகையர் இட்ட - மகளிர் மூட்டிய, தூமத்து அகில் புகை - தூப வர்க்கத்தை ஒட்டிய அகிற் புகையானது, முழுதும் சுற்ற - முழுதும் சூழ்ந்ததனால், வேகம் வெம் களிற்றின் வல் தோல் - விரைந்து எங்கும் செல்லும் வெம்மை வாய்ந்த யானையின் வலிய தோலை, மெய் உற போர்த்த - தன் உடலிலே பொருந்தப் போர்த்தவனும், தையல் பாகனில் - உமாதேவியைத் தன் ஒரு பாகத்தில் ஏற்றவனுமான சிவபெருமானைப்போல், பொலிந்து தோன்றும் - விளங்கிக் காணப்படும் ; பவள மாளிகையை பாராய் - பவள மாளிகையை நோக்குவாயாக.

வாகை வெஞ்சிலைக்கை வீர ; (யுத்த. 793). வடிக்கு மலர்க் குழலென மாற்றுக. 'மழை யொக்கும் வடித்த கூந்தல்' (ஆரணிய. 623). பவள மாளிகை செம்மேனியனாகிய சிவபிரானையும், அம் மாளிகையைச் சூழ்ந்து நின்ற கருநிறப்புகை அப்பிரான் போர்த்துக்கொண்ட யானை உரிியையும்போலும் எனப்பட்டன. தையல் பாகன் - சிவபிரான் ; 'பாகத்தில் ஒருவன் வைத்தான்' (ஆரணிய. 629) எனச் சூர்ப்பணகை கூற்றாக வருதல் காண்க, 'நாரி பாகத் தன்' (ஆரணிய. 851) ; 'தத்துவ மறைக்கு மெட்டுதற் கரியதன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வடிவிற், பாகமாய் விளங்கும் பைந்தொடி' (வி.பா. அருச். 78). களிற்றின் வன்றோல் மெய்யுறப் போர்த்தது' 'வீழ்மத வெம்போர் ஓங்க லுரிக்கு முருத்திரன்' (ஆரணிய. 1090). தாருக வனத்துத் தவமுனிவர் சிவபிரான் மீது ஆபிசார ஓமம் செய்து ஏவிய, ஒரு யானை சிவபிரானை எதிர்க்க, அவர் அதனைக் கொன்று அதன் தோலைத் தமது போர்வையாகக் கொண்டனர் என்பது வரலாறு. இவ்வீரச்செயல் திருவழுவூர் என்ற சோழநாட்டுத்தலத்து நிகழ்ந்த தாகப் புராணம் கூறும், 'பூமன் சிரங்கண்டி' எனத்தொடங்கும் விருத்தத்தில், 'சலந்தரன் விற்குடி மாவழுவூர்' என வருதல் காண்க ; 'கைம்மா வுரிவை யம்மான்' (தேவா. 1244 ; 10).

பி - ம். 1. மலர்க் குழல் வடிவ மான ; புலர்த்த மாலை.
2. இட்ட தூயவகிற். 21

795. காவலன் பயந்த வீரக் கார்முகக் களிறே கற்ற
தேவர்தந் தச்ச னீலக் கல்லினுற் றிருந்தச் செய்தது
ஈவது தெரியா வுள்ளத் திராக்கத ரீட்டி வைத்த
பாவபண் டார மன்ன செய்குன்றம் பலவும் பாராய்.

காவலன் பயந்த வீர கார்முக களிறே - தயரத மன்னன் பெற்ற வீரம் செறிந்த வில்லை ஏந்திய ஆண் யானையை ஒத்த வனே ! கற்ற - சிற்பநூலில் தேர்ச்சி பெற்ற, தேவர் தம் தச்சன் - தெய்வத் தச்சனான விசுவகன்மாவால் ; நீலம் கல்லினுல் திருந்த செய்தது - நீல மணிக்கற்களால் நன்கு செய்யப் பெற்றனவும், ஈவது தெரியா உள்ளத்து இராக்கதர் ஈட்டிவைத்த-ஈதல் தொழிலை உணராத நெஞ்சினையுடைய அரக்கர்கள் சேர்த்து வைத்த, பாவ பண்டாரம் அன்ன - பாவம் செறிந்த நிதிக்கூடம் போன்ற, செய் குன்றம் பலவும் - செய்குன்றங்கள் பலவற்றையும், பாராய் - காண்பாயாக.

கார்முகக் களிறு ; இல்பொருளுவமை. கார் முகம் என்பது வானிடு வில்லையொட்டி எழுந்த சொல். கற்ற தேவர் தந் தச்சன் - விசுவகன்மா ; 'தெய்வத் தச்சனைப் புகழ்துமோ' (சுந்தர. 113) என ஆசிரியர் கூற்றாக வருதல் காண்க. 'ஏவின தியற்றினன், தேவரு மருள்கொளத் தெய்வத் தச்சனே' (யுத்த. 12). ஈவது தெரியா வுள் ளத் திராக்கதர் ; 'இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(ஆரணிய. 129) ஆகலின் அவர்பால் ஈகை இல்லை யென்றார். ஈகை அருள்பற்றி எழுவது ஓர் உள்ளப்பண்பு, 'தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான், எங்ஙனம் ஆளும் அருள்' (குறள். 251) என்றார் நாயனார், ஈதற்பண்பில்லாமையினாலே அவர்கள் ஈட்டிய நிதிக்குவையைப் பாவ பண்டாரம் என்றார். 'ஈதல் அறம்' (ஔவை. தனிப்பா.) என்றதனால் ஈயாமை மறம் அல்லது பாவம் எனப் பட்டது. பண்டாரம் - நிதியறை. 'தன்னடியவர்க்கு மூலபண் டாரம் வழங்குகின்றான்; (திருவாச. திருப்பாண்டி. 5); 'பண்டாரங் காமன் படையுவள் கண்காண்மின் (பரி. 11; 123): பாண்டா காரம் - பொக்கிஷம் (வடமொழி). தெய்வத் தச்சன் நீலமணி கொண்டு செய்த செய்குன்றம் பாவபண்டாரம் போலும் என்னப்பட்டது. தன்மைத் தற்குறிப்பேற்றவணி. பாவத்தைக் கரிய அல்லது நீல நிறமாகக் கூறுவது கவிமரபு; 'அருநீல பாவ மகல' (பெரியதிரு.)

பி - ம். 2. நீலக் காசினால்.

3. யாவதுந் தெரியா, யாவரும்.

4. காணாய். 32

796. பிணைமதர்த் தனைய நோக்கம்
பாழ்படப் பிடியுண் டன்பில்
துணைவனைப் பிரிந்து போந்து
மருங்கெனத் துவளு முள்ளம்
பணமயிர்ப் பெய்து மல்குற்
பாவையர் பருவ நோக்கும்
கணமயிற் குழுவின் நம்மைக்
காண்கின்றார் தம்மைக் காணாய்.

'பிணை - பெண் மானின், மதர்த்து அனைய நோக்கம் - களிப் பேறியது போன்ற பார்வையின் அழகு, பாழ்பட - கெட்டழியும் படி, பிடியுண்டு - (அரக்கரால்) கைப்பற்றப்பட்டு, அன்பில் துணை வனை பிரிந்து போந்து - (தமது) அன்பிற்குப்பாத்திரமான நாயகனை நீங்கி நின்று, மருங்கென துவளும் - (தனது) இடைபோன்று துவண்டசைகின்ற, உள்ளம் - மனத்தையும், பணம் அயிர்ப்பெய் தும் - நாகபடம் என்று ஐயுறுமாறு உள்ள, அல்குல் - அல்குலினை யும் உடைய, பாவையர் - தேவகன்னிகைகள், பருவம் நோக்கும் - கார் காலத்திலே (மேகத்தை) எதிர்பார்க்கின்ற, கணம் மயில் குழு


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வின் - திரண்ட மயில் கூட்டம் போன்று, நம்மை காண்கின்றார் தம்மை காணாய் - நம்மைக் கண்ணுறுபவரைப் பார்ப்பாயாக.

மதர்த்தல் - களித்தல், 'மதுப்பருகிப் பருவாளை நின்று மதர்க்கு மருங்கெலாம்' (பால. நாட்டுப். 24); தேவர்களின் இடரைத் தீர்க்கப் போந்தவனாகலின் இராவணனாற் சிறைப் படுத்தப் பெற்ற தேவமாதர்கள் தத்தம் கணவன்மாரைப் பிரிந்து நின்றவர்கள் கார் வரவு கண்டு களிப்பெய்தும் மானைப் போன்று இராம இலக்குவரை மகிழ்வுடன் நோக்கினர் என்பது இதிற்கண்ட கருத்து. நோக்கம் - இங்கே பார்வையின் அழகு அல்லது கண்ணழகு, மருங்கெனத் துவளும் உள்ளம் - (ஒப்பு) 'மென்மருங் குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்' (சுந்தர. 332); பணம் அயிர்ப்பு எய்தும் அல்குல்; நாகத்தின் படமோ என ஐயுறத்தக்க அல்குல். 'பாராழிப் பிடரிற் றாங்கும் பாந்தளும்' (கிட்கிந்தா. 756); 'மன்னுக விணைப்படமும் தேர்த்தட்டு மதிமயக்கி' (சீவக. 173); பாவையர் என்ற பன்மைக் கேற்ப, கணமயில் எனப்பட்டது. பாவையர் உவமவாகுபெயராய் பாவைபோன்ற மகளிரைக் குறித்தது. பருவம் நோக்கும் கணமயில் - இங்கே கார்ப்பருவம்; 'கார்பெற்ற தோகையோ' (நள. 404) என்றது காண்க. மற்றும், 'அளவில் காரெனும் அப்பெரும் பருவம்வந் தணைந்தாற், றளர்வ ரென்பது தவம்புரி வோருக்கும் தகுமால்' (கிட்கிந்தா. 481); 'கார் கெழு பருவம் வாய்ப்பக் காமுறு மகளிர் உள்ளம், சீர்கெழு கணவன் தன்பால் விரைவுறச் சொல்லுமா போல்' (பெரியபு. திருஞான. 812).

பி - ம். 1. மதந்தனைய.

2. துணைவரைப்.

3. துவளு முள்ளப்.

4. குழாம்போல்.



797. நாழ்மலர்த் தெரியல் மார்ப நம்படை காண வானத்து
யாழ்மொழித் தெரிவை மாரும் மைந்தரு மேறு கின்றார்
வாழ்வினிச் சமைந்த தன்றே யென்றுமா நகரை யெல்லாம்
பாழ்படுத் திரியல் போவா ரொக்கின்ற பரிசு பாராய்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'நாழ் மலர் தெரியல் மார்ப - அன்றலர்ந்த மாலையை அணிந்த மார்பினை யுடையவனே! நம படை காண - நமது சேனையைக் காணுமாறு, யாழ் மொழி - யாழ்போலும் இனிய வார்த்தைகளை யுடைய, தெரிவைமாரும் மைந்தரும் - தேவ மகளிரும் ஆடவரும், வானத்து ஏறுகின்றார் - விண்ணேக்கி ஏறுபவர்களாய், 'இனி வாழ்வு சமைந்தது அன்றோ' - இனி அரக்கர் வாழ்நாள் முடிவுற்றது அன்றோ, என்று - என்று கூறி, மா நகரை எல்லாம் - பெரிய இலங்கை நகரத்தை எல்லாம், பாழ்படுத்து - பாழ்செய்துவிட்டு, இரியல் போவார் - ஓடிப்போகின்றவரை, ஒக்கின்ற பரிசு பாராய் - ஒத்திருக்கின்ற தன்மையைக் கண்ணுறுவாயாக'.

நாள் என்பது எதுகை குறித்து, நாழ் என நின்றது. ஏராளமான வானரப்படைகள் தடுக்குமாதலால் நம்மை இனி அரக்கர்கள் ஒன்றும் செய்தற்கில்லை யென்றும், இனி இலங்காபுரி அழிவெய்துதல் திண்ணம் என்றும் உறுதிகொண்டு தம்மைக் காண்பதற்காக இராவணனுற் சிறைப்படுத்தப்பட்ட விண்ணுலக மாதர்கள் வானிலேறுவது, அவர்கள் இருப்பிடம் நோக்கி விழைந்து செல்லுதல்போலும் எனப்பட்டது. தெரியல் - மலர்களைத் தேர்ந்தெடுத்துத் தொடுத்த மாலை; அல் பெயர்விகுதி. இனி வாழ்வு சமைந்தது என்பதற்கு, நமக்கு நல்வாழ்வு ஏற்பட்டுவிட்டது என்று தேவமாதர்களின் கூற்றுகக் கோடலும் ஆம். இரியல் போதல் - நீங்குதல்; ஆரணிய. 420, 473. 784 முதல் 799 வரை உள்ள செய்யுட்களோடு சித்திரகூடப்படலம் (அயோத்தி. 2—38) செய்யுட்களை ஒப்பு நோக்குக. இப்படலத்து இலங்கையின் அழகிய தோற்றத்தைத் தம்பிக்குக் காட்டிய இராமபிரான் அங்கு மால்வரை யியல்பெலாம் பிராட்டிக்குக் காட்டினன் என்பதறிக.

பி - ம். 1. நாண்மலர்; தெரியல் வீர; நம் பலங்காண்பான், வலிகாண்பான்; மாடத்து.

2. யாழ் மொழிப் பாவைமாரும்.

3. சமைந்த தென்றே.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இராவணன் வாநர சேனையைக் காணக் கோபுரத்தின்மீது ஏறுதல்

798. இன்னவா றிலங்கை தன்னை
யிளையவற் கிராமன் காட்டிச்
சொன்னவா சொல்லா வண்ண
மதிசயந் தோன்றுங் காலை
அன்னமா நகரின் வேந்தன்
அரிக்குலப் பெருமை காண்பான்
சென்னிவான் தடவுஞ் செம்பொற்
கோபுரத் தும்பர்ச் சேர்ந்தான்.

இன்னவாறு - இந்தவிதமாக, இலங்கை தன்னை - இலங்கை நகரத்தை, இராமன் இளையவற்கு காட்டி - இராமபிரான் இலக்குவனுக்குக் காண்பித்து, சொன்னவா சொல்லா வண்ணம் - சொன்ன வகையைத் திரும்பவும் சொல்லாதபடி, அதிசயம் தோன்றும் காலை - அதிசயம் உள்ளத்துத் தோன்றிக்கொண்டிருக்கையில், அன்ன மா நகரின் வேந்தன் - அத்தகைய பெரிய நகரின் அரசனான இராவணன், அரிகுல பெருமை காண்பான் - குரங்குக் கூட்டத்தின் மிகுதியைக் காண்பதற்காக, சென்னி வான் தடவும் - உச்சியானது விண்ணைத் தீண்டுகின்ற, செம்பொன் கோபுரத்து உம்பர் சேர்ந்தான் - செம்பொன்னினா லியன்ற கோபுரத்தின் மேலிடத்தை அடைந்தான்.

சொன்னவாறு என்பது ஈறு குறைந்தது. அதிசயம்: ஆரணிய. 572, 997. மேன்மேலும் வருணனைக்கிடம் இருத்தலின் சொன்னதை மீட்டும் சொல்லவேண்டிய அவசியம் இன்றி இலங்கை வருணிக்கப்பட்டது என்க.

பி - ம். 1. இன்னவா.
2. சொல்லா முன்னம்.
3. நகரி வேந்தன்; அரிகுலப்.
4. தடவுந் தோற்றந்; தடவுகின்ற; கோபுரந் தென்பாற் சென்றான். 25

இலங்கைகாண் படலம் முற்றும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## இலங்கைகாண் படலம் :—

ஸ்ரீ இராமபிரான் பரிவாரங்களோடும் சுவேல மலையின்மீதேறி நின்று இலங்கை வளத்தைப் பார்த்ததாக இரு நூல்களும் கூறும். ஆனால் இலங்கையின் பல பெருமைகளையும் இராம பிரான் இலக்குவற்குக் காட்டிக் கூறியதாக வான்மீகத்தில் இல்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 10. இராவணன் வானரத்தானைகாண் படலம்

இது, இராவணன் வாநர சேனையைக் கண்டதைத் தெரிவிக்கும் படலம் என விரியும். சில ஏட்டுப் பிரதிகளில் கோபுரப் படலம் என்றும், சேனைகாண் படலம் என்றும் இப்படலப் பெயர் காணப்படுகின்றது.

## வேறு

### இராவணன் கோபுரத்தின்மீது நிற்றல்

799. கவடு றப்பொருத காய்களி றன்னான்
அவடு யக்கின்மல ரம்புற வெம்பும்
சுவடு டைப்பொருவி றோள்கொ டனேகம்
குவடு டைத்தனியோர் குன்றென நின்றான்.

கவடு உற பொருத - மனத்திலே கபடம் பொருந்தப் போர் செய்த, காய் களிறு அன்னான் - சினத்துடன்கூடிய ஆண் யானையை நிகர்த்தவனான இராவணன், அவள் துயக்கின் - அந்தச் சீதாதேவியின்பால் தான்கொண்ட காதலினால் விளைந்த தளர்ச்சியோடு, மலர் அம்பு உற வெம்பும் - (மன்மதனுடைய) மலர்வாளிகள் மேனியில் தைக்க வருந்துகின்ற, சுவடு உடை - தழும்புகளைப் பெற்ற, பொரு இல் தோள் கொடு - ஒப்பற்ற தன் புயங்களுடன், அநேகம் குவடு உடை தனி ஒர் குன்று என நின்றான் - பலவாகிய சிகரங்களையுடைய ஒப்பற்ற ஒரு மலைபோன்று நின்றான்.

களிறன்னான் குன்றென நின்றான், என இயைக்க. கவடு - வஞ்சனை. யானைக்குக் கவடு அதிகம் என்பர்; (ஒப்பு): 'களிறு கவுளடுத்த வெறிகற் போல' (புறநா. 30); மற்றும், சீவக. 2910; சூளா. சீயவதை. 94 காண்க. கவடு - புரசைக்கயிறு என்பது பழையவுரை. காய் களிறு: வினைத்தொகை. அவள் என்றது, சீதாதேவியை. துயக்கு - தளர்ச்சி; ஆசை, பந்தம் எனலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Viney Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஆம்; 'தொண்டையங் கனிவாய்ச்சீதை துயக்கிஞ லென்னைச் சுட்டாய்' (சுந்தர. 730). மலரம்பு - மன்மதனுடைய ஐந்து மலர் வாளிகளான தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலம் என்பன. சுவடு - வாளித் தழும்பு. பொருவில் தோள் - வில் எடுத்துப் போர்செய்யும் தோள்களுமாம். அநேகம், வடசொல்; ந+ஏகம் எனப்பிரியும். தோள்கள் பலவும் சிகரங்களாக இராவணன் குன்று போல் நின்ருன் என்பது குறிப்பு.

பி - ம். 1. கவடுகப், கவடுடை; பொருவு.

2. துவக்கின்; மலரப்புற.

3. தோளி னநேகம், தோளோ டனேகக்.

800. பொலிந்த தாங்குமிகு போரென லோடும்
நலிந்த நங்கையெழி லால்வலி நாளும்
மெலிந்த தோள்கள்வட மேருவின் மேலும்
வலிந்து செல்லமிசை செல்லு மனத்தான்.

(அவ்வாறு நின்ற இராவணன்) 'ஆங்கு மிகு போர் பொலிந்தது - அங்கே பெரும்போர் தோன்றியது'. எனலோடும் - என்ற அளவில், நலிந்த நங்கை எழிலால் - கணவனை விட்டுப் பிரிந்ததால் உடல் மெலிந்த சீதா தேவியின் அழகினை உட்கொண்டதால், நாளும் வலி மெலிந்த தோள்கள் - நாளுக்கு நாள் வலிமை தளரப் பெற்ற புயங்கள். வடமேருவின் மேலும் வலிந்து செல்ல - வட மேருவைக் காட்டிலும் வன்மை கொண்டு உயர, மிசை செல்லும் மனத்தான் - (அப்போரின் மீது) செல்கின்ற உள்ளத்தை உடையவன் ஆனுன்.

மெலிந்த தோள்கள் போரெனலோடும், வலிந்து சென்றன என்று இயைக்க. முன் செய்யுளின் கருத்து இங்கு வலியுறுத்தப் பெற்றது, நலிந்த நங்கை - சீதாப் பிராட்டி; துன்ற லோதியின் அவல நிலையை, 'வன் மருங்கில் வாளரக்கியர் நெருக்கவங் கிருந்தார்' (சுந்தர. 332); எனத் தொடங்கித் தொடரும் பாடல்களில் காண்க. போரெனலோடும் வலிந்து செல் மனத்தான்; 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொ டிண்டோள்'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(பால. பூக்கொய். 18); ஒப்பு: 'போரெனிற் புகலும் புனைகழல் மறவர்' (புறநா. 31). ஒப்பு: 'பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை, வளிபொரு தெண்கண் கேட்பின், அதுபோ ரென்னு மென்னையு முளனே' (புறநா. 89); குறள். 778-இன் உரையும் காண்க.

பி - ம். 1. ஆமினிது, ஆகுமிது.

2. மலிந்த; மிக நாளும், மிகு நாளும்.

4. மலிந்து; செல்லு மிசை; வெல்லமிகை, செல்ல வளர்கின்ற. 2

801. செம்பொன் மௌலிச் சிகரங்கள் தயங்கும்
அம்பொன் மேருவரை கோபுர மாக
வெம்பு காலினை விழுங்கிட மேனாள்
உம்பர் மீதினிமிர் வாசுகி யொத்தான்.

செம்பொன் மௌலி சிகரங்கள் தயங்கும் - செம்பொன்னாலாகிய கலசங்களைத் தம்மிடம் கொண்ட சிகரங்களுடன் விளங்கும், கோபுரம் அம் பொன் மேருவரை ஆக - கோபுரமானது, அழகிய பொன் மேருமலை ஆக, வெம்பு காலினை விழுங்கிட - தன்னிடம் பொருமை கொண்டு மனம் புழுங்கிய வாயு பகவானைக் கவளீகரிக்குமாறு, மேல் நாள் - முன் காலத்தில், உம்பர் மீதில் நிமிர் வாசுகி ஒத்தான் - (மேருவின்) உச்சியில் உயர்ந்து கவிந்த வாசுகி என்னும் பாம்பினை நிகர்த்து விளங்கினான் (இராவணன்).

இராவணன் வாசுகிக்கு ஒப்பாகக் கூறப்பட்டனன், கோபுரம் அம்பொன் மேருவரை ஆக என்று மொழி மாற்றப் பெற்றது. வாயு தேவனுக்கும் வாசுகி என்னும் அரவிற்கும் எழுந்த பகைமை பின்னிரண்டடிகளிற் குறிக்கப் பெற்றது. வாசுகியை அரவென்ற ஒற்றுமை பற்றிச் சேடன் என்றும் கூறுவர். இந்த வரலாற்றினை ஆரணிய. 1150. சுந்தர. 24, 28ல் காண்க. கோபுரம் உத்தர கோபுரம் என்பது பழையவுரை.

பி - ம். 1. மௌலிகொள், மௌலிய; சிரங்கள்; தயங்க.

3. வெம்பு காலை, காலனை; மேன்மேல், மேலும்.

4. உம்பர் மேனிமிர். 3

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



802. தொக்க பூதமவை யைந்தொடு துன்னிட்
டொக்க நின்றதிசை யொன்பதொ டொன்றும்
பக்க முந்நிழல் பரப்பி வியப்பால்
மிக்கு நின்றகுடை மீது விளங்க,

'தொக்க பூதம் அவை ஐந்தொடு துன்னிட்டு - ஒன்றாக வியைந்த ஐம்பெரும் பூதங்களுடன் நெருங்கி, ஒக்க நின்ற - ஒன்று கூடி நின்ற, திசை ஒன்பதொடு ஒன்றும் - திசை பத்துக்களிலும், பக்கமும் - அவற்றின் புறங்களிலும், நிழல் பரப்பி - நிழலைப் பரவச் செய்து, வியப்பால் - ஆச்சரியப்படும் வகையில், மிக்கு நின்ற குடை - மேம்பட்டு நின்ற ஒற்றை வெண்கொற்றக் குடை, மீது விளங்க - (தலை) மீசை ஒளி செய்யவும்,

இராவணன் குடையின் பெருமை இங்குக் கூறப்பெற்றது. பஞ்சீகரணத்தின்படி, ஐந்து பூதங்களுள் ஒவ்வொரு பூதத்தின் அம்சம் பிறிதொன்றில் சேர்ந்துள்ளமையின் 'தொக்க பூதம்' என்றும், 'ஐந்து பூதமும் பத்தாக்கி, யவைபாதி நன்னான் காக்கி நந்துதம் பாதிவிட்டு நான்கொடு நான்கும் கூட்ட, வந்தன தூல பூதம்' (கைவல்யம். தத்துவ விளக்கப். 41) என்றும், பெரியோர் ஐம்பூதங்களின் சேர்க்கையை விரிப்பது காண்க. திசை ஒன்பதொ டொன்று - பத்துத் திசைகள்; நான்கு பெருந்திசைகள், நான்கு கோணத்திசைகள், ஆகாயம், பூமி என்ற இவைகள்கூடிப் பத்துத் திசைகள் ஆதல் காண்க. தசரதன் என்பதற்குப் பத்துத் திசைகளிலும் தன் தேர் செல்லும்படி நின்றவன் எனப் பொருள் கூறுதல் காண்க. குடை வருணனை; சுந்தர. 1080-இலும் காண்க. குடை, இங்கு ஆட்சியைக் குறித்தது என்க. இச்செய்யுளால் இராவணன் குடை பிரபஞ்சம் முழுமையும் வியாபித்த செய்தி கூறப்பெற்றது காண்க.

இதுமுதல் 16-ஆம் கவி வரையில் ஒவ்வொரு செய்யுளின் இறுதியிலும் வரும் செயவெனெச்சங்கள் பதினேழாங் கவியிலுள்ள 'நின்றான் கண்டான்' என்பவற்றோடு முடியும்.

பி - ம். 1. பூத மைந்தையும்; தூசுற்று, மெய்யுற்று.
3. முன் னிழல்; பரப்பிய நிப்பால், பாப்பிய நிப்பார்.
4. மிக்க.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஓத நூல்கள் செவியின்வழி யுள்ளஞ்
சீதை சீதையென வாருயிர் தேய
நாத வீணையிசை நாரதர் பாட
வேத கீதவமிழ் தள்ளி விழுங்க.

803. கைத்த ருங்கவரி வீசிய காலால்
நெய்த்தி ருண்டுயரு நீள்வரை மீதில்
தத்தி வீழருவி யின்றிரள் சால
உத்த ரீகநெடு மார்பி னுலாவ,

கை தரும் கவரி வீசிய காலால் - கையினால் தாங்கப்பெற்ற வெண்சாமரை வீசிய காற்றினால், நெய்த்து இருண்டு உயரும் நீள்வரை மீதில் - நெய்ப்புடனே இருணிறத்தை யடைந்து உயர்ந்து நீண்ட மலைமேல், தத்தி வீழ் அருவியின் திரள் - பாய்ந்து வீழ்கின்ற அருவித்தொகுதியின் தன்மை, சால - நிறைந்து ஒளிருமாறு, நெடு மார்பின் உத்தரீகம் உலாவ - அகன்ற மார்பிடத்து (அவனது) உத்தரீகம் என்ற மேலாடை அசைந்து விளங்க,

இராவணன்மீது வீசப்பெற்ற கவரிகளின் செயல் கூறப்பெற்றது. கால் - காற்று. கவரி: கவரிமா என்றும், சமரம் என்றும் கூறப்படும் ஒரு மானின் மயிரினாற் செய்யப்பட்டது. நெய்த்திருண்டு - 'நீண்டு குழன்று நெய்த்திருண்டு' (கிட்கிந்தா. 546). உத்தரீகம் - மேலாடை; சுந்தர. 146; உத்தரீகத்துக்கு அருவி. உத்தரீகம், வடசொல்; அரையாடையினின்றும் வேறாக மார்பிலணியுமாறு உத்தரிப்பது அல்லது கத்தரிப்பது என்று பொருள்படுவது. உத்தரீகத்துக்கு அருவி: 'வேறுபல் துகிலி னுடங்கி............இழுமென விழிதரு மருவி' (திருமுரு. 295 - 316) என்ற வரிகளையும், அவற்றின் கீழ்க் குறிப்புக்களையும் நோக்குக; குறிஞ்சிப். 55; புறநா. 154; திணைமா. 6; வி. பா. சிறப்பு. 8. 'ஓயா அருவித் திரள்உத்தரி யத்தை யொப்ப' (சுந்தர. 41). நெடு மார்பு - நெடுமை அகற்சியின் மேற்று. சால, ஒப்ப எனினும் ஆம். மார்பிற்கு மலையும், மேலாடைக்கு அருவியும் உவமை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. காலின், கால்வாய்.

2. உயர; இருண்டுவரை பொன்னிழல் மீதில்.

3. நந்தி விழுமருவி; திரை; சாலும், நல்முத்து; திரள் ஆன்ற, திரளோப்ப. 5

804. வான கத்துறு முருப்பசி வாசத்
தேன கத்தரு திலோத்தமை செவ்வாய்
மேன கைக்குல வரம்பையர் மேலாம்
சான கிக்கழகு தந்தயல் சார,

வாசம் தேன் அகம் - நறுமணத்தையும் தேனையும் தன் இடம் (ஏற்ற), தரு வான் அகத்து உறும் - கற்பகத்தரு நின்ற தேவர் உலகத்து வாழும், உருப்பசி திலோத்தமை - உருப்பசியும் திலோத்தமையும், செ வாய் மேனகை - சிவந்த வாயினையுடைய மேனகையும் முதலான, குல அரம்பையர் - சிறந்த அரம்பை மாதர்கள், மேலாம் - மிகவும் சிறந்த, சானகிக்கு அழகு தந்து அயல் சார - சானகிப் பிராட்டியாரை அழகுபடுத்திக்கொண்டு தமது அண்மையிலே கூடி நிற்கவும்,

இராவணனைச் சூழ அரம்பையர் நின்றமை கூறப்பெற்றது. உருப்பசி; பிரமனின் ஊரு அல்லது துடையினின்று தோன்றியவள் என்ப. திலோத்தமை - ஒவ்வொரு பேரழகியின் உடலிலிருந்து எள்ளளவு எள்ளளவாக எடுத்துக் கூட்டிச் செய்த உருப்பெற்றவள் என்ப. திலம் - எள். சானகிக் கழகு செய்தலாவது: பிறர் ஒத்து நோக்கிப் பிராட்டியின் பேரழகை அறியத் துணையாயிருப்பவர் என்க. அழகிற் சிறந்தவர்களாகிய இவர்களும், சானகிக்கு ஒப்பாகார் என்பது குறிப்பு; 'பொல்லாதவனொருவன் நல்லவன் குணத்தைப் பிரகாசிப்பது போல, பிராட்டிக்கு அழகு மிகுதி என்பதை இவர்கள் அவயவம் சொல்ல' என்பது பழைய உரை. குலம் என்பது உயர்வு என்ற பொருளில் வந்தது. தேவமாதர்களும் இராவணனிடம் பணியாற்றினர் என்பது; 'அரமடந்தையர் சிலதியர் அரக்கியர்க்கு' (சுந்தர. 104); 'வானமாதரோ டிகலுவர் விஞ்சையர் மகளிர், ஆனமாதரோ டாடுவர் இயக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கியர், அவரைச் சோனைவார் குழலரக்கியர் தொடர்குவர்' (சுந்த. 131); சுந்தர. 144; 408-ம் காண்க.

பி-ம். 1. வானகத்த, வானகத்தன; வானகத்தரும், வானகந்நமுது; வானகத்துறும்.

2. தேனகத்திரு, தேனகைத்தரு, தேவகைத்தன, தேனெனத்தகு.

3. ஏனகை; மேனகைக் குயில மென்மையிலாரும், மேனகைக் குயிலின் மென்மையர் யாரும். 6

805. வீழி யின்கனி யிதழ்ப்பணை மென்றோள்
ஆழி வந்தவர மங்கைய ரைஞ்ஞூற்
றேழி ரண்டினி னிரட்டி பயின்றோர்
சூழி ரண்டுபுடை யும்முறை சுற்ற,

வீழியின் கனி இதழ் - வீழிச் செடியின் பழம் போன்ற வாயிதழையும், பணை மெல் தோள் - மூங்கிலை யொத்த மெல்லிய தோள்களையும் உடையவராய், ஆழிவந்த அரமங்கையர் - திருப்பாற்கடலினின்று தோன்றிய தேவமாதர்கள், ஐஞ்ஞூற்று ஏழிரண்டினின் இரட்டி - பதினாலாயிரவர், பயின்றோர் - (ஆடல் பாடல்களில்) நல்ல பயிற்சியுள்ளவர்கள், இரண்டு புடையும் சூழ் முறை சுற்ற - இரண்டு பக்கங்களிலும் சுற்றி நிற்கவேண்டிய விதிப்படி சூழ்ந்து நிற்கவும்,

வீழி; 'வீழியின்கனி போற்' (யுத்த. நாகபாசம். 115). ஐஞ்ஞூற் றேழிரண்டினி னிரட்டி - பதினாலாயிரவர்; ஏழிரண்டில்; 'ஏழிரண் டாண்டின் வாவென் றியம்பினன் அரசன் என்றாள' (அயோத்தி. கைகேசி. 107); அரம்பையர் பாற்கடலில் தோன்றியவர்; பால. நீர்விளையாட்டு. 12.

பி-ம். 3. ஏழிரண்டி னிரட்டிய ரன்பால், ஏழிரண்டி னிரட்டியி னின்னோர், னிரண்டு பயின்றோர்.

4. புறமும் மயல்; புடை கொண்டவர். 7

806. முறைப டிந்தபிறை முள்ளெயி றுள்வாள்
இறைப டிந்தவிள வெண்ணில வினக்
குறைப டிந்ததொரு குன்றின் முழங்கா
மறைப டிந்தனைய தொங்கல் வயங்க,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


முழை படிந்த பிறை - குகையிற் படிந்துள்ள பிறைச் சந்திரன் போன்று (வாயிலிருக்கும்), முள் எயிறு - கூர்மையான கோரப் பற்கள், ஒள் வாள் - ஒள்ளிய ஒளியை, இழை படிந்த - அணிகளில் படிந்துள்ள, இள வெண் நிலவு என - இள வெண்ணில வொளியுடனே வீசவும், குழை படிந்தது ஒரு குன்றின் - குண்டலங்களை அணிந்ததொரு மலையிலே, முழங்கா மழை படிந்தனைய - முழங்குதலில்லாத மழை படிந்தாற் போன்று, தொங்கல் வயங்க - (கருங்குவளை) மாலை விளங்கவும,

இராவணனுடைய மாலை குண்டலம், ஆகியவற்றின் சிறப்புக்கள் கூறப்பெற்றன. குண்டலங்களை யணிந்த குன்று; இல்பொருளுவமை. இங்கு இராவணனின் புயங்களைக் குறித்து நின்றது. தொங்கல்; மாலை; தொங்குதல் பற்றி வந்த பெயர்: அல்: பெயர் விகுதி ஆரணிய. 85 : 409. படிந்தது அனைய என்பது படிந்தனைய எனத் தொக்கது. முழங்கா மழை; (குறுந். 270, 380). 'எயிறுகிய ஒரு வாள் மலை முழைஞ்சின் பிறைபோல ஆபரணங்களுடே நிலவின; அநேகம் குண்டலங்களோடு நின்ற மலையிலே முழங்காத மேகம் தூங்கினதுபோலக் கரிய தொங்கல் சூழவயங்க—இது பொருள்' என்பது பழையவுரை.

பி - ம். 2. இழை படர்ந்த, இழைபடிந்தவர். 8

807. ஓத நூல்கள்செவி யின்வழி யுள்ளம்
சீதை சீதையென வாருயிர் தேய
நாத வீணையிசை நாரதர் பாட
வேத கீதவமிழ் தள்ளி விழுங்க,

நூல்கள் ஓத - (அறிஞர்கள்) அரிய நூற் கருத்துக்களை யெடுத்துரைப்பவும், உள்ளம் சீதை சீதை என - மனம் சீதை சீதை என்று புலம்பிய வண்ணம், ஆருயிர் தேய - (அக்காரணத்தால்) அருமையான தன் உயிர் மெலிந்து நிற்பவும், வேதம் கீத அமிழ்து - சாமவேதமாகிய அமிழ்தத்தை, செவியின் வழி - காதுகளின் வழியால், அள்ளி விழுங்க - முகந்து பருகுமாறு, நாதம் வீணை இசை நாரதர் பாட - ஒலிமிக்க வீணையின் இசையை நாரத முனிவர் பாடவும்,

முதலிரண்டடிகட்கு ஒப்பு: 'மானம் குலம் கல்வி வண்மை யறிவுடைமை.................பசிவந்திடிற் பறந்துபோம்' என்றபடி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



காமம் உண்டான வழியும் நல்லனவெல்லாம் பயனற்றுப் போயின என்க. சீதை சீதையென வாருயிர் தேய; (ஒப்பு): 'சிற்றிடைச் சீதை யென்னும் நாமமும் சிந்தை தானும், உற்றுட னென்றாய் நின்றால் ஒன்றொழித் தொன்றை யுன்ன, மற்றொரு மனமும் உண்டோ மறக்கலாம் வழிமற் றியாதோ, கற்றறி ஞான மின்றேற் காமத்தைக் கடக்க லாமோ' (ஆரணிய. 637); 'தேவிய னேமி யான்ற சிந்தைமெய்த் திருவி னேகப், பூவிய லன்ளி மேலாப் பொய்யுறக் குறங்குவானை, காவியங் கண்ணி தன்பாற் கண்ணிய காத லீரின், ஆவியை யுயிர்ப்பென் றோதும் அம்மியிட் டரைக்கின் றானை' (சுந்தர. 308); 'பூவை சானகி யுருவெளி யொருமுகம் பொருந்த' (சுந்தர. 1092). இராவணன் சாமகானப்பிரியன் ஆகலின்நாரத முனிவன் வீணைகொண்டு சாமகானம் செய்தனர் என்க. வேதம் ஆயிரம் வல்லான் ஆகலின், அறிஞர் நூற்பொருளை ஓதினர். ஆனால் இராவணனுடைய செவியின் கண் அவை ஏற வில்லை. செவியின்வழி விழுங்க என இயைத்துப் பொருள் கூறப் பெற்றது.

பி - ம். 1. ஓதை ; ஓது ; நூல் கொள் ; வழியின் செவி.
2. சீதை யுள்ளும், எனும்.
3. நாரதனார் தம்.
4. கீதமும்.

808. வெங்க ரத்தரயில் வாளினர் வில்லோர்
சங்க ரற்கும்வலி சாய்வில் வலத்தோர்
அங்க ரக்கர்சத கோடி யமைந்தோர்
பொங்க ரக்குவிழி யோர்புடை சூழ,

வெம் கரத்தர் - கொடிய கைகளை யுடையவரும், அயில் வாளினர் - கூரிய வாளைக் கைக்கொண்டவரும், வில்லோர் - வில்லேந்திய வரும், சங்கரற்கும் வலி சாய்வு இல் வலத்தோர் - சிவபெருமானுக்கும் எந்த வகையிலும் குறைதலில்லாத பலமுள்ளவரும், சத கோடி அமைந்தோர் - நூறு கோடி யென்னும் எண்ணிக்கையருமான, பொங்கு அரக்கு விழியோர் அரக்கர் - சினத்தால் புழுங்குகின்ற செவ்வரக்குப் போன்ற கண்களையுடையவர்களும், அங்கரக்கர் - இராவணனது மெய்காப்பாளருமான (வீரர்கள்), புடை சூழ - பக்கத்திலே சூழ்ந்து வரவும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அங்கரக்கர் ; அங்கரக்ஷர் என்ற வடசொற்றிரிபு. இன்னும் முதியோர்கள் சட்டையை அங்கரக்கை என வழங்குதல் காண்க. அரக்கு விழி ; 'ஊட்டரக் கூட்டிய வனைய செங்கணன்' (யுத். 306).

பி - ம். 1. வாளிளர் வேகச்.

2. கிங்காற்கும் வலிகேடில் வலத்தோர் ; சார்ளில், கேடில் ; சலத்தோர், தவத்தோர், மனந்தோர் ; சாய்விலா ராஞேர்.

3. அங்கமைச்சர் ; அரக்குவிழியோர், அரக்கர் மிடலோர் ; யமைந்தார்.

809. கல்லி லங்கையுல கங்கவர் கிற்போர்
நல்லி லங்கைமுத லோர்நவை யில்லோர்
சொல்லி லங்கர்சத கோடிதொ டர்ந்தோர்
வில்லி லங்குபடை யோர்புடை விம்ம,

அங்கை - அழகிய கையினுல், கல்லில் - அகழ்வதனுல், உலகம் கவர்கிற்போர் - உலகங்களைக் கவர்ந்து கொள்ள வல்லவர் களும், நல் இலங்கை முதலோர் - அழகிய இலங்காபுரி தோன்றிய நாள் தொடங்கி முதன்மை பெற்று விளங்குபவரும், நவை இல் லோர் - குற்ற மற்றவரும், சொல்லில் - எண்ணிக் கூறு மளவில், சத கோடி அங்கர் தொடர்ந்தோர் - நூறு கோடி உறுப்பினராக அமைந்தவருமான, வில் இலங்கு படையோர் - விற்களுடன் விளங்குகின்ற படை வீரர்கள், புடை விம்ம - அருகிலே நிறைந்து விளங்கவும்,

சேனுவீரரின் பெருமை கூறப்பெற்றது. கல்லில் அங்கை யுல கங்கவர் கிற்போர் ; (ஒப்பு): ஊன்றி மேருவை யெடுக்குறு மிடுக் கினுக் குரிய' (கிட்கிந்தா. 690) ; 'ஒடிக்கு மேல்வட மேருவை வேரொடு மொடிக்கும்' (கிட்கிந்தா. 709); 'உறைந்த மந்தர முதலிய கிரிகளை யுருவ வெறிந்து' (யுத்த. மூலபல. 10). நல்லிலங்கை முதலோர் ; (ஒப்பு): 'பாவந் தோன்றிய காலமே, தோன்றிய பழை யோர்' (யுத்த. படைக்காட்சி 23). அங்கர் - அரசர்க் குரிய படை யுறுப்பினர். விம்முதல் - மிகுத்து நிற்றல். 'நல்லிலங்கை முத லோர் - மாலியவான் காலத்துள்ளோர்' என்பது பழையவுரை. இச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

செய்யுளிலும் இதனை யடுத்த செய்யுளிலும் திரிபென்னும் சொல்லணி வருதல் காண்க; முதல் எழுத்து நீக்கி அடுத்த சில பல எழுத்துக்கள் ஒன்றி நிற்கப்பெறுவது திரிபின் இலக்கணம்.

பி - ம். 1. உலகங்கள் கடப்போர்.

2. நகையில்லோர்.

3. சொல்லிலங் கோர், சொல்லிலங்கு, சொல்லிலங்கை; தொடர்ந்தார்.

810. பாரி யங்குநர் விசும்பு பரந்தோர்
வாரி யங்குமழை யின்குரன் மானும்
பேரி யங்கள் முருடாகுளி பெட்கும்
தூரி யங்கடலி னின்று துவைப்ப,

பார் இயங்குநர் - பூமியிலே நடமாடுபவரும், விசும்பு பரந்தோர் - ஆகாயத்திலே பரவியுள்ளவருமான பலர், வார் இயங்கு மழையின் குரல் மானும் - நீருடனே உலாவுகின்ற மேகத்தின் குரலை யொத்த, பேர் இயங்கள் - பெரிய இசைக் கருவிகளும், முருடு ஆகுளி, பெட்கும் தூரியம் - முருடும், ஆகுளியும், விரும்பத்தக்க தூரியம் என்ற இசைக் கருவிகளும், கடலின் நின்று துவைப்ப - கடல் போன்று நிலைபெற்று முழங்கவும்,

வார் - புனல்; 'வாராயிர முகமாநுகர் மஞ்ச' (வி. பா. அருச். தவநிலை. 159). பேரியங்கள் மழையின் குரல் மானுதல்; 'தூரியக் குரலின் வானின் முகிற்கணந் துணுக்கங் கொள்ள' (ஆரணிய. 418). முருடு ஆகுளி இவை இசைக்கருவி விசேடங்கள்; 'முரசியம்பின முருடதிர்ந்தன' (சிலப். மங்கல. 46). துவைத்தல் - ஒலித்தல்; 'நெடும்பணை துவைக்குந் தோறெலாம்' (ஆரணிய. 570); 'கோடும் வயிரும் குழுமின துவைப்ப' (பெருங். உஞ்சை. 56, 239). கடலின் என்பதில் இன் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருளது. மானும் உவம உருபு. 'ஆகுளி - சிறு பறை' பழையவுரை.

பி - ம். 1. இயங்கிய, இயங்கினர்; படர்ந்தோர்.

2. குரன்மானப், குல மென்னப்.

3. பேரி யேங்கு, பேரியங்கு; பெட்புந், பெட்பின்.

4. கடையினின்று, கடை நின்று.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


811. நஞ்சு மஞ்சுவிழி நாகியர் நாண
வஞ்சி யஞ்சுமிடை மங்கையர் வானத்
தஞ்சொ லின்சுவை யரம்பைய ராடிப்
பஞ்ச மஞ்சிவனு மின்னிசை பாட,

நஞ்சும் அஞ்சும் விழி நாகியர் நாண - விடமும் அச்சம் கொள்ளத்தக்க கண்களையுடைய நாகலோகப் பெண்களும் வெட்குமாறுள்ள, வஞ்சி அஞ்சும் இடை - வஞ்சிக் கொடியும் நிகரின்மையின் அஞ்சிப் பின்னிடையும் இடையினையுடைய, மங்கையர் - (இந்தப்) பூவுலக மங்கையரும், வானத்து - தேவலோகத்தில் உள்ள, அம் சொல் இன்சுவை - அழகிய சொல்லின் இனிய சுவையுடைய, அரம்பையர் - அரம்பை முதலிய அரமகளிரும், ஆடி - ஆட்டம் மேற்கொண்டு, பஞ்சமம் சிவனும் இன்னிசை பாட - பஞ்சமம் என்னும் ஸ்வரத்தை நிகர்த்த இனிய இசையைப் பாடவும்,

நஞ்சும் அஞ்சும் விழி - (ஒப்பு): 'விடங்கா லயிற்கண்ணி மேவுங் கொலாம்' (திருக்கோ. 31); ஆடவர்களை வருத்துதலின் விழிக்கு நஞ்சு உவமை. 'இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு, நோய் நோக்கொன் றந்நோய் மருந்து' (குறள். 1091); அஞ்சும் என்பதை உவம வுருபாகவும் ஆக்குவர்; சேலுண்ட கண்ணியர் என்றாற் போல. நாகியர் - நாகலோக மகளிர். இடைக்கு வஞ்சிக் கொடியை உவமை கூறுவது கவிமரபு. இங்கு வஞ்சியும் துவளும் தன்மையில் பின்னிடையும் எனப்பட்டது. பஞ்சமம்; ஏழிசைகளுள் ஒன்று; ஷட்ஜமம் ரிஷபம் காந்தாரம் பஞ்சமம் என்றது காண்க.

பி - ம். 1. நாகர் நாணி.
2. விஞ்சையர், வஞ்சியர்.
3. இன்சொலின், இன்சுவையர்; அரம்பைய ரோடும்.
4. பஞ்சு ரஞ்சிவனு மின்னிசை பாட, விஞ்சை மங்கைய ரின்னிசைபாட.

812. நஞ்சு கக்கியெரி கண்ணினர் நாமக்
கஞ்சு கத்தர்கதை பற்றிய கையர்
மஞ்சு கக்குமுறு சொல்லினர் வல்வாய்க்
கிஞ்சு கர்கிரி யொத்தனர் சுற்ற,


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நஞ்சு கக்கி எரி கண்ணினர் - விடத்தை வெளிப்படுத்திக் கொண்டு எரிகின்ற விழிகளை யுடையவரும், கதை பற்றிய கையர் - கதை என்னும் படை பிடித்த கரத்தினரும், மஞ்சு உகக் குமுறும் சொல்லினர் - மேகமும் சிதறி விழுமாறு குமுறுகின்ற சொல்லை யுடையவரும், வல்வாய் - பெரிய வாயாகிய, கிஞ்சுகர் - முருக்க மலரை யுடையவரும், கிரி ஒத்தனர் - மலையை நிகர்த்தவரும் ஆன, நாமம் கஞ்சுகத்தர் - அஞ்சத்தக்க கஞ்சுகியர் என்று பேர் பூண்ட வர்கள், சுற்ற - (இடைவிடாது) சூழ்ந்து நிற்பவும்,

கஞ்சுகன் - சட்டை தரித்தவன் ; மணிமேகலை. 25 : 11 ; வில்லிபா. சூது போர். 56. கஞ்சுகி - மெய்க்காப்பாளன் ; சூடா. நிக. கடும் பார்வையும், அஞ்சத்தக்க கருஞ்சட்டையும், கைத்தடியும், இடியும் உதிர்ந்து விழும்படியான கடுமொழியும், ஊனுண்பவராகலின் சிவந்தவாயும் உடைய சட்டையிட்ட பிரதானிகள் என்க ; 'கற்றைச்சுடர் விட்டெரி கஞ்சுகியான்' (ஆரணிய. 83). கிஞ்சுகம் - முருக்கமலர். வல்வாய் - பெரியவாய் ; 'வல்வாயோடு கழுத்தேந்தி' (விவேகசிந்.). முன் செய்யுட்கண் கூறிய நஞ்சு விழிக்கும், இதில் கூறிய நஞ்சுக் கண்ணுக்கும் உள்ள வேற்றுமை உய்த்துணர்க.

பி - ம். 1. கக்கும் ; நாணு, நாணுக்.
2. கசை.
4. கிஞ்சுகத்தின் விசையோர் திசை செல்ல, வல்வாய்க் கிஞ்சுகத்திகிரி யொத்தனர் சுற்ற. 14

14, 15-ஆம் பாடல்கள் சில பிரதிகளில் முன் பின்னாக உள்ளன.

813. கூயு ரைப்பகுல மால்வரை யேனும்
சாயு ரைப்பரிய வாய தடந்தோள்
வாயு ரைத்தகல வைக்களி வாசம்
வேயு ரைப்பதென வந்து விளம்ப.

கூய் உரைப்ப - (யாவரும்) உரத்த குரலுடன் (உவமை கூறு தற்குத் தக்கன என்று) சொல்வனவான, குலம் மால் வரை யேனும் - எட்டுத்திக்குக்களிலு முள்ள பெரிய மலைகளாயினும், சாய் உரைப்பு அரிய ஆய தட தோள் வாய் - உவமை கூறுதற்கு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vijay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அரியவான பெரிய தோள்களிடம், உரைத்த - பூசப்பெற்ற, கலவை களி வாசம் - கலவைச் சாந்தின் நல்மணமே, வேய் உரைப்பது என வந்து விளம்ப - (இராவணன் வருகின்றான் என்பதை) ஒற்றன் உரைப்பது போல வீசி அறிவிக்கவும்,

கூயுரைத்தல், சிலம்பெதிர் கூவுதலுமாம். தடம்புயம் மகா மேருவுக்கு ஒப்பு என்னும் உரையைக் கடந்தது என்க. சாய் - சாயல்; ஒப்புமை. வேய் - ஒற்று, தூதும் ஆம். 'இராவணன் புயத்திலே அணி சந்தனவாசம் எட்டுத் திக்கினும் சென்று இராவணன் வந்தானென்று தூது சொல்வதுபோலப் பரிமளிக்கும்.

பி - ம். 1. கூஉயுரைப்ப, கூயுரைப்பு; என்னும், பேணும், ஏயும்.
2. தாயுரைப் பரியது.
3. கலவைத்தனி.
4. உரைப்பதெள வெங்கும்; விளங்க. 15

814. வேத்தி ரத்தரெரி வீசி விழிக்கும்
நேத்தி ரத்தரிறை நின்றுழி நில்லாக்
காத்தி ரத்தர்மனை காவல் விரும்பும்
சூத்தி ரத்தர்பதி னுயிரர் சுற்ற,

வேத்திரத்தர் - கையிற் பிரம்பினை உடையவரும், எரி வீசி விழிக்கும் நேத்திரத்தர் - நெருப்பைக் கக்கிக் கொண்டு பார்க்கின்ற கண்களையுடையவரும், நின்றுழி இறை நில்லா காத்திரத்தர் - ஓர் நொடிப்பொழுதும் நின்ற விடத்து நில்லாமல் (ஓடியாடுகின்ற) கால்களை உடையவரும், மனை காவல் விரும்பும் - வீட்டுக் காவலை விரும்பிப் புரிகின்ற சூக்குமத் தன்மை வாய்ந்த வருமான, சூத்திரத்தர் - உபாயம் வல்லவர்கள், பதினுயிரர் சுற்ற - பதினாயிரம் பெயர்கள் சூழ்ந்து நிற்கவும்,

வேத்திரத்தர்; வேத்திரம் - பிரம்பு: 'வேத்திரப் படையாற் ருக்கி' (திருவிளை. கடவுள். 18); 'மின்னுரை வேத்திரக் கையர்' (ஆரணிய. 569); 'வேத்திரத் தாசனம்' (ஆரணிய. 840). காத்திரம்- உடல், வடசொல்; இங்குக் கால்களைக் குறித்தது. பால. வரைக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காட்சி. 6); சூத்திரம் - உபாயம். (வின்ஸ்லோ); இந்தப் பதினாறு செய்யுட்களில் கோபுரத்தில் ஏறிநின்ற இராவணன் நிலை வருணிக்கப்பட்டது. இவ்வாறு சந்தர்ப்பங்கட்கு ஏற்பச் சிறந்தவகையில் ஆசிரியர் பல இடங்களிலும் சிறந்த பாத்திரங்களை வருணித்துள்ளமை காவியத்தை முறையாகக் கற்போர் அறிவர். (ஆரணிய. 554 - 576; சுந்தர. 407 - 425; 1080 - 1096). இனி, இராவணன், இராமபிரானை அவர் முகப்பொலிவால் தானே அறிந்து கொண்டு, பிறரை இன்னார் இன்னார் என்று கூறும்படி, சாரணனை ஏவ, அவன் பதினான்கு கவிகளில் கூறுகின்றான். முன்னர்ச் சாரணனும், அவனை யடுத்துச் சுகனும் வாநர வீரர்களைப்பற்றி இராவணனுக்குக் கூறியதாக முதனூல் பகரும்.

பி - ம். 1. வீச, வீடு.
2. நிறை நின்றுழி. 16

## இராமபிரானை இராவணன் காணுதல்

815. தோர ணத்தமணி வாயின் மிசைச்சூல்
நீர ணைத்தமுகி லாமென நின்றான்
ஆர ணத்தமுதை யம்மறை தேடும்
கார ணத்தைநிமிர் கண்கொடு கண்டான்.

தோரணத்த மணி வாயின் மிசை - தோரணம் எனச் சொல்லப்படும் நவமணிகள் பதித்துச் செய்த அழகிய வாயிலின் மேலிடத்திலே, சூல் நீர் அணைத்த முகிலாம் என - கருவாக நீரைக் கொண்ட முகில்போலும் என்னுமாறு, நின்றான் - நின்றவனாகிய இராவணன், ஆரணத்து அமுதை - வேதத்தின் இனிய பொருள் மயமாயிருப்பவனும், அ மறை தேடும் - அந்த வேதங்களால் நாடப்படுகின்ற, காரணத்தை - காரணப் பொருளாயுள்ளவனுமான இராமபிரானை, நிமிர் கண் கொடு கண்டான் - நிமிர்ந்து நிற்கின்ற விழிகளால் பார்த்தான்.

நீரணைத்த சூல்முகில், இங்கு இராவணனுக்கு உவமை; 'மழை முகில்' (அயோத்தி. கங்கைப். 1). ஆரணத்தமுது - இராமபிரான்;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

*97, 957.* காரணம் - காரணப் பொருளாயிருப்பவன்; 'காலமுங் கணக்கும் நீத்த காரணன்' (சுந்தர. *1122*). வாயில் - கோபுரத்துக்கு ஏழா நிலைவாசல் என்றது பழையவுரை. 'எழுநிலைக் கோபுரம்' என்றது காண்க. தோரணவாயில்: ஆரணிய. *892, 951*; சுந்தர. *338, 632, 1107.* இதுவே இராமபிரானை இராவணன் முதன்முதல் நேரிற் கண்டதென்பது நினைத்தற்குரியது.

பி - ம். 1. மணிவாசல் கோபுர மேற்சூழ.

2. நிரணந்த, நிரணைத்து; நின்ற, நின்றேன்.

3. ஆரணத்தையரியை, ஆரணத்த மறையையரி; மறை சொல்லும், நேடும்.

4. கண்ணெதிர். 17

816. மடித்த வாயினன் வயங்கெரி வந்து
பொடித்தீ ழிந்தவிழி யின்னது போழ்தின்
இடித்த வன்றிசை யெரிந்தது நெஞ்சம்
துடித்த கண்ணினெ டிடத்திரள் தோள்கள்.

(இராமபிரானைப் பார்த்ததும்), மடித்த வாயினன் - சினத்தால் உதட்டை மடித்துக் கொண்ட வாயினை உடைய வனான இராவணனுடைய, விழியின் - கண்களிலிருந்து, வயங்கு எரி வந்து - கொழுந்துவிட்டெரிகின்ற தீயானது தோன்றி, பொடித்து இழிந்த - சிறுசிறு பொடியாக வெளி வந்தது; அது போழ்தின் - அப்போது, வல்திசை இடித்த - (அவனது சினத்தா லெழுந்த பேராவேசத்தால்), பெரிய திசைகளில் எல்லாம் இடி போன்ற பெரு முழக்கம் உண்டாயிற்று; நெஞ்சம் எரிந்தது - அவனது நெஞ்சமும் பற்றி எரிந்தது; (கெட்ட அறி குறியாக), இட கண்ணினொடு இட திரள் தோள்கள் துடித்த - (அவனுடைய) இடக்கண்களோடு இடத் தோள்களும் துடித்தன.

வாய் மடித்தல், வெகுளியின் மெய்ப்பாடு; 'வம்பியல் சிலையை நோக்கி வாய்மடித் துருத்து நக்கான்' (சுந்தர. *985*); 'வெகுண்டோ னவிநயம் விளம்புங் காலை, மடித்த வாயு மலர்ந்த மார்பும், துடித்த புருவமுஞ் சுட்டிய விரலும்' (சிலப். அரங்கேற்று காதை); 'மடித்தபில வாய்கடொறும் வந்துபுகை முந்த' (ஆரணிய. *602*).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இடக்கண் இடத்தோள் துடித்தல்; ஆடவர்க்குக் கெட்ட நிமித்தங்கள். இ- என்பது முன்னும் பின்னும் கூட்டப்பட்டது.

பி - ம். 1. வாயின.
3. பொடித் தழன்ற விழி ; விழியன்னது.
3. இடித்த வானகம் ; எரிந்தன.
4. கண்ணினன், கண்ணெடு. 18

## இராவணன் சினத்தல்

817. ஆக ராகவனை யவ்வழிக் கண்டான்
மாக ராகநிறை வாளொளி யோனை
ஏக ராசியினி னெய்த வெதிர்க்கும்
வேக ராகுவென வெம்பி வெகுண்டான்.

ஆக - மேற் கூறியவாறு கெட்ட அறிகுறிகள் நிகழவும், இராகவனை அ வழி கண்டான் - இராமபிரானை அப்போது கண்டவனான இராவணன், மாகம் ராகம் நிறை வாள் ஒளியோனை - ஆகாயத்திலே நிறைந்த சிவந்த மிக்க ஒளியை யுடையவனான சூரியனை, ஏகராசியினின் எய்த எதிர்க்கும் - அமாவாசையில் நெருங்கிச் சென்று எதிர்கின்ற, வேகம் ராகு என வெம்பி வெகுண்டான் - தீவிரமான இராகு என்னும் கோளைப்போல் சீறினான்.

ஆக - இடைச்சொல் ; அசையுமாம். ராகம் - செந்நிறம் ; இது தமிழில் இராகம் எனவரும். இராகம் - சிவபபு, (பிங்). ஏகராசி - அமாவாசை; சூரியனும் சந்திரனும் ஒன்றி நிற்கும் நாள். 'உவாவுற வந்துகூடு முடுபதி யிரவி யொத்தார்' (கிட்கிந்தா. 98) ; 'இந்துவோடிரவி கூட்ட மமாவாசையு மென்ப' (சூடா. 1. 85) ; வேகம் - செலவின் கடுமை. நான்கடிகளிலும் எதுகை நோக்கி ரா என்ற எழுத்துத் தமிழ்க் கேற்ப இகரம் பெருமலே நின்றது. வேகம் வெம்பி வெகுண்டு என அடுக்கியது, சூரியனைப்பற்றிய இராகுவின் உக்கிரம் குறித்து நின்றது. இங்குக் குறிக்கப்பெற்றது சூரிய கிரகணம். இதற்கு விஞ்ஞானிகள் கூறும் விவரம் உண்டு. என்றும் சூரிய சந்திர கிரகணங்கள் இராகு கேதுவெனும் கோள்கள் அக்கதிர்களைப் பற்றுவதால் உண்டாவன என்பதே ஐதிகம். இராகு கேதுக்கள் சூரிய சந்திரர்களைப் பற்றுவதும் விடுவதும் உண்டு. தக்க. 555, தாழிசை உரை. 'ஒரு புடை பாம்பு கொளினும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஒருபுடை, யங்கண் மாஞாலம் விளக்குறூம் திங்கள்' (நாலடி. 148); 'மதி சேர்ந்த அரவு' (கலித். 104); 'மாமதி கோண், முன்னம் விடுத்த முகில் வண்ணன்' (பெரியதிரு.); இச்செய்யுளில் இராம பிரானைக் கதிரவனாகவும், இராவணனை இராகுவாகவும் அமைத்த நயம் நோக்கத்தக்கது.

பி-ம். 2. மாக ராக நிறவாள் ஒளியோனும்.
3. எய்தி யெதிர்க்கும், எய்த வுயிர்க்கும். 19

## இராவணன் சாரணனை வினுதல்

818. ஏனை யோனிவ னிராம னெனத்தன்
மேனி யேயுரைக் கின்றது வென்றிச்
சேனை யோரை யடையத்தெரி யென்று
தான்வி னுவவெதிர் சாரன் விளம்பும்.

'ஏனையோன் இவன் - பிறரினின்று வேறுபட்டுக் காண்கின்ற இவன், இராமன் என தன் மேனியே உரைக்கின்றது - இராமன் என்று அவன் உடல் வண்ணமே பேசுகின்றது; (ஆகவே இவனை விட்டு), வென்றி சேனையோரை அடைய தெரி - வெற்றி மிக்க சேனை வீரர்களை முற்றிலும் அறிவிப்பாயாக' என்று தான் வினுவ - என்று இராவணன் சாரணனுக்குக் கட்டளையிட, சாரன் எதிர் விளம்பும் - சாரணன் மறுமொழி பகர்ந்தான்.

ஏனையோன்; இராமனெனத் தன்மேனியே யுரைக்கின்றது; 'கண்டவாற்றுற் றனதே யுலகென நின்றான்' (திருவாய்.). வேறெங்கும் காணப்பெறுத ஒப்பற்ற நீலமேனிப் புருடோத்தமன் ஆகலின், அவன் மேனி கொண்டே இராவணன் உணர்ந்தான் என்க. தன் மேனியே உரைக்கின்றது; 'பெருமாள் திருவழகு எனக்குச் சொல்லிற்றென்றும், அவரைக் கண்டவுடனே கண்ட துக்கக் குறியினாலே என்னுடம்பு எனக்குச் சொல்லிற்று என்றுமாம்' என்பது பழையவுரை.

பி-ம். 1. ஏனையோனவ், ஏனையோனையவ், ஏனையோரன.
2. உரை செய்கின்றது.
3. சேனை வீரர் படையைத்; வீரரைத் தெரிந்துரை யென்று, வீரர்தமைச் செப்பிடு கென்றே, வீரர் தம்மைச் செப்பிடு கென்னத். 20

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## சாரணன் இலக்குவனைத் தெரிவித்தது

819. இங்கி வன்படை யிலங்கையர் மன்னன்
தங்கை யென்றலும் முதிர்ந்த சலத்தால்
அங்கை வாள்கொடவ ளாகம் விளங்கும்
கொங்கை நாசிசெவி கொய்து குறைத்தான்.

(சாரன் இலக்குவனைச் சுட்டி), 'இங்கு இவன் - இதோ காணும் இவன், படை இலங்கையர் மன்னன் தங்கை என்றலும் - படை வலிமைபெற்ற இலங்கை யரசனான இராவணன் தங்கை என்று கேட்ட வளவில், முதிர்ந்த சலத்தால் - முற்றிய சினத்தால், அம் கை வாள் கொடு - தனது உள்ளங்கையில் இருந்த வாளைக் கொண்டு, அவள் ஆகம் விளங்கும் - அந்த சூர்ப்பணகையின் மார்பில் ஒளிரும், கொங்கை - தனங்களையும், நாசி செவி - மூக்குடன் காதுகளையும், கொய்து குறைத்தான் - கொய்து அவளை உறுப் பிழந்தவளாகச் செய்த இலக்குவனாவான்.

இலங்கையர் மன்னன் படை தங்கையெனக் கூட்டலும் ஆம். சலம் - தணியாச் சினம்; 'வதனத்தாள் சலத்தை நோக்கி' (ஆரணிய. 794); 'சலந்தலைக் கொண்டனர்' (சுந்தர. 808). கொங்கை நாசி செவி கொய்தது; 'மூக்கும் காதும்வெம் முரண்முலைக் கண் களும் முறையால், போக்கி' (ஆரணிய. 312) என்றது காண்க. மேல்வாயும் மேல் உதட்டையும்கூட அறுத்தான் என்பது ஆரணிய. 356-ஆம் செய்யுளில் கூறப்பட்டது. மூக்கையும் காதுகளையும் மட்டும் அறுத்ததாக வான்மீகம், அத்யாத்மம், கூர்ம புராணம் என்ற மூன்றும் கூறும். உதடுகளையும் அரிந்ததாக மகாபாரதம் கூறும். 'ஏற்றநெடுங் கொடிமூக்கு மிருகாது முலையிரண்டு மிழந்து வாழல், ஆற்றுவனே' (ஆரணிய. 361) என்று சூர்ப்பண கையே புலம்புதலும் காண்க,

பி - ம். 1. இங்கிவர், இங்குக் கொல், பண்டு, முன்.
2. தங்கை யென்னவும்; சினத்தான்.
3. ஆகம் விளக்கும், வாளுருவி, வாளொடு.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

820. அறக்க ணல்லதொரு கண்ணில ஞகி
நிறக்க ருங்கடலுள் நேமியி னின்று
துறக்க மெய்தியவ ருந்துற வாத
உறக்க மென்பதனை யோட முனிந்தான்.

'(இவ்விலக்குவன்), அறக்கண் அல்லது ஒரு கண்ணிலன் ஆகி - தருமத்தினிடத்தன்றிப் பிறிதொன்றினிடத்துச் செலுத்தும் விழியில்லாதவனுகி, கருநிற கடலுள் - கரிய நிறம் வாய்ந்த கடலாற் சூழப்பெற்ற, நேமியின் நின்று - பூமியில் நின்று, துறக்கம் எய்தியவரும் - துறக்கம் அடையப் பெற்றவரும், துறவாத - நீக்குவதற்கு அருமையான, உறக்கம் என்பதனை ஓட முனிந்தான் - நித்திரை என்பது தன்னிடம் அணுகாமல் ஓடுமாறு (அதனைச்) சீறியவன் ஆவன்.

இனி, இராமபிரானை இடைவிடாது சூழ்ந்து நின்று அவனுக்குக் காவல் செய்யுமாறிருந்தவனுகலின் 'கருங்கடலுள் நேமியினின்று' என்றும் கூறுவர். முதலடிக்கு 'வளையா வருநன் னெறி நின் னறிவாகு மன்றே' (அயோத். நகர்நீ. 129). நேமி - பூமி ; (பிங்.) இதனைச் சக்கரவாளம் என்றும் சிலர் கூறுவர். துறக்கம்; புரிந்தோர் வைகும் துறக்கமே போலும்' (ஆரணிய. 1188); சுந்தர, 94 ; கலித். 118. 'புண்ணிய மில்லார் புகுதற் கரியது' (சூளா. 279) ; துறவாத உறக்கம் ; இராமனென்னும். புண்ணியன் கண்ணும் வன்றேட் டம்பிகண் போன்ற வன்றே' (ஆரணிய. 1034); இன்னும் இலக்குவன் கண்டுயிலாமை ; அயோத்தி. கங்கைப். 49 ; குகப் ; 42. (ஆரணிய. 1048) ; யுத்த. 447. 'மனையின் வாழ்வு முறக்கமு மாற்றினன்' (யுத்த. நாகபாசப். 153, 158) : இனி அறக்கடவுளான இராமபிரானை யன்றி வேறு கண்ணில்லாதவன் எனினுமாம். 'விழிக்கும் கண்வேறில்லா...' (அயோத்தி. நகர்நீ. 49) ; துறக்க மெய்தியவருந் துறவாத உறக்கம் என்றதனுல், உறக்கத்தின் வன்மை கூறப்பட்டது.

பி-ம். 1. என்பதொரு ; கண்ணினனுகி, கண்ணுவனுகி.
2. கடுந்தகைமை நீதியினின்றும், கடுந்தகை நீதியிலின்று, கடலுயில் நேமியினீடு, கருங்கடலி னுண்மையினின்று ;
3. துறக்கம் வேயினர்களும்.
4. ஓட முனிந்தோன்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## சுக்கிரீவன்

821. கைய வன்தொட வமைந்த கரத்தான்
ஐய வாலியொடிவ் வண்ட நடுங்கச்
செய்த வன்செருவி னிற்றிகழ் கின்றான்
வெய்ய வன்புதல்வன் யாரினும் வெய்யான்.

'ஐய - ஐயனே! அவன் - அந்த இராமபிரான், கை தொட அமைந்த கரத்தான் - தன் கையினுற் பிடித்து நட்புறுதி செய்யப் பெற்ற கையை யுடையவனுகி, வாலியொடு இ அண்டம் நடுங்க செய்த - வாலியோடு இந்த அண்டம் நடுநடுங்கும்படி பண்ணிய, வல் செருவினில் திகழ்கின்றான் - கொடிய போரில் புகழ் பெற்று விளங்குகின்ற, வெய்யவன் புதல்வன் - சூரிய குமாரனுன சுக்கிரீவன், யாரினும் வெய்யான் - (அவன்) யாவரினும் கொடியன்.

இச்செய்யுள் சாரன் சுக்கிரீவனைச் சுட்டிக் கூறியது. இராமபிரானுல் சுக்கிரீவன் தம்பியாகக் கருதப்பட்டு அங்கி சாட்சியாகக் கைதொட்டு நண்பனுகச் செய்யப்பெற்றவன் என்பது; கிட்கிந்தாகாண்டம் யுத்த. முதற்போர். 60, நாகபாசப். 69. 97 உரைக் குறிப்பும் காணத்தகும். வெய்யவன் புதல்வன் - சுக்கிரீவன். திகழ்கின்றான் : கால வழுவமைதி. இறப்பு, நிகழ்வாகக் கூறப்பட்டது : இதன்பின் ஒரு பாடல் வேண்டும் என்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. வனைந்த.
2. நைய.
3. செய்ய நின்மைச் செருவில்.
4. வெய்ய வன்மகன் ; வெய்யோன்.



## அங்கதன்

822. தந்தை மற்றவன் சார்வில் வலத்தோன்
அந்த ரத்தரமு தார்கலி காண
மந்த ரத்திநெடும் வாசுகி யோடும்
சுந்த ரப்பெரிய தோள்கள் திரித்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

(அந்தச் சுக்கிரீவனது வலத்தில் இருக்கும்), 'மற்றவன் தந்தை - மற்றொருவனுடைய தந்தையான வாலி, சார்வில் வலத்தோன் - கூட்டு ஒருவரையும் வேண்டாத வன்மையுடையவன்; அந்தரத்தர் அமுது ஆர்கலி காண - (அவ்வாலி) வானுலகத் தேவர்கள் அமுதத்தைக் கடலினின்று பெறும்படி, மந்தரத்தினொடும் வாசுகியோடும் - மந்தர மலையோடு வாசுகி என்னும் கடைகயிற்றை இணைத்து, சுந்தர பெரிய தோள்கள் திரித்தான் - அழகிய பருத்த புயங்களால் கடைந்தான்.

இங்கு அங்கதனை அறிமுகப்படுத்த எழுந்தவன், அவன் தந்தையான வாலியின் வீரச் சிறப்பினையும், புயவன்மையையும் கூறினன். இங்ஙனம் தந்தையைக் கொண்டு மகனை அறிவுறுத்துவதும், மகனைக்கொண்டு தந்தையினை அறிவுறுத்துவதும் இக் காவியத்திற் பலவிடங்களிலும் காணலாம். 'இம்மாண் கதைக்கோ ரிறையான இராமன் என்னும், மொய்ம்மாண் கழலோற் றருநல்லற மூர்த்தி யன்னான்' (பால. அரசியற். 1); 'நேமிபண் டுருட்டிப், பெருமை யெய்தின ரியாவரே யிராமனைப் பெற்றார்' (அயோத்தி. 35). வாலி கடல் கடைந்தது; கிட்கிந்தா. 115, 249, 252, 253, 367, 372; சுந்தர. 518; 'தேங்கிய கடலை முன்னாட் டிரித்தவன் சேய்' (யுத்த. இந்திரசித்து. 60). வாசுகி எட்டுப் பெரிய நாகங்களில் ஒன்று. (ஒப்பு) சுந்தர. 1270. இச்செய்யுள் விற்பூட்டுப் பொருள்கோளில் அமைந்தது.

பி - ம். 1. மைந்தன் மற்றையவன் மாள்வில் வலத்தோர், மைந்தன் மற்றிவனென்பர் சலித்தே, மைந்தன் மற்றவ ரென்பர் சலித்தோர்.

2. அந்த ரத்திலமு தார்கலி கால, அந்த ரத்தினமு தார்கலி யிய, அந்த ரத்தி னுளார்வலி சாய.

3. மந்த ரத்தொடும்; வாசுகி சுற்றி.



## அநுமன்

823\. நடந்து நின்றவ னகுங்கதிர் முன்பு
தொடர்ந்த வன்உலகு சுற்றி யெயிற்றின்
இடந்தெ ழுந்தவனை யொத்தவன் வேலை
கடந்த வன்சரிதை கண்டனை யன்றே.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'நடந்து நின்றவன் - (அங்கே) நடந்துகொண்டிருப்பவன், நகும் கதிர் முன்பு - விளங்குகின்ற சூரியனுக்கு முன்னர், தொடர்ந்தவன் - (கல்வி கற்குமாறு) பற்றிச் சென்றவனும், உலகு சுற்றி - உலகினைச் சுழற்றி, எயிற்றின் இடந்து எழுந்தவனை ஒத்தவன் - கோரப்பற்களினால் பெயர்த்து எழுந்தவனான திருமாலை நிகர்த்தவனும், வேலை கடந்தவன் - ஆழியைத் தன் காலாற் கடந்தவனுமான (அநுமன்), சரிதை கண்டனை - அவன் வரலாற்றினை நீயே அறிந்துள்ளாய். அன்றே - ஈற்றசை.

ஏனையோரை அறிமுகப்படுத்தியதுபோலன்றி, அநுமனை 'நடந்து நின்றவன்' என்றது குரங்கின் சுறுசுறுப்பும், மேல் நிகழவிருக்கும் காரியத்தில் மனம்வைத்த பரபரப்பும் காட்டவென்க. நடந்து நிற்றல் - உலாவல். கதிர்: சினையாகு பெயர். கதிர்முன்பு தொடர்ந்தவன், அநுமன்; சுந்தர. 74; யுத்த. 408. இனி, இத்தொடர், இளம் பருவத்துக்கதிரவனைக் கனியென்று கருதிப்பாய்ந்ததனைக் குறித்தது எனினுமாம்; சுந்தர. 64, 241; யுத்த. முதற்போர். 245; அதிகாயன். 178; உத்தர. அநுமப். 12 கண்டுணர்க. அநுமனுக்கு வராகம் உவமை; 'உலகினை யெயிற்றி னிடந்தெழுந்தவன் வராகவதாரம் எடுத்த திருமால்'; 'அயிலெயிற்றி னேந்துதியால்'; 'ஏனமாய் மண்ணிடந்தாய்' (ஆரணிப. 58, 60). வேலை கடைந்தவன் - அநுமன்; 'கருங்கடல் கடந்த காலால்' (சுந்தர. 196); 'கருங்கடல் கடந்தனன் காலினால்' (சுந்தர. 585); 'ஓதநீர் கடந்துபகை கடிந்துலகை யுய்யக் கொண்டான்' (யுத்த. 408); மற்றும், யுத்த. கும்ப 273-உம் காண்க. முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறிப் பின் நிகழ்ச்சிகளைக் கூறாமல் 'அவன் சரிதை கண்டனை யன்றே' என்றான். அவையனைத்தையும் இராவணன் கேட்டும் நேர்முகமாகவும் அறிந்துளனாதலின்.

பி - ம். 1. கடந்து.

2. நின்றவவ னுங்கெதிர், நின்ற வன்னகதிர்; சுற்று மெயிற்றின்; துற்று மெயிற்றால், துற்ற வெயிற்றால்.

3. இடந்த பன்றியி னெழுந்தெழு, இடந்த பன்றியி னெழுந்தெதிர், இடந்த பன்றியின் மேலவன்.

4. யென்றான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

### நீலன்

824. நீலன் நின்றவ னெருப்பின் மகன்திண்
சூல முங்கயிறு மின்மை துணிந்தும்
ஆல மென்னுநிற மின்மை யறிந்தும்
கால னென்பரிவ னைக்கரு தாதார்.

'நின்றவன் - இதோ நிற்கின்றானே இவன், நெருப்பின் மகன் நீலன் - நெருப்பின் மகனான நீலனாவன்; திண் சூலமும் கயிறும் இன்மை துணிந்தும் - உறுதியான சூலம் கயிறு என்பன இவனிடம் இல்லாமையை நன்கு தெளிந்தும், ஆலம் என்னும் நிறம் இன்மை அறிந்தும் - விடம் என்று கூறத்தக்க கருநிறம் இல்லாமையைத் தெரிந்தும், கருதாதார் - பகைவர், இவனை - இந்த நீலனை, (செய்கை ஒப்புமையாற்), காலன் என்பர் - யமனே என்று சொல்வர்.

நீலன் - நெருப்பின் மகன; கிட்கிந்தா. 698; மற்றும், இவன் பெயரும், வீரமும் யுத்த. முதற்போர். 74, 78, 87-லும், அணி வகுப்பு. 14; கும்ப. 183, 185-லும் காண்க. சூலமும் கயிறும் காலனுடைய கருவிகள். ஆலம் - விடம்; காலன் நிறம் கருமையாதலின் விடத்தைக் கூறினார். இவை இல்லாமலே யமன் என்னும்படி உள்ளவன் நீலன் எனப்பட்டது. உயிர்களைக் காலமறிந்து கவர்பவனாகலின் காலன் என்பது காரணக்குறி.

பி - ம். 1. நீல னென்பவன் இங்கு நின்றனன்; மகன்றான்.
2. தொடர்தோன், துணிந்தான்.
3. ஆலமுண்டவ னடுந்திறன் மிக்க, ஆல மன்றிவ னடுந்திறன் மிக்கான், ஆல மொன்றுநிற மென்றய லோனை; ஆல மன்றிங் கருந்திற லன்றிவன், ஆல மன்னவனலென்ன வன்னுனை. 26

### நளன்

### வேறு

825. வேறுக நின்றான் நளனென்னும் விலங்க லன்னான்
ஏறு வருணன் வழிதந்தில னென்றி ராமன்
சீறுத வுள்ளத் தெழுசீற்ற முகுத்த செந்தீ
ஆறுத முன்னம் மகன்வேலையை யாறு செய்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'வேருக நின்ருன் - தனித்து நிற்பவன்; நளன் என்னும் விலங்கல் அன்னுன் - நளன் என்ற பெயர்கொண்ட மலையை ஒத்தவன் (அவன்), ஏரு - (அகந்தை) ஏறப்பெற்று, வருணன் வழி தந்திலன் என்று - வருணன் வழி செய்திலன் என்று நினைந்தத ஞல், இராமன் - இராமபிரானுடைய, சீருத உள்ளத்து எழு சீற்றம் - என்றும் சினவாத மனத்தில் எழுந்த சினம், உகுத்த செந்தீ - வெளிவிட்ட செந்நிறத் தீ, ஆருத முன்னம் - தணிவதற் குள்ளாக, அகன் வேலையை ஆறு செய்தான் - அகன்ற கடலை அணையமைத்து வழி செய்தவன்.

நளன் - இவன் 'தெய்வத் தச்சன்மெய்த் திருநெடுங் காதலன்' (கிட்கிந்தா. 705) என்ப. இந்நளன் யாதொன்றை நீரிற் போட் டாலும் மிதக்கும்படி வரம் பெற்றவன்; யுத்த. இராவணன்ருனை. 27; மற்றும், மகரக்கண்ணன். 31. சீருத உள்ளத்து: 'உண்டை தெறித்தபோ தொத்ததன்றிச் சில உண்மை தெரிந்ததில்லை' (யுத்த. கும்ப. 17). வேலையை ஆறு செய்தது சேதுபந்தனப் படலத்துக் காண்க.

பி - ம். 1. வேருகி நின்ற.
3. உமிழ்ந்த செந்தீ. 27

இதன்பின் ஏழு அதிகப்பாடல்கள் :—

ஏறிட்ட கல்லு வீழு மிடமற வெண்கி ஞலே
நாறிட்ட தென்ன வொவ்வோ ரோசனை நாலு பாலும்
கூறிட்ட சேனை நாப்பட் டோற்றுவோ னிடும்ப னென்றே
கூறிட்ட வயிரத் திண்டோட் கொடுந்தொழின் மடங்கல்
[போல்வான். 1

மற்றிவன் படையி லொள்ளு ரன்றிவா னவர்க ளேவந்
துற்றன ரெனினும் பற்றி யுயிருகப் பிசைந்திட் டுத
கொற்றவ னருளுங் கொண்டோன் குடாவடிக் கிறைவன்
[கூற்றம்
பெற்றவ னடைந்தோர் தம்மை யுயிரெனப் பேணு நீரான்.

ஆங்கவ னெதிரே வேருே ராடகக் குன்ற மொன்றை
வாங்குநீர் மகர வேலை வந்துடன் வளைந்த தென்ன
ஓங்குமைம் முகத்தின் ருனை யுட்பொலிந் திடுவான் வெற்றி
ஓங்கிய குவவுத் திண்டோள் வினதனென் றுரைக்கும்
[வெய்யோன். 3

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அன்னவன் றனக்கு வாமத் தைம்பது கோடி யூகம்
தன்னைவந் திடையிற் சுற்றத் தடவரை யென்ன நிற்பான்
கொன்னவில் குலிசத் தண்ணல் கொதித்தெதிர்
[கொடுக்கு மேனும்
வென்னிடக் குமைக்கும் வேக தெரிசியென் றுரைக்கும்
[வீரன். 4

பிளக்குமண் பதையும் நாகர் பிலனையுங் கிளக்கும் வேரோ
டிளக்குமிக் குடுமிக் குன்றத் தினமெலாம் பிடுங்கி யேந்தி
அளக்கர்கட் டவனு மாட்டா தலக்கணுற் றிடவிட்
[டார்க்குந்
துளக்கமில் மொய்ம்பர் சோதி முகனுந்துன் முகனு
[மென்பார். 5

குன்றொடு குணிக்குங் கொற்றக் குவவுத் தோட் குரக்குச்
[சேனை
ஒன்றுபத் தைந்தொ டாறு கோடிவந் தொருங்கு சுற்ற
மின்றொடுத் தமைந்த போல விளங்கெயி றிலங்க மேருச்
சென்றென வந்து நிற்பான் றிறல்கெழு தீர்க்க பாதன். 6

நாற்றிரண் டாய கோடி நோன்கவித் தானை சுற்றச்
காற்றின்மா மகற்குக் கீழ்பாற் கனவரை யென்ன நிற்பான்
கூற்றின்மா மைந்தன் கூற்றுங் குலுக்கமுற் றலக்க
[ணெய்தச்
சீற்றமே சிந்துஞ் செங்கட் டெதிமுக னென்னுஞ் சீயம். 7

சாம்பன்

826. முக்கா லமுமொய்ம் மதியான் முறையின் னுணர்வான்
புக்கா லமெழப் புணரிப் புலவோர் கலக்கும்
அக்கால முள்ளான் கரடிக் கரசாகி நின்றான்
இக்கால நின்று முலகேழு மெடுக்க வல்லான்.

(அவன்), 'முக்காலமும் - (இறப்பு, நிகழ்வு, எதிர்) என்ற மூன்றுகால நிகழ்ச்சிகளையும், மொய் மதியான் - தனது பூரண அறிவுகொண்டு, முறையின் உணர்வான் - நெறிப்படி அறிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வல்லவனும், புக்கு ஆலம் எழ - புகுந்து ஆலகாலவிடம் தோன்று மாறு, புலவோர் புணரி கலக்கும் அ காலம் உள்ளான் - தேவர்கள் கடலைக் கடைந்து கலக்கிய அந்தக் காலத்தில் இருந்தவனும், கரடிக்கு அரசாகி நின்றான் - கரடிகளுக்கு அரசனாகி நின்றவனுமான சாம்பவன், இ காலம் நின்றும் - இத்தனை காலமாகியும் (முதுமை யுற்றும்), உலகு ஏழும் எடுக்க வல்லான் - ஏழு உலகங்களையும் பெயர்த்து எடுக்கும் வன்மை வாய்ந்தவன்.

மொய்மதி - வலிய அறிவு. புணரி - பல நதிகள் வந்து கலக்கக்கூடிய கடலுக்குக் காரணக்குறி. இ பெயர்விகுதி. புல வோர் - தேவர்; இங்குக் குறிக்கப்பட்ட திருப்பாற்கடல் கடைந்த நிகழ்ச்சிக்கு ஆரணிய. 102, 178; கிட்கிந்தா. 115, 249, 252, 253, 367, 372; சுந்தர. 42, 46, 518. 'அந்த ரத்தவ . ரலைகட லமுதெழக் கடைவுறு மந்நாளிற், சுந்த ரத்தடந் தோள்வளை மாசுணஞ் சுற்றிய தொழில்காட்ட, மந்த ரத்தையும் கடுத்தது' (யுத்த. கும்ப. 345); 'தேங்கிய கடலை முன்னாட் டிரித்தவன் சேய்' (யுத்த. இந்திரசித்து. 60). சாம்பவன் - கரடிக்கரசன்; திரிகால ஞானி. பாற்கடல் கடையும்போதே இருந்தவன். இவன் வரலாற் றினைக் கிட்கிந்தா. 699 உரைக்குறிப்பிற் காண்க.

பி - ம். 1. முக்கா லுலகை முறைசூழ்ந்து முன்னே யுரைப்பான், முக்காலமுந் தன்னுடை மொய்ம்மதியா லுணர்வான்.
2. புக்காலமெனப், புணரியை.
3. அக்காலமும்.
4. இக்காலம் நின்ற; எடுக்கு மீட்டான். 28

## பிற வீரர்கள்

827. சேனு பதிதன் னயலே யிருள்செய்த குன்றின்
ஆனு வொளியி னிரண்டாடகக் குன்றி னின்றூர்
ஏனேரி லிராம னிலக்குவ னென்னு மீட்டார்
வானேர்த மருத்துவர் மைந்தர் வலிக்கண் மிக்கார்.

'இருள் செய்த குன்றின் - இருள் நிறமான கறுத்த குன்றிடத் தில் பக்கத்தே (வெகு அண்மையில்), ஆனு - நீங்காத, ஒளியின் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஒளியினையுடைய, இரண்டு ஆடகம் குன்றின் நின்றார் - இரண்டு பொன்மலைபோல, சேனாபதி தன் அயலே - சேனாபதியான நீலன் அருகில் நின்றவர், ஏனோரில் - பிற சேனையிலிருப்பவர்க்குள்ளே, இராமன் இலக்குவன் என்னும் ஈட்டார் - இராம இலக்குவர் போன்ற வன்மை படைத்தவரான, வானோர் தம் மருத்துவர் மைந்தர் - தேவ மருத்துவரான அசுவினி தேவரின் குமாரர்; வலிக்கண் மிக்கார் - திறமையில் மிகவும் மேன்மையுற்றவர்கள்.

சேனாபதி - பிரகத்தன். ஆடகம் - பொன். ஆரணிய. 414, 480; சுந்தர. 424, 748, 1191. ஈடு - வலிமை; (ஆரணிய. 707); 'ஒரு கரியீ டழித்துரித்தனை' (தேவா. 142 : 13). இவ்விருவர், மயிந்தன் துமிந்தன் என்பவர் கிட்கிந்தா. 701, 702 பார்க்க. ஏனோரில் என்பது பிற வானரப்படை வீரருள் என்க; இவ்விருவர்களும் பிரமாத்திரத்தால் மடிந்து பின்னர் அநுமன் கொணர்ந்த மருத்து மலையாற் பிழைத்தவர்கள்; (யுத்த. பிரமாத்திர. 178). வானோர் தம் மருத்துவர் - அசுவனி தேவர்கள்.

பி - ம். 1. சேனை பதியின்.
2. ஆனை மருங்கே; குன்ற மன்னார், குன்ற நின்றது.
3. ஏனோர்.
4. வானோர்த மருத்துவன் மைந்தர், வானோ ரருந்தா மருந்தன்னார்; மிக்கான், மிக்கோன். 28

828. உவன்காண் குமுதன் குமுதாக்கனு மூங்க வன்காண்
இவன்காண் கவயன் கவயாக்கனு மீங்கி வன்காண்
சிவன்கா ணயன்கா ணெனுந்தூதனைப் பெற்ற செல்வன்
அவன்கா ணெடுங்கேசரி யென்பவ னுற்றன் மிக்கான்.

'உவன் காண் - அதோ நடுவே காணப்படுகின்றானே அவன் குமுதன் என்பவன்; ஊங்கு அவன் காண் குமுதாக்கனும் - அதோ நிற்பவன் குமுதாக்கன் ஆவன்; இவன் காண் கவயன் - இவன் கவயன்; ஈங்கு இவன் காண் கவயாக்கன் - இதோ நிற்பவன் கவயாக்கன்; சிவன் காண் அயன் காண் எனும் தூதனை பெற்ற செல்வன் - 'சிவனே யாவன் பிரமனேயாவன்' என்று கண்டோர்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கூறும்படியுள்ள தூதனைப் பெற்ற செல்வன், அவன் - அவன், நெடுகேசரி என்பவன்-பெருமைமிக்க கேசரி என்னும் வாநர வீரன்; ஆற்றல் மிக்கான் - பேராற்றல் மிகுந்தவன்.

குமுதன் : கிட்கிந்தா. 702 உரைக் குறிப்புக் காண்க. இவன் போர்த்திறத்தை நாகபாசப்படலம் 55-இலும், படைத்தலைவர் வதைப்படலம் 81-இலும் காண்க. ஊங்கு அருகில் என்னும் பொருளது. கவயன் ; கிட்கிந்தா. 697. கேசரி ஓர் சிறந்த வாநர வீரன் ; கிட்கிந்தா. 692 உரைக் குறிப்புக் காண்க. 'இம்பர் ஞாலத்தும் வானத்து மெழுதிய சீர்த்தி நம்பன்' ஆன அநுமனைத் தந்தவன் எனப் புகழப்பட்டவன். அமிசத்தாற் சிவ பிரான், அறிவாற் பிரமன். 'காலனை யொக்குந் தூதன் காலுங் கண்ணுதலு மென்றார்' (யுத்த. 760); 'புராரி மற்றி யானே வாத சேயெனப் புகன்றான்' (பால. திருவவ: 28); 'ஆதியயன்று னேயென யாது மறைகின்றீர்' (கிட்கிந்தா. 992); 'விரிஞ்சனே விடைவல்லானே ; (கிட்கிந்தா. 61). கேசரிக்கு அவன் மனைவி அஞ்சனை தேவியிடம் தோன்றியவன் அநுமன். இரண்டாமடி நான்காமடிகளில் காண் அசை.

பா - ம். 1. இவன் காண் ; இங்கிவன், ஊங்குவன்.

2. உவன் ; ஊங்கிவன், உங்கிவன்.

3. சிவன் காண் திருமாலெனப்.

4. நெடுந் தோள் வலிக்கேசரி ; நெடுங்கேசரி கேசரி. 30

829. முரபன் னகுதோளவன் மூரி மடங்க லென்னக்
கரபன் னகமன்னவை மின்னுகக் காந்து கின்றான்
வரபன் னகந்தன்னையும் வேரொடு வேண்டின் வாங்குஞ்
சரபன் னவன்னிவன் சதவலி யாய தக்கோன்.

'மூரி மடங்கல் என்ன - வலிமை வாய்ந்த நரசிங்கம் போல, கரம் - கையிலேயுள்ள, நகம் பல் அன்னவை - நகங்களும் பற்களும் என்பன, மின் உக - ஒளியை வீச, காந்துகின்றான் - சினந்து நிற் பவனாய், நகு தோளவன் - விளங்குகின்ற தோளையுடைய அவன், முரபன் - முரபன் ; (அதோ நிற்கின்றானே) அவன், வரம் பன்னகம் தன்னையும் - சிறந்த பலவாகிய மலைகளையும், வேண்டின் வேரொடு வாங்கும் - விரும்பின் வேருடன் பெயர்த்தெடுக்கும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(வன்மை பெற்ற), சரபன் - சரபன் என்னும் பெயரான்; இவன் - அண்மையில் காணப்படுபவன், சதவலி ஆய தக்கோன் - சதவலி என்று பெயர் பூண்ட பெரியோன்.

மூரி: 'மூரி மால்கரி' (ஆரணிய. 472); (யுத்த. பிரமாத்திர. 176). மடங்கல்: பிடரிமயிர் மடங்கப் பெற்றது என்பது சிங்கத்திற்குக் காரணக்குறி. 'கூனுகிர் மடங்கலேற்றின் குழுவைமான் கொல்லு மெனமுன்' (ஆரணிய. 861). இரண்டாம் அடியில் பன்னகம் - பல் நகம்; உம்மைத் தொகை. மூன்றும் அடியில் பல் நகம் என்று பிரியும். இச்செய்யுளில் திரிபு என்னும் சொல்லணி காண்க. சதவலி (கிட்கிந்தா. 689) குறிப்புக் காண்க. தக்கோன் ஆய சதவலி யெனப் பிரித்துக் கூட்டினும் ஒன்றும். முரன் - ஓர் அசுரன்; திருமால் இவனை வென்றது பற்றி முராரி எனப்பெயர் பெற்றான் என்ப; சுந்தர. 347. முரபன் - முரன்; இவன் நரகாசுரன் சேனாபதி; இவன் கோட்டை காத்திருந்துழிக் கண்ணபிரான் இவனைக் கொன்றான் என்பது வரலாறு.

பி - ம். 1. முரவன் னரு, முரபன்னகத்.
2. கரம்பல் விவை, கரவன் னகம், இன்னவாவ மின்னென.
3. வரவன்னகந்; வாங்கும் வேண்டில்.
4. சரவன் னகமன்ன, சரபன்னவன் மன்ன. 31

830. மூன்று கண்ணில னாயினு மூன்றெயி லெரித்தோன்
போன்று நின்றவன் பனசனிப் போர்க்கெலாந் தானே
ஏன்று நின்றவ னிடபன்மற் றிவன்றனக் கெதிரே
தோன்று கின்றவன் சுசேடணன் தீயொடுந்
[தொடர்ந்தோன்.

'மூன்று கண் இலன் ஆயினும் - மூன்று கண்களைப் படைத்திலனேனும், மூன்று எயில் எரித்தோன் போன்று நின்றவன் - முப்புரம் தீயிட்ட சிவபிரான் போல நிற்பவன், பனசன் - பனசன் எனப்படுவோன்; இ போர்க்கு எலாம் தானே ஏன்று நின்றவன் - இடபன் - இந்தப் போருக் கெல்லாம் தானே (முதன்மையினை) ஏற்று நிற்பவன் இடபன்; மற்று இவன் தனக்கு எதிரே

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தோன்றுகின்றவன் - வேறு இவனுக்கு நேராகக் காணப்படுபவன், தீயொடுந் தொடர்ந்தோன் - அக்கினி பகவானைத் தொடர்ந்தவனை, சுசேடணன் - சுசேடணன் என்பான்.

மூன்று கண்களுடையவனும், மூன்றெயில் எரித்தவனும் சிவபெருமான்; அவன் போன்ற ஆற்றல் சான்றவன் பனசன் எனப்பட்டது; கிட்கிந்தா. 695-ன் குறிப்பும், பிரமாத்திர. 177-ம் காண்க. இப்படலத்துட் கூறப்பட்ட வாநர வீரர்களிற் பெரும்பாலோர் கிட்கிந்தாகாண்டம் தானைகாண் படலத்தும் கூறப்பெறுதல் காண்க. முதுமை அறிவு மூதறிவு.

பி - ம். 1. மூதெயில், மூவெயில்.
3. இடவனு மற்றவ னெதிரே, இடவன் மற்றிவன்வல னெதிரே, இடவன் மற்றினையவனெதிரே.
4. சுசேடணன், சுசேடன்முன்; என்றுளந் தூயோன், தீயொடுந் தொடர்ந்தான்; தீயினைத் தொடர்ந்தான். 32

331. வெதிர்கொள் குன்றெலாம் வேரொடும் வாங்கிமே தினியை
முதுகு நொய்தெனச் செய்தவன் கனலையு முனிவோன்
கதிர வன்மகற் கிடமருங் கேநின்ற காளை
ததிமு கன்னவன் சங்கனென் றுரைக்கின்ற சிங்கம்.

'கதிரவன் மகற்கு இடமருங்கே நின்ற காளை - சூரியன் புதல்வனை சுக்கிரீவனுக்கு இடது பக்கத்தில் நிற்கின்ற காளை போன்றவன், வெதிர் கொள் குன்று எலாம் - மூங்கில்களைத் தன்னிடம் கொண்ட மலைகளை யெல்லாம், வேரொடும் வாங்கி - வேரொடும் பெயர்த்து, மேதினியை - பூமியின், முதுகு நொய்து என செய்தவன் - நடுவிடம் பாரமற்றதெனப் புரிந்தவனும், கனலையும் முனிவோன் - நெருப்பையும் சினந்து சீறவல்லவனுமான ததிமுகன் என்னும் பெயரான்; அவன் - அதோ நிற்கின்ற அவன், சங்கன் என்று உரைக்கின்ற சிங்கம் - சங்கன் என்று சொல்லப்படுகின்ற சிங்கம் போன்றவன்.

வெதிர் - மூங்கில்; இது குறிஞ்சி நிலக்கருப்பொருள். 'இரு வெதிர்ப் பைந்தூறு கூரெரி நைப்ப' (மதுரைக். 302); 'நெல்கொள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நெடு வெதிர்க் கணந்த யானை' (குறிஞ்சிப். 35); 'இருவெதிரீங் கழைதத்தி' (மலைபடு. 207); வெதிரை மூங்கில் என்ற பொருளில் தெலுங்கரும் வழங்குவர். மேதினியை முதுகு நொய்து எனச் செய்தல்; அந்த மலையகழப்பட்ட இடம் குழி வீழ்ந்து வறுமையாதல் என்க. மேதினி - பூமி; வராகத்தின் மேதை அல்லது கொழுப்பினால் உண்டாய பூமி என்று காரணக்குறி என்பர். காளை: உவமவாகு பெயர். மிடலானும் கம்பீரமான நடையாலும் நோக்காலும் உவமை. ததிமுகன்; இவனே பிராட்டியைக் கண்டு திரும்பிய அநுமன் முதலியவர்களோடும் கலாய்த்து அடிபட்டவனும் சுக்கிரீவற்குச் சொந்தமான மதுவனத்தின் காவலனும் என்ப; மற்றும் பிரமாத்திர. 179-உம் காண்க.

பி - ம். 3. மகற் கிடவருகே; காலன்.
4. ததிமுகன்னிவன்; உரைக்கு மிச்; உரைக்குமச். 33

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

நாடி லிங்கிவ ராதியாய் நவின்றமூ வெழுவர்
ஆடல் வெம்படைத் தலைவர்கள் ஆறுபத் தேழு
கோடி வீரர்கள் குன்றெனக் குவவிய தோளாய்
கூடு சேனையும் எழுபது வெள்ளமாய்க் குறிப்பார்.

832. அண்ணல் கேளிவர்க் குவமையு மளவுமொன் றுளதோ
விண்ணின் மீனினைக் குணிப்பினும் வேலையுண் மீனை
எண்ணி நோக்கினு மிக்கடன் மணலினை யெல்லாங்
கண்ணி நோக்கினுங் கணக்கிலை யென்றனன் காட்டி.

'அண்ணல் - பெருமையிற் சிறந்தோய்! கேள் - இதனைச் செவிக் கொள்வாயாக' என்று, காட்டி - அச்சேனைகளைக் காண்பித்து, 'இவர்க்கு - இந்த வானர வீரர்கட்கு, உவமையும் அளவும் ஒன்று உளதோ - உவமையேனும் அளவேனும் ஏதேனும் உண்டோ? விண்ணின் மீனினைக் குணிப்பினும் - ஆகாயத்தின் கண் உள்ள நட்சத்திரங்களை எண்ணினாலும், வேலையுள் மீனை -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கடற்கண் உள்ள மீன்களை, எண்ணி நோக்கினும் - எண்ணிப்பார்த்தாலும், இக்கடல் மணலினை எல்லாம் - இந்தக் கடலின் மணலினை யெல்லாம், கண்ணி நோக்கினும் - கருதி அளவிடப் பார்த்தாலும், கணக்கு இலை - (இந்த வாநரர்களை) கணக்கிட இயலாது' என்றனன் - என்று கூறி முடித்தான் (அந்தச் சாரணன்).

எண்ணிக் கணிக்க முடியாமைக்கு விண்ணின் மீன், வேலை மீன், கடல் மண் என்பன எடுத்துக் காட்டப்பட்டன. மீன் என்பது உடுக்களையும், நீர்வாழ் மீனையும் குறிக்கும். மின்னுதல் காரணமாக நட்சத்திரம் மீன் எனப்பட்டது. 'தாரகையை யெண்ணியளவிடலாம், கடற் கரையி னெய்மணலை யெண்ணி யளவிடலாம்' (சேக்கிழார் புராணம். 51); 'தொல்லைநம் பிறவி யெண்ணில் தொடு கடல் மணலுமாற்ரு எல்லைய' (சீவக. 270).

பி - ம். 1. கேளிதற்கு; அவதியும்.
2. மீன்களை, மீனினை யெல்லாம்.
3. எண்ணி னேக்கினும்; அக்கடல், கடலினின்.
4. கண்ணி னேக்கினும், கண்ணி நாடினும், கண்ணி நாட்டினும்; கணக்கிலது, கணக்கிலர்; காட்ட. 34

## இவற்றைக் கேட்ட இராவணன் இகழ்ச்சி

833. சினங்கொள் திண்டிற லரக்கனும் சிறுநகை செய்தான்
புனங்கொள் புன்றலைக் குரங்கினைப் புகழுதி போலாம்
வனங்க ளும்படர் வரைதொறுந் திரிதரு மானின்
இனங்க ளும்பல வென்செயு மரியினை யென்ருன்.

சினம் கொள் - (சாரணன் புகழ்ந்தது கேட்டுக்) கோபங் கொண்ட, திண் திறல் அரக்கனும் - மிக்க வன்மை வாய்ந்த அரக்கனை இராவணனும், சிறு நகை செய்தான் - புன் முறுவல் செய்து (அச்சாரணனைப் பார்த்து), 'புனம் கொள் புன் தலை குரங்கினை புகழுதி போலாம் - கொல்லைப் புறத்தில் அலைந்து திரிகின்ற சிறிய தலையினை யுடைய குரங்குகளைப் புகழ்வாய்போலும்; வனங்களும் படர்வரை தொறும் - காடுகள்தோறும் பரவியுள்ள மலைகள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தோறும், திரிதரும் மானின் பல இனங்களும் - திரிகின்ற மானின் பலவாகிய கூட்டங்களும், அரியினை என் செயும் - ஒரு சிங்கத்தை என்ன செய்துவிட முடியும்', என்றான் - என்று மொழிந்தான்.

சினம் என்று மனத்தின் வேகத்தையும், திண்திறல் என்று உடல் வலியையும் குறித்தார். சிறுநகை: இங்கு எள்ளல் பற்றி வந்தது; வீரத் தெழுந்த வெகுளி நகையுமாம். தோட்டங்களில் அலைந்து திரிகின்ற சிறிய தலையை யுடைய குரங்கு என இகழ்ந்தான்; (ஒப்பு): 'சுள்ளியி லிருந்துறை குரங்கு' (யுத்த. 25); 'கோடணை குரங்கினுக் கரசும்' (யுத்த. முதற்போர். 126): 'சுருங்கிய குரங்கு' (யுத்த 73): 'கூன் முதுகின் சிறுகுரங்கு' (யுத்த. 74): 'கூனுடைக் குரங்கு' (யுத்த. கும்ப 92). போலாம்; ஒப்பில் போலி. மானின் இனங்கள் அரியினை என்செயும்; (ஒப்பு): 'மல்லலாளியைப் பல வளைந்து கொள்ளினும், கொல்லலா யிருக்குமோ குஞ்சரங் களால்' (வி. பா. நிரைமீட்சி. 84): 'மரனிற்குமோ அரி வாளரி வேங்கை முன்; (தனிப்பா.): 'நாயினம் சீயம் கண்ட தாமென நடப்ப தல்லால், நீயுருத் தெழுந்த போது குரங்கெதிர் நிற்ப துண்டோ' (யுத்த. 754); 'வல்லிய மருங்கு கண்ட மானென' (யுத்த. மாயாசனக. 18); 'மன்னுசெங் கதிரோன் றன்னை மயங் இருட் குழாமென் செய்யும்' (குசேலோ. வைகுந்த மடைந்த.) மான் கூட்டங்கள் சிங்கத்தை யென்செய்யும் என்றதனால் குரங்குக் கூட்டங்கள் தனியே யொன்றும் செய்யா என்பதைக் குறித்தான். பிறிதுமொழிதல் அணி. இதனை ஒட்டு என்றும் நுவலாநுவற்சி யென்றும் வழங்குவர்.

பி - ம். 3. வனங்களும் பலமலை; திரிந்துழல்,
4. எரியினை.



இங்கோர் அதிகப்பாடல் :—

அழிவி லாவலி படைத்துள நம்படை யரக்கர்
ஒழிவி லாதபல் லாயிர வெள்ளத்துக் குறையோர்
துளியும் ஒவ்விடா வெழுபது வெள்ளத்தின் தொகைசேர்
எளிய புன்குரங் கென்செயு மென்றன னிகலோன்.

இராவணன் வானரத்தானைகாண் படலம் முற்றும்.

---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**இராவணன் வாநரத்தானைகாண் படலம்: வான்மீகத்தில் இதனைப்பற்றிய குறிப்புப் பின்வருமாறு :—**

26-ஆம் சர்க்கத்தில் ஸாரணன் என்ற ஒற்றன் வாநர சேனையை இராவணனுக்குக் காட்டுகின்றான். இராவணன் ஓர் கோபுரத்தின் மீது நின்றதாகக் கூறி அவனுடைய நிலையையும் அவனைச் சூழ்ந்திருந்தவர் நிலையையும் 17 செய்யுட்களில் கம்பர் கூறுவர். மற்றும் வாநர வீரர்களையும், வாநரர் தலைவர்களையும் சுக சாரணர் இராவணற்குக் கூறுகின்றனர். வான்மீகத்தில் சில பெயர்கள் அதிகமாகக் கூறப்பெற்றுள்ளன. பின்னர் சார்த்தூலன் என்பவன் சில வாநரத் தலைவர்களின் பிறப்பு வரலாறுகளைக் கூறுகின்றனன். இராவணனுக்கு அப்பெருஞ் சேனையைக் காண்டலும் சினம் பிறக்கின்றது.

---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 11. மகுடபங்கப் படலம்

சுக்கிரீவன் இராவணனது மகுடங்களைக் கீழ் வீழ்த்தி இராவணனைப் பங்கப்படுத்தியதைக் கூறும் படலம் என விரியும்.

## இராமபிரான் வீடணனை வினவுதல்

834. என்னும் வேலையி னிராவணற் கிளவலை யிராமன்
கன்னி மாமதில் நகர்நின்று நம்வலி காண்பான்
முன்னி வானினு மூடிநின் றூர்களை முறையால்
இன்ன நாமத்த ரினையரென் றியம்புதி யென்றான்.

என்னும் வேலையின் - (இராவணன் சாரணனை நோக்கி முன் குறித்தபடி) கூறிக்கொண்டிருந்தபொழுது, இராமன் - இராமபிரான், இராவணற்கு இளவலை - இராவணனுக்குத் தம்பியான வீடணனைப் பார்த்து; 'நம் வலி காண்பான் - நமது படைவலிமையைக் காண, முன்னி - கருதி, கன்னி மாமதில் நகர் நின்று - அழியாத உயர்ந்த மதில்களாற் சூழப்பெற்ற இலங்காபுரியிலிருந்து, வானினும் மூடி நின்றார்களை - ஆகாயத்திற் கவிந்து கொண்டிருப்பவர்களை, முறையால் - முறைப்படி, இன்ன நாமத்தர் இனையர் - இன்ன பேருடையவர் என்றும் இத்தகையர் என்றும், இயம்புதி - சொல்லுக' என்றான் - என்று கேட்டான்.

இராவணன் சாரணன் வழியாக இராமபிரான் பக்கத்திலிருந்தவர்களைப்பற்றி அறிந்துகொண்டிருந்த அதே நேரத்தில் இராமபிரான் வீடணனை நோக்கிப் பகைவர்களைப்பற்றி அறிவிக்குமாறு கேட்டனன் என்க. சில சுவடிகளில் இச்செய்யுள் முதல் ஆறு செய்யுட்கள் வரை இராவணன் தானைகாண் படலத்தோடேயே சேர்ந்துள்ளன. வேலை: வேலா என்பதன் திரிபு. இளவல்: அல் பெயர்விகுதி. கன்னி - அழியாத தன்மை; 'கன்னிமா மதில் சூழ் கருவூர்' (திவ். பெரியதிரு. 2:9:7); 'கன்னிக் கொடிமதில்' (சீவக. 525). இராவணன் அழிந்த பின்பும் வீடணன் செல்வமாக அந்நகர் உள்ளமை காண்க. காண்பான் - பானீற்று வினையெச்சம். இராவணனோடு நிற்பவர் பெயர்களையும், அவர்களின் ஆற்றல்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பண்பு என்பவற்ருல் இத்தகையர் என்பதையும் கூறுக என்பான், இன்ன நாமத்தர் இனையர் என்றியம்புதி என்ருன். சுக்கிரீவனுல் இராவணன் இகழ்வுற்ற இவ்வரலாறு இங்குள்ளவாறே வான்மீகத்திலும் காணக்கிடைக்கின்றது. ஆயினும், அத்யாத்மத்தில் இராமபிரானே ஓர் அம்பினுல் சுக்கிரீவன் முடிகளை வீழ்த்தியதாகக் கூறப்பட்டிருக்கிறது.

பி - ம். 1. கன்னிமா மதிற்புறம், மாமதில் மிசை நின்று; நம் வலிகாண, நம் பெலங்காண, நாம்பலர்காண.

3. முன்னின், வானக மூடி, வான்றெட முடுகி, மொய்த்தார்களை.

4. தானத்தர்; இன்ன ரென். 1

## வீடணன் இராவணனைக் காட்டல்

835 நாறு தன்குலக் கிளையெலா நரகத்து நடுவான்
சேறு செய்துவைத் தானும்பர் திலோத்தமை முதலாக்
கூறு மங்கையர் குழாத்திடைக் கோபுரக் குன்றத்து
ஏறி நின்றவன் புன்ரெழி லிராவண னென்ருன்.

(அது கேட்ட வீடணன் இராமபிரானை நோக்கி), 'கோபுரம் குன்றத்து - கோபுரமாகிய குன்றின்கண், ஏறி - ஏறி; உம்பர் திலோத்தமை முதலா கூறும் மங்கையர் - தேவருலகில் உள்ள திலோத்தமை முதலாகப் புகழ்ந்துரைக்கப்படுகின்ற தேவமாதர்களின், குழாத்திடை நின்றவன் - கூட்டத்தின் நடுவில் நிற்பவனே, தன் குலகிளை நாறு எலாம் - தன்னுடைய குலத்தில் உதித்த கிளைஞர்களாகிய நாற்றுக்களை எல்லாம், நரகத்து நடுவான் - நரகத்தில் நடும் பொருட்டாக, சேறு செய்து வைத்தான் - (அந்த நரகத்தைச்) சேருகச் செய்து வைத்திருப்பவனுன, புன்தொழில் இராவணன் என்ருன் - இழிந்த தொழிலையுடைய இராவணன்', என்ருன் - என்று (வீடணன்) மொழிந்தான்.

நல்ல நெல் நாற்றுக்களை நன் செயில் நட்டு விளைப்பர். இங்கு அரக்கராகிய நாற்றை நரகத்தில் நடுமாறு சேறு செய்தான் எனப்பட்டது. அரக்கர்களைத் தீயன புரியுமாறு செய்து, அவர்கள் உய்விலராய் நரகத்திடையே வளரச் செய்தவன் என்பது கருத்து. 'நீலமா மணிமுடி நிருதர் வேந்தனை, மூலநா சம்பெற முடிக்கு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


முன்பினுல், மேலைநா ளுயிருடன் பிறந்து மேல்விளை, கால மோர்ந் துடனுறை கடிய நோயனுள்' (ஆரணிய. 227); 'உடனுறைந் துயிர்க டம்மை அந்தகற் களிக்கு நோய் போல் அரக்கி' (ஆரணிய 417) என்பன இங்கு ஒப்பு நோக்கத்தகும். சேற்றிற்கே அளறு என்ற பெயரும் உண்டு; இந்த அளற்றிற்கே நரகம் என்று பொருள் கொள்வர் பரிமேலழகர்; (குறள். 255). திலோத்தமை முதலா என்றமையின், மேனகை, உருப்பசி, அரம்பை முதலானோரையும் கொள்க. முதலாக என்பது ஈறுகெட்டது. குன்றக் கோபுரத்து என்று கொண்டு மலைபோன்றுயர்ந்த கோபுரத்து எனினுமாம். ஏறி நின்றவன் புன்தொழில் என்பதில் முரண் அமைந்திருத்தல் காண்க. புன்றொழி லரக்கன்; (சுந்தர. 522). உருவக வணி.

பி - ம். 1. பெருங்குலச்; நரகத்து ளாடுவான்.

2. செய்தவ னுருப்பசி.

3. கோபுரக் குன்றின். 2

இவ்விடத்து இராவணன் வாநரத்தானைகாண் படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் உள்ளது.

## இராவணன்மேற் சுக்கிரீவன் பாய்தல்

836. கருதி மற்றென்று கழறுதன் முனம்விழிக் கனல்கள்
பொருது புக்கன முந்துறச் சூரியன் புதல்வன்
சுருதீ யன்னவன் சிவந்தநற் கனியென்று சொல்லப்
பருதி மேற்பண்டு பாய்ந்தவ னுமெனப் பாய்ந்தான்.

கருதி - (வீடணன் மேலும்) மனத்தால் எண்ணி, மற்றொன்று கழறுதல் முனம் - பிறிதொன்று பகர்தற்கு முன்பு, சூரியன் புதல்வன் - சூரியன் குமாரனான சுக்கிரீவனுடைய, விழி கனல்கள் பொருது முந்துற புக்கன - கட்பொறிகள் போட்டியிட்டுக்கொண்டு முற்பட்டு (இராவணன் மீது தாக்கச்) சென்றனவாக, சிவந்த நல் கனி என்று சொல்ல - சிவந்த சிறந்த பழம் என்று சொல்லிய வண்ணம், பண்டு பருதி மேல் பாய்ந்தவன் - முற்காலத்துச் சூரியன் மீது தாவினவனும், சுருதி அன்னவன் ஆம் என - வேதத்தை ஒத்தவனுமான அநுமன் என்று கூறுமாறு, பாய்ந்தான் - இராவணன்மேற் பாய்ந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வீடணன் இராமபிரானிடம் மேல் வார்த்தை பேசுவதற்கு முன்னே இராவணன்மீது பாய்ந்தவனான சுக்கிரீவனுடைய உள்ளப் போக்கையும் விரைவையும் ஒருசேர ஆசிரியர் விளக்கிய திறம் நோக்கற்குரியது. அநுமன் சூரியனைக் கனி என்று பாய்ந்த வரலாறு, இராவணன் வானரத்தானைகாண் படலம் 25-ஆம் செய்யுட் குறிப்பிற் காண்க; மற்றும், 'அன்ன காய்கதிரவிமேற் பாய்ந்தபோ ரநுமன்' (யுத்த. முதற்போர். 245); 'தேர் மேற் செலக் குதித்தான்' (யுத்த. அதிகாயன். 178); யுத்த. 823; உத்தர காண்டம் அநுமப் படலத்தும் இவ்வரலாறு காணப்படும்; சுந்தர. 64, 241-ம் காண்க. சுருதி அன்னவன்; 'வேதக்கடல்' (கிட்கிந்தா. 61); 'வேத மேய்க்கும் வீரன்' (சுந்தர. 34); 'சுருதியே யனைய தோளால் வீசினான் காலின் தோன்றல்' (யுத்த. முதற்போர். 133); 'வேத மொத்தனன் மாருதி' (யுத்த. முதற்போர். 221). சுருதி - கேட்கப்படுவது என்று மறைக்குக் காரணக்குறி; கேள்வி என்ற சொல்லும் காண்க. சுக்கிரீவனுக்கு உவமையாக அநுமன் கூறப் பட்டனன்.

பி - ம். 1. கருதுகின்றது.

2. புக்கென, புக்கனல்.

3. அன்னமுன், அன்னநாய்; சிந்த. 3

இது முதல் மகுட பங்கப்படலம் என்று ஓர் பிரதியில் உள்ளது.

837. சுதையத் தோங்கிய சுவேலத்தி னுச்சியைத் துறந்து
சிதையத் திண்டிற லிராவணக் குன்றிடைச் சென்றான்
ததையச் செங்கரம் பரப்பிய தன்பெருந் தாதை
உதயக் குன்றினின் றொருகுன்றிற் பாய்ந்தவ னொத்தான்.

சுதையத்து ஓங்கிய - நட்சத்திர மண்டலம் வரையில் உயர்ந்த, சுவேலத்தின் உச்சியை துறந்து - சுவேல மலையின் உச்சியைவிட்டு, இராவண குன்றிடை - இராவணனாகிய மலையிலே, திண் திறல் சிதைய - (அவ்வரக்கனுடைய) மிக்க ஆற்றல் கெடுமாறு, சென்றான் - பாய்ந்தவனாகிய சுக்கிரீவன், செம்கரம் ததைய பரப்பிய - தன்னுடைய செந்நிறமான கிரணங்களை நெருக்கமாகப் பரவச் செய்த, தன் பெருதாதை - தனது பெருமை வாய்ந்த தந்தையாகிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

சூரியன் ; உதய குன்றின் நின்று ஒரு குன்றில் பாய்ந்தவன் ஒத்தான் - உதயகிரியில் இருந்து, மற்றொரு குன்றின்மீது பாய்ந்தவனை நிகர்த்தான்.

சுவேல மலையினின்று பாயும் சூரியன் புதல்வனுக்கு, உதயமலையினின்று மற்றொரு (அத்தமனக் குன்றின்மீது) பாயும் அவன் தந்தையை உவமித்தார். சுதை - நட்சத்திரம் (அக. நி.); உகு குன்றின் எனக்கொண்டு அத்தமனகிரி யென்றும் கொள்ளலாம் எனினும், ஒளி மிகப்பாய்கின்ற சுக்கிரீவற்கு அது உவமையாகாதாகலின் இராவணனாகிய குன்று எனப்பொருள் தரப்பட்டது. இனி அடுத்துவரும் கவியில் 'கோபுரம் சார்ந்தான்' என்பதற்குச் சுக்கிரீவன் என்று கொண்டால், இங்கு 'இராவணக் குன்றிடை' என்பதற்கு இராவணன் இருந்த குன்றம் போன்ற கோபுரத்திடை எனக்கோடலுமாம். சுதையம் ; தேவலோகம் என்றும், சுவேலம்; பவளமால் வரை என்றும் பழைய உரைக் குறிப்புக்கள். சுதன்மை என்பது சுதையம் எனத் திரிந்ததுபோலும். ததைதல்: 'ததையு மலர்த்தா ரண்ணல்' (பால. 713).

பி - ம். 1. சுவேதத்தின்.

2. செல்வான்.

3. பரப்பியே.

4. பாய்ந்தவ னொத்தவன், பாய்வதை, பாய்ந்தன. 4

838. பள்ளம் போய்ப்புகும் கிரியெனப் படியிடைப் படிந்து
தள்ளும் பொற்கிரி சலிப்புறக் கோபுரஞ் சார்ந்தான்
வெள்ளம்போற் கண்ணி யழுதலு மிராவணன் மேற்றன்
உள்ளம் போற்செலுங் கழுகினுக் கரசனு மொத்தான்.

பள்ளம் போய் புகும் கிரி என - பள்ளமான இடத்திலே சென்று புகுந்த மைநாகம் என்னுமாறு, படி இடை படிந்து - பூமியிலே படியுமாறு, தள்ளும் - தள்ளப்பட்ட, பொன் கிரி - திரிகூட மலையும், சலிப்பு உற - சலிப்படையுமாறு, கோபுரம் சார்ந்தான் - கோபுரத்தை அடைந்த, இராவணன் மேல் - இராவணன் மீது (சென்றவனான சுக்கிரீவன்), வெள்ளம் போல் கண்ணி அழுதலும் - வெள்ளம் போன்று பெருகும் நீரைக்கொண்ட விழிகளையுடைய சீதாதேவி அழுத அளவில், தன் உள்ளம்போல் செலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கழுகினுக் கரசனும் ஒத்தான் - தன் மனம் போன்று விரைந்து சென்ற கழுகரசனான சடாயுவை ஒத்தான்.

சுக்கிரீவனுக்குக் கழுகரசனான சடாயு உவமை. பள்ளம் போய்ப் புகும் கிரி; இக்கிரி இந்திரன் வயிரவாள் கொண்டு மலைகளின் சிறகுகளை அறுத்தபோது அஞ்சிக் கடலிற் புகுந்த மைநாக மலையென்னலாம் (சுந்தர. 40, 55) உரைக் குறிப்புக் காண்க. பள்ளத்தினை வேலைப்பள்ளம் எனக்கொண்டு அதன்கண் சென்று கலக்கும் ஆற்றுப்புனல் எனினுமாம. 'பள்ளந்தாழுறுபுனலிற்' (திருவாச. திருச்சத. 21); பொற்கிரி திரிகூடமலை. இது மேருவின் ஓர் பகுதியாயிருந்தமையின் இங்ஙனம் கூறப்பட்டது. சலிப்புற - களைப்புற; 'சலித்த காலையில்' (யுத்த. முதற் போர், 186). வெள்ளம்போற் கண்ணி - பிராட்டி; (ஒப்பு): 'மழைக்கனென்பது சூரணக் குறியென வகுத்தாள்' (சுந்தர. 335); 'கண்ணினீர்க் கடலிற் கண்டேன்' (சுந்தர. 1279); தன் மனத்தில் உள்ள வேகம் போன்றே உடலும் விரைந்து பாய்ந்தான் என்பது தோன்ற, உள்ளம்போற் செலும் 'எனப்பட்டது'; பாய்ந்ததற்கும், ஆற்றல் காட்டிய தற்கும் உவமை.

பி - ம். 1. புகும் புனலென கரியென.
3. வெள்ளம் போற் கன்னி.
4. கழுகினுக் கரசையும். 5

## அமரமங்கையர் நிலைகெட்டு ஓடுதல்

839. கரிய கொண்டலைக் கருணையங் கடலினைக் காணப்
பெரிய கண்கள்பெற் றுவக்கின்ற அரம்பையர் பிறரும்
உரிய குன்றிடை யுருமிடி வீழ்தலு முலைவுற்று
இரியல் போயின மயிற்குல மாமென இரிந்தார்.

கரிய கொண்டலை - கருநிறம் வாய்ந்த மேகம் போன்றவனும், அம் கருணை கடலினை - அழகிய கருணைக்கடலுமான இராமபிரானை காண - (தாம் நின்ற இடத்திலிருந்து) பார்ப்பதற்கு, பெரிய கண்கள் பெற்று உவக்கின்ற - அகன்ற விழிகளைத் தாம் பெற்றுள்ளமையின் களிக்கின்றவராய், அரம்பையர் பிறரும் - தேவமாதர்களும் பிறமாதர்களும், உரிய குன்றிடை உரும் இடி வீழ்தலும் - தமக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குரிய மலையின்மீது அஞ்சத்தக்க இடி வீழ்ந்த அளவில், உலைவுற்று - மனம் நொந்து, இரியல் போயின - (வீற்று வீற்ருக) நிலைகெட்டு ஓடிய, மயில் குலம் ஆம் என - பெரிய மயிற்கூட்டங்கள் எனுமாறு, இரிந்தார் - ஓடினர்.

உவமையணி. இராமபிரான் வரவினைக்கண்டு களிக்கும் தேவமகளிர்க்குக் கார்பெற்ற தோகைகளையும், இராவணன் மீது சுக்கிரீவன் பாய்ந்த அளவில் நிலைகெட்டு ஓடிய அவர்களுக்கு, இடி வீழ்தலும் நிலைகெட்டோடும் மயிற்கூட்டத்தையும் உவமித்தார். கொண்டல் - கார்; இராமபிரானுக்குக் கார் உருவுவமமும் பயனுவமமுமாம். உவர்நீர் நிறைந்து பிறர்க்குப் பருகப் பயன்படாத கடலினும் வேறுபடுத்திக் கருணையம்கடல் எனப்பட்டது. 'மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ' (அயோத்தி. கங்கைப். 1); 'கடலோ மழையோ முழுநீலக் கல்லோ காயா நறும் போதோ, படர் பூங் குவளை நாண்மலரோ நீலோற் பலமோ பானலோ' (பால. மிதிலை 65); பெரிய கண்களைப் பெற்று, உவத்தல்' அவன் பரந்த அழகைக் காண்பதற்குத் தமக்குப் பெரிய விழிகள் அமைந்தன வென்று மகிழ்தல், (ஒப்பு): 'நம்பியைக் காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும், கொம்பினைக் காணுந் தோறும் குரிசிற்கு மன்னதேயாம்' (பால. கார்முக. 43); (ஒருசார் ஒப்பு): 'காதுளா னல்லேனென்ருன் கண்ணுளான் கானம் கேட்டு' (திருவிளை. விறகு.). மகளிர்க்குக் கண்கள் அகன்றிருத்தல் அழகென்பர்; 'கடலினும் பெரிய கண்கள்' (ஆரணிய. 623) என்று பிராட்டியின் கண்களைச் சூர்ப்பணகை புகழ்ந்தது காண்க. 'பண்களாற் கிளவி செய்து' (யுத்த. மாயா. 5) எனத்தொடங்கும் பாட்டினில், 'கண்களா லரக்கன் கண்டான்' என்ற இடத்து அந்தப் பிராட்டியை இருபது கண்களால் பார்க்கும் வாய்ப்பு இராவணக்குக் கிட்டியது குறிக்கப்பட்டது காண்க. மயில் குறிஞ்சிப்பறவை ஆதலின் உரிய குன்று எனப்பட்டது. உரும் இடி; ஒரு பொருட் பன்மொழியுமாம். உரும் - அச்சம்; 'உருமுட்காகும்' (தொல். சொல். 365). இரியல் போதல்; ஆரணிய. 240.

பி - ம். 3. உருமிடி வீழ்தர.

4. இரியல் போகின்ற.

6

இங்குக் கோபுரப்படலம் முற்றும் என்றும், இராவணன் சேனை காண் படலம் முற்றும் என்றும் சில பிரதிகளில் உள்ளன.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வேறு

## சுக்கிரீவன் இராவணன் முன் நிற்றல்

840. காலவிருள் சிந்துகதி ரோன்மதலை கண்ணுற்று
ஏலவெதிர் சென்றட லிராவணனை யெய்தி
நீலமலை முன்கயிலை நின்றதென நின்றான்
ஆலவிட மன்றிவர நின்றசிவ னன்னான்.

காலம் இருள் சிந்து கதிரோன் மதலை - இராப்போதில் தோன்றிய இருட்டினை ஒழிக்கின்ற ஆயிரம் ஒளித்தொகுதிகளை யுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவன், கண்ணுற்று - (இராவணனைக்) கண்டு, அடல் இராவணனை எய்தி ஏல எதிர் சென்று - வலிமை வாய்ந்த இராவணனை நெருங்கி எதிரிற் சென்று, (முன்பு பாற்கடல் கடையப்பெற்ற அன்று) ஆல விடம் - ஆலகால விடம், அன்றிவர - சினந்து எழ (முன்பு அஞ்சாது), (அதன்முன்) நின்ற சிவன் அன்னான் - அவ்விடத்தின் முன் (அதனைப் பருகுதற்கு) நின்ற சிவபிரான்போன்ற அச்சுக்கிரீவன், நீலமலை முன் கயிலை நின்றதென நின்றான்; நீல பர்வதத்தின் முன் (வெள்ளிய) கயிலைமலை நின்றதுபோல நின்றான்.

மதலை - சிறுவன், 'மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு' (நாலடி. 197); 'மதலையாஞ், சால்பிலார்க் கில்லை நிலை' (குறள். 449). கருநிறமுள்ள இராவணனுக்கு நீல மலையும் ஆலகால விடமும், சுக்கிரீவனுக்குக் கயிலையும், திருநீறணிந்த சிவபெருமானும் உவமை. ஆலம் - விடம் (திவா); 'ஆலமுண்டவற் கண்டிலீரோ' (யுத்த. 414). அன்றுதல் - சினத்தல்; 'அவ்வானத்தை யன்றிச் சென்று' (இயற்பா. திருவிருத். 18). இறுதி யடிக்கு (ஒப்பு): 'ஆலம் பார்த்துண் டவன்போல்' (சுந்தர. 222).

பி - ம். 4. ஆலம் வர வன்றதன்முன், ஆலவிட மன்றுவ. 7

இது முதல் மகுடபங்கப்படலம் ஆரம்பம் என்றும் சிகாமணிப் படலம் ஆரம்பம் என்றும் இருபிரதிகளில் காணப்படுகின்றன.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## சுக்கிரீவன் செயலும் இராவணன் வினவுதலும்

841. இத்திசையின் வந்தபொரு ளென்னென வியம்பான்
தத்தியெதிர் சென்றுதிசை வென்றுயர் தடந்தோள்
பத்திரெடு பத்துடைய வன்னுடல் பதைப்பக்
குத்தின னுரத்தினிமிர் கைத்துணை குளிப்ப.

இ திசையின் - நான் இருக்கும் இந்தத் திக்கினை நோக்கி, வந்த பொருள் என் என - வந்த காரியம் யாது என்று (இராவணன்) கேட்கையில், இயம்பான் - (சுக்கிரீவன்) மறுமொழி கூறாதவனாய், தத்தி - தாவி, எதிர் சென்று - அவனுக்கு நேராகப் போய், திசைவென்று - எல்லாத் திக்குக்களையும் வெற்றிகொண்டு, உயர் தட தோள் பத்திரெடு பத்துடையவன் - உயர்ந்த விசாலமான தோள்கள் இருபது பெற்றவனை இராவணனுடைய, உடல் பதைப்ப - உடல் நடுங்குமாறு, நிமிர் - உயர்த்தப்பட்ட, கைதுணை குளிப்ப - தன் கைகள் இரண்டும் நன்கு பதியுமாறு, உரத்தின் குத்தினன் - மார்பிற் குத்தினான்.

தத்துதல் - தாவுதல், 'தத்தி மார்பின் வயிரத் தடக்கையால்' (யுத்த. முதற்போர். 66): 'தத்திக் கரைபுரளும் பாமானந்த சாகரத்தே' (கந்தரலங்.). பத்திரெரு பத்துத்தோள்; 'சீதையை விடுவதுண்டோ விருபது திண்டோ ளுண்டாய்' (யுத்த. இந்திரசித்துவதை. 9); 'இருபது கரந்தலை யீரைந்து' (யுத்த. 342).

பி - ம். 1. இத்திசையில்.
2. இயம்ப.
4. குழிப்ப.

8

## இருவரும் மலைதல்

842. திருகிய சினத்தொடு செறுத்தெரி விழித்தான்
ஒருபது திசைக்கனு மொலித்தவொலி யொப்பத்
தருவன மெனப்புடை தழைத்துயர் தடக்கை
இருபது மெடுத்துரு மிடித்தென வடித்தான்.

திருகிய சினத்தொடு - அப்போது இராவணன்) மாறுபட்ட கோபத்துடனே, செறுத்து - சினந்து, எரி விழித்தான் - நெருப்பெழ விழித்தவனாகி, தருவனம் என - மரங்கள் அடர்ந்த காடு



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



போன்று, புடை தழைத்து உயர் - பக்கங்களில் செழித்து உயர்ந்துள்ள, தடகை இருபதும் எடுத்து - பெரிய இருபது கரங்களையும் உயர்த்தி, ஒருபது திசைக்கணும் ஒலித்த ஒலி ஒப்ப - பத்துத் திக்கிலும் எதிரொலித்த ஒலியை ஒத்திருப்ப, உரும் இடித்தென அடித்தான் - இடி இடித்தாற்போலச் சுக்கிரீவனைத் தாக்கினான்.

'திருகுவெஞ் சினத்தன' (யுத்ந. 336): தருவனம் இராவணனுடைய கைகட்குவமை 'தருவனத்தில் யானியற்றும்' (பால. கையடைப். 10): இராவணனுக்கு இருபதுகை ; 342. உரும் இடித்தென, (அதன்) ஒலி ஒப்ப, அடித்தான் எனலும் ஆம். ஒருபது திசைக்கணுமென்பது, பத்துத் திசைக்கும் ஒரு முகமாக முழங்கினது போல என்றும், பத்துத் திக்கினும் இடி விழுந்ததுபோல் எனினுமாம்' என்பது பழையவுரை. இது முதல் 8 செய்யுட்கள் அந்தாதித்தொடையில் அமைந்துள்ளமை காண்க. இங்கு, இரு பெருவீரர்கள் தனித்து நெருங்கிப் போர்புரியும் வருணனை கூறப் பட்டுள்ளமை நோக்கத்தகும்.

பி - ம். 1. செறுந்தெதிர் விழித்தான்.
2. வலி.
3. தடந்தோள்.
4. உரு மெனப்பல. 8

843. அடித்தவிரல் பட்டவுட லத்துழி யிரத்தம்
பொடித்தெழ வுறுக்கியெதிர் புக்குடல் பொருத்திக்
கடுத்தவிசை யிற்கடி தெழுந்துகதிர் வேலான்
முடித்தலைகள் பத்தினு முகத்தினு முதைத்தான்.

அடித்த விரல்பட்ட உடலத்து உழி - தாக்கிய விரல் அழுந்திய (சுக்கிரீவனது) உடம்பிலிருந்து, இரத்தம் பொடித்து எழ - இரத்தம் துளித்துளியாய் எழ, உறுக்கி - சினம் பொங்கி, எதிர் புக்கு - அந்த இராவணனிடம் சென்று, உடல் பொருத்தி - தன் உடலை (அவனது உடலுடன்) பொருந்த வைத்து, கடுத்த விசையில் - மிக்க வேகத்துடன், கடிது எழுந்து - விரைந்து கிளம்பி, கதிர் வேலான் - ஒளி பொருந்திய வேலாயுதத்தை ஏந்தியவனான அந்த இராவணனுடைய, முடி தலைகள் பத்தினும் - கிரீடமணிந்த பத்துத் தலைகளிலும், முகத்தினும் உதைத்தான் - முகத்திலும் உதைத்தான் (சுக்கிரீவன்).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

உடலம்: அம்சாரியை. உழி: ஏழனுருபு. இரத்தம் பொடித்தெழ: 'சோரிபொடிப்ப நோக்கி' (கிட்கிந்தா. 304): இரண்டு மூன்றும் அடிகளில் மற்போர் முறை சித்திரிக்கப்பட்டுள்ளமை காண்க. கடுத்த விசையிற் கடிது என்றமையின், எதிரிக்குச் சிறிதும் நெகிழற்கு இடம்விடாது பொருதமை விளக்கப்பட்டது. முடித்தலை இராவணனுக்கு இயற்கை அடைமொழி. முடித்தலைகள் பத்து: 'பத்துள தலையும் தோளும்' (சுந்தர. 448); 'தலையீரைந்து' (யுத்த. 342).

பி - ம். 1. உடலற்றுழி.

2. பொருந்நிக்.

3. இடித்தெரி விழித்திகல் பரப்பியொ ரிமைப்பின். 10

844. உதைத்தவ னடித்துணை பிடித்தொரு கரத்தில்
பதைத்துலை வுறப்பல திறத்திகல் பரப்பி
மதக்கரியை யுற்றரி நெரித்தென மயக்கிச்
சுதைத்தல னிடைக்கடி தடிக்கொடு துகைத்தான்.

உதைத்தவன் - தன்னை உதைத்தவனான அந்தச் சுக்ரீவனுடைய, அடி துணை ஒரு கரத்தில் பிடித்து - கால்கள் இரண்டினையும் ஒரு கையினால் (இராவணன்) பற்றி, பதைத்து உலைவு உற - (அந்தச் சுக்கிரீவன்) துடிதுடித்து வருந்த, பல திறத்து இகல் பரப்பி - பலவகைப்பட்ட தன் மற்போர் வலியை விளங்கச் செய்து, அரி மத கரியை உற்று நெரித்து என - சிங்கம் மதம் கொண்ட யானையை நெருங்கி நெருக்கினாற்போன்று, மயக்கி - அறிவு மயங்கி மூர்ச்சையடையச்செய்து, அடி கொடு - (தன்) கால்களால், கடிது சுதை தலனிடை துகைத்தான் - விரைவாகச் சுண்ணாம்பு தீற்றிய இடத்தில் (சுக்கிரீவனைப் போட்டுத்) தேய்த்தான் (இராவணன்).

உதைத்தவன் உதைக்கப்பட்டவனாகிய இராவணன் எனினுமாம்; 'தழுவின புளிஞர் வேந்தன்' (அயோத்தி. குகப். 33) என்ற இடத்துப்போல. துணை இரண்டு என்னும் பொருளது. மதக்கரியை யுற்றரி நெரித்தென; உவமையணி. இகல் பரப்பி மயக்கித் துகைத்தான் என்க. சுதைத்தலம், என்று கோபுரம் சுதையால் திருவபெற்றமை உணரவைத்தது என்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பி - ம். 1. கரத்தில்.
2. பல விதத்து ; அழுந்தி.
3. மயங்கிச்.

11

845. துகைத்தவ னுடற்பொறை சுறுக்கொள விறுக்கித்
தகைப்பெரு வலத்தொடு தலத்திடை யமுக்கி
வகைப்பிறை நிறத்தெயி றுடைப்பொறி வழக்கிக்
குகைப்பொழி புதுக்குருதி கைக்கொடு குடித்தான்.

தகை பெரு வலத்தொடு - தகுதிசான்ற மிக்க வன்மையுடன், தலத்திடை அமுக்கி - பூமியில் அழுத்தி, வகை பிறை நிறத்து - பலவகைப்பட்ட பிறையின் தன்மையைக்கொண்ட, எயிறு உடை பொறி வழக்கி - பற்கள் உடைவதினின்று நெருப்புப்பொறி வெளிப்படுமாறு செய்து, துகைத்தவன் - (தன்னைத்) துகைத்தவனுடைய, உடல் பொறை - உடற் சுமை, சுறுக்கொள - (நெருப்பினால்) வேகுமபடி, இறுக்கி - இறுகப்பற்றி, குகை பொழி புது குருதி - குகைபோன்ற (அந்த இராவணனுடைய) வாயினின்று வெளிவந்த புது இரத்தத்தை, கை கொடு குடித்தான் - கையினாற் பருகினான்.

துகைத்தல் - மிதித்து உழக்குதல்; 'துன்றுகடி காவினை யடிக்கொடு துகைத்தான்' (சுந்தர. 698). உடல் பொறை - உடற் பாரம்; 'புன்சொ லுரைப்பான் பொறை' (குறள். 189). துகைத்தவன் - இராவணன். அவன் நீரைக் கைக்கொடு பருகினவன் சுக்கிரீவன். சுறுக் கொள்ளுதல் - தீப்படுகின்ற தசை, மயிர் முதலின சுடுநாற்றம் கொள்ளுதலும் ஆம்; சுந்தர. 378, 929, 931; யுத்த. மந்திரப். 13. சுறுக்கொளக் காரணம் எயிறுடையப் பெற்றதால் உண்டாயினது என்க. உடை பொறி - உடைதலால் எழுந்த பொறி என்று காரணப்பொருட்டு. சுக்கிரீவன் வாநரன் ஆதலின் மக்கள் உதிரம் பருகாற்கில்லை; எனினும் வீராவேசத்து மெய்ம்மறந்து ஆற்றிய போராதலின் அவ்வாறு நிகழ்ந்தது எனக் கோடலுமாம். இதனை அடுத்த செய்யுட்கண்ணும் கைக்கொடு குடித்தவன் என்று சுக்கிரீவன் கூறப்படுதல் காண்க. குகை - இங்கு உவமையால் குகைபோன்ற வாயினைக் குறித்து நின்றது. இறுக்கி, அமுக்கி, வழக்கிக் குடித்தான் என்க. வழக்கி, பிறவினை, 'குகைப்பொழி புதுக் குருதி கைக்கொடு குடித்தான் - இராவணன் மார்பைக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

குழிபண்ணிக்கொண்டு இரத்தத்தைக் குடித்தான் சுக்கிரிவன்' என்பது பழையவுரை.

பி - ம். 1. சுறுக்கொட.

2. அழுத்தி.

3. பிறை நிறுத்து; பெரிய வாயால், பொறி வழக்கில், பொறி வழுத்தி.

## சுக்கிரீவனுடலை இராவணன் திரித்தல்

846. கைக்கொடு குடித்தவ னுடற்கனக வெற்பைப்
பைக்கொடு விடத்தர வெனப்பலகை பற்றி
மைக்கொடு நிறத்தவன் மறத்தொடு புறத்தில்
திக்கொடு பொருப்புற நெருப்பொடு திரித்தான்.

மை கொடு நிறத்தவன் - மைபோற் கறுத்துக் கொடுமை யாகத் தோன்றுகின்ற நிறத்தை யுடையவனான இராவணன், கை கொடு குடித்தவன் - கையினால் (தன் உதிர நீரைப்) பருகினவனான சுக்கிரீவனுடைய, உடல் கனக வெற்பை - உடலாகிய மேரு மலையை, பை - படங்களையும், கொடு விடம் - கொடிய விடத்தினையும் உடைய, அரவு என - அரவினைப்போல, பல கை பற்றி - பல கரங்களாற் பிடித்து, மறத்தொடு புறத்தில் - வீரத்துடன், திக்கொடு பொருப்பு உற - திசைகளுடனே மலைகளிலும் மோதுமாறு, நெருப்பொடு திரித்தான் - நெருப்புப்பொறி சிதறச் சுழற்றினான் (இராவணன்).

சுக்கிரீவன் உடலைப்பற்றிய இராவணன் கரங்கட்கு அநந்தன் படங்களையும், பற்றிய செயற்கு அவ்வரசன் மேருவினைப் பற்றியதையும் உவமித்தார்; உவமையணி. அநந்தன் மேருவைப் பற்றியது சுந்தர. 24, 35 உரைக்குறிப்புக்கள் காண்க. வெண்ணிறம் எனினும், இங்கு அவனது அழகுபற்றி மேருவை உவமித்தது என்க. இப்படலம் ஏழாம் செய்யுட்கண் சுக்கிரீவற்கு வெண்ணிறமான கயிலையை உவமித்தது காண்க. வீடணனும், சுக்கிரீவனும் ஒருவரையொருவர் தழுவியபோது, 'எல்லியும் பகலும் போல' (யுத்த. 426) என்று கூறப்பட்டமையும் காண்க. மறத்தொடு,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



திக்கொடு, பொருப்புற, நெருப்பொடு திரித்தான் என்றமையால், திரிப்பின் கொடுமையும், விரிவும் காணலாம்.

பி - ம். 2. மிடற்றரவு.

3. மைக்கடு ; மறத்தொடு முரத்தில்.

4. பொருப்பொடு, பொருப்பென ; நிலத்தொடு. 13

## அகழியில் போர்

847. திரித்தவ னுரத்தினுகிர் செற்றும்வகை குத்திப்
பெருத்துயர் தடக்கைகொ டடுத்திடை பிடித்துக்
கருத்தழி வுறத்திரி திறத்தெயில் கணத்தன்று
எரித்தவனை யொத்தவ னெடுத்தகழி யிட்டான்.

எயில் அன்று கணத்து எரித்தவனை - முப்புரங்களை அக்காலத்துக் கணப்பொழுதில் எரித்தவனாகிய சிவபெருமானை, ஒத்தவன்-ஒப்பாகி நின்ற சுக்கிரீவன், திரித்தவன் உரத்தின் - (தன்னைச்) சுழற்றிய இராவணனுடைய மார்பில், உகிர் செற்றும் வகை குத்தி (தன்) நகம் அழுந்துமாறு குத்தி, பெருத்து உயர் தடகை கொடு - பருத்து உயர்ந்த தன் பெரிய கைகளைக் கொண்டு, அடுத்து - நெருங்கி, இடை பிடித்து - அந்த இராவணனுடைய) இடையைப் பற்றி, திரி திறத்து - திரிகின்ற திறத்தினால் (அவ்விராவணன்), கருத்து அழிவுற எடுத்து - கருத்தழிய (மூர்ச்சையுற) அவனைத் தூக்கி, அகழி இட்டான் - அகழியில் இட்டான்.

திரித்தவன் - இராவணன், செற்றுதல் ; 'செத்தினும் போழினும்' (தொல். மெய்ப். பேரா. உரை) ; (பால. 6 : 5). கருத்தழிதல் ; 'கருத்தழித் தெய்துவென்' கலங்கல் என்றனன். (கிட்கிந்தா. 262) இலங்கையின் மதில் அகழிகளைச் சுந்தர காண்டத்துக் காண்க. எயில் இலக்கணையால் முப்புரத்தைக் குறித்து நின்றது திரிபுரம் எரித்தது ; (ஆரணிய. 139, 258, 458, 905 ; சுந்தர. 139.

பி - ம். 1. திறத்தி னுயிர் ; செந்தும் வகை, செற்றுமவை ; சிந்தும் வகை.

2. கைகொ டெடுத்து, கையொடடித்து.

3. கருந்தழி வுறுந்துற நெரித்தெயில் கணத்தில், கருத்தழி வுறத்தெறிர் நெரித்தெயில் கணத்தின், கருந்தழி வுறந்திரி திறத்தெயில் கணத்தின்.

4. அகழிலிட்டான். 14

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


848. இட்டவனை யிட்டவக ழிற்கடிதி னிட்டான்
தட்டவுய ரத்தினி லுறுந்தச முகத்தான்
ஒட்டவுட னேயவனும் வந்தவனை யுற்றான்
விட்டிலர் புரண்டிருவ ரோரகழின் வீழ்ந்தார்.

தட்ட-அகன்ற, உயரத்தினில்-(ஒரு) திடரின் உதவி கொண்டு (அவ்வகழியினின்று) உறும் - கரையேறி நின்ற, தசமுகத்தான் - இராவணன், அகழில் கடிதின் இட்டவனை - (தன்னை) அகழியில் இட்டவனான சுக்கிரீவனை, இட்ட - தன்னைத் தள்ளிய, அகழில் - அகழிலேயே. கடிதின் இட்டான் - விரைந்து இட்டனனாகி, ஒட்ட - 'ஏறிவா பார்ப்போம்' என்று சூளுரைப்ப, உடனே - உடனாக, அவனும் - அந்தச் சுக்கிரீவனும், வந்து - (அந்த அகழியினின்றும்) ஏறிவந்து, அவனை உற்றான் - அந்த இராவணனை வந்தடைந் தான்; (பின்னர்), இருவர் - இருவரும், விட்டிலர் - (ஒருவரை யொருவர்) விட்டிலராய், புரண்டு - தரையிற் புரண்டு, ஓர் அகழின் வீழ்ந் தார் - ஓர் அகழியிலே விழுந்தார்.

இட்டவன் - சுக்கிரீவன். ஒட்டுதல் - சூளுரைத்தல்; ஒட்டல் - பந்தய மிடுதலும் ஆம். ஒட்டம் என்ற பதத்தின் வந்த தொழிற் பெயர். உயரம் இங்கு இலக்கணையால் உயர்ந்த திடரைக் குறித்து நின்றது. தட்டுதல் - தட்டுப்படுதல், அதாவது கண்ணுக்கு விஷயமாதல் எனினுமாம்.

பி - ம். 2. உயரத்தினிலிருந், உயரத்தினிமிருந்.
3. வந்தவனை.



## மல்யுத்தம்

849. விழுந்தனர் சுழன்றனர் வெகுண்டனர் திரிந்தார்
அழுந்தின ரழுந்தில ரகன்றில ரகன்றார்
எழுந்தன ரெழுந்தில ரெதிர்ந்தனர் முதிர்ந்தார்
ஒழிந்தன ரொழிந்தில ருணர்ந்திலர்க ளொன்றும்.

விழுந்தவர் - அகழியில் வீழ்ந்த இராவணன் சுக்கிரீவன் என்ற இருவரும், வெகுண்டனர் சுழன்றனர் திரிந்தார் - சினந்து சுற்றி வலமிடமாகத் திரிந்து, அழுந்தினர் அழுந்திலர் - ஒருவருடலில்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மற்றவரமுழுந்தியும் அழுந்தாதவராய் வெளிப்பட்டும், அகன்றிலர் அகன்றார் எழுந்தனர் - ஒருவரை யொருவர் விடாமல் நெருங்கியும், நெருங்காமல் சிறிது மேற் கிளம்பியும், எழுந்திலர் எதிர்த்து நின்றும் - எழுந்திராமலே பொருது நின்றும், ஒழிந்தனர் ஒழிந்திலர் - சிறிது போது பொருவதினின்று நீங்கியும் நீங்காமலும், ஒன்றும் உணர்ந்திலர்கள் - சிறிதும் உணர்ச்சியின்றி, முதிர்ந்தார் - பொருவதில் மும்முரமாக நின்றார்.

மற்போரில் பல பிடிவரிசைகள் விரைவாக மேற் கொள்ளுதலால், ஒவ்வொரு நிகழ்ச்சியும் முற்றும் கட்புலனாகாது பல ஒரு சமயத்தில் நிகழ்வது இங்குக் குறிக்கப்பட்டது. சிறந்த கவிகள் எந்த நிகழ்ச்சியை வருணித்தாலும் அந்த நிகழ்ச்சியில் கை வந்தவராகவே வரைந்து செல்லுதல் இயல்பு. திருவிளையாடல் மாணிக்கம் விற்ற படலத்தும், நரிபரியாக்கிய படலத்தும் விறகு விற்றபடலத்தும், நவமணிகளின் இயல்புகளையும், இசையின் நுட்பங்களையும், பரிகளின் இலக்கணங்களையும், பரஞ்சோதி முனிவர் அவ்வப் பொருள்களில் முறையே பயின்றவர் போன்று கவிபாடிச் செல்வது காண்க.

பி - ம். 1. வீரிந்தனர், விரைந்தனர்.
2. அகன்றனர் புகன்றார், அகன்றில ரடர்ந்தார் ; முதிர்ந்தார்.
3. இடைந்தில ரெதிர்ந்தார்.
4. குலைந்திலர்கள் ஒன்றும், உலைந்திலர்கள் ; தொலைந்திலர்கள். 16

850. அந்தர வருக்கன்மக னுழியக ழாகச்
சுந்தர முடைக்கரம் வலிப்பவொர் சுழிப்பட்டு
எந்திர மெனத்திரி யிரக்கமி லரக்கன்
மந்தர மெனக்கடையும் வாலியையு மொத்தான்.

அந்தர அருக்கன் - ஆகாய வீதியில் சஞ்சரிக்கின்ற சூரியன் மகனான சுக்கிரீவன், அகழ் ஆழியாக - அகழியே கடலாக, சுந்தரம் உடை கரம் வலிப்ப - அழகிய கையினால் இழுத்துக் கடைய, சுழி பட்டு - ஒரு சுழியில் சிக்கி, (அதனிடத்து) எந்திரம் என திரி - எந்திரம் போன்று சுழல்கின்ற, இரக்கமில் அரக்கன் - இரக்கமில்லாத அரக்கனாகிய இராவணன், மந்தரம் என - மந்தரம் போன்று காணப்பட, கடையும் வாலியையும் ஒத்தான், (முன்பு) பாற்கடல் கடைந்த வாலியையும் ஒத்து விளங்கினான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்த உவமையணி. அகழி; பாற்கடல், இராவணன் மந்தரம், சுக்கிரீவன் கடைந்தவன், கடல் கடைந்த அண்ணன் ஆற்றல் தம்பிக்கும் உண்டு என்று குறித்தார்போலும். இச்செய்யுளில் சுக்கிரீவனுக்கு வாலியை உவமை கூறினர். வாலி கடல் கடைந்தது (கிட்கிந்தா. *115*, *249*, *252*, *253*, *367*, *372* சுந்தர ; *518* ; யுத்த. இந்திரசித்து. *60*). 'இந்தக் கவிக்குச் சுக்கிரீவன் கர்த்தாவாக அறிக' என்பது பழையவுரை.

பி - ம். 2. உடைக் கைகள் சுடர்க் கயிறதாக, உறக்கரம் வலக்கயிற தென்ப ; உடைக்கலம் வலிப்பதோர் கழிப்பட்டு.

**851.** **ஊறுபடு செம்புன லுடற்க ணிழிகின்ற**
**ஆறுபடர் கின்றன வெனப்படர வன்னர்**
**பாறுபொரு கின்றன பருந்திவை யெனப்போய்**
**ஏறினர் விசும்பிடை யிரிந்தவுல கெல்லாம்.**

ஊறுபடு உடல்கண் இழிகின்ற செம்புனல் - காயம்பட்ட உடலினின்று பெருகுகின்ற உதிரம், ஆறுபடர்கின்றன என - நதிகள் செல்கின்றன என்னுமாறு; படர - வெள்ளமிட, அன்னர் - இராவண சுக்கிரீவர்கள், பாறு பருந்து இவை பொருகின்றன - கழுகும் பருந்துமாகிய இவை தம்முடன் மாறுபட்டு எதிர்க்கின்றன, என - என்று நினையும் வண்ணம், போய் - சென்று, விசும்பிடை ஏறினர் - ஆகாய வீதியில் சென்று ஏறினர்; உலகு எல்லாம் இரிந்த - (இந்தப் பயங்கரக் காட்சியைக் கண்ட) உலகத்து மக்கள் யாவரும் நிலைதடுமாறி ஓடினர்.

ஊறுபட்டதனாலாகிய செம்புனல் குருதி. பாறு - கழுகு. உலகு : இடவாகுபெயர்.

பி - ம். 1. உடைந்த கழையுற்றது, உடைந்த கரை யொத்த, உடைத்தகரை யோதத்து, உடைந்தகரை யொத்தார்.
2. தாறு ;
3. பொருகின்றன ; பரிந்து திசையிற் போம், பரிந்தவை யெனப்போய். 18
4. யிரிந்ததுல கெல்லாம்.

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


852. தூரநெடு வானின்மலை யுஞ்சுட ரவன்சேய்
காரினெடு மேருநிகர் காய்சின வரக்கன்
தாருடைய தோள்கள்பல வுந்தழுவ நின்றான்
ஊரினெடு கோள்கதுவு தாதையையு மொத்தான்.

தூரம் நெடு வானின் மலையும் - சேய்மையில் உள்ள நீண்ட வானிற் போர் புரிகின்ற, சுடரவன் சேய் - சூரியனின் புதல்வனான சுக்கிரீவன், காரினெடு மேரு நிகர் - நிறத்தால் மேகத்தையும் உருவால் மேருவையும் போன்ற, காய்சின அரக்கன் - காய்கின்ற சினம் கொண்ட அரக்கனுடைய, தாருடைய தோள்கள் பலவும் - மாலையணிந்த பல புயங்களாலும், தழுவ நின்றான் - தழுவப்பட்டு நின்றவனாய், ஊரினெடு கோள் கதுவு - ஊரினொடு சேர்ந்த கோள் (ஊர் கோளால்) பற்றப்பட்ட, தாதையையும் ஒத்தான் - தந்தையாகிய சூரியனையும் ஒத்து விளங்கினான்.

சூரியனைப் பரிவேடம் சூழ்ந்தது போன்று, இராவணனுடைய தோள்கள், சுக்கிரீவனைச் சுற்றின என்க. சேய் என்பது செம்மை நிறம் உடையவன் என்று பொருள்படும். இச்சொல் சிவபெருமான் மகனான முருகனையே சிறப்பாகக் குறிப்பது: பின்னர் பொதுவாக மகன் என்ற பெயரில் வழங்குகின்றது. இஃது ஓர் சிறந்த உவமை. கதுவுதல் - பற்றுதல்; 'காயெரி கதுவ' (ஆரணிய. 442) கட்பொறி கதுவா. (கிட்கிந்தா. 757); ஊர் - பரிவேடம்; கோள் - இராகு எனப் பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 2. காரினிற மோடு நிகர்.
3. தாரினொடு. 19

இச் செய்யுளும் ஓர் பிரதியில் இல்லை.

853. பொங்கமர் விசும்பிடை யுடன்றுபொரு போழ்தில்
செங்கதி ரவன்சிறு வனைத்திரள் புயத்தால்
மங்கலில் வயங்கொளி மறைத்தவ லரக்கன்
வெங்கதிர் கரந்ததொரு மேகமென லானான்.

விசும்பிடை - ஆகாய வீதியில், உடன்று - மாறுபட்டு, பொங்கு அமர் பொரு போழ்தில் - மனம் கொதித்துச் செய்யும் போர்புரியும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

போதினில், செம் கதிரவன் சிறுவனை - சிவந்த சூரியன் புதல்வனை, திரள் புயத்தால் - திரண்ட தோள்களால், மங்கல் இல் - மங்குதல் இல்லாத, வயங்கு ஒளி மறைத்த - விளங்குகின்ற ஒளியை மறைத்தவனான, வல் அரக்கன் - வலிய அரக்கன், வெம் கதிர் கரந்தது ஒரு மேகம் எனல் ஆனான் - கொடிய கதிர்களையுடைய சூரியனை மறைத்த ஒரு மேகம்போலவும் காணப்பட்டான்.

உவமை, உரு தொழில் இரண்டும்பற்றி வந்தது. சுக்கிரீவன் - செங்கதிரவன் ; அரக்கன் மேகம்.

பி - ம். 3. மங்குலில். 20

854. நூபுர மடந்தையர் கிடந்தலற நோனார்
மாபுர மடங்கலு மிரிந்தயர வன்றாள்
மேபுர மடங்கலென வெங்கதிர வன்சேய்
கோபுர மடங்க விடியத்தனி குதித்தான்.

நூபுரம் மடந்தையர் கிடந்து அலற - சிலம்பணிந்த மங்கையர் வீழ்ந்து அலறவும், நோனார் - பகைவருடைய, மா புரம் அடங்கலும் - பெரிய நகரம் முழுதும், இரிந்து அயர - நிலையழிந்து தளரவும், வல் தாள் மே புரம் - வலிய கால்களையும் புற உடலையும் கொண்ட உடலின் மேலிடம், மடங்கல் என - நரசிங்கமாகத் தோன்றிய திருமால்போல, வெம் கதிரவன் சேய் - வெம்மை கொண்ட சூரியன் புதல்வனான சுக்கிரீவன், கோபுரம் அடங்க இடிய - கோபுரம் முழுவதும் இடியுமாறு, தனி குதித்தான் - தனியே குதித்தான்.

நூபுரம் - சிலம்பு ; இச்சொல்லைச் சங்கம் மருவிய பத்துப்பாட்டு எட்டுத்தொகை நூல்களில் காண்டற்கில்லை. சிலப்பதிகாரத்தில், 'பரியக நூபுரம் பாடகஞ் சதங்கை' (சிலப். 6 : 84) என்பது காணலாம். மடந்தையர், இங்குப் பருவம் குறியாது மகளிர் எனப் பொருள்பட நின்றது. நோனார் - பிறராக்கம் பொறுதவர். நோன்றல் - பொறுத்தல் ; 'நோனா வுடம்பின் உயிரும்' (குறள். 1132). மடங்கல் - சிங்கம் ; 'கூனுகிர் மடங்க லேற்றின் குழு' (ஆரணிய. 861) ; அடங்க - முழுவதும் என்னும் பொருளது. நரசிங்காவதாரத்தின் மேற்பகுதி சிங்க வடிவாதலின் மேபுர மடங்கல் என என்றார். 'மேபுரம் - மேவிய உடம்பு' என்பது பழையவுரை. அடங்க, உரிச்சொல். இதில் திரிபு என்னும் சொல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


லணி காண்க. வல் தாள் என்பதை வலிய முயற்சி யென்று கொண்டு, முயற்சியுடன் குதித்தான் எனக் கோடலுமாம். 'வன்ருட் சிலே யேந்தி' (ஆரணிய. 989). இங்குச் சுக்கிரீவன்ருள் - வனுக்கு நரசிங்கம் உவமை. நரசிங்கம் குதித்தது: இரணியன் வதைப். 137—142.

...

பி - ம். 1. நோனு.

2. மாபுர மடந்தையர்; இடிந்து விழவன்ருள், இரிந்தலற வன்ரேள்.

3. மீபுரம்.

21

855 ஒன்றுற விழுந்தவுரு மைத்தொடர வோடா
மின்றெரி யெயிற்றினெரு மேகம்விழு மென்னத்
தின்றிடுவெ னென்றெழு சினத்திக லரக்கன்
பின்ருெடர வந்திரு கரத்துணே பிடித்தான்.

ஒன்றுற விழுந்த - ஒருமித்து வீழ்ந்த, உருமை தொடர ஓடா - இடியைப் பின்பற்றி ஓடி, மின் எயிற்றின் தெரி ஒரு மேகம் - ஒளிரும் மின்னல்போன்று ஒளிர்கின்ற பற்களையுடைய ஒரு மேகம், விழும் என்ன - விழுகின்ற தென்னுமாறு, 'தின்றிடுவென் - இவனேத் தின்றுவிடுவன்', என்று - என்று பகர்ந்து, எழு சினத்து இகல் அரக்கன் - பொங்குகின்ற கோபத்தைக் கொண்ட மாறுபாடுமிக்க அரக்கனுன இராவணன், பின் தொடர வந்து இரு கரம் துணே பிடித்தான் - சுக்கிரீவனேப் பின்பற்றி வந்து அவனுடைய பெரிய இரண்டு கைகளேயும் பிடித்துக் கொண்டான்.

உரும் - இடி. ஓடா - செய்யாவென்னும் வாய்ப்பாட்டு உடன் பாட்டு விணேயெச்சம். இராவணனுக்கு மேகமும், சுக்கிரீவனுக்கு இடியும் உவமை. கோபுரம் இடியக் குதித்தானுதலின். ஒன்றுற விழுந்த உரும்: கோபுரந் தகரக் குதித்த சுக்கிரீவன் 'இரு கரத் துணே பிடித்தான் என்பது, இராவணன் பின்பின் ஒளித்து வந்து சுக்கிரீவன் இரண்டு கரமும் பிடித்தான்' என்பது பழையவுரை.

பி - ம். 1. என்றிட, ஒன்றிடை; அமைந்த; ஓடி.

2. மின்றிரி; எயிற்றது.

3. சினத்திற லரக்கன்.

4. கரத்திடை பிடித்தான்.

22

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இதன்பின் இரு அதிகப்பாடல்கள் :—

பிடித்தவன் விழித்துணை பிதுங்கிட நெருக்கி
இடித்தலம் வரக்கதறி யெய்த்திட விரங்கா
தடிக்கொடு துகைத்தலை கடற்குளொரு கையால்
எடுத்துக விராவண னறிந்திகலி ஞர்த்தான்.

எறிந்திட விழுந்திரவி சேயறிவு சோர்வுற்
றறிந்ததொ ரிமைப்பளவில் ஆகமது தேறி
பிறிந்தில னெனத்தொனி பிறந்திட மருங்கில்
செறிந்தம ரரக்கனொடு செய்வனென வந்தான்.

856. **வந்தவனை நின்றவன் வலிந்தெதிர் மலைந்தான்**
**அந்தகனு மஞ்சிட நிலத்திடை யறைந்தான்**
**எந்திர மெனக்கடி தெடுத்தவ னெறிந்தான்**
**கந்துக மெனக்கடி தெழுந்தெதிர் கலந்தான்.**

நின்றவன் - நின்றவனான சுக்கிரீவன், வந்தவனை - (பின் தொடர்ந்து) வந்தவனான இராவணனை, வலிந்து எதிர் மலைந்தான் - வலிமையுடன் எதிரே பொருதவனாய், அந்தகனும் அஞ்சிட நிலத்திடை அறைந்தான் - யமனும் நடுக்க மெய்துமாறு தரையில் ஓங்கி அடித்தான்; அவன் - அந்த இராவணன், எந்திரம் என - எந்திரப் பாவைபோல, கடிது - விரைவாக, எடுத்து எறிந்தான் - அந்தச் சுக்கிரீவனைத் தூக்கி வீசினான்; (அவனும்), கந்துகம் என - பந்துபோல், கடிது எழுந்து - விரைந்து கிளம்பி, எதிர் கலந்தான் - பொருமாறு எதிரே வந்து கூடினான்.

விரைவுபற்றி இடைநிகழ்ச்சி வினைகள் விடப்பட்டன. அந்தகன் - உயிர்களை இறுதியிற் கவர்பவன் என்று யமனுக்குக் காரணக்குறி. வலிந்து வந்தவனை என்றும் கூட்டலாம். 'எந்திரம் - மரப்பாவை' என்பது பழையவுரை.

பி - ம். 2. யரைந்தான்.
4. தெழுந்தனுக வந்தான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


857. படிந்தன மரந்தரை பகிர்ந்தன பரப்பும்
கொடுஞ்சின முதிர்ந்தனர் உரத்தின்மிசை குத்த
நெடுஞ்சுவர் பிளந்தன நெரிந்தநிமிர் குன்றம்
இடிந்தன தகர்ந்தன விலங்கைமதி லெங்கும்.

கொடு சினம் முதிர்ந்தனர் - கடுங்கோபம் முற்றப்பெற்றவராய், உரத்தின் மிசை குத்த - ஒருவரோடொருவர் மார்பின் மிசைத் தாக்க, மரம் தரை படிந்தன - மரங்கள் தரையில் விழுந்தன; தரை பரப்பும் பகிர்ந்தன - நிலப்பரப்புகள் பிளவுபட்டன; நிமிர் குன்றம் நெரிந்த - உயர்ந்த குன்றுகள் நெரிந்தன; இலங்கை மதில் எங்கும் - இலங்காபுரியின் மதில்களில் எல்லாப்பக்கங்களும், நெடு சுவர் பிளந்தன - உயர்ந்த சுவர்கள் விரிவு கண்டனவாய், இடிந்தன தகர்ந்தன - இடிந்து உடைந்தன.

படிந்தன பகிர்ந்தன என்று வினைமுற்றுக்களை முன் வைத்ததனால், மற்போர் நிகழ்ச்சிகளின் விரிவும் கடுமையும் தொனிக்கும். தரை படிந்தன என்றும் தரைப் பரப்பு என்றும், தரை என்பதை ஈரிடத்தும் கூட்டுக. உரத்தின் என்பதற்கு வலிமையுடன் எனினுமாம்.

பி - ம். 1. படிந்நனர், பரந்தனர், பரந்ததொர் நெருப்பின்; படிந்தது, பகிர்ந்தது.

2. முதிர்ந்தன; உரத்தினனி குத்தி.

4. இலங்கை நகரெல்லாம், மதிலெல்லாம். 24

858. செறிந்துயர் கறங்கனையர் மேனிநிலை தேரார்
பிறிந்தனர் பொருந்தின ரெனத்தெரிதல் பேணுர்
எறிந்தனர்க ளெய்தினர்க ளின்னரென முன்னின்
றறிந்தில ரரக்கரு மமர்த்தொழி லயர்ந்தார்.

செறிந்து உயர் கறங்கு அனையர் - அடர்ந்து உயர்ந்த காற்றுடியைப் போன்றவராயுள்ள, (அந்த இராவண சுக்கிரீவர்களுடைய) மேனி நிலை தேரார் - (இன்னாருடையது) உடல் என்று அறியாதவரும், பிறிந்தனர் பொருந்தினர் - (அவ்விருவரும்) இப்போது பிரிந்துள்ளார், அல்லது பொருந்தியுள்ளனர், என - என்று தெரிதல் பேணுர் - தெளிவாக உணர்தலைப் பொருந்தாதவருமாய், இன்னர் எறிந்தனர்கள் - இன்னார் இன்னாரைத் தூக்கி வீசினர், இன்னர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எய்தினர்கள் - இன்னவர் இன்னாரைக் கிட்டி உள்ளார் (எனவும்), முன் நின்று அறிந்திலர் - முன்னே நின்றும் அறிய மாட்டாமல், அரக்கரும் அமர் தொழில் அயர்ந்தார் - அரக்கர்களும் (அப்போர்த் தொழிலைக் கண்டு மனம் தளர்ந்தார்கள்.

கறங்கு - காற்றாடி: பிரிந்தினர் எதுகை நோக்கிப் பிறிந்தனர் என நின்றது. 'அரக்கர்கள்; இராவணனுக்காகப் போர்புரிய வந்தவர், இருவருருவமும் தெரியாமல் மயங்கி நின்றார்' என்பது பழையவுரை.

பி - ம். 1. செறிந்துழல்; அனைய.

2. திரிதல், தெளிதல்.

3. எறிந்திலர்கள், எய்திலர்கள்.

4. அயர்ந்தார், மறந்தார், அரக்கனு மமர்த்தொழி லயர்ந்தான். 25

## வேறு

### சுக்கிரீவன் வாராமையின் இராமபிரான் கவலுதல்

859. இன்னதோர் தன்மை யெய்து
மளவையி னெழிலி வண்ணன்
மன்னுயி ரனைய காதல்
துணைவனை வரவு காணான்
உன்னிய கரும மெல்லா
முன்னொடு முலந்த தென்னாத்
தன்னுணர் வழிந்து சிந்தை
யலம்வந்து தளர்ந்து சாய்ந்தான்.

இன்னது ஓர் தன்மை எய்தும் அளவையின் - இப்படிப்பட்ட ஓர் நிகழ்ச்சி (இலங்கையில்) நடைபெறும் போது, எழிலி வண்ணன் - மேகம் ஒத்த நிறத்தவன் ஆன இராமபிரான், மன் உயிர் அனைய காதல் துணைவனை வரவு காணான் - (தன்னுடைய) நிலைத்த உயிர்போன்றவனும், அன்பிற்கு உரிய துணைவனுமான சுக்கிரீவனுடைய வருகையைக் காணாதவனாய், 'உன்னிய கருமம் எல்லாம் உன்னொடும் உலந்தது - நான் புரியக் கருதியிருந்த காரியங்கள் யாவும் உன்னொடும் அழிந்தன', என்னா - என்று சொல்லி,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தன் சிந்தை அலம் வந்து - தன் மனம் வருந்தி, உணர்வு அழிந்து - அறிவு ஒடுங்கி, தளர்ந்து சாய்ந்தான் - (உடல்) தளர்ச்சியுற்று மெலிவுற்றான்.

இராமபிரான் தன்னை நட்டாரிடம் கொண்ட பேரன்பு இச் செய்யுளால் விளங்கும். 'பரதனீ பின்னையன பகர்தியோ' (கிட்கிந்தா. 683) என்று இராமபிரான் முன்கூறியுள்ளமையும் அவன் சுக்கிரீவனிடம் கொண்ட நட்பினை விளக்கும். சுக்கிரீவனைப் பெருந் துணையாகக் கொண்டே தன் மனைவியைத் தேடவேண்டியவன் ஆகலின் உன்னிய கருமம் உலந்தது என்றான். உணர் வழிந்து அலம் வந்து என்றிருப்பினும், சிந்தை அலம் வருதலின் விளைவாக உணர் வழிந்தது எனக்கொள்க. அலம் வந்து; ஆலு மீன் கணம் வெருவுற வலம்வர' (கிட்கிந்தா. 20): சாய்தல்; மெலிதல் 'ஒய்தல் ஆய்தல்' உள்ளதன் நுணுக்கம். சாய்தல் - தளர்ந்து வீழ்தலுமாம்.

பி - ம். 1. அளவினில்.
3. முதலொடு முடிந்தது.
4. அலமா ; சோர்ந்தான்.

26

## மனம் வருந்திய இராமபிரான் கூற்று

860. ஒன்றிய வுணர்வே யாய வோருயிர்த் துணைவ வுன்னை
இன்றியா னுளனாய் நின்றென் றியற்றுவ தியைவ தன்றால்
அன்றியுந் துயரத் திட்டா யமரரை யரக்கர்க் கெல்லாம்
வென்றியுங் கொடுத்தா யந்தோ கெடுத்ததுன் வெகுளி
[யென்றான்.

(மேலும், இராமபிரான் சுக்கிரீவனைக்கருதி), 'ஒன்றிய உணர்வே ஆய - (என் உணர்வோடு) ஒத்த உணர்வையே உடைய, ஓர் உயிர் துணைவ - ஒப்பற்ற பிராண நண்பனே! உன்னை இன்றி - நீ யில்லாமல், யான் உளனாய் நின்று - நான் மாத்திரம் தனித்து உயிருடனிருந்து, ஒன்று இயற்றுவது - ஒரு செயலை ஆற்றுவது, இயைவது அன்று - நடை பெறற்குரியதாகாது ; அன்றியும் - அல்லாமலும், அமரரை துயரத்து இட்டாய் - தேவர்களைத் துன்பத்திற் குள்ளாக்கினாய் ; அரக்கர்க் கெல்லாம் வென்றியும் கொடுத்தாய் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அரக்கர்கள் அனைவர்க்கும் வெற்றியை உண்டு பண்ணினாய்; அந்தோ - ஐயோ : உன் வெகுளி கெடுத்தது என்றான் - உன் முன் கோபமானது (அனைவர்க்கும்) கெடுதியை விளைத்தது' என்று மனம் நொந்து பகர்ந்தான். ஆல் - அசை.

வெகுளியால் விளையும் தீமை இங்கு உரைக்கப் பெற்றது. உயிர் ஒன்று உளம் ஒன்று எனும்படியிருந்தவர் ஆகலின், 'ஒன்றிய உணர்வே யாய வுயிர்த்துணைவ' என்றான். மூன்று நான்காம் அடிகளில் வானுளோர் அனைவரும் வானரங்களாகப் பூமியிற் றோன்ற, அவர்கள் உதவிகொண்டே அரக்கரை அழிப்பதாகத் திருமால் சூளுறவாதலின் அவதார ரகசியம் குறிக்கப்பட்டது. அரக்கர்க்கெல்லாம் வென்றி கொடுக்கவே, அமரர்க்கு மீட்டும் துயரம் நிகழும். இதுவே இறுதியடிகளிற் குறிக்கப்பட்டது. அரக்கர் வென்றி முன்னரும் அமரர் துயரம் பின்னரும் நிகழும் எனினும் மீளாத்துயர் அமரர்க்கு ஏற்படக் கூடுமே என்ற இரக்கத்தால் துயரத்தை முன் வைத்தான். அந்தோ : இரக்கக் குறிப்பு.

பி - ம். 1. உணர்வினைய, சுணர்விறைய.

2. இயற்றுதல் ; இசைவதன்றால்.

3. துயர்நந் நிட்டாய்.

4. என்னைக்.

27

861. தெய்வவெம் படையுந் தீரா மாயமும் வல்ல தீயோன்
கையிடைப் புக்காய் நீவே றெவ்வணங் கடத்தி காவல்
வையமோ ரேழும் பெற்றால் வாழ்வனே வாரா யாகில்
உய்வனே தமிய னேனுக் குயிர்தந்த வுதவி யோனே.

'தமியனேனுக்கு உயிர் தந்த உதவியோனே - (சீதா தேவியைப் பிரிந்து) தனித்திருக்கும் எனக்கு உயிரளித்த உபகாரியே; நீ - நீ, தெய்வம் வெம்படையும் தீரா மாயமும் வல்ல தீயோன் - தெய்வத்தன்மை வாய்ந்த அஸ்திரங்களும், நீங்காத மாயமும் வல்ல கொடியவனான இராவணனுடைய, கையிடை புக்காய் - கைகளிலே சிக்கினாய் ; வேறு எவ்வணம் காவல் கடத்தி - வேறு எந்த வகையில் அவன் காவலினின்று தப்புவாய்! வாராயாகில் வையம் ஓர் ஏழும் பெற்றால் வாழ்வனே - நீ மீண்டு வாராவிட்டால் ஓர் ஏழுலக


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கத்தையும் நான் அடையப் பெற்றாலும், உய்வனே - யான் நல் வாழ்க்கை பெற்றுப் பிழைத்தல் கூடுமோ?

வாயு வாத்திரம், வருணாத்திரம், பிரமாத்திரம் அக்கினி அத்திரம் என்று, பின் போர் நிகழ்ச்சிகளில் பேசப்படுதலின் தெய்வ வெம் படையெனப்பட்டது. ஏழுபுவனத்தின் ஆட்சி பெறுவதை விடச் சுக்கிரீவன் நட்பு விசேடம் என்று கூறப்பட்டது. சீதா தேவி வேண்டுமா, ஏழுபுவனத்தின் ஆட்சி வேண்டுமா என்றால் சீதாதேவியே தான் வேண்டும் என்று இராமபிரான் கூறியதாக முதனூல் கூறும்; (ஒப்பு): ஆரணிய. 1099. தமியனேனுக்கு உயிர் தந்த உதவியோன்; சீதாதேவியை அரக்கன் கவர்ந்து செல்ல, உயிரற்றவன்போன்று நடமாடிய இராமபிரானுடன் நட்புக் கொண்டு, அவனுக்குப் பிராட்டியின் அணிகலங்களைக் காட்டி, உதவி புரிவதாக வாக்களித்து, ஏராளமான வானரப்படைகளைத் துணையாக அளித்து, அநுமனை அனுப்பிப் பிராட்டி வலியள் கற்பினள் என்ற செய்தியைக் கொணருமாறு செய்தவன் சுக்கிரீவன் ஆகலின் அவனை 'உயிர் தந்த உதவியோனே' என்றான். உய்வனே, வாழ்வனே என்பவற்றுள் ஏகாரம் எதிர்மறை. உயிர் தந்த உதவியோனே; (யுத்த. நாகபாசப். 259). வாராயாகில் என்பதை இடைநிலை விளக்காக்கி வாழ்வனே, உய்வனே என்பதனோடும் தனித்தனி இணைக்க.

பி - ம். 1. வான்படை; மாயையும்; நீயோர்.
2. கையிடைப் பட்டாய்; எங்ஙனம்.
3. வாழ்வனோ.
4. உய்வனோ.

28

862. ஒன்றாக நினைய வொன்றாய் விளைந்ததென் கரும மந்தோ
என்றானும் யானோ வாழே னீயிலை யெனவுங் கேளேன்
இன்றாய பழியு நீற்க நெடுஞ்செருக் களத்தி னென்னைக்
கொன்றாயு நீயே உன்னைக் கொல்லுமேற் குணங்கள்
[தீயோன்.

'குணங்கள் தீயோன் உன்னை கொல்லுமேல் - தீய பண்புகள் நிறைந்த இராவணன் உன்னைக் கொல்வானாகில், என் கருமம் - நான் மேற்கொள்ள வேண்டிய செயல், ஒன்றாக நினைய ஒன்றாய் விளைந்தது - ஒரு விதமாகக் கருதப் பிறிதொன்றாக முடிந்தது; அந்தோ - ஐயோ! யானோ - யானோ, என்றானும் வாழேன் - எந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

விதத்திலும் இனி வாழமாட்டேன்; நீ இலை எனவும் கேளேன் - நீ இல்லை (மறைந்தாய்) என்ற சொல்லையும் கேட்கலாற்றேன்; இன்று ஆய பழியும் நிற்க - இன்று உனக்குப் பகைவன் கையிற் சிக்கியதால் உண்டாய பழியும் வந்து நிலைக்க, என்னை - என்னை, நெடு செருகளத்தில் கொன்றாயும் நீயே - பெரிய போர்க்களத்தில் கொன்றவனும் நீயே யாவாய்.

சீதையை மீட்டு வரலாம் என்று மனப்பால் குடித்து நின்ற எனக்கு அக்காரிய சித்தி ஏற்படாமல் அதற்கு மிக்க அநுகூலமாக இருந்த உனக்கே கேடு விளைந்ததே, 'ஒன்றை நினைக்கின் அது வொழிந்திட்டு ஒன்றாகும்' என்று புலம்புகின்றான். என் கருமம் என்று தனிச்சொற்றொடராக்கி, என் ஊழ்வினை எனலுமாம். சுக்கிரீவன் இறந்தால் இராமபிரான் உயிர் வாழ்வ தரிதாகலின், கொன்றாயும் நீயே என்றான்; (ஒப்பு): ஆரணிய. 1101.

பி - ம். 1. விளைந்த தோர் கரும மொன்றே.
2. வென்றாலும், என்றாலும்; யானே.
3. பழியில், பழியோ.
4. கொன்றாய் நீயன்றோ நின்னை, கொன்றானே யன்றோ நின்னை; நீயான். 29

863. இறந்தனை யென்ற போது மிருந்தியா னரக்க ரென்பார்
திறந்தனை யுலகி னீக்கிப் பின்னுயிர் தீர்வெ னென்றால்
புறந்தரு நண்பி னோர்கள் வுயிரொடும் பொருந்தி னானை
மறந்தனன் வலிய னென்பா ராதலா லதுவும் மாட்டேன்.

'இறந்தனை என்ற போதும் - நீ இறந்துவிட்டாய் என்ற பொழுதிலும், யான் இருந்து - யான் உயிருடன் இருந்து, அரக்கர் என்பார் திறம்தனை - அரக்கர் என்பவர்களின் தொகுதிகளை, உலகின் நீக்கி - உலகத்தினின்று அகற்றி, பின் உயிர் தீர்வென் என்றால் - அதன் பின்னர் உயிர் விடுவேனாகில், புறந்தரு நண்பினோர்கள் - (இடர்ப்பட்ட காலத்து) காப்பாற்றுதலாகிய இயல்புடன்கூடிய நண்பர்கள், உயிரொடும் பொருந்தினானை - உயிரொடும் ஒன்றுபட்ட நண்பனை, (இராமன்) மறந்தனன் வலியன் என்பார் - மறந்தான், (ஆதலால்) கல்மனத்தான் என்று (உலகத்தார்) பழிமொழிவர்; ஆதலால் அதுவும் மாட்டேன் - ஆதலின் அங்ஙனம் செய்யவும் மாட்டேன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'உன்னைக் கொன்றவர் மீது, பழி தீர்த்துப் பின் இறத்தலையும் யான் கொள்ளேன்' என்று இராமபிரான் கூறினன் என்க. அன் பனுகிய உன்னைப் பிரிந்து வாழேன். ஒருவாறு பிரிய இயையினும் உலகத்தோர் பழிப்புக்கரளாவேன். ஆகலின் உன்னை விட்டுப் பிரிந்து அரக்கர்களைச் சங்கரித்து, தேவகாரியத்தை முடித்தலும் என்னால் இயையாது என்றான் (ஒப்பு): திங்கள் மறுவாற்றும் சான்றோரஃ தாற்றார் தெருமந்து, தேய்வர் ஒருமாசுறின்' (நாலடி. 161). புறந்தருதல் - பாதுகாத்தல்; 'பகடு புறந்தருநர் பாரமோம்பி' (கலித். 8 ; 21); 'மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பி' (கலித். 8 : 21); 'விருந்து புறந்தரூஉம்' (சிலப். 2, 86). வலியன் ; இகழ்ச்சிக் குறிப்பு.

பி - ம். 1. இருந்திகல்.
2. செருத்து ; நீர்வனேனும்.
3. பண்பிறைய ; பண்பினோர்கள், பண்பினலும்.
4. மறந்தன னென்று கொள்வார். 30

864. அழிவது செய்தா யைய அன்பின லளியத் தேனுக்
கொழிவரு முதவி செய்த வுன்னையா னொழிய வாழேன்
எழுபது வெள்ளந் தன்னி னீண்டொர்பே ரெஞ்சா தேகிச்
செழுநக ரடைந்த போழ்து மித்துயர் தீர்வ துண்டோ.

'ஐய - ஐயனே ! அளியத்தேனுக்கு - இரங்கத்தக்க எனக்கு' அன்பினால் - (என்பாலுள்ள) அன்பினால், அழிவது செய்தாய் - அழிதற்குக் காரணமான செயலைச் செய்தனை ; ஒழிவு அரும் உதவி செய்த - நீங்குதல் இல்லாத (என்றும் நிலை பெறுவதான) உதவி புரிந்த, உன்னை ஒழிய யான் வாழேன் - உன்னைப் பிரிந்து நான் உயிர் வாழ மாட்டேன் ; எழுபது வெள்ளம் தன்னின் - எழுபது வெள்ளம் சேனையில், ஈண்டு ஓர் பேர் எஞ்சாது ஏகி - இங்கு ஒருவரும் குறையாமல் (வெற்றி யுற்றவராய் மீண்டு), செழு நகர் அடைந்த போழ்தும் - வளமை மிக்க நகரத்தைச் சென்று நான் சேர்ந்த காலத்தும், இத்துயர் தீர்வது உண்டோ - (நீ இல்லாது சென்ற) இந்த மனத்துயர் ஒழிவதாகுமோ ?' ஓ - எதிர்மறை.

உன்னை இழந்து, மற்றெல்லோரையும் காத்து நான் திரும்பி னாலும், உன் இழப்பால் உண்டான துயர் என்னை விடாது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்றான் இராமபிரான் என்க. உபகாரம் செய்தமையின் எல்லாக் காரியங்களும் இனிது முடிந்த காலத்தும், சுக்கிரீவனைப் பிரிந்ததனாலாய துன்பம் நீங்காதென்றான். போர்க்களத்தில் இறந்த வாநர வீரர்களும் அநுமன் கொணர்ந்த சஞ்சீவி மூலிகையால் உயிர்பெற் றெழுந்தனர் எனப் பின்னர் வருதலின் எழுபது வெள்ளம்தன்னில் ஈண்டொர்பே ரெஞ்சா தேகி எனப்பட்டது. 'மரக்கல முதலவு முய்ந்து வாழ்ந்தன, குரக்கின முய்ந்தது கூறல் வேண்டுமோ' (யுத்த. மருத்துமலை. 102); 'முந்தை நாண்முதற் கடைமுறை யளவையு முடிந்த, அந்த வாநர மடங்கலும் எழுந்துடனார்த்து' (யுத்த. மீட்சிப். 137). அளியத்தேன் - எளிமையேன். இவ்வைந்து செய்யுட்களும் சுக்கிரீவனை நினைத்து இராமபிரான் வருந்தினமையைத் தெரிவித்தன. இச்செய்யுட்களோடு அயோமுகிப் படலத்து இலக்குவனைக் காணாது இராமபிரான் புலம்பியதனையும், பிரமாத்திரப் படலத்துத் தம்பியையுன்னி அவன் விலாபித்ததையும் ஒப்புநோக்குக. இந்நிலையில் சுக்கிரீவன் வெற்றியுடன் திரும்பி வந்தமையை இனிக்கூறுகின்றார்.

பி - ம். 1. அழிவன ; அளியற்றேனுக்கு, அளியத்தேனே.
2. உழிவரும் ; வாழ்தல்.
3. எஞ்சாதாசைச்.
4. அடையி னன்றே வித்துயர் தீர்வதென்றான். 31

### சுக்கிரீவன் இராமபிரானிடம் திரும்புதல்

865. என்றவ னிரங்குங் காலத் திருவரு மொருவர் தம்மின்
வென்றிலர் தோற்றி லாராய் வெஞ்சமம் விளைக்கும் வேலை
வன்றிற லரக்கன் மௌலி மணிகளை வலியால் வாங்கிப்
பொன்றின னுசில் நன்றென் றவன்வெள்க விவனும்
[போந்தான்.

என்று அவன் இரங்கும் காலத்து - என்று அந்த இராமபிரான் மனம் வருந்தியபோது, இருவரும் - (இராவணன் சுக்கிரீவன் என்ற) இருவரும், தம்மின் ஒருவரும் வென்றிலர் தோற்றிலாராய் - தம்முள் எவரும் வெற்றியோ தோல்வியோ அடையாதாராய், வெம் சமம் விளைக்கும் வேலை - கடிய மற்போர் செய்தபொழுது, அவன் - அந்த இராவணன், பொன்றினன் ஆகில் நன்றென்று வெள்க -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(நான்) இறந்துவிடுவேனாகில் மிகவும் நல்லது என்று எண்ணி நாணம் உறுமாறு, வல் திறல் அரக்கன் மௌலி மணிகளை - மிக்க வலிமைவாய்ந்த அந்த அரக்கனுடைய மகுடத்திற் பதித்திருந்த அரதனம் முதலிய கற்களை, வலியால் வாங்கி - தன் உடல்வன்மையால் பறித்துக்கொண்டு, இவனும் போந்தான் - இந்தச் சுக்கிரீவனும் (இராமபிரானிருந்த இடத்திற்கு) வந்தான்.

'மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிது' ஆகலின் இறத்தலே நன்றென்று கருதினான் இராவணன் என்க; 'மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை, பீடழிய வந்த விடத்து'; 'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா, ருயிர்நீப்பர் மானம் வரின்'; 'இளிவரின் வாழாத மான முடையா, ரொளி தொழு தேத்து முலகு' (குறள். 968, 970) என்பன காண்க. மௌலி மணிகள் வாங்கி: 'பொறிப்புண் டரீகம் போலும் ஒருவனாற் புனைந்த மோலி, பறிப்புண்டும்' (யுத்த. 968); 'மணிபறித் தெழுந்த வெந்தை' (யுத்த. 930); 'இக்கிரி பத்தின் மௌலி யினமணி யிமைப்பிற் கொண்ட' (யுத்த. 899); மௌலி - மகுடம்; 'வசிட்டனே புனைந்தான் மௌலி' (யுத்த. திருமுடிசூட்டு. 38). இருவரும் சமபலமுள்ளவர் என்பது, 'வென்றிலர் தோற்றிலாராய்' என்றும், 'வன்திறல் அரக்கன் என்றும், வலியால் வாங்கி' என்றும் கூறப்பட்டது. இருவர் தம்மின் ஒருவரும் என உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது; (ஒப்பு): 'என்னையும் வெலற்கரி திவனுக்கீண்டிவன், தன்னையும் வெலற்கரி தெனக்கு' (சுந்தர. 1104). இராவணனுடைய கிரீடங்களைச் சுக்கிரீவன் தள்ளியதாக முதனூல் கூறும். மற்போர் எளிதில் முடிவதன்று என்று எண்ணிய சுக்கிரீவன் தான் போர் புரிந்ததற்கு அறிகுறியாக மணிகளைப் பறித்துவந்து இராமபிரானிடம் காட்டினன் என்க. இராவணன் வெள்கி நிற்க, சுக்கிரீவன் போந்தான் என்க.

பா - ம். 1. என்றிவன்; இரங்கு.

2. தோற்றிலாதார்; சமர்.

3. தனிமணி; வலியின், வாயில் வலியாற் பற்றி.

4. ஆகினன் றென்று, ஆகிலே னென்று; வெட்க.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



866. கொழுமணி முடிக டோறுங் கொண்டன மணியின் கூட்டம்
அழுதய ருறுகின் றான்ற னடித்தல மதனிற் சூட்டித்
தொழுதய னாணி நின்றான் தூயவ ரிருவ ரோடும்
எழுபது வெள்ளம் யாக்கைக் கோருயி ரெய்திற் றன்றே.

கொழு மணி முடிகள் தோறும் - செழிப்பான நவமணிகள் பதிக்கப்பெற்ற மகுடங்களிலிருந்து, கொண்டன மணியின் கூட்டம் - பறித்துக்கொண்டவான மணிகளின் தொகுதியை, அழுது அயர் உறுகின்றான் தன் - அழுது தளர்கின்றவனான இராமபிரானுடைய, அடி தலம் அதனில் சூட்டி - பாதவிணைகளில் வைத்து, தொழுது நாணி அயல் நின்றான் - வணங்கி வெட்கமுற்று(ச் சுக்கிரீவன்) அருகிலே நின்றான்; (அப்பொழுது), தூயவர் இருவரோடும் - பரிசுத்தமான குணம் படைத்தவரான இராம இலக்குவரோடும், எழுபது வெள்ளம் யாக்கைக்கு ஓர் உயிர் எய்திற்று - எழுபது வெள்ளம் சேனையின் உடலுக்கும் (அப்போது) உயிர் வந்ததுபோற் காணப்பட்டது. அன்று, ஏ - அசைகள்.

மணிமுடிகள் தோறும்: 'தலைதொறும் தலைதொறும் தயங்கும், வகையபன் மகுட மிளவெயி லெறிப்ப' (சுந்தர. 407). இராம இலக்குவர்மட்டுமன்றி வாநரக் குழுவிற்கே சுக்கிரீவன் உயிர் போன்றவன் என்பது குறிக்கப்பட்டது. முடியை அடியிற் சூட்டி என்றதன் நயம் காண்க. போரில் தோற்ற மன்னர்களின் மகுடத்தை அழித்து வெற்றிகொண்ட வீரன் காற்கழல் செய்து அணிவது தமிழ்நாட்டின் பண்டைப் போர் மரபென்ப. அட்டவர், முடிபுனைந்த பசும் பொன்னின் அடி பொலியக் கழறைஇய வல்லாளனை' (புறநா. 40). (ஒப்பு): சீவக. 2665. அடித்தலம்: 'செம்மையின், திருவடித் தலம்' (அயோத்தி. கிளை கண்டு. 135). யாக்கை: கைவிகுதிபெற்ற தொழிற்பெயர். எழுவகைத் தாதுக்களாலும் நரம்பு முதலானவற்றைக் கொண்டும் கட்டப்படுவது என்று காரணக்குறி; 'யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர்' (நாலடி. 28). எதிரியாகிய இராவணனைக் கொல்லாமற் றிரும்பியதனுல் நாணினன் எனப்பட்டது. 'பையல் தலையைப் பிடுங்கிக் கொண்டுவந்து திருவடிகளிலே இடப்பெறாத நாம் என் சொல்லி முன்னே நிற்பது என்று பெருமானருகே வந்து நின்றார்' என்று எழுதுவர் பெரியவாச்சான் பிள்ளை. இங்கு, 'கருதலர் பெருமை தேவி மீண்டிடாச் செயலே காட்ட' (சுந்தர.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1254) என்ற வரிகள் நினைவுகூரத்தகும். எழுபது வெள்ளம் யாக்கைக் கோருயிர் ; 'மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்' (புறநா. 186) நோக்குக.

பி - ம். 1. கொண்டநன், கொண்டநன் ; குழுவின்.
2. அயர்கின்ற வண்ணல், அயர்வுறுகின் ருன்றன் ; அடித்தலத் தமரச்.
4. வெள்ளத் தாக்கை ; எய்திற் றன்றன். 33

867. என்புறக் கிழிந்த புண்ணி னிழிதருங் குருதி யோடும்
புன்புலத் தரக்கன் றன்னைத் தீண்டிய புன்மை போக
அன்பனை யமரப் புல்லி மஞ்சன மாட்டி விட்டான்
தன்பெரு நயன மென்னுந் தாமரைத் தடத்து நீரால்.

அன்பனை அமர புல்லி - அன்பனுகிய சுக்கிரீவனை நன்கு தழுவிக்கொண்டு, என்புற கிழிந்த புண்ணின் - (அவனுடைய) எலும்புவரையில் பொருந்துமாறு கிழிபட்ட காயங்களிலிருந்து, இழிதரும் குருதியோடும் - சொரிகின்ற உதிரத்துடனே, புல் புலத்து அரக்கன் தன்னை - அற்ப அறிவுடைய அரக்கனுகிய இராவணனை, தீண்டிய புன்மை போக - தொட்டு நின்ற இழிதகவு நீங்குமாறு, தன் பெரு நயனம் என்னும் தாமரை தடத்து நீரால் - தன்னுடைய அகன்ற கண்கள் என்னும் தாமரைக்குளத்து நீரினல், மஞ்சனம் ஆட்டிவிட்டான் - நீராட்டுச் செய்தனன்.

புண்ணின் ஆழத்தைக் குறிப்பான், என்புறக் கழிந்தபுண் எனப்பட்டது. தீய கொலைப்புண்கள் அன்றி, பிறன் மனைவியைக் கவர்ந்த மகாபாதகன் ஆகலின், 'தீண்டிய புன்மைபோக' எனப் பட்டது. ஒருசார் ; (ஒப்பு) : யுத்த. வீடண. 145. பாவக் கழிவாக நீராடுவதும் நீராட்டுவதும் தொன்றுதொட்ட மரபு. 'தீது நீங்கக் கடலாடியும், மாசுபோகப் புனல் படிந்தும்' (பட்டினப். 99—100) என்றது காண்க. புன்மைபோகக் கண்ணீரால் மஞ்சன மாட்டுதல் ; (ஒப்பு) : 'அண்ணல் வீரனைத் தம்பியு மன்னமும், கண்ணி னீரினிற் பாதங் கழுவினர்' (ஆரணிய. 549) ; 'வாங்கிய வாழி தன்னை வஞ்சரூர் வந்த தாமென், ருங்குயர் மழைக் கணீரா லாயிரங் கலச மாட்டி' (சுந்தர. 1287) ; (ஒப்பு) : 'மெழுகு மாப்பிகண் கலுழ் நீரானே' (புறநா. 249) ; 'கையால் நிலந்தடவிக் கண்ணீர் மெழுகுவார்' (அயோத்தி. நகர்நீ. 108) ; 'வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டுங் கண்ணன்' (அயோத்தி. குகப. 39).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அமரப்புல்லி என்பதற்கு விருப்பம் பொருந்தத் தழுவி எனினு மாம். அமர்தல் - விரும்புதல். புன்புலம் : இழிதக்க செயற்கண் தோய்ந்த அறிவாகலின் இங்ஙனம் கூறப்பட்டது ; புலம் - இடமு மாம் ; குலத்தைக் குறித்தது. இராமபிரான் விழிகட்குத் தாமரை பலவிடங்களில் உவமையாக இந் நூற்கண் வந்துள்ளது ; ஆரணிய. 376, 421, 606, 813, 972, 984 ; முதலியன காண்க. நயனம், வட சொல். இராமபிரான் ஆரத் தழுவியதனல் சுக்கிரீவன் உடலி னின்று பெருகிய உதிரமும் நின்றது ; இவ்வாறு காணப்படும் குருதிப் பெருக்குடன் காணப்படாத தீட்டுக்கறையையும் கண்ணீ ரால் ஆட்டிப் போக்கியதாகச் சொல்லியது உடனவிற்சியணி. இச் செய்யுள் தற்குறிப்பேற்றமும் ஆம்.

பி - ம். 1. குழிந்த ; இழிபெருங், இழிகொழுங்.
2. புன்புறத் தருக்கன் ; நீமைபோக.
3. அன்பனை மார்பிற் புல்லி.
4. தன்பெருங் கண்கள் என்னும் ; தாமரை பொழியு நீரால். 34

## இராமபிரான் சுக்கிரீவனிடம் கூறுதல்

868. ஈர்கின்ற தன்றே யென்ற னுள்ளத்தை யிங்கு மங்கும்
பேர்கின்ற தாவி யாக்கை பெயர்கின்ற தில்லைப் பின்னைத்
தேர்கின்ற சிந்தை யன்றே திகைத்தனை யென்று [தெண்ணீர்
சோர்கின்ற வருவிக் கண்ணன் றுணைவனை நோக்கிச் [சொல்லும்.

தெண்ணீர் அருவி சோர்கின்ற கண்ணன் - தெளிந்த கண் ணீர் அருவிபோல் சொரிகின்ற விழிகளை யுடையவனை இராம பிரான், துணைவனை நோக்கி - தன் உடன்பிறந்தவனாகக் கருதப் பட்ட சுக்கிரீவனைப் பார்த்து, '(நீ என்னைப் பிரிந்தது) என் தன் உள்ளத்தை ஈர்கின்றது அன்றே - என்னுடைய நெஞ்சினைப் பிளக்கின்றது அல்லவோ! ஆவி - என்னுடைய உயிர், இங்கும் அங்கும் பேர்கின்றது - (உன் பிரிவினால்) நிலைபெறாமல் இங்கும் அங்கும் (போவதும் வருவதுமாகத்) தவிக்கின்றது ; யாக்கை பெயர்கின்றது இல்லை - என் உடலும் இயக்கமின்றி உள்ளது ; பின்னை - அதன்மேலும், தேர்கின்ற சிந்தை திகைத்தனை அன்றே - (காலம் இடம் அறிந்து செய்வதில்) தேர்ச்சியுள்ள உன் மனம்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



திகைத்தனை அல்லவோ ?' என்று சொல்லும் - என்று சொல்ல லானான்.

சுக்கிரீவன் இராமபிரானிடம் கூறியதை மேல் மூன்று செய்யுட்களில் காண்க. ஈர்தல் - பிளத்தல்; 'ஈர்கிலாக் கள்வ னேன்' (அயோத்தி. கங்கைப். 44). இங்கு மங்கும் பேர்கின்றதாவி : 'ஆவியோ நிலையிற் கலங்கிய தாக்கை யகத்ததோ புறத்ததோ அறியேன்' (வி. பா. 17-ஆம் போர் 240). துணைவன் : 'குன்று சூழ்வான் மகனொடு மறுவ ரானோம்' (யுத்த. 449). சுக்கிரீவனைப் பாதன் என்றது; 'பாதனீ யினையன பகர்தியோ' (கிட்கிந்தா. 683), உள்ளத்தின்கண் உள்ள கலவரமும், உடலின் செயலற்ற நிலையும் 'ஆவி பேர்கின்றது யாக்கை பேர்கின்ற தில்லை' என்ற தொடர் களால் குறிக்கப்பட்டன. அருவிக் கண்ணன்; 'புயல்பொழி யருவிக் கண்ணன்' (யுத்த. வேலேற்ற. 47).

பி - ம். 1. அங்கு மிங்குப்.

2. பிடிக்கின்றதில்லை ; பின்னர்த்.

3. சிந்தை பொன்றே ; திகைத்தன ; என்றுகூறி.

4. நோக்கிச் சொன்னான். 35

869. கல்லினும் வலிய தோளாய் நின்னையக் கருணை யில்லோன்
கொல்லுதல் செய்தா னாகிற் கொடுமையாற் குற்றம் [பேணிப்
பல்பெரும் பகழி மாரி வேரொடும் பறிய நூறி
வெல்லினுந் தோற்றேன் யானே யல்லனோ விளிந்தி [லாதேன்.

'கல்லினும் வலிய தோளாய் - மலையைக் காட்டிலும் திண்மை வாய்ந்த புயத்தை யுடையவனே! நின்னை - உன்னை, அ கருணை இல்லோன் - அந்த இரக்கம் அற்ற இராவணன், கொல்லுதல் செய்தான் ஆகில் - கொன்றிருப்பானாகில் (நான் மரித்திருப்பேன்), விளிந்திலாதேன் - உயிர் துறவாத யான், குற்றம் பேணி - அவன் செய்த பிழையை மனத்துட்கொண்டு (அதற்குத் தண்டனையாக), கொடுமையால் - கடுமையுடன் பொருந்தி, பல்பெரு பகழிமாரி - பலவாகிய பெரிய அம்புகளினால், வேரொடும் பறிய நூறி - (அவனை) வேரொடும் விழும்படி அழித்து, வெல்லினும் - வெற்றி பெற்றேன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



எனினும், (உன்னைப் பாதுகாக்காமல் இயற்றிய அந்தச் செயல் வெற்றிக் காரியமாகப் புலப்படாதாகலின்), யானே தோற்றேன் அல்லனோ - யான் தோற்றவனாகக் கருதப்படுவேன் அல்லனோ? ஓகாரம் எதிர்மறை

நண்பனைப் பாதுகாக்க முடியாத நிலையில் தான் பெறும் வெற்றி வெற்றியாகாது என்று இராமபிரான் கூறினன்.

பி - ம். 1. கருணையில்லான்.

2. கொற்றம்பேணி.

4. தோற்றே னனோ வல்லனோ. 36

870. பெருமையும் வண்மை தானும் பேரெழி லாண்மை தானும்
ஒருமையி னுணர நோக்கிற் பொறையின தூற்ற மன்றே
அருமையு மடர்ந்து நின்ற பழியையு மயர்ந்தாய் போலும்
இருமையுங் கெடுத்தா யன்றோ யென்னினைந் தென்செய்
[தாய்நீ.

'ஒருமையின் உணர நோக்கின் - மனத்தை ஒரு முகப் படுத்தி ஆராய்ந்து பார்ப்போமாயின், பெருமையும் வண்மைதானும் - பெருமையும் வள்ளன்மைப் பண்பும், பேர் எழில் ஆண்மை தானும் - பெரிய அழகிய வீரப் பான்மையும், பொறையினது ஊற்றம் அன்றே - பொறுமைக்கு உறுதி தருவன வல்லவோ? அருமையும் - உன்னுடைய அருமையையும், அடர்ந்து நின்ற பழியையும் - நெருங்கி நின்ற பழியையும், அயர்ந்தாய் போலும் - (நீ) மறந்தனை போலும்; (நின் ஆராயாத செய்கையால்) இருமையும் கெடுத்தாய் அன்றே - இம்மை மறுமை யென்ற இரண்டினையும் அழித்தனை அல்லவோ? நீ என் நினைந்து என் செய்தாய் - நீ என்ன செய்யக் கருதி என்ன செயலைச் செய்தாய்?

பெருமை ஆண்மை முதலிய பண்புகளைப் பொறுமையை மிகுக்குமாறு பயன் படுத்தல் முறையன்றி, பொறுமையை இழப்பதற்குத் துணைக்கொள்ளல் நன்றன்று. இராவணனைக் கண்டவுடன் அவன் மேல் திடீரெனப் பாய்ந்தாய்: வாநரேந்திரனாகிய நீ, உன் சேனைப் பரிவாரங்களைக் கொண்டு அவனை எதிர்க்க வேண்டும அல்லாது நீ முன்னிட்டுச் சென்றது பொருந்துமோ? இப்படைகட்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கெல்லாம் நீ உயிராகலின், உன் உயிர் மிகவும் அருமையானது. இங்ஙனம் பழிக்கிடனான செயலை நீ செய்தனை. உன் உயிர்க்குக் கெடுதல் ஏற்பட்டால், உன்னைச் சார்ந்தார்கள் உயிர் துறக்க நேரும். ஆதலின் இம்மை மறுமைகளில் பழி விளைக்கவல்ல செயலைச் செய்தனையே என்றான் இராமபிரான். ஒருமையின் உணர நோக்கின்; 'சிந்தை ஒருமையின் நிறுவி' (கிட்கிந்தா. 363). 'ஒருதிறத்துணர நோக்கி' (ஆரணிய. 279): இம்மையிற் பழியையும் மறுமையில் நற்கதி யின்மையையும் உண்டு பண்ணினை என்றான். ஆண்மை தானும், பொறையின தூற்றம்' 'ஒறுத்தாற்றும் பண்பி னார் கண்ணுங்கண் ணோடிப், பொறுத்தாற்றும் பண்பே தலை' (குறள். 579): நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை' போற்றி யொழுகப்படும்' (குறள். 154): என்பன இங்கு ஒப்பு நோக்கத்தகும். ஊற்றம்+விளைவு (பழையவுரை) என் நினைந்தென் செய்தாய். ஒன்றாக்கி யொன்றிழைத்த லுணர்வுடையோர்க் குரித்தன்றால் (சுந்தர. 316) 'ஆலம்பார்த் துண்டவன்போ லாற்ற லமைந் துளரெனினும், சீலம்பார்க் குரியார்க ளெண்ணாது செய் பவோ' (சுந்தர. 317); என்ற அநுமன் கூற்றுக்களைக் காண்க. போலும்: ஒப்பில் போலி 'என் நினைந்து என் செய்தாய்' கிட்கிந்தா. 304.

பி - ம். 1. பெருமையு மேன்மை தானும், வன்மை.
2. அடர்த்து, அடுத்து.
3. அயர்த்தாய்; போல.
4. கெடுக்க லுற்றாய். 37

871. இந்நிலை விரைவி னெய்தா தித்துணை தாழ்த்தி யாயின்
நன்னுதற் சீதை யாலென் ஞாலத்தாற் பயனென் நம்பி
உன்னையான் றொடர்வ லென்னைத் தொடருமிவ் வுலக
[மென்றால்
பின்னையென் னிதனைக் கொண்டு விளையாடிப் பிழைப்ப
[செய்தாய்.

'இ நிலை - இந்த நிலைமையில், விரைவின் எய்தாது - வேக மாக இங்கு வாராமல், இதுணை தாழ்த்தி ஆயின் - இவ்வளவு நேரம் (இன்னும் சற்று நேரம்) தாமதித்திருந்தால் (உனக்கு ஏதோ இங்கு விளைந்ததென்றே கருதுவேன்; அங்ஙனம் ஓர் ஊறுபாடு நிகழ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மாயின்), நம்பி - சிறந்த ஆண்மகனே ; நல் நுதல் சீதையால் என் ஞாலத்தால் என் பயன் - அழகிய நெற்றியுடன் கூடிய சீதை யாலும், இந்த நானிலத்தாலும் நிகழக் கூடிய பயன் யாது? (ஒன்று மின்று ; ஆகலின்), யான் உன்னை தொடர்வல் - நான் இறந்த உன்னைப் பின்பற்றுவேன் ; இ உலகம் என்னை தொடரும் - (அப்போது) இந்த உலகமும் என்னைப் பின்பற்றும் (நான் இறந் தால் இந்த உலகும் இறந்து படும்); என்றால் - எனப்படின், இதனை கொண்டு - இத்தகைய செயலை மேற்கொண்டு, பின்னை என் - பின்னை நிகழ்வது என்ன இருக்கின்றது, விளையாடி பிழைப்ப செய்தாய் - விளையாட்டாகப் பிழையைச் செய்து விட்டனையே.'

தாழ்த்தல் - தாமதித்தல் 'தாழ்த்திடாமல் மின்னிடை வெந் தித்தம்மின்' (சேதுபு. சங்கர. 71): புவியாள்வது, சீதையைப் பெறுவது என்பனவற்றைக் காட்டிலும், சுக்கிரீவனைப் பெறுதலே மேல் என்று இராமபிரான் சுக்கிரீவனிடம் காட்டிய அன்பு காண்க. வனவாசத்தில் முனிவர்கள் வந்து முறையிட அவர்கட்காக அரக் கராதிகளை அழிப்பதாக இராமன் வாக்களித்த போது, சீதாதேவி இராமபிரானிடம் அரக்கர்கள் தமக்கு ஒன்றும் செய்யவில்லையே அவர்களை ஒறுப்பதென் என வினவ, இராமபிரான் சீதையைவிட நேர்ந்தாலும் விட்டுவிடுவேன், முனிவர்கட்குத் தான் கொடுத் வாக்குத் தவறமாட்டேன் என்று கூறியதாக முதனூல் கூறும். விளையாட்டு வினையாயதே என்றான் இராமபிரான் 'வளையெயிற் றரக்கரோடு வரும்விளை யாட்டென்றாலும், விளைவன தீமை யேயாம்' (ஆரணிய. 280) 'தொடரும் இவ்வுலகம்' என்ற தற்கு, நான் மரித்தது கண்டு, அரக்கர் மீறி உலகை நலிய, உலகத் தவரும் இறந்து என் பின்னே வருவர்' என்று இராமபிரான் கருதிக் கூறியதாகப் பழையவுரை கூறும்.

பி - ம். 1. இன்னிலை.

2. ஞானத்தாற்.

3. உலக மொன்றோ, எல்லாம் ; அன்றே ;

4. இதனை நோக்கி ; விழைவாரைப் பிழைக்கச் செய்தாய்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இங்கு,

என்றன னென்ற லோடு மிணையடி யிறைஞ்சி யாங்கே
குன்றுற்ற குவவுத் திண்டோட் கொற்றவ வல்விற் காணத்
தன்றனி யுள்ள நாணுற் றழல்விழிக் கொலைவெஞ் சீயம்
நின்றென வெருத்தங் கோட்டி நிலனுற நோக்கிக் கூறும்

என்ற பாடல் சில சுவடிகளிலும்,

எனவிவை அமலன் கூற விருகையும் எடுத்துக் கூப்பி
மனமிக நாணி யொன்றும் வாய்திறந் துரைக்க லாற்றான்
பனியினை வென்றோன் மைந்தன் பின்னரும பணிந்து நின்றே
அனகனுக் கன்பி னோடும் அடுத்தமை யறைய லுற்றான்.

என்ற பாடல் வேறு சில சுவடிகளிலும் காண்கின்றன.

### சுக்கிரீவன் மறுமொழி

872. காட்டிலே கழுகின் வேந்தன் செய்தது காட்ட மாட்டேன்
நாட்டிலே குகனார் செய்த நன்மையை நயக்க மாட்டேன்
கேட்டிலே னல்லே னின்று கண்டுமக் கிளியன் னாளை
மீட்டிலேன் தலைகள் பத்துங் கொணர்ந்திலேன்
[வெறுங்கை மீண்டேன்.

(இவற்றைக் கேட்ட சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி), 'காட்டிலே - காட்டிடத்தில், கழுகின் வேந்தன் - கழுகரசனான சடாயு என்பவன், செய்தது காட்ட மாட்டேன் - புரிந்தது போன்ற வீரச்செயலைச் செய்து காட்டும் ஆற்றல் பெற்றிலேன்; நாட்டிலே - நாட்டிடத்தில், குகனார் செய்த நன்மையை நயக்கமாட்டேன் - குகப்பெருமான் செய்த (நன்மை போன்ற) நன்மையை விரும்பிச் செய்ய இயலாதவனாயினேன்; கேட்டிலேன் அல்லேன் - நான் அவைகளைக் கேட்டறியாதவனல்லன்; (கேட்டிருந்தும்) இன்று - இன்று, அ கிளி அனாளை கண்டும் - அந்தக் கிளி போன்ற மொழியை யுடையவளான சீதாபிராட்டியைக் கண்டும், மீட்டிலேன் - சிறை மீட்கவேண்டியிருக்க அதுவும் செய்திலேன்; தலைகள் பத்தும் கொணர்ந்திலேன் வெறுங்கை மீண்டேன் - (அவனைக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கவர்ந்த இராவணனுடைய) பத்துத் தலைகளையும் கொணராமல் வெறுங்கையனாய்த் திரும்பினேன்.

சடாயுவும் குகனும் இராமபிரானால் தந்தை முறையிலும், தம்பி முறையிலும் வைத்துப் பாராட்டப் பெற்றவர்கள். இராவணன் சீதாதேவியைக் கவர்ந்து சென்ற போது அவனை எதிர்த்துத் தன் உயிரைப் புகழ்க்கு விற்றவன் சடாயு. வனம் சென்ற போது, கங்கைக் கரையில் இராமபிரான் இலக்குவன் சீதாதேவி என்ற இவர்கட்குப் பேருபசாரம் செய்து, பின்னர் பரதாழ்வான் வந்த போதும், அவனது வரவுண்மை யறிந்து மகிழ்ந்துபசரித்து ஆவன செய்தவன் குகப்பெருமான். அத்தகைய செயல்கள் ஒன்றும் செய்ய வில்லையே என்று இரங்கிக் கூறினன் சுக்கிரீவன். மேற் கூறிய செயல்களைப் பொறுத்தே சடாயு குகன் என்ற இருவரும் முறையே பெரிய உடையார் என்றும், குகப் பெருமா னென்றும் அழைக்கப்படுவர். இராவணன் தலைகள் பத்தும் கொண்டுவந்து இராமபிரான் திருவடியில் சமர்ப்பியாத நிலையில், முடிமணி பறித்தது மட்டும் பெருஞ் செயல் அன்று எனக்கருதினன் ஆகலின், வெறுங்கை வந்ததாகக் கூறினன் என்க. கண்டும் என்றதில் இருந்த உவமை பிரித்துக் கூட்டப் பெற்றது. குகன் இருந்த சிருங்கிபேரபுரம் அயோத்தித் தலைநகரை ஒட்டியே இருந்த தாகலின் நாட்டிலே குகனார் செய்த எனப் பட்டது. கேட்டிலேனல்லேன்: இரண்டு எதிர்மறைகள் உடன் பாட்டுப் பொருளை உணர்த்தின; 'காணே மல்லேம் கண்டனம் கடத்திடை' (கலித். பாலை. 9) என்ற இடத்துப்போல. கிளியனாள் - சீதாதேவி; 'பிள்ளைபோற் பேசுவாளை' (ஆரணிய. 630). இச்செய்யுளுடன் 'வாளால் மகவரிந் தூட்டவல் லேனல்லன்' என்று தொடங்கும் பட்டினத்தார் பாடல் ஒப்பு நோக்கத்தகும். கண்ணப்ப நாயனார் காளத்தியீசனிடம் காட்டிய அன்பின் திறமும் இங்கு ஒப்ப நோக்கத்தகும்.

பி - ம். 1. செய்ததுங், செய்தன.
2. நன்மை போல் கேட்டிலேன் கண்டு போந்தேன்.
3. இன்றுகண்டுங் கிளிமொழி மாதராளை, கண்டுவந்த கிளிமொழியாளை நின்பால், கண்டே னந்தக் கிளிமொழியாளை நின்பால்.
4. கொணர்கிலேன்; வெறுங்கை வேந்தே; வெறுங்கை வந்தேன். 39

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



873. வன்பகை நிற்க வெங்கள் வானரத் தொழிலுக் கேற்ற
புன்பகை காட்டும் யானோர் புகழ்ப்பகைக் கொருவன் [போலாம்
என்பகை தீர்த்தென் னுவி யரசொடு மெனக்குத் தந்த
உன்பகை யுனக்குத் தந்தே னுயிர்சுமந் துழலா நின்றேன்.

'என்பகை தீர்த்து - என்னுடைய பகையை ஒழித்து, என் ஆவி - எனதுயிரை, அரசொடும் - என் அரசுடனே, எனக்கு தந்த - எனக்குத் தந்தவனை, உன்பகை - உன் பகையை (நரனே ஒழித்து விடாமல்), உனக்கு தந்தேன் - நீயே (தீர்த்துக் கொள்ளும்படி) உனக்கே விடுத்தேன்; (இவ்வாறு புரியவேண்டிய உதவியைப் புரியாமல்) உயிர் சுமந்து உழலா நின்றேன் - உயிரைத் தாங்கிக் கொண்டு மனம் வருந்தி நிற்கின்றேன்; (ஆதலால்) வன் பகை நிற்க - வலிய பகை (அழியாது) நிற்ப, எங்கள வாநர தொழிலுக்கு ஏற்ற - எங்களுடைய குரங்குச் செயலுக்குப் பொருந்திய, புல் பகை காட்டும் - அற்பமான பகையைக் காட்டுகின்ற, யான் - நான், ஓர் புகழ் பகைக்கு ஒருவன் போலாம் - (உங்களது) ஒப்பற்ற புகழ்க்கு விரோதியாதற்குத்தக்க ஒருவன் போல்வேன்;

என் அண்ணனும் நேர் பகைவனுமான வாலியைக் கொன்று எனக்கு உயிர்ப்பிச்சையும் இராஜ்யமும் தந்த உமக்கு, உம் நேர் பகைவனான இராவணனை யொழித்து உம் மனைவியை மீட்டுத் தருவதன்றோ நான் புரிய வேண்டிய கைம்மாறு ஆகும். அங்ஙனம் புரிய வியல வில்லை யெனில் என் உயிரையேனும் விடுத்திருக்க வேண்டும். நான் அங்ஙனம் ஒன்றும் செய்யாது தாவிப்பாய்ந்து போரிட்டு ஓடிவந்து எனது குரங்குப்புத்தியைக் காட்டி உம்புகழ்க்கு ஓர் களங்கம் உண்டுபண்ணிவிட்டேன் என்று சுக்கிரீவன் இரங்கினன் என்க. (ஒப்பு): 'தலைமகன் இடரின் வைகவே, ஆனது குரக்கினத் தெமர்கட் காமெனு...............விம்மினான்' (கிட்கிந்தா. 666); 'மன்னவ நின்பணி மறுத்து வைகிலேன், புன்னிலைக் குரக்கியல் புதுக்கினே னென்றான்' (கிட்கிந்தா. 680); என்பகை தீர்த்தென் னுவி யரசொடு மெனக்குத்தந்த' 'செம்மை சேருள்ளத் தீர்கள் செய்த பேருதவி தீரா - வெம்மைசேர் பகையுமாற்றி யரசு வீற்றிருக்க விட்டீர் (கிட்கிந்தா. 609); 'உதவி கொன்றார்க் கென்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


றேனு மொழிக்கலா முபாய முண்டோ' (கிட்கிந்தா. 613); 'சிதையாத செருவி லன்னான், முன்சென்று செருநர் மார்பின், உதை யானே லுதையுண் டாவி யுலையானே லுறவென் மன்னோ' (கிட்கிந்தா. 617). இச் செய்யுட்கு, சுக்கிரீவன் கூற்று நன்று என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. நிற்ப.
2. புன்பகை நாட்டும்; யானோ; பகை யொருவன்.
3. தீர்ந்தென்னாவி.
4. உன்பகை யுனக்கே; உழல; உழலுகின்றேன். 40

874. செம்புக்குஞ் சிவந்த செங்கட் டிசைநிலைக் களிற்றின் சீற்றக்
கொம்புக்குங் குறைந்த துண்டே யென்னுடைக் [குரக்குப் புன்றோள்
அம்புக்கு முன்னஞ் சென்று னரும்பகை முடிப்ப லென்று
வெம்புற்ற மனமும் யானுந் தீதின்றி மீள வந்தேன்.

'செம்புக்கும் சிவந்த - தாம்பிரத்தைக் காட்டிலும் சிவந்த, செங்கண் திசை நிலைகளிற்றின் சீற்றம் கொம்புக்கும் - சிவந்த விழிகளையுடைய திக்குகளில் நின்றுள்ள யானைகளின் சினத்துடன் பாய்ந்த தந்தங்கட்கும், என்னுடை புன் குரக்கு தோள் குறைந்த துண்டே - என்னுடைய புல்லிய குரங்குத்தோள் குறைந்து விட்டதே; அம்புக்கு முன்னம் சென்று - (உம்முடைய) அம்பிற்கு முன்னர்ச் சென்று, உன் அரும்பகை முடிப்பல் என்று - உமது (தீர்ப்பதற்கு) அரிய பகைவனை ஒழிப்பேன் என்று (கூறி), வெம் புற்ற மனமும் யானும் - புழுங்கிய உள்ளமும் யானும், தீது இன்றி மீள வந்தேன் - எவ்விதக் கெடுதியுமின்றித் திரும்பி வந்தேன்.

திக் விஜய காலத்தில் இராவணன் திசைக்களிற்றுடன் எதிர்க்க, அந்த யானைகளின் மருப்புக்கள் அவன் மார்பிற் பரய்ந் தன; தன் கைக்குத்தோ இராவணனை ஒன்றும் செய்ய வில்லை யாகலின், அந்தக் கொம்பின் ஆற்றலுக்குத் தன் ஆற்றல் குறைந்ததே என்று சுக்கிரீவன் அங்கலாய்த்தான் என்க. சினத்தாற் கண்கள் மிக்குச் சிவந்திருந்தமைபற்றிச் செம்புக்கும் சிவந்த செங்கண் எனப்பட்டது. செம்புக்கும்: உருபு மயக்கம்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'செம்பு காட்டிய கண்ணிணை' (ஆரணிய. 506); 'கண்கடையிற் காய்ப் புண்ட செம்பிற் றேன்ற' (சுந்தர. 999); சிவந்த செம் - சிவப்பு மிகுதியைக் காட்டி நின்றது. திசைநிலைக் களிற்றின் சிற்றக் கொம்பு; சுந்தர. 303, 312; 'வாரணம் பொருத மார்பும்' (யுத்த. கும்ப. 1): 'திக்கின் மாவெலாம் தொலைத்து' (ஆரணிய. 258); பேர்ந்தாசைக் கரியிரியப் புருவம் பேர்த்தோய்' (யுத்த. இராவணன் வதை: 221); 'பார்மகளைத் தழுவிணையே திசையானைப் பணையிறுத்த பணைத்த மார்பால்' (யுத்த. இராவணன்வதை. 226); 'தேவர்க்கும் திசைக்கரிக்கும்..................வலியானுக்கு' (யுத்த. இராவணன்வதை. 242); குறைந்த துண்டே என்பதை வினவாக ஆக்கலுமாம். தோள் இங்கே கையெனும் பொருளது; 'தோளுற் றெர் தெய்வம்' (சீவக. பதிகம். 10); 'தாண் முதல் சார்ந்து தோண்முதற் றேழனை' (பெருங். 2 : 13). தாவிச் சென்றது இராமன் அம்புக்கு முன் எனினும், செயலளவில் ஒன்றுமின்றுயிற்று என்றான். ஆசிரியர் உவமைகள் கூறும்போது காப்பியத் தலைவனது சொற் செயல்களையே எடுத்துரைப்பர்; புருடோத்தமனுன இராமபிரானது அச் சொற் செயல்களைக் காட்டிலும் உயர்ந்தன ஒன்றுமின்மையின்; இங்கு அம்புக்கு முன் என்றது இராமபிரான் அம்பின் முன் என்க. 'வீரன் வெஞ்சிலையிற் கோத்த வம்பென விசையிற் போனான்' (யுத்த. 921); 'மராமரத் தூடுசெல் அம்பு போன்றனன்' (கிட்கிந்தா. 564); 'தன்துணைத் தமையன் றனி வாளி யிற்சென்று' (கிட்கிந்தா. 567); 'இராம னெய்ததோர், பகழியின் செலவென அநுமன்' (சுந்தர. 155); 'புக்கு நீங்கின னிராகவன் சரமெனப் புகழோன்' (சுந்தர. 239) 'அம்பின் முன் செலு மனத்திற்கு முன்செலும் அநுமன்' (யுத்த. முதற்போர். 232). வெம்புற்ற மனமும் யானும் உயர்திணையும் அஃறிணையும் கூடி உயர்திணை முடிவுபெற்றது. இங்கு இழிவு பற்றி வந்ததென்க.

பி - ம். 2. குறைந்த வன்றே.

3. அம்புக்கு முன்பு; பகை யறுப்பே னென்ற, அறுப்பேனென்று.

4. நிநிலேன்; மீளவல்லேன்.



875. நூல்வலி காட்டுஞ் சிந்தை நும்பெருந் தூதன் வெம்போர்
வேல்வலி காட்டி னர்க்கும் வில்வலி காட்டி னர்க்கும்
வால்வலி காட்டிப் போந்த வளநகர் புக்கு மற்றென்
கால்வலி காட்டிப் போந்தேன் கைவலிக் கவதி யுண்டோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'நூல் வலி காட்டும் சிந்தை - (தான் கற்றுத் தேர்ந்த) ஐந்திர வியாகரணத்தின் சிறப்பைக் காட்டக்கூடிய ஆராய்ச்சி மிக்க, நும்பெரு தூதன் - உங்களது பெருமை சான்ற தூதுவனாகிய அநுமன், வெம் போர் - (தன் அரக்கர்களுடன் நிகழ்த்திய) கடிய பேரரில், வேல்வலி காட்டினார்க்கும் - (தமது) வேலின் வன்மையைக் காட்டினவர்க்கும், வில்வலி காட்டினார்க்கும் - வில்லின் ஆற்றலைக் காட்டினவர்க்கும், (மாருதத் தன்) வால் வலி காட்டி போந்த - வாலின் திறமையைக் காட்டி வந்த, வளம் நகர் புக்கு - வளமை மிக்க நகராகிய இலங்கையிற் புகுந்து, என் கால் வலி காட்டி போந்தேன் - என்னுடைய (ஓட்டத்தில்) கால் வலிமையைக் காண்பித்து வந்தேன், கை வலிக்கு அவதி உண்டோ - என்று கை வலிமைக்கு ஓர் எல்லை யுளதோ?' மற்று : அசை.

வில் வாள் முதலான போர்க் கருவிகளைக்கொண்டு தன்னை எதிர்த்த அரக்கர்களை, அநுமன் தன் வாலினாற் கட்டி யீர்த்த தன்றி, அந்த வாலினைக் கொண்டே அந்நகரம் எரியுண்ணுமாறு செய்து தன் வாலின் வலிமையை விளக்கிக் காட்டினான்; அதற்கு எதிரிடையாக யாவரும் ஏளனம் செய்யுமாறு, அந்த நகரத்திலேயே புறங்காட்டி ஓடுவதில் என் கால்களுக்குள்ள வன்மையை நான் காட்டினேனே யன்றி, புயவலியைக் காட்டமாட்டாதவனாயினேன் என்று சுக்கிரீவன் வருந்தினன் என்க. சிந்தை - சிந்தித்துச் செய்யப்படும் ஆராய்ச்சிக்கு இலக்கணை, நூல்வலி காட்டும் என்பதற்கு, நூலாராய்ச்சியைத் தனது சொல்வன்மையைக் கொண்டு காட்டும் திறலோன் எனினும் ஒன்றும், 'இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற, துணர விரித்துரையா தார்' (குறள். 650) என்றது இங்குக் காணத்தகும். மற்று : வினைமாற்று. கைவலிக்கவதி யில்லை என்பது பிற குறிப்பு, இச்செய்யுள் சொல்லழகு பொருளழ காற் சிறந்து விளங்குவது ஒன்று. ஆசிரியரின் முயற்சியின் றிப் பாடப் பெற்ற செய்யுட்களில் இஃது ஒன்று எனலாம், (ஒப்பு): 'பேடிப்போர் வல்லரக்கர்' (ஆரணிய. 341); 'கூலத்தா ருலகமெல் லாம்' (ஆரணிய. 657); 'இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம் (பால. அகலிகை. 82) போல்வன காண்க. வானரத்துக்கு, வால், கால் கை என்பன முப்படைகளாம்.

பி - ம். 1. நுன்; வன்போர்.

2. காட்டு வார்க்கும்.

4. காட்டி மீண்டேன், மிட்டேன், மீண்ட.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## அப்பொழுது வீடணன் சுக்கிரீவனை வியந்து கூறல்

876. இன்னன பலவும் பன்னி யிறைஞ்சிய முடிய னுகி
மன்னவர் மன்னன் முன்னர் வானர மன்னன் நிற்ப
அன்னவன் றன்னை நோக்கி யாழியா னறிவ தாக
மின்னென விளங்கும் பைம்பூண் வீடணன் விளம்ப
[லுற்றுன்.

இன்னன பலவும் பன்னி - இவ்வாருன பலவற்றைச் சொல்லி, இறைஞ்சிய முடியன் ஆகி - வணங்கிய சிரத்தை உடையன் ஆகி, மன்னவர் மன்னன் முன்னர்-அரசர்க்கரசனுன இராமபிரான் முன்பு, வாநர மன்னன் நிற்ப - வாநர அரசனுன சுக்கிரீவன் நிற்கையில், அன்னவன் தன்னை நோக்கி - அந்தச் சுக்கிரீவனைப் பார்த்து, ஆழியான் அறிவதாக - இராமபிரான் அறியும் வண்ணம், மின் என விளங்கும் பைம்பூண் - மின்னல்போன்று ஒளிசெய்கின்ற அணிகள் அணிந்த, வீடணன் விளம்பல் உற்றுன் - வீடணன் கூறத்தொடங்கினுன்.

இன்னன என்பது மேலே 40 முதல் 43 வரை கூறப்பட்டவை. இறைஞ்சிய முடியான்: இங்கு முடிவணங்கியது வணக்கத்துடன் நாணம்பற்றியும் ஆம். அடித்தல மதனிற் சூட்டித் தொழுதயல் நாணி நின்றுன்' (யுத்த. 867) என்றது காண்க. இராமபிரானது உயர்வும் அதற்கு ஒருபடி தாழ்ந்த சுக்கிரீவன் நிலையும் மன்னவர் மன்னன், மன்னன் என்ற சொற்களால் குறிக்கப்பெற்றன. ஆழி யான்: திகிரிப்படையை உடையவன், தானுன நிலையில் பாற்கடலில் பள்ளிகொள்ளும் திருமாலுமாம்; கிட்கிந்தா. 72, 358, 429; சுந்தர. 400, 1257; 'ஆழியான் அவனை நோக்கி' (யுத்த. 445). பைம் பூண்: இராமபிரானைச் சரணடைய வரும்போதில் வீடணன் அணி கள் அணிந்ததாகக் கூறப்பெறவில்லை; ஆயினும், வீரர்க்கின்றி யமையாத கழல்மட்டும் அணிந்திருந்தான் என்பது 'அறைகழல் வீடணன்' (யுத்த. 339) என்பதுகொண்டு உணரலாம்.

பி - ம். 1. பலவும் சொல்லி; இறங்கிய; முடியன் நாணி.
3. அழகனை நோக்கி யாழி.
4. வீடணா விதனைச் சொன்னுன். 43

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


877. வாங்கிய மணிக ளன்னான் தலைமிசை மௌலி மேலே
ஓங்கிய வல்ல வோமற் றினியப்பா லுயர்ந்த துண்டோ
தீங்கவன் சிரத்தின் மேலு முயிரினுஞ் சீரி தம்மா
வீங்கிய புகழை யெல்லாம் வேரொடும் வாங்கி விட்டாய்.

(வீடணன் சுக்கிரீவனை நோக்கி), 'வாங்கிய மணிகள் - நீ பறித்துவந்த மகுடமணிகள், அன்னான் - அந்த இராவண னுடைய, தலைமிசை மௌலி மேலே - தலைமேல் உள்ள மகுடத்தி னிடத்து, ஓங்கிய அல்லவோ - உயர்ந்து ஒளிசெய்தன அல்லவோ? இனி அப்பால் உயர்ந்த மற்று உண்டோ - இனி இவற்றின் மேலும் உயர்வான பொருள் வேறுள்ளதோ? தீங்கவன் சிரத்தின் மேலும் - தீமையே மிகவுடையவனான இராவணனுடைய தலையைப் பார்க்கிலும், உயிரினும் - அவன் உயிரைப் பார்க்கிலும், சீரிது - சிறப்புள்ளனவாகும் அவை; (நீ அந்த மணிகளைப்பறித்து வந்ததனால்), வீங்கிய புகழை எல்லாம் - அந்த அரக்கனது மிக்க புகழையெல்லாம், வேரொடும் வாங்கி விட்டாய் - வேருடன் களைந் தவனாக ஆயினை. அம்மா - வியப்பிடைச்சொல்.

நீ அரக்கனது தலைகளைப்பறித்து வரவில்லையேயென்று கவலை யுறுகின்றனை. ஆயினும் அவனது மகுட மணிகளைப் பிடுங்கி வந்தது அவனது உயிரையே கவர்ந்ததைக்காட்டிலும் மேலானது என்றான் வீடணன். வாங்கிய மணிகள்; 'மணிகளை வலியால் வாங்கி' (யுத்த. 866) என்று முன்னர் வந்ததும் காண்க. வீங்கிய புகழை யெல்லாம் வேரொடும் வாங்குதல்; (ஒப்பு): 'வேரொடு மமரர் தம்புகழ் விழுங்கினான்' (சுந்தர. 1115); 'தேவர் மெய்ப் புகழ் தேய்த்தவன்' (யுத்த. மூலபல. 3); சுந்தர. 992-ம் காண்க. 'மரபி னோர் புகழை யெல்லா முன்புக ழாக்கிக் கொண்டாய்' (அயோத்தி. குகப். 36).

பி - ம். 3. நீங்கினன், நீங்கிவன்.
4. பறித்து விட்டாய், வாங்கி விட்டான்.

44

878. பாரகஞ் சுமந்த பாம்பின் பணமணி பறிக்க வேண்டின்
வார்கழற் காலி னாலே வவ்வவல் லவனை முன்னாத்
தார்கெழு மௌலி பத்தின் றனிமணி வலிதில் தந்த
வீரதை விடைவ லோற்கும் முடியுமோ வேறு முண்டோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(இன்னும்), 'பாரகம் சுமந்த பாம்பின் - பூமியைத் தாங்கி நிற்கும் சேடனது, பணாமணி பறிக்க வேண்டின் - படத்தின் ஜீவ ரத்தினங்களைக் கைப்பற்ற விரும்பினாலும், வார்கழல் காலினாலே வவ்வ வல்லவனை - (தனது) நீண்ட வீரகண்டை யணிந்த காலி னாலேயே பிடுங்கவல்ல இராவணனுடைய வன்மையை, முன்னா - ஆராயுமிடத்து, தார்கெழு மௌலி பத்தின் - அவனது மாலை புனைந்த பத்து மகுடங்களினுமுள்ள, தனி மணி - ஒப்பற்ற மணி களை, வலிதின் தந்த - வன்மையுடன் பிடுங்கிக் கொணர்ந்த, வீரதை - வீரப்பான்மை, விடைவலோற்கு முடியுமோ - இடபமேறிச் செலுத்தும் சிவபிரானுக்கும் இயலக்கூடியதாகுமோ? வேறும் உண்டோ - இதைக்காட்டிலும் (சிறப்பளிக்கக்கூடியது) வேறு உள்ளதோ? ஓ - எதிர்மறை.

பாரகம் சுமந்த பாம்பு - ஆதிசேடன். பணாமணி - படத்தின் மீதுள்ள நாகரத்தினங்கள்; 'சகச்ர பணாமணி மண்டல மண்டிதே' (வேதம்); நல்லபாம்பின் படத்தில் மணி இருப்பதாக நூல்கள் கூறும். இந்த மணி தவறிவிடின் நாகம் கண்ணொளி யிழந்து இறந்துவிடும் என்றும் கூறுவர்; 'இழந்தமணி புற்றர வெதிர்ந்த தெனல் ஆனாள்' (சுந்தர. 554); மற்றும், அயோத்தி. தைல மாட்டுப். 63; மணி. 7 : 131; சிலப். 13 : 58; சீவக. 1508. 'தார்கெழு மௌலி பத்தின்' இதே தொடர் கும்பகருணன் வதைப் படலம் முதற் செய்யுட்கண்ணும் வந்துள்ளது. வீரதை - வீரம்; 'வீரதை யன்று பேதைமை யாமரோ' (கிட்கிந்தா. 500); சுந்தர. 15, 222 காண்க.

பி - ம். 1. நாகப்; பணாமணிக் குழுவை யெல்லாம்.
2. காலினாலே கல்ல; மன்னா, மன்றே.
3. மகுடமிநில் செறிமணி பறித்துத் தந்த, மவுலி பற்றித் தனிமணி பறித்து; வந்த.
4. வீரமே; விடைவல் லோர்க்கும்; மேலும். 45

879. கருமணி கண்டத் தான்றன்
சென்னியிற் கறைவெண் டிங்கள்
பருமணி வண்ணன் மார்பிற்
செம்மணி பறித்திட் டாலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தருமணி யிமைக்குந் தோளாய்
தசமுகன் முடியில் தைத்த
திருமணி பறித்துத் தந்த
வென்றியே சீரி தன்றே.

'தருமணி இமைக்கும் தோளாய் - பறித்துக்கொணர்ந்த மணிகளாலே ஒளி செய்கின்ற புயங்களை யுடையவனே! கருமணி கண்டத்தான் தன் - நீலமணிபோன்ற கழுத்தினனான சிவபிரானுடைய, சென்னியில் - சிரத்தில் (சூடிய), கறைவெண் திங்கள் - களங்கம் அமையப்பெற்ற வெள்ளிய மதியினைப் (பறித்திட்டாலும்), பருமணி வண்ணன் மார்பில் செம்மணி பறித்திட்டாலும் - பருத்த நீலமணி போன்ற நிறத்தினனான திருமாலின் மார்பினில் அமைந்த சிவந்த கவுத்துவ மணியைக் கைப்பற்றினாலும், (அவற்றை விட) தசமுகன் முடியில் தைத்த - பத்து முகங்களையுடைய இராவணனுடைய மகுடத்தில் பதிக்கப்பெற்ற, திருமணி பறித்து தந்த - சிறந்த மணியை பறித்துத் தந்த, வென்றியே சீரிது அன்றோ - கைப்பற்றிக் கொணர்ந்த வெற்றியே சிறப்புடைய தல்லவோ? ஓகாரம் - வினா.

கருமணி கண்டத்தான்; ஆரணிய. 613, 688. 694; கிட்கிந்தா. 182, 294; சுந்தர. 78. புறநா. 1; 5, 6. சென்னியில் கறை வெண் திங்கள் சூடியது; ஆரணிய. 688; சிவபெருமான் சிரசின் மீ தணிந்தது ஒற்றைக் கலைப்பிறை; ஆகவே அதனிடம் கறை காணப்படாது; ஆயினும் பிறை வளர்ந்த நிலையில் கறைகாணப் படுதலின் கறை வெண்திங்கள் எனப்பட்டது என்க. சிவபிரான் அணிந்த திங்களும், திருமால் மார்பில் அணிந்த கவுத்துவமும்; எளிதில் எடுக்கவோ வைக்கவோ கூடும், ஆனால், இராவணன் மகுட மணிகள் மகுடத்திலேயே நன்கு பதிக்கப்பெற்றவை. ஆகலின் அவற்றைப் பறித்ததன் அருமையும் இங்குச் சுட்டப் பெற்றமை காண்க.

பா - ம். 1. கருமணிச்.
3. முடியிற் கொண்ட.
4. திருமணி பறித்து வந்த; அன்றே; சிறந்த தம்மா, சீர்த்த தன்றே. 47

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


880. தொடிமணி யிமைக்குந் தோளாய்
சொல்லிதின் வேறு முண்டோ
வடிமணி வயிரத் தொள்வாள்
சிவன்வயின் வாங்கிக் கொண்டான்
முடிமணி பறித்திட் டாயோ
அவனினி முடிக்கும் வென்றிக்கு
அடிமணி யிட்டா யன்றே
யரிக்குலத் தரச வென்றான்.

'அரி குலத்து அரச - குரங்குக் குலத்துக்கெல்லாம் அரசனே! தொடி மணி இமைக்கும் தோளாய் - தோள்வளையின் மணிகள் ஒளிவிடுகின்ற தோள்களை யுடையவனே! வடிமணி வயிரத்து ஒள்வாள் - தேர்ந்து எடுத்த மணிகள் பதிக்கப் பெற்ற பிடியுடன் கூடிய ஒள்ளிய சந்திரகாசம் என்னும் வாளினை, சிவன் வயின் வாங்கி கொண்டான் - சிவபிரானிடமிருந்து பெற்றுக்கொண்டவனான இராவணனுடைய, முடிமணி பறித்திட்டாயோ - கிரீடங்களில் இருந்த மணிகளைக் கைப்பற்றினாயோ? (இல்லை), அவன் - அந்த இராமபிரான், இனி முடிக்கும் வென்றிக்கு - இனி அடிகோலவிருக்கின்ற இராவண வதமாகிய) வெற்றிக்கு, அடிமணி இட்டாய் அன்றே - அஸ்திவாரத்திற்கு மணிகளை இட்டனை யல்லவோ? சொல் இதின் வேறும் உண்டோ - புகழ்விளைக்கும் செயல் இதனைக் காட்டிலும் பிறிது ஒன்றுள்ளதோ?' என்றான் - என்று கூறி முடித்தான்.

878 முதல் 881 வீடணன் சுக்கிரீவன் அரிய செயலைப் பாராட்டிக் கூறியவை, முடிமணியைப் பறித்ததில் உள்ள அத்தன்மையை மறுத்து, வெற்றிக்கு அடிமணியிட்டதாகப் பகர்ந்தது அவநுதியணி என்பர். சொல் - சொல் என் ஏவலுமாம். வாள் சிவன்வயின் வாங்கியது; 'நாரி பாகத்தன் வாளுடை தடக்கையன் (ஆரணிய. 851); 'தவத்தரன் தந்த வாளாற் படுத்தனன்' (ஆரணிய. 1004); இராவணன், வீறிய வாளிடை விளைந்ததா மென்றான்; (கிட்கிந்தா. 650); 'முக்கணான் வாளை வாங்கி யுலகொரு மூன்றும் வென்றாய்' (சுந்தர. 991); 'சங்கரன் தந்த வாளும்' (யுத்த. கும்ப. 1); 'வாளுமுள தோதவிட முண்டவன் வழங்கும்' (ஆரணிய. 613);

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'அடிமணியிட்டாய் - முளையிட்டாய்' என்பது பழையவுரை. மனைகள் முதலியன புதிதாகக் கட்டும்போது 'வானம்' பறித்து அத்திவாரப் பள்ளத்தில் நவமணிகளைப் பரப்புவது ஓர் பண்டை வழக்கு என்பது காண்க.

பி - ம். 1. சொல்லினி.

2. வயிர வெவ்வாள், வயிரவொள்வாள் ; சிவன்கையில், சிவனிடை.

3. இவனினி.

4. இட்டா யன்றே. 48

## இராமபிரான் சுக்கிரீவன் செயலைக் கொண்டாடுதல்

881. வென்றியன் றென்றும் வென்றி வீரர்க்கு விளம்பத் தக்க
நன்றியன் றென்று மன்று நானில மெயிற்றிற் கொண்ட
பன்றியன் றாகி னீதா ரியற்றுவார் பரிவின் என்னு
இன்றிது வென்றி யென்றென் றிராமனு மிரங்கிச்
[சொன்னான்.

(இவற்றைக்கேட்ட இராமபிரான் சுக்கிரீவனை நோக்கி), 'வென்றி அன்று என்றும் - (தன்னுடைய ஆற்றலுக்கு) இஃது ஓர் வெற்றியன்று என்றும், வென்றி வீரர்க்கு விளம்ப தக்க நன்றி அன்று என்றும் - சுத்தவீரர்கள் சொல்லிக்கொள்ளத்தக்க நன்மையும் இஃது அன்று என்றும் சொல்லுவர் ; ஆயினும் அன்று நானிலம் எயிற்றில் கொண்ட பன்றி அன்று ஆகின் - அக்காலத்துப் பூமியைத் தன் கோரத் தந்தங்களிற்கொண்ட வராகம் அல்லையாகில், ஈது ஆர் பரிவின் இயற்றுவார் - இந்த அரிய செயலை ஆவலுடன் எவர் புரிவார் ?' என்னு - என்று கூறி, இன்று இது வென்றி என்று என்று - இன்றுபெற்ற இந்த வெற்றியே வெற்றி என்று, இராமனும் இரங்கி சொன்னான் - இராம பிரானும் உள்ளக்கனிவுடன் பகர்ந்தான்.

வீரர்கட்குத் தமது எந்த வெற்றியும் முழுத் திருப்தியை அளிப்பதில்லை ; அடைந்த வெற்றி எம்மாத்திரம் என்று எண்ணுவது அவரதியற்கை ; என்றாலும், சுக்கிரீவன் செய்த செயல்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வராக உருவெடுத்த திருமாலாலன்றி, பிறரால் இயற்ற முடியாத தாகும்; ஆகவே சுக்கிரீவன் பெற்ற இந்த வெற்றியே சிறந்த வெற்றியென்று இராமபிரான் பாராட்டினன் என்க. நானிலம் - பூமி; முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நான்கு நிலங்களாலாயது ஆகலின் இப்பெயர் பெற்றது. நானிலம் எயிற்றிற் கொண்ட பன்றி: இரணியாக்கன் என்னும் அசுரன் பூமியைச் சுருட்டிக்கொண்டு பாதலம் சென்றபோது, தேவர்கள் வேண்டுகோளின்படி திருமால் ஓர் பன்றி உருவுடன் சென்று, அவ்வசுரனைக் கொன்று பூமியைத் தன் கொம்பால் ஏந்தி எடுத்து முன்போல் நிலைநிறுத்தினன் என்பது வரலாறு; 'பாரிடந்த வெம் பன்றி' (கிட்கிந்தா. 120); 'பாரிடத்தை யெயிறுகீற விடந்தானை வளைமருப்பின் ஏனமாகி' (பெரியதிரு. 2·3·6).

பி - ம். 1. வென்றியென் றென்று மன்று, வென்றியி னென்றும், வீரர்க்கு விளக்கத்தக்க.

2. நன்றியென் றெல்றும் நன்று.

3. ஆரி தியற்றுவார்; பரியத் தந்த, பரிவைத் தந்த, பரியத் தக்கது.

4. இன்றிவற் காயது: இன்றிவற் கருமை, இன்றிவ னருமை. 49

## சூரியாத்தமனம்

882. தன்றனிப் புதல்வன் வென்றித்
தசமுகன் முடியில் தைத்த
மின்றளிர்த் தனைய பன்மா
மணியினை வெளியிற் கண்டான்
ஒன்றொழித் தொன்று மென்றவ்
வரக்கனுக் கொளிப்பான் போல
வன்றனிக் குன்றுக் கப்பா
லிரவியு மறையப் போனன்.

தன் தனி புதல்வன் - தன்னுடைய ஒப்பற்ற மகன், வென்றி தசமுகன் முடியில் தைத்த - வெற்றிபொருந்திய இராவணனுடைய மகுடங்களிலே பதிக்கப்பெற்றிருந்த, மின் தளிர்த்தனைய - மின்னல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கொழுந்துவிட்டாற்போன்ற, பல் மா மணியினை - பல சிறந்த மணிகளை, வெளியில் கண்டான் - வெளிப்படுத்தி நின்றான்; (அதனால்), 'ஒன்று ஒழித்து ஒன்றும் - ஒன்று ஒழிய ஒன்று பொருந்தும்', என்று - என்று பயந்து, அவ் அரக்கனுக்கு ஒளிப்பான் போல - அந்த இராவணனுக்குப் பயந்து ஒளிப்பவன் போன்று, வல் தனி குன்றுக்கு அப்பால் - வலிய தனிப்பட்ட மலைக்கு அப்புறத்தில், இரவியும் மறைய போனான் - சூரியனும் மறையும்படி சென்றான்.

சுக்கிரீவனாற் பரிபவப்பட்ட இராவணன் தான் அவன் தந்தையாதலின் ஒருவேளை தன்மீதும் பாய்வானோ என்று அஞ்சிச் சூரியன் மறைந்ததாகக் குறிக்கப்பட்டது. ஓர் இயற்கை நிகழ்ச்சியில் கவி தன் குறிப்பினை ஏற்றுக் கூறுதலின் இது தற்குறிப் பேற்றவணி. வெளியிற் காணுதல் - பறித்து வெளிப்படுத்துதல். 'ஒன்றொழித் தொன்றும்' என்றது, மகன்மேல்கொண்ட கோபம் தன்மேல் ஆம் என்று அஞ்சி' என்க.

பி - ம். 1. முடியில் தந்த.

2. மின்றளிர்த் தன்ன; மணிகளை.

3. என்று வரக்கனுக்கு, என்ன வரக்கனை. 50

இதனுடன் மகுடபங்கப் படலம் முற்றும் என்று சில பிரதிகளில் காணப்படுகின்றது.

### இராமபிரான் தன்னிருக்கை சேர்தல்

883. கங்குல்வந் திறுத்த காலைக்
கைவிளக் கெடுப்ப தென்ன
வெங்கழ லரக்கன் மௌலி
மிசைமணி விளக்கஞ் செய்யச்
செங்கதிர்ச் செல்வன் செய்த
வென்றியை நிறையத் தேக்கிப்
பொங்கிய தோளி னானு
மிழிந்துபோ யிருக்கை புக்கான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கங்குல் வந்து இறுத்த காலை - இராக்காலம் வந்து தங்கிய போது, கை விளக்கு எடுப்பது என்ன - கை விளக்கெடுப்பது போன்று, வெம் கழல் அரக்கன் - வெம்மையான வீரகண்டை யணிந்த அரக்கனுடைய, மௌலி மிசைமணி விளக்கம் செய்ய - கிரீடங்களினின்று பறித்துவந்த மணிகளே (இருளகற்றி) வெளிச்சத்தை உண்டுபண்ண, செம் கதிர் செல்வன் செய்த வென்றியை - செந்நிறக் கிரணங்களைக்கொண்ட சூரியன் புதல்வனான சுக்கிரீவன் பெற்ற வெற்றியை, நிறைய தேக்கி - மனத்தில் நிறையும்படி தொகுத்து, பொங்கிய தோளினானும் இழிந்து போய் இருக்கை புக்கான் - (அதனால்) பூரித்த தோள்களை யுடையவனான இராமபிரானும் அவ்விடத்தினின்றும் இறங்கிச் சென்று தன் பாடியை அடைந்தான்.

கங்குல்; ஆரணிய. 14, 551. மணி விளக்கம் செய்தல்: 'மந்தி கண் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும்' (பெரியபு. கண்ணப்ப. 131); 'இருள் பருகு மருமணி' (சீவக. 169)-உம் அதன் உரையும் காண்க. சுக்கிரீவன் பறித்துவந்த இராவணன் முடியின் மணிகள் பத்து விளக்குகளாக என்க. இராமபிரான் மலையிலிருந்து கீழே இழிந்து தன் இருக்கைக்கு எழுந்தருளினன்.

பி - ம். 1. எடுப்பக் காவல், எடுத்த காவல், எடுத்ததாக.
2. அரக்கன் தானை; விளக்கமே.
3. செங்கதிர் மைந்தன்.



இச்செய்யுள் சில சுவடிகளில் இல்லை.

## இராவணனும் தன்னிருக்கை சேர்தல்

884. என்றுனு மினைய தன்மை யெய்தாத விலங்கை வேந்தன்
நின்றார்கள் தேவர் கண்டா ரென்பதோர் நாணம் நீள
அன்றுய மகளிர் நோக்க மாடவர் நோக்க மாகப்
பொன்றுது பொன்றி னான்றன் புகழென விழிந்து போனான்.

என்றுனும் - எந்த நாளிலேயும், இனைய தன்மை எய்தாத இலங்கை வேந்தன் - இத்தகைய அவல நிலைமையை அடைந்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


திராத இலங்கைக் காவலனுகிய இராவணன், நின்ருர்கள் தேவர் கண்டார் - (தானும் சுக்கிரீவனும் செய்த உடற் போரினைக் கண்டு) நின்றவர்களான தேவர்கள் (தான் பரிபவப்பட்டதைக்) கண்டார், என்பதோர் நாணம் நீள - என்பதனுல் எழுந்த வெட்கம் மிக, அன்று - அப்பொழுது, ஆயம் மகளிர் - தோழியர்கள் சூழப்பெற்ற தலைவியரின், நோக்கம் - காதற் பார்வை, ஆடவர் நோக்கம் ஆக - ஆண் மக்கள் பார்க்கின்ற பார்வை போன்று (காதலை எழுப்பா திருக்க), பொன்ருது பொன்றினுன் தன் - உயிர் நீங்காமல் இறந்த வன் போன்றவனுடைய, புகழ் என - புகழானது இழிந்தாற் போன்று, இழிந்து போனுன் - (வானர சேனையைக் காண ஏறி நின்ற இடத்திலிருந்து) இறங்கிச் சென்ருன்.

என்ருனும் இனைய தன்மை யெய்தாத இலங்கை வேந்தன் : (ஒப்பு) : 'காட்டாதன காட்டிய தாதையைக் கண்ணிற் கண்டான்' (யுத்த. நாகபாசப். 3). தன்னுல் அடிப்படுத்தப்பட்ட தேவர்கள் தனது அவல நிலையைக் கண்டு உள்ளே மகிழ்ந்து நிற்பரே என்ப தால் நாணம் நீண்டது என்க; இங்கு நாணம் நீள என்று கூறி, முதல்நாள் போரில் தோற்று மனைக் கேகுபவன், 'வானகு மண்ணு மெல்லாம் நகும் என்றதற்கு நாணுன்' என்று கூறியது என் எனின், ஏளனம் செய்யும் தேவரைத் தான் மீண்டும் ஓர் கால் அடிப்படுத்தக்கூடும் என்ற துணிவினுல் என்க. 'மகளிர் நோக்கம் ஆடவர் நோக்கம் ஆக' (ஒப்பு) : 'தோகை மாதர்கள் மைந்தரிற் ருேன்றினர் சுற்ற' (சுந்தர. 1087). அவன் கீழிறங்கியதற்குப் பிறிது உவமை கூருது, அவன் புகழ் இழிந்ததையே உவமையாகக் கூறிய நயம் காண்க. (ஒப்பு) : 'மென் மருங்குல் போல் வேருன வங்கமு மெலிந்தாள்' (சுந்தர. 332). 'பொன்றினுன் - சாகாமல் செத்த வனுக' என்பது பழையவுரை.

பி - ம். 1. எய்திலா.
3. ஆயர் மகளிர்.



மகுடபங்கப் படலம் முற்றும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## மகுடபங்கப் படலத்தை யொட்டிய வான்மீகக் குறிப்பு:—

இராமபிரானும் சுக்கிரீவனும் சுவேல மலையின்மேல் ஏறி இலங்கை முழுவதையும் கண்ணுற்றனர். அப்போது சுக்கிரீவன் இராவணன் மீது பாய்ந்து, அவ்வரக்கனது தலையின்மேற் ருவி அவனுடைய அழகிய கிரீடத்தைத் தள்ளித் தானும் பூமியிற் குதித்தான். இருவர்க்கும் தொந்தப் போர் நிகழ்ந்தது. அவர்கள் புலியும் சிங்கமும் சண்டையிடுவது போலும் இரண்டு யானைக் குட்டிகள் பொருவது போலும் பொருதனர். வெகு நேரம் போர் புரிந்து விட்டுத் திரும்பி இராமபிரான் பக்கம் வந்து சேர்ந்தான் சுக்கிரீவன். சுக்கிரீவனுடைய பணிவான சொற்களோ இராம பிரான் அவனைப் பாராட்டிய சொற்களோ இம் முதனூலில் இல்லை. **(வான்மீகம். யுத்த. 40-ஆம் சுலோகம்).**

---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 12. அணிவகுப்புப் படலம்

இராமபிரான் இராவணன் என்ற இருவரும் போரின் பொருட்டுத் தம் சேனைகளை அணிவகுத்தமையைக் கூறும் படலம் என விரியும். இதன் பெயர் அணிவகுப்பு நகர் காவற் படலம் என்று சில பிரதிகளில் காணப்படுகின்றது.

## இராவணனின் வருத்தம்

885. மானத்தா னூன்றப் பட்ட மருமத்தான் வதன மெல்லாம்
கூனற்று மரையில் தோன்ற வான்றொடுங் கோயில் புக்கான்
பானத்தா னல்லன் தெய்வப் பாடலா னல்லன் ஆடல்
தானத்தா னல்லன் மெல்லென் சயனத்தா னுரையுந்
[தாரான்.

மானத்தான் ஊன்றப்பட்ட மருமத்தான் - மானத்தால் தாக்கப்பெற்ற மார்பினை யுடையவனான இராவணன், வதனம் எல்லாம் - (தன்) முகங்கள் அனைத்தும், கூனல் தாமரையில் தோன்ற - வாடி வளைந்த தாமரை மலர்போல் தோற்ற, (தலை கவிழ்ந்த வண்ணம்), வான்தொடும் கோயில் புக்கான் - (தான் நின்ற கோபுரத்தினின்று இறங்கி) விண்ணைச் சென்று தீண்டுகின்ற (தன் அரண்மனையில்) நுழைந்தான்; (அவ்வாறு நுழைந்தவன்), பானத்தான் அல்லன் - இனிய மது பானங்களில் ஈடுபட்டானில்லை; தெய்வ பாடலான் அல்லன் - தெய்வத் தன்மையுடன் கூடிய உயர்ந்த பாடல்களிலும் ஈடுபடவில்லை; ஆடல் தானத்தான் அல்லன் - ஆட்டங்கள் நிகழும் நாட்டிய சாலைக்கும் சென்றானில்லை; உரையும் தாரான் - எவருக்கும் பேச்சுக்கிடம் தாராதவனாய், மெல்லென் சயனத்தான் - மெத்தென்ற படுக்கையிற் படுப்பதானான்.

மார்பு - நெஞ்சினைக் குறித்து நின்றது எனக்கொண்டு ஏற்பட்ட பரிபவத்தால் உழன்ற நெஞ்சுடன் கூடியவன் எனினுமாம். மானம் என்பது குறைவு; அவமானத்தைக் குறித்தது. மகுட மணியை ஓர் குரங்கு பறித்ததே யென்ற நினைவால் தோன்றிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மானக்கேடு மார்பினை வேல் துளைத்தது போன்று இலங்கேசனை வருத்தியது. வேலூன்றியது போன்ற என்பார், ஊன்றப்பட்ட, என்றார். வதனம் சாய்ந்ததாகலின் வாடிய கூனல் தாமரை உவமையாக்கப்பட்டது. கோயில் வானளாவிற்று: அந்தக் கோயிலுள், இராவணன் தலை நிமிர்ந்து செல்லாமல் முகம் கோட்டிச் சென்றான் என்ற நயம் காண்க. உள்ளத்துக் கவலை யுண்டாகில் ஒன்றிலும் மனம் செல்லாது; ஆகவே வயிற்றுணவினிடத்தோ செவியுணவாகிய இசைப்பாடலினிடத்தோ, மகிழ்ச்சி விளைக்கும் கூத்தினிடத்தோ அவன் மனம் செல்லவில்லை; ஒருவரிடமும் அவன் பேசவுமில்லை. பசிவந்திடப் பத்தும் பறப்பது போன்றே பருவரல் வந்தபோதும் பறக்கும். மனத்தில் கிளர்ச்சியின்றேல் ஆடல் பாடலைச் சுவைத்தல் இயலாது என்பது காண்க. இராவணன் அவமான நிலை இவ்வாறு விளக்கப்பெற்றது. மானம், வதனம், பானம், தானம், சயனம் வடசொற்கள். இச் செய்யுட்கு (ஒப்பு): 'மாதிரம் எவையும் நோக்கான்' (யுத்த. கும்ப, 3) எனத் தொடங்கும் செய்யுள். இச் செய்யுள் அவலச் சுவைக்கோர் சிறந்த எடுத்துக் காட்டு; இளிவும் இழவும் பற்றி வந்தது. மகுடம் இழந்ததுமட்டும் அன்று, இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலாய வற்றையும் இழந்தமை குறிக்கப்பட்டதுணர்க. 'அபிமானமான வேல் மார்பில் தைக்கக் குவிந்த தாமரை யொத்த முகத்தோடும் இராவணன் போனான்' என்பது பழையவுரை.

பி - ம். 1. ஊல்லப்பட்ட; மருமத்தன்.

2. கூனத்தாமரை, கோவில்.

4. மெல்லச்; சயனத்தால்; உறையுந்தாரான். 1

886. வையெயிற் றாலும் நேரா மணியிழந் திரங்க லாலும்
பையுயிர்த் தயரும் பேழ்வாய்ப் பஃறலைப் பரப்பி னாலும்
மெய்யனைத் திரையின்வேலை மென்மலர்ப் பள்ளி யான
ஐயனைப் பிரிந்து வைகு மனந்தனே யரக்கர் வேந்தன்.

அரக்கர் வேந்தன் - அரக்கர் கோமானாகிய இராவணன், (அப்போது), வை எயிற்றாலும் - கூரிய பற்கள் உடைமையாலும், நேரா - உவமை யற்ற, மணி இழந்து இரங்கலாலும், - நாகரத்தி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ணங்களை இழந்து மனம் தளர்வதாலும், பை உயிர்த்து அயரும் - படங்களுடன் கூடிப் பெருமூச்சு விட்டுத் தளரும், பேழ்வாய் - பிளந்த வாயினையுடைய, பல்தலை பரப்பினாலும் - பல தலைகளின் பரப்பினை யுடைமையாலும், மெய்யனை - உண்மைப் பொருளான வனும், ஐயனை - (யாவர்க்கும்) தலைவனுமான திருமாலை, பிரிந்து வைகும் - பிரிந்து உறைபவனும், திரையின் வேலை மெல்மலர் பள்ளிஆன - அலைகளைக்கொண்ட பாற்கடலிலே இருக்கும் மெல்லிய மலர்ப் படுக்கையுமான, அனந்தனே - ஆதிசேடனே போல்வானானான். ஏகாரம் - தேற்றம்.

மானமிழந்து மன ஏக்கத்துடன் படுத்திருந்த இராவணனுக்கு, திருமாலைப் பிரிந்து வருந்தும் ஆதிசேடன் ஒப்பு: எயிறுடைமை யானும், மணியிழந்ததாலும், பையஉயிர்த்தலாலும், பேழ்வாயும் பல் தலைகளும் உடைமையானும் என்க. திருமால் இராமபிரானாக அவ தரித்து விட்டமையின், சேடனுக்குக் கருமாணிக்கம் என்னும் பெரு மானைப் பிரிய நேர்ந்த நிலை இங்குக் குறிக்கப்பெற்றதென்க. மணி இழத்தல்: இராவணன் தன் மகுட மணியை இழத்தல். வை எயிறு - கூர்மையான பற்கள்; கூரிய விடப் பல்லும், கோரப்பல்லுமாம்; பாம் பின் விடப் பற்களைக் காளி, காளாத்திரி, யமன், யமதூதி என்பர். சீவக. 1288, உரை காண்க. நாகத்திற்குத் தலையில் மணி உண் டென்று நூல்கள் கூறும்; 'இழந்தமணி புற்றர வெதிர்ந்ததென லானாள்' (சுந்தர. 554); மற்றும், அயோத்தி. தைலமாட்டு. 63. மணி. 7 : 131 ; சிலப். 13 : 58 ; சீவக. 1508. பை உயிர்த்தல் - சேடன் படங் கொண்டு சீறுதல்; இராவணனுக்கு ஏற்றும்போது பைய உயிர்த் தல் என்பதன் தொகுத்தல் என்க. பல - தலை; பஃறலை; 'குறில் வழிலள தவ்வணையின் ஆய்தம், ஆகவும் பெறாஉம் அல்வழி யானே' (நன். 228); உவமையணி. அரக்கர் அரசன் அரவரசனை ஒத்தான் எனப்பட்டது. இவ்வுவமையின் சிறப்பு உய்த்துணரத் தக்கது. இராவணனைச் சுந்தர. 1083 இலும், ஆதிசேடனுக்கு உவமித்தது காண்க. சுந்தர, 425-ம காண்க.

பி - ம். 1. தெய்வ, நீடு ; மவரி யிழந்தனனே மானும்.
2. பையனைத் துயிர்க்கும் வெவ் ; பஃறலைப் பாம்பின் பாவில்.
3. மெய்யனைத் திரையின், பள்ளியாக.
4. அனந்தனே போன்றான் மன்றே.

2

இச் செய்யுள் ஐயம் என்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## சார்த்தூலனென்ற ஒற்றனின் வரவு

887. தாயினும் பழகி னூர்க்குந் தன்னிலை தெரிக்க லாகா
மாயவல் லுருவத் தான்முன் வருதலும் வாயில் காப்பான்
சேயவர் சேனை நண்ணிச் செய்திறந் தெரித்தி நீயென்று
ஏயவ னெய்தி னுனென் றரசனை யிறைஞ்சிச் சொன்னுன்.

தாயினும் பழகினுர்க்கும் தன்னிலை தெரிக்கல் ஆகா - தாயைக் காட்டிலும் நெருங்கிப் பழகினவர்க்கும் தன்னுடைய நிலையைத் தெரிந்து கூறமுடியாத, மாயம் வல் உருவத்தான்-மாயையில் வல்ல உருவத்தினையுடைய சார்த்தூலன், முன் வருதலும்-(இராம்பிரான் முதலானவர்களுடைய சேனையைக் கண்ணுற்று இராவணனுக்கு அச்செய்தியை அறிவிக்க ஆசாரவாசலின்) முன்னர் வந்த அளவில், வாயில் காப்பான் -(அவனைக் கண்ட) வாயில் காவலாளன் (இராவணனிடம் சென்று), 'சேயவர் சேனை நண்ணி - அன்னியரான பகைவர் படையினை அணுகி, செய் திறம் நீ தெரித்தி என்று -(அவர்கள்) புரியும் செயல்களை நீ அறிந்து வந்து அறிவிப்பாய்' என்று, ஏயவன் - ஏவப்பட்டவனுன சார்த்தூலன், எய்தினுன் - வந்துள்ளான்,' என்று அரசனை இறைஞ்சி சொன்னுன் - என்று இராவணனை வணங்கி(ச் செய்தியை)க் கூறினுன்.

மாய வல் உருவத்தான் : வந்த ஒற்றன் சார்த்தூலன் என்பது 889-ஆம் பாடலால் விளங்கும். தாய்கொளித்த சூலில்லை என்பது வழக்கு: 'தாயினும் பழகினுர் தமக்குந் தேர்வொணுர்' (பால. தாடகை. 33); 'தாயை யாயினுஞ் சலித்திடு வஞ்சனை தவிரா, மாயையான்' (யுத்த. 493) என வருவன காண்க. மாய வல் உருவம்: வஞ்சனையாகக்கொண்ட உருவத்தையும் மன வன்மையும் சுட்டி நின்றது; 'கடாஅ உருவொடு கண்ணஞ்சா தியாண்டும், உகாஅமை வல்லதே யொற்று'; 'துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந், தென்செயினும் சோர்வில தொற்று' (குறள். 585, 586) என்றமை இங்குக் காணத்தக்கன. ஏயவன் - ஏவப்பட்டவன் ; வினையாலணையும் பெயர். 'இராவணன் சுக்கிரீவன் கையிலே அடியுண்டபின் இராமன் அவ்விடத்திலே என்ன செய்துகொண்டிருக்கிருனென்று விசாரித்து வரச்சொல்லி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இரகசியமாக அனுப்பின சார்த்தூலன் வந்தவுடனே இந்தக்கவி' (பழையவுரை). சேயவர் - தூரத்தார்கள் எனினும் ஆம். இறைஞ்சுதல் - வணங்குதல் ; சீவக. 1704.

1 பி - ம். . பழகினரும்.

2. உருவத் தோன்றல்.

3. சேனை நண்ணூச், நண்ணூர். 3

## சார்த்தூலன் செய்திகூறத் தொடங்குதல்

888. அழையென வெய்திப் பாதம் வணங்கிய வறிஞன் றன்னைப்
பிழையற வறிந்த வெல்லா முரைத்தியென் றரக்கன் பேச
முழையுறு சீய மன்னுன் முகத்தினு லகத்தை நோக்கிக்
குழையுறு நெஞ்சன் பைய வரன்முறை கூற லுற்ருன்.

'அழை என எய்தி - (உள்ளே) அழைப்பாயாக' என்று இராவணன் கூற) சார்த்தூலன் உள்ளே புகுந்து, பாதம் வணங்கிய அறிஞன் தன்னை - திருவடிகளில் வணங்கின நுட்பமான அறிவு சான்ற தூதனை நோக்கி, 'அறிந்த எல்லாம் - நீ ஒற்ருகச் சென்று தெரிந்த செய்திகளனைத்தும், பிழை அற உரைத்தி - தவருமல் பகர்வாயாக' என்று அரக்கன் பேச - என்று அரக்கன் சொல்ல, முழை உறு சீயம் அன்னுன் - குகையிலே பொருந்திய சிங்கத்தை யொத்தவனுன இராவணனுடைய, முகத்தினுல் அகத்தை நோக்கி - முகக் குறிப்பினுல் அவன் மனம் நொந்திருப்பதைத் தூதன் ஓர்ந்து, குழை உறு நெஞ்சன் - ஒடுங்கின உள்ளத்துடன் கூடியவனுய், பைய - மெல்ல, வரன் முறை கூறல் உற்ருன் - தான் தெரிந்து கொண்ட முறைப்படியே பகரத் தொடங்கினுன்.

சார்த்தூலன் கூற்றைப் பின்வரும் மூன்று கவிகளிற் காண்க. முழையுறு சீயம் - குகையில் உள்ள சிங்கம் ; அதனுடைய அணுகற் கரிய தன்மை குறித்து நின்றது ; 'மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும், சீரிய சிங்கம்' (திருப்பாவை. 23) ; சீயம் - சிங்கம். ;பேச, கேட்க என்னும் பொருட்டு. முகத்தினுல் அகத்தை நோக்கல் ; 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்'; 'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்' (குறள். 706) ; உள்ளத்தின் உள்ளதை யுரையின் முந்துற, மெள்ளத்தன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


முகங்களே. விளம்பு மாதலான்' (யுந்த. 394); 'முகத்தின் முதுக் குறைந்த துண்டோ வுவப்பினுங், காயினுந் தான்முந் துறும்' (குறள். 707). சார்த்தூலன் இராவணன் மன நிலையைக் கண்டு மிகுந்த அச்சத்துடன் தான் கூறவேண்டியவற்றைக் கூறலானான் என்க.

பி - ம். 2. பிழையுறுது; அறிந்ததெல்லாம்.

3. முகந்தா னேக்க.

4. குழையுறு மெய்யன். 4

## சார்த்தூலன் கூற்று

889. வீரிய விதியி னெய்திப் பதினெழு வெள்ளத் தோடும்
மாருதி மேலை வாயி லுழிஞைமேல் வருவ தானுன்
ஆரிய னமைந்த வெள்ள மத்தனை யோடும் வெற்றிச்
சூரியன் மைந்தன் றன்னைப் பிரியல னிற்கச் சொன்னுன்.

(சார்த்தூலன் இராவணனை நோக்கி), 'வீரிய - வீரம் செறிந்தவனே!; மாருதி - அநுமன், பதினெழு வெள்ளத்தோடும் - பதினேழு வெள்ளம் படையுடனே, விதியின் எய்தி - முறையாகச் சென்று, மேலை வாயில் - மேற்குப் புறவாசலிலே, உழிஞை மேல் வருவது ஆனுன் - மதிலைச்சூழ்ந்து முற்றுகை செய்வதில் மூண்டு நின்ருன்; ஆரியன் - இராமபிரான், வெற்றி சூரியன் மைந்தன் தன்னை - வெற்றிபொருந்திய சூரியன் புதல்வனான சுக்கிரீவனை நோக்கி, அமைந்த அத்தனை வெள்ளமோடு - பொருந்திய அதே அளவுள்ள பதினேழு வெள்ளமுடன், தன்னை பிரியலன் நிற்க சொன்னுன் - (தன்னைவிட்டு) நீங்காமல் நிற்கும்படி சொன்னுன்.

இச்செய்யுள் முதல் வானரசேனையின் அணிவகுப்பு கூறப்பெறும். மாருதியைப் பின்தொடர்ந்தது பதினேழு வெள்ளம் என்று இங்குக் குறிக்கப்பெற்றது. வானரச்சேனை ஐயஞ்சாயிர கோடியுடன் அநுமன் வந்ததாகத் தானைகாண் படலம் 704 கூறும்; கிட்கிந்தா. 704-உம் பார்க்க. உழிஞை மேல் வருதல்: இவ்வுழிஞையினை மருதத்துப் புறன் என்றும், 'முழு முதல் அரண முற்றலுங் கோடலும், அனைநெறி மரபிற் ருகும்' என்பது அதன் பொதுவிலக்கணம் என்றும், அதன் துறைகள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

நாலிரண்டு என்றும், தொல்காப்பியம் புறத்திணையியல் கூறும். 'வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம், வட்கார் மேல் செல்லுவது வஞ்சியாம்—உட்கா, தெதிரூன்றல் காஞ்சி யெயில் வளைத்தல் நொச்சி, அதுவளைத்த லாகும் உழிஞை' என்றது காண்க. போரின் நிகழும் பல நிகழ்ச்சிகளுக்கும் தனித்தனி மாலை சூடுவது என்பது தமிழ் வழக்கு. உழிஞைமேற் சென்றவர், உழிஞை மலர் சூடினர் என்பது உணரத்தக்கது. இதனை வட மொழி வாணரும் குறிப்பிட்டுள்ளனர் என்பது இங்கே குறிக்கொள் ளத்தக்கது.

பி-ம். 1. விரிய விரைவினெய்தி; வீரனேவ; வீரனி விளம்பக் கேண்மோ; பதினேழு.
2. வாயின் வஞ்சிமேல்.
3. ஆரியன் மைந்தன்; நெற்றி.
4. சூரியன் மகனே. 5

890. அன்றியும் பதினேழ் வெள்ளத்
தரியொடு மரசன் மைந்தன்
தென்றிசை வாயில் செய்யுஞ்
செருவெலாஞ் செய்வ தானான்
ஒன்றுபத் தாறு வெள்ளத்
தரியொடுந் துணைவ ரோடும்
நின்றன னீல னென்பான்
குணதிசை வாயி னெற்றி.

'அன்றியும் - அல்லாமலும், அரசன் மைந்தன் - அரசகுமாரனான அங்கதன், பதினேழ் வெள்ளத்து அரியொடும் - பதினேழு வெள்ளம் குரங்குச் சேனையுடனே; தென்திசை வாயில் - இலங்கையின் தென்திசை வாயிலின்கண், செய்யும் செரு எலாம் செய்வ தானான் - செய்யவேண்டிய போரையெல்லாம் செய்வதாக அமைந்தான்; நீலன் என்பான் - நீலன் என்னும் வானர வீரன், ஒன்று பத்து ஆறு வெள்ளத்து அரியொடும் - பதினேழு வெள்ளம் குரக்குப் படையுடனும், துணைவரோடும் - துணைவரோடும், குண திசை வாயில் நெற்றி நின்றனன் - கீழ்த்திசை வாயில் முன்பு (போருக்கு ஆயத்தமாக) நின்றனன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஒன்று பத்தாறு - பதினேழு. நீலனைப்பற்றிய விவரம் யுத்த. இராவணன் தானை. 26, முதற்போர். 74, 78, 87-இலும் காண்க. இவ்வாறு நான்கு கோபுர வாயில்களிலும் தனித்தனிப் பதினேழு வெள்ளம் சேனைகளுடன் நான்கு மகாவீரர்கள் நிறுத்தப்பெற்றமை கூறப்பட்டது காண்க.

பி - ம். 1. அரியொடும் வாலிமைந்தன்.

3. பத்தேழு வெள்ளக் கவியொடுந், கவிக்குலத்.

4. நீலன் மற்றைக். 6

891. இம்பரி னியைந்த காயுங்
கனியுங்கொண் டிரண்டு வெள்ளம்
வெம்புவெஞ் சேனைக் கெல்லா
முணவுதந் துழல விட்டான்
உம்பியை வாயில் தோறும்
நிலைதெரிந் துணர்த்தச் சொன்னான்
தம்பியுந் தானும் நிற்ப
தாயினன் சமைவீ தென்றான்.

' இரண்டு வெள்ளம் - இரண்டு வெள்ளம் சேனையை, இம்பரின் இயைந்த காயும் கனியும் கொண்டு - இவ்வுலகிலே பொருந்தியுள்ள காய்களையும் பழங்களையும் கொண்டுவந்து, வெம்பு வெம் சேனைக்கு எல்லாம் உணவு தந்து உழல விட்டான் - சினந்து போர் செய்ய வல்ல கொடிய சேனைக்கெல்லாம் உணவு அளிக்குமாறு திரியவிட்டிருக்கின்றான்; உம்பியை - உன் தம்பி வீடணனை, வாயில் தோறும் - வாயில்களில் எல்லாம், நிலை தெரிந்து உணர்த்த சொன்னான் - (அவ்வப்போதுள்ள) நிலவரங்களை ஆராய்ந்து அறிவிக்குமாறு கூறி, தம்பியும் தானும் நிற்பது ஆயினன் - (இராமபிரான்) தம்பி இலக்குவனும் தானும் ஆக (வடதிசை வாயிலில்) நிற்பதானான்; சமைவு ஈது என்றான் - நிகழ்ந்துள்ள ஏற்பாடு இது என்று மொழிந்தான்.

இரண்டு வெள்ளம் குரங்குகள் குரக்குச் சேனைக்கு உணவு தேடும்படி அனுப்பப்பட்டன; ஆக ஏழுவெள்ளம் வானரச்சேனை பிரிக்கப்பெற்ற வகை காண்க. வீடணன் பல வாயில்களிலும் நிகழ்வனவற்றை அறிந்து கூறுமாறு பணிக்கப்பட்டான். தம்பி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யும் தானுமாக இராமபிரான் வடக்கு வாயிற்கண் நின்றான். உலகில் உள்ள பல பாகங்களினின்றும் உணவுப்பொருள் கொண்டுவர என்றதனால், 'இம்பரி னியைந்த' எனப்பட்டது. ஏனைய திக்குகள் குறிக்கப்பெற்றமையின் இராம இலக்குவர் நின்றது எஞ்சிய வடக்கு வாயில் என்பது ஓர்க. 'நிலைதெரிந் துணர்த்தல்: 'வீடணனை, சுக்கிரீவர் கையிலே அடிபட்ட இராவணன் பயந்து மாயாரூபியாக ஒளித்தாலும் அதை நீர் காட்டிக் கொடுமென்று கட்டளையிட்டது பொருள்' என்பது பழையவுரை. இம்மூன்று செய்யுட்களும் சார்த்தூலன் கூற்று.

பி - ம். 2. வெம்பும்; உணவுகொண் டுதவ.
3. உணரச் சொன்னான், உணர்க வென்றான்.
4. சமைவி தென்றான்.

7

### இராவணன் சினந்து கூறல்

892. சார்த்தூல னிதனைச் சொல்லத்
தழல்தெரி தறுக ணானும்
பார்த்தூளி வாடை பொங்கப்
படுவது படுமா பார்த்தி
போர்த்தூளி துடைப்பெ னானை
யவருடற் பொறையி னின்றும்
கோத்தூறுங் குருதி தன்னா
லென்றன னெயிறு தின்னா.

சார்த்தூலன் இதனை சொல்ல - சார்த்தூலன் இந்த வார்த்தைகளைக் கூற, தழல் தெரி தறுகணானும் - அனல் ஒளிர்கின்ற கொடுங் கண்களையுடைய இராவணனும், எயிறு தின்னா - பற்களைக் கடித்துக்கொண்டு, பார்த்து - உக்கிரமாகப் பார்த்து, அவர் - அந்தப் பகைவரின், உடல் பொறையின் நின்றும் - உடல் சுமையிலிருந்தும், கோத்து ஊறும் குருதி தன்னால் - தொடர்ச்சியாகப் பெருக்கெடுத்து வழிகின்ற உதிரத்தால், போர் தூளி நானை துடைப்பென் - போர்த்துகளை நாளையதினமே ஒழித்துக் கட்டுவேன்; ஊளி வாடை பொங்க படுமா - ஊழிக்காற்று மிகுந்து தோன்றும் நிலை தோன்றுவதை, பார்த்தி - நீ பார்ப்பாய்' என்று மொழிந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


படுமா - படுமாறு என்றது ஈறு குறைந்தது. பார்த்தி: இகர ஈற்று ஏவல் ஒருமைமுற்று. பொறை - சுமை அல்லது பாரம்; 'இல்லை நிலக்குப் பொறை' (குறள். 570). துடைப்பல்: அல்லீற்றுத் தன்மை யொருமை வினைமுற்று. ஊழி: ஊளியென நின்றது' ழுகர ளகரப் போலி.

பி - ம். 1. தழல்சொரி.
2. பார்த்துழி வடவை.
4. ஈர்த்தூறுங்; நின்று, நின்ருன்.

8

## இராவணன் மந்திராலோசனை புரிதல்

893. மாவணை நீலக் குன்றத் திளவெயில் வளர்ந்த தென்னத்
தூவணைக் குருதிச் செக்கர்ச் சுவடுறப் பொலிந்த தோளான்
ஏவணை வரிவிற் காமன் கணைபட எரியா நின்ற
பூவணை மாற்றி வேருேர் புனைமணி யிருக்கை புக்கான்.

(இவ்வாறு இராவணன் சார்த்தூலனிடம் கூறிப் பின்னர்), 'மா அணை நீல குன்றத்து - மரங்கள் செறிந்த நீலமலையில், இள வெயில் வளர்ந்தது என்ன - இளம் வெயில் எழுந்தாற்போன்று, தூ அணை குருதி செக்கர் சுவடு உற - ஊன் பொருந்திய உதிரத்தின் செந்நிறச் சுவடுகள் பொருந்த, பொலிந்த தோளான் - விளங்குகின்ற புயங்களை யுடையவனுன இராவணன், ஏவு அணை - ஏவுதல் தொழிலைக்கொண்ட, வரிவில் காமன் - கட்டமைந்த வில்லினையுடைய மன்மதனுடைய, கணை பட - அம்புகள் தீண்டுவதனுற், எரியா நின்ற பூ அணை மாற்றி - வெப்பம் விளைக்கின்ற மலர்ச்சயனத்தை மாற்றி, வேறு ஓர் புனைமணி இருக்கை புக்கான் - மற்றோர் அலங்கரிக்கப்பெற்ற நவமணிகளாலாக்கிய ஓர் இடத்தை அடைந்தான்.

சுக்கிரீவன் கைக்குத்தினுல் உதிரம் நிறைந்து அதனுல் அந்த இராவணனுடைய தோள்கள் நீல மலையில் இளவெயில் வந்தது போலக் காணப்பட்டன என்க. நீலமலை: அவன் தோள்கள்; குருதிச் செக்கர்: இளவெயிற் சிறப்பு; அழகிய உவமை. இது காறும் மன்மதன் வாதைக்குட்பட்டிருந்தவன் இப்பொழுது போருக்கு ஆயத்தமாகின்ருன் ஆகலின் 'வேருேர் புனைமணி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

யிருக்கை' எனப்பட்டது. வேறோர் இருக்கை - மந்திராலோசனை மண்டபம். மணியிருக்கை - சிங்காதனமும் ஆம். ஏ அணை வரிவில் - மலரம்புகள் எய்யப்பெறும் கட்டமைந்த வில். இச்செய்யுளால் இராவணன் தான்பட்ட பரிபவத்தோடு, தான்கொண்ட தகாத காதலையும் விட்டானில்லை என்பது தெரியவருகிறது.

பி - ம். 1. பாவனை, பாவனை : பரந்தது, வந்தது ; மலர்ந்தது.

2. திருந்திச் செக்கர்.

3, சரம்பட ; எரியாய் நின்ற.

4. ஆற்ற வேறோர், மாறி வேறோர் ; காய மாற, மாறி. 9

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

பெய்யொளி பளிங்கிற் செய்த மாளிகை பிறங்கச் சுற்றி
ஐயிரு கோடி வெள்ளம் பேய்க்கணம் காப்ப தங்குச்
செய்மணி தவிசின் மீதாங் கிராவணன் இருந்து தேவர்
மையறு மரபின் வந்த வமைச்சரை வருக வென்றான்.

894. செய்வன முறையி னெண்ணித்
திறந்திற முறையில் தேரும்
மையறு மரபின் வந்த
வமைச்சரை வருக வென்றான்
பொய்யெனப் பளிங்கி னாய
விருக்கையின் புறத்தைச் சுற்றி
ஐயிரண் டாய கோடிப்
பேய்க்கணங் காப்ப வாக்கி.

பொய் என - (கட்டிடமில்லாத) வெற்றிடம் என்று புலப்படும் படி, பளிங்கின் ஆய இருக்கையின் - பளிங்கினாலமைக்கப்பட்ட (அந்த) இருப்பிடத்தின், புறத்தை சுற்றி - பக்கத்தைச் சூழ்ந்து, ஐயிரண்டு ஆய கோடி பேய்க்கணம் காப்ப ஆக்கி - பத்துக்கோடிப் பேய்க்கணங்களைக் காவல்புரியுமாறு திட்டம்செய்து (பின்னர்), செய்வன முறையின் எண்ணி - செய்யவேண்டுவனவற்றை முறைப்படி ஆராய்ந்து, திறம் திறம் முறையில் தேரும் - பகுதி பகுதியாகக் கிரமப்படி எண்ணவல்ல, மையறு மரபின் வந்த அமைச்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சரை வருக என்றான் - எவ்விதமான குற்றமும் இல்லாத மந்திரிமார்களை '(அங்கு) வருக' என்று (பணியாட்களை) அனுப்பினான்.

முதலிரண்டடிகட்கு (ஒப்பு): அயோத். மந்திரப். 6—9 செய்யுட்களும், திருக்குறள் அமைச்சு என்ற அதிகாரமும் காண்க. பளிங்கின் பண்பினால் அது பதித்த இடம் வெற்றிடம்போன்று தோன்றுமாகலின் பொய்யெனப்பட்டது. இருக்கை - ஆசனமும் ஆம். ஆக்கி, வருகவென்றான் என்றியைக்க.

1. உணர்விற்றேர.

3. பொதுவினின், பொதுவினிற்.

4. காப்பதாக்கி. 10

895. அளந்தறி வரிய ராய வமைச்சரை யடங்க நோக்கி
வளைந்தது குரங்கின் சேனை வாயில்க டோறும் வந்து
விளைந்தது பெரும்போ ரென்ன விட்டது விடாது நம்மை
உளைந்தனம் என்ன வெண்ணி யென்செயற் குரிய
[வென்றான்.

(அவ்வாறு அமைச்சர் வந்தவுடனே), அளந்து அறிவு அரியர் ஆய அமைச்சரை அடங்க நோக்கி - அளந்து காண முடியாதபடி மிகவும் பலவாகிய மந்திரிமார்கள் அனைவரையும் முழுதும் பார்த்து, 'வாயில்கள் தோறும் வந்து குரங்கின் சேனை வளைந்தது - எல்லா வாயில்களிலும் குரங்குச்சேனை சூழ்ந்து கொண்டது; பெரும் போர் என்ன விளைந்தது விட்டது - பெரிய யுத்தம் விளைந்தது என்னுமாறு வந்துவிட்டது, நம்மை விடாது - இனி வந்துவிட்டதான இப்போர் நம்மைவிடாது; உளைந்தனம் - (நாம்) மனம் நொந்துள்ளோம்; என்ன எண்ணி என் செயற்கு உரிய - (இந்நிலையில்) யாம் யாது நினைந்து என்ன செய்வதற்குரியோம்' என்றான் - என்று கேட்டான்.

அறிவு அளப்பதற்கு அரியராய என்றும் பொருள் கொள்ளலாம். அடங்க நோக்கி - முற்றும் பார்த்து; 'வயலடங்கக் கரும்பு' (ஈடு. 8:9:4) வந்துவிட்டது என்றும், நம்மை விடாது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



என்றும் இயைத்துப் பொருள் கொள்க. வளைந்தது விளைந்தது என இறப்பினுற் கூறியது விரைவும் தெளிவும்பற்றி என்க; (நன். பொது. 33).

பி-ம். 1. அளந்தறி வறியவல்ல, அளத்தறி வரியவந்த, அளந்தறி வறியவந்த.
2. என்று.
3. உளைந்தனர், இளைந்தனம்; உரியது. 11

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

இறைவன்மற் றிதனைக்கூற வெறுழ்வலி யமைச்சர் [பொங்கிப்
பிறைமுடிப் பரம னேடும் பெருவரை யெடுத்த மேலோய்
உறுசமர்க் கெம்மைக் கூவி யேவிடா தொழிந்தா யாமும்
சிறுதொழிற் குரங்க தென்ற திறத்தினும் தாழ்த்த [தென்றார்.

## நிகும்பன் ஏச்சுமொழி

896. எழுபது வெள்ளத் துற்ற குரக்கின மெயிலை முற்றும்
தழுவின வென்று செய்யத் தக்கது சமைதி போலாம்
அழுவநீர் வேலை யன்ன வாயிர வெள்ள மன்றே
உழிஞையைத் துடைக்க நொச்சி யுச்சியிற் கொண்ட [துன்னூர்.

(அப்பொழுது நிகும்பன் இராவணனை நோக்கி), 'எழுபது வெள்ளத்து உற்ற குரக்கினம் - எழுபது வெள்ளம் என்று கணக்கிடப்பட்ட குரங்குத்தொகுதிகள், எயிலை - நம் நகரத்தின் மதில்களை, முற்றும் - முழுவதும், தழுவின - சூழ்ந்து நின்றன; என்று - என்று, செய்ய தக்கது சமைதி போலாம் - புரியக்கூடியது குறித்து மனமழிவாய்போலும்; உழிஞையை - நமது பகைவர் சூடிய மதில்முற்றுகைக்குரிய உழிஞைப் பூக்களை, துடைக்க - அழித்தற்கு, அழுவம் நீர் வேலை அன்ன உன் ஊர் - பரந்த நீர் நிறைந்த கடல்போன்ற உனக்குரிய இலங்கைப்படை, உச்சியில் நொச்சி கொண்டது - தலையில் மதில் காத்தற்குரிய நொச்சிப்பூவைத் தலையிற் கொண்டவாய் உள்ளது, ஆயிரம் வெள்ளம் அன்றே - ஆயிரம் வெள்ளம் அன்றோ?

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஆயிரம் வெள்ளம் அரக்கர் சேனைக்குமுன் எழுபது வெள்ளம் குரக்குச்சேனையால் யாது செய்யமுடியும் என்றான் என்க. குரக்குச் சேனை எழுபது வெள்ளம் என்பது இந்நூற்கண் பல இடங் களிலும் குறிக்கப்பெற்றுள்ளது; 'எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன' (சுந்தர. 520); 'வெள்ள மேழு பத்துளதால்' (சுந்தர. 603). உழிஞை - எயில் வளைக்கும்போது சூடும் மாலை. நொச்சி: பகைவர்க்கு எதிரூன்றி மதிலைக் காப்போர் புனைவது. போலாம் - ஒப்பில் போலி. அழுவம் - நீர்ப்பரப்பு. உழிஞை சூடி மதிலை வளைப்பாரை எதிர்க்க நொச்சி சூடியது இங்குக் குறிக்கப் பட்டது என்க. நொச்சி - மதில். 'செய்யத் தக்கது சமைதி போலாம் - அதற்கான போர்புரிய உத்யோகப்படு என்றார்' என்பது பழையவுரை. இச்செய்யுள் ஐயம் என்பது ஐயர் அவர்கள் குறிப்பு. நிகும்பன்: (அதிகாயன். 16); இவன் அங்கதனுடன் பொருததும், மாருதியினால் கொல்லப்பட்டதும் (யுத்த. அதிகாயன். 248—251)-ல் காண்க. ஊர் என்பது ஊர்க்கண் உள்ள படைக்கு ஆகி வந்தது.

பி - ம். 1. குரங்கினம்.

2. சமைதும், சமைத்தி.

3. வேலை யென்னது; என்றே.

4. தொடக்க நோக்கி னுச்சிகை, தொடக்க நோக்கி நொச்சியிற். 12

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

அமைச்சர்மற் றிதனைக் கூறி யரசநீ விடைதந் தீமோ
இமைப்பிடைச் சென்று வந்த குரங்கினப் படையை [யெல்லாம்
கமைப்பறக் கடிது கொன்றே களைகுவம் என்ற போதில்
சுமைத்தட வரைத்தோட் கும்ப கருணன்சேய் நிகும்பன் [சொல்வான்.

897. எழுமழு தண்டு வேல்வா
ளிலைநெடுஞ் சூல மாதி
முழுமுதற் படைக ளேந்தி
யிராக்கதர் முனைந்த போது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தொழுதுதம் படைகள் கைவிட்
டோடுவார் சுரர்க ளென்னின்
விழுமிது குரங்கு வந்து
வெறுங்கையாற் கொள்ளும் வென்றி.

(மேலும்), 'எழு மழு தண்டு வேல் வாள் - கணையமரமும் எரியீட்டியும் கதையும் வேலும் வாளும், இலை நெடும் சூலம் ஆதி - இலைத்தொழில் பொருந்திய நீண்ட சூலமும் முதலான, முழு முதல் படைகள் ஏந்தி - சிறந்த தலைமைபெற்ற போர்க்கருவிகளைத் தாங்கிவந்து, இராக்கதர் முனைந்தபோது - (அரக்கர்கள்) போரில் பொருதற்கு முயன்றபோது, சுரர்கள் - தேவர்களே, தம் படைகள் கைவிட்டு - தமது ஆயுதங்களை விட்டுவிட்டு, தொழுது - வணங்கியவண்ணம், ஓடுவார் என்னின் - ஓடுவார்கள் என்றால், குரங்கு வந்து - குரங்குகள் வந்து, வெறும் கையால் - (போர்க் கருவிகளில்லாத) வெறும் கையால், கொள்ளும் வென்றி விழுமிது - அடையும் வெற்றி மிகவும் சிறந்து உள்ளது.

எழு - இருப்புத் தூணுமாம்; 'இலைநெடுஞ் சூலம்' (தேவா). தேவர்களே கண்டு போர்க்கருவிகளைக் களத்திலிட்டு ஓடினர்; அவ்வாறாகவும் குரங்குகள் நம்மை என்ன செய்தல் கூடும் எனப்பட்டது. சுரர்கள்: சுரை என்ற அமுதத்தைப் பருகி அமரராகி நின்றவர். விழுமிது: பிற குறிப்பு. எவ்வித மான போர்க்கருவிகளும் கொள்ளாமையால் வெறுங்கை எனப் பட்டது; 'வெறுங்கை முழம் போடுமோ' என்பது பழமொழி.

பி - ம். 1. வில்வாள்; சூல வென்றி.
2. முனிந்த போது; மலைந்த.
3. படைகள் முன்னிட்டு, போகவிட்டு; என்றால்.
4. விழுமிது வெறுங்கை வந்து குரங்குகள் கொள்ளும் வெற்றி. 13

898. சுதிவ ணிகழ்ச்சி யென்னு வெரிவிழித் திடியி னக்குப்
பூதலத் தடித்த கையன் நிகும்பனென் றொருவன் பொங்க
வேதனைக் காம மந்தோ வேரொடுங் கெடுத்த வென்னு
மாதுலத் தலைவன் பின்னு மன்பின்ஓர் மாற்றஞ் சொன்னான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'இவண் - இங்கு, நிகழ்ச்சி ஈது - நடை பெற வேண்டுவது எதிரியின் சேனையோடு போர் புரிவதே', என்ன - என்று சொல்லி, எரிவிழித்து - நெருப்புப் பொறி யுண்டாகுமாறு விழித்து, இடியின் நக்கு - இடியோசை யுண்டாகும்படி சிரித்து, பூதலத்து அடித்த கையன் - தரையிலே அடித்த கையனாய், நிகும்பன் என்று ஒருவன் - நிகும்பன் என்ற ஓர் அரக்கன், பொங்க - சினம் மிக்கெழ, (அப்போது) மாதுல தலைவன் - தாய் மாமனாகிய மாலி என்னும் தலைவன், 'வேதனை காமம் வேரொடும் கெடுத்தது - மனநோயை உண்டாக்கக்கூடிய காமம் அல்லவா வேரோடும் கெடுத்துவிட்டது, அந்தோ - ஐயோ', என்ன - என்று பகர்ந்து, அன்பின் - அன்பினால், பின்னும் ஓர் மாற்றம் சொன்னான் - பின்னரும் ஒரு வார்த்தை மொழியலானான். இதனைப் பின் இரண்டு கவிகளிற் காண்க. 896 முதல் இதுவரை நிகும்பன் கூறியவை.

நக்கு - சிரித்து, இது வீரத்தெழுந்த வெகுளி நகை. பகைவனைக் குறித்த எள்ளல் நகை யெனினுமாம், தான் பிறரை எண்ணி நக்கது. எரிவிழித்திடியினக்கு என்பதில் மின்னலும் இடியும் பெறப்படுதல் காண்க. 'நகுதற் பொருட்டன்று நட்டல்' (குறள். 784); 'பூதலத் தடித்த கையன்' வெகுளியின் மெய்ப்பாடு. 'சிறு சொற் சொல்லிய சினங்கெழு வேந்தர்' மீது நிகழ்ந்த வெகுளி போன்றது இது, (ஒப்பு): 'கன்றின வுள்ள்மொடு கைபுடைத் திடுதலும்' (சிலப். அரங்கேற்று; பக். 85) 'நிலத்தறைந்தான் கைபிழையா தற்று' (குறள். 37); நிகும்பன்: இவனைக் கும்பகன்னன் சேயென்பர் யுத்த. 491 குறிப்புக் காண்க. இவனை மாலியவான் மகன் என்றும் இராவணனுக்கு மாமன் என்றும் நூல்கள் கூறும். காமத்தால் வரும் கேடு; 'பகை பாவம் அச்சம் பழியென நான்கும், இகவாவா மில்லிறப்பான் கண்' (குறள். 146); 'அறம் புகழ் கேண்மை பெருமையிந் நான்கும், பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா— பிறன்தாரம், நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென், றச்சத்தோ டிந்நாற் பொருள்' (நாலடி. 82); பின்னும் என்று கூறியது, முன் அவன் பல சமயங்களில் இராவணனுக்கு உபதேசம் செய்தமையைச் சுட்டி நின்றது.

பி. ம். 2. ஒருவன் பொங்கி.

3. கெடுத்த தென்ன.

4. வார்த்தை.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


899. புக்கெரி மடுத்திவ் வூரைப் பொடிசெய்து போயி னற்குச்
சக்கர முண்டோ கையில் தனுவுண்டோ வாளி யுண்டோ
இக்கிரி பத்தின் மௌலி யினமணி யடங்கக் கொண்ட
சுக்கிரீ வற்கு முண்டோ சூலமும் வாளும் வேலும்.

'புக்கு - இவ்வூரில் நுழைந்து, எரி மடுத்து - தீயூட்டி, இவ் வூரை பொடி செய்து போயினற்கு - இந்த நகரத்தைத் தூளாக்கிச் சென்ற அநுமனுக்கு, கையில் சக்கரம் உண்டோ - கையில் சக்கரம் உள்ளதோ? தனு உண்டோ வாளி உண்டோ - வில் உண்டோ? அம்பு தான் உண்டோ? இக்கிரி பத்தின் - பத்து மலைகள் போன்ற மௌலி - மகுடங்களின், இனம் மணி அடங்க கொண்ட - தொகுதியான மணிகள் முழுவதும் கைக்கொண்ட, சுக்கிரீவற்கும் உண்டோ சூலமும் வாளும் வேலும் - சுக்கிரீவனுக்கும் சூலமும் வாளும் வேலும் உண்டோ?

பொடி செய்து போனவன்: அநுமன். சக்கரம்; ஆழிப்படை. முன்னர், 'விழுமிது குரங்கு வந்து வெறுங்கையாற் கொள்ளும் வென்றி' என்று நிகும்பன் கூறியதற்கு விடையாக, 'இலங்கையைப் பொடி செய்த அநுமனுக்கும், மகுட மணிகளைப் பறித்துச் சென்ற சுக்கிரீவனுக்கும் கையில் படைகள் ஒன்றும இல்லையே, ஆகலின் போரில் வெற்றிகொள்ளப் படை தேவையில்லை' என்று கூறினன் மாலியவான் என்க. அநுமனையும் சுக்கிரீவனையும், தனுவும் வாளியும் சூலமும் வேலும் என்ன செய்து விடும்? அவர்கள் வெல்லற் கரியர் என்று குறித்ததுமாம். குரங்குகள் கையில் படைக்கல மின்மையை இராவணனும் இகழ்ந்து கூறியதை யுத்த. 1094-ஆம் பாடலிற் காண்க. இன்னும் 'ஒன்ருயுத முடையாயலை' யுத்த. 1123; யுத்த. 897, 900-ம் காண்க.

பி - ம். 1. போயினர்க்குஞ்.
2. தசமுகன் தலைகள் பத்தின், தசமுகன் தலைகளாகும், தசமுகன் தலைகளான.
3. இக்கிரீவத்தின், இக்கிரீடத்தின்; மின்னும்; இமைப்பிற்; இடந்து போன.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


900. தொடைக்கலந் திராமன் வாளி
தோன்றுதன் முன்னர்த் தோன்று
இடைக்கலம் வருதல் செய்யு
முலையினுள் தன்னை யீந்து
படைக்கல முடைய நாமப்
படையிலாப் படையை யீண்ட
அடைக்கலம் புகுவ தல்லால்
இனிப்புகு மரணு முண்டோ.

(ஆகையால்), 'இராமன் வாளி - இராமபிரானது அம்புகள், தொடை கலந்து - வில்லினைத் தொகுத்தலைப் பொருந்தி, தோன்றுதல் முன்னர் - காணப்படுவதற்கு முன்பே, தோன்று - கட்புலனாகாத, இடைக்கு அலம்வருதல் செய்யும் முலையினுள் தன்னை - இடைக்கு வருத்தம் விளைக்கின்ற தனங்களையுடைய சீதாதேவியை, ஈந்து - அவனிடம் கொடுத்துவிட்டு, படைக்கலம் உடைய நாம் - போர்க்கருவிகளையுடைய நாம், அ படை இலா படையை - ஆயுதங்களற்ற (அந்தப் பகைவன்) படையை, ஈண்ட - விரைவாக, அடைக்கலம் புகுவது அல்லால் - புகல் புகுவது அல்லாமல், இனி புகும் அரணும் உண்டோ - இனி(த் தீங்கு வாராமல்) புகற்குரிய அரணும் நமக்கு உள்ளதோ. ஓ - எதிர்மறை.

899, 900 பாடல்கள் மாலியவான் கூற்று. தொடை - தொடுக்கப்படுவது என்று அம்புக்குக் காரணக்குறி. தோன்று இடை: 'நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி' (கலித்.) என்றபடி உத்தம மகளிர் இடைநுட்பமாக இருக்கும் என்ப. 'இல்லை உண்டென்ன நின்ற இடை' (பால: கோலம். 12); 'புடைகொண்டெழு கொங்கையும் அல்குலும் புல்கிநிற்கும், இடைகண்டிலமல்லது எல்லா உருவும் தெரிந்தாம்' (ஆரணிய. 697); தொட்டவெற் குணரலாமற் றுண்டெனும் சொல்லு மில்லை' (கிட்கிந்தா. 757); 'கண்கொளா நுடங்கிடை' (சீவக. 172). படையிலாப் படை - போர்க்கருவிகள் இல்லாத வானரப்படை. இனி புகும் அரண் உண்டோ என்றது, இராமன் வாளிக்கு எங்கு சென்றாலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தப்பமுடியாது என்றபடி. இனி என்றமையால், வானரப்படைகள் நகரைச் சூழ்ந்து நின்ற இந்நிலையில் என்று பொருள் கொள்க.

பி - ம். 1. தொடைக்கலத் திராமன்.

2. அலமரலைச், அலமரவு.

3. படைக்கல முதலயாவும் துறத்துபோய்; ஈண்டி, ஈன்ற.

4. புகுந்தாலன்றி அரக்கருக்; அரணம். 16

## இராவணன் வெகுளியும், மாலியவான் மௌனமும்

901. என்புழி மாலி தன்னை யெரியெழ நோக்கி யென்பால்
வன்பழி தருதி போலாம் வரன்முறை யறியா வார்த்தை
அன்பழி சிந்தை தன்னா லடாதன அறைய லென்றான்
பின்பழி யெய்த நின்றா னவன் பின்னைப் பேச்சுவிட்டான்.

என் புழி - என்று சொன்ன அளவில், மாலி தன்னை - மாலியவானை, பின் பழி எய்த நின்றான் - பின்னர்ப் பழி பெறப் போகின்றவனான இராவணன், எரி எழ நோக்கி - தீயெழும்படி பார்த்து, 'என்பால் வன்பழி தருதி போலாம் - எனக்குக் கொடிய பழிச்சொல்லை விளைப்பாய் போலும், அன்பு அழி சிந்தை தன்னால் - அன்பினால் அழிந்துகிடக்கின்ற நினைவினாலே, வரன் முறை அறியா அடாதன வார்த்தை அறையல் - முறையற்றனவும் தகுதியற்றனவுமான சொற்களைக் கூறாதே', என்றான் - என்று பகர்ந்தான்; அவன் - அந்த மாலியும், பின்னை பேச்சு விட்டான் - பின்பு உரையாடுவதை நிறுத்தினான்.

எரி எழ நோக்கி; (ஒப்பு): நெருப்பெழ 'நிமிர நோக்கி' (யுத்த. கும்ப. 191). வன்பழி - எளிதில் தீர்க்க இயலாத பழிச் சொல்; அதாவது, இராவணன் எதிரிக்குப் பயந்து சரண் புக்குச் சீதையை விட்டுவிட்டான் என்பது. பின்பழி எய்த நின்றான் - இராவணன். அன்பழி சிந்தை என்பதற்கு, இராமன்பால் கொண்ட அன்பினால் அழிந்த சிந்தை என்றும், தன்பால் அன்பு


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அழிந்து பகைமைகொண்ட சிந்தை என்றும் இரு பொருள் கூறலாம். இங்கு இராவணன் வீடணனை இகழ்ந்ததை ஒப்பு நோக்குக ; யுத்த. 307—314.

பா. பே. 1. என்பழி அரசன்றன்னை, அனையான்றன்னை ; அன்பால்.
2. வாய்முறை, வாயிடை புகுதா வார்த்தை.
3. அன்புளி ; அறைந்தி.
4. என்ன வெய்யோன்.

17

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

எரிநெருப் பென்னப் பொங்கி யிராவண னென்னு மேலோன்
உரைசெறி யமைச்ச ரோடும் உறுபடைத் தலைவ ரோடும்
கரிபரி யிரதம் காலாள் கணக்கறும் வெள்ளச் சேனை
மருவுற திசைநான் கும்பர் வகுத்தமர் புரியச் சொன்னான்.

## இராவணன் அணிவகுத்தமை

902\. காட்டிய கால கேயர் கொழுநிணக் கற்றை காலத்
தீட்டிய படைக்கை வீரச் சேனையின் றலைவ தெள்ளி
ஈட்டிய வரக்கர் தானை யிருநூறு வெள்ளங் கொண்டு
கீட்டிசை வாயி னிற்றி நின்பெருங் கிளைக ளோடும்.

(பிறகு இராவணன் சேனைத் தலைவனான பிரகத்தனை நோக்கி), காட்டிய - போரில் தலைகாட்டிய, காலகேயர் - காலகேயரின், கொழு நிண கற்றை கால - கொழுவிய நிணத்தொகுதியை வெளிப் படுத்தும்படி, தீட்டிய படைகை வீர சேனையின் தலைவ - கூர்மை செய்யப்பெற்ற போர்க்கருவிகளை கையிலேந்திய வீரப்படையின் தலைவனே! தெள்ளிஈட்டிய அரக்கர் தானை - ஆராய்ந்து தொகுத்த அரக்கர் சேனை, இருநூறு வெள்ளம் கொண்டு - இருநூறு வெள்ளம் கொண்டு, நின் பெரு கிளைகளோடும் - உன்னுடைய பெரிய சுற்றத்தோடும், கீழ்திசை வாயில் நிற்றி - கிழக்குத்திக்குக் கோட்டை வாசலின்கண் நிற்பாயாக.

890-ஆம் செய்யுளால் கீட்டிசை வாசலை முற்றி நின்றவன் நீலன் என்றறியலாவான் ; அவனுக்கெதிரே இராவணன் தன் சேனைத்தலைவனை நிற்கச் செய்தனன் என்க. காலகேயர் : கடலுக் குள் ஒளிந்திருந்த அரக்கர்கள் ; யுத்த. 573 உரைக் குறிப்புக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



காண்க. அரக்கர் சேனைத்தலைவன்: பிரகத்தன் என்றே முதனூலும் கூறும். இவனைச் சுமாலியின் மகன் என்பர்; இவன் கூறியதை இராவணன் மந்திரப் படலம் 26—32-இல் காண்க. இவன் நீலன் என்ற வானர வீரனுடன் பொருது மடிந்தவன்; யுத்த. 1019—1029-இல் கண்டுணர்க. 'காலகேயர் - நாகலோகத்திலே நின்றும் போர் காட்டியவர்' (பழையவுரை). தெள்ளி ஈட்டிய அரக்கர் தானை: 'கூற்றுடன்று மேல்வரினும் கூடியெதிர் நிற்கும், ஆற்ற லதுவே படை' (குறள். 765); 'அழிவின் றறைபோகா தாகி வழிவந்த, வன்க ணதுவே படை' (குறள். 764); 'மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற, மெனநான்கே ஏமம் படைக்கு' (குறள். 766) என்பன காண்க. கிட்டினைத் தலைச்சென்று; (திருவிளை. திருவாலவாய். 23).

பி - ம். 2. விர சேனையின்.
3. ஈட்டிய பகைஞரோடும், அரக்கர் சேனை; இருநூற்று வெள்ளம்.
4. கிளையி னேடும்.

18

903. காலன்றன் களிப்புத் தீர்த்த மகோதரக் காளையே போய்
மாலொன்று மனத்து வீர மாபெரும் பக்க னேடும்
கூலங்கொள் குரங்கை யெல்லாங் கொல்லுதி வெள்ள மான
நாலைம்ப தோடுஞ் சென்று நமன்றிசை வாயில் நண்ணி.

'காலன் தன் களிப்பு தீர்த்த மகோதர காளையே - யமனுடைய உவகையை ஒழித்த மகோதரன் என்று பேர் தரித்த காளை போன்றவனே! மால் ஒன்றும் மனத்து - போர்ப்பித்துக் கொண்டுள்ள மனத்தினையுடைய, வீர மாபெரும் பக்கனேடும் போய் - வீரனான மகாபாரிசுவனுடன் சென்று, வெள்ளம் ஆன நாலைம்ப தோடும் - இருநூறு வெள்ளம் ஆக அமைத்த சேனையுடனே புறப்பட்டு, நமன் திசை வாயில் சென்று நண்ணி - எமனுக்குரிய திக்காகிய தென்திசை வாயிலைச் சென்றடைந்து, கூலம் கொள் குரங்கை எல்லாம் கொல்லுதி - வால்படைத்த குரங்குகளை எல்லாம் கொன்றொழிப்பாயாக.

தென்றிசை முற்றுகை யிட்டவன் அங்கதன் (890): அவனுக்கெதிரே மகோதரனையும் மகாபார்சுவனையும் இராவணன் நிறுத்தினன் என்க. மகோதரன் யமனுலகு சென்று அவனையும் அழித்தனன் எனப்பட்டது. காளை தமை பற்றிக் காலன்றன் களிப்புத் தீர்த்த எனப்பட்டது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உவமவாகுபெயர். மால் என்றது போர்ப்பித்து. பெரும் பக்கன்; மகோதரனைப்பற்றிய விவரம் யுத்த. 493-ல் காண்க. கும்ப. 35—41 மகோதரன் கூற்று. இவன் ஐயிருகோடி அரக்கருடன் நின்றவன். மகாபார்சுவன்: யுத்த. 496 காண்க. குரங்கிற்கு வால்தான் விசேடம் ஆதலின் கூலம் நொள் குரங்கு எனப்பட்டது. வாலறுப்பது என்ற வழக்கும் காண்க. நமன் திசை வாயில்: தெற்குக் கோட்டை வாயில், பிரமாத்திரப் படலம் 94-97-ஆம் செய்யுட்களில் கூறப்படும் மகோதரன் வேறு; தெற்கு வாயிலைக் காக்கச் சென்ற மகோதரன் வேறு என்றறிக.

பி - ம். 1. நீர்க்கும்; மகோதர காளையே.
2. விரன்.
3. கொல்லுநின், கொல்லுமின்; சேனை வெள்ளம்; வெள்ளங் கொண்ட.

904. ஏற்றமென் சொல்லி னென்பா லிந்திரன் பகைஞ வந்நாள்
காற்றினுக் கரசன் மைந்தன் கடுமைநீ கண்ட தன்றே
நூற்றிரண் டாய வெள்ளம் நுன்பெரும் படைஞர் சுற்ற
மேற்றிசை வாயில் சேர்தி விடிவதன் முன்னம் வீர.

(பிறகு இராவணன் இந்திரசித்தை நோக்கி), இந்திரன் பகைஞ - இந்திரசித்தே! என்பால் ஏற்றம் சொல்லின் என் - என்னிடத்து உன்னுடைய பெருமையைக் கூறுவதால் என்ன பயன்! அ நாள் - அந்தக் காலத்தில், காற்றினுக்கு அரசன் மைந்தன் கடுமை நீ கண்டது அன்றே - வாயுவின் புதல்வனான அநுமனுடைய கடுமையை நீ நேர் முகமாக அறிந்தனை யல்லவோ, வீர - வீரனே, நூற்றிரண்டாய வெள்ளம் - இரண்டு நூறு வெள்ளமான சேனையையும், நுன் பெரு படைஞர் சுற்ற - உனது பெரும் படையினரும் சூழ்ந்து நிற்ப, விடிவதன் முன்னம் - விடிதற்கு முன், மேல் திசை வாயில் சேர்தி - மேற்றிசை வாயிலில் சென்று நிற்பாயாக.

இந்திரன் பகைஞ - இந்திரன் விரோதியான இந்திரஜித்தே! என்பால் ஏற்றம் சொல்லின் என் - (உன்னுடைய உயர்வை) என்னிடம் சொல்லி ஆவது ஏன்? அந்நாள் - அக்காலத்து, காற்றினுக்கு அரசன் மைந்தன் கடுமை நீ கண்டது அன்றே - காற்றின் வேந்தனாய வாயுவின் மகன் அநுமனது கடிய வீரத்தை நீ நேராகக் கண்டறிந்தவன் அல்லவோ? வீர - ஆண்மை மிக்க

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வனே! இரண்டு நூறுய வெள்ளம் நுன்பெரு படைஞர் சுற்ற - இரண்டு நூறு வெள்ளம் சேனையும் உன்னுடைய பெரிய படைத் தலைவரும் சூழ, விடிவதன் முன்னம் - பொழுது விடிவதற்குள், மேல் திசை வாயில் சேர்தி - மேலைத் திக்கு வாயிலில் வந்தடை வாயாக. ஓகாரம் - எதிர்மறை.

889-ஆம் செய்யுளால் மேலை வாயிலை முற்றுகை இட்டவன் அநுமன் என்பது கூறப்பட்டது; அவனை இந்திரசித்து முன்பே அறிந்தமையைக்கூறி அவன்பால் இந்திரசித்தை இராவணன் அனுப்பினன் என்க. இந்திரனை வென்றதன் காரணமாக மேக நாதன் என்ற இராவணன் மகன் இந்திரஜித்தெனப்பட்டான். இவனைப்பற்றிய விவரம் யுத்த. 506-ல் காண்க. காற்றினுக் கரசன் மைந்தன்: 'காலின் மதலை' கிட்கிந்தா. 45, 71, 92, 157. சமீரணன் மகன்; கிட்கிந்தா. 450. மருத்துமகன் கிட்கிந்தா. 862. வாயு குமரன்; சுந்தர. 36, 57, 197, 517, 519. மருத்தின் காதலன் யுத்த. வேலெற்ற. 40 அந்நாள். அநுமனுடன் பொருத அந்த நாள் சுந்தர. 1007 முதல் 1035 வரை பார்க்க. யுத்த. 899, 900, 903 செய்யுட்களிற் காணப் படுவதற்கேற்ப, நூற்றிரண்டு என்பது நூருகிய இரண்டு என்று கொள்ளப்பட்டது. சிலர் நூறும் இரண்டும் என்று உம்மைத் தொகையாகவும் கொள்வர். 'ஏற்றமென் சொல்லின் என்றது, 'அநுமன் வர்த்தமானம் உனக்குச் சொல்ல வேண்டாமே' என்பது பழையவுரை.

பி - ம். 1. ஏற்றமென் சொல்ல; வொள்வாள்; வல்லில்; இந்நாள்.
2. கண்டா யன்றே, கண்டதன்றே.
3. ஏய வெள்ளம்; நும், நுண்.
4. சேர்த்தி.

20

905. இந்நெடுங் கால மெல்லா
மிமையவர்க் கிடுக்கண் செய்தாய்
புன்னெடுங் குரங்கிற் சேறல்
புல்லிது புகழு மன்றால்
அந்நெடு மூலத் தானை
யதனெடு மமைச்ச ரோடுந்
தொன்னெடு நகரி காக்க
விருபாக்க வென்னச் சொன்னன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'விருபாக்க - விருபாக்கனே! இ நெடு காலம் எல்லாம் - இந்த நீண்ட நாள்கள் எல்லாம், இமையவர்க்கு இடுக்கண் செய் தாய் - தேவர்களுக்குத் துன்பம் செய்தனை; புல்நெடு குரங்கின் சேறல் - அற்பமான ஆனால் பெருந்தொகுதியாகவுள்ள குரங்கின் சேனைமீது (போர் புரியச்) போதல், புல்லிது புகழும் அன்று - மிகவும் கேவலம் உனக்குப் புகழ் தருவதாகாது; (ஆதலின்), அ நெடு மூலம் தானை அதனொடும் - அந்தப் பெருமைசான்ற மூலபலத் துடனும், அமைச்சரோடும் - மந்திரி மாருடனும், தொல் நெடு நகரி காக்க - பழமையான பெரிய நகரத்தைக் காவல் புரிக, என்ன சொன்னான் - என்று கட்டளையிட்டான் (இராவணன்). ஆல் - அசை.

இச்செய்யுள் விரூபாக்கனை நகர் காவலுக்கு நியமித்ததைக் கூறியது. குரங்கின்எளிமையும் அதன் தொகுதியின் மிகுதியும் புல்நெடும் என்ற தொடராற் குறிக்கப்பெற்றன. புல்நெடு குரங்கு புல்லிது என்ற சொல் நயம் காண்க. 'மூலத்தானை; மூலபல வதைப் படலத்திற் கூறிய மூலத்தானை வேறு இங்குக் கூறப் பெற்றது வேறு எனக் காண்க. இலங்கையின் பழமையும் பெருமையும் 'தொன்னெடு' என்ற தொடராற் குறிக்கப் பெற்றன. நகரிகாக்க விருபாக்க என்ற இடத்துப் பிராச நயம் காண்க. 'அந்நெடு மூலத்தானை; கோட்டை காவலாக முன்னுள் வைத்தபடை' என்பது பழையவுரை. இங்கு அணிவகுப்பு படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் உள்ளது.

பி - ம். 1. இமையவர்க் கிறுக்கம்.
3. அதனெடு மரசரோடும், வெள்ளத் தோடும்.
4. நகரைக்; விருபாக்க னென்னச்.

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

இம்முறை யாக்கர் கோமான் அணிவகுத் திலங்கை மூதூர்
மும்மதில் நின்ற தானை நிற்கமூ தமைச்ச ரோடும்
விம்முறு சேனை வெள்ளத் தலைவர்க்கு விடையும் நல்கிக்
கம்மெனக் கமழும் வாச மலரணை கருகச் சேர்ந்தான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

906. கடகரி புரவி ஆள்தேர்
கமலத்தோ னுலகுக் கிப்பாற்
புடையுள பொருது கொண்டு
போர்பொரப் பொங்கு கின்ற
இடையிடை மிடைந்த சேனை
யிருநூறு வெள்ளங் கொண்டு
வடதிசை வாயில் காப்பேன்
யானென வகுத்து விட்டான்.

'கமலத்தோன் உலகுக்கு இப்பால் உள புடை - பிரமலோகத்துக்கு இப்புறமுள்ள இடங்களில், பொருது - போர் புரிந்து, கொண்டு, போர் போர பொங்குகின்ற - (மேலும்) போர் செய்தற்கு உள்ளக் கிளர்ச்சி கொள்கின்ற, கடகரி புரவி ஆள்தேர் - மதயானை, குதிரை, காலாள், தேர் என்பவற்றுடன், இடை இடை மிடைந்த சேனை - ஆங்காங்கு நெருங்கியுள்ள சேனை, இருநூறு வெள்ளம் யான் கொண்டு - இருநூறு வெள்ளங்களையும் யான் கொண்டு, வட திசை வாயில் காப்பேன் - இலங்கையின் வடதிசை வாயிலைப் பாதுகாப்பேன்' என வகுத்து விட்டான் - என்று (இவ்வண்ணம்) ஆயிரம் வெள்ளம் சேனையையும் பகுத்து விட்டான்.

இராமபிரானும் இலக்குவனும் நின்ற இடம் வடதிசை வாயிலாகலின், (891) இராவணன் தான் அங்குச் செல்வதாகக் கூறினன் என்க. கடகரி புரவி யாள்தேர் - ரதகஜ துரகபதாதி என்ற வட சொற்றொடர் அழகு பெறத் தமிழிற் சுருக்கிக் கூறப்பட்டிருத்தல் காண்க. ஆள் - காலாள். புடை - பக்கவிடம் என்பதைக் குறிக்கும் ஏழாம் வேற்றுமை 'உருபு, உளபுடை என மாற்றிப் பொருள் கூறப்பட்டது. இச்செய்யுள் சில பிரதிகளில் முன்பின்னாக மாறி யுள்ளது. 902-ம செய்யுள் முதல் இச்செய்யுள் ஈறாக இராவணன் தன் படைகளை அணிவகுத்தமை கூறப்பெற்றது. இவை யாவும் இரவிலே நிகழ்ந்தமை அறிக.

பி - ம். 1. ஆடேர், காற்றேர், காற்பார்;
2. உலகுக் கப்பாற்.
3. புடையன; போர் பெருப்.
4. வகுத்துச் சொன்னான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## இராப்பொழுது விடிதல்

907. கலங்கிய கங்கு லாகி நீங்கிய கற்பங் காணும்
நலங்கிளர் தேவர்க் கேயோ நான்மறை முனிவர்க் கேயோ
பொலங்கெழு சீதைக் கேயோ பொருவலி யிராமற் கேயோ
இலங்கையர் வேந்தற் கேயோ எல்லார்க்குஞ் செய்த
[தின்பம்.

கலங்கிய - கலங்குவதற்குக் காரணமான, கங்குல் ஆகி - இருள் வடிவு கொண்டு, நீங்கிய கற்பம் - அகன்ற கற்பமானது, காணும் - போரினைக் கண்ணுறச் செல்கின்ற, நலம் கிளர் தேவர்க்கேயோ - நன்மை ஒளிர்கின்ற அமரர்க்கு மட்டுமோ, நான் மறை முனிவர்க் கேயோ - நான்கு வேதங்களிலும் வல்ல முனிவர்க்கு மட்டுமோ, பொலம் கெழு சீதைக்கேயோ - அழகுடன் விளங்குகின்ற சீதைக்கு மட்டுமோ, பொருவலி இராமற் கேயோ - போர்வலி மிக்க இராமற்கு மட்டுமோ, இலங்கையர் வேந்தற்கேயோ - இலங்கை யரசனுன வீடணனுக்கு மட்டுமோ, எல்லார்க்கும் இன்பம் செய்தது - எல்லோர்க்கும் இன்பம் விளைத்தது.

கங்குலாகி நீங்கிய கற்பம்; 'ஒரு நாள் எழுநாள் போலும்' 'யாமத் தெல்லை ஓர் யாண்டொத்தும் இறந்ததுபோன்று நீடித்த இருள் புலர்ந்தது; தமக்குக் கதிமோட்சம் பிறந்தது எனத்தேவர் முனிவர்களும், போர் நிகழ்ந்து தனக்கு விடுதலை கிடைக்கும் என்று பிராட்டியும், அரக்கனை ஒழிக்க விடியலை நோக்கி நின்ற இராமபிரானும், தான் கொண்ட கொள்கை நிறைவேறுங் காலம் கிட்டியது என்று வீடணனும் ஒரு சேர இன்பம் எய்தினர். இச்செய்யுள் கவிக்கூற்று. பொலம் கெழு - பொன்போன்று விளங் கும் எனினுமாம், இருள் விடிந்தது நல்லோர் பலர்க்கும் ஒருசேர இன்பம் தந்தது.

பி - ம். 1. கங்குலங்கு நீங்கிய, கங்குலாங்கு நீங்கிய, கங்குல் நீங்கி விடிந்தன.
2. நலங்கெழு.
3. பொரு விறல்.
4. இன்பம்வந் தெய்திற் றென்பார்.



சில பிரதிகளில் இச் செய்யுள் முதல் அங்கதன் தூதுப்படலம் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## சூரியோதய வருணனை

908. அளித்தக வில்லா வாற்ற லமைந்தவன் கொடுமை யஞ்சி
வெளிப்பட லரிதென் றுள்ளம் வேதனை யுழக்கும் வேலை
களித்தவன் களிப்பு நீக்கிக் காப்பவர் தம்மைக் கண்ணுற்
றொளித்தவர் வெளிப்பட் டென்னக் கதிரவ னுதயஞ்
[செய்தான்.

அளிதகவு இல்லா - கருணையாகிய தக்க பண்பு அமையப் பெருதவனாய், ஆற்றல் அமைந்தவன் கொடுமை அஞ்சி - வல்லமை வாய்க்கப்பெற்றவனான இராவணனுடைய கொடுங்கோன்மைக்குப் பயந்து, வெளிப்படல் அரிது என்று - (நாம்) வெளிப்படுதல் அருமை என்று, உள்ளம் - மனத்தில், (குறுநில மன்னர்), வேதனை உழக்கும் வேலை - துன்பம் அநுபவிக்கும் கால், களித்தவன் களிப்பு நீக்கி - செருக்குற்றவனான அக் கொடுங்கோல் மன்னனது கர்வத்தைப் போக்கி, காப்பவர் தம்மை கண்ணுற்று - பாதுகாப்பவரான அரசர்க்கரசனைக் கண்டு, ஒளித்தவர் வெளிப்பட்டு என்ன - (அது காறும்) மறைந்திருந்த அச்சிற்றரசர் வெளிப் புறப்பட்டாற் போன்று, கதிரவன் உதயம் செய்தான் - சூரியன் உதித்தான்.

பொதுவாகவே அரக்கர், 'இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்' (ஆரணிய. 129) எனப்படுதலின், 'அளித்தகவில்லா' எனப்பட்டது; 'இரக்கமி லவரையே துணைக்கொ டேறலால்' (யுத்த. 372) என்பதும் காண்க. இராவணன் கொடுங்கோன்மைக் கஞ்சி அவனது இலங்கை வழியிலும் செல்லாதிருந்த சூரியன், அந்த அரக்கனது செருக்குக்கு உலைவு நிகழவிருப்பதைக் கண்டு, தைரியத்துடன் அந்நகரத்திலும் உதயம் செய்தான் எனப்பட்டது. ஆற்றல் அளித்தகவு அமைந்ததா யிருத்தல் வேண்டும் என்ற நீதியும் தொனிப்பது காண்க. 'உருளுறு தேரினு மிலங்கைமி தோடு மன்றெ' (யுத்த. 430). களிப்பு - செருக்கு என்ற பொருளில் வந்தது. களித்தவன் களிப்பு நீக்கிக் காப்பவர் என்பதில், துஷ்ட நிக்ரக சிஷ்டபரிபாலனம் என்னும் திருமாலின் அருட்செயல் குறிக்கப்பெற்றிருத்தல் காண்க; 'பரித்ராணாய



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சாதூநாம் விநாசாயச துஷ்கிருதாம்' என்ற கீதாச்லோகமும் காணத்தகும். காப்பவர் - இராமபிரான். வெளிப்பட்டது என்ன என்பது வெளிப்பட்டென்ன என நின்றது. இச்செய்யுளில் அமைந்த உவமை நயம் போற்றற்குரியது.

பி - ம். 1. அளித்தகை ; கொடுமைக் கஞ்சி.
2. உள்ளி ; உழக்கும் காலே.
3. களித்தவர் களிப்பு, களித்தவற் களிப்பு ; நீக்க, நீங்க, நோக்கி.
4. வெளிப்பட்டன்ன.

24

## வாநரசேனை இலங்கையின் வாயில்களை வளைத்தல்

909. உளைப்புறு மோத வேலை ஓங்கலை யொடுங்கத் தூர்ப்ப
அளப்பருந் தூளிச் சுண்ண மாசைக ளலைக்கும் பூசல்
இளைப்பருந் தலைவர் முன்னம் ஏவலி னெயிலை முற்றும்
வளைத்தனர் விடியத் தத்தம் வாயில்கள் தோறும் வந்து.

விடிய - பொழுது விடிந்த அளவில், அளப்பரும் தூளி சுண்ணம் - அளவிடற்கியலாத புழுதித் தூள்கள், ஆசைகள் அலைக்கும் - திசைகளை அலைப்பதாலான, உளைப்புறும் ஓத வேலை - ஒலித்தலைக் கொண்ட நீர்ப்பெருக்கினை உடைய ஆழியின், ஓங்கு அலை ஒடுங்க - உயர்ந்து எறியும் அலையோசை அடங்குமாறு, தூர்ப்ப - அடக்க, பூசல் - ஆரவாரம், இளைப்பு அரு தலைவர் முன்னம் - போரில் சளைத்தலில்லாத (வாநரத்) தலைவர் முன்னம், ஏவலின் - ஏவிய கட்டளையின்படி, தம் தம் வாயில்கள் தோறும் வந்து - தங்கள் தங்களுடைய வாயில்கள் தோறும் வந்து, எயிலை முற்றும் வளைத்தனர் - (அந்த இலங்காபுரியின்) மதிலை முற்றுகையிட்டனர்.

சேனைகளின் செலவால் எழுப்பப்பட்ட புழுதி கடலலையின் ஒலியை வெளியேற விடாமல் தம்முன்னேயே அகப்படுத்திக் கொண்டது எனப்பட்டது; உயர்வுநவிற்சியணி. ஓத வேலை; இருபெயரொட்டுமாம். ஓங்கல் - உயர்தல்; அல் ஈற்றுத் தொழிற் பெயர். ஆசை - திக்கு; 'ஆசையின் அளவு மெல்லா வுலகமும்' (யுத்த. 913); 'ஆசைகள் சுமந்தபேரமரி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யானைகள்' (ஆரணிய. 848). உளைப்பு - முழக்கம். இச்செய்யுள் ஐயம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. ஒங்கலை யொடுங்கித் தூர்க்க, ஒங்கலையோடு துன்னி.

2. ஆசைகள் அலைப்பப் ; பூசை.

3. தேவர் ; முன்னே ; ஏயவர்

4. வளைத்தவர் ; வாயிலின் வந்து சார்ந்தார் ; வாயில்கள் வந்து சேர்ந்தார். 25

## இராமபிரான் போர்க்கெழுதல்

910. தந்திர மிலங்கை மூதூர் மதிலினைத் தழுவித் தாவி
அந்தரக் குலமீன் சிந்த வண்டமுங் கிழிய வார்ப்பச்
செந்தனிச் சுடரோன் சேயுந் தம்பியு முன்பு செல்ல
இந்திரன் தொழுது வாழ்த்த விராமனு மெழுந்து சென்றான்.

தந்திரம் - (மதிலை முற்றுகையிட்ட) வானரப் படையானது, இலங்கை மூதூர் மதிலினை தழுவி தாவி - இலங்கை என்னும் பழமையான நகரின் மதிலினை அணைந்து பாய்ந்து, அந்தர குல மீன் சிந்த - வானத்தில் உள்ள கூட்டமாகிய நட்சத்திரங்கள் உதிரும்படியும், அண்டமும் கிழிய - அண்டம் கிழியும்படியும், ஆர்ப்ப - ஆரவாரம் செய்கையில், தனி செ சுடரோன் சேயும் - நிகரற்ற சிவந்த கிரணங்களை யுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவனும, தம்பியும் - இலக்குவனும், முன்பு செல்ல - முன்னே போக, இந்திரன் தொழுது வாழ்த்த - இந்திரன் வணங்கி வாழ்த்தா நிற்க, இராமனும் எழுந்து சென்றான் - இராமபிரானும் எழுந்து போனான்.

தந்திரம் - சேனை, வடசொல்; 'தந்திரக் கடலை நீந்தி' (யுத்த. கும்ப. 129); அந்தரம் - ஆகாயம்; ஆரணிய. 495, 542, 735. இந்திரன் வணங்கி வாழ்த்த, சுக்கிரீவனும் இலக்குவனும் முன் ஏக, இராமபிரான் சென்றான் எனப்பட்டது. தானே மதி முதலியவற்றிற்கு ஒளி வழங்குதலின் தனிச்சுடரோன் எனப்பட்டான். தன் இடரும் வானவரிடரும் தீரப் போகின்ற தாகலின் இந்திரன் வாழ்த்தினன் என்க; 'போயதெம் பொருமை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


லென்னு விந்திர னுவகை பூத்தான்' (பால. திருவவ. 25); 'வெங் கானில் விரதம் பூண்டு, போந்ததுவும் கடைமுறையே புரந்தரனார் பெருந்தவமாய்ப் போயிற்றம்மா' (யுத்த. இராவணன் வதை. 241). இவ்வாறு வானவர் இராமபிரானை வாழ்த்துமிடங்கள் பல இக் காப்பியத்தின்கண் காணலாம். இராமபிரான்வடக்கு வாயிலில் எழுந்தருளினன் என்ப; 913.

பி-ம். 2. அந்நியங் குலமின்; குலுங்க வார்ப்பச்.

3. பின்பு செல்ல.

4. எழுந்து போனன்.



## அரக்கர் சேனையை வளைத்தல்

911. நூற்கடற் புலவ ராலு நுனிப்பரும் வலத்த தாய
வேற்கடற் றானை யான விரிகடல் விழுங்கிற் றேனும்
கார்க்கடல் புறத்த தாகக் கவிக்கடல் வளைந்த காட்சி
பாற்கட லழுவத் துள்ள தொத்ததப் பதகன் மூதூர்.

அ பதகன் மூதூர் - அந்தப் பாதகனான இராவணனுடைய பழைமை மிக்க நகரானது, கடல் நூல் புலவராலும் - கடல் போன்று விரிந்த கணிதநூலறிவு சான்ற புலவர்களாலும், நுனிப்பு அரு வலத்தது ஆய - ஆராய்ந்து அறிதற்கு முடியாத வன்மை வாய்ந்ததாகிய, வேல்கடல் தானை ஆன - வேற்படைத் தொகுதியையுடைய (அரக்கர்) சேனையான, விரிகடல் விழுங்கிற் றேனும் - பரந்த சமுத்திரத்தால் விழுங்கப் பெற்றிருந்ததென் றாலும், கார்க்கடல் புறத்தது ஆக - கரிய கடல் பக்கத்தில் பொருந்த, கவிகடல் வளைந்த காட்சி - குரங்குக் கடல் சூழ்ந்துநின்ற தோற்றம், பால்கடல் அழுவத்து உள்ளது ஒத்தது - ஒரு பாற் கடலின் பரப்பின்கண் (அவ்விலங்கை) இருப்பதை ஒத்து விளங்கியது.

நூற்கடல்: 'நூற்பெருங்கடல்' (சுந்தர. 301). கவியின் சேனை பாற் கடலாகவும், அரக்கர் படை அதன் நடுவில் உள்ள கருங் கடலாகவும் கூறப்பட்டன. குரக்குப் படைக்குப் பாற்கடல்; யுத்த. 321, 435. கணித நூல் வல்லுநராலும் சேனையின் தொகை கணிப் பரிது என்பான், நூற்கடற் புலவராலும் நுனிப்பரும் வலத்ததாய எனப்பட்டது. கார்க்கடல்: யுத்த. 435. அழுவம் - பரப்பு.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பதகன் - கொடும் பாதகன்; 'பதகன் துரந்த வுரகம்' (யுத்த. நாக பாசப். 263); 'வெய்யன் பதகன் பரதார விருப்பன் வீணன்' (அரிச். பு. இந்திர. 35). முதுமை + ஊர் = மூதூர்.

பி - ம். 1. நுனிப்பருங் கணக்கிற்குரி; வலத்ததான.
2. கடல் விரிந்த தேனும்; விரிகடல் வளைக்கும் காட்சி. 27

912. அலகிலா வரக்கன் சேனை யகப்பட வரியின் றானை
வலைகொலா மென்னச் சுற்றி வளைத்ததற் குவமை கூறின்
கலைகுலாம் பரவை யேழுங் காலகிளர்ந் தெழுந்த காலத்
துலகெலா மொருங்கு கூடி யொதுங்கின வேயு மொக்கும்.

அலகு இலா அரக்கன் சேனை - அளவற்ற அரக்கர் படை, அகப்பட - (தனக்குள்) சிக்குமாறு, அரியின் தானை - குரங்குப் படை, வலைகொலாம் என்ன சுற்றி - ஒரு வலையோ என்னுமாறு சூழ்ந்துகொண்டு, வளைத்ததற்கு உவமை கூறின் - வளைத்து நின்றதற்கு உவமை கூறுவோமாயின், கலைகுலாம் பரவை ஏழும் - ஆடைபோன்று புகழப்பட்டுப் பல புவனங்களையும் சுற்றியுள்ள ஏழு கடல்களும், கால் - ஊழிக்காற்றினால், கிளர்ந்து எழுந்த காலத்து - பொங்கி எழுந்த (ஊழிக்) காலத்தில், உலகு எலாம் ஒருங்கு கூடி - உலகனைத்தும் ஒன்றாக இயைந்து, ஒதுங்கினவேயும் ஒக்கும் - ஒருபுறமாக ஓதுங்கி நின்றதையும் நிகர்க்கும்.

அலகிலா - அளவற்ற; 'அலகிலா வுயிர்கள் தத்தம் ஆணையி னமர்ந்து செல்ல' (சிவ. சித்தி. சூத். 2 : 1). அகப்படுதல் - சிக்குதல்; 'அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீரே' (தனிப்பா.). கலைகுலாம்; நூல்களிற் கூறப்பட்ட எனினுமாம்; தன்மைத்தற்குறிப் பேற்றவணி.

பி - ம். 1. அரக்கர் சேனை, அரியின் சேனை.
2. வளைந்ததற் குவமை கூறின், வளைந்த மாநகர மன்னோ, மாநகர மென்னோ.
3. மலைகுலாம் பரவை.
4. ஓங்கின வேயு மொத்த. 28

அணிவகுப்புப் படலம் முற்றும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இப்படலத்தையொட்டிய முதனூல் குறிப்பு :—

இராவணன் மந்திராலோசனை மண்டபத்தை அடைகின்றான். மாலியவான் கூறும் அறவுரைகள் இரு நூல்களிலும் உள்ளன. இராமபிரானும் இராவணனும் இன்ன இன்ன வீரர்கள் இன்ன இன்ன இடங்களில் இத்துணைச் சேனையுடன் இருக்கவேண்டும் என்று பணித்து அணிவகுப்புச் செய்கின்றனர். போருக்கு இரு திறத்தாரும் ஆயத்தம் ஆகின்றனர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 13. அங்கதன் தூதுப் படலம்

இஃது, இராமபிரான் அங்கதனை இராவணனிடம் தூது அனுப்பியதைப்பற்றிக் கூறும் படலம் என விரியும். இஃது அங்கதப்பெருமான் தூதுப் படலம் எனவும் ஓர்பிரதியில் காணப் படுகிறது.

## இராமபிரான் வீடணனை நோக்கிக் கூறல்

913. வள்ளலும் விரைவி னெய்தி வடதிசை வாயின் முற்றி
வெள்ளமோ ரேழு பத்திற் கணித்த வெஞ்சேனை யோடும்
கள்ளனை வரவு நோக்கி நின்றனன் வரவு காணுன்
ஒள்ளிய துணர்ந்தே னென்ன வீடணற் குரைப்ப தானுன்.

வள்ளலும் - வண்மையுடையவனுன இராமபிரானும், வெள்ளம் ஓர் ஏழு பத்தில் கணித்த வெம் சேனையோடும் - ஓர் எழுபது வெள்ளம் என்று கணக்கிடப்பெற்ற கடும் சேனையுடன், விரைவின் எய்தி - வேகமாய்ச் சென்று, முற்றி - இலங்கா நகரத்தை முற்றுகை செய்து, கள்ளனை வரவு நோக்கி - சீதாதேவியைத் திருட்டுத்தனமாகக் கவர்ந்துசென்ற இராவணனுடைய வருகையை எதிர்நோக்கிக்கொண்டு, வடதிசை வாயில் நின்றனன் - அந்நகரின் வடக்குத்திக்கு வாயிலில் நின்று, வரவு காணுன் - (அந்த இராவணன்வரக்) காணுதவனுய், வீடணற்கு - (தன் அண்மையில் நின்ற) வீடணனுக்கு, 'ஒள்ளியது உணர்ந்தேன் என்ன உரைப்பது ஆனுன் - மிகவும் சிறந்ததொரு செயலை ஆராய்ந்திருக் கின்றேன்' என்று சொல்லலானுன்.

'இராமனும் எழுந்து சென்றுன்' என்று முன்படலத்திற் கூறிய செய்தியின் தொடர்ச்சியாக, இப்படலம் தொடங்குகிறது. எழுபது வெள்ளம் என்றது, வானரசேனை முழுமையும் சுட்டியது. கள்ளன் - இங்கு இராவணன்; பிராட்டியைத் திருட்டுத்தனமாகக் கவர்ந்தது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பற்றி இவ்வாறு கூறப்பட்டான். 'கள்ளவா ளரக்கன்' (சுந்தர. 394); 'கள்வனூர் இருந்தவள் இவளென' (சுந்தர. 507); 'கள்ள வரக்கர் கடியிலங்கை' (சுந்தர. 603); (ஒப்பு): 'வஞ்சனை நீசெய' (சுந்தர. 454); 'வஞ்சித்த நாய்களின், நின்ற வஞ்சனை நீயு நினைத் தியோ' (சுந்தர. 620). வடக்கு வாயிலில் இராவணன் வரவை இராமன் எதிர்பார்த்திருந்தது, 'அவன் சமாதானத்துக்கு இயை வனுகில், போர் தொடங்குவதை நிறுத்துவோம்; வாராவிடின் போர்புரிவோம்' என்ற எண்ணத்தான் என்று உய்த்துணரப்படும். இது, 'ஒள்ளிய துணர்ந்தேன்' என்ற தொடரானும் பெறப் படும்; (ஒப்பு): 'ஆளயாவுனக் கமைந்தன மாருத மறைந்த, பூளையாயின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு, நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின், வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்' (யுத்த. முதற்போர். 256); மற்றும், 'இதிவா ராவணஸ் வயம்' என்ற முதனூற் பகுதியும் காண்க. ஒள்ளியது: 'ஒளியார் முன் ஒள்ளிய ராதல்' (குறள். 714); இச்செய்யுள் ஐயம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பா-ம். 1. விரைவி னேகி; வாயின் நண்ணி, மேவி.

2. ஏழு பத்தும், பத்துக்; குணித்தவன் சேனை.

3. வரவுகாணு.

4. னென்னு. 1

இதனுடன் அணிவகுப்புப் படலம் முற்றும் என்று ஓர் பிரதி யில் காணப்படுகிறது.

914. தூதுவ னொருவன் தன்னை இவ்வழி விரைவில் தூண்டி
மாதினை விடுதி யோவென் றுணர்த்துவோம் மறுக்கு மாகில்
காதுதல் கடனென் றுள்ளங் கருதிய தறனு மஃதே
நீதியு மஃதே யென்ருன் கருணையி னிலய மன்னுன்.

கருணையின் நிலயம் அன்னுன் - அருளுக்கு இருப்பிடம் போன்றவனுன இராமபிரான் (வீடணனை நோக்கி), 'இவ்வழி - இவ்விடத்திலிருந்து, தூதுவன் ஒருவன் தன்னை - ஒரு தூதுவனை, விரைவில் தூண்டி - விரைவுடன் (இராவணனிடம்) அனுப்பி,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'மாதினை விடுதியோ - இப்போதாவது சீதாதேவியை விடுதலை செய்கின்றாயா?' என்று உணர்த்துவோம்-என்று (நமது கருத்தினை) அறிவுறுத்துவோம்; மறுக்கும் ஆகில் - (அப்பொழுதும் அவன் சீதாதேவியைத் திருப்பித் தருவதை) மறுத்தானாகில், (பிறகு), காதுதல் கடன் என்று - (அந்த அரக்கனைப்) போரில் கொல்லுதல் கடமை என்று, உள்ளம் கருதியது - என்மனம் தீர்மானித்துள்ளது; அறனும் அஃதே - அறமும் அங்ஙனம் செய்தலே ஆகும்; நீதியும் அஃதே - அரசநீதியும் அங்ஙனம் செய்வதே ஆகும்' என்றான் - என்று பகர்ந்தான்.

முன் செய்யுட்கண், 'ஒள்ளிய துணர்ந்தேன்' என்ற தொடரின் குறிப்பு இங்கே, 'என்று உள்ளம் கருதியது' என்று தொடங்கி, விரித்துரைக்கப்படுதல் காண்க. கருணைவள்ளலான இராமபிரான் தனக்கு இலங்கேசன் செய்த தவற்றையும் பொருட்படுத்தாது, அவன் மன்னிப்புக் கோருவானாகில் போர் புரிதலை நிறுத்துவோம் என்று கருதியது காண்க. மேலும் சாம பேத தான தண்டம் என்ற நான்கு வித உபாயங்களையும் மேற்கொள்ளல் அரசியல் முறையாதலும் அறிக. இராவணன் போருக்கு ஆயத்தமாகி யிருப்பதைச் சாரணர் மூலம் இராமபிரான் கேட்டறிந்தவன் ஆகலின், 'விரைவினில் தூண்டி' எனப்பட்டது. காதுதல் - பகைத்துக்கொல்லுதல். அவன் கருணையின் நிலையம் ஆகலின் அறனும் நீதியும் அஃதே என்றான். மக்கள் பிழைப்பது இயல்பு; பின்னர் அப்பிழைகளை யுணர்ந்து நல்வழிப்படுவராயின் அது போற்றத்தக்கதாகலின் இவ்வாறு கூறினன் என்க; (ஒப்பு): 'அற்றார் நவையென்றலுக் காகுந ரார்கொ லென்றான்' (கிட்கிந்தா. 270); இங்கு திருக்குறள் 154—158 ஒப்பு நோக்கத்தகுவன.

2. உணர்த்தினால், உணர்த்தவே.

3. கருதிய வறனு மஃதே.

4. கருணையி னிலைய மூர்த்தி, கருணையி னிலைமை யானுன். 2

சில சுவடிகளில் அங்கதன் தூதுப் படலம் தொடக்கம் என்று இங்கே காணப்படுகிறது.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வீடணன் முதலானோர் தத்தம் கருத்தைக் கூறுதல்

915. அரக்கர்கோ னதனைக் கேட்டா
னழகிற்றே யாகு மென்றான்
குரக்கினத் திறைவன் கேட்டுக்
கொற்றவர்க் குற்ற தென்றான்
இரக்கம திழுக்க மென்றா
னிளையவன் இனிநா மம்பு
துரக்குவ தல்லால் வேறோர்
சொல்லுண்டோ வென்னச் சொன்னான்.

அரக்கர்கோன் அதனை கேட்டான் - அரக்கர்களின் மன்னவனாகிய வீடணன் அந்த இராமபிரானது சொற்களைக் கேட்டு, 'அழகிற்றே ஆகும் என்றான் - நன்றாயிருக்கின்றது' என்றான்; குரக்கினத்து இறைவன் கேட்டு - குரங்கரசனான சுக்கிரீவன் செவியேற்று, 'கொற்றவர்க்கு உற்றது என்றான் - அரசர்க்குப் பொருந்துவதே' என்று பகர்ந்தான்; இளையவன் - தம்பியான இலக்குவன், 'இரக்கமது - பகைவரிடம் இரக்கம் காட்டுவது, இழுக்கம் - தவறான செயல்', என்றான் - என்று மொழிந்தவனாய், 'இனி - இனிமேல், நாம் அம்பு துரக்குவது அல்லால் - நாம் அம்பினை ஏவுவதன்றி, வேறு ஓர் சொல் உண்டோ - பிறிது ஒரு வார்த்தையுண்டோ?' என்னச் சொன்னான் - என்று கூறினான்.

அரக்கர்கோன் - வீடணன்; 'நீதி யாறெனத் தெரிவுறு நிலைமையான்' (யுத்த. மீட்சி. 150) ஆகலின் வீடணன் அதற்கியைந்தான் என்க. அரச நீதியில் வல்லவனாகலின் சுக்கிரீவனும் ஒப்பினான். இளையவன் ஆன இலக்குவன்மாத்திரம் தன் அண்ணனுக்குப் பேரபசாரம் புரிந்தவன் அரக்கனாதலானும், பிராட்டியை மீட்பதற்கு மேலும் காலந்தாழ்த்தல் அவமே ஆகலானும் தூதனுப்புவதற்கு இயையவில்லை. 'இயைந்தநீதி வளை யாவரு நன்னெறி நின்னறி வாகுமன்றே' (அயோத்தி. 129) என இராமபிரானாற் புகழப்பட்டவன் எனினும், சிற்சில சமயங்களில் இலக்குவன் இராசதகுணமே மேற்கொண்டு ஒழுகுவதைப் பார்க்கின்றோம். நகர்நீங்கு படலத்தும், சித்திரகூடப் படலத்தும் இவனுக்குக் கைகேயி மீதும், பரதன்மீதும் முறையே எழுந்த வெகுளி காண்க. அவனுடைய இச்செயல்கள் அனைத்தும் இராமன்மீது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

நிமிர்ந்த காதல்பற்றி எழுந்த என்க. சொல் - தூதாகக் கூறி பயனுப் வேண்டிய மாற்றம்.

பி - ம். 1. அழகிதே.

2. குரக்கினத் தலைவன் நின்ருன்; கொற்றவற் குறுகி யென்ருன், கொற்றவ குறுகி நின்று.

3. இரக்குமது.

4. துரக்குமது. 3

## இலக்குவன் கூற்று

916. தேசியைச் சிறையில் வைத்தான்
தேவரை யிடுக்கண் செய்தான்
பூசுரர்க் கலக்க ணீந்தான்
மன்னுயிர் புடைத்துத் தின்ருன்
ஆசையி னளவும் எல்லா
வுலகமுந் தானே யாள்வான்
வாசவன் திருவுங் கொண்டான்
வழியலா வழிமேற் செல்வான்.

(மேலும் இலக்குவன், 'நீ சந்து பேசவேண்டும் என்று கூறும் அந்த அரக்கன்), தேசியைச் சிறையில் வைத்தான் - ஒளியுடன் விளங்கும் சூரியனைச் சிறையிலிட்டான்; தேவரை இடுக்கண் செய்தான் - தேவர்களைத் துன்புறுத்தினன்; பூசுரர்க்கு அலக்கண் ஈந்தான் - அந்தணர்க்குத் துன்பத்தை விளைத்தான்; மன் உயிர் புடைத்து தின்ருன் - நிலையுற்று வாழக்கூடிய பிராணிகளை அடித்துத் தின்ருன்; ஆசையின் அளவும் எல்லா உலகமும் தானே ஆள்வான் - திசைகளின் எல்லைவரையிலும் எல்லாப் புவனங்களையும் தானே ஆள எண்ணியவனுய், வாசவன் திருவும் கொண்டான் - இந்திரனுடைய செல்வமனைத்தும் பறித்துக்கொண்டான்; வழி அலா வழி மேல் செல்வான் - நியாயத்திற்கு மாருன வழியிலே நடப்பவனுனன்.

தேசி - சூரியன்; தேஜஸ்ஸை உடையவன். தேசி - இந்திரனும் ஆம்; (ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு). இருகோள்களைச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuyan Vani Trust Donations

சிறையில் வைத்தது; ஆரணிய. 358, 558, 851. பூசுரர் - பிராமணர்; இவரை நிலத் தேவர் என்றும் தரைத் தேவர் என்றும் கூறுப. அலக்கண் - துன்பம்; (பிங்.). 'அலக்கணுற்றிரியப் போனர்' (சுந்தர. 297). மன்னுயிர் புடைத்துத் தின்றல்; அரக்கர்கள் மக்களூன் உண்பவர்; யுத்த. 494, 495, 501 காண்க; 'பிசைந்து தின்ன வெண்ணுவன் எண்ணிப் பின்னர் என்னுயிரிழப்பென்' (ஆரணிய. 871). என்று இராவணனே கூறுவது காண்க; 'கற்பழியாக் குலமகளைக் கொடுந்தொழிலாற் றின்றுனே' (சுந்தர. 32) என்பது அநுமன் கவன்று கூறியது. ஆசை - திக்கு; 'ஆசைகள் சுமந்த பேரமரி யானைகள்' (ஆரணிய. 848). வாசவன் - அஷ்ட வசுக்களுக்குத் தலைவன்; இந்திரன்; வாசவன் திருவினை இராவணன் கைப்பற்றியது; உத்தர. திக்விசயப் படலத்துக் காண்க. வழியலாவழி; நேர் வழியல்லாத கெட்டவழி; அநீதி. ஆசையின் அளவும் - தன் விருப்பத்தின் எல்லையளவும்; இனி ஆசைக்கு ஓர் அளவில்லை யாதலின் அவனுடைய பேராசைக்கும் அளவின்று என்றபடி.

பி - ம். 1. தேசருக் கிடுக்கண் செய்தான், தேவியைச் சிறையில் வைத்தான், தேவியை யிடுக்கண் செய்தான்.

3. ஆசையும் விசும்பும்.

4. வாசவ விருப்பும்; சென்றான். 4

917. வாழியாய் நின்னை யன்று வரம்பறு துயரின் வைகச்
சூழ்விலா வஞ்சஞ் செய்துன் துணைவியைப் பிரிவு
[செய்தான்
ஏழையா ளிடுக்க ணோக்கி யொருதனி யிகன்மேற் சென்ற
ஊழிகாண் சிற்கும் வாண ளுந்தையை உயிர்பண்
[டுண்டான்.

'வாழியாய் - அழியா வாழ்வுடன் கூடியவனே! அன்று - அக்காலத்து, நின்னை - உன்னை, வரம்பு அறு துயரின் வைக - எல்லையற்ற துன்பத்துள் அழுந்துமாறு, சூழ்வு இலா வஞ்சம் செய்து - பிறரால் எண்ணுதற்கு இயலாத வஞ்சனைகளைச் செய்து, உன் துணைவியை பிரிவு செய்தான் - உன் வாழ்க்கைத் துணையான பிராட்டியை உன்னிடமின்றும் பிரியும்படி சூழ்ச்சி புரிந்தான்; ஏழையாள் இடுக்கண் நோக்கி - அந்தப் பேதையினுடைய துன்பத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ளைதக் கண்ணுற்று (மனம் பொருமல்), பண்டு - முன்னுளில், ஒரு தனி இகல் மேல் சென்ற - தன்னந் தனியஞகப் போர் மேற் சென்றவஞன, ஊழி காண்கிற்கும் வாழ்நாள் உந்தையை - பிரளய காலத்தையும் நின்று காணக்கூடிய ஆயுளைப் பெற்றிருந்த உன் தந்தையான சடாயுவினுடைய, உயிர் உண்டான் - உயிரைக் கவர்ந்தான்.

சீதா தேவியைச் சிறையின்றும் மீட்பதே தான் இலங்கை வந்த தற்குக் காரணம் ஆகலின், இராவணன் அவளைக் கவர்ந்த போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளை இலக்குவன் இராமபிரானுக்கு நினைவூட்டு கின்றனன். ஊழி காண்கிற்கும வாணுள் உந்தை; சடாயு. (ஆரணிய. 184). சடாயுவுக்கும் இராவணனுக்கும் நிகழ்ந்த போரும் சடாயு அரக்கன் கைவாளால் இறந்ததும் ஆரணிய காண்டம் சடாயு வதைப் படலத்துக் காண்க. சடாயு என்பதற்குப் பல மயிர்கள் சேர்த்துத் திரித்தாற் போன்ற மிக்க ஆயுள் உள்ளவன் என்பார் ஆகலின் 'ஊழி காண்கிற்கும் வாணுள் உந்தை' எனப்பட்டது. 'எண்ணரும் பருவங்க ளிறந்தான்' (ஆரணிய. 973). காண்க.

பி - ம். 1. நின்னை யிங்ஙன்; துயரின் வைக்க.
2. சூழ்விலா மாயம், சூழ்ந்து.
3. ஏழையாள் இடுக்கண்; ஏழைபா லிரக்கும் 5

918. அன்னவன் தனக்கு மாதை விடிலுயி ரருளு வாயேல்
என்னுடை நாம நிற்கும் நாளெலா மிலங்கை மூதூர்
மன்னவன் நீயே யென்று வந்தடைந் தவற்கு வாயால்
சொன்னசொ லென்னும் முன்னஞ் சூளுறு வென்னுந்
[தோன்றல்.

'தோன்றல் - பெருமையாளனே! மாதைவிடில் - சீதாதேவியை விட்டுவிடின், அன்னவன் தனக்கு (அது கொண்டு) - (உன் மனைவியைக் கவர்ந்தும் உன் தந்தையைக் கொன்றும் நின்ற) அந்த இராவணனுக்கு, உயிர் அருளுவாயேல் - உயிர்ப் பிச்சை நீ யீந் தால், 'என்னுடை நாமம் நிற்கும் நாள் எலாம் - என்னுடைய பெயர் இந்தப் பூவுலகில் வழங்கும் காலம் எல்லாம், இலங்கை மூதூர் மன்னவன் நீயே - இலங்கை யென்ற பழமையான நகர்க்கு அரசனுகுபவன் நீயே', என்று வந்து அடைந்தவற்கு - என்று உன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ணிடம் புகல் புகுந்த வீடணனுக்கு, வாயால்-உன் சத்தியவாக்கால், சொன்ன சொல் என்னும் - சொன்ன வாக்குறுதி யாதாக முடியும்? முன்னம் சூளுறவு என்னும் - முன்னர்த் தண்டகாரணிய முனிவர்கட்கு நீ உறுதி செய்து தந்த வார்த்தை தான் யாதாக முடியும்?

பின் மூன்றடிகட்கு (ஒப்பு): யுத்த. 442-ம் அதன் உரைக் குறிப்பும் காண்க. 'என்னுடை நாம நிற்கும் அளவெலாம்'; 445. சொல் எனில் அமையுமாயினும், 'வாயாற் சொன்ன சொல்' என்றது, இராமபிரான்வாக்கு உண்மையையன்றிப் பிறிதொன்றையும் மொழியாது என்பது காட்ட; (ஒப்பு): 'தீய வழுக்கியும் வாயாற் சொலல்'; இதனை வடநூலார் தாற்பரியம் என்ப; (குறள். 139); பரி. உரைக்குறிப்பு; 'முன்னஞ் சூளுறவு' (ஆரணிய. 134-139) காண்க. முனிவர் பொருட்டுச் செய்தது. தோன்றல் - ஆண்பாற் சிறப்புப் பெயர்; தோன்றல் - விளி.

பி - ம். 2. நாம நிற்கு மளவெலாம்; இலங்கை காக்கும், ஆளும்.
4. சொன்ன சொல் எல்லா மென்னுய்த் தோன்றும். 6

919. அறந்தரு தவத்தை யாயு
மறிவினு லவற்றை முற்றும்
மறந்தனை யெனினும் மற்றிவ்
விலங்கையின் வளமை நோக்கி
இறந்திது போதல் தீதென்
றிரங்கினை யெனினும் எண்ணிற்
சிறந்தது போரே யென்றுன்
சேவகன் முறுவல் செய்தான்.

'அறம் தரு தவத்தை ஆயும் அறிவினல் - தருமத்தை விளைக்கவல்ல பொறுமையாகிய தவத்தையே (எப்போதும்) கருதுகின்ற உனது புத்தியினல், (வீடணனுக்கும் தண்டகாரணிய முனிவர்கட்கும் கூறிய) அவற்றை - அந்த உறுதி மொழிகளை, முற்றும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மறந்தனை எனினும் - முழுவதும் மறந்து விட்டனை யென்றாலும், மற்று-மேலும், இவ் இலங்கையின் வளமை நோக்கி-இந்த இலங்கா நகரத்தின் செழிப்பினைக் கருதி, இது இறந்துபோதல் தீது என்று இரங்கினை எனினும் - இந்த அழகிய நகரம் அழிதல் நன்றன்று என எண்ணி இரக்கம் கொண்டனை என்றாலும், (வேறு எக்காரணமாயினும்), எண்ணில் - ஆராயுங்கால், சிறந்தது போரே - மிகவும் சிறந்ததாக என் மதிக்குத் தோன்றுவது சண்டையே' என்றான் - என்று சொன்னான் இலக்குவன்; சேவகன் முறுவல் செய்தான் - (அச்சொற்களைக் கேட்டு) இராமபிரான் புன் முறுவல் கொண்டான்.

'தவத்தின் உருவென்று பகரக்கூடிய பொறுமை காரணமாக வீடணனுக்குக் கூறிய உறுதிமொழியையும், முனிவரிடம் கூறிய சூளுறவையும் மறந்ததனாலோ, வியக்கத்தக்க இலங்காபுரி அழிய நேருமே என்ற எண்ணததினாலோ, நீ அரக்கன் இழைத்த தீமையை மறந்து, இராவணனுடன் சமாதானம் பேசிக் காண்போம் என்று எண்ணினையாயினும், அஃது எனக்கு உடன்பாடில்லை; போர் புரிவதே தகுதி' என்றான் இலக்குவன். தவத்தை ஆயும் அறிவு; 'உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற் குரு' (குறள். 261). இனி முதலடியுள் உள்ள 'அவற்றை' என்பது, யுத்த. 915-இல் இலக்குவன் கூறியவற்றைக் குறித்தது எனக் கொள்ளலுமாம். இலங்கையின் வளத்தையும் வனப்பினையும் இராமன் வியந்தமை; 'இந்திர னிருக்கை யென்பர் இலங்கையை யெடுத்துக் காட்டார், அந்தர முணர்தல் தேற்றா ரருங்கவிப் புலவ ரம்மா' (யுத்த. 781) என்றது கொண்டு காண்க. சேவகன் - வீரனான இராகவன்; இங்கு முறுவலித்தது இளமை பற்றி எழுந்தது என்க. 'எள்ள லிளமை பேதைமை மடனென், றுள்ளப்பட்ட நகை நான்கு' (தொல். மெய்ப்பாடு. 4) என்றது காண்க. இவ்வைந்து செய்யுட்களால் இலக்குவன், இராமபிரான் கொண்ட கருத்தினை மாற்ற முயன்றனன் என்க.

பி - ம். 1. தவத்தினுண்மே லருளினால்; அவற்றை யெல்லாம்.
2. மற்றை யிலங்கையின்; அழகை, வண்மை.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இங்கு அதிகப்பாடல்கள் :—

சூளுறும் வஞ்ச ஞகத் தோன்றிய விலங்கை வேந்தன்
கோளுறும் சிறையை நீக்கிக் குரைகழல் வணங்கு மாகில்
வீழுறு மிலங்கைச் செல்வம் வீடணற் களித்தே ஞகில்
ஆளுநம் தவத்துச் செல்வம் அவன்றனக் களிப்பெ
[னென்ருன்.

தப்பில் வீடணர்க் கிலாவகை தானமாச்
செப்பிய வாய்மைதான் சிதைய லாகுமோ
இப்பொழு திராவண னீங்கு வந்திடில்
அப்பொழு தயோத்திநா டளிப்ப ஞணயே.

## இராமபிரான் முடிவுரை

920. அயர்த்திலன் முடிவு மஃதே
ஆயினு மறிஞ ராய்ந்த
நயத்துறை நூலி னீதி
நாந்துறந் தமைதல் நன்ருே
புயத்துறை வலிய ரேனும்
பொறையொடும் பொருந்தி வாழ்தல்
சயத்துறை அறனு மஃதே
யென்றிவை சமையச் சொன்னுன்.

(இச் சொற்களைக் கேட்ட இராமபிரான் இலக்குவனை நோக்கி), ‘அயர்த்திலன் - (வீடணனுக்கும் முனிவர்கட்கும் நான் சொன்ன வாக்குறுதிகளையும் பிராட்டிக்கு அவனிழைத்த கொடுமைகளையும்) நான் மறந்தேனில்லை; முடிவும் அஃதே - இறுதியில் நிகழப் போவதும் போரே யாகும்; ஆயினும் - ஆனுலும், அறிஞர் ஆய்ந்த (தேவகுருவான பிருகற்பதி, அசுரர் குருவான சுக்கிரன் முதலிய) பேரறிஞர்கள் ஆராய்ந்து சொல்லியுள்ள, நயம் துறை நூலின் நீதி - அரசியல் நீதி முறைகளை எடுத்துக்கூறுவதான சாஸ்திர வழிகளை, நாம் துறந்து அமைதல் நன்ருே - நாம் கைவிட்டு இருத்தல் நன்ருகுமா? (மேலும்), புயம் துறை வலியர் ஏனும் - தோள் வன்மை கொண்டு புரியும் போர்த்துறையிலே வலிமை யுடையவர் ஆனுலும், பொறையொடும் பொருந்தி வாழ்தல் - பொறுமை யுடன் ஒன்றி வாழ்வது, சயத்துறை - வெற்றி பெறும் வழியாகும்;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அறனும் அஃதே - அரச நீதியும் அங்ஙனம் பொறுமை காட்டி வாழ்தலாகும். என்று இவை சமைய சொன்னான் - இவ்வாறு இச்சொற்களை (இலக்குவன மனம் கொள்ளுமாறு) இராமபிரான் கூறினான்.

அறிஞர் ஆய்ந்த நயத்துறை நூலின் நீதி: பிரகற்பதி சுக்கிராசாரியார் என்ற பேரறிஞர் கூறிய பார்ஹஸ்பத்யம், சுக்கிர நீதி முதலியன. சாமபேத தானம் என்ற மூன்றினையும் முதற்கண்மேற்கொண்டு அவைகள் பயனளியாவிடின் பிறகே தண்டத்தைக் கடைப்பிடித்தல் வேண்டும் என்ற அரச நீதி இங்கே குறிக்கப் பெற்றது. பொறையுடன் வாழ்தல்; (ஒப்பு): 'ஒறுத்தார்க் கொரு நாளை யின்பம் பொறுத்தார்க்குப்,பொன்றும் துணையும்புகழ்' (குறள்.); 'ஒறுக்கு மதுகை யுரனுடை யாளன், பொறுக்கும் பொறையே பொறை' (நாலடி. 65). அறனுமஃதே நீதியுமஃதே என்று முன்பு (914) கூறியதையே இராமபிரான் இங்கும் வலியுறுத்துவது காண்க.

பி-ம். 2. நயத்திறம்; நீதி நூலில், நீதி நூலை; நிற்பது; தாமே, அமைத்தனன்றே.

3. புயத்துற, புயத்துள.

4. மஃதே என்பது, என்றுரை. 8

## அங்கதனைத் தூதனுப்பத் துணிதல்

921. மாருதி பின்னுஞ் செல்லின் மற்றிவ னன்றி வந்து
சாருநர் வலியோ ரில்லை யென்பது சாரு மன்றே
யாரினி யேகத் தக்கா ரங்கத னமையு மொன்னர்
வீரமே விளைப்ப ரேனுந் தீதின்றி மீள வல்லான்.

'மாருதி - அநுமன், பின்னும் செல்லின் - (அரக்கனிடம் தூது வனாக) மீண்டும் போவானாகில், மற்று - பிறகு, இவன் அன்றி - இந்த அநுமனை அல்லாமல், வந்து சாருநர் வலியோர் இல்லை - (இலங்கை நகர்க்குள்ளே) வந்து மீண்டு போதற்குரிய வன்மை பெற்றோர் (நம் படையில்) இல்லை, என்பது - என்ற எண்ண மானது, சாரும் அன்றே - (நம்பகைவர் மனத்துப்) பொருந்தும் அல்லவோ? இனி ஏக தக்கார் யார் - இனி எவர்தான் தூதாகச் செல்லும் தகுதியுடையவர்? 'அங்கதன் அமையும் - அங்கதனே



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொருந்தும்; ஒன்னுர் 'வீரமே விளைப்பர் எனும் - பகைவர்கள் மிக்க வீரத்தையே காட்டி நின்றபோதும், தீது இன்றி மீள வல்லான் - எந்தவிதமான கேடுமின்றித் திரும்பும் ஆற்றல் உள்ளவன்' (என்று) சுக்கிரீவன பகர்ந்தான்.

முன்னிரண்டடிகள் இராமபிரானுடைய பேரறிவையும் உலகிய லறிவையும் நன்கு விளக்கும். 'அநுமனுடைய ஆற்றலே அரக்கர் நன்கு அறிவர்; பின்னரும் அவனையே அனுப்பினுல், அவன் ஒருவனே ஆற்றல் சான்றவன்; அவனைப் போன்ருர் பிறரில்லை போலும் என்று எண்ண இடம் தரும்; யாரை இனி அனுப் பலாம்? என்ருன் இராமபிரான். சுக்கிரீவன் அதனை ஒப்பி, அங்கதனை அனுப்பலாம் என்றனன், என்க. 'ஆரினியேகத் தக்கார்' இன்று வினவியது இராமபிரான்; 'அங்கதன் அமையும்' என்றது சுக்கிரீவன். இனி, வினவும் விடையும் இராமபிரா னுடையதாகவே கோடலும் ஆம்.

பா - ம். 1. இன்னஞ் செல்லின்; மற்றவன்.
2. சாருதல்; சாலும்; சாருநரில்லை யென்று, சான்றவர்.
3. அமையு மென்ருர்.
4. மீடல். 9

922. நன்றென வவனைக் கூவி நம்பிநீ நண்ண லார்பால்
சென்றுள துணர வொன்று செப்பினை திரிதி யென்ருன்
அன்றவ னருளப் பெற்ற வாண்டகை யலங்கற் [பொற்ருேள்
குன்றினு முயர்ந்த வென்ருல் மனநிலை கூற லாமோ.

'நன்று என - நல்லது' என்று, (இராமபிரான்) அவனை கூவி - அங்கதனை அழைத்து, 'நம்பி - நற்பண்புகளால் சிறந்தவனே; நீ நண்ணலார்பால் சென்று - நீ பகைவரிடம் போய், உணர ஒன்று உளது - மனம் கொள்ளும்படியான ஒரு செய்தி இருக் கிறது; (என்று) செப்பினை திரிதி - (அதனைச்) சொல்லிவிட்டு மீண்டும் வருவாயாக' என்ருன் - என்று சொன்னுன்; அன்று - அப்போது, அவன் - அந்த இராமபிரானுல், அருள பெற்ற - கருணை யுடன் கட்டளையிடப்பெற்ற, ஆண்டகை - ஆண்மைப் பண்புகள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

நிறைந்த அங்கதனுடைய, அலங்கல் பொன் தோள்-மாலை புனைந்த அழகிய தோள்கள், குன்றினும் உயர்ந்த என்றால்-(அச்சொற்களைக் கேட்டு), மலைகளைக் காட்டிலும் உயர்ந்து விளங்கின எனின், மனம் நிலை கூறலாமோ - அந்த வாநர வீரனது மனத்தின் நிலைமையைக் கூற (எம்போல்வாரால்) முடியுமோ? ஓ - வினா? எதிர்மறை.

நம்பி - நமக்கினியான் என்று அன்புடன் தெரிவிக்கும் ஆண்பாற் சிறப்புப் பெயர்; நம்பி - குணபூர்ணன் என்பாரும் உளர். செப்பினை; முற்றெச்சம். திரிதி - திரும்பி வருவாயாக: பின்னிரண்டடிகள் கவிக் கூற்று.

பி - ம். 1. நன்ன லான்பால்.

2. சென்றுவென் றுரையி தொன்று, சென்றிரண் டுரையி னென்றை; செப்பிநீ; தெரிதி; சென்றவ னுரைத்துமீளத் திரிதியென் றுவந்து கூற.

3. அன்றவ னேவப் பெற்ற வாணையால், ஏவப் பெற்ற தாதலால்; அவன்பொற் றோள்கள்.

4. உயர்ந்த தென்றால்; அவனிலை. 10

## இராவணனிடம் கூறவேண்டுவனவற்றை இராமபிரான் அறிவித்தல்

923. என்னவற் குரைப்ப தென்ன
ஏந்திழை யாளை விட்டுத்
தன்னுயிர் பெறுதல் நன்றே
வன்றெனிற் றலைகள் பத்தும்
சின்னபின் னங்கள் செய்யச்
செருக்களஞ் சேர்தல் நன்றே
சொன்னவை யிரண்டின் ஒன்றே
துணிகெனச் சொல்லி டென்றான்.

(அங்கதன் இராமபிரானை நோக்கி), 'அவற்கு உரைப்பது என் என்ன - (நான் சென்று) அந்த இராவணனுக்கு மொழிய வேண்டுவது யாது' என்று விண்ணப்பிக்க, (இராமபிரான்), 'ஏந்திழையாளை விட்டு-உயர்ந்த அணிகள் பூண்ட சீதாதேவியைச் சிறை வீடுசெய்து, தன் உயிர் பெறுதல் - தன்னுடைய உயிர் பெறுதல், நன்றே - நல்லதா? அன்று எனில் - அல்லாவிடில்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தலைகள் பத்தும்; உன்னுடைய பத்துத் தலைகளையும், சின்ன பின்னங்கள் செய்ய-(என் அம்புகளினால்), கண்டம் கண்டமாக அறுத்து வீழ்த்துமாறு, செருகளம் சேர்தல் நன்றோ-போர்க்களம் அடைதல் நல்லதா? சொன்னவை இரண்டின் ஒன்றே துணிக-கூறியன இரண்டில் ஒன்றைத் தெளிந்து சொல்லுக', என-என்று; சொல்லிடு-இராவணனிடம் கூறுக', என்றான்-என்று புகன்றான்.

ஏந்திழையாள்-பண்புத்தொகை; அன்மொழி. 'தலைகள் பத்தும் சின்ன பின்னங்கள் செய்ய'; (ஒப்பு) 'சீரிய வல்ல சொல்லித் தலைபத்தும் சிந்துவாயோ' (சுந்தர. 446); 'பத்துள தலையுந் தோளும் பலவுள பகழி தூவி, வித்தக வில்லினாற்குத் திருவிளையாடற் கேற்ற, சித்திர விலக்கமாகும்' (சுந்தர. 448). தரன், வெற்றியடைதல் திண்ணம் என்ற துணிவுள்ளவன் ஆதலின் இங்ஙனம் கூறினன் இராமபிரான். செருக்களம்-போர்க்களம்; 'செருக்களத் துருத்தெய்தாதே' (கிட்கிந்தா. 345). சொன்னவை யிரண்டு, பிராட்டியை விட்டு விடுதல் அல்லது போரிற்புக்கு இறத்தல். துணிக என என்பது துணிகென என்றாயது. இரண்டில் ஒன்று செய்யாமல் அடைத்திருத்தல் கூடாது என்பது குறிப்பு. அடுத்த செய்யுளும் காண்க.

பி-ம். 2. உயிர் பெறுகை.

3. சின்ன பின்னங்களாக.

4. ஒன்று துணிந்தது சொல்லு கென்றான்; ஒன்றைத் துணிவெனச் சொல்லி விட்டான். 11

924. அறத்துறை யன்று வீரர்க் கழகுமன் றுண்மை யன்று
மறத்துறை யன்று சேம மறைந்துறைந் தொதுங்கி [வாழ்தல்
நிறத்துற வாளி கோத்து நேர்வந்து நிற்கு மாகில்
புறத்துற எதிரே வந்து போர்தரப் புகறி யென்றான்.

(இன்னும்), 'சேமம் மறைந்து ஒதுங்கி உறைந்து வாழ்தல்-பாதுகாவலுக்குள்ளாக மறைந்து ஒதுங்கி நின்று வாழ்வது, அறத் துறை அன்று-அரச நீதிக்குப் பொருந்துவதன்று; வீரர்க்கு அழகும் அன்று-நல்ல வீரர்களுக்கு அழகு தருவதும் அன்று;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஆண்மை அன்று - தைரியத்தின் பாலும் படாது; மறத்துறை அன்று - வீரத்துறையுடன் இயைவதுமன்று; நிறத்து உற வாளி கோத்து - மார்பின் கண் தைக்குமாறு அம்புகளைத் தொடுத்துக் கொண்டு, நேர் வந்து நிற்குமாகில் - எதிர்த்து வந்து போர்புரிய வன்மை யுடையவனாகில், புறத்து உற - நகர்க்கு வெளியே பொருந்த, எதிரே வந்து போர் தர - எதிரே வந்து போர் செய்யுமாறு, புகறி - சொல்வாயாக', என்றான் - என்று பகர்ந்தான்.

இங்கு லக்ஷிதலக்ஷணை என்பது ஐயரவர்கள் குறிப்பு; வஞ்சனையாகச் சீதா தேவியைக் கவர்ந்து சென்றதும், சமாதானம் வேண்டியும் அதற்கு உடன்பட்டுத் தேவியைக் கொணர்ந்து கொடாமையும், பொருதற்கு வராமல் நகர்க்குள்ளேயே பதுங்கி நிற்பதும் அறத் துறையன்று என்றும், சுத்த வீரர்க்கழகன்று என்றும் இராவணன் மனத்து வேகம் உண்டாகும்படி அவனிடம் கூறுமாறு இராமபிரான் அங்கதனிடம் கூறினன்; (ஒப்பு): 'கடிமரந்தடியு மோசை தன்னூர், நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப, ஆங்கினி திருந்த வேந்தனொ டீங்குநின், சிலைத்தார் முரசங் கறங்க, மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே' (புறநா. 36); 'அறவையாயி னினதெனத் திறத்தல், மறவை யாயிற் போரொடு திறத்தல், அறவையு மறவையு மல்லை யாகத், திறவா தடைத்த திண்ணிலைக் கதவின், நீண்மதி லொருசிறை யொடுங் குதல், நாணுத்தக வுடைத்திது காணுங் காலே' (புறநா. 44) என்ற செய்யுட்கள் இங்கு ஒப்பு நோக்கத்தகும். இச்செய்யுட் கருத்து, 'உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்' என்னும் புறத் துறையோடு பொருந்துவது; 'அடுநை யாயினும்...................... நாணுத்தக வுடைத்தே' இது புறத்துழிஞையோன்கண் தூதன் அவன் சிறப்பு எடுத்துரைத்தது' என்ற (தொல். புறத். 10 இளம்.) குறிப்புக் காண்க. இச்செய்யுளில் அறத்துறை, வீரர்க் கழகு, ஆண்மை, மறத்துறை என்றும், மறைந்து, உறைந்து, ஒதுங்கி என்றும் பல சொற்களை வழங்கியதன் நயம் ஓர்க.

பி - ம். 2. ஒழுகி வாழ்தல்.
3. நிறத்துற.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## அங்கதன் செல்லுதல்

925. பார்மிசை வணங்கிச் சீயம் விண்மிசைப் படர்வ தேபோல்
வீரன்வெஞ் சிலையிற் கோத்த வம்பென விசையிற் [போனன்
மாருதி யல்ல னாகில் நீயெனும் மாற்றம் பெற்றேன்
யாரினி யென்னோ டொப்பா ரென்பதோ ரின்ப முற்றான்.

'மாருதி அல்லனாகில் நீ - அநுமன் இல்லாவிட்டால் தூது செல்லற்குத் தக்கவன் நீயே' எனும் - என்று கூறுகிற, மாற்றம் பெற்றேன் - உயர்ந்த சொல்லைக் கேட்கும் பேற்றினை அடைந்தேன்; இனி என்னோடு ஒப்பார் யார் - இனி எனக்கு நிகராவர் யாவர் உளர்?'' என்பதோர் - என்று கருதுவதாகிய ஒப்பற்ற, இன்பம் உற்றான் - இன்பம் எய்தியவனான அங்கதன், பார்மிசை வணங்கி - (இராமபிரானைப்) பூமியில் வீழ்ந்து பணிந்து, சீயம் விண்மிசை படர்வதே போல் - சிங்கமானது ஆகாயத்தினிடத்துப் பாய்ந்து செல்வதுபோன்றும், வீரன் வெம் சிலையில் கோத்த அம்பு என - வீரனான இராம்பிரானுடைய கொடிய கோதண்டம் என்னும் வில்லினிற்பூட்டி எய்யப்பட்ட அம்புபோன்றும், விசையில் போனான் - விரைந்து சென்றான்.

ஒன்றின்மீது பாயுங்கால் விலங்குகள் பதுங்கிப் பாயும் என்பர்; இக்கருத்து முதலடியில் தொனிப்பது காண்க. சீயம் - சிங்கம்; 'நாய்தரக் கொள்ளும் சீயம் நல்லரசு' (யுத்த. 941); 'நாயினம் சீயம் கண்ட தாமென' (யுத்த. 754) அங்கதன் சென்ற விரைவுக்கு இராமபிரான் வில்லினின்று விடுத்த அம்பு உவமை. பாட்டுடைத் தலைவன் பண்பு செயல்கள் என்ற இவற்றையே உவமையாக்குவது பெருங்கவிகளின் மரபு; (ஒப்பு): 'இராமனெய்தகோர் பகழியின் செலவென' (சுந்தர. 155); 'இராமனென்னும் சேவகற் பற்றிச் செல்லும், அறத்தகை யரசன் றன்போ ராழியு மனைய னானான்' (சுந்தர. 31); சுந்தர. 605, 1020-ம் காண்க. இரண்டாம் அடியில் வெஞ்சிலை யென்றும், விசை யென்றும் கூறியது, அங்கதன் செலவின் தீவிரம் குறித்து நின்றது. இராகவன் அம்பின் வன்மையும் வேகமும் பகைவரைத் தவறாமல் தாக்கி மீளும் தன்மையும், இந்நூலில் பல இடங்களிற் காணலாம். 'மாருதி யல்ல னாகில் நீயெனு மாற்றம் பெற்றேன்' 'அநுமன் இன்றேல் அங்கதன்' என்ற பழமொழி உண்மையும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காண்க. அநுமனையடுத்து அங்கதன் என்ற கருத்து அங்கதனுக்கு மிக மகிழ்ச்சியை விளைத்தது; (ஒப்பு): 'போயிது புரிதியென்று புலமைதீர் புன்மை காண்டற், கேயினி ரென்னி னென்னிற் பிறந்தவர் யாவ ரின்னும்' (கிட்கிந்தா. 993) என்ற அநுமன் கூற்றினைக் காண்க.

பி - ம். 1. பாரினில்; படர்வதென்ன.

2. அம்பென விரைவிற்.

3. நீயெனும் வார்த்தை.

4. யாரினி யென்னை யொப்பா ரென்றன னணிகொ டோளான், என்னின் மிக்கா ரெனப்பொலிந் துயர்ந்த தோளான். 13

## அங்கதன் இராவணனிருப்பிடஞ் சேர்தல்

926. அயில்கடந் தெரிய நோக்கு மரக்கரைக் கடக்க வாழித்
துயில்கடந் தயோத்தி வந்தான் சொற்கட வாத தூதன்
வெயில்கடந் திலாத காவன் மேருவின் மேலும் நீண்ட
எயில்கடந் திலங்கை யெய்தி யரக்கன திருக்கை புக்கான்.

அயில் கடந்து எரிய நோக்கும் அரக்கரை கடக்க - வேற்படையையும் உக்கிரத்தினால் வென்று, நெருப்புப்பொறி பறக்குமாறு விழிக்கும் அரக்கர்களை வென்று ஒழிப்பதற்காகவே, ஆழி துயில் கடந்து அயோத்தி வந்தான் - பாற்கடலில் பள்ளிகொள்வதை விடுத்து அயோத்தியில் திருவவதாரம் செய்தவனாகிய இராமபிரானுடைய, சொல் கடவாத தூதன் - திருவார்த்தையை மீறி நடவாத தூதுவனாகிய அங்கதன், வெயில் கடந்திலாத காவல் மேருவின் மேலும் நீண்ட - சூரியனும் தாண்டிச்செல்லாத காவல் அமைப்பெற்றதும் மேருமலையைப் பார்க்கிலும் உயர்ந்துள்ளதுமான, எயில் கடந்து - மதிலைத் தாண்டி, இலங்கை எய்தி - இலங்கா நகரத்தை அடைந்து, அரக்கனது இருக்கை புக்கான் - இராவணனுடைய இருப்பிடத்தை அடைந்தான்.

தூதன் புக்கான் என்க. அரக்கர் நோக்கின் கடுமை, 'அயில் கடந் தெரிய நோக்கும்' எனப்பட்டது. விழிக்கு அயில்: 'அயிலா மென விழியா' (ஆரணிய. 450). ஆழித் துயில்கடந்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தயோத்தி வந்தான் : 'தாம ராவணை துறந்து தரைநின்றவரை' (ஆரணிய. 31); 'மேலைநாள், அண்டசத் தருந்துயி லுறந்த வையன்' (ஆரணிய. 130); 'உத்தி யரவணைத் துயில்நீத் தயோத்தி வந்தடைந்த' (உத்தர. வாலிவாலாற். 20); 'அராவணை யமலன்' (ஆரணிய. 271); 'சேக்கையி னரவி னீங்கிப் பிறந்தது' (ஆரணிய. 781); 'பாற்கடலின் விரும்புந் துயிலை வெறுத்து' (ஆரணிய. 1057); 'அரவணைத் துயிலி னீங்கிய, தேவனே யவன்' (சுந்தர. 395). இராமபிரானைத் திருமாலாகவே கம்பர் கூறும் இடங்கள் பல. வெயில்கடந்திலாத எயில்; (ஒப்பு): ஆரணிய. 82, 414, 1050; சுந்தர. 106, 107, 192; யுத்த. 430. இரண்டாமடியில் கடந்த, கடவாத என்பதில் முரண்தொடை காண்க. இச்செய்யுள் ஐயம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. அயில்கடந் திலங்குஞ் செங்கை; எரியின் நோக்கும்.

4. இருக்கை சேர்ந்தான், பார்த்தான். 14

## அங்கதன் இராவணனைக் காணுதல்

927. அழுகின்ற கண்ண ராகி யநுமன்கொ லென்ன வஞ்சித்
தொழுகின்ற சுற்றஞ் சுற்றச் சொல்லிய துறைக டோறும்
மொழிகின்ற வீரர் வார்த்தை முகந்தொறுஞ் செவியின் மூழ்க
எழுகின்ற சேனை நோக்கி யியைந்திருந் தானைக் கண்டான்.

(இவ்வாறு வந்த அங்கதனைக் கண்ணுற்று ஆங்கு நின்ற அரக்கர்கள், முன்னர் இலங்கையில் நுழைந்து துன்பிழைத்த) அநுமன் கொல் என்ன அஞ்சி - அநுமன் தானோ இவன் என்று பயமடைந்து, அழுகின்ற கண்ணர் ஆகி - நீரைப் பெருக்குகின்ற விழிகளை யுடையவராய், தொழுகின்ற சுற்றம் சுற்ற - (தங்கட்குத் துயர் உறாத வண்ணம் பாதுகாக்குமாறு தன்னைப்), பணிந்து வேண்டுகின்ற இனத்தவர் தன்னைச் சுற்றிக் கொள்ளவும், சொல்லிய துறைகள் தோறும் - (அரசியலுக்கு இன்றியமையாதன வாகப் பொருள் நூல்களிற்) கூறப்பட்டுள்ள பல துறைகளிலே, மொழிகின்ற வீரர் - பணியாளராகச் சொல்லப்படுகின்ற வீரர்களின், வார்த்தை - விண்ணப்பங்கள், முகந்தொறும் செவியின் மூழ்க - பத்து முகங்களிலுமுள்ள காதுகளிலே வீழவும், எழுகின்ற சேனை நோக்கி - போருக்கு ஆயத்தமாகப் புறப்படுகின்ற சேனையைப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பார்த்தவண்ணம், இமைந்திருந்தானை - அமைந் திருந்தவனான இராவணனை, கண்டான் - பார்த்தான் (அந்த அங்கதன்).

அங்கதன் சென்றபோது இராவணன் இருந்த அவல நிலை இதில் கூறப்பட்டது. வந்தவன் அநுமன் தானோ என்றஞ்சிச், சுற்றம் தொழுது நிற்கவும், பல வீரர்களின் சொற்கள் தன்னுடைய இருபது செவிகளினும் படவும், போருக்குச் சேனைகள் ஆயத்தமாக நிற்கவும் கண்ணுற்றிருந்த இராவணன் எனப்பட்டது.

பி - ம். 2. சுற்றும் சுற்றம் ; தொழுகின்ற சுற்றத்தோடும்.
3. வீரன், வீர ; செவியின் மூள்க.
4. எழுகின்ற தானை ; வியந்து, இசைந்து. 15

## அங்கதன் வியப்பு

928. கல்லுண்டு மரமுண் டேழைக்
கடலொன்றுங் கடந்தே மென்னும்
சொல்லுண்டே யிவனை வெல்லத்
தோற்றத்தோர் கூற்ற முண்டோ
எல்லுண்ட படைகைக் கொண்டா
னெதிருண்டே யிராமன் கையில்
வில்லுண்டே லுண்டென் றெண்ணி
யாற்றலை வியந்து நின்றான்.

(இராவணனைக் கண்ட அங்கதன் தனக்குள்), 'கல் உண்டு மரம் உண்டு - (கடலைத் தூர்த்து அணை கட்டக்) கற்களும் உண்டு, மரங்களும் உண்டு; ஏழை கடல் ஒன்றும் கடந்தேம் என்னும் சொல் உண்டு - சிறிய இந்தக் கடல் ஒன்றையும் தாண்டி விட்டேம் என்றும் சொல்லும் எழுந்து விட்டது ; (ஆனால்), இவனை - இந்த இராவணனை, வெல்ல - வெற்றி கொள்வதற்கு, தோற்றத்து - பிறந்துள்ளதான, ஓர் கூற்றம் உண்டோ - ஒரு யமனும் இருக்கின்றானோ? எல் உண்ட - ஒளியுடன் கூடிய, படை கை கொண்டான் - போர்க் கருவிகளை கையில் கொண்ட இந்த இராவணனுக்கு, எதிர் உண்டே - மாறாக நிற்கும் படையும் உண்டோ? இராமன் கையில் வில் உண்டேல் உண்டு - இராமபிரானது கரத்தில் வில்லானது எதிர்த்து நிற்குமானால், (அப்போதுதான் இவன் படைக்குத் தக்க


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எதிர் உண்டு)'; என்று எண்ணி - என்று நினைத்து, ஆற்றலை வியந்து நின்றான் - இராவணனுடைய வலிமையைக் கண்டு ஆச்சரியமுற்று நின்றான்.

கற்களையும் மரங்களையும் கொண்டு ஆழியை அணை கோலினோம் என்று தருக்குவதிற் பயனில்லை. இந்த இராவணனை இராமபிரான் தான் தன்னுடைய வில்லினால் வெல்லக்கூடும் அன்றி, பிறர் எவரும் இவனை வெல்லற்கில்லை என்று இராவணன் வீரத்தை வியந்தான் அங்கதன் என்க. கடல் கடந்த எளிமை தோன்ற, 'ஏழைக் கடல்' எனப்பட்டது. ஏழைக் கடல்: நூறு யோசனை அளவே யுள்ளது. இச்செய்யுளில் தடையும் விடையும் ஒருங்கே அமைந்துள்ளமை காண்க. இவ்வாறே அநுமன் இராவணனைக் கண்ட போதும், 'அல்லெலாந் திரண்டன்ன நிறத்த னாற்றலை, வெல்லலா மிராமனாற் பிறரும் வெல்வரோ' (சுந்தர. 1103) என்றது நினைவுறற்குரியது.

பி - ம். 1. கடலுவ்வு; கடந்தோம்.
2. சொல்லுண்டிங்கிவனை; தோற்றவக், தோற்றுமோர், தோற்றவோர்; கூற்றும்.
4. உண்டே; ஆற்றவும். 16

929. இன்றிவன் தன்மை யெய்த
நோக்கினு லெதிர்ந்த போரில்
வென்றவென் தாதை மார்பின்
வில்லின்மேற் கணையொன் றேவிக்
கொன்றவன் தானே வந்தா
னென்றுதான் குறிப்பி னல்லால்
ஒன்றிவன் றன்னைச் செய்ய
வல்லரோ உயிர்க்கு நல்லார்.

'இன்று இவன் தன்மை எய்த நோக்கினால் - இப்பொழுது இந்த இராவணனுடைய நிலையை நன்கு ஊன்றிக் கவனித்தால், எதிர்ந்த போரில் - நேர்ந்த யுத்தத்தில், வென்ற - இவனை வென்ற, என் தாதை மார்பின் - என் தந்தையான வாலியின் மார்பிலே, வில்லின்மேல் கணையொன்று ஏவி - வில்லினிடத்து மெல்லிய அம்பொன்றினை வைத்துச் செலுத்தி, கொன்றவன் தானே - கொன்றவனான இராமபிரான் தானே, வந்தான் - (இவனைக் கொல்லு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மாறு) வந்தான், என்று தான் குறிப்பின் அல்லால் - என்று குறித்துக் கூறினல் கூறலாமேயன்றி, உயிர்க்கு நல்லார் - தம் உயிர்க்கு இதம் செய்ய எண்ணுபவர், இவன் தன்னை ஒன்று செய்ய வல்லரோ - இவ்விராவணனை எந்தவகையாலும் ஊறுபாடு செய்யவல்லாரோ?

முன் பாட்டில் வியந்ததுபோலவே இப்பாட்டிலும் அங்கதன் இலங்கேசனது பேராற்றலை வியந்தான். 'படைகைக் கொண்டான் எதிருண்டே யிராமன் கையில், வில்லுண்டேல் உண்டு' என்ற அடிகளின் கருத்தே இங்கும் தொனிப்பது காண்க. இவ்வாறு சொல்லும்போது, தன் தாதையையும் கொன்ற இராமன் என்ற கருத்து, அவனுக்கு ஊற்றமளிப்பதாயிற்று. இராமனைத் தவிர்த்துப் பிறர் யாரும் இவனை எதிர்ப்பரேல் அவர்கள் தம் வாழ்நாட்கிறுதி தேடியவரே யாவர் என்றான். எதிர்ந்த போரில் வென்ற வென் தாதை; இராவணனை வாலி போரில் வென்றதும், அவனை வாலில் கட்டிச்சென்றதும உத்தரகாண்டம் வாலிவாலாற் கட்டுண்ட படலத்துக் (9-ஆம் செய்யுள்) காண்க. 'பெய்க்கொள் வாலினன் மிடலி ராவணன், தொக்க தோளுறத் தொடர்ப டுத்தநாள்' (கிட்கிந்தா 125) உரைக்குறிப்புக் காண்க; மற்றும், சுந்தர. 580, 1126 முதலியனகொண்டும் இதனை அறியலாம்.

பி-ம். 1. என்றவன் தன்னை; நோக்கினேற்கு, நோக்கினன், நோக்கி நோக்கி.
2. வென்றவன்; கணையோன் றுந்திக்.
3. என்றுடன்; குறிப்பது, குறுகின், குறுகிற்று.
4. நின்றிவனை; வெல்ல வல்லரோ; உயிர்க்கு நல்லோர். 17

தன்சிறிய தந்தையை அங்கதன் வியத்தல்

930. அணிபறித் தழகு செய்யு
மணங்கின்மேல் வைத்த வாசைப்
பிணிபறித் திவனை யாவர்
முடிப்பவர் படிக்கட் பேழ்வாய்ப்
பணிபறித் தெழுந்த மானக்
கலுழனி னிவனைப் பற்றி
மணிபறித் தெழுந்த எந்தை
யாரினும் வலிய னென்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

(மேலும் அங்கதன்), 'அணி பறித்து - ஆபரணங்களைக் களைந்து (அணிகள் பூணுமலே), அழகு செய்யும் - அழகுடன் விளங்கும், அணங்கின்மேல் வைத்த ஆசை - தெய்வப் பெண் போன்ற சீதாதேவியின்மீது கொண்ட காதலாகிய, பிணி பறித்து - நோயை அகழ்ந்து, இவனை முடிப்பவர் யாவர் - இவனுக் கிறுதி காட்டவல்லோர் யார்? படிக்கண் - இந்தப் பூமியில், பேழ்வாய் - பிளவுபட்ட நாக்கினையுடைய, பணி - பாம்பினை, பறித்து எழுந்த - தூக்கிக்கொண்டு சென்ற, மான கலுழனின் - பெருமைமிக்க கருடனைப்போன்று, இவனைபற்றி - இந்த அரக்கனைப் பற்றிக் கொண்டு, மணி பறித்து எழுந்த - அவனது மகுடமணிகளைக் கைப்பற்றி மேலெழுந்த, எந்தை - என் தந்தையான சுக்கிரீவன், யாரினும் வலியன் - எல்லாரைக்காட்டிலும் 'வன்மையுள்ளவன்' என்றான் - என்று நினைந்தான்.

அணிபறித் தழகு செய்யும் அணங்கு என்றது, ஆபரணத்தையும் கடந்து அழகு பொலியும் என்றபடி; (ஒப்பு): 'உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரார், அமிழ்தினைச் சுவை செய் தென்ன வழகினுக் கழகு செய்தார்' (பால. கோலங். 3); (ஒப்பு): 'கோலங்கொள்ளும் ஆடகப் பைம்பூண் அருவிலை யழிப்பச், செய் யாக் கோலமொடு வந்தீர்க்கு' (சிலப். 16 : 9—11). அணிதரித்து அழகு செய்வது மகளிர்க்கியல்பு; அணியிலாக் கவிதை பணியிலா வனிதை பயனின்று என்பது பழமொழி. இங்குப் பிராட்டி அணிகள் தரியாததுமட்டுமன்றி, தரித்த அணியையும் பறித்தாள் எனப்பட்டது. மகளிர் அணிபறித்தல் அமங்கலமன்றோ? இவ் வாறு அமங்கலமான சொற்களைப் பயன்படுத்திய கம்பநாடர், அந்த அமங்கலத்தை மாற்றுமாறு அணிபறித்து அவலம் செய்யும் என்னாது அழகு செய்யும் என்றுகூறிச் சமர்த்தித்தது போற்றற்பாலது. இனி, பணிபறித்து என்பதற்கு அரவின் தலை மணியைக் கருடன் பறித்ததாகக்கூறி அந்த அரிய செயலைச் சுக்கிரீவன் இராவணன் மகுடமணியைப் பறித்ததற்கு உவமான மாகக் கூறலுமாம். பணி - பாம்பு; படத்தை யுடைமைபற்றி எழுந்த பெயர். எந்தை - சுக்கிரீவன்; 'இவன் சிறுதாதை யென்னு, மூலமே தந்த நுந்தை யாமென முறையி னிற்றி' (கிட்கிந்தா. 424); 'எந்தைகேள்' (கிட்கிந்தா. 576) என்று அங்கதனே கூறுதல் காண்க. கலுழனின்: ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொருள். பரித்து என இடையினமாகவே 1, 3, 4 அடிகளில் கொள்ளலாம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. 'படிக்கண்...... ..............பணி - அநந்தன்' என்பது பழையவுரை.

பி - ம். 1. அணிபழுத்து, பரித்து; அழகு செய்த; வைத்த காதற்.

2. பிணிபறித் தவனை, பரித்து; முறிப்பவர்; பிடித்த; போரில்.

3. கலுழனே யென்ன.

4. மணிபரித்து; வலிய னன்றே. 19

## அங்கதன் இராவணன்பாற் செல்லுதல்

931. நெடுந்தகை விடுத்த தூத னினையன நிரம்ப வெண்ணிக்
கடுங்கனல் விடமுங் கூற்றுங் கலந்துகால் கரமுங் காட்டி
விடுஞ்சுடர் மகுட மின்ன விரிகட லிருந்த தென்னக்
கொடுந்தொழில் மடங்க லன்னா னெதிர்சென்று குறுகி
[நின்றான்.

நெடு தகை விடுத்த தூதன் இனையன நிரம்ப எண்ணி - மிக்க நற்பண்புகள் சான்ற இராமபிரான் அனுப்பிய தூதனான அங்கதன் இவ்வாறான நினைவுகளை மிகுதியும் எண்ணியவனாய், விரி கடல் - பரந்த கடலானது, கடுகனல் - கொடிய தீயும், விடமும் - நஞ்சும், கூற்றும் - யமனும் (ஆகிய) இம்மூன்று பொருள்களையும், கலந்து - ஒன்றாகக் கூட்டி, கால் கரமும் காட்டி - காலும் கையும் அதற்கு உண்டுபண்ணி, சுடர் விடும் மகுடம் மின்ன இருந்தது - ஒளி உமிழ்கின்ற மகுடம் (தன் முடிமேல்) விளங்க இருந்தது, என்ன - என்று புகலுமாறு (இருந்த), கொடு தொழில் மடங்கல் அன்னான் - கொடுமையான தொழிலை மேற்கொண்ட ஆண் சிங்கத்தைத் நிகர்த்த இராவணனுக்கு, எதிர் சென்று குறுகி நின்றான் - எதிராகப் போய் அவன் அண்மையில் நின்றான்.

நெடுந்தகை - பண்புத் தொகைப் புறத்துப்பிறந்த அன் மொழித்தொகை. தூது சென்ற அங்கதன் மடங்கல் அன்னான் எதிர் நின்றான் என்றியைக்க. இராவணன் அங்கு இருந்தது; ஒரு கரிய கடல் கடுங்கனல் முதலிய பொருள்களால் ஆக்கப்பட்ட கரம் கால்களை யுடையதாய்த் தன் சிகரத்தின மீது மகுடம் மின்ன இருந்தது போலும் எனப்பட்டது; இல்பொருள் உவமை. மூன்றும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அடியில் என்ன என்கின்ற வினை யெஞ்சு கிளவிக்கு, இருந்த என்ற பெயரெச்சம் வருவித்து முடிக்கப்பட்டது. மடங்கல்; பிடரி மயிர் மடங்கப்பெற்றது என்று சிங்கத்திற்குக் காரணக்குறி. இதனை வடநூலார் ஸிம்ஹம் என்று கூறி, ஹிம்ஸா என்ற சொல் முன்பின்னாக மாறி ஸிம்ஹம் என்று வந்ததாகக் கூறுவர். எனவே பிற வுயிர்களை இம்சிப்பதே அவ்விலங்கின் தொழிலாக இருக்க கொடுந்தொழில் 'மடங்கல் என்றது இராவணனுடைய கொடுமை யைப் பெருக்கிக் காட்டிய தென்க.

பி - ம். 1. தூத னிவையிவை.

2. கனல் கதுவும்; கார்விடமும் கூட்டி; கலந்த, காந்துகால்.

3. இருந்த தன்ன.

4. அன்றான் முன். 19

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

வந்ததென் குரங்கொன் றில்லை யடைத்ததென் கடல்வாய் [மந்தி
சிந்தையின் கனியா லென்பேர் தெரியுமோ தெரியா தாகில்
இந்தவெம் பதியைக் காக்கு மிறைவனோ வறிது மெங்கள்
விந்தையெம் பெருமான் வாழி வீடண னென்னும் வேந்தன்.

## இராவணன் அங்கதனை வினவுதல்

932. நின்றவன் றன்னை யன்னா னெருப்பெழ நிமிரப்பார்த் திங்
சின்றிவண் வந்த நீயா ரெய்திய கரும மென்னை
கொன்றிவர் தின்னா முன்னங் கூறுதி தெரிய வென்றுன்
வன்றிறல் வாலி சேயும் வாளெயி றிலங்க நக்கான்.

நின்றவன் தன்னை - தன் இடம் வந்து நின்றவனான அங்கதனை, அன்னான் - அந்த அரக்கன், நெருப்பு எழ நிமிர பார்த்து - விழிகளில் தீப்பொறி பறக்க நிமிர்ந்து நோக்கி, 'இன்று இவண் - இன்றைத் தினத்தில் இவ்விடத்தில், வந்த நீ யார் - வந்து நின்ற நீ யாவன்? எய்திய கருமம் என்னை - நினைந்து வந்த காரியம் என்ன? இவர் - என்னுடைய பணியாளராகிய இவர்கள், கொன்று தின்னா முன்னம் - கொன்று உண்பதன் முன்னர், தெரிய கூறுதி -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விவரமாகச் சொல்வாயாக', என்றான் - என்று கட்டளையிட்டான், வல்திறல் வாலி சேயும் வாள் எயிறு இலங்க நக்கான் - (அவற்றைக் கேட்ட) மிகவும் வலிமை வாய்ந்த வாலி மகனாகிய அங்கதனும், ஒளிபொருந்திய தன் பற்கள் விளங்கித் தோன்றச் சிரித்தான்.

சேய் - இந்தச் சொல் செம்மை என்றும் பண்படியாகத் தோன்றிச் சிவபிரானுடைய இளைய குமாரனான முருகனைக் குறித்துப் பின்னைப் பொதுவாக எந்த ஓர் மகவினையும் குறித்த தென்க. நகைக்குங்கால் பற்கள் வெளித்தோன்றுமாகலின், 'வாளெயிறிலங்க' என்னப்பட்டது. இங்கு நகை எள்ளல் நகை : 'பிறன் தன்னை யெள்ளிய வழி' நக்கது என்க; தொல். மெய்ப்பாட்; 4. பேராசிரியர் உரை காண்க. தன்னை அரக்கர்கள் கொல்ல வியலா தென்பது கொண்டும், தூதாக வந்தவனைக் கோறல் அறமன்று என்பதனை அறிந்தும், நக்கான் என்க. இப்படியே இராவணன் அநுமனை யாரென்று வினவிய பொழுது 'நாயகன் தூதன் நக்கான்' (சுந்தர. 1125) என்றதும் என்க.

பி - ம். 1. என்றவன் ; நோக்கி நெருப்பினு நிமிர்ந்த கோபத்து, நோக்கி யெரி நிகர் கோபத்தோடு, அன்று நெருப்புற நிமிர நோக்கி.

2. ஏதுவுன் கருமம் ; கருமம் ஏது ; என்று, உன்னை.

3. கொன்றமர், கொன்றெமர். 20

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

முந்தவோர் தசக்கி ரீப னுக்கையை மொய்ம்பால் வீக்கும்
அந்தவா யிரத்தோ ளானை யரக்கிய மழுவ லாளன்
வந்தெதிர் கொள்ள வீரச் சிலையும்வெவ் வலியும் வாங்கும்
சுந்தரத் தோளன் விட்ட தூதனா னென்னச் சொன்னான்.

## அங்கதன் தன்னைத் தெரிவித்தல்

933. பூதநா யகனீர் சூழ்ந்த புவிக்குநா யகனிப் பூமேல்
சீதைநா யகன்வே றுள்ள தெய்வநா யகனீ செப்பும்
வேதநா யகன்மே னின்ற விதிக்குநா யகன்றான் விட்ட
தூதன்யான் பணித்த மாற்றஞ் சொல்லிய வந்தே
[னென்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(அங்கதன் இராவணனை நோக்கி), 'பூதம் நாயகன் - ஐம்பெரும் பூதங்கட்குத் தலைவனும், நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன் - கடல்நீரால் சூழப்பட்ட இப்பூமிக்கு இறைவனும், இ பூமேல் சீதை நாயகன் - இந்த பூமியின்மேல் அவதரித்துள்ள சீதாதேவியின் நாயகனும், வேறு உள்ள தெய்வம் நாயகன் - மற்றும் வெவ்வேறாக வழங்குகின்ற தெய்வங்கட் கெல்லாம் தலைவனும், நீ செப்பும் வேதம் நாயகன் - நீ தினந்தோறும் பாராயணம் செய்கின்ற மறைகட்கு இறைவனும், மேல் நின்ற விதிக்கு நாயகன் - எல்லாவற்றிலும் மிக்குத் தோன்றுகின்ற ஊழ்வினைக்குத் தலைவனும், (ஆக விளங்குகின்ற) தான் - இராமபிரான், விட்ட தூதன் யான் - அனுப்பிய தூதன் நான், பணித்த மாற்றம் சொல்லிய வந்தேன் - (என் தலைவன் உன்னிடம் சொல்லுமாறு) கட்டளையிட்டுள்ள செய்திகளை மொழிவதற்காக வந்தேன்', என்றான் - என்று புகன்றான்.

பூத நாயகன் - ஆன்ம நாயகனும் ஆம். இராமபிரானுடைய பல்வேறு பெருமைகளைக் கூறி இவனால் அனுப்பப்பட்ட தூதன் என்று அங்கதனை அறிமுகப்படுத்திக்கொள்கின்றான். சூர்ப்பணகை தன்னை இராமபிரானிடம் அறிமுகப்படுத்திக்கொண்டது, (ஆரணிய. 258) இங்கு ஒப்புநோக்கத்தகும். பூத நாயகன்: நிலம் நீர் தீ வளி விசும்பு என்ற ஐம்பெரும் பூதங்கட்குத் தலைவன். பூதங்கள் அவற்றினின்று தோன்றிய உயிர்களுமாம். 'அகில பூதங் காப்பானவனே யென்ன' கலிங். 198. அகில உயிர்கள் தோறும் தங்கியிருப்பவன் ஆதலின் பூதநாயகன் என்றும், அவ்வுயிர்களைக் காப்பவன் ஆகலின் புவிக்கு நாயகன் என்றும், சத்தியுடன் இணைந்தே புரத்தல் முதலியன இறைவன் ஆற்ற வேண்டுதலின் பூமேல் சீதை நாயகன் என்றும், வழிபடும் தெய்வங்கள் பலவெனினும், பரத்துவம் பெற்று விளங்குதலின் வேறுள்ள தெய்வ நாயகன் என்றும், நான்மறைகளால் பிரதி பாதிக்கப்படுபவன் ஆகலின் வேத நாயகன் என்றும், யாவருக்கும் வாழ்க்கை நிலைமைகளையும் போகம் முதலியவற்றையும் நிர்ணயம் செய்யும் விதி என்ற ஊழினையும் கடந்தவன் ஆதலின் விதிக்கு நாயகன் என்றும் கூறினன். அங்கதன். இறுதியில் விதியினைக் குறித்தது போகூழால் இராவணன் அனைத்துச் செல்வத்தையும் இழந்து இறக்கப்போவதைத் தெரிக்க என்னலாம். சொல்லிய - செய்திய வென்னும் வாய்பாட்டு வினை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

யெஞ்சு கிளவி. புவிக்கு நாயகன் பூ மேல் சீதை நாயகன் என்பதற்குப் பூமிப்பிராட்டி சீதாபிராட்டி என்ற இருவர்களின் தலைவன் எனினுமாம். பிராட்டி திருமகள் அவதாரம் ஆதலின் பூமேற் சீதை நாயகன் எனப்பட்டது. இச் செய்யுள் ஐயமென்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. அப்பூ மேற்.
4. சொல்லிய வந்தது.

21

## இராவணன் இராமபிரானை ஏசிக் கூறல்

934. அரன்கொலா மரிகொ லாமற்
றயன்கொலா மென்பா ரன்றிக்
குரங்கெலாங் கூட்டி வேலைக்
குட்டத்தைச் சேது கட்டி
இரங்குவா னாகி லின்ன
மறிதியென் றுன்னை யேவும்
நரன்கொலா முலக நாத
னென்றுகொண் டரக்க னக்கான்.

(அச் சொற்களைக் கேட்ட இராவணன்), 'அரன் கொல் ஆம் - சிவபெருமானோ? அன்றி அரி கொல் ஆம் - அல்லாமல் திருமால் தானோ? மற்று அயன் கொலாம் - இவர்களிருவரும் அல்லாமல் பிரமன் தானோ? என்பார் அன்றி - என்று முதற் கடவுளாகக் கூறப்படுகின்ற இவர்கள் அல்லாமல், குரங்கு எலாம் கூட்டி - குரங்குகளை யெல்லாம் ஒன்று சேர்த்துக் கொண்டு, வேலை குட்டத்தை சேது கட்டி - ஒரு சிறு குட்டை போலுள்ள ஆழியில் அணைகட்டி(க் கடந்து), (அந்த அற்ப காரியத்தால் தன்னை ஒரு வீரனாக எண்ணிக்கொண்டு), 'இன்னம் இரங்குவான் ஆகில்-(இந்த நிலையிலேனும் இராவணன்) இரக்கம் கொள்வானாகில், அறிதி - தெரிந்து வருவாயாக', என்று - என்று சொல்லி, உன்னை ஏவும் - உன்னைத் தூதனாக அனுப்பிய, நரன் கொலாம் உலகநாதன் - மனிதன்தானா உலக நாயகன்', என்று கொண்டு - என்று சொல்லிக் கொண்டே, அரக்கன் நக்கான் - இராவணன் நகையாடினான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

'நீ சொன்ன பூத நாயகன் முதலிய அடைமொழிகள் அரன் அயன் அரி என்றவரையே பொதுவாகக் குறிக்கும். அங்ஙன மிருக்கவும் தனக்கு மக்கட்டுணை யெவருமின்றிக் குரங்குகளைத் துணைக்கொண்டு போர் செய்தற்கு எழுந்து, சிறிய கூவம்போன்ற ஓர் கடலை அணையிட்டு, தன் ஆற்றலை யறியாமல் வார்த்தைகளைச் சொல்லி மிரட்டி உன்னைத் தூதாக அனுப்பினனே அவன் பேதைமையை என்ன சொல்வது!' என்றுகூறி ஏளனம் செய்தான் இராவணன். இங்கு எழுந்த நகை பிறன் பேதைமை கண்டு நக்கது என்க. 'உலக நாதனுயின் தான் இருந்த இடத்திலிருந்தே காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாமே. இவ்வாறு இங்கு வந்து ஓர் குரங்கினைத் தூதனுப்பும் ஒருவனை உலக நாதன் என்ருன்' என்க; யுத்த. 178 இங்கு ஒப்புநோக்குக. 'இரங்குவா ருகிலின்ன மறிதி' என்றது இரட்டுற மொழிதலாகும் நயம் ஓர்ந்துணர்க.

பி - ம். 1. அயன் கொலா மென்பதன்றி, எங்ப தொன்ற.
2. குரங்கெலாம் கூடி, கொண்டு.
4. உலகின் நாதன். 22

## இராவணன் அங்கதனை வினவுதல்

935. கங்கையும் பிறையுஞ் சூடுங் கண்ணுதல் கரத்து நேமி
சங்கமுந் தரித்த மால்மற் றிந்நகர் தன்னைச் சாரார்
அங்கவர் நிலைமை நிற்க மனிசனுக் காக அஞ்சாது
இங்குவந் திதனைச் சொன்ன தூதனீ யாவ னென்ருன்.

'கங்கையும் பிறையும் சூடும் கண்ணுதல் - கங்கையாற்றையும் பிறைச் சந்திரனையும் தன் சடை மீது அணிந்துள்ள நெற்றிக் கண்ணனான சிவபெருமானும், கரத்து - தன்னுடைய கைகளில், நேமி சங்கமும் தரித்த மால்-ஆழிப்படையையும் சங்கினையும் தாங்கியுள்ள திருமாலும், (அச்சத்தினல்) இந்நகர் தன்னை சாரார் - இந்த இலங்கா நகரத்துக்குள் வரமாட்டார்கள்; அங்கு அவர் நிலைமை நிற்க - அவ்வாருக அவர் நிலைமை யிருக்க, மனிசனுக்காக - ஓர் நரன் பொருட்டாக, அஞ்சாது - சிறிதும் பயமின்றி, இங்கு வந்து இதனை சொன்ன - இவ்விடத்துத் (துணிந்து) வந்து இந்த வார்த்தைகளை மொழிந்த, தூதன் - தூதனே! நீ யாவன் - நீ யார்?' என்ருன் - என்று கேட்டான் இராவணன். மற்று - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கங்கையும் பிறையுஞ் சூடும் கண்ணுதல்; சிவபிரான்: சிவபிரானைப்பற்றியும் அவனுடைய அருஞ் செயல்களைப் பற்றியும் இந் நூலில் ஆங்காங்கே பல இடங்களிற் காணலாகும். இங்கு அகந்தையை அழித்ததற்காகக் கங்கையைத் தரித்ததையும், கருணையைக் காட்டப் பிறையணிந்ததையும் குறித்தார். கண்ணுதல்: முன்பின்னுகத் தொக்க ஆரும் வேற்றுமைத்தொகை என்ப. நேமியும் சங்கமும் திருமால் ஏந்தியுள்ள படைகள்; இவை, ஏனைய கதை, வாள், வில் என்றவற்றிற்கும் உபலக்கணம். இதனை என்பது செய்யுள் 933-ல் அங்கதன் கூறியதை அனுவதித்து நின்றது. மற்று - அசை; வினைமாற்றுமாம்.

பி - ம். 2. தரித்தார் தாமற் றிந்நகர்தன்னை, தரித்தா னுற்ற தறிந்து வந்தூரைச் சார்ந்து.

3. அங்கவர் தம்மை யன்றி, தன்மை நிற்க; மனிதருக்காக, ஆரேனு மாத.

4. உதனைச் சொற்ற; தூதனீ யாரை யென்றான். 23

அங்கதன் கூறிய விடை

936. இந்திரன் செம்மல் பண்டோ ரிராவண னென்பான் றன்னை
சுந்தரத் தோள்க ளோடும் வாலிடைத் தூங்கச் சுற்றிச்
சிந்துரக் கிரிக டாவித் திரிந்தனன் தேவ ருண்ண
மந்தரப் பொருப்பால் வேலை கலக்கினன் மைந்த
[னென்றான்.

'பண்டு ஓர் இராவணன் என்பான் தன்னை - முற்காலத்து இராவணன் என்று கூறப்பட்ட ஒருவனை, வாலிடை தூங்க - (தனது) வாலினிடத்துத் தொங்குமாறு, சுந்தர தோள்களோடும் சுற்றி - அழகிய (அவனது) தோள்களோடும் சேரப் பிணித்து, சிந்துரக்கிரிகள் தாவி - யானைகள் வாழ்கின்ற மலைகள் தோறும் தாவிச் சென்று, திரிந்தனன் - திரிந்தவனும், தேவர் உண்ண - தேவர்கள் அமுது செய்யுமாறு, மந்தரம் பொருப்பால் வேலை கலக்கினன் மைந்தன் - மந்தர மலையினை மத்தாகக் கொண்டு பாற் கடலைக் குழம்பும்படி செய்தவனும், இந்திரன் செம்மல் - இந்திரனின் குமாரனுமான வாலியின புதல்வன்', என்றான் - என்று சொன்னான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இந்திரன் செம்மல்: வாலி. இராவணன் முன்பு நின்று கொண்டே, படர்க்கையில் அவனையாரோ ஒருவன் என்றும், அவனை வாலி வாலிற் பிணித்தனன் என்றும் அலட்சியமாக அஞ்சாது கூறியது காண்க. வாலிடைத் தூங்கச் சுற்றியது; (சுந்தர. 580); உத்தர காண்டம் வாலி வாலாற் கட்டுண்ட படலத்தில் காண்க. மற்றும் வாலி கடல் கடைந்தது; கிட்கிந்தா. 392, சுந்தர. 518. சிந்துரம் - யானை; 'சிந்துரம் வயப்புரவி' (ஆரணிய. 524); 'சிந்துரத்தின் மருப்பொசித்த செங்கண் மாலே' (வி. பா. கிருட்டினன். 11). மந்தரப் பொருப்பால் வேலை கடைந்தது; (ஆரணிய. 252, 253). 'வட வரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கி' (சிலப். ஆய்ச்சியர்).

பி - ம். 1. என்கின்றனை.
2. புயங்களோடும், தோளிணேடும், தோள்கடோறும்.
3. திரிந்தனன் தேவர்க்குன்ன, தேவர்க்குத் திரிக்க வொண்ணு.
4. மந்தர கிரியான். 24

## இராவணனை அங்கதன் வேறுபடுத்த முயலுதல்

937 உந்தையென் துணைவ னன்றே ஓங்கறச் சான்று முண்டால்
நிந்தனை யிதன்மே லுண்டோ நீயவன் றூத னுதல்
தந்தனன் நினக்கு யானே வானரத் தலைமை தாழா
வந்தனை நன்று செய்தா யென்னுடை மைந்த வென்றான்.

'உன் தந்தை என் துணைவன் அன்றே - உன் தந்தை வாலி என் நண்பன் அல்லனோ? ஓங்கு அறம் சான்றும் உண்டு - (இதற்குச்) சிறந்த அறச்சாட்சியும் உண்டு; நீ அவன் தூதன் ஆதல் - (இப்படி என் நண்பனுடைய மகனான நீ உன் தந்தையைக்கொன்ற) அந்த மானிடனுக்குத் தூதனாக ஆதலாகிய, இதன்மேல் நிந்தனை உண்டோ - இதனைக் காட்டிலும் பழிக்கத்தக்க செயல் பிறிது ஒன்று உள்ளதா? (இல்லை); (ஆதலின், இப்போதாவது அந்தத் தூதனுக்கும் நிலைமையை விட்டுவிடு); என்னுடை மைந்த - என் அருமைப் புதல்வனே! நினக்கு - உனக்கு, யானே - நானே, வானரம் தலைமை தந்தனன் - வானரங்கட்குத் தலைமைப் பதவியை யீந்தேன்;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தாழா வந்தனை - தாமதமின்றி வந்தனை! நன்று செய்தாய் - நல்லது புரிந்தனை !' என்றான் - என்று பகர்ந்தான் (இராவணன்). ஏகாரம் - தேற்றம். ஆல் - அசை.

உந்தை - உன் தந்தை என்பதன் மரூஉ. ஓங்கு அறச் சான்று : 'என்றிலங்கேசன் இயம்பிட வாலி யெழுந்தபே ருவகையா லிறுகத், தன்றிர டோளாற் றழுவி..............இனறி நாடொடங்கி யென்பிராதாநீ யென்றிலங் கேசனை விடுத்தான்' (உத்தர. வாலிவாலாற். 19) என்றது காண்க. சான்று : 'சான் றென நின்ற வீரன்' (கிட்கிந்தா. 375). நினக்கு யானே தந்தனன் என மொழி மாற்றுக. தந்தனன் என்று இறந்த காலத்துக் கூறினன்; தெளிவுபற்றி வந்த கால வழுவமைதி. தாழாது என்பது ஈறு கெட்டது. நன்று செய்தாய் - மகிழ்ச்சிக் குறிப்பு. ஓர் மானிடனுக்குத் தூதனுகினையே என்று பிறகுறிப்புமாம். வாலி இராவணனைப் பிராதாவென ஏற்றதனாலும், தம்பி தனயன் என்னும் முறைபற்றியும், 'என்னுடை மைந்த' என்றான். இச் செயல்கொண்டு இராவணனுடைய உலகியலறிவும், பேதோபாயத் தேர்ச்சியும் தெளியலாம். 'பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப், பொருத்தலும் வல்ல தமைச்சு' (குறள். 633) என்ற குறட்பா அரசனுக்கும் கூறப்பட்ட அறிவுரையாதல் காண்க.

பி - ம். 1. துணைவன் என்றே ; நற்சான்று முண்டால், உண்டே.
2. சிந்தனை யிதன்மே லுண்டோ ; தூதனுகை.
3. தந்தன னுனக்கு நானே.
4. நன்றி செய்தாய்.



938 தாதையைக் கொன்றான் பின்னே
தலைசுமந் திருகை நாற்றிப்
பேதைய னென்ன வாழ்ந்தா
னென்பதோர் பிழையுந் தீர்ந்தாய்
சீதையைப் பெற்றே னுன்னைச்
சிறுவனு மாகப் பெற்றேன்
ஏதெனக் கரிய தென்று
னிறுதி நூற்கெல்லை கண்டான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இறுதி நூற்கு எல்லே கண்டான்-வாழ்நாளாகிய நூலிறுதியின் வரம்பினைக் கண்டுவிட்டவனாகிய அரக்கன், (பின்னும் அங்கதனைப் பார்த்து), 'தாதையை கொன்றான் பின்னே - உன்னுடைய தந்தையைக் கொன்றவனான இராமனைப் பின்பற்றி, இரு கை தலை சுமந்து - இரண்டு கைகளையும் தலைமீது (வணக்கத்திற்கு அடையாளமாகக்) குவித்துக்கொண்டும், நாற்றி - தலையினைத் தொங்கவிட்டுக்கொண்டும், பேதையன் என்ன - (கண்டோர் யாவரும்) இவன் ஓர் அறிவிலி என்று இகழ்ந்து கூறும்படி, வாழ்ந்தான் என்பதோர் பிழையும் தீர்ந்தாய் - உயிர்வாழ்ந்தான் என்பதான ஓர் பழிமொழியையும் தீரப்பெறுவாய்; சீதையை பெற்றேன் - யான் அப்பொழுது சீதையைக் கிட்டப்பெறுவேன்; உன்னை சிறுவனுமாக பெற்றேன் - என்னை என் மைந்தனாக அடையப்பெற்றவனும் ஆவேன்; எனக்கு அரியது ஏது - எனக்கு அருமையான காரியம் யாதுள்ளது?' என்றான் - என்று சொன்னான் இராவணன்.

தாதை: தாத என்ற வடசொல்லின் விகாரம் என்பர். தாதை: வாலி; அவனைக் கொன்றது கிட்கிந்தாகாண்டம் வாலி வதைப் படலத்துக் காண்க. தீர்ந்தாய், பெற்றேன் என்ற சொற்கள் தெளிவுபற்றி வந்த காலவழுவமைதி. நூலிறுதி: கிரேக்க நாட்டுத் தெய்வங்களாகிய கிளாத்தோ, லாகீஸிஸ், ஆட்ரோபாஸ் என்பவர்கள் வாழ்நாளாகிய நூலினை முறுக்கேற்றுவது, நூற்பது, அறுப்பது என்ற தொழில்களை முறையே செய்துவந்ததாகக் கூறும்; அவ்வண்ணமே வாழ்க்கையை நூலாக இங்கு உருவகித்தமை நோக்கத்தகும். உடல் திண்மையாலும் அகம்பாவத்தாலும் இன்னும் சீதையைப் பெறுவதாக மனப்பால் குடிக்கின்றான் இலங்கேசன். முன் பாட்டிற் கூறிய கருத்தையே மீண்டும் கூறுகின்றான். 'விநாசகாலே விபரீத புத்தி' என்றதற்கிணங்கச் சீதைமேற் காதலை விட்டானல்லன்; ஆகலின் அவனுக்குச் சாவு நிகழ்வது திண்ணம் என்பது கருதி, 'இறுதி நூற்கெல்லை கண்டான்' எனப்பட்டது. 'சீதையென் றமிழ்தாற் செய்த நஞ்சினாலிலங்கை வேந்தன் நாளையித் தகைய னன்றோ?' (யுத்த. இராவணன் சோகப். 53); 'வஞ்சனே னெனக்கு நாளை மாதரார்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வடிவுகொண்ட, நஞ்சுதோ யமுதமுண்பா னச்சினேன் நாளும் தேய்ந்து, நெஞ்சுநே ரானதும்மை நினைப்புவிட் டாவிநீக்க, அஞ்சினேன்' (யுத்த. மாயாசனக. 10) என்று இராவணனே கூறுதல் காண்க. இச்செய்யுள் ஐயம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 2. பேதையர்; வாழ்ந்தாய்; நீர்ப்பாய்.

4. யாதெனைக்; இறுதியி னெல்லை, இறுதியி னில்லை. 26

939 அந்நர ரின்று நாளை யழிவதற் கைய மில்லை
உன்னர சுனக்குத் தந்தே னுளுதி யூழிக் காலம்
பொன்னரி சுமந்த பீடத் திமையவர் போற்றி செய்ய
மன்னவ னுதி யானே சூட்டுவென் மகுட மென்றான்.

(பின்னரும்), 'அ நரர் இன்று நாளை அழிவதற்கு ஐயம் இல்லை - அந்த மனிதர்கள் இன்றோ நாளையோ இறந்து ஒழிவதற்குச் சிறிதும் சந்தேகமில்லை; உன் அரசு உனக்கு தந்தேன் - உனக்குரிய கிட்கிந்தை யரசினை உனக்கு நான் தந்துவிட்டேன்; ஊழிகாலம் ஆளுதி - வெகுகாலம் ஆட்சிபுரிவாயாக; அரி சுமந்த பொன் பீடத்து - அழகிய சிங்கங்களால் தாங்கப்பெற்ற பொன் ஆசனத்தில், இமையவர் போற்றி செய்ய - தேவர்கள் வணங்கி வாழ்த்துமாறு, மன்னவன் ஆதி - வானரத் தலைவனாக ஆவாயாக; யானே மகுடம் சூட்டுவென் - நானே முடிசூட்டி வைப்பேன்' என்றான் - என்று மொழிந்தான் இராவணன்.

இன்று நாளை என்பதுவிரைவு குறித்து நின்றது; இன்று நாளையிடை காணலாம்' (யுத்த. நாகபாச. 74). 'உன்னர சுனக்குத் தந்தேன்' யுத்த. 937, 938 காண்க. ஊழிக்காலம் ஆளுதி எனக. பொன்னரி சுமந்த பீடம் - பொற்சிங்காதனம். இமையவர் - இமையா நாட்டத்தராய தேவர்.

பி - ம். 1. அன்னவர்; இங்கு நின்றார்.

2. உன்னர சுனக்கே.

4. மன்னவனாக; புன்னை. 27

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## இராவணனுக்கு அங்கதன் எதிர்மொழி பகர்தல்

940. அங்கத னதனைக் கேளா அங்கையோ டங்கை தாக்கித்
துங்கவன் தோளும் மார்பு மிலங்கையுந் துளங்க நக்கான்
இங்குநின் றூர்கட் கெல்லா மிறுதியே யென்ப துன்னி
உங்கள்பா னின்று மெம்பாற் போந்தன னும்பி யென்றான்.

அங்கதன் அதனை கேளா - அங்கதன் அவ்வார்த்தைகளைச் செவியேற்று, அம் கையோடு அம் கை தாக்கி - அழகிய கையுடன் கையைச் சேர்த்து அடித்து, துங்கம் வல் தோளும் மார்பும் இலங்கையும் துளங்க நக்கான் - உயர்ந்த வலிய புயங்களும் மார்பும் இலங்கை நகரும் அசைவுறுமாறு நகைத்து, 'இங்கு நின்றூர்கட்கு எல்லாம் - இந்த இலங்காபுரியின்கண் இருப்பவர் அனைவர்க்கும், இறுதியே என்பது உன்னி - முடிவுகாலமே வந்தது என்பதை மனத்தில் நினைந்தவனாய், உங்கள்பால் நின்றும் உம்பி எம்பால் போந்தனன் - உங்கள் பக்கத்திருந்து எங்கள் பக்கத்திற்கு உன் தம்பி வீடணன் வந்தடைந்தான்', என்றான் - என்று பகர்ந்தான்.

கேளா - கேட்டு; செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். அங்கையோ டங்கை தாக்கி - வெகுளிக்குறி; (ஒப்பு): 'கேட்ட வாண்டகை கரத்தொடு காதலம் கிடைப்ப' (யுத்த. 111); 'நஞ்சின் வெய்யவன கையெறிந் துருமென நக்கான்' (யுத்த. 128); மற்றும், சீவக. 258, 582. நக்கான் - இங்கு வீரத்தெழுந்த வெகுளி நகை; (ஒப்பு): அயோத்தி. நகர்நீ. 117. மூன்றுவதடிக்கு: 'அழி வினை யெய்துவான் அறிவி னீங்கினான்' எனப்பட்டது காண்க. உன் தம்பி என்பது உம்பி என்று மருவிற்று. அங்கை உள்ளங் கையும் ஆம்.

பி - ம். 1. அங்கை கொண்டு.
2. துங்க நல்தோள்; குலுங்க நக்கான்.
3. இறுதியென் றென்று முள்ளான்.
4. நுங்கள்; எம்பாற் போந்ததென்.



941. வாய்தரத் தக்க சொல்லி யென்னையுன் வசஞ்செய் [வாயேல்
ஆய்தரத் தக்க தன்றோ தூதுவந் தரச தாள்கை
நீதரக் கொள்வேன் யானே யிதற்கினி நிகர்வே றெண்ணில்
நாய்தரக் கொள்ளுஞ் சீயம் நல்லர செனறு நக்கான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'வாய்தர தக்க சொல்லி - வாயில் வந்த வார்த்தைகளைக் கூறி, என்னை உன் வசம் செய்வாயேல் - என்னை நீ உன் வசமாக்குதற்கு நினைந்தால், தூது வந்து அரசது ஆள்கை - தூதனாக வந்த நான் அரசினை ஆட்சி செய்வது என்பது, ஆய்தர தக்கது அன்றோ - பெரியோரால் ஆராய்ச்சி செய்தற்குரிய தல்லவோ! நீ தர யானே கொள்வேன் - (வானரத் தலைமையை) நீ கொடுக்க யான் பெற்றுக்கொள்வேன்! இதற்கு - (நீ தர நான் அரசினை ஏற்றுக்கொள்ளும்) இந்தச் செயலுக்கு, இனி வேறு நிகர் எண்ணில் - இனி பிறிதொரு ஒப்புக்கூற நினைந்தால், நாய் தர நல் அரசு சீயம் கொள்ளும் - ஒரு நாயானது கொடுக்க ஒரு சிறந்த அரசினை ஒரு சிங்கம் கொள்வதை ஒக்கும்', என்று நக்கான் - என்று சொல்லி எள்ளிச் சிரிப்புச் சிரித்தான் (அங்கதன்).

'தூதனாகச் செல்பவன் மாற்றான் சொற் கிணங்கி மாறுபடுவானாகில் அவன் பாவம் பழிக்கு ஆளாவன் அன்றோ? உன்னைத் திரணமாக மதித்துத் தன் வாலிற் கட்டிக்கொண்டு தாவிய வாலி மகனாகிய எனக்கு நீ அரசளிப்பாய்! நான் அதனை ஏற்றுக்கொள்வேன்! மிகவும் நன்று' என்று எள்ளல் நகை செய்தனன் அங்கதன். இச்செய்யுளுடன், சுந்தர. 646, 647 ஒப்புநோக்குக. நாய்தரக் கொள்ளும் சீயம்; (ஒப்பு): அயோத்தி. நகர்நீ. 117. இச்செய்யுளுடன் திருக்குறள்: தூது. 4, 6, 10 காணத்தகும்.

பி - ம். 2. அரசை.

3. கொள்வன் யானே; யிதற்கொரு நிகருமுண்டோ; இனி நிகர் வேறுண்டோ. 29

இராவணன் 'வந்த காரியம் கூறுக' எனல்

942. அடுவனே யென்னப் பொங்கி யோங்கிய வரக்க னந்தோ
தொடுவனே குரங்கைச் சீறிச் சுடர்ப்படை யென்று [தோன்று
நடுவனே செய்யத் தக்க நாளுலந் தார்க்குத் தூத
படுவதே துணிந்தா யாகில் வந்தது பகர்தி யென்றான்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அடுவனே என்ன பொங்கி - (இவனைக்) கொல்லவே செய்வேன் என்று சினந்து, ஓங்கிய - எழுந்த, அரக்கன் - இராவணன், (பின்னர்) 'அந்தோ - ஐயோ! குரங்கை சீறி சுடர் படை தொடுவனோ - ஒரு அற்பக் குரங்கினைச் சினந்து ஒளிமிக்க வாட்படையைத் தீண்டுவேனோ?' என்று - என்றெண்ணி (அச்செயலை விடுத்து, அங்கதனை நோக்கி), தோன்று நடுவனே செய்ய தக்க - கண்ணுக்குப் புலப்படாத யமனே இறுதி செய்யக்கூடிய, நாள் உலந்தார்க்கு தூத - வாழ்நாள் முடிவெய்தப்பெற்ற இராம இலக்குவரின் பொருட்டு வந்த, தூத - தூதனே! படுவதே துணிந்தாய் ஆகில் - இறந்து ஒழிவதற்கே துணிவாயானால், வந்தது பகர்தி - நீ வந்த காரியத்தைச் சொல்வாயாக', என்றான் - என்று சொன்னான்.

இராவணன் வெகுண்டானாயினும் ஓர் அற்பக் குரங்கை, அதிலும் தூதாக வந்ததொன்றைக் கொல்லுதல் தவறு என்று எண்ணி அவனைக் கொல்லாது அவன் வந்த காரணத்தைக் கேட்டான் என்க. அந்தோ; இரக்கக் குறிப்பு. தோன்று நடுவன் - ஒருவனது இறுதிக் காலத்தில் கட்புலனாகாது நடுவு நிலைமையோடும்கூடி உயிர் கவர்பவன் ஆதலின் தோன்று நடுவனே செய்யத்தக்க நாள் எனப்பட்டது. 'இறுதி நூற்கெல்லை கண்டான்' (யுத்த. 935) என்று கூறப்பட்ட இலங்கேசன், இராம இலக்குவரை 'நாள் உலந்தார்' என்றான். உலத்தல் - அழிதல்; 'வினை யுலப்ப வேறாகி' (நாலடி. 3). நடுவன்: 'நடுவன் மேல்வர' (பெருங். உஞ்சைக். 53, 70). ஒரு காரணமின்றி உயிர் கொள்வதும் கால முடிவினன்றிக் கவர்தலும் இன்மையின் இவனை யமதர்மராஜன் என வழங்குவர்; காரணமின்றி யுயிர் கொள்ளாமை; திருவிளை. பழியஞ்சின படலத்துக் காண்க. 'காலனும் காலம் பார்க்கும்' (புறநா. 41) என்றதும் இங்குக் காணலாம்; மற்றும், கலித். 105: 37-8; பழ. 89; பெருங். 1:37; 204-5; பால. தாடகை. 64 காண்க. எல்லோரையும் சமமாக நோக்குதல் கொண்டும் சமஞ் செய்தல் கொண்டும், இவனைச் சமன் என்றும் கூறுவர்; மணி. 6, 97-100. தன்னைப் பற்றாது இராமபிரானிடமே பணியாற்றத் துணியின் தன் படையால் இறந்துபடுவது உறுதி என்பான், 'படுவதே துணிந்தாயாகில்' என்றான். 'நடுவனே செய்யத்தக்க நாளுலந்தார்' என்றது,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இயமனாலே அளவிட்டுக் கொல்லுமாறு வாழ்நாள் குறைந்த பேர்' என்பது பழையவுரை.

பி - ம். 1. அடுவனே ; ஓங்கிவாள் அரக்கன்.

2. தொடுவனே குரங்கு தன்னை ; சுடர்படைக்கு ; இழிவுதோல்ற, என்று கொண்டான், ஒன்று கொண்டான்.

3. நடுவனெ யென்னத் தக்காய், நாளுலந்தாரை நம்பிப்.

4. படுவதே குனிந்தாய். 30

## அங்கதன் விடை

943. கூவியின் றென்னை நீபோய்த் தன்குல முழுதுங் கொல்லும்
பாவியை யமருக் கஞ்சி யரண் புக்குப் பதுங்கி னானைத்
தேவியை விடுக அன்றேல் செருக்களத் தெதிர்ந்து [தன்கண்
ஆவியை விடுக வென்றா னருளினம் விடுகி லாதான்.

(அங்கதன் தன்னை வினவிய இராவணனை நோக்கி), 'இனம் அருள் விடுகிலாதான் - (நீ அவனிடம் மிகவும் அபசாரப்பட்டிருப் பினும்), இன்னமும் உன்னிடம் கருணை சிறிதும் நீங்காத இராமபிரான், இன்று என்னை கூவி - இன்று என்னை அழைத்து, நீ போய் - நீ சென்று, தன் குலம் முழுதும் கொல்லும் - தன்னுடைய குலம் அடங்கலும் அழிக்கும், பாவியை - பாவியும், அமருக்கு அஞ்சி அரண்புக்கு பதுங்கினானை - போர்க்குப் பயந்து பாதுகாப்பான இடத்தில் புகுந்து ஒளிந்திருப்பவனுமான இராவணனிடம் (சென்று), தேவியை விடுக - சீதா தேவியை விட்டிடுக; அன்றேல் - அவ்வாறு விடுதற்கு எண்ணமின்றாயின், செரு களத்து எதிர்ந்து - போர்க்களத்து எதிர்த்து நின்று, தன்கண் - தன் முன் பாக, ஆவியை விடுக - உயிரை விட்டிடுக', (என்று பகர்வாய்), என்றான் - என்று கூறினான்.

தன்குல முழுதும் கொல்லும் பாவி ; (ஒப்பு): யுத்த. 317. 'நீலமா மணிமுடி நிருதர் வேந்தனை, மூலநாச முற முடிக்கு மொய்ம்பினாள்' (ஆரணிய. 227) ; யுத்த. மாயாசனக. 19. பலவித மான கவலைகட்கு நீ யிடம்தந்தும் இராமபிரான் மீட்டும் சந்து பேசி விடுத்தனன் என்பான், 'அருளினம் விடுகிலாதான்' என்றான். வீடணனும் அரக்கர் குலத்தவன் அன்றோ எனின் அவன் இராமபிரானைச் சரண் புகுந்து, 'களவிய லரக்கன் பின்னே

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தோன்றிய கடன்மைதீர, விளையவற் கவித்த மோலி' (யுத்த. 448) இராமபிரானுற் கவிக்கப்பெற்றுத் தூய்மை யெய்தியவன் ஆகலின் அவன் விலக்கென்க; அவனைக் குலபாம்சன் என்று முதனூல் கூறும். கீழ் யுத்த. 472-இல் இராமபிரான் வீடணனும் அரக்கர் குலத்தவனேனும், அவனை தம்மவனுகவே கருதிக் கனைகழ லரக்கர் வன்மையை நிகழ்த்துமாறு இராமபிரான் வினவியதன் கருத்து இங்கு உய்த்துணரத்தகும்.

பி-ம். 2. பாவியை யெய்தி; அரன்புகப்; பதுங்குவானை.
3. செருப்புறத் தெதிரே வந்துன், செருக்களத் தெதிர்ந்து தன்னின்.
4. விடுக்க, அருளினை. 31

944. பருந்துணப் பாட்டி யாக்கை
படுத்தநாள் படைஞ ரோடும்
மருந்தினு மினிய மாமன்
மடிந்தநாள் வனத்துள் வைகி
இருந்துழி வந்த தங்கை
மூக்கும்வெம் முலையு மெம்பி
அரிந்தநாள் வந்தி லாதான்
இனிச்செய்யு மாண்மை யுண்டோ.

'பாட்டி யாக்கை பருந்து உண படுத்த நாள் - பாட்டியாகிய தாடகையின் உடலைப் பருந்துகள் தின்னும்படி கொன்ற நாளிலும், மருந்தினும் இனிய மாமன் படைஞரோடும் மடிந்த நாள் - அமுதத்தினும் இனியவனான மாமன், (சுபாகு) தன்னுடன் வந்த சேனை வீரரோடும் இறந்துபட்ட நாளிலும், வனத்துள் வைகி இருந்துழி - காட்டில் (பஞ்சவடியில்) வசித்திருந்த காலத்து, வந்த தங்கை மூக்கும் வெம்முலையும் எம்பி அரிந்த நாள் - அங்கு வந்த தங்கையான சூர்ப்பணகையின் நாசியினையும் விரும்பத்தக்க முலையையும் தம்பி இலக்குவன் அறுத்த அந்த நாளிலும், வந்திலாதான் - போர் செய்ய வராதவன், இனி செய்யும் ஆண்மை உண்டோ - இனியும் செய்து காட்டவல்ல ஆண்மைத் தொழிலும் உள்ளதா? ஓகாரம் - எதிர்மறை.

பாட்டி யாக்கை படுத்த நாள்: இதனைப் பால காண்டம், தாடகை வதைப் படலத்துள், 'சொல்லொக்கும்'; 'பொன்னெடும்' (73, 74) எனத் தொடங்கும் செய்யுட்கள் கொண்டுணர்க. இனிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மாமன்; சுபாகு: தங்கை மூக்கும் வெம்முலையு மெம்பி யரிந்த நாள் (ஆரணிய. 311, 312)-ம் அவற்றின் உரையும் காண்க. மருந்து - அமுதம்: 'மருந்து நம் அல்லற் பிறவிக்கு' (திருக்கோ. 148); பாட்டி: தாடகை: இவள் சரன் என்னும் இயக்கன் மகன் சுகேதுவின் மகள்; ஆயிரம் யானைகளின் வன்மை பெற்றவள்; சுந்தன் மனைவி: இவளுக்குப் பிறந்தவர்களே மாரீசனும் சுபாகுவும். சுந்தன் என்ற இவர்களின் தந்தை அகத்தியராற் கொல்லப்பட்டான். இதுகண்டு வெகுண்டு இரு குமரர்களும் அவர்களின் தாயும் அகத்தியரை யெதிர்க்க, அம்முனிவர் இம்மூவரையும் அரக்கராகுமாறு சபித்தனர். தாடகை இராமனம்புபட்டு மரித்தாள்.

பி-ம். 1. பகைஞரோடுஞ்.

3. வந்த நங்கை; இருஞ் செவி முலையி னோடும், மூக்கொடு முலையு மெம்பி, இருஞ்செவி மூக்கு மெம்பி, இருஞ்செவி முலையு மூக்கும்.

4. அரிந்துழி; ஆண்டொழி லழகிதென்றுன், அழகிதம்மா; இனி வரற்கையமுண்டோ. 32

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

945. கிளையொடும் படைஞ ரோடுங்
கேடிலா வுயிர்கட் கெல்லாம்
களையெனத் தம்பி மாரை
வேரொடுங் களையக் கண்டும்
இளையவன் பிரிய மாய
மியற்றியா யிழையை வெளவும்
வளையெயிற் றரக்கன் வெம்போர்க்
கினியெதிர் வருவ துண்டோ.

'கேடு இலா உயிர்கட்கு எல்லாம் - அழிவில்லாத (உலகத்துப்) பிராணிகளை எல்லாம் (அழிப்பதற்கு), களை என - இவர்கள் களை போல்வர் என்று எண்ணி, தம்பிமாரை கிளையொடும் படைஞரோடும் வேரொடும் களைய கண்டும் - (கரன் முதலிய) தம்பிமார் களைச் சுற்றத்தாரோடும் சேனை வீரருடனும் (ஒருவரும் எஞ்சாது), அடியோடு ஒழித்துவிட்டதை அறிந்திருந்தும், (நேரே வந்து பொரும் துணிவின்றி), இளையவன் பிரிய - என்னை விட்டு இலக்குவன் பிரியுமாறு, மாயம் இயற்றி - வஞ்சனைத் தொழில் செய்து, (அவன் இல்லாத சமயத்தில்), ஆயிழையை வெளவும் - சிறந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அணிகளைப் பூண்டவளான சீதாதேவியைக் கவர்ந்துசென்ற, வளை எயிறு அரக்கன் - வளைந்த கோரப்பற்களையுடைய அந்த இராவணன், வெம் போர்க்கு இனி எதிர் வருவது உண்டோ - இனியும் தனக்கு எதிராகக் கடும்போர் புரிதற்கு வரப்போவதும் உண்டோ? ஓகாரம் - எதிர்மறை.

கிளை, களை என்பன உவமவாகு பெயர்கள். தம்பிமார்: கரன் தூடணன் முதலியோர். 'தங்கைக்கு மானபங்கம் நிகழ்ந்தபோதும், அவன் தம்பிமார்கள் கொல்லப்பட்ட போதும் இலங்கேசன் வந்திருக்க வேண்டும்: அப்போது வாராதிருந்தவன் இப்போது வந்துவிடப் போகின்றானா?' எனப்பட்டது. இளையவன் பிரிய மாய மியற்றி ஆயிழையை வௌவியது; மாரீசன் வதைப் படலத்துக் காண்க. மாயமியற்றியது; 'என்னமா மாயம் யானிங் கியற்றுவ தியம்பு கென்றான், பொன்னின்மா னாகிபுக்கப் பொன்னை மால் புணர்த்து கென்ன' (ஆரணிய. 763) என்றது காண்க. இளையவன் பிரிய ஆயிழையை வௌவினது; ஆரணிய. 826; 878, 879 காண்க. ஆயிழை: பண்புத்தொகை யன்மொழி. வளையெயிற் றரக்கன்: 'வளையெயிற் றரக்கரோடு வரும் விளையாட்டு' (ஆரணிய. 286).

தம்பிமார்: இராவணன் தம்பிமாரான கரன் தூடணன் முதலியவர்கள். கரன் என்பவன் கும்பீநசியின் புதல்வன்; கும்பீநசி சுமாலியின் மகளும் இராவணனைப் பெற்றவளான கேகசியின் தங்கையுமாவள். விசுரவசு முனிவரை மணந்தவள். இராவணனுக்கும் தந்தை அம்முனிவன் ஆகலின் கரன் தம்பி முறையாவன். இனி, தூடணனும் திரிசிரசும் மேற்கூறிய விசுரவசு முனிவர்க்குக் கலை என்பவளிடம் பிறந்தவர்கள். எனவே இராவணற்குத் தம்பி முறையினர் என்பதறிக. களையக் கண்டும், ஆயிழையை மாயமியற்றி வௌவும் என்று கூறியதால், தன் கிளையை வலிமையால் அழித்தவனை வலிமைகொண்டு போர் செய்து அழிக்க மாட்டாமல், மாயையால் மனைவியை வௌவிய இழிதகவு குறிக்கப் பெற்றது என்க.

பா - ம். 1. கிளை நெடும்.
2. களையன.
3. இயற்றியே கொண்டு போய.
4. இனியிவண்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


946. ஏந்திழை தன்னைக் கண்ணுற்
றெதிர்ந்தவர் தம்மை யெற்றிச்
சாந்தெனப் புதல்வன் தன்னைத்
தரையிடைத் தேய்த்துத் தன்னூர்
காந்தெரி மடுத்துத் தானுங்
காணவே கடலைத் தாவிப்
போந்தபின் வந்தி லாதா
னினிப்பொரும் போரு முண்டோ.

'ஏந்திழை தன்னை கண்ணுற்று - (எமது தூதனாகிய அநுமன்) சீதாப் பிராட்டியைப் பார்த்துவிட்டு, எதிர்ந்தவர் தம்மை எற்றி - எதிர்த்தவராகிய வீரர்களனைவரையும் தாக்கி ஒழித்து, புதல்வன் தன்னை - அட்சய குமரனை, சாந்து என தரை இடை தேய்த்து - (குழைக்கின்ற) சாந்து போன்று ஆகும்படி பூமியில் இட்டுத் தேய்த்து, தானும் காணவே - தன் கண் முன்னரே, தன் ஊர் - தன்னுடைய இலங்கா நகரத்தை, காந்து எரிமடுத்து - எரி கின்ற நெருப்பிற் கிரையாக்கி, கடலை தாவி போந்தபின் - கடலைத் தாண்டிச் சென்ற பின்னரும், வந்திலாதான் - போருக்கு வந்திலாத இராவணன், பொரும் போரும் இனி உண்டோ - புரியப்போகின்ற யுத்தம் இனியு முண்டோ? ஓகாரம் - எதிர்மறை.

ஏந்திழை - அன்மொழித்தொகை. சாந்தெனப் புதல்வன் தன்னைத் தரையிடைத் தேய்த்தது; 'வயிரக் கைகொடு, பிடியா விண்ணொடு மண் காணத், தேய்த்தா னூழியி னுலகேழ் தேயினு, மொருதன் புகழிறை தேயாதான்' (சுந்தர. 968) என்றது காண்க. காந்தெரி மடுத்து: இதன் முழு விவரமும் சுந்தர காண்டம் இலங்கை எரியூட்டு படலத்துக் காண்க.

பி - ம். 1. ஏந்திய படைகள் கொன்றன்று.

2. தரைபோாடும்.

3. காய்ந்தெரி.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



947. உடைக்குலத் தொற்றர் தம்பா
லுயிர்கொடுத்து உள்ளக் கள்ளம்
துடைத்துழி வருணன் வந்து
தொழுதுழித் தொழாத கொற்றக்
குடைத்தொழி லும்பி கொள்ளக்
கொடுத்துழி வேலை கோலி
யடைத்துழி வந்தி லாதான்
இனிவர வைய முண்டோ.

'தொழாத கொற்ற குடை தொழில் உம்பி கொள்ள கொடுத்துழி - (தன்னைப் பிறர் வணங்குவதன்றித் தான் எவரையும்) வணங்க வேண்டாத, வெற்றி பொருந்திய உன் தம்பி, (இலங்கையின்) அரசுபுரியும் தொழிலைப் பெற்றுக்கொள்ளும்படி, (அவனுக்கு ஈந்தபோதும்) வருணன் வந்து தொழுதுழி - தன் பாணத்துக்கு அஞ்சி வருணன் வந்து சரண்புகுந்த காலத்தும், வேலை கோலி அடைத்துழி - கடலை மிகவும் வளைத்து அணையமைத்தபோதும், குலத்து உடை ஒற்றர் தம்பால் - அரக்கர் குலத்திலே தோன்றிய ஒற்றர்களிடத்து, உயிர் கொடுத்து - உயிர்ப்பிச்சை அளித்து, உள்ளம் கள்ளம் துடைத்துழி - அவர்களுடைய நெஞ்சத்து வஞ்சனையை அறவே போக்கியபோதும், வந்திலாதான் - வராதிருந்தவன், இனி வர ஐயம் உண்டோ - இனி வருவன் என்று நினைக்கச் சந்தேகம் யாதேனும் உள்ளதோ? (உறுதியாக இராவணன் போருக்கு வரமாட்டான்). ஓகாரம் - எதிர்மறை.

நிகழ்ச்சிகள் முறைமாறி இச்செய்யுளில் கூறப்பெற்றுள்ளன. உடைக்குலத் தொற்றர் என்பது மொழி மாற்றிப் பொருள் உரைக்கப்பட்டது, ஒற்றர்க்குயிர் கொடுத்தது; வானரர்களாக உருமாறி ஒற்றுக் கேட்க வந்த சுக சாரர்கள் வர, அவர்களை வீடணன் அறிந்து இராமபிரானிடம் விட்டுத் தன் மந்திர வன்மையால் அவர்கள் தமது உண்மையுருவம் பெறுமாறு செய்ததும், இராமன் கருணையால் அவர்கள் விடுதலை யடைந்து இராவணன் பாற் சென்று இராமபிரான் பராக்கிரமத்தைக் கூறியதும்; யுத்த காண்டம்: ஒற்றுக் கேள்விப் படலம் 740-752 கொண்டு காண்க.
'ஊரை நெருங்கி முற்று முன்னே எழுந்து பொரவேண்டிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அரக்கன், 'ஊரணித்தாக வந்தும் பொரத் துணிந்தானில்லை; அவனே பொருதற்கு வருபவன்' என்று இராம்பிரான் கூறியதாகக் கூறினன் அங்கதன் என்க. துடைத்துழி, தொழுதுழி, கொடுத்துழி, யடைத்துழி என்ற இடங்களில், எச்சங்களின் அகர வீறு தொக்கது; வீடணற்கரசளித்தது குடைத்தொழில் எனப்பட்டது. குடை முக்கியமான அரசச் சின்னமாகலின். 'குழைக்கின்ற கவரியின்றிக் கொற்றவெண் குடையு மின்றி' என்றது காண்க. 'பல குடை நீழலுந் தங்குடைக் கீழ்க் காண்ப, ரலகுடை நீழ லவர்' (குறள். 1034).

பி - ம். 1. உடைத்தவன்; ஒற்றர்க் கம்மாவுரை.

2. துடித்துழி.

3. கொடைத் தொழில் தம்பி.

4. ஆண்டொழி லழகிதம்மா, இனிச்செயு மாண்மை யுண்டோ. 35

948. மறிப்புண்ட தேவர் காண
மணிவரைத் தோளின் வைகும்
நெறிப்புண்ட ரீக மன்ன
முகத்தியர் முன்னே நென்னல்
பொறிப்புண்ட ரீகம் போலு
மொருவனுற் புனைந்த மௌலி
பறிப்புண்டும் வந்தி லாதான்
இனிப்பொரும் பான்மை யுண்டோ.

'மறிப்புண்ட தேவர் - (தன்னால் சிறையிலே) மடக்கி அமைக்கப்பட்ட அமரர்கள், காண - கண்டுகொண்டிருக்கவும், மணிவரை தோளின் வைகும் - அழகிய மலைபோன்ற புயங்களில் (தழுவி) வதியும், நெறி புண்டரீகம் அன்ன முகத்தியர் முன்னே - நெறியினைக்கொண்ட தாமரை மலர்போன்ற முகத்தையுடைய தேவமாதர்க்கு முன்பாக, நென்னல் - நேற்று, பொறி - உடற்புள்ளிகளையுடைய, புண்டரீகம் போலும் - புலியை ஒத்த, ஒருவனால் - (வீரம் செறிந்த) சுக்கிரீவனால், புனைந்த மௌலி - தான் அணிந்திருந்த மகுடமணிகளை, பறிப்புண்டும் - பறிக்கப்பெற்றும் (அப்போது அந்தச் சுக்கிரீவனைப் பொருதற்கு), வந்திலாதான் - வாராதிருந்த இராவணன், இனி பொரும் பான்மை உண்டோ - இனி வந்து யுத்தம் செய்யும் தன்மையும் உள்ளதோ' (இல்லை) என்றபடி.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தேவரும் அவர்தம் தேவியரும் காணச் சுக்கிரீவனால் மகுட மணி பறிக்கப்பெற்று அவமானமுற்றும் உடனே சினங்கொண்டு போருக்கெழாதவன் இனிப் பொருதற்கு வருதலும் உண்டோ? அது நிகழாத காரியம் என இராமபிரான் கூறியதாக அங்கதன் அறைந்தான். இவனாற் பரிபவப்பட்ட தேவர்களின் முன்பு இப் பங்கம் நிகழ்ந்ததாகலின் இராவணனுக்கு ரோஷம் உண்டாதல் இயல்பாதலால் இங்ஙனம் கூறப்பட்டது. இது வயப்புலியை வாலுருவி விடுவதுபோன்ற ஓர் செயல் என்ப. தேவர் காணச் செயல்கள் ஆற்றுவது சிறப்புப்போலும்; (ஒப்பு): 'காதையென் புகழினோடும் நிலைபெற வமரர் காண, மீதெழு மொக்கு ளன்ன யாக்கையை விடுவ தல்லால்' (யுத்த. இந்திரசித்து. 9) என்று இராவணன் பின்னர்க் கூறுதல் காண்க. இனி, மகளிர்முன் அதுவும் அவனால் அடிப்படுக்கப்பட்ட தேவமாதர் முன்பு பரிபவப் படலும் மிகவும் இழிவானதாகும்; ஆதலின் முகத்தியர் முன் பெனப்பட்டது; (ஒப்பு): 'தாதவிழ் கூந்தன் மாதர் தனித்தனி நோக்கத் தானோர், பூதல மென்னுந் தங்கை தன்னையே நோக்கிப் புக்கான்' (யுத்த. கும்ப. 3); 'மிதிலைவந்த சானகி நகுவ ளென்றே நாணத்தாற் சாம்புகின்றான்' (யுத்த. கும்ப. 11) என்பன காண்க. புண்டரீகம் - முன்னது தாமரை, (சுந்தர. 1127); பின்னது புலி; 'புண்டரிகத் துரியான்' (இரகு. குலமு. 3); 'புண்டரிக மலரினும்' (தக்க. 24). இனி, புண்டரீகம் போலும் ஒருவன் வாலி என்றும், அவன் இராவணனுடன் நட்புப்பூண்டு அவனுக்கு முடிசூட்டினன் என்றும் ஐயரவர்கள் குறிப்பர்; இதற்கு ஆதாரம் ஆராய்தல் வேண்டும். மறிப்புண்டல் - சிறைப்படுத்தப்படுதல். மணிவரை - இங்குத் திரிகூட மலை. தோள் - தாழ்வரை. இனி மணிவரைத் தோளின் வைகும் நெறிப்புண்டரீகம் என்று புண்டரீகத்துக் கியைத்தலுமாம். தோளில் வைகுதல்: 'வீமன் திருமகளாம் மெல்லியலை யுன்னுடைய, வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன்' (நள. 41). நென்னல் - முன் நாள்; 'நென்னற் கண்ட திருமேனி' (யுத்த. 5); 'நென்னலே கழிந்த தென்றான்' (வி. பா. நிரைமீட்சி. 106).

பி - ம். 1. தன்வரைத்.

2. முகத்தியர் முன்னே நிற்க, எதிரே நென்னல், நென்னல் காண.

4. என்னிலிப்; படர்வ தென்றான், படுவ தென்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இங்கு ஓர் அதிகப்பாடல் :—

பசையறு சிந்தை யானைத் தமரொடும் படுத்த போதும்
இசையெனக் கில்லை யென்றே யென்பதோ ரிகழ்வு
[கொண்டான்
வசையற விசைக்கு மூரை வளைக்கவும் வந்தி லாதான்
திசையினை வென்ற வென்றி வரவரச் சீர்த்த தென்றான்.

பி - ம். 2. இகழ்வு காண்பான்.
3. வசையுற வைகும்.
4. சீர்த்த தன்றே. 36

## இராவணன் இறுதியாகச் செய்யவேண்டியது யாது என்று அங்கதன் கூறல்

949. என்றிவை யியம்பி வாவென் றேவின னென்னை எண்ணி
ஒன்றுனக் குறுவ துன்னித் துணிந்துரை உறுதி பார்க்கின்
துன்றிருங் குழலை விட்டுத் தொழுதுவாழ் சுற்றத் தோடும்
பொன்றுதி யாகி லென்பின் வாயிலிற் புறப்ப டென்றான்.

'என்று இவை இயம்பிவா என்று - என்று மேற்கூறிய இந்த வார்த்தைகளைச் சொல்லி (இராவணனுடைய உள்ளக் கருத்தைத் தெரிந்து) வருவாயாக வென்று, என்னை ஏவினன் - என்னைக் கட்டளையிட்டு அனுப்பினன், (ஆகவே) எண்ணி - மேற் கூறியவைகளை நன்கு பரிசிலனை செய்து, உனக்கு உறுவது ஒன்று உன்னி - உன் மனத்தில் வந்து தோன்றும் முடிவான செயலை நன்கு ஆராய்ந்து, துணிந்து உரை - துணிந்து பகர்வாயாக; உறுதி பார்க்கின் - உனக்கு நன்மை தரத்தக்க செயலை நன்கு நோக்குவாயானால், துன்று இரு குழலை விட்டு - அடர்ந்தகரிய கூந்தலையுடைய சீதா தேவியைச் சிறைவீடு செய்து, தொழுது வாழ் - (இராமபிரானை) வணங்கி வாழ்வாயாக; சுற்றத்தோடும் பொன்றுதி யாகில் - உன் உற்றாருடன் இறந்துபட எண்ணினையாகில், என்பின் - என்னைப் பின்தொடர்ந்தே, வாயிலில் புறப்படு - வீட்டு வாயிலிலிருந்து புறப்படுவாயாக', என்றான் - என்று பகர்ந்தான்.

940-ஆவது செய்யுளில் அங்கதன் இராவணனை இடித்துரைத்து, இறுதியாக இச்செய்யுளில் 'ஒன்று பிராட்டியை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விட்டு விடு; அன்றிப் போருக்குப் புறப்படு' என்று கூறு கின்றான். இவ்விரு வினைக்களும் இராமபிரான் அங்கதன் பால் கூறியனுப்பினவைகளே, அவன் இராவணனை இடித்துரைத்தன யாவும் இராமபிரான் 921-ஆம் செய்யுளில் சுட்டியுரைத்ததை அங்கதன் விரித்தமைத்ததாகும். என் - ஐ - என் தலைவன் எனினு மாம். சீதாதேவியை விட்டிடுமாறு இராவணற்கு அறவுரை கூறாதவரில்லை. செஞ்சோற்றுக் கடன் கழித்திறந்தொழிந்த தம்பி கும்பகன்னன் 'திட்டி விடமன்ன கற்பின் செல்வியை விட்டிலை யோவிது விதியின் வன்மையே' (யுத்த. கும்ப. 80) என்கின்றான். 'புலையாடற் கொன்று முன்னை யென்னுரை கொள்ளாய்' (ஆரணிய. 741) என்பது மாரீசன் கூற்று. 'தப்புதி யறத்தை யேழாய் தருமத்தைக் காமியாதே' (சுந்தர. 460); என்பது பிராட்டி கூறியது. 'கிளையொடு மடியாது அசைவில் கற்பினவ் வணங்கைவிட் டருளுதி (யுத்த. 110) 'குலம்கள்மே லுடைய காதல், தீராசை பழியென்றேன்' (யுத்த. இராவணன் வதை. 221) என்கின்றான் வீடணன். 'ஆசை தானச் சீதைபால் விடுதியாயி னன்னவர் சீற்றந் தீர்வர்' (யுத்த. இந்திரசித்துவதை. 6) என்பது அருமை மகள் இந்திர சித்து மொழிந்தது.

பி - ம். 1. இயம்புவாய்; இவற்றை யெல்லாம்.

4. ஆயினின்றே, ஆகிலுன்றன். 

## நீ ஊரிற் பதுங்கியிருப்பது உனக்குப் பழியையே விளைக்கு மென்று அங்கதன் கூறுதல்

950. நீரிலே பட்ட சூழ்ந்த நெருப்பிலே பட்ட நீண்ட
பாரிலே பட்ட வானப் பரப்பிலே பட்ட வெல்லாம்
போரிலே பட்டு வீழப் பொருதநீ யொளித்துப் புக்குன்
ஊரிலே பட்டா யென்றால் பழியென உளையச் சொன்னான்.

'நீரிலே பட்ட - நீரிலே தோன்றிய பிராணிகளும், சூழ்ந்த நெருப்பிலே பட்ட - வளைந்து கொள்கின்ற தீயிடைத் தோன்றிய பிராணிகளும், நீண்ட பாரிலே பட்ட - பரந்த பூமியிடத்துத் தோற் றம்செய்த பிராணிகளும், வான பரப்பிலே பட்ட - ஆகாயவெளி யிலே தோற்றிய பிராணிகளும், எல்லாம் - (ஆகிய) எல்லா உயிர் களும், போரிலே பட்டு வீழ - போர்க்களத்திலே இறந்து வீழ,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பொருத நீ - ஒருக்கால் போர் புரிந்த நீ (இப்பொழுது), உன் ஊரிலே புக்கு ஒளித்து பட்டாய் என்றால் - உன் நகரின்கண்ணே (ஓர் புறத்து) புகுந்து மறைந்து கிடந்தாய் என்றால், பழி - உனக்குப் பழியை விளைக்கும்' என - என்று, உளைய சொன்னான் - இராவணன் மனம் புண்படும்படி மொழிந்தான்.

உன் கொடிய செயலால் உலகமே அழியும்படி நீ ஒருகால் பொருதனை; அத்தகைய நீ போர்க்குப் புறப்படாமல் நகர்க்குள் அஞ்சி உறைவது உனக்குப் பழியினைத்தரும் என்றான் அங்கதன். படுதல் - தோன்றுதல்; 'ஈத லிசைபட வாழ்தல்' (குறள். 231); பட்டு என்ற பாடத்தினும் பட்ட என்ற பாடமே சிறந்தது ஸ்ரீஐயர் குறிப்பு. உளைதல் - துன்புறுதல்; ஆரணிய. 286; சுந்தர. 236.

பி - ம். 1. பட்டு.
2. பட்ட தெல்லாம்; பட்ட வென்றால். 38

வேறு

## இராவணன் முனிந்து கூறல்

951. சொற்ற வார்த்தையைக் கேட்டலுந் தொல்லுயிர்
முற்று முண்பது போலும் முனிவினன்
பற்று மின்கடி தின்னெடும் பார்மிசை
எற்று மின்னென நால்வரை யேவினான்.

சொற்ற வார்த்தையை கேட்டலும் - (இவ்வாறு அங்கதன்) கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடனே (இராவணன்), தொல் உயிர் முற்றும் - பழமையான உயிர்களையெல்லாம், உண்பது போலும் - விழுங்கிவிடுவான் போலும் என்று எண்ணத்தக்க, முனிவினன் - கோபத்துடன் கூடியவனாகி, 'கடிதின் பற்றுமின் - இந்தத் தூதுவனை விரைந்து பிடியுங்கள், நெடு பார்மிசை எற்றுமின் - நீண்டு பரந்த பூமியின்மீது மோதுங்கள்', என நால்வரை ஏவினான் - என்று நான்குபேரைக் கட்டளையிட்டு அனுப்பினான்.

சினத்தால் உலகத்திலேயே உயிர்களில்லாவாறு செய்துவிடுவான்போன்று காணப்பட்டான் என்பது தோன்ற, தொல்லுயிர் முற்று முண்டதுபோலு முனிவினன் எனப்பட்டது. சினம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சேர்ந்தாரைச் சொல்லி எனப்படுவது காண்க. பின் இரண்டடிகளும் வெகுளியின் விளைவான அவன் தீவிரச் சொற்களைக் குறித்து நின்றன; (ஒப்பு): 'உற்றக லாமுன், கற்ற குரங்கைப், பற்றுதி ரென்றான், முற்று முனிந்தான்' (சுந்தர. 1228).

பி - ம். 2. முனிவினுற்.

3. பாரிடை. 30

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

## அங்கதன் செயல்

952. ஏவி னன்பிடித் தாரை யெடுத்தெழத்
தாவி னனவர் தந்தலை போயறக்
கூவி னனவன் கோபுர வாயிலில்
தூவி னன்துகைத் தானிவை சொல்லினன்.

ஏவினன் - இராவணனுடைய கட்டளையை மேற்கொண்டு, பிடித்தாரை - தன்னைப் பிடித்த நால்வரையும், எடுத்து - தாங்கிக் கொண்டு, எழ தாவினன் - உயரப் பாய்ந்து, அவர் தம் தலை போய் அற - அவர்கள் தமது தலைகள் அறுபட்டு ஒழியச்செய்து, கூவினன் - முழக்கம்செய்து, அவன் - அந்த இராவணனுடைய, கோபுர வாயிலில் தூவினன் - கோபுர வாயிலில் சிதறிவிட்டு, துகைத்தான் - மிதித்தவனாய், இவை சொல்லினன் - பின்வரும் வார்த்தைகளைப் பகர்ந்தான்.

இச்செய்யுட்கண் வெகுளியின் பலவகை மெய்ப்பாடுகளைக் காண்க. இவை சொல்லினன்; அங்கதன் கூற்றை அடுத்த செய்யுளிற் காணக. ஏவினன் - செயப்பாட்டு வினைப்பொருட்கண் வந்த செய்வினை.

பி - ம். 1. ஏவினர்.

2. தாவி னனவர்தன்; தலையாலறை, தலையாறலை.

3. கோபுர வாசலிற். 4

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


953. ஏமஞ் சார வெளியவர் யாவிரும்
தூமங் கால்வன வீரன் சுடுசரம்
வேமின் போல்வன வீழ்வதன் முன்னமே
போமின் போமின் புறத்தென்று போயினன்.

(பின் அங்கிருந்த வீரர்களைப் பார்த்து), 'தூமம் கால்வன - புகையை எழச்செய்வனவும், வேமின் போல்வன - வெந்து கொதிக்கச்செய்கின்ற மின்னல் போல்வனவும் ஆன, வீரன் சுடுசரம் - வீரனான இராமபிரானுடைய சுட்டெரிக்கின்ற அம்புகள் (வந்து), வீழ்வதன் முன்னமே - உம்மீது வீழ்வதன் முன்னமே, எளியவர் யாவிரும் - வலியற்ற நீங்கள் அனைவரும், ஏமம் சார - பாதுகாவலான இடத்தை அடையும்படி, புறத்து போமின் போமின் - அப்பால் செல்லுங்கள் செல்லுங்கள்', என்று போயினன் - என்று சொல்லிக்கொண்டே (இராமபிரான் தங்கியிருந்த இடத்திற்குச்) சென்றான்.

போமின் புறத்தின் என்றது கருணைபற்றி என்க; (ஒப்பு): 'ஆவு மானியற் பார்ப்பன மக்களும்' (புறநா. 9) எனத் தொடங்கும் புறநானூற்றுச் செய்யுளும், அதன் உரையும் காண்க; மற்றும், சீவக. 443, 2258—59, 2261; சிலப். 26; 225—8; சுந்தர. 970; சிறுபஞ்ச. 41; காஞ்சிப். நாடு. 21-உம் காண்க. எளியவர் யாவிரும்: முன்னிலையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. போமின் என்றது, இலங்கைவாசிகளை. படைமடம் என்ற புறத்திணைத்துறை இங்குக் கருதத்தக்கது' (ஒப்பு): புறநா. 9 உரை, 142.

பி-ம். 1. சார்ந்த; யாவரும்.
3. போல விழுவதன்; போல்வன வீழ்வன.

41

அங்கதன் இராமபிரானை யடைந்து கூறல்

954. அந்த ரத்திடை யார்த்தெழுந் தானவன்
சிந்து ரத்தந் துதைந்தெழுஞ் செச்சையான்
இந்து விண்ணின் றிழிந்துள தாமென
வந்து வீர னடியில் வணங்கினன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சிந்து ரத்தம் - சிந்திய உதிரத்தினுல், துதைந்து எழும் செச்சையான் - நெருங்கத் தோன்றிய, செஞ்சந்தனம் போன்ற பூச்சுகளையுடையவனுன அங்கதன், அந்தரத்திடை - ஆகாயத்தினிடத்து, ஆர்த்து எழுந்தவனுய், விண்ணின்று இந்து இழிந்துளதாம் என - ஆகாயத்திலிருந்து சந்திரன் பூமியில் இறங்கியதென்று (பார்த்தவர்) கருதுமாறு, வந்து - வந்து, வீரன் அடியில் வணங்கினுன் - வீரனுன இராமபிரானுடைய திருவடியில் வணங்கி நின்றுன்,

பகைவருடன் போர் செய்ததனுல், ரத்தம் படிந்திருந்தது அவன் மேனியில் செஞ்சந்தனக் குழம்பைப் பூசியது போன்றிருந்தது எனப்பட்டது. வெண்ணிற மேனியன் ஆதலின் அங்கதன் இந்துவிற்குவமிக்கப் பட்டான். செச்சை - செங்குழம்பு.

பி - ம். 1. தானவர்.

2. சித்த ; தெறித்தெழு, துகைத்தெழுஞ் ; செம்மையான்.

3. இழிந்துளதே. 42

955. உற்ற போதவ னுள்ளக் கருத்தெலாம்
கொற்ற வீர னுணர்த்தென்று கூறலும்
முற்ற ஓதியென் மூர்க்கன் முடித்தலை
அற்ற போதன்றி யாசை யருனென்றுன்.

உற்ற போது - (அங்கதன்) வந்தடைந்த பொழுதில், கொற்றம் வீரன் - வெற்றி பொருந்திய வீரனுன இராமபிரான், ‘ அவன் உள்ள கருத்து எலாம் - அந்த இராவணனுடைய உள்ளத்தின் கண் உள்ள எண்ணங்கள் அனைத்தையும், உணர்த்து-தெரிவிப்பாயாக,’ என்று கூறலும் - என்று மொழிந்த அளவில், (அங்கதன்), ‘முற்ற ஓதி என் - (அந்த அரக்கன் நினைவுகளை ஒன்றுவிடாமல்) முழுதும் சொல்வதால் என்ன பயன், மூர்க்கன் - அந்தப் பிடிவாதக்காரன், முடிதலை அற்றபோது அன்றி - கிரீடம் தரித்துள்ள (தனது) தலைகள் அறுபட்டபோதன்றி, ஆசை அருன் - தன் மனத்துக் கொண்டுள்ள) காதல் நீங்கப் பெருன் ’, என்றுன் - என்று தெரிவித்தான்,

இச் செய்யுட்கண் சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமும் காண்க. நல்லறிவுரை கேளாதவன் ஆதலின் மூர்க்கன் எனப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பட்டது; மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா என்ற பழமொழியும் காண்க.

பி-ம். 2. வீரன் உரை.

3. முற்றும், ஓதிய.

4. ஆசை யருது. 43

அங்கதன் தூதுப் படலம் முற்றும்.

---

## இப்படலத்தை யொட்டிய முதனூற் குறிப்பு:—

நால் வகை உபாயங்களையும் நன்குணர்ந்த இராமபிரான் அரசநீதி தவறுதவாறு, பலருடன கலந்து ஆலோசித்து வீடணன் அநுமதியின் பேரில் அங்கதனைத் தூதாக அனுப்பத் துணி கின்றான். பின்னர் அவனை அழைத்துப் பல அறவுரைகளைக் கூறிச் சீதையை விட்டிடுமாறும் மறுத்தால் போருக்கு ஆயத்தமாகுமாறும் சொல்லும்படி பகர்ந்தனன். அங்கதன் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு விரைந்து சென்று இராம பிரான் கூறியதை அவ்வரக்கனிடம் மொழிகின்றான். அச்சொற் களைக் கேட்டு வெகுண்டு அரக்கர்கோன் அவனைப் பிடித்துக் கட்டு மாறு கட்டளை யிடுகின்றான். அங்கதனோ தன்னைப் பிடிக்க வந்த அரக்கர்களுடன் விண்ணில் எழுந்து, பின் அவர்களை உதறித் தள்ளி விட்டு, இராவணனுடைய மாளிகைச் சிகரத்தினை உதைத்துக் கீழ் விழும்படி செய்து இராமபிரானிடம் சென்று சேர்கின்றான். இராமபிரான் வாலி குமாரனைத் தூது விட எண்ணியபோது இலக்குவன் தடுத்துக் கூறியதும், அங்கதனை நல்ல நயமான வார்த்தைகளால் இராவணன் தன்வசப் படுத்த முயன்றதும் அதன் பின்னர் இருவர்க்கும் நடந்த சம்பாஷணையும் முதனூலில் இல்லை.

---


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 14. முதற்போர்ப் படலம்

இது, இராமபிரானும் இராவணனும் முதன் முதலாகப் புரிந்த போரைக் கூறும் படலம் என விரியும். 'இரரவணன் முதனாளை யிற் றோற்றபடலம் பங்கப்படலம் என்றும் முதனாளை யுத்தம் என்றும் இராவணன் முதற் போரில் மருட்சி என்றும் இப் படலத்தின் பெயர் சில பிரதிகளில் மாறிக் காணப்படுகின்றது.

## வானர சேனைக்கு இடப்பட்ட கட்டளை

956. பூச லேபிறி தில்லையெ னப்புறத்
தாசை தோறு முரச மறையுமின்
பாச றைப்படை யின்னிடம் பற்றிய
வாசல் தோறு முறையின் வகுத்திரால்.

'பூசலே பிறிது இல்லை - போரே யல்லாது வேறு சமாதானம் என்பது இல்லை; என - என்று, புறத்து - வெளியில், ஆசை தோறும் - திசைகள் தோறும், முரசம் அறையு மின் - முரசொலி செய்யுங்கள்; (என நீலன் கட்டளையிட) பாசறை படையின் இடம் - பாசறைக்கண் உள்ள சேனைகளிடம், 'பற்றிய வாசல் தோறும் - பொருந்திய கோட்டை வாயில்கள் தோறும், முறையின் வகுத்திர் - முறையே (நீங்கள் யாவரும்) அணிவகுத்து நிற்பீராக' (என்றான் இராமபிரான்). ஆல் - அசை. ஏகாரம் - தேற்றம்.

என அறையுமின் என்க. பற்றிய வாசறோறும் என்பது முதல், கொடி மதிற் குடுமித்தலைக் கொள்க, (958) என்பது வரை யில், இராமபிரான் பாசறைப் படையினிடம் கூறியன. இக்கட்டளை இராமபிரான் பிறப்பித்ததே; சேனை நாயகன் ஆன நீலன் கட்டளை யெனினுமாம். ஆசை - திசை.

பி - ம். 2. அறைந்தன, அறைந்தேன, அறைந்தகள், அறைந்தனர்.
3. பறையின்னிடம், பறை பின்னிடப்; பற்றுமின்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இங்கு அதிகப்பாடல்கள் :—

ஆதி யம்பர னங்க தன் ஓதல்கேட்
டதவன் கருத் தென்றிடி னன்றெனச்
சோதி யாம்மக னுதி துணைவருக்
கோதி னனங் கம்ரர்க ளுய்யவே

ஆதி நாயகன் ஆங்கது கூறுமுன்
பாத மீது பணிந்தருள் பற்றியே
காது வெம்படைக் காவல ராதியோர்
மோது போரை முயலுதல் மேயினர்.

**957. மற்றும் நின்ற மலையும் மரங்களும்
பற்றி வீரர் பரவையின் மும்முறை
கற்ற கைகளி னுற்கடி மாநகர்
சுற்றும் நின்ற வகழியைத் தூர்த்திரால்.**

'மற்றும்-மேலும், கற்ற கைகளினுல் - (முன்பே தூர்த்தற்குப்) பழகித் தேர்ந்த கரங்களால், வீரர் - வீரர்கள், நின்ற மலையும் மரங்களும் - ஆங்காங்கு நிலைபெற்றுள்ள மலைகளையும் மரங்களையும், பற்றி - கைக்கொண்டு (சேது அணை வகுத்தபோது), பரவையின் - கடலில் வீழ்த்தியதினும், மும்முறை - மூன்று மடங்கு அதிகமாகக் (கொண்டுவந்து வீசி), கடிமா நகர் சுற்றும் நின்ற - காவல் அமைந்த பெரிய இலங்காபுரியைச் சூழ்ந்துள்ள, அகழியை தூர்த்திர் - அகழியைத் தூர்த்துத் திடராக்குங்கள். ஆல் - அசை.

முன்னரே பரவையைத் தூர்த்துப் பழகிய கைகளினுல் அகழியைத் தூர்த்தல் எளிது என்றபடி. இலங்கா நகரத்துக்கு இயற்கையாக அமைந்த அகழி கடல் என்று கூறப்பட்டிருத்தலின், இங்குக் குறித்தது இலங்கையைச் சூழ்ந்துள்ள கடற்பகுதி என்க. 'மற்று நின்ற வென்றது, அணை கட்டி மிகுந்தது என்பதும், 'மும்முறை என்பது. கடலின் மும்மடங்கு' என்பதும் பழையவுரைகள்.

பி - ம். 2. பற்றி வீசப், வீசிப், வீசிய.
4. சுற்றி நின்ற.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


958. இடுமின் பன்மர மெங்கு மியக்கறத்
தடுமின் போர்க்கு வருகெனச் சாற்றுமின்
கடுமி னிப்பொழு தேகதிர் மீச்செலாக்
கொடு மதிற்குடு மித்தலை கொள்கென்றான்.

'பன்மரம் இடுமின் - (அரக்கர்கள் நடமாடும் சாலைகளில்) பல மரங்களைப் போடுங்கள்; எங்கும் இயக்கு அறதடுமின் - (அவ்வாறு போடுவதால் அரக்கர்கள்) எங்கும் ஊடாட முடியாமல் தடை செய்யுங்கள்; 'போர்க்கு வருக என சாற்றுமின் - சண்டையிட வாருங்கள் என்று அறைகூவி அழையுங்கள்; கடுமின் - விரைந்து, இப்பொழுதே - இப்பொழுதே, கதிர்மீ செலா - சூரியனும் (நேராக) மேற் செல்ல மாட்டாத, கொடு மதில் குடுமி தலைகொள்க - வளைவாக அமையப் பெற்ற மதில்களின் சிகரத்தைக் கைப்பற்றிக் கொள்ளுங்கள்' என்றான் - என்று இராம்பிரான் கட்டளையிட்டான்.

இயக்குதல் - சஞ்சரித்தல், இயக்கு அற - நடமாட்டம் இல்லாதவாறு, கதிர் மீச்செலாக் கொடுமதிற் குடுமி; சுந்தர. 116; 158; 169, 193; யுத்த. 430; கடுகுமின் என்பது கடுமின் என இடை குறைந்தது. மின் - முன்னிலையேவற்பன்மை விகுதி, கொடுமை வளைவு. கொடிய இராவணன் தலைநகரின் மதிலாகலின் கொடு மதில் என்றுருமாம்: கொடி மதில் என்றும் சிலர் பாடங் கொண்டு உரை வரைவர். மதில் குடுமித்தலை கொள்ளுதல், நொச்சித்திணையாகும்; (தொல். புறத். 68) இம்மூன்று செய்யுட்களும் இராமபிரான் படைகளுக்கு இட்ட கட்டளையாகும்.

பி - ம். 1. எடுமின்; இயங்கத், இயக்கிறத்.
2. வருமெனச்; சாற்றலும்.
3. கெடுமின்; மீச்செலக்.
4. கொடி; குருவித்தலை; கொள்ளுமின். 3

## வானரப்படை அகழியைத் தூர்த்தல்

959. தடங்கொள் குன்று மரங்களுந் தாங்கிய
மடங்க லன்னவவ் வாநர மாப்படை
இடங்கர் மாவிரி யப்புன லேறிடத்
தொடங்கி வேலை யகழியைத் தூர்த்ததால்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

(இவ்வாறு கட்டளை பிறக்க), தடம் கொள் குன்றும் மரங்களும் - பெருமையைக்கொண்ட மலைகளையும் மரங்களையும், தாங்கிய - சுமந்து சென்ற, மடங்கல் அன்ன அ வானர மாப்படை - சிங்கத்தையொத்த அந்தப் பெரிய குரங்குச் சேனை, இடங்கர்மா இரிய - முதலைபோன்ற நீர்வாழும் பிராணிகள் நிலைகெட்டோடவும், புனல் ஏறிட - அகழி நீரானது அப்பாற் செல்லவும், தொடங்கி - செய்ய ஆரம்பித்து, (இலங்கை நகர்க்கண் அமைந்த), வேலை அகழியை தூர்த்த - கடல்போன்று ஆழ்ந்த அகழியைத் தூர்க்கலாயிற்று. ஆல் - அசை.

தடம் - சிறிய நீர்நிலைகள் எனினுமாம். தடம் - வழியென்றுமாம். மடங்கல் - பிடரிமயிர் மடங்கியிருப்பது என்று சிங்கத்துக்குக் காரணக்குறி. வானரங்களின் மிக்க வன்மையும் மிகுதியும் குறிப்பான் மடங்கல் என்றும் மாப்படை என்றும் கூறப்பட்டன. இடங்கர்மா - முதலை; 'முதலை இடங்கர் கராம் என்ற இந்த மூன்றும் சாதி விசேடம்' (குறிஞ்சிப். 257); நச். உரை; கிட்கிந்தாகாண்டம் கார்காலப் படலம் 118-ஆம் பாடல்; யுத்த. 631 என்ற இவற்றின் உரைக்குறிப்புக் காண்க. முதலைமா; (சூளா. நாட்டுச். 22) காண்க. வேலை யகழி: இருபெயரொட்டாகவும் கொள்க. பகைவர் அகழியைத் தூர்த்தல், பாசி நிலையாம் (தொல். புறத். 68).

பி - ம். 1. தாங்கியே, தாக்கின, தாங்சின.
2. மடங்கல் போல்வரும்.
4. தூர்க்கவே, தூர்த்திரால்.

4

960. ஏய வெள்ள மெழுபது மெண்கடல்
ஆய வெள்ளத் தகழியைத் தூர்த்தலும்
தூய வெள்ளந் துணைசெய்வ தாமென
வாயி லூடுபுக் கூரை வளைந்ததே.

எண் கடல் ஏய வெள்ளம் எழுபதும் - எட்டாம் கடல் போன்று அமைந்த எழுபது வெள்ளம் குரங்குப் படையும், வெள்ளத்து ஆய அகழியை - வெள்ளமான நீர்ப் பெருக்கைக் கொண்ட அகழியை, தூர்த்தலும் - (மலைகளையும் மரங்களையும் கொண்டு) நிரப்புகையில்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தூய வெள்ளம் - தூய்மையான வெண்ணிறம் கொண்ட அந்த வெள்ள நீரானது, துணை செய்வது ஆம் என - இராமபிரானுக்கு உதவி புரிவதை ஒப்ப, வாயில் ஊடுபுக்கு ஊரை வளைந்தது - இலங்காபுரியின் வாயில்கள் வழியாக உள்ளே புக்கு ஊரை வளைந்து கொண்டது. ஏ - அசை.

எழுபது வெள்ளம் வானரச் சேனை என்று இந்நூலிற் பல இடங்களிலும் வருதல் காணலாம். சுந்தர. 520, 603. எண் கடலாய ஏய வெள்ளம் என இயைக்க; எண்கடல், எட்டாம் கடலான பெரும்புறக் கடல்' என்பது பழையவுரை, எண் கடல்: கடல் ஏழு எனவே நூல்கள் நுவலும், எனினும் வானரங்களின் பெருக்கை நோக்கி அவற்றின் தொகுதி எண் கடல் எனப் பட்டது. எண்கடலாய வெள்ளத் தகழியை என்றேகோடலுமாம். (ஒப்பு): 'புகார்ப் பிறந்த, எழுமாத ரோடிவ ளெண்மாத ராவள்' (குலோத்துங்கக் கோவை). எண் கடல் எண் மாதர் என்றதுபோலச் சிறப்பாக எண்ணப்பட்ட கடல் எனினுமாம். வெள்ளம் துணை செய்வது போன்று வளைந்தது; தற்குறிப்பேற்றவணி. 'ஏழ் கடல் கிடந்ததென்று' (சுந்தர. 241). பிறர்க்குதவி செய்தது பற்றித் தூய வெள்ளம் எனப்பட்டது.

பி - ம். 1. வெள்ள மெழுபது மேலும்.
2. வெள்ள வகழியை.
3. துணைச் செய்வது, துணைச் செய்வதாமென.
4. வளைந்ததால், வளைந்தவே. 5

961. விளையும் வென்றி யிராவணன் மெய்ப்புகழ்
முளையி னேடுங் களைந்து முடிப்ப போல்
தளைய விழ்ந்த கொழுந்தடந் தாமரை
வளையம் வன்கையில் வாங்கின வாநரம்.

விளையும் வென்றி - இதுகாறும் வளர்ந்து கொண்டிருந்த வெற்றியையுடைய, இராவணன் மெய் புகழ் - இராவணனது உண்மையான கீர்த்தியை, முளையினேடும் களைந்து முடிப்பபோல் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அடியோடு பேர்த்தொழிப்பனபோல, தளை அவிழ்ந்த - முறுக் கவிழ்ந்த, கொழுதட தாமரை - வளவிய பெரிய தாமரை மலரைக் கொண்ட கொடியின், வளையம் - சிறந்த பெரிய கிழங்கை, வாநரம் வன்கையில் வாங்கின - குரங்குகள் (தம்து) வலிய கரங்களால் பற்றி யெடுத்தன,

இராவணன் மெய்ப்புகழ்: தாமரைக் கொடிகளைக் கிழங்கி ஞேடும் குரங்குகள் பறித்தமை இராவணனுடைய மெய்ப்புகழை அடியோடு களைந்தது போலும் எனப்பட்டது, மூன்றுல குடையவன்; *258, 261, 272. 335, 579, 752; 753, 847*: இசை யாலே பெயரெழுதுவோன்: *328*; தொல் குடியோன்: *316*; நான் முகன் மரபினன் *847*; மறைவலோன்; *733, 847*, வணங்காமுடியன் *556*; வள்ளல்: *630*; அவனுடைய பல வீரச் செயல்கள்: *851, 1004, 732, 329, 920, 358, 558, 851, 250, 323, 328, 557, 643, 646, 752, 848, 875*; *319, 327, 596, 742, 848, 889, 919, 905, 322, 613, 1013, 851, 330* முதலியவற்றில் காண்க. முளையிஞேடும் களைந்து; முளையிலே களையினல்லால்' (வி. பா. ரூது. *11*) தாமரையின் அளவிற் பருத்தமை தடம் என்றதனுலும் செழிப்புகொழு என்றதனுலும் நன்கு மலர்ந்த தன்மை தளையவிழ்ந்து என்றதனுலும் குறிக்கப் பெற்றன. கடையடி முற்றுமோனை, உவமையணி. ‘தாமரையின் செந்தேன் தளையவிழ’ (நள. *14*). தாமரை வளையம் - தாமரைக் கிழங்கு (கமாலாலயச் சிறப்பு. *1040-42*).

பி - ம். 2. கடிந்து.
3. தளைய விழ்ந்த செத்தாமரை மாத்தடம், தளையவொண் மலர்த் தாமரை யின்றடம்.
4. வளைய மொண்கையில்; வாங்கிய.

6

**962.** **இகழுந் தன்மைய னுய விராவணன்**
**புகழு மின்ருெடு போயின தாமென**
**நிகழுங் கண்ணெடு நீல முகுத்தலால்**
**அகழி தானு மழுவது போன்றதே.**

நிகழும் கண் - நடைபெறும் கண்கள் போன்ற, நெடு நீலம் உகுத்தலால் - நீண்ட கருவிளை மலர்கள் (தேனைச்) சிந்துவதால், இகழும் தன்மையன் ஆய இராவணன் - பழிக்கத்தக்க பண்புடைய இகழும் தன்மையன் ஆய இராவணன், புகழும் - கீர்த்தியும், இன்ருெடு வனுகிய இராவணனுடைய, புகழும் - கீர்த்தியும், இன்ருெடு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations





போயினதாம் என - இன்றோடு போய்விட்டதாகும் என்று, அகழி தானும் அழுவது போன்றது - (இலங்கையின்) அகழியும் அழுவதை நிகர்த்திருந்தது. ஏ - அசை.

இகழும் தன்மையனுய விராவணன்: (ஒப்பு) அறமிலாதான் (யுத்த: ஒற்றுக். 35): 'நஞ்சினுற் செய்த மனத்தினன்' (யுத்த. நிகும்பலை. 208); 'அறமுனக் கஞ்சியின் ருளித்தலால்' (யுத்த. கும்ப. 84); 'சுடுதியைத் துகிலிடைப் பொதிந்த துன்மதி' (யுத்த. 350); 'அவியைநாய் வேட்டதென்ன என்சொனு யர்க்க வென்னு' (ஆரணிய. 873) என்பன போன்றன காண்க. இனித்தன் தருக்கினுல் பிறரை இகழும் தன்மையனை எனினுமாம். கள் நெடு நீலம் எனப் பிரித்துக் கள் உகுத்தலால் எனக்கொண்டே பொருள் கூறலாம். கண் நெடு நீலம்: 'கண் போன் மலர்ந்த காமர் சுனை மலர்' (திருமுருகு. 298); தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இச்செய்யுள் 'ஐயம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 2. புகழும் மேன்மையும்; தாமெனு.
3. நீலம் வகுத்தலால், நெகிழ்தலால், முகிழ்த்தலால்.
4. அழுவன போன்றவே. 7

963. தண்டி ருந்தபைந் தாமரை தாளறப்
பண்டி ரிந்து சிதையப் படர்சிறை
வண்டி ரிந்தன வாய்தொறும் முட்டையைக்
கொண்டி ரிந்தன வன்னக் குழாமெலாம்

(அகழ் தூர்க்கப்பட்ட போது), தண்டு இருந்த பைந்தாமரை - தண்டாக இருந்த பசிய தாமரைக்கொடி, தாள் அற - அடி அகழப் பட்டதனுல், படர் சிறை வண்டு - (அங்கிருந்த) விரிந்த சிறகுகளையுடைய வண்டுகள், பண் திரிந்து சிதைய - ரீங்கார இசைகள் முறை மாற, இரிந்தன - நிலைதிரிந்து ஓடின; அன்னம் குழாம் எலாம் - அன்னப் பறவைகளின் தொகுதிகள் யாவும், வாய்தொறும் முட்டையை கொண்டு இரிந்தன - (தமது) வாய்களில் முட்டைகளைக் கவ்விக் கொண்டு நிலை மாறி ஓடின,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தண்டு - தாமரையின் நாளம், தாள் - அடி, அன்னப் பறவை அண்டஜம் அல்லது முட்டையினின்று பிறப்பதால் முட்டையைக் கொண்டிரிந்தன எனப்பட்டது. எறும்புகளும் முட்டை கொண்டு திட்டை யேறுவது தினசரிக் காட்சி. இரித்தல் என்பது பாண்டி நாட்டு வழக்கு என்பதும், இச்செய்யுள் 'ஐயம்' என்பதும் ஸ்ரீ ஐய ரவர்கள் குறிப்புக்கள்.

பி - ம். 1. தண்டிருந்தடந் ; தாளுடைப், தாழுடைப், தாளிறப்.

2. பண்டிருந்த, பண்டிருந்லு.

3. வண்டிருந்தன, இரிந்தென ; முட்டையும் 8

## வானரங்கள் பாய்தல்.

964. ஈளி தார மியம்பிய வண்டுகள்
பாளை தாதுகு நீர்நெடும் பண்ணைய
தாள தாமரை யன்னங்கள் தாவிட
வாளை தாவின வானரந் தாவவே.

ஈளி தாரம் இயம்பிய வண்டுகள் - இளி தாரம் என்னும் பண்களை யிசைத்த வண்டுகளுடன், பாளை தாது உகுநீர் நெடு பண்ணைய - (தென்னை, கமுகு முதலியவற்றின்) பாளையின் மகரந்தம் ஒழுகப்பெற்ற நீரைக்கொண்ட பெரிய வயல்களில் உள்ள, தாள தாமரை அன்னங்கள் - தாளுள்ள தாமரை மலரிலே வதிகின்ற அன்னங்களும், தாவிட - தாண்டிச் செல்லுங்கால், வாநரம் தாவ வாளை தாவின - குரங்குகள் தாவவே வாளை மீன்களும் துள்ளிக் குதித்தன. ஏ - அசை.

பறவைகள் தாம் தங்கியிருந்த தாமரை மலரை விடுத்துச் சென்றமைக்குக் காரணம் இதற்கு முன் செய்யுளிற் கூறப்பெற்றது. இளி தாரம் என்பன ஏழிசைகளைச் சார்ந்தவை. எடுத்த வோசையுமாம் : 'மந்தர மத்திமை தாரமிவை மூன்றில்' (கல்லா. 21, 50) ; 'மந்தரத்து மத்திமத்தும் தாரத்தும்' (பெரியபு. ஆனாய. 27) ; 'மந்தரத்திலேடு மத்திமந் தாரம் போக்கி' (திருவிளை. விறகு விற்ற. 32). தாரத்தை ஓர் பண்ணாகவும் கொள்வர் ; 'பாடுகின்ற பண்தாரமே' (தேவா.582 : 3). தாள தாமரை ; 'முட்டாட்டாமரை'



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuyan Vani Trust Donations


(திருமுருகு. 73). வாநரம் தாவியது தாமரை வளையத்தைப்பற்ற என்க; 'நாகிளங் கமுகின், வாளை தாவுறு கோசல நாடு' (யுத்த. முதற்போர். 256). வானரந் தாவ, அன்னங்கள் தாவிட, வாளை தாவின என்றியைக்க. 'இளி, ஈளி என நீட்டல்; பண்ணை - கூட்டம்; கழகம், இந்தக் கவி விற்பூட்டு' என்பது பழையவுரை.

பி - ம். 1. ஏளைதாரம்; ஈளைதாரம்; வண்டுறை.

2. நெடும் பண்ணைகள், பண்ணை சூழ், பண்ணைவாய்.

3. தாமரையின் வளம் தாவிட.

4. வாநரம் தாவுமே. 9

965. தூறு மாமரம் குன்றிநெ டுந்தொடர்
நீறு நீர்மிசைச் சென்று நெருக்கலான்
ஏறு பேரகழ் நின்று மெனைப்பல
ஆறு சென்றன வார்கலி மீதரோ.

தூறு மாமரம் - தூறுபோல அடர்ந்துள்ள மரங்களும், குன்றி நெடும் தொடர் நீறும் - மலைகளுடன் தொடர்ந்து எழுந்த புழுதியும், நீர்மிசை சென்று நெருக்கலான் - (அகழியின்) நீர்மீது சென்று அடர்த்தலால், ஏறு - நீர் மேலேறிய, பேர் அகழ் நின்றும் - பெரிய அகழியினின்றும், எனை பல - எத்துணையோ பலவான, ஆறு - ஆறுகள், ஆர்கலி மீது சென்றன - கடலிடத்துப் பாய்ந்தன. அரோ - ஈற்றசை.

அகழியின் நீர் ஊரை வளைத்ததுமட்டுமன்றி, மலைகளும் புழுதியும் அதனிடம் நிறைய அதன் நீர் மேலே வழிந்து பல கால்களாக ஓடிக் கடலில் வீழ்ந்தன எனப்பட்டது. ஏறு பேர் அகழி - நீர் உயரப்பெற்ற பெரிய அகழி என்க. 'தூறு மாமரம் - மராமரம்' என்பது பழையவுரை.

பி - ம். 1. மரமும், மலையும்.

2. சேறு மீமிசைச்: நெருங்கலான்.

3. அகழி னின்றினைப், அகழின் னின்றெனப்.

4. மேலரோ. 10

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


966. இழுகு மாக்க லிடுந்தொ றிடுந்தொறும்
சுழிகள் தோறுஞ் சுரித்திடை தோன்றுதேன்
ஒழுகு தாமரை யொத்தன வோங்குநீர்
முழுகி மீதெழு மாதர் முகத்தையே.

இழுகும் மா கல் - (அகழியைத் தூர்க்கும்பொருட்டு) டரவி நின்ற பெரிய மலைகளை, இடும்தொறும் இடும்தொறும் - வானரர்கள் (அகழியில்) வீசி எறியும்தோறும் எறியுந்தோறும்; (தோன்றுகின்ற), சுழிகள் தோறும் - நீர்ச்சுழிகளின் நடுப்பாகத்தெல்லாம், சுரித்து - உள்ளழுந்தி, இடை தோன்று தேன் ஒழுகு தாமரை - பிறகு வெளித் தோன்றுகின்ற தேன் ஒழுகப்பெற்ற தாமரை மலர்கள், ஓங்கு நீர் முழுகி மீது எழு மாதர் முகத்தை ஒத்தன - அலைகள் உயர்ந்தெழுகின்ற நீரிலே முழுகி மேலே எழுகின்ற பெண்களின் முகத்தை நிகர்த்தன. ஏ - அசைநிலை.

இடுந்தொ றிடுந்தொறும்: அடுக்கு மிகுதியுடன் விரைவும் குறித்தது. தாமரை மாதர் முகத்தை ஒத்தன எனக் கூட்டுக. தாமரையில் தேனொழுகுவதுபோன்று முழுகி எழுந்த மாதர்களின் முகத்து நீர் ஒழுகின என்க. மற்றும் தேனொழுகுதல் மகளிரின் தேன்போன்ற மொழியினைக் குறித்ததும் ஆம். மாதர் முகம் தாமரையை யொத்தது எனக் கூறுது மாற்றிக் கூறினமையின் இது எதிர்நிலையணி; (ஒப்பு): பால. நீர்விளையாட்டு. 10.

பி - ம். 1. இழுகி; இடந்தொறு மேற்றநீர்.
2. சுழிக டோன்றும்; முகிழ்த்தன, சுழிந்திடை; தோன்றலால், தோன்றுவ; தூங்குதேன். 11

இதுவும், அடுத்த செய்யுளும் ஓர் பிரதியில் இல்லை.

967. தன்மைக் குத்தலை யாய தசமுகன்
தொன்மைப் பேரகழ் வாநரந் தூர்த்ததால்
இன்மைக் கும்மொன் றுடைமைக்கும் யாவர்க்கும்
வன்மைக் கும்மோர் வரம்புமுண் டாங்கொலோ

தன்மைக்கு தலை ஆய தசமுகன் - தான் என்று கருதும் ஆணவத்திற்குச் சிறந்த இடமாக அடைந்த இராவணனுடைய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(தலைநகரின்), தொன்மை பேர் அகழ் - பழமையான பெரிய அகழியையும், வானரம் தூர்த்தது-வானரர்கள் (மலைகளையும் பிறவற்றையும் கொண்டு) நிரப்பிவிட்டனர்; ஆல் - அதனால், யாவர்க்கும் - எப்படிப்பட்டவர்க்கும், ஒன்று இன்மைக்கும் உடைமைக்கும் - ஒன்று இல்லாமைக்கும் (ஒன்று) உடைத்தாயிருத்தற்கும், வன்மைக்கும் - வல்லமைக்கும், ஓர் வரம்பும் உண்டாம் கொல் - ஓர் எல்லை ஏற்படக்கூடுமா? ஓ - வினா.

தன்மை: உயர்வுக்குரிய பல பண்புகள் எனினுமாம். வாநரங்கள் தூர்க்கக் கடல்போன்ற அகழியும் வற்றித் தரைமட்டமாயிற்று. எனவே எத்தகைய உடைமைக்கும் ஒரு காலத்தில் இன்மை நிகழும் என்பது திண்ணம். நாலடியாரில் உள்ள 'செல்வ நிலையாமை' என்னும் அதிகாரம் இங்கு ஒப்பு நோக்கத்தகும். அற்பமான குரங்குகள்கூடி ஆழிபோன்ற அகழியைத் தூர்த்தமை கொண்டு வன்மை என்பது யாரிடம்தான் உள்ளது என்று ஒரு தலையாகத் துணியப்படாமையும் உணர்க. இதனைக் காட்சியணி என்பர் ஒருசாரார். தன் செயலால் பிறர்க்கு ஒன்றைப் போதிப்பது இவ்வணியின் இலக்கணம். 'தன்மை - நான் என்பதற்கு முதலானவன்' என்பது பழையவுரை. இன்மை, உடைமை, வன்மை இவை ஒருவழியில்லா என்பது இங்குக் கூறப்பெற்றது.

பி - ம். 1. தன்மைக்குந்.

2. பேரகழ் நீரொடுந்; தூர்த்தலால். 12

## வாநரங்களின் செயல்கள்

968. தூர்த்த வாநரந் துங்க வரைகளால்
சீர்த்த பேரணை தன்னையுஞ் சிந்தின
வார்த்த தன்ன மதிலின் வரம்புகொண்
டார்த்த வார்கலி காரொடு மஞ்சவே.

துங்கம் வரைகளால் தூர்த்த வாநரம் - உயர்ந்த மலைகளைக் கொண்டு (அகழியை) நிரப்பிய வாநரங்கள், சீர்த்த - நன்கு அமையப்பெற்ற, பேர் அணை தன்னையும் - பெரிய தடுப்பாயிருந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கரையையும், சிந்தின - சிதறச் செய்தனவாய், வார்த்தது அன்ன - (உலோகத்தை) உருக்கி ஊற்றியதுபோன்று காணப்படும், மதிலின் வரம்பு கொண்டு - மதிலின் விளிம்பினைப் பற்றிக்கொண்டு, ஆர்கலி காரொடும் அஞ்ச - கடலுடன் மேகமும் பயப்படும்படி, ஆர்த்த - பெருமுழக்கம் செய்தன. ஏ - அசை.

துங்கம் - உயர்வு. பேரணை, பெருந்தடை என்ற பொருளினது; இங்குக் கரையைக் குறித்தது. சிந்துதல் - சிதறச்செய்து அழித்தல். மதிலின் வரம்புகொண்டு என்றது மதிலின் உச்சியிலேறி நின்று என்க. வார்த்த தன்ன மதில் - செம்பு முதலிய உலோகத்தை உருக்கி வார்த்துக் கட்டப்பட்ட மதில். ஆரவாரம் மிகப் பெரிதாகலின் ஆர்கலி, கார் என்ற இரண்டையும் கூட்டிக் கூறினர்.

பி - ம். 1. வாநரம் சுள்ளி பறித்திடைச்; துள்ளிப் பறித்திடை.
2. பேரணி யாவையும், பேரண்டம் தன்னையும்; சிந்திட. 13

969. வட்ட மேரு விதுவென வான்முகடு
எட்ட நீண்ட மதின்மிசை யேறிவிண்
தொட்ட வானரந் தோன்றின மீத்தொக
விட்ட வெண்கொடி வீங்கின வென்னவே.

வட்டம் மேரு இது என - வட்டவடிவமான மேருமலை இது தான் என்று கருதுமாறு, வான் முகடு - ஆகாய முகட்டினை, எட்ட - தீண்டும்படி, நீண்ட - உயர்ந்த, மதில்மிசை ஏறி - மதிலின் மீது ஏறி, விண் தொட்ட வாநரம் - ஆகாயவீதியைச் சென்று தொட்ட குரங்குகள், மீ தொக விட்ட - மேலிடத்துத் திரளுமாறு தொங்கவிட்ட, வெண் கொடி என்ன - வெள்ளைக்கொடி மிகுந்துள்ளன என்னும்படி, வீங்கின - மிகுத்துத் தோன்றின. ஏ:அசை.

வாநரங்கள் வெண்ணிறத்தன ஆகலின், மதில்மீதேறி நின்ற அவைகள் வெண் கொடிகள்போன்றன எனப்பட்டது. வான் முகடு எட்ட நீண்ட மதில் என்றமையின் மதிலின் அளவுகடந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உயரம் குறிக்கப்பட்டது. மீத்தொகை விட்ட - வானவீதியில் மிகுதியாகக் கட்டப்பட்ட என்க; தன்மைத்தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. வான்முகம்.
3. மீத்தொகை.
4. வீங்கின தென்னவே. 14

## வாநரர்களின் பாரத்தால் இலங்கைமதில் தரையிலழுந்துதல்

970. இறுக்க வேண்டுவ தில்லையெண் டீர்மணி
வெறுக்கை யோங்கிய மேரு விழுக்கலான்
நிறுக்க நேர்வரும் வீரர் நெருக்கலால்
பொறுக்க லாது மதிள்தரை புக்கதால்.

எண் தீர் - எண்ணிக்கைக்கு அடங்காத, மணி வெறுக்கை ஓங்கிய - இரத்தினம் முதலிய பொருட் செல்வங்களை மிகுதியாகக் கொண்ட, மேரு விழு கலால் - மேருவ வென்ற சிறந்த எடைக் கல்லினால், நிறுக்க - நிறை போட, நேர் வரும் - அதற்கு நிகராக வுள்ள, வீரர் நெருக்கலால் - குரங்கு வீரர்கள் அழுத்தியதால், பொறுக்கலாது - (அந்தச் சுமையைத் தரிக்க மாட்டாமல்), மதிள் தரை புக்கது - இலங்கை நகரத்தின் மதில் கீழே அழுந்தியது. ஆல் - அதனால், இறுக்கவேண்டுவது இல்லை - (அந்த மதிலை) இடிக்கவேண்டிய அவசியம் (வாநரர்கட்கு) இல்லையாயிற்று. ஆல்: அசை.

விழு கல் - சிறந்த எடைக்கல். பொன்னும் மணிகளும் நிறைந்தொளிரும் மேருவை ஓர் துலைத்தட்டில் வைத்து மற்றொரு தட்டில் வாநரர்களை நிறுத்தினால் பின்னதான துலையே தாழும் ஆகலின், அந்தக் குரங்குகள் அனைத்தும் இலங்கை மதில்மேல் ஏறி நின்ற அளவில், மதில் தரைக்குள் அழுந்தியது; எனவே, அம்மதிலை அழிக்கவேண்டிய அவசியம் எழவில்லை என்க; தொடர் புயர்வு நவிற்சியணி. எண் தீர்தல் - எண்ணிக்கையும் கடத்தல். 'மதில் பொன்னனபடியாலே ஒடியவில்லை' என்பது பழையவுரை. இறுத்தல் - இடித்தல். எண தீர் - கருதமுடியாத சிறப்புவாய்ந்த எனினும் ஆம். வெறுக்கை - பொன் எனினும் பொருந்தும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மணி, வெறுக்கை உம்மைத்தொகையும் ஆம். நிறுத்தல் - தராசில் வைத்து எடை பார்த்தல். நேர் வருதல் - ஒப்பாதல். மதில் மதிள், ஈற்றுப்போலி.

பி - ம். 1. வேண்டியதில்லை; என் இனமணி, கடிமதில்.

2. வெறுக்க; ஓங்கியும்; மேரு வெனப்பொலி.

3. நெருங்கலால்.

4. மதிட்டரை; மதிலகழ், புக்கதே. 15

இங்கு இரு அதிகப்பாடல்கள் :—

'அன்ன போதங் கரக்கர்பி ரான்படை
உன்னு மாயிர வெள்ளம் உடன்றெழா
கன்னி மாமதி லின்புறங் காத்துடன்
முன்னி வெஞ்சமர் மூண்டெழுந் துற்றதே,

அன்ன வேலை யரக்க ரழன்றுகண்
சிந்து தீயிற் றிசையெரி சேர்த்தவன்
முந்து ரைத்த முறைமையின் முற்றுற
வந்தெ திர்த்தனர் வாயில்க டோறுமே.

## அரக்கர் போர்க்கு எழுதல்

971. அறைந்த மாமுர சானைப் பதாகையால்
மறைந்த வானெடு வானக மாதிரம்
குறைந்த தூளி குழுமிவிண் ணூடுபுக்
குறைந்த தாங்கவர் போர்க்கெழு மோதையே.

(வானரர்களின் செயல் இவ்வாறாக இலங்கையில்), அறைந்த - அடிக்கப்பெற்ற, மாமுரசு ஆனை பதாகையால் - பெரிய முரசினைச் சுமந்து சென்ற யானைகளின் மீது விளங்கிய பெருங் கொடிகளால், நெடுவான் அகம் மறைந்த - நீண்ட ஆகாயத்தினிடங்கள் மறைந்தன; தூளிகுழுமி - தூசிகள் குவிந்து, மாதிரம் குறைந்த - திக்குகள் அளவில் குறைந்தனவாகக் காணப்பட்டன; ஆங்கு - அவ்விடத்தில், அவர் - அந்த அரக்கர், போர்க்கு எழும் ஓதை - போர்க்குப் புறப்பட்ட ஒலியானது, விண் ஊடுபுக்கு உறைந்தது -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆகாயத்திற் புக்கு நிலைபெற்றது. ஏ - அசை. மறைந்தவால்; ஆல் - அசை.

யானை மீது முரசினை ஏற்றி நகர்க்குச் செய்தி தெரிவித்தலும், அவற்றின் மீது கொடி பிடித்துச் செல்லுதலும் பண்டைக் காலத்து அரசியல் மரபுகள்; இச்செய்திகளை அறிவித்து வந்தவர் வள்ளுவர் என்ப; பால. எழுச்சி. 7. 'வள்ளுவன் சாக்கை பெய ரரசர்க், குள்படு கரும்த் தலைவற் கொன்றும்' (திவா.); (ஒப்பு): அயோத்தி. மந்தரை. 25; மணி. 1, 27-30; பெருங். 1·38:100 காண்க. ஆணைப்பதாகை: ஆணையின் கொடிகளு மளவித் தோய் தலால்; (இப்படலம் 104); பதாகை - பெருங் கொடி; 'பல்வேறு குழூஉக் கொடி பதாகை நிலைஇல்' இது படாகை எனவும் வழங்கும்; (ஒப்பு): 'தொடங்கல் வெண்குடை தொகை பிச்சமுட் படவிராய், எங்கும் விண் புதைதர' (பால. எதிர்கொள். 7); 10, 11 காண்க. மாதிரம், மலையும் ஆம். வானகம் மறைந்த; மாதிரம் குறைந்த; ஓதை உறைந்தது என்று முடிக்க.

பா - ம். 1. பதாகையும்.
2. மறைந்ததால்.
3. குழூமி யுலகெலாம்.
4. உறைந்த தாமவர்; ஓசையே, ஓதையால். 16

972. கோட லம்பின கோதை யலம்பின
ஆட லம்பரித் தாரு மலம்பின
மாட லம்பின மாமணித் தேர்மணி
பாட லம்பின பாய்மத மாவெலாம்

கோடு அலம்பின - சங்கங்கள் முழங்கின; கோதை அலம்பின - (அந்த அரக்கர்கள் தரித்திருந்த) மாலைகள் ஒலித்தன; ஆடல் அம் பரி தாரும அலம்பின - வலிமை வாய்ந்த அழகிய குதிரைகளின் கிண்கிணி மாலைகளும் ஒலி செய்தன; மாமணி தேர் மணி மாடு அலம்பின - பெரிய அழகிய தேரில் கட்டப்பட்ட மணிகள் பக்கங்களில் ஒலித்தன; பாய் மதம் மாவெலாம் - ஒழுகுகின்ற மதநீரினை உடைய யானைகள் யாவும், பாடு அலம்பின - போர் படுமிடத்துப் பிளிறின.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கோடு - ஊது கொம்பு: 'கோடு சங் கூதும் கொம்பு மரக் கொம்பு விலங்கின் கொம்பு' (நிகண்டு); ஆடும்பரி - நாட்டியக் குதிரைகள், தார் - கிண்கிணி மாலை. அக்காலத்துத் தேர்களில் மணி கட்டுவதுண்டாகலின், 'மாமணித் தேர்மணி' எனப்பட்டது. 'மணிநா யாத்த மாண்வினைத் தேரன்' (அகநா.). 'நற்றேர்த் தார் மணி' (அகநா. 184). இனி மாமணி - குதிரையின் கழுத்து மணியுமாம். 'மாபூண்டெண்மணி' (அகநா. 64). 'தாடாழ் தார் மணி' (அகநா. 154). மதமா - யானை. இச்செய்யுள் சொற்பொருட் பின் வருநிலை யணி. அலம்புதல் - ஒலித்தல்; ஆடல், வெற்றியும் ஆம். தார், சதங்கையும் ஆம்.

பி - ம். 3. தேர்மணிப் பாடல்.

4. மதயானையே. 17

## வானரசேனை அரக்கர் சேனையைத் தாக்குதல்

973. அரக்கர் தொல்குல மாசற வல்லவர்
வருக்கம் யாவையும் வாழ்வுற வந்ததோர்
கருக்கொள் காலம் விதிகொடு காட்டிடத்
தருக்கி யுற்றெதிர் தாக்கின தானையே.

அரக்கர் தொல் குலம் ஆசு அற - அரக்கர்களின் பழமை வாய்ந்த குலம் சுவடுமின்றி அழியவும், அல்லவர் - அரக்கரல்லாத தேவர் மானிடர் முதலியோருடைய, வருக்கம் - தொகுதிகள், யாவையும் வாழ்வு உற - எவையும் நல்வாழ்வினைப் பெறவும், வந்தது - வந்ததாகிய, ஓர் கருகொள் காலம் - ஒரு நிமித்தத்தைத் தன்னிடம் கொண்ட காலத்தை, விதிகொடு காட்டிட - விதி கொண்டு தோற்றுவிக்க, தானை - வானரச் சேனைகள், தருக்கி உற்று எதிர் தாக்கின - பெருஞ்செருக்கினை அமைந்து (அரக்கர் படையை) எதிர்த்துப் போர் செய்தன. ஏ - அசை.

நல்லோர் வாழ்தற்கும் அரக்கர் அழிதற்கும் உரிய காலம் விதியே கூட்டிற்றாகலின் வானரப் படைகள் அரக்கர் படையைத் தாக்கின என்றார். இங்கும் 'பரித்ராணாய சாதூநாம், விநாசாய சதுஷ்கிருதாம்' என்ற பெருமான் அவதார ரகசியம் குறிக்கப் படுதல் காண்க; (ஒப்பு): 'அரக்கர் பாவமு மல்லவ ரியற்றிய


CC-0. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வறமும், துரக்க நல்லறம் துறந்தனள்' (அயோத்தி. மந்தரை. 68); 'விதியது வலியினாலு மேலுள விளைவினாலும்' (ஆரணிய. 639)-ம் காண்டல்தகும். தானை தாக்கின என்க.

பி - ம். 1. அரக்கர் நற்குலம்; வேரற; அல்லவாய்.

2. வாழ்ந்துற, வாழ்ந்திட, வாழ்ந்தற.

3. கால விதிகொடி காட்டிட, காலம் விடுகொடுங் காட்டிடை. 18

## இரு படைகளும் பொருத வகை

974. பற்கொ டுந்நெடும் பாதவம் பற்றியும்
கற்கொ டுஞ்சென்ற தக்கவி யின்கடல்
விற்கொ டுந்நெடு வேல்கொடும் வேறுள
எற்கொ டும்படை யுங்கொண்ட திக்கடல்.

அ கவியின் கடல் - அந்தக் கடல் போன்ற வானரச் சேனை, பல் கொடும் - பற்களைக் கொண்டும், நெடு பாதவம் பற்றியும் - பெரிய மரங்களைக் கொண்டும், கல்கொடும் - கற்களைக்கொண்டும், சென்றது - (எதிர்க்கச்) சென்றது; இ கடல் - இந்தக் கடல்போன்ற அரக்கர் சேனையோ, வில் கொடும் - விற்களைக் கொண்டும், நெடு வேல் கொடும் - நீண்ட வேல்களைக் கொண்டும், வேறு உள எல் கொடும் படையும் கொண்டது - பிறிதாகவுள்ள ஒளிபொருந்திய போர்க்கருவிகளையும் கைக்கொண்டது.

கற்களும் பற்களும் மரங்களுமே வானரர்களின் படைகள். வில்லும் வேலும் அரக்கரின் போர்க் கருவிகள். பாதவம் - மரம், பாதபம் என்ற வடசொற்றிரிவு. 'பாதவக் கண்ணிழல்' (ஞானு. 18, 11). 'படப்படப் பொடியாக வெங்குள பாதவாதிகள் (தக்க. 64). உலோகங்களால் ஆன படைகள் ஆதலின் எல்கொடும் படையெனப்பட்டன. இருதிறச் சேனைக்கும் ஏற்றத்தாழ்வு ஒன்றுமின்மையின் இரண்டும் கடலாக உருவகம் செய்யப்பட்டன; (ஒப்பு): யுத்த. 1, 435.

பி - ம். 1. பற்கொண்டும், பற்கொடு; பாதகம் பற்றிய.

3. விற்கொடு; வேல்கொடு; வேற்றுளது. 19

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## போர் வருணனை

975. அம்பு கற்களை யள்ளின வம்பெலாம்
கொம்பு டைப்பணை கூறுற நூறின
வம்பு டைத்தட மாமர மாண்டன
செம்பு கச்சுடர் வேற்கணஞ் செல்லவே.

அம்பு - அரக்கர் ஏவிய அம்புகள், கற்களை அள்ளின - (வானரர்கள் தூக்கின) மலைகளைத் தூளாக்கின, அம்பு எலாம் - (அந்த) அம்புகளை எல்லாம் (வானரருடைய), கொம்பு உடை பணை கூறு உற நூறின - கிளைகளுடன்கூடிய பருத்த மரக்கிளைகள் துண்டாகும்படி பொடியாக்கின ; செம்பு உக - (பகைவரின் உதிரம் தோய்தலால்) செந்நிறம் தோன்றும்படி, சுடர் - ஒளிவிடுகின்ற, வேல்கணம் செல்ல - வேல்தொகுதிகள் ஊடுருவிப் பாய்ந்ததால், வம்பு உடை தட மாமரம் மாண்டன - நறுமணமுள்ள மிகப்பெரிய மரங்கள் அழிந்துபட்டன. ஏ - அசை.

வானரப்படைக்கும் அரக்கர் சேனைக்கும் நிகழ்ந்த போரினைக் கூறத் தொடங்குகின்றார். குரங்குகள் எறிந்த கற்களை அரக்கர் அம்புகளால் பொடி செய்ய, அந்த அம்புகளை வானரர்கள் மரங் களாற் றூளாக்கினர் ; அந்த மரங்களை வேற்படைகொண்டு அரக்கர் சிதைத்தனர். பணை - பருத்த கிளைகளுக்காகி வந்தது ; பணை, மூங்கில் மரமும் அரசுமாம். பகைவரின் உதிரம் தோயப் பெற்றமையின் செம்புக எனப்பட்டது. எறிந்த வேல்கள் பல வாகலின் வேற்கணம் என்றார்.

பி - ம். 1. அள்ளிய.
2. கொம்புடைப்படை ; கூறுக.
4. செம்புகாற், செம்புகற், வெம்புகர்ச் சுடர் ; வெம்புகற் ; சொல்லவே.

976. மாக்கை வானர வீரர் மலைந்தகல்
தாக்கி வஞ்சர் தலைகள் தகர்த்தலால்
நாக்கி னூடுஞ் செவிதொறும் நாகம்வாழ்
மூக்கி னூடுஞ் சொரிந்தன மூளையே.

மா கை வானர வீரர் - பெரிய கரங்களையுடைய குரங்கு வீரர்கள், மலைந்த கல் - போரில் வீசிய கற்கள், தாக்கி - மோதி, வஞ்சர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuyan Vani Trust Donations


தலைகள் தகர்த்தலால் - வஞ்சகராகிய இராக்கதர்களின் தலைகளைப் பிளத்தலால், (அவர்களுடைய) நாக்கின் ஊடும் செவிதொறும் - வாய் வழியாகவும் காதுகளின் வழியாகவும், நாகம் வாழ் மூக்கின் ஊடும் - பாம்புகள் வசிக்கின்ற (புற்றுத் துவாரம்போன்ற) மூக்குத் தொளையின் வழியாகவும், மூளை சொரிந்தன - மூளைகள் வெளிப் பட்டன. ஏ - அசை.

வானரம் எறிந்த கற்களால் அரக்கர் மேனியில் நிகழ்ந்ததைக் கூறுவது இச்செய்யுள். தகர்த்தல்: 'தாளாற்ற லாலிடித்துத் தலை பத்தும் தகர்த்துருட்டி' (சுந்தர. 314). அரக்கர்களின் நாசிகள் விரிந் தனவாகலின் நாகம்வாழ் மூக்கு எனப்பட்டது; (ஒப்பு): 'மடித்த பில வாய்கடொறும்' (ஆரணிய. 602), நாக்கு, செவி, மூக்கு என்ற மூன்றும் புழைகளால் ஒன்றுபட்டு இயைபுண்மையின் அம் மூன்றிலுமே மூளைச் சேறு வெளிப்பட்டன என்க, மூளை - சுத்த தாதுக்களில் ஒன்றான மச்சை என்ப; (சூடா.).

பி - ம். 2. தலைகளைத் தாக்கலால்.
3. செவியினும்.
4. மூக்கி னூடும்.



977. அற்க ளோடு நிறத்த வரக்கர்தம்
விற்க ளோடு சரம்பட வெம்புணீர்
பற்க ளோடுஞ் சொரிதரப் பற்றிய
கற்க ளோடு முருண்ட கவிகளே.

அற்கள் ஓடும் நிறத்த அரக்கர்தம் - இருள் தொகுதியும் கண்டு ஓடுமாறு (மிகவும்) கருநிறம் பெற்ற அரக்கரின், விற்களோடு - விற்களிலிருந்து விரைந்து வெளிவந்த, சரம்பட - அம்புகள் பட்ட தனால், (வானரர்கள்), வெம்புண்நீர்-கொதிக்கின்ற புண்களிலிருந்து உதிர நீர், பற்களோடும் சொரிதர - பற்களோடும் ஒழுக, பற்றிய - (தாம் கையிற் பிடித்த), கற்களோடும் - கற்களுடனே, கவிகள் உருண்ட - குரங்குகளும் உருண்டு வீழ்ந்தன. ஏ - அசை.

அரக்கர் விடுத்த அம்புகளால் கற்கள் பொடிபட்டதன்றி வானரர்களும் உருண்டனர் எனப்பட்டது. அரக்கர் - இருள் போன்ற,கருநிறத்தர். (ஒப்பு): 'நீலமாமணி நிறநிருதர்' (ஆரணிய. 227). 'இருகு வெஞ்சினத் தரக்கரும் கருநிறந் தீர்ந்தார்' (சுந்தர.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


110); தொயில்கள் கறுத்த மேனியிற் பொலிந்தன' (சுந்தர. 127); 'கறுத்தவா ளரக்கிமாரும் அரக்கரும்' (சுந்தர. 134); 'துன்னிரு ளொருவழித் தொக்கதாமென, உன்னருந் தீவினை யுருக் கொண்டென்ன' (சுந்தர. 218) கும்பகன்னன் உறங்கினான் என்றமையும் காண்க. வெம்புணீர் - உதிரம், 'புண்ணீர் வெள் ளத்துக் கால் தாழ்ந்து' (திருவிளை. பழியஞ்சின. 10); சொரிதர - தர துணைவினை.

பி - ம். 1. நிகர்த்த.
2. சரம்புக; வெம்புநீர், வெம்புண்ணீர்.
3. சொரிந்தன பற்றிய. 22

978 நின்று மேரு நெடுமதீள் நெற்றியின்
வென்றி வாநர வீரர் விசைத்தகல்
சென்று தீயவ ராருயிர் சிந்தின
குன்றின் வீழு முருமின் குழுவினே.

மேரு நெடு மதிள் நெற்றியின் - மேருமலைபோன்று உயர்ந்த மதிலின் உச்சியில், நின்று - நின்றுகொண்டு, வென்றி வாநர வீரர் - வெற்றிமிக்க குரங்கு வீரர்கள், விசைத்த கல் - வேகமாக வீசிய கற்கள், குன்றின் வீழும் உருமின் குழுவின் - மலைமீது வீழ்கின்ற இடித்தொகுதிகள்போன்று, சென்று - போய், தீயவர் ஆர் உயிர் சிந்தின - கொடிய அரக்கர்களின் அருமையான உயிரை வெளியேறச் செய்தன. ஏ - அசை.

அரக்கர்கள் குன்றுகள்; அவர் மீது வாநரர் எறிந்த கற்கள் இடிபோன்றன என்க. உருவமட்டுமன்றி எளிதில் அழியாத கன்னிமதிலாகலின் மேரு நெடு மதில் என்றார்; 31: அகலமும் உயரமும் குறிப்பிட்டமை காண்க. கற்கள் தீயவருடைய உயிரைச் சிந்தின வாகலின் வென்றி வாநர வீரர் விசைத்தகல் எனப்பட்டது நெற்றி - உச்சி: பெருங். 41; 74; 1; 55; 20; 3; 4; 46. விசைத் தல்; 'விழுந்தன தோள்புடை விசைத்த காற்றினே' (கிட்கிந்தா. 241)' வேகப் புள்ள மொடு விசைத்தன ரார்த்து' (பெருங். 1; 56; 238); 'விசைத்தெறி பாண்டிலொடு' (பெருங். 1: 37; 95).

பி - ம். 1. நின்ற; பேரும்.
3. ஆவி சிதைத்தன.
4. உருவின்; குழுவினுல்; குழுவென. 23

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



979. எதிர்த்த வாநர மாக்கையொ டிற்றன
மதிற்பு றங்கண்டு மண்ணின் மறைந்தன
கதிர்க்கொ டுங்க ணரக்கர் கரங்களால்
விதிர்த்தெ றிந்த விளங்கிலை வேலினே.

கதிர் கொடு கண் அரக்கர் கரங்களால் - சூரியன்போன்று கொடுமையான விழிகளையுடைய அரக்கரின் கைகளால், விதிர்த்து எறிந்த விளங்கு இலை வேலின் - அசைத்து வீசிய ஒளிர்கின்ற இலை வடிவான வேல்களால், எதிர்த்த வாநரம் - எதிர்த்துப் பொருத குரங்குகள், ஆக்கையொடு - தமது உடலோடு, இற்றன - (உயிரும்) அழிந்தனவாய், மதில்புறம் கண்டு மண்ணில் மறைந்தன - மதிலுக்கு வெளியிலே விழுந்து மண்ணிலே மறைந்திட்டன. ஏ - அசை.

வேலின் மறைந்தன எனக் கூட்டி முடிக்க. மாக்கை - பெரிய கையெனினுமாம், மதில்புறம் கண்டு எனவே, மதிலின் உச்சி யினின்றும் வெளிப்புறம் வீழ்ந்தன எனப்பட்டது. விழுந்து கிடந்தன என்னாது, மண்ணில் மறைந்தது என்றது, விழுந்த வேகத்தில் என்க. சினத்தாற் சிவந்த விழிகளாதலின் கதிர்க் கொடுங்கண் எனப்பட்டது. கதிர் கொடும் என்ற அடைமொழி களால் ஒளியும் கொடுமையும் கொள்க. விதிர்த்தல் - அசைத்தல், 'வியந்துகை விதிர்த்ததே' (சீவக, 1841). 'விழைவற விதிர்த்து வீசி' (சீவக. 2301); வேலின் நுனி இலைவடிவாகலின் விளங்கிலை வேலின் எனப்பட்டது. யாக்கை ஆக்கை என மருவியது. எழு வகைத் தாதுவினால் சேர்த்துக் கட்டப்படுவது என்று காரணக் குறியான் எழுந்த பெயர். 'எழுவகைத் தாதுவி னுயிர்க்குடல் போல்' (நன். பெயர். 11); என்றது காண்க. எழுவகைத் தாதுக் கள்: இரதம், உதிரம், எலும்பு, தோல், இறை, மூளை, சுக்கிலம் என்ப. இங்குக் குறிப்பிட்ட வேல்கள் மரங்களைத் துண்டுபடுத்திய வற்றினின்றும் வேறானவை.

பி - ம். 1. வாநரர்; யாக்கையோ டிற்றன, யாக்கையை யெற்றின.
2. மதிற்புறங் கொண்டு; மறைந்தென; மறிந்தன.
3. கடுங்கண்.
4. விலங்கிலை; வேல்களே.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


980. கடித்த குத்தின கையிற் கழுத்தறப்
பிடித்த வள்ளுகி ராற்பிள வாக்கின
இடித்த வெற்றின வெண்ணி லரக்கரை
முடித்த வாநரம் வெஞ்சினம் முற்றின.

வாநரம் - குரங்குகள், வெம்சினம் முற்றின - கடுமையான கோபம் மிக்கனவாய், கடித்த - (பற்களால் அரக்கரைக்) கடித்தன; கையில் குத்தின - கைகளால் குத்தின; கழுத்து அற பிடித்த - கழுத்து அறும்படி பிடித்தன, வள் உகிரால் பிளவாக்கின - கூரிய நகங்களால் இருபிளவாகச் செய்தன; இடித்த - முட்டிகளால் தாக்கின, எற்றின - கால்களால் உதைத்தன, எண் இல் அரக்கரை முடித்த - (இவ்வாறான செயல்களால்) கணக்கற்ற அரக்கரை உயிரிழக்கச் செய்தன.

மற்போராகலின் கடித்த குத்தின பிடித்த உகிரால் பிளவாக்கின எனப்பட்டது. வள்உகிர் - கூரிய நகங்கள். 'வரிய கட்டலவன் வள்ளுகி ருற்றென' (பெருங். 1·58:100); 'பளிக்கு மணி வள்ளுகிர் (பெருங். 2·6:111); 'வள்ளுகிர் ஞமலி' (குறிஞ்சிப். 131); அரக்கரை முடித்த வாநரம் தமது கடுஞ்சினம் தீரப்பெற்றன எனினுமாம்.

பா - ம். 1. கடித்திடித்தன; கழுத்தினில்.
2. பிடித்து; வள்ளுகிரிற்.
4. வெஞ்சின மூளவே, வெஞ்செரு மூட்டின.

25

981. எறிந்து மெய்து மெழுமுளைத் தண்டுகொண்
டறைந்தும் வெவ்வயி லாகத் தழுத்தியும்
நிறைந்த வெங்க ணரக்கர் நெருக்கலால்
குறைந்த வானர வீரர் குழுக்களே.

நிறைந்த வெம்கண் அரக்கர் - கொடுமை நிறைந்துள்ள கண்களையுடைய அரக்கர்கள், எறிந்தும் - (பல படைக்கலங்களை) வீசியும், எய்தும் - (அம்புகளை) ஏவியும், எழு - இருப்புத் தூண் போன்ற, முளை தண்டு கொண்டு அறைந்தும் - மூங்கில் கோல்களைக் கொண்டு அடித்தும், வெ அயில் ஆகத்து அழுத்தியும் - கடுமை யான வேலாயுதத்தை உடலில் தைக்குமாறு செய்தும், நெருக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கலால் - நெருக்கியதனால், வானர வீரர் குழுக்கள் குறைந்த - குரங்கு வீரர்களின் கூட்டம் அளவில் குறைந்தது. ஏ - அசை.

எழுமுளைத் தண்டு - இரும்புத் தூண்போன்ற பூண் அமைந்த கதை என்பர் ஒரு சாரார். 'முளைத் தண்டு - முளையினை யுடைய தண்டாயுதம்' என்பது சீவக. 1156 : உரைக் குறிப்பு. முளை - மூங்கில் (பிங்.); 'முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி' (குறிஞ்சிப். 131); நிறைந்த வெங்கணரக்கர் என்றும் குறைந்த வானர வீரர் என்றும் கூறிய இடத்து அடிமுரணும் சொன்னயமும் காண்க. இங்குக் கூறப்பட்டது அரக்கர் ஆற்றிய போர்.

பி - ம். 1. எழுமழுத் ; தண்டெடுத்து.

2. அறைந்து மவ்வவர், அவ்வயில், மாவெயில்.

3. நிறைந்து ; நெருக்கலாற்.

4. தானைக் குழாமெலாம், தானைக் குழுவெலாம். 26

இச் செய்யுள் சில பிரதிகளில் 'பாய்ந்த சோரி' என்றதன்பின் காணப்படுகிறது,

982. செப்பிற் செம்புனல் தோய்ந்தசெம் பொன்மதில்
துப்பிற் செய்தது போன்றது சூழ்வரை
குப்புற் றீர்பிணக் குன்று சுமந்துகொண்டு
உப்பிற் சென்ற துதிரத் தொழுக்கமே.

செப்பில் செம்புனல் தோய்ந்த செம்பொன் மதில் - செப்பைப் போலச் செந்நிறமான இரத்தம் படியப் பெற்ற செம்பொன்னினாலாய மதிலானது, சூழ்வரை - சுற்றி நின்ற தொருமலை, துப்பில் செய்தது போன்றது - பவழத்தால் ஆக்கியது போலக் காணப் பட்டது ; உதிரத்து ஒழுக்கம் - இரத்தப் பெருக்கானது, குப்புற்று ஈர் பிண குன்று சுமந்துகொண்டு - தலைகீழாக வீழ்ந்து இழுக்கப் படுகின்ற பிண மலைகளைத் தாங்கிக்கொண்டு, உப்பில் சென்றது - உவர்க்கடல் நோக்கிப் பாய்ந்தது. ஏ - அசை.

முன்னரே செம்பொன்னினாலாய மதில் செம்பு போன்ற செம் புனல் தோயப் பெற்றமையின் நற்பவளத்தால் செய்யப்பட்ட மலை போன்ற தெனப்பட்டது. செம்புனல் - உதிரம் ; 'செம்புனற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொழியக் கதை சேர்த்தினன். (யுத்த. முதற்போர். 75); துப்பு - நற்பவளம்; 'துப்பினற் செய்த கையொடு' (சுந்தர. 337). குப்புற்று: 'குறுமுனி குடித்த வேலை குப்புறு கொள்கைத் தாதல்' (சுந்தர. 15); மற்றும், கிட்கிந்தா. 983, 987. ஈர் பிணக்குன்று - வினைத் தொகை. உப்பு - உப்புக் கடலுக்கு இலக்கணை, துப்பிற் செய்தது சூழ்வரை போன்றது என இயைத்தலுமாம்; அங்ஙனங் கொண்டால் செய்ததாகிய சூழ்வரை என்க. உதிரத்திற்குத் துப்பு நிறம் பற்றி, 'பவளம் சொரிதரு பைபோல் - திவளொளிய ஒண் செங் குருதி' (களவழி. 14).

பி - ம். 1. தோய்த்த, தேய்த்த.
2. சூழ்வரும்.
4. குப்புற்றின்பிணக்.
4. சென்ற ; உதிரத்தின் ஓதமே.

27

983. வந்திரைத்த பறவை மயங்கின
அந்த ரத்தி னெருங்கலி னங்கொரு
பந்தர் பெற்றது போன்றது பற்றுதல்
இந்தி ரற்கு மரிய விலங்கையே.

இந்திரற்கும் பற்றுதல் அரிய இலங்கையே - இந்திரனும் கைப்பற்றிக்கொள்ளுதற்கு இயலாத இலங்கைத்தீவானது, வந்து இரைத்த பறவை மயங்கின - அங்கு வந்து கூச்சலிட்ட பல்வகைப் பறவைகள் மயங்கினவை, அந்தரத்தின் நெருங்கலின் - (தம்மில் ஒன்று கூடி) ஆகாயத்தில் நெருங்கியதனல், அங்கு ஒரு பந்தர் பெற்றது போன்றது - அந்த இடத்தில் ஒரு பந்தல் உண்டாயதுபோற் காணப்பட்டது.

பந்தர் பெற்றது போன்றதனல் வானத்தினின்று வந்து இலங்கையைச் சேர்தல் இந்திரற்கும் இயலாதாயிற்று என்பர் ஒரு சாரார். இரைத்தல்; (வி. பா. வெளிப்பாட்டு. 5). இந்திரற்கும்; உம்மை உயர்வு சிறப்பு. பறவை பந்தர்; கந்தபு. ஆற்றுப். 13.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பந்தர் பெற்றது போன்றது; 'கழுகு பந்தரிட்டன' (வி. பா. 13-ஆம் போர் : 127),

பி - ம். 1. வயங்கின, மயங்கியே.

2. நெருங்கினவங்கொரு, நெருங்கலின் வந்தொரு, மயங்கலினங்கொரு.

3. *பந்தருற்றது. 20

984. தங்கு வெங்கன லொத்துத் தயங்கிய
பொங்கு வெங்குரு திப்புனற் செக்கர்பூங்
கங்கு லன்ன கவந்தமுங் கையெடுத்து
அங்கு மிங்குநின் றாடின வாமரோ.

தங்கு வெம் கனல் ஒத்து தயங்கிய - நிலைபெற்ற கடுமையான நெருப்பினை நிகர்த்து விளங்கிய, பொங்கு வெம் குருதி புனல் - பொங்கிய வெம்மை வாய்ந்த இரத்த நீராகிய, செக்கர் - செவ்வானத்திலே, பூ கங்குல் அன்ன கவந்தமும் - அழகிய (இரவு போன்ற வண்ணமுள்ள) உடற் குறையும், கையெடுத்து - கரத்தை உயர்த்தி, அங்கும் இங்கும் நின்றாடின ஆம் - அங்குமிங்கும் நின்று ஆடல் புரிந்தன ஆம். அரோ - ஈற்றசை.

கவந்தம் ஆடுதல்: 'பேரொாத்த வாயிரம் பேர்மடிந் தாற்பிறக்கும் கவந்தம், நேரொத்தவாடும்' (திருவரங்கமாலை 44); கவந்தம் என்பது கபந்தம் என்ற வடசொல்லின் திரிபு. இதற்கு வடமொழி நிகண்டில், 'தொழிலுடன் கூடின தலையற்ற உடல்' என்று பொருள் தரப்பட்டுள்ளது. கவந்தம் ஆடுதல்; 'கோடுஞ்சிலையம்பிற்றலை யரியுண்டன குறைநின், றாடுந்தொறு முடனாடுவ வலகைக்குல மொருசார்' (வி. பா. 5-ஆம் போர். 19); 'கவந்தமெங் கணுமாடவும்' (சீவக. 2316).

பி - ம். 1. வெங்கன லோடும்.

2. பொங்கு செம்புனலோடும் பொருந்திய, செம்பருந்தோடும் பொருந்திய வெங்குருதிப் புனற் செக்கர்முன்.

3. கங்கு லென்னக்.

4. ஆடின வாமரோ, ஆடின தாலரோ். 29

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



985. கொன்னி றக்குரு திக்குடை புட்களின்
தொன்னி றச்சிறை யிற்றுளி தூவலால்
பன்னி றத்த பதாகைப் பரப்பெலாம்
செந்நி றத்தன வாய்நிறந் தீர்ந்தவே.

கொன் நிற குருதி குடை புட்களின் - (பார்ப்பவர்க்கு) அச்சம் விளைக்கின்ற செந்நிறமுள்ள உதிரத்திலே முழுகுகின்ற பறவைகளின், தொல் நிற சிறையில் துளி தூவலால் - பழமையான அழகிய இறக்கைகளில் படிந்த (உதிரத்) துவலைகள் சிந்துதலால், பல் நிறத்த பதாகை பரப்பு எலாம் - பலவித நிறங்களைக்கொண்ட பெருங் கொடிகளின் தொகுதி முழுவதும், செம் நிறத்தனவாய் நிறம் தீர்ந்த — செந்நிறமாக மாறி அமைந்தன. ஏ : அசை.

கொன் - அச்சம் ; 'அச்சம் பயமிலி காலம் பெருமையென் றப்பால் நான்கே கொன்னைச் சொல்லே' (தொல். சொல். இடை. 7). நிறம் - செந்நிறம். பதாகை - பெருங்கொடி ; இடை பல நிறங்களும் மாறப்பெற்றுச் செந்நிறம் பெற்றன. குருதிக்குடைபுள் ; (ஒப்பு) : குருதி படிந்துண்ட காகம். 'தீர்ந்தது - பொருந்தியது என்பது பழையவுரை ; தீர்ந்தது, (முன்னை நிறம்) அழிந்தது எனலும் ஆம்.

பி - ம். 1. நிறந்த குருதி கடல் புடை, நிறக் குருதிக்கிடை புக்கன
நிறக் குருதிக்குடை புட்குலம்.
4. வானிறந் தீர்ந்ததே.



986. பொழிந்த சோரிப் புதுப்புனல் பொங்கிமீ
வழிந்த மாமதில் கைவிட்டு வாநரம்
ஒழிந்த மேருவி னும்பர்விட் டிம்பரின்
இழிந்த மாக்கட லென்ன விழிந்தவே.

வாநரம் - வாநரங்கள், ஒழிந்த - வலியிழந்தனவாய், பொழிந்த சோரி புது புனல் பொங்கி - சொரிந்த உதிரமாகிய புது வெள்ளம் பொங்கி, மீவழிந்த மாமதில் கைவிட்டு - மேல்வழியப் பெற்ற பெரிய மதிலினைக் கையகன்று, மேருவின் உம்பர் விட்டு இம்பரின் இழிந்த- மேருவின் மேலிடத்தை அகன்று மற்றொரு பக்கத்தில் இறங்கிய, மாகடல் என்ன இழிந்த - பெரிய கடல்போன்று கீழே இறங்கின. ஏ - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இரத்தம் பொங்கி வழிந்ததால் வானரங்கள் மதிலின் மேலிடத்தினின்று கடல்போன்று இழிந்தன என்க. 'அவாந்தரப் பிரளயத்துக்கு அசையாத வடமலையை முட்டின பிரளயம் வடிந்ததுபோல, வானரம் மதிலைவிட்டு இறங்கியது' என்பது பழையவுரை. உம்பர் - மேற் பக்கமுமாம். மதிலுக்கு மேரு; (ஒப்பு): 'நின்று மேரு நெடு மதில்' யுத்த. 978.

பி - ம். 1. பொங்கி மேல்.
2. கைவிட்ட ; வாநரர்.
3. மொழிந்த.
4. இழிந்ததே. 31

987. பதன மும்மதி லும்படை நாஞ்சிலும்
கதன வாயிலும் கட்டுமட் டாலையும்
முதல யாவையும் புக்குற்று முற்றின
விதன வெங்க ணிராக்கதர் வெள்ளமே.

விதனம் வெம்கண் இராக்கதர் வெள்ளம் - துயரத்தைச் செய்யவல்ல கொடுமையான விழிகளைக் கொண்ட அரக்கரின் பெருந் தொகுதிகள், பதனமும் - மதில் மேடையும், மதிலும் - மதிலும், படை நாஞ்சிலும் - கற்படுத்துச் செய்யப்பட்ட நாஞ்சில் என்ற உறுப்பும், கதனம் வாயிலும் - கலக்கத்தை உண்டுபண்ணக் கூடிய கோட்டை வாயிலும், கட்டும் அட்டாலையும் - கட்டப்பட்ட அட்டாலைகளும், முதல யாவையும் - முதலான எல்லா விடங்களிலும், புக்குற்று முற்றின - புகுந்து நிரம்பி நின்றன. ஏ - அசை.

பதனம் - மதில்களுள்ள மேடை; இச்சொல் பதணம் எனவும் வழங்கும்; 'நெடுமதினிறைப் பதணத்து' (பதிற்றுப். 22, 25). 'இங்கு நொச்சி - மதில்; பதணமுமாம், என்றது காவல் வேண்டாத அரண் என்றவாறு' சிலப். 1, 10 : 242 உரைக்குறிப்புக் காண்க. நாஞ்சில் - மதில் உறுப்புக்களில் ஒன்று; அம்பு எவும் புழைகள் அமைந்த இடம். இது நாஞ்சில், ஞாயில், குருவித்தலை எனவும் வழங்கும், சுந்தர. 3, 90-உம், (சீவக. 105) உரைக்குறிப்பும் காண்க. கதனம் - கலக்கம் (பிங்.); அட்டாலை : கோட்டை மதில்மேல் மண்டபம் 'கீழ்பாலிஞ்சி யணைய வட்டாலை கட்டு' (திருவாலவா. 26, 10). 'யானையோடு போர் செய்தற்குரிய மண்டபம்' என்பது திரு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



விளையாடல். 'கோட்டையை இடையிலே இடையிலே வளைத்துக் கட்டின இடம்' என்பது பழையவுரை. துயரம் விளைப்பவர் அரக்கர் மட்டும் அன்று' கோட்டை வாயிலே கலக்கம் செய்யும் என்பார் 'கதன வாயிலும்' என்றார், 'கோட்டைக்கு அரணாகப் போட்ட உட்படிகள்' என்பது பழையவுரை.

பி - ம். 1. பதணமும்; படர் நாஞ்சிலும்.

2. கதவும், கதவ; கட்டியட் டாலையும், கட்டினட் டாலையும், கட்டிலட் டாலையும்; கார்படி கோபுரம்.

4. விதலை. 32

988. பாய்ந்த சோரிப் பரவையிற் பற்பல
நீந்தி யேகும் நெருக்கிடச் செல்வன
சாய்ந்து சாய்ந்து சரம்படத் தள்ளலுற்று
ஓய்ந்து வீழ்ந்த சிலசில வோடின.

நெருக்கிட - (அரக்கர்) நெருங்கி வந்ததனால், செல்வன - (பிற விடங்கட்குப்) போவனவாகி, பற்பல - பற்பல குரங்குகள், பாய்ந்த - சோரி பரவையில் - பாய்ந்து ஓடிய உதிரக் கடலில், நீந்தி ஏகும் - அரிதிற் கடந்து போகும்; சில சில - சிற்சில வானரங்கள், சாய்ந்து சாய்ந்து - வலி மிகவும் குன்றி, சரம்பட - (இராக்கதர்கள் ஏவிய) அம்புகள் தைத்ததனால், தள்ளல் உற்று ஓய்ந்து வீழ்ந்த - உயிர் தளர்ந்து வீழ்ந்தன, சில சில ஓடின - சில உயிர் தப்பும்படி ஓடின.

உதிர மிகுதியால் சோரிப்பரவை யெனப்பட்டது. பரவை - பரந்து நிற்பது என்ற கடலுக்குக் காரணக்குறி. சோரி - சோர்தல் பற்றி வந்தது; இ பெயர் விகுதி, நீந்துதல் - அரிதிற் கடத்தல். 'தந்திரக் கடலை நீந்தி' (யுத்த. கும்ப. 129); ஓய்ந்து - சாய்ந்து; தொல். சொல். உரி. 32. இதுகாறும் போரிடும் பொருட்டு மதில் மீது ஏறின குரங்குகள் மதிற் காவலர்களால் துரத்தப்பட்டமை கூறப்பெற்றது.

பி - ம். 2. ஏகு நெருக்கிடைச், ஏறி நெருக்கிடை, ஏறி நெருக்கிட, எங்கு நெருக்கின, ஏக நெருங்கின; சொல்வன; சிற்சில.

4. விழச், ஓய்ந்து போயின வெஞ்கவித் தானையே. 33

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## அரக்கர் ஆரவாரஞ் செய்தல்

989. தழிய வாநர மாக்கடல் சாய்தலும்
பொழியும் வெம்படைப் போர்க்கட லார்த்தவால்
ஒழியுங் காலத் துலகொரு மூன்றுமொத்
தழியு மாக்கட லார்ப்பெடுத் தென்னவே.

ஒழியும் காலத்து - எல்லாம் அழியும்படியான ஊழிக் காலத்து, ஒரு மூன்று உலகும் ஒத்து - மூன்று உலகங்களும் ஒன்று கூடி, அழியும் - அழிவதற்குக் காரணமான, மாகடல் - பெருங் கடலானது, ஆர்ப்பு எடுத்தென்ன - ஆரவாரம் செய்தது போன்று, தழிய மா கடல் வாநரம் சாய்தலும் - (மதிலைப்) பொருந்தியிருந்த கடல் போன்ற வாநரம் வலி குன்றிய அளவில், பொழியும் வெம்படை - மேன் மேலும் எய்கின்ற கொடிய கருவிகளையுடைய, போர்கடல் ஆர்த்த - போரியற்றுவதை மேற்கொண்ட இராக்கத சேனையாகிய கடல் ஆர்ப்பரித்தன ; ஏ - அசை, ஆல் - அசை.

தழிய - தழுவிய என்பதன் விகாரம், ஒழியும் காலம் - ஊழியில் சராசரங்கள் ஒழியும் நாள். உலகொரு மூன்று ; சுவர்க்கம் மத்தியம் பாதலம் ; மேல் கீழ் நடு வென்றுமாம் ; (ஒப்பு) : மும்மை சாலுலகம் (கிட்கிந்தா. 300) ; அழியும் - உலகம் அழிதற்குக் காரணமான : மூன்றும் ஒத்து - மூன்றும் ஒரு சேர. இருதிறத்துப் படைக்கும் சாம்யம் கூறுவார் வாநரமாக் கடல் என்றும, வெம்படைப் போர்க் கடல் என்றும் கூறினர். வெம்படை என்றதனாலே அரக்கர் படை என்பது விளங்கும்

பி - ம். 2. பொழிய, கழிய ; ஆர்ந்தலால், ஆர்த்தன.

3. மூவ்று பேரய்.

4. மால்கடல் ; ஆயரோ, ஆலரோ.

34

## பலவகை யொலியெழுதல்

990. முரசு மாமுரு டும்முரல் சங்கமும்
உரைசெய் காளமு மாகுளி யோசையும்
விரைசும் பல்லியம் வில்லர வத்தொடும்
திரைசெய் வேலைக்கொ ராகுலஞ் செய்தவே.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முரசும் - முரசக் கருவியும், மாமுருடும் - பெரிய முருடு என்ற கருவியும், முரல் சங்கமும் - ஒலிக்கும் இயல்புள்ள சங்கமும், உரை செய்காளமும் - புகழப்படுகின்ற எக்காளமும். ஆகுளி ஓசையும் - ஆகுளி என்னும் சிறு பறையும், (என) விரைசும் பல் இயம் - பலவகையாகக் கலந்த பல கருவிகளின் ஒலியும், வில் அரவத்தொடும் - வில்லிலிருந்து அம்பு எய்யும் ஓசையுடன் கூடி, திரை செய் வேலைக்கு ஓர் ஆகுலம் செய்த - அலை வீசுகின்ற கடலுக்கும் ஓர் கலக்கத்தைச் செய்தன; ஏ. அசை.

முருடு : பறைப்பொது. (பிங்.); 'ஏத்தல் சால் முருடார்ப்ப; (சீவக. 1777); 'முரசியம்பின முருடதிர்ந்தன.' (சிலப். 1.46); இங்கு அரும்பதவுரைகாரர் மத்தளம் என்று பொருள் கூறினர். முருடு : பத்தல் எனினுமாம். 'முரசுஞ் சங்கு முருடு மொலிப்ப' (பெருங். 3; 19; 195); இங்கு முருடு ஒருவகைப் பறையெனப்பட்டது. காளம் - ஊதுகொம்பு; 'சங்கபடகம் பேரிதாரை காளம் (பெரியபு. திருஞான. 629); காளம் எக்காளமுமாம். ஆகுளி - ஒருவகைச் சிறுபறை. 'நுண்ணீராகுளியிரட்ட' (மதுரைக். 606); பல் இயம் - பலதிறப்பட்டக் இசைக் கருவிகள், இயம் - ஒலியும் ஆம். எல்லா ஒலிகளும் கூடி ஆர்கலி என்று பெயர் பெற்ற கடலுக்கும் வருத்தம் விளைத்தன என்று ஓசை மிகுதி கூறப்பட்டது. வில் - அரவம் - வில்லிலிருந்து அம்பு எய்வதால் நிகழும் ஒலி; நாண் ஒலியுமாம்.

பி - ம். 3. விரசு, விரவும், விரைசெய்.
4. செய்ததே.



## அரக்கர்களின் படைகள் போருக்குப் புறப்பட்டு வருதல்

991. ஆய காலை யனைத்துல குந்தரும்
நாய கன்முக னுலு நடந்தென
மேய சேனை விரிகடல் விண்குலாம்
வாயி லூடு புறப்பட்டு வந்ததே.

ஆய காலை - அனைய பொழுதில், உலகு அனைத்தும் தரும் - உலகம் எல்லாவற்றையும் படைக்கின்ற கடவுளான, நாயகன் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பிரமதேவனது, நாலுமுகம் நடந்து என - நான்கு முகங்களாலும், எல்லாப்புவனங்களும் வெளிப்பட்டு வந்தது போன்று, மேயசேனை - பொருந்திய (நால்வகைப் படையாகிய), விரி கடல் - பரந்த கடலானது, விண் குலாம் வாயில் ஊடு - ஆகாயம் வரையில் ஓங்கி விளங்குகின்ற (இலங்கையின்) நான்கு வாயில்களின் வழியே புறப்பட்டு வந்தது - வெளிப்பட்டு வந்தது. ஏ - அசை.

இச்சேனை நம் மதில்களை வளைத்துக் கைப்பற்றிய குரங்குவீரர்களைத் துரத்தியடித்தபின் அதன் புறத்திருந்த வானரர்களையும் அப்புறப்படுத்த, அரக்கர் சேனை இலங்கையின் நான்கு கோட்டை வாயிலாலும் வெளிவந்தன என்க. இனி அனைத்துலகும் தரும் நாயகன் என இயைப்பின், நடந்தென என்பதற்கு எழுவாய் தருவித்தல் வேண்டும். பிரமனுக்கு நான்முகம் வந்த வரலாறு பலவாருகப் புராணங்களிற் கூறப்பட்டுள்ளது. நடந்தது என என்பது நடந்தெனத்திரிந்தது. விண்குலாம் வாயில் : இலங்கைக் கோட்டை வாயில்கள் ; ((ஒப்பு) : 'வன்கொண்டல் விட்டு மதிமுட்டு வனமாடம்' (சுந்தர. *96*) ; 'வான யாறுதம் மாமியத் தலந்தொறு மடுப்ப' (சுந்தர. *100*) ; 'ஊரி னிந்நெடுங் கோபுரத் துயர்ச்சிகண்டு ணர்ந்தால், மேரு வெங்ஙனம் விளர்க்குமோ முழுமுற்றும் வெள்கி' (சுந்தர. *115*). 'மேருவை நிறுத்திவெளி செய்தது கொல் விண்ணோர்,ஊர்புக வமைத்தபடு கால் கொ லுலகேழும், சோர்வில நிலைக்க நடு விட்டதொரு தூணோ, நீர்புகு கடற்குவழி யோவென நினைந்தான் மற்றும் சுந்தர : **116, 117, 157, 158, 160, 162**-ம் காண்க.

பி - ம். 1. ஆயக லித்து உலகும்மலர்.
2. முகந்தன்று, முகனுகலின், முகந்தாறு.
3. மேய சேனை யிரரக்கதர் வெள்ளமாம், விண்குலாய், விண்ணுறும், விண்ணகர்.
4. வாயிலூடும், தோறும் ; புறத்தும் வளைந்ததால், புறத்தும் வளர்ந்ததே. 36

992. நெடிய காவத மெட்டு நிரம்பிய
படிய வாயிற் பருப்பதம் பாய்ந்தெனக்
கொடியோ டுங்கொடி சுற்றத் தொடுத்ததண்டு
ஒடிய வூன்றின மும்மத வோங்கலே.

நெடிய காவதம் எட்டு நிரம்பிய படிய - நீண்ட எட்டுக் காதம் வரையில் நிறைந்த தன்மையுடையவான, மும்மத ஓங்கல் - மூன்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மதங்களையுடைய யானைகள், வாயில் பருப்பதம் பாய்ந்தென - கோபுரவாசல்களிலே பாய்ந்து வந்தன போல, கொடியொடும் - (தம்மீது வைத்துள்ள) கொடியுடனே, கொடி சுற்ற - (பிறயானைகள் தாங்கிய) கொடிகள் சுற்றிக் கொள்ளவும், தொடுத்த - (கொடியுடன்) தொடுக்கப்பட்டுள்ள, தண்டு - தண்டுகள் ஒடிய - முறியவும், ஊன்றின - அவற்றைத் தரையில் ஊன்றிக் கொண்டு வெளிவந்து பொருந்தின. ஏ - அசை.

நால்வகைச் சேனைகளைக் கீழ்க்கவிகளில் பொதுப்படக் கூறினர். இனி வேழப்படை முதலியவற்றைத் தனித்தனியாகக் கூறுவர். யானைகள் கொடிகள் தாங்கிச் செல்வது மரபு. இங்கு அந்தக் கொடிகள் ஒன்றுடன் ஒன்று பிணைத்தலின் கொடிகள் கட்டப்பெற்ற தண்டுகள் ஒடிந்தன எனப்பட்டது, ஊன்றுதல் - தள்ளுதலும் ஆம் 'நூக்கலூன்ற னுேன்ற றள்ளல்' (திவாகரம்) காவதம் - காதம். இதனைப் பத்துமைல் என்றும் ஏழரை மைல் என்றும் கூறுவர். 'ஆறைங் காதம்' (சிலப். 10 : 36); 'நடந் தனர் காவதம் பலவும்' (ஆரணிய: 177); படிய; கருமணியம் பாலகத்துப் பதித்தன்ன படியவாய் (சீவக. 167); வாயில் - கோபுரவாயில். இப்பாடல் ஐயம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் கருத்து. பருப்பதம் பர்வதம் என்ற வடசொற்றிரிபு, 'செம்பொற், பருவரையும் நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்' (பால. குலமுறை. 22); பாய்ந்தெதென என்பது பாய்ந்தென எனத்தொகுத்தது. மும்மத ஓங்கல் வெளிப்படை; பாயாவேங்கை. பறவாக்கொக்கு, மதமலை, நடைமலை, கைம்மலை என்பன போன்று மும்மத வோங்கல் ஆகுபெயரால் யானையைச் சுட்டிற்று. கொடியொடும் கொடி - இரண்டாவது கொடி, காகமும் ஆம். நெடிய காவதமெட்டு நிரம்பிய படிய வாயில், என்பதற்கு 'எண் காதவழி அகலமான கோட்டை வாசற்படிகள் தோறும்' என்பது பழையவுரை. கோட்டை வாயில்களின் வழியாக யானைகள் நெருங்கி வந்தபோது, அவை சுமந்து வந்த கொடிகள் ஒன்றேடொன்று சுற்ற, அவை தண்டுகள் ஒடியுமாறு தரையில் ஊன்றிக்கொண்டு வந்தன என்பது கூறப்பெற்றது.

பி - ம். 1. காவதம் விட்டு; நிரப்பிய.

2. படியின், படிகொள்; மீதிற்; சார்ந்தென.

3. சுற்றக் கொடுத்த, சுற்றித் தொடுத்த.

4. ஓடிய வோங்கின.





CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



993. சூழி யானை மதம்படு தொய்யலின்
ஊழி நாணெடுங் காலென வோடுவ
பாழி யாள்வயி ரப்படி பன்முறை
பூழி யாக்கின பொன்னெடுந் தேர்களே.

பொன் நெடு தேர்கள் - பொன்னாலாகிய உயர்ந்த தேர்கள், சூழியானை - முகபடாத்தை யணிந்த யானைகளின், மதம்படு - மதம் பெருகுவதனால் தோன்றிய, தொய்யலின் - சேற்றிலே, ஊழி நாள் - ஊழிக்காலத்திலே, நெடுகால் என - பெருங்காற்று வீசுவதுபோல, ஓடுவ - விரைந்து ஓடுவனவாய், பாழி ஆள் வயிரம்படி - வன்மையைக் கொண்டுள்ள உறுதியான பூமியை, பன் முறை பூழி ஆக்கின - பலபடியாக துகள் செய்தன. ஏ - அசை.

தேர்கள், தொய்யலின் ஓடுவ, பூழி ஆக்கின என்றியைக்க. சூழி - யானையின் முகபடாம்; 'சூழி யானை துகைத்தது சோபனம்' (யுத்த. மீட்சிப். 17); 'யானைச் சூழியிற் பொலிந்த' (மலைபடு. 228); 'சூழியு மோடையும் சுடர்மணிக் கோவையும்' (பெருங். 2 : 2 : 200); தொய்யல் - சேறு. (பிங்.); 'தொய்யல்வெம் சுழியிடை' (சுந்தர. 584); ஊழி நாள் நெடுங்கால் - பிரளயகாலக் காற்று. வயிரம் - வன்மை; வயிரம் பாய்ந்த மரம் என்ற வழக்குக் காண்க, யானைகளின் மத நீர் பொழிந்து சேருக்க, அதன் மீது காற்றின் வேகத்துடன் ஓடிய தேர்கள் அதனைப் புழுதியாக மாற்றின. (ஒப்பு); சோறு வாக்கிய கொழுங்கஞ்சி, யாறு போலப் பரந்தொழுகி, யேறு பொரச் சேருகித், தேரோடத் துகள் கெழுமி' (பட்டினப். 44—47); தொல். உவம. 10. பேராசிரியர் உரைக்குறிப்பும் காண்க. பூழி; 'பூழிவெங் கான நண்ணி' (அயோத்தி. கைகேசி. 107); பூழி - நனைந்த புழுதி என்பர். 'பூழி பூத்த புழற்காளாம்பி' (சிறுபாண். 134); மற்றும், சுந்தர. 222, 668, 1105. பாழி, மிடுக்கும் ஆம்.

பா - ம். 1. மதப்பபடு ; தொய்யிலின்
2. நாள்வரும் ; ஓடின.
3. பாழியாழ், பாழிவாள், வாய், சால் ; நெடுங்கற்படப்பட்டன. 38

994. பிடித்த வாநரம் பேரெழிற் றேள்களால்
இடித்த மாமதி லாடை யிலங்கையாள்
மடுத்த மாக்கடல் வாவுந் திரையெலாம்
குடித்துக் கால்வன போன்ற குதிரையே.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பிடித்த வானரம் - (இலங்கா நகரத்தை) முற்றுகை செய்த குரங்குகள், பேர் எழில் தோள்களால் - மிக்க எழுச்சியுற்ற (தமது) தோள்களால், இடித்த மாமதில் - தகர்க்கப்பட்ட உயர்ந்த மதிலாகிய, ஆடை இலங்கையாள் - ஆடையையுடைய இலங்கை என்னும் பெண், குடித்து மடுத்த மாகடல் - பருகி உட்கொண்ட தான பெரிய கடலிலே, வாவும் திரை எலாம் - தாவிவருகின்ற அலைகள் எல்லாம், கால்வன குதிரை போன்ற - வெளிப்படுவன வற்றைக் குதிரைகள் நிகர்த்தன. ஏ - அசை.

குரங்குகள் இலங்கா புரியின் மதில்களைத் தகர்க்கவே, அகழாக அமைந்த கடல் போன்ற நீரலைகள் உட்புகுந்தன வெளியேறுவது போன்று, குதிரைகள் கோட்டைவாயிலின் வழியாக வெளிவந்தன எனப்பட்டது. மதிலைச்சூழ நின்ற அகழி மதிலின் ஆடையாக உருவகம் செய்யப்பட்டது. நகரத்தைப் பெண்பாலாகக் கூறுவது மரபு. ஆகலின் இலங்கையாள் என்றார். வாவுதல் - தாவுதல்; 'வாவு மிளமான்காள்' (நைடத. பிரிவுறு : 18); குதிரைகளின் வருகைக்கு, அலைகள் உவமை. 'மொய்களி றுடைதிரை மரக்கலம்' (சீவக. 2223)-ம் அதன் கீழ்க் குறிப்பும் காண்க. 'தரங்க நிரைத்தன தரள நிரைத்தன, துரங்க மெனைப்பல' (நக்க. 265), காலுதல் - உமிழ்தல்; இதற்குப் 'பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி' (பெரும்பாண். 2)-இன் உரைக்குறிப்புக் காண்க.

பி - ம். 1. வானரப்.
2. ஆடலிலங்கையுள், லிலங்கையும்.
3. மடுத்து, மடித்த, வடித்த.
4. கால்வன போலும்.

39

995. கேழில் ஞாலங் கிளத்திய தொன்முறை
நாளும் நாளும் நடந்தன நள்ளிரா
நீள மெய்தி யொருசிறை நின்றன
மீளு மாலையும் போன்றனர் வீரரே.

கேழ் இல் ஞாலம் - உவமை யில்லாத பூமியின் கண், தொல் முறை கிளத்திய - பழமையாகப் பகர்கின்ற, நாளும் நாளும் - தினந் தோறும், நடந்தன - சென்றனவான, நள் இரா - நள் என்னும் ஒலியுடன்கூடிய இரவுகள், நீளம் எய்தி ஒரு சிறை நின்றன - ஒரு கூட்டை அடைந்து ஒரு பக்கத்திலே நின்றவை, மீளும் மாலையும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


போன்றனர் வீரர் - (அத்தன்மை நீங்கப் பெற்றவர் திரும்பும் தன்மையும்போலக் காணப்பட்டனர் அரக்க வீரர்கள். ஏ - அசை.

கிளத்திய சொன் முறை - சொன்ன பழமை நீதிப்படி. அரக்கர்கள் இயல்பாகவே கருநிறத்தினர்; அவர்கள் கூட்டமாக வெளிவந்தது, வெகு நாட்களாகக் கழிந்த இராப்பொழுதெல்லாம் ஓரிடத்தில் தங்கி நின்றவை இப்போது கூடி வெளிப்படுவனபோலும் எனப்பட்டது. நீளம் எய்தி - சிறைக்கூடம் போன்ற ஓர் இடத்தை யுற்று. நீளம் - பறவைக் கூடு; 'நீள நீங்கிய பறவையின் விண்ணுற நிமிர்ந்தான்' (ஆரணிய. கவந்த. 40). மாலை - தன்மை; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. ழகர ளகரங்கள் தம்முள் எதுகையாக வருமாதலின் 'கேழில்' என்ற பதமே தழுவப்பட்டது. இயல்பு, ஒழுங்குமாம். சிறை - இடம்.

ப - ம. 1. கேளில்; கிளர்ந்திய.

4. வீழும்; மாலைய. 40

996. பத்தி வன்றலைப் பாம்பின் பரங்கெட
முத்தி நாட்டின் முகட்டினை முற்றுறப்
பித்தி பிற்பட வன்றிசை பேர்வுறத்
தொத்தி மீண்டில வானெடுந் தூளியே.

நெடு தூளி - (இங்ஙனம் நால்வகைப் படைகளாலும் எழுப்பப் பெற்ற) மிக்க புழுதியானது, பத்தி - வரிசையாக அமைந்த, வல் தலை பாம்பின் - வலிய தலைகளைக் கொண்ட ஆதி சேடனுடைய, பரம் கெட - பாரம் கெடுமாறு, முத்தி நாட்டின் முகட்டினை முற்றுற - வானநாட்டினின் உச்சியை முற்றுற வளைந்துகொள்ளுமாறும்; பித்தி பின்பட - அண்டச்சுவர் பின்னாகுமாறும், வல்திசை - வலிய திக்குகள், பேர்வுற - நிலை பெயருமாறும், தொத்தி மீண்டில - தொத்திக்கொண்டு மீளாதனவாயின. ஆல் ஏ - அசை.

சேடன் தன் முடி மீது தாங்கும் பூமியானது புழுதியாக மாறி முத்தி நாட்டினை முற்றின படியால் அச்சேடனது தலைப்பாரம் கெட்டது எனப்பட்டது. 'புவியோ அரவினுக் கொருதலைப் பாரம்' (ஔவை); பத்தி - வரிசை; 'பத்தியிற் குயிற்றிய' (சீவக. 85); 'சித்திரப் பத்தியிற் றேவர் சென்றனர்' (சுந்தர. 146); 'பத்தியிற் பண்ணின பருமயானையே' (சீவக. 2211). பரம் - பாரம்; 'ஒருத்தலைப்பரம்' (அயோத்தி. மந்திர. 66). பித்தி: அண்டச்சுவர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இதனைத் தாண்டியும், எழுப்பப்பட்ட தூளி சென்றது என்க. 'கதிகொண்ட சேனை நடவ வெழுதுகள் ககனம் சுலாவி யநில கதியுற' (வி. பா. 16-ஆம் போர் 73) எனத்தொடங்கும் செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத்தகும். 'நானுவித மணிப்பித்திப்பத்தி' (சுந்தர. 197). தொத்துதல்: 'நரரு மினித்தொத்துவர்' (திருவால. 29, 1); தொடர்புயர்வு நவிற்சியணி.

பி - ம். 2. நாட்டின் முகத்தினை; முந்துறப், மொய்த்துறும்.

3. பித்தி படப்பட; பேர்வறந்.

4. தொத்திருண்டில, தொத்தி மீண்டிலதால். 41

## குரங்குச்சேனை சுக்கிரீவனைச் சேர்தல்

997. நெருக்கி வந்து நிருதர் நெருங்கலால்
குரக்கி னப்பெருந் தானை குலைந்துபோய்
அருக்கன் மாமக னாரம ராசையால்
செருக்கி நின்றவ னின்றுழிச் சென்றவால்.

நெருக்கி வந்து - (தம்மை) நெருங்கிக்கொண்டே வந்து; நிருதர் நெருங்கலால் - அரக்கர்கள் நெருங்குவதனால்; குரக்கினம் பெருதானை - குரங்குகளின் கூட்டமான பெரும்படைகள், குலைந்து போய் - நிலைகெட்டுபோய், ஆர் அமர் ஆசையால் - போர் செய்ய வேண்டும் என்னும் நிறைந்த விருப்பத்துடன், செருக்கி நின்றவன் - கர்வம் கொண்டு நின்றவனை, அருக்கன் மாமகன் - சூரியன் புதல்வனை சுக்கிரீவன், நின்றுழி சென்ற - நின்ற இடத்தின் கண்ணே சென்றன. ஆல் - அசை.

அரக்கர் நெருக்கலால் குரங்குச்சேனை நிலைதடுமாறிச் சுக்கிரீவனை அடைந்தன. செருக்கி நின்றவன் அருக்கன் மாமகன் என மாற்றுக. அருக்கன்: அர்க்க என்ற வடசொற்றிரிபு. அருக்கன் மாமகன் ஆர் அமர் ஆசையெனவும் கொள்ளலாம். ஆர் - நிறைவு. ஆரமர் அலரத்தாக்கி (புறநா. 71) என்ற இடத்துப் பொறுத்தற்கரிய போர் என்பர் உரைகாரர். அங்கு அருமை அமர் என்பது ஆரமர் எனப்பட்டது என்க. 'அருஞ்சமஞ்சிதையத் தாக்கி' (புறநா. 72ம்) காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. நெருங்க, நெருக்குலாற்.

2. பெருஞ்சேனை.

3. அருக்கனூர்.

4. செருக்கி நின்றவர். 42

## சுக்கிரீவன் பொருதற்கு எழுதல்

998. சாய்ந்த தானைத் தளர்வுஞ் சலத்தெதிர்
பாய்ந்த தானைப் பெருமையும் பார்த்துறக்
காய்ந்த நெஞ்சன் கனல்சொரி கண்ணினன்
ஏய்ந்த தங்கோர் மராமர மேந்தினன்.

சாய்ந்த தானை தளர்வும் - வலி குறைந்த வானரப் படையின் தளர்ச்சியும், சலத்து எதிர் பாய்ந்த தானை பெருமையும் - கோபத்துடன் எதிரே தாவிச்சென்ற அரக்கர் படையின் பரப்பும், பார்த்து - கண்டு, உற காய்ந்த - மிகவும் கொதிப்புக் கொண்ட, நெஞ்சன் - உள்ளத்தையுடையவனும், கனல் சொரி கண்ணினன் - நெருப்பு பறக்கின்ற விழிகளையுடையவனுமாகி, அங்கு - அவ்விடத்தில், ஏய்ந்தது - பொருந்தியிருந்த, ஓர் மராமரம் ஏந்தினன் - ஒரு மராமரத்தைத் தூக்கிக்கொண்டான் (சுக்கிரீவன்).

சாய்தல் - தளர்தல்; இதனை உள்ளதன் நுணுக்கம் என்பர்; தொல். சொல். 27, 32). சலம் - தணியாக் கோபம். தானை முதலது குரக்குச் சேனை பின்னது அரக்கர் சேனை. காய்தல் - சினத்தல். சினத்தால் உடலும் உள்ளமும் கொதிக்கும் ஆகலின். காய்ந்த எனப்பட்டது. 'காய்தலு முவத்தலும்' (தொல். பொ. 147).

பி - ம். 1. சார்ந்த, சலித்தெதிர்.

2. பார்த்தறக்.

3. காய்ந்த நெஞ்சின், கண்ணினன். 43

999. வார ணத்தெதிர் வாசியி னேர்வயத்
தேர்மு கத்தினிற் சேவகர் மேற்செறுத்து
ஒரொ ருத்தர்க் கொருவரி னுற்றுயர்
தோர ணத்தொரு வன்னெனத் தோன்றினன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வாரணத்து - யானை மீதும், வாசியின் - குதிரையின் மீதும், வயம் தேர் முகத்தினில் - வெற்றிகொண்ட தேரின் மீதும், சேவகர் மேல் - அரக்கர் வீரர் மீதும், செறுத்து - சினந்து நின்று, ஓர் ஒருத்தர்க்கு ஒருவரின் - ஒவ்வொருத்தற்கு முன்னமும், உற்று - (ஒவ்வொரு) சுக்கிரீவன் பொருந்தி இருப்பதுபோல, உயர் தோரணத்து - உயர் தோரண வாயிலிலே, எதிர் நேர் ஒருவன் எனத் தோன்றினன் - நேர் நின்று பொருத அநுமன்போலக் காணப்பட்டான்.

எதிர்த்து நின்றவை நால்வகைப் படையெனினும் அவை அனைத்தையும் ஒரொருவனாக எதிர்த்தான் என்று சுக்கிரீவனுடைய போர்த்திறம் கூறப்பட்டது, (ஒப்பு.) இது, அசோக வனத்தில் அநுமன் ஒருவனே நின்று அக்ககுமாரன் முதலியோரின் பெரும் படைகளைக் கொன்ற செய்தியை உவமித்தது. 'முன்னேயுளன் பின்னேயுளன் முகத்தேயுள னகத்தின், றன்னேயுளன் மருங்கேயுளன் றலைமேலுளன் மலைமேல், கொன்னேயுள னிலத்தேயுளன் விசும்பேயுளன் கொடியோர், என்னேயொரு கடுப்பென்றிட' (யுத்த. மூலபல. 186). 'என்னேரின னென்னேரின னென்றியாவரு மெண்ணப், பொன்னேர்வரு வரிவிற்கரத் தொரு கோளரி பொருவான், ஒன்றூர் பெரும் படைப்போர்க்கட லுறையன் றுள தெனினும், அன்னேரவ ருடனேதிரி நிழலேயென லானான்' (யுத்த. மூலபல. 116). சேவகர் - காலாள் வீரர். சேவகம் - வீரம். தோரணவாயில் - அலங்காரமாக அமைந்த கோட்டை அல்லது நகரவாயில்; 'தோரணத்தி னும்ப ரிருந்ததோர்' (சுந்தர. அக்க. 21).

பி - ம். 2. சேவகர் சென்னிமேல்.
3. ஓரொருத்தர்க் கொருத்தரின், ஒருவர்; உற்றுரெனத். 44

1000. களிறு மாவும் நிருதருங் காலற
ஒளிறு மாமணித் தேரு முருட்டிவெங்
குளிறு சோரி யொழுகக் கொதித்திடை
வெளிறி லாமர மேகொண்டு வீசினன்.

களிறும் மாவும் நிருதரும் கால் அற - யானைகளும் குதிரைகளும் அரக்க வீரர்களும் கால் முறிந்து போகுமாறும், ஒளிறும் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விளங்குகின்ற, மாமணி தேரும் உருட்டி - சிறந்த மணிகள் பதிந்த தேரும் உருளுமாறும், வெம் குளிறு சோரி ஒழுக - காண்பவருக்கு அச்சம் விளைக்கின்ற ஒலியுடன்கூடிய உதிரம் ஆருய்ப் பெருகுமாறும், கொதித்து - மனதில் வெம்மைகொண்டு, இடை - நடுவில், வெளிறு இலா - நடுவில் வெளிறில்லாத (முழு வயிரம் பாய்ந்த), மரமே கொண்டு - அந்த மராமாத்தைக் கொண்டே, வீசினன் - எறிந்தான். ஏ - தேற்றம்.

தேர்ப்படை யானைப்படை குதிரைப்படை காலாட்படை என்று கூறுவதே மரபாயினும். செய்யுள் நோக்கி இங்கு முறை மாற்றியுரைக்கப்பட்டது; மற்றும் 'யானையுடைய படைகாண்டல் முன்னினிதே' என்றதற்கேற்ப, யானைப்படையை முற்கூறியது எனினுமாம். மா விலங்கின் பொதுப் பெயரேனும், இங்கு இடம் நோக்கிக் குதிரை எனக்கொள்ளப்பட்டது. வெளிறிலாமரம் - வயிரம் பாய்ந்த மரம், வெற்றிடமில்லாத மரம்; (ஒப்பு): 'வெளிறிலாக் கேள்வியான்' (சீவக. 200). வெளிறு - குற்றமுமாம். (சீவக. 1617). குளிறு சோரி; (ஒப்பு.) 'ஓசைச் சோரியை நோக்கினன்' (கிட்கிந்தா. 298). 'காலற - முடிய' என்பது பழையஉரை.

பி - ம். 1. சுாலிற, காலுற.
3. கொதித்துடை, குதித்திடை. 45

## வாநரவீரரும் அரக்கரும் நெருங்கிப் போரிடல்

1001. அன்ன காலை யரிக்குல வீரரும்
மன்னன் முன்புக வன்க ணரக்கரும்
முன்னு ழந்த முழங்கு பெருஞ்செருத்
தன்னில் வந்து தலைமயக் குற்றனர்.

அன்ன காலை - அப்பொழுது, அரிகுல வீரரும் - குரங்குக் குலத்து வீரர்களும், மன்னன் - அரசனான சுக்கிரீவனும், முன்புக - முன்னர்ச் செல்ல, வன்கண் அரக்கரும் - கொடிய இராக்கதரும், முன் உழந்த - முன்பு போர் புரிந்து வருந்திய, முழங்கு - முழங்குகின்ற, பெரு செரு தன்னில் வந்து தலை மயக்கு உற்றனர் - பெரிய போரின் கண் வந்து கைகலந்தனர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இருதிறப் படைகளும் தம்முட் கலந்தன. தலை மயக்குறுதல்; 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' (புறநா. 19); வெங் கண்மை - கொடுமை; 'வன்கண் வஞ்சனை யரக்கர்' (சுந்தர. 345). 'வாழ்வாரின் வன்கணா ரில்' (குறள். 1198).

பி - ம். 1. அரிகுல; வீரர்தம்.

2. மன்னன் முன்மத.

3. முன்னில் வந்து, முன்னெழுந்து; முழங்கு பொருஞ்.

4. தலைமயக் குற்றவால், குற்றதால். 46

1002. கற்று ரந்த களம்பட வஞ்சகர்
இற்று லந்து முடிந்தவ ரெண்ணிலர்
விற்று ரந்தன வெங்கணை யாலுடல்
அற்று லந்த குரங்கு மனந்தமே.

களம் - போர்க்களத்தின் கண், துரந்த கல்பட - எறிந்த கற்கள் வீழ்ந்ததனால், வஞ்சகர் - வஞ்சகரான அரக்கரில், இற்று - உயிரற்று, உலந்து - ஆயுள் குறையப்பெற்று, முடிந்தவர் எண்ணிலர் - இறந்துபட்டவர் கணக்கில்லாதவர்; வில்துரந்தன - (அரக்கரின்) விற்கள் வெளிப்படுத்திய, வெம்கணையால் - கொடிய அம்புகளால், உடல் அற்று உலந்த குரங்கும் அனந்தமே - உடலிழந்து இறந்த குரங்குகளும் எல்லையில்லாதன.

வானரர்கள் கற்களைக் கொண்டும், அரக்கர்கள் வில் கணைகளைக் கொண்டும் பொருத போழ்தில் இருதிறத்திலும் இறந்தவர் பலர். அனந்தம் - எல்லை அல்லது முடிவற்றது எனப்பொருள்படும் வடசொல். ந - அந்தம் எனப்பிரிந்து புணரும்; 'ஊரனந்தம் பெற்ற பேரனந்தம் சுற்று முறவனந்தம்' (தாயு. பரசிவ. 2). உலத்தல் - இறத்தல்; 'உலந்தாருடல் கடலோடுற' (ஆரணிய. 454); 'உயிருலந்தார்' (ஆரணிய. 460); உலந்தன ரொல்லையின் மடிந்தார்' (ஆரணிய. 515).

பி - ம். 1. கணம்படக், படக்கழல்.

2. இற்றுலர்ந்து; முடிந்தனர்; எண்ணிலார்.

2. துரந்த கணைப்பட வெங்களத்து.

4. கவியு மளந்தமால். 47

133

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


1003. கற்க டந்து நிமிர்ந்த கடுஞ்செரு
மற்க டங்கள் வலிந்து மலைந்திடத்
தற்க டங்கி யுலந்தவர் தம்முயிர்
தெற்க டங்க நிறைந்து செறிந்தவால்.

நிமிர்ந்த கடும் செரு - கடுமையாக நிகழ்ந்தபோரில், மற்கடங்கள் - குரங்குகள், வலிந்து - திறமையைக்காட்டி, கற்கள் தந்து மலைந்திட - கற்களை வீசிப் போர்புரிய, தற்கு அடங்கி-(தமது) கர்வம் அழிந்து, உலந்தவர் தம் - இறந்தவரான அரக்கரின், உயிர் - உயிர், தெற்கு அடங்க நிறைந்து செறிந்த - தென் திசை முழுவதும் நிறைந்து பொருந்தின. ஆல் - அசை.

மர்க்கடம் - குரங்கு 'வாத மாமகன் மர்க்கடம்' (பெரியதிரு. 5 ; 8 ; 2) ; தருக்கு - தற்கு என எதுகை நோக்கித் திரிந்தது, தெற்கு - இயமனுலகம்.

பி - ம். 1. கற்கடங்க டுரந்த, கற்கடந்து துரந்த ; நிமிர்ந்து.
2. மலிந்து ; மலைந்திடு.
4. தெற்கடங்கி ; செறிந்ததால். 48

## படுகளச் சிறப்பு

1004. பாடு கின்றன பேய்க்கணம் பல்விதத்
தாடு கின்ற வறுகுறை யாழ்கடற்
கோடு கின்ற வுதிரம் புகுந்துடல்
நாடு கின்றனர் கற்புடை நங்கைமார்.

பேய்க் கணம் பாடுகின்றன - பேய்க் கூட்டங்கள் பாடத் தொடங்கின ; அறுகுறை - அற்ற உடற்குறை, பல்விதத்து ஆடுகின்ற - பலவகையாக ஆடத் தொடங்கின ; உதிரம் (இறந்த வீரர்களின் உடலிலிருந்து பெருகிய) இரத்தம், ஆழ் கடற்கு - ஆழ்ந்த கடலை நோக்கி, ஓடுகின்ற - ஓடுவன ஆயின ; கற்புடை நங்கை மார் - கற்புப் பொருந்திய மகளிர்கள், புகுந்து - போர்க்களத்திலே புக்கு,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உடல் நாடுகின்றனர் - தத்தம் கணவன் மாரின் உயிரைத் தேடலாயினர்.

போர்க்கள வருணனை. அறுகுறை - கவந்தம். 'ஆடுவ கவந்தமொன்று றெண்ணுயிரம், விடிய பொழுதெனும்' (யுத்த. அதிகாயன் : 112) உதிரம் பெருகிக் கடலிற் சென்று சங்கமமாயிற்று, 'உதிரத் திட்டமும் ........காலப் புனல், வானயாறு மெனக் கடல் மடுத்ததே' (யுத்த. அதிகாய. 113); உடல் நாடுகின்றனர் என்ற பாடமும் உண்டு எனினும் உயிர் என்ற பாடமே தழுவப்பட்டது. உயிர்; உயிர் போன்ற கணவன்மார். கற்புடை மகளிர் ஆதலின் கணவன் மார் இறந்தபின் வாழ்தற் கொருப்படார். ஆகவே அவர் அவர்களின் அருவமான உயிரைத் தங்கள் உயிர் கொண்டு நாடிச் சென்றனர் என்க. 'தன்னுயிர் கொண்டவனுயிர் தேடினள் போல்' (சிலப்.); தலைவனும் தலைவியும் தந்தமக்குள் உயிர் போன்றவர் என்ப. 'ஈண்டு நீ யிருக்க வாண்டங் கெவ்வுயிர்விடு மிராமன்' (சுந்தர. 525); முன் இரண்டடி கட்கும் (ஒப்பு): 'கவந்தமாடு முன்புதங் களிப்பொடாடு பேயினம்' (கலிங்கத்து. 432); இங்கே கலிங்கத்துப் பரணி களம்பாடியது காணத்தகும்.

பி - ம். 3. ஓடுகின்றது ; புகுந்துயிர்.

4. கற்புடை நங்கையர்.

49

1005. யானை பட்ட வழிபுனல் யாறெலாம்
பானல் பட்ட பலகணை மாரியின்
சோனை பட்டது சொல்லரும் வாநரச்
சேனை பட்டது பட்டது செம்புனீர்.

பட்ட யானை - வாநரங்களால் தாக்குண்டு இறந்த யானைகளிடமிருந்து, அழி புனல் யாறு எலாம் - பெருகுகின்ற இரத்த நீராகிய ஆறுகள் எல்லாம், பானல் பட்ட - கடலிற் சென்று கலந்தன; பலகணை மாரியின் சோனை பட்டது - (அரக்கரின்) பலவான அம்பு களின் பெரிய மழை எழுந்தது; (அதனால்) சொல் அரும் வாநர சேனைபட்டது - இத்துணை யென்று சொல்ல வியலாத வாநரப்படை இறந்தது; செம்புண் நீர் பட்டது - இரத்தப் புனல் காணப் பட்டது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அழிபுனல் - வினைத் தொகை, 'அழியும் புனலஞ் சனமா நதியே' (சீவக. 1194); துணிக்கப்பட்ட யானைகளின் உதிர நீருடன் அரக்கரின் வாளிகளால் அறுபட்ட குரக்கு வீரர்களின் உதிரமும் சென்று கடலிற் கலந்தன. பானல்-கடல் 'பானலே கடல் குதிரை வெற்றிப், பழன நெய்தல் கண்ணென்றது பெயர்; (நிகண்டு) சோனை - விடா மழை. இறந்த வானரங்கள் எண்ணிறந்தன ஆகலின் சொல்லரும் எனப்பட்டது. செம்புணீர்-இரத்தம் (யுத்த. 1006); (ஒப்பு): 'வெம்புணீர்' (யுத்த. 977).

பி - ம். 1. ஆனை; ஆறு; அடுபரிபட்டன.
2. பானை; பட்டன; பல், போல்; மாரிசன்.
4. செம்புனல். 50

சில சுவடிகளில் இப்பாடல் இல்லை.

இங்கு ஓர் அதிகப் பாடல் (சில சுவடிகளில் இங்குள்ள பாடலுக்குப் பதிலாகப் பின்வரும் பாடல் காணப்படுகின்றது).

ஆனைபட்ட வடுபரி பட்டன
தானை பட்டது தாரிர தங்கணை
சோனை பட்டது துன்னரும் வானரச்
சேனை பட்டது பட்டது செங்களம்.

1006. காய்ந்த வாநர வீரர் கரத்தினல்
தேய்ந்த வாயுள ரானவர் செம்புணீர்
பாய்ந்த தானைப் படுகளம் பாழ்படச்
சாய்ந்த தால்நிரு தக்கடல் தானையே.

காய்ந்த - வெகுண்ட, வாநர வீரர் கரத்தினல் - குரங்கு வீரரின் கைகளால், தேய்ந்த ஆயுளர் ஆனவர் - குறைந்த ஆயுளையுடையவரான இராக்கதர்களின், செம்புண் நீர் - செந்நிறம் உள்ள உதிரமானது, பாய்ந்தது - பாய்ந்தது; ஆனை படுகளம் பாழ்பட - ஆனைகள் இறந்தபட்ட போர்க்களம் பாழாகும்படி, நிருதர் கடல் தானை - அரக்கரின் சேனைக்கடல், சாய்ந்தது - வலி குன்றியது. ஆல், ஏ - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தேய்ந்த ஆயுளர் - வடமொழி நடை. பாய்ந்த - பாய்ந்தது, படுகளம் - போர்க்களம்; 'உலகமேத்தும் படுகளம் கண்டு' (சீவக. 17); 'படுகளத்தில் ஒப்பாரியா?' என்ற வழக்கும் காண்க. கடற்றனை - 'கடற்றனை முன்னுகக் கண்டான்' (நள. 67); மூன்றுமடியில் தானைப் படுகளம் என இயைத்துப் பொருள் கொள்ளலுமாம். 'பாழ்படச் சாய்ந்தது - நின்ற வரக்கர் மடியப் பயந்தவரோடினர்' என்பது பழையவுரை.

பி - ம். 1. கதந்திறல். 51

### வச்சிர: முஷ்டியென்னும் அரக்கன் எதிர்த்து வருதல்

1007. தங்கண் மாப்படை சாய்தலும் தீயெழ
வெங்கண் வாளரக் கன்விரை தேரினைக்
கங்க சாலந் தொடரக் கடற்செலூஉம்
வங்க மாமென வந்தெதிர் தோன்றினன்.

தங்கள் மாபடை சாய்தலும் - தங்களுடைய (அரக்கருடைய) பெரிய சேனை வலி ஒடுங்கிய அளவில், வெம் கண் தீ எழ - கண்களில் வெம்மையான தீ பறக்க, வாள் அரக்கன் - கொடிய (வச்சிரமுட்டி என்னும்) அரக்கன், விரை தேரினை - வேகமாக வருகின்ற தனித்தேரினை, கங்கம் சாலம் தொடர - பருந்துக் குழாங்கள் பின் தொடர்ந்து வர, கடல் செலூஉம் வங்கம் ஆம் என - கடலிலே செல்லும் மரக்கலம்போல (செலுத்தி), வந்து - வந்து, எதிர் தோன்றினன் - எதிரே காணப்பட்டான்.

தங்கள் மாப்படை அரக்கரின் பெரிய சேனை, இங்குக் கூறப்பட்ட கொடிய அரக்கன் வச்சிரமுட்டி யென்பது 1010-ஆம் பாடல் கொண்டுணர்க. விரைதேர் - வினைத் தொகை; கங்கசாலம் வடமொழித் தொடர்; கடல் இங்கு உதிரக்கடல் என்க. வங்கம் - மரக்கலம், 3 4 அடிகட்கு (ஒப்பு): 'கங்கமொடு காகமிடை யக்கடலினேடும், வங்கமென லாயதொரு தேரின் மிசை வந்தான்' (ஆரணிய. 531)-ம் 'குருதி வெள்ளம் ஆனதற்கேற்ப, அதனிடைச் செல்லும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தேர் வங்கமாக உவமிக்கப் பெற்றது' என்ற உரைக் குறிப்பும் காண்க; (ஒப்பு): வங்கத்திற்குக்களிறு 'மால்களிறு போன்ருேர் வங்கம் (சீவக. 493).

பி - ம். 1. நியெழும்.

2. விரைத் தேரினை.

3. கடற் செலும்.

4. தாக்கினுன். 52

1008. வந்து தாக்கி வடிக்கணை மாமழை
சிந்தி வாநரச் சேனை சிதைத்தலும்
இந்தி ராதிய ருந்திகைத் தேங்கினுர்
நொந்து சூரியன் கான்முளை நோக்கினுன்.

வந்து - (தேரில் விரைந்து வந்து வச்சிர முட்டி என்பவன்), வடிகணை மாமழை சிந்தி - கூர்மையான அம்புகளினுலாய பெரிய மழையைப் பொழிந்து, தாக்கி வாநர சேனை சிதைத்தலும் - எதிர்த்து வாநரப்படையை அழித்த வளவில், இந்திராதியரும் திகைத்து ஏங்கினுர் - இந்திரன் முதலான தேவர்களும் மனம் தடுமாறி (என்ன நிகழுமோ) என்று தவித்தார்கள்; சூரியன் கான் முளை நொந்து நோக்கினுன் - சூரியன் புதல்வனுன சுக்கிரீவன் மனம் வருந்தி (அந்நிலையைக்) கண்ணுற்ருன்

வடிக்கணை - கொல்லன் உலைக் களத்தில் வடிக்கப்பட்ட கணை யெனினுமாம். இந்திராதியர்; இந்திரன் வருணன் முதலிய திக்குப் பாலகர்களும் பிறரும். சூரியன் கான்முளை - சுக்கிரீவன்; 'இரவி கான் முளை' (யுத்த. கும்ப. 254); 'எல்லவன் கான் முளை' (யுத்த. கும்ப. 259); 'பரிதி கான்முளை' (யுத்த. கும்ப. 264) என வருவன வும் காண்க.

பி - ம். 1. வந்து தாங்கி.

3. திகைத் தேகினுர். 53

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## வச்சிர முட்டியைச் சுக்கிரீவன் சிதைத்தல்

1009. நோக்கி வஞ்ச நொறில்வய மாப்பரி
வீக்கு தேரினின் மீதெழப் பாய்ந்துதோள்
தூக்கு தூணியும் வில்லுந் துணித்தவன்
யாக்கை யுஞ்சிதைத் திட்டெழுந் தேகினன்.

நோக்கி - (அதனைப்) பார்த்து (சுக்கிரீவன்), வஞ்சன் நொறில் வயம் மா பரி - வஞ்சம் மிகுந்த வச்சிரமுட்டியின் விரைவுள்ள வலிய பெரிய குதிரைகள், வீக்கு தேரினின் மீது - பூட்டப்பட்ட தேரின் மீது, எழ பாய்ந்து - எழும்பும்படி தாவி, தோள் தூக்கு தூணியும் வில்லும் - (அவன்) தோளில் தொங்கவிட்டிருந்த அம்புப் புட்டிலையும் வில்லினையும், துணித்து - அறுத்து, அவன் யாக்கையும் சிதைத்திட்டு எழுந்து ஏகினன் - அவனுடைய உடலையும் அழித்து விட்டு மீட்டும் அங்கு நின்று கிளம்பிச் சென்றான்.

வஞ்சன் - வச்சிர முட்டி. நொறில் - விரைவு; நொறில் பரித் தேர்பட நூறி' (ஆரணிய. 521); 'நொறில் பரித்தேர்' (நைடத. போர்புரி. 3); சிதைத்திட்டு; இட்டு துணைவினை. வச்சிர முட்டி இறந்தது வடக்கு வாயிலில் என்பது இப்படலம் 85-ஆம் செய்யுளால் விளங்கும்.

பி - ம். 2. வீக்கு தேரினன்.
3. தொலைத்தனன், துணிந்தவன்.

54

## வாநரர் ஆரவாரஞ் செய்தல்

1010. மலைகு லைந்தென வச்சிர முட்டிதன்
நிலைகு லைந்து விழுதலி னின்றுளார்
குலைகு லைந்து கொடிநகர் நோக்கினர்
அலைகி ளர்ந்தென வாநர மார்த்தவே.

மலை குலைந்தென - மலை தன் நிலை கெட்டாற் போல, வச்சிர முட்டி - வச்சிரமுட்டி என்னும் அரக்கன், தன் நிலை குலைந்து விழு தலின் - தன் நிலை தடுமாறி விழுந்ததனால், நின்றுளார் - அங்கே நின்றிருந்த அரக்கர்கள், குலை குலைந்து - நடுக்கமெய்தி, கொடி நகர் நோக்கினர் - கொடிகள் கட்டப்பட்டிருந்த இலங்காபுரி நோக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கித் திரும்பினர், (அதுகண்டு) அலை கிளர்ந்தென வானரம் ஆர்த்த- அலைகள் பொங்கி எழுந்தாற் போலக் குரங்குகள் பேரொலி செய்தன, ஏ - அசை.

இச் செய்யுளின் சந்தமும் சொற்போக்கும் அழகு பெற அமைந்துள்ளமை காண்க. குலைந்தது என என்பது குலைந்தென எனக் குறுகிற்று. குலை ஈரற் குலையுமாம்; குலை வற்றி, குலை நடுங்கி என்று வருவன காண்க. கொடி நகர்; நகர்க்கு இயற்கை அடைமொழி: அலை கிளர்தல் உருவம் பற்றியும் தொழில் பற்றியும் வந்த உவமை. கொடி நகர் நோக்கினர் என்றது அரக்கர்கள் அஞ்சித் தந்நகர்க்கு மீண்டமை குறித்தது.

பி - ம். 1. மலை குலைந்தன.
2. ஆர்த்ததே.

55

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

ஆர்த்த போதி லருந்திறற் சிங்கனும்
சூர்த்த நோக்குடைச் சூரனும், துர்க்கனும்
கூர்த்த வெங்கதிர்க் கோபனொ டாதியாய்
வேர்த்த ரக்கர் வியன்படை வீசினர்.

## கீழை வாசலில் வாநரர்க்கும் அரக்கர்க்கும், கொடும் போர்

1011. வீழி வெங்க ணிராக்கதர் வெம்படை
ஊழி யாழி கிளர்ந்தென வோங்கின
கீழை வாயிலிற் கிட்டலு முட்டினர்
சூழும் வாநர வீரர் துவன்றியே.

வீழி வெம்கண் இராக்கதர் வெம்படை - வீழிப்பழம் போன்ற செந்நிறம் வாய்ந்த கொடுங் கண்களையுடைய அரக்கரின் கொடிய படை, ஊழி ஆழி கிளர்ந்தென - ஊழிக் காலத்தில் கடல் மேலெழுந்தாற் போலக் கிளர்ந்தவாய், ஓங்கின - மேலெழுந்து வந்தன; (அவை) கீழை வாயிலில் கிட்டலும் - கிழக்கு வாயிலை அடைதலும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சூழும் வாநர வீரர் துவன்றி முட்டினர் - சுற்றிலுமுள்ள குரங்குப் படைவீரர் நெருங்கித் தாக்கினர். ஏ - அசை.

வீழி - செந்நிறமான ஓர் பழம்; இது கம்ப நாடரால் பல இடங் களிலும் உவமையாகக் குறிக்கப் பெறும்; 'வீழியின் கனியிதழ்' (யுத்த. 805); 'வீழியின் கனிபோல் மேனி கிழிபட' (யுத்த. நாக பாசப். 115); 'வீழிக் கனிபோல்' (யுத்த. படைத்தலைவர். 70); கிட்கிந்தா. 30-ம் காண்க. கிட்டலு முட்டினர் என்ற இடத்து இணை யெதுகை காண்க. கீழை வாயிலில் நின்ற வானரத் தலைவன் நீலன்.

பி - ம். 2. ஊழியூழி ; ஓங்கியே.
3. வாசலிற் ; கிட்டவும். 56

இது முதல் மூன்று செய்யுட்கள் சில பிரதிகளில் இல்லை.

1012. சூலம் வாள்மழுத் தோமரம் சக்கரம்
வாலம் வாளி மழையின் வழங்கியே
ஆல மன்ன வரக்க ரடர்த்தலும்
காலும் வாலுந் துமிந்த கவிக்குலம்.

ஆலம் அன்ன அரக்கர் - ஆலகால விடம் போன்ற அரக்கர் கள், சூலம் வாள் மழு தோமரம் சக்கரம் வாலம் வாளி - முத்தலைச் சூலம் வாள் மழு தோமரம் சக்கரப்படை பாலம் அம்பு என்ற இவ் வாயுதங்களை, மழையின் வழங்கி - மழை போன்று பொழிந்து, அடர்த்தலும் - எதிர்த்த அளவில், கவிகுலம் - வாநரர் குழாங்கள், காலும் வாலும் துமிந்த - காலும் வாலும் துணியப்பெற்றன. ஏ - அசை.

சூலம் - முத்தலை அயில், தோமரம் - தண்டாயுதம்; எறியீட்டி என்பாருமுளர்; 'சூலமழு வாளொடயி லேருமர முலக்கை; (சுந்தர. 164). 'தோமர வலத்தர்' (பதிற். 54, 14). கைவேலும் ஆம் (பிங்.); வாலம் - பிண்டி பாலம், 'பால முதலாயுதம்' (சுந்தர. 164). மழை யின் - ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருள். ஆல மன்னவர்க் கல்லையெற் கல்லையால்' (சுந்தர. 619); 'ஆலகாலந் திரண்டன்ன



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வாக்கையார்' (ஆரணிய. 372); (ஒப்பு): அந்த காலத்தவ் வால காலத்துடன் பிறந்தோர்' (யுத்த. படைக் காட்சி. 14).

பி - ம். 1. சூலம் வாளயில் சக்கரம் நோமரம்.
2. மாலை வாளி; வழங்கினர்.
3. அரக்கர்க டாக்கலும். 57

1013. வென்றி வாநர வீரர் விசைத்தெறி
குன்று மாமர முங்கொடுங் காலனிற்
சென்று வீழ நிருதர்கள் சிந்தினர்
பொன்றி வீழ்ந்த புரவியும் பூட்கையும்.

வென்றி வாநர வீரர் - வெற்றி பொருந்திய குரங்கு வீரர், விசைத்து எறி - வேகமாக வீசுதற்குரிய, குன்றும் மாமரமும் - மலைகளும் பெரிய மரங்களும், கொடும் காலனில் - கொடிய யமனைப் போல, சென்று - கடுகிச் சென்று, வீழ - வீழ்ந்த அளவில், நிருதர்கள் சிந்தினர் - இராக்கதர்கள் சிதறுண்டனர்; (அப்போது), புரவியும் பூட்கையும் - அவர்களுடைய குதிரைகளும் யானைகளும், பொன்றி வீழ்ந்த - இறந்து வீழ்ந்தன.

வாநர வீரர் எறிந்த மலைகள், மரங்கள் என்ற இவற்றால் அரக்கர்கள் சிதறுண்டனர். குதிரைகளும் யானைகளும் இறந்து வீழ்ந்தன. பூட்கை - யானை; (கிட்கிந்தா. 436); மற்றும் யுத்த. இராவணன் வதை.

பி - ம். 1. விசைந்தரிர்.
2. கோலுற, காலென; கோலிற.
4. புரவி புழைக்கையும், புரவிவெம் பூட்கை தேர். 58

1014. தண்டு வாளயில் சக்கரஞ் சாயகம்
கொண்டு சீற்ற நிருதர் கொதித்தெழப்
புண்திறந்து குருதி பொழிந்துக
மண்டி யோடினர் வாநர வீரரே.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(அது கண்டு) சிற்றம் நிருதர் - சினமிக்க அரக்கர், தண்டு வாள் அயில் சக்கரம் சாயகம் கொண்டு - கதை வாள் வேல் சக்கரப் படை, அம்பு முதலியன கைக்கொண்டு, கொதித்து எழ - மனம் வெம்பி யெழுந்த அளவில், வாநர வீரர் - குரங்கு வீரர்கள் (எதிரி களின் படைகளால் உண்டான), புண் திறந்து குருதி பொழிந்து உக - புண்களின் வாய் பிளந்து உதிரத்தை மிகுதியாகச் சிந்த, மண்டி ஓடினர் - நெருங்கி ஓடினுர். ஏ - அசை.

தண்டு - கதை; 'சங்கு சக்கரம் கதை கட்கம் சார்ங்கம்' என்பன திருமாலின் பஞ்சாயுதங்கள். சாயகம் - அம்பு; 'பஞ்ச பாணஸ்ய சாயகா:' என்றது காண்க. 'இரட்டிச் சாயகங்கள்' (யுத்த. மகரக் கண்ணன். 18).

பி - ம். 1. தண்டு வாளெரி.

2. கொண்டு சீறி; குதித்தெழ. 59

## நீலன் பொருதமை

1015. எரியின் மைந்த னிருநிலங் கீழுற
விரிய நின்ற மராமரம் வேரொடும்
திரிய வாங்கி நிருதர்வெஞ் சேனைபோய்
நெரிய வூழி நெருப்பென வீசினுன்.

(அப்பொழுது), எரியின மைந்தன் - அக்கினியின் புதல்வனுன நீலன், இருநிலம் - பெரிய பூமியில், கீழ் உற விரிய நின்ற மராமரம் - அடியில் வேரூன்றப் பரவி நின்ற ஓர் மராமரத்தை, வேரொடும் திரிய வாங்கி - வேருடன் திருகிப் பெயர்த்து, நிருதர் வெம் சேனை போய் நெரிய - அரக்கரின் கொடிய படையானது துகள்படுமாறு, ஊழி நெருப்பு என வீசினுன் - பேரூழிக் காலத்து நெருப்புப் போன்று எறிந்தான்.

இது முதல் இரண்டு கவிகள் நீலன் போர்; எரியின் மைந்தன். நெருப்பின் மகனுன நீலன். கிட்கிந்தா. 696 உரைக் குறிப்புக் காண்க. இருநிலம் - பூமி; 'ஒரு குறளா யிருநிலமூ வடிமண் வேண்டி' (பெரியதிரு. 3. 4-1); எரியின் மைந்தன் ஆகலின் நெருப் பென வீசினுன் எனப்பட்டது. நெரிய; நெரிந்து பார்மக ணெளி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வுற’ (ஆரணிய. 447): எரியின் மைந்தன் நெருப்பெழ’ என்பது ஒரு நயம்’ என்பது ஸ்ரீ ஐயாவர்கள் குறிப்பு.

பி - ம். 3. நிருதர் தம்.

4. நெருப்பெழ.

60

1016. தேரும் பாகரும் வாசியுஞ் செம்முகக்
காரும் யாளியுஞ் சீயமுங் காண்டகு
பாரின் வீழப் புடைப்பப் பசும்புணின்
நீரும் வாரி யதனை நிறைத்ததே.

தேரும் - தேர்களும், பாகரும் - அவற்றை ஓட்டுபவரும், வாசியும்-அவற்றில் பூட்டப்பட்ட குதிரைகளும், செ முகம் காரும் யாளியும் - சிவந்த முகத்தையுடைய மேகம் போன்ற யானைகளும் யாளிகளும், சீயமும் - சிங்கங்களும், காண் தகு பாரின் - காணத்தக்க (அழகான) நிலத்திடையே, வீழ - (உயிர் தீர்ந்து) விழும்படி, புடைப்ப - அந்த மராமரம் தாக்கியதனால் (ஊறுபட்ட), பசும்புணின் நீரும் - பச்சைப் புண்ணிலிருந்து வெளிவந்த உதிரமும், வாரி அதனை நிறைத்தது - கடலை நிறைத்தது. ஏ - அசை.

செம்முகக்கார் என்றது யானையை. பசும்புணின் நீர் - உதிரம். வாரி ; கடலுக்கு இலக்கணை. யாளி வேறு, சீயம் வேறு.

பி - ம். 1. தேரும் மாவும் படைஞரும்.

2. யாளியுஞ் சிங்கமுஞ்.

3. போரின் வீழ்ந்து ; பசும் புணீர்.

4. வாரிய தென்ன நிறைந்தவே.

61

## கும்பானுவின் போர்

1017. அரக்கர் சேனை யடுகளம் பாழ்பட
வெருக்கொண் டோடிட வெம்படைக் காவலன்
நெருக்க நேர்ந்து கும்பானு நெடுஞ்சரம்
துரக்க வாநரச் சேனை துணிந்ததே.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(அச்சமயத்தில்), அடுகளம் பாழ்பட - போர்க் களம் பாழ்படும் படி, அரக்கர் சேனை வெரு கொண்டு ஓடிட - அரக்கருடைய படை அஞ்சி ஓடிட, (அப்போது) வெம் படை காவலன் கும்பானு - கொடிய அரக்கர் சேனைத் தலைவனான கும்பானு என்பவன், நெருக்க நேர்ந்து - வானர சேனையை நெருக்குமாறு கருதி, நெடு சரம் தூரக்க - வெகு தூரம் செல்லும் அம்புகளை ஏவவே, வானர சேனை துணிந்தது - குரங்குச் சேனை துண்டுபட்டது. ஏ - அசை.

இது முதல் ஆறு கவிகள் கும்பானு என்ற அரக்கனும் இடும்பன் என்ற வானரவீரனும் பொருததையும் கும்பானு இறந்ததையும் கூறும். வெருக் கொள்ளுதல் - அஞ்சுதல். 'சேடனும் வெருக்கொடு சிரத்தொகை நெளித்தான்' (ஆரணிய. 599) ; தூரக்க; 'துரக்க நல்லறம் துறந்தனள் தூமொழி மடமான்' (அயோத்தி. மந்தரை. 78),

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

பி - ம். 2. படைக் காவலர்.

3. நெருக்கு, நெருக்கி நின்று.

4. துணிந்தவே.

62

இதுவும் அடுத்த செய்யுளும் சில பிரதிகளில் இல்லை.

## இடும்பன் கும்பானுவை எதிர்த்தல்

1018. கண்டு நின்ற கரடியின் காவலன்
எண்திசாமுக மெண்ணு மிடும்பனோர்
சண்ட மாருத மென்னத் தடவரை
கொண்டு சீறி யவனெதிர் குப்புற.

(இவ்வாறு துண்டு படுவதைக்), கண்டு நின்ற - நோக்கி நின்ற, கரடியின் காவலன் - கரடிகட்குத் தலைவனாகி, எண் திசா முகம் எண்ணும் - எட்டுத்திக்குக்களில் உள்ளவரும் மதிக்கும், இடும்பன் - (வலிமை பெற்ற) இடும்பன், தடவரை கொண்டு - ஒரு பெரிய மலையைக் கைக்கொண்டு, ஓர் சண்டம் மாருதம் என்ன - பெருங் காற்றுப போன்று (விரைந்து), சீறி அவன் எதிர் குப்புற - அக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கும்பானு என்னும் அரக்கர் படைத்தலைவனுக்கு நேராகச் சென்று குதித்து; - எறிதலும் என்ற அடுத்த செய்யுளொடு தொடரும்.

கரடியின் காவலன் இடும்பன். 'இடும்பன், சாம்ப வானுடைய வரசற்பிரதானி' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. சண்ட மாருதம் சூறுவளி போன்று விரைந்து வீசும் காற்று. சண்டம் - வேகம். குப்புறு - குப்புற்று; ஆரணிய. 240, 718; கிட்கிந்தா. 983, 987; சுந்தர. 15.

பி - ம். 2. திசாமுக மெங்கும்.

3. மாருதம் போலத் தடவரை. 63

1019. தொடுத்த வாளிகள் வீழுமுன் சூழ்ந்தெதிர்
எடுத்த குன்றை யிடும்ப னெறிதலும்
ஒடித்து வில்லு மிரதமு மொல்லெனப்
படுத்த வாசியும் பாகனும் பாழ்பட.

தொடுத்த வாளிகள் - (கும்பானு என்னும் சேனைத் தலைவன்) விடுத்த அம்புகள், சூழ்ந்து - வளைந்து கொண்டு, வீழும் முன் - வீழ்வதற்கு முன்னே, எதிர் எடுத்த குன்றை - நேராக உயர்த்திய மலையை, இடும்பன் எறிதலும் - அந்த இடும்பன் வீசி எறிந்த அளவில், (அந்த மலை) வில்லும் ஒடித்து - அரக்கனது வில்லை யொடித்து, இரதமும் வாசியும் - தேரினையும் அதில் பூட்டப் பட்ட குதிரைகளையும், பாகனும் - பாகனையும், ஒல்லென பாழ்பட - விரைவாக அழியுமாறு, படுத்த - செய்தது.

ஒல்லெனல் - விரைவுக் குறிப்பு. 'உரையாய் நனியொல்லே' சீவக. 898; 'ஒல்லென வெழுந்த தோர்' (பெருங். 1; 44; 19); வாசி - குதிரை; சுந்தர. 196, 938, 1203; 'குதிகொண்ட வாசி வயவர்' (வி.பா. 16-ம் போர். 74); ஈற்றடியில் படுத்தது என்பது படுத்த என நின்றது.

பி - ம். 2. எடுத்த குன்றம்.

3. ஒடித்த.

4. படுத்து; வாசிபதாகையும்; பாகனும் பட்டதே. 64

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1020. தேர ழிந்து சிலையு மழிந்துகக்
காரி ழிந்த வுருமெனக் காய்ந்தெதிர்
பார்கி ழிந்துகப் பாய்ந்தனன் வானவர்
போர்கி ழிந்து புறந்தரப் போர்செய்தான்.

தேர் அழிந்து சிலையும் அழிந்து உக - தேரும் அழிந்து வில்லும் முறிந்து சிந்தியதால், வானவர் போர் கிழிந்து புறந்தர போர் செய்தான் - தேவர்கள் போரில் அழிந்து முதுகு காட்டி ஓடுமாறு முன்பு போர் செய்த அரக்கன், கார் இழிந்த உரும் என - மேகத்திலிருந்து வீழ்ந்த இடிபோன்று, காய்ந்து - சினந்து, பார் கிழிந்து உக - பூமி பிளந்து சிந்துமாறு, எதிர்பாய்ந்தனன் - (அந்த இடும்பனுக்கு) எதிரே பாய்ந்தான்.

கார் இழிந்த உரும்; சினத்துடன் பூமியில் இழிவதோடு கிழியப் புரிவதிலும் அரக்கனுக்கு உவமை 'காரிழிந்த வுரு மெனக் காந்துவான்' (யுத்த. 1028) காண்க. வானவர் போர் கிழிந்து புறந்தரப் போர் செய்தவன் கும்பானு என்னும் அரக்கன். புறந்தருதல் - முதுகு காட்டல் இது புறக்கொடை எனவும் வழங்கும். சீவக. 773-ம் அதன் உரையும் காண்க. 'அழிகுநர் புறக்கொடை' (பு.வெ. 55).

பி - ம். 1. தேர் கிழிந்து; இழிந்துகக், இழந்துகக்.
2. கார் கிழிந்த, அழிந்த; காந்துவான்.
3. பார் கிழிந்துறப்.
4. பரந்தட்டப்.



இங்கு ஓர் அதிகப்பாடல்:—

போர்செய் காலை யிடும்பனும் பொங்கியக்
கார்செய் மேனி யரக்கனைக் கைகளால்
மேரு மீதிடி வீழ்ந்தெனத் தாக்கலும்
சோர்வி லாத வரக்கனுந் துள்ளினன்.

1021. தத்தி மார்பின் வயிரத் தடக்கையாற்
குத்தி நின்ற கும்பானுவைத் தானெதிர்
மொத்தி நின்று முடித்தலை கீழுறப்
பத்தி வன்றடந் தோளுறப் பற்றுவான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



(அவ்வாறு), தத்தி - தாவி, மார்பின் வயிரம் தட கையால் - தன் மார்பிலே வயிரம்போன்று வலிய பெரிய கரத்தால், குத்தி நின்ற கும்பானுவை - தாக்கி நின்ற கும்பானுவை, தான் எதிர் மொத்தி நின்று - தான் மாறுபட்டுத் தாக்கி நின்று, முடிதலை கீழ்உற - முடியணிந்த தலை கீழ்ப்படுமாறு; பத்தி - ஒழுங்காக அவனுடைய, வல்தட தோள் உற பற்றுவான் - பெரிய புயங்களை நன்ருகப் பிடித்துக் கொண்டான்.

தத்துதல் - தாவுதல்; 'தத்திக் கரைபுரளும் பரமாநந்த சாகரத்தே' (கந்தரலங். 47); 'முத்துறழாலி தத்துவன தவிழ' (பெருங். 1; 48; 245); மொத்துதல் - அடித்தல்; 'எதிர் மொத்தி நின்று' (யுத்த. 1021); தன்னை மார்பில் குத்தி நின்ற கும்பானுவை இடும்பன் கொல்ல நினைத்தது கூறப்பட்டது.

பி - ம். 1. வயிரத் தடக்கையர்.
3. மொய்த்து நீடு; கவ்வுறப்.
4. வன்றலைகள். 66

1022. கடித்த லத்திரு காலுறக் கைகளால்
பிடித்துத் தோளைப் பிறங்கலின் கோடுநேர்
முடித்த லத்தினி லெற்றிட மூளைகள்
வெடித்தி ழிந்திட வீந்தன ளுமரோ.

கடிதலத்து இருகால் உற கைகளால் - அவனது இடைப் புறத்துத் (த்தன்) இரண்டு கால்களும் பொருந்தக் கரங்களால், தோளை பிடித்து - புயங்களைப்பற்றி, பிறங்கலின் கோடு நேர் முடி தலத்தினில் எற்றிட - மலைச்சிகரம் போன்ற முடிதலத்தினில் (இடும்பன்) தாக்கிய அளவில், மூளைகள் வெடித்து இழிந்திட வீந்தனன் ஆம் - மூளைகள் சிதறிக் கீழே விழுந்திட, வீந்தனன் (அந்தக் கும்பானு) உயிர் நீங்கினன் ஆனுன். அரோ - ஈற்றசை.

கடிதலம் - இடைப்புறம். (ஒப்பு): 'கடித்தலத்தினும் கழுத்தினுந் தன்னிரு கரங்கள், மடுத்து மீக்கொண்ட வாலி' (கிட்கிந்தா. 288). மற்போரின் திறம் இங்கு வகுத்துக் கூறபபெறுதல் காண்க பிறங்கல் - மலை சேய்மையினின்றும் காண விளங்குவதாகலின்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இப்பெயர் பெற்றது. பிறக்கம் - விளக்கம்; 'ஈன்று நின்ருேர்க்கும் தோன்றும் சிறுவரை, சென்று நின்ருேர்க்குத் தோன்றுமன்ற...... தேர்வீ சிருக்கை நெடியோன் குன்றே' (புறநா. 114) என்றது காண்க; 'பொற்பிறங்க லிலங்கை' (சுந்தர. 623); 'எண்ணரும் பிறங்கல்' (அகநா. 8). கோடு - சிகரம்; 'கோடுறுமால் வரை யதனை' (கிட்கிந்தா. 748); 'சிமய நீள் கோட்டு' (கிட்கிந்தா. 898). எற்றிட; 'எடுத்துப்பாரிடை யெற்றுவாம் பற்றியென்று' (கிட்கிந்தா. 288). வீந்தவன் - கும்பானு என்னும் அரக்கன். 'இச் செய்யுளில் கரடியின் இயல்பு கூறப்பெற்றுள்ளது' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 3. முடித்த லத்திஃனக் கவ்வுற.

4. விழ்தர விழ்த்தினன், சிந்திட விழ்ந்தனன்; வெய்யரும் பானுவே. 67

1023. தன்ப டைத்தலை வன்படத் தன்னெதிர்
துன்ப டைத்த மனத்தன் சுமாலிசேய்
முன்ப டைத்த முகிலன்ன காட்சியன்
வன்ப டைத்த வரிசிலை வாங்கினன்.

தன் படைத்தலைவன் - (தன் கீழிருந்த) சேனைத் தலைவன், தன் எதிர்பட - தனக்கு முன்பாக இறந்துபட, துன்பு அடைத்த மனத்தன் - துன்பம் நிறைந்து நின்ற மனம் உள்ளவனான, சுமாலி சேய் - சுமாலியின் மகனான பிரகத்தன், முன் படைத்த முகில் அன்ன காட்சியன் - முன்னே வந்து நின்ற மேகம் போன்ற தோற்றம் உடையவனாய், வன்பு அடைத்த வரிசிலை வாங்கினன் - வலிமை வாய்ந்துள்ள கட்டமைந்த வில்லை வளைத்தான்

இதுமுதல் பதினேரு கவிகள் பிரகத்தன் பொருது இறந்ததைக் கூறும். இவன் அரக்கர் சேனாதிபதியென்று முதனூலும் கூறும். இவன் கூற்றினை இராவணன் மந்திரப் படலத்துள் 16 முதல் 21 வரையில் உள்ள செய்யுட்களில் காண்க. இவனுடைய வீரச்செயல் யுத்த. 503, 504-லிலும் கூறப்பட்டுள்ளது. சீதாப் பிராட்டியை இராமபிரானிடம் தந்து போர் ஒழிவதே தகுதியென்ற மாலியவானைச் சினந்து இவன் கூறியவற்றை (யுத்த. 735, 737)-ல் காண்க. மற்றும், இராவணனிடம் வீரம் பேசி வெந்தொழில் புரியுமாறு 'காணுதி விடையீக, என்று கூறியவனும் இவனே' (யுத்த.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


752, 755). இவன் அரக்கர்தானை இருநூறு வெள்ளம் கொண்டு கீட்டிசை வாயிலில் நிற்குமாறு இராவணனாற் பணிக்கப்பட்டவன் (யுத்த. 902). துன்பு அடைத்த, வன்பு அடைத்த எனப் பிரிக்க. சுமாலி; (யுத்த. 733) உரைக் குறிப்பு காண்க. சுமாலி சேய் என்றது பிரகத்தனை. கரிய பெரிய உருவன் ஆகலின் முகிலன்ன காட்சியன் எனப்பட்டது. இப்படைத் தலைவன் பிரகத்தன் என்பது (1034)ல் 'இறந்து வீழ்ந்தனனே பிரகத்தன்' என்பது கொண்டு உணரப்படும். முதல் மூன்று செய்யுட்கள் 'முன்படைத்த முகில் - முற்காலத்தில் ஏழு மேகமொன்றானது, வன்படை - வன்மையையடைந்து' என்பன **பழையவுரை.**

பி - ம். 2. துன்படைத்த மனத்தின், துன்பெடுத்த.

3. காட்சியின், காட்சியான். 68

1024. வாங்கி வார்சிலை வாநர மாப்படை
ஏங்க நாணெறிந் திட்டிடை யீடின்றித்
தூங்கு மாரி யெனச்சொரி வாளிகள்
வீங்கு தோளினன் விட்டன னமரோ.

(பின்னர் பிரகத்தன்), வீங்கு தோளினன் - புயங்கள் பூரிக்கப் பெற்றவனாய், வார்சிலை வாங்கி - நீண்ட வில்லினை வளைத்து, வாநர மாபடை ஏங்க - குரங்குச்சேனை மனம் வருந்தும்படி, நாண் எறிந்து இட்டு - நாணை ஒலியெழுப்பி, தூங்குமாரி என - பெய்கின்ற மழை போன்று, சொரி வாளிகள் - சிந்துகின்ற அம்புகளை, இடை யீடின்றி விட்டனன் ஆம் - இடைவிடாது எய்தனன் ஆம். அரோ - அசை.

பிரகத்தன் வாநர சேனை ஏங்குமாறு அம்புமாரி பொழிந்தான் என்க. முதலடி முற்றுமோனை. இடையீடின்றி - இடைவிடாது. தூங்குதல் - இடையறாது வீழ்தல்; 'வீழ்பனி தூங்க' (திருக்கோ. 320). நாணெறிதல் - 'நாணெறிந்தனன் சிலையினை யரக்கியர் நகுபொற், பூணெறிந்தனர்' (யுத்த. கும்ப. 209). வீங்குதோளினன்: 'வீங்கிய தோளன் தேய்ந்து மெலிகின்ற பழியன்' (யுத்த. இந்திரசித்து. 60).

பி - ம். 2. இட்டிடையின்றியே.

3. மாரியெனச் சுடர், மாரிசொரிதர.

4. வீழ்த்தினன். 69

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1025. நூறு மாயிர முங்கணை நொய்தினின்
வேறு வேறு படுதலின் வெம்பியே
ஈறில் வாநர மாப்படை யெங்கணும்
பாற நீலன் வெகுண்டெதிர் பார்ப்புரு.

நொய்தினின் - விரைவாக, கணை - அம்புகள், நூறும் ஆயிரமும் வேறு வேறுபடுதலின் - நூறும் ஆயிரமுமாக வெவ்வேறு வகையில் (தம்மீது) தைத்தலின், ஈறு இல் வாநரம் மாபடை - எல்லை யில்லாத குரங்குப் பெருஞ் சேனைகள், வெம்பி - மனம் கொதித்து, எங்கணும் பாற - எல்லாப் பக்கங்களிலும் சிதறிவிட, நீலன் பார்ப்புரு எதிர் வெகுண்டு - நீலன் என்னும் வாநர வீரன் அதனை நோக்கி மாருகச் சினந்து. ஏ - அசை.

இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகம். 'குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்' (நன்.) என்றது காண்க. எறிந்தவன் சிதைத்தலும் என்ற அடுத்தகவியுடன் முடியும். நொய்தினின் - விரைவின், பாற - சிதறி வீற்று விற்ருகச் செல்ல. பார்ப்புரு - பார்த்து, செய்யா என்னும் வாய்பாடு. நீலன் அக்கினியின் குமாரன் என்ப. 'நீலனின்றவனெருப்பின் மகன்' (யுத்த. இராவணன் தானை. 25); மற்றும், 1025, 1026, 1028, 1029-ம் காண்க. இவனே பிரகத்தனைக் கொன்ற வாநர வீரன். சேது அணையிட்டதில் இவனுக்கும் ஓர் பங்குண்டென்பதை 'நீலனிட்ட நெடுவரை' (யுத்த. 653)-ல் காண்க.

பி - ம. 2. வேறு வேறு படுத்தலின்.
4. பாறவீரன், வெகுண்டெனப்.

70

1026. குன்ற நின்ற தெடுத்தெதிர் கூற்றெனச்
சென்றெ றிந்தவள் சேனை சிதைத்தலும்
வென்றி வில்லின் விடுகணை மாரியால்
ஒன்று நூறுதி ருற்றதக் குன்றமே.

நின்ற குன்றது எடுத்து - அண்மையில் இருந்த ஒரு மலையை உயர்த்தி, எதிர் கூற்று என சென்று - எதிர்த்துச் செல்லும் யானை ஒப்பப் போய், எறிந்து அவன் சேனை சிதைத்தலும் - தாக்கி அந்த அரக்கனுடைய படையை அழித்த அளவில்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(அவ்வரக்கன் தன்னுடைய) வென்றி வில்லின் - வெற்றி பொருந்திய வில்லினின்று, விடுகணை மாரியால் - செலுத்திய அம்பு மழையால், அ குன்றம் - அந்த மலை, ஒன்று நூறு உதிர் உற்றது - ஒன்று நூறு தூளாக விழுந்தது. ஏ - அசை.

நின்ற குன்றது என மொழி மாற்றிப் பொருள் கொள்ளப் பட்டது. நீலன் பிரகத்தன் சேனையைச் சிதைத்தான்; அவன் கணை மாரியால் அவன் எறிந்த குன்றினைத் தூளாக்கினன்.

பி - ம். 1. நின்ற நெடுந்தெறி.

2. சென்று நின்றனன், சென்றெறிந்தவர்; சிதைந்திட.

3. வென்று; மாரியில்.

4. ஒன்று நூறுற; உக்கதக் குன்றமே. 71

1027. மீட்டு மங்கொர் மராமரம் வேரொடும்
ஈட்டி வானத் திடியென வெற்றலும்
கோட்டும் வில்லுங் கொடியும் வயப்பரி
பூட்டுந் தேரும் பொடித்துக ளாயவே.

மீட்டும் - திரும்பவும் (நீலன்) அங்கு ஓர் மராமரம் வேரொடும் ஈட்டி - அங்கிருந்த ஒரு மராமரத்தை வேரொடும் தேடி யடைந்து, வானத்து இடி என - விண்ணில் எழும் இடிபோன்று (முழங்கி அந்த மரத்தை), எற்றலும் - தாக்கிய அளவில், (பிரகத்தனுடைய), கோட்டும் வில்லும் கொடியும் - வளைக்கும் தன்மை கொண்ட வில்லும் கொடியும், வயம்பரி பூட்டும் தேரும் - வெற்றி பொருந்திய குதிரைகள் பூட்டிய தேரும், துகள் பொடி ஆயவே - சிறு துகளாய் விட்டன.

இடி அவன் முழக்கத்துக் குவமை. கோட்டும் வில் - வளைக்கப் படும் வில். 'பூட்டு - கோப்பு' என்பது பழையவுரை.

பி - ம். 2, ஈட்ட; வாங்கி; ஏற்றலும்.

3. குலப்பரி,

4. பொறித்துகள், துகளாயதே. 72

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இங்குச் சில அதிகப் பாடல்கள் :—

வருசு மாலி மகன்பிர கத்தனங்
கிரத மொன்றதி னேறினன் பின்னரும்
வரிநெ டுஞ்சிலை வேறென்று வாங்கியே
சொரியு மாமழை போற்சரந் தூவினன். 1

வால றுந்து வயிறு துணிந்திரு
கால றுந்து கழுத்தறுந் தங்கமாம்
மேல றுந்து விளிந்தின வெஞ்சமர்
ஆலும் வானரச் சேனை யநேகமே. 2

நீல நெஞ்சிடை யஞ்சு நெடுஞ்சரம்
ஆல மன்ன அரக்கனழுத்தலும்
சால நொந்தனன் நொந்து தருக்கருக்
கால வெங்கனல் போற்கனன் றனரோ. 3

கனலும் வெங்க ணரக்கன் கடுஞ்சிலை
புனையும் தேர்பரி பாகொடு போயற
நினைவ தற்குமுன் நீலனங் கோர்நெடுந்
தனிம ராமரந் தான் கொண்டு தாக்கினன். 4

1028. தேரி ழந்து சிலையு மிழந்திடக்
காரி ழிந்த வுருமெனக் காந்துவான்
பாரி ழிந்து பருவலித் தண்டொடும்
ஊரி ழந்த கதிரென வோடினன்.

தேர் இழந்து சிலையும் இழந்திட - (பிரகத்தன்) தேரை இழந்து, வில்லையும் இழந்ததனால், கார் இழிந்த உரும் என - தனக்கு ஆதாரமான) மேகத்தை விடுத்து வந்த இடிபோன்று, காந்துவான் - கொதிப்பவனாய், பார் இழிந்து - பூமியில் இறங்கி, பருவலி தண்டொடும் - பருத்த வன்மையுள்ள தண்டாயுதத்துடன், ஊர் இழந்த கதிர் என ஓடினன் - ஊர்கோளை இழந்த சூரியனைப்போன்று (பகைவனை நோக்கி) ஓடினான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அவனது உள்ளக் கொதிப்புக்கும் முழக்கத்துக்கும் காரிழிந்த உரும் உவமை. கார் அவன் மேனிக்கும், உரும் அவனுடைய அதிர் குரலுக்கும் ஒப்பாகக் கூறப்பட்டுள்ளன. ஊர் - ஊர்கோள். தேரிழிந்து நின்ற பிரகத்தனுக்கு ஊரிழந்த கதிர் உவமை. ஊர் கோள் - கதிரினையும் மதியினையும் சுற்றி நிற்கும் ஓர் ஒளிவட்டம். இதனைப் பரிவேடம் என்பர். 'கட்டழற் கதிரை யூர்கோள் வளைந்தவர் (சிவக. 1136); 'பரிதி வானவன் ஊர்வளைப் புண்டது பாராய்' (ஆரணிய. 431). இந்த ஊர்கோளை உற்பாதமாகக் கூறுவர். ஆரணிய காண்டம் 431 உரைக் குறிப்புக் காண்க. 'ஊரினெடு கோள்கதுவு தாதையையு மொத்தான்' (யுத்த. 852); 'ஊரொடு பொருந்தித் தோன்று மொளியவன்' (யுத்த. மாயா சனகப். 76) என்பனவும் காண்க. 'உறுவுகொளுரொணியொ டுடனிலை புரிந்த, மறுவுடை மண்டிலக் கடவுளை வளைத்த' (பெருங். 2 : 9 : 167-168).

பா - ம். 1. தேரழிந்து; அழிந்திட, அழிந்தபின்.

2. காரழிந்த, உழந்த; போரிழந்தகன் றியெனப் பொங்கியே.

3. பாரிழந்து, அழிந்த, கிழிந்து; பருவரைத் தண்டு கொண்டு.

4. ஊரழிந்த கதிரென. 73

1029. வாய்ம டித்தழல் கண்டொறும் வந்துகப்
போய டுத்தலும் நீலன் புகைந்தெதிர்
தாய டுத்தவன் றன்கையிற் றண்டொடும்
மீயெ டுத்து விசும்புற வீசினன்.

வாய் மடித்து - வாயினை மடித்தபடி, அழல் கண் தொறும் வந்து உக - நெருப்பு இரண்டு விழிகளிலும் வெளிப்பட்டு வந்து சிந்துமாறு, போய் அடுத்தலும் - போய் நீலனைச் சார்ந்த அளவில், நீலன் - நீலன், புகைந்து எதிர் தாய் - சினந்து எதிரே தாவிச் சென்று, தன் - தன்னை, அடுத்தவன் - அடுத்தவனை அந்தப் பிரகத்தன், கையில் தண்டொடும் - கையிலிருந்த தண்டாயுதத் துடனே, மீ எடுத்து - (அவனை) மேலே தூக்கி, விசும்புற - ஆகாயத் தில் பொருந்துமாறு, வீசினன் - எறிந்தான்.

வாய் மடித்து அழல் கண்டொறும் வந்துக: வெகுளியின் குறிகள், வாய் மடித்து; 'வாய் மடித் துருத்து நக்கான்' (சுந்தர.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



985); நீலன் வெகுண்டு தாவிச் சென்று பிரகத்தனை அவன் தாங்கிய தண்டுடன் மேலே உயர்த்து விண்ணிற் பொருந்துமாறு வீசினன் என்க,

பி - ம். 1. மடித்தனல்.
2. போயடித்தலும்.
3. தாயடித்தவன் ; யெடுத்தவன். 74

இது முதல் ஐந்து செய்யுட்கள் சில பிரதிகளில் இல்லை.

1030. அம்ப ரத்தெறிந் தார்ப்ப வரக்கனும்
இம்ப ருற்றெரி யின்றிரு மைந்தன்மேல்
செம்பு னற்பொழி யக்கதை சேர்த்தினன்
உம்பர் தத்தம துள்ள நடுங்கவே.

அம்பரத்து எறிந்து ஆர்ப்ப -(நீலன் அந்த அரக்கனை) விண்ணில் எறிந்து ஆரவாரிக்கும்போது, அரக்கனும் - (அந்த அரக்கனும், இம்பர் உற்று-தரைக்கண் வந்து, உம்பர் தம் தமது உள்ளம் நடுங்க - வானுலகத்தில் உள்ள தேவர்கள் (ஒவ்வொருவரும்) தத்தம் மனம் நடுங்குமாறு, எரியின் திருமைந்தன் மேல் - அக்கினியின் புதல்வனை அந்த நீலன்மீது, செம்புனல் பொழிய - (அவன் உடலிலிருந்து) உதிரம் சொரிய, கதை சேர்த்தினன் - தண்டாயுதத்தால் தாக்கினன், ஏ - அசை.

அம்பரம் - ஆகாயம், ஆரணிய. 64; 'ஆழ்ந்ததே ரம்பரத் தோட்டி யார்க்கின்றான்' (ஆரணிய. 488); 'அம்பரமே தண்ணீரே' (திருப்பாவை. 17); அம்பரத்தில் ஆடுகின்றார் வெண்ணிலாவே' (திருவருட்பா.). இம்பர் - தரை என்ற பொருளில் வந்தது. எரியின் திருமைந்தன் - நீலன்; இவனைப் பற்றிய குறிப்புக்களை, கிட்கிந்தா காண்டம் 696 உரைக்குறிப்பிலும் யுத்த. 1025-இன் உரைக் குறிப்பிலும் காண்க. செம்புனல் - உதிரம். உம்பர் - தேவர், மேலிடத்தவர் என்பது நேர்பொருள். இராமபிரான் பக்கத்தார்க்குத் தோல்வி நேருமோ என்ற அச்சத்தால் உம்பர் நடுங்கினர் என்க.

75

பி - ம். 1. அம்பரத்தினின் றூர்த்த.

இது சில பிரதிகளில் இல்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1031. அடித்த லோடு மதற்கிளை யாதவன்
எடுத்த தண்டம் பறித்தெறி யாவிகல்
முடித்து மென்றெரு கைக்கொடு மோதினன்
குடித்து மிழ்ந்தெனக் கக்கக் குருதியே.

அடித்தலோடும் - (பிரகத்தன் தண்டாயுதம் கொண்டு) தாக்கிய அளவில், (நீலன்) அதற்கு இளையாது - அதற்குச் சிறிதும் சளைக்காதவனாய், அவன் எடுத்த தண்டம் - அவன் கையில் எடுத்த தண்டாயுதத்தை, பறித்து எறியா - பிடுங்கி எறிந்துவிட்டு, இகல் முடித்தும் என்று - இப்பகையினை முடிப்பேன் என்று கருதி, குடித்து உமிழ்ந்து என - (இதன் முன்பு அந்த அரக்கன்) பருகியுள்ள உதிரத்தை உமிழ்ந்தாற்போன்று, குருதி கக்க - இரத்தத்தைக் கக்குமாறு, ஒரு கைகொடு மோதினன் - ஒரு கையால் தாக்கினன். ஏ - அசை.

பிரகத்தன் தன் கைத்தண்டினால் நீலனை அடித்தான் அதற்குச் சலியாது நீலன் தண்டம் பறித்தெறிந்தான், பிறகு மோதினன் என்க. இகல் முடித்தும் - போரை முடிவு செய்வோம் என்று. குடித்தது என்பது குடித்தென நின்றது. உமிழ்ந்தால் என்ன என்பது உமிழ்ந்தென என நின்றது. எச்சத் திரிபு என்பர்.

பி - ம். 2. எடுத்த தண்டைப்.
3. என்றிருகைக் கொடு.
4. குடித்து விழ்ந்தென ; கக்கும்.



1032. குருதீ வாய்நின் றொழுகவுங் கூசலன்
நிருதன் நீல னெடுவரை மார்பினிற்
கருத லாதமுன் குத்தலும் கைத்தவர்
பொருத பூசல் புகலவொண் ணாததே.

வாய் நின்று குருதி ஒழுகவும் - வாயிலிருந்து இரத்தம் பெருகவும், கூசலன் - அஞ்சாதவனாய், நிருதன் - அந்த அரக்கன், நீலன் நெடு வரை மார்பினில் - நீலனுடைய நீண்ட மலை போன்ற மார்பில், கருதலாத முன் குத்தலும் - அவன் எதிர்பார்ப்பதன் முன்னம் குத்துதலும், அவர் - அவ்விருவரும், கைத்து - வெறுத்து, பொருத பூசல் புகல ஒண்ணாதது - தாக்கிச் செய்த போர் சொல்லும் தரத்ததன்று. ஏ - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நிருதன் - பிரகத்தன். கருதலாத முன் - எதிர்பாராத நிலையில். கைத்தல் - கோபித்தல், சினந்து; 'மருவலரைக் கைக்கும்' (தஞ்சைவா. 423); 'கைத்தோ டுஞ்சிறை கற்போயை' (சுந்தர. 647).

பா - ம். 1. னெழுகலும்; கூசிலன்.

3. கைக்கொடு, 77

1033. மற்று நீல னரக்கனை மாடுறச்
சுற்றி வால்கொடு தோளினு மார்பினும்
நெற்றி மேலும் நெடுங்கரத் தெற்றலும்
இற்ற மால்வரை யென்ன விழுந்தனன்.

மற்றும் - மேலும், நீலன் அரக்கனை - (பின்னர்) நீலன் (அந்தப் பிரகத்தனை), வால் கொடு மாடுஉற சுற்றி - வாலினால் இருபுறமும் அழுத்தமாகச் சுற்றி, தோளினும் மார்பினும் நெற்றி மேலும் - தோள்களிலும் மார்பிலும் நெற்றியிலும், நெடுகரத்து எற்றலும் - நீண்ட கைகளால் குத்திய அளவில், இற்ற - அடியுடன் பெயர்க்கப் பட்ட, மால்வரை என்ன விழுந்தனன் - பெரிய மலைபோல வீழ்ந்தான்.

மாடு - பக்கம். இற்று - உயிரழிந்து. மால் வரை - பெரிய மலை. இனி மால் என்பது மலைக்கும் பெயராதலின் (அக. நி.) மாலாகிய வரை என இருபெயரொட்டுமாம்.

பா - ம். 1. மற்ற.

3. நெடுங்கர நீட்டலும். 78

4. இற்று.

பிரகத்தன் வீழ்ச்சி

1034. இறந்து வீழ்ந்தன னேபிர கத்தனென்று
அறிந்து வானவ ராவலங் கொட்டினர்
வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற் றுடவர்
முறிந்து தத்த முதுநகர் நோக்கினர்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பிரகத்தன் இறந்து வீழ்ந்தனன் என்று-பிரகத்தன் என்பவன் இறந்து வீழ்ந்தான் என்பதை, அறிந்து - உணர்ந்து, வானவர் ஆவலம் கொட்டினர் - தேவர்கள் ஆர்ப்பரித்தனர்; வெறிந்த செம் மயிர் வெள் எயிறு ஆடவர் - செறிந்தடர்ந்த செம்மயிரையும் வெள்ளிய பற்களையும் உடைய அரக்க வீரர், முறிந்து - தோற்று நிலையழிந்து, தம் தம் முதுநகர் நோக்கினர் - தங்கள் தங்களுடைய பழமையான நகரத்தை நோக்கிச் சென்றனர். ஏ - அசை.

ஆவலம் கொட்டுதல் - மகிழ்ச்சியால் கைகொட்டி ஆரவாரித் தல். ஒரு பேரரக்கன் வீந்ததால் உண்டான மகிழ்ச்சி; 'ஆர்த்து வானவ ராவலங் கொட்டினர்' (யுத்த. முதற்போர். 202); 'செறிந்த தேவர்கள் ஆவலங் கொட்டினர் சிரித்தார்' (யுத்த. பிரமாத்திர. 82); 'அறனுந் தன்வா யாவலங் கொட்டிற் றன்றே' (யுத்த. 453); வெறிந்த செம்மயிர் - அடர்ந்த செம்மயிர், வெறிதல் - செறிதல்; வெறித லோதி செற்று வெறுப்புக் களுறலடர்தல், நெருங்குதல் சினுங்குதல் செறிவின் பெயரே' (பிங்.); செம்மயிர் வெள்ளெயிற் றுடவர்; அரக்கர். முறிதல்; நிலையழிதல் 'அரக்க னெடுத்து முறிந்து' (பெரியபு. திருஞான. 77). முதுநகர் - பழமையான இலங்கா நகரம்; திரிகூட மலையானது பொன் மலையான மேருவின் சிகரத்துள் ஒன்று எனக் கூறப்பட்டமை கொண்டு இதன் பழமை யுணரலாம்' (யுத்த. 474); 'என்னுடை நாம நிற்கு மளவெலா மிலங்கை மூதூர், மன்னவனீயே' (யுத்த. 918) என இலக்குவன் கூறுதலும், 'எத்தனை காலங் காப்பேன் யானிந்த மூதுரென்று' (சுந்தர. 189). இலங்காதேவி கூறுதலும் காண்க. 'ஒத்த பதகன் மூதூர்' (யுத்த. 911); 'புறங்கொடுத்தோடினர் என்னாது முதுநகர் நோக்கினர் என நயம்படக் கூறியது காண்க. இது வஞ்சப் புகழ்ச்சி, 'திருகினர் முதுகிட்டுப் பறந்த வீரர்' (வி. பா. 13-ஆம் போர் 135) என்றது காண்க. தலை குனிந்து சென்றான் என்னாது; 'பூதல மென்னும் நங்கை தன்னையே நோக்கிப் புக்கான்' (யுத்த. 1213) என்றதும் நோக்குக.

பி - ம். 4. முழுநகர்; எய்தினர்.

79

இச் செய்யுளும் ஓர் பிரதியில் இல்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## அங்கதனுற் சுபாரிசன் இறத்தல்

1035. தெற்கு வாயிலிற் சென்ற நிசாசரர்
மற்கு லாவு வயப்புயத் தங்கதன்
நிற்க வேயெதிர் நின்றில ரோடினர்
பொற்கு லாவு சுபாரிசன் பொன்றவே.

தெற்கு வாயிலில் சென்ற நிசாசரர் - தெற்குக் கோட்டை வாயிலில் போயிருந்த அரக்கர், மல்குலாவு வயம் புயத்து அங்கதன் - வலிமை ஒன்றும் வெற்றியைக்கொண்ட புயத்தினையுடைய அங்கதன், நிற்கவே - பொருது நிற்கையில், பொன் குலாவு சுபாரிசன் - அழகு விளங்குகின்ற சுபாரிசன் என்ற தலைவன், பொன்ற - இறந்துபட, எதிர் நின்றிலர் ஓடினர் - எதிரே நிற்க மாட்டாதவராய் ஓடினர். ஏ - அசை.

மகோதரனும் மாபெரும்பக்கனும் தெற்கு வாயிலிலிருந்து போர் தொடுக்குமாறு இராவணனால் பணிக்கப்பட்டாரென (யுத்த. 903) கூறும். இங்கு இருந்து போர் புரியுமாறு அனுப்பப்பட்ட வீரர் 16 கோடி என்பது, (யுத்த. 479)-ல் காண்க. நிசாசரர் - அரக்கர்; இரவில் சஞ்சரிப்பவர் எனப் பொருள்படும் வடசொல்.

பி - ப். 1. தெற்கு வாசலிற்.
4. சுபாருசன்; பொன்றினன்.

80

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

'நிருதர் தானை யுடைந்தது நேர்கிலாத்
தரும கோபன் சதமகன் சண்டியோ
டெரிமு கன்னிவர் ஆதி யிராக்கதர்
செருவின் வெற்றி திகழவந் தெய்தினர்.'

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## அநுமனல் துன்முகன் அழிதல்

1036. நூற்றி ரண்டெனும் வெள்ளமும் நோன்கழல்
ஆற்றல் சால்துன் முகனுமங் கார்த்தெழ
மேற்றிண் வாயிலின் மேவினர் வீடினர்
காற்றின் மாமகன் கையெனுங் காலனல்.

மேல் திண் வாயிலின் - அப்போது மேலைப் புறத்துச் சிறந்த காவல் அமைந்த வாயிலில், நூற்றிரண்டு எனும் வெள்ளமும் - நூற்றிரண்டு வெள்ளப் படையும், நோன் கழல் - வலிய வீரகண்டை யணிந்த, ஆற்றல் சால் துன்முகனும் ஆர்த்து எழ - வலிமை மிக்க துன்முகனும் ஆர்ப்பரித்து எழ, மேவினர் - பொருந்தி நின்றவர்; காற்றின் மா மகன் கையெனும் காலனல் வீடினர் - வாயுவின் சிறந்த புதல்வனான அநுமன் கையென்னும் யமனால் இறந்து பட்டனர். அங்கு - அசை.

மேற்கு வாயிலில் நூற்றிரண்டு வெள்ளம் அரக்கர் சேனையுடன் நிற்குமாறு இந்திரசித்து இராவணனாற் பணிக்கப்பட்டமை, (யுத்த. 904)-ல் காண்க. துன்முகன் : இவன் வில்லின் மாப்படை யேழிரு கோடிக்கு வேந்தன் (யுத்த. 499)-ம் அதன் உரைக் குறிப்பும் காண்க; இவன் இந்திரசித்தின் தலைமைக்கீழ்ப் போர்ப்பணி புரிந்தவன் ஆம். ஆற்றல் சால் - வன்மை நிறைந்த; ‘ஆற்றல் சால் நளனே யன்றி’ (நைடத. நளன் தூது. 121). காற்றின் மாமகன் - அநுமன், அவன் கரத்தைக் காலனாக உருவகம் செய்தார். ‘கையெனும் காலனல்’ என்பது ஒரு நயம். வெள்ளமும் துன்முகனும் மேவினர், சிறப்பினால் உயர்திணை முடிபு வந்தது; (நன். 378). காண்க. ‘பொன்னனும் குதிரையும் வந்தார்கள் என்ற இடத்துப்போல, மேல்; ‘வடக்கு வாயிலின்’ (1040)ல் ‘வச்சிர முட்டியும் துன்முகக் குன்றமும் (அடக்கரும் வலத்தைம்பது வெள்ளமும்) படக் குறைந்தனர்’ என வருதலின், சேனைத் தலைவன் ஆன துன்முகனோடு சேர்ந்த வீரர் பலரும் இறந்து பட்டனர் எனக் கொள்ள வேண்டும்.

பி - ம். 3. வாசலின் மேவினர்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## ஒற்றர் இராவணனிடம் நிகழ்ந்தன சொல்லுதல்

1037. அன்ன காலை யயிந்திர வாய்முதல்
துன்னு போர்கண்ட தூதுவ ரோடினர்
மன்ன கேளென வந்து வணங்கினர்
சென்னி தாழ்க்கச் செவியிடைச் செப்பினர்.

அன்ன காலை - அப்போது, அயிந்திர வாய் முதல் - இந்திர திசையாகிய கிழக்குத் தொடங்கி (நான்கு வாயிலிலும்), துன்னு போர் கண்ட - நெருங்கிய போரினைக் கண்ணுற்ற, தூதுவர் ஓடினர் - தூதுவர் வேகமாகச் சென்று, வந்து - இராவணன் முன்பு வந்து, சென்னி தாழ்க்க - தலைபணியுமாறு, வணங்கினர் - வணங்கினராய், 'மன்ன கேள் என செவி இடை செப்பினர் - அரசே கேட்பாயாக' என்று காதுகளில் சொல்லலானர்கள். அவர்கள் கூறியதை அடுத்த மூன்று கவிகளில் காண்க.

அயிந்திரவாய் - இந்திரனைப் பாலகனாகக் கொண்ட இடம்; கிழக்கு மன்னர் என்று இராவணனை விளித்தது. தூதுவர் கூறிய செய்திகளை இரகசியமாக உற்றுக் கேட்டற்கு இராவணன் சென்னி தாழ்த்தான் எனினுமாம். மிகவும் இரகசிய மாகலின் செவியிடைச் செப்பினர் எனப்பட்டது. பரிபவச் செய்திகளைக் கேட்ட அளவில் இராவணன் தலை குனியும்படி எனினுமாம். 'அயிந்திரம் நிறைந்தவ னாணை யேவலால்' (யுத்த. 345).

பி - ம். 1. அன்ன காலத்து; வாசலில், வாயலில்.
2. தூதுவர் முந்தினர், தோன்றினர்.
4. சென்னி தாழ்ப்ப.



1038. கீழை வாயிற் கிளர்நிரு தப்படை
ஊழி நாளினும் வெற்றிகொண் டுற்றநின்
ஆழி யன்ன வனீகத் தலைமகன்
பூழி யானுயிர் புக்கது விண்ணென்றார்.

'கீழை வாயில் - கிழக்கு வாயிலில், ஊழி நாளினும் வெற்றி கொண்டு உற்ற - பிரளய காலத்திலும் வெற்றி யடைந்துள்ள,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நின் ஆழி அன்ன அனீகம் தலைமகன் - உனது ஆணைச்சக்கரம் போன்ற படைத்தலைவன் பிரகத்தன், கிளர் நிருத படை - மன எழுச்சி கொண்ட அரக்கர் படையுடன் (சென்று எதிர்த்து), பூழியான் - புழுதிபடிந்தவனானன்; உயிர்விண் புக்கது - அவன் உயிர் விண்ணிலே சென்றது', என்றார் - என்று அறிவித்தார்.

'ஈட்டிய வரக்கர் தானை யிருநூறு வெள்ளங் கொண்டு, கிட்டிசை வாயில் நிற்றி' (யுத்த. 902)-ல் இராவணன் பிரகத்தனுக்குக் கட்டளையிட்டது காண்க. இப்பிரகத்தன் சேனை நாயகன்; மந்திரப் படலத்தில் இவன் இராவணனிடம் கூறிய வற்றை அப்படலம் 16—21-ல் காண்க. 'பிரகத்தனென்றொருரு பித்தன்' 'இந்திரன் சிந்துரச் சென்னி ..........இரியலுற்றேகச், சோனை மாரியிற் சுடுகணை பல முறை துரந்தவன்' இவன் (யுத்த. 504. காண்க. மற்றும், இப்படைத் தலைவனே, மாலியவான் இராவணற்கு நல்லுரை கூறி நின்றபோது, அவனைக் கண்டித்தமை யுத்த. 735—737-ல் காண்க. அனீகம்; ஆரணிய. 392, 538; சுந்தர. 815, 832. அனீகத் தலைமகன் - பிரகத்தன். பிரகத்தனுடைய பல்வேறு போராற்றலைக் குறிக்கும் முகத்தால், அவனையும் கொன்று நின்ற வானர சேனையின் போராற்றல் குறிக்கப் பெற்றது. பூழி - புழுதி; சுந்தர. 222, 668, 1105. 'பூழியான் - சரீரம் புழுதியிலே கிடக்கின்றது' என்பது பழையவுரை.

பி - ம். 1. கிழை வாய்தல்.

2. ஊழி நாளிறுவா, நாளினில், ஊழிகாண்குறு மாயுவை யுள்ளவன்; வாரியை யுண்பவன், வெற்றிகொண் டுற்றுளார்.

4. பூழியாய். 83

1039. வென்றி வேற்கை நிருதர் வெகுண்டெழாத்
தென்றி சைப்பெரு வாயிலிற் சேர்ந்துழிப்
பொன்றி னனச் சுபாரிசன் போயுளர்
இன்று போன விடமறி யோமென்றார்.

'வென்றி வேல்கை நிருதர் வெகுண்டு எழா-வெற்றி பொருந்திய வேலை ஏந்திய கையினையுடைய அரக்கர் சினந்து புறப்பட்டு, தென்திசை பெரு வாயிலில் சேர்ந்துழி - தென்திசைப் பெரிய வாயிலை யடைந்தபோது, அ சுபாரிசன் பொன்றினன் - அந்தச் சுபாரிசன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இறந்தான்; போயுளர் - அவனுடன் சென்றவர், இன்று போன இடம் அறியோம் - இன்று சென்ற இடத்தை யாம் அறியோம்' என்றார் - என்று பகர்ந்தார்கள்.

எழா: செய்யா வென்னும் வாய்பாட்டு உடன் பாட்டு வினையெச்சம். மகோதரனும் மாபெரும் பக்கனும் இவ்வாயிலில் இருக்குமாறு நிருமிக்கப்பட்டவர்கள் என்பது (1035) கொண்டறிக. 'சுபாரிசன் பொன்றவே' என்று அங்கு வருதல் காண்க.

பி - ம். 2. வாசலிற் சேர்ந்துழி.

3. சுபாருசன்; போயுளான், போயுளார். 94

இது சில பிரதிகளில் இல்லை.

1040. வடக்கு வாய்தலில் வச்சிர முட்டியும்
குடக்கு வாய்தலிற் றுன்முகக் குன்றமும்
அடக்க ரும்வலத் தைம்பது வெள்ளமும்
படக்கு றைந்தனர் நம்படை யென்றனர்.

'வடக்கு வாய்தலில் - வடக்கு வாசலில், வச்சிர முட்டியும் - வச்சிர முட்டி என்பவனும், குடக்கு வாய்தலில் - மேலை வாயிலில், துன்முக குன்றமும் - துன்முகன் என்ற மலைபோன்ற அரக்கனும், அடக்கரும் - பகைவரால் அடக்குதற்கு அருமையான, வலத்து நம் படை ஐம்பது வெள்ளமும் - வன்மையையுடைய நமது ஐம்பது படை வெள்ளமும், பட - இறந்துபட, குறைந்தனர் என்றனர் - அழிந்தனர்' என்றனர்.

வடக்கு வாயிலில் இருநூறு வெள்ளம் சேனை கொண்டு நின்றவன் இராவணன் என்பது, யுத்த. 906-ம் செய்யுள் கொண்டறிக. என்றனர் என்பது, தூதுவரை.

பி - ம். 1. வடக்கு வாயிலில், வாசலில்; வச்சிரத் தாடவர்.

2. குன்றன தோளினர்; துன்முகக் குன்றனும்.

3. அடற்கரும்.

4. படச் சிதைந்தகு. 95

இதன் பின் 'வென்றி வேற்கை' என்ற கவி சில பிரதிகளில்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## அதுகேட்ட இராவணன் பெருமூச்செறிதல்

1041. என்ற வார்த்தை யெரிபுகு நெய்யெனச்
சென்று சிந்தை புகுதலுஞ் சீற்றத்தீ
கன்று கண்ணின் வழிச்சுடர் கான்றிட
நின்று நின்று நெடிதுயிர்த் தானரோ.

என்ற வார்த்தை எரிபுகு நெய்என - என்று அவர் கூறிய சொற்கள் தீயில் பெய்த நெய் போல, சிந்தை சென்று புகுதலும் - உள்ளத்திற் போய்ப்புக்க அளவில், சீற்றம் தீ - கோபத்தீயானது, கன்று - வெம்பிய, கண்ணின் வழி சுடர் கான்றிட - விழியின் வழியாகப் பொறிகளைக் கக்க, நின்று நின்று நெடிது உயிர்த்தான் - விட்டு விட்டுப் பெருமூச் செறிந்தான். அரோ - ஈற்றசை.

இச்செய்யுளில் வெகுளிச்சுவை மெய்ப்பாடுகளைக் காணலாம். எரிபுகு நெய்; 'காய்கனற்றலை நெய் சொரிந் தெனக்கதம் கனற்ற (அயோத்தி. மந்தரை சூழ்ச்சி. 63); 'நெய்பெய் தீயினெதிர் கொண்டு 'நெய்யுறு விளக்கனைய்' (குறுந். 106); (சுந்தர. 513). சீற்றத்தீ - சினம் தீயாக உருவகிக்கப்பட்டது; 'பெருஞ்சினம், புனற்படு நெருப்பிற் பொம்மென வுரறி' (பெருங். 1; 47; 128—129); 'சின மென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' (குறள். 306) என்ற இடத்துப் பரிமேலழகர், 'சினம் என்னும் நெருப்பு என்றும், சேர்ந்தாரைக் கொல்லி என்பது ஏதுப்பெயர், தான் சேர்ந்தவிடத்தைக் கொல்லும் தொழிலது; உலகத்து நெருப்புச் சுடுவது தான் சேர்ந்த இடத்தையே, இந்நெருப்புச் சேராத விடத்தையும் சுடும் என்னும் வேற்றுமை தோன்ற நின்றது' என வரைந்தமை காண்க. கான்ற - உமிழ்ந்த; 'பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பரிதி' (பெரும்பாண். 2)-ம் அதன் கீழ்க் குறிப்புக் காண்க; 'பச்சைமா லனைய மேகம் பௌவ நீர் பருகிக் கான்ற' (வே. சாமிநாதய்யர். தனிப்பாடல்); 'தின்று கான்று விழிவழித் தீயுக' (கிட்கிந்தா. 320).

பி - ம். 2. சென்று காதிற் புகுதலும்.
3. கன்று கண்ணின் விழிச்சுடர்; காந்திட.
4. நெருப் புயிர்த்தான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இராவணன் வினவும் அதற்குக் கிடைத்த விடையும்

1042. மறித்து மற்றவ னுருயிர் வவ்வினுன்
இறுத்துக் கூறுமென் ருனிசை யெங்கணும்
நிறுத்து நீல னெடும்பெருஞ் சேனையை
ஒறுத்து மற்றவ னேடும்வந் துற்றனன்.

மறித்தும் - மீண்டும், (இராவணன் அந்தத் தூதனைப் பார்த்து) 'மற்றவன் - பிரகத்தனது, ஆருயிர் வவ்விஞன்- அருமையான உயிரைக் கவர்ந்தவனைக் குறித்து, இறுத்து - விடையிறுக்கு முகமாக, கூறும் - சொல்லுங்கள்', என்ருன் - என்று வினவிஞன்; (அதற்குத் தூதுவர்), எங்கணும் - (எல்லாத் திக்குகளிலும்) இசை நிறுத்தும் நீலன் - தன் புகழை நிலைபெறச் செய்த நீலன் என்பவன், நெடு பெரு சேனையை - நீண்ட பெரும் படையை, ஒறுத்து - அழித்து, மற்றவனேடும் வந்து உற்றனன் - மற்றும் அந்தப் பிரகத்தனுடன் போர் செய்யுமாறு வந்து அடைந்தான்.

அருமை + உயிர் : ஆருயிர் என்ருயது. இறுத்து - நின்று நிதானித்து என்றும் பொருள்படும், இறுத்து - விடையிறுத்து; 'இல்லெனும் தீச்சொ லிறுத்தினர் தோமும்' (கல்லா. 74). ஒறுத்தல் - அழித்தல்; 'ஒறுத்தாஞ மொன்னூர் புரங்கண் மூன்றும்' (தேவா. 407, 11). 'இசை யெங்கணும்' என்ற இச்செய்யுளிற் கண்ட தொடர் தொடங்கி, இதனை அடுத்த செய்யுட்கண் உள்ள 'வீந்தனன்' என்பது வரையில் தூதுவர் கூறிய விடை. பின்னை யும் இரகசியமாக 'அந்தப் பிரகத்தனைக் கொன்றவன் ஆர், தெரிந்து சொல்வாயாக' என்று கேட்டான் இராவணன் என்பது பழையவுரை.

பி - ம். 1. மறுத்தும்; ஆரவன்; வவ்விஞர்.
2. கூறி; திசை.
3. நிறுத்த, நிறுத்தி,

87

1043. உற்ற போதி னிருவரு மொன்றல
கற்ற போர்க ளெலாஞ்செய்த காலையில்
நெற்றி மேன்மற்ற நீல னெடுங்கையால்
எற்ற வீந்தன னென்ன வியம்பிஞர்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

'உற்ற போதின் - அவ்வாறு வந்து அடர்ந்த போதினில், இருவரும் - (நீலன் பிரகத்தன்) என்ற இரு வீரரும், ஒன்று அல - ஒரு விதமல்ல, கற்ற போர்கள் எலாம் செய்த காலையில் - (தாங்கள் பயின்றிருந்த போர் வகைகள் எல்லாம் புரிந்து நின்ற போதினில், அ நீலன் - அந்த நீலன், நெற்றி மேல் - (பிரகத்தனுடைய) நெற்றியின் மீது, நெடு கையால் எற்ற - நீண்ட கரத்தால் தாக்க, வீந்தனன் - (அந்த அரக்கன்) இறந்தனன்' என்ன இயம்பினர் என்று கூறினர். மற்று - அசை.

கற்ற போர்கள் : விற்போர், வாகனங்களில் ஏறிப் பொருதல், மற்போர், சொற்போர் முதலியன. சொற்போர் - விவாதம். வீந்தனன் - இறந்தான்.

பி - ம். 1. போதும், போழ்தில் ; ஒன்றலக்.
3. மற்றை வீரன்.
4. இயம்பினன், ஏிளம்பினன் ; விளம்பியே. 88

1044. அன்ன வன்னெடும் போன வரக்கரில்
நன்ன கர்க்குவந் தோமைய நாங்களே
என்ன வென்ன வெயிற்றகல் வாய்களைத்
தின்னத் தின்ன வெரிந்தன திக்கெலாம்.

(மற்றும்) 'ஐய - தலைவனே', அன்ன வன்னெடும் போன அரக்கரில், நல் நகர்க்கு வந்தோம் நாங்களே - சிறந்த இலங்காபுரிக்குத் திரும்பி வந்தவர்கள் நாங்கள் தான்', என்ன என்ன - என்று பன்முறை கூற, அகல் வாய்களை - பெரிய வாய்களை, எயிற்று - (இராவணன் தனது) பற்களினால், தின்ன தின்ன - பல தடவை கடித்துக் கொள்ள, (அவனது சினத் தீயினால்) திக்கு எலாம் எரிந்தன - திசைகள் எல்லாம் எரியலாயின.

அன்னவன் என்றது பிரகத்தன் என்னும் சேனைத் தலைவனை. இவ்வாறு தூதுவர் கூறிய அளவில் இராவணன் பற்களைக் கடிக்க அவனுடைய சினத்தீயால் திக்கெலாம் எரிந்தன எனப்பட்டது; 'என்று தானு மெயிறு பொடிபடத், தின்று கான்று விழிவழித் தீயுக' (கிட்கிந்தா. 320); வாய் - இங்கே உதடுகள் என்க. தின்னத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தின்ன என்ற அடுக்கு விடாமல் கடித்ததைக் குறித்தது. முகங்கள் பத்தாகலின் வாய்களே எனப்பட்டது.

பி - ம். 2. இன்னகர்க்கு ; யாங்களே.
3. எயிறிகல், எயிறகல் ; வாயினே. 89

## இராவணன் வீரரைப் போருக்கு ஏவினது

1045. மாடு நின்ற நிருதரை வன்கணன்
ஓட நோக்கி யுயர்படை யான்மற்றக்
கோடு கொண்டு பொருதக் குரங்கினுல்
வீடி னனென்று மீட்டும் விளம்பினன்.

'மாடு நின்ற நிருதரை-அருகில் நின்ற அரக்கரை, வன்கணன் - கொடுமை நிறைந்த கண்களால் இராவணன், ஓட நோக்கி - நெடிது பார்த்து, உயர் படை யான் - சிறந்த ஆயுதங்களை யுடைய பிரகத்தன், அ கோடு கொண்டு - அந்த மரக்கிளையைக் கைப்பற்றிக் கொண்டு, பொருத குரங்கினுல் வீடினன் - போர் செய்த அந்தக் குரங்கினுல் மாண்டான்', என்று மீட்டும் விளம்பினன் - என்று திரும்பவும் கூறினன். மற்று - அசை.

மாடு - பக்கம், 'மாடு பற்றி யிடங்கர் வலித்திட' (கிட்கிந்நா. 338) ; 'ஊர்தரு குரங்கின் மாடே' (கிட்கிந்நா. 309) ; வன்கணல்: ஆல் மூன்றனுருபு. வன்கணன் என்றே கொண்டு கொடிய கண்களையுடைய இராவணன் எனினுமாம். ஓட நோக்குதல் - நெடிது ஆழ்ந்து நோக்குதல், ஓடவோடப் பார்த்தல் என்பது வழக்கு; (ஒப்பு) : எய்த நோக்குதல், (கிட்கிந்தா. 946)'; கோடு-மரக்கிளை; கோடு சங் கூதும் கொம்பு மரக்கொம்பு விலங்கின் கொம்பு' (நிகண்டு) பல்வேறு ஆயுதங்களைத் தாங்கிய அரக்கர் சேனைத் தலைவன் கேவலம் மரக்கிளையையே கைக்கொண்டு பொருத குரங்கினுல் கொலையுண்டான் என்று கூறுமுகத்தால் குரங்கின் போர் வலி கூறப்பட்டது. விளம்பினவன் இராவணன். பிரகத்தன் ஒரு குரங்கின் கையால் இறந்ததை அடிக்கடி கூறித் தன் வியப்பைக் காட்டு கின்ருன். 'வீடினன் : இது காகுசுரம் (வினு)' என்பது பழையவுரை.

பி - ம். 2. உயர் படைக் காவலன். படையா மரக்.
3. கொண்டு பொருத.
4. வீடினன் என ; விட்டு. 90

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


1046. கட்ட தீந்திரன் வாழ்வைக் கடைமுறை
பட்ட தீங்கொர் குரங்கு படுக்கவென்று
இட்ட வெஞ்சொ லெரியினி லென்செவி
சுட்ட தென்னுடை நெஞ்சையுஞ் சுட்டதால்.

'கட்டது இந்திரன் வாழ்வை - (இந்தப் பிரகத்தன்) வேருடன் களைந்ததோ இந்திரன் வாழ்வினை ; (அங்ஙன மாகவும்) கடைமுறை - இறுதியாக, இங்குபட்டது - இப்போது மரித்தது, ஓர் குரங்கு படுக்க - ஒரு வானரம் கொன்றதனால் ஆகும் : என்று - என்று' (இத் தூதுவர்) இட்ட வெம் சொல் - தந்த கொடுஞ் சொல். எரியினில் - தீப்போன்று. என் செவி சுட்டது - என் காதுகளைச் சுட்டது. (அம்மட்டோ) என்னுடை நெஞ்சையும் சுட்டது - என் மனத்தையும் சுடா நின்றது'. ஆல் - அசை.

கட்டது - வேருடன் களைந்தது ; 'களைகட்டதனொடு நேர்' (குறள். 550) ; ஒரு அற்பக் குரங்கின் கையில் மரித்தானே இந்திரன் பெருவாழ்வையும் களைந்த வீரன் என்று இரங்குகின்றான் இலங்கேசன். 'புரந்தார்க ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா, டிரந்து கோட் டக்க துடைத்து' (குறள். 780) என்ற குறள் இங்கு நினைவு கூரத் தகும். 'தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவற், கொற்கத் துதவினு னுகுமால்' (தொல் : புறத். 72. நச்., உரை மேற்கொள்) காண்க. 'இட்ட வெஞ்சொல் - என்னுடை நெஞ்சையும் சுட்டதால்' (ஒப்பு) : 'என்ற வார்த்தை யெரிபுகு நெய்யெனச், சென்று சிந்தை புகுதலும்' (1041) : தீயினாற் சுட்ட புண் உள்ளாறு மாறாதே, நாவினாற் சுட்ட வடு' (குறள். 129) : என்ற குறட்பாவும் அதற்குப் பரிமேலழகர் உரையும் இங்குக் காண்க.

பி - ம். 1. கடன் முறை.

2. பட்ட தங்கு ; படுத்தவென்று.

3. எரிபுகு நெய்யென, எரியினி யென்செவி.

4. என்றனி நெஞ்சினைச்.

81

1047. கருப்பை போற்குரங் கெற்றக் கதிர்சூழல்
பொருப்பை யொப்பவன் தானின்று போன்றினன்
அருப்ப மென்று பகையையு மாரழல்
நெருப்பை யும்மிகழ்ந் தாலது நீதியோ.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'கருப்பை போல் குரங்கு எற்ற - எலியைப் போன்ற (இழிவான) ஒரு குரங்கு தாக்கியதனால், கதிர் சுழல் பொருப்பை ஒப்பவன் தான் இன்று பொன்றினான் - சூரியன் சுற்றிவருகின்ற மேருமலையை நிகர்த்த பிரகத்தன் இன்று மாண்டான்; பகையையும் ஆர் அழல் நெருப்பையும் - பகையையும் மிகுதியாக அழற்றும் தன்மையுடைய நெருப்பையும், அருப்பம் என்று இகழ்ந்தால் - அற்பமென்று இழிவு செய்தால், அது நீதியோ - அது நெறியாகுமா?' ஓ - வினா.

கருப்பை - எலி. 'அணியொடு கருப்பை யாடாது' (பெரும்பாண். 85). கரிகாற் கருப்பை பார்க்கும் (புறநா. 322). வேலிக் கருப்பைப் பார்க்கும்' (புறநா. 324). கதிர் சுழல் பொருப்பு : மேருமலை; அதனை ஒப்பவன் பிரகத்தன் என்ற சேனை நாயகன் அல்பம் அருப்பம் என வந்தது. பகைவரையும் தீயினையும் அற்பமென்று இகழ்தல் பிழை. இதனை வினை பகை யென்றிரண்டினெச்ச நினையுங்கால், தீயெச்சம் போலத் தெறும்' '(குறள். 674).. 'அளையுறை பாம்பு மாசு நெருப்பும், முழையுறை சீயமு மென்றிவை நான்கும், இளைய வெளிய பயின்றனவென் றெண்ணி, இகழின் இழுக்கம் தரும்' (ஆசாரக். 84); 'எரியுந் தீத்திர ளொட்டுணைத் தாயினும், கரியச் சுட்டிடுங் காந்திக் கனலுமேற், றெரியில் தொல்பகை தான்சிறி தாயினும், விரியப் பெற்றபின் வென்றிடு கிற்குமே' (சூளா. சீயவதை. 71) என்பன காண்க. உம்மை உயர்வு சிறப்பு. இச் செய்யுள் வேற்றுப்பொருள் வைப்பணி. முன்னர்க் குரங்கு என்று புறக்கணித்தது இப்போது பெருந் தீங்கு விளைப்பதாயிற்று எனப்பட்டது. பகையைக் கூறவந்த இடத்து ஒப்புமை நோக்கித் தீயையும் உடன் கூறினர். இக் கவி இராவணன் கூற்று.

பி - ம். 1. குரங்கெள்றலும்; கை சுழல்.
2. ஒப்பவர் தாம்; போயினர்; பொன்றினர்.

92

1048. நிற்க வன்னது நீர்நிறை கண்ணனாய்
வற்க மாயின மாப்படை யோடுஞ்சென்
றெற்கம் வந்துத வாம லுறுகென
விற்கொள் வெம்படை வீரரை யேவியே.

(என்று இங்ஙனம் பகர்ந்து) நீர் நிறை கண்ணனாய் - நீர் நிறைந்த விழிகளையுடையவனாய் (இராவணன்), 'அன்னது நிற்க -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அது கிடக்கட்டும், வற்கம் ஆயின மாபடையோடும் சென்று-பெரும் தொகுதியாகவுள்ள சிறந்த சேனைகளுடன் போய். ஒற்கம் வந்து உதவாமல் உறுக - (தளர்ச்சியால்) பின்னிடுதல் வந்து பொருந்தா வண்ணம், சென்று போர் புரிக', என - என்று, வில் கொள் வெம் படை வீரரை ஏவினன் - வில்லைத் தாங்கிய கொடிய வீரரைக் கட்டளையிட்டு அனுப்பினனாகி. ஏ - அசை.

வற்கமாயின - வர்க்கம் என்ற சொல் வற்கமென எதுகை நோக்கி நின்றது. ஒற்கம் - தளர்ச்சி; இங்கு பின்வாங்குதல் என்க. ஒற்கம்: 'கற்றில னாயினும் கேட்க வஃதொருவற், கொற் கத்தி னூற்றாந் துணை' (குறள். 414). உறுக என என்பது உறு கென என்றாயது.

பி - ம். 1. நீணெடுங் கண்ணினர், கண்ணினன்.

2. வற்க வாயிலின் ; மாப்படையோடுமென்று, படையோடும் போய்.

3. ஒற்கமின்றி யுறுகவவ் வாயிலில்

4. எற்கொள் ; ஏவியே. 93

இங்கு இரண்டு அதிகப் பாடல்கள் :—

ஏவி மற்றய னின்ற வரக்கரைத்
தாவில் என்னொரு தேரினைத் தம்மெனக்
கூவ மற்றவர் கொண்டுட னண்ணினர்
தேவ ராதியர் நெஞ்சம் திடுக்கென.

ஆய்வ ருஞ்சத கோடி யடற்பரி
மாய்வருந்திரை போல்வரப் பூண்டது
தேய மெங்கும் திரிந்தது திண்டிறல்
சாய விந்திர னேபண்டு தந்தது.

## இராவணன் போர்க் கெழுதல்

1049. மண்டு கின்ற செருவின் வழக்கெலாம்
கண்டு நின்று கயிலை யிடந்தவன்
புண்டி றந்தன கண்ணினன் பொங்கினன்
திண்டி றன்னெடுந் தேர்தெரிந் தேறினன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கயிலை இடந்தவன் - கயிலை மலையைப் பெயர்த்து எடுத்த வனாகிய இராவணன், மண்டுகின்ற செருவின் - மிக்குச் செல்லு கின்றபோரில், வழக்கு எலாம் கண்டு நின்று - நிகழ்ந்த முறைகளை யெல்லாம் மனத்தான் ஆராய்ந்து, புண் திறந்தன - புண்ணைப் பிளந்தாற் போன்று (மிகச்செந்நிறம் உற்ற), கண்ணினன் பொங் கினன் - கண்களை யுடையவனாய் வெகுண்டு, திண்திறல் நெடுதேர் தெரிந்து ஏறினன் - உறுதியான வன்மை வாய்ந்த உயர்ந்த தேரை நன்கு தேர்ந்து (அதில்) ஏறினன்.

மண்டுதல் - மிக்குச் செல்லுதல் 'கடற்டைை குளிப்ப மண்டி' (புறநா. 6); செரு; 'செருவின் மாண்டவர் பெருமையும்' (யுத்த. கும்ப. 228).

பா - ம். 2. கண்டு மென்று; கயிலை கடந்தவன்.

3. புண்டிறந் தன்ன; நெஞ்சினன் பொங்கினன். 94

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஏறினா னிடத் தோள்துடித் தேயறக்
கூறி னான்குரங் கோடு மனிதரை
நீற தாக்குவெ னென்று நெருப்பெழச்
சீறி னான்சிவன் போலவத் தேரின்மேல்.

1050. ஆயி ரம்பரி பூண்ட தகிர்குரன்
மாயி ருங்கடல் போன்றது வானவர்
தேய மெங்குந் திரிந்தது திண்டிறல்
சாய விந்திர னேபண்டு தந்தது.

(இராவணன் ஏறிய தேர்), ஆயிரம் பரி பூண்டது - ஆயிரம் குதிரை கட்டப்பெற்றது ; அதிர் குரல் - முழங்கும் குரலையுடைய, மா இரு கடல் போன்றது - மிகப் பெரிய கடலை ஒப்பது ; வானவர் தேயம் எங்கும் திரிந்தது - தேவர்கள் உறையும் தேயங்கள் எங்கும் சென்று வந்தது ; திண்திறல் சாய - (தனது) உறுதியான வலிமை ஒடுங்கிய அளவில், இந்திரனே பண்டு தந்தது - இந்திரனே முன்பு அளித்தது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆயிரம்பரி: 'ஆயிரம்பரி யமுதத்தின் வந்தவும்' (யுத்த. தேரேறு 19). திண்டிறல் சாய - வலி குறைந்து ஓய்ந்த போது இந்திரன் அளித்த தேர். மாயிரும் புறநா. 12, 180, 471, 472, 517. இராவணன் ஏறிய தேரின் சிறப்புக் கூறப்பட்டது.

பி - ம். 2. மாயிருள் கடலொப்பது போல்வது.
3. திண்டிசை.
4. இந்திரன் : இத்துணைத் ; தந்து நடந்தது. 95

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

1051. ஏற்றி யெண்ணி யிறைஞ்சி யிடக்கையால்
ஆற்றி ஞன்ற னடுசிலை யன்னதின்
மாற்ற மென்னெடு நாணொலி வைத்தலும்
கூற்றி னார்தம் கருவுயிர் கொண்டதே.

ஏற்றி எண்ணி இறைஞ்சி - (தனது இஷ்ட தெய்வமாகிய சிவபெருமானை) உளத்தில் கொண்டு தியானித்து வணங்கி (பிறகு), தன் அடு சிலை - தனது (பகைவரை) கொல்லும் வில்லினை, இடகையால் ஆற்றினன் - முறையாகப் பற்றினனாகி, அன்னதின் மாற்றம் என் நெடு நாண் ஒலி வைத்தலும் - அதனுடைய வார்த்தை என்று மொழியத்தக்க நீண்ட நாண் ஒலியைச் செய்தலும், கூற்றினார் தம் கரு உயிர் கொண்டது - யமனுடைய மனைவியின் வயிற்றில் கண்டிருந்த கருவின் உயிரையும் கவர்ந்தது. ஏ - அசை.

முதலடி முற்றுமோனை. இராவணன் வில்லைக் கரத்தில் ஏற்றது இங்குக் கூறப்பட்டது. நாணொலி வில்லின் மாற்றம் எனப்பட்டது; தற்குறிப்பேற்றவணி. எல்லா உயிர்களையும் கொள்பவன் கூற்றுவன்; அவனுடைய உயிரையும் கொள்வதென்று அதன் ஏற்றம் கூறப்பட்டது. ஏற்றி - துதித்து (அரங்கத்.). ஆற்றல் - பிடித்தல்; மாற்றம் ஒலியும் ஆம். 'இராவணன் சிலையை நாணேற்றித் தோத்திரம் பண்ணிக் கையிலே பிடித்துச் சிறு நாணொலிகொண்டு முழங்கு முழக்கால், இயமன் தேவி வயிற்றிற் கருவின் உயிரை உண்டது' என்பது பழைய உரை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இறைஞ்சியது, சிலையை; தேரை என்னலும் ஆம். இச்செய்யுள் 'ஐயம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. இடக் கையின்.

2. ஆற்றியான்ற; அடுஞ்சிலை, நெடுஞ்சிலை, மற்றநின்.

3. மாற்று மின்னொடு நாணொலி, மாற்றமின்னதெனரொலி, மாற்றமென் கின்ற நாணொலி.

4. கொள்வதே, கொண்டதே. 96

1052. மற்றும் வான்படை வானவர் மார்பிடை
யிற்றி லாதன வெண்ணுமி லாதன
பற்றி னுன்கவ சம்படர் மார்பிடைச்
சுற்றின நெடுந் தும்பையுஞ் சூடினன்.

மற்றும் - பின்னும், வானவர் மார்பிடை இற்றிலாதன - தேவர்களின் மார்பிற்பட்டும் ஒடியாதனவும், எண்ணும் இலாதன - கணக்கற்றனவுமான, வான்படை பற்றினன் - சிறந்த படைக்கலங்களைக் கையில் தாங்கினன்; படர் மார்பிடை கவசம் சுற்றினன் - பரந்த மார்பினிடத்துக் கவசத்தை அணிந்தான்; நெடு தும்பையும் சூடினன் - (போர்க்கு அடையாளமான) சிறந்த தும்பைத்தாரையும் வேய்ந்துகொண்டான்.

இங்கும் முதலடி முற்றுமோனை. பல ஆயுதங்களை ஏற்றுக் கவசமும் அணிந்தமை கூறப்பெற்றது. போருக்குச் செல்பவர் தும்பை சூடுதல் பண்டைத் தமிழ்வழக்கு. 'தும்பை, அதிரப் பொருதற்குச் சூடினன்' என்பது பழைய உரை.

பி - ம். 1. மற்றும் வன்படை, மானவர்.

2. எண்ண மிலாதன.

4. சூட்டினன். 97

1053. பேருங் கற்றைக் கவரிப் பெருங்கடல்
நீரும் நீர்நுரை யும்மென நின்றவன்
ஊரும் வெண்மை யுவாமதிக் கீழுயர்
காரு மொத்தனன் முத்தின் கவிகையான்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பேரும் கற்றை கவரி - இருமருங்கும் வீசப்படும் தொகுதியான வெண்சாமரையால், பெருகடல் நீரும் நீர் நுரையும் என - பெருங் கடலின் நீரும், (அதன்மீது காணப்படும்) நுரையும் போன்று, நின்றவன் - நின்றவனான இராவணன், முத்தின் கவிகையான் - முத்துக் குடை பிடிக்கப்பெற்றவனாய், வெண்மை ஊரும் - வெண் ணிறம் படர்ந்த, உவாமதி கீழ் உயர் காரும் ஒத்தனன் - கலை நிறைந்த பூர்ணிமைச் சந்திரன் கீழ் ஒளிர்கின்ற மேகத்தையும் நிகர்த்து விளங்கினான்.

அரசச் சின்னங்களாகிய சாமரையும், முத்துக் குடையும் கூறப்பட்டன. வெண்சாமரைக்கு வெண்ணுரையும், இராவண னுக்கு கடல்நீரும் உவமை. முத்துக் கவிகையின் கீழ் விளங்கிய அரக்கர்கோனுக்குச் பூர்ண மதிக்குக் கீழுள்ள கார் உவமை. 'கவரியினாலே கருங்கடலும் நுரையுமானான்; முத்துக் குடையி னாலே பூர்ண சந்திரன் கீழே நின்ற மேகமானான்' என்பது பழைய உரை.

பி - ம். 2. நின்றவன்.

3. தாரும்; உயர்மதிக்.

98

1054 போர்த்த சங்கப் படகம் புடைத்திடச்
சீர்த்த சங்கக் கடலுகத் தேவர்கள்
வேர்த்த சங்கிட அண்டம் வெடிபட
ஆர்த்த சங்க மறைந்த முரசமே.

போர்த்த-தோல் போர்த்தப்பட்ட, சங்கம் படகம் புடைத்திட- திரளான படகம் என்னும் கருவி அடிக்கப்படவும், சீர்த்த-சிறப்புப் பொருந்திய, சங்கம் கடல் உக - சங்கம் திகழும் கடல்போன்ற பகைவர் படை (அஞ்சிச் சிதறவும்), தேவர்கள் வேர்த்து அசங்கிட- விண்ணவர்கள் உடல்வேர்த்துத் தளரவும், அண்டம் வெடிபட - அண்ட முழுவதும் வெடிக்கவும், சங்கம் ஆர்த்த - சங்கங்கள் பேரொலி விளைத்தன; முரசம் அறைந்த - முரசம் அடிக்கப்பட்டன. ஏ - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இனி முதலடியில் தசாங்கம் என்ற வடசொல் தசங்கம் எனக் குறுகி நின்றது என்பர் ஒருசாரார். இச்செய்யுட்கண் திரிபு என்னும் சொல்லணி காண்க.

பி - ம். 1. போர்த்த சங்கம்.
2. நீர்த்த.
3. வேர்த்த சங்க விசும்பு.
4. முரசினம், முரசெலாம். 99

இங்கு ஓர் அதிகப் பாடல்—

அண்டகோடி யகிலமு மின்றொடே
விண்டு நீங்குறு மென்றுயர் விண்ணவர்
கொண்ட வாகுலத் தால்மனம் கூசியே
புண்ட ரீகன் பதியிடைப் போயினர்.

1055. தேரு மாவும் படைஞருந் தெற்றிட
மூரி வன்னெடுந் தானையை முற்றினன்
நீரொ ரேழு முடிவி னெருக்குநாள்
மேரு மால்வரை யென்ன விளங்கினன்.

தேரும் மாவும் படைஞரும் தெற்றிட - தேரும் குதிரையும் படை வீரரும் நெருங்க, மூரிவல் நெடு தானையை முற்றினன் - மிக்க வன்மை வாய்ந்த பெரிய அரக்கர் படையை முற்றுகையிட்ட இராவணன், ஓர் ஏழு நீர் முடிவின் நெருக்கு நாள் - ஓர் ஏழு கடல்களும் அடர்க்கும் நாளாகிய யுகமுடிவில், மேரு மால்வரை என்ன விளங்கினன் - மேருவாகிய பெரிய மலைபோன்று காணப்பட்டான்.

தெற்றுதல் - நெருங்கல், 'கற்றவா தெற்றிவர' (பெரியாழ். 1 : 5 : 8). மூரி - வன்மை; ஆரணிய. 455, 472, 664, 1052; 'மூரி விற்கை யிளையவன் முன்செல' (அயோத்தி. நகர்நீங்கு. 234). நீரொரேழு - ஏழுகடல். மேருமலை : ஊழிதோ றேங்கும் ஓங்கல் ஆகலின், ஊழியில் நின்று நிமிரும் மேரு வென்னப்பட்டது. ஏழு கடல்களால் நெருக்கப்படும் மேருகிரி, தேர் முதலியவற்றால் நெருக்கப்பெறும் இராவணனுக்குவமை.

பி - ம். 1. படைகளும், செற்றிட, தெற்றிய.
2. மூரிவாம் நெடுஞ், தானையை.
3. நெருங்கும் நாள். 100

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuyan Vani Trust Donations


வேறு

1056. ஏழிசைக் கருவிவீற் றிருந்த தென்னினுஞ்
சூழிருந் திசைகளைத் தொடருந் தொல்கொடி
வாழிய வுலகெலாம் வளைத்து வாயிடும்
ஊழியி னந்தக னாவி னோங்கவே.

ஏழ் இசை கருவி வீற்றிருந்தது என்னினும் - ஏழிசைகளை யுடைய கருவியாகிய வீணையின் உருவம் பெருமையுறப் பொறிக்கப்பட்டு விளங்கினும், சூழ் இரு திசைகளை - சுற்றியுள்ள பெருந் திக்குகளை, தொடரும் - (காற்றினால்) தொடர்கின்ற, தொல் கொடி - பழமையான கொடியானது, வாழிய உலகு எலாம் - வாழ்வு பெற்றுள்ள உலகினை எல்லாம், வளைத்து வாயிடும் - வளைத்துக் கொண்டு தன் வாயில் இடுகின்ற, ஊழியின் - ஊழிக்காலத்து, அந்தகன் நாவின் ஓங்க - யமனது நாவினைப்போன்று புலப்படவும். ஏ - அசை.

முதலடி இராவணனுக்கு வீணைக்கொடி என்பதைச் சுட்டி நின்றது. சாம கானத்தில் வல்லவனாய்ச் சிவபிரானிடத்து வரமும் வாழ்வும் பெற்றவன் ஆகலின் இசைக் கருவியைக் கொடியாக ஏற்றனன். 'வீணைக் கொடிப்பற்றி யொடித்து' (ஆரணிய. 911); 'வீணையின் கொடியொன்று கிடந்தது பார்மேல்' (ஆரணிய. 971); 'கொடியின் மேலுறை வீணையும்' (யுத்த. இராவணன்வதை. 34); எல்லோருக்கும் இன்பமளிப்பது வீணையின் இசை என்னினும், இந்த இராவணன் தேர்மீது கட்டப்பெற்ற வீணைக்கொடி அச்சத்தை விளைத்தது ஆகலின், 'என்னினும்' என்று கூறப் பட்டது. கொடிகள் காற்றில் அடித்துக்கொள்ளும்போது ஊழிக் காலத்து யமன் நாக்கினை நீட்டுவதுபோலும் எனப்பட்டது; தன்மைத்தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 2. திசைகளை யளக்கும்.
3. வாழியர், வளைந்து.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


1057. வேணுவின் நெடுவரை யரக்கர் வேலைக்கோர்
தோணிபெற் றனமெனக் கருதுந் தொல்செருக்
காணிய வந்தவர் கலக்கங் கைம்மிகச்
சேணுயர் விசும்பிடை யமரர் சிந்தவே.

வேணுவின் நெடுவரை அரக்கர்-மூங்கில்களையுடைய உயர்ந்த மலையை ஒத்த அரக்கர்களாகிய, வேலைக்கு ஓர் தோணி பெற்றனம் என கருதும் - கடலைத் தாண்டுவதற்கு உரிய நிகரற்ற ஓடத்தை அடைந்தோம் என்று கருதுபவராய், செருகாணிய வந்தவர் - போரினைக் கண்ணுறுவதற்காக வந்தவராகிய, தொல் அமரர் - பழமையான தேவர்கள்; கலக்கம் கைமிக - மனக்கலக்கம் மிகுந்தவராய், சேண் உயர் - மிகவும் உயர்ந்த, விசும்பிடை சிந்த - ஆகாயத்தினிடத்தே சிதறிப்போகவும். ஏ - அசை.

வேணு - மூங்கில்; (சீவக. 634); 'மாணு விறலோய் வேணுவாகென' (சிலப். 1 : 6 : 23 உரை); (ஒப்பு): 'அரக்கரென் கடலிடை யாழ்கின் றுரொரு, மரக்கலம் பெற்றென மறுக்கம் நீங்கினர்' (ஆரணிய. 123). காணிய: 'காரிய முண்மை நின்னைக் காணிய வந்தேனென்றாள்' (ஆரணிய. 262). கைம்மிக - பெருக; 'காந்தின மனத்தினர் புலவி கைம்மிக' (ஆரணிய. 591). சேணுயர் - மிகவும் உயர்ந்த; 'சேணுயர் தருமத்தின் தேவை' (அயோத்தி. கிளை கண்டு. 47); 'சேணுயர் திருக்காளத்திமலை' (பெரியபு கண்ணப்ப. 96). 'இராக்கதர் இந்த வானரசேனைக்கடலை கடக்க இராவணனாகிய தோணி பெற்றோம் என்று நினைக்க' என்பது பழையவுரை.

பி - ம். 1. வேணுயர், நெடுஞ்சிலை.
2. பெற்றனரெனக் கடக்குந்.
3. கலங்கிச், கலங்கர்.
4. சேணுயர் நெடுவரை, தேவர் ஓடினர், சிந்தினர். 102

1058. கண்ணுறு கடும்புகை கதுவக் கார்நிறத்
தண்ணல்வா ளரக்கர்த மரத்தப் பங்கிகள்
வெண்ணிறங் கோடலி னுருவின் வேற்றுமை
நண்ணினர் நோக்கவு மயிர்ப்பு நல்கவே.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கண் உறு கடும்புகை - தனது விழிகளிற் பொருந்திய சினத்தினால் உண்டான புகையானது, கதுவ - பற்ற, கார் நிறத்து அண்ணல் வாள் அரக்கர்தம் அரத்த பங்கிகள் - கருநிறம் வாய்ந்த பெருமைசான்ற கொடிய அரக்கருடைய செம்பட்ட உரோமங்கள், வெள் நிறம் கோடலின் - வெண்மையான நிறத்தைப் பெறுதலினால், உருவின் வேற்றுமை நண்ணினர் - தமது வடிவம் வேறுபட்டனர்; (அவ்வாறு மாறவே), நண்ணினர் - நெருங்கிய உறவினர் காணும் போதும், அயிர்ப்பு நல்க - (அவர்கட்கும்) சந்தேகத்தை உண்டு பண்ணவும். ஏ : அசை.

கொடுமைப் பண்புபற்றி வாளரக்கர் எனப்பட்டது. செம்பட்ட மயிராதலின் அரத்தப் பங்கிகள் என்றார். மயிர், புகை பற்றுவதால் வெண்ணிறமாகத் தோன்ற, கிட்டிய உறவினரும் அவர்களை அயிர்க்கலாயிற்று என்க; (ஒப்பு): பால. பூக்கொய். 5; நீர்விளையாட்டு. 11. நண்ணினர் என்பதே; உருவ வேற்றுமை நண்ணினர் என்று முற்றாகவும், நண்ணினர் நோக்கவும் எனப் பெயராகவும் தனித்தனிக்கொண்டு பொருள் செய்க. 'இராவணன் விழிப்புகையினால் சாதிலிங்கம் போன்ற மயிருடைய அரக்கர்க்கெல்லாம் வெள்ளை மயிராக இருந்த படை, யார் படை என்று சந்தேகம் வர' என்பது பழையவுரை.

பி - ம். 1. கடும்பொறி, நெடும்புகை, நறும்பொறி, கழுமக்.
2. அண்ணல் முன்.
3. ஒண்ணிறங், கொண்டலில், வெண்ணிறக் கொண்டலின், உருவு.
4. நண்ணுற, நோக்கமும் வியப்பு.

103

1059. காலெடுந் தேருயர் கதலி யுங்கரத்
தேனைய ரேந்திய பதாகை யீட்டமும்
ஆனையின் கொடிகளு மளவித் தோய்தலால்
வானவா ஞெடுமழை யொற்றி வற்றவே.

கால்நெடு தேர் உயர் கதலியும் - சக்கரங்களையுடைய உயர்ந்த தேரின்மீது உயரக்கட்டிய பெரியகொடியும், ஏனையர் கரத்து ஏந்திய பதாகை ஈட்டமும் - பிறர் கைகளில் தாங்கிய கொடிகளின் தொகுதியும், ஆனையின் கொடிகளும் - ஆனைமேல் அமர்ந்து பிடித்த கொடி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


களும், அளவி தோய்தலால் - ஒன்றுகூடிப் படிதலால், வான ஆறொடு - ஆகாய கங்கையுடன், மழை ஒற்றி வற்ற - மேகமும் ஒற்றப்பட்டு நீர் வற்றவும். ஏ : அசை.

கால் - தேர்க்கால், கதலி - கொடி. பதாகை - பெருங்கொடி. ஆனையின் கொடி - ஆனைகள் மீது உயர்த்தப்பட்ட கொடிகள். 'கொல்களிற்று மீமிசைக் கொடி' (புறநா. 9). அளவி - கலந்து, வானவாறு - ஆகாய கங்கை; இது சில இடங்களில் வானயாறு எனவும் வழங்கியுள்ளது; 'வானயாறு கோளறுத்து' (தக்க. 388).

பி - ம். 1. தேனுயர், காதலின்.
2. ஈட்டிய பதாகை.
3. அளாவித், அனைத்தும்.
4. வான யாறொடு, ஏற்றி. 104

1060. ஆயிரங் கோடிப்பே யங்கை யாயுதம்
தூயன சுமந்துபின் றொடரச் சுற்றொளிர்
சேயிரு மணிநெடுஞ் சேமத் தேர்தெரிந்து
ஏயின வாயிரத் திரட்டி யெய்தவே.

ஆயிரம் கோடி பேய் அங்கை தூயன ஆயுதம்- ஆயிரம் கோடிப் பேய்க்கணங்கள் அழகிய கையில் தூய்மையான கருவிகளை, சுமந்து பின் தொடர - சுமந்துகொண்டு பின்பற்றி வரவும், சுற்று ஒளிர் - சுற்றுப்புறங்களில் விளங்குகின்ற, சே இரு மணி - மிகப் பெரிய மணிகள் அழுத்திச் செய்தனவும், தெரிந்து - ஆராய்ந்தெடுத்து, ஏயின - உடன் வருமாறு கட்டளையிடப்பெற்றனவுமான, நெடு சேமம் தேர் ஆயிரத்து இரட்டி எய்தவே - சேமத் தேர்கள் இரண்டாயிரம் பின் தொடரவும். ஏ : அசை.

அரக்கனுடைய தீய எண்ணங்கட்கும் செயல்கட்கும் ஏற்ப அவனுக்குப் பரிவாரங்களாக அமைந்தன எண்ணிறந்த பேய்கள் என்க. சுற்று - சுற்றுப்புறம், மணிகள் தேர்களிற் கட்டிய மணிகளுமாம். சேமத்தேர் - போரில் அழிந்த தேர்க்குப் பிரதியாகச் சேமித்துவைக்கும் தேர்.

பி - ம். 1. ஆயிரக் கோடி பேய், ஆயின பெருங் கொடி, அணிகொள்; ஆய் வரும் பூதமோ டலகை யாயுதம்.
2. சுமந்து பின் அமல, தொடர்ந்து சுற்றிட. 105

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


1061. ஊன்றிய பெரும்படை யுலைய வுற்றுடன்
ஆன்றபோ ரரக்கர்க ணெருங்கி யார்த்தெழத்
தோன்றின னுலகெலாந் தொடர்ந்து நின்றன
மூன்றையுங் கடந்தொரு வெற்றி முற்றினன்.

ஊன்றிய பெருபடை - போர் புரியுமாறு எதிரே நிலைநின்ற பெரிய குரங்கு சேனை, உலைய - மனம் வருந்தவும், உடன் உற்று ஆன்ற போர் அரக்கர்கள் நெருங்கி ஆர்த்து எழ - தன் உடல் பொருந்தி நிறைந்த போரில் வல்லவரான அரக்கர்கள் நெருங்கி மகிழ்ச்சியுற்று ஆரவாரித்துக் கிளம்பவும், தொடர்ந்து நின்றன - ஒன்றுடன் ஒன்று தொடர்பாக உள்ளனவான, மூன்றையும் கடந்து - மூன்றினையும் கடந்துசென்று, உலகு எலாம் ஒரு வெற்றி முற்றினன் - உலகனைத்திலும் ஒப்பற்ற வெற்றித் தொழிலில் முதிர்ந்தவனான இராவணன், தோன்றினன் - போர்க்களத்தில் காணப்பட்டான்.

ஊன்றிய பெரும்படை - எதிரூன்றல், காஞ்சி (புறப்பொருள்.). ஆன்ற என்பதற்கு வலிமையால் உயர்ந்த என்க. தொடர்ந்து நின்றன உலகெலாம் மூன்று, சுவர்க்கம் மத்யம் பாதலம் என்க. கடத்தல் - வெல்லுதல், 'அறத்தினாலன்றி யமரர்க்கும் அருஞ் சமம் கடத்தல்' (யுத்த. 1206); பேரமர்க் கடந்த ஐவர்போல' (பெரும்பாண். 416); 'இருந்தன னுலகங்க ளிரண்டு மொன்றும் தன் அருந்தவ முடைமையின் அளவில் ஆற்றலின்' (ஆரணிய. 576); ஆரணிய. 258, 261, 272, 334, 579, 752, 753, 847. உலக மூன்றும் ஒன்றாக ஆள்பவன்' சுந்தர. 442, 443, 448, 474. தோன்றினன்: போர்க்களத்துத தோன்றினன் என்க. இச்செய்யுள் ஐயம் என்பது ஐயர் குறிப்பு.

பி - ம். 2. ஆன்ற பேரரக்கர், நெருக்கி.
3. உலகெனத் தொடர்ந்து, நின்றவை, நின்றவம்.

106

## இராவணன் போர்க்கெழுந்ததைத் தூதுவர் இராமபிரானுக்குத் தெரிவித்தல்.

1062. ஓதுறு கருங்கடற் கொத்த தானையான்
தீதுறு சிறுதொழி லரக்கன் சீற்றத்தால்
போதுறு பெருங்களம் புகுந்து ளானெனத்
தூதுவர் நாயகற் கறியச் சொல்லினார்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'தீது உறு சிறு தொழில் அரக்கன் - கெட்ட பண்புகள் அமைந்த இழிந்த காரியங்களைச் செய்யும் இராவணன், ஓது உறு கரு கடற்கு ஒத்த தானையான் - (புகழ்ந்து) கூறப்படுகின்ற கரிய கடலுக்கு நிகரான படையை உடையவனாகி, சீற்றத்தால் - சினத்தோடு, போது உறு பெருகளம் புகுந்துளான் - (தான்) புகுதற்குரிய யுத்தகளத்திலே வந்திருக்கின்றான்', என - என்று, தூதுவர் நாயகற்கு அறிய சொல்லினார் - வானரத் தூதுவர் (தமது) தலைவனாகிய இராமபிரானுக்கு விளக்கமாகப் பகர்ந்தார்கள்.

சிறுதொழிலரக்கன் ; 'புன்றொழி லரக்கன்' (சுந்தர. 522); இங்கே பிறர் மனை நயத்தலான இழிதொழில் 'பிறன்கடை நின்றாரிற் பேதையா ரில்' (குறள். 142) என்றது காண்க. போதுறு - போதற்கு அல்லது வருதற்குரியதாதல்.

பி - ம். 1. கருங்கடற்குயர்ந்த.
5. மீதுறு ; தெறுதொழில் ; சீறினன், சீறியே, சீறியிப், சீற்றத்தான்.
3. போதுறு பொருகளம்.
4. நாயகர்க்கு.

107

அது கேட்ட இராம்பிரான் மகிழ்ச்சி,

1063. ஆங்கவ னமர்த்தொழிற் கணுகி னானென
வாங்கினன் சீதையை யென்னும் வன்மையால்
தீங்குறு பிரிவினாற் றேய்ந்த தேய்வற
வீங்கின வாரியன் வீரத் தோள்களே.

ஆங்கு - அப்பொழுது, அவன் - அந்த இராவணன். அமர் தொழிற்கு அணுகினான் என - போர்த் தொழிலுக்காக (வந்து) நெருங்கினான் என்று சொல்லிய அளவில், 'சீதையை வாங்கினன் என்னும் வன்மையால்-சீதையை மீட்டுவிட்டேன்' என்னும் உறுதியான நினைவால், தீங்குறு பிரிவினால் - துன்பத்தை உண்டாக்கும் பிரிவின் காரணமாக, தேய்ந்த தேய்வு அற - மெலிந்த மெலிவு நீங்கும்படி, ஆரியன் வீர தோள்கள் வீங்கின - (மேன்மைமிக்க) இராமபிரானுடைய வீரியம் மிக்க புயங்கள் வீங்கி உயர்ந்தன. ஏ - அசை.

அமர்த்தொழிற் கணுகினான் எனக் கேட்ட அளவில் தோள்கள் வீங்கி வீரவுணர்ச்சி யொருபுறமும், வெற்றி கிட்டியதாகலின்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சீதையை மீட்டல் ஒருதலை என்ற உவகை ஒருபுறமும் எழுந்தன என்க; (ஒப்பு): 'அந்த அணையைக் குறுகி நின்றான், அண்டர் முதல் வன்னொருத னுவியனை யாளைக், கண்டனன் னெனப்பெரிய காதன் முதிர்கின்றான்' (யுத்த. 687); யுத்த. கும்ப. 292-உம் பார்க்க; 'வீங்கின தோள்கள்'; 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொ டிண்டோள்' (பால. பூக்கொய். 18); 'கிட்டிய தம ரெனக் கிளர்ந்த தோளினன்' (அயோத்தி. குகப். 9). திருக்குறள் படைச் செருக்கு என்ற அதிகாரமும் காண்க. வன்மை - உறுதி யான நினைவு. 'வாரா தொழியா னெனும் வன்மையினால்' (சுந்தர. 494); இராமன் தோள்வலி மிகுத்துப் பேசப்படுதலின், 'வீரத் தோள்கள்' எனப்பட்டது. 'சூடிய சிலையிராமன் தோள்வலி கூறுநர்க்கே' (பாயிரம்.),

பி - ம். 1. அணுகினனெனின்.
2. வன்மையால்.
3. பரிவினால்; மெலிந்த தேயவை.
4. ஓங்கினவாரியன், இராகவன் மெலிந்த, விசயத் தோள்களே. 108

## இராமபிரான் போர்க்கு எழுதல்

1064. தொடையுறு வற்கலை யாடை சுற்றிமேற்
புடையுறு வயிரவாள் பொலிய வீக்கினான்
இடையுறு கருமத்தி னெல்லை கண்டவர்
கடையுறு நோக்கினிற் காணுங் காட்சியான்.

இடை உறு - (பிறந்த நாளிலிருந்து பரமபதம் எய்தும் காலத்திற்கு) நடுவில் பொருந்திய இடைப்பொழுதில், கருமத்தின் எல்லை கண்டவர் - கருமத்தின் எல்லையைக் கண்ட ஞானிகள், கடை உறு நோக்கினில் - எல்லையான ஞானக் கண்ணினால், காணும் காட்சியான் - கண்ணுறுகின்ற காட்சிப் பொருளாகின்ற வனான இராமபிரான், தொடை உறு வற்கலை ஆடை சுற்றி - தொடுத்தாற்போன்று காணப்பட்ட மரவுரி ஆடையைச் சுற்றி (இடையில் வரிந்து) கட்டி, மேல் புடை உறு வயிரவாள் பொலிய வீக்கினான் - அதன் மேற்புறத்திலே பொருந்திய வயிரவாளினை விளங்கும்படியாகச் செருகினான்.

தொடை உறு வற்கலை - தொடைகளில் உடுத்தப் பெறுகின்ற மரவுரி யெனினுமாம். வற்கலை - வற்கலா என்ற வடசொற்றிரிபு.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



புடை - அரைப் புறம். வீக்குதல் - இறுகக் கட்டுதல், 'மேகமென் றுருத்தி வீக்கி' (ஆரணிய. 567); 'புலன்கள் வீக்கியும்' (சுந்தர. 401); வற்கலை துறவறவாடையேனும் அவ்வறத்திற்கு மாறுன வயிர வாளை வீக்கியது துட்ட நிக்கிரகமான தனது சங்கற்பம் முற்று தற்கு என்க. தற்காப்பின் பொருட்டு எனினுமாம். 'தன்னைக் கொல்லவந்த பசுவைக் கொல்லு' என்பது பழமொழி; (ஒப்பு): காணும் காட்சியான்', வாயு நிற்ப மனனிற்கும் மனந்தா னிற்பப் பொறிநின்று, பாய பொறிக ணீற்பவிடர்ப் படுபுன் புலன்க ணின்றனவால், ஆயபுலன்கள் நின்றமையால் அகிலம் தோன்று துள்ளத்தே, தூய பரமா நந்தபரம் சோதி தோன்றக் கண்டிருந்தார்' (பிரபுலிங்க. விமலை. 26); மற்றும், யுத்த. 190-உம் காண்க.

'இடையுறு கருமத்தின் எல்லை கண்டவர் - இடையிலே வந்த கருமத்தின் முடிவுகண்ட பெரியவரும், இராமாவதாரமாக இப்போது வந்த வர்த்தமானத்தின் அளவையறிந்தவருமாம்' என்பது பழையவுரை. கடையுறு நோக்கு - ஞானக்கண்.

பி - ம். 1. ஆடைச் சுற்றின் மேல்.

4. கடையுற.

109

1065. ஒத்திரு சிறுகுறள் பாத முய்த்தநாள்
வித்தக ருமறை யுலகை மிக்குமேல்
பத்துடை விரல்புடை பரந்த பண்பெனச்
சித்திரச் சேவடிக் கழலுஞ் சேர்த்தினுன்

சிறுகுறள் - குறுகிய வாமநாவதாரம் கொண்ட திருமால், ஒத்த இருபாதம் உலகை மிக்குமேல் உய்த்த நாள் - தம்மில் இணையொத்த இரண்டு திருவடிகளையும் உலகவளவினையும் மீறி ஈரேழு புவனங் களையும் அளப்பதற்குச் செலுத்திய காலத்தில், அருமறை வித் தகர் - அரிய வேதங்களை உணர்ந்த ஞானிகளின், பத்து உடை விரல் - பத்தியுடன் கூடிய விரல்கள், புடைபரந்த பண்பு என - மேற் பக்கங்களில் பரவிய பண்பினைப்போல, சித்திர சேவடி கழலும் சேர்த்தினுன் - அழகிய தன்மை வாய்ந்த வீரக் கழலையும் புனைந்தான்.

வாமனுக வந்து மாவலியிடம் மூன்றடி மண் வேண்டித் திரு விக்கிரமனுய்த் திருமால் உயர்ந்தபோது அவனுடைய திருவடிக

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஊப்பற்றி ஞானிகள் வணங்கியவளவில் பத்தியுடன்கூடிப் பதிந்த விரல்களோ எனக் கூறுமாறு கழல்கள் இருந்தன எனப்பட்டது. சிறுகுறள் : 'ஒரு குறளாயிருநில மூவடி மண்வேண்டி' (பெரியதிரு. 3 : 4 : 1); 'நீலநிறத்து நெடுந்தகை வந்தோர், ஆலமர் வித்தின் அருங்குறளானன்' (பால. வேள்விப். 21). வித்தகர் - ஞானிகள் ; 'வித்தகரறிகுவர்' (யுத்த. 190); பத்து - பற்று, பத்தி. 'பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்' (திருவாய். 1, 3, 1); என்ற திவ்யப்பிரபந்தப் பாசுரத்தை அடியொற்றிய வரி இது. 'பத்துடையீர் ஈசன் பழவடியீர்' (திருவெம். 3); பத்துடை விரல் : பத்து என்ற எண் குறித்து நின்றது எனினுமாம். தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இச்செய்யுளும் ஐயம் என்பது ஐயர் குறிப்பு. மறையுலகு - பிரமலோகம் எனினுமாம். 'அருமறையுலகு- மறையினுற் சொல்லும் புவி' என்பது பழையவுரை.

பி - ம். 1. ஒத்துறு, வைத்தநாள்.

2. வித்தக வருமறை, உலகின் மேற்படர்.

3. பந்துள, பண்பெனுஞ். 110

1066 பூவுயர் மீனெலாம் பூத்த வானிகர்
மேவருங் கவசமிட் டிறுக்கி வீக்கினன்
தேவியைத் திருமறு மார்பிற் றீர்ந்தனன்
நோவில ளென்பது நோக்கி னன்கொலோ.

மீன் எலாம் - நட்சத்திரங்கள் யாவும், பூத்த வான் நிகர் - மலர்ந்த வானத்தை ஒத்த பூ உயர் - பூத்தொழிலால் மேம்பட்டு, மேவு அரும் கவசம் இட்டு இறுக்கி வீக்கினன் - பொருந்திய அருமையான கவசம் தரித்து இறுகக் கட்டினன்; திருமறு மார்பில்- ஸ்ரீவத்ஸம் என்னும் மறு அமைந்த மார்பில் நின்றும், தேவியை தீர்ந்தனன் - தேவியான இலக்குமியைப் பிரிந்துள்ளா னுகலின், நோவிலள் என்பது நோக்கினன்கொல் (அவ்வாறு இறுகக் கட்டு வதால், வருந்த மாட்டாள் என்பதனை ஆலோசித்தான் போலும். ஓ - அசை.

பூ - பூத்தொழில் ; 'பூக் கனிந்து' (பொருந. 82); பூத்தொழில் நிறைந்து விளங்கிய கவசத்திற்கு, பூவெலாம் பூத்த வானினை உவமித்தார். வீக்கினன் ; 1064. தேவி - திருமகள். திருமகள் அவன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மார்பில் இருப்பின் கவசத்தை இறுக்கிக் கட்டச் சிறிது தயங்குவாள், இராமபிரான் இப்பொழுது விட்டுப் பிரிந்த நிலையில் அவளுக்கு வருத்தம் உறாது என்று எண்ணினன் கொல்லோ என்று கூறப்பட்டது. பிரிந்த நிலை; (ஒப்பு): 'இந்தவெம் பிறவிக் கிரு மாதரைச் சிந்தையாலுந் தொடேன்' (சுந்தர. 640); இங்கு இரு மாதர் என்றது பூதேவி சீதேவி என்பவர்களை என்றறிக. திருமறு மார்பு: 'திருமறு மார்பனேவல் சென்னியிற் சேர்த்தி' (கிட்கிந்தா. 363). திருமகள் ஸ்ரீவத்ஸம் என்னும் மறு என்ற இரண்டையும் தன் மார்பில் பெற்றவன் என்றுமாம். 'செய்ய தாமரைத் திருமறு மார்பனைச் சேர்ந்தார்' (பால. அகலிகை. 19). 'பூவுயர் மீன் என்பதற்கு, பூவையொத்த உயர்ந்த மீன் என்பதும் மீனெலாம் பூத்த வானிகர் என்பதற்கு முத்தணிந்த கரிய சூரிய படம்' என்பதும் பழையவுரை.

பி-ம். 2. மேவிருங்.
3. திருமணி மார்பிற் றிர்தலால்.
2. நோவிலை.

111

1067. நற்புதுக் கோதைதன் னளினச் செங்கையின்
நிற்புறச் சுற்றிய காட்சி நேமியான்
கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம்
பொற்புறத் தழுவிய தன்மை போன்றதால்.

நேமியான் - அந்த இராமபிரான், நல் புது கோதை - சிறந்த புதிய தோலுறையை, தன் நளினம் செம் கையின் - தன்னுடைய செந்தாமரை யொத்த கரத்தில், நிற்புற - நன்கு பொருந்தி நிற்குமாறு, சுற்றிய காட்சி - சுற்றி அணிந்த காட்சி, கற்பகம் கொம்பினை - கற்பகத்தருவின் கிளையை, கரிய மாசுணம் - கரும்பாம்பு, பொற்புற தழுவிய தன்மை போன்றது - அழகுபடச் சுற்றிய தன்மை யொத்துக் காணப்பட்டது. ஆல் - அசை.

கோதை - தோலுறை; இங்கே கைக்கிடும் கவசம், இது உடும்புத் தோலாற் செய்யப்படுவது. கோதா - வடசொல்; (யுத்த. 1078) பார்க்க; உடும்பு என்னும் பொருளது. நிற்புற - நன்கு பதியுமாறு.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இராமபிரான் தோலுறையைத் தன் கரத்தணிந்தது கற்பகக் கிளையைக் கரும்பாம்பு சுற்றியதுபோலும் என்க; தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. நற்புறு, நற்புறக்.

2. நேமிசால்.

4. போன்றவால், போன்றதே, போன்றவே. 112

1068. புதையிருட் பொழுதினு மலரும் பொங்கொளி
சிதைவரு நாள்விரை சிவந்த தாமரை
இதழ்தொறும் வண்டுவீற் றிருந்த தாமெனத்
ததைவுறு நிரைவிரற் புட்டி ருங்கினன்.

புதை இருள் பொழுதினும் - (எல்லாப் பொருள்களையும் காண வொட்டாமல்) மறைக்கின்ற இருள் காலத்திலும், மலரும் - மலரும் இயல்புள்ளதும், பொங்கு ஒளி - மிக்க ஒளியமைந்த கதிரவன், சிதைவரு நாள் - (அந்த இருளைக்) கெடுக்கின்ற பகற் பொழுதில், சிவந்த விரை தாமரை - சிவந்து காட்டுகின்ற மணம் செறிந்தது மான தாமரையின், இதழ் தொறும் - இதழ்கள் தோறும், வண்டு வீற்றிருந்தது ஆம் என - வண்டுகள் மொய்த்திருந்தனவாகும் என்று கூறுமாறு, ததைவு உறு - நெருங்குதல் அமைந்த, நிரை விரல் புட்டில் தாங்கினன் - வரிசையாகிய விரல்களுக்குக் கவசத்தை ஏற்றான்.

தாமரை யிதழ்தோறும் வண்டிருந்த தென்னுமாறு பொருந்தி வரிசையாகிய விரல்களுக்குக் கவசம் அணிந்தான்; தற்குறிப் பேற்றவணி. விரற்கவசத்தைப் புட்டில் என்ப: 'விரற்றலைப் புட்டில் வீக்கி' (சீவக. 2203). ததைதல் - நெருங்குதல்; 'ததையு மலர்த் தாரண்ணல்' (பால. மிதிலைக். 150); 'ததையிலை வாழை' (ஐங்குறு. 460). புட்டிலுக்கு வண்டு உவமை.

பி - ம். 1. போழ்தினும்.

2. சிதைவில, நாள்வர, நாரவிர்; சிறந்த.

3. இருந்தவே.

4. ததையுறும்; நிறைவிரற், விரனிரை. 113

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


1069 பல்லிய லுலகுறு பாடை பாடமைந்
தெல்லையி னூற்கட லேற நோக்கிய
நல்லிய னவையறு கவிஞர் நாவருஞ்
சொல்லெனத் தொலைவிலாத் தூணி தூக்கினான்.

உலகுறு பல்லியல் பாடை - உலகில் வழங்கும் பலவகைத் தன்மை பொருந்திய மொழிகளில், பாடு அமைந்து - சிறந்த அறிவுபெற்று, எல்லை இல் நூல் கடல் ஏற நோக்கிய - கணக்கற்ற நூற்கடல்களின் கரை கண்டு ஏறுமாறு கருதியுள்ள, நவை அறு நல் இயல் கவிஞர் நாவரும் - குற்றம் தீர்ந்த நல்ல இயல்புடைய கவிகளின் நாவினின்று அடுத்தடுத்து எழுகின்ற, சொல் என - சொற்களைப் போன்று, தொலைவு இலா தூணி தூக்கினான் - குறைவில்லாத அம்பருத் தூணியைத் தோளில் தொங்கவிட்டுக் கொண்டான்.

மொழிகள் தம்முள் வேறுபாடுடைமையின் பல்லியல் எனப் பட்டது; தனி மொழிகளில் மட்டும் அன்றி, கிளை மொழிகளிலும் பிராந்திய மொழிகளிலுமே வேறுபாடு காணப்படும். இந்த மொழி வேறுபாட்டின் காரணம் தட்ப வெட்பங்கள், பேசும் கருவிகளின் அமைப்பு முதலிய பல என்ப. பாடு - சிறப்பு. பிறப்பிலேயே கவியியற்றும் ஆற்றல் வாய்ந்து பல மொழிகளின் பயிற்சி யும் பெற்று, அறிவு நூல்கள் பலவும் கற்றவன் சொல், பொருட் சிறப்பும் பெருக்கும் உடையனவாகலின் நல்லியல் நவையறு கவிஞர் நாவரும் சொல், தூணிக்கு உவமையாக்கப்பட்டது. எல்லையில் நூற்கடல் எனினும், 'அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா துலகநூல் ஓதுவது' (நாலடி. 140) பயனின்றாகலின், அறிவு நூல் களையே இங்குக் கொள்க. 'கற்க கசடறக் கற்பவை' (குறள். 391) என்றாராகலின் அறிவு நூல்களையே கற்பவை என்றும், அவை ஐயம் திரிபு அறியாமை அகலக் கற்றலேமேல் என்பான், கசடற என்றும், தான் ஞேன்றியாகக் கல்லாது பிற்றை நிற்றல் முனியாது அறிஞரையடுத்துக் கற்றலே சிறந்தது என்பார் கற்க என்றும் கூறப்பட்டது. இங்ஙனம் கற்ற கவிஞரின நாவில் தட்டுத் தடை யின்றிச் சொற்கள் வருதல்போன்று இராமபிரான் அம்பருத் தூணியினின்றும் அம்பு எழும் என்றமை காண்க. உண்மைக் கவியின் இயல்பினை மேல்வரிச் சட்டமாக இவ்வாசிரியர் பல இடங்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


களிலும் குறிப்பிடுவர். சான்றோர் கவியின் இயல்பினை கூறுதற்குக் கோதாவரியை உவமை கூறியது, சூர்ப்பணகைப் படலம் தொடக்கச் செய்யுளிற் காண்க; (ஒப்பு): 'புலவர் சொற்றுறை புரிந்தன போன்றன புங்கம்' (யுத்த. கும்ப. 226); 'நற்பெருங் கல்விச் செல்வ நவையறு நெறியை நண்ணி, முற்பய முணர்ந்த தூயோர் மொழியொடும் பழகிமுற்றி' (யுத்த. களியாட்டு. 6); 'நல்லியற் கவிஞர் நாவிற் பொருள்குறித் தமர்ந்த நாமச், சொல்லெனச் செய்யுள் கொண்ட தொடையென.......... பல்லலங்காரப் பண்பே காகுத்தன் பகழி' (யுத்த. 1232); அமங்கல மில்லாத சொற்களை பயிலும் நாவர் என்பார் நவையறு கவிஞர் என்றார். சிறந்த கவிஞர்கட்குச் சொற்கள் அநாயாசமாக வரும் என்பார் நாவருஞ் சொல்லென்றார்.

பி - ம். 1. உவகுறுபாடல்; பாடமைத்து, பாணமைத்து, பாடமை.
2. நூற்கட லெய்த.
3. கவிஞர் நாவிடைச்.
4. சேர்த்தினன். 114

1070. கிளர்மழைக் குழுவிடைக் கிளர்ந்த மின்னென
அளவறு செஞ்சுடர்ப் பட்ட மார்த்தனன்
இளவரிக் கவட்டிலை யாரொ டேர்பெறத்
துளவொடு தும்பையுஞ் சுழியச் சூடினன்.

கிளர் மழை குழுவிடை - எழுச்சி கொண்ட மேகத்தின் தொகுதியில், கிளர்ந்த மின் என - விளங்கிய மின்னல் போன்று புலப்படுமாறு, அளவு அறு செம் சுடர் பட்டம் ஆர்த்தனன் - (நெற்றியில்) அளவில்லாத செவ்விய ஒளியினையுடைய வீரப் பட்டம் கட்டிக் கொண்டான்; இள வரி கவடு இலை ஆரொடு - முற்றாத நரம்புகள் அமைந்த கிளைகளில் இலைகளையுடைய ஆத்தி மாலையுடன், ஏர்பெற - அழகு அமைய, துளவொடு தும்பையும் சுழிய சூடினன் - துளசி மாலையோடு போர்க்குரிய தும்பைத் தாரையும் வட்டமாக அணிந்தான்.

மேகத்தில் விளங்கும் மின்னல் இங்கே நெற்றிப்பட்டத்துக்கு உவமையாக்கப்பெற்றது. இராமபிரான் தன் குலத்துக்குரிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மாலையோடு போர்க்குரிய மாலை சூடியதும் இங்குக் கூறப்பெற்றன. துளவு திருமாலுக்குரிய மாலை. ஆத்தி சூரிய குலத்தரசரான சோழர்க்குரியது. இராகவன் சூரியவங்கிசத்தவன் ஆகலின் இவ் வாத்திமாலை கூறினர். சோழர் அரசியலில் தொடர்பு ஆசிரியர்க் குப் பெரிதும் உண்மையின் இம்மாலையைப் புகழ்ந்து கூறினர். இவ்வாசிரியர் இரண்டாவது குலோத்துங்கன் காலமென்று சிலர் கூறுவர். இதனைச் சென்னிநாட் டெரியல் வீரன் தியாகமா விநோ தன்' (யுத்த. மருத்து. 58); என்பது கொண்டு காண்க; மற்றும், கம்பன் தந்தை பெயர் ஆதித்தன் என்பர். இஃது ஓர் சோழன் பெயர். ஆசிரியர் இவன் காலத்திருந்தவர் என்றும் சிலர் கூறுவர். மற்றும் பொன்னி நாட்டினைப் பலவிடங்களிலும் தம் காவியத்தில் கம்பர் கூறியமை கொண்டு, சோழ மன்னனிடம் இவர் கொண்ட பற்றினை அறியலாம். இப்பற்றுப்பற்றியே இராமபிரானுக்கும் ஆத்திமாலை கூறினர் என்க. தும்பை: போர்மாலை; புறநானூற்றில் காண்க. ஆர்க்கு அல்லது சிது கிளைகளாக இருக்குமாகலின் 'கவட்டிலை ஆர்' என்ருர். ஆர் - ஆத்தி; 'போந்தை வெம்பே யாரென வரூஉம், மாபெருந் தானையர் மலைந்த பூவும்' (தொல். புறத். 5); 'ஆர்புனை ஒலியனின் முன்னோ ரெல்லாம்' (புறநா. 43); 'நின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே' (புறநா. 45); 'ஆர்நார்ச் செறியத் தொடுத்த கண்ணி' (புறநா. 80); 'சூரிய வங்கிசத்துக்கு ஆத்திமாலையும், பரத்துவத்துக்குத் துழாய் மாலையும், அதிரப் பொருவதற்குத் தும்பை மாலையும் சூடினுன் என்க.

பி - ம். 1. குழுவிடைக் கிடந்த.
2. வளர்பிறை நெற்றியிற், அளவறு நெடுஞ்சுடர்ப், வளமிகு நெடுஞ் சடைப், ஆர்த்துமேல்.
3. எற்படத்.
4. தும்பையின்; சுழியம், செறிய.

115

1071. ஓங்கிய வுலகமு முயிரு முட்புறந்
தாங்கிய பொருள்களுந் தானுந் தானென
நீங்கிய தியாவது நினைக்கி லோமவன்
வாங்கிய வரிசிலை மற்றென் றேகொலாம்.

ஓங்கிய உலகமும் - அடுக்கடுக்காக உயர்ந்த உலகங்களும், உயிரும் - (அவற்றின்கண் உள்ள) உயிர்களும், உட்புறம் தாங்கிய


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பொருள்களும் - அவற்றுடன் கலந்துள்ள இயங்கு பொருள் நிலைத் திணைப் பொருள்களும், தானும் தான் என - தானும் தானே (பிற ரில்லை) என்னும்படி, (பரம்பொருளாக இருந்தும் அப்பொருள்களின் நின்றும்) நீங்கியது - வேருகவிருக்கும்; (மனித உருவில் வந்து நிற்கும் விதம்), யாவது - இன்னவாறு என்று, நினைக்கிலோம் - நாம் உணர்கிலோம்; (இவ்வண்ணம் வேறுபட்டு வந்துள்ள அந்தப் பிரான் போன்றே), அவன் - அந்த இராமபிரான், வாங்கிய வரிசிலை மற்றொன்றே கொல் ஆம் - அவன் கையிற் கொண்ட கட்டமைந்த வில்லும் பிறிதொன்றே கொல்?

இராமபிரானை லீலா மானுஷ விக்ரகம் என்பர். தான் மனிதனாக அவதரித்ததற்கேற்ப நடித்துக் காட்டினன் அப்பெரு மான். தன் இச்சையால் வேண்டிய உருக்கொள்வன். அந் நிலையில் அவன் பரம்பொருளாக இருந்தும் அவற்றினின்றும் வேருக விளங்கி நிற்பன். 'உலகெலாமாகி வேரு யுடனுமா யொளியா யோங்கி' (சிவ. சித்தி. 2:1) என்ற செய்யுள் இங்கே நினைவுகூரத்தகும். இவ்வாறு பரம்பொருளாக இருக்கும் பெரு மான் உருவத் திருமேனிகொண்டு விளங்குவது எவ்வாறு என நாம் அறியும் ஆற்றல் உடையோமல்லோம். அதுபோன்றே அவன் கைக்கொண்ட வில்லும் சாதாரணமான வில் போன்று காணப்படவில்லை எனப்பட்டது. இச்செய்யுளும் ஐயம் என்பது ஐயர் குறிப்பு. எல்லா வுலகமும் தன்னிடத்தே யிருக்கக் காக்கும் பெருமான் தன்னைவிட்டுப் பிரிந்துபோனது எந்தப் பதார்த்த மென்று பயந்து தன்னைக் காக்கச் சிலை எடுத்தான்?; ஆகையால் இந்தச் சிலை தன்னிலும் உயர்ந்த தெய்வமோ என்பது பொருள்.

பி - ம். 1. ஒப்புறத், ஒப்புற.
2. மறைகளும் பொருளும், தானெனின்.
3. நினைந்திலேம், நினைக்கிலேம்.
4. கொலோ.

116

1072. நாற்கட லுலகமும் விசும்பு நாண்மலர்
தூர்க்கவெஞ் சேனையுந் தானுந் தோன்றினன்
மாற்கடல் வண்ணன்ருன் வளரு மாலிரும்
பாற்கட லோடும்வந் தெதிரும் பான்மைபோல்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மால் கடல் வண்ணன் - கரிய கடல் போன்ற நிறம் உடைய வனான திருமால், தான் வளரும் மால் இரு பால்கடலோடும் வந்து எதிரும் பான்மைபோல் - தான் கண்வளர்கின்ற (அறிதுயில் கொள்கின்ற) மிகவும் பெரிய பாற் கடலுடனே வந்து எதிர்ப் பட்டாற் போல, (இராமபிரான்) நால் கடல் உலகமும் - நான்கு புறத்துக் கடலால் சூழப்பட்ட பூவுலகத்தாரும், விசும்பும் - விண் ணுலகத்தாரும், நாண்மலர் தூர்க்க - அன்றலர்ந்த மலர்களை இறைத்துப் பூமியிடங்களை நிறைக்க, வெம் சேனையும் தானும் - கொடிய குரங்குச் சேனையும் தானுமாக, தோன்றினான் - காணப் பட்டான்.

குரங்குச் சேனைக்குப் பாற்கடல் உவமை. பாலாழியிற் பள்ளி கொள்ளும் பரமன் இராமபிரானாகத் தோன்றியதற்கேற்ப, அவன் யோகத்துயில் பயிலும் பாற்கடல் வானர சேனையாக வந்தது போலும் எனப்பட்டது; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. (ஒப்பு): 'விளக்கொளி பரத்தலிற் பாலின் வெண் கடல், வளத்தடந் தாமரை மலர்ந்த தாமென' (யுத்த. 321); 'நாமப் பாற்கடல் சுற்ற விற்கை வடவரை பாங்கு நிற்பக்' (யுத்த. 435); 'கார்க்கடல் புறத்த தாகக் கவிக்கடல் வளைந்த காட்சி, பாற்கட லழுவத் துள்ள தொத்தது' (யுத்த. 911).

பி - ம். 3. வண்ணனை யருளுமாறிரு, மாபெரும்.

117

4. பான்மையான்.

## இராமபிரான் இலக்குவனுடன் சேர்தல்

1073. ஊழியி னுருத்திர னுருவு கொண்டுதான்
ஏழுய ருலகமு மெரிக்கின் றானென
வாழிய வரிசிலைத் தம்பி மாப்படைக்
கூழையி னெற்றிநின் றானைக் கூடினான்.

ஊழியின் - ஊழிக்காலத்தில், தான் - இராமபிரான், உருத்திரன் உருவு கொண்டு - உருத்திரமூர்த்தியின் வடிவம் தரித்து, ஏழ் உயர் உலகமும் எரிக்கின்றான் என - ஏழாக உயர்ந்துள்ள உலகங்கள் அனைத்தையும் தீயிடுபவன்போன்று, மாபடை கூழையின் நெற்றி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நின்றான் - பெரிய குரங்குச் சேனையுடைய பின்னணியின் முன்பு, நின்றவனான, வாழிய வரிசிலை தம்பியை - வாழ்ச்சியையுடைய கட்டமைந்தவில்லை ஏந்தி நின்ற தம்பி இலக்குவனை, கூடினான் - சேர்ந்தான்.

திருமாலே அயனாகப் படைத்தும், அரியாகக் காத்தும், அரனாக அழித்தும் தொழில் இயற்றுவன் என்பது வைணவ நூற் கொள்கை; (ஒப்பு): 'உடம்புருவில் மூன்றொன்றாய் மூர்த்தி வேறாய், உலகுய்ய நின்றானை' (பெரியதிரு. 2:4:3; 'மூவருமாய் முதலாய மூர்த்தி' (பெரியதிரு. 4:1:2); 'தன்னாலே தன் உருவம் பயந்த தானாய்' (பெரியதிரு. 6:6:6). கூழை: படையின் பின்னணி. இலக்குவனும் திருமாலின் அம்சம். ஆதிசேடன் அவதாரம், அவனும் உருத்திரனை ஒப்பான் என்பது 'முற்றா மதிய மிலைந்தான் முனிந்தானை யன்னான்' (அயோத்தி. நகர்நீ. 136) என்றது கொண்டு காண்க.

பி - ம். 1. உருவம்; கொண்டநாள்.
2. அவிக்கின்றான்; விக்கின்றான், நீக்குந்தான்.
4. கூழையன்; நெற்றியின்றானை கூட்டினான். 118

## இரண்டு சேனையும் பொருதல்

1074. என்புழி நிருதரா மேழு வேலையும்
மின்பொழி யெயிறுடைக் கவியின் வெள்ளமும்
தென்புலக் கிழவனுஞ் செய்கை கீழ்ப்படப்
புன்புலக் களத்திடைப் பொருத போலுமால்.

என்புழி - என்ற அளவில், தென் புலம் கிழவனும் செய்கை கீழ்பட - தென்திசைப் பாலகனான யமனும் (தன் செயலாகிய) கொலைத் தொழில் தாழ்ந்தது என்னுமாறு, நிருதராம் ஏழு வேலையும் - அரக்கர்களாகிய ஏழு கடலும், மின்பொழி எயிறு உடை கவியின் வெள்ளமும் - ஒளி விடுகின்ற பற்களையுடைய வெள்ளம் போன்ற குரங்குப் படையும், புன்புலம் களத்திடை பொருத போலும் - இழிக்கத்தக்க இடமான போர்க்களத்தில் தம் முட் போர் செய்தனபோலும். ஆல் - அசை.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தென்புலக் கிழவன் - யமன். 'தென்புலத்தார் என்பதற்குப் பிதிரர்; பிதிரராவார் படைப்புக் காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட் சாதி: அவர்க்கு இடம் தென்திசை யாதலின், தென் புலத்தார் என்றார் என்பது (திருக்குறள். 43. பரி. உரை). புன்புலம்: 'புன்புலப் பிறவியின் பகைஞன் போலுமால்' (யுத்த. 326); போலும்: ஒப்பில் பொலி. தென்புலக் கிழவனும்: உம்மை உயர்வு சிறப்பு.

பி - ம். 2. எயிற்றுடைக்.

3. கிழவன்றன்; நீட்டிடப், நிக்கிடப். 119

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

நிருதர்கள் எவருமே நோக்கி நின்றுபோர்
பொருதனர் அயில்முதற் படைகள் போக்கியே
மரமொடு மலைகளைப் பிடுங்கி வாநரர்
செருவிடைத் தீயவர் சிதறத் தாக்கினர்.

## இருதிறத்துச் சேனையும் மிகுதியாக இறத்தல்

1075. தெற்கிது வடக்கிது வென்னத் தேர்கிலார்
பற்குவை பரந்தன குரக்குப் பல்பிணம்
பொற்குவை நிகர்த்தன நிருதர் போர்ச்சவங்
கற்குவை நிகர்த்தன மழையுங் காட்டின.

இது தெற்கு இது வடக்கு என்ன தேர்கிலார் - இது தென் திசை, இது வடதிசை என்று (பார்ப்பவர்) தெளிய முடியாதபடி, (பிணங்களின்) பல்குவை, பரந்தன - பரவி நின்றன, (அவற்றுள்) குரங்கு பல்பிணம் - குரங்கின் பலவாகிய சவங்கள், பொன்குவை நிகர்த்தன - வெண் பொன் (வெள்ளி) குவியலைப் போன்று காணப்பட்டன; போர் நிருதர் சவம் - போர்க்களத்திலே பட்ட அரக்கரின் பிணங்கள், கல்குவை நிகர்த்தன - கற்குவியல்களை ஒத்து விளங்கின, மழையும் காட்டின - (அன்றியும்) மேகத் தொகுதியின் தன்மையையும் காட்டி நின்றன.

தெற்கு வடக்கு என்றது ஏனைத்திசைகட்கும் உபலக்கணம். நிருதர்கள் கருநிறம் ஆகலின் அவர்கள் சவக்குவியல் கருங்கற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குவியல் எனப்பட்டது. கருநிறம்பற்றிய மழையும் உவம்மாயிற்று. பல்குவை எதுகை நோக்கிப் பற்குவை என்று வந்தது. பற்குவை - பற்களின் குவியலுமாம். போர்ச்சவம் - போரிற்பட்ட சவம் என்க. இனி வைக்கோற்போர் என்றவிடத்துப் போர் ஒரு குவையைக் குறித்தலின் சவப்போர் எனக் கொண்டு பிணக்குவியல் என்னுமாம். மழையும் காட்டின; மேகம் போன்றும் காணப்பட்டன என்க. மூன்றும்டியில் பொன் வெண்பொன் அல்லது வெள்ளியென்க, மழை - மேகம். 'மழை தொடர் மஞ்ஞை யென்ன' (சுந்தர. 211): 'உழைக்குல மழைக்குல மனைய' (சுந்தர. 418).

பி - ம். 1. தெற்கிவை, வடக்கிவை; என்னுந் திக்கெலாய்.

4. காட்டினுன். 120

## அரக்கர் சேனை இறத்தல்

1076. துமிந்தன தலைகுடர் சொரிந்த தேர்க்குலம்
அவிந்தன புரவியு மாளு மற்றன
குவிந்தன பிணக்குவை சுமந்து கோணிலம்
நிமிர்ந்தது பரந்தது குருதி நீத்தமே.

தலை துமிந்தன - தலைகள் துண்டுபட்டன; குடர் சொரிந்த - குடல்கள் சிந்தின; தேர்குலம் அவிந்தன - தேர்க் கூட்டங்கள் சிதைந்தன; புரவியும் ஆளும் அற்றன - குதிரைகளும் ஆட்களும் துண்டுபட்டனர்; குவிந்தன பிணம் குவை சுமந்து - குவிந்தனவாகிய பிணத் தொகுதிகளைத் தாங்கி, கோள் நிலம் நிமிர்ந்தது - வலிய நிலம் உயர்ந்தது, குருதி நீத்தம் பரந்தது - இரத்தவெள்ளம் பரவிற்று. ஏ: அசை.

துமித்தல்: 'சரஞ்சிரந் துமித்த' (ஆரணிய. 512); 'நாசி துமிப்பதன் முன்' (ஆரணிய. 1086); குடல் - குடர்; போலி. இரண்டாம் அடி மூன்றும் அடி முதற்சீர்கள் இனவெதுகை. ஆள் - காலாள். கோள் - வலிமை; எல்லாப் பொருள்களையும் தாங்கி நிற்றலின் கோள் நிலம் எனப்பட்டது. 'இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்' என்ற நன்னூற் சூத்திரத்துக்கு உதாரணமாக 'நிலம் வலிது, என்றமை காண்க, நீத்தம் - வெள்ளப்பெருக்கு; (ஆரணிய. 245); 'மொய்புணீர், நித்தமோடி நெடுந்திசை நேடுற' (ஆரணிய. 550).

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 2. புரவியுந்தாரும்.

3. குவை சுமந்த ; கோளில. 121

1077. கடுங்குரங் கிருகையா லெற்றக் கால்வயக்
கொடுங்குரந் துணிந்தன புரவி குத்தினல்
ஒடுங்குரந் துணிந்தனர் நிருத ரோடின
நெடுங்குரம் பெனநிறை குருதி நீத்தமே.

கடும் குரங்கு இருகையால் எற்ற - கொடிய குரங்குகள் (தமது) இரண்டு கரங்களாலும் தாக்க, கால் வயம் கொடு குரம் - கால் வலிமையையும் வளைந்த குளம்புகளையும் கொண்ட, புரவி துணிந்தன - குதிரைகள் துண்டுபட்டன, குத்தினல் - கைக்குத்தினல், உரம் ஒடுங்க - வலிமை ஒடுங்க, நிருதர் துணிந்தனர் - அரக்கர்கள் வெட்டப்பட்டுத் துண்டாகினர் ; நெடு குரம்பு என - நீண்ட ஓர் அணைக்கட்டிலிருந்து நீர் பெருகுவதுபோன்று, நிறை குருதி நீத்தம் ஓடின - போர்க்களத்தில் நிறைந்து நின்ற உதிரவெள்ளம் பாய்ந்தன. ஏ - அசை.

கால் வயம் - கால்களின் வலிமை. கொடுங்குரம் - வளைந்த குளம்பு. குதிரைகட்கு வளைந்த ஒற்றைக் குளம்பாதல் காண்க. இச்செய்யுள் திரிபு என்னும் சொல்லணியில் அமைந்தது. குரம் என்ற சொல் வெவ்வேருக அமைந்து பொருள் தந்தமை காண்க. குரம்பு - அணைக்கட்டு. 'விடுபாய் பரி குரம்பா' (ஆரணிய. 455) ; குரம்பு - வாய்த்தலை. நீத்தத்திற் குரம்பென நிருதர் ஓடினர் என்றும் கூறுவர்.

பி - ம். 2. குத்தினில்.

3. ஒடுங்குரந் துணிந்தன, துறந்தன.

4. நெடுங் குரம்பினில். 122

## இராவணன் வில்லின் நாணெலியால் நிலை கெடுதல்

1078. அவ்வழி யிராவண னமர ரஞ்சத்தன்
வெவ்விழி நெருப்புக வில்லி னுணினைச்
செவ்வழிக் கோதையிற் றெறிக்கச் சிந்தின
எவ்வழி மருங்கினு மிரிந்த வானரம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அ வழி -(அவ்வாறு அரக்கர்கள் பெருவாரியாக இறந்த) அச் சமயத்து, இராவணன் - இராவணன், அமரர் அஞ்ச - தேவரும் பயம் எய்துமாறு, தன் வெ வழி நெருப்பு உக - தன்னுடைய (சினத்தால்) கடுமைவாய்ந்த வெவ்விய கண்களிலிருந்து தீப்பொறி பறக்க, வில்லின் நாணினை - வில்லினுடைய நாண் கயிற்றை, செ வழி கோதையில் தெறிக்க - செவ்விய வகையில் அணிந்த கைத்தோலுறையுடன் கூடித் தெறித்த அளவில், இரிந்த வாநரம் - அகன்ற குரங்குகள், எ வழி மருங்கினும் சிந்தின - எல்லாப் புறங்களிலும் சிதறின.

கோதை: விரலுறை, நாணோசையாற் பகைவரை அச்சுறுத் தல்; கலித். 15, 1, 2; 125. நிகும்ப. 2, 8. மற்றும் கந்த: தாரக: 69.

பி - ம். 1. அமராஞ்சிட.

3. வெவ்வழி.

3. தெறிப்ப, சிந்தியாங்கு, சிந்தினன். 123

இங்கு அதிகப் பாடல்கள் :—

அண்டகோ ளகைவெடித் தவனி கீண்டுற
எண்டிசா முகங்களும் இடிய ஈசனைக்
கொண்டவான் கயிலையும் சிகர கோடிகள்
விண்டுநீங் கியதெனில் விளம்ப வேண்டுமே. 1

வச்சிர வரைப்புயத் தரக்கன் வாங்கிய
கைச்சிலை நாணொலி கலந்த காலையில்
அச்சமில் புரந்தரன் ஆதி தேவர்கள்
உச்சிகள் பொதிரெறிந் துரம டங்கினர், 2

1079. உருமிடித் துழியுலைந் தொளிக்கும் நாகமொத்
தீரியலுற் றனசில விறந்த வாற்சில
வெருவலுற் றனசில விம்ம லுற்றன
பொருகளத் துயிரொடும் புரண்டு போஞ்சில.

உரும் இடித் துழி - இடியிடித்த போழ்தில், உலைந்து ஒளிக் கும் - வருந்தி ஒளிக்கின்ற, நாகம் ஒத்து - நல்ல பாம்பினை ஒத்து,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சில - சில குரங்குகள், இரியல் உற்றன - நிலைகெட்டு ஓடின, சில இறந்த - சில இறந்துபட்டன, சில வெருவல் உற்றன - சில அச்சம் அடைந்தன, சில விம்மல் உற்றன - (சில குரங்குகள்) தேம்பி அழுதன, சில பொருகளத்து உயிரொடும் புரண்டு போம் - சில குரங்குகள் பொருகின்ற களத்தில் உயிருடன் புரண்டு ஓடின.

வாநரங்கள் நிலைகெட்டோடின தன்மை இங்கு குறிக்கப்பெற் றது. ஆல்: அசை. இடிக்கு அரவம் அஞ்சுதல். 'அசனி கேட்ட வளையுறை யரவம்' (யுத்த. நாகபாசப். 284); 'விரிநிற நாகம் விடருளதேனும், உருமின் கடுஞ்சினம் சேணின்று முட்கும்' (நாலடி. 164).

பி - ம். 1. உருமிடித் துலைந்துபோய்.

3. விம்மி விம்மலாற்.

4. புரண்டவாற்சில, புரண்ட வாநரம். 124

1080 பொரக்கரு நிறநெடு விசும்பு புண்பட
இரக்கமி லிராவண னெறிந்த நாணினுல்
குரக்கின முற்றதென் கூறிற் றன்குலத்
தரக்கரு மனையதோ ரச்ச மெய்தினர்.

பொர - போர்புரியுமாறு, இரக்கமில் இராவணன் - இரக்கமற்ற இராவணன், கருநிறம் நெடுவிசும்பு புண்பட - கரியநிறம் கொண்ட நீண்ட ஆகாயமும் புண் உறும்படி, எறிந்த நாணினுல் - தெறித்த தில் எழுந்த நாண் ஒலியால், கூறில் - சொல்லுமிடத்து, தன் குலத்து அரக்கரும் - தன் குலத்தைச் சேர்ந்தவரான அரக்கர்களும், அனையதோர் - (வாயினுல் பகர்தற்கும்) அரிய அத்தகைய, அச்சம் எய்தினர் - பயம் அடைந்தனர்; குரக்கினம் உற்றது என் - குரங்குத் திறள் அடைந்த தன்மையைச் சொல்லவும் வேண்டுமோ?

இலங்காதிபன் செய்த நாண்ஒலியின் ஓசையால் அவன் இறத் தவர்களான அரக்கர்களே நடுங்கினர் எனின், குரங்குகளின் நிலையைக் கூறவேண்டுவதில்லை என்றவாறு. நாண் - நாணொலி.

141

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. போரக் கருதிய, கருதியே, கருதின ; புண்டர, போழ்பட.

3. கூற்றன் தன்குலத்து.

4. இளைய. 125

1081. வீடண னொருவனு மிளைய வீரனும்
கோடணை குரங்கினுக் கரசுங் கொள்கையான்
நாடினர் நின்றனர் நாலு திக்கினும்
ஓடின ரல்லவ ரொளித்த தும்பரே.

ஒருவன் வீடணனும் - ஒப்பற்ற வீடணனும், இளைய வீரனும் - இளைய வீரனான இலக்குவனும், கோடு அணை குரங்கினுக்கு அரசும் - மரக் கிளைகளில் உலாவும்படியான குரங்குகட்கு அரசனான சுக்கிரீவனும், கொள்கையான் நாடினர் நின்றனர்-மனத்தினால் புரிய வேண்டுவதை ஆராய்ந்தவராய் நின்றனர் ; அல்லவர்-இவரல்லாத பிறர், நாலு திக்கினும் ஓடினர் - நான்கு திசைகளிலும் ஓடினர், உம்பர் ஒளித்தது - வானத்தவரும் போய் மறைந்து கொண்டனர், ஏ : அசை.

இளைய வீரன் - இலக்குவன், 'வில்லார்தோ ளிளையவீர' (கிட்கிந்தா. 61) ; கோடணை குரங்கு - இத்தொடர் சாகாமிருகம் என்ற வடசொல்லின் நேர்த் தமிழாக்கம். கோடு - மரக்கிளை. 'கோடுசங் கூதும் கொம்பு மரக் கொம்பு விலங்கின் கொம்பு' என்பது நிகண்டு. நாடினர் : முற்றெச்சம். உம்பர் - மேலிடத்தவர், இங்கு இடவாகு பெயராக வானவர். இழிவுபற்றி ஒளித்தது எனப்பட்டது. இனி, கொள்கையான் நாடினர் என்பதற்குச் சிறந்த கோட்பாட் டினையுடைய இராமபிரானைப் பின்பற்றி நின்றனர் எனினுமாம்.

பி - ம். 2. கோடிலர், கோடலர் ; கோடுறு, கோடுறை, கொள்கைதான். 126

## வேறு

1082. எடுக்கினு னிலத்தை யேந்து மிராவண னெறிந்த நாளல்
நடுக்கினு லுலகை வெள்ளி நாகத்தை யெடுக்கப் பெற்ற
மிடுக்கினன் மிக்க வானோர் மேக்குயர் வெள்ள மேனுள்
கெடுக்குநா ளூருமி னுர்ப்புக் கேட்டன ரென்னக் கேட்டார்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


எடுக்கின் - (பெயர்த்து) எடுக்கவேண்டும் என்று கருதினால், நானிலத்தை ஏந்தும்-(இந்தப்) பூமியைப் பேர்த்தெடுக்கும் வலிமை சான்றவனும், வெள்ளி நாகத்தை எடுக்கப்பெற்ற மிடுக்கினன் - கயிலாய மலையைப் பெயர்க்கக் கூடிய வன்மையனுமான, இராவணன் எறிந்த நாணால் - இராவணன் தெறித்துச் செய்த நாண் ஒலியால், உலகை நடுக்கினன் - உலகத்தை நடுங்கச் செய்தான்; மிடுக்கினன் மிக்கவானோர் - வலிமையாற் சிறந்த தேவர்கள், மேக்கு உயர் வெள்ளம் - மேலே உயர்கின்ற பிரளய வெள்ளம், மேல் நாள் - மேல் வரவிருக்கின்ற நாளாகிய, கெடுக்கும் நாள் - உலகினை அழிக்கும் ஊழிக்காலத்தில் கேட்கப்படுகின்ற, உருமின் ஆர்ப்பு கேட்டனர் என்ன - இடியின் பேரொலியைச் செவியேற்றாற்போன்று, கேட்டார்-(நாண் ஒலியைக்) கேட்டார்கள்.

இவ்வுலகத்தாரை நடுங்கச் செய்தது போன்றே, வானவரையும் நடுங்கச் செய்தது இராவணன் செய்த நாண் ஒலி எனப்பட்டது. எடுக்கின் நானிலம் எனப்பிரிக்க. முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற நான்கு நிலங்களால் ஆனமையின் பூமிக்கு நானிலம் எனப் பெயர் எழுந்தது என்ப. வெள்ளம் - ஊழிப்பிரளயம், மேல் நாள் - இனி வரப்போகிற கடையூழி நாள். இப்பாடல் சில பிரதிகளில் இல்லை. மிடுக்கினன் என்பது இடைநிலை விளக்காக முன்னும் பின்னும் இயைக்கப்பட்டது.

இங்கு அதிகப்பாடல்கள் :—

இப்புறத் துயிர்க ளெல்லாம் இரிந்திட வரக்கர் கோமான்
கைப்படு சிலையை வாங்கிக் காலமா மழையுஞ் எஞ்ச
முப்புறத் துலக மெல்லாம் மூடிய தென்ன மூளும்
அப்புமா மாரி சிந்தி யண்டமும் பிளக்க வார்த்தான்.

ஆர்த்தவன் பகழி மாரி சொரிந்தரிச் சேனை எல்லாம்
தீர்த்தொரு கணத்திற் போக்கச் செங்கதிர்ச் சிறுவன் தானும்
பார்த்துள மழன்று பொங்கிப் பருவலி யரக்க னோடும்
போர்த் தொழிற் கொருவன் போலப் பொருப்பொன்றுங்
[கேந்திப் புக்கான்.

பி - ம். 1. எடுக்கும், யென்னும், ஞாணின், நாணல்.
2. நடுக்கின னென்ப தல்லால், நல்கின னென்னாற்பாற்றே.
4. செருக்கு நாண் மழையின், கேட்டான்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1083. ஏந்திய சிகர மொன்றங் கிந்திரன் குலிச மென்னக்
காந்திய வுருமின் விட்டான் கவிக்குலத் தரச னக்கல்
நீந்தரு நெருப்புச் சிந்தி நிமிர்தலும் நிருதர்க் கெல்லாம்
வேந்தனும் பகழி யொன்றால் வெண்டுக ளாக்கி வீழ்த்தான்.

கவிகுலத்து அரசன் - குரங்குக் கூட்டத்துக்கு அரசனான சுக்கிரீவன், அங்கு - அப்பொழுது, காந்திய உருமின் - உக்கிரமாக விழுகின்ற இடிபோன்ற, ஏந்திய சிகரம் ஒன்று - ஏந்திய மலைச்சிகரம் ஒன்றினை, இந்திரன் குலிசம் என்ன - இந்திரனது வச்சிரப் படை போல, விட்டான் - (இராவணன் மீது) வீசினான், அ கல் - அந்த மலைச்சிகரம், நீந்த அரு நெருப்பு சிந்தி - கடத்தற்கருமையான தீயினைக் கக்கி, நிமிர்தலும் - விரைந்து எழுந்த அளவில், நிருதர்க்கு எல்லாம் வேந்தனும் - அரக்கர்க்கெல்லாம் மன்னனான இராவணனும், பகழி ஒன்றால் வெள் துகள் ஆக்கி வீழ்த்தான் - ஓரம்பினால் வெண்ணிறப்பொடியாக்கித் தள்ளினான்,

குலிசம் - வச்சிராயுதம். அக்கல் - அந்த மலைச்சிகரம்.

பி - ம். 1. ஏந்திய கோடும், ஆங்கொன்று, அங்கொன்று.
2. காந்தியது, நக்கான்.
3. நெருப்புச் சிந்த.
4. வெறுந்துகள், விட்டான்.



1084. அண்ணல்வா ளரக்கன் விட்ட வம்பினா லழிந்து சிந்தித்
திண்ணெடுஞ் சிகர நீறாய்த் திசைதிசைச் சிந்த லோடும்
கண்ணெடுங் கடுந்தீக் காலக் கவிக்குலத் தரசன் கையால்
மண்மகள் வயிறு கீற மரமொன்று வாங்கிக் கொண்டான்.

அண்ணல் வாள் அரக்கன் - பெருமையாளனாகிய கொடிய இராவணன், விட்ட அம்பினால் - ஏவிய அம்பினால், திண் நெடு சிகரம் அழிந்து சிந்தி - (சுக்கிரீவன் எறிந்த) வலிய உயர்ந்த மலைச்சிகரம் அழிந்து வீழ்ந்து, நீறாய் திசை திசை சிந்தலோடும் - தூள் தூளாக திக்குகள் எங்கும் சிதறுதலும், கவிகுலத்து அரசன் - குரங்குக் குலத் தலைவனான அந்தச் சுக்கிரீவன், கண் நெடுகடும்தீ கால - தன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



விழிகள் மிக்க நெருப்பை வெளி யுமிழ, கையால் - தன் கையினால், மண்மகள் வயிறு கீற - பூமகளின் வயிறு பிளக்கும்படி, மரம் ஒன்று வாங்கி கொண்டான் - மரம் ஒன்றைப் பெயர்த்து எடுத்துக்கொண்டான்.

திசைதிசை (கலிங். 26 ; 13 ; 6 ; 18 ; 135 (6). சிகரம் நீறு பட்டவளவில், சுக்கிரீவன் சினந்து நெடிய ஓர் மரத்தினைப் பெயர்க்கவே, அந்த மரமிருந்த இடம் பெரும்பள்ளம் ஆயினமையின், பூமிதேவியின் வயிறு கீறப்பெற்றது போலிருந்தது எனக் கூறப்பட்டது. பூமியைப் பெண்ணாகக் கூறுவது கவிசமயம். 'நிலமகள் முகமோ' (பால. நகர. 2); 'மண்ணக மடந்தையை மயக்கொழிப்பவள் போல்' (சிலப். 16 ; 40); 'வண்ணச்சீறடி மண்மகள் அறிந்திலள்' (சிலப். 15 ; 138). மண்மகள் இலம்பகம், சீவக சிந்தாமணியில் ஓர் பகுதியாதலும் காண்க.

பி - ம். 1. விட்ட வாளியால், அம்பொன்றால் சிந்த.
3. சுண்ணெடுங்.



1085. கொண்டமா மரத்தை யம்பின் கூட்டத்தாற் காட்டத் தக்க
கண்டமா யிரத்தின் மேலு முளவெனக் கண்டங் கண்டான்
விண்டவா ளரக்கன் மீது விசும்பெரி பறக்க விட்டான்
பண்டைமால் வரையின் மிக்க தொருகிரி பரிதி மைந்தன்.

கொண்ட மாமரத்தை - (சுக்கிரீவன்) கைக்கொண்ட பெரு மரத்தை, அம்பின் கூட்டத்தால் காட்டத்தக்க - அம்பின் தொகுதிகளைக்கொண்டு காண்பிக்கத்தக்க, கண்டம் ஆயிரத்தின் மேலும் உள - துணுக்குகள் ஆயிரத்தின் மிக்கு உள்ளன, என - என்னுமாறு, கண்டம் கண்டான் - துண்டாடினான் (இராவணன்), (அப்போது) பரிதி மைந்தன் - சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன், விண்ட வாள் அரக்கன் மீது - (அம்மரத்தைப்) பிளந்த இராவணன் மேல், எரி விசும்பு பறக்க - நெருப்பு ஆகாயத்திலே பறக்குமாறு, பண்டை மால்வரையின் மிக்கது ஒரு கிரி விட்டான் - முன்னர் எறிந்த பெரிய மலையினும் பெரிதான ஒரு மலையை வீசி எறிந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கண்டம் காணுதல் - துண்டு பண்ணுதல். சாதாரணமாகத் துண்டுபண்ணுவதிலும் மேலாகப் பற்பல துணுக்குகளாகவும் செய்தான் என்பது இரண்டாம் அடியின் கருத்து.

பி-ம். 2. கடிந்தான் பின்னும்.
3. விண்டலரால், அரக்கர் மீள. 130

1086 அக்கிரி யினையு மாங்கோ ரம்பினு லறுத்து மாற்றித்
திக்கிரி தரப்போர் வென்ற சிலையினை வளைய வாங்கிச்
சுக்கிரீ வன்றன் மார்பிற் புங்கமுந் தோன்ரு வண்ணம்
உக்கிர வயிர வாளி யொன்றுபுக் கொளிக்க வெய்தான்.

(இராவணன்) ஆங்கு- அப்பொழுது, அ கிரியினையும் ஓர் அம்பினுல் அறுத்து மாற்றி - அந்த மலையினையும் ஓரம்பினுல் துணித்து அகற்றி, திக்கு இரிதர - திசைகளில் எல்லாரும் நிலைகுலைந்து ஓடும் வண்ணம், போர் வென்ற - போரில் வெற்றிபெற்ற, சிலையினை வளைய வாங்கி -(தன்) வில்லினை வளையும்படி பண்ணி, உக்கிர வயிரம் வாளி ஒன்று-கடுமையான உறுதி கொண்ட ஓர் அம்பினை, சுக்கிரீவன் தன் மார்பில் - சுக்கிரீவனுடைய மார்பிலே, புங்கமும் தோன்ரு வண்ணம் - அம்பினடியும் வெளியில் காணப்படாதவாறு, புக்கு ஒளிக்க எய்தான் - நுழைந்து மறையுமாறு விடுத்தான்.

திக்கு இரிதர: திசைகள் நிலைகுலைய. தர - துணைவினை. விடுத்த அம்பு சுக்கிரீவன் மார்பிற் புக்கு மறைந்தது என்பார். புங்கமும் தெரியாவண்ணம் எனப்பட்டது. புங்கம் - அம்பு; 'புலவர் சொற்றுறை புரிந்தன போன்றன புங்கம்' (யுத்த. கும்ப. 226). அம்பின்மேல் அம்பாக என்பதைப் புங்காநுபுங்கம் என்பர் வடநூலார். கடுமையும் வன்மையும் வாய்ந்ததென்பதுபட உக்கிர வாளி எனப்பட்டது. புங்கம் : அம்பின் முனை என்பர். 'புங்கமே தோன்ருவண்ணம்' என்பது அதிகாயன் வதைப்படலத்தும் காணலாம் (200). புங்கம் : அம்பின் நுனி என்பர்.

பி-ம். 1. அக்கிரிதனையும்.
2. உளைய வாங்கி.
3. சுடர்விடுபகழி யொன்றும்.
4. உக்கிர மாகவேதா னுடல்புக்கு மூழ்கிற் றன்றே, உக்கிர வயிரவாளி யுடலிற்புக் கழுந்த வெய்தான். 131

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## சுக்கிரீவன் சலித்துவிட அநுமன் வருதல்

1087. சுடுகணை படுத லோடுந் துளங்கினன் துளங்கா முன்னம்
குடதிசை வாயி னின்ற மாருதி புகுந்த கொள்கை
உடனுறைந் தறிந்தா னென்ன வோரிமை யொடுங்கா [முன்னர்
வடதிசை வாயில் வந்து மன்னவன் முன்ன ரானன்.

சுடு கணை படுதலோடும் - எரிக்கின்ற அம்பானது (தன் மீது) தைத்த அளவில், துளங்கினன் - (சுக்கிரீவன்) மனம் தளர்ந்தான்; துளங்கா முன்னம் - (அவ்வாறு அவன் தளர்தற்கு முன்பு), புகுந்த கொள்கை உடன் உறைந்து அறிந்தான் என்ன - நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அருகில் இருந்து தெரிந்து கொண்டவன் போன்று, குட திசை வாயில் நின்ற மாருதி - மேலைவாயிலிலிருந்த காற்றின் மகனான அநுமன், ஓர் இமை ஒடுங்கா முன்னர் - ஓர் கண்ணிமைப் பொழுது கழிவதன் முன்பு, வடதிசை வாயில் வந்து மன்னவன் முன்னர் ஆனன் - வடதிசை வாயிலிலே வந்து சுக்கிரீவ மன்னன் முன்பு சென்றடைந்தான்.

சுடுகணை - வினைத் தொகை. ஓரிமை யொடுங்கா முன்னம்: கண்ணிமைப் பொழுதாகிய ஓர் மாத்திரைக்குள்ளாக; 'கண்ணிமை கைந்நொடி யவ்வே மாத்திரை' (தொல். எழுத்து. 7); மாருதி - மருத்தின் மகன்; 'மாருதி மேலை வாயி லுழிஞைமேல் வருவ தானன்' (யுத்த. 889). மன்னவன் - குரக்கரசனான சுக்கிரீவன்.

பி - ம். 2. மாருதி புகுந்து.
3. ஓரிமைப்பு.
4. வாயினின்ற; முன்னிதானன்.



## இராவணன் அநுமன் போர்

1088. பரிதிசேய் தேரு முன்னம்
பருவலி யரக்க பல்போர்
புரிதியோ வென்னொ டென்னப்
புகையெழ விழித்துப் பொங்கி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வருதியோ வாவென் பான்மேன்
மலையொன்று நிலையின் வாங்கிச்
சுருதியே யனைய தோளால்
வீசினன் காலின் தோன்றல்.

'பருவலி அரக்க - மிக்க வன்மை வாய்ந்த அரக்கனே! பரிதி சேய் தேரு முன்னம் - சூரிய புத்திரனான சுக்கிரீவன் தெளிவு பெறு முன்னர், என்னொடு பல் போர் புரிதியோ - என்னுடன் பல்வகையான மற்போர்களைச் செய்வாயோ', என்ன - என்று, (இராவணனை நோக்கி அநுமன் அறைகூவி யழைக்க), புகை எழ விழித்து பொங்கி-கண்களில் புகை கிளம்பக் கடுமையாக விழித்துப்பார்த்து, 'வருதியோ - போர் நிகழ்த்த வருகின்றாயோ? வா எனபான் மேல்-(வருதியாயின்) வா' என்று சொன்ன இராவணன்மீது, காலின் தோன்றல் - காற்றின் மகனான அநுமன், மலையொன்று நிலையில் வாங்கி - ஒரு மலையை அடியுடன் பெயர்த்தெடுத்து, சுருதியே அனைய தோளால் வீசினன் - மறைகளை நிகர்த்த தனது புயங்களால் வீசி எறிந்தான்.

மலையொன்று நிலையின் வாங்கி-மலையை அடியுடன் அகழ்ந்து. சுருதியே யனைய தோள்; 'வேதம் ஒத்தனன் மாருதி' (யுத்த. 1175); வேதம் என்பது என்றும் அழியாதது, அதுபோன்று என்றும் உலவாத தோள்வலியன் ஆகலின், 'சுருதியே அனைய தோளால்' எனப்பட்டது.

பி - ம். 1. தேறமுன் பாய்வரு மரக்கர்தம் வெம்.
2. பொருதியோ.
3. வருதியேல்; வாவென்றுன்மேல்.
4. தோளான்; எறிந்தனன் காற்றின்.



1089. மீயெழு மேக மெல்லாம் வெந்துவெங் கரியிற் சிந்தித்
தீயெழ விசும்பி னூடு செல்கின்ற செயலை நோக்கி
காய்கணை யைந்து மைந்துங் கடுப்புறத் தொகுத்துக்
[கண்டித்
தாயிரங் கூறு செய்தா னமரரை யலக்கண் செய்தான்.

அமரரை அலக்கண் செய்தான் - தேவர்களுக்கு இடர் இழைத்தவனாகிய இராவணன், மீ எழு மேகம் எல்லாம் - (அநுமன் எறிந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அந்த மலை), வானத்தின்மீது கிளம்பிச் செல்கின்ற மேகம் எல்லாம், வெந்து வெம்கரியில் சிந்தி - வெந்து வெப்பமான கரி (தணல் போற்) சிந்தி, தீ எழ - நெருப்புப் பொறி பறக்க, விசும்பின் ஊடு செல்கின்ற செயலை நோக்கி - ஆகாயத்தின் வழியாகப் போகின்ற போக்கினைப் பார்த்து, காய்கணை ஐந்தும் ஐந்தும் கடுப்பு உற தொகுத்து - கொதிக்கின்ற பத்து அம்புகளையும் வேகமாகச் செலுத்தி, கண்டித்து - (அந்த மலையைத்) துண்டாடி, ஆயிரம் கூறு செய்தான் - ஆயிரம் துணுக்குகளாகப் பண்ணினான் (இராவணன்).

காய்கணை : வினைத்தொகை. கடுப்பு - வேகம் ; 'மண்டு கடுப் பினிற் படரும் வாம்பரி' (சேதுபு. சந்துரு. 15). கண்டித்தல் - துண் டித்தல் (திவா.). அமரரை அலக்கண் செய்தான் ; 'தேவருக் கிடுக் கண் செய்தான்' (யுத்த. 916) ; 'அண்டர்தம் புகழிற் றேன்றும்' (சுந்தர. 306). அலக்கண் - துன்பம் ; 'அலக்கணெய்துவ தணிய துண்டு' (சுந்தர. 297) ; 'அவர் அலக்கணே வுரைசெய வறிந்தான்' (சுந்தர. 806).

பி - ம. : மீயெழு மழைகள், மழையும், மலையும், மையும்.

3. கடுப்பினில்.

4. அமரரை யாட்டங் கண்டான். 134

1090. மீட்டொரு சிகரம் வாங்கி வீங்குதோள் விசையின் வீசி
ஓட்டினு னேட்ட வானத் துருமினுங் கடுக வோடிக்
கோட்டுவெஞ் சிலையின் வாளி முன்சென்று கொற்றப்
[பொற்றேள்
பூட்டிய வலயத் தோடும் பூழியாய்ப் போயிற் றன்றே.

மீட்டு ஒரு சிகரம் வாங்கி - (அநுமன்) திரும்பவும் ஒரு மலை யைப் பெயர்த்து, வீங்கு தோள் விசையின் வீசி - பருத்த புய வலிமையினால் வீசி, ஓட்டினான் - செலுத்தினான் ; ஓட்ட - அவ்வாறு செலுத்திய அளவில், (அம்மலை) வானத்து உருமினும் கடுக ஓடி - விண்ணின்று வீழும் இடியினும் மிக வேகமாகச் சென்று, கோட்டு வெம் சிலையின் - வளைக்கின்ற கொடிய வில்லிலிருந்து, (அரக்கன்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



எய்த) வாளி முன் சென்று - அம்புகட்கு முன்பாகச் சென்று, கொற்றம் பொற்றோள் - இராவணனது வெற்றி பெற்ற அழகிய தோளில், பூட்டிய - அணிந்த, வலயத்தோடும் - வாகு வலயத்துடன், பூழியாய் போயிற்று - புழுதியாக ஆயிற்று. அன்று, ஏ - அசை.

அநுமன் வீசிய மலை இராவணன் வாகுவலயத்தைப் பொடியாக்கித் தானும் நொறுங்கிற்று. வலயம் - வாகுவலயம், தோள் வளை யென்றும் சொல்வர். கோட்டுதல் - வளைத்தல் 'பொருவன கண்டு தன் புருவங் கோட்டினன்' (யுத்த. 336).

பி - ம். 1. மீட்டுமோர்.

2. என்னலோடு முருமினுங் கடிதின், என்னலோடும்; கடிதாய் ஓடி. 135

1091. மெய்யெரிந் தழன்று பொங்கி வெங்கணன் விம்மி மீட்டோர்
மைவரை வாங்கு வானை வரிசிலை வளைய வாங்கிக்
கையினுந் தோளின் மேலு மார்பினுங் கரக்க வாளி
ஐயிரண் டழுந்த வெய்தா னவனவை யாற்றி நின்றான்.

வெம்கணன் - கொடிய விழிகளையுடைய இராவணன், விம்மி - மனம் வெதும்பி, மீட்டு ஓர் மை வரை வாங்குவானை - மறுபடியும் ஒரு கரிய மலையைப் பெயர்த்துக் கொண்டிருந்த அநுமனை நோக்கி, மெய் எரிந்து - உடல் கொதிக்க, அழன்று பொங்கி - வெகுண்டு எழுந்து, வரிசிலை வளைய வாங்கி - கட்டமைந்த வில்லை வளையுமாறு செய்து, (அந்த அநுமனுடைய), கையினும் தோளின் மேலும் மார்பினும் கரக்க - கைகளிலும் புயங்களிலும் மார்பிடத்தும் புகுந்து மறையும்படி, ஐயிரண்டு வாளி அழுந்த எய்தான் - பத்துப் பாணங்களை நன்கு விடுத்தான்; அவன் - அந்த அநுமன், அவை ஆற்றி நின்றான் - தன்மேற் பாய்ந்த அந்த அம்புகளைத் தாங்கி நின்றான்.

எரிந்து அழன்று பொங்கி வெங்கண் விம்மி என்று அடுக்கியதிலிருந்து சினத்தின் கடுமை பெறப்படும். மை வரை - மேகம் படிந்த மலை. வாங்குதல் - பறித்தெடுத்தல்; 'வாங்கிக் குரும்பி கெண்டும்' (அகநா. 72). இரண்டாமடியில் வாங்குதல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



என்ற சொல் பெயர்த்தல், வளைத்தல் என்ற இரு பொருளினும் வந்தமை காண்க. கரக்க என்று வந்தமையின் அழுந்த எய்தான் எனப்பட்டது.

பி - ம். 1. மெய்யெரித்து, மெய்யெரி ; விம்மமீட்டோர், விரமிட்டோர்.

2. உளைய வாங்கி.

4. அவையவன், எய்தவை. 136

1092. யாரிது செய்ய கிற்பா ரென்றுகொண் டிமையோ ரேத்த
மாருதி பின்னு மாங்கோர் மராமரங் கையின் வாங்கி
வேரொடுஞ் சுழற்றி விட்டான் விடுதலு மிலங்கை வேந்தன்
சாரதி தலையைத் தள்ளிச் சென்றது நிருதர் சாய.

(இங்ஙனம் அநுமன் செய்யும் அருஞ்செயலை நோக்கி), 'யார் இது செய்யகிற்பார் - யாவர் இவ்வாறு புரியவல்லவர்', என்று கொண்டு - என்றுரைத்துக்கொண்டே, இமையோர் ஏத்த - வானவர்கள் வாழ்த்த, மாருதி - அநுமன், பின்னும் - பிறகு, ஆங்கு - அவ்விடத்து, ஓர் மராமரம் வேரொடும் கையின் வாங்கி - ஒரு மராமரத்தை வேரோடும் கரத்தில் கொண்டு, சுழற்றிவிட்டான் - சுழற்றி வீசினான்; விடுதலும் - எறிதலும், (அது) இலங்கை வேந்தன் சாரதி தலையை தள்ளி நிருதர் சாய சென்றது - அது இலங்கை மன்னனான இராவணனுடைய தேர்ப்பாகனைத் வீழச் செய்து, அரக்கர்கள் இறந்து வீழும்படி செய்தது.

செய்யகிற்பார் கில் ஆற்றலையுணர்த்தும் இடைநிலை. சாரதி - தேர்ப்பாகன், வடசொல். வாளி முன்னர் இராவணனுடைய தேர்ப்பாகன் தலையை வீழ்த்திப் பின் நிருதரையும் கீழே வீழ்த்தது என்க. தங்கள் காரியத்திலேயே கண்ணும் கருத்துமாயிருப்பவராதலின் இங்கு மாருதி மரம் வீசியது கண்டு இமையோர் ஏத்தினர் என்க.

பி - ம். 1. என்று நின்றமர ரேத்த, கொண்டிமையோ ரார்த்தார்.

2. மராமரம் வலியின் வாங்கி,

3. விட்டதவ் விலங்கை.

4. தள்ளி நின்றது. 137

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1093. மாறியோர் பாக னேற மறிதிரைப் பரவை பின்னும்
சீறிய தனைய னுங்கோர் செறிகழ லரக்கர் தேவன்
நூறுகோல் நொய்தி னெய்தா னவையுட னுழைதலோடும்
ஆறுபோற் குருதிசோர வநுமனு மலக்க ணுற்றான்.

மாறி ஓர் பாகன் ஏற - இறந்துபட்ட சாரதிக்குப் பிரதியாக ஓர் பாகன் தேரில் ஏறிக்கொள்ள, மறிதிரை பரவை பின்னும் சீறியது அனையன் - அலைகள் கரைகள் மோதி மடங்குகின்ற கடல் வெகுண்டாற் போலும் காணப்பட்டவனும், கழல் செறி - வீர கண்டை பொருந்தியவனுமான, ஓர் அரக்கர் தேவன் - ஒப்பற்ற அரக்கர் தலைவனான இராவணன், ஆங்கு - அப்பொழுது, நூறு கோல் நொய்தின் எய்தான் - நூறு அம்புகளை விரைந்து விடுத்தான், அவை உடல் நுழைதலோடும் - அந்த அம்புகள் (தன்) உடலில் புகுந்த அளவில், குருதி ஆறுபோல் சோர - இரத்தம் ஆறுபோன்று பெருக, அநுமனும் அலக்கண் உற்றான் - அநுமனும் துன்பம் அடைந்தான்.

அலக்கண் - துன்பம்; (1089) பார்க்க. அநுமனும் உம்மை உயர்வு சிறப்புப் பொருளது.

பி - ம். 1. பரவை யேழும், மண்ணைச், மண்ணும்.
2. சிறிய, விரதந் தூண்டி, யனையதொப்ப, அனையனான், அரக்கன் தெய்வ.

138

இங்கோர் அதிகப்பாடல் :—

அலக்கணுற் றநுமன் சோர வங்கதன் முதலாம் வீரர்
மலக்குற மரங்கள் வாங்கி வருதல்கண் டரக்கன் வாளி
சிலைக்கிடை தொடுத்தங் கேந்து மாமலை சிதைத்திட் டன்னோர்
கலக்கமுற் றழிய வொவ்வோர் பகழியிற் காய்ந்து கொல்வான்.

1094. கற்கொண்டும் மரங்கள் கொண்டுங்
கைக்கொண்டுங் களித்து நும்வாய்ச்
சொற்கொண்டு மயிரின் புன்றோல்
தோள்கொண்டுந் துள்ளி வெள்ளிப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பற்கொண்டு மலைகின் றூரிற்
பழிகொண்டு பயந்ததி யானோர்
விற்கொண்டு நின்ற போது
விறல்கொண்டு மீடிர் போலாம்.

'நும்வாய் சொல் கொண்டு - உங்கள் வாய்க்கு வந்தவாறு பிதற்றிக்கொண்டு, கல்கொண்டும் மரங்கள் கொண்டும் கை கொண்டும் - கற்களாலும் மரங்களாலும் கரங்களாலும், மயிரின் புன்தோல் தோள் கொண்டும் - மயிர் செறிந்த அற்பமான தோலையுடைய தோள்களைக்கொண்டும், வெள்ளி டல் கொண்டும் - வெண்மையான பற்களைக் கொண்டும், துள்ளி களித்து - குதித்து மகிழ்ந்து, மலைகின்றூரில் பயந்தது - போர் புரிவரிடத்து, (போர் நிகழ்த்தாது) பின்வாங்கியது, (மூன்று உலகங்களையும் வெற்றி கொண்ட இலங்கை மன்னன் அற்பமான குரங்குகளை எதிர்த்துப் போர் செய்தான் என்ற) பழிகொண்டு - பழி வருமே என்பதை மனங் கொண்டாகும்; யான் ஓர் வில் கொண்டு நின்றபோது - நான் ஓர் வில்லேந்திப் (போர்க்களத்தில்) நின்றபோது, விறல்கொண்டு மீடிர் போலாம் - உங்கள் வன்மையினால் உயிருடன் மீள்வீர் போலும்'.

'எம்முடன் போர் புரியத்தக்க சமநிலை உள்ளவர்கள் அல்லர் குரங்கு வீரர்கள் ஆகிய நீங்கள் என்று நான் அம்பு ஏவப் பின் வாங்கினேன். வில்லை வளைத்து நாணேற்றி நிற்பேனாயின், நீங்கள் உயிருடன் திரும்புதல் கூடுமோ' என்றான் இராவணன். குரங்கு கட்குள்ள படைக் கருவிகள் கல், மரம், கை, வாய் வழங்கும் வீரச் சொற்கள், தோள், பற்கள் என்ற இவைகளன்றி வில்வேல் முதலிய படைகள் இன்றாகலின் இங்ஙனம் கூறப்பட்டது; (ஒப்பு): 'ஒருகை யுடைய தெறிவலோ, இருகை சுமந்து வாழ்வேன்' (தொல். புறத். 60) மீள்திர் என்பது மீடிர் என்றாயது; போலும் ஒப்பில்போலி. இங்குச் 'சிறப்புடை அரசியலாவன மடிந்த உள்ளத்தோனையும் மகப்பெறா தோனையும், ......... .....படையிழந்தோனையும், ஒத்தபடையெடா தோனையும் கொல்லாது விடுதலும் கூறிப் பொருதலும் முதலியன வாம்' (தொல். புறத். 65, நச். உரை) என்றது காண்க.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. அளித்து ; தம்வாய்ச்.

3. கொண்டே னென்றுநானே, கொண்டேனென்ன நானேர்.

4. மிகுதிர், கொல்லாம். 139

1095. என்றுரைத் தெயிற்றுப் பேழ்வா
யெரியுக நகைசெய் தியாணர்ப்
பொன்றொடர் வடிம்பின் வாளி
கடையுகத் துருமுப் போல
ஒன்றினொன் றதிக மாக
வாயிர கோடி யுய்த்தான்
சென்றது குரங்குச் சேனை
காலெறி கடலிற் சிந்தி.

என்று உரைத்து - என்று இராவணன் கூறி, எயிறு பேழ் வாய் எரி உக நகை செய்து - வளைவான தந்தங்களைக் கொண்ட பிளந்த வாயினின்றும் நெருப்புச் சிந்த வெகுளிச் சிரிப்புச் சிரித்து, கடை உகத்து உருமுபோல - ஊழியிறுதியின் இடிபோன்றனவாய், யாணர் தொடர் பொன் - புதிய பொன்னாற் செய்த, வடிம்பின் ஆயிர கோடி வாளி - கூரிய நுனியுடன் கூடிய ஆயிரம் கோடி அம்புகளை, ஒன்றின் ஒன்று அதிகமாக - ஒன்றை ஒன்று விஞ்சுமாறு, உய்த்தான் - செலுத்தினான் ; (அதனால்), கால் எறி கடலில் - காற்றால் தாக்கப்பெற்ற கடல் போன்று, குரங்கு சேனை சிந்தி சென்றது - வானரப்படை சிதறிப் போயிற்று.

பேழ்வாய் - பிளந்தவாய் : யாணர் - புதிய, 'யாணர்நீர்க் கங்கை யாற்றங்கரை' (சுந்தர. 638) ; வடிம்பு ; 'பொன்னின்ற வடிம்பின் வாளிப் புட்டிலன்' (ஆரணிய. 422) ; 'பொன்றெரி வடிம்புடைப் பொருவில் வாளி' (ஆரணிய. 491) ; கால் எறிகடல் : சேனை சிதறியதற்குச் சிறந்த உவமை. (ஒப்பு). 'எறிந்த கால் பொர மேருவின் கொடு முடியிடிந்து' (யுத்த. 1200) ; 'காலுடைக் கடலெனச் சிந்தி' (யுத்த. கும்ப. 305).

பி - ம். 1. நகை செய்தியான்ற, நகை செய் தீண்டும்.

2. பொன்னுடை ; வயிர வாளி.

3. ஒன்றினென் றதிக மொய்த்த, எய்த.

4. கடலிற் சிந்த. 140

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இலக்குவன் பொருமாறு வருதல்

1096. கலக்கிய வரக்கன் வில்லின்
கல்வியின் கவிக ளுற்ற
அலக்கணுந் தலைவர் செய்த
தன்மையு மமையக் கண்டான்
இலக்குவ னென்கை வாளிக்
கிலக்கிவ னிவனை யின்று
விலக்குவ னென்ன வந்தான்
வில்லுடை மேரு வென்ன.

கலக்கிய அரக்கன் - (தமது படையினைக்) குழம்பச் செய்த இராவணனுடைய, வில்லின் கல்வியின் - வில்வித்தையினால், கவிகள் உற்ற அலக்கணும் - குரங்குகள் அடைந்த துன்பத்தையும், தலைவர் செய்த தன்மையும் அமைய கண்டான் - குரங்குப் படைத் தலைவர் காட்டிய வீரத்தையும் பார்த்தவனாய், இலக்குவன் - இலக்குவன், 'என் கை வாளிக்கு இலக்கு இவன் - என்கை அம்புக்கு இலக்கு ஆவதற்குரியவன் இந்த இராவணன், இவனை இன்று விலக்குவன் - இந்த இராவணனை இப்போதே தடுப்பேன்' என்ன - என்று சொல்லிக் கொண்டு, வில்லிடை மேரு என்ன வந்தான் - வில்லேந்திய மேருமலை போன்று வந்தான்.

இராமபிரான் புறப்படுவதன் முன்பு இலக்குவன் தான் செல்வதாகத் தமையனிடம் அநுமதி பெற்றுவந்தான் என்பது வான்மீகம். அலக்கண் - துன்பம்; 'அலக்க ணுற்றது தீவினை நல்வினை யார்த்தெழுந்தது' (யுத்த. கும்ப. 340). மூன்றாமடியில் இலக்குவன் இலக்கு என்று வந்த சிலேடை நயம் காண்க. வில்லுடை மேரு; இல்பொருள் உவமை, (ஒருசார் ஒப்பு): கிட்கிந்தா. 304.

பி - ம். 1. வில்லின் கல்வியும்.
2. தலைவர் சோர்ந்த, தலைவர் பட்ட; அமைய நோக்கி.
3. என்றன் வாளிக் ; யிவனை யென்று.
4. வில்லுடை மேக மென்ன, மேக மன்னான் ; மேருவே போல்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## இலக்குவன் நாணொலி செய்ய, எதிரிகள் நடுங்குதல்

1097. தேயத்தின் தலைவன் மைந்தன்
சிலையைநா ணெறிந்தான் தீய
மாயத்தின் வினையை வல்லார்
நிலையென்னை முடிவின் மாரி
ஆயத்தி னிடியி தென்றே
யஞ்சின வுலகம் யானை
சீயத்தின் முழக்கங் கேட்டல்
போன்றனர் செருந ரெல்லாம்.

தேயத்தின் தலைவன் மைந்தன் - நாட்டிற் கெல்லாம் இறைவனான தயரத மன்னனின் இளைய குமாரன், சிலையை நாண் எறிந்தான் - வில்லின் நாணைத்தெறித்து ஒலிசெய்தான்; தீய - கொடிய, மாயத்தின் வினையை வல்லார் - மாயத்தினால் புரியும் தொழிலில் தேர்ந்தவரான அரக்கர்களின், நிலை என்னை - நிலைமையை என்னென்று பகர்வது? முடிவில் - ஊழி யிறுதியில், மாரி ஆயத்தின் - மழை பொழிகின்ற மேகத்தின், இடியே இது என்று - இடியே இது என்று, அஞ்சின உலகம் - அரக்கர் உலகம் பயந்தன; செருநர் எல்லாம் - பொருகின்றவர் யாரும், யானை சீயத்தின் முழக்கம் கேட்டல் போன்றனர் - யானையானது சிங்கத்தின் கர்ஜனையைக் கேட்டாற்போலக் காணப்பட்டனர்.

தேசம் தேயம் என வந்தது. தேயத்தார் தேயஞ் சேறல் (சுந்தர. 130); தேயத்தின் தலைவன்; தயரதன். நாணெறிதல் குணத்தொனி செய்தல் எனப்படும். 'நாணெறிந்தனன் சிலையினை யரக்கியர் நகுபொற், பூணெறிந்தனர்' (யுத்த. கும்ப. 209); முடிவு - யுகம் அல்லது ஊழியிறுதி. ஆயம்; மேகம். 'முதிரம் பயோதரம் கதம்ப மெய்ப்பிரம், அப்பிர மாயமும் பெயர்க் குரித்தே' (பிங்கலம்) இனி மாரிஆயம் மேகத்தொகுதி யெனினுமாம். நாணொலிக்குச் சிங்கத்தின் ஒலி - 'அரிமானிடித் தன்ன அஞ்சிலை வல்வில்' (கலித். 15; 1). ஆயம் - மேகம்; (பிங்.); 'ஆயத்தின் இடியிதென்றே'

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(ஆரணிய. 24). யானை சீயத்தின் முழக்கம் கேட்டல், உவமையணி; (ஒப்பு): நாகபாசப். 286; 'காட்டில்வாழ் விலங்குமாக்கள் கோளரி கண்ட வென்ன' யுத்த. பிரமாத்திர. 139). சீயம் - சிங்கம்; 'நாய் தரக் கொள்ளும் சீயம் நல்லர சென்று நக்கான்' (யுத்த. 941).

பி - ம். 2. மாயத்தின் இயற்கை; வல்லரன்.

3. ஆயத்தின் இடிப்பி தென்றே, இறுதி யிதென்று; உலகம் யாவும்.

## இராவணனும் இலக்குவனைக் கண்டு வியத்தல்

1098. ஆற்றல்சா லரக்கன் றானு
மயனின்ற வயவர் நெஞ்சம்
வீற்றுவீற் ருகி யுற்ற
தன்மையும் வீரன் தம்பி
கூற்றின்வெம் புருவ மன்ன
சிலைநெடுங் குரலுங் கேளா
ஏற்றினன் மகுடம் என்னே
யிவனொரு மனிச னென்னு.

ஆற்றல் சால் அரக்கன் தானும் - வன்மை நிறைந்த இராவணனும், அயல் நின்ற வயவர் நெஞ்சம் - அருகில் நின்ற வீரர்களுடைய உள்ளம், வீற்று வீற்ருகி உற்ற தன்மையும் - வெவ்வேறு விதமாக மாறிய தன்மையும் (நோக்கி), வீரன் தம்பி - வீரனான இராமபிரான் தம்பி இலக்குவனுடைய, கூற்றின் வெம்புருவம் அன்ன - யமனுடைய கொடிய புருவம் ஒத்ததான, சிலை நெடு குரலும் கேளா - வில்லினுடைய பேரதிர்ச்சியும் கேட்டு, 'என்னே - இஃது என்னே, இவன் ஒரு மனிசன் என்னு - இந்த இலக்குவன் ஒரு மனிசன்', என்று வியந்து, மகுடம் ஏற்றினன் - தன் கிரீடத்தைச் சிறிது உயர்த்திக்கொண்டான்.

ஆற்றல் சால் நளனே யன்றி. (நைடத. நளன் தூது. 22); வீற்று வீற்ருகி; 'ஆற்றுவீ யரங்கத்து வீற்று வீற்ருகி' (சிலப். 10; 156); வீற்று வீற்ருகி என்பதற்கு வேறிடத்தில்லாத தன்மைத் தாய் என்று பொருள் காண்பர் அடியார்க்கு நல்லார் 'வீற்று வீற் ருகி யோடி விழுதலும்' (யுத்த. கும்ப. 188). வீரன் - இராமபிரான். சிலை போன்ற புருவம் என்னுது புருவம் போன்ற சிலை



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



என்றது எதிர் நிலையணி. சிலை நெடுங்குரல் - வின்னாணினது நீண்ட ஒலி முழக்கு. இவன் ஒரு மனிசன் என்று இலக்குவனைப் புகழ்ந்தான் இராவணன். 'உண்மைக் கிவனே வலிக்கிவனே யுறவுக் கிவனே யுரைக்கிவனே' (வி.பா. திரௌபதி மாலை. 39). காண்க. இவன் மனிதப்பிறவி தானோ என மலைத்தான் எனினுமாம். வெம் கூற்றின் புருவம் என மொழிமாற்றிப் பொருள் கூறலுமாம்.

பி - ம். 1. அயனின்ற வரக்கர்; நெஞ்சும்.

2. விற்று விற்றுகியுக்க; தண்மையும்.

3. கூற்றின துருவம்; சிலையொலி கேளா முன்னம்.

4. ஏற்றின, புருவம்; என்றான். 143

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

'நகைத்திது புரிந்தான் கொல்லோ வென்பதன் முன்பு [நாண்வாய்த்
துகைத் தொலி யொருங்கா முன்னம் சோனையம் புயலு [மெஞ்ச
மிகைப்படு சரத்தின் மாரி வீரனுக் கிளையோன் மேவும்
பகைப்புலத் தரக்கன் சேனைப் பரவைமேற் பொழிவ தானான்.

### அரக்கர்க்கும் இலக்குவற்கும் நிகழ்ந்த போர்

1099. கட்டமை தேரின் மேலுங் களிநெடுங் களிற்றின் மேலும்
விட்டமெழு புரவி மேலும் வெள்ளெயிற் றரக்கர் மேலும்
முட்டிய மழையின் றுள்ளி முறையின்றி மொய்க்கு [மாபோல்
பட்டன பகழி யெங்கும் பரந்தது குருதிப் பவ்வம்.

முட்டிய மழையின் துள்ளி - மோதிய மழைத் துளிகள், முறையின்றி மொய்க்கு மாபோல் - ஒரு முறையாக வன்றிப் பல விடங்களிலும் பரவுவது போன்று, கட்டு அமை தேரின் மேலும் - நன்கு அமைக்கப்பட்ட தேரின் மீதும், களி நெடு களிற்றின் மேலும் - களிமயக்கம் கொண்ட பெரிய யானையின் மேலும், விட்டு எழு புரவி மேலும் - இருப்பிடம் விடுத்து எழுந்து தாவுகின்ற குதிரை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யின் மீதும், வெள் எயிறு அரக்கர் மேலும் - வெண்ணிறமான பற்களையுடைய இராக்கதர்கள் மேலும், பகழிபட்டன - அம்புகள் தைத்தன ; குருதி பவ்வம் எங்கும் பரந்தது - உதிரக்கடல் எல்லா இடங்களிலும் பரவிற்று.

களி - மதத்தான் உண்டாவது, நெடும் களிறு ; நெடுமை உயர்வின் மேற்று ; துள்ளி - துளி என்பதன் விரித்தல், (சுந்தர. 150 ; 258) ; மொய்க்குமாறு என்பது ஈறு குறைந்தது. விட்ட குதிரை (குறுந். 74) ; பவ்வம் - கடல்- ஏனைய மூன்று படைகளும் கூறப்பெற்றமையின், வெள்ளெயிற்றரக்கர் பதாதி என்ற காலாட்படை என்க.

பி - ம். 3. முறை முறை, முறைமையின்.

4. பட்டது ; கணைகள் ; பரந்தன. 144

1100. நகங்களிற் பெரிய வேழ நறைமத வருவி காலும்
முகங்களிற் புக்க வாளி யபரத்தை முற்றி மொய்ம்பர்
அகங்களைக் கிழித்துத் தேரி னச்சினை யுருவி யப்பால்
உகங்களிற் கடைசென் ருலு முலப்பில வோட லுற்ற.

நகங்களில் பெரிய வேழம் - மலைகளைக் காட்டிலும் பெரிய யானைகளின், நறை மதம் அருவி - நல்ல மணம் உள்ள மதவாரி, காலும் - வழிகின்ற, முகங்களில் புக்கவாளி - முகங்களில் தைத்துருவிய (இலக்குவன்) அம்புகள், அபரத்தை முற்றி - (அந்த யானைகளின்) பின் புறங்களில் நிறைந்து, மொய்ம்பர் அகங்களை கிழித்து - வீரர்களின் மார்புகளைப் பிளந்து, தேரின் அச்சினை உருவி - அந்தத் தேரின் அச்சினைத் துளைத்து, அப்பால் - அதன் பின்னர், உகங்களின் கடை சென்றாலும் - யுகங்களின் முடிவு கழியினும், உலப்பு இல ஓடல் உற்ற - முடிவின்றி ஓடத்தொடங்கின.

நகம் - மலை ; (பிங்) 'நகராசன் மடந்தை' (பதினே. திருக்கைலா. 13). நறை மதம் ; மணமுள்ள மதநீர் ; ஏழிலைம்பாலை என்ற மரம் இந்த மதசலம் போன்று நாறும் என்பர் ; (பால. வரைக் காட்சி. 6) ; அம்பு ஊடுருவிச் சென்ற தன்மை இங்கு வருணிக்கப்பட்டமை காண்க. அபரம் - உடலின் பின்புறம். (பிங்) அபர காத்திரம் என முன் வந்துள்ளமை காண்க. மொய்ம்பர் - வன்மை வாய்ந்த வீரர். மொய்ம்பு - வலிமை ; 'மூவகை யுலகங்காக்கு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மொய்ம்பினீர்' (கிட்கிந்தா. 615); அகம் - மார்பு; 'புல்லக மகன்றது' (சிலப். 30; 16); (ஒப்பு). 'ஏழு மாமர முருவிக்கீ ழுலக மென் றிசைக்கும், ஏழு மூடுபுக் குருவிப்பின் னுடனடுத் தியன்ற, ஏழி லாமையின் மீண்டதவ் விராகவன் பகழி, ஏழு கண்டபி னுருவு மா லொழிவதன் றின்னும்' (கிட்கிந்தா. 173); 'வேழம் வீழ்த்த விழுத்தொடைப்பகழி, பேழ்வா யுழுவையைப் பெரும்பிறிதுறீஇப், புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக், கேழற் பன்றி வீழவயல, தாழற் புற்றத் துடும்பிற் செற்றும் வல்வில் வேட்டம்' (புறநா. 152); 'அலையுருவக் கடலுருவத் தாண்டகைத னீண்டுயர்ந்த, நிலையுருவப் புயவலியை நீயுருவ நோக்கையா, உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைத னுரமுருவி, மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி' (பால. குலமுறை. 26); 'முக்கோடி வாழ்நாளு முயன்றுடைய பெருந்தவமு முதல்வன் முன்னாள், எக்கோடி யெவராலும் வெலப்படா யெனக்கொடுத்த வரமு மேனைத், திக்கோடு முலகனைத்துஞ் செருக்கடந்த புயவலியுந் தின்று மார்பிற். புக்கோடி யுயிர்பருகிப் புறம்போயிற் றிராகவன்றன் புனித வாளி' (யுத்த. இராவணன் வதை. 198); 'துவசம் பிளந்து தேருருந் துரகம் பிளந்து சுடர்மணிப்பொற், கவசம் பிளந்து மார்பகமும் பிளந்தூ டுருவக் கடோற்கசன்றன்' வாளி தொடுத்தான். (வி. பா. 3-ஆம் போர். 7). பாண்டியன் மாணிக்கவாசகர் முதுகிற் பிரம்பில் அடித்த அடி முப்புவனங்களின்கணிருந்த சராசரங்கள் அனைத்தினும் சென்று பட்டதாகத் திருவிளையாடல் கூறும் செய்யுட்களும் இங்கு ஒருசார் ஒப்பாக உணர்தல் கூடும். (திருவிளை. மண் சுமந்த. 53-56). உலப்பில ஓடலுற்றன என்றது இன்னும் எத்தனை யுகம் சென்றாலும் ஓடிக்கொண்டே உலகில் வட்டமிடும் அம்புகள் என்க.

பி - ம். 1. அருவ நாளும்.

2. புக்க வம்பு; அபரத்தின், அபானத்தின்; முன்பார், முன்னம்; ஒன்னார்.

3. அகங்களைக் கழன்று.

4. ஓய்வில.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1101. நூக்கிய களிறுந் தேரும் புரவியு நூழில் செய்ய
ஆக்கிய வரக்கர் தானை யையிரு கோடி கையொத்
தூக்கிய படைகள் வீசி யுடற்றிய வுலகஞ் செய்த
பாக்கிய மனைய வீரன் தம்பியைச் சுற்றும் பற்றி.

நூக்கிய களிறும் - (பகைவர்) செலுத்திய யானையையும், தேரும் புரவியும் - தேர்களையும் குதிரைகளையும், நூழில் செய்ய - (அவ்விலக்குவனது) அம்பு அழிக்க, கையொத்து ஆக்கிய அரக்கர் - அணிவகுத்திருந்த அரக்கருடைய, ஐயிரு கோடி தானை - பத்துக்கோடிச் சேனை, ஊக்கிய படைகள் - செலுத்தற்குரிய ஆயுதங்களை, உலகம் செய்த பாக்கியம் அனைய வீரன் - உலகம் பண்ணிய நற்பயன்போன்ற வீரனுடைய, தம்பியை - தம்பியான இலக்குவனை, சுற்றும் பற்றி - சூழ்ந்த இடம் எங்கும், வீசி உடற்றிய - வீசிப் பொருதன.

சேனை பொருதன என்க. நூக்கிய - செலுத்திய; 'தலை கீழ்ப் பட நூக்கி' (சுந்தர. 53); 'நூக்குறுத் தங்குமிங்கும்' (சுந்தர. 91); 'நூக்கி னனக் கதவினை நொய்தினின்' (கிட்கிந்தா. 587). நூழில் செய்ய; 'ஒள்வாள் வீசிய நூழிலும்' (தொல். பொ. 72); 'ஆர றத்தினெ டன்றிநின் றுரவர், வேர றுப்பன்' (ஆரணிய. 39) என்று கங்கணம் கட்டிக்கொண்டு அரக்கர் வாதனையை அகற்றி முப்புவனமும் உய்யவருள் செய்தவனாகலின் உலகம் செய்த 'பாக்கிய மனைய வீரன்' எனப்பட்டது. 'அரக்கரை யாசற வழித்து நல்லறம், புரக்கவந் தனமெனும் பெருமை பூண்ட' (யுத்த. 372); என்ற சுக்கிரீவன் கூற்றும், 'துணிபொருள் துணிவிற் றூக்கி, அறைகழல் இராமன் ஆகி அறநெறி நிறுத்த வந்த விறை' (கிட்கிந்தா. 360) என்ற வாலி கூற்றும் இங்கு நோக்கத்தகும்; (ஒப்பு): 'பாக்கியம் அனையநின்' (சுந்தர. 666).

பி - ம். 2. அரக்கர் சேனை.
3. ஓக்கிய; வீதி; யுடற்றியது.
4. தம்பியை முற்றும் பற்றி.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1102. உறுபகை மனித னின்றெம்
மிறைவனை யுறுகிற் பானேல்
வெறுவிது நந்தம் வீர
மென்றொரு மேற்கோள் தோன்ற
எறிபடை யரக்க ரேற்ரு
ரேற்றகைம் மாற்ரு னென்னு
வறியவ ரொருவன் வண்மை
பூண்டவன் மேற்சென் றென்ன

எறிபடை அரக்கர் - ஆயுதங்களை வீசுகின்ற இராக்கதர், 'உறுபகை மனிதன் - பெரும்பகை யாகிய மானிடன், இன்று எம் இறைவனை உறுகிற் பானேல் - இன்றைக்கு எம்முடைய தலைவனை இராவணனைக் கிட்டுவானாகில், (அப்போது) நம் தம் வீரம் வெறுவிது - நமது ஆண்மை வீணாகிவிடும்'; என்று - என்று எண்ணியதால், ஒரு மேற்கோள் தோன்ற - ஒரு மனவெழுச்சி உண்டாக, ஏற்றகை மாற்ருன் என்னு - (இரந்தார்) இரந்து ஏற்றகையில் இரவு மருமல் கொடுப்பவன் என்று, வண்மை பூண்டவன் ஒருவன் மேல் வறியவர் சென்று என்ன - வள்ளன்மை மேற்கொண்ட ஒருவனிடம் வறியவர் செல்வது போல, ஏற்ருர் - (வந்து) எதிரேற்று நின்ருர்கள்.

உறுகிற் பானேல்; கில் ஆற்றல் உணர்த்தும் இடைநிலை என்ப. வெறுவிது - வீணுவது. வெறுமை என்ற பண்படியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று. 'குப்புறு கொள்கைத்தாதல் வெறுவிது' (சுந்தர. 15); எறிபடை; இதனை அஸ்திரம் என்பர் வடநூலார். ஏற்றகை மாற்ருமை; 'ஏற்றகைம் மாற்ருமை யென்னுனுந் தாம்வரையார், ஆற்ருதார்க் கீவதாம் ஆண்கடன்' (நாலடி. 98); வள்ளலை இரவலர் ஏற்பது போல, இராக்கதர் இலக்குமணனை ஏற்று நின்றனர்; ஏற்றல் என்பது இரத்தற்குக் கையேற்றல், எதிரியை எதிரேற்றல் என்ற இருபொருளில் வந்தமை காண்க. இரவலர் மனத்திருத்தி யுறுமாறு வள்ளல் உதவுவது போன்று, இராக்கதர் சலிப்புறும்வண்ணம் இலக்குவன் அம்புமாரியால் நிரப்புவன் என்பது பொருள். உவமையணி.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பி - ம். 1. இன்றெம் மன்னனை, இறைவனை.

2. நந்தம் வீர மென்பதோர்; மேன்மை.

3. ஏற்றார் ஏற்றது, ஏன்றது.

4. வறியவன். 147

1103. அறுத்தன னரக்க ரெய்த வெறிந்தன வறுத்த ரூத
பொறுத்தனன் பகழி மாரி பொழிந்தன னுயிரின் போகம்
வெறுத்தன னமனும் வேலை யுதிரத்தின் வெள்ள மீள
மறித்தன மறிந்த வெங்கும் பிணங்களம் மலைகள் மான.

பகழி மாரி பொழிந்தனன் - (இலக்குவன்) அம்பு மழைகளைச் சொரிந்தவனாகி, அரக்கர் எய்த எறிந்தன அறுத்தனன் - இராக்கதர் விடுத்த அம்புகளையும் வீசிய படைக் கருவிகளையும், கண்டமாக்கி, அறுத்து அரூத - அறுத்து முடியாதவைகளை(த்தான்), பொறுத்தனன் - தாங்கினன்; நமனும் உயிரின் போகம் வெறுத்தனன் - யமனும் உயிர்களைத் தின்று துய்த்தலை வெறுத்தான்; அம்மலைகள் மான - அழகிய மலைகளை ஒப்ப, பிணங்கள் எங்கும் மறிந்த - பிணங்கள் எங்கும் மடங்கிக் கிடந்தனவாய், உதிரத்தின் வெள்ளம் வேலை மீள மறித்தன - இரத்தப்பெருக்கானது கடலிற் சென்று படியாமல் மீளும்படி தடுத்தன.

மலை போன்று குவிந்த பிணங்களான் நமனுக்கு உயிரிடத்தில் வெறுப்பு நிகழ்ந்தது எனப்பட்டது. உதிரவாரி பெரிதெனினும், அது கடலைச் சென்றடையாத வண்ணம், பிணக்குவியல்கள் அணை போன்று தடுத்தன என்க. மான; உவம உருபு, (ஒப்பு): 'எண்ணிழந்த குருதிநதி யிருமருங்குங் கரிபரியாள் கரைகளாக' (வி. பா. முதற்போர். 72).

பி - ம். 2. பொறுத்தன.

4. மறித்தனன். மறிந்தது, மறித்தது பிணங்களின் மலைகளம்மா, மறிந்தவர் மலைகள்மான, பிணங்கள்மா மலைகள்மான. 148

1104. தலையெலா மற்ற முற்றுந் தாளெலா மற்ற தோளாம்
மலையெலா மற்ற பொற்றார் மார்பெலா மற்ற சூலத்
திலையெலா மற்ற வீர ரெயிறெலா மற்ற கொற்றச்
சிலையெலா மற்ற கற்ற செருவெலா மற்ற சிந்தி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



வீரர் தலையெலாம் அற்ற - (இலக்குவன் எய்த அம்புகளால்) அரக்கப்படைவீரருடைய தலைகள் துண்டிக்கப்பட்டன ; தாள் எலாம் முற்றும் அற்ற - பாதங்கள் எல்லாம் முழுவதும் துண்டு பட்டன ; தோளாம் மலை எலாம் அற்ற - தோளாகிய மலைகள் எல் லாம் அற்றன, பொன்தார் மார்பு எலாம் அற்ற - அழகிய மாலை புனைந்திருந்த மார்புகள் எல்லாம் அற்றன ; எயிறு எலாம் அற்ற - அவர்களின் கோர தந்தங்கள் அனைத்தும் உடை பட்டு வீழ்ந்தன; சூலத்து இலை எலாம் அற்ற - சூலப்படைகளின் இலைவடிவான தலைகள் ஒடிந்தன ; கொற்றம் சிலை எலாம் அற்ற - வெற்றி பொருந்திய விற்களியாவும் இற்றன ; சிந்தி - அரக்கர் நாற் புறமும் நிலை குலைந்து ஓடியதால், கற்ற செருஎலாம்அற்ற - அவர் தேர்ந்த போர்த்திறம் எல்லாம் இல்லையாயின.

அற்ற அற்ற என்று இச்செய்யுட்கள் அடுக்கியுள்ளமை. செருவில் அனைவரும் வீழ்ந்த நிலை குலைந்த தன்மையைக் காட்டும். சூலத்து இலை - சூலத்தின் இலைவடிவான நுனி. தலை தாள் என்றவை தவிர, மற்றும் தோள், மார்பு, சூலம், எயிறு, சிலை, செரு என்பனவற்றிற்கு ஏற்ப அடைமொழிகள் பயின்று வந்துள் ளமை காண்க. இதனைச் சொற் பொருட்பின் வருநிலையணி என்பர்.

பி - ம். 1. மற்றத் தாள்.

3. வீரரெயிறெலா மற்றே. 149

1105\. தேரெலாந் துமிந்த மாவின்
திறமெலாந் துமிந்த செங்கட்
காரெலாந் துமிந்த வீரர்
கழலெலாந் துமிந்த கண்டத்
தாரெலாந் துமிந்த நின்ற
தனுவெலாந் துமிந்த தத்தம்
போரெலாந் துமிந்த கொண்ட
புகழெலாந் துமிந்து போய.

தேர் எலாம் துமிந்த - (அரக்கர் படைகளின்) தேர்கள் அனைத் தும் துண்டுபட்டன ; மாவின் திறம் எலாம் துமிந்த - குதிரை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


களின் வன்மை யெல்லாம் அற்றன; செம்கட் கார் எலாம் துமிந்த-(சினத்தாற்) சிவந்த கண்களையுடைய மேகம் போன்ற யானைகள் துண்டுபட்டன; வீரர் கழல் எலாம் துமிந்த - வீரர்களுடைய வீரகண்டைகள் எல்லாம் உடைபட்டன; கண்டம் தார் எலாம் துமிந்த - கழுத்தில் அணிந்த மாலைகள் எல்லாம் அறுபட்டன; நின்றதனு எலாம் துமிந்த - கையில் பிடித்திருந்த விற்கள் யாவும் ஒடிந்தன; தம் தம் போர் எலாம் துமிந்த - தங்கள் தங்களுடைய போர் வீரம் எல்லாம் அழியப்பெற்றது; கொண்ட புகழ் எலாம் துமிந்து போய - தாம் அதுகாறும் ஈட்டி நின்ற புகழ் அடங்கலும் அழிந்து போயின.

முன் பாடலில் அற்ற என்ற சொல் அடுத்தடுத்து வந்தாற் போன்று, இச்செய்யுட் கண்ணும் துமிந்த என்ற சொல் வந்தது. சொற்பொருட்பின்வருநிலையணி. மாவின் திறம் என்பது குதிரை களின் வகை யெனினுமாம். கார் உவமவாகு பெயராய்க் கரிய வேழங்களைக் குறித்தது. கழல் என்பது கருவியாகு பெயராய் வீரர்களின் கால்களைக் குறித்தது. தார் - போர் வீரர்கள் அணியும் வஞ்சி தும்பை முதலிய மாலைகள். போர் என்பது போர் புரியும் வீரம் என்க. 'வீரமும் களத்தே போட்டு வெறுங்கையே மீண்டு போனான் (யுத்த. கும்ப. 1) என்றது காண்க. தேர் முதலிய கட் புலனாகும் பொருள்களையும், வீரம் புகழ் போன்ற அருவப் பொருள் களையும் விடுத்ததாகக் கூறிய நயம் காண்க. தனு என்பதற்கு உடல் என்று கூறினுமாம்.

பி - ம். 1. துமிந்து; மாவின் சிரமெலாம்; துமிந்து.
2. கண்டர், கண்ட; கண்டர் தலையெலாம்.
3. நின்ற தரு வெலாம்.
4. துமிந்து போன.

150

1106. அரவியல் தறுகண் வன்ரு ளாள்வீழ ஆண்மேல் வீழப்
புரவிமேற் பூட்கை வீழப் பூட்கைமேற் பொலன்றேர் வீழ
நிரவிய தேரின் றன்மேல் நெடுந்தலை கிடந்த நெய்த்தோர்
விரவிய களத்து ளெங்கும் வெள்ளிடை யரிது வீழ.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அரவு இயல் தறுகண் - பாம்பினைப் போன்ற (சீறுகின்ற) தன்மையையும், அச்சமின்மையையும் உடைய, வல் தாள் ஆள் வீழ - வலிய முயற்சியைக் கொண்ட காலாட்கள் வீழ்ந்தனராக, ஆள்மேல் புரவி வீழ - அந்தக் காலாட் படைகள் மீது குதிரைகள் சாய, மேல்-அந்தக் குதிரைகள்மீது, பூட்கை வீழ-யானைகள் சாய, பூட்கை மேல் பொலம் தேர் வீழ - அந்த யானைகளின் மேல் பொன்னாலாகிய தேர்கள் வீழ, நிரவிய தேரின் தன் மேல் - வரிசையாக வீழ்ந்த தேர்களின் மீது, நெடு தலை கிடந்த - நீண்ட தலைகள் சாய்ந்து கிடந்தன; நெய்த்தோர் விரவிய களத்துள் எங்கும் - உதிரம் கலந்துள்ள யுத்த அரங்கில் எவ்விடத்திலும்; வீழ வெள்ளிடை அரிது - இனி மற்றொன்று வீழ்வதற்கு வெற்றிடம் சிறிதும் இல்லை.

ஆள்-காலாள். 'அரவியல் தறுகண் ஆள்' 'எறிகோலஞ்சா வரவினன்ன சிறுவர் மள்ளரும் உளரே' (புறநா. 89); 'அராவழன்ற தனையவன்' (ஆரணிய. 545). பூட்கை - யானை. சுந்தர. 851, 864, 871. 874, 938. பூணணிந்த துதிக்கையினை யுடையது என்க. நெய்த்தோர் - உதிரம்; 'நெய்த்தோர் சொரிந் தெங்கும்' (சீவக. 2173) 'நெய்த்தோரிற் பிணமாலை' (சீவக. 2335); வெள்ளிடை - வெற்றிடம். 'வெள்ளிடை மருங்கு லார்தம்' (சுந்தர. 206); 'வெள்ளிடை வியன் கோயில்' (சுந்தர. 301); 'வெள்ளிடையல்ல தொன்றில்லை வெஞ்சுரம்' (கிட்கிந்தா. 815): இதனைப் பொய்யிடம் என்றும் வழங்குவர் ஆசிரியர்; (யுத்த. 694); இச்செய்யுள் படுகளத்தை வருணித்தது.

பி - ம். 1. தறுகன் தன்றோள்;

2. பூட்கை வீழ்ந்த.

2. தேரின் மேன் மேல்.

4. வெளியிடம்; வெள்ளிடி, வெள்ளிடை வேறு முண்டோ; யுருமுவீழ.

1107. கடுப்பின்க ணமர ரேயுங்
கார்முகத் தம்பு கையால்
தொடுக்கின்றான் துரக்கின் றானென்
றுணர்ந்திலர் துரந்த வாளி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இடுக்கொன்றுங் காணுர் காண்ப
தெய்தகோ ஞெய்தி னெய்திப்
படுக்கின்ற பிணத்தின் பம்மற்
குப்பையின் பரப்பே பல்கால்.

கடுப்பின் கண் - (இலக்குவன் அம்புகளை) வேகமாக விடுக்கு மிடத்து, அமரரேயும் - தேவர்களும், கார் முகத்து - வில்லினின்று, அம்பு கையால் தொடுக்கின்ருன் - அம்புகளைக் கரத்தால் தொடுக்கின்ருன் என்றும், துரக்கின்ருன் என்று - விடுக்கின்ருன் என்றும், உணர்ந்திலர் - அறிய இயலாதவராயினர் ; துரந்த வாளி - ஏவிய அம்பானது, இடுக்கு ஒன்றும் காணுர் - சென்று பற்றுதலைச் சிறிதும் கண்டாரில்லை ; காண்பது - (அந்த விண்ணவர்) கண்ணுறுவது, எய்த கோல் பல் கால் நொய்தின் எய்தி - விடுத்த அம்புகள் பல தடவைகள் விரைந்து சென்று, படுக்கின்ற பிணத்தின் - கீழ் வீழ்த்துகின்ற பிணங்களின், பம்மல் குப்பையின் - அடர்ந்து மூடிய குவியலின், பரப்பே - பரப்பேயாகும்.

'எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார் ; பால. கார்முக. 34. கடுப்பின்கண் அமரர் - இலக்குவன் விரைந்து புரிந்த போர்த் தொழிலின் திறம் இதிற் கூறப்பெற்றது. இடுக்கு - இடுக்குதல் அல்லது கவ்வுதல், முதனிலைத் தொழிற்பெயர். பம்மல் ; 'எழுந்தது தண்பனிப்பம்பல்' (பாகவத. கோவியர். 1) ; இலக்குவன் விடுத்த வாளியின் இடுக்குக் காணுர் ; இறந்து போன பிணத்தின் குப்பையே கண்டார் என்க.

பி - ம். 1. கையில்.
2. தூர்க்கின்ருன்.
4. குப்பைப் பம்மலின் ; பரப்பை.



1108. கொற்றவாள் கொலைவேல் சூலம்
கொடுஞ்சிலை முதல வாய
வெற்றிவெம் படைகள் யாவும்
வெந்தொழி லரக்கர் மேற்கொண்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



டுற்றன கூற்று மஞ்ச
வொளிர்வன வொன்று நூருய்
அற்றன வன்றி யொன்றும்
அருதன வில்லை யன்றே.

வெம் தொழில் அரக்கர் மேல் கொண்டு உற்றன - கொடுந் தொழிலையுடைய அரக்கர்கள் கைக்கொண்டு உபயோகித்தனவும், கூற்றும் அஞ்ச ஒளிர்வன - யமனும் பயப்படுமாறு திகழ்வனவுமான, கொற்றம் வாள் - வெற்றி பொருந்திய வாட்படை, கொலை வேல் - கொல்லும் தன்மையதானவேல், சூலம் கொடு சிலை - சூலம், வளைந்த வில், முதலவாய - முதலியனவான, வெற்றிவெம் படைகள் யாவும் - சயம் தருகின்ற கொடிய படைக்கருவிகள் எல்லாம், ஒன்று நூருய் அற்றன அன்றி - ஒன்று நூருகத்துண்டு பட்டன அல்லாமல், அருதன ஒன்றும் இல்லை - துண்டாடப் படாதன யாதொன்றும் இல்லை; அன்று ஏ - அசைகள்.

பி - ம். 1. சிலைமுதல் கோலி.

2. மெய்க்கொண்டு, மீக்கொண்டு.

3. உற்றனர் கூற்ற மஞ்ச. 153

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

எரிமுகப் பகழி மாரி யிலக்குவன் சிலையின் கோலிச்
சொரிதரக் களிறு பொற்றேர் துரங்கமோ டிசைந்த காலாள்
நிருதர்கள் அளப்பில் கோடி நெடும்படைத் தலைவர் வல்லே
பொருகள மீதிற் சிந்திப் பொன்றின வென்ப மன்னே.

1109. குன்றன யானை மானக் குரகதக் கொடித்தேர் கோப
வன்றிற லாளி சீயம் மற்றைய பிறவும் முற்றும்
சென்றன வெல்லை யில்லை திரிந்தன சிறிது போதும்
நின்றன வில்லை யெல்லாங் கிடந்தன நெளிந்த பார்மேல்.

எல்லை இல்லை சென்றன குன்று அன யானை - (போர்க்குச் சென்றனவாய்) எல்லை யில்லாதனவான மலைகளை நிகர்த்த யானைகளும், மானம் குரகதம் - பெருமிதம் கொண்ட குதிரைகளும், கொடிதேர் - கொடி புனையப்பட்ட தேர்களும், கோபம் வல்திறல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஆளி சீயம் - சினத்தையும் கடுமையான வன்மையையும் கொண்ட யாளிகளும் சிங்கங்களும். மற்றைய பிறவும் - மற்று முள்ள பிராணி களும், முற்றும் - முழுவதும், சிறிது போதும் திரிந்தன நின்றன இல்லை - சிறிது கால அளவும் திரிந்தனவும் நின்றனவும் இல்லை; எல்லாம் பார்மேல் கிடந்தன நெளிந்த - எல்லாம் பூமியின் மீது கிடந்து (புழுக்கள் போன்று) நெளிவன வாயின.

உருவப் பெருமையையும் உணர்வுப் பெருமையையும், காட்சி யினிமையையும் முறையே குன்றன யானை, மானக் குரகதம், கொடித்தேர் எனக் குறித்தார். 'கொடித் திண்டேர்' (யுத்த. தேரேறு. 2).

பி - ம். 1. கொன்றனன், கொன்றனர், குன்றன்ன; மானக் கோடி நெடுந் தேர்கள். மானங் குரகதக் கொடுந்தேர், மானக் கொடிநெடுந் தோகை; பாய்மா.

3. திரிந்தில.

4. நெளிந்து. 154

## இராவணன் வெகுளி

1110. சாய்ந்தது நிருதர் தானை தமர்தலை யிடறித் தள்ளுற்
றோய்ந்தன வொழிந்த வோடி யுலந்தன வாக வன்றே
வேய்ந்தது வாகை வீரற் கிளையவன் வரிவில் வெம்பிக்
காய்ந்ததவ் விலங்கை வேந்தன் மனமெனுங் காலச் செந்தீ.

தமர்தலை - தங்களைச் சேர்ந்த இராக்கதரின் தலைகள், இடறி தள்ளுற்று - (அம்புகளால்) இடறித் தள்ளப்பட்டு, ஓய்ந்தன - உயிரற்றனவும், ஒழிந்த ஓடி உலந்தன ஆக - ஒழிந்தவை ஓடி வலிகெடப் பெற்றனவுமாக, அன்றே - அப்போதே, நிருதர் தானை சாய்ந்தது - அரக்கருடைய சேனை தோற்றது; வீரற்கு இளை யவன் - இராமபிரானுக்கு இளையவனான இலக்குவனது, வரிவில் - கட்டமைந்த வில், வாகை வேய்ந்தது - வெற்றிமாலை சூடிற்று; அ இலங்கை வேந்தன் மனம் எனும் காலம் செந்தீ - அந்த இலங்கைக்கு மன்னனான இராவணனுடைய மனம் என்னும் ஊழிக்காலத்துச் செந்நிறமாகத் தோற்றும் நெருப்பானது, வெம்பி காய்ந்தது - வெதும்பிக் கொதித்தது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அரக்கர் சேனை அழிய இலக்குவன் வென்றான்; அதுகண்டு இராவணன் உள்ளம் கொதித்தது. வாகை சூடுதல் - வெற்றிக் கறிகுறி; 'வென்றது வாகையாம்' (பு. வெ. மா.); 'வடதிசை வாகை சூடி' (கல்வெட்டு.).

பி - ம். 1. சாய்ந்தன.
2. ஓய்ந்ததும், ஓய்ந்தது; பொழிந்தது, ஒழிந்தது; உலர்ந்துமாக, உலைந்ததுமாக, உலர்ந்தனவாறே.
3. வரிவில் ஒன்றே, வரிவில் அம்பிற்.
4. காய்ந்தன; வெந்தீ. 155

## இராவணன் கிட்டி யெதிர்க்க, இலக்குவன் பின்னிடாது நிற்றல்

1111. காற்றுறழ் கலின மான்தேர் கடிதினிற் கடாவிக் கண்ணுற்
றேற்றன னிலங்கை வேந்தன் எரிவிழித் திராமன் தம்பி
கூற்றுமால் கொண்ட தென்னக் கொல்கின்றான் குறுகச்
[சென்றான்
சீற்றமுந் தானும் நின்றான் பெயர்ந்திலன் சிறிதும் பாதம்.

காற்று உறழ் - (விரைவினால்) காற்றை ஒத்த, கலினம் - கடிவாளம் பூண்ட, மான்தேர் - குதிரை பூட்டப்பெற்ற தேரினை, கடிதினில் கடாவி - வேகமாகச் செலுத்தி, இலங்கை வேந்தன் - இலங்கை அரசனான இராவணன், கண்ணுற்று - (இலக்குவனை) நோக்கி, எரிவிழித்து ஏற்றனன் - நெருப்புப் பொறி பறக்க விழித்து எதிர்த்தான்; (அப்போது), கூற்று மால் கொண்டது என்ன - யமன் பித்துக்கொண்டாற் போன்று, கொல்கின்றான் இராமன் தம்பி - கொலை புரிபவனான இராமன் தம்பியான இலக்குவன், குறுக சென்றான் - அவனைக் கிட்டிடச் சென்றவனாய், சீற்றமும் தானும் நின்றான் - சினமும் தானும் ஆக நின்றனன்; பாதம் சிறிதும் பெயர்ந்திலன் - அடி சிறிது கூடப் பின்னிட்டானில்லை.

கலினம் - கடிவாளம்; 'கலினமா விலாழியும்' (சுந்தர. 135); கொல்வதில் தீவிரமான கூற்றுவன் பித்தும் ஏறப்பெறின் அவன் புரியும் கொலைக்கு எல்லையும் உண்டோ. அதனால் 'கூற்றுமால் கொண்ட தென்னக் கொல்கின்றான்' எனப்பட்டது. சீற்றமும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தானும் நின்றான்; சினம் இவன் என்னுமாறு நின்றான் என்க; (ஒப்பு): 'தனியுந் தானுமத் தையலு மாயினான்' பால. மிதிலைக். 139.

பி - ம். 1. காற்றுள, காற்றனல்.

4. சிற்றமுந் தானும் வேறென்றியாவர்க்கும் தெரிக்கொணாதால்; நின்றான் பெயர்ந்திலன் சென்று பாதம். 156

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

எதிர்வரு மரக்கர் கோமான் இலக்குவன் றன்னை நோக்கி
மதியிலி மனித னீயும் வாளமர்க் கொருவன் போலாம்
இதுபொழு தென்கை வாளிக் கிரையென நகைத்தான் வீரன்
முதிர்தரு கோபம் மூள மொழிந்தமர் முடுக்க லுற்றான்.

## வேறு

## இலக்குவன் அம்பெய்தல்

1112. காக்கின்றவென் னெடுங்காவலின் வலிநீங்கிய கள்வா
போக்கின்றுனக் கரிதாலெனப் புகன்றான்புகை யுயிர்ப்பான்
கோக்கின்றன தொடுக்கின்றன கொலையம்புகள் தலையோ
டீர்க்கின்றன கனலொப்பன வெய்தானிகல் செய்தான்.

'காக்கின்ற என் நெடு காவலின் வலி நீங்கிய கள்வா - (சீதா தேவியைக்) பாதுகாத்துக் கொண்டிருந்த என்னுடைய பெருங் காவலின் வன்மையைக் கடந்திட்ட வஞ்சகனே! உனக்கு இன்று போக்கு அரிது - இன்று நீ தப்பிப்போவது என்பது இயலாத காரியம்', என புகன்றான் - என்று கூறியவனாய், (இலக்குவன்), புகை உயிர்ப்பான் - புகை யுண்டாகுமாறு பெருமூச்சுவிட்டு, கோக்கின்றன தொடுக்கின்றன - (வில்லில்) கோத்து தொடுக்கும் தன்மையனவும், தலையோடு ஈர்க்கின்றன - தலையை இழுத்துக்கொண்டு செல்வனவும், கனல் ஒப்பன - நெருப்பை நிகர்த்தனவும் ஆகிய, கொலை அம்புகள் - கொலைத்தொழில் அமைந்த அம்புகளை, எய்தான் இகல் செய்தான் - எய்தவனாய்ப் போர் புரிந்தான். ஆல் - அசை.

இராமன் ஏவலினால் பிராட்டியைக் காத்திருந்தவன் ஆகலின் 'காக்கின்ற காவலின்' எனப்பட்டது; பொன்னனாள் புக்கசாலை காத்தனன் புறத்து நின்றான்' (ஆரணிய. 793); 'கனியிரும் பொழில் காத்தய லிருந்தவன்' (ஆரணிய. 310). இச் செய்யுள் முதலாக 28

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



செய்யுட்கள் போர்ச்சந்தத்தில் அமைந்தவை. வீர வார்த்தைகளும், அவைகட்கேற்ற வீரச் செயல்களும் வெகுளியின் மெய்ப்பாடுகளும் இவற்றில் நன்கு குறிக்கப்பெற்றமை காண்க; அதிகாயன் வதைப் படலம் 143–178 செய்யுட்கள் இச்சந்தத்தில் அமைந்துள்ளமையும் நோக்குக. எய்தான் - எய்து நின்றவனாய்; முற்றெச்சம்.

பி - ம். 1. கடி நீங்கிய.
2. இன்றுனக் கணித்தால்.
3. கொலை வெங்கணை.
4. ஈர்க்கொன்றிய.

157

## விடுத்த அம்புகளை இராவணன் அறுத்துவிட, இலக்குவன் சரமாரி பொழிதல்

1113. எய்தான்சர மெய்தாவகை யிற்றீகென விடையே
வைதாலென வைதாவின வடிவாளியி னறுத்தான்
ஐதாதலி னறுத்தாயினி யறுப்பாயென வழிகார்
பெய்தாலெனச் சரமாரிகள் சொரிந்தான்துயில் பிரிந்தான்.

'எய்தான் சரம் எய்தா வகை - எய்தவனுடைய அம்புகள் (என் மீது) அணுகாதபடி, இடையே இற்று ஈகென - நடுவிலே ஒடிந்து ஒழிக', என வைதால் என -என்று இடையிலே சபித்தாற்போன்று, வைதா இன வடி வாளியின் அறுத்தான் - கூர்மை செறிந்தனவாக இனமான வடிக்கப்பட்ட அம்புகளால் சேதித்தான்; (அப்போது), துயில் பிரிந்தான் -நித்திரை யொழிந்தவனாகிய இலக்குவன்; 'ஐது ஆதலின் அறுத்தாய் - (நான் முன் ஏவியவை) மெல்லிது ஆகலின் துணித்தனை; இனி - இனிமேல், அறுப்பாய் - (இப்போது விடுவதைத்) துணிப்பாயாக', என - என்று மொழிந்து, அழிகார் பெய்தால் என - உலகினை யழிக்கின்ற (பெருவெள்ளத்தின் போழ்தில்) மேகம் மழை பொழிந்தாற் போன்று, சரமாரிகள் சொரிந்தான் - அம்பு மழைகளைப் பொழிந்தான.

இற்றீகென - இறுக என; வினைத்திரிசொல். வைதாலென வாளி; 'வைய்தெனக் கொல்லும் விற்கை மானுடர்' (யுத்த. 751); 'நல்லியல் நவையறு கவிஞர் நாவருஞ், சொல்லென' (யுத்த. 1069);

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'வைவன முனிவர்சொல் லனைய வாளிகள்' (யுத்த. அதிகாயன். 116). 'வைதவைவினில் ஒழிந்தன' (யுத்த. வேலேற்ற. 29); ஐது - மெல்லிது, அழிகார் வினைத்தொகை, உலகத்தை யழிக்கின்ற ஊழிக்காலத் தெழு மேகங்கள். துயில் பிரிந்தான்; இலக்குவன். 'உறக்க மென்பதனை யோட முனிந்தான்' (யுத்த. 820); 'மனையின் வாழ்வு முறக்கமு மாற்றினான்' (யுத்த. நாகபாசப். 153).

பி - ம். 1. இற்றிர்கென.
2. வவதானென.
3. அகல் செய்கென.
4. நெடுவாளிகன், வடிவாளிகள். 158

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

அரக்கன்மனம் கொதித்தாண்டகை யமலன்றனக் கிளையோன்
துரக்கும்பல விசிகம்துகள் படநூறின னதுகண்
டருக்கன்குல மருமானழி காலத்திடை யெழுகார்
நெருக்கும்படி சரதாரையின் நெடும்மாமழை சொரிந்தான்.

## இலக்குவன்விட்ட அம்புகளைத் தடுத்து அவனுடைய அம்பறாத்தூணியை இராவணன் துணித்தல்

1114. ஆங்குஞ்சர மனையான்விடும் அயில்வாளிக ளவைதாம்
வீங்குஞ்சரம் பருவத்திழி மழைபோல்வன விலக்காத்
தூங்குஞ்சர நெடும்புட்டிலிற் சுடர்வேலவற் கிளையான்
வாங்குஞ்சரம் வாங்காவகை யறுத்தானற மறுத்தான்.

அறம் அறுத்தான் - நல்ல அறச்செய்கைகளைச் சேதித்தவனான இராவணன், ஆம் குஞ்சரம் அனையான் விடும் - வலியுடன் கூடிய யானையை நிகர்த்தவனான அந்த இலக்குவன் விடுவனவும், வீங்கும் சரம் பருவத்து - பொங்கிய சரற்காலத்து, இழி மழை போல்வன - பெய்கின்ற மழைபோல்வனவுமான, அயில் வாளிகள் அவை தாம் விலக்கா - கூரிய அம்புகள் அனைத்தையும் தடுத்து, சுடர் வேலவற்கு இளையான் - ஒளிவிடுகின்ற வேலாயுதத்தையுடைய இராமபிரானுக்கு இளையவனான இலக்குவன், தூங்கும் - அசைவதாகத் தொங்குகின்ற; சரம் நெடு புட்டி


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



லில் - அம்புகளை அடக்கிய நெடிய அம்பறாத் தூணியிலிருந்து, வாங்கும் சரம் - எடுக்கின்ற அம்புகளை, வாங்காவகை - எடுக்க வியலாதபடி, அறுத்தான் - (அம்பறாத்தூணியைத்) துணித்தான்.

இச்செய்யுளில் திரிபு என்னும் சொல்லணி காண்க. விலக்கா - விலக்கி; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பெரும்பாலும் வில்லொடுங் கூட்டியே இராமபிரான் கூறப்படுவது இந்நூலில் யாண்டும் காணலாம். 'வீங்கிய சிலையிராமன் தோள் வலி' என்பது பாயிரம். ஆயினும் இங்குச் சுடர் வேலவன் எனக் குறிக்கப்பட்டமை நோக்கத்தக்கது. தயரதனைக், 'கால வேலான்' (பால. கையடை. 11) என்றதும் இங்குக் குறிக்கொள்ளத்தகும். அற மறுத்தான்; 'அறம்புகாமையா லழியுமிப் பதியென வயர்த் தான்' (சுந்தர. 118); 'மூவகை யுலகையும் முறையினீக்கிய பாவியர்' (சுந்தர. 395). அண்டங்கள் எவையும் தாக்கிக் காப்பி னும் அறமிலாதான்' (யுத்த. 720); 'அறமுனக் கஞ்சியின் றெளித்ததால்' (யுத்த. கும்பகன்னன். 84).

பி - ம். 1. அவைதான்.

2. பருவத்தழி, விலகாத்; வீங்குஞ்சர நெடுமார்பினில் நுழையக்கனல் விழியா.

159

## அநுமன் போரைத் தவிர்கென்று சொல்லுதல்

1115. அப்போதையி னயர்வாறிய வனுமா னழல்விழியாப்
பொய்ப்போர்சில புரியேலினி யெனவந்திடைப் புகுந்தான்
கைப்போதக மெனமுந்தவன் கடுந்தேரெதிர் நடந்தான்
இப்போரொழி பிற்போருள வீவைகேளென விசைத்தான்.

அப்போதையின் - அந்தப் பொழுதில், அயர்வு ஆறிய அநு மான் - இளைப்பாறிய அநுமன், அழல் விழியா - தீப்பிறக்கும்படி விழித்து, 'இனி பொய் போர் சில புரியேல் - இனி சில போலிச் சண்டைகளை நீ புரியாதே', என - என்று சொல்லிக் கொண்டு; இடை வந்து புகுந்தான் - அந்தப் போரின் நடுவில் புகுந்தவனாய், கைப்போதகம் என - கையினையுடைய யானையைப்போல, முந்து - முற்பட, அவன் - அந்த இராவணனுடைய, கடு தேர் எதிர் நடந் தான் - விரைந்து செல்கின்ற தேரினுக் கெதிராகச் சென்று,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'இ போர் ஒழி - (இப்போது புரியும்) இந்தச் சண்டையைத் தவிர்க, பின் போர் உள - பின்னர்ச் செய்ய இருக்கும் போர்கள் உள்ளன; இவை கேள் - (நான் கூறும்) இவற்றைக் கேட்பாயாக', என இசைத்தான் - என்று மொழியலானான்.

அயர்வாறுதல் - இளைப்பாறுதல், கைப்போதகம் - துதிக்கையினையுடைய யானை, போதகம் - பத்து ஆண்டு நிறைந்த யானைக் கன்று (பிங்.); 'போதக நடப்ப நோக்கி' (ஆரணிய. 224). 'போதகம் மெனப் பொம்மெ னுயிர்ப்பினான்' (ஆரணிய. 1044). கடும் தேர் - விரைந்த செலவினையுடைய தேர். அநுமன் கூறுவதை அடுத்த கவியிற் காண்க.

பி - ம். 1. அப்போதகன்; அநுமானனல்.

2. புரியேலென, புரியேனென, எனவந்தவன், நின்றவன்.

4. மற்போருள. 160

## அநுமன் ஓங்கி வளர்ந்து நிற்றல்

1116. வென்றாயுல கொருமூன்றையும் மெலியாநெடு வலியால்
தின்றாய்செறி கழலிந்திர னிசையைத்திசை திரிந்தாய்
என்றாலுமின் றழிவுன்வயி னெய்தும்மென விசையா
நின்றானவ னெதிரேயுல களந்தானென நிமிர்ந்தான்.

'மெலியா நெடு வலியால் உலகு ஒரு மூன்றையும் வென்றாய் - தளராத மிக்க வன்மையால் ஒரு மூன்று உலகங்களையும் வெற்றி கொண்டாய்; திசை திரிந்தாய் - திக்குக்களில் எல்லாம் சஞ்சரித்து, செறி கழல் இந்திரன் இசையை தின்றாய் - பொருந்திய கழல் புனைந்த இந்திரனுடைய புகழை அழித்தாய்; என்றாலும் - (இத் துணைப் பெருமை உடையவன் நீ) எனினும், இன்று - இப்பொழுது, உன் வயின் அழிவு எய்தும் - உனக்கு அழிவு வந்தடையும்', என இசையா நின்றான் - என்று சொல்லியவனாய், அவன் எதிரே - இராவணன் எதிராக, உலகு அளந்தான் என நிமிர்ந்தான் - உலகினை அளந்த திருவிக்கிரமன்போன்று உயர்ந்து நின்றான்.

முதலடிக்கு 'உலக மூன்றும் காவலோன் பின்னை' (ஆரணிய. 258); இசையைத் தின்னல்: உண்டற்குரிய வல்லாப் பொருளையும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உண்டது போலக் கூறியது (தொல். பொருள். 213); இசையா : செய்யா என்னும் வாய்பாடு. உலகளந்தான் என நிமிர்ந்தான்; (ஒப்பு): அணுவின் மேருவின் ஆழியான் எனச் செலும் அறிவோன்' (சுந்தர. 229); அநுமனுடைய பேருருவை, கிட்கிந்தா. 73, 1001; சுந்தர. 587-இல் காண்க. 'எதிர்த் திருநான்மறை தெரிக்கும், செங்கண்ணவ னிவனேயெனத் திரிந்தான்கலே தெரிந்தான்'; 'உலகொரு மூன்றையும் வலத்தால், அளந்தான் முன மிவனேயென விமையோர்களு மயிர்த்தார்' (யுத்த. பிரமாத்திர. 116). உலகளந்த வரலாறு: பால. வேள்வி. 21—37 காண்க; மற்றும், ஆரணிய. 10:4; சுந்தர. 33-உம் காண்க.

பி - ம். 1. மெலியாத மெய்.
2. திரித்தாய்.
3. என்றுனு.
4. எனவுரையா. 161

## அநுமான் பேருருவங் கொண்டு இதனைக் காண் எனல்

1117. எடுத்தான்வலத் தடக்கையினே யதுபோயுல கெல்லாம்
அடுத்தாங்குற வளர்ந்தான்திரு வடியின்படி யாயே
மடுத்தாங்குற வளர்ந்தானென வளர்கின்றவ னுருவம்
கடுத்தானெனக் கொடியாற்கெதிர் காண்பாயெனக் [காட்டா.

வளர்ந்தான் திருவடியின் படியாயே - வாமனன் ஆகித் திரு விக்கிரமனாக ஓங்கி வளர்ந்தவனாய், சிறிய திருவடியின் தன்மைக் கேற்ப, மடுத்து - நிறைந்து, ஆங்கு உற வளர்ந்தான் என உருவம் வளர்கின்றவன் - ஆங்குப் பொருந்த வளர்ந்தான் என வடிவம் வளர்கின்ற அநுமன், தட வலம் கையினே எடுத்தான் - (தனது) பெரிய வலிய கரத்தினே உயர்த்தினான்; அது உலகு எல்லாம் போய் அடுத்து ஆங்கு உற - (அந்தக்கரம்) உலகங்களனைத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டு அடுத்து நிற்ப, கடுதான் என கொடியாற்கு எதிர் - நஞ்சு என்னுமாறு கொடுந்தன்மை வாய்ந்த இராவணனுக்கு எதிரே, 'காண்பாய்' என காட்டா - நீ 'காண்பாயாக' எனக் காட்டி.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



திருவடியின் படியாயே மடுத்தாங்குற வளர்ந்தான் ; கிட்கிந்தா. 1001 பார்க்க ; 112 செய்யுட் குறிப்பும் காண்க. கடுத்தல் - ஒத்தல் ; 'குவளைக் கோட்டகம் கடுத்தது' (சுந்தர. 128) ; 'பங்கி யரக்கரைக் கடுத்த' (சுந்தர. 132). காட்டா : செய்யா என்னும் வாய்பாடு.

பி - ம். 1. இதுபோய்.

2. வடிவென்ன.

3. அடுத்தாங்குற ; வளர்ந்தாலென, அளந்தானென ; வளர்கின்றதை வயவெங்.

4. கடியார்க்கு. 162

## அநுமன் பெருமூச்சு விடுதல்

1118. வில்லாயுத முதலாகிய விறல்வெம்படை மிடலோ
டெல்லாமிடை பயின்றாய்புய நாலைந்தினொ டியைந்தாய்
வல்லாய்செரு வலியாய்திறன் மறவோயிக லெதிரே
நில்லாயென நிகழ்த்தாநெடு நெருப்பாமென வுயிர்ப்பான்.

'வில் ஆயுதம் முதலாகிய விறல் வெம்படை எல்லாம் - விற்படை முதலான வெற்றி பொருந்திய கொடிய படைக் கருவிகளை எல்லாம், மிடலோடு இடைபயின்றாய் - வன்மையுடன் இவ்வுலகிற் பயின்றுள்ளாய் ; புயம் நாலைந்தினொடு இயைந்தாய் - இருபது தோள்கள் பொருந்தப்பெற்றாய்; செருவலி வல்லாய் - போர் புரியும் ஆற்றலுடையாய் ; ஆய்திறன் மறவோய் - ஆராயப்படுகின்ற திறமையுடன் கூடிய வீரனே! இகல் எதிரே நில்லாய் - போர் புரிவதற்கு எதிரே நிற்பாயாக ; (பார்ப்போம்)', என நிகழ்த்தா - என்று சொல்லி, நெடு நெருப்பு ஆம் என - பெரிய தீப்போன்று, உயிர்ப்பான் - (வெம்மையாக) மூச்செறிந்தான்.

புயம் நாலைந்தினொ டியைந்தாய் - 'இருபது கரந்தலை யீரைந்தென்னுமத் திருவிலிக்கு' (யுத்த. 342) ; உரைக் குறிப்பும் காண்க. 'தருவனமனைய தோளான்' (யுத்த. அதிகாய. 266) ; 'தருவனமெனப்புடை தழைத்துயர் தடங்கை' (யுத்த. மகுடபங்க. 3) ; வல்லாய் வலியாய் மறவோய் என்றது இராவணன் முன்னியற்றிய வீரச் செயல்களைக் குறித்து என்க ; பிறகுறிப்புமாம். நிகழ்த்தா ;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



செய்யா என்னும் வாய்பாடு. நெருப்பாம் என உயிர்த்தான் அன லென்ன வயிர்த்துயிர்த்தாள்' (பால. பூக்கொய். 18).

பி - ம். 1. வயவெம்படை ; முதலோடு ; அடவே.
2. எல்லாமவை.
3. வலியாயினி, இதன்.



அநுமன் 'என்குத்தைத் தாங்கிப் பின் நீ குத்த நான் இறவாவிடினும் உன்னோடு பொருவதில்லை' என்றது

1119. நீளாண்மையி னுடனேயெதிர் நின்றாயிஃ தொன்றோ
வாளாண்மையு முலகேழினொ டுடனேயுடை வலியும்
தாளாண்மையு நிகராருமில் தனியாண்மையு மினிநின்
தோளாண்மையு மிசையோடுடன் துடைப்பேனொரு
[புடைப்பால்.

(அநுமன் இராவணனைப் பார்த்து), 'நீள் ஆண்மையின் உடனே எதிர் நின்றாய்-மிகுந்த வீரத்துடனே என்எதிரே நின்றனை, இஃது ஒன்றோ - இது ஒரு பொருளோ? வாள் ஆண்மையும் - வாளினால்தெரிக்கும் ஆண்மையும், உலகு ஏழினொடு உடனே யுடை வலியும் - ஈரேழு உலகங்களும் ஒன்று சேர அழியும்படி புரியும் ஆற்றலும், தாளாண்மையும் - முயற்சியும், ஆரும் நிகர் இல் தனி ஆண்மையும் - எவரும் ஒப்பாகாத தனிப்பட்ட வீரமும், நின் தோள் ஆண்மையும் - உன்னுடைய புயவலியும் என்ற அனைத்தினையும், இசையோடு உடன் ஒரு புடைப்பால் இனி துடைப்பேன் - உன் னுடைய புகழுடனே ஒரே குத்தினால் இப்பொழுதே ஒழித்துக் கட்டுவேன்'.

நீளாண்மை என்றது மனோதிடம்; வாள் ஆண்மை - போர்க் கருவிகளைக் கையாளும் திறம்; தாளாண்மை - உடலாற் செய்யும் ஊக்கத்துடன் கூடிய முயற்சி; தனி ஆண்மை - தன்னிகரற்று விளங்கிய வீரம். தோள் ஆண்மை - புயவலி. புடைப்பு - தாக்குதல் அல்லது அடித்தல்.

பி - ம். 1. ஆண்மையொ டெதிரேதனி ; இனியொன்றாய்.
2. வில்லாண்மையு மறவோயுள ; தெறுவலியும்.
3. நனிநின்.
4. மிடலோடுடன் ; புடைப்பில்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


1120. பரக்கப்பல வுரைத்தென்படர் கயிலைப்பெரு வரைக்கும்
அரக்குற்றெரி பொறிக்கட்டிசைக் கரிக்குஞ்சிறி தனுங்கா
உரக்குப்பையி னுயர்தோள்பல வுடையாயுர னுடையாய்
குரக்குத்தனிக் கரத்திற்றொடப் பொறையாற்றுவை
[கொல்லாம்.

'பல பரக்க உரைத்தென் - பலவாக விரித்துக் கூறுவதால் என்ன பயன்? படர் கயிலை பெருவரைக்கும் - படர்ந்து உள்ள கயிலை என்ற பெரிய மலைக்கும், அரக்கு உற்று எரி - (சாதிலிங்கம் போன்று) செந்நிறம் கொண்டு எரிகின்ற, பொறிகண் திசைக் கரிக்கும் - தீப்பொறிகள் பறக்கின்ற கண்களைக் கொண்ட திசை யானைகளுக்கும், சிறிது அனுங்கா - சற்றும் பின்னிடையாத, உரம் குப்பையின் உயர்தோள் பல - வலிமைத் தொகுதி மிக்க உயர்ந்த பல தோள்களை, உடையாய் - பெற்றவனே! உரன் உடையாய் - வலிமை கொண்டவனே! (இனி பின்னிடையாது), குரக்கு தனி கரத்தில் - குரங்கினுடைய நிகரற்ற கையினால், தொட - தொட்டவளவில், பொறை ஆற்றுவை கொல்லாம் - அந்தப் பளுவைத் தாங்குவாயோ!'

கொல்: ஐயப் பொருளில் வந்தது. 'கொல்லே ஐயம் அசை நிலை கூற்றே' (நன். இடை.) என்றது காண்க. கயிலை மலையினை முயற்சியின்றி எடுத்ததும், திசைக்கரிகளை வென்றதும் இந்நூலிற் பல இடங்களிலும் காணலாம். சுந்தர. 117, 272, 303, 451, 452, 743. பொறையாற்றுதல் - தாங்கி நிற்றல் 'பொறையிருந்தாற்றி' (சுந்தர. 499).

பி - ம். 2. அரக்குத் தெறிபொறி, அரக்குப் பொறித்தெறி; சிறிதொதுங்கா.
3. தோளினி யுடையா.
4. கரத்திற்புடை; பொறையாற்றுதி.



1121. என்றேள்வலி யதனாலெடுத் தியானெற்றவு மீறவா
நின்றாயெனி னீபின்னெனை நின்கைத்தல நிரையால்
குன்றேபுரை தோளாய்மிடல் கொடுகுத்துதி குத்தப்
பொன்றேனெனி னின்னோடெதிர் பொருகின்றிலெ
[னென்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'குன்றே புரை தோளாய் - மலையையே ஒப்பான தோள்களை யுடையவனே! என் தோள் வலி அதனல் - என்னுடைய புயவன்மை யினல், எடுத்து - என் கையை உயர்த்தி, யான் எற்றவும் இறவா நின்ருய் எனின் - யான் குத்தவும் நீ சாகாமல் இருப்பையாயின், நீ - நீ, பின் - பிறகு, எனை - என்னை, நின் கைத்தலம் நிரையால் - உன்னுடைய கைத்தல வரிசையினல், மிடல்கொடு குத்துதி - வலி மையோடு குத்துவாயாக; குத்த - அங்ஙனம் குத்துங்கால், பொன் றேன் எனின் - இறவாவிடினும், நின்னேடு எதிர் பொருகின்றிலென் - உனக்கு எதிர்நின்று போர்புரியேன்', என்ருன் - என்று சொல்லி முடித்தான்.

அநுமனின் வீரவசனம். இராவணன் தோளுக்குக்குன்று; (சுந்தர. 411; 1080); பொன்றுதல் - இறத்தல்; 'பொன்றுதல் ஒரு காலத்தும் தவிருமோ' (யுத்த. இந்திரசித்து. 10).

பி - ம். 2. நின்றேனெனை.

3. குன்ருேடுயர் தோளால். 166

## இராவணன் அநுமன் கூறியதை வியத்தல்

1122. காரிற்கரி யவன்மாருதி கழறக்கடி துகவா
வீரற்குரி யதுசொற்றனை விறலோயொரு தனியேன்
நேர்நிற்பவ ருளரோபிறர் நீயல்லவ ரினிநின்
பேருக்குல களவேயினி யுளவோபிற வென்ருன்.

காரில் கரியவன் - மேகத்தைப் பார்க்கிலும் கருமை நிறமுள்ள இராவணன், மாருதி கழற - அநுமன் அவ்வாறு கூற, கடிது உகவா - விரைவாகக் கொண்டாடி, 'விறலோய் - வலிமையுடை யோய்!, வீரற்கு உரியது சொற்றனை - வீரனுக்குப் பொருந்திய தையே புகன்ருய், ஒரு தனியேன் - தனிப்பட்ட என்னுடைய, இனி நேர் நிற்பவர் நீயல்லவர் பிறர் உளரோ - இனி நேராக எதிர்த்து நிற்கக்கூடியவர்கள் உன்னையல்லாத பிறர் இருக்கின்றனரோ? நின் பேருக்கு உலகு அளவே - (என்னுடன் எதிர்ததுப் பொருததனு லான) உனது புகழுக்கு உலகு உள்ள அளவும் அளவாகும்; இனி பிற உளவோ - இனி வேறு உவமையுள்ளதா?' என்ருன் - என்று பகர்ந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உகவா : செய்யா என்னும் வாய்பாடு. 'நீ தைரியமாக என் முன் நின்றதனாலேயே என்னுடன் போர் புரிவதனாலாகிய புகழ் நினக்கு எய்திற்று; என்னை எதிர்த்து நிற்பவர் எவரும் இல்லை' என்றான் இராவணன். இனி பிற உளவோ என மொழிமாற்றுக. இராவணன் அநுமன் கூறியதற்கு மகிழ்ந்து 'நீ ஒருவனாக என் முன்னர் நின்ற வெற்றியமையாதோ? இன்னும் வேறு புகழ் வேண்டுமோ உனக்கு' என்றான்.

பி - ம். 1. கழறக்கூடி கதுவா, கடிதுதவா.
2. ஒருதனியே, தனியென்.
3. நீயல்லெவர்.
4. உலகளவேயென, போருக்குளவளவே யினியுளவே புகழ்விறலோய்.

## இராவணன் மேலும் கூறுதல்

1123. ஒன்றாயுத முடையாயலை யொருநீயென துறவுங்
கொன்றாயுயர் தேர்மேனிமிர் கொடுவெஞ்சிலை கோலி
வன்றானையி னுடன்வந்தவெ னெதிர்வந்துநின் வலியால்
நின்றாயொடு நிகராரினி யுளரோவுரை நெடியோய்.

'நெடியோய் - பெருமையுடையவனே, ஒரு நீ - தனியாயுள்ள நீ, ஆயுதம் ஒன்று உடையாய் அலை - போர்க்கருவி எதுவும் கொண்டு வரவில்லை, எனது உறவும் கொன்றாய் - என்னுடைய சுற்றத்தார் களையும் கொன்றனை, நிமிர் கொடு வெம்சிலை கோலி - உயர்ந்த மிகவும் கொடிய வில்லை வளைத்து, வன் தானையினுடன் - வலிய சேனையினுடனே, உயர் தேர் மேல் வந்த என் எதிர் வந்து - உயர்ந்த தேரின் மீது வந்த எனக்கு எதிராக வந்து, நின் வலியால் நின்றாயொடு - நின் வலிமை காட்டி நின்ற நின்னோடு, நிகர் ஆர் - (உலகத்தில் உள்ளவரில்) இனி ஒப்பாவார் ஆர்? உரை - சொல் வாயாக'.

கோலுதல் : வளைத்தல். 'கோலிய வரிசிலை வலியும் கொற் றமும்' (யுத்த. 395).

பி - ம். 2. நெடுந்தேர் நிமிர்.
3. உடன் வந்தளன்.
4. நின்றாயெனி னிகரோ.

168



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1124. முத்தேவர்கள் முதலாயினர் முழுமூன்றுல கிடையே
எத்தேவர்க ளெத்தானவ ரெதிர்வாரிக லென்னேர்
பித்தேறின ரல்லாலிடை பேராதெதிர் மார்பிற்
குத்தேயென நின்றுயிது கூறுந்தர மன்றால்.

'முழு மூன்று உலகிடையே - முழுமையான மூன்று உலகிலும் உள்ள, முத்தேவர்கள் முதலாயினர்-பிரமா, விஷ்ணு, சிவன்என்ற மூன்று தேவர்கள் முதலாயினோரில், பித்தேறினர் அல்லால்-பித்தம் மிகப் பெற்றவர்கள் அல்லாமல், எதேவர்கள் எதானவர் என் நேர் இகல் எதிர்வார் - எந்தத் தேவர்கள் அல்லது அசுரர்கள் எனக்கு நேராகப் போரில் எதிர்வார்கள்? (எவருமிலர்); அங்ஙன மிருக்க, இடை பேராது - இருந்த இடத்தைவிட்டு விலகாமல், மார்பில் குத்தே என எதிர் நின்றுய் - மார்பில் குத்து என்று சொல்லி எதிர் நின்றனை, இது கூறும் தரம் அன்று - இது எடுத்துக்கூறும் தரத்தது அன்று'. ஏ, ஆல் - தேற்றம்.

இகல் என்னேர் எதிர்வார்கள் என மொழி மாற்றுக. இடை பேரா; 'இடைபேரா வினையானை' (யுத்த. கும்ப. 55).

பி - ம். 1. மூன்றுலகிடையும்.
2. எதிர்வா ரிகலென்ன, எவ்வீரர்களென்னேர்.
3. பித்தேறினன்.
4. நின்றுயது.

169

1125. பொருகைத்தல மிருபத்துள புகழும்பெரி துளதால்
வருகைத்தல மதவெங்கரி வலிகெட்டென வருவாய்
இருகைத்தல முடையாயெதி ரிவைசொற்றனை யினிமேல்
தருகைக்குரி யதோர்கொற்றமெ னமர்தக்கது மன்றால்.

'பொருகைதலம் இருபத்து உள - போர் புரிதற்குரிய கைகள் இருபது உள்ளன, புகழும் பெரிது உளது - (உலகிலேயே பெரிய வீரன் என்ற) கீர்த்தியும் எனக்கு மிகவும் உள்ளது, வரு கைதலம் மதம் வெங்கரி -, பொருந்திய துதிக்கையையுடைய மதம் செறிந்த கொடிய யானைகளும், வலிகெட்டென-வலியழிந்திடுமாறு, வருவாய்- (கம்பீரமான தோற்றத்துடன்) வருபவனே! இரு கைதலம் உடை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யாய் - நீ இரண்டே கைகளை உடையவன்; எதிர் இவை சொற்றனை- எனக்கு நேர் நின்று (நான் குத்துகின்றேன் ; என்னைக் குத்துவாயாக, பின் என்னை நீ குத்து என்ற) இவ்வீர வார்த்தைகளைப் பகர்ந்தாய் ; இனிமேல் - ஒன்றுக்கும் பற்றாத ஓர் புல்லிய குரங்கு இவ்வாறு என் எதிர் நின்று இவ்வார்த்தைகளைச் சொல்லுமாறு ஏற்பட்டபின், தருகைக்கு உரியது - நிகழ்த்துதற்குரிய, ஓர் கொற்றம் என் - ஒப்பற்ற வெற்றி எனக்கு யாது உளது ? அமர் தக்கதும் அன்று - நான் போர் செய்வதும் பொருந்துவதன்று'. ஆல் - அசை.

கைத்தலம் இருபத்துள : 1114 குறிப்புக் காண்க. 'இருகரங்களையுடையவுன்னை இருபது கரங்களுடன் கூடிய யான் எதிர்ப்பது என்பது ஒத்தபடை யெடாதவனுடன் பொருவதேயாகும்; அது என் புகழுக்கும் இழுக்காகும்' என்றான் இராவணன். தொல். புறத். 65 நச்சினார்க்கினியர் உரைப்பகுதி காண்க; 'ஒருகை யுடைய தெறிவலோ யானு மிருகை சுமந்து வாழ்வேன்'; 'யானைக் கீதென்கையிலெஃகமால், தானும் விலங்கா லொருகைத்தால்' (சீவக. 2261) உரை. தருகை: கை விகுதிபெற்ற தொழிற்பெயர்.

பி - ம். 1. சிறிதுளதால்.

2. வலிகட்டினன் வருவான், தொட்டென வருவாய்.

3. உடையா யெனதெதிர்.

4. பகர்தக்கதும், என்றால். 170

1126. திசையத்தனை யையும்வென்றது சிதையப்புகழ் தெறுமவ்
வசைமற்றினி யுளதேயென துயிர்போல்வரு மகனை
அசையத்தரை யரைவித்தனை யழிசெம்புன லதுவோ
பசையற்றில தொருநீயென தெதிர்நின்றிவை பகர்வாய்.

'அத்தனை திசையையும் வென்றது - எல்லாத் திக்குகளையும் வெற்றி கொண்டது, சிதைய-அழிந்துபட, புகழ் தெறும் அ வசை- புகழை அழிக்கக்கூடிய அந்தப் பழிப்புரையைக்காட்டிலும், இனி மற்று உளதே - இனி வேறு இருக்கின்றதா ? (எனக்கு உன்னால் விளைந்த அந்தப்பழி இன்னதெனக்கூறுவேன்); எனது உயிர்போல் வரும் மகனை - எனது உயிரைப்போல (போர் அரங்கில்) வந்த அந்த அரக்கனை, அசைய - உயிர் நீங்குமாறு, தரை அரைவித்

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தனை - தரையிலே வைத்து அரைத்தனை; அழி செம்புனல் அதுவோ - அப்போது பெருகி ஓடிய உதிரமோ, பசை அற்றிலது- இன்னும் ஈரம் புலரவில்லை, ஒருநீ - ஒப்பற்ற நீ, எனது எதிர் நின்று இவை பகர்வாய் - நீ என் நேராக நின்று இத்தகைய சொற்களைப் பகர்ந்தனை'.

திசை அத்தனை - நான்கு பெருந் திசைகள்; நான்கு கோணத் திசைகள் ஆகாயம் பூமி. திசைகளை வென்றது; 'எட்டு மோரிரண்டுமாய திசைகளை யெறிந்து வென்றேன்' (யுத்த. இந்திரசித்து. 11). உயிர்போல் வருமகன் : அக்ககுமாரன்; அவனை அழித்தது; 'விண்ணொடு மண்காணத், தேய்த்தா னூழியி னுலகேழ் தேயினு மொருதன் புகழிறை தேயாதான்' (சுந்தர. 968); 'சாந்தெனப் புதல்வன்றன்னைத் தரையிடைத் தேய்த்து' (யுத்த. 946). அழி செம்புனல்: வினைத்தொகை.

பி - ம். 1. திசை பத்தினையுற, புகழ்தேறும்.
2. மற்றினி யுளவே.
3. தரையணைவித்தனை.

171

1127. பூணித்திவை யுரைசெய்தனை யதனாலுரை பொதுவே
பாணித்தது பிறிதென்சில பகர்கின்றது பழியால்
நாணித்தலை யிடுகின்றில னனிவந்துல கெவையும்
காணக்கடி தெதிர்குத்துதி யென்றான்வினை கடியான்.

வினைகடியான் - கொடிய தொழிலனான இராவணன், 'அதனால் பூணித்து இவை உரை செய்தனை - (இங்ஙனம் எனக்கு வசை நேர்ந்ததன் காரணமாக) சூளுரைத்து இவ்வார்த்தைகளை வழங்கினாய்; உரை பொதுவே - இவ்வாறு பகர்வது உலகியல்தான், பாணித்தது - காலதாமதமாயிற்று; பிறிது சில பகர்கின்றது என் - வேறாகச் சில சொல்வதினால் என்ன பயன்? பழியால் நாணி - நான் வசையினால் வெட்கி, தலையிடுகின்றிலன் - தலையிடாதவனாகி நின்றேன்; வந்து - முன்வந்து, உலகு எவையும் நனி காண - உலகில் உள்ளார் அனைவரும் நன்கு காணுமாறு, கடிது எதிர் குத்துதி - விரைந்து எதிர்நின்று குத்துவாயாக'; என்றான் - என்று மொழிந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பூணித்தல் - சூளுறவு செய்தல்; 'பூழியிற் புரட்டலென் பூணிப்பாமென' (சுந்தர. 1105); 'என்னேடே பூணித்து' (ஈடு. 10 : 8 : 5). பாணித்தல் - காலந் தாழ்த்தல்; 'பாணித்து நின்று பயனுவ தென்னே' (ஆரணிய. 961); மற்றும், கலிங். 102, 13 உரை. பழி - ஒன்றுக்கும்பற்ருத போர்க்கருவியொன்றும் கையேற்காத ஒரு குரங்கினை எதிர்த்தலாகிய பழி என்க. குரங்கின் கையில் குத்தப்பட்டதற்கு நாணி எனினும் ஆம்; (ஒப்பு): 'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ, தஞ்ச லறிவார் தொழில்' (குறள். 428); 'பிறர்பழியுந் தம்பழியும் நாணுவார் நாணுக், குறைபதி யென்னும் உலகு' (குறள். 1015); 'நல்லறந் துறந்த தென்னு நகைவர நாணுட் கொண்டான்' (கிட்கிந்தா. 301). வினைகடியான்; 'கொன்ருனே கற்பழியாக் குலமகளைக் கொடுந்தொழிலாற் றின்ருனே' (சுந்தர. 321); 'பாவகாரிதன் பாவகம் ஒருமுகம் பயில' (சுந்தர. 1092); 'மூவகை யுலகையு முறையி னீக்கிய, பாவியர்' (சுந்தர. 395).

பி - ம். 1. இதனுலுயர்.
3. இடுகின்றிலனினி.
4. தறுகண்ணன், வினைகடிவான். 172

## அநுமன் இராவணன் மார்பிற் குத்துதல்

1128. வீரத்திற மிதுநன்றென வியவாமிக விளியாத்
தேரிற்கடி திவராமுழு விழியிற்பொறி சிதரு
ஆரத்தொடு கவசத்துடல் பொடிபட்டுக வவன்மா
மார்பிற்கடி தெதிர்குத்தினன் வயிரக்கர மதனல்.

'இது வீரம் திறம்-இந்த வீரப்பான்மை, நன்று-மிகவும் பெரிதாக உள்ளது' என வியவா - என்று ஆச்சரியப்பட்டு, மிக விளியா - மிகவும் ஆர்ப்பரித்து, தேரில் கடிது இவரா - தேரின் மீது விரைந்து ஆரோகணித்து, முழுவிழியில் பொறி சிதரு - கண் முழுதும் நெருப்புப் பொறி சிந்தும்படி, அவன் மா மார்பில் - அந்த இராவணனுடைய அகன்ற மார்பினில், வயிரம் கரம் அதனல் - (தன்னுடைய) வயிர மொத்த வலியகையினுல், ஆரத்தொடு கவசத்து - ஆரத்தொடு கூடிய கவசத்துடனே, உடல் பொடிபட்டு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உக - சரீரம் பொடியாகிச் சிந்துமாறு, கடிது எதிர் குத்தினன் - வேகமாக எதிர் நின்று குத்தினன்.

வீரத்திறம்; 'வீரத்திறலோர்' (கிட்கிந்தா. 271); வியவா, விளியா, இவரா, சிதரு என்பன செய்யா - என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சங்கள். விளியா - மகிழ்ச்சியால் ஆகப் பரித்து. ஆரம் - போர்மாலையான தும்பை; நவமணிமாலையுமாம், 'பசும் பொனாரத்தின் மானிற மணிகள்' (சுந்தர. 411); 'கோளெலாங் கிடந்தநெடுஞ் சிறையன்ன நிறையாரங் குலவ' ஆரணிய. 558).

பி - ம். 1. திறமவை.

3. கவசத்தொடு மழிபட்டுகவரைபோல், கவசத்துடன் பொடிபட்டவன்.

## அநுமன் கைக்குத்தினுல் நேர்ந்த நிகழ்ச்சி

1129. அயிருக்கன நெடுமால்வரை யனலுக்கன விழிகள்
தயிருக்கன முழுமூளைகள் தலையுக்கன தரியா
உயிருக்கன நிருதக்குல முயர்வாநர மெவையும்
மயிருக்கன வெயிறுக்கன மழையுக்கன வானம்

(அநுமனது குத்தின் வேகத்தால்) நெடு மால்வரை அயிர் உக்கன - மிகவும் உயர்ந்த அகன்ற மலைகள் மணற்றூள் போல உதிர்ந்தன; விழிகள் அனல் உக்கன - கண்களினின்று தீப்பொறிகள் சிந்தின; முழு மூளைகள் தயிர் உக்கன - பெரிய மூளைகள் தயிர் போலச் சிதறின; தலை தரியா உக்கன - தலைகள் நிலைகொள்ளாமல் ஆடின; நிருத குலம் உயிர் உக்கன - அரக்கர் குலத்தினுடைய உயிர்களும் சிதறின; உயர் வாநரம் எவையும் மயிர் உக்கன எயிறு உக்கன - உயர்ந்த வாநரங்கள் எல்லாமும் மயிரும் பற்களும் உதிரப்பெற்றன. வானம் மழை உக்கன - வானத்தினின்று மழைகள் சிதறி வீழ்ந்தன.

அயிர் - கரியநுண் மணல், 'அயிர் கிடக்குங் கடல் வலயத்தவர்' (ஆரணிய. 199); தரியா - ஈறுகெட்ட எதிர் மறை வினையெச்சம். தயிர் என்றது மூளைச் சேற்றினை. உக்கன என்ற சொல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அடுத்தடுத்து வந்தது சொற் பொருட்பின் வரு நிலையணி. போர் நிகழ்ச்சி கண்கூடாதல் காண்க.

பி - ம். 1. விழிதன்.

2. உக்கன; நிரியா, தரியாது.

3. உக்கது; நிருதக் கடல். 174

1130. விற்சிந்தின நெடுநாணிமிர் திரைசிந்தின விரிநீர்
கற்சிந்தின குலமால்வரை கதிர்சிந்தின சுடரும்
பற்சிந்தின மதயானைகள் படைசிந்தின ரெவரும்
எற்சிந்திய வெரிசிந்தின விகலோன்மணி யகலம்.

வில் சிந்தின நெடு நாண் - (வீரர்களின் வில்லிலிருந்து நீண்ட நாணிகள் அறுந்து வீழ்ந்தன; நிமிர் திரை விரிநீர் சிந்தின - ஓங்கி எரியும் அலைகள் பரந்த கடற்கரையைக் கடந்தன; குலம் மால் வரை கல் சிந்தின - சிறந்த பெரிய மலைகளினின்று கற்கள் உடைந்து வீழ்ந்தன; சுடரும் கதிர் சிந்தின - சூரிய சந்திரர் களாகிய ஒளிப்பிழம்புகள் கிரணங்களைச் சிதறின; மதம் யானைகள் பல் சிந்தின - மதம் கொண்ட யானைகள் தம் தந்தங்கள் ஒடியப் பெற்றன; எவரும் படை சிந்தினர் - எல்லோரும் தத்தம் ஆயுதங் களைக் கீழே போகட்டார்கள்; இகலோன் மணி அகலம் - மாறு பட்டுப் பொருவதில் வல்லவனான இராவணனுடைய அழகிய மார்பு முழுதும், எல் சிந்திய எரி சிந்தின - ஒளியைக் கக்குகின்ற நெருப்பை வாரி யிறைத்தன.

சிந்தின என்ற சொல் அடுத்தடுத்து வந்தது; சொற்பொருட் பின்வருநிலையணி. குலமால் வரை; எட்டுச் சிறந்த மலைகள். விரிநீர்; வினைத்தொகையன்மொழி.

பி - ம். 1. கணை சிந்தின; தரை, கரை.

3. மதவானைகள்; பரிமாகரி பணை சிந்தின படையும்.

4. எரி சிந்திய. 175

1131. கைக்குத்தது படலுங்கழ னிருதர்க்கிறை கறைநீர்
மைக்குப்பையி னெழில்கொண்டொளிர் வயிரத்தட [மார்பில்
திக்கிற்சின மதயானைகள் வயவெம்பணை செருவிற்
புக்கிற்றன போகாதன புறமுக்கன புகழின்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கை குத்தது படலும் - (அநுமனுடைய) கைக்குத்துப் பட்ட வுடனே, கழல் நிருதர்க்கு இறை - வீரகண்டையை அணிந்த அரக்கர் கோனாகிய இராவணனுடைய, கறை நீர் - விடத்தின் தன்மையுடன், மைகுப்பையின் எழில் கொண்டு ஒளிர் - அஞ்சனத் தொகுதியின் அழகைக் கொண்டு விளங்கும், வயிரம் தட மார்பில் - வயிரம் போன்று உறுதியான மார்பின் கண், திக்கில் - எட்டுத் திக்குகளிலும் உள்ள, சினம் மதயானைகள் - சினம் கொண்ட மதம் பிடித்த யானைகளின், வயம் வெம்பணை - வெற்றி பொருந்திய கொடிய தந்தங்கள், செருவில் புக்கு இற்றன - போரிலே புகுந்து ஒடிந்தன வாய், போகாதன - (அந்த மார்பிலேயே) அகலாது நின்றவை, புகழின் புறம் உக்கன - அந்த இலங்கேசனது புகழ் போயின போல் முதுகின் வழியே சிந்தின.

கறை - நஞ்சு; 'கறையுகு பகுவாயு ரகம்' (ஞானப். பாயி. 7·5). திக்கு யானைத் தந்தங்கள் இற்றவை; 'பணைக்கை யானைக் கோடுழுத நெடுந்தழும்பின்' (யுத்த. இராவணன் வதை. 205); 'பெருந்திசை யெல்லை யானைக், கோடுள தனையும் புக்குக் கொடும் புறத்தழுந்து புண்ணின்' (யுத்த. இராவணன் வதை; 212); 'அப்பணை யனைத்து மார்புக் கணியெனக் கிடந்த' (யுத்த. இராவணன் வதை; 213); 'பார் மகளைத் தழுவினையோ திசை யானைப் பணையிறுத்த பணைத்த மார்பால்' (யுத்த. 226); 'வண்ட லங்கு நுதற்றிசைய வயக்களிற்றின் மருப்பொடிய வடர்த்த பொற்றோன்' (ஆரணிய. 557). பணை - தந்தம்; அநுமன் குத்தினால் யானைக் கொம்புகள் இராவணன் மார்பினின்றும் கழன்றன.

பி - ம். 1. கைக்குத்திடை ; பட.லுங்களி ; கறை நீர்.

3. திக்குச் செறி ; மத யானையின் ; நெடுவெம்பணை.

4. புக்கற்றன ; போதாதன ; புகலில், புகழில். 176

**1132.** **அள்ளாடிய கவசத்தவிர் மணியற்றன திசைபோய்**
**விள்ளாநெடு முழுமீனென விழிவெம்பொறி யெழநின்**
**றுள்ளாடிய நெடுங்கால்பொர வொடுங்காநிலை குலையத்**
**தள்ளாடிய வடமேருவிற் சலிந்தானறம் வலித்தான்.**

அள்ளாடிய - சந்து விட்டுப்போன, கவசத்து - (தனது) கவசத் திலே, அவிர்மணி - ஒளிர்கின்ற அரதனங்கள், விள்ளா - விண்டு,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நெடு முழு மீன் என - நீண்ட முழுமையான நட்சத்திரம் போன்று, திசை போய் அற்றன - திசைகளில் தெறித்து வீழ்ந்தன, (அப்போது) அறம் வலித்தான் - அறத்தை வலிந்து செகுத்தவனை இராவணன், விழி வெம் பொறி எழ நின்று - (தன்) கண்களிலிருந்து தீப்பொறிகள் பறக்க நின்று, உள் ஆடிய நெடு கால் பொர ஒடுங்கா - உள்ளே உலவுகின்ற சிறந்த பிராணவாயு வீசுவதினின்றும் தளர, உலகு உலைய - உலகினர் வருந்துமாறு, தள்ளாடிய வடமேருவில் - தடுமாறி அசைந்த வடமேரு மலை போன்று, சலித்தான் - மனம் உடைந்தான்.

அள்ளாடுதல் - கட்டுவிடுதல், விள்ளா அற்றன - விண்டு உதிர்ந்தன, விள்ளா, ஒடுங்கா; செய்யா என்னும் வாய்பாடுகள். வடமேரு இராவணற்குவமை; (ஒப்பு): 'ஓங்குதய மால்வரையின் விளங்க' (ஆரணிய. 557); 'மங்கையரீட்ட மால்வரை தழீஇய மஞ்ஞையங் குழுவென வயங்க' (சுந்தர. 416); இங்கும் இராவணனுக்கு வரையுவமமாகக் கூறப்பட்டமை காண்க. 'உள் ஆடிய நெடுங்கால்: அண்டத்துள் உலவும் சண்டமாருதம்' என்பது பழையவுரை.

பி - ம். 1. மணியன்னவை, யற்றவை.
2. முழு மின்னென விழ.
3. ஒடுங்கா நிலைகுலைய.
4. தவமறுத்தான், அறமறுத்தான். 177

## வானவர் முதலியோர் ஆரவாரித்தல்

1133. ஆர்த்தார்விசும் புறைவோர்நெடி தனுமான்மிசை யதிகந்
தூர்த்தார்நறு முழுமென்மல ரிசையாசிகள் சொன்னார்
வேர்த்தார்நிரு தர்கள்வானரர் வியந்தாரிவன் விசயம்
தீர்த்தானென வுவந்தாடினர் திகழ்மெய்ம்மயிர் சிலிர்த்தார்.

(அதுகண்டு) விசும்பு உறைவோர் - வானத்தில் வதிபவரான தேவர்கள், ஆர்த்தார் - மகிழ்ச்சியால் ஆர்ப்பரித்தவராகி, அநுமான் மிசை - உயர்ந்த அநுமான்மீது, நறு முழு மெல் மலர் அதிகம் நெடிது தூர்த்தார் - நன்மணமுள்ள முழுமையான மெல்லிய மலர்களை மிகவும் நீண்டநேரம் பொழிந்தவர்களாய், இசை ஆசிகள் சொன்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஞர் - அவன் வீரத்திற்கு ஏற்ற வாழ்த்துக்களை வழங்கினுர்கள் ; நிருதர்கள் வேர்த்தார் - அரக்கர்கள் (உடல் வியர்த்தனர்) ; வாநரர் வியந்தார்-வாநரர் ஆச்சரியமெய்தி, 'இவன்- இந்த இராவணனுடைய, விசயம் - வெற்றியை, தீர்த்தான் - (இந்த அனுமன்) ஒழித்துக்கட்டினுன்', என-என்று, உவந்து ஆடினர்-மகிழ்ச்சிக் கூத்தாடி, திகழ் மெய் மயிர் சிலிர்த்தார் - விளங்குகின்ற உடம்பு முழுதும் மயிர் சிலிர்க்கப்பெற்றுர்கள்.

இச் செய்யுட்களில் துன்பத்தாலும் உவகையாலும் நிகழும் மெய்ப்பாடுகள் முறையாகக் கூறப்பெற்றமை காண்க. விசயம்: வடசொல்.

பி - ம். 3. வேர்த்தார் மிகநிருதாதியர், உயிர் நிருதாதியர், நிருதர்கள் வானவர், நிருதர்கள் தானவர், வியந்தாரவன்.

4. உயர்ந்தாடினர், முழுகென், முழுமெய். 178

## இராவணன் மூர்ச்சித்து உடனே உணர்வுபெறுதல்

1134. கற்றங்கியி னெடுவாயுவி னிலைகண்டவர் கதியால்
மற்றங்கொரு வடிவுற்றது மாருடுறு காலைப்
பற்றங்கொரு மையிலன்னது பயில்கின்றதொர் செயலால்
உற்றங்கது புறம்போயுடல் புகுந்தாலென வுணர்ந்தான்.

அங்கியின் நிலை - அக்கினியின் நிலையினையும், நெடு வாயுவின் நிலை - பெரிய பிராணவாயுவின் நிலையினையும், கற்று கண்டவர் - அனுபவத்தில் அறிந்து உணர்ந்த யோகிகள், கதியால் - (தம்மிடமுள்ள) பரகாயப்பிரவேச ஆற்றலால், மற்று அங்கு ஒரு வடிவுற்று - பிறிதோர் உடலிற் பொருந்தி, அது - அதினின்று, மாருடுறு காலை - வேறுபடும்போது, அங்கு-முன்னர், ஒருமையில் - ஒன்றுபட்டிருந்த, பற்று - அந்தச் சரீரப் பற்றினுலே, அன்னது பயில்கின்றதோர் செயலால் - அந்த உடலிலேயே பொருந்தும் செயலுக்குப் பொருந்த, அங்கு அது - அப்போது உடற்கண் பொருந்திய அந்த உயிர், புறம் போய் உற்று உடல் புகுந்தால் என - வெளிச் சென்று மீண்டும் உடற்கண் வந்து புகுந்தாற்போன்று, உணர்ந்தான் - இராவணன் உணர்ச்சி எய்தினுன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இராவணன் உயிரிழந்தவன் போன்று நினைவு நீங்கப்பெற்று, மீண்டும் உயிர் வரப்பெற்றதற்கு, பிறிதொரு சரீரத்தில் புகும் ஆற்றல் சான்ற சித்தர்கள், தம்முடம்பினை விடுத்துப் பின்னர் அவ்வுடம்பிலேயே பற்றுவைத்து வருதலை உவமை கூறினர். பிறிதோருடலிற் புகுதல் பரகாயப்பிரவேசம்; இனி அங்கியின் நெடு வாயு என்பதற்கு, அங்கம் : சரீரம். அங்கி என்றால் சரீரத்தை யுடைய ஆன்மாவின் பெயர். ஆதலின் அங்கியின் நெடுவாயு என்றது பிராணவாயு என்க. கூடுவிட்டுக் கூடுபாயும் இது யோகி கள் ஆற்றக்கூடிய ஓர் அருஞ்செயல்; 'மற்றொரு சரீரத்தினும் புகுதலாம்' (தாயு. 117); ஆதிசங்கராச்சாரியார் பரகாயப்பிரவேசம் செய்த வரலாறு கேட்டுணர்க; (ஒப்பு): 'இறந்தனர் பிறந்தபய னெய்தினர்கொ லென்கோ, மறந்தன ரறிந்துணர்வு வந்தனர்கொ லென்கோ, துறந்தவுயிர் வந்திடை தொடர்ந்ததுகொ லென்கோ' (சுந்தர. 553).

பி - ம். 1. கற்றங்கியல்.

2. வடிவின்னுயிர், மாறுடுவ.

3. பற்றங் கருமையில், பயவாதொரு செயல்போல், பயிலாதொரு செயலால்.

4. உற்றங்குயிர்.

179

இதிற் சிறிது வேறுபட்ட ஓர் பாடல் :—

கற்றங்கிய முழுமார்பிடைக் கவியின்கர மதனால்
உற்றென்றிய குத்தின்வலி யதனாலுட லுளைவான்
பற்றின்றிய வொருமால்வரை யனையானொரு படியால்
மற்றங்குடல் பெற்றாருயிர் வந்தாலென வுய்ந்தான்.

## மூர்ச்சை தெளிந்த இராவணன் அநுமனைக் கிட்டிச் சில கூறுதல்

1135. உணராநெடி துயிராவுரை யுதவாவெரி யுமிழா
இணையாருமி லவனேர்வர வெய்தாவலி செய்தாய்
அணையாயினி யெனதூழென வடராவெதிர் படராப்
பணையார்புய முடையானிடை சிலவிம்மொழி பகர்வான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உணரா - உணர்ச்சியுற்று, நெடிது உயிரா - பெருமூச்செறிந்து, உரை உதவா - பேச்சு வெளிவராமல், எரி உமிழா - நெருப்பு எழும் படி விழித்து இணையாருமிலவன் நேர் வரவு எய்தா - தன்னொப்பார் எவருமில்லாத அநுமன் எதிரே வந்து, 'வலி செய்தாய் - வலிய போர் புரிந்தவனே! இனி எனது ஊழ் அணையாய் - இனி என்னாலேற்படும் விதிமுறைக்கு உட்படுவாயாக', என - என்று கூறி, அடரா - அடர்த்து, எதிர்படரா - எதிரே சென்று, பணை ஆர் புயம் உடையான் இடை - மூங்கிலையொத்த தோள்களையுடைய வன் ஆன அநுமனிடம், சில - சிலவாகிய, இம்மொழி - பின்வரும மொழிகளை, பகர்வான் - சொல்லலானான்.

இச்செய்யுட்கண் உயிரா உதவா முதலிய பல செய்யாவென்னு வாய்பாட்டு வினையெச்சங்கள் வந்துள்ளமை காண்க. இவற்றை உடன்பாட்டிற் கூருது இவ்வாறு கூறுவது மெய்ப்பாட்டுணர்ச்சி மிகுத்துக்காட்டக் கவிகள் மேற்கொள்ளும் ஒருநெறி. 'மக்களை முன் காணா மனநடுங்கா வெய்துயிரா' (நள. 369) எனத் தொடங்கும் செய்யுளைக் காண்க. பணை ஆர் புயம் - பருத்து நிறைந்த புயம், பணை மூங்கிலுமாம். எனதூழென: 'நினதூழினி யெனவே' (சீவக. 2265); இங்கு நச்சினார்க்கினியர் 'இனி நினது ஊழ் எனவே - இனிமேல் உன்னுடைய முறையாகும் என்று அவ்வீரன் கூறவே; போரில் முறையுண்டென்பதை 'வாண்மிகு மறமைந்தர், தோண் முறையான் வீறுமுற்றவும்' (மதுரைக். 53-54); 'என்முறை வருக வென்னான் கம்மென, எழுதரு பெரும்படை விலக்கி, யாண்டு நிற்கு மாண்டகை யன்னே' (புறநா. 292) என வரைதல் காண்க.

பி - ம். 1. உணரா வுணர் வுநியா.

3. அடராவெளி.

4. சிலவன்மொழி, பகர்ந்தான். 180

## இராவணன் அநுமனுடைய திறமையைப் புகழ்தல்

1136. வலியென்பது முளதேயது நின்பாலது மறவோய்
அலியென்பவர் புறநின்றவ ருலகேழையு மடர்த்தாய்
சலியென்றெதிர் மலரோனுரை தந்தாலிறை சலியேன்
மெலிவென்பது முணர்ந்தேனெனை வென்ருயினி விறலோய்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


'மறவோய் - வீரனே! வலி என்பதும் உளதே - வன்மை என்பது ஒன்றுண்டே, அது நின்பாலது - அது உன்னிடம்தான் உள்ளது; புறம் நின்றவர் அலி என்பவர் - (புறத்துள்ள வீரர்கள் அனைவரும்) உன்னை நோக்கும் இடத்து அலிகள் என்றே சொல்லத் தக்கவர் ஆவர்; உலகு ஏழையும் அடர்த்தாய் - உலகேழையும் அழித்தவனுனாய்; (எங்ஙனம் என்றால்), மலரோன் - பிரமதேவனே, சலி என்று எதிர் உரை தந்தால் - என்னெதிரே (நீ) மனம் தளர்வாய் என்று கூறினும், இறை சலியேன் - சிறிதுந் தளராத நான், மெலிவு என்பதும் உணர்ந்தேன் - மெலிவு என்பதனை (உன்னால்) அறிந்தவன் ஆனேன் அன்றோ? விறலோய் - வன்மை மிக்கவனே! இனி எனை வென்றாய் - இனி என்னை வெற்றிகொண்டவனே ஆனாய்'.

புற நின்றவர் அலியென்பவர் என மாற்றுக. (ஒப்பு.) 'வீரச் சேவகச் செய்கை கண்டால், நாயெனத் தகுதுமன்றே, காமனு நாமு மெல்லாம்' (யுத்த. கும்ப. 1240); என்பது அநுமன் கூற்று. 'பேடிய ரன்றோ பெற்றியி னின்றிடின்' (மணி. 3 : 25); அநுமனை இராவணன் புகழ்ந்தது. 'வீரரை யார் வியவாதார்' (கிட்கிந்தா. 297).

பி - ம். 1. உளதேல்.

2. அரியென்னை, புறநின்றன, பிறநின்றன, உலகேழினும், அடைத்தாய்.

3. தாழ்ந்தால்.

4. மெலிவென்பது மறிந்தேன்; விகல்விறலோய்; இனியென்றான். 181

1137. ஒன்றுண்டினி யுரைநேர்குவ துன்மார்பினெ னொருகைக்
குன்றின்மிசை கடைநாள்விழு முருமேறெனக் குத்தா
நின்றிந்நிலை தருவாயெனி னீயல்லவ ருளரோ
இன்றும்முனை யென்றும்முனை யிலையோர்பகை யென்றான்.

'இனி உரைநேர்குவது ஒன்று உண்டு - இப்போது நான் பகர வேண்டுவது ஒன்று உள்ளது; உன் மார்பின் - உனது மார்பின்கண், குன்றின் மிசை கடைநாள் விழும் உரும் ஏறு என - மலையின்மீது ஊழி யிறுதியிலே வீழ்கின்ற பேரிடி போன்று, என் ஒருகை குத்தா - எனது ஒருகரத்தாற் குத்தா நிற்கவும், நீ நின்று இந்நிலை தருவாய் எனின் - நீ உயிர்தரித்து நிற்கப்பெறுவாயாகில், நீ

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அல்லவர் உளரோ -(பின்னர்), உன்னை ஒழிந்து வேறொருவர் உலகில் நிலையாயிருப்பவர் இருக்கின்றனரோ? (அப்பால்) இன்றும் உளை என்றும் உளை-இன்று நீ உளனாயிருப்பது போன்றே என்றும் இருப்பவனாவாய், ஓர் பகை இலை-(உனக்குப்) பிறிதோர் பகை இல்லை', என்றான் - என்று மொழிந்தான் (இராவணன்).

கடைநாள்: உலகழியும் ஊழிக் காலம். (ஒப்பு.) முடிவின் மாரி ஆயத்தினிடியிதென்றே யஞ்சின' (யுத்த. முதற்போர். 1097); வீரர் வீரரின் வீரதையைப் பாராட்டும் பண்பினை இச்செய்யுட்களில் காணலாம்.

பி-ம். 2. குன்றின்னெடுங், குன்றினிடை, குத்த: குளித்தால், குறித்தால்.
3. நின்றுன்னிலை, நின்னேர்பிறர். 182

## அநுமன் குத்துமாறு தன் மார்பைக் காட்டுதல்.

1138. என்றானெதிர் சென்றானிக லடுமாருதி யெனைநீ
வென்றாயலை யோவுன்னுயிர் வீடாதுரை செய்தாய்
நன்றாகநின் னிலைநன்றென நல்காவெதிர் நடவாக்
குன்றாகிய திரடோளவன் கடன்கொள்கெனக் கொடுத்தான்.

இகல் அடும் மாருதி - பகைவர்களைக் கொன்று ஒழிக்கின்ற அநுமன், என்றான் எதிர் சென்றான் - என்று மேற்கண்டவாறு பகர்ந்த இராவணன் எதிரேபோய், 'உன் உயிர் வீடாது-(யான் தந்த குத்திலே) உன் உயிர் நீங்கப் பெறாமல், உரை செய்தாய் - (என் எதிர் நின்று) பேசினையாதலின், எனை நீ வென்றாய் அலையோ - என்னை நீ வெற்றிகொண்டவன் ஆவாயல்லையோ? நன்றாக-நன்றாக, நின் நிலை நன்று என - உன்னிலை செம்மையாக உள்ளது' என்று, நல்கா - புகழுரை தந்து, எதிர் நடவா - அவன் எதிராக நடந்து சென்று, குன்று ஆகிய திரள் தோளவன் - மலையை ஒத்த திரண்ட தோளையுடையவன் ஆன இராவணன், 'கடன் கொள்க - (உனக்கு உரிய) கடனை ஏற்றுக்கொள்க' என - என்று, கொடுத்தான் - ஒரு குத்துத் தரலானான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நல்கா நடவா : செய்யாவென்னும் வாய்பாடு. திரள் தோள வன் என்பதனை அனுமானுக்கு ஏற்றி, உன் கடனைப் பெற்றுக் கொள்க என்று தன் மார்பினைக் கொடுத்ததாகச் சிலர் கூறுவர்.

பி - ம். 2. வின்னுயிர்.

3. நன்ருக வுன்வலிதான், உன்னிலை நன்று. 183

இராவணன் குத்த அநுமன் சலித்ததைத் தெரிவிக்கும்.

1139. உறுக்கித்தனி யெதிர்நின்றவ னுரத்திற்றன தொளிர்பல்
இறுக்கிப்பல நெடுவாய்மடித் தெரிகண்டொறு மிழிய
முறுக்கிப்பொதி நிமிர்பல்விரல் நெரியத்திசை முரியக்
குறுக்கிக்கரம் நெடுந்தோளுற நிரைகைக்கொடு குத்த.

தனது பல நெடுவாய் மடித்து - தன்னுடைய பலவான பெரிய வாய்களை மடித்து, ஒளிர் பல் இறுக்கி - விளங்குகின்ற பற்களை இறுகக் கடித்துக் கொண்டும், எரிகண் தொறும் இழிய - நெருப்பு விழிகள்தோறும் வெளிப்படவும், உறுக்கி - வெகுண்டு, பொதி நிமிர் பல் விரல் நெரிய முறுக்கி - கனமான நிமிர்ந்த பலவாகிய விரல்கள் ஒன்ருக இணையுமாறு திரித்துக் கொண்டு, திசைமுரிய - திக்குகள் நிலை கெட, கரம் நெடு தோள் உற குறுக்கி - கைகளை நீண்ட தோள்களிற் பொருந்துமாறு மடக்கிக் கொண்டு, தனி எதிர் நின்றவன் உரத்தில் - தனித்துத் தன் எதிர் நின்றவனுன அநுமனுடைய மார்பின்கண், நிரை கைகொடு குத்த - வரிசையான தன் கரங்கள் கொண்டு குத்த; சலித்தான் என்ற செய்யுளுடன் முடியும்.

இதில் மற்போரின் தன்மை உள்ளபடி உரைக்கப்பெற்றி ருத்தல் காண்க. இராவணன் முதலில் குத்த, அப்பால் அநுமன் குத்த, மீண்டும் இராவணன் குத்தினுன் என்று வான்மீகம் கூறும். இங்கு இராவணன் குத்தினுல் நிகழ்ந்த நிகழ்ச்சி கூறப்பட்டது. இருபது கரங்களாகலின் நிரை கைக்கொடு எனப்பட்டது.

பி - ம். 2. எரிகண்டொறு முமிழ.

3. முறுக்கிப்பொறி நிமிரக்கரம் நிமிர்பல்.

4. குறுக்கிக் கிரிநெடுந்தோள்புற நிமிரக்கொடு, நிரை கைக்கொடு. 184

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இங்கு ஓர் அதிகப்பாடல் :—

கொதித்தாங்கட லரக்கன்கொடுங் கரமொன்றதின் வலியால்
மதித்தானெடு வயமாருதி மார்பத்திடை வரமேல்
புதைத்தரங்குறு மிடியேறெனப் பொறிசிந்திய புவனம்
விதித்தான்முத லிமையோருளம் வெள்கும்படி விட்டான்.

**1140. பள்ளக்கடல் கொள்ளப்படர் படிபேரினும் பதையா**
**வள்ளல்பெரு வெள்ளத்தெறுழ் வலியாரினும் வலியான்**
**கள்ளக்கறை யுள்ளத்ததிர் கழல்வெய்யவன் கரத்தால்**
**தள்ளத்தளர் வெள்ளிப்பெருங் கிரியாமெனச் சலித்தான்.**

பள்ளக்கடல் கொள்ளப்படர் - ஆழமாகிய கடல் கொள்ளுமாறு பரந்துள்ள, படிபேரினும் - பூமி நிலைகுலையும் காலத்தும், பதையா வள்ளல் - நடுங்காத கருணையனும், பெருவெள்ளத்து - பெரிய வெள்ளம் போலும், எறுழ் வலியாரினும் வலியான் - வலிமை வாய்ந்த வலியவரினும் வலியவனுமான அநுமான், கள்ளம் கறை உள்ளத்து - கள்ளத் தன்மையினால் அழுக்கேறிய மனத்தையும், அதிர் கழல் - பேரொலி செய்கின்ற வீரகண்டையையும் உடைய, வெய்யவன் - கொடியவனான இராவணன், கரத்தால் தள்ள - தன் கையினால் குத்தி வீழ்த்திய காலத்து, தளர் வெள்ளி பெரு கிரி யாம் என சலித்தான் - தளர்ச்சியுற்ற வெள்ளிப் பெருமலையான கயிலாயம் போன்று மனம் தளர்ந்தான்.

இராமபிரானைப்பற்றிய அரிய செய்திகளைச் சொல்லிக் கணையாழிதந்து, பிராட்டிக்குயிர்ப் பிச்சை அளித்தவன் ஆகலின் அநுமன் வள்ளல் எனப்பட்டான். 'துணையிலேன் பரிவுதீர்த்த, வாழிய வள்ளலே' (சுந்தர. 561) ; 'அருளின் வாழ்வே' (சுந்தர. 560) எனப் பிராட்டி அநுமனைப் புகழ்ந்தமை காண்க. 'மற்றையோர் களும் அநுமான் வண்மையால் பெற்றவாயுளார்' (யுத்த. மருத்து. 115) ; எறுழ் வலி : ஒருபொருட் பன்மொழி சிறப்புப்பற்றி வந்தது. வெள்ளிப் பெருங்கிரி - கயிலாய மலை. (ஒப்பு) : 'தள்ளாடிய வடமேருவிற் சலித்தான்' (யுத்த. முதற்போர். 1132).

பி - ம். 1. பதையான்.
2. வள்ளப், வெள்ளத்துறு.
3. உள்ளத்தெதிர்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## வேறு

1141. சலித்த காலையி னிமையவ ருலகெலாஞ் சலித்த
சலித்த தாலறஞ் சலித்தது மெய்ம்மொழி தகவுஞ்
சலித்த தன்றியுந் தவமொடு சுருதியுஞ் சலித்த
சலித்த நீதியுஞ் சலித்தது கருணையுந் தவமும்.

சலித்த காலையில் -(மாருதி) இலங்காதிபனுடைய குத்தினுல் தளர்ந்த போதில், இமையவர் உலகு எலாம் சலித்த - தேவர் உலகனைத்தும் மனத்தளர்வெய்தின; அறம் சலித்தது - தருமமும் சலித்தது; மெய் மொழி சலித்தது - உண்மை மொழியும் தளர்ந்தது; தகவும் சலித்தது - நற்பண்பும் சலித்தது; அன்றியும் - அல்லாமலும், தவமொடு சுருதியும் சலித்த - புகழுடன் வேதமும் சலித்தன; நீதியும் சலித்தது - நீதியும் சலித்தது; கருணையும் தவமும் சலித்த - கருணையும் தவமும் சலிப்புற்றன. ஆல்: அசை.

வானவர் இடுக்கண் தீர்க்க வாயுவின் புதல்வனுகக் சிவாம்சம் பெற்றுப் பூவுலகில் வந்தவன் அநுமன் ஆகலின் இமையவர் உலகு முதல் அனைத்தும் சலித்தன எனப்பட்டது. (ஒப்பு.) 'தனிக்கைச் சிலையும் வானவரு முனிவர் குழுவும் தனியறனும், இனிக்கட் டழிந்த தரக்கர்குலம் என்னும் சுருதி யிரிரண்டும், குனிக்க' (சுந்தர. 544); என்ற இடத்து இங்குச் சலித்த அனைத்தும் களிக்கூத்தாடின எனப்பட்டமை காண்க. 'காந்தையருக் கணியனைய' (யுத்த. இராவணன் வதை. 241) எனத் தொடங்கும் மண்டோதரி புலம்பற் செய்யுளும் காண்க. தகவு - நடுநிலைமையுமாம். சொற்பொருட் பின்வரு நிலையணி.

பி - ப். 1. இமையவருலகொடுஞ்.
3. சலித்த நன்றியுஞ் சுருதியு மிருதியும்.
4. கருணையும் பலவும்.

186

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

உருத்து வெஞ்சினத் தரக்கனங் கொருகையிற் புடைப்ப
வரைத்த டம்புலை மாருதி மயங்கிய தறிந்தாங்
கிரைத்த திண்பரித் தேர்நின்று மிருநிலத் திழியச்
சரித்து வாநர மடிந்திடச் சரமழை பொழிந்தான்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1142. அனைய காலையி னரிக்குலத் தலைவரவ் வழியோர்
எனைய ரன்னவர் யாவரு மிருங்குவ டேந்தி
நினைவின் முன்னெடு விசும்பொரு வெளியின்றி நெருங்க
வினையம் நன்றிதென் றிராவணன் மேற்செல விட்டார்.

*அனைய காலையின்* - (அநுமன் தளர்ந்த) அப்போது, *அவ்வழியோர்* - ஆங்கிருந்தவரான, *அரிகுலத்தலைவர்* - வானரக்குலத் தலைவர், *எனையர் அன்னவர் யாவரும்* - எத்துணைவர் உண்டோ அத்துணைவரும், *நெருங்க*-நெருக்கடியில், '*இது வினையம் நன்று*-இதுவே புரிவதற்குச் சிறந்த தொழில்' *என்று*-என்று தெரிந்து, *இருகுவடு ஏந்தி* - (ஒவ்வொருவரும்) ஒவ்வொரு மலை ஏந்தி வந்து, *நினைவின் முன்* - நினைப்பதற்கு முன்பே, *நெடு விசும்பு ஒரு வெளியின்றி* - பரந்த ஆகாயத்தில் வெற்றிடம் என்பது ஒரு சிறிதும் இல்லாமல், *இராவணன் மேல் செல விட்டார்* - இராவணன் மீது செல்லும்படி எறிந்தார்கள்.

*நினைவின் முன்* என்பது செயலின் விரைவு குறித்து நின்றது. 'வாயுவேகம் மனோவேகம்' என்ற வழக்கும் காண்க. 'மானுருவாக நின் மனம் பூட்டினையோ' (அகநா. 384); *வினையம்* - செய்தற்குரிய செயல். 'வினையமீ தல்ல தில்லை' (ஆரணிய. 274).

பி - ம். 2. எனைய ரன்னவ ரனைவரும், ஒருவடு.
3. வெளியின்றி நிமிர.
4. வினையிதென் றறிந்து, வினையது.



1143. ஒத்த கையின ரூழியி னிறுதியி னுலகை
மெத்த மீதெழு மேகத்தின் விசும்பெலா மிடையப்
பத்து நூறுகோ டிக்குமேற் பனிபடு சிகரம்
எத்தி மேற்செல வெறிந்தனர் பிறிந்தன ரிமையோர்.

*ஒத்த கையினர்* - ஒரு நிகரான புயவலிமை யுடையவர்களான வானரர்கள், *ஊழியின் இறுதியின்* - பேரூழியின் முடிவிலே, *உலகை மெத்த மீதெழு* - உலகினைக் கடந்து மிகுதியாக மேலே கிளம்பு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கின்ற, மேகத்தின் - மேகத்தைப் போன்று, விசும்பு எலாம் மிடைய - வானமெல்லாம் நிரம்ப, பத்து நூறு கோடிக்கு மேல் - பத்து நூறு கோடி என்னும் எண்ணிக்கைக்கும் அதிகமான, பனிபடு சிகரம் - பனி பொருந்திய சிகரங்களை, எத்தி மேல்செல- தாக்கி மேற் செல்லு மாறு, எறிந்தனர் - இராவணன் மீது வீசினர்; இமையோர் பிறிந்தனர் -(அச்சத்தால் வானத்தை விடுத்துத்) தேவர்கள் அப்பாற் போயினர்.

மெத்த மீதெழு மேகம்: பிரளய காலத்து ஒன்று கூடும் சத்த மேகங்கள். எத்த - எற்ற அல்லது தாக்க. எறிந்தனர் பிரிந்தனர் என்ற இடத்து இணையெதுகை நோக்கிப் பிரிந்தனர் என்பது வல்லின றகரம் பெற்றது.

பி - ம். 2. மேய்ந்தெழு, மொய்த்தெழு ; விசும் பெலா மறையப், மறைப்பப்.
3. பத்து நூறிரு கோடிக்குமேற் ; பனிபடர்.
4. எத்த. 188

1144. தருக்கி வீசிட விசும்பிட மின்மையிற் றம்மின்
நெருக்கு கின்றன நின்றன சென்றில நிறைந்த
அருக்க னும்மறைந் தானிருள் விழுங்கிய தண்டஞ்
வருக்க மற்றன ராக்கரென் றிமையவர் மகிழ்ந்தார்.

தருக்கி-செருக்கு மிகுந்து, வீசிட-(வாநரர்கள்) மலைகளை வீசிய தனால், விசும்பிடம் இன்மையின்-ஆகாயத்தில் இடமில்லாமையின், (அம்மலைச் சிகரங்கள்), தம்மின் நெருக்குகின்றன நின்றன - தமக்குள் நெருக்குகின்றனவாய் நின்று, சென்றில நிறைந்த - அப்பாற் செல்லாமல் நிறைந்தன ; (அவற்றால்) அருக்கனும் மறைந்தான் - சூரியனும் மறைந்தான் ; அண்டம் இருள் விழுங்கியது - இவ்வுலகத்தினை இருள் விழுங்கியது ; அரக்கர் வருக்கம் அற்றனர் என்று இமையவர் மகிழ்ந்தார் - அரக்கர்கள் தமது வருக்கமே அழியப்பெற்றனர் என்று தேவர்கள் மகிழ்ச்சியுற்றனர்.

அரக்கன் வடசொல்: அது உகரம் பெற்று அருக்கன் என வந்தது. தங்கள் நன்மையிலேயே கண்ணும் கருத்துமாய் நிற்கும் தேவர்களின் மகிழ்ச்சியும் அயர்வும் இந்நூலில் ஆங்காங்குக் குறிக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கப் பெறுதல் காண்க; யுத்த. முதற்போர். 127, 137, 178, 186, 194; சுந்தர. கடல் தாவு. 71.

பி - ம். 1. தருக்கின் ; வீசின ; விசும்பிடை ; வின்மையிற், மின்மையிற்.

2. நின்றில சென்றவை நிறைய.

3. அருக்கனும் மறைந்தார்.

4. சுருக்க முற்றனர் ; சூழ்ந்தார். 189

1145. ஒன்றி னொன்றுபட் டுடைவன விடித்துரு மதிரச்
சென்ற வன்பொறி மின்பல செறிந்திடத் தெய்வ
வென்றி வில்லென விருநிலம் வீழ்ந்திட மேன்மேற்
கன்றி யோடிடக் கனமழை நிகர்த்தன கற்கள்.

ஒன்றின் ஒன்றுபட்டு உடைவன - ஒன்றன் மீது ஒன்று தாக்கி உடைவனவும், (அவ்வாறு தாக்கி உடைந்தபோது தோன்றிய) வல்பொறி மின்பல செறிந்திட - வலிய நெருப்புப் பொறிகளினால் பல மின்னல்கள் நெருங்க, உரும் இடித்து-இடிபோன்று முழங்கி, அதிர சென்ற கற்கள் - அதிர்ச்சியுற்றுச் சென்றனவுமான மலைகள், தெய்வம் வென்றிவில் என-தெய்வத் தன்மையையும் வெற்றியையும் கொண்ட (இராமபிரானுடைய கோதண்டம் என்னும்) வில்லினின்று எழுகின்ற அம்பு போல, மேன்மேல் கன்றி ஓடிட - மேன்மேலும் சினம் முதிர்ந்து சென்றதனால், இரு நிலம் வீழ்ந்திட - பெரிய நிலத்தில் வீழ்கையில், கன மழை நிகர்த்தன - பெரு மழையை ஒத்தன.

வென்றிவில்: இதில் வில் என்பது இலக்கணையால் அம்பினைக் குறித்தது. இருநிலம் - பூமி; இருமை-பெருமை; 'இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே' (வெற்றி வேற்கை); 'ஒரு குறளா யிருநிலமூவடி மண் வேண்டி' (பெரியதிரு. 3, 4, 1).

பி - ம். 1. ஒன்றை ; ஓடிவன, ஓடின ; உதிர.

2. சென்று ; வான் பொறி மீப்பல, சிந்திட.

3. வழுநிலம் விழுந்திடமேனி, இருநிழல் விரிந்திட. மேல்மேல், விழுகில விழுந்திட மேன்மேல். 190

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## அப்போது அம்மலைகளால் நிகழ்ந்த நிகழ்ச்சி

1146. இரிந்து நீங்கிய திராக்கதப் பெரும்படை யெங்கும்
விரிந்து சிந்தின வானத்து மீனெடு விமானஞ்
சொரிந்த வெம்பொறி படக்கடல் சுவறின தோற்றம்
கரிந்த கண்டகர் கண்மணி யெனப்பல கழறில்.

(கல் மாரியால்) இராக்கத பெரும்படை - அரக்கருடைய மாபெருஞ் சேனை, இரிந்து நீங்கியது - நிலைகுலைந்து ஓடிவிட்டது; வானத்து மீனெடு விமானம் - ஆகாயத்தில் தோன்றும் உடுக்களோடு விமானங்கள், எங்கும் - எவ்விடத்தும், விரிந்து சிந்தின - விரிவுற்றுச் சிந்தலாயின; (அப்போது) சொரிந்த வெம்பொறிபட - சொரிந்த கொடிய தீப்பொறி பட்டதனால், கடல் சுவறின - கடல் நீர் வற்றினவாக(ப் பிறகு), தோற்றம் கழறில் - அங்குத் தோன்றிய காட்சியைக் கூறுமிடத்து, கண்டகர் - தீய்ந்துபோன இராக்கதரின், பல கண்மணி என - பலவான கண்ணின் கருவிழி எனும்படி, கரிந்த - தீய்ந்தன.

இரிதல் நீங்குதல் என்ற இரண்டும் ஒரு பொருளன ஆகலின், இங்கு இரிதல் - நிலைகுலைதல் என்று பொருள் செய்யப்பட்டது. நீர் வறண்ட பின் கடலிற் காணப்பட்ட பலவகை மீன்கள் கண்டகரான இராக்கதரின் கண்மணி எனத்தகும் எனப்பட்டது, தற்குறிப்பேற்றவணி. கண்டகர் முட்போன்றவர்; ஆரணிய. 485, 734, 972, 1079; இராவணனைத் தேவகண்டகன், இருடி கண்டகன் என்று கூறுவர். 'புளிக்கும் கண்டகர்' (சுந்தர. 659); 'கறையடிக் கிழிவு கண்ட கண்டகன்' (கிட்கிந்தா. 371). கண்மணி - 'அரக்கர், கருடனஞ்சுறு கண்மணி காகமுங் கவர்ந்த' (ஆரணிய. 449); கண்ணே கண்ணிற் கருமணியே' (தேவா. 482, 1); 'கருமணியிற் பாவாய்' (குறள். 1123).

பி - ம். 2. மீனெடு மானம்.
3. சொரிந்து; சுவறின தோற்றம்.
4. கழறி.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## எறிந்த மலைகளை இராவணன் துணித்தல்

1147. இறுத்த தின்றுல கென்பதோர் துமுலம் வந்தெய்தக்
கறுத்த சிந்தைய னிராவண னனையது கண்டான்
ஒறுத்து வானவர் புகழுண்ட பாரவில் லுளைய
அறுத்து நீக்கின னுயிர கோடிமே லம்பால்.

இன்று உலகம் இறுத்தது - இன்றைக்கு உலகம் அழிந்தது, என்பதோர் துமுலம் வந்து எய்த - ஓர் பேரொலி எங்கும் எழ, கறுத்த சிந்தையன் - சினங் கொண்ட மனத்தவனான, இராவணன் - இராவணன், அனையது கண்டான் - அவ்வொலியைக் கேட்டு, ஒறுத்து வானவர் புகழ் உண்ட - வருத்தி அமரர்களின் புகழைக் களைந்த, பாரம் வில் உளைய - பெருமை சான்ற தன் வில் வளைந்து நெகிழ, (அவற்றினின்று வெளியேறிய) ஆயிரம் கோடியேல் அம்பால் - மிகப்பல அம்புகளால், அறுத்து நீக்கினன் - அம்மலைகளைத் தகர்த்து ஒழித்தான்.

துமுலம் இது துமிலம் எனவும் வழங்கும். துமிலப் போர் - பேராரவாரத்துடன் ஆற்றும் யுத்தம்; ஆரணிய. 376; கறுத்தல் - வெகுளல்; கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள (தொல். உரி); காணுதல் என்பது கேட்டல் என்னும் பொருட்கண் வந்தது.

பி - ம். 3. ஒறுத்த; வளைய. 192

## அந்த மலைகள் சாம்பராதல்

1148. காம்பெ லாங்கடுந் துகள்படக் களிறெலாந் துணியப்
பாம்பெ லாம்பட யாளியு முழுவையும் பாறக்
கூம்பர் மாமர மெரிந்துகக் குறுந்துகள் நுறுங்கச்
சாம்ப ராயின தடவரை சுடுகணை தடிய.

சுடுகணை தடிய - சுடுகின்ற (இராவணனுடைய) அம்புகள் துணித்ததனால், கூம்பர் தடவரை - (வாநரர் எறிந்த) செங்குத்தான பெரிய மலைகள், காம்பு எலாம் கடு துகள்பட - தம்மிடத்துள்ள மூங்கில்கள் எல்லாம் சிறு சிறு துண்டுகளாகவும், களிறு எலாம் துணிய - யானைகள் எல்லாம் துண்டுபடவும், பாம்பு எலாம்பட -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


(கடிவாளக் கயிறு முதலியனவாகப் பொருந்தி யிருந்த) பாம்புகள் அனைத்தும் அழியவும், யாளியும் உழுவையும் பாற - யாளிகளும் புலிகளும் உயிர் நீங்கவும், மாமரம் எரிந்து உக - (தம்மிடத்து வளர்ந் திருந்த) பெரிய மரங்கள் தீய்ந்து சிந்தி, குறுதுகள் நுறுங்க - சிறு துகள்கள் மேலும் தூளாகுமாறு, சாம்பர் ஆயின - சாம்பராகி ஒழிந்தன.

காம்பு - மூங்கில்; 'காம்புறழுந் தோளானை' (ஆரணிய. 357). உழுவை - புலி; 'உழுவைப் போத்தை யுழையுயி ருண்பதே' (யுத்த. இராவணன் சோக. 17); 'உழுவை தின்னிய வந்த கலை யினம் பிணை' (சுந்தர. நிந்தனை. 21); 'வெங்க ணுழுவைபோல்' (கிட்கிந்தா. 893). சாப்பல் - சாம்பர். கூம்பு - கூம்பர்; ஈற்றுப் போலி.

பி - ம். 1. காம்பெலாங் களப்பட்டன; துமியப்.
2. ஆனியும்.
3. மாமர மெரிந்திட, கூம்புமால்வரை மாமரம். 193

## வானவர் இராவணனுடைய திறமையைக் கண்டு கைவிதிர்த்தல்

1149. உற்ற வாறென்று மொன்றுநூ றுயிர முருவா
இற்ற வாறென்று மிடிப்புண்டு பொடிப் பொடியாகி
அற்ற வாறென்று மரக்கனை யடுசிலை கொடியோன்
கற்ற வாறென்றும் வானவர் கைத்தலம் குலைந்தார்.

'உற்ற ஆறு என்றும் - (அந்த இராவணன் விடுத்த அம்பு கள்) மேலே தாக்கியவிதம் (என்னே) என்றும், ஒன்று - ஒரு மலை, நூறுயிரம் உருவா இற்ற ஆறு என்றும் - பல்லாயிரம் சிற்றுருவங் களாகச் சிதறிய வண்ணம் (என்னே) என்றும், இடிப்புண்டு - ஒன்றுடன் ஒன்று மோதி, பொடி பொடி ஆகி அற்ற ஆறு என்றும் - துகள் துகளாகிவிட்ட விதம் (என்னே) என்றும், அரக்கனை - அரக்கனை இராவணனைக் குறித்து, கொடியோன் - இந்த வெய்யவன், அடுசிலை கற்றவாறு என்றும் - (பகைவரைக்)

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கொல்லுகின்ற வில்லின் கல்வியில் தேர்ச்சிபெற்ற வகைதான் (என்னே)' என்றும் - என்றும் கூறி, வானவர் கைதலம் குலைந் தார் - தேவர்கள் கைநடுக்கம் எய்தினர்.

அடுசிலை : வினைத்தொகை.

பி - ம். 1. உற்றவா கண்டு.

2. பொடிப்பொடி யாக்கி.

3. என்று மழற்கணை.



## கணையால் நிகழ்ந்த நிகழ்ச்சிகள்

1150. அடலு டைத்துமென் றரிக்குல வீரரன் றெறிந்த
திடலு டைத்தன தசமுகன் சரமவை திசைசூழ்
கடல்து டைத்தன களத்தினின் றுயர்தரும் பூழி
உடலு டைத்தன வுதிரமுந் துடைத்ததொண் புடவி.

'அடல் துடைத்தும் என்று - (இலங்காதிபனுடைய) வன்மையை ஒழித்துவிடுவோம்' என்று, அரிகுல வீரர் அன்று எறிந்த திடல் - வானரகுல வீரர்கள் அன்று வீசிய மலைகளை, தசமுகன் சரம்வை துடைத்தன - இராவணனுடைய அம்புகள் ஒழித்தன; (அந்த மலைகளின் பொடி) திசை சூழ் கடல் துடைத்தன - திக்குகளிற் சூழ்ந்துள்ள கடலைத் தூர்த்தன; களத்தி னின்று உயர்தரும் பூழி - (அக்காலத்துப்) போர்க்களத்தினின்று எழுந்த தூளிகள், உடல் துடைத்தன - (வீரரின்) உடலிற் சென்று பரவின; உதிரமும் - சரங்களால் பெருகிய இரத்தமும், ஒண் புடவி துடைத்தது - ஒளி மிக்க பூமியைத் துடைத்தது.

திடல் - மலை. உடல் - போர்வீரரின் சரீரம்; உதிரமும் ஒண் புவி துடைத்தது என்க. புடவி - பூமி; 'புடவி மீதினில், முழங்கிவந் திழிவதோர் முகிலும் போல்கின்றான்' (கிட்கிந்தா. 943).

பி - ம். 2. தசமுகன் சிரமிவை.

3. களத்து நின்றவர்கரும்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இராவணன் சரமழை பொழிதல்

1151\. கொல்வெ னிக்கண மேமற்றிவ் வாநரக் குழுவை
வெல்வென் மானிட ரிருவரை யெனச்சினம் வீங்க
வல்வன் வார்சிலை பத்துட னிடக்கையின் வாங்கித்
தொல்வன் மாரியிற் றொடர்வன சுடுசரந் துரந்தான்.

'இ வாநர குழுவை இ கணமே கொல்வென் - இந்த வாநரத் தொகுதியை இதே கணத்திலேயே கொல்வேன்; மற்றும் மானிடர் இருவரை வெல்வென் - மேலும் மனிதர் இருவரையும் வெற்றிகொள் வேன்;' என - என்று நினைந்து, சினம் வீங்க - கோபம் பெருக; (இரா வணன்), வல் வன் வார் சிலை பத்துடன் - மிக வலிய நீண்ட பத்து விற்களை, இடகையின் வாங்கி - இடதுகரத்திலே ஒருங்கே தூக்கி, தொல் வல் மாரியில் - பழைய பெரிய மழைபோல, தொடர்வன - தொடர்ந்து வருவனவாகிய, சுடுசரம் துரந்தான் - சுடுகின்ற அம்புகளைத் தொடுத்து விடுத்தான்.

தொல் வன் மழை - ஊழிக்காலத்து மழை என்க. கைகள் இருபதாகலின் விற்கள் பத்தெனப்பட்டன. சுடுசரம்: 'சொல் லொக்கும் கடியவேகச் சுடுசரம்' (பால. தாடகை. 73). வாங்கி - வளைத்து எனினுமாம். மாரியில்: இல் ஐந்தாம் வேற்றுமை உருபு; ஒப்புப்பொருளில் வந்தது.

பி - ம். 1. இப்பொழுதே மற்றிவ், இக்கிரி வீசிய, இக்குறியே மற்றிவ்.
2. வீங்கி.
3. பல்வன்; தடக்கையின், கையால்.
4. சுடர்நெடுஞ். 198

1152\. ஐயி ரண்டுகார் முகத்தினு மாயிரம் பகழி
கைக ளீரைந்தி னுலும்வெங் கடுப்பினிற் றொடுத்துற்
றெய்ய வெஞ்சின வானமு மிருநில வரைப்பும்
மொய்கொள் வேலையுந் திசைகளுஞ் சரங்களாய் முடிந்த.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஐயிரண்டு கார் முகத்தினும் - பத்து விற்களிலும், ஆயிரம் பகழி - ஆயிரம் அம்புகளை, கைகள் ஈரைந்தினாலும் - பத்துக் கரங்களினாலும், வெம் கடுப்பினில் தொடுத்துற்று எய்ய - கடுமையான வேகத்துடன் தொடுத்து எய்ததனால், எஞ்சின வானமும் - (எல்லாப் பூதங்களையும்) கடந்து நின்ற ஆகாயமும், இருநிலம் வரைப்பும் - பெரிய தரைப்பரப்பும், மொய் கொள் வேலையும் - வலிமையைக்கொண்ட கடலும், திசைகளும் - திக்குகளும், சரங்களாய் முடிந்த - சரங்களாக முடிந்தன.

கார்முகம் - வில்; கார்முகத்தையும், மாற்றரும் பகழியாலறுத்து மாற்றினான்' (ஆரணிய. 493); 'கைக்கார் முகத்தோடு கடைப்புருவங் குனித்தான்' (ஆரணிய. 912). பத்துக் கைகள் விற்றண்டைப் பிடித்து நிற்றலின், மற்றும் பத்துக் கைகள் சரம் தொடுத்தன என்க. எஞ்சுதல்: இங்கு மிஞ்சுதல் என்ற பொருளில் வந்தது. இருநில வரைப்பு - பூமி; யுத்த. 1141 உரைக் குறிப்புக் காண்க. நிலவுலகையும் ஊழிக்காலத்து அழிக்கவல்லதாதலின் மொய்கொள் வேலை எனப்பட்டது.

பி - ம். 2. தொடுப்புற்று.
3. எய்ய வஞ்சின.
4. முடித்தான்.



1153. அந்தி வானக மொத்ததவ் வமர்க்கள முதிரஞ்
சிந்த வேலையுந் திசைகளு நிறைந்தன சினத்தாற்
பந்தி பந்தியாய் மடிந்தது வாநரப் பகுதி
வந்து மேகங்கள் படிந்தன பிணப்பெரு மலைமேல்.

உதிரம் சிந்த - இரத்தம் சிந்தியதனால், அவ் அமர்க்களம் அந்தி வானகம் ஒத்தது - அந்தப் போர்க்களம் அந்திவானத்தை நிகர்த்திருந்தது; உதிரம் சிந்த - இரத்தம் பெருகியதனால், வேலையும் திசைகளும் நிறைந்தன - கடலும் எட்டுத்திக்குகளும் நிரம்பின; சினத்தால் - கும்பகன்னன் கோபத்தால், வாநர பகுதி - குரக்குச் சேனை, பந்தி பந்தியாய் மடிந்தது - வரிசை வரிசையாய் இறந்து வீழ்ந்தது; (அப்படி மடிந்து வீழ்ந்த வாநரப்) பிணம் பெரு மலைமேல் - பிணங்களாகிய பெரிய மலைமேல், மேகங்கள் வந்து படிந்தன - மேகங்கள் வந்து தங்கின.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அமர்க்களம் உதிரப்பெருக்கால் மாலைப்பொழுதிற் செவ்வானம் நிகர்த்தது எனப்பட்டது; உதிரம் சிந்த என்பது இடைநிலை விளக்காக முன்னும் பின்னும் கூட்டப்பட்டது. பந்தி பந்தியாய்-வரிசை வரிசையாய். பகுதி-சேனை; 'சேனை பகுதி பாடி பலம் படை' (பிங்கலம்.)- பெரும் பிணக்குவியலை மலையென்று கொண்டு மேகங்கள் அவற்றின்மீது படிந்தன என்றது மயக்கவணி. பிணங்கள் மேகமண்டலம் வரையில் குவிந்துயர்ந்தன என்க.

பி-ம். 2. சிந்தி; சினத்தாற், சிரத்தால்.
3. பந்தியாய் முடிந்தன.
4. நெடும்பிண மலைமேல். 198

## சில வாநரத்தலைவரின் நிலைமை

1154. நீல னம்பொடு சென்றில னின்றில னனிலன்
கால னூர்வயத் தடைந்தில னேவுண்ட கவயன்
ஆல மன்னதோர் சரத்தொடு மங்கத னயர்ந்தான்
சூல மன்னதோர் வாளியாற் சோம்பினன் சாம்பன்.

நீலன் அம்பொடு சென்றிலன் - நீலன் என்னும் குரக்கு வீரன் (தன்மீது தைத்த) அம்பினால் நடக்கமாட்டாதவனாயினான்; அனிலன் நின்றிலன் - அனிலன் நிற்கமாட்டாதவனாயினான்; ஏ உண்ட கவயன் - அம்பினால் தைக்கப்பட்ட கவயன் என்பவன், காலனூர் வயத்து அடைந்திலன் -(இன்னும்) யமன் வயமாகவில்லை யென்பதே குறை; (மூர்ச்சித்துக் கிடந்தான்), அங்கதன் ஆலம் அன்னதோர் சரத்தொடும் அயர்ந்தான் - அங்கதன் நஞ்சினையொத்த அம்பினால் களைத்தான்; சாம்பன் சூலம் அன்னதோர் வாளியால் சோம்பினன் - சாம்பன் என்பவன் சூலப்படையை நிகர்த்த அம்பினால் செயலற்றவனாயினன்.

நீலன்: யுத்த. 824 உரைக்குறிப்புக் காண்க. கவயன்: யுத்த. 828 காண்க. அங்கதன்: யுத்த. 823 பார்க்க. சாம்பன்: யுத்த. 826 குறிப்புக் காண்க.

பி-ம். 1. நின்றிலன், சென்றிலன்; நிலத்தான்; அனலன்.
2. காலனூர் வசத்.
3. ஆல மன்னபோ ரங்கதன் சரத்தொடு மயர்த்தான். 199

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வாநரப்படை நிலைகுலையக்கண்டு இலக்குவன் சினத்தல்

1155. மற்றும் வீரர்தம் மருமத்தி னயிலம்பு மடுப்பக்
கொற்ற வீரமு மாண்டொழிற் செய்கையுங் குறைந்தார்
சுற்றும் வாநரப் பெருங்கட லுலைந்தது தொலையா
துற்று நின்றவ ரோடின ரிலக்குவ னுருத்தான்.

மற்றும் வீரர் - மற்றுமுள்ள வீரர்கள், தம் மருமத்தின் அயில் அம்பு மடுப்ப - தத்தம் உயிர்நிலைகளில் கூர்மையான அம்புகள் தைத்ததால், கொற்றம் வீரமும் ஆண் தொழில் செய்கையும் குறைந்தார் - வெற்றிசான்ற வீரமும் ஆண்தொழிற்கேற்ற செய்கையும் குறையப்பெற்றுர்; சுற்றும் வாநரர் பெரு கடல் தொலைந்தது - சூழ்ந்துநின்ற வாநரப் பெரும் கடலானது அழிந்தது; தொலையாது உற்று நின்றவர் ஓடினர் - (வாநரரில்) இறவாது உயிருடன் நின்றவர்கள் ஓட்டம் பிடித்தனர்; இலக்குவன் உருத்தான் - (அதுகண்டு) இலக்குவன் சினம்கொண்டான்.

மருமம் - மார்பு; 'மருமத்தி னெறிவேல் பாய்ந்த' (பால. கையடை. 11); 'மானத்தா னூன்றப்பட்ட மருமத்தான்' (யுத்த. அணிவகுப்பு. 1). உருத்தல் - சினத்தல்; 'உருத் தெழுவாளை' (ஆரணிய. 312); 'உருத்துல கெடுத்தகரு மாவினையு மொத்தான்' (கிட்கிந்தா. 862); மற்றும், கலித். 103 காண்க.

பி - ம். 1. மற்ற.
3. தொலைந்தது குலைவால்.
4. நின்றவ ரோடியே, நின்றன வோடின; இலக்குவற் குரைத்த, இலக்குவற் குரைத்தார்.

200

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

உருத்தி லக்குவன் ஒருகணத் தவனெதி ரூன்றிக்
கரத்தின் வெஞ்சிலை வளைக்குமுன் கடுஞ்சினத் தரக்கன்
சிரித்து வெம்பொறி கதுவிடத் திசைமுக மடையப்
பொருத்தி வெஞ்சரம் பொழிந்திவை விலக்கெனப்
[புகன்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இலக்குவனுடைய வீரச்செயல்

1156. நூறு கோடிய நூறுநூ றுயிர கோடி
வேறு வேறெய்த சரமெலாஞ் சரங்களால் விலக்கி
ஏறு சேவகன் றம்பியவ் விராவண னெடுத்த
ஆறு நாலுவெஞ் சிலையையுங் கணைகளா லறுத்தான்.

நூறு கோடிய - நூறு கோடி என்ற எண்ணனவும், நூறு நூறுயிர கோடி - நூறு லக்ஷம் கோடிக் கணக்குள்ளவுமான, வேறு வேறு எய்த சரம் எலாம் - தனித் தனியாக (அரக்கர்கள்) எய்த அம்புகளனைத்தையும், ஏறு சேவகன் தம்பி - விடைபோன்ற வன்மை சான்ற இராமபிரானுடைய தம்பியான இலக்குவன், சரங்களால் விலக்கி - (தன்) அம்புகளால் ஒழித்து அகற்றி, அவ் இராவணன் - அந்த இராவணன், எடுத்த - தன் பத்துக் கைகளிற் பிடித்த, ஆறு நாலு வெம் சிலையையும் கணைகளால் அறுத்தான் - பத்துக் கொடிய விற்களையும் அம்புகளாற் சிதைத்தான்.

ஏறு - உடையானரசருள் ஏறு (குறள். 381) ஆறு நாலு வெஞ் சிலை: முன்னர் 'ஐயிரண்டுகார் முகம்' (யுத்த. 1152) என்றது காண்க. சேவகன் - வீரன்; இங்கு இராமபிரான். 'தேவ தேவன் மெய்ச்சேவகன் தென்பெருந்துறை நாயகன்' (திருவாச. சென்னி. 1).

பி - ம். 4. சரங்களால்.



## வானவர் மகிழ்ச்சியும், அரக்கரின் வருத்தமும்.

1157. ஆர்த்து வானவ ராவலங் கொட்டின ரரக்கர்
வேர்த்து நெஞ்சமும் வெதும்பினர் வினையறு முனிவர்
தூர்த்து நாண்மலர் சொரிந்தன ரிராவணன் றோளைப்
பார்த்து வந்தனன் குனித்தது நல்லறம் பாடி.

வானவர் ஆர்த்து ஆவலம் கொட்டினர் - தேவர்கள் (மகிழ்ச்சியால்) ஆர்ப்பரித்து வாய் கொட்டினார்கள், வினை அறு முனிவர் - இருவினைகளின்று நீங்கிய மனனசீலர்கள், நாண்மலர் சொரிந்து தூர்த்தனர் - அன்றலர்ந்த மலர்களைச் சொரிந்து அமர்க்களத்தை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நிறைத்தார்கள், நல் அறம் பாடி குனித்தது - சிறந்த அறக்கடவுள் பாடிக்கொண்டு ஆடிற்று, (இங்கிலையில்) அரக்கர்கள், வேர்த்து நெஞ்சமும் வெதும்பினர்-உடலும் வியர்த்து உள்ளமும் கொதிக்கப் பெற்றனர்; இராவணன் தோளே பார்த்து உவந்தனன்-இராவணன் (இலக்குவனுடைய) வெற்றிப் புயங்களைக் கண்ணுற்று மகிழ்ந்தான்,

ஆவலம் கொட்டினர். 'குரங்கு நல்வலங் குலேந்ததென் ருவலங் கொட்டி' (சுந்தர. 1040); 'அறிந்து வானவ ராவலங் கொட்டினர்' (யுத்த. 1034): 'தேவர்கள் ஆவலங் கொட்டினர்' (யுத்த. பிரமாத்திர. 82); வேர்த்து நெஞ்சமும் வெதும்பினர் என்றமையின் உடலும் உள்ளமும் ஒருங்கே உளேந்தார் என்பது பெறப் படும். உள்ளமும் வெதும்பவே அதன் விளைவாக உடல் வேர்த் தது எனினுமாம். வினை : நல்வினை, தீவினை. நல்வினைகள் நல்லன; அவை அறவேண்டுவதென்னை எனின் நல்வினையும் பிற விக்குக் காரணமாதலின் அதுவும் ஒழிய வேண்டும் என்க. குனித் தல் - குதித்தாடுதல், 'குனிக்கக் குனித்த புருவம்' (சுந்தர. 544); 'அன்பரென் பூடுருகக் குனிக்கும்' (திருக்கோ. 11); 'தேனகு கோதை மாதர் திரண்டனர் குனிப்ப' (உத்தர. திக்குவிசய. 207); நாண் மலர் : அன்றலர்ந்த மலர். படி - பூமி; பிருதிவி என்பதன் திரிபென்பர், எல்லாப் பொருள்களும் படிதற்கிடமாதலின் இப் பெயர் பெற்றதென்றும் மொழிவர்.

பி - ம். 3. தூர்த்து நன்மலர், சொரிந்தன னிலக்குவன், னிராமனும்.
4. வாநரம் படியில், குனித்தன. 202

1158. நன்று போர்வலி நன்றுபோ ராள்வலி வீரம்
நன்று நோக்கமு நன்றுகைக் கடுமையு நன்று
நன்று கல்வியு நன்றுநின் றிண்மையு நலனும்
என்று கைம்மறித் திராவண னொருவனீ யென்றான்.

'போர் வலி நன்று-போர் செய்யும் ஆற்றல் நன்று, போர் ஆள் வலி வீரம் நன்று - போரை மேற்கொண்டு ஆள்கின்ற வீரமும் நன்று; நோக்கமும் நன்று - பார்க்கும் வீரப் பார்வையும் நன்று; கை கடுமையும் நன்று - கை விசையும் நன்று; கல்வியும்நன்று - படைக்கலக் கல்வியும் நன்று; நின் திண்மையும் - உன்னுடைய மன உறுதியும்; நலனும் - நீ போர் புரியும் அழகும், நன்று -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நன்று ; என்று இராவணன் - என்று இராவணன் கூறி, கை மறித்து - கையை மடக்கி வைத்துக்கொண்டு, நீ ஒருவன் - நீ ஒப்பற்ற வீரன்' என்ருன்-என்று (இலக்குவனுடைய வீரத்தை வியந்து கூறினன்.

கல்வி : போர்க் கல்வி ; வீரர் வீரரை வியப்பது வழக்காதலின் இராவணன் இலக்குவனை வியந்தான் என்க. கும்பகன்னன் வதைப் படலத்து 16 முதல் 31 வரையுள்ள செய்யுட்கள் இங்கு ஒப்பு நோக்கத்தகுவன. 'கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் றன்னை' (கந்த. சூரபன்மன் வதை. 433) என்ற பாடலும் இங்குக் காண்க. கைம்மறித்து : கைகொட்டி ; (சுந்தர. 238). ஒருவன் நீ - ஏகவீரியன், 'வீரி யன்தனக் கொருவனும் விராடனை' (வீ. பா. நிரைமீட்சி. 18).

பி - ம். 1. நன்று நோள்வலி, நன்றதோ ராள்வினை.

3. நன்றுநின் ஞண்மையும்.

4. உவந்திவை யுரைப்பான். 203

1159 கானி னன்றிகற் கரன்படை படுத்தவக் கரியோன்
தானு மிந்திரன் றன்னையோர் தனுவலந் தன்னுல்
வானில் வென்றவென் மதலையும் வரிசிலை பிடித்த
யானு மல்லவர் யாருனக் கெதிரென்று மிசைத்தான்.

'கானின் - தண்டகவனத்திலே, அன்று - அந் நாளில், இகல் - மாறுபட்டெழுந்த, கரன்படை படுத்த அ கரியோன் தானும் - அந்தக் கரனுடைய சேனைகளை ஒழித்த அந்தக் கரிய மேனியனுன இராமபிரானும், இந்திரன் தன்னை ஓர் தனுவலம் தன்னுல் - இந்திரனை, ஒப்பற்ற ஒரு வில்லின் ஆற்றலால், வானில் வென்ற - விண்ணுலகத்தில் வெற்றி கொண்ட, என்மதலையும் - என் குமாரனுன இந்திரசித்தும், வரிசிலை பிடித்த - கட்டமைந்த வில்லினைப் பற்றியுள்ள, யானும் அல்லவர் யார் - யானும் அல்லாத வேறு எவர், உனக்கு எதிர்-உனக்கு நிகராவர்', என்றும் இசைத் தான் - என்றும் மொழிந்தான்.

கரன் படை படுத்த அக்கரியோன். இராமபிரான். ஆரணிய. கரன்வதைப்படலத்து காண்க. இந்திரனை இராவணன் மதலை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இந்திரசித்து வென்றது. உத்தர. திக்விசயப் படலம் 215-ல் காண்க. இச்செய்யுட்கு ஒப்பு: 'சந்த வில்லி முப்புரந் தழற்படச் சுரந்தொடும், அந்த வில்லி யஞ்சினத் தரக்கரோடு தானவர், இந்த வில் லியைந்தெடுத்த தேவர்தேவ னும்மலால், இந்த வில்லி யொக்கும்வில்லி யெங்குமில்லை யில்லையே' (உத்தர. திக்குவிசய. 215); மதலை - மகன், தந்தைக்குத் தளர்ந்த காலையில் ஓர் பற்றுக் கோடாக இருப்பவன் என்று காரணக் குறி. 'சிதலை தினப்பட்ட வால மரத்தை, மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு' (நாலடி. 197) 'மதலையாம், சார்பிலார்க் கில்லை நிலை' (குறள். 449).

பி - ம். 1. கானின் வன்றிறல்.

2. வரிசிலை மடித்த.

3. யானு மல்லது, யாருனக் கெதி ரென்று, என. 204

## இராவணன் வேற்படையை இலக்குவன்மீது எறிதல்

1160. வில்லி னாலிவன் வெலப்படா னெனச்சினம் வீங்கக்
கொல்லு நாளுமின் றிதுவெனச் சிந்தையிற் கொண்டான்
பல்லி னாலித ழதுக்கினன் பருவலிக் கரத்தால்
எல்லி னான்முகன் கொடுத்ததோர் வேலெடுத் தெறிந்தான்.

'இவன் - இந்த இலக்குவன், வில்லினால் வெலப்படான் - வில்லினால் வெல்லப்படமாட்டான்', என சினம் வீங்க - என்று நினைந்ததனால், கோபம் பெருக; 'கொல்லும் நாளும் இன்று - இவனைக் கொன்றொழிக்க வேண்டிய நாளும் இன்றே யாகும்; இது என - அதற்கு மேற்கொள்ள வேண்டிய சூழ்ச்சியும் இதுவாகும்' என்று, சிந்தையில் கொண்டான் - தன் மனத்தில் சிந்தித்து, பல்லினால் இதழ் அதுக்கினன் - பற்களினால் உதடுகளைக் கடித்து, பருவலி கரத்தால் - பருத்த வலிய கைகளினால், எல்லின் நான் முகன் கொடுத்ததோர் வேல் எடுத்து எறிந்தான் - ஒளிமிக்க பிரமன் அளித்ததான ஒப்பற்ற ஒரு வேலை எடுத்து அந்த இலக்குவன் வீசினான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பல்லினலிதழதுக்குதல் - வெகுளியின் மெய்ப்பாடு. 'பல்லாலே யிதழதுக்கும் கொடும்பாவி, (யுத்த. இராவணன் வதை. 225); எல்லின் நான்முகன் தேஜஸ்ஸுடன் கூடிய பிரமன்.

பி - ம். 1. என மனம் வெதும்பா, என்றுளம் வெதும்பா.

2. ஏன்றிது; சிந்நையுட், சிந்தையிற் குறித்தே. 205

## இராவணன் வேலினல், இலக்குவன் அயர்தல்

1161. எறிந்த காலவே லெய்தவம் பியாவையு மெரித்துப்
பொறிந்து போயுகத் தீயுக விசையினிற் பொங்கிச்
செறிந்த தாரவன் மார்பிடைச் சென்றது சிந்தை
அறிந்த மைந்தனு மமர்நெடுங் களத்திடை யயர்ந்தான்.

எறிந்த காலவேல் - (இராவணன்) வீசிய யமன் போன்ற வேலாயுதமானது, எய்த அம்பு யாவையும் எரித்து - (இலக்குவனால்) விடுக்கப்பட்ட அம்புகள் எல்லாவற்றையும் தீய்த்து, பொறிந்து போய்உக - தீப்பொறியாகிப் போய்ச் சிந்தி விழுமாறும், தீ உக - நெருப்புச் சிந்துமாறும், விசையினில் பொங்கி - வேகமுடன் எழுந்து, செறிந்த தாரவன் மார்பிடை சென்றது - மலர்கள் நெருங்கத் தொடுத்த மாலையணிந்த இலக்குவனுடைய மார்பிடத்தே பாய்ந்தது; (அதன் தன்மையை), சிந்தை அறிந்த மைந்தனும் - மனத்தால் உணர்ந்த வீரனான இலக்குவனும், நெடு அமர் களத்திடை அயர்ந்தான் - பரந்த படுகளத்திடத்து மூர்ச்சித்தாற் போன்று கிடந்தான்.

காலவேல் - 'காலவேலான்' (பால. கையடை. 11). இனி அறிந்த மைந்தனும் அமர்நெடுங் களத்திடைச்சிந்தை அயர்ந்தான் எனினுமாம். சிந்தை அயர்தல் - மனம் தளர்தல்.

பி - ம். 1. யாவையு மெறிந்து.

2. விசையிற் போகிச், போக்கிச்.

4. அறிந்து; அசைந்தான். 206


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1162. இரிய லுற்றது வாநரப் பெரும்படை யிமையோர்
பரிய லுற்றன ருலைந்தனர் முனிவரும் பதைத்தார்
விரிதி ரைக்கடற் கிரட்டி கொண் டார்த்தனர் விரவார்
திரிகை யொத்தது மண்டலங் கதிரொளி திரிந்த.

வாநரம் பெருபடை - பெரிய வாநர சேனையானது, இரியல் உற்றது - நிலைகுலைந்து ஓடலாயிற்று; இமையோர் பரியல் உற்றனர் - தேவர்கள் வருந்தத் தொடங்கினர்; முனிவரும் உலைந்தனர் பதைத்தார் - முனிவர்களும் நிலைகுலைந்து நடுங்கினர்; விரவார் - பகைவரான அரக்கர்கள, விரிதிரை கடற்கு இரட்டி கொண்டு ஆர்த்தனர் - விரிந்த அலைகளை யுடைய கடலொலிக்கு இருமடங்கு ஓசையுண்டாகுமாறு ஆரவாரம் செய்தனர்; மண்டலம் திரிகை ஒத்தது - (அந்தப் பேரதிர்ச்சியால்) பூமண்டலமும் சக்கரம் ஒப்பச் சுழன்றது; கதிர் ஒளி திரிந்த - சூரியன் ஒளியும் மாறுபட்டது.

திரிகை - எந்திரமுமாம்; திரிந்த - திரிந்தது.

பி - ம். 2. பரியலுற்றவர், உற்றுணர்வு.
4. இரியலுற்றது; தீர்ந்த.



## இலக்குவன் அயர்ந்தது கண்டு அவனைத் தூக்கிச் செல்லுமாறு அங்கு இராவணன் வருதல்

1163. அஞ்சி னலல னயன்றந்த வேலினு மாவி
துஞ்சி னலலன் றுளங்கின னென்பது துணியா
எஞ்சி லியாக்கையை யெடுத்துக்கொண் டகல்வனென் [றெண்ணி
நஞ்சி னற்செய்த நெஞ்சினன் பார்மிசை நடந்தான்.

'அயன் தந்த வேலினுக் அஞ்சினன் அலன் - (இந்த இலக்குவன் நான் எறிந்த) பிரமதேவனால் அளிக்கப்பெற்ற வேலுக்கும் பயந்தானில்லை; ஆவி துஞ்சினன் அலன் - உயிரும் நீங்கப்பெற்றானில்லை; துளங்கினன் - (ஆயினும்) உயிர் சோர்ந்துள்ளான்', என்பது துணியா - என்பதைத் திடமாக உணர்ந்து, 'எஞ்சிலி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யாக்கையை எடுத்துக் கொண்டு அகல்வன் - வலி ஒடுங்குதல் இல்லாத (அந்த இலக்குவனுடைய) உடலை எடுத்துக் கொண்டு அப்பாற் போவேன்' என்றெண்ணி என்று நினைந்து, நஞ்சினால் செய்த நெஞ்சினால் பாரின் மேல் நடந்தான் - விடத்தினாற் செய்தது போன்று கொடிய நெஞ்சினையுடைய இராவணன், பூமி மீது-(இலக்குவன் கிடந்த இடம் நோக்கி நடந்து வந்தான்).

பிரமன் வேலுக்கும் அஞ்சினானில்லை இலக்குவன்; பிரமதேவன் தந்த படையாகலின் அதற்கு அடங்கி நின்றான். பிரமாத்திரத்துக்கு அநுமன் அடங்கியிருந்தது போன்று என்க. 'சாய்ந்த மாருதி சதுமுகன் படையெனுந் தன்மை, யாய்ந்து மற்றிதனுணையை யவமதித் தகறல், ஏய்ந்த தன்றென வெண்ணினன் கண்முகிழ்த் திருந்தான்' (சுந்தர. 1038)-ம் என்ற பாடலும் அதன் உரைக்குறிப்பும் காண்க. துணியா - செய்யா என்னும் வாய்பாடு. நஞ்சினாற் செய்த நெஞ்சினான்; 'நஞ்சமனையான்' (சுந்தர. 704); 'நஞ்சிற் கொடியான்' (ஆரணிய. 1094).

பி - ம். 2. என்பதுந்துணியா.

4. மனந்தினன் ; பார்மிசை.



## இலக்குவனுடலை இராவணன் தூக்கமுயலுதல்

1164. உள்ளி வெம்பிணத் துதிரநீர் வெள்ளத்தி னோடி
அள்ளி யங்கைக ளிருபதும் பற்றிப்பண் டரன்மா
வெள்ளி யங்கிரி யெடுத்தது வெள்கின னென்ன
எள்ளில் பொன்மலை யெடுக்கலுற் றானென வெடுத்தான்.

உள்ளி - (இவ்வாறு இலக்குவனுடைய உடலைத் தூக்கிச் செல்லக்) கருதி, வெம்பிணத்து உதிரம் நீர் வெள்ளத்தின் ஓடி - வெவ்விய பிணங்களின் இரத்தப் பெருக்கிலே விரைந்து போய், (இராவணன் தன்), அம்கைகள் இருபதும் அள்ளி பற்றி - அழகிய இருபது கரங்களாலும் (அந்த இலக்குவனுடைய உடலை) அணைத்துப்பிடித்து, பண்டு - முன்காலத்து, அரன் மாவெள்ளி அம்கிரி எடுத்தனன் - (முன்பு பொன்மலையிருக்க) சிவபிரானுடைய பெரிய வெள்ளி மலையாகிய கைலாயத்தினைத் தூக்கி எடுத்த அவ்விராவணன், வெள்கினன் என்ன - அங்ஙனம் புரிந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தற்குவெட்கினன் போலவும், (அந்த மானக் குறைவு நீங்குமாறு அதனினும் கனம் வாய்ந்த) எள்ளில் பொன்மலை எடுக்கல் உற்றான் என எடுத்தான் - இகழ்தற்கில்லாத பொன்மலையை எடுக்கலுற்றான் போலவும் எடுக்கலுற்றான்.

உள்ளி - நினைந்து; 'உள்ளத்தா லுள்ளலும் தீதே' (குறள். 282); 'உள்குவா ருள்கிற் றெல்லாம்' (தேவா. 1189, 3); 'உள்ளிய தெய்த லெளிதுமன்' (குறள். 540); வெவ்விய உதிர நீர் என்க. 'வெள்கினன் என்ன'; வெள்கியது; பொன்மலையைத் தூக்காது வெள்ளி மலையை யெடுத்தது பற்றி நாணம் எழுந்தது என்க. (ஒப்பு) 'புயலைப் பற்றுமவ் வெங்கரி போக்கியோர், முயலைப்பற்றுவ தென்ன முயற்சியோ' (கிட்கிந்தா. 315); உள்ளுவதெல்லாம் உயர் வுள்ளல், (குறள். 596). ஆகலின், இராவணன் வெள்ளியங்கிரி யெடுத்தது; ஆரணிய. 258, 319, 327, 596, 742. எள்ளில் - இகழ் தலில்லாத; 'எள்ளரிய தேர்தரு சுமந்திரன்' (சுந்தர. 551).

பி - ம். 1. உதிரத்திேனதத்தின், உதிரநீ ரோதத்தின்.
2. பண்டான்ற, அமரின், அமலன், அரன்றன்.
3. வெட்கினே னென்ன.
4. எள்ளிப், எள்ளில் பொன்வரை; எடுப்பான். 509

## இராவணன் இலக்குவனைத்தூக்க முடியாதவனாதல்

1165. அடுத்த நல்லுணர் வொழிந்தில னம்பரஞ் செம்பொன்
உடுத்த நாயகன் றானென வுணர்தலி னொருங்கே
தொடுத்த வெண்வகை மூர்த்தியைத் துளக்கிவெண் [பொருப்போ
டெடுத்த தோள்களுக் கெழுந்தில னிராமனுக் கிளையான்.

இராமனுக்கு இளையான் - இராமன் பின்றோன்றலான இலக்குவன், செம்பொன் அம்பரம் உடுத்த நாயகன் தான் என - பீதரம் பரம் தரித்த தலைவன் தானென்று, ஒருங்கே உணர்தலின் - ஒருமைப்பட்டு அறிந்ததனால், அடுத்த நல் உணர்வு ஒழிந்திலன் - பொருந்திய நல் அறிவு நீங்கப் பெறுமலிருந்தனன்; (அப்போது) தொடுத்த எண்வகை மூர்த்தியை - அட்ட மூர்த்தங்களை ஒருசேரத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தரித்த சிவபிரானை, துளக்கி - சலிக்கச் செய்து, வெண் பொருப் போடு - வெள்ளி மலையுடன், எடுத்த - உயர்ந்த தோள்களுக்கு எழுந்திலன் - (இராவணனுடைய தோள்களால் தூக்கமுடியாதவன் ஆனான்.

செம்பொன் அம்பரம் உடுத்த நாயகன் - பீதாம்பரம் தரித் தவன். 'புலியினதளுடையானும் பொன்னுடை வேய்ந்தானும்' (ஆரணிய. 556; அம்பரம் - ஆடை; திக்குகளையே ஆடையாக வுடையவன் ஆதலின் சிவபெருமானைத் திகம்பரன் என்றது காண்க. இலக்குவன் திருமாலின் அம்சமாதலின் இராவண னுக்குத் தூக்க முடியாதவன் ஆயினன். இலக்குவனுடன் இரா வணனுக்குப் பாரமாகவும் அநுமனுக்கு இலேசாகவும் இருந்தது கொண்டு வான்மீகியும் 'அசிந்த்யம்' என்றது இங்கே காணத்தகும். எண்வகை மூர்த்தி : சிவபெருமான்; ஐம்பெரும் பூதங்கள், சூரிய சந்திரர்கள் யாக கர்த்தா என்ற எட்டுப் பொருள்களைச் சிவ பெருமான் தனச்குத் திருமேனியாக உடையவன் ஆகலின் அட்ட மூர்த்தி என்றும், எண்குணத்தான் என்றும் கூறப்படுவன்; 'கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான், தாளை வணங்காத் தலை' (குறள். 9). வெண்பொருப்பு; கபிலாயமலை.

பி - ம். 1. அறிந்திலன், அழிந்திலன்.
2. தாளினை ; உணர்ந்திலன்.
3. தடுத்த ; துளக்கிய ; பொருப்பை.
4. இளையோன். 210

1166. தலைகள் பத்தொடுந் தழுவிய தசமுகத் தலைவன்
நிலைகொள் மாக்கட லொத்தனன் கரம்புடை நிமிரும்
அலைகள் ஒத்தன வதிலெழு மாமதி யொத்தான்
இலைகொள் தண்டுழா யிலங்குதோ ளிராமனுக் கிளையான்.

தலைகள் பத்தொடும் தழுவிய தசமுகன் தலைவன் - (இலக்குவ னுடைய உடலைத் தூக்க முயன்ற) பத்துச் சிரங்களுடன் கூடிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இராவணன், நிலைகொள் மாகடல் ஒத்தனன் - நிலையான ஒரு கடலை நிகர்த்திருந்தான்; புடை நிமிரும் கரம் - பக்கத்தில் உயர்ந்த அவனுடைய கைகள், அலைகள் ஒத்தன - அலைகளைப் போன்றன; அதில் எழும் (அவ்விராவணன்) கையில் தோன்றும், இலை கொள் தண் துழாய் இலங்கு தோள் இராமனுக்கு இளையான் - இலைகளைக் கொண்ட குளிர்ந்த துளசிமாலை ஒளிரப்பெற்ற தோளிணையுடைய இராமபிரானுக்கு இளையவனான இலக்குவன், அதில் எழும் மாமதி ஒத்தான் - அந்தக் கடலில் உதயமாகும் சிறந்த சந்திரனை நிகர்த்து விளங்கினான்.

இராவணனுக்குக் கடலும் இலக்குவனுக்குக் கடலில் தோன்றும் சந்திரனும் உவமை. நிமிரும் மலை எனப் பிரித்து உதயகிரியை நிகர்த்தான் எனினுமாம். இராவணன் கரங்கட்கு அலைகள் உவமை. திருமாலின் அவதாரமாகலின் இராமபிரானுக்கும் இலைகொள் தண்டுழாய் இராமன் எனப்பட்டது. இங்கு 'ஹிமவாந் மந்தரோ மேரு; த்ரைலோக்யம் வாஸஹாமரை: பாக்யம் புஜாப்யாம் உத்தர்த்தம் நஸங்கியே பரதாநுஜ: ஸக்த்யாப்ராஹ்ம் யாபி ஸௌமித்ரி: தாடிதஸ்து ஸ்தாநந்தரே, விஷ்ணோரசிந்த்யம் ஸ்வம்பாகம், ஆத்மாநம் ப்ரத்ய நுஸ்மரத்' ( ) என்ற ஸ்ரீராமாயண ஸ்லோகங்களும் வ்யாக்யானங்களும் இங்குக் குறிக்கொள்ளத்தக்கன.

பி - ம். 1. பத்துடன்; தசமுகன்றனவா.
2. தாம்பொடு. பாம்பொடு.
3. அலைகள்; அவிர்மதி, இரவியை.
4. தண்டொடை; தண்டுழாய், வயங்குதோள். 211

## அநுமன் வந்து இலக்குவனை யெடுத்துச் செல்லல்

1167. எடுக்க லுற்றவன் மேனியை யேந்துதற் கேற்ற
மிடுக்கி லாமையி னிராவணன் வெய்துயிர்ப் புற்றான்
இடுக்கில் நின்ற வம்மாருதி புகுந்தெடுத் தேந்தித்
தடுக்க லாததோர் விசையினி னெழுந்தயல் சார்ந்தான்.

எடுக்கலுற்று - இராவணன் (தான்) எடுத்துச் செல்லத் தொடங்கி, அவன் மேனியை - அந்த இலக்குவன் உடலை, ஏந்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தற்கு ஏற்ற - தூக்குவதற்குப் பொருந்திய, மிடுக்கு இலாமையின் - வன்மை யின்மையாலே, வெய்து உயிர்ப்பு உற்றான் - வெம்மை யாகப் பெருமூச்சு விட்டான்; (இந்நிலையில்) இடுக்கின் நின்ற அ மாருதி - எங்கோ ஓர் மூலையில் இருந்த அநுமன், புகுந்து - பிர வேசித்து, ஏந்தி எடுத்து - (இலக்குவனைக் கையிலே) தூக்கி எடுத்துக் கொண்டு, தடுக்கலாதது ஓர் விசையினின் - தடுக்க முடியாத ஓர் வேகத்துடன் எழுந்து, அயல் சார்ந்தான் - எழுந்து சென்று அப்பாற் சார்ந்திட்டான்.

மிடுக்கு - வன்மை. 'மிடுக்கிலாதானை வீமனே யென்று விசயனே வில்லுக் கிவனென்றும்' (தேவா. 947 : 2); 'வில்லாளரை வெல்லு மிடுக்கினரோ' (ஆரணிய. 902); 'நடுக்கரு மிடுக்கின்' (ஆரணிய. 974); இடுக்கு - மூலை. வழக்கு மொழி.

பி - ம். 3. இடுக்கினிற்வார, இடுக்கு நின்ற, இடுக்குகின்ற; பொர, போர்.
4. தடுக்க லாகலா : விசையினன், விசையினல். 212

1168. தொகவொ ருங்கிய ஞானமொன் றெவரினுந் தூயான்
தகவு கொண்டதோர் நண்பெனுந் தனித்துணை யதனுல்
அகவு காதலா லாண்டகை யாயினு மநுமன்
மகவு கொண்டுபோய் மரம்புகு மந்தியை நிகர்த்தான்.

தொக ஒருங்கிய - தொகுதியாக ஒன்றுபட்டுள்ள, ஞானம் ஒன்று எவரினும் - ஞானம் அமைந்த யாவரினும், தூயான் - பரிசுத்தம் வாய்ந்தவனான அநுமன், ஆண்டகை ஆயினும் - இலக் குவன் திருமாலாகிய பரம்பொருளேயாகி இருக்கவும், தகவு கொண்டது ஓர் - தகுதி பெற்றதொரு, நண்பு எனும் தனி துணை அதனுல் - நட்புரிமை என்கின்ற ஒப்பற்ற துணையினாலும், அகவு காதலால் - தழைத்த பத்தியினாலும், (இலக்குவனைச் சுமந்து சென்று) மகவு கொண்டு போய் மரம்புகும் மந்தியை நிகர்த்தான் - மகவினைத் தாங்கிச் சென்று மரம் போய்ச் சேரும் மந்தியை ஒத்து விளங்கினான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இராவணனால் எடுக்க வியலாது மிகப்பாரமாயிருந்த இலக்குவனை அநுமன் இலேசாக எடுத்தது, அநுமனுடைய ஒன்றுபட்ட ஞானத்தாலும், நட்பினாலும், காதலாலும் என்க. தாம் கொண்ட மானிடவுருவுக் கேற்ப இராம இலக்குவர் நடித்தனராயினும் அவர்களின் தானான இயற்கை சிறிதும் குறையப் பெற்றிலர் என்பதும் அகம்பாவத்திற்கரியர் என்பதும் பத்திக்கெளியர் என்பதும் இங்கே புலப்படுதல் காண்க. மகவு கொண்டு போய் மரம்புகும் மந்தி ஓர் சிறந்த உவமை. மந்தி-பெண் குரங்கு, 'மந்தியும் பாட்டியும்' (தொல். மாபி, 3); இப்பொழுது வழக்கில் அச்சொல் ஆண் குரங்கிற்கு வழங்குகின்றது. மகவு - இளமைப் பெயர்; 'கன்றும் பிள்ளையு மகவு மறியும்.......இளமைப் பெயரே' (தொல். மரபி. 1). என்றது காண்க.

பி-ம். 1. தொக வொதுங்கிய; என்றெவரினுந் என்றெவற்றிற்குந் தூயான், அன்றேல் மற்றெவறகும்.

2. தகவு கண்டதென்; அன்பெனுந்தளித்துணை யல்லால், தனித்துணை யதனுல்.

3. அகமுங்; ஆண்டகை யென்னினும்.

4. யொத்தான். 213

## அநுமன் இராமபிரானுள்ள இடத்தைச் சேர்தல்

1169. மையல் கூர்மனத் திராவணன் படையினுன் மயங்குஞ்
செய்ய வாளரி யேறனுன் சிறிதினிற் றேறக்
கையுங் கால்களு நயனமுங் கமலமே யனைய
பொய்யி லாதவ னின்றிடத் தனுமனும் போனுன்.

மையல் கூர் மனத்து இராவணன் - மயக்கம் மிக்க மனத்தினனை இராவணன், படையினுல்-(எறிந்த)வேலாயுதத்தால், மயங்கும்-மயங்கிக் கிடந்த, செய்யவாள் அரி ஏறு அனுன் - செல்விய கொடிய சிங்கத்தை நிகர்த்தவனை இலக்குவன், சிறிதினில் தேற - சிறுபொழுதில் தெளிவுபெற, கையும் கால்களும் நயனமும் கமலமே அனைய - (தன்னுடைய) கரங்களும் திருவடிகளும் நேத்திரங்களும் தாமரை மலரையே ஒத்துள்ள, பொய்யிலாதவன் நின்றிடத்து அநுமனும் போனுன் - சத்திய சந்தனை இராமபிரான் இருந்த இடத்திற்கு அநுமனும் ஏகினன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கையுங் கால்களும் நயனமும் கமலமே யனைய; (யுத்த: 778); உரைக்குறிப்புக் காண்க. பொய்யில்லாதவன்: இராமபிரான்: 'சத்திய வாக்யோ திருடவ்ரதா:' என்ற முதனூல் காண்க. நின்ற இடத்து என்பது நின்றிடத்தெனத் தொக்கது. இலக்குவன் மார்பிற் பாய்ந்த சக்தி ஆயுதம் இராவணனிடம் மீண்டு செல்ல, இலக்குவன் தேறுதல் அடைந்தான் என்று முதனூல் கூறும். இரண்டாம் அடியில் தேறி என்ற பாடம் சில பிரதிகளில் காணப் படுகிறது. முதனூற்கேற்ப இந்தப் பாடத்தையும் கொள்ளலாம்.

பி - ம். 1. இராவணன் வேலினன். 214

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

### அப்போது இராமபிரான் இராவணனை நோக்கிச் செல்ல இராவணன் தேரைச் செலுத்திக்கொண்டு வருதல்

1170. போன காலையிற் புக்கனன் புங்கவன் போர்வேட்
டானை மேற்செலுங் கோளரி யேறிவ னென்ன
வானு ளோர்கண மார்த்தனர் தூர்த்தனர் மலர்மேல்
தூந வின்றவே லரக்கனுந் தேரினைத் துரந்தான்.

போன காலையில் - (அநுமன் அங்ஙனம்) சென்ற போழ்தினில், புங்கவன் - சிறந்தவனான இராமபிரானும், ஆனை மேல் செலும் கோள் அரி ஏறு இவன் என்ன - யானை மேல் செல்லுகின்ற கொல்லும் ஆற்றல் வாய்ந்த சிங்கமே யாவன் இவன் என்று (பார்த்தோர்) மொழியுமாறு, போர் வேட்டு - போர் புரிவதை விரும்பி, புக்கனன் - (இராவணனை நோக்கிப்) புகுந்தான்; (அக்காலையில்), வானுளோர் கணம் ஆர்த்தனர் - தேவர்கள் கூட்டமாக ஆரவாரித்தார்கள்; மலர்மேல் தூர்த்தனர் - மலர்களை மேலே மிகுதியாகப் பொழிந்து நிறைத்தார்கள்; தூ நவின்ற வேல் அரக்கனும் - மாமிசம் நிறைந்துள்ள வேற்படை தாங்கிய இராவணனும், தேரினை துரந்தான் - (தனது) தேரினை (இராமபிரானை நோக்கிச்) செலுத்தினன்,


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



புங்கவன் - சிறந்தவன்; 'அமரர் புங்கவன் புத்தியி னோர்ந் தான்' (காசிகண்டம். துருவ. தவ. 1). கோளரி - சிங்கம்; 'பெரிய கோளரி பெயர்ந்தான்' (சுந்தர. 83).

பி - ம். 1. புகுந்தனன்.
2. ஏறது, ஏறிது, வருவதும்.
3. ஆர்த்தது, தூர்த்தது.
4. தெரிகணை சொரிந்தான்.

215

## இராமபிரான் அநுமன் தோளில் அமர்ந்து செல்லுதல்

1171. தேரிற் போரரக் கன்செலச் சேவகன் தனியே
பாரிற் செல்கின்ற வறுமையைப் பார்த்தனன் பரிந்தான்
சீரிற் செல்கின்ற தில்லையிச் செருவெனுந் திறத்தால்
வாரிற் பெய்கழல் மாருதி கதுமென வந்தான்.

போர் அரக்கன் - போர் வலிமை வாய்ந்த இராவணன், தேரில் செல - தேர் மீது ஏக, சேவகன் - இராமபிரான் (தேரின்றியே), தனியே - தனியாக, பாரிற் செல்கின்ற வறுமையை பார்த்தனன் - தரையிலே நடந்துபோகின்ற எளிமையை நோக்கி, பரிந்தான் - அன்பு மேலிட்டவனாய், வாரில் பெய்கழல் மாருதி - வாரினாற் பிணைக்கப்பெற்ற கழல்களைப் புனைந்த அநுமன், 'இ செரு - (தரை மீது செல்லும் இராமபிரானுக்கும், தேர் மீதிருந்து பொர நினைக் கும் இராவணனுக்கும் நிகழவிருக்கும்) இந்தச் சண்டை, சீரில் செல்கின்றது இல்லை - சிறப்புடையதொன்றாக இராது, எனும் திறத்தால் - என்ற கருத்தினால், கதுமென வந்தான் - இராமபிரான் இருந்த இடத்துக்கு விரைந்து வந்தான்.

சேவகம்-வீரம்; சேவகன்: இராமபிரான்; 'சேவகனும் யாமும். (சுந்தர, 167). பாரிற் செல்கின்ற வறுமையைப் பார்த்தான். 'தாதவிழ்செந் தாமரையின் அகவிதழ்போற் சீறடிகள் தரையின்மீது, போதுவதும் பிறரொருவர் பொறுப்பதுவும் பொரு வன்பு புரிந்த சிந்தை, மாதவஞ்செய் தாதையார் வந்தெடுத்துத் தோளின்மேல் வைத்துக் கொள்ள' (பெரியபு. திருஞான. 11) என்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அடிகளைக் காண்க. வார் : தோள்வார். கதுமென : விரைவுக் குறிப்பு. செரு : போர் ; 'செருவின் மாண்டவர் பெருமையும்'.

பி - ம். 1. சேவகன் செவ்வே.
2. வறுமையை நோக்கினன்.
3. சீரிற் போகின்றதில்லை. 216

1172. நூறு பத்துடை நொறில்பரித் தேரின்மே னுன்முன்
மாறில் போரரக் கன்பொர நிலத்துநீ மலைதல்
வேறு காட்டுமோர் வெறுமையை மெல்லிய வெனினும்
ஏறு நீயைய வென்னுடைத் தோளின்மே லென்றான்.

'மாறில் போர் அரக்கன் - நிகரற்ற போர் புரியும் அரக்கன், நொறில் - விரைந்து செல்லக்கூடிய, நூறு பத்துடை பரி தேரின் மேல் - ஆயிரம் குதிரைகளைக்கொண்ட தேரின் மீதிருந்து, நுன் முன் பொர-உன் முன்னர்ப் போர் புரிகையில், நிலத்து - தரையிலே யிருந்து, நீ மலைதல் - நீ சண்டை செய்தல், ஓர் வெறுமையை - ஒப்பற்ற எளிமையை, வேறுகாட்டும் - தனியே எடுத்துக்காட்டும் ; ஐய - ஐயனே ! மெல்லிய எனினும்-மென்மையானவை என்றாலும், (அதனைப் பொருள் செய்யாது) என்னுடை தோளின்மேல் நீ, ஏறு - என்னுடைய தோளின்மீது நீ ஏறுவாயாக', என்றான் - என்று பகர்ந்தான் (அநுமன்).

நொறில் : விரைவு. (சுந்தர. 937, 1110) ; மாறு - ஒப்பு. 'மாறிலா வள்ளி வாழ்க' (கந்த. வாழ்த்து) ; மெல்லிய எனினும் என்பது அநுமனுடைய அடக்கத்தைக் காட்டும்.

பி - ம். 2. போரரக்கன் நிலத்தினில் மலைதல்,
3. வெறுமைய, வறுமைய.
4. ஏறு நீ கடிது. 217

1173. நன்று நன்றென நாயக னேறின னுமக்
குன்றின் மேலிவர் கோளரி யேறெனக் கூறி
அன்று வானவ ராசிக ளியம்பின ரீன்ற
கன்று தாங்கிய தாயென மாருதி களித்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நாயகன் - யாவர்க்கும் தலைவனான இராமபிரான், 'நன்று நன்று எனா - நல்லது நல்லது' என்று சொல்லி (அநுமன் வேண்டுகோளை ஏற்று அவன் தோள்களில்), ஏறினன் - ஏறியமர்ந்தான்; நாமம் குன்றின் மேல் இவர் - புகழ்பெற்ற மலையின் மீது ஏறிய, கோளரி ஏறு என கூறி - கொல்லும் தன்மையுள்ள ஆண் சிங்கம் (அநுமன் தோள்களில் ஏறிய இராமபிரானுக்கு ஒப்பாம்) என்று சொல்லி, அன்று - அப்போது, வானவர் ஆசிகள் இயம்பினர் - தேவர்கள் வாழ்த்துக்கள் கூறினர்; ஈன்ற கன்று தாங்கிய தாய் என மாருதி களித்தான் - ஈன்ற கன்றினைத் தாங்கிய தாய்ப் பசுவைப்போல அநுமன் மனம் மகிழ்ந்தான்.

கோளரி : *1170* பார்க்க. அநுமனுக்குக் குன்று உவமை. கோளரி இராமபிரானுக்குவமை. குன்றின் மேலிவர் கோளரி **சுந்தர.** *1102.* கன்றும் தாயும் முறையே இராமபிரானுக்கும் அநுமனுக்கும் உவமை. (ஒப்பு) : **சுந்தர.** *1078.*

பி - ம். 1. நானெனா, நன்றெனா.

2. குன்று ; தாவிய, தாங்கிய ; கூறல், கூறில், கூடி.

3. இன்று : நாவலரஃதலா லியம்பலர், வானவரஃதலா லியம்பலர். 218

**1174.** **மாணி யாயுல களந்தநா ளவனுடை வடிவை**
**ஆணி யாயுணர் மாருதி யதிசய முற்றான்**
**காணி யாகப்பண் டுடையனு மொருதனிக் கலுழன்**
**நாணி னான்மற்றை யனந்தனுந் தலைநடுக் குற்றான்.**

மாணியாய் - வாமந பிரமசாரியாகி, உலகு அளந்த நாள் - மூவுலகங்களையும் ஈரடியால் அளந்த நாளில், அவனுடை வடிவை - அந்தப் பரந்தாமன் வடிவை, ஆணியாய் உணர் மாருதி - சிறப்பாக (ஆணித்தரமாக) அறிந்துள்ள அநுமன், அதிசயம் உற்றான் - வியப்படைந்தான்; (மாலின் வடிவை) காணியாக பண்டு உடையனும் - காணியாட்சியாக (தனக்கே சொந்தமான பொருளாகப்) 'பழையநாள்தொட்டுக் கொண்டுள்ள, ஒரு தனி கலுழன் - ஒப்பற்ற கருடன், (அத்தன்மை தனக்கு நீங்கியது குறித்து)', நாணினான் - வெட்கமுற்றான்; மற்றை அநந்தனும் தலைநடுக்குற்றான் - மற்றொருவனாகிய ஆதிசேடனும் தலைநடுக்கம் கொண்டான.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மாணி - பிரமசாரி ; மாணிநற் படிவமொடு' (கிட்கிந்தா. 47); 'மாணியாம் படிவமன்று (கிட்கிந்தா. 62) ; 'மாணியாம் வேடந்தாங்கி' (சுந்தர. 28). ஆணி : ' எண்ணலா ஆணி ' (சுந்தர. 591) ; செம்மையின் ஆணி ' (அயோத்தி. கிளைகண்டு. 47). அதிசயம் : ' அதிசயம் ஒருவராலமைக்கலாகுமோ ' (ஆரணிய. 997) ; ' அதிசயம் அளிப்பதற்கு ' (ஆரணிய. 572), அனந்தன் - ஆதிசேடன் ; ' அனந்தன் படங்கிழிவுற ' (ஆரணிய. 525).

பி - ம். 2. ஆணியா யுயர் ; யதிசயங் கொண்டான். 219

1175. ஓத மொத்தனன் மாருதி யதனகத் துறையும்
நாத னொத்தன னென்னிலோ துயில்கில னம்பன்
வேத மொத்தனன் மாருதி வேதத்தின் சிரத்தின்
போத மொத்தன னிராமன்வே றிதனில்லை பொருவே.

'மாருதி ஓதம் ஒத்தனன் - அநுமன் (பாற்) கடலை நிகர்த்தனன் ; அதன் அகத்து உறையும் நாதன் - அதனிடத்து அறிதுயில் கொண்டு தங்குகின்ற திருமாலை, ஒத்தனன் என்னில் - (இராமபிரான்) நிகர்த்தான் என்று கூறுவோமானால், நம்பனே துயில்கிலன் - தலைவனாகிய இராமபிரானோ (அந்தப் பாற்கடல் நாதன் போன்று) உறங்குகின்றானில்லை ; (பின்னர் எதனை உவமை கூறலாமெனின்), மாருதி வேதம் ஒத்தனன் - அநுமன் நான்மறையை நிகர்த்தனன் ; இராமன் - இராமபிரான், வேதத்தின் சிரத்தின் போதம் ஒத்தனன் - வேதத்தின் சிரம் என்று புகழப்படுகின்ற ஞானவடிவனான பரம் பொருளை ஒத்திருந்தான் ; இதன் வேறு இல்லை பொருவே - இதைக் காட்டிலும் உவமானமாகச் சொல்லக் கூடியது பிறிதொன்றுமில்லை '.

அநுமனை அவன் வெண்ணிறத்தால் பாற்கடலாகவும், இராமபிரானை அவனுடைய கார்மேனி வண்ணத்தால் திருமாலாகவும் கூறலாமெனின், அது பொருந்தாக் கூற்று : திருமால் அறிதுயில் கொள்பவனாக, இராமபிரான் விழிப்புடையவன் ஆதலின் ; ஆகவே மாருதியை வேதத்திற்கும், இராமபிரானை வேதசிரமாகிய உபநிடதத்தில் உள்ள மெய்ஞ்ஞான போதத்திற்கும் உவமையாக்கினர் என்க. வேதமொத்தனன் மாருதி; (ஒப்பு): வேதக்கடல், கிட்கிந்தா. 61. வேத மேய்க்கும் அளித்துப்பினநுமன் ' (சுந்தர. 34). ' வேதத்தோட்டியின் தொடக்கினிற்கும் துளைக்கைமால் யானை யன்னான் ' (யுத்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நாகபாச. 242). இதனில்லை பொருவே என்று முடிவுகட்டிக்கூறினர் ஆசிரியர். (ஒப்பு): ஓஒ வுவமன் உறழ்வின்றி யொத்ததே (களவழி நாற்பது. 36). இங்கே காண்க.

பி - ம். 2. ஒத்தன னென்கிலோ ; அமலன்.
3. இராகவன்.
4. இதனிலை, இது நல்ல, இதனினில். 220

வேறு

1176. தகுதியாய் நின்ற வென்றி
மாருதி தனிமை சார்ந்த
மிகுதியை வேறு நோக்கி
னெவ்வண்ணம் விளம்புந் தன்மை
புகுதிகூர்ந் துள்ளார் வேதம்
பொதுவுறப் புலத்து நோக்கும்
பகுதியை யொத்தான் வீரன்
மேலைத்தன் பதமே யொத்தான்.

தகுதியாய் நின்ற வென்றி மாருதி - (இராமபிரானுக்குப்) பொருத்தமான வாகனமாகி நின்ற வெற்றி பொருந்திய அநுமன், தனிமை சார்ந்த மிகுதியை - தனிமையுற்றுப் பொருந்திய மேம்பாட்டினை, வேறு நோக்கின் - தனித்து ஆய்ந்து பார்க்குமிடத்து, விளம்பும் தன்மை எவ்வண்ணம் - கூறும் தகைமை எங்ஙனம்? புகுதி கூர்ந்து உள்ளார் - அறிவு மிக்காரான முனிவர்கட்குரிய, வேதம் - நான்மறை, பொது உற புலத்து நோக்கும் - பொதுவாக அறிவுகொண்டு உணரும், பகுதியை - மூலப்ரகிருதியை, ஒத்தான் - அநுமன் நிகர்த்தனன்: வீரன் - ஆண்டகையான இராமபிரான், மேலை தன் பதமே ஒத்தான் - இந்தப் பிரகிருதிக்கு மேலேயுள்ள தனக்குச் சொந்தமான பரமபதத்தினையே ஒத்து விளங்கினன்.

பகுதி - மூலப்ரகிருதி: இஃது அநுமானுக்கும் அதற்கு மேற்பட்ட பரமபதம் இராமபிரானுக்கும் உவமை என்க. இந்தப் பிரகிருதியே திருமாலுக்குச் சரீரமாயிருப்பது: மற்றும் உலகின் மூலகாரணமும் இதுவே. மூல ப்ரகிருதியிலிருந்து ஈசன் உட்பார்வையாலே முக்குணங்களும், அவற்றினின்று விண்ணாதி பூதங்களும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அவற்றினின்று சராசரங்களும் உண்டாயின என்பது நூல்களின் கருத்து. தன்பதம் - தனக்குரிய பரமபதம்.

பி - ம். 1. தனிமை சான்ற.

3. பகுதி கூர்ந்துள்ள, கூர்ந்தனாய ; பொதுவற.

4. பதத்தை. 221

1177. மேருவின் சிகரம் போன்ற தென்னினும் வெளிறுண் [டாமால்
மூரிநீ ரண்ட மெல்லாம் வயிற்றிடை முன்னங் கொண்ட
ஆரியற் கநேக மார்க்கத் தாலிடம் வலம தாகச்
சாரிகை திரிய லான மாருதி தாமப் பொற்றோள்.

மூரி நீர் அண்டம் எல்லாம் - வலிமை சான்ற நீரில் தோன்றிய அண்டங்கள் அனைத்தினையும், முன்னம் வயிற்றிடை கொண்ட ஆரியற்கு - முன்னர் (மகாப்பிரளயத்தில்) தன் வயிற்றில் அடக்கிய மேன்மையாளனான இராமபிரானுக்கு, அநேக மார்க்கத்தால் இடம் வலம்து ஆக - பற்பல வழிகளால் இடது புறமாகவும் வலது புறமாகவும், சாரிகை திரியலான - சாரிகை திரியப்புகுந்த, மாருதி - அநுமனுடைய, தாமம் பொன் தோள் - மாலை புனைந்த அழகிய புயங்கள், மேருவின் சிகரம் போன்றது என்னினும் வெளிறு உண்டாம் - மேரு மலையின் சிகரத்தை ஒத்தது என்று சொல்லினும் அறியாமை என்னும் குற்றம் கூறுபவரிடம் பொருந்தும். ஆல் - அசை.

'காஞ்சனாத்ரி கமநீய விக்ரகம்' என்று அநுமனைப் புகழ்வர்: எனினும் மேருவின் பொன் நிறம் அநுமன் பொன்னிறத்திற்குச் சிறிதும் ஒப்பாகாது. ஆகவே மேருமலையை அநுமனுக்கு உவமை கூறுதல் அறியாமையின் பாற்படும், 'சொல்லொக்கும் பொருளொவ்வாவாற் சொல்லலாம் உவமை யுண்டோ, நெல்லொக்கும் புல்லென்றாலும் நேருரைத் தாகவற்றே' (ஆரணிய. 627); தாமம் - ஒளியுமாம். சாரிகை திரிதல் - 'சாரிகை திரிந்தனனரோ' (ஆரணிய. 37).

பி - ம். 1. வேறு.

3. மாற்றத்து ; ஆயிரம் வலமதாக, வலமிட முதலவான.

4. சாரிகை, தருமப். 222

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## வேறு

### அருந்தவர் ஆசி கூறலும், வானவர் போர்காண வரலும்

1178. ஆசி சொல்லின ரருந்தவ ரறமெனுந் தெய்வம்
காசில் நன்னெடுங் கரமெடுத் தாடிடக் கயிலை
ஈச னான்முக னென்றிவர் முதலிய விமையோர்
பூசல் காணிய வந்தன ரந்தரம் புகுந்தார்.

அருந்தவர் - அரிய தவத்தினரான முனிவர்கள், ஆசி சொல்லினர் - வாழ்த்துரைகளை வழங்கினர்; அறம் எனும் தெய்வம் - அறக் கடவுள், காசில் நல் நெடு கரம் எடுத்து ஆடிட - குற்றமற்ற தனது அழகிய நீண்ட கையை உயர்த்திக் கூத்தாட, கயிலை ஈசன் நான்முகன் என்றிவர் முதலிய இமையோர் - கயிலாயத்தில் வீற்றிருக்கும் சிவபிரான், பிரமன் என்ற இவர் முதலாக உள்ள தேவர்கள், பூசல் காணிய - (இராமபிரானுக்கும் இராவணனுக்கும் நடக்கவிருக்கும்) போரினைக் கண்ணுறுவதற்காக, வந்தனர் - வந்து, அந்தரம் புகுந்தார் - ஆகாயத்திற் புகுந்தார்கள்.

போர் நிகழ்ச்சியில் இராமபிரானுக்கு வெற்றியுறும், அதன் விளைவாக அருந்தவர்க்கு இடம் நீங்கும், அறக் கடவுள் மகிழ்ச்சிக் கூத்தாடும் எனப்பட்டது: ' தனிக்கைச் சிலையும் வானவரு முனிவர் குழுவும் தனியறனும், இனிக்கட் டழிந்த தரக்கர்குலம் என்றே சுருதி யீரிரண்டும் குனிக்க' (சுந்தர. 544); என்றது காண்க. காணிய, செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

பி - ம். 2. கரமெடுத் தார்த்தது.
4. காணிய வந்தவர்; அனுகுறப், அருகுறப். 223

### இராம இராவணரின் போர்

1179. அண்ண லஞ்சன வண்ணனு மமர்குறித் தமைந்தான்
எண்ண ரும்பெருந் தனிவலிச் சிலையைநா ணெறிந்தான்
மண்ணும் வானமு மற்றைய பிறவுந்தன் வாய்ப்பெய்
துண்ணுங் காலத்தவ் வுருத்திர னுர்ப்பொத்த தோதை.

அண்ணல் அஞ்சன வண்ணனும் - பெருமை மிக்கவனான மை போல் நிறம் கொண்ட இராமபிரானும், அமர் குறித்து அமைந்தான் -

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


போர் புரிய நினைந்து பொருந்தியவனாய், எண் அரு பெரு தனி வலி சிலையை நாண் எறிந்தான் - நினைத்தற்கும் முடியாத பெருமை கொண்ட ஒப்பற்ற வன்மை வாய்ந்த கோதண்டம் என்னும் வில்லின் நாணைத்தெறித்தான்; ஓதை - அதனால் விளைந்த ஓசையானது, மண்ணும் வானமும் மற்றைய பிறவும் - பூமியினையும் ஆகாயத்தினையும் மற்றும் எல்லாவற்றையும், தன்வாய் பெய்து உண்ணும் - தன் வாயிலே போட்டுக் கொண்டு உண்கின்ற ஊழியிறுதியிலே, அவ்வுருத்திரன் ஆர்ப்பு ஒத்தது - (அங்ஙனம் உண்ணும்) அந்த உருத்திரக்கடவுளின் பேரார்ப்பினை நிகர்த்து நின்றது.

அஞ்சன வண்ணன் : 'அஞ்சன வண்ண னென்னுயிர் நாயகன்' (அயோத்தி. குகப். 14); பேரூழிக் காலத்துச் சராசரங்களனைத்தையும் தன் அகட்டிடைக் கொள்ளும் உருத்திரனின் பெருமுழக்கம் இங்குக் குறிக்கப்பட்டது.

பி - ம். 1. அமர்ந்தான்.
3. நான்முகன் மற்றுந்தன்; வாரிவாய்ப் பெய்த, வாய்ப்பெய்து வாரி.
4. காலத்துருத்திரன், காலத்தினுருத்திரன்; ஓசை. 224

1180. ஆவி சென்றிலர் நின்றில ராக்கரோ டியக்கர்
நாவு லர்ந்தனர் கலங்கினர் விலங்கினர் நடுங்கிக்
கோவை நின்றபே ரண்டமுங் குலைந்தன குலையாத்
தேவ தேவனும் விரிஞ்சனுஞ் சிரதலங் குலைந்தார்.

அரக்கரோடு இயக்கர் - அரக்கரும் இயக்கரும், (நாணொலி கேட்டெழுந்த அச்சத்தால்), ஆவி சென்றிலர் - உயிர் நீங்கப் பெறுவிடினும், நின்றிலர் - (ஓரிடத்தில்) நிலை கொள்ளாமல், நா உலர்ந்தனர் - நாவானது வறளப் பெற்று, விலங்கினர் - (தாம் இருந்த இடத்தை விட்டு) நிலைபெயர்ந்து, நடுங்கி கலங்கினர் - உடல் நடுக்கமுற்று மனக்குழப்பமுற்றனர்; கோவை நின்ற பேர் அண்டமும் - வரிசையாக அமைந்துள்ள பெரிய உலக கோளங்களும், குலைந்தன - நிலை தடுமாறின; குலையா - என்றும் நிலை கெடாத, தேவ தேவனும் - சிவபிரானும், விரிஞ்சனும் - பிரமனும், சிர தலம் குலைந்தார் - தலை நடுக்க முற்றனர்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அச்சத்தால் நிகழ்ந்த மெய்ப்பாடுகள் இங்கே குறிக்கப் பெற்றன. தேவ தேவன் - சிவபிரான் 'தேவ தேவன் மெய்ச் சேவகன், தென்பெருந்துறை நாயகன்' (திருவாசக. சென்னி. 1).

பி - ம். 2. விலங்கென.

3. பேருலகமும்.

4. தேவர் தேவனும்.

225

இதன் பின் அதிகப்பாடல்கள் :—

அனைய கண்டிக லரக்கருக் கிறைவனப் பொழுதில்
மனம் நெருப்பெழக் கொதித்தொரு மனிதனென் வலியை
நினைய கிற்றில னெடுஞ்சம ரென்னொடுந் துணிந்த
வினைய மின்றொடும் போக்குவெ னெனவிழி சிவந்தான். 1

அடுக்கி நின்றிடு பகிரண்டப் பரப்பெலா மதிரத்
துடிக்கு நெஞ்சகத் திமையவர் துளங்குறக் கூற்றும்
நடுக்க முற்றிட நல்லற மேங்கிடக் கயிலை
யெடுக்கும் திண்டிறல் அரக்கனும் சிலையைநா ணெறிந்தான். 2

எறிந்த டற்சிலை வளைத்தொரு கணத்திடை யெரியின்
நிறந்த ரும்பல நெடுஞ் சுடர்ப் பகழிகள் நெறியின்
அறிந்தி டற்கரி தாகிய வளப்பில்பல் கோடி
செறிந்தி டத்திசை வானகம் வெளியின்றிச் செறித்தான். 3

ஐய னேக்கினன் நன்றென நகைத்தவன் சிலைவாய்
எய்த வெஞ்சரம் பொடிபட யாவையு முருக்கி
வெய்தி னங்கவன் மேற்செல வெழுகணை விடுத்தான்
கைத வன்கணை யேழுகொண் டக்கணை கடிந்தான். 4

1181. ஊழி வெங்கன லொப்பன துப்பன வுருவ
ஆழி நீரையுங் குடிப்பன திசைகளை யளப்ப
வீழின் மீச்செலின் மண்ணையும் விண்ணையுந் தொளைப்ப
ஏழு வெஞ்சர முடன்றொடுத் திராவண னெய்தான்.

(அப்போது), ஊழி வெம்கனல் ஒப்பன - ஊழிக் காலத்துத் தோன்றும் கொடிய தீயை நிகர்ப்பனவும், துப்பன உருவ - பவளம் போன்ற வண்ணம் உடையனவும், ஆழி நீரையும் குடிப்பன - கடற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



புனலையும் சுவறுமாறு பருகும் ஆற்றல் வாய்ந்தனவும், திசைகளை அளப்ப - திக்குக்களை எல்லாம் அளக்கக் கூடியனவும், வீழின் மண்ணையும் - கீழ்நோக்கிப் புகுந்தால் பாதலத்தையும், மீசெலின் விண்ணையும் - மேல்நோக்கிச் சென்றால் ஆகாயத்தினையும், தொளைப்ப - துளைக்க வல்லனவுமான, வெம் சரம் ஏழும் - கொடிய அம்புகள் ஏழினையும், உடன் தொடுத்து இராவணன் எய்தான் - ஒருசேரத் தொடுத்து இராவணன் விட்டான்.

இச்செய்யுளுடன் மராமரப்படலத்துக் கூறப்பட்ட இராமனன்பின் திறத்தையும் ஒப்பு நோக்குக. (கிட்கிந்தா. 173, 174).

பி - ம். 3. வீழின் மேற்செலின் ; விண்ணையும் மண்ணையும்.
4. இராவண னெடுத்துடன். 226

1182. எய்த வாளியை யேழினு லேழினே டேழு
செய்து வெஞ்சர மைந்தொரு தொடையினிற் சேர்த்தி
வெய்து காலவெங் கனல்களும் வெள்குறப் பொறிகள்
பெய்து போம்வகை யிராகவன் சிலைநின்று பெய்தான்.

எய்த வாளியை - (இராவணன்) ஏவிய அம்புகளை, ஏழினால் (த் தன்னுடைய) ஏழு அம்புகளால் ஏழினோடு ஏழு செய்து - (ஒவ்வொன்று ஏழு துண்டு வீதம்) நாற்பத்தொன்பது துண்டுகளாகுமாறு புரிந்து, ஒரு தொடையினில் - ஒரு முறை தொடுக்குமிடத்து, வெம்சரம் ஐந்து சேர்த்தி - கொடிய ஐந்து சரங்களை ஒருசேரப் பொருத்தி, வெய்து கால வெம் கனல்களும்-வெய்யவான ஊழிக்காலத்துக் கொடிய அக்கினிகளும், வெள்குற - (இவற்றின் கடுமைக்கு முன்பு தாம்) வெட்கமுறும்படி, பொறிகள் பெய்து - தீப் பொறிகளைக் கக்கிக்கொண்டு, போம் வகை - செல்லுமாறு, இராகவன் சிலைநின்று பெய்தான் - இராமபிரான் (தனது) வில்லினின்று பொழிந்தான்.

வெள்குதல் - நாணுதல் 'வெள்கிடு மகுடஞ் சாய்க்கும்' (கிட்கிந்தா. 302). மற்றும் சுந்தர. 115 ; 133.

பி - ம். 1. எய்து.
2. செஞ்சுர மஞ்சொரு ; தொடையிடைச்.
3. கனலுளம், கனலெனக், காரென.
4. பெயர்த்தான். 227

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



1183. வாளி யைந்தையு மைந்தினல் விசும்பிடை மாற்றி
ஆளி மொய்ம்பினவ் வரக்கனு மையிரண் டம்பு
தோளி னுணுற வாங்கினன் துரந்தனன் சுருதி
ஆளு நாயக னவற்றையு மவற்றின லறுத்தான்.

ஆளி மொய்ம்பின் அவ்வரக்கனும் - யாளியை ஒத்த வன்மை வாய்ந்த இராவணனும், வாளி ஐந்தையும் - இராமபிரான் விடுத்த ஐந்து அம்புகளையும், ஐந்தினல் - ஐந்து அம்புகளினல், விசும்பிடை மாற்றி - ஆகாயத்திலேயே அப்புறப்படுத்தி, ஐயிரண்டு அம்பு - பத்துப் பாணங்களை, தோளில் நாண்உற வாங்கினன் துரந்தனன் - தனது தோளில் நாணி பொருந்துமாறு (வில்லை) வளைத்துச் செலுத்தினன்; சுருதி ஆளும் நாயகன் - வேதங்களை ஆள்கின்ற தலைவனான இராமபிரானும், அவற்றையும் - அந்தப் பத்து அம்புகளையும், அவற்றினல் அறுத்தான் - பத்துப் பாணங்களினல் அறுத்தான்.

ஐந்தையும் மைந்தினல் எனினுமாம். மைந்து - வலி. கிட்கிந்தா. 126. வாங்கினன் - முற்றெச்சம். சுருதியாளு நாயகன்; இராமபிரான்: நான்மறையின் கனி; ஆரணிய. 97; 'சுருதிநாயகன்' சுந்தர. 338, 642, 1107; 'விராவரும் புவிக்கெலாம் வேதமேயன' (அயோத்தி. மந்தரை. 47); 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ நீண்மறைகள், உன் செய்கை யன்னவைதாம் சொன்ன ஒழுக்கினவோ' (ஆரணிய. 1177), 'வேதநாயகன்' (யுத்த. 933).

பி - ம். 2. மொய்ம்புடை; மொய்ம்பினன்.
3. தோளினுன், தோளினுல்.
4. அவற்றின லவற்றையும்.



1184. அறுத்து மற்றவ னயனின்ற வளக்கரு மரக்கர்
செறுத்து விட்டன படையெலாங் கணைகளாற் சிந்தி
இறுத்து வீசிய கிரிகளை யெரியுக நூறி
ஒறுத்து மற்றவர் தலைகளாற் சிலமலை யுயர்த்தான்.

அறுத்து - அறுத்துவிட்டு, மற்று - பின்னர், அவன் அயல் நின்ற அளக்கரும் அரக்கர் - அந்த அரக்கனுடைய அருகில் நின்ற அளவிடற்கரிய அரக்கர், செறுத்து விட்டன படை எலாம் - சினந்து எறிந்த படைக்கலங்களனைத்தையும், கணைகளால் சிந்தி - அம்பு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



களினால் அழித்தகற்றி, இறுத்து வீசிய கிரிகளை - அகழ்ந்து எறிந்த மலைகளை, எரிஉக நூறி ஒறுத்து - தீப்பொறி சிதறுமாறு பொடி செய்து அழித்து, அவர் தலைகளால் சில மலை உயர்த்தான்- அவருடைய (அறுக்கப்பட்ட) தலைகளால் சில மலைகளை உயர்ந்து விளங்கும்படி செய்தான். மற்று - அசை.

அளக்கரு மளக்கர் என்ற இடத்து எதுகை நயம் காண்க, ஒறுத்து-ஒறுத்தார்க்கொரு நாளையின்பம் (குறள். 156); நூறுதல்- அழித்தல்,; 'நூறிட மாருதி நொந்தார்' (சுந்தர. 1236): 'நூறி நொய்தினையாகி நுழைதியோ' (சுந்தர. 1146); 'கடித்துக் கரும் பினைக் கண்டகர நூறி' (நாலடி. 156).

பி - ம். 1. வேறவன்; அளப்பரு மனக்கர்
2. செறுத்து விட்டவன்; படையைவெங்; சிதறி.
3. கரிகளை; யெரியெழ. 229

1185. மீனு டைக்கருங் கடல்புரை யிராக்கதர் விட்ட
ஊனு டைப்படை யிராவண னம்பொடு மோடி
வான ரக்கடல் படாவகை வாளியான் மாற்றித்
தானு டைச்சரத் தாலவர் தலைமலை தடிந்தான்.

மீன் உடை கரு கடல் புரை இராக்கதர் விட்ட - மீனைத் தன்னகத்துக் கொண்டுள்ள கரிய ஆழியை ஒத்த பெருந்திரளான அரக்கர்கள் விடுத்த, ஊன் உடை படை - மாமிசம் படிந்துள்ள படைக்கலங்கள், இராவணன் அம்பொடும் ஓடி - இராவணனுடைய அம்புகளுடனே ஓடி, வானரர் கடல் படா வகை - வானர சேனைக் கடல் மீது படாத வண்ணம், வாளியான் மாற்றி - தன்னுடைய அம்புகளினால் விலக்கி, தான் உடை சரத்தால்-வேறு தன்னுடைய அம்புகளால், அவர் - அந்த இராக்கதருடைய, தலை மலை தடிந் தான் - தலைகளாகிய மலைகளை அறுத்தான்.

மீனுடைக் கருங்கடல் - கடலுக்கு இயற்கை அடைமொழி. 'தூம்புடை நெடுங்கை வேழம்' (சீவக. 232); என்ற இடத்துப் போல; இராக்கதர் பெருக்கத்துக்குக் கடல் உவமை; கரிய நிறம் பற்றியுமாம். ஊனுடைப் படை; மாமிசம் படிந்துள்ள வேல் வாள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முதலிய போர்க் கருவிகள் ; 'தூநவின்ற வேல்' (1170) என்றது காண்க. படாத என்பது படா என நின்றது.

பி - ம். 1. மீனுடைக்கடற்.

3. பகழியான்.

4. நெடுந்தலை நடிந்தாள். 230

1186. இம்ப ரானெனில் விசும்பின னுருமோ ரிமைப்பில்
தும்பை சூடிய விராவணன் முகந்தொறுந் தோன்றும்
வெம்பு வஞ்சகர் விழிதொறுந் திரியுமே னின்றான்
அம்பின் முன்செலு மனத்திற்கு முன்செலு மனுமன்.

மேல் நின்றான் - தன் புயத்தில் மீதமர்ந்திருந்த இராமபிரானுடைய, அம்பின் முன் செலும் - அம்பும் பிற்படுமாறு செல்பவனும், மனத்திற்குமுன் செலும் - மனமும் பின்படுமாறு செல்பவனும் ஆன, அநுமன் - மாருதி, ஓர் இமைப்பில் - ஒரு கண்ணிமைப் பொழுதில், இம்பரான் எனின் விசும்பினன் ஆகும் - இவ்வுலகத்தவன் என்று கருதுவோம் எனின், ஆகாயத்தில் இருப்பவனாவன் ; தும்பை சூடிய இராவணன் முகம் தொறும் தோன்றும் - தும்பை மாலை அணிந்து போர்புரிகின்ற இராவணனுடைய முகம் தொறும் தோன்றுவான் ; வெம்பு வஞ்சகர் விழிதொறும் திரியும் - மனம் கொதிக்கின்ற வஞ்சனை மிக்காராகிய அரக்கர்களுடைய கண்கள் தோறும் காணப்பட்டுத் திரிவான்.

அநுமன் ஒருவனே பலவிடத்துப் பலவாறு தோன்றியமை கூறப்பட்டது. கதாநாயகனுடைய சொற்செயல்களும் பிறவும் உவமையாக்கப்படுவதை இந்நூலில் ஆங்காங்குக் காணலாம். அம்பின் முன் செலும் அநுமன் : 'இராம னெய்தவோர் பகழியின் செலவென அநுமன் பற்றினன்' (சுந்தர. 155) ; 'புக்கு நீங்கினன் இராகவன் சரமெனும் புகழோன்' (சுந்தர. 239). மனம் வேகத்திற்கு - மனகதி வாயுவேகன்' (யுத்த. 1217). அம்பின்முன் செலும் மனத்திற்குமுன் எனினுமாம்.

பி - ம். 1. விசும்பினில்.

2. தோன்றுமா நின்றான்.

3. தெரியுமே னின்றான். 231

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## படுகளக் காட்சிகள்

1187. ஆடு கின்றன கவந்தமு மவற்றெடு மாடிப்
பாடு கின்றன வலகையு நீங்கிய பணைக்கைக்
கோடு துன்றிய கரிகளும் பரிகளுந் தலைக்கொண்
டோடு கின்றன வுலப்பில வுதிரவா றுவரி.

கவந்தமும் ஆடுகின்றன - தலையற்ற உடலங்கள் கூத்தாடத் தொடங்கின; அலகையும் - பேய்களும், அவற்றெடும் ஆடி - அந்தக் கவந்தங்களுடனே ஆடி, பாடுகின்றன - பாட ஆரம்பித்தன; உலப்பில உதிரம் ஆறு - வற்றுதலில்லாத இரத்தப் பெருக்குக்கள், பணைகை - பருத்த கரங்களுடன், துன்றிய கோடு நீங்கிய கரிகளும் - (முன் நெருங்கியிருந்த) தந்தங்கள் நீங்கப்பெற்ற யானைகளையும், பரிகளும் - குதிரைகளையும், தலை கொண்டு - தம்மிடம் அகப்படுத்திக் கொண்டு, உவரி ஓடுகின்றன - கடலை நோக்கிப் பாய்வன ஆயின.

அலகை - பேய்; 'அலகையின் குழுவு மஞ்ச' (சுந்தர. 1280); உவரி - உவர்ச்சுவை கொண்ட கடல்; இ - பெயர்விகுதி.

பி - ம். 2. அலகையு நீந்தின; பணைத்த, பதைத்த, பனைக்கை.
3. கரியொடு தேர்க்குலம்.



1188. அற்ற வாழிய வறுப்புண்ட வச்சின வம்போ
டிற்ற கொய்யுளைப் புரவிய தேர்க்குல மெல்லாம்
ஒற்றை வாளியோ டுருண்டன கருங்களிற் றோங்கல்
சுற்றும் வாசியுந் துமிந்தன வமர்க்களந் துவன்றி.

தேர் குலம் எல்லாம் - தேர்த்திரள் அனைத்தும், அம்போடு - (இராமபிரான் எய்த) வாளிகளால், அற்ற ஆழிய - துண்டுபட்ட உருளைகளை யுடையனவும், அறுப்பு உண்ட அச்சின - முறிந்திட்ட அச்சுக்களை உடையனவும், இற்ற கொய் உளை புரவிய - அறுந்து போன கொய்யும் உளை மயிரைக் கொண்ட குதிரைகளை யுடையனவும் ஆயின; கரு களிற்று ஓங்கல் - கரிய யானைகளாகிய மலைகள், ஒற்றை வாளியோடு உருண்டன - ஒரே அம்பினுல் கீழே உருண்டு கிடந்தன; அமர்களம் துவன்றி - போர்க்களத்திலே மிகவும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நெருக்கமாக, சுற்றும் வாசியும் - வலசாரி இடசாரியாக ஆதி போகும் குதிரைகளும், துமிந்தன - அறுபட்டுக் கிடந்தன.

அற்ற வாழிய அறுப்புண்ட அச்சின - இவை வடமொழி நடை. கொய்யுளை - 'கொய்யுளைப்பரி (நைடத. அன்னத்தை. 23). வாசி - குதிரை. (சுந்தர. 196 ; 873, 906,

பி - ம். 1. அரியுண்ட ; அச்சினம் பொடிபட்டு.
3. உற்ற.
4. துணிந்தன.

233

1189. தேரி ழந்துவெஞ் சிலைகளு மிழந்துசெந் தறுகட்
காரி ழந்துவெங் கலினமாக் கால்களு மிழந்து
சூரி ழந்துவன் கவசமு மிழந்துதுப் பிழந்து
தாரி ழந்துபின் னிழந்தனர் நிருதர்தந் தலைகள்.

நிருதர் - அரக்கர்கள், தேர் இழந்து-தேர்களை இழந்தும், வெம் சிலைகளும் இழந்து - கொடிய விற்களை இழந்தும், செ தறுகண் - செந்நிறம் வாய்ந்த கொடுமையுடன் கூடின, கார் இழந்து - மேகம் போன்ற யானையை இழந்தும், வெம்கலினமாகால்களும் இழந்து - கொடிய கடிவாளம் பூண்ட குதிரைகளின்காலையிழந்தும், சூர் இழந்து -வீரத்தை யிழந்தும், வன் கவசமும் இழந்து - வலிய கவசத்தை இழந்தும், துப்பு இழந்து - வலிமையை இழந்தும், தார் இழந்து - மாலையை இழந்தும், பின் தம்தலைகள் இழந் தனர் - முடிவில் தங்கள் தலைகளையும் இழந்தனர்.

கார் - உவமவாகுபெயராக யானையைக் குறித்தது. கலினமா - 'கலினமா விலாழியும்' (சுந்தர. 135); இழந்து என்ற சொல் பல அடிகளிலும் வருதல் சொற்பொருட் பின்வருநிலையணி.

பி - ம். 1. தேரழிந்து.
2. காரழிந்து.
3. சூரழித்து ; வெம் ; பிளந்து, கவசமுந் துவசமுந் துணிந்து, கவசமுந் துவசமுமிழந்து.
4. தாரழிந்து ;

234

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**1190.** **அரவ நுண்ணிடை யரக்கியர் கணவர்த மற்ற**
**சிரமு மன்னவை யாதலின் வேற்றுமை தெரியார்**
**புரவி யின்தலை பூட்கையின் தலையிவை பொருத்திக்**
**கரவி லின்னுயிர் துறந்தனர் கவவுறத் தழுவி.**

அரவம் நுண் இடை அரக்கியர் - பாம்பு போன்ற நுட்பமான இடையை யுடைய அரக்கர் மகளிர், அற்றதம் கணவர் - இறந்து பட்ட தங்களுடைய மணாளரின், சிரமும் - தலைகளும், அன்னவை ஆதலின் - குதிரை யானை போன்ற விலங்குகளின் தலைகளே ஆகலின், வேற்றுமை தெரியார் - (குதிரை யானைகளின் தலை கட்கும் தங்கள் கணவர் தம் தலைகட்கும்) வேறுபாடு உணர மாட்டாதவராய், புரவியின் தலை பூட்கையின் தலை இவை - குதிரை களின் தலை யானைகளின் தலை என்ற இவற்றினை, பொருத்தி - (தம் புருடன்மாரின் அற்ற உடலோடு) சேர்த்து வைத்து, கவவு உற தழுவி - முயக்கமமைய நன்கு பொருந்த அணைத்து, கரவில் இன் உயிர் துறந்தனர் - ஒழிதலில்லாத இனிய உயிரை நீத்தனர்.

யானை, குதிரை, யாளி என்ற இவைகளின் தலைகளைப் போன்ற தலைகளை அரக்கர் கொண்டிருந்தனர் என்பதை முத னூலிலும் காணலாம். 'வயிற்றிடை வாயினர், வளைந்த நெற்றி யில், குயிற்றிய விழியினர்' (சுந்தர. 385). கரிபரி வேங்கைமாக் கரடி- யாளிபேய், அரிநரிநாயென வாளிமுகத்தினர்' (சுந்தர. 388). என்பனவற்றை ஒப்பு நோக்குக. கவவுற - 'உவவுற்ற திங்கண முகத்தானைக் கவவுக்கை நெகிழ்ந்தனனாய்' (சிலப். 1. கானல் வரி. 52); 'காதலற் பிரியாமற் கவவுக்கை நெகிழாமல்' (சிலப். மங்கல. 61).

பா - ம். 1. அரவ வல்குலார்; அரவினுண்ணிடை; மடந்தையர்; கணவரன்றற்ற.
2. யாதொன்றுந் தெரியாப்.
4. தரவில்; நல்லுயிர்; குவவுத்தோள், கரமுற.



**1191.** **ஆர்ப்ப டங்கின வாயெலாம் அழற்கொழுந் தொழுகப்**
**பார்ப்ப டங்கின கண்ணெலாம் பலவகைப் படைகள்**
**தூர்ப்ப டங்கின கையெலாம் தூளியின் படலைப்**
**போர்ப்ப டங்கின வுலகெலாம் முரசெலாம் போல.**



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முரசு எலாம் போல - முரசங்கள் (ஒலி யவிந்தாற்) போன்று, வாயெலாம் ஆர்ப்பு அடங்கின - (அரக்கரின்) வாய்கள் எல்லாம் ஆரவாரம் ஒடுங்கின; கண் எலாம் அழல் கொழுந்து ஒழுக - விழிகள் எல்லாம் அனற்சிகை வெளியெழ, பார்ப்படங்கின - நோக்குதல் ஒழிந்தன; கை எலாம் பலவகை படைகள் தூர்ப்பு அடங்கின - கைகள் எல்லாம் பலவிதப் படைக்கலங்களைத் தூர்த்தலை ஒழிந்தன; தூளியின் படலை - தூளியின் தொகுதிகள், உலகு எலாம் போர்ப்பு அடங்கின - உலகங்களனைத்தையும் கவர்ந்து கொள்ளுதலைத் தவிர்ந்தன.

பார்ப்பு-பார்த்தல்; பு விகுதிபெற்ற தொழிற்பெயர்.

பி - ம். 1. அனற்கொழுந்து; ஒழுகும்.

4. முரசெலாம்போல. 236

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

எய்து வெள்ள நூற் றிரண்டெனத் திரண்டகால் வயவர்
மொய்கொள் சேனையம் தலைவர்கள் முரண்கரி பரிதேர்
வெய்ய வீரர்கள் அளப்பிலர் கோடியர் விறல்சேர்
ஐயன் வெஞ்சரம் அறுத்திட அனைவரு மவிந்தார்.

1192. ஒன்று நூற்றினே டாயிரங் கொடுந்தலை யுருட்டிச்
சென்று தீர்வில வெனைப்பல கோடியுஞ் சிந்தி
நின்ற தேரொடு மிராவண னொருவனு நிற்கக்
கொன்று வீழ்த்தின திராகவன் சரமெனுங் கூற்றம்.

இராகவன் சரம் எனும் கூற்றம் - இராமபிரானுடைய அம்பு என்ற யமன், ஒன்று நூற்றினோடு ஆயிரம் கொடு தலை உருட்டி - ஒரு லக்ஷம் கொடிய தலைகளை உருளச்செய்து, சென்று தீர்வில - அதனோடு போய்விடாமல், எனைபல கோடியும் சிந்தி - எத்தனையோ பல கோடி வீரர்களையும் ஒழியச்செய்து, நின்ற தேரொடும் இராவணன் ஒருவனும் நிற்க - நின்ற தேருடன் இராவணன் ஒருத்தனே எஞ்சி நிற்க, கொன்று வீழ்த்தினது - கொன்று வீழ்த்தது,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மூன்றுமடிக்கு: 'தானும் தேருமே யாயினன்' (யுத்த. பிர மாத்திர. 59).

பி - ம். 1. நெடுந்தலை.
2. சென்று தீர்வன; எனப்பல.
3. நிற்பக்.
4. வீழ்ந்தின; வீழ்ந்ததவ். 237

1193. தேரும் யானையும் புரவியு மரக்கருந் தெற்றிப்
பேரு மோரிட மின்றெனத் திசைதொறும் பிறங்கிக்
காரும் வானமுந் தொடுவன பிணக்குவை கண்டான்
மூரி வெஞ்சிலை யிராவணன் அராவென முனிந்தான்.

மூரி வெஞ்சிலை இராவணன் - வலிய கொடிய வில்லையேந்திய இராவணன், தேரும் யானையும் புரவியும் அரக்கரும் - தேர்களும் யானைகளும் குதிரைகளும் இராக்கதரும், தெற்றி - (எங்குமொன் ஞெடொன்று) முட்டி, பேரும் ஓர் இடம் இன்றென - பெயர்ந்து செல்லுதற்குரிய ஓரிடமும் இல்லையென்னுமாறு, திசைதொறும் பிறங்கி - திக்குகளெல்லாம் விளங்கி, காரும் வானமும் தொடுவன பிணம் குவை கண்டான் - மேகமண்டலத்தையும் ஆகாயத்தையும் சென்று தீண்டுவனவான பிணக் குவியல்களை பார்த்தவனாய், அரா என முனிந்தான் - பாம்புபோல வெகுண்டான்.

தெற்றி, 'தெற்று வெண்டிரைச் சரையு' (உபதேசகா. சிவநாம. 135); மூரிவெஞ்சிலை. (ஒப்பு.) 'மூரிவிற்கார்' (கிட்கிந்தா. 45); 'மூரிவில்' (சுந்தர. 356).

பி - ம். 1. அரக்கரும் புரவியும்; செசற்றி.
2. ஓர்விடம்; இன்மையில்.
3. பிணக்குன்று.
4. அரவென, முசிந்தான். 238

1194. முரண்தொ குஞ்சிலை யிமைப்பினின் முறையுற வாங்கிப்
புரண்டு தோளுறப் பொலன்கொள்நாண் வலம்படப் [போக்கித்
திரண்ட வாளிகள் சேவகன் மரகதச் சிகரத்
திரண்டு தோளினு மிரண்டுபுக் கழுந்திட வெய்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பொலன் கொள் நாண் - அழகைக்கொண்ட நாணியானது, புரண்டு தோளுறப் - புரண்டு தோளிலே பொருந்தும்படி, முரண் தொகும் சிலை - வலிமையைத் தன்னகம் கொண்டுள்ள வில்லினை, இமைப்பினில் முறை உற வாங்கி - ஓரிமைப்பொழுதிலே நெறியாக வளைத்து, திரண்ட வாளிகள் இரண்டு - திரட்சி பொருந்திய அம்புகள் இரண்டினை, வலம்பட போக்கி - வலிமை பொருந்த விடுத்து, சேவகன் - வீரனான இராமபிரானுடைய, மரகத சிகரத்து இரண்டு தோளினும் - மரகதச் சிகரம் போன்ற இரண்டு தோள்களிலும், புக்கு அழுந்திட எய்தான் - தைத்து ஊன்றுமாறு ஏவினான்.

சேவகன் - வீரன். இங்கு இராமபிரான் 'சேவகன் முறுவல் செய்தான்' (யுத்த. 919); 'சேவகனும் யாமும்' (சுந்தர. 167).

பி - ம். 2. புரண்டு தோளுக.
4. புக்கழுந்துற.

259

1195. முறுவ லெய்திய முகத்தினன் முளரியங் கண்ணன்
மறுவி லாததோர் வடிக்கணை தொடுத்துற வாங்கி
இறுதி யெய்துநாட் கால்பொர மந்தர மிடையிட்
டறுவ தாமென விராவணன் சிலையினை யறுத்தான்.

முறுவல் எய்திய முகத்தினன் - புன்முறுவல் பூத்த முகத்தினையுடையவனாய், முளரி அம் கண்ணன் - செந்தாமரை ஒத்த விழிகளையுடைய இராமபிரான், மறு இலாதது ஓர் வடிகணை தொடுத்து - குற்றமற்ற ஓர் கூர்மையான அம்பினை (வில்லிற்) பூட்டி, உற வாங்கி - அதனை நன்கு வளைத்து, இறுதி எய்து நாள் - ஊழி முடிவில், கால் பொர - பெருங்காற்று வீசும்போது, மந்தரம் - மந்தரகிரி, இடையிட்டு அறுவது ஆம் என - நடுவிலே முறிந்து போவது போன்று, இராவணன் சிலையினை அறுத்தான் - இராவணனுடைய வில்லினை அறும்படி செய்தான்.

இராவணன் அம்பு செலுத்திய கடுமைக்கு எதிராக, இராமன் முறுவல் பூத்தான், 'கூனிகூன் போக வுண்டை தெறித்தபோ தொத்த தன்றிச் சினவுண்மை தெரிந்ததில்லை' (யுத்த. 1227);

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முளரியங் கண்ணன். 'கமலக்கண்ணனர்' (சுந்தர. **394**); மற்றும் ஆரணிய. **376, 421, 606, 813, 972, 984.** பின்னிரண்டடி இல்பொருளுவமை.

பி - ம். 2. தொடுந்தது. **240**

இங்குச் சில அதிகப் பாடல்கள்—

1. அறுத்த வில்லிழந் தழியுமுன் னேயிரு கரத்தும்
 பொறுத்து வெஞ்சிலே நாணெலி புடைத்தடற் பகழி
 நிறுத்தி வீசினன் நெடுந்திசை விசும்பொடு நிமிரக்
 கறுத்த வான்முகில் கன்மழை பொழிதரும் கடுப்பின்.

2. நிரைக் குமையிரு சிலேயிடைச் சரம்மழை நிருதன்
 துரக்க மாருதி யுடலுறு குருதிகள் சொரிந்த
 குரக்கு வான்படை குறைந்தன கூசிவா னவர்கள்
 இரக்க முற்றுலேந் தோடின ரிருண்டதெவ் வுலகும்.

3. எறுழ்வ லிப்புயத் திராகவ னிளநகை யெழும்ப
 முறுவ லித்தவன் பகழிகள் யாவையு முருக்கி
 பிறைமு கச்சரம் ஐயிரண் டொருதொடை பிடித்தாங்
 குறுதி யற்றவன் சிலேயொரு பத்தையும் ஒறுத்தான்.

**1196.** **மாற்று வெஞ்சிலே வாங்கினன் வடிம்புடை நெடுநாண்**
**ஏற்று ருமுனம் இடையறக் கணைகளா லெய்தான்**
**காற்றி னுங்கடி தாவன கதிர்மணி நெடுந்தேர்**
**ஆற்று கொய்யுளேப் புரவியின் சிரங்களு மறுத்தான்.**

மாற்று வெம்சிலே வாங்கினன் - பிறிதொரு கொடிய வில்லினே வளேத்து, வடிம்பு உடை நெடுநாண் - தழும்பை விளேக்கவல்ல நீண்ட நாணே, ஏற்றுருமுனம் - (இராவணன்) ஏற்றுவதற்கு முன்னம், இடை அற கணேகளால் எய்தான் - (இராமபிரான்) அந்த வில்லானது நடுவிலே அற்றுப் போகும்படி அம்புகளேக்கொண்டு செலுத்தினன், (அன்றியும்) காற்றினும் கடிதாவன - காற்றினும் வேகம் அமையத் தாவிச் செல்வனவும், கதிர் மணி நெடுந்தேர் - ஒளியுள்ள அரதனங்கள் அழுத்திச் செய்யப்பெற்ற பெரிய தேரை, ஆற்று - சுமந்திழுப்பனவுமான, கொய் உளே புரவியின் சிரங்களும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அறுத்தான் - கொய்யப்பட்ட பிடரி மயிரினையுடைய குதிரைகளின் தலைகளையும் அறுத்தான்.

உளை - தலையாட்டம் என்ப.

பி - ம். 1. மாற்றெர் சார்முக மெடுத்தனன்; வாங்கிய வடிநாண்.
2. ஏற்றுருவகை; கணைகளா லறுத்தான்.
3. கடிதாயவன், கடிதாமவன்; கடிமணி.
4. ஆற்றும், ஆற்றுக்; சிரங்களை யறுத்தான். 241

1197. மற்றும் வெம்படை வாங்கினன் வழங்குரு முன்னம்
இற்ற விந்துக வெரிகணை யிடையற வெய்தான்
கொற்ற வெண்குடை கொடியொடுந் துணிபடக்
[குறைத்தான்
கற்றை யஞ்சுடர்க் கவசமுங் கட்டறக் கழித்தான்.

மற்றும் - (இராவணன்) பின்னும், வெம்படை வாங்கினன் - பிறிதொரு ஆயுதத்தை எடுத்து, வழங்குரு முன்னம் - எறிதற்கு முன்னரே, இற்று இடையற அவிந்து உக - அது இடையிலே நீங்கும்படி இற்றழிந்துவிடுமாறு, எரிகணை எய்தான் - எரியும் தன்மையுள்ள (அம்பினை) இராமபிரான் எய்தான்; (பின்னும் பல வாளிகளால்), கொற்றம் வெண் குடை - வெற்றி பொருந்திய வெண் குடை, கொடியொடும் துணிபட - கொடியுடன் துண்டுபடுமாறு, குறைத்தான் - வெட்டினன்; கற்றை அம் சுடர் கவசமும் கட்டு அற கழித்தான் - தொகுதியான அழகிய ஒளிவாய்ந்த கவசத்தினையும் பூட்டற்று விழும்படி அகற்றினன்.

இடையற: (1197).

பி - ம். 1. மற்றும் வெஞ்சிலை; வழங்கினன்; வாங்குரு; வண்ணம்.
2. அற்றழிந்துக; வயினெடுங் கணைகளா லறுத்தான்.
3. வெண்குடையோடது; குறைபடத் துணித்தான்.
4. கடிந்தான். 242

1198. மாற்றுத் தேரவண் வந்தன வந்தன வாரா
வீற்று வீற்றுக வெயிலுமிழ் கடுங்கணை விட்டான்
சேற்றுச் செம்புனற் படுகளப் பரப்பிடைச் செங்கட்
கூற்றுங் கையெடுத் தாடிட விராவணன் கொதித்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அவண் - அவ்விடத்து, (இராவணனுக்கு) மாற்றுத் தேர் வாரா வந்தன வந்தன - வெவ்வேறு தேர்கள் வருபவைகளை வருந்தோறும் வருந்தோறும், (அவைகள்) வீற்று வீற்றுக - துண்டு துண்டாகச் சிதறிட, வெயில் உமிழ் கடுகணை விட்டான் - ஒளிவிடுகின்ற கடிய வாளிகளை (இராமபிரான்) விட்டான்; சேறு செம்புனல் - சேருகிய உதிர நீரைக்கொண்ட, படுகளம் பரப்பிடை - போர்க்களப் பரப்பிலே, செம் கண் கூற்றும் - சினத்தால் சிவந்த விழிகளையுடைய யமனும், கை எடுத்து ஆடிட - கரங்களை உயர்த்திக் கூத்தாடுமாறு, இராவணன் கொதித்தான் - இராவணன் மனம் வெதும்பினன்.

வீற்று வீற்றுக. 'வீற்று வீற்றோடு மயிலினம் போல்; (களவழி. 29); 'வீற்று வீற்றாகியோடி விழுதலும்' (யுத்த. 1392)' கூற்றுகையெடுத்தாடியது தனக்கு ஏராளமான உணவு கிட்டியது பற்றி; 'மின்திகழ் பிறழ்பற் கூற்றம் விலாப்புடை வீங்கவுண்ண' (குசேலோ. குசேலர் வைகுந்த).

பா - ம். 1. மாற்றுத் தேரவை, தேரவன்.

2. வீற்று வீற்றுற ; நெடுங்கணை.

4. கூற்றுக் ; குதித்தான். 243

1199. மின்னும் பன்மணி மவுலிமே லொருகணை விட்டான்
அன்ன காய்கதி ரிரவிமேற் பாய்ந்தபோ ரனுமன்
என்ன லாயதோர் விசையினிற் சென்றவன் தலையிற்
பொன்னின் மாமணி மகுடத்தைப் புணரியில் வீழ்த்த.

மின்னும் - ஒளி விடுகின்ற, பன் மணி மவுலி மேல் - பல மணிகள் அழுத்தப்பெற்ற மகுடத்தின் மீது, ஒரு கணை விட்டான் - ஒரு அம்பினை எய்தான்; அன்ன - அந்த அம்பானது, காய் கதிர் இரவி மேல் பாய்ந்த போர் அநுமன் என்னலாயது ஓர் - வெப்பமான கிரணங்களையுடைய சூரியன் மீது தாவிச் சென்ற போர்த்திறம் வாய்ந்த அநுமன் என மொழியத்தக்க ஒப்பற்ற, விசையினில் சென்று - வேகத்திற் சென்று, அவன் தலையில் - அவனது சிரத்தின்மீது இருந்த, பொன்னின் மாமணி மகுடத்தை - பொன்னினாற் செய்து நவமணிகள் அழுத்தப்பெற்ற கிரீடத்தை, புணரியில் வீழ்த்த - கடலிடை வீழ்த்தியது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இராமபிரான் இராவணன் மீது விடுத்த அம்பின் விசைக்கு, இரவிமேற் பாய்ந்த அநுமன் விசையை ஒப்புமை கூறினர். இரவி மேல் அநுமன் பாய்ந்தது, சுந்தர. 64, 241; யுத்த. அதிகாயன். 178; இராமன் கைத்தனு அநுமன் செலவுக்கு முன்பு கூறப்பட்டது. (கிட்கிந்தா. 358); இங்கு அதனையே மாற்றிக் கூறினர் 'பழ நமக்கிதுவாமெனப் பரிதிமேற் பாய்ந்தான்' (உத்தர. அநுமப். 12). அன்ன, வீழ்த்த: அன்னது, வீழ்த்தது என்பதன் விகாரங்கள்.

பி - ம். 1. மோலி மேல்.
2. பாய்ந்தனன்; பேர் அநுமன்.
4. பொன்னினுலுயர்; வீழ்த்தது புணரி, புணரியிற் புதைந்த. 244

1200. **செறிந்த பன்மணி பெருவனந் திசைபரந் தெரியப்**
**பொறிந்த வாய்வயக் கடுஞ்சுடர்க் கணைபட்ட பொழுதின்**
**எறிந்த கால்பொர மேருவின் கொடுமுடி யிடிந்து**
**மறிந்து வீழ்ந்தது மொத்ததவ் வரக்கன்றன் மகுடம்.**

வயம் கடு சுடர் கணைபட்ட பொழுதின் - வெற்றி வாய்ந்த கடுமையான ஒளித் தொகுதியையுடைய இராமபாணம் மேலே தீண்டியபோது, செறிந்த பன்மணி - மகுடத்திற் பதிக்கப்பெற்றிருந்த பல அரதனங்கள், பெருவனம் - மிக்க நீரையுடைய கடலுடன், திசை பரந்து எரிய - திக்குகளிற் பரவி விளங்க, பொறிந்தவாய் - பொறித்தன்மையையுற்றனவாக, அவ்வரக்கன் தன் மகுடம் - அந்த இராவணனுடைய கிரீடமானது, எறிந்த - வேகமாக வீசிய, கால் பொர - காற்று மோதியதால், மேருவின் கொடுமுடி - மேருமலையின் சிகரமானது, இடிந்து மறிந்து வீழ்ந்ததும் ஒத்தது - உடைந்து மடங்கி விழுந்ததையும் நிகர்த்திருந்தது.

யுத்த 1195 இல் இராவணன் வில் மந்தர மலையைப்போலிருந்தது என்றார். இச்செய்யுட்கண் இங்கு அவன் மகுடம் மேரு இடிந்து வீழ்ந்தது போன்று வீழ்ந்தது என்றார். வனம் - நீர்; 'வனமொண்டிடு மோதையின்' (அயோத்தி. நகர்நீங்கு. 85).

பி - ம். 1. பன்மயிர்ப்.
2. கணைபடும் போழ்தில்.
3. கொடுமுடிச் சிகரம்; எறிந்து, இடந்து, இழந்து. 245

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


1201. அண்டர் நாயக னடுசிலை யுதைத்தபே ரம்பு
கொண்டு போகப்போய்க் குரைகடற் குளித்தவக் [கொள்கை
மண்ட லந்தொடர் வயங்குவெங் கதிரவன் தன்னை
உண்ட கோளொடு மொலிகடல் வீழ்ந்தது மொக்கும்.

அண்டர் நாயகன் - தேவர் கோனாகிய இராமபிரானுடைய, அடு சிலை உதைத்த பேர் அம்பு - கொல்லும் தன்மை செறிந்த வில்லினின்று விடுத்த பெரிய சரம், கொண்டு போகப்போய் - அடித்துக்கொண்டு செல்ல உடன்சென்று, குரைகடல் குளித்த அ கொள்கை - (இராவணன் மகுடம்) ஒலிக்கின்ற கடலில் அழுந்திய அந்தத்தன்மை, மண்டலம் தொடர் - வட்ட வடிவமாக உலகினைச் சுற்றிச் செல்கின்ற, வயங்கு - விளங்குகின்ற, வெம் கதிரவன் - வெப்பமிக்க கிரணங்களையுடைய சூரியன், தன்னை உண்ட - தன்னை வாய் வழியாக விழுங்கிய, கோளொடும் ஒலி கடல் வீழ்ந்ததும் ஒக்கும்-(கேது என்ற) செம் பாம்புடன் இரைக்கின்ற கடலிலே வீழ்ந்ததையும் நிகர்க்கும்.

மகுடத்தைப்பற்றிய இராமன் அம்பு சூரியனைப்பற்றிய கோள் போலும் எனப்பட்டது. அடுசிலை : வினைத்தொகை. இராம பிரான் விடுத்த அம்பு கடலிற் சென்று குளித்தது, சூரியனைக் கோள் கவ்விச்சென்று கடலிடை வீழ்ந்ததை ஒக்கும் எனப்பட்டது. ' ஆர்க்கின்ற வானவரு மந்தணரு முனிவர்களு மாசிகூறித், தூர்க் கின்ற வலர்மாரி தொடரப்போய்ப் பாற்கடலிற் றூய் நீராடி...... கார்க்குன்ற மனையான்றன் கடுங்கணைப்புட் டிலினடுவட் கரந்த தம்மா ' (யுத்த. இராவணன் வதை. 199).

பா - ம். 1. யுகைந்த பேரம்பு.
2. குளித்ததேரர்.
3. மண்டலத்தொடு வயங்கு ; கதிர்தனை வாயால், கதிர்களை வாயால், கதிரினை வாயால்.

246

1202. சொல்லு மத்தனை யளவையின் மணிமுடி துறந்தான்
எல்லி மைத்தெழு மதியமும் ஞாயிறு மிழந்த
அல்லு மொத்தனன் பகலுமொத் தனன்அமர் பொருமேல்
வெல்லு மத்தனை யல்லது தோற்றிலா விறலோன்.


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அமர்பொருமேல் - போர் செய்வானாகில், வெல்லும் அத்தனை யல்லது தோற்றிலா விறலோன் - வெற்றிகொள்ளும் அளவன்றி தோல்வியுறாத வலிமை சான்ற இராவணன், சொல்லும் அத்தனை அளவையின் - சொல்லும் பொழுதிற்குள், மணிமுடி - மணி மகுடத்தை (இராமபிரான் பாணத்தால்), துறந்தான் - நீங்கப் பெற்றவனாய், எல் இமைத்து எழும் மதியமும் - ஒளிவிட்டுத் தோன் றுகின்ற சந்திரனையும், ஞாயிறும் - சூரியனையும், இழந்த-முறையே இழக்கப்பெற்ற, அல்லும் ஒத்தனன் பகலும் ஒத்தனன் - இரவினை யும் பகலினையும் நிகர்த்து விளங்கினான்.

சந்திரனிழந்த இரவும் சூரியனில்லாத பகலும் விளங்காமல் நிற்கும்: அது போன்று இருந்தனன் மகுடமிழந்த இராவணன் என்பது கருத்து, சந்திரனில்லா வானம் தாமரையில்லாப் பொய்கை' (விவேக.) என்றது காண்க.

பி - ம். 1. யளவினில்.
4. தோற்கிலா. 247

1203. மாற்ற ருந்தட மணிமுடி யிழந்தவா ளரக்கன்
ஏற்ற மெவ்வுல கத்தினு முயர்ந்துள னெனினும்
ஆற்றல் நல்நெடுங் கவிஞனோ ரங்கத முரைப்பப்
போற்ற ரும்புக ழிழந்தபோ ரொருவனும் போன்றான்.

மாறு அரு - ஒப்புரைத்தற்கரிய, தடமணி முடி இழந்த வாள் அரக்கன் - பெரிய மணிகள் அழுத்திச் செய்யப்பெற்ற மகுடத்தை இழந்த கொடிய இராக்கதன், ஏற்றம் - உயர்வால், எ உலகத்தி னும் உயர்ந்துளன் எனினும் - எல்லா உலகங்களிலும் மேம்பட்டுள் ளான் என்றாலும், (வாழ்வு பெறச் செய்யவும் அழிவுறச் செய்யவும்) ஆற்றல் நல் நெடு கவிஞன் - வல்லமை பெற்ற சிறந்த பெருமை வாய்ந்த கவிஞன், ஓர் அங்கதம் உரைப்ப - ஒருவகைச் செய்யுளைப் பகர, போற்றரும் போர் புகழ் இழந்த-போற்றுதற்கு அருமையான போர்ப் புகழை இழக்கப்பெற்ற, ஒருவனும் போன்றான் - ஒருத் தனையும் ஒத்து விளங்கினான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அங்கதம்; வசைப்பாட்டு: இதன் இலக்கணத்தை தொல். செய்யுள் 124-ல் காண்க.

பி - ம். 1. முடியிழந்தயரும்; மணிமுடி துறந்துளானெனினும்.
2. ஏற்றவெவ்.
3. ஆற்றறன்றெடும்; கவிஞர்.
4. பேரொருவனும். 248

1204. அறங்க டந்தவர் செயலிதென் றுலகெலா மார்ப்ப
நிறங்க ரிந்திட நிலம்விரல் கிளைத்திட நின்றான்
இறங்கு கண்ணின னெல்லழி முகத்தினன் றலையன்
வெறுங்கை நாற்றினன் விழுதுடை யாலன்ன மெய்யன்.

(அப்பொழுது தருக்கு ஒழிந்தமையின்) இறங்கு கண்ணினன் தலையன் - கீழ்நோக்கிய பார்வையினையும் தலையினையும் உடையவனும், எல் அழி முகத்தினன் - ஒளியிழந்த முகத்தினையுடையவனும், வெறுகை நாற்றினன் - (படைக்கலம் ஏதுமின்றி) வறிய கரங்களைத் தொங்க விட்டிருப்பவனும், (அதனால்) விழுது உடை ஆலன்ன மெய்யன் - விழுதிறங்கிய ஆல மரத்தை நிகர்த்த உடலுடன் கூடியவனும் ஆன இராவணன், 'அறம் கடந்தவர் செயலிது என்று உலகு எலாம் ஆர்ப்ப - அறத்தினை மீறிய (தீயவர்களின்) செயல்கள் இவ்வண்ணம் தான் முடியும்' என்று உலகத்துள்ளோர் எல்லோரும் உரத்துப் பேச, நிறம் கரிந்திட - தன் நிறம் என்றும் உள்ளதைவிடக் கருநிறம் எய்த, நிலம் விரல் கிளைத்திட நின்றான் - கால் விரல் நிலத்தைக் கீறிக் கொண்டிருக்க நின்றான்.

நிலம் கிளைத்தல்: நாணத்தின் செயல். விழுதுடை ஆல் பொருத்தமான உவமையாதல் காண்க.

பி - ம். 1. அறங்கடிந்தவர்.
2. கரிந்துதன், கரிந்ததோர், கரிந்துக; நிலமால் வரையென, நிலம் விரல் கிளைத்நவன்.
4. ஆற்றினன்; மெய்யாள். 249

1205. நின்ற வன்னிலை நோக்கிய நெடுந்தகை யிவனைக்
கொன்ற லுன்னிலன் வெறுங்கைநின் றனெனக் கொள்ளா
இன்ற விந்தது போலுமுன் தீமையென் றிசையோ
டொன்ற வந்தன வாசக மினையன வுரைத்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நின்றவன் நிலை நோக்கிய - நின்றவனுடைய (அந்த) நிலைமையைக் கண்ணுற்ற, நெடுதகை - பெருந்தன்மையனான இராமபிரான், 'வெறுங்கை நின்றான் - இவன் நிராயுதனாய் நிற்கின்றான்', என கொள்ளா - என்று மனத்துட் கொண்டு, இவனை கொன்றல் உன்னிலன் - இவனைக் கொல்லுவதைக் கருதாதவனாகி, 'இன்று உன் தீமை அவிந்தது போலும் - இன்று உன் கெட்ட செயல்கள் ஒழிந்தனபோலும்', என்று இசையோடு - என்று கீர்த்தியுடன், ஒன்ற வந்தன வாசகம் இனையன உரைத்தான் - பொருந்தவந்தனவான இந்த வார்த்தைகளைப் பகர்ந்தான்.

இராவணன் நிராயுதனாக நின்றானாகலின் அவனை எதிர்த்தல் தக்கதன்று என நினைந்து, அவன்பால் தன் பெருமைக்கேற்ற சில சொற்களைக் கூறினான் இராமபிரான். இங்குத் தொல்காப்பியம் புறத்திணையியல் 65-ஆம் சூத்திரத்து, 'சிறப்புடை அரசியலாவன' எனத்தொடங்கி எழுதப் பெறும் நச்சினார்க்கினியர் உரையும், புறநானூறு 9-ஆம் செய்யுளும் காணத்தகுவன. சிறப்புடை அரசற்குப் பொருத்தமாய், வென்றவாளின் இசையோடு ஒன்றி நின்றது இச்செயல் என்பதோர்க.

பி - ம். 2. கொன்றலென்பயன், என்னினி.
3. முன்றன்மை; நின்றிலை.
4. இனையன வாசகம், சில்சில வாசகம்; உரைப்பான். 250

1206. அறத்தி னாலன்றி யமரர்க்கும் அருஞ்சமங் கடத்தல்
மறத்தி னாலரி தென்பது மனத்திடை வலித்தி
பறத்தி நின்னெடும் பதிபுகக் கிளையொடும் பாவி
இறத்தி யானது நினைக்கிலென் றனிமைகண் டிரங்கி.

(இராமபிரான் இராவணனை நோக்கி): 'அறத்தினால் அன்றி - தரும நெறியினாலல்லாமல், மறத்தினால் - மற நெறியினால், அரு சமம் கடத்தல் - பெரும்போரினை வெல்லுதல், அமரர்க்கும் அரிது என்பது - தேவர்கட்கும் அருமையானது என்பதை, மனத்திடை வலித்தி - உள்ளத்திலே உறுதியாகக் கொள்க; பாவி - பாவச் செயல்கள் இழைத்தவனே! கிளையொடும் நின்நெடு பதி புக - உறவினருடன் உன்னுடைய பேரூர்க்கண் புகுதற்கு, பறத்தி - விரைதி; இறத்தி - (நீ இப்போது என் கையால்) மடிந்திருப்பாய்; (ஆயினும்) தனிமை கண்டு இரங்கி - (உன்னுடைய) தனிமையைக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கண்டு இரக்கம் கொண்டு, அது யான் நினைக்கிலென் - உன்னைக் கொல்வதாகிய அந்தக் காரியத்தை நான் எண்ணினேனில்லை'.

பறத்தி - விரைதி; பறத்தல் என்பதனடியாகப் பிறந்த முன்னிலை ஏவல்வினை.

பி - ம். 2. மனத்திடை மதிப்பாய்.

3. பதிபுக விரைவினிற், பதாதிபோ லின்றினிப்.

4. நினைத்திலன். 251

1207. உடைப்பெ ருங்குலத் தினரொடு முறவொடு முதவும்
படைக்க லங்களு மற்றுநீ தேடிய பலவும்
அடைத்து வைத்தன திறந்துகொண் டாற்றுதி யாயிற்
கிடைத்தி யல்லையே லொளித்தியாற் சிறுதொழிற் கீழோய்.

'சிறு தொழில் கீழோய் - இழிந்த செய்கையினையுடைய கீழ் மகனே! உடை பெரு குலத்தினரொடும் - உன்னுடைய பெருங் குலத்தினரோடும், உறவொடும் - சுற்றத்தாரோடும், உதவும் படைக்கலங்களும் - (உனக்கு) உதவக்கூடிய போர்க் கருவிகளையும், மற்றும் நீ தேடிய பலவும் - மற்றும் நீ தேடிய பல சேனைகளையும், அடைத்து வைத்தன திறந்துகொண்டு - உள்ளே கூட்டி வைத்திருப்பனவற்றையும் திறந்து கைக்கொண்டு, ஆற்றுதி ஆயின்-போர் புரிய வன்மையுடையை யாயின், கிடைத்தி-போர்க்கு வருக; அல்லையேல் ஒளித்தி - வல்லை யல்லையேல் ஒளித்துக்கொள்.' ஆல் - அசை.

பி - ம். 4. அம்பொடும்; ஒளித்தியால். 252

1208. சிறையில் வைத்தவ டன்னைவிட் டுலகினிற் றேவர்
முறையில் வைத்துநின் றம்பியை யிராக்கதர் முதற்பேர்
இறையில் வைத்தவற் கேவல்செய் திருத்தியேல் இன்னுந்
தறையில் வைக்கிலென் னின்றலை வாளியிற் றடிந்து.

'இன்னும் - இனியேனும், சிறையில் வைத்தவள் தன்னை - நீ சிறையிலிருத்திய சீதையை, விட்டு - விடுதலை செய்து, நின் தம்பியை - உனது பின்றோன்றலான வீடணனை, உலகினில் தேவர் முறையில் வைத்து - உலகின் கண் தேவரின் முறையிலே இருத்தி,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இராக்கதர் முதல் பேர் இறையில் வைத்தவற்கு - (என்னால்) அரக்கர்க் கெல்லாம் முதன்மையான பெரிய அரசுப் பதவியில் நிறுத்தப் பெற்ற அந்த வீடணனுக்கு, ஏவல் செய்து இருத்தியேல் - பணிவிடை புரிந்து கொண்டிருப்பாயாகில், நின் தலை வாளியில் தடிந்து தறையில் வைக்கிலென் - உன் தலைகளை என் அம்புகளாற் சேதித்து நிலத்து வைக்கமாட்டேன்.

தரை எதுகை நோக்கித் தறையென நின்றது.

பி - ம். 1. விட்டிவ் வழித்தந்து.
2. வைத்த, நின்ற; இராக்கத முறைப்பேர், தம்பியை மணிமுடி சூட்டி.
4. உன்றலை.

253

1209. அல்லை யாமெனி னாரம ரேற்றுநின் றாற்ற
வல்லை யாமெனின் உனக்குள வலியெலாங் கொண்டு
நில்லை யாவென நேர்நின்று பொன்றுதி யெனினும்
நல்லை யாகுதி பிழைப்பினி யுண்டென நயவேல்.

'அல்லை யாம் எனின் - (நான் மேற்கூறிய வண்ணம் புரிய விழைவு ஒன்றும்) இல்லாதவனாகில், ஆர் அமர் ஏற்று நின்று - அரிய போரை மேற்கொண்டு, ஆற்ற வல்லையாம் எனில் - புரிய வன்மையுடையையா யிருப்பின், உனக்கு உள வலி எலாம் கொண்டு - உன்பால் அமைந்த வன்மை முழுவதையும் கைக்கொண்டு, நில் ஐயா - எதிர்த்து நிற்பாயாக ஐயனே' என - என்று மொழிந்து, 'நேர் நின்று பொன்றுதி - என்னெதிரே நின்று இறந்தொழிவாய்; எனினும் - அவ்வாறு ஒழிந்தாயென்றாலும், நல்லை ஆகுதி - நல்லவனாவாய்; இனி பிழைப்பு உண்டு என நயவேல் - இனி போர் புரிந்தால் பிழைத்தல் கூடும் என்பதை மட்டும் விரும்பி நில்லாதே.'

உளவலி - வினைவலி, தன்வலி முதலியன. ஐயா - விளி. பொன்றுதி எனினும் நல்லை ஆகுதி என்றது: இராமன் வாளி புனிதமுள்ளதாகலின் அதனாற்பட்டவர்க்கு நரகமின்று வீர சுவர்க்கமே கிட்டும் என்பது கருதி; இராவணனைக் கொன்ற இராமபிரான் அம்பினைப் புனிதவாளி என்று பிற்கூறுவதும் காண்க. 'நாசம்வந் துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



றேன்' (யுத்த : 124) 'இராமனம்பாற் பொன்றலே புகழுண் டன்றோ' (ஆரணிய : 757) என்று இராவணன் கூறுவது காண்க.

பா-ம். 1. ஆற்றிநின் றேற்க, ஏற்றுநின் றூற்ற, ஆற்றிநன் றெதிர்க்க.

3. நில்லையா வெதிர்.

4. யுண்டென்று. 254

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

வளைத்த வில்லு மிரதமு மாண்டது
கிளைத்த யானையுஞ் சேனையுங் கெட்டது
இளைத்த னையினி யின்றுபோய் நாளைவா
விளைத்த வெஞ்சமர் நீசெய வேண்டுமேல்.

1210. ஆளை யாஉனக் கமைந்தன மாருத மறைந்த
பூளை யாயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்.

'ஆள் ஐயா - அரக்கரை ஆட்சி புரிகின்ற ஐயா! அமைந்தன - உனக்குத் துணையாக அமைந்திருந்த சேனைகள், மாருதம் அறைந்த பூளை யாயின கண்டனை - பெருங்காற்றினால் சிதறப்பட்ட பூளைப்பூக்கள்போ லாயினவற்றை நீ நேரில் கண்ணுற்றனை; இன்றுபோய் நாளை போர்க்கு வா - இன்று நின் இருப்பிடம் சென்று போர்புரிய விரும்பினால் நாளைக்கு வருவாயாக' என நல்கினன் - என்று அருள்மொழி கூறினவனாய் (இலங்கேசனை) விடுத்தான்; (யாவன் எனில்), நாகு இளங் கமுகின் - மிகவும் இளைய கமுக மரத்தின்மீது, வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல் - வாளைமீன்கள் துள்ளிப்பாயும் (நீர்வள நிலவள மமைந்த) கோசல நாட்டிற்குத் தலைவனும், வள்ளலுமான இராம பிரான்.

ஆள் ஐயா : பிற குறிப்பு. பூளை - முதலாகுபெயர் ; 'மாருத மறைந்த பூளை' முன்னிரண்டடிகட்கு ஒப்பு : 'காற்றிடைப் பூளை கரந்தென வரந்தை யுறக்கட லரக்கர்தஞ் சேனைக், கூற்றிடைச் செல்லக் கொடுங்கணை துரந்த கோலவில் லிராமன் (பெரியதிரு. 4 : 10 : 6) ; பூளைவீ : 'பொங்குகோ பஞ்சுடப் பூளைவீயன்ன' (பால,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தாடகை. 1); 'பூளைசூடி' (பால. அகலிகை. 39); 'பூளை வீயெனப் போவன' (சுந்தர. 1211). இச்செய்யுள் தழிஞ்சி என்னும் புறப் பொருட்டுறை 'அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக், கழிதறு கண்மை காதலித் துரைத்தன்று' (பு. வெ. மாலை). இங்குப் பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா, லூராண்மை மற்றத னெஃகு, (குறள். 773)-ம், அதற்குப் பரிமேலழகர் வரைந்த உரையும் காண்க. நல்கினன்-அருளிக் கூறினன். முதல்நாள் உற்ற பரிபவத்தைக் கண்டு உள்ளம் மாறி மறுநாள் போர்க்கு வாராமல் சீதாதேவியைத் தன்பால் அனுப்புவான் என்ற எண்ணத்தால் நல்கினன் எனப்பட்டது. நாகிளம்: ஒருபொருட் பன்மொழி; 'நாகிளம் கமுகின் வாளை தாவுறு' என்பது கொண்டு நீர்வள நில வளம் உணரலாம். 'இதிவா இராவண ஸ்வயம்' என்பது முத னூல்; இதற்கேற்ப இராவணனே ஒருக்கால் நல்லுணர்வெய்திச் சரண்புகுவன் எனின், இலங்கையரசினை வீடணனுக்குக் கொடுத்து விட்ட நிலையில் அயோத்தி நகரத்தை அரக்கர்கோனுக்குத்தர வெண்ணினன் இராமபிரான் எனக் கருதுமாறு இத்தொடர் வழங் கப்பட்டதென அறிக. நல்கினன், வள்ளல் என்ற சொற்கள் வந்துள்ளமையும் ஓர்க. இனி, ஐயா, உனக்கமைந்தன ஆள் என்று கொண்டு, ஆள் என்பதனைக் காலாள் எனக்கோடலுமாம்; முந்துற்றுப் பொருபடையாகலின் காலாளைச் சிறப்பித்தான். ஏனைய மூன்று படைகளும் உபலக் கணத்தாற் கொள்க. இனி முதலடியில் 'ஆளயா என்பதே பாடமாகக் கொண்டு உரை வரைந் தாரும் உளர்.

ப-ம். 4. கோசலை. 255

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

என்றி ராம னியம்ப விராவணன்
ஒன்று மோதலன் உள்ளத்தி னென்வலி
நின்ற நேர்மை நினைத்திலன் மானிடர்
நன்று சொன்ன தெனநகைத் தேகினன்.

முதற்போர்ப் படலம் முற்றும்.

---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## இப்படலத்தைப்பற்றிய முதனூற் குறிப்பு :—

அங்கதன் தூது சென்று திரும்பியவுடன் வானரர்கள் இலங்கை யகழியைத் தூர்த்து மதிலை முற்றிச் சூழ்ந்தனர். குமுதன் என்ற வானரவீரன் பத்துக்கோடி வானர சேனையுடன் கீழைவாயிலில் நின்றான். அவனுக்கு உதவியாகப் பனசனும் பிரகசனும் நின்றார்கள். சதவலி என்பவன் இருபதுகோடி வானர சேனையுடன் தெற்கு வாயிலில் நின்றான். தாரையின் தந்தையான சுசேடணன் அறுபதுகோடி வானரத்தானையுடன் மேலைவாயிலில் நின்றான். வடக்கு வாயிலில் இராமபிரான், இலக்குவன், சுக்கிரீவன் என்ற இவர்கள் நின்றனர்; வீடணனும் இராமபிரானுடன் நின்றனன்.

இருதிறத்தாரும் போரிற் கைகலந்தனர். சுக்கிரீவன் பிரகசனையும், இராமபிரான் அக்கினிகேது முதலிய நால்வரையும் சுசேடணன் வித்யுந்மாலியையும் கொன்றனன். இந்நிலையில் அரக்கர்க்கு வன்மைதரும் இருட்போது வந்தது. அங்கதன் இந்திரசித்தின் தேர்ப்பாகனையும் குதிரைகளையும் ஒழிக்க, இந்திரசித்து மாயையினால் விண்ணில் மறைந்து இராம இலக்குவர்மீது பல அம்புகளை யெய்தனன். இந்திரசித்தின் நாகபாசத்தால் இராம இலக்குவர் பிணிக்கப்பட்டு மூர்ச்சையுற்றனர். அவர்கள் நிலைமையைக்கண்டு அநுமன் முதலியோர் வருந்தினர்; வீடணன் தேறுதல் கூறினன்.

இந்திரசித்து, தன் நாகாத்திரத்தால் இராம இலக்குவர்களை வீழ்த்தியதைப்பற்றித் தந்தையிடம் கூறிய அளவில், அவன் புட்பக விமானத்தில் சீதாதேவியை அமரச்செய்து அவட்கு அவள் கணவனும் மைத்துனனும் வீழ்ந்ததனைக் காட்டுமாறு ஏவலர்க்குக் கட்டளையிட்டான். பிராட்டி பெரிதும் புலம்பத் திரிசடை அவளைத் தேற்றுகின்றாள்.

பின்னர் இராமபிரான் தனது வன்மையால் மூர்ச்சை தெளிந்து இலக்குவன் வீழ்ந்திருப்பதைக் கண்டு பலவாறு புலம்புகின்றான். தான் தம்பியைப் பிரிந்து வாழ்கிலன் என்று சொல்லச் சுக்கிரீவனைக் கிட்கிந்தைக்கு செல்லுமாறு பணிக்கின்றான். இந்த அவல நிலையில் சுக்கிரீவன் மாமனாகிய சுசேடணன் பல மூலிகைகளைக் கொண்டுவருமாறு கூறுங்கால், நாகபாசத்தால் கட்டுண்ட நிகழ்ச்சி


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யைக் கேட்டுக் கருடாழ்வான் அங்குத்தோன்றி இலக்குவனையும் பிறரையும் மூர்ச்சை தெளியச்செய்தனன்.

இச்செய்தி கேட்ட இராவணன் தூம்ராக்ஷனை அனுப்ப, அவன் அநுமனால் தாக்கப்பட்டு இறந்தான். வச்சிரதம்ஷ்ட்ரன் அங்கதனாற் கொல்லப்பட்டான். பிரகத்தனை நீலன் கொன்றான். இராமபிரான் போருக்கு ஆயத்தமாக இலக்குவன் அண்ணனை விலக்கித் தான் போர்க்குச் சென்றான். இந்திரசித்து விடுத்த சத்திப்படையால் இலக்குவன் மூர்ச்சையுற்று விழுந்தான். வீழ்ந்த இலக்குவனைத் தூக்கிச்செல்ல முயன்றான் இராவணன். ஆனால் அவனை அவனால் எடுக்கமுடியவில்லை. இந்நிலை யில் அநுமன் மிகவும் எளிதாக இலக்குவனை மகவுடை மந்தி போன்று எடுத்து இராமபிரானிடம் சேர்க்கின்றான். பிறகு இராம பிரான் அநுமன் தோளின்மீது ஏறிக்கொண்டு இராவணனுடன் கடும்போர் புரிந்தனன். இராவணன் நிராயுதபாணியாக நின்றான். இராமபிரான் தனித்துநின்ற அவ்வரக்கன்மீது கருணைகொண்டு, 'நாளை நின் தானையுடன் வா' என்று விடைதந்தனுப்பினன்.

கம்பர் காப்பியத்தில், நாகபாசத்தாற் பிணிப்புண்டது கும்ப கன்னன் அதிகாயன் என்ற இவர்களின் வதைக்குப்பின்பே காணப் படுகின்றது. மற்றும், இராமபிரான் இலக்குவன் என்ற இரு வரும் நாகபாசத்தாற் பிணிப்புண்டதாக முதனூல் கூற, இலக் குவன் ஒருவனே பிணிப்புண்டதாகக் கம்பர் கூறுவர். பிராட்டி களன்காண் படலம் என்ற ஓர் படலம் கம்பர் காப்பியத்தில் பிரமாத்திரப்படலத்தின் பின் காணப்படுகிறது. இலக்குவன் நாகபாசத்தால் வீழ்ந்ததும், இராவணன் அவனை எடுக்க முடியாமையும், அநுமன் எளிதில் எடுத்துச் சென்றதும், இரா வணன் முதல்நாட் போரிலேயே தோற்றுவிட, அவனை மறுதினம் போர்க்கு வருமாறு இராமபிரான் கூறியதும் ஆன இச்செய்திகளை இரு நூல்களிலும் காணலாம்.

---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# செய்யுள் முதற் குறிப்பகராதி

## [ எண் — செய்யுள் எண் ]



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations




ஆ



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations





CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations




CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations





CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations




CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations







CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations





CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சொ



த



தா



தி



தீ



து



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations





CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations





CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations





CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations




CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations





CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations







CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations





---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# பிழை திருத்தம்

| செய்யுள் எண் | வரி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 26 | 4 | னெஞ்சினன் | நெஞ்சினன் |
| 102 | 2 | வெல்வரெள்பது | வெல்வரென்பது |
| 137 | 4 | வேள்வீயி | வேள்வியி |
| 172 | 4 | வெட்டுழுத் | வெட்டெழுத் |
| 348 | 2 | மூர்ந்தியைத் | மூர்த்தியைத் |
| 480 | 1 | ரனவைவி | ரளவைவி |
| 525 | 1 | காத்து | காந்து |
| 567 | 2 | தறிந்திலர்ரனைய | தறிந்திலரனைய |
| 618 | 4 | கொணரப் | கொணரச் |
| 619 | 1 | வேந்தனு | வேந்தனும் |
| 636 | 2 | சுற்றிச் | சுற்றிக் |
| 707 | 1 | ம்ன்னெடு | நன்னெடு |
| 711 | 1 | விறற்றிண் | விரற்றிண் |
| 725 | 2 | டேகினள் | டேகினன் |
| 741 | 3 | முறைமிளென் | முரைமினென் |

---

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. Digitized By Siddhanta eGangotri Gyaan Kosha

